ஸ்ரீ தியாகராச விலாச வெளியீடு

உ

திருத்தக்கதேவரியற்றிய

# சீவகசிந்தாமணி மூலமும்

மதுரையாசிரியர் - பாரத்துவாசி

## நச்சினார்க்கினியருரையும்

இவை

உத்தமதானபுரம்

மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்யகலாநிதி

டாக்டர் வே. சாமிநாதையரவர்கள்

பல பிரதிரூபங்களைக்கொண்டு பரிசோதித்து

நூதனமாக எழுதிய பலவகை ஆராய்ச்சிக் குறிப்புக்களுடன்

சென்னை :

கபீர் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பெற்றன.

ஆறாம் பதிப்பு

ஹேவிளம்பி௵ சித்திரை௴



[விலை ரூ. 18

# இப்புத்தகத்தில் அடங்கியவை

## இப்பதிப்பில் எடுத்துக்காட்டிய

# நூல்கள் முதலியவற்றின் முதற்குறிப்பகராதி

அகநா, அகம் - அகநானூறு.
அடிக் - அடிக்குறிப்பு.
அடியார் - அடியார்க்கு நல்லார், அடியார்க்கு நல்லாருரை.
அம்பிகா - அம்பிகாபதிக்கோவை.
அரங்கக் - திருவரங்கக்கலம்பகம்.
அரங்கத்தந் - திருவரங்கத்தந்தாதி.
அரிச்சந்திர - அரிச்சந்திரபுராணம்.
அருங்கலச் - அருங்கலச் செப்பு.
அரும்பத - அரும்பதவுரை; அரும்பத வுரையாசிரியர்.
அழகர்கல - அழகர்கலம்பகம்.
அறநெறி - அறநெறிச்சாரம்.
ஆசாரக் - ஆசாரக்கோவை.
ஆத்திரையன் - ஆத்திரையன் பேராசிரியன்.
ஆனைக்காப் - திருவானைக்காப்புராணம்.
இ. கொ - இலக்கணக்கொத்து.
இராசராச - இராசராசசோழனுலா.
இராமா - இராமாயணம்.
இலிங்க - இலிங்கபுராணம்.
இ. வி - இலக்கண விளக்கம்.
இ. வி. சூ - இலக்கணவிளக்கச் சூறாவளி.
இ-ள் - இதன் பொருள்.
இளம் - இளம்பூரணம்; இளம்பூரணர்.
இறை - இறையனாரகப்பொருள்.
உத்தர - உத்தரகாண்டம்.
ஐங் - ஐங்குறுநூறு.
ஐந். எழு - ஐந்திணையெழுபது.
ஐந். ஐம் - ஐந்திணை ஐம்பது.
கச்சி. வண்டு - கச்சியானந்தருத்திரேசர் வண்டுவிடுதூது.
கந்த - கந்தபுராணம்.
கம்ப - கம்பராமாயணம்.
கல் - கல்லாடம், கல்லாடருரை.
கலித் - கலித்தொகை.
கலிங்கத் - கலிங்கத்துப்பரணி.
கழுக்குன்றப் - திருக்கழுக்குன்றப் புராணம்.
காசிகா - காசிகாண்டம்.
காஞ்சி, காஞ்சிப் - காஞ்சிப்புராணம்.
கார் - கார் நாற்பது.
காரி - காரிரத்தினகவிராயர்.
காழிக்கோ - சீகாழிக்கோவை.
குண்டல - குண்டலகேசி.
குண - குணசாகரர்.
குமர. பிரபந் - குமரகுருபரசுவாமிகள் பிரபந்தங்கள்.
குலோத். உலா - குலோத்துங்க சோழன் உலா.
குலோத்துங்க - குலோத்துங்க சோழன்கோவை.
குற்றாலப் - திருக்குற்றாலப்புராணம்.
குறிஞ்சிப் - குறிஞ்சிப்பாட்டு.
குறுந் - குறுந்தொகை.
கூர்ம - கூர்ம புராணம்.
கூவப் - திருக்கூவப் புராணம்.
சங்கா - சங்கரநமச்சிவாயருரை.
சடகோப - சடகோபரந்தாதி.
சர. குற - சரபேந்திர பூபால குறவஞ்சி.
சரவண - சரவணப் பெருமாளையர்.
சாமி - சாமிநாத தேசிகர்.
சிந். மாலை - சிந்தாமணி மாலை.
சிலப் - சிலப்பதிகாரம்.
சிவ. சித்தி - சிவஞானசித்தியார்.
சிவ. பா, சிவஞா. பா - சிவஞானபோத பாஷ்யம்.
சிவஞா, சிவஞான - சிவஞானமுனிவர்.
சிறுபஞ்ச - சிறுபஞ்ச மூலம்.

சிறுபாண் - சிறுபாணாற்றுப்படை.
சினேந்திர - சினேந்திரமாலை.
சீகாழித், சீகாழிப் - சீகாழித்தல புராணம்.
சீகாளத்திப்-சீகாளத்திப் புராணம்.
சீவக - சீவகசிந்தாமணி.
சுப்பிர - சுப்பிரமணிய தீக்ஷிதர்.
சூ - சூத்திரம்.
சூடா, சூடாமணி - சூடாமணி நிகண்டு.
சூளா - சூளாமணி.
சே-சேனாவரையம், சேனாவரையர்.
சை - சைனநூல் வழக்கு.
சொக்க - சொக்கப்ப நாவலர்.
சோ - சோதிடம்.
தக்க - தக்கயாகப்பரணி.
தகடூர் - தகடூர் யாத்திரை.
தஞ்சை, தஞ்சைவாணன் - தஞ்சைவாணன் கோவை.
தண்டி - தண்டியலங்காரம்.
தணிகைப் - திருத்தணிகைப் புராணம்.
தனிப் - தனிப்பாடல்.
திணைமா - திணைமாலைநூற்றைம்பது.
திணைமொழி - திணைமொழியைம்பது.
தியாகராச - தியாகராசலீலை.
திரி - திரிகடுகம்.
திருக்கலம் - திருக்கலம்பகம்.
திருச்சந்த - திருச்சந்த விருத்தம்.
திருச்சிற் - திருச்சிற்றம்பலக் கோவையார்.
திருநூற் - திருநூற்றந்தாதி.
திருவா - திருவாசகம்.
திருவாய் - திருவாய்மொழி.
திருவாரூர்க் - திருவாரூர்க்கோவை.
திருவாரூர் நான்மணி - திருவாரூர் நான்மணிமாலை.
திருவால, திருவால. திருவிளை-திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்.
திருவிருத் - திருவிருத்தம்.
திருவிளை - பரஞ்சோதி முனிவர் திருவிளையாடல்.
திருவேங்கடத் - திருவேங்கடத்தந்தாதி.
திவ்ய - திவ்யப்ரபந்தம்.
தெய்வச் - தெய்வச்சிலையாருரை.
தே - தேவாரம்.
தொல் - தொல்காப்பியம்.
தொல். வி, தொல். சூ. வி - தொல்காப்பியச் சூத்திர விருத்தி.
ந - நச்சினார்க்கினியம், நச்சினார்க்கினியர்.
நம்பி - நாற்கவிராச நம்பியகப்பொருள்.
நரி - நரிவிருத்தம்.
நள - நளவெண்பா.
நற் - நற்றிணை.
நன் - நன்னூல்.
நாச்சியார் - நாச்சியார் திருமொழி.
நால்வர் - நால்வர் நான்மணிமாலை.
நாலடி - நாலடியார்.
நான்மணி - நான்மணிக்கடிகை.
நீதிநெறி - நீதிநெறிவிளக்கம்.
நீல - நீலகேசி.
நூற்றெட்டுத் - நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி.
நெடுநல் - நெடுநல்வாடை.
நேமி - நேமிநாதம்.
நைட, நைடத - நைடதம்.
பக் - பக்கம்.
பட்டினப் - பட்டினப்பாலை.
பதி - பதிகம்.
பதிற் - பதிற்றுப்பத்து.
பர - பரதம்.
பரி - பரிபாடல், பரிமேலழகர்.
பரிமேல் - பரிமேலழகருரை.
பழ - பழமொழி.
பழ. அந், பழமலை - பழமலையந்தாதி.
பன்னிரு - பன்னிரு பாட்டியல்.
பா - பாகதம்.
பாகவத - பாகவதம்.
பாண்டிக் - பாண்டிக்கோவை.
பி - ம் - பிரதிபேதம்.

பிரயோக - பிரயோக விவேகம்.
பிரபு - பிரபுலிங்கலீலை [காண்டம்.
பிரமோ, பிரமோத் - பிரமோத்தர
பு. வெ - புறப்பொருள்வெண்பா
மாலை.
புறநா - புறநானூறு.
பெரிய - பெரியபுராணம்.
பெரிய திரு - பெரியதிருமொழி.
பெரியாழ்வார் - பெரியாழ்வார் திரு
மொழி.
பெருங் - பெருங்கதை. [புராணம்.
பெருந்துறை-திருப்பெருந்துறைப்
பெருந். பார - பெருந்தேவனார்
பாரதம்.
பெரும் - பெரும்பொருள்விளக்கம்.
பெரும்பாண் - பெரும்பாணாற்றுப்
படை.
பேர் - பேராசிரியம், பேராசிரியர்.
பேரூர்ப் - பேரூர்ப்புராணம்.
பொருந - பொருநராற்றுப்படை.
பொன்வண்ணத் - பொன்வண்ணத்
தந்தாதி.
மணி - மணிமேகலை.
மதுரைக் - மதுரைக்காஞ்சி.
மயில்-மயிலேறும்பெருமாள்பிள்ளை
மயிலை - மயிலைநாதர், மயிலைநாத
மலைபடு - மலைபடுகடாம். [ருரை.
மாறன் - மாறனலங்காரம்.
மு - முற்றும்.
முத் - முத்தொள்ளாயிரம்.
முருகு - திருமுருகாற்றுப்படை.
முல்லைப் - முல்லைப்பாட்டு.
மூ - மூலம். [புராணம்.
மேரு, மேருமந்தர - மேருமந்தர
மேற் - மேற்கோள்.
யா. கா - யாப்பருங்கலக்காரிகை.
யா. வி - யாப்பருங்கலவிருத்தி.
வச்ச - வச்சணந்தி மாலை.
வளையா - வளையாபதி.
வாயுசங் - வாயுசங்கிதை. [யுரை.
வி-விகாரம், விசேஷவுரை, விருத்தி
விக்கிரம. உலா - விக்கிரமசோழ
னுலா.
வி. பா-வில்லிபுத்தூர் ஆழ்வார் பார
விநாயக - விநாயகபுராணம். [தம்.
வீர - வீரசோழியம்.
வெங். கோ - வெங்கைக்கோவை.
வைத் - வைத்தியநாததேசிகர்.

சிவமயம்

# ஆறும்பதிப்பின் முகவுரை

**நாரணன் என்னும் தேவும் நான்முகத் தவனும் முக்கட்**
**பூரணன் தானு மாகிப் புவிபடைத் தளித்து மாற்றி**
**ஆரண முடிவுந் தேரு அநாதியாய் உயிர்கட் கெல்லாம்**
**காரண னாய மேலோன் கழலிணை கருத்துள் வைப்பாம்.**

— கந்தபுராணம்

இந்நூலின் முதற்பதிப்பு என்பாட்டனாராகிய டாக்டர் ஐயரவர்களால் 1887-ஆம் ஆண்டிலும், இரண்டாம் பதிப்பு 1907-ஆம் ஆண்டிலும், மூன்றாம் பதிப்பு 1922-ஆம் ஆண்டிலும், நான்காம் பதிப்பும், ஐந்தாம் பதிப்பும் முறையே 1942, 1949-ஆம் ஆண்டுகளில் எனது தந்தையாராகிய ஸ்ரீ கலியாணசுந்தரையரவர்களாலும் வெளியிடப் பெற்றன. இந்நூலைப்பற்றிய செய்திகள் ஐயரவர்கள் எழுதியுள்ள முகவுரையால் நன்கு விளங்கும். இப்பதிப்பு ஐயரவர்களுடைய குறிப்புக்களைக்கொண்டு நல்ல முறையில் வெளிவருகின்றது.

சென்னைக் கிறிஸ்துவக் கலாசாலைத் தமிழாசிரியர் வித்வான் வி. மு. சுப்பிரமணிய ஐயரவர்களும், வித்வான் S. B. சாரநாதன் அவர்களும், பதிப்பு நன்கு வெளிவர உதவி புரிந்தமைக்கு நன்றி செலுத்துகின்றேன்.

சென்னை-5
12-5-57

**க. சுப்பிரமணியன்**



மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்திய கலாநிதி டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள்.

# முதற்பதிப்பின் முகவுரை



செந்தமிழ்மொழியிற் சிறந்துவிளங்கும் பழைய * காப்பிய மைந்த னுள் முந்தியதாகிய இந்தச் சீவகசிந்தாமணி என்பது திருத்தக்க தேவர் என்னும் சைனமுனிவரால் இயற்றப்பட்டது. இது பழைய இலக்கியவுரைகளிலும் இலக்கணவுரைகளிலும் உரையாசிரியர்களால் மேற்கோளாக எடுத்துக் காட்டப்பட்டுள்ள பிரமாண நூல்களுள் ஒன்று ; முற்காலத்து முதல் இடை கடை என்னும் முச்சங்கத்தும் எழுந்தருளியிருந்து தமிழாராய்ந்த தெய்வப் புலவர்கள் அருளிச்செய்த இலக்கியங்கள் போன்று செந்தமிழ்நடையிற் சிறந்துள்ளது ; வடமொழியில் வான்மீகம் போல எல்லா வருணனைகளும் தன்பால் அமையப் பெற்றிருத்தலின், மகாகாவியமென்று கூறப்பட்டிருத்தலன்றி, பிற்காலத்து அதிமதுரமான காப்பியங்கள் இயற்றிய மகாகவிகள் பலர்க்கும் இன்ன இன்னவற்றை இன்ன இன்னவாறு வருணித்துப் பாடுகவென அவ்வான்மீகம்போல வழி காட்டியதும் இந்நூலே யென்பர்.

இந்நூல் சீவகனென்னும் ஓரரசன் பிறந்தது முதல் வீடு பெற்றது இறுதியாகவுள்ள கதையைக் கூறும்.

இந்நூலால், அரசன் அமைச்சரைப் பலமுறை ஆராய்ந்து தெளியல் வேண்டுமென்பதும், பெண்வழிச் சேறல் பெருந்துயர் விளைக்குமென்பதும், தன்னாசிரியன் கட்டளைப்படியே எப்பொழுதும் ஒழுகல்வேண்டு மென்பதும், பகையை வெல்லக்கருதினோன் உரிய காலமும் இடமும் வாய்க்குமளவும் தன் எண்ணத்தை வெளிப்படுத்தாதிருத்தல் வேண்டு மென்பதும், பிறவுயிர்களுக்குத் துன்பம் வரின் உடனே தீர்த்தற்கு முயலல்வேண்டுமென்பதும், வருத்தும்படி நேரினுந் தனக்கு ஒருவாற்றானும் பகைவரல்லாதவரைச் சிறிதும் வருத்தலாகாதென்பதும், தந்தைதாயர் சொல்லைத் தலையாகக் கொள்ளல் வேண்டுமென்பதும், அறிவும் அன்பு முள்ள துணைவனிருந்தால் தானெண்ணியவற்றையெல்லாம் எளிதில் முடித்துக் கொள்ளலாமென்பதும், தமக்கு இன்பதுன்பங்கள் வந்தவிடத்து முறையே மகிழ்தலும் வருந்துதலுமின்றி எல்லாம் ஊழ்வினைப் பயனென்றெ எண்ணல் வேண்டுமென்பதும், எல்லாவுயிர்களிடத்தும் எப்

* காப்பியமைந்தாவன : சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், மணி மேகலை, குண்டலகேசி, வளையாபதி என்பன.

பொழுதும் அருளுடையனாதல் வேண்டுமென்பதும், சற்பாத்திரமறிந்து தானஞ்செய்தல் வேண்டுமென்பதும், தீவழிச் செல்வோரைக் காணின் இரங்கி உடனே அவரை நல்வழிப்படுத்த முயலல் வேண்டுமென்பதும், நன்றிமறவாதிருத்தல் வேண்டுமென்பதும் இவைபோல்வன பிறவும் நன்கு விளங்குகின்றன.

இந்நூலாசிரியர் இச்சரிதத்தை இன்ன நூலிலிருந்தெடுத்து யாம் பாடுகின்றேமென்று கூறாமையின், இதற்கு முதனூல் இன்னதென்று இந் நூலைக் கொண்டு நிச்சயிக்கக் கூடவில்லை; ஆயினும் வடமொழியில் க்ஷத்திர சூடாமணி, கத்திய சிந்தாமணி, ஜீவந்தர நாடகம், ஜீவந்தர சம்பு என நான்கு நூல்கள் உள்ளன; அவைகளெல்லாம் இச்சீவகன் சரிதமே கூறுகின்றன. * மஹாபுராணத்தின் ஒரு பாகத்தும், மணிப்பிரவாளமாகிய ஸ்ரீபுராணத்தின் ஒரு பாகத்தும் இச்சரிதம் கூறப்பட்டுள்ளது. அவற்றிற்கும் இதற்கும் கதையில் வேறுபாடுகளுண்டு. அந்நூல்களுள் க்ஷத்திரசூடாமணி என்பதை இதற்கு முதனூலென்று சைனர் கூறுகின்றனர். தமிழிற் சிந்தாமணிமாலை யென்று ஒரு நூல் வழங்குகின்றது. அது சுத்தத் தமிழ்நடையுள்ளதன்று.

இந்நூல் முதலிற் கடவுள் வாழ்த்து முதலியனவும் கதையைத் தொகுத்துக் கூறுவதாகிய பதிகமும் முறையே அமையப்பெற்று, பின்னர் நாமகளிலம்பக முதலிய பதின்மூன்று இலம்பகவுறுப்பாகப் பகுக்கப்பட்டுள்ளது. இதன் செய்யுட்டொகை, ௩கசசு; திருத்தக்கதேவர் இயற்றிய செய்யுள் இரண்டாயிரத் தெழுநூறேயென்று "முந்நீர்வலம்புரி" (3143) என்னுஞ் செய்யுளுரையில் நச்சினார்க்கினியர் எழுதியிருத்தலால், மற்றவைகள் பிறராற் செய்யப்பட்டனவென்று தோற்றுகின்றன.

இச்சீவகசிந்தாமணியை உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியருரையுடன் பல பிரதிரூபங்களைக் கொண்டு நன்குகப் பரிசோதித்து, எழுதுவோரால் நேர்ந்த வழுக்களை மாற்றி, பலர்க்கும் பயன்படும் வண்ணம் அச்சிடுவிக்க முயலும்படி சில வருடத்திற்குமுன், சேலம் ம-ா-ா-ஸ்ரீ இராமசாமி முதலியாரவர்கள் பலமுறை வற்புறுத்திக் கூறி, எனக்குத் தம்பாலிருந்த கையெழுத்துப் பிரதியையுங் கொடுத்தார்கள்.

யான் அவ்வாறு செய்தற்கு அநருகனாயினும், உலோகோபகாரிகளாகிய அவர்கள்சொல்லை மறுத்தற்கஞ்சியும், கல்விமான்களுக்குக் கருவூலம் போலும் இந்நூல் உரையுடனே நின்று நிலவுதல்குறித்தும் ஒருவாறு அவ்வண்ணம் செய்யலாமென்று துணிந்து முயன்றுவருகையில், இத்தமிழ் நாட்டுள்ள கல்வியறிவொழுக்கங்களான் ஆன்ற விவேகிகள் பலர் இம்முயற்சி இனிது பயன்படும்வண்ணம் தம்பாலுள்ள பழைய கையெழுத்துப் பிரதிகளை அன்போடு கொடுத்தார்கள். அவையனைத்தையுங் கைக்கொண்டு ஒப்புநோக்கி வந்தேன்.

---

* இம்மகாபுராணமும் ஸ்ரீபுராணமும் சைன சமயத்தாரியற்றிய பழைய நூல்கள்.

அப்பொழுது என்வேண்டுகோளுக்கிரங்கித் திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்து ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிகமூர்த்திகள் தங்கள் புத்தகசாலையிலிருந்த புத்தகங்களுள் எனக்கு வேண்டுவனவற்றையும், திருநெல்வேலி முதலிய பிறவிடங்களிலிருந்து வருவித்த சில பிரதிகளையும் கட்டளையிட்டார்கள். இம்முயற்சியில் யான் மனந்தளராவண்ணம் இடையிடையே அவர்கள் செய்துவந்த பேருதவிகள் பல.

எழுத்துஞ் சொல்லும் மிகுந்தும் குறைந்தும் பிறழ்ந்தும் திரிந்தும் பலவாறு வேறுபட்டுக் கிலமுற்றிருந்த இந்நூலுரைப் பழையபிரதிகள் பலவற்றையும் பலகால் ஒப்புநோக்கி இடையறாது பரிசோதனை செய்து வந்தபொழுது, கவிகளின் சுத்தவடிவத்தையும் உரையின் சுத்தவடிவத்தையும் கண்டுபிடித்தற்கும், உரையினும் விசேடவுரையின்னது பொழிப்புரையின்னதென்று பிரித்தறிதற்கும், மேற்கோள்களின் முதலிறுதிகளைத் தெரிந்துகோடற்கும், பொழிப்புரையை மூலத்தோடும் இயைத்துப்பார்த்தற்கும், பிழையைப் பிழையென்று நிச்சயித்துப் பரிகரித்தற்கும், பொருள்கோடற்கும் எடுத்துக்கொண்ட முயற்சியும் அடைந்த வருத்தமும் பல. அப்படியடைந்தும் சிலவிடத்துள்ள இசைத்தமிழ் நாடகத்தமிழின் பாகுபாடுகளும், மற்றுஞ் சில பாகமும் நன்கு விளங்கவில்லை. அதற்குக்காரணம் அவ்விசைத்தமிழ் நாடகத்தமிழ்நூல் முதலியவைகள் இக்காலத்துக் கிடையாமையே.

இந்நூலையும் இவ்வுரையையும் பின்னும் இரண்டொருமுறை பரிசோதித்தற்கு விருப்புடையனேனும், இவற்றை விரைவிற் பதிப்பித்துப் பிரகடனம் செய்யும்படி, யாழ்ப்பாணம் ம-ா-ா-ஸ்ரீ சி. வை. தாமோதரம் பிள்ளையவர்கள் பலமுறை தூண்டினமையால் விரைந்து அச்சிடுவிக்கத் துணிந்தேன்.

ஆயினும் புராதனமான தமிழ்நூல்களும் உரைகளும் பண்டைவடிவம் குன்றாதிருத்தல் வேண்டுமென்பதே எனதுநோக்கமாதலின், பிரதிகளில் இல்லாதவற்றைக் கூட்டியும், உள்ளவற்றை மாற்றியும், குறைத்தும் மனம்போனவாறே அஞ்சாது பதிப்பித்தேனல்லேன்; ஒருவகையாகப் பொருள் கொண்டு, பிரதிகளில் இருந்தவாறே பதிப்பித்தேன்; யாதொன்றும் செய்திலேன்; பிரதிகளிற் சிலவிடத்து வடமொழிப்பதங்கள் கிரந்தவெழுத்தாலே எழுதப்பட்டிருந்தமையின், அவ்வாறே பதிப்பித்தேன்.

இந்நூலில் ஆங்காங்குள்ள ஆருகதசமயக் கோட்பாடுகளை வீடூர் ம-ா-ா-ஸ்ரீ சந்திரநாத செட்டியாரவர்கள் எனக்கு விளங்கச் செய்தார்கள்; அடிக்கடி யான் பார்த்துக்கொள்ளும்படி சில சைனநூல்களும் கொடுத்தார்கள்.

புலவர்திலகர்களாற் பரிசோதித்தற்குரிய இந்நூலையும் இவ்வுரையையும் என்சிற்றறிவிற்கு எட்டியமட்டுமே ஒருவாறு பரிசோதித்து, எழுதுவோரால் நேர்ந்த வழுக்களைக் களைந்து, இயன்றவரை திருத்தமாகப்

பதிப்பித்தேனாதலின், இப்பதிப்பிற் காணப்படும் எழுத்துப்பிழை சொற்பிழை வாக்கியப்பிழை முதலியவற்றையும், அவற்றின் திருத்தங்களையும் தயைசெய்து விவேகிகள் தெரிவிப்பார்களாயின், அவர்கள் பேருதவி செய்ததாக வெண்ணி எழுமையும் மறவேனாகி அவற்றைப் பின்பு அச்சிற் பதிப்பித்துப் பலர்க்கும் பயன்படும்படி செய்வேன். விளங்காத மேற்கோள்களுள் ஏதாவது இன்ன நூலின் இன்ன பாகத்துள்ளதென்று காணப்படின், அதனையும் தெரிவிக்குமாறு அவர்களை வேண்டுகின்றேன்.

இப்புத்தகத்தை அச்சிடுவிக்கும் பொழுது யான் பொருட் கவலையடைந்து வருந்தாவண்ணம் கும்பகோணம், தஞ்சை, கோட்டூர், திரிசிரபுரம், யாழ்ப்பாணம், சென்னபட்டணம், திருநெல்வேலி, ஊற்றுமலை, சோழன்மாளிகை முதலிய இடங்களிலுள்ள, செல்வப் பொருளோடு கல்விப்பொருளும் ஒருங்குடைய கனவான்கள் பலர் கையொப்பஞ் செய்து முற்பணமளித்தார்கள். இக்காலத்தில் அவர்கள் செய்த அவ்வுதவியை யான் எக்காலத்தும் மறவாதிருப்பதன்றி அவர்களுக்கு என்னாற் செய்தற்குரிய பிரதியுபகாரம் யாது?

யான் எழுதியனுப்பும் மேற்பிரதிக்கு அச்சுப்பிரதி வேறுபடாவண்ணம், சென்னைத் திராவிடரத்நாகர அச்சுக்கூடத்திலிருந்து இவற்றைப் பலமுறை ஒப்புநோக்கிப் பேருதவி செய்துவந்த தேரழுந்தூர், ப்ரஹ்மஶ்ரீ சக்ரவர்த்தி இராஜகோபாலாசாரியரையும், திருமானூர், ப்ரஹ்மஶ்ரீ கிருஷ்ணையரையும் ஒருபொழுதும் மறவேன்.

ஒன்றுக்கும் பற்றாத சிறியேனை இம்முயற்சியிற் புகுத்தி நடாத்தி நிறைவேற்றியருளிய எம்பெருமானது திருவருளையும் குருவருளையும் எக்காலத்தும் சிந்தித்து வந்திக்கின்றேன்.

எனக்குக் கிடைத்த பிரதிகளுள் நச்சினார்க்கினியருரையோடு கூடிய சீவகசிந்தாமணிப் பிரதிகளாவன:—திருவாவடுதுறையாதீனத்து ஶ்ரீலஶ்ரீ சுப்பிரமணிய தேசிகமூர்த்திகள் பிரதி க; ஷெ ஆதீனத்து மஹாவித்துவான் ம-௱-௱-ஶ்ரீ மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையவர்கள் பிரதி க; திரிசிரபுரம் ம-௱-௱-ஶ்ரீ சி. தியாகராச செட்டியாரவர்கள் பிரதி க; யாழ்ப்பாணம் ம-௱-௱-ஶ்ரீ சி. வை. தாமோதரம் பிள்ளையவர்கள் பிரதி உ; சென்னை ம-௱-௱-ஶ்ரீ மழவை மகாலிங்கையரவர்கள் பிரதி க; ம-௱-௱-ஶ்ரீ அஷ்டாவதானம் சபாபதி முதலியாரவர்கள் பிரதி க; ம-௱-௱-ஶ்ரீ தி. க. சுப்பராய செட்டியாரவர்கள் பிரதி க; ம-௱-௱-ஶ்ரீ திரு. சின்னசாமி பிள்ளையவர்கள் பிரதி க; சேலம் ம-௱-௱-ஶ்ரீ இராமசாமி முதலியாரவர்கள் பிரதி க; உடையூர் ம-௱-௱-ஶ்ரீ சுப்பிரமணிய பிள்ளையவர்கள் பிரதி க; திருநெல்வேலி ம-௱-௱-ஶ்ரீ சாலிவாடீசுவர ஓதுவாரவர்கள் பிரதி க; ம-௱-௱-ஶ்ரீ ஈசுவரமூர்த்திக் கவிராயரவர்கள் பிரதி க; தூத்துக்குடி ம-௱-௱-ஶ்ரீ குமாரசாமி பிள்ளையவர்கள் பிரதி க; சிதம்பரம் ம-௱-௱-ஶ்ரீ தருமலிங்க செட்டியாரவர்கள் பிரதி க; தஞ்சை ம-௱-௱-ஶ்ரீ மருதமுத்து

உபாத்தியாயரவர்கள் பிரதி க; ம-௱-௱-ஸ்ரீ விருஷபதாச முதலியா ரவர்கள் பிரதி க; கூடலூர் ம-௱-௱-ஸ்ரீ விசயபால நயினரவர்கள் பிரதி க; வீடூர் ம-௱-௱-ஸ்ரீ சந்திரநாத செட்டியாரவர்கள் பிரதி க; ஆக உரைப்பிரதி—கக.

இவற்றுள் முழுதுமில்லாதனவும் விசேடவுரையில்லாதனவும் சில. மூலப்பிரதிகள் :—இராமநாதபுரம் ம-௱-௱-ஸ்ரீ பொன்னுசாமித் தேவ ரவர்கள் பிரதி க; சேலம் ம-௱-௱-ஸ்ரீ இராமசாமி முதலியாரவர்கள் பிரதி க; வீடூர் ம-௱-௱-ஸ்ரீ சந்திரநாத செட்டியாரவர்கள் பிரதி உ; ஆக மூலப்பிரதி—ச.

கும்பகோணம்,
அக்டோபர், 1887

இங்ஙனம்
வே. சாமிநாதையன்

# இரண்டாம் பதிப்பின் முகவுரை

“ ஆதியிற் றமிழ்நூ லகத்தியற் குணர்த்திய
மாதொரு பாகனை வழுத்துதும்
போதமெய்ஞ் ஞான நலம்பெறற் பொருட்டே.”

1887-ஆம் ஸ்ஃதத்தில் இந்நூலும் உரையும் பதிப்பிக்கப்பெற்று நிறைவேறிய பின்பு காலக்கிரமத்தில் எனக்குக்கிடைத்த ஏட்டுப்பிரதிகள்-களை; அவற்றாலும், செய்துவந்த பழைய நூல்களின் ஆராய்ச்சி முதலியவற்றாலும் இதன்மூல முதலியன அடைந்த திருத்தங்கள் பல; முன்பு விளங்காமலிருந்த மேற்கோள்களிற் பெரும்பாலன பின்பு விளங்கின; இவையும் ஸ்ரீபுராணத்திலுள்ள சீவகசரித்திரமும், பிறநூல்களிலும் இந்நூலிலுமுள்ள ஒப்புமைப் பகுதிகளைப் புலப்படுத்துவதாகிய சீவகசிந்தாமணி ஆராய்ச்சி விளக்கமென்பதும், மூலத்திலும் உரையிலும் உள்ள கடினமான பாகங்களின் பொருள்களைப் பெரும்பாலும் புலப்படுத்தும் விசேடக் குறிப்பும், அவ்விரண்டிலுமுள்ள அரும்பதங்கள், சிறந்த வாக்கியங்கள், விஷயங்கள், பழமொழிகள், அபிதானங்கள் முதலியவற்றைத் தெரிவிப்பதாகிய அரும்பத அகராதி முதலியன என்னும் பகுதியும், பிறவும் இப்பதிப்பில் நூதனமாகச் சேர்க்கப்பெற்றவை.

தமிழில் நல்ல பயிற்சியுள்ளவர்களுக்கு மிக்க இன்பத்தையும் படிப்பவர்களுக்கு நல்ல ஊக்கத்தையும் பயிற்சியையு முண்டுபண்ணுவதன்றிப் பண்டைக் காலத்திலிருந்த பெரியோர்களுடைய இயல்பையும் ஆராய்ச்சிவன்மையையும் மேற்கூறிய பகுதிகள் நன்கு புலப்படுத்தும்; தமிழ்ச்சுவையை நுகர்ந்து ஆனந்திப்பவர்களுக்கு இவை நல்விருந்தாக இருக்குமென்பது வெளிப்படை.

நூலும் உரையும் ஒரு வருடத்திற்கு முன்பே பதிப்பிக்கப்பெற்று நிறைவேறியும், ஆராய்ச்சி விளக்கம் முதலியவற்றைப் பதிப்பித்துச் சேர்த்தே புத்தகத்தை வெளிப்படுத்த வேண்டுமென்று வித்தியாவிநோதர்களாகிய பாலைக்காடு, ம-া-া-ஸ்ரீ ராவ்பகதூர் பா. ஐ. சின்னசாமி பிள்ளையவர்களும், சென்னை, Senior Veterinary Assistant ஆகிய ம-া-া-ஸ்ரீ வெ. ப. சுப்பிரமணிய முதலியாரவர்களும் இன்னும் சில அன்பர்களும் பலமுறை வற்புறுத்தினார்கள். அடிக்கடி நேர்ந்த தேக அசௌக்கியத்தாலும் பலவகையான வேலைகளாலும் அவற்றை ஒருவாறு செய்துமுடித்தற்கு இதுகாறும் தாமதமாயிற்று.

சில கையெழுத்துப் பிரதிகளில் அதிகமாகக் காணப்பட்ட பாடல்கள், உரிய இடங்களில் தனித்தனியே சேர்க்கப்பெற்றன. சில பயன்கருதி,

முதற்செய்யுள் முதல் எல்லாச்செய்யுட்களுக்கும் ஒன்று முதல் தொடர்ச்சியான எண்கள் போடப்பட்டுள்ளன.

இந்நூலின் முதற்பதிப்புப் புத்தகத்தையும் மேலே குறிப்பிட்ட ஏட்டுப் பிரதிகளுள் ஒவ்வொன்றையும் வைத்துக்கொண்டு அன்பர் களுடன் ஒப்புநோக்கி, பாடபேதங்களை உள்ளபடியே எழுதியும் எழுது வித்தும் பேருதவி செய்தவர், கும்பகோணம் நேடிவ் ஹைஸ்கூல் தமிழ்ப் பண்டிதராகிய ம-ா-ா-ஸ்ரீ ம. வீ. இராமானுஜாசாரியரவர்கள்.

இதனைப் பதிப்பிக்கத் தொடங்கிய காலமுதல் உடனிருந்து மிக்க உதவிசெய்தவர், மயிலாப்பூர் பி. எஸ். ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதராகிய ம-ா-ா-ஸ்ரீ இ. வை. அநந்தராமையரவர்கள்.

இதன் முதற்பதிப்புமுதல் சகாயஞ் செய்துவரும், சென்னை, நியூ யிங்க்டன் ஸ்கூல் மதபோதகாசாரியராகிய ம-ா-ா-ஸ்ரீ தி. அ. கிருஷ்ணையரவர்களுடைய உதவி இதற்கும் உண்டென்பதை நான் சொல்ல வேண்டுவதில்லை.

ஜைனமத ஸம்பிரதாயமான அநேக விஷயங்களை அன்புடன் விளங்கச் செய்தவர், ஜைனசாஸ்திரப் பண்டிதராகிய வீடூர் ம-ா-ா-ஸ்ரீ அப்பாசாமி நயினாரவர்கள்.

இங்ஙனம் உதவிசெய்தவர்களையும் கையெழுத்துப் பிரதிகளை ஈந்த வர்களையும் எப்பொழுதும் மறவாதிருத்தலன்றி அவர்களுக்கு யான் செய்தற்குரிய கைம்மாறு யாதுளது?

பிரதிகளிற் காணப்பட்ட பாடபேத முதலியனவும் இந்நூல் ஸம்பந்த மாக எழுதிவைத்திருக்கும் இன்னும் வேறு பலவகையான ஆராய்ச்சிக் குறிப்புக்களும் இதன் பிரயோக விளக்கமும் ஒழுங்குபடுத்தி எழுதப் பெறுமையால், இப்போது பதிப்பிக்கக்கூடவில்லை; காலம் வாய்க்கு மாயின், அவற்றைத் தனிப்புத்தகமாகப் பின்பு வெளிப்படுத்தலா மென்பது எனது கருத்து.

இதிற் காணப்படும் தவறுகள் என்னுடைய மறதி முதலியவற்றால் நேர்ந்தனவென்றெண்ணிப் பொறுத்துக் கொள்ளும்படி பெரியோர்களை வேண்டிக் கொள்கின்றேன்.

தோன்றாத்துணையாய் நின்று இங்ஙனம் நடத்தியருளுகின்ற ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேசருடைய பெருங்கருணையைச் சிந்திக்கின்றனன்.

இவற்றுள், முதலாவது பிரதியும் பதின்மூன்றாவது பிரதியும் உரியவர்களாலேயே எழுதப்பெற்றுள்ளவை; முதல் இரண்டுபிரதிகளும் மூலமும் பொழிப்புரையும் உள்ளவை. ௩ - ஆவது முதலிய பன்னிரண்டு பிரதிகளும், மூலமும் பொழிப்புரையும் விசேடவுரையுமுள்ளவை; கரு - ஆவதும், கசு - ஆவதும் மூலமட்டும் உள்ளவை; கஎ - ஆவது பிரதி யில், முக்கியமான பாடல்கள் மட்டும் எழுதப்பெற்றிருந்தன; அதன் முதற்பக்கத்தில், 'சிந்தாமணித்தெரிவு' என்ற பெயர் வரையப் பட்டிருந்தது.

## இப்பதிப்பிற்குக் கிடைத்த ஏட்டுப்பிரதிகள்

| எண். | செய்யுளளவு முதல். | இறுதி. | பிரதிக்கு உரியவர்கள் | பிரதி கிடைக்கும்படி செய்தவர்கள் |
|---|---|---|---|---|
| க. | 1 | 3145 | திருவாவடுதுறை ஆதீனத்து மஹாவித்துவான் ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரம் பிள்ளையவர்கள். | கும்பகோணம் காலேஜ் தமிழ்ப் பண்டிதராயிருந்த ஸ்ரீ சி. தியாகராச செட்டியாரவர்கள். |
| உ. | 2907 | ,, | கொழும்புத்துறை, தி. குமாரசாமி செட்டியாரவர்கள். | உரியவர்களே. |
| ங. | 2 | 1220 | தருமபுர ஆதீனத்துத் தலைவர்கள். | ம-া-ா-ஸ்ரீ ம. வீ. இராமாநுஜாசாரியரவர்கள். |
| ச. | 1428 | 2928 | ,, ,, | ,, ,, |
| ரு. | 13 | 723 | அழகிய சிற்றம்பலக்கவிராயரவர்கள், மிதிலைப்பட்டி. | ,, அப்பாப்பிள்ளையவர்கள், குன்றக்குடி. |
| சு. | 1412 | 2598 | ,, ,, | ,, ,, |
| எ. | 1963 | 3125 | செங்கோட்டைக் கவிராஜ பண்டாரமவர்கள். | ,, திரிகூட ராஜப்பக் கவிராயரவர்கள், மேலகரம். |
| அ. | 1342 | 1986 | கடையநல்லூர், முத்துகிருஷ்ண வாத்தியாரவர்கள். | ,, ,, |
| கூ. | 1 | 1556 | சென்னை, பச்சையப்பவாத்தியாரவர்கள். | ,, முத்துக்குமாரஸாமி முதலியாரவர்கள், சென்னை. |
| க0. | 1 | 1554 | வானமாமலைத் தாதர், கணக்கு, நாங்குனேரி. | உரியவரே. |
| கக. | 1412 | 2227 | சேலம், அப்பாசாமி பிள்ளையவர்கள். | ,, குருஸாமி பிள்ளையவர்கள், சேலம். |
| கஉ. | 1 | 1412 | திருநெல்வேலி, திருவம்பலத் தின்னமுதம் பிள்ளையவர்கள். | ,, வி. விசுவநாதசாஸ்திரிகள், திருவல்லிக்கேணி. |
| கங. | 1 | 1335 | திருநெல்வேலி வண்ணார் பேட்டை, திருப்பாற்கடனாதன் கவிராயரவர்கள். | ,, கவிராஜநெல்லையப்பப்பிள்ளையவர்கள், திருநெல்வேலி. |
| கச. | 2102 | 3145 | ம-া-ா-ஸ்ரீ அப்பாசாமி நயினாரவர்கள், வீடூர். | உரியவர்களே. |
| கரு. | 1 | ,, | சேலம், இராமசாமிமுதலியாரவர்கள். | உரியவர்களே. |
| கசு. | 1 | 2421 | சென்னை, பச்சையப்பவாத்தியாரவர்கள். | ம-া-ா-ஸ்ரீ முத்துக்குமாரஸாமி முதலியாரவர்கள். |
| கஎ. | 1 | 2380 | திருநெல்வேலி, அம்பலவாண கவிராயரவர்கள். | ,, கவிராஜநெல்லையப்பப்பிள்ளையவர்கள். |

முதலாவது இரண்டாவது பிரதிகளின் இறுதியில், 'இவ்வுரை யாசிரியர் கருத்தறியாது இக்காலத்தார் வேண்டாதனவற்றிற்கு வேண்டுவனவாகக் கருதி எழுதிய இடைவாசகங்கள் முடிக்குஞ்சொல்லோடு முடியாமையான் மிகையென்று விதப்புரைகளையும் நாட்டுவளங்களினும் நகரவளங்களினும் கதைகளினும் கூடிப் பாடியிட்ட பாட்டுக்களையும் சொல்வேறுபாட்டானும் பொருள் வேறுபாட்டானும் இலக்கணவழுவானும் வாய்பாட்டின் பேதங்களானும் கண்டு அவற்றைத் தள்ளி எழுதின சிந்தாமணியுரை நச்சினார்க்கினியம் முடிந்தது' என்னும் வாக்கியமும், ௬ - ஆவது பிரதியினிறுதியில், 'சைவராஜ குருவேதுணை' என்பதும், ௧௦ - ஆவது பிரதியினிறுதியில், '௯௨௦ - ஆம் ஆண்டு குரோதனஸ்ரீ சித்திரைமாஸம் ௧௫ - உமுதல், சிந்தாமணி, திருநெல்வேலி, தம்பாபிள்ளையன் அவர்கள் ஏடுபார்த்து எழுதின, ஸ்ரீவைகுண்டம், சிவசங்கரம் பிள்ளையவர்கள் ஏடுபார்த்து இராமாயணம் - திருவேங்கடம் எழுதுவித்து எழுதின ஏட்டின்படிக்கு முதற்புத்தகம் பிழைபார்த்துமுடிந்தது' என்பதும், ௧௨ - ஆவது பிரதியினிறுதியில், '௮௰ - ஆம் ஆண்டு சித்திரைமீ காரிமாறன் எழுதிமுடிந்தது' என்பதும், ௧௪ - ஆவது பிரதியினிறுதியில், 'பிரமோதூத நாமஸம்வத்ஸரம் கார்த்திகைமீ ௨௩-உ ஸௌமியவாரம் த்விதியை மிருக சீரிஷநக்ஷத்ரங்கூடின சுப தினத்தில், செந்நாநல்லூரில், ஆதிதீர்த்தேசுவர ஸ்வாமிஸன்னிதியில், சிந்தாமணி முத்தியிலம்பகம் உரையெழுதி ஸம்பூர்ணம்' என்பதும், ௧௫ - ஆவது பிரதியினிறுதியில், 'அர்த்தநாரிபண்டிதர்பாதபத்மம் துணை; ஆங்கீரஸஸ்ரீ சித்திரைமீ ௯-உ ஸோமவாரம், திருதியை உரோகிணி எழுத ஆரம்பம்; ஷை வருஷம் வைகாசிமீ ௨௯-உ புதவாரமும் தசமியும் இரேவதி நக்ஷத்திரமும் பெற்ற சுபதினத்திலே திருச்சிராப்பள்ளியிலிருக்கும் குமாரஸாமிவாத்தியார் குமாரர் வேலாயுதவாத்தியார் சேலத்திலிருக்கும் அட்டாவதானச் சொக்கநாதமுதலியாரவர்கள் (தஞ்சைவாணன்கோவையுரையாசிரியர்) மேலேடு பார்த்து எழுதியது' என்பதும், சில பிரதிகளினிறுதியில்,

'கைப்பிழைகண்டிடு கற்றுவல்லோரே' என்பதும்,

"ஓரா தெழுதினே னுயினு மொண்பொருளை
ஆராய்ந்து கொள்க வறிவுடையார் - சீராய்ந்து
குற்றங் களைந்து குறைபெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்"

என்னும் வெண்பாவும் எழுதப்பெற்றிருந்தன.

சென்னை,
25—12—1907

இங்ஙனம்
**வே. சாமிநாதையன்**

# மூன்றாம்பதிப்பின் முகவுரை

"ஓங்க லிடைவந் துயர்ந்தோர் தொழவிளங்கி
ஏங்கொலிநீர் ஞாலத் திருளகற்றும்—ஆங்கவற்றுள்
மின்னேர் தனியாழி வெங்கதிரோன் றேனையது
தன்னே ரிலாத தமிழ்."

இந்நூலின் இயல்பும் உரையின் இயல்பும் இதன்பின்புள்ள முகவுரைகள் முதலியவற்றால் நன்கு விளங்கும்.

இராமாயணத்தைக் கம்பர் அரங்கேற்றுகையில், "அள்ளிமீ துலகை வீசும்" (விபீடணன். கஙஙு) என்னும் பாடலிலுள்ள 'வெள்ளிவெண் கடலின்' என்ற பகுதியைக் கேட்ட புலவரொருவர், 'இது சிந்தாமணிப் பிரயோகமாக இருக்கிறது' என்று சொல்லியபோது கம்பர், 'சிந்தா மணியிலிருந்து ஓரகப்பை முகந்துகொண்டேன்' என்று விடை பகர்ந்தனரென்று பழைய பிரதியொன்றில் எழுதிய குறிப்பால் தெரிய வருகிறது. நாற்பொருளையுந் தெரிவித்தலின், இந்நூல் முடிபொருட் டொடர் நிலை என்று அடியார்க்கு நல்லார் குறிப்பித்திருக்கின்றனர் (சிலப். உ : ங - கக). பிரயோக விவேக நூலுடையார் வடமொழியிற் பிறந்தவண்ணமே சொற்களைத் தாம் தற்சமமாகக் கூறுவதற்குச் சிந்தா மணியை ஆதாரமாகக் கொண்டிருக்கிறார் (பிரயோக. சூ. உ௦, ஙஎ-உரையைப்பார்க்க). இவற்றால் கம்பர் முதலியவர்களுக்கு இந்நூலிலுள்ள நன்கு மதிப்பு வெளியாகின்றது.

ஏட்டுப் புத்தகங்களைச் சோதித்தபொழுது இரண்டு பழம்பிரதிகளில், "தெருளிற்பொருள் வானுலகு" (2872) என்ற செய்யுளின் உரைக்குப் பின் மூன்றுசெய்யுட்களின் உரைகள் மட்டும் மிகப் பிழைபட்ட வுருவத் துடன் எழுதப்பட்டிருந்தன. ஒரு பிரதியில் தனித்தனியேசெய்யுட் களுக்கு இடம் விட்டும் மற்றொன்றில் இடம்விடாமலும் அவ்வுரைகள் இருந்தன. அவ்வுரைகளுக்குரிய ங - பாடல்கள் வேறு எந்தப் பிரதி யிலும் கிடைக்கவில்லை. திருத்தமாக அவைகளும் பாடல்களும் கிடைத்த பின் வெளியிடப்படும்.

1907-ஆம் வருஷத்தில் இதன் இரண்டாம் பதிப்பு வெளிவந்த பின்பு கிடைத்த சில கையெழுத்துப் பிரதிகளாலும் செய்துவந்த நூல்களின் ஆராய்ச்சிகளாலும் இந்நூலும் இவ்வுரை முதலியனவும் சில சில திருத்தங்களையும் பொருட் பெருக்கத்தையும் விளக்கத்தையும் இப்போது அடைந்துள்ளன.

இரண்டாம் பதிப்பில் சீவக சிந்தாமணி யாராய்ச்சி விளக்கமென்ற பெயருடன் 41-பக்கங்களில் வெளியான பகுதி 'ஒப்புமைப் பகுதிகள்' என்ற பெயருடன் 113-பக்கங்கொண்டு இதில் வெளியிடப்பெற்றுள்ளது.

இப்படியே விசேடக்குறிப்பும், அரும்பத முதலியவற்றின் அகராதியும் இதிற் பெருக்கமடைந்திருக்கின்றன.

உரையாசிரியர்கள் அவ்வவ்விடங்களில் இந்நூலிலிருந்து மேற்கோளாக எடுத்துக்காட்டியிருக்கும் பகுதியைப் புலப்படுத்தும் 'பிரயோக விளக்கம்' என்பது இப்பதிப்பில் நூதனமாகச் சேர்க்கப்பெற்றுள்ளது.

தமிழ் நூற்சுவையை நுகர்வோர்க்கு இவை நல்விருந்தாகுமென்பது வெளிப்படை.

நூலாராய்ச்சி விஷயத்திற் பொருட்கவலை யிராதபடி பல வருடங்களாக உபகரித்து வருபவர்களும் ஸ்ரீ ஸேது ஸம்ஸ்தானாதிபதிகளும், மதுரைத் தமிழ்ச் சங்கத் தலைவர்களும், சென்னைச் சட்ட நிருபணசபையங்கத்தினர்களுமான கௌரவம் பொருந்திய மஹாராஜராஜஸ்ரீ பா. இராஜராஜேசுவரஸேதுபதி மஹாராஜா அவர்களுடைய வண்மை தமிழகத்தால் ஒரு காலத்தும் மறக்கற்பாலதன்று.

இந்நூல் மூலமும் உரையும் இம்முறை பதிப்பிக்கப்பெறுங் காலத்தில் ஒப்புநோக்குதல் முதலிய அரிய உதவிகளைச் செய்துவந்த சென்னை, இராசதானிக் கலாசாலைத் தமிழ்ப்பண்டிதர் பிரஹ்மஸ்ரீ இ. வை. அநந்தராமையரவர்களுக்கும், மயிலாப்பூர் பி. எஸ். ஹைஸ்கூல் முதல் தமிழ்ப் பண்டிதர் சிரஞ்சீவி, ம. வே. துரைசாமி ஐயருக்கும், சென்னை இராமகிருஷ்ண மிஷன் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர் சிரஞ்சீவி, கோ. சேஷாத்திரி ஐயருக்கும் நன்றி செலுத்துகிறேன்.

இந்நூல் சம்பந்தமாகத் தாம் பல நாளாகத் தேடித் தொகுத்து வைத்திருந்த குறிப்புக்கள் பலவற்றை ஷை அநந்தராமையரவர்கள் அன்புடன் உதவினார்கள்; இவ்வரிய உதவி மிகவும் கொண்டாடத் தக்கது.

தமிழ்நூலாராய்ச்சியிலேயே பெரும்பாலும் பொழுதுபோக்கிவரும் நண்பர் ம-ா-ா-ஸ்ரீ வெ. ப. சுப்பிரமணிய முதலியாரவர்கள் (Retired Superintendent, Veterinary Department) இந்நூலைப் படித்தபோது தாம் எழுதிவைத்திருந்த சில குறிப்புக்களை என் விருப்பத்தின்படி அனுப்பி யுதவினார்கள்.

இப்புஸ்தகத்தைத் திருத்தமாகவும், விரைவாகவும் அச்சிட்டுத் தந்த கமர்ஷியல் அச்சுக்கூடத்தாருடைய உதவி மிகவும் மெச்சத்தக்கது.

இப்பதிப்பிற் காணப்படும் பிழைகளைப் பொறுத்துக் கொள்ளும்படி விவேகிகளை வேண்டுகிறேன்.

"தூக்கும் பனுவற் றுறைதோய்ந்த கல்வியுஞ் சொற்சுவைதோய்
வாக்கும் பெருகப் பணித்தருள் வாய்வட நூற்கடலும்
தேக்கும் பசுந்தமிழ்ச் செல்வமுந் தொண்டர்செந் நாவினின்று
காக்குங் கருணைக் கடலே சகல கலாவல்லியே."

திருவேட்டீசுவரன் பேட்டை,
22—8—1922

இங்ஙனம்
**வே. சாமிநாதையன்**

# நூலாசிரியர் வரலாறு

இந்நூலாசிரியராகிய திருத்தக்கதேவருடைய காலம், இடம், அவரை ஆதரித்த பிரபுவின் பெயர் முதலியவற்றுள் யாதொன்றும் தமிழ் நூல்களால் வெளிப்படையாக விளங்கவில்லை. ஆனாலும், இந்நூலுரைத் தொடக்கத்தில் நச்சினார்க்கினியர், 'இத்தொடர்நிலைச்செய்யுளைத் தேவர் செய்கின்ற காலத்திற்கு நூல் அகத்தியமும் தொல்காப்பியமும்' என்று எழுதியிருத்தலால், இவருடைய *காலம் பழமையானதென்றுமட்டும் ஒரு வகையாகத் தெரிகிறது. [கடைச்சங்கத்தாருக்கு அகத்தியமும் தொல் காப்பியமும் இலக்கணமாயிருந்தனவென்பதை இறையனாரகப் பொருளுரை முதலியவற்றாலுணர்க]

"முந்நீர்வலம்புரி" (3143) என்னும் ஓம்படைச்செய்யுளின் உரையில், இந்நூலாசிரியரை, 'சோழகுலமாகிய கடலிலே பிறந்த வலம்புரி' என்று நச்சினார்க்கினியர் எழுதியிருத்தலால், இவர் சோழகுலத்திற் பிறந்தவரென்பதும் நச்சினார்க்கினியருரைச் சிறப்புப்பாயிரத்துள்ள, "வண்பெரு வஞ்சிப், பொய்யா மொழிபுகழ் மையறு சீர்த்தித், திருத்தகு முனிவன்" என்னும் வாக்கியத்தால், இவர் வஞ்சியென்னும் ஊரிலிருந்த பொய்யாமொழி யென்பவராற் புகழப்பெற்றவரென்பதும் வெளியாகின்றன.

மேற்காட்டிய 3143-ஆம் கவியாலும், "மூவாமுதலா" என்னும் கவியுரையினிறுதியில் எழுதப்பெற்றுள்ள, 'செம்பொன்' என்பதை முதலிலேயுடைய வாக்கியத்தாலும் இவராசிரியர் இவரை மதித்திருந்தமை புலப்படுகின்றது.

இவர் திருத்தகுமுனிவர், திருத்தகுமகாமுனிவர், திருத்தக்கமகாமுனிகள், தேவரென்றும் வழங்கப்பெறுவர்.

ஒருவர் தம்மைக் குறிப்பால் இகழ்ந்துரைத்துக்கொண்ட பழைய செய்யுளாகிய,

"திருத்தக்க மாமுனிசிந் தாமணி கம்பர்
விருத்தக் கவித்திறமும் வேண்டேம் - முருத்தக்க
கொங்குவேண் மாக்கதையைக் கூறேங் குறளணுகேம்
எங்கெழிலென் ஞாயி றெமக்கு"

என்பதனால், இவருடைய வாக்கின்பெருமை முதலியன விளங்குகின்றன.

---

* இவருடைய காலம் கி. பி. 900 அல்லது கி. பி. 900-த்துக்குப் பிந்தியதாக இருக்கலாமென்று செந்தமிழில் ம-ா-ா-ஸ்ரீ து. அ. கோபிநாதராவ், M. A. அவர்களும், தஞ்சைத்தமிழகத்தில் பிரஹ்மஸ்ரீ T. S. குப்புசாமிசாஸ்திரிகளும் ஆராய்ந்து எழுதிவெளிப்படுத்தியிருக்கிறார்கள். அவை விரிவஞ்சி இங்கே எடுத்துக் காட்டப்படவில்லை; செந்தமிழ், தொகுதி - ரு, பக்கம் - கூரு; தமிழகம், தொகுதி - 1, பக்கம் 120

இத்தமிழ்நாட்டிலுள்ள சைனர்களுள், கர்ணபரம்பரையாக வழங்கும் இவருடைய சரித்திரம் வருமாறு :—

இந்நூலாசிரியராகிய திருத்தக்கதேவர் சோழர்குலத்திலே யுதித்து உரிய பிராயத்தே வித்தியாரம்பஞ் செய்விக்கப்பெற்றுச் சிறிது கல்வி கற்ற பின்பு, நல்லாசிரியர்பால் அகத்தியம் தொல்காப்பியமுதலிய இலக்கண நூல்களையும், பழைய சங்கச்செய்யுட்களையும், அக்காலத்துவழங்கிய மற்ற நூல்களையும் ஐயந்திரிபற ஓதியுணர்ந்து, இப்படியே வடமொழியிலும் வல்லராய்ப் பின்பு தாம் மேற்கொண்ட ஆருகதசமயத்திற்குரிய நூல்களெல்லாவற்றையுங் கற்று, அவற்றிலே அதிபாண்டித்திய முடையராய், அன்பு அருள் வாய்மை அடக்க முதலிய நற்குணங்களனைத்தும் ஒருங்கே அமையப்பெற்று, ஆண்டில் இளையராயினும் அறிவின் முதியராய், இளமைப்பருவத்தே துறவறம் பூண்டு, தம்மாசிரியரை விட்டு நீங்காது அவர் கருத்தின்வழி ஒழுகுதலே தமக்குப் பெரும்பயனாகக் கொண்டு, அவ்வாறு அன்போடொழுகுவாராயினர். சிலநாட்சென்றபின், ஆசிரியருடன் பாண்டிவளநாட்டிலேயுள்ள மதுராபுரியையடைந்து அவ்விடத்தே சிலகாலம் அமர்ந்தனர்.

அங்ஙனம் அமரும்போது, திருத்தக்கதேவர், அம் மதுரைப்பதியிலேயிருந்த * சங்கப்புலவர்களின் புலமைகளை உணர்ந்து, அவர்களோடு கூடிப் பழகவிரும்பி, ஆசிரியர்பால் அநுமதிபெற்றுச் சென்று அவர்களோடு நாடோறும் பயிலுவாராய்த் தமிழ்மொழியிலுள்ள பழைய செய்யுட்களின் சொற்சுவை பொருட்சுவைகளை அவர்கள் எடுத்துக்கூறிப் பாராட்டத் தாமின்புற்றும், தாமும் அவ்வாறே எடுத்துமொழிந்து அவர்களை இன்புறுவித்தும் "தவலருந் தொல்கேள்வித் தன்மை யுடையார், இகலில ரெஃகுடையார் தம்முட் குழீஇ, நகலி னினிதாயிற் காண்பா மகல் வானத், தும்ப ருறைவார் பதி" என்றவாறே அவர்களோடு அளவளாவி அளவில்லாத மகிழ்ச்சியடைந்து, அவர்களால் நன்கு மதிக்கப்பெற்றிருந்தனர்.

அப்படியிருக்கும் நாட்களிலே ஒருநாள், அங்கேயுள்ளவர்கள் திருத்தக்க தேவரைநோக்கி, "ஆருகதசமயத்தாரிற் பாடும்புலவர் பலரும் துறவினை வலியுறுத்திப்பாடத் தெரிந்துகொண்டாரேயன்றிக் காமச்சுவையைப் பாராட்டிப் பாடத் தெரிந்துகொண்டாரல்லர். இக்காலத்து வழங்கும் காமச் சுவையையுடைய நூல்கள் பலவற்றுள்ளும் ஒன்றேனும் அவர் இயற்றியதாகக் காணப்படாமையே அதற்குத் தக்க சான்றும்" என்று சொல்ல, அதற்குத் திருத்தக்கதேவர், "இன்பச்சுவையைப் பாராட்டு

* இச்சங்கம் கடைச்சங்கமன்றென்பர்; இதனை, "இனி, பலவடுக்கிப் பொருட்டொடராய் அறம்பொருளின்பம் வீடென்பன விராய்ப் பொருள் வேறுபடவந்த தரவுகொச்சகம், பின்னுள்ளோர் செய்த சிந்தாமணி முதலியனவாம்" (தொல். செய். சூ. கருரு - ந.) என்பதும் வலியுறுத்துகின்றது.

தலில் அவர் வெறுப்புற்றிருந்தாரல்லது பாடத் தெரியாதிருந்தாரல்லர்" என்று கூற, அவர்கள், "அப்படியானுற், காமச்சுவை முழுதும்விளங்க அமைத்து, தேவரே! ஒரு நூலியற்றுதிர்" என்றுர்கள்.

திருத்தக்கதேவர் அங்ஙனம்பாடத்துணிந்து, தம்மாசிரியர்பாற் சென்று வணங்கி, நிகழ்ந்ததை விண்ணப்பஞ்செய்ய, ஆசிரியர் அவ்வாறு பாடுதற் கண்ணே தம்மாணுக்கர் வல்லுநராயிருத்தலை நன்குணர்ந்திருந் தாராயினும் மாணுக்கர் கருத்தை அளந்தறிய ஆலோசித்திருக்கும் பொழுது, அவ்விருவருக்கும் எதிரிலே, ஒருநரியானது ஓட அதனைக் கண்ட ஆசிரியர், மாணுக்கரை நோக்கி, "இந் நரிச்சாதித்தன்மையை ஆதாரமாகக்கொண்டு உமக்குத் தோற்றியவாறே ஒரு சிறிய நூல் இயற் றுதிர்" என்று சொல்ல, திருத்தக்கதேவர் அதனை ஆதாரமாகக்கொண்டு, யாக்கைநிலையாமை செல்வநிலையாமை முதலியவைகளெல்லாம் வெள் ளிடைமலைபோல் தெள்ளிதிற் புலப்படும்வண்ணம் விரைவில் * நரி விருத்தம் என்னும் ஒரு நூலியற்றி ஆசிரியருக்குக் காட்ட, ஆசிரியர் பெரிதும் வியப்புற்றுத் தம் மாணுக்கர் கருத்துத் துறவின்கண்ணே உறுதி கொண்டிருத்தலைநோக்கிக் கழிபேருவகையுற்று மாணுக்கரைப் பார்த்து, "சங்கப்புலவர்கள் கூறியவண்ணம் காமச்சுவை பெரிதும் விளங்கும்விதம் சீவகன் கதையை ஒரு பெருங்காப்பியமாக இயற்றுதிர்" என்றுகூறி, "அஃது இடையூறின்றி இனிதுமுடிக" என்று அருகக் கடவுளைப் பிரார்த்தித்து, "செம்பொன்வரைமேல்" (2) என்னுஞ் செய்யு ளொன்றியற்றி அதனுல் அக்கடவுளைத் துதித்து, "இச்செய்யுளைக் கடவுள் வாழ்த்தாகக் கொண்டு நீர் நூலியற்றுதிர்" என்று அக்கவியைத் திருத் தக்கதேவருக்கு அளித்தனர்.

திருத்தக்கதேவர் அச்செய்யுளையேற்றுச் சிரமேற்கொண்டு, தாம் "மூவா முதலா" (1) என்னுங்கவியாற் சித்தனைத் துதியா நிற்க, அக் கவியை ஆசிரியர் கேட்டு, "யான் கூறிய கவியினும் நீர் கூறிய கவி செவ் விதாயிருத்தலால், அதனை முதலிலே நிறுத்துக" என்று சொல்ல, திருத் தக்க தேவர் தம்மாசிரியர் கட்டளையை மறுத்தற்கஞ்சித் தாம் கூறிய சித்தசரணமாகிய "மூவா முதலா" என்னுங் கவியை முன்னும் ஆசிரியர் கூறிய அருகசரணமாகிய "செம்பொன் வரைமேல்" என்னுங் கவியைப் பின்னுமாக † வைத்துப் பாடத்தொடங்கி, இந்நூலை எட்டு நாளில் நிறைவேற்றி ஆசிரியருக்குக்காட்ட, ஆசிரியர் நோக்கிப் பெரிதும் வியந்து புகழ்ந்து, இந்நூல் நின்று நிலவுக" என்று ஆசிகூறி "முந்நீர்

* இந்நூல் சென்னை லெக்ஸிகன் கமிட்டியில், பண்டிதராகவுள்ள ம-ா-ா-ஸ்ரீ ராவ்சாகிப் மு. இராகவையங்காரவர்களால், செந்தமிழ்ப் பிரசுரம் உ௦-ஆவதாக அரும்பதவுரையுடன் பதிப்பிக்கப்பெற்றிருக் கின்றது.

† இவ்வரலாறு, முதற்கவியுரையின் இறுதியில் உள்ளது.

வலம்புரி" (3143) என்னுங் கவியால் ஓம்படை யுரைத்துத் தேவரை நோக்கி, "இனிச் சங்கப்புலவரிடஞ்சென்று அரங்கேற்றி வருதிர்" என்றனர்.

உடனே திருத்தக்கதேவர் சென்று பாண்டியராசனவைக்களத்திற் சங்கப்புலவர்களுடைய முன்பு இந்நூலை வாசித்துக்காட்ட, அவர்கள் கேட்டு, இந்நூல் சொல்வளம் சந்தவின்பம் செய்யுணடைமுதிர்ச்சி காமச்சுவை முதலியனவும் அலங்காரங்களுமுடைத்தாய், எவ்வெச்சாதியார்க்கும் காலம் இடம் முதலியவற்றிற்கும் ஏற்ற வருணனை முதலியன பெற்றிருத்தலைத் தெரிந்து வியப்புற்றுச் சிரந்துளக்கி, "இங்ஙனம் பாடுதல் யாவர்க்கும் அரிதரிது" என்று புகழ்ந்து நன்குமதித்து மிகப்பாராட்டிப் பெருமகிழ்ச்சியடைந்தனர்; அரசனும் அவ்வாறே புகழ்ந்து பாராட்டினன்; மற்றையோரும் மகிழ்ச்சியடைந்தனர்.

அப்படி நிகழ்ந்தபொழுது, ஆங்குள்ளாரிற் சிலர் ஐயமுற்று, "இத் திருத்தக்கதேவர் இளமைப்பருவந்தொடங்கித் துறவுபூண்டிருத்தல் மெய்ம்மையாயின், மற்றச்சுவைகள்போலக் காமச்சுவையை இவ்வாறு பாராட்டிப்பாடுதல் இவர்க்கு இயலுவதன்று; இந்நூலின்கண்ணோ அச்சுவை அதிகரித்துள்ளது; ஆதலின், இவர் சிற்றின்ப அனுபவமுடையராதல் வேண்டும்" என்று தம்முட் பேசிக்கொண்டனர்.

அதனைத் தேவர் தெரிந்து அவ்வனைவரும் காணும்படி, திரண்ட இரும்பின் கட்டியைத் தழலிற் பழுக்கக்காய்ச்சி வருவித்து, "யான் * பால சந்நியாசியாக விருத்தல் மெய்ம்மையாயின், இஃது என்னைச் சுடாதொழிக" என்று சூளுரைத்து, அக்கட்டியைத் தம்கையினால் தழுவியும் நாவாற் பரிசித்தும் தாம் யாதொரு துன்பமும் அடையாது இன்புற்றிருந்தனர்.

தேவர் அங்ஙனமிருத்தலை முன்பு ஐயமுற்றுப் பேசினோர் கண்டு அஞ்சி, "யாம் என்னகாரியஞ்செய்தேம்! யாம் என்ன காரியஞ் செய்தேம்!" என்று நடுநடுங்கி, அவரை வணங்கி, "யாங்கள் கருதிப்பேசிய பெருங்குற்றத்தைப் பொறுத்தருள்க" என்று பலமுறை இரந்து வேண்டிக்கொண்டனர். தேவர் அவர்களை நோக்கி, "நீவிர் எனது துறவொழுக்கத்தைப் பலரும் அறியச் செய்தீராதலின், எனக்குக் குற்றஞ்செய்தீரல்லிர்; இதுபற்றி நீவிர் அஞ்சன்மின்" என்று பல இனிய மொழிகள் கூறி, அவர்களது அச்சத்தை அகற்றினர்.

இவற்றையெல்லாம் பார்த்துக்கொண்டிருந்த சங்கப்புலவரும், பாண்டியராசனும் திருத்தக்கதேவரது துறவொழுக்கத்தையும், மற்ற மேம்பாடுகளையும் மிகவியந்து பாராட்டினார்கள்.

பின்பு தேவர் அவர்களிடத்து விடைபெற்றுச் சென்று தம்மாசிரியரிடத்தே ஆங்கு நிகழ்ந்தவற்றையெல்லாங் கூறி உடனுறைவாராயினர்.

---

* இவர் பாலப்பிரமசாரியென்றும்வழங்கப்பெறுவர்.

# நூலைப்பற்றிய சில குறிப்புக்கள்

சிந்தாமணியென்பது, இந்நூற்குத் தன்மையால்வந்த பெயரென்பர்; நன்னூலில், "முதனூல்" என்னுஞ் சூத்திரவுரையில், 'தன்மையாற்பெயர் பெற்றன சிந்தாமணி, சூளாமணி, நன்னூல் முதலாயின' என்று மயிலைநாத ரெழுதியிருத்தல் காண்க. பிறந்தவுடன் சீவகனை விசயை சிந்தாமணி (*311) யென்று பாராட்டினமையால், சிந்தாமணியென்பது முதலில் அவனுக்குப் பெயராய், அப்பால் அவன் சரித்திரமாகிய இந்நூலுக்காயிற்றென்று கூறுவதுமுண்டு: "முந்நீர் வலம்புரி" (3143) என்னும் செய்யுளில், இந்நூல், சிந்தாமணியென்னும் பெயரால் வழங்கப்பெற்றிருத்தல் காண்க. இப்பெயருள்ள நூல்கள் சில தமிழில் இருத்தலின், அவற்றினின்றும் வேறுபடுத்தித் தெரிவித்தற் பொருட்டே, 'சீவக' என்னும் அடைமொழியுடன் இந்நூற்பெயர் வழங்குவதாயிற்றென்று தெரிகின்றது. ஆனாலும் உரையாசிரியர்களாற்பெரும்பாலும் சிந்தாமணியென்றே வழங்கப்படும். புலவர் சிந்தித்தவற்றையெல்லாம் தருதலின், இது சிந்தாமணியென்று பெயர்பெற்றதென்று சிலர் சொல்வதுமுண்டு.

இதற்கு **மணநூல்** என்றும் ஒரு பெயர் வழங்குகின்றது; அதற்குக் காரணம், இதன் உறுப்பாகிய இலம்பகம் பதின்மூன்றனுள் ௩, ச, ரு, ௬, ௭, ௮, ௯, ௧௨ - இவற்றிற் சீவகன் காந்தருவதத்தை முதலிய மகளிரெண்மரைத் தனித்தனி மணஞ்செய்துகொண்டதும், உ-ஆம் இலம்பகத்தில் அவன் கோவிந்தையைத் தன்தோழனை பதுமுகனுக்கு மணஞ் செய்வித்ததும், ௧, ௧௦, ௧௧, ௧௩-இவ்விலம்பகங்களில் அவன் முறையே நாமகள், மண்மகள், பூமகள், முத்திமகளென்னுமிவரை மருவியதுமாக நூல் முழுவதும் மணங்களே கூறப்படுதல். இதனை,

368. "குழைமுக ஞான மென்னுங் குமரியைப் புணர்க்க லுற்றார்"

369. "திருந்துபொற் கண்ணி யாற்குச் செல்வியைச் சேர்த்தினாரே"

370. "நாமக ளலத்தை யெல்லா நயந்துடன் பருகி"

2326. "பூமிதேவி.........ஏக மாக நுகரிய வெய்தி னானே"

2368. "பொருவில் பூமகட் புணர்ந்தனன்"

3117. "கேவல மடந்தை யென்னும்.........பொன்னொரு பாக மாக"

என்பனவற்றாலும் இவற்றின் உரைகளாலும் அறிந்துகொள்க.

இந்நூல் சைனர்களாற் பூசித்துப் பாராயணஞ் செய்யப்பெற்று வருகின்றது. புறத்திரட்டு முதலிய சில தொகைநூல்களில் இதன் செய்யுட்கள் இடத்திற்குத் தக்கபடி தெரிந்தெடுத்துச் சேர்க்கப் பெற்றுள்ளன.

---

* இங்கிலீஷ் எண்களெல்லாம் சிந்தாமணிக்கவிகளைத் தெரிவிப்பவை.

இதனையும், இதற்காக மற்றச் சைன நூல்கள் சிலவற்றையும் ஆராய்ந்தபொழுது பல வடமொழிகளும் பிராகிருதமொழிகளும் தமிழில் விரவி வழங்குவதற்குக் காரணம் இதுவும், அந்நூல்களுமென்றே தோற்றியது.

ஒரேவிதமாகவன்றி எதுகை வேறுபட்டுவந்த செய்யுட்களும் இதிற் சில சில உள்ளன : 172, 191, 533, 840, 1121, 1320, 1359, 1946, 2253, 2307, 2309-ஆம் கவிகளைப் பார்க்க.

நச்சினார்க்கினியத்திற்கு முன்பு இந்நூலுக்குப் பழைய வுரை யொன்று இருந்ததாகச் சொல்லுவதுண்டு; இதனை, 'விளைகபொலிக ஒருவழக்கென்பாருமுளர்' (260) எனவும் 'இனி, தீர்த்தங்கரரில் ரிஷபஸ்வாமிமகன் பரதராச சக்கரவர்த்தியென்று முரைப்பர்' (366) எனவும், 'கண்டத்திணுவியாரென்பதற்குக் கட்டிமுதலிய உறுப்பாற் புகைத்த அகிற்புகையை யுடையாரென்று முரைப்பர்' (1434) எனவும், 'இனி, அழுகுரலென்னுங் கவியில், உழிதருபெருநிதி யென்றதனைத் தோழராக்கி, 'இவரைக் கட்டியங்காரன் கந்துக்கடற்குக்கொடுத்தா னென்பார்க்கு இக்கவியில் எங்கடமர் தோழரென வீந்தாரென்றல் பொருந்தாமையுணர்க' (1793) எனவும் 'இனி முழுமுற்றும் ஒரு சொல்லாக்கியுமுரைப்ப' (1870) எனவும், 'இனி, நடந்தாரென்று, பாடமோதி......தான்நூற்றைவரோடும் போனானென்பாருமுளர்' (1933) எனவும், 'சாகரதத்தன் பெயரென்பாருமுளர்' (2705) எனவும் வருவன வற்றாலறிக.

இந்நூற்கதைகள் பழைய உரைகளிலும் நூல்களிலும் எடுத்தாளப் பட்டு வந்துள்ளன; அவற்றுட் சில வருமாறு:—

## (உரை)

'நாய் தேவனுயிற்று' (தொல். சொல். சூ. ௪௦௨. சே.)

'தொழிலின் சிறப்புக்கு ஆசைப்பட்டுக் கட்டியங்காரனைப்போல் வேறுபடு மாந்தர் பலர்' (திருக்குறள், ௯௭௪, பழையவுரை)

'கட்டியங்காரன்போல அரசவின்பத்தினை வெஃகி விகாரப்படுவ தல்லது அதனைக் குற்றமென்றொழிந்து தம்மியல்பில் நிற்பார் அரிய ராகலின், வேறுகுமாந்தர் பலர் என்றார்.'

'நம்பன்சிலைவாய்.........அரசும்மிலை (809) எனப் பதுமுகன் கூறினாற்போல, ஒருவீரன் தன்மறம் அரசன்மேல்வைத்துக் கூறியவாறு'
(திருக்குறள், ௯௭௪, ௭௭௪, பரிமேல்.)

(நூல்)

“ சீவகன் மஞ்சரியைத் தாழ்த்துரைப்பச் சீறினளே
தூவாய்க் குணமாலை சோமேசா—ஆவகையே
தன்னை யுணர்த்தினுங் காயும் பிறர்க்குநீர்
இந்நீர ராகுதி ரென்று ”

(சோமேசர் முதுமொழிவெண்பா, கஙஉ)

“ சச்சந் தனையழித்துக் கொண்டான் றனியமைச்சன்
வைச்ச வரசை வடமலையே—நிச்சம்
எனைவகையாற் றேறியக் கண்ணும் வினைவகையால்
வேறுகு மாந்தர் பலர் ”

“ தோழமை கொண்ட சுதஞ்சணனாற் சீவகனும்
வாழுமுயிர் பெற்றான் வடமலையே—தாழா
துடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
இடுக்கண் களைவதா நட்பு ”

(வடமலைவெண்பா, ரு௨, எக)

“ சுரமஞ் சரிவிடுத்த சுண்ணம் பழித்த
அருமந்த சீவகனும் ”

(வருணகுலாதித்தனுலாமடல், கண்ணி, கஙச)

“ காவிநோய் செய்தகருங் கயற்கண் மாதரார் ” என்பது சிந்தாமணி (தக்க, 380, உரை)

“ சீவகனுக் கன்றொருபெண் சிங்கமொரு கன்றினும்
பாவனைபோ லேயெழுதிப் பக்கத்தில்—ஓவியமாக்
காரானை யொன்றெழுதிக் காட்டவரிக் கன்றுதுள்ளிப்
போராடிப் பாய்ந்தகதை பொய்யலவே ”

(கூளப்பநாயகன் விறலிவிடுதூது, கண்ணி, உ0ங - ச)

“ பாராளுஞ் சீவகர்கோன் பல்லவதே யத்தனுகச்
சீரால் விருந்தமைத்த சேவகனும் ”

(சிவந்தெழுந்தபல்லவராயனுலா)

* " சீவகன் றந்தை முயற்சியை நீத்த செயலினன்றோ
பூவல யத்தைப் புரப்பது விண்டனன் பொற்கொடியே
தேவன் மயில்வெற்பிற் றம்வீடு காக்குந் திறமிலனூர்
காவல ரென்பதெ னென்றேத னல்ல கருத்தல்லவே"

(மயூரகிரிக்கோவை, சகூஉ)

இந்நூற்பெயரைச் சிலேடைவகையில் அமைத்துப் பாராட்டிய நூல்கள் சில; அந்த நூற்பகுதிகள் வருமாறு :—

† " மந்தா கினியணி வேணிப் பிரான்வெங்கை மன்னவநீ
கொந்தார் குழன்மணி மேகலை நூனுட்பங் கொள்வதெங்ஙன்
சிந்தா மணியுந் திருக்கோ வையுமெழு திக்கொளினும்
நந்தா வுரையை யெழுதலெவ் வாறு நவின்றருளே"

(வெங்கைக்கோவை, க0எ)

" வந்தென்றுஞ் சிந்தா மணியா யிருந்தவுனைச்
சிந்தென்று சொல்லியநாச் சிந்துமே" (தமிழ்விடு தூது, எஉ)

" ..........................................சிந்தா
மணிகொடையின் மிக்கதென்பார் வண்கொடையு முன்பேர்
அணியும் பெருமையினு லன்றோ" (தமிழ்விடு தூது, அ௫)

" ..........................................முந்தக்
குணமாலை ருக்குமணி கொண்டமய நீர
மணமாலை கிள்ளைதர வாழ்ந்தார்" (மான்விடு தூது, ௫சு)

" ..........................................அடுபோர்
மறந்தரு சீவகனுர் மங்கையரிற் றத்தை
சிறந்ததுநின் பேர்படைத்த சீரே."

(அழகர்கிள்ளைவிடு தூது, க0)

" சிந்தா மணியாஞ் சிலப்பதிகா ரம்படைத்தான்
கந்தா மணிமே கலைபுனைந்தான்—நந்தா
வளையா பதிதருவான் வாசவனுக் கீந்தான்
திளையாத குண்டலகே சிக்கும்—வளையாழி"

(திருத்தணிகையுலா, ௫உசு - எ)

இந்நூற் செய்யுணடையைப் பரிமேலழகர் திருக்குறளுரையில் அங்கங்கே வசனநடையாக அமைத்திருக்கின்றனர்; அவற்றுட் சில வருமாறு :—

---

* இது பாங்கி பிரிவுடம்படுத்தல்.

† இது பாங்கி தலைமகளவயவத்தருமை சாற்றல்.

* (உஎ௬) 'அதன் விளேவின்கண் அந்தோ விணையேயென்றழுவராத லின்' (2625)

(௩உ௦) 'உயிர்நிலத்து விணைவித்திட்டார்க்கு விளேவும் அதுவேயாக லின்' (2762)

(ச௦எ) 'உருவின்மிக்கதோருடம்பது பெறுதலு மரிதாகலான்' (2752)

(ச௬௦) 'மோதிமுள்ளொடு முட்பகை கண்டிடல், பேதுசெய்து பிளந் திடலென்பவை' (1920)

(௬உச) 'பகடு, மருங்கொற்றியும் மூக்கூன்றியும் தாடவழ்ந்தும் அரிதினுய்க்குமாறுபோல' (2784)

(௬௯அ) 'ஒளி - உறங்கா நிற்கவும் தாம் உலகங்காக்கின்ற அவர் கடவுட்டன்மை' (248)

மிக்கதுறவியென்று புகழப்படும் திருத்தக்கதேவர் இந்நூலிற் பல வகைச் சுவைகளே அமைத்திருத்தலேயும் முன்பு ஸ்ரீ அநபாயசோழ மகாராஜா இந்நூலேக் கற்றும் கேட்டும் தம்முடைய சமயக்கொள்கையை முதலில் மறந்திருந்தாரென்பதையும் நோக்கும்பொழுது, சிறந்தகவிகள் தம்மவரன்றி ஏனேயோரும் அறிந்து நடத்தற்பொருட்டுத் தங்கள் சமயக் கொள்கைகளே இடையிடையே விரவுவித்துப் பலவகைநயங்களுடன் நூலியற்றுவாரென்றும் அவற்றைப் படிப்போர்களிற் சிலர் தங்கள் சமயக் கொள்கைகளே மறந்தொழிந்து அவ்வழியே செல்லத்துணிவாரென்றும் பெரியோர்கள் கூறுதல் வலியுறுகின்றது; ஸ்ரீ உமாபதிசிவாசாரியர் அருளிச்செய்த திருத்தொண்டர்புராண வரலாற்றில், க௦-ஆவது செய்யுள் முதலியவற்றையும், குளத்தூர்ச் சோமேசர் முதுமொழி வெண்பாவில் உ௦-ஆவது செய்யுளேயும் பார்க்க.

நச்சினர்க்கினியரையன்றி அடியிற் குறிப்பிட்ட உரையாசிரியர்கள் இந்நூலே எடுத்தாண்டிருக்கிருர்கள் :—

அடியார்க்குநல்லார், உரையாசிரியர், குன்றத்தூர் அட்டாவதானம் சொக்கநாத முதலியார், சிலப்பதிகார அரும்பதவுரையாசிரியர், தக்க யாகப்பரணி உரையாசிரியர், திருக்குருகூர்ச் சுப்பிரமணிய தீக்ஷிதர், திருக்குருகைப் பெருமாள் கவிராயர், திருநூற்றந்தாதியுரையாசிரியர், திருநெல்வேலிச் சங்கர நமச்சிவாயர், திருநெல்வேலி மயிலேறும் பெருமாள் பிள்ளே, திருவாரூர் வைத்தியநாதநாவலர், திருவாவடுதுறைச் சாமிநாததேசிகர், திருவாவடுதுறைச் சிவஞானமுனிவர், தென்திருப் பேரைக் காரிரத்தினகவிராயர், நாற்கவிராய நம்பியகப்பொருள் உரை யாசிரியர், நீலகேசிவிருத்தியுரையாசிரியர், நேமிநாத வுரையாசிரியர், பரிமேலழகர், புறநானூற்றுரையாசிரியர், மயிலேநாதர், யாப்பருங்கலக் காரிகையுரையாசிரியர், யாப்பருங்கலவிருத்தியுரையாசிரியர்.

---

தமிழெண்கள் திருக்குறளேத் தெரிவிப்பவை.

# விசேடக் குறிப்பு

2. பொன் பிதிர்வு : " மணிமுடி யழகழிந்து பொற் பிதிர் படவுதிர் பட" (வி. பா. 13-ம் போர். 122). வெம்பல் - விரும்பல்; சீவக. 410, 1985.

3. சொல் - புகழ்; கம்ப. மிதிலைக். 105. பகை நண்பொ டில்லான்: குறள், 4.

5. முந்நீர் : " மும்முறை நீர் " (கம்ப. அதிகாய. 21)

7. வாடுதல் - குறைதல் ; " வாடிடா தோங்கு மலகில் வண்புகழ் " (திருவால. நகர. 1)

11 : 4. (பி - ம்.) ' நஞ்சசற்ற '

40. தழங் குரல்; சீவக. 378; நாலடி. 339.

45. தொழுது வித்துவார் : " கழனி வாழ்கென வான்முளை வித்து நர் " (நைடதம், நாடு. 5)

54. மீன்கணின் அளவு : மீன்கணற்றதன் சுனையே " (புறநா. கoக : 10). களிறுமாய் கழனி : சீவக. 1617.

57. பாளைவாய் கமுகு : " பாளைவாய்க் கமுகின் றேனும் " (கம்ப. நாடு. 9)

59. போர்பு = போர்வு - நெற்கதிர்ப் போர் ; ஐங்குறு. க ; புறநா. உoக.

111. அகிற்புகை இருள் : திருவிளை. நகரப். அஎ.

120. பூத்தலை : " மின்னன் மாண்ட, கவிரலர் பூத்த சென்னி வாரணம் " (கல். 2 : 27 - 8)

145. கொங்கு விம்மு கோதை : நைடதம், கைக். 1.

171. வீற்றுத் தெய்வம் - திரு : ' மூலமேற்றேன்றும் வீற்றுத் தெய்வம் '

179. ஏழடி வருதல் : பொருந. 166. (சிலப். உ : 69-70 அடியார்.)

234. எந்திர வூர்தி : " என்றலு மவனு மாங்கோ ரெந்திர வெகின மூர்ந்து சென்றனன் " (வி. பா. முகூர்த். 4)

288. இமைத்தல் அச்சக்குறி : " துணுக்கென விமைத்தனர் திசைகள் காப்பவர் " (வி. பா. 14-ம் போர். 201). " தூமித்திருள் குருதி யொள்வாள் சுடரெழ விதிர்ப்ப நோக்கி, இமைத்தலும் வளவர்கோனை வெருவனீ யேகுகென்றான் " (நைடதம், போர்புரி. 43)

386. வலம்புரி.........மாமணி யீன்றதென்ன : " வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பும் " (ஆத்திரையன் பாயிரம்)

415. சேனையுள் நிமித்திகன் : கம்ப. பரசுராம. 6.

730. பருந்தும் நிழலும் : " பருந்தொடு நிழல்சென்றென்ன வியலிசைப் பயன்றுய்ப் பாரும் " (கம்ப. நாடு. 15)

745. இடை நைதல் : " அஞ்சன மெழுத லாற்று தம்மவோவென்று நையும், வஞ்சிநுண் ணிடையாய் " (நைடதம், சுயம். 165)

892. வண்டின் சாதிகள் : கம்ப. உலாவியல். 21; நைடதம், நாடு. 13.

894. வண்டு சுண்ணம் உண்ணுதல் : "வண்டுணக் கமழுஞ் சுண்ணம் " (கம்ப. நீர்விளை. 5)

932. மரகத வொளியை மான் புல்லென்று கறித்தல் : "மரகத மணியின், இழைத்தசெய் குன்றின் பைங்கதிர் 'பொன்னிலத் தெய்த ... ....மானினங்கள், தழைத்த புல்லென விழைவொடு தனித்தனி கறிக்கும்" (நைடதம், நகரப். 6)

968. குலிகநீரை வீசுதல் : "கூடியார் புனலாடப் புணையாய மார் பினில், ஊடியா ரெறிதர வொளிவிட்ட வரக்கினை" (கலித். எஉ : 15-6)

1033. மருந்தின் சாயல் : சீவக. 8.

1036. 1-2. ஒப்பு : "வாவி யுறையு மடவனமே யென்னுடைய, ஆவி யுவந்தளித்தா யாதியால்" (நள. சுயம். 50)

1327. மாலை வாடின......தோளியே : "கண்ணிமைத்த லாலடிகள்" (நள. சுயம். 153)

1414. மைபட்டன்ன மாமுக முசுக்கலை : "மைம் மெழுக் கெறிந்த முகத்திள மந்தி" (கூர்ம. சம்பு. 33)

1471. நிலந்தினக் கிடந்த நிதி : கூர்ம. கண்ணன் மணம். 248.

1508. அரவு மணியிழந்து அலமரல் ; "மணியிழி யரவின் மாழ்கி" "இழந்தமணி புற்றர வெதிர்ந்ததென லானாள்" (கம்ப. தைல. 63, உருக். 65)

1532. வெண்ணெய்க் குன் றெரியுறல் : "வெண்ணெயின் குன்றந் தீயால் வெதும்புகின் றதனே டொத்தான்" (சூளா. கல்யாணச். 194)

1651. குருதிக் காந்தள் : கூர்ம. பிலக்க. 16

1656. பாம்பு பைத்தாங் கனைய : "பாம்பு பைத்தாவித் தென்ன" (கூர்ம. பிலக்க. 52)

1871. அசதியாடல் : கம்ப. உண்டாட்டு, 24.

1896. ஒப்பு. வி. பா. வாரணாவத. 120.

1988. மாலையால்யாத்தல் : சீவக. 2665; "குறுகலென் றொள் ளிழை கோதைகோ லாக, இறுகிறுக யாத்துப் புடைப்ப" (பரி. கூ : 39-40)

2002. ஆசுமன் பிலாத புன்பெண் கூந்தல்யானனவ லென்றான் : "பல்லிருங் கூந்தன் மகளிர் ஒல்லா முயக்கிடைக் குழைகவென் றோரே" (புறநா. எ௲ : 13-4)

2020. குமரியாட : வி. பா. தீர்த்த. 22.

2026. தமிழ் - இனிமை ; "வண்டுதமிழ்ப் பாட்டிசைக்குந் தாம ரையே" (கம்ப. பம்பைப். 29)

2286. அம்புபெய் தூணி யொத்தான் : "அகன் மார்புந் தோளுங் கொழுங்கணைத் தூணி யென்ன, எய்துவிற் சாம்பன் றிண்டோ ளெறும் வலி காட்டி னானே" (கூர்ம. கண்ணன்பூமி. 50)

2478. சாந்தால வட்டம் வீசிக் குளிர்ப்பித்தல் : சீவக. 2615; பெருங். 2. 18 : 109-15.

2481. எய்த்து - அறிந்து ; "கராமலை யத்தளர் கைக்கரி யெய்த்தே, அராவணை யிற்றுயில் வோயென" (கம்ப. திருவவ. 118)

2666. அந்துகி னனைதலின் : நைடதம், புனல் விளை. 17.

2686. "செந்நெருப்புணு மெலிமயிர்க் கம்பலம்" (கூர்ம. சம்பு. 37)

2845. சீவக. 1436.

## இந்நூல் உரையாசிரியராகிய

# நச்சினார்க்கினியர் வரலாறு

எவனுலை வாயிடைவந் தமுதவா யுடையனென வியம்பப் பெற்றோன்
எவன்பண்டைப் பனுவல்பல விறவாது நிலவவுரை யெழுதி யீந்தோன்
எவன்பரம வுபகாரி யெவனச்சி னார்க்கினிய னெனும்பே ராளன்
அவன்பாத விருபோது மெப்போது மலர்கவென தகத்து மன்றே.

* "தொல்காப் பியத்திற் றெருத்த பொருளனைத்தும்
எல்லார்க்கு மொப்ப வினிதுரைத்தான்—சொல்லார்
மதுரைநச்சி னார்க்கினியன் மாமறையோன் கல்விக்
கதிரின் சுடரெறிப்பக் கண்டு."

பாண்டிமண்டலசதகம்

† "கரைபெற்ற தோர்பஞ்ச லட்சண மானதொல் காப்பியமும்
தரைமுற்றும் போற்றிய சிந்தா மணியுந் தமிழ்ச்சங்கத்தில்
நிரைபெற் றுயர்பத்துப் பாட்டும் விளங்க நிசவுரையை
வரைநச்சி னார்க்கினி யன்னையன் பாண்டிய மண்டலமே."

இந்நூலின் உரையாசிரியராகிய ஆசிரியர் நச்சினார்க்கினியர் பாண்டிவளநாட்டுள்ள மதுராபுரியிற் பிராமணவருணத்திற் பாரத்துவாச கோத்திரத்திற் பிறந்தவர். தமிழ்ப்பாஷையிலுள்ள பலவகையான எல்லா நூல்களிலும் அதிபாண்டித்தியமுடையவர்; சைவசமயத்தினர்; இவர் இன்னராதல், "வண்டிமிர் சோலை மதுரா புரிதனில், எண்டிசை விளங்க வந்த வாசான், பயின்ற கேள்விப் பாரத் துவாசன், நான்மறை துணிந்த நற்பொரு ளாகிய, தூய ஞான நிறைந்த சிவச்சுடர், தானே யாகிய தன்மை யாளன்" என்னும் உரைச் சிறப்புப்பாயிரத்தால் விளங்கும். சிவதலங்களுட்சிறந்த சிதம்பரத்தினது திருநாமங்களாகிய, 'திருச்சிற்றம்பலம்', 'பெரும்பற்றப்புலியூர்' என்பவற்றை முறையே ஆறெழுத்தொருமொழிக்கும் ஏழெழுத்தொருமொழிக்கும் உதாரணமாக இவர் தொல்காப்பியம் எழுத்ததிகாரத்து மொழிமரபில், "ஓரெழுத் தொருமொழி" (கஉ) என்னுஞ் சூத்திரத்து விசேடவுரையிற் காட்டியிருத்தலாலும் சைவசமயத்துச் சிறந்த நூல்களாகிய திருவாசகம் திருச்சிற்றம்பலக் கோவையார் ‡ திருவுலாப்புறமுதலியவற்றினின்றும் தமது உரைகளிற் பல விடங்களில் இலக்கிய இலக்கணப் பொருள்களுக்கன்றித் தத்துவப்பொருளுக்கும் மேற்கோள்கள் எடுத்துக்காட்டியிருத்தலாலும்,

* இன்னும் இவரைப்பற்றிய உரைச்சிறப்புப்பாயிரங்களாக உள்ள செய்யுட்களை, இப்புத்தகத்தின் கூஉஉ-ஆம் பக்கமுதலியவற்றிற் பார்க்க.

† இச்செய்யுளைத் தெரிவித்தவர் கும்பகோணம் டவுன் ஹைஸ்கூல் முதல் தமிழ்ப்பண்டிதராக இருந்த பின்னத்தூர் ஸ்ரீ அ. நாராயணசாமி ஐயரவர்கள். ‡ ஆதியுலா.

அங்ஙனம் மேற்கோள் கொண்ட சிலவிடங்களில் எழுதியுள்ள விசேடவுரைகளாலும், இந்நூல் 362-ஆம் செய்யுளில், 'போகம் மீன்ற புண்ணியன்' என்பதற்கு எழுதிய விசேடவுரையாலும், திருமுருகாற்றுப்படையுரையிற் காட்டிய சில நயங்களாலும், மற்றுஞ் சிலவற்றாலும் இவர் சைவசமயியாதல் நன்குவெளியாகும்.

" கச்சைசே ரரவர் போலுங் கறையணி மிடற்றர் போலும்
பிச்சைகொண் டுண்பர் போலும் பேரரு ளாளர் போலும்
இச்சையான் மலர்க டூவி யிரவொடு பகலுந் தம்மை
நச்சுவார்க் கினியர் போலு நாகவீச் சரவ னாரே "
(திருநா. திருநாகேச்சரம்)

" பச்சிலை பழம்போ தேனும் பறித்திட்டுப் பத்தி செய்வோர்க்
கெச்சமி லிருமைப் பேறு மளித்தரு ளிறைவா போற்றி
முச்சக முதலே போற்றி மூலச்சுவட் டணியாய் போற்றி
நச்சினார்க் கினியாய் போற்றி யெனத்துதி நவிலுங் காலை "
(காஞ்சி. சத்ததான. கக)

என்பனவற்றில், முறையே 'நச்சுவார்க்கினியர்' என்றும், 'நச்சினார்க்கினியாய்' என்றும் வருவனவற்றை நோக்கும்போது, இவருடைய பெயர் சிவபெருமானுடைய திருநாமமாகவே கருதப்படுகிறது.

இவ்வுரையாசிரியர், இந்நூலுக்கன்றிப் பத்துப்பாட்டிற்கும் தொல்காப்பியத்திற்கும் கலித்தொகைக்கும் குறுந்தொகையில் பேராசிரியர் பொருளெழுதாதொழிந்த இருபது செய்யுட்களுக்கும் உரைசெய்தருளினர். இன்னும் சிலநூல்களுக்கு இவர் உரையியற்றினரென்பர்; அவை இவையென்று புலப்படவில்லை. இக்காலத்து வழங்கும் திருக்கோவையாருரை பேராசிரியராற் செய்யப்பட்டதென்று தெரிகின்றமையாலும், இவர் அந்நூற்குச் செய்த வேறுரை கிடையாமையாலும் அதற்கும் திருக்குறள் முதலிய மற்றுஞ்சிலவற்றிற்கும் இவர் உரைசெய்திருப்பதாக இவருடைய உரைச்சிறப்புப்பாயிரத்திலேனும் வேறொன்றிலேனும் கூறப்படாமையாலும் அவைகள் இங்கே எழுதப்பட்டில.

இன்றியமையாத இடங்களில் மட்டும் பதப்பொருள், இலக்கணக் குறிப்பு முதலியன இவரால் எழுதப்படும்.

இவர் * பதசாரம் எழுதுதல் மிகப் பாராட்டற்பாலது.

மேற்கோளாக எடுத்துக்காட்டும் நூலின் பெயரையாவது நூலாசிரியரின் பெயரையாவது எடுத்துக்கூறுதல் பெரும்பாலும் இவருக்கு வழக்கமின்று.

வெளிப்படையாகக் கூறப்படாமலிருந்தும் சிலசில குறிப்பைக் கொண்டு மிக ஊகித்தறிந்து இன்னகாலத்தில் இன்னசெய்தி நிகழ்ந்தது, இன்னகாலத்தில் இன்னசெய்தி நிகழ்ந்ததென்று இந்நூலுள் அவ்வவ்விடத்து, கதை நிகழ்ந்த காலத்தை விளக்கிக்கொண்டே போவார்: 21,

* 25-ஆம் பக்கமுதலியவற்றைப் பார்க்க.

413, 493, 590, 851, 1564, 2029, 2033, 2106, 2706-ஆம் கவிகளின் உரைகளைப் பார்க்க.

விரிவிற்கஞ்சி ஒருவாக்கியத்தின் இறுதிச் சொல்லையேனும் அதன் முதற் சொல்லையேனும் எழுதி வாக்கியத்தைக் குறிப்பித்துவிட்டுப் பொருளெழுதுதலும் மேற்கூறிய யாதொன்றையும் எழுதாமலே பொருளெழுதுதலும்,

" அறுவர்தந் நூலு மறிந்துணர்வு பற்றி
மறுவரவு மாறுன நீக்கி—மறுவரவின்
மாசா ரியறு மறுதலைச்சொன் மாற்றுதலே
ஆசா ரியன தமைவு"                    (ஏலாதி, எகூ)

என்றபடி நூலின் சமயத்தையும் நூலாசிரியருடைய கொள்கையையும் அவர் கருத்தையும் அறியவேண்டிய அளவு உழைத்தறிந்து அதற் கேற்பவே உரை யெழுதுதலும் இவருக்கு இயல்பு; இவருரை விகற்பங்கள் இன்னும் பலவகை.

இவர் இந்நூலுக்கு முதன்முறை ஒருரை யெழுதி, அக்காலத்திற் புகழ்பெற்றிருந்த சைனவித்துவான்கள் சிலருக்குக் காட்ட, மற்றைப் பகுதிகள் போலத் தங்கள் சமயக்கொள்கைகள் முறையே அறிந்து எழுதப்படவில்லை யென்றுகூறி அவர்கள் அவ்வுரையை அங்கீகரிக்க வில்லை யென்றும், அப்பால் இவர் ஆருகதநூல்கள் பலவற்றையும் அறிந்தோரிடம் முறையே கற்றறிந்து நலமுற ஆராய்ந்து இரண்டா முறை இவ்வுரையை யெழுதி அவர்களுக்குக் காட்ட அவர்கள் உற்று நோக்கி மகிழ்ந்து பாராட்டி இதனை அங்கீகரித்தார்களென்றும் சைனர்களுள்ளும் ஏனையோருள்ளும் கர்ணபரம்பரையில் ஒரு வரலாறு வழங்குகின்றது; "அகன்று பொருள்கிடப்பினும்" (தொல். செய். சூ. உகo) என்பதனுரையில், "இனிப் பலசெய்யுட்கள் வருமாறு சிந்தாமணியுள் யாங்கூறிய உரைகள் பலவற்றானுமுணர்க' எனவும், "மாட்டுமெச்சமும்" (தொல். செய். சூ. உகக) என்பதனுரையில், 'மாட்டும் எச்சமுமின்றி உடனிலையாய் அமைந்தன பலவும் சிந்தாமணியுள் யாங்கூறிய உரையான் உணர்க' எனவும் "இருமென் மொழியான்" (தொல். செய். சூ. உ௩அ) என்பதனுரையில், 'இவை பொருட்டொடர்; அவை சிந்தாமணி முதலியன; அவை பாவிற்கு இனமாகிய துறையும் விருத்தமும் பற்றிச் செய்தனவென்பார்க்கு அப்புலவர் செய்யுள் செய்கின்ற காலத்திற்கு நூல் தொல்காப்பியமானவாறும் அவர் இனங் கொள்ளாதவாறும் அவ்வினங்கள் தாம் இலக்கணக் குறைபாடுடையவாறும் கொச்சகம்போற் சிறப்பின்மையும் முன்னர் விளங்கக் கூறியவற்றைக் கொண்டு பின்பு செய்த நூல்கள் முன்பு செய்த செய்யுட்கு விதியாகாதவாறுங் கொண்டு மறுக்க' எனவும் வருவன இவர் தொல்காப்பியத்திற்கு உரை செய்யு முன்னரே இந்நூலுக்கு உரைசெய்ததையும், இந்நூல் 72-ஆம் கவியுரையில், எங்குத் தன்மையையுணர்த்துதல், செலவினும், வரவினும் என்னும்

சூத்திரத்திற் கூறினும், எனவும், 892-ஆம் கவியுரையில், ‘ஆசிரியர், நண்டுந்தும்பியும் என்று தும்பியைப் பின்வைத்தது மேல்வருஞ் சூத்திரத்தில், மாவு மாக்களு மையறிவென்ப என்ற ஐயறிவு இதற்கும் ஏறுதற்கென்றுணர்க; இதனை வாராததனால் வந்தது முடித்தலென்னுந் தந்திரவுத்தியாற் கொள்கவென்று ஆண்டு உரைகூறிப்போந்தாம்’ எனவும், 1913-ஆம் கவியுரையில், “சீவகசாமி யென்னும் இருபெயரொட்டுப் பண்புத்தொகை, ‘பண்புகொள் பெயரு மதனோ ரற்றே’ என்னும் சூத்திரத்தில் தன்னின முடித்தலென்பதனாற் சீவகசாமியாரென ஆரீறாய்ச் சீவகசாமியீரேயென ஈரோடு ஏகாரம் பெற்றதெனக் கூறினும்” எனவும், 2690-ஆம் கவியுரையில், ‘வயாமர மென்பதூஉம் மாற்றருஞ் சிறப்பின் மரபன்றி வழக்கின்கண் அடிப்பட்டுச் செய்யுளின்பம் படவந்த மரபென்று மரபியலிற் பாதுகாத்தாம்’ எனவும் வருவன அதற்கு உரை செய்தபின்னரே இவர் இதற்கு உரைசெய்ததையும் தெரிவித்து, இந்த இரண்டு பகுதியுள் முதற்பகுதி இவர் தொல்காப்பியத்திற்கு உரையியற்றுமுன் சிந்தாமணிக்கு முதன்முறை உரையியற்றியதையும், இரண்டாவது பகுதி இவர் அந்நூலுக்கு உரையியற்றியபின் அதற்கு இரண்டா முறை உரையியற்றியதையும் ஒருவகையாகப் புலப்படுத்தி மேற்கூறிய வரலாற்றை வலியுறுத்தி நிற்றல் காண்க.

பாஷாபிமானத்தையும் தமிழ்ப்பாஷையிலுள்ள நூலாராய்ச்சியையும் நூலாசிரியரிடத்தேயுள்ள அன்புடைமையையும் ஒவ்வொன்றையும் நுணுகி நுணுகி ஆராய்ந்து ஆராய்ந்து விளங்க எழுதுதலையும் மற்றக் குணவிசேடங்களையுமுடைய இவர் வடமொழியுரையாசிரியர்களுள் ஒருவராய்ச் சிறந்து விளங்கிய ஸ்ரீ மல்லிநாதஸூரியைப் போன்றவரென்று இருமொழியிலும் பாண்டித்தியமுடையவர்கள் சொல்வார்கள்.

நூலாசிரியருடைய ஆழ்ந்த கருத்தைவிளக்கி இவர் அவ்வவ்விடத்து எடுத்துக்காட்டும் நயங்கள் மிக்க இன்பத்தை அளிக்கும். அவற்றுட் சில வருமாறு:—

[குறிப்பிட்ட இடங்களில் அவற்றின் விசேடவுரைகளைப் பார்க்க.]

2. வெம்புஞ்சுடர்.
3. பகைநண்பொடில்லான்.
6. மீனேறுயர்த்த.
,, சீவகசாமியென்பான்.
8. வேந்தற்கமுதாய்.
11. ஆங்கே.
,, வள்ளல்.
,, விஞ்சைக்கிறைவன் மகள் வீணையிற்றோற்றவாறு.
,, நாகரிற்றுய்த்தவாறு.
14. வென்றிக்களிற்றை.
21. கண்ணிணைமாரிகற்ப.
128. வம்புண் கோதையர்.
141. மாகநீண்மணிம்முடி
163. பெண்ணணங்கரியதேவரும்.
164. கருங்குழல்கள்.
165. வட்டமதிமுகம். [மழலை.
181. மெய்பெறுவெழுத்துயிர்க்கு
183. திருமகளிவளென...வைகும்.
188. பொனங்கொடி...குன்றனான்.
192. பளிக்கறை......சாயல்.
200. களிறனான்.
,, வெளிறிலா......கொண்டு.
204. வலம்புரிபொறித்தவண்கை மத வலிவிடுப்ப.
221. அத் தம்பெருமான்.
222. தேனெனப்பாலெனச்சில்ல மிர் தூற்றென

249. யாவராயினு......வையகம்
251. வாண்ணுமற்கு...ஆற்றலான்
252. பிழைப்பிலாட்புறந்தந்
தானும்
268. அமிர்தமன்னனையெய்தி
271. வண்டுமொய்த்தரற்றும்
,, அனைய நீயும் [பிண்டி
279. வேன்மிடைந்த......யரிந்து
,, தேன்மிடைந்த...செங்களம்
280. உப்புடைய......தானையுள்
289. ஆண்டகை யவிந்தான்
305. குருசிறந்தபுதல்வனை
313. பணைசெய்
326. தன்னுடைமதி
332. உற்றது [மாகி
336. நமராதுமற்றது நண்ணல
340. திருவிற்கைபோய்மெய்
344. அணங்கு நுண்டுகில் [காப்ப
345. ஐயவோவென்றெழுந்தனள்
348. வாளுறைநெடுங்கணாளை
,, தோளுற......றெக்கு
351. தொழுதேனும்......துறந்து
352. நோக்கி நும்மைநோக்கான்
353. உரவோன்சிறுவன்
354. வளத்துறைதெய்வமாறள்
357. குறுகவம்மென [கற்பு
361. மாற்றம்மஞ்சும் மன்னிய
362. போகம்மீன்ற...மதியன்
றன்
364. எல்லார் [தான்
365. மாரியின்நல்கிக்கற்பகமொத்
368. குழைமுக......குமரி
392. இன்னணம்விலக்கினனே
393. ஆண்டகைக்குரவிர்
396. மாடவீட்டகம். [னேன்
400. அந்தணர்தொழிலேல
402. நலம்......நான்முகன்
406. நறவறமலர்ந்தகண்ணி
407. கைவரையன்றிநில்லா [னன்
419. ஆய்த்தியர் நலக்காசெறாண
427. உய்த்திட்டனர் பூசல்
431. மிலேச்சனை...தெழித்தான்
439. திருநகர்ச்செல்வ
440. பொன்னிழைசுடருமேனி
453. மடவார்மனம்போல மாய்ந்
455. நாளுற்றுலந்தான் [தார்
466. நாளைக்கனவினி லருளி
478. நம்படைதம்முள் [வந்து
493. சாலவுடைநாய்கன்
506. கரைகடலழுவம் [கதிபதி
563. குலம்புரிந்தனைய குன்றிற்
591. பொன்விளைகழனி
615. மதுகரவீட்டமொத்தார்
703. மனப்பொலி......மத்திகை
712. ஈயின்றியிருந்ததீந்தேன்
737. வீழ்த்தனள் [சொல்
747. தண்ணியசிறியவெய்யதழற்
775. ஏழுயர்ம்பாதகம் [டார்
793. வான்புலங்காவல்கொண்
796. அகில்கொண்ட......வட்டம்
840. மகளிருட்டிருவனை
842. மாபிறனேக்குகின்றான்
856. தொழுவிற்......கிழவன்
881. மல்லிகைமாலைசேர்ந்து
882. இருந்தான்......ஒத்தே
973. கடலென......ஊழித்தீயென
1013. ஏவலாற்சேர்கலேன்
1096. புரவலனிதனைச்சொன்னான்
1154. என்னையிக்கிருமிகொன்று
1167. விழுச்சிறை
1169. பவித்திரகுமரன்
1200. மன்னுடைவேலினாய்
1219. இந்திரன்றன்னைநோக்கி
1226. உழுவையன்னற்கு
1229. கடந்தான்காலிற்கழலானே
1258. வாக்கமையுருவின்மிக்கான்
1264. இறைவனுமெதிர்கொண்டு
1266. உருமிற்றேன்றி
1271. குறையரவு
1509. தீண்டுவந்து
1570. கண்டவன்கண்ணினேக்க
1573. பாவைபோன்று
1625. குன்றனன்சிந்திக்கின்றான்
1659. கன்னிப்பிணையினிலை
கலங்கி [யிலே
1661. திருந்துசோலைக்கருங்கு
1693. வரையுடைமார்பன்
1841. குஞ்சரம்......இசைத்தன
1889. பருகுபைங்கழல்
1981. கட்டிலேறிய
1997. நன்குரங்கு
2382. தேனெய்மார்பகம்
2423. மலர்வீடுபெற்றன வின்றெ
டென்ன
2426. ஆவியம்புகை
2453. கரும்பேதேனே......மானே

2540. இடைகுழைந்துநின்ருர்
2541. கனி......ஒத்தார் [தார்
2542. துகிலிகைப்பாவையொத்
2552. பொய்ந்நங்கைமார்கள்
2554. முலைமுத......நம்பி
2558. முரல்......சேர்ப்ப
2602. இல்லை......ந்தாள்
2606. திருவன்ருள்
2608. எங்கோபணியென்ற
2630. விளக்கிட்டன்னவள்
2631. கயனெடுந்தடங்கண்ணி
2639. பொற்குடந்...முன்னிருர்
2651. பாவையன்ருள்
2655. கட்டியங்காரருக
2707. வீநிறைகொடியருேம்
2719. கடிமலர்.........ஒத்தான்
2720. இனந்திரியேறுபோல
2730. தளிர்கவரிவீச......ஒத்தான்
2746. கோற்கடன் மன்னன்
2781. ஆர்கண்ணேநோக்குமே
2842. அடங்கலர்க்கீந்த
2917. பூவலர்கொடியனுர்
3072. தேங்கொள்பங்கயப்பகை

தொல்காப்பியவுரை முதலியவற்றில் இவர் எடுத்துக்காட்டியுள்ள மேற்கோள்கள் அமைந்த நூற்பெயர்கள் முதலியவற்றுள் இதுகாறும் விளங்கியவை வருமாறு :—

க. அகத்தியம் [கை
௨. அகநானூறு = நெடுந்தொ
௩. அணியியல்
௪. அவிநயம்
௫. அறநெறிச்சாரம்
௬. ஆசாரக்கோவை
௭. இராமாயண வெண்பா
௮. இறையனுரகப்பொருள்
௯. உதயணன்கதை
க0. ஏலாதி
கக. ஐங்குறுநூறு
க௨. ஐந்திணையெழுபது
க௩. ஐந்திணையைம்பது
க௪. ஔவையார் பாடல்
க௫. கடகண்டு
க௬. கலித்தொகை
க௭. களவழிநாற்பது
க௮. காக்கைபாடினியம்
க௯. கார்நாற்பது
௨0. காரைக்காற்பேயார்பாடல்
௨க. குணநாற்பது
௨௨. குறிஞ்சிப்பாட்டு
௨௩. குறுந்தொகை
௨௪. கூத்தநூல்
௨௫. கைந்நிலை
௨௬. கொன்றைவேந்தன்
௨௭. சிலப்பதிகாரம்
௨௮. சிறுகாக்கைபாடினியம்
௨௯. சிறுகுரீஇயுரை
௩0. சிறுபஞ்சமூலம்
௩க. சிறுபாணுற்றுப்படை
௩௨. சினேந்திரமாலை
௩௩. சீவகசிந்தாமணி
௩௪. சூளாமணி
௩௫. தகடூர்யாத்திரை
௩௬. தந்திரவாக்கியம்
௩௭. திணைமாலைநூற்றைம்பது
௩௮. திணைமொழியைம்பது
௩௯. திரிகடுகம்
௪0. திருக்குறள்
௪க. திருக்கோவையார்
௪௨. திருப்பாட்டு
௪௩. திருமுருகாற்றுப்படை
௪௪. திருவாசகம்
௪௫. திருவாய்மொழி
௪௬. திருவுலாப்புறம்
௪௭. தொல்காப்பியம்
௪௮. நற்றிணை நானூறு
௪௯. நாடகநூல்
௫0. நாலடியார்
௫க. நெடுநல்வாடை
௫௨. பட்டினப்பாலை
௫௩. பதிற்றுப்பத்து
௫௪. பரிபாடல்
௫௫. பல்காப்பியம்
௫௬. பல்காயம்
௫௭. பழமொழி
௫௮. பன்னிருபடலம்
௫௯. பாரதவெண்பா
௬0. புறநானூறு
௬க. புறப்பொருள்வெண்பாமாலை
௬௨. பூதத்தாரவையடக்கு
௬௩. பூதபுராணம்
௬௪. பெரும்பாணுற்றுப்படை

| | | | |
|---|---|---|---|
| ௬௫. | பெருங்பொருள்விளக்கம் | ௭௪. | முல்லைப்பாட்டு |
| ௬௬. | பொய்கையார் முதலாயி னோர் செய்த அந்தாதி | ௭௫. | மூதுரை |
| ௬௭. | பொருநராற்றுப்படை | ௭௬. | மோதிரப்பாட்டு |
| ௬௮. | மணிமேகலை | ௭௭. | யாப்பருங்கலம் |
| ௬௯. | மதுரைக்காஞ்சி | ௭௮. | யாழ்நூல் |
| ௭௦. | மலைபடுகடாம் | ௭௯. | வசைக்கடம் |
| ௭௧. | மாபுராணம் | ௮௦. | வசைக்கூத்து |
| ௭௨. | முத்தொள்ளாயிரம் | ௮௧. | வளையாபதி |
| ௭௩. | முதுமொழிக்காஞ்சி | ௮௨. | விளக்கத்தார் கூத்து |

தொல்காப்பியவுரைமுதலியவற்றில் வேதம், வேதாங்கம் முதலிய பல நூல்களிலிருந்தும் அவற்றின் உரைகளிலிருந்தும் பற்பல அரிய விஷயங்களை ஆங்காங்கு எடுத்துக்காட்டி நன்கு விளக்கிப்போகின்றமை யாலும் பிறவாற்றாலும் இவரை வடமொழியிற் பலவகையான கலைகளிலும் மிக்க பயிற்சியுள்ளவரென்று சொல்லுதற்கிடமுண்டு.

உரையாசிரியர், சேனாவரையர், பேராசிரியர், ஆளவந்தபிள்ளையா சிரியர் முதலிய உரையாசிரியர்கள் இவருடைய உரையில் எடுத்துக் கூறப்பட்டிருத்தலின், அவர்களுக்கு இவர் * காலத்தினாற் பிற்பட்டவ ரென்று தெரிகின்றது.

இவர் பழைய செய்யுட்களையேனும், அவற்றின் கருத்தையேனும் உரைநடையாக எழுதுவதுண்டு; அவற்றுட் சில வருமாறு :—

3\. அருஞ்சுரத்தின் மரம்போல அடைந்தார்க்களித்தல் அவர்க் கியல்பு (புறநா. ௧௧௯; நாலடி. ௨௦௨)

192\. அடுத்தது காட்டும் பளிங்கு (திருக்குறள், ௭௦௬)
205\. நன்மையுந் தீமையுங்கருதி ( ,, ௬௧௧)
214\. இடித்துக்கூறல் அமைச்சர்க்கியல்பு ( ,, ௬௩௮)
252\. அரசன் உவாத்தியாயன் தாய் தந்தை தம்முன் (ஆசாரக். ௧௭)
272\. இருதலைக் கொள்ளியிடத்து எறும்புபோல் (திருவா. நீத்தல். ௯)
547\. சங்குசுட்டாலும் நிறங்கெடாது (மூதுரை. ௪)
799\. குடிப்பிறந்து பழிநாணுவார்க்கு (1998) (திருக்குறள், ௭௯௪)
1592\. சென்ற விடத்தாற் செல்ல விடாதே ( ,, ௪௨௨)
1631\. இருதலைப் புள்ளியின் ஓருயிரேம் (கலித். ௮௯)
1731\. ஆடவர் குறுகா வருங்கடிவரைப்பு (நெடுநல். ௧௧௭)
1813\. இடிக்குந் துணையார்சொற் கொள்ளாதே (திருக்குறள், ௪௪௭)
2353\. தேவாசுரம் இராமாயணம் மாபாரதம் (கலிங்கத். களம்பாடியது, ௧)
2384\. மெய்புகுவன்ன முயக்கம் (அகநா. ௩௦௪)
2802\. மார்பிற்கோதை (புறநா. ௪௮)

அமிழ்தினுமினிய தமிழ்மடவரல் செய் அருந்தவத்தின் பெரும் பயனாக அவதரித்தருளிய இம்மகோபகாரியின் அருமைபெருமைகள் விரிவஞ்சி இவ்வளவோடே நிறுத்தப்பெற்றன.

* இவர் கி. பி. 14-வது நூற்றாண்டுக்கு முற்பட்டவரல்லரென்று பிரஹ்மஸ்ரீ T. S. குப்புசாமி சாஸ்திரிகள் எழுதியிருக்கிறார்கள்; தமிழகம், தொகுதி-I, பக்கம் ௯௧ பார்க்க.

# இக்காப்பியத் தலைவனாகிய சீவகன் சரித்திரச் சுருக்கம்

## [க—நாமகளிலம்பகம்]

இப்பரதகண்டத்தில் ஏமாங்கதநாட்டில் இராசமாபுரத்திற் குருகுலத்திலே உதித்துச் செங்கோல் செலுத்திய சச்சந்தனென்னுமரசன், தன் மாமனும் விதையதேயத்தரசனுமாகிய ஸ்ரீதத்தன்மகள் விசயையை மணந்து அவளது பேரழகுபற்றியெழுந்த வேட்கைமிகுதியால் அவளுடன் இடைவிடாமல் இருப்பக் கருதி, நிமித்திகன்முதலிய மந்திரிமார் கூறிய உறுதிமொழியைக் கொள்ளானாகி, கட்டியங்காரனென்னும் மந்திரியொருவனை யழைத்து அவனை நோக்கி, "நீ இந்நாட்டைக் காத்து வருதி" என்று விதித்து அந்தப்புரம் புகுந்து தானெண்ணியவண்ணம் இன்புற்றிருந்தான்.

அவன் அப்படியிருக்கையில், விசயை கருப்பமுற்று ஒருநாளிரவில் மூன்றுகனுக்கண்டு அவற்றின் பயன்களை அரசனாலுணர்ந்து அவற்றுள் ஒன்றால் வருத்தமுற்று அவன் தேற்றத் தேறியிருந்தனள்.

அப்பொழுது கட்டியங்காரன் அரசனைக்கொன்று இராச்சியமுழுவதையும் தானேயாளக்கருதி, அறிவுடையோர் சொற்கேளானாகி, தன் மைத்துனனாகிய மதனனோடு யோசித்து, பின்பு அரசனிருக்கும் அந்தப்புரத்தைச் சேனைகளோடும் வளைந்துகொண்டான். அதனை வாயில் காப்பாளனாலறிந்த அரசன் மனங்கலங்கிப் புலம்பிய விசயையைத் தேற்றி அவளை முன்னமே தான் செய்வித்த மயிற்பொறிமேலேற்றி, மகப்பேற்றைக் கருதி ஆகாயவழியே வேறிடஞ்செல்ல விடுத்துத் தான் புறம்போந்து, கட்டியங்காரனோடும் அவன் படைவீரரோடும் போர்செய்து பின்பு அவனால் மாய்ந்தனன். அப்பாற் கட்டியங்காரன் வெற்றிமுரசறைவித்து எல்லாவற்றையும் கவர்ந்துகொண்டனன்.

ஆகாயவழியேசெல்லும் விசயை அம்முரசொலிகேட்டுக் கலங்கித் தான் ஊர்ந்துசெல்லும் மயிற்பொறியை முறுக்கி நடத்தமாட்டாமல் மூர்ச்சித்தமையால், அப்பொறி அப்பாற் செல்லாமல் அந்நகரத்தைச் சார்ந்த ஒரு மயானத்திடையே மெல்ல வீழ்ந்தது. உடனே அவள் அவ்விடத்துச் சுபகாலத்தில் ஓர் ஆண்மகவைப்பெற்று ஒருவாறு கவலையொழிந்து, அக்குழந்தைக்குப் பாலூட்டி, அரசனிறந்ததற்கிரங்கி அப்பிள்ளையைநோக்கி, "வேந்தே! அரசன் பலபல சிறப்புச்செய்யப் பிறக்கும் நீ பாவியேன் காண இங்ஙனம்பிறப்பது தகுதியோ? உலகுடையாய்! நீ கிடக்கின்ற இடம் பகைவனிடமாயிருக்கின்றது; நினது பாயல் சுடுகாடாயுள்ளது; யானும் உசாவுதற்கு ஒருதுணையுமில்லாத் தமியேனா யிருக்கிறேன்; நின்னைக் கொண்டுபோகக்கருதின், இக்காலமோ போகவொண்ணாத இருளாயுள்ளது; மேல் நீ வளருமாறும்

அறியேன். சிந்தாமணியே! நீ ஒன்றுமுரையாமற் கிடவாநின்றாய்; என் வருத்தத்தை நீக்கப் பிறந்த நீ என்னிடத்துப் பிறந்த துன்பக்கடலை யான் நீந்தும் தெப்பமாகாதபொழுது என்னைக் காப்பவர் யாவர்? உரைக்கின்றிலை'' என்று கூறித் தனியே யிருந்து வருந்திப் புலம்பும்பொழுது, அம்மயானத்துள்ள தெய்வமொன்று மனமிரங்கி அவள்தோழியாகிய சண்பகமாலைவடிவங்கொண்டு அவள் முன்னே வந்து துயரந்தீரும்படி அவளுக்கு இனிய வார்த்தைகள் கூறி, அவளிடத்திருந்த (சச்சந்தன் பெயரெழுதப்பட்டுள்ள) மோதிரத்தைக் குழந்தைக்குச் சேர்த்தி அக்குழந்தையை ஒரு படுக்கைமீது கிடத்தி அவளை நோக்கி, ''இனி இப்பிள்ளையை எடுத்துப்போதற்கு ஒருவன் வருவான்; ஆதலால், யாம் ஒளித்திருத்தல் நலம்'' என்றுகூற, உடனே அவள் விலகிச் சென்று மறைந்து நின்றனள்.

அவள் அப்படிநிற்கையில், மரித்த தன்குழந்தையைப் புதைத்தற்கு அங்கே வந்த கந்துக்கடனென்னும் வணிகனொருவன் யாருமின்றித் தனியே கிடந்த அக்குழந்தையைக் கண்டு மிகுந்த மகிழ்ச்சியடைந்து அதன் கையிலிருந்த மோதிரத்தால் இராசவம்சத்துக் குழந்தையென்றறிந்து பிறரறிந்து கொள்ளாதபடி அம்மோதிரத்தை மறைத்துக்கொண்டவனாகி அக்குழந்தையை அன்போடெடுப்ப அது தும்மிற்று. அப்பொழுது தெய்வம், 'சீவ' என்று வாழ்த்தியது. பின்பு கந்துக்கடன் அக்குழந்தையை எடுத்துக்கொண்டு விரைந்துசென்று இராசமாபுரத்திலுள்ள தன்வீட்டினுள்ளே புகுந்து தன் மனைவியாகிய சுநந்தையைநோக்கி, ''நின்மகன் சாதலில்நின்றும் தப்பினான்'' என்று கூறிக் கொடுப்ப, அவள் தொழுது வாங்கிப் பெருமகிழ்ச்சியடைந்து வளர்த்துவரும் நாளில் முன்னம் தெய்வம் சீவவென்று வாழ்த்தினதைப்பற்றி, அறிவுடையோர் அப்பிள்ளைக்குச் சீவகனென்று நாமகரணஞ் செய்தனர். பின்பு சுநந்தை நந்தட்டனென்னும் ஒரு புத்திரனைப் பெற்றாள். இது நிற்க;

மயானத்திருந்த விசயை தோழியாகவந்த தெய்வத்தோடும் தண்டகாரணியம்புகுந்து, தவவேடம் பூண்டு மகனுக்கு ஆக்கம் உண்டாகுகவென்று நோற்றனள். தெய்வம், ''இராசமாபுரத்திற்சென்று நின்புதல்வன்செய்தியை அறிந்துவருவேன்'' என்றுகூறி விசயையிடத்து விடைபெற்றுப் போய்த் தானுறையும் புறங்காட்டைச்சேர்ந்திருந்தது. சீவகன் * தோழர்களோடும், தம்பிமாராகிய † நபுலவிபுலர்களோடும், நந்தட்டனோடும் இனிது வளர்ந்து உரியபருவத்தில் வித்தியாரம்பம் செய்விக்கப்பெற்று, கந்துக்கடன் கட்டளைப்படி அச்சணந்தியாசிரியரிடம் வில்

* சச்சந்தனிறந்தபின்பு, அவன் சுற்றத்தைக் கட்டியங்காரன் அழிப்பது தெரிந்து, சச்சந்தன்தோழர் தம்புதல்வர்களைக் கந்துக்கடனிடத்தே ஒப்பித்து வளர்த்துவரும்வண்ணம் வேண்டிக்கொள்ள, கந்துக்கடன் அவர்களைச் சீவகனோடு சேர்த்து அன்போடு வளர்த்து வருவானாயினான். அதனால், அப்பிள்ளைகள் சீவகனுக்குத் தோழராயினர்.

† நபுலவிபுலர் - சச்சந்தனுடைய காமக்கிழத்தியர்புத்திரர்.

வித்தை முதலியவற்றை எளிதிலே பயின்று சிலகாலத்துட் சகல வித்தியா பாரங்கதனாயினான்.

ஆசிரியர் சீவகனது புத்தியின் திறமும் கல்விமுதிர்ச்சியுங்கண்டு அளவில்லாத ஆச்சரியமும் மகிழ்ச்சியுமுடையராகி, முதலில் அவனுக்குத் தருமோபதேசஞ் செய்து பின்பு அவனைத் தனியிடத்திற்கு அழைத்துச் சென்று தாம் ஓராசனத்திருந்து அவனை நோக்கி, "இந்நகரத்தரசனா யிருந்த சச்சந்தனென்பவன் பூர்ண கருப்பிணியாகிய தன் மனைவி விசயையை மயிற்பொறிமேற் போக்கிப் பின்பு கட்டியங்காரனென்னும் மந்திரியாற் கொல்லப்பட்டான். அவ்விசயை மயானமடைந்து ஒரு பிள்ளையைப் பெற்றாள். அப் பிள்ளையைக் கந்துக்கடனெடுத்து வந்து தன் மனைவியாகிய சுநந்தை கையிற் கொடுப்ப, அவள் அன்போடு வளர்த்து வருவாளாயினாள்" என்று ஒரு கதைமுகத்தாலே கண்ணனன் கன்னனுக்குப் பிறப்புணர்த்தியதுபோலக் கூற, அதுகேட்ட சீவகன், "அப்பிள்ளை யாவன்?" என்று வினவ, ஆசிரியர் "நீதான்" என்ற வுடன் சீவகன் பதைபதைத்து மூர்ச்சையுற்று, அவர் தேற்றத் தேறிக் கட்டியங்காரனைக் கொல்லுதற்குச் சந்நத்தனாயெழுந்தான். ஆசிரியர் அவனை நோக்கி, "மைந்த! இது காலமன்று; இன்னும் ஒரு வருடம் சென்றபின்னர், நீ எண்ணியது செய்க; இப்பொழுது உன்னை வெளிப் படுத்தாதொழிக; இது யான் வேண்டுவது" என்று சொல்ல, சீவகன் ஆசிரியர் கட்டளையை மறுத்தற் கஞ்சி அங்ஙனமே செய்வதாக ஒப்புக்கொண்டான்.

பின்பு ஆசிரியர் தம் வரலாறு கூறுவாராகி அவனை நோக்கி, "யான் முன்னம் வெள்ளிமலையிலுள்ள வாரணவாசி என்னும் நகரத்தரசன்; உலோகமா பாலனென்னும் பெயருடையேன்; தவஞ்செய்தற்கெண்ணி மகனுக்கு அரசளித்துத் தவவேடம் புனைந்து நோன்பு புரிகையிற் பூர்வ சன்ம பாவத்தால் எனக்கு யானைத்தீயென்னும் நோய் உண்டாகியது; அதனால், மிகவும் வருந்தி ஒருவாற்றானும் தீரப்பெற்றிலேனாகி இங்கு வந்து நின்னைக் கண்டவுடன் அந்நோய் தீரப்பெற்றேனாதலின் நின்பாற் பெருவியப்புற்று நினக்குக் கல்வி யறிவுறுத்தற்கே யண்டிருந்தேன். என் எண்ணம் முற்றியது. இனித் தவம் செய்தற்குச்செல்ல எண்ணு கின்றேன்; விடை கொடு" எனவே, சீவகன் அவரைப் பிரிதற்குச் சிறிதும் கருத்திலனாயினும் அவர் தவஞ்செய்யப் போதலை மறுத்தற்கஞ்சி உடன்பட, அவர் * இருபத்துநான்காம் தீர்த்தங்கரராகிய ஸ்ரீவர்த்த

* தீர்த்தங்கரர் இருபத்துநால்வர்; அவர்கள் பெயர் வருமாறு:— (க) விருஷபர், (உ) அஜிதர், (௩) சம்பவர், (௪) அபிநந்தனர், (௫) சுமதி, (௬) பத்மப்ரபை, (௭) சுபார்ச்வர், (௮) சந்திரப்ரபை, (௯) புஷ்பதந்தர், (க0) சீதளர், (கக) சிரேயாம்சர், (கஉ) வாசுபூஜ்யர், (க௩) விமலர், (க௪) அநந்தர், (க௫) தருமர், (க௬) சாந்தி, (க௭) குந்து, (க௮) அரர், (க௯) மல்லி, (உ0) முனிஸுவ்ரதர், (உக) நமி, (உஉ) நேமி, (உ௩) பார்ச்வர், (உ௪) ஸ்ரீவர்த்தமானர்.

மானருடைய சமவசரணமடைந்து நோன்பியற்றி முத்தியடைந்தார். சீவகன் இராசமாபுரத்தே யிருந்தனன்.

## [௨—கோவிந்தையாரிலம்பகம்]

சிலநாட் சென்றபின் ஒருநாள் அரசனுடைய பசுக்கள் சமீபத்திலுள்ள ஒரு மலையையடைந்து மேய்கையில், அம்மலையிலுள்ள வேடர் அவற்றைக் கவர்ந்து கொண்டுசெல்ல, அப்பசுக்களைப் புரக்குமிடையர் அவ்வேடர்களை ஒன்றும் செய்யமாட்டாமல் மறுகிச் சுழன்று விரைந்தோடிச் சென்று கட்டியங்காரனிடத்து முறையிட்டார். உடனே அவன் அவ்வேடரைவென்று நிரைமீட்டுவரும்படி தன்புதல்வர் நூற்றுவருக்கும் தன்மைத்துனன் மதனனுக்கும் கட்டளையிட, அவர் படையுடனேசென்று பொருது, அவ்வேடராற்றோல்வியுற்று மீண்டார். இடையர் மீட்டும்வந்து அச்செய்தியைக் கட்டியங்காரனுக்கறிவிப்ப அவன் வாளாவிருந்தனன். அதனை அவ்விடையர் தலைவனாகிய நந்தகோன் தெரிந்து வருத்தமடைந்து, "இந்நிரையை மீட்டுவரும் மைந்தற்குப் பேரழகுள்ள என் கன்னியாகிய கோவிந்தையைத் தருவேன்" என்று வீதிதோறும் முரசறைவித்தான். அதுகேட்டும் வேடருக்கஞ்சிப் பலரும் சும்மாவிருந்தனர். அதனையுணர்ந்த சீவகன், சூளுரைத்துப் போர்க்கோலங்கொண்டுசென்று யுத்தஞ்செய்து, அவ்வேடர் ஐம்பத்தாருயிரவரும் தனக்கு ஒருவாற்றானும் பகைவரன்மையின் அவர்களைக் கொல்லாமல் அச்சுறுத்தி நிரைமீட்டுவந்து, நந்தகோன் வேண்டுகோளின்படி அவன் மகளைத் தான் அப்பொழுது மணஞ்செய்தல் தன்குலத்திற்குப் பொருந்தாதென்றெண்ணி, தன்தோழனாகிய பதுமுகனுக்கு மணஞ்செய்வித்தனன்.

## [௩—காந்தருவதத்தையாரிலம்பகம்]

அப்பால் வெள்ளிமலையிலுள்ள வித்தியாதரராசனாகிய கலுழவேகனென்பவன் தன்மகள் காந்தருவதத்தைக்கு இராசமாபுரத்தில் மணநிகழுமென்பதைச் சோதிடராலறிந்து அங்ஙனம் செய்விக்கத் துணிந்து அவ்விராசமாபுரத்து வணிகனாகிய ஸ்ரீதத்தனென்பான் ஒருதீவிற்சென்று பெரும்பொருளீட்டி நகரமடையவெண்ணிப் பரிசனங்களோடும் மரக்கலமூர்ந்து கடலிற் செல்வது தெரிந்து, அவனை அழைத்துவரும்படி தன்னிடத்துள்ள தரனெனும் வித்தியாதரனொருவனை யனுப்பினான். அத்தரன் போந்து சனங்களுடன் கப்பல்முழுகியதுபோலத் தன்வித்தைமகிமையால் ஸ்ரீதத்தனுக்குத் தோற்றுவிப்ப, ஸ்ரீதத்தன் அக்கப்பலினின்றும் முறிந்துவிழுந்த ஒருமரத்துண்டத்தைத் தழுவி மெல்லமெல்லச் சென்று கரையையடைந்து வருந்தியிருந்தனன்.

அப்பொழுது தரன் வழிச்செல்வான்போன்று அவனைச் சந்தித்துத் தேற்றி அவனை அழைத்துக்கொண்டு கலுழவேகனிடம் செல்லவே கலுழவேகன் ஸ்ரீதத்தனுக்கு மிக்க உபசாரங்கள் செய்து அளவளாவியிருந்து

பின்னர்க் காந்தருவதத்தையின் வரலாறுகளைக்கூறி, அவளை வீணாபதி யென்னும் தோழியுடன் அவனிடமொப்பித்துப் பல பொருள்களுமுதவி அவனை நோக்கி, "இசையில் இவளை வெல்வான் எவனோ அவனுக்கு இவளை மணம்புரிவி" என்று சொல்லிவிடுப்ப, ஸ்ரீதத்தன் அவளோடும் புறப்பட்டு விமானமூர்ந்து போந்து பரிசனங்களுடன் முழுகிப்போனதாகத் தான் முன்னங்கருதிய கப்பலைத் தரன் காட்டக்கண்டு உவப்புற்று, அதிலுள்ள தனக்கினியவர் அனைவரும் தன்னைச் சூழ இராசமாபுரஞ் சார்ந்து தன்மனையை அடைந்து தன்மனைவியாகிய பதுமைக்கு நிகழ்ந்தவற்றைக்கூறிக் காந்தருவதத்தையைக் கன்னிமாடத்தே யிருத்திக் கட்டியங்காரனைக்கண்டு அவனுடன்பாடுபெற்று ஒரு மண்டபஞ்செய்வித்து, "இக்காந்தருவதத்தையை வீணையில் வெல்வோரே இவளை மணஞ்செய்தற்குரியர்" என்று பிரசித்தஞ்செய்தனன். அது தெரிந்த பலதேயத்தாரும் அவ்விடத்தே வந்துகூடினார்கள். பின்பு ஸ்ரீதத்தன் காந்தருவதத்தையை அழைத்துவந்து அம்மண்டபத்தேயிருத்தி அவளை யாழ் வாசிக்கச் செய்தான். அதுகேட்ட பலரும் ஆச்சரியமுற்றனர். முதல் மூன்று வருணத்தாருள்ளே இசையில்வல்ல ஒவ்வொருவரும் தனித்தனியே வந்து பாடியும் யாழ்வாசித்தும் அவளை வெல்லும் வல்லமை இல்லாராய்த் தோல்வியுற்றனர். இப்படி ஆறு தினங்கள் சென்றன.

பின்பு இச்செய்தியையுணர்ந்த சீவகன் தன் கல்வியைத் தோற்றுவிக்க அங்கே செல்ல நினைந்து தன் தோழனாகிய புத்திசேனனாற் கந்துக்கடனுக்குத் தெரிவித்தான். கந்துக்கடன் அநங்கமாலையென்னும் பரத்தை நிமித்தம் சீவகனிடத்துக் கட்டியங்காரனுக்கு மிக்க சினமுண்டாயிருத்தலை நாகமாலையென்பவளால் அப்பொழுது அறிந்துகொண்டமையால், "படையமைத்து அவ்விடஞ்செல்க" என்று சொல்லி விடுப்ப, சீவகன் அப்படியே போந்து அம்மண்டபமடைந்து தான் இசையில் வல்லனாதலைப் பலருக்கும் புலப்படுத்திக் காந்தருவதத்தையை வென்றனன். உடனே அவள் அவனுக்கு மாலையிட்டனள்.

அதுகண்டு அழுக்காறுற்ற கட்டியங்காரன் மனம்புழுங்கி அங்குவந்திருக்கும் அரசர்களைநோக்கிப் பொருமைவிளைத்தற்குரிய சிலவார்த்தைகள்கூறி, "அரசர்களே! இச் சீவகனைவென்றோனே இக் காந்தருவதத்தையை மணம் செய்தற்குரியன்" என்று கூற, அரசர் ஒருங்கு திரண்டு வந்து சீவகனோடு போர்செய்து தோல்வியுற்றனர். பின்பு சீவகன் காந்தருவதத்தையைத் தன் மனைக்கு அழைத்துச்சென்று சுபமுகூர்த்தத்திலே அவளை விதிப்படி மணம் புரிந்து அவளோடும் வாழ்ந்திருந்தனன்.

## [௪—குணமாலையாரிலம்பகம்]

இப்படிச் சிலநாள் சென்றபின் இளவேனிற்காலம் வந்தது. அப்பொழுது நகர்ப்புறச்சோலையில் விளையாடுதற்குச்சென்ற இராசமாபுரத்திலுள்ள சுரமஞ்சரியும் குணமாலையும் சுண்ணம் (சுண்ணம்—வாசனைப் பொடி) காரணமாகத் தம்முள் மாறுபட்டுத் தம் சுண்ணங்களுள் நல்

லதை அறிஞரால் அறிந்துவரும்படி தம் தோழியர் இருவரையனுப்ப அவர் அவ்வாறே அறிஞர் பலர்க்கும் அவற்றைக் காட்டினர். கண்ட அவர், "இவற்றைச் சீவகனுக்குக் காட்டும்" என்றனர். அம் மகளிர் அவன் மாட்டுச் சென்று அவற்றைக் காட்ட அவன் குணமாலை சுண்ணத்தை நல்லதென்ருன். அவர் மீண்டுசென்று அச்செய்தியைத் தம் தலைவியர்க்கறிவித்தனர். அதனைச் சுரமஞ்சரி கேட்டு அவலமுற்று, "எனது சுண்ணத்தை யிகழ்ந்த சீவகன் பின்னர் வலிந்துவந்து என்னை விரும்பும்படி யான் நோற்பேன்" என்று குறிப்பாலுணர்த்திக் கன்னிமாடஞ்சென்று மற்றை ஆடவரொருவரையும் கருதாளாகிச் சீவகனையே கருதி நோன்பியற்றியிருந்தனள்.

அவள் அப்படியிருக்க, அப் புறநகர்ச்சோலையிலே பிராமணருடைய சோற்றுக்குவியலை நாயொன்று தீண்ட அதனை அப்பிராமணர் தடியால் மொத்தினர். அது பயந்து ஒரு குளத்தில் வீழ்ந்து நீந்தி வருந்தும் தருணத்தில் அதனைச் சீவகன்கண்டு மிகவுமிரங்கிப் பஞ்சநமஸ்கார மென்னும் மந்திரத்தை அதன் செவியில் உபதேசித்தான். உடனே அந்நாய் அதனுல் தன்னுடம்பை ஒழித்துத் தேவனுகி விண்ணிற் சென்றது. யாவருங் கண்டு வியப்புற்றனர்.

பின்பு அத்தேவன் சுதஞ்சணனென்னும் பெயருடையவனுகி மீண்டு வந்து சீவகனை வணங்கிநிற்கவே சீவகன், "நீ யார்?" என்றனன். சுதஞ்சணன், "ஈங்குநின்றும் நின்னருளாற்சென்று இயக்கர்தலைவனுகிச் சங்கவெண்மலையிற் சந்திரோதயமென்னும் நகரில் இருப்பேனுயினேன்; என் பெயர் சுதஞ்சணனென்பது; நினக்குப் பணிபுரியும் கருத்துடையேன்" என்று சொல்ல, சீவகன், "எனக்குப் பகைவரால் துன்பம்வரும் பொழுது வந்து உதவி செய்க; இப்பொழுது நின்னிடஞ் சென்று உறைக" என்று விடுப்ப, சுதஞ்சணன் விசும்பாருகச் சென்று தன்னகர மடைந்தான்.

அவன் சென்ற பின்பு சோலையிலிருந்தோர் யாவரும் தத்தம் ஊர்திகளிலேறி நகரிக்குச் செல்லுகையில் அசனிவேகமென்னும் பட்டத்து யானை செருக்குற்றுச் சங்கிலிபிணித்த கட்டுத்தறியை முறித்துப் பாகனுக் கடங்காமற் குணமாலைக்கெதிரே சென்று சினந்து நின்று அவளைக் கொல்லத்தொடங்கியது. அதனைச் சீவகன் கண்டு கட்டியங்காரன் பகைப்பானென்று கருதாமல் அந்தயானையின் செருக்கையடக்கி அதனை அப்பாற்செலுத்திக் குணமாலையைக் காத்தனன். முன்னரே சீவகன் மாட்டு விருப்புற்றிருந்த குணமாலை அவனை நேரிற்கண்டமையால் அவனிடத்தே அதிமோகமுடையவளாகித் தன் மனையையடைந்து தோழி முதலாயினுர் மிக உபசரிக்கவும், உணவு முதலியவற்றை வேண்டாமற் சோர்வுற்றுச் சீவகனிடம் தூதுசென்றுவந்த தன் கிள்ளையால் அவன் தன்னைவிரும்பியது தெரிந்து ஒருவாறு துயரந்தீரப் பெற்றிருந்தனள். அதனை அவளுடைய நற்றுயாகிய விநயமாமாலையறிந்து தன்கணவனுகிய குபேரமித்திரனுக்குத் தெரிவித்தனள். அவன் சீவகனுக்குக்

குணமாலையைக் கொடுத்தலில் மிக்க மகிழ்ச்சியுடையவனாகித் தன் கருத்தை மொழிந்து சிலமுதியோரைக் கந்துக்கடனிடத்துத் தூது விடுத்தான். அம்முதியோர் அவனிடம்போய்ப் பேச அவன் உடன்பட்டபின் விவாகத்திற்குரியவை ஈட்டப்பட்டன. அதன் பின்பு சீவகன் குணமாலையை மணம்புரிந்து அவளைப்பிரியாது மகிழ்ச்சியுற்றிருந்தான்.

சீவகன் இப்படியிருக்கையில், முன்னர் அவனுக்குத் தோல்வியுற்ற யானை நாணிக் கவள முதலியன கொள்ளாமற் கோபத்தோடு நிற்றலைக் கட்டியங்காரன் அறிந்து, "இதற்குக் காரணம் என்ன?" என்று வினவினன். பாகன் சீவகனால் நிகழ்ந்ததைக்கூற உடனே அவன் சினந்து மதனனையும் சில வீரரையும் நோக்கி, "நீவிர் சென்று சீவகனாகிய செட்டி மகனை விரைவிற் கொணர்க" என்று கட்டளையிட அவர்கள் சென்று சீவகன் இருக்குமிடத்தை வளைந்துகொண்டார்கள். அதனை உள்ளேயிருந்த சீவகன் அறிந்து கோபங் கொண்டு யுத்த சந்நத்தனாகிப் புறம்போந்தும், "இன்னும் ஒரு வருடம்வரை கட்டியங்காரனிடத்துக் கோபங்கொள்ளாதிருப்பேன்" என்று முன்னம் ஆசிரியராணைக்கிசையத் தான் கூறியதை நினைந்து கோபம் தணிந்து நின்ற வளவிலே, கந்துக்கடனும் சுநந்தையும் வந்து, "மைந்த! அரசனுக்கு அடங்கியொழுகுதல் ஆண்மை" என்றனர். அதனாலும் சீவகன் தன் வீரத்தை வெளிப்படுத்தானாகி மதனன் முதலியோர் சூழ்ந்துவரச் செல்லும்பொழுது அக்கொடுமையைக் கண்ட ஊரவர் யாவரும் பதைப்புற்று வருந்திப் புலம்பியழுதனர். அச்செய்தியைத் தோழரும் தம்பிமாரும் கேட்டுச்சினந்து மதனன் முதலியோரை வெல்லுதற்குரிய உபாயத்தை நாடிக்கொண்டு நின்றனர். காந்தருவதத்தை கேட்டுத் தன் கணவனைச் சிறைமீட்கக் கருதித் தன் தெய்வங்களை நினைப்ப உடனே அத்தெய்வங்கள் போந்து அவனைச் சூழ்ந்து கொண்டன. அவற்றைத் தெரிந்த சீவகன், "இனிச் செய்வதென்னை?" என்று ஆலோசித்துக் காந்தருவதத்தை தன் சிறைத்துயரை நீக்க முயன்றதற்கு நாணித் தன் உயிர்த்தோழனாகிய சுதஞ்சணனை நினைத்தான். நினைத்தவுடன் அச்சுதஞ்சணனுக்கு இடக்கண் ஆடியது; ஆடின அளவிலே அவன், "இதனால் நமக்குத் தீங்கு வருமோ?" என்று நோக்காது முதலிலே சீவகனை நினைத்தான். அப்போது அவனுற்ற துன்பத்தைத் தனது ஞானத்தாலறிந்து விரைந்து வந்து யுகமுடிவு வந்ததுபோலத் தோற்றும்படி அவ்விடத்தே காற்றும் மழையும் மிக்கு வரச்செய்து ஒருவருக்கும் தோற்றுமற் சீவகனை எடுத்து மார்போடணைத்து ஏந்திச்சென்று தன்னகரமடைந்து அவன் பெருமையையும் அவன் தனக்குச் செய்த பேருதவியையும் தன் தேவியர்க்கு விளங்கக் கூறி அவனை மகிழ்வித்து அவனோடும் அவ்விடத்தே உறைந்தனன்.

இங்கே மதனன் சீவகனைக் காணாது திகைத்து, "கட்டியங்காரனிடத்து என்ன சொல்லுவோம்!" என்றெண்ணி ஆங்குள்ளானொருவனை வாளாற் பிளந்து உருத்தெரியாமற் புரட்டிவிட்டுக் கட்டியங்காரனிடம் சென்று, "நின்கட்டளைப்படியே சீவகனைப்பிடித்து வருகையில் மழையும்

காற்றும் அதிகரித்தமையால் கண்டுக் கொணர்தற்குத் தடையுற்று அவ் விடத்திலேயே அவனைக் கொன்றுவிட்டேன்" என்றான். கட்டியங்காரன் பெரிதும் வியப்புற்று, "சீவகனைக் கொல்லுதல் மிகவுமரிது; அவனைக் கொன்ற நீ இவற்றைப் பெறுவாயாக" என்று மதனனுக்குப் பல சிறப் புக்களும் செய்து அவனை மகிழ்வித்தான்.

## [ரு—பதுமையாரிலம்பகம்]

அங்கே சுதஞ்சணன் பல தேயங்களையும் ஆங்காங்குள்ள மலைகள் ஆறுகள் முதலியவற்றையும் காணுதற்குச் சீவகன் விருப்புற்றிருப்பதை அறிந்து அவற்றின் வழி முதலியவற்றைக் கூறிப் பின்னர்க் காமனும் விரும்பும் சாரீரத்தைக் கொடுப்பதும் விடமுதலியவற்றைக் கெடுப்பதும் வேண்டிய உருவைத் தருவதுமாகிய மூன்று மந்திரங்களை அவனுக்கு மொழிந்து அவனை யேந்திக்கொண்டு தன் மலையினின்றும் இறங்கிப் பூமியில் விடுப்ப, சீவகன் அவன் முன்னர்க் கூறிய வழியே போய் மிருகங் களையும் பறவைகளையும் கொன்று தின்று திரியும் கொடிய வேடனொரு வனைக் கண்டு அவனை நல்வழிப்படுத்த நினைந்து அவனுக்கு உறுதிமொழி யுரைத்தனன்.

உரைத்துவிட்டு அப்பாற்சென்று காட்டுத் தீயால் வளைக்கப்பட்டு நின்ற யானைத்திரளின் வருத்தத்தை நீக்கினன்; பின்பு அரணபாத மென்னும் மலையை அடைந்து ஆங்குள்ள அருகக் கடவுளையும் சாரணரையும் வழிபட்டேத்தி அப்பாற் பல்லவ தேயத்துள்ள சந்திராப மென்னும் நகரை நண்ணி அந்நகரத்தரசனாகிய தனபதியின் மகன் உலோகபாலனோடு நட்புற்று அவன் சகோதரியாகிய பதுமையென்பவள் சோலையிற்சென்று பூக்கொய்து விளையாடுகையிற் பாம்பு கடித்தமையால் அவளுக்குண்டான விடவேகத்தைப் போக்கி அவளை மணம்புரிந்து அவளோடும் அவ்விடத்தே இரண்டு மாதங்கள் தங்கி இன்புற்றிருந்தான்; பின்பு வேறிடஞ்செல்ல விருப்புற்று ஒருநாளிரவினடுவில் ஒருவரோடும் சொல்லாது வேற்றுருக்கொண்டு அந்நகரினின்றும் நீங்கி அப்புறம் செல்வானாயினன்.

அப்போது பதுமை சீவகன் தன்னை நீங்கியது தெரிந்து துன்பக் கடலில் அழுந்தி அவனோடு கூடியிருக்கையில் இன்பம்விளைவித்த ஒவ்வொருபொருளையும் கண்டு பலவாறு புலம்பித் தன் தோழிமாருள் அறிவுடையா ளொருத்தி தேற்ற ஒருவாறு தேறியிருந்தனள். அதனை யுணர்ந்த தனபதி மிகவும் கவலையுற்றுச் சீவகனை நாடிக் கொணரும் வண்ணம் சிலரையனுப்ப அவர் சீவகனைப் பலவிடத்துந் தேடியலைந்து பின்பு கண்டு, "நின்னைப் போன்றானொரு குருசிலைக் கண்டதுண்டாயிற் கூறுக" என்ன, சீவகன் அவரை நோக்கி, "அவனை ஒன்பதாம் திங்களிலே காண்பீர்; அதற்கு முன்னம் காணீர்; யான் கூறியது பொய்யுரையன்று; இச்செய்தியை நும் அரசனுக்குக் கூறுமின்" என்று விடுப்ப அவர் போந்து அச்செய்தியைத் தனபதிக்குத் தெரிவித்தார். அவன் ஒருவாறு வருத்தமொழிந்திருந்தான். சீவகன் அப்பாற் சென்றான்.

## [௬—கேமசரியாரிலம்பகம்]

அப்படிச் சென்ற சீவகன் பலவிடங்களையும் கடந்து சித்திரகூட மென்னும் தவப்பள்ளியைச் சார்ந்து அதிலிருந்த தாபதர்களோடும் அளவளாவி அவர்களைத் திருத்திப் பின்பு தக்கநாட்டிலுள்ள கேமமா புரத்தை யடைந்தான்.

முன்பு அந்நகரத்துள்ள வேதவணிகனாகிய சுபத்திரனென்பவன் தனக்குக் கேமசரியென்ற ஒரு புத்திரி பிறந்தபொழுது அவனுக்குச் சாதகங் கணித்தற்குப்போந்த கணிதரை நோக்கி, "இவளுக்குக் கணவன் யாவன்?" என்ன அவர், "நின் மகளுக்குக் கணவனல்லாதார் ஆடவராகத் தோன்றாராதலின், அவள் எவனைக் கண்டு நாணுகின்றளோ அவனே அவளுக்குக் கணவனாவான்" என்றனர். அதுகேட்ட வணிகன் அதுதொடங்கி நாடோறும் வருவோர் பலரையும் தன் மனைக்கழைத்துச் சென்று உபசரித்து விருந்தூட்டி ஒருவரையும் கண்டு அவள் நாணாமை தெரிந்து, "இவளுக்குக் கணவனாவான் வருங்காலம் உளதோ!" என்று கவலையுற்றிருந்தான்.

அப்படியிருந்த சுபத்திரன் சீவகனைச் சந்தித்து அவன் வடிவழகு கண்டு மகிழ்ச்சியுற்று அவனைத் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றான். அப்பொழுது கேமசரி சீவகனைக் கண்டு நாணமடைந்து பின்னர் மோகமுற்று வருந்தினாள். அதனையறிந்த சுபத்திரன் சீவகனுக்கு அவளை மணம்புரிவிக்க அவன் அவளோடும் அவ்விடத்தே இரண்டு திங்கள் தங்கியிருந்து பின்பு வேறிடஞ் செல்லக்கருதி அவளிடத்துச் சொல்லாது பிரிந்துசென்று எதிர்ப்பட்டானொருவனுக்குத் தருமோபதேசஞ்செய்து தன் அணிகலன்களை அவனுக்களித்து அப்பாற் செல்வானாயினான்.

கேமசரி சீவகனைக் காணாது திகைத்துப் பிரிவாற்றாது பலவாறு புலம்பித் தன் நற்றாயாகிய நிப்புதியென்பவள் தேற்ற ஒருவாறு துயரந் தீர்ந்திருந்தாள்.

## [௭—கனகமாலையாரிலம்பகம்]

பின்பு சீவகன் சிலவிடங்களைக் கடந்துசென்று மத்திம தேயத்துள்ள ஏமமாபுரமென்னும் நகரிக்குச் சமீபமாகிய ஒரு பூஞ்சோலையை யடைந்து ஆங்குள்ள அழகான ஒரு பொய்கையைக் கண்டு அதன் வளங்களை நோக்கிக் காந்தருவதத்தையையும், குணமாலையையும் நினைந்து பலவாறு புலம்பி மிகுந்த வருத்தமடைந்து அப்பாற்செல்லாது அவ்விடத்தேயிருந்தான். அப்பொழுது அந்நகரத்தரசனாகிய தடமித்தன் புதல்வன் விசயனென்பவன் அச்சோலையை அடைந்து சீவகனைக்கண்டு, "இவன் இவ்விடத்தானல்லன்" என்றெண்ணித் தேய முதலியவற்றை வினவ, சீவகனும் தானின்னானென்று புலப்படாவண்ணம் அவற்றைக் கூறி அவ்விடத்துப் பலமுறை முயன்றும் அவ்விசயன் எய்து வீழ்த்த மாட்டாத மாங்கனியொன்றைத் தான் ஓரம்பாலெய்து அவ்வம்புடன்

அம்மாங்கனி தன் கையில் வரப்பெற்றுத் தான் வில்வித்தையில் வல்ல ஞதலை வெளிப்படுத்த அதனை அவ்விசயனறிந்து மகிழ்ந்து சீவகனை உடன்கொண்டு சென்று தன் தந்தையாகிய தடமித்தனுக் கறிவித்தான். அவன் சீவகனைக்கண்டு உவப்புற்று விசயன் முதலிய தன் புத்திரர் ஐவர்க்கும் வில்வித்தை முதலியன கற்பிக்கும்படி அவனை நியமிக்க, அவன் அவற்றை அவர்களுக்குக் கற்பித்து வருகையில், அவர்கள் அவ்வித்தைகளில் மிகவும் வல்லுநராயினர். அதனை அரசன் அறிந்து அளவில்லாத மகிழ்ச்சியுற்று அவனைத் தன்னிடத்தே வைத்துக்கொள்ளக் கருதித் தன் புத்திரி கனகமாலையை அவனுக்கு மணம் புரிவிக்க, அவன் அவளோடுகூடி அவ்விடத்தே யிருந்தான்.

சீவகன் அங்ஙனமிருக்க, நந்தட்டன் அவன் இன்னவிடத்திலுள்ளா னென்பதை அறியாகுகி நாடெங்குந் தேடியும் அவனைக் காணுது வருந்திக் காந்தருவதத்தையை வினவி அவள் செய்த வித்தை மகிமையாற் சீவகன் ஏமமாபுரத்திற் கனகமாலையோடிருத்தலை நேரிற் கண்டு மகிழ்ச்சி யடைந்து காந்தருவதத்தையை வணங்கி, "அடியேன் சீவகனையடையும்படி அருள் புரிவாய்" என்று வேண்ட, காந்தருவ தத்தை தன் வித்தை விசேடத்தால் நந்தட்டனைச் சீவகனிருக்குமிடத்தை யடையச் செய்தாள். அப்படியடைந்த நந்தட்டனைச் சீவகன் கண்டு ஆநந்தமுற்றுத் தழுவி எல்லாச் செய்திகளையும் வினவி அவனை மகிழ்வித்து அவனோடும் அந்நகரத்திருந்தான்.

அச்செய்தியையறியாத தோழன்மார் கவலைமிக்குக் காந்தருவதத் தையை அடைந்து சீவகன் ஏமமாபுரத்தே இருத்தலையும், நந்தட்டன் அவனை அடைந்ததையும் அவளால் தெரிந்துகொண்டு தாமும் சீவக னிடஞ் செல்லக் கருதி அவளுக்குத் தெரிவித்து விடைபெற்றுப் பல வீரர் களோடும் புறப்பட்டு ஏமமாபுரம் செல்வாராகி விசயை தவஞ்செய்து கொண்டிருக்கும் தவப்பள்ளியை யடைந்தனர். அப்பொழுது விசயை அவர்களை நோக்கி, "நீங்கள் எங்குள்ளீர்? எங்குச் செல்கின்றீர்" என்று வினவ, தம் வரலாறு சொல்லுகையிற் சீவகன் வரலாறுஞ் சொல்லும்படி நேர, அதனைக் கூறுநின்ற தேவதத்தன், "கட்டியங்காரன் கட்டளை யால் மதனன் முதலியோர் சீவகனைக் கொல்லக் கொலைக்களங்குறுகலும் ஒரு தெய்வம் வந்து காத்தது" என்று சொல்ல வெண்ணி, "சீவகனைக் கொல்ல" என்றவளவில் விசயை பதைபதைத்து மூர்ச்சையுற்றுப் பின்பு எழுந்து சீவகன் வரலாறுகளை வெளிப்படச்சொல்லிக் கண்ணீர் விட்டுப் பிரலாபித்தழுகையில், தோழர் தம்முள் ஒருவரையொருவர் நோக்கி மகிழ்ந்து அவளைச் சீவகன் நற்றுயென்றும், சீவகனை இராசகுமாரனென் றும் விளங்க அறிந்தவர்களாகிச் சீவகன் இறவாதிருத்தலை அவளுக் குணர்த்த விசயை, "என்மீது வைத்த காதலாலே என் இறை இறந்த பின்பு யான் மிகுந்த துன்பமடைந்தேன்; இச்செய்தியை என் ஐயனுக்கு உணர்த்தி அவனை என்னிடத்து அழைத்து வாருங்கள்" என்று கூறவே தோழர் வணங்கி, "தாயே! ஒரு மதிக்குள்ளே நும்பாற் சீவகனை

அழைத்து வருவேம்; நீவிர் கவலைப்படவேண்டாம்" என்று சொல்லி விடைபெற்று ஏமமாபுரத்தைச் சார்ந்த ஒரு சோலையை யடைந்து அங்கிருந்துகொண்டு அந்நகரத்தில் நந்தட்டனோடு சீவகனிருத்தலை ஒற்றரால் அறிந்து அவனைக் காணுமாறு எங்ஙனமென்று ஆலோசித்து யுத்தஞ்செய்ய வந்தவர்களைப்போலவே கோலங்கொண்டு அந்நகரை வளைந்து அரசன் பசுக்களைக் கவர்ந்தனர்.

அதனையறிந்து சினந்த அரசன் கட்டளையாற் பெரும்படை சூழத் தேர் மீதேறிப் போர் செய்தற்கு நந்தட்டனோடு வந்த சீவகனைக்கண்டு பதுமுகன், "அடியேம் நின் திருவடி நிழலிலே உறையவேண்டிச் சச்சந்தன் மகனாகிய நின்னைக் காணவந்தோம்" என்று எழுதியெய்த அம்பு சென்று சீவகன் தேர்மீது மாறிவீழ்ந்தவளவிலே சீவகன், 'இக்கணையை இவ்வாறு வீழும்படி எய்தவன் பதுமுகனே' என்றறிந்து போர்செய்யாதபடி தன்படையை விலக்கி நிற்கவே தோழர்சென்று அவனை வணங்கிப் பேரானந்தமுற்று அவனோடு நகரஞ் சென்று அரசனைப் பணிந்தனர். அரசன், "இவர்கள் யார்?" என்று வினவுகையில் சீவகன், "என் உயிர்த்தோழர்" என்றான். பின்பு சீவகன் தனியேயிருந்து தோழரை நோக்கி, "என்னிலைமையை எங்குணர்ந்தீர்?" என்ன அவர், "சச்சந்தன் தேவியாகிய விசயையைத் தண்டகாரணியத்தே கண்டு தெரிந்துகொண்டோம்" என்றார். உடனே சீவகன் கண்ணீர்சொரிய உரோமஞ்சிலிர்ப்ப, "மகாபாவியாகிய என்னைப்பெற்ற அடிகளும் உளரோ! உளரோ!" என்று பன்முறை வினவி அவரிருக்கின்ற திசை எங்கேயெங்கேயென்று கேட்டு அத்திசையைநோக்கி விரையவணங்கி அங்கே செல்லும் கருத்துடையவனாகி விடை பெறுதற்பொருட்டுத் தடமித்தன்பாற் சென்றான்.

உடனே அவனும் தோழராற் சீவகன் வரலாறனைத்தும் தெரிந்து மகிழ்ந்து விடைகொடுக்கவே சீவகன் கனகமாலையை அவ்விடத்தே வைத்து விட்டு எல்லாரோடும் புறப்பட்டு வழிக்கொண்டு சென்றான்.

## [அ—விமலையாரிலம்பகம்]

சென்ற சீவகன் தோழரோடும் தண்டகாரணியமடைந்து தன்வரவு நோக்கிக் கொண்டிருந்த விசயமாதேவியைத் தரிசித்து வணங்கிப் பேரானந்த முற்றான். விசயையும் சீவகனை எடுத்துத்தழுவிப் பெரிதும் பாராட்டி அன்புறுவாளாயினள். இங்ஙனம் ஆறுதினங்கள் சென்றன. பின்பு விசயை தோழருட் சிலரை வேறேயழைத்துச் சில உபாயங்களைக் கூறிப் பின்பு சீவகனை நோக்கி, "நின்மாமனாகிய கோவிந்தனைக் கண்டு அவனேவலாற் பகையை வெல்லக்கடவை" எனவே சீவகன், "உமது கட்டளைப்படியே செய்வேன்" என்றுகூறி ஆங்கிருந்த சில தவமகளிரோடும் விசயையைமுன்னதாகத் தன் மாமனது நகரிற்கனுப்பிவிட்டுத் தான்குதிரையேறி எல்லாரோடும் ஏமாங்கத நாட்டைச்சார்ந்து இராசமாபுரத்தின் அருகேயுள்ள ஒரு சோலையிற் தங்கி உண்டுறங்கியபின்

மற்றைநாட்காலையில் தோழரை அவ்விடத்தே வைத்துவிட்டுத் தான் மகளிர் விரும்புதற்குரிய ஒரு வடிவங்கொண்டு அந்நகரத்து வீதியிற் சென்றான்.

அப்பொழுது தான் விளையாடிய பந்தினுளொன்று எழும்பிச்சென்று சீவகன் முன்னே வீழ அதனை எடுத்தற்கு வந்த விமலையென்பவள், அவனைக் கண்டு வேட்கையதிகரிக்கப்பெற்று நெஞ்சம்கலங்கி நாண மகன்று வருந்துவாளாயினள். சீவகனும் அவள் பேரழகை நோக்கி அதிகமோகங்கொண்டு அப்பாற் செல்லமாட்டாமல் அவள் தந்தையாகிய சாகரதத்தனுடைய கடையிலே வருந்தியிருந்தான்.

சாகரதத்தன் தன்னிடத்துப் பலநாளாக விலையாகாமலிருந்த சரக்கை யெல்லாம் அப்பொழுதுவிற்று மிகவும் மகிழ்ச்சியடைந்து சீவகனைச் சந்தித்து அவனைநோக்கி, "நம்பனே! என்மனைவியாகிய கமலை பெற்ற விமலைக்குச் சாதகஞ் செய்யவந்த சோதிடரைநோக்கி, 'என் பண்டம் விலையாகாமைக்குக் காரணம் யாது?' என்று வினவினேன்; அச்சோதிடருள் ஒருவன், 'நின்மகள் விமலைக்குரிய கணவன் நின் கடையில்வந்து தங்குவான்; அப்பொழுது எல்லாம் விலையாகும்' என்றான். அப்படியே நீவந்து தங்கியவுடன் எல்லாப்பண்டமும் விலையாயின; ஆதலால் நீயே விமலை கணவன்" என்று கூறிச் சுபமுகூர்த்தத்திலே அவனுக்கு விமலையை மணஞ்செய்வித்தான். சீவகன் அவளோடும் அவ்விடத்திலே இரண்டு தினங்கள் தங்கி மற்றைநாட் காலையில் எழுந்து சோலையிலுள்ள தோழரையடைந்தனன்.

## [கூ—சுரமஞ்சரியாரிலம்பகம்]

அப்பொழுது தோழர் சீவகனது மணக்கோலங்கண்டு மகிழ்ந்து, "நீ மணஞ்செய்த தையலின் பெயர் கூறுக" எனவே சீவகன், "விமலை" என்றான். கேட்ட தோழர் மிகவியப்புற்று, "இவனே காமன்" என்று கூறினர். அவர் அங்ஙனம் கூறக்கேட்ட புத்திசேனன் சீவகனை நோக்கி, "இவர்களைப்போல யானும் நின்னை வியப்பேனல்லேன்; இந் நகரத்தின்கண்ணே ஒரு மடந்தை சுரமஞ்சரி யென்றுளாள்; அவள் ஆடவர் தன்மனைக்கு அருகே செல்லினும் 'உயிரை விடுவேன்' எனக் கோபியாநிற்பள்; அவளை மயங்கச்செய்து இன்பநுகரின் நின்னை காமதிலகனென்பேன்" என்று கூறவே சீவகன் புத்திசேனனை நோக்கி, "நீ கூறிய அவளைக்கொணர்ந்து நாளையே காமன் கோட்டத்தில் மகிழ்விப்பேன்; நீ காமன் படிவத்தைச் சார்ந்து மறைந்திரு" என்று சொல்லி உடனே அவ்விடம்விட்டுச் சுரமஞ்சரியிடத்து மிகுந்த காதலுடையவனாகி ஒரு வயோதிகப் பிராமண வடிவங்கொண்டு தண்டூன்றி மிக்க மெலிவைப் புலப்படுத்திக்கொண்டு கண்டோரிரங்க நடந்துசென்று அவளது கன்னிமாடத்தின் வாயில்முன் போயினன்.

அப்பொழுது சீவகன் தன்முதுமையைக் கண்டு அச்சுறுத்தற் கஞ்சிய அவ்வாயில் காக்கும் மகளிரைநோக்கி, "பசியால் மிக வருந்து

கின்றேன் " என்றான். அம்மகளிர் விரைந்து சுரமஞ்சரியை அடைந்து, "ஊதப் பறக்குந்தன்மையனாகவும் மிகுந்த பசியாளனாகவும் ஒரு விருத்தப் பிராமணன் நம் மனைவாயிலில் நிற்கின்றான்; அவனிடத்து யாம் செய்வதறிந்திலேம்; விரைந்து கூறுதி" எனலும் சுரமஞ்சரி, "அம்மூப்புடையானைப் பார்ப்பின் விரதம் குன்றுவதன்று" என்றெண்ணி மாடத்தினின்று மிறங்கிவந்து அம்முதியோனை நோக்கி, "நீர் வந்தது என்ன காரியத்தைக் கருதி?" என்று வினவினள். அவன், "குமரியாட" என்றான். அவள், "அதனாற் பயனென்ன?" என்று வினவ முதியோன், "இம்மூப்புப்போம்" என்றான். சுரமஞ்சரி கேட்டு நகைத்து "இவர் பித்தர்போலும்; இது நிற்க; இவர் பசியைத்தீர்ப்பது பேரறம்" என்றெண்ணி அம்முதியோனைத் தன்மாடத்தே அழைத்துச் சென்று ஸ்நானம் செய்வித்துப் பொற்கலத்தைப் பரப்பி அறுசுவையடிசி லூட்டி முகவாசமீந்து கட்டிலின்மீதுள்ள பஞ்சணையிலே படுக்கச் செய்ய, அம்முதியோன் சிறிதுநேரம் உறங்குவான்போற் கிடந்து பின்னர் ஒரு கீதத்தைப் பாடினான். கேட்ட மகளிர் விம்மிதமுற்றனர். சுரமஞ்சரி நாணி நகைத்துக் கேட்டுக்கொண்டு நின்றனள்.

அங்ஙனம் நின்ற சுரமஞ்சரி, "இப்பாட்டுச் சீவகன் பாட்டை ஒத்துளது" என்று தோழியர் வியந்து சொல்லக் கேட்டு, "நாளைத் தினம் சென்று காமனை வழிபட்டு, 'இப்பாட்டையுடைய சீவகனை விரைவிற்றருக' என்று வேண்டிக்கொள்வேன்" என்று கூறி மற்றை நாளில் தன்னுயிர்த் தோழியுடனே அவ்வேதியனையும் அழைத்துக் கொண்டு சகடமூர்ந்து ஆடவர் காணாமற் காமன் கோட்டத்தை அடைந்து தான் பரவுகின்றது கேளாதபடி கூடவந்த அந்தணனை ஆங் குள்ள ஓரறையில் வைத்துவிட்டுச் சென்று காமனை வணங்கி, "பூமலி மார்பனே! எனக்குச் சீவகனை விரைவில்தரின் மகரக்கொடியும், அம்பும், கருப்புச்சிலையும், தேரும், ஊரும், தருவேன்" என்று வேண்ட ஒளித் திருந்த புத்திசேனன், "சீவகனை நீ பெற்றாய்; இனி விரைவிற் செல்" என்று சொல்ல, அதனை அவள் காமதெய்வம் வாய்விட்டுக் கூறிய தாகவே யெண்ணிப் பின்னும் பரவி மீண்டுவந்து அறையிடத்தே உரிய வடிவுகொண்டு நின்ற சீவகனை நெஞ்சு துணுக்கெனக் கண்டு நாணி நைந்து நிற்ப, சீவகன் மிக்க காதலுடையனாகிச் சுரமஞ்சரியைத் தழுவி, "நின்னை நாளை மணம் செய்வேன்" என்று விடுப்ப அவள் தன் மனையை யடைந்தனள்.

தோழர் அச்செய்தியைப் புத்திசேனனால் அறிந்துகொண்டு சீவகனை, 'காமதிலகன்' என்று புகழ்ந்தனர். நிகழ்ந்த அச்செய்தியைச் சுரமஞ்சரி யின் தாயாகிய சுமதியும் தந்தையாகிய குபேரதத்தனும் கேட்டு மகிழ்ந்து சுற்றத்திற் கெல்லாமறிவித்துச் சீவகனுக்குச் சுரமஞ்சரியை மணம் செய்வித்தனர். சீவகன் அவளோடும் அன்று அவ்விடத்தே தங்கி யிருந்து மற்றைநாளெழுந்து தோழர் சூழத் தன் மனையை அடைந்து தன் குதிரை முதலியவற்றை நோக்கித் தன்னையே நினைந்து அழுது

புலம்பி உருகிக்கொண்டிருந்த சுநந்தையையும் கந்துக்கடனையும் கண்டு வணங்கி அவர்கள் வருத்தத்தைப் போக்கி மற்றையாரை மகிழ்வித்துக் காந்தருவதத்தையைக் கண்டு குணமாலையைத் தேற்றி மேல் முடியும் காரியங்களைக் கந்துக்கடனுக்குக் கூறி விடைபெற்றுக் குதிரைகொள்ளும் வாணிகன்போல வேடம்பூண்டு தோழர் சூழ ஏமாங்கத நாட்டைக் கடந்து சென்றான்.

## [கo—மண்மகளிலம்பகம்]

அங்ஙனம் சென்ற சீவகன் விதையநாட்டை யடைந்து நகரத்தார் எதிர்கொண்டு விரும்பச் சென்று தன் மாமனாகிய கோவிந்தராசனை வணங்கினான். கோவிந்தராசன் மகிழ்ந்து விருந்து செய்வித்துச் சீவகனுக்கு மேல்நடத்த வேண்டுவனவற்றை யெண்ணித் தன் மகனாகிய ஸ்ரீதத்தனுக்குச் சுபகாலத்திலே அரசளித்து எல்லாரோடுமிருக்கையில், தன்னை இராசமாபுரத்துக்கு வரும்படி வேண்டித் தன் கருத்தறிதற் பொருட்டு வணக்கமுடையவன் போலே தனக்குக் கட்டியங்காரன் அனுப்பிய வஞ்சக வோலையை விரிசிகனென்பவன் படிப்பவறிந்து, "கட்டியங்காரனைக் கொல்லுதற்குரிய உபாயம் இதுபோல வேறொன்று மில்லை" என்று சீவகன்கூறக் கேட்டு நால்வகைச் சேனையோடும் புறப்பட்டு இராசமாபுரத்தின் பக்கத்தே வந்து தங்கினான். அப்பொழுது கட்டியங்காரனுக்குத் துர்நிமித்தங்கள் நிகழ்ந்தன.

அவை நிகழ்ந்தபின் கோவிந்தன் கட்டியங்காரனைக் கபடமாக வருவிக்க எண்ணித் திரிபன்றியந்திரமொன்று செய்வித்து, "இவ் யந்திரப்பன்றியை எய்து வீழ்த்துபவனே என்மகள் இலக்கணைக்குக் கணவனாவான்" என்று பிரசித்தஞ் செய்தான். அது தெரிந்த கட்டியங்காரனும் பல தேயத்தரசரும் அவ்விடத்தே வந்துகூடி அந்த யந்திரத்தை நோக்கி வியப்புற்றனர். பின்பு இலக்கணையை விரும்பிய அரசிளங் குமரர் தனித்தனியே வந்து வில்லை வளைத்து அம்பு தொடுத்து அப் பன்றியை எய்து வீழ்த்தமாட்டாதவராகி மெலிவடைந்தனர். அப் பொழுது சீவகன் யானைமேற் கொண்டு வெளிப்பட அவனை இறந்தா னென்று கருதியிருந்த கட்டியங்காரன் கண்டு துணுக்குற்றுப் புலியைக் கண்ட மான்போலே அஞ்சிக் கலக்கமுற்றான். சீவகன் யானையினின்று மிறங்கி அவ்யந்திரத்துள்ள சக்கரத்தின்மேல் ஏறி நின்று வில்லை வளைத்து அம்பு தொடுத்து அப்பன்றியை வீழ்த்தினான்.

அப்பொழுது கோவிந்தன் கட்டியங்காரனுக்கும் மற்றையோருக்கும் சீவகனை இன்னானென்று விளங்கக் கூறினன். அதன்பின்பு ஆகாயத் திடத்தே ஓர் இயக்கன் தோன்றி, "சீவகனாகிய சிங்கம் கட்டியங் காரனாகிய கரியினுயிரை விழுங்கும்" என்று கூறக்கேட்டுக் கட்டியங் காரன் மிகவும் சினந்து சீவகனை நோக்கி, "நினக்கு ஒருபொழுதும் அஞ்சுவேனல்லேன்; எனது ஆற்றலை நின் தந்தையறிவன்; நீ அறியாய்; நின்னையும் என்னைக் கபடமாக வருவித்துக்கொல்லத்

துணிந்த நின் மாமனையும் வெல்லும் விருப்புடையேன் ; போர் செய்தற்கு எழுக'' என்று சொல்லித் தன் மக்கள் நூற்றுவரோடும் மற்றை அரசர்களோடுங்கூடி யுத்த சந்நத்தனாக, சீவகனும் தோழரோடும் தம்பிமாரோடும் மற்றை யரசரோடும் புறப்பட, அவ்விருதிறத்தார் சேனையும் எதிர்த்து நின்று போர் செய்தன ; சீவகன் படைவீரராற் கட்டியங்காரன் படைவீரரிற் சிலர் மாய்வுற்றனர் ; சிலர் தோற்றோடினர். பின்பு சீவகன் கட்டியங்காரன் புதல்வர் நூற்றுவரையும், பதுமவியூகம் வகுத்து அதனுள்ளே யிருந்த அவனையும் கொன்று விளங்கினான். எல்லாரும் புகழ்ந்தனர். விசயை கேட்டு மகிழ்ந்தனள்.

## [கக—பூமகளிலம்பகம்]

பின்பு சீவகன் இராசமாபுரமடைந்து மாளிகை புகுந்து தன்னைக் கண்டு நடுங்கிய கட்டியங்காரன் பரிசனங்களுக்கு அபயமளித்து வேண்டும் பொருள்களும் விருத்தியும் உதவி அவர் விரும்பியபடி உரிய இடங்களுக்குப் போகச் செய்து பின்பு எல்லாவிடங்களையும் கண்ணுற்று முத்திரை வைத்துக் காவலிட்டு யுத்தவீரர்களை இளைப்பாறச்செய்து மகிழ்வித்து வேத்தவைசார்ந்து சுபகாலத்திலே சிங்காதனத்தில் வீற்றிருந்து மணிமுடி சூடி, கட்டியங்காரனால் துன்பமுற்ற யாவரையும் இன்பமுறுவித்து நீதிநெறியை நடாத்தி அரசியற்றுவானாயினான்.

## [க௨—இலக்கணையாரிலம்பகம்]

பின்பு அவன் தன்னருகிலுள்ளாரை நோக்கி, ''பதுமைமுதலிய தேவியரை அழைத்துவருவீர்'' என்ன அவர் உடனே அங்கங்கே சென்று அவர்களை அழைத்துவந்தார். வந்த மங்கையர் சீவகனைத் தொழுது வணங்கி, அவனால் அங்கீகரிக்கப்பட்டுப் பெருமகிழ்ச்சியோடிருந்தனர்.

அப்பால் கோவிந்தராசன் இலக்கணையைச் சீவகனுக்கு மணஞ்செய்விக்கக் கருதிக் கணிதர்களால் விவாகமுகூர்த்தம் வரையறைசெய்து முரசறைவித்து நகரையலங்கரிப்பித்துக் குறித்த முகூர்த்தத்தில் விதிப்படி சீவகனுக்கு இலக்கணையை மணஞ்செய்வித்தான். பின்பு எல்லாருங் கண்டு மகிழும்படி சீவகன் நகர்வலமாகப் பவனிவந்து ஆலயமடைந்து அருகக்கடவுளை வலஞ்செய்து ஏத்தித் தொழுது அக்கடவுளுக்கு நூறு ஊர்கள் முதலியவற்றைச் சேர்ப்பித்துத் தன் மாளிகையையடைந்து சிங்காதனத்திலிருந்து செங்கோல் செலுத்தி அரசு புரியலாயினான்.

அங்ஙனம் அரசுபுரிகின்ற சீவகன் தன்னை வருந்திவளர்த்த கந்துக்கடனுக்கு அதற்குமுன் இல்லாத அரசுரிமையையும் சுநந்தைக்குத் தேவிப் பட்டத்தையும் கொடுத்தான் ; நந்தட்டனை இளவரசாக்கினான் ; நபுலவிபுலர்க்குக் குறுநில மன்னர் மகளிரை மணஞ்செய்வித்து நாடுகளையும் நல்கினான் ; தன் தோழர்க்கு அரசையும், ஏனாதிமோதிரம் முதலியவற்றையும் ஈந்தான் ; தன் நிமித்தம் வருந்திய பிறர்க்கு அமைச்சரைக் கொண்டு நிதியையும் நாட்டையும் கொடுப்பித்தான் ; தன்னை வருந்தி வளர்த்த செவிலித்தாயர்க்கு நாள்தோறும் ஆயிரம்பொன் இறை

தண்டுதற்குரிய ஐந்து கிராமங்களைக் கொடுத்தான் ; மாமனாகிய கோவிந்தனுக்குக் கட்டியங்காரனுடைய பொருள்களையெல்லாம் உதவினான் ; தனக்குப் பேருதவிபுரிந்த சுதஞ்சணனுக்குக் கோயில் சமைப்பித்து அவன் வடிவைப் பொன்னாலியற்றி ஓரூரையும் நிலைபெறுத்தி அவன் சரிதத்தை ஒரு நாடகமாகச் செய்து நடத்தினான். பின்னும் பெருதார் யாரென்று சிந்தித்து, இளமைப் பருவத்தே தான் விளையாடிக்கொண்டிருந்த ஓர் ஆலமரத்துக்கு மாலையணிந்து பீடஞ்சேர்த்தி அதற்குப் புண்ணியம் சேருமாறு பசுக்கள் மேய்ந்து அதன் நிழலில் உறங்கும் வண்ணம் ஐந்தூரை அதற்கு இறையிலியாகவிட்டான். மேலும் இவ்வாறு செய்யவேண்டுவனவெல்லாம் செய்து முடித்துத் தேவிமாரெண்மரோடுங் கூடி மகிழ்வுற்றுச் செங்கோல் செலுத்தி வருநாளில் உலகம் செழிப்புற்றது ; யாவரும் இன்புற்றனர் ; எல்லா உயிர்களும் மகிழ்வடைந்தன.

## [கரு—முத்தியிலம்பகம்]

அப்படி நிகழும்பொழுது ஒருநாள் விசயை தவப்பள்ளியினின்றும் தனக்குத் துணையாகப்போந்த தவமகளிர்க்குக் கைம்மாறில்லையேயென்றெண்ணி அருகக்கடவுளுக்குக் கோயில் சமைப்பித்துப் பூசை செய்து அப்பூசையின் பயனையெல்லாம் அவர்களுக்குக் கொடுத்தனள் ; முன்பு சண்பகமாலைபோல் வந்து தன்னிடரைத் தீர்த்துத் தன்னைத் தாபதப் பள்ளியிலே சேர்த்துப் பாதுகாத்த தெய்வத்திற்கு அது தங்கும் புறங்காட்டிலே கோயில் சமைப்பித்தாள் ; தன்னை யெடுத்துப்போந்த மயிற்பொறியைத் தான் எப்பொழுதும் காணும்படி தானுறையுமாடத்தே எழுதுவித்தாள் ; சீவகன் பிறந்தவிடம் சுடுகாடாகக் கிடவாதபடி சாலையாக்கி அவ்விடத்தே ஐந்நூற்றைந்து பிள்ளைகளுக்கு நாள்தோறும் பாலும் அன்னமும் உண்பிக்கும்படி செய்வித்தாள் ; சுநந்தைக்கு உபசாரமொழி கூறி மேம்பாடுறுவித்தாள் ; தன்னை வணங்கிய காந்தருவதத்தை முதலிய எண்மரையும் எடுத்துத்தழுவி, “ உலகாளுஞ்சிறுவரைப் பெறக்கடவீர் ” என்று பணித்தாள்.

இங்ஙனம் தான் செய்யவேண்டியவற்றைச் செய்து முடித்துப் பின்னர்ச் சீவகனையழைத்து அருகேயிருத்தி அவனுக்குத் தருமோபதேசம் செய்து தான் துறக்கவெண்ணியதைத் தெரிவித்து உடன்பாடு பெற்றுச் சிவிகையேறிச் சுநந்தையோடும், துறக்க விரும்பிய மற்றை மகளிரோடும் சமீபத்துள்ள ஒரு தவப்பள்ளியைச் சார்ந்து அங்கே தவஞ்செய்துகொண்டிருந்த பம்மையென்பவளைத் தொழுது, “ அடிகளே ! எம்மையெல்லாம் பிறவிக் கடலினின்றும் கரையேற்றுவீர் ” என்று பிரார்த்தித்து அவள் கூறிய அறமொழி கேட்டுத் தீக்ஷை பெற்று விதிப்படி துறந்து அவ்விடத்தே தவஞ்செய்து கொண்டிருந்தாள்.

அவள் அவ்வாறிருக்க, ஒரு நாள் சீவகன் அத் தவப்பள்ளியைச் சார்ந்து விசயை சுநந்தை இருவரையும் தரிசித்து வந்து தேவிமாரெண்மரோடும் நீர் விளையாட்டை நிகழ்த்தி இளவேனில் முதலிய ஒவ்வொரு

பருவத்திலும் அவர்களோடும் இன்பம் நுகர்ந்து செல்லா நிற்கையில், தேவியரெண்மரும் கருப்பமுற்றுத் தனித்தனியே ஒவ்வொரு புத்திரரைப் பெற்றுர். காந்தருவதத்தை, குணமாலே, பதுமை, கேமசரி, கனக மாலே, விமலே, சுரமஞ்சரி, இலக்கணை யென்னும் தேவியர் புதல்வரெண் மருக்கும் முறையே சச்சந்தன், சுதஞ்சணன், தரணி, கந்துக்கடன், விசயன், தத்தன், பரதன், கோவிந்தனென்று பெயர்களிடப்பட்டன. அப்புதல்வர் வளர்ந்து ஐந்தாவது பிராயத்தில் வித்தியாரம்பஞ் செய் விக்கப்பெற்று முறையே கலேகள் கற்றுப் படைக்கலம் பயின்று ஊர்திக ளூர்ந்து மேன்மையடைந்தார். அப்பொழுது சீவகனுக்கு நாற்பத்தைந் தாவது பிராயம் நடந்தது.

பின்னர் ஒரு நாள் மல்லிகைமாலேயென்பவள் வந்து சீவகனே வணங்கி, "அரசே! சோலே நிறையப் பூத்து அழகெய்தியது; அதனைக் கண்டருள்க" எனவே சீவகன் தேவியர் சூழ அச்சோலேயையடைந்து எல்லா வளங்களேயும் தான் கண்டு தேவியர்க்குக் காட்டி ஒரு பலா மரத்தின் நீழலே யடைந்து ஒரு பக்கத்திருந்தான். அப்பொழுது அவ் விடத்தே ஓராண்குரங்கு தன்னேடு பிணங்கிய தன் காதன் மந்தியை மகிழ்விக்கும்பொருட்டுப் பலாப்பழமொன்றை யெடுத்துக் கீறிச் சுளேகளே அதற்குக் கொடாநிற்கையில் அச்சோலே காப்பாளுகிய ஒருவன் வந்து அக்கனியைக் கவர்ந்து அக்கடுவனேயும் மந்தியையும் ஓட்டித் தான் உண்டுமகிழ்ந்தான். அதனே ஆங்கிருந்த சீவகன் கண்டு செல்வத்தில் மிகவும் அருவருப்புற்று, "கைப்பழமிழந்த மந்தி அரசையிழந்த கட்டி யங்காரனே யொத்தது; இச் சிலதன் அக் கட்டியங்காரனேத் துறந்து அரசை யெய்திய என்னே யொத்தனன். வலியான் கவர்ந்து நுகர்தற் குரிய இச் செல்வத்தால் அடையும் பயனென்னே?" என்றெண்ணித் துறக்கும் சிந்தையனுகித் தன் மாளிகையை யடைந்து ஸ்நாநஞ் செய்து அறுசுவையடிசிலுண்டு முகவாசங் கொண்டு தேவிமார்களோடும் கோயி லேச் சார்ந்து அருகக் கடவுளே வணங்கித் துதித்து வலமாக வந்தான்.

வந்தவன் அவ்விடத்து அசோக மரத்தின் கீழே பளிக்குக்கல் மேலே சாரணரிருவர் நிற்பக் கண்டு அவரைத் தரிசித்து வணங்கி வாழ்த்தி அவரை நோக்கி, "அடிகளே! பிறப்பினே யொழிக்கும் வழியறியா தேன் பல பிறப்புக்களிலும் செய்துகொண்ட தீவினே கெடும்படி தவஞ் செய்து ஞானத்தை யடையுமாறு அருளுமின்" என்று பிரார்த்திக்க அவருள் இரத்தினப்பிரபை யென்பவர், "அரசனே! கேட்பாய்" என்று தவத்தாற் பெறுகின்ற மக்கள் யாக்கையையும், அந்த யாக்கை நூறி யாண்டும் நிலேபெற்று நில்லாது கருப்ப முதலாக அழிகின்ற அழிவையும், நரககதி விலங்குகதி மக்கட்கதி தேவகதி யென்கின்ற நாற்கதித் துன்பத் தையும், துணியப்படும் பொருளேயும், அப்பொருளேத் துணியும் துணி வையும், சீலத்தையும், தானத்தையும், அச்சீலத்தாலும் தானத்தாலும் பெறப்படும் பயன்களேயும், வீட்டிலக்கணத்தையும் விளங்க விரித்துக் கூறினர். யாவற்றையும் சீவகன் விரும்பிக் கேட்டு, "சுவாமீ! அடியே

னுடைய முற்பிறப்பையும், அப் பிறப்பிற் செய்த பாவத்தையும் அருளிச் செய்க'' என்று கேட்க அவர் கூறுவாராயினர் :—

"தாதகியென்பதொரு நாட்டிற் பூமிமாதிலகமென்னும் நகரில் அரசன் பவணமாதேவ னென்பான்; அவன் மனைவி சயமதி யென்பாள்; அவர் புத்திரன் அசோதரனென்பான். அவனுக்குத் தந்தை தாயர் இலக்கணமமைந்த மகளிரை மணஞ்செய்விக்க அவ்வசோதரன் அம் மனைவிகளோடும் இன்புற்றொழுகும் நாட்களிலே ஒருநாள் அவன் அம் மனைவியரோடு நீர் விளையாடுதற்கு ஒரு தடாகத்தை அணுகியபொழுது அவன் மனைவியர் ஆங்குள்ள தாமரை மலரில் ஒளித்திருக்கும் அன்னக் குஞ்சுகளைக் கண்டு, 'இவற்றைப் பிடிப்பித்துத் தருக' என்று அவனை வேண்ட அசோதரன் தன்னருகே நின்ற ஏவலாளனொருவனைக் கொண்டு அவற்றுளொன்றைப் பிடிப்பித்து அம்மாதர்களுக்குக் கொடுத்தனன். அவர்கள் அதற்குப் பாலூட்டித் தமது மார்போடணைத்துப் பாதுகாத்து வந்தார். இதனை ஒருநாள் பவணமாதேவன் கண்டு நடுநடுங்கி அசோ தரனால் விளைந்தமை தெரிந்து சினந்து அவனை வருவித்து நேரே யிருத்திப் பல அறம் போதித்து, 'மைந்தனே! பறவைகளையும், மிருகங் களையும் தம் கிளையினின்றும் பிரித்துக் காவல் செய்து வைத்தோர், மறுமையில் தாமும் தம் கிளையினின்றும் நீங்கிப் பிறராற் காவல் செய்யப் படுவர்' என்று கூற அசோதரன் கேட்டு மிகவும் அஞ்சி, அவ்வன்னப் பார்ப்பைத் தன் மனைவியரிடத்தினின்றும் விடுவித்து அன்று பிடித்த தடாகத்தே போகவிட்டுத் தந்தையைப் பணிந்து, 'அடியேன் துறந்து தவஞ்செய்வல்' என்ன அரசன், 'மைந்தனே! உலகைக் காத்துப் பின்பு துறவினையடைதி' என்று வற்புறுத்திக் கூற, அதனை அவன் மனங் கொள்ளானாகித் தந்தையை உடன்படுவித்து விடைபெற்றுத் துறவிற் சென்றான். அவ்வசோதரன் நீயே'' என்று கூறி மேற்செய்தி கூறுஞ் சாரணர், "அங்ஙனம் துறவிற் சென்ற நீ தவம் செய்து மறுமையில் ஸகஸ்ராரமென்னும் கற்பத்து இந்திரனாகி அரசுபுரிந்து இங்கே அவதரித் தாய்; அன்னப்பார்ப்பைக் கிளையினின்றும் பிரித்துச் சிறை வைத்தமை யால் நீயும் கிளையினின்றும் பிரிந்து சிறைகொள்ளப்பட்டாய்'' என்று கூறக் கேட்டு அஞ்சிப் பதைபதைத்துத் துறக்கும் சிந்தையனாகிச் சீவகன் அவரை வணங்கித் துதித்தான். அப்பொழுது அச்சாரணரிரு வரும் எழுந்து விசும்பாறுகத் தாம் குறித்தவிடம் சென்றார்.

உடனே சீவகன் தேவிமாரோடும் தன் மாளிகையையடைந்து தன் கருத்தை யாவருமறியக் கூறி நந்தட்டனை யழைத்து, "நீ இவ்வுலகாள் வாய்; நான் துறப்பேன்'' என்ன அவன், "இவ்வற்ப வாழ்வை வேண் டேன்; நின் திருவடியை வழிபட்டு வாழும் வாழ்வன்றோ அடியேன் வேண்டுவது'' என்றான். பின்பு தன் புதல்வன் சச்சந்தனை யழைத்து அவனுக்கு இராச தருமங்கள் பலவற்றையும் கூறி மணிமுடி சூட்டி அவனை அரசாக்கி, தம்பிமார் புதல்வருக்கும் தோழர் புதல்வருக்கும் உரிய சிறப்புக்கள் இயற்றி, தான் துறத்தல் கேட்டுப்பிரிவாற்றாது,

"யாமும் நின்னோடு துறப்பேம்" என்று கூறிய தேவிமாரெண்மரையும் விசயைபாற் சேர்த்துத் துறப்பித்துத் தன் பிரிவை எண்ணித் தேயத்தாரும், நகரத்தாரும், மற்றையாரும் விம்மிவிம்மிப் பிரலாபித்து அழவும் தான் ஒருவரையும் நோக்கானாகித் தேவர்கள் தாங்கிச் செல்லும் சிவிகை ஊர்ந்து சமவசரணமடைந்து ஸ்ரீவர்த்தமானரைத் தரிசித்துச் சுதன்மரென்னும் கணதரரால் விதிப்படியே துறந்து விபுலகிரியில் தவஞ்செய்து கருமக்ஷயம் பண்ணி யாவருக்கும் தருமோபதேசஞ் செய்து எல்லா உலகத்திற்கும் உச்சியிலுள்ளதென்று கூறப்படும் ஸித்தக்ஷேத்திரத்தையடைந்து வீடுபெற்றான்.

பின்பு அவன் மேனி அக்கினியிந்திரனாற் கருப்பூரவிநாசம் போலே மறைந்தபின்பு எல்லா உலகத்தாரும் கூடிப் பஞ்சகல்யாணத்துள் ஒன்றாகிய பரிநிர்வாணமென்னும் கல்யாணத்தை விதிப்படி செய்தார்கள்.

தேவிமாரெண்மரும் தவஞ்செய்து மறுமையில் இந்திரராகி இன்புற்றனர். நந்தட்டனும் தோழரும் தவஞ்செய்து மறுமையில் தேவராகிச் சுவர்க்கம் பெற்றனர்.

சீவகன் சரித்திரச் சுருக்கம் முற்றிற்று.

---

## ஸ்ரீபுராணத்தில், 24-ஆம் தீர்த்தங்கரராகிய

## ஸ்ரீவர்த்தமானர் புராணத்துள்ள

# சீவகசரித்திரம்

மற்றொருநாள், சிரேணிக மகாராஜன், ஸமவசரணமடைந்து, அசோகவனத்துள் அசோக விருக்ஷ மூலத்து ரூபயௌவந சுபலக்ஷண ஸஹிதராகித் தியாநாரூடராகியிருந்த ஜீவந்தரமுனிகளைக் கண்டு அத்தியந்தம் [1] விஸ்மிதனாகி ஸுதர்மகணதரரை அடைந்து, "பகவானே! [2] ஈதிருசலக்ஷண ஸஹிதராகிய இந்தத் தபோதனர் யார்?" என்று வினவ அவரும் அருளிச்செய்வார்.

"ஜம்பூத்வீப பரத க்ஷேத்திர ஹேமாங்கத [3] விஷய ராஜமஹாபுரத்து ராஜா ஸத்தியந்தரன்; தேவி விஜயை யென்பாள். இவன் மந்திரி காஷ்டாங்காரிகன்; புரோகிதன் ருத்திரதத்தனென்பான். ராஜா விஜயா தேவியுடன் அனவரதம் போகாபிலாஷி யாகையினால் மந்திரி பக்கலே ராஜ்யகாரிய நிர்வாஹத்தினை நியோகித்து இஷ்டவிஷய காமபோகங்களை அனுபவித்துச் செல்லாநின்ற நாளகத்து ஒருநாள் விஜயை ஓர் அசோக விருக்ஷத்தினைப் [4] பரசுவினாற் சேதிக்க வீழ்ந்தபின், அதன் மூலத்தே ஒரு பாலாசோகம் அஷ்டமாலாலங்கிருதமாகித் தோற்றவும் ஸ்வப்நங் கண்டு இராஜாவுக்கு ஸ்வப்நத்தை நிவேதிப்ப இராஜாவும் சொல்லு வான்:—'எட்டுக் கல்யாணத்தை உடையனாகி எனக்குப் பின் ஸகலபுவன ராஜ்ய யோக்யனாயினானொரு புத்திரனைப் பெறுதி' என்றனன். அதன் பின், சுவர்க்கவாஸியாயினானொரு தேவன் ஸ்வஜீவிதாந்தத்து அவதரித்து விஜயாதேவி கருப்பத்தை யடைந்தனன். அந்நகரத்துக் கந்தோத்கடனென்பான் ஒரு வைசியன் மனோகரோத்தியானத்து எழுந்தருளியிருந்த சீலகுப்தரென்னும் தபோதனரை நமஸ்கரித்து, 'பகவானே! எனக்கு இதற்குமுன் ஆயுஷ்யஹீனராகிய புத்திரரே ஜனித்தனர்; இனி ஆயுஷ்மானாகிய புத்திரன் உளனாகுவனோ?' என்று வினவ, முனிவரனும் [5]அவதிஞானத்தாற் பார்த்து, 'இதன்மேல், ஆயுஷ்யமான்களாயினார் பல புத்திரரையும் பெறுவை; அதற்கு உபாயமும்; பிறந்து மிருதனாகிய புத்திரனை ஸ்மசான பூமியுள் ஸம்ஸ்கரித்தற்காகச் சென்றவிடத்து அங்கே ஒரு பிள்ளையைப் பெறுவை. அவனும் ஸகலபுவந ராஜாவாகித் தபப் பிரபாவத்தால் முக்தி பதமடைகுவன்'

[1] விஸ்மிதம் - ஆச்சரியம்.

[2] ஈதிருசலக்ஷண ஸஹிதர் - இத்தன்மையதாகிய இலக்கணத்தோடு கூடியவர்.

[3] விஷயம் - நாடு.

[4] பரசு - கோடாரி.

[5] அவதி ஞானம் - முற்பிறப்பை யறியுமறிவு.

என்று அவர் அருளிச் செய்யக் கேட்டுப் போயினன். ஒரு [1] யக்ஷி தேவதை [2] சரமதேஹதரனொருவன் விசயாதேவிக்குப் புத்திரனாகுமென நினைத்து அவனுக்கு உபசாரஞ் செய்வேனென்று ராஜகிருஹத்தில் ஒரு கருடயந்திரத்திலே ஸந்நிஹிதமாய் நின்றனள். மற்றொருநாள் [3] பிரபாதசமயத்து, ருத்திரதத்தன் ராஜகிருஹமடைந்து அலங்கார ஹீனையாகிய தேவியைக் கண்டு, 'தேவி! ஸ்வாமி எங்கே யெழுந்தருளி யிருக்கின்றனர்?' என்று கேட்ப அவளும், 'இப்போது பள்ளிகொண் டருளுகின்றனராதலிற் காணமுடியாது' என்று சொல்லக்கேட்டு, அவ் வசனம் துர்நிமித்தமென்று நிச்சயித்து மீண்டுபோகிக் காஷ்டாங்காரி கனை யடைந்து ரஹஸ்யமாகச் சொல்லுவான்: 'உனக்கு ஸகல புவன ராஜ்யமுண்டாகுமாதலின் அரசனை லோகாந்தரமடைவிப்பாயாக' என்று சொல்லக் கேட்ட காஷ்டாங்காரிகன் தனது கரங்களால் [4] சிரவணங்களைப் புதைத்து, 'முன்பு [5] காஷ்டபாரவாஹியாகிய எனக்கு ராஜ்யபாரம் பிரஸாதித்த ஸ்வாமிக்கு [6] ஈதிருச துஷ்கருமத்தைச் செய்க வென்று சொல்லிப் பிழை செய்தனையே' என, புரோஹிதனும், 'தத்புத் திரனாலே உனக்கு மரணம் அவசியம் [7] பாவியாகுமாதலின் உனக்கு உறுவது செய்வாயாக', என்று சொல்லிப் போயினன். பின் ருத்திர தத்தனும் மூன்றுநாள் அஸாத்திய வியாதி பீடிதனாகி மரணமடைந்து நரகம் புக்கனன். அதற்பின், காஷ்டாங்காரிகன் தனது மரணபயத் தால் ராஜாவுக்கு மரணத்தைப் பண்ணுவேனென நிச்சயித்துப் பஹுவித ஸம்மானங்களால் இரண்டாயிரம் ராஜாக்களை ஸ்வவசராக்கி அவர்க ளோடுங்கூட ராஜபவனத்தை வளைய, ராஜாவும் அதனைக்கேட்டுத் தேவி யைக் கருடயந்திரத்தின் மேற்போகவிட்டு யுத்த ஸன்னத்தனாகிப் புறப் பட்டு யுத்தம் பண்ணப் [8] பராஜயமெய்திய காஷ்டாங்காரிகன் காளாங் காரகனென்னும் தன் புத்திரனோடும் கூடவந்து யுத்தம்பண்ணி ராஜாவை லோகாந்தரமடைவித்து இராஜ்யத்தை அடைந்தனன். விஜயமாதேவி யும் கருடயந்திரத்தின்மேற் போகி யக்ஷியின் பிரபாவத்தாற் சரீர பாதையின்றியே ஸ்மசாநப் பிரதேசமடைந்து ஸர்வாங்கோபாங்க ஸுந்தரனாகிச் சந்திராதித்தரை அதிசயிக்கும் காந்திதீப்தியினையுடைய னாகிய புத்திரனைப் பயந்தபின், யக்ஷிதேவதை அநித்யத்துவாதி ஸம்ஸார ஸ்வபாவ வர்ணநபூர்வகமாக, 'சரம தேஹியாகிய நின் புத்திரன் ஸகல புவன ராஜ்யந் தாங்கித் தபப்பிரபாவத்தால் முத்திபதமடைகுவன்' என்று தேவிக்குச்சொல்லித் தத்கால யோக்கியமாகிய தேவியது துக்கங்

[1] யக்ஷிதேவதை - அருகனுக்குப் பணிசெய்வதொரு தெய்வம்.

[2] சரமதேஹதரன் - முடிவான தேகத்தைத் தரித்தவன்.

[3] பிரபாதசமயம் - காலைவேளை.

[4] சிரவணம் - காது.

[5] காஷ்டபாரவாகி - விறகு கட்டைச் சுமப்பவன்.

[6] ஈதிருச துஷ்கருமம் - இத் தன்மையதாய தீத்தொழில்.

[7] பாவி - வரற்பாலது.

[8] பராஜயம் - தோல்வி.

களை நீக்கியிருந்தபின், கந்தோத்கடன் மிருதனுகிய புத்திரனைக் கொடு வந்து தத்பிரதேசத்தே வைத்துத் தத்ஸமீபத்தே பிள்ளையது ஸ்வரத்தினைக் கேட்டு, 'ஜீவ' என்னும் ஆசீர்வாதஞ் சொல்லிப் பிள்ளையை யெடுப்ப, தேவியும் அதனைக் கண்டு மிகவும் ஸந்தோஷித்த பின்னை, பிள்ளையை அப்பிரகாசமாகக் கொண்டுபோகி ஸுநந்தை யென்னும் தன் பார்யையைக் குறுகி, 'ஸஜீவனுகிய பிள்ளையைப் பரீக்ஷியாது தந்தனை' என்று [1] கிருத்திரிமகோபத்தாற் கொடுப்ப, அவளும் ஆனந்தத்துடன் வாங்கி வளர்ப்ப, வளர்கின்ற பிள்ளைக்கு ஜீவகனென்னும் நாமகரணம் பண்ணியதற்பின், ஸுநந்தை நந்தாட்டியனென்னும் புத்திரனைப் பெற்றனள். விஜயமாதேவியும் யக்ஷி தேவியுடன் கூடக் கருடயந்திரத்தாற் போகி ஒரு தாபஸாச்ரமத்தே வஸித்தனள். ஸத்தியந்தர மகாராஜனுக்குத் தேவிமார் பாமரதியும், அநங்கபதாகையுமென்பார் இருவருளர். அவர்கட்குப் புத்திரர் மதுரனும் வகுளனு மென்பார். அந்நகரத்து விஜயனென்னும் சேனுபதிக்கும் ஜயவதி யென்னும் பாரியைக்கும் புத்திரன் தேவஸேனன்; ஸாகரஸேனனென்னும் புரோஹிதனுக்கும் ஸ்ரீமதிக்கும் புத்திரன் புத்திஷேணன். தனபாலசிரேஷ்டிக்கும் ஸ்ரீ தேவிக்கும் புத்திரன் வரதத்தன். மதிஸாகர மந்திரிக்கும் அனுபமைக்கும் புத்திரன் மதுமுகன். [2] ஸ்ராவகதருமஸஹிதராகிய மதுராதிகள் அறுவரும் ஜீவந்தரனுடன் வளர்ந்து மித்திரராகிச் செல்கின்ற நாளகத்து ஒரு நாள், நகரபாஹ்யோத்தியானத்து மித்திரருடன் [3] வனக்கிரீடை பண்ணுநின்ற குமாரனைக் குறுகிப் [4] பஸ்மகவியாதி பீடிதனுகித் தாபஸ வேஷதாரியாயினுன் ஒருவன், 'குமாரனே! ஸமீபமாக இவ்விடத்து நகரமுண்டோ?' என்றனன். குமாரனும் முறுவல் கொண்ட முகத்தனுகி, 'பாலராகிய எங்களைக் கண்டால் நகரம் [5] ஆஸந்நமேயென்பது [6] அநுபதேசமாகவே பிரஸித்தமாக இருப்ப இவ்வண்ணங் கேட்கின்றீர்; மோஹவியாகுலசித்தத்தினீர்போலும்' என்று குமாரன் சொன்ன [7] பரிணத வசனங்களைக் கேட்டு ராஜ்யார்ஹமாகிய சரீரகத சுபலக்ஷணுதிகளைக் கண்டு இவன் ராஜகுமாரனென நிச்சயித்து [8] க்ஷுத்பீடாபரவசனுகிய தாபஸன் போஜனுர்த்தியாயினன். குமாரனும் அதனை [9] ஸம்வதித்து அவனுடனே போகி ஸ்வபவநமடைந்து போஜனஸமயத்துக் குமாரன் ஸ்வஹஸ்தத்தால் தாபஸனுக்கு ஆஹாரம் கொடுப்பத் ததாஹாரபுக்திக்ஷணத்திலே ரோக பீடையெல்லாம் போயின. அதற்

[1] கிருத்திரிமம்-செயற்கை.
[2] ஸ்ராவகதருமம்-இல்லறநடை.
[3] வனக்கிரீடை - பொழில் விளையாட்டு.
[4] பஸ்மகவியாதி - பெரும்பசியை யுண்டுபண்ணும் யானைத் தீயென்னும் நோய்.
[5] ஆஸந்நம் - ஸமீபத்திலுள்ளது.
[6] அநுபதேசம் - சொல்லாமை.
[7] பரிணதவசனம் - பக்குவமான மொழி.
[8] க்ஷுத்பீடை - பசித்துன்பம்.
[9] ஸம்வதித்து - ஒத்துச் சொல்லி.

பின் கந்தோத்கடஸமீபமடைந்து, ‘மஹாவியாதி விநாசகாரணனாகி மஹோபகாரியாகிய குமாரனுக்கு யான் சாஸ்திராப்பியாசம் பண்ணப் பெறுவேனாக வேண்டும்’ என்று சொல்ல, கந்தோத்கடனும் ‘சாஸ்திர குருவாயினாற்கு நமஸ்காராதி விநயங்கள் செய்யவேண்டுமே; நீர் அந்யலிங்கிகளாகின்றீராதலின் அது ஸம்பவிப்பதன்று போலும்’ என்று சொல்ல, தாபஸனும் சொல்லுவான்: ‘ஸிஹ்மபுரமென்னும் நகரத்து ராஜா ஆர்யநந்தி யென்பேன். வீரநந்தி முனிவரன் ஸமீபத்தே தரும சிரவணாநந்தரம் த்ருதிஷேண புத்திரனுக்கு ராஜ்ய பதம் கொடுத்துத் தீக்ஷாப்ராப்தனாகியபின், காலாந்தரத்துப் பஸ்மகமென்பதொரு மஹா ரோகம் தோன்றுதலின், தீக்ஷாப் ப்ரச்சுதனாகித் தாபஸவேஷதாரி யாகின்றேன்; யான் ஸம்யக் திருஷ்டியாதலின் உனக்கு ஸத்தர்மவானா கின்றேன்’ என்று சொல்லக் கேட்டு, கந்தோத்கடன் மிகவும் பிரீதனாகித் தரும வாத்ஸல்யத்தினாற் குமாரவிருத்தாந்தத்தினை ரஹஸ்யமாக அறி வித்துத் தாபஸஸமீபத்தே குமாரனைச் சாஸ்திராப்பியாசம் பண்ணவிட் டனன். குமாரனும் போதாதிசயத்தால் அல்பகாலத்தே ஸகல வியவ ஹார சாஸ்திர பாரங்கதனாயினன். அதற்பின், ஆர்யநந்திகள் ஸம்யமத் தினைப் பிராபித்துத் தபப்பிரபாவத்தால் முக்தி பதமடைந்தருளினர்.

“குமாரனும் யௌவனாவஸ்தையினை அடைந்து செல்கின்ற காலத் துக் காளகூடனென்பான் ஒரு [1] வியாதபதி அந்நகரத்தே நிரை துரந்து கொண்டுபோக, அந்நிரைக்கு அதிபதியான கோபாலன் கோபேந்திர னென்பான்; இவன் பார்யை கோபஸ்ரீயென்பாள்; ‘இவள் புத்திரியாகிய கோதாவரியினை இந்நிரை மீட்கவல்ல வீரபுருஷனுக்குக் கொடுத்தும்’ என்று காஷ்டாங்காரிகன் நகரத்திலே [2] கோஷணை பண்ணுவிப்ப, அத னைக் கேட்டு ஜீவந்தரன் மித்திரரோடு கூடப்போகி வியாத [3] பலமடைந்து யுத்தம்பண்ணிஜயித்து மீட்டுக்கொண்டு வந்து நகரமடைந்து யுத்த முகத்துப் பராக்கிரமம் பண்ணிய நந்தாட்டியனுக்குக் கோதாவரியினைக் கொடுப்பித்தனன்.

“இப்பால் ஜம்பூத்வீப பரதக்ஷேத்திரத்து விஜயார்த்தபர்வத தக்ஷிண ஸ்ரேணியில், ககனவல்லபநகராதிபதி கருடவேகனென்னும் வித்யாதரன் தாயாதியாயினானொருவனாற் [4] பராஜிதனாகிப்போந்து ரத்நத் வீபத்து மனுஜோதய மென்னும் பர்வதத்து ரமணீயமென்பதொரு நகரம் பண்ணுவித்திருந்தனன். இவன் பார்யை தாரணியென்பாள்; இவர் கட்குப் புத்ரி கந்தர்வதத்தை யென்பாள். இவள் ஒருநாள் உபவாஸ விதியால் நோற்று முடிவின்கண் [5] ஜினபதி பூஜை பண்ணித் திவ்ய [6] சேஷை கொடுவந்து ராஜாவுக்குக் கொடுப்ப, அவனும் அதனை வாங்கிச்

[1] வியாதபதி - வேடர் தலைவன்.
[2] கோஷணை - பறைமுழக்கம்.
[3] பலம் - சேனை.
[4] பராஜிதன் - ஜயிக்கப்பட்டவன்.
[5] ஜினபதி - அருகன்.
[6] சேஷை - தெய்வப்ரஸாதம்.

[1] சிரஸாவஹித்து உபவாஸ [2] பரிஸ்ராந்தையாகிய புத்ரியை, [3] 'பாரணை பண்ணுவாயாக' என்று விடுத்தபின், 'பெண்பிள்ளையை யாவர்க்குக் கொடுத்தும்?' என்று மதிஸாகரனை வினவ அவனும் சொல்லுவான்: "ஒருநாள் மஹாமேருபர்வத நந்தனவனத்துப் பூர்வதிக் [4] ஜினபவன மடைந்து [5] ப்ரதக்ஷிணீகரண ப்ரணாம [6] ஸ்தவநாப்யர்ச்சனம் பண்ணிய பின், அங்கே [7] ஸந்நிஹிதராகிய விபுலமதிசாரண தபோதனரை நமஸ்கரித்துத் [8] தர்மஸ்ரவணாநந்தரம், 'என் ஸ்வாமி புத்திரியாகிய கந்தர்வ தத்தை யாவர்க்கு யோக்யை?' என்று யான் வினவ, அவரும் அவதி ஞானத்தாற் பார்த்து அருளிச் செய்வார்: 'ஜம்பூத்வீப பரதக்ஷேத்ர ஹேமாங்கதவிஷய ராஜமஹா நகரத்து ஸத்யந்தரமஹாராஜபுத்ரனுக்கு வீணாஸ்வயம்வரத்தால் தேவியாகும்' என்று அருளிச்செய்தனர்" என்று மந்திரி சொல்லக்கேட்டு ராஜாவும், 'பூதலத்துள்ளாருடன் [9] அபூர்வமாகிய ஸம்பந்தத்தினை யாங்ஙனஞ் செய்தும்?' என்று வினவ மந்திரி சொல்லுவான்: 'ராஜமஹாபுரத்து வ்ருஷபதத்த [10] ஸ்ரேஷ்டிக்கும் பத்மாவதிக்கும் புத்திரன் ஜினதத்தனென்பான்; அவனால் நமது [11] அபிப்ரேத கார்யம் ஸித்திக்கும். அஃது எவ்வண்ணமென்னின், ராஜமஹாபுரஸமீபமாகிய [12] ப்ரீதிவர்த்தனமென்னும் [13] உத்யானத்து ஸாகரசேன [14] கேவலிகளுக்குக் கேவலபூஜார்த்தமாக நின்பிதாவினோடுங் கூடச்சென்று கேவலபூஜை பண்ணியபின், [15] தர்மவாத்ஸல்யத்தால் வ்ருஷபதத்தஜினதத்தர்களோடு [16] பாந்தவமுண்டாயிற்று. அதன்பின் வ்ருஷபதத்தன் புத்ரனுக்கு ஸ்ரேஷ்டிபதங் கொடுத்துக் குணபாலமுனிஸமீபத்தே தீக்ஷித்தனன். பத்மாவதியும் ஸுவிர்தையென்னும் [17] ஆர்யாங்கனை பக்கல் தீக்ஷித்தனள். ஸ்ரேஷ்டிபதப்ராப்தனாகிய ஜினதத்தனும் வாணிஜ்யார்த்தமாக ஜலயாத்ரையால் இங்கே வருவன்' எனக்கேட்டு ராஜாவும் அவனை உபாயத்தாற் கொண்டு வருவதற்குப் பலாதிகனென்னும் வித்யாதரனை

[1] சிரஸா - தலையாலே.

[2] பரிஸ்ராந்தை - ஸ்ரமத்தை அடைந்தவள்.

[3] பாரணை - உபவாஸவிரதத்தின் முடிவிற் செய்யும் உணவு.

[4] ஜினபவனம்-அருகன்கோயில்.

[5] ப்ரதக்ஷிணீகரணம் - ப்ரதக்ஷிணம் செய்தல்; ப்ரணாமம் - வணக்கம்.

[6] ஸ்தவனம் - துதித்தல்; அப்யர்ச்சனம் - பூஜை.

[7] ஸந்நிஹிதர் - ஸமீபத்திலிருப்பவர்.

[8] தர்மஸ்ரவணாநந்தரம் - தர்மத்தைக் கேட்ட பின்பு.

[9] அபூர்வம் - முன்னில்லாதது.

[10] ஸ்ரேஷ்டி - செட்டி.

[11] அபிப்ரேதகாரியம் - இச்சிக்கப்பெற்ற காரியம்.

[12] ப்ரீதிவர்த்தனம் - பிரீதியை விருத்திபண்ணுவது.

[13] உத்யானம் - தோட்டம்.

[14] கேவலிகள் - முத்திபெற்றவர்.

[15] தர்மவாத்ஸல்யம் - தர்மத்தினுள்ள பிரீதி.

[16] பாந்தவம் - பந்துத்தன்மை.

[17] ஆர்யாங்கனை - தவப்பெண்.

யேவ, அவனும் ஸ்வவித்தையால் மரக்கலமுடைந்ததாகக் காட்டியபின், ஜினதத்தனும் ஒரு பலகை [1] அவலம்பனமாகப் போந்து ஸமுத்ரத்துள் ஒரு கரையினையடைந்து பின் பலாதிகனுடன் சென்று விநயபூர்வகமாக ராஜஸமீபமடைந்தபின் மாயையால் உடைவித்த மரக்கலத்தைக் காட்டி, மிகவும் [2] ஸம்ப்ரீதனுகிய ஜினதத்தனுக்குப் பூர்வவிருத்தாந்தத்தினையறி வித்து, கந்தர்வதத்தையைக் கொடுபோகி ராஜமஹாபுரத்து வீணாஸ்வ யம்வர கல்யாண விதியாற் கொடுப்பாயாக வென்று பெண்பிள்ளையைக் கொடுப்ப, அவனும் கொண்டு போகித் தன்னகரமடைந்தபின் காஷ்டாங் காரிகனுக்கு ஸ்வயம்வர வ்ருத்தாந்தத்தினை யறிவித்துச் சுபதிவஸத்து ஜினபதி பூஜாபுரஸ்ஸரமாக ஸ்வயம்வர கோஷணைபண்ணியபின், மனோ ஹரோத்யானத்து ஸ்வயம்வர மண்டபத்து [3] ஸமுதிதராகிய [4] த்ரைவர் ணீகரும் கந்தர்வதத்தைக்கு வீணையிற்றோற்றபின் ஜீவந்தர குமாரன் மித்ரரோடுங்கூட ஸ்வயம்வர மண்டபமடைந்தபின் இவனுக்கு வீணை கள் பலவுங் கொடுப்ப, அவற்றுள் நரம்பு முதலானவற்றுள் ரோம முத லான தோஷங்களைக் காட்டி வித்யாதரகுலத்துட் பரம்பரையால் வரு கின்ற ஸுகோஷணையென்னும் வீணையைத் தருகவென்று வாங்கிக் கொண்டு மதுரமாக வாசித்தபின் வீணையிற்றோற்ற கந்தர்வதத்தை ஜீவந்தர குமாரன்மிசை மாலையிட்டனள். அதனைக்கண்டு காளாங்காரி கன் முதலான ராஜகுமாரர்கள் [5] அஸஹமானர்களாகி யுத்த ஸந்நத்த ராகிய பின், ஜீவந்தர குமாரன் ஜயகிரியென்னும் [6] மதஹஸ்தியினையேறி மித்ரரோடும் பலாதிகவித்யாதரனோடும் சென்று யுத்தம் பண்ணி ஜயித்த பின், கந்தர்வதத்தையைக் கல்யாண விதியால் விவாஹம் பண்ணி இஷ்டவிஷய காமபோகங்களை அனுபவித்துச் செல்லா நின்ற காலத்து ஒருநாள் வஸந்த காலத்து நகரஜனங்கள் வஸந்தவினோதார்த்தமாக ஸுரமலயமென்னும் உத்யானமடைந்து வஸந்தோத்ஸவமனுபவித் திருப்ப, அந்நகரத்து வைஸ்ரவணதத்தனென்னும் வைச்யனுக்கும் சூதமஞ்சரி யென்னும் பார்யைக்கும் புத்ரி ஸுரமஞ்சரியென்பாள்; குமாரதத்தனென்னும் வைச்யனுக்கும் விமலைக்கும் புத்ரி குணமாலை யென்பாள்; இவர்களிருவர் கன்யகைகளும் வஸந்தக்ரீடை பண்ணித் தமது [7] சூர்ணங்காட்டி 'அதனில் இதுநன்று' என்று [8] பரஸ்பரவாத முண்டானவிடத்து, ஸுரமஞ்சரி சந்த்ரோதயமென்னும் தனது சூர் ணத்தை சியாமலதையென்னும் [9] சேடி கையிலும், குணமாலை ஸூர்யோ தயமென்னும் தனது சூர்ணத்தை வித்யுர்லதையென்னுஞ் சேடி

[1] அவலம்பனம் - பிடிப்பு.

[2] ஸம்ப்ரீதன் - செவ்விய பிரீதி யையுடையவன்.

[3] ஸமுதிதர் - கூடியவர்.

[4] த்ரைவர்ணீகர் - முதல் மூன்று வர்ணத்தவர்கள்.

[5] அஸஹமானர்கள் - ஸஹியா தவர்கள்.

[6] மதஹஸ்தி - மதயானை.

[7] சூர்ணம் - சுண்ணம்.

[8] பரஸ்பரம்-ஒருவருக்கொருவர்.

[9] சேடி - ஏவல் செய்பவள்.

கையிலும் கொடுத்துக் [1] கந்தயுக்தி நிபுணராயினோர்க்குக் காட்டிக் கொடு வருகவென்று விடுப்ப அவர்களும் போகிப் பலரையுங் கேட்ப, பலரும் தர்சன ஸ்பர்சனகந்தங்களாற் பார்த்துச் சந்த்ரோதயத்தை ஸ்துதிப்பாரும் ஸூர்யோதயத்தை [2] ப்ரஸம்சிப்பாரும் ஸமானமென்பாரும் ஜீவககுமாரனே அறிவானென்பாருமாயினபின் ஜீவந்தர குமாரனுக்குக் காட்ட, அவனும் சந்த்ரோதயத்தை அழகிது என்று சொல்லி அவர்களுக் கேற்ற யுக்தியினாற்காட்டுவான் வேண்டி அவ்விரண்டினையும் வாங்கி ஆகாசத்து வீச, அவற்றுள் சந்த்ரோதயத்தை வண்டுகள் சூழ்ந்து கொண்டன. இவ்வண்ணம் யுக்தியினால் [3] கந்தாதிசயத்தை அறிவித்த பின், ஸுரமஞ்சரி குணமாலைகள் பரஸ்பரம் மாத்ஸர்யத்தின் நீங்கினர். அங்கே அஞ்ஞானராகிய ஜனங்களால் [4] பாதிதமாகி ஓடி நீருள் வீழ்ந்து கண்டகதப்ராணமாயிற்றொரு [5] சீவாவினைக் கண்டு ஜீவந்தர குமாரன் எடுப்பித்து அதன் செவியுள் பஞ்ச நமஸ்கார மங்கல பதங்களைச் சொல்ல, அதுவும் ஸாவதானமாகிக் கேட்டுச் சரீரம் விட்டு அதன் மாஹாத்மியத்தால் சந்த்ரோதய மென்னும் பர்வதத்துச் சுதர்சனனென்னும் யக்ஷனாயிற்று; ஸுதர்சனன் தற்காலத்து அவதிஞானத்தாற் பூர்வபவ ஸம்பந்தத்தினையறிந்து இங்கு வந்து ஜீவந்தர குமாரனைக் கண்டு, ‘குமாரனே! நின் [6] ப்ரபாவத்தால் [7] ஈத்ருசவிபவத்தைப் பெற்றேன்’ என்று பூஜித்து [8] ‘வ்யஸநோத்ஸவ காலங்களில் என்னை நினைக்கப் பெறவேண்டும்’ என்று சொல்லிப் போயினன். அதற்பின், வன [9] விஹரணம் பண்ணிப்போதுகின்ற நகரஜன கோலாஹலத்தினாற் ப்ரமித்து ஓடிவருகின்ற அசனிவேக மென்னும் மதஹஸ்தி ஸுரமஞ்சரி யேறிய ரதத்தினைக்குறுகுதலும் அதனைக் கண்டு குமாரன் கருணைபரவசனாகித் தனது பலப்ராபாவத்தினால் அதனை [10] ப்ரஹரித்து [11] நிவாரித்து மீண்டு நகரமடைந்தபின், ரூபயௌவன விஞ்ஞானாதி குணலங்க்ருதனாகிய குமாரனை ஸுரமஞ்சரி [12] அனுராகித்தமையை இங்கித சேஷ்டைகளாலறிந்து வைஸ்ரவணதத்தாதி பந்து ஜனங்கள் கந்தோட்கடனுக்கு அறிவிப்ப, அவனும் அதிப்ரீதனாகிச் சுபதிவஸத்து ஜீவந்தரகுமாரனுக்கு விவாஹவிதியால் ஸுரமஞ்சரியைக் கொடுத்தபின், அவளுடன் இஷ்டவிஷயகாமபோகங்களால் இனிது செல்கின்ற காலத்து, குமார பீடிதமாகி [13] க்ஷீணசக்திகமாகிய அசனிவேக மென்னும் மதஹஸ்தி

[1] கந்தயுக்தி - கந்தத்தின் சேர்க்கை.
[2] ப்ரஸம்சித்தல் - துதித்தல்.
[3] கந்த அதிசயம் - கந்தத்தின் மேன்மை.
[4] பாதிதமாகி - துன்புறுத்தப் பெற்று.
[5] சீவா - நாய்.
[6] ப்ரபாவம் - மகிமை.
[7] ஈத்ருசவிபவம் - இத்தன்மையதாகிய செல்வம். [மகிழ்ச்சி.
[8] வ்யஸனம் உத்ஸவம் - துக்கம்,
[9] விஹரணம் - ஸஞ்சாரம்.
[10] ப்ரஹரித்து - அடித்து.
[11] நிவாரித்து - விலக்கி.
[12] அனுராகித்தமை - ஆசையுற்றமை.
[13] க்ஷீணசக்திகம் - குறைந்த வன்மையையுடையது.

கவளங் கொள்ளாது நின்றமையறிந்து காஷ்டாங்காரிகன் மிகவும் கோபித்து, 'வைச்யோசிதமாகிய வாணிஜ்ய [1] வ்யாபாரமின்றி ராஜ புத்ரா [2] னுரூபமாக [3] ஆசரிக்கின்ற கர்விதனுகிய ஶ்ரேஷ்டிபுத்ரனை [4] லோகாந்தரமடைவிக்க' என்று சண்டதண்டனென்னும் [5] தளவரனை [6] நியோகிப்ப, அவனும் [7] தத்ர பஸஹிதனுகிச் சென்றுகுறுக, அதனையறிந்த குமாரன் புறப்பட்டு யுத்தம் பண்ணிச் சண்டதண்ட பலத்தையெல்லாம் [8] பங்கம் பண்ணி, 'காஷ்டாங்காரிகன் ஸந்நி ஹிதனுகின்றிலன்; இந்த [9] க்ஷுத்ர ஜனங்களை வதிப்பது கர்மமன்று' என்று கருதி, ஸுதர்சனயக்ஷனை நினைந்தனன். அவனும் தத் க்ஷணத் திலே வந்து விஜயகிரியென்னும் மதஹஸ்தியிலேற்றிக்கொண்டு போகித் தனதிடமடைந்தனன். ஜீவந்தர குமாரன், யக்ஷநிர்மிதமாகிய பூஜாதி சயங்களை அனுபவித்திருந்தனன். ஜீவந்தர குமாரன், அபாயமின்றி யிருந்ததைக் கந்தர்வதத்தை வித்யாப்ரபாவத்தாலறிந்து குமாரவ்ருத் தாந்தத்தினையறியாது பயசலிதராகிய நந்தாட்யன் முதலிய பந்து ஜனங்களை உள்ளபடியறிவித்தலின், அவர் பயத்தினீங்கினர். குமார னும் [10] யக்ஷாவாஸத்தே சிலகாலங்கழித்தபின், அபூர்வ தேசங்களைக் காண்பான்வேண்டிக் கமனேன்முகனுகிய பின், அவனுக்குக் காமரூபிணி யென்னும் [11] முத்திரிகை முதலாயின கொடுத்து விடுப்ப, அநேக தேசங் களைக் கடந்து போகிச் சந்த்ராப மென்னும் நகரங் குறுகுதலும், அந் நகரத்துத் தனபதியென்னும் ராஜாவுக்கும் திலோத்தமை யென்னும் தேவிக்கும் புத்ரி பத்மோத்தமை; ராஜா ஆதித்ய முனிகளென்பாரொரு தபோதனரை நமஸ்கரித்து, 'இவள் யாவர்க்குப் பார்யையாகும்?' என்று வினவ அவரும், 'ஒருகாலத்தில் இவளுக்கு விஷஸ்பர்சனமுண்டாம்; அதனைத் தீர்க்குமவனுக்கு யோக்யை' என்றனர். இவளும் யௌவன வஸ்தையினையடைந்து வனவிஹரணம் பண்ணுகின்றபொழுது, இவளை ஒரு ஸர்ப்பங்கடிப்ப மோஹித்தனள். இதனையறிந்து, [12] 'விஷஹரணம் பண்ணினவனுக்குக் கந்யகையோடு கூட அர்த்தராஜ்யங்கொடுப்பன்' என்று அரசன் கோஷணை பண்ண, அதனைக் கேட்ட வித்யா நிபுண ராகிய ஜனங்கள் விஷஹரணம்பண்ணமாட்டாது நீங்கியபின், விஷ வித்யாநிபுணராயினுரைத் தேடித்திரிகின்ற பரிஜனங்கள் ஜீவந்தரகுமா ரனைக்குறுகி, 'பூஜ்யனே! உனக்கு விஷவித்யா [13] கௌசல்யமுண்டோ?'

[1] வ்யாபாரம் - செய்கை.
[2] அனுரூபம் - உரியது.
[3] ஆசரிக்கின்ற - அனுஷ்டிக்கின்ற.
[4] லோகாந்தரம் - வேறு உலகம்.
[5] தளவரன் - சேனைத் தலைவன்.
[6] நியோகிப்ப - ஏவ.
[7] தத்ர - அங்கே.
[8] பங்கம்பண்ணி - உடைத்து.
[9] க்ஷுத்ரம் - அற்பம்.
[10] யக்ஷ ஆவாஸம் - யக்ஷர்களின் இருப்பிடம்.
[11] முத்திரிகை - மோதிரம்.
[12] விஷஹரணம் - விஷத்தைப் போக்கல்.
[13] கௌசல்யம் - திறமை.

என்றுவினவ, குமாரனும், 'சிறிது உண்டுபோலும்' என, ஸந்துஷ்டராகிய ஜனங்கள் குமாரனைக் கொண்டுபோகி ராஜஸமீபமடைவிப்ப, குமாரனும் [1] யக்ஷோபதிஷ்ட [2] மந்த்ரானுஸ்மரணத்தால் விஷவிநாசம் பண்ணியபின், ராஜ்யார்ஹமாகிய லக்ஷணகுணாதிசயங்களைக் கண்டு இவன் ராஜகுமாரனென நிச்சயித்துப்பத்மோத்தமையினைக் குமாரனுக்கு விவாஹவிதியாற் கொடுத்து அர்த்தராஜ்யத்தினையும் கொடுத்தபின், அவளுடன் இஷ்டவிஷயகாமபோகங்களை அனுபவித்து லோகபாலன் முதலாகிய முப்பத்திருவர் மைத்துனரோடுங்கூட இனிது செல்கின்ற காலத்து, தேசாந்தர கமனோன்முகனாகி ஒருவருமறியாதபடி பல்லவ தேசத்தைக் கடந்தபின் க்ஷேமவிஷயத்து க்ஷேமபுரமென்பதொரு ஜினபவனத்தைக் குறுகினனாகத் தத்க்ஷணத்திலே ஜினபவனஸமீபமாகியதொரு சம்பகவ்ருக்ஷம் புஷ்பித்தது; உத்யான ஸகல கோகிலங்களும் கூவின; நகரஸமீபமாகிய மனோஹரமென்னும் உத்யானத்து ஸஹஸ்ரகூடமென்னும் தடாகமும் ஸலிலபரிபூர்ணமாயிற்று; [3] தத்கத ஸகலகுவலயாதி புஷ்பங்களும் மலர்ந்தன; ப்ரமரநிகரங்களும் [4] பரிப்ரமித்தன; ஜினபவன கோபுர கவாடங்கள் தாமே நீங்கின. அவ்வவ்வதிசயங்களைக்கண்டு விஸ்மிதனாகித் தடாகத்தையடைந்து ஸ்நான புரஸ்ஸரமாகப் புஷ்பங்களைக் கைக்கொண்டு ஜினபதிஸமீபமடைந்து அர்ச்சனாபுரஸ்ஸரமாக ஸ்துதித்திருந்தனன். தந்நகரச்ரேஷ்டி ஸுபத்ரனுக்கும் நிஸ்ப்ருதியென்னும் பார்யைக்கும் புத்ரி க்ஷேமஸுந்தரியென்பாள்; ஸுபத்ர ச்ரேஷ்டி விநயந்தரரென்னும் தபோதனரையடைந்து, 'க்ஷேமஸுந்தரி யாவர்க்குப்பார்யையாகும்?' என்று வினவ அவரும் அருளிச் செய்வார்: 'கந்யகாயோக்கியனாகிய பர்த்தா ஸஹஸ்ரகூடஜினபவனத்தையடைதலும் சம்பகவிகாஸமும் [5] கோகிலகோலாஹலமும் தடாகபூர்ணமும் தத்கத குமுதவிகாஸமும் மதுகரஸஞ்சாரமும் கோபுர [6] கவாடவிகடனமுமாகிய அதிசயங்களுளவாகும்' என்று [7] ஆதேசித்தனர். ஆதலின், தத்பரீக்ஷார்த்தமாக நாள்வழிபார்த்திருக்கின்ற ஸுபத்ரன்பரிஜனங்கள் ஜீவந்தரகுமாரனையும் அவ்வவ்வாச்சர்யங்களையும் கண்டு, [8] ஸம்ப்ரமத்துடன் சென்று ச்ரேஷ்டிக்கு அறிவிப்ப அவனும் வந்து குமாரனை எதிர்கொண்டுபோற்றித் தனது [9] பவனமடைந்து சுபதிவஸத்துக் கல்யாண விதியாற் குமாரனுக்கு க்ஷேமசுந்தரியைக் கொடுப்ப, அவளுடன் இனிது அனுபவித்துச் சில காலங்கழிந்தபின், முன்பு ஸத்யந்தரமஹாராஜனால் தனக்கு [10] ப்ரஸாதஞ் செய்யப்பட்ட

[1] உபதிஷ்டம் - உபதேசிக்கப்பெற்றது.

[2] அனுஸ்மரணம் - பின்நினைத்தல்.

[3] தத்கத - அதையடைந்த.

[4] பரிப்ரமித்தன - நாற்புறமும் சூழ்ந்தன.

[5] கோகிலகோலாஹலம் - குயில் முழக்கம்

[6] கவாடவிகடனம் - கதவுதிறத்தல்.

[7] ஆதேசித்தனர் - கட்டளையிட்டனர்.

[8] ஸம்ப்ரமம் - பரபரப்பு.

[9] பவனம் - வீடு.

[10] ப்ரஸாதம் செய்யப்பட்ட - கொடுக்கப்பட்ட.

சாபபாணங்களைக் குமாரனுக்கு யோக்யமென்று கொடுப்ப, அவற்றைக் கொண்டு அங்குநின்றும் அப்ரகாசமாகப் போந்து பலநாடுங்கடந்து ஸுஜனவிஷய ஹேமாப நகரத்து ஸமீபமாகிய மனோஹரோத்யான மடைந்தனனாக, தந்நகராதிபதி த்ருடமித்ர னென்னும் ராஜாவுக்குத் தேவி நளினையென்பாள்; இவளுக்குப் புத்ரி ஹேமாபையென்பாள்; ராஜா தன்புத்ரியை யாவர்க்குக் கொடுத்துமென்று ஒரு [1] நைமித்திகனைக்கேட்ப அவனும், 'மனோஹரோத்யானத்து ஒரு [2] லக்ஷ்யத்தினை நோக்கி எய்தபின், யாவனது சரம் லக்ஷ்யத்திற்சென்று மீண்டு வந்து விழுவதாகும், அவன் கந்யாபதியாகும்' என்றனன். அன்று தொடங்கி ராஜபுத்ரர்கள் அந்த உத்யானத்தே யந்த்ரத்திலே [3] தனுர்வியாயாமம் பண்ணுகின்றவிடத்தே ஜீவந்தரகுமாரனும் குறுக அவர்களும், 'குமாரனே! தனுர்வேத சிக்ஷையில் அப்யாஸமுண்டாயின் எய்வாயாக' என்ன, குமாரனும் அவர்களுடைய சாபபாணங்களைக்கண்டு லக்ஷண ஹீனங்கள் என்று தூஷித்து மத்யமலக்ஷணத்த தாகியதொரு பாணத்தினை வாங்கிக்கொண்டு எய்ய, அது லக்ஷ்யத்திற்செல்லாது மீண்டு வந்தது கண்டு விஸ்மிதராகி, 'குமாரனுக்குத் தனுர்வேதாப்யாஸம் இப்பெற்றியதோ?' என்று [4] மித்தியாபஹாஸம் பண்ணியபின், குமாரனும் [5] லஜ்ஜிதனாகி ஸ்வஹஸ்தகதபாணத்தினால் எய்தவிடத்து லக்ஷ்யத்திலே வீழ்ந்தது. அதனைப் பரீக்ஷிப்பான்வேண்டி ராஜ [6] நியுக்தராகிய பரிஜனங்கள் ஸம்ப்ரமத்துடன் கொண்டுசென்று ராஜாவுக்குக் காட்ட, அவனும் இவனுடைய ராஜயோக்கிய மாஹாத்ம்யத்தினைக் கண்டு ராஜபுத்ரனென நிச்சயித்துக் கல்யாண விதியால் ஜீவந்தர குமாரனுக்கு ஹேமாபையைக் கொடுத்தனன். குணமித்ர பஹுமித்ர தனமித்ர ஸுமித்ரர் முதலாகிய கந்யகாப்ராதாக்களைத் தனுர்வித்யாதி ஞானகுசலராகப்பண்ணிக் குமாரன் இனிதிருந்தனன். கந்தர்வதத்தை தனது வித்தையால் அப்ரகாசமாகவந்து ஜீவந்தர குமாரன் [7] குசலவ்ருத்தியினை யறிந்து தனது வரவினையறிவித்துச் செல்கின்ற காலத்து ஒருநாள் நந்தாட்யன் கந்தர்வதத்தா ஸமீபமடைந்து, ஸ்வாமினீ! அப்ரகாசமாகப் பலநாளும் போகின்ற தேசம் யாது?' என்று வினவ, அவளும் [8] மந்தஸ்மிதஞ்செய்து, 'குமாரனே! தத்ப்ரதேசமடைய வேண்டுதியாயின், ஸ்நானபவித்ரனாகி ஸ்மர தாங்கிணீ யென்னும் சயன தலத்து நின் ப்ராதாவினை ஸ்மரித்துச் சயனம் பண்ணத் தத்ஸமீப மடையலாகும்' என்றபின், நந்தாட்யனும் அவ்வண்ணம் செய்ய, கந்தர்வ

[1] நைமித்திகன் - சோதிடன்.

[2] லக்ஷ்யம் - குறி.

[3] தனுர்வியாயாமம் - விற்பயிற்சி.

[4] மித்தியாபஹாஸம் - பொய்யாகிய பரிகாசச்சிரிப்பு.

[5] லஜ்ஜிதனாகி - வெட்கமடைந்து.

[6] நியுக்தர்-ஏவப் பட்டவர்.

[7] குசலவ்ருத்தி - க்ஷேமமாக இருத்தல்.

[8] மந்தஸ்மிதம் - புன்சிரிப்பு.

தத்தாநியோகத்தால் ஆபோகினீயென்பதொருவித்யை சயனதலத்தோடுங்கொண்டுபோகி ஜீவந்தர குமார ஸமீபமடைவிப்ப அடைந்து ஜீவந்தர குமாரனை நமஸ்கரிப்ப, ஜீவந்தர குமாரனும் ஆனந்தத்தோடு நந்தாட்யனை ஆலிங்கனம் பண்ணியபின், கந்தோத்கடாதி பந்துஜன வ்ருத்தாந்தத்தினையுங்கேட்டுப் பரஸ்பரம் ப்ரீதராயிருந்தனர். மற்றொன்று சொல்லுதும் :

" ஸுஜநவிஷய சோபாநகரத்து ராஜா த்ருடமித்ரனுக்கு ப்ராதாவாகிய ஸுமித்ரனுக்குத்தேவி வசுஸுந்தரை ; இவர்கட்குப் புத்ரி ஸ்ரீசந்த்ரையென்பாள். இவள் யௌவநாவஸ்தையினையடைந்தபின் ஒரு நாள் தன்மாளிகையில் விளையாடுகின்ற [1] கபோதமிதுனங்களைக் கண்டு [2] ஜாதிஸ்மரணமுடையளாகி மூர்ச்சித்தனளாக, இவளைப் பரிஜனங்கள் சந்தனாதிகளால் தேற்றியபின் மாதாபிதாக்கள் அதனைக் கேட்டுப் பரவசராகித் திலகசந்திரிகை மகள் அநங்க ஸுந்தரியென்னும் சேடியை, 'பெண்பிள்ளையின் மூர்ச்சாகாரணத்தையறிந்து வருவாயாக' என்று போகவிட, அவளும் ஜாதிஸ்மரணத்தால் மூர்ச்சை வந்தமை கந்யகைபக்கல்கேட்டுவந்து சொல்லுவாள் : ' இதற்கு மூன்றும்பவத்து ஹேமாங்கதவிஷயராஜமஹாபுரத்து வைசியன் ரத்நதேஜனென்பான் ; பார்யை ரத்நமாலையென்பாள் ; இவர்கட்குப் புத்திரி அநுபமையென்பாள் ; அந்நகரத்துக் கனகதேஜனென்னும் வைசியனுக்கும் சந்த்ரமாலைக்கும் புத்ரன் ஸ்வர்ணதேஜன் ; மைத்துனனாகிய இவனுக்கு அநுபமையைக் கொடுத்துமென்றிசைந்த மாதாபிதாக்கள் பின் அவனை அவமதித்து மணிகாரனென்னும் வைசயபுத்ரனாகிய குணமித்ரனுக்குக் கொடுத்துச் செல்கின்ற காலத்து, அவன் அம்போநிதியென்னும் ஓராற்றின் சுழியுள் அகப்பட்டு மரித்தபின், அநுபமையும் பர்த்ருமரணதுக்கிதையாகித் தத்ப்ரதேசத்தே வீழ்ந்து மரித்தனள் ; பின்பு அவர்கள் இருவரும் அந்நகரத்து ஒரு வைசியன் க்ருஹத்தே பவனவேகனும் ரதிவேகையுமென்னும் கபோதமிதுனங்களாகப் பிறந்து [3] போதாதிசயத்தாற் பிறருபதேசிப்ப அக்ஷராப்யாஸ முதலாகிய ஸாமர்த்யத்தினையடைந்து சிராவகயோக்யாசாரங்களை ஆதரித்துப் பூர்வபவ ஸம்பந்தத்தினாற் பரஸ்பரம் அநுராகித்து வளர்கின்ற காலத்து, அநுபமைக்கு மைத்துனனாகிய ஸ்வர்ணதேஜன் மரித்து [4] மார்ஜாரமாகப் பிறந்தனன் ; மார்ஜாரம் பூர்வ வைரத்தால் அநுபமையாகிய ரதிவேகையைப் பிடிப்பப் பவனவேகனென்னும் புரு, நக [5] துண்டங்களால் மார்ஜாரத்தைப் பாதித்துச் செல்லாநின்ற காலத்து, ஒருநாள் பர்வதபார்சவத்தே

---

[1] கபோதமிதுனம் - புருவிரட்டை.

[2] ஜாதிஸ்மரணம் - பழம்பிறப்புணர்ச்சி.

[3] போதாதிசயம் - ஞானமிகுதி.

[4] மார்ஜாரம்-பூனை.

[5] துண்டம் -மூக்கு.

கபோத மிதுனங்கள் விளையாடப் போகியவிடத்து வலையிலே பவன வேகன் அகப்படக் கண்ட ரதிவேகை சோகத்திேைடு கூடவந்து சிரேஷ்டிக்குத் [1] தத்பர்த்ரு மரணத்தினை மூக்கிளுலெழுதிக் காட்டி, சோகத்தால்மரித்து ஶ்ரீசந்த்ரையாகிப் பிறந்தது' என்று சேடி சொல்லக் கேட்டு ஶ்ரீசந்த்ரையுடைய பூர்வபர்த்தாவைத் தேடுவான்வேண்டி ஒருப் பட்டகன்று இவள் பூர்வவைபவங்களை யெழுதுவித்து ரங்கதேஜனென் னும் நர்த்தகனையும் மதனலதை யென்னும் நர்த்தகியினையும் அழைத்து ஸம்மான பூர்வகமாக, [2] 'ஏதத்வ்ருத்தாந்தத்தினை நாடகமாகப்பண்ணி அபிநயித்துப் பலதேசங்களிலும் ரங்கஸ்தானத்துப் [3] பட்டகத்தைவிரித் துக் கூத்தாடுக' என்று சொல்லிவிடுத்தனர், அவர்களும்போகி அவ் வண்ணஞ்செய்கின்றகாலத்து ஒருநாள் ராஜா, புஷ்பவனமென்பதோர் உத்யானத்து ஸ்மாதிகுப்தரென்னும் தபோதனரை நமஸ்கரித்துத் தர்மசிரவணானந்தரம், 'என் புத்ரி பூர்வபவ பர்த்தாவைக் காணலாவது எங்கே?' என்று வினவ அவரும், 'இப்போது ஹேமாபநகரத்தில்' என்றருளிச்செய்யக் கேட்டு நர்த்தகரோடு கூடப்போகி ஹேமாபநகர மடைந்து ரங்கஸ்தானத்தே கூத்தாடுவிப்ப, தத்தர்சனார்த்தமாக நகர ஜனங்களோடுவந்து நந்தாட்யன் கண்டு, ஜாதிஸ்மரணத்திளுல் மூர்ச் சிப்ப, ஜீவந்தரகுமாரன் சீதக்கிரியைகளால் மூர்ச்சை நீக்கி, மூர்ச்சா காரணம் என்னென்றுவினவ, அவனும் பட்டகத்து எழுதிய பூர்வபவஸம் பந்தத்தினையெல்லாம் சொல்லி, பூர்வபவத்து நின்மாளிகையிலே பவன வேகனென்னும் கபோதமாகி, [4] ஜீவிதாவஸானத்து நந்தாட்யனயி னேன்' என்று சொல்லக்கேட்டு அத்யந்தம் விஸ்மிதனைகி ஜீவந்தர குமாரன் ஶ்ரீசந்த்ரா நந்தாட்யர்களுக்குக் கல்யாண விதியினைத் தொடங்குவாளுெருப்பட்டனன். மற்றென்று சொல்லுதும்:

"ஹரிவிக்ரமனென்பானொரு வ்யாதபதி தன் தாயாதியாயினாெரு வனாற் பீடிதனைகிப்போந்து கபித்தவனஸமீபமாகியதொரு பர்வத பார்ச்வத்தே ஒரு நகரம்பண்ணியிருந்தனன். இவனுக்கும் வனகிரி யென்னும் பார்யைக்கும் புத்திரன் வனராஜனென்பான்; ஹரிவிக்ரம னுக்கு [5] ஸாமந்தர் அதிபலனும் வடவ்ருக்ஷனும் சித்ரஸேனனும் ஸைந்த வனும் அரிஞ்சயனும் சத்ருமர்த்தனனும் என்பார். வனராஜனுக்கு ஸஹாயர், லோகஜங்கனும் ஶ்ரீஷேணனும் என்பாரிருவர். ஒருநாள், நகரசோபையென்னும் நகரமடைந்து ஓர் உத்யானத்துவிளையாடா நின்ற ஶ்ரீசந்த்ரையது ரூப யௌவனஸௌந்தர்யாதிசயத்தினைக்கண்டு விஸ்மிதராகிப்போகின்றவர் ஸ்நானார்த்தமாகக் கொடுபோகின்ற ராஜ

---

[1] தத்பர்த்ரு - அதன்கணவன்.
[2] ஏதத்வ்ருத்தாந்தம் - இந்த வரலாறு. [3] பட்டகம் - படம்.
[4] ஜீவிதாவஸானம் - வாழ்நாள் முடிவு.
[5] ஸாமந்தர் - சிற்றரசர்.

வாஹனமாகிய ப்ரதான துரகத்தினைப் பலத்தாற்பிடித்துக்கொண்டுபோகி ஹரிவிக்ரமனுக்குக்கொடுப்ப அவனும் அவர்களுக்கு ஸம்மானம் பண்ணியபின், வனராஜனுக்கு ஶ்ரீசந்த்ரையது ரூபஸௌந்தர்யாதிசயத்தை யறிவிப்ப, அவனும் பூர்வ பவ ஸ்நேஹானுபந்தத்தினால் மிகவும் [1] அனுரக்தனாகி அவளை யாதானும் ஒருபாயத்தாற் கொடுவந்துதரவேண்டுமென்று பஹுவிதஸம்மானங்களாலிரப்ப, அவர்களும் நகரமடைந்து [2] நிவாஸஸ்தானமறிந்து அதற்கு அநுரூபமாக நிலவறை பண்ணி அவளையுங்கொண்டு அங்கேகி, இன்னார் 'இவ்வண்ணஞ்செய்தனர்' என்று ஓலையெழுதிவைத்துப்போனவிடத்து மற்றைநாள் பெண்பிள்ளையைக் காணாது பந்து ஜனங்கள் அதிதுக்கிதராகியபின், கின்னரமித்ரனும் யக்ஷமித்ரனுமென்னும் கந்யகாப்ராதாக்கள் அவ்வோலையை வாசித்து அவ்வழியே தொடர்ந்து சென்று யுத்தம் பண்ண, அவர்களும் இவர்களை ஜயித்துக்கொண்டுபோகி வனராஜனுக்குக் கொடுத்தனர். அவளும், 'என்னுடைய நகரத்து ஜினபவனம் நமஸ்கரித்தல்லது வார்த்தை பேசேன்' என்று மௌன விரதம் கைக்கொண்டனள். வனராஜனும் இவளது விரக்தசித்தமறிந்து, 'யாதானுமோருபாயத்தால் என்கண் அனுராகிப்பாளாகப்பண்ணவேணும்' என்று தன்பரிசாரகஸ்திரீகளை யேவ, அவர்களும் நாநாப்ரகாரத்தாற் பேதிப்பவும், அவள் முன்போலச் சலியாதிருந்தனள்; இந்தவ்ருத்தாந்தத்தினை ஹரிவிக்ரமன் கேட்டு, 'இவ்வண்ணஞ்செய்து பிழை செய்தனை' என்று வனராஜனை மிகவுங் கோபித்து ஶ்ரீசந்த்ரையினைத் தன் புத்திரிகளோடுகூட வர்த்திப்பாளாகப் பண்ணியபின், த்ருடமித்ரன் ஸுமித்ரன் முதலாகிய ஸகலபந்து ஜனங்களோடுங்கூட ஜீவந்தரகுமாரன் யுத்தஸன்னத்தனாகிச்சென்று ஹரிவிக்ரமனுடைய நகரத்தைவளைந்து யுத்தஞ்செய்யத்தொடங்கியபின், 'பஹுஜனவிநாசகாரணமாகிய யுத்தஞ்செய்யுமது காரியமன்று' என்று கருதி ஜீவந்தரகுமாரன் ஸுதர்சனயக்ஷனை நினைத்தனன்; அவனும் தத்க்ஷணத்திலே ஶ்ரீசந்த்ரையைக்கொடுவந்துகொடுத்துப் பின்னும் யுத்தோன்முகனாகிய ஹரிவிக்ரமனையும் வனராஜனையும் கட்டிக்கொடுவந்து குமாரஸன்னிதானத்தில் இட்டனன். தத்காலத்தே [3] சர்யாமார்க்கமெழுந்தருளினாரொரு சாரணரைக் கண்டு ஜீவந்தரகுமாரன், நவபுண்யக்ரமத்தாலெதிர்கொண்டு அமுதுசெய்வித்துப் [4] பஞ்சாச்சர்யமடைய, அதுகண்டு வனராஜன் ஜாதிம்ஸ்ருதியடைந்து, 'யான் முன்பு ஸ்வர்ணதேஜனென்னும் வைசியனாகிப்பிறந்து அதற்பின் மார்ஜாரபவத்துக் கபோதத்தினையடர்த்துப் பிடித்தபின், மற்றொருநாள் ஒரு தபோதனர் ஆகமாத்யயனம்பண்ணக் கேட்டிருந்து உபசமபாவத்

---

[1] அனுரக்தன் - பிரீதிகொண்டவன்

[2] நிவாஸஸ்தானம் - இருப்பிடம்.

[3] சர்யை-பிக்ஷைகோடல்

[4] பஞ்சாச்சரியங்களாவன- தேவர்கள் மலர்மழை பொழிதல், பொன் மழை பொழிதல், தேவதுந்துபிமுழக்கல், தேவஸ்துதி,தென்றல் நறுமணம்வீசல்.

தால் வைரானுபந்தத்தினீங்கி வனராஜனுயினேனுதலிற் பூர்வபவ ஸ்நேஹத்தால் இவ்வண்ணஞ்செய்தேன்; என்பலபராக்ரமத்தாலன்று' என்று சொல்லியபின், அவர்களைப் பந்தத்தினீக்கிப் போகவிட்டபின் சோபாநகரமடைந்து கல்யாணவிதியால் ஸ்ரீசந்த்ரையினை நந்தாட்ய னுக்குக் கொடுத்தபின், ஹேமாபநகரத்து ஏறவருகின்றவன் ஒரு பொய் கைக்கரையில் விட்டிருந்தபொழுது அப்பொய்கையுள் ஸ்நானபானுதி களைச்செய்கின்ற பரிஜனங்களைச் சில [1]மக்ஷிகங்கள்வந்து பாதிப்ப, 'இது [2]க்ருதகமாவிருந்தது' என்று அறிந்து, 'இதற்குக்காரண மென்ன?' என்று யக்ஷினை ஸ்மரிப்ப, அவனும் அதுபொழுதேவந்து அப்பொய்கையுள் ஒரு வித்யாதரன்செய்த அம்மாயத்தினை நீக்கி அவனைக் குமாரஸந்நிதானத்து வைப்ப அவனும், 'நீயார்?' என்று வினவச் சொல்லுவான்: "பூர்வபவத்து மாலாகாரனென்னும் வைச்யனுக்கும் குஸுமஸ்ரீயினுக்கும் புத்ரன் ஜாதபடனென்பேன்; தனதத்தனென்னும் வைச்யனுக்கும் நந்தியென்னும் பார்யைக்கும் புத்ரன் சந்த்ராபனென்னும் மித்ரனேடுகூட நின்கண்ணே ஸத்தர்மங்கேட்டு மதுமாம்ஸ நிவ்ருத்தி வ்ரதம் கைக்கொண்டு முடித்து வித்யாதரனுயினேன். ஒருநாள், ஸித்த கூடத்து ஸந்நிஹிதராகிய சாரணரை நமஸ்கரித்துப் பூர்வபவஸம்பந்தத் தினைக்கேட்டுப் [3]பவத்தர்சனுர்த்தமாக வந்தேன். நின்பூர்வ பவஸம் பந்தமாவது: தாதகீஷண்ட பூர்வமந்தர பூர்வவிதேஹ புஷ்கலாவதீவி ஷய புண்டரீகிணீ நகராதிபதி ஜயந்தரன்; தேவி ஜயதேவி; இவர்கட்குப் புத்ரன் ஜயத்ருடன். இவன் ஒருநாள் மனேஹரோத்யானமடைந்து வனவிஹரணம்பண்ணி ஒரு பொய்கையுள் விளையாடாநின்றதொரு அன்னக்குஞ்சைக் கண்டு ஆதரித்து ஒரு [4]சேடகனைவிடுத்துப் பிடிப் பித்துக்கொண்டுபோந்து வளராநிற்ப இதன் மாதாபிதாவாகிய அன் னங்கள் இதன் பின்தொடர்ந்து சென்று மாளிகையிலே அநவரதமும் சோகஸ்வரத்தால் அரற்றுகின்றவிவற்றுள், பிதாவாகிய அன்னத்தைச் சேடகன் எய்துவீழ்த்தினன்; ஜயதேவி கண்டு, 'இஃது என்?' என்று வினவச் சேடகனும் உள்ள பெற்றிசொல்லியபின் குமாரனைநோக்கி, 'இந்தப்பாபக்கிரியைசெய்து பிழைசெய்தனை; இனி இதனைத் தாயோடே கூடவிடுவாயாக' என்றுசொல்ல அவனும், 'அஞ்ஞானனுகிய என்னல் இப்பாபக்கிரியை செய்யப்பட்டது' என்று ஆத்மநிந்தையோடும் கூடிப் பிரித்த பதினுறுநாளிற்கூட்டியபின், ஸம்ஸாரவிரக்த தபப்ரபாவத்தால் ஸஹஸ்ராரகல்பத்துத் தேவனுகி அஷ்டாதசா ஸகரோபமகாலம் திவ்ய ஸுகமனுபவித்துப்போந்து ஜீவந்தரகுமாரனுயினை. முன்பு சேடிகனு லெய்யப்பட்ட அன்னம் நின்சத்ருவாகிய காஷ்டாங்காரிகனுயிற்று. முன்பு அன்னக்குஞ்சைக் கிளையிற்பிரித்தனையாதலிற் பதினுறு ஸம்

---

[1] மக்ஷிகம்-ஈ. [2] க்ருதகம் - செயற்கை. [3] பவத்தர்சனுர்த்த மாக - உன்னைப்பார்க்க. [4] சேடகன் - ஏவலாள்.

வத்ஸரம் நீயும் நின்கிளையிற் பிரிந்தனை " என்று இவ்வண்ணம் வித்யாதரன் சொல்லக் கேட்டு, அவனுக்குப்ரியவசனஞ்சொல்லிவிட்டு ஹேமாபநகரமடைந்து இஷ்டவிஷயங்களை யனுபவித்துச் செல்கின்றகாலத்து மற்றொன்று சொல்லுதும் :

" ராஜபுரத்துநின்றும் நந்தாட்யன் போகி ஜீவந்தரகுமாரனை யடைந்த பின் வகுளமதுராதிகள் கந்தர்வதத்தையைக் குறுகி விநயோபசாரஸஹிதமாக, 'ஸ்வாமியும் நந்தாட்யனும் எந்தத்தேசத்தை வர்த்திக்கின்றனர்?' என்று வினவ அவளும், 'ஸுஜனவிஷயஹேமாபநகரத்துள்ளார்' என்று சொல்லக் கேட்டு மிகவும் ப்ரீதராகி ஸ்வபந்துஜனங்களுக்கு அறிவித்து ஹேமாபநகரத்து ஏறப்போகின்றவர்கள் தண்டகாரண்யத்துத்தாபஸாச்ரமத்துவிட்டனர்; அவ்விடத்து [1] யத்ருச்சையாய் விஜயமஹாதேவி அவர்களைக் கண்டு, " நீங்கள் எங்குள்ளீர் ? எங்குப் போகின்றீர் " என்றுவினவ [2] யதாவ்ருத்தாந்த மறிவித்தபின், புத்ரவிரஹ துக்கபீடிதையாகிய தேவி சோகபாஷ்பம் வீழ்தர 'அப்பிள்ளையை இங்கேயும் கொண்டுவருவீராக' என்று சொல்லிவிடுத்தபின், அவர்களும், 'தேவியது சோகாவஸ்தையினாலும் ரூப ஸாத்ருச்யத்தாலும் ஸ்வாமிக்கு மாதாவேபோலும்' என்று ஸந்தேஹமெய்திப்போகி ஹேமாபநகரமடைந்து சௌர்யப்ரகாசநபுரஸ்ஸரமாக ஸ்வாமியைக் காண்பான் வேண்டி ஒரு வ்யாதபதியோடுங்கூடி [3] ஸார்த்தத்தினைச் சூறைகொண்டனர். ஸார்த்தத்துள்ளவர்கள் சிரோகதஹஸ்தராகி ஆக்ரோசபூர்வகம் ஜீவந்தர குமாரனுக்கு அறிவிப்ப அவனும் வ்யாதபலத்தோடும் யுத்தம் பண்ணுகின்றவிடத்து வகுளாதிகளும் தமது வீர்யப்ரகாச பூர்வமாக ஸ்வநாமாக்ஷரஸஹிதமாகிய சரங்களை விட அவற்றைக்கண்டு பந்துஜனங்களாவதறிந்து அவர்களுடன் கூடிக் கந்தோதிகடாதி பந்துஜனவ்ருத்தாந்த [4] நிவேதநாநந்தரம் தண்டகாரண்ய வ்ருத்தாந்தத்தினை யறிவித்தபின் அப்போதே ராஜபுரகமனோன்முகனாகி த்ருடமித்ராதி பந்துஜனங்களுக்கறிவித்து, சாதுரங்கபல [5] விபூதியோடுங் கூடப்போகித் தண்டகாரண்யத்துத் தன் வரவு பார்த்திருந்த விஜயமஹாதேவியை நமஸ்கரித்திருப்ப, தத்க்ஷணத்தே ஸுதசர்னயக்ஷன் ஸந்நிஹிதனாகித் திவ்யாபரண வஸ்த்ரகந்த மால்யபோஜனாதிகளாற் பூஜித்து மதுர வசனங்களாற் குமாரமாதாக்களுடைய சோகதுக்கங்களைக் கெடுத்துப் போயினபின், குமாரனது புண்யமஹிமையினைக்கண்டு மிகவும் [6] பிரஸன்னையாகி ரஹஸ்யமாகப் புத்திரனை நோக்கி, 'ஸ்வாமியை

---

[1] யத்ருச்சை-தற்செயல்.

[2] யதாவ்ருத்தாந்தம் - உள்ளவரலாறு.

[3] ஸார்த்தம்-பொருளோடுகூடிய கூட்டம்.

[4] நிவேதநாநந்தரம் - தெரிவித்தபின்.

[5] விபூதி - செல்வம். [6] பிரஸன்னையாகி - கிருபையடைந்தவளாகி.

லோகாந்தரமடைவித்து நம் குலராஜதானியாகிய ராஜபுரத்தே ராஜ்ய பதமெய்தி வர்த்திக்கின்ற காஷ்டாங்காரிகன் நமக்குச் சத்ருவாயினன். தேஜஸ்வியாகிய உன்னால் உபேக்ஷிக்கப்படுவானல்லன்' என்று சொல்ல, 'அவ்வண்ணம் செய்கிறேன்' என்று சொல்லி, 'காலானுரூபமாக [1] அபிப்ரேதகாரிய முடிந்தபின் நந்தாட்யனோடே எழுந்தருளுமளவும் இவ்வனப் பிரதேசத்தே இருந்தருளுவீராக' என்று சொல்லி மஹா தேவிக்கு ரக்ஷார்த்தமாகச் சில பரிஜனங்களையும் இருத்திப் போகி முன்பே பரிஜனங்களை யடைவித்து அப்ரகாசமாக ராஜமாபுரமடைந்து யக்ஷனால் கொடுக்கப்பட்ட காமமுத்திரிகாப்ரபாவத்தினால் ஒரு வைச்ய வேஷங்கொண்டு போகி [2] ஆபணப்ரதேசத்திருப்ப, அந்த நகர ச்ரேஷ்டி ஸாகரதத்தன் பார்யை அமலையென்பாள்; புத்திரி விமலையென்பாள்; 'இவளை யாவர்க்குக் கொடுத்தும்?' என்று நைமித்திகனை வினவ, 'கன்யகாயோக்ய பர்த்தா ஸந்நிஹிதனாகியபொழுது ஸ்வர்ணரஜதாதி ஸகல தனங்களும் அதிக லாபத்தவாகும்' என்று ஆதேச முண்டாதலின், ஜீவந்தர குமாரன் ஸந்நிஹிதனாகியபொழுதே அவ்வண்ணமாகியபின் ஆனந்தத்துடன்கூடி ஜீவந்தரகுமாரனுக்கு விமலையை விவாஹ விதி யாற் கொடுக்க அனுபவித்துச் சிலகாலங்கழித்தபின்பு [3] பரிவ்ராஜக வேஷங்கொண்டு போகிக் காஷ்டாங்காரிக ஸமீபமடைந்து, 'அதிதி யாகிய எனக்குப் போஜனதானம் பண்ண வேண்டும்' என்ன அவனும் உபசாரஸஹிதமாகப் போஜனம் பண்ணுவித்தபின், அதுவே காஷ்டாங் காரிகவிநாச நிமித்தமாகக்கொண்டு புறப்பட்டு ஒருவ்ருத்தப்ராஹ்மண வேஷங்கொண்டு போகி ராஜபுத்ராதிவிசிஷ்ட ஜனங்கள் இருந்த ஸபையை யடைந்து 'த்ருஷ்ட பலமாகிய வசீகரண சூர்ணாஞ்சனாதி ஔஷத வித்தைகள் உள; வேண்டுவீர்களாயின், உபதேசங்கொள்வீ ராமின்' என்ன அவர்களும், 'என்னே! இந்த வார்த்திக்யாநுரூப மாகின்றதில்லை இவன் வசனம்' என்று சொல்லி அபஹஸித்து, 'இந் நகரத்தே குணமாலை யென்பாள் ஒரு வைச்ய புத்ரி சூர்ணத்தினை ஜீவந் தர குமாரன் ஸ்துதியாமையாற் புருஷத்வேஷியாகி வர்த்திக்கின்றனள்; அவளை வசீகரணம் பண்ண வல்லீராயிற் பின்பு யாங்களும் அப்ய ஸித்தும்' என்று சொல்லியபின் மாயாவ்ருத்தனும், 'அவ்வண்ணம் செய்குவன்' என்று ப்ரதிக்ஞைபண்ணிக் குணமாலை பவனமடைந்து, 'அதிதியாயினா னொருவன் வந்து நின்றனன்' என்று சேடி முகத்தாலறி வித்துக் குணமாலையின் அனுமதியாலடைவிக்க அடைந்து, [4] பத்ரா ஸனத்திருப்ப, 'எங்கு நின்றும் வருகின்றீர்? எங்குப்போகின்றீர்?'

[1] அபிப்ரேதகாரியம் - இச்சிக்கப் பெற்ற காரியம்.

[2] ஆபணம் - கடைத்தெரு.

[3] பரிவ்ராஜகவேஷம் - ஸந்யாஸ வேஷம்.

[4] பத்ராஸனம் - மங்களமான ஆஸனம்.

என்று குணமாலை வினவ [1] ஸ்கலித வசனத்தனாகி, 'பின்னின்றும் வருகின்றேன்; முன்னேக்கிப் போகின்றேன்' என்ற பரிஹாஸ வசனங்களைப் பரிஜனங்கள் அபஹஸித்தபின், 'வார்த்திக்யம் சித்த விகாரம் பண்ணுமென்பது தருவதன்றோ' என்று அவர்களை நிவாரித்து, 'முன்னேக்கிப் போகின்ற தேசம் யாது?' என்று வினவ, 'ஜராவிநாச காரணமாகிய கந்யாதீர்த்தத்து ஏறப்போகின்றேன்' என்ன அவளும், 'என்னே! இவனது சரீரம் வார்த்திக்யாநுரூப மாயினும் வசனம் யௌவனலங்கிருத மாகின்றவாறு' என நினைந்து உபசார ஸஹிதமாக அவனுக்குப் போஜனம் பண்ணுவித்தனள். அதற்பின், "[2] அபிலஷிததேசத் தேறப்போவீராமின்' என்ன அவனும், 'அவ்வண்ணஞ் செய்வேன்' என்று ஸ்கலிதவசனத்தனாகி அவளது சயனஸ்தலத்தையடைய, குணமாலை, பரிசாரக ஜனங்கள் அதனை யறிந்து கரங்களைப் பற்றி யீர்க்கின்றவர்களை நிவாரித்து, 'சயனஸ்தலத்தேவஸிப்பிக்க' என்று நியோகித்த பின், இரவு வஸித்து [3] ப்ரபாத காலத்து அதிமதுரமாகப் பாடிய இவனது ஸ்வரத்தைக் கேட்டு, 'காந்தர்வதத்தா விவாஹ காலத்து ஜீவந்தரகுமாரகீதமே போன்றிருந்தது' என்று விஸ்மிதையாகி, குணமாலை அவனையடைந்து, 'என்ன என்ன வித்தைகள் அப்யஸித்தீர்?' என்று கேட்ப, "தர்மார்த்தகாமசாஸ்த்ர பாரங்கதனாகின்றேன்; தர்மார்த்த பலங்களை ப்ரதிபாதிப்பது காமசாஸ்த்ரம்; அதன் பேதத்தனவாகிய ஸகலகலாவித்தைகளும் அறிவேன்' என்ன அவளும் ஆதரித்து, 'கந்தயுக்தி முதலாகிய வித்தைகளை எனக்கு உபதேசிக்க வேண்டும்' என்று பிரார்த்தித்து அப்யஸியாநின்றவிடத்து மற்றொரு நாள் வித்யாதி தேவதாபூஜா வ்யாஜத்தினால் ஓர் உத்யானமடைந்து ஏகாந்தமாகத் தனது ஸ்வபாவ ரூபத்தைக் காட்டிப் பின்னரும் [4] விச்வாஸார்த்தமாகச் சூர்ணவிவாதவ்ருத்தாந்தத்தினையுஞ் சொல்லிக் கரதலஸ்பர்சனஸுகமனுபவித்த பின், அவளும் லஜ்ஜாஸ்நேஹபரவசையாகி நிற்ப, பின்னும் தனது வ்ருத்த வேஷங்கொண்டு வித்யாதேவதா பூஜை பண்ணியபின், இந்த வ்ருத்தாந்தத்தினைப் பந்து ஜனங்களறிந்து மிகவும் ப்ரீதராகி ஜீவந்தரகுமாரனுக்குக் குணமாலையை விவாஹ விதியாற் கொடுத்தபின், அவளுடன் இஷ்டவிஷய காமபோகங்களையனுபவித்துச் சிலநாள் கழிந்தபின் ஒருநாள், ஸமஸ்தபந்து ஜனங்களோடும் சாதுரங்க [5] பலஸஹிதனாகி விஜயகிரியென்னும் மதஹஸ்தியினையேறி ராஜ [6] பரிச்சதம் புடைசூழ்தரக் கந்தோக்கடபவனத்தினையடைந்தனன்.

[1] ஸ்கலிதம் - நழுவல்.
[2] அபிலஷிததேசம் - இச்சிக்கப் பெற்ற நாடு.
[3] ப்ரபாதகாலம் - விடியற்காலம்.
[4] விச்வாஸார்த்தம் - நம்பிக்கையின் பொருட்டு.
[5] பலம் - சேனை.
[6] பரிச்சதம் - பரிவாரம்.

அதனைக் காஷ்டாங்காரிகன்கேட்டு மிகவுங் கோபித்தவிடத்து ஆப்த ராகிய மந்த்ரிஜனங்கள், 'ஜீவந்தரகுமாரன் மஹானுபாவனும் ஸுதர்சன யக்ஷமித்ரனும் வித்யாதரபல ஸஹிதனும் மதுரவகுளாதிஸஹாயனும் ஆதலின், அவன் அபேத்யபராக்ரமன்; அவனுடன் விரோதிக்குமது விநாசஹேதுவாகும்' என்று சொல்ல அடங்கினன்; மற்றென்று சொல்லுதும் :

"விதேஹவிஷயத்து ராஜா கோபேந்திரன்; தேவி ப்ருதிவீஸுந்தரி; புத்ரி ரத்னவதி; 'இவள், சந்த்ரகவ்யதனமென்னும் யந்த்ரம் வீழ்தரச் சரந்தூரந்திட்டவனுக்கு யோக்யை' என்று நியதியுண்டாதலின், தகர்த்த மாகக் கோபேந்தரமஹாராஜன் ராஜமஹாபுரமடைந்து ஸ்வயம்வர கோஷணபூர்வகமாக ராஜாக்களையழைப்பித்தபின், அவர்களும் [1] ஸமுதி தராகிவந்து யந்த்ரத்திலெய்து அஸமர்த்தராகியபின், ஜீவந்தர குமாரன் ஸித்தநமஸ்காராநந்தரம் ஆசார்யராகிய ஆர்யநந்திகளை நமஸ் கரித்து யந்த்ரத்தை ஸ்கலிதமாக எய்தனன்; அதனைக்கண்டு ராஜவித்யா தரஜனங்கள் ஸாதுகார்முகராகி ஸ்துதிப்ப, ரத்னவதி ஜீவந்தரகுமாரன் மிசை மாலையிட்டனள். காஷ்டாங்காரிகன் முதலிய ராஜாக்கள் கன்யா பஹரணம் பண்ணுவான்வேண்டி யுத்தந்தொடங்குதலும், ஜீவந்தர குமாரன் ஸத்யந்தரமஹாராஜ ஸாமந்தவர்க்கமாகியவர்களுக்குத் தூத முகத்தால் தனது வ்ருத்தாந்தத்தினையும் க்ருதக்னனாகிய காஷ்டாங்காரி கனது ஸ்வாமித்ரோஹத்தினையும் அறிவித்து ஸாமபேததான தண்ட லக்ஷணத்தவாகிய சதுர்விதோபாயத்தினால் அவர்களை வசீகரித்து யுத்தோன்முகனாகி விஜயகிரியென்னும் மதஹஸ்தியேறி யுத்தரங்கங் குறுகுதலும் காஷ்டாங்காரிகன் அசனிவேகமென்னும் மதஹஸ்தியை மேற்கொண்டு குறுகி யுத்தம்பண்ண, அவனை ஜீவந்தரகுமாரன் லோகாந்தரமடைவித்தனன். ததனந்தரம் ஸகல ராஜபலமும் ஜீவந்தர ஸ்வாமியைச் சரணமாக அடைந்தபின், ராஜ்யகோஷண பூர்வகம் விஜயாதேவ்யாதி ஸகலபந்துஸஹிதனாகி ஜினபதிபூஜாதி மங்கலக்ரியா பூர்வமாக ஸுதர்சன யக்ஷ வித்யாதரப்ரப்ருதிகள் ராஜ்யாபிஷேகம் பண்ணியபின் ரத்னவதி கல்யாணனந்தரம் காந்தர்வதத்தைக்கு மஹா தேவிபட்டங்கொடுத்து, துஷ்டநிக்ரஹ சிஷ்டபரிபாலன ப்ரகாரத்தினால் ராஜ்யபரிபாலனம் பண்ணி இஷ்டவிஷயகாமபோகங்களை யனுபவித்துச் செல்கின்றகாலத்து, மற்றொருநாள் ஜீவந்தரமஹாராஜன் ஸுரமலயோ த்யானத்து வரதர்மதபோதனர் பார்ச்வத்தே தர்மச்ரவணானந்தரம் நந்தாட்யாதி பந்துஜனங்களோடுகூட ஸம்யக்தர்சன தான சீலோப வாஸ ஜினபூஜாதி வ்ரதங்களோடு கூடிச் செல்லாநிற்ப, ஒருநாள் அசோகவனமென்னும் உத்யானத்துப் பரஸ்பரயுத்தம் பண்ணாநின்ற வானரஸமூஹத்தைக்கண்டு போக [2] நிர்விண்ணனாகித் தத்ர ஸந்நிஹித

[1] ஸமுதிதராகி-மகிழ்ச்சியையுடைய வர்களாகி.

[2] நிர்விண்ணன் - ஒன்றும்தோன்றாதவன்.

ராகிய சாரணதபோதனர்பார்ச்வத்தே தனது பூர்வபவ ஸம்பந்தத்தினைக்கேட்டு, ப்ரதிதிவஸம் ஜிநபதி பூஜாபராயணனுகின்றவன், ஸுர மலயோத்யானத்தே ஸ்ரீவர்த்தமானபட்டாரகர் ஸமவஸரணம் ஸந்நிஹித மானமைகேட்டு விபூதிஸஹிதம்போகி, ஸமவஸரணமடைந்து ஜினபதி பூஜாநந்தரம் கந்தர்வதத்தாபுத்ரனுகிய வஸுந்தரபுத்ரனுக்கு ராஜ்ய பதங்கொடுத்து ஸத்யந்தரமஹாதேவியோடுங்கூடக் காந்தர்வதத்தாதி தேவிகளும் அவர்கள் மாதாக்களும் சந்தனுர்யை ஸமீபத்தே 'தீக்ஷித்த பின், ஜீவந்தரமஹாராஜனும் நந்தாட்ய மதுராதிஸஹாய மாதுலாதி மஹீபதிகளோடுகூட ஸர்வஸங்கப்பரித்யாகரூபத்ததாகிய 'ஜினதீக்ஷயினை'ப்ராபித்து ஜீவந்தரமுனிகளும் 'தபப்ரபாவத்தால் சுருதகேவலிபத ப்ராப்தராகி விஹரித்து ஸ்ரீ வர்த்தமான பட்டாரகர் பரிநிர்வாணுனந்தரம் விபுலகிரிமிசை அகாதிகர்மக்ஷயம்செய்து முக்திபதமடைகுவர் '' என்று ஸுதர்மகணதரர் அருளிச்செய்யக்கேட்டு சிரேணிக மஹாராஜன் அதிஸந்துஷ்டனுகி நமஸ்கரித்துப்போகித் தனது நகரமடைந்தனன்.

சீவகசரித்திரம் முற்றிற்று

---



திருத்தக்க தேவர்.

உ

பரமபதி துணை

# சீவகசிந்தாமணி

## நச்சினார்க்கினியருரை



### கடவுள் வாழ்த்து

மூவா முதலா வுலகம்மொரு மூன்று மேத்தத்
தாவாத வின்பந் தலையாயது தன்னி னெய்தி
ஓவாது நின்ற குணத்தொண்ணிதிச் செல்வ னென்ப
தேவாதி தேவ னவன்சேவடி சேர்து மன்றே

என்பது. இத்தொடர்நிலைச்செய்யுள் தேவர் செய்கின்ற காலத்திற்கு நூல் அகத்தியமும் தொல்காப்பியமுமாதலானும், "முந்துநூல் கண்டு முறைப்பட வெண்ணி" (தொல். சிறப்பு.) என்றதனால், அகத்தியத்தின் வழிநூல் தொல்காப்பியமாதலானும், பிறர்கூறிய நூல்கள் நிரம்பிய இலக்கணத்தன அன்மையானும், அந்நூலிற் கூறிய இலக்கணமே இதற்கிலக்கண மென்றுணர்க.

### குறிப்புரை

1. உலகமென்னும் மங்கலமொழி அடைகொடுத்து இதிற் கூறப் பட்டது; "உலக முவப்ப" (முருகு. 1) என்பதன் அடிக்குறிப்பைப் பார்க்க. தேவாதிதேவன் : ஏலாதி. 32; பெரியதிரு. 3. 2 : 8. சேர்தும் - இடைவிடாது நினைப்போம் (குறள், 3, பரிமேல்.)

(மேற்கோளாட்சி.) அடி, 1 : நேமி. இடை. 2; கல். 'புயற்கார்ப்' 15, மயில். ; பிரயோக. திங்ஙு. 5. அடி, 4 : தொல். இடை. 48, ந.; 46, தெய்வச். ; சிலப். 9 : 14-5, அடியார்.; நன். இடை. 22, மயிலை., சங்.; தஞ்சை. 386, சொக்க.; கல். 'திங்கண்முடி' 32, மயில்.; இ - வி. இடை. 27. முற்றும் : தொல். செய். 149, ந.; யா. வி. ஒழிபு. 2; நேமி. வினை. 8; தஞ்சை. 1, சொக்க.

அவ்விலக்கணத்திற் செய்யுளியலின்கண்ணே ஆசிரியர் பா நான்கென்றும், அவற்றை [1] அறம்பொருளின்பத்தாற் கூறுகவென்றும் கூறிப் பின்பு [2] அம்மை முதலிய எட்டும் தொடர்நிலைச்செய்யுட்கு இலக்கணமென்று கூறுகின்றுழி, "இழுமென் மொழியான் விழுமியது நுவலினும்" (தொல். செய். 238) என்பதனுல், மெல்லென்ற சொல்லான் அறம்பொருளின்பம் வீடென்னும் விழுமிய பொருள்பயப்பப் பழையதொரு கதை மேற் கொச்சகத்தாற் கூறின், அது தோல் என்று கூறினமையின், இச் செய்யுள் அங்ஙனம் கூறிய தோலாமென்றுணர்க.

இச்செய்யுள் [3] முன்னோர் கூறிய குறிப்பின்கண் வந்த செந்துறைப் பாடாண் பகுதியாம் (தொல். புறத்திணை. 27). இதனுனே, "யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடையது" (தொல். செய். 149) என்பதற்குத் [4] தேவபாணியும் காமமுமேயன்றி வீடும் பொருளாமென்பது ஆசிரியர் கருத்தாயிற்று.

[5] முந்துநூல்களிற் காப்பியமென்னும் வடமொழியால் தொடர்நிலைச் செய்யுட்குப் பெயரின்மையும் இதற்குப்பின்பு கூறிய நூல்கள் இதற்கு விதியன்மையும் உணர்க.

இனி, இத்தொடர்நிலைச்செய்யுளை [6] இனமென்ப. [7] அந்நூல்கள் இனமென்று காட்டிய உதாரணங்கடாம் அவர் சேர்த்த அவ்வப்பாக்கட்கே இனமாகாது ஒழிந்த பாக்கட்கும் இனமாதற்கு ஏற்றலானும், துறையை விருத்தமாகவும் தாழிசையை விருத்தமாகவும் ஓதுதற்கு அவை ஏற்றமையானும், "மூவாமுதலா" என்னுங்கவி முதலியன தாழம்பட்டவோசையான் விருத்தமாயும் சீர்வரையறையானும் மிகத்துள்ளிய வோசையானும் துறையாயும் கிடத்தலின், இதனை [8] விருத்தக்கலித்துறையெனல்

---

(உரை) [1] தொல். செய். 106. [2] தொல். செய். 236. [3] முன்னோர் கூறிய குறிப்பென்றது அறம்பொருளின்பம் பயப்பச் செய்த செய்யுளைக் கேட்டோர்க்கும் அஃது உறுதிபயத்தலைக் குறித்துச் செய்தல். செந்துறைப் பாடாண் - விகாரவகையான் அமரராக்கிச் செய்யும் அறுமுறை வாழ்த்திணைப் போலாது உலகினுள் இயற்கைவகையான் இயன்ற மக்களைப் பாடுதல். [4] தேவபாணி - தேவரை வாழ்த்துவது; "தேவப் பிரணவ மெனும்வடமொழியைத், தேவ பாணியெனத் திரித்துவழங் கினரே" (பன்னிரு. 207). [5] முந்துநூல்களிற் காப்பியமென்னும் வடமொழிப் பெயர் இன்றேனும் சொற்றொடர்நிலை, பொருட்டொடர்நிலையென்னும், தொடர்நிலைச் செய்யுட்குக் காப்பியமென்னும் பெயர் கூறுதல் பொருந்துமென்பது அடியார்க்கு நல்லார் கொள்கை (சிலப். உரைப் பாயிரம்). [6] இனம் - பாவினம்; தாழிசை, துறை, விருத்தமென்பன. [7] அந்நூல்களென்றது யாப்பருங்கலம் முதலியவற்றைப் போலும். [8] விருத்தக் கலித்துறையென ஒருவகைச் செய்யுட்களைப் பிற்காலத்தில்

வேண்டும்; அது கூறவே துறையும் விருத்தமுமெனப் பகுத்தோதிய இலக்கணம் நிரம்பாதாமாகலானும் இனமென்றல் பொருந்தமின்று. இச் செய்யுட்களின் ஓசைவேற்றுமையும் மிக்கும் குறைந்தும் வருவனவும் கலிக்கேயேற்றலிற் கொச்சகமென்றடங்கின.

"யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடையது" என்பதனால் இக்கவியும் மேலிற் கவியும் முன்னிலையன்றியும் தேவர்ப் பராயினவாம்.

இனி, [9] அளவியற்சந்தம், அளவழிச்சந்தம், அளவியற்றாண்டகம், அளவழித்தாண்டகம், சமசந்தத்தாண்டகம், சந்தத்தாண்டகம், தாண்டகச் சந்தமென அடக்குவார்க்கு அவற்றுள்ளும் சிலவன்றி முழுதுமடங்காமையுணர்க.

மூவாமுதலாவென்பது, மூத்த முதலியவென்னும் [10] பெயரெச்சங்களின் எதிர்மறையடுக்கு; "எதிர்மறுத்து மொழியினும் பொருணிலை திரியா" (தொல். வினை. 39) என்பதனான், உலகமென்னும் வினைமுதற் பொருளொடு முடிந்தது; "முதலா வேன தம்பெயர் முதலும்" (தொல். மொழி. 33) என்பதனான், முதலுமென்பதொரு வினை உடன்பாட்டிற்கு உளதாம். ஆசிரியர், "காலமுலகம்" (தொல். கிளவி. 58) என்றும், பிறுண்டும் சூத்திரஞ்செய்தலின் அது வடமொழியன்று. ஈண்டு உலகமென்றது [11] உயிர்க்கிழவனை; "உலக முவப்ப" (முருகு. 1) என்றது போல. ஒருமூன்றுமென்ற குற்றியலுகரம் மெய்யொடுங் கெட்டு, "முதலீரெண்ணினொற்று ரகர மாகு, முகரம் வருத லாவயி னான" (தொல். குற்றியலுகரப். 33) என்னும் விதியும் பெற்று, "அளந்தறி கிளவியும்" (தொல். குற்றியலுகரப். 41) என்னும் சூத்திரத்து, "தோன்றுங்காலை" என்ற இலேசான் முடிந்தது. ஒருமூன்று மேத்த எய்தியென்க; உம்மை, "இனைத்தென வறிந்த சினைமுதற் கிளவிக்கு வினைப்படு தொகுதியின்" (தொல். கிளவி. 33) வந்தது. உலகமென்னும் பெயர் மூன்றென்னும் பெயர்ப்பயனிலை கொண்டு, அதுதான் ஏத்தவென்னும் வினைப்பயனிலை கொண்டது.

வருத்தமாகிய குறிப்புணர்த்திய தாவென்னும் உரிச்சொல், வினைக்கு முதனிலையாய்த் தாவாதவெனப் பெயரெச்சமறையாய் இன்பமென்னும் பெயரொடு முடிந்தது. ஏத்தத் தாவாதவென்பது, "வினையெஞ்சு கிளவியும்....................வல்லெழுத்து மிகுமே" (தொல். உயிர் மயங்கு. 2) என்பதனான், ஒற்று மிக்கது. தாவாத வின்பமென்பது உடம்படுமெய்யாயிற்று; இன்பமென்னும் பெயர் தலையாயதென்னும்

---

வழங்குவது உண்டு. இதனைக் காப்பியக் கலித்துறை என்பாரும் உளர் (வீர. யாப்புப். 18, உரை). [9] இவற்றின் இலக்கண முதலியவற்றை யாப்பருங்கல விருத்தி யுரையிற் (சூ. 95) கண்டு கொள்க. [10] "புரைதீரா மன்னு விளமை" (நாலடி. 11), "இடிப்பாரை யில்லாத வேமரா மன்னன்" (குறள், 448) என வேறிடங்களிலும் பெயரெச்சங்களின் எதிர்மறையடுக்கு வந்தன. [11] உயிர்க்கிழவன் - ஆன்மா; 'மண்ணிடத்து வாழும் சீவான்மாக்களை உணர்த்திற்று' (முருகு. 1, ந.)

குறிப்புப்பெயரைக் கொண்டது; "அல்வழி யெல்லா மெல்லெழுத் தாகும்" (தொல். புள்ளி. 19) என்பதனன் மகரம் நகரமாயிற்று. தன்னினெய்தியென்ற இன், காரக வேதுப்பொருட்கண்வந்த ஐந்தா முருபு. தன்னிலெய்தியென்று பாடமாயின், மணியினது ஒளியும் மலரி னது நாற்றமும் போலத் தன்னுள்ளே பெற்றெனக. எய்தியென நின்ற செய்தெனெச்சம் காரணகாரியப்பொருட்டாய், நின்ற வென்னும் பெய ரெச்சவினையொடு முடிந்து, அது குணமென்னும் பொருட்பெயரொடு முடிந்தது.

ஓவாதென்னும் எதிர்மறையெச்சமும் நின்றவென்பதனெடு முடியும். [12] குணமாவன தாவாத வின்பமென்பதனற்பெற்ற அநந்தசுகமொழிந்த ஏழு குணங்களும்; அவை:—அநந்தஞானம், அநந்தவீரியம், அநந்த தரிசனம், நாமமின்மை, கோத்திரமின்மை, ஆயுவின்மை, அழியாவியல் பென்பன. அத்து: இரண்டாமுருபின்கண்வந்த சாரியை; "அத்தே வற்றே யாயிரு மொழிமே, லொற்றுமெய் கெடுத லென்மனார் புலவர்" (தொல். புணரியல், 31) என்பதனன் மகரங் கெட்டு, "அத்தி னகர மகரமுனை யில்லை" (ஷை. ஷை. 23) என்பதனன் அகரம்கெட்டு முடிந் தது. "குற்றியலுகரமுமற்று" (ஷை. ஷை. 3) என்பதனன் வருமொழி யின் ஒகரமேறிற்று. ஒண்ணிதி: பண்புத்தொகை. ஒண்ணிதிச் செல் வன் - வீடாகிய விளங்கிய நிதியையுடைய செல்வன்; இகரவீற்று வேற் றுமைச்சொல்லாதலின் வல்லெழுத்து மிக்கது. செல்வனென்ருர், அழி யாத இன்பத்தை நுகர்தலின். என்பவென்னும் முற்றுச்சொல் [13] சாதுக்க ளென்னும் பெயர் தொக்குநின்றதனெடுமுடியும்; தோன்ரு வெழுவாயு மாம். [14] தேவும் தெய்வத்துக்கு ஒரு பெயர்: நான்கனுருபு விரிக்க. ஆதி யாகிய வென்க. சேவடி பண்புமாத்திரையாய்க்குறைந்த சொல்லாத லின், [15] மருவின்பாத்தியதாய் (தொல். குற்றியலுகரப். 77) நின்றது. சேவடிசேர்துமென ஒற்று இரட்டாது நின்றது, இரண்டாவதற்கோதிய திரிபில் அன்னபிறவால் (தொல். தொகை. 15). சேர்தும்: பன்மைத் தன்மை; ஈண்டு ஒருவரைக் கூறும் பன்மை. அன்று: அசை. ஏகாரம்: ஈற்றசை.

(இதன் பொருள்.) தேவர்களுக்கு ஆதியாகிய தேவனுவான், கெடாத இன்பம் தனக்கு ஒப்பற்றதனை [16] அந்தமுமாதியுமில்லாத [17] மூன்றுலகுமேத்தத் தன்ருற் பெறுகையினலே தன்னை விட்டுநீங்காது நின்ற குணங்களையுடையனுகிய ஒண்ணிதிச்செல்வனென்பர் சாதுக்கள்; ஆதலின், யாமும் இவ்விலக்கியம் இனிது முடிதற்பொருட்டு அவன் திரு வடிகளை வணங்குவேமென்ருரென்க.

---

[12] எண்குணம்: சீவக. 1469. [13] துறந்தோரைச் சாதுக்களென்பது சைனநூன்மரபு. [14] தேவு: "தேவு மாதவற் ருெழுது" (கம்ப. கையடை. 24) [15] மருவிநடந்த வழக்கினது பகுதியை இலக்கணமாக உடையது. [16] உலகம் நித்திய மென்பது சைனர்களுடைய கொள்கை. [17] மூன் றுலகு: மேலுலகம், மத்திமலோகம், பவணலோகம் (நாகலோகம்)

இஃது [18] அருகசரணம் சித்தசரணம் சாதுசரணம் தன்மசரண மென்னும் நான்கினுள் சித்தசரணம்.

இனி, தான் மூவாமுதலாக வேண்டியென்றும், நாம் மூவாமுதலாக வேண்டியென்றும் வினையெச்சமாக்குவாருமுளர்; அதற்கு எய்தி யென்பதனோடு முடிக்க.

மேல்வரும் செய்யுட்கும் இவ்வாறுரைப்பின் உரை பெருகுமாதலின், இனி நல்லறிவுடையோர் உய்த்துணருமாறு சுருங்கவுரைக்கின்றாம்.

"செம்பொன்" (சீவக. 2) என்னும் கவியாற் குருக்கள் அருகனை வணங்குதலின், தாம் சித்தனை வணங்கினார். குருக்கள் கூறுதலானும் அருகனை வணங்குதலானும் [19] அதனை முன்வைக்கவெனின், அவர், 'இது நன்று; இதனை முன்னே வைக்க' என்றலின் முன்வைத்தார். (க)

2. செம்பொன் வரைமேற் பசும்பொன்னெழுத் திட்ட தேபோல்
அம்பொன் பிதிர்வின் மறுவாயிரத் தெட்ட ணிந்து
வெம்புஞ் சுடரிற் சுடருந்திரு மூர்த்தி விண்ணோர்
அம்பொன் முடிமே லடித்தாமரை சென்னி வைப்பாம்.

---

[18] அருக சரணம் - அருகக்கடவுளை வணங்கும் வணக்கம். சித்த சரணம் - சித்தனை வணங்கும் வணக்கம்; சித்தன் - காதி அகாதி யென்னும் இருவகைக் கருமங்களையும் வென்று அக்கினியிந்திரனால் உடம்பைத் துறந்து பரிநிர்வாணம் பெற்று மூவுலகத்து உச்சியிலிருப்ப வன்; "இருநால் வினைகெடுத்திட் டெண்குணனு மெய்தி, உருவாற் சிறிதொழிந்த வுண்மை - அருவாகி, நித்தராய் மூவுலகு மேத்த நிறைந்த புகழ்ச், சித்தரா நந்தமக்கோர் சேர்வு" (சீவசம்போதனை, 2); "மூவுல கத் துச்சிச் சூளா மணிவிளக்குத் தேர்வகையிற் சித்தி யவர்" (அருங்கலச் செப்பு, 159). சாது சரணம் - சாதுக்களை வணங்கும் வணக்கம். தன்மசரணம் - தருமத்தை வணங்கும் வணக்கம். [19] சித்த சரணத்தை அருகசரணத்தின் பின் வைத்தலே முறை.

2. பொன்பிதிர்வின் : "பொன்பிதிர்ந்த வாகத்து" (சீவக. 2709); எதுகை நோக்கி இயல்பாயிற்று; பத்மம், சங்கம், மத்ஸ்யம், ஸ்ரீவத்ஸம் முதலிய இரேகைகள் நூற்றெட்டும் மஸூரிகை முதலிய அடையாளங்கள் தொளாயிரமும் ஆக மறுக்கள் ஆயிரத்தெட்டென்று முநிஸுவ்ரத காவ்யமென்னும் வடமொழிநூலிலும், ஸ்வஸ்திகம், நந்தியாவர்த்தம் முதலிய இரேகைகள் நூற்றெட்டும் மஸூரிகை முதலிய அடையாளங்கள் தொளாயிரமும் ஆக மறுக்கள் ஆயிரத்தெட்டென்று புருதேவசம்பு வென்னும் வடநூலிலும் சொல்லப்பட்டுள்ளன வென்பர். ஸ்ரீ வர்த்தமானர் பொன்னிற முடையவராதலின், 'வெம்புஞ் சுடரிற் சுடருந் திருமூர்த்தி' என்றார்; இதனைத் திருக்கலம்பகக் காப்புச் செய்யுளின் உரையாலும் உணர்க. அருகன் மேனிக்குச் சூரியன் :

இன் : ஐந்தாமுருபு ; [1] உவமப்பொரு. எழுத்திட்டதென்றது ஒற்றுமைப்படக் கிடந்ததற்கும், பிதிர்வென்றது சிறியவும் பெரியவுமாகிய வடிவிற்கும் உவமை. மேல் வெம்புமென எதிர்காலநோக்கிற்று ; எல்லாரும் [2] விரும்பும் சுடரென்று இளஞாயிறென்றலுமாம். இன் : [3] உறழ்பொரு. [4] வைத்தவென வருவிக்க.

(இ - ள்.) ஆயிரத்தெட்டு மறுவை எழுத்திட்டாற்போலப் பிதிர்வு போல அணிந்து இளஞாயிற்றினும் விளங்குமூர்த்தியுடைய, தேவர்கள் முடிமேல் வைத்த அடியை யாமும் சென்னியிலே வைப்பாமென்க.

[5] செம்மை பசுமை : தொடைமுரண் ; ஈண்டு வண்ணவேறுபாடின்று.

இஃது [6] அருகசரணம். (௨)

3. பன்மாண் குணங்கட் கிடனுய்ப்பகை நண்பொ டில்லான்
தொன்மாண் பமைந்த புனைநல்லறந் துன்னி நின்ற
சொன்மாண் பமைந்த குழுவின்சரண் சென்று தொக்க
நன்மாண்பு பெற்றே னிதுநாட்டுதன் மாண்பு பெற்றேன்.

சொல் : புகழ். குழு - [1] ஆசிரிய உபாத்தியாய சாதுக்கள்.

(இ - ள்.) உறவும் பகையுமில்லாதான் [2] கூறிய நற்குணங்கட்கு இருப்பிடனுய்ப் பழையதாகிய மாட்சிமையமைந்த [3] அறத்தையும், அதனைப் பொருந்திநின்ற குழுவினையும் சரணுகச் சென்றுசேர்ந்த நல்வினையுடையேனுதலின் இக்கதையை உலகிலே நிலைபெறுத்துதற்கு நல்வினையுடையேனெனத் [4] தெளிந்து கூறினுரென்க.

---

“பருதியங் கடவுளன்னகோன்” (சீவக. 374); “ஞாயிற்றுத் திகழொளி......அறிவன்” (சிலப். 11 : 2-4)

(உரை) [1] உவமப்பொரு - ஒப்புமைபடக் கூறுதல். [2] சீவக. 410. [3] உறழ்பொரு - ஒன்றனுல் ஒன்றை மிகுத்தல். [4] முடிமேல் வைத்த அடித்தாமரையென்க. [5] சொல்லும் சொல்லும் முரணிய தொடை. [6] அருகன் - ஜிநன் ; ‘அருகனுவான் மூவுலகத்துச்சியிலுள்ள சித்தனைத் தியானித்து முத்தி யடைந்தவன்’ என்றும், ‘அகமிந்திர லோகத்தின் அவதரித்து மத்திம லோகத்தில் சுவாமி, ஜீவன், கருமம், வேதம், உலகம், காலமென்னும் அறுபொருளின் குணங்களை விளக்கினவன்’ என்றும் கூறுவர் திருக்கலம்பக உரையாசிரியர்.

3. பன்மாண்குணம் : எண்பத்துநான்கிலக்கம் குணவிரதம், நூறு கோடி மகாவிரதம், ஆயிரத்தெண்ணூறு சீலாசார மென்பர் (சீவக. 1244, 2813, 3023-4). இல்லா னென்றது அருகனை. சொல் - புகழ் (குறள், 56)

(உரை) [1] இவர் பஞ்சபரமேஷ்டிகளைச் சார்ந்தவர். [2] ‘பன்’ என்னும் சொல்லை நினைந்து ‘கூறிய’ என உரை எழுதினுர். [3] அறம் - ஜிநதருமம். [4] பெற்றேனென இறந்த காலத்தாற் கூறினமையின், ‘தெளிந்து கூறினுர்’ என்றுர்.

இறைவன் நண்பிலனாயினும் [5] அருஞ்சுரத்தின் மரம்போல் அடைந் தார்க்களித்தல் அவற்கியல்பு. இல்லாவென்று பாடமாயின் இல்லாவற மென்க.

இனி, [6] குணங்கட்கிடனாய்ப் பகைநண்பில்லானெனின், பிறர்க் குள்ளது, இவற்கின்றென்றாகும்; "குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி" (குறள், 29) என்றலின்.

இது தன்மசரணமும் சாதுசரணமும் கூறிற்று. (ங)

## அவையடக்கம்

4. கற்பா லுமிழ்ந்த மணியுங்கழு வாது விட்டால்
நற்பா லழியு நகைவெண்மதி போனி றைந்த
சொற்பா லுமிழ்ந்த மறுவும்மதி யாற்க ழீஇப்
பொற்பா விழைத்துக் கொளற்பாலர் புலமை மிக்கார்.

(இ - ள்.) கல்லின்பகுதியீன்ற மணியும் நிறைமதிபோற் கலை கணிறைந்த சொல்லின்பகுதியீன்ற மறுவும் கழுவாதொழிந்தால் நன்மை கெடும்; ஆதலிற் சான்றோர் தமது அறிவாலே கழுவி அழகாக அமைத்துக் கொளற்பாலராயிருந்தாரென்க.

எனவே யான் அத்தன்மையனல்லனென்பது சொல்லெச்சம்; "சொல்லொடுங் குறிப்பொடு முடிவுகொ ளியற்கை, புல்லிய கிளவி யெச்ச மாகும்" (தொல். செய். 206) என்றாராதலின். மறுவில்லாத மதிக்கு மறு அடுத்தாற் போலக் கலை நிறைந்த சொற்கு அடுத்த மறுவாவது வழுவ மைக்குஞ் சொல்; அதனைச் [1] சங்கத்தார் ஆராய்ந்தமை கூறவே [2] அவை யடக்கமுணர்த்தியதாயிற்று. [3] மதிபோல் நிறைந்த மதியுமாம். (ச)

[5] புறநா. 119; நாலடி. 202. [6] கிடந்தவாறே பொருள் கொள்ளும் முறையையும் கூறுகின்றார். பிறர்க்குள்ளதென்றது துறவியருக்கும் பகைமுதலிய குற்றம் உண்டென்பதைக் கூறியபடி. அவருக்கும் பகைக் குறிப்பாகிய வெகுளி உண்டென்பதை இக்குறள் வெளிப்படுத்துவதா தலின் இங்கே மேற்கோள் காட்டினார்; இப்பொருட்கு இல்லான் கூறிய அறமென ஒருசொல் வருவிக்க.

4. கற்பாலுமிழ்ந்தமணி: சீவக. 9, 588; பரி. 3 : 64; நான் மணி. 5; பெருங். 1. 51 : 9.

(மேற்.) மு : தொல். செய். 113, ந.; இ-வி. பாட்டியல், 128.

(உரை.) [1] சங்கத்தார் - ஜைன சங்கத்தார். [2] அவைக்கு அடங்கி யதை உணர்த்தினார். [3] 'கலை நிறைதலின் திங்கள் உவமையாயிற்று' (முருகு. 98, ந.)

5. முந்நீர்ப் பிறந்த பவழத்தொடு சங்கு முத்தும்
அந்நீ ருவர்க்கு மெனின்யாரவை நீக்கு கிற்பார்
இந்நீர வென்சொற் பழுதாயினுங் கொள்ப வன்றே
பொய்ந்நீர வல்லாப் பொருளால்விண் புகுது மென்பார்.

நிலத்தைப் படைத்தலும் காத்தலும் அழித்தலுமாகிய மூன்று தொழிலுமுடைமையின் [1] முந்நீர் : ஆகுபெயர்.

(இ - ள்.) பவழமும் சங்கும் முத்தும் கடலிலே பிறந்தன; அவை பிறந்த அக்கடல் உவர்க்குமென்று கூறினும் அவற்றைக் கைவிடுவா ரில்லை. அதுபோல மெய்யாகிய [2] புராணப்பொருளாலே வீடுபெறுவே மென்பார், எனது இவ்வாறு உவர்க்குந் தன்மையையுடைய சொல் தீதாயினும், அச்சொற்பொதிந்த பொருளாலே அச்சொல்லைக் கொள்வ ரெனத் துணிந்து கூறினாரென்க. (உ)

## பதிகம்

6. மீனே றுயர்த்த கொடிவேந்தனை வென்ற பொற்பிற்
றேனே றனையா னுளன்சீவக சாமி யென்பான்
வானேற நீண்ட புகழான்சரி தம்மி தன்னைத்
தேனூற நின்று தெருண்டாரவை செப்ப லுற்றேன்.

ஏறுயர்த்த - ஏற்றை மேம்படுத்தின; "கடல்வாழ் சுறவு மேறெனப் படுமே" (தொல். மரபு. 40) என்றார். [1] சாமி : பாகதம்.

---

5. பிறந்த : முற்று.

(உரை) [1] இது மூன்று நீர்மையையுடையதென்னும் பொருளினது. இங்கே கூறியபடியே நச்சினார்க்கினியர் பிறவிடங்களிலும் (பெரும் பாண். 441, மதுரைக். 75-6) எழுதுவர்; அடியார்க்கு நல்லாரும் (சிலப். 17) இங்ஙனமே எழுதுவர்; ஆற்றுநீர்; ஊற்றுநீர், வேற்றுநீர் என்பாரும் உளர் (புறநா. 9, உரை). [2] புராணப் பொருள் - பழம் பொருள்.

6. சீவகனுக்கு மன்மதன் உவமை : சீவக. 401. சீவகசாமி : 1913, 2310, 2609. வானேற நீண்ட புகழ் : சீவக. 161; புறநா. 11 : 6-7; பெருங். 3. 24 : 3. தேன் - இனிமை (சீவக. 15)

(மேற்.) அடி, 4 : கல். 'தன்னுழை' 12, மயில்.; நன். உரி. 17, சங்கர. மு : நன். உரி. 17, மயிலை.

(உரை) [1] ஸ்வாமி என்னும் வடசொல் பிராகிருதத்தில் சாமி யெனச் சிதைந்து வரும்.

(இ - ள்.) காமனைவென்ற பொற்பினையுடைய ஏறனையான்றன் ஒருவனுளன்; அவன் யாரெனிற் சீவகசாமி யென்பான்; அவனது ஒழுக்கம் கேட்டோர் நெஞ்சிடத்தே நின்று இனிமைமிகும்படி, தெளிந்தோர் அவையிலே இத்தொடர்நிலைச் செய்யுளைக் கூறலுற்றேனென்க.

புகழானென்னும் பெயர் சொல்லுவான் குறிப்பான் அவனென்னுஞ் சுட்டுப்பெயர் மாத்திரையாயிற்று; "நாணி நின்றோள்" (அகநா. 16) என்றும், "அணங்கருங் கடவு ளன்னோள்" (அகநா. 16) என்றும் அகத்திற் கூறினாற் போல. இது, "பொருளொடு புணராச் சுட்டுப்பெய ராயினும்" (தொல். கிளவி. 37) என்னுஞ் சூத்திரவிதி. மேல் இங்ஙனம் வருவனவற்றிற் கெல்லாமொக்கும். [2] சீவகனை முற்கூறினார் கதைக்கு நாயகனாதலின். (௬)

7. கோடாத செங்கோற் குளிர்வெண்குடைக் கோதை வெள்வேல்
ஓடாத தானை யுருமுக்குர லோடை யானை
வாடாத வென்றி மிகுசச்சந்த னென்ப மன்னன்
வீடாத கற்பி னவன்றேவி விசயை யென்பாள்.

செங்கோல் [1] பிறிதினியைபு நீக்கிய விசேடணமாயினும் கோடாத வென்று அடையடுத்தலிற் கோலென்னுந் தன்மையாயிற்று. வெண்குடை: இயைபின்மைமாத்திரை நீக்கிய விசேடணம். உருமுக்குரல் போலுங் குரலையுடைய யானை. [2] வீடாத: விகாரம்.

(இ - ள்.) செங்கோல் முதலியவற்றையுடைய மன்னன் குறையாத வென்றிமிகு [3] சச்சந்தனென்பர்; அவன்தேவி விசயையென்று பெயர் கூறப்படுவாளென்க. (உ)

8. சேந்தொத் தலர்ந்த செழுந்தாமரை யன்ன வாட்கட்
பூந்தொத் தலர்ந்த பசும்பொற்கொடி யன்ன பொற்பின்
ஏந்தொத் தலர்ந்த முலையின்னமிர் தன்ன சாயல்
வேந்தற் கமுதாய் விளையாடுதற் கேது வாமே.

---

[2] "கண்ணகியென் பாண்மன்னோ" என்றவிடத்து, 'இவளை முற்கூறிற்று, கதைக்கு நாயகியாதலின்' (சிலப். 1 : 29) என்று அரும்பதவுரையாசிரியர் எழுதியது இங்கே ஒப்பு நோக்கற்குரியது.

7. ஓடாத தானை : பெரும்பாண். 102. கோடாத செங்கோலும் ஓடாமையும் : பெருங். 3. 18 : 11-2. உருமுக்குரல் யானை : பரி. 8 : 17-8. வாடாத - குறையாத.

(மேற்.) அடி, 1 : இ - கொ. ஒழிபு. 30.

(உரை) [1] தொல். பெயர். 28, ந. பார்க்க. [2] விடாத வென்றது வீடாதவென நின்றமையின் விகாரமென்றார் (சீவக. 307, ந.) [3] சச்சந்தன் : ஸத்யந்தர னென்னும் வடமொழிச் சிதைவு.

8. சேந்து : சிவந்தென்பதன் மரூஉ. வாட்கண் : கண்ணென்னும் துணையாய் நின்றது; இவ்வாறு வருவனவற்றை உவமையும் உருபும்

(இ - ள்.) சிவந்து தம்மிலிணையொத்து அலர்ந்த தாமரையன்ன கண்ணிணையும் பொற்பிணையும் தம்மிலொத்து அடிபரந்த ஏந்து முலையிணையுமுடைய சாயலாள் வேந்தனுக்கு அமுதமாய்ப் புணர்ச்சிக்குக் காரணமாமென்க.

அமிர்தம் கட்கினிதாகிய மென்மையும் [1] தன்னை நுகர்ந்தார் பிறிது நுகராமற்றடுக்கு மென்மையுமுடைமையின், 'அமிர்தன்ன சாயல்' என்றார்; "சாயன் மென்மை" (தொல். உரி. 27) என்று பொதுப்படச் சூத்திரஞ் செய்தது ஐம்பொறியாலும் நுகருமென்மையெல்லாம் அடங்குதற்கு; "மயிலன்ன சாயல்" (ஏலாதி, 28), "சாயன்மார்பு" (கலித். 65) என ஒளிக்கும் ஊற்றிற்கும் வந்தன; பிறவும் காண்க; சாயல்: [2] ஆகுபெயர். மறுமையிற் சென்று பெறும் அமுதமும் இவளெனக் கொண்டு மயங்கினமை தோன்ற மீட்டும் 'அமுதாய்' என்றார். (அ)

9. கல்லார் மணிப்பூ ணவன்காமங் கனைந்து கன்றிச்
சொல்லாறு கேளா னனிசூழ்ச்சியிற் றேற்ற வாறும்
புல்லார் புகலப் பொறிமஞ்ஞையிற் றேவி போகிச்
செல்லா றிழுக்கிச் சுடுகாடவள் சேர்ந்த வாறும்.

நனி: விசேடித்த உரிச்சொல். பொறி - எந்திரம். செல்லாறிழுக்குதல் - வெற்றிமுரசு கேட்டுக் கலங்குதல். தேவி போகி இழுக்கிச் சேர்ந்தவாறுமென முடிவுழி, அவளெனவேண்டாமையின், அது தேவியைச்சுட்டாது, அங்ஙனம் [1] அமுதாயவள் இங்ஙனமாயினாளெனத் தேவரிரங்குதலின், முன்னிற்கவியை நோக்கித் தகுதிபற்றிவந்தது. இனி, 'சாத்தியவள் வந்தாள்' என்றாற்போலத் தேவியவளென [2] வினைக்கொருங்கியன்றதென்பாருமுளர்; அது [3] வழக்கிலதென்று மறுக்க.

---

தொடர்ந்தவழி உவமேயப் பொருட்கு அடைபுணர்த்தல் உண்டென்று கூறி அதன்கண் அடக்குவர் (மாறன். 104, உரை). "வாளுற்ற கண்ணாள்" (சீவக. 10). பூந்தொத்து-பூங்கொத்து; "அரும்பிவர் மென்முலை தொத்தா" (பு. வெ. 285). அமிர்தன்ன சாயல்: சீவக. 1033.

(மேற்.) அடி. 1: தொல். எச்ச. 53, ந; கல். 'புயற்கார்ப்' 30, மயில். இ - வி. பொது. 76. அடி. 3: தொல். உரி. 27, ந.

(உரை) [1]தொல். உரி. 27-ஆம் சூத்திரவுரையில் இவ்வுரையாசிரியர் இங்ஙனமே எழுதினர். [2] பண்புப் பெயர் பண்பியை உணர்த்திற்று.

9. கனைந்து கன்றி: சீவக. 2769. புகல - விரும்ப; "நன்றெனப் புகன்று வந்தார்" (கந்த. திருவவ. 115)

(மேற்.) மு.: கல். 'ஈன்றவென்' 10, மயில்.

(உரை) [1] "சேந்தொத்தலர்ந்த......அமுதாய்" (சீவக. 8) [2] இயற்பெயரும் சுட்டுப்பெயரும் ஒன்றனை ஒன்று கொள்ளாது இரண்டும் பிறிதுவினை கோடல் (தொல். கிளவி. 38). [3] இவ்வாறு வழக்கிற்குண்டென்று சேனாவரையர் கூறுவர். இங்கே நச்சினார்க்கினியர் அதனை மறுக்கின்றார் போலும்.

(இ - ள்.) பூணவன் வேட்கைசெறிந்து அதிலே அடிப்பட்டு அமைச்சர் சொல்வழியைக் கேளானாய்ப் பகைவர் மனமகிழ எண்ணத்திலே மிகத்தோற்றபடியும், தேவி போகி இழுக்கி அவள் சுடுகாட்டைச் சேர்ந்தபடியுமென்க. (௯)

10. நாளுற்று நம்பி பிறந்தான்றிசை பத்து நந்தத்
தோளுற்றொர் தெய்வந் துணையாய்த்துயர் தீர்த்த வாறும்
கோளுற்ற கோன்போ லவன்கொண்டு வளர்த்த வாறும்
வாளுற்ற கண்ணாள் மகன்வாழ்கென நோற்ற வாறும்.

தோள் - கை. உற்று : உவமவாசகம் ; "செப்புற்ற கொங்கை" (திருச்சிற். 354) என்றார் பிறரும். "ஒழியாது" (தொல். தொகை. 15) என்னும் இலேசாற் கோனையென்னும் உருபு தொக்கது. [1] அவனென்று [2] கந்துக்கடனைச் சுட்டிற்று, கதையை உட்கொண்டு. அரசன் இறத்தற்கு ஏதுவாகலின், ஈண்டும் வாளுற்ற கண்ணென்றார். வாழ்க : வியங்கோள் ; [3] விகாரம். நோன்பு வேட்கையுள்ளது.

(இ - ள்.) நம்பி, ஒன்பதுதிங்களும் நிறைந்து திசைகளிற் பல்லுயிர்களும் வளர்தல் காரணமாகப் பிறந்தானாக, [4] ஒருதெய்வம் [5] கூனியது உருவாய்த் தன்கை தனக்கு உதவுமாறுபோலத் தேவிக்கு உதவித் துயர்தீர்த்தபடியும், கொலையுண்ட சச்சந்தன் வளர்க்குமாறுபோலக் கந்துக்கடன் [6] உட்கொண்டு வளர்த்தபடியும், கண்ணாள் நோற்றபடியுமென்க.

நல்ல நாளுற்றென்றுமாம். (௰)

11. நெஞ்சம் புணையாக் கலைமாக்கட னீந்தி யாங்கே
வஞ்சம் மறவர் நிரைவள்ளல் விடுத்த வாறும்
விஞ்சைக் கிறைவன் மகள்வீணையிற் றோற்ற வாறும்
நஞ்சுற்ற காம நனிநாகரிற் றுய்த்த வாறும்.

10. தோள் - கை (பெருங். 2. 13 : 43). உற்று - ஒத்து. கைபோலுதவல் : குறள், 788. வாளுற்ற கண் : சீவக. 8.

(உரை) [1] நெஞ்சறி சுட்டெனலுமாம். [2] கந்தோத்கடசிரேஷ்டி என்று ஸ்ரீபுராணத்திற் கூறப்படுவான். [3] தொகுத்தல் விகாரம். [4] இது யக்ஷிதேவதையென்று ஸ்ரீபுராணம் கூறும். [5] விசயையின் தோழியான சண்பகமாலை. [6] கட்டியங்காரனுக்குப் புலப்படாமல் வளர்த்தமை பற்றி இங்ஙனம் கூறினார்.

11. வள்ளல் : சீவக. 450, 797. நிரை விடுத்தது : சீவக. 1112. விஞ்சைக் கிறைவன் - வித்தியாதரர்க்கு அரசனான கலுழவேகன் ; விஞ்சை வித்தியாதரருக்கு ஆயிற்று; பண்பாகுபெயர். மகள் : காந்தருவதத்தை; இவள் தத்தை யென்றும் கூறப்படுவாள். நஞ்சுற்ற - நைந்துற்ற ; போலி. நஞ்சுற்ற காமம் : சிலப். 2 : 26-7-ஆம் அடிகளின் உரையில் இதனை உரைநடையில் அடியார்க்குநல்லார் அமைத்தனர். நாகரிற்றுய்த்தல் : சீவக. 189, 217. நாகர் - பவணதேவர்.

(இ - ள்.) வள்ளல், தனது நெஞ்சு தெப்பமாகக் கலைகளாகிய கடலைக் கடந்து கரையேறி அப்பொழுதே மறவர்கொண்ட நிரையை மீட்டபடியும், தத்தை யாழ்ப்பாடலிலே தோற்றபடியும் [1] இருதலையு மொத்த காமத்தை நாகரைப்போல நுகர்ந்தபடியுமென்க.

[2] கற்றபொழுதே பயன்கோடலருமையின் ஆங்கே யென்றார். [3] மறவரைக் கொல்லாது உயிரை வழங்குதலின் வள்ளலென்றார். விஞ்சை : குணப்பண்பு ; பண்புடைப் பொருண்மேனின்ற ஆகுபெயர். ஒருமகளை வென்றானென்றல் இவன் தலைமைக்கு இழிவென்று அவள் செய்தியாகக் கூறினார். நாகரோடு உவமை, [4] ஒருடம்பாதலும் நீங்கல் வன்மையும் பற்றி. (சு)

12. முந்நீர்ப் படுசங் கலறம்முர சார்ப்ப மூதூர்ச்
செந்நீர்க் கடியின் விழவாட்டினுட் டேங்கொள் சுண்ணம்
மைந்நீர் நெடுங்க ணிருமங்கையர் தம்முண் மாறாய்
இந்நீர்ப் படியே மிவைதோற்றன மென்ற வாறும்.

அலற ஆர்ப்ப விளையாடும் விளையாட்டென்க. கடி - மிகுதி. தேங் கொள்சுண்ணம் -ஒளியும் நாற்றமும் ஊறும் இனிமைகொண்ட சுண்ணம். தோற்றனம் : [1] "மோயின ளுயிர்த்த காலை" (அகநா. 5) என்றாற் போல வினையெச்சம் முற்றாய்த் திரிந்தது.

(இ - ள்.) மூதூரிற் புதுநீரால் உண்டான விழவிடத்தாடும் ஆட்டிலே இருவராகிய மங்கையர் சுண்ணத்தாலே மாறாய் இச்சுண்ணங் களைத் தோற்று இந்நீரிற் படியேமென்றபடியுமென்க. (எ)

13. சுண்ணம் முடைந்து சுரமஞ்சரி சோர்ந்து தோழி
வண்ணந் நெடுங்கட் குணமாலையை வைது மாறிப்
புண்மேற் புடையிற் புகைந்தாணுரு வியாது நோக்காள்
கண்ணேைக் குடைந்து கடிமாட மடைந்த வாறும்.

(இ - ள்.) சுரமஞ்சரி, சுண்ணந்தோற்றலாலே சோர்ந்து தோழி யாகிய குணமாலையைக் [1] கண்ணற்றுச் சீவகனை [2] மழைவள்ளலென்று வைது நெஞ்சழன்று அழகுகெட்டு ஆண்மக்கள் வடிவை ஓவியத்தும் நோக்காளாய்க் [3] கன்னியாமாடத்தை அடைந்தபடியுமென்க.

---

(உரை) [1] குறள், 1196; பெருங். 1. 32 : 49. [2] சீவக. 2554. [3] மறவர் சீவகனுக்குப் பகைவர் அன்மை : சீவக. 2554, உரை. [4] சீவக. 217, ந.

12. முந்நீர்ப்படு சங்கு : சீவக. 5. சங்கும் முரசும் : முருகு 120-21. செந்நீர் - புதுநீர். இருமங்கையர் - குணமாலையும் சுரமஞ்சரியும். சுண்ணம் - வாசனைப் பொடி.

(உரை) [1] மோயினள் - மோந்து.

13. புண்மேற்புடை - புண்ணினிடத்துள்ள புடைப்பு. சுரமஞ்சரி ஆண் உரு நோக்காமை : சீவக. 907.

(உரை) [1] கண்ணற்று - கண்ணோட்டமில்லாமல். [2] சீவக. 899;

மாறி வைதென மாறிற்று, " திங்களங்கதிர் " (சீவக. 898), "மாற்ற மொன்று " (சீவக. 899) என்னும் கவிகளை நோக்கி. (அ)

14. பொன்றுஞ்சு மார்பன் புனலாட்டிடைப் புன்க ணெய்தி
நின்றெஞ்சு கின்ற ஞமலிக்கமிர் தீந்த வாறும்
அன்றைப் பகலே குணமாலையை யச்சு றுத்த
வென்றிக் களிற்றை விரிதாரவன் வென்ற வாறும்.

அச்சம் : விகாரம். வென்றிக்களிறு - [1] முன்பு வெற்றியையுடைய களிறு. விரி தார் - மார்பின் விசேடத்தால் உலகு புகழ்ந்த தார்.

(இ - ள்.) திருத்தங்கு மார்பன் புனலாட்டிலே உயிர்போகின்ற ஞமலிக்குத் தானும் வருந்திப்பார்த்துநின்று [2] பஞ்சநமஸ்காரமாகிய மந்திரத்தைக் கொடுத்தபடியும். அவன் அறஞ்செய்த அப்பகலே களிற்றை வென்றபடியு மென்க. (க)

15. தேனூறு தீஞ்சொற் குணமாலையைச் சேர்ந்த வாறும்
கோனூறு செய்வான் கருதிச்சிறை கொண்ட வாறும்
வானூ றிழிந்து மழைமின்னென வந்தொர் தேவன்
ஊனூ றுளிவே லுரவோற்கொண் டெழுந்த வாறும்.

செய்வான் : வினையெச்சம். கருதியென்பது கருதவென நின்றது; "உரற்கால் யானை யொடித்துண்டு" (குறுந். 232) என்னுஞ் செய்தெ

---

மழை வள்ளலென்றது வேண்டுமிடம் வேண்டாத இடம் பாராமல் மேகம் நீரைப் பெய்தலை நோக்கி. [3] சீவக. 900.

14. பொன் - திருமகள். மார்பன் - சீவகன். பொன்றுஞ்சு மார்பு: சீவக. 908, 1332, 1504, 1922; சிலப். 19 : 61; பெருங். 3. 6 : 21. புன்கண் - துன்பம். ஞமலி - நாய். மரணத்தை நீக்குதலின் பஞ்ச நமஸ்காரமந்திரம் அமிர்தமென்னப்பட்டது. அமிர்து : சீவக. 946. அச்சுறுத்த - அச்சத்தை அடைவிக்க.

(மேற்.) அடி, 3 : மாறன். சொல்லணி. 20.

(உரை) [1] "வென்றிசே ரிலங்கை யானை" (கம்ப. சிறப்புப்.) [2] அருகர், சித்தர், ஆசாரியர், உபாத்தியாயர், சாதுக்களென்னும் பஞ்ச பரமேஷ்டிகளை வணங்குதற்குரியனவாகிய ஐந்து மந்திரங்கள்; அவை 'ஓம்ணமோ அரஹந்தாணம், ஓம்ணமோ ஸிந்தாணம், ஓம்ணமோ ஆரியாணம், ஓம்ணமோ உவண்டாயாணம், ஓம்ணமோ ளோயேஸவ்வஸாஹூணம்' என்பன. "மந்திரங் களைந்து மனத்தில்வரச் சொற்றூர்கள், இந்திரர்க்கு மிந்திரரே யெண்" (அருங்கல. 150)

15. ஊறுதல் - இடைவிடாமை (சீவக. 152). கோன் - கட்டியங்காரன்; இச்சொல் காஷ்டாங்காரிகனென்பதன் சிதைவு. கொல்லுதலென்பதனைச் சொல்ல அஞ்சி, 'ஊறு செய்வான்' என்றூர். மழை-மேகம்.

னெச்சம் பிறவினை கொண்டாற்போல. சிறை - [1] அன்னப்பார்ப்பைச் சிறை செய்தது. ஒருதேவன் : விகாரம். மழை : அவனூர்தி. [2] ஆசிரியன்கூற்றை உட்கோடலின், உரவோன் அறிவுடையோனாயிற்று.

(இ - ள்.) உரவோன் தேனினது இனிமை இடைவிடாத இனிய சொல்லையுடைய குணமாலையைச் சேர்ந்தபடியும், கட்டியங்காரன் கொல்லுதற்குக் கருத முற்பிறப்பிற் றீவினையாகிய சிறை வந்து அவனைக் கைக்கொண்ட படியும், ஒருதேவன் மழைமேலேறி மின்போல வான்வழியாக வந்திழிந்து அவனைக் கைக்கொண்டு போனபடியுமென்க.

[3] அவனெனச் சுட்டுவருவித்து உரவோனைச் சுட்டாகலுமொன்று. (கo)

16\. தேங்காத மள்ளர் திரடோளிணை சிக்க யாத்த
பூங்கச்சு நீக்கிப் பொறிமாண்கல நல்ல சேர்த்தி
நீங்காத காத லுடையாய்நினைக் கென்று பின்னும்
பாங்காய விஞ்சை பணித்தாங்கு விடுத்த வாறும்.

பூங்கச்சியாத்த கெடாத வீரர், தோளிணையையுடைய வீரர் ; இவை [1] இகழ்ச்சி. கச்சு - சேலையின்மேற் கட்டினது. சிக்க - அகப்படக் கோல; திசைச்சொல். நீக்கி - அச்சிறையை நீக்கி. பின்னும் நினைக்கவென்றது, [2] இடர்வரினென்றதன்றி இன்பமுறுங்காலும் நினைக்கவென்றவாறு.

(இ - ள்.) மள்ளர் சீவகனைச் சிக்க, தேவன் அதனை நீக்கிக் கலத்தைச் சேர்த்தி, 'என்றும் நீங்காத காதலையுடையாய், பின்னும் நினைக்க' என்று தனக்குரிய விஞ்சைகளை அவனுக்கு நிறுத்தி அவ்விடத்துநின்று விடுத்தபடியுமென்க.

இது முற்கூறிய கவியிற் சிறைப்பாவத்தைத் தொடர்புபடுத்தெடுத்து விரியக்கூறிப் பின்பு அவற்குச் செய்த சிறப்புக்களும் கூறிற்று. [3] கட்டில்லாமை பின்னே உணர்க. (கக)

---

(உரை) [1] சீவக. 2851, முதலியன. [2] சீவக. 393. [3] இப்பொருளே சிறப்புடையது.

16\. சிக்க யாத்தல் : வி. பா. வாரணவத. 5 ; சிக்கவென்பது குடநாட்டில் வழங்குகின்றது ; "பொதிந்து சிக்க" (சீவக. 1890). நினைக்கென்று : சீவக. 959.

(உரை) [1] வீரரல்லாதாரை வீரரென்றமையின் இகழ்ச்சியாயிற்று. [2] "துயர்வரி னினைமின் றுயரிலீர் சொல்லினு நன்றாம்" (பெரியதிரு. 1. 1 : 10). [3] தோளிணை சிக்கயாத்த என்ற சொற்கிடக்கையினால் கட்டியதாகப் பொருள்கொள்ள நேருமாதலின் அதனை விலக்கினார்.

17\. பைந்நாகப் பள்ளி மணிவண்ணனிற் பாயல் கொண்டு
கைந்நாகந் துஞ்சுங் கமழ்காந்தளஞ் சாரல் போகி
மைந்நாக வேலி மலிபல்லவ தேய நண்ணிக்
கொய்ந்நாகச் சோலைக் கொடியந்நகர் புக்க வாறும்.

மை - மேகம். கொய்ந்நாகம் - புன்னை. கொடிமாநகரும் பாடம். காந்தள் வடிவிற்கும் [1] நிறத்திற்கும் உவமம்.

(இ - ள்.) நாகப்படுக்கையிலே மாயோன் துயிலுமாறுபோலக் காந்தளைப் படுக்கையாகக்கொண்டு யானைதுயிலும் அழகிய சாரலைப் போய்ப் பல்லவ தேசத்தை நண்ணி அதன் நகரிலே புகுந்தபடியுமென்க. (கஎ)

18\. அத்தம் மனைய களிற்றந்நகர் மன்னன் மங்கை
முத்தம் முரிஞ்சு முகிழ்மென்முலை மின்ன னாளைப்
பைத்தங்கொர் நாகம் பனிமாமதி யென்று தீண்டச்
சித்தங் குழையற் கெனத்தீர்த்தவட் சேர்ந்த வாறும்.

அத்தகிரியென்னும் வடமொழிச்சிதைவு விகாரமாயிற்று; "அத்த மென்னும் பொன்னஞ் சிலம்பு" (பாண்டிக் கோவை) என்றார் பிறரும். அங்கெனக் கதையை யுட்கொண்டு [1] சுட்டினார். குழையற்க: விகாரம்.

(இ - ள்.) களிற்றையுடைய முற்கூறிய நகரின்மன்னன்மகள் முகத்தைப் பொழிலிடத்தே ஒருநாகம் மதியென்று உட்கொண்டு படம்விரித்து அது மறுச்சேர்மதியன்மையின், அவளைக் கையிலே தீண்டுதலாலே சித்தம் வருந்தின [2] உலோகபாலனை வருந்தற்கவென்று கூறி, அச்சொற் கேற்பத் தீர்த்து அவளைச் சேர்ந்தபடியுமென்க. (கஅ)

---

17\. (1-2) "காந்தளஞ் சிலம்பிற் களிறுபடிந் தாங்குப், பாம்பணைப் பள்ளி யமர்ந்தோன்" (பெரும்பாண். 372-3). நாகவேலி - சுரபுன்னையாகிய வேலி. அந்நகரென்றது சந்திராபமென்னும் நகரத்தை (சீவக. 1251)

(உரை) [1] நிறமென்றது வெண்மை நிறத்தை. ஆதிசேடன் வெண்மை நிறத்தினன்.

18\. அத்தகிரியை அத்தமென்றல் வழக்கு (சீவக. 1733). அத்தகிரி களிற்றுக்கு உவமை: சீவக. 2211; வேறு மலையைக் கூறாது அத்தகிரியை உவமை கூறியது, அந்திச் செவ்வானம் சாரப்பெற்ற அம்மலை உத்தம இலக்கணமாகிய செம்புகரையுடைய நல்யானைக்கு ஏற்ற ஒப்பாமெனக் கருதி; 'குடவரை புகருக்குவமை' (சீவக. 980, ந.). மன்னன் மங்கை: பதுமை. பைத்து - படம் விரித்து.

(மேற்.) அடி, 1: மாறன். சொல்லணி. 10.

(உரை) [1] இது நெஞ்சறி சுட்டு. [2] உலோகபாலன்: பதுமையின் சகோதரன்.

19. பொற்பூண் சுமந்த புணர்மென்முலைக் கோடு போழ
நற்பூங் கழலா னிருதிங்க ணயந்த வாறும்
கற்பா டழித்த கனமாமணித் தூண்செய் தோளான்
வெற்பூ டறுத்து விரைவின்னெறிக் கொண்ட வாறும்.

(இ - ள்.) கழலான், பூணுகிய கிம்புரியைச் சுமந்த முலையாகிய கோடு உழாநிற்க, அதனை இரண்டுதிங்கள் விரும்பினபடியும், அவன் காரியத்தின் விரைவாலே மலையை ஊடறுத்து வழிக்கொண்டபடியுமென்க.

உலகத்தின் பெருமையைக் கெடுத்த கனத்த மணித்தூணையொத்த தோளான். (கச)

20. தள்ளாத சும்மை மிகுதக்கநன் ஞடு நண்ணி
விள்ளா விழுச்சீர் வணிகன்மகள் வேற்க ணேக்கம்
உள்ளாவி வாட்ட வுயிரொன்றெத் துறைந்த வாறும்
கள்ளாவி நாறுங் கமழ்கோதையிற் போய வாறும்.

விள்ளா - நீங்கா. உள் - மனம். ஆவி - மணம். இன் : நீக்கம்.

(இ - ள்.) இன்ன ஒலியென நீக்கலாகா ஒலிமிகுகின்ற, தக்கநாட்டைப் பொருந்தி, அவ்விடத்து [1] நகரின் வணிகன்மகள்நோக்கம் மனத் துணின்று உயிரை வருத்துதலால் இருவருயிரும் ஒருயிரையொத்து உறைந்தபடியும், அவளினின்றும் போனபடியுமென்க. (கரு)

21. இன்னீ ரமிர்தன் னவள்கண்ணிணை மாரி கற்பப்
பொன்னூர் கழலான் பொழிமாமழைக் காடு போகி
மின்னீர வெள்வே லவன்மத்திம தேய மன்னன்
கொன்னூர் கொடுவெஞ் சிலைகண்டெதிர் கொண்ட வாறும்.

19. இருதிங்கள் : சீவக. 1359. கற்பாடு - உலக்கல்லினது பெருமையை ; "கற்பா டழித்த புயத்தரக்கன்" (கூர்ம. இராவண. 11); கற்பாடழித்த தோளான் : சீவக. 690.

(மேற்.) அடி. 3 : சிவஞா. பா. 8, அவதாரிகை. அடி, 2-4 : தொல். சூ. வி. பாயிரம். மு : தொல். கிளவி. 37, ந.; தஞ்சை. 96, சொக்க.; இ - வி. பொது. 61.

20. (பி-ம்.) 'தக்கணநாடு'. 'தக்கணமென முப்பத்தைந்தாம் கூட்டெழுத்து ஈறுகெட்டு இரண்டு ககரமாயிற்று' என இப்பாடத்திற்கு விதி எழுதுவர் மயிலைநாதர் (நன். 146). வணிகன் : சுபத்திரன் ; அவன் மகள் கேமசரி ; க்ஷேம சுந்தரி என்பதன் சிதைவு. உயிரொன்றெத்தல் : 'இருதலைப் புள்ளி னேருயி ரம்மே' (அகநா. 12 : 5)

(மேற்.) அடி, 1 : நேமி. உரி. 2 ; நன். உரி. 13, மயிலை. சங்கர. (உரை) [1] கேமமாபுரம்.

'கண்ணிணையும்' என்னும் உம்மை விகாரத்தால் தொக்கது. [1] ஓடின பொன் கிடக்க நெகிழுமாதலின், 'ஊரும்' என்றார். கண்ணும் காடும் மழை பொழியப் போனனென்றதனால், காலம் காராயிற்று. 'மன்னீர வெள்வேல்' எனவும் பாடம். [2] சிலை : ஆகுபெயர்.

(இ - ள்.) கழலான் அமிர்தன்னவள் கண்ணிணைகளும் மாருத நீர் சொரியப் பழகும்படி காட்டிடைப் போகையினாலே, மின்னின் தன்மையை யுடைய வேலவனாகிய [3] தடமித்தன் அச்சம் பரந்த சிலைத்தழும்பைக் கண்டு எதிர்கொண்டபடியுமென்க. (கசு)

22. திண்டேர ரரசர் திறற்சிங்கங்கள் வில்லும் வாளும்
கண்டாங் குவந்து கடிபெய்திவட் காத்து மென்று
கொண்டார் குடங்கை யளவேயுள கண்ணி னாளைப்
புண்டாங் கெரிவே லிளையோற்குப் புணர்த்த வாறும்.

கொண்டார் - [1] ஏற்றார். பகைவர் புண்ணைத் தாங்குதற்குக் காரண மான வேல்; வினைத்தொகை; ஏதுப்பொருள் கருவிக்கண் அடங்கும்; "மற்றிந்நோய் தீரு மருந்து" (கலித். 60) என்றாற்போல. அரசன் றிறலும் பாடம்.

(இ - ள்.) அவன் அரசர்சிங்கங்களினுடைய விற்றொழிலையும் வாட் டொழிலையும் கண்டு அப்பொழுதே உவந்து, இவ்விடத்தே இவளைக் காவலிட்டுக் காப்பேமென்று உட்கொண்டு கண்ணினாளை இளையோற்குப் புணர்த்தபடியுமென்க. (கஎ)

23. மதியங் கெடுத்த வயமீனெனத் தம்பி மாழாந்
துதிதற் குரியாள் பணியா லுடனாய வாறும்
நிதியின் னெறியி னவன்றோழர் நிரந்த வாறும்
பதியின் னகன்று பயந்தாளைப் பணிந்த வாறும்.

---

21. அமிர்தன்னவள் - கேமசரி (சீவக. 8, அடிக்.). கண்மாரிகற்ப : "வேன்மலைந்தகண் மாரி கற்ப" (பாகவதம், 10. 17 : 53)

(உரை) [1] ஓடின பொன் - உருக்கிய பொன். [2] சிலைதழும்புக்கு ஆயிற்று (சீவக. 1645). [3] த்ருடமித்திரனென்பதன் சிதைவு.

22. சிங்கங்களென்றது தடமித்தன் புதல்வர் ஐவரையும். குடங்கை அளவே உள கண் : சீவக. 342, 990, 1290, 2006, 2535, 3139. இளை யோன் - சீவகன்.

(உரை) [1] ஏற்றார் - இரப்பவர். இரப்பவரது அகங்கை ஏற்கும் பொழுது அவரது அவாவிற்குத் தக்கபடி பரப்பப்படுதலால் அது பெரிய கண்களுக்கு ஏற்ற உவமையாயிற்று.

(இ - ள்.) [1] நந்தட்டன் திங்களைக் கெடுத்த உரோகிணி என்னும் படி மயங்கி உலகுவிளங்கத் தோற்றினவனுக்குரிய தத்தையேவலாலே அவனைக் கண்டபடியும், பொருள்தேடவேண்டுமென்னும் வழியாலே அவன்தோழர் அவனைத் தேடினபடியும், அவன் விசயையைக் கண்ட படியுமென்க.

வயமீன்களெனத் தோழர் நிரந்தபடியுமென்றுமாம். பதியினின்றும் நீங்கிப் பிள்ளையைப்பெற்றாளெனவே விசயையாம் ; பதி - [2] இராசமாபுரமு மாம் ; ஏமமாபுரமுமாம். (கஅ)

24. கண்வா ளறுக்குங் கமழ்தாரவன் றாயொ டெண்ணி
விண்வா ளறுக்கு நகர்வீதி புகுந்த வாறும்
மண்மேல் விளக்காய் வரத்திற்பிறந் தாளொர் கன்னிப்
பெண்ணா ரமிர்தின் பெருவாரியுட் பட்ட வாறும்.

மாலையைக்கண்ட கண் பிறிதொன்றிற்செல்லாமையின், கண் வாளறுக்கு மென்றார். விண் - தேவருலகு. மண்ணுக்கு : உருபுமயக்கம். [1] கன்னிப்பெண்ணாரமிர்தின்பெருவாரி பலசொற்றொகையாயினும், [2] " கற் சுனைக் குவளையிதழ் " போல இருசொற்றொகையாய் நின்றது.

(இ - ள்.) தாரவன் விசயையுடனேயெண்ணி இராசமாபுரத்திற் றெருவிலே புகுந்தபடியும், வரத்தோடே பிறந்தாளொரு கன்னிப்பெண் ணாகிய அமிர்தினது போகக்கடலிலே அகப்பட்ட படியுமென்க. (கக)

25. துஞ்சா மணிப்பூட் சுரமஞ்சரி யென்னு நாமத்
தஞ்சாயல் பூத்த வகிலார்துகி லாய்பொ னல்குல்
எஞ்சாத வின்பக் கொடிதாழ்த்ததும் பன்றி யெய்து
நஞ்சூறு வேலான் பகைநாமறக் கொன்ற வாறும்.

23. மதியங் கெடுத்த...மாழாந்து : சீவக. 1215, 1695 ; " வான்மதி யிழந்த மீனினம் போலப், பொலிவின் றாகி...விலாவித்தன்று " (பெருங். 1. 47 : 260 - 63). தம்பி - சீவகன் தம்பி ; கந்துக்கடன் புதல்வன்.

(மேற்.) மு : யா - வி. ஒழிபு. 2.

(உரை) [1] நந்தாட்டயனென்பதன் சிதைவு. [2] இராசமாபுரமாயின் அகலுதலை விசயையின் தொழிலாகவும், ஏமமாபுரமாயின் சீவகன் தொழிலாகவும் கொள்க.

24. கன்னிப்பெண் : விமலை.

(மேற்.) அடி, 3 - 4 : கல். ' திங்கண் முடி ', 15, மயில்.

(உரை) [1] கன்னிப்பெண்ணாரமிர்தென்னும் தொடர் ஒரு சொற் போலவும் பெருவாரியென்னும் தொடர் ஒரு சொற்போலவும் நின்று பொருள்தருதலின் இருசொற்றொகையாய் நின்றதென்றார். [2] ' கற்சுனைக் குவளையிதழ் ' என்பதில் கற்சுனையென்னும் தொடரும் குவளையிதழ் என்பதும் அங்ஙனம் அமைந்தன ; தொல். எச்ச. 24, இளம்., ந. மேற்.

துகிலையும் மேகலையையும் உடைத்தாகிய அல்குலையுடைய கொடி; இன்பமாகிய கொடி. [1]பொன் : ஆகுபெயர். கொடியென்றலானும் [2]விரதத்தை நீங்குதலானும் தாழ்த்ததென்றார். நாம் - அச்சம்; நாமமா யின் விகாரமாம்.

(இ - ள்.) வேலான் ஒளிமாறாத மணிப்பூணினையும் நாமத்தினையும் சாயலினையும் பூத்த கொடியை வளைத்தபடியும், [3]பன்றியையெய்து பகையைக் கொன்றபடியுமென்க. (உ௦)

26\. புண்டோய்த் தெடுத்த பொருவேலெனச் சேந்து நீண்ட
கண்போன்ற மாமன் மகள்கண்மணிப் பாவை யன்ன
பெண்பா லமிர்தி னலம்பெற்றதும் பொற்பச் செங்கோல்
தண்பான் மதிதோய் குடைதண்ணிழற் பாய வாறும்.

[1] தன் மாமனுடைய மகள், அவன் கண்போன்ற மகள், அவன் தேவி [2]புதவியுடைய வேலெனச் சேந்துநீண்ட கண்மணியிற் பாவையன்ன பெண்; "உண்கண், மணிவாழ் பாவை" (நற். 184) என்றார் பிறரும்.

(இ - ள்.) அவளிடத்து அமிர்தையொத்த இனிய நலத்தைப் பெற்றபடியும், செங்கோல் பொலிவுபெறுநிற்பக் குடை நிழலைப் பரப்பின படியுமென்க.

வேல் படும்பொழுதே புண்ணும் உடனே நிகழ்தலிற் புண்டோய்த் தென்றார். தோய் : உவமவாசகம். குடை : எழுவாய். குடைத்தண் ணிழலும் பாடம். (உக)

---

25\. பன்றி - திரிபன்றி; 'அசுரமாவது வில்லேற்றினுதல் திரி பன்றி யெய்தாறுதல் கோடற்குரியனெனக் கூறிய வழி அது செய்தாற்குக் கொடுத்தல்' (தொல். களவு. 1, இளம்.)

(உரை) [1]பொன்னென்றது மேகலையை. [2]ஆடவரைக் காணினும் அவர் பெயரைக் கேட்பினும் உண்ணேனென்று சுரமஞ்சரி பூண்ட விரதம் (சீவக. 902). [3]சீவக. 2177, 2200.

26\. மாமன் - கோவிந்தன்; அவன் மனைவி புதவி; அவர் மகள் இலக்கணை. கண்மணி...பெண் : வி. பா. இராசசூய : 13. பாயவாறும் : 'நாடுபாயிற்று' (பெருங். 4 : 2)

(மேற்.) அடி, 2 : சிலப். 16 : 15 - 7, அடியார்.

(உரை) [1]மாமன் மகளென்பதற்கு மாமன்மனைவியென்று பொருள் கொண்டார் அடியார்க்கு நல்லார் (சிலப். 16 : 17); "விஞ்சை யன் மகள் வடிவாகி", "மனக்கினி யாற்குநீ மகளாய தூஉம்" (மணி. பதி. 70, 21 : 30) எனப் பிறவிடத்தும் மகளென்பது மனைவியென்னும் பொருளில் வருதல்காண்க. [2]பிருதிவி சுந்தரி யென்பதன் சிதைவு.

27. திறைமன்ன ருய்ப்பத் திருநிற்பச்செங் கோன டப்பக்
குறைவின்றிக் கொற்ற முயரத்தெவ் வர்தேர் பணிய
உறைகின்ற காலத் தறங்கேட்டுரு முற்ற பாம்பின்
அறிவன் னடிக்கீ ழரசஞ்சித் துறந்த வாறும்.

உய்ப்ப - செலுத்த. நிற்ப - கெடாது நிற்ப. குறைவின்றி : [1] மத்திம தீபம்.

(இ - ள்.) உய்ப்ப, நிற்ப, நடப்ப, உயரும்படி தேர்பணிய வீற்றிருக்கின்ற காலத்தே அறத்தைக்கேட்டு, உருமேற்றின் ஓசைகேட்ட பாம்புபோல 'அரசாட்சியை அஞ்சி அறிவனடிக்கண்ணே துறந்தபடியு மென்க.

இவனது துறவு கூறவே [2] எல்லார் துறவும் உணர்த்தியதாயிற்று.

(உஉ)

28. கோணைக் களிற்றுக் கொடித்தேரிவு ளிக்க டல்சூழ்
வாண்மொய்த்த தானை யவன்றம்பியுந் தோழன் மாரும்
பூண்மொய்த்த பொம்மன் முலையாரும் புலந்து றப்ப
வீணைக் கிழவன் விருந்தார்கதிச் சென்ற வாறும்.

கோணை : ஐ, அசை.

(இ - ள்.) மாறுபாட்டினையுடைய களிறுமுதலியவற்றைச் சூழ்ந்த காலாளையுடையவனுடைய தம்பியும் தோழர்நால்வரும் தேவியரெண்மரும் இந்நிலத்தை விட்டுச் சுவர்க்கம்பெற, தான் வீடுபெற்றபடியுமென்க.

---

27. மன்னர் திறையை உய்ப்ப. சீவகன் அரசாட்சிக்கு மிக அஞ்சியதை 2891-ஆம் பாட்டால் உணரலாகும். அறிவன் - ஸ்ரீவர்த்தமானர் ; அடி - அவர் கோயிலாகிய சமவசரணம் ; துறந்து தவஞ் செய்தற்குரிய இடம் அது; இப்படியே, "வீரன் முணிழல் விளங்க நோற்றபின்" (409) என்பர் பின்னும். சமவசரணத்தின் இயல்பை, 3000-ஆம் பாடலின் அடிக்குறிப்பால் அறியலாகும். மூப்பு வருமுன்பே துறத்தல் மரபாதலின், உய்ப்ப நடப்ப உயரப் பணிய உறைகின்ற காலத்தே அறங்கேட்டுச் சீவகன் துறந்தான் ; "காமஞ் சான்ற" (தொல். கற்பு, 51), "நரைவரு மென்றெண்ணி", "மூப்புமேல் வாராமை முன்னே" (நாலடி. 11, 326) என வருபவற்றையும் புறநானூறு, 219-ஆம் செய்யுளின் விசேட வுரையையும் காண்க.

(உரை) [1] மத்திமதீபம் : ஓரணி. [2] எல்லாருமென்றது தம்பியையும் தோழரையும் தேவியர் எண்மரையும் (சீவக. 28)

28. இவுளிக்கடல் : "துரகமாக் கடல்கொள் காவலன்" (கம்ப. அவதார. 22). வீணைக்கிழவன் : சீவக. 411, 1002, 1021, 2598. விருந்தார் கதி - புதுமை பொருந்திய வீடு (சீவக. 376, 381)

(மேற்.) அடி, 1 : கல். 'குங்கும', 22, மயில்

இவனையொழிந்தோர்க்கு வீடுபெற நல்வினையின்று. "தென்புல மருங்கின் விண்டு நிறைய" (மதுரைக். 202) என்றாற் போலப் புலம் நிலமாம். "ஏசு பெண்ணொழித் திந்தி ரர்களாய்த், தூய ஞானமாய்த் துறக்க மெய்தினர்" (சீவக. 3121) என்று தேவியரை முற்கூறி, "இவருந், திருவின் றேற்றம்போற் றேவ ராயினர்" (சீவக. 3134) என்று பிற்கூறுவாராதலான், மூலயாரும் தம்பியும் தோழன்மாருமெனல் வேண்டுமாயினும், [1] ஆண்பால் சிறப்புடைமையின் முற்கூறினர். [2] பாட்டுக் காமத்தை விளைத்தலின் அதிற்பற்றற்று விரைய வீடுபெற்றமை தோன்ற, 'வீணைக்கிழவன் விருந்தார்கதிச் சென்றவாறும்' என்றார். (உஅ)

29\. தேன்வா யுமிழ்ந்த வமிர் துண்டவன் போன்று செல்வன்
வான்வாய் வணக்கு நலத்தார்மூலைப் போகம் வேண்டான்
ஏனோரு மேத்த வவனெய்திய வின்ப வெள்ளம்
ஈனோர்க் குரைப்பாம் பதிகத்து ளியன்ற வாறே.

உமிழ்ந்தவமிர்து, "நிலம்பூத்த மரம்" (கலித். 27) போல நின்றது.

(இ-ள்.) அழியாத செல்வத்தையுடையவன் தேனை உமிழ்தற்குக் காரணமாகிய அமிர்தத்தையுண்டவனையொத்து, வானிடத்து மகளிரை அழகால் வணக்கும் நலத்தாருடைய போகத்தைவேண்டானாய், எல்லாரு மேத்த அவன் அவ்வீட்டிலே [1] கேவலமடந்தையை நுகர்ந்த பேரின்பத் தையும் [2] பதிகத்தில் நடந்த நெறியே இவ்வுலகிலுள்ளோர்க்கு உரைப்பா மென்றாரென்க.

---

(உரை) [1] 'அறிவு முதலாயவற்றான் ஆண்மகன் சிறந்தமையின் ஆடூஉவறிசொல் முற்கூறப்பட்டது' (தொல். கிளவி. 2, சே.) என்பதை ஒப்பு நோக்குக. [2] பாட்டுக் காமத்தை விளைத்தல்: "கிளை நரம் பிசையுங் கூத்துங் கேழ்த்தெழுந் தீன்ற காம, விளைபயன்" (சீவக. 2598); 'இசை நாடகம் காமத்தை விளைத்தலின்', 'இசையுங் கூத்தும் காமத் திற்கு உத்தீபனமாகலின்' (சீவக. 411, 2597, ந.); 'பாட்டுக் காமத்தை விளைவித்தலின் யாழை வாசித்து வீழ்துணை தழீஇ என்றார்' (மதுரைக். 559-61, ந.); 'காமம் மிகுதற் பொருட்டு அவற்கு யாழிசையை ஆர்த்து மளவில்' (பரி. 20 : 55-8, உரை); "ஊடு கின்றனர் கொழுநரை யுருகினர் நோக்கப், பாடு கின்றன கின்னர மிதுனங்கள்" (கம்ப. சித்திர 12)

29\. நலத்தார் - தேவியர் எண்மர். ஏனோர் : ஏனையோரென்பதன் விகாரம்; "ஏனோன் போல்" (கலித். 26) என்பதன் உரையிற் காண்க. ஈனோர் : சிலப். பதி. 53, 23 : 176; மணி. 28 : 132; சூளா. மந்திரச். 78.

(உரை) [1] கேவலமடந்தை - முத்தியாகிய மகள் (சீவக. 3117). [2] பதிகம் - பிரதீகமென்பதன் சிதைவு (பிரயோக. 3, உரை); "பதிகக் கிளவி பல்வகைப் பொருளைத், தொகுதி யாகச் சொல்லுத லானே" (நன். மேற்.)

இன்பவெள்ளத்தையுமென்று உம்மையும் உருபும் விரித்து, "கல்லார் மணி" (சீவக. 9) என்னும் கவிமுதலியவற்றின் உம்மைகளுக்கும் இரண்டாவது விரித்து உரைப்பாமென்பதனொடு முடிக்க.

முற்கூறிய வீட்டை உட்கொண்டு கூறி அதிற் பயனும் கொண்டு கூறினார். (உகூ)

# க — நாமகளிலம்பகம்

## நாட்டுவளம்

30. நாவீற் றிருந்த புலமாமக ளோடு நன்பொற்
பூவீற் றிருந்த திருமாமகள் புல்ல நாளும்
பாவீற் றிருந்த கலைபாரறச் சென்ற கேள்விக்
கோவீற் றிருந்த குடிநாட்டணி கூற லுற்றேன்.

(இ - ள்.) பாவிலே வீற்றிருந்த கலைகள் [1] தட்டற நடந்த கேள்விக்கோ, தன்னை நாமகளோடு திருமகள் [2] வெறுப்பின்றி நாடோறும் புல்லும்படி, தான் வீற்றிருத்தற்குக் காரணமான நாட்டழகைக் கூறுத லுற்றேனென்றாரென்க.

[3] 'கேள்விக்கோ' எனவே, கல்வியும் செல்வமும் பெற்றனவேனும், அவை நாடோறும் புதியனவாக நிகழ்கின்றமை தோன்றப் பின்னும் 'புல்ல' என்றார்.

இனி, அவர்கள் நாட்டிலே புல்ல என்றுமாம். (க)

---

30. வீற்றிருந்த - கவலையின்றியிருந்த; "வீற்றிருந் தவருங் கற்றார்" (சீவக. 1676); 'வருத்தமின்றி யிருந்த' என்பர் இவ்வுரையாசிரியர் (முருகு. 70); வேறொருவர்க்கு இல்லாத பெருமையோடிருந்த வெனலு மாம் (மலைபடு. 68. ந.). புலம் - அறிவு. பார் - தட்டு; " பாரறு நோன்பு " (கந்த. பாயிரம், 62)

(மேற்.) அடி, 1-2; தொல். வேற்றுமை. 12, ந; நன். பெயர். 40, மயிலை, சங்கர.; இ - வி. பெயர். 42.

(உரை) [1] தட்டு - தடை. [2] " நாவின் கிழத்தி யுறைதலாற் சேராளே, பூவின் கிழத்தி புலந்து" (நாலடி. 252) என்பதை நினைந்து இங்ஙனம் எழுதினார். [3] கேள்வி யென்பதனாற் கல்வியும், கோவென்பதனாற் செல்வ மும் பெறப்பட்டன.

31. காய்மாண்ட தெங்கின் பழம்வீழக் கமுகி னெற்றிப்
பூமாண்ட தீந்தேன் றொடைகீறி வருக்கை போழ்ந்து
தேமாங் கனிசி தறிவாழைப் பழங்கள் சிந்தும்
ஏமாங் கதமென் றிசையாற்றிசை போய துண்டே.

'வீழ' என்னுமெச்சம் காரணகாரியப்பொருட்கண் இறந்தகால முணர்த்திற்று. ஒழிந்த எச்சம் ஈண்டுச் [1]செய்வதன்றொழின்மேலன. பூமாண்ட தீந்தேன்றொடை - பொலிவு மாட்சிமைப்பட்ட தேன்போல இனிய நீரையுடைய [2]தாறு; "தகைசெய் தீஞ்சேற் றின்னீர்ப் பசுங்காய்" (மதுரைக். 400) என்றார் பிறரும். இனித் தேனும் தொடையுமென உம்மை விரித்தலுமாம். வருக்கை : [3]ஆகுபெயர்.

(இ - ள்.) பழம் விழுதலாலே கீறிப் போழ்ந்து சிதறிச் சிந்தும் ஏமாங்கதமென்று பெயர் கூறப்பட்டு, இசையாலே திசையெல்லாம் போய தொரு நாடுண்டென்க.

இனி வீழ அப்பழம் கீறிப் போழ்ந்து சிதறிச் சிந்துமெனச் [4]செய்விப் பதன் தொழிலுமாம் ; [5]"விண்டு" (திருச்சிற். 24) என்பதுபோல. (௨)

வேறு

32. இலங்க லாழியி னன்களிற் றீட்டம்போற்
கலங்கு தெண்டிரை மேய்ந்து கணமழை
பொலங்கொள் கொன்றையி னன்சடை போன்மின்னி
விலங்கல் சேர்ந்துவிண் ணேறிவிட் டார்த்தவே.

31. தெங்கின் பழம் : சீவக. 40, 68. நெற்றி - உச்சி (சீவக. 1198). கமுகின் பழம் உதிர்த்தல் : சீவக. 1198 (1-2); திருச்சிற். 100. வருக்கை - பலா. ஏமாங்கதம் - ஹேமாங்கதமென்னும் வடமொழிச் சிதைவு. இசையால் திசை போயது : "செங்கோற் றென்னவர் காக்கு நாடென, எங்கணும் போகிய விசையோ பெரிதே" (சிலப். 13 : 9-10); "எண்டிசை மருங்கினுந் தன்பெயர் பொறித்த......நகர்" (பெருங். 3. 3 : 115-6)

(மேற்.) அடி, 1 : தொல். குற்றியலுகரப். 78, ந.; இ - வி. உயிரீற் றுப். 31. அடி, 1-3 : கல். 'கண்டகாட்சி', 14-5, மயில். அடி, 4 : நேமி. இடை. 2. மு : தொல். செய். 98, இளம். ; யா - வி. தொடை. 5 ; யா - கா. ஒழிபு. 6.

(உரை) [1]தன்வினை. [2]தாறு - குலை. [3]பலாப்பழத்திற்கு ஆனமை யின் ஆகுபெயர். [4]பிறவினை. [5]'விண்டென்பது பிளந்தென்பது போலச் செய்வதன் தொழிற்கும் செய்விப்பதன் தொழிற்கும் பொது' (திருச்சிற். 24, பேர்.)

32. கணமழை - கூட்டமாகிய மேகம். ஆழியினன் களிற்றீட்டம் : சீவக. 3040.

(மேற்.) அடி, 1-2 : தக்க. 421, உரை.

கலங்கு தெண்டிரை - மறுகுகின்ற தெண்டிரை ; [1] ஆகுபெயர்.

**(இ - ள்.)** கணமழை [2] சக்கரவர்த்தி களிற்றீட்டம்போலே திரையைப் பருகிச் சூல் முதிருமளவும் மலையைச் சேர்ந்து பின்பு விண்ணிலேயேறிச் சடை போல மின்னி வாய்விட்டு ஆர்த்தனவென்க. (ங)

33. தேனி ரைத்துயர் மொய்வரைச் சென்னியின்
மேனி ரைத்து விசும்புற வெள்ளிவெண்
கோனி ரைத்தன போற்கொழுந் தாரைகள்
வானி ரைத்து மணந்து சொரிந்தவே.

**(இ - ள்.)** வான் ஒன்றின்மேலொன்றாக மேல்நிரைத்துத் தம்மிற் கூடித் [1] தேனிறால் நிரைத்துயர்ந்த வரைத்தலையிலே வெள்ளியாற் செய்த வெள்ளிய கோல்களை விசும்புற நிரைத்தாற் போலத் தாரைகளை நிரைத்துச் சொரிந்தனவென்க. (ச)

34. குழவி வெண்மதிக் கோடுழக் கீண்டுதேன்
முழவி னின்றதிர் மொய்வரைச் சென்னியின்
இழியும் வெள்ளரு வித்திரள் யாவையும்
குழுவின் மாடத் துகிற்கொடி போன்றவே.

**(இ - ள்.)** வரைத்தலையினின்றிழியும் வெள்ளருவித்திரள் யாவையும், பிறைக்கோடு உழுதலின் இறால்கிழிந்து வரைத்தலையினின்றிழியும்

---

**(உரை)** [1] அலை நீருக்கு ஆனமையின் ஆகுபெயர். [2] சீவக. 366, உரை; சூரியகுலத்திற் பிறந்த நாபி மஹாராஜாவின் பௌத்திரரும், ஆதிதீர்த்தங்கரரான விருஷபஸ்வாமியின் புத்திரருமாகிய பரதேசுவர சக்கரவர்த்தி ; பரதராச சக்கரவர்த்தி என்றும் கூறப்படுவர் ; இவர் 84-லட்சம் யானைகளை உடையவரென்று மகாபுராணம், ஸ்ரீபுராணம், புருதேவ சம்பு முதலிய நூல்கள் கூறும் ; இவர் பன்னிரண்டு மகா சக்கரவர்த்திகளுள் முதல்வர்.

33. வெள்ளி வெண்கோல் - மிக வெண்மையான கோல். மழைத் தாரைக்கு வெள்ளிக் கோல்கள் : "வான், வெள்ளி வீழிடை வீழ்த்தெனத் தாரைகள்" (கம்ப. ஆற்று. 4). வான் - மேகம்.

(மேற்.) அடி, 3 : கல். 'உழைநின்றீரும்' 15, மயில்.

(உரை) [1] தேனிறால் - தேன்கூடு.

34. குழவிவெண்மதி - பிறைச்சந்திரன். கோடு - நுனி ; "கோடு கூடு மதியம்" (புறநா. 67 : 4). அருவிக்கு முழவு : சீவக. 1193 ; குறுந். 78 : 1-2; சிலப். 25 : 6. அருவித்திரளுக்குத் துகிற்கொடி : பதிற். 47 : 34.

தேன் [1] திரள் யாவையும் திரட்சியையுடைய மாடங்களில் துகிற்கொடியை யொத்தனவென்க.

முழவு போல அதிர்தல் [2] இரண்டிற்குமேற்றுக. " வெண்டுகில் " (பரி. 10 : 80) என்றும், " கோபத் தன்ன தோயாப் பூந்துகில் " (முருகு. 15) என்றுங் கூறலின், [3] துகில் வெண்மை செம்மை இரண்டிற்கும் பொது. (ஙு)

35. இலங்கு நீண்முடி யிந்திரன் மார்பின்மேல்
விலங்கி வீழ்ந்தமுத் தாரமும் போன்றவை
நலங்கொள் பொன்னொடு நன்மணி சிந்தலாற்
கலன்பெய் பேழை கவிழ்த்தவும் போன்றவே.

விலங்கிவீழ்தல் - [1] பிணைத்திட்ட மாலைபோலே வீழ்தல். கவிழ்த்த : [2] தொழிற்பெயர். சிந்துதல் - உள்நிறைதலிற் றெறித்தல்.

(இ - ள்.) அவ்வருவிகள், தாமே விழுகின்ற பொழுது இந்திரன் மார்பின் மேலே வீழ்ந்த முத்துவடத்தையுமொத்து, அவை பொன்னை யும் மணியையுஞ் சிந்துதலின் [3] அவனுபரணப்பெட்டிதான் கவிழ்க்கப் பட்ட ஆபரணங்களையும் ஒத்தனவென்க.

இது நீரிற்குவமை கூறிற்று. (சு)

36. வள்ளற் கைத்தல மாந்தரின் மால்வரைக்
கொள்ளை கொண்ட கொழுநிதிக் குப்பையை
உள்ள மில்லவர்க் கூர்தொறு முய்த்துராய்
வெள்ள நாடும டுத்துவி ரைந்ததே.

---

[1] வெள்ளருவித்திரள் என்பதிலிருந்து திரள் என்னும் சொல் தேனென்பதோடு கூட்டி உரைக்கப்பட்டது. [2] வெள்ளருவித்திரள், தேனருவித்திரள். [3] " துகினூல் ", " கண்கொளாத்துகிலள்ளி யேந்திய " (சீவக. 235, 2685)

35. இந்திரன் சைனர்களால் உயர்ந்த தெய்வமாகக் கொண்டாடப் படுவான் ; சீவக. 1597 ; நாலடி. 346. அருவிக்கு முத்தாரம் உவமை : சிறுபாண். 2-3, அடிக்.

[1] பிணைத்திட்ட - சேர்த்திட்ட. [2] வினையாலணையும் பெயர். [3] " ஆயிரங் கண்ணோ னருங்கலச் செப்பு " (சிலப். 14 : 68)

36. வள்ளல் - வண்மை. வெள்ளத்திற்கு வள்ளல்கள் ; பரி. 16 : 1-4 ; கம்ப. ஆற்று. 4. உள்ளம் - ஊக்கம் ; " ஒளியொருவற் குள்ள வெறுக்கை " (குறள், 971)

உய்த்து - உய்ப்ப. உராய் - பெயர்ந்து.

(இ - ள்.) வெள்ளமானது வண்மையையுடைய கையினைத் தம்மிடத்தே யுடைய நன்மக்களைப்போலே நிதித்திரளை மடிந்திருப்பார்க்கு ஊர்தொறும் கொடுப்பதாக நாட்டிலே [1] முகஞ்செய்து விரைந்ததென்க. (எ)

37. மையல் யானையின் மும்மத மார்ந்துதேன்
ஐய பொன்னசும் பாடிய ளைந்துராய்ச்
செய்ய சந்தனந் தீம்பழ மாதியா
நைய வாரிந டந்தது நன்றரோ.

(இ - ள்.) அவ்வெள்ளம் மூன்றுமதமும் உள்ளேநிறைந்து தேனைப் பூசி வியப்பையுடைய பொன்னசும்பையளைந்து பெயர்ந்து, சந்தனம் பழமென்கின்றவை முதலாகப் பிறவற்றையும் இழந்தேமென்று [1] காடு வருந்தும்படி வாரிப் பெரிதாக நடந்ததென்க.

உண்டு பூசி அளைந்து செருக்கி நாட்டை நோக்கி நடந்ததென்றார்; [2] குறிப்பு. ஐய : [3] உரிச்சொல் ஈறுதிரிந்தது. " நன்று பெரிதாகும் " (தொல். உரி. 45) (அ)

38. வீடில் பட்டினம் வௌவிய வேந்தெனக்
காடு கையரிக் கொண்டுக வர்ந்துபோய்
மோடு கொள்புனன் மூரிநெ டுங்கடல்
நாடு முற்றிய தோவென நண்ணிற்றே.

[1] வீடு : விகாரம்.

(இ - ள்.) புனலானது, குடிநீங்குதலில்லாத பட்டினத்தைக் கொள்ளை கொண்ட வேந்தெனத் திரைகளாகிய கைகளாலே காட்டை யரித்தல் கொண்டு அப்பொருள்களை உள்ளடக்கிக் கொண்டுபோய் கடல் நாட்டை வளைத்ததோ வென்று மக்கள் வருந்தும்படி அந்நாட்டை நண்ணிற்றென்க. (கூ)

(உரை) [1] முகஞ்செய்து - தோற்றஞ்செய்து.

37. பொன் அசும்பு - பொன்னினுடைய துளி.

(மேற்.) அடி, 1 : நன். உரி. 11, மயிலை. அடி, 2 : கல். ' திங்கண் முடி ' 40, மயில்.

[1] நைய என்பதற்கு எழுவாய் வருவிக்கப்பட்டது. [2] உண்ணுதல் முதலிய மனிதர் செய்கைகள் முறையே தொனிக்கின்றமையின் குறிப்பென்றார். [3] தொல். உரி. 87.

38. வீடு - விடுதல். காடு கையரிக்கொண்டு : " வயிற்றினூடு கையரிக்கொண்டு பெய்யுங் கவந்தன் " (கூர்ம. இராமன்வனம். 63). மோடு - பெருமை.

[1] முதனிலை திரிந்த தொழிற்பெயர்.

## வேறு

39. திரைபொரு கனைகடற் செல்வன் சென்னிமேல்
நுரையெனு மாலையை நுகரச் சூட்டுவான்
சரையெனும் பெயருடைத் தடங்கொள் வெம்முலைக்
குரைபுனற் கன்னிகொண் டிழிந்த தென்பவே.

சரையென்னும் பெயரினையும் தடமாகிய விரும்பிய முலையினையு முடைய புனலாகிய கன்னி; தடம் [1] முலைபோற்சுரத்தலின் முலையாம். கொள்கன்னி : வினைத்தொகை. கன்னியென்னும் [2] விசேடிக்கப்படுஞ் சொல்லை நீர் விசேடித்து [3] அஃறிணையாக்குதலின், இழிந்ததென்றார். என்ப : அசை ; இது புறநடையாற் கொள்க (தொல். இடை. 48) ; இவ் விதி மேலுங்கொள்க.

(இ - ள்.) கடலாகிய தன் கணவன் நுகர்தற்கு முற்கூறிய பொருள் களை உள்ளடக்கிக்கொண்ட கன்னி அவனுக்குச் சூட்டுதற்குத் தன் தலை மேல் நுரையாகிய மாலையைக்கொண்டு இழிந்ததென்க. (௩௦)

40. பழங்கொடெங் கிலையெனப் பரந்து பாய்புனல்
வழங்கமுன் னியற்றிய சுதைசெய் வாய்த்தலை
தழங்குரற் பம்பையிற் சாற்றி நாடெலாம்
முழங்குதீம் புனலக முரிய மொய்த்தவே.

39. கடற்செல்வன் - வருணன். சரை - சரயு. க்ஷத்திர சூளாமணி முதலிய வடநூல்களில் 'சரை' என்ற பெயருடைய நதியொன்று ஏமாங் கதத்தில் உண்டென்று கூறப்படவில்லை. (பி - ம்.) 'சரவெனும் பெயரு டைத்'. தடம் - மணற்குன்று. வெம்மை - விருப்பம்.

(மேற்.) அடி, 4 : தொல். இடை. 48, ந.; நன். உரி, 18, மயிலை.; சங்கர. கல். 'கல்லுயர்', 9, மயில்.; இ - வி. இடை. 27.

[1] புறநா. 68 : 8-9 ; கம்ப. ஆற்று. 12. [2] அடைகொளி. [3] சீவக. 105, உரை.

40. தெங்கிலை : புல்லினுள் ஒருசாரனவற்றிற்கு இலை யென்பது வரும் (தொல். மரபு. 87, பேர்.). புனலுக்குத் தென்னையோலை : " ஆறு, பணிவிலாப் பழங்கொ டெங்கி னிலையெனப் பரந்தது" (மேரு. வைச யந்த. 11). சுதை - சுண்ணம்பு. வாய்த்தலை - மதகு ; இஃது இக்காலத்து வாத்தலை என்று வழங்கும். தழங்குரல் : பெருங். 3 : 19 : 197. பம்பை - கரைகாவலரை அழைக்கின்ற பறை ; பரி. 10 : 7, பரிமேல் ; " சிலைக்கும் பம்பை" சீவக. 42.

பழங்கொடெங்கு - காய்த்த தெங்கு. இலை [1] நெருக்கத்திற்கு. இலையெனப் பாய்புனல் பரந்து வழங்கும்படி நீர் [2] வரத்தறிந்து முன்னே படுத்த வாய்த்தலை. [3] தழங்குரல் : விகாரம்.

(இ - ள்.) புனலாலே வாய்க்கால் உட்கரை முரிதலின், நாட்டிலுள்ளாரெல்லாரும் பறையினாலே சாற்றி வாய்த்தலையிலே மொய்த்தார், [4] படலிடுதற் கென்க. (கக)

41. வெலற்கருங் குஞ்சரம் வேட்டம் பட்டெனத்
தலைத்தலை யவர்கதந் தவிர்ப்பத் தாழ்ந்துபோய்க்
குலத்தலை மகளிர்தங் கற்பிற் கோட்டகம்
நிலைப்படா நிறைந்தன பிறவு மென்பவே.

(இ - ள்.) [1] முன்பே வெலற்கருங்குஞ்சரம் பின்பு வேட்டம்பட்டால் அதனைப் [2] பரிக்கோற்காரர் குத்தி விலக்குமாறுபோல வாய்த்தலையிடந் தொறுமிடந்தொறும் நாட்டினுள்ளார் படலிட வாய்க்கால்கள் தணிந்து போதலாலே மகளிர் கற்புப்போலே கோட்டகமும் பிறவும் நிலைப்படா வாய் நிறைந்தனவென்க.

குஞ்சரத்திற்கு வாய்க்கால் [3] உவமிக்கும் பொருள். [4] கோட்டகம் - பயிருடைத்தான நீர்நிலை. பிற - ஏரி முதலியன. (கஉ)

42. கவ்வையுங் கடும்புன லொலியுங் காப்பவர்
செவ்வனா ருயிரஞ் சிலைக்கும் பம்பையும்
எவ்வெலாத் திசைகளு மீண்டிக் காரொடு
பவ்வநின் றியம்புவ தொத்த வென்பவே.

---

(உரை) [1] தென்னையோலையின் மட்டை ஆற்றிற்கும் அதன் ஓலைகள் ஆற்றிலிருந்து பிரியும் மிகப் பலவான வாய்க்கால்களுக்கும் உவமை. [2] வரத்து - வரவு. [3] குலையலங்கு காந்தள், குலையலங்காந்தள் (கலித். 40 : 12) என்றனது போல விகாரப்பட்டது (தொல். புணரியல். 17, ந.) [4] படலிடுதல் - மூங்கில் முள்ளாற் செய்த படலை வெள்ளத்தின் வேகம் தணிதற்பொருட்டு வாய்க்கால் மதகுகளில் இடுதல்.

41. வெள்ளத்திற்கு யானை உவமை; "கடுமான் கிள்ளி, மதில் கொல் யானையிற் கதழ்புநெறி வந்த, சிறையழி புதுப்புனல்" (ஐங். 78 : 1-3). குலமகளிருடைய அடங்கிய கற்பு வேகம் தணிந்த நீருக்கு உவமை.

(மேற்.) அடி, 1 : கல். 'திங்கண்முடி,' 7, மயில்.

(உரை) [1] சீவக. 14, ந. [2] குத்துக்கோற்காரர். [3] உபமேயம். [4] "கோட்டகக் கழனிக்கொள்ளம் பூதூர்" (தே. திருஞா.)

42. கவ்வை - ஒலி. பம்பை : சீவக. 40. என்ப : அசை. மேகத்தோடு கடல் ஒலித்தல் : "கடலெனக் காரென வொலிக்குஞ் சும்மை" (மலைபடு. 483)

செவ்வன் - நேரே.

(இ - ள்.) படலிட்டதினின்றும் குதித்து வழீஇய புனலொலியும், கரைகாப்பாருடைய கவ்வையும், பறையொலியும், எல்லா எல்லாத் திசைகளினும் ஈண்டிக் காரும் கடலும் மாறுமல் முழங்குவதொத்த வென்க. (௪௩)

43. மாமனு மருகனும் போலு மன்பின
காமனுஞ் சாமனுங் கலந்த காட்சிய
பூமனு மரிசிப்புல் லார்ந்த மோட்டின
தாமின மமைந்துதந் தொழிலின் மிக்கவே.

(இ - ள்.) தம் உழவுத்தொழிலிலே மிக்கனவாகிய எருமை முதலியன தாம் அன்பின, காட்சிய, [1] பூ மன்னும் [2] அரிசிப்புல் என்கின்ற வற்றைத் தின்ற வயிற்றினவாய்த் திரளமைந்து நின்றனவென்க.

இதற்கு [3] ஒருசொல் வருவிக்க. ஒன்றுக்கொன்று பிற்படின், வருந்து மென்று அன்புகூறினர். சாமன் - காமன்றம்பி. “ஆவயிற் குறிப்பே யாக்கமொடு வருமே” (தொல். எச்ச. 36) என்றதனுன் [4] ஆக்கம் வருவிக்க. (௪௪)

44. நெறிமருப் பெருமையி னொருத்த னீளினம்
செறிமருப் பேற்றினஞ் சிலம்பப் பண்ணுறீஇப்
பொறிவரி வராலின மிரியப் புக்குடன்
வெறிகமழ் கழனியு ளுழுநர் வெள்ளமே.

சிலம்ப - முழங்க. பொறி - விளக்கம்.

---

(மேற்.) மு : பிரயோக. காரக. 5.

43. காமன் - கண்ணபிரானுக்கு உருக்குமிணியிடமாகத் தோற்றிய பிரத்தியும்னன். சாமன் : இவன் கண்ணபிரானுக்கு ஜாம்பவதியிட மாகத் தோற்றிய சாம்பன்; இவர்களுடைய வரலாறு பிரத்தியும்ந சரித மென்னும் சைனநூலால் தெரிகிறது; காமனும் சாமனும் : சீவக. 1715; கலித். 26 : 3-4; 94 : 34; நாச்சியார். 1 : 1; இராமா. அசுவமேத. 147. மோடு - வயிறு.

(உரை) [1] பூ - குவளை, கழுநீர் முதலியன. [2] மத்தங்காய்ப்புல் : இம்மியெனவும் இது வழங்கப்படும்; சீவக. 495; நாலடி. 94. [3] நின்றன என்னும் சொல். [4] வயிற்றினவாய் என்பதிலுள்ள ஆய் என்பது.

44. நெறி மருப்பு : பதிற். 67 : 15. நெறிமருப்பு எருமை : ஐங். 91 : 1. வெறி - பூக்களின் மணம்.

(மேற்.) அடி, 3 : கல். ‘கண்ட காட்சி’, 54, மயில்.

(இ - ள்.) அங்ஙனநின்ற அறல் பட்ட கொம்பினையுடைய எருமைச் சாதியிற் கடாவாகிய பெரிய திரள், எருத்தினம் என்கின்றவற்றைப் பூட்டி வராலிரிய அவற்றுடனே இழிந்து கழனியிலே உழுவார் [1] வெள்ள மென்னும் எண்ணுடையினுரென்க.

" ஏற்புடைத் தென்ப வெருமைக் கண்ணும் " (தொல். மரபு. 37) என்பதனுல் ' ஒருத்தல் ' என்ருர். (சு௫)

45. சேறமை செறுவினுட் செந்நெல் வான்முளை
வீறொடு விளைகெனத் தொழுது வித்துவார்
நாறிது பதமெனப் பறித்து நாட்செய்வார்
கூறிய கடைசியர் குழாங்கொண் டேகுவார்.

(இ - ள்.) அங்ஙனம் உழுவார், நிலமகளைத்தொழுது சேறு சமைந்த செய்யிலே முளையை விளைகவென்று வித்துவார், இந்நாற்றுச் செவ்வியென்று பறித்து அதிலே [1] நாட்கொண்டுவைப்பார், முன்னை நாளே எமக்கென்று கூறிவைத்த கடைசியர் திரளைக்கொண்டு ஏகுவாராயினுரென்க.

இத்துணைநிலத்திற்கு இத்துணைக் கடைசியரென்று கூறியவென்று மாம். (சுசு)

46. முலைத்தடஞ் சேதகம் பொறிப்ப மற்றவர்
குலைத்துடன் பதித்தலிற் குதித்த வாட்கயல்
புலத்திடைக் கவரிகன் றூட்டப் போந்தபால்
நிலத்திடைப் பாய்ந்தவை பிறழு நீரவே.

---

(உரை) [1] தொல். புள்ளிமயங்கு. 98.

45. செறு - வயல். வான்முளையென்ருர், நெல்லின்வித்தை முன்னமே ஊறவைத்து விதைத்தலின். வீறு - வேறொன்றற்கில்லாத அழகு. தொழுது - இந்திரனை வணங்கி யெனலுமாம்; " தெய்வநெறி யிந்திரன் முதற்பரவல் செய்து, கைவரு படைத்தொழிலுடன்களமர் சென்ருர் " (குற்ருலப். திருநாட்டுச். 3). நென்முளையைக் கடைசியர் தொழுது வித்துதல் : " கழனியிற் செந்நெல் வியப்பொடும் வாழ்கென வித்தும்............கடைசியர் " (கூர்ம. சூரியன்மரபு. 40). பதம் - காலம்.

(உரை) [1] நாட்கொண்டு - முகூர்த்தங்கொண்டு.

46. தடம் - உயர்ந்த இடம். சேதகம் - சேறு. கடைசியர் சேறு தெறிப்ப நடுதல் : சிலப். 10 : 127 - 30. சேறுதெறிப்பதற்குக் காரணம் கடைசியர் களித்து ஒருவர்மேல் ஒருவர் சேற்றை இறைத்துக் கொள்ளுதல். கவரி கன்று ஊட்டப்போந்த பால் : " கன்றினைக் கவரி யூட்டிக் கழிந்தபால் " (தணிகைப். வள்ளி. 74). இச்செய்யுள் திணைமயக்கங் கூறியது. இதனுல் மருதநிலமும் குறிஞ்சிநிலமும் கலந்தமை கூறப் பட்டது.

மற்று : வினைமாற்று. [1] குறிஞ்சி நிலத்தே கவரி தன்கன்றை யூட்டுதலான் அதற்கு மிக்குச் சொரிந்த பால்மறைத்த நிலத்திடை யென்க. "கவரியுங் கராமு நிகரவற் றுள்ளே" (தொல். மரபு. 17) என்றதனால், 'கன்று' என்றார்.

(இ - ள்.) அக்கடைசியர் முலைப்பரப்பிலே சேறுதெறிப்ப முடியைக் குலைத்து எல்லாரும் நடுதலின் வெருவி, நடாத இடத்தே குதித்த கயல் அவர் நெருங்குதலிற் பானிலத்திடத்தே பாய்ந்து அவை அதிலே கிடந்து பிறழுநீர அந்நிலமென்க. (கஎ)

47. பாற்சுவை யறிந்தவை பழனத் தாமரை
மேற்செலப் பாய்தலின் வெரீஇய வண்டினம்
கோற்றொடி நுளைச்சியர் முத்தங் கோப்பவர்
ஏற்றிய மாலைத்தே னிரியப் பாய்ந்தவே.

(இ - ள்.) அக்கயல்கள் உண்டு பாற்சுவையை அறிந்து நீரன்மை யின் தாமரைமேலே செல்லப் பாய்தலின், அதற்கு வெருவியெழுந்த வண்டினம் நுளைச்சியர் முத்தைக் கோப்பவர் சூடின மாலையில் தேனினம் கெடும்படி பாய்ந்தன வென்க.

'பாற்சுவை தெரிந்தன' எனவும் பாடம். (கஅ)

48. இரிந்ததேன் குவளையி னெற்றி தைவர
முரிந்துபோ தவிழ்ந்துகொங் குயிர்க்கு முல்லையின்
அரும்புசேர்ந் தணிஞிமி றார்ப்ப வாய்பதம்
விருந்தெதிர் கொண்மெனத் தழுவி வீழ்ந்தவே.

---

(உரை) [1] கவரி குறிஞ்சிநிலக் கருப்பொருளாதலின் புலமென் பதற்குக் குறிஞ்சி நிலமென்றார் ; "கவிர்ததை சிலம்பிற் றுஞ்சுங் கவரி" (பதிற். 11 : 21)

47. அவை - கயல்மீன்கள். பழனம் - வயல். கோற்றொடி - திரண்ட வளைகள் ; சீவக. 209 ; கோலம் கோலெனக் கடைக்குறையாகி வந்த தென்பர் மயிலைநாதர் (நன். பெயர். 12). நுளைச்சியர் - நெய்தல் நிலத்து மகளிர். இச்செய்யுளால் மருதநிலமும் நெய்தல்நிலமும் கலந்தமை கூறப்பட்டது.

48. நெற்றி - உச்சி ; சீவக. 31. முரிந்து - கெட்டு. போது - மலரும் பருவத்து அரும்பு. கொங்கு - தேன். ஞிமிறு - மிஞிறு என்ப தன் போலியென்பர் ; "மிஞிற்றீட்டங்காள்" (சீவக. 892). இச் செய்யுளால் முல்லைநிலமும் நெய்தல் நிலமும் மருத நிலமும் கலந்தமை கூறப்பட்டது.

(மேற்.) அடி ; 2 : நன். பொது. 5, மயிலை.

**(இ - ள்.)** முல்லையின் அரும்பு போதாயவிழ்ந்து தேனைச் சொரியப் படுங்குவளையின் நெற்றியிலே முன்பு இரிந்த தேனினம் சேர்தலாலே, அதிலிருந்த ஞிமிறுகள் முரிந்து ஆர்ப்ப, அத்தேனினம் இவ்வழகிய உணவை நுமக்கு விருந்திடுகின்றேம் ; இதனை ஏற்றுக்கொண்மினென்று கூறிநுற்போல அவற்றைத் தைவர, அஞ்ஞிமிறுகள் அத்தேனினத்தைத் தழுவி அதிலே வீழ்ந்தனவென்க.

கொண்மின் : [1] விகாரம். இவற்ருல் [2] நிலமயக்கங்கூறிஞர். (கஅ)

49. வளமுடி நடுபவர் வரம்பில் கம்பலை
இளமழை முழக்கென மஞ்ஞை யேங்கலின்
அளமரு குயிலின மழுங்கிப் பூம்பொழில்
உளமெலி மகளிரி னொடுங்கு மென்பவே.

**(இ - ள்.)** நடுபவர்கம்பலையைக் [1] கார்செய்யத் தொடங்கின மழை முழக்கென்று உட்கொண்டு மயில் ஆரவாரித்தலின், அக்கம்பலையை மழையென்று அலமருகின்ற குயிலினம் உண்மையென்று வருந்திப் பிரிந்த மகளிரைப் போலே பொழிலிலே குவிந்திருக்குமென்க. (உ௦)

50. வளைக்கையாற் கடைசியர் மட்டு வாக்கலிற்
றிளைத்தவர் பருகிய தேற றேங்குழிக்
களிப்பவுண் டிளவனங் கன்னி நாரையைத்
திளைத்தலிற் பெடைமயி றெருட்டுஞ் செம்மற்றே.

(உரை) [1] தொகுத்தல் விகாரம். [2] ஐந்திணைகளும் ஒன்ருே டொன்று கலத்தல்.

**49.** கம்பலை - குரவையின் ஆரவாரம். அளமருதல் = அலமருதல் - சுழலுதல் ; எதுகைக்கேற்ப ஒற்றுமைபற்றி வடநூல் நியாயத்தால் லகரத்திற்கு ளகரம் போலியாக வந்தது ; சீவக. 841 ; "அளமரு பொறிபோல்" (திருவிளை. நாடு. 18)

**(மேற்.)** அடி, 3 : இ. கொ. ஒழிபு. 17. அடி, 3 - 4 : நன். பொது. 5, மயிலை ; பிரயோக. சமாச. 2.

(உரை) [1] அகநா. 4 : 6.

**50.** கடைசியர் - மருதநிலத்து மகளிர். திளைத்தவர் - இடைவிடாது பயின்ற மள்ளர் ; திளைத்தல் : சீவக. 189. 519 ; வி - பா. 13 : 167. **(பி - ம்.)** 'திளைப்பவர் பருகிய தேற றேத்துழி.' கன்னி நாரை - இளைய நாரை. (2-3), "சலஞ்சலம்............அன்னம் பெடையெனத் தழுவி" (சீவக. 2103). பெடை : எழுவாய். தெருட்டும் - தெளியச் செய்யும்.

**(மேற்.)** அடி, 2 : சிலப். 5 : 198 - 9. அடியார்.

[1] மீண்டும் நடவுத்தொழின் முதலாகக்கூறுகின்றுர்.

(இ - ள்.) கடைசியர் கையாலே மதுவை வார்த்தலின், தொழிலிலே இடைவிடாது பயின்றவர் உண்ட தேறல் மிக்குச்செறிந்த இடத்தே, காமவின்பம் அறிந்த அன்னம் அதனையுண்டு காமவின்பநுகர்ந்தறியாத நாரையைப் புணர்தலின், அதனைக்கண்டு மயிற்பெடை தன்மயிலைத் தெருட்டுந்தலைமைத் தென்க.

[2] "திளையா வருமருவி" (திருச்சிற். 294) என்றுர் பிறரும். பெடையென்றும் மயிலென்றும் பிரிக்க. நீர் கள்ளுண்டு இதுபோல் மயங்கன்மினென்று தெருட்டிற்று. இனி மயிலைக்கண்டாற் கள்ளின் களிப்புத் தீருமென்றலின், [3] அது தெருட்டிற்றென்றுமாம். (உக)

51. கண்ணெனக் குவளையுங் கட்ட லோம்பினர்
வண்ணவாண் முகமென மரையி னுள்புகார்
பண்ணெழுத் தியல்படப் பரப்பி யிட்டனர்
தண்வய லுழவர்தந் தன்மை யின்னதே.

குவளையும் : உம்மை, சிறப்பும்மை. ஓம்பினுர் : வினையெச்சமுற்று. உள்புகார் : தொழிற்பெயர்.

(இ - ள்.) காதன்மகளிர் முகமென்று உட்கொண்டு தாமரையாகிய களையின் அருகுசெல்லாதவர் அவர்கள் கண்ணென்று உட்கொண்டு சூடுதற்குப் பறிக்குங் குவளையையும் களைபறித்தலைப் பரிகரித்துப் பண்ணை எழுத்தின் வடிவுதோன்றப் பாடினுர் ; உழவர் தன்மை இப்படி யிருந்த தென்க.

தாமரையை, "கடவுளொண்பூ வடைத லோம்பி" (பெரும்பாண்.290) எனக் கூறுதலானும் அவர் பறியாராயிற்று. 'மரையினுள்' என்னும்

(உரை) [1] 45-ஆம் பாடலில் நடவுத்தொழில் கூறப்பட்டது. [2] 'திளைத்தல் - ஈண்டு இடைவிடாது அவ்விடத்தோடு பயிறல்' (திருச்சிற். 294, பேர்) [3] அது பெடைமயில்.

51. கட்டல் - களைபறித்தல். மரை - தாமரை ; முதற்குறை. பண் - நிறைந்த நரம்புகளையுடைய இராகம் ; "நிறைநரம் பிற்றே பண்ணெனலாகும்" (திவாகரம்) ஏழு சுரங்களையுமுடைய இராகமென்றபடி ; இது வடமொழியில் ஸம்பூர்ணராகமென்றும் ஜனகராகமென்றும் கூறப்படும் ; எழுபத்திரண்டு மேளகர்த்தாக்களில் உள்ளவையெல்லாம் ஸம்பூர்ண ராகங்களே ; குறைந்த நரம்பையுடைய இராகம் திறம் எனப்படும்; "குறைநரம் பிற்றே திறமெனப் படுமே" (திவாகரம்). இவற்றின் விகற்பமெல்லாம் இசைநூல் வல்லார்வாய்க் கேட்டுணர்க. பண்ணென்றது மருதப்பண்ணை. களைபறிப்போர் இங்கே ஆடவரென்று தெரிகின்றது ; "கண்கைகான் முகம்வா யொக்குங் களையலாற்களையி லாமை......... மள்ளர் களைகலா துலாவி நிற்பார்" (கம்ப. நாடு. 10)

(மேற்.) அடி. 3-4 : கல். 'புயற்கார்', 24, மயில்.

உம்மையில்சொல், [1] எஞ்சுபொருட்கிளவியான செஞ்சொலன்மையுணர்க (தொல். இடை. 36). முகமும் கண்ணும் [2] காதன்மையைத் தோற்றுவித்தலின், அதற்கேற்பப் பாடிஞரென்க. (உஉ)

52. நித்திலப் பந்துட னீன்று பாதிரி
ஒத்தபூ வுடற்றிய நாவி ஞகிஞற்
றத்துநீர் நாரைமே லெறியத் தண்கடற்
பைத்தெழு திரையெனப் பறவை யாலுமே.

நித்திலப்பந்து [1] உவமத்தொகையின் வந்த ஆகுபெயர்; [2] "கந்தருவ வழக்கம்" (இறை. 1) என்றாற்போல. ஈன்று உடையவென்க.

(இ - ள்.) தத்துநீர், முத்துப்பந்துபோலுஞ் சினையைச் சேரவீன்று தனது நாவிற்கு ஒத்த பாதிரியினது பூவைக்கெடுத்த நாவினையுடைய நத்தையாலே நாரைமேலே எறிய, அப்பறவை திரையென மெல்லவெழுந்து ஆலுமென்க.

இது வேண்டினவளவிலே நீர்பாய்கின்றமை கூறிற்று. (உங)

53. சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் றோற்றம்போல்
மெல்லவே கருவிருந் தின்று மேலலார்
செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்தநூற்
கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே.

சொல் - நெல். அரு - [1] சூலுண்டென்று சொல்வதற்கரிய. மெல்ல - ஒழுக. தேர்ந்த-மெய்ப்பொருளை ஆராய்ந்த. [2] "தாறுபடுநெல்" என்றாற் போல, 'காய்த்த' என்றார்.

---

(உரை) [1] எச்சவும்மையால் தழுவப்படும் சொல்லான உம்மையில்லாத சொல். [2] காதன்மை - காதலின்தன்மை.

52. நித்திலப்பந்து - முத்துப்பந்து; இங்கே அதனைப்போன்ற நத்தையின் முட்டைக்கு ஆயிற்று. உடற்றிய - அழித்த. பைத்து - விரிந்து. பறவையென்றது நாரையை. ஆலும் - ஒலிக்கும்.

(உரை) [1] சீவக. 79, உரை. [2] கந்தருவ வழக்கத்தோடு ஒக்கும் வழக்கம்.

53. சொல் : எழுவாய். சூற்பசும் பாம்பு : "சினைப்பசும் பாம்பின் சூன்முதிர்ப் பன்ன" (குறுந். 35 : 2). காய்த்த - விளைந்தன; "காய்த்த நெல்லிற் கழனி யூரன்" (ஐங். 4). நெல் இறைஞ்சிக் காய்த்தல் : பெருங். 1. 48 : 159.

(மேற்.) அடி, 1 : இ. கொ. வினை, 22. அடி, 4 : நன். பொது. 59, மயிலை; சங்கர.; இ - வி. அணி. 22. அடி, 3-4 : நன். பொது. 59, மயிலை மு. நன். பொது. 4, மயிலை; சங்கர.

(உரை.) [1] "எய்யா விளஞ்சூல்" (பொருந. 6). [2] தாறு - குலை.

(இ - ள்.) நெல்லானவை கருத்தங்கி ஈன்று குடிப்பிறவாதார் செல்வமே போல் தலையை நேரே நிறுத்திக் கல்விசேர் மாந்தரைப்போல மிகவும் வளைந்து விளைந்தனவென்க. (உச)

54. மீன்கணி னளவும்வெற் றிடங்க ளின்மையாற்
றேன்கணக் கரும்பியல் காடுஞ் செந்நெலின்
வான்புகழ் களிறுமாய் கழனி யாக்கமும்
ஊன்கணுர்க் குரைப்பரி தொல்லென் சும்மைத்தே.

(இ - ள்.) மீனினது கண்ணளவும் பாழ்நிலமின்மையான் மக்கட்குப் புகழ்தலரிதாய் வானிலுள்ளார் புகழ்கின்ற கழனியில் [1] தேனிருலினது திரட்சியையுடைய கரும்புவளர்ந்த காடும் யானைநின்ருல் மறையுஞ் செந் நெல்லினது முதிர்ச்சியும் ஒல்லென்கின்ற ஓசையையுடைத்தாயிற்றென்க.

[2] முன் விளைவுகூறி, இதனுல் [3] முற்றினபடி கூறினுர். மீன்கண் மிகவும் உருட்சியுடைமையின், இடங்குறித்தல் அரிது (உரு)

55. ஆய்பிழி விருத்துவண் டயிற்றி யுண்டுதேன்
வாய்பொழி குவளைகள் சூடி மள்ளர்கள்
தேய்பிறை யிரும்புதம் வலக்கை சேர்த்தினுர்
ஆய்செநெ லகன்றகா டரிகுற் ருர்களே.

(இ - ள்.) உழவர்கள் பிழியை வண்டை யூட்டிப் பின்பு தாமுமுண்டு குவளையைச் சூடிப் பிறைபோலும் அரிவாளைத் தம் கையிலே எடுத்தார்; எடுத்துச் செந்நெற்காட்டை அரியலுற்ருரென்க.

---

54. மீன்கணின் அளவும் : இதுபோலவே “ கயற்கணினளவும் ” (சீவக. 1393) எனப் பின்னும் சிறுமைக்கு மீன்கண்ணை உவமையாகக் கூறுவர். கரும்பியல்காடு : “ கரும்பலாற் காடொன்றில்லாக் கழனி ” (சீவக. 2902) ; “ கரும்பல்லது காடறியாப், பெருந்தண்பணை ” (புறநா. 16 : 15-6). நெல் களிற்றை மறைத்தல் : சீவக. 1617 ; மதுரைக். 247. மாய்த்தல் - மறைத்தல். ஊன்கணுர் - மனிதர் ; மணி. 21 : 128.

(உரை) [1] சீவக. 712, 1936. [2] சீவக. 53. [3] ‘ ஒல்லென் சும்மைத்து ’ என்றதனுல் முற்றினபடி கூறப்பட்டது.

55. பிழி - கள். விருத்துவண்டு - விருந்தாக வந்த வண்டு. தேய் பிறை இரும்பு - தேய்ந்த பிறையைப்போன்று வளைந்த அரிவாளை ; “ கொடும்பிறை வடிவிற் செய்த கூனிரும் பங்கை வாங்கி ” (திருவிளை. நாடு. 27). வலக்கை சேர்த்தியது மங்கலக் குறிப்பு. செந்நெற்காடு : “ செந்நெற்காடேறிச் சங்கீனும் ” (தே. திருஞா.)

குவளையை ஈண்டுக்[1] களிப்பாற் பறித்துச் சூடினர். காடு பெருமை கூறிற்று. எறிகுற்றுரும் பாடம். விருத்துவண்டு, "வன்றொடர் மொழியும்" (தொல். குற்றியலுகரப். 9) என்னும் சூத்திரத்தில், வல்லெழுத்திடைமிகும் என்றது, 'ஒற்று' என்ற மிகுதியான், இயல்புகணத்துக் கண்ணும் மெல்லொற்றுத் திரிந்தது. (உசு)

56. வலியுடைக் கைகளான் மலர்ந்த தாமரை
மெலிவெய்தக் குவளைகள் வாடக் கம்பலம்
பொலிவெய்தப் பூம்பொய்கை சிலம்பிப் பார்ப்பெழ
மலைபட வரிந்துகூன் குயங்கை மாற்றினர்.

கம்பலம் : [1] உரிச்சொற்றிரிவு. 'பொய்கை பார்ப்பெழ' என [2] இடத்து நிகழ்பொருளின்றொழில் இடத்தின்மேனின்றது. பட : உவமவுருபு.

(இ - ள்.) அந்நெல்லை அரிதற்குத் தக்க வலியுடைக்கைகளாலே வருந்த வாடக் கம்பலை பொலிவெய்துதலாற் பார்ப்புமுட்பட ஆரவாரித்தெழ அரிந்திட்டு வளைந்த அரிவாளை மாற்றினரென்க.

[3] முன் களைபறியாதவற்றை ஈண்டுக் களிப்பினால் அரிந்தார். (உஎ)

57. வாளையி னினந்தலை யிரிய வண்டலர்
தாளுடைத் தாமரை கிழிய வண்சுமை
கோளுடை யிளையவர் குழாங்கொண் டேகலிற்
பாளைவாய் கமுகினம் பழங்கள் சிந்துமே.

தலை - இடம். வண்டு அலர் - வண்டுதுகைத்து அலர்ந்த. பாளைவாய் கமுகு - மடற்கமுகு.

(இ - ள்.) தொழிற் [1] கோட்பாட்டையுடைய இளையவர்குழாம், இரியக் கிழியச் சூட்டைச் சுமந்துபோதலின், அதுபட்டுக் கமுகினம் பழத்தைச்சிந்து மென்க. (உஅ)

---

(உரை) [1] "கண்ணெனக் குவளையுங் கட்ட லோம்பினர்" (சீவக. 51) என்றமையால் இங்கே பறித்தற்குக் காரணங் கூறினர்; இது, "தாமரை மெலிவெய்த" (56) என்பதற்கும் ஒக்கும்.

56. கம்பலம் - கம்பலை; "ஏங்கு கம்பலத்தின்னிசை" (சீவக. 1197). சிலம்பி - முழங்கி. பார்ப்பு - பறவைக்குஞ்சு. மலை : இங்கே அரிந்து குவிக்கப்பட்ட நெற்சூட்டிற்கு உவமை. கூன்குயம் - வளைந்த அரிவாள்.

(உரை) [1] கம்பலை : கம்பலம் என வந்தது : [2] எழுதல் பார்ப்பின் தொழில் ; அது பொய்கையின்மேல் நின்றது. [3] சீவக. 51.

57. வண்டு அலர் - வண்டின் பாட்டிற்கு அலர்ந்த. சுமை - நெற்சூட்டின் சுமை. கமுகு பழம் சிந்துதல் : சீவக. 1198.

(உரை) [1] கோட்பாடு - கொள்கை.

58. சோர்புயன் முகிறலை விலங்கித் தூநில
மார்புகொண் டார்ந்தது நரல வண்சுளை
ஆர்புறு பலாப்பழ மழிந்த நீள்களம்
போர்பினுன் மலிந்துடன் பொலிந்த நீரவே.

புயல் - நீர். விலங்கி : [1] விகாரம் ; விலங்கவென்க. பழம் - களத் திற்கு அடை. நிலத்திற்குக் களம் சினையாம்.

(இ - ள்.) [2] முகிலைத் தலைசென்று தடுக்கும்படி நிலத்தின்மார்பை யெல்லாம் தமக்கு இடமாகக்கொண்டு நிற்கையினுலே அந்நிலம் பொறுக்க மாட்டேனென்று வாய்விடும்படி களங்களெல்லாம் போரால் மிக்குப் பொலிந்த நீரவென்க.

இனி, [3] நிலத்திலே முகிலைவிலக்கிப் பழையகூடுகள் நிறைதல் கொள்கையாலே அங்ஙனம் அவைநிறைந்த நிலம் இப்பொழுது இடு கின்ற போரைப் பொறேனென்று வாய்விடும்படியென்றுமாம் ; ஆர்பு கொண்டெனவே [4] கூடுகள்பெற்றும். (உகூ)

59. ஈடுசால் போர்பழித் தெருமைப் போத்தினுல்
மாடுறத் தெழித்துவை களைந்து காலுறீஇச்
சேடுறக் கூப்பிய செந்நெற் குப்பைகள்
கோடுயர் கொழும்பொனின் குன்ற மொத்தவே.

---

58. சோர்புயல் - சொரிகின்ற நீரையுடைய ; புயல் - நீர் ; " புயலன் றலர்சடை யேற்றவன் " (திருச்சிற். 240); சீவக. 571, 2476, உரை. ஆர்ந்து அது எனப் பிரிக்க. நரல - முழங்க. ஆர்புறு - நிறையப்பெற்ற. அழிந்த - சிதைந்த. போர்பு - வைக்கோற்போர் ; " மரம்பெறு, போர் பிற் குருகுறங்கும் பூம்புன னீர்நாட, மார்பிற் கிடந்த மறு " (தொல். புறத். 5, ந. மேற்.); புறநா. 371 : 14, 373 : 25 ; இது போர்வெனவும் வழங்கும் ; ஐங். 9 : 4, 58 : 1.

(மேற்.) அடி, 1 : கல். 'புயற்கார்', 1, மயில்.

(உரை) [1] விலங்கவென்பது விலங்கியென்று ஆயிற்று. [2] இப் பொருளுக்கு நிலம் மார்பு கொண்டென்று பிரிக்க. [3] இப்பொருளுக்கு நிலம் ஆர்பு கொண்டென்று பிரிக்க. [4] கூடுகளென்னும் எழுவாய் அவாய் நிலையால் வருவிக்கப்பட்டது.

59. எருமைப்போத்து - எருமைக்கடா. காலுறீஇ - காற்றிற் பொருந்தச்செய்து ; தூற்றி என்றபடி. சேடு - பெருமை. பொன்னின் குன்றம் - மேருமலை ; பெரும்பாண். 237-41.

(இ - ள்.) பெருமை நிறைந்தபோரைத் தலையைத்தள்ளிப் போத்தி ஞற் பக்கத்தேயுற உரப்பி வைக்கோலைக் களைந்து தூற்றிக் குவித்த [1] பொலிகள் குன்றமொத்தனவென்க.

ஈடு - இடுதலுமாம். "பெற்ற மெருமை புலிமரை புல்வாய், மற் றிவையெல்லாம் போத்தெனப்படுமே" (தொல். மரபு. 41) (௫௦)

60. கரும்புகண் ணுடைப்பவ ராலை தோறெலாம்
விரும்பிவந் தடைந்தவர் பருகி விஞ்சிய
திருந்துசா றடுவுழிப் பிறந்த தீம்புகை
பரந்துவிண் புகுதலிற் பருதி சேந்ததே.

இனிக் கரும்பின் செய்தி கூறுகின்றார்.

(இ - ள்.) கரும்பைச் சாறுகொள்வாருடைய ஆலைதோறும் அடைந்து வந்தவரெல்லாம் பருகி மிக்க சாற்றைப் பாகுசெலுத்துமிடத் துப் பிறந்த புகை விண்ணிலே பரந்து சேறலிற் பருதி சிவந்ததென்க.

எல்லாமென்பது இருதிணைக்கும் பொது. பருகுதலிற் றிருந்திற்று.

இனி, இங்ஙனம் [1] ஒருக்கின பண்டங்களைக் கொண்டுபோகின்றமை கூறுகின்றார். (௫௧)

61. கிணைநிலைப் பொருநர்தஞ் செல்லல் கீழ்ப்படப்
பணைநிலை யாய்செநெற் பகரும் பண்டியும்
கணைநிலைக் கரும்பினிற் கவரும் பண்டியும்
மணநிலை மலர்பெய்து மறுகும் பண்டியும்.

இதுமுதல் மூன்றுகவியுமொருதொடர்.

உழவர் கிணைப்பொருநரது மிடிதீரக் கொடுத்து மிக்க நெல்லை

---

(உரை) [1] பொலி - நெற்குவியல்.

60. கண் - கணு. கருப்பஞ்சாற்றை வந்தவர்க்கு அளித்தல்: "விசய மடூஉம் புகைசூ ழாலைதொறும், கரும்பின் றீஞ்சாறு விரும்பினிர் மிசைமின்" (பெரும்பாண். 261-2). அடுவுழி - காய்ச்சுமிடத்து.

(உரை) [1] ஒரிடத்திற் கூட்டின.

61. கிணைநிலைப் பொருநர் - கிணைநிலையையுடைய பொருநர்; கிணைநிலை - வேளாளரைக் கிணை கொட்டுவோன் புகழ்ந்து பாடுவது; கிணை - தடாரிப்பறை. பொருநர் ஏர்க்களம் பாடுவோர், போர்க்களம் பாடுவோர், பரணி பாடுவோரென முப்பகுதியினராவர். இங்கே கூறிய பொருநர் ஏர்க்களம் பாடுவோர் (சிலப். 10 : 138-9)

விற்றற்குக் காரணமான பண்டியும், கரும்பினின்றும் [1] பாகுமுதலியன கொண்டுபோம் பண்டியும், மலர்பெய்துபோம் பண்டியுமென்க. பண்ணை : [2] விகாரம். நிலை - நிலைபெறுதல். (௬௨)

62. மல்லலந் தெங்கிள நீர்பெய் பண்டியும்
மெல்லிலைப் பண்டியுங் கமுகின் மேதகு
பல்பழுக் காய்க்குலை பெய்த பண்டியும்
ஒல்குதீம் பண்டம்பெய் தொழுகும் பண்டியும்.

இளநீர் பெய்த பண்டியும், வெற்றிலை பெய்த பண்டியும், பழுக்காய் பெய்த பண்டியும், குழைந்த இனிய பழம்பெய்து இடைவிடாதுபோம் பண்டியுமென்க. மெல்லிலை : வினைத்தொகை. (௬௩)

63. கருங்கடல் வளந்தரக் கரையும் பண்டியும்
நெருங்குபு முதிரையி·னிறைந்த பண்டியும்
பெருங்கலிப் பண்டிகள் பிறவுஞ் செற்றுபு
திருந்தியெத் திசைகளுஞ் செறிந்த வென்பவே.

கடல்வளமாவன : [1] "ஓர்க்கோலை சங்க மொளிர்பவளம் வெண் முத்த, நீர்ப்படு முப்பினோ டைந்து." நெருங்குபு : நிகழ்காலமுணர்த்தும். பிறவும் : [2] உம்மை மாறுக. 'செற்றுபு' என்னுமெச்சம், 'ஒலியை யுடைய' என்னும் விரியொடு கூடும்.

(இ - ள்.) முற்கூறிய பண்டிகளும், வளத்தை நகர்க்குத் தருதற்கு முழங்கும் பண்டியும், நெருங்கி முதிரையானிறைந்த பண்டியும், ஒழிந்த பண்டங்கள் செற்றி ஒலியையுடைய பண்டிகளும் திருந்தி எத்திசைகளும் செறிந்தன வென்க.

நகர்க்கரையும் பாடமாயின், கரைதல் திசைச்சொல்லாய்க் கொண்டு போமென்னும் பொருள் பயக்கும். (௬௪)

---

செல்லல் - துன்பம். பணைநிலை ஆய்செந்நெல் - வயலில் நிலைத்த அழகிய செந்நெல். பகர்தல் - விற்றல். பண்டி - வண்டி. கணைநிலை - திரண்ட நிலையையுடைய. கவரும் - விரும்பிக்கொள்ளும். மலர் பெய்த பண்டி : கம்ப. நாட்டுப். 22.

(உரை) [1] பாகு - தேம்பாகு. [2] பணை என்றனது.

62. மல்லல் - வளம். மெல்லிலை - மெல்லுதற்குரிய வெற்றிலை. பழுக்காய் - பாக்கு. பண்டம் - பழம்; திசைச் சொல்.

63. நெருங்குபு - நெருங்கி. முதிரை - அவரை துவரை முதலியன (பதிற். 55 : 7, உரை). செற்றுபு - நெருங்கி.

(மேற்.) அடி, 3 : கல். 'திங்கண்முடி', 13, மயில்.

(உரை) [1] ஓர்க்கோலை - கடலில் தோன்றும் ஒருவகைப் பொருள். [2] உம்மையைப் பண்டிகளென்பதனோடு கூட்டுக.

64. கிளிவளர் பூமரு தணிந்து கேடிலா
வளவயல் வைகலு மின்ன தென்பதேன்
துளியொடு மதுத்துளி யருத சோலைசூழ்
ஒளியமை யிருக்கையூ ருரைக்க நின்றவே.

கேடு : "[1] விட்டில் கிளிநால்வாய் வேற்றரசு தன்னரசு, நட்டம் பெரும்பெயல்கா லெட்டு." என்ப : அசை. தேன் - [2] வைத்ததேன். மது - பூவின்மது.

(இ - ள்.) மருதணியப்பட்டுக் கேடில்லாத வயல் நாடோறும் இத் தன்மைத்து ; இனி, யான் கூறுதற்கு நின்றன, குடியிருப்பையுடைய நாட்டிலூர்களென்க. (௬௫)

(வேறு)

65. சேவலன்னந்தாமரையின்றோடவிழ்ந்தசெவ்விப்பூக்
காவிற்கூடெடுக்கியகவ்விக்கொண்டிருந்தன
தாவில்பொன்விளக்கமாத்தண்குயின்முழவமாத்
தூவிமஞ்ஞைநன்மணம்புகுத்துந்தும்பிக்கொம்பரோ.

எடுக்கிய - எடுத்தற்கு. தா - வலி. தூவி - சூட்டு. மணம் - பூவின் மணமும் கலியாணமும்.

---

64. கிளிவளர் மருது : கிளி மருதமரத்தில் இருத்தற்குரிய தென்பர் ; "கிளி மருதமர் சேக்கைய மருதம்" (பெரிய. திருக்குறிப். 10). கேடு : "மிக்கபெய லோடுபெய லின்மையெலி விட்டில்கிளி, அக்கணர சண்மையோ டாறு." இவற்றை வடநூலார் ஈதிகளென்ப (குறள், 732, பரிமேல்.). வைகலும் - நாள்தோறும். என்ப : அசை. தேனும் மதுவும் : சீவக. 872.

(மேற்.) அடி, 2-3 : மாறன். பொருளணி. 26.

(உரை) [1] பு. வெ. 205, மேற். [2] தேனீக்களால் பூவிலிருந்து கொண்டுபோய்க் கூட்டில் வைக்கப்பட்டது.

65. தோடு - இதழ். செவ்விப்பூ - அழகு குலைதலில்லாத பூ. கூடு எடுக்கிய - கூடு எடுத்தற் பொருட்டு. தாவில் பொன் - வன்மையில்லாத பொன். குயிலோசைக்கு முழவம் : சீவக. 2691. "இரங்கு குயில் முழவா" (யா - வி. 76. மேற்.). தூவிமஞ்ஞை : "மாயிருந் தூவி மயி லலங் கடையே" (தொல். மரபு. 48). தாமரைமலரும் குயிலோசையும் இளவேனிற்குரியன.

(மு.) "தும்பிவாய் துளைக்கப் பட்ட கீசகம் வாயுத் தன்னால்
வம்பவாங் குழலி னோங்க மணியறை யரங்க மாக
உம்பர்வான் மேக சால மொலிமுழாக் கருவி யாக
நம்பதேன் பாடமஞ்ஞை நாடக நவில்வ காணாய்" (சூளா. சீயவதை. 194)

(மேற்.) அடி, 2 : கல். 'வற்றிய', 17-20, மயில். அடி, 4 : கல். 'சலியா', 46-8, 'பொடித்தரும்', 15-7, மயில்.

(இ - ள்.) தும்பியையுடைய கொம்புகள், சேவலாகிய அன்னம் பூவைக்கவ்வியிருந்தன; [1] அவ்வன்னம் விளக்காகக் குயில் முழவமாக மயிலை மணத்தே புகுத்திவிடுமென்க.

தாமரையானும் குயிலோசையானும் இளவேனிலென்றுகருதி, மயில் பூம் [2] பொதும்பரின்மறைதலிற் கொம்பு புகுத்தும் என்றார்; பேடும் தோகை மயிலும் சேரவிருந்தனவென்க.

இனி, மயில் அன்னம்விளக்காகக் குயில்முழவமாகத் தும்பியைக் கொம்பிடத்தே மணம்புகுத்துமென்றுமாம்; கொம்பிலுலாவுமயில், விளக்காலும் முழவாலும் அக்கொம்பினின்றும் போந்து ஆடுதலின், அக் கொம்பிற் பூவின் மணத்தே தும்பியைப் புகுதவிட்டதாயிற்று. [3] மெல்லிய ஓசையன்மையின், குயிலோசையை முழவமாகக் கருதிற்று. இதற்கு [4] இக்கருத்து நிகழ்தல், "ஆடமைக் குயின்ற" (82) என்னும் அகப் பாட்டிற் காண்க. (௬௫)

66. கூடினார்கணம்மலர்க்குவளையங்குழியிடை
வாடுவள்ளைமேலெலாம்வாளையேறப்பாய்வன
பாடுசால்கயிற்றிற்பாய்ந்துபல்கலனொலிப்பப்போந்
தாடுகூத்தியாடல்போன்றநாரைகாண்பவொத்தவே.

(இ - ள்.) கண்போலும் செவ்விமலரையுடைய குவளையோடையில் நீர் தாழ்தலிற் சிறிது வாடின வள்ளை மேலேசெல்ல வாளைமீன்களெல்லாம் பாய்கின்றவை, [1] கழாயினின்றும் இழிந்து பக்கத்தினமைந்த கயிற்றிலே குதித்துக் கலனொலிப்ப ஆடுங்கூத்தியது கூத்தையொத்தன; கரையிலிருந்த நாரைகள் காண்பனபோன்றனவென்க.

---

(உரை) [1] அன்னம்போன்ற வடிவமுள்ள விளக்கு: "யவனர், ஓதிம விளக்கின்" (பெரும்பாண். 316-7). [2] பொதும்பர் - இளமரக்கா. [3] குயிலின் ஓசை பஞ்சமஸ்வரமென்று கூறப்படுமாதலின் இங்ஙனம் கூறினார்; கார்ப்பருவத்திற் குயிலின் குரல் மெல்லிதாயிராதென்பது பற்றிக் கூறினாரெனினுமாம். [4] இக்கருத்தென்றது ஆடுதலை.

66. கூடினார் - தம் கணவரோடு கூடின மகளிர்; கூடினாருடைய கண் மலருக்கு உவமை: "கழுநீ ராம்பல் கருங்கேழ்க் குவளையொடு, கொழுநகைக் குறும்போது குறிப்பிற் பிரியாப், புணர்ச்சி மகளிர் போகத் துக் கழுமித், துயிற்கண் டிறந்த தோற்றம் போல, நறவுவாய் திறந்து நாண்மதுக் கமழ" (பெருங். 2. 15 : 20-24). கூடினாருடைய கண்களை அர்த்த உன்மீலனம் உடையன வென்பர். வள்ளை - நீரில் தோன்றும் ஒருவகைக் கொடி. வாடு வள்ளை: சீவக. 168; பெருங். 2. 15 : 88-9. பாடு - பக்கம்.

(மு.) "மாநீர் நெடுங்கயத்து வள்ளைக் கொடிமீது......கழைக்கோதையரேய்க்கும்" (நள. சுயம்வர. 148).

(உரை) [1] கழாய் - கூத்து ஆடுதற்கு நாட்டின மூங்கிற்கம்பம்.

குவளைக் குழியில் நாட்டின [2] கழையும் அதிற் படர்ந்தகொடியும் அதிற் பாய்கின்ற மீனும், கழாயும் அதன்கீழிழிந்து ஆடுங்கயிறும் கூத்தியும் போன்றன; வடிவும் தொழிலும் உவமம். காண்ப: அகர வீற்றுப்பலவறிசொல்; [3] தொழிற்பெயராய்நின்றது. (௬எ)

67. காவியன்னகண்ணிஞர்கயந்தலைக்குடைதலின்
ஆவியன்னபூந்துகிலணிந்தவல்குற்பல்கலை
கோவையற்றுதிர்ந்தனகொள்ளுநீரரின்மையின்
வாவியாவும்பொன்னணிந்துவானம்பூத்தவொத்தவே.

(இ - ள்.) மகளிர் கயத்திடத்தே விளையாடுதலிற் பலகலைகள் வடமற்று உதிர்ந்தன; அவற்றை எடுப்பாரின்மையின், வாவிகளெல்லாம் மேகலையை யணிந்து, வானம் மீனைப்பூத்த தன்மையையொத்தன வென்க.

கயந்தலை: [1] விகாரம். பொன்: [2] ஆகுபெயர். மேகலைக்குறுப்பானவை அற்றுவீழ்ந்தன. (௬அ)

68. பாசவல்லிடிப்பவருலக்கைவாழைப்பல்பழம்
ஆசினிவருக்கைமாதடிந்துதேங்கனியுதிர்த்
தூசலாடுபைங்கமுகுதெங்கிஞெண்பழம்பரீஇ
வாசத்தாழைசண்பகத்தின்வான்மலர்கணக்குமே.

---

[2] வள்ளைக்கொடி படருவதற்காக நீரில் மூங்கிலை நாட்டுவர். [3] காணுதலென்னும் பொருளதாய் நின்றது.

67. கயந்தலை - குளம்; "கயந்தலைக் குடைந்தபோது" (திருவிளை. வெள்ளானை. 22); தலை: அசைநிலை; "மரந்தலை" (குறுந். 203 : 2; அகநா. 169 : 1) எனப் பிற இடங்களிலும் இங்ஙனம் அசைநிலையாக வருதல் காண்க. ஆவியன்ன பூந்துகில் - பாலாவியைப் போன்ற, பூத்தொழிலையுடைய ஆடை (சீவக. 873, 1094; பெருங். 1. 36 : 64, 165; 1. 40 : 228). குளத்தில் விழுந்த மணிகளுக்கு விண்மீன்கள் உவமை: பெருங். 2. 5 : 54-6.

(உரை) [1] கயத்தலை எனவரற்பாலது மெலித்தல்விகாரம் பெற்றது. [2] பொன் அதனாற் செய்யப்பட்ட மேகலைக்கு ஆயிற்று.

68. பாசவல் - பச்சை நெல்லை இடித்து உண்டாக்கும் அவல்; இது வாசவல் என்றும் வழங்கும்; சீவக. 1562. பாசவல் இடித்த உலக்கை: குறுந். 238; அகநா. 141; பெருங். 2. 14 : 50; கூர்ம. பிலக்கமுத. 31, சம்புத்தீவு. 56. ஆசினி - ஈரப்பலா. ஊசலாடு பைங்கமுகு - மகளிர் ஊசலாடுதற்குரிய கமுகமரம் (சீவக. 147, 922); "கமுக வார்நெடுங் கனக வூசலிற்" (கம்ப. ஆறுசெல். 22). தெங்கின் ஒண்பழம் பரீஇ: சீவக. 92.

**(இ - ள்.)** உலக்கை வாழைப்பழத்தை உதிர்த்து ஆசினிமுதலிய வற்றை முறித்து அவற்றின் பழங்களையும் உதிர்த்துப் பின்னும் [1] அசை கின்ற கமுகின் பழத்தையும் தெங்கின்பழத்தையும் [2] பரிந்து தாழை மலரையும் சண்பகத்தின் மலரையும் நக்குமென்க.

எனவே ஏனையவும் பயன்றருமென நிலநன்மை கூறினர்.

இத்துணையும் சோலைகளும் அவற்றிற்கு [3] அங்கமான வாவிகளும் கூறினர். (௬௯)

69. மன்றனுறிலஞ்சிமேய்ந்துமாமுலைசுரந்தபால்
நின்றதாரையானிலநனைப்பவேகிநீண்மனைக்
கன்றருத்திமங்கையர்கலந்நிறைபொழிதர
நின்றமேதியாற்பொலிந்தநீரமாடமாலையே.

இலஞ்சி - மடு; [1] ஆகுபெயர். நிறை - சால்; "பீரிவர்பு பரந்த நீரறு நிறைமுதல்" (பதிற். 15) என்றார் பிறரும். மாலை - ஒழுங்கு.

**(இ - ள்.)** மாட வொழுங்குகள், பூவை மேய்தலாற் சுரந்தபால் நிலத்தை நனைக்கும்படி மாறாதுநின்ற தாரையாலே கன்றை நினைத்துப் போய் அதனை அருத்தி மங்கையரெடுத்த கறவைக்கலமும் அதனினின் றும் பால் சொரியும் சாலும் வழியும்படி நின்ற மேதியாலே பொலிந்த தன்மைய வென்க. (௭௦)

70. வெள்ளிப்போழ்விலங்கவைத்தனையவாய்மணித்தலைக்
கொள்பவளங்கோத்தனையகாலகுன்றிச்செங்கண
ஒள்ளகிற்புகைதிரண்டதொக்குமாமணிப்புறுக்
கிள்ளையோடுபாலுணுங்கேடில்பூவைபாடவே.

மா - கருமைநிறம். மணி - அழகு.

---

(உரை) [1] ஊசல் - அசைதல்; "பூங்குழை யூசற் பொறைசால் காதின்" (பொருந. 30). [2] பரிந்து - நமுவச்செய்து. [3] சோலைகளை அடுத்து வாவிகள் இருத்தலின் இங்ஙனம் கூறினர்.

69. மன்றல் - மணம். இலஞ்சி - பொய்கையிலுள்ள கழுநீர் முதலிய பூக்களை; சிறுபாண். 42. பாலால் நிலம் நனைதல்: "கனைகுர னல்லாத்தன் கன்றுள்ளப் பாலால், நனைவது போலுநம் மூர்" (தொல். புறத். 3, ந. மேற்.) கலநிறை பொழிதல்: மணி. 12 : 93. மேதி - எருமை. இது மருத நிலத்திற்குரிய விலங்கு.

(உரை) [1] இலஞ்சி பூவுக்கானமையின் ஆகுபெயர்.

70. போழ் - தகடு. புறுவின் காலுக்குப் பவளத்துண்டுகள்: பெருங். 5. 1 : 66-8. குன்றி - குன்றிமணி. புறுவிற்கு அகிற்புகை: பெருங். 5. 1 : 67-8. பூவை - நாகணவாய்ப்புள்.

(இ - ள்.) அம்மாடத்திலே வெள்ளித்தகட்டை [1] விலங்குதலாக வைத்தன்ன வாயினையும் தலையினையும் அகிற்புகை திரண்டதனையொக்கும் நிறத்தினையுமுடைய புறு, காலவாய்க் கண்ணாவாய்ப் பூவை பாடா நிற்கக் கிள்ளையோடே பாலுண்ணுமென்க.

கொள்ளுதல் - அறுத்துக்கொள்ளுதல். நடுவு பலவரையுண்மையின், 'கோத்தனைய' என்றார். ஒள்ளகில் : ஒண்மை, அகிற்குஅடை. [2] சிலர்பாடப் பிள்ளைகள் பாலுண்டாரென்பதும் தோன்றிற்று. (சக)

71. காடியுண்டபூந்துகில்கழுமவூட்டும்பூம்புகை
மாடமாலைமேனலார்மணிக்குழலின்மூழ்கலிற்
கோடுயர்ந்தகுன்றின்மேற்குழீஇயமஞ்ஞைதஞ்சிற
காடுமஞ்சினுள்விரித்திருந்தவண்ணமன்னரே.

(இ - ள்.) காடியுண்ட துகில் புகையிலே மயங்குதலாலே மாடவொழுங்கின் மேலிருக்கின்ற நல்லாருடைய குழலினூட்டும் புகையிலே அக்குழல் மறைதலின், அவர்கள் மலைமேற்றிரண்ட மயில்கள் தஞ்சிறகை அவ்விடத்து உலாவுமஞ்சினுள்ளே விரித்திருந்த தன்மையையொப்பாரென்க.

காடி - கஞ்சி. [1] சுட்டு வருவிக்க. 'அன்னது' என்ற பாடத்திற்கு மூழ்குதல் வண்ணம் என்னது அன்னதென்க. (சஉ)

72. கண்ணுளார்நுங்காதலரொழிககாமமீங்கென
உண்ணிலாயவேட்கையாலூடிஞரையாடவர்
வண்ணமேகலைகளைப்பற்றவற்றுதிர்ந்தன
எண்ணில்பொன்சுடுநெருப்புக்கமுற்றமொத்தவே.

---

(உரை) [1] விலங்குதலாக - வேறுவேறாக. [2] இவ்வாக்கியம் தொனிப்பொருள்.

71. காடியுண்ட பூந்துகில் : மதுரைக். 721; நெடுநல். 134; அகநா. 387 : 7-8. துகிலுக்குப் புகை யூட்டுதல் : மதுரைக். 554. துகில்காடியுண்ணுதலும் புகை ஊட்டப்பெறுதலும் : பெருங். 1. 54 : 9-11. மகளிர் கூந்தற்குக் கலாபம் : சீவக. 919; சிறுபாண். 14-6, 263-4; மலைபடு. 44. கழும - மயங்க. மாடங்களுக்குக் குன்றும் மகளிருக்கு மயிலும் பூம்புகைக்கு வெள்ளிய மேகமும் உவமைகள். பூம்புகை யென்றாராயினும் அகிற் புகையையே கொள்க; "அகிலெழு கொழும்புகை மஞ்சி னுடவும்......இகலின மலையொடு மாட மென்பவே" (சூளா. நகரச். 6)

(உரை) [1] அக்குழல் என்பதிலுள்ள சுட்டு.

72. கண்ணுள்ளார் காதலர் : குறள், 1123. வண்ணம் - அழகு. பொன்சுடு நெருப்புக்க முற்றம் : மதுரைக். 680-82.

(இ - ள்.) நும்மாற்காதலிக்கப்பட்ட மகளிர் நுங்கண்ணுள்ளார், ஈங்குக் காமத்தையொழிகவென்று கூறி உள்ளே நிலைபெற்ற விருப்பத் தாலே ஊடிப் போகின்றவரைக் கணவர் மேகலைகளைப்பிடிக்க, அவை அற்றுச்சிந்தினவை கிடந்த இடம் மாற்றற்ற பொன்னைச்சுடும் நெருப்புச் சிந்தின முற்றங்களை யொத்தனவென்க.

[1] இமையாது நோக்கலின், இங்ஙனம் ஊடினார். [2] 'ஈங்கு' தன்மையை யுணர்த்துதல், "செலவினும் வரவினும்" (தொல். கிளவி. 28) என்னும் சூத்திரத்திற் கூறினும். பொன்னுக்கும் [3] மணிக்கும் தழலும் கரியுமுவமை. (௭௩)

73. கோட்டிளந்தகர்களுங் கொய்ம்மலரதோன்றிபோற்
சூட்டுடைய சேவலுந்தோணிக் கோழியாதியா
வேட்டவற்றினூறுளார் வெருளிமாந்தர் போர்க்கொளீஇக்
காட்டியார்க்குங் கௌவையுங்கடியுங் கௌவைகௌவையே.

(இ - ள்.) செல்வச் செருக்கினையுடைய மாந்தர், அவற்றினது புண்ணைக் கருதாராய்ப் பின்னும் போரைவிரும்பித் தகர்களையும் சூட்டுடைய தோணியில் வந்த கோழிமுதலாவுள்ள கோழிகளையும் [1] பூழ்முதலிய சேவல்களையும் காட்டிக் [2] கொளுத்தி ஆர்க்குங் கௌவையும் விலக்குங் கௌவையுமே அவ்விடத்திற்கு ஆரவாரமென்க. (௭௪)

74. இறுநுசுப்பினந்நலாரேந்துவள்ளத்தேந்திய
நறவங்கொப்புளித்தலிஞகுபுன்னைபூத்தன
சிறகர்வண்டு செவ்வழிபாடமாடத்தாடெலாம்
இறைகொள்வானின்மீனெனவரம்பைமுலையினிருந்தவே.

---

(மேற்.) அடி, 1 : கல். 'கண்டகாட்சி', 53, மயில்.

(உரை) [1] அவர்கள் இமைத்து நோக்கின் கண்ணில் பிரதிபிம்பம் தோன்றுது ; இமையாது நோக்கல் ஊடற்குக் காரணம் ; குறள், 1320. [2] ஈங்கு தன்மையை உணர்த்துதல் : "யாவையீங் களிப்பன தேவர் கோன்" (மணி. 14 : 48). [3] மணி - நீலமணி.

73. தகர் - ஆட்டுக்கிடாய். சூட்டு - குடுமி ; தோன்றிபோற் சூட்டு டைய சேவல் : சீவக. 120 ; கல். 'பாய்திரை' 27 - 8. கிடாய்ச் சண்டை யும் கோழிச் சண்டையும் : பு. வெ. 348 - 9 ; கம்ப. நாடு. 16; திருவிளை. நகர. 79. தோணிக்கோழி - பிறநாட்டிலிருந்து கப்பலில் வந்தகோழி.

(உரை) [1] பூழ் - குறம்பூழ். பூழ் முதலிய சேவல் என்றதனால் சிவல். கிளி, பூவை என்பனவும் கொள்ளப்படும். [2] கொளுத்தி - பொருத்தி.

74. இறுநுசுப்பு - ஒடிகின்ற இடை. அ - அழகு. வள்ளம் - கிண் ணம். நாகுபுன்னை - இளைய புன்னைமரம். சிறகர் : போலி. செவ்வழி மாலைக்காலத்திற்குரிய பண். வானின் மீன் புன்னையரும்புக்கு உவமை. அரம்பை முலையினிருந்த : பெருங். 4. 11 : 74-5 ; "வாழை, வருமுகி ழேய்க்கு முலை" (யா - வி. 84, மேற்.)

'நாகுபுன்னை' வேற்றுமைத்தொகையாய், "ஒற்றிடையினமிகா மொழியும்" (தொல். குற்றியலுகரப். 7) என்னுஞ்சூத்திரத்தான், ஒற்று அடாது நின்றது; "சொல்லியமரபின்" (தொல். மரபு. 26) என்னுஞ் சூத்திரத்தில், 'சொல்லுங்காலை' என்றதனால், நாகு பெண்மையேயன்றி, இளமையு முணர்த்திற்று; [1] "நாகுமுதிர் நுணவம்" (சிறுபாண். 51) என்றார் பிறரும். இறை - தங்குதல். அரம்பை : [2] ஆகுபெயர்.

(இ - ள்.) நல்லார் மணி [3] வட்டிலிலே எடுத்த நறவத்தைக் கொப்புளித்தலிற் [4] புன்னைகள் மாடத்தாடெலாம் வண்டுபாடும்படி மினென்னப்பூத்தன, அவர் [5] கொப்புளித்தலின் வாழை [6] முகை முலைபோலே இருந்தன வென்க. (எ௪)

75. விலக்கில்சாலையாவர்க்கும்வெப்பின்முப்பழச்சுனைத்
தலைத்தணீர்மலரணிந்துசந்தனஞ்செய்பந்தரும்
கொலைத்தலையவேற்கணார்கூத்துமன்றியைம்பொறி
நிலத்தலையதுப்பெலாநிறைதுளும்புமூர்களே.

நோயறுத்தற்குக் கடு நெல்லி தான்றி சூழ வளர்ப்பார்கள். தலைய : [1] இரண்டிடத்தும் வினைக்குறிப்பு.

(மேற்.) அடி, 3 : இ - வி. பொது. 18. அடி, 3-4 : நன். பொது. 50, மயிலை; சங்கர.

(உரை) [1] இங்ஙனமே அவ்விடத்தும் எழுதினர் இவ்வுரையாசிரியர். [2] அரும்புக்கு ஆனமையின் ஆகுபெயர். [3] வட்டில் - கிண்ணம். [4] புன்னையும் வாழையும் மகளிரால் மலரும் மரங்களின் வகையைச் சார்ந்தவை. [5] கொப்புளித்தலென்பதை வாழையோடுங் கூட்டினார். [6] முகை - அரும்பு.

75. சாலை-இங்கே அன்ன சத்திரம். முப்பழம் - கடு, நெல்லி, தான்றி என்பவற்றின் பழங்கள்; சீவக. 2856. மலர்மோந்து இன்புறுதற்கும் சந்தனம் பூசி இன்புறுதற்கும் வைக்கப்பட்டன. "முப்பழச் சுனை......பந்தர்" (பெருங். 1. 40 : 126; சூளா. நகரச். 14); "முப்பழம் பொதிந்த வாவி மூவகைத் தலைத்தெண் ணீரைத், தப்பற நறை கொண் டூட்டிச் சந்தனப் பந்த ரீட்டி, வெப்பொழி தரப்பெய் வாரும்" (கழுக்குன்றப். நகர. 17). துப்பு - நுகரப்படும் பொருள். நிறை - நிறைந்து.

(மேற்.) அடி, 1 : சிலப். 'உரைபெறு' 1, அடியார். அடி, 4 : கல். 'அமுதமுந்', 8, மயில்.

(உரை) [1] இரண்டிடமென்றது கொலைத்தலைய, நிலத்தலைய என்பவற்றை.

(இ - ள்.) நாட்டிலூர்கள், யாவர்க்கும் விலங்குதலில்லாத [2] அடிசிற்சாலை முதலியனவும் வெம்மையில்லாத [3] சுனையிற் காலையிலெடுத்த தண்ணீரிலே பூவுமிட்டுச் சந்தனமுமிட்ட தண்ணீர்ப்பந்தரும், கூத்தாடுமிடமு மொழிய ஐம்பொறி நிலத்திடத்தனவாகிய நுகரும்பொருள்களெல்லாம் நிறைந்து ததும்புமென்க.

இவை அரசனறம். (சசு)

76. அடிசில்வைகலாயிரமறப்புறமுமாயிரம்
கொடியனார்செய்கோலமும்வைகலாறுமாயிரம்
மடிவில்கம்மியர்களோடுமங்கலமுமாயிரம்
ஒடிவிலைவெறாயிரமோம்புவாரினேம்பவே.

[1] இல்லையும் வேறாயிரமும் : விகாரம். அறப்புறமென்பதற்கு [2] ஓதுவிக்குஞ்சாலையென்பதும் ஒன்று. ஒடிவு - தவிர்வு; "ஒடியா விழவு" (அகநா. 149) என்றார் பிறரும்.

(இ - ள்.) அவ்வூர்களில் நாடோறும் காணப்பட்ட வைகுதலையுடைய அடிசிற்சாலையும் ஆயிரம்; அறத்திற்குவிட்ட [3] இறையிலிநிலங்களும் ஆயிரம்; மகளிர் கோலஞ்செய்யுமிடமும் ஆயிரம்; தொழிலின்மடியாத கம்மியருமாயிரம்; கலியாணமுமாயிரம்; வெவ்வேறாகிய ஆயிரம் பாதுகாப்பாராற் காத்தலில் தவிர்தலில்லையென்க. (சஎ)

77. நற்றவஞ்செய்வார்க்கிடந்தவஞ்செய்வார்க்குமஃதிடம்
நற்பொருள்செய்வார்க்கிடம்பொருள்செய்வார்க்குமஃதிடம்
வெற்றவின்பம்விழைவிப்பான்விண்ணுவந்துவீழ்ந்தென
மற்றநாடுவட்டமாகவைகுமற்றநாடரோ.

---

[2] அன்ன சத்திரம். [3] சுனை - குளம்.

76. அடிசிற்சாலையும் அறப்புறமும் : மணி. 20 : 6-7. ஆயிரமென்பது பல என்னும் பொருளில் வந்தது; இதனை அனந்தவாசி என்பர்; தக்க. 73, உரை. கொடியனார் - மகளிர். கோலம் - அலங்காரம். மடிவு - சோம்பல். கம்மியர் - தொழில் செய்வோர்.

(உரை) [1] இல்லை இலை என்றும், வேறாயிரம் வெறாயிரம் என்றும் ஆனமை. [2] வித்தியாசாலை. [3] வரியில்லாத நிலம்.

77. நற்றவம் - பிறப்பு அறுதற் பொருட்டுச் செய்யும் தவம். நற்றவமும் தவமும் : "ஆங்கவ னற்றவம் நோக்கி......ஓங்குதவந்தனை நோக்கி வியந்து" (கூர்ம. சூரியன் மரபு. 31). நற்பொருள் - கல்வி. வெற்றம் - வெற்றி; மதுரைக். 73. விண்வந்து வீழ்ந்ததொக்கும் : "பொன்னகர், இந்திர வுலகம்வந் திழிந்த தொக்குமே" (சூளா. நகர. 15). மற்றநாடு வட்டமாக ஏமாங்கதம் இருத்தல்; "பற்பல நகரமெல்லாம் வட்டமாப் படைத்த காஞ்சி" (காஞ்சிப். நகர. 121). நாட்டிற்குரிய நல்லிலக்கணங்கள் : குறள், 731; மணி. 14; 40-42; 26 : 74-6; பெருங். 3. 2 : 41-54.

(இ - ள்.) அவ்வேமாங்கதமென்னுநாடு வெற்றியையுடைய தன தின்பத்தை உலகை விரும்பப்பண்ணுதற்கு விண் மகிழ்ந்துவீழ்ந்த தென்னும்படி தன்னையொழிந்த நாடு தனக்கு எல்லையாக வைகும். அது வீடுபெறத் தவஞ் செய்வார்க்கு இடம்; மறுமைகருதி இல்லறநடத்து வார்க்கும் இடம்; அது நற்பொருளைப்பயக்குங்கல்வியைக் கற்பார்க்கு இடம்; நிலையாத பொருளைத் தேடுவார்க்குமிடமென்க.

[1] உம்மையிரண்டும் இழிவுசிறப்பு. வெற்றம் - வெற்றி. வீழ்ந்த தென : விகாரம்.

"ஊருரைக்க நின்ற" (சீவக. 64) என்ற கவிமுதலாக முடித்த வினைகளைச் சேர்த்து, அவற்றையுடைய நாடு, விண்வீழ்ந்தென வைகும்; அஃது இவை செய்வார்க்கிடமென்க. (எஅ)

## நகர்வளம்

### (வேறு)

78. கண்வலைக் காமுக ரென்னு மாபடுத்
தொண்ணிதித் தசைதழீஇ யுடலம் விட்டிடும்
பெண்வலைப் படாதவர் பீடி ேனாங்கிய
அண்ணலங் கடிநக ரமைதி செப்புவாம்.

(இ - ள்.) கண்ணாகிய வலையாலே காமுகரென்னும் விலங்கை அகப்படுத்தி நிதியாகிய தசையைக் கைக்கொண்டு உடலைக் கைவிடும் பெண்ணினுடைய சூழ்ச்சியில் அகப்படாத முனிவருடைய தவப்பயன் போலே செல்வமோங்கிய இராசமாபுரத்தின் நிறைவு கூறுவாமென்க.

அம் : சாரியை. (எகூ)

79. விண்புகு வியன்சினை மெலியப் பூத்தன
சண்பகத் தணிமலர் குடைந்து தாதுக
வண்சிறைக் குயிலொடு மயில்கண் மாறுகூய்க்
கண்சிறைப் படுநிழற் காவு சூழ்ந்தவே.

(மேற்.) அடி, 1 : குறள், 731, பரிமேல். அடி, 2 : குறள், 739, பரிமேல். அடி, 4 : கல். 'வேற்றுப்பிடி', 26, மயில்.

(உரை) [1] தவஞ்செய்வார்க்கும் பொருள் செய்வார்க்கும் என்பவற் றிலுள்ள உம்மைகள்.

78. மா - விலங்கு. பீடு - பெருமை. அண்ணல் - தலைமை. கடி நகர் - காவலையுடைய இராசமாபுரம்.

79. வியன்சினை - அகன்ற கிளைகள். தாது - மகரந்தப்பொடி. கண் சிறைப்படும் - கண்களைத் தம்மிடத்தே தடுத்துக்கொள்ளும்.

(**இ - ள்.**) குயில்கள், பூத்தனவாகிய சண்பகத்தின் மலரைத் தாதுகக் குடைந்து மயிலோடே மாருகக் கூவி, நோக்கினார் கண்கள் மீளாத நிழலையுடைய கா அந்நகரைச் சூழ்ந்தனவென்க.

மெலிய - வளைய. [1] கார்காலத்து மயிலின் களிப்பைத் தான் உட்கோடலின் 'மாறு' என்றார். மயிலொடெனா மாறுக. செய்தெனெச்ச அடுக்கு, "அம்முக்கிளவியும்" (தொல். வினை. 34) என்னுஞ் சூத்திரத்திற் பிறவினை கொள்ளுமென்றதனுற் பிறவினையாகிய [2] உடையவென்னும் குறிப்பினைக் கொண்டது. [3] இகரவீறு திரிந்தது. இனி [4] மேலிற் கவிக்கும் பொருந்த மயிலை உவமத்தொகைக்கண் வந்த ஆகுபெயரென்று மகளிராக்கி, [5] மகளிர் குயிலொடு மாறுகூவினரென்றுரைப்பதும் ஒருபொருள். இனிச் சண்பகத்தின் தேன் துளித்தலிற் காரென்று மயிலொடு மயிலும், வேனிலாதலிற் குயிலொடு குயிலும் கூவிற்றென்றுமாம்; சிறுபான்மை [6] மயில் கூவிற்றென்றலு மரபு. (௭௦)

80. கைபுனை சாந்தமுங் கடிசெய் மாலையும்
மெய்புனை சுண்ணமும் புகையு மேவிய
நெய்யொடு குங்கும நிறைந்த நாணினுற்
பொய்கைகள் பூம்படாம் போர்த்த போன்றவே.

மேவிய நெய் - பூசின புழுகு. குங்குமம் - குங்குமமும். இவை குளிப்பார் அணிந்தன.

(**இ - ள்.**) சாந்தமுதலியன நிறைந்த பொய்கைகள் நாணத்தாலே பொலிவினையுடைய படாம் போர்த்த தன்மையை ஒத்தனவென்க.

இனிப் பிறர்மாசு பட்டதென்னும் நாணுலே பூவாகிய படாம் போர்த்ததுவுமாம். (௭௧)

81.(க) கடிநலக் கரும்பொடு காய்நெற் கற்றையின்
பிடிநலந் தழீஇவரும் பெருங்கைக் குஞ்சரம்
அடிநிலை யிருப்பெழு வமைந்த கன்மதிட்
புடைநிலை வாரிகள் பொலிந்த சூழ்ந்தவே.

---

(உரை) [1] கார்காலத்து மயில் களிப்படையும். [2] நிழலையுடைய என்பதிலுள்ளது. [3] கூவி கூய் என்றனது. [4] முன் செய்யுள். [5] இறை. 2, உரை. [6] "அலந்த மஞ்ஞை யாமங் கூவ" (பெருங். 1. 54 : 144)

80. கடி - மணம். சுண்ணம் - வாசனைப்பொடி. புகை - அகில் முதலியவற்றின் புகை. நெய் - புழுகு; "நெய்யார் கருங்குழல்" (தஞ்சை. 3). பொய்கை - மானிடராக்காத நீர்நிலை (சீவக. 337, ந.) படாம் - சீலை. பூம்படாம் என்பதற்குப் பொலிவினையுடைய படாம் என்றும், பூவாகிய படாமென்றும் இரண்டு பொருள் கொள்க.

(மேற்.) அடி, 3-4 : தஞ்சை. 3, சொக்க.

81. கடிநலக்கரும்பு - வரைந்து கொள்ளப்பட்ட நன்மையையுடைய கரும்பு. காய்நெற் கற்றை - காய்த்த நெல்லினது தொகுதி (புறநா. 44 : 2,

82.(உ) சலசல மும்மதஞ் சொரியத் தத்தமுட்
கொலைமருப் பிரட்டைகள் குளிப்பப் பாய்ந்திரு
மலைதிளைப் பனவென நாக மான்றபோர்
குலவிய நிலைக்களங் கோல மார்ந்தவே.

இவை யிரண்டும் ஒரு தொடர்.

க. இன்பிடி - கவளம். அடி [1] இளகாது நிற்றலையுடைய கணையம் அமைந்த வாரி.

உ. தம்மிற் போர்செய்வன இரண்டுமலை யென்னும்படி யானைகள் ஓசைபட மும்மதஞ் சொரிதலாலே இரண்டுகொம்பும் தைத்து மறையப் போர்செய்தற்கு வளைத்த நிலைபெற்ற களம்.

(இ - ள்.) சூழ்ந்த கன்மதிலின் உட்புடை நிலையிலே கரும்பு முதலியவற்றின் நலத்தை விரும்பிவரும் குஞ்சரநிற்றலையுடைய கூட்டங் களும் பொலிந்த ; அக்குஞ்சரம் போர்செய்தற்குச் சமைந்த களங்களும் கோலமார்ந்தன வென்க. (௫௩)

83. முத்துடை வெண்மருப் பீர்ந்து மொய்கொளப்
பத்தியிற் குயிற்றிய மருங்கிற் பல்வினைச்
சித்திரக் கிம்புரி வைரஞ் சேர்த்துநர்
ஒத்திய லிடங்களு மொழுங்கு நீண்டவே.

பத்தி மருங்கிலே பலவினைகளைக் குயிற்றிய நல்ல கிம்புரி ; இன் : அசை.

---

184 : 1, 337 : 14). தழீஇ - விரும்பி. பெருங்கைக் குஞ்சரமென்றது தரையிலே தோயும் துதிக்கையை யுடைய யானை என்றபடி. எழு-கணைய மரம் ; இது மதிலின் குறுக்கே கதவிற்குப் பாதுகாவலாகப் போடப் படுவது. மதிற்புடை - மதிலின் பக்கத்தில். வாரிகள்-யானைக்கூடங்கள். மதிலைச்சார யானைக்கூடங்கள் இருத்தல் : சூளா. நகர. 4.

82. சலசல : ஒலிக்குறிப்பின் வந்த இரட்டைக் கிளவி. கொலை மருப்பு - கொலையைச் செய்யும் கொம்பு (சீவக. 2154). நாகம் - யானை. மான்ற - மயங்கிய. குலவிய - வளைந்த. கோலம் ஆர்ந்த - அழகு நிறைந்தன.

(மேற்.) அடி, 1 : நன். பொது. 45, சங்கர. அடி, 1-2 : நன். பொது. 45, மயிலை.

(உரை) [1] இளகாது - தளராது.

83. முத்துடைவெண்மருப்பு : முருகு. 304-5, அடிக். மொய் - வன்மை. சித்திரம் - அழகு. கிம்புரி - யானைக் கொம்பிலிடும் பூண்.

(இ - ள்.) மருப்பை யறுத்துக் கூர்மையிட்டு அது வலிகொள்ளும் படி யிடும் கிம்புரியிலே வைரமிடுவார் தம்மிற் பொருந்தி நடக்குந் தெருவு களும் ஒழுங்கு நீண்டனவென்க.

இனி, கிம்புரிவைரம் - [1] கோளகையுமாம் ; ஆகுபெயர். (அச)

84\. ஓடுதேர்ச் சாரிகை யுகுபொற் பூமியும்
ஆடக மாற்றுந்தார்ப் புரவி வட்டமும்
கேடக வாட்டொழி லிடமுங் கேடிலாக்
கோடுவெஞ் சிலைத்தொழி லிடமுங் கூடின்றே.

ஆடகத்தார் : வேற்றுமைத்தொகை. கோடுசிலை : வினைத்தொகை.

(இ - ள்.) தேரினது கதிவிசேடத்தாலே சிந்தும் பொன்னையுடைய தேரேறுமிடமும், குதிரையேறுமிடமும், கேடகத்தோடு வாட்டொழில் செய்யுமிடமும், பயிற்றுதலிற் கெடுதலில்லாத விற்றொழில் செய்யுமிடமும் கூடிற்றென்க. (அரு)

85\. புடைநகர்த் தொழிலிடங் கடந்து புக்கபின்
இடைநகர்ப் புறம்பணை யியம்பு மோசையோர்
கடலுடைந் ததுவெனக் கலந்த தக்கடல்
மடையடைத் தனையதம் மாக்க ளீட்டமே.

(இ - ள்.) [1] புறப்படைவீட்டில் தொழில்செய்வாரிடத்தை யான் ஒரு வாற்றாற்கூறி இடைநகரினது தன்மைகூறத் தொடங்கின பின்பு, முற் கூறிய புடைநகர்ப்புறமாகிய மருதநிலத்தே சென்றொலிக்கும் இடைநகரி னோசை கடலுடைந்ததென்னும்படி அவ்விடத்தே பொருந்திற்று ; அவ் வோசை பிறத்தற்குக் காரணமாகிய மாக்களீட்டம் அதன் உடைப்பை உலகு குவிந்தடைக்குந் தன்மையையொத்தது ; ஆதலால் என்றாற் கூறுதலரிதென்றாரென்க.

---

(உரை) [1] கோளகை - யானைத்தந்தப்பூண் (சீவக. 645, 2275, ந.) ; "மௌலி யிரண்டு மிருகோட்டுக், கோளகையா கக்கொண்ட கோக் களிறு" (இராசராச. 239)

84\. சாரிகை - ஓட்டத்தால். ஆடகம் - நால்வகைப் பொன்னுள் ஒன்று தார் - கிண்கிணிமாலை. வட்டம் - வட்டமாக ஓடுமிடம் (பெருங். 3. 4 : 21). கோடுதல் - வளைதல். கூடின்று : பன்மை யொருமை மயக்கம்.

85\. புடைநகர் - கடைநகர். இடைநகர் - நகரினது இடைப்பாகம். புறம்பணை - புறம்பை அணைந்த இடம் (சிலப். 9 : 12, அடியார்.) ; நச்சினார்க்கினியர் புறம்பண்ணை எனப் பிரித்துப் பொருள் கொள்வர் ; சீவக. 91.

(மேற்.) அடி, 2 : சிலப். 9 : 12, அடியார். அடி. 4 : கல். 'வள்ளி யோர்', 1-2, மயில்.

(உரை.) [1] படைவீடு - நகர்.

'கடந்து' என்றார், கூறுதலருமை பற்றி. புகுதல் - சொல்லப் புகுதல். அடைத்தனையது : [2]காலமயக்கம். (௮௬)

86. சிந்துரப் பொடிகளுஞ் செம்பொற் சுண்ணமும்
சந்தன நீரொடு கலந்து தையலார்
பந்தொடு சிவிறியிற் சிதறப் பார்மிசை
இந்திர வில்லெனக் கிடந்த வீதியே.

(இ - ள்.) தையலார், சிந்துரப்பொடிகளையும் சுண்ணத்தையும் சந்தனத்தையும் பனிநீரோடே கலந்து [1]மட்டத்துருத்தியாலும் நெடுந் துருத்தியாலும் சிதற, அவை பாரிலே கிடந்த இந்திரவில்லென வீதியிலே கிடந்தனவென்க. (௮௭)

87. பாத்தரும் பசும்பொனின் மாடத் துச்சிமேற்
றூத்திரண் மணிக்குட நிரைத்துத் தோன்றுவ
பூத்தன வேங்கைமேற் பொலிந்து கார்நினைந்
தேத்தரு மயிற்குழா மிருந்த போன்றவே.

(இ - ள்.) மாற்றற்ற பொன்மாடங்களின் உச்சியிலே நீலமணிக் குடங்கள் நிரைத்துத் தோன்றுவன, [1]பூத்தனவாகிய வேங்கையின் மேலே மேகத்தை நினைத்தலால் மேனோக்குதலைத் தருகின்ற மயிற்றிரள் பொலிந்திருந்தனவற்றை ஒத்தனவென்க.

"ஏக்கழுத்தம்" (சீவக. 496) என்றார் பின்னும். (௮௮)

88. நெடுங்கொடி நிழன்மதி நெற்றி தைவர
உடம்புவேர்த் தினமழை யுரறி நோக்கலின்
நடுங்குபு நல்வரை மாடத் துச்சியில்
அடங்கிவீழ்ந் தருவியி னழுவ போன்றவே.

---

[2] இறந்தகாலத்தாற் கூறினமையால் கால மயக்கமாயிற்று.

86. சிந்துரப் பொடி - செந்நிறமுடைய பொடி. பொற் சுண்ணம்- பொற் பொடி. பந்தும் சிவிறியும் நீர்வீசு கருவிகள் (சீவக. 966; சூளா. சுயம்வர. 122; பெருங் 1. 42 : 188). இந்திரவில் - வானவில்; இது பல நிறமுடைய பொடிகளுக்கு உவமை.

(உரை) [1] மட்டத்துருத்தி, நெடுந்துருத்தி : சீவக. 968, 2657.

87. பாத்தல் - பகுத்தல்; பாத்தரும் பசும்பொன் : சீவக. 398. மணிக்குடம் - நீலமணியாற் செய்யப்பட்ட தூபிகள். ஏ-மேல் நோக்குதல்; "காதிரண்டு மில்லாதா, ளேக்கழுத்தஞ் செய்தாலும்" (சிறுபஞ்ச. 5)

(உரை) [1] வேங்கைமரத்தின்மேல் மயிலிருத்தல் : "பூத்த வேங்கை வியன்சினை யேறி, மயிலின மகவு நாடன்" (பொருளியல்)

88. மதிநெற்றி - சந்திரனுடைய உச்சியை. தைவர - தடவ. நடுங்குபு - நடுங்கி. வரைமாடம் - மலைபோன்ற மாடம். அருவியை அழுகைக் கண்ணீராகக் கூறுதல் : நற். 88 : 8-9.

(இ - ள்.) கொடி, மிக்குச் சென்று மதியின்றலையைத் தடவுதலின், நடுவு திரியுமேகம் உடம்பு புழுங்கி வேர்த்து இடித்து நோக்கிப் பெய்தலின், உளதாய அருவியின் கனத்தால் நடுங்காநின்று மாடத்துச்சியிலே குவிந்து வீழ்ந்து அழுவனபோலேயிருந்தனவென்க.

[1] சிலர்கோபத்திற்கஞ்சிச் செருக்கடங்கியழுதனரென்பது போதரும். (அக)

89. பொற்சிறு தேர்மிசைப் பைம்பொற் போதகம்
நற்சிரு ரூர்தலி னங்கை மார்விரீஇ
உற்றவர் கோழிமே லெறிந்த வொண்குழை
மற்றத்தே ருருள்கொடா வளமை சான்றவே.

[1] விரீகி விரீஇ ஆயிற்று. மற்று : அசை.

(இ - ள்.) நங்கைமார் நெல்லுப்பார்த்திருக்கின்றவர்கள் கோழிமேல் எறிந்த குழை, சிறுர் தேர்மிசைப் போதகத்தையூர்தலின், அத்தேரைப் போதல் கொடாத செல்வம் நிறைந்தனவென்க. (சுo)

90. மாலையும் பசும்பொனு மயங்கி வார்கணைக்
கோலெயுங் குனிசிலை நுதலி னரொடு
வேலிய லாடவர் விரவி விண்ணவர்
ஆலய மிதுவென வையஞ் செய்யுமே.

கணை - [1] அலகு.

(இ - ள்.) [2] அவ்விடம், மாலையும் பூணும் மயங்கப்பட்டுச் சிலை போலும் நுதலினரோடே ஆடவரும் கலக்கப்பட்டுத் தேவரிருப்பிடமிது வென்று ஐயந்தருமென்க. (சுக)

---

(உரை) [1] சிலர் கோபத்திற்கஞ்சி எனவரும் வாக்கியம் இச் செய்யுளில் தொனித்த குறிப்புப் பொருளை எடுத்துக் காட்டியது.

89. தேரின்மீது செய்துவைத்த யானைக்கன்றின்மேல் சிறுவர்களை ஏற்றுதல் : மணி. 3 : 141-3. விரீஇ - நெல். குழையைக் கோழிமீது எறிதல் : நன். 407, மயிலை ; நன். 408, சிவஞா.

மு. "நேரிழை மகளி ருணங்குணக் கவரும், கோழி யெறிந்த கொடுங்காற் கனங்குழை, பொற்காற் புதல்வர் புரவியின் றுருட்டும், முக்காற் சிறுதேர் முன்வழி விலக்கும்" (பட்டினப். 22-6)

(உரை) [1] வ்ரீஹி என்ற வடசொல் விரீஇ என மருவியது.

90. பொன் - ஆபரணம் ; ஆகுபெயர். கோல் - அம்பு. குனிசிலை - வளைக்கப்பட்ட வில். வேல் இயல் - வேற்படையிற் பழகி ஒழுகுகின்ற. விரவி - கலக்கப்பட்டு. மயங்கி, விரவி என்னும் செய்வினைகள் செயப்பாட்டு வினைப்பொருளைத் தந்துநின்றன. விண்ணவராலயம் - தேவர் இருக்குமிடம்.

(உரை) [1] அலகு - கூர்மையுள்ள பாகம் ; "அலகம்பையும்" (கம்ப. கங்கைப். 3) ; "அலகம் பனகண்" (தஞ்சை. 234). [2] 'அவ்விடம்' என்பது அவாய்நிலையான் வருவிக்கப்பட்டது.

91. கற்சுண்ணஞ் செய்ததோண் மைந்தர் காதலால்
நற்சுணப் பட்டுடை பற்ற நாணிறுற்
பொற்சுணத் தால்விளக் கவிப்பப் பொங்கிய
பொற்சுணம் புறம்பணை தவழும் பொற்பிற்றே.

கல் - உலம். சுண்ணப்பட்டு - சுண்ணம் அளைந்த பட்டு. சுண்ணத் தால் : [1] உருபினும் பொருளினும் மெய்தடுமாறி ஒன்றனிலைக்களத்து ஒன்று சென்றது. மகளிர் : தோன்று எழுவாய்.

(இ - ள்.) மைந்தர், மகளிர் [2] புலந்துபோவுழித் தம் காதலால் அவருடையைப்பிடிக்க, அதுநெகிழ்ந்த நாணுலே அவர் சுண்ணத்தைக் கொண்டு விளக்கை அவிப்ப மிக்கெழுந்த சுண்ணம் புறம்பின் மருத நிலத்தே பரக்கும் பொற்பிற்று [3] அவ்விடமென்க.

காதலாரும் பாடம். (கூ௨)

92. நலத்தகு நானநின் றிடிக்கு நல்லவர்
உலக்கையா லுதிர்ந்தன தெங்கி னெண்பழம்
நிலத்தவை சொரிதலின் வெரீஇய மஞ்ஞைபோய்க்
கலத்துயர் கூம்பின்மே லாடுங் கௌவைத்தே.

நலத்தகு, 'வியத்தகு' என்றாற்போல நின்றது.

(இ - ள்.) விரும்பத்தகுகின்ற சுண்ணத்தை நின்றிடிக்கும் மகளிர் உலக்கையாற் கழன்றனவாகிய பழத்தை அத்தெங்கு மடலிலே தாங்கி நிலத்தே சொரிதலின் வெரீஇய மயில்போய் அச்சம் நீங்கிக் கூம்பின் மேலாடும் கௌவைத்து அவ்விடமென்க.

---

91. கல் சுண்ணம் செய்த - உருண்ட கல்லைப் பொடியாகச் செய்த. சுண்ணப்பட்டு - வாசனைப் பொடியை அளைந்த பட்டு பொற்பிற்று - பொலிவையுடையது.

(மேற்.) அடி, 3 : கல். 'உழை நின்றீரும்' 12-3, மயில்.

(உரை) [1] சுண்ணத்தால் என்பதிலுள்ள ஆலுருபு ஐயுருபாயும் அதன் பொருளாகிய கருவி செயப்படு பொருளாயும் வந்தன. (தொல். வேற்றுமை மயங்கு. 18). [2] புலந்து - பிணங்கி. [3] அவ்விடமென்னும் எழுவாய் வருவிக்கப்பட்டது.

92. நலத்தகு = நலக்கத்தகு - விரும்பத்தக்க. நானம் - சுண்ணம். நல்லவர் - மகளிர். உலக்கையால் தெங்கின்பழம் உதிர்தல் : சீவக. 68. வெரீஇய - அஞ்சிய. கலத்து உயர் கூம்பு - கப்பலில் உள்ள உயர்ந்த பாய்மரம். கௌவைத்து - முழக்கத்தையுடையது.

நானம் : [1] ஆகுபெயர், அதிலே நனைத்திடித்தலின். [2] புகாரினது ஆழத்தால் நகரளவும் கலம்வந்தது; [3] அரசன் விளையாடுதற்குச் சமைத்தனவுமாம். (௯௨)

93. இட்டவெண் ணிலப்படா வகையி னீண்டிய
முட்டிலா மூவறு பாடை மாக்களாற்
புட்பயில் பழுமரப் பொலிவிற் றாகிய
மட்டிலா வளநகர் வண்ண மின்னதே.

[1] மிலேச்சராதலின் [2] ஐயறிவிற்குரிய 'மாக்கள்' என்னும் பெயராற் கூறினார்.

(இ - ள்.) [3] போகட்ட எள்ளு நிலத்தில் வீழாததொரு கூற்றாலே திரண்ட குறைவற்ற பதினெட்டுப்பாடைமாக்களாலே பழுமரப்பொலிவிற்றாகிய நகரின்செய்தி, எக்காலமும் யான் முற்கூறிய தன்மைத்தென்க.

இதனானே நெருக்கமும் ஓசைவேறுபாடும் பயன்கோடலும் கூறினார்.

"கடிநக ரமைதி செப்புவாம்" (சீவக. 78) என்றதுமுதலாக நடுவு கூறிய வினைகளை, "புடைநகர்த் தொழிலிடங் கடந்து" (சீவக. 85) என்பதனோடு முடித்து, அதுமுதல் இடைநகரிற் கூறிய வினைகளை, 'இன்னது' என்பதனோடு முடிக்க. (௯௩)

---

(உரை) [1] நானம் - புழுகுநெய்; இஃது அதில் நனைத்து இடிக்கும் சுண்ணத்திற்கு ஆயிற்று. [2] இராசமாபுரம் கடற்கரையிலுள்ளதாகக் கத்திய சிந்தாமணியிலும், ஜீவந்தர சம்புவிலும் நகர வருணனையில் விளங்கக் கூறப்பட்டுள்ளது. புகார் - கடற்றுறைமுகம் (புறநா. 30 : 10-12). [3] நகரத்து அருகே கடல் கப்பல் முதலியவற்றைச் சமைப்பித்து விளையாடுதல் அரசர்க்கு இயல்பு.

93. எண் - எள்; எள்ளெனப் பிரித்தலுமாம். 'எள் போட்டால் விழாது' என்பது நெருக்கத்தைக் குறிப்பதற்கு வழங்கும் பழமொழி. ஈண்டிய - ஒன்று சேர்ந்த. முட்டு - குறைவு. மூவறு பாடைமாக்கள் : சிலப். 5 : 11, 6 : 130; மணி. 1 : 16; பெருங். 1. 57 : 65. புட்பயில் - பலவகைப் பறவைகளும் உணவின் பொருட்டு நெருங்கிய. பழுமரப் பொலிவிற்று - பழுத்த மரத்தைப்போன்ற பொலிவை யுடையது; பழுமரம் - ஆலமரமெனினுமாம். புட்பயில்......பொலிவிற்று : சீவக. 498, 828; புறநா. 173 : 3-4; மணி. 14 : 26-7; கம்ப. பம்பை. 14.

(மேற்.) அடி, 2 : பிரயோக. சமாசப். 1.

(உரை) [1] மிலேச்சர் - இலக்கணத் திருத்தமில்லாத சொற்களைச் சொல்லுவோர். [2] "மாவு மாக்களு மையறி வினவே" (தொல். மரபு. 32); ஐயறிவு - ஐம்பொறியுணர்ச்சி. [3] போகட்ட - இட்ட; "வண்டுபோகட்ட மலர்போன் மருண்மாலை, உண்டுபோ கட்ட வுயிர்க்கு" (நள. சுயம்வர. 119)

94. தங்கொளி நித்திலத் தாமஞ் சூடிய
வெங்களி யிளமுலை வேற்கண் மாதரார்
பைங்கிளி முன்கைமேற் கொண்டு பார்ப்பெனும்
கொங்கலர் தாமரைக் கிடங்கு கூறுவாம்.

'சூடிய' என்றார், 'முலைமுடிசூடிற்று' என்றாற்போல. வெம்மை - விருப்பம். மேல் தாமரைகூறுதலின், பார்ப்பு அன்னப்பார்ப்பு.

(இ - ள்.) மாதரார், கிளியை முன்கையிலே கொண்டு பார்ப்பை அக்கிளிக்கு எண்ணிக்காட்டுதற்குக் காரணமாகிய கிடங்கினைக் கூறுவா மென்றாரென்க. (கூரு)

95. கோட்சுறு வினத்தொடு முதலைக் குப்பைகள்
ஆட்பெறு திரிதர வஞ்சிப் பாய்வன
மோட்டிருப் பனிக்கிடங் குழக்க மொய்த்தெழுந்
தீட்டருப் புள்ளின மிரற்று மென்பவே.

(இ - ள்.) சுறுவினத்தோடே முதலைத்திரள் கரையிலே வந்த ஆளை எதிர்ப்படப் பெறுவாய் உள்ளே திரிதருதலான், அதற்கஞ்சி விசைத்துப் பாய்வனவாகிய இரு உழக்குதலின் ஈட்டமருத புள்ளினம் எழுந்தரற்று மென்க.

முன்னே [1] கழியணைந்தமை பெறுதலின், சுறவு கூறினார். [2] கரையில் அஞ்சி, ஆழத்திற்சென்றால் ஆளைக்கொல்லுதல் அவற்றிற்குத் தொழில். (கூசு)

96. சிறையனப் பெடையினோ டூடிச் சேவல்போய்
அறுபத வண்டின மார்ப்பத் தாமரை
உறைவது குழுவினி னீங்கி யோகொடு
கறையற முயல்வதோர் கடவு ளொத்ததே.

---

94. நித்திலத்தாமம் - முத்துமாலை. வெங்களி - விருப்பத்தை யுடைய களிப்பை விளைக்கும். கொங்கு - தேன். கிடங்கு - அகழி.

95. கோட் சுறு - கொல்லுதலையுடைய சுறுமீன். முதலைக் குப்பைகள் - முதலையின் கூட்டங்கள். மோடு இரு - பெரிய இரு மீன்கள். உழக்குதல் - கலக்குதல். மொய்த்து - நெருங்கி. இரற்றும் - ஒலிக்கும்.

(உரை) [1] இந் நகரத்தருகே கழி அணைந்தமை, 92, 427-ஆம் செய்யுட்களாலும் பெறப்பட்டது. "கடல்வாழ் சுறவு" (தொல் மரபு. 40), "ஏம முந்நீ ரெறிசுறவு" (பெருங். 1. 40 : 182) என்பவற்றாலும் சுறுமீன் கடலில் உள்ளதென்பது பெறப்படும். [2] சுறுக்களின் தன்மையை 142-ஆம் பாடலாலும் உணர்க.

96. சேவல் - ஆணன்னம். அறுபத வண்டினம் - ஆறு கால்களை

(இ - ள்.) அன்னப்பெடையினோடே சேவலூடிப்போய் வண்டினமெழுந்தார்ப்பத் தாமரைப்பூவிலே குவிந்திருக்கின்றது, சுற்றத்தினின்றும் நீங்கிக் கறையறத் தீயிடைநின்று யோகத்தோடு தவஞ்செய்வதொரு கடவுளையொத்த தென்க.

யோகம் : திரிந்தது. கறை - [1] மும்மலம். [2] எழுந்த வண்டு புகைக்கும், பூ நெருப்பிற்கும் உவமம். (௬௭)

97. அரும்பொனும் வெள்ளியு மணியு மல்லது
கருங்கலந் தோய்விலாக் காமர் பூந்துறை
குரும்பைமென் முலையின்மேற் குலாய குங்குமம்
விருந்துசெய் திடவெறி மேனி சேந்ததே.

(இ - ள்.) குளிப்பார்முலையிற் குங்குமம், [1] தன்னைப் புதுமை செய்தலாலே பொற்குடமுதலியன முகத்தலல்லது மட்குடமுகவாத துறை மேனி சிவந்ததென்க.

பொன்முதலிய காரணப்பெயர் அவற்றான் இயன்ற காரியத்தின் மேல் நின்ற ஆகுபெயர். வெறி - மணம். (௬௮)

98. பட்டவர்த் தப்பலிற் பரவை யேந்தல்குல்
அட்டொளி யரத்தவாய்க் கணிகை யல்லது
மட்டுடை மணமகண் மலர்ந்த போதினாற்
கட்டுடைக் காவலிற் காமர் கன்னியே.

---

யுடைய வண்டின் தொகுதி. உறைவது : எழுவாய். யோகு - யோகம். கடவுள் - முனிவர் (மதுரைக். 41). மு. ஆனைக்காப். நகர. 8.

(உரை) [1] மும்மலம் - காமம், வெகுளி, மயக்கம்; சங்கை முதல் பாஷண்டிமூடம் இறுதியாகிய மலங்கள் இருபத்தைந்தென்று கூறுவதுமுண்டு. [2] "புண்டரிகந் தீயெரிவ போல்விரியப் பூம்புகைபோல், வண்டிரியுந் தெண்ணீர் மகதர்கோன்" (நள. சுயம். 144)

97. பொன் வெள்ளி யென்பன, அவற்றாற் செய்யப்பட்ட குடங்களுக்கு ஆயின. கருங்கலம் - இழிவான மட்கலம். காமர் : காமருவென்பது கடைக் குறைந்து நின்றது; காமம் மருவு மென்பதன் விகாரமென்பர் இவ்வுரையாசிரியர் (கலித். 80 : 14, உரை); காமம் வருமென்பதன் விகாரமென்பர் அடியார்க்கு நல்லார் (சிலப். 4 : 40, உரை)

(உரை) [1] தன்னை யென்றது அகழியை.

98. தப்பல் - கொல்லுதல்; "பார்ப்பார்த் தப்பிய" (புறநா. 34 : 3.) பரவை - கடல். கணிகை - பரத்தை. கன்னி : சீவக. 1203; புறநா. 337. காவலாற் கன்னி : கம்ப. நகர. 9, 14.

(மேற்.) மு : நன். பொது. 59, மயிலை.

அட்டு ஒளி அரத்தம் - உருக்கி ஒளியையுடைய அரக்கு. மட்டு - காமபானம். கட்டு - [1] கற்பித்தல்.

(இ - ள்.) அகப்பட்டவரைக் கரையேறுமற் கோறலிற் பரத்தையை யொக்கும்; அதுவொழிய மலர்ந்த பூவினுல் மணஞ்செய்த குலமகளை யொக்கும்; காவலாற் கன்னியையொக்குமென்க. (சுகூ)

99. நிரைகதிர் நித்திலங் கோத்து வைத்தபோல்
விரைகமழ் கமுகின்மேல் விரிந்த பாளையும்
குரைமதுக் குவளைகள் கிடங்கிற் பூத்தவும்
உரையினே ரோசனை யுலாவி நாறுமே.

குரைமது: வினைத்தொகை. உரை - புகழ்; புகழால் எங்கும் உலாவி.

(இ - ள்.) நித்திலத்தைக் கோத்துவைத்தபோற் கரையிற் கமுகின் மேல் விரிந்த விரைகமழ் பாளையும், அகழிற்பூத்த குவளையும் உலாவி ஓரோசனை நாறுமென்க. (எ௦)

100. தாய்முலை தழுவிய குழவி போலவும்
மாமலை தழுவிய மஞ்சு போலவும்
ஆய்முகி றழீஇயசும் பருத நெற்றிய
சேயுயர் மதில்வகை செப்பு கின்றதே.

(இ - ள்.) நீர்சுமந்திளைத்த மேகத்தைத் தன்னிடத்தே அணைத்த லாலே குழவியை அணைத்த தாயுடைய முலைபோலவும், மஞ்சைத் தன் னிடத்தே அணைத்த பெரியமலைபோலவும், அசும்பருத தலையையுடைய மதிலின் கூறுபாடு இனிக் கூறுகின்றதென்றுரென்க. (எக)

(உரை) [1] தாய்தந்தையராற் கற்பிக்கப்படுதல் (தொல். கற்பு. 1, ந.)

99. நிரைகதிர் நித்திலம் - வரிசைப்படுத்திய கிரணங்களையுடைய முத்துக்கள். கோத்து வைத்த நித்திலம் விரிந்த பாளைக்கு உவமை. குரைமது - ஒலிக்கும் தேன். யோசனையின் அளவு பலவகைப்பட வழங்கு கின்றது; நாற்காதந்தான் யோசனை என்பது சைனருடைய கொள்கை (சீவக. 1901, உரை). ஓசனை கமழு மென்றல் மரபு (சீவக. 953, 1901; பரி. 12 : 25.)

100. 1-2. பட்டினப். 95-6. மஞ்சு - வெண்மேகம். குழவி தழுவிய தாய் முலை போலவும், மஞ்சு தழுவிய மாமலை போலவும் என மாற்றி இயைத்துக் கொள்க. ஆய்முகில் - இளைத்த மேகம்; ஆய்: உரிச்சொல். அசும்பு - நீர்த்துளி. நெற்றிய - உச்சியையுடைய. சேயுயர் மதில் - நெடுந்தூரத்தே உயர்ந்த மதில்.

(வேறு)

101. மாற்றவர் மறப்படை மலைந்துமதில் பற்றின்
நூற்றுவரைக் கொல்லியொடு நூக்கியெறி பொறியும்
தோற்றமுறு பேய்களிறு துற்றுபெரும் பாம்பும்
கூற்றமன கழுகுதொடர் குந்தமொடு கோண்மா.

இதுமுதலாக, "கரும்பொன்" (104) அளவும் ஒரு தொடர்.

நூற்றுவரைக்கொல்லி - சதக்கினி; நூறுபேரை ஒருகாற்கொல்வ தொரு பொறி. நூக்கி - தள்ளி. எறிதல் - அடித்தல்; "[1] சேரியம் பெண்டிர் நெஞ்சத் தெறிய" (நற். 171) என்றாற்போல. தோற்றமுறு பேய் - [2] கட்புலனாகிய பேய். துற்றுதல் - விழுங்குதல். தொடர் - [3] துவக்குசங்கிலி. குந்தம் - [4] விட்டேறு. கோண்மா - புலிமுதலியன. [5] இவற்றிற்கு எண்ணும்மை விரிக்க. (எஉ)

102. விற்பொறிகள் வெய்யவிடு குதிரைதொட ரயில்வாள்
கற்பொறிகள் பாவையன மாடமடு செந்தீக்
கொற்புனைசெய் கொள்ளிபெருங் கொக்கெழில்செய் கூகை
நற்றலைக டிருக்கும்வலி நெருக்குமர நிலையே.

விடுகுதிரை - பகைவர்மேலே விடுங் குதிரைப்பொறி. தொடர்வாள் - தானே தொடர்ந்து கொல்லும்வாள். கற்பொறிகள் - [1] இடங்கணிமுதலியன. பாவையும் அன்னமும் மாடங்களும் அடப்படும் தீயும்; மாடம் - நாடகசாலை. கொல் - [2] கொற்சாதி. காய்ந்த இரும்புடன் கொளுத்தலின், 'கொள்ளி' என்றார். எழில்செய் : இகழ்ச்சிக் குறிப்பு. தலைகளைத் திருகிக்கொள்ளும் வலியுடனே நெருக்குமரமாவது [3] ஐயவித்துலாம். [4] இவற்றிற்கும் எண்ணும்மை விரிக்க. (எ௩)

101. மாற்றவர் - பகைவர். மலைந்து - மாறுபட்டு. பொறி - யந்திரம். கூற்றம் அன்ன - யமனை ஒத்த. கோண்மா - கொலைசெய்தலையுடைய மிருகங்கள்.

(உரை) [1] ஊர்களிலுள்ள அழகிய மங்கையர் தம்முடைய மார்பில் அடித்துக் கொள்ள. [2] பேய்கள் அருவமுடையனவாதலின் கட்புலனாகிய பேய் என்றார். [3] தானே சென்று கட்டும் சங்கிலி: "துவக்கு சங்கிலி யெறிந் திழுக்கும்" (திருவிளை. நகரச். 27). [4] ஒருவகை ஆயுதம்; வேலுமாம். [5] பேய் முதலியவற்றிற்கு.

102. பாவை, அன்னம், மாடம் எனப் பிரிக்க.

(உரை) [1] வந்தோர்மேல் கல்லை வீசும் பொறிகள் : 'கல்லிடு கூடை- இடங்கணிக்கல் வீசுங் கூடை' (சிலப். 15 : 210, அரும்பத.); 'இடங்கணிப் பொறிக்குக் கல்லிட்டு வைக்கும் கூடை' (சிலப். அடியார்.) [2] கொல்லச்சாதி. [3] கதவை அணுகாதபடி கற்கவி தொடங்கித் தொங்கவிடப் படும் துலாம் (பதிற். 16 : 4, 22 : 23; சிலப். 15 : 210). [4] விற்பொறிகள் முதலியவற்றிற்கு.

103. செம்புருகு வெங்களிக ளுமிழ்வதிரிந் தெங்கும்
வெம்புருகு வட்டுமிழ்வ வெந்நெய்முகந் துமிழ்வ
அம்புமிழ்வ வேலுமிழ்வ கல்லுமிழ்வ வாகித்
தம்புலங்க ளால்யவனர் தாட்படுத்த பொறியே.

எவ்விடத்துந் திரிந்து செம்புருகின நீரை உமிழ்வனவும், பகைவர் வேதற்குக் காரணமான உருகுவட்டை உமிழ்வனவும், நெய்யை உமிழ் வனவுமாக யவனர் இயந்திரித்த பொறியும். [1] உம்மை விரிக்க. ஆகி - ஆக. புலம் - அறிவு. (எச)

104. கரும்பொனியல் பன்றிகத நாகம்விடு சகடம்
குரங்குபொரு தகரினொடு கூர்ந்தரிவ நுண்ணூல்
பரந்தபசும் பொற்கொடி பதாகையொடு கொழிக்கும்
திருந்துமதி றெவ்வர்தலை பனிப்பத்திருந் தின்றே.

இரும்பான் இயன்ற பன்றி. நாகம் - விடவரவு. நூல் - [1] அரிகயிறு. பதாகை - பெருங்கொடி.

(இ - ள்.) பொற்கொடிகள் பதாகையொடு கொழிக்குந் திருந்து மதில், மாற்றவர் மறப்படை அகழைக் கடந்து தன்னைப்பற்றின், அத் தெவ்வர் தலை பனிக்கும்படி நூற்றுவரைக்கொல்லிமுதல் மரநிலையீருக வுள்ளவையும், செம்புருகு களிமுதலியவற்றை உமிழ்வனவாக யவனர் தாட்படுத்த பொறிகளும், பன்றிமுதல் நுண்ணூலீருகவுள்ளவையும் திருந்திற்றென்க.

103. எங்கும் திரிந்து செம்புருகு வெங்களிகள் உமிழ்வ என மாறிக் கூட்டுக. களி - குழம்பு. உமிழ்வ - உமிழ்வனவாகிய பொறிகள். வட்டு - எஃகுருண்டை. யவனர் - யவனதேசத்துத் தச்சர்; "யவனத் தச்சரும்" (பெருங். 1. 58 : 40; மணி. 19 : 108). தாட்படுத்த - முயற்சியால் உண் டாக்கின.

(மேற்.) அடி, 4 : இ-வி. எழுத். 27.

(உரை) [1] களிகளுமிழ்வ என்பன முதலியவற்றிற்கு உம்மை விரிக்க.

104. கரும்பொன் - இரும்பு. கதம் - கோபம். தகர் - ஆடு. கொழிக்கும் - மேலே அசைந்து தோன்றும். திருந்து மதில் - தொழில் திருந்திய மதில். பனிப்ப - நடுங்க. திருந்தின்று - திருந்தியது.

101-4. மதுரைக். 67 ; பதிற். 20 ; சிலப். 15 : 207-17 ; மணி. 28 : 23-4 ; பு. வெ. 112 ; திருவிளை. நகரச். 24-9.

(மேற்.) மு : சிலப். 15 : 217, அடியார்.

(உரை) [1] சிலப். 15 : 216, அடியார்.

மதில் இன்னதுமின்னதும் திருந்திற்றெனச் சினைவினை முதலொடு முடிந்தது. [2] பற்றிற் [3] பனிப்பவென்க; இத்தொடர்நிலையிற் சொற்களைத் துணித்துப் பலவிடத்தினுமெடுத்துக்கூட்டியது, [4] செய்யுளுறுப்பு இருபத்தாறினும் மாட்டென்பது ஒருறுப்பாதலின்; "அகன்றுபொருள் கிடப்பினுமணுகிய நிலையினும், இயன்றுபொருண் முடியத் தந்தன ருரைத்தல், மாட்டெனமொழிப பாட்டியல் வழக்கின்" (தொல். செய். 210) என்றும், "மாட்டு மெச்சமு நாட்ட லின்றி, உடனிலை மொழியினுந் தொடர்நிலை பெறுமே" (தொல். செய். 211) என்றும் தொல்காப்பியனார் கூறினர். இதனால் நாடு முதலிய கவிகளில் மாட்டின்றி வந்தனவுங் கொள்க. இவ்விதி மேல்வருவனவற்றிற்குங் கொள்க. (எ௫)

105. வயிரவரை கண்விழிப்ப போன்றுமழை யுகளும்
வயிரமணித் தாழ்க்கதவு வாயின்முக மாக
வயிரமணி ஞாயின்முலை வான்பொற்கொடிக் கூந்தல்
வயிரக்கிடங் காடைமதிற் கன்னியது கவினே.

வரைகள் கண்விழிப்பனபோன்று கதவுடையவென வினைக்குறிப்பொடு முடிந்தது. மழையுகளும் வாயிலெனவே கோபுரமாம். ஞாயில் [1] ஏப்புழைக்கு நடுவாய் எய்து மறையும் [2] சூட்டு. கவினது என மாறுக. 'அது' இடப்பொருளுணர்த்திற்று.

(இ - ள்.) முலையினையும் கூந்தலினையும் ஆடையினையுமுடைய மதிற் கன்னி கதவினையுடைய நாலுவாயிலும் நாலுமுகமாகக் கவினிடத்ததாயிற்றென்க.

இனி, ஆகவென்பதை எங்குங் கூட்டி, மதில் இன்னது இன்னதாகக் கவினிடத்ததென்றுமாம். மதிலில் இன்னது இன்னதாகையினாலே அம் மதிற்கன்னியதாயிருக்கும் அழகென்றுமாம். (எ௬)

---

[2] பற்றின்: சீவக 101. [3] பனிப்ப: சீவக: 104. [4] தொல். செய். 1.

105. வயிரவரை - வயிர மணிகளாலான மலை. உகளும் - தாவும். வரை கண்விழித்தாற் போன்ற கதவு: "கடவுண் மால்வரை கண்விடுத் தன்ன, அடையா வாயிலவ னருங்கடை" (சிறுபாண் 205 - 6). வாயில் - வாயில்மாடம். முகம் - கோபுரம் (சீவக. 1444). ஞாயில்முலை: சீவக. 1444; பெருங். 3. 3: 24. கிடங்கு - அகழி. கிடங்கே ஆடை: சீவக. 1444; மதிற்கன்னி: "புனற்கன்னி" (சீவக. 39, ந.). மதிலும் பொறிவகையும்: பெருங். 3. 3: 17 - 38.

(உரை) [1] ஏப்புழை - பகைவர் மேலே அம்புகளை எய்யும் துவாரம்; இது ஞாயில், குருவித்தலை என்கிற உறுப்பென்றும் கூறப்படும் (சிலப். 15: 217, அடியார்.); "மீன்பூத் தன்ன வுருவ ஞாயில்" (புறநா. 21); "ஞாயிலிஞ்சி நகைமணி மேகலை" (மணி. 5: 112); "ஏப்புழை ஞாயி லேந்து நிலையரணம்" (பு. வெ. 86); தொல். புறத். 10, ந. [2] சூட்டு - மதிலுறுப்பு விசேடம்.

106. செம்பொன்மழை போன்றடிதொ றுயிரங்கள் சிந்திப்
பைம்பொன்விளை தீவினிதி தடிந்துபலர்க் கார்த்தி
அம்பொனிலத் தேருகுடி யகநகர மதுதான்
உம்பருல கொப்பதுதன் றன்மைசிறி துரைப்பாம்.

**(இ - ள்.)** இனிக் கூறுநின்றது, பொன்விளைகின்ற தீவில் நிதியை வெட்டிப் பொன்னை மழைபோன்று அடிக்கடி சிந்திப் பலர்க்கும் பல ஆயிரங்களைக் கொடுத்து நிறைவித்ததனாலே மறுமையில் தேவருலகத்திலே செல்லுங்குடியையுடைய உள்நகரம்; அதுதான் நுகர்ச்சியான் உம்பருலகொப்பதொன்றாயினும் அதன் நன்மை சிறிது கூறுவாமென்றானென்க. (எஎ)

(வேறு)

107. துப்புறழ் தொண்டைச் செவ்வாய்த் தோழியர் காமத்தூதின்
ஒப்பவொன் றுதி யாக வாயிரத் தோரெட் டேறுச்
செப்பித்தஞ் செம்பொ னல்கு னலம்வரை வின்றி விற்கும்
உப்பமை காமத் துப்பி னவரிட முரைத்து மன்றே.

**(இ - ள்.)** வேட்கையினை விளைவிக்குந் தோழியராகிய தூதாலே செம்பொன் ஒன்றுதியாக ஆயிரத்தெண் [1] கழஞ்சு ஏறுக, வந்தவனுக்கு ஒப்ப விலை சொல்லித் தம் அல்குலை விற்கும் [2] உவர்ப்பில்லாத காம நுகர்ச்சியையுடைய பரத்தையரிடத்தைக் கூறுவாமென்க.

---

106. பொன்மழை - பொன்னைப் பெய்யும் மேகம். அடிதோறும் ஆயிரம் சிந்துதல்: "ஏரேறு செம்பொ னடிக்கா யிரநல்கி" (திருவாரூர்க். 475). பொன் விளைதீவு: சீவக. 503. ஆர்த்தி - நிறையக் கொடுத்து. பொன்னிலம் - தேவருலகம். அகநகரம் - உள் நகரம்.

107. துப்பு உறழ்: பவளத்தை வென்ற. தொண்டைச் செவ்வாய்: செவ்வாயென்னும் மாத்திரையாய் நின்றது. துப்புறழ் தொண்டைச் செவ்வாய்: "துப்போடு கனிதொண்டை துயில்கொண்ட துவர்வாய்" (குண்டல.); மேரு. பத்திர. 4; வச்சிராயுத. 56. ஒன்று முதல் ஆயிரத்தெட்டுக்கழஞ்சு பொன் பரிசம்: சிலப். 3 : 164-6, 14 : 158-60; பெருங். 1. 35 : 82 - 5. உப்பு அமை - இனிமை அமைந்த. துப்பு - நுகர்தல்.

**(மேற்.)** அடி. 1 : சிலப். 4 : 47 - 57, 72 - 6, அடியார்.; மாறன். பொருளணி. 19. அடி, 2 - 3 : சிலப். 14 : 157 - 9, அடியார்.

**(உரை)** [1] கழஞ்சு - பன்னிரண்டு பணவெடை கொண்ட நிறை; "மாணிழைக்கொரு கங்குலின் மருவுவா ரளிக்கும், ஆணி தீர்ந்த பொன்னுயிரங் கழஞ்சென வறைவர்" (பிரமோ. உருத்திராக்க. 26). [2] அமைதல் - இன்மையாதல் (சீவக. 175; மணி. 3 : 149)

தொண்டை வாய்க்கு அடை. நலம் வரைவின்றி - ஒருவரிடத்தும் அன்பு நிலைபேறின்றி. "உப்புடைய முந்நீர்" (சீவக. 280) என்றார் உவர்ப்பிற்கு; உப்பு - இனிமையுமாம். இனி உவமத்தொகையாக்கி, இதற்கு இஃது அளவென்று உப்பிடுமாறுபோலக் [3] கொடுக்கும் பொருளளவான அன்பென்றும் உரைப்ப. துப்பையொக்கும் தொண்டை போலும் செவ்வாயென இரண்டு உவமையும் செவ்வாயை நோக்குதலின், [4] அடுத்துவரலுவமையன்று. (எஅ)

108. குங்கும மெழுகிச் சார்வுந் திண்ணையுங் குயிற்றி யுள்ளாற்
றங்குமென் சாந்தத் தோடு தாமமுந் தாழ நாற்றி
எங்குநற் சுவர்க டோறு நாடக மெழுதி யேற்பப்
பொங்குமென் மலர்பெய் சேக்கை பொலிந்துவிண் புகற்சி [யுண்டே.

(இ - ள்.) அச்சேரிப்புறமெங்கும், சார்ந்திருக்குமிடத்தையும் திண்ணையையும் பண்ணிக் குங்குமத்தாலே மெழுகி, உள்ளெல்லாம் மெழுகின சந்தனத்திலே மாலையையும் தாழநாற்றிச் சுவர்கடோறும் காமக்குறிப்புப் பட நாடக மெழுதிச் சேக்கை பொலிந்து விண்ணை விரும்பப் பண்ணுதலுடைத்தென்க. (எகூ)

109. தூசுசூழ் பரவை யல்குல் சுமக்கலா தென்ன வீழ்த்த
காசுசூழ் கோவை முத்தங் கதிர்முலை திமிர்ந்த சாந்தம்
வாசநற் பொடிகண் மாலை வண்டுண வீழ்ந்த முற்றம்
ஆசைப்பட் டரசு வைக வருங்கடி கமழு மன்றே.

(இ - ள்.) தூசுசூழல்குலைச் சூழ்ந்த கோவை, இவ்வல்குல் நம்மைச் சுமக்க மாட்டாதென்று கருதினாற்போல வீழ்த்த காசு முத்தம் சாந்தம் சுண்ணம் மாலை என்கின்றவை வீழ்ந்த முற்றம் அரசு விரும்பித் தங்கும்படி கமழுமென்க. (அ௦)

---

[3] "நிதிவழி நேய நீட்டும், மன்றலங் கோதை மாதர் மனமெனப் போயிற் றம்மா" (கம்ப. மாரீசன். 238). [4] "அடுக்கிய தோற்றம் விடுத்தல் பண்பே" (தொல். உவம. 36)

108. சார்வு: "சார்வணை யேறி" (பெருங். 1. 37 : 15.) உள்ளால்: ஆல், உருபு மயக்கம். நாற்றி - தொங்கக் கட்டி. சேக்கை - படுக்கை. புகற்சி - விருப்பம்.

109. தூசு - ஆடை. காசு - மணிகள். கோவை : எழுவாய். திமிர்ந்த - பூசிய. கடி - வாசனை. ஆசைப்பட்டு அரசு வைகும் : சிலப். 14 : 147-ஆம் அடியின் உரையில் இதனை அரும்பத வுரையாசிரியர் உரைநடையில் அமைத்தனர்.

(மேற்.) அடி, 4 : சிலப். 14 : 147, அரும்பத.

110\. அஞ்சிலம் பொலியோ டல்குற் கலையொலி யணிந்த முன்கைப்
பஞ்சிமெல் விரலிற் பாணி பண்ணொலி பவழச் செவ்வாய்
அஞ்சிநேர்ந்துயிர்க்குந்தேன்சோர் குழலொலிமுழவினோசை
துஞ்சலி லோசை தம்மாற் றுறக்கமு நிகர்க்க லாதே.

முன்பு [1] சேடியர்கையாற் செம்பஞ்சணிந்த விரல். செவ்வாயை முன்னும் பின்னும் கூட்டுக. வாயுறுத்தற்கு அஞ்சி உற்றபின் தன் தொழில் முடித்தற்கு நேர்ந்து ஊதுங் குழல்.

**(இ - ள்.)** சிலம்பொலியோடே கலையொலி யாழொலி பாட்டொலி குழலொலி முழவினொலியாகிய ஒழியா ஒலிகளாலே இச்சேரிக்குத் துறக்கமும் ஒவ்வாதென்க. (அக)

111\. தேனுலா மதுச்செய் கோதை தேம்புகை கமழ வூட்ட
வானுலாஞ் சுடர்கண் மூடி மாநக ரிரவு செய்யப்
பானிலாச் சொரிந்து நல்லா ரணிகலம் பகலைச் செய்ய
வேனிலான் விழைந்த சேரி மேலுல கனைய தொன்றே.

சுடரென்றது ஞாயிற்றினது சுடரையும் திங்களினது சுடரையு மாக்கிப் பானிலாவைத் திங்களின் சுடரிற்கேற்றுக.

**(இ - ள்.)** கோதையைப் புகைத்தலால் அப்புகை வானுலாஞ்சுடர்களை மறைத்து நகரைப் பகலே இரவையுண்டாக்க, அவ்விரவை நல்லாரணிகலத்தின் மாணிக்கங்கெடுத்துப் பகற்பொழுதைச்செய்ய இயல்பான இரவிலும் பானிலாச்சொரிந்து வானுலாவுந்திங்களின் சுடர்களை அம்மணிகள் மறைத்துப் பகற்பொழுதைச் செய்ய அச்சேரி மேலுலகையொப்பதொன்றேயாயிற்றென்க.

ஏகாரம் : தேற்றம். [1] இரவும்பகலுமின்மையின் துறக்கமொத்தது. இனி, பால் - பகுதி. நிலா - ஒளியென்று முரைப்ப; "நிலாத்தலைத் திகழும் பைம்பூண்" (சீவக. 1950), "பணிநிலா வீசும் பைம்பொற் கொடி" (சீவக. 2531) என்றாற்போல. (அஉ)

---

110\. கலை - மேகலை. குழல் - புல்லாங்குழல். துஞ்சல் - ஒழிதல். துறக்கம் - சுவர்க்கலோகம்.

(உரை) [1] சேடியர் - தோழியர். செவ்வாயைப் பண் என்பதனோடும் கூட்டுக.

111\. கோதை - மாலை. மாலைக்குப் புகையூட்டுதல் : சிலப். 13 : 122 - 6, அடியார். சுடர்கள் - சூரிய சந்திரர்கள். பால் நிலா - பாலைப் போன்ற வெள்ளிய நிலா. வேனிலான் - மன்மதன். சேரி - பரத்தையர் சேரி. மேலுலகு - சுவர்க்க லோகம். மு. கம்ப. எழுச்சி. 56.

(உரை) [1] சீவக. 135.

112. இட்டநூல் வழாமை யோடி யோசனை யெல்லை நீண்டு
மட்டுவார் மாலை வேய்ந்து சதுக்கங்கண் மலிந்த சும்மைப்
பட்டமும் பசும்பொற் பூணும் பரந்தொளி நிழற்றுந் தீந்தேன்
அட்டுந்தா ரணிந்த மார்ப ராவணங் கிளக்க லுற்றேன்.

(இ - ள்.) வலித்தநூற் செவ்வை தப்பாமற் கிடந்து நீண்டு வேயப்பட்டு நாற்சந்திகளிலே மிக்க ஒலியினையுடைய அங்காடித்தெருக் கூறுதலுற்றேனென்றாரென்க.

தம் தரத்திற்கேற்பப் பெற்ற பட்டமும் பூணும் எங்கும் விளங்குதற்குக் காரணமான வணிகர் [1] முதலாயினார். (அரு)

113. மணிபுனை செம்பொற் கொட்டை வம்பணி முத்த மாலைக்
கணிபுனை பவழத் திண்காழ் கம்பலக் கிடுகி னூன்றி
அணிநில மெழுகிச் சாந்தி னகிற்புகைத் தம்பொற் போதிற்
றிணிநில மணிந்து தேங்கொ ளையவி சிதறி னாரே.

கணி - [1] நூல்போனவன்; அவன்புனைந்த காழ். திணிநிலம் - [2] படுத்த நிலம். தேங்கொள் ஐயவி - [3] தெய்வங்கள் இனிதாகக் கொண்ட ஐயவி.

---

112. வழாமை - தவறுதபடி. மட்டு வார் - தேன் ஒழுகுகின்ற. சும்மை - ஒலி. பட்டம் - அரசராற் கொடுக்கப்படும் பட்டப் பெயர்கள்; அவை எட்டி, காவிதி என்பன; "எட்டி காவிதிப் பட்டந் தாங்கி" (பெருங். 2. 3 : 144); பூண் - இங்கே அப்பட்டங்களுக்குரிய பொற்பூ முதலியன; "எட்டிப் பூப்பெற் றிருமுப் பதிற்றியாண், டொட்டிய செல்வத் துயர்ந்தோ ராயினன்" (மணி. 22 : 113-4); தொல். தொகைமரபு. 12, ந. நிழற்றும் - நிழலைச் செய்யும். தேன் அட்டும் - தேனைச் சொரியும். தார் - முல்லை மாலை; "தார்முல்லை மன்னுவோ வணிகர்குல மணியேயோ" (திருவிளை. வன்னியுங்கிணறும். 19). ஆவணம் - கடைத்தெரு; சும்மையை யுடைய ஆவணம் என இயைக்க.

(உரை) [1] வணிகரிற் பட்டமும் பூணும் பெறுவோரும் உண்மையின் முதலாயினாரென்றார்.

113. கொட்டை - உருண்டை வடிவமாகவுள்ளது (பெருங். 1. 57 : 54-5). மாலைக்காழ் : பெருங். 1. 33 : 192. காழ் - சட்டக்கால் (மதுரைக். 621, ந.). கம்பலக்கிடுகு - கடைகளுக்கு முன்னாகப் பகலில் உயர்த்தி வைத்தற்கும் இரவில் தாழ்த்தி வைத்தற்கும் உரித்தாகச் செய்யப்பட்டதும், கம்பலம் வேய்ந்ததுமான சட்டம்; கிடுகு - சட்டம் (திருவிளை. நகர. 61). காழும் கிடுகும் : சீவக. 2975; பட்டினப். 167; அறநெறிச். 84; சூளா. கல்யாணச். 22. ஐயவி - வெண்சிறு கடுகு.

(உரை) [1] நூல்போனவன் - நூலில் தேர்ச்சியடைந்தவன். [2] கற்படுத்திய பூமி. [3] வெண்சிறு கடுகு தெய்வங்களுக்கு இனியது : "நெய்

(இ - ள்.) மணியழுத்தின பொன்னாற் செய்த கடைமணியையுடைய கச்சுத்தூக்கின பவழக் காம்பைக் கம்பலம்வேய்ந்த சட்டத்திலே [4] கொளுத்தி ஊன்றி மெழுகிப் புகைத்து அணிந்து சிதறினாரென்க.

முத்தமாலை புனைந்த கிடுகு. (அச)

114. பொன்சொரி கதவு தாளிற் றிறந்துபொன் யவனப் பேழை
மின்சொரி மணியு முத்தும் வயிரமுங் குவித்துப் பின்னும்
மன்பெரும் பவழக் குப்பை வாலணி கலஞ்செய் குப்பை
நன்பக லிரவு செய்யு நன்கலங் கூப்பி னாரே.

(இ - ள்.) பொன் தானேசொரிதற்குக் காரணமான கதவைத் திறந்து பேழையிலிருந்த மணிமுதலியவற்றைக் குவித்துப் பின்னரும் பவளத்திரள்களையும் குறைப்பணிகளையும் [1] நீலமணிப்பூண்களையும் குவித்தாரென்க.

நன்பகல் -[2] கடும்பகல். (அரு)

115. விழுக்கலஞ்சொரியச்சிந்திவீழ்ந்தவையெடுத்துக்கொள்ளா
ஒழுக்கின ரவர்கள் செல்வ முரைப்பரி தொழிக வேண்டா
பழுக்குலைக்கமுகுந்தெங்கும்வாழையும்பசும்பொன்னாலும்
எழிற்பொலி மணியி னாலுங் கடைதொறு மியற்றி னாரே.

(இ - ள்.) கலத்தைச் சொரிதலாற் சிதறி வீழ்ந்தவற்றைக் கொள்ளா ஒழுக்கினர்; அதுவேயன்றி, அவர்க்கு நாடோறும் நடுதற்குக் கமுகு முதலியன தேடவேண்டா; அஃது என்னையெனின், அவற்றைப் பொன்னாலும் மணியாலும் இயற்றினாராதலான். அவர்கள் செல்வம் என்னா லுரைத்தலரிது; இனி நீரும் கேட்கவேண்டுமென்னும் விருப்பத்தை ஒழிவீராகவென்க.

இனி உரைப்பரிது, கேட்கவிரும்பவேண்டா, ஒழிகவென்றுமாம். (அசா)

---

யோடையவி யப்பி" (முருகு. 228), "ஐயவி யப்பிய நெய்யணிநெடு நிலை" (நெடுநல். 86) என்பவற்றாலும் அவற்றின் உரையாலும் அறியப் படும். [4] கொளுத்தி - பொருத்தி.

114. தாள் - தாழைத் திறக்குங் கோல்; "இன்பப் புதாத்திறக்குந் தாளுடைய மூர்த்தி" (சீவக. 1549). யவனப் பேழை - யவனதேசத்திற் செய்யப்பட்டதான பொற்பெட்டி; சீவக. 557; பெருங். 3. 22 : 213. நன்பகல் - எப்பொருளும் நுகர்தற்கு நன்றாகிய பகற்பொழுது (முருகு. 130, ந.)

(உரை) [1] பகலை இரவாகச் செய்யும் பூணென்றதனால் நீலமணிப்பூ ணென்று பொருளுரைத்தார். [2] உச்சிப் பொழுது.

115. விழுக்கலம் - சிறந்த ஆபரணம். பழுக்குலை..........இயற்றி னார் : சூளா. இரத. 13, சுயம். 93.

116. மூசுதே னிருலின் மூச மொய்திரை யியம்பி யாங்கும்
ஓசையென் றுணரி னல்லா லெழுத்துமெய் யுணர்த லாகாப்
பூசுசாந் தொருவர் பூசிற் றெழுவர்தம் மகலம் பூசி
மாசன மிடம்பெ றுது வண்கடை மலிந்த தன்றே.

இருலின்மூசு தேன்போல மூச. உம்மை : சிறப்பு. ஓரோசையும் பாடம். பூசு சாந்து - நன்கு மதித்த சாந்து. பூசி - பூச.

(இ - ள்.) மாசனம் போக்கிடம்பெறுமல் ஒருவர் பூசிற்று எழுவர்தம் அகலம் பூசும்படி மூச ஆங்குப்பிறந்த ஓசையும் மொய்திரைபோல இயம்பி ஓசையென்று உணர்தலன்றி எழுத்தின் வடிவு உணர்தலாகா ததாய்க் கடையிலே மலிந்ததென்க.

நான்குசாதியும் [1] அநுலோமப் [2] பிரதிலோமரும் [3] சங்கரசாதியும் பற்றி [4] எழுவர் என்றுர். (அஎ)

117. மெய்யணி பசும்பொற் சுண்ண மேதகு நான நீரின்
ஐதுபட் டொழுகி யானை யழிமதங் கலந்து சேறுய்ச்
செய்யணி கலன்கள் சிந்தி மாலையு மதுவு மல்கி
வெய்தடி யிடுதற் காகா வீதிகள் விளம்ப லுற்றேன்.

அணிசுண்ணம், ‘ [1] உண்டசோறு ’ போல் நின்றது; [2] மிச்சில் கவிழ்த்தல் மரபு. செய்யணிகலம் - அரிதிற்செய்த கலம். மாலையினும் கலத்தினுந் தீண்டுதற்கு அடிநாணிற்று, தமது நலத்தான்.

(இ - ள்.) அணிந்துமிக்க சுண்ணம் நானத்தாலும் பனிநீராலும் இளகுதல் பட்டு வீதியில் ஒழுகுதலின், அதனேடு மதமுங்கலந்து மதுவு மல்கிச் சேறுய்ச் சிந்தி விரைய அடியிடுதற்காகா வீதிகள் கூறலுற்றேனென்க.

இவை [3] பீடிகைத்தெருவொழிந்தன. (அஅ)

---

116. இருல் - தேன்கூடு. மொய்திரை - கடல். எழுத்துமெய் - எழுத்தின் வடிவம்; எழுத்தின் வடிவம் உணர்தலாகா ஓசை : கம்ப. பம்பைப். 7; பூசுசாந்து............பூசி : சிலப். 5 : 226.

(மேற்.) அடி, 3-4 : சிலப். 5 : 224-34, அடியார்.

(உரை) [1] அனுலோமர் - உயர்குலத் தந்தைக்கும் இழிகுலத் தாய்க்கும் பிறந்தவர். [2] பிரதிலோமர் - இழிகுலத்தந்தைக்கும் உயர்குலத் தாய்க்கும் பிறந்தவர். [3] சங்கரசாதி - பலவகை வருணக் கலப்பாற் பிறந்த சாதி. [4] எழுவர் : “உத்தம குலத்து நாற்பெருங் குடியு முயர்ந்தவு மிழிந்தவு மயங்க, வைத்தவு மான புறக்குடி மூன்றும்” (திருவிளை. நகரங்கண்ட. 45)

117. நானநீர் - நானமும் பனிநீரும். அணிசுண்ணம் - அணியப்பட்டு மிக்க சுண்ணம். அழிமதம் - மிக்க மதம்.

(மேற்.) அடி, 1-2 : பிரயோக. காரகப். 5.

(உரை) [1] உண்டு மிக்க சோறு. [2] மிஞ்சிய பொருளைக் கொட்டி விடுதல். [3] கடைத்தெரு (சிலப். 5 : 41)

(வேறு)

118. முழவணி முதுநகர் முரசொடு வளைவிம
விழவணி மகளிர்தம் விரைகம ழிளமுலை
இழையணி யொளியிள வெயில்செய விடுபுகை
மழையென மறையின பொலிவின தொருபால்.

(இ - ள்.) ஒருபால், முழவுநிரைத்த கோயில்களிலே முரசும் வளையும் விம்முதலால், அவ்விழவிற்கு [1] ஒப்பித்த மகளிருடைய முலையில் அணிந்த இழையில்ஒளி இளவெயிலை உண்டாக்கும்படி இடுகின்ற புகை மழையென ஞாயிற்றை.மறைத்த பொலிவினையுடைத்தாயிற்றென்க.(அகூ)

119. குடையொடு குடைபல களிறொடு நெரிதர
உடைகட லொலியினொ டுறுவரர் பலிசெல
முடியொடு முடியுற மிடைதலின் விடுசுடர்
கொடியுடை மழைமினிற் குலவிய தொருபால்.

உடைகடலொலி - உடைகடலொலிபோலும் ஒலி.

(இ - ள்.) ஒருபால், அரசனைக் குடையும் குடையும் களிறுங் களிறும் பல நெருங்கிச் சேவித்தல் காரணமாகத் தேவருடைய பலி நடத்தலாலே, அதனைச் சேவிக்கும் அரசர் முடியுமுடியும் நெருங்குதலின் விடுசுடர் மழையின் மின்போற் குலவியதென்க.

இது, செல்வமுண்டாதற்குப் பலிநடக்குமென்றார். இனிப் பலிநடத்தலிற் குடைமுதலியன நெரிதர முடி நெருங்கிற்றென்றுமாம். (கூo)

120. பூத்தலை வாரணப் போர்த்தொழி லிளையவர்
நாத்தலை மடிவிளிக் கூத்தொடு குயிறரக்
காய்த்துறு தமனியத் துகளொடு கடிகமழ்
பூத்துகள் கழுமிய பொலிவின தொருபால்.

---

118. வளை - சங்கு. முரசும் சங்கும் : முருகு. 120-21. விம - விம்ம. இடுபுகை - கோயில்களிலே இட்ட புகை. மழை - மேகம். மறையின - மறைத்த.

(உரை) [1] ஒப்பித்த - அலங்கரித்த.

119. நெரிதர - நெருங்க. உறுவரர் - தேவர். பலி - பூசை. கொடி - ஒழுங்கு.

120. பூத்தலை வாரணம் - தோன்றிப் பூவைப்போன்ற சூட்டை யுடைய கோழி (சீவக. 73). கோழிப் போர் : சீவக. 73. நாத்தலைமடி விளி - நாவினது நுனியை மடித்துச் செய்யும் ஒலி ; இது சீழ்க்கையெனவும் வீளையெனவும் வழங்கும் (சீவக. 447); "மடிவிடு வீளையர்" (குறிஞ்சிப். 161); "வில்லுடை வீளையர்" (குறுந். 272); "இடையன், மடிவிடு வீளை" (அகநா. 274); "வீளையோட்டின் வெருவவெய்து" (பெருங். 1. 55 : 64). கழுமிய - மயங்கிய.

பூ - தோன்றிப்பூ. காய்த்துறு - காய்த்தலுற்ற.

(இ - ள்.) ஒருபால், கோழிப்போரின் வெற்றியைத் தமதாகவுடைய இளையவர் சீழ்க்கைக் கூத்தோடு நெருங்குதலான், அப்பொழுது சிந்தும் பொற்றுகளும் பூத்துகளும் மயங்கின பொலிவினதென்க. (கூக)

121. மைந்தரொ டூடிய மகளிரை யிளையவர்
அந்துகில் பற்றலிற் காசரிந் தணிகிளர்
சுந்தர நிலமிசைச் சொரிதலின் மின்னணிந்
திந்திர திருவிலி னெழிலின தொருபால்.

(இ - ள்.) ஒருபால், கணவரோடூடிய மகளிரை [1] அவர் துகில்பற்றலிற் காசு கோவையற்று நிலத்தே விசையோடே சிந்துதலின், ஒளியை யணிந்து வானவில்லின் எழிலினதென்க.

சுந்தரம் - நன்மை. (கூஉ)

122. வளையறுத் தனையன வாலரி யமைபதம்
அளவறு நறுநெயொ டடுகறி யமைதுவை
விளைவமை தயிரொடு மிசைகுவிர் விரையுமின்
உளவணி கலமெனு முரையின தொருபால்.

(இ - ள்.) ஒருபால், வளையை நுண்ணியதாக அறுத்தாற்போன்றனவாகிய வாலிய அரிசியாலமைத்த சோற்றையும் நெய்யால் அட்ட கறியையும் முற்றின தயிராலமைத்த துவையினையும் மிசைகுவீராக விரையுங்கோள்; உண்டால் தருதற்கு அணிகலமுளவெனும் உரையினதென்க.

ஒடு, எண்ணொடுவுமாம். வாலவிழும் பாடம். (கூங)

123. வரைநிரை யருவியின் மதமிசை சொரிவன
புரைநிரை களிறொடு புனைமணி யியறேர்
விரைநிரை யிவுளியொ டிளையவர் விரவுபு
குரைநிரை குளிர்புனல் யாற்றின தொருபால்.

---

(மேற்.) அடி, 1 : கல். ‘பாய்திரை’, 28 - 9, மயில்.

121. மைந்தர் ஊடிய மகளிர் துகிலைப் பற்றுதல் : சீவக. 91, ந. காசு - பல நிறமுள்ள மணிகள்.

(உரை) [1] அவர் - கணவர்.

122. வளைஅறுத்தனையன வாலரி - சங்கை அறுத்தாற்போன்றனவாகிய வெள்ளிய அரிசியால் (கந்த. வில் - வதை. 12). பதம் - உணவு. நெய்யொடு - நெய்யால். துவை - துவையல். விளைவமைதயிர் : “பாறை படுதயிர்” (சீவக. 426).

123. புரை - உயர்ச்சி. இயல் தேர் - செல்லுகின்ற தேர். விரவுபு - கலந்து. குரை - ஆரவாரிக்கின்ற.

(இ - ள்.) ஒருபால், [1] மலையொழுங்கின் அருவியைத் தம்மேலே சொரிந்து கொள்வனபோல மதத்தை மேலே சொரிவனவாகிய உயர்ச்சியையுடைய களிற்ருேடும் தேரிற்பூண்டாற் செலவுவிரைந்த இவுளியோடும் இளையவர் விரவி நிரைத்த யாற்றினதென்க.

அருவிபோல் வீழ்கின்ற மதமென்பாருமுளர். மிகையும் பாடம். (கூச)

124. வரிவளை யரவமு மணிமுழ வரவமும்
அரிவளர் கண்ணிய ரணிகல வரவமும்
புரிவளர் குழலொடு பொலிமலி கவினிய
திருவிழை கடிமனை திறவிதின் மொழிவாம்.

புரிவளர்குழல் - நரம்பிடத்து இசைவளர்தற்குக் காரணமாகிய குழல்; "[1] குழல்வழி யாழெழீஇத் தண்ணுமைப் பின்னர், முழவியம்ப லாமந்திரிகை" (கூத்தநூல்). புரி - விருப்பமுமாம்.

(இ - ள்.) குழலொடு வளையரவமும் முழவரவமும் கலவரவமும் [2] கவினிய மனைகளைச் செவ்விதாகக் கூறுவாமென்ருரென்க.

இஃது அரசற்குரியவர் இருப்பு. (கூரு)

(வேறு)

125. பாவை யன்னவர் பந்து புடைத்தலிற்
றூவி யன்னம் வெரீஇத் துணை யென்றுபோய்க்
கோவை நித்தில மாடக் குழாமிசை
மேவி வெண்மதி தன்னொ டிருக்குமே.

(இ - ள்.) மகளிர் பந்தடித்தலின் அன்னம் அவ்வோசைக்கு வெருவி மதியை இனமென்று கருதிக் கூடப்போய் மாடங்களின்மேலே அம்மதியோடே மேவியிருக்குமென்க.

[1] மதி இயங்குந்தோறும் தானும் இயங்கிற்று. (கூசு)

---

(உரை) [1] அருவிகளை யேற்று விளையாடுதல் யானைக்கு இயல்பு.

124. கண்ணியர் - மகளிர். திறவிதின் - செவ்விதாக.

(உரை) [1] இறை. 40, மேற்; "குழல்வழி நின்றதி யாழே யாழ்வழித், தண்ணுமை நின்றது தகவே தண்ணுமைப், பின்வழி நின்றது முழவே முழவொடு, கூடிநின் றிசைத்த தாமந் திரிகை" (சிலப். 3 : 139-42) என்பதிலும் இம்முறை அமைந்துள்ளது. [2] கவினிய - அழகு பெற்ற.

125. பாவையன்னவர் - கொல்லிப் பாவையைப் போன்ற வடிவழகையுடைய மகளிர். மகளிர் பந்தாடுதல் : சீவக. 150. கோவை நித்தில மாடம் - முத்துமாலைகளை அணிந்த மாளிகை.

(உரை) [1] இது தாற்பரியம்.

126. திருவ நீணகர்ச் செம்பொனி னீடிய
உருவ வொண்கொடி யூழி னுடங்குவ
பரவை வெங்கதிர்ச் செல்வன பன்மயிர்ப்
புரவி பொங்கழ லாற்றுவ போன்றவே.

பரவை - பரத்தல்.

(இ - ள்.) அத்திருவையுடைய மனைகளில் நீடிய கொடி முறையால் அசைவன, செல்வனுடைய புரவியை அழலாற்றுவபோன்றனவென்க. (கஎ)

127. இழைகொள் வெம்முலை யீர முலர்த்துவார்
விழைய வூட்டிய மேதகு தீம்புகை
குழைகொள் வாண்முகஞ் சூழ்குளி ரங்கதிர்
மழையுண் மாமதி போன்மெனத் தோன்றுமே.

இழை தான்விரும்பிக்கொண்ட வெவ்விய முலையிலே கணவர் பூசிய சந்தன முதலியவற்றின் ஈரத்தை உலர்த்துவார் ; தொழிற்பெயர்.

(இ - ள்.) கணவர் விழைய ஈரமுலர்த்துவாரூட்டிய புகைசூழ்முகம் மழையுட் [1] குளிரும் கதிர்மதிபோலுமெனத் தோன்றுமென்க. (கஅ)

128. செம்பொற் கண்ணி சிறுர்களை ந் திட்டவும்
அம்பொன் மாலை யவிழ்ந்துடன் வீழ்ந்தவும்
தம்பொன் மேனி திமிர்ந்ததண் சாந்தமும்
வம்புண் கோதையர் மாற்று மயலரோ.

(இ - ள்.) மகளிர் தம்மேனி திமிர்ந்த சாந்தமும் மயிர்குலைந்து சோர வீழ்ந்த மாலையும் சிறுர் களைந்த கண்ணியும் [1] சேடியர் மாற்றும் துராலென்க.

வண்டுகள் புதுமையைஉண்ட பழமாலையைச் சூடுதலிற் சேடியரா யிற்று. " கண்டுகை விட்ட மயல் " (நாலடி. 43) என்றார் பிறரும். (கக)

126. திருவநீணகர் - செல்வத்தையுடைய நீண்ட வீடுகளில் ; திருவம் : அம், அசை. ஊழின் - முறைப்படி. செல்வன என்றார் புரவிகள் ஏழாதலின் ; " ஈசன சாந்து மெருக்கு மணிந்து " (திருச்சிற். 74). அழலாற்றுவ - வெப்பத்தைத் தணிப்பன.

127. விழைய - கணவர் விரும்ப. குழை.........தோன்றும் : " ஒண் குழை திகழு மொளிகெழு திருமுகம்.........மழைமாய் மதியிற் றோன்றுபு மறைய " (மதுரைக். 448-52). போன்ம் - போலும்.

(உரை) [1] குளிரும் - தங்கும் (சீவக. 494, ந.)

128. கண்ணி - தலையிற் சூடும் மாலை. பொன்மேனி - பொன்னைப் போன்று ஒளிவிடும் மேனி. திமிர்ந்த - பூசிய. வம்பு - புதுமை. மயல் - குப்பை. மு. பெருங். 2. 2 : 90-102.

(உரை) [1] சேடியர் - தோழியர். துரால் - செத்தை.

129. வேரி யின்மெழுக் கார்ந்தமென் பூநிலத்
தாரி யாகவஞ் சாந்தந் தளித்தபின்
வாரி நித்திலம் வைப்பபொற் பூவொடு
சேரி தோறிது செல்வத் தியற்கையே.

அரி - ஐம்மை; [1] விகாரம். ஆரி - அழகென்றுமாம்; ஆரியாக - மேலாக வென்றுமாம். மேலும், "தளித்த சுண்ணம்" (சீவக. 1330) என்ப. வேரி - [2] இருவேரியுமாம்.

(இ - ள்.) நாற்றமும் தோற்றமும் இனியவற்றான் மெழுகிய மெழுக்கு ஆர்ந்த வேரியையுடைய பூநிலத்தே [3] ஐதாகத் தொழில்படச் சாந்தைப் பூசின பின்பு பொற்பூவோடு நித்திலத்தையும் வைப்பார்கள்; சேரிதோறும் செல்வத்தியற்கை இத்தன்மைத்தென்க. (கOO)

130. கருனை வாசமுங் காரிருங் கூந்தலார்
அருமை சான்ற வகிற்புகை வாசமும்
செருமிச் சேந்துகண் ணீர்வரத் தேம்பொழில்
உரிமை கொண்டன வொண்புற வென்பவே.

கூந்தலிலார்ந்த புகையென வினைத்தொகை; கூந்தலார், பெயருமாம்.

(இ - ள்.) புறவுகள் பொரிக்கறியினது வாசப்புகையும் அகிலினது வாசப்புகையும் செருமிக் கண்ணீர் வருதலாலே பொழிலைத் தாம் இருத்தற்குரிய இடமாகக் கொண்டனவென்க. (கOக)

131. நறையு நானமு நாறு நறும்புகை
விறகின் வெள்ளி யடுப்பினம் பொற்கலம்
நிறைய வாக்கிய நெய்பயி லின்னமு
துறையு மாந்தர் விருந்தொடு முண்பவே.

நறை - [1] நறைக்கொடி. நானம் - தூவியெரிக்கும் புழுகு. நிறைய - [2] மடைநூல் விதியிற்குறையாமல். விருந்துபெறற்கருமையின், உம்மை சிறப்பும்மை.

---

129. வேரி - வாசனை. தளித்த - பூசிய. வாரி நித்திலம் - கடலில் உண்டான முத்து.
(மேற்.) அடி, 4 : நன். இடை. 2, மயிலை.; சங்கர.
(உரை) [1] அரி ஆரியென்றனது. [2] வெட்டிவேர். [3] மெல்லிதாக.
130. வாசம் - வாசனை. கூந்தல் ஆர் - கூந்தலில் நிறைந்த. செருமி - நிரம்பி. புறவு - புறா. புறவு புகைக்கு அஞ்சி ஓடுதல் : பட்டினப். 54-8.
131. வாக்கிய - சொரிந்த.
(உரை) [1] நறைக்கொடி : "குறவர் கொன்ற குறைக்கொடி நறைப் பவர்" (நற். 5); "நறைக்கொடிகொண்டு" (ஐங். 276). [2] மடைநூல் - பாகசாஸ்திரம்; "கந்துகக் கருத்து மடைநூற் செய்தியும்" (மணி. 2 : 22)

(இ - ள்.) வெள்ளியடுப்பிலே நறையும் நானமும் நாறும் நறும் புகை விறகாலாக்கின அமுதை மாந்தர் பொற்கலத்தே விருந்தோடு முண்பரென்க.

விறகு - சந்தனமுதலியன. (கS௨)

132. பாளை மென்கமு கின்பழ மெல்லிலை
நீள்வெண் மாடத்து நின்றுகொண் டந்நலார்
ஆளிய மொய்ம்பர்க் களித்தணி சண்பகம்
நாள்செய் மாலை நகைமுடிப் பெய்பவே.

மணமெல்லிய பாளை. வெள்ளிலை பாடமாயின், [1] கொம்பிலே வெளுத்ததாம். நகைமுடி - முத்தமாலையையுடைய முடி.

(இ - ள்.) நல்லார் மாடத்தேநின்று பாக்கையும் வெற்றிலையையும் பறித்துக்கொண்டு மொய்ம்பர்க்குக்கொடுத்து அவரணிந்த சண்பக மாலையை வாங்கி நாட்காலமன்றாயினும் வேட்கைமிகுதியால் தமது முடியிலே பெய்வரென்க.

இனி நாட்காலத்தே செய்த சண்பகமாலையணிந்த முடியிலே அக் காலத்திற்கு உரிய பூக்களைப் பெய்வரென்றுமாம். (கS௩)

133. எழுது வாணெடுங் கண்ணிணை யந்நலார்
மெழுகு குங்கும மார்பிடை வெம்முலை
உழுது கோதையுஞ் சாந்து முவந்தவை
முழுதும் வித்தி விளைப்பர் திளைப்பவே.

மையெழுதுங் கண். குங்கும மெழுகும். திளைப்பன, கரணங்கள்.

(இ - ள்.) அம்மகளிர் கணவர்மார்பிலே முலையாலே உழுது கோதையையும் சாந்தையும் வித்தித் திளைப்பனவற்றில் தாங்கள் உவந்தனவற்றை முழுதும் விளைப்பரென்க. (கS௪)

134. குஞ்சி மேலனிச் சம்மலர் கூட்டுணும்
அஞ்சி லோதிய ரம்மலர்ச் சீறடி
மஞ்சு தோய்மணி மாடத்து மல்குபூம்
பஞ்சி மேலும் பனிக்கும் பனிக்குமே.

---

132. மெல்லிலை - வெற்றிலை (சீவக. 62). ஆளிய மொய்ம்பரென்றது கணவரை; ஆளி - சிங்கம். அ : அசை. சீவக. 517.

(மேற்.) அடி, 4 : கல். 'நிணமுயிர்,' 23-4, மயில். 3-4 : நன். 409, மயிலை.

(உரை) [1] கொம்பிலே வெளுத்த வெற்றிலை சிறந்த தென்பர்.

133. எழுது - மை யெழுதிய. மார்பு, ஆடவருடையது. வித்தி - விதைத்து. திளைப்ப - இடை விடாது அனுபவிப்பன.

134. குஞ்சிமேல் - கணவருடைய தலையின் மேலும். அனிச்சம் மலர் கூட்டுணும்-அனிச்சப்பூவினது மென்மைத்தன்மையைக் கொள்ளை

கூட்டுணும் - கவரும்.

(இ - ள்.) ஓதியருடைய அனிச்சமலர்கூட்டுணுஞ் சீறடி ஆடவர் குஞ்சி மேலும் பனிக்கும்; பஞ்சிமேலும் பனிக்குமென்க.

கோபத்தாலும் கரணத்தாலும் நடுங்கிற்றென ஊடலுங்கூடலு முணர்த்திற்று; "கொல்புனற் றளிரி னடுங்குவன ணின்று" (பதிற். 52) என்றார் பிறரும். [1] நகராதலின், ஊடற்குக் காரணங் கூறுராயினர். "எஞ்சுபொருட் கிளவி செஞ்சொ லாயிற், பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல்" (தொல். இடை. 36) என்பதனுற் குஞ்சிமேலுமென்று உம்மை கொடாராயினர். (கூ௦௪)

135. தூம மேகம முந்துகிற் சேக்கைமேற்
காம மேநுகர் வார்தம காதலால்
யாம மும்பக லும்மறி யாமையாற்
பூமி மாநகர் பொன்னுல கொத்ததே.

ஏகாரம், தேற்றம். காமமே: ஏகாரம், பிரிநிலை. "யாமத்து மெல்லையும்" (கலித். 139) என்றார் பிறரும். பூமியின். பூமென்மா நகரும் பாடம்; பூ: வடமொழி.

(இ - ள்.) சேக்கைமேல் நுகர்வார் தம்முடைய காதலால் இரவும் பகலும் அறியாமையின், அந்நகர் பொன்னுலகத்தை ஒத்ததென்க (கூ௦௫)

136. அரவு கான்றிட்ட வங்கதிர் மாமணி
உரவு நீர்முத்து முள்ளுறுத் துள்ளன
இரவன் மாந்தர்க்கு மின்னவை யீவதோர்
புரவு பூண்டனர் பொன்னகர் மாந்தரே.

உரவுநீர் - உலாவுநீர். [1] உம்மை - இழிவுசிறப்பு.

(இ - ள்.) மணியுமுத்தும் உள்ளுறுத்து இன்னவை இரவன்மாந் தர்க்கும் உள்ளனவாதலாற் பொன்னகர்மாந்தரே புரவு பூண்டனரென்க.

---

கொள்ளும். அம் சில் ஓதியர் - அழகிய சிலவாகிய கூந்தலையுடைய மகளிர். பஞ்சி - பஞ்சு. இங்கே மெத்தையைக் குறித்தது.

(உரை) [1] ஊடலென்னும் உரிப்பொருளையுடைய மருதநிலத்துள்ள நகர் பரத்தையர்சேரியை உடையதாகலின் இங்ஙனம் உரை எழுதினார்.

135. தூமமே - அகில் முதலியவற்றின் புகைகளே. துகிற்சேக்கை வெள்ளிய ஆடையையுடைய படுக்கை. யாமம் - இரவு; "இடையிருள் யாமம்" (மணி. 16 : 19). இரவும் பகலும் தெரியாமையால் நகரம் சுவர்க்கத்தைப் போலும்: சூளா. நகர. 15.

136. கான்றிட்ட - கக்கிய. உள்ளுறுத்து - உள்ளிட்டு. புரவு - பாது காத்தல். பொன்னகர் - இராசமாபுரம்.

(உரை) [1] மாந்தர்க்கும் என்பதிலுள்ள உம்மை.

இஃது இகழ்ச்சி. ஏகாரம், எதிர்மறை. இனி இன்னவை இரவன் மாந்தர்க்கும் உள்ளனவாயிருத்தலிற் பின் மாந்தரே புரவுபூண்டா ரென்றது [2] உயிர் உறுப்புமுதலியன கொடுத்தற்குத் துணிந்தாரிவரே யென்றுமாம்; ஏகாரம், தேற்றம். (கoஎ)

137. முல்லை யங்குழ லார்முலைச் செல்வமும்
மல்லன் மாநகர்ச் செல்வமும் வார்கழற்
செல்வர் செல்வமுங் காணிய வென்பர்போல்
எல்லி யும்மிமை யாரிமை யாததே.

(இ - ள்.) இமையார் இமையாதிருந்த இருப்பு, [1] நீயிர் இம்மூன்று செல்வத்தையும் விடாமற்காண்டற்கு யாம் விழித்திருந்தேமென்று தம் கண்ணை நோக்கிக் கூறுவாரைப்போலே இருந்ததென்க.

மூன்றுவன: போகமும் செல்வமும் வீரமும். 'என்பவே' என்பது பாடமாயின், இமையார், நீயிர் இவை காண்டற்கு யாங்கள் இமையா திருந்ததென்று கண்ணிற்குக் கூறுவாரென்க. ஏகாரம் ஈற்றசை. (கoஅ)

138. முழவுஞ் சங்கமு முன்றின் முழங்குவ
விழவும் வேள்வும் விடுத்தலொன் றின்மையாற்
புகழ லாம்படித் தன்றிது பொன்னகர்
அகழ்தன் மாக்கட லன்னதொர் சும்மைத்தே.

வேள்வி - விசேடமான நாட்களில் நிகழ்வன; வேள்வென ஈறு திரிந்தது.

(இ - ள்.) விழவினும் வேள்வியினும் ஒன்றைக் கைவிடுதலின் மையான், முழவும் சங்கும் முழங்குவன, கடலன்னதொரு சும்மைத்தாத லான், இப்பொன்னகர் புகழலாம்படித்தன்றென்க. (கoகூ)

---

[2] உயிர் உறுப்பு முதலியன கொடுத்தலைத் ததீசி, சிபி, வலன், புத்தன் முதலியோரிடத்துக் காண்க; குறள், 233, பரி. இந்நகரத்திற் பெற்றுக் கொள்வாரில்லை யென்றபடி.

137. முல்லை, கற்பிற்குச் சூடுவது (சீவக. 624, 680, 2438, 2542, ந; சிறுபாண். 30, அடிக்.) மல்லல் - வளம். காணிய - காண. எல்லி - இரவு. இமையார் - தேவர். தேவர் இமையாமை: அறநெறிச். 49.

(உரை) [1] நீயிரென்றது தம் கண்களை.

138. முழவு - மத்தளம். முன்றில் - முற்றம். வேள்வி - யாகம். விழவும் வேள்வும்: "விழவொலியும் வேள்வொலியு மாறன்" (தே. திருநா.); பெரியதிரு. 6. 4 : 8; பூசையை யாகமென்பர் சைனர். அகழ்தல் மாக்கடல் - தோண்டப் படுதலையுடைய பெரிய கடல்.

139. திங்கண் முக்குடை யான்றிரு மாநகர்
எங்கு மெங்கு மிடந்தொறு முண்மையால்
அங்கண் மாநகர்க் காக்க மருதகேோர்
சங்க நீணிதி யாற்றழைக் கின்றதே.

சங்கமென்னும் பேரெண்ணையுடைய தொன்றுபட்ட நிதியோடே.

(இ - ள்.) ஸ்ரீகோயில் தெருவிடமெங்கும் உண்டாகையினலே, மாநகர்க்கு இடந்தோறும் நிதியோடே அருதகேோராக்கம் தழையாநின்ற தென்க.

இனி, மாநகருண்மையால் நகர்க்கு ஆக்கமருது; அவ்வாக்கம் ஒரு சங்க நிதியாலே தளிர்க்கின்றதென்றுமாம்; சங்கநிதி - அரசன். (கசo)

(வேறு)

140. தேன்றலைத் துவலை மாலை பைந்துகில் செம்பொன் பூத்து
ஞான்றன வயிர மாலை நகுகதிர் முத்த மாலை
கான்றமிர் தேந்தி நின்ற கற்பகச் சோலை யார்க்கும்
ஈன்றருள் சுரந்த செல்வத் திராசமா புரம தாமே.

தேனைத் தலையிலே துவலையாகவுடைய மாலைமுதலியவற்றைப்பூத்து நான்றனவாகிய வயிரமாலை முதலியவற்றைத் தோற்றுவித்து, அமிர்தை யேந்தி நின்ற கற்பகச்சோலையென்று ஊரிற்கு ஒரு பெயர் கூறிற்று; இதற்கும் அவை உண்மையின்.

(இ - ள்.) அங்ஙனம் கூறிய ஊர், யார்க்கும் அருளையீன்று செல் வத்தைச் சுரந்த கற்பகச்சோலை; அஃது இராசமாபுரமென்னும் பெயரை யுடைத்தாமென்க.

---

139. திங்கள் முக்குடையான் : சிலப். 11 : 1. முக்குடைகளாவன : சந்திராதித்தியம், நித்தியவிநோதம், சகலபாசனம் என்பன. நகர் - அருக தேவனுடைய கோயில். இராசமாபுரத்துள்ள சிலையுமொன்றில் 'யம தரர்' என்று பெயர் பெற்ற பெரிய சைனமுனிவர் ஒருவர் இருந்ததாக, கத்திய சிந்தாமணி முதலியவற்றால் தெரிகின்றது.

140. துவலை - திவலை. ஞான்றன - தொங்கின. கற்பகச் சோலை : கற்பகங்கள் பத்து வகைப்படு மென்றும் அவை மாலை முதலியவற்றை அளிக்குமென்றும் சைனநூல்கள் கூறுமாதலின் கற்பகச் சோலை என்றார்; சீவக. 365, 1716, 2841, 2997-ஆம் பாடல்களையும் அவற்றின் உரை களையும், 2997-ஆம் பாடலின் அடிக்குறிப்பையும் பார்க்க.

இனி, தான்சுரந்த அருளாலே யார்க்கும் மறுமையிற் கற்பகச் சோலையையீன்று அச்சோலையிற் செல்வத்தைத் தன்னிடத்தேயுடையது இராசமாபுரமென்றுமாம்; என்றது: இதில் வாழ்வாரருளைக் கண்டு பிறர்க்கும் அருள் பிறந்து சுவர்க்கமெய்துவரென்றவாறு.

இத்துணையும் நகரின் சிறப்புக் கூறினார். (கசக)

## கோயிற் சிறப்பு

### (வேறு)

141. வேக யானை மீளிவேல் வெய்ய தானை யையகோன்
மாக நீண்ம ணிம்முடி மாரி வண்கை மாசில்சீர்
ஏக வாணை வெண்குடை யிந்ந கர்க்கு மன்னவன்
நாக நீர நன்னகர் நன்மை தன்னஞ் செப்புவாம்.

தானையென்றது [1] ஒழிந்த மூன்றுபடையை. ஐய - வியக்கத்தக்க. தேவர் புகழுமுடியென்று குலநன்மை கூறினார். சீர் - மிக்கபுகழ். ஏகவாணை - பொதுவறவாளுதல்.

(இ - ள்.) யானை முதலியவற்றையுடைய மன்னவனது கோயிலின் நன்மையைச் சிறிது கூறுவாமென்றாரென்க. (கசஉ)

142. நீணி லம்வ குத்துநீர் நிரந்துவந் திழிதரச்
சேணிலத் தியற்றிய சித்திரச் சுருங்கைசேர்
கோணி லத்து வெய்யவாங் கொடுஞ்சுறத் தடங்கி டங்கு
பூணி லத்து வைத்ததோர் பொற்பினிற் பொலிந்ததே.

---

141. வேகயானை......தானை: கம்ப. திருவவ. 22. மீளி - வலி. நீண்முடி: சீவக. 264, 286. ஏக ஆணை: "ஏகச் செங்கோ லேயர் பெருமகன்" (பெருங். 2. 8 : 3). நாக நீர நன்னகர். நாகம் - தேவருலகம்; பவணலோகமுமாம் (சிலப். 1 : 21 - 2; பெருங். 4. 4 : 100). தன்னம் - சிறிது.

(மேற்.) அடி, 1 : கல். 'திங்கண்முடி', 40, மயில்.

(உரை) [1] ஒழிந்த மூன்று படை: தேர், குதிரை, காலாள்.

142. நிரந்து - வரிசையாகி. சேணிலத்து - புறத்தே உள்ள நிலத்திலிருந்து. சித்திரம் - அழகு. சுருங்கை: இது புறத்தேயுள்ள அகழியினின்றும் கோயில் அகழிக்கு நீர் வருதற்காகச் செய்யப்பட்டுள்ள கால்வாய்; வீதியிற் செல்லும் யானைகள் தன்னுள் விழாதிருத்தற் பொருட்டு இது மேலே மூடப்பட்டிருக்கும்; இது கரந்து படை எனவும் கரந்துறை எனவும் வழங்கும் (பரி. 20 : 104; சிலப். 14 : 63 - 5; மணி. 12 : 79, 28 : 5 - 6; கம்ப. ஊர்தேடு. 145). கோணிலத்து வெய்யவாம் கொடுஞ் சுறத்தடங்கிடங்கு - வந்தோரைக் கொல்லுதற்குரிய ஆழமான நீரில் மிக்க வேகத்தையுடையனவாகிய கொடிய சுறாமீன்களையுடைய பெரிய அகழி. சுறாமீன் கரையில் வருவதற்கு அஞ்சி ஆழத்திற் சென்றால் ஆளைக் கொல்லுதல்: சீவக. 95.

(இ - ள்.) நீர் நிரந்துவந்திழியும்படி, நீணிலத்தை வெட்டிப் [1]புறம்பில் அகழ்தொடங்கிப்படுத்த வழிசேர்ந்த [2]கிடங்கு நிலமகளுக்குப் பூணிட்டதோர் அழகுபோலப் பொலிந்ததென்க.

சுற, புறனடையாற்கொள்க (தொல். உயிர்மயங்கு. 32). சுருங்கை - [3]கரந்த கற்படை. (கசங)

143. இஞ்சி மாக நெஞ்சுபோழ்ந் தெல்லை காண வேகலின்
மஞ்சு சூழ்ந்து கொண்டணிந்து மாக நீண்ட நாகமும்
அஞ்சு நின்னை யென்றலி ஞண்டு நின்று நீண்டதன்
குஞ்சி மாண்கொ டிக்கையாற் கூவி விட்ட தொத்ததே.

(இ - ள்.) மதிலானது மாகத்தின் நடுவைப்பிளந்து நாகத்தின் எல்லையைக் காண ஏகுதலின், அதனை மஞ்சு முற்படப்போகாமற்றடுத்துப் பின்பு காலைக்கட்டிக்கொண்டு, ஆகாயத்தேயுயர்ந்த நாகமும் நின்னை அஞ்சுமென்றலின், தான் [1]மேகபதத்தளவிலேநின்று தன் தலையினீண்ட கொடிக்கையாலே நம்மை வந்து காண்கவென்று கூவி விட்ட தன்மையையொத்தது, அவை அசைந்த தன்மையென்க.

குஞ்சி - கொடிநாட்டுங் குழி ; [2]கழையுமாம். (கசச)

144. முத்து மாலை முப்புரி மூரி மாம ணிக்கத
வொத்த நான்கு கோபுர மோங்கி நின்றொ ளிர்வன
சத்தி நெற்றி சூட்டிய தாம நீண்ம ணிவணன்
தத்தொ ளிம ணிம்முடித் தாம நால்வ போலுமே.

(இ - ள்.) மாமணிக்கதவையுடைய தம்மிலொத்த [1]நீலமணிக் கோபுரம் நான்கிலும் நின்று ஒளிர்வனவாகிய [2]சூலத்தினெற்றியிற் சூட்டிய முப்புரியாகிய முத்தமாலை, [3]தாமத்தையுடைய உலகளந்த மாயோன் முடியில் தாமம் நால்வன போலுமென்க.

---

(உரை) [1]புறம்பில் அகழ் - நகரமதிற் புறத்தேயுள்ள அகழி. [2]கிடங்கு - அகழ் ; இஃது அரசன் மனையைச் சூழ்ந்த மதிலின் புறத்தது. [3]மூடப்பட்டுள்ள கற்படுத்திய வழி.

143. மாக நெஞ்சு போழ்ந்து - ஆகாயத்தின் நடுவிடத்தைப் பிளந்து. நாகம் - தேவருலகம். குஞ்சி - தலை என்ற பொருள் சிறந்தது. கொடிக்கை - கொடியாகிய கை.

(உரை) [1]மேகபதம் - மேகங்கள் உள்ள இடம். [2]கழை - மூங்கில்.

144. முப்புரி முத்தமாலை - மூன்று வடமாகிய முத்து மாலைகள். மூரி - பெருமை. சத்தி - சூலம். மணிவணன் - திருமால். நால்வ - தொங்குவன.

(உரை) [1]திருமாலை உவமை கூறினமையால் நீலமணிக் கோபுரமென்றார். [2]சூலம் - இடி தாங்கி ; " பிறையணி மாளிகை சூலத்தவாய் " (திருச்சிற். 222). [3]தாமம் - ஒளி.

போன்றவும் பாடம். முப்புரியாகிய முத்தமாலையையுடைய கதவு மாம். தத்துதல் - வீசுதல். (கசரு)

145. சங்கு விம்மு நித்திலஞ் சாந்தொ டேந்து பூண்முலைக்
கொங்கு விம்மு கோதைதாழ் கூந்த லேந்து சாயலார்
இங்கி தக்க ளிப்பினு லெய்தி யாடும் பூம்பொழில்
செங்க ணிந்தி ரன்னகர்ச் செல்வ மென்ன தன்னதே.

சங்கு விம்மு நித்திலம் - சங்கு சூன்முற்றியீன்ற முத்து. செல்வம் : [1] ஆகுபெயர்.

**(இ - ள்.)** நித்திலத்தைச் சாந்துடனேந்திய முலையினையும் கூந்தலினையுமுடைய சாயலார் காமக்குறிப்போடு கூடிய களிப்பாற் சென்று ஆடும்பொழில் இந்திரன் நகரிற் கற்பகச்சோலை என்ன தன்மைத்து, அன்ன தன்மைத்தென்க. (கசசு)

146. வெள்ளி யானை மென்பிடி மின்னி லங்கு பைம்பொனாற்
றுள்ளு மானொ ருத்தலுஞ் செம்பொ னம்பொன் மான்பிணை
உள்ளு காம முள்சுட வேந்த னுங்கு றைவதோர்
பள்ளி மாட மண்டபம் பசுங்க திர்ப்ப வண்ணமே.

**(இ - ள்.)** வெள்ளியாற்செய்த களிறும் பைம்பொனாற்செய்த பிடியும் செம்பொனாற்செய்த ஒருத்தலும் அம்பொனாற்செய்த பிணையும் ஒன்றையொன்று உள்ளுங்காமம் வேந்தனுள்ளத்தே வேட்கைமிகுப்ப அச்சோலையில் அவன் உறைவதொரு மண்டபத்திற் பள்ளிமாடம் நாகருலகையொக்குமென்க.

இனி, வெள்ளியாலே யானையும் பிடியும் செய்தவென்றுமாம். (கசஎ)

147. கோழ ரைம ணிம்மடற் கூந்த னெற்றி யேந்திய
மாழை யந்தி ரள்கனி மாம ணிம ரகதஞ்
சூழ்கு லைப்ப சுங்கமுகு சூலு பாளை வெண்பொனல்
ஊழ் திரண்ம ணிக்கயி றூச லாட விட்டதே.

---

145. கொங்கு விம்மு கோதை - தேன் மிக்க மாலை. சாயலார் - மென்மையையுடைய மகளிர்.

(மேற்.) அடி, 1 - 2 : கல். 'கண்டகாட்சி', 48, மயில்.

(உரை) [1] செல்வம் அதனையுடைய கற்பகத்திற்கு ஆயிற்று.

146. மானொருத்தல் - ஆண்மான். பிணை - பெண்மான். பள்ளி மாடம் : பெருங். 1. 5 : 31, 3. 18 : 110. பவண்ணம் = பவணம் - நாக லோகம். (சீவக. 2853 ; பெருங். 3. 3 : 103). இது பலவகைப்பட்ட போகங்களிற் சிறப்புற்ற தென்பர் ; இது, சிலப். 1 : 21 - 2-ஆம் அடிகளாலும் அவற்றினுரையாலும் அறியப்படும்.

147. கோழரை - கொழுவிய அரை. மாழை - பொன்.

(இ - ள்.) பொன்னாற்செய்த பழத்திரளையும் மரகதமணியாற்செய்த குலையினையும் வெள்ளியாற்செய்த பாளையினையும், ஏந்திய கொழுவிய அரையினையும், நீலமணியாற்செய்த மடலினையுமுடைய [1]கூந்தற்கமுகின் நெற்றியில் [2]ஊசலாட விட்ட கயிறு முத்துவடமென்க. (கக அ)

148. மென்றி னைப்பி றங்கலு மிளிர்ந்து வீழ ருவியும்
குன்ற யன்ம ணிச்சுனைக் குவளை கண்வி ழிப்பவும்
நின்று நோக்கு மான்பிணை நீல யானை மன்னவன்
கன்று காமம் வெஃகிய காமர் காம பூமியே.

காமர் காமபூமி - காமனுக்கு விருப்பஞ் செய்கின்ற பூமி ; "[1]காமரை வென்ற கண்ணோன்" (திருச்சிற். 164) போல.

(இ - ள்.) நீலயானைமன்னவன் தழும்பிய காமத்தாலே விரும்பிய பூமியிடத்துச் செய்குன்றில், தினையையும், அதினின்றும் குதித்துவிழுகின்ற அருவியையும், மானும் பிணையும் அதன் அயலிற் சுனைக்குவளை காப்பார்கண்போல விழியாநிற்கவும், உண்பனவாக நின்று நோக்குமென்க.

பிறங்கல் - திரள். இவற்றைச் சித்திரமெனிற் [2]கோயிற்கு அங்கமாகிய [3]செய்குன்று கூறிற்றிலராவர். (ககக)

149. தீங்கு யின்ம ணந்துதேன் றுஞ்ச வண்டு பாண்செய
வேங்கை நின்று பொன்னுகுக்கும் வெற்பு டுத்த சந்தனம்
ஓங்கு பிண்டி சண்பக மூழி நாறு நாகமும்
நீங்க நீங்கு மின்னுயிர் நினைப்பி னின்றி ளஃகுமே.

[1] ஊழ், ஊழியெனத் திரிந்தது ; முறைமைப்பட அலர்ந்து நாறும்.

(உரை) [1]கூந்தற் கமுகு - ஒருவகைக் கமுகு. [2]கமுகமரம் மகளிர் ஊசலாடுதற் குரியது (சீவக. 68; திருவாரூர் நான்மணி மாலை, 20)

148. பிறங்கல் - குவியல். மணிக்குவளை - நீலமணி போன்ற குவளைப்பூ. கண் விழிப்ப என்றது சமாதி யென்னும் அணியாகும். மான் பிணை - மானும் பிணையும். நீலயானை - கரிய யானை ; சீவக. 645, 2195 ; பெருங். 1. 32 : 55 ; கருமையை நீலமென்றும் கூறுவர் ; "நீலக் குஞ்சி" (மணி. 22 : 154). கன்றுகாமம் : சீவக. 210.

(உரை) [1]'காமரென்னும் ரகரவீறு இழிவின்கண் வந்தது' (திருச்சிற். 164, பேர்.) [2]சீவக. 1496 - 8 ; பெருங். 1. 46 : 265 - 286. [3]கட்டுமலை.

149. மணந்து - சேரப்பெற்று. பாண் - பாட்டு. வேங்கை மலருக் குப் பொன். "பொன்னென மலர்ந்த வேங்கை" (அகநா. 188 : 8 - 9) பிண்டி - அசோகம். நாகம் - சுரபுன்னை ; ஒருவகை மரமுமாம் (பரி. 12 : 4). இளஃகும் = இளகும் - தளிர்க்கும் ; ஆய்தம் விரித்தல் விகாரம். "இளகு காடு" (சீவக. 1768)

(உரை) [1]ஊழ் - முறை.

(இ - ள்.) குயிலாகிய [2] காளங்கூடித் [3] தேனாகிய யாழ் தங்க வண்டு பாட அவற்றிற்குப் பரிசிலாக வேங்கை பொன்னைச்சொரியும் முற்கூறிய செய்குன்றைச் சந்தனமுதலியன சூழ்ந்தன; இக்குன்றையும் காவையும் நீங்க உயிர்நீங்கும்; நினைப்பின் உயிர் தளிர்க்குமென்க. (கஉ0)

150. முத்தம் வாய்பு ரித்தன மொய்க திர்ப்ப சும்பொனாற்
சித்தி ரத்தி யற்றிய செல்வ மல்கு பன்மணி
பத்தி யிற்கு யிற்றிவான் பதித்து வைத்த போல்வன
இத்தி றத்த பந்தெறிந் திளைய ராடு பூமியே.

(இ - ள்.) இளையர் பந்தாடுபூமிகள், முத்து விளிம்பிலே அழுத்தப் பட்டன; பொன்னாலே பண்ணப்பட்டன; மணி பத்தியிற் குயிற்றப்பட்டு வானை இவ்வுலகிலே இருத்தினாற்போல்வனவாகிய இத்திறத்தன வென்க. (கஉக)

151. வைத்த பந்தெடுத்தலும் மாலை யுட்க ரத்தலும்
கைத்த லத்தி னோட்டலுங் கண்ணி நெற்றி தீட்டலும்
பத்தி யிற்பு டைத்தலும் பைய ரவ்வி னாடலும்
இத்தி றத்த பந்தினோ டின்ப மெல்லை யில்லையே.

(இ - ள்.) பந்தைக் கையாற்றொடாதே காலாலே தட்டியெடுத்தலும் கரத்தலும் கையிலே கொள்ளலும் செல்ல ஓட்டுதலும் கண்ணியையுடைய நெற்றியிலே தீட்டுதலும் ஒருகாலைக்கு ஒருகாலுயரப் பத்தியாகப் புடைத்தலும் தாம் நிலையிலே நின்று அரவுபோலப் பரந்து உலாவுத லுண்டாம்படி புடைத்தலுமாகிய இக்கூற்றவாகிய அப்பந்தினோடுண் டான இன்பம் முடிவில்லையென்க. (கஉஉ)

[2] காளம் - ஒருவகை வாத்தியம். [3] தேன் - ஒருவகை வண்டு.

150. புரித்தன - பூரித்தன; " நன்மணி புரித்தன " (சீவக. 1203, ந.). பத்தியின் - வரிசையாக. வான் - தேவருலகத்தை. இளையர் - மகளிர். இச்செய்யுட் பொருளோடு, சீவக. 1953 - 5-ஆம் செய்யுட்கள் ஒப்பு நோக்கற் பாலன.

151. மகளிர் பந்தாடல்: பெருங். 4. 12 : 87-9; சூளா. சுயம். 201 - 4; பாகவதம், 8. 5 : 10.

150 - 51. பந்தாட்டத்தைத் தெரிவிப்பதில் இவற்றைப் போன்ற சந்தவின்ப முடையவை, " பொன்னிலங்கு " (சிலப். 29) முதலிய மூன் றும்; பந்தாடலைப்பற்றிய பலவகைச் செய்திகள், பெருங். 'பந்தடி கண்டது' (4 : 12) என்றும் பகுதியால் தெரியவரும்.

152. கூற்ற மன்ன கூர்நுதிக் குருதி வான்ம ருப்பிடைச்
சீற்ற முற்ற மன்னர்தஞ் சென்னி பந்த டிப்பன
ஊற்றி ருந்த மும்மதத் தோடை யானை பீடுசால்
காற்றி யற்பு ரவிதேர் கலந்து கௌவை மல்கின்றே.

கூற்றம் யானைக்குவமை. சீற்றமுற்ற - அரசன் வெருண்ட. ஊற்று இருந்த - இடைவிடாத.

(இ - ள்.) மருப்பிடையே மன்னர்தலையைப் பந்தடிப்பனவாகிய யானை புரவி தேர் இவை கூடி ஒலிமிக்கது, அவ்விடமென்க.

இவை, [1] அரசன் ஏறுவனவாதலின் உள் நிற்றல் இயல்பு. (கஉங)

153. கவ்வை யங்க ருவிசூழ்ந்து கண்ப டுக்கு மாடமும்
தெவ்வர் தந்த நீணிதி சேர்ந்த செம்பொன் மாடமும்
மவ்வ லங்கு ழலினர் மணிக்க லம்பெய் மாடமும்
இவ்வ லந்த வல்லவும் மிடங்க ளெல்லை யில்லையே.

(இ - ள்.) மனச்செருக்கால் ஆரவாரமுடைய வீரர்திரள், அரசனது பகையை மனத்தாலேநோக்கி யாமந்தோறுங் காத்துத் துயில்கொள்ளுமாடமும், திறைகிடக்குமாடமும், கலம் இட்டுவைக்கு மாடமுமாகிய இக்கூறப்பட்ட இடங்களும், கூருதொழிந்த ஆயுதசாலை முதலிய இடங்களும் முடிவில்லை யென்க.

கருவி - தொகுதி; ஈண்டு [1] ஆகுபெயர்; இனி, பகைவர்க்குக் [2]கவ்வையைச் செய்தலையுடைய ஆயுதங்கள் சூழ்ந்து நோக்கினர் கண்ணை அகப்படுக்கும் ஆயுதசாலையுமென்ப. (கஉச)

---

152. கூர் நுதி - கூர்மையான நுனியை யுடைய. சீற்றமுற்ற - சச்சந்தனுடைய கோபத்தை அடைந்த. மருப்பிடைச் சென்னி பந்தடிப்பன என்க. பீடுசால் - பெருமை மிக்க. காற்றியற் புரவி - காற்றைப் போல விரைந்து செல்லுதலையுடைய குதிரை. கௌவை - ஆரவாரம்.

(உரை) [1] சீவக. 81 - 2 ஆம் செய்யுட்களிற் புறநகரிலுள்ள யானைப் படை கூறப்பட்டது.

153. கருவி - இங்கே வீரருடைய தொகுதி. சூழ்ந்து - ஆராய்ந்து. தெவ்வர் தந்த நிதி - பகைவர் பணிந்து கொடுத்த திறை. மௌவல் - முல்லை. வலந்த - சொல்லப்பட்ட.

(உரை) [1] தொகுதி வீரருடைய திரளுக்கு ஆயிற்று. [2] கவ்வை - துன்பம்.

154. பூத்தகோங்கும்வேங்கையும்பொன்னிணர்செய்கொன்றையுப்
காய்த்து நின்று கண்டெறூஉங் காமர் வல்லி மாதரார்
கூத்த ரூத பள்ளியுங் கொற்ற மன்ன மங்கையர்
ஏத்தல் சான்ற கோயிலு மிடைப்ப டுத்தி யன்றவே.

தமது கண்ணுனது இளையோர்மெய்யை வெவ்விதாக்கி அவ
நெஞ்சிலே நின்று சுடுமாதராரெனச் சினைவினை முதலொடு முடிந்த
தென்க.

(இ - ள்.) மாதரார் நாடகசாலையும், [1] காவன்மகளிர் அரசற்கு வெற்
நிலைபெறும்படி ஏத்தும் ஸ்ரீகோயிலும் கோங்குமுதலியவற்றை நடுவே
யாக்கிப் பண்ணினவென்க.

இதனால், [2] இரண்டும் தம்மில் இடைவிட்டிருக்குமென்றார்; மேலே
"[3] வண்புகழ் மாலடி வந்தனை செய்தாள்" (சீவக. 220) என்ப. (கஉ௫

155. கந்து மாம ணித்திரள் கடைந்து செம்பொ னீள்சுவர்ச்
சந்து போழ்ந்தி யற்றிய தட்டு வேய்ந்து வெண்பொனல்
இந்தி ரன்றி ருநக ருரிமை யோடு மிவ்வழி
வந்தி ருந்த வண்ணமே யண்ணல் கோயில் வண்ணமே.

(இ - ள்.) மாமணித்திரளைத் தூணுகக் கடையப்படுதலானும், பொற்
சுவரிலே சந்தனத்தை அறுத்துப் பண்ணிவைத்த நெடுங் [1] கையை
வெள்ளியாலே வேயப்படுதலானும், அண்ணல் கோயிலின் தன்மை
இந்திரனகர் இவ்வழி வந்திருந்த தன்மையேயாயிருந்ததென்க.

ஏகாரம் தேற்றம். (கஉ௫

---

154. பொன் இணர் செய் - பொன் போன்ற பூங்கொத்தை மலர்
கின்ற; "கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்" (அகநா. கடவுள்
1). காய்த்து - வெம்மையாகச் செய்து; "கை காய்த்திய" (பதிற். 82 : 9)
தெறூஉம் - சுடுகின்ற. காமர்வல்லி - அழகிய பூங்கொடியைப் போன்ற
கூத்தருத பள்ளி - நாடகசாலை (பெருங். 4. 13 : 147, 14 : 4; இறை
21, உரை). கோயில் - சிஞலயம்.

(உரை) [1] காவன் மகளிர் - பகைவர் மனையோராய்ப் பிடித்து வரப்
பட்ட மகளிர்; கொல்லப்படாராதலின் இவர்களைக் கொண்டு கோயிற்
காரியங்களைச் செய்வித்தல் மரபு; இதனை, பட்டினப். 246-ஆம் அடி
முதலியவற்றாலும், அவற்றின் உரையாலும் உணர்க. [2] இரண்டு : நாடக
சாலை, ஸ்ரீகோயில். [3] இதனால் அரண்மனையில் ஸ்ரீ கோயில் உண்டென்று
விளக்கினார்.

155. மணித்திரள் கந்து கடைந்து - மாணிக்கத்திரளைத் தூணுகக்
கடைந்து. சந்து - சந்தனமரம். தட்டு - கைம்மரம்.

(மேற்.) அடி, 4 : சிலப். 2 : 53 - 61, அடியார்.; தொல். குற்றிய
லுகரப். 78, ந.

(உரை) [1] கை - கைம்மரம்.

156. ஆட லின்ன ரவ்வமு மங்கை கொட்டி நெஞ்சுணப்
பாட லின்ன ரவமும் பணைமு ழவ்வ ரவமும்
கூடு கோலத் தீஞ்சுவைக் கோல யாழ ரவமும்
வாட லில்ல வோசையால் வைக லுளும் வைகின்றே.

கொட்டி - [1] ஒச்கடித்து. ஒழிந்த கருவிகளோடு கூடும் அழகையும் சுவையையுமுடைய நரம்பையுடைய யாழ்.

(இ - ள்.) கூத்தின் அரவமும் பாட்டின் அரவமும் முழவின் அரவமும் யாழின் அரவமுமாகிய குறைதலில்லாத ஓசையாலே [2] அண்ணலுக்கு நாள்கடோறும் நாள் கழியாநின்றதென்க.

இனி, வைகவாயின், ஓசையோடு செல்ல நாளும் கழியாநின்றதென்க.

கோயிலின் சிறப்புக் கூறினர். (கருஎ)

## சச்சந்தன் வரலாறு

### (வேறு)

157. நச்சு நாகத்தி னாழற் சீற்றத்தன்
அச்ச முற்றடைந் தார்க்கமிர் தன்னவன்
கச்சு லாமுலை யார்க்கணங் காகிய
சச்சந் தன்னெனுந் தாமரைச் செங்கணான்.

இதுமுதல், "கோதை" (158) அளவும் ஒரு தொடர்.

நச்சு : நாகத்திற்கு அடை. அன்னவன் : தொழிற்பெயர். (கருஅ)

---

156. நெஞ்சுண - கேட்போர் நெஞ்சை உண்ணும்படி (நற். 204; பெருங். 2. 9 : 39; சூளா. கலியாண. 287). பணை முழவு - பெருத்த முழவு. வாடல் - குறைதல்.

(மேற்.) அடி, 4 : தொல். சூ - வி. எழுத். 1, சிவஞா.

(உரை) [1] ஒக்கடித்து - சேரக்கூட்டி. [2] முன் பாட்டிலிருந்து வருவிக்கப்பட்டது.

157. நச்சு நாகத்தின் - விடத்தையுடைய பாம்பைப்போல. ஆரழல் சீற்றம் - தீர்த்தற்கரிய விடத்தைப் போன்ற கோபம்; அழல் - விடம்; "அழல்வாய் நாகம்" (சிலப். 5 : 124); "அழற்கண் ணாகம்" (மணி. 23 : 69). அரசன் விடமும் அமுதமும் போல்வான் : சீவக. 250. அணங்கு-தெய்வம் (பெருங். 1. 36 : 103 - 4). சச்சந்தன் : சீவக. 7, அடிக்.

(மேற்.) அடி, 1 : கல். 'வேற்றுப்பிடி', 18 - 20, மயில்.

158. வண்கை யாற்கலி மாற்றிவை வேலினாற்
றிண்டி றற்றெவ்வர் தேர்த்தொகை மாற்றினான்
நுண்க லைக்கிட னாய்த்திரு மாமகள்
கண்க ளுக்கிட னாங்கடி மார்பனே.

நோக்கிய கண்கள் வேறுசெல்லாத புதிய மார்பன். (கஉகூ

159. கோதை நித்திலஞ் சூழ்குளிர் வெண்குடை
ஓத நீருல கொப்ப நிழற்றலாற்
றாதை யேயவன் றாணிழற் றங்கிய
காத லாற்களிக் கின்றதிவ் வையமே.

கோதைநித்திலம் : உம்மைத்தொகை. ஒப்ப - எல்லார்க்கும் ஒப்ப

(இ - ள்.) சச்சந்தனென்னுஞ்செங்கணான், அடைந்தார்க்கு அமி
தன்னவன், அடையாதார்க்கு [1] உயிர்போமளவும் சென்று கோபமாறு
நஞ்சுபோலுஞ் சீற்றத்தன், கடிமார்பன், கலைக்கு இடனாகிக் கையாலே
கலியை மாற்றி வேலாலே தேர்த்திரளை மாற்றினான்; மாற்றிக் குடை
யாலே ஒப்ப நிழற்றலால் உலகிற்குத் தாதையே; ஆதலின், அவன்
தாணிழலிலே தங்கவேண்டி இவ்வுலகம் அவன் மேல்வைத்த காதலாலே
களியாநின்றதென்க.

இனி, [2] தாணிழற்றங்கிய வையம், அவன் உலகில் வைத்த காத
லாலே களிக்கின்றதென்றுமாம். இவற்றால், [3] தெறலும் அளியும் அழகு
கொடையும் வீரமும் கல்வியும் முறைசெய்தலும் கூறினார். (கடுo

---

158. கலி - வறுமையை. திண்திறல் தெவ்வர் : இது பழைய நிலை
யைக் கூறியது. நுண்கலை - நுட்பமான பொருளையுடைய கலை. கடி
வரைவு; "கண்ணாடி யன்ன கடிமார்பன்" (சீவக. 2327, ந.)

159. கோதை நித்திலம் - பூமாலையும் முத்துமாலையும்; "தண்
டரளப் பூத்தாம வெண்குடையான்" (நள. 3 : 33). நிழற்றல் - நிழலை
செய்தல். தங்கிய - தங்கும் பொருட்டு; வினையெச்சம்.

(உரை) [1] நஞ்சினியல்பு : சீவக. 2345, ந. [2] இப்பொருளுக்கு
தங்கிய வென்பதைப் பெயரெச்சமாகக் கொள்க. [3] சீற்றத்த னென்றதனால்
தெறலும், அமிர்தன்னவனென்றதனால் அளியும், கடிமார்பனென்
தனால் அழகும், கலிமாற்றி யென்றதனாற் கொடையும், தேர்த்தொகை
மாற்றினானென்றதனால் வீரமும், கலைக்கிடனா யென்றதனாற் கல்வியும்
ஒப்ப நிழற்றலாலென்றதனால் முறைசெய்தலுங் கூறப்பட்டன.

160. தருமன் றண்ணளி யாற்றன தீகையால்
வருணன் கூற்றுயிர் மாற்றலின் வாமனே
அருமை யாலழ கிற்கணை யைந்துடைத்
திருமக கன்றிரு மாநில மன்னனே.

தருமன் - அறக்கடவுள். இதற்கு [1] உவமையும் உருபும் விரிக்க.

(இ - ள்.) அம்மன்னன் அமிர்தத்தையொத்தலும் உலகை நிழற்றலுமாகிய தண்ணளியால் தருமன்; கலிமாற்றின ஈகையால் வருணன்; தேர்த்தொகை மாற்றுமிடத்தால் அழற்சீற்றத்தனுய் உயிரை மாற்றுதலிற் கூற்றம்; கலைக்கிடனும் அருமையால் வாமன்; மகளிர்க்கு அணங்காகிய அழகாற் காமனென்று உவமை கூறுதற்குக் கொண்டு கூறினர். [2] கூறியது கூறல் அன்றென்க. (கசுக)

161. ஏனை மன்னர்த மின்னுயிர் செற்றவேற்
றனை மன்னரிற் றனிமி லேறனன்
தேனை மாரியன் னன்றிசை காவலன்
வானந் தோய்புக ழான்மலி வெய்தினன்.

(இ - ள்.) ஒழிந்த பகைவர் உயிரைச்செற்ற தம் மரபிலுள்ளாரில் தான் செருக்கினுல் ஏறனையான், மொழியால் தேன்மாரியனையனுகிய காவலன் சுவர்க்கத்தே செறியும் புகழாலே மிகுதல் பெற்றனென்க.

தேனை : ஐ, அசை. (கசுஉ)

160. தண்ணளியால் தருமன் என மாற்றிப் பொருள் கொள்க. வாமன் - அருகக்கடவுள்; "வாமன் கோயில்" (சீவக. 2738). திருமகன் - காமன்.

(மேற்.) மு : நன். பொது. 59, மயிலை., சங்கர; மாறன். பொருளணி, 37.

(உரை) [1] தருமனைப் போல்வான் என விரித்துப் பொருள் கொள்ளுதல். [2] இஃது ஒருவகைக் குற்றமாகும்.

157 - 60. பாகவதம், 4. 4 : 43 - 6-ஆம் செய்யுட்கள் ஒப்பு நோக்கற்பாலன.

161. இமில் ஏறு - முசுப்பை யுடைய இடபம். தேனை மாரி : "துளி விராவிய தேனை மாரியின்" (காஞ்சிப். நகரேற். 84). வானந்தோய் புகழ் : சீவக. 6, அடிக். ; பெருங். 3. 24 : 3.

(மேற்.) அடி, 3 : இ - வி. இடை. 27.

162.(க) செல்வற் கின்னணஞ் சேறலிற் றீம்புனல்
மல்கு நீர்விதை யத்தர சன்மகள்
அல்லி சேரணங் கிற்கணங் கன்னவள்
வில்லி னீள்புரு வத்தெறி வேற்கணாள்.

163.(உ) உருவுஞ் சாயலு மொப்ப வுரைப்பதற்
கரிய வாயினு மவ்வளைத் தோளிகட்
பெருகு காரிகை பேசுவல் பெண்ணணங்
கரிய தேவரு மேத்தரு நீரளே.

இவையிரண்டும் ஒரு தொடர்.

புனலினது வளப்பம் பொருந்திய நீர்மையையுடைய விதையம்; தண்ணீரும் விளைவிக்குநீருமாம். திருவிற்கு ஒரு திருவன்னவள்: இல் பொருள்.

(இ - ள்.) செல்வற்கு இன்னணம் நல்வினை நடத்தலாலே, இதற்கு ஏற்ப [1] விதையத்தரசன் மகள், இவ்வுலகிற் பெண்ணால் அணங்கு தற்கரிய தேவரும் ஏத்தரும் நீர்மையுடையாளாயினாள்; அவ்வேற்கண்ணாளாகிய அணங்கன்னவளுடைய வடிவும் மென்மையும் இத்தன்மைய வென்று உவமை கூறுவார்க்கு அரியவாயினும், அவளிடத்துக் காரிகையைச் சிறிது கூறுவேனென்றாரென்க.

அது மேற்கூறுகின்றார். (கரு௲-ச)

(வேறு)

164. எண்ணெயு நானமு மிவைமூழ்கி யிருடிருக்கிட்
டொண்ணறுந் துகிற்கிழி பொதிந்துறை கழித்தனபோற்
கண்ணிருண்டு நெறிமல்கிக் கடைகுழன்ற கருங்குழல்கள்
வண்ணப்போ தருச்சித்து மகிழ்வானாத் தகையவே.

162. இன்னணம்: இன்ன வண்ண மென்பதன் மரூஉ. நீர் - தன்மை. விதையம் - விதேகம்; “விதையக்கோன் செய்தான் விருந்து” (நள. 3 : 79). அல்லி - அகவிதழ்; இங்கே தாமரைக்கு ஆயிற்று. அணங்கு - திருமகள். புருவத்திற்கு வில் உவமை.

163. உரு - வடிவம். சாயல் - மென்மை. அ - அழகு. வளைத் தோளி - வளையை அணிந்த தோளையுடையவள். காரிகை - அழகு. அணங்கு - வருத்துதல்.

(உரை) [1] இவ்வரசன் பெயர் அரிமர்த்தன னென்பது ஜீவந்தர சம்புவால் விளங்கு மென்பர்.

164. நானம் - கஸ்தூரி. திருக்கிட்டு - முறுக்கி. துகிற்கிழி - துகிலாகிய கிழியிலே. கண் இருண்டு - பார்த்தவருடைய கண் இதன் கருமையால் இருளும்படி; இருண்டு - இருள; எச்சத்திரிபு. நெறிமல்கி -

இருண்டு, இருளவென்க. குழல் மயிர்மாத்திரையாய் [1] ஐவகையையும் உணர்த்தலிற் பன்மை கூறினர்.

(இ - ள்.) எண்ணெயும் நானமுமென்கிற [2] இவையிற்றிலே மூழ்கிக் குழன்ற கரிய குழல்கள், இருளைப்பிடித்து நீளமுறுக்கி அறல்படப் பிடித்து உறையிலேயே பொதிந்து அதனை வாங்கப்பட்டவை போல நோக்கினர் கண் இருளும்படி நெறிமல்கிச் சேடியர் போதைக்கொண்டு வழிபட்டாலும் வருந்துந் தன்மையவென்க.

கண் - இடமாக்கி, கருங்குழல் - கொடிய குழலென்றுமாம். குழன்றும் பாடம். (கசுச)

165. குழவிக்கோட் டிளம்பிறையுங் குளிர்மதியுங் கூடினபோல்
அழகுகொள் சிறுநுதலு மணிவட்ட மதிமுகமும்
தொழுதாற்கு வரங்கொடுக்குந் தொண்டைவாய்தூ முறுவல்
ஒழுகுபொற் கொடிமூக்கு முருப்பசியை யுருக்குமே.

குழவிப் பருவத்து ஒரு கலையையுடைத்தாய்ப் பின்பு இளமைப் பருவத்தே நின்ற பிறை. இளமை - ஈண்டுக் குழவிப் பருவமொழிந்ததன் மேற்று; "இளமையுந் தருவதோ" (கலித். 15) என்றார் பிறரும். "மாக் கட னடுவ ணெண்ணாட் பக்கத்துப், பசுவெண் டிங்க டோன்றி யாங்குக் கதுப்பயல் விளங்குஞ் சிறுநுதல்" (குறுந். 129) என்றார் பிறரும். வட்ட மதிமுகம் - வட்டத்தையுடைய மதித்த முகம்; அடையுமாம். தான் தொழப்பட்ட கணவனுக்கு வரங்கொடுக்கும். வளருகின்ற பொலிவினையுடைய நீண்ட மூக்கும்.

---

நெளித்தல் மிக்கு. கடைகுழன்ற - நுனி சுருளுதல் பெற்ற. கருங்குழல்கள் : ஐம்பாலாதலின் பன்மையாற் கூறினர். குழல்கள் : சீவக. 989; மணி. 22 : 130 ;. கல். 'அமுதமும்'; "புயலுள வேமலர் சூழ்ந்திருடுங்கிப் புரள்வனவே" (திருச்சிற். 35). போது - பூ. மகிழ்வு ஆறு - மகிழ்தல் அமையாத.

இச் செய்யுள் முதல் 179-ஆம் செய்யுளளவும் விசயையின் கேசாதி பாதவருணனை. தெய்வ மகளிரைப் பாதாதி கேசாந்தமாகவும் மானிட மகளிரைக் கேசாதி பாதாந்தமாகவும் வருணித்தல் முறையாதலின் இந் நூலாசிரியர் விசயையின் அழகைக் கேசாதிபாதமாகக் கூறினார். (பொருந. 25-47, உரை). இம்முறை வேறுபட்டு வருவதும் உண்டு.

(மேற்.) அடி, 3-4 : கல். 'அமுதமுந்', 20, மயில்.

(உரை) [1] ஐவகையை, சீவக. 2437-ஆம் செய்யுளின் குறிப்புரையான் உணர்க. [2] இவையிற்றிலே - இவற்றிலே; இற்று : சாரியை.

165. கோடு - நுனி. தொண்டை - கொவ்வைக்கனி. தூ - தூய்மை. கொடி - நீட்சி : ஐங். 14, உரை. கொடிமூக்கு : பெருங். 2. 15 : 83, 5. 8 : 106; கூர்ம. பலவகைத். 17.

(இ - ள்.) பிறையும் மதியும் கூடினபோல் அழகுகொண்ட நுதலும் முகமும் வாயும் முறுவலும் மூக்கும் உருப்பசியை உருக்குமென்க.

உருக்குதல் - [1] நுகர்தற்கு அவளும் ஆண்பாலாக விரும்புதல் (௧௬௬)

166. வண்சிலையை வனப்பழித்து வார்ந்தொழுகி நிலம்பெரு
நுண்கருமைகொண்டொசிந்து நுதலிவர்ந்து போந்துலாய்க்
கண்கூடா கடைபுடைத்துக் கைவல்லா னெழுதியபோற்
பண்பார்ந்த கொடும்புருவம் பழிச்சாஅப் படியவே.

(இ - ள்.) எழுத்து ஒருமைப்படுதற்குத் [1]துகிலிகைக்கோலை உதறிக் [2]கைவல்லானெழுதியவைபோல் தமக்குரிய குணநிறைந்த கொடிய புருவம், வனப்பழித்துத் தாம்செல்லுமளவுஞ்சென்று மேற்செல்லாவாய்க் கூரிய கருமைகொண்டு வளைந்து நுதலில் தாம் சேறற்குரிய அளவுஞ் சென்று போந்து பரந்து தம்மிற்கூடாவாதலின், பழிச்சுதலமையாத தன்மையவென்க.

'வனப்பிகந்து வார்ந்தொழுக' என்பதூஉம் பாடம். (௧௬௭)

167. சேலனைய சில்லரிய கடைசிவந்து கருமணியம்
பாலகத்துப் பதித்தன்ன படியவாய் முனிவரையும்
மாலுறுப்ப மகிழ்செய்வ மாண்பினஞ்சு மமிர்தமுமே
போல்குணத்த பொருகயற்கண் செவியுறப்போந் தகன்றனவே.

(இ - ள்.) சில அரியவாய்ச் சிவந்து மாயோனையும் பாற்கடலையும் முகத்தே வைத்தாற்போன்ற தன்மையவாய் மாலுறுப்பனவாய் மகிழ்ச்சி செய்வனவாய்த் துன்பத்தாலும் இன்பத்தாலும் நஞ்சும் அமுதும் போலும் குணத்தவாகிய கண், செவியுற நீண்டு அதற்கேற்ப அகன்றன வென்க.

---

(உரை) [1] சீவக. 2447.

166. சிலை - வில். வார்ந்து ஒழுகி - மிக நீண்டு. கண்கூடா - தம்மில் இடம் கூட மாட்டா. கடை புடைத்து - உதறி. கொடும்புருவம் - வளைந்த புருவம். பழிச்சு ஆஅ - புகழ்தல் அமையாத.

(உரை) [1] துகிலிகை - எழுதுகோல். [2] எழுதிய புருவம் : பெருங். 1. 35 : 179, 40 : 321, 5. 8 : 106.

167. சில்லரிய - சிலவாகிய இரேகைகளையுடையன. கருமணி - திருமால்; திருவாய். 8. 9 : 1. படியவாய் - தன்மையையுடையனவாய். முனிவரையும் மாலுறுப்ப : திருவிருத்தம், 66. நஞ்சும் அமிர்தமும் : குறள், 1091. பொருகயற்கண்; பொருதல், கயற்கு அடை; குறுந். 250 : 5.

(மேற்.) அடி, 1-4 : மாறன். பொருளணி. 10.

[1] கன்னியாதலின், 'மாலுறுப்ப' என்றார். மகிழ்செய்வ - கணவனுக்கு மகிழ்செய்வ. மாண்பிலாநஞ்சு. கயல்போற்பிறழுங்கண். [2] கருமணியைப் பாலிற் பதித்தாற் பால் நிறங்கெடுமென்றுணர்க. (கௌஅ)

168. மயிரெறி கத்தரிகை யனையவாய் வள்ளைவா
டுயிர்செகுத்து முன்னொன்றிப் பின்பேரா துருவமைந்த
செயிர்மகர குண்டலமுந் திளைப்பானா வார்காதும்
வயிரவின் முகஞ்சூடி வண்ணம்வீற் றிருந்தனவே.

(இ-ள்.) கத்தரிகையனையவாய் வாடு வள்ளையின் அழகைக் கெடுத்துப் பின்மறியாது முன்னைபொருந்தி அழகமைந்த குண்டலமும் தோடும் அசைதலமையாத காதும் வயிரத்தினொளியை இடத்தே சூடி வீற்றிருந்தனவென்க.

வாட்டாயின், வாட்டின காதென்க. 'காதும்' என்ற உம்மை இறந்தது தழீஇயிற்று. (கௌகூ)

169. ஈனாத விளங்கமுகின் மரகத மணிக்கண்ணும்
ஆனாதே யிருள்பருகு மருமணி கடைந்ததூஉம்
தானாகி யிருளொடோர் தாமரைப்பூச் சுமந்தன்ன
கானார்ந்த திரள்கழுத்துக் கவின்சிறைகொண் டிருந்ததே.

[1] கோட்புகாத கன்னிக்கமுகு வரையிற்கும் [2] நெய்ப்பிற்கும், மணி திரட்சிக்கும் நிறத்திற்கும் உவமம். உதயகிரியிற் சிந்தூர அருவி வீழ்ந்த [3] சிந்தூராகரத்திற் பதினாறுசதுர்யுகம் சிவப்பேறின முழுமாணிக்கம் இருளைக்கெடுத்தலின், 'இருள்பருகு மருமணி' என்றார். இருளும் தாமரையும், மயிர்க்கும் முகத்திற்கும் உவமம். கான் - மணம்.

(உரை) [1] கற்புடைய மங்கையர் பிறர்க்கு மயக்கத்தை உண்டு பண்ணார்; தம்மை நினைத்த பிறர் நெஞ்சையும் சுடுவார் என்பர்; இதனை "நிறையுடைப் பெண்டிர் தம்மே போலப், பிறர்நெஞ்சு சுடூஉம் பெற்றியுமில்லை" (மணி. 22 : 66-7) என்பதனாலும், "தீதிலா வடமீன்" (சிலப். மங்கல.) என்பதனுரையாலும் விளங்கும்; இது பற்றியே இங்ஙனம் பொருள்கூறினர். [2] சீவக. 1325.

168. மயிரெறி கத்தரிகை காதுக்கு : பொருந. 29-30. வள்ளைவாடு : சீவக. 66; பெருங். 2. 15 : 88-9. செயிர் - கோபம்; இது மகரத்திற்கு அடை. குண்டலமும் என்ற உம்மையால் தோடு கொள்ளப்பட்டது. வண்ணம் - அழகு.

169. ஈனாத இளங்கமுகு - தாறு உண்டாகாத இளைய கமுகமரம்; கம்ப. உருக்காட்டு. 50. மரக்கண் : "மரக்கண்ணோ மண்ணாளவார்கண்" (முத்.). ஆனாது - அமையாமல். இருள் பருகுமணி : புறநா. 162.

(உரை) [1] கோட்புகாத - குலைவைக்கத் தொடங்காத. [2] நெய்ப்பு - பளபளப்பு. [3] சிந்தூராகரம் : "செங்கே, ழாகரங் கடுக்கு மற்றோரணிமுடி" (கூவப். தாருகன். 200)

(இ - ள்.) கழுகினது மரகதமணிபோலுங் கண்ணும் இருளைக் கெடுக்கும் மாணிக்கங்கடைந்ததுவும் தாளுய்ச் சுமந்தன்ன கழுத்து அழகு குடிகொண்டிருந்ததென்க. (கசo)

170. மணிமகரம் வாய்போழ்ந்து வாழ்முத்த வடஞ்சூழ்ந்தாங்
கணியரக்கார் செம்பஞ்சி யணையனைய வாடமைத்தோள்
துணிகதிர் வளைமுன்கைத் தொகுவிரல் செங்காந்தள்
மணியரும்பு மலரங்கை குலிகமார் வனப்பினவே.

பஞ்சணை நிறத்திற்கும் மென்மைக்கும் உவமம். அமை திரட்சிக்கும் நெய்ப்பிற்கும் உவமம். துணிதல் - தெளிதல்.

(இ - ள்.) அமைத்தோள், மகரம் வாய் அங்காத்தலாலே ஆங்கு வாழும் முத்தஞ்சூழப்பட்டுச் செம்பஞ்சணையை [1] அனைய. குவிந்த விரல்கள் காந்தளின் அழகையுடைய அரும்பையனைய. அகங்கை தாமரைமலரையனைய. இக்கைகள் குலிகமார்ந்த வனப்பினவென்க.

போழ்ந்தவும், வான்முத்தமும் பாடம். (கசக)

171. தாமச்செப் பிணைமுகட்டுத் தண்கதிர் விடுநீல
மாமணிதா பித்தனபோன் மனம்பருகு கருங்கண்ண
ஏமுற வடிபரந் திளம்பிறை வடஞ்சூடி
ஆமணங்கு குடியிருந் தஞ்சுணங்கு பரந்தனவே.

---

170. மணி மகரம் - அழகிய சுறுமீன் வடிவமாகச் செய்யப்பட்டுத் தோளிலணியும் ஆபரணம். போழ்ந்து - பிளந்து. மகரவாய்ப்பணியின் முத்தம் : சீவக. 351, 644; பெருங். 2. 19 : 136. அரக்கு - செந்நிறம். அணை - மெத்தை. அமை - மூங்கில். பஞ்சியணையனைய ஆடமைத் தோள் : பரி. 7 : 55; கலித். 14 : 1, 66 : 9; பெருங். 2. 15 : 72. துணி கதிர் : தெளிந்த கிரணம்; 'துணி நீர் - தெளிந்த நீர்' (மதுரைக். 283, ந.). முன்கைத் தொகுவிரல் : பெருங். 2. 15 : 75. அங்கை - உள்ளங்கை. குலிகம் - இங்குலிகம்; முதற்குறை. உள்ளங்கைக்குச் சாதிலிங்கம்; சீவக. 1670; "மரைமலர் குலிகமொ டிகலிய வங்கை" (நன். 268, மயிலை. மேற்.)

(உரை) [1] அனைய வென்பது முதனிலைத் தீவகம்.

171. தாமம் - மாலை. முகட்டு - உச்சியில், தாமச்செப்பிணை : " தாமச் செப்பெனப்பணைத்து " (கூர்ம. இரா - வன. 86). மனம் பருகு - பார்த்தவர் மனத்தை விழுங்குகின்ற. ஏமுற - பித்து அடையும்படி. பிறை வடம் - சந்திரஹாரம் (கூர்ம. வயிரவன். 26). சுணங்கு - தேமல்.

(மேற்.) அடி, 1 : கல். 'வள்ளியோர்', 10, மயில். அடி, 1-2 : கல். 'குங்கும', 16 - 21, மயில்.

(இ - ள்.) தாமத்தையுடைய முலையிரண்டும் தம்தலையிலே நீல மணியை அழுத்தினாற்போல நோக்கினார் மனத்தை உள்ளடக்கும் கரிய கண்ணவாய், கண்டார் மயக்கமுற அடிபரந்து சூடி, தம்மேலுறையும் [1] வீற்றுத்தெய்வம் இருப்பிடமாக இருக்கப்பட்டுச் சுணங்கு பரந்தன வென்க.

'தாமச்செப்பிணை' எனவே முலையாம். இனி, பூஞ்செப்பாக்கின், [2] சினையிற் கூறுமுதலறிகிளவியுமாம். ஆமணங்கு - மேல்ஆகக்கடவ வருத்தமுமாம். (கசஉ)

172. அங்கைபோல் வயிறணிந்த வலஞ்சுழி யமைகொப்பூழ்
கங்கையின் சுழியலைக்குங் கண்கொளா நுடங்கிடையை
உண்டெனத் தமர்மதிப்பர் நோக்கினார் பிறரெல்லாம்
உண்டில்லை யெனவைய மல்லதொன் றுணர்வரிதே.

(இ - ள்.) அகங்கை போலும் வயிற்றை அழகுபெறுத்தின கொப் பூழ் சுழியைவருத்தும். கட்புலனாகா இடையைத் [1] தமர் பயிறலின் உண்டென்று கருதுவர்; பிறர் அதனைநோக்கினாரெல்லாம் [2] அல்குலும் முலையுமுண்மையின் உண்டென்றும் கட்புலனாகாமையின் இல்லை யென்றும் ஐயுறுதலன்றி இரண்டிலொன்று துணிவார்க்கு அறிதலரி தென்க.

கங்கை, குலந்தூய்மைக்குக் கூறினார். (கசங)

173. மன்னாக விணைப்படமுந் தேர்த்தட்டு மதிமயக்கிப்
பொன்னால வட்டமும்போற் கலையிமைக்கு மகலல்குல்
கொன்னிளம் பருதியுங் குறுமுயலின் குருதியும்போன்
றின்னரத்தப் பட்டசைத் திந்திரற்கும் புகழ்வரிதே.

---

(உரை) [1] வேறொன்றற்கில்லாத அழகைச் செய்யும் தெய்வம்; சீவக. 411, 606. [2] பூ மாலைக்கு ஆயினமையின் சினையாகு பெயர்.

172. அங்கை - உள்ளங்கை. வலஞ்சுழி - வலமாகச்சுழித்த. கொப் பூழுக்குப் புனற்சுழி: பெருங். 2. 15: 68. கண்கொளா - கண்ணுக்குப் புலப்படாத. இடையை உண்டு இல்லை என்றல்: கம்ப. கோலங்காண். 12.

(உரை) [1] "இட்டிடை......தொட்டவெற்குணரலாம்" (கம்ப. நாட விட்ட. 38). [2] திருச்சிற். 4.

173. நாகம் - பாம்பு; நாகஇணைப்படம்: கூர்ம. கண்ணனவ. 19. ஆலவட்டம்: இது தாலபத்திர மென்பதன் சிதைவு. கலை - மேகலை. கொன் - எல்லாராலும் வணங்கப்படும் பெருமை யெனலுமாம். குருதி - இரத்தம். அரத்தப்பட்டு - செந்நிறப்பட்டு. இந்திரர் எனப்பாடங் கொண்டு தேவர் என்று பொருள் கொள்வர் அடியார்க்கு நல்லார்: "இந்திர ரமிழ்த மியைவதாயினும்" (புறநா. 182); "இந்திர குமரரின் யாங்காண் குவமோ" (சிலப். 16: 173)

மன் - பெருமை. இணைப்படம் - இரண்டு புறமும் ஒத்த படம். கலை, அடை. கொள் - விடியற்காலம்; "கொள்வரல்வாழ்க்கை" (புறநா. 379 : 1) போல. உம்மை, சிறப்பு.

(இ - ள்.) படமும் தட்டும் ஆலவட்டமும்போலே வட்டமகன்ற அல்குல், பருதியும் குருதியும்போலே கண்ணுக்கு இனிய பட்டு உடுக்கப்பட்டு எல்லாரையும் மதிமயக்குதலின், இந்திரற்கும் புகழ்தலரிதென்க. (௧௪௪)

174. வேழவெண் டிரடடக்கை வெருட்டிமற் றிளங்கன்னி
வாழைத்தண் டெனத்திரண்டு வாலரக்குண் செம்பஞ்சி
தோழமைகொண் டெனமென்மையுடையவாயொளிதிகழ்ந்து
மாழைகொண் மணிமகரங் கௌவிவீற் றிருந்தனவே.

வெருட்டி : பெயர். மற்று : வினைமாற்று. செம்பஞ்சி [1] பஞ்சி மாத்திரை. பொன் தன்னிடத்தே அடக்கின மணி. மகரம் : [2] ஆகுபெயர்.

(இ - ள்.) ஒழுக நோக்குதலான் அயிராவதத்தின் கையை வெருட்டிய [3] குறங்குகள், தண்டெனத் திரண்டு பஞ்சி தன்னுடனே தோழமைகொண்டு மென்மைபெற்றதெனத் தாம் மென்மையுடையவாய்த் திகழ்ந்து [4] குறங்குசெறி'கௌவி மேலாயிருந்தனவென்க.

'திரண்ட' பாடமாயின், பெயராம். (௧௪௫)

175. பக்கத்தாற் கவிழியவாய் மேல்பிறங்காப் பாண்டிலா
ஒக்கநன் குணராமை பொருந்திய சந்தினவாய்
நெக்குப்பின் கூடாது நிகரமைந்த முழந்தாளும்
மக்களுக் கில்லாத மாட்சியின் மலிந்தனவே.

---

(மேற்.) அடி, 4 : சிலப். 17 : 172 - 3, அடியார்.

174. வேழம் - யானை. வெருட்டி - வெருட்டும் துடைகள். கன்னி வாழை - குலை ஈனாத வாழை (கந்த. மாயை. 56). வால் - தூய்மை. அரக்கு - செந்நிறம். மாழை - பொன்.

(உரை) [1] அரக்குண் என்று அடை கொடுத்தமையால் இங்ஙனங் கூறினர். [2] மகரமீன் அதன் வடிவமாகச் செய்யப்பட்ட ஆபரணத்திற்கு ஆயிற்று. [3] குறங்குகள் - துடைகள். [4] குறங்கு செறி - ஓர் ஆபரணம்; "குறங்கு செறிதிரள் குறங்கினிற் செறித்து" (சிலப். 6 : 86)

175. பக்கத்தால் - பக்கத்தில். கவிழியவாய் - கவிழ்ந்தனவாய். பாண்டில் - வட்டம். சந்து - மூட்டுவாய். நிகர் அமைந்த - ஒப்பு இல்லாத : அமைதல் - இல்லையாதல்; சீவக. 107, 176, ந.

(இ - ள்.) மேற்பக்கத்திலே கவிழ்ச்சியையுடையவாய்ப் பேராத வட்டமாம்படி உள்ளே பொருந்திய சந்தினவாய் நெகிழ்ந்து பின் போகாமல் ஒப்பற்ற முழந்தாளும் மாட்சியினால் மிக்கனவென்க.

நன்மை இதற்கொப்ப வேறொன்றில் உணராதபடி பொருந்திய சந்து. (கசசு)

176. ஆடுதசை பிறங்காது வற்றாது மயிரகன்று
நீடாது குறுகாது நிகரமைந்த வளவினவாய்ச்
சேடாவ நாழிகையிற் புடைதிரண்டு தேனெய்பெய்
வாடாத காம்பேபோற் கணைக்காலின் வனப்பினவே.

(இ - ள்.) கணைக்கால், தசைபேராதுமாய் வற்றாதுமாய் மயிர்மிக்கு நீடாமற் குறுகாமல் ஒப்பிலாத அளவினவாய் அம்பறாத்தூணிபோலே திரண்டு காம்புபோல் இனிய வனப்பினவென்க.

சேடு - பெருமை. [1] தேவிநிறத்திற்கு உவமை பதுமராகமாயினும், மயிர்கள் அகன்றதனால், காம்பு உவமையாயிற்று. இனிக் [2] கணைக்காலின் வனப்பு இன்னவென்றுமாம். (கசஎ)

177. பசும்பொன்செய் கிண்கிணியும் பாடகமும் பாடலைப்ப
நயந்தெரி பொற்சிலம்பு முத்தரிபெய் தகநக
இயைந்தெழிலார் மணியாமை யிளம்பார்ப்பின் கூன்புறம்போல்
அசைந்துணர்வு மடிந்தொழியு மடியிணை புகழ்வார்க்கே.

(இ - ள்.) அரிபெய்யப்பட்டு, கிண்கிணியும் பாடகமும் தாங்கிக் கிடக்கின்ற இடத்தை வருத்துதலாலே, சிலம்பு சிறிதே சிரிப்ப அழகார்ந்த யாமைப்பார்ப்பின் புறம்போலும் அடியிணையைப் புகழ இயைந்து புகழ்வார்க்கு உணர்வு துளங்கிக் கெட்டுப்போமென்க.

நயந்து - விரும்பி. "பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற் றிளமை" (தொல். மரபு. 4); "தவழ்பவை தாமு மவற்றோ ரன்ன" (தொல். மரபு. 5) என்றார். (கசஅ)

176. ஆடுதசை - கெண்டைத்தசை. சேடு - பெருமை. ஆவ நாழிகை - அம்பு வைக்கும் புட்டில். தேன் நெய் - தேனாகிய நெய்; "தேனெய் பாலொடு கலந்தன" (சூளா. கலியாண. 54). காம்பு - மூங்கில்; சீவக. 2694. மு. பெருங். 2. 15 : 61 - 3.

(உரை) [1] விசயையின் நிறத்திற்குப் பதுமராகம் ஒப்பென்பது முன்னும் பின்னு முள்ள உவமைகளால் விளங்குகின்றது. [2] இன் : சாரியை.

177. பாடகம் - ஒருவகைக் காலணி; சீவக. 510; பரடலைப்ப வென்று கொள்ளுதலும் பொருந்தும்; "செம்பொற் கிண்கிணி, பாடகக் குரலொடு பரடுபிறழ்ந் தாற்ற" (பெருங். 2. 19 : 185 - 6). முத்து அரி - முத்தாகிய பரல். யாமைப் பார்ப்பின் கூன் புறம் : சீவக. 2755. புறவடிக்கு ஆமைப் பார்ப்பு : பெருங். 2. 15 : 57 - 8; கம்ப. நாட விட்ட. 34.

178. அரக்கியல் செங்கழுநீ ரகவிதழ்போ லுகிர்சூடிப்
பரப்பின்றி நுதியுயர்ந்து பழிப்பறத் திரண்டுநீண்
டொருக்குற நெருங்கிப்பொன் னொளியாழி யகங்கௌவித்
திருக்கவின்கொண் மெல்விரல்க டேனார்க்குந் தகையவே.

(இ - ள்.) திருவினது விரலினழகைக்கொண்ட விரல்கள். நுதி பரப்பின்றித்தோன்றித் திரண்டு நீண்டு சேரநெருங்கி மோதிரம் கௌவப்பட்டு அகவிதழ்போலும் உகிர்சூடிப் பூவென்று தேனார்க்குந் தகைமையவென்க.

குலிகமூட்டின இதழ், செம்பஞ்சு ஊட்டினதற்கு உவமம். (௧௭௮)

179. என்பொடு நரம்பின்றி யிலவம்பூ வடரனுக்கி
இன்புற வரம்புயர்ந் திருநில முறப்புல்லி
ஒன்பதின்சா ணடப்பினு மொருகாத மென்றஞ்சும்
மென்பஞ்சிச் சீறடியு மேதக்க விழைவினவே.

(இ - ள்.) என்பும் நரம்புமின்றி இலவிதழைக் கெடுத்துக் கட்கினிய புறவெல்லை உயர்ந்து நிலத்தையுறப்புல்லி நடப்பினும் அஞ்சும் அடியும் பெருமை தக்க விழைவினவென்க.

[1] ஏழடியென்றல் மரபாயிருக்க, ஒருகாதமென்னுமெழுத்து நோக்கி 'ஒன்பதின்சாண்' என்றாரேனும் அடியிடுமளவில் ஏழாம். (௧௭௯)

180. இவ்வுருவு நெஞ்சென்னுங் கிழியின்மே லிருந்திலக்கித்
தவ்வுருவு நினைப்பென்னுந் துகிலிகையால் வருத்தித்துக்
கவ்வியத னேக்கினற் கண்விடுத்துக் காதனீர்
செவ்விதிற் றெளித்தானக் காமப்பூச் சிதறினன்.

---

178. அரக்கியல் - செந்நிறம் இயன்ற. அகவிதழ் - உள்ளிதழ். உகிர் - செம்பஞ்சு ஊட்டின நகம். நுதி - நுனி. ஒருக்குற - ஒருங்குதல் பெற. பொன் ஆழி - பொன்னாற் செய்யப்பட்ட கால்மோதிரம். தேன் ஆர்க்கும் - பூ என்று மயங்கி வண்டுகள் ஒலிக்கும்.

179. இலவம் பூ அடர் - இலவம்பூவின் இதழை. அனுக்கி - வருத்தி. பஞ்சிச் சீறடி - செம்பஞ்சு ஊட்டிய சிறிய அடி. மகளிர்க்கு அடி சிறுத்திருத்தல் உத்தம இலக்கணம்; "நுதலடி நுசுப்பென மூவழிச் சிறுகி" (கலித். 108 : 3). விழைவின - விரும்பத்தக்கன.

(உரை) [1] தம்பால் வந்து மீளும் பெரியோர்களுடன் ஏழடியளவு செல்வோர், ஸப்த பயத்தினின்றும் நீங்கி, ஸப்த பரமஸ்தானத்தைப் பெறுவரென்பது சைனநூற் கொள்கை; ஸப்தபயங்களாவன - இகலோக பயம், பரலோகபயம், அகுப்திபயம், அத்திராணபயம், ஆகஸ்மிபயம், வேதநாபயம், மரணபயம் என்பன. ஸப்தபரமஸ்தானங்களாவன - ஸஜ்ஜாதித்துவம், ஸத்கிருஹஸ்தத்துவம், பரிவ்ராஜகத்துவம், தேவேந்திரத்துவம், சக்கரவர்த்தித்துவம், பாமார்ஹந்தியம், பரிநிர்வாணம் என்பன. "எழுமேழடி யூக்கி நடந்து செலா" (சீவக. 1384); "சேவடி, ஏழடி யிடுத லாற்றா தாயினும்" (பெருங். 1. 53 : 131 - 2); பொருந. 166.

180. நெஞ்சென்னுங்கிழி : "உள்ளக்கிழியினுருவெழுதி" (தே. திருநா.). இலக்கித்து - குறித்து வைத்து. கிழியில் உருவை எழுதல் :

(இ - ள்.) கூறிய இவ்வுருவை ஒருப்பட்டிருந்து நெஞ்சென்னும் படத்திலே குறித்து அதனை நினைவென்னுங்கோலாலே உறுப்புவிளங்க எழுதித் தான் கைக்கொண்ட தியானத்தாலே [1] நயனமோக்கம் பண்ணி மாமன் மகளாதலின், அன்பென்னும் நீரைச்சொரிந்து புணர்ச்சி வேட்கையாகிய அமையாத பூவைச் சிதறினானென்க.

இவன் எழுதிப்பிரதிட்டித்தான். இலக்கு - குறித்துப்பார்த்தல். [2] 'இருந்திலேகித்து' என்பதும் பாடம். (கஅக)

181. மெய்பெறு வெழுத்துயிர்க்கு மழலைவா யின்முறுவற்
றையலா ணெடுந்தடங்கண் வலைப்பட்டுச் சச்சந்தன்
ஐயுறு னணங்கெனவே யகத்தடக்கிச் செல்கின்றான்
மொய்யறுக் களியானை முழங்கித்தே னிமிர்தாரான்.

எழுத்து வடிவுபெற்றுத் தோற்றும் இளைய வார்த்தையையும் முறுவலையுமுடைய தையலாள்; மழலை எக்காலத்திற்கும் கூறுப. மொய் - போர்.

(இ - ள்.) அங்ஙனங்குறித்த தாரானாகிய சச்சந்தன், விசேடித்துத் தையலாள் கண்வலையிலே அகப்பட்டுக் கால் நிலந்தோய்தல் முதலியன கண்டு தெளிந்தும் அணங்கென்றே உட்கொண்டு செல்லாநின்றானென்க. (கஅஉ)

## (வேறு)

182. வண்டின முகபடா மணிந்து வார்மதம்
உண்டுகுத் திடுகளிற் றுழவன் றன்மகள்
பெண்டிர்தம் பெருநலங் கடந்து பெற்றபேர்
விண்டலர் கோதைக்கு விசயை யென்பவே.

பெருங். 3.22 : 144 - 8. துகிலிகை - எழுதுகோல். வருத்தித்து - வளரச் செய்து. நோக்கு - இங்கே மனத்தால் நோக்கும் நோக்கம். கண் விடுத்தல் - சிற்பிகளால் செய்யப்படும் ஒருவகைக்கிரியை. காமம் ஆறுப்பூ என மாறுக.

(உரை.) [1] நயன மோக்கம் பண்ணி - கண்ணைத்திறந்து. [2] இலேகித்து - எழுதி.

181. எழுத்து மெய்பெறு - எழுத்துக்கள் வடிவம் பெற்று; பெறு - பெற்று; "யாமொடுங் கொள்ளா பொழுதொடும் புணரா, பொருளறி வாராவாயினுந் தந்தையர்க், கருள்வந் தனவாற் புதல்வர்தம் மழலை" (புறநா. 92) தையல் - இளமை. கண்வலை : சீவக. 78. ஐயுறன் - மானிடமகளென்றும் தெய்வமகளென்றும் ஐயம் அடையாதவனாகி. அணங்கு எனவே - தெய்வமகளென்றே. மொய் - வன்மை எனினுமாம். தேனிமிர் தாரான் : அனைத்தும் ஒரு பெயராய் யானை யென்பதற்கு முடிபாயிற்று.

182. வண்டினம் முகபடாம் - வண்டின் கூட்டமாகிய முகத்திலணியும் ஆடையை; வண்டுகள் மதத்தை உண்ணும் பொருட்டு மொய்த்தன. மதம் உண்டு உகுத்திடு களிறு : "வரிஞிமி றார்க்கும் வாய்புகு கடாஅத்து............வயக்களிற் றெருத்தல்" (அகநா. 78 : 3 - 4). உண்டு - உண்ண; எச்சத்திரிபுமாம்.

(இ - ள்.) வண்டினமாகிய முகபடாத்தை அணிந்து மதத்தைத் தான் உண்டு சிந்தும் களிற்றுழுவன்றன் மகள்பெயர் விசயையென்பர்; அக்கோதைக்கு அப்பெயர் பெண்டிர்நலங்கடந்து பெற்ற காரணப்பெயரென்க.

பெயர் பேரென மருவிற்று. (கஅங)

183. அருமணி மரகதத் தங்க ணுறிய
எரிநிறப் பொன்னித ழேந்து தாமரைத்
திருமக ளிவளெனத் திலக வெண்குடைப்
பெருமகன் கோயிலுட் பேதை வைகுமே.

(இ - ள்.) [1] இமவானில் மரகதப்பாறையிற் பதுமையென்னுங்கயத்தில் தோற்றிய பொற்றாமரையிற் றிருவென்ன விசையத்தரசன்கோயிலிலே பேதை வைகாநிற்குமென்க.

திலகம் - மேலாதல். திரு உவமம், வடிவிற்கும் நல்வினையுடையோனிடத்து ஏகுந்துணையும் பொதுவாயிருத்தற்கும். (கஅச)

184. கலம்புரி யகலல்குற் றுயர் தவ்வையர்
சிலம்புரி திருந்தடி பரவச் செல்பவள்
வலம்புரி சலஞ்சலம் வளைஇய தொத்தனள்
குலம்புரிந் தனையதோர் கொடியி னீர்மையாள்.

---

நலம் கடந்து - அழகை வென்று. விசயை - வெற்றியை யுடையவள்.

(மேற்.) அடி, 3 - 4 : கல் 'பழமை', 35, மயில்.

183. நாறிய - தோன்றிய. எரிநிறம் - நெருப்பைப் போன்ற நிறம். தாமரைத் திருமகள் : "தெய்வத் தாமரைத் திருமகள்" (பெருங். 1. 34 : 149). திலக வெண்குடை : சூளா. அரசியற். 266. பேதை : இங்கே விசயை.

(மேற்.) அடி, 1 : சிலப். 4 : 72 - 6. அடியார்.

(உரை) [1] ஹிமவான், மஹாஹிமவான், நிஷதம், நீலி, ருக்மி என மலைகள் ஆறு உண்டென்பதும் அவற்றில் முறையே பத்மை, மஹாபத்மை, திங்கச்சை, கேசரி, புண்டரீகை, மஹாபுண்டரீகை என ஆறு பொய்கைகள் உள்ளன என்பதும் அப்பொய்கைகளில் முறையே ஸ்ரீ, ஹ்ரீ, த்ருதி, கீர்த்தி, புத்தி, லக்ஷ்மி என ஆறு தெய்வமங்கையர் தோற்றினரென்பதும் சைனநூல் வழக்கு; சீவக. 1001, 2863.

184. கலம்புரி - மேகலை யென்னும் ஆபரணம் விரும்பிய. தாயர் தவ்வையர் : பெருங். 1. 33 : 187, 34 : 119; 4. 10 : 47; கம்ப. மிதிலைக். 51. சிலம்புரி = சிலம்புபுரி. திருந்தடி - இலக்கணத்தால் திருந்திய அடி. அடிபரவ - அடிபோற்ற; சீவக. 2369; சிலப். 26 : 90; "நங்கையடி போற்றியென நங்கைநடை கற்ருள்" (சூளா. கல்யாணச். 35); கம்ப.

(இ - ள்.) குலம் கொடியினீர்மை புரிந்தனையதொரு நீர்மையாள், மேகலை விரும்பின அல்குலையுடைய [1] ஐவகைத்தாயரும் அவர்மக்களாய்த் தனக்கு மூத்தவர்களும் அடிபரவச் செல்பவள், வலம்புரி சலஞ்சலத்தை வளைத்த தன்மையை யொத்தாளென்க.

சிலம்புபுரி, விகாரம். (கஅரு)

185. இன்னகிற் கொழும்புகை யுயிர்க்கு மீர்ங்குழல்
மென்மலர்க் கோதைதன் முலைகள் வீங்கலின்
மின்னுருக் குறுமிடை மெலிய மெல்லவே
கன்னிதன் றிருநலங் கனிந்த தென்பவே.

மின்னுருக்குறுமிடை - மின் வடிவு கெடுதற்குக் காரணமான இடை. 'நடுக்குறும்' என்றும் பாடம்.

(இ - ள்.) குழலையுடைய கோதைதன்முலைகள், இடைமெலிய வீங்குதலாலே, அவள் நலம் முதிர்ந்ததென்க. (கஅசு)

186. முந்துநாங் கூறிய மூரித் தானையக்
கந்துகொல் கடாக்களி யானை மன்னவன்
பைந்தொடிப் பாசிழைப் பரவை யேந்தல்குல்
தந்தைமாட் டிசைத்தனன் றனது மாற்றமே.

(இ - ள்.) தானையையும் யானையையுமுடைய அச்சச்சந்தன் விசயையுடைய முந்துகூறிய [1] தந்தைமாட்டே தனது மாற்றத்தை இசைப்பித்தானென்க.

தனதுமாற்றம் - அவளைக் கொள்ளவேண்டுமென்னும் மாற்றம். (கஅஎ)

187. மருமகன் வலந்தது மங்கை யாக்கமும்
அருமதிச் சூழ்ச்சியி னமைச்ச ரெண்ணிய
கருமமுங் கண்டவர் கலத்தற் பான்மையிற்
பெருமகற் சேர்த்தினர் பிணைய னாளையே.

---

மிதிலைக். 30. சலஞ்சலம் : ஆயிரம் வலம்புரிச்சங்குகளால் சூழப்படுவதொரு சங்கு. வலம்புரியும், சலஞ்சலமும் : சீவக. 2103.

(உரை) [1] ஐவகைத்தாயர் : சீவக. 363, ந.

185. புகை உயிர்க்கும் - புகையின் மணத்தை வீசுகின்ற. நலம் - பெண்மையழகு.

186. அசரச் சுட்டை மன்னவனோடு கூட்டுக. கந்து - யானையைக் கட்டும் கம்பம். தந்தை - விசயையின் தகப்பன்.

(உரை) [1] விதையத்தரசன் : சீவக. 162.

187. மருமகன் - சச்சந்தன். வலந்தது - சொல்லியது. ஆக்கம் - அமைத்துக் கோடல். சூழ்ச்சி - தந்திரம். பெருமகன் - சச்சந்தன்.

ஆக்கம் [1] கிளவியாக்கம்போல் நின்றது; அவள் முதிர்ச்சியுமாம். கருமம் - [2] கோவிந்தனுக்கு இவன் உதவியாதல்.

(இ - ள்.) [3] தந்தையும் தாயும், மருமகன் கூறியதனையும் மங்கை அவனிடத்து அன்பை அமைத்துக்கோடலையும் அமைச்சரெண்ணிய கருமத்தையும் பார்த்து, [4] மைத்துனமுறையானும் பிணையனாளைப் பெருமகற்குச் சேர்த்தினாரென்க.

"பின்னர் நான்கும் பெருந்திணை பெறுமே" (தொல். களவு. 14) என்பதனான் ஒப்பும் பெருந்திணைப்பாற்படுங் கந்தருவமாமாறு [5] பெரும்பொருளானுணர்க. (கஅஅ)

(வேறு)

188\. பொனங்கொடியமிர் தனாளும்பொன்னெடுங் குன்றனானும்
அனங்கனுக் கிலக்க மாகி யம்புகொண் டழுத்த விள்ளார்
இனந்தமக் கெங்கு மில்லா ரியைந்தன ரென்ப முக்கட்
சினந்திகழ் விடையி னானுஞ்செல்வியுஞ் சேர்ந்த தொத்தே.

(இ - ள்.) குன்றனானும் கொடியாகிய அமிர்தனாளும், முன்பு இலக்கமாய் நின்று, பின்பு அவர், விடையினானும் செல்வியும் சேர்ந்ததொத்து விள்ளாராய் ஒருடம்பாயினாரென்க.

கொடியென்றார், குன்றுமறையப் படர்ந்து கேடுபிறப்பித்தலின். அழுத்த இலக்கமாய். [1] காட்சியும் நிலையும் முயக்கமும் கூறி, அவற்றிற்கு உவமை மேற்கூறுகின்றார். (கஅகூ)

---

(உரை) [1] தொல்காப்பியச் சொல்லதிகாரத்தில் முதலாவது இயலின் பெயர்; இதற்குப் பொருள் சொற்களை அமைத்துக் கோடலென்பது. [2] விசயையின் சகோதரன். [3] விசயையின் தந்தையும் தாயும்; விசயையின் தந்தை சச்சந்தனுக்கு மாமன். [4] விவாகம் செய்து கொள்ளுதற்குரிய முறைமை; சீவக. 1048; சூளா. சுயம். 275. [5] பெரும்பொருளென்பது, பெரும்பொருள் விளக்கமென்னும் நூலாக இருத்தல் கூடுமோ வென்று ஊகிக்கப்படுகின்றது.

188\. பொனங்கொடி - பொற்கொடி. அனங்கன் - மன்மதன். இலக்கம் - லக்ஷ்யம். அழுத்த இலக்கமாகி என மாறிக்கொள்க. விள்ளார் - நீங்கார். இனம் - ஒப்பு. விடையினான் - சிவபெருமான். செல்வி - உமாதேவியார்.

(உரை) [1] அமிர்தனாளும், குன்றனானும் என்றதனால் காட்சியும், அனங்கனுக்கு இலக்கமாகி என்றதனால் நிலையும், இயைந்தனர் என்றதனால் முயக்கமும் கூறப்பட்டன.

189. காதலாற் காம பூமிக் கதிரொளி யவரு மொத்தார்
மாதருங் களிற ஞனு மாசுண மகிழ்ச்சி மன்றல்
ஆதரம் பெருகு கின்ற வன்பிஞ லன்ன மொத்தும்
தீதிலார் திளைப்பி ஞமான் செல்வமே பெரிது மொத்தார்.

காதல் - எல்லாப்பொருளையும் நுகர்தற்குச்செல்லும் வேட்கை. காம பூமி - [1] தானப்பயஞற்பெறும் போகபூமி. [2] உம்மை : சிறப்பு. ஆதரம் பெருகும் அன்பாவது - [3] புணர்வதன்முன்னும் பின்னும் ஒரு தன்மைத் தாய்ச் செயற்கையால் மிகுமன்பு. அன்னம், புணர்ச்சியால் மெய்யுருகும் மென்மைக்கு உவமம். பலரும், “ துணைபுணரன்னத்தின்றூவி ” (கலித். 72 ; சிலப். 3 : 66) என்று புணர்ச்சியால் தூவிக்கு மென்மை பிறக்கு மென்றூர். ‘ ஒத்தும் ’ என்பதனை முன்னும் பின்னும் கூட்டுக. இவ் வெச்சத்தைத் தீதிலாரில் தீதின்மையோடு முடிக்க. தீதிலாத்திளைப்பிற் பாடமாயின் ஆமானையொத்தும் தீதிலா மாதரும் களிறனுமென்க. [4] ஆமான் நக்குங்காற் பிறக்கும் இனிமையே ஈண்டு உவமம். ஏகாரம் தேற்றம்.

(இ - ள்.) மாதரும் களிறனும் மகிழ்ச்சியையுடைய முயக்கத்தால் மாசுணத்தையொத்தும், அன்பாலுளதாகிய மென்மையால் அன்னத்தை யொத்தும், கண்முதலிய அவயவநுகர்ச்சியால் ஆமானையொத்தும், தீதிலாதவர்கள் இப்புணர்ச்சிக்கு முன்னர்ப் போகபூமியிலுள்ளார் செல்வமே பெரிதும் ஒத்தார் ; இப்பொழுது காதலால் அவர்கள் தன்மையு மொத்தாரென்க. (கஅ௦)

190. தன்னமர் காத லானுந் தையலு மணந்த போழ்திற்
பொன்னஞ ளமிர்த மாகப் புகழ்வெய்யோன் பருகி யிட்டான்
மின்னவிர் பூணி ஞனை வேற்கணூர்க் கியற்றப் பட்ட
மன்னிய மதுவின் வாங்கி மாதரும் பருகி யிட்டாள்.

---

189. காமபூமி - போகபூமி. முயக்கத்தால் மாசுணம் ; சீவக. 217 ; பெருங். 4. 4 : 100 - 101 ; கல். ‘இரண்டுடல்’ 1. ஆதரம் - ஆசை. அன்பிஞல் அன்னம் : நெடுநல். 132 - 3, ந ; பெருங். 2. 7 : 167. ஆமான் - காட்டுப்பசு.

(மேற்.) அடி, 1 : கல். ‘ இரண்டுடல் ’, 1, மயில்.

(உரை) [1] போகபூமி : சீவக. 2841. [2] இறை. 2, திருச்சிற். 9, உரை. [3] அவரும் என்பதிலுள்ளது. [4] ஆமானுடைய நக்குதல் முதலில் இனிமையைத் தந்து அப்பால் உயிரை நீக்கும் ; “ ஆமாபோ னக்கி யவர்கைப் பொருள் கொண்டு ” (நாலடி. 379); “ நாவின் புறநக்கிக், கொல்லுங் கவயமாப்போல் ” (நீதிநெறி. 75)

190. தன்னமர்காதல் - தன்னை விரும்பும் காதல் ; அமர்தல் - விரும்புதல் ; பெருங். 3. 6 : 39. புகழ்வெய்யோன் - புகழை விரும்பிய சச்சந்தன். மங்கையர் காமபானம் பருகுதல் : பட்டினப். 106 - 8.

(இ - ள்.) காதலானும் தையலும் முற்கூறியாங்குப் புணர்ந்த பொழுதிலே அவன் பொன்னனாளை அமிர்தமாகப் பருகினான்; அவன் பருகின தன்மையைத் தானுங்கண்டு பூணினாளை அவளும் மதுப்போலே பருகினாளென்க.

மகளிர்க்குச் சமைத்த மது. வாங்கி - அவன்காட்டக் கண்டு. பருகியிடுதல்: ஒரு சொல். இதனால், அதரபானமும் அல்குற்பானமுங்கூறி மேல் இவற்றிற்கு உவமை கூறுகின்றார். (கசுக)

191. பவழவாய் பரவை யல்கு லென்றிவை பருகும் வேலான்
கவழமார் களிறு போன்றான் காதலி கரும்பை யொத்தாள்
தவழ்மதுக் கோதை மாதர் தாமரைப் பூவ தாக
உமிழ்நகை வேலி னானு மொண்சிறை மணிவண் டொத்தான்.

'இவை' என்றது, கரும்பையும் தாமரைப்பூவையும். கரும்புவமை, நெருக்கி நீர் நுகர்தற்கு. பூவதாக - பூவினது தன்மை எக்காலமுமுண்டாக. இது, வேறுபாடின்மையின் [1] வேறுபடவந்த உவமமாயிற்று; எனவே [2] பதுமயோனியாம். 'வேலினானும்' என்றது, களிறுபோல வன்மையுடையோனு மென்றவாறு; உம்மை சிறப்பு.

(இ - ள்.) வாயும் அல்குலும் இவையென்று உட்கொண்டு, வேலான் பவழவாயைப் பருகிக் களிற்றையொத்தான்; அப்பொழுது அவள் கரும்பையொத்தாள். அவ்வேலானும் அல்குலைப் பருகி மாதர் பூவாயிருக்கச் செவ்வி குலையாதிருக்க நுகர்வதோர் வண்டையொத்தானென்க.

செவ்வி குலையாதிருக்க நுகர்வதொரு வண்டு இல்பொருளுவமை. (கசு௨)

192. பளிக்கறைப் பவழப் பாவை பரிசெனத் திகழுஞ் சாயற்
களிக்கயல் பொருவ போன்று கடைசிவந் தகன்ற கண்ணாள்
ஒளிக்கவின் கொண்ட காமத் தூழுறு கனியை யொத்தாள்
அளித்தயில்கின்ற வேந்த னஞ்சிறைப் பறவை யொத்தான்.

(இ - ள்.) கண்ணாள் கனியையொத்தாள்; அவளுக்கு மேன்மேலும் விருப்பமுண்டாக்கி அயில்கின்ற வேந்தன் வாவலையொத்தானென்க.

---

191. வேலான் களிறு போன்றான்; காதலி கரும்பை ஒத்தாள்; "கரும்பே யிவளவன் கைக்களிறே" (குலோத்துங்க. 60). மாதரைத் தாமரைப் பூவாகக் கூறுதல்; சீவக. 218. தாமரையும் வண்டும்: வி. பா. குருகுலச். 110.

(உரை) [1] தொல். உவம. 32. [2] சீவக. 218, ந.

192. பளிக்கறைப் பவழப்பாவை: சீவக. 1166; மணி. 4: 164; பெருங். 2. 15: 52 - 3. பரிசு - தன்மை. ஊழுறுகனி - முதிர்ந்த பழம். அளித்து - விருப்பமுண்டாக்கி. அயிலுதல் - உண்ணுதல். பறவை - வௌவால்.

பளிக்குப்பாறையை அடுத்த பவழப்பாவை இவளது தன்மையெனத் திகழும் சாயல், ஈண்டு ஒளியது மென்மை; இது செயற்கைநலம். இதற்கு அடுத்தது காட்டும் பளிங்கைப் (குறள், 700) பவழம் தன் தன்மையாக்கினாற்போல, அடுத்த மகளிர் தன்மையனும் அரசனை இவளும் தன்றன்மையே யாக்கிக்கொண்டாளெனக் கதை கருதிய நயமு முண்டு. பொருவபோன்று பொருதெனவிரிக்க. கொண்ட கனி. அயிறல் - உண்டல்; "உண்டற்குரிய வல்லாப் பொருளை, உண்டன போலக் கூறலு மரபே" (தொல். பொருளியல், 19); "தோணல முண்டு துறக்கப் பட்டோர்" (கலித். 33) என்றார் பிறரும். பழமும் வாவலும் [1]வடுப்பட நுகர்தற்குவமை. (கசுங)

## (வேறு)

193. துறுமலர்ப் பிணையலுஞ் சூட்டுஞ் சுண்ணமும்
நறுமலர்க் கண்ணியு நாறு சாந்தமும்
அறுநிலத் தமிர்தமு மகிலு நாவியும்
பெறுநிலம் பிணித்திடப் பெரியர் வைகினார்.

பிணையல் - மலர்நெருங்குமார்பின்மாலை. சூட்டு - [1]நெற்றிக்கட்டு. கண்ணி - முடிக்குமாலை. அமிர்தம் - அடிசிலும் பானமுமுதலியன. இனி, அறுநிலத்தமிர்தம் - அறுசுவையுமாம்; [2]ஆறுகாலத்திற்குரிய பானமுமாம்.

(இ - ள்.) பெரியவர் புணர்ச்சியற்ற நிலத்தே பிணையல்முதலியன தம்மை நுகரும் இந்திரியங்களைப் பிணிப்ப வைகினாரென்க. (கசுச)

194. துடித்தலைக் கருங்குழற் சுரும்புண் கோதைதன்
அடித்தலைச் சிலம்பினோ டரவ மேகலை
வடித்தலைக் கண்மலர் வளர்த்த நோக்கமோ
டடுத்துலப் பரிதவ ளூறி லின்பமே.

துடி - [1]ஏலம். வடித்தலைக்கண் - ஒப்பினால் வடுவகிரிடத்தே நிற்கும் கண்.

---

(உரை) [1]சீவக. 2700, ந.

193. துறுதல் - நெருங்குதல். சுண்ணம் - வாசனைப்பொடி. நாவி - கஸ்தூரி.

(உரை) [1]நெற்றியில் கட்டக் கூடிய பூமாலை. [2]இருதுநுகர்வு; சீவக. 2668 - 2700.

194. மேகலை அரவம் என மாறுக. வடி - மாவடுவின் பிளவு; திருச்சிற். 32, பேர். ஊறு - இடையூறு.

(உரை) [1]மயிர்ச்சாந்து.

**(இ - ள்.)** அவரின்பம், கோதைதன்கண்மலர் ஊடலையும் கூடலையும் விளைவித்த நோக்கத்தானே அவளூடின காலத்து அடி அவன் றலையிற்படுதலிற் பிறந்த சிலம்பின் அரவத்தோடும் கூடின காலத்துப் பிறந்த மேகலையரவத்தோடும் அடுத்து முடிதல் அரிதாயிருந்ததென்க.

அவனும் பாடம். (கசு௫)

195. இழைகிள ரிளமுலை யெழுது நுண்ணிடைத்
தழைவளர் மதுமலர் தயங்கு பூஞ்சிகைக்
குழைமுகக் கொடியொடு குருதி வேலினேன்
மழைமுகின் மாரியின் வைகு மென்பவே.

பூண் விளங்குதற்குக் காரணமாய முலை. [1] ஓவியமெழுதுவார், இதன் தன்மை கருதி எழுதுதற்குக் காரணமான இடை. தழையிலே வளர்ந்த. சிகை - முடி. முலைமுதலியவற்றையுடைய கொடி : இல்பொருளுவமை.

**(இ - ள்.)** வேலினேன், கொடியோடே மாரிக்காலத்து மழைமுகில் போலே அருள்பொழிந்து தங்குமென்க. (கசுசு)

196. படுதிரைப் பவழவா யமுத மாந்தியும்
கொடிவளர் குவிமுலைத் தடத்துள் வைகியும்
இடியினுங் கொடியினு மயங்கி யாவதும்
கடிமணக் கிழமையோர் கடலின் மிக்கதே.

**(இ - ள்.)** மிக்க மணக்கிழமை, அமுதத்தையுண்டும் வைகியும் [1] மாவிடி போலவும் [2] நாழிற்கொடி போலவும் உணர்வும் உடம்புமெல்லா மயங்கிக் கடலின் மிக்கதென்க. (கசுஎ)

---

195. பூஞ்சிகை - பூவை அணிந்த முடி. குழை முகக்கொடி - காதணியைத் தன்னிடத்தேயுடைய கொடி போன்ற விசயை; கொடி என்பதற்கேற்பத் தளிரென்றும் ஒரு பொருள் தோற்றியது.

(உரை) [1] சித்திரம்.

196. படுதிரை பவழத்திற்கு அடை. கொடி - தொய்யிற்கொடி. இடி - மா. இடியினும் கொடியினும் மயங்கி : சிலப். 6 : 146, 30 : 58; பெருங். 1. 32 : 43. கிழமை - உரிமை. கடல் காமத்திற்கு உவமை; குறள், 1137.

(உரை) [1] இடிக்கப்படும் மா. [2] நாழிற்கொடி : “ நாழில், விரையாற் கமழும் விறன்மலை நாடன் ” (பு. வெ. 321)

197. கப்புரப் பசுந்திரை கதிர்செய் மாமணிச்
செப்பொடு சிலதிய ரேந்தத் தீவிய
துப்புமிழ்ந் தலமருங் காம வல்லியும்
ஒப்பரும் பாவைபோன் றுறையு மென்பவே.

(இ - ள்.) கருப்பூர முதலியவற்றையுடைய [1] சுருளைச் சேடியர் செப்போடேந்த, அதனை நுகர்ந்து ஐம்பொறிக்குமினிய நுகர்ச்சிகளைக் கணவனுக்குக் கொடுத்துப் புணர்தற்கு அலமரும் விசயையும் அவனுக்குக் [2] கொல்லிப்பாவைபோல் தங்குமென்க.

கப்புரம் : [3] பாகதம். உம்மை : சிறப்பு. [4] வேறுகருத்துச் செல்லாமல் தன்னையே கருதுவித்தலின், பாவையென்றார்.

இதற்குமுன்பு உலகியன்மணங்கூறி, மேற் காமமிகுதியாற் கெடுகின்றமை கூறுகின்றார். (கசுஅ)

198. மண்ணகங் காவலின் வழுக்கி மன்னவன்
பெண்ணருங் கலத்தொடு பிணைந்த பேரருள்
விண்ணக மிருள்கொள விளங்கு வெண்மதி
ஒண்ணிற வுரோணியோ டொளித்த தொத்ததே.

இன் : நீக்கப்பொருட்டு. உரோகிணி, [1] விகாரம். அவ்வுரோகிணி காரணத்தின் [2] இருடி சபிக்க மதி தேய்ந்ததொரு கதை.

(இ - ள்.) மன்னவன் மண்ணகம் இருள்கொள்ளும்படி காவலிற் றப்பிப் பெண்களுக்கு அருங்கலமானவளுடனே சேர்ந்த [3] கழிகண்ணோட்டம், மதி விண்ணகமிருள்கொள உரோகிணியோடு ஒளித்த தன்மையை யொத்ததென்க. (கசுகூ)

---

197. கப்புரம் - கற்பூர மென்னும் வடமொழிச்சிதைவு; இங்கே பச்சைக்கற்பூரம்; திரை - வெற்றிலை; சீவக. 1479, 2026. தீவிய - இனிய. துப்பு - நுகரும் பொருள்கள். காமவல்லி - கற்பகத்திற் படரும் கொடி.

(உரை) [1] சுருள் - வெற்றிலை. [2] கொல்லிமலையிலுள்ள பாவை. [3] பாகதம் - பிராகிருதம். [4] சீவக. 192, ந.

198. காவலின் வழுக்கி - காத்தலினின்றும் தவறி. மன்னவன் : சச்சந்தன். பெண்ணருங்கலம் : சூளா. இரத. 110. பிணைந்த - சேர்ந்த. மதியும் உரோகிணியும் : நெடுநல். 160-63; பெருங். 1. 47 : 212 - 3; 2. 9 : 167 - 8. மதி உரோகிணியோடு ஒளித்தல் : பெருங். 3. 14 : 6 - 10.

(உரை) [1] உரோகிணி உரோணி என்றானது. [2] தக்கன். [3] அளவிறந்த உவகை; குறள், 432, பரிமேல்; பதிற். 22 : 1.

(வேறு)

199. குங்குமத் தோளி னானுங் கொழுங்கயற் கண்ணி னாளும்
தங்கிய காதல் வெள்ளந் தணப்பறப் பருகு நாளுட்
டிங்கள்வெண் குடையி னாற்குத் திருவிழுக் குற்ற வண்ணம்
பைங்கதிர் மதியிற் றெள்ளிப் பகர்ந்தெடுத் துரைத்து
[மன்றே.

(இ - ள்.) தோளினானும் கண்ணினாளும் வேட்கைப்பெருக்கத்தின் நீக்கமறப் பருகுநாளிலே, அவனுக்குச் செல்வம் மதிபோல் [1] ஒழுகக் குறைந்த தன்மையைத் தெரிந்துகூறிப் பின்பு [2] சீவகன் சரிதம் எடுத்துரைக்கலுற்றாமென்றாரென்க.

இதன்கருத்து : இச்செய்யுட்கு [3] அங்கமாகிய வருணனைகள்கூறி, அதற்குரிய தலைவனை நாட்டுகின்றார், இத்துணையும் [4] அவன் தோன்றற்குக்காரணங்கூறி, அதற்கு முற்பிறப்பில் [5] அன்னப்பார்ப்பைப் பிரித்த தீவினைவந்து [6] குரவரைப்பிரித்தலும் கூறவேண்டுதலின், திருவிழுக்குற்றமை முற்கூறுகின்றாரென்றுணர்க. திருவிழுக்குறுதலாவது : [7] கட்டியங்காரற்கு அரசளித்தலும் [8] அமைச்சர்சொற்கேளாமையும். (கஎ௦)

200. களிறனா னமைச்சர் தம்முட் கட்டியங் கார னென்பான்
ஒளிறுவாட் டடக்கை யானுக் குயிரென வொழுகு நாளுட்
பிளிறுவார் முரசிற் சாற்றிப் பெருஞ்சிறப் பியற்றி வேந்தன்
வெளிறிலாக்கேள்வியானை வேறுகொண் டிருந்து
[சொன்னான்.

199. தணப்பு அற - நீங்குதல் இல்லாமல். திரு - செல்வம். இழுக்குறல் - கெட்டுப்போதல். மதியின் இழுக்குற்ற வண்ணமென மாறுக. தெள்ளி - தெரிந்து.

(மேற்.) அடி, 3-4 : பரி. 12 : 4, பரிமேல்.

(உரை) [1] ஒழுகக்குறைந்த - நீளக்கெட்ட. [2] 'சீவகன் சரிதம்' என்பது வருவிக்கப்பட்டது. [3] நாட்டுவளம், நகரவளம், கோயிற்சிறப்பு முதலியன. [4] அவன் - சீவகன். [5] சீவகன் முற்பிறப்பில் அன்னப்பார்ப்பைப்பிரித்த வரலாற்றை, சீவக. 2856 - ஆம் பாடல் முதலியவற்றாலுணர்க. [6] குரவர் - தாய்தந்தையர். [7] கட்டியங்காரன் ; சச்சந்தன் மந்திரிகளில் ஒருவன். [8] அமைச்சர் - நிமித்திகன் முதலானோர்.

200. களிறனான் - சச்சந்தன். தடக்கையான் - கட்டியங்காரன். தடக்கையானுக்குப் பெருஞ்சிறப்பியற்றி என மாறுக. பெருஞ்சிறப்பு - முடியும் குடையு மொழிந்த மற்ற எல்லாச் சிறப்புக்களையும் செய்தல்; "அருமுடி யொழிய வெல்லா வணிகளு மவனுக்கீந்தான்" (சூளா. சுயம். 143). வேந்தன் - சச்சந்தன். வெளிறு - அறிவின்மை ; குறள், 503. கேள்வியான் - நிமித்திகன். வெளிறிலாக் கேள்வியான் : சீவக.

(இ - ள்.) களிறனான், தன் அமைச்சரில் வெளிறிலாக் கேள்வியை யுடைய நிமித்திகனைத் தனக்கு வேருகக்கொண்டு கட்டியங்காரனென் கின்றவனைத் தனக்கு உயிரெனக்கொண்டு ஒழுகுநாளிலே, வேந்தன் அத்தடக்கையானுக்கு முடியும் குடையுமொழிந்த சிறப்புக்களையுண் டாக்கி அதனை உலகறிய முரசாற்சாற்றி இருந்து இக்காரியத்தைக் கூறினனென்க.

[1] மதச்செருக்காற் பாகன் [2] தோட்டியை [3] நீவுமாறுபோலக் காமக் களிப்பால் தன் அமைச்சர்கூற்றைக் கடத்தல்நோக்கி, 'களிறனான்' என்றார். நிமித்திகன் கருமமே கூறுதலும் கட்டியங்காரன் அரசன் கருத்திற்கேற்ப ஒழுகுதலும் இரண்டற்கும் காரணம். "கோதனான்" (சீவக. 240) என்றும், "கரிமாலை நெஞ்சினான்" (சீவக. 294) என்றும், "கல்லாமந்திரி" (சீவக. 385) என்றும் மேற்கூறலின், கட்டியங்காரனை வெளிறிலாக்கேள்வியானெனலாகாது; இனி இகழ்ச்சிக்குறிப்பென்பாரு முளர். (களக)

201. அசைவிலாப்புரவிவெள்ளத்தரிஞ்சயன்குலத்துட்டோன்றி
வசையிலாள் வரத்தின்வந்தாள் வான்சுவை யமிர்தமன்னாள்
விசையையைப் பிரித லாற்றேன் வேந்தனீ யாகி வையம்
இசைபடக் காத்தல் வேண்டுமிலங்குபூண் மார்பவென்றான்.

அரிஞ்சயன் - [1] தேவிபாட்டன். வசையிலாள் : வினையெச்சமுற்று. வேண்டுமென்பது உம்மீற்றுன் வந்ததோர் ஏவல் கண்ணிய வியங்கோள்; "வாழ்தல் வேண்டுமிவண் வரைந்த வைகல்" (புறநா. 367) என்றார் பிறரும்.

(இ - ள்.) பூண்மார்பனே, அமுதன்னாள், [2] அரிஞ்சயனது அசை விலாக் குலத்துட்டோன்றி வசையின்றி முற்பவத்தில் எனது வேண்டு கோளாலேவந்தாள்; அவளைப்பிரிதலாற்றேன்; நீ இனி வேந்தனாய் உலகை இசையுண்டாகக் காப்பாயாகவென்றானென்க. (களஉ)

---

1617; சூளா. மந்திர. 65; கம்ப. நாடு. 53, வேள்விப். 29. வேறு கொண்டு - தனக்கு மாறுபட்டவனாகக்கொண்டு.

(மேற்.) அடி, 3 : நன். உரி. 18, மயிலை.; சங்கர.

(உரை) [1] கம்ப. வரைக்காட்சி. 4. [2] தோட்டி - அங்குசம். [3] நீவு மாறு - நீக்குமாறு.

201. அசைவு - ஒய்வு. புரவி - குதிரை. அரிஞ்சயன் - விசயையின் பாட்டன். வரம் - வேண்டுகோள்; பிரார்த்தனை. நீ வேந்தனாகி என மாறுக. இசைபட - கீர்த்தியுண்டாகும்படி.

(மேற்.) அடி, 2 : கல். "பாய்திரை" 1 - 15, மயில்.

(உரை) [1] தேவி : விசயை. [2] அரிஞ்சயன் மிகப் புகழ்பெற்றவ னென்பது : சீவக. 1412, ந.

202. அண்ணரு ளுரைப்பக் கேட்டே யடுகளிற் றெருத்தினிட்ட
வண்ணப்பூந் தவிசு தன்னை ஞமலிமே லிட்ட தொக்கும்
கண்ணகன் ஞாலங் காத்த லெனக்கெனக் கமழுங் கண்ணி
மண்ணகம்வளருந்தோளான் மறுத்துநீமொழியலென்றான்.

தவிசு - [1] கழுத்துமெத்தை. [2] மண்வளர்தற்குக் காரணமாகிய தோளான் - அரசன்; 'மண் [3] ணெழுவனையதோள்' பாடமாயின், பண்ணியவெழுவாம்; "[4] ஆவுதி மண்ணி" (மதுரைக். 494) என்றாற் போல. தோளாயும் பாடம்.

(இ - ள்.) கட்டியங்காரன், தான் கருதியிருந்ததனை அரசன்றானே கூறக்கேட்டு உண்மகிழ்ந்து, ஞாலங்காவல் எனக்குத் தவிசை ஞமலி மேலிட்டதொக்குமென்று மறுப்ப, தோளான் என்காரியமாக நீ மறுத்து மொழியலென்றானென்க.

[5] வேறூரூர்தி கூறுது ஞமலியைக் கூறினான், [6] அவன் அயிராது தருதற்கு. (கஎஉ)

203. எழுதரு பருதி மார்ப னிற்றென விசைத்த லோடும் [லோய்
தொழுதடிபணிந்து சொல்லுந்துன்னலர்த்தொலைத்தவே
கழிபெருங் காத லாள்கட் கழிநலம் பெறுக வையம்
பழிபடா வகையிற் காக்கும் படுநுகம் பூண்ப லென்றான்.

[1] ஒடு : உடனிகழ்ச்சி. கழிபெரு : [2] ஒரு பொருளிருசொற்பிரிவில்லா தது.

---

202. அண்ணல் - சச்சந்தன். எருத்து - கழுத்து. வண்ணம் - அழகு. ஞமலி - நாய். நாய்மீது தவிசிடல் : பழ. 75; திருவா. உயிருண்ணி. 2; ஏசறவு, 5. 'ஒக்கும் என' என்று மாறுக. மண்ணகம் - பூமி. மொழியல் - சொல்லாதே.

(மேற்) அடி, 3 : கல். 'திங்கண்முடி', 6; 'பற்றலர்', 13, மயில்.

(உரை) [1] யானையின் கழுத்து. [2] மண்வளர்தல் - பூமி எல்லா விதத்தும் சிறப்புற்று ஓங்கியிருத்தல். [3] எழு - கணையமரம். [4] ஆவுதி - ஆகுதி. [5] வேறூர் ஊர்தி - வேறொரு வாகனம். [6] அவன் அயிராது - சச்சந்தன் ஐயுறாமல்.

203. பருதிமார்பன் : சீவக. 1913. இற்றென - இத்தன்மைத் தென்று. சொல்லும் - பகையென்று கூறப்படும். துன்னலர் - பகைவர். காதலாள்கண் - விசயையிடத்து. கழிநலம் - மிக்க இன்பத்தை. வையம் காக்கும் நுகம் என இயைக்க. படுநுகம் - பெரிய பாரம்; நுகம் - பாரம்; சீவக. 2794; சிறுபாண். 113, ந. வையங்காக்கும் நுகம் : சூளா. மந்திர. 7.

(உரை) [1] இசைத்தலோடும் என்பதில் உள்ளது. [2] தொல். எச்ச. 64, ந.

(இ - ள்.) அரசன் என்னிலை இற்றெனா இசைத்தவளவிலே, கட்டியங்காரன் தொழுது வணங்கிப் பகையென்று கூறப்படும் பகைவரை யெல்லாம் கொன்ற வேலோய், நீ நலம்பெறுக; யான் பழிபிறவாதபடி வையத்தைக் காக்கும் பெரிய பாரத்தைப் பூண்பேனென்றானென்க.

[3] தன் நினைவை அவன்காரியம்போற் கூறினான். (கள௪)

204. வலம்புரி பொறித்த வண்கை மதவலி விடுப்ப வேகிக்
கலந்தனன் சேனை காவல் கட்டியங் கார னென்ன
உலந்தரு தோளி னாய்நீ யொருவன்மேற் கொற்றம்வைப்பின்
நிலந்திரு நீங்குமென்றோர் நிமித்திகனெறியிற் சொன்னான்.

'பொறித்த' எனப் பிறவினையாற்கூறினார், அயன்படைத்தலைநோக்கி. மத: [1] விசேடித்த உரிச்சொல். உலம் வளர்க்குந்தோள்.

(இ - ள்.) மதவலி, உபசாரமாகக் கையாலே காட்டிவிடுப்பக் கட்டியங்காரன்போய்ச் சேனையைக்காத்தலைக் கலந்தானென்று கூறக்கேட்டு, நிமித்திகனென்னுமமைச்சன், தோளினாய், ஒருவன்மேல் உனது கொற்றம்வைப்பின், நிலமும் திருவும் நின்னைநீங்கும்; இதனை நீயே ஓரென்று நீதியாற் கூறினானென்க. (கள௫)

205. எனக்குயி ரென்னப் பட்டா னென்னலாற் பிறரையில்லான்
முனைத்திற முருக்கி முன்னே மொய்யமர் பலவும்வென்றான்
தனக்கியான் செய்வசெய்தேன்றான் செய்வசெய்க வொன்றும்
மனக்கிறை மொழிய வேண்டா வாழிய ரொழிக வென்றான்.

என்னலாற்பிறரையில்லான் - என்னை யொழியப் பிறரையில்லாதான்; [1] இன்மை உடைமைக்கு மறுதலை. முன்னே - சிறப்பிக்கு முன்னே. வென்றானெனவே நடத்துதற்குரியனென்றான். நன்மையும் தீமையும் கருதிச் செய்வவெனப் பன்மையாற் கூறினான்.

---

[3] தன் என்றது கட்டியங்காரனை.

204. வலம்புரி - சங்கரேகை. வலம்புரி பொறித்த வண்கை: முல்லைப். 2; சூளா. குமார. 45. மதவலி - சச்சந்தன். உலம் - உருண்டைக்கல். கொற்றம் - அரசுரிமை; சிலப். 19 : 20; பெருங். 1. 35 : 165; வெற்றியுமாம். நிலம் திரு - நிலமும் திருவும். ஓர் என்று சொன்னான் எனமாறுக; ஓர் - உணர்வாய்.

(உரை) [1] தொல். உரி. 79.

205. முனைத்திறம் முருக்கி - போர்க்களங்களின் கூறுபாட்டை அழித்து. முன்னே - பட்டங்கள் அளித்துச் சிறப்பிக்கும் முன்னே. மனக்கு இறை - மனத்திற்குத் துன்பம் தருவனவற்றை; மனக்கு - மனத்துக்கு என்பதன் விகாரம்; இறை - இன்னா. வேண்டா: எதிர்மறை வியங்கோள் முற்று.

(உரை) [1] தொல். வினை. 17, சே.

(இ - ள்.) உயிரெனப்பட்டான், பிறரையில்லான், வென்றான்; அவன் றனக்கு யான்செய்வன செய்தேன்; அவன்றான் எனக்குச் செய் வனசெய்க; நீ சிறிதும் பொறுமை கூறவேண்டா; நீயும் நின்னிலேயிலே வாழ்வாயாக; இனி இக்கூற்றினைத் தவிர்வாயாகவென்றானென்க. (௧௭௬)

206. காவல குறிப்பன் றேனுங் கருமமீ தருளிக் கேண்மோ
நாவலர் சொற்கொண் டார்க்கு நன்கலாற் றீங்கு வாரா
பூவலர் கொடிய ஞர்கட் போகமே கழுமி மேலும்
பாவமும் பழியு முற்றார் பற்பலர் கேளி தென்றான்.

நாவலர் - அமைச்சர். கழுமி - மயங்கி. இஃது [1] உலகியலாற் கூறி னான். மேற்கூறுவனவெல்லாம் போகத்தையே நோக்குதலின், இது வென ஒருமையாற்கூறினான்.

(இ - ள்.) காவல, நாவலர்சொற்கொண்டார்க்குத் தீங்கு வாரா; ஆதலால், திருவுள்ளமன்றேனும் அருளிக்கேண்மோ; ஒருவன்மேற் கொற்றம் வையாதிருக்கின்ற இது கருமமென்றான்; அதற்கு உடம்படா மையின், நின்னையொழியக் கழுமி முன்னும் இம்மையிற்பழியும் மறுமை யிற்பாவமும் உற்றார் மிகப்பலர்; இதனைக் கேளென்றானென்க. (௧௭௭)

207. பெரும்பெயர்ப் பிரம னென்னும் பீடினற் பெரிய நீரான்
அரும்பிய முலையி னளுக் கணிமுக நான்கு தோன்ற
விரும்பியாங் கவளை யெய்தான் விண்ணக மிழந்த தன்றித்
திருந்திறற் கின்று காறுஞ் சிறுசொல்லாய் நின்ற தன்றே.

---

206. குறிப்பு - கருத்து. கருமம் - காரியம். அருளிக்கேண்மோ - கேட்டருளும். நாவலர் - மந்திரிகள்; "ஒருதலையாச் சொல்லலும், வல்ல தமைச்சு" (குறள், 634) என்பதும் சொல்வன்மை யென்னும் அதிகாரம் அமைச்சியலில் அமைந்திருப்பதும் இதனை விளக்கும். பூ அலர் கொடிய ளூர் - பூக்கள் மலர்ந்த கொடிபோன்ற மகளிர்.

மு. "பெண்ணி னாகிய பேரஞர்ப் பூமியுள், எண்ண மிக்கவ ரெண் ணினு மெண்ணிலார், பின்னி நின்ற பெருவினை மேல்வரும், என்ன தாயினு மேதில்பெண் ணீக்குமின்" (வளையா.)

(உரை) [1] பொதுவாகக் கூறல் : சீவக. 245, ந.

207. பெரும்பெயர்ப் பிரமன் : "பெரும்பெயர் முருக", "பெரும் பெய ரியவுள்" (முருகு. 269, 274.) முலையினளுக்கு - முலையினையுடை யாள் பொருட்டு. பிரமனுக்குத் திலோத்தமை பொருட்டு நான்கு முக முண்டானமை : கந்த. மாயைப். 63. சிறுசொல் - பழிச்சொல்; "சிறு

(இ - ள்.) பிரமனென்னும் தவத்தாற் பெரிய நீரான், [1] திலோத்தமை பொருட்டு நான்குமுகம் தோன்றும்படி விரும்பி அவ்விடத்து அவளைப் பெறுதுய் விண்ணகமிழந்ததேயன்றிப் பின் தவத்தாற் பாவந்தீர்ந்தவற்கு இன்றளவும் புறஞ்சொல்லாய் நின்றதல்லவோவென்றுனென்க.

பெயர் - புகழ். அன்றே : ஏகாரம், வினு. முறைசெய்யாமையிற் றன்னிலையிழந்தான். தோற்றியும் பாடம். (கஎஅ)

---

சொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை" (புறநா. 72); "சீறினுனென்ற போழ்திற் சிறுசொலாய் நிற்கும்" (சூளா. அரசியற். 317)

(உரை.) [1] திலோத்தமை - ஒரு தேவகணிகை; நான்கு முகமென்றது, இயற்கையாயுள்ள ஒருமுகத்தை யன்றி வேறு நான்கு முகங்களை. அந்நான்கு முகமுண்டான கதை வருமாறு: பிரமதேவர் முன்னொரு காலத்தில் காம மிகுதியால் தேவலோகம் சென்று ஆண்டுள்ள தேவமகளிரை அடைதற்கு முயன்று, தம்மை அவர்கள் மதியாமையால், அவர்களை எளிதிற் பெற்று அநுபவித்தற்குரிய இந்திரபதவியை அடைய நிச்சயித்து மீண்டுவந்து ஓரிடத்தில் இருந்து மூன்றரைக் கோடி வருடம் குரூரமான தவம் செய்தார்; அதனை அறிந்து தன் பதவிக்குக் கேடு வருமோ என்று கவலையுற்ற இந்திரன், தேவகுருவின்பால் முறையிட்டு அவரது கட்டளையால் இவருடைய தவத்தை அழித்தற்காகத் திலோத்தமையை உண்டுபண்ணி அனுப்ப அவள் வந்து முன்னின்று வேட்கையை விளைவித்தற்குரிய ஆடல்பாடல்களைச் செய்தனள்; உடனே இவர் விழித்துப்பார்க்கத் தொடங்குகையில் அவள் வலப்புறத்தே சென்று அவற்றைச் செய்தனள்; இவர், திரும்பிப்பார்த்தாற் கூடஇருக்கும் முனிவர்கள் பழிப்பார்களேயென்று நினைத்துத் தாம் புரிந்து வந்த தவங்களுள் ஒருகோடி வருடத் தவத்தால் அந்தப்பக்கத்தே ஒருமுகத்தை உண்டாக்கிக் கொண்டு பார்க்க அவள் பின்புறத்தே சென்று அவற்றைச் செய்ய இவர் மற்றொரு கோடி வருடத்தவத்தால் அந்தப் பக்கத்தும் ஒரு முகத்தை உண்டாக்கிக்கொண்டு பார்த்தனர்; உடனே அவள் இடப்பக்கத்தே சென்று அவற்றைச் செய்தனள்; இவர் வேறொரு கோடி வருடத் தவத்தால் அந்தப்பக்கத்தும் ஒருமுகத்தை உண்டாக்கிக் கொண்டு பார்க்க அவள் ஆகாயத்தே சென்று அவ்வாடல்பாடல்களைச் செய்ய இவர் எஞ்சிய அரைக்கோடி வருடத் தவத்தால் மேலேயும் ஒரு முகத்தை உண்டாக்கிக் கொண்டு பார்த்தபோது அவள் மறைந்து போயினள். அப்பால் இவர் காமபரவசராகி ஆகாயவழியே செல்லும் தெய்வமங்கையர் பலரையும் வலிந்து இழுத்துத் துன்புறுத்துவாராயினர்; அதனை அறிந்த தேவர்களுடைய வேண்டுகோளால் வந்த ஸதாசிவ மூர்த்தி, இவர் அத்தீச்செய்கையை நிகழ்த்தாதிருத்தற் பொருட்டு இவருடைய மேற்றலையைக் கிள்ளியெறிய, அப்பால் இவர் எல்லாராலும் பழிக்கப்பட்டுத் தமது பதவியையும் இழந்தனர். இது தர்மபரீக்ஷை என்னும் சைனநூலில் மூன்றும் படலத்திற் கூறப்பட்டிருக்கிறது.

208. கைம்மலர்க் காந்தள் வேலிக் கணமலை யரையன் மங்கை
மைம்மலர்க் கோதை பாகங் கொண்டதே மறுவ தாகக்
கொய்ம்மலர்க் கொன்றை மாலைக் குளிர்மதிக் கண்ணி யாற்
பெய்ம்மல ரலங்கன் மார்ப பெரும்பழி யாயிற் றன்றே. [குப்

கைமலர் - கைபோலுமலர். மலையரையன் - மலைகளுக்கரசன். மைமலர்க்கோதை - நீலமலராற்செய்த கோதை; [1] இறைவி; ஆகுபெயர். மாலை - [2] அடையாளப்பூ. கண்ணி - சூடும்பூ; "கண்ணியுந் தாரு மெண்ணின ராண்டே" (தொல். மரபு. 79) என்றார்.

(இ - ள்.) இடப்பட்ட மாலைமார்பனே, மலையரையன் மனைவியாகிய [3] மேனை பெற்ற கோதையைப் பாகத்தேவைத்ததே மறுவையுடைய தொன்றாகக் கொன்றையாற்செய்த மாலையினையும் மதியாகிய கண்ணியினையுமுடைய அரனுக்குப் பழியாயிற்றல்லவோவென்றானென்க. (கஎகூ)

209. நீனிற வண்ண னன்று நெடுந்துகில் கவர்ந்து தம்முன்
பானிற வண்ண னேக்கிற் பழியுடைத் தென்று கண்டாய்
வேனிறத் தானை வேந்தே விரிபுனற் றொழுனை யாற்றுட்
கோனிற வளையி னார்க்குக் குருந்தவ னொசித்த தென்றான்.

வேனிறம் - வேலினது விளக்கம். கோல் - திரட்சி.

---

208. கைம்மலர்க் காந்தள் : பரி. 19 : 76; பெருங். 4. 11 : 78-9; சூளா. நாட்டுச். 11, சீயவதைச். 217; காந்தள் வேலிக் கணமலை : குறுந். 76. மதி - பிறை. கங்காதேவியை மணந்தது தெரிந்து ஊடிய உமாதேவியை மகிழ்வித்தற்பொருட்டுச் சிவபெருமான் தமது திருமேனியிற் பாதியைக் கொடுத்தருளினரென்று தர்மபரீக்ஷை தெரிவிக்கின்றது.

(உரை) [1] உமை. [2] காந்தட்பூவை முருகவேளுக்கு அடையாளப் பூவென்பர்; முருகு. 43-4, ந. [3] இமவான் மனைவி.

209. நீல் - நீலம்; கடைக்குறை. நெடுமை பல வென்னும் பொருளில் வந்தது. தம்முன் - தமையன். பால்நிறவண்ணன் - பலராமன். தொழுனை - யமுனை; "தொழுனை யன்னேன் கருதுழி யொழுகிற் றன்றே" (கூர்ம. கண்ணன்பூமி. 34) குருந்து - குருந்தமரம். கண்ணன் குருந்தொசித்தது : அகநா. 59; பழ. 12; திரிகடுகம், கடவுள்.; சிலப். ஆய்ச்சி.; தே. திருஞா. புறம்பயம். 3; திருநா. அதிகை. 10; நாச்சியார். 3 : 2. கண்ணன் குருந்தொசித்த கதை:—ஒரு நாள் யமுனையாற்றிலே நீர்விளையாடிக் கொண்டிருந்த கோவியருடைய துகில்களையெல்லாம் விளையாட்டு நிமித்தம் கவர்ந்து கொண்டு கரையிலுள்ள குருந்தமரத்தில் ஏறி நின்ற கண்ணபிரான் தம்முடைய முன்னோராகிய

(இ - ள்.) வேந்தே, [1] மாயோன் பலதுகிலைக் கவர்ந்து தம்முனாகிய பானிறவண்ணன் நோக்கிற் பழியுடைத்தென்றுகாண் தொழுனையாற் றிலே [2] கோவியர்க்குக் குருந்தொசித்தது; இஃது அங்ஙனந் தீதென்று ரைனென்க. (கஅ0)

210. காமமே கன்றி நின்ற கழுதைகண் டருளி னாலே
வாமனார் சென்று கூடி வருந்தினீ ரென்று வையத்
தீமஞ்சேர் மாலை போல விழித்திடப் பட்ட தன்றே
நாமவேற் றடக்கை வேந்தே நாமிது தெரியி னென்றான்.

காமமே : ஏகாரம், தேற்றம். என்று - என்ன. ஈமம் - சுடுகாடு.

(இ - ள்.) வேந்தே, நாம் இக்காமத்தைத் தெரியின், காமமே அடிப் பட்டு நின்ற ஆண்கழுதையைக்கண்டு, அருளாலே புத்தனார் பெண்கழு தையாய்ச் சென்றுகூடி, இக்காமத்தாலே வருந்தினீரேயென்ன, [1] அது வையத்திலே ஈமத்திலே விழுந்த மாலைபோல இழித்திடப்பட்டதல்லவோ வென்றானென்க. (கஅக)

---

பலராமர் அங்கு வருதலை அறிந்து தமது செய்கையை அவர் காணின் தமக்கு மிக்க பழி உண்டாகுமென நினைந்து அக்குருந்த மரத்தை முறித்து யமுனையாற்றில் வீழச்செய்து தாம் கவர்ந்த துகில்களை நீரில் நின்ற அக்கோவியர் எளிதிற் பெறும்வண்ணம் செய்ததன்றித் தாமும் நீந்தி வேறிடம் சென்றாரென்று சைனர் கூறுவர்; 'ஒசித்தது' என்பதற்கு ஒளித்துக்கொண்டதென்றும் அவர்களில் ஒருசாரார் பொருள் கூறுவது உண்டு.

(உரை) [1] கரிய நிறமுடையோன்; பரி. 3 : 1, பரிமேல். [2] கோவியர் - இடைச்சாதி மங்கையர்.

210. கன்றி - அடிப்பட்டு; மணி. 22 : 20. வாமனார் - புத்தர். ஈமம் - சுடுகாடு. நாமம் - அச்சம்; உரிச்சொல் ஈறு திரிந்தது. நாம் முன்னிலைக்கண் வந்தது; "நாமரை யாமத்தென் னோவந்து வைகி நயந்ததுவே" (திருச்சிற். 164); உளப்பாட்டுத் தன்மையுமாம். புத்தன் இங்கே கூறிய செய்கையால் இழிவுபடுத்தப் பட்டதை நீலகேசியில் புத்த வாதச் சருக்கத்தில் "திரிவே தனைகளுந் தீரா நுமக்குள வாதலன்றே, கரிவே தனையவர் காமுறு காமங் கடிந்ததுதான்" (கரி - பெட்டைக் கழுதை) என்னும் 43-ஆம் செய்யுளாலும், 'மூன்று வேதனைகளும் நுமக்கு உண்மையினன்றே பெட்டைக் கழுதையைப் பெருது வேதனைப் படுகின்ற கழுதைகளோடு ஸங்கமிப்பீராயினது' என்னும் அதனுரையாலும், நீலகேசி, மொக்கலவாதச் சருக்கத்துள்ள, "கல்லாது நீயுங் கழுதைக்கருள் செய்தி யென்றான்" (139) என்பதனாலும் தெளிக.

(மேற்.) அடி, 4 : நேமி. உரி. 2.

(உரை) [1] அது - அவ்வாறு புத்தன் வினவியது; அச்செய்கையுமாம்.

211. படுபழி மறைக்க லாமோ பஞ்சவ ரன்று பெற்ற
வடுவுரை யாவர் பேர்ப்பார் வாய்ப்பறை யறைந்து தூற்றி
இடுவதே யன்றிப் பின்னு மிழுக்குடைத் தம்ம காமம்
நடுவுநின் றுலகமோம்ப னல்லதே போலு மென்றான்.

(இ - ள்.) கேட்பாயாக; காமத்தாற் பிறந்த பழியை மறைக்கலாமோ? பஞ்சவர் ஒருத்தியையே மனைவியாக்கலிற்பெற்ற வடுவுரையைப் போக்குவார் யார்? அது தூற்றியிடுதலேயன்றி மறுமையிலும் நரக முதலியவற்றைத் தரும்; ஆதலால், நடுவுநிலையிலே நின்று உலகமோம்புதலே நல்லதுபோலு மென்றானென்க.

போலும் : [1] ஒப்பில்போலி. (௧௮௨)

212. ஆரறி விகழ்தல் செல்லா வாயிரஞ் செங்க ணானும்
கூரறி வுடைய நீரார் சொற்பொருள் கொண்டு செல்லும்
பேரறி வுடையை நீயும் பிணையனாட் கவலஞ் செய்யும்
ஓரறி வுடையை யென்றா னுருத்திர தத்த னென்பான்.

ஆரறிவிகழ்தல் செல்லா - பெரிய அறிவு பிறரால் இகழப்படாத. அவலம் - அரசன் கொலையுண்டல்.

(இ - ள்.) அரசன் நிமித்திகன் கூற்றைக்கொள்ளாமை கண்டு, அருகிருந்த உருத்திரதத்தன், இந்திரனும் அமைச்சர் சொற்பொருளைக் குறிக்கொண்டு நடக்கும்; அவனைப்போல நீயும் அறிவுடையை; ஆயினும் இப்பொழுது இவன் சொல்லைக் கொள்ளாமையின், பிணையனாட்கு அவலஞ் செய்யும் ஓரறிவுடையையாயினை யென்றானென்க. (௧௮௩)

213. அளந்துதாங் கொண்டு காத்த வருந்தவ முடைய நீரார்க்
களந்தன போக மெல்லா மவரவர்க் கற்றை நாளே
அளந்தன வாழு நாளு மதுவெனக் குரைய லென்றான்
விளங்கொளி மணிகள் வேய்ந்து விடுசுட ரிமைக்கும் பூணான்.

---

211. பஞ்சவர் பாண்டவரைவர். வாய்ப்பறை அறைந்து - வாயாகிய பறையை அடித்து. இழுக்கு - குற்றம். அம்ம : கேட்பித்தற் பொருளில் வரும் இடைச்சொல்.

(உரை) [1] தொல். இடை. 30.

212. ஆரறிவு - நிறைந்த அறிவு. கூரறிவு - மிக்க அறிவு. பிணை - பெண்மான். அவலமென்பது யாக்கை நிலையாமையை. இந்திரன் அமைச்சர் சொல்வழி நடத்தல் : "இந்திர னிறைமையு மீரைஞ் நூற்றுவர், தந்திரக் கிழவர்க டாங்கச் செல்லுமே" (சூளா. இரத. 119); 'ஆயிரங் கண்ணுடை யமரர் கோனுமோர், ஆயிர மமைச்சர்சொல் வழியி னுயதே" (சாந்திபுராணம்)

213. அளந்தன போகம் : நாலடி. 103; பெருங். 2. 13 : 55.

(இ - ள்.) பூணான், வரைந்துகாத்த தவமுடையார்க்குக் [1] கருவாய்ப் பதிகின்ற பொழுதே போகமெல்லாம் அளந்தன; அவரவர்க்கு அப் பொழுதே வாழும் நாளும் அளந்தன; அஃது எனக்கு உரையலென்று னென்க.

போகமுமென்னும் உம்மை கூறிற்றிலர், செஞ்சொலாய் முற்படக் கிளத்தலின்; "நிலந்திரு நீங்கும்" (சீவக. 204) என நிமித்திகன் கூறிய செல்வநிலையாமையையும், உருத்திரதத்தன் கூறிய யாக்கைநிலை யாமையையும் நிலையாமையென ஒருமையாக்கி, 'அது' என்று ஒருமை யாற் கூறினான். உரையலென்றான், நிமித்திகனை நோக்கி; அவன் உரியனாதலின். (கஅச)

214. மூரித்தேந் தாரி னாய்நீ முனியினு முறுதி நோக்கிப்
பாரித்தேன் றரும நுண்ணூல் வழக்கது வாதல் கண்டே
வேரித்தேங் கோதை மாதர் விருந்துனக் காக வின்பம்
பூரித்தேந் திளைய கொங்கை புணர்கயான் போவ லென்றான்.

(இ - ள்.) தாரினாய், நூல்வழக்கு [1] இடித்துக்கூறல் (குறள், 638) அமைச்சர்க்கு இயல்பென்றமைகண்டு, உறுதிநோக்கி இத்துணையும் பரக்கக் கூறினேன்; இனி மாதர்கொங்கையை நினக்கு எப்பொழுதும் விருந்தாகக் கொண்டு புணர்க; நீ என்னை முனியினும் நின் தவறு காணாமல் துறவிடத்தே போவேனென்றானென்க.

மூரி, பண்புமாத்திர முணர்த்தாது பெயராதலின், வேற்றுமைத் தொகை. முனியினுமென்பது எதிர்காலமுணர்த்து மெச்சம்; உம்மை, ஐயம். 'இளையகொங்கை' என்று இளமைநிலையாமை கூறினான். அரசன் போவென்னாமல் தானே போவேனென்றல் நீதியன்மையின், துறவு [2] உட் கோளாயிற்று. இதனான், "வெளிறிலாக் கேள்வியான்" (சீவக. 200) என்றார்.

"களிறனான்" (சீவக. 200) முதல் இத்துணையும் ஒரு தொடர். (கஅரு)

(வேறு)

215. இனமா மென்றுரைப் பினுமே தமெனான்
முனமா கியபான் மைமுளைத் தெழலாற்
புனமா மலர்வேய் நறும்பூங் குழலாள்
மனமா நெறியோ டியமன் னவனே.

(உரை) [1] கருவாய் - கருவினிடத்தே.

214. மூரி - பெருமை. முனியினும் உறுதிகூறல்: குறள், 638; "அரைசர் சீறுவ ரேனு மடியவர், உரைசெயாதொழி யார்க ளுறுதியே" (கலிங்கத். 366). பாரித்தேன் - விரித்துக் கூறினேன்; "பயனில, பாரித் துரைக்கு முரை" (குறள், 193). வேரி - தேன். இன்பம் பூரித்து - இன்பம் நிறைந்து. ஏந்து - மேல் நோக்கிய.

(உரை) [1] தீயன கண்டால் நெருக்கிச் சொல்லுதல். [2] உட்கோள் - எண்ணம்.

இனமாம் - நினது வேட்கையும் முற்கூறிய [1] தேவரது வேட்கைத்திரளிலே வைத்து எண்ணுவதொரு வேட்கையாம். குழலாள் மனமாம் மன்னவன்-குழலாள் மனக்கருத்தாய் நுகரும் மன்னவன்; நெறியோடிய மன்னவன் - அரசநீதி கெட்ட மன்னவன்.

(இ - ள்.) குழலாள் மனமாம் மன்னவன், முற்பிறப்பில் தீவினை முளைத்துத் தோன்றுதலாலே, இது முற்கூறிய இனத்தேயாமென்று பின்னும் கூறினும் தனக்குவரும் ஏதமெண்ணுகுயினுனென்க. (கஅரு)

216. கலையார் துகிலேந் தல்குலுங் கதிர்சூழ்
முலையார் தடமும் முனியா துபடிந்
துலையாத் திருவின் னமிர்துண் டொளிசேர்
மலையார் மணிமார் பன்மகிழ்ந் தனனே.

விசையையது கெடாத இளமைச்செல்வியை நுகர்ந்து. [1] ஆர்தல் - ஒத்தல்.

(இ - ள்.) மார்பன், அவளல்குலாகிய இன்பக்கடலினும் முலைத் தடத்தினும் வெருதே படிந்து உண்டு வேறு மனக்கவற்சியின்றி மகிழ்ந்தானென்க. (கஅஎ)

217. விரிமா மணிமா லைவிளங் குமுடித்
திருமா மணிசிந் துதிளைப் பினராய்
எரிமா மணிமார் பனுமேந் திழையும்
அருமா மணிநா கரினு யினரே.

(இ - ள்.) மார்பனும் ஏந்திழையும், மார்பிற்கிடந்த விரிந்த மாமணி மாலையும் [1] மணிபோலும் மயிர்முடியிற் கிடந்த தெய்வவுத்தியும், சிந்தும் திளைப்பினராய் நாகரைப்போல் ஒன்ருயினுரென்க. (கஅஅ)

---

215. ஏதம் - துன்பம். எணுன் - எண்ணுன். முனமாகிய பான்மை - முற்பிறப்பிற் செய்ததாகிய தீவினை. முளைத்தெழல் - தோன்றி எழுதல். நெறி ஓடிய - நீதிகெட்ட; ஓடுதல் - கெடுதல்; சீவக. 2381, ந.; சிறுபாண். 214. குழலாள் : விசயை. மன்னவன் : சச்சந்தன்.

(உரை) [1] தேவரது - பிரமன் முதலிய தேவரது.

216. கலை - மேகலை. முனியாது - வெறுப்பில்லாமல். உலையா - கெடாத. திரு - விசயை. திருவின் உலையா அமிர்து உண்டு என மாறுக.

(உரை) [1] மலையார் மார்பன் என்பதில் உள்ளது.

217. முடிமணி - சூடாமணி; சிலப். 6 : 106-8, அடியார். மேற்; கம்ப. சூடாமணி. 88. மணிமாலையும் மணிமுடித்திருவும் என உம்மை வருவிக்க. நாகர் - நாகலோகத்தவர். நாகரைப்போல் நுகர்தல் : சீவக. 11, 1347.

(உரை) [1] நீலமணி; பெருங். 2. 15 : 90 - 91. [2] தெய்வவுத்தி - திருமகள் வடிவமாகச் செய்யப்பட்டதோர் ஆபரணம்; முருகு. 23.

218. நறவார்ந் ததொர்நா கிளந்தா மரைவாய்
உறவீழ்ந் ததொரொண் மணிபோன் றுரவோன்
அறவாக் கியவின் பமமர்ந் தவிருட்
கறைவேற் கணினுள் கனவுற் றனளே.

தேன் நிறைதலும் மிக்க இளமையும் மாறுத தாமரையெனவே [1] பதும யோனியாம். உரவோனுற - [2] பிள்ளையார் அவதரிக்க. அறவு: தொழிற்பெயர்.

(இ - ள்.) அங்ஙனம் நாகரைப்போல் அமர்ந்த இருட்கண்ணே தாமரைவாய் வீழ்ந்ததொரு [3] முத்துப்போன்று உரவோனுற, அப்பொழுதே இன்பம் அறுதலையாக்கிய கனவைக் கறைவேற்கண்ணினுள் கண்டாளென்க. (உஅஅ)

(வேறு)

219. பஞ்சி யடிப்பவ ளத்துவர் வாயவள்
துஞ்சு மிடைக்கன மூன்றவை தோன்றலின்
அஞ்சி நடுங்கின ளாயிழை யாயிடை
வெஞ்சுடர் தோன்றி விடிந்ததை யன்றே.

(இ - ள்.) துவர்வாயினையுடையாள் துயிலிடைக் கண்ட கனா மூன்று; அவை பின்பு மனத்தே தோன்றலின், அவள் அஞ்சி நடுங்கினாள்; அக்காலத்தே விடிந்ததென்க.

எனவே [1] கடிதிற்பயக்குமாறாயின. இவை [2] பிற்பயக்கும் கனவாதலின், பின்னும் நெஞ்சிற்றோன்றின. (உகூ௦)

---

218. நறவு - தேன். ஆர்தல் - நிறைதல். நாகிளமை - மிக்க இளமை. மணி - முத்து. உரவோன் - சீவகன். உரவோன் உற என மாறுக. அறவு - அறுதல். ஆக்கிய கனவு உற்றனள் என இயைக்க. கறைவேல் - விடம் பூசிய வேல்.

(உரை) [1] சீவக. 191, உரை. [2] பிள்ளையார் அவதரிக்க - சீவகன் தங்க. [3] சீவக. 379.

219. பஞ்சியடி - செம்பஞ்சு பூசிய அடி. துவர்வாய் - சிவந்த வாய். கன - கனவு. வெஞ்சுடர் - சூரியன். விடிந்ததை: சீவக. 223.

(மேற்.) அடி, 3-4: சிலப். 15: 95-106, அடியார்.

(உரை) [1] கனாமூன்றும் கடையாமத்திற் காணப்பட்டனவாதலால் இவ்விதம் கூறினார்; "படைத்தமுற் சாமமொ ராண்டிற் பலிக்கும் பகரிரண்டே, கிடைத்தபிற் சாம மிகுதிங்க ளெட்டிற் கிடைக்குமென்னும், இடைப்பட்ட சாமமொர் மூன்றினிற் றிங்களொர் மூன்றென்பவாற், கடைப்பட்ட சாமமு நாள்பத்தி லேபலன் கைபெறுமே" (2) என்னும் கனாநூற் செய்யுளா லுணர்க. விடியற்காலக்கனா உடனே பலித்தல்: சீவக. 1909; சிலப். 15: 105-6. [2] பிற்பயக்கும் - பின்பு பலனைத்தரும்.

220. பண்கெழு மெல்விர லாற்பணைத் தோளிதன்
கண்கழூஉச் செய்து கலைநல தாங்கி
விண்பொழி பூமழை வெல்கதிர் நேமிய
வண்புகழ் மாலடி வந்தனை செய்தாள்.

பண் : [1] ஆகுபெயர்; யாழொடு பயின்ற [2] விரலும் ஆகுபெயர். கழூஉச் செய்து, "நல்ல மரூஉச் செய்து" (நாலடி. 246) என்பதுபோல நின்றது. விண் : [3] ஆகுபெயர். தீவினையை வெல்லும் [4] அறவாழி.

(இ - ள்.) பணைத்தோளி, கண்கழுவித் தாங்கி அக்கோயிலின் மாலடியை வணங்கினாளென்க.

"[5] தெய்வமஞ்சல்" (தொல். மெய்ப்பாடு. 24) என்னும் மெய்ப்பாட்டியற் சூத்திரம், தன் குலதெய்வத்தை வணங்குதற்கு விதியாமாறுணர்க. (கஉக)

221. இம்பரி லாநறும் பூவொடு சாந்துகொண்
டெம்பெரு மானடிக் கெய்துகென் றேத்தி
வெம்பரி மானெடுந் தேர்மிகு தானையத்
தம்பெரு மானடி சார்ந்தன ளன்றே.

(இ - ள்.) அவள், இவ்வுலகில் நிகரில்லாத பூவையும் சாந்தையும் கொண்டு, எம்பெருமானே, நின்னடிக்கு இவை பொருந்துவனவாகவென் றேத்தி, தன் கணவனடியை வணங்கினாளென்க.

அ, [1] உலகறிபொருண்மேற்று. (கஉஉ)

222. தானமர் காதலி தன்னொடு மாவலி
வானவர் போன்மகிழ் வுற்றபின் வார்நறுந்
தேனெனப் பாலெனச் சில்லமிர் தூற்றெனக்
கானமர் கோதை கனிமொழி கின்றாள்.

220. பண்கெழுமெல்விரல் : சீவக. 239. பணைத்தோளி - மூங்கில் போன்ற தோளினையுடையாள். கழூஉச்செய்து - கழுவுதலைச் செய்து : இடக்கரடக்கல். கண்கழுவிக்கடவுளை வணங்குதல்; சீவக. 1943; ஆசாரக். 10; பெருங். 3. 8 : 7; 4. 7 : 126. மால் - அருகன்; சீவக. 961.

(உரை) [1] பண் யாழுக்கானமையின் ஆகுபெயர். [2] விரல் கைக்கு ஆயிற்று. [3] விண் அதில்வாழும் தேவர்களுக்கு ஆயிற்று. [4] தருமசக்கரம். [5] 'தலைமகற்குத் தொழுகுலமாகிய தெய்வமும் அவர்க்கு ஆசிரியரான தாபதரும் இன்னாரென்பது அவனான் உணர்த்தப்பட்டு உணர்ந்த தலைமகள் அத்தெய்வத்தினை அஞ்சி ஒழுகும் ஒழுக்கம்' (தொல். மெய்ப்பாடு. 24, பேர்.)

221. சாந்து - சந்தனம். அடிக்கு எய்துக என்று. தம்பெருமான்; "நங்காய் காணுன் பெருமா னன்னகர்" (பெருங். 2. 10 : 72)

(உரை) [1] உலகறிசுட்டு.

222. தானமர் - தான் விரும்பிய. மாவலி - மிக்க வலியையுடைய சச்சந்தன். கான் - மணம்.

[1] தேவர் நோக்கத்தால் நுகர்ந்தாற்போல் இவனும் நோக்கத்தால் நுகர்ந்து மனமகிழ்ச்சியுற்றபின். கனவுமூன்றிற்கும் தேன்முதலிய மூன்றும் உவமம்: "பிண்டி......வீழ்ந்தது" (சீவக. 223) என்னுமொழி, இவள் கூறுதலின் [2] இனிதாய்ப் பின் தீங்கு விளைத்தலிற் றேனுவமம்; "ஆர்ந்தோர் வாயிற் றேனும் புளிக்கும்" (குறுந். 354) என்றார் பிறரும், "எண், முத்தணிமாலை" (சீவக. 223) என்ற சொல் குலந்தூய்மை கூறுதலிற் பாலுவமம். [3] இவன் ஆக்கத்திற்கு ஊறுமமிர்து உவமம்; இவனுக்கம் அமுதுபோல் உயிர்களைக் காத்தலின்.

(இ - ள்.) மாவலி, தான் மேவின காதலிதன்னோடே மகிழ்வுற்ற பின்பு, அவள் தேன்முதலியன வென்னும்படி கனுமொழியாநின்றாளென்க. (உஉஉ)

223. தொத்தணி பிண்டி தொலைந்தற வீழ்ந்ததெண்
முத்தணி மாலை முடிக்கிட னாக
ஒத்ததன் றாள்வழி யேமுளை யோங்குபு
வைத்தது போல வளர்ந்ததை யன்றே.

முத்தணிமாலை - முத்தையொத்த மாலை; அணி, "மின்னணி நுண்ணிடை" (திருச்சிற். 342) போல் உவமவுருபு; என்றது, வெள்ளிய மாலையை. இது [1] குலந்தூய்மை கூறிற்று; "வெண்டா மரைமலர்த்தடங் கள்போலு, நங்குடி" (சீவக. 547) என்பர் மேலும்; முத்தமாலையெனின், மேல், "நறுமாலை" (ஷெ. 225), "எண்கோதைத்தொகை" (ஷெ. 2607) என்றல் பொருந்தாது. வளர்ந்ததை, வினைத்திரிசொல்; "உரைத்ததை" (கலித். 76) போல.

(இ - ள்.) ஒருபிண்டி, தான் அணிந்த தொத்துக்கள் ஒழுகக் கெட்டுப் பின்பு தானும் நேராகவீழ்ந்தது; அதன்வழியிலே ஒருமுளை அதனையொத்து எட்டுமாலையையுடையதொரு முடிக்கு இருட்பிடனாக நட்டுவைத்தாற்போலே ஓங்காநின்று வளர்ந்ததென மொழிந்தாளென்க.

---

(உரை) [1] சீவக. 352, ந; கந்த. வள்ளி. 23. [2] 'தேனுக்கு இன் சுவை நிகழ்ந்த காலத்தே புளிச்சுவை நிகழுமாறு போல' (சீவக. 2382, ந.) [3] சீவகனுடைய ஆக்கம்.

223. தொத்து - பூங்கொத்து. பிண்டி - அசோகமரம். அசோகமரம் பரசுவினால் வெட்டப்பட்டு வீழ்ந்ததாகக் கனுக்கண்டாளென்று ஸ்ரீபுராணம் கூறும். முடி - கிரீடம். தாள்வழி - வேரின்வழியே. முளை - அசோகங் கன்று; பாலாசோக மென்பர் ஸ்ரீ புராணமுடையாரும், க்ஷத்திரசூளாமணியுடையாரும்.

அசோகமரமொன்று வீழவும் பொன்மௌலியையும் எட்டுப் பூமாலைகளையும் உடையதான பாலாசோகமொன்று அதனடியில் முளைத்து வளரவும் விசயை கனுக்கண்டாளென்று சீவந்தரசம்பு தெரிவிக்கின்றது.

(உரை) [1] குலத்தூய்மை சீவக. 547, 2413-ஆம் கவிகளிலுள்ள உவமைகளாலும் விளக்கப்பெற்றுள்ளது.

மேலே, "துளும்புநலத்தாரோடு" (சீவக. 2889) என்றலின், முத்தணி மாலையைக் கனவிற்கண்டாள்; அது காரணம். இதனால், சுற்றங் கெட்டபடியும் அரசன் கெட்டபடியும் கூறினர். அது கதையிற் காண்க. (கஉச)

224. வார்குழை வில்லிட மாமுடி தூக்குபு
காரெழு குன்றனை யான்கன வின்னியல்
பார்கெழு நூல்விதி யாற்பயன் றன்றெரிந்
தேர்குழை யாம லெடுத்துரைக் கின்றான்.

(இ - ள்.) சலியாதவன், கனவின் இயல்பை, [1]கனநூலின்விதியாலே பயனைத்தெரிந்து தான்பார்த்து முடிதுளக்கி அவற்றில் நல்லவற்றை எடுத்து அவள் அழகுகெடாமற் கூறுநின்றானென்க.

அஃது, அசோகு முறிந்தது கூறாமல் மாலையையும் முடியையும் இரண்டு கனவாகப் பிரித்தது. (கஉரு)

225. நன்முடி நின்மக னறுநறு மாலைகள்
அன்னவ னுலம ரப்படுந் தேவியர்
நன்முளை நின்மக னுக்கம தாமெனப்
பின்னத னற்பயன் பேசலன் விட்டான்.

(இ - ள்.) அவன் அவட்கு, முடி நின்மகனும்; நறிய பூமாலைகள் அந் நல்வினையுடையோனால் அமரப்படும் தேவிமார்; முளை நின்மகனுக்க மென மூன்றுக்கிக் கூறிய பின்பு இற்றதனுள்ள பயனைப் பேசலனாய் விட்டானென்க.

---

224. வில்லிட - ஒளிவீச. பார்கெழு - பெருமை பொருந்திய. ஏர்; விசயையின் அழகு. துன்பச்செய்தியைப் பொறுக்கும் அளவில் பிறர்க்குக் கூறவேண்டுமென்பது இச்செய்யுளால் தெரிகின்றது; சீவக. 2343-ஆம் பாடலும் இதனை விளக்கும்.

(உரை) [1] இப்பெயர் கொண்ட நூலொன்று தமிழில் உள்ளது.

225. நறுமாலைகள் - நல்ல மாலைகளெனினுமாம்; நறுமை-நன்மை; புறநா. 29 : 3, உரை. அமரப்படும் - விரும்பப்படும். எண்மராதலின் தேவியரென்று பன்மையாற்கூறினர். க்ஷத்திரசூளாமணியில் ஸரஸ்வதீலம்பகத்தில், "பாலாசோகம் உன்மகனையும், அதன்மீது காணப்பட்ட மௌலி அவனுடைய ஐசுவரியத்தையும் எட்டுமாலைகள் அவனுடைய தேவிமாரையும் சொல்லா நின்றன" என்று சச்சந்தன் விசயைக்குக் கனுப்பயன் தெரிவித்தானெனக் கூறப்பட்டிருத்தலின் இச்செய்யுளில் 'நன்முளை நின்மகன்' என்றும், 'நன்முடி நின்மகனுக்கம்' என்றும் பாடம் கொள்ளுதல் நேர்; கையெழுத்துப் பிரதிகளில் அவ்வாறு காணப்படவில்லை.

"[1] குருதிக்கோட்டுக்குஞ்சரநகரம்" (சீவக. 2182) போல் முத்த மாலையை மாலையென்னும்பெயர் கருதி நறுமாலையென்றலாகாமையுணர்க; மாலையென்னும் பெயர் பொதுவாகலின். (கஉசு)

226. இற்றத னற்பய னென்னென வேந்திழை
உற்றதின் னேயிடை யூறெனக் கென்றலும்
மற்றுரை யாடல ளாய்மணி மாநிலத்
தற்றதொர் கோதையிற் பொற்றொடி சோர்ந்தாள்.

உற்றதென இறந்தகாலத்தாற் கூறினான், தெளிவுபற்றி; "[1] இல்லை, கனமுந் துருத வினை" (பழ. 2) என்றலின். இன்னே, [2] உதாசீனம் போல் நின்றது.

(இ-ள்.) இற்றதனற்பயன் என்னென்று தேவிகேட்ப, ஏந்திழாய், எனக்கு, இங்ஙனே ஓரிடையூறு வந்ததுகாணென்றவளவிலே, பின்பு உரையாடலளாய் மணிநிலத்தே தங்கியதொரு கோதைபோலே வீழ்ந்தா ளென்க. (கஉஎ)

227. காவி கடந்தகண் ணீரொடு காரிகை
ஆவி நடந்தது போன்றணி மாழ்கப்
பாவியெ னுவிவ ருத்துதி யோவெனத்
தேவியை யாண்டகை சென்றுமெய் சார்ந்தான்.

(இ-ள்.) காரிகை, கண்ணீருடனே ஆவிபோனாற்போல அழகு கெடுதலாலே, ஆண்டகை சென்று பாவியேனுடைய ஆவியை வருத்து கின்றாயோ வெனக்கூறி அவளை மெய்யைச் சார்ந்தானென்க.

தேவியை மெய்யையென்ற இரண்டுருபும், "தெள்ளிது" (தொல். வேற்றுமைமயங்கு. 5) என்றதனான் முடியும். (கஉஅ)

228. தண்மலர் மார்புற வேதழீயி னனவள்
கண்மலர்த் தாள்கன வின்னியன் மெய்யெனும்
பெண்மய மோபெரி தேமட வாய்க்கெனப்
பண்ணுரை யாற்பர வித்துயர் தீர்த்தான்.

---

(உரை) [1] அஸ்தினபுரம்; கோடு, குஞ்சரத்திற்கு அடை.

226. ஏந்திழை : விளி. கோதையின் - மாலையைப் போல.

(உரை) [1] கனவுக்கு முற்பட்டுத் தோன்றாத பொருளில்லை. [2] விருப்பு வெறுப்பில்லாமற்சொன்னதுபோல்.

227. கடந்த - வென்ற. மாழ்க - கெடுதலால். பாவியெனுவிவருத் துதியோ : சீவக. 1017. ஆண்டகை - சச்சந்தன்.

228. மலர் மார்பு-அகன்ற மார்பு. பண்ணுரை-உபசார வார்த்தை.

(இ - ள்.) குளிர்ந்த அகன்ற மார்பிலேயுறத் தழீயினன்; அதனால் அவள் விழித்தாள். அப்பொழுது, நினக்குக் கனவின் றன்மையை மெய் யெனக் கருதும் பெண்டன்மை ஓ, பெரிதாயிருந்ததெனக் கூறிப் புனைந்துரையாற் பரவித் துயர்தீர்த்தானென்க.

ஏகாரம் : ஈற்றசை. ஓ : வியப்பு. (கசுகூ)

229. காதலன் காதலி னுற்களித் தாய்மலர்க்
கோதையங் கொம்பனை யார்தங் குழாந்தொழத்
தாதுகு தாமம ணிந்தகில் விம்மிய
போதுகு மெல்லணைப் பூமகள் சேர்ந்தாள்.

(இ - ள்.) பூமகள், காதலன் கொண்டாட்டத்தாலே களித்துச் சேடியர் தொழத் தாமஞ்சூழ்ந்து அகில் விம்மிய அணையிலே சேர்ந்தா ளென்க. (உ௦௦)

230. பண்கனி யப்பரு கிப்பய னுடகம்
கண்கனி யக்கவர்ந் துண்டுசின் னுள்செல
விண்கனி யக்கவின் வித்திய வேற்கணி
மண்கனிப் பான்வள ரத்தளர் கின்றுள்.

விண் : [1] ஆகுபெயர். வித்திய - பரப்பிய. குழவிப்பருவத்தாலும் அரச நீதியாலும் வீடுபேற்றாலும் மண்ணையுருக்குமவன்.

(இ - ள்.) பண்ணைப் [2] பழுக்கக்கேட்டும் நாடகங்களைக் கண்ணுருக முகந்து நுகர்ந்தும் இருவர்க்கும் இங்ஙனம் சிலநாள்சென்றவளவிலே, வேற்கண்ணி பிள்ளை வளர்தலாலே தளராநின்றுளென்க. (உ௦க)

(வேறு)

231. கரும்பார்தோண்முத்தங்கழன்றுசெவ்வாய்விளர்த்துக்கண் பசலைபூத்தகாமம், விரும்பார்முலைக்கண்கரிந்து திங்கள்வெண் கதிர்கள் பெய்திருந்தபொற்செப்பேபோல், அரும்பால்பரந்து நுசுப்புங்கண்ணின்புலனுயிற்றுய்ந்தவனிச்சமாலை, பெரும்பார மாய்ப்பெரிதுநைந்துநற்சூற்சலஞ்சலம்போனங்கைநலந்தொலைந் ததே.

229. ஆய்மலர்க் கோதை - ஆராயப்பட்ட மலராற்றொடுத்த மாலை. கொம்பனையார் - சேடியர். தாமம் - பூமாலை. அகில் - அகிற்புகை. போது - மலர். பூமகள் : விசயை : சீவக. 162.

230. கவர்ந்து - விரும்பி. 1 - 2. பட்டினப். 113. விண் - தேவர்கள். கனிப்பான் - சீவகன்.

(உரை) [1] விண் தேவர்க்காயிற்று. [2] முற்றக் கேட்டும்.

231. கரும்பார் தோள் - கரும்பை ஒத்த தோள்; தொய்யிலாகிய கரும்பையுடைய தோள் என்றுமாம். தோள் முத்தம் - தோளிலணியும் மகரமீன் வடிவமாகச் செய்யப்பட்ட ஆபரணத்தின் வாயினின்றும்

(இ - ள்.) [1] வயாவிற்கு நங்கையுடைய தோள் மெலிந்து வாய் வெளுத்துக் கண்கள் பசலை பூத்தன; பின்பு [2] முதிர்கின்ற அளவிற்குக் காமத்தை விரும்புதற்குக் காரணமான முலைக்கண் கருகிப் பால்பரந்து நுசுப்பும் [3] கண்ணினது நுகர்ச்சிப்பொருளாயிற்று; பின்பு [4] முதிர்ந்த அளவிற்கு அணிச்சமாலை பாரமாய்ச் சலஞ்சலம்போல் நைந்து நலந் தொலைந்ததென்க.

[5] உம்மை சிறப்பு. (உ0உ)

(வேறு)

232. தூம்புடை நெடுங்கை வேழந் துற்றிய வெள்ளி லேபோற்
றேம்புடை யலங்கன் மார்பிற் றிருமகன் றமிய ளுக
ஓம்படை யொன்றுஞ் செப்பா டிருமக ளொளித்து நீங்க
ஆம்புடை தெரிந்து வேந்தற் கறிவெனு மமைச்சன் சொன்
[ளுன்.

வேழம் - [1] வெள்ளிலுக்கு வருவதொரு நோய்; "குருதிக்கோட்டுக் குஞ்சரநகரம்" (சீவக. 2182) போல வேழத்திற்குக் கை அடை. தேம்புதலுடைய திருமகன்; தேம்புதல் - கெடுதல்; விகாரம்; "புட் டேம்பப் புயன்மாறி" (பட். 4) என்றார் பிறரும். தமியளுக - அரச வுரிமையை நீங்க. ஓம்படை ஒன்றும் செப்பாள் - தான் பரிகாரம் சிறிதும் கூறுளாய். [2] அவன் வஞ்சித்து அரசுவெளவுதலின், 'ஒளித்து நீங்க' என்றார். ஆம்புடை - [3] பிள்ளையார் பிழைப்பதொரு கூறுபாடு.

---

தொங்கும் பல வடங்களாகிய முத்தின் தொகுதி; சீவக. 170, 351. நுசுப்பு - இடை. அணிச்சமாலை பாரமாயிற்று: சீவக. 2701; பெருங். 1. 53 : 134. சலஞ்சலம்: ஒருவகைச் சங்கு; வலம்புரி என்னும் சங்கு களாயிரத்தாற் சூழப் பெறுவது: பணிலமென்றுங் கூறப்படும். நலம் - அழகு.

(மேற்.) மு: தொல். பாயிரவிருத்தி, சிவஞா.

(உரை) [1] வயா - கருப்பந்தங்கியபின் வருத்தமுற்று நுகரப்படும் பொருள்கள் மேற்செல்லும் வேட்கை. [2] முதிர்கின்ற - கருப்பம் முதிர் கின்ற. [3] இடை கண்ணுக்குத் தோற்றியது. [4] கருப்பம் முதிர்ந்த. [5] நுசுப்பும் என்பதிலுள்ளது.

232. தூம்பு - உள்துளை. நெடுங்கை - துதிக்கை. துற்றிய - உண்ட. வெள்ளில் - விளாம்பழம்; யானையுண்ட விளாங்கனி என்பது பழமொழி; தஞ்சை. 56. தேம்புடை அலங்கல் - தேனைத் தன்னிடத்தே உடைய மாலை என்றுமாம். திருமகன் - சச்சந்தன். ஓம்படை - பாது காப்பு; சீவக. 1738. ஆம் புடை - ஆகும் கூறுபாடு. அறிவெனு மமைச்சன் சொன்ளுன் - தன்னைப் பாதுகாத்தற்குரிய ஓரறிவு சச்சந்த னுக்கு உண்டாயிற்று; அவ்வறிவு உண்டானமைக்குக் காரணம் விசயை யின் கனுக்காட்சியைக் கேட்டதே. அறிவெனும் அமைச்சன்: கம்ப. வாலிவதை. 124.

(மேற்.) அடி, 4: மாறன். சொல்லணி. 18.

(உரை) [1] வெள்ளில் - விளாமரம். [2] அவன் - கட்டியங்காரன். [3] பிள்ளையார் - சீவகன்.

(இ - ள்.) திருமகன் வெள்ளில்போலத் தமியனாகத் திருமகணீங்கப் பின்பு அவனுக்குத் தன்னறிவென்னும் அமைச்சன் ஆம்புடைதெரிந்து கூறினானென்க. (உ0ரு)

233. காதிவேன் மன்னர் தங்கள் கண்ணென வைக்கப் பட்ட
நீதிமேற் சேற றேற்றாய் நெறியலா நெறியைச் சேர்ந்து
கோதியல் காம மென்னு மதுவினிற் குளித்த ஞான்றே
ஓதிய பொறியற் றாயோ ரரும்பொறி புனைவி யென்றான்.

(இ - ள்.) [1] அவ்வறிவென்னுமமைச்சன், வேன்மன்னர் ஊனாகிய கண்ணைக் கண்ணென்பாருடனே காதித் தம்முடைய கண்ணென்று துணிந்து வைத்த நீதியிற்செல்லாயாய்த் தீநெறியைச் சேர்ந்து காம மென்னுங்கள்ளிலே அழுந்தினஅன்றே நல்வினையற்றாய்; ஆதலால், இனி ஒரெந்திரத்தைப் புனைவி யென்றானென்க. (உ0ச)

(வேறு)

234. அந்தரத் தார்மய னேயென வையுறும்
தந்திரத் தாற்றம நூல்கரை கண்டவன்
வெந்திற லான்பெருந் தச்சனைக் கூவியோர்
எந்திர வூர்தி யியற்றுமி னென்றான்.

(இ - ள்.) [1] அரசன், தொழிலோடே நூலைக் கரைகண்டவனாகிய தச்சனைக்கூவி எந்திரமானதோரூர்தியை இயற்றுமினென்றானென்க.

தொழிலால் மயனேயெனத் துணிந்து வடிவால் ஐயமுறுந்தச்சன். இயற்றுமின், ஒருமைபன்மைமயக்கம். ஊர்தி - ஏறப்படுவது. (உ0ரு)

233. காதி - பொருது. மன்னர்தங்கள் கண்ணெனவைக்கப்பட்ட நீதி : குறள், 581 ; பெருங். 4. 10 : 13 - 4. கோது - குற்றம். ஞான்று - தினம். பொறி - நல்வினை, யந்திரம். ஒரு பொறி செய்விக்க வேண்டு மென்று சச்சந்தன் நிச்சயித்துக்கொண்டான்.

(மேற்.) அடி, 4 : மாறன். சொல்லணி. 18.

(உரை) [1] அறிவென்னும் அமைச்சன் என்பது முன்பாடலிலிருந்து வருவிக்கப்பட்டது.

234. அந்தரம் - ஆகாயம். மயன் : தெய்வத்தச்சன். மயனென்பது பெரும்பான்மை யாதலின் மயனே என ஐயுறுமென்று ஐயத்துள் ஒரு தலையேபற்றிக் கூறினார் ; திருச்சிற். 41, பேர். தந்திரம் - தொழில். தமநூல் - தம்முடைய குலத்துக்குரிய சிற்பநூல் ; அவை மயமதம் முதலியன. திறலானாகிய தச்சன் ; இத்தச்சன் விச்சுவகருமனை ஒப்பா னென்று சுத்தியசிந்தாமணியிற் கூறப்பட்டுள்ளது. ஊர்தி - வாகனம். எந்திரவூர்தி : பெருங். 2. 8 : 187.

(மேற்.) அடி, 4 : நேமி. எச்சமரபு, 10 ; பிரயோக. காரகப். 2.

(உரை) [1] அரசன் - சச்சந்தன்.

235. பல்கிழி யும்பயி னுந்துகி னூலொடு
நல்லரக் கும்மெழு குந்நலஞ் சான்றன
அல்லன வும்மமைத் தாங்கெழு நாளிடைச்
செல்வதொர் மாமயில் செய்தன னன்றே.

கிழி - சீலை. பயின் - [1]பற்றுதற்குரியன. [2]துகினூல் - வெள்ளிய நூல்.

**(இ - ள்.)** நலஞ்சான்றனவாகிய கிழிமுதலியனவற்றையும் ஒழிந்தனவற்றையும் கூட்டி, [3]அவன் கூறியபடியே செல்வதொரு மயிலை ஏழுநாளிலே செய்தானென்க. (உ0௬)

236. பீலிநன் மாமயி லும்பிறி தாக்கிய
கோலநன் மாமயி லுங்கொடு சென்றவன்
ஞாலமெல் லாமுடை யானடி கைதொழு
தாலுமிம் மஞ்ஞையு றிந்தரு ளென்றான்.

**(இ - ள்.)** மயிலையும் பண்ணின மயிலையும் அவன்கொண்டு சென்று, அரசனை வணங்கி இம்மயில்களில் ஆலுமஞ்ஞையை அறிந்தருளென்றானென்க.

பீலி [1]இரண்டற்கும் ஏற்றுக. (உ0௭)

237. நன்னெறி நூனயந் தானன்று நன்றிது
கொன்னெறி யிற்பெரி யாயிது கொள்கென
மின்னெறி பல்கல மேதகப் பெய்ததொர்
பொன்னறை தான்கொடுத் தான்புகழ் வெய்யோன்.

---

235. பயின் - பிசின். நலம் சான்றன - நன்மை அமைந்தன. மயில் - யந்திரமயிலை. ஏழுநாளிடைச் செய்தனன் என இயைக்க. இது கருட யந்திரமென்று ஸ்ரீ புராணத்தால் தெரிகின்றது.

(உரை) [1]பற்றுதற்குரியன - ஒட்டுதற்குரியன. [2]துகில் இங்கே வெண்மை நிறமுடையது; சீவக. 34, ந. [3]அவன் - சச்சந்தன்.

236. பீலி - கலாவம். கோலம் - அழகு. நன்மாமயில் - உயிருடைய மயில். சென்றவன் - தச்சன். ஆலும் - அசைந்து ஒலிக்கும்; ஆலுமஞ்ஞை யென்றது உயிருடைய மயில் என்னும் பொருளில் வந்தது; பரி. 18 : 8.

(உரை) [1]மயிலிரண்டற்கும்.

237. நயம் - நீதி. கொல்நெறி - கொற்றொழில். மின் எறி - ஒளி வீசுகின்ற என்றுமாம். கலம் - ஆபரணம். மேதக - மேன்மை பொருந்த. பொன்னறை - பொக்கிஷ அறை. புகழ் வெய்யோன் - புகழை விரும்பியவன்.

(இ - ள்.) வெய்யோன், இம்மயில் நூலினுடைய நீதிதானு யிருந்தது ; இது மிக நன்றெனக்கூறி, தான், கொற்றொழிலிற் பெரியாய், இது கொள்கவென்று பொன்னறையைக் கொடுத்தானென்க.

மின்னெறி - மின்னைக்கெடுக்கும். இந்நூலின் நீதியென்றுமாம். (உ௦அ)

238. ஆடியன் மாமயி லூர்தியை யவ்வழி
மாடமுங் காவும டுத்தொர்சின் னுள்செலப்
பாடலின் மேன்மேற் பயப்பயத் தான்றுரந்
தோடமு றுக்கியு ணர்த்தவு ணர்ந்தாள்.

(இ - ள்.) ஆடுதலியன்ற மயிலாகிய ஊர்தியைத் தேவிதான் பாட்டுப்போலே [1] பையப்பைய மேன்மேற்றுரந்து மாடத்திலும் காவிலுமடுத்துச் சின்னுள் சென்றவளவிலே, ஒருநாள் அங்ஙனம் [2] கற்பித்தவன் விசையுடன் ஓடும்படி முறுக்கியுணர்த்த அவள் அதுவு முணர்ந்தாளென்க. (உ௦௯)

(வேறு)

239. பண்டவழ் விரலிற் பாவை பொறிவலந் திரிப்பப் பொங்கி
விண்டவழ் மேகம் போழ்ந்து விசும்பிடைப் பறக்கும்வெய்ய
புண்டவழ் வேற்கட் பாவை பொறியிடந் திரிப்பத் தோகை
கண்டவர் மருள வீழ்ந்து கால்குவித் திருக்கு மன்றே.

(இ - ள்.) கண்டவர் [1] மருளும்படி பாவை விரலாலே பொறியை வலத்தே திரிப்ப அதுபொங்கிப் போழ்ந்து பறக்கும் ; அவள் அதனை இடத்தே திரிப்ப அது வீழ்ந்து காலைக் குவித்திருக்குமென்க.

பகைவர்க்குப் புண்செல்லுதற்குக் காரணமான வேல். கால்பரப்பிற் பொறிகெடும். (உ௧௦)

---

238. அவ்வழி - அவ்விடத்து. மடுத்து - சேர்த்து. பாடலின் - ஒரு ஸ்தானத்திலிருந்து மற்றொரு ஸ்தானத்திற்குச் சென்று அங்கே ஆலாபனம் செய்து அதிலிருந்து மற்றொரு ஸ்தானத்திற்கு மெல்ல மெல்லச் செல்லும் இசைப்பாட்டைப்போல ; சீவக. 730, ந. துரந்து - செலுத்தி.

(மேற்.) அடி, 1 : கல். ‘ திங்கண்முடி ’, 10 - 11, மயில்.

(உரை) [1] பையப்பைய - மெல்ல மெல்ல. [2] கற்பித்தவன் - சச்சந்தன்.

239. பண் - பண்ணையுடைய யாழ்நரம்பு. பாவை : விசயை. பொறி - யந்திரத்தை. போழ்ந்து - பிளந்து. தோகை - மயிற்பொறி ; சீவக. 300. மருள - மயங்கும்படி.

(வேறு)

240. காதி வேல்வல கட்டியங் காரனும்
நீதி யானிலங் கொண்டபி னீதிநூல்
ஓதி னார்தமை வேறுகொண் டோதினான்
கோது செய்குணக் கோதினுட் கோதனன்.

காதிவேல்வல - பொருது வேலை வல்ல. [1] உம்மை : இழிவுசிறப்பு. [2] கோது செய்குணக்கோது - நூல்கள் பயனின்றாகக் கூறிய குணங்களிற் கோது; அஃதாவது [3] செய்ந்நன்றிக்கேடு; உட்கோதனன் - அதிலே நிற்கின்ற பயனிலாதோன்; இனிப் பயனின்மைசெய்கின்ற குணத்துக்கு ஒதின தீக்குணங்கட்குள்ளாகிய செய்ந்நன்றிக்கேடுதன்னை ஒப்பானென்றுமாம்.

(இ - ள்.) கோதனாகிய கட்டியங்காரனும், அரசன் கொடுப்ப நிலத்தை அடிப்படுத்திய பின்பு தருமநூலோதினாரெல்லாரையும் தனக்கு மாறாகக்கொண்டு ஒருமொழி கூறினானென்க. (உகக)

241. மன்ன வன்பகை யாயதொர் மாதெய்வம்
என்னை வந்திடங் கொண்டஃ திராப்பகற்
றுன்னி நின்று செகுத்திடு நீயெனும்
என்னை யான்செய்வ கூறுமி னென்னவே.

(இ - ள்.) மன்னவன் பகையாயதொரு தெய்வம் என்னை இருப்பிடமாகக் கொண்டுவந்து அத்தெய்வம் இரவும் பகலும் நெருங்கிநின்று நீ செகுத்திடு என்றுநிற்கும்; அதற்கு யான் செய்யத்தகுவன யாவை; அவற்றை நீர் கூறுவீராகவென்று கூறினானென்க.

'என்ன' என்பதனை, "உட்கினரா" (சீவக. 242) என மேல் வருகின்றதனோடு முடிக்க. (உகஉ)

---

240. வேல்வல - வேற்போரில் வல்ல. ஓதினார் - தருமதத்தன் முதலாயினார்.

(உரை) [1] கட்டியங்காரனும் என்பதில் உள்ளது. [2] பயனில்லாத கூறுகளைக் கோதென்றல் மரபு; நாலடி. 106. [3] செய்ந்நன்றிக்கேடு - செய்ந்நன்றி மறத்தல்; பயனில்லாதனவாகிய குணங்களுள்ளே பயனில்லாதது செய்ந்நன்றி மறத்தல் : குறள், 110; புறநா. 34 : 6; கம்ப. கிட்கிந்தை. 62.

241. செகுத்திடு - அரசனைக் கொல்வாய். இது முதலாக மேல் வருவனவற்றிலுள்ள செய்திகள் கத்திய சிந்தாமணியை ஒத்திருக்கின்றன.

242. அருமை மாமணி நாக மழுங்கவோர்
உருமு வீழ்ந்தென வுட்கின ராவவன்
கருமங் காழ்த்தமை கண்டவர் தம்முளான்
தரும தத்தனென் பானிது சாற்றினான்.

(இ - ள்.) மணி அழுங்கும்படி நாகத்தின்மேலே இடிவீழ்ந்தாற் போலே அம்மொழியைக் கேட்டு அமைச்சர் உட்கினராக, அவர்களி னுள்ளானாகிய தருமதத்தனென்கின்றவன் கண்டு இதனைப் பலரறியக் கூறினானென்க.

மணி அரசனுக்கும், நாகம் அமைச்சர்க்கும், 'செகுத்திடு' என்ற சொல் இடிக்கும் உவமை. காழ்த்தமை - கொலலத்துணிந்தமை. 'ஆயவன்' என்ற பாடத்திற்கு அரசனாலாயவனென்க. (உ௪௧)

243. தவளைக் கிண்கிணித் தாமரைச் சீறடிக்
குவளை யேயள வுள்ள கொழுங்கணாள்
அவளை யேயமிர் தாகவவ் வண்ணலும்
உவள கந்தன தாகவொ டுங்கினான்.

(இ - ள்.) அவ்வண்ணலும் சீறடியையுடைய கண்ணாளாகிய அவளையே அமுதாகக்கொண்டு அந்தப்புரமொன்றுமே தனக்குரித்தாக ஒழிந்தவற்றில் வேட்கையின்றிச் சுருங்கினானென்றானென்க.

ஏகாரமிரண்டும் தேற்றம். உம்மை, சிறப்பு. உவளகம் - ஒரு பக்கமுமாம். (உ௪௪)

244. விண்ணி னேடமிர் தம்விலைச் செல்வது
பெண்ணின் னின்பம் பெரிதெனத் தாழ்ந்தவன்
எண்ண மின்றி யிறங்கியிவ் வையகம்
தண்ணந் தாமரை யாளொடுந் தாழ்ந்ததே.

---

242. நாகம் - பாம்பு. அழுங்க - அழிய; புறநா. 98. உட்கினரா- அஞ்சினராக. கருமங்காழ்த்தமை : பெருங். 2. 8 : 16.

(மேற்.) அடி, 3 - 4 : தொல். எச்ச. 61, ந.

243. தவளைக் கிண்கிணி - தவளைக்குரல் போலும் ஒலியையுடைய கிண்கிணி ; பெருங். 1. 40 : 18 ; 46 : 246 ; 3. 9 : 167 - 8 ; தவளையினது வாய்போன்ற வாயையுடைய கிண்கிணியுமாம் ; சீவக. 3126 ; குறுந். 148. விசயை அமிர்தாதல் : சீவக. 8.

(மேற்.) அடி, 2 - 3 : தொல். எச்ச. 61. ந.

244. விண் - சுவர்க்கலோகம். பெண் நின் இன்பம். பெரிதென - பெரிதென்று. தாழ்ந்தவன் : இங்கே நிமித்திகன். இறங்கி = இறங்க - துறவு மார்க்கத்தே தங்கினமையால். சச்சந்தனை நோக்கித் தான்கூறிய

(இ - ள்.) விண்ணும் அமிர்தும் விலைபெறுவதொன்றாயிருக்கும் பெண்மை; அதிலும் நினது அரசினதின்பம் பெரிதுகாணென்று காரியங் கூறுதலின், நின்னிற்றாழ்ந்த நிமித்திகன் செல்வம்வேண்டுதலின்றித் துறவிலே வீழ்தலாலே இவ்வையகம் திருமகளுடனே கூடி நின்னிடத்தே தங்கிற்று; இனி நினக்கு வேறொரு மனக்கவற்சியின்றென்றானென்க.

'நின்னின்பம்' என்றது, [1] அரசனைநோக்கி நிமித்திகன்கூறியது. 'பெண்ணி னின்ப மெனப்பெரி தாழ்ந்தவன்' என்பதும் பாடம். (உசரு)

245. தன்னை யாக்கிய தார்ப்பொலி வேந்தனைப்
பின்னை வௌவிற் பிறழ்ந்திடும் பூமகள்
அன்ன வன்வழிச் செல்லினிம் மண்மிசைப்
பின்னைத் தன்குலம் பேர்க்குந ரில்லையே.

(இ - ள்.) தன்னை ஆக்கிய வேந்தனைப் பின்னைக் கொல்வானாயின், [1] தன் குலமும் திருவும் மண்மிசையினின்றும் பிறழும்; அவன் வழியே யொழுகின், தன்குலத்தையும் செல்வத்தையும் மண்மிசையினின்றும் பெயர்ப்பாரில்லை யென்றானென்க.

பூமகள் - [2]திரு. இஃது [3] உலகியலாற்கூறினான். தார்கெழுவேந்த னும் பாடம். (உசரு)

246. திலக நீண்முடித் தேவரும் வேந்தரும்
உலக மாந்தர்க ளொப்பவென் றோதுப
குலவு தார்மன்னர்க் கியானிது கூறுவன்
பலவு மிக்கனர் தேவரிற் பார்த்திவர்.

(இ - ள்.) முடிகளுக்கு மேலாய முடியையுடைய தேவரில் அரசர் பல குணங்களால் மிக்காராயினும், உலகிலுள்ளார் தேவரும் வேந்தரும் ஒப்பரென்று கூறுவர்; அவர் அறியார்; யான் மன்னர்க்குள்ளதொரு விசேடங் கூறுவேன்.; அதனைக் கேளென்றானென்க.

---

புத்தியை அவன் கேளாமையால் நிமித்திகனென்னும் மந்திரி துறக்க எண்ணியது; சீவக. 214, உரை.

(உரை) [1] அரசன் - சச்சந்தன்.

245. ஆக்கிய - மேன்மைப்படுத்திய; சீவக. 254. தார் - மாலை. வௌவுதல் - கொல்லுதல்.

(உரை) [1] பூமகள் என்பது பின்னும், இம்மண்மிசை, குலம் என்பன முன்னும் கூட்டப்பட்டன. [2] திரு - செல்வம். [3] பொதுவாகக் கூறினான்; சீவக. 206.

246. திலகம் - மேலாதல். திலகநீண் முடித்தேவர்: சூளா. சுயம். 69. பலவும் - பலவகையிலும். தேவரின் - தேவரைக் காட்டிலும். தேவரைக் காட்டிலும் அரசர் சிறந்தவர்: சூளா. மந்திரசாலை. 29.

'கூறலென்' என்று பாடமாயின், ஒப்புக் கூறேனென்றானென்க. இது முதல், "மன்ன வன்பகை யாயதொர் மாதெய்வம்" (சீவக. 241) [1] என்றதனைக் குறித்துக் கூறுகின்றான். (உகஎ)

247. அருளு மேலர சாக்குமன் காயுமேல்
வெருளச் சுட்டிடும் வேந்தெனு மாதெய்வம்
மருளி மற்றவை வாழ்த்தினும் வையினும்
அருளி யாக்க லழித்தலங் காபவோ.

மன் - மிகுதி. மருளி : இ, [1] பகுதிப்பொருள்விகுதி. மற்று - வினை மாற்று. "தாமினி நோயும்" (பு - வெ. 187) என்றாற்போல [2] உம்மை மாற்றுக. ஆக்கல், அழித்தல் : காலந்தோன்றாத [3] வினைப்பெயர். ஆப : எதிர்காலத்திற்குரிய பகரத்தொடு அன் பெறுதுவந்த அகரவீற்றுப் பலவறிசொல். ஓகாரம் : எதிர்மறை.

(இ - ள்.) வேந்தெனுந்தெய்வம் அருளுமேல் அரசாக்கும் : காயு மேற் சுட்டிடும். மற்று மயக்கத்தையுடைய அத்தெய்வங்கள் தம்மை ஒருவன் வாழ்த்துவனாயின் அவனையருளியாக்கலும், தம்மையொருவன் வைவனாயின் அவனை அருளாதழித்தலும் அவைகட்கு அப்பொழுதே ஆகாவே யென்றானென்க. (உகஅ)

248. உறங்கு மாயினு மன்னவன் றன்னொளி
கறங்கு தெண்டிரை வையகங் காக்குமால்
இறங்கு கண்ணிமை யார்விழித் தேயிருந்
தறங்கள் வெளவ வதன்புறங் காக்கலார்.

---

(உரை.) [1] என்றதனை - என்று கட்டியங்காரன் கூறியதை.

247. அருளுமேல் - அருள் செய்யுமேல். காயுமேல் - கோபம் கொண்டால். மருளி - மயக்கம்; பெருங். 1. 34 : 170.

(உரை) [1] பகுதிப்பொருள் விகுதி - பகுதியின் பொருளை யன்றித் தனக்கென்று வேறு பொருளில்லாத விகுதி. [2] உம்மை மாற்றுதல் - வாழ்த்தின் ஆக்கலும், வையின் அழித்தலும் எனல். [3] வினைப்பெயர் - தொழிற்பெயர்.

248. ஒளி - அரசர் பாலுள்ள கடவுட்டன்மை ; புகழ்வடிவு. மன்ன வன் ஒளி : சீவக. 272, 2377 ; புறநா. 51, 309 ; மணி. 19 : 128 ; பெருங். 1. 34 : 66 ; சூளா. இரத. 24 ; மன்னவன் உறங்கவும் அவனொளி உலகைக் காவா நிற்கும் : குறள். 698, பரிமேல் ; "உறங்கும் போதுந் தன்னரு ளாணை யுலகெங்கும், அறங்குன் றாவா காப்பதை யென்ப" (திருவிளை. பழியஞ்சின. 18)

இறங்கு கண்ணிமையார் - தெய்வத்தன்மை குலையுந் தேவரென்றது, மேலே, "எல்லீரு மைந்து நாள்க ளுளவென விமைக்குங் கண்ணும்" (சீவக. 2810) என்பராதலின்; கண்ணிமையார், தேவர்க்கு ஒரு பெயர்.

(இ - ள்.) மன்னவன் உறங்குமாயினும் அவனொளி உலகைக் காவாநிற்கும்; தேவர் விழித்தேயிருந்தும் தம்மை நோக்கி உலகத்தார் செய்கின்ற அறங்களை [1] அசுரர்வௌவ அதனைப் பரிகரிக்க மாட்டா ரென்றானென்க. (உகக)

249. யாவ ராயினு நால்வரைப் பின்னிடிற்
றேவ ரென்பது தேறுமிவ் வையகம்
காவன் மன்னவர் காய்வன சிந்தியார்
நாவி னும்முரை யார்நவை யஞ்சுவார்.

(இ - ள்.) இழிந்தோராயினும் அவர் பின்னே நால்வரைத் திரியச் சொல்லுவராயின், அவரைப் [1] பால்வரைதெய்வமென்னுந்தன்மையை இவ்வையகந்தேறுமாதலான் மன்னவர்களான்வரும் நவையை அஞ்சுவார், அவர் காய்வனவற்றை [2] உவமைகூறுமிடத்தும் கூறார்; நினைப்பதுஞ் செய்யாரென்றானென்க. (உஉ0)

250. தீண்டி னார்தமைத் தீச்சுடு மன்னர்தீ
ஈண்டு தங்கிளை யோடு மெரித்திடும்
வேண்டி லின்னமிர் தும்நஞ்சு மாதலான்
மாண்ட தன்றுநின் வாய்மொழித் தெய்வமே.

---

(உரை) அசுரர் வருவிக்கப்பட்டது.

249. யாவராயினும்; உம்மை: இழிவு சிறப்பு. நவை - தண்டனை. மன்னவர் காய்வன சிந்தியார், நாவினும் உரையார்; பெருங். 1. 35: 18 - 9.

(உரை) [1] பால்வரை தெய்வம் - இன்பதுன்பத்திற்குக் காரணமாகிய நல்வினை தீவினைகளை வகுக்கும் தெய்வம்; பால் - ஊழ்வினை. [2] உவமை கூறுமிடத்துக் கூறல்: "பகல்வெல்லுங் கூகையைக் காக்கை" (குறள், 481) என்றாற் போல்வது.

250. தீ - நெருப்பு; கோபம். கிளை - உறவினர். மன்னவன் அமிர்தும் நஞ்சும் போல்வான்: சீவக. 157, உரை. மாண்டதன்று - மாட்சிமை யுடையதன்று.

(இ - ள்.) தீ தீண்டினரையே சுடும்; அதுபோலன்றி மன்னருடைய கோபம் தீங்குசெய்தவர்களைத் திரண்ட சுற்றத்தோடுஞ் சுடும்; [1]அவரது அருள் அவரை விரும்புவாருண்டாயின் அமுதுபோல் உறுதிபயக்கும்; அவரது [2]செற்றம் அவரைவிரும்பாதார்க்கு நஞ்சுபோற் [3]கரந்துநின்று கொல்லும்; அங்ஙனமாதலால், நின் தெய்வம் [4]என்தெய்வம்போல மாண்டதன்றென்றானென்க.

இதனாற் [5]பகைவரையும் நட்டாரையும் தீ நட்பையுங்கூறினான். (உஉக)

251. வேலின் மன்னனை விண்ணகங் காட்டியிஞ்
ஞால மாள்வது நன்றெனக் கென்றியேல்
வாலி தன்றெனக் கூறினன் வாண்ஞமற்
கோலை வைத்தன்ன வொண்டிற லாற்றலான்.

(இ - ள்.) வாள்வலியாலே ஞமனுக்கு வல்லவனாயின் வந்துபார்க்க வென்று ஓலைவைத்தாற்போன்ற திறலை நடத்துதலுடைய தருமதத்தன், மன்னனை வேலினால் விண்ணேற்றி, இவ்வுலகையாள்வது எனக்கு நன்றென்றியேல், அது நினக்கு நன்றன்று என்றானென்க.

[1] இவன் முன்னின்று கூறிய அருமைநோக்கி, 'ஆற்றலான்' என்றார். (உஉஉ)

(வேறு)

252. குழற்சிகைக்கோதைசூட்டிக்கொண்டவனிருப்பமற்றோர்
நிழற்றிகழ் வேலி னானை நேடிய நெடுங்க ணாளும்
பிழைப்பிலாட்புறந்தந்தானுங்குரவரைப்பேணல்செய்யா
திழுக்கினாரிவர்கள்கண்டாயிடும்பைநோய்க்கிரைகளாவார்.

---

(உரை) [1] அவரது - அரசரது. [2] செற்றம் - கோபம். [3] கரந்து - மறைந்து. [4] என் தெய்வம் - சச்சந்தன். [5] எரித்திடுமென்றதனால் பகைவரையும், அமிர்துமென்றதனால் நட்டாரையும், நஞ்சுமென்றதனால் தீநட்பையும் கூறினார்; நட்டார் - நண்பர்.

251. மன்னனை - சச்சந்தனை. என்றியேல் - என்பாயாயின். வாலிதன்று - நல்லது அன்று. ஞமன் - நமன்; யமன்; "தெரிகோன் ஞமன்ன் போல" (புறநா. 6). ஓலைவைத்தன்ன; "நீலப்போதினுக் கோலை போக்கும்" (பாகவத. கோவியரை மணந்த. 8). ஆற்றலான் - தருமதத்தன்.

(உரை) [1] இவன் - கட்டியங்காரன்.

252. குழற்சிகை - மயிர்முடி. கோதை - மலர்மாலை. கொண்டவன் - தன் கணவன். நிழல் - ஒளி. நேடிய - தேடிய. புறந்தந்தான் - கொள்ளாது வெளியே போகவிட்டவன். பிழைப்பிலாட் பிரிதல்: குறுந். 137; புறநா. 71; திரி. 86. இழுக்கினார் - தவறியவர். இடும்பை - துன்பம்.

(இ - ள்.) இடும்பைநோய்களுக்கு இரைகளாவார், தன்கணவனை யொழிய வேறொருவனைத் தேடியவளும், [1] தன்னைத்தப்பாத மனைவியை மனத்தாற் கொள்ளாது விட்டவனும், குரவரைப் பேணுதல்செய்யாதே தப்பினொருமாகிய இவர்கள் காணென்றானென்க.

தரவு, "செலவினும் வரவினும்" (தொல். கிளவி. 28) என்னும் பொதுச் சூத்திரத்தான் முடிக்க. [2] குரவர் - அரசன், உவாத்தியாயன், தாய், தந்தை, தம்முன் என ஐவர். (உ௨௩)

253. நட்பிடைக் குய்யம் வைத்தான் பிறர்மனை நலத்தைச்சேர்ந் [தான்
கட்டழற் காமத் தீயிற் கன்னியைக் கலக்கினானும்
அட்டுயி ருடலந் தின்றா னமைச்சனை யரசு கொன்றான்
குட்டநோய் நரகந் தம்முட் குளிப்பவ ரிவர்கள் கண்டாய்.

(இ - ள்.) நட்பிடத்து வஞ்சித்தவனும், பிறர்மனையாளைச் சேர்ந்தவனும், மிக்க அழல்போலும் காமத்தீயினாற் கன்னியை அத்தன்மை குலைத்து [1]வரையாதவனும், உயிரை அட்டு உடலைத்தின்றவனும், கொன்றவனுமாகிய இவர்கள்காண், இம்மையிற் குட்டநோயினும் மறுமையில் நரகத்தினும் அழுந்துவரென்றானென்க.

கலக்குதல் - [2] கைக்கிளைவகையாகிய [3] இராக்கதமென்னும் மணத்தில் [4]தப்பியதாம். (உ௨௪)

254. பிறையது வளரத் தானும் வளர்ந்துடன் பெருகிப் பின்னைக்
குறைபடு மதியந் தேயக் குறுமுய றேய்வ தேபோல்
இறைவனைத் தன்னை யாக்கி யவன்வழி யொழுகி னென்றும்
நிறைமதி யிருளைப் போழு நெடும்புகழ் விளக்கு மென்றான்.

---

(உரை) [1] தன்னை - கணவனை. [2] ஐந்துவகைக் குரவரையும் பேணுதல் இன்றியமையாதது ; ஆசாரக். 17.

253. குய்யம் - வஞ்சனை. கட்டழல் - மிக்க நெருப்பைப்போன்ற ; கட்டு - மிகுதி ; "கட்டணி வார்சடையோன்" (திருச்சிற். 303). உயிரை அட்டு என மாறுக.

(உரை) [1] மணம் புரிந்து கொள்ளாதவன். [2] ஒருதலைக்காமம். [3] வலிதிற் கொள்ளுதல் ; எண்வகை மணத்துள் ஒன்று. [4] தப்புதலாவது மணம் புரிந்து கொள்ளாமை.

254. அது - முயல். திங்களும் முயலும் : சீவக. 1334; நாலடி. 176. இறைவனைத் தன்னை ஆக்கியவன் ; சீவக. 245. போழும் : முற்று. (பி - ம்.) 'விளக்குமன்றே'.

(இ - ள்.) பிறைவளர அதுதானும் உடனேவளர்ந்து பெருத்துப் பின்பு குறைதலுண்டான மதி தேய முயலும் தேயுமாறுபோலத் தன்னை இறைவனாக ஆக்கினவன் வழியிலே அவனோடும்பெருகி அவனோடும் தேய்ந்தொழுகுவனாயின், அவ்வொழுக்கம் இருளையோட்டுமதிபோலப் பழியையோட்டும்; புகழை விளக்குமென்றானென்க. (உஉரு)

255\. கோணிலை திரிந்து நாழி குறைபடப் பகல்கண் மிஞ்சி
நீணில மாரி யின்றி விளைவஃகிப் பசியு நீடிப்
பூண்முலை மகளிர் பொற்பிற் கற்பழிந் தறங்கண் மாறி
ஆணையிவ் வுலகு கேடா மரசுகோல் கோடி னென்றான்.

(இ - ள்.) அரசன் தான் நடத்து முறைமையிற் பிறழ்வனாயின், இவ்வுலகு, கோள் நிற்கும் நிலைகுலைந்து இராநாழிகை குறையப் பகற் பொழுதுகள் மிக்கு மாரியின்றாய் நிலம் விளைவுசுருங்கிப் பசிமிக்கு மகளிர் கற்பழிந்து அறச்சாலைகளுமின்றிக் கெடும்; அரசனாணையேயென்றானென்க.

கட்டியங்காரன் கொலைகுறித்ததும் அரசன் அவற்கு அரசளித்ததும் உட்கொண்டு [1] இரண்டுகவியும் பொதுவாகக் கூறினான். [2] எச்சங்கள், செயப்படுபொருளன. (உஉசு)

256\. தார்ப்பொலி தரும தத்தன் றக்கவா றுரைப்பக் குன்றிற்
கார்த்திகை விளக்கிட் டன்ன கடிகமழ் குவளைப் பைந்தார்
போர்த்ததன் னகல மெல்லாம் பொள்ளென வியர்த்துப் பொங்கி
நீர்க்கடன் மகரப் பேழ்வாய் மதனன்மற் றிதனைச் சொன்னான்.

குன்றிலே கார்த்திகைவிளக்கிட்டன்னவாகக் குவளைத்தார்போர்த்த அகலம். மகரவாய்போலும் பெரிய வாய்.

(மேற்.) அடி, 2: மாறன். பொருளணி. 10. 1 - 2: கல். 'நீர் நிலை', 9, மயில்.

255\. கோள் நிலை திரிந்து - கிரகங்கள் தாம் நிற்க வேண்டிய நல்ல நிலையினின்றும் மாறுபட்டு; மணி. 1 : 34; 7 : 8 - 10. நாழி : நாழிகை யென்பதன் மரூஉ. மாரி - மழை. மு. மதுரைக். 4 - 23.

(மேற்.) அடி, 1. கல். 'பாய்திரை', 7 - 9; 'வானவர்க்', 4, மயில். மு : சிலப். 15 : 9 - 10, அடியார்.

(உரை) [1] முன் பாட்டும் இப்பாட்டும். [2] திரிந்து முதலியன; திரியப்பட்டு என்று பொருள் கொள்க.

256\. குன்றிற் கார்த்திகை விளக்கு : சீவக. 262; சூளா. மந்திர. 17. குவளை - செங்குவளை. அகலம் - மார்பு. பொள்ளென வியர்த்து; குறள், 487. மதனன் - கட்டியங்காரன் மைத்துனன்.

(மேற்.) அடி, 3 : நன். இடை. 2, மயிலை.

(இ - ள்.) [1] வாகைத்தாராற்பொலிந்த தருமதத்தன், அமைச்சர்க்கும் அரசர்க்கும் தக்கபடியைக் கூறினுகை, மதனன், தன் அகலமெல்லாம் கடுக வியர்த்துப் பொங்கி இதனைக் கூறினனென்க. (உஉஎ)

257. தோளினுல் வலிய ராகித் தொக்கவர் தலைகள் பாற
வாளினுற் பேச லல்லால் வாயினுற் பேச றேற்றேன்
காளமே கங்கள் சொல்லிக் கருணையாற் குழைக்குங் கைகள்
வாளமர் நீந்தும் போழ்தின் வழுவழுத் தொழியு மென்ருன்.

(இ - ள்.) பகைவரது தலைகள்சிதற வாளினுல் [1] வஞ்சினமுடித்தலல்லது வாயினுற்பேசுதலையறியேன்; தாங்கள் காளமேகங்கள்போல் இங்ஙனம் முழங்கக் கூறுதலாலே, கருணையோடே சோற்றைத் திரட்டும் கைகள் அமர்க்கடலை நீந்தும்பொழுது மிக [2] வேர்த்து வாள்வழுக்குமென்று கூறினுனென்க.

தேற்றேன், "தேற்ருய் பெரும பொய்யே" (புறநா. 59) என்ருற்போல்நின்றது. இக்கவி [3] முன்னிலைப்புறமொழி. (உஉஅ)

258. நுண்முத்த மேற்றி யாங்கு மெய்யெலாம் வியர்த்து நொய்தின்
வண்முத்த நிரைகொ ணெற்றி வார்முரி புருவ மாக்கிக்
கண்ணெரி தவழ வண்கை மணிநகு கடக மெற்ருு
வெண்ணகை வெகுண்டு நக்குக் கட்டியங் காரன் சொன்னுன்.

(இ - ள்.) கட்டியங்காரன், மெய்யெலாம் முத்தழுத்தினுற்போலக் கடிதின்வியர்த்து அவ்வியர்ப்பு [1] நிரைத்த நெற்றியிலே புருவமாக்கிக் கண் எரிதவழாநிற்கக் கடகத்தை உடைத்து [2] வெடிசிரிப்பாக வெகுண்டு சிரித்து ஒருவார்த்தை கூறினுனென்க.

வார்புருவம் - நெடிய புருவம். (உஉகூ)

---

(உரை) [1] வெற்றி மாலை.

257. தொக்கவர் - ஒன்று கூடிய பகைவர். வாளினுல்...தேற்றேன்: கம்ப. கும்ப - வதை. 235. காளம் - கருமை. கருணையால் - பொரிக்கறியோடு; ஆல், ஓடு என்னும் பொருளில் வந்தது; "தூங்குகையானேங்கு நடைய" (புறநா. 22 : 1) என்புழிப் போல. கருணையாற் குழைக்குங் கைகள் : புறநா. 90 ; சூளா. அரசியற். 254.

(மேற்.) அடி, 4 : தக்க. 90, உரை.

(உரை) [1] சபதம். [2] வழுவழுத்து என்பதனுல் வேர்த்தல் வருவிக்கப்பட்டது. [3] முன்னே நிற்பாரை நோக்கிப் பிறரைக் கூறுமாறு போலக் கூறுதல்.

258. முத்து வியர்வைத்துளிக்கு உவமை. வார் முரிபுருவம்-நீண்ட வளைந்த புருவம். கடகம் எற்ருு - கடகத்தை அறைந்து.

(உரை) [1] வரிசைப்பட்ட [2] சிலப். 16 : 63 - 70, அடியார்.

259. என்னலாற் பிறர்கள் யாரே யின்னவை பொறுக்கு நீரார்
உன்னலாற் பிறர்கள் யாரே யுற்றவற் குருத சூழ்வார்
மன்னன்போய்த் துறக்க மாண்டு வானவர்க் கிறைவ னாக
பொன்னெலாம் விளைந்து பூமி பொலியயான் காப்ப லென்றான்.

உற்றவன் - சச்சந்தன். உருத - பொன்னுலகாளாமல் மண்ணுல காளுதல். இனி, உற்றவன்-கட்டியங்காரனுமாம். விளைந்த பூமியும் பாடம்.

(இ - ள்.) நீ கூறிய கடிய சொற்களைப்பொறுப்பார் என்னையொழிய வேறு யார், அதற்குயானே; தன்னைச் செறிந்தவற்கு உருத காரியங் களைச் சூழ்வார் உன்னையொழிய வேறுயார், அதற்குநீயே; இனி அமைக; வேந்தன் தேவர்க்கிறைவனாக, யான் பூமியெல்லாம் விளைந்து பொன் பொலியக் காப்பேனென்றானென்க. (உரு௦)

260. விளைக பொலிக வஃதே யுரைத்திலம் வெகுள வேண்டா
களைக மெழுக மின்னே காவலற் கூற்றங் கொல்லும் [லும்
வளைகய மடந்தை கொல்லுந் தான்செய்த பிழைப்புக் கொல்
அளவறு நிதியங் கொல்லு மருள்கொல்லு மமைக வென்றான்.

(இ - ள்.) நீ கூறியவாறே [1] பூமியெல்லாம் விளைக; பொன்னும் பொலிக; நினதுநினைவே கூறிற்றிலேம்; [2] அவற்றிற்கு நீ வெகுள வேண்டா; இப்பொழுதே களைவேமாக எழுவேம்; இதற்குக் காரணம் யாதெனின், காவலனைக்கொல்லுங்கூற்றம், நிலமகளாய்க்கொல்லும்; பிழைப்பாய்க் கொல்லும்; நிதியாய்க்கொல்லும்; அருளாய்க்கொல்லும்; ஆதலால், அவனுக்கு அக்கொலை அமைவதாகவென்றானென்க.

இனி, 'அஃதேலுரைக்கிலம்' என்பது பாடமாயின், நின்கருத்து அதுவாயின், வேறு கூறுகின்றிலேமென்க. இனி, கூற்றமும் கயமடந்தை முதலியனவும் காவலனாகிய கட்டியங்காரனைக் கொல்லுமென்று [3] உட் கொண்டு, 'இனி வார்த்தையமைக' என்றானென்பாருமுளர். 'விளைக பொலிக' ஒரு [4] வழக்கென்பாருமுளர். (உருக)

259. துறக்கம் ஆளுதல் - போரில் இறந்து வீர சுவர்க்கமடைந்து இன்பம் நுகர்தல். பூமி பொன் விளைதல் : ஐங். 1.

260. தான் செய்த பிழைப்புக் கொல்லுதல் : சிலப். 20 : 76 - 8.

(உரை) [1] விளைக பொலிக என்பனவற்றால், 'பூமியெல்லாம், பொன்' என்பன முன் செய்யுளிலிருந்து வருவிக்கப்பட்டன. [2] கட்டியங் காரன் கருத்தின்படியே கூறுத குற்றங்களின் பொருட்டு. [3] கட்டியங் காரன்முன்னே கடுஞ்சொற்களைச் சொல்லுதல் முறையன்மையின் இப் பொருள் உட்கோளாயிற்று. [4] பரி. 10 : 86 ; பெருங். 4. 13 : 143.

261. நிலத்தலைத் திருவ னுடை னீப்பருங் காதல் கூர
முலைத்தலைப் போக மூழ்கி முகிழ்நிலா முடிகொள் சென்னி
வெலற்கருந் தானை நீத்த வேந்தனை வெறுமை நோக்கிக்
குலத்தொடுங் கோற லெண்ணிக் கொடியவன் கடிய சூழ்ந்தான்.

(இ - ள்.) திருவனுளிடத்தே தனது காதல் கூருதலின், அவளது முலைப் போகத்தே அழுந்தித் தானையை நீத்த சென்னியையுடைய வேந்தனை வெறுமையைப் பார்த்துப் பிள்ளையுடனே கொல்லக்கருதி, அதற்குவேண்டும் கடியதொழில்களைக் கொடியவன் சூழ்ந்தானென்க.

நிலத்தலைத்திரு : இல்பொருளுவமை. (உ௬உ)

262. கோன்றமர் நிகள மூழ்கிக் கோட்டத்துக் குரங்கத் தன்கீழ்
ஏன்றநன் மாந்தர்க் கெல்லா மிருநிதி முகந்து நல்கி
ஊன்றிய நாட்டை யெல்லா மொருகுடை நீழல் செய்து
தோன்றினன் குன்றத் துச்சிச் சுடர்ப்பழி விளக்கிட் டன்றே.

(இ - ள்.) அரசன்சுற்றம் விலங்கிலே மூழ்கிச் சிறையிலே தாழத் தன் கீழ்மையையேற்ற மாந்தர்க்கெல்லாம் நிதியைநல்கி நாட்டை யெல்லாம் குடையால் நீழல்செய்து ஊன்றுதற்குக் குன்றத்திலிட்ட விளக்குப்போலே பழியாகிய விளக்கையிட்டுத் தோன்றினனென்க.

கீழ் - இடமுமாம். நன்மாந்தர் : [1] இகழ்ச்சி. ஊன்றிய : பெயரெச்சமுமாம். (உ௬௬)

263. பருமித்த களிறு மாவும் பரந்திய றேரும் பண்ணித்
திருமிக்க சேனை மூதூர்த் தெருவுதொ றெங்கு மீண்டி
எரிமொய்த்த வாளும் வில்லு மிலங்கிலை வேலு மேந்திச்
செருமிக்க வேலி னன்றன் றிருநகர் வளைந்த தன்றே.

---

261. நீப்பருங் காதல் - விடுவதற்கரிய அன்பு. கூர - மிகுதலால். முகிழ்நிலா - அரும்புகின்ற ஒளி. வெறுமை - தனிமை. கருவுற்றிருக்கும் விசயையையும் கொல்ல எண்ணினமையால் 'குலத்தொடும் கோற லெண்ணி' என்றார்; சீவக. 477.

262. நிகளம் - விலங்கு. கோட்டம் - சிறைக் கோட்டம். ஊன்றிய - ஊன்றும்பொருட்டு. குன்றத்துச்சி விளக்கு; சீவக. 256; பழ. 204; "வயிரக் குன்றிற் கொழுஞ்சுடர் விளக்கிட் டாங்கு" (சூளா. மந்திர. 17)

(உரை) [1] தீய மாந்தரென்னும் பொருளதாதலின் இகழ்ச்சி என்றார்.

263. பருமித்த - அலங்கரித்த; சீவக. 512; வி. - பா. 12 - ஆம் போர். 64. பண்ணி - ஏறுதற்குரியவாக அமைத்து. இலைவேல் - இலை போன்ற வடிவத்தையுடைய வேல். திருநகர் - அரண்மனை.

(இ - ள்.) சேனையானது, களிறுமுதலியவற்றைப்பண்ணி, வாள் முதலியவற்றையேந்தி, தெருவுதோறும் ஈண்டி, வேலினது நகரை எங்கும் வளைந்ததென்க.

[1] உள் நிற்கும் ஊர்திகளும் உட்பட வளைந்து அந்தப்புரத்தினுட் புகுதாது நின்றது கண்டு வாயிலோன் உணர்த்துகின்றமை மேற் கூறுகின்றார். (உகூச)

264. நீணில மன்ன போற்றி நெடுமுடிக் குருசில் போற்றி
பூணணி மார்ப போற்றி புண்ணிய வேந்தே போற்றி
கோணினைக் குறித்து வந்தான் கட்டியங் கார னென்று
சேணிலத் திறைஞ்சிச் சொன்னான் செய்யகோல் வெய்ய
சொல்லான்.

போற்றி, பரிகாரம். பூணணிமார்ப - பகைவர் கவசமணிவதற்குக் காரணமான மார்ப; "அரும்பூணற வெறிந்தாங்கு" (சீவக. 2265) என்பர் மேலும். போற்றி, [1] நான்கு கூறியது நிலத்திற்கும் குலத்திற்கும் வீரத்திற்கும் தருமத்திற்கும் நின்னையொழிய இல்லையென்று இரங்கினான்.

(இ - ள்.) வெய்யசொல்லைக் கூறுதலுடைய வாயிலோன், போற்றி யென்று கூறி இறைஞ்சி, கட்டியங்காரன் நின்னைக் கொலை குறித்து வந்தானென்று கூறினானென்க.

'கோண்' எனின் மாறுபாடாம். (உகூ௫)

265. திண்ணிலைக் கதவ மெல்லாந் திருந்துதா முறுக்க வல்லே
பண்ணுக பசும்பொற் றேரும் படுமதக் களிறு மாவும்
கண்ணகன் புரிசை காக்குங் காவல ரடைக வென்றான்
விண்ணுரு மேறு போன்று வெடிபட முழங்குஞ் சொல்லான்.

---

(உரை) [1] சீவக. 152, ந.

264. போற்றி - பாதுகாத்தருளுக; இகரவீற்று வியங்கோள்; சிலப். 13 : 92, அடியார். வாயிலோன் போற்றி என்றது தான் சொல்லும் கொடுஞ்செய்தியை அரசன் பொறுத்தருளுதற் பொருட்டு; சீவக. 430. நெடுமுடிக் குருசில்; மணி. 25 : 96. பூண் - கவசம். நின்னைக் கோள் குறித்து; கோள் - கொலை. சேண் நிலத்து - நெடுந் தூரத்தில்; "இருந்த மன்னவற் கெழுகோ லெல்லையுட், பொருந்தல் செல்லாது புக்கவ னிறைஞ்ச" (பெருங். 1. 47 : 53-4) செய்ய கோல் : பெருங். 1 : 37 : 10 ; 3 : 5 : 99 ; "ஊட்ட ரக்குண்ட கோலர்" (சூளா. சீயவதை. 78)

(மேற்.) அடி, 1 : சிலப். 20 : 30-33, அரும்பத.

(உரை) [1] வணங்குந்தோறும் கூறினமையின் போற்றி பலவாயிற் றென்பர் (சிலப். 20 : 30-33, அரும்பத.)

265. வல்லே - விரைய ; இதனைத் தாழுறுக்க, பண்ணுக, அடைக என்பவற்றோடும் கூட்டுக. உருமேறு - இடி. வெடிபட - ஓசை உண்டாக ; "வெடிபடக் கடந்து" (மதுரைக். 233)

வல்லேயென்றது, எவ்விடத்தும் கூட்டுக. வெடிபட - வெடித்த லுண்டாக.

(இ - ள்.) சொல்லான், கதவமெல்லாம் தாழிடுக; தேர் முதலிய வற்றைப் பண்ணுக; புரிசையிலே அது காக்கும் காவலரடைக வென்று னென்க.

இஃது [1] இராசதத்தாற் கூறினன். (உ௬௫)

266. புலிப்பொறிப் போர்வை நீக்கிப் பொன்னணிந் திலங்கு கின்ற
ஒலிக்கழன் மன்ன ருட்கு முருச்சுடர் வாளை நோக்கிக்
கலிக்கிறை யாய நெஞ்சிற் கட்டியங் கார னம்மேல்
வலித்தது காண்டு மென்று வாளெயி றிலங்க நக்கான்.

(இ - ள்.) புலியினது வரியையுடைய கவசத்தைத் தவிர்த்து மன்ன ரஞ்சும் வாளை நோக்கி, வலித்ததுகாண்டுமென்று மிகச் சிரித்தானென்க.

இது [1] வீரத்தின்கண் எள்ளுதலாற் பிறந்த நகை. [2]ஊர்திகளின் மையின், கவசநீக்கினனென்க. போர்வை - [3] உறையுமென்ப. (உ௬௭)

267. நங்கைநீ நடக்கல் வேண்டு நன்பொருட் கிரங்கல் வேண்டா
கங்குனீ யன்று கண்ட கனவெலாம் விளைந்த வென்னக்
கொங்கலர் கோதை மாழ்கிக் குழைமுகம் புடைத்து வீழ்ந்து
செங்கயற் கண்ணி வெய்ய திருமகற் கவலஞ் செய்தாள்.

---

(உரை) [1] தனக்கு யாதொரு துணையும் இல்லாதிருப்பவும் பழைய வழக்கத்தால் இவ்வாறு கூறினமையால் 'இராசதத்தால் கூறினன்' என்றார்; "என்னு மாத்திரத் தேந்திய கார்முகம், சின்ன மென்றுந் தனிமையுஞ் சிந்தியான், மன்னர் மன்னவன் செம்மன் மரபினுல், பின்னு றத்தன் பெருங்கர நீட்டினன்" (கம்ப. கரன் வதை. 177)

266. புலிப்பொறிப் போர்வை - புலியின் தோலால் செய்யப்பட்ட வரிகளையுடைய கவசம்; புறநா. 13 : 2. உட்கும் - அஞ்சுகின்ற. வாளை நோக்கிக் கூறல்; பெருங். 1. 46 : 89-93. சூளா. அரசியற். 35; கம்ப. நிந்தனை. 73. கலி - தீய குணங்கள். இறை - தங்குமிடம். வலித்தது - துணிந்த காரியத்தை.

(உரை) [1] 'வீரத்தெழுந்த வெகுளிநகையும் எள்ளல்நகையென்றே அடக்கல் வேண்டும் ஈண்டென்பது' (தொல். மெய்ப். 4, பேர்.) [2] வாகனம் ஏறுதவர் கவசம் பூணுதல் மரபன்று'என்பர். [3] ஆயுதத்தின் உறை : "எஃகம் புலியுறை கழிப்ப", "புலியுறை கழித்த புலவுவா யெஃகம்" (பதிற். 19, 24)

267. கங்குல் - இரவு. விளைந்த - பயனையளித்தன. கொங்கு - தேன். கோதை மாழ்கி - மாலைபோல் மயங்கி. குழை - குண்டலம். திருமகன் - சீவகன். அவலம் - துன்பம். விசயை வயிற்றில் அடித்துக் கொண்டமையால் 'திருமகற் கவலம் செய்தாள்' என்றார்.

வேண்டுமென்பது ஒருவியங்கோள் ; " ஓஒதல்வேண்டும் " (குறள், 653) என்றாற்போல. நன்பொருள் - பிள்ளை. எல்லாமென்றான், [1] பிள்ளையார் ஆக்கங்கருதி [2] உயிர்நிற்றற்கு. தெளிவுபற்றி, 'விளைந்த' என்று இறந்த காலத்தாற் கூறினான்.

(இ - ள்.) நங்காய், நீ இரங்குதல்வேண்டா ; பிள்ளைகாரணத்தாற் போவாயாக ; அஃது என்னெனின், நீ அன்று கங்குலிற்கண்ட கனவெல்லாம் பயன்பட்டனகாண் என்று கூற, கயற்கண்ணி, கோதைபோல மாழ்கி வீழ்ந்து தன்பிள்ளைக்கு வருத்தஞ்செய்தாளென்க. (உகூஅ)

268. மல்லலைத் தெழுந்து வீங்கி மலைதிரண் டனைய தோளான்
அல்லலுற் றழுங்கி வீழ்ந்த வமிர்தமன் னாளை யெய்திப்
புல்லிக்கொண் டவல நீக்கிப் பொம்மல்வெம் முலையி னாட்குச்
சொல்லுவா னிவைகள் சொன்னான் சூழ்கழற் காலி னானே.

(இ - ள்.) மற்றொழிலை வருத்தி எழுந்து நீண்டு மலைதிரண்டனைய தோளானாகிய கழற்காலினான், அல்லலுற்றுக் கெட்டு வீழ்ந்த அமிர்தமன்னாளைச் சேர்ந்து, தழுவி அவலத்தைநீக்கி அவளுக்கு முன்பு [1] அன்பிற்றலைப் பிரியாதன கூறுகின்றவன் இப்பொழுது [2] அவ்வன்பிற்றலைப்பிரிந்தன கூறினானென்க.

அமுதயின்றார்க்கு [3] நாளுலந்தால், [4] அது வேறுபாடு தோற்றுவிக்குமாறுபோல் இவற்கும் வேறுபாடு தோற்றுவித்தலின், 'அமிர்தமன்னாள்' என்றார். (உகூகூ)

269. சாதலும் பிறத்த லானுந் தம்வினைப் பயத்தி னாகும்
ஆதலு மழிவு மெல்லா மவைபொருட் கியல்பு கண்டாய்
நோதலும் பரிவு மெல்லா நுண்ணுணர் வின்மை யன்றே
பேதைநீ பெரிதும் பொல்லாய் பெய்வளைத் தோளி யென்றான்.

(உரை) [1] பிள்ளையார் - சீவகன். [2] விசயையின் உயிர் நிற்றற் பொருட்டு.

268. மல் அலைத்து - மல்லர்களை வருத்தி. தோளான் : சச்சந்தன். அல்லல் - துன்பம். அழுங்கி - கெட்டு. புல்லி - தழுவி. அவலம் - வருத்தம். பொம்மல் - பெருமை ; " பொம்மல் வெம்முலை " (சீவக. 1492, உரை)

(உரை) [1] அன்பிற்றலைப் பிரியாதன - அன்பினின்றும் நீங்காத சொற்கள். [2] அன்பிற்றலைப் பிரிந்தன - பிரிவைப் புலப்படுத்தும் சொற்கள். [3] நாளுலந்தால் - வாழ்நாள் கெட்டால். [4] அது - அவ்வமிர்தம்.

269. அவை - அவ்வினைகள். நோதல் - வருந்துதல். பரிவு - அன்பு. தோளி : விளி. மு. புறநா. 192.

(இ - ள்.) பேதாய், தோளி, சாதல்தானும் பிறத்தல்தானும் ஆதல் தானும் அழிதல்தானுமெல்லாம் தம்வினைகளின் பயத்தாலுண்டாம்; ஆண்டுச் சாதற்கும் அழிதற்கும் நோதலும், பிறத்தற்கும் ஆதற்கும் அன்புறுதலும் எல்லாம் அறிவின்மையன்றே; இங்ஙனமாதலின், நீ பெரிதும் அறிவிலியாயிருந்தாய்; அவ்வினையுறுதல் பொருட்கு இயல்பு காணென்றானென்க. (உசo)

270. தொல்லைநம் பிறவி யெண்ணிற் றொடுகடன் மணலு மாற்றா
எல்லைய வவற்று ளெல்லா மேதிலம் பிறந்து நீங்கிச்
செல்லுமக் கதிக டம்முட் சேரலஞ் சேர்ந்து நின்ற
இல்லினு ளிரண்டு நாளைச் சுற்றமே யிரங்கல் வேண்டா.

அவற்றுள் எல்லாம் பிறந்துமேதிலமென மாற்றுக. இரண்டுநாள் - சிறிது நாளென்னும்பொருட்டு.

(இ - ள்.) நம்முடைய பழைய மானிடப்பிறப்பை எண்ணின், வெண்மணலும் [1] உறையிடப்போதாத எல்லையுடைய; அப்பிறவியு ளெல்லாம் பிறந்தும் வேறுபட்டேம்; இனி இவ்வுடம்பைநீங்கிச் செல்லுங் கதியிலும் சேரேம்; ஆதலின், இப்பொழுது சேர்ந்து நின்ற இரண்டு நாளை உறவை உறவாகக் கருதி அதற்கு இரங்க வேண்டா வென்றானென்க. (உசக)

271. வண்டுமொய்த் தரற்றும் பிண்டி வாமனால் வடித்த நுண்
உண்டுவைத் தனைய நீயு முணர்விலா நீரை யாகி [ணூல்
விண்டுகண் ணருவி சோர விம்முயிர்த் தினையை யாதல்
ஒண்டொடி தகுவ தன்று லொழிகநின் கவலை யென்றான்.

[1] இறைவன் அருளால் வண்டுமொய்த்தது. நூல் : [2] ஆகுபெயர். அனைய : நெஞ்சறிபொருண் மேற்று.

---

270. தொல்லை - பழமை. தொடுகடல் - தோண்டப்பட்ட கடல். கடல் மணலும் ஆற்றா எல்லைய : மதுரைக். 235 - 7; திருவாய். 4. 1 : 4. ஏதிலம் - வேறு பட்டோம். கதி - பிறப்பு. சுற்றம் - உறவு.

மு : வி-பா. 13-ஆம்போர். 172.

(மேற்.) அடி, 1 : கல். ‘ திங்கண் முடி ’, 23-5, மயில்.

(உரை) [1] உறை - இலக்கக் குறிப்புள் ஒன்று; தானியங்களை அளக்குங்கால் ஐந்துகலத் தானியம் அளக்கப்பட்டவுடன் அவற்றை ஒன்றென்று எண்ணி எடுத்துவைக்கும் ஒரு பிடிக்குப் பெயராக வழங்கப் படுகின்றது; பதிற். 71.

271. வண்டு மொய்த்தரற்றும் பிண்டிவாமன் : சீவக. 957; பிண்டி - அசோகம்; வாமன் - அருகதேவன். வடித்த - சொல்லப்பட்ட. நீரையாகி - தன்மையை யுடையையாகி. விண்டு - வேறுபட்டு.

(உரை) [1] பிண்டியின் நிழலில் அருகதேவன் வீற்றிருத்தலின், தெய்வத்தன்மையுள்ளதாகிய அம்மரப் பூவில் வண்டுகள் மொய்யா வாயினும், இறைவனருளால் வண்டு மொய்த்தது என்றார்; கடவுட்குரிய பூவில் வண்டு மொய்யாது; முருகு. 43. [2] நூற்பொருளுக்கு ஆனமையின் ஆகுபெயர்.

(இ - ள்.) ஒண்டொடி, வாமனுற் சொல்லப்பட்ட நூற்பொருளை உணர்ந்து வைத்து அவ்வாறுணர்வுடைய நீயும் உணர்வில்லாத தன்மை யையாய் எனது மொழியை வேறுபட்டுக் கண்ணீர்வீழ விம்மியுயிர்த்து இத்தன்மையையாதல் தகாது; இவ்வருத்தத்தைத் தவிர்கவென்று னென்க. (உசஉ)

272. உரிமைமுன் போக்கி யல்லா லொளியுடை மன்னர் போகார்
கருமமீ தெனக்கு மூர்தி சமைந்தது கவல வேண்டா
புரிநரம் பிரங்குஞ் சொல்லாய் போவதே பொருண்மற் றென்றான்
எரிமுயங் கிலங்கு வாட்கை யேற்றிளஞ் சிங்க மன்னன்.

(இ - ள்.) வாளைப்பிடித்த கையினையுடைய [1] ஏறுகிய சிங்கத்தை யொப்பான் நரம்பு இரங்குதற்குக் காரணமானசொல்லாய், மன்னர் உரி மையை முன்னே போக்கியல்லது தாம்போகார்; ஆதலால், இப்போக்கு எனக்கும் கருமம்; உனக்கும் கருமம்; ஏறுதற்கு ஊர்தியுஞ்சமைந்தது; இனிக் கவல வேண்டா; போவதே கருமமென்றானென்க.

[2] பிள்ளையாற்கதிபெறுதலும் பகைவேறலுங்கருதி, இருவர்க்கும் கரு மமென்றான். கவற்சி - [3] இருதலைக்கொள்ளியிடத்து எறும்புபோற் கண வனையும் புதல்வனையுநோக்கிக் கவலுதல். (உசங)

273. என்புநெக் குருகி யுள்ள மொழுகுபு சோர யாத்த
அன்புமிக் கவலித் தாற்று வாருயிர்க் கிழத்தி தன்னை
இன்பமிக் குடைய சீர்த்தி யிறைவன தாணை கூறித்
துன்பமில் பறவை யூர்தி சேர்த்தினன் றுணைவி சேர்ந்தாள்.

உருகி, உருக. அனந்தசுகமிகுதலாலே சீர்த்தியையுடைய அருகன். அவனாணை: "ॐ नमो अरहन्दाणम्" (ஓம் ணமோ அரஹந்தாணம்) என்னும் மொழி. கூறி - கூற. துன்பமில் பறவை - தீதற்ற பறவை.

---

272. உரிமை முன் போக்கியல்லால் ஒளியுடை மன்னர் போகார். அரிச்சந்திர. நகர்நீங்கு. 1; உரிமை - மனைவி; பெருங். 1. 38 : 267. ஒளி - கடவுட்டன்மை. ஊர்தி - மயிற் பொறி. புரிநரம்பு - முறுக்கிய நரம்பு. நரம்பிரங்குதல் - நரம்பினிடத்துண்டாகும் பண் இரங்குதல்.

(மேற்.) அடி, 3 : கல். 'பாய்திரை', 21-5, மயில்

(உரை) [1] ஏறுகிய சிங்கம் - ஆண் சிங்கம். [2] நற்கதி பெறுதல். சச்சந்தனுக்கும், பகையை வெல்லுகை விசயைக்கும் கருமம். [3] இரு தலைக் கொள்ளியிடத்து எறும்பு : பழ. 9; திருவா. நீத்தல். 9; பெரிய திரு : 11. 8 : 4.

273. யாத்த - கட்டிய. ஆருயிர்க்கிழத்தி : விசயை. சீர்த்தி - மிகு புகழ். பறவையூர்தி - மயில் வடிவமான யந்திரம்.

(இ - ள்.) என்புருகும்படி உள்ளம் ஒழுகாநின்று சோரப் பிணித்த அன்பு மிகுதலால் ஆற்றுத உயிர்போலுங்கிழத்தியைப் பறவையாகிய ஊர்தியைச் சேர்த்திஞன்; அத்துணையும் செயலற்று இறைவனது ஆணைகூறச் சேர்ந்தாளென்க. (உசச)

(வேறு)

274. நீருடைக்கு வளையி னெடுங்க ணின்ற வெம்பனி
வாருடைம்மு லைமுகந் நனைப்ப மாதர் சென்றபின்
சீருடைக்கு ருசிலுஞ் சிவந்த முன்ருேர் தீத்திரள்
பாருடைப்ப னிக்கடல் சுடுவ தொத்து லம்பிஞன்.

உடைம்முலை : மகரவொற்று வண்ணத்திற்கடுத்தது. பாரை அகத் தடக்கின கடலென்றது ஊழிக்காலத்துநீரை. [1] தான் உண்டாக்கின படையைத்தான் அழிக்கின்ற தன்மைபற்றி, நெருப்பும் நீரும் உவமை கூறிஞர்.

(இ - ள்.) மாதர், நீரருதவொரு குவளைபோல வெய்யநீர் இடைய ருது நின்ற கண் வாருடைகின்ற முலைமுகத்தை நனைப்பப் போனபின்பு, குருசிலும் நெஞ்சு அழன்று கோபித்து [2]மடங்கற்றீ கடலைச் சுடுவ தொத்து முழங்கிஞனென்க. (உசரு)

275. முழைமு கத்தி டியரி வளைத்த வன்ன மள்ளரிற்
குழைமு கப்பு ரிசையுட் குருசி ருன கப்பட
இழைமு கத்தெ றிபடை யிலங்கு வாட்க டலிடை
மழைமு கத்த குஞ்சரம் வாரி யுள்வ ளைத்தவே.

---

(உரை) [1] இது பஞ்ச நமஸ்கார மந்திரத்துள் ஒன்று; இம்மந்திரம் வழித்துணை ஆகுகவெனக் கூறப்படுவதும் உண்டு; சிலப். 10 : 100.

274. வெம்பனி - துன்பத்தால் வருங்கண்ணீர் வெப்பமுடையது; பெருங். 1. 33 : 123 - 4. 2. 10 : 124; 3. 24 : 101. வார் உடை - கச்சை உடைக்கின்ற. சிவந்து - கோபங் கொண்டு. பாருடைப் பனிக்கடல் : பாராகிய நிலத்தை யுடைய குளிர்ச்சியையுடைய கடலெனினுமாம்; முருகு. 45, ந; பாகவதம். கருத்தமன். 50. உலம்பல் - முழங்குதல்; பெருங். 1. 48 : 6.

(உரை) [1] நெருப்பிலிருந்து நீருண்டாயிற்று என்பர். [2] மடங்கற்றீ - ஊழித்தீ; பதிற். 72 : 15.

275. முழை - குகை. அரி - சிங்கம். மள்ளர் - வீரர். குழை - குண்டலம். புரிசை - மதில். குழை முகப்புரிசை - அந்தப்புரம்; நெடுநல். 107; மணி. 23 : 55. குருசில் - சச்சந்தன். இழை முகத்தெறிபடை - வேல். வாரி - யானைக் கூடம் : இப்பெயர் செண்டு வெளிக்காயிற்று; சீவக. 277; பெருங். 1. 37 : 6. குஞ்சரம், வளைத்த என்பதனேடுங் கூட்டப்பட்டது.

குழைமுகமகளிர் காக்கும்புரிசையெனவே அந்தப்புரமாயிற்று; "ஆடவர் குறுகா வருங்கடி வரைப்பின்" (நெடுநல். 107) என்றார் பிறரும். இழை முகத்தெறிதல் - [1] நூல்பிளக்கவெறிதல். மழை - மதம்.

(இ - ள்.) முழையிடத்தே [2] அரியைவளைத்த குஞ்சரத்திரள்போல அந்தப்புரத்தே குருசில் அகப்படும்படி வேலையும் வாளையுமுடைய மள்ளராகிய கடலினிடையிற் குஞ்சரங்கள் [3] செண்டுவெளியிலே வளைத்த வென்க.

அரியை யானைவளைத்தல், [4] இல்பொருளுவமம். (உசசு)

276. அயிலி னிற்பு னைந்தவா ளழன்று ருத்து ரீஇயுடன்
பயில்க திர்ப்ப ருமணிப் பன்ம யிர்ச்செய் கேடகம்
வெயிலெ னத்தி ரித்துவிண் வழுக்கி வந்து வீழ்ந்ததோர்
கயில ணிக்க திர்நகைக் கடவு ளொத்து லம்பினான்.

[1] வினையுலந்து வீழ்ந்ததொரு கடவுள் உவமையாயிற்று, இவனும் [2] இங்ஙனம் நிற்றலின். கயில் - மூட்டுவாய். நகை - முத்துவடம்.

(இ - ள்.) கூர்மையாற் புனைந்தவாளை, நெஞ்சழன்று கோபித்து உருவி அதனுடனே கேடகத்தையும் ஞாயிற்றைத் திரிக்குமாறுபோலத் திரித்துக் கடவுளையொத்து முழங்கினானென்க. (உசஎ)

277. மாரி யிற்க டுங்கணை சொரிந்து மள்ள ரார்த்தபின்
வீரி யக்கு ருசிலும் விலக்கி வெங்க ணைமழை
வாரி யிற்க டிந்துட னகற்ற மற்ற வன்படைப்
பேரி யற்பெ ருங்களி றுபின்னி வந்த டைந்தவே.

---

(உரை) [1] சீவக. 1680. [2] அரி - சிங்கம். [3] செண்டு வெளி: யானைச் செண்டு, குதிரைச் செண்டு என்று சில விளையாட்டுக்கள் உண்டு; யானையின் மீதும், குதிரையின் மீதும் ஏறியிருந்து பந்தை ஆடுதற்குரிய இடம் செண்டு வெளி எனப்படும்; இங்கே யானைச் செண்டாடும் முற்ற வெளியைத்தான் 'செண்டுவெளி' யென்றார்; கம்ப. நகர. 68-ஆம் பாடலில் குதிரைச் செண்டாடலைப் பற்றிக் கூறப்பட்டிருத்தல் காண்க. [4] அரியோடு பொருதற்கு யானை அஞ்சுமாதலின் இவ்விதம் கூறினார்.

276. அயில் - கூர்மை. உருத்து - கோபித்து, உரீஇ - உருவி. பயில் கதிர்ப்பருமணிப் பன்மயிர் செய்கேடகம் - தங்கப்பெற்ற கதிர்களையுடைய பரிய மாணிக்கங்கள் அழுத்தியதும் கரடித் தோலாற் செய்யப்பட்டதுமாகிய கேடகம்; சீவக. 279. வழுக்கி - தவறி. கடவுள் - சூரியன்.

(உரை) [1] வினையுலந்து - நல்வினைகெட்டு. [2] இங்ஙனம் நிற்றல் - துணையும் ஊர்தியும் இன்றி நிற்றல்.

277. மாரியின் - மழையைப்போல. அவன் - கட்டியங்காரன். உடன் கடிந்து அகற்ற என மாறுக.

(இ - ள்.) மள்ளர் கணையை மாரியிற்சொரிந்து ஆர்த்தபின்பு, குருசிலும் அக்கணைமழையை விலக்கிச் சென்றுவெளியில்நின்று நாற்படையையும் [1] சேரக்கெடுத்துப்போகப் பேரணியினின்ற பெருங்களிறுகள் [2] செற்றி வந்து சேர்ந்தன வென்க.

தம்பேர் உலகில் இயலுதலையுடைய பெரிய களிறு. (உசஅ)

278. சீற்ற மிக்க மன்னவன் சேர்ந்த குஞ்ச ரந்நுதற்
கூற்ற ருங்கு ருதிவாள் கோடு றவ முத்தலின்
ஊற்று டைநெ டுவரை யுருமு டன்றி டித்தென
மாற்ற ரும்ம தக்களி றுமத்த கம்பி ளந்தவே.

கூற்றரு - சொல்லுதற்கரிய. [1] ஊற்று - அசும்பு.

(இ - ள்.) சச்சந்தன், கோடுறத் தன்னைச்சேர்ந்த குஞ்சரங்களின் நுதலிலே வரைக்கண் [2] உருமிடித்தென வாளையழுத்தலின், அக்களிறுகள் மத்தகம் பிளந்தனவென்க. (உசகூ)

279. வேன்மி டைந்த வேலியும் பிளந்து வெங்கண் வீரரை
வான்ம யிர்ச்செய் கேடகத் திடித்து வாள்வ லையரிந்
தூனு டைக்கு ருதியுள் ளுழக்கு புதி ரிதிரத்
தேன்மி டைந்த தாரினான் செங்க ளஞ்சி றந்ததே.

வேலி, [1] ஆகுபெயராதலிற் பிரித்தென்னுதற், 'பிளந்து' என்றார். தன்னை [2] ஒறுத்தவரைப் பரிசையாலிடித்து. வலையென்றார், தப்பாமற் சூழ்தலின்.

(இ - ள்.) பிளந்து இடித்து அரிந்து திரிதலால் தாரினான் களம் சிறந்ததென்க.

இத்துணையும் [3] இவன்வெற்றியாதலின், இவன்களமென்றார். (உ௬௦)

---

(உரை) [1] சேரக்கெடுத்து - ஒருமிக்கக் கெடுத்து. [2] செற்றி - நெருங்கி.

278. நுதல் - நெற்றி. கோடு - யானைத்தந்தம். உடன்று - கோபித்து. மத்தகம் - யானை நெற்றி.

(உரை) [1] மலையின் ஊற்று அசும்பென்று கூறப்படும். [2] உருமிடித்தென - இடி இடித்தாற் போல.

279. வேல் மிடைந்த வேலி - வேற்படை வீரரின் சூழ்தல்; குறுந். 245 : 4; பதிற். 33 : 7. மயிர்ச்செய் கேடகம் - கரடியின் மயிராற் செய்யப்பட்ட கேடகம். வாள்வலை - வாட்படை வீரரின் சூழ்தல். ஊன் - தசை: உழக்குபு - கலக்கி. தாரினான் : சச்சந்தன்.

(மேற்.) அடி, 4 : சிலப். 28 : 104, அரும்பத.

(உரை) [1] வீரருக்கானமையின் ஆகுபெயர். [2] ஒறுத்தவர் - துன்புறுத்தியவர். [3] இவன் - சச்சந்தன்; வென்றோர்க் குரியது போர்க்களமென்பர்; புறநா. 53, 62; பு. வெ. 180, 225.

(வேறு)

280. (க) உப்புடைய முந்நீ ருடன்றுகரை கொல்வ
தொப்புடைய தானையு ளொருதனிய னாகி
இப்படி யிறைமக னிருங்களிறு நூற
அப்படையு ளண்ணலு மழன்றுகளி றுந்தி.

281. (உ) நீடக மிருந்தநிழ னேமிவல னேந்திக்
கேடக மறுப்பநடு வற்றரவு சேர்ந்தாங்
கோடுகதிர் வட்டமென வொய்யென வுலம்பிக்
காடுகவர் தீயின்மிகை சீறுபு வெகுண்டான்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) தனக்கு வேலியாகிய கரையைக் கடல் தானே கொல்லுகின்றாற் போலத் தமக்குக் காவலாகிய அரசனைப் படை தாமே கொல்லுகின்றதென்றார். ஒருதனி - ஒப்பிலாத தனி.

(உ) நீடகமிருந்த நேமி - பகையின்மையின் நெடுநாள் உள்ளேயிருந்த சக்கரம். நடுவற்று - பாதியில்லையாய். சீறுதல் - செற்றம்.

(இ - ள்.) இறைவனாகிய மகன் தானையுள் தனியனாய் நின்று முற்கூறியவாறே களிற்றை நூற அதற்கு அழன்று கட்டியங்காரனும் களிற்றை உந்திச் சக்கரத்தையேந்தி, அரவுசேர்தலால் நடுவற்று விசும்பிலே ஓடுகின்ற கதிர்வட்டமெனக் கேடகத்தையறுத்தலிற் சச்சந்தன் உலம்பி அவன் [1] மிகையைச் சீறிநின்று தீப்போல வெகுண்டானென்க. (உ௱௬௧-உ)

282. (க) நெய்ம்முக மணிந்துநிழ றங்கியழல் பொங்கி
வைம்முக மணிந்தநுதி வாளழல வீசி
மைம்முக மணிந்தமத யானைதவ நூறிக்
கைம்முத றுணிந்துகளி றாழவது நோனான்.

280. முந்நீர் - கடல். முந்நீர் கரையைக் கொல்வது : பெருங். 1. 33 : 197. ஒரு தனியனாகி ; மணி. 4 : 9. இறைமகன் - சச்சந்தன். நூற - அழிக்க. அண்ணல் - கட்டியங்காரன். உந்தி - செலுத்தி.

281. நீடு அகம் இருந்த - நீண்ட நாள் உள்ளேயிருந்த ; பெருங். 1. 38 : 206. நேமி - சக்கரம். அரவு - இராகு வென்னும் பாம்பு. கதிர் வட்டம் - சூரியமண்டலம். ஒய்யென : ஒலிக்குறிப்பு. உலம்பி - முழங்கி. காடுகவர் தீ : காட்டுத்தீ. சீறுபு - சீறி.

(உரை) [1] மிகை - மீதூர்ந்த நடை.

282. நிழல் - ஒளி. வை - கூர்மை. நுதி - நுனி. மைம்முக மணிந்த மதயானை : சீவக. 2434 ; பெருங். 2. 12 : 37 ; 3. 17 : 17, 22 : 199 - 200. கைம்முதல் - துதிக்கையின் அடி. ஆழ - கீழே விழ. நோனான் - பொறாதவனாகி.

283. (உ) மாலைநுதி கொண்டுமழை மின்னென விமைக்கும்
வேலைவல னேந்திவிரி தாமமழ கழியச்
சோலைமயி லார்கடுணை வெம்முலைக டுஞ்சும்
கோலவரை மார்பினுறு கூற்றென வெறிந்தான்.

**இவையிரண்டும் ஒருதொடர்.**

(க) நுதி - நுனை. கருமையை யுடைய முகத்தே பட்டமணிந்த மதயானை. தவ - மிக. முதல் - அடி.

(உ) விரிதாமம் அழகழிய - இவன்சூடும் வாகைமாலை மேல் அழகு கெட்டுப்போக. மயிலின்றன்மையாரென்ற பன்மையால், [1] தேவியர் பலராயிற்று. 'முலைகடுஞ்சுமார்பு' எனவே முன் தனக்கு நிகராக எறிவாரின்மை தோன்றிற்று; "மகளிர் மலைத்த லல்லது மள்ளர், மலைத்தல் போகிய சிலைத்தார் மார்ப" (புறநா. 10) என்றார் பிறரும். வேல்வடிவுகொண்டு உறுவதொரு கூற்றென. [2] யானை வீழாநிற்க எறிந்தான்.

(இ - ள்.) அங்ஙனம் வெகுண்டு வாளை ஒச்சி யானையை வெட்டுதலாலே அது கைதுணிந்து வீழாநிற்க, அதனைக் கட்டியங்காரன் பொருளுய் வேலையேந்தி அழகு அழிய அவன்மார்பிலே கூற்றென எறிந்தானென்க. (உ௫ங-ச)

## (வேறு)

284. புண்ணிடங் கொண்ட வெஃகம் பறித்தலிற் பொன்ன னூர்தம்
கண்ணிடங் கொண்ட மார்பிற் றடாயின காது வெள்வேல்
மண்ணிடங் கொண்ட யானை மணிமருப் பிடையிட் டம்ம
விண்ணிட மள்ளர் கொள்ள மிறைக்கொளி திருத்தி னானே.

**தடாயினவேல்; [1] தடாயின : பெயரெச்சம். அம்ம - அசை.**

---

283. மாலை நுதி கொண்டு - பூமாலையை நுனியில் கொண்டு. மயிலார்கள் - மயிலின் தன்மை கொண்ட மகளிர். மகளிர் துஞ்சும் மார்பன் : பதிற். 63 : 4 - 5; சிறுபாண். 232, ந.

(உரை.) [1] சச்சந்தனுக்குத் தேவியர் பலருண்டென்பதும், போக மங்கையர் ஐந்நூற்றுவர் என்பதும் க்ஷத்திரசூளாமணி முதலிய வடநூல்களால் அறியப்படும். [2] கட்டியங்காரனுடைய யானை; இது மேல் இரண்டு பாடல்களுக்கும் முடிவு.

284. எஃகம் - வேல்; புண்ணிடங்கொண்ட வேலைப்பறித்தல் : குறள், 774. கண்களைத் தன்னிடத்தே கொண்ட மார்பு. தடாயின - வளைந்த; தடவென்னும் உரிச்சொல்லடியாகப் பிறந்தது. மள்ளர் - வீரர். மிறை - வளைவு; "மிறைக்களச் சந்தி" (மணி. 6 : 61). வேலின் வளைவை யானைக் கொம்பால் நிமிர்த்தல் : புறநா. 284. மிறைக்கொளி திருத்தல் : பு. வெ. 175. மு. சீவக. 2293.

(உரை) [1] சீவக. 2293.

(மேற்.) அடி, 4 : கல். 'நீர் நிலை', 29 - 30, மயில்.

(இ - ள்.) மார்பிலே தைத்துநின்ற வேல் பறித்தலின், அம் மார்பிலே பொருது வளைந்த அதனைப் பட்டுவீழ்ந்த யானையின் மருப்பிடையிலேயிட்டு மள்ளர் விண்ணிடங்கொள்ளும்படி அவ்வளவுக்குண்டாகிய இளக்கத்தைப் போக்கினனென்க. (உ௮௪)

285. ஏந்தல்வே றிருத்த யானை யிரிந்தன வெரிபொற் கண்ணி
நாந்தக வுழவர் நண்ணார் கூற்றென நடுங்கி மள்ளர்
சாய்ந்தபின் றறுக ணண்மைக் கட்டியங் காரன் வேழம்
காய்ந்தனன் கடுக வுந்திக் கப்பணஞ் சிதறி னானே.

(இ - ள்.) ஏந்தல் வேலைத்திருத்துதலாலே மள்ளர் நடுங்கிச் சாய்ந்தபின், யானை இரிந்தன ; உழவர் அணுகார்; அதுகண்டு கட்டியங் காரன் அவர்களைக் காய்ந்தனனாய் வேழத்தைச்செலுத்திக் கப்பணத்தைச் சிதறினானென்க.

நாந்தகம் - வாள். நண்ணார் - முற்று. கப்பணம் - இரும்பால் [1] ஆனை நெருஞ்சி முள்ளாகப் பண்ணியது. இதனான், [2] இவன் வேறொரு யானையை ஏறினமை யுணர்க. (உ௮௫)

286. குன்றமார் பரிந்து வெள்வேற் குடுமிமா மஞ்ஞை யூர்ந்து
நின்றமால் புருவம் போல நெரிமுரி புருவ மாக்கிக்
கொன்றவன் வேழம் வீழ்ப்ப மற்றுமோர்களிற் றிற்பாய்ந்து
நின்றமா மள்ளர்க் கெல்லா நீண்முடி யிலக்க மானான்.

ஊர்தல் - ஈண்டுப் போதன்மேற்று ; “ வானூர் மதியம் ” (நாலடி. 125) போல. மால் புருவம்போல. மால் புருவம் நெரித்தாற்போல. நீண்முடி : [1] ஆகுபெயர்.

---

285. ஏந்தல் - சச்சந்தன். வேல் திருத்த - வேலின் வளைவை நிமிர்த்தலால். கண்ணி - மாலை. உழவர் - வீரர். தறுகண் - அஞ்சத் தகுவனவற்றிற்கு அஞ்சாமை. கடுக - விரைய.

(மேற்.) அடி, 3 - 4 : மதுரைக். 597 - 8, ந.

(உரை) [1]ஆனை நெருஞ்சி - ஒருவகை முட்புதல் [2]இவன் - கட்டியங் காரன்.

286. குன்றம் - கிரவுஞ்சகிரி. குடுமிமஞ்ஞை - உச்சிச் சூட்டையுடைய மயில். மால் - முருகன். புருவம் நெரி முரி ஆக்கி - புருவத்தை நெரித்து. அவன் - கட்டியங்காரனது. வேழம் கொன்று எனமாறுக. பாய்ந்து=பாய - பாய்தலால். நீண்முடி - சச்சந்தன் ; “ நெடுமுடிக் குருசில் ” (சீவக. 264)

(உரை) [1] சச்சந்தனுக்கானமையின் ஆகுபெயர்.

(இ - ள்.) வேலாலே குன்றினது மார்பைப்பிளந்து [2] மயில் போகப் பட்டு நின்ற முருகனைப்போலப் புருவமாக்கிக் கட்டியங்காரனது வேழத்தை முன்பு திருத்தின வேலாலே கொன்றுவீழ்ப்ப, அவன் மற்றும் ஒரு களிற்றிற் பாய்தலாலே மள்ளர்க்கெல்லாம் சச்சந்தன் இலக்காயினு னென்க. (உ௮எ)

(வேறு)

287. நஞ்சுபதி கொண்டவள நாகணையி னுன்றன்
நெஞ்சுபதி கொண்டுபடை மூழ்கநிலம் வீசு
மஞ்சுதவழ் குன்றனைய தோளொசிந்து மாத்தாட்
குஞ்சரங்க ணூறிக்கொலை வாளொடித்து நின்றான்.

நாகணையினுன் - [1] சச்சந்தன். ஒசிந்து - ஒசிய.

(இ - ள்.) நாகணையினுன்றன் நெஞ்சைப் பதியாகக்கொண்டு மள்ளர் படைகள் மூழ்காநிற்க, [2] தானும் குஞ்சரங்களைத் [3] தோளொசிய வெட்டி வாளை ஒடித்துநின்றானென்க.

நிலத்திலுள்ளார்க்குக் கொடுக்குந்தோள் : [4] ஆகுபெயர். இனி, 'மதி கொண்ட' என்பது பாடமாயின் திருமால் உட்கொண்ட சக்கரமென்க.

தோளசைந்தும் பாடம். (உ௮அ)

288. ஆரமரு ளாண்டகையு மன்னவகை வீழும்
வீரரெறி வெம்படைகள் வீழவிமை யானுய்ப்
பேரமரு ளன்றுபெருந் தாதையொடும் பேராப்
போரமரு ணின்றவிளை யோனிற்பொலி வுற்றான்.

வீழும் - விரும்பும்.

(இ - ள்.) ஆண்டகையும் அமரிலே முற்கூறியவாறே விரும்பும் வீர ரெறிகின்ற படைகள்வீழ இமையானாய், பாரதத்திற் புறங்கொடாமற் பொருகின்ற போரிலே கன்னனோடே மாறுபட்டுநின்ற அபிமன்னுவைப் போலே பொலிவுற்றானென்க.

---

[2] சச்சந்தனுக்கு வாகனமில்லாமையால் மயில் போகப்பட்டு நின்ற முருகனை உவமை கூறினர்.

287. பதிகொண்ட - பதிதல் கொண்ட. நாகணையினுன் - திருமால்; திருவாய். 5. 10 : 11; திருச்சந்த. 117. மாத்தாள் - பெரிய அடி, நூறி - அழித்து.

(உரை) [1] திருமாலுக்குரிய பெயர் சச்சந்தனுக்காயிற்று. [2] சச்சந்தனும். [3] ஒசிய - முறிய. [4] தோள் கைக்கானமையின் ஆகுபெயர்.

288. ஆண்டகை - சச்சந்தன். இமைத்தல் - தோல்விக் குறி; குறள், 775. அமர் - பாரதப்போர். பெருந்தாதை - கன்னன்; இவன் அபிமனுக்குப் பெரியதந்தை. பேரா - பின்னிடாமல். இளையோன் - அபிமன். கன்னனுடன் பொருத அபிமன் உவமை : பெருங். 1. 56 : 56-8.

இனி ' நீடும் ' பாடமாயின், நெடும்பொழுதாம் ; " நீடுநின்றனன் " என்றார் பிறரும். (உ௭௯)

289. போழ்ந்துகதிர் நேமியொடு வேல்பொரு தழுந்தத்
தாழ்ந்துதறு கண்ணிணைக டயழல விழியா
வீழ்ந்துநில மாமகடன் வெம்முலை ஞெமுங்க
ஆழ்ந்துபடு வெஞ்சுடரி னாண்டகை யவிந்தான்.

ஆழ்ந்து - மறைந்து. ஆண்டகைமை, குணப்பண்பு ; " ஆண்டகைக் குரவிர் " (சீவக. 393) போல. அவிதல் - குறைதல் ; " திரை பாடவிய " (அகநா. 260) என்றாற்போல. [1] பண்பியாக்கிப் பட்டானென்னின், " பாலருவி " (சீவக. 291) என்னுங்கவி வேண்டாவாம். இவன் பகைவர் [2] முகநோக்கி வீழ்ந்தமையின், [3] பிள்ளையார் பின்பு பகை வென்றார்.

(இ-ள்.) சக்கரத்தோடே வேலும் போழ்ந்து தம்மிற் பொருது அழுந்துதலாலே மெய்வலி குறைந்து தறுகண்மையையுடைய கண்கள் அழல விழித்து முலைஞெமுங்க வீழ்ந்து சுடர்போல் ஆண்டகைமை குறைந்தானென்க. (உ௮௦)

(வேறு)

290. தோய்ந்தவிசும்பென்னுந்தொன்றாட்டகந்தொழுது புலம்பெய்திமைந்தர்மாழ்க, ஏந்துமுலையாரிணைந்திரங்கக்கொடுங் கோலிருள்பரப்பவேஎபாவம், ஆய்ந்தகுருகுலமாமாழ்கடலினுண் முளைத்தவறச்செங்கோலாய்கதிரினை, வேந்தர்பெருமானைச்சச் சந்தனைமந்திரிமாநாகமுடன் விழுங்கிற்றன்றே.

---

289. போழ்ந்து - பிளந்து. தறுகண்: பெருங். 2. 9. 152. ஞெமுங்க- அழுந்த. வீழ்ந்து..........அவிந்தான் : சீவக. 609.

(உரை) [1] ஆண்டகை யென்பதற்குச் சச்சந்தனென்று பொருள் கொண்டால் பண்பியாகும் ; ஆண்டகைமை என்று கொள்ளின் பண் பாகும். [2] முகநோக்கிவீழ்தல் வீரக்குறிப்பு ; சீவக. 2322-ஆம் பாடலின் விசேடவுரை இங்கே அறியற்பாலது. [3] பிள்ளையார் - சீவகன்.

290. மாழ்க - மயங்க. இணைந்து - வருந்தி. இக்ஷ்வாகுகுலம், ஹரி குலம், குருகுலம், நாதகுலம், உக்கிரகுல மென்னும் குலங்கள் ஐந்தனுள் குருகுலத்திற் பிறந்தவன் சச்சந்தன். மந்திரி : கட்டியங்காரன். நாகம் - இங்கே, இராகுவென்னும் பாம்பு. சச்சந்தன் மந்திரியால் விழுங்கப் பட்டது ; சீவக. 385 ; சீவக. 2324 - ஆம் பாடலும் அதனுரையும் இப் பாடலின் இறுதியடிப்பொருளை விளங்க அறிதற்கு இன்றியமையாதன.

(மேற்.) அடி, 3 : கல். ' குரவ ', 12 - 5, மயில்.

கடலாங்குருகுலம், [1] சிறப்புநிலைக்களமாக [2] முதலொடுமுதலே வந்த மெய்யுவமம். மந்திரிமாநாகம், [3] கிழக்கிடுபொருள் நிலைக்களமாக முதலொடு முதலே வந்த வினையுவமம். தொல்காப்பியனார் சொல்லும்பொருளும் உடன் ஆராய்தலின், [4] உருவகவுவமை யென்றேகூறினார். செங்கோலை யுடைய கதிர்; இல்பொருளுவமம். உடன்விழுங்கிற்று - அரசவுரிமையெல்லாம் கொண்டான். நாகத்திற்கேற்ப 'விழுங்கிற்று' என்றார்.

(இ - ள்.) மக்கள்செறிந்த விசும்பென்று கூறும் ஏமாங்கதத்தே சான்றோர் மயங்க, கற்புடைமகளிர் இரங்க, கொடுங்கோலாகிய இருள் பரவ, பெருமானைச் சச்சந்தனைக் கடல்போலும் குருகுலத்தே முளைத்த கதிர்போல்வானை நாகம்போலும் மந்திரி விழுங்கினான்; ஏஎபாவமென்க.

ஏ எ : [5] குறிப்புமொழி. இதனால், [6] அவன் ஆண்டகைமை குறைந்ததற்கு இரங்கினார். (உகூக)

291. பாலருவித்திங்கடோய் முத்தமாலைப் பழிப்பினெடுங் குடைக்கீழ்ப்பாய்பரிமான்றேர்க், கோலருவிவெஞ்சிலையான்கூர் வாளோடு மணிக்கேடகமுமறமுமாற்றி, வாலருவிவாமனடித்தா மரைமலர்சூடிமந்திரமென்சாந்துபூசி, வேலருவிக்கண்ணினார் மெய்காப்போம்பவேந்தன்போய்விண்ணோர்க்குவிருந்தாயினனே.

பாலருவி - பால்போலுங்கிரணம். தோய், உவமவுருபு; [1] புறனடையாற்கொள்க. வாலருவி - [2] சுக்கிலத்தியானம். வேலருவி - வேலொழுங்கு. கண்ணினார் காவற்றொழிலை ஈண்டுப் பேணப்போய்.

---

(உரை) [1] தொல். உவம. 4. [2] முதற்பொருளோடு முதற்பொருள் வந்த மெய்யுவமம்; இஃது உவமவகை நான்கனுள் ஒன்று; தொல். உவம. 1. [3] கீழான பொருள்; தொல். உவம. 5. [4] தொல்காப்பியத்திற் கூறப்பட்டது உவம அணியொன்றே. [5] இரக்கக் குறிப்புமொழி. [6] அவன்-சச்சந்தன்.

291. திங்கள் தோய்குடை - சந்திரனை ஒத்த குடை; சீவக. 2588. சிலையானாகிய வேந்தன் என்க. மறம் - வீரம். வாமன் - அருக தேவன். மெய் - உடலை. காப்போம்ப - காத்தலைச் செய்ய. விருந்து - புதுமை.

கட்டியங்காரனோடு போர் செய்தற்குச் சென்ற சச்சந்தன் சிறிது நேரம் போர் செய்து ஜீவஹிம்ஸையாகிற பாவத்துக்கு அஞ்சிச் சும்மா இருந்து வைராக்கியம் வந்து உதவ அப்பாற் செய்த பாவனை விசேடத்தாலே மேலுலகம் பெற்றானென்று க்ஷத்திரசூளாமணியிலும் கத்திய சிந்தாமணியிலும் கூறப்பட்டிருக்கின்றது.

(உரை) [1] தொல். உவம. 17. [2] சுக்கிலத்தியானம் - பரிசுத்தமான தியானம்; சீவக. 3081; குறள், 358, பரிமேல்.; திருநூற்றந்தாதி 19 - ஆம் செய்யுளில் 'வெள்ளைவாள்' என்றதும் இத்தியானத்தையே என்பர்; அது பிரமத்வ விதர்க்க விசாரம், ஏகத்வ விதர்க்க விசாரம், சூக்ஷ்மக் கிரியாப் பிரதிபாதி, வ்யுபரதக் கிரியா நிவிர்த்தியென நால் வகைப்படுமென்பர்.

(இ - ள்.) குடைநிழற்கண்ணே தேர்மீதுநின்று கோல் இடையருமல் வழங்கும் சீலையானாகிய வேந்தன், அவை உதவாமையின், வாளும் கேடகமும் மறமும் துணையாகப்பொருது, அவற்றைப்போக்கி வாம னுடைய அருவியை [3] யாடிச் சாந்தைப்பூசி மலரையொத்த அடியைச் சூடிப் போய்த் தேவர்கள் வழிபடுதற்குப் புதியனாயினனென்க.

உயிர்நீங்குகின்ற பொழுது தியானம் வந்து உதவுதலின், வீடுபெற்று னென்க ; சுவர்க்கமுமாம். (உகூஉ)

292. செந்தீக்கருந்துளைய தீங்குழல்யாழ்தேந்தே மென்னு மணிமுழவமும், தந்தாங்கிளையார்மெல்விரல்கடீண்டத்தாந்தா மென்றிரங்குந் தண்ணுமைகளும், அந்தீங்கிளவியாரைஞ்ஞூற்று வரவைதுறைபோயாடலரம்பையன்னார், எந்தாய்வெறுநிலத்துய்ச் சேர்தியோவென்றினைந்திரங்கிப்பள்ளிபடுத்தார்களே.

[1] செந்தீயாற் கருந்துளையவான குழல்கள். தேந்தேம், தாந்தாம் : [2] அநுகரணம். இளையார் - [3] நிருத்த கீத வாச்சியத்திற்குரிய மகளிர். 'கிளவியாரைஞ்ஞூற்றுவர்' என்றார். [4] அகப்பரிவாரம் ஐஞ்ஞூற்றுவரே யென்றற்கு. மேலும் நால்வரையொழிந்த [5] தோழர் ஐஞ்ஞூற்றுவரும் அகப்பரிவாரமென் றுணர்க. தமக்குரிய துறைகள் முற்றக்கற்று அவையிலே ஆடுதலுடைய அரம்பையன்னார்.

(இ - ள்.) இளையார், குழல்முதலியவற்றை ஈமத்தே கொண்டுவந்து விரல்களால் வாசியாநிற்க, ஐஞ்ஞூற்றுவரும் அரம்பையன்னாரும் இரங் கிப் பள்ளிபடுத்தாரென்க.

"கோன்றமர் நிகளமூழ்கி" (சீவக. 262) எனவே ஆடவரின்மை யுணர்க. (உகூங)

---

[3] ஆடி யென்பது வருவிக்கப்பட்டது.

292. குழல் - புல்லாங்குழல். இளையார் - மகளிர். தண்ணுமை - மத் தளம். துறை - ஆடல், பாடல் முதலியன. இனைந்து - வருந்தி.

(உரை) [1] பெரும்பாண். 179. [2] அநுகரணம் - ஒன்றைப்போலவே ஒலித்தல். [3] பொருந. 55, ந. [4] அகப்பரிவாரம் - அகச்சுற்றம்; அகப்பரி வாரம் புறப்பரிவாரம் என அரசச்சுற்றமாகிய குழாங்கள் இருவகையின. [5] சீதத்தன், புத்திசேனன், பதுமுகன், தேவதத்தன் என்ற நால்வரும், அகப்பரிவார மகளிராகிய ஐந்நூற்றுவருடைய பிள்ளைகள் ஐந்நூற்று வரும் சீவகனுடைய தோழர்கள்.

293. மடையவிழ்ந்தவெள்ளிலேவேலம்புபாயமணிச்செப்பகங் கடைகின்றவேபோற், றொடையவிழ்ந்த மாலேயுமுத்துந் தோய்ந்த துணைமுலேயி னுள்ளரங்கி மூழ்கக் காமன், படையவிழ்ந்த கண் பனிநீர்பாய விம்மாப் பருமுத்த நாமழலேக் கிண்கிணியினர்,புடை யவிழ்ந்த கூந்தல் புலவுத் தோயப் பொழிமழையுண் மின்னுப் போற் புலம்பினரே.

தொடை - முறுக்கு. தோய்ந்த - செறிந்த. காமன் படையவிழ்ந்த - காமன் அம்புதோற்ற. [1] முத்தமாகிய நா. புலவு - குருதி ; [2] ஆகுபெயர்.

**(இ - ள்.) கிண்கிணியினர், மணிச்செப்பை உள்வாயைக் கடைகின்ற கருவிகள் அதனுள்ளே அழுந்துமாறுபோல, [3] மூட்டுக்கழன்ற வேலும் அம்பும் ஆண்டுப் பரந்துகிடக்கின்றவை முலேயினுள்ளே தைத்து அழுந்தும்படி புரண்டழுது, பின்பு பெய்கின்ற [4] மேகத்தினுள்ளே மின் தோன்றுமாறு போலக் கூந்தல் மெய்யை மறைத்து நிலத்தைத் தீண்ட, அதனுள்ளேயிருந்து அழுதாரென்க.**

**விம்மிப் புலம்பினரென்க.** (உகூச)

294. (க) அரிமானேர் மெல்லணைமேன் மஞ்ஞை சூழக் கிடந் தாங்கு வேந்தன் கிடந்தா னேத்தான், கரிமாலே நெஞ்சினன் கண் டான் கண்டேகைதொழுதான் கண்ணீர்கலுழ்ந்து குத்தபின், எரிமாலே யிமத்திழுதார்குட மேனை நூறுமேற்பச்சொரிந்தலறி யெம், பெருமானே யெம்மை யொளித்தியோவென்னப் பெரிய கண்ணீர்சொரிந்தலறுவார்.

295. (உ) கையார் வளேகள்புடைத்திரங்குவார் கதிர்முலே மேலாரம்பரிந்தலறுவார், நெய்யார்கருங்குழன்மேன்மாலே சிந்தி நிலத்திடுவார் நின்று திருவில் வீசும், மையார்கடிப்பிணேயும்வார் குழையுங்களேந்திடுவார் கையால்வயிறதுக்குவார், ஐயாவோ வென்றழுவார்வேந்தன்செய்த கொடுமைகொடிதென்பார்கோல் வளேயினர்.

---

293. மடை - மூட்டு. வெள்ளிலே வேல் - வெற்றிலேபோலும் வடிவுள்ள வேல் ; சீவக. 741, 1341, மணிச்செப்பு முலேக்குவமை. அரங்கி - அழுந்தி. விம்மா - விம்மி. மழலேக் கிண்கிணியினர் ; பெருங். 3. 4 : 175.

(உரை) [1] சீவக. 317. [2] குருதி - இரத்தம் ; குருதியையுடைய நிலத்திற்கானமையின் ஆகுபெயர். [3] மூட்டு - பொருத்து. [4] மணி. 9 : 6.

294. அரிமான் - சிங்கம் ; சிங்கம் சச்சந்தனுக்கும் மயில்கள் மகளிருக்கும் உவமை. கரிமாலே நெஞ்சினன் : கட்டியங்காரன். கலுழ்ந்து - கலங்கி. ஈமம் - பிணம் சுடும் விறகடுக்கு ; புறநா. 231 : 2.

295. வளேகள் புடைத்தல் ; “ மகளிர், வாழைப் பூவின் வளேமுறி சிதற.........வெள்வேல் விடலே சென்றுமாய்ந் தனனே ” (புறநா. 237 :

296. (ங) பாஞட் பிறைமருப்பிற் பைங்கண் வேழம் பகுவா யோர் பையணன்ம நாகம் வீழ்ப்பத், தேஞர் மலர்ச்சோலைச் செவ்வரை யின்மேற் சிறுபிடிகள் போலத் துயருழந் துதாம், ஆஞ தடி யேம்வந் தவ்வு லகினின் னடியடைது மென்றழுது போயி ஞரெம், கோஞர் பறிப்பநலம் பூத்தவிக் கொடியினிப் பூவா பிறர்ப றிப்பவே.

இவை மூன்றும் ஒரு தொடர்.

(க) கலுழ்ந்து - வழிபாட்டிற்படுதலின் மனம் தன்வழித்தன்றிக் கலங்கி. அழுதது [1] உவகைக் கலுழ்ச்சி; "விளிவில் கொழ்கை" (தொல். மெய்ப்பாடு. 5) என்றதஞன், இதுவும் அழுகைப்பாற்படும். மாலை - இயல்பு. ஈமம் - விறகு. ஏனை நாறு - சந்தனமுதலியன. ஒளித்தியோ - நின்மெய்யும் எரி நுகர்கின்றதோ.

(உ) கதிரையுடைய ஆரம். திருவில்லை நின்று வீசுங்குழை. நீலக் கடிப்பிணை - குதம்பை போல்வதொரு [2] பணி. ஓ : இரக்கக்குறிப்பு. கொடிதென்றது, அரசற்குச் செய்யும் நீர்க்கடன் [3] மரபுசெய்யாமை நோக்கி.

(ங) வாயையும் பையையும் அணலையும் உடையதொரு நாகம். 'சிறு பிடிகள்' எனவே அக்களிறு கூடுதற்குரிய குலத்திற் பிறந்த பிடிகளல்ல வென்பது பெற்ரும். 'இக்கொடி' என்ருர், தம்மைப் பிறர்போல. இவர் கள் அரசற்குக் [4] காமம் ஒழிந்த நுகர்ச்சி கொடுத்தற்குரிய மகளிர்.

(இ - ள்.) மயில் சூழ்ந்துகிடப்ப ஓர் அரிமான், [5] அணைமேற் கிடந் தாற் போலத் தேவியர் சூழ்ந்துகிடப்ப வேந்தன்கிடந்தவனைக் கரிந்த இயல்பினையுடைய நெஞ்சிஞன்ருன் கண்டான்; கண்டு கலுழ்ந்து தொழு தான்; தொழுது கண்ணீர் உகுத்தபின்பு, அவன் [6] செற்றம் நீங்கினமை கண்டு, கோல் வளையிஞர், ஈமத்தே குடமும் ஏனையவும் அரசற்குப் பொருந்தச் சொரிந்து அலறி, பின்பு ஒளித்தியோவென்று நீர்சொரிந்து அலறுவார், இரங்குவார், அலறுவார், இடுவார், களைந்திடுவார், அதுக்கு

10 - 14). ஆரம் பரிந்து - முத்து மாலையை அறுத்து. நெய் - புழுகு. திரு வில் - இந்திரவில்லின் ஒளி. கடிப்பிணை, காதைப் பெருக்குவதற்கு இடப்படுவது; "வயிரக் கடிப்பிட்டு வார்காது தாழப் பெருக்கி" (பெரி யாழ். திருமொழி, 2. 3 : 4)

(மேற்.) அடி, 3 : சிலப். 4 : 9 - 12, அடியார்.

296. பால் - வெள்ளை; பாதியுமாம். அணல் - கீழ்வாய். யானை யைப் பாம்பு வீழ்த்துதல் : குறுந். 119 : 1 - 2. ஆஞது - அமையாமல். பிறர் பறிப்பப் பூவா வென்க.

(உரை) [1] தொல். மெய்ப். 5, பேர். [2] ஆபரணம். [3] சந்ததி. [4] பொருந. 85; சிறுபாண். 220, ந; காமம் - மெய்யுறு புணர்ச்சி. [5] படுக்கை. [6] வைரம்.

வார், அழுவார், கொடிதென்பாராய்ச் செவ்விய வரைமேல் ஒரு நாகம் வேழத்தை வீழ்ப்ப அது காத்தற்குரிய பிடிகள் துயருழக்குமாறுபோலத் தாம் 'துயருழந்து எங்கோனுர் நுகர அவருக்குக் கொடுத்த நலங்கள் பிறர்க்குக் கொடேம்! இனி அவ்வுலகிலே சென்று அடியடைவேமென்று ஆறுது அழுது போயினுரென்க. (உகூ௬ - எ)

297. செங்கட்குறுநரியோர் சிங்க வேற்றைச் செகுத்தாங் கத னிடத்தைச் சேர்ந்தா லொப்ப, வெங்கட் களியானை வேல்வேந் தனை விறலெரியின் வாய்ப்பெய்தவன்பெ யர்ந்துபோய்ப், பைங் கட் களிற்றின்மேற் றன்பெ யரிஞற் பறையறைந்தான் வேன் மாரி பெய்தா லொப்ப, எங்க ணவருமி னைந்தி ரங்கிஞ ரிருண் மனத்தான் பூமகளை யெய்திஞனே.

(இ - ள்.) நரி, நிகரில்லாத சிங்கவேற்றைச் செகுத்து அப்பொழுதே அதற்குரிய இடத்தைச் சேர்ந்தால் அச்சிங்கத்தின்ரெழிலை நடத்தாது தன்ரெழிலை நடத்துமாறுபோல, இருண்மனத்தானுகிய விறலவன், வேந்தனை எரிவாய்ப் பெய்துபோய்ப் பூமகளை எய்திஞன்; அதுவேயன் றித் தன் பெயராலே பறை சாற்றிஞன்; அதுகேட்டு வேல்மழை பெய் தால் அதற்கு இரங்குமாறு போல எவ்விடத்தவரும் இரங்கிஞரென்க.

[1] அவன் கருத்தால் மகளிர்பெய்தலின், 'அவன் பெய்தான்' என் ருர். விறலவனென்க; இஃது இகழ்ச்சி. இனைந்து - கெட்டு. (உகூஅ)

## சீவகன் பிறப்பு

### (வேறு)

298. களிமுகச் சுரும்புண் கோதை கயிலெருத் தசைந்து சோர
வளிமுகச் சுடரி னில்லா மனத்தொடு மயங்கி யிப்பாற்
சுளிமுகக் களிற ஞன்றன் சொன்னய நெறியிற் போய
கிளிமுகக் கிளவிக் குற்ற திற்றெனக் கிளக்க லுற்றேன்.

297. செகுத்து - கொன்று. தன் பெயரிஞற் பறையறைந்தான்: சூளா. அரசியற். 350. பூமகளை எய்திஞன்; பூமகள் - செல்வம்; பூமகளி லம்பக மென்னும் பெயராலும் இஃது அறியப்படும்.

(உரை) [1] கட்டியங்காரனுடைய எண்ணப்படி.

298. கோதை - கூந்தல். கயில் - ஆபரணத்தின் மூட்டுவாய். வளி முகச்சுடரின் - காற்றின் முன்னுள்ள தீபம் போல. நில்லா மனத்தோடு - ஒரு வழியில் நில்லாத மனத்தோடு. சுளிமுகக் களிறு - குத்துக் கோலைக் கோபிக்கின்ற முகத்தையுடைய ஆண்யானை. கிளவிக்கு - சொற்களை யுடைய விசயைக்கு.

களிமுகம் - களிக்கின்ற நெறி. கயில் : [1] ஆகுபெயர். அசைந்து சோர - குலைந்து வீழ. சுளித்தல் - கோபித்தல்.

(இ - ள்.) காற்றின்முன் நின்ற சுடர்போல ஒருவழி நில்லா மனத்தோடே [2] எருத்தத்திலே கோதை சோர மயங்கிக் களிறனுனது வார்த்தையின் பயனை உட்கொண்டுபோன கிளிபோலுங் கிளவிக்கு இப்பாலுற்ற தீங்கு இத்தன்மைத்தென்று கூறுதலுற்றேனென்க. (உகூகூ)

299. எஃகென விளங்கு வாட்க ணெறிகட லமிர்த மன்னாள்
அஃகிய மதுகை தன்னா லாய்மயி லூரு மாங்கண்
வெஃகிய புகழி னான்றன் வென்றிவெம் முரச மார்ப்ப
எஃகெறி பிணையின்மாழ்கியிறுகிமெய்ம்மறந்து சோர்ந்தாள்.

எஃகென - கூர்மைதான் இதன்வடிவென. ஆய்மயில் - விசை குறைந்த மயில். எஃகெறி - எஃகால் எறிந்த. மாழ்கி - மனமயங்கி. இறுகி - மூர்ச்சித்து. இது [1] கையாறுதலிற் [2] பொறி இடந்திரித்தலாற் றுமையுணர்க.

(இ - ள்.) அரசனுக்கு வாளின்றன்மையாகிய கண்ணையுடைய அமுதன்னாள், அவனை நீங்குதலாற் குறைந்த வலியாலே மயிலைச் செலுத்துகின்ற அவ்விசும்பிடத்தே புகழினனது கொடிய முரசார்ப்ப, அதுகேட்டு மாழ்கி மெய்ம்மறந்து இறுகிச் சோர்ந்தாளென்க.

வேந்தாந் தன்மையை விரும்பிய [3] புகழினன். (உஎo)

300. மோடுடை நகரி னீங்கி முதுமரந் துவன்றி யுள்ளம்
பீடுடை யவரு முட்கப் பிணம்பல பிறங்கி யெங்கும்
காடுடை யளவை யெல்லாங் கழுகிருந் துறங்கு நீழற்
பாடுடை மயிலந் தோகை பைபய வீழ்ந்த தன்றே.

பீடுடையவரும் உள்ளம் உட்க எங்கும் பிணம் பெருத்து. துவன்றிப் பிறங்கித் தானுடைய எல்லையெல்லாம் கழுகு உறங்கும் நிழலையுடைய காடென்க. பாடு - ஈண்டு இடப்பக்கம். உடை மயில் - உடைகின்ற மயிலென வினைத்தொகை. பொறிக்கு, "ஓடமுறுக்கி" (சீவக. 238) என்னும் வாசகம் முன்னர் உளதாகலின், அதற்கேற்ப 'உடைகின்றது'

(உரை) [1] ஆபரணத்துக்கானமையின் ஆகுபெயர். [2] எருத்தம் - கழுத்து.

299. எஃகு - வேல். வாட்கண் - ஒளியையுடைய கண். எறிகடல் - அலைகளை எறிகின்ற கடல். அஃகிய மதுகை - குறைந்த வன்மை. மயில் - மயிற்பொறி. எஃகு - வேல். பிணை - பெண்மான். எஃகெறிபிணை : சீவக. 715, 2344. வென்றி முரசு ஆர்ப்ப... சோர்ந்தாள் : பெருங். 3. 24 : 62 - 5.

(உரை) [1] செயலறுதல். [2] யந்திரம். [3] கட்டியங்காரன்.

300. மோடு - பெருமை. பிறங்கி - மிக்கு. காடு - மயானம். பைபய - மெல்லமெல்ல.

என்றார். கையால் இடந்திரித்தாற் கடிதின் வீழ்கின்றது, ஈண்டுத் தானே இடந்திரிதலிற் பையப் பைய நிலத்திற்கு [1] அண்ணிதாக வீழ்ந்ததென்றார். வீழ்ந்தது, நிகழ்காலத்திற்றோன்றிய இறப்பு.

(இ - ள்.) அங்ஙனம் மூர்ச்சிப்பதன் முன்பு வலத்திலே முறுக்கின விசை தானே கைவிட்டபின் இடத்தே திரிகின்ற தோகைமயில் அந்நகரினின்று நீங்கிச் சுடுகாட்டின் நேரே வீழ்ந்ததென்க. (உஎக)

301. மஞ்சுசூழ் வதனை யொத்துப் பிணப்புகை மலிந்து பேயும்
அஞ்சுமம் மயானந் தன்னு ளகில்வயி றூர்ந்த கோதை
பஞ்சிமேல் வீழ்வ தேபோற் பல்பொறிக் குடுமி நெற்றிக்
குஞ்சிமா மஞ்ஞை வீழ்ந்து கால்குவித் திருந்த தன்றே.

மேகம், புகைநிறத்திற்கு உவமம். பேயும் : உம்மை, சிறப்பு. அகில் : [1] ஆகுபெயர். குஞ்சி - மயிர்.

(இ - ள்.) அங்ஙனம் வீழ்ந்த அந்த மயில், புகை மலிந்து பேயும் அஞ்சும் மயானத்தே வீழ்கின்றபொழுது, மாலை பஞ்சின்மேல் வீழ்வது போல் மெல்லென வீழ்ந்து காலைக் குவித்திருந்ததென்க.

'இருக்கும்' என்றும் பாடம். இம்மயிற்பொறியைக் [2] கூனியது உருவாகிய [3] தெய்வம் மறைத்துக் கட்டியங்காரனும் [4] கோவிந்தனும் தேவியைத் தேடாமற்காத்ததென்று கொள்க. அது பின்பு, "கனியார் மொழியாட்கு மயிற்குங் காமர்பதிநல்கி" (சீவக. 2603) எனச் சேரக் கூறியவாற்றானுமுணர்க. (உஎஉ)

302. வார்தரு தடங்க ணீர்தன் வனமுலை நனைப்ப வேல்பெற்
றார்கட லனைய காட்டு ளச்சமொன் றானு முள்ளாள்
ஏர்தரு மயிலஞ் சாய லிறைவனுக் கிரங்கி யேங்கிச்
சோர்துகி றிருத்த றேற்றா டுணைபிரி மகன்றி லொத்தாள்.

---

(உரை) [1] சமீபமாக.

(மேற்.) அடி. 4 : கல். 'புயற்கார்', 11 - 2, மயில்.

301. மஞ்சு - வெண்மேகம். அகில் - அகிற்புகை. கோதை - மாலை. பஞ்சி - பஞ்சு. குடுமி நெற்றி - கொண்டையை உச்சியிலே உடைய.

(உரை) [1] அகில் அதன் புகைக்கு ஆயிற்று. [2] விசயையின் தோழியாகிய சண்பகமாலை. [3] யக்ஷி தேவதை ; இதனை, சீவக. 314-ஆம் செய்யுளால் உணர்க. [4] விசயையின் சகோதரன்.

302. வார்தல் - ஒழுகுதல். ஏல்பெற்று - எழுச்சி பெற்று. கடல், பரப்பிற்கு உவமை. ஏர்தரு - எழுச்சி பெற்ற. மயிலஞ்சாயல் - மயில் போன்ற அழகிய மென்மையையுடைய விசயை. இறைவன் : சச்சந்தன். சோர்துகில் திருத்தல் - நழுவுகின்ற ஆடையை உடுத்தல். துணைபிரி மகன்றில் : சீவக. 1250 ; குறுந். 57 ; பரி. 8 : 44 ; பெருங். 1. 53 : 96-7.

வார்தலைத்தருகின்ற. ஏல் - மனவெழுச்சி. தான் நிற்கின்ற நிலையிற் கலக்கத்தாலே பேய் முதலியவற்றிற்குச் சிறிதும் அஞ்சாளாய். யாது செய்வலென்றிரங்கி. ஏங்கி - அழுது. தேற்றுள், தொழிற்பெயர். [1] அன்பு மிகுதியாற் கையாறு முற்படுதலின், 'இறுகி' (சீவக. 299) எனக் கையாறுகூறி, இரங்கி யெனக் கவலைகூறி, ஏங்கியென அரற்றுக்கூறி, அச்சமுள்ளாளென அவலங்கூறினர். வருத்தந்தோன்றிநிற்றல், அவலம். வாய்விட்டழுதல், அரற்று. யாதுசெய்வலென்றல், கவலை. மூர்ச்சித்தல், கையாறு.

(இ - ள்.) மயிலஞ்சாயல், திருத்தல்தேற்றுதவள், காட்டிலே உணர்வு பெற்று இறைவனுக்கு இரங்கிக் கண்ணீர் முலையை நனைப்ப ஏங்கி அச்ச முள்ளாளாய் மகன்றிலை ஒத்தாளென்க. (உ௩ங)

303. உண்டென வுரையிற் கேட்பா ருயிருறு பாவ மெல்லாம்
கண்டினித் தெளிக வென்று காட்டுவாள் போல வாகி
விண்டொட நிவந்த கோயில் விண்ணவர் மகளிற்சென்றுள்
வெண்டலை பயின்ற காட்டுள் விளங்கிழை தமிய ளானாள்.

(இ - ள்.) விளங்கிழை, கோயிலிலே விண்ணவர்மகள்போல நல் வினையின் வண்ணமாய் நடந்தவள், இப்பொழுது, பல்லுயிர்களும் நுகரும் பாவமுண்டென்று நூலிலே கேட்பாரெல்லாம் இனி என்னைக் கண்டு தெளிவீராகவென்று உலகிற்குக் காட்டுவாள்போலத் தான் தீவினை யின் வண்ணமாய்க் காட்டிலே தமியளானாளென்க.

மகப்பெறுங்காலத்திற்குத் துணையின்றி வருந்துதலிற் 'காட்டுவாள் போலவாகி' என்றார். (உ௩ச)

304. இருள்கெட விகலி யெங்கு மணிவிளக் கெரிய வேந்தி
அருளுடை மனத்த வாகி யணங்கெலாம் வணங்கி நிற்பப்
பொருகடற் பருதிபோலப் பொன்னனான் பிறந்தபோழ்தே
மருளுடை மாத ருற்ற மம்மர்நோய் மறைந்த தன்றே.

(இ - ள்.) பெறுதற்கரியோன், மணிவிளக்கு ஏந்தியெரிய அணங்கு கள் வணங்கிநிற்பக் கடலிடத்துப் பருதிபோலப் பிறந்தபொழுதே, மயக்கமுடைய மாதருற்ற வருத்தநோய் மறைந்ததென்க.

(உரை) [1] முதலில் அவலமும் பின்பு அரற்றும் கவலையும் கையாறும் உண்டாதல் முறையாயினும் அன்புமிகுதியாற் கையாறு முற்படுமென்பர் (சீவக. 389, ந.)

303. உரையில் - நூல்களில். உண்டென உரையிற் கேட்பார்: பெருங். 1. 33 : 110. வெண்டலை - இறந்தவருடைய வெள்ளிய தலை. பயின்ற - மிக்க.

304. மணிவிளக்கு - இரத்தின விளக்கு; பெருங். 2. 11 : 71. பருதி - சூரியன். பொன்னனான் - சீவகன். மம்மர்நோய் - வருத்த மாகிய நோய்.

இகலி - விளக்கோடு இகலி. ஏந்தி - மிக்கு. [1] இவன் வீடுபெறுவ னென்பது கருதித் தெய்வம் வணங்கிற்று. "கவாஅன் மகற்கண்டு தாய்மறந்தாஅங்கு" (நாலடி. 201) என்றார் பிறரும். முன், "வெஞ் சுடரி ருண்டகை யவிந்தான்" (சீவக. 289) எனக்கூறி, அச்சுடர் குழவி யாய்த்தோன்றினமை கூறினார். ஞாயிறு தோற்றத்தில் இருளைப் போக்கிப் பின் மதியத்தைக் கெடுக்குமாறுபோல, இவனும் பிறந்த பொழுதே தேவியிருளைப்போக்கிப் பின்பு பகைவெல்லுமென்பது கருத்து. இக்கருத்தால், "செய்யோன் செழும் பொற்சரம்" (சீவக. 2312) என்றும், "மதிவீழ்வது போல வீழ்ந்தான்" (ஷை. ஷை.) என்றும் கூறினார். (உ௭௪)

305. பூங்கழற் குருசி றந்த புதல்வனைப் புகன்று நோக்கித்
தேங்கம ழோதி திங்கள் வெண்கதிர் பொழிவ தேபோல்
வீங்கிள முலைகள் விம்மித் திறந்துபால் பிலிற்ற வாற்றாள்
வாங்குபு திலகஞ்சேர்த்தித் திலகனைத் திருந்த வைத்தாள்.

புதல்வன்பொருட்டு இவளைப்போக்குதலின், 'குருசி றந்த புதல் வனை' என்றார். முலைகள் திங்களின் கதிரைத் தாம்பொழிவதுபோலப் பால்சொரியும் பருவத்தளவும் பொருளாய்ப் பாலை வலிய வாங்கியென்க; என்றது மகப் பயந்தோர்க்குப் பயந்த பொழுதே பால்சுரவாதாதலால்.

(இ - ள்.) ஓதி, புதல்வனை நோக்கிப் பிலிற்றுந் துணையும் ஆற்று ளாய் வாங்கித் திருந்தத் திலகமிட்டுத் திலகனை வைத்தாளென்க. (உ௭௫)

(வேறு)

306. (௧) கறைபன் னீராண் டுடன்விடுமின் காமர் சாலை தளி நிறுமின், சிறைசெய் சிங்கம் போன்மடங்கிச் சேரா மன்னர் சின மழுங்க, உறையுங் கோட்ட முடன்சீமி னொண்பொற் குன்றந் தலைதிறந்திட், டிறைவன் சிறுவன் பிறந்தானென் றேற்பார்க் கூர்தோ றுய்த்தீமின்.

---

(உரை) [1] உலகை ஆளுதலைப் புலப்படுத்தும் ஊர்நை என்னும் சுழியும், இரதரேகை, துவசரேகை, கலசரேகை முதலிய இராசசின்னங் களும் குழந்தையின்பாற் காணப்பட்டன வென்று சுத்தியசிந்தாமணி யால் தெரிகின்றது.

305. குருசில் : சச்சந்தன். குருசில் தந்த புதல்வன் : "உரவோன் சிறுவன்" (சீவக. 353). புகன்று - விரும்பி. தேங்கமழ் ஓதி : விசயை. பிலிற்ற - சுரக்க. வாங்குபு - வாங்கி. திலகம் சேர்த்தி - மண்பொட்டை அணிந்து (பிரபு. மாயையுற்பத்தி. 46). திலகன் - மேலானவன்.

306. கறை - சிற்றரசர் கொடுக்கும் கப்பம். கறைவிடுவித்தல் : கம்ப. திருவவதார. 113. சேராமன்னர் - பகையரசர். சினம் அழுங்க - சினம் கெடும்படி. கோட்டம் - சிறைக்கோட்டம். கோட்டம் சீமின் :

307. (உ) மாட மோங்கும் வளநகருள் வரம்பில் பண்டந் தலைதிறந்திட், டாடை செம்பொ னணிகலங்கள் யாவும் யாருங் கவர்ந்தெழுநாள், வீட லின்றிக் கொளப்பெறுவார் விலக்கல் வேண்டா வீழ்ந்தீர்க்குக், கோடி மூன்றே டரைச்செம்பொன் கோமா னல்கு மெனவறைமின்.

308. (ங) அரும்பொற் பூணு மாரமு மிமைப்பக் கணிகள கன் கோயில், ஒருங்கு கூடிச் சாதகஞ்செய் தோகை யரசர்க்குடன் போக்கிக், கருங்கைக் களிறுங் கம்பலமுங் காசுங் கவிகள் கொள வீசி, விரும்பப் பிறப்பாய் வினைசெய்தேன் காண விஃதோஒ பிறக்குமா.

309. (ச) வெவ்வா யோரி முழவாக விளிந்தா ரீமம் விளக்காக, ஒவ்வாச் சுடுகாட் டுயரரங்கி னிழல்போ னுடங்கிப் பேயாட, எவ்வாய் மருங்கு மிருந்திரங்கிக் கூகை குழறிப் பாராட்ட, இவ்வா றுகிப் பிறப்பதோ விதுவோ மன்னர்க் கியல்வேந்தே.

**இவை நான்கும் ஒருதொடர்.**

(க) கறை - கடமை. [1] பாலக்கிரகாரிட்டம் பன்னீராண்டளவும் உண்டாகையினாலே அதற்குச் சாந்தியாகப் பன்னீராண்டு கடமை கொள்ளாதொழிதல் அரசியல்பென்று, 'பன்னீராண்டு' என்றார். இனி, அரசர்க்குப் பதினோராண்டிலே உபநயனம்பண்ணிப் பன்னீராண்டிலே இல்லறக் [2] கிழமைபூண்டு அரசவுரிமை யெய்துதல் இயல்பாகலின் பன்னீராண்டும் உலகத்தார்க்குத் தானமாகவிடுதல் இயல்பென்றனு மொன்று. உடன் - சேர. சாலை - அறச்சாலை. தளி - கோயில். நிறுமின் - இவையிற்றைப்படைமின். மன்னர்சிறைசெய்சிங்கம்போல் மடங்கிச் சினமழுங்கும்படி உறையும். சீமின் - இடித்துத் தூய்மை செய்மின். புதல்வற்பயந்தாற் சிறைவீடு செய்தல் பிதிரருடைய [3] தனிசு நீங்குதலாம். திறந்திட்டு - திறந்துபோகட்டு. சிறுவன் பிறந்தானென்று மகிழ்ந்து ஏற்பார்க்கு. உய்த்து - கொண்டுசென்று. இது தானம்.

---

சூளா. சுயம். 163. ஏற்பார்க்கு - இரப்பவர்க்கு. உய்த்து ஈமின் - கொண்டுபோய்க் கொடுங்கள்.

(மேற்.) அடி, 1 : சிலப். 4 : 9-12, அடியார்.

307. வளநகர் - இராசமாபுரம். எழுநாள் - ஏழுநாள் (சூளா. சுயம். 164.) வீடலின்றி = விடலில்லாமல்-இடைவிடாமல். வீழ்ந்தீர்க்கு- விரும்பினீர்க்கு.

308. ஆரம் - முத்துமாலை. இமைப்ப - ஒளிவிட. கணிகள் - சோதிடர்கள். சாதகம்செய்து - சாதகத்தைக் கணித்து. ஓகை : உவகை என்பதன் மரூஉ; ஓகை போக்கி (சீவக. 1269; சூளா. சுயம். 170). காசு - பொற்காசு. கவிகள் - புலவர்கள். பிறக்குமா - பிறக்கும்விதம்.

309. ஓரி - நரியின் குரல். விளிந்தார் ஈமம் - இறந்தவரைச் சுடுதற்குரிய விறகடுக்கு. அரங்கு - ஆடுமிடம். நுடங்கி - அசைந்து. கூகை - கோட்டான்.

(உரை) [1] பாலர்களைப் பிடித்து வருத்தும் பேய்களால் உண்டாகும் தீங்கு. [2] உரிமை. [3] கடன்.

(உ) நகர் - கோயில். பண்டம் - நெல்லுமுதலியன. யாவும் - பிறவும். ஏழுபிறப்பினுமுள்ள தீவினை நீங்குதற்கு, 'ஏழுநாள், வீடலின்றிக் கொளப் பெறுவார்' என்றான். [4] ஏழுபிறப்பாவன: "மக்கள் விலங்கு பறவை யூர்வன, நீருட் டிரிவன பருப்பதம் பாதவம், எனவிவை யெழு பிறப் பாகு மென்ப." வீடல்: [5] விகாரம். வீழ்ந்தீர்க்கு - உயர்ந்த தானத்தைப்பெற விரும்பினீர்க்கு. உடம்பிற்கு மூன்றரைக்கோடி மயிர் உளவாகலின், ஒரு மயிர்க்கு ஒரு பொன்னாக மூன்றரைக்கோடிபொன் நல்குமென்றான். தலை திறந்து, பண்டங்களையும் ஆடைமுதலியவற்றை யும் பிறவற்றையும் கொள்ளை கொள்ளப் பெறுவாரை யாரும் விலக்குதல் வேண்டாவென்க.

(௩) ஒருங்கு - சேர. செய்து - செய்ய. ஓகை - உவகை. கவிகள் - [6] பெருமங்கலம்பாடுவார். பிறப்பாய் - பிறக்கும் நீ. இஃது - இத்தன் மைத்து. ஓஒ, இரக்கக்குறிப்பு. பிறக்குமா - பிறக்கும்படி யென்னும் பொருட்டு; மாறு, மாவென விகாரமுமாம்.

(௪) வெவ்வாய் - கொடிய வாய். பிறப்பார்க்கு ஒவ்வாச்சுடுகாடு. மருங்கு - பக்கம். ஓரி முழவாக ஈமம் விளக்காக அரங்கிலே பேய் ஆட வென்க. இவ்வாறென்றது, தந்தை விரும்பும்படி நல்வினையுடைய தன்மையை. இது வென்றது செயலின்றித் தாய் வருந்தும்படி தீவினை யுடைய தன்மையை.

(இ - ள்.) தேவி, புதல்வனைநோக்கி, கோமானுளவன் கணிகள் சாதகஞ் செய்ய ஓகைபோக்கி வீசிக் கறைவிடுமின், நிறுமின், சீமின், ஈமின், விலக்கல் வேண்டா என அறைமின், வீழ்ந்தீர்க்கு நல்குமென அறைமினென்று விரும்பப் பிறக்கும் நீ ஓஒ தீவினை செய்தேன் காண்டற் காகப் பிறக்கும்படி இத்தன்மைத்தாயிருந்தது; வேந்தே, இவ்விரண்டி லும் இவ்வாறாகிப் பிறப்பது மன்னர்க்கு இயல்போ? பேயாடக் கூகை பாராட்ட இதுவாகிப் பிறப்பது மன்னர்க்கியல்போ? கூறுயென்றாளென்க. ஓகாரமிரண்டும் வினா. என்றெனவும், கூறுயென்றாளெனவும் வருவிக்க. [7] ஆகி, இரண்டிடத்திற்கும் கூட்டுக. (உ௭௭-௮௦)

310. பற்று மன்ன னகர்ப்புறமாற் பாயல் பிணஞ்சூழ் சுடுகாடால்
உற்றா ரில்லாத் தமியேனு லொதுங்க லாகாத் தூங்கிருளால்
மற்றிஞ் ஞால முடையாய்நீ வளரு மாறு மறியேனால்
எற்றே யிதுகண் டேகாதே யிருத்தியாலென் னின்னுயிரே.

[4] தேவர், மனிதர், விலங்கு, நீர்வாழ்வன, பறவை, தாவரம், ஊர்வன என ஏழுவகையாகக் கூறுவதும் உண்டு (குறள், 62, பரிமேல்.) [5] விடல் வீடல் என்றாயிற்று. [6] தொல். புறத். 36. [7] இவ்வாறாகி என்பதிலுள்ள ஆகி என்பதை இது என்பதோடும் கூட்டுதல்.

310. பற்று மன்னன் - பகைவனை அரசன் (பெருங். 3. 25: 101). பாயல் - படுக்கை. ஒதுங்கல் - நடத்தல். எற்று - என்ன.

(இ - ள்.) இஞ்ஞாலமுடையாய், நீ கிடக்கின்ற இடம் பகைவனிடமா யிராநின்றது? நினது பாயல் சுடுகாடாயிராநின்றது; யானும் [1] உசாவு வதற்கு ஒரு துணையுமில்லாத் தமியேனாயிராநின்றேன்; நின்னைக் கொண்டுபோகக் கருதிற் போகவொண்ணாதே இருளாயிராநின்றது; மேல் நீ வளருமாறும் அறியேனாயிராநின்றேனென்று பிள்ளையை நோக்கிக்கூறி, இனி இதுவும் அறிந்தே இச்செய்திகண்டும் போகாதே, கொடிய வுயிரே, இராநின்றாய்; இதற்குக் காரணம் என்னென்று கூறினாளென்க.

மற்று : வினைமாற்று. (உ௪௧)

311. பிறந்த நீயும் பூம்பிண்டிப் பெருமா னடிகள் பேரறமும், புறந்தந் தென்பாற் றுயர்க்கடலை நீந்தும் புணைமற் றாகாக்காற், சிறந்தா ருளரே லுரையாயாற் சிந்தா மணியே கிடத்தியால், மறங்கூர் நுங்கோன் சொற்செய்தேன் மம்மர் நோயின் வருந்துகோ.

சொல் : [1] ஆகுபெயர். வருந்துகு : வருந்துவேனெனத் தனித் தன்மை.

(இ - ள்.) சிந்தாமணியே, நீ ஒன்றுமுரையாமற் கிடவாநின்றாய்; இனி எனது வருத்தம் நீக்கப்பிறந்த நீயும், பேரறத்தையுடைய அடிகளும் புறந்தந்து என்னிடத்துப் பிறந்த துயர்க்கடலை யான் நீந்தும் புணையாகாதபொழுது மற்று நின்னினும் அவனினும் சிறந்தாருளரேல் உரைக்கின்றிலை; நுங்கோன் கூறிய காரியத்தைச் செய்த யான் வருந்தக்கடவேனோவென்று கூறினாளென்க. (உ௪உ)

312. அந்தோ விசயை பட்டனகொண் டகங்கை புறங்கை யானாற்போற், கந்தார் களிற்றுத் தங்கோமான் கழிய மயிலோர் மயிலூர்ந்து, வந்தாற் போலப் புறங்காட்டுள் வந்தா டமியே யெனமரங்கள், சிந்தித் திரங்கி யழுவனபோற் பனிசேர் கண்ணீர் சொரிந்தனவே.

(உரை) [1] வினாவுதற்கு.

311. பிண்டிப்பெருமானடிகள் - அருகன்; பிண்டி - அசோகம். ‘நீயும் அடிகள் அருளிய பேரறமும்’ என்று சைனர் பொருள் கூறுவர். பேரறமும் புறந்தந்து; சீவக. 386. புணை - தெப்பம். சிந்தாமணி யென்றது பிள்ளையை நோக்கி. மறம் - வீரம். மம்மர் - மயக்கம். வருந்துகோ - வருந்துவேனோ.

(உரை) [1] சொல்லிய காரியத்திற்கானமையின் ஆகுபெயர்.

312. அந்தோ - ஐயோ. அகங்கை புறங்கையானாற் போலென்றது விரைவு குறித்து நின்றது; யா - வி. 37, மேற். கந்து - கட்டுத்தறி. கழிய - இறக்க. மயில் ஊர்ந்து - மயிற்பொறியை ஊர்ந்து. புறங் காட்டுள் - சுடுகாட்டுள். கண்ணீர் : சிலேடையுமாம்.

(மேற்.) அடி, 1 : நன். இடை. 2, மயிலை.; சங்கர.

(இ - ள்.) அகங்கைபோய்ப் புறங்கையான [1] கடுமைபோல விசயை கோமான் படாநிற்கப் புறங்காட்டுள் வந்தவள் தனியே பட்ட தீங்குகளை உட்கொண்டு அந்தோவென்ன இரங்கி அழுவனபோல மரங்கள் தமக்கு அடுத்த பனியாகிய கண்ணீரைச் சொரிந்தனவென்க. (உ அ௩)

313. அடர்பொற் பைம்பூ ணரசழிய வரும்பொற் புதல்வற் பெற்றிருந்த, இடர்கொ ணெஞ்சத் திறைவியு மிருங்கண் ஞாலத் திருள் பருகிச், சுடர்போய் மறையத் துளங்கொளிய குழவி மதிபெற் றகங்குளிர்ந்த, படர்தீ ரந்தி யதுவொத்தாள் பணை செய் கோட்டுப் படாமுலையாள்.

அடர் - தகடுமாம். உம்மை : சிறப்பு. படர்தீர்ந்த அதுவென்க. அந்தி - சந்தியாதேவி. [1] பணைசெய் - [2] பிழைத்தலைச்செய்த.

(இ - ள்.) உலகில் தீங்கினை நீக்கின அரசுபடப் புதல்வனைப் பெற்றிருந்த படாமுலையாளாகிய இறைவியும், சிறிது இடர்தீர்ந்தமை யால், இருளைப் பருகிச் சுடர்மறையக் குழவியாகிய மதியைப்பெற்றுச் சிறிது மனங்குளிர்ந்த அந்தி படர்தீர்ந்த அத்தன்மையையொத்தா ளென்க. (உ அச)

## (வேறு)

314. தேனமர் கோதை மாதர் திருமகன் றிறத்தை யோராள்
யானெவன் செய்வ லென்றே யவலியா விருந்த போழ்திற்
றனமர்ந் துழையி னீங்காச் சண்பக மாலை யென்னும்
கூனிய துருவங் கொண்டோர் தெய்வதங் குறுகிற் றன்றே.

(இ - ள்.) மாதர், திருமகன் நல்வினையையோராளாய், யான் யாது செய்வலென்று வருந்தியிருந்தவளவிலே, ஒரு தெய்வந்தான் இவளிடத்து நின்றும் நீங்காத சண்பகமாலையென்னும் கூனியது வடிவைக் கொண்டு அமர்ந்து குறுகிற்றென்க.

---

(உரை) [1] விரைவு.

313. பொன்அடர் - பொற்றகடு. பொற்புதல்வன் : புறநா. 9 : 4. புதல்வற்பெற்று ; சீவக. 386. இடர்கொள் - துன்பத்தைக்கொண்ட. இருங்கண் ஞாலத்து - பெரிய இடத்தையுடைய பூமியில். இருள் பருகி - இருளை அழித்து. சுடர் - சூரியன் ; சச்சந்தனுக்கு உவமை ; சீவக. 289. குழவிமதி - பிறை. படா - சாயாத.

(உரை) [1] தொல். உரி. 41. [2] பிழைத்தலைச் செய்த என்றது தன் அழகால் சச்சந்தன் இறந்ததைக் குறித்தது.

314. ஓராள் - அறியாளாய். அவலியா - வருந்தி ; சீவக. 273. அமர்ந்து - விரும்பி. உழையின் நீங்கா - பக்கத்தினின்றும் நீங்காத. தெய்வதம் - யக்ஷிதேவதை ; யக்ஷர் வியந்தரலோகவாசிகள் எண்மருள் ஒருவகையார் என்பர்.

இவன் அரசன்மகனாதலின், ஆண்டுறையும் தெய்வம் வந்தது. தெய்வதம் : தைவதமென்னும் வடமொழிச் சிதைவு. (உ௮௫)

315. விம்முறு விழும வெந்நோ யவணுறை தெய்வஞ் சேரக்
கொம்மென வுயிர்த்து நெஞ்சிற் கொட்புறு கவலை நீங்க
எம்மனை தமியை யாகி யிவ்விட ருற்ற தெல்லாம்
செம்மலர்த் திருவின் பாவா யான்செய்த பாவ மென்றாள்.

(இ - ள்.) அவ்விடத்துறையுந் தெய்வமாகிய கூனி சேர, [1] பொருக்கென உயிர்த்து நெஞ்சிற்கவலை நீங்குதலாலே, அக்கூனி, அன்னாய், பாவாய், நீ இவ்விடருற்றதெல்லாம் யான்செய்த தீவினையாலே; இனி வருத்தம் நீங்கென்றாளென்க.

தேவியது விழுமத்தாலே நோயையுடையதாகிய தெய்வம். திருவின் : இன் அசை. தெய்வம் கூனியாய் நிற்றலின், உயர்திணையாற் கூறினார். (உ௮௬)

316. பூவினுட் பிறந்த தோன்றற் புண்ணிய னனைய நம்பி
நாவினு ளுலக மெல்லா நடக்குமொன் றாது நின்ற
கோவினை யடர்க்க வந்து கொண்டுபோ மொருவ னின்னே
காவியங் கண்ணி னாயா மறைவது கரும மென்றாள்.

தோன்றல் - தலைமை. புண்ணியன் - முருகன். நா : [1] ஆகுபெயர்.

(இ - ள்.) அவள், கண்ணினாய், நம்பி வார்த்தையிலே உலகமெல்லாம் நடக்கும்; அங்ஙனம் நடத்தற்குப் பொருந்தாதுநின்ற கட்டியங்காரனைக் கொல்லும்படி இவனை ஒருவன் இப்பொழுதே வந்து கொண்டுபோம்; ஆதலால், யாம் மறைந்துநிற்பது கருமமென்றாளென்க. (உ௮௭)

---

315. அவண் - அவ்விடத்தில். கொம்மென - விரைய. கொட்புறு கவலை - சுழலுதற்குக் காரணமான கவலை. எம்மனை - தாய்; சீவக. 425; மணி. 5 : 32. திருவின் பாவாய் : சிலப். 6 : 61; மணி. 5 : 4. தமியையாகி.........பாவம்; சீவக. 391, 425.

(உரை) [1] விரைய.

316. பூ - இங்கே தாமரைமலர். முருகக்கடவுள் தாமரைமலரிற் பிறந்தமை பரிபாடல் 5-ஆம் பாடலாலும், கந்தபுராணத்தாலும் அறியப்படும். நம்பி - பிள்ளை. ஒன்றாது - பொருந்தாமல். கோ என்றது கட்டியங்காரனை.

(மேற்.) அடி, 2 - 3 : தொல். உருபு. 8, ந.; இ - வி. உருபு. 4.

(உரை) [1] நா சொல்லுக்காயிற்று.

317. (க) சின்மணி மழலை நாவிற் கிண்கிணி சிலம்பொ டேங்கப், பன்மணி விளக்கி னீழ னம்பியைப் பள்ளி சேர்த்தி, மின்மணி மிளிரத் தேவி மெல்லவே யொதுங்கு கின்றாள், நன்மணி யீன்று முந்நீர்ச் சலஞ்சலம் புகுவதொத்தாள்.

318. (உ) ஏதிலா ரிடர்பன் னூறு செய்யினுஞ் செய்த வெல்லாம், தீதில வாக வென்று திருமுலைப் பான்ம டுத்துக், காதலான் பெயர்சு மந்த கதிர்மணி யாழி சேர்த்திக், கோதைதாழ் குழலி னாளைக் கொண்டுபோய் மறைய நின்றாள்.

இவையிரண்டும் ஒரு தொடர்.

(க) மணியாகிய நா. பன்மணி - உயிர்நீத்தவர் பூண்ட மணி. நீழல் : விகாரம் ; நிழலிடம்.

(உ) ஏதிலார் - அயலார். தீதிலவாக - நன்றாக ; காப்பாக. அவன் முலையைப் பிடித்துக் கூனிகொடுத்தாள். ஆழிசேர்த்திற்று, [1] அறிந்து வளர்த்தற்கு. சேர்த்தி : சேர்த்தவென்க.

(இ - ள்.) கூனி, நம்பியைப் பள்ளியிலேசேர்த்தித் தீதிலவாக வென்று முலைப்பாலை மடுத்து ஆழிசேர்த்தினாளாக ; தேவி, கிண்கிணி சிலம்பொடேங்க மணிமிளிர ஒதுங்குகின்றவள், சலஞ்சலம் மணியை யீன்று முந்நீரிலே புகுவதொத்தாள் ; அங்ஙனம் போகின்ற அக்குழலி னாளைக் கூனி கொண்டுபோய் மறையநின்றாளென்க.

தெய்வம் ஒருபள்ளியைத் தேவியறியாதபடி நிருமித்ததென்றுணர்க; அது, பின்பு ஆசிரியன், "பூந்தவிசினுச்சி" (சீவக. 386) என்பதனாலும் பெற்றாம். (உஅஅ-கூ)

---

317. சின்மணி - சிலவாகிய மணிகள். மழலைக் கிண்கிணி : சீவக. 293 ; பெருங். 1. 34 : 4, 175. மணி நாவிற் கிண்கிணி : சீவக. 293. நீழல் : நீட்டல் விகாரம். ஒதுங்குகின்றாள் - செல்கின்றாள். மணி - முத்துக்களை. முந்நீர் - கடலில். விசயைக்கு முத்தைப் பெற்றுக் கடலிற் செல்லும் சலஞ்சலம் உவமை ; சீவக. 386.

318. நூறு என்றது பல என்னும் பொருளில் வந்தது. காதலான் - சச்சந்தன். ஆழி - மோதிரம் ; பெயர்சுமந்த ஆழி : சீவக. 1040 ; "காதலன், பொறியாப் புறுத்த தமனிய வள்ளத்து" (பெருங். 1. 40 : 161-2). கோதை - மாலை.

(உரை) [1] சச்சந்தன் மகன் என்று அறிந்து வளர்த்தற்கு.

319. நல்வினை செய்தி லாதே னம்பிநீ தமியை யாகிக்
கொல்வினை மாக்கள் சூழக் கிடத்தியோ வென்று விம்மாப்
புல்லிய கொம்பு தானோர் கருவிளை பூத்த தேபோல்
ஒல்கியோர் கொம்பு பற்றி யொருகண்ணோக்கி நின்றாள்.

(இ - ள்.) அப்பொழுது அத்தேவி, நின்னைப்பெறுதற்கு நல்வினை செய்து, வளர்த்தற்கு நல்வினை செய்யாதேனுடைய நம்பி, நீ தனியையாய்க் கொடிய விலங்குகள்சூழக் கிடத்தியோவென்று அழுது, கொம்பைப்புல்லிய கருவிளைதான் ஒருபூவைப் பூத்ததுபோல ஒருகொம்பைப் பற்றி ஒதுங்கி ஒரு கண்ணாலே நோக்கி நின்றாளென்க. (உகூ௦)

(வேறு)

320. நாளொடு நடப்பது வழுக்கி மின்னொடோர்
கோளொடு குளிர்மதி வந்து வீழ்ந்தெனக்
காளக வுடையினன் கந்து நாமனும்
வாளொடு கனையிருள் வந்து தோன்றினான்.

(இ - ள்.) அவள் அங்ஙனம்நிற்க, மதி நாளொடு நடக்கின்றதனைத் தப்பி மின்னோடு செல்கின்ற மேகத்துடனே வந்துவீழ்ந்தாற்போல, கந்துக்கடனும் கருமையை இடத்தேயுடைய உடையினனாய்க் கனையிருளிலே வாளொடு வந்துதோன்றினானென்க.

[1] நடப்பது : தொழிற்பெயர். ஊர்கோள் : வினைத்தொகை; ஆகுபெயர். கோள் - பாம்புமாம்; இதற்கு உம்மை விரிக்க. நாமனும் : உம்மை சிறப்பு. (உகூக)

321. வாள்கடைந் தழுத்திய கண்ணினா ளோர்கடந்
தோள்கடைந் தழுத்திய மார்பன் றூங்கிருள்
நீள்சுடர் நிழன்மணி கிழிப்ப நோக்கினான்
ஆள்கடிந் தணங்கிய வணங்கு காட்டுளே.

319. நம்பி : விளி. மாக்கள் - விலங்குகள். புல்லிய - தழுவிய. கருவிளை - ஒருவகைக் கொடி. கொம்பு புல்லிய கருவிளை என மாறுக. ஒல்கி - ஒதுங்கி. கணோல் - கண்ணோல். ஏதாவது ஒன்றனைப்பற்றி நின்று பார்த்தல் நாணமுடைய மகளிர்க்கு இயல்பு; புறநா. 85 : 7, 86 : 1 - 2.

320. நாளொடு - நட்சத்திரங்களோடு. வழுக்கி - தப்பி. காளக வுடை - கரிய உடை; காளகம் - கருமை; சீவக. 1230. கந்து நாமன் - கந்துக் கடன்; இவன் சக்கரவர்த்தி வணிகனென்று கத்திய சிந்தாமணியிற் கூறப்படுகின்றான். கனை இருள் - மிக்க இருள்.

(மேற்.) அடி, 4 : நன். வினை. 25, மயிலை; சங்கர.

(உரை) [1] நடப்பது - நடத்தல்.

321. மார்பன் - கந்துக்கடன். தூங்கிருள் - செறிந்த இருள். நிழல் - ஒளி. அணங்கிய - வருத்திய. அணங்கு - தீண்டி வருத்தும் தெய்வம். அணங்கு அணங்கிய காடு என மாறுக.

அழுத்திய கண் - அழுத்தினாற்போலுங்கண். தோள்கடைதல் - புல்லுதல்விசேடம். அணங்குகள் ஆளைக்கடிந்து வருத்திய : காடென்றதற்கு அடை.

(இ - ள்.) கண்ணினார் தோளழுத்திய மார்பன் காட்டிலே செறிந்த இருளைச் சுடரையுடைய மணி கிழித்தலாலே [1]பிள்ளையை நோக்கினானென்க. (உகூஉ)

322. அருப்பிள முலையவர்க் கனங்க னாகிய
மருப்பிளம் பிறைநுதன் மதர்வை வெங்கதிர்
பரப்புபு கிடந்தெனக் கிடந்த நம்பியை
விருப்புள மிகுதியின் விரைவி னெய்தினான்.

அருப்பிளமுலை - அரும்புபோலுமுலை ; [1]விகாரம். மருப்பு - [2]கோடு. மதர்வை - மயக்கம். பரப்புபு - கதிர் தனது கிரணங்களைப் பரப்பாநின்று. கிடந்ததெனா : [3]விகாரம்.

(இ - ள்.) பிறைபோலும் நுதலையுடைய முலையவர்க்கு அனங்கனாதற்கு இப்பொழுது, உதயத்து இளஞாயிறு கிடந்ததெனக் கிடந்த நம்பியை, அவன் விருப்பத்தையுடைய மனச்செருக்காலே விரைவோடு சேர்ந்தானென்க. (உகூஙு)

323. புனைகதிர்த் திருமணிப் பொன்செய் மோதிரம்
வனைமலர்த் தாரினான் மறைத்து வண்கையாற்
றுனைகதிர் முகந்தென முகப்பத் தும்மினான்
சினைமறைந் தொருகுரல் சீவ வென்றதே.

வனைதல் - [1]கைசெய்தல். துனைகதிர்-இருளை நீக்குதற்கு விரைகின்ற கதிர். எல்லாப் புலன்களுக்கும் விருப்பஞ்சேறலின், 'முகப்ப' என்றார் ; "மன்னெயின்முகவை" (புறநா. 373) என்றார் பிறரும். தும்முதல் நன்னிமித்தம். சீவ : வேண்டுகோளாகிய வியங்கோட்கண்வந்த [2]வடசொல்.

(மேற்.) அடி, 3 : சிலப். 5 : 122 - 7, அடியார்.

(உரை) [1]பிள்ளை - சீவகன்.

322. அருப்பு - அரும்பு. அனங்கன் - மன்மதன். நுதல் - நெற்றி. பரப்புபு - பரப்பி. உளமிகுதி - மனச் செருக்கு.

(உரை) [1]அரும்பு என்பது அருப்பு எனவலித்தது. [2]கோடு - முனை ; ஒரு கலையுமாம். [3]'கிடந்ததெனா' என்பது கிடந்தெனா என்று தொக்கது.

323. தாரினான் : கந்துக்கடன். துனை - விரைவு. முகப்ப - எடுப்ப. சீவ - சீவித்திரு ; தும்மியவுடன் 'ஜீவ நூறும் புகுக' என்றல் மரபு. 'ஜீவ, நந்த, வர்த்தஸ்வ' என்று ஆசி கூறுதல் சைனமுனிவர்களுடைய வழக்கம் என்பர் ; இப்பிள்ளைக்குச் சீவகன் என்று பெயர் வந்ததற்குக் காரணம் இதுவே ; தும்மியவுடன் 'சிவாய' என்றல் சைவருடைய வழக்கம் ; திருவால. 49 : 10.

(உரை) [1]கைசெய்தல் - கட்டுதல் ; தொடுத்தல். [2]வடசொல் : ஜீவ - ஜீவித்திரு.

(இ - ள்.) தாரினன், மோதிரத்தைப் பிறரும் அறிவரென மறைத்துக் கையாலே இளஞாயிற்றை யெடுத்தாற்போல நம்பியையெடுப்ப [3]அவன் தும்மினன்; அப்பொழுது அத்தெய்வம் சினையிலே மறைந்து நின்று சீவிப்பாயாகவென்று ஒருகுரல் வாழ்த்திற்றென்க.

தேவி அச்சத்தால் [4]தன்னுள்ளே வாழ்த்துதலின், 'ஒருகுரல்' என்றார். (உகூச)

324. என்பெழுந் துருகுபு சோர வீண்டிய
அன்பெழுந் தரசனுக் கவலித் தையனை
நுன்பழம் பகைதவ நூறு வாயென
இன்பழக் கிளவியி னிறைஞ்சி யேத்தினள்.

என்புக்குள்ளேயெழுந்து உடலுருகி [1]அவசமாக வளர்ந்த அன்பு. அரசனுக்குப் புத்திரமுகங்காணும் நல்வினையின்மைகண்டு வருந்தி. நுன்: [2]திசைச் சொல். தவ - மிக. [3]கிளையறநூறுவாயென்பது கருத்து.

(இ - ள்.) அப்பொழுது தேவி, கந்துகன் பிள்ளையையெடுத்தது கண்டு பழைய அன்பு தோற்றி அவலித்து, பின்பு தெய்வத்தை வணங்கி, ஐயனைப் பகைதவநூறுவாயென வாழ்த்தினளென்க. (உகூரு)

325. ஒழுக்கிய லருந்தவத் துடம்பு நீங்கினர்
அழிப்பரும் பொன்னுடம் படைந்த தொப்பவே
வழுக்கிய புதல்வனங் கொழிய மாமணி
விழுத்தகு மகனொடும் விரைவி னேகினன்.

[3]அவன் - சீவகன். [4]சீவக. 386 - ஆம்பாடலில் 'நல்லறங்காக்க' என்று விசயை கருதியதாகக் கூறியதும் தன்னுள்ளே வாழ்த்தினளென்று ஈண்டுக் கூறியதனை வலியுறுத்துகின்றது.

324. உருகுபு - உருகி. அரசனுக்கு - சச்சந்தனுக்கு. அவலித்து - வருந்தி. ஐயனை - பிள்ளையை. நுன் - உன்; "நொந்தா வொண்சுடரே நுனையே நினைந்திருந்தேன்" (தே. சுந்தர.); பெருங். 1. 32 : 13. நூறுவாய் - அழிப்பாய். பழக்கிளவி - பழத்தின் சுவைபோன்ற சொல்.

(உரை) [1]அவசம் - தன் வசமில்லாமை. [2]நுன் என்பது கன்னட பாஷையில் வழங்குகின்றது. [3]கிளை - சுற்றம்.

325. ஒழுக்கு - ஒழுக்கம். தவத்தாற் சுவர்க்கம் பெறல் : சிறுபஞ்ச. 36. தேவருடம்பைப் பொன்னுடம்பு என்பர் சைனர்; "பொன்னுகத் தடியேனைப் புகப்பெய்து" (தே. திருநா.) வழுக்கிய - இறந்த. புதல்வன் - கந்துக்கடனுடைய புதல்வன். ஒழிய - நீங்க. மணி - முத்து; சீவக. 317. மகன் - சீவகன்.

(இ - ள்.) [1] கந்துகன், அருந்தவத்தேநின்ற உடம்பைவிட்டவர் மேலான உடம்பைப்பெற்ற நிலைமையையொப்ப, தன்புதல்வன் காட்டிலேகிடப்ப, மணிபோல [2] விழுத்தக்க மகனைக்கொண்டு விரைவோடே ஏகினானென்க.

ஒழுக்கத்தாலே இயன்ற தவம், அழிப்பருமருந்தவமென்க. தவவுடம்பை இவன் புதல்வனுக்கு உவமைகூறினார், [3] அவனாலே சீவகனைப் பெறுதலின். (உகசு)

326. மின்னடு கனையிரு ணீந்தி மேதகு
பொன்னுடை வளநகர் பொலியப் புக்கபின்
தன்னுடை மதிசுடத் தளருந் தையலுக்
கின்னுடை யருண்மொழி யினிய செப்பினான்

பொலிய - துன்பம் நீங்கி இன்பம் நிகழ. தன்னுடைமதி - பெண்மதி. இன்மொழி, "புண்ணியற்பெறுதிர்" (சீவக. 1130) என்றது. அருளுடை மொழி, "பின்றையுநிகழ்வதுண்டு" (சீவக. 1130) என்றது; எல்லார்க்கும் அருள் பிறத்தலிற் [1] சிறைகோடலை அருளென்றார்.

(இ - ள்.) அவன், இருளைநீந்தித் தன்மனையிலே புக்கபின் தையலுக்கு [2] முனிவன் கூறிய இரண்டுமொழியினும் இனிய மொழியைக் கூறினானென்க. (உகஎ)

(உரை) [1] கந்துகன் என்பது வருவிக்கப்பட்டது. [2] விழுத்தக்க - சிறப்புப் பொருந்திய. [3] அவன் - கந்துகனுடைய பிள்ளை; தன்னுடைய மரித்த குழந்தையைக் கொண்டுவந்த கந்துகன் அக்குழந்தையை மயானத்தே போட்டுவிட்டுச் சீவகனை எடுத்துக்கொண்டு சென்றமையின் இவ்வாறு கூறினார்.

326. கனையிருள் - மிக்க இருள். மேதகு - சிறந்த. நகர் - மனை. மதி - அறிவு. தையல் - கந்துக்கடனுடைய மனைவி. இன்னுடை - இனிமையையுடைய : "இன்வளரிளம்பிறை" (சீவக. 1008). அருள்மொழி - முனிவன் அருளிய மொழி; என்றது அப்பிள்ளை பின்பு அரசனாற் சிறைகொள்ளப்படுவா னென்றதை.

(உரை) [1] சிறை கோடல் - கட்டியங்காரன் சிறை கொள்ளல். [2] முனிவன் கூறியமொழி : இதற்கு முன்பு பிள்ளைகள் பல பிறந்து பிறந்து இறந்துபோக வருந்தியிருந்த கந்துக்கடனுடைய வீட்டிற்கு ஒரு முனிவர் பிக்ஷைக்கு வர அவரை வழிபட்டுத் தனது குறையைச் சொல்லியபொழுது அவர் சிலநாளைக்குப்பின்பு உலகத்தை யெல்லாம் ஆளுதற்குரிய ஒரு பிள்ளையைப் பெறுவானென்றும், வளர்ந்து கல்வி கற்று மேன்மையுற்று மணஞ் செய்துகொண்டபின் அவன் நகரத்தரசனாற் சிறைகொள்ளப்பட்டு அப்பால் அதனினின்றும் நீங்கிச் சுகமுறுவானென்றும் கந்துக்கடனுக்குச் சொல்லியதாக, சீவக. 1122, 1130-ஆம் பாடல்கள் தெரிவிக்கும்.

327. (க) பொருந்திய வுலகினுட் புகழ்கண் கூடிய
அருந்ததி யகற்றிய வாசில் கற்பினுய்
திருந்திய நின்மகன் றீதி னீங்கினுன்
வருந்தனீ யெம்மனே வருக வென்னவே.

328. (உ) கள்ளலேத் திழிதருங் களிகொள் கோதைதன்
உள்ளலேத் தெழுதரு முவகை யூர்தர
வள்ளலே வல்விரைந் தெய்த நம்பியை
வெள்ளிலே வேலினுன் விரகி னீட்டினுன்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) உலகிற்பொருந்திய புகழெல்லாம் கூடிய அருந்ததிக்கற்பை அகற்றிய கற்பினுய். ஆசு - குற்றம். திருந்திய - நல்வினே திருந்திய. வருந்தல் : அல்லீற்று வியங்கோள். எம்மனே - எம்மில்லாளே.

(உ) தேன் இதழை யலேத்து இழிதற்குக் காரணமான களிப்பு. உள்ளலேத்து - தன்நெஞ்சிலே [1] தரங்கித்து. " இதுமக வழியின் வாழேன் " (சீவக. 1124) என்றவளுயிரையும் மேற்பொருள்களேயும் கொடுத்தலின், 'வள்ளல்' என்ருர். விரகு - தேவிசேர்த்தின [2] திலகத்தை மாற்றினது.

(இ - ள்.) கந்துகன் கற்பினுய், நின்மகன் சாதலினின்றுந்தப்பி னுனெச் செப்பினுன் ; செப்பி இனி வருந்தல் ; எம்மில்லாளே, வருக வென, கோதை உவகை பரத்தலால் வள்ளலே மிகவிரைந்தெய்த, வேலினுன் நம்பியை விரகால் நீட்டினுனென்க. (உகஅ - கூ)

329. சுரிமுக வலம்புரி துவைத்த தூரியம்
விரிமுக விசும்புற வாய்விட் டார்த்தன
எரிமுக நித்தில மேந்திச் சேந்தபோற்
கரிமுக முலேயினுர் காய்பொன் சிந்தினுர்.

---

327. தீது - மரணம் ; சிலப். 19 : 12. மனே - இல்லாள்.

(மேற்.) அடி, 3 : சிலப். 19 : 60 - 67, அடியார்.

328. கள் - தேன். கோதை : சுநந்தை. வள்ளல் - கந்துக்கடன். வல்விரைந்து - மிகவிரைந்து. வெள்ளிலே வேலினுன் : சீவக. 741. விரகு - உபாயம்.

(உரை) [1] தரங்கித்து : திருவரங்கத். 3. [2] விசயை சீவகனுக்குத் திலகமிட்டதை, சீவக. 305-ஆம் பாடலால் அறிக.

329. சுரிமுகம் - சுழித்த முகம். துவைத்த - இசைத்தன. விரிமுக விசும்பு - விரிந்த இடத்தையுடைய ஆகாயம். எரி - நெருப்பு. நித்திலம் - முத்து. சேந்தபோல் - சிவந்தனபோல. இக்கவியால் கந்துக்கடனுடைய வீட்டிற் பிறந்த நாட் கொண்டாட்டம் நடைபெற்றமை கூறப்பட்டது.

**(இ - ள்.) அப்பொழுது வலம்புரி இசைத்தன; [1] நால்வகை வாச்சியங்களும் ஆர்த்தன; நித்திலமேந்துதலாற் கோபித்தனபோற் கரிந்தமுகத்தையுடைய முலையினர் எரிமுகத்தே காய்ந்த பொன்னைக் [2] கொள்ளையூட்டினரென்க.** (௩௦௦)

330. அழுகுரன் மயங்கிய வல்ல லாவணத்
தெழுகிளை மகிழ்ந்தெம தரசு வேண்டினன்
கழிபெருங் காதலான் கந்து நாமனென்
றழிதரு பெருநிதி யுவப்ப நல்கினன்.

**அரசன்படுதலால் அழுகுரல். எழுகிளைமகிழ்ந்து - [1] எழுபிறப்பும் கிளைமையை விரும்பி; வளர்கின்ற கிளையுமாம். உழிதரு - ஓரிடத்தும் நில்லாது திரியும்.**

**(இ - ள்.) அதுகேட்டுக் கட்டியங்காரன், அரசனிருப்பிற்குத் தொடர்ந்த பீடிகைத் தெருவிலே இருந்தும் கந்துகன் எமது அரசாட்சியை விரும்பினனுதலால் மிக்க காதலையுடையனென்றுகொண்டு, அவன் உவப்ப நிதியை நல்கினனென்க.** (௩௦௧)

331. திருமகற் பெற்றெனச் செம்பொற் குன்றெனப்
பெருநல நிதிதலை திறந்து பீடுடை
இருநிலத் திரவலர்க் கார்த்தி யின்னணம்
செருநிலம் பயப்புறச் செல்வன் செல்லுமே.

(உரை) [1] நால்வகை வாச்சியம்: தோற்கருவி, துளைக்கருவி, நரப்புக்கருவி, கஞ்சக்கருவி என்பன. [2] கொள்ளை யூட்டினர் - கொள்ளை கொளக்கொடுத்தனர்.

330. அல்லல் - துன்பம். ஆவணம் - கடைத்தெரு. எழுகிளை மகிழ்ந்து எமதரசு வேண்டினன்; பெருங். 1. 35 : 135; கிளை - சுற்றம். கழிபெருங்காதல் - மிக்க பேரன்பு. கந்துநாமன் - கந்துக்கடன் என்னும் பெயரினேன். பிள்ளையைப் பெற்றமையால் கொண்டாடும் கந்துக்கடனுடைய வீட்டிலுண்டான பிறந்தநாட் கொண்டாட்ட விழாவின் ஆரவாரத்தைத் தான் அரசாட்சி எய்தியது பற்றி அவனும் அவன் கிளைகளும் மகிழ்வதாகக் கட்டியங்காரன் நினைந்து மகிழ்ந்து அளவற்ற நிதியைக் கந்துக்கடனுக்குக் கொடுத்தான்.

(உரை) [1] எழுபிறப்பு : சீவக. 307, அடிக்.

331. பொற்குன்று - மேருமலை. நிதிதலை திறந்து......இரவலர்க்கு ஆர்த்தி; சீவக. 307. பீடு - பெருமை. இரவலர் - யாசகர். ஆர்த்தி - நிரம்பக்கொடுத்து. செருநிலம் - போர் செய்யும் இடம். பயப்பு - பயன். செல்வன் - கந்துக்கடன்.

பெற்றென ஆர்த்தி : எனவெனெச்சம் காரணகாரியப்பொருட்டு; 'மருந்துதின்றெனப் பிணிநீங்கிற்று' என்றாற்போல. குன்றெனப் பெரிய. செருநிலம்பயப்புற - அரசன் போர்செய்த இந்நகர்தன்னிலே சீவகனும் போர்செய்து பிறந்த பயன் உறவேண்டி.

(இ - ள்.) செல்வன், திருமகனைப்பெறுதலாலே, கட்டியங்காரன் நல்கின பின்பு நிதியைப் பீடுடைய இரவலர்க்கு ஆர்த்தி, அம்மகன் போரிலே தன்பகையை வெல்லவேண்டி, மேலும் இங்ஙனம் கொடைக் கடன் பூண்டொழுகுமென்க.

"அருளிலர், கொடாமை வல்ல ராகுக" (புறநா. 27) என்றார் பிறரும். [1] ஆழியாற் [2] குலனுணர்தலின், அதற்குரிய [3] தொழிலே கருதினன் கந்துகனும். (௩௦௨)

(வேறு)

332. நல்லுயிர் நீங்கலு நன்மாண் புடையதொர்
புல்லுயிர் தன்னொடு நின்றுழிப் புல்லுயிர்
கல்லுயிர் காட்டிற் கரப்பக் கலங்கவிழ்த்
தல்லலுற் றாளுற்ற தாற்ற வுரைப்பாம்.

நல்லுயிர் - சச்சந்தன். புல்லுயிர் - பிள்ளை. கரப்ப : [1] செய்விப் பதன்றொழில். கவிழ்த்த அல்லல் : இது காரணகாரியம்; கருவிக்கண் அடங்கும்; 'உண்ட எச்சில்' போல. 'உற்றது' என்று இறந்தகாலத் தாற் கூறினார், கதையை உட்கொண்டு.

(இ - ள்.) தேவி, [2] தனது நல்லுயிர் நீங்குதலாலே புல்லுயிருடனே நின்றவிடத்து, அதனைக் காட்டிலே விதி மறைத்தலாலே, ஒருவன் மரக்கலம் கவிழ்த்தலால் அவனுற்ற வருத்தத்தைத் தான் காட்டிடத்தே உற்றவள், மேல் உற்றதனை முடிவுபோக உரைப்பாமெனத் [3] தேவர் கூறினாரென்க. (௩௦௩)

---

(உரை) [1] ஆழி - சச்சந்தனுடைய மோதிரம்; இது சீவகன் கையில் அணிந்திருந்தமை, சீவக. 323 - ஆம் கவியாலறியப்படும். [2] குலன் - அரசகுலம். [3] தொழில் - போர் செய்து வெற்றியடைதற் பொருட்டுச் செய்யும் கொடைக்கடன்.

332. மாண்பு - மாட்சிமை. புல்லுயிர் - சீவகன். கல்லுயிர் காடு - கல்லைப் பெற்ற மயானம். கரப்ப - மறைத்தலால். கலம் - மரக்கலம். கலங்கவிழ்த்த அல்லல் : சீவக. 572, 2793 : பெருங். 2. 9 : 46 - 7; மேரு. பத்திர. 96; "கலங்கவிழ்த்த நாய்கன் போல்" (யா - வி. மேற்.) ஆற்ற - முடிவுவரை.

(உரை) [1] விதியின் தொழிலானது பற்றிச் செய்விப்பதன் தொழி லென்றார். [2] தனது நல்லுயிர் - சச்சந்தன். [3] தேவர் : இந்நூலாசிரிய ராகிய திருத்தக்கதேவர்.

333. பொறியறு பாவையிற் பொம்மென விம்மி
வெறியுறு கோவை வெறுநில மெய்த
இறுமுறை யெழுச்சியி னெய்துவ தெல்லாம்
நெறிமையிற் கூற நினைவி னகன்றாள்.

பொறி - எந்திரம். பொம்மென - கடுக. 'எய்துவதெல்லாம்' என்றார், "ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி, பன்மைக் காகு மிடனுமா ருண்டே" (தொல். எச்ச. 65) என்றதனால். நெறிமை : மை பகுதிப் பொருள் விகுதி.

(இ - ள்.) கோதை, விம்மிப் பாவைபோல நிலனெய்துதலாலே [1] கூனி, அந்தத்திலும் ஆதியிலுமெய்தும் காரியத்தையெல்லாம் நெறியாலே கூற, அவள் வருத்தத்தில் நின்றும் நீங்கினாளென்க.

கனவால் [2] ஆக்கமுமுளதென்று கருதிய தேவி மனங்கொள்ளும்படி கூனி தன் தெய்வத்தன்மையால் மேல்வருவன கூறலின் அதனை உட்கொண்டு 'நினைவின் அகன்றாள்' என்க. (௩௦௪)

334. பெருமகற் காக்கம் பிறழ்வின்றிக் கேட்டே
திருமக ளானினிச் செய்வதை யெல்லாம்
ஒருமனத் தன்னா யுரையென லோடும்
தெருமரு தெய்வதஞ் செப்பிய தன்றே.

[1] ஏகாரம் : ஈற்றசை. செய்வதை : வினைத்திரிசொல். [2] இருவர்க்கும் ஒருமனம். ஓடு : உடனிகழ்ச்சி. தெருமருதெய்வம் - [3] புதல்வன் அன்னப் பார்ப்பைப் பிரித்த தீவினையை உறுகின்ற தன்மையைத் தானோக்கி அதற்கு அவனை வேறோரிடத்து நீக்கித் தேவியையத் தனியே கொண்டுபோகின்றதற்கு வருந்துகின்ற தெய்வம். செப்பியது - கணவனையிழந்தார்க்கு [4] நோன்புகடனாதலின், இயைவதொருகருமம் தேவிக்குக் கூறிற்று.

---

333. பொறியறு பாவையின் விம்மி : சீவக. 2886; பெருங். 1. 33 : 146; 36 : 60 - 61; உத்தர. அனுபப். 24. விம்மி - அழுது. வெறி - வாசனை. கோதை : விசயை. இறுமுறை - இறுதி. எழுச்சி - தொடக்கம். எல்லாம் : முழுது மென்னு பொருள்படநிற்பதோர் உரிச்சொல் : திருச்சிற். 351, பேர். நினைவு - வருத்தம் ; சீவக. 1880.

(உரை) [1] கூனி யென்பது வருவிக்கப்பட்டது ; இவள் விசயையின் தோழி. [2] ஆக்கம் - விருத்தி.

334. பெருமகன் - சீவகன். திருமகள் : விசயை. தெருமரல் - சுழலுதல். தெய்வம் - விசயையின் தோழியாகிய தெய்வம்.

(உரை) [1] கேட்டே என்பதிலுள்ளது. [2] விசயை, தெய்வம் என்ற இருவர். [3] புதல்வன் - சீவகன். [4] புறநா. 246 : 4 - 10; மணி. 2 : 47 - 8.

(இ - ள்.) மகனுக்கு ஆக்கம் பிறழ்வின்றாகக் கேட்டுத் தேவிதான், இனி யான் செய்யுங் காரியங்களெல்லாம், அன்னாய், உரையாயென்னுத லோடும், தெய்வம் துணிந்து செப்பிற்றென்க.

அது மேற்கூறுகின்றார். (௩௦௫)

335. மணியறைந் தன்ன வரியற லைம்பாற்
பணிவருங் கற்பிற் படைமலர்க் கண்ணாய்
துணியிருட் போர்வையிற் றுன்னுபு போகி
அணிமணற் பேர்யாற் றமரிகை சார்வாம்.

(இ - ள்.) நீலமணியிலே அறலையழுத்தியன்ன ஐம்பாலினையும் உலகெல்லாம் நினது ஏவலிலே வருதற்குக்காரணமான கற்பினையு முடைய படைபோலுங் கண்ணாய், இருளாகிய போர்வையிலே மறைந்து போய், அமரிகை யென்னும் பேர்யாற்றில் அணிமணலிலே [1] அயாவுயிர்ப் பாம்; அதனைத் துணி யென்றாளென்க.

பகைநிலத்தை இருளிலே கழிவாமென்றாள். (௩௦௬)

336. (க) அமரிகைக் கோசனை யைம்பது சென்றாற்
குமரிக் கொடிமதிற் கோபுர மூதூர்
தமரிய லோம்புந் தரணி திலகம்
நமரது மற்றது நண்ணல மாகி.

337. (உ) வண்டார் குவளைய வாவியும் பொய்கையும்
கண்டார் மனங்கவர் காவுங் கஞலிய
தண்டா ரணியத்துத் தாபதப் பள்ளியொன்
றுண்டாங் கதனு ளுறைகுவ மென்றாள்.

இவையிரண்டும் ஒருதொடர்.

335. அறல் - கருமணல். ஐம்பால் - ஐந்து பிரிவுடைய கூந்தல். மணியறைந்தன்ன கூந்தல்; பெருங். 2. 4 : 140, 7 : 17. பணி - ஏவல். அமரிகையாறு : ஏமாங்கத நாட்டிற்கும் தண்டகாரணியத் திற்கும் இடையிலுள்ள ஒரு நதி என்பர்.

(உரை) [1] அயாவுயிர்ப்பாம் - சிரமபரிகாரம் செய்து கொள்ளுவோம்.

336. ஓசனை - யோசனை ; "ஓசனை பல கடந்து" (கம்ப. திருவவ. 40). குமரி - அழிவின்மை. ஓம்பும் - பாதுகாக்கும். தரணிதிலகம் : இராசமாபுரத்திற்கும் தண்டகாரணியத்திற்கும் இடையே உள்ளதோர் ஊர். அது - அத்தரணி திலகத்தை. நண்ணலமாகி - அடையேமாகி.

337. வாவியும் பொய்கையும் : பெருங். 3. 3 : 5. பொய்கை : சிலப். 11 : 96 - 103 ; மணி. 11 : 4 ; வி - பா. 11 - ஆம்போர். 68. கா - சோலை. கஞலிய - தழைத்த. தண்டாரணியத்துத் தாபதப் பள்ளி : பெருங். 2. 12 : 5; 5. 4 : 144. தாபதப்பள்ளி - தவஞ் செய்வோர் உறையுமிடம்.

(க) [1] ஓசனை : வடசொற்சிதைவு. குமரிமதில். உலகிற்கெல்லாம் தமராம் இயல்பை நடத்தும். தேவி நோற்றற்குத் தாபதப்பள்ளி வேண்டுதலானும், அரசனை அமரில் நீத்துப் புதல்வனைப் [2] புறங்காட்டில் நீத்துத் தமரிடத்துச் சேறல் ஆகாமையானும், [3] கூனி, 'நண்ணலமாகி' என்றாள்.

(உ) வாவி - யாற்றிலோடை. பொய்கை - மானிடராக்காத நீர் நிலை. ஆங்கு : உவமவுருபு.

(இ - ள்.) அந்த [4] அமரிகைக்கு ஐம்பது யோசனை போனால் தரணிதிலகமென்னும் மூதூர் நமரது; அதனைச் சேரேமாய், மற்று வாவியும் பொய்கையும் காவும் நெருங்கிய தண்டகாரணியமென்கின்ற வனத்தே ஒரு தாபதப்பள்ளி உண்டு; அதனிடத்தே [5] அவர் உறைகின்றாற்போல உறைகுவமென்றாளென்க. (௩௦௭-அ)

338. (க) பொருளுடை வாய்மொழி போற்றினள் கூற
மருளுடை மாதர் மதித்தன ளாகி
அருளுடை மாதவ ரத்திசை முன்னி
இருளிடை மின்னி னிலங்கிழை சென்றாள்.

(வேறு)

339. (உ) உருவ மாமதி வாண்முகத் தோடிய
இருவி லும்மெறி மாமக ரக்குழைத்
திருவி லும்மிவை தேமொழி மாதரைப்
பொருவி னீளதர் போக்குவ போன்றவே.

(வேறு)

340. (௩) சிலம்பிரங்கிப் போற்றிசைப்பத் திருவிற்கைபோய் மெய்காப்ப, இலங்குபொற் கிண்கிணியுங் கலையுமேங்க வெறி வேற்கண், மலங்கமணி மலர்ந்த பவளக்கொம்பு முழுமெய்யும், சிலம்பிவலந் ததுபோற்போர் வைபோர்த்துச் செல்லுற்றாள்.

---

(உரை) [1] யோஜனு ஓசனை என்று சிதைவுற்றது. [2] புறங்காடு - சுடுகாடு. [3] கூனி : விசயையின் தோழியாகிய தெய்வம். [4] அமரிகை என்ற யாறு. [5] அவர் - தாபதர்.

338. போற்றினள் கூற : சீவக. 361. மாதர் - விசயை. மாதவரத்திசை - தாபதரைக் கொண்ட தண்டகாரணியம். முன்னி - நினைத்து.

339. உருவம் - அழகு. ஓடிய - கெட்ட. வில் - ஒளி. திருவில் - பல நிறத்தையுடைய ஒளி. அதர் - வழி.

340. கை - பக்கம். கலை - மேகலை. மலங்க - சுழல. சிலம்பி என்றது சிலம்பியினூலை. வலந்தது போல் - சூழ்ந்தது போல. சிலம்பி வலந்தது போற் போர்வை : பதிற். 39 : 13.

341. (ச) பஞ்சியடரனிச்சநெருஞ்சியீன்றபழுமாலென்
றஞ்சுமலரடிகளரங்கண்டன்னவருங்காட்டுட்
குஞ்சித்தசைந்தசைந்துகுருதிகான்றுவெய்துயிரா
வஞ்சியிடைநுடங்கமயில்கைவீசிநடந்ததே.

(வேறு)

342. (ரு) தடங்கொ டாமரைத் தாதுறை தேவியும்
குடங்கை போலுண்கட் கூனியுங் கூர்ம்பரற்
கடங்க ளும்மலை யுங்கடந் தார்புனல்
இடங்கொள் யாற்றக மெய்தின ரென்பவே.

இவை ஐந்தும் ஒருதொடர்.

(க) மருளுடைமாதர் - மயக்கந்தீர்ந்த மாதர். கேளிரைக்கண்டால் துன்பம் மிகுமாதலின், தமரிடைச் (சீவக. 336) சேறலாகாதென்றும் நோற்பலென்றும் யான் கருதியதனையே கூறினளென்றது அவளே கூறினளாகக் கொண்டமைதோன்ற, 'மதித்தனளாகி' என்றார். புதல்வற்பயந்த [1] புனிறு தீராது (மணி. 7 : 75). இராத்திரியிற் சேறலரி தென்று கருதித் தெய்வம் தன் தெய்வத்தன்மையாற் கொண்டுபோகின்ற விரைவுதோன்ற, 'மின்னின்' என்றார்.

(உ) முன்புநிறைமதிபோலும் முகத்தில்ஒளி, இப்பொழுது வருத்தத் தாற்கெட்ட கரிய வொளி; "இருங்கண்யானை" (பதிற்.) போல. பொருவில் - வெம்மையால் ஒப்பில்லாத. அதர்போக்குவ - வழி போக்குவ ; விளக்கு : [2] ஆகுபெயர்.

(ஙு) வில்லென்னும் பெயர்பற்றி, விற்படை பக்கத்தே காப்ப வென்றார். கண்மலங்க - தனியே போதற்கு அஞ்சிச்சுழல ; வலம்புரி சலஞ்சலம் வளைஇய தொத்தவளாதலின் (சீவக. 184) மணியைப்பூத்த தொரு பவளக்கொம்பைச் சிலம்பி சூழ்ந்தது போல மெய்முழுதும் போர்வையாலே மறைத்து.

(ச) 'ஈன்ற' என்றார், பழத்தின் [3] செருக்கால். அரம் - வாளரம். குஞ்சித்து - குந்தி. வெய்துயிரா மயில். நடந்ததே - நடந்த

---

341. அடர் - நெருக்கம். பஞ்சியடர்......மலரடி : குறள், 1120 ; பெருங். 1. 53 : 162 - 3. குருதிகான்று - இரத்தத்தைக்கக்கி. வஞ்சி யிடை - வஞ்சிக்கொடி போன்ற இடை. மயில் : விசயை.

342. தேவி - திருமகள் ; இங்கே விசயை. குடங்கை - உள்ளங்கை. குடங்கைபோலும் கண் : சீவக. 2535 ; சூளா. சுயம். 72. பரல் - பருக்கைக்கல். கடம் - காடு. யாறு - அமரிகையாறு.

(உரை) [1] புனிறு - ஈன்ற அணிமை. [2] விளக்கு அதன் ஒளிக்கு ஆயிற்று. [3] செருக்கு - செழுமை ; "செருக்கற்ற பஞ்சிமலர்" (சீவக. 2339)

தன்மையே ; ஏகாரம், தேற்றம். பஞ்சியடரையும் அனிச்சத்தையும் நெருஞ்சிப்பழமென்று கருதிக் குஞ்சித்து அசைந்தசைந்து குருதி கான்று அஞ்சும் மலரடியென்க. கைவீசியென்று வருந்தாமை கூறினர்.

(ரு) புனலிடங்கொண்ட - நீரறுத. என்ப : அசை.

(இ - ள்.) கூனி, மொழிகளை விரும்பினளாய்க்கூற, அதனை மாதர் மதித்தனளாய் மாதவரிருக்கின்ற அத்திசையைக்கருதிப் போர்வை போர்த்து அருங்காட்டிலே இடை [4] நுடங்கக் கையைவீசி நடைக்கு வருந்தாததொரு மயில் நடந்த தன்மையே மலரடிகளாலே செல்ல லுற்றாள் ; அப்பொழுது, இருவிலும் திருவிலும் மாதரை இரவிடை வழிபோக்கும் விளக்குப்போன்றனை ; அவ்விளக்கிலே கூனியொழிய வேறொருவரின்மையின், கண் [5] அலமருதலாற் சிலம்பு இசைப்பத் திருவிற்காப்பக் கிண்கிணியும் கலையும் ஏங்கக் கடங்களும் மலையுங் கடந்து அந்த இலங்கிழை மின்போலச் சென்றாள் ; இங்ஙனஞ் சென்ற தாதுறைதேவியும் அவளுக்கு ஏற்பச் சென்ற கூனியும் பின்னர் யாற்றிடைக் துறையைச் சேர்ந்தாரென்க. (ருoக-கரு)

343. எல்லை யெய்திய வாயிரச் செங்கதிர்
மல்லன் மாக்கடற் றோன்றலும் வைகிருட்
டொல்லை நல்வினை முற்படத் தோன்றிய
அல்லல் வெவ்வினை போல வகன்றதே.

எய்திய எல்லை. மல்லல் - மணிமுதலிய வளன்.

(இ - ள்.) எய்தின அளவிலே, ஒருவர்க்கு நல்வினைவந்து தோன்ற அதற்கு முன்னே தோன்றிநின்ற தீவினை அகலுமாறுபோல, உலகம் பகற்பொழுதைப் பெறவேண்டிக் கதிர் கடலிற்றோன்றின அளவிலே இருள் அகன்றதென்க. (ருகச)

344. நுணங்கு நுண்கொடி மின்னொர் மழைமிசை
மணங்கொள் வார்பொழில் வந்துகி டந்ததொத்
தணங்கு நுண்டுகின் மேலசைந் தாளரோ
நிணங்கொள் வைந்நுதி வேனெடுங் கண்ணினாள்.

[4] நுடங்க - அசைய. [5] அலமருதல் - சுழலுதல்.

343. எல்லை எய்திய - உலகம் பகற்பொழுதை அடையும்பொருட் டெனினுமாம். மல்லல் - வளப்பம். தொல்லை - பழமை. வெவ்வினை - பாவம். மு. நாலடி. 51 ; பெருங். 1. 53 : 156 - 7.

344. நுணங்கு - நுண்மை. கொடிமின் - கொடியைப்போன்ற மின்னல் எனினுமாம். மழை - மேகம். மழைமிசை கிடந்த தொத்து என இயைக்க. பொழில் - சோலை. கண்ணினாள் வந்து எனமாறுக. அணங்கு நுண்டுகில் : பொருந. 82 - 3. கண்ணினாள் : விசயை.

மிகவும் நுண்ணிய ஒழுங்குபட்ட மின். அணங்கும் - இழை தெரியாது வருந்தும்.

(இ - ள்.) கண்ணிஞள், அவ்வாற்றிடைக்குறையிற் பொழிலிலே வந்து, [1] மஞ்சிலே ஒருமின் கிடந்த தன்மையையொத்து, துகிலின் மேலே கிடந்தாளென்க. (௩௪௪)

345. வைகிற் றெம்மனே வாழிய போழ்தெனக்
கையி ஞனடி தைவரக் கண்மலர்ந்
தைய வோவென் றெழுந்தன ளாய்மதி
மொய்கொள் பூமி முளைப்பது போலவே.

தெய்வம் கூனிவடிவாய்நிற்றலின் தன்ருெழிற்கேற்ப, அடி தைவந்தது, ஈண்டு அரசனைக் கனவிற் கண்டு அது நனவாகாமையின், 'ஐயவோ' என்ருள்; ஓ : இரக்கக்குறிப்பு. ஆய்மதி - [1] ஒளியற்ற மதி; அதுவும் உதயத்தே தோன்றும். மொய்கொள் - அணுச்செறிந்த.

(இ - ள்.) அப்பொழுது கூனி, எம்மன்ருய், வாழ்வாயாக; பொழுது வைகிற்றென்று அடியைத்தடவ, கண்ணைவிழித்து ஐயவோவென்று மதி பூமியிலே முளைப்பதுபோல எழுந்தாளென்க.

முகமெடுத்தற்கு உவமை. அன்னை, ஈண்டு முறைப்பெயரன்மையின், "அன்னையென்னை" (தொல். பொருளியல், 52) என்னும் பொருளியற் [2] சூத்திரத்தாற்கொள்க. (௩௪௫)

346. தூவி யஞ்சிறை யன்னமுந் தோகையும்
மேவி மென்புன மானின மாதியா
நாவி நாறெழின் மேனியைக் கண்டுகண்
டாவித் தாற்றுகி லாதழு திட்டவே.

(உரை) [1] மஞ்சு - வெண்மேகம்.

345. வைகிற்று - கழிந்தது. எம்அனே - எம் அன்ருய். 'போழ்து வைகிற்றென' என்று மாறுக. தைவர - தடவ.

(மேற்.) அடி, 1-2 : பிரயோக. காரகப். 5.

(உரை) [1] சீவக. 339, உரை, முகமெடுத்தற்கு மதி உவமை. [2] தோழி தலைவியை அன்னை என்றலும் தலைவி தோழியை அன்னை என்றலும் இவ்விருவரும் தலைவனை என்னை என்றலும் அச்சூத்திரத்தாற் கொள்ளப்பட்டன.

346. தூவி - அன்னச்சிறகு. தோகை - மயில். மேவி - விசயையிருக்குமிடம் அடைந்து. புனம் - கொல்லை. நாவி - கஸ்தூரி மணம். ஆவித்தல் - கொட்டாவி விடுதல். ஆற்றுகிலாது - பொறுக்கமாட்டாமல்.

(இ - ள்.) [1] அதனைக்கண்டு மானினமுதலாக அன்னமும் தோகை யும் மேவி எழின்மேனியைக் கண்டு கொட்டாவிகொண்டு [2] ஆற்ருது அழுதிட்டனவே; தமக்கு [3] இவை இயல்பாகக் காலையிற் செய்தனவல்ல வென்க.

ஏகாரம் : தேற்றம். (ரூகஎ)

347. கொம்மை வெம்முலைப் போதிற் கொடியனுள்
உம்மை நின்றதொ ரூழ்வினை யுண்மையால்
இம்மை யிவ்விட ருற்றன ளெய்தினுள்
செம்மை மாதவர் செய்தவப் பள்ளியே.

கொம்மை - பெருமை. செம்மை - செவ்வை.

(இ - ள்.) அவை வருந்தினபின், பால்சுரத்தற்கு வெவ்விதாகிய முலையினையுடைய திருவனுள், முற்பிறப்பிற் செய்த தீவினையுள்ளதாத லால் இப்பிறப்பில் இவ்வருத்தமுற்ருள்; அது நீங்குதலாலே மாதவர் தவஞ்செய்கின்ற பள்ளியைச் சேர்ந்தாளென்க. (ரூகஅ)

(வேறு)

348. வாளுறை நெடுங்க ணுளை மாதவ மகளி ரெல்லாம்
தோளுறப் புல்லு வார்போற் றெக்கெதிர் கொண்டுபுக்குத்
தாளுறு வருத்த மோம்பித் தவநெறிப் படுக்க லுற்று
நாளுறத் திங்க ளூர நல்லணி நீக்கு கின்ருர்.

[1] வாளின்றன்மை முன் தங்கியகண்ணுளை, மாதவஞ் செய்வார்க்குப் புல்லலாகைமையின், 'புல்லுவார்போல்' என்ருர். வருத்தம் தேவிக்கு இன்றென்பது உணராது இக்காட்டில் வருவார்க்கு வருத்தமுளதென்று தாம் கருதி ஓம்பினுர். மேல் தவத்திற் சேறற்கு நெறியாகிய நோன்பை உண்டாக்கலுற்று. கணவனை இழந்ததற்கும் புதல்வன் வாழ்தற்கும் பொருந்திய நோன்பு. நல்ல நாள்வந்து பொருந்த. நாடோறும் திங்கள் ஒருகலை ஏருநிற்க.

---

(உரை) [1] அதனை - விசயை எழுந்ததை. [2] பொருமல் [3] அன்னம் முதலியனவற்றிற்குக் காலையில் கொட்டாவி விடுதல் இயல்பு என்பது இதனுலுணரப்படும்.

347. கொம்மை - பெருமை; "கொம்மை வருமுலை" (நெடுநல். 69, ந.). போதிற் கொடியனுள் - தாமரை மலரிலுள்ள பூங்கொடி போன்ற திரு மகள்; இங்கே விசயை. உம்மை - முற்பிறப்பு. ஊழ்வினை - தீவினை. மாதவர் செய்தவப்பள்ளி : சீவக. 359.

348. புல்லுதல் - தழுவுதல். தொக்கு - கூடி. ஓம்பி - பரிகரித்து. நாள் - நல்லநாள். வளர்பிறையிலென்பார் 'திங்களூர' என்ருர். அணி - ஆபரணம்.

(மேற்.) அடி, 4 : கல். 'நீர் நிலை', 58 - 64, மயில்.

(உரை) [1] வாளின் தன்மை கூர்மை.

(இ - ள்.) மகளிரெல்லாம் தொக்குக் கண்ணுளைப் புல்லுவாரைப் போல் எதிர்கொண்டு புக்கு ஓம்பி அவள் கருத்தறிந்து படுக்கலுற்று உற ஊர நீக்குகின்றுரென்க.

தேவி நீக்குகின்றவற்றை அவர்மேலேற்றினுர், ஏவிஞரைக் கருத்தா வாக; 'அரசரெடுத்த [2] தேவகுலம்' போல. (௩௧௯)

(வேறு)

349. திருந்து தகரச் செந்நெருப்பிற் றேன்ரேய்த் தமிர்தங் கொளவுயிர்க்கும், கருங்கா ழகிலி னறும்புகையிற் கழுமிக் கோதை கண்படுக்கும், திருந்து நானக் குழல்புலம்பத் தேனும் வண்டு மிசைப்புலம்ப, அரும்பொன் மாலை யலங்கலோ டாரம் புலம்ப வகற்றினள்.

தகர விறகாலாக்கின நெருப்பிலே தேன்ரேய்த்திட்ட அகிலினது இனிமைகொள்ள நாறும் புகையிலே மயங்கிக் கண்படுக்கும் கோதை.

(இ - ள்.) கோதை புலம்ப, தேனினமும் வண்டினமும் [1] தாதூதா மையின் இசைக்குப் புலம்ப, [2] பொன்னரிமாலையும் நெற்றிமாலையும் தலைக் கோலமாகிய முத்தும் புலம்ப, இவற்றைக் குழலினின்று அகற்றினு ளென்க. (௩௨௦)

350. திங்க ளுகிரிற் சொலிப்பதுபோற் றிலகம் விரலிற் ருனீக்கிப், பைம்பொன் மகர குண்டலமும் பாவை கழுத்தி னணி கலமும், வெங்கண் வேந்தற் கமிர்தாகி வேற்கட் பாவை பகையாய, அங்கண் முலையி னணிமுத்து மரும்பொற் பூணுமகற்றினள்.

சொலிப்பது - [1] இடப்பது. சிதைப்பதும் பாடம். இன்பத்தால் அவனைக் கெடுத்தலின், தனக்குப் பகையாய முலை.

---

[2] தேவகுலம் - தேவாலயம்.

349. தகரம் - ஒருவகை வாசனைமரம். தகரநெருப்பில் அமிர்தங் கொளவுயிர்க்குங் கருங்காழகிலின்புகை : சீவக. 2692; நெடுநல். 55-6. கழுமி - மயங்கி. கண்படுக்கும் - உறங்கும். நானம் - கஸ்தூரி. தேன் - ஒருவகை வண்டு.

(உரை) [1] தாது ஊதாமையின் - பூந்தாதை உண்ணமுடியாமை யினல்; ஊதல் - உண்ணல்; கலித். 66 : 7, உரை. [2] பொன்னரிமாலை - பொன்னை அரிந்து தொடுத்த மாலை.

350. உகிர் - நகம். சொலிப்பது போல் - நீக்குவதுபோல்; சிறுபாண். 236; புறநா. 327 : 5,383 : 10; பைம்பொன்னையும் மகர குண்டலத்தையும் என உம்மை விரிக்க. பொன் : குழையை உணர்த் தினமையின் ஆகுபெயர். வேந்தற் கமிர்தாகி : சீவக. 8. பூண் - மற்றைய ஆபரணங்கள்.

(உரை) [1] இடப்பது - பெயர்ப்பது.

(இ-ள்.) பாவைதான், திலகத்தை விரலாலே நீக்கி, [2] குழையையும் குண்டலத்தையும் கழுத்தின் அணிகலங்களையும் முலையில் அணிந்த முத்தையும் பூணையும் நீக்கினளென்க. (௩௨௧)

351. பஞ்சி யனைய வேய்மென்றோட் பகுவாய் மகரங் கான் றிட்ட, துஞ்சாக் கதிர்கொ டுணைமுத்தந் தொழுதே னும்மை யெனத்துறந்து, அஞ்சி வருத்து நுசுப்பினள் வளைகை யுடைத்து மணிக்காந்தள், அஞ்சச் சிவந்த மெல்விரல்சூ ழரும்பொ னாழி யகற்றினள்.

[1] அங்காந்த வாயினையுடைய மகரங்கான்ற மாறாத கதிரையுடைய பல வடம் சேர்ந்த முத்தம். அரசன் நீங்காமல் முயங்குதற்குக் காரண மாய்த் தன்னைக் கெடுத்தலின், 'தொழுதேன்' என்றாள். வளைகழற்றுதல் அரிதாதலிற் கையாலுடைத்தென்றார். மணி - அழகு.

(இ-ள்.) நுசுப்பினள், நும்மைத் தொழுதேனென்று தோளின் முத்தத்தைத் துறந்து, வளையை உடைத்துப் பின்பு விரலைச்சூழ்ந்த ஆழியை அகற்றினளென்க. (௩௨௨)

352. பூப்பெய் செம்பொற் கோடிகமும் பொன்னா ரால வட்ட மும், ஆக்கு மணிசெய் தேர்த்தட்டு மரவின் பையு மடுமல்குல், வீக்கி மின்னுங் கலையெல்லாம் வேந்தன் போகி யரம்பையரை, நோக்கி நும்மை நோக்கானீர் நோவா தொழிமி னெனத் துறந்தாள்.

'நோக்கி' என்றார், [1] மெய்யுறுபுணர்ச்சியின்றி நோக்கால் நுகர் தலின். நும்மைநோக்கான் - நும்மாலுள்ள பயனைக் கொள்ளான். இஃது [2] இரண்டன் மருங்கின் நோக்கனோக்கமாதலின், ஏதுவாயிற்று.

(இ-ள்.) தேவி, வேந்தன்போய் அரம்பையரை நுகர்தலாலே நும்மை நோக்கானுதலால் நீர் என்னைவெறுதே நீங்குவீராகவென்று சொல்லி, பூந்தட்டையும் ஆலவட்டத்தையும் தேர்த்தட்டையும் பையை யும் அடுகின்ற அல்குலிலே வீக்கி இன்பத்தையாக்குங் கலைகளெல்லா வற்றையும் துறந்தாளென்க.

மணியாலே செய்தமைக்குந் தேருமாம். (௩௨௩)

---

[2] குழை - இங்கே ஓலை போல்வதொரு காதணி.

351. பஞ்சி அனைய - பஞ்சனையைப் போன்ற. மகரம் கான்றிட்ட முத்தம்; சீவக. 170. வஞ்சி - வஞ்சிக் கொடி. நுசுப்பு - இடை. காந்தள் - காந்தளின் மலர். ஆழி - மோதிரம்.

(உரை) [1] திறந்த.

352. கோடிகம் - தட்டு. ஆலவட்டம்: சீவக. 173. வீக்கி - கட்டப் பட்டு. கலை - மேகலை.

(உரை) [1] சீவக. 222, ந. [2] தொல். வேற்றுமைமயங்கு. 10; கண் ணால் நோக்கும் நோக்கமன்றி மனத்தால் நோக்கும் நோக்கம்.

353. பிடிக்கை போலுந் திரள்குறங்கி னணியு நீக்கிப் பிணை யன்னாள், அடிக்கிண் கிணியு மஞ்சிலம்பும் விரன்மோ திரத்தோ டகற்றியபின், கொடிப்பூத் துதிர்ந்த தோற்றம்போற் கொள்ளத் தோன்றி யணங்கலற, உடுத்தாள் கற்றோய் நுண்கலிங்க முரவோன் சிறுவ னுயர்கெனவே.

கொடிப்பூத்துதிர்ந்த : ஒற்றுமையாற் [1] சினைவினைமுதன்மேலேற்றினார். அலற - வருந்த. கல் - நற்செங்கல். உரவோன் - அறிவுடையோன். 'உயர்க' என்றார், [2] நோன்பின்பயன் அதுவாகலின்.

(இ - ள்.) பிணையன்னாள், [3] குறங்கிற் செறிந்த அணியையும் நீக்கி, கிண்கிணியையும் சிலம்பையும் காலாழியுடன் அகற்றியபின்பு, பூத்துதிர்ந்த தோற்றம்போல் தோன்றி, கூனி வருந்தச் சிறுவன் உயர்க வென்று கலிங்கத்தை உடுத்தாளென்க.

உரவோன் சிறுவனென்றாள், [4] பகையைவெல்லப் பிறந்தமை கருதி. (௩௨௪)

(வேறு)

354. பாலுடை யமிர்தம் பைம்பொற் கலத்திடைப் பாவை யன்ன
நூலடு நுசுப்பி னல்லா ரேந்தவு நேர்ந்து நோக்காச்
சேலடு கண்ணி காந்தட் டிருமணித் துடுப்பு முன்கை
வாலட கருளிச் செய்ய வனத்துறை தெய்வ மானாள்.

அமிர்தம் - அடிசில். நேர்ந்தேந்தவும் - இவள் உணவொழிந்தாளென்று வலிய எடுக்கவும். உணவொழிந்து நுகர்ச்சியே நிகழ்ந்தமையின், நோக்காத என்றார். முன்பு திருமணியையுடைய கை. அருளி - அருள. செய்ய - சிவந்த.

---

353. பிடிக்கை - பெண்யானையின் துதிக்கை. குறங்கினணி - குறங்கு செறி என்னும் ஆபரணம்; சீவக. 174, 2695. பிணை - பெண்மான். கிண்கிணியும் சிலம்பும்; சீவக. 177. விரல் மோதிரம் - கால் விரலில் அணியும் மோதிரம். அணங்கு - கூனி வடிவமாக வந்த தெய்வம். கல்தோய் நுண்கலிங்கம் - காவிக்கல்லில் தோய்த்த நுண்ணிய நூலாற் செய்யப்பட்ட புடைவை. உரவோன் - அறிவுடையவன். உரவோன் சிறுவன் : சீவக. 305.

(உரை) [1] பூத்தல் சினையாகிய மலரின் தொழில்; அது கொடியாகிய முதற்பொருளின்மேல் ஏற்றப்பட்டது. [2] சீவக. 10. [3] துடை. [4] பகையென்றது கட்டியங்காரனை.

354. பாவையன்ன - கொல்லிப்பாவையைப் போன்ற அழகுடைய. நூலடு - பஞ்சுநூலை வருத்துகின்ற. சேலடுகண்ணி : விசயை. வால் அடகு - தூய்மையான இலைகளை. வனத்து உறை தெய்வம் - வன தேவதை.

(இ - ள்.) உடுத்தபின், நுசுப்பிணையுடைய பாவையன்ன நல்லார் நேர்ந்து கலத்தே அமிர்தத்தை ஏந்தவும் நோக்காத கண்ணி, காந் தட்டுடுப்புப்போலும் தன்கை தானே அடகையருள அதனை நுகர்ந்து [1] இல்லுறைதெய்வமன்றி வனத்தேயுறைவதொரு செய்ய தெய்வமானு ளென்க. (ரு௨ரு)

355. மெல்விரன் மெலியக் கொய்த குளநெல்லும் விளைந்த வாம்பல்
அல்லியு முணங்கு முன்றி லணில்விளித் திரிய வாமான்
புல்லிய குழவித் திங்கட் பொழிகதிர்க் குப்பை போலு
நல்லெழிற் கவரி யூட்ட நம்பியை நினைக்கு மன்றே.

மெலிய என்றார், தவமகளிர்கொய்தலின். விளித்திரிய - கத்திக்கெட. கதிர்க்குப்பைபோலும் எழிலென்றார், சாமரத்தால்.

(இ - ள்.) நெல்லும் அல்லியும் உணங்கும் முன்றிலிலே அணில் இரியும்படி ஆமான்குழவியைப் புல்லிய கவரிமா, அதற்கு முலையை ஊட்டத் தேவி, நம்பி பிறர்முலையை உண்டு வளர்கின்றபடியை நினைக்கு மென்க.

"குஞ்சரம் பெறுமே குழவிப் பெயர்க்கொடை" (தொல். மரபு. 19) என்றதனுள், 'கொடை' என்றதனான், ஆமான்குழவியும் கொண்ட வாறுணர்க. (ரு௨சு)

356. பெண்மைநாண் வனப்புச் சாயல் பெருமட மாது பேசின்
ஒண்மையி னொருங்கு கூடி யுருவுகொண் டனைய நங்கை
நண்ணிய நுங்கட் கெல்லா மடைக்கல மென்று நாடும்
கண்ணிய குலனுந் தெய்வங் கரந்துரைத் தெழுந்த தன்றே.

பெண்மை - அமைதித்தன்மை. மடம் - [1] கொளுத்தக்கொண்டு கொண்டது விடாமை. மாது - காதல்; [2] உரிச்சொல் ஈறு திரிந்தது. இவட்குள்ள அமைதித்தன்மை முதலியவற்றைக் கூற நினைத்தேமாயின், அவை தமக்கு விளக்கங் காரணமாகச் [3] சேரக்கூடி ஒருவடிவு கொண்டாற்

(உரை) [1] அகநா. 282 : 18; சிலப். 9 : 1 - 4, அடியார்; மதுரைக். 164, ந.

355. குளநெல் - ஒருவகைத் தானியம்; சீவக. 2491; புறநா. 33 : 5; இதனை நீவாரம் என்பர் வடநூலார். ஆம்பலல்லி : இருபெய ரொட்டு; அல்லி - அல்லியரிசி; இஃது அல்லிப்பூவின் உட்கொட்டையில் உள்ளது. கைம்மை மகளிர் அல்லியரிசியை உணவாகக் கொள்ளுதல்: புறநா. 248, 280. உணங்கும் - உலரும். அணில் - அணிற்பிள்ளை. ஆமான் - காட்டுப்பசு. கதிர்க்குப்பை - கதிரின் கற்றை. கவரி - கவரி என்னும் மான்.

356. நாண் - நாணம். வனப்பு - அழகு. சாயல் - மென்மை. மாது - காதல்; சீவக. 463. ஒண்மை - விளக்கம். கண்ணிய - கருதிய. தெய்வம் - கூனி. கரந்து - மறைத்து.

(உரை) [1] கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை - பிறர் உணர்த்தியவற்றை உட்கொண்டு தாம் முன்னமே உட்கொண்டவற்றை வெளிப்படுத்தாமை. [2] 'மாதர்' என்னும் உரிச்சொல் மாது என்றான மையின் ஈறு திரிந்த தென்றார்.

[3] சேரக்கூடி-ஒருங்குகூடி.

போலும் நங்கை. எல்லாம் நண்ணிய நுங்கட்கு – நற்குணமெல்லாம் பொருந்திய நுமக்கு.

(இ - ள்.) அவ்வளவிலே தெய்வம், நங்கை நுங்கட்கு அடைக்கலம்; இவளைக் காத்தல் வேண்டுமென்றுகூறிப் பின்பு, [4] நாட்டையும் குலத்தையும் வேறுபெயர்படக் கூறிப் போதற்கு [5] ஒருப்பட்டதென்க. (௩௨௭)

(வேறு)

357. உறுதி சூழ்ந்தவ ளோடலி னாயிடை
மறுவில் வெண்குடை மன்னவன் காதலஞ்
சிறுவன் றன்மையைச் சேர்ந்தறிந் திவ்வழிக்
குறுக வம்மெனக் கூனியைப் போக்கினாள்.

ஆயிடை - இராசமாபுரத்திடை. [1] சேடியை வம்மென்று உயர்த்துக் கூறினாள், தான் நிற்கின்ற தவநிலைக்கேற்ப.

(இ - ள்.) அங்ஙனம் போதற்கு ஒருப்பட்ட தெய்வத்தின் நெஞ்சம் இவ்விடத்து இவட்கு ஆம் உறுதிகளைச்சூழ்ந்து தான் உறைகின்ற இடத்தே [2] சேறலான் அதற்கேற்பத் தெய்வம் தன் தெய்வத்தன்மையால், தேவிக்கும் அக்கருத்தே பிறப்பிக்கத் தேவியும் ஆயிடைச்சேர்ந்து சிறுவன் செய்தியை அறிந்து இவ்விடத்தே [3]அணித்தாக வம்மென்று அத்தெய்வத்தைப் போகவிட்டாளென்க. (௩௨அ)

358. நெஞ்சி னைத்தினி யாளையென் னீர்மையால்
வஞ்சித் தேனென வஞ்சியங் கொம்பனாள்
பஞ்சி மெல்லடிப் பல்கல னார்ப்பச்சென்
றிஞ்சி மா நகர்த் தன்னிட மெய்தினாள்.

நெஞ்சினைத்து - யான் கருதியதே தானுங் கருதி. வஞ்சித்தல், அறிந்து வருகின்றேனென்றது.

(இ - ள்.) அப்பொழுது கொம்பனாள், இனியாளை எனது தெய்வத் தன்மையாலே வஞ்சித்தேனென்று வருந்தி, கலன் ஆர்ப்பச் சென்று இராசமாபுரத்திற் [1] புறங்காட்டைச் சேர்ந்தாளென்க. (௩௨௯)

[4] விசயையின் நாட்டையும் குலத்தையும். [5] ஒருப்பட்டது - துணிந்தது.

357. உறுதி - நன்மை. ஓடல் - போதல். சிறுவன் - சீவகன். வம்மென - வாருமென்று; பொருந. 101.

(உரை) [1] சேடி - தோழி. [2] சேறலால் - செல்லுதலால். [3] அணித்தாக - விரைவாக.

358. நீர்மை - தெய்வத்தன்மை. கொம்பனாள் - கூனி. பஞ்சி - செம்பஞ்சு. கலன் - ஆபரணம். இஞ்சி - மதில்.

(உரை) [1] புறங்காடு - மயானம்; சுடுகாடு.

359. தானுந் தன்னுணர் விற்றளர்ந் தாற்றவும்
மானி ஞேக்கிவ ரும்வழி நோக்கிநின்
ருணி யம்பல வாசையிற் செல்லுமே
தேனி யம்புமொர் தேம்பொழிற் பள்ளியே.

மானின் : இன் சாரியை.

(இ - ள்.) மாஞேக்கிதானும் தெய்வமென்றறியாத [1] பெண்ணுணர் வாலே மிகவும் தளர்ந்து, பள்ளியிடத்தே [2] அவள் வரும் வழியை நோக்கி நின்று பல இரவும் பகலும் இன்றுவரும் இன்றுவருமென்னும் ஆசையிலே நடவாநிற்குமென்க. (௩௩௦)

(வேறு)

360. மட்டவிழ் கோதை வாளன வுண்கண் மயிலன்னாள்
கட்டழ லெவ்வங் கைம்மிக நீக்கிக் களிகூர
விட்டகல் வாற்ரு வேட்கையி ஞேடும் பொழுதிப்பாற்
பட்டதை யெல்லாம் பல்லவர் கேட்கப் பகர்குற்றேன்.

அழல்போலெவ்வம். அகல்வு - அகற்சி. [1] இன் சாரியை. பகர்கு : [2] தன்மைச் சொல்.

(இ - ள்.) [3] சுநந்தை, பிள்ளையையிழந்த துன்பத்தைச் சிறிதும் நில்லாதபடி போக்கிக் களிப்புமிகுதலாலே ஒழிந்தோர்க்கும் பிள்ளையை விட்டு நீங்கமாட்டாத வேட்கை நடக்கின்ற இராப் பொழுதிற்குப் பின்பு, பிள்ளையுற்ற காரியங்களையெல்லாம், பலருங் கேட்கும்படி கூறுவேனகத் தொடங்கினேனென்ருரென்க.

என்றது, தம்மாற் சரிதங்கூறுதல் அரிதாகலின், இனி வேட்கையாற் [4] கடுகக் கழியும் பொழுதென்றுமாம். (௩௩௧)

---

359. ஆற்றவும் - மிகவும். மாஞேக்கி : விசயை. பல ஆணியம் - பல நாள். தேன் - ஒருவகை வண்டு. பொழிற்பள்ளி - சோலையிலுள்ள பள்ளியிடம் ; " பூம்பொழிற்பள்ளி " (நீல. அருக்க. 4)

(உரை) [1] பெண்ணுணர்வு - பெண்ணறிவு. [2] அவள் - கூனி.

360. மட்டு - தேன். கட்டழல் எவ்வம் ; " இணரெரி தோய்வன்ன வின்ஞ " (குறள், 308) ; " கட்டழ லெவ்வமொடு " (பெருங். 2. 11 : 150). எவ்வம் - துன்பம். கூர் - மிக. பட்டது - உண்டான செயல்; சீவக. 1085. இப்பாற்பட்டதை......பகர்குற்றேன் : பெருங். 2. 8 : 5.

(உரை) [1] வேட்கையின் என்பதிலுள்ளது. [2] பகர்கு - சொல்வேன். [3] சுநந்தை - கந்துக்கடனுடைய மனைவி. [4] கடுக - விரைய.

361. கூற்றம் மஞ்சுங் கொன்னுனை யெஃகின் னிளையானும்
மாற்றம் மஞ்சும் மன்னிய கற்பின் மடவாளும்
போற்றித் தந்த புண்ணியர் கூடிப் புகழோனைச்
சீற்றத் துப்பிற் சீவக னென்றே பெயரிட்டார்.

கொன்னுனை : வினைத்தொகை. சொல்லப்புகின், சொல்லும் அஞ்சும் கற்பு. சீவகன் சீவித்தலையுடையவனென்று [1] தெய்வம் வாழ்த்தினமையின் அப்பெயரேயாயிற்று.

(இ - ள்.) இளையானும் மடவாளும் விரும்பிக் கொண்டுவந்த [2] பார்ப்பார் [3] சான்றோர் [4] உள்ளிட்டோருங்கூடிச் சீற்றத்துப்பிற் புகழோனைச் சீவகனென்றே பெயரிட்டாரென்க. (௩௬௧)

362. மேகம் மீன்ற மின்னனை யாடன் மிளிர்பைம்பூண்
ஆகம் மீன்ற வம்முலை யின்பா லமிர்தேந்தப்
போகம் மீன்ற புண்ணிய னெய்த கணையேபோல்
மாகம் மீன்ற மாமதி யன்னான் வளர்கின்றான்.

முலை : எழுவாய். போகமீன்ற - தான் சத்தியுஞ் சிவனுமாய் உலகத்துக்கெல்லாம் போகத்தை உண்டாக்கின. [1] 'புண்ணியன்' என்றார். திரிபுரத்தையழித்தும் நஞ்சுண்டும் பல்லுயிர்களையுங் காத்தலின். எய்த கணை - திருமால். கணை வளருமாறுபோல வளர்கின்றானெனவே, அவன் [2] ஆய்ப்பாடியிலே [3] நந்தகோன்மனையிலே மறைய வளர்ந்தது உவமையாம்.

(இ - ள்.) [4] மதியன்னான், மின்னனையாளது ஆகமீன்ற முலை இனிய பாலமுதத்தையேந்தப் புண்ணியனெய்த கணை [5] நந்தகோன்மகனாய் வளருமாறு போலக் கந்துகன்மகனாய் வளர்கின்றானென்க.

361. கூற்றம் - யமன். கொன்னுனை - கொல்லுகின்ற நுனி. எஃகு - வேல். இளையான் - கந்துக்கடன். மாற்றம் - சொல். மன்னிய - நிலைபெற்ற. மடவாள் - சுநந்தை. புகழோன் - சீவகன். சீற்றத்துப்பு - கோபவன்மை.

(உரை) [1] தெய்வம் வாழ்த்தியது என்பது சீவக. 323 - ஆம் பாடலால் அறியப்படும். [2] பார்ப்பார் - அந்தணர். [3] சான்றோர் - முற்றஉணர்ந்து ஐம்பொறியையும் அடக்கினோர். [4] உள்ளிட்டோர் - இவர்கள் முதலியோர்.

362. மின்னனையாள் : சுநந்தை. ஆகம் - மார்பு. போகம் - இன்பம். புண்ணியன் - சிவபெருமான். கணை - அம்பு ; இங்கே திருமால். மாகம் - ஆகாயம். மதிபோல் வளர்தல் : சீவக. 364, 387, 454, 882.

(உரை) [1] புண்ணியன் : "போரார் புரங்கள் புரள நூறும் புண்ணியனை" (தே. திருநா.); புறநா. 91. [2] ஆய்ப்பாடி - திருவாய்ப்பாடி. [3] நந்தகோன் : கண்ணபிரானை எடுத்துவளர்த்த தந்தை. [4] மதியன்னான் - சீவகன். [5] கண்ணபிரான் சரிதம் 22-ஆம் தீர்த்தங்கரராகிய நேமீசுவரரது புராணத்திலுள்ளது.

மா - ஈண்டு அழகு. மதி - [6] பிறை. (௩௩௩)

363. அம்பொற் கொம்பி ளுயிழை யைவர் நலனேம்பப்
பைம்பொற் பூமிப் பல்கதிர் முத்தார் சகடம்மும்
செம்பொற் றேரும் வேழமு மூர்ந்து நிதிசிந்தி
நம்பன் செல்லு நாளினு நாளு நலமிக்கே.

ஐவர் : [1] ஆட்டுவாள், ஊட்டுவாள், ஒலுறுத்துவாள், நொடிபயிற்று வாள், கைத்தாய். நிதிசிந்தி : [2] குழவிப்பருவத்தும் கொடையியல்பு. நாளின் : இன் சாரியை.

(இ - ள்.) நம்பன், ஐவர் எல்லாநலத்தையும் பேணுநிற்க, அவ்வி டத்தே சகடத்தையும் தேரையும் வேழத்தையும் தன் கையாற் செலுத்திச் சிந்தி நாடோறும் நாடோறும் நலமிக்குச் செல்லுமென்க. (௩௩௪)

364. பல்பூம் பொய்கைத் தாமரை போன்றும் பனிவானத்
தெல்லார் கண்ணு மின்புற வூரும் மதிபோன்றும்
கொல்லுஞ் சிங்கக் குட்டியும் போன்றிவ் வுலகேத்தச்
செல்லும் மன்னே சீவகன் றெய்வப் பகைவென்றே.

[1] ஒழிந்தோரிற் சிறந்தமையின் தாமரையுவமம். வானிடத்துத் தேவர் முதலாயினரிடத்தும் இன்பமுறப் பரக்கின்ற மதியாவது அறிவு; அதுதான் ஒரு வடிவுகொண்டாற் போன்றும். " குட்டியும் பறழுங் கூற்

---

[6] மதி - பிறை; " இருகோட் டொருமதி " (11 - ஆம் திருமுறை, எழுகூற்.)

363. ஐவகைத்தாயர் ; மேரு. வைசயந்த. 50. பூமி - பூமியில். சக டம் - வண்டி. நிதிசிந்தி நம்பன் செல்லும் (பெருங். 5. 8 : 43). நம்பன் - விரும்பத்தக்கவன்.

(மேற்.) அடி, 1 : சிலப், 16 : 84 - 93, அடியார்.

(உரை) [1] ஆட்டுவாள் - பாராட்டுபவள். ஊட்டுவாள் - உண்பிப்ப வள். ஒலுறுத்துவாள் - தாலாட்டுபவள். நொடிபயிற்றுவாள் - வார்த்தை கற்பிப்பவள். கைத்தாய் - கையிலேந்தி வளர்க்குந் தாய். [2] குழந்தைப் பருவத்துங் கொடுத்தல் அரசர்க்கு இயல்பு.

364. பல்பூம் பொய்கை - பல பூக்களையுடைய பொய்கையில். எல் லார் - ஒளியையுடைய தேவர் ; எல் - ஒளி. சிங்கக்குட்டி போன்றவன் : சீவக. 392, 404. தெய்வப்பகை - வாலக்கிரகங்களாகிய பகை.

(உரை) [1] ஒழிந்தோரென்றது சீவகனுடைய தோழராகிய சீதத் தன், புத்திசேனன், பதுமுகன், தேவதத்தனுகிய நால்வரும், சச்சந்த னுடைய அகப்பரிவாரமகளிர் ஐஞ்ஞூற்றுவருடைய பிள்ளைகள் ஐஞ்ஞூற் றுவரும் ஆகிய ஐஞ்ஞூற்று நால்வரை (சீவக. 292); சச்சந்தனுடைய அகப்பரிவாரமகளிர் ஐஞ்ஞூற்றுவரும் தம்மையும் தம்மைச் சார்ந்தோ

றவண் வரையார்'' (தொல். மரபு. 10) என்றதனுள் 'கூற்று' என்றத னால், புலி முதலியவற்றிற்குக் கூறிய இளமைப் பெயர் சிங்கத்திற்குங் கொண்டார். தெய்வப்பகை - [2] வாலசிகிற்சையிற் கூறுகின்ற தெய்வப் பகை. ஓ : அசை.

(இ - ள்.) சீவகன் பகையை மிகவும் வென்று உலகேத்தும்படி தாமரை முதலியன போன்று செல்லுமென்க. (௩௩௫)

365. மணியும் முத்தும் மாசறு பொன்னும் பவளம்மும்
அணியும் பெய்யும் மாரியி னேற்பார்க் கவைநல்கிக்
கணிதம் மில்லாக் கற்பகங் கந்துக் கடனொத்தான்
இணைவே லுண்க ணந்தையு மின்பக் கொடியொத்தாள்.

(இ - ள்.) தமக்கு வேண்டும் பொருள்களை வேண்டாமல் ஏற்பார்க்கு அப்பொருள்களைப் பெய்கின்ற மாரி போல நல்கி ஓரளவிற்படாத கந்து கன் பின்பு, வேண்டியேற்பார்க்கு நல்கிக் கற்பகமொத்தான்; சுநந்தை யும் அதன்மேற் படர்ந்த காமவல்லியை யொத்தாளென்க.

[1] கார் வேண்டாமைக் கொடுத்தலும் [2] கற்பகம் வேண்டக் கொடுத்த லும் இயல்பு. நல்கி இல்லாவென்க. நந்தை : [3] தலைக்குறை. இது [4] சௌளத்திற்கு முன்புள்ள கருமங்களிலும் நாடோறும் நடத்துங் கருமங் களிலும் கொடைக்கடன் [5] அமர்ந்தமை கூறினார். (௩௩௬)

366. சாதிப் பைம்பொன் றன்னொளி வெளவித் தகைகுன்றா
நீதிச் செல்வம் மேன்மே னீந்தி நிறைவெய்திப்
போதிச் செல்வம் பூண்டவ ரேத்தும் பொலிவினால்
ஆதிக் காலத் தந்தணன் காதன் மகனொத்தான்.

---

ரையும் கட்டியங்காரன் வருத்துதலறிந்து தங்கள் பிள்ளைகள் ஐஞ்ஞூற் றுவரையும் வளர்க்கும்படி கந்துக்கடனிடத்தே கொடுக்க, அப்பிள்ளைகள் சீவகனோடு கூடி வளர்ந்து வந்தனராதலின் இவ்விதம் கூறினார். [2] வால சிகிற்சை : குழந்தைகளுக்கு வரும் அரிஷ்ட நீக்கத்தைக் கூறுவதொரு நூல்.

365. மணி - மாணிக்கம். அணி - ஆபரணம். மாரி - மேகம். நல்கி - கொடுத்து. கணிதம் - அளவு. இன்பக்கொடி - காமவல்லிக்கொடி. கற்பகமும் காமவல்லிக் கொடியும் : சீவக. 1129.

(உரை) [1] குறள், 211. [2] "உள்ளிய வுள்ளியாங் கீயு முயர்விற்றம், கள்ளவிழ் பூஞ்சோலைக் கற்பகமும்" (வீர. உரை. மேற்.). [3] சுநந்தை நந்தையென்று முதற்குறைந்து வந்தது. [4] சௌளம் : இருது சங்கமனம் முதலிய பதினாறு கருமங்களுள் ஒன்று; அது குடுமி வைத்தலென்று இக் காலத்து வழங்கும். [5] அமர்ந்தமை - தங்கிய தன்மை.

366. சாதிப்பைம்பொன் - உயர்ந்த சாதிப்பொன். வெளவி - கைக் கொண்டு. தகை - பெருமை. போதி - ஞானம். அனுப்பிரேக்ஷை பன்னி

சாதிப்பைம்பொன்றன்னொளி வெளவி : இதனால் [1] நிறம்பிறந்தமை கூறினார். நீதிச்செல்வம் - சௌளம். மேன்மேல் நிறைவெய்தி - முறையே [2] நாமகளைப் புணரும் பருவம் நிறைந்து. அந்தணன்மகன் - சுவாயம்பு மனு ; [3] இயல்பான. அறிவிற்குவமை. இனித் [4] தீர்த்தங்கரரில் [5] ரிஷப ஸ்வாமிமகன் [6] பரதராச சக்கரவர்த்தியென்றும் உரைப்பர்.

(இ - ள்.) ஒளியை வெளவிச் செல்வநீந்தி நிறைவெய்துதலின், அறிவாகிய செல்வத்தைப் பூண்டவரேத்தும் பொலிவாலே அந்தணன்மகனொத்தானென்க.

க்ஷத்திரியனுக்கு வைதிகம் வேண்டுதலின், சௌளத்திற்கு முன்புள்ள கன்மமும் சௌளமுங் கூறினமையான், மேலும் உபநயன முதலியனவும் விரியக் கூறாராயினும் அவ்விடங்களிலே குறிப்பானுணர்க.

(௩௬௬)

(வேறு)

367. நனந்தலை யுலகின் மிக்க நன்னுதன் மகளிர் தங்கள்
மனந்தளை பரிய நின்ற மதலைமை யாடு கென்றே
பொனங்கொடி யிறைஞ்சி நின்று பூமகள் புலம்பி வைக
அனங்கனுக் கவலஞ் செய்யு மண்ணனற் றுயு ரைத்தாள்.

மிக்க மகளிராவார் - [1]விறன் மடந்தையும் புகழ் மடந்தையும். தளை - குவிதல். மனத்தினின்ற தளை பரிய - இவனைப் பெறுமாறு நினைந்து வருந்துகின்ற மனத்தினின்ற வருத்தம் நீங்க. நின்ற மையாடுக - முறையே நின்ற [2] மையோலை பிடிக்க.

ரண்டனுள் 'ஒன்றற்குப் போதிதுர்லபம்' என்ற பெயருண்மை ஈண்டு உணர்க. பொலிவின்றால் = பொலிவினால் - விளக்கத்தால். ஆதிக்காலம்- அக்காலம் (சீவக. 2713). அந்தணன் - பிரமன்.

(உரை) [1] நிறம் பிறந்தமை - சீவகனுக்குத் தேகத்திற் காந்தியுண்டானமை. [2] நாமகளைப் புணரும் பருவம் - கல்வி கற்கும் பருவம். [3] இயல்பான அறிவு - இயற்கை அறிவு ; நூலுணர்ச்சிக்கு இஃது இன்றியமையாதது (குறள், 636). [4] தீர்த்தங்கரரில் - சைனர்களுள் ஆசிரியராகக் கூறப்படும் ரிஷபர் முதலிய இருபத்து நான்கு தீர்த்தங்கரரில்; சைனாகமங்களை உண்டு பண்ணினவர்களானமையின் இவர்கள் இப்பெயர் பெற்றார்கள் ; தீர்த்தம் - சைனாகமம் (சீவக. 1247). [5] ரிஷபஸ்வாமி : ரிஷபதீர்த்தங்கரர் ; இவர் ஆதிதீர்த்தங்கரர் என்றும் கூறப்படுவர். [6] பரதேசுவர சக்கரவர்த்தி என்றும் சக்கரவர்த்தி யென்றுங் கூறப்படுவர் (சீவக. 32, உரை)

367. நனந்தலை உலகு - பரந்த இடத்தையுடைய பூமி. பரிய - நீங்க. மையாடல் : சீவக. 2705, 2756. பொனங்கொடி - பொற்கொடி.

(உரை) [1] விறல் மடந்தை - வீரலக்ஷ்மி. [2] மையோலை - மையிட்ட ஓலை.

(இ - ள்.) அண்ணல் நற்றாய், கொடிபோல இறைஞ்சி நின்று, மகளிர் தளைபரியத் திருமகள் சிறிதுநாள் தனித்து வைக மதலை மையாடுகவென்று உரைத்தாளென்க.

இது [3] நன்றொழிலாதலிற் கூறினாள். தளைபரிய மையாடுகவென்றது பல நூல்களைக் கற்கவே வெற்றியும் புகழுமுண்டாமென்று. செல்வச் செருக்கின்றி வழிபாட்டோடு கற்றலின் 'பூமகள் புலம்ப' என்றார். (௩௬௮)

368. முழுவெனத் திரண்ட திண்டோண் மூரிவெஞ்சிலையி னானும்
அழலெனக் கனலும் வாட்க ணவ்வளைத் தோளி னாளும்
மழலையாழ் மருட்டுந் தீஞ்சொன் மதலையை மயிலஞ் சாயற்
குழைமுக ஞான மென்னுங் குமரியைப் புணர்க்க லுற்றார்.

யாழை மருட்டும் மழலைத்தீஞ்சொல். சாயற்குமரி; குழைமுகம், பூணையுந்தோற்றுவித்தது; குழையப்பண்ணுகின்ற முகமுடைய ஞான மென்னுங் குமரி. வேறு தன்கருத்தறிவாரின்றி இவனே தன்கருத்தறியத் [1] தான் அழியாதிருத்தலின் 'குமரி' என்றார்.

(இ - ள்.) கந்துகனும் சுநந்தையும் மதலையை ஞானமென்னுங் குமரியைப் புணர்க்கக் கருதினாரென்க.

'சாத்தனை நூலைக் கற்பிக்கலுற்றார்' என்றாற்போல. (௩௬௯)

369. அரும்பொனு மணியு முத்துங் காணமுங் குறுணி யாகப்
பரந்தெலாப் பிரப்பும் வைத்துப் பைம்பொன்செய் தவிசி னுச்சி
இருந்துபொன் னோலை செம்பொ னூசியா லெழுதி யேற்பத்
திருந்துபொற் கண்ணி யாற்குச் செல்வியைச் சேர்த்தி னாரே.

பரந்த: விகாரம். வைத்து - வைக்க.

---

[3] தாயின் தொழில்.

368. மூரி - பெருமை. சிலையினான்: கந்துக்கடன். தோளினாள்: சுநந்தை. மதலை: சீவகன். தீஞ்சொல் - இனிய சொல். குமரி - கன்னி; ஞானமென்னும் குமரி (சீவக. 370); "தவமணமுந் திருநீற்றி னன்மண முந் தவறாச், சிவமணமும் பெறக்கல்விச் செல்வி மணம்புரிவித்தார்" (திருவாதவூரடிகள் புராணம், மந்திரிச் 18). சீவகனுக்குக் கல்வி பயில்விக்க எண்ணினர் என்றவாறு.

(உரை.) [1] தானென்றது ஞானமென்னுங் குமரியை.

369. காணம் - பொற்காசு. பிரப்பு: முருகு. 234; அகநா. 98 : 9, 242 : 9; பெருங். 1. 34 : 186. கண்ணியாற்கு - மாலையையுடைய சீவக னுக்கு. செல்வி - நாமகள்; நாமகளைச் செல்வியென்றார், கல்விச் செல வத்தைக் கொடுப்பவளாதலின்; குறள். 400, 411; நாலடி. 251. சீவகனைப் பள்ளியில் வைத்தபொழுது 'ஓம் ஸித்தந்நம:' என்று கூறி நெடுங்கணக்குத் துவக்கியதாகக் கத்திய சிந்தாமணியால் தெரி கின்றது.

(இ - ள்.) அவர்கள், பொன்முதலியன குறுணியென்கின்ற அளவாகப் பரந்த எல்லாப் பிரப்பரிசியையும் வைக்க, [1] உவாத்தி முதலியோர் தவிசின் மேலேயிருந்து கண்ணியார்க்குச் செல்வியை, மகளிரைச் சேர்த்துமாறன்றியே பொன்னோலையிலே அவள் பொருந்தும்படி எழுத்தாணியாலெழுதிச் சேர்த்தினரென்க. (ஙசo)

370. நாமக ணலத்தை யெல்லா நயந்துடன் பருகி நன்னூல்
ஏமுத லாய வெல்லாப் படைக்கலத் தொழிலு முற்றிக்
காமனுங் கனிய வைத்த புலங்கரை கண்டு கண்ணார்
பூமகள் பொலிந்த மார்பன் புவிமிசைத் திலக மொத்தான்.

சொல்லாற் கூறுவனவெல்லாம் அடங்குதற்கு 'எல்லாம்' என்றார். 'பருகி' எனவே தன் குலத்திற்குரிய வேதமும் அதிகரிக்கவேண்டுதலின், ஈண்டே உபநயனமுங்கூறினார். இது, "[1] சாம கீத மற்று மொன்று சாமி நன்கு பாடினான்" (சீவக. 2038) என்பதனானும் பிறவாற்றானுமுணர்க. ஏ முதலாய படைக்கலத்தொழிலும் முற்றி, எல்லாத்தொழிலும் முற்றியென்க. புலம் : [2] ஆகுபெயர்.

(இ - ள்.) மார்பன், நாமகள் நலத்தையெல்லாம் தான்விரும்பிச் சேரக் கற்று, தான் ஓதிய தனுவேதத்திற் கூறிய அம்புமுதலிய படைக்கலங்களின் தொழில்களையும் எல்லாத் தொழில்களையும் முடித்து, காமனும் மனமுருகும்படி அந்நூலிற் கூறிவைத்த பாட்டினையும் கரைகண்டு, மண்மகளுக்கு நெற்றியிலிட்ட திலகத்தை யொத்தானென்க.

இசைகூறவே கூத்தும் அடங்கும். முன் நூல்களைக் கற்றதற்கேற்பத் தொழில்களைக் கற்றானென்றார். (ஙசக)

371. மின்றெளித் தெழுதி யன்ன விளங்குநுண் ணுசுப்பி னல்லார்
பொன்றெளித் தெழுதி யன்ன பூம்புறப் பசலை மூழ்கிக்
குன்றொளித் தொழிய நின்ற குங்குமத் தோளி னற்குக்
கன்றொளித் தகல வைத்த கறவையிற் கனிந்து நின்றார்.

(உரை) [1] உவாத்தி - உபாத்தியாயன்.

370. நாமகள் நலம் - கல்வி நலம். ஏ - அம்பு. முற்றி - முற்றக் கற்று. காமன் - மன்மதன். புலம் - இசை நூல். மார்பன் - சீவகன். சீவகன் இசையில் வல்லவன் : சீவக. 28, 411, 2052 ; இவன் யாழாசிரியனென்றும் வேய்ங்குழலாசிரியனென்றும் கத்திய சிந்தாமணி முதலியவற்றிற் கூறப்படுகின்றான்.

(உரை) [1] இது, சுரமஞ்சரிபால் விருத்த உருவங்கொண்டு சென்ற சீவகன் இசைபாடியதைப்பற்றிச் சிறப்பிக்கின்றது. [2] நூலிற் சொல்லப்பட்ட இசைக்கானமையின் ஆகுபெயர்.

371. தெளித்து - தெளிவித்து. நல்லார் - மங்கையர். பூம்புறம் - பொலிவு பெற்ற மெய்யிடம். பசலை - தேமல். ஒளித்து ஒழிய - இவனுடைய தோளைக் கண்டு மறைந்துபோக. கறவை - பசு.

மின்னை நிலைபெற நிற்கத் தெளிவித்து அதனிடத்தே மகளிர் அவயவங்களை எழுதியன்ன நல்லாரென்க; "தெளித்தசொற் றேறியார்க்கு" (குறள், 1154) என்றாற்போல. இனி மின்னைக் கரைத்தெழுதியன்ன நல்லாருமாம். புறம் - தம்மெய்யிடம். ஒளித்து ஒழிய - ஒளித்துப்போக. மறைத்து முலையுண்ணாதபடி வைக்கப்பட்ட கறவை.

(இ - ள்.) தோளிணாற்றுத் தமது பூம்புறத்தில் தோன்றிய பொன்னைக் கரைத்தெழுதியன்ன பசலையிலே நல்லார் முழுகிக் கறவைபோல வேட்கை செறிந்து நின்றாரென்க.

இதனாற் [1] குலக்கன்னியரைக் கூறினார். (நசஉ)

372\. விலைபகர்ந் தல்குல் விற்கும் வேலினும் வெய்ய கண்ணார்
முலைமுகந் திளையர் மார்ப முரிவில ரெழுதி வாழும்
கலையிகந் தினிய சொல்லார் கங்குலும் பகலு மெல்லாம்
சிலையிகந் துயர்ந்த திண்டோட் சீவகற் கரற்றி யாற்றார்.

அல்குல் விற்கும் கண் - அல்குலைவிற்றற்குக் காரணமான கண்; களவு குடிகொள்ளுங் கண். இவர் பரத்தையரிற் கன்னியர். மார்பை முலையாலே முகந்து நீங்காது எழுதி வாழும் இனியசொல்லார்; போக நுகரும் பரத்தையர். சிலையிகந்து - சிலைக்குக்கூறுகின்ற நிலையைக் கடத்தலாலே.

(இ - ள்.) சீவகற்குக் கண்ணார், சொல்லார் எல்லாரும் இரவும் பகலும் அரற்றி ஆற்றாராயினாரென்க.

[1] இற்பரத்தையரும் [2] சேரிப்பரத்தையருமாம். (நசந)

373\. வான்சுவை யமிர்த வெள்ளம் வந்திவட் டொக்க தென்னத்
தான்சுவைக் கொண்ட தெல்லாந் தணப்பறக் கொடுத்த பின்றைத்
தேன்சுவைத் தரற்றும் பைந்தார்ச் சீவக குமர னென்ற
ஊன்சுவைத் தொளிறும் வேலாற் குறுதியொன் றுரைக்க
லுற்றான்.

(உரை) [1] குலத்திற் பிறந்தவரும், விவாகம் ஆகாதவருமாகிய மகளிர்.

372\. இளையர் மார்பை. இளையர் - சிறுவர். முரிவிலர் - நீங்கார். கலையிகந்து இனியசொல்லார். சீவக. 2107; சூளா. அரசியற். 124. சிலை - கல்; வில்லெனினுமாம்.

(உரை) [1] இற்பரத்தையர்: ஒருவனுக்கே உரிமை பூண்டவர்; காமக்கிழத்திய ரென்றும் கூறப்படுவர் (நம்பி. 113). [2] சேரிப்பரத்தையர்: ஒருவனுக்கே உரிமை பூணாமல் யாரையும் விரும்புவோர்; வரைவின் மகளிரென்றும், காதற் பரத்தையரென்றும் கூறப்படுவர் (நம்பி. 114)

373\. இவண் தொக்கது - இவ்விடத்தில் நிறைந்தது. தேன் - வண்டு. என்ற வேலானென இயைக்க.

கொண்டதெல்லாம் : ஒருமைபன்மை மயக்கம்.

(இ - ள்.) சீவககுமரனென்ற வேலாற்கு [1] ஆசிரியன் தான் நுகர்ந்த கலைகளையெல்லாம் [2] தட்டறக் கொடுத்தபின்பு, வானிடத்தமிர்தக்கடல் வந்து நிறைந்ததென்னும்படி ஓர் உறுதி கூறலுற்றானென்க.

தொக்கதென்னக் கொடுத்த பின்றையென்றுமாம். (௩௪௪)

374\. நூனெறி வகையி னோக்கி நுண்ணிதி னுழைந்து தீமைப்
பானெறி பலவு நீக்கிப் பருதியங் கடவு ளன்ன
கோனெறி தழுவி நின்ற குணத்தொடு புணரின் மாதோ
நானெறி வகையி னின்ற நல்லுயிர்க் கமிர்த மென்றான்.

ஆகமங் கூறிய வழியினது கூறுபாட்டாலே நன்மைதீமையை ஆராய்ந்து, கூறிய பொருளிடத்தே நெஞ்சு சென்று. தீமைப்பானெறி - துன்மார்க்கம். நிறத்தாலும் இருணீக்கத்தாலும் ஞாயிறு உவமை. கோன் - அருகன். குணம் - [1] இரத்தினத்திரயம் ; அவையாவன : [2] நன்ஞானம், [3] நற்காட்சி, [4] நல்லொழுக்கம். நானெறி - சதுர்க்கதி ; அவையாவன : நரககதி, விலங்குகதி, மக்கட்கதி, தேவகதி. நல்லுயிர் - [5] பவ்வியசீவன்.

(இ - ள்.) அவன் நோக்கி நுழைந்து நீக்கிப் புணரின் நல்லுயிர்க்கு ஆக்கமென்றானென்க. (௩௪௫)

---

(உரை) [1] ஆசிரியன் - அச்சணந்தியாசிரியன். [2] தட்டற - தடையற.

374\. நூல் - இங்கே ஆகமம். பருதியங்கடவுளன்ன கோன் - அருகன் ; "வெம்புஞ் சுடரிற் சுடருந்திரு மூர்த்தி" (சீவக. 2). குணம் - அருகனுடைய குணம். நால்நெறி - நான்கு கதி.

(உரை) [1] இரத்தினத்திரயம் : இது பரத்திரயம் எனவும் வழங்கும் ; "பரத்திர யங்கள் பணித்தபிரான்" (திருநூற். 24) ; இவை திரியோக மருந்தெனவும் வழங்கும் (நில. தரும. 107). [2] நன்ஞானம் - பொருள்களின் தன்மையை உள்ளவாறே உணர்தல் ; "பொருணின்ற பெற்றியைப் பொய்யின் றுணர்தல், மருளறு நன்ஞான மாண்பு" (அருங்கலச். 57). [3] நற்காட்சி - ஐயமின்மை, அவாவின்மை, உவர்ப்பின்மை, மயக்கமின்மை, அறப்பழிநீக்கல், அழிந்தாரைத் தாங்கல், அறத்துக்கு அளவளவு, அறத்தை விளக்கல் என்னும் எட்டுறுப்பினையும் உடையது ; "எட்டு வகையுறுப்பிற் றாகி யியன்றது, கட்டிய நற்காட்சி காண்" (அருங்கலச். 13). [4] நல்லொழுக்கம் : அணுவிரதம், மஹாவிரதம் என இருவகைப்படும் ; அணுவிரதம் இல்லறத்தார்க்குரியது ; மஹாவிரதம் துறவறத்தார்க்கு உரியது ; ஒவ்வொன்றும் மிகப்பலவாகும்; அவற்றின் பகுப்பை, அருங்கலச்செப்பு முதலியவற்றிற் கண்டுகொள்க. [5] பவ்வியசீவன் - முத்தியில் விருப்பமுள்ள ஆன்மா.

375. அறிவினுற் பெரிய நீரா ரருவினை கழிய நின்ற
நெறியினைக் குறுகி யின்ப நிறைகட லகத்து நின்ருர்
பொறியெனும்பெயரவைவாய்ப்பொங்கழலரவின் கண்ணே
வெறிபுலங் கன்றி நின்ருர் வேதனைக் கடலு ணின்ருர்.

தீவினை கழியநின்ற நெறி - சன்மார்க்கம். இன்பநிறைகடல்-அனந்த சுகம். நிறைக்கடல் பாடமாயின், இன்பப்பெருக்கினையுடைய கடலென்க. வேட்கையாகிய நஞ்சையுடைய உடம்பென்னும் பாம்பிடத்திற் [1]பொறி யென்னும் பெயரையுடையவாகிய ஐந்துவாயிடத்தே களிப்பைச் செய் கின்ற [2]விடயங்களிலே [3]அடிப்பட்டுநின்ருர்.

(இ - ள்.) பெரிய நீரார் குறுகி இன்பக்கடலகத்தே நின்ருர்; கன்றி நின்ருர் துன்பக்கடலிலே நின்ருரென்க. (௩௭௫)

376. கூற்றுவன் கொடிய ஞகிக் கொலைத்தொழிற் கருவி சூழ்ந்து
மாற்றரும் வலையை வைத்தான் வைத்ததை யறிந்து நாமும்
நோற்றவன் வலையை நீங்கி நுகர்ச்சியி லுலக நோக்கி
ஆற்றுறப் போத றேற்ரு மளியமோஒ பெரிய மேகாண்.

கருவி - [1]ஐயும் பித்தும் வளியுமாகிய [2]வார்கள். வலை - [3]ஆயுக்கன் மம். நுகர்ச்சியிலுலகம் - இதற்குமுன்பு அனுபவியாத உலகம்; வீடு. ஓஒ பெரியம் : இகழ்ச்சி.

(இ - ள்.) கூற்றுவன் கொடியனுய்ச் சூழ்ந்து வலையை வீசிவைத் தான்; அதனை அறியத்தக்க நாமும் அறிந்து தவஞ்செய்து தப்பி உலக நோக்கி வழிப்படப்போதலைத் தெளிகிலேம்; பெரியேங்காணென்க. (௩௭௬)

---

375. நீரார் - தன்மையை யுடையார். வினை - தீவினை. அழல் - விடம். பொறியெனும் ஐவாய்ப் பொங்கழலரவு : சீவக. 1292. வெறி - களிப்பு. புலம் - விடயம்.

(உரை) [1]பொறி : மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன. [2]விடயங்கள் : சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பன. [3]அடிப்பட்டு நின்ருர் : எழுவாய்.

376. கூற்றுவன் - யமன். கருவியாற் சூழ்ந்து. மாற்றரும் - தடுத் தற்கரிய. நோற்று - தவம் செய்து. அவன் - யமன். நுகர்ச்சியில் உலகம்: சீவக. 381; திருநூற். 2. ஆறு உறப்போதல் - நல்வழிப்படப் போதல்.

(உரை) [1]ஐ - சிலேட்டுமம்; பித்து - பித்தம்; வளி - வாதம்; இம் மூன்றும் நோய்களென்று கூறப்படும்; சீவக. 3075, ந. [2]வார்-வலையைக் கட்டுதற்குரியது. [3]ஆயுக்கன்மம் - வாழ்நாளைக் கொடுத்தற்குரிய வினை.

377. பேரஞ ரிடும்பை யெல்லாம் பிளந்திடும் பிறப்பு நீக்கும்
ஆரமிர் தரிதிற் பெற்று மதன்பயன் கோட றேற்றும்
ஓருமைம் பொறியு மோம்பி யுளபகல் கழிந்த பின்றைக்
கூரெரி கவரும் போழ்திற் கூடுமோ குறித்த வெல்லாம்.

(இ - ள்.) இடும்பையெல்லாம் நீக்குதற்குக் காரணமான, பிறப்பறுக்கும் மக்கள் யாக்கையைத் தவப்பயனாற்பெற்றும்; பெற்றுவைத்தும் அதன்பயனைக் கொள்ள அறிகின்றிலேம்; ஐம்பொறிகளையும் ஐம்புலன்களாலே பேணி உள்ள நாள் சென்றால் எரிகவரும்பொழுது நினைத்த அறமெல்லாம் செய்யக்கூடுமோ! ஓர்ந்து பாருமென்க. (ங௬அ)

378. தழங்குரன் முரசிற் சாற்றித் தத்துவந் தழுவல் வேண்டிச்
செழுங்களி யாளர் முன்ன ரிருளறச் செப்பி னாலும்
முழுங்கழ னரகின் மூழ்கு முயற்சிய ராகி நின்ற
கொழுங்களி யுணர்வினாரைக்குணவதங்கொளுத்த லாமோ.

தழங்குகுரல்: விகாரம். செழுங்களி - [1] தரிசன மோகனீயப் பிரகிருதி ஏழும். [2] குணவதம்; வதம் - விரதம்; இது பகுதிப்பொருள் விகுதி.

(இ - ள்.) எல்லாரும் தத்துவந்தழுவல்வேண்டிக் களியாளர் முன்னே முரசிற்சாற்றிச் செப்பினாலும் அதுகொள்ளாதபடி நரகின்மூழ்கும் பாவத்தினை முன்னே உடையராகி நின்ற உணர்வினாரைக் குணங்கொளுத்தலாமோ வென்க. (ங௬௯)

379. பவழவாய்ச் செறுவு தன்னு ணித்திலம் பயில வித்திக்
குழவிநா றெழுந்து காளைக் கொழுங்கதி ரீன்று பின்னைக்
கிழவுதான் விளைக்கும்பைங்கூழ்கேட்டிரேற் பிணிசெய்பன்மா
உழவிர்காண் மேயுஞ் சீல வேலியுய்த் திடுமி னென்றான்.

---

377. அஞர் - துன்பம்; அஞரிடும்பை: இருபெயரொட்டு. அமிர்து - உடம்பு; ஆக்கத்திற்குக் காரணமானமையின் மக்களுடம்பு 'அமிர்து' எனப்பட்டது. பகல் - நாள். எரி - நெருப்பு.

378. தழங்குரல் = தழங்கு குரல் - முழங்குகின்ற ஒலி. குணவதம் - குண விரதம்; வதம்: விரதமென்பதன் சிதைவு; சீவக. 2818, ந.; சூளா. இரத. 86.

(உரை) [1] தரிசன மோகனீயப் பிரகிருதிகள் ஏழாவன: அநந்தானுபந்திக்குரோதம், அநந்தானு பந்திமானம், அநந்தானு பந்திமாயை, அநந்தானு பந்திலோபம், மித்தியாத்துவம், ஸம்மியக்மித்தியாத்துவம், ஸம்மியக்துவப் பிரகிருதி என்பன. இவை நரககதியிற் செலுத்துமென்பர்; சீவக. 3076; இவற்றின் இலக்கணமும், பெயர்க் காரணமும், இவற்றிற்குரிய உவமைகளும் கருமஸ்வரூபம் என்னும் நூலில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. [2] குணம், வதம் இரண்டற்கும் 'விரதம்' என்றே பொருள்.

379. நித்திலம் - முத்து; சீவக. 218. வித்தி - விதைத்து. குழவி நாறு - குழவிப் பருவமாகிய நாற்று. காளைப் பருவமாகிய கதிர். கிழவு-

பவழுவாய் - கருத்தங்கும் பை. நித்திலம்போலுஞ்சுக்கிலம்.

(இ - ள்.) உழுவிர்காள், கேட்பீராயின், பவழுவாயாகிய [1]செய்யிலே நித்திலத்தை வித்துதலாலே முளைதோன்றிக் கதிரையீன்று பின்னே தான் மூப்பை விளைக்கும்; அப்பயிரை, நோயைச்செய்யும் தீவினைகளாகிய விலங்குகள் மேயும்; அவை மேயாதபடி சீலமாகிய வேலியைக் கொண்டு சென்றிடுவீராக வென்றுனென்க. (௩௭௦)

380. சூழ்கதிர் மதிய மன்ன சுடர்மணிப் பூணி ஞனும்
வீழ்தரு கதியி னீங்கி விளங்குபொன் னுலகத் துய்க்கும்
ஊழ்வினை துரத்த லானு முணர்வுசென் றெறித்த லானும்
ஆழ்கடற் புணையி னன்ன வறிவரன் சரண டைந்தான்.

சீவகனுக்கு மதியுவமை, [1]கலைகள்நிறைதலால்; [2]உம்மை : சிறப்பும்மை. வீழ்தருகதி - நரகத்தே விழுதற்குக் காரணமான தீவழி. [3]பொன்னெயில் வட்டத்திற்செலுத்தும் ஊழ்வினை - சாதுசரணுவதற்கு முன் செய்த நல்வினை. அத்தவத்தே பயின்றமையால், உணர்வு மீண்டும் அதன்மேற்சென்று பரத்தலானும்.

(இ - ள்.) அதுகேட்டுப் பூணிஞனும், ஊழ்வினை செலுத்துதலானும் உணர்வு எறித்தலானும் கதியினீங்கிப் பிறவிக்கடலை நீந்துதற்குத் தெப்பமன்ன [4]அறிவனைச் சரணுக அடைந்தானென்க. (௩௭௧)

381. காட்சிநன் னிலையின் ஞானக் கதிர்மணிக் கதவு சேர்த்திப்
பூட்சிசா லொழுக்க மென்னும் வயிரத்தாழ் கொளுவிப் பொல்
மாட்சியில் கதிக ளெல்லா மடைத்தபின் வரம்பி லின்பத் [லா
தாட்சியி லுலக மேறத் திறந்தன னலர்ந்த தாரான்.

---

மூப்புத்தன்மை.; நீல. 10 : 30. பைங்கூழ் - பயிர். மா - விலங்குகள். மாமேயும் என இயைக்க. மு. பாகவதம், 3. 9 : 35.

(மேற்.) அடி, 1-2 : மாறன். பொருளணி. 35. மு. இ-வி. அணி. 25.

(உரை) [1]செய் - வயல்.

380. பூணிஞன் : சீவகன். கதி - நரககதி. ஊழ்வினை - நல்வினை. எறித்தல் - பரத்தல். ‘ஊழ்வினை......எறித்தலானும்’ என்பது, “தவமுந் தவமுடையார்க் காகும்” (குறள், 262) என்பதைத் தழுவியது. ஆழ்கடற் புணையினன்ன அறிவரன் சரண் : குறள். 8, 10, உரை; புணை - தெப்பம். சரண் - பாதம் என்றுமாம்.

(உரை) [1]முருகு. 93; மதுரைக். 760, ந. [2]பூணிஞனும் என்பதிலுள்ளது. [3]பொன்னெயில் வட்டம் - பொன் மதில் சூழ்ந்ததாகிய சமவசரண மென்னும் சினுலயம்; சீவக. 856, 1243; திருநூற். 18. [4]அறிவன் - ஸ்ரீ வர்த்தமானர்; சீவக. 27.

நிலைபேறுடைமையின் நிலை. பொருள்களைக் காத்தற்கு உலாவு தலிற் கதவு. காட்சியையும் ஞானத்தையும் விட்டுநீங்காமல் தகைத்த லின், தாழ். மாட்சியில் பொல்லாக் கதி - பிறவி கெடுதலில்லாத தீக்கதி; மாட்சிமையுமாம். [1] ஆட்சியில் உலகம் - இதற்குமுன்பு ஆளாதவுலகம்; வீடு. அலர்ந்த - புகழாற் பரந்த.

(இ - ள்.) தாரான், காட்சியாகிய நிலையிலே ஞானமாகிய கதவைச் சேர்த்தி ஒழுக்கமாகிய தாழைக் [2] கொளுவிக் கதிகளெல்லாம் அடைத்த பின் வீட்டுலகத்தே செல்ல வழிதிறந்தானென்க. (௩௮௨)

382. நல்லறத் திறைவ ளுகி நால்வகைச் சரண மெய்தித்
தொல்லறக் கிழமை பூண்ட தொடுகழற் காலி ளுற்குப்
புல்லற நெறிக்க ணின்று பொருள்வயிற் பிழைத்த வாறும்
இல்லறத் தியல்பு மெல்லா மிருளறக் கூறி யிட்டான்.

நால்வகைச்சரணம்: அருகசரணம், சித்தசரணம், சாதுசரணம், தன்மசரணம். தொல்லறம் - தன்குலத்திற்கெல்லாம் உரிய அறம். புல்லறநெறிக்கணின்று பொருள்வயிற்பிழைத்தவாறும் - தீக்கதியினின் ஞேர் தாம் நடாத்துகின்ற [1] புல்லிய இல்லறத்தினெறியிலே நிற்றலால் வீடுபேற்றில் தப்பியவாறும். இல்லறத்தியல்பும் - வீடுபேறு தப்பாதபடி இல்லறம் நடாத்துமியல்பும். எல்லாம் - ஒழிந்தனவும்.

(இ - ள்.) சரணமெய்திப் பூண்ட காலினனுக்கு உலகம் பிழைத்த படியையும் நல்லோர் நடாத்தும் அறத்தியல்பையும் ஒழிந்தவற்றையும் மயக்கமறக் கூறினனென்க. (௩௮௩)

383. எரிமுயங் கிலங்கு வைவே லிளையவர் குழாத்தி னீங்கித்
திருமுயங் கலங்கன் மார்பிற் சீவகற் கொண்டு வேரு
விரிமலர்க் கண்ணி கட்டி விழைதக வேய்ந்த போலும்
தெரிமலர்க் காவு சேர்ந்து பிறப்பினைத் தெருட்ட லுற்ருன்.

---

381. காட்சி - நற்காட்சி. பூட்சி - பூணுதல்; மேற்கொள்ளுதல்; சீவக. 1292. வயிரத்தாழ் - வயிரத்தாலாகிய தாழ். காட்சி, ஞானம், ஒழுக்கம் என்பன இரத்தினத்திரயங்கள் எனப்படும்; சீவக. 374, அடிக். இரத்தினத்திரயங்கள் முறையே இதில் 'நிலை' முதலியனவாக உருவகிக் கப்பட்டன. மாட்சி - மாளுதல்; பெருமையுமாம். தாரான்: சீவகன்.

(உரை) [1] சீவக. 376, அடிக். [2] பொருத்தி.

382. நல்லறத்திறைவன்: "நல்லறங் காக்கவென்ருள்" (சீவக. 386). சரணம் - பாதுகாப்பு. கிழமை - உரிமை. தொடுகழல் - இடப் பட்ட கழல். காலினற்கு - சீவகனுக்கு. பொருள் - வீடுபேறு. இருள் - மயக்கம்.

(உரை) [1] புல்லிய - புன்மையான.

383. குழாம் - கூட்டம். திரு - இலக்குமி. கண்ணி - மாலை. விழைதக - விரும்பும் வண்ணம். கா - சோலை. தெருட்டல் - தெளிவித்தல்.

இளையவர் - [1] தம்பிமாரும் [2] தோழன்மாரும். கொண்டுவேறு - வேறாகக் கொண்டு.

(இ - ள்.) ஆசிரியன், குழாத்தினின்றும் தானீங்கிச் சீவகனைத் தனியே கொண்டுபோய், கண்ணிகட்டி [3] விதானித்தபோலும் காவைச் சேர்ந்து, அவனுக்குப் பிறப்பினைத் தெளிவிக்கலுற்றானென்க. (ரு௮௪)

384. பூவையுங் கிளியு மன்ன ரொற்றெனப் புணர்க்குஞ் சாதி
யாவையு மின்மை யாராய்ந் தந்தளிர்ப் பிண்டி நீழற்
பூவியற் றவிசி னுச்சிப் பொலிவினோ டிருந்த போழ்தில்
ஏவியல் சிலையி னானை யிப்பொருள் கேண்மோ வென்றான்.

(இ - ள்.) ஆசிரியன், பிண்டி நிழலிடத்திட்ட தவிசின்மேல் இருந்த அளவிலே, பூவையும் கிளியுமுதலாகக் கொண்டு வேறும் அரசர் [1] ஒற்றாக விடும் சாதிகளெல்லாம் இல்லாதபடியை ஆராய்ந்து, சிலையினானை இக் கதையைக் கேட்பாயாகவென்றானென்க. (ரு௮ரு)

385. வையக முடைய மன்னன் சச்சந்த னவற்குத் தேவி
பைவிரி பசும்பொ னல்குற் பைந்தொடி விசயை யென்பாள்
செய்கழன் மன்னன்றேர்ந்து தேவியைப்பொறியிற்போக்கி
மையல்கொ ணெஞ்சிற் கல்லா மந்திரி விழுங்கப் பட்டான்.

பொன் - மேகலை. தேர்ந்து - கனவிற்குப் பின்பு இவளைப் போகவிடு மாறு தேர்ந்து. மையல் - [1] தன்னை ஆக்கினவனைக் கொல்லுதல்.

(உரை) [1] தம்பிமார் : சச்சந்தனுக்குக் காமக்கிழத்தியர்பாற் றோன்றிய நபுலன் விபுலன் என்ற இருவரும் கந்துக்கடன் புதல்வனாகிய நந்தட்டனும் சீவகனுக்குத் தம்பிமார்கள். [2] தோழன்மார் : ஐஞ்ஞாற்று நால்வர் ; சீவக. 292, 304, அடிக் ; இவர்கள் சீவகனுடன் கல்வி பயின் றவர்கள். [3] விதானித்த போலும் கா - மேற்கட்டி கட்டினாற்போலுஞ் சோலை.

384. பூவை - நாகணவாய்ப் பறவை. பிண்டி - அசோகமரம். அசோக மரத்தின் கீழுள்ள பீடத்திலிருத்தல் சாரண பரமேஷ்டிகளுக் குரிய விதி என்பர் ; சிலப். 10 : 21-5, 160-63. ஏ - அம்பு. சிலையினான் - சீவகன். பொருள் - கதை.

(உரை) [1] ஒற்றாக - ஒற்றியறிவனவாக.

385. வையகம் - பூமி. தேர்ந்து - அறிவால் ஆராய்ந்து ; "ஆம் புடை தெரிந்து வேந்தற் கறிவெனு மமைச்சன் சொன்னான்" (சீவக. 232) என்பது இங்கே அறியற்பாலது. பொறி - யந்திரமயில். மையல் - மயக்கம். மந்திரி விழுங்கப்பட்டான் : சீவக. 290.

(உரை) [1] தன்னை என்றது கட்டியங்காரனை ; ஆக்கினவன் - அரச னாகச் செய்தவன் ; "தன்னை யாக்கிய தார்ப்பொலி வேந்தனை" (சீவக. 245)

(இ - ள்.) இவ்வையகமுடைய அரசன் சச்சந்தன்; அவனுக்குத் தேவி விசயை; அவன் தேர்ந்து அவளைப் போக்கி மந்திரியாலே கொல்லப்பட்டானென்க. (௩௮௬)

386. புலம்பொடு தேவி போகிப் புகற்கருங் காடு நண்ணி
வலம்புரி யுலகம் விற்கு மாமணி யீன்ற தென்ன
இலங்கிழை சிறுவன் றன்னைப் பயந்துபூந் தவிசி னுச்சி
நலம்புரி நங்கை வைத்து நல்லறங் காக்க வென்றாள்.

வலம்புரி உவமை [1] கூறவே தேவி மறைந்தமையும் உணர்த்தினர். இலங்கிழை - தேவி; இது சுட்டு. நலம்புரி நங்கை - அறத்தை விரும்பிய கூனியாகிய தெய்வம். வைத்து - வைக்க. அறம் - நோன்பு.

(இ - ள்.) தேவி போய், நண்ணி, வலம்புரி மணியையீன்றாற்போலச் சிறுவனைப் [2] பயக்கையினாலே, அவனைத் தெய்வம் தவிசின்மேலே வைக்க, அத்தேவி, யான் மேற்செய்கின்ற அறம் நின்னைக் காக்கவென்று [3] உட்கொண்டாளென்க.

இத்தெய்வம் நம்பியைப் பள்ளிசேர்த்தினபொழுதே தேவி கருதியதனை ஆசிரியன் உணர்ந்து ஈண்டுக் கூறினான். எனவே தேவி நோன்பிலேயிருந்தமை சீவகனுணர்ந்து, அது கருமமென்று உட்கொண்டான். பின்பு, [4] "அடிகளுமுளரோ" (சீவக. 1884) என்றது, இதற்குப்பின்பு தீங்கின்றி யிருந்தமை கருதி. (௩௮௭)

387. வானத்தின் வழுக்கித் திங்கட்கொழுந்துமீன் குழாங்கள் சூழக்
கானத்திற் கிடந்த தேபோற் கடலக முடைய நம்பி
தானத்து மணியுந் தானு மிரட்டுறத் தோன்றி னானே
ஊனத்திற் றீர்ந்த சீர்த்தி யுத்தரட் டாதி யானே.

கொழுந்தென்றார், நாடோறும் வளர்தலின். தானத்து மணி - சுடுகாட்டு மணி. ஊனம் - [1] நாளுக்குள்ள தீங்கு.

---

386. புலம்பு - வருத்தம். புகற்கு - புகுதற்கு. காடு - மயானம். வலம்புரி - ஒருவகைச் சங்கு; மணி - முத்து. வலம்புரியீன்ற முத்து: சீவக. 317; தொல். ஆத்திரை. பொதுப். சிறுவன் - சீவகன். நங்கை - கூனி.

(உரை) [1] வலம்புரி: இஃது ஈன்றவுடன் மாயுமாதலின் இங்ஙனம் கூறினர். [2] பயக்கை - பெறுகை. [3] தேவி உட்கொண்டது: சீவக. 323, உரை; உட்கொண்டாள் - நினைத்தாள். [4] அடிகளுமுளரோ - என் தாயாரும் உயிரோடு இருக்கின்றாரோ.

387. வழுக்கி - தவறி. திங்கட்கொழுந்து - பிறைச்சந்திரன். கடலகம் - பூமி. இரட்டுற - மாறுபட. சீர்த்தி - மிக்க புகழ். சீவகன் உத்தரட்டாதி நட்சத்திரத்திற் பிறந்தவன்.

(உரை) [1] நாள் - நட்சத்திரம்.

(இ - ள்.) நம்பி, உத்தரட்டாதிநாட்பிறந்தவன், பிறை மீன்குழாங்கள் சூழக்கிடந்ததுபோல மணியும் தானும் மாறுபடத் தோன்றினனென்க. (௩௮௭)

388. (௧) அருந்தவன் முந்து கூற வலங்கல்வே ணாய்கன் சென்று
பொருந்துபுசிறுவற்கொண்டுபொலிவொடுபுகன்றுபோகத்
திருந்திய நம்பி யாரத் தும்மினன் றெய்வம் வாழ்த்திற்
றரும்பொனாய் கொண்மோ வென்று னலைகடல் விருப்பிற்
[கொண்டாள்.

389. (௨) கரியவன் கன்னற் கன்று பிறப்பினைத் தேற்றி யாங்கப்
பெரியவன் யாவ னென்ன நீயெனப் பேச லோடும்
சொரிமலர்த் தாரும் பூணு மாரமுங் குழையுஞ் சோரத்
திருமலர்க்கண்ணி சிந்தத்தெருமந்து மயங்கிவீழ்ந்தான்.

இவையிரண்டும் ஒரு தொடர்.

(௧) [1] முனிவன் நிகழும் பொருளெல்லாம் கந்துகற்குக் கூறலின், அது தப்பாதென்று கருதிச்சென்று. கொண்டு - கொள்ள. திருந்திய - தவம் திருந்திய. பொன்னாய் - திருவையுடையாய்.

(௨) கரியவன் - கண்ணன். பெரியவன் - அறிவு பெரியவன். பேசலோடும் : உடனிகழ்ச்சி. தேன்சொரி மலர்.

(இ - ள்.) நாய்கன், அவ் [2] வொளி ஓடிய வழியே சென்று பொருந்தா நின்று சிறுவனையெடுக்க, அந்த நம்பி, நன்னிமித்தம்பெற்றேமென்று நாய்கன் மகிழ்ந்து போம்படி நிறையத் தும்மினான்; அப்பொழுது தெய்வம் வாழ்த்திற்று; அம்மகிழ்ச்சியுடனே போய், அரும்பொன்னாய், கொள்ளென்றான்; அவளும் கொண்டாளென்று ஒருகதைமுகத்தாலே, கரியவன் கன்னனுக்குப் பிறப்புணர்த்தியாங்கு உணர்த்தினாகை, அது கேட்ட சீவகன், நீ கூறியவன் யாரென்று கேட்ப, நீயெனக் கூறினாகை, தார்முதலியன சோரச் சிந்தக் கலங்கி மூர்ச்சித்து வீழ்ந்தானென்க.

388. நாய்கன் - வைசிய குலத்தவனாகிய கந்துக்கடன். ஆர - நிறைய. தெய்வம் - கூனி. 'அரும்பொனாய்' என்றது கந்துக்கடன் மனைவியாகிய சுநந்தையை.

389. கரியவன் - கண்ணபிரான். கண்ணபிரான் கர்ணனுக்குப் பிறப்புணர்த்திய வரலாறு, வி-பா. கண்ணன் தூது, 218-ஆம் பாடல் முதலியவற்றாலும், ஸ்ரீ புராணத்தில், 22-ஆம் புராணத்தாலும் அறியலாகும். என்ன - என்று சீவகன் கேட்க. பேசலோடும் - முனிவன் கூறியவுடன். ஆரம் - முத்தமாலை.

(உரை) [1] முனிவன் - கந்துக்கடன் வீட்டிற்கு வந்த ஒரு முனிவன்; சீவக. 1124-1130. [2] ஒளி - சீவகனுடைய தேக காந்தி (சீவக. 322)

[3] 'என்று' எனவும், 'உணர்த்த' எனவும் வருவிக்க. [4] அன்புமிகுதியால் மூர்ச்சை முந்திற்று. (௩௮௯-௯௦)

390. கற்பகங் கலங்கி வீழ்ந்த வண்ணம்போற் காளை வீழச்
சொற்பகர் புலவன் வல்லே தோன்றலைச் சார்ந்து புல்லி
நற்பல குழீஇய தம்மா னவையறத் தேற்றத் தேறிக்
கற்புனை திணிதிண் டோளான் கவலைநீர்க் கடலுட்பட்டான்.

(இ - ள்.) காளை, கற்பகம் நிலைகுலைந்து விழுந்த தன்மைபோல விழுதலாலே, சொல்லை [1] விரகாற் கூறிய ஆசிரியன், அத்தோன்றலை விரையச் சேர்ந்து தழுவிச் சந்தனுதிக் [2] கூட்டாற் செய்த குழம்பால் தேற்ற, அத்தோளான் தெளிந்து [3] கையாற்றைவிட்டுச் சோகக் கடலிலே விழுந்தானென்க. (௩௯௧)

391. இனையைநீ யாய தெல்லா மெம்மனோர் செய்த பாவம்
நினையனீ நம்பி யென்று நெடுங்கணீர் துடைத்து நீவிப்
புனையிழை மகளிர் போலப் புலம்பனின் பகைவ னின்றுன்
நினைவெலா நீங்கு கென்ன நெடுந்தகை தேறி னானே.

புலம்பல் - அழுதல் ; தொழிற்பெயர்.

(இ - ள்.) நம்பி, நீ இனையையாயதெல்லாம் எம்போல்வார் செய்த பாவம் ; இனி, நின்பகைவன் நின்றுனுதலின், மகளிர் போலப் புலம்பலை நீ நினையலென்று கண்ணீர் துடைத்துப் பின்பு உடம்பினைத் தடவி நினைவு நீங்குகவென்ன, அவன் தெளிந்தானென்க.

'நீர்துடைத்து' என்றது [1] அரற்று. 'நினைவெலாம்' என்றது [2] அவலம். அவல முதலிய [3] நான்குங் கூறினர். எம்மனோர் செய்த பாவம் நீங்குகை காரணமாகவென்றுமாம். (௩௯௨)

---

[3] கொண்டாள் என்பதற்குப் பின், 'என்று' எனவும், தேற்றியாங்கு என்பதன் பின் 'உணர்த்த' எனவும் வருவிக்க. [4] அன்பு மிகுதியால் மூர்ச்சை முற்படுதல் : சீவக. 302, உரை.

390. கற்பகம் கலங்கி...வீழ : மேரு. பூர்ண. 12. காளை - சீவகன். புலவன் - அச்சணந்தியாசிரியன்.

(உரை) [1] விரகு - தந்திரம். [2] கூட்டு - பலபொருள் கூடியது. [3] கையாறு - செயலறுதல் ; மூர்ச்சை.

391. இனையையாயது - இத்தன்மையையுடையாய் ஆனமை ; நீ இனையையாயது எம்மனோர்பாவம் : பெருங். 1. 36 : 146 ; மேரு. பூர்ண. 38. நீவி - தடவி. புலம்பல் - புலம்பாதே. நினைவு - சென்றதை நினைத்தல். நெடுந்தகை - சீவகன்.

(உரை) [1] அரற்று - யாது செய்வேனென்றல். [2] அவலம் - வருத்தம். [3] அவலம் முதலிய நான்கனுள் 'நினைவெலாம்' (சீவக. 391) என்றதனுல் அவலமும், 'நீர் துடைத்து' (சீவக. 391) என்றதனுல் அரற்றும், 'கவலை நீர்க்கடல்' (சீவக. 390) என்றதனுல் கவலையும், 'மயங்கி வீழ்ந்தான்' (சீவக. 389) என்றதனுல் கையாறும் கூறப்பட்டமை அறிக.

392. மலைபக விடிக்குஞ் சிங்க மடங்கலின் முழங்கி மாநீர்
அலைகடற் றிரையிற் சீறி யவனுயிர் பருக லுற்றுச்
சிலையொடு பகழி யேந்திக் கூற்றெனச் சிவந்து தோன்றும்
இலையுடைக் கண்ணி யானை யின்னணம் விலக்கி னானே.

(இ - ள்.) அவனுயிரைப் பருகலுற்று, திரையின் முழங்கிச் சிங்கக் குட்டி போலச் சீறி வில்லோடும் பகழியேந்திக் கூற்றெனத் தோற்றுங் கண்ணியானை விலக்கினானென்க.

தந்தையைக் கொன்றவனைக் கொல்லாமை விலக்கல் அருமையின், மேற்கூறுகின்ற கூற்றான் விலக்கினமைதோன்ற 'இன்னணம்' என்றார். (௩௯௨)

393. வேண்டுவ னம்பி யானோர் விழுப்பொரு ளென்று சொல்ல
ஆண்டகைக் குரவிர் கொண்மின் யாதுநீர் கருதிற் றென்ன
யாண்டுநே ரெல்லை யாக வவன்றிறத் தழற்சி யின்மை
வேண்டுவ லென்று சொன்னான் வில்வலா னதனை நேர்ந்தான்.

[1] வேண்டுவல் : அல்லீற்றுத் தன்மைச்சொல் ; சந்தியால் னகரம் வந்தது. [2] இர் ஈறு, "கேளிர் வாழியோ" (குறுந். 280) எனநின்றாற் போல [3] இயல்பாய் நின்றது. ஆண்டகைமை கூறிற்று. கொலையை விலக்குவரோவென்று அஞ்சிக் கற்பித்தமுகத்தான் ; [4] அரசனென் றுணர்ந்தான். திறம் - குலம். [5] வல்லான் ; செய்யுளாய் மறையாகாது வழக்காய் உடன்பாடுணர்த்திற்று. இது மேலும் கொள்க.

392. பக - பிளவுபட. சிங்கமடங்கல் : இருபெயரொட்டு. சீவக னுக்குச் சிங்கக்குட்டி உவமை : சீவக. 364, 404 ; இளம்பிராயத்திற் பகையை வெல்லத் தொடங்கினமையின் இவ்விதம் கூறினர் ; பொருந. 139-ஆம் அடி முதலியன இங்கே அறியற்பாலன. மடங்கலிற் சீறி என்றும், திரையின் முழங்கி என்றும் மாறுக. அவன் - கட்டியங்காரன். பருகலுற்று - உண்ணத் தொடங்கி ; என்றது உடனே கட்டியங்காரனைக் கொல்லுதற்கு யுத்தசன்னத்தனான் என்றபடி. சிவந்து - கோபித்து. கண்ணியான் : சீவகன்.

393. சொல்ல - அச்சணந்தியாசிரியன் கூற. கருதிற்று - கருதியது. என்ன - என்று சீவகன் மறுமொழி கூற. அவன் - கட்டியங்காரன். அழற்சியின்மை - கோபமில்லாமை. 'கட்டியங்காரனிடத்துக் கோபி யாது ஒரு வருடம் பொறுத்திருத்தலைக் குருதட்சிணையாகக் கொடு என்று ஆசிரியர் சீவகனை இரந்தாரென்பது க்ஷத்திர சூளாமணி முதலிய நூல்களிற் கூறப்பட்டுள்ளது.

(உரை) [1] 'வேண்டுவல்' என்பவற்றில் முதலிலுள்ளதை. [2] 'குரவிர் என்பதிலுள்ளது. [3] இயல்பாய் - விளியுருபை ஏலாமல். [4] சீவகன் தன்னாசிரியனை அரசனென்று உணர்ந்தான் ; தன்பகையைக் கொல்ல ஒருவன் சேறலை விலக்குதற்கு அரச குலத்திற் பிறந்தவர் அஞ்சுவர். [5] வல்லான் : வல்லமை யுள்ளவன், வல்லமையில்லாதவன் என இருபொருள் பட்டு, விதி, மறை என்னும் இரண்டிலும் வருவதா யினும் இங்கே விதிப்பொருள்பட்டு நின்றது.

(இ - ள்.) நம்பி, யான் ஓர் இடும்பையையுடையதொரு காரியத்தை வேண்டுவலென்று கூற, குரவிர், நீர் கருதிற்று யாது? அதனைக் கொண்மினென, [6] அவன்குலத்தளவில் ஓர்யாண்டிறுதியளவாக அழற்சி யின்மை வேண்டுவலென்று விலக்கிச் சொன்னான்; வில்வல்லானும் நேர்வரியதனை நேர்ந்தா னென்க.

என்று கூறவும் பாடம். (௩௯௪)

394. வெவ்வினை வெகுண்டு சாரா விழுநிதி யமிர்த மின்னீர்
கவ்விய வெஃகி னின்ற கயக்கமி னிலைமை நோக்கி
அவ்விய மகன்று பொங்கு மழல்படு வெகுளி நீக்கி
இவ்விய லொருவற் குற்ற திற்றெனக் கிளக்க லுற்றான்.

வினையைத் தான் வெகுளுதலாலே அது சாரப்படாத அமிர்து; [1] இரத்தினத்திரயம். கயக்கம் - கலக்கம். அவ்வியமகன்று - மனக் [2] கோட்டம் இன்றி. 'இவ்வியலொருவன்' என்று தன்னைப் பிறன்போற் [3] கூறினான், தன்மேலன்பால் வருந்துவனென்று.

(இ - ள்.) ஆசிரியன், சீவகனுக்கு எழுந்த வெய்தான கோபத்தைப் போக்கி, அவனுக்கு அமிர்தம் [4] இரும்புண்ட நீர்போல நின்ற நிலையை நோக்கி, ஒருவற்கு வந்த துன்பத்தை [5] இற்றெனச் செப்பாநின்றா னென்க.

[5] தான் மெய்யுணர்தலின், என்னை விலக்கானென்று இக்கதை கூறுகின்றான். (௩௯௫)

395. (க) வானுறை வெள்ளி வெற்பின் வாரண வாசி மன்னன்
ஊனுறை பருதி வெள்வே லுலோகமா பால னென்பான்
தேனுறை திருந்து கண்ணிச் சிறுவனுக் கரசு நாட்டிப்
பானிறக் குருகி னுய்ந்து பண்ணவர் படிவங் கொண்டான்.

[6] அவன் - கட்டியங்காரன்.

394. 1-2. சீவக. 2830-31; நீல. தரும. 97, உரை. இரும்புண்ட நீர்: மேரு. வைசயந்த. 97. எஃகு - இரும்பு. இவ்வியல் - இத்தன்மை.

(மேற்.) மு: பிரயோக. காரகப். 5.

(உரை) [1] இரத்தினத்திரயம்: சீவக. 374, அடிக். [2] கோட்டம் - கோணல். [3] கூறியவன் ஆசிரியன்; அச்சணந்தியாசிரியன் தன் சரிதத்தை அந்யாபதேசமாகக் கூறினானென்று கத்திய சிந்தாமணியிற் கூறப்பட்டுள்ளது. [4] நெருப்பிற் பழுக்கக் காய்ந்த இரும்பு உண்ட நீர் அவ்விரும்புள் அடங்கியிருத்தல் போல இரத்தினத்திரயங்கள் சீவகனிடம் அடங்கியிருத்தலை அறிந்து. [5] இற்று - இத்தன்மையது. [6] தான் - சீவகன்.

395. வான் - மேகம். வெள்ளி வெற்பு - வித்தியாதரர்களுக்கு உறைவிடம் என்று கூறப்படும் வெள்ளிமலை; அம்மலையில் தக்ஷிண சிரேணி, உத்தரசிரேணி என இரண்டு பகுதிகள் உள்ளன என்றும் முதலாவதில் 50-பட்டணங்களும், இரண்டாவதில் 60-பட்டணங்களும்

396. (உ) வெஞ்சினங் குறைந்து நீங்கவிழுத்தவந்தொடங்கிநோற்கும்
வஞ்சமில் கொள்கை யாற்குப் பாவம்வந் தடைந்த தாகக்
குஞ்சர முழங்கு தீயிற் கொள்கையின் மெலிந்திம் மூதூர்
மஞ்சுதோய் குன்ற மன்ன மாடவீட் டகம்பு குந்தான்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) வெள்ளிமலையில் வாரணவாசியென்னும் ஊரின் மன்னன். பருதிபோற் பகையாகிய இருளைக் கெடுக்கும் வேல். மா, [1] வியங்கோளசை யன்றி இசைநிறைத்து நின்றது; [2] புறனடையால் வந்தது; "ஒக்கல் வாழ்க்கை தட்குமா காலே" (புறநா. 193) என்றாற்போல. [3] அன்னம் போல நல்லனகொண்டு.

(உ) கொள்கை - விரதம்.

(இ - ள்.) மன்னனாகிய உலோகபாலனென்பான், புதல்வனுக்கு அரசை நிறுத்தி ஆய்ந்து தவவேடங் கொண்டான்; கொண்டு தவத்தைத் தொடங்கிச் சினம்போக நோற்குங் கொள்கையாற்குப் பாவம் வந்து சேர்ந்ததாக, யானைத் தீயாலே உணவிடத்தே வருந்தி இவ்வூரில் மாடத் திரளிடத்தே புகுந்தானென்க. (௩௯௬ - ௭)

397. உரைவிளை யாமை மைந்தன் கேட்கிய வுவந்து நோக்கி
வரைவிளை யாடு மார்பன் யாரவன் வாழி யென்ன
விரைவிளை யாடுந் தாரோ யானென விரும்பித் தீம்பாற்
றிரைவிளை யமிர்த மன்ன கட்டுரை செல்க வென்றான்.

---

உள்ளன என்றும் மேருமந்தர புராணம் கூறும். ஊன் : வேலுக்கு அடை. பால் நிறக்குருகு - அன்னப்பறவை. பண்ணவர் - முனிவர். ஒரு நாள் வெள்ளிமலையின்மீது தவழ்ந்த வெள்ளைமேகம் கறுத்துப் பின்பு மறைந்து போனதைக்கண்டு, 'எல்லாம் நிலையா' என்றறிந்த உலோகபாலன் உடனே துறவு பூண்டானென்ற செய்தி கத்திய சிந்தாமணியிற் கூறப்பட்டுள்ளது.

396. கொள்கையான் - உலோகபால முனிவன். குஞ்சரமுழங்குதீ : எதனாலும் தணியாத பெரும்பசியை உண்டாக்கும் யானைத்தீ என்னும் நோய்; சீவக. 401, 403; மணி. பதிகம், 66; 17 : 7, 73; இதனை, 'பஸ்மகவியாதி' என்பர் ஸ்ரீ புராணமுடையார். மாடம் ஈடு அகம் எனப் பிரிக்க; ஈடு - திரள்.

(உரை) [1] உலோகமா பாலன் என்பதிலுள்ள மா, இசை நிறைத்து நின்றது. [2] புறனடை : தொல். இடை. 48. [3] பாலையும் நீரையும் கலந்து வைத்தால் நீரினின்றும் பிரித்துப் பாலை மட்டும் உண்ணுதல் அன்னத்தி னியல்பு.

397. கேட்கிய - கேட்க. வரை - மலை. மார்பன் - சீவகன். விரை - வாசனை. என - என்று ஆசிரியன் கூற. பாற்றிரை - பாற்கடல்.

வரை தனக்கு நிகராகக் கருதி விளையாடும். விரை விளையாடும் - விரை உலாவும்.

(இ - ள்.) மைந்தன், கதை முடிவதற்குமுன்னே கேட்டதற்கு மகிழ்ந்து நோக்கி, நீ கூறிய மார்பன் யார்? அவன்றான் வாழ்வானாக வெனக் கூற, அது கேட்டு, தாரோய், அவன் யானென்று ஆசிரியன் கூற, மேல் கேட்பதாக விரும்பி, அமிர்தமன்ன புனைந்துரை முடிவுபோக [1] நடப்பதாகவென்றானென்க. (௩௯௮)

398. பூத்தின்று புகன்று சேதாப் புணர்முலை பொழிந்த தீம்பால்
நீத்தறச் செல்ல வேவித் தட்டவின் னமிர்த முண்பான்
பாத்தரும் பசும்பொற் றாலம் பரப்பிய பைம்பொற் பூமி
ஏத்தருந் தவிசி னம்பி தோழரொ டேறி னானே.

சேதா : [1] பண்புத்தொகை. பால் பெருக்கறுதலாலே அந்நிலை யறிந்து அதிலிட்ட அரிசியைப் பால்செல்ல வேவப்பண்ணிச் சமைத்த பாலடிசில். ஓடின பொன்.

(இ - ள்.) கந்துகன், அமுதம் உண்ணவேண்டித் தாலம் பரப்பிய பூமியிலே தவிசின் மேலே தோழரோடு ஏறினானென்க. (௩௯௬)

399. புடையிரு குழையு மின்னப் பூந்துகில் செறிந்த வல்குல்
நடையறி மகளி ரேந்த நல்லமிர் துண்ணும் போழ்தின்
இடைகழி நின்ற வென்னை நோக்கிப்போந் தேறு கென்றான்
கடல்கெழு பருதி யன்ன பொற்கலத் தெனக்கு மிட்டார்.

நடை - சோறிடு முறைமை.

(இ - ள்.) மகளிர், இருகுழையும் மின்னநிற்க அமுதமேந்தத் [1] தான் அதனை உண்ணுங்காலத்தே, என்னைப் பார்த்து இங்ஙனே போந்து ஏறுவீராக வென்றான்; யான் ஏறினவளவிலே, பொற்கலத்தே எனக்கும் அமுதமிட்டாரென்க. (௩௦௭)

---

(உரை) [1] நடப்பதாக - சொல்லுக.

398. புகன்று - விரும்பி. சேதா - பசு; சீவக. 481. வேவித்து - வேவச்செய்து. அமிர்தம் - பாலன்னம். பாத்தல் - பகுத்தல். பாத்தரும் பசும்பொன்; சீவக. 87. தாலம் - உண்கலம். நம்பி - கந்துக்கடன்.

(உரை) [1] செம்மையாகிய பசு.

399. புடை - பக்கம். மகளிர் அமுதேந்த என மாறுக. இடைகழி - வழிக்கு இடையே கழிந்துள்ள இடம்; ரேழி என வழங்கும் (பட்டினப். 144; பெருங். 1. 33 : 16). பருதி - சூரியன். பருதியன்ன பொற்கலம்: பெரும்பாண். 243-4.

(உரை) [1] தான் - கந்துக்கடன்.

400. கைகவி நறுநெய் பெய்து கன்னலங் குடங்கள் கூட்டிப்
பெய்பெயென் றுரைப்பயானும் பெருங்கடல் வெள்ளிக் குன்றம்
பெய்துதூர்க் கின்ற வண்ணம் விலாப்புடை பெரிதும் வீங்க
ஐயன தருளி னல்யா னந்தணர் தொழிலே னனேன்.

விரைவின்கண் [1] இருகால் அடுக்குதல் இக்கால வழக்கு.

(இ - ள்.) இவற்குக் கைகவித்தற்குக் காரணமான நெய்யைப் பெய்து குடங்களையும் ஒன்றேடொன்று சேர்த்திப் பெய்பெய்யென்று கந்துகன் கூற, [2] அவர்சொரிதலின், யானும் வெள்ளிமலையைப் போகட்டுக் கடலைத்தூர்க்கின்ற வண்ணம் விலாப்புடை வீங்கத் [3] தூர்த்து உன்னருளாலே அறவோர் தொழிலனேனென்க.

[4] திருத்தியை அடைந்தேனென்றான். (௩எக)

401. சுரும்புடை யலங்கன் மாலைச் சுநந்தையுந் துணைவன் றானும்
விரும்பின ரெதிர்கொண் டோம்ப வேழவேந் தீயி னீங்கி
இருந்தனெ னேம முந்நீ ரெறிசுற வுயர்த்த தோன்றற்
கரும்புடைக் காளை யன்ன காளைநின் வலைப்பட் டென்றான்.

அலங்கன்மாலை - அசையும் மாலை. சுறவுயர்த்த - சுறவை மேம்படுத்தின.

(இ - ள்.) தலைமையையுடைய காமனையொத்த காளாய், நின் வலைப்படுதலாலே, சுநந்தையும் துணைவனும் விரும்பினராய் வழிபட்டுப் பேண, யானைத்தீயினின்றும் நீங்கியிருந்தேனென்றானென்க.

பின்னர்ப் பசி தோன்றாதிருத்தலின் நீங்கியென்றான். இவன் நோய் தீர்த்த நிலையை வலையென்றான். இது விளக்கிப்போகக் கருதலிற் பட்டென்றான். (௩எ௨)

---

400. கைகவி நறுநெய் - போதுமென்று கைகவித்தற்குக் காரணமான நல்ல நெய்; பொருந. 158, ந. கன்னல் - சருக்கரை. உரைப்ப - கந்துக்கடன் சொல்ல. கடல் தூர்க்கின்ற வண்ணம் என இயைக்க. ஐயனதருளினல் - ஐயனாகிய உனது அருளினல். அந்தணர் இயல்பு: பாகவதம், 8. 7 : 46.

(உரை) [1] "விரைசொல் லடுக்கே மூன்றுவரம் பாகும்" (தொல். எச்ச. 28) என்பது பழைய வழக்கு. [2] அவர் - அம்மகளிர். [3] தூர்த்து என்பது வருவிக்கப்பட்டது; விலாப்புடை வீங்கத் தூர்த்து என்றமையால் பெரும்பசிக்குக் காரணமான யானைத்தீ கெடும்படி நிரம்ப உண்டமை அறியலாகும். [4] திருத்தி - திருப்தி.

401. துணைவன் - கணவன்; கந்துக்கடன். வேழவெந்தீ - யானைத்தீ. ஏமம் - இன்பம்; பாதுகாப்புமாம். தோன்றல் - தலைமை (சீவக. 316). ஏம முந்நீர்.........காளை : "ஏம முந்நீ ரெறிசுற வுயர்த்த, காமன்" (பெருங். 1. 40 : 182). கரும்புடைக் காளை - கரும்பாகிய வில்லையுடைய மன்மதன்; மன்மதன் சுறாமீனைக் கொடியாகவுடையவன். காளை : விளி.

402. நிலம்பொறுக் கலாத செம்பொ னீணிதி நுந்தை யில்லம்
நலம்பொறுக் கலாத பிண்டி நான்முகன் றமர்கட் கெல்லாம்
உலம்பொறுக் கலாத தோளா யாதலா லூடு புக்கேன்
கலம்பொறுக் கலாத சாய லவருழை நின்னைக் கண்டேன்.

நிதி - திரள். தன் நலம் தான் பொறுக்கமாட்டாத. [1]எல்லா மூர்த்தமும் இவனுதலின், 'நான்முகன்' என்றார்; "ஆதிவேதம் பயந்தோய்நீ" (சீவக. 1242), "மலரேந்து சேவடிய மாலென்ப" (சீவக. 1610) என்ப மேலும்.

(இ - ள்.) தோளாய், நிதியையுடைய நுந்தையில்லம் துறந்தவர்க் கெல்லாம் இல்லமாதலால், உள்ளே சென்றேன்; மகளிரிடத்தே நின்னைக் கண்டேனென்றானென்க. (ருஎரு)

403. ஐயனைக் கண்ணிற் காண யானைத்தீ யதகங் கண்ட
பையணா ளுகம் போல வட்கயான் பெரிது முட்கித்
தெய்வங்கொலென்றுதேர்வேற் கமிர்துலாய்நிமிர்ந்ததேபோல்
மொய்குரன்முரசநாணுந் தழங்குரன்முழங்கக்கேட்டேன்.

[1] நாகம் : ஆகுபெயர்.

(இ - ள்.) நின்னைக் கண்ணுற் கண்டேனுக, யானைத்தீ, மருந்து கண்ட நஞ்சு போலக்கெடுதலாலே, யான் அஞ்சித் தெய்வமோவென்று ஆராய்வேற்கு அமிர்து நிமிர்ந்ததேபோல் உலாவப்பட்டு முரசம் நாணும் வார்த்தை அவ்விடத்தே முழங்க அதனைக் கேட்டேனென்றானென்க.

---

402. நிலம்......நீணிதி : சீவக. 495; மதுரைக். 215; மலைபடு. 575 : பெருங். 1. 32 : 60. நிதி - பெரிய பொருள் (சீவக. 495). நுந்தை - உன் தந்தை; கந்துக்கடன். நான்முகன் தமர் - அருகதேவனுடைய அடியார்கள். நலம் பொறுக்கலாத நான்முகன் : சிறுபாண். 127. உலம் - உருண்டைக்கல். 'நுந்தையில்லம் தமர்கட்கெல்லா மாதலால்' என இயைக்க. ஊடு - உள்ளே. கலம் - ஆபரணம்.

(உரை) [1]ஐந்து தொழிற்கும் உரிய எல்லாக் கடவுளும் அருகன் : நன். எழுத். சொல். கடவுள் வாழ்த்துக்களின் விசேட வுரைகள் இங்கே அறியற்பாலன. கருமங்கெட்ட பின்பு அருகதேவனுக்கு உண்டாகும் அதிசயங்கள் பத்தனுள் சதுரானனத்துவம் ஒன்றென்பர்.

403. அதகம் = அகதம் - மருந்து; எழுத்து நிலை மாறல்; "எரி தழல் விடத்தை, மலைமறை யதக மாற்றி யாங்கு" (கல். 'நிணமுயி ருண்ட' 8). அணல் - கீழ்வாய். வட்க - கெட. தழங்கு குரல், தழங்குர லென்றானது விகாரம்.

(உரை) [1] நாகம் அதன் விடத்திற் கானமையின் ஆகுபெயர்.

'ஐயநிற்கண்ணின்' என்றும் பாடம். [2] இவனிருக்கின்ற மனையாதலின் இவனைக் காண்பதற்கு முன்னே குறைந்து இவனைக் கண்டபின் [3] பொன்றக் கெட்டது. (௩எச)

404. கோட்டிளந் திங்கள் சூழ்ந்து குலவிய திருவிற் போல
மோட்டொலி முத்தஞ் சூழ்ந்து முருகுகொப் புளிக்குந் தாரோய்
கேட்டளப் பரிய சொல்லுங் கிளரொளி வனப்பு நின்னைச்
சேட்டிளஞ் சிங்க மன்னாய் சாதகஞ் செய்த வென்றான்.

திங்களை வளைத்திட்ட விற்போல முத்தைச் சூழ்ந்து தேன் கொப்புளிக்கும் தார். சேடு - பெருமை.

(இ - ள்.) தாரோய், சிங்கமன்னாய், அங்ஙனம் கேட்டு அளவிடுதற்கரிய வார்த்தையும் வனப்பும் [1] நின்னைப் பிறப்பை அறிவித்தன வென்றானென்க. (௩எரு)

405. கோளியங் குழுவை யன்ன கொடுஞ்சிலை யுழுவன் கேட்டே
தாளிய றவங்க டாயாத் தந்தைநீ யாகி யென்னை
வாளியங் குருவப் பூணாய் படைத்தனை வாழி யென்ன
மீளியங் களிற னயான் மெய்ந்நெறி நிற்ப லென்றான்.

கோளியங்கு - கொலைத்தொழிலிலே நடக்கின்ற.

(இ - ள்.) சீவகன், அதனைக்கேட்டு ஒளியியங்காநின்ற உருவமாகிய பூணையுடையோய், முயற்சியாற் பிறந்த தவங்கள் தாயாக, நீ தந்தையாகி என்னைப் படைத்தனையென்ன, ஆசிரியன் களிறனாய், யான் தவநெறியிலே நிற்பேனென்றானென்க.

---

[2] இவன் - சீவகன். [3] பொன்றக்கெட்டது - முற்றக்கெட்டது ; சீவகன் கையாலெடுத்துக் கொடுத்த உணவை உண்டபின் உலோகபால முனிவனுக்குப் பசி அடியோடு கெட்டதென்று சில வடநூல் கூறும்.

404. கோட்டிளந்திங்கள் : பெருங். 1. 33 ; 58 ; கோடு - பிறையின் இருபக்கத்தும் உள்ள முனை. திருவில் - இந்திரவில். மோடு - பெருமை. முருகு - வாசனையுமாம். முத்த மாலைக்குத் திங்களும், தாருக்கு இந்திர வில்லும் உவமைகள். வனப்பு - அழகு. சாதகம் - பிறப்பு.

(உரை) [1] நின்பிறப்பை.

405. உழுவை - புலி. உழுவன் - வீரன் ; சீவகன். தாள் - முயற்சி. ஆசிரியன் ஞான பிதாவாதலின் 'தந்தை நீயாகி' என்றான். வாள் - ஒளி. என்னைப் படைத்தனை என இயைக்க. மீளி - பெருமை.

நல்வினையால், இக்கலைகளைக் கற்றுத் [1] தான் வேறொரு பிறப் பானமை கூறினான். (௩எ௬)

406. மறுவற மனையி னீங்கி மாதவஞ் செய்வ லென்றாற்
பிறவற மல்ல பேசார் பேரறி வுடைய நீரார்
துறவறம் புணர்க வென்றே தோன்றறு டொழுது நின்றான்
நறவற மலர்ந்த கண்ணி நன்மணி வண்ண னன்னான்.

அறமல்லவாகிய பிற - விலக்குஞ்சொற்கள். நறவு அற - நறு நாற்றம் தன்னிடத்தே தங்க.

(இ - ள்.) மணிவண்ணனன்னான், அறிவுடையோர் இல்லறத்தி னின்று நீங்கி மறுவறத் தவஞ்செய்வலென்றாற் பிற பேசார் உலகத்தார்; ஆதலால், யானும் அதுவே கூறுவேன்; துறவறத்தைக் கூடுகவென்று அவனுடைய தாளைத் தொழுது நின்றானென்க.

ஒருவன் துறப்பேனென்றால் அறிவுடையோர் விலக்காராதலின், [1] இவனும் அதற்கு உடன்பட்டானெனத் [2] தேவர் கூற்றுமாம். (௩எஎ)

407. கைவரை யன்றி நில்லாக் கடுஞ்சின மடங்க லன்னான்
தெவ்வரைச்செகுக்கு நீதிமனத்தகத்தெழுதிச்செம்பொற்
பைவிரி யல்கு லாட்கும் படுகட னிதியின் வைகும்
மைவரை மார்பி னாற்கு மனமுறத் தேற்றி யிட்டான்.

கை வரையன்றி நில்லா - ஒழுக்கத்தின் எல்லைகடவாத; யானையை மாறுபட்டு நில்லாதவென்றுமாம். பைபோல விரிந்த - கடல்போல் நிதி.

(இ - ள்.) மடங்கலன்னான், தன்பகைவரைக் கொல்லுமுறை மையை [1] அவன் மனத்தே நிலைபெறுத்தி, சுநந்தைக்கும் கந்துகனுக்கும் சீவகன் கல்வியையும் [2] தீக்கையையும் தன்துறவையும் மனம் கொள்ளும் படி தெளிவித்தானென்க. (௩எஅ)

(உரை) [1] தான் - சீவகன்.

406. மறு - குற்றம். தோன்றல் - அச்சணந்தியாசிரியன். மணி வண்ணன் அன்னான் - திருமாலைப்போன்ற சீவகன்.

(உரை) [1] இவன் - சீவகன். [2] தேவர் - இந்நூலாசிரியராகிய திருத் தக்க தேவர்; கவிக்கூற்றுமாம் என்றபடி.

407. கைவரை - ஒழுக்கத்தின் எல்லை; கை - ஒழுக்கம்; யானையு மாம். அன்னான் - ஆசிரியன். தெவ் - பகை.

(உரை) [1] அவன் - சீவகன். [2] தீக்கை - தீக்ஷை; சைனர்க்கும் தீக்ஷை உண்டென்பர்; அது ஜிநதீக்ஷை என்று சொல்லப்படும்.

408. அழலுறு வெண்ணெய்போல வகங்குழைந் துருகி யாற்ருள்
குழலுறு கிளவி சோர்ந்து குமரனைத் தமியனுக
நிழலுறு மதிய மன்ருய் நீத்தியோ வெனவு நில்லான்
பழவினை பரிய நோற்பான் விஞ்சையர் வேந்தன் சென்ருன்.

(இ-ள்.) சுநந்தை ஆற்ருளாய்ச் சோர்ந்து, கலைகள்நிறைந்தவனே, குமரனைத் தமியனும்படி நீத்தியோவென்று கூறவும் நில்லானுய், வேந்தன் பழவினை கெடும்படி தவஞ்செய்வதற்குச் சென்ருனென்க.

இது [1] நாமகளைக்கூடின இலம்பகமென்க; [2] இலம்பகம் வடசொல். (௩எ௯)

க – நாமகளிலம்பகம் முற்றிற்று.

ஆகக்கவி, ௪௦௮.

---

408. குழல் - வேய்ங்குழல். குமரன் - சீவகன். நிழல் - ஒளி. நீத்தியோ - துறக்கின்ருயோ. எனவும் - என்று சுநந்தை கூறவும். பரிய - கெடும்படி. வேந்தன் - உலோகபாலன்; ஆசிரியன்.

(உரை) [1] நாமகளைக் கூடின - கல்வி பயின்ற என்பது பொருள்; சீவக. 370, உரை. [2] தண்டி. 7.

இரண்டாவது

# கோவிந்தையாரிலம்பகம்



409. ஆர்வ வேரரிந் தச்ச ணந்திபோய்
வீரன் றுணிழல் விளங்க நோற்றபின்
மாரி மொக்குளின் மாய்ந்து விண்டொழச்
சோர்வில் கொள்கையான் றேற்ற நீங்கினுன்.

ஆர்வவேர் - ஆசையென்கிற பிறவிவேர். அச்சணந்தி - [1] ஆரிய நந்தி. வீரன் தாள்நிழல் - [2]ஸ்ரீவர்த்தமானஸ்வாமிகள் [3]சமவ சரணத்தே. மொக்குளின் மாய்தல் - வீடு பெறுங்கால் திருமேனியுடனே மறைதல்.

(இ - ள்.) அச்சணந்தி, இவ்விடத்துநின்றும் போய், தாள்நிழலிலே விளங்கும்படி வேரையரிந்து நோற்றபின்பு, அக்கொள்கையான், விண் டொழ மொக்குளின் மாய்ந்து பிறவி நீங்கினுனென்க. (க)

410. நம்ப னித்தலை நாக நன்னகர்ப்
பைம்பொ னோடைசூழ் பரும யானையும்
செம்பொ னீள்கொடித் தேரும் வாசியும்
வெம்ப வூர்ந்துலாம் வேனி லானினே.

409. ஆர்வம் - ஆசை. ஆர்வவேரரிந்து : குறள், 361; பாகவதம், 1. 2 : 9. வீரன்றுணிழல் : சீவக. 1087. மொக்குள் - நீர்க்குமிழி. மாய் தல் - மறைதல் ; சீவக. 54, 453, 1617 ; மதுரைக். 172 ; சிலப். 9 : 2. மாரி மொக்குளின் மாய்ந்து : நாலடி. 27 ; மேரு. மன்னனும். 75 ; கம்ப. கிளைகண்டு. 79, இந்திரசித்துவதை. 9. விண் - விண்ணுலகத்திலுள்ள தேவர் ; ஆகுபெயர். கொள்கை - தவம். தோற்றம் - பிறவி.

(உரை) [1] ஆரியநந்தி என்பதும் சீவகனுடைய ஆசிரியன் பெயர். [2] ஸ்ரீவர்த்தமானஸ்வாமிகள் : ஜைனநூலிற் கூறப்பட்டுள்ள தீர்த்தங்கரர் களுள் இருபத்து நான்காந்தீர்த்தங்கரர் ; அவருக்கு வீரர் என்னும் பெயருமுண்டு ; சீவக. 3012. [3] சமவசரணம் - ஸ்ரீ வர்த்தமானஸ்வாமிக ளுடைய ஆலயம் ; சீவக. 27, அடிக். அஃது அவருடைய தாள்நிழலாகக் கூறப்படும் ; சீவக. 27.

410. நம்பன் - நமக்குச் சிறந்தவன் ; சீவகன். நாகம் - பவண லோகம் ; பாம்புகளின் உலகம். ஓடை - யானையின் நெற்றிப்பட்டம். வெம்புதல் - விரும்புதல் ; சீவக. 2. வேனிலான் - மன்மதன்.

(இ - ள்.) பிள்ளையார், இவ்வுலகில் நாகம்போலும் இராசமாபுரத்தே யானை முதலியவற்றைக் கண்டார் விரும்ப ஏறி, வேனிலானே போல மகளிர்க்கு வேட்கை விளைத்து நடக்குமென்க. (உ)

(வேறு)

411. கலையின தகலமுங் காட்சிக் கின்பமும்
சிலையின தகலமும் வீணைச் செல்வமும்
மலையினி னகலிய மார்ப னல்லதிவ்
வுலகினி லிலையென வொருவ னாயினான்.

இதனால், சீவகற்குப் பதினையாண்டு சென்றபின் நல்வினையாற் பிறக்கின்ற குணங்கள் கூறுகின்றார்.

கலையினதகலம் - கல்விகாரணமாகப் பிறப்பதொரு ஞானம். காட்சிக் கின்பம் - அப்பருவத்திலே பிறப்பதோர் அழகு. சிலையினதகலம் - படைக்கலம் பயின்றவாற்றால் அப்பருவத்துப் பிறக்கும் வீரம். வீணை - தாளத்தோடே கண்டத்திலும் [1] கருவியிலும் பிறக்கும் பாட்டு; இசை நாடகம் காமத்தை விளைத்தலின், அவற்றாற் பிறக்குங்காமத்தை, 'வீணைச்செல்வம்' என்றார்.

(இ - ள்.) ஞானமும் அழகும் வீரமும் காமமுமாகின்றான் சீவகன்; இவனல்லாது இவ்வுலகில் ஞானமுதலியன இல்லையென்னும்படி தான் ஒருவனேயாயினானென்க.

அரசர்க்குச் சிறந்தன இந்நான்கென்றார்.

இனி, கலையினதகலம் - நாமகள்; காட்சிக்கின்பம் - [2] வீற்றுத் தெய்வம்; சிலையினதகலம் - [3] வீரமகள்; வீணைச்செல்வம் - [4] மாதங்கி. இவர்கள் தாம் இவனல்லது வேறு யாங்களென்று இல்லையென்னும்படி ஆயினானென்றுமாம். (௩)

---

411. காட்சி - காணுதல். சிலை என்றது மற்றப் படைக்கலங்களுக்கும் உபலட்சணம். சீவகன் வீணையில் மிக்க பயிற்சியுள்ளவன்: சீவக. 28, அடிக். மலையினின்: வேற்றுமையுருபு இன்சாரியையோடு வந்தது; "கற்பினின் வழாஅ நற்பல வுதவி" (அகநா. 86 : 13) என்புழிப்போல. அகலிய - அகன்ற.

(மேற்.) மு: சிலப். 1 : 36-9, அடியார்.

(உரை) [1] கருவி - வீணைமுதலியன. [2] வீற்றுத் தெய்வம் - வேறொன்றற் கில்லாத அழகைத் தருவதொரு தெய்வம்; சீவக. 171, 606, உரை; சிலப். 2 : 69-70, அடியார். [3] வீரமகள் - வீரலக்ஷ்மி. [4] மாதங்கி: சங்கீதத்தின் அதிதேவதை; வீணைக்குரிய தெய்வம் என்பர்; சீவக. 550; பொருந. 20, ந.

(வேறு)

412. நாம வென்றிவே னகைகொண் மார்பனைக்
காம னேயெனக் கன்னி மங்கையர்
தாம ரைக்கணாற் பருகத் தாழ்ந்துலாம்
கோம கன்றிறத் துற்ற கூறுவாம்.

நகை - முத்துவடம்.

(இ - ள்.) அங்ஙனம் ஒருவனாகிய மார்பனை மங்கையர் காமனே யென்று தாழ்ந்து கண்ணாற் பருகும்படி நடக்கும் சீவகனிடத்துப் பிறந்த காரியங்களைக் கூறுவாமென்றாரென்க. (௪)

413. சில்லம் போதின்மேற் றிரைந்து தேனுலாம்
முல்லை காரெனப் பூப்ப மொய்ந்நிரை
புல்லு கன்றுளிப் பொழிந்து பால்படும்
கல்லென் சும்மையோர் கடலின் மிக்கதே.

பின்பனிக்கு அழிகின்றமையின், சிலவான அழகிய போதின் மேலே தேனினம் சாய்ந்துலாவு முல்லையென்று அடை கூறியது. இப்பொழுது காரெனப் பூக்கும்படியாகவென்க. பால்படும் சும்மை - பசுக் கறக்கிற ஒலி.

(இ - ள்.) நிரை, தான் புல்லுங் கன்றை நினைத்து, முல்லை காரெனப் பூப்பத் தானே பாலைப்பொழிதலாற் படும் ஒலி ஒரு கடலினுமிக்கதென்க. (௫)

414. மிக்க நாளினால் வேழ மும்மதம்
உக்க தேனினோ டூறி வார்சுனை
ஒக்க வாய்நிறைந் தொழுகு குன்றின்மேல்
மக்க ளீண்டினார் மடங்கன் மொய்ம்பினார்.

உக்க தேனுடனே மும்மதம் ஊறுதலாலே சுனைகளெல்லாம் தம்மில் ஒக்கவாய் நிறைந்து ஒழுகுங்குன்று.

(இ - ள்.) இங்ஙனம் ஒலிமிக்க நாளிலே குன்றின்மேல் மொய்ம்பினா ராகிய வேடரெல்லாரும் வந்து தங்களிலே திரண்டாரென்க. (௬)

---

412. நாம் - அச்சம்; அம் : சாரியை. நகை - முத்தமாலை; பெருங். 2. 6 : 96, 3. 5 : 52. மார்பன் : சீவகன். இப்பாடல் கவிக் கூற்று.

413. சில் அம் போது எனப்பிரிக்க, போது - மலரும் பருவத்து அரும்பு. தேன் - ஒருவகை வண்டு. கார் என - கார்காலமென்றெண்ணி. முல்லை கார்காலத்தில் மிகுதியாகப் பூக்கும்; குறுந். 108. நிரை - பசுக் கூட்டம். கன்று உள்ளி - கன்றை நினைத்து. சும்மை - ஒலி.

414. உக்க - சிந்திய. வேழத்தின்மும்மதம் உக்க தேன்; சீவக. 37. ஊறி - ஊறுதலால். ஒக்க - ஒன்றுசேர. மக்கள் : இங்கே வேடர்களைக் குறித்தது. மடங்கல் - சிங்கம்.

415. மன்ன வன்னிரை வந்து கண்ணுறும்
இன்ன நாளினுற் கோடு நாமெனச்
சொன்ன வாயுளே யொருவன் புட்குரல்
முன்னங் கூறினுன் முழுது ணர்வினுன்.

இன்ன நாள் - இளவேனிற்குரிய நாள்.

(இ - ள்.) அங்ஙனம் [1] ஈண்டினவர்கள், இத்தன்மைத்தாகிய நாளிலே நிரை வந்துசேரும்; அதனை நாம் கொள்ளுதுமெனக் கூறிய அப்பொழுதே, புட்கூறிய குரலின் குறிப்பை, நிமித்தமெல்லாவற்றிலும் அறிவுடையானெருவன் கூறினுனென்க.

அது மேற்கூறுகின்ருர். (எ)

416. (க) அடைது நாநிரை யடைந்த காலையே
குடையும் பிச்சமு மொழியக் கோன்படை
உடையும் பின்னரே யொருவன் றேரினுல்
உடைதுஞ் சுடுவிற்றே னுடைந்த வண்ணமே.

417. (உ) என்று கூறலு மேழை வேட்டுவீர்
ஒன்று தேரினு லொருவன் கூற்றமே
என்று கூறினு மொருவ னென்செயும்
இன்று கோடுநா மெழுகென் றேகினுர்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) பிச்சம் - [1] பீலியாற்கட்டுவன. சுடுவில் - சுடுவால்; சுடுதலென வினைமேனின்ற வினைப்பெயரன்றி வினைமாத்திரையுணர்த்தி நின்று உரு பேற்றது; தேனினம்போலக் கெடுதுமெனவே தமக்குப் [2] பாடின்மை கூறினுன்.

---

415. கண்ணுறும் - சேரும். ஒருவன் - ஒரு வேடன். புள் - இங்கே ஆந்தை; சீவக. 450, ந.

(உரை) [1] வேடர்கள்.

416. குடையும் பிச்சமும்: பெருங். 1. 38 : 26; கம்ப. மந்திரப். 26. பிச்சம்: பிஞ்சமென்னும் வடமொழிச் சிதைவு. உடைதும் - தோற்றுப்போவோம். சுடுவில் - சுடுதலால். சுடுதலால் தேனினம் கெடல்: சீகாளத்திப். நான்முக. 73.

417. என்று கூறலும் - என்று நிமித்திகன் கூறுதலும். ஏழை வேட்டுவீர்: பெருங். 1. 56 : 16; ஏழை - அறிவின்மை. தேர் ஒன்றினுல் என மாறுக.

(மேற்.) அடி, 2 : இ - வி. உயிரீற்றுப். 54.

(உரை) [1] பீலி - மயிலிறகு. [2] பாடின்மை - அழிவின்மை.

(இ - ள்.) நாம் நிரையை அடிப்போம்; அடித்த பொழுதே, அரசன் படைவந்துபொருது குடையும் பிச்சமும் அவ்விடத்தே கிடக்கத் தான் கெடும்; அது கெட்ட பின்பு சுடுதலால் தேனினம் கெட்டாற்போல ஒருவன்தேரா ற் கெடுவேமென்று [3] நிமித்திகன் கூறினான்; அவன் கூறினவளவிலே, அவனை வேட்டுவீரென இகழ்ந்து, ஒருவனைக் கூற்ற மேயென்று உலகங்கூறினும், அவ்வொருவன் ஒருதேரால் ஒன்றுஞ் செய்யமாட்டான்; ஆகலின், இன்று கொள்ளக்கடவேம்; எழுந்திருப்பீ ராகவென்று கூறி நிரை நிற்கிற இடம் நோக்கிப் போனாரென்க. (அ - கூ)

418. வண்டு மூசரு நறவ மார்ந்தவர்
தொண்ட கப்பறை துடியொ டார்த்தெழ
விண்டு தெய்வதம் வணங்கி வெல்கென
மண்டி னார்நிரை மணந்த காலையே.

[1] மூசரு: விகாரம். தொண்டகப்பறை - [2] ஆகோட்பறை. விண்டு - அரசனுடன் பகைத்து.

(இ - ள்.) அங்ஙனம் ஏகினவர், நறவமார்ந்து, பறை துடியோடு ஆர்த்தெழ [3] முருகனைவணங்கி விண்டு, நிரைவந்து கூடின அளவிலே வெல்கவெனக் கூறி மிக்குச்சென்றாரென்க. (கo)

419. (க) பூத்த கோங்குபோற் பொன்சு மந்துளார்
ஆய்த்தி யர்நலக் காசெ றாணனன்
கோத்த நித்திலக் கோதை மார்பினான்
வாய்த்த வந்நிரை வள்ளு வன்சொனான்.

[3] நிமித்திகன் - சகுனம் கூறுபவன்.

415 - 7. மிதிலையிலிருந்து தசரதர் புறப்பட்டபொழுது அவருக்கு ஒரு கணி நிமித்தம் சொன்னதாகத் தெரிகிறது; கம்ப. பரசுராமப். 6.

418. மூசு அரு - மொய்த்தல் நீங்காத. நறவம் - கள். தொண்டகப் பறை குறிஞ்சிநிலத்துக்குரியது. தெய்வதம்: இங்கே முருகக்கடவுள். மண்டினார் - மிக்குச் சென்றார். நிரை மணந்தகாலை - பசுநிரைகள் கூடிய சமயத்தில்.

(உரை) [1] மூசுதல் என்பது மூசு என்றானது. [2] ஆ கோட்பறை - பசுக்களைக் கொல்லுதற்பொருட்டு அடிக்கும் வாத்தியம். [3] முருகக்கடவுள் குறிஞ்சி நிலத்திற்குரிய தெய்வம்.

419. கோங்கு - ஒருவகை மரம்; அதன் பூக்கள் பொன்னிற முடையன. பூத்தகோங்குபோல் பொன்சுமந்துளார்: பெருங். 4. 11 : 47-8; பொன் - ஆபரணம்; ஆகுபெயர். ஆய்த்தியர் - ஆய்ச்சியர். நலக்கு - நலத்துக்கு. வாய்த்த - நிமித்தம் கூறுதல் தப்பாத. வள்ளுவன் - வருங் காரியம் உரைப்பவனாகிய நிமித்திகன்.

420. (௨) பிள்ளை யுள்புகுந் தழித்த தாதலால்
எள்ளன் மின்னிரை யின்று நீரென
வெள்ளி வள்ளியின் விளங்கு தோணலார்
முள்கு மாயரும் மொய்ம்பொ டேகினார்.

இவை இரண்டும் ஒருதொடர்.

(க) சுமந்திருப்பாராகிய ஆய்த்தியர். கோதை - பூமாலை. நித்திலத்தை யுடைய மார்பினன் - நந்தகோன். வாய்த்த - தப்பாத.

(௨) வெள்ளியாற்செய்த வளையினையுடைய தோள்.

(இ - ள்.) ஆய்த்தியர் நலஞ்சேர்தற்கு [1] ஆதீண்டு குற்றியை ஒப்பானாகிய நந்தகோனுடைய அந்நிரையிலே வாய்த்த நிமித்திகன், நிரைக்குள்ளே புகுந்து காரி [2] அழித்ததாகலால், இன்று நீர் நிரையைக் காவல் இகழாதொழிமினெனச் சொன்னான்; அதுகேட்டுப் [3] புதுமணவாளப் பிள்ளைகளும் மொய்ம்புடனே காத்தற்கு ஏகினாரென்க. (கக - ௨)

421. காய மீனெனக் கலந்து கானிரை
மேய வெந்தொழில் வேட ரார்த்துடன்
பாய மாரிபோற் பகழி சிந்தினார்
ஆயர் மத்தெறி தயிரி னாயினார்.

(இ - ள்.) ஆகாயமும் மீனுமென்னும்படி காட்டிலே கலந்து நிரை மேய்கிற அளவிலே, வேடர் ஆர்த்துப் பரந்த மழைபோலப் பகழியை உடனே சிந்தினாராக, போரிற்கு ஆற்றாராய் ஆயர், மத்தாற்கடைந்த தயிர்போலச் சிதறினாரென்க. (கங)

420. பிள்ளை - காரியென்னும் பறவை; காரிப்புள் நிரைக்குள் புகுந்து அழித்தல்: சீவக. 1849. வள்ளி - வளை. வெள்ளி வள்ளியின் விளங்குதோணலார்: நெடுநல். 36; பெருங். 2. 14 : 56. முள்குதல் - முயங்குதல்; சீவக. 687, 1413, 1986; "முள்குவார் போகம் வேண்டின்" (தே. திருநா.). மொய்ம்பு - வன்மை.

(உரை) [1] ஆதீண்டு குற்றி - பசுக்கள் தம் தினவைப் போக்கிக் கொள்ளுதற்பொருட்டு உராய்ந்து கொள்ளுவதற்கு நாட்டப்பட்டுள்ள கட்டை; குற்றி - கட்டை. [2] அழித்தது - எழுந்தது.; [3] புதுமணவாளப் பிள்ளைகள் போருக்குச் செல்லுதல் மரபன்று என்பர்.

421. காயமீன் - காயமும் மீனும்; உம்மைத்தொகை; காயம் - ஆகாயம்; முதற்குறை; பெருங். 1. 42 : 76. பசுக்களுக்கு விண்மீன்கள் உவமை: புறநா. 399 : 30 - 31. மத்தெறிதயிர்: கம்ப. சடாயு. 23.

(மேற்.) அடி, 3 - 4 : நன். வினை. 32, மயிலை; சங்கர.

422. (க) குழலு நவியமு மொழியக் கோவலர்
கழலக் காடுபோய்க் கன்று தாம்பரிந்
துழலை பாய்ந்துலா முன்றிற் பள்ளியுள்
மழலைத் தீஞ்சொலார் மறுக வாய்விட்டார்.

423. (உ) மத்தம் புல்லிய கயிற்றின் மற்றவர்
அத்த லைவிடி னித்த லைவிடார்
உய்த்த னரென வுடைத யிர்ப்புளி
மொய்த்த தோணலார் முழுது மீண்டினர்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(உ) மற்று : அசை.

(இ - ள்.) அங்ஙனம் சிதறின கோவலர், குழலும் கோடாலியும் அங்கே கிடக்கக் காட்டைக் கழலப்போய், இடைச்சேரியில் மகளிர் நின்று சுழலும்படி, அவ்வேடர் கயிறுபோல அத்தலையை நெகிழவிட்டாராயின் இத்தலையை நெகிழவிடார்; ஆதலால், இனி அந்நிரையைக் கொண்டே போயினரென வாய்விட்டார்; அதுகேட்டுத் தோள்முழுதும் தயிர்ப் புள்ளி செறிந்த நல்லார் திரண்டாரென்க.

'உய்த்தனர்' என இறந்தகாலத்தாற் கூறினர், தெளிவுபற்றி.
(கச - ரு)

(வேறு)

424. வலைப்படு மானென மஞ்ஞையெ னத்தம்
முலைப்படு முத்தொடு மொய்குழல் வேய்ந்த
தலைப்படு தண்மலர் மாலைபி ணங்க
அலைத்த வயிற்றின ராயமு திட்டார்.

---

422. குழல் - வேய்ங்குழல். நவியம் - கோடாலி; இஃது ஒடியெறிதற்குக் கொள்ளுவது; புறநா. 224 : 14-5. கோவலர் - இடையர். கழல - நீங்க. காடுகழலப்போய் எனமாறுக. கன்று தாம்பு அரிந்து - கன்றுகள் கயிற்றை அறுத்து. உழலை - தடைமரம்; சீவக. 713, 1226. உலாம் - உலாவும். பள்ளி - இடைச்சேரி; "பள்ளியாகுலமாக" (சீவக. 426). மழலைத் தீஞ்சொலார் - ஆய்ச்சியர். மறுக - மயங்கும்படி. வாய்விட்டார் என்பதை அடுத்த பாடலின் பயனிலையாகக் கொள்க.

423. மத்தம் - மத்து. மத்தம்.........விடார் : கலித். 110 : 10 - 11; நள. கலிதொடர். 103. அத்தலையென்றது பசுக்கள் இருக்கும் இடத்தை. இத்தலையென்றது இடையரிருக்கும் இடத்தை. புளி - புள்ளி. நலார் - மகளிர்.

424. வலைப்படுமான்; திருவா. நீத்தல். 40. வலைப்படு என்பதை, மயில் என்பதனோடும் கூட்டுக. வலைப்படுமயில் : குறுந். 244 : 5, ஒப்பு. மொய்குழல் - நெருங்கிய கூந்தல். பிணங்க - பின்னிக்கொள்ளும்படி. வயிற்றிலடித்து அழுதல் : பெருங். 1. 44 : 25.

**(இ - ள்.)** அவர், முத்தோடே குழலிலே வேய்ந்த [1] தலையின்மாலை பிணங்கும்படி மயிர்குலைய அலைத்த வயிற்றினராய், வலைப்படு மானென வலைப்படு மயிலென வருந்தினரென்க. (கசு)

425. எம்மனை மாரினி யெங்ஙனம் வாழ்குவிர்
நும்மனை மார்களை நோவ வதுக்கி
வெம்முனை வேட்டுவ ருய்த்தன ரோவெனத்
தம்மனைக் கன்றொடு தாம்புலம் புற்றார்.

**(இ - ள்.)** [1] அவர், பின்பும், வேட்டுவர் நும்முடைய தாய்மாரை நோம்படி அடித்துக் கொண்டு போயினர்; இனி எம்முடைய தாய்மார், எங்ஙனம் உயிர் வாழ்வீர்? ஓஒவெனக் கூப்பிட்டுக் கன்றொடு புலம்புத லுற்றாரென்க.

உவப்பின்கண் அஃறிணையை [2] உயர்திணையாகக் கூறினார். (கஎ)

426. (க) பாறை படுதயிர் பாலொடு நெய்பொரு
தாறு படப்பள்ளி யாகுல மாக
மாறு படமலைந் தாய்ப்படை நெக்கது
சேறு படுமலர் சிந்த விரைந்தே.

427. (உ) புறவணி பூவிரி புன்புலம் போகி
நறவணி தாமரை நாட்டக நீந்திச்
சுறவணி சூழ்கிடங் காரெயின் மூதூர்
இறையணிக் கேட்கவுய்த் திட்டனர் பூசல்.

இவையிரண்டும் ஒரு தொடர்.

(க) ஆய், 'வேடு' (முல்லைப். 26) போலச் சாதியையுணர்த்திற்று. சேறு - மது.

(உ) புறவு - முல்லைநிலம்.

---

(உரை) [1] தலையின் மாலை - தலையிற் சூடும் முல்லை மாலை.

425. எம் அனைமார் என்றது கன்றுகளை நோக்கி; அண்மை விளி. நோவ - வருந்தும்படி. அதுக்கி - அடித்து. அதுக்கி உய்த்தனர் என இயைக்க. ஓ: இரக்கக் குறிப்பு. புலம்புற்றார் - அரற்றினார்கள். மு. முல்லைப். 12-6.

(உரை) [1] அவர் - இடைச்சியர். [2] காதல் பற்றியும் உவப்புப் பற்றியும் அஃறிணை உயர்திணையாக மயங்கியது; முல்லைப். 15-6. அடிக்.

426. பாறை - கல். பாறைபடுதயிர்: கூர்ம. கண்ணனவ. 111. ஆகுலம் - வருத்தம். ஆய் - இடைச்சாதி. நெக்கது - கெட்டது. சேறு - தேன்.

427. புறவு - சிறுகாடு. புன்புலம் - முல்லை நிலம். சுறவு - சுறுமீன். கிடங்கு - அகழி. சுறவணி கிடங்கு; சீவக. 95, 142. ஆரெயில் - அரிய மதில். இறை - அரசன்; கட்டியங்காரன். 'இறையணிக் கேட்க' என்றதனால் வாயிலோனுக்குச் சொன்னமை பெறப்பட்டது.

(இ - ள்.) [1] கற்போற்றேய்ந்த தயிரும் பாலும் நெய்யுடனே கலந்து ஆறுண்டாம்படி பள்ளியிலே வருத்தம் நிகழாநிற்க, கெடாது நின்ற ஆய்ப்படை மாறுபாடுண்டாகப் பொருது கெட்டது; கெட்டபின்பு, ஆயர் மலர் சிந்தும்படி விரைந்து [2] புன்புலத்தைப் போய் நாட்டகத்தை நீந்தி மூதூரில் இறை [3] அணித்தாகக் கேட்கும்படி நிரையையடித்த பூசலைக் கொண்டுபோய்ப் [4] போகட்டாரென்க.

'இட்டனர்' என்றார், இப்பழியை அரசன்றலையிலே போகடுதலால்; உய்த்திட்டனர் : ஒரு சொல்லுமாம். 'மூதூர்' எனவே [5] இது கேட்டறியாத தென்பது கருத்து. இதனால் வாயிலோனுக்கு இசைத்தமை கூறினார். (கஅ-கக)

(வேறு)

428. கொடுமர வெயின ரீண்டிக் கோட்டிமி லேறு சூழ்ந்த
படுமணி நிரையை வாரிப் பைந்துகி லருவி நெற்றி
நெடுமலை யத்தஞ் சென்றா ரென்றுநெய் பொதிந்த பித்தை
வடிமல ராயர் பூசல் வளநகர் பரப்பி னாரே.

துகில்போலருவி. நெய்யை வார்த்த மயிரிலே மலரையுடைய ஆயர்.

(இ - ள்.) மறவர் திரண்டு நிரையைச் சேரக் கைக்கொண்டு மலையில் அருஞ்சுரத்தே போயினாரென்று பூசலை நகரிலே பரப்பினாரென்க.

"பல்லாக் கொண்டா ரொல்லா ரென்னும், பூசல் கேட்டுக் கையது மாற்றி" (பன்னிருபடலம்) என்றும், "நிரைகோள் கேட்டுச் செய்தொழி லொழிய" (பு-வெ. 23) என்றும் துறை கூறுதலின், [1] இவரும் கேட்டோ ரெல்லாம் சென்று மீட்பரெனக் கருதி நகர்க்குணர்த்தினார். (உ௦)

(வேறு)

429. காசின் மாமணிச் சாமரை கன்னியர்
வீச மாமக ரக்குழை வில்லிட
வாச வான்கழு நீர்பிடித் தாங்கரி
ஆச னத்திருந் தானடன் மொய்ம்பினான்.

---

(உரை) [1] கற்போல் - கல்லைப்போல். [2] இங்கே 'புன்புலத்தைப் போய்' என்றதுபோல 'காதத்தை யோடி' (சீவக. 510) என்பர்பின். [3] அணித்தாக - சமீபமாக. [4] போகட்டார் - போட்டார்; "வண்டுபோ கட்ட மலர்போன் மருண்மாலை, உண்டுபோ கட்ட வுயிர்க்கு" (நள. சுயம். 119). [5] இது; இடையர் போட்ட பூசல்.

428. கொடுமரம் - வில். எயினர் - வேட்டுவர். கோடு - கொம்பு. இமில் - ஏற்றின் முசுப்பு. ஏறு சூழ்ந்த நிரை : பு வெ. 1. வாரி - கைக்கொண்டு. துகிலைப்போன்று வெள்ளிய அருவி (குறிஞ்சிப். 55). நெற்றி - உச்சி. அத்தம் - வழி. பித்தை - தலைமயிர். பூசல் : வேட்டுவர் நிரை கொண்டாரென்பது.

(உரை) [1] இவர் - இடையர்.

429. சாமரையைக் கன்னியர்வீசுதல் : சீவக. 541; மணி. 18 : 49-50. மகரக்குழை - மகரமீன்வடிவமாகச் செய்யப்பட்டுள்ள குண்டலம்.

காசு - குற்றம். மொய்ம்பினுன் : இகழ்ச்சி.

(இ - ள்.) மொய்ம்பினுன், கன்னியர் சாமரை வீசுந்தோறும் மகரக் குழை வில்லிடக் கழுநீரைப் பிடித்து, சச்சந்தனிருந்த மண்டபத்தே அவ னிருந்த சிங்காசனத்தே இருந்தானென்க. (உக)

430. கொண்ட வாளொடுங் கோலொடுங் கூப்புபு
சண்ட மன்னனைத் தாடொழு தாயிடை
உண்டொர் பூசலென் றுற்குரை யாயெனக்
கொண்ட னர்நிரை போற்றெனக் கூறினுன்.

(இ - ள்.) எடுத்த வாளொடும் பிரம்பொடும் கையைக் குவித்துக் கொடிய அரசனைத் தாளைத்தொழுது, அக்காட்டிலே ஒரு பூசலுண் டென்று கூறிய [1] ஆசாரவாசிக்கு, 'அதுயாது? கூறுய்' என்று அரசன் கூற அவனும், 'யான் கூறுகின்றதனைத் [2] திருவுளம்பற்று; நிரையை அடித்துக் கொண்டார்' என்று கூறினுனென்க. (உஉ)

431. செங்கட் புன்மயிர்த் தோறிரை செம்முக
வெங்க ணுக்கிற்குப் பாயமி லேச்சனைச்
செங்கட் டவிழி யாத்தெழித் தான்கையுள்
அங்கட் போதுபி சைந்தடு கூற்றனுன்.

வில்லிட - ஒளிவீச. அரசர் கையிற் செங்கழுநீர் மலரைப் பிடித்திருத்தல் இயல்பு; சீவக. 1887, 2358; பெருங். 1. 38 : 308-9; 3. 5 : 87-8; "கார்நறு நீலங் கடிக்கயத்து வைகலும், நீர்நிலை நின்ற பயன்கொலோ - கூர்நுனைவேல் வண்டிருக்க நக்கதார் வாமான் வழுதியாற், கொண் டிருக்கப் பெற்ற குணம்" (முத்தொள்ளாயிரம்). மொய்ம்பினுன் : கட்டி யங்காரன்.

430. வாளொடுங் கோலொடுங் கூப்பி : பெருங். 1. 47 : 23. கோல்: சீவக. 264. கூப்புபு - குவித்து. சண்டம் - கொடுமை. ஆயிடை - அக் காட்டில். பூசல் - பெரும்போர். என - என்று கட்டியங்காரன் கூற.

(உரை) [1] ஆசாரவாசி - வாயில்காப்போன். [2] திருவுளம்பற்று - உட்கொள்க.

431. தோல் திரை செம்முகம் - தோல் சுருங்கிய சிவந்த முகம். வெங்கண் - அஞ்சாமை; காவலாளர்க்குக் காய்ந்து நோக்குதல் இயல்பு : பெருங். 4. 10 : 38. குப்பாயம் - சட்டை. குப்பாய மிலேச்சன் : முல்லைப். 66; மிலேச்சர்கள் பண்டைக்காலத்தில் வாயில்காவலர்களாக இருந்ததுண்டென்று பழைய நூல்களால் தெரிகின்றது. தெழித்தல் - கோபித்தல். கூற்றனுன் தெழித்தான் என இயைக்க.

(இ - ள்.) அடுகூற்றனான், அதனைக்கேட்டுப் பூவைப்பிசைந்து, கண் முதலியவற்றையுடைய மிலேச்சனைக் கண்ணாலே தீப்புறப்பட விழித்துக் கோபித்தானென்க.

[1] அவன் அரசனன்மையின், கோபம் எளியார்மேற்றாயிற்று. (உ௩)

(வேறு)

432. கூற்றின் னிடிக்குங் கொலைவேலவன் கோவ லர்வாய்
மாற்றம் முணர்ந்து மறங்கூர்கடற் றானை நோக்கிக்
காற்றின் விரைந்து தொறுமீட்கெனக் காவன் மன்னன்
ஏற்றை யரிமா னிடிபோல வியம்பி னானே.

"ஏறு மேற்றையும்" (தொல். மரபு. 2) என்றலின், ஏற்றையும் பெயர்.

(இ - ள்.) கூற்றுப்போற் கோபியாநின்ற வேலவனாகிய காவல் மன்னன், அக்கோபம் சிறிது தணிந்து, கோவலரையழைத்து அவர் கூறிய [1] கூற்றிற் பொருளையுணர்ந்து, தனது தானையைப்பார்த்து, காற்றினும் விரைந்துசென்று நிரையை மீட்பீராகவென்று அரிமானேறும் இடியும் போல இயம்பினானென்க. (உ௪)

(வேறு)

433. கார்விளை மேக மன்ன கவுளழி கடாத்த வேழம்
போர்விளை யிவுளித் திண்டேர் புனைமயிர்ப் புரவி காலாள்
வார்விளை முரசம் விம்ம வானுலாப் போந்த தேபோல்
நீர்விளை சுரிசங் கார்ப்ப நிலநெளி பரந்த வன்றே.

கார்காலத்துண்டான மேகமன்ன கவுள்மறைந்த கடாம். போருண்டாதற்குக் காரணமான குதிரை. வார்விளை - வாருண்டான. யானையும் பரியும் முழக்கமுமுண்மையின், மேகம் உவமை.

---

(உரை) [1] கட்டியங்காரன் முதலில் மந்திரியாயிருந்து பின்பு அரசனாகிய சச்சந்தனைக் கொன்று அரசாட்சி பெற்றவனாதலின் "அவன் அரசனன்மையின்' என்றார்; நிகழ்ந்த செய்தி கூறிய வாயிலோனைக் கோபித்தல் இராச தருமம் அன்றென்பர்.

432. வேலவன் : கட்டியங்காரன். கோவலர் - இடையர். மறம் - வீரம். கடற்றானை - கடல்போன்ற சேனை. தொறு - பசுக்கூட்டம். 'மீட்க என' என்று பிரிக்க. அரிமானேற்றை - ஆண்சிங்கம்.

(மேற்.) அடி, 4 : நன். உரி. 17, மயிலை ; சங்கர.

(உரை) [1] கூற்று - சொல்.

433. கவுள் - கன்னம். அழிதல் - மறைதல். இவுளிபூட்டிய தேர். வார் - முரசத்திற் கட்டிய தோற்கயிறு. வான் - மேகம். உலா - பவனி. சுரிசங்கு - முகம் சுழித்த சங்கு. நிலம் நெளியப் பரந்தபடை : புறநா. 23 : 15.

**(இ - ள்.)** வேழமும் தேரும் புரவியும் காலாளும், முரசும் விம்மச் சங்கு ஆர்ப்ப வான் உலாப்போந்ததே போல் நிலம் நெளியப் பரந்த வென்க.

இனி, வானுலாப்போந்ததே போலும் நீராவது கடல்; அதில் விளைந்த சங்குமாம். நெளிய : [1] விகாரம். (உ௬)

434. காலகம் புடைப்ப முந்நீர்க் கடல்கிளர்ந் தெழுந்த தேபோல்
வேலக மிடைந்த தானை வெஞ்சின வெயினர் தாக்க
வால்வளை யலற வாய்விட் டிரலையுந் துடியு மார்ப்பப்
பால்வளைந் திரவு செற்றுப் பகலொடு மலைவ தொத்தார்.

**(இ - ள்.)** காற்று உள்ளேயடித்தலாலே கடல் எழுந்ததே போலக் கிளர்ந்து வேல் மிடைந்த தானையும் எயினரும் வளையலற இரலையும் துடியும் வாய்விட்டு ஆர்ப்பத் தம்மில் தாக்குதலாலே கோவித்து ஒரு பக்கத்திலே வந்து வளைந்து இரவும் பகலும் மலைவதொத்தாரென்க.

மூன்றுநீர்மையையுடைய கடல்; அது முற்கூறினும் (சீவக. 5). [1] ஒடு : எண்ணொடு. வேடர் அரசர்க்கு எதிர்நிற்றலின், இரவும் பகலும் உவமையாயின. வளை தானைக்கும், துத்தரிக்கொம்பும் துடியும் வேடர்க்கும் நிரனிறை. (உ௭)

435. விற்பழுத் துமிழ்ந்த வெய்ய வெந்நுனைப் பகழி மைந்தர்
மற்பழுத் தகன்ற மார்பத் திடங்கொண்டு வைகச் செந்நாச்
சொற்பழுத் தவர்க்கு மாண்மை சொல்லலாந் தன்மைத் தன்றிக்
கொற்பழுத் தெரியும் வேலார் கொடுஞ்சிலை குழைவித் தாரே.

பழுத்து - குழைந்து. [1] வெய்ய - விரும்பின. மற்பழுத்து - மற்றொழிலிலே முற்றுப்பெற்று. செவ்விய நாவிலே சொல்லெல்லாம் [2] கைவந்தவர்கள். [3] கொற்றொழிலிலே அடிப்பட்டு. மைந்தரும் வேலாரும் [4] அரசன் படை.

---

(உரை) [1] நெளியவென்பது நெளியென்றாயிற்று.

434. கால் - காற்று. கிளர்ந்து - வளர்ந்து. தானையும் எயினரும் என உம்மை விரிக்க; தானை - கட்டியங்காரனுடைய சேனை. வளை - சங்கு. இரலை - துத்தரிக்கொம்பு; ஒருவகை ஊதுகொம்பு; சீவக. 447, ந.; "கொம்பு துத்தரி கொட்டு முறைமையன்" (கம்ப. கங்கைப். 30). பால் - பக்கம். கரியநிறத்தையுடைய வேடர்க்கு இரவும், கட்டியங் காரன் படைவீரர்க்குப் பகலும் உவமை.

(உரை) [1] பகலொடு என்பதில் உள்ளது.

435. விற்பழுத்துமிழ்ந்த பகழி : மலைபடு. 226; பாகவதம், சராசந்த. 13. நுனை - கூர்மை. பகழி - வேடருடைய அம்பு. செந்நாச் சொற்பழுத்தவர் - கவிஞர்.

(உரை) [1] சீவக. 237. [2] கைவந்தவர் - மிகத்தேர்ந்தவர். [3] கொற்றொழில் - கொல்லுதற்றொழில் : கொல்லன்தொழிலுமாம். [4] அரசன் - கட்டியங்காரன்.

(இ - ள்.) வேடர்கையில் வில் வளைந்து [5] கான்ற பகழி மைந்தர் மார்பத்தே தங்குதலாலே கவிகளுக்கும் ஆண்மை கூறலாந் தன்மைத் தன்றாக எரியும் வேலார் அவ்வேடர்வில்லைக் கெடுத்தாரென்க.

இனி, வேலார் தமது வில்லை வளைத்தார்; அவ்வளவிலே வேடர் மைந்தரை [6] வீட்டினரென்றுமாம். (உஎ)

436. வாட்படை யனுங்க வேடர் வண்சிலை வளைய வாங்கிக்
கோட்புலி யினத்தின் மொய்த்தார் கொதிநுனைப் பகழி தம்மால்
வீட்டினர் மைந்தர் தம்மை விளிந்தமா கவிழ்ந்த திண்டேர்
பாட்டரும் பகடு வீழ்ந்த பனிவரை குனிவ தொத்தே.

(இ - ள்.) [1] தம்மைக்கெடுத்த வாட்படை கெடும்படி வேடர் வில்லை வளைத்துப் புலியினம்போல் எதிர்சென்று [2] மொய்த்தவர்கள், தம் பகழியாலே வீரரானவர்களை வீட்டினர்; அவ்வளவிலே மா வீழ்ந்தன; தேர் கவிழ்ந்தன; வரை குனிவதனையொத்துப் பகடு வீழ்ந்தனவென்க.

மொய்த்தார் : [3] தொழிற்பெயர். பட்டு : [4] விகாரம். (உஅ)

437. வென்றி நாங் கோடு மின்னே வெள்ளிடைப் படுத்தென் றெண்ணி
ஒன்றியுள் வாங்கு கென்ன வொலிகட லுடைந்த தேபோற்
பொன்றவழ் களிறு பாய்மா புனைமயிற் குஞ்சி பிச்சம்
மின்றவழ் கொடியொ டிட்டு வேற்படை யுடைந்த வன்றே.

வேற்படை - காலாள். குஞ்சி - [1] சிற்றணுக்கன்.

(இ - ள்.) படாத மைந்தர், வேடரை வெளியிலே புறப்படவிட்டு, யாம் இப்பொழுதே வெற்றியைக்கொள்ளுதுமென்று எல்லாருமெண்ணி,

---

[5] கான்ற - உமிழ்ந்த. [6] 'வீட்டினர்' என்பது அடுத்த (சீவக. 436) செய்யுளில் உள்ளது.

436. அனுங்க - கெடும்படி. கோள் - கொலை. வீட்டினர் - கொன்றார். மா - குதிரை. பகடு - யானை. ஒத்து வீழ்ந்த எனமாறுக.

(உரை) [1] தம்மையென்றது வேடரை. [2] மொய்த்தவர்கள் - வேடர்கள். [3] தொழிற்பெயர் - வினையாலணையும்பெயர். [4] பட்டு என்பது பாட்டு என்றாயிற்று.

437. கோடும் - கொள்வோம். வெள்ளிடைப்படுத்து : பெருங். 1. 56 : 47. உள்வாங்குக - பின்னேசெல்க. என்ன - என்று மைந்தர்கூற. உடைந்ததேபோல் உடைந்த என இயைக்க. பிச்சம் - பீலிக்குடை. குஞ்சியும் பிச்சமும் : சீவக. 2170. இக்கவியின் பொருளோடு, சீவக. 450-ஆம் கவியின் பொருள் ஒருவாறு ஒற்றுமையுடையது.

(உரை) [1] சிற்றணுக்கன் - ஒருவகை விருது; மிகவும் அருகிப் பிடித்தற்குரியது.

அப்படையுடனே பொருந்தித் தள்ளிச் சிறிது குறைப்பீராகவென்று தம்படைக்குச் சொல்ல, களிறும் மாவும் வேற்படையும் குஞ்சத்தையும் பிச்சத்தையும் கொடியுடனே போகட்டுக் கடலுடைந்ததுபோல் உடைந்த வென்க. (உகூ)

438. பல்லினுற் சுகிர்ந்த நாரிற் பனிமலர் பயிலப் பெய்த
முல்லையங் கண்ணி சிந்தக் கால்விசை முறுக்கி யாயர்
ஒல்லென வொலிப்ப வோடிப் படையுடைந் திட்ட தென்ன
அல்லலுற் றழுங்கி நெஞ்சிற் கட்டியங் கார ருழ்ந்தான்.

(இ - ள்.) [1] படை கெட்டவளவிலே, ஆயர் கண்ணி சிந்தும்படி காலை விசையுண்டாக முறுக்கி ஓடி ஒல்லெனவொலிப்பப் படையுடைந்த தென்று கூற, அதுகேட்டுக் கட்டியங்காரன் நெஞ்சிலே ஒருவருத்தமுற்று இரங்கி அதிலே அழுந்தினனென்க.

பல்லாற்கிழித்த நாரிலே பூ நெருங்க வைத்துக் கட்டப்பட்ட முல்லைக் கண்ணி. [2] 'என்றூர்க்கு' பாடமாயின், என்று வருந்தினூர்க்குத் தானும் எதிரே வருந்தினனென்க. (௩௦)

439. வம்புகொண் டிருந்த மாதர் வனமுலை மாலைத் தேன்சோர்
கொம்புகொண் டன்ன நல்லார் கொழுங்கயற் றடங்கண் போலும்
அம்புகொண் டரசர் மீண்டா ராக்கொண்டு மறவர் போனூர்
செம்புகொண் டன்ன விஞ்சித் திருநகர்ச் செல்வ வென்றூர்.

செம்பின் தன்மையைக் கொண்டாலொத்த மதில். உலகிற்கன்றி நகரிற்கு அரசனாகிய [1] ஸ்ரீமானேயென்றூர் வெகுண்டு.

---

438. பல் - ஒருவகைக் கருவி; பெரும்பாண். 217-8. பல்லினுற்......... கண்ணி: கூர்ம. பிலக்க. 43. சுகிர்தல் - கிழித்தல். இடையர்க்கு முல்லைமாலை உரியது. விசை முறுக்கி - வேகம் மிக்கு. முறுக்கி ஓடி எனவும், ஒலிப்ப உடைந்திட்டது எனவும் இயைக்க. கட்டியங்காரன், நெஞ்சில் அழுங்கி, ஆழ்ந்தான் எனமாறுக.

(உரை) [1] கட்டியங்காரனுடைய படை. [2] உடைந்திட்டதென்றூர்க்கு என்று கொள்க.

439. வம்பு - கச்சு. மாதர் - காதல்; சீவக. 356, அடிக். சோர்தல் - ஒழுகுதல். கொம்பு முலைகொண்டன்ன எனமாறுக. நல்லார்.........தடங் கண்போலும் அம்பு : சீவக. 445; பு - வெ. 84. மறவர் - வேடர். செம்பு கொண்டன்ன இஞ்சி; மதுரைக். 485; நெடுநல். 112; அகநா. 375; புறநா. 37, 201; "செம்படுத்த செழும்புரிசை" (தே. திருஞா.) கம்ப. கும்ப - வதை. 159.

(உரை) [1] ஸ்ரீமானே யென்றது கட்டியங்காரனை.

(இ - ள்.) நிரைபோனபின் வந்த ஆயர், செல்வனே, மாலையினது தேனொழுகுவதொரு கொம்பு கச்சைத் தம்மிடத்தே கொண்டு அடிபரந்த காதலையுடைய முலைகளைத் தனக்கு உறுப்பாகக் கொண்டாற்போலும் நல்லாருடைய கண்போலத் தப்பாத அம்பை எதிர்கொண்டு அரசர் மீண்டார் ; மறவர் ஆவைக்கொண்டே போனாரென்றாரென்க.

அரசர் - [2] அவன்புதல்வரும் மதனனும். (௩௧)

440. மன்னிரை பெயர்த்து மைந்தர் வந்தனர் கொள்க வாட்கட்
பொன்னிழை சுடரு மேனிப் பூங்கொடி யனைய பொற்பிற்
கன்னியைத் தருது மென்று கடிமுர சியம்பக் கொட்டி
நன்னகர் வீதி தோறு நந்தகோ னறைவித் தானே.

(இ - ள்.) அதுகேட்டு [1] அரசன் [2] வாளாவிருத்தலின், நந்தகோன், கண் முதலியவற்றையுடைய கன்னியை மைந்தர் நிரைமீட்டுவந்தவர் கொள்வாராக ; யாமும் தருவேமென நகர்வீதிதோறும் மிக்க முரசை முழங்கக்கொட்டிச் சாற்றுவித்தானென்க.

மன்னிரை - பெரிய நிரை. பூண்விளங்குதற்குக் காரணமான மேனி. இரண்டுகுலத்தோரும் தாழ்வுயர்வு கருதாதிருத்தற்கு, 'கொள்க' என்றும், 'தருதும்' என்றுங்கூறினன். படைநான்கு மிகப்படைத்துப் பல்லுயிர்க்கும் அருள்புரிந்தோர் உண்மையானும், கன்னியை விரும்புவா ருண்மையானும் கொட்டி அறைவித்தானென்க. (௩௨)

441. வெதிர்ங்குதைச் சாபங் கான்ற வெந்நுனைப் பகழி மூழ்க
உதிர்ந்தது சேனை யீட்டங் கூற்றொடு பொருது கொள்ளும்
கருந்தடங் கண்ணி யன்றிக் காயமா ருக வேகும்
அரும்பெற லவளு மாகென் றுடவர் தொழுது விட்டார்.

மூங்கிலாற்செய்த குதையையுடைய வில்.

---

[2] அவன் - கட்டியங்காரன்.

440. மன் - பெருமை ; பட்டினப். 291, ந. 'மைந்தர் பெயர்த்து வந்தனர், கன்னியைக்கொள்க' எனமாறுக. இழை - ஆபரணம். கன்னி - நந்தகோனுடைய மகளான கோவிந்தை. இயம்ப - முழங்கும்படி. வீதி தோறும் கொட்டி எனமாறுக. நந்தகோன் : பசுக்கூட்டத்தலைவன்.

(உரை) [1] கட்டியங்காரன். [2] வாளா இருத்தல் - சும்மா இருத்தல்.

441. வெதிர் - மூங்கில். குதை - நாணைக் கட்டுதற்கு வில்லின் இருபக்கத்தும் அமைந்துள்ள பள்ளம். சாபம் - வில். காயம் - ஆகாயம் ; முதற்குறை. அவள் - தெய்வமகள்.

(இ - ள்.) ஆடவர், சேனைத்திரள் வேடரது சாபங்கான்ற பகழி மூழ்குதலாலே கெட்டது; ஆதலால், [1] இவளையன்றி ஆகாயமே வழியாகச் செல்வாளொரு பெறுதற்கரிய தெய்வமகளுமாக, அவ்வேடராகிய கூற்றெடு பொருது கொள்ளுங் [2] கோளைவல்லார் இல்லையென்று தொழுது விட்டாரென்க.

[3] இது சொல்லெச்சம். (ருரு)

442. கார்விரி மின்ன ஞர்மேற் காமுகர் நெஞ்சி ஞேடும்
தேர்பரி கடாவித் தேந்தார்ச் சீவக னருளிற் போகித்
தார்பொலி புரவி வட்டந் தான்புகக் காட்டு கின்ருற்
கூர்பரி வுற்ற தெல்லா மொருமக ஞுணர்த்தி ஞனே.

(இ - ள்.) சீவகன், மின்னையொக்குமகளிர்மேலே காமுகர் நெஞ்சு ஓடுமாறுபோல ஓடுந்தேரைச் செலவிலே கடாவிப் பின்பு புரவியை வட்டத்தே செல்லக் காட்டுகின்றவனுக்கு [1] அவனருளாலே ஒருமகன் போய்வந்து ஊர் பரிவுற்றதெல்லாம் உணர்த்தினனென்க.

வட்டம் - [2] வாளி. இனி, ஒருமகன் தேர்பரி கடாவிப்போய் வந்தென்றுமாம்.

இதன்பின், * "என்றவன்", "சேட்டிளம்" என இரண்டு கவி கூறுவாரும் உளர்; அவை பயிலவழங்கா. (ருச)

---

(உரை) [1] இவள் - நந்தகோனுடைய மகள். [2] கோள் - கொள்ளுதல். [3] இது : 'கோளைவல்லார் இல்லை' என்றது.

442. கார் - மேகம். பரி - செலவு. சீவகன் கடாவி என மாறுக. காட்டுகின்ருற்கு - சீவகனுக்கு. பரிவுற்றது - துன்பமுற்றது. ஒருமகன், அருளிற்போகி உணர்த்தினன் என மாறுக.

(உரை) [1] அவன் - சீவகன். [2] வாளி - வட்டமாய் ஓடுதல்.

* (க) என்றவ னுரைப்பக் கேட்டே யெரிமணிக் கடகக் கையால்
ஒன்றிய தோழர் கைம்மே லெறிந்துநக் குணர்வின் மிக்கான்
சென்றவற் கோகை யாகச் சிறப்பொடு செம்பொன் சிந்தி
நன்றிதே போல்வ தில்லை நாந்தொறு மீட்டு மென்ருன்.

(உ) சேட்டிளம் பருதி போலுந் திருமகிழ் மாலை மார்பன்
கேட்டலுங் கனன்று வல்லே கிளரொளி நந்த திண்டேர்
நீட்டமில் செய்கை தம்மாற் பண்ணென நினைந்து சொன்ஞன்
தீட்டரும் பருதி யன்ன சீவக சாமி யன்றே.

(வேறு)

443. தன்பான் மனையா ளயலான்றலைக் கண்டு பின்னும்
இன்பா லடிசிற் கிவர்கின்றகைப் பேடி போலா
நன்பால் பசுவே துறந்தார்பெண்டிர் பாலர் பார்ப்பார்
என்பாரை யோம்பே னெனின்யானவ ளுக வென்றான்.

தன்பகுதியாய்த்தங்கிய [1] வீரமகளை. 'போலா' என்பது, செய்யா வென்னும் எச்சப்பொருட்கண்வந்த உவமைச்சொல். நன்பால் - நல் லொழுக்கம்; "பலவயினானும்" (தொல். கிளவி. 51) என்றதனால், சிலவயின் திணை விராயெண்ணி உயர்திணையான் முடிந்தன.

(இ - ள்.) நல்லொழுக்கம், பசு, துறந்தார், பெண்டிர், பாலர், பார்ப்பாரென்பாரை ஓம்பேனெனின், யான் தன்வீரத்தை அயலாரிடத்தே கண்டு பொறுத்தான் ஆண்மகனன்மையிற் பேடியையொத்துப் பின்னும் பாலடிசிலுண்டற்கு மேற்கொள்கின்ற ஒழுக்கத்தையுடைய கட்டியங் காரனாவேனென்றானென்க.

இஃது [2] உட்கோள். இனி, 'போலாம்' என மகரவீறுக்கிப் பேடி போலாம் அவனாகவென்றுமாம். 'போலா' என்றது எச்சப்பொரு ளுணர்த்தினமையின் ஒப்பில்போலியாகாமையுணர்க. (ருரு)

444. போர்ப்பண் ணமைத்து நுகம்பூட்டிப் புரவி பண்ணித்
தேர்ப்பண் ணமைத்துச் சிலைகோலிப் பகழி யாய்ந்து
கார்க்கொண்மு மின்னி னிமிர்ந்தான்கலி மான்கு ளம்பிற்
பார்க்கண் ணெழுந்த துகளாற்பகன் மாய்ந்த தன்றே.

பண்ணமைத்தல் - சமைத்தல். [1] கொண்மு : விகாரம்.

(இ - ள்.) புரவியைப்பண்ணி, நுகத்தே பூட்டித் தேரைப் பண்ண மைத்துப் பின் தன்னைப் போருக்கு ஏடாகப்பண்ணமைத்துக் கோலி ஆய்ந்து மின்போலத் தேரைச் செலுத்தினான்; அப்பொழுது, குதிரைக் குரத்தாற் பாரிடத்து எழுந்த புழுதியாலே பகற்பொழுது கெட்டதென்க. (ருசு)

---

443. மகள் - வீரமகள். தன்பால்மனையாள்............பேடிபோலாம்: சூளா. அரசியல். 156; வி-பா. 13-ஆம் போர். 184. பாலடிசில் - பாற் சோறு. ஓம்புதல் - பாதுகாத்தல். அவன் - கட்டியங்காரன்.

(மேற்.) அடி, 2: இ-வி. சூ. பெயர். 7, சிவஞா. மு: நன். பொது. 17, மயிலை; சங்கர. இ-வி. பொது. 4.

(உரை) [1] வீரமகள் - வீரலக்ஷ்மி. [2] உட்கோள் - சீவகன் தன் மனத்தில் எண்ணியது.

444. பண்ணி - ஆயத்தம்செய்து. சிலைகோலி - வில்லை வளைத்து. கொண்மு - மேகம்; திருவால. 12 : 13. நிமிர்ந்தான் - தேரைச் செலுத்தினான். கலி - முழக்கம்.

(உரை) [1] கொண்மூ என்பது கொண்மு என்றானது.

445. இழுதொன்று வாட்க ணிளையாரிளை யார்க ணோக்கிற்
பழுதின்றி மூழ்கும் பகழித்தொழில் வல்ல காளை
முழுதொன்று திண்டேர் முகஞ்செய்தவன் றன்னொ டேற்கும்
பொழுதன்றுபோ தும்மெனப் புண்மொழிந்தான்மொழிந்தான்.

(இ - ள்.) முன்பு [1] நிமித்தங்கூறினவன், அத்தேரைக்கண்டு, தோன்றின அவன், மகளிர் காமுகரிடத்து நோக்குகின்ற நோக்குப் போலத் தப்பின்றுருகத் தைக்கும் அம்பாற்செய்யுந் தொழிலை வல்ல காளை, தேரொன்றே திசை முழுதும் முகஞ்செய்தற்குக் காரணமானவன்றன்னுடனே யாம் போரை எதிர்கொள்ளும் பருவமன்று; இப்பொழுது [2] போகக்கடவேமென்று கூறினானென்க. (௩எ)

446. மோட்டும் முதுநீர் முதலைக்கு வலிய துண்டேற்
காட்டுண் ணமக்கு வலியாரையுங் காண்டு நாமென்
றேட்டைப் பசியி னிரைகவ்விய நாக மேபோல்
வேட்டந் நிரையை விடலின்றி விரைந்த தன்றே.

(இ - ள்.) அப்பொழுது, வேட்டுவச்சாதி, பெரிய முதலைக்கு முதுநீரிடத்து வலியதொன்று உண்டாயின், நமக்குக் காட்டிடத்து வலியாரையும் காண்டுமென்று கூறி, இரைக்கு இடைந்த பசியால் இரையைக் கவ்விய நாகம்போல் அந்நிரையைக் கைவிடுதலின்றுய்ப் போரிற்கு விரைந்ததென்க. (௩அ)

(வேறு)

447. கடற்படை யனுங்க வென்ற கானவ ரென்னுங் கூற்றத்
திடைப்படா தோடிப்போமி னுய்யவென் றிரலைவாய்வைத்
தெடுத்தனர் விளியுஞ் சங்கும் வீளையும் பறையுங் கோடும்
கடத்திடைமுழங்கக்காருங் கடலுமொத்தெழுந்தவன்றே.

---

445. இழுது - நெய். இளையார் - மகளிர். இளையார்கண் - சிறுவரிடத்தே. பழுதின்றி - தப்புதலில்லாமல். காளை என்றது சீவகனை. 'தேர் ஒன்று முழுதுமுகம் செய்தவன்' என மாறுக. போதும் - போவோம். புள்மொழிந்தான் - புள்ளின் நிமித்தம் கூறியவன்; எழுவாய். (உரை) [1] சீவக. 415-6. [2] போகக் கடவேம் - மீள்வோம்.

446. மோட்டு முதலை என இயைக்க; மோடு - பெருமை. முதுநீர் முதலைக்கு வலியது: குறள், 495. நமக்குக் காட்டுள் என மாறுக. காண்டும் - காண்பேம். ஏட்டை - இளைப்பு; நாலடி. 358. வேட்டு அந் நிரையை எனப்பிரிக்க; வேட்டு - வேட்டுவச்சாதி; எழுவாய்; வேட்டு என்னும் தொழில் அதனையுடைய வேடரைக் குறித்தது; தொல். அகத். 21, ந.

447. படாது - அகப்படாது. உய்ய ஓடிப்போமின் என மாறுக. இரலை - ஊதுகொம்பு. விளியும் வீளையும் எடுத்தனர் எனமாறுக; விளி - கொக்கரிப்பு. வீளை - நாவினது நுனியை மடித்துச் செய்யும் ஒலி; சீவக.

(இ - ள்.) அங்ஙனம் [1] விரைந்தவர், அரசன்படை கெடும்படி வென்ற வேடரென்னும் கூற்றத்திடையில் அகப்படாதே பிழைக்க [2] ஓடிப் போங்கோளென்று வார்த்தைகூறித் துத்தரிக்கொம்பையூதிக் கொக்கரிப் பையும் சீழ்க்கையையும் எழுப்பினர்; அதற்கு எதிரே பிள்ளையாருடைய சங்கும் பறையும் கொம்பும் காட்டிலே முழங்க, இரண்டுபடையின் ஒலியும் காரையும் கடலையுமொத்து எழுந்தவென்க.

"வில்லுடை வீளையர் கல்லிடு பெடுத்த" (குறுந். 272) என்றார் பிறரும். (ரு௯)

448. கைவிசை முறுக்கி வீசுங் கொள்ளியுங் கறங்கு மேய்ப்பச்
செய்கழற் குருசி றிண்டேர் விசையொடு திசைக ளெல்லாம்
ஐயென வளைப்ப வீர ரார்த்தன ரவரு மார்த்தார்
மொய்யமர் நாட்செய் தையன் முதல்விளை யாடி னானே.

விசையுண்டாக முறுக்கி. ஐயென - விரைய. [1] பின்புசெய்யும் மொய்யமருக்கு முதலே நாட்கொண்டு என்றது, தான்செய்யும்தொழில் நிகழ்த்துவதற்கு முன்பே அதனைத் தொடங்கிவைத்தலை. இது தம் மிற்றும் படை வகுத்து விளையாடுந் தன்மைத்தென்று, 'விளையாடினான்' என்றார். தனக்கு அவர் நிகரன்மையானும், அரசாட்சியின்மையிற் பகையின்மையானும், தனது அருளும் வீரமும் மேம்படுத்துதற்குச் சென்றானாகலானும், அவரை அஞ்சப்பண்ணி நிரைமீட்டானென்பதே தேவர் கருத்து; அது மேற்காண்க.

(இ - ள்.) அவரெதிர்த்தலிற் குருசில் தேர் கொள்ளிவட்டத்தையும் காற்றாடியையுமொப்ப விசையோடே வளையாநிற்க, தன்வீரர் ஆர்த்தார்; அதுகேட்டு வேடரும் ஆர்த்தார்; அப்பொழுது ஐயன் நாட்செய்து விளையாடினானென்க. (சo)

---

120, அடிக். விளியும் சங்கும் வீளையும்: "வீளைக்குரலும் விளிசங்கொலி யும்" (தே. திருஞா.). கோடு - கொம்பு. கடம் - காடு. கார் - மேகம். இரலையும், விளியும், வீளையும் வேடருடையன. சங்கும், பறையும், கோடும் சீவகனுடையன.

(உரை) [1] விரைந்தவர் - வேடர். [2] ஓடிப்போங்கோள் என்பது ஓடிப்போங்களென்பதன் மரூஉ; தொல். வினை. 26, கல்; "புறப் பற்றுத், தள்ளுங்கோ ளூரரவிற் றமோ தரன்பள்ளி, கொள்ளுங்கோ ளூர்மருவுங் கோள்" (நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி)

448. கொள்ளி: சீவக. 1771. கறங்கு - காற்றாடி. தேர், கொள்ளி யும் கறங்குமேய்ப்ப விசையொடு வளைப்ப என மாறுக. குருசில் - சீவகன். வீரர் - சீவகனுடைய படைவீரர். அவர் - வேடர். மொய்ய மர்.........முதல் விளையாடினனே: கம்ப. தாடகை. 77; மொய்த்தல் - நெருங்குதல்; முதலிற் செய்யும் போரைக் கன்னிப்போர் என்பர். நாட்செய்து - நாள்கொண்டு.

(உரை) [1] பின்பு செய்யும் மொய்யமரென்றது கட்டியங்காரனோடு போர்செய்தலை.

449. ஆழியா னூர்திப் புள்ளி னஞ்சிற கொலியி னாகம்
மாழ்கிப்பை யவிந்த வண்ணம் வள்ளறேர் முழக்கி னானும்
சூழ்துகண் மயக்கத் தானும் புளிஞருள்சுருங்கிச்சேக்கைக்
கோழிபோற் குறைந்து நெஞ்சி னறமென மறமும்விட்டார்.

(இ - ள்.) திருமால் ஏறப்படுவதாகிய கருடனது சிறகொலியினாலே பாம்பு மயங்கிப் படமொடுங்கினாற்போல, வள்ளல் தேரொலியாலும் தம்மைச்சூழ்ந்த துகளின் மயக்கத்தாலும், வேடர், மனவெழுச்சி சுருங்கி வலைப்பட்ட கோழிபோலே செயல்குறைந்து தமதுநெஞ்சில் [1] அறம் புகுதாமற் கைவிட்டாற்போல ஈண்டு மரத்தையும் கைவிட்டா ரென்க.

[2] அவருயிரைக்கொடுத்தலின், 'வள்ளல்' என்றார். பொராதே தேரொலியாலே அவரை அஞ்சுவித்து நிரைமீட்கின்றான். (சக)

450. புள்ளொன்றே சொல்லு மென்றிப் புன்றலை வேடன் பொய்த்தான், வெள்ளந்தேர் வளைந்த நம்மை வென்றியீங் கரிது வெய்தா, உள்ளம்போற் போது நாமோ ரெடுப்பெடுத் துய்ய வென்னா, வள்ளன்மே லப்பு மாரி யார்ப்பொடு சிதறி னாரே.

(இ - ள்.) அங்ஙனம் மறம்விட்ட வேடர், ஆந்தை ஒருதேர்வரு மென்று சொல்லாநின்றதென்று நமக்குச்சொல்லி இந்தப் [1] புன்றலை வேடன் நிமித்தத்தைத் தப்பினான்; நம்மைத் தேர்வெள்ளமாக வளைந்தன; ஆகலான், இவ்விடத்து நிரைகோடலரிது; இனி நாம் கடிதாக ஒருகால் உற்றுப்பொருது தள்ளி உய்யப்போம்படி ஒருவருள்ளம்போலே எல்லாரும் செல்லக்கடவேமென்று கூறிச் சென்று, வள்ளன்மேலே அப்புமாரியைச் சிதறினாரென்க.

[2] நீ நினைந்தாற்போலப் போவேமென்றுமாம். (சஉ)

---

449. ஆழியான் - திருமால். பை - படம். கருடனுடைய சிற கொலிக்கு நாகம் அஞ்சுதல்; பெருங். 1. 46 : 23-4; கம்ப. நாகபாசப். 263. வள்ளல் - சீவகன்; சீவக. 11, 450, 797. துகள் - புழுதி. புளிஞர் - வேடருள் ஒருவகையார். உள் - மனம். சேக்கை - வலை.

(உரை) [1] மறக்குடி அறஞ்செய்யக் கெடுமென்பது ஒரு பழமொழி. [2] அவர் - வேடர்.

450. புன்றலை : சிறிய தலை என்பது பொருள்; முனித்தலை என்றும் கூறுவதுண்டு; சீவக. 2541; புறநா. 250; "புருத்தலையன்" (சிந்தாமணிமாலை.) நம்மைத் தேர்வெள்ளம் வளைந்த என மாறுக. வெய்தா - விரைவாக. நாம் வெய்தா உய்யப் போதும் என மாறுக. அப்புமாரி - அம்புமழை.

(உரை) [1] புள்நிமித்தம் கூறியவன்; சீவக. 415. [2] நீ என்றது நிமித்தம் கூறிய வேடனை நோக்கி.

451. மால்வரைத் தொடுத்து வீழ்ந்த மணிநிற மாரி தன்னைக்
காலிரைத் தெழுந்து பாறக் கல்லெனப் புடைத்த தேபோல்
மேனிரைத் தெழுந்த வேடர் வெந்நுனை யப்பு மாரி
கோனிரைத் துமிழும் வில்லாற் கோமகன் விலக்கி னானே.

(இ - ள்.) மாரிதன்னைக் காற்று, கல்லென இரைத்தெழுந்து சிதற அடித்த தன்மைபோல, தன்மேல் நிரைத்தெழுந்த வேடருடைய அம்பாகிய மழையை, கோமகன் தன் கைவில்லால் தான்சொரிகின்ற கோலை எதிரே நிரைத்து விலக்கினானென்க.

மால் - பெருமை. வரையிற்றொடுத்தென்றார், [1] காலமழையென் றுணர்தற்கு. காற்றுத் தான் வேண்டிய திசையே மழையைப்போக்கு மாறுபோல, இவனம்பு தன் விசையால் அவரம்பை [2] மீளவிட்டதென்க; "நாமுறக், கணைக்காற் றெடுத்த கண்ணகன் பாசறை" (புறநா. 373) என்றார் பிறரும். இதனாற் கோமகனென்றார். (சங)

452. கானவ ரிரிய வில்வாய்க் கடுங்கணை தொடுத்த லோடும்
ஆனிரை பெயர்ந்த வாய ரார்த்தன ரணிசெய் திண்டோள்
தானொன்று முடங்கிற் றொன்று நிமிர்ந்தது சரம்பெய் மாரி
போனின்ற வென்ப மற்றப் பொருவரு சிலையி னார்க்கே.

(இ - ள்.) [1] தனது வில்வாய்க் கடுங்கணையை அங்ஙனந்தொடுத்த வுடனே நிரை மீண்டன; அதுகண்டு ஆயர் ஆர்த்தனர்; அதன்பின்பு, நிரையைவிட்டுக் குவிந்த கானவர் இரியும்படியாகத் தனது திண்டோள் தானொன்று முடங்கிற்று; ஒன்று நிமிர்ந்தது. அப்பொழுது அவ் வேடர்க்கு அம்புகள் பெய்மாரிபோலத் தாரையாய் நின்றவென்க.

---

451. மணிநிறம் - பளிங்கின் நிறம். கல்லென இரைத்து என மாறுக. பாற - சிதறும்படி. நிரைத்தெழுந்த - வரிசையாகித் தோன்றிய. கோல் - அம்பு. கணைக்கு மாரி: சீவக. 421; மதுரைக். 183; பரி. 22 : 5-6; புறநா. 287 : 3; பெருங். 3. 27 : 98-9.

(உரை) [1] கால மழை - பருவத்துப் பெய்யும் மழை; [2] மீள விட்டது - திரும்பச் செய்தது.

452. பெயர்ந்த - மீண்டன. கானவர் இரிய, தோள் ஒன்று முடங்கிற்று, ஒன்று நிமிர்ந்தது என இயைக்க. தோள் முடங்கிற்று நிமிர்ந்தது என்றமையால் சீவகன் அம்புகளை விட்டான் என்பது அறிக; முடங்கிற்று - வளைந்தது. சிலையினார் - வேடர். சிலையினார்க்குச் சரம் மாரிபோல் நின்ற என மாறுக.

(மேற்.) மு: நன். வினை. 32, மயிலை.; சங்கர; இ-கொ. ஒழிபு. 38; பிரயோக. திங்ஙு. 5.

(உரை) [1] தனது - சீவகனுடைய.

அங்ஙனந்தொடுத்த [2] தொடைவிசேடங்கண்டு, இனிப் பொரலரி தென்று குறைந்த நிரையைக் கைவிடுதலால், 'தொடுத்தலோடுமானிரை பெயர்ந்த' என்றார். இது நிரைமீட்ட பின்பு, அவ்வேடர்திரள் குலைந்து போம்படியெய்த நிலைமைகூறிற்று. கொல்லாதிருத்தலின், 'மாரிபோல்' என்றார். (சச)

(வேறு)

453. ஐந்நூறு நூறு தலையிட்டவா றுயி ரவர்
மெய்ந்நூறு நூறு நுதிவெங்கணை தூவி வேடர்
கைந்நூறு வில்லுங் கணையுமறுத் தான்க ணத்தின்
மைந்நூறு வேற்கண் மடவார்மனம் போல மாய்ந்தார்.

தலையிட்ட - முதலிலேயிட்ட. வேடர் ஐம்பத்தாறுயிரவர். அவர் மெய்நூற்றை நூறவல்ல கணையை இப்பொழுது அங்ஙனம் நூறுதபடி சொரிந்து; தூவுதல் - மிகச்சொரிதல். மையாகிய நூறு - அஞ்சனம். இனி, [1] மையை அழித்தற்குக் காரணமான வேலென்றுமாம். நிலை நில்லாது கெடுதலின், மனம் உவமை. மாய்தல் - மறைதல்; "களிறு மாய்க்குங் கதிர்க்கழனி" (மதுரைக். 247) என்றாற்போல. தம்முயிர்க்கு ஊறுசெய்யாது எய்தமைகண்டு போகடுதலின், தூவுதலான் அறுத்தான் என்றார்; தூவித் துணித்தானென்றுமாம்.

(இ - ள்.) அங்ஙனம் பெய்மாரிபோல் நிற்கும்படி கணையைத் தூவி, வேடர் கையிற் பிறரை நூறுகின்ற வில்லையும் அம்பையும் அஞ்சிப் போகடப்பண்ணினான்; பின்பு அவர் மடவார்மனம்போலே ஒருகணத்திற் காட்டிலே மறைந்தாரென்க. (சரு)

454. வாள்வாயு மின்றி வடிவெங்கணை வாயு மின்றிக்
கோள்வாய் மதிய நெடியான்விடுத் தாங்கு மைந்தன்
தோள்வாய் சிலையி னொலியாற்றொறு மீட்டு மீள்வான்
நாள்வாய் நிறைந்த நகைவெண்மதி செல்வ தொத்தான்.

---

[2] தொடை - தொடுத்தல்.

453. ஐந்நூறு நூறுதலையிட்ட; "மூன்றுதலையிட்ட முப்பதிற் றெழுத்தின்" (தொல். புணரியல், 1). மெய்நூறு என்பதிலுள்ள நூறு என்பது பல என்னும் பொருளில் வந்தது; இதனை 'அநந்தவாசி' என்பர்; சீவக. 76, உரை; தக்க. 73, உரை. நூறும் - அழிக்கும். மாய்தல் - மறைதல்; சீவக. 409, அடிக்.

(உரை) [1] "அடையலர் நேய மாதர்கண், மைதுடைத் துறை புகும் வயங்கொள் வேலினாய்" (கம்ப. நகர்நீங்கு. 159)

454. வாள்வாய் - வாளாலுண்டாகிய வடு. கோள் - இராகு வென்னும் பாம்பு. கோள்வாய் மதியம் நெடியான் விடுத்தது: பெரியதிரு. 1. 8 : 6, 6. 4 : 9, 11. 8 : 7; திருவாய். 3. 8 : 3. "பான்மதி விடுத்தனை" (யா-வி. செய். 22. மேற்.). இராகுவின் வாய்ப்பட்ட சந்திரனைத் திருமால் மீட்டன ரென்பது ஜைனர்கள் கூறுவ தொரு கதை என்பதும் உணரற்பாலது. பாம்பின் வாயினின்றும்

கோள் - இராகு. சிலையின் ஒலியால் - எய்கிற காலத்து விசையிற் பிறந்த ஒலியாலே. இது, "கோனிரைத் துமிழும் வில்லால்" (சீவக. 451) என்றதனைக் கருதிக்கூறிற்று. நாடோறும் நிறைந்தமதி உலகறியக் [1] கலைநிரம்பினமை தோற்றுவித்தலின், உவமையாம். [2] மேல் [3] அரசர் தேற்றவுந்தேருமற் பொருதுபட்டாரேனும், அவர் கட்டியங்காரனைப்போற் பகையன்மையிற் சிறிது பாவமுளதென்று, அதுதீர்த்தற்குப் பொன்னுற் [4] பண்ணவனுருவமாக்கி விழாச்செய்து [5] களத்துப்பாவம் போக்கினானென்று கூறிய தேவர், ஈண்டு வேடர் எம்முறையானும் கொல்லத்தகாதவராதலிற் கொலையின்றென்பது தோன்றக் களத்துப்பாவம்போக்கினானென்று கூறுராயினரென்க.

(இ - ள்.) கோள்வாய்மதியத்தைத் திருமால்விடுத்தாற்போல, மைந்தன் அவ்வேடர்மேல் வாட்டமும்புமின்றாக அம்புத்தமும்புமின்றாகச் சிலையினொலியால் நிரைமீட்டு மீள்வான், மதிபோவதனையொத்தா னென்க. (சுசு)

455. ஆளற்ற மின்றி யலர்தாரவன் றோழ ரோடும்
கோளுற்ற கோவ னிரைமீட்டன னென்று கூற
வாளுற்ற புண்ணுள் வடிவேலெறிந் திற்ற தேபோல்
நாளுற்று லந்தான் வெகுண்டானக ரார்த்த தன்றே.

தோழர்க்குப் போரின்றேனும் கூடநின்றநிலையால், 'தோழரோடும்' என்றார். கோளுற்ற - வேடராற்கொள்ளப்பட்ட. கோவன் - நந்தகோன்; அரசனுமாம். [1] தான் தோற்றதன்மேல் [2] இவன்வெற்றி நிலைநின்றது, புண்ணிலே வேல் எறியப்பட்டு அது முறிந்துநின்றாற்போன்றது. நிரைமீட்டற்கு வெகுண்டமையால், தேவர், 'நாளுற்றுலந்தான்' என்று ஒரு பெயரிட்டார்; சீவகன் அரசவுரிமை எய்துநாள் வந்துறுதலின், தனக்கிழைத்த நாளுற்றுலந்தவனென்றுமாம்.

---

மீண்ட மதி வேடர்கையினின்றும் மீண்ட நிரைக்கு உவமை; புறநா. 260. நாள்வாய்......மதி செல்வதொத்தான் : மணி. 4 : 75-6.

(உரை) [1] கலை - கிரணம், வித்தை : சீவக. 3?0, உரை. [2] மேல் என்றது காந்தருவதத்தையாரிலம்பகத்தை. [3] அரசர் : கட்டியங்கார னுடைய கட்டளையால் அழுக்காறுற்றுப் போர்செய்வதற்கு வந்தவர்கள். [4] பண்ணவன் - அருகன்; பொன்னுற் பண்ணவனுருவமாக்கியது முதலியவற்றை, சீவக. 820-ஆம் பாடல் முதலியவற்றால் உணர்க. [5] களத்துப்பாவம் - போர்க்களத்துப் போர்செய்து பிறரைக் கொன்ற பாவம்.

455. அள் - வீரர்; பு. வெ. 28. அற்றம் - அறதல்; குறைபாடு. தாரவன் : சீவகன். தோழர் : சீதத்தன் முதலிய ஐந்நூற்று நால்வர்; சீவக. 364, அடிக். ஆளற்றமின்றி......கோளுற்ற கோவன் : பெருங். 3. 18 : 3-4. புண்ணுள் எறிந்த வேல் : கலித். 83 : 30, 120 : 7; பெருங். 1. 33 : 95; 4. 13 : 130. நாளுற்றுலந்தான் - கட்டியங்காரன்.
(உரை) [1] தான் - கட்டியங்காரன். [2] இவன் - சீவகன்.

(இ - ள்.) தாரவன், தோழருடனே இரண்டுபடையிலும் ஓராளுக்கும் குற்றமின்றாக நிரைமீட்டானென்று கூற, அதுகேட்டு நாளுற்றுலந்தவன் இற்றதுபோல வெகுண்டான்; நகர் உவந்து ஆர்த்ததென்க. (சஎ)

(வேறு)

456. இரவிதோய்கொடிகொண்மாடத் திடுபுகை தவழச்சுண்ணம்
விரவிப்பூந் தாம நாற்றி விரைதெளித் தாரந் தாங்கி
அரவுயர் கொடியி னுன்ற னகன்படை யனுங்க வென்ற
புரவித்தேர்க் காளை யன்ன காளையைப் பொலிக வென்றார்.

(இ - ள்.) [1] சீவகன் செல்லுகின்ற தெருவிலே கற்புடைமகளிர், மாடத்தே சுண்ணத்தோடே கலந்து புகைதவழாநிற்கத் தாமத்தை நாலப் பண்ணி விரையை எங்குந் தெளித்து [2] அதனை இங்ஙனம் [3] கோடித்து, [4] தாமும் மங்கலமாக ஆரத்தையணிந்து, துரியோதனன் படைகெடும்படி வென்ற அருச்சுனனையொத்த காளையைப் பொலிகவென்றாரென்க.
[5] வில்லும் தேரும் நிரைமீட்டலும் உவமம். (சஅ)

457. இன்னமு தனைய செவ்வா யிளங்கிளி மழலை யஞ்சொற்
பொன்னவிர் சுணங்கு பூத்த பொங்கிள முலையி னார்தம்
மின்னிவர் நுசுப்பு நோவ விடலையைக் காண வோடி
அன்னமு மயிலும் போல வணிநகர் வீதி கொண்டார்.

(இ - ள்.) செவ்வாயினையும் சொல்லினையுமுடைய, வளர்கின்ற இளைய முலையினையுடையார், விடலையைக் காண்பதாக நுசுப்பு நோவ ஓடி, அன்னமும் மயிலும் நின்றாற்போல நகரில் தெருவைக் கைக் கொண்டு நின்றாரென்க.

456. சுண்ணம் - வாசனைப் பொடி. சுண்ணம் விரவிப் புகைதவழ என மாறுக. தாமம் - மாலை. நாற்றி - தொங்கவிட்டு. விரை - வாசனை; என்றது சந்தனக் குழம்பை. தேர்க்காளை - அருச்சுனன். காளை - சீவகன். விராடபுரத்திலிருந்த பொழுது அருச்சுனன் நிரைமீட்ட செய்தி இங்கே அறியற்பாலது.

(உரை) [1] 'சீவகன் செல்லுகின்ற தெருவிலே கற்புடைமகளிர்' என்பது வருவிக்கப்பட்டது. [2] அதனை - அம்மாடத்தை. [3] கோடித்து - அலங்காரம் செய்து. [4] தாமும் என்றது கற்புடை மகளிரை. [5] அருச்சுனனுடைய வில்லும் தேரும் சீவகனுடைய வில்லுக்கும் தேருக்கும், அவன் நிரை மீட்டது சீவகன் நிரைமீட்டதற்கும் உவமைகள்.

457. பொன் அவிர் - பொன்னைப்போல் விளங்குகின்ற. மின் இவர் நுசுப்பு - மின்னலின் தன்மை பொருந்திய இடை. விடலை : 16-பிராயத்திற்கு மேல் 30-ஆம் பிராயம் வரையிற் கூறப்படும் ஆண்பாற் பருவப் பெயர்; (பன்னிரு. 232)

இது, [1] கற்புடை மகளிரொழிந்தோரைக் கூறிற்று. (சகூ)

458. சில்லரிச் சிலம்பின் வள்வார்ச் சிறுபறை கறங்கச் செம்பொன்
அல்குற்றே ரணிந்து கொம்மை முலையெனும் புரவி பூட்டி
நல்லெழி னெடுங்க ணம்பாப் புருவவில் லுருவக் கோலிச்
செல்வப்போர்க் காமன் சேனை செம்மன்மே லெழுந்த தன்றே.

[1] இன் : அசை. 'முலையெனும்புரவி' என்றார், புரவியின்பின் தேர் செல்லுமாறு போல முலைசென்று வசீகரித்த பின்பு அல்குற்பயன் கோடலின்.

(இ - ள்.) செல்வத்தே நின்று போர்செய்யும் காமன்சேனை சிலம்பாகிய பறை கறங்காநிற்க அல்குலாகிய தேரைச்சமைத்து, முலையாகிய புரவியைப் பூட்டி, கண் அம்பாகக்கொண்டு, புருவமாகிய வில்லை முடிய வளைத்து, தலைவன்மேலே மறுபடையாக எழுந்ததென்க.

இதனால், [2] அவர் வேட்கைசெலுத்தினமை கூறினார். (௬௦)

459. நூல்பொர வரிய நுண்மை நுசுப்பினை யொசிய வீங்கிக்
கால்பரந் திருந்த வெங்கட் கதிர்முலை கச்சின் வீக்கிக்
கோல்பொரச் சிவந்த கோல மணிவிரற் கோதை தாங்கி
மேல்வரல் கருதி நின்றார் விண்ணவர் மகளி ரொத்தார்.

நூலெதிர்த்தற்கரிய. இன்னும், ஐயும் அசைச்சொல். கோல் [1] நரம்பு.

(இ - ள்.) இடை தளரும்படி வீங்கி அடிபரந்து தளராதிருந்த முலையைக் கச்சாற்கட்டி, விரலாற் கோதையைத் தாங்கி, சீவகன் வரவைக் கருதி, இமையாதே பார்த்து மேனிலத்து நின்றவர் தெய்வமகளிரை யொத்தாரென்க. (௬க)

460. ஆகமு மிடையு மஃக வடிபரந் தெழுந்து வீங்கிப்
போகமும் பொருளுமின்ற புணர்முலைத் தடங்க டோன்றப்
பாகமே மறைய நின்ற படைமலர்த் தடங்க ணல்லார்
நாகம்விட் டெழுந்து போந்த நாகர்தம் மகளி ரொத்தார்.

(உரை) [1] இங்குக் கூறிய மகளிர் கற்புடைய மகளிரல்லரென்பதை, சீவக. 453-ஆம் பாடலாலுமறிக; பெருங். 2. 7 : 52-6.

458. சில அரி - சிலவாகிய பருக்கைக்கல். வள்வார் - சிறிய வார்; பு. வெ. 327. அணிந்து - சமைத்து. கொம்மை - பெருமை. கோலி - வளைத்து. காமன் சேனை - மகளிர் : எழுவாய். செம்மல் : சீவகன்.

(உரை) [1] சிலம்பின் என்பதிலுள்ளது. [2] அவர் - மகளிர்.

459. நுசுப்பினை ஒசிய - இடை ஒடியும்படி. விரலிற் கோதையைத் தாங்கி ; கோதை - விரற்கூடு.

(உரை) [1] வீணையின் நரம்பு.

460. ஆகம் - மார்பு. வீங்கி - பெருத்து. முலைத்தடங்கள் : "தன தடங்கண் மிசை" (கலிங்கத். 26); தடம் - உயர்ந்த இடம் (திருச்சிற். 4, பேர்.). படை - இங்கே வேல் ; கண்ணுக்கு உவமை. நாகம் - புவண லோகம்.

அஃக - சுருங்கும்படி. பொருள் - சுணங்கு. புணர்முலை - நெருங்கின முலை. வேல்போலும் கண். எழுந்து - உயர்ந்து.

(இ - ள்.) எழுந்து வீங்கி ஈன்ற முலைத்தடம், ஒருபாதியே தோன்ற ஒருபாதி மறைய, ஒருவர்பின்பு ஒருவர் நின்ற நல்லார், நாகருலகத்தை விட்டுப் போந்த நாகர்மகளிரை யொத்தாரென்க. (௬௨)

461. வாளரந் துடைத்த வைவே லிரண்டுடன் மலைந்த வேபோல்
ஆள்வழக் கொழிய நீண்ட வணிமலர்த் தடங்க ணெல்லாம்
நீள்சுடர்நெறியை நோக்குநிரையிதழ்நெருஞ்சிப்பூப்போற்
காளை தன் றேர்செல் வீதி கலந்துடன் றொக்க வன்றே.

வாளரம் - அரவிசேடம்.

(இ - ள்.) அராவின வேல் இரண்டு தம்மின் மலைந்தனபோல் ஆள் வழக்கமற மலைந்து நீண்ட கண்ணெல்லாம், கொடுமை செய்ய மாட்டாது தம்மிற் கலந்து, ஞாயிறுபோம் நெறியை நோக்கும் பூப்போலே காளை தேர் செல்கின்ற வீதியிலே சேர நெருங்கினவென்க. (௬௩)

462. வடகமுந் துகிலுந் தோடு மாலையு மணியும் முத்தும்
கடகமுங் குழையும் பூணுங் கதிரொளி கலந்துமூதூர்
இடவகை யெல்லை யெல்லா மின்னிரைத் திட்ட தேபோற்
படவர வல்கு லாரைப் பயந்தன மாட மெல்லாம்.

வடகம் - அத்தவாளம்; உடைவிசேடம். கதிரொளி - திங்களும் ஞாயிறும் போலும் ஒளி. கலந்து - கலப்ப. வகை - குறுந்தெரு. நிரைத் திட்டது : ஒருசொல்.

(இ - ள்.) வடக முதலியன ஒளி தம்மிற் கலக்கும்படி சில மின்னை நிரைத்தாற்போல மூதூரிடத்தினது கூறுபாட்டின் எல்லையெல்லா வற்றிலுமுள்ள மாடமெல்லாம் அல்குலாரைப் பெற்றனவென்க.

இனி, மூதூரெல்லையெல்லாம் வடக முதலியன ஒளி தம்மிற் கலக்கும் படி சிலமின் நிரைத்தாற்போல வென்றுமாம். (௬௪)

461. வாளரம் துடைத்த - அரத்தினால் அராவப்பட்ட; "வாளரம் பொருத வேலும்" (கம்ப. மிதிலைக். 14). மலைந்தபோல் - மாறுபட்டன போல. ஆள் வழக்கு ஒழிய - ஆடவர்களின் நடைகெடும்படி. சுடர் - சூரியன். நிரை - வரிசை. சூரியனை நெருஞ்சிப்பூ நோக்குதல் : குறுந். 315; அகநா. 336; புறநா. 155; பாண்டிக். 293. சூரியனை நோக்கும் நெருஞ்சிப்பூ மகளிர்க்கு உவமை : பெருங். 2. 4 : 14-7. காளை : சீவகன். தொக்க - கூடின.

462. வடகம் - மேற்போர்வை; "வடகப் போர்வையை வனப்பொடு திருத்தி" (பெருங். 1. 45 : 10). தோடு - காதணி. பூண் - மற்றைய ஆபரணங்கள். மூதூர் - இராசமாபுரம். மின் நிரைத்திட்டதே போல் - மின்னலை வரிசையாக வைத்ததைப்போல. மாடமெல்லாம் பயந்தன என்க.

463. (க) மாதுகு மயிலி னல்லார் மங்கல மரபு கூறிப், போதக நம்பி யென்பார் பூமியும் புணர்க வென்பார், தோதக மாகவெங் குஞ்சுண்ணமேற் சொரிந்து தண்ணென், றுதுகு பிணையல்வீசிச் சாந்துகொண்டெறிந்து நிற்பார்.

இதுமுதல், "வட்டுடை" (468) அளவும் ஒரு தொடர்.

(க) காதலொழுகுகின்ற மயிலிற்காட்டின் நல்லார் - பரத்தையர். போதக - போதுக; "திருவே புகுதக" (சீவக. 2121) என்றாற்போல. இவன் அரசனென்றறியாதிருந்தும் உலகங் காத்தற்குரியனென்று 'பூமியும் புணர்க' என்றார். தோதகமாக - வருத்தமாக. நல்லார், மங்கலங் கூறி, நம்பி, போதுகவென்பாரும், புணர்கவென்பாரும், எவ்விடமும் சொரிந்து வீசி எறிந்து நிற்பாரும்.

464. (உ) கொடையுளு மொருவன் கொல்லுங் கூற்றினுங் கொடிய வாட்போர்ப், படையுளு மொருவனென்று பயங்கெழு பனுவ னுண்ணூல், நடையுளார் சொல்லிற் றெல்லா நம்பிசீ வகன்கட் கண்டாம், தொடையலங் கோதை யென்று சொல்லுபு தொழுது நிற்பார்.

(உ) [1] உம்மையிரண்டும் சிறப்பு. வாட்போரையுடைய போரென்று போரிற்கு விசேடம். பனுவல் - ஆராய்ச்சி. நடை - ஒழுக்கம். தொடையலங்கோதை - கட்டுதலையுடைய அழகிய மாலை. கோதாய், நுண்ணூல் வல்லார் கூறிற்று. கொடையிலும் ஒருவன் கொடுப்பான்; படையிலும் ஒருவன் கெடுப்பான்; இவ்விரண்டும் ஒருவனிடத்தே நில்லாவன்றே; ஆயினும், இவ்விரண்டும் சீவகனிடத்தே கண்டேமென்று தம்மிற்கூறி, அவனைத்தொழுது நிற்பாரும். [2] ஒன்றல்லவெல்லாம் பலவாதலின் இரண்டையும் 'எல்லாம்' என்றார். இவற்றிற்குக் கன்னனும் அருச்சுனனுங்கொள்க. இனி, [3] நிலையாமையை யுணர்ந்து கொடைக்கு நிகரில்லாதவன், அதனாற் படைக்கு நிகரிலனாவனென்று சொல்லிற்றுமாம்.

---

463. மாது: மாதர் என்னும் உரிச்சொல்லின் விகாரம்; சீவக. 356, ந. மங்கலத்தை முறைப்படியே கூறி. போதக - புகுக. போதக நம்பி யென்பார்; சீவக. 2122. தோதகம் - வருத்தம். சுண்ணம் - வாசனைப் பொடி. தாது - மகரந்தப்பொடி. பிணையல் - மாலை.

464. கூற்றினும் - யமனைக்காட்டிலும். வாட்போரையுடைய போரிலும். பயம்கெழு - பிரயோசனம் பொருந்திய. சொல்லிற்றெல்லாம்: ஒருமை பன்மை மயக்கம். தொடையலங்கோதை: அல்லும் அம்மும் வேண்டா வழிச்சாரியை எனலுமாம்; 'பிணையலங்கண்ணி - கட்டின கண்ணி; அல், அம்: சாரியை' (அகநா. 44 : 14, உரை); "கூம்பலங் கைத்தலத்து" (திருச்சிற். 11, பேர்.). கோதை: விளி. சொல்லுபு - சொல்லி.

(உரை) [1] கொடையுளும் படையுளும் என்பவற்றினுள்ள உம்மைகள். [2] 'ஒன்றல் லவைபல தமிழ்நூல்" (யா. கா. மேற்.) [3] சீவக. 331, ந.

465. (ரு) செம்மலைப் பயந்த நற்றாய் செய்தவ முடைய ளென்பார்
எம்மலைத் தவஞ்செய் தாள்கொ லெய்துவம் யாமுமென்பார்
அம்முலை யமுத மன்னா ரகம்புலர்ந் தமர்ந்து நோக்கித்
தம்முறுவிழும வெந்நோய்தந் துணைக்குரைத்துநிற்பார்.

(ரு) இவனைப்பயந்தமையால் தவமுடையளென்பாரும், [1] இவனைப் பெற விருக்கின்றவள் எம்மலையிலேநின்று தவஞ்செய்தாளோ! யாமும் அதனைச் சேர்வே மென்பாரும். ‘[2] தவஞ்செய்தார்கொல்’ என்றும் பாடம். அகம் புலர்ந்து - நெஞ்சுலர்ந்து. தம்முடைய மிக்க சீரிய காமநோயைத் தம் தோழிக்குக் கூறிநிற்பாரும்.

466. (சு) சினவுநர்க் கடந்த செல்வன் செம்மல ரகல நாளைக்
கனவினி லருளி வந்து காட்டியாங் காண வென்பார்
மனவிரி யல்கு லார்தம் மனத்தொடு மயங்கி யொன்றும்
வினவுந ரின்றி நின்று வேண்டுவ கூறு வாரும்.

(சு) நாளையென்றார், இற்றைக்குக் காட்சியால் ஆற்றுதலின். காட்டி: இகரவீற்று வியங்கோள். செல்வனே, எம்மையருளி நாளைக் கனவிடத்தே வந்து நின் அகலத்தை யாம் காணக் காட்டுவாயாகவென்பாரும். மனவு - மணி. தாம் கூறுவன ஒன்றும் கேட்பாரின்றாகவும் மயங்கிநின்று தாம் இவனிடத்து விரும்பும் நுகர்ச்சிகளைத் தம்மனத்தோடு கூறுவாரும். அல்குலார், [1] இரண்டிடத்துங் கூட்டுக.

467. (எ) விண்ணகத் துளர்கொன் மற்றிவ் வென்றிவேற் குருசிலொப்பார், மண்ணகத் திவர்க ளொவ்வார் மழகளி றனைய தோன்றல், பண்ணகத் துறையுஞ் சொல்லார் நன்னலம் பருக வேண்டி, அண்ணலைத் தவத்திற் றந்தார் யார்கொலோ வளிய ரென்பார்.

---

465. நற்றாய் - விசயை. செய்தவம் உடையவள்: பெருங். 4. 5 : 34; “என்ன நோன்பு நோற்றாள் கொல்லோ விவனைப் பெற்ற வயிறுடையாள், என்னும் வார்த்தை யெய்துவித்த விருடீகேசா” (பெரியாழ். 2. 2 : 6). மலையிற்றவம்செய்தல்: “மலையின்......பயின்ற தவத்தால் - தலைமைசேர், அம்மாதர் புல்லு மபயன் புயம்புணர, எம்மா தவம்புரிந்தோம் யாம்” (தண்டி. 57, மேற்.). அமர்ந்து நோக்கி - விரும்பிப் பார்த்து. விழுமவெந்நோய் - துன்பத்தைத் தரும் கொடிய காமநோய். துணை - தோழி.

(உரை) [1] இது வருவிக்கப்பட்டது. [2] தேவியர் எண்மராதலின் இப்பாடம் சிறப்புடையது.

466. சினவுநர் - கோபிப்பவர்; பகைவர். கடந்த - வஞ்சியாது எதிர் நின்று வென்ற. செல்வன்: அண்மைவிளி. அகலம் - மார்பை. காட்டி - காட்டுக; வியங்கோள்; போற்றியென்பதுபோல. வினவுநர் - கேட்பவர்.

(உரை) [1] காண வென்பார் என்பதோடுங் கூட்டுக.

467. குருசிலொப்பார் விண்ணகத்திலுளர் கொல் என்க. இவர்க

(ரு) மற்று : வினைமாற்று. தோன்றலை மண்ணிடத்து இம்மக்கள் ஒவ்வாராதலால், பின்னை இக்குருசிலையொப்பார் விண்ணகத்துளரோ? அஃது அறிகின்றிலேமென்பாரும்;' இவ்வுலகின் மகளிர் ஈங்கில்லாத தொரு நலத்தை நுகரவேண்டி இவ்வண்ணலைத் தாம்செய்த தவத்தாற்றந் தவர் தேவரோ? மக்களோ? அவர் யாவராயினும் எல்லாராலும் அளிக்கத்தக்காரென்பாரும்.

468. (சா) வட்டுடைப் பொலிந்ததானை வள்ளலைக்கண்டபோழ்தே
பட்டுடை சூழ்ந்த காசு பஞ்சிமெல் லடியைச் சூழ
அட்டரக் கனைய செவ்வா யணிநலங் கருதிக் காமக்
கட்டழ லெறிப்ப நின்றார் கைவளை கழலநின்றார்.

(சா) வட்டுடை - முழந்தாளளவாக வீரர் உடுக்கும் உடை விசேடம். காசு - புறத்தின் மேகலை. அட்ட அரக்கு.

(இ - ள்.) [1] மயிலினல்லார், [2] அமுதமன்னார், [3] அல்குலாராகிய இவர்கள் என்பாரும் என்பாருமாய், வள்ளலைக் கண்டபொழுதே காமத்தீ யெரிய வாய் கருகிநின்றவர்கள், பின்பு மேகலை சூழ வளை கழல நின்றா ரென்க. (ருரு-சாo)

469. வார்செலச் செல்ல விம்மும் வனமுலை மகளிர் நோக்கி
ஏர்செலச் செல்ல வேத்தித் தொழுதுதோ ணுக்க விப்பாற்
பார்செலச் செல்லச் சிந்திப் பைந்தொடி சொரிந்த நம்பன்
தேர்செலச் செல்லும் வீதி பீர்செலச் செல்லு மன்றே.

வார்செலச்செல்ல - கச்சு மேலே போகப்போக. இப்பால் - பின்பு. நிலத்திலே செல்லும்படி செல்லும்படி சிதறிச் சொரிந்தன; [1] தொடி பலவாதலிற் கூறினர். செல்லுமென்பது நிகழ்காலமேயுணர்த்தும்.

(இ - ள்.) நம்பன்தேர்செல்லுதலாலே இப்பாலுள்ள மகளிர், மறையுமளவு நோக்கிநின்று, அழகு போகாநிற்கப் போகாநிற்க ஏத்தித் தொழுது தோளை [2] நாற்ற, அத்தோள்கள் செருகிக் காத்தற்குரிய

---

ளென்றார் மனிதர் தம்நெஞ்சிற்கு அணியராதலின். மழகளிறு - இளங் களிறு. பண் அகத்து உறையும் - பண்ணின் இனிமை தன்னிடத்தே தங்கும். சொல்லார் : எழுவாய். அடி, 4 : கம்ப. கார்முகப். 43.

468. வட்டுடை : சீவக. 767. தானை - சேனை. வள்ளலென்றது மறவரைக்கொல்லாது விடுத்தமையால். காசு - மேகலை. பஞ்சி - செம்பஞ்சு. அட்டாக்கு = அட்ட அரக்கு - உருக்கிய அரக்கு. காமக் கட்டழல் : சீவக. 253.

(உரை) [1] சீவக. 463. [2] சீவக. 465. [3] சீவக. 466.

469. வனம் - அழகு. தொடி - இங்கே தோளில் அணியப்படுவது. பைந்தொடி சொரிந்த : நற். 23 : 1; "தொடி நடந் திழியச் சா அய்த் தோளவர், கொடுமை கூறின வாயினும்" (தொல். களவு. 20, ந. மேற்.)

(உரை) [1] சொரிந்த வென்றதனுல் பன்மையாற் கூறினு ரென்றார். [2] நாற்ற - தொங்கவிட.

தொடிகளையும் சொரிந்தன. பின்பு அவனதுதேர், செல்கின்ற வீதியின் மகளிர்க்குப் பசப்புப்பரக்கத் தான் செல்லாநிற்குமென்க.

"நீப்ப நீங்காது வரின்வரை யமைந்து, தோட்பழி மறைக்கு முதவிப், போக்கில் பொலந்தொடி" (நற். 136) என்பர். முன் வளைகழல நின்றூர்க்கு வருத்தமிகுதியால், தொடியும் கழன்றனவென்க. (சுக)

470\. வாண்முகத் தலர்ந்தபோலு மழைமலர்த் தடங்கண் கோட்டித்
தோண்முதற் பசலை தீரத் தோன்றலைப் பருகு வார்போல்
நாண்முதற் பாசந் தட்ப நடுங்கினூர் நிற்ப நில்லான்
கோண்முகப் புலியொ டொப்பான் கொழுநிதிப் புரிசை புக்கான்.

ஒளியையுடைய முகத்தே பூத்த மலர்போலும் குளிர்ந்த கண். புரிசை - தன் மனையைச் சூழ்ந்த மதில்.

(இ - ள்.) அங்ஙனம் பசந்தவர், தம் தோளிற்பசலை தீரும்படி தோன்றலைப் பருகுவார்போலே கண்ணாலே வளைத்துப் பார்த்து நடுங்கினூராய் நாணுகிய [1]முதற்றளை தடுத்தலாலே செல்லமாட்டாது நிற்ப, தான் நில்லாதுய்க் கொல்லுமுகத்தையுடைய புலிபோல்வான் புரிசைக்குள்ளே புக்கானென்க. (சுஉ)

471\. பொன்னுகம் புரவி பூட்டு விட்டுடன் பந்தி புக்க
மன்னுக வென்றி யென்று மணிவள்ள நிறைய வாக்கி
இன்மதுப் பலியும் பூவுஞ் சாந்தமும் விளக்கு மேந்தி
மின்னுகு செம்பொற்கொட்டில் விளங்குதேர் புக்கதன்றே.

(இ - ள்.) புரவி, நுகம்பூட்டுதல் விட்டுப் பந்தியிலே புக்கன; பின்பு தேருக்கு மதுவை வட்டில் நிறைய வார்த்து, அம்மதுவாகிய பலி முதலியவற்றை வென்றி மன்னுகவென்று ஏந்த, அத்தேர் மகிழ்ந்து கொட்டிலிலே புக்கதென்க. (சுஙு)

---

470\. வாள் - ஒளி. கோட்டி - வளைத்து. தடங்கண்கோட்டி......... நிற்ப : பெருங். 3. 10 : 25. தோள்முதற்பசலை - தோளினிடத்திலுள்ள பசலை. பருகுதல்போல் நோக்குதல் : பொருந. 77; பெருங். 1. 33 : 121-4; 3. 7 : 80. நாண்முதற்பாசம் - மகளிர்க்குரிய குணங்கள் நான்கனுள்ளே நாண் முதலாவது; "பெண்பா லவர்கட் கணியாய்ப்பிரி யாத நாணும்" (சீவக. 1961): "நாணோடு டன்பிறந்த நாண்" (முத்தொள்ளாயிரம்). தட்ப - தடுப்ப; "புள்ளிடை தட்ப" (புறநா. 124 : 1). கோள் - கொல்லுதல். புரிசை - மதில்; இங்கே வீட்டைச் சூழ்ந்தது.

(உரை) [1] நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்பனவற்றுள் நாண் முதலாவது.

471\. பொன்நுகம் புரவி பூட்டு : சீவக. 2214; பெருங். 1. 48 : 15. பந்தி - குதிரைகட்டும் சாலை. வாக்கி - வார்த்து. மதுப்பலி : பெருங். 1. 33 : 86. தேரினை வழிபடுதல் மரபு; கம்ப. தேரேறு. 24.

472. இட்டவுத் தரிய மெல்லென் றிடைசுவல் வருத்த வொல்கி
அட்டமங் கலமு மேந்தி யாயிரத் தெண்ம ரீண்டிப்
பட்டமுங் குழையு மின்னப் பல்கல னொலிப்பச் சூழ்ந்து
மட்டவிழ் கோதை மாதர் மைந்தனைக் கொண்டு புக்கார்.

ஒல்கி - எதிர்கொண்டு.

(இ - ள்.) மாதர் ஆயிரத்தெண்மர் ஈண்டி, எட்டுமங்கலத்தையும் ஏந்தி, மின்ன ஒலிப்ப உத்தரியம் இடையையும் சுவலையும் வருத்த எதிர்கொண்டு சூழ்ந்து மைந்தனை உள்ளேகொண்டு புக்காரென்க.

"சாமரை தீபந் தமனியப் பொற்குடம், காமர் [1]கயலி னிணை முதலாத் - தேமருவு, கண்ணாடி [2]தோட்டி [3]கதலிகை வெண்முரசம், எண்ணிய மங்கலங்க ளெட்டு." (கூ௪)

473. தாயுயர் மிக்க தந்தை வந்தெதிர் கொண்டு புக்குக்
காய்கதிர் மணிசெய் வெள்வேற் காளையைக் காவ லோம்பி
ஆய்கதி ருமிழும் பைம்பூ ணாயிரச் செங்க ணான்றன்
சேயுய ருலக மெய்தி யன்னதோர் செல்வ முற்றார்.

பிள்ளை உயர்ச்சிமிகுதற்குக் காரணமான தந்தை; "சான்றோ னாக்குத றந்தைக்குக் கடனே" (புறநா. 312) என்றார் பிறரும். காய்தல் - எறித்தல்.

(இ - ள்.) தாயும் தந்தையும் பிள்ளையை எதிர்கொண்டுபுக்கு, ஆலத்தி முதலியவற்றாலே பரிகரித்து, உலகைப் பெற்றாலொத்ததொரு செல்வத்தைத் தாமுற்றாரென்க. (கூ௫)

474. (க) தகைமதி யெழிலை வாட்டுந் தாமரைப் பூவி னங்கட்
புகைநுதி யழல வாட்கட் பொன்னனாள் புல்ல நீண்ட
வகைமலிவரைசெய்மார்பின் வள்ளலைக்கண்டுவண்டார்த்
தொகைமலிதொறுவையாளுந்தோன்றன்மற்றின்ன கூறும்.

---

472. உத்தரியம் - மேலாடை. இடையையும் சுவலையும் வருத்த; சுவல் - பிடர். அட்டமங்கலம் : சீவக. 2487. ஆயிரத்தெண்மர் : இஃது ஒருவகை மரபுபோலும்; சிலப். 5 : 164-6; பெருங். 2. 5 : 9-10. பட்டம் - நெற்றிப்பட்டம். மட்டு - மணம்.

(உரை) [1]கயலின் இணை - இரட்டைக்கயல். [2]தோட்டி - அங்குசம். [3]கதலிகை - கொடி.

473. தாய் உயர் மிக்க - தாயைக் காட்டிலும் உயர்ச்சி மிக்க. காளை : சீவகன். ஆயிரச் செங்கணான் - இந்திரன். சேய் உயர் உலகம் - மிக உயர்ந்த தேவருலகம்.

474. தகை மதி - பெருமையையுடைய சந்திரன். பொன்னனாள் - திருமகள். வரைசெய் மார்பு - மலையைப் போன்ற மார்பு; செய் : உவம உருபு : சீவக. 2490, ந. வள்ளல் - சீவகன். தொகை - கூட்டம். தோன்றல் : கோவிந்தன்.

475. (உ) கேட்டிது மறக்க நம்பி கேண்முதற் கேடு சூழ்ந்த
நாட்டிறை விசயை யென்னு நாறுபூங் கொம்ப னாளை
வேட்டிறைப் பார மெல்லாங் கட்டியங் காரன் றன்னைப்
பூட்டிமற் றவன்ற னாலே பொறிமுத லடர்க்கப் பட்டான்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) தான் மதிக்குக் கெடாதே மதியைத் தான்கெடுக்கும் பொற்று மரையில் திருப் பொருந்தும்படி பெருத்த மார்பினையுடைய வள்ளலைக் கண்டு சில மொழிகளைக் கூறுநிற்கும் நிரையையாளும் வண்டாரை யுடைய நந்தகோனென்க. மற்று : வினைமாற்று. இன்ன : இத்தன்மைய வாகிய மொழிகளை ; இன்ன கேளென மேலே கூட்டுக.

(உ) பொறிமுதல் - இருவினையும் செய்தற்குக் காரணமான உயிர் ; "தொழின்முத னிலையே" (தொல். வேற்றுமைமயங்கு. 29) என்றாற் போல நின்றது.

(இ - ள்.) வள்ளலைக்கண்டு கூறுந்தோன்றல், நம்பி, இதனைக் கேட்டு மறப்பாயாக ; பின்னை இன்ன கேட்பாயாக ; அவ்விரண்டும் யாவையெனின், கொம்பனாளை விரும்பிப் பல்லுயிரைக் காக்கின்ற பாரத்தையெல்லாம் கட்டியங்காரனைப் பூட்டித் தனக்குமுன்னே நாட்டிற் குக் கேடு சூழ்ந்த இறை அவனாலே உயிர் போக்கப்பட்டா னென்க. (சுசு-எ)

476. கோலிழுக் குற்ற ஞான்றே கொடுமுடி வரையொன் றேறிக்
காலிழுக் குற்று வீழ்ந்தே கருந்தலை களைய லுற்றேன்
மால்வழி யுளதன் றாயின் வாழ்வினை முடிப்ப லென்றே
ஆலம்வித் தனைய தெண்ணி யழிவினு ளகன்று நின்றேன்.

காலோடி வீழ்ந்தேனுகை வீழ்ந்தென்றது : கட்டியங்காரன் இவன் அரசனோடு இறந்தானென்று தன்சுற்றத்தையழிப்பனென்று கருதி.

(இ - ள்.) அவனால் உயிர் போக்கப்பட்ட அன்றே வரையேறி வீழ்ந்து உயிரைப்போக்கலுற்ற யான், மால்வழி ஆலம்வித்துப்போலத் தெறித்துப் போய் மறைந்தது பின் தோன்றினதில்லையாயின் உயிரைப் போக்குவலென்றே எண்ணி, வருத்தத்தே மிக்குநின்றேனென்றானென்க.

475. நம்பி : விளி. கேண்முதற் கேடு சூழ்ந்த - தன் சுற்றத்தா ரிடத்திலே அழிவை ஆராய்ந்த. இறை : சச்சந்தன். வேட்டு - விரும்பி. இறைப்பாரம் - அரசபாரம். பொறி - இருவினை ; "சிறுகாலைப் பட்ட பொறியும்" (நாலடி. 110)

(மேற்.) அடி, 1 : இ - வி. வினை. 13.

476. கோலிழுக்குற்ற ஞான்று என்றது சச்சந்தனுடைய மரணத் தைக் குறித்தது ; "கோலிளகிற் றன்றே" (சீவக. 2146). கொடுமுடி - சிகரம். வரைபாய்ந்து உயிர்விடுதல் ஒரு வழக்கம். மால்வழி - சச்சந்த னுடைய சந்ததி. ஆலம்வித்து - ஆலம்விதை.

[1] தேவிக்குப் பிள்ளையுண்மையறிதலிற் கூறினானென்க. இது, 'கேட்டு மறக்க' என்ற மொழி. (கூஅ)

477\. குலத்தொடு முடிந்த கோன்றன் குடிவழி வாரா நின்றேன்
நலத்தகு தொறுவி னுள்ளே னுமங்கோ விந்த னென்பேன்
இலக்கண மமைந்த கோதா வரியென விசையிற் போந்த
நலத்தகு மனைவி பெற்ற நங்கைகோ விந்தை யென்பாள்.

குலம் தோன்றுதலருமை பற்றிப் பின்னும் 'முடிந்த' என்றான். தன்குலமெல்லாம் இப்பொழுது தானாய்நிற்றலின் வாரா நின்றேனென்றான். நலத்துக்குத் தக்க.

(இ - ள்.) யான் கோன்குடிவழி வாராநின்றேன்; இடையிடத்தேன்; பெயர் கோவிந்தனென்று கூறப்படுவேன்; கோதாவரியென்று கூறிப் புகழால் எங்கும் பரந்த இலக்கணமமைந்த என்மனைவி பெற்ற நங்கை கோவிந்தையென்று பெயர் கூறப்படுவாளென்க. (கூகூ)

478\. வம்புடை முலையி னாளென் மடமகண் மதர்வை நோக்கம்
அம்படி யிருத்தி நெஞ்சத் தழுத்தியிட் டனைய தொப்பக்
கொம்படு நுசுப்பி னாளைக் குறையிரந் துழந்து நின்ற
நம்படை தம்மு ளெல்லா நகைமுக மழிந்து நின்றேன்.

(இ - ள்.) முலையினாளாகிய என்மகள்நோக்கம், எல்லார்க்கும் அம்பைத் தோளடியிலே செல்ல வலித்து நெஞ்சிலே அழுத்திய தன்மையை ஒத்தலாலே அந்நுசுப்பினாளைப் பெறவேண்டுமென்று வருந்தி நின்ற நம் ஆயரிடத்தெல்லாம் முகச்செவ்வியின்றி மறுத்துநின்றேனென்க.

தான்மகட்கொடுத்தலின் நம்படையென்றான். சீவகன் விரும்பிக் கோடற்கு மகளை இங்ஙனம் சிறப்பித்துக் கூறினான். (எ0)

---

(உரை) [1] தேவி: விசயை.

477\. கோன் - சச்சந்தன். நலத்தகுதொறு - விரும்பத்தக்க பசு. இசையிற் போந்த - புகழால் எங்கும் பரவிய. நலத்தகு மனைவி - விரும்பத்தக்க மனைவி.

478\. வம்பு - கச்சு. மதர்வை நோக்கம் - மயக்கத்தைக் கொடுக்கும் பார்வை. கொம்பு அடு - பூங்கொம்பை வருத்துகின்ற. நம்படை என்றது ஆயர்களை. நகைமுகம் அழிந்து என்றது முகச்செவ்வி இல்லாதிருந்ததை; சீவக. 482, உரை.

479. பாடகஞ் சுமந்த செம்பொற் சீறடிப் பரவை யல்குற்
சூடக மணிந்த முன்கைச் சுடர்மணிப் பூணி ஞாளை
ஆடகச் செம்பொற் பாவை யேழுடன் றருவ லைய
வாடலில் வதுவை கூடி மணமக னாக வென்றான்.

(இ - ள்.) ஐயனே, அடிமுதலியவற்றையுடைய கோவிந்தையைப் பாவை ஏழுடனே தருவேன்; குறைவற்ற மணம்பொருந்தி மணமகனு வாயாக வென்றானென்க.

இஃது இன்னவாகிய மொழியைக்கேளென்றது. 'என்றான்' என்பதனை, 'அகன்றுநின்றேன்' (சீவக. 476) என்பதனோடும் கூட்டுக. (எக)

(வேறு)

480. (க) வெண்ணெய்போன் றூறினியண் மேம்பால்போற் றீஞ்
உண்ண வுருக்கிய வானெய்போன் மேனியள் [சொல்லள்
வண்ண வனமுலை மாதர் மடநோக்கி
கண்ணுங் கருவிளம் போதிரண்டே கண்டாய்.

481. (உ) சேதா நறுநெய்யுந் தீம்பால் சுமைத்தயிரும்
பாதால மெல்லா நிறைத்திடுவல் பைந்தாரோய்
போதார் புனைகோதை சூட்டுன் னடித்தியை
யாதாவ தெல்லா மறிந்தருளி யென்றான்.

482. (ங) குலநினைய னம்பி கொழுங்கயற்கண் வள்ளி
நலனுகர்ந்தா னன்றே நறுந்தார் முருகன்
நிலமகட்குக் கேள்வனு நீணிரை நப் பின்னை
இலவலர்வா யின்னமிர்தம் மெய்தினா னன்றே.

இவை மூன்றும் ஒரு தொடர்.

---

479. பாடகம் - ஒருவகைக் காலணி. சீறடி - சிறிய அடி. சூடகம் - கைவளை. ஆடகப்பொன் - நால்வகைப் பொன்னுள் ஒன்று. பாவை ஏழு : சீவக. 490.

480. ஊறு - ஸ்பரிசம். மேம்பால் - மேவும்பால்; விகாரம். நோக்கி - நோக்கத்தையுடையாள்; இச்செய்யுளில் தன் சாதிக்கு ஏற்பத் தான் அறிந்த பொருள்களையே கோவிந்தைக்கு உவமையாகக் கூறியிருக்கும் நயம் பாராட்டற்குரியது.

481. சேதா - செம்மையாகிய பசு. தீம்பாலையும். பாதாலம் - பாதாளம். அறிந்தருளி உன் அடித்தியைக் கோதை சூட்டு; அடித்தி - அடியாள்; பெருங். 1. 35 : 111.

482. குலம் நினையல் - அரசர்க்குத் தாழ்ந்த இடையர்குலமென்று நினையாதே. வள்ளியின் நலனை. நறுந்தார் முருகன் - மணமுள்ள கடப்பமாலையை அணிந்த முருகக்கடவுள். நிலமகட்குக் கேள்வன் - திருமால். நப்பின்னை-நப்பின்னைப்பிராட்டியார்; இவர் கண்ணபிரானுடைய தேவிமார்களுள் ஒருவர்; "ஆயர்பாவை நப்பின்னை தனக்குறை"

(க) மேம்பால் - உண்டற்கு [1]மேவும்பால்; ஈற்றுமிசையுகரம் மெய்யொடுங் கெட்டது. உண்ணா - [2]தீய. உம்மை, [3]சிறப்பும்மை.

(உ) சுமைத்தயிர் - ஆடைத்தயிர். யாதுஆவது - இத்தால் வரும் தீங்கென்?

(ங) பின்னை, அவள்பெயர்; ந : சிறப்புப் பொருளுணர்த்துவதோரிடைச் சொல்; [4]நச்செள்ளை, [5]நப்பாலத்தன், [6]நக்கீரன் என்றாற்போல; [7]நம்பின்னை : விகாரமுமாம்.

(இ - ள்.) பைந்தாரோய், நம்பி, முலையினையும் காதலினையுமுடைய மடநோக்கி, வெண்ணெய்போற்குழைந்து இனியள்; சொல்லள்; மேனியள்; அவையன்றி அவள் கண்களும் பூவிரண்டேகாண்; அவளை வரைந்தால் யாது ஆவது? யாமறிய முருகன் வள்ளிநலம் நுகர்ந்தானன்றே; திருமால் பின்னையைப் புணர்ந்தானன்றே; ஆதலால், குலத்தின் தாழ்வு கருதாதொழிக; இனி யான் கூறினவெல்லாந் திருவுள்ளம்பற்றி நின்னடித்திலையக் கோதை சூட்டுவாயாக; சூட்டுமிடத்துக் கலியாணஞ்செய்தற்குச் சிறியேனல்லேன்; நெய்யும் பாலும் தயிரும் பாதாளமெல்லாம் நிறைப்பேனென்றானென்க.

[8]மணமகளுகவென்றவிடத்து [9]முகச்செவ்வி காணாமையின், பின் இது கூறி உடம்படுத்தினான். (எஉ-ச)

(வேறு)

483. கன்னியர் குலத்தின் மிக்கார் கதிர்முலைக் கன்னி மார்பம்
முன்னினர் முயங்கி னல்லான் முறிமிடை படலை மாலைப்
பொன்னிழை மகளிரொவ்வா தவரைமுன் புணர்தல் செல்லார்
இன்னதான் முறைமை மாந்தர்க் கெனமனத்தெண்ணி னானே.

(பெரிய திருமொழி, 2. 3 : 5). இவரை நீளாதேவியின் கூறென்பர். இப்பெயர் பின்னை எனவும் வழங்கும். இலவலர் - இலவம்பூ.

(மேற்.) அடி, 3 : சிலப். 17 : 'எடுத்துக்காட்டு.' பக். 451.

(உரை) [1]மேவும் - விரும்பும். [2]தீய - வற்ற. [3]கண்ணும் என்பதிலுள்ளது. [4]நச்செள்ளை : இவர் பெண்பாற்புலவர்; செள்ளையார் என்றும், செள்ளை என்றும், காக்கைபாடினியார் நச்செள்ளையார் என்றும் கூறப்படுவர்; இவர் பாடிய பாடல்கள் : குறுந். 210; பதிற். 6-ஆம் பத்து; புறநா. 278. [5]நப்பாலத்தன் : இவர், நற்றிணையில், 52, 240-ஆம் பாடல்கள் இயற்றியவர். [6]நக்கீரர்; இவர் பத்துப்பாட்டில் திருமுருகாற்றுப்படை, நெடுநல்வாடை என்ற இருபாடல்களும், நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, புறநானூறு என்ற நூல்களில் பல பாடல்களும் பாடியவர்; [7]நம்பின்னை என்பதையே பாடமாகக் கொண்டார் அடியார்க்கு நல்லார்; சிலப். 17 : பக். 451. [8]மணமகளுகை என்ற இடம்; சீவக, 479. [9]சீவகனிடத்துக் காணாமையின்.

483. முறி - தளிர். முறிமிடை படலைமாலை : சீவக. 1889; பெரும்பாண். 60, 174; நெடுநல். 31; பெருங். 3. 25 : 175. சூளா. துறவு. 23; பு - வெ. 6, 74, 136. மாந்தர்க்கு முறைமை இன்னது என மாறுக; ஆல் : அசை.

(இ - ள்.) நம் குலத்தோர், [1] வகைமாலையினையும் இழையினையுமுடைய மகளிரை வரையுமிடத்து, கன்னியரிற் குலத்தின்மிக்காருடைய அழியாத மார்பத்தை எதிர்ப்பட்டாராய் முயங்கினல்லது, தம் குலத்திற்கு ஒவ்வாதவரை முற்பட வரையார்; அதுவுமன்றித் [2] தேவரையொழிய மக்கட்கு முறைமை இத்தன்மையதாயிருந்ததெனக் கருதி, பின்பு தன்மனத்தே [3] பதுமுகனுக்குக் கொடுப்பதாகவெண்ணினானென்க. (எ௩)

484. கோட்டிளங் களிறு போல்வா னந்தகோன் முகத்தை நோக்கி
மோட்டிள முலையி னாணின் மடமக ளெனக்கு மாமான்
சூட்டொடு கண்ணியன்றே யென்செய்வா னிவைகள் சொல்லி
நீட்டித்தல் குணமோ வென்று நெஞ்சகங் குளிர்ப்பச் சொன்னான்.

'சூட்டொடு கண்ணியன்றே' என்றது, இடுந்தன்மையன்றிச் சூட்டுந் தன்மையோடு கூடிய கண்ணியல்லவோவென்றும், நெற்றிச்சூட்டும் கண்ணியுமல்லவோவென்றும் இரண்டுபொருளுணர்த்தும்; உணர்த்தவே மார்பிற்கு மாலையிடுகவென்றும், தலைக்கு மாலைசூட்டுகவென்றும் பெரும்பான்மையும் வழக்கு நடத்தலின், தலைமேல் வைக்கப்படும் கண்ணியென்றாகை நந்தகோன் கருதினான். [1] நெற்றிச்சூட்டு ஆடவர்க்காகாத தன்மையும், கண்ணி ஆடவர்க்கு ஆம் தன்மையும்போல, தன்குலத்திற்கு ஆகாமையிற் சூட்டின் தன்மையும், [2] பதுமுகன்குலத்திற்குச் சிறிது பொருந்துதலிற் கண்ணியின் தன்மையும் உடையளென்று சீவகன் கருதினான்; [3] கோபாலரினும் வாணிகஞ் செய்வாருளராதலின்.

(இ - ள்.) களிறுபோல்வான் நந்தகோன் முகத்தைப் பார்த்து, முலையினளாகிய நின்மகள், மாமான், எனக்குச் சூட்டொடு கண்ணியல்லவோ, இவைகள் சொல்லி நீட்டித்தல் செய்வானேன்? இதுகுணமோவென்று நெஞ்சிடம் குளிரும்படி கூறினானென்க.

இனி, மாமான் எனக்குச் சூட்டொடுகண்ணியன்றேயென்றது: தனக்கு ஆகாமையிற்புலாலும், பதுமுகற்கு ஆதலிற் பூவுமாகக்கருதினானென்றுமாம். இனி, ஆமான்சூட்டுமாம்; இனி 'மா' வடசொல்லாக்கி ஆகாதென்றும் உரைப்பர். (எ௪)

---

(உரை) [1] வகைமாலை: மாலையின் விசேடம்; கலித். 57 : 16; பெருங். 4. 4 : 8. [2] தேவரை என்பது வருவிக்கப்பட்டது. [3] பதுமுகன்: தனபாலனென்ற வணிகனுடைய மகன்; சீவகனுடைய தோழர் நால்வருள் ஒருவன்.

484. மாமான்: விளி; அம்மானே என்பது பொருள்: திவ். திருப்பாவை. 9; "தேர்வேந்தர் மாமான்" (பெருந் - பார. உத்தியோக.) "மாமான் மரபிற்" (தக்க. 187). சூட்டு புலாலுக்கும், கண்ணி பூவிற்கும் பெயராக வழங்கும்.

(உரை) [1] நெற்றிச்சூட்டு மகளிர்க்குரித்து; சீவக. 624. [2] பதுமுகன்வணிகர்குலத்திற்பிறந்தவன்; சீவக. 1791. [3] கோபாலர்-இடையர்.

485. தேன்சொரி முல்லைக் கண்ணிச் செந்துவ ராடை யாயர்
கோன்பெரி துவந்து போகிக் குடைதயிர் குழுமப் புக்கு
மான்கறி கற்ற கூழை மௌவல்சூழ் மயிலைப் பந்தர்க்
கான்சொரி முல்லைத் தாரான் கடிவினை முடிக வென்றான்.

துவரூட்டின ஆடை. தயிர்முழங்கப்புகுதல் நன்னிமித்தம். கறி கற்ற - கடித்தலைக் கற்ற. மௌவல் - மல்லிகைவிசேடம். மயிலை - இருவாட்சி. கடிவினை - [1] சமாவர்த்தனம்.

(இ - ள்.) முல்லைத்தாரானாகிய ஆயர்கோன் உவந்துபோய்ப் புக்குப் பந்தரிலே கடிவினை முடிவதாகவென்றானென்க. (எஎ)

486. கனிவளர் கிளவி காமர் சிறுநுதல் புருவங் காமன்
குனிவளர் சிலையைக் கொன்ற குவளைக்கண் கயலைக் கொன்ற
இனியுள ரல்ல ராய ரெனச்சிலம் பரற்றத் தந்து
பனிவளர் கோதை மாதர் பாவையைப் பரவி வைத்தார்.

[1] குனிவு : விகாரம்.

(இ - ள்.) மாதர், கனிந்தமை தோற்றுகின்ற கிளவியையுடையாளுடைய நுதலும் புருவமும் சிலையைக்கெடுத்தன; கண் கயலைக்கெடுத்தன. இப்பருவங்கண்டு ஆயர் உயிர்கொண்டிருப்பாரல்லரென்று சிலம்பு ஒலியா நிற்கப் பாவையைத் தந்து பரவி வைத்தாரென்க. (எஅ)

487. நாழியு ளிழுது நாகான் கன்றுதின் றொழிந்த புற்றேய்த்
தூழிதொ றுவுந் தோழும் போன்றுடன் மூக்க வென்று
தாழிருங் குழலி னாளை நெய்தலைப் பெய்து வாழ்த்தி
மூழைநீர் சொரிந்து மொய்கொ ளாய்த்திய ராட்டி னாரே.

---

485. செந்துவராடை ஆயர் : கலித். 102 : 37; "துவருண் ணுடைச் சாய்கோ லிடையன்" (யா - வி. மேற்.). முல்லைத்தாரானாகிய ஆயர்கோன் என மாறுக. குழும - முழங்க; சீவக. 2078. மான்கறி கற்ற கூழைமௌவல் : கூர்ம. சம்புத். 76; மௌவல் - செம்முல்லை. மயிலை - இருள்வாசி (இருவாட்சி). மௌவலும் மயிலையும் : பெருங். 1. 51 : 40.

(உரை) [1] சமாவர்த்தனம் - விவாகத்திற்கு முன்பு செய்யப்படும் ஒருவகைச் சடங்கு.

486. கிளவி : கோவிந்தை. நுதலும் புருவமும். குனிவளர் - குனிதல் வளர்கின்ற. குவளைபோன்ற கண். ஆயர் இனி உளரல்லர். மாதர் : எழுவாய். பாவையைத் தந்து; பாவை : கோவிந்தை. பரவி - புகழ்ந்து.

(உரை) [1] குனிவு என்பது குனி என்று வந்தது.

487. இழுது - நெய். நாகு ஆன்கன்று - இளமையையுடைய பசுவின் கன்று. புல் - அறுகம்புல். இழுது..............புற்றேய்த்து...........

(இ - ள்.) ஆய்ச்சியர் குழலினுளைப் பசுவும் தொழுவும்போன்று ஊழிதோறும் நீயும் [1] நின்கணவனும் சேர மூப்பீராகவென்று வாழ்த்தி, நாழியுளிருந்த நெய்யிழுதை நாகாகிய பசுவின்கன்று தின்றொழிந்த புல்லாலே தோய்த்து அந்நெய்யைத் தலையிலே வார்த்து மூழையாலே நீரைச்சொரிந்து ஆட்டினுரென்க. (எகூ)

488. நெய்விலைப் பசும்பொற் றோடு நிழன்மணிக் குழையு நீவி
மைவிரி குழலி னுளை மங்கலக் கடிப்புச் சேர்த்திப்
பெய்தனர் பிணையன் மாலை யோரிலைச் சாந்து பூசிச்
செய்தனர் சிறுபுன் கோலந் தொறுத்தியர் திகைத்து நின்றார்.

(இ - ள்.) கருமை விரிந்த குழலினுளை, நெய்விலையாலுண்டான பொற்றோட்டையும் குழையையும் நீக்கி மங்கலமான கடிப்பிணையை யிட்டு மாலையை இட்டனராய் ஓரிலையில் இடுவித்துவந்த சந்தனத்தையும் பூசிக் கோலஞ்செய்தார்; அதுகண்டு ஆய்ச்சியர் திகைத்துநின்றாரென்க. (அ௦)

489. ஏறங்கோண் முழங்க வாய ரெடுத்துக்கொண் டேகி மூதூர்ச்
சாறெங்கு மயரப் புக்கு நந்தகோன் றன்கை யேந்தி
வீறுயர் கலச நன்னீர் சொரிந்தனன் வீர னேற்றான்
பாறுகொள் பருதி வைவேற் பதுமுக குமரற் கென்றே.

(இ - ள்.) ஆயர், ஏறுகோட்பறை முழங்காநிற்க அவளை எடுத்துக்கொண்டு மூதூரெங்கும் சாறயர ஏகிப் பின்பு கந்துகன் மனையிலே புகுதலின், நந்தகோன் தன்கையிலே கலசத்தையேந்தி நீரைச் சொரிந்தான்; வீரனும் பதுமுகனுக்கென்று கூறி ஏற்றானென்க.

வீறு - வேறொன்றற்கில்லா அழகு. மணஞ்செய்தமை கூறினார். (அக)

வாழ்த்தி: சீவக. 2416, 2430; பெருங். 2. 5 : 67 - 70. தோழ் - தொழுவம்; குலோத். உலா. 216. ஆவும் தொழுவும் போன்று மூக்க என இடையர்க்கேற்றபடி வாழ்த்தூக் கூறியது அறிந்து இன்புறற்பாலது. மூக்க - மூத்திடுக. மூழை - அகப்பை. மொய் - நெருக்கம்.

(உரை) [1] நின்கணவனும் என்பது வருவிக்கப்பட்டது.

488. நெய்விலைப் பசும்பொன் : பெரும்பாண். 164. நிழல் - ஒளி. நீவி - நீக்கி. கடிப்பு - கடிப்பிணை; ஒருவகைக் காதணி; சீவக. 295, அடிக். 2091; பெருங். 1. 34 : 199. பிணையன் மாலை : சீவக. 2177; அகநா. 44 : 14. தொறுத்தியர் - இடைச்சியர்.

489. ஏறங்கோள் - ஏறுகளைத்தழுவிக் கொள்ளுதற்பொருட்டு அடிக்கும் வாத்தியம்; முல்லை நிலத்திற்குரிய பறை; இறை. 1, உரை; ஏறுகோள்; அம்முச்சாரியை பெற்றது. எடுத்துக்கொண்டு - கோவிந்தையை எடுத்துக்கொண்டு. மூதூர் - இராசமாபுரம். சாறு - விழா. அயர -

490. நலத்தகை யவட்கு நாகா ணுயிரத் திரட்டி நன்பொன்
இலக்கணப் பாவை யேழுங் கொடுத்தனன் போக விப்பால்
அலைத்தது காமன் சேனை யருநுனை யம்பு மூழ்க
முலைக்குவட் டிடைப்பட் டாற்ருன் முத்துக முயங்கி ணுனே.

நலத்தகை - நன்மையுடைய அழகு. காமன்சேனை - கண்ணும் முலையும்.

(இ - ள்.) கோவிந்தைக்குப் பசு இரண்டாயிரமும், பொற்பாவை ஏழும் கொடுத்தனுய் நந்தகோன்போக, இவ்விடத்தே பதுமுகனைக் காமன்சேனை வருத்திற்று; அவ்வளவிலே அவன் அம்பு தைத்தலாலே ஆற்ருனுய் முலைச்சிகரங்களுக்கு நடுவே முத்துக வீழ்ந்து முயங்கிஞ னென்க. (அ௨)

## (வேறு)

491. கள்வாய் விரிந்த கழுநீர்பிணைந் தன்ன வாகி
வெள்வேன் மிளிர்ந்த நெடுங்கண்விரை நாறு கோதை
முள்வா யெயிற்றூ றமுதம்முனி யாது மாந்திக்
கொள்ளாத வின்பக் கடற்பட்டனன் கோதை வேலான்.

கள் வாய் விரிந்த - தேன் வாயிலே பரந்த.

(இ - ள்.) வேலான் இன்பத்தைச் செய்தலின் அலர்கின்ற கழுநீ ரிரண்டு சேர்ந்தாற்போன்ற தன்மையவாய்த் துன்பத்தைச் செய்தலின் வேல்போற் பிறழ்ந்த கண்ணிணையுடைய மணந்தோற்றுகின்ற கோதை யுடைய எயிற்றின் மாருத அமுதத்தை வெருமல் உண்டு கரைபுரண்ட இன்பக்கடலிலே அழுந்திஞனென்க. (அ௩)

492. தீம்பாற் கடலைத் திரைபொங்கக் கடைந்து தேவர்
தாம்பாற் படுத்த வமிர்தோதட மாலை வேய்ந்தோள்
ஆம்பாற் குடவர் மகளோவென் றரிவை நைய
ஓம்பா வொழுக்கத் துணர்வொன்றில ஞயி ஞனே.

---

கொண்டாட. மூதூர்ப்புக்கு என இயைக்க. தன்கைக் கலசமேந்தி நீர் சொரிந்தனன் என்க. வீரன் - சீவகன். பாறு - பருந்து. பாறுகொள் பருதிவேல் : சீவக. 395, 568.

490. நாகு ஆன் எனப்பிரிக்க. இரட்டியும் என உம்மை விரிக்க. பாவை ஏழு : சீவக. 479. பதுமுகனை அலைத்தது. காமன்சேனை : சீவக. 458. மூழ்க ஆற்ருன் என இயைக்க.

491. பிணைதல் - சேர்தல். கோதை - கோவிந்தை. முள்வாய் எயிற்றூறமுதம் : கலித். 4 : 13 ; மணி. 18 : 71. முனியாது - தெவிட் டாமல். வேலான் : பதுமுகன்.

492. தீம்பால் - இனிய பால். குடவர் - இடையர். ஒழுக்கத்து அரிவை நைய. உணர்வு - அறிவு.

திரை, கடைகிற காலத்துப் பிறந்தது. [1] தாம்பால் ஆம்பால் இரண்டும் விகாரம்; இனி, ஆம்பால் - பெரும்பாலுமாம்.

(இ - ள்.) இவள் தேவர் கடலைக் கடைந்து தம்மிடத்தே அகப்படுத்த அமுதமோ! அன்றி அழகிய பாலையுடைய இடையர்மகளோ! என்று நயப்புரைத்துப் பின்னும் [2]பரிகரிக்கவொண்ணுத புணர்ச்சியொழுக்கத்திலே மாலையினையும் தோளினையுமுடைய அரிவை [3]அவசமாகத் தானும் அறிவு மயங்கினுளென்க.

இவ்விலம்பகம் வீரமகளைச் சேர்ந்தமை கூறிற்று. (அச)

உ – கோவிந்தையாரிலம்பகம் முற்றிற்று.

ஆகக்கவி, சகூஉ.

---

(உரை) [1] தம்பால் என்பது தாம்பால் என்றும், அம்பால் என்பது ஆம்பாலென்றும் வந்தன; தம்பால் - தம்மிடம்; அம் பால் - அழகிய பால். [2] காக்க முடியாத. [3] அவசம் - மயக்கம்.

## மூன்றாவது

# காந்தருவதத்தையாரிலம்பகம்

---

493. (க) இங்கிவர்க ளிவ்வா றிருந்தினிது வாழச்
சங்குதரு நீணிதியஞ் சாலவுடை நாய்கன்
பொங்குதிரை மீதுபொரு மால்களிறு போன்றோர்
வங்கமொடு போகிநிதி வந்துதர லுற்றான்.

இவ்விடத்தே பிள்ளையாரும் சுற்றமும் இருந்து இனிதாக வாழா நிற்க, நாய்கன் பரிவுதீர்ந்து மட்டவிழ் [1]கோதையோடே மனையிலே மகிழ்ந்து புக்கானெனக்கூட்டி, " கட்டழல் " (சீவக. 583) என்னும் கவி யளவும் ஒரு தொடராக்குக. இதற்குக் காரணம் என்னையோவெனின், ஆசிரியன் " ஆண்டு நேரெல்லை " (சீவக. 393) என்று கூறிய பின்பு சுதஞ்சணனும், " பன்னிரு மதியின் " (சீவக. 1220) என்றும், "ஆறிரு மதியின் " (சீவக. 1221) என்றும் கூறினமையால், ஆசிரியன் முந்நூற் றறுபத்தைந்து நாள் ஓரியாண்டான சௌரமானபட்சம்பற்றிக் கூறினா னென்றும், தேவன், ' மதியின் ' என்று மதியைக் கருதிக் கூறினமை யின், சாந்திரமான பட்சம்பற்றிக் கூறினானென்று முணர்க. அங்ஙனங் கூறுகின்ற பொழுது, ஆசிரியன், மாசித்திங்களில் முதற்றேதியில் [2]அபரபட்சத்துத் தசமியிலே கூறினானென்றும், தேவன் பங்குனித் திங்களில் நாலாந்தேதியில் அபரபட்சத்துச்சதுர்த்தசியிலே கூறினானென் றுங் கொள்க. எனவே, ஆசிரியன், ' யாண்டு ' என்றது மாசித்திங்களிற் றோன்றிய பங்குனிப் பிறைமுதலாக மேல்வருகின்ற மாசியிற் பங்குனிப் பிறையளவும் பன்னிருமதியாமாதலானும் இருவரும் இரண்டு திங்களிற் கூறினாரேனும் ஓரியாண்டென்பது பெற்றாம். சௌரமான பட்சத்தாலே ஐந்து நாள் ஏறுகின்றதாதலின், ஆசிரியன் கூறியது அம்மாசியில் உவாவின்முன் கழிந்த தசமியிலெனக் கொள்க. இது, " நானக்கிடங்கு " (சீவக. 590) என்னுங் கவியானுமுணர்க. மாசித்திங்களில் ஆறுந்தேதி அமாவாசை முதல் பங்குனித்திங்களில் ஐந்தாந்தேதி வரை சாந்திரமான பட்சத்தாற் பங்குனியாகையாலே மண்டபமெடுத்தலும் விவாகங்களு

---

493. இவர்கள் - சீவகன் முதலியவர்கள். சங்கு : ஒரு பேரெண் ; புறநா. 18, உரை. சால உடை - மிகவும் கெட்ட. நாய்கன் : ஸ்ரீதத்தன். திரை - கடல். கப்பலுக்குக் களிறு உவமை. சீவக. 501, 2793 ; பதிற். 52: 1-4. கப்பலிற் சென்று நிதி கொணர்தல் : சிலப். 2 : 7-8.

(உரை) [1] கோதை : காந்தருவதத்தை. [2] தேய்பிறை.

முரியவாயின. இவ்விடத்தில் சௌரமானபட்சத்தால் மாசித்திங்கள் கொள்ளார், சாந்திரமான பட்சம் சிறந்ததாகலின். இங்ஙனம் இருவரும் ஆண்டுக் கூறுகின்ற நாளிடையில் நடந்த சரிதமாகிய நிரைமீட்டலும், தத்தையையும் குணமாலையையும் வரைதலும், சிறைவிடுத்தலும் நிகழ்ந்தன மாசியிலும் பங்குனியிலே சிறிது நாளிலுமென்பது உணர்தற்கு மேலே "பங்குனிப் பருவஞ் செய்தான்" (சீவக. 851) என்றார். மேலே தோழர், பிள்ளையார்க்குத் தத்தையது ஓலை கொடுத்ததிலே, "ஐந்துமதி யெல்லையினை யாண்டுடைய ளாகி" (சீவக. 1875) எனவே இவ்வோலை எழுதுவதற்கு முன்னே ஏழுதிங்கள் சென்றனவென்றாராதலின், இராசமாபுரத்தே முப்பத்தைந்து நாளும், "இங்ஙன மிரண்டு திங்களேகலும்" (சீவக. 1359) என்றும், "கழிந்தன விரண்டு திங்கள்" (சீவக. 1496) என்றுங் கூறுதலால், பதுமையாரிடத்தும் கேமசரியாரிடத்தும் பங்குனி முதலாக நான்கு திங்களும், இவ்வோலை எழுதுதற்குமுன்னே கனகமாலையாரிடத்து இரண்டு திங்களும், ஆக ஏழுதிங்களும் சென்றனவென்று தேவர் திங்களைப் பகுத்துக் கூறுதலின், ஈண்டு ஸ்ரீதத்தனுக்கு, "அணங்கனாரோ டறுமதி கழிந்த பின்றை" (சீவக. 505) என்றல் பொருந்தாதென்பது பற்றி, முன்நிகழ்ந்ததொரு கதை தேவர் கூறுகின்றாரென்றே பொருளுரைத்தல் வேண்டிற்றென்று கொள்க.

"சங்குதரு" முதலாக, "மடவார்கள் கடனென் றெழுந்து போந்தான்" (சீவக. 498) இறுதியளவும் ஒரு தொடர்.

(க) உடைநாய்கன் : வினைத்தொகை ; சங்கமென்னும் இலக்கத்தை மேன்மேலே தருகின்ற பெரியபொருள் மிகவுங்கெட்ட நாய்கன். "கலத்தினுங் காலினுந் தருவன ரீட்டக், குலத்திற் குன்றாக் கொழுங்குடிச் செல்வர்" (சிலப். 2 : 7-8) என்று இளங்கோவடிகளும் கூறினமையின், பொருளுடையவன்றான் இருந்து பொருள்தேடுதலும் பொருளில்லாதவன்றான் கலத்திற் சென்று பொருள்தேடுதலும் வேண்டுதலின், இவனையும், 'ஓர்வங்கமொடு போகிநிதி வந்துதர லுற்றான்' என்றும், "ஊனமெனு மின்றியினி தோடுகவி தென்றான்" (சீவக. 500) என்றும் ஒருவங்கமேயுளதாகத் தேவர் கூறினமையால், பொருளின்றித்தான் செல்கின்றானென்றுணர்க.

பொருமால் களிறுபோன்று பொங்கு திரைமீதே ஒருவங்கத்தோடு போய் வந்து நிதிதர லுற்றானென்க.

494. (உ) மின்னெழுகு சாயன்மிகு பூட்பதுமை கேள்வன்
கொன்னெழுகு வேலியவ தத்தன்குளிர் தூங்கும்
தன்வழிய காளைசீ தத்தனவன் றன்போற்
பொன்னெழுகு குன்றிலுறை போர்ப்புலியொ டொப்பான்.

(உ) மின்னொழுகு சாயல் - ஒளிபரக்குஞ்சாயல். சாயலினையும் பூணினையுமுடைய பதுமைகேள்வன் : பதுமை - ஸ்ரீ தத்தன் மனையாள். கொன் ஒழுகு வேல் - அச்சம் பரக்கின்ற வேல். குளிர் : திசைச்சொல் ; குளிருமென்னும் வினைச்சொல் குளிரெனத் தொழின்மேனின்றது ; இருப்பென்றவாறு ; செப்புப் போல. இப்பொழுது மனையிடத்து இருப்புச் செறியும் யவதத்தன் வழியில் ஸ்ரீ தத்தன். [1]அ : அசைச்சொல். அவன்றன் போற்கானை - தந்தையையொக்குங்காளை. பொன் [2]அசும்பாக ஒழுகும் குன்றிலே தங்கும் புலியோடொப்பான்.

495. (ங) இம்மியன நுண்பொருள்க ளீட்டிநிதி யாக்கிக்
கம்மியரு மூர்வர்களி ற்றேடைநுதல் சூட்டி
அம்மிமிதந் தாழ்ந்துசுரை வீழ்ந்ததறஞ் சால்கென்
றும்மைவினை நொந்துபுலந் தூடலுணர் வன்றே.

(ங) இம்மி - மத்தங்காய்ப்புல்லரிசி ; குறைந்ததோர் எண்ணுமாம். பிறர்தொழில் செய்வாரும் சிறிய பொருள்களைத் தேடிப் பெரிய பொருளாக்கி, அதனானே களிற்றின்நுதலிலே பட்டத்தைக் கட்டி அதனை ஏறுவர். இதனால், நெடுங்காலமாகப் பொருள் தேடுமாறு கூறினான். ஆழ்தற்குரிய அம்மி மிதந்து மிதத்தற்குரிய சுரை ஆழ்ந்து வீழ்ந்த தென்றது, உயர்ந்தோர் வாழாதே தாழ்ந்தோர் வாழ்ந்ததனை.

496. (ச) உள்ளமுடை யான்முயற்சி செய்யவொரு நாளே
வெள்ளநிதி வீழும்வினை யாததனி னில்லை
தொள்ளையுணர் வின்னவர்கள் சொல்லின்மடி கிற்பின்
எள்ளுநர்கட் கேக்கமுத்தம் போலவினி தன்றே.

---

494. பதுமை கேள்வன் : ஸ்ரீ தத்தன் : இவன் இராசமாபுரத்துள்ள ஒரு வணிகன் ; சீவகனுடைய தோழன். யவதத்தன் : ஸ்ரீ தத்தனுடைய முன்னோன். குளிர்தல் - தங்குதல் ; சீவக. 1782, 1973. அவன்றன்போற் காளை எனமாறுக.

(உரை) [1] வழிய என்பதிலுள்ளது. [2] அசும்பு - ஊற்று ; "அசும்பு பொன்" (சீவக. 533)

495. இம்மியரிசி மிகவும் சிறியது ; சீவக. 43, அடிக். நிதி - பெரிய பொருட்டிரள் : சீவக. 402, உரை. கம்மியர் = கர்மியர் - பிறர் தொழில் செய்வோர் ; சீவக. 76 ; கம்மகாரர் என்றும் சொல்லப்படுவர் ; சீவக. 501, ந. அம்மி மிதந்தாழ்ந்து சுரை வீழ்ந்தது : "சுரையாழ வம்மி மிதப்ப" (பழ. 125). உம்மைவினை - பழவினை. ஊடல் - கோபித்தல்.

496. உள்ளம் - பொருள் திரட்டுதலில் முயற்சி செய்கின்ற மனம். செய்ய - செய்தால். வீழும் - உண்டாகும். அதனின் வினையாது இல்லை என மாறுக ; அதனின் - அம்முயற்சியால். தொள்ளை யுணர்வு - குற்றம்

(ச) முயலுமுள்ளமுடையான். வருந்தாமல் ஒருநாளே வெள்ள மென்னும் எண்ணையுடைய பெரும்பொருள் திரளும். இதனால், ஒரு நாளை முயற்சியிலும் வருமென்றான், முயற்சியின்பெருமைகூறுதலின். இனி, நல்வினை வந்துதவுவது ஒருநாளிலேயென்றுமாம். ஏக்கழுத்தம் - தலையெடுப்பு ; "ஏபெற்றாகும்" (தொல். உரி. 7) என்றார்.

497. (ரு) செய்கபொருள் யாருஞ்செறு வாரைச்செறு கிற்கும்
எஃகுபிறி தில்லையிருந் தேயுயிரு முண்ணும்
ஐயமிலை யின்பமற னோடவையு மாக்கும்
பொய்யில்பொரு ளேபொருண்மற் றல்லபிற பொருளே.

(ரு) செறுவார் - செறப்படுவார். 'எவையும்' என்றும் பாடம். மற்று: அசைநிலை.

498. (சா) தூங்குசிறை வாவலுறை தொன்மரங்க ளென்ன
ஓங்குகுல நையவத னுட்பிறந்த வீரர்
தாங்கல்கட னாகுந்தலை சாய்க்கவரு தீச்சொல்
நீங்கன்மட வார்கள்கட னென்றெழுந்து போந்தான்.

(சா) வாவலுறையுமரம் - ஆல். தான்கெட விழுது தாங்கினாற்போல. தீச்சொல் - இவன்பிறந்து இக்குடி கெட்டதென்னுஞ்சொல். நீங்கல் - தாங்காது போதல்.

---

பட்ட அறிவு; "தொள்ளை சேருணர் வெய்தி" (சீகாழித். பூந்தராய். 10). சொல்லின் - வருவது தங்காது என்ற சொல்லினால். மடிகிற்பின் - சோம்பியிருந்தால். எள்ளுநர் - இகழ்பவர். ஏக்கழுத்தம் - தலைநிமிர்தல் : சீவக. 87; கலித். 27 : 9, உரை.

497. பொருள் செய்க - பொருளைத்தேடுக ; கலித். 5 : 4 ; 14 : 14. யாரும் பொருள் செய்க என்று மாறுக. செறுவார் - பகைவர். செறுதல்- கொல்லுதல். எஃகு - ஆயுதம். பிறிது இல்லை - அப்பொருள் செய்தலைக் காட்டிலும் வேறு இல்லை. இருந்தேயும் - அப்பகைவரிடத்துத் தான் இருந்தும். இன்பத்திற்கு ஐயமில்லை என்க. பிறபொருள் பொருளல்ல.

மு. குறள், 759.

498. தூங்கு சிறை வாவல் - தொங்குகின்ற சிறகையுடைய வௌவால் ; பெருங். 1. 52 : 71. தொன்மரம் - ஆலமரம். தொன்மரங் கள்......தாங்கல் கடன் : குறள், 1030 ; நாலடி. 197 : கம்ப. சேதுபந். 53 ; உத்தர. இலவணான் வதைப். 43. தீச்சொல் இன்றித்தாங்கல் வீரர் கடன் என்க. நீங்கல் - தம்குலத்தைத் தாங்காது போதல். மடவார்கள்- அறிவில்லாதவர்.

(மேற்.) மு. குறள், 1030, பரிமேல்.

(இ - ள்.) ஸ்ரீதத்தன், காளை, புலியொடொப்பான், பதுமைகேள்வன், அவன் நிதியங்கெட்ட [1] நாய்கனுதலால், தான்போய்ப் பொருள்தரக் கருதினுன் ; அங்ஙனங்கருதி, கம்மியரும் களிறேறுவர் ; ஆதலால், முயற்சியை நன்றென்று கருதாதே, வாழாதார் வாழக்காண்டலின் முயற்சிவேண்டா ; அறமே அமையுமென்று கருதி முற்பிறப்பில் நல்வினைசெய்யப் பெற்றிலேமென்று நொந்து அம்முயற்சியை வெறுத்துக் [2] கலாய்த்திருத்தல் ஒருவர்க்கு அறிவன்று ; அதுவேயுமன்றி உள்ளமுடையான் முயற்சியைச்செய்ய ஒருநாளே நிதி திரளும் ; அந்நிதியாலே எல்லாத் [3] துப்புரவுகளும் உளவாம் ; அங்ஙனம் எல்லாமாகின்ற முயற்சியைவிட்டுப் புரைபட்ட உணர்வினவர்கள், வருவது இடைத் தங்காதென்னுஞ் சொல்லான் மடிந்திருப்பின், அவ்விருப்புப் பகைவர்க்கு ஒரு தலையெடுப்புப் பெற்றுற்போல இனிதாயிருக்கும் ; அங்ஙனம் அவர் தலையெடாதபடி எல்லாரும் பொருளைத் தேடுக ; தேடினுற் பகைவரைக் கொல்லும்படை அதனையொழிய இல்லை ; [4] தான் அவரிடத்து இருந்தேயும் பகைவரைக்கொல்லும் ; அதுவன்றித் தான் உளவாக இன்பத்திற்கு ஐயமில்லை ; ஆதலின், அறத்தோடே [5] முற்கூறியவற்றையும் உண்டாக்கும் மெய்யாகிய பொருளே நன்குமதிக்கும்பொருள் ; ஒழிந்த பொருள் நன்கு மதிக்கும் பொருளல்ல ; ஆதலின், இப்பொருளைக்கொண்டு தம்குலம் நைகிறவளவிலே ஆலமரத்தின் வீழ்போலத் தீச்சொற் பிறவாமைத் தங்குலத்தைத்தாங்கல் அதனுட்பிறந்தவருடைய கடனுகும். தங்குலத்தைத் தாங்காதுபோதல் பேதையரது கடனுகும் ; ஆதலால், யானும் முயன்று பொருள்தேடி என்குலத்தைத் தாங்குவேனென்று கூறி எழுந்திருந்து பண்டசாலையேறப் போந்தானென்க.

இதையெல்லாம், தன் பொருட்குறைபாட்டாற் [6] கூறினுன். (க - சு)

499. மோதுபடு பண்டமுனி யாதுபெரி தேற்றி
மாதுபடு நோக்கினவர் வாட்கண்வடு வுற்ற
தாதுபடு தார்கெழிய தங்குவரை மார்பன்
கோதுபட லில்லகுறிக் கொண்டெழுந்து போந்தான்.

மாதுபடு - பெருமைபட்ட. வடு உற்ற கண் தங்குமார்பு - வடுவகிரையொத்த கண் தங்கும் மார்பு ; வரைபோலும் மார்பு ; தார்கெழியமார்பு. கண்ணொளி மழுங்குதற்குக் காரணமான தாருமாம்.

---

(உரை) [1] நாய்கன் - வணிகன். [2] கலாய்த்திருத்தல் - கோபித்திருத்தல். [3] துப்புரவு - நுகர்தற்குரிய பொருள்கள். [4] தானென்றது பொருளினை. [5] முற்கூறியவை - செறுதல் முதலியன. [6] கூறியவன் ஸ்ரீதத்தன்.

499. மோதுபடு - மோதுதல் படுகின்ற. மாது - பெருமை ; காதலுமாம் ; சீவக. 1666 ; நோக்கினவர் - மகளிர். வடு - மாவடு. வாளையும் வடுவையும் போன்ற கண் ; கண் தங்குவதும், தார் கெழியதும், வரை போன்றதுமாகிய மார்பு ; கெழிய - பொருந்திய. கோது - குற்றம். குறிக்கொண்டு - கைக்கொண்டு.

(இ - ள்.) மார்பன், பண்டத்தைப் பெரிதாக ஏற்றிக் குற்றமற்ற [1] நன் முகூர்த்தத்தையும் கைக்கொண்டு பண்டசாலையினின்றும் கடற் கரையேறப் போந்தானென்க. (எ)

500. வானமுற நீண்டபுகழ் மாரிமழை வள்ளல்
தானமென வேண்டுநர்கள் வேண்டுவன நல்கி
நானமிக நாறுகமழ் குஞ்சியவ னேறி
ஊனமெனு மின்றியினி தோடுகவி தென்றான்.

(இ - ள்.) குஞ்சியவனாகிய [1] வள்ளல், தானமென்று ஒருபெயரை யிட்டு வேண்டுவார் வேண்டுவனகொடுத்து [2] மரக்கலத்தேறித் தெய்வத்தை நோக்கி இக்கலம் தீங்கு சிறிதுமின்றி நன்றாக ஓடுவதாகவென்றா னென்க.

மாரிமழை - மாரிக்காலத்து மழை. கமழ் குஞ்சி - [3] இயல்பான மணம் கமழ்குஞ்சி. [4] இதனால், முன்பு பலகலங்களும் தீங்குற்றனவென்பது பெற்றாம். (அ)

501. ஆடுகொடி யுச்சியணி கூம்பினுயர் பாய்மூன்
றீடுபடச் செய்திளையே ரேத்தவிமிழ் முந்நீர்க்
கோடுபறை யார்ப்பக்கொழுந் தாட்பவழங் கொல்லா
ஓடுகளி றொப்பவினி தோடியதை யன்றே.

(இ - ள்.) கொடியணிந்த கூம்பிலே மூன்றுபாய் காற்று முகக்கும் படி குழையக் கட்டுதலாலே, முந்நீரிற்பிறந்த சங்கும் [1]பறையும் முழங் காநிற்கப் பவளக்கொடியை அறுத்து ஓடுகின்ற களிறுபோலக் [2] கம்மகாரர் கொண்டாடும்படி நன்றாக ஓடிற்றென்க.

இதனால், காற்றுமுகந்த பொழுது ஓடின [3]விசை கூறினார். (௯)

---

(உரை) [1] நன்முகூர்த்த மென்பது வருவிக்கப்பட்டது.

500. வானமுற நீண்ட புகழ் : சீவக. 6, அடிக். மாரி - மழைக் காலம். குஞ்சியவனாகிய வள்ளல் என மாறுக. என - என்று. நானம் - கஸ்தூரி. நாறுவதும், கமழ்வதுமாகிய குஞ்சி. ஊனம் - தீங்கு. எனும் = என்னும் - சிறிதும்; சீவக. 1688, 2014; "வழுவெனும் பாரேன்" (சிலப். 16 : 69). இது - இக்கப்பல்.

(உரை) [1] வள்ளல் - ஸ்ரீதத்தன். [2] மரக்கலமென்பதும் தெய்வத்தை நோக்கி என்பதும் வருவிக்கப்பட்டன. [3] குஞ்சியின் இயற்கைமணம்; குறுந். 2 : 4 - 5, ஒப்பு. [4] இதனால் - இக்கலம் தீங்கின்றி ஓடுவதாக என்றதனால்.

501. கூம்பு - பாய் மரம். ஈடுபட - குழையும்படி. இளையர்-கம்மியர். கோடு - சங்கு ; அகநா. 350 : 12. கொல்லா - கொன்று. கப்பலில் முரசம் முழங்குதல் ; மதுரைக். 80 - 83. கப்பலுக்குக் களிறு : சீவக. 493, அடிக்.

(உரை) [1] நாவாய்ப்பறை ; இறை. 1, உரை. [2] கம்மகாரர்-கம்மியர்; சீவக. 495, அடிக். [3] விசை - வேகம்.

502. திரைகடருஞ் சங்குகலந் தாக்கித்திரண் முத்தம்
கரைகடலுட் காலக்கணை பின்னொழிய முந்நீர்
வரைகிடந்து கீண்டதெனக் கீறிவளர் தீவின்
நிரையிடறிப் பாய்ந்திரிய வேகியது மாதோ.

முந்நீரை ஒருமலை நில்லாதே கிடந்து கிழித்ததென்னும்படி கிழித்து; இஃது இல்பொருளுவமை.

(இ - ள்.) அக்கலம், சங்கு தன்னைத் தாக்குதலாலே அச்சங்கு ஒலிக்கிற கடலிலே முத்தைச்சொரிய அம்முந்நீரைக் கீறித் தீவின் ஒழுங்கை இடறிக் குதித்துத் தன்மேலிருந்தெய்த அம்பு பின்னே கழியப் போயிற்றென்க.

இதனால், கடுகினைவிசை கூறினார். (கo)

503. மின்னுமிளிர் பூங்கொடியு மென்மலரு மொப்பார்
அன்னமொடுந் தோகைநடை சாயலமிர் தன்னார்
துன்னியினி தாகவுறை துப்புரவின் மிக்க
நன்மையுடை நன்பொன்விளை தீவமடைந் தஃதே.

(இ - ள்.) விளக்கத்தால் மின்னையும், நுடக்கத்தாற் கொடியையும், மென்மையால் மலரையுமொப்பார்; நடையும் சாயலும் அன்னத்தையும் மயிலையுமொப்பார். இத்தன்மையார் இனிதாக இருக்கிற துப்புரவு களாலே மிக்க நன்மையுடைய தீவத்தை அக்கலம் சேர்ந்ததென்க. (கக)

(வேறு)

504. (க) தீவினு ளிழிந்து தேந்தார்ச்செம்மலுந் திருமுத்தாரம்
கோவினைக்குறிப்பிற்கண்டு கொடுத்தருள்சுமந்து செம்பொற்
பூவினுள் ளவளை யன்ன பொங்கிள முலையி னார்தம்
நாவினு ளமிர்தங் கேட்டு நாடக நயந்து சின்னாள்.

இதுமுதல், "ஆடகம்" (510) அளவும் ஒரு தொடர்.

(க) திரு முத்து ஆரம் - திருமகள் சேரும்ஆரம்; "கழைபோய் விண்முத்தும்" (பாண்டிக்கோவை) என்றாற்போல; உண்மைத்தொகை யுமாம்; முத்துவடமுமாம்; 'சுமந்து' என்றார், மிகுதிதோன்ற. உள்ள வள் - உண்டானவள்; ஒருசொல்.

---

502. கலம், திரைகள் தரும் சங்கைத்தாக்கி என்க. தாக்கி-தாக்கு தலால். கரைதல் - ஒலித்தல். கால - ஈன. நிரை - ஒழுங்கு, வரிசை. இடறி - கெடுத்து. கணை பின்னொழிய ஏகியது என்க.

503. அமிர்தன்னார்: சீவக. 8, உரை. துன்னி - பொருந்தி. தீவம்- தீவு. அடைந்தஃது: ஆய்தம் விரித்தல் விகாரம்.

504. செம்மல்: ஸ்ரீதத்தன். கோவினை - அத்தீவுக்கு அரசனை. செம்மலும் இழிந்து முத்தாரம் கொடுத்துக் கோவினைக்கண்டு என மாறுக. பூவினுள்ளவள் - இலக்குமி. நாவினுள் அமிர்தம் - பாட்டு.

505. (உ) புணர்ந்தவர் பிரித லாற்றுப் போகமீன் றளிக்குஞ் சாயல், அணங்கினுக் கணங்க ஞரோடறுமதிகழிந்தபின்றைக், கொணர்ந்தன பண்டம் விற்ற கொழுநிதிக் குப்பையெல்லாம், உணர்ந்துதன் மதலே யேற்றி யொருப்படுத் தூர்க்கு மீள்வான்.

(உ) தெய்வங்களுக்கும் தாம் தெய்வமன்னுர். 'எல்லாமுணர்ந்து' என்ருர், சரக்கின் பெருமையால் உணரவரிதாகலின்.

506. (௬) அரசனைக் கண்டு கண்ணுற் றவர்களைவிடுத்து நன்ளுள், இரைவதி வியாழ வோரை யிருஞ்சிலை முளைப்ப வேறிக், கரைகட லழுவ நீந்திக் காற்றினுங் கடுகி யைஞ்நூ, றுரையுடைக் காத மோடி யோசனை யெல்லை சார்ந்தே.

(௬) ஏறி - ஏற. கரைகிற கடலழுவம் - கரை அண்ணிதான கடற் பரப்பு. சார்ந்து - சார. இனி, [1] இரண்டெச்சமும் திரியாமல் மரக்கலத் தின்தொழிலை மக்கண்மேலேற்றுப; 'மரக்கலமோடினுன்' என்ருற்போல.

507. (௪) களித்தலைமயங்கியிப்பாலிருத்தலுங்கலந்தோர்காற் றிற், றுளித்தலை முகில்களீண்டித் தூங்கிருண் மயங்கிமான்று, விளிப்பது போல மின்னி வெடிபட முழங்கிக் கூற்றும், ஒளித் துலைந் தொழியவெம்பியுரறிநின்றிடிப்பநாய்கன்.

(௪) முற்படக் கூற்றும் உலைந்து ஒளித்துப்போம்படி வெம்பி வெடித் தல்பட முழங்கிப் பின்னைச் சிறிதே முழங்கிநின்று இடிப்ப.

---

505. சின்னுட் புணர்ந்தவர் என முன்பாடலோடு இயைக்க. போகம் - இன்பம். அணங்கு - தெய்வம். அணங்கனுர் : மகளிர். அறு மதி - ஆறுமாதங்கள். நிதிக்குப்பை - நிதியின் தொகுதி. மதலை - கப்பல்; ஒருவகைத்தோணியுமாம்; சீவக. 512. ஒருப்படுத்து - ஒருவழிப்படுத்தி; சீவக. 2922, உரை.

506. கண்ணுற்றவர்களை - தான் பழகியவர்களை. ஓரை - முகூர்த் தம். சிலை - தனுர்லக்கினம். ஏறி - கப்பலில் ஏற. கரைகடல் - ஒலிக் கின்ற கடல். அழுவம் - பரப்பு.

(உரை) [1] ஏறி, சார்ந்து என்ற இரண்டெச்சமும்.

507. கலந்து - பரந்து. ஈண்டி - நெருங்கி. வெடிபட முழங்கி : பாகவதம், 7. 2 : 84. உலைந்து - தொலைந்து. உரறி - முழங்கி. கூற்றும் உலைந்தொழிய வெம்பி வெடிபட முழங்கி, உரறி நின்றிடிப்ப எனமாறுக. நாய்கன் : ஸ்ரீதத்தன்.

508. (ரு) எண்டிசை வளியு மீண்டி யெதிரெதிர் கலாவிப் பவ் வம், கொண்டுமே லெழுவ தொப்பக் குளிறிநின் றதிர்ந்து மேகம், தண்டுளி பளிக்குக் கோல்போற் றுரையாய்ச் சொரிந்து தெய்வம், கொண்டதோர் செற்றம் போலுங் குலுங்கன்மினென்று கூறும்.

(ரு) [1] சொரிந்து - சொரிய.

509. (சு) இடுக்கண்வந் துற்ற காலை யெரிகின்ற விளக்குப் போல, நடுக்கமொன் றுனு மின்றி நகுகதா நக்க போழ்தவ், விடுக் கணை யரியு மெஃகாமிருந்தழு தியாவ ருய்ந்தார், வடுப்படுத் தென்னை யாண்மை வருபவந் துறுங்க ளன்றே.

(சு) எரிகின்ற விளக்குப் போல நடுங்கும் நடுக்கம். கள்: அசை.

510. (எ) ஆடகச் செம்பொற் கிண்ணத் தேந்திய வலங்கற் றெண்ணீர், கூடகங் கொண்ட வாழ்நா ளுலந்ததேற் கொல்லும் பவ்வத், தூடகம் புக்கு முந்நீ ரழுந்தினு முய்வர் நல்லார், பாடகம் போலச் சூழ்ந்த பழவினைப் பயத்தி னென்றான்.

(எ) அலங்கற்றெண்ணீர் - துளங்குகிற தெண்ணீர். கூடு அகங் கொண்ட - உடம்பு உள்ளேகொண்ட. [1] மகளிர் காலிற் பாடகம் ஒரு கம்பி யாய்ப் பலமுடக்காலே போக்கும் வரவுமுண்டாறாற்போலத் தோன்றிக் காலைவிடாதே கிடந்தாற் போலப் பழவினையென ஒன்றேயாயது நல்வினை தீவினையென இரண்டுபோல் தோன்றி இவனைச் சூழ்ந்து கிடக்கு

---

508. வளி - காற்று. கலாவி - கலந்து. பவ்வம் - கடல். குளிறி - முழங்கி. எண்டிசைவளி......எழுவதொப்ப : பெருங். 1. 43 : 102 - 3. கோல் - அம்பு. செற்றம் - கோபம். குலுங்கன்மின் - அசையாதீர்.

(உரை) [1] எச்சத்திரிபு.

509. இடுக்கண்......நகுக : “இடுக்கண் வருங்கா னகுக” (குறள், 621). எஃகுஆம் - ஆயுதமாகும். வடுப்படுத்து - குற்றப்படுத்தி. ஆண் மையை வடுப்படுத்தென்னை என்பதை அடுத்த பாடலின் பின் இயைத் துக் கொள்க. வருப வந்துறும் : நாலடி. 109.

510. கூடு - உடம்பு. உலந்ததேல் - முடிந்ததாயின். கூடகம் கொண்ட தெண்ணீர் கொல்லும் எனமாறுக. முந்நீர் அழுந்தினும் - கடலினுள் அழுந்தினாலும். நல்லார் - மகளிர். பாடகம் - காலில் அணி யும் ஒருவகை அணி. பாடகம் போலச் சூழ்ந்த பழவினை : கல். ‘உயிர் புகு’ 1 - 2 ; பாகவதம், 12. 9 : 10.

(மேற்.) அடி, 4 : கல். ‘உயிர்புகு’, 1-2, மயில்.

(உரை) [1] இப்பொருள் சிறப்புடையது.

மென்க. இனி, பாடு - பக்கமாக்கி, மகளிரிடத்து நெஞ்சுபோலே சூழ்ந்த வென்றுமாம்; நல்லாருய்வரென்றுமாம்.

(இ - ள்.) செம்மலும் தீவினுள்ளே இழிந்து ஆரங்கொடுத்து அரசனை அவன் குறிப்புடனே கண்டு அவன் தலையளியைச்சுமந்து திருவையொத்த மகளிரது பாட்டைக்கேட்டு அவர்கள் நாடகத்தையும் விரும்பி, சிலநாட் கூடினவர்கள் பலநாளாகப் பிரியவொண்ணாததொரு போகத்தை உண்டாக்கிக் கொடுக்கும் அவ்வணங்கனுடனே அங்ஙனம் ஆறுதிங்கள் சென்றபின்பு நிதிக்குப்பையெல்லாம் உணர்ந்து அதனை மரக்கலத்தே ஏற்றி அங்குள்ள காரியத்தை ஒருப்படுத்தித் தன்னூர்க்கு வரவேண்டி, மீண்டும் அரசனைக்கண்டு தான் செறிந்தவர்களைப்போக்கி நன்னாளாகிய இரேவதியிலே வியாழஓரையிலே தனு உதயமாக மரக் கலத்தையேற, அஃது அழுவத்தைக் கடந்து கடுகி ஐஞ்ஞூறென்கிற வார்த்தையையுடைய காதத்தை ஓடித் தான்போன கரை ஒரோசனை யெல்லையெனச் சேருதலாலே, தாம் களியிடத்தே மயங்கியிருந்த வள விலே, அவ்விடத்திலே இருள்போன்று எங்கும் பரந்து ஒருகாற்றாலே முகில்கள் ஈண்டி எத்திசையும் கலந்து கெடுப்பதுபோல மின்னி இடியா நிற்க, அதனைக்கண்டு சிலமொழிகூறும் நாய்கன்: எண்டிசையிற் காற்றும் ஈண்டி ஒரு காற்றுக்கெதிரே ஒரு காற்றுக்கலந்து கடலைக்கொண்டு மேலே யெழும் ஊழியிறுதியை ஒவ்வாநிற்க மேகமும் நின்று அதிர்ந்து துளியைச் சொரியும்படி நம்முடனே தெய்வங்கொண்டதொரு செற்றம்போலேயிருந் தது; இதற்கு நீங்கள் அசையாதொழிமினென்றுகூறி, பின்னும் கட்புல னும்படி இடுக்கண் வந்துற்றபொழுது நடுக்கம் சிறிதுமின்றித் தாம் நகுவாராக; அங்ஙனம் நக்கபொழுது அவ்விடுக்கணை அரியும் வாளாம்; அங்ஙனம் நகாதிருந்து அழுது பிழைத்தார் ஒருவருமில்லை; ஆதலால், அழவேண்டா; வரும் தீங்கும் நன்றும் வந்தே சேரும்; அவை வந்து சேருமிடத்தும் பாடகம்போலச் சூழ்ந்தபழவினையில் நல்வினைப்பயத் தாலே வாழுநாள் உலந்ததில்லையாயின், கடலுக்கு நடுவேபுக்கு அந்நடுக் கடலிலே அழுந்தினும் பிழைப்பர்; தீவினைப்பயத்தாலே வாழும் நாள் உலந்ததாயின், உயிர்க்குக் காவலாகிய சிறிது தண்ணீரும் கட்புல னாகாமற் கொல்லும்; ஆதலால், ஈண்டு ஆண்மையை வடுப்படுத்திப் பெறுவது என்னையென்றானென்க. (கஉ - அ)

511. வினையது விளைவின் வந்த வீவருந் துன்ப முன்னீர்க்
கனைகட லழுவ நீந்திக் கண்கனிந் திரங்கல் வேண்டா
நனைமலர்ப் பிண்டி நாத னலங்கிளர் பாத மூலம்
நினையுமி னீவி ரெல்லா நீங்குமி னச்ச மென்றான்.

511. வீவருந்துன்பம் - அழிவில்லாத துன்பம். கனைகடல் - ஒலிக் கின்ற கடல். கனிந்து - குழைந்து. நனை - தேன். பிண்டிநாதன் - அருகதேவன். நீவிரெல்லாம் நாதன் பாதமூலம் நினையுமின்; அச்சம் நீங்குமின் எனமாறுக.

(இ - ள்.) தீவினையின் பயனாகிவந்த துன்பமாகிய [1] பழைய நீரை
புடைய கடற்பரப்பை நீந்திக் கண்குழைந்து வருந்தல்வேண்டா; நீவி
ரெல்லாம் நாதன் பாதமூலத்தை நினையுமின்; அச்சம் நீங்குமினென்று
னன்க.

பாதமாகிய, துன்பநீங்குதற்குக் [2] காரணமாயதனை. [3] கலம்படு
லும் அவர் வருத்தமுமாக [4] இவனுக்குத் தோன்றியதன்றி [5] அவர்க்கு
லைவயின்மை, "நாடக நாங்க ளுற்றது" (சீவக. 582) என்றதனானும்
றவாற்றானும் உணர்க. (கக)

512. பருமித்த களிற னானும் பையெனக் கவிழ்ந்து நிற்பக்
குருமித்து மதலை பொங்கிக் கூம்பிறப் பாய்ந்து வல்லே
நிருமித்த வகையி னோடி நீர்நிறைந் தாழ்ந்த போதில்
உருமிடித் திட்ட தொப்ப வுள்ளவ ரொருங்கு மாய்ந்தார்.

(இ - ள்.) பண்ணின களிறனானும் மெல்லெனத் தலைசாய்த்துநிற்ப,
தலை முழங்கிப் பொங்கித் தான் நினைத்த கூற்றிலே ஓடிக் கூம்பு
றியப்பாய்ந்து நீர் நிறைந்து உருமிடித்த தன்மையையொப்ப அழுந்
ன பொழுதிலே அங்குள்ளவரெல்லாம் சேர மறைந்தாரென்க. (உ0)

(வேறு)

513. ஓம்பிப் படைத்த பொருளும்முறு காத லாரும்
வேம்புற்ற முந்நீர் விழுங்கவ்விரை யாது நின்றான்
கூம்பிற்ற துண்டந் தழுவிக்கிடந் தான்கொ ழித்துத்
தேம்பெற்ற பைந்தா ரவனைத்திரை யுய்த்த தன்றே.

(இ - ள்.) பாவம் வாராமற் [1] பரிகரித்துத் தேடின பொருளையும்
காதலாரையும் உவர்த்தலுற்ற நீர் விழுங்காநிற்க, கலங்காமல் [2] நின்ற
வன் துண்டந் தழுவிக்கிடந்தான்; அத்தாரவனைத் திரை கொழித்துக்
கரையிலே செலுத்திற்றென்க. (உக)

---

(உரை) [1] புறநா. 9 : 10, உரை. [2] பாதமூலத்தை. [3] கலம் படு
தல் - கப்பல் உடைதல். [4] இவன் - ஸ்ரீதத்தன். [5] அவர் - ஸ்ரீதத்தனுடன்
வந்தவர்கள்.

512. பருமித்த - பலதிறப்பட அலங்கரித்த. குருமித்து - முழங்கி;
வி-பா. 16-ஆம் போர். 71. மதலை - கப்பல். மதலை குருமித்துப்
பொங்கி நிருமித்தவகையின் ஓடிக் கூம்பிறப் பாய்ந்து எனமாறுக;
கூம்பு - பாய்மரம்; நிருமித்த - நினைத்த. நீர்நிறைந்து உருமிடித்திட்ட
தொப்ப ஆழ்ந்த போதில் எனமாறுக.

513. பொருளையும் காதலாரையும் என உருபுவிரிக்க. வேம்பு -
உவர்ப்பு. விரையாது - கலங்காமல். கூம்பிற்ற துண்டம்.........திரை
யுய்த்தது : மணி. 16 : 14. தாரவனைத் திரை கொழித்து உய்த்தது என
மாறுக.

(உரை) [1] பரிகரித்து - பாதுகாத்து. [2] நின்றவன் : ஸ்ரீதத்தன்.

514. நாவா யிழந்து நடுவாருமி லியாம நீந்திப்
போவாய் தமியே பொருளைப் பொருளென்று கொண்டாய்
வீவா யெனமுன் படையாய்படைத் தாய்வி னையென்
பாவா யெனப்போய்ப் படுவெண்மணற் றிட்டை சேர்ந்தான்.

(இ - ள்.) வினையே, முன் படைக்கிற பொழுதே பொருளைப் பொருளென்று கொண்ட நீ வீவாயெனப் படையாய், நாவாயிழந்து ஆருமில்லாத நடுயாமத்தே கடலை நீந்தித் தனியே போவாயெனப்படைத்தாய்; நீ இனி எத்தைச் செய்யாதொழிவாயென்று கூறிப்போய்க் கொழிக்கின்ற மணற்றிட்டையிலே சேர்ந்தானென்க.

'என' என்பதை [1] இரண்டிடத்தும் கூட்டுக. (உஉ)

(வேறு)

515. பொரியரை ஞாழலும் புன்னையும் பூத்து
வரிதரு வண்டொடு தேனின மார்க்கும்
திருவிரி பூம்பொழிற் செவ்வனஞ் சேர்ந்தாங்
கருவரை மார்ப னவலித் திருந்தான்.

(இ - ள்.) மார்பன், ஞாழலும் புன்னையும் பூத்தலால் இசையைத் தருகின்ற வண்டும் தேனும் ஆர்க்கின்ற பொழிலிலே நேரே சென்று சேர்ந்து வருந்தியிருந்தானென்க.

அம் : அசை. (உ௩)

516. ஓடுந் திரைக ளுதைப்ப வுருண்டுருண்
டாடு மலவனை யன்ன மருள்செய
நீடிய நெய்தலங் கான னெடுந்தகை
வாடி யிருந்தான் வருங்கல நோக்கா.

---

514. தமியே - தனியே. வீவாய் - அழிவாய். வினை : விளி. 'வினையே, பொருளைப் பொருளென்று கொண்டாய், வீவாயெனப் படையாய் ; ஆருமில் நடுயாமத்து நீந்தித்தமியே போவாயெனப் படைத்தாய்' எனமாறுக. என்பாவாய்-நீ எதைச்செய்யமாட்டாய். படுதல்-கொழித்தல்.

(உரை) [1] போவாய், வீவாய் என்ற இரண்டிடம்.

515. பொரியரைஞாழல் - பொரிந்த அரையை உடைய புலிநகக் கொன்றை. வரி - பாட்டு ; சீவக. 2581, ந. தேன் - ஒருவகை வண்டு. திரு - அழகு. செவ்வனம் - நேரே ; அம் : அசை ; மணி. 16 : 95; பெருங். 3. 22 : 222. அவலித்து - வருந்தி.

516. உதைப்ப - செலுத்த; திரையுதைத்தல் : "ஊர்திரை யுதைப்ப" (மணி. 16 : 14). அலவன் - நண்டு. 'கானலில் அலவனை அன்னம் அருள் செய' எனமாறுக. நெடுந்தகை - ஸ்ரீதத்தன்.

(இ - ள்.) நெடுந்தகை, நெய்தனிலத்திற் கானலிலே அலவனை அன்னம் அருளுதலாலே, அது தனக்கு நன்னிமித்தமாகக் கருதி நாம் போம்படி இவ்விடத்து வரும் கலமுளதோவென்றுநோக்கி அதுகாணு மையின் வருந்தியிருந்தானென்க.

அன்னம் கொல்லாதிருந்த தன்மை, தான்பற்றுக்கோடாக வாழ்வாரைக் காலான் உதைத்துக் கடல் நம்முன்னே தள்ளவும் போகற்றுப் பின்னும் [1]அதனிடத்தே செல்லாநின்றதென்று நோக்கி [2]அதற்கு அருளினாற்போலே யிருந்ததென்க. (உச)

517. ஆளிய மொய்ம்ப னிருந்தவப் பூம்பொழிற்
றாள்வலி யானொர் மகனைத் தலைப்பட்டுக்
கேளி ரெனக்குற்ற கேண்மின் னீரெனத்
தோள்வலி மிக்கான் றொடர்ந்துரைக் கின்றான்.

(இ - ள்.) ஆளி மொய்ம்பனாகிய அத்தோள்வலிமிக்கான், தானிருந்த அப்பொழிலிலே முயற்சிவலியான் ஒருமகனைச் சென்று பொருந்தி, கேளிரே, எனக்குற்ற வருத்தத்தை நீர் கேண்மினென்று இடைவிடாது கூறுகின்றானென்க.

இதனை, 'மொழிந்தான்' (சீவக. 518) என்பதனோடு முடிக்க. தரன் வழிப்போவாரைப்போலே வந்தான். [1]அ : அசை. (உரு)

518. கருங்கடற் போயிற்றுங் காற்றிற் கவிழ்ந்து
திருந்திய தன்பொரு ளீதுற்ற வாறும்
அரும்புணை சார்வா வவனுய்ந்த வாறும்
இருந்தவற் கெல்லா மெடுத்து மொழிந்தான்.

(இ - ள்.) பொருளின்மையின் அதுதேடுதற்குக் கடலிற்போன செய்தியும், நல்வழியால் தேடிய தன்பொருள் காற்றாற் கலங்கவிழ்தலாலே தீதுற்றபடியும், தெப்பஞ்சார்வாகத் தான் அங்கே உய்ந்தபடியும் எல்லாம் தானிருந்து அத்தரனுக்கு உயர்த்துக் கூறினானென்க. (உசா)

---

(உரை) [1]கடலினிடத்தே. [2]அலவனுக்கு.

517. ஆளியமொய்ம்பன் : சீவக. 132; பட்டினப். 298-9. தாள் வலி - முயற்சிவன்மை. ஓர் மகன் - தரன் என்பவன். தொடர்ந்து - இடைவிடாது.

(மேற்.) அடி, 1 : கல். 'குங்கும' 24. மயில்.

(உரை) [1]ஆளிய என்பதிலுள்ளது.

518. போயிற்றும் - சென்ற தன்மையும். கவிழ்ந்து - கவிழ்தலால். திருந்திய - குற்றமில்லாத. அவன் - ஸ்ரீதத்தன். (தான்) உய்ந்தவாறும் எல்லாம் இருந்து அவற்கு எடுத்து மொழிந்தான் என்க; அவற்கு - தரனுக்கு. எடுத்து - உயர்த்தி.

519. மானு மரனு மிரங்க மதவலி
தானுற்ற துன்பந் தரனுக் குரைத்தபின்
தேனு மமிழ்துந் திளைத்தாங் கினியன
ஊனமில் கட்டுரைக் குள்ளங் குளிர்ந்தான்.

(இ - ள்.) ஸ்ரீதத்தன், மானும் மரனும் இரங்கும்படி தானுற்ற துன்பத்தை அங்ஙனம் தரனுக்குரைத்த பின்பு, [1]அவன் யான் இழந்ததற் கெல்லாம் நின்னைப் பெற்றேனேயென்று கூறியவுரைக்கு அத்தரன் உள்ளங் குளிர்ந்தானென்க.

[2]இவனைப்பெறுதல் கருதுதலின் ஊனமிலுரையாயிற்று. திளைத்தல் - அநுபோகுதல். 'உரைத்தலின்' என்ற பாடத்திற்குத் தரன்கூறிய தற்கு ஸ்ரீதத்தன் மகிழ்ந்தானென்க. (உஎ)

520. விஞ்சைகள் வல்லேன் விளிந்தநின் றோழரொ
டெஞ்சிய வான்பொரு ளெல்லா மிமைப்பினுள்
வஞ்சமொன் றின்றி மறித்தே தருகுவன்
நெஞ்சிற் குழைந்து நினையன்மி னென்றான்.

(இ - ள்.) விஞ்சைபலவும் வல்லேன்; ஆதலாற் கெட்ட நின்தோழருடனே நின்னை நீங்கிய நீதியாலுண்டான பொருளெல்லாம் ஒருமாத்திரையில் வஞ்சனை சிறிதும் இன்றாகக் கெடுதியை நீக்கித் தருவேன். இனி நீயிர் கெட்டு நெஞ்சிற் பலகால் நினையாதொழிவீராக வென்றானென்க.

நினையன்மின் : ஒருவரைக்கூறும் பன்மை. (உஅ)

521. உரையகங் கொள்ள வுணர்த்தின னாகி
வரையக மேற வலிமின மென்னா
விரைசெலல் வெம்பரி மேழக மேற்றிக்
குரைகழன் மைந்தனைக் கொண்டு பறந்தான்.

519. மதவலி - மிக்க வலியையுடையவன்; மத : விசேடித்த உரிச்சொல்; சீவக. 204. ஊனம் - குறைபாடு.

(உரை) [1] அவன் - ஸ்ரீதத்தன். [2] இவனால் - தரனால்.

520. விஞ்சைகள் - வித்தைகள். எஞ்சிய - நீங்கிய. வான்பொருள் - சிறந்த பொருள். மறித்து - மீட்டு. குழைந்து - வருந்தி.

(மேற்.) மு : சிலப். 15 : 28-37, அடியார்.

521. வலிமின் - துணிவுகொள்வீராக. பரி - குதிரை. மேழகம் - ஆட்டுக்கிடாய்; சீவக. 1230; பு - வெ. 244. (பி - ம்.) மைந்தன் - ஸ்ரீதத்தன்.

(இ - ள்.) தருகுவனென்ற உரையை மனங்கொள்ளும்படி மைந்தனை உணர்த்தினனாய் இவ்வரையிடத்தே ஏறும்படி துணிவீராகவென்று கூறித்தான் [1] நிருமித்த பரிபோலும் செலவினையுடைய மேழகத்தை யேற்றித் தரன் கொண்டு பறந்தானென்க.

[2] அம் : அசை. (உகூ)

522. விசும்பிவர் மேகம் விரைவினர் போழ்ந்து
பசும்புயற் றண்டுளி பக்க நனைப்ப
நயந்தனர் போகி நறுமலர்ச் சோலை
அசும்பிவர் சார லருவரை சார்ந்தார்.

(இ - ள்.) பசும்புயற்றுளி பக்கத்தை நனைப்ப அதனை நயந்தன ராய் அம்மேகத்தைப் பிளந்து விரைவினராய்ப் போய்ச் சோலையினையும் சாரலினையுமுடைய மலையைச்சேர்ந்தாரென்க.

அசும்பு - நீர்ப்பொசிவு. (ரு0)

523. கண்டா லினியன காண்டற் கரியன
தண்டா மரையவ டாழுந் தகையன
கொண்டான் கொழுங்கனி கோட்டிடைத் தூங்குவ
உண்டா னமிழ்தொத் துடம்பு குளிர்ந்தான்.

(இ - ள்.) அவன், அம்மலையிலே, உலகிற் காண்டற்கு அரியன வாய்க் கண்டாற் கண்ணுக்கு இனியனவாய்த் திரு விரும்பும் தன்மைய வாய்க் கோட்டிடையிலே அமிர்தொத்துத் தூங்குவனவாகிய கனியைக் கொண்டான்; கொண்டு உண்டான்; உண்டு உடம்பு குளிர்ந்தானென்க. (ருக)

524. மழைதவழ் சோலை மலைமிசை நீண்ட
குழைதவழ் குங்குமங் கோழரை நாகம்
தழைதவழ் சந்தனச் சோலையி னேக்கி
இழைதவழ் மார்ப னினிதி னுவந்தான்.

---

(உரை) [1] நிருமித்த - செய்த. [2] வலிமினம் என்பதிலுள்ளது.

522. போழ்ந்து - பிளந்து. புயல் - மேகம். அசும்பு - ஊற்று. அசும்பிவர் சாரலருவரை : சீவக. 533.

523. தாமரையவள் - இலக்குமி. தாழும் - விரும்பும். கோட்டிடை அமிழ்தொத்துத் தூங்குவ கொழுங்கனி கொண்டான் உண்டான் என மாறுக. தூங்குவ - தொங்குவனவாகிய.

524. மழை - மேகம். சோலையையுடைய மலையின்மேல். நீண்ட மலை மிசை எனமாறுக. கோழரை நாகம் - கொழுவிய அரையையுடைய சுர புன்னை. சோலையின்-சோலையொடு. இழை-ஆபரணம். மார்பன்:எழுவாய்.

நான்கடியும் : [1] தவழ்தல் - பரத்தல்.

(இ - ள்.) இழை ஒளிபரத்தற்குக் காரணமான மார்பன், நீண்ட அம்மலைமிசையிற் குங்குமத்தையும் நாகத்தையும் சந்தனச்சோலையோடே நோக்கிக் கட்கு இனிமையினாலே மனமகிழ்ந்தானென்க. (௯௨)

525. கோதை யருவிக் குளிர்வரை மேனின்று
காதங் கடந்தபின் கன்னிக் கொடிமதில்
நாத னுறைவதொர் நன்னக ருண்டங்குப்
போது மெழுகெனப் போயினர் சார்ந்தார்.

(இ - ள்.) மாலைபோலும் அருவியையுடைய அம்மலையிலே தரன் நின்று, இம்மலையிலே காதங்கடந்த பின்பு நாதன் உறைவதொரு கொடிமதில் நகருண்டு; அங்குப் போகக்கடவோம்; அதற்கு எழுந்திருப்பாயாக வெனக் கூற, அவரும் போயினராய் அந்நகரைச் சேர்ந்தாரென்க.

முன் [1] வரையளவென்றிருந்தவனை, இது கூறி, 'எழுக' என்றான். நகர் - [2] ஸ்ரீகோயிலென்று கருதினன். (௯௩)

(வேறு)

526. மேகமே மிடைந்துதாழ விருள்கொண்ட வெள்ளிக் குன்றம்
மாகத்து விளங்கித் தோன்றும் வனப்புநாம் வருக்க லுற்றால்
நாகந்தான் கரியதொன்று கீழ்நின்று நடுங்கக் கவ்விப்
பாகமே விழுங்கப் பட்ட பான்மதி போன்ற தன்றே.

(இ - ள்.) தாழ்வரையெல்லாம் மேகமே நெருங்கியிருத்தலாலே ஒன்றுபாதி [1] இருட்சிகொண்ட வெள்ளிமலை ஆகாயத்தே தோன்றுகின்ற அழகை நாம் வகுத்துக்கூறத் தொடங்கினால், கரியதொரு நாகந்தான் கீழே நின்று அது வருந்தும்படி முதற்கவ்விப் பின்பு ஒன்றுபாதியே விழுங்கப்பட்ட மதிபோன்றதென்று கூறலாம்; வேறு அரிதென்க.

ஏகாரம் : தேற்றம். (௯௪)

---

(உரை) [1] தவழ்தல் - பரத்தல்; சீவக. 1095.

525. கோதை - மாலை. 'கோதை யருவிக் குளிர்வரை : சீவக. 2378; பரி. 15 : 20-21, 18 : 46; நாலடி. 71; அருவிக்கு மாலை : பெருங். 1. 48 : 61-3. கன்னிக்கொடிமதில் நகர் என இயைக்க. போதும் - போவோம். எழுகென - எழுகவென்று தரன்கூற.

(மேற்.) அடி. 1 : சிலப். 5 : 191-5, அடியார்.

(உரை) [1] ஸ்ரீதத்தனை. [2] ஸ்ரீகோயில் - சினாலயம்.

526. மிடைந்து - நெருங்கி. மாகம் - ஆகாயம். வனப்பு - அழகு. கரியதொன்று நாகம்தான் எனமாறுக. கவ்வி - முழுதும் கவ்வி. பாகம் - பாதி. இருளுக்கு நாகமும், வெள்ளிக் குன்றுக்கு மதியமும் உவமைகள்.

(உரை) [1] இருட்சி - இருளுதல்.

527. துளங்குபொன் னகரின் றன்மை சொல்லலாஞ் சிறிதோர் தேவன், விளங்குபொன் னுலகத் துள்ள துப்புர விடங்க ளெல் லாம், அளந்துகொண் டின்பம் பூரித் தணிநக ராக்கி மேலால், இளங்கதிர்ப் பருதி சூட்டி யியற்றிய தென்னலாமே.

பருதி - வட்டம்; [1] ஆகுபெயர்; என்றது பொன்மதிலை; "அத்தேர்ப், பருதி சுமந்தெழுந்த யானை" (களவழி. 4) என்றார் பிறரும்.

(இ - ள்.) நகரின் தன்மை நமக்குச் சிறிது கூறலாம்; எங்ஙன மென்னின், ஒருதேவன் அம்மதிபோலும் மலைத்தலையிலே ஞாயிறு போலும் மதிலைச்சூட்டி அதனுள்ளே நகராக்கி அந்நகரிடங்களெல்லாம் பொன்னுலகில் இன்பத்தையுடைய நுகர்பொருள்களை ஆராய்ந்து கொண்டு நிரைத்து இங்ஙனம் செய்ததொரு நகரியென்று கூறலாமென்று ரென்க. (நு௬)

(வேறு)

528. பொங்கி யாயிரந் தாமரை பூத்தபோற்
செங்க ணாயிரஞ் சேர்ந்தவன் பொன்னகர்
கொங்கு தோய்குழ லாரொடுங் குன்றின்மேல்
தங்கு கின்றது போற்றகை சான்றதே.

தாமரை மிக்கு ஆயிரம்பூவைப் பூத்தனபோலுங் கண்கள்.

(இ - ள்.) அங்ஙனம் கூறலின், அந்நகர் இந்திரன் அமராவதி தெய்வமகளிரோடே வந்து வெள்ளிமலைமேல் தங்குகின்ற தன்மைபோல அழகமைந்த தென்க. (நு௬)

529. கிடங்கு சூழ்மதிற் கேழ்கிளர் பூங்கொடி
மடங்க னோக்கியர் வாண்முகம் போலுமென்
றுடங்கு வெண்மதி யுள்குளி ரத்தம
குடங்கை யாற்கொம்மை கொட்டுவ போன்றவே.

527. சிறிது சொல்லலாம். துப்புரவு - நுகரும் பொருள். அளந்து - ஆராய்ந்து. பூரித்து - நிறைத்து. மேலால் - மலையின்மேலிடத்தில். (உரை) [1] மதிலுக்கானமையின் ஆகுபெயர்.

528. தாமரை பொங்கி ஆயிரம்பூத்தபோற் செங்கண் எனமாறுக. பொன்னகர் - அமராவதி. கொங்கு - வாசனை. குழலார் : தெய்வமகளிர். தகை - அழகு. மு. பெருங். 1. 37 : 96-7.

529. கிடங்கு - அகழி. கேழ் - நிறம். மடங்கல் நோக்கு - முன்னும் பின்னும் பார்க்கும் சிங்கத்தின் பார்வை; அரிமா நோக்கம் என்றும் கூறப்படும்; சீவக. 1569. உடங்கு - சேர. தம - தம்முடைய. குடங்கை - உள்ளங்கை. கொம்மை - புறம்.

(இ - ள்.) மதிலிற்கொடிகள், மதியைத் தீண்டுகின்ற பொழுது, இம் மதி மகளிர் முகத்தையொக்கும்; இதற்கு நாம் அருளவேண்டுமென்று கருதி அவையெல்லாம் சேர அம்மதியின் மனங்குளிரும்படி தம்முடைய குடங்கைகளாலே, 'நீ முகத்தையொப்பை; நல்லை நல்லை' என்று அதன் புறத்தைத் தட்டுவனபோலேயிருந்தனவென்க. (ருஎ)

530. திருவ மேகலை தெள்ளரிக் கிண்கிணி
பரவை யாழ்குழல் பண்ணமை மென்முழா
உருவம் யாருடை யாரென் றுளிர் நகர்
அரவம் வாய்திறந் தார்ப்பது போன்றதே.

திருவ; அ: அசை.

(இ - ள்.) மேகலை, கிண்கிணி, பேரியாழ், பண்ணையுடைய குழல், முழா என்கின்ற இவற்றின் அரவம் எங்ஙனமிருந்ததென்னின், இவ் வுலகில் என்னிற்காட்டில் உருவுடையார் யாரென்று நகர்தான் வாய் விட்டு ஆர்க்குந் தன்மை போலேயிருந்ததென்க. (ருஅ)

531. செம்பொன் மாடங்கள் சென்னி யழுத்திய
அம்பொற் றிண்ணிலை யாய்மணித் தூவிகள்
வெம்பு நீள்சுடர் வீழ்ந்து சுடுதலிற்
பைம்பொற் கொப்புள் பரந்தன போன்றவே.

(இ - ள்.) தம் தலையிலழுத்திய மணித்தூவிகளையுடைய மாடங்கள், ஞாயிறு தாழ்ந்து சுடுதலினலே பொன் உருகிக் கொப்புள் பரந்தன போன்றன வென்க.

பொன்னல் திண்ணிய நிலையுண்டாகக் கட்டின தூவி. (ருகூ)

532. உருளி மாமதி யோட்டொழித் தோங்கிய
வெருளி மாடங்கண் மேற்றுயி லெய்தலின்
மருளி மான்பிணை நோக்கினல் லார்முகத்
தருளி னுலழ லாற்றுவ போன்றவே.

530. தெள்ளரி - தெள்ளிய பரலாகிய மணிகளையுடைய; மதுரைக். 444; கலித். 69 : 8. பரவையாழ் - பேரியாழ். பண்ணமைகுழல் என மாறுக; பண் - இராகம். முழா : பெருங். 1. 34 : 140. அரவம் - மேகலை முதலியவற்றின் ஒலி.

531. தூவிகள் சென்னியழுத்திய மாடங்கள் எனமாறுக; தூவி - ஸ்தூபி; மாடங்களின் உச்சியில் அமைப்பது. வெம்பும் சுடர் - சுடு கின்ற சூரியன்; சீவக. 2. பைம்பொற் கொப்புள் பரந்தன போன்றவே : நள. சுயம். 104.

532. உருள்மதி - உருளுதலையுடைய மதி. ஓட்டொழித்து - ஓடு தலைத் தடைசெய்து. மருளி; இ : பகுதிப்பொருள் விகுதி. மான்பிணை

(இ - ள்.) மதியைச் செலவைத் தவிர்த்து மேலே ஓங்கிய வெருட்சி யையுடைய மாடங்களின் மேலே ஞாயிற்றின்றேர் பூண்ட [1] மாக்கள் துயிலைப் பெறுதலாலே, அவை நல்லார்முகத்தின் அருளால் தம்வெம் மையை ஆற்றுவன போன்றவென்க.

உருளி, வெருளி ; இ : பகுதிப்பொருள் விகுதி. [2] சோதிடநூலார் இங்ஙனங் கூறுப. (சூ0)

533. அசும்பு பொன்வரை யாய்மணிப் பூண்களும்
பசும்பொன் மாலையும் பட்டுழிப் பட்டவை
நயந்து கொள்பவ ரின்மையி னன்னகர்
விசும்பு பூத்தது போன்றன வீதியே.

(இ - ள்.) பொன் இடையறுது ஒழுகுகின்ற வரையிற் பிறந்த மணி யாற் செய்த பூண்களும் மாலையும் விழுந்த இடத்தே கிடக்கின்றவற்றை எடுப்பாரின்மையின், நன்னகர் வீதிகள் ஆகாயம் மீனைப்பூத்த தன்மையை ஒத்தன வென்க. (சுக)

534. தேக்க ணின்னகி றேளெடு கூட்டமைத்
தாக்கப் பட்ட வளவில் கொழும்புகை
வீக்கி மாடந் திறந்திட மெல்லவே
ஊக்கி வாய்விட் டுயிர்ப்பன போன்றவே.

(இ - ள்.) நெய்யை இடத்தேயுடைய நாற்றமினிய அகிலையும் ஒழிந்த கூட்டையும் தேனோடே பிசைந்திட்டு உண்டாக்கின புகையை மாடங்களிற் சாளரங்களை அடைத்து நிறைத்து அவற்றைத் திறக்க, அம் மாடம் புகையைப் பொறுக்கமாட்டாது வலிய வாய் அங்காந்து மெல் லெனக் காலுவன போன்றன வென்க.

---

மருள்நோக்கு - பெண்மான் போலும் மருண்ட நோக்கு ; "மான்வயி ருர்ந்து நோக்கும் வெருவுறு மருளி னோக்கின்.........கண்கள்" (சீவக. 2290)

(உரை) [1] மாக்கள் - குதிரைகள். [2] சந்திரமண்டலம் சூரியமண்ட லத்திற்குக் கீழேயுள்ளதென்பது சோதிடநூலாருடைய கொள்கை.

533. அசும்பு வரை : சீவக. 522. பட்டுழி - விழுந்த இடம். நயந்து - விரும்பி. பூண்களும்.........கொள்பவரின்மை : சீவக. 115. பூத்தது - நட்சத்திரத்தைப் பூத்தது.

534. தேன்கண் இன்னகில் - நெய்யைத் தன்னிடத்தே யுடைய இனிய மணமுடைய அகில் ; சீவக. 2495. கூட்டு தேனோடு அமைத்து என மாறுக. அகில் தேனெடு.........புகை : சீவக. 1855 ; பெருங். 3. 9 : 60. மாடம் வீக்கித் திறந்திட எனமாறுக ; வீக்கி - நிறைத்து. ஊக்கி - வலிய முயன்று ; சீவக. 1384. உயிர்ப்பன - சொரிவன.

கூட்டாவன; [1] " நேர்கட்டி செந்தே னிரியாசங் கற்பூரம், ஆர மகி லுறுப்போ ரைந்து." [2] நிரியாசம் - பிசின். அது குங்குலிய முதலியன. (சஉ)

535. தப்பில் வாய்மொழித் தானவர் வைகிய
ஒப்பின் மாநக ரொண்மைமற் றியாதெனிற்
கப்பத் திந்திரன் காமுறு மாமணிச்
செப்பு வாய்திறந் தன்னதொர் செம்மற்றே.

(இ - ள்.) தானவர் தங்கிய நகரின் விளக்கம் பின்னை எங்ஙன மிருந்ததென்னின், இக்கப்பத்துக்குரிய இந்திரன் விரும்பிய பூண் தங்கும் மணிச்செப்பை வாய்திறந்தாற்போலும் தலைமைத்தென்க. (சங)

(வேறு)

536. நன்னகர் நோக்கி நாய்க னாகங்கொல் புகுந்த தென்னப்
பொன்னகர் பொலியப் புக்குப் பொங்குமா மழைக டங்கும்
மின்னவிர் செம்பொன் மாடத் திருவரு மிழிந்து புக்குப்
பின்னவன் விருந்து பேணிப் பேசினன் பிறங்கு தாரான்.

மழைதங்குமிருவரென்றது தரனையும் ஸ்ரீதத்தனையும்; தரன் கதி யாற்றங்குதலும் ஸ்ரீதத்தன் கொடையாற்றங்குதலும் கொள்க. இனி, வெள்ளிமலை மேகபதத்துக்கு மேலென்றுரேனும் மேகம் எங்குமுள தென்று வைத்து, மழைகள் தங்குமாடமென்றுமாம்.

(இ - ள்.) நாய்கன் நகரைநோக்கி நாம் புகுந்தது நாகமோவென்று கருதும்படி, பொன்னகரிலே புக்குப் பின்பு இருவரும் இழிந்து தரனு டைய மனையிலே செல்லுதலாலே அத்தரன் விருந்திட்டுப் பின்பு அவன் ஒருமொழி கூறினனென்க. (சச)

---

(உரை) [1] " நேர்கட்டி செந்தே னிரியாசம் பச்சிலை, யார மகிலு றுப்போ டாறு" எனக் காட்டுவர் அடியார்க்கு நல்லார்; சிலப். 5 : 14. [2] நிரியாசம் : வாசனைவகையுள் ஒன்று என்பர் அடியார்க்கு நல்லார்; சிலப். 14 : 108.

535. தானவர் - வித்தியாதரர்; " சாமமார்ந் திலங்கு மேனித் தானவ ெனாருவன்" (மேரு. சஞ்சயந்தன். 6). ஒண்மை - விளக்கம். கப் பத்திந்திரன் : சிலப். 11 : 154; கற்பம் கப்பமென நின்றது; பிராகிரு தம் (சிலப். 11 : 154, அரும்பத.) நகருக்குச் செப்பு : சீவக. 35, அடிக். செம்மற்று - தலைமையையுடையது.

536. நாகம் - பவணலோகம். நன்னகர்.........நாகம் : கம்ப. மந்தி ரப். 2. மழைகள் - மேகங்கள். மின் அவிர் - மின்னலைப்போல ஒளிவிட்டு விளங்குகின்ற. இழிந்து - இறங்கி.

537. (க) மாடியந் தானை மன்னர் மாமணி நாக மாகக், கேடில்சீர்க் கலுழ ருய கலுழவே கற்குத் தேவி, தோடலர் கோதைத் தொல்சீர்த் தாரணி சுரும்புண் கண்ணி, ஆடவ ரறிவு போழு மணிமுலை யணங்கி னன்றாள்.

538. (உ) விண்ணகம் வணங்க வெண்கோட் டிளம்பிறை முளைத்த தேபோற், பண்ணகத் தினிய சொல்லாள் பாவையைப் பயந்த ஞான்றே, எண்ணிட மின்றி மன்ன ரிம்மலை யிறை கொண் டீண்டி, அண்ணலங் களிற்றி னுச்சி யருங்கல வெறுக்கை யீந்தார்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(இ - ள்.) மன்னர் நாகமாகத் தான் அவர்களுக்குக் கருடனாகிய கலுழவேகற்குத் தேவியாகிய தாரணி, அணங்கினன்றாளுமாய், இனிய சொல்லாளுமாயிருக்கிற பாவையை விண்ணிடத்தே பிறை தோன்றினாற் போல எல்லாரும் வணங்கும்படி பெற்ற அற்றைநாளே, எள்ளிட இட மின்றாக இம்மலையில் மன்னரெல்லாம் ஈண்டித் தங்குதல்கொண்டு களிற் றின் உச்சியிலே கலமாகிய செல்வத்தைக் கொடுத்தாரென்க.

மாடியம் [1] உடம்புக்கீடு. அன்றே பேசினாரென்க. (சரு - கூ)

539. மந்திரத் தரசன் வல்லே நிமித்திகன் வருக வென்றாற்
கந்தரத் தோடு கோளிற் சாதக மவனுஞ் செய்தான்
இந்திர திருவி லேய்ப்பக் குலவிய புருவத் தாட்கு
வந்தடை பான்மை மண்மே லிராசமா புரத்த தென்றான்.

---

537. மாடியந்தானை : பெருங். 3. 26 : 19. மாடியம் என்பதற்கு, 'தலைச்சீரா' என்று பொருள் கூறுவர் சைனர். கலுழன் - கருடன். தோடு அலர் - இதழ்கள் அலர்ந்த. அறிவு போழும் - அறிவைப் பிளக்கும்.

538. பிறை குழந்தைக்கு உவமை; சீவக. 362. சொல்லாள் : தாரணி. பயந்த ஞான்றே - பெற்ற அன்றைக்கே. எண்ணிடமின்றி மன்னர்.........ஈண்டி : சீவக. 635; சூளா. அரசியல். 293. எண்ணிட மின்றி - எள்ளுப்போட இடம் இல்லாமல்; சீவக. 93, அடிக். இறை கொண்டு - தங்குதல் கொண்டு. அண்ணல் - தலைமை. அருங்கல வெறுக் கை - அரிய ஆபரணங்களாகிய செல்வங்கள்; "பொலங்கல வெறுக்கை தருமார்" (அகநா. 1 : 9)

(உரை) [1] உடம்புக்கு இடப்படுவது; கவசம்.

539. மந்திரத்தரசன் - வித்தியாதர உலகத்து அரசன்; சீவக. 545. வல்லே - விரைய. நிமித்திகன் - சோதிடன்; விளி. அந்தரத்து - ஆகாயத்தில். கோளின் - கிரகங்களால். இந்திரதிருவில் : சீவக. 121. குலவிய - வளைந்த. பான்மை - ஊழ்வினை : சீவக. 553.

மந்திரம் : [1] ஆகுபெயர்.

(இ - ள்.) விச்சாதரலோகத்தின்கண் அரசன், கணி, கடுகச் சாதகம் செய்துவருகவென்றவனுக்கு அவனும் கோளாலே எண்ணிச் சாதகஞ் செய்தான் ; அங்ஙனஞ்செய்தவன் தத்தைக்கு வந்துசேரும் நல்வினைப் பயனெல்லாம் மண்மேல் இராசமாபுரத்தே வந்துசேருமென்று கூறினானென்க. (சஎ)

540. அவனுரை தெளிந்து வேந்த னாசையு ளரசர் நிற்பக்
கவனங்கொள் புரவிக் கொட்பிற் காதலுங் கரந்து வைத்தான்
அவனதே கருதிற் றுங்கொ லன்றுகொ லறிய லாகா
திவணது மறிது மென்று கோயிலுக் கேகி னானே.

(இ - ள்.) அரசர் எமக்குத் தருமென்னும் ஆசையிலே நிற்ப, கணி, தான் கூறியவுரையைத் தெளிந்து அங்கே கொடுக்குமென்று நிற்ப, வேந்தன் இடமும் வலமும் பாய்கின்ற கதிவிசேடத்தைக் கொண்ட குதிரையினது மனத்திற் சுழற்சிபோலே தன்காதலையும் இரண்டிடத் துக்கும் ஏற்பக் கூறி மறைத்து வைத்தான்; ஆதலால், அவன் கருதிய காரியம், அக்கணி கூறியதேயாயிருக்கின்றதோ, அன்றி அரசர் கருதியதேயோ, இரண்டும் இதற்குமுன் அறியமுடியாது ; இனி நீ வந்தபடியாலே இப்பொழுது அவன் கருதியதும் விளங்க அறியக்கடவேமென்று கூறிப் பின்பு ஸ்ரீதத்தையையுங்கொண்டு கோயிலுக்கு ஏகினானென்க.

அதுவும் : [1] விகாரம். அரசனது கருத்துத் தெள்ளிதின் உணரலாகாமையின், இவற்கு ஈண்டும் உண்மைகூறுது காரியம்முடிந்துபோகின்ற பொழுது கூறினான். (சஅ)

541. (க) பால்பரந் தன்ன பட்டார் பூவணை பசும்பொற் கட்டிற்
கால்பரந் திருந்த வெங்கட் கதிர்முலை கச்சின் வீக்கி
வேல்பரந் தனைய கண்ணார் வெண்மதிக் கதிர்பெய் கற்றை
போலிவர் கவரி வீச மன்னவ னிருந்த போழ்தின்.

(உரை) [1] மந்திரம் அதனுற் சிறப்புற்ற உலகத்திற்காயிற்று.

540. கவனம் - முன்னில் இரண்டடிகளை ஒக்கவைத்துப் பாயும் பாய்ச்சல் (தக்க. 103, உரை). இவணதும் - இப்பொழுது அவன் நினைத்ததையும். அறிதும் - அறிவோம். கோயில் - கலுழவேகனுடைய அரண்மனை.

(உரை) [1] இவணதும் என்பதிலுள்ளது.

541. பட்டு : வெண்பட்டு. பூ அணை - பூக்கள் சேர்ந்த. கட்டில் - கட்டிலில். கால் - அடி. கற்றை - தொகுதி. மகளிர் கவரிவீசுதல் : சீவக. 429, அடிக்.

542. (உ) என்வர விசைக்க வென்ன வாயிலோ னிசைப்ப வேகி, மன்னர்த முடிகள் வேய்ந்த வயிரம்போழ்ந் துழுது சேந்த, பொன்னவிர் கழல்கொள் பாதம் பொழிமழைத் தடக்கைகூப்ப, இன்னுரை முகமன் கூறித் தானத்திலிருக்க வென்றான்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) பாலாவி பரந்தன்ன பட்டு. கச்சாற்கட்டி அடிபரந்து தளரா திருந்த முலையிணையுடைய. வேல் கொலையிலே பரந்தாற்போலும் கண்ணார். மதியின் கதிர்களைச் சொரிந்த திரள்போலும் கவரி.

(உ) என்வரவு - ஸ்ரீதத்தனைக் கொண்டுவந்த வரவு. பிளந்து உழுத லாலே சிவந்த.

(இ - ள்.) அங்ஙனம் ஏகின தரன், கண்ணார் கவரிவீசக் கட்டிலிற் பூவணையிலே மன்னவன் இருந்தவளவிலே, என்வரவு இசைக்கவென்ன, வாயிலோனும் இசைப்ப, ஸ்ரீதத்தன்போய்ப் பாதத்தை வணங்க, மன்னவன் உபசாரங் கூறி அரசரிருத்தற்குரிய இடத்தே இருக்கவென்றானென்க. (சகூ-ருo)

543. முதிர்பெயன் மூரி வான முழங்கிவாய் விட்ட தொப்ப
அதிர்குரன் முரச நாண வமிர்துபெய் மாரி யேய்ப்பக்
கதிர்விரி பூணி னாற்குத் தந்தைதாய் தாரங் காதல்
மதுரமா மக்கள் சுற்றம் வினவிமற் றிதுவுஞ் சொன்னான்.

வான் சத்தத்திற்கும், முரசு முழக்கத்திற்கும், மாரி கேட்டற்கு இனிமைக்கும் உவமை.

(இ - ள்.) அங்ஙனங்கூறிய அரசன், ஒப்ப நாண ஏய்ப்ப அவனுடைய தந்தை முதலியவர்களை வினவிப் பின்பு அந்த ஸ்ரீதத்தனுக்கு இதுவுங் கூறினானென்க.

அது மேற்கூறுகின்றார். (ருக)

---

542. இசைக்க - சொல்லுக. வாயிலோன் - வாயில்காப்பவன். வேய்ந்த வயிரம் - சூடிய வயிரமணி. உழுது - உழ; எச்சத்திரிபு. சேந்த- சிவந்த. கூப்ப - குவித்து வணங்க. இன்னுரை முகமன் - இனிய வார்த்தைகளோடு கூடிய உபசாரம். தானத்தில் - உரிய இடத்தில்.

543. முதிர்பெயல் - மிக்க பெய்தலையுடைய. மூரிவானம் - வன்மையையுடைய மேகம். அமிர்து - நீர். ஏய்ப்ப - ஒப்ப. பூணினாற்குத் தந்தை : உயர்திணைக்கண் நான்கனுருபு வந்தது. தாரம் - மனைவி.

544. இன்றைய தன்று கேண்மை யெமர்நும ரெழுவர் காறும்
நின்றது கிழமை நீங்கா வச்சிர யாப்பி னூழால்
அன்றியு மறனு மொன்றே யரசன்யான் வணிக னீயே
என்றிரண் டில்லை கண்டா யிதுநின தில்லம் என்றான்.

வச்சிரயாப்பு - வச்சிரத்தால் தலையிலிட்ட எழுத்து; "வச்சிர நுதியி னிட்ட, எழுத்தனான்" (சீவக. 1534) என்ப மேலும்.

(இ - ள்.) கேண்மை இன்று உளதாயதன்று; வச்சிரயாப்பின் நீங்காத விதியினாலே எமரெழுவர் நுமரெழுவரளவும் [1] ஏழுகிழமையும் போல [2] ஏற்றிழிவின்றி நின்றது அக்கேண்மை; அன்றியும் சமயமும் ஒன்றே; ஆதலின் யான் அரசன், நீ வணிகனென்று இரண்டுசாதியில்லை காண்; இது நின்மனை காணென்றானென்க.

கிழமை - உரிமையுமாம். (ருஉ)

545. (க) மந்திர மன்னன் சொன்னீர் மாரியால் வற்றி நின்ற, சந்தனந் தளிர்த்த தேபோற் சீதத்தன் றளிர்த்து நோக்கி, எந்தைக்குத் தந்தை சொன்னு னின்னணம் மென்று கேட்ப, முந்தைத்தான் கேட்ட வாறே முழுதெடுத் தியம்பு கின்றான்.

546. (உ) வெள்ளிவே தண்டத் தங்கண் வீவிறென் சேடிப் பாலிற், கள்ளவிழ் கைதை வேலிக் காசில்காந் தார நாட்டுப், புள்ளணி கிடங்கின் விச்சா லோகமா நகரிற் போகா, வெள்ளிவேற் கலுழ வேகன் வேதண்ட வேந்தர் வேந்தன்.

---

544. கேண்மை - நட்பு. எழுவர்காறும் நின்றதென்றது ஏழு தலைமுறையாக உள்ளது என்றபடி. ஊழ் - விதி. அறம் - ஜினதருமம். இது நினது இல்லம் : வி-பா. கண்ணன் தூது. 108

(உரை) [1] வாரத்திலுள்ள ஏழு நாட்களை ஏழு தலைமுறைக்கு உவமையாகக் கூறினர். [2] ஏற்றிழிவு - உயர்வு தாழ்வு.

545. மந்திரமன்னன் : சீவக. 539. மாரி............தளிர்த்தது : 'கோடையால் தெறப்பட்டு வாடிநின்ற சந்தனம் மழைபெற்றுத் தளிர்த் தாற் போல' (இறை. 3, உரை). தந்தை என்றது ஸ்ரீதத்தன் பாட்டனை. இன்னணம் - இன்ன வண்ணம். கேட்ப - கலுழவேகன் கேட்கும்படி. முந்தை - முன்பு.

546. வெள்ளி வேதண்டம் - வித்தியாதரர் வாழும் வெள்ளிமலை. வீவில் - அழிவில்லாத. தென் சேடிப்பாலில் - தட்சிண சிரேணியின் பக்கத்தில்; சிலப். 6 : 1. கைதை வேலி - தாழையாகிய வேலியை யுடைய. காசு இல் - குற்றமில்லாத. புள்ளணி கிடங்கு : சீவக. 95. போகா - நீங்காத.

547. (ரு) சங்குடைந் தனைய வெண்டா மரைமலர்த் தடங்கள் போலும், நங்குடித் தெய்வங் கண்டீர் நமரங்கா ளறிமி னென்னக், கொங்குடை முல்லைப் பைம்போ திருவடங் கிடந்த மார்ப, இங்கடி பிழைப்ப தன்று லெங்குல மென்று சொன்னான்.

இவைமூன்றும் ஒருதொடர்.

(ரு) தடங்களிலே உடைந்த தன்மையவாகிய [1] மலரும் சங்கும் போலும் நங்குடி. இது [2] தூய்மைக்கு உவமை; இனி, [3] சங்கு சுட்டாலும் நிறங்கெடாதது போலக் கெட்டாலும் தன்தன்மை கெடாத குடியுமாம்; "நத்தம்போற் கேடும்" (குறள், 235) என்ப. [4] அரச முல்லையும் [5] காவன்முல்லையுங்கருதி 'இருவடம்' என்றார்.

(இ - ள்.) மாரியின்மையின் வற்றி நின்ற சந்தனம் அதுபெற்றுத் தளிர்த்தாற்போல மன்னனது சொன்னீராலே ஸ்ரீதத்தன் தளிர்த்து மன்னனை நோக்கி, யான்கேட்டிருப்ப என்னுடைய தந்தைக்கு அவன் றன்னுடைய தந்தை தான் முன்புகேட்டிருந்தபடியே இன்னணமென்று முழுதெடுத்தியம்புகின்றவன், நமரங்காள், வேதண்டமலையில் தென் சேடிக்கூற்றிற் காந்தாரநாட்டில் விச்சாதரலோக மாநகரியில் நின்று நீங்காத கழுவேகன் வேந்தன்; அவன், நங்குடித்தெய்வங் [6] காணுங் கோள்; அதனை அறிந்திருப்பீராகவென்று சொன்னான்; ஆதலால், மார்பனே, எங்குலம் இவ்விடத்து உன்னடியைப் பிழைப்பதன்றாயிருந்த தென்று சொன்னானென்க.

மன்னனைநோக்கி, பிழைப்பதன்றால் எங்குலமென்று சொன்னானெனக் கூட்டுக. தந்தை இயம்புகின்றவன், நமரங்காள் அறிமி னென்னச் சொன்னானென்றது, [7] 'மந்திரம்' என்னும் கவியிற் சொன்னானென்றதனை. தந்தை - பாட்டன். (ருரு - ரு)

---

547. உடைந்தனைய - உடைந்தாற் போன்ற. வெண்டாமரைமலர் கூறியது குலத்தூய்மைக்கு; சீவக. 223. சங்கு.........குடி : பெருங். 2. 5 : 65 - 6; பு - வெ. 185. நமரங்காள் : சீவக. 2623 - 4; கம்ப. களங் காண். 6. கொங்கு - தேன். இருவடம் - இரண்டு மாலை. அடி பிழைப்பது: பெருங். 1. 58 : 91 - 2.

(உரை) [1] கிடந்தவாறே பொருள் கொள்ளின் உவமைக்கு உவமை என்னும் குற்றம் தங்கும். [2] குலத்தூய்மைக்கு உவமை; சீவக. 2413. [3] "சங்கு, சுட்டாலும் வெண்மை தரும்" (மூதுரை). [4] அரசமுல்லை - அரசனுடைய இயல்பின் மிகுதி (பு - வெ. 171). [5] காவல் முல்லை - அரசன் உலகத்தைக் காத்தலின் மிகுதி (பு - வெ. 179). இவ்விரண்டற்கும் அறிகுறியாக முல்லைமாலை சூடுதல் மரபு. [6] காணுங்கள் என்பதன் மரூஉ. [7] 'மந்திரம்' என்னும் கவி; சீவக. 545.

548. (க) பெருந்தகைக் குருசிறோழன்பெருவிலைக் கடகமுன்கை
திருந்துபுவணங்கப்பற்றிச்சென்றுதன்னுரிமைகாட்டப்
பொருந்துபுபொற்பவோம்பிப்பொன்னிழை சுடரநின்ற
கருங்கண்ணி திறத்துவேறுக்கட்டுரைபயிற்றுகின்றான்.

549. (உ) எரிமணிப் பளிக்கு மாடத் தெழுந்ததோர் காமவல்லி
அருமணிக்கொடிகொன்மின்கொலமரர்கோனெழுதிவைத்த
ஒருமணி குயின்ற பாவையொன்றுகொலென்று நாய்கன்
திருமணிக் கொடியை யோரான் றெருமர மன்னன் சொன்னான்.

இவையிரண்டும் ஒரு தொடர்.

(க) திருந்து - மனம் திருந்தாநின்று. ஓம்பி - ஒப்ப. திறம் - குலம். பயிற்றுகின்றான் : எதிர்காலமுணர்த்திய நிகழ்காலம்.

(உ) காமவல்லியாகிய மணிக்கொடி. இந்திரன் தன்மனத்தே எழுதிவைத்த ஒப்பில்லாத மணியென்று மணிக்கு விசேடங்கூறுக. மணியைப் பூத்தகொடி - தத்தை.

(இ - ள்.) அதுகேட்டு, குருசில் தோழன் தொழாநிற்க, அவன் முன்கையைப் பிடித்துச்சென்று தன் உரிமையைக்காட்டினானாக, அவளும் மனம் பொருந்தாநின்று உபசரியாநிற்ப, நாய்கன் அவ்விடத்து நின்ற மணிக்கொடியை அச்சநிகழ்ந்தமையால் மகளென்று ஓரானாய், கொடியோ! மின்னோ! மணியாற் செய்த பாவையோ! என்று சுழலாநிற்க, அவனுக்கு மன்னன் அக்கருங்கண்ணியைத் தன்குலமன்றி ஸ்ரீதத்தன் குலமாகவே மேற்றொட்டும் கூறுதலைப் பயிற்றுகின்றவன் ஒரு காரியம் சொன்னானென்க.

அது, “நின்மகளிவள்” (சீவக. 552), “ஆணையிராமின்” (சீவக. 556) என்றவற்றாற்கொள்க. (௬௬ - எ)

550. (க) தூசுலாய்க்கிடந்தவல்குற்றுப்புறழ்தொண்டைச்செவ்வாய்
வாசவான் குழலின் மின்போல் வருமுலைச் சாந்து நக்கி
ஊசல்பாய்ந் தாடிக் காதிற் குண்டல மிலங்க நின்றாள்
காசில்யாழ்க்கணங்கொடெய்வக்காந்தர்வதத்தையென்பாள்.

---

548. குருசில் - கலுழவேகன். தோழன் - ஸ்ரீதத்தன். முன்கையைப் பற்றி என இயைக்க. உரிமை - மனைவியை. பொருந்துபு - மனம் பொருந்தி. கருங்கண்ணி : காந்தருவதத்தை.

549. எரிமணிப் பளிக்கு மாடம் : சீவக. 594; மணி. 4 : 87. காமவல்லியாகிய அரிய மணிக்கொடி. மணிகுயின்ற - மணியாற்செய்யப் பட்ட. நாய்கன் : ஸ்ரீதத்தன். திருமணிக்கொடி : காந்தருவதத்தை. ஓரான் - இன்னதென்று தெரியாதவனாகி. தெருமர - மனம் சுழல.

550. தூசு - ஆடை. துப்புறழ் தொண்டைச் செவ்வாய் : சீவக. 107, ந; துப்பு - பவளம். குழலின் மின்போல் - கூந்தலாகிய மேகத்தை

551. (உ) விளங்கினு ளுலக மெல்லாம் வீணையின் வனப்பி னுலே
அளந்துணர்வரிய நங்கைக்கருமணிமுகிழ்த்த வேபோல்
இளங்கதிர் முலையுமாகத்திடங்கொண்டு பரந்தமின்னிற்
றுளங்குநுண் ணுசுப்புந்தோன்றுதுருவருவென்னவுண்டே.

552. (ங) நின்மக ளிவளை நீயே நின்பதிக் கொண்டுபோகி
இன்னிசை பொருது வெல்வான் யாவனே யானு மாக
அன்னவற் குரிய ளென்ன வடிப்பணி செய்வ லென்றான்
தன்னமர் தேவி கேட்டுத் தத்தைக்கே தக்க தென்றாள்.

இவைமூன்றும் ஒருதொடர்.

(க) உலாய் - சூழ்ந்து. [1] நாணுல் இறைஞ்சி நிற்றலிற் குண்டலம் சாந்தைத் தீண்டிப் போக்கு வரவுடைத்தாய் அசைந்து இலங்க நின்றாள். யாழ்விச்சைத்தொகுதி கொண்ட தெய்வம் - மாதங்கி.

(உ) குணங்கள் அளந்துணர்வரிய.

(ங) போகி : போகவென வியங்கோளுமாம். யாவன் - மூன்று வருணத்திலும் யாவன் ; " இறைவராதி மூவகைக் குலத்து ளார்க்கும் " (சீவக. 608) என்றார் மேலும் ; தன்னில் இழிந்த வணிகரையுங்கூட்டினான், அக்குலத்தில் தான்செய்த நல்வினையின் நிலைமையை எய்துவித்தலின். ' உரியள் ' எனவே கொடைப்பொருட்டாம். அடிமைப்பணி : விகாரமாம்.

(இ - ள்.) அல்குல் முதலியவற்றையுடையதொரு மின்போல நாணிநின்றவள், தெய்வமாகிய காந்தருவதத்தையென்னும் பெயரையுடையாள் ; இவள்தான் வீணையாலும் வனப்பினுலும் உலகமெல்லாம் விளங்கினாள் ; இவட்கு அதுவுமன்றி முலையும் மணிமுகிழ்த்தபோற் றோன்றிப் பின்பு ஆகத்தே பரந்தன ; முன்பு மின்போல் துளங்கு நுசுப்பும் இப்பொழுது உண்டு இல்லையென்ன ஐயம் நிகழ உண்டா

யுடைய மின்னலைப்போல. ஊசல் - அசைதல். யாழ்த்தெய்வம் - மாதங்கி ; சீவக. 411, அடிக்.

551. வீணையினுலும், வனப்பினுலும் விளங்கினாள் என்க. வனப்பு-திரண்ட அழகு. முகிழ்த்த - அரும்பின. ஆகத்து இடம் கொண்டு - மார்பின் இடத்தைத் தம்முடையனவாகக்கொண்டு. மின்னின் - மின்னலைப்போல. துளங்கு நுண் நுசுப்பும் - அசைகின்ற நுண்ணிய இடையும். உரு என்பவர் பழகியவர் ; அரு என்பவர் அயலார் (சீவக. 172, ந.)

552. பதி - இராசமாபுரம். இன்னிசை பொருது - இனிய இசையால் வாதம் செய்து. ' அடிப்பணி செய்வல் ' என்றது சீதத்தன் கூற்று. தன்னமர் தேவி - தன்னை விரும்பிய தேவி ; என்றது தாரணியை. தத்தை - காந்தருவதத்தை.

(உரை) [1] " நாணடச் சாய்ந்த நலங்கிளர் ரொருத்தின் " (பொருந. 31)

யிற்று; இத்தன்மையுடைய நின்மகளாகிய இவளை நீயே நின்பதியேறக் கொண்டுபோய் இசையாற்பொருது வெல்வான் யாவனாயினுமாக, அங்ஙனம் வென்றவனுக்குக் கொடுப்பாயென்று கூறினானாக, நாய்கனும் அடிமைப்பணி செய்வேனென்றான்; அதனைத் தாரணி கேட்டு இவ்விழிவு இவளுக்கே தக்கதென்று வெறுத்துக் கூறினாளென்க. (௫௮ - ௬௦)

553. (க) முனிவரும் போக பூமிப் போகமுட் டாது பெற்றும்
தனியவ ராகி வாழ்தல் சாதுய ரதனி னில்லை
கனிபடு கிளவி யார்தங் காதலர் கவானிற் றுஞ்சிற்
பனியிரு விசும்பிற் றேவர் பான்மையிற் றென்று சொன்னான்.

554. (உ) நூற்படு புலவன் சொன்ன நுண் பொருளுழைந்தி யானும்
வேற்கடற் றானை வேந்தர் வீழ்ந்திரந் தாலு நேரேன்
சேற்கடை மதர்வை நோக்கிற் சில்லரித் தடங்க ணங்கை
பாற்படு காலம் வந்தாற் பான்மையார் விலக்கு கிற்பார்.

இவையிரண்டும் ஒரு தொடர்.

(உ) வேற்றானை. சேலின் கடை போன்ற கடையினையும் நோக்கினையும் அரியினையுமுடைய கண்.

(இ - ள்.) அதுகேட்டு மன்னன், இனிமைதோன்றின கிளவியார் வெறுத்தற்கரிய இப்போகபூமியிற் போகத்தைக் குறையாமற் பெற்று வைத்தும் தனித்து வாழ்கின்ற தொழிலதனிற்காட்டில் அவர்க்கு இறந்து படும் வருத்தம் வேறில்லை; அவர் தங்கணவர் குறங்கிலே துஞ்சப் பெறின், அவ்வின்பம் தேவரின்பத்தின் பகுதியையுடைத்து; அதனை அறிந்துவைத்து, நங்கை இந்நாளளவும் சாந்துயரெய்திநிற்கவும் ஒருவன் பகுதியிலே படுங்காலம் வாராமையினாலே யானும் சோதிட நூலிலேயுளனாகிய கணி கூறிய பொருளிலே சென்று மன்னரிரந்தாலும் நேரேனாயினேன்; ஈண்டு அவள் ஒருவன்பாற் படுங்காலம் வந்தால், அவ்விதியை யாவரானும் விலக்கலரிது; ஆதலின், அதற்கு நேர்ந்தேனென்று சொன்னானென்க.

'வாராமையின்' என்றும், 'ஆதலினதற்கு நேர்ந்தேன்' என்றும் வருவித்துரைக்க. (௬௧ - ௨)

553. முனிவு - வெறுத்தல். போகபூமி - வித்தியாதரவுலகம். முட்டாது - குறையாமல். வாழ்தலதனின் சாதுயரில்லை என மாறியியைக்க. கனிபடு கிளவியார் - பழத்தின் சுவை உண்டாகின்ற சொற்களையுடைய மகளிர்; சீவக. 324. கவான் - துடை. பான்மையிற்று - தன்மையையுடையது.

554. நூற்படு புலவன் - சோதிடன்; நூல் - சோதிடநூல். நுழைந்து - கூர்ந்து சென்று. கடல் போன்ற வேற்றானை என்க. வீழ்ந்து - விரும்பி. நேரேன் - உடன்படேன். மதர்வை நோக்கின் - மயக்கத்தைத் தரும் பார்வையையுடைய. பான்மை - ஊழ்வினை. விலக்குகிற்பார் - தடுக்கும் ஆற்றலுடையவர்.

555. படைப்பருங் கற்பி னுடன் பாவையைப் பரிவு நீக்கிக்
கொடைக் குரிப்பால வெல்லாங் கொடுத்தபின் கூற்றுமுட்கும்
விடைப்பருந் தானை வேந்தன் வேண்டுவ வெறுப்ப நல்கித்
தொடுத்தலர் கோதை வீணை பதிக்கிது சொல்லி னானே.

கணவன் கருத்தே தன்கருத்தாதலின், பிறர் படைத்தற்கரிய கற்பாயிற்று. உரிப்பால : வினைத்தொகை. வேறுபடுத்தற்கரிய தானை.

(இ - ள்.) அது கேட்ட தாரணி, தத்தையை, தம்மைநீங்குதலாற் பிறந்த பரிவை நீக்கித் தான் கொடுத்தற்குரியனவெல்லாம் கொடுத்த பின்பு, வேந்தனும் அவள்வேண்டுவனவெல்லாம் மிகக்கொடுத்து வீணை பதியென்னும் பேடிக்கு இதனைக் கூறினானென்க.

அது மேற்கூறுகின்றார். (சுரு)

556. உடம்பினொ டுயிரிற் பின்னி யொருவயி னீங்கல் செல்லா
நெடுங்கணுந் தோளும் போலு நேரிழை யரிவை நீநின்
தடங்கணி தனிமை நீங்கத் தந்தையுந் தாயு மாகி
அடங்கல ரட்ட வேலா னாணையி ராமி னென்றான்.

உதவியாற் கண்ணும் தோளும் போலும் அரிவாய். ஆகி : வியங்கோள் ; எச்சமாக்கி ஒருமை பன்மை மயக்கமு மென்ப.

(இ - ள்.) உடம்பினோடு உயிர் பின்னுமாறுபோற் பின்னி ஒன்றாய் ஓரிடத்தும் இவளை நீங்காத அரிவாய், நின் தடங்கண்ணி எம்மைப் பிரிந்த தனிமை போம்படி இவளுக்குத் தந்தையும் தாயுமாவாயாக; அங்ஙனமாய்ப் பின் இருவீரும் நம்முடைய ஆணையை விட்டு ஸ்ரீதத்தனது ஆணையையுடையீராவீராக வென்றானென்க. (சுச)

557. அருமணி வயிரம் வேய்ந்த வருங்கலப் பேழை யைஞ்ஞூ
றெரிமணி செம்பொ னார்ந்த விராயிரம் யவனப் பேழை
திருமணிப் பூணி னாற்குச் சினந்தலை மழுங்க லின்றிக்
குருமணி முடியிற் றேய்த்த தரன்றமர் கொள்க வென்றான்.

555. படைப்பருங்கற்பு - பிறரால் உண்டாக்குதற்கரிய கற்பு. பாவை : காந்தருவதத்தை. பரிவு - துன்பம். கொடைக்கு உரிப்பால - கொடுத்தற்குரிய பகுதிகளையுடைய பொருள்கள். உட்கும் - அஞ்சும். வெறுப்ப - மிக ; உரிச்சொல். கோதை - மாலை.

556. உயிரின் பின்னி - உயிரைப் போலச் சேர்ந்து. தோள் - கை. அரிவை : விளி. தடங்கணி : காந்தருவதத்தை. தனிமை கலுழவேகனையும் தாரணியையும் பிரிந்ததனாலுண்டாயது. அடங்கலர் அட்ட - பகைவரைக் கொன்ற. ஆணையிராமின் : “ முன்னையிராமின் ” (பெருங். 2. 9 : 262)

557. அருங்கலப்பேழை - அரிய ஆபரணங்களை வைத்தற்குரிய பெட்டி. மணியும் செம்பொன்னும் ஆர்ந்த ; ஆர்ந்த - நிறைந்த. யவனப்

பூணினுற்குப் பகைவர்மேற்செற்றம் தலைகெடுதலின்ருகலின், அவர் முடியின் மணியை அவனடியிலே தேய்ப்பித்த தரன்.

(இ - ள்.) மன்னன் அருங்கலம் வைத்தற்குச் சமைத்த மணியாகிய வயிரம்வேய்ந்த பெட்டி ஐஞ்ஞூறும் மணியும் பொன்னும்ஆர்ந்த யவன தேசத்திற் பெட்டி இரண்டாயிரமும், தரனுடைய சுற்றமும் நீ கொள்வா யாகவென்ருனென்க. (௬௫)

558. பல்வினைப் பவளப் பாய்காற் பசுமணி யிழிகை வம்பார்
நல்லகில் விம்மு கட்டிற் றவிசொடு நிலைக்கண் ணுடி
மெல்லிய தூப முட்டி மேதகு நானச் செப்போ
டல்லவுங் கொள்க வென்ரு னணங்குடை நிணங்கொள் வேலான்.

(இ - ள்.) வேலான், பரந்த காலினையும் [1] கைச்சுரிகையினையு முடைய கச்சார்ந்த கட்டிலும் தவிசும் கண்ணுடியும் [2] இந்தளமும் செப்பும் ஒழிந்தனவும் நீ கொள்கவென்ருனென்க.

ஒடு : [3] எண்ணெடு. (௬௬)

559. விளக்கழ லுறுத்த போலும் விசியுறு போர்வைத் தீந்தேன்
துளக்கற வொழுகி யன்ன துய்யறத் திரண்ட திண்கோல்
கொளத்தகு திவவுத் திங்கட் கோணிரைத் தனைய வாணி
அளப்பருஞ் சுவைகொ ணல்யா ழாயிர மமைக வென்ருன்.

(இ - ள்.) இனிமைகொண்ட நல்யாழாயிரம், விளக்கை அழலைச் சேர்த்திஞற்போலும் நிறத்தவாய்த் தெரியாமற்போர்த்த போர்வையினை யும் தேன் அசைவற ஒழுகினுற்போன்ற [1] சிம்பறத்திரண்ட நரம்பு தன் னிடத்தே கொள்ளத்தக்க வார்க்கட்டினையுமுடையவாய்க் கோள்நிரைத் தனைய எண்ணுட்டிங்களைப்போல அமைகவென்ருனென்க.

பேழை ; பெருங். 3. 22 : 213. மழுங்கல் - கெடுதல். குரு - நிறம். தரன் தமர் - தரனுடைய சுற்றத்தாரையும்.

558. பல்வினைப்பவழப்.........கட்டில் : பெருங். 1. 47 : 177 - 8 ; 3. 14 : 56 - 7. தவிசு - ஆதனம். நானச் செப்பு - புழுகு வைக்கும் செப்பு ; சீவக. 2475. அணங்கு - கொற்றவை ; சிறுபாண். 94, ந.

(உரை) [1] கைச்சுரிகை - கைக்கத்தி ; கட்டிலினுடைய மேற்கால் களில் உட்டுளையமைத்து அவற்றிற் கத்தியைச் செருகி வைத்திருத்தல் அரசர்க்கு மரபு. [2] "வீதியிந்த ளத்தகிலின் வீசுபுகை வாசமெழும்" (நூற்றெட்டுத். 22). [3] தவிசொடு என்பதிலுள்ளது.

559. விசியுறு - கட்டுதலுற்ற. விளக்கழலுறுத்த.........போர்வை : பொருந. 5. தேன் துளக்கற.........கோல் : கந்த. தாரகன். 69. துய்யறத் திரண்ட : பெருங். 4. 16 : 8.

(உரை) [1] சிம்பு - தும்பு, சிக்கல் ; சீவக. 666 ; "மயிர் தும்பு" (சீவக. 721, ந. மேற்.)

கோள் நிரைத்த திங்கள் பத்தரில் தோலைச் சூழ முடுக்கின ஆணிக்கு உவமம்; "விளக்கழ லுருவின் விசியுறு பச்சை" (பொருந. 5); "உருக்கி யன்ன பொருத்துறு போர்வை" (பெரும்பாண். 9), "தொடித் திரி வன்ன தொண்டுபடு திவவிற், கடிப்பகை யனைத்துங் கேள்வி போகாக், குரலோர்த்துத் தொடுத்த சுகிர்புரி நரம்பின்" (மலைபடு. 21-3), "துளைவாய் தூர்ந்த துரப்பமை யாணி, எண்ணாட் டிங்கள் வடிவிற் ருகி" (பொருந. 10-11) என்றார் பிறரும். (சுஎ)

560. அரக்கெறி குவளை வாட்க ணவ்வளைத் தோளி னளைப்
பரப்பமை காதற் றயர் பற்பல்காற் புல்லிக் கொண்டு
திருப்புறக் கொடுத்த செம்பொற் றமரை போன்று கோயில்
புரிக்குழன் மடந்தை போகப் புலம்பொடு மடிந்த தன்றே.

"தொடர லிறுதி தம்முற் றும்வரின், லகரம் றகரவொற் றுகலு முரித்தே" (தொல். உயிர்மயங்கு. 12) என்பதனால், "பற்பல்கால்" என்றார்; [1] கொண்டு - கொள்ள.

(இ - ள்.) தமரைப்பிரிதற்கு அழுதுசிவத்தலின், இங்குலிகம் ஊட்டின குவளைபோலுங் கண்ணையுடைய தத்தையைத் தாயர் பற்பல்கால் தழுவிக்கொள்ள, அம்மடந்தை போகையினாலே, கோயில், திருமகளைப் போகவிட்ட தாமரைபோன்று புலம்பொடு மடிந்ததென்க.

"ஒழியாது" (தொல். தொகை. 15) என்றதனால், [2] இரண்டாவது விரித்துத் தாரணியையும் அல்லாத தாயரையும் புல்லிக்கொண்டு போக வென்றுமாம். (சுஅ)

561. காம்புபொன் செய்த பிச்சங் கதிர்மணிக் குடையொ டேந்தித்
தாம்பலர் கவரி வீசக் கிண்கிணி ததும்ப நாகப்
பாம்புபைத் தனைய வல்குற் பல்கலை மிழற்ற வேகி
ஆம்பனா றமுதச் செவ்வா யரசனைத் தொழுது நின்றாள்.

560. அரக்கு - இங்குலிகம். சிவப்பால் குவளையையும் கூர்மையால் வாளையும் போன்ற கண். பரப்பமை காதல் - பரவுதல் அமைந்த அன்புடைய. தாயர் - நற்றாய் முதலிய அறுவகைத் தாயர். புல்லி - தழுவி. திரு புறக்கொடுத்த - இலக்குமியைப் போகவிட்ட; புறக் கொடுத்த : அகநா. 4 : 5. கோயில் - கலுழவேகனுடைய அரண்மனை. மடந்தை : காந்தருவதத்தை. போக - போதலால். புலம்பு - வருத்தம்.

(உரை) [1] எச்சத்திரிபு. [2] இப்பொருளுக்குத் தாயர்ப் பற்பல் கால் என ஒற்று விரித்துக்கொள்க.

561. காம்பு பொன் செய்த பிச்சம் - பொன்னாற் செய்த காம்பை யுடைய பிச்சம். பிச்சமும் குடையும் : சீவக. 416, அடிக். பலர் - மகளிர் பலரும். மகளிர் கவரி வீசுதல் : சீவக. 429, அடிக். பைத்தனைய - படம் விரித்தாற்போன்ற. கலை - மேகலை. மிழற்ற - ஒலிக்க. செவ்வாய் : காந்தருவதத்தை; அகுபெயர். அரசன் - கலுழவேகன்.

(இ - ள்.) ஆம்பல் போல மணக்கின்ற செவ்வாயினையுடையாள், பலர் தாம் பிச்சத்தையும் குடையையுமேந்தக் கவரிவீசத் ததும்ப மிழற்றத் தாயரிடத்துநின்றும் போந்து அரசனைக் கண்ட பொழுதே கையாற்றொழுது நின்றாளென்க.

[1] ஏந்தி - ஏந்த. பலர்தாம் கவரியை வீச வென்றுமாம். நாறுதல் - தோற்றுதலுமாம். (சுகூ)

562. அடிக்கல மரற்ற வேகி யரும்பெறற் றாதை பாதம் [னுக்
முடிக்கலஞ் சொரியச் சென்னி யிறைஞ்சலு முரிந்து மின்
கொடிப்பல நுடங்கி யாங்குத் தோழியர் குழாத்து ணிற்ப
அடுத்தனன் புல்லி வேந்த னாற்றுகி லாது சொன்னான்.

மின்னுக்கொடியெனப் பொருட்பெயர்க்கும் உகரமும் வல்லெழுத்தும் பெறுதல் [1]இலேசாற்கொள்க. புல்லி - புல்ல.

(இ - ள்.) தத்தை அங்ஙனந்தொழுதுநின்ற இடத்தினின்றும் சிலம்பு முதலியன ஒலிப்பச் சென்று தந்தைபாதத்தே சென்னியால் முரிந்து வணங்கின அளவிலே, அவன் ஆற்றுகிலாதே பல்காற்புல்ல, அவள்போய் மின்னுக்கொடி பலவும் நுடங்கியாங்கு நுடங்கும் தோழியர் திரளிடத்தே நிற்க, வேந்தன் ஒருமொழி கூறினானென்க. (எ0)

563. வலம்புரி யீன்ற முத்த மன்மிசை யவர்கட் கல்லால்
வலம்புரி பயத்தை யெய்தா தனையரே மகளி ரென்ன
நலம்புரிந் தனைய காதற் றேவிதன் னவையை நீங்கக்
குலம்புரிந் தனைய குன்றிற் கதிபதி கூறி னானே.

குலம் வடிவு கொண்டனைய அதிபதி.

(உரை) [1] எச்சத்திரிபு.

562. அடிக்கலம் - பாதத்தில் அணிந்த ஆபரணங்கள். தாதை - கலுழவேகன். முடிக்கலம் - தலையிலணிந்த ஆபரணங்கள். இறைஞ்சலும் வேந்தன் ஆற்றுகிலாது அடுத்தனன் புல்லி என மாறியியைக்க; இறைஞ்சலும்-காந்தருவதத்தை வணங்கியவுடன். புல்லி-அரசன் புல்ல; எச்சத்திரிபு. மின்னுக்கொடி - மின்னலைப் போன்ற கொடி; உகரம் சாரியை. நுடங்கியாங்கு - அசைந்தாற்போல. தோழியர் குழாத்திற்கு மின்னற்கொடி உவமை. நிற்ப - காந்தருவதத்தை நிற்க. வேந்தன் சொன்னான் என இயைக்க.

(உரை) [1] தொல். புள்ளிமயங்கு. 50, ந.

563. வலம்புரி.........மகளிர் : கலித். 9 : 15 - 7; பெருங். 1. 47 : 253 - 5; பாண்டிக். 201-2; குலோத்துங்க. 392. தேவி - தாரணி. நவை - வருத்தம். அதிபதி - கலுழவேகன்.

(இ - ள்.) நலம் வடிவுகொண்டனைய தேவி தனது வருத்தத்தை நீங்கும்படி, வலம்புரியீன்ற முத்தம் மண்மிசையவர்கட்குப் பயன் கொடுப்பதன்றி அதனால் வலம்புரி பயனை எய்தாது; மகளிரும் தாயருக்கு அத்தன்மையரேயென்று கூறினானென்க. (எக)

564. இன்சுவை யாழொ டன்ன மிளங்கிளி மழலை மஞ்ஞை
பொன்புனை யூக மந்தி பொறிமயிர்ப் புறவம் பொன்னார்
மென்புன மருளின் னோக்கின் மானின மாதி யாகத்
தன்புறஞ் சூழப் போகித் தளிரியல் விமானஞ் சேர்ந்தாள்.

உம்மைவிரிக்க. மழலையிளங்கிளி. வளர்த்தலிற் பூண் அணிந்த கருங்குரங்கு. மந்தி: பெண்பெயர்; "குரங்கு முசுவு மூகமு மந்தி" (தொல். மரபு. 67) என்றார். புறவம் - சித்திரப்புறா. மருண்ட இனிய நோக்கு.

(இ - ள்.) தளிரியல், மானினமுதலாக எண்ணியவெல்லாம் தன் பக்கத்தே சூழ்ந்து செல்லப் போய் விமானத்தைச் சேர்ந்தாளென்க. (எஉ)

(வேறு)

565. வெற்றிவேன் மணிமுடிக், கொற்றவன் றெருமகள்
அற்றமில் பெரும்படைச், சுற்றமோ டியங்கினாள்.

(இ - ள்.) வெற்றியையுடைய வேலினையும் முடியினையுமுடைய கொற்றவன்மகள் இடைவிடாத படையாகிய சுற்றத்தோடே போயினா ளென்க.

அதன் எல்லை மேற்கூறுகின்றார். (எஙு)

566. கண்ணயற் களிப்பன, அண்ணல்யானை யாயிரம்
விண்ணகத் தியங்குதேர், எண்ணவற் றிரட்டியே.

(இ - ள்.) கண்ணருகே மதமுடையனவாகிய யானை ஆயிரம்; தேரினுடைய எண் இரண்டாயிரமென்க. (எச)

567. விற்படை விலக்குவ, பொற்படைப் புரவியும்
முற்படக் கிளந்தவற்றின், நற்புடைய நாற்றியே.

564. மழலையிளங்கிளி என மாறுக. பொன் - பொன்னாலாகிய ஆபரணம். ஊகம் - கருங்குரங்கு. மந்தி - பெண் குரங்கு. பொறிப் புறவம்: பெருங். 3. 1: 162. மருள் இன் நோக்கு எனப்பிரிக்க. போக - செல்ல. தளிரியல் - தளிரைப்போன்ற மென்மைத் தன்மை வாய்ந்த காந்தருவதத்தை. மு. பெருங். 4. 10: 41-81.

565. கொற்றவன் - கலுழவேகன். அற்றமில் படை - இடை விடாத சேனை. உறுதிச் சுற்றங்களுள் ஒன்றுதலின் படையைச் சுற்ற மென்றார். இயங்கினாள் - போயினாள்.

566. விண்ணகத்து - ஆகாயத்தில்.

567. விற்படை விலக்குவ.........புரவி: சீவக. 701; பெருங். 1. 48: 8. பொற்படைப்புரவி: மலைபடு. 574. நாற்றி - நான்கு மடங்கு.

(இ - ள்.) அம்பைத் தம்விசையாலே விலக்குவனவாகிய பக்கரை யுடைய குதிரைகளும் முற்கூறிய யானையின் நான்மடங்குற்ற பக்கத்தன வென்க. (எரு)

568. பாறுடைப் பருதிவேல், வீறுடை யிளையரும்
ஆறிரட்டி யாயிரர், கூறுதற் கரியரே.

பாற்றினஞ்சூழ்ந்த வேல். வீறு - தம் வீரம் பிறர்க்கின்மை.

(இ - ள்.) பருதிபோற்பகைவரைச் கெடுக்கும் வேலையுடைய இளைஞரும் பன்னீராயிரம் பெயர்; அவர்தாம் பகைவர் வஞ்சினங் கூறுதற்கு அரியரென்க. (எசு)

569. மாகநீள் விசும்பிடை, மேகநின் றிடித்தலின்
நாகநின் றதிர்ந்தவர்க், கேகலாவ தில்லையே.

மாகம் - திக்கு; மஞ்சுமாம். அதிர்ந்து - அதிர.

(இ - ள்.) விசும்பிலே மேகம் மழைபெய்தற்கு இடித்தலின், அதனைத் தன் பகையானையாகக் கருதி யானைகள் போகாது நின்று அதிர்தலாலே அவர்க்குப் போகலாவதோர் உபாயமில்லையாயிற்றென்க. (எஎ)

570. வெஞ்சின வெகுளியிற், குஞ்சர முழங்கலின்
மஞ்சுதம் வயிறழிந், தஞ்சிநீ ருகுத்தவே.

(இ - ள்.) குஞ்சரம் அங்ஙனம் வெகுளியோடே முழங்குதலால், அது கேட்டு மேகம் அஞ்சிக் கருக் கலங்கி நீரையுகுத்தன போன்றனவென்க. இடித்த மேகம் பின்பு பெய்தது. (எஅ)

571. வேழமும் மதத்தொடு, தாழ்புயல் கலந்துடன்
ஆழ்கட லகம்புறம், வீழ்தர விரைந்ததே.

புயல் : [1] ஆகுபெயர். கலந்து - கலக்க.

---

568. பாறு - பருந்து. இளையர் - வீரர்.

569. மாக விசும்பு - 'திக்குகளையுடைய ஆகாயம்' என்பர் (மதுரைக். 454, ந.); பூமிக்கும் சுவர்க்கத்துக்கும் நடுவண் உள்ளது மாகம் என்பர் (பரி. 1 : 47, பரிமேல்.); அகநா. 141 : 6, 253 : 24; புறநா. 35 : 18; பெருங். 2. 9 : 184. நாகம் - யானை. அதிர்ந்து - அதிர்தலால்.

570. சின வெகுளி : இருபெயரொட்டு. குஞ்சரம் - யானை. மஞ்சு - மேகம். வயிறு அழிந்து - கருப்பங் கலங்கி.

571. கலந்து - கலத்தலால். கடலகம் - கடலின் நடு இடம். விரைந்தது - படையானது விரைந்து சென்றது. கடலகம் புறம் வீழ்தர வேழமும்மதத்தொடு தாழ்புயல் கலந்து விரைந்தது என மாறியியைக்க.

(உரை) [1] புயல் அதனிடத்துண்டாகிய நீருக்கானமையின் ஆகு பெயர்; சீவக. 58, அடிக்.

(இ - ள்.) கடல்நடுவு கரைக்குப்புறம்பே விழும்படி மும்மதங் களோடே புயலுகுத்த நீரும் கடலிடத்தே கலத்தலாலே மேகத்தாலும் நாகத்தாலும் [2] தகைவின்றி விமானம் படையுடனே மரக்கலமிருக்கின்ற இடத்தே விரைந்து சென்றதென்க. (எக)

572. மல்லன்மாக் கடலிடைக், கல்லெனக் கலங்கவிழ்த்
தல்லலுற் றழுங்கிய, செல்வனுற்ற செப்புவாம்.

(இ - ள்.) கடலிடத்தே கலங்கவிழ்த்து வருத்தமுற்றுக் கெட்ட ஸ்ரீதத்தன் பெற்ற இலாபம் இனிக் கூறுவாமென்க. (அ௦)

573. (க) பானிறப் பனிவரை, மேனிற மிகுத்தன
நீனிற நிழன்மணி, தானிரைத் தகமெலாம்.

இதுமுதல், "பீழை" (சீவக. 580) அளவும் ஒருதொடர்.

(க) வெள்ளிமலையில், 'நிறமிகுத்தன' என்றது, நீலமொழிந்த மணிகளை. நீலநிறத்தையுடைய ஒளிமணி.

574. (உ) வஞ்சமின் மனத்தினன், நெஞ்சகம் புகன்றுக
விஞ்சையம் பெருமகன், வஞ்சமென் றுணர்த்தினன்.

(உ) வஞ்சமில் மனத்தினன் - ஸ்ரீதத்தன். புகன்று உக - உவந்து உவகை யொழுக. பெருமகன் - தரன்.

575. (ஙு) நங்கைதன் னலத்தினன், மங்குல்வெள்ளி மால்வரை
எங்குமன்ன ரீண்டினர், சங்குவிம்மு தானையார்.

(ஙு) மங்குல் - மேகம். மால்வரையில் மன்னர் தானையாராய் எவ்விடத்தும் ஈண்டினர்.

576. (ச) ஈரலங்க லேந்துவேல், ஆரலங்கன் மார்பினன்
கார்கலந்த கைக்கணி, சீர்கலந்து செப்பினன்.

(ச) ஈரும் வேல். மார்பினன் - அரசன்.

---

[2] தகைவு - தடை.

572. மல்லல் - வளப்பம். கலம் - கப்பல். கலம் கவிழ்த்த அல்லல் : சீவக. 332, ந. அழுங்கிய - வருத்தமுற்றுக் கெட்ட. செல்வன் - சீதத்தன்.

573. நீனிற நிழன்மணி : "நீனிற நிருதர்" (கம்ப. வாலிவதை. 151). நிழல் - ஒளி.

574. வஞ்சமென்று - தன்னுடைய சூழ்ச்சியென்று.

575. நங்கை : காந்தருவதத்தை. தானையாராய் ஈண்டினர் என மாறுக.

576. அலங்கல் - மாலை. ஈரும் வேல், அலங்கல் ஏந்தியவேல் எனத் தனித்தனிக் கூட்டுக. மார்பினன் : கலுழவேகன். கணி - சோதிடன். மார்பினனுடைய கணி, செப்பினன்.

577. (௬) மாதர்வாழ்வு மண்ணதே, ஆதலா லலங்கலந்
தாதவிழ்ந்த மார்பநின், காதலன் கடலுளான்.

(௬) அவிழ்தற்குக் காரணமான மார்பு. 'அழைப்பி' என்பது சொல்லெச்சம்.

578. (௭) என்றுகூற வென்னையே, துன்றுகாதற் றோழனைச்
சென்றுநீ கொணர்கென, அன்றுவந்த வண்ணமே.

(௭) அழைப்பியென்றென முன்னேகூட்டுக.

579. (௭) துன்பமுற் றவர்க்கலால், இன்பமில்லை யாதலின்
அன்பமற்றி யானினைத், துன்பத்தாற் றொடக்கினேன்.

(௭) தொடக்கினேன் - பிணித்தேன்.

580. (௮) பீழைசெய்து பெற்றனன், வாழியென்று மாக்கடல்
ஆழ்வித்திட்ட வம்பியைத், தோழர்ச்சுட்டிக் காட்டினன்.

(௮) பீழை - துன்பம். ஸ்ரீதத்தனுக்கு ஆழ்வித்தானுகப்பண்ணின. சுட்டி - இது கலம், இவர் தோழரென்று சுட்டி.

(இ - ள்.) [1] விஞ்சையம்பெருமகன், நங்கைநலத்தாலே மன்னரீண்டினர்; அதுகண்டு [2] மார்பினனுடைய கணி, மாதர்வாழ்வு மண்ணிடத்ததே; ஆதலால், அவளைக்கொண்டுபோதற்கு மார்பனே, நின்றோழன் கடலிடத்தான்; அவனை அழைப்பியென்று சீர்கலந்து செப்பினன்; அதுகேட்டு மன்னன் நீ சென்று என்காதற்றோழனைக் கொணர்கவென என்னையே நோக்கிக் கூற, யான் அன்றுவந்த செய்தி ஒருவஞ்சனைகாணென்று கூறி, அவ்வஞ்சனையை, அன்பனே, துன்ப முற்றார்க்கல்லது இன்பமில்லையென்று உலகு கூறலின், யான் நின்னை யொழிந்தோர்க்கு இன்பஞ்செய்து நின்னையொருவனையும் துன்பத்தாற்

577. மாதர் வாழ்வு மண்ணது : சீவக. 563. மண்ணது - பூமியின் கண்ணுள்ளது. அலங்கல் - பூமாலை. காதலன் - தோழன்.

578. என்று கூற - என்று சோதிடன் சொல்ல. கொணர்கென - கொண்டுவருக வென்று கலுழவேகன் கூற.

579. துன்பமுற்றவர்க்கலால் இன்பமில்லை : "துன்புள தெனி னன்றோ சுகமுளது" (கம்ப. கங்கைப். 69)

(மேற்.) மு : நன். உரி. 11, மயிலை.

580. பெற்றனன் - உன் அன்பைப் பெற்றேன். அம்பி - கப்பல்; ஒருவகை ஓடமுமாம். அம்பியையும் தோழரையும்.

(மேற்.) அடி, 1 - 2 : கல். 'பாய்திரை' 63, மயில்.

(உரை) [1] விஞ்சையம் பெருமகன் - தரன். [2] மார்பினன் : கலுழ வேகன்.

பிணித்தேனென்று உணர்த்தினான்; உணர்த்தி யான் அங்ஙனம் பிழை செய்து நின்நட்பைப்பெற்றேன்; இனி நீ வாழ்வாயாகவென்று முகமன் கூறி, மறைத்த அம்பியின், அகமெல்லாம் நிறமிகுத்தனவற்றையும் மணிகளையும் நிறைத்து, வஞ்சமின் [3] மனத்தினான் அகம் புகன்றுருகும் படி, அவ்வம்பியையும் தோழரையுங்காட்டினானென்க.

எனவே இலாபமே கூறினான். காரியம் [4] கடைப்படுதலின், ஈண்டு உண்மை கூறினான். "வெற்றிவேல்" (சீவக. 565) முதல், இத்துணையும் குறளடி நான்காய்வந்த கொச்சகவொருபோகு; "[5] நெய்யோடு தீயொக்கச், செய்யானைச் சேர்வார்க்குப், பொய்யாத வுள்ளமே, மெய்யா தல் வேண்டுமே" என்றாற்போல யாப்பின் வேறுபட்டன. (அக - அ)

(வேறு)

581. தேன்றரு மாரி போன்று திவ்விய கிளவி தம்மால்
ஊன்றரு குருதி வேலா னுள்ளகங் குளிர்ந்து விஞ்சைக்
கோன்றரு துன்ப மற்றென் குலத்தொடு முடிக வென்றான்
கான்றுவில் வயிரம் வீசுங் கனமணிக் குழையி னானே.

தேனைச் சொரிவதொரு மாரி. ஊன்சொரிவதொரு குருதி.

(இ - ள்.) வயிரம் ஒளியைக் கான்று பரப்பும் குழையினானாகிய வேலான், தரனது இனிய மொழியாலே குளிர்ந்து கலுழவேகன் தந்த இத்தன்மையதான துன்பம் என்குலமுள்ள அளவும் நடப்பதாகவென்று உவந்து கூறினானென்க. (அகூ)

582. தோடலர் தெரிய லான்றன் றோழரைக் கண்டு காதல்
ஊடலர்ந் தெழுந்து பொங்க வுருவத்தார் குழையப் புல்லிப்
பாடிரும் பௌவ முந்நீர்ப் பட்டது பகர்த லோடும்
நாடக நாங்க ளுற்ற தென்றுகை யெறிந்து நக்கார்.

---

[3] மனத்தினான் - ஸ்ரீதத்தன். [4] கடைப்படுதல் - முற்றுப் பெறுதல். [5] தொல். செய். 149, பேர், ந. மேற்.

581. திவ்வியம் - இனிமை. கிளவிதம்மால் - தரனுடைய சொற்களால்; தம் : சாரியை. ஊன் - தசை. வேலான் : ஸ்ரீதத்தன். விஞ்சைக் கோன் - கலுழவேகன்; துன்பம் - இன்பத்தைக்கொடுக்கும் துன்பம். முடிக - நடப்பதாக. வயிரம் வில்கான்று வீசும் எனமாறி இயைக்க; வில் - ஒளி. கனமணிக்குழை - கனவிய மணியையுடைய குண்டலம்; "கனங்குழை" (குறள், 1081). குழையினானாகிய வேலான் எனமாறுக.

582. தெரியலான் : ஸ்ரீதத்தன். ஊடு - மனத்தினுள்ளே. உருவத் தார் - அழகிய மாலை. தார்குழையப் புல்லியது அன்பின் மிகுதியைக் குறித்தது. பாடு இரும்பௌவம் - ஒலித்தலையுடைய பெரிய கடல்; பாடு - ஒலித்தல்; சீவக. 2123, ந. பட்டது - தான் உற்றது. நாங்க ளுற்றது நாடகம் என மாறுக. கையெறிந்து நகுதல் : பெருங். 1. 46 : 314.

(இ - ள்.) ஸ்ரீதத்தன் தோழரைக்கண்டு காதல் நெஞ்சிலே விரிந் தெழுந்து மிகுதலாலே தார்குழையத் தழுவி முந்நீர்ப்பெளவத்திலே தான் உற்றதெல்லாங் கூறியவளவிலே, நாங்கள் கண்டது நாடகம்; இதுகண்டிலேமென்று கைதட்டிச் சிரித்தாரென்க.

இவர்க்கு இங்ஙனம் [1] நிருமித்தான். (௯௰)

583. கட்டழற் கதிய புண்ணிற் கருவரை யருவி யாரம்
பட்டது போன்று நாய்கன் பரிவுதீர்ந் தினியர் சூழ
மட்டவிழ் கோதை யோடு மண்கணை முழவ மூதூர்க்
கட்டவிழ் தாரி ளுன்றன் கடிமனை மகிழ்ந்து புக்கான்.

(இ - ள்.) முகையவிழ்ந்த தாரானாகிய நாய்கன், அழலாற் கதுவிய புண்ணிலே அருவியும் ஆரமும் பட்டதுபோன்று பரிவு தீர்ந்து, தனக் கினியவரெல்லாரும் தன்னைச்சூழ மகிழ்ந்து தத்தையோடே இராசமாபுரத் தில் தன் மனையிலே புக்கானென்க.

கதிய : [1] விகாரம். (௯௧)

584. பெருமனை குறுக லோடும் பிறையென விலங்கித் தோன்றும்
திருநுதன் மனைவி செம்பொற் கொடியென விறைஞ்சி நிற்ப
வருமுலை பொதிர்ப்ப வாங்கி வண்டின மிரியப் புல்லிக்
கதிர்நகை முறுவன் மாதர் கண்ணுறு கவலை தீர்த்தான்.

(இ - ள்.) தன்மனைவியிருக்கின்ற இடத்தைச் சேர்ந்தவளவிலே அவள் இறைஞ்சிநிற்ப, தன்மேல் வண்டினங்கெடும்படி அவளையணைத்து முலை புடைகொள்ளும்படி தழுவி, எயிற்றினையும் மகிழ்ச்சியையுமுடைய அம்மாதரிடத்து நின்ற வருத்தத்தைத் தீர்த்தானென்க. (௯௨)

---

(உரை) [1] நிருமித்தவன் தரன்.

583. கட்டழற்.........பட்டதுபோன்று : "செந்தீக் கதீஇய வெந் தழற் புண்ணினுட், சந்தனச் சாந்திட் டன்ன தண்மையொடு" (பெருங். 3. 7 : 108 - 9). ஆரம் - சந்தனச்சாந்து. கட்டவிழ்தாரினனாகிய நாய்கன்; நாய்கன் - ஸ்ரீதத்தன். பரிவு - துன்பம். மட்டு - தேன். கோதை - காந்தருவதத்தை. மண்கணை முழவம் : சீவக. 628, அடிக். கட்டு - அரும்பின் முறுக்கு.

(உரை) [1] கதுவிய என்பது கதிய என்றாயிற்று.

584. மனைவி - பதுமை என்பவள். இறைஞ்சி - வணங்கி. பொதிர்ப்ப - வீங்கும்படி. வாங்கி - தழுவி. புல்லி - அணைத்து. வண்டினம் இரிய வாங்கி, வருமுலை பொதிர்ப்பப் புல்லி எனமாறுக. மாதர் - பதுமை.

585. சந்திர காந்த மென்னுந் தண்மணி நிலத்தி னங்கண்
வெந்தெரி பசும்பொன் வெள்ளி பளிங்கொடு பவளம் பாய்த்திக்
கந்தெரி மணியிற் செய்த கன்னியா மாட மெய்திப்
பைந்தொடிப் பாவை யொன்றும் பரிவிலள் வைகி னாளே.

(இ - ள்.) பாவை, சந்திரகாந்தமென்னும் மணியாற் செய்த நிலத்திடத்தே ஓடவைத்து விளங்குகின்ற பொன்னாற் சுவரமைத்து மணியாற் கந்துநாட்டிப் [1] பளிக்குக் கையலகோடே பவளத்தைப் பூட்டாகப் பரப்பி அதிலே வெள்ளியாலே வேய்ந்துசெய்த கன்னியாமாடத்தைச் சேர்ந்து சிறிதும் வருத்தமின்றி வைகினாளென்க. (கூங)

586. பாசிழை பரவை யல்குற் பசுங்கதிர்க் கலாபம் வீங்கக்
காசுகண் பரிய வைகிக் கடன்றலைக் கழிந்த பின்னாத்
தூசணி பரவை யல்குற் றுளங்குநுண் ணுசுப்பிற் பாவை
ஆசறு வரவுந் தந்தை வலித்தது மறியச் சொன்னான்.

(இ - ள்.) பதுமையது அல்குற்கலாபம் விம்முதலால் அதில் மணிகளற்று விழும்படி புணர்ந்து அவளிடத்து நிகழ்த்து முறைமையெல்லாம் அவ்விடத்தே கழிந்த பின்பு, தத்தையது குற்றமற்ற வரவையும் அவள் தந்தை யாழ் வென்றானுக்குக் கொடுக்கவென்று துணிந்ததனையும் அவளறியக் கூறினானென்க. (கூச)

587. வண்டுண மலர்ந்த கோதை வாயொருப் பட்டு நேரத்
தெண்கட லமிர்தம் பெய்த செப்பெனச் செறிந்து வீங்கிப்
பெண்டிரு மாண்மை வெஃகிப் பேதுறு முலையி னாளைக்
கண்டவர் மருள நாளைக் கடிவினை முடித்து மென்றான்.

585. பாய்த்தி - பரப்பி. கந்து - தூண். எரிமணியிற் கந்து என மாறுக. வெந்தெரிபசும்பொன்......கன்னியாமாடம் : சீவக. 593. பாவை : காந்தருவதத்தை. ஒன்றும் - சிறிதும். பாவை எய்தி வைகினாள் என இயைக்க.

(உரை) [1] பளிக்குக் கையலகு ; சீவக. 593.

586. வீங்க - இறுகுதலால். காசு - மணி. பரிய - அற்றுவிழ. கடன் - நிகழ்த்தும் முறைமை. பின்னா - பின்னாக. துளங்கு - அசைகின்ற. பாவை : காந்தருவதத்தை. தந்தை - தத்தையின் தந்தையாகிய கலுழவேகன். வலித்தது - துணிந்தது ; சீவக. 266. அறிய - பதுமை அறியும்படி.

(மேற்.) அடி, 1 : நன். பத. 9, மயிலை ; நேமி. எழுத். 19.

587. கோதை - பதுமை. ஒருப்பட்டு - துணிந்து ; பெருங். 3. 22 : 37. நேர - உடன்படுதலால். பெண்டிரும் ஆண்மை வெஃகல் : சீவக.

(இ - ள்.) அது கேட்ட பதுமை நெஞ்சாலே துணிந்து உடன்படு தலாலே ஸ்ரீதத்தனும் நாளை முலையினுளைக் கடிவினை முடிப்பேமென்று னென்க.

செறிந்து - நெருங்கி. மகளிருமுட்பட நுகர்தற்கு ஆண்மையை விரும்பி மயங்குதற்குக் காரணமான முலை. கட்டியங்காரன் உடன் படவே கடிவினை முடிதலின், அவனை நாளை உடன்படுவிப்பேனெனத் துணிந்து கூறினான். (௬௫)

588. மால்வரை வயிறு போழ்ந்து வல்லவர் மதியிற் றந்த
பால்வரை மணியும் பொன்னும் பற்பல கொண்டு புக்குக்
கால்பொரு கழலி னானுங் காவலற் கண்டு சொன்னான்
வேல்பொரு தானை யானும் வேண்டுவ விதியி னேர்ந்தான்.

(இ - ள்.) ஸ்ரீதத்தனும், நூல்வல்லவர் தமதறிவாலே வரையின் வயிற்றைப் பிளந்து தந்த, பாலாலே நன்மையாராய்ந்து கொண்ட மணி யும் பொன்னும் பலபல கொண்டுபுக்கு அரசனைக்கண்டு தன்குறையைக் கூறினான்; அரசனும் அவன் விரும்பினவற்றை விதியாலே உடன்பட்டா னென்க.

குறை - மண்டபஞ் சமைத்தலும் மூன்றுவருணத்தாரும் வரச் சாற்று தலு முதலியன. சுயம்வரத்திற்கு அரசர் உடன்படவேவேண்டுதலின், 'விதியின்' என்றார். (௬௬)

(வேறு)

589. மையன்மத யானைநிரை மன்னன்மகிழ்ந் தானாப்
பொய்யில்புகழ் நாய்கன்மத வொளியினொடு போகி
நொய்தின்மனை யெய்தியிது செய்கென நொடித்தான்
மொய்கொண்முலை பாயமுகை விண்டலர்ந்த தாரான்.

மையல் - [1] செல்வச்செருக்கு.

---

165, அடிக்.; மதுரைக். 555, ந.; கம்ப. சூர்ப்பனகைப். 60; 'இவளழகு எமக்குங்கூட வியப்பாயிற்று; இனி இவருக்குச் 'சொல்லவேண்டுமோ' (பரி. 20 : 22, பரிமேல்.). முடித்தும் - முடிப்போம்.

588. வல்லவர் மதியின் போழ்ந்து தந்த மணி, பால் வரை மணி என்க. மதியின் - அறிவால். பால்வரை மணி - பாலால் நன்மையை ஆராய்ந்து கொள்ளப்பட்ட நீலமணி; நீலமணியின் தன்மையைப் பாலால் ஆராய்ந்து கொள்ளுதல்; சீவக. 1325. கழலினான் : ஸ்ரீதத்தன். காவலன் - கட்டியங்காரன். கழலினான் புக்குக் காவலற்கண்டு சொன்னான் எனமாறுக.

589. மையல் மதயானை : சீவக. 37; மன்னன் மகிழ்ந்து - கட்டியங் காரன் மகிழ்ந்ததனால். தாரானாகிய நாய்கன் என மாறுக. மத ஒளி - மிக்க ஒளி; மத : மிகுதிப் பொருள்தரும் உரிச்சொல் (தொல். உரி. 80). நொய்தின் - விரைவாக. நொடித்தான் - சொன்னான். பாய - பாய்தலால். முலைபாய அலர்ந்ததார் : சீவக. 612.

(உரை) [1] மணி. 23 : 103.

(இ - ள்.) பாய்கையினால் அலர்ந்த தாராஞகிய நாய்கன் மன்னன் மகிழ்ந்தவளவிலே மிக்க ஒளியோடே போய் மனையைச் சேர்ந்து இத் தொழிலைக் கடிதாகச் செய்கவென்று கூறினானென்க.

அது மேற்கூறுகின்றார். (கூஎ)

590. நானக்கிடங் காடை நகர் நாகத்திடை நன்பொன்
வானக்கிடு மாட்சியதொர் மண்டபஞ்செய் கென்ன
மீனத்திடை நாள்கிழமை வெள்ளிசயை பக்கம்
கானத்திடை வேங்கையெழக் கண்ணினர்க ளன்றே.

(இ - ள்.) நானக்கிடங்கை ஆடையாகவுடைய நகராகிய சுவர்க்கத் தினடுவே பொன்னையுடைய வானைச் சிரித்திடும் அழகினையுடையதொரு மண்டபத்தைச் செய்கவென்று கூறினாஞக ; கணிகள், வெள்ளிக்கிழமை யும் திருதியையும் பெற்ற உத்தரட்டாதிநாள் சிங்கம் உதயமாக முகூர்த்தங் குறித்தாரென்க.

நானம் - புழுகு ; குளித்தலிற் புழுகுடைத்தாயிற்று. வானைத்தீண்டு மென்றுமாம். பூரட்டாதியின் நாலாங்காலும் உத்தரட்டாதியும் இரேவதி யும் மீனராசியாதலால், உத்தரட்டாதி நடுநாளாதலின், 'மீனத்திடை நாள்' என்றார். திருதியை, அட்டமி, திரயோதசியென்பவற்றில் திருதியை சிறத்தலின் 'சயைபக்கம்' என்றார். மேடத்தின் முற்கூறு மேடராசியின் கூறு ; இரண்டாங்கூறு சிங்கராசியின்கூறு ; மூன்றாங்கூறு தனுராசியின்கூறு ; ஆதலால், மேடத்தின் நடுக்கூற்றைச் சிங்கத்தின் உதயமாக விதித்தார். இது கூறிற்று, சிங்கத்தே பிருகஸ்பதியாதலின். வெள்ளிமுதல் வியாழமீருகக் கிழமை ஏழாயவாறும், உத்தரட்டாதிமுதல் உரோகிணியீருக நாள் ஆருயவாறும் கூடுமாறென்னையெனின், இத்திங் களிற் சதயமுதல் ஆயிலியத்தளவும் சந்திரன் வர்த்தித்து வருதலின், வியாழக்கிழமைக்கு உரோகிணி கூடிற்று. இதனுனே மேல், "ஒண்ணிற வுரோணி யூர்ந்த வொளிமதி யொண்பொ னுட்சி" (சீவக. 620) என்று வியாழக்கிழமையிலும் சிறிதுநாழிகை உரோகிணியாகக் கூறினர். (கூஅ)

591. நட்புப்பகை யுட்கினொடு நன்பொன்விளை கழனி
பட்டினொடு பஞ்சுதுகில் பைம்பொனொடு காணம்
அட்டசுவை வல்சியினொ டியாதுமொழி யாமல்
ஒட்டிப்பதி னுயிரவ ருற்றுமுயல் கின்றார்.

---

590. நாகம்-சுவர்க்கலோகம். வான் நக்கிடும் எனப்பிரிக்க. நகுதல்-சிரித்தல். சயை - திருதியை, அஷ்டமி, திரயோதசியென்னும் திதிகள். கண்ணினர் - கணித்தார்கள்.

591. உட்கினொடும் - அச்சத்தோடும் ; சீவக. 403. நட்புடனும் பகையுடனும் உட்கினொடும் பதினுயிரவர் உற்று முயல்கின்றார் என்க. அட்ட - சமைத்த. யாதும் - எதுவும். ஒட்டி - முடிவுசெய்து.

பொன் இட்டால் விளையுமென்று அக்கழனியின் சிறப்புக் கூறிற்று; பொன் உண்டாதற்குக்காரணமான கழனியுமாம். பஞ்சு - படாம். ஒடு: எண்ணொடு. காணம் - பழங்காசு. வல்சி - [1] பகற்சோறு. [2] உருபுவிரிக்க.

(இ - ள்.) பதினாயிரம்பெயர், கழனிமுதலியவற்றையும் ஏனையவற்றையும் ஒழியாமல் அறுதியிட்டுத் தம்மிற் கூடியும் மாறுபட்டும் [3] இவனுக்கு அஞ்சுதலுடனே கடிதின் முடிக்குங் கருத்தினராய் முயலாநின்றாரென்க. (௯௯)

592. வண்டுபடு தேறனற வாய்விடொடு பருகிக்
கண்டதொழிற் கணிச்சிகளிற் கயம்படநன் கிடித்தாங்
கெண்டிசையு மேற்பப்படுத் தேற்றியதன் மேலாற்
கண்டுருகு பொன்னினிலங் காமுறுவ புனைந்தார்.

(இ - ள்.) அவர்கள், தேறலையும் நறவையும் வாய்விடுதலோடே பருகித் தொழில்செய்தற்கென்று கண்ட [1] குந்தாலிகளாலே ஆழம்பட வெட்டிப் பின்பு அவ்விடத்தே எண்டிசையும் பொருந்தும்படி தலமிசைத்து உயர்த்தி அதன் மேலே இஃது உயரத்திற்களவென்றறிந்து காமுறுவனவாகிய பொன்னாலே நிலத்தைப் புனைந்தாரென்க.

வாய்விடுதல் [2] வஞ்சினம்; ஆரவாரமுமாம். [3] ஒடு: உடனிகழ்ச்சி. (௧௦௦)

593. பொன்செய்குடங் கோத்தனைய வெருத்திற்பொலி பொற்றூண்
மின்செய்பசும் பொன்னிலத்து வீறுபெற நாட்டி
மன்பவள மேனவின்று பளிக்கலகு பரப்பி
நன்செய்வெளி வேய்ந்துசுவர் தமனியத்தி னமைத்தார்.

---

(உரை) [1] சைனர் இரவில் உண்ணாராதலின், 'வல்சி' என்பதற்குப் பகற்சோறென்று பொருள் கூறினர்; சீவக. 1939. [2] கழனி, பஞ்சு, துகில், காணம், யாதும் என்பவற்றின் பின் இரண்டன் உருபு விரிக்க. [3] இவன் - ஸ்ரீதத்தன்.

592. வண்டுபடுதேறல் - வண்டுகளால் ஓரிடத்துச் சேமித்து வைக்கப்பட்ட தேன்; வைத்த தேன் என்பர்; சீவக. 64, ந.; நறவு - பூவாலாக்கினதேன்; சீவக. 64, ந.; "பூநறவு" (சீவக. 939). வாய்விடொடு - வாய்விடுதலோடு. தொழிற் கண்ட எனமாறுக. கயம்பட - ஆழமுண்டாக; கயம் - ஆழம்; "கயம்பல கெழீஇ யியங்குதுறை" (பெருங். 1. 51 : 77). இடித்து - வெட்டி. ஏற்றி - உயர்த்தி. கண்டு - அறிந்து. பொன்னின் - பொன்னால். காமுறுவ - விரும்பத்தக்கன. காமுறுவ பொன்னால் புனைந்தார் எனமாறுக.

(உரை) [1] குந்தாலி: கூந்தாலி எனவும் வழங்கும். [2] வஞ்சினம் - சபதம். [3] வாய்விடொடு என்பதிலுள்ளது.

593. எருத்து - கழுத்து. 'பொன்னிலத்து எருத்திற் பொன் செய் குடம் கோத்தனைய பொற்றூண் வீறுபெறநாட்டி' எனமாறி யியைக்க. வீறு - பெருமை. வெளி - வெள்ளியால். தமனியம் - பொன். மு. சீவக. 585.

மன் - பெருமை. நவின்று - [1] நவில. வெள்ளி : [2] விகாரம்.

(இ - ள்.) அப்பொன்னிடத்தே தங்கமுழத்திற் குடதாடியாலே பொற் குடத்தைக் கோத்தாலொத்த தூணைப் பெருமைபெற நாட்டி மேலே பவளமாகிய உத்தரமுதலியன [3] பயில அவற்றின்மேலே பளிக்குக் கையலகாலே கைபரப்பி, வெள்ளியாலே வேய்ந்து சுவரைப் பொன்னான் அமைத்தாரென்க.

குடதாடி - தூணுக்கும் உத்தரத்துக்கும் நடுவே வைக்கப்பட்டது. (கoக)

594. பாவையவ ளிருக்குமிடம் பளிக்குச்சுவ ரியற்றிக்
கோவைகுளிர் முத்தினியல் கோதையொடு கொழும்பொன்
மாலையொடு மாலைதலை மணந்துவர நாற்றி
ஆலையமி தோவியர்கட் கென்னவணி யமைத்தார்.

(இ - ள்.) பாவையாகிய அவளிருக்குமிடத்தைப் பளிங்காலே சுவர் செய்து முத்தினியல் கோவையோடே பூமாலையும் பொன்மாலையுடனே மாணிக்கமாலை முதலியனவும் தம்மில் தலையொத்துவர நாலப்பண்ணி, இவ்விடம் சித்திரகாரர்கட்கு இருப்பிடமென்னும்படி சித்திரத்தை யெழுதி னாரென்க.

[1] இவை சித்திரத்தின் மாலை. ஓவியங்கட்கும் பாடம். (கoஉ)

595. ஆயிதழ பொன்னலங்கல் காலசைப்ப வொல்கி
வாயருகு வந்தொசிந்து மறியமழை மின்போற்
சேயவர்க்குந் தோன்றியதொர் திலகமெனுந் தகைத்தாய்ப்
பாயதிரை முத்தமணல் பரந்துபயின் றுளதே.

(உரை) [1] எச்சத்திரிபு. [2] வெள்ளியென்பது வெளியென்றுயிற்று. [3] பயில - பொருந்த.

594. பாவையவள் : காந்தருவதத்தை. பாவை......பளிக்குச்சுவ ரியற்றி : சீவக. 549, 585. கோவை - பூமாலை. முத்தினியல் கோவை யொடு கோதை என மாறுக. மாலை - மாணிக்கமாலை. தலைமணந்து - கலந்து. நாற்றி - தொங்கவிட்டு. ஆலையம் - இருப்பிடம். ஓவியர் - சித்திரகாரர். அணி - சித்திரம். இஃது ஓவியர்கட்கு ஆலயமென்ன அணி அமைத்தார் என மாறியியைக்க.

(உரை) [1] இவை : இப்பாடலிற் கூறிய முத்துமாலை முதலிய மாலைகள்.

595. ஆய் - அழகு ; சீவக. 48, 2395, ந.; கலித். 46 : 4, ந. கால் - காற்று. அசைப்ப - அசைத்தலால். ஒல்கி - ஒதுங்கி. வாய் - விளிம்பு. ஒசிந்து - சாய்ந்து. மறிய - மீளுதலால். சேயவர்க்கும் - சேய்மைக்கண் உள்ளவர்களுக்கும். சேயவர்க்கு மின்போல் தோன்றியது என மாறி யியைக்க. தோன்றியது - தோன்றப்பட்டதாகிய மண்டபம். பாய - பரவிய. முத்தமணல் : பெரும்பாண். 335.

(இ - ள்.) அழகிய இதழையுடைய பொன்னாற்செய்த [1] தூக்கு மாலைகள் காற்று அசைத்தலாலே ஒதுங்கி விளிம்பருகே வந்து சாய்ந்து மீளுதலாலே மின்போற்றோன்றப்பட்ட மண்டபந்தான் மண்டபங் களுக்குத் திலகமென்னும் தகைமைத்தாய் முத்தமாகிய மணல் எங்கும் நெருங்கிப் பரந்துளதென்க.

இத்துறைப் பிறவும் கூறினார். (கO௩)

596. காமர்களி றும்பிடியுங் கன்றுங்கலை மானும்
தாமரைய வாவிகளும் புள்ளுந்தகை நலத்தின்
ஏமுறுவ பாவையினொ டியக்கிநிலை யெழுதி
ஆமொரையங் காண்பவர்க்கி தகம்புறமி தெனவே.

கலையும் மானும். இயக்கிநிலையெழுதி - அதிதெய்வமாக இயக்கியது நிலையையும் எழுதி. இயக்கநிலை பாடமாயின், இவை இயக்சுமும் நிலையு மாக எழுதியென்க. எழுதி - எழுத.

(இ - ள்.) பாவையோடே களிறு முதலியவற்றைப் பளிக்குச்சுவரிலே யெழுத, அச்சுவரின் [1] பாடத்தால் வந்து காண்பார்க்கு அகமிது புறமிது வெனத் தெரியாததோர் ஐயம் நிகழாநின்றதென்க. (கO௪)

597. உழந்தவரு நோக்கிமகிழ் தூங்கவொளி வாய்ந்து
விழுங்குமெனப் பறவைகளும் பிறவிலங்கு மடையா
முழங்குதிரை வேலியினி னில்லையென மொய்கொண்
டெழுந்துகொடி யாடுமிதவ் வெழினகரி னியல்பே.

(இ - ள்.) பலநாள் இதிலே பழகின சித்திரகாரரும் பார்த்து வியந்து மகிழ்ச்சி செறியும்படி ஒரு விளக்கம் வாய்ந்து, இதில் எழுதின பறவைக்கும் விலங்குக்கும் பகையாகிய பறவைகளும் விலங்குகளும் இவை நம்மை விழுங்குமென்றஞ்சி அடையாவாக, உலகினில் தனக்கு நிகரில்லையென்னும்படி கொடி ஆடாநிற்கும்; அம்மண்டபத்தினியல்பு இத்தன்மைத்தென்க. (கO௫)

(உரை) [1] மதுரைக். 713, ந.

596. காமர்களிறு - விருப்பம் மருவின ஆண் யானை. பிடி - பெண் யானை. கலையும் மானும் என உம்மை விரிக்க. ஏமுறுவ - மயக்க முண்டாவன; ஏமுறல் - மயக்கமுறுதல்; சீவக. 754, 2001, 2459. இயக்கி - யக்ஷி. எழுதி - எழுத. களிறு முதலியவற்றைச் சித்திரத்தில் எழுதுதல் : சீவக. 148; ந. காண்பவர்க்கு இஃது அகம் இது புறம் எனவே ஐயம் ஆம் என மாறி யியைக்க.

(உரை) [1] பாடம் - ஒளிவிடுதல்.

597. உழந்தவர் - பழகியவர்; இங்கே சித்திரகாரர். இல்லை - தனக்கு ஒப்பு இல்லை. மொய் - வலி. இல்லையெனக் கொடியாடும் என இயைக்க. நகரின் இயல்பு இது. இது - இத்தன்மைத்து.

598. ஓடுமுகில் கீறியொளிர் திங்கள்சிகை வைத்தே
மாடமது வார்சடைய வள்ளலையு மொக்கும்
நாடிமுக நான்கதனி னன்முகனை யொக்கும்
நேடிநிமிர் தன்மையினி னேமியையு மொக்கும்.

**(இ - ள்.) அந்த மாடமாகிய அது முகிலைக் கிழித்துப் பிறையைத் தலையிலே வைத்தலாலே அரனையொக்கும்; முகநான்காகிய அதனானே எங்கும் நாடுதலாலே அயனையொக்கும்; மேலெல்லையைத் தேடி நிமிர்ந்த தன்மையாலே அரியையுமொக்குமென்க.**

**நாடி - [1] நாசியென்பாருமுளர். [2] இன் : அசை.** (கoசு)

599. கண்டவர்கள் காமுறலிற் காமனையு மொக்கும்
கொண்டுலக மேத்தலினக் கொற்றவனை யொக்கும்
வண்டெரிய லாரமுலை மாதர்மகி ழமுதம்
உண்டவர்க ளெவ்வகைய ரவ்வகைய தொன்றே.

**(இ - ள்.) அது, காமுறலிற் காமனையொக்கும்; உலகங் கொண்டேத்தலிற் சச்சந்தனையுமொக்கும்; அதுவன்றி, மாதராகிய அமுதத்தையுண்டவர்கள் எத்தன்மையர் அத்தன்மையதொன்றென்க.**

**[1] நீங்கலாகாமை கூறினர்.** (கoஎ)

(வேறு)

600. முகிற்றலை மதிய மன்ன முழுமணி மாடத் திட்ட
அகிற்புகை தவழ்ந்து வானத் தருவிசும் பறுத்து நீண்டு
பகற்கதிர்ப் பரப்பிற் றாகிப் பஞ்சவர் விமான முட்டிப்
புகற்கரு மமரர் கற்பம் புக்கயா வுயிர்த்த தன்றே.

598. சிகை - தலை. மாடமது திங்கள் சிகைவைத்து எனமாறுக; அது : பகுதிப்பொருள் விகுதியெனலுமாம். வைத்து - வைத்தலால். வள்ளல் : சிவபெருமான். திங்களைச் சிகையில் வைத்தலால் மாடத்திற்குச் சிவபெருமான் உவமை; திருச்சிற். 222. முகநான்கதனின் நாடி என மாறுக. நாடி - நாடுதலால். நேடி - தேடி. நேமி - திருமால்; கம்ப. பிணிவீட்டு. 70 நேடி நிமிர்தன்மையால் நேமி என்று உவமை கூறியது திருமால் கொண்ட விசுவரூபத்தால்.

(மேற்.) அடி, 2 : தொல். சூ. வி. எழுத். 1, சிவஞா.

(உரை) [1] நாசி : வீட்டின் ஓருறுப்பு; பெருங். 1. 40 : 14, 42 : 37; 2. 6 : 57; பெரிய. திருஞான. 12; கலிங்கத். 102. [2] தன்மையினின் என்பதிலுள்ளது.

599. காமுறலின் - விரும்புதலால். உலகம் கொண்டு ஏத்தலின் எனமாறுக. கொற்றவன் - இங்கே சச்சந்தன். தெரியல் - பூமாலை. மாதர் மகிழ் அமுதம் : சீவக. 26. அவ்வகையது - அத்தன்மையது.

(உரை) [1] சீவக. 505.

600. முகிற்றலைமாடம், மதியமன்ன முழுமணி மாடம் என்க. வானம் - ஆகாயம். விசும்பு - மேகம். அறுத்து - ஊடுருவிச்சென்று.

(இ - ள்.) மதிபோன்ற நிறைமணிகளையுடைய முகிற்றலைமாடத் திட்ட புகை தவழ்ந்துசென்று வானத்து மேகத்தை ஊடுருவி நீண்டு பகலைச்செய்கின்ற கதிரிடத்தே பரத்தலையுடைத்தாய்ச் சோதிட்கரது விமானத்தை முட்டி அமரர் கற்பத்திலும் புக்கு அயாவுயிர்த்ததென்க.

கற்பம் - இருத்தற்குக் கற்பித்த இடம். (கoஅ)

(வேறு)

601\. (க) அரைசன தருளினெ டகன்மனை யவனெய்தி
உரைசெலல் வகையினெ டுலகமு மறிவுற
முரைசதி ரிமிழிசை முதுநக ரறைகென
விரைசெல லிளையரை வியவரின் விடவே.

602\. (உ) விடுகணை விசையொடு வெருவரு தகையவர்
படுபணை யவருறை பதியது குறுகி
நெடுமதி யகடுற நிழறவழ் கொடியுயர்
கடிநக ரிடிமுர சறைமின மெனவே.

603\. (௩) மங்கல வணியினர் மலர்கதிர் மதியன
புங்கவ னறநெறி பொலிவொடு மலிகென
அங்கதிர் மணிநகை யலமரு முலைவளர்
கொங்கணி குழலவள் கோடணை யறைவாம்.

---

கதிர் - சூரியன். பரப்பிற்றாகி - பரவுதலையுடையதாய். பஞ்சவர் : சந்திரன், சூரியன், மற்றைக்கோள்கள், 27-நட்சத்திரங்கள், தாரகைகள் என ஐந்துவகையினர் ; சூளா. துறவு. 206 ; நீல. தருமவுரை. 80 ; இவர்கள் சோதிடர் என்றும் சோதிட்கர் என்றும் கூறப்படுவர் ; அகிற்புகை...............விமானமுட்டி ; பெருங். 2. 18 : 49-51. புகற்கரும் - புகுதற்கரிய. அயாவுயிர்த்தது - இளைப்பாறியது ; சீவக. 2108.

601\. அரைசன் - அரசன். அவன் - சீதத்தன். உலகமும் அறிவுற உரை செலல் வகையின் எனமாறுக. முரைசு - முரசு. அதிர் - அதிர்தலால். இமிழிசை முரசு எனமாறுக. வியவர் - ஏவல் செய்வார் ; வியம் - ஏவல் ; “ வினைகடைக் கூட்ட வியங்கொண்டான் ”, “ வியம்படு தானை ” (சிலப். 9 : 78 ; 26 : 7)

602\. வெருவரு - அஞ்சத்தக்க. தகையவர் - ஏவலாளர். படுபணையவர் - ஒலித்தலையுடைய முரசறைபவர். பதியது - பதியை ; அது : பகுதிப்பொருள் விகுதி. அகடு உற - நடு இடத்தைப் பொருந்த. நிழல் - ஒளி. உயர்கொடியையுடைய கடிநகர் என்க. நகர் - நகரிடத்தே. அறைமினம் - அறையுங்கள் ; அம் : அசைநிலை.

603\. மங்கல அணியினர் - வெள்ளணி யணிந்தவர் ; சீவக. 614, உரை ; மங்கல அணியினராய் முரசறைதல் ; சீவக. 2388. கதிர் மதி

(வேறு)

604. (ச) வான்றரு வளத்த தாகி வையகம் பிணியிற் றீர்க, தேன்றரு கிளவி யாருங் கற்பினிற் றிரித லின்றி, ஊன்றுக வூழி தோறு முலகினுண் மாந்த ரெல்லாம், ஈன்றவர் வயத்த ராகி யில்லறம் புணர்க நாளும்.

605. (ரு) தவம்புரிந் தடக்கி நோற்குந் தத்துவர்த் தலைப்பட் டோம்பிப், பவம்பரி கெமக்கு மென்று பணிந்தவருவப்ப வீமின், அவம்புரிந் துடம்பு நீங்கா தருந்தவ முயன்மின் யாரும், சிவம் புரி நெறியைச் சேரச் செப்புமிப் பொருளுங் கேண்மின்.

606. (சா) அம்மல ரணிச்சத் தம்போ தல்லியோ டணியி ுனைந்து, விம்முறு நுசுப்பு நைய வீற்றிருந் தணங்கு சேர்ந்த, வெம்முலைப் பரவை யல்குன் மிடைமணிக் கலாபம் வேய்த்தோட், செம்மலர்த் திருவின் சாயற் றேமொழி தத்தை யென்பாள்.

அன - சூரியனையும் சந்திரனையும் ஒத்த. புங்கவன் - அருகதேவன். பொலிவு - வளர்ச்சி. மலிக - மிகுக. என - என்று கூறி. மணி நகை - மணிமாலையும் முத்து மாலையும்; நகை - முத்தமாலை; சீவக. 132, ந. அலமருதல் - சுழலுதல்; அசைதலுமாம். குழலவள்: காந்தருவதத்தை. கோடணை - முழக்கம்; சீவக. 3013, 3065. அறைவாம் என அறநெறி மலிக என்று மாறி, தீர்க என்பது முதலாக மேற்பாடல்களில் வரும் வியங்கோட்களோடு இயைத்துக் கொள்க.

604. வான் தருவளம் - மழை தருகின்ற வளப்பம். தேன் தருகிளவி - தேனைப்போன்ற இனிய சொல். திரிதலின்றி - மாறுபடாமல். ஊன்றுக - நிலைபெறுக. ஊழிதோறும் என்பதை, வையகம், கிளவி யார், மாந்தர் என்பவைகளுக்கு முன் கூட்டுக. வயத்தராகி - அடங்கின வர்களாகி. நாளும் இல்லறம் புணர்க என்று மாறுக.

605. அடக்கி - ஐம்புலன்களையும் அடக்கி. தத்துவர் - உண்மை யறிவுடையவர். தலைப்பட்டு - எதிர்ப்பட்டு; சீவக. 1592. பவம் - பிறவி. பரிக - கெடுக. அவர் - தத்துவர். அவம் - வீணான தொழில். உடம்பு அவம் புரிந்து நீங்காது சிவம் புரி நெறியைச் சேர அருந்தவம் முயன்மின் என மாறியியைக்க. சிவம் - நன்மை; மங்களம். நெறி - வீடுபேறு. பொருள் - காரியம்.

606. அம்மலர் அல்லி என இயைக்க; அம் - அழகிய. அணி - மற்றைய ஆபரணங்கள். நைய - வருந்தும்படி. அணங்கு - வீற்றுத் தெய்வம். நகிலில் அணங்கு உறைதல்; சீவக. 171, அடிக். செம்மலர்த் திருவின் - செந்தாமரையில் உறையும் இலக்குமியினது. மொழி - மொழியினை உடையவள்.

607. (ஏ) மற்றவ டந்தை நாய்கன் வண்கைச்சீ தத்த னென்பான், கொற்றவன் குலத்தின் வந்தான் கூறிய பொருளி தாகும், முற்றவ முடைய ளாகி மூரிநூற் கலைக ளெல்லாம், கற்றவள் கணங்கொ ணல்யா ழனங்கனைக் கனிக்கு நீராள்.

608. (அ) தீந்தொடை மகர வீணைத் தெள்விளி யெடுப்பித் தேற்றிப், பூந்தொடி யரிவை தன்னிற் புலமிகுத் துடைய நம்பிக், கீந்திடு மிறைவ ராதி மூவகைக் குலத்து ளார்க்கும், வேந்தடு குருதி வேற்கண் விளங்கிழை தாதை யென்றான்.

609. (கூ) மண்ணக மடந்தை யாக மார்புற முயங்கி நின்ற, அண்ணலை யாதி யாக வருங்கடி நகரை வாழ்த்தி, விண்ணக முழக்கி னேய்ப்ப வீதிதொ றெருக்கி யெங்கும், கண்ணெனிர் கடிப்பி னோச்சிக் கடிமுர சறைந்த காலை.

இவை ஒன்பதும் ஒரு தொடர்.

(க) உரை செலல் வகை - முற்கூறிச் சாற்றும் முறைமை; புகழுமாம். கண் நடுங்குதலால் இமிழ்கின்ற ஓசையையுடைய முரசு. வியவர் - ஏவல் செய்வார்; 'வியங்கோள்' போல. என்றது முரசறைவிப்பாரை.

(உ) தகையவர் - அவ் வியவர். பதியாகிய அதனை. [1] அம் : அசை.

(௩) மங்கலவணி - வெள்ளணி. எவ்வுயிர்க்கும் தண்ணளி செய்தலின், மதி உவமை. நகை - முத்து. மணியும் நகையும். முலை வளர்கின்ற தத்தை.

(ச) கற்பினின்; இன் : அசை.

607. அவள் : காந்தருவதத்தை. தந்தையாகிய சீதத்தனென்பான் கொற்றவன் குலத்தில் வந்தான் என இயைக்க. கொற்றவன் - கலுழவேகன். கூறிய - சீதத்தன் சொல்லிய. நூற்கலைகள் - இசைநூலிற் கூறப்பட்ட கலைகள். கலைகளெல்லாம் கற்றவள் : சீவக. 657. கணம் - இசைத்தொகுதி. யாழ் - வீணையால். கனிக்கும் - உருக்கும்; சீவக. 657. அனங்கன் இசையறிவிற் சிறந்தவன் : சீவக. 729, 2037.

608. தொடை - நரம்பு. தீந்தொடையாழ் : பெருங். 1. 52 : 85. தேற்றி - எல்லார்க்கும் தெளிவித்து. அரிவைதன்னின் - காந்தருவதத்தையைக் காட்டிலும். புலம் - அறிவு. நம்பிக்கு - சிறந்த ஒருவனுக்கு. ஈந்திடும் : முற்று. இறைவர் - அரசர். தாதை - கலுழவேகன். தாதை, மூவகைக்குலத்துளார்க்கும் எடுப்பி, மிகுத்துத் தேற்றி உடைய நம்பிக்கு ஈந்திடும் என்றான் என்க.

609. அண்ணல் - கட்டியங்காரன். விண்ணக முழக்கு - மேகத்தின் முழக்கம். எருக்கி - தாக்கி. கடிப்பு - குறுந்தடி.

(உரை) [1] அறைமினம் என்பதில் உள்ளது.

(ரு)[1] தவத்திலே மிக்கு ஐம்புலனும் அடக்கி நோற்கும் தத்துவ வுணர்விஞேரை எதிர்ப்பட்டு எமக்கும் பிறப்பறுகவென்று வணங்கி ஓம்பி அவர் உவப்பனவற்றை ஈமின். யாவரும் உடம்பு அவமே புரிந்து நீங்காமல் அவ்வுடம்பால் நன்மை புரிந்த வீட்டைச் சேரும்படி அருந் தவத்தை முயன்மின்.

(சு) அனிச்சப்போதை அழகியமலர்களின் அல்லியோடே அணியின் நொந்து வருந்தும் நுசுப்பு நோம்படி வீற்றிருந்து வீற்றுத்தெய்வஞ் சேர்ந்த முலை முதலியவற்றையுடைய தேமொழி பெயர் தத்தை.

(எ) [2]மற்று: விணைமாற்று. கலுழவேகன் குலத்தோடே [3]போந் தான். இசைநூலிற் கூறிய கலைகள். யாழாலே காமனையும் உருக்கு நீராள்.

(அ) தொடை - நரம்பு. பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங் கோட்டியாழென்னும் [4]நான்கினும் பத்தொன்பது நரம்பு கட்டின மகர யாழ் இவள் வாசிக்கின்றதென்பது தோன்ற, 'மகரவீணை' என்ருர்; [5]"ஒன்று மிருபது மொன்பதும் பத்துடனே, நின்ற பதினுன்கும் பின் னேழுங்-குன்ருத, நால்வகை யாழிற்கு நன்னரம்பு சொன்முறையே, மேல் வகைய நூலோர் விதி." முறையே உக - கக - கச - எ என்க. விளி - ஓசை. எடுப்பி - எழுப்பி. அரசர் அந்தணர் வணிகரென்னும் மூவகைக் குலத்துளாரிலுமென்க; உருபு மயக்கம். இவள்தான் அரசகுலமாதலின், அரசரை முற்கூறிஞர்.

(கூ) தன் மார்பிலேயுற. எருக்கி - தாக்கி. எங்கும் - எவ்விடத்தும்.

(இ - ள்.) அங்ஙனம் மண்டபம் சமைத்தவளவிலே, ஸ்ரீதத்தன், அவ்விடத்து [6]அரசனுக்கு அறிவித்து அவனருளோடே தன்மனையைச் சேர்ந்து உலகமும் அறிவுறும்படி இந்நகரிலே உரை நடத்தலின் கூறு பாட்டோடே முரசை அறைவார்களாகவெனக் கூறித் தன்னிளையரை வியவரிடத்தே விட, அவ்வியவரும் கணைபோலும் விசையுடன் சென்று முரசறைவார் உறைபதியதனைக் குறுகி முரசறைமினெனக் கூற, அது கேட்டு அவரும் குழலவளுடைய யாழ் [7]வாசினையை அறைவாமெனக் கூறி 'அணியினராய்ப் புங்கவனறநெறி வளர்ச்சியோடே மிகுக; ஊழி தோறும் இவ்வையகம் மழைதரு வளத்தையுடைத்தாய்ப் பிணியினின் றும் நீங்குக; கிளவியாரும் கற்பினில் திரியாது நிலைபெறுக; மாந்தரெல் வாம் [8]இருமுதுகுரவர் சொற்கேட்டு நாளும் இல்லறம் புணர்க என உலகைவாழ்த்தி, பின்பு கட்டியங்காரன் முதலாக நகரையும் வாழ்த்தி, நீங்கள் தானஞ்செய்மின்; தவம்செய்மின்; யான் செப்புகின்ற இக் காரியத்தையுங்கேண்மின்; தேமொழி, தத்தையொன்பாள்; அவள் தந்தை

[2] மற்றவள் என்பதில் உள்ளது. [3] போந்தவன் சீதத்தன். [4] யாழ் நால்வகைப்படும் "பேரியாழ் பின்னு மகரஞ் சகோட முடன் சீர்பொலியுஞ் செங்கோடு செப்பிஞர்" (சிலப். 3 : 26, அடியார். மேற்.). [5] சிலப். 3 : 26. அடியார். மேற். [6] கட்டியங்காரனுக்கு. [7] வாசினை - வாசித்தல்; சீவக. 1079, ந. [8] இருமுதுகுரவர் - தாய்தந்தையர்; சிலப். 16 : 67.

யாகிய நாய்கன் ஸ்ரீ தத்தனென்பான்; குலத்தின் வந்தான்; ஆதலால் அவன் கூறிய காரியம் இதுவாகும்; அஃது யாதெனின், கற்றவள், நீராள், விளங்கிழை, அவள் தாதையாகிய கலுழவேகன் மூவகைக் குலத்துளாரிலும் மகரயாழினது விளியையெடுப்பி மிகுத்து எல்லார்க்கும் தெளிவித்து அவ்வரிவையிற்காட்டில் அறிவுடைய நம்பிக்கு அவளைக் கொடுமென்று கூறினனென்பதென்று வீதிதோறும் கடிப்பிலேச்சித் தாக்கி எங்கும் முழக்கின் ஏய்ப்ப முரசறைந்த பொழுதிலே யென்க.*

(கO௬ - க௭)

610. வணக்கருந் தானை மன்னர் மத்தகம் பிளந்து வாய்த்த
நிணக்கொழுங் குருதி வாட்கை நிலம்புடை பெயர்க்கு மாற்றல்
அணைப்பருங் களிகொள் வேழத் தத்தின புரத்து வேந்தன்
கணைக்கவி னழித்த வுண்கட் கன்னியைக் கருதி வந்தான்.

நிணத்தையுடைய குருதி.

(இ - ள்.) மன்னருடைய வேழத்தினது மத்தகத்தைப் பிளந்து தப்பாத வாளையுடைய கையினையும், மெய்வலியினையுமுடைய அத்தின புரத்தினரசன் கன்னியைக் கொள்ளக் கருதி வந்தானென்க. (ககஅ)

611. சிதைப்பருஞ் சீற்றத் துப்பிற் செய்கழ னரல வீக்கி
மதக்களி றடர்த்துக் குன்ற மணிவட்டி னுருட்டு மாற்றற்
கதக்களி யொளிறு வைவேற் காம்பிலிக் காவன் மன்னன்
பதைப்பரும் பரும யானைப் பாலமா குமரன் வந்தான்.

610. மத்தகம் - யானையின் நெற்றி. வாய்த்த - தப்பாத. அணைப்பரும் களி - தடுத்தற்கரிய மதம். வேழத்து - யானையையுடைய. அத்தின புரம்: சீவக. 2132. கையையும், ஆற்றலையும் உடைய வேந்தன் என்க. கணைக்கவின் அழித்த உண்கண் - அம்பினது அழகைக் கெடுத்த மையுண்ட கண். கன்னி: காந்தருவதத்தை.

611. சீற்றத்துப்பின் - கோபத்தையுடைய வன்மையால்; சீவக. 361. செய்கழல் - தொழிலழகு பெற்ற வீரக்கழல்; பு - வெ. 267, உரை. நரல - ஒலிக்கும்படி. குன்றம் - மலையை. வட்டு - விளையாட்டிற்குரிய ஒருவகை உருண்டை; "வல்லா னுடிய மணிவட் டேய்ப்ப" (சீவக. 983).

* இதன்பின்,
"இசைபட வறைந்த வோசை யெண்டிசை வேந்து மல்லால்
விசையுடை யெவரு மீண்டி வெறுநில நெளியத் தோற்றிப்
பசைபடு மாறு வந்தார் பான்மையும் பண்பு மெல்லாம்
நசைபட நல்ல நாட்டி நாஞ்சிறி துரைத்து மன்றே"
என ஒரு செய்யுள் சில பிரதிகளிற் காணப்படுகின்றது.

கதக்களியாற் பகைக்கு அஞ்சிப் பதைத்து ஓடுதலரிய யானை. பாலமா ; மா, ஈண்டு வியங்கோளன்றி இசைநிறைத்தது.

(இ - ள்.) பகைவராற் சிதைத்தற்கரிய துப்பாலே வீரக்கழலைக் கட்டிக் களிற்றை அடர்த்துக் குன்றை வட்டுப்போல் உருட்டும் மெய்வலியினையும், வேலினையும், யானையினையுமுடைய காம்பிலி நாட்டுக்கு மன்னனாகிய பாலகுமரன் வந்தானென்க. (௬௧௯)

612. இலைபொர வெழுதி யன்ன வெரிமணிக் கடக முன்கைச்
சிலைபொரத் திரண்ட திண்டோட் சில்லரிச் சிலம்பி னார்தம்
முலைபொர வுடைந்த தண்டார் மொய்ம்மதுத் துளிப்ப வந்தான்
மலைபொர வரிய மார்பின் வாரண வாசி மன்னன்.

இட்ட இலைத்தொழில் திருந்த நெருங்க எழுதினாற்போன்ற முலை.

(இ - ள்.) முன்கையினையும், தோளினையும், மலை ஒத்தற்கரிய மார்பினையுமுடைய மன்னன் முலைபொருதலால் அலர்ந்த தாரின் மதுத் துளிப்ப வந்தானென்க. (௬௨௦)

613. கதிர்முடி மன்னர் சூழ்ந்து கைதொழு திறைஞ்சி மாலைத்
திருமுடி வயிர வில்லாற் சேவடி திளைப்ப வேத்தி
அருமுடி யணிந்த கொற்றத் தவந்தியன் முரச மார்ப்ப
ஒருபிடி நுசுப்பி னாளை யுள்ளுபு வந்து விட்டான்.

[1] ஏத்தி - ஏத்த.

குன்றை வட்டுப் போல் உருட்டல் ; "வடவரை பிடுங்கி வட்டென வுருட்டும்" (இலிங்க. தீவுகளின். 10). கதம் - கோபம். காம்பிலி : ஒரு தேசம்; சீவக 2183, 2253. பதைப்பரும் - பதைத்து ஓடுதல் அரிய. பாலமா குமரன் - பாலகுமரன் ; மா : இசைநிறைத்து நின்றது ; உலோகமா பாலன் என்பது போல : சீவக. 396, அடிக்.

612. சிலை பொர - வில் பொருதலால். சில்லரிச் சிலம்பு - சில வாகிய பரல்களையுடைய சிலம்பு. சிலம்பினார் தம் இலை பொர எழுதி யன்ன முலை பொருதலால் உடைந்த தார் எனமாறியியைக்க. முலை பொர உடைந்த தார் : "மொய்கொண்முலை பாயமுகை விண்டலர்ந்த தாரான்" (சீவக. 589); உடைந்த - அலர்ந்த. வாரணவாசி : ஒரு நகரம் ; சீவக. 395, 2188.

613. மாலையையணிந்த திருமுடி. வயிர வில்லால் - வயிரத்தினது ஒளியால். சேவடி - அவந்தியனுடைய பாதம். சேவடி திளைப்ப இறைஞ்சி ஏத்தி என மாறியியைக்க. கொற்றம் - வெற்றி. அவந்தியன் - அவந்தி நாட்டு மன்னன் : சீவக. 2185. ஒருபிடி நுசுப்பினாள் - ஒரு பிடியில் அடங்கும் இடையையுடையவள். ஒருபிடி நுசுப்பு : சீவக. 2085, 2458 ; பெருங். 2. 2 : 216. உள்ளுபு - நினைந்து.

(மேற்.) அடி, 4 : மாறன். பொருளணி. 16.

(உரை) [1] எச்சத்திரிபு.

**(இ - ள்.)** மன்னர் சூழ்ந்து கையாற்றொழுது தமது முடியின் வயிரத்தினது ஒளியாலே அவன்சேவடி ஒளி இடையறுதிருக்கும்படி இறைஞ்சியேத்த, முடியணிந்த அவந்தியன், ஆர்ப்ப ஒருபிடியின் அடங்கு நுசுப்பினுளைக் கொள்ளக்கருதி வந்துவிட்டானென்க. (கஉக)

614. வெள்ளணி யணிந்த ஞான்றே வேந்தர்தம் முடியிற் கொண்ட
கள்ளணி மாலை மோந்து கனைகழ லிலங்கு நோன்றாட்
புள்ளணி கொடியி னானிற் போர்பல தொலைத்த வாற்றல்
அள்ளிலை யணிந்த வைவே லயோத்திய ரிறையும் வந்தான்.

வெள்ளணி - பிறந்தநாளில்[1] ஒப்பனை. அள்ளுதல் - செறிதல்.

**(இ - ள்.)** ஒப்பனையை அணிந்தவன்றே மாலையை மோந்து கழலிலங்கு காலினையும் கருடக்கொடியோனைப்போலப் பல போரைத்தொலைத்த ஆற்றலையும் வேலினையுமுடைய அயோத்தியர்க்கிறையும் வந்தானென்க. (கஉஉ)

615. நீணிதி வணிக ரூரு நிலமிசை யவர்க ளெல்லாம்
வீணையிற் பொருது வெல்வான் விரைவினர் துவன்றி மூதூர்க்
கோணமு மறுகு மெல்லாங் குச்சென நிரைத்தம் மாந்தர்
மாண்மது நசையின் மொய்த்த மதுகர வீட்ட மொத்தார்.

**(இ - ள்.)** கடிமுரசறைந்த காலையிலே, வணிகரூருக நிலமிசையவர்களாகிய இவர்களும் ஒழிந்த அரசரும் அந்தணரும் எல்லாரும் வீணையிற் பொருது வெல்லவேண்டி விரைவினராய் நெருங்கி மூதூரிற் குறுந்தெருவிலும் நெடுந்தெருவிலும் பாவாற்றியென நிரைத்தலாலே, அம்மாந்தர் மதுநசையால் மொய்த்த தேனீயின் திரட்சியை ஒத்தாரென்க.

---

614. பிறந்தநாளில் வெள்ளணி அணிதல் மரபாதலின், ‘வெள்ளணியணிந்த ஞான்றே’ என்பது பிறந்த நாளைப் புலப்படுத்தி நின்றது; சீவக. 603, 2388, 2431; சூளா. சுயம். 212; பு - வெ. 212. கள் - தேன். கனைகழல் - ஒலிக்கின்ற கழல். புள்ளணி கொடியினான் - திருமால்; புள்: கருடன். அள்ளிலை வேல்: சீவக. 1341. அள் - செறிவு; சீவக. 1191, ந.

(உரை) [1] ஒப்பனை - அலங்காரம்.

615. வெல்வான் - வெல்ல வேண்டி. துவன்றி - நெருங்கி. கோணம் - குறுந்தெரு. மறுகு - நெடுந்தெரு. குச்சு - பாவாற்றி; நெய்வோர்க்குரிய ஒரு கருவி என்பர். குச்செனநிரைத்தல்: சீவக. 1153: கந்த. நாட்டுப். 7. நிரைத்தல் - இடைவிடாது மொய்த்தல். நசையின் - விருப்பத்தால். மதுகரம் - தேனீக்கள்.

[1] இது, மதுகரம் வருந்தத் தேனை ஒருவன் கொண்டுபோமாறுபோல [2] இவர் வருந்தச் சீவகன் கொண்டுபோதல் கருதிற்று. (கஉ௩)

616. (க) உருக்கமைந் தெரியுஞ் செம்பொ ேனரைவில் லகல மாகத்
திருக்குழன் மடந்தை செல்லத் திருநிலந் திருத்திப் பின்னர்
விரைத்தகு நான நீரால் வெண்ணிறப் பொடியை மாற்றிப்
பரப்பினர் படுவண் டார்ப்பப் பன்மலர் பக்க மெல்லாம்.

617. (உ) விலைவரம் பறித லில்லா வெண்டுகி லடுத்து வீதி
அலர்தலை யணிச்சத் தம்போ தைம்முழ வகல மாகப்
பலபடப் பரப்பிப் பாவை மெல்லடிப் பரிவு தீர
நிலவரைத் தன்ன னுரை நிதியினுல் வறுமை செய்தான்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(உ) அடுத்து : சேர்த்து.

(இ - ள்.) மடந்தைசெல்லும்படி, வீதியில் திருநிலத்தை ஒட்டமைந்து எரியும் பொன்னாலே ஓரைந்து விற்கிடை அகலமாக எங்குந் திருத்திப் பின்பு நாற்றத்திற்குத் தக்க புழுகாலும் பனிநீராலும், எழுந்த பொடியை மாற்றிப் பக்கமெல்லாம் வண்டார்க்கும்படி மலரைப் பரப்பினார்; அங்ஙனம் பரப்பிப் பாவையது அடியிற் பரிவு தீரும்படி அம் பொன்னிலத்தே வெண்டுகிலைப் பலபடச்சேர்த்து அதன்மேலே அனிச்சப்பூவை ஐம்முழவகலமாகப் பரப்புதலாலே, நிலத்தெல்லையில் தன்னை யொப்பாரை நிதியாலே மிடியராக்கினனென்க. (கஉச-௫)

(உரை) [1] இக்கருத்தோடு "துன்றி வைத்ததண் டேனுறு திழந்து சூழ்ந் தெடுப்ப. ஒன்று மற்றவ ராறுயி ருலந்தமை யுணர்ந்து" (பாகவதம், 11. 4 : 25) என்பது ஒப்பிடற்குரியது. [2] இவர் - மற்றைய அரசர்கள்.

616. உருக்கமைந்து எரியும் செம்பொன் - ஓட்டமைந்து விளங்கும் பொன்னால்; சீவக. 535. ஓர் ஐவில் அகலம் - ஓர் ஐந்து விற்கிடை அகலம்; சீவக. 1704. எட்டுச்சாண் கொண்டது ஒருவில் அளவு; இவ் வளவுப்பெயரின் விகற்பத்தைச் சைன நூலிற்பரக்கக்காணலாம். மடந்தைசெல்ல - காந்தருவதத்தை செல்லும்படி. மடந்தை செல்லும்படி திருநிலத்தைப் பொன்னால் ஐந்துவில் அகலமாகத்திருத்தி என்க. விரைத்தகு - நறுமணத்திற்குத் தக்க. நானத்தாலும் நீராலும் மாற்றி. பொடி - நிலத்தினின்று மேலே எழுந்த துகள். பக்கமெல்லாம் பன்மலர் பரப்பினர் என்க.

617. விலை வரம்பு அறிதலில்லாத்துகில் - விலையின் எல்லை அறிய முடியாத உயர்ந்த நடைப்பாவாடை; "பையர வுரியி னன்ன நடைப் படாம் பரப்பிப் பெய்த, கொய்யவிழ் போதி னீத்தங் குரைகழ லடிந னைப்ப" (திருவிளை. திருமணப். 147). அடுத்து - சேர்த்து. ஐம்முழ அகலம் - ஐந்துமுழ அளவு அகலம். பாவை : காந்தருவதத்தை. நில வரை - நிலத்தின் எல்லையில். தன் அனர் - தன்னை ஒப்பவர்.

618. மண்டல நிறைந்த மாசின் மதிப்புடை வியாழம்போன்றேர்
குண்டல மிலங்க நின்ற கொடியினைக் குறுகித் தோழி
விண்டலர் கோதை விம்மும் விரைகுழ றொழுது நீவிப்
பண்டியன் மணங்களெல்லாம் பரிவறப்பணிந்து சொன்னாள்.

(இ - ள்.) வட்டம் நிறைந்த மறுவில்லாத மதியின்பக்கத்து நின்ற வியாழம்போன்று முகத்தருகே ஒரு குண்டலம் இலங்கும்படி நின்ற கொடியினை வீணாபதி தொழுது குறுகி விரைக்குழலைக் கோதி அவட்கு நாணால் வரும் பிரிவு அறப் பண்டு உலகிலியலும் மணங்களையெல்லாம் தாழ்ந்து கூறினாளென்க.

விரைகுழல் : [1] விகாரம். (கஉகூ)

619. எரிமணி நெற்றி வேய்ந்த விளம்பிறை யிதுகொ லென்னப்
புரிமணி சுமந்த பொற்பூண் பொறுக்கலா நுசுப்பிற் பாவை
திருமணி வீணைக் குன்றத் திழிந்ததீம் பாலை நீத்தத்
தருமுடி யரச ராழ்வ ரம்மனை யறிவ லென்றாள்.

புரி - முத்துவடம். பாலையாவன - [1] செம்பாலை, படுமலைப்பாலை, செவ்வழிப்பாலை, அரும்பாலை, கோடிப்பாலை, மேற்செம்பாலை, விளரிப் பாலையெனவேழும். அம்மனை - தாய்; "அன்னை யென்னை யென்றலு முளவே, தொன்னெறி முறைமை சொல்லினு மெழுத்தினும், தோன்று மரபின வென்மனார் புலவர்" (தொல். பொருளியல், 52) என்பது விதி.

(இ - ள்.) வீணாபதி, இது மணியை இரண்டுதலையிலும் அழுத்திய தொரு பிறையோவென்ன முத்துவடங்கள் இரண்டுதலையிலும் மணியைச் சுமந்த பூணைப் பொறுக்கலாத நுசுப்பினையுடைய பாவாய், அம்மனாய், நினது மகர யாழாகிய மலையினின்றும் குதித்த பாலையென்கின்ற பண்ணாகிய நீர்ப்பெருக்கத்திலே அரசர் அழுந்துவர்; அதனை யான் அறிவேனென்றாளென்க.

இதனால், வருவது கூறினாள். (கஉஎ)

---

618. மண்டலம் - வட்டம். குண்டலத்திற்கு வியாழமும் முகத்திற்கு மதியும் உவமைகள் : பெருங். 2. 19 : 92 - 6; முருகு. 86 - 8, ந. கொடி : காந்தருவதத்தை. கோதை - மாலையின் மணம். விரைகுழல் - இயற்கை மணத்தையுடைய கூந்தலை. விரைக்குழல் தொழுது நீவி : பெருங். 1. 36 : 85. மணங்களென்றது பிரமம் முதலிய எண்வகை மணங்களை. பர்வு - துன்பம்.

(உரை) [1] விரைக்குழல் விரைகுழலென்றானது.

619. மணியை நெற்றியிலே வேய்ந்த. முத்துவடத்திற்குப் பிறை. நுசுப்பு - இடை. அம்மனை : விளி.

(உரை) [1] சிலப். 3 : 71, உரை.

620. (க) மண்ணிட மலிர வெங்கு மாந்தரும் வந்து தொக்கார்
ஒண்ணிற வுரோணியூர்ந்த வொளிமதியொண்பொ னாட்சித்
தெண்ணிற விசும்பி னின்ற தெளிமதி முகத்து நங்கை
கண்ணிய வீணை வாட்போர்க் கலாமின்று காண்டுமென்றே.

621. (உ) பசுங்கதிர்க் கடவுள் யோகம் பழிப்பற நுனித்து வல்லான்
விசும்பிவர் கடவு ளொப்பான் விரிச்சிக னறிந்து கூற
அசும்புதே னலங்கலைம்பா லரிவையொ டாய்ந்து நாய்கன்
விசும்புபோன் மாந்த ரார விழுநிதி சிதறி னானே.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) 'மண்டி' பாடமாயின், தம்மில் திரண்டென்க. கண்ணிய - உலகம் மதித்த.

(உ) விரிச்சிகன் - கணி; காரணப்பெயர். அசும்புதேன் - இடையறாது ஒழுகுந்தேன்.

(இ - ள்.) சந்திராபரணமென்னும் நூலிற் கூர்த்துவல்லான், பிருகஸ்பதியை ஒப்பானாகிய விரிச்சிகன்றான் அறிந்து, மாந்தரும் வந்து மண்ணகம் நிறைய எங்கும் தொக்கார்; ஆதலின், உரோகிணியூர்ந்த மதியையுடைய வியாழக்கிழமையிலே நங்கையது வீணையாகிய வாட்போரின் மாறுபாட்டைக் காண்பேமென்று ஸ்ரீதத்தனுக்குக் கூற, அவனும் பதுமையுடனே இது நடத்துமுறைமையை ஆராய்ந்து விழுநிதியை மாந்தர் ஆரும்படி மழைபோலச் சிதறினானென்க. (கஉ அ-கூ)

622. வாசநெய் வண்டு மூச மாந்தளிர் விரல்கள் சேப்பப்
பூசிவெள் ளிலோத்தி ரத்தின்பூம்பொருக்கரைத்தசாந்தின்
காசறு குவளைக் காம ரகவிதழ் பயில மட்டித்
தாசறத் திமிர்ந்து மாத ரணிநலந் திகழ்வித் தாரே.

620. மலிர - நிறைய; "வரைசெறிந் தனைய செம்பொன் மஞ்சங்கண் மலிரத் தோன்றி" (சூளா. சுயம். 240). தொக்கார் - கூடினர். உரோணி - உரோகிணி என்பதன் சிதைவு; சீவக. 198. பொன் ஆட்சி - வியாழக்கிழமை; ஆட்சி - கிழமை. மதி உரோகிணியோடு கூடிய நாள் கலியாணத்திற்குச் சிறந்தது; அகநா. 136 : 4 - 5. வீணையாகிய வாட்போர்; "யாழ்ப்படை பொருது" (சீவக. 628). கலாம் - கலகம்.

621. பசுங்கதிர்க் கடவுள் - சந்திரன். யோகம் - நூல் : இது சைன நூல் மரபு. விசும்பிவர் கடவுள் - வியாழபகவான். ஒப்பானாகிய விரிச்சிகன். அலங்கல் ஐம்பால் - மாலையை யணிந்த கூந்தல். நாய்கன் : சீதத்தன். ஆர - நிறையக் கொள்ளும்படி. விழுநிதி - சிறந்த செல்வத்தை. விசும்புபோல் சிதறினான் என்க; விசும்பு - மேகம்.

622. வாச நெய் - வாசனையெண்ணெய். மூச - மொய்ப்ப. வெள்ளிலோத்திரம்-மணமுள்ள ஒரு வகைமலர் : சீவக. 2685; ஐங். 301; சூளா. இரதநூபுர. 16; "தேறு வெள்ளி லோத்திரப்பூம் பொருக்கரைத்த

(இ - ள்.) மாதர், மெய்யிலே வண்டு மூச விரல்சிவப்ப நெய்யைப் பூசி வெள்ளிலோத்திரத்தினது பூவுலர்தலை அரைத்த குழம்பாலே குற்ற மறத் திமிர்ந்து நலத்தை விளக்கினாரென்க.

குவளையினது உள்ளிதழின் தடிப்பதெனப் பூசித் திமிர்ந்தென்க. (௧௬௦)

623. கங்கையின் களிற்றி னுச்சிக் கதிர்மணிக் குடத்திற் றந்த
மங்கல வாச நன்னீர் மணிநிறங் கழீஇய தொப்ப
நங்கையை நயப்ப வெல்லாம் விரையொடு துவருஞ் சேர்த்தி
அங்கர வல்கு லாளை யாட்டினா ரரம்பை யன்னார்.

(இ - ள்.) அரம்பையன்னார், மணியை [1] ஒப்பமிட்ட தன்மையொப்ப, நங்கையை நயக்கப்படுவனவாகிய [2] ஓமாலிகைகளெல்லாவற்றையும் [3] விரையையும் [4] துவரையுஞ்சேர்த்தி, பின்பு அவளைக் களிற்றின் உச்சியிலே குடத்தாற்றந்த மங்கலமாகிய கங்கையினீராலே ஆட்டினாரென்க.

ஓமாலிகைகளாவன :—" [5] இலவங்கம் பச்சிலைகச் சோலமிரு வேரி, மலையிரு வேரி வகுளஞ் சுரபுன்னை, ஏலந்தக் கோல மதாவரிசி சாதிக் காய், நாகணமஞ் சட்டி நறும்பிசின் குக்குலு, மாஞ்சிகண் டில்வெண் ணெய் தீம்புநன் முரி, அடவிக்கச் சோல மரத்தை சரளம், புழுகா ரியக் கொட்டங் கொட்டந் தகாம், அதிமதுர முத்தக்கா சாய்ந்தவிலா மிச்சம், சயிலேக நாகப்பூச் சண்பகமொட் டென்று, முழுதுணர்ந்தோ ரோதிய முப்பத் திரண்டே, விதிவகை யோமா லிகை." நயப்ப : பெயர். விரை : " சந்தன மகிலொடு கருப்பூரங் கத்தூரி, குங்கும மென்றிவை யைந்தும் விரையே." துவர் : " நாற்பான் மரமா நாவ றிரிபலை, வன்கருங் காலி பத்துந் துவரே " எனவிவை. (௧௬௧)

---

சாந்தும் " (விநாயக. திருமண. 121); பூம்பொருக்கு - பூவின் உலர்தல் ; சோற்றுப் பொருக்கு என்பதனாலும் பொருக்கின் பொருள் புலப்படும். சாந்தின்.........மட்டித்து : சீவக. 2423. மட்டித்து - பூசி. ஆசு அற - குற்றம் கெட. திமிர்ந்து - பூசி.

623. களிற்றின் உச்சியிற் குடத்திற் றந்த மங்கலக் கங்கையின் வாச நன்னீரால் ஆட்டினார் எனமாறியியைக்க. கழீஇயதொப்ப - சாணை பிடித்ததை ஒப்ப. மகளிர்க்கு மணி : கம்ப. நீர்விளையாட்டு. 22. நங்கையை - காந்தருவதத்தையை. கங்கையின் களிற்றினுச்சி......ஆட்டினர் : பெருங். 3. 22 : 199 - 200. கங்கையின்......மணிநிறங் கழீஇய தொப்ப ஆட்டினர் : பிரமோ. சோம. 112.

(உரை) [1] ஒப்பமிடல் - சாணைபிடித்தல். [2] ஓமாலிகை - ஓமாலிகா திரவியம் என வழங்கும் : இது முப்பத்திரண்டு வகைப்படும் ; சிலப். 6 ; 76 - 9 ; பெருங். 1. 41. : 127 ; 2. 5 : 32. [3] விரை : இது ஐந்து வகைப் படும் ; " கொட்டந் துருக்கந் தகர மகிலார, மொட்டிய வைந்தும் விரை " (சிலப். 5 : 14, அடியார். மேற்.) [4] துவர் - இது பத்து வகைப்படும் ; " பூவந்தி திரிபலை புணர்கருங் காலி, நாவ லோடு நாற்பான் மரமே " (சிலப். 6 : 76 - 9, அடியார். மேற்.) [5] இம்மேற்கோள், முற்றும் வேறு பாட்டுடன் அடியார்க்கு நல்லாரால் எடுத்துக் காட்டப்படுகிறது ; சிலப். 6 : 76-9, உரை.

624. வெண்ணிற மழையின் மின்போல் வெண்டுகிற் கலாபம் வீக்கிக்
கண்ணிற முலையுந் தோளுஞ் சந்தனத் தேய்வை கொட்டித்
தெண்ணிறச் சிலம்பு செம்பொற் கிண்கிணி பாதஞ் சேர்த்திப்
பண்ணிறச் சுரும்பு சூழும் பனிமுல்லைச் சூட்டு வேய்ந்தார்.

(இ - ள்.) வெண்மேகத்தினுட்கிடந்த மின்னுப்போல் துகிலுக்குள்ளே கலாபத்தை வீக்கி, கண்ணையும் நிறத்தையுமுடைய முலையினும், தோளினும் சந்தனக்குழம்பைப் பூசி, சிலம்பையும் கிண்கிணியையும் பாதத்தே சேர்த்தி, பண்ணையும் நிறத்தையுமுடைய சுரும்பு சூழும் முல்லைச்சூட்டைக் கற்பிற்குத் தலையிலே சூட்டினரென்க. (கஙஉ)

625. எரிமணிச் சுண்ண மின்னு மிருஞ்சிலை முத்தஞ் சேர்த்தித்
திருமணி முலையி னெற்றிச் சிறுபுறஞ் செறியத் தீட்டிப்
புரிமணி யாகத் தைதா விரனுதி கொண்டு பூசி
விரிமணி வியப்ப மேனி யொளிவிட்டு விளங்கிற் றன்றே.

புரி - வடம். பூசி - பூச.

(இ - ள்.) அவர், வானவிற்போலும் முத்துவடத்தை முலைத்தலையிலே சேர்த்தி, மணிச்சுண்ணத்தை முதுகிலே செறியத் தீட்டி, அதனை ஆகத்தே விரனுதியைக்கொண்டு ஐதாகப்பூச, மேனிதான் மணிவியக்கும்படி விளங்கிற்றென்க. * (கஙங)

624. மழை - மேகம். கண்ணையும் நிறத்தையும் உடைய என்க. சந்தனத்தேய்வை - சந்தனக்குழம்பு. கொட்டி - பூசி. சிலம்பையும் கிண்கிணியையும் சேர்த்தி. பண்ணையும் நிறத்தையும் உடைய. முல்லைச் சூட்டைக் கற்பிற்குச்சூடுதல் : சீவக : 2438, ந ; சிறுபாண். 30 ; ஐங். 408 ; தக்க. 119.

625. சிலை - இந்திரவில். முத்துவடத்திற்கு இந்திரவில் உவமை ; சீவக. 2476 ; பெருங். 1. 49 : 82. நெற்றி - உச்சி. சிறுபுறம் - முதுகு. முத்தத்தை முலையின் நெற்றி சேர்த்தி எனவும், மணிச்சுண்ணத்தைச் சிறுபுறம் தீட்டி எனவும் மாறி இயைக்க. புரி - முத்துவடம் ; சீவக. 619. ஆகம் - மார்பு. ஐதா - மெல்லிதாக. நுதி - நுனி. மணி - மாணிக்கம். மேனி மணிவியப்ப ஒளிவிட்டு விளங்கிற்று என்க ; வியப்ப : உவமவுருபு.

* இதன்பின்,

" இதுமெயென் றின்றுந் தேரு ரிருநிலத் துறையு மாந்தர்
புதுமையைப் பொருளி தென்னார் பழமையைப் பொருளிதென்பர்
மதமய மாலைத் தோழி பழமையைப் பழித்து மாதோ
புதுமையே பொருளி தாதல் பூங்கண்ணி னுணர்த்தி னாளே "

என ஒருசெய்யுள் சில கையெழுத்துப் பிரதிகளிற் காணப்படுகின்றது.

626. அருங்கயம் விசும்பிற் பார்க்கு மணிச்சிறு சிரலை யஞ்சி
இருங்கயந் துறந்து திங்க ளிடங்கொண்டு கிடந்த நீல
நெருங்கிய மணிவிற் காப்ப நீண்டுலாய்ப் பிறழ்வ செங்கேழ்க்
கருங்கய லல்ல கண்ணே யெனக்கரி போக்கி னாரே.

(இ - ள்.) நீண்டு உலாய்ப் பிறழ்கின்ற இவை, ஆழ்ந்த கயத்தை விசும்பிலே நின்று பார்த்துத் தன்னையெடுக்கும் [1] சிச்சிலிக்கு அஞ்சி அதனைத்துறந்து நீலமணியாகிய நெருங்கிய விற்காப்பத் திங்களை இடங்கொண்டு கிடந்த கயலல்ல; கண்ணேயென்று பிறர்கருதும்படி மையையெழுதினாரென்க.

[2] 'கரி' என்றார், சான்று போலவுந்தோன்ற. 'கிடந்து' என்றும் பாடம். (கஈச)

627. பொருந்துபொற் றூண்க ணான்கிற் பொலிந்துநூற் புலவர் செந்நா
வருந்தியும் புகழ்த லாகா மரகத மணிசெய் கூடத்
திருந்திளை யார்கள் கோல மிந்திர னிருமித் தாற்போற்
றிருந்தச்செய் ததற்பி னங்கை திருவிற்கோர் திலக மொத்தாள்.

(இ - ள்.) தூண் நான்காற்பொலிந்து நூற்புலவர் புகழ்தலாகாத மணியாற்செய்த, [1] ஒப்பித்தற்குப் பொருந்துங்கூடத்தே ஒப்பிக்குமகளிரிருந்து கோலத்தை இந்திரன் நிருமித்தாற்போற்செய்தபின், நங்கை திருமகட்கிட்டதொரு திலகத்தையொத்தாளென்க. (கஈரு)

628. மண்கனை முழவம் விம்ம வரிவளை துவைப்ப வள்வார்க்
கண்களந் திடியின் வெம்பிக் கடலென முரச மார்ப்ப
விண்கனிந் துருகு நீர்மை வெள்வளைத் தோளி போந்தாள்
பண்கனிந் துருகு நல்யாழ்ப் படைபொரு துடைக்க லுற்றே.

---

626. கயம் - குளம். சிரலுக்கு அஞ்சித்திங்களைத் தனக்குரிய இடமாகக்கொண்டு. நீலமணி நெருங்கிய விற்காப்ப, திங்கள் இடங்கொண்டு கிடந்த கயலல்ல என மாறுக. வில் - இந்திரவில். உலாய்ப் பிறழ்வ - உலாவிப் பிறழ்கின்றனவாகிய இவை; என்றது கண்களை. என - என்று கூறும்படி. கரி - மை. போக்கினர் - எழுதினார். மு. நாலடி. 395.

(மேற்.) மு : யா - வி. ஒழிபு. 2.

(உரை) [1] சிச்சிலி - மீன் கொத்துங்குருவி. [2] கரி - சாட்சி : இப் பொருள் தொனி.

627. நான்கின் - நான்கால். வருந்தியும் - மிகமுயன்றும். ஆகா - இயலாத. இளையார்கள் - மகளிர். கோலம் - அலங்காரம். செய்தற்பின் - செய்தபின்பு. நங்கை : காந்தருவதத்தை. திருவிற்கு - இலக்குமிக்கு.

(உரை) [1] ஒப்பித்தல் - அலங்கரித்தல்.

628. மண்கனை முழவம் - மார்ச்சனை அமைந்த திரண்ட முழவம்; சிலப். 10 : 139; மணி. 6 : 119. வளை - சங்கம். வள்வார் - சிறிய

மண் - மார்ச்சனை. பண் முற்றுப்பெறுதலிற் கேட்டோர் நெஞ்சுருகு தற்குக் காரணமான யாழ்.

(இ - ள்.) தேவர் நெஞ்சு நெகிழ்ந்துருகுந் தன்மையையுடைய வளைத்தோளி, யாழையுடைய மூன்றுவருணத்துப் படையையுங்கெடுக்க லுற்று முழவு விம்ம வளையொலிப்ப வள்வார்முரசம் கண்ணுலித்து இடியின் வெம்பிக் கடலென ஆர்ப்பப் போந்தாளென்க. (௬௨௬)

629. பரந்தொளி யுமிழும் பைம்பொற் கண்ணடி பதாகை தோட்டி, விரிந்திருண் மேயுஞ் செம்பொன் விளக்குவெண் முரசு கும்பம், சுரந்தவெண் மதியைச் சூன்று கதிர்கொண்டு தொகுத்த போலும், பொருந்துபொற் கதிர்பெய் கற்றை புணர்கயல் போந்த வன்றே.

[1] கண்ணடி : விகாரம். ஒளிபரந்து இருளைக் கெடுக்கும் விளக்கு. அமுதைச் சுரந்த மதியைச் சூன்று கிரணங்களை வாங்கிக்கொண்டு சேர்த்த போலும் கற்றை ; பொற்காம்பாற் கதிரைப்பெய்கின்ற கற்றை. புணர்கயல் - இரட்டைக்கயல்.

(இ - ள்.) கண்ணுடி முதலிய [2] அட்டமங்கலங்களாகிய இவை முன்னே போந்தனவென்க. (௬௨௭)

630. வென்றவ னகலம் பூட்ட விளங்கொளி மணிசெய் செப்பின்
நின்றெறி பசும்பொன் மாலை போந்தது நெறியிற் பின்னர்
ஒன்றிய மணிசெய் நல்யாழ் போந்தன வுருவ மாலை
தின்றுதே னிசைகள் பாடத் திருநகர்ச் சுடர வன்றே.

---

வார் ; சீவக. 458, அடிக்.; 2152. வள்வார் முரசம் கண்களைந்து இடியின் வெம்பி ஆர்ப்ப எனமாறியியைக்க. சங்கும் முரசமும் : சீவக. 2152 ; பெருங். 2. 5 : 18-9 ; 3. 19 : 195. விண் - தேவர் ; ஆகுபெயர். தோளி : காந்தருவதத்தை. பண் - இராகம். வீணை வாசித்துப் பிற ரோடு வாதம் செய்து பொருதலின், 'யாழ்ப்படை பொருது' என்றார் ; "வீணைவாட் போர்க்கலாம்" (சீவக. 620) என்றார் முன்னும்.

629. பதாகை - பெருங்கொடி. ஒளி பரந்து இருளைமேயும் விளக்கு எனமாறுக ; மேயும் - கெடுக்கும். சூன்று - தோண்டி. கற்றை - தொகுதி ; என்றது கவரியை.

(உரை) [1] கண்ணுடி கண்ணடி என்றுனது. [2] அட்டமங்கலம் : சீவக. 472, அடிக்.

630. வென்றவன் - காந்தருவதத்தையை வீணையில் வென்றவ னுடைய. மணிச்செப்பு : சீவக. 197, 2474, 2736. செப்பில் மாலை வைத்தல் : சீவக. 2474. உருவம் - யாழின்வடிவை. மாலை - பூமாலை. தேன் - ஒருவகை வண்டு.

தின்று - உள்ளடக்கி. யாழினதுருவை மாலை மறைத்துக்கிடத்தலின், அம்மாலையில் தேன்பாட, தேன் மாலையைத்தின்றென்று மிகுதியாற் கூறுவாருமுளர். 'தின்றுதேன்றிசைகள்பாட' என்றும் பாடம்.

(இ - ள்.) உலகு நடக்குநெறியாலே, வென்றவன் அகலத்தே பூட்டு தற்குச் செப்பிலே பொன்மாலை போந்தது; அதன்பின்னே பாட விளங்க யாழ் போந்தனவென்க. (கரு௮)

(வேறு)

631. ஆரந் துயல்வர வந்துகில் சோர்தர
வீரம் படக்கையை மெய்வழி வீசித்
தேரை நடப்பன போற்குறள் சிந்தினொ
டோரு நடந்தன வொண்டொடி முன்னே.

(இ - ள்.) குறள் சிந்துடனே ஆரமசையத் துகில் நெகிழாநிற்க வீர முண்டாக விலாப்புடைக்குள்ளே கையை வீசித் தேரைகள் நடக்குமவை போல ஒண்டொடிமுன்னே நடந்தனவென்க. (கரு௯)

632. வட்டச் சூரையர் வார்முலைக் கச்சினர்
பட்டு வீக்கிய வல்குலர் பல்கணை
விட்ட தூணியர் வில்லினர் வாளினர்
ஒட்டி யாயிரத் தோரெண்மர் முன்னினார்.

(இ - ள்.) வட்டமான [1]பனிச்சையர், வாராற்கட்டின கச்சினர், சேலை கட்டின அல்குலர், தூணியர், வில்லினர், வாளினராய் வஞ்சினங் கூறி ஆயிரத்தெண்மர் முற்படச்சென்றாரென்க. (கசo)

631. துயல்வர - அசைய. கையை மெய்வழி வீசல்; கலித். 94 : 31, ந. தேரை நடப்பனபோல்.........நடந்தன : சூளா. சுயம். 124; கம்ப கோலங்காண். 23. ஒண்டொடி - காந்தருவதத்தை. குறள் சிந்துடனே ஒண்டொடி முன்னே நடந்தன. ஓரும் : அசை. இரண்டடி உயரமுள்ள வனைக் குறளன் என்றும், மூன்றடி உயரமுள்ளவனைச் சிந்தன் என்றுங் கூறுவது மரபு; தொல். செய். 40, பேர்.

632. சூரை : சல்லடமென்பாரும் உளர். பட்டு - வெண்பட்டு. கணை விட்ட தூணியர் - அம்புகள் நிறைந்த தூணியையுடையவர்; தூணி - அம்பறாத் தூணி. அடி, 3 : திருவிளை. 5 : 8. ஒட்டி - துணிந்து, அறுதியிட்டு; சீவக. 591, 2143, ந. முன்னினார் - முன் சென்றார்கள்; இவர்கள் ஆண்கோலம் பூண்ட மகளிர்; சீவக. 633.

(உரை) [1]பனிச்சை - மகளிர் கூந்தலின் ஐம்பால்களுள் ஒன்று முன்னுச்சி மயிர்; சிறுபாண். 21-2, ந.; தக்க. 25, உரை.

633. வம்பு வீக்கி வருமுலை யுட்கரந்
தம்பி னொய்யவ ராணுடைத் தானையர்
பைம்பொற் கேடகம் வாளொடு பற்றுபு
செம்பொற் பாவையைச் சேவித்து முன்னினார்.

(இ - ள்.) ஒடுங்கால் அம்பினுங்கடியவர், வருமுலை உட்கரந்து கச்சுவீக்கி ஆணுடையாக வுடுத்த தானையராய்க் கேடகத்தையும் வாளையும் பிடித்துப் பாவையைச் சேவித்து முற்படச் சென்றாரென்க.
இங்ஙனஞ் சேவித்தல் மகளிர்க்கியல்பு. (கசச)

634. (க) ஆணை யாணை யகலுமி னீரென
வேணுக் கோலின் மிடைந்தவ ரொற்றலின்
ஆணை யின்றெம தேயென் றணிநகர்
காணுங் காதலிற் கண்ணொருக் குற்றவே.

635. (உ) கண்ணி னோடு பிறந்தது காரிகை
வண்ணங் காண்டற்கன் றேவென்று வைதவர்
விண்ணு மண்ணும் விருந்துசெய் தாலொப்ப
எண்ணி னெண்ணிட மின்றி நெருங்கினார்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(இ - ள்.) காவற்குரியவர்கள் மிடைந்தவரை முற்பட வைது அவர் நீங்காமையின், ஆணை ஆணை, அகலுமினெனக்கூறி ஒற்றுதலால், அவர் விண்ணில் விச்சாதரரும் மண்ணிலுள்ளாரும் எள்ளிட இடமின்றி நெருங்கினார், காரிகை வண்ணங் காண்டற்கன்றே! ஆதலால், விசாரித்துப் பார்க்கின், யாமும் கண்ணினோடு பிறந்தது வண்ணங் காண்டற்காயிருக்குமெனக் கூறிப் பின்னும் எங்கட்கு நீர் விருந்து செய்தாற்போல இன்று எம்முடைய ஆணையே ஆணையாகக் கொண்மினெனவுங்கூறி நகரிலுள்ளார் காதலாற்காணுங்கண்கள் நெருக்குற்றவென்க.

---

633. வம்பு - கச்சு. அம்பின் நொய்யவர் - அம்பைக் காட்டிலும் விரைவாகச் செல்லுபவர் ; சீவக. 1993 ; நொய்ம்மை - விரைவு ; சீவக. 2265, ந. பற்றுபு - பற்றி. பாவை : காந்தருவதத்தை.

634. வேணுக்கோலின் - மூங்கிற் கோலினால். மிடைந்தவர் - நெருங்கினவர்களை. ஒற்றல் - அடித்தல் ; தள்ளுதலுமாம். ஆணையாணை...... ஆணையின்றெமதேயென்று : பெருங். 1. 38 : 22-3. நகர் - நகரிலுள்ளவர்கள். காதலின் - காதலால். நெருக்குற்ற - நெருங்கின.

635. கண்ணினோடு நாம் பிறந்தது. காரிகை வண்ணம் - காந்தருவதத்தையின் அழகு. வைது அவர் எனப்பிரிக்க. விண் - விச்சாதரலோகத்தவர். எண்ணின் - ஆராய்ந்தால். எண்ணிடமின்றி - எள்ளுப் போட இடம் இல்லாமல் ; சீவக. 93, அடிக்.; சீவக. 538, அடிக்.

வேணுக்கோல் - [1] மூங்கிற்பிளிச்சு. [2] ஐயுருபு விரிக்க. நகர், [3] ஆகு பெயர். காவற்குரியவர் களென்றும் முற்படவென்றும் நீங்காமையினென் றும் யாமுமென்றும் வண்ணங்காண்டற்காயிருக்குமென்றும் பின்னுமென் றும் எங்கட்கென்றும் ஆகக்கொண்மினென்றும் வருவித்துரைக்க.

(கசஉ - ௩)

(வேறு)

636. (க) இனஞ்சே ராவாகி யிளையா ருயிரின்மே லெண்ணங் கொள்வான், புனஞ்சேர் கொடிமுல்லை பூம்பவளத் துள்புக்குப் பூத்த போலும், வனஞ்சேர் துவர்ச்செவ்வாய் வாளெயிறுங் கண் மலரும் வனைய லாகாக், கனஞ்சேர் கதிர்முலையுங் கண்டார்கள் வீட்டுலகங் காணார் போலும்.

637. (உ) மீன்சேர் குழாமனைய மேகலையும் வெம்முலையுங் கூற் றங் கூற்றம், ஊன்சே ருயிருய்யக் கொண்டோடிப் போமின்க ளுரைத்தே மென்று, கான்சேர் கமழ்கோதை காறொடர்ந்து கை விடா தரற்று கின்ற, தேன்சேர் திருவடிமேற் கிண்கிணிபொன் னுவதற்கே தக்க தென்பார்.

638. (௩) கள்வாய்ப் பெயப்பட்ட மாலைக் கருங்குழல்கள் கண் டார் நைய, உள்வாய்ப் பெயப்பட்ட வெம்மதுச்செப் போரிணை மெல்லாக மீன்ற, புள்வாய் மணிமழலைப் பொற்சிலம்பி னிக் கொடியை யீன்றாள் போலும், கொள்வா னுலகுக்கோர் கூற் றீன்றா ளம்மவோ கொடிய வாறே.

---

(உரை) [1] மூங்கிற் பிளாச்சு என்பது இக்காலத்து வழக்கு. [2] மிடைந் தவர் என்பதற்கு ஐயுருபு விரிக்க. [3] நகரிலுள்ளவர்களுக்கு ஆனமையின் ஆகுபெயர்.

636. இனம் - தம் இனத்தை. இளையார் - சிறுவர்களுடைய. கொள் வான் - கொள்ளவேண்டி. முல்லை பூத்த போலும். வனம் - அழகு. துவரைப் பூசிய செவ்வாய். வாளெயிறு - ஒளியையுடைய பற்கள். பற்க ளுக்கு முல்லையும், சிவந்த வாய்க்குப் பவளமும் உவமை. வனையலாகா - செய்யமுடியாத. கதிர்முலையும் காணுதவர்போலும் வீட்டுலகங் கண் டார்கள் என்க.

637. மீன் சேர் குழாம் அனைய மேகலை - நட்சத்திரங்களின் கூட் டத்தை ஒத்த மணிகள் கட்டிய மேகலாபரணம். கூற்றம் - யமன். ஊன் - தசை. உய்யக்கொண்டு - பிழைக்கப்பெற்று. போமின்கள் - போங்கள். கான்சேர் கமழ்கோதை - வாசனை சேர்ந்த கமழ்கின்ற மாலை போல்வாள். கைவிடாது - இடைவிடாமல். தேன் - வண்டு. கோதைகால் தொடர்ந்து - காந்தருவதத்தையிடம் கட்டுப்பட்டு. கோதையின் கால் தொடர்ந்து, முலையுங்கூற்றம் கூற்றம் போமின்கள்; உரைத்தேம் என்று அரற்று கின்ற கிண்கிணியும், மேகலையும் பொன்னுவதற்கே தக்கது என்பார் என்க.

638. கள் - தேன். வெம்மது உள்பெய்யப்பட்ட செப்பு என மாறுக. வெம்மது - விருப்பமாகிய தேனை. வெம்மை - விருப்பம்; சீவக.

(வேறு)

639. (ச) செய்ய தாமரை மேற்றிரு வேகொலோ
வெய்ய நோக்கின்விச் சாதரி யேகொலோ
மையில் வானவர் தம்மக ளேகொலென்
றைய முற்றலர் தார்மன்னர் கூறினார்.

இவை நான்கும் ஒருதொடர்.

(க) முல்லை இளையாருயிரிடத்து அறிவைக்கொள்ளவேண்டித் தம் மினத்தைச் சேராவாய்ப் பவளத்துள்ளே புக்குப் பூத்தபோலும் செவ்வா யையும் எயிற்றையும் கண்மலரையும் பண்ணமுடியாத முலையையும் காணுதவர்கள் போலேயிருந்தது, முன்பு வீட்டுலகத்தைக் கண்டவர்க ளென்பாரும். [1]இவையிற்றைக்கண்டவர்கள் பின்னை இவையே காண் பார்களென்று கூறினாரென்றுமாம். துவர்ச்செவ்வாய் : பெயர்மாத்திரை.

(உ) முலையும் : உம்மை சிறப்பு. கூற்றம் கூற்றம், [2]விரைவு. ஊன் சேருயிர் - மானிடயாக்கை. பூவென்று தேனினஞ்சேரும் அடி. ஆவ தற்கே : ஏகாரம் எதிர்மறை. கோதைபோல்வாளிடத்தே கட்டுப்பட்டு, முலையும் கூற்றங்கூற்றம் ; நுமதுயிர் ஊன்சேருயிராதலின் அதனைப் பிழைக்கக் கொண்டு [3]ஓடிப்போங்கோள் ; எம்மேல் [4]தாழ்வறவுரைத்தே மென்று மாறாது அரற்றுகின்ற திருவடிமேற் கிண்கிணியும் அல்குலின் மேகலையும் பொன்னுவதற்கோ தக்க ; இவளிடத்தே தங்குதற்குத் தக்கன வல்லவோவென்பாரும்.

(ஙு) மாலைக்கருங்குழலும் பாடம். [5]பன்மை : ஐம்பாற்பகுதி. விருப்ப மாகிய மதுவை நெஞ்சுகளிலே பெயப்பட்ட செப்பாவது முலை ; மதுப்

---

4. அடிக். செப்பு - முலை. ஆகம் - மார்பு. புள் - அன்னப்பறவை. மணி - சிலம்பிற்கு நாவாகிய மணி. மணியாகிய நாக்கையும் புள்வாய்போன்ற மழலையையும் உடைய சிலம்பு. மழலைப் பொற்சிலம்பு : பெருங். 1. 34 : 4, 175. சிலம்பின் இக்கொடி - சிலம்பையுடைய காந்தருவதத்தை. ஆகமீன்ற செப்போரிணையையும் கருங்குழல்களையும் கண்டார் நைய. இக் கொடியை ஈன்றாள் போலும் கூற்றை ஈன்றாள் ; அம்ம ஓ கொடிது என்க.

639. திரு - இலக்குமி. விச்சாதரி - வித்தியாதர உலகத்துப் பெண். மை இல் - குற்றம் இல்லாத. மன்னர் ஐயமுற்றுக் கூறினார் என்க.

(உரை) [1]இக்கருத்தோடு, "தோள்கண்டார் தோளே கண்டார் தொடுகழற் கமல மன்ன, தாள்கண்டார் தாளே கண்டார் தடக்கைகண் டாரு மஃதே.........யாரே வடிவினை முடியக்கண்டார்" (கம்ப. உலா வியற். 19) என்ற பாடல் ஒப்பிடற்குரியது. [2]கூற்றம் என்பது விரைவு குறித்து இருமுறை அடுக்கி வந்தது. [3]ஓடிப்போங்கள் என்பதன் சிதைவு. [4]தாழ்வுஅற - இகழ்ச்சி நீங்க. [5]கருங்குழல்கள் என்பதில், 'குழல், மயிர் மாத்திரையாய் ஐவகையையும் உணர்த்தலிற் பன்மை

பெய்த செப்புமாம். மணியாகிய நாவால் அன்னத்தின் வாய்போல மழலை வார்த்தை கூறுஞ்சிலம்பு. கொள்வான் - உயிரைக்கொள்ளுதற்கு. கேட்பீராக; ஆகமீன்ற செப்பிணையையும் கள்வாய் மாலை வேயப்பட்ட குழல்களையும் கண்டார் வருந்தும்படி இக்கொடியை யீன்றவள்போலேயிருந்தது, முன்பு உலகத்திற்குக் கூற்றுவனையீன்றவள்; ஓ ஒருத்தி கொடியபடி என்னென்பாருமென்க. பெண்ணும் ஆணும் இவ்வாறு [6] பேதுறுதலின், ஓ வென்றார்.

(ச) கொல், ஐயம்; [7] ஓகாரம் அசை. வெய்ய - கொடிய.

(இ - ள்.) மன்னர், என்பாரும் என்பாருமாய்ப் பின்னும் திருவோ! விச்சாதரியோ! மகளோ! என்று ஐயுற்றுக்கூறினரென்க. (கசசு-எ)

640. வீணை வென்றிவள் வெம்முலைப் பூந்தடம்
ஆணை தோய்வதல் லாற்பிறன் வௌவுமேற்
கோணைப் போரிற் குளிக்குவ மன்றெனின்
மாண நற்றவஞ் செய்குவ மென்மரும்.

(இ - ள்.) இவள் முலைத்தடத்தை யாழைவென்று தோய்வதன்றி ஒருவன் வலிதிற்கொள்ளக்கருதின், ஆணையே, போரிற்குளிக்குவம்; இவடான் வெல்லின் இவளைப்பெறுதற்கு நல்வினையுண்டாம்படி தவஞ் செய்குவமென்பாருமென்க.

ஆணை - வஞ்சினம். (கசஅ)

641. குலிகச் செப்பன கொம்மை வரிமுலை
நலியு மெம்மையென் பார்நல்ல கண்களால்
வலிய வாங்கியெய் தாளெம்மை வாழ்கலேம்
மெலிய வாவி விடுக்குமற் றென்மரும்.

---

கூறினர்' (சீவக. 164, ந.): ஐம்பாற்பகுதி - குழல், அளகம், கொண்டை, பனிச்சை, துஞ்சை என்பன; சீவக. 2437, ந. [6] பேதுறல் - மயக்கமுறுதல். [7] கொலோ என்பதில் உள்ளது.

640. வீணைவென்று - யாழ் வாசித்தலில் வென்று. முலைத்தடத்தை வீணைவென்று தோய்வதல்லால் எனமாறி இயைக்க. பிறன் - ஒருவன். வௌவுமேல் - கொள்ளக் கருதினால். பிறன் வௌவுமேல் ஆணை என மாறுக. கோணைப் போர் - மாறுபாட்டையுடைய போர்; ஐ : சாரியை (சீவக. 816, ந). அன்றெனின் - காந்தருவதத்தை வென்றால். மாண - இவளை நாம்பெற நல்வினை உண்டாகும்படி.

641. கொங்கைக்குக் குலிகச் செப்பு : "கொங்கை செம்பொன் செய் குலிகச் செப்பு" (கம்ப. மாரீச. 68). கொம்மை - பெருமை. எம்மை நலியும், வாழ்கலேம் என்பார் எனமாறி இயைக்க. வலிய வாங்கி - நிரம்ப வலித்து. வாங்கிக் கண்களால் எம்மை எய்தாள் எனமாறுக. மெலிய = மெல்லிய - தேய்ந்த. விடுக்கும் - போம்.

நலிதல் : பிறவினை. [1] மெலிய : விகாரம்.

(இ - ள்.) முலை எம்மைவருத்தும் ; இனி வாழ்கலேமென்பாரும் ; நிரம்ப வலித்துக் கண்ணுகிய அம்பாலே எம்மை எய்தாள் ; அதனுற் றேய்ந்த ஆவி போமென்பாருமென்க. (கசக)

642. ஊட்டி யன்ன வுருக்கரக் காரடி
நீட்டி மென்மலர் மேல்வந்து நின்னலம்
காட்டி யெம்மைக்கொன் றுயெனக் கைதொழு
தோட்டை நெஞ்சின ராயுழல் வார்களும்.

(இ - ள்.) இயல்பான சிவப்பால் அரக்கூட்டியன்ன நிறத்தோடு பொருந்திய அடிநீட்டப்பொருததனை நீட்டி வந்து நலத்தைக்காட்டி வருத்தினுயென்று கூறித் தொழுது [1] அறைபோய நெஞ்சினராய் வருந்துவார்களுமென்க. (கருo)

(வேறு)

643. திங்கண் மதிமுகத்த சேலும் பவளமுஞ் சிலையு முத்தும், கொங்குண் குழலாண்மெல் லாகத்த கோங்கரும்புங் கொழிப்பில் பொன்னும், அங்கை குழியா வரக்கீத்த செந்தளிர்நெய் தோய்த்த போலும், மங்கை மலரடியுந் தாமரையே யாமறியே மணங்கே யென்பார்.

[1] பிறையையுடையதொரு மதி, இல்பொருளுவமை ; திங்கள் மதித்த முகமுமாம். 'முகத்த', 'ஆகத்த' என்பன அவ்வவ்வுறுப்புக்களை யுணர்த்தும்.

---

(உரை) [1] மெல்லிய என்பது மெலிய என்றுயிற்று.

642. ஊட்டியன்ன உருக்கரக்காரடி : அகநா. 68. உருக்கரக்கு ஊட்டியன்ன ஆரடி நீட்டி என மாறியியைக்க. மலர்மேல் வந்து - நிலத்தின் மீது பரப்பப்பட்ட அனிச்ச மலரின்மீது நடந்துவந்து. நலம் - அழகு. கொன்றுய் - வருத்தினுய். ஓட்டை நெஞ்சினர் : பரி. 12 : 51 ; நள. சுயம். 64.

(உரை) [1] அறைபோய - ஓட்டையான, கீழற்றுப்போகிய ; "அறி வறை போகிய பொறியறு நெஞ்சத்து" (சிலப். 20 ; 25)

643. திங்கள் - இங்கே பிறை. பவளம் - வாய். சிலை - வில் ; என்றது புருவத்தை. கோங்கரும்பென்றது நகில்களை. அங்கை - உள்ளங்கை. குழியா - குழியாதனவாய். அரக்கு ஈத்த - செந்நிறம் ஊட்டப்பட்ட. நெய்தோய்த்த தளிர் ; "புதலிவ ரீங்கை, நெய்த்தோய்த் தன்ன நீர்நனை யந்தளிர்" (அகநா. 294 : 6-7). போலும் என்பதைச் சேல்முதலியவற்றேடு தனித்தனியே கூட்டுக.

(மேற்.) அடி. 1 : கல். 'திங்கண்முடி,' 1, மயில்.

(உரை) [1] சீவக. 165.

(இ - ள்.) குழலாளது முகத்திடத்தனவாகிய கண்ணும் வாயும் புருவமும் எயிறும், சேல் முதலியவற்றையொக்கும்; ஆகத்திடத்தன வாகிய முலையும் சுணங்கும், அரும்பையும் ஒட்டற்ற பொன்னையு மொக்கும்; அகங்கை குழியாவாய்த் தளிர் நெய்தோய்த்தவற்றை யொக்கும்; மங்கையடியும் தாமரைமலரையொக்கும். இவை வருத்தும் வருத்தமொன்றுமே இத்தன்மைத்தென்று யாம் அறியாதிருக்கின்றே மென்பாருமென்க.

இவற்றில் நம்மை வருத்துகின்றது இஃதென்று யாமறியே மென்றுமாம். அணங்கேயென்னுமேகாரம் தேற்றம். (கூகூக)

644. பொன்மகரம் வாய்போழ்ந்த முத்தநூ ரேள்யாப்பிற் பொலிந்த வாறும், மின்மகரங் கூத்தாடி வில்லிட் டிருங்குழைக் கீழிலங்கு மாறும், மன்மகர வெல்கொடியான் மால்கொள்ளக் கால்கொண்ட முலையி னுளை, என்னரம்பை யென்னுவா றென்பா ரிமைக்குங்க ணிவையோ வென்பார்.

மகரம் தன்வாய் அங்காத்தலிற்றோன்றிய முத்து. மகரம் அசைதலால் ஒளியை வீசி விளங்குகிறபடியும். மன் - பெருமை.

(இ - ள்.) முலையினுளை அரம்பையென்னுதபடி மாறுபட்டு இம் முத்து வடம் தோட்கட்டிற்பொலிந்தவாறும், இக்குழை காதில் இலங்கு மாறும் என்னென்பாரும், கண் இமைக்குமென்பார்க்கு, இம்மானிட மகளிர் கண்களோ இக்கண்களென்பாருமென்க.

ஓகாரம்: எதிர்மறை. இப்பூண்கள் கந்தருவர்செய்தனவாகலின், இவள் தெய்வமன்றென்று தெளிவித்தவென்றும், கண் இமையாநிற்கவும் மானிடரில் விசேடமுண்டென்றும் கூறினர்; இது, "[1] வண்டே யிழையே வள்ளி பூவே" (தொல். களவு. 4) என்னும் சூத்திரவிதி. (கூகூ௨)

645. கோள்வயிர நீளருவிக் குன்றிவர்ந்த செஞ்சுடர்போற் கொலேவேன் மன்னர், நீள்வயிர வெண்மருப்பி னீலக் களிற் றின்மே னிரைத்தார் பொங்கத், தோள்வயிரந் தோன்றத் தொழுவா ரழுஆநைவார் தொக்கோர் கோடி, வாள்வயிரம் விற்கு மடநோக்கி யார்கொலோ பெறுவா ரென்பார்.

---

644. மகரம் - சுறாமீன் வடிவாகச் செய்யப்பட்ட ஆபரணம்; சீவக. 170. போழ்ந்த - பிளந்த. கூத்தாடி - கூத்தாடுதலால். வில்லிட்டு - ஒளியை வீசி. மகரவெல் கொடியான் - காமன். மால் - மயக்கம். கால்கொண்ட - இடங்கொண்ட. என்னுவாறு - என்று சொல்லாதபடி. என் என்பதைப் பொலிந்தவாறும், இலங்குமாறும் என்பவற்றோடு கூட்டுக.

(உரை) [1] 'பயின்றதன் மேல் அல்லது செல்லாத தாதூதும் வண்டு, ஒருவரால் இழைக்கப்பட்ட அணிகலங்கள், முலையினும் தோளினும் எழுதும் தொய்யிற் கொடி, கைக்கொண்டு மோந்து உயிர்க்கும் கழுநீர்ப்பூ' (தொல். களவு. 4, ந.)

645. கோள் - கொள்கை. வயிரமணியையுடைய அருவி. குன்று - உதயகிரி. செஞ்சுடர் - சூரியன். வயிரம் - கோளகை; சீவக. 83,

கோட்பாட்டையுடைய வயிரம். நீள்வயிரம்; ஆகுபெயரார் கோளகை. நிரைத்தார் - வாகைத்தார்; யாழ்வென்று சூடுதலின். பொங்க - மிகுத்துக் காட்ட. தோள்வயிரம் தோன்ற - தோள்வலி உலகெங்கும் பாக்க; இவளைப் பெறவே எல்லாவற்றானும் தோள்வலி யுண்டாமென்றார். அது, " திருமகளிவளைச் சேர்ந்தான் " (சீவக. 744) என்னுங் கவியானுமுணர்க. தொழுவார்க்கு இவர்ந்த செஞ்சுடரென்க. அழுது நைவாரென்றது அவலம்; " இளிவே யிழவே " (தொல். மெய்ப் பாடு. 5) என்னுஞ்சூத்திரத்தில் அசைவாவது பழைய தன்மைகெட்டு வேறொருவாறாய் வருந்துதலாதலின், இவரும் அத்தன்மையெய்தி அவலமுற்றாரென்க. இது தம் அசைவிற் றோன்றிய அவலம். கோடி - அநேகர். வாள் தனது செற்றத்தைக் கைவிடுதற்குக் காரணமான நோக்கி. [1] ஒருவனென்று துணியலாகாமையிற் பன்மையாற் கூறினார்.

(இ - ள்.) மன்னர் குன்றிலே தொழுவார்க்கு இவர்ந்த சுடர்போலே இருந்து அழுது நைவாராய்த் தொக்கு ஒரு கோடியாயிருந்தவர்களில் இம்மட நோக்கியைத் தார்பொங்கத் தோள்வயிரம் தோன்றப் பெற விருக்கின்ற நல்வினையுடையார் யாரென்பாருமென்க. (கரு௩)

646. பைம்பொ னிமிர்கொடி பாவை வனப்பென்னுந் தளிரை யீன்று, செம்பொன் மலர்ந்திளையார் கண்ணென்னுஞ் சீர்மணி வண்டுழலச் சில்லென், றம்பொற் சிலம்பரற்ற வன்னம் போன் மெல்லவே யொதுங்கி யம்பூஞ், செம்பொற் புரிசை யடைந்தாள்செந் தாமரைமேற் றிருவொ டொப்பாள்.

வனப்பென்னுந்தளிரையீன்று பொன்னைப் பூத்துக் கண்ணென்னும் வண்டுழலும்படி பொன்னாய் வளர்ந்ததொரு கொடியென்று ஒருபெயர். ஒடு : எண்ணொடு.

(இ - ள்.) அலர்தார்மன்னர் அங்ஙனங்கூறி, பின்பு, அவரும் ஒழிந்தோரும்என்மரும் உழல்வாரும் என்பாருமாகாநிற்ப, கொடியையும் பாவையையும் திருவையுமொப்பாள், சிலம்பரற்ற அன்னம்போல நடந்து சென்று புரிசையைச் சேர்ந்தாளென்க. (கரு௪)

---

உரை. நீலக்களிறு, சீவக. 148, அடிக். கோடி பலரென்னும் பொருளில் வந்தது. நோக்கி - நோக்கத்தையுடையாளை.

(உரை) [1] சீவக. 754, ந.

646. கொடி பாவை ஒப்பாள் - கொடியையும் பாவையையும் போன்றவள். வனப்பு - பல உறுப்பும் திரண்டவழிப்பெறுவதோர் அழகு (தொல். செய். 235, பேர்.) செம்பொன் என்றது சுணங்கை. இளையார் - இளைய ஆடவர். மணிவண்டு - நீலமணியைப் போன்ற வண்டு. ஒதுங்கி - நடந்து. புரிசை - மண்டபத்தின் மதில்.

647. பட்டியன்ற கண்டத் திரைவளைத்துப் பன்மலர்நன் மாலை நாற்றி, விட்டகலாச் சாந்தி னிலமெழுகி மென்மலர்கள் சிதறித் தூமம், இட்டிளைய ரேத்த விமையார் மடமகள்போ லிருந்து நல்யாழ், தொட்டெழீஇப் பண்ணெறிந்தாள் கின்னரரு மெய்ம்மறந்து சோர்ந்தா ரன்றே.

நாற்றம் விட்டகலாத. [1] தூமம் : ஆகுபெயர்.

(இ - ள்.) பல்வண்ணத்திரையை வளைத்து நாற்றி மெழுகிச் சிதறி அகிலைப் புகைத்து இளையரேத்தாநிற்க, இமையார்மடமகள் போலே இருந்து யாழை யெடுத்துப் பண்ணையெழுப்பி நரம்பைத் தெறித்தாள் : அப்பொழுது கின்னரரும் சோர்ந்தாரென்க.

யாழ்மண்டபத்தேயிருந்து [2] அவைப்பரிசாரமாகப் பாடுகின்றமை கூறுகின்றார். கண்டத்திரை - கண்டமாகிய திரை. (கருரு)

## (வேறு)

648. புன்காஞ்சித் தாதுதன் புறம்புதையக் கிளியெனக்கண்
டன்புகொண் மடப்பெடை யலமந்தாங் ககல்வதனை
என்புருகு குரலழைஇ யிருஞ்சிறகர் குலைத்துகுத்துத்
தன்பெடையைக் குயிறழுவத் தலைவந்த திளவேனில்.

(இ - ள்.) தாதிலே தன்புறம் புதைதலாலே பெடை அதனைக்கண்டு கிளியென்று அலமந்து அவ்விடத்துநின்றும் போகின்றவதனைத் தன் குரலாலே யழைத்துச் சிறகையசைத்துத் தாதை உதிர்த்துக் குயில் பெடையைத் தழுவும்படி இளவேனில் அவ்விடத்தே வந்ததென்க (கருசு)

---

647. பட்டு இயன்ற - பட்டினுற் செய்யப்பட்ட. கண்டத்திரை - பல நிறத்தால் கூறுபட்ட திரை (முல்லைப். 44, ந.); சீவக. 873 : பெருங். 1. 37 : 103; 40 : 115. நாற்றி - தொங்கவிட்டு. அகலாவென்பதற்கு நாற்றம் என்னும் எழுவாயை வருவிக்க. இளையர்-இளைய மகளிர். இமையார் - தேவர். எழீஇ - எழுப்பி. பண் - பண்ணையுடைய நரம்பு; ஆகு பெயர். கின்னரர் - தேவகணத்துள் ஒருவகையினர்; இசையறிவிற் சிறந்தோர்.

(உரை) [1] தூமம் அகிலுக்கு ஆயிற்று. [2] சீவக. 651, ந. ; "அவைப் பரிசாரங் கடத்துளிப் போக்கி" (பெருங். 1. 37 : 111). அவைப்பரிசாரம்- சபையை வணங்கல் ; ஸபாஸ்தவம், விநயப்ரசாரம் என்றும் கூறப்படும்.

648. புறம்புதைய - முதுகை மறைத்தலால். அலமந்து - மனம் சுழன்று. பெடையாகிய அகல்வதனை. என்பு உருகு குரல் - என்பும் உருகுதற்குக் காரணமான குரலால். அழைஇ - அழைத்து. உகுத்து - காஞ்சித் தாதை உதிர்த்து. குயில் - ஆண்குயில்.

649. தண்காஞ்சித் தாதாடித் தன்னிறங் கரந்ததனைக்
கண்டாஞ மடப்பெடை கிளியெனப்போய்க் கையகல
நுண்டூவி யிளஞ்சேவ னோக்கோடு விளிபயிற்றித்
தன்சிறகாற் பெடைதழுவத் தலைவந்த திளவேனில்.

(இ - ள்.) தாதையளைந்து தன்னிறம் கரந்த சேவலைக்கண்டு அமையாத பெடை கிளியெனக்கருதிக் கைவிட்டுநீங்குதலாலே சேவல் இங்கிதமான நோக்கோடே அழைத்தலைப் பலகால் நிகழ்த்திப் பெடையைச் சிறகாற்றழுவும்படி இளவேனில் அவ்விடத்தே வந்ததென்க. (கருஎ)

650. குறுத்தாட் குயிற்சேவல் கொழுங்காஞ்சித் தாதாடி
வெறுத்தாங்கே மடப்பெடை விழைவகன்று நடப்பதனை
மறுத்தாங்கே சிறகுளர்ந்து மகிழ்வாஞக் கொளத்தேற்றி
உறுப்பிஞ லடிபணியத் தலைவந்த திளவேனில்.

(இ - ள்.) சேவல் தாதையாடுதலாலே பெடை கிளியென்று அப்பொழுதே வெறுத்து வேட்கைநீங்கிப் போகின்றதனைப் போக்கைத் தவிர்த்து உளர்ந்து தேற்றித் தலையால் வணங்கும்படி இளவேனில் அவ்விடத்தே வந்ததென்க.

பங்குனியிலும் சிறிது இளவேனில் தோன்றுதலின், இதுகூறிஞர். வேட்கை விளைகின்ற பருவத்தாளாதலின் இதுகூறிஞர்.

இம்மூன்றும் (648 - 650) ஒருபொருண்மேல் மூன்றடுக்கித் [1] தாழம் பட்ட ஓசைபெற்றுவந்த [2] கொச்சகவொருபோகு. ஒருபோகென்பது [3] பண்புத் தொகைப்புறத்தன்மொழி. இது, "தரவின்ருகி" (தொல். செய். 149) என்னுஞ் சூத்திரவிதி. [4] இசைநூலோர், முகம் நிலை முரியென்பனவற்றில் நிலையென்ப இதனை. (கருஅ)

---

649. தாதுஆடி - தாதை அளைந்து. தன்நிறம் - கரிய நிறம். கரந்ததனை - மறைந்த சேவலை. ஆஞ - அன்பு அமையாத. நோக்கு - பார்வை. விளி - அழைத்தல்.

650. குறுத்தாள்: வலித்தல் விகாரம். விழைவு அகன்று - அன்பு நீங்கி. ஆஞக்கொள - அமையாமல் கொள்ளும்படி. தேற்றி - தான் ஆண் குயிலென்பதைத் தெளியச் செய்து.

648-50. காஞ்சிமலர்த்தாது நீலநிறத்தது; "மீனேற்றுக் கொடியோன்போன் மிஞிறார்க்குங் காஞ்சி" (கலித். 26 : 3). இக்கவிகளின் பொருள், "குறுஞ்சினைப் புன்னை நறுந்தா தாடி" (பெருங். 3. 6 : 9) என்பது முதலிய அடிகளில் ஒரு வகையாக அமைந்திருத்தல் காண்க.

(உரை) [1] தாழம் - தாழ்தல்; "தாழம் பறை" (பெருங். 1. 56 : 189). [2] கொச்சகம் இழத்தலிற் கொச்சக ஒரு போகாயிற்று. (தொல். செய். 148, பேர்.) [3] (தொல். செய். 148, ந.) [4] 'இனி இசைநூலாரும் இத்தரவு முதலாயினவற்றை முகம், நிலை, கொச்சகம், முரி எனவேண்டுப. கூத்த

(வேறு)

651. தளையவிழ் கோதை பாடித் தானமர்ந் திருப்பத் தோழி
விளைமதுக் கண்ணி வீணா பதியெனும் பேடி வேற்கண்
இளையவள் பாட வீர ரெழால்வகை தொடங்க லன்றேல்
வளையவ ளெழாலின் மைந்தர் பாடுக வல்லை யென்றாள்.

(இ - ள்.) கோதை அவைப்பரிசாரத்தைப் பாடி யாழ்வாசித்தற்குச் சமைந்திராநிற்க, அவள் தோழியாகிய வீணாபதியென்னும் பேடி இளையவள் பாட வீரரெல்லாரும் அதற்கேற்ப யாழின் கூறுபாட்டையெல்லாம் வாசிக்கத் தொடங்குக; அதற்கு இயையீராயின், வளையவளது யாழ் வாசினைபோலே மைந்தர் விரையப் பாடுவீராகவென்றாளென்க.

தொடங்கல் : அல்லீற்று வியங்கோள்; "இற்றெனக்கிளத்தல்" (தொல். கிளவி. 19) போல. இதற்கு [1] உத்தரங்கூறலாற்றாது அவ ளுடனே நகையாடுகின்றார். (௬௫௯)

(வேறு)

652. வேயே திரண்மென்றோள் வில்லே கொடும்புருவம்
வாயே வளர்பவள மாந்தளிரே மாமேனி
நோயே முலைசுமப்ப தென்றார்க் கருகிருந்தார்
ஏயே யிவளொருத்தி பேடியோ வென்றார்
எரிமணிப்பூண் மேகலையாள் பேடியோ வென்றார்.

(இ - ள்.) தோள் வேயே; புருவம் வில்லே; வாய் பவளமே; மேனி தளிரே; இவை இத்தன்மையவாகவும் முலைகண்டிலேம்; இவட்கு முலை சுமத்தல் நோயோவென்று ஐயுற்று வினவினார்க்கு அருகிருந்தவரும் முலைகாணாமையால் என்னே என்னே இவளொருத்தி பேடியோவென்று ஐயுற்றார்; அதுகேட்டுச் சிலர் தத்தையுடன் வந்தாளென்று யாம் கேட்டிருந்த பேடி இவளோவென்றாரென்க. (௬௬௦)

---

நூலார் கொச்சகம் உள்வழி அதனை நிலைபெற அடக்கி முகம், நிலை, முரி யென மூன்றாக வேண்டுப' (தொல். செய். 132, பேர்.); 'இனி இசைத் தமிழில் வருங்கால் முகநிலை, கொச்சகம், முரியென்ப ஒருசாராசிரியர்' (சிலப். 6: 35, அடியார்.)

651. கோதை - காந்தருவதத்தை. தோழியாகிய வீணாபதி. இளைய வள் : காந்தருவதத்தை. பாட - மிடற்றுப்பாடலைப் பாட. எழால்வகை - யாழின் கூறுபாட்டை. தொடங்கல் : வியங்கோள்; "ஆக்கமொடு கூறல்" (தொல். கிளவி. 20) என்பதுபோல. எழாலின் - யாழ்வாசித்தலைப் போல.

(உரை) [1] உத்தரம் - விடை.

652. வேய் - மூங்கில். கொடும்புருவம் - வளைந்த புருவம். மாமேனி - மாமை நிறத்தையுடைய மேனி. நோய் - வருத்தம். ஏ, ஏ : இசைநிறை. மேகலையாள் : காந்தருவதத்தையினுடைய.

653. பலிகொண்டு பேராத பாச மிவள்கண்
ஒலிகொண் டுயிருண்ணுங் கூற்றமென் றெல்லே
கலிகொண்டு தேவர் முலைகரந்து வைத்தார்
இலைகொண்ட பூணினீ ரென்றெழினி சேர்ந்தாள்
இலங்குபொற் கிண்கிணியா ணக்கெழினி சேர்ந்தாள்.

கொண்டு - கொள்ள. ஒலி - தழைத்தல்; "ஒலிதெங்கு" (பதிற். 13) போல. எல்லே - வெளியே. கலி - ஆரவாரம்.

(இ - ள்.) அவள் அதுகேட்டு, பூணினீர், பிரமனுர் படைக்கின்ற பொழுதே இவள்கண் உயிர்ப்பலிகொள்ளுதலாலே தன்கொலைத்தொழிலின் மீளாத காலபாசம், இவடான் எல்லே சென்று உயிரையுண்ணுங் கூற்றமென்று கருதி, எனக்கு முலையை மறைத்துவைத்தாரென்று கூறிப் போய்த்திரையைச் சேர்ந்தாள்; அக்கலியை உட்கொண்டு தத்தையும் நக்கு இருந்தவிடத்தினின்றும் வந்து திரையைச்சேர்ந்தாளென்க.

"[1] கடாமுங் குருதியுங் கால்வீழ்ந்த பச்சைப், படாமும் புலித்தோலுஞ் சாத்தும் பரமன், இடாமுண்ட நெற்றியா னெஞ்ஞான்றுங் கங்கை, விடாமுண்ட வார்சடையான் வெண்ணீ றணிந்தோன், மெய்யுறு நோயில்லை வேறோர் பிறப்பில்லை, ஐயுறு நெஞ்சில்லை யாகாத தொன்றில்லை" என நான்கடிச்செய்யுள் முடியவும் ஈற்றடி இரண்டுமிக்கு வேறுபட வந்த கொச்சகமென்று கூறி, ஒழிந்தனவும் பிறவேறுபாட்டான் வருவனவும் வந்துழிக் காண்க [2] வென்றமையின், இக்கவியிரண்டும் (652 - 3) ஒரோவோரடிமிக்கு வேறுபட வந்த கொச்சகவொரு போகாம். (கசுரு)

(மேற்.) அடி, 4 : தொல். புணரியல். 38, இடை. 34, ந; தொல். புணரியல். 23, தெய்வச்; தொல். செய். 149, ந. நன். உயிரீற்றுப். 12, இடை. 3, மயிலை; சங்கர; இ-வி. உயிரீற்றுப். 16, இடை. 28; மு. இ-வி. சூ. பெயர். 7, சிவஞா.

653. பேராத - நீங்காத. பலிகொண்டு பேராத பாசம் : பதிற். 71. கண்ணுக்குப் பாசமும் வீணைபதிக்குக் கூற்றமும் உவமைகள். எல்லே; இரக்கக்குறிப்பு இடைச்சொல்லுமாம்; "எல்லே யிளங்கிளியே" (திருப்பாவை, 15). இலைகொண்ட - இலையின் வடிவத்தைக் கொண்ட. கிண்கிணியாள் : காந்தருவதத்தை. நக்கு - சிரித்து. எழினி - திரை.

(மேற்.) மு. இ-வி. சூ. பெயர். 7, சிவஞா.

(உரை) [1] தொல். செய். 149, பேர். ந. மேற். [2] என்றமையினென்று இங்கே சுட்டியது பேராசிரியருரையை.

(வேறு)

654. நுண்டுகி லகலல்கு ஞெசித்த வெம்முலை
உண்டிவ ணுசுப்பெனா வுரைப்பி னல்லது
கண்டறி கிலாவிடைக் காம வல்லியாழ்
கொண்டவர் குழாத்திடைக் கொடியி னெல்கினாள்.

(இ - ள்.) அல்குலும் முலையும் இவட்கு இடையுண்டெனக் கூறுமது வொழிந்து கட்புலனாகாத இடையையுடைய தத்தை, யாழையெடுத்துத் தோழியர் குழாத்திடையே கொடியைப் போல ஒதுங்கினாளென்க.

இதனால், திரையருகினின்றும் யாழ்வாசிக்கின்றவிடத்து ஏறப் போகின்றாளென்றார். நொசித்தமுலை - நோக்கினார்நெஞ்சை வருத்தின முலை. (கசுஉ)

655. பளிக்கொளி மணிச்சுவ ரெழினி பையவே
கிளிச்சொலி னினியவர் நீக்கக் கிண்கிணி
ஒளிக்குமின் றாடவ ருயிர்க ளென்னநொந்
தளித்தவை யிரங்கச்சென் றணையி லேறினாள்.

(இ - ள்.) அவள், கிளிச்சொல்லிற்காட்டில் இனிய சொல்லையுடையார் பளிங்காகிய ஒளிமணியாற்செய்த சுவரை மறையவீழ்த்த திரையைப் பையவே நீக்காநிற்க, கிண்கிணி, இன்று ஆடவருயிரெல்லாம் போமென்று நொந்து அருள்பண்ணி அவையிரங்க, நடந்துசென்று அணையிலே ஏறினாளென்க. (கசுங)

656. உறைகழித் திலங்குவா ளுடற்றுங் கண்ணினாள்
மறையொளி மணிச்சுவ ரிடையிட் டித்தலை
இறைவளை யாழ்தழீஇ யிருப்ப வத்தலைக்
கறைகெழு வேலினார் கண்ணி தீந்தவே.

654. நுண்துகில் - நுண்ணிய இழையாலான ஆடை. அல்குலும் முலையும். நுண்டுகில்......உண்டிவணுசுப்பு : திருச்சிற். 4. காமவல்லி : காந்தருவதத்தை. யாழ்கொண்டு. அவரென்றது தோழியரை.

655. சுவரெழினி - சுவரை மறைத்த திரை. பைய - மெல்ல. கிண்கிணியிரங்கவென இயைக்க. இரங்க - ஒலிப்ப; வருந்த என்று வேறொரு பொருளும் தோற்றியது.

656. வாள் உடற்றும் - வாளோடு மாறுபடும். கண்ணினாள் : காந்தருவதத்தை. இறை - கை. வளையாழ்தழீஇ - வளைந்த கோட்டை யுடைய யாழைத் தழுவி; "வணர்கோட்டுச் சீறியாழ் வாடுபுடைத் தழீஇ" (புறநா. 155 : 1). கறை - இரத்தம். வேலினார் - வேலையுடைய அரசர். கண்ணி - முடியிற் சூடும் மாலை. தீந்த - கரிந்தன.

(மேற்.) அடி, 3 : கல். 'பொருப்பு', 10, மயில்.

(இ - ள்.) கண்ணினுள், தன்னைமறைத்தற்குச் சமைத்த பளிக்குச் சுவரை நடுவேயிட்டு, வளைந்த யாழைக் கையாலே தழீஇ உள்ளே யிருப்ப, அவளைக் கண்டு புறத்திருந்த வேலினுர்கண்ணி காமத்தீயால் தீந்தனவென்க.

பளிங்கிற்கு இரண்டுபுறத்தோரும் தோன்றுவர். இறை : [1] ஆகு பெயர். "பதுமம் வீரஞ் சிங்கம் பிரமரம், பாத விலக்கண மஞ்சானு மண்டிதம், விதியுறு பங்கோற் பவஞ்சுக மண்டிலம், மேலோர் விரும்பு மெய்யா சனமே." இவ்வொன்பதினும் இவள் பதுமாசனத்தேயிருந் தாள்; "நேரிருந்து காலடிகண் மாற்றிக் குதிமேலாப், பாரிருத்தல் பத்மா சனம்", "ஒன்பான் விருத்தியுட் டலைக்கண் விருத்தி, நன்பா லமைந்த விருக்கையள்" (சிலப். 8 : 25-6) என்றுர் பிறரும். (கசுச)

657\. சிலைத்தொழிற் சிறுநுத றெய்வப் பாவைபோற்
கலைத்தொழில் படவெழீஇப் பாடி ஞள்கனிந்
திலைப்பொழில் குரங்கின வீன்ற தூண்டளிர்
நிலத்திடைப் பறவைமெய்ம் மறந்து வீழ்ந்தவே.

[1] ஏறிட்ட விற்போலும் நுதல். தெய்வத்தாற்செய்த கொல்லிப்பாவை; "பூதம் புணர்த்த புதிதியல் பாவை" (நற். 192) என்றுர் பிறரும். **கலைத்தொழிலாவன :** "[2] பண்ணல் பரிவட்டணை யாராய்த றைவரல், கண்ணிய செலவு விளையாட்டுக் கையூழ், நண்ணிய குறும்போக்கு" (சிலப். 7 : 1) என்ற எட்டும். பண்ணல் - பாட நினைத்த பண்ணுக்கு இணை கிளை பகை நட்பான நரம்புகள் பெயருந்தன்மைமாத்திரை யறிந்து வீக்குதல். பரிவட்டணை - அவ்வீக்கின நரம்பை அகவிரலாலும் புறவிரலாலும் கரணஞ்செய்து தடவிப்பார்த்தல். ஆராய்தல் - ஆரோகண அவரோகணவகையால் இசையைத் தெரிவது. அநுசுருதியேற்றுதல், தைவரல். ஆளத்தியிலே நிரம்பப் பாடுதல், செலவு. பாடநினைத்த வண்ணத்திற் சந்தத்தை விடுதல், விளையாட்டு. வண்ணத்திற்செய்த பாடலெல்லாம் இன்பமாகப்பாடுதல், கையூழ். குடகச் செலவும் துள்ளற் செலவும் பாடுதல், குறும்போக்கு.

---

(உரை) [1] இறை - கையிலுள்ள கோடு; கைக்கு ஆனமையின் ஆகுபெயர்.

657\. சிலைத்தொழில் - வில்லின் தொழிலையுடைய. சிறுநுதல் : காந்தருவதத்தை; அன்மொழித்தொகை. கலை - இசைக்கலை. எழீஇ - யாழை வாசித்து. குரங்கின - வளைந்தன. பொழில் குரங்கின : பெருங். 3. 14 : 282-3. தூண்கள் தளிரையீன்றன : பாகவதம், 2. 2 : 2; 10. 8 : 32. பறவை - கின்னரப் பறவை : இஃது இசையறிவிற் சிறந்தது; சீவக. 723, உரை; பதிற். 43 : 21, உரை.

(மேற்.) அடி, 2-3 : நன். வினை. 32, மயிலை. பிரயோக. திங்ங. 5.

(உரை) [1] சீவக 2070, ந. [2] இவற்றிற்குரிய இலக்கணச் சூத்திரங் கள் அரும்பதவுரையிற் காணப்படும்.

**(இ - ள்.)** சிறுநுதல், பாவைபோலிருந்து யாழைவாசித்து அதற்கேற்பப் பாடினளாக; பொழில் உருகி வளைந்தன; தூண் தளிரையீன்றன; [3] கின்னரமிதுனங்கள் மெய்ம்மறந்து வீழ்ந்தனவென்க. (கசுரு)

(வேறு)

658. கருங்கொடிப் புருவ மேறா கயனெடுங் கண்ணு மாடா
வருங்கடி மிடறும் விம்மா தணிமணி யெயிறுந் தோன்றா
இருங்கடற் பவளச் செவ்வாய் திறந்திவள் பாடி னாளோ
நரம்பொடு வீணை நாவி னவின்றதோ வென்று நைந்தார்.

கொடி - ஒழுங்கு. கடி - விளக்கம்.

**(இ - ள்.)** அரசர்முதலாயினார், புருவம் ஏறா; கண்ணும் ஆடா; மிடறும் வீங்காது; எயிறும் தோன்றா; ஆதலால், இவள் வாய்திறந்து பாடினாளோ! அன்றி யாழ்தான் தனக்குரிய நரம்போடே [1] சாரீரவீணைக்குரிய நாவாலும் பாடிற்றோவென்று வருந்தினாரென்க.

இது பதினொருவகையிலும் உள்ளாளப்பாட்டுப் பாடுங்கால் இடை பிங்கலையை இயக்கமறுத்து [2] மூலாதாரமுதல் பிரமரந்திரமளவும் இயக்கமாக்கி நடுவு தொழில்வரப் பாடுதலென்றறிக: "உள்ளாளம் விந்துவுடனாத மொலியுருட்டுத், தள்ளாத தூக்கெடுத்த றன்படுத்தன் - மெள்ளக், கருதி நலிதல்கம் பித்தல் குடிலம், ஒருபதின்மே லொன்றென் றுரை", "கண்ணிமையா கண்டந் துடியா கொடிறசையா, பண்ணளவும் வாய்தோன்றா பற்றெரியா - வெண்ணிலிவை, கள்ளார் நறுந்தெரியற் கைதவனே கந்தருவர், உள்ளாளப் பாட லுணர்" (இசைமரபு) (கசுசு)

---

[3] கின்னர மிதுனங்கள் - ஒன்றையொன்று பிரியாதனவும் இசையறிவிற் சிறந்தனவுமான ஆணும் பெண்ணுமாகிய இரட்டைப் பறவைகள்; "மன்ன ரஞ்சுமது சூதனன் வாயிற் குழலி னோசைசெவி யைப்பற்றி வாங்க, நன்ன ரம்புடைய தும்புரு வோடு நாரத னுந்தந்தம் வீணை மறந்து, கின்னர மிதுனங்களுந் தந்தங் கின்னரந் தொடுகின்றிலோமென் றனரே" (பெரியாழ். 3. 6 : 5); "கிஞ்ஞர மிதுனங்கள் கிளர்ந்து தோன்றுமே" (சூளா. துறவு. 60); "பாடுகின்றன கின்னர மிதுனங்கள் பாராய்" (கம்ப. சித்திர. 12)

658. கருங்கொடிப் புருவம் : **மணி.** 3 : 119. கொடி - ஒழுங்கு; "ஆய்கரும்பின் கொடிக்கூரை" (**புறநா.** 22 : 15). விம்மாது - வீங்காது. **மணி** - முத்து. கருங்கொடி......தோன்றா : **திருவிளை.** விறகுவிற்ற. 29. செவ்வாய் திறந்து.........நவின்றதோ ; **மதுரைக்.** 217 ; **மலைபடு.** 534-6. **மு : பெருங்.** 1. 37 : 118-22.

(மேற்.) அடி, 4 : **மதுரைக்.** 217-8, **ந.**

(உரை) [1] சரீரத்தை வீணையாகக் கூறுவர் இசைநூலார்; **சிலப்.** 3 : 24-ஆம் அடியில் 'மிடறும்' என்பதன் உரையைப் பார்க்க; **தக்க.** 610, உரை. [2] **சீவக.** 735, **ந.**

(வேறு)

659. இசைத்திறத் தனங்கனே யனைய நீரினர்
வசைத்திற மிலாதவர் வான்பொன் யாழெழீஇ
விசைத்தவர் பாடலின் வெருவிப் புள்ளெலாம்
அசிப்பபோன் றிருவிசும் படைந்த வென்பவே.

(இ - ள்.) முன் மெய்ம்மறந்து வீழ்ந்த புள்ளெல்லாம், காமனை யொத்த நீராராகிய வசையிலாதோர் யாழைவாசித்து உச்சத்தே பாடுத லின், அதற்கு வெருவி அவரைச் சிரிப்பனபோல விசும்பைச் சேர்ந்தன வென்க.

அசிப்ப : [1] வடசொற்றிரிபு (கசுஎ)

660. மாதர்யாழ் தடவர வந்த மைந்தர்கைக்
கீதத்தான் மீண்டன கேள்விக் கின்னரம்
போதரப் பாடினுள் புகுந்த போயின
தாதலர் தாரினர் தாங்கள் பாடவே.

(இ - ள்.) மாதர் யாழை வாசித்தலாலே வந்த அறிவையுடைய கின்னரம், மைந்தர் யாழ்வாசினையாலே மீண்டுபோயின; அவை உள்ளேவந்து புகுதும்படி கண்டத்தாற் பாடினுள்; அப்பொழுது புகுந் தன; தாரினர்தாம் கண்டத்தாற் பாட மீண்டும் அவை போயின வென்க. (கசுஅ)

661. சுரும்பெழுந் திருந்துணுந் தொங்கல் வார்குழல்
அரும்பெற லவட்கிசை யரசர் தோற்றபின்
நரம்புறு தெள்விளி நவின்ற நான்மறை
வரம்பெறு நெறியவர் மலைதன் மேயினர்.

---

659. அனங்கன் - மன்மதன்; இவன் இசையறிவிற் சிறந்தவன்; சீவக. 607, 664, 729; பெருங். 3. 14 : 287-8. நீரினராகிய வசைத் திறம் இல்லாதவர்; வசைத்திறம் - பழிப்பின் கூறுபாடு. வெருவி - அஞ்சி. புள் - கின்னரப்பறவை. அடைந்த - அடைந்தன.

(உரை) [1] ஹஸிப்ப என்பதன் திரிபு.

660. மாதர் : காந்தருவதத்தை. வந்த கின்னரம் என்க. மீண் டன - திரும்பிச்சென்றன. போதர - மண்டபத்தின் உள்ளே வர. கின்னரமும் இசையும் : சூளா. கல்யாணச். 10; கம்ப. வரைக். 39. தாரினர் பாடப்போயின என்க; தாரினர் : அரசர்கள்.

661. உண்ணும் - தாதை உண்ணும். தொங்கல் வார்குழல் - மாலையையணிந்த நீண்ட கூந்தலையுடைய. அரசர் இசை தோற்றபின் எனமாறுக. நரம்புறு தெள்விளி - வீணையில் பொருந்திய தெளிந்த பாட்டு. வரம்பெறு - மேன்மையைப் பெற்ற. நெறியவர் : அந்தணர்.

எழுந்திருந்துண்ணும் : “ நறுந்தா தூதுந் தும்பி, கையாடு வட்டிற் ஞேன்றும் ” (அகநா. 108) என்ருர் பிறரும். வரம் - வேண்டுவ கோடல்.

(இ - ள்.) குழலையுடைய பெறுதற்கரியவட்கு அரசர் இசையைத் தோற்ற பின்பு நரம்போடுசேர்ந்த பாட்டிலே பயின்ற அந்தணர் வாசித்தலைப் பொருந்திஞரென்க.

‘ சுரும்பெறிந்திருந்து ’ என்றும் பாடம். (கசு௯)

(வேறு)

662. திருமலர்க் கமலத் தங்கட் டேனின் முரல்வ தொப்ப
விரிமலர்க் கோதை பாட வெழால்வகை வீரர் தோற்ருர்
எரிமலர்ப் பவளச் செவ்வா யின்னரம் புளர மைந்தர்
புரிநரம் பிசைகொள் பாட லுடைந்தனர் பொன்ன ஞட்கே.

(இ - ள்.) கோதை, தாமரைப்பூவிலே தேனினம் பாடுந்தன்மையை யொப்பக் கண்டத்தாற் பாட அந்தணர் அதற்கேற்ப யாழை வாசித்தலைத் தோற்ருர் ; முருக்கிதழ்போலும் செவ்வாயினையுடையாள் நரம்பைத் தடவ மைந்தர் அந்நரம்பினிசையைக் கொண்ட கண்டப் பாடலை அவட்குத் தோற்ருரென்க.

“ அந்த ணளர்க் கரசு வரைவின்றே ” (தொல். மரபு. 82) என்றதஞல் ‘ வீரர் ’ என்ருர். (கஎ௦)

663. வாலரக் கெறிந்த காந்தண் மணியரும் பனைய வாகிக்
கோல்பொரச் சிவந்த கோலக் குவிவிரன் மடந்தை வீணை
நூல்பொரப் புகுந்த நுண்ணூல் வணிகருந் தொலைந்து மாதோ
கால்பொரக் கரிந்த காமர் பங்கயப் பழன மொத்தார்.

662. திருமலர்க் கமலத்......கோதைபாட : “ திருமலர்த் தாமரைத் தேன்முரன் றதுபோல்......இன்குர லெழுவ ” (பெருங். 1. 37 : 120-22). தேனினம் - வண்டின் கூட்டம். கோதை : காந்தருவதத்தை. பாட - கண்டத்தால் பாட. எழால்வகை - யாழின் கூறுபாடு. வீரர் - அந்தணர். எரிமலர் - முருக்கம்பூ. எரிமலர்ச் செவ்வாய் : பெருங். 1. 37 : 119. செவ்வாய் : காந்தருவதத்தை. நரம்பு உளர - யாழின் நரம்பைத்தடவ. மைந்தர் : அந்தணர். நரம்பிசை கொள்பாடல் - நரம்பின் இசையைக் கொண்ட கண்டப்பாடலை. பொன்னனுட்கு உடைந்தனர் என்க.

663. கோல் - யாழ் நரம்பு. கோலக் குவிவிரல் - அழகையுடைய குவிந்த விரல். விரலுக்குக் காந்தள் : பொருந. 33 ; குறுந். 167 : 1. மடந்தை - காந்தருவதத்தைக்கு. வீணை நூல் பொர - வீணையை இசை நூல்வழியே வாசிக்க. மாது, ஓ ; அசை. கால்பொரக் கரிந்த - வாடைக் காற்றுப் பொருதலாலே கருகிப்போன.

(இ - ள்.) நரம்பைத் தடவுதலாலே அரத்தமூட்டின அரும்பையனைய வாகிச் சிவந்த விரலையுடைய மடந்தைக்கு யாழை இசைநூலோடே வாசிக்கத் தொடங்கிய பூணுநூலையுடைய வணிகருந் தோற்றுக் கரிந்த தாமரைப் பழனத்தையொத்தாரென்க. (௬௭௧)

664. தேனுயர் மகர வீணைத் தீஞ்சுவை யிவளை வெல்வான்
வானுயர் மதுகை வாட்டும் வார்சிலைக் காம னுகும்
ஊனுயர் நுதிகொள் வேலீ ரொழிகவீங் கில்லை யென்றான்
கானுய ரலங்கன் மாலைக் கட்டியங் கார னன்றே.

தேனினமிக்க வார்சிலை.

(இ - ள்.) கட்டியங்காரன், தசைமிக்க முனைகொண்ட வேலினீர், இவளை மகரயாழின் இனிமையை வெல்வான் வானிலுள்ளாரது அறிவைக் கெடுக்குங் காமனுயிருக்கும்; இவ்வுலகில் இல்லையல்லவோ? ஆதலின் இவ்வியாழ் வாசினை இனி ஒழிவதாகவென்றானென்க. (௬௭௨)

665. (௧) மறுமுயற் கிவர்ந்த வேக மாசுண மடையப் பட்ட
நிறைமதி போன்று மன்ன ரொளிகுறைந் துருகி நைய
அறுபகல் கழிந்த பின்றை யந்நகர்க் காதி நாய்கன்
சிறுவனேர் சிங்க வேற்றை சீவக சாமி யென்பான்.

666. (௨) தம்பியுந் தோழன் மாருந் தானுமற் றெண்ணிச் சூழ்ந்து
வெம்பிய வீணைப் போருட் செல்குவம் யாமு முன்னே
தும்பறப் புத்தி சேன சொல்லிது குரவற் கென்னக்
கந்துகற் கவனுஞ் சொன்ன னவனிது விளம்பி னனே.

இவையிரண்டும் ஒருதொடர்.

664. தேன் உயர் - வண்டுகள் மிக்க. வான் - வானிலுள்ள தேவர்; ஆகுபெயர். மதுகை - இங்கே அறிவு. தேனுயர் வார்சிலை என இயைக்க. காமனுடைய வில்லின் நாண் வண்டுகளாகக் கூறப்படுமாதலின் தேனுயர் வார்சிலை என்றார். ஊன் - தசை. வேலீர், இங்கில்லையன்றே ஒழிக என்றான் என்க; இங்கில்லையன்றே - காந்தருவதத்தையை வெல்பவர் இவ்வுலகில் இல்லையல்லவா. ஒழிக - (ஆதலின்) இனியாழ் வாசித்தல் நீங்குவதாக. கான் - வாசனை.

665. முயற்கு - முயலைக் காத்தற்பொருட்டு; மறு இவர்ந்த நிறை மதி அடையப்பட்ட மாசுணவேகம் போன்று என மாறியியைக்க. நிறைமதி - பூரண சந்திரன். மாசுணவேகம்போன்று - பாம்பினது விடவேகத்தாலே ஒளி குறைதல் போன்று; மாசுணம் - இராகுவென்னும் பாம்பு. நாய்கனுடைய சிறுவன்; நாய்கன் - கந்துக்கடன். சிங்க ஏற்றை - ஆண்சிங்கம்; சீவக. 432, ந.

666. சூழ்ந்து வெம்பிய - அரசர் முதலியோர் ஆராய்ந்து மனம் வெதும்பிய. வீணைப்போருள் முன்னே யாமும் செல்குவம் என்று

(இ - ள்.) முயலைக்காத்தற்பொருட்டாகத் தன்னிடத்தே மறுப்பரந்த நிறைமதி தன்னை அடைந்த மாசுணத்தினது வேகத்தாலே ஒளிகுறையு மாறு போன்று மன்னர் ஒளி குறைந்து நையாநிற்க ஆறுநாள்சென்ற பின்பு, நாய்கன் சிறுவன், ஏற்றை, சீவகசாமியென்பான்; அவன் தானும் தம்பியும் தோழன்மாருமாக விருந்து, அரசர் முதலாயினர் சூழ்ந்து மாறுபட்ட யாழ்ப்போரிலே இத்திரள் குலைவதற்குமுன்னே யாமும் செல்வேமென்றெண்ணி, இக்காரியத்தைப் புத்திசேனனே, நீ சென்று கன்னியிடத்து வேட்கையாற் செல்கின்றனல்லன்; [1] கல்விதோற்றுவித் தற்குச் செல்கின்றனென்று கொள்ளும்படி குரவற்குக் கூறென்று கூற, கந்துகனுக்குப் புத்திசேனனும் கூறினனாக, கந்துகன் இவ்வார்த் தையைக் கூறினனென்க.

அது மேற்கூறுகின்றார் [2]ஆறுநாள் ஒருமரபு. [3]தும்பற - சிம்பற. (கஎரு-ச)

667. (க) ஐயனுக் கமைந்த நீரா ரறுபத்து நால்வ ரம்பொன்
வையகத் தமிர்த மன்னர் வாக்கமை பாவை யொப்பார்
எய்திய விளமை மிக்கா ரியைந்தன ரென்று பின்னும்
கையமை சிலையி னாற்குக் கந்துக னிதுவுங் கூறும்.

இதுமுதல் "இன்னன்" (சீவக. 693) என்னுமளவும் ஒருதொடர்.

668. (உ) மறைவல்லாற் குரைக்கும் போழ்திற் கோயிலு ணின்று மாலைப்
பிறைவெல்லு நுதலி னாளோர் பெண்கொடி வந்து கூந்தல்
உறைசெல நீக்கிப் பைந்தா ளொண்மணிக் குவளை நீட்ட
நறைவெல்லு நாக மாலை நோக்கொடு பூக்கொண் டானே.

இவையிரண்டும் ஒருதொடர்.

எண்ணி யென இயைக்க. தும்பற - சிக்கற. புத்திசேனன் : இவன் சீவகன் தோழர் நால்வருள் ஒருவன். இது - இக்காரியத்தை. புத்தி சேன, தும்பறக் குரவற்கு 'இது சொல் என்ன' எனமாறி இயைக்க. குரவற்கு - கந்துகனுக்கு. என்ன - என்று சீவகன் கூற.

(உரை) [1] இசைக்கல்வி. [2] சீவக. 1917, 2193, 2393. [3] சீவக. 559, அடிக்.

667. ஐயன் - சீவகன். பாவை - கொல்லிப்பாவை. சிலையினாற்கு இதுவும் - சீவகனுக்குள்ள சிறிது தாழ்வும்.

668. மறை வல்லான் - புத்திசேனன் ; இவன் அந்தண வருணத்த வன் ; சீவக. 671. கூந்தலாகிய உறையை. தாள் ஒண்மணிக்குவளை - தாளையுடைய நீலமணிபோலும் குவளைப்பூ. நீட்ட - நீட்டிக்கொடுக்க. நறை - தேன். நாகமாலை : இவள் சச்சந்தனுடைய அகப்பரிவார மகளிருள் ஒருத்தி. நோக்கொடு - குறிப்பாலே. பூ - நாகமாலை கொடுத் தனுப்பிய குவளைப்பூவை.

(க) அறுபத்துநால்வரென்றது கலைகளை. வாக்கு - திருத்தம். சிலையினுன் - சீவகன். இதுவும் கூறும் - உலகம் இவன் மிகுதிப்பாடு கூறும்; உம்மை, சிறப்பு; மிகுதியாவது, உலம் ஏந்துதலானும் [1]கல்லேந்தி நீக்குதலானும் [2]நிரைமீட்டலானும் உளதாய மிகுதி; இதற்குக் கட்டியங்காரன் பொருததே குறையென்றுன். இது, மேலே "விலங்கல்" (சீவக. 689) என்னும் கவி முதலியவற்ருற்காண்க.

(உ) நுதலினுளாகிய பொன்கொடி. மாலையென்றதற்கேற்ப நறை கூறிஞர். நோக்கு - [3] நோக்கனேக்கம்.

(இ - ள்.) இன்பத்தால் அமுதன்னராய் நீங்கலாகாமையிற் கொல்லியம் பாவையன்னராய் மூப்பிலாதாராய் அமைந்த நீரார் அறுபத்து நால்வர் ஐயனுக்கு முன்பே இயைந்தாராதலால் யாழ்வாசிக்கச் சேறற்குக் குறையில்லை யென்று விளம்பினுன்; விளம்பிப் பின்னும் கந்துகன் சிலையினுனுக்கு ஆண்டுச் சேறற்கு உலகங்கூறுமிகுதியாற் சிறிதுகுறையுண்டென்று மறைவல்லாற்குக் கூறுகின்ற காலத்தே கோயிலினின்றும் ஒரு பெண்கொடி வந்து கூந்தலாகிய உறையை அகலநீக்கித் தாளினையுடைய மணிபோலுங் குவளையைநீட்ட அதனை மயிரிலே வைத்த பூவென்று இகழாதே இவளை வரவிட்ட நாகமாலை குறிப்பாலே ஒருகாரியமுண்டென்று கருதிப் பூவைக் கைக்கொண்டானென்க.

[4] 'என்று' என்பதை இரண்டிடத்தும் கூட்டுக. (கஎ௬-கா)

669. (க) நல்லவ ணேக்க நாய்கன் றேர்ந்துபூங் குவளைப் போதின்
அல்லியுட் கிடந்த வோலை தாளது சலாகை யாதல்
சொல்லுமென் றுய்ந்து கொண்டு துகிலிகைக் கணக்கு நோக்கி
வல்லிதிற் சலாகை சுற்றி யோலையை வாசிக் கின்றுன்.

---

(உரை) [1] கல்லேந்தி நீக்கியதை, சீவக. 690-ஆம் பாடலாலுணர்க. [2] நிரைமீட்டதைக் கோவிந்தையாரிலம்பகத்தான் உணர்க. [3] நோக்கல் நோக்கம்; சீவக. 352, அடிக். [4] இயைந்தனரென்று என்பதிலுள்ள 'என்று' என்பதை, 'இதுவும்' என்பதன் பின்னும், 'பூ' என்பதன் பின்னும் கூட்டுக.

669. நல்லவள் நோக்கம் - நாகமாலையின் குறிப்பு. நாய்கன் - கந்துக்கடன். நாய்கன் நல்லவள் நோக்கம் தேர்ந்து என மாறியியைக்க. அல்லி - அகவிதழ். குவளைப்போதினது தாள் என மாறியியைக்க. சலாகை - இரும்புக்கம்பி. தாள் சலாகையாதலைச் சொல்லும் என இயைக்க. துகிலிகை - எழுதுகோல். சலாகை - தாளாகிய சலாகை.

670. (உ) நம்பனை நகரி னீக்கிச் சேமத்தால் வைக்க தீயுட், செம்பொன்போற் பெரிதுஞ் சேந்து செகுத்திட லுற்று நின்றான், வெம்பினான் காரி யுண்டிக் கடவுளிற் கனன்று வேந்தன், இம்பரின் றெனக்குச் சொன்னா னிதுபட்ட தடிக ளென்றாள்.

671. (௩) ஓலையை யவட்கு நீட்டி யொண்மணிக் குழையு முத்தும், மாலையும் படுசொ லொற்றி வம்மென மறைய நல்கி, வேலைநெய் பெய்த திங்கள் விரவிய பெயரி னாற்கு, மேலைநாட் பட்ட தொன்று விளம்புவல் கேளி தென்றான்.

இவைமூன்றும் ஒருதொடர்.

(இ - ள்.) அப்பூவை வாங்கின நாய்கன், நாகமாலை குறிப்பை விசாரித்துப் பின்பு குவளைப்போதினது தாள்தானே தனது அல்லியுட் கிடந்த ஓலையைச் சுற்றி வாசித்தற்குச் சலாகையாதலைச் சொல்லாநின்ற தென்று ஆராய்ந்து கொண்டு துகிலிகைக் கணக்காலெழுதின எழுத்தைப் பார்த்துத் தாளாகிய சலாகையிலே வரி ஏற்றிழிவு படாதபடி சுற்றி ஓலையை வாசிக்கின்றவன், வேந்தன் தீயுட்பொன்போல வெம்பினான்; அங்ஙனம் வெம்பி நஞ்சையுண்ட கடவுள்போல எரிந்து இன்று இப் பொழுது எனக்குச் சொல்லுவதுஞ் செய்தான்; ஆதலாற் செகுத்திட லுற்றேநின்றான். இனி நம்பனை நகரினின்றும் போக்கி ஒரு சேமத் திடத்தே வைக்கவென்று வாசித்தானென்க.

---

670. நம்பனை - சீவகனை. சேமத்தால் - பாதுகாப்புள்ள இடத்தில். சேந்து - சிவந்து. சேந்து வெம்பினான் என இயைக்க. காரி - விடம். காரியுண்டிக் கடவுள் - சிவபெருமான்; மலைபடு. 83. வேந்தன் - கட்டியங் காரன். இம்பர் - இப்பொழுது. கனன்று இன்று இம்பர் எனக்குச் சொன்னான் என மாறி இயைக்க. இதுபட்டது என்பதன் பின், மேற் பாடலில் உள்ள 'மேலை நாட் பட்டதொன்று விளம்புவல்' என்பதை இயைத்து, அடிகளென்றாள் என்பதன்பின் கேளிது என்றானென்பதைக் கூட்டி முடிக்க. பட்டது - நிகழ்ந்தது.

671. அவட்கு - நாகமாலையால் அனுப்பப்பட்ட பெண்ணிடம். முத்தும் மாலையும் மறைய நல்கிப் படுசொல் ஒற்றி வம்மென என்று மாறியியைக்க. என - என்று கந்துக்கடன் கூற. 'ஓலையை' என்பது முதல், 'படுசொலொற்றிவம்மென' என்பது வரையில் உள்ளதை, சீவக. 693-ஆம் பாடலின் பின் இயைத்துக்கொள்க. வேலைபோல நெய்யைத் தீயில் ஓமம் பண்ணிய; "நீர்நாண நெய்வழங்கியும்" (புறநா. 166 : 21). திங்கள் விரவிய பெயரினான் - புத்திசேனன்; இது லக்ஷிதலக்ஷணை எனப்படும்; அஃதாவது, ஒரு சொல் தனது பரியாய நாமமாகிய ஒன்றைக் குறிப்பிட அது தன் பொருளினால் ஒன்றைக் குறிப்பிடுதல்; 'எட்டினோ டிரண்டு - பத்து; பத்தி' என்றாற் போல்வது.

[1] வாசிக்கின்றான், பெயர். [2] சேமத்தால், உருபுமயக்கம். காரி - நஞ்சு. இக்கவியில் (670) 'இது பட்டதடிகளென்றாள்' என்னுமிடத்து, 'அடிகளென்றாள்' என்பதனை 'மேலைநாட் பட்டதொன்று விளம்புவ லடிக ளென்றாள்' என அதனோடு கூட்டி, ஓலைகொண்டுவந்தவள் வார்த்தையாக்குக, 'கேளிதென்றாள்' என்பதனை அது கேட்ட கந்துகன், திங்கள்விரவிய பெயரினாற்கு இவள்கூறுகின்ற இதனை நீ கேளென்றா னென்க. "இன்னனன்" (சீவக. 693) என்னுங்கவியில், 'சூழ்ச்சி தன்னுளான்' என்பதன்பின்னே, 'இதுபட்டதென்றாள்' என்று ஓலை கொண்டுவந்தவள் கந்துகன் சிறைப்புறமாகப் புத்திசேனனுக்குச் செய்தி கூறினளாக்கி முடித்து, "ஓலையை" என்னுங்கவியில், 'மறைய நல்கி' என்பதளவாக அதன்பின்னே கூட்டி, 'படையமைத்தெழுமின்' என்பதனை அதன்பின்னே கூட்டுக. 'என்றாள்' இரண்டிடத்தும் கூட்டுக. இங்ஙனங்கூறாது, 'இதுபட்ட தடிகள்' என்று கந்துகனுக்கு அவள் கூற அவன் புத்திசேனனுக்குக் கூறினனென்று கூறின், புதல்வன் செய்தியைத் தந்தை கூறுமுறையாற்கூறாது இடக்கர்முதலிய கூற்றாற் கூறினாகத் தேவர் கூறாரென்றுணர்க. வேலைபோல நெய்யை யோமம் பண்ணிய. திங்கள் - மதி : [3] மதியெனவே புத்திசேனனும் ; [4] "தீத் தீண்டு கையார்" (திணைமாலை நூற். 5) என்றது வேங்கையை யுணர்த்தினாற்போல. (சுஎஎ-க)

672. கடியரங் கணிந்து மூதூர்க் கடல்கிளர்ந் தனைய தொப்ப
நடையறி புலவ ரீண்டி நாடக நயந்து காண்பான் [னத்
குடையுடை யவனெ டெண்ணிச் சீவகற் கொணர்மினென்
தொடையல்சூழ் வேலி னானுந் தோழருங் காணச்சென்றார்.

கடி - விளக்கம் ; விளக்கமாவது [1] எழுகோல் அகலத்தினையும், எண் கோல் நீளத்தினையும், ஒருகோல் குறட்டுயரத்தினையும், வாய்தலி ரண்டினையுமுடைத்தாதல். அணிந்து - [2] பார்ப்பனப்பூதமுதலிய [3] நால்

(மேற்.) அடி, 3 : இ - வி. பெயர். 12.

(உரை) [1] வாசிக்கின்றவன். [2] சேமத்தால் - சேமத்திடத்தில் ; மூன்றும் வேற்றுமை யுருபு ஏழாம் வேற்றுமைப் பொருள் தந்தது. [3] மதி என்பதற்குப் புத்தி என்பது பொருள். [4] தீத்தீண்டு கை - வேம் கை ; வேங்கை.

672. அரங்கு - நாடக அரங்கு. மூதூர் - இராசமாபுரம். கிளர்தல் - பொங்குதல். நடையறி புலவர் - இயல் இசை நாடகங்களின் முறைமை தெரிந்த புலவர்கள். மூதூரில் நடையறி புலவர் கடல் கிளர்ந்தனைய தொப்ப ஈண்டி நாடகம் நயந்து காண்பான் கடியரங்கணிந்து என மாறி யியைக்க. காண்பான் - காணவேண்டி. குடையுடையவன் - கட்டியங் காரன். எண்ணி - எண்ணுதலால். சீவகனைக் கொணர்மின் என்ன. என்ன - என்று கட்டியங்காரன் கூற. வேலினான் - சீவகன்.

(உரை) [1] நாடக அரங்கின் அளவு : "எழுகோ லகலத் தெண்கோ னீளத், தொருகோ லுயரத் துறுப்பினதாகி.........ஏற்ற வாயி லிரண்டுடன்

வகைப்பூதங்களையும் ஒழிந்தவற்றையுமியற்றி; "[4] கூறிய வுறுப்பிற் குறியொடு புணர்ந்தாங், காடுநர்க் கியற்று மரங்கி னெற்றிமிசை, வழுவில் பூத நான்கு முறைப்பட, எழுதின ரியற்ற லியல்புணர்ந் தோரே." நடையறிபுலவராவார் : இயலாசிரியனும், யாழாசிரியனும், இசையாசிரியனும், குழலோனும், தண்ணுமை முதல்வனுமுதலாயினோர். ஈண்டு [5] இவர் தன்மை யுரைப்பிற்பெருகும். "கூத்தின் வகையுங் குறைவற நோக்கின், ஏத்தும் வகையா னிருவகைப் படுமே", "[6] அவை தாம், சாந்திக் கூத்தே விநோதக் கூத்தென், றய்ந்துற வகுத்தன னகத்தியன் றனே", "சாந்திக் கூத்தே தலைவ னின்பம், ஏந்திநின் றுடிய வீரிரு நடமவை, சொக்க மெய்யே யவிநய நாடகம், என்றிப் பாற்படூஉ மென்மனோர் புலவர்." [7] சொக்கமாவது சுத்தநிருத்தம் : அது நூற்றெட்டுக் கரணமுடைத்து. மெய்க்கூத்தாவது தேசி, வடுகு, சிங்களம்; இவை மெய்த்தொழிற் கூத்தாதலிற் காரணப்பெயர் : சாத்து விகம், இராசதம், தாமதமென்னும் அகச்சுவைபற்றியாடுதலின், அகமார்க்கமெனப்படும்; [8] "அகத்தெழு சுவையா னகமெனப் படுமே" (சயந்தம்). அவிநயமாவது - கதைதழுவாதே பாட்டுக்களின் பொருள் தோன்றக் கைகாட்டி யவிநயிப்பது. நாடகமாவது - கதைதழுவி வருங் கூத்து. ஈண்டுக் காண்கின்ற அது நாடகம்.

(இ - ள்.) மூதூரில் நடையறிபுலவர் கடல்கிளர்ந்தனையதொப்ப ஈண்டி நாடகங்காண்டற்கு அரங்கையணிந்து அரசனேடெண்ணுதலாலே சீவகற் கொணர்மினென்ன, வேலினனும் தோழரும் காணச்சென்று ரென்று ஓலை கொண்டுவந்தவள் புத்திசேனனுக்குச் செய்தி கூறுகின்று ளென்க.

இதுமுதல் ஓலைகொண்டுவந்தவள் கூற்று. "செலவினும்" (தொல். கிளவி. 28) என்னும் பொதுவிதியால், 'சென்றார்' என்றாள். (கஅ0)

673\. நிலமறிந் தணிக வையன் சீவக னெறியி னென்ன
நலநுதற் பட்டங் கட்டி நகைமுடிக் கோதை சூட்டி
அலர்முலைக் குருதிச் சாந்து மாரமும் பூணுஞ் சேர்த்திக்
குலவிய குருதிப் பட்டிற் கலைநலங் கொளுத்தி யிட்டான்.

---

பொலிய" (சிலப். 3 : 101-5). [2] பூதமியற்றல் : "தோற்றிய வரங்கிற் றெழுதன ரேத்தப், பூதரையெழுதி" (சிலப். 3 : 106-7). [3] நால்வகைப் பூதங்கள் : வச்சிரதேகன், வச்சிரதந்தன், வருணன், இரத்தகேசுவரன் என்பவர்கள். [4] சிலப். 3 : 106-7, அடியார். மேற். [5] இவர்கள் தன்மையை, சிலப். 3 : 1-94-ஆம் அடிகளிற் காண்க. [6] சிலப். 3 : 12, அடியார். மேற். [7] இங்குக் கூறுகின்ற விசேடவுரையோடு, சிலப். 3 : 12-ஆம் அடிக்கு, அடியார்க்கு நல்லார் எழுதிய உரைப்பகுதிகள் ஒப்பிடற்குரியன. [8] சிலப். 3 : 12, அடியார். மேற்.

673\. ஐயனாகிய சீவகனை நெறியின் அணிக என்ன என்று மாறி யியைக்க. நெறியின் - நூல் முறைப்படி. அணிக என்ன - அரங்கில் ஆடுதற்கு வந்த கூத்திக்கு அலங்காரம் செய்க என்று நடையறிபுலவர்

(இ - ள்.) நடையறிபுலவர், ஐயனாகிய சீவகன், நூனெறியால் அணிவாயாகவெனக்கூற, அவனும் கட்டிச் சூட்டிச் சேர்த்திச் செம் பட்டோடே கலையினலத்தைப் பொருத்தியிட்டானென்க.

வளர்கின்ற முலையெனவே [1] பன்னிரண்டாமாண்டாயிற்று; [2] " வட்ட ணையுந் தூசியு மண்டலமும் பண்ணமைய, எட்டுட னீரிரண்டாண் டெய்தியபின் - கட்டளைய, கீதக் குறிப்பு மலங்கார முங்கிளரச், சோதித் தரங்கேறச் சூழ் " (பரதசேனாபதீயம்). குருதிச்சாந்து - குங்குமச்சாந்து. (கஅக)

674. திருவிலே சொரிந்து மின்னுங் குண்டலஞ் செம்பொ னோலை
உருவுகொண் மதிய மன்ன வொளிமுகஞ் சுடர வாக்கிப்
பரியகஞ் சிலம்பு செம்பொற் கிண்கிணி பாதஞ் சேர்த்தி
அரிவையை யரம்பை நாண வணிந்தன னனங்க னன்னான்.

(இ - ள்.) அனங்கனன்னான், குண்டலத்தையும் ஓலையையும் நிறைமதி போலும் முகம்விளங்கும்படி ஆக்கி, காற்சரிமுதலியவற்றைப் பாதத்தே சேர்த்தி, அரம்பை நாண அரிவையை அணிந்தானென்க.

ஆக்குதல் - சமைத்தல். [1] இவளைத்தீண்டவும் வேட்கை நிகழாமை யின், அனங்கனன்னானென்றார்; " சிலைவல்லான் போலுஞ் செறி வினான் " (கலித். 143) என்றார் பிறரும். அவன் தீண்டுதலிற் றனக்கு

கூற. நுதற்பட்டம் - நெற்றிப்பட்டம். நகைமுடி - ஒளிவீசுகின்ற முடியின்மீது. முடியில் கோதையைச் சூட்டி. அலர்முலை - வளர்கின்ற முலை. குருதி - சிவப்பு. முலையிடத்துச் சேர்த்தி. குருதிப்பட்டு - சிவப்புப்பட்டு. கலைநலம் - ஆடையின் அழகு. கொளுத்தி - பொருத்தி.

(உரை) [1] பன்னிரண்டாம் ஆண்டில் அரங்கிலேறியாடுதல் மரபு; " ஈரா றாண்டிற், சூழ்கழன் மன்னற்குக் காட்டல் வேண்டி " (சிலப். 3 : 10-11). [2] சிலப். 3 : 10-11, அடியார். மேற்; " நன்னர் விருப் புடையோ ணற்குணமு மிக்குயர்ந்தோள், சொன்னகுலத் தாலமைந்த தொன்மையளாய்ப் - பன்னிரண்டாண், டேய்ந்ததற்பி னுடலுடன் பாடலழ கிம்மூன்றும், வாய்ந்தவரங் கேற்றல் வழக்கு " (சிலப். 3 : 10 - 11, அடியார். மேற்.) என்பதும் ஈண்டு அறியற்பாலது.

674. திருவில் - இந்திரவில். குண்டலத்தையும் ஓலையையும். உருவு கொள்மதியம் - பூரணசந்திரன். சுடர - விளங்கும்படி. ஆக்கி - அணிந்து. பரியகம் - காற்சரியென்னும் ஆபரணம். பரியகம், சிலம்பு, கிண்கிணி : சீவக. 2079. அரிவை - கூத்தி. அன்னான் - சீவகன். ' அநங்கன் ' என்றார் அங்கமில்லாதவனாகிய சித்தன் என்னுங் குறிப்பும் தோன்ற; " அருவாய்ப்போத லழகிதோ " (சீவக. 3021) என்பர்பின்; இப்பொருள் சைனரில் கன்னபரம்பரையில் வழங்குகின்றது.

(உரை) [1] மன்மதன் பிறமகளிரை விரும்பாத மனத்திண்மையன் என்பது ஈண்டு அறியத்தக்கது; " காமனும் விழையுங் காமர் காரிகை " (பெருங். 1. 40 : 183)

வேட்கைநிகழவும் அவற்கு வேட்கை நிகழாமைகண்டு இவளும் இனிக் கூத்தினால் இவனைப் பிணிப்பே மென்றுட்கொண்டு ஆடுகின்றாளாம். ஈண்டு இவட்கு வேட்கையின்றேல், "ஆடவர் மனங்கள்" (சீவக. 683) என்னுங்கவியிற் றேழியை விட்டாளென்றல் பொருந்தாதாம்; இதனானே இவள் நடிக்கின்ற நாடகம் ஒருவன் மேலே ஒருத்தி வேட்கையுற்றதொரு கதையேயாம். (௬௮௨)

675. தோற்பொலி முழவும் யாழுந் துளைபயில் குழலு மேங்கக், காற்கொசி கொம்பு போலப் போந்துகைத் தலங்கள் காட்டி, மேற்பட வெருவி நோக்கித் தானையை விட்டிட் டொல்கித், தோற் றினாண் முகஞ்செய் கோலந் துளக்கினாண் மனத்தை யெல்லாம்.

மார்ச்சனை முதலியவுமுளதாய், "இடக்க ணிளியாய் வலக்கண் குர லாய், நடப்பது தோலியற் கருவி யாகும்" என்ற ஓசையுமுடைத்தாய், [1] கஞ்சத்தாற் செய்ததென்பது தோன்றப் பொலிதல் கூறினார். "கருங் காலி செங்காலி வேம்புபலாக் கஞ்சம், நெருங்கிய சீர்க்குரா மண்ணும் - [2] பொருந்தவே, ஊன மிலவா யுயர்நிலத்திற் றோன்றிலா, மானின் விழி மடவாய் வைப்பு." துளைபயில் குழல் - துளையிடத்தே வாச்சியமும் யாழ்ப்பாடலும் கண்டப்பாடலும் பயிலப்பட்ட முதல்வங்கியமும் வழிவங் கியமும். [3] "ஓங்கிய மூங்கி [4] லுயர்சந்து வெண்கலமே, பாங்குறுசெங் காலி கருங்காலி - பூங்குழலாய், கண்ண னுவந்த கழைக்கிவைக ளாமென் றூர், பண்ணமைந்த நூல்வல்லோர் பார்த்து." ஏங்க - இவைமூன்றுங் கூடியிசைப்ப. இவை ஆமந்திரிகையாம், [5] "குழல்வழி யாழெழீஇத் தண் ணுமைப் பின்னர், முழவியம்ப லாமந்திரிகை." போந்து - வலக்கால் முன்மிதித்தேறி வலத்தூணைச் சேர்ந்து. கைத்தலங் காட்டுதல், [6] கமல வர்த்தனை. மேற்படவெருவிநோக்கி - தெய்வத்தை நோக்குதலின் மேலே யெழ வெருவிப்பார்த்து. தானை - [7] கரந்துவர லெழினி; "வழுவில்

675. முழவும் யாழும் குழலும் ஏங்க: சீவக. 2596; ஏங்க - ஒலிப்ப. காற்கொசி கொம்புபோல - காற்று வீசுதலால் அசைந்து சாய்கின்ற பூங் கொடியைப்போல. கைத்தலம் காட்டல் - அரங்கிலேறிய நாடகமகளிர் முதன்முறை கையைக் காட்டல்; "வகைதெரி மாக்கட்கு வட்டணை காட்டி" (மணி. 7 : 43). வெருவி நோக்கி - அஞ்சிப் பார்த்து. தானை என்றது இங்கே திரைச் சீலையை. விட்டிட்டு; சீவக. 860. கோலம் - அலங்காரத் தோற்றத்துடன். தானையை விட்டிட்டுக் கைத்தலங்கள் காட்டி வெருவி நோக்கி ஒல்கித் தோற்றினாள் என மாறியியைக்க. துளக்கினாள் - வருத்தினாள்; சீவக. 1560, ந.

(உரை) [1] கஞ்சம் - வெண்கலம். [2] (பி - ம்.) 'பொருந்திய'. [3] சிலப். 3 : 26, அடியார். மேற். [4] (பி - ம்.) உயர்சந்தம் வெண்கலமும் பாங்குடைச். [5] சீவக. 124, அடிக். [6] கமலவர்த்தனை : கைத்தலம், தாமரைமலர் போன்ற நிலையையுடைமையின் இப்பெயர்பெற்றது; கமலவட்டணை என வும் வழங்கும்; பரி. 16 : 11, பரிமேல். [7] கரந்துவரலெழினி - மேற்கட்டுந்

கேள்வி நன்னூ லுணர்ந்தோர், எழினி தானே மூன்றென மொழிப", "அவைதாம், ஒருமுக வெழினியும் பொருமுக வெழினியும், கரந்துவர லெழினியு மெனமூ வகையே"; இராசதானியிலும், அரங்கிலும், கோல மறைத்துவரும் இடத்திலும் இட்ட திரைகள். முகஞ்செய் கோலம் - கூத்திற்கு முகமாகிய தோற்றம்.

(இ - ள்.) முழவுமுதலியன ஏங்கக் கொம்புபோலப் போந்து விட்டிட்டுக் காட்டி நோக்கி ஒல்கிக் கோலத்தே தோற்றினாள்; அப்பொழுதே பார்ப்பவர் மனத்தையெல்லாம் துளக்கினாளென்க. (கஅங)

676. தெண்மட்டுத் துவலை மாலை தேனொடு துளிப்பத் திங்கள்
உண்ணட்ட குவளை போலு முருவக்கண் வெருவி யாட
விண்விட்டுக் கடவுள் வீழ நுடங்கின புருவ நெஞ்சம்
பண்விட்ட திருந்து காணும் பன்மணிக் கழலி னார்க்கே.

ஆடுகின்ற விசையாலே மாலை மதுத்துவலையைத் தேனினத்தோடே துளிப்ப. திங்களோடே நட்புப்பண்ணின குவளை.

(இ - ள்.) துளிப்பக் கண் நடிப்பிற்கேற்பப் பிறழ்ந்தாட அதற்கேற்பப் புருவம் அசைந்தன; அப்பொழுது இருந்துகாண்பார்க்கு நெஞ்சு நிலைகுலைந்ததென்க. (கஅச)

677. செங்கதிர்ச் சிலம்பு செம்பொற் கிண்கிணி சிலம்பக் கோதை, பொங்கப்பொன் னோலை வட்டம் பொழிந்துமின் னுகுப்பப் போர்த்த, குங்குமச் சாந்து வேய்ந்து குண்டலந் திருவில் வீச, அங்கதி ரார மின்ன வரிவைகூத் தாடு கின்றாள்.

---

திரை; எழினி - திரைச்சீலை; "ஒருமுக வெழினியும் பொருமுக வெழினியுங், கரந்துவர லெழினியும் புரிந்துடன் வகுத்தாங்கு" (சிலப். 3 : 109-10) என்பதும் ஈண்டு அறியற்பாலது.

676. தெண் மட்டுத்துவலை - தெளிவுள்ள தேனின் துளியை. தேன் - வண்டு. மாலை துவலையைத் தேனொடு துளிப்ப என மாறியியைக்க. திங்களுள் நட்ட - சந்திரனிடத்தே நடப்பட்ட. உருவம் - அழகு. முகத்துக்குச் சந்திரனும், கண்களுக்குக் குவளையும் உவமைகள். வெருவி - பிறழ்ந்து. விண் - ஆகாயம். கடவுள் - தெய்வங்கள். வீழ - கீழே விழும்படி. நுடங்கின - வளைந்தன. புருவம் கடவுள் வீழ நுடங்கின என மாறுக. பண்விட்டது - நிலை குலைந்தது. கழலினார்க்கு நெஞ்சம் பண்விட்டது என மாறியியைக்க.

677. சிலம்பும் கிண்கிணியும் சிலம்ப; சிலம்ப - ஒலிக்க. கோதை பொங்க - நாட்டியம் ஆடுகின்ற வேகத்தால் கூந்தலானது நிமிர்ந்து நிற்க; பொங்க - எழுந்துநிற்ப; மிகுத்துக் காட்ட என்பர்; சீவக. 645, ந. ஓலை மின்னை வட்டமாகப் பொழிந்து உகுப்ப என மாறியியைக்க.

(இ - ள்.) அரிவை சிலம்புமுதலியன சிலம்பக் கோதை விசையால் எழுந்துநிற்ப ஓலை மின்னை வட்டமாகச் சொரிந்து சிந்தக் குண்டலம் மேனியை மறைத்த சாந்தைத் தீண்டி வீச ஆரம் மின்ன ஆடாநின்றாளென்க. (கஅ௫)

678. மருங்குலு மொன்று தாய்க்கு மொருமக ளாத லோர்ந்தும்
இரும்பிறை லியன்ற நெஞ்சத் திவர்களோ விருந்து காண்க
அரங்கின்மே லிவளைத் தந்த தாய்கொலோ கயத்தி யன்றேற்
சுரும்புசூழ் கண்ணி சூட்டி யவர்கொலோ கயவர் சொல்லீர்.

(இ - ள்.) இடையும் ஒன்றே; வேறு சேமவிடையுமில்லை, இதுமுரிந்தால்; இவள் ஒரு தாய்க்குமொருபிள்ளையே, வேறில்லை; இதனையறிந்தும் அருளின்றாக இரும்பாற்செய்த நெஞ்சினையுடைய இக்கொடியோர் இருந்து காண்க; இவர் இதுமுடிவுபோகக் காண்டலறிந்தும் அரங்கின் மேல் இவளைவிட்ட தாய் கொடியளோ? அன்றாயிற் கண்ணிசூட்டியவர் கொடியரோ? இருவரினும் கொடியவரைக் கூறிக் காணீரென்பாருமென்க.
இவர்களோ : ஓ, இரக்கக் குறிப்பு. (கஅசு)

(வேறு)

679. அகிலார் புகையலாற் சாந்தணியாள் பூச்சாரச் செல்லாள் செல்லிற், பகலே பகைவளர்த்த பாவை சிறுநுசுப்பொன் றுண்டே பாவம், இகலேந் திளமுலைமேற் சாந்தெழுதி முத்தணிந்து பூவுஞ் சூட்ட, முகிலேந்து மின்மருங்குன் மொய்குழற்றா யிதுகண்டு முளளே பாவம்.

உண்டே : ஏகாரம், எதிர்மறை. ஒருபாவம் இருந்தபடி.

---

மின் - ஒளி. உகுப்ப - சிந்த. ஒளியை வட்டமாகச் சொரிதல் : சீவக. 860. சாந்து வேய்ந்து - சாந்தை அணிந்து. திருவில்வீச - இந்திர வில்லைப்போல் ஒளி வீச. குண்டலம் சாந்தை வேய்ந்து திருவில் வீச என மாறியியைக்க.

678. மருங்குலும் ஒன்று : பெருங். 1. 40 : 215. தாய்க்கும் ஒரு மகள் ; "ஈன்றாட் கொருபெண் ணிவள்" (பரி. 8 : 58). ஒரு தாய்க்கு ஒருபிள்ளை என்பது பழமொழி. ஓர்ந்தும் - இதையறிந்தும். 'இரும்பிறை லியன்ற நெஞ்சத்திவர்' என்றது இரக்கமில்லாத மனமுடையவரென்பதைத் தெரிவித்தற்கு. இவளை - நாட்டியமாடும் அனங்கமாலையை. கயத்தி - கொடியவள். கண்ணி - பூமாலை. கயவர் - கொடியவர்.

679. அகிற்புகையை யன்றிச் சாந்தை அணியமாட்டாள். பூச்சாரச் செல்லாள் - பூவின் பக்கத்தும் செல்லாள். பகை பகலே வளர்த்த நுசுப்பு - பகையாகிய முலையை வெளிப்படும்படி வளர்த்த இடை. இடை பாவைக்கு உண்டே ; உண்டே - இல்லையென்றபடி. இகல் - மாறுபாடு. முகிலையேந்திய மின்னலைப்போல் குழலையேந்திய மருங்குலையுடைய தாய் என்க ; கூந்தலுக்கு மேகமும் இடைக்கு மின்னலும் உவமை. முலை மேல் சூட்ட இது கண்டும் தாய் உளளே, பாவம் என மாறியியைக்க.

(இ - ள்.) இவள் அகிற்புகையணிதலன்றிச் சந்தனமுமணியாள்; பூவின் அருகும் செல்லாள்; சென்றாளாயின் அதனைத் தாங்குதற்கு முலை யாகிய பகையை வெளியாகச் சுமந்துவளர்த்த நுசுப்பென்பதொன்று பாவைக்கில்லை; இத்தன்மையறிந்தும் இவள் தாயானவள் இடையுடனே மாறுபடுதலை மேற்கொண்ட முலைமேலே எழுதி அணிந்து சூட்ட, இத னைக்கண்டும் உயிருடனேயிருந்தாள்; என்னே! ஈதொருபாவமிருந்தபடி என்னென்பாருமென்க. (கஅஎ)

680. தேந்தாமஞ் செம்பவளத் தாமஞ் செம்பொ னெரிதாம மின்னுத் திரடா மங்கள், தாந்தா மெனத்தாழ்ந்த பொன்மேகலைத் தாம வரங்கின்மேற் றாதார் முல்லைப், பூந்தாமக் கொம்பாடக் கண்டா ரெல்லாம் புனமயிலே யன்னமே பொன்னங் கொம்பே, ஆந்தா மரைமகளே யல்ல ளாயி னமரர்மக ளென்பாரு மாயி னாரே.

பூமாலைதாம், பவளத்தாமந்தாம், பொற்றாமந்தாம், மணித்தாமந்தா மென்று கண்டார் கூறும்படி அவ்விடத்தே பொருந்திய மேகலையை யுடைய தாமமென்று [1] தோரியமடந்தையர்க்கு வெளிப்படையாக்கி அவர் களையுடைய அரங்கின்மேலே கொம்புபோல்வாள் ஆடவென்க; தோரிய மடந்தையர் - [2] பற்றுப்பாடுவார்.

(இ - ள்.) மயிலேயாம், அன்னமேயாம், பொன்னங்கொம்பேயாம், திருமகளேயாம்; அல்லளாயின் தேவர்மகளேயாமென்பாருமென்க.

[3] 'என்பாரும்' என்பதனை முன்னும் பின்னுங் கூட்டுக. 'ஆயினர்' என்பதனை, "நெய்பருகி" (சீவக. 682) என்னுங்கவியிற் பின்னேகூட் டுக. [4] முல்லை கற்பிற்குச் சூட்டிற்று; "தாதுடைமுல்லையெல்லாம்" (சீவக. 686) என்ப மேலும். இனி இவையே மாலையென்று கண்டார் வியக்கும்படி

680. தேந்தாமம் - தேனையுடைய பூமாலை. பொன் எரி தாமம் - பொன் விளங்குகின்ற மாலை. மின்னுத்திரள் தாமங்கள் - நட்சத்திரக் கூட்டங்கள் போன்ற மணிகளாலாய மாலை. தாம்தாம்: ஒலிக்குறிப்பு. தாழ்ந்த - அவ்விடத்தே தங்கிய. தாழ்தல் - தங்குதல்; சீவக. 1314, ந. மேகலையையுடைய தாமம். தாதார்முல்லைப்பூந்தாமக்கொம்பு - தாதுக் களையுடைய முல்லைப் பூமாலையை யணிந்த பூங்கொம்பு போன்ற அனங்க மாலை. பொன்னங் கொம்பு - பொற்கொம்பு; அம்: சாரியை. தாமரை மகள் - இலக்குமி. அமரர்மகள் - தேவகன்னிகை.

(உரை) [1] தோரியமடந்தையர் - ஆடிமுதிர்ந்தவர் என்பர் (சிலப். 3: 133-4, அடியார்.); 'ஒரு பாட்டினைப் பிற்கூறு சொல்வார்' (தொல். மரபு. 107, பேர்.) [2] பற்றுப்பாடுவார் - வாரம்பாடுபவர்; "வாரம் பாடுந் தோரிய மடந்தையும்" (சிலப். 14: 155). [3] என்பாரும் என்பதை, மயிலே, அன்னமே, பொற்கொம்பே, தாமரைமகளே, அமரர்மகளே என் பவைகளுக்குப் பின்னும், மேற்கவியில், காண்பாரும் உளரே, நோக்கிக் காணீர் என்பவைகளுக்குப் பின்னும் கூட்டுக. [4] முல்லை கற்பிற்குச் சூடு தல்: சீவக. 624, அடிக்.

பூமாலை முதலிய தாழ்ந்த தாமவரங்கின்மேலே மேகலையையும் முல்லைத் தாமத்தையுமுடைய கொம்பு போல்வாள் ஆடவென்றுமாம். (கஅஅ)

681. கொடியார் குளிர்முத்தஞ் சூட்டி வைத்தார் கொல் வானே குங்குமச்சே ரூட்டி னூர்கள், அடிசார்ந்து வாழ்வாரை யம்முலைகடாமே யழித்திடுமேற் றாமே யழித்திடுகவென், றொடி யாத மாத்திரையா லுண்டே நுசுப்பிருந்து காண்பாரு முளரே செங்கண், நெடியான் மகன்சிலையு மம்பும் வைத்த நிழன்மதியோ வாண்முகமோ நோக்கிக் காணீர்.

**(இ - ள்.)** நம்மைக்கொல்லுவதற்கே சூட்டுவதுஞ்செய்தார், ஆட்டு வதுஞ் செய்தார்; ஆதலால் கொடியராயிருந்தார்; என்றும் தம் காற்கீழ் வாழ்வார் சிலரை உலகம் தாமேயழிக்குமாயின் அம்முலைகளுந்தாமே நம்மை யழிக்க அமையுமென்று கருதித் தான்முறியாத மாத்திரையாலே இடையும் உண்டென்னுமளவாயிருந்தது; இப் [1] பாதகத்தைக் கண்டு வைத்தும் இருந்து காண்பாரும் உளராயிருந்தாரென்பாரும், காமனது வில்லும் அம்பும்வைத்ததொரு மதியோ! முகமோ! நோக்கிக் காணீ ரென்பாருமென்க. (கஅகூ)

682. நெய்பருகி நீண்ட விருட்கற்றை போலுங் குழற் கற்றை கண்டு நிறைக லங்குவார், மைபருகி நீண்டு மதர்த்தவுண் கண் வாளே றுபெற்றுநைவார் மாநா கத்தின், பைபருகு மல்கு லிலயம் பற்றிப் பதனமைத்த பாவை நிருத்த நோக்கி, மெய்யுரு கிக் கண்ணுருகி நெஞ்சுருகிக் காம வெயில்வெண்ணெய்ப் பாவை போன் மெலிகின் றரே.

---

681. கொடியார் - கொடியவர். கொல்வானே சூட்டிவைத்தார் என மாறுக. அடிசார்ந்து வாழ்வாரைத் தாமே அழித்திடுமேல் முலைகள் தாமே அழித்திடுகவென்று எனமாறியியைக்க. செங்கண் நெடியான் மகன் - திருமாலின் புதல்வனாகிய மன்மதனுடைய. நிழல்-ஒளி. புருவத் திற்கு வில்லும், கண்களுக்கு அம்பும், முகத்திற்குச் சந்திரனும் உவமைகள்.

(உரை) [1] பாதகம் - பெரும்பாவம்.

682. நெய்பருகிய குழற்கற்றை, இருட்கற்றைபோலும் குழற் கற்றை என்க. கற்றை.- தொகுதி. மதர்த்த-மயக்கங்கொண்ட. வாளேறு- வாள்வெட்டு. அல்குலையுடைய பாவையின் நிருத்தத்தைநோக்கி என்க. இலயம் - தாளவறுதிகள்; சீவக. 1258, ந. பதனமைத்த நிருத்தம் - கால மைத்த கூத்து. காமமாகிய வெயிலிலே வெண்ணெயாற் செய்துவைக்கப் பட்ட பாவையைப் போல.

[1] கற்றை - பற்றம். கண்ணுகிய வாளேறு. படத்தின்றன்மையைக் கைக்கொள்ளுமல்குல். இலயம் - கூத்தில் தாளவறுதியைத் தொடங்கிக் காலமைத்த கூத்து. கண்ணுருகுதல் - நீர்வார்தல். மெலிதல் - உடம்பு நுணுகுதல். (கக௦)

(வேறு)

683. ஆடவர் மனங்க ளென்னு மரங்கின்மே லனங்க மாலை
ஆடினுண் முறுவ லென்னுந் தோழியை யையன் காண
ஓடரி நெடுங்க ணென்னு மோலையை யெழுதி விட்டாள்
வாடிய வாறு நோயு முரைத்துவார் கொடிய ளுளே.

கொடியளுள் : சுட்டு.

(இ - ள்.) அனங்கமாலை, மனங்களென்னும் அரங்கின்மேலே யாடினுள்; ஆடியவள் தன்மேனி வாடியவாறும் நோயுமுரைத்துக் கண்ணென்னும் ஓலையையெழுதி அதனை முறுவலென்னும் தோழி கையிலே கொடுத்துச் சீவகன் காணப் போகவிட்டாளென்க.

தன் கூத்தினுல் அவற்கு வேட்கை நிகழ்ந்ததோவென்றறிதற்கு நோக்குகின்றவள் தான்குறித்தன கொள்வாளுகை நோக்கினமையை உருவகமாகக் கூறினுர். அதனை அவன்கொள்ளாமை கண்டு நாடக மகளாதலின், தன்னெஞ்சு வருந்தாதபடி அதனைத் தேற்றுகின்றுளாக மேலிற்கவி கூறுகின்றுர்; மாதவி, "மாலை வாரா ராயினு மாணிழை, காலை காண்குவம்" (சிலப். 8 : 115-6) என்றுற்போல. (கககக)

684. (க) வளமல ரணியப் பெற்றேன் வால்வளை திருத்தப் பெற்றேன், களனெனக் கரையு மல்குல் கையினுற் றீண்டப் பெற்றேன், இளமுலை சுமந்து பெற்ற வருத்தமு மின்று தீர்ந்தேன், உளமெலி மகளி ரெய்து மின்பமு மின்று பெற்றேன்.

(உரை) [1] கற்றை - பற்றம்; சீவக. 1707, 2820, ந.; கொத்து; கலித். 72 : 20, 93 : 22, ந.

683. முறுவல் - புன்சிரிப்பு. ஐயன் காண - சீவகன் காணும்படி. நோய் - காமநோய். கொடியளுள் தான் வாடியவாறும் நோயும் உரைத்துக் கண் என்னும் ஓலையை எழுதி முறுவல் என்னும் தோழியிடம் ஐயன் காண விட்டாள் என்க; கொடியளுள் - அனங்கமாலை. இப்பாடல் உருவகம்.

684. வளப்பம் பொருந்திய மலர். வால் வளை - வெள்ளிய வளைகளை. திருத்தல் - தக்கவாறு அழகுபட அமைத்தல். களனென : ஒலிக்குறிப்பு. கரையும் - ஒலிக்கும். உளம் மெலிமகளிர் - ஊடலால் மனம் மெலிந்த மகளிர். இன்பம் - ஊடல் தீர்ந்த இன்பம். அனங்கமாலைக்குச் சீவகன் அலங்காரம் செய்தமை : சீவக. 673-4.

685. (உ) என்றவ ளரசன் றன்னை நோக்கல ளிவன்க ணார்வம்
சென்றமை குறிப்பிற் றேறிக்கூத்தெலா மிறந்தபின்றை
நின்றது மனத்திற் செற்ற நீங்கித்தன் கோயில் புக்கான்
மன்றலமடந்தை தன்னைவலிதிற்கொண்டொலிகொடாரான்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) [1] நகைமுடிக்கோதைசூட்டுதலின், 'மலரணியப்பெற்றேன்' என்றாள். வளைதிருத்தல் ஈண்டுக் கூறவே ஆண்டு அணிதல் பெற்றாம். மேகலைக்குக் களனென்னுமோசை இயல்பு. பட்டிற் [2] கலைநலங்கொளுத்துதலின், 'அல்குறீண்டப் பெற்றேன்' என்றான். [தலைவனுடன் ஊடலான தலைவி யூடறீர்ப்ப அவள் காலைத் தலைவன்பிடிக்க அவளுடல்போய் இன்பமாந்தன்மையவான தன்காலையும் இவன் தீண்டப்பெற்றேனென்றாள்.] குருதிச்சாந்து முதலியன சேர்த்துதலின், 'முலை சுமந்துபெற்ற வருத்தமுமின்று தீர்ந்தேன்' என்றாள். [3] பரியகம் முதலியன பாதத்தே சேர்த்துதலின் தான்விரும்பி ஊடற்காலத்திற் காறீண்டி ஊடறீர்த்தற்குரிய மகளிர் பெறுமின்பமும் பெற்றேனென்றாள்.

(இ - ள்.) தன்னை அவன் விரும்பாமையுணர்தலின், தான் இவையெல்லாம் [4] இவன் நிகழ்த்தப்பெற்றேன்; இனி யான் பெறுதது ஏதென்று உட்கொண்டு தன்மனத்தைத் தேற்றிப் பின்பும் அவள் அரசன்றன்னை நோக்காளாயினாள்; ஆதலால் கட்டியங்காரன் கூத்தெல்லா முடிந்த பின்னை அவனிடத்து அவட்கு ஆர்வநிகழ்ந்தமையை அவள்தன் குறிப்பாற்றெளிந்து அம்மடந்தையை வலிதிற்கொண்டு நீங்கித் தன் கோயிலிலே புக்கான்; புக்கபின் அவன் மனத்தே இவனைக்கொல்ல வேண்டுமென்னுஞ் செற்றம் நின்றதென்க. (கக௨ - ௩)

---

685. என்றவள் - என்று இவ்வாறு எண்ணிய அனங்கமாலை. அரசன் - கட்டியங்காரன். இவன்கண் - சீவகனிடத்து. ஆர்வம் சென்றமை- அனங்கமாலைக்கு ஆசை நிகழ்ந்தமையை. கூத்து - நாடகம். மனத்தில் - கட்டியங்காரன் மனத்தில். செற்றம் - சீவகனைக் கொல்லவேண்டுமென்னும் கோபம். கோயில் - அரண்மனை. மன்றல் மடந்தைதன்னை - மணத்திற்குரிய அனங்கமாலையை; அ: அசை. வலிதின் - வன்மையால். தாரான்: கட்டியங்காரன். தாரான், கூத்தெலாம் இறந்தபின்றை இவன்கண் ஆர்வம் சென்றமை தேறி, மடந்தைதன்னை வலிதிற்கொண்டு கோயில் புக்கான்; மனத்தில் செற்றம் நின்றது என்க.

(உரை) [1] நகைமுடிக் கோதை - தலையில் அணியும் ஒருவகை முத்துமாலை; சீவக. 673. [2] கலை - மேகலை. [3] பரியகம் - பாதத்திலணியும் 'காற்சரி' என்னும் ஆபரணம்; சீவக. 674, அடிக்.; பாதசாலம் என்றும், காற்சவடியென்றும் கூறுவர்; "பரியக நூபுரம் பாடகஞ் சதங்கை, அரியகங் காலுக் கமைவுற வணிந்து" (சிலப். 6: 84-5, அடியார். மேற்.)
[4] இவன்: சீவகன்.

686\. தேனுடைந் தொழுகுஞ் செவ்வித் தாமரைப் போது புல்லி
ஊனுடை யுருவக் காக்கை யிதழுகக் குடைந்திட் டாங்குக்
கானுடை மாலை தன்னைக் கட்டியங் காரன் சூழ்ந்து
தானுடை முல்லை யெல்லாந் தாதுகப் பறித்திட் டானே.

முகைவிரிந்து தேனொழுகும். ஊனுடைந்த உருவம் : வினைத் தொகை; ஊனையுடைக்கும் உருவமுமாம். மாலைக்கேற்பக் கான்கூறினார். சீவகனையே கூடுவனென்றலின், முல்லை - கற்பு. முல்லைக்கேற்பத் தாது கூறினார்.

(இ - ள்.) அங்ஙனம் செற்றம் நிகழாநிற்கக் கட்டியங்காரன் மாலையைப் போகாமற்றடுத்துப் பிணத்திலிருக்குங் காக்கை போதைப் புல்லிக் குடைந்தாற்போலத் தானுடைய முல்லையெல்லாம் பறித்தானென்க.

இதனால், புணரும் நெறியறியாமை கூறினார். (கஙஅசு)

687\. கலையினிற் கன்னி நீக்கித் தாமரைக் கண்க டம்மால்
முலையினி லெழுதிச் செவ்வாய் பயந்ததேன் பருகி முள்கும்
சிலைவலாய் புல்லு நம்பி சீவக சாமி யோவென்
றலைகடற் புலம்பி னோவா தரற்றுமா லணங்கி னன்னாள்.

---

686\. உடைந்து - இதழ்விரிந்து. செவ்வி - அழகு. உடைந்து தேனொழுகும் தாமரைப் போது என மாறியியைக்க. ஊனுடையுருவம்- பிணம். இதழுக-தாமரைப்பூவின் இதழ் உதிரும்படி. காக்கை தாமரைப் போது புல்லி இதழுகக் குடைந்திட்டாங்கு எனமாறியியைக்க. கான் - வாசனை. மாலைதன்னை - அனங்கமாலையை. சூழ்ந்து - சீவகனிடம் அவள் போகாதபடி தடுத்து. தானுடை - அனங்கமாலையினுடைய. தாது - மகரந்தப்பொடி. உக - சிந்தும்படி. முல்லை பறித்திட்டான் என்றது புணர்ந்தான் என்பதை உணர்த்தியது. கட்டியங்காரன் மாலை தன்னைச் சூழ்ந்து காக்கை போது குடைந்திட்டாங்குத் தானுடை முல்லையைப்பறித்தான் என்க. கட்டியங்காரனுக்குப் பிணத்திலிருக்குங் காக்கையும் அனங்கமாலைக்குத் தாமரையும் உவமை.

687\. கலை - மேகலை. கன்னி - அழிவின்மை. கண்களால் முலையில் எழுதி 'முள்கல்; "முலைகொள் கண்கள் கண்ணி னெழுதி முள்கு மொய்ம்பன்" (சீவக. 1413). முள்கல் - முயங்குதல்; சீவக. 420, அடிக். சிலைவலாய், நம்பி, சீவகசாமி என்பன விளி. அடுக்கிய விளிகளாற் காதற்சிறப்பு விளங்கும். ஓவாது - இடைவிடாமல். அணங்கினன்னாள் அரற்றும் என்க.

'சிலைவலாய்' எனவே இத்துன்பம் நீக்குதற்குரியாயென்றாள். [1] உருவு வெளிப்படுதலிற் புல்லென்றாள். ஓ : இரக்கக்குறிப்பு.

(இ - ள்.) அவன் அங்ஙனம் புணர்ந்தவளவிலே, அணங்கினன்னாள் மேகலையிடத்து அழிவின்மையை நீக்கிக் கண்ணால் முலையிலேயெழுதிப் பருகி இங்ஙனம் முறைமையறிந்து முள்குஞ் சிலைவலாய், நம்பி, சாமி, நீவந்துபுல்லுவாயாகவென்று கடலொலிபோல அரற்றாநிற்குமென்க.*

(௬௮௭)

688. பிறனல மரற்றக் கேட்டும் பீடினாற் கனிந்த காம
நறுமல ரணிந்த மாலை நாற்றக்கோர் நான்கு காதம்
உறநடந் தறித லில்லா னொண்டொடிக் குருகிப் பின்னும்
திறனல தமர்க்குச் செப்புந் தீயுமிழ்ந் திலங்கும் வேலான்.

(இ - ள்.) வேலான், பீடினாற்கனிந்த காமமாகிய நறுமலராலே [1] பண்ணின பெண்ணாகிய மாலையினது நாற்றத்திற்கு ஒருநாற்காத வழியளவும் அணுக வந்தறியாதவன், ஒண்டொடி, தன்னருகேயிருந்து வேறொருவன் நன்மையை அங்ஙனங்கூறக்கேட்டும் பின்னும் அவட்கு உருகித் தன் அமைச்சர்க்கு நெறியல்லாமொழிகளைக் கூறாநிற்குமென்க.

அவை மேற்கூறுகின்றார். (௬௮௮)

(உரை) [1] சீவகனுடைய உருவெளித் தோற்றம்.

688. பிறன் நலம் - சீவகனுடைய நன்மையை. அரற்ற - அனங்கமாலை கூற. பீடு - பெருமை. காமமாகிய நறுமலரால். அணிந்த மாலை - அலங்கரிக்கப்பட்ட அனங்கமாலையினது. மாலை என்பதற்கேற்ப நாற்றம் கூறினார். நாற்றக்கு - மணத்திற்கு. அறிதலில்லான் : கட்டியங்காரன். ஒண்டொடி - அனங்கமாலை. திறனல - நீதியல்லாத மொழிகளை. செப்பும் - சொல்லுவான். வேலானாகிய அறிதலில்லான் ஒண்டொடி பிறன் நலம் அரற்றக் கேட்டும் பின்னும் உருகித் தமர்க்குச் செப்பும் என மாறியியைக்க.

(உரை) [1] பண்ணின - அலங்கரித்த.

* இதன்பின்,

" இந்நகர் தனக்கு மன்னன் யாரெனக் கியம்பு மாதே
மன்னிய வணிகன் மைந்தன் சீவகன் றானே யென்னே
உன்னிய நெஞ்சுங் கண்ணு மொருங்குட னவனுக் காணாய்
என்னைநீ மனத்துள் வையாக் காரணம் யாதோ வென்றான் "

என்னும் செய்யுள் சில ஏட்டுப்பிரதிகளிற் காணப்படுகின்றது.

(வேறு)

689. விலங்க லன்ன வேக வேழ நான்கு வெல்லு மாற்றலன்
கலங்க லந்தி லங்கு மார்பிற் கந்து கன்ம கன்னென
நலங்க லந்து ரைக்கு மாலிந் நன்ன கர்க்கு மன்னனே
உலங்க லந்த தோளி னீரு ரைமி னீவி ரென்னவே.

(இ - ள்.) தோளினீர், கந்துகன்மகன் ஆற்றலனென்று உலகமெல்லாம் கூடி அவனலத்தைக் கூறுநிற்கும்; இந்நகர்க்கு அவனே பெருமான்? நீங்கள் கூறுவீராகவென்னுநிற்கவென்க.

கோபத்தால் இங்ஙனங் கூறினான். மார்பின் மகன். (கசுஎ)

690. மட்ட விழ்ந்த தாரி னானிம் மாந கர்க்கு ளாயிரர்
தொட்டெ டுக்க லாவு லம்மொர் தோளி னேந்தி யாடினான்
ஒட்டி நாக மோரி ரண்டெ டுக்க லாத கல்லினை
விட்ட லர்ந்த போது போல வேந்த லேந்தி நீக்கினான்.

தொட்டு - தீண்டி. ஒட்டி - வஞ்சினங்கூறி.

(இ - ள்.) தாரினான் உலமேந்தியாடினான்; பின் அந்த ஏந்தல் யானையால் எடுத்தலாற்றாத ஓரிரண்டு கல்லினையும் இரண்டுகையிலும் போதுபோலேந்தி நீக்கினானென்க. (கசுஅ)

691. வெஞ்சி லையின் வேடர் வெள்ள மப்பு மாரி தூவலின்
எஞ்ச லின்றி நம்ப டையி ருமு றையு டைந்தபின்
மஞ்சு சூழ்க ணைமம ழைபொ ழிந்து மாநி ரைபெயர்த்
தஞ்சி லோதி யார்பு னைந்த செஞ்சொன் மாலை சூடினான்.

---

689. விலங்கல் - மலை. வேழம் நான்கு வெல்லும் ஆற்றலன் - நான்கு யானைகளை வெல்லக் கூடிய வன்மையுடையவன். கலம் - ஆபரணம். கலம் கலந்திலங்கு மார்பினையுடைய மகன், கந்துகன்மகன் எனப் பிரித்துக் கூட்டுக. நலம் - சீவகனுடைய சிறப்பு. உரைக்கும் - உலகங்கூறும். மன்னனே - சீவகன் அரசனே? உலம் - உருண்டைக் கல். என்ன - என்று கட்டியங்காரன் கூற. தோளினீர், கந்துகன் மகன் ஆற்றலன் என (உலகம்) நலம் கலந்து உரைக்கும்; இந்நகர்க்கு (அவன்) மன்னனே? நீவிர் உரைமின் என்ன என்று மாறியியைக்க.

690. மட்டு - தேன். தாரினான் - சீவகன். எடுக்கலா - எடுக்க முடியாத. உலம் - உருண்டைக்கல்லை. ஒட்டி - வஞ்சினம் கூறி; சீவக. 632, அடிக். நாகம் - யானை. இரண்டு கல்லினை. விட்டு - விண்டு; வலித்தல் விகாரம். போதுபோல - பூக்களைப்போல. ஏந்தல் - சீவகன். ஏந்தல் நாகமெடுக்கலாத இரண்டு கல்லினைப் போதுபோல ஏந்தி நீக்கினான் என மாறியியைக்க; சூளா. மந்திர. 65 இது முதல் மூன்றுபாடல்களும் அமைச்சர் கூற்று.

691. சிலையின் - வில்லால். அப்புமாரி - அம்புமழையை. எஞ்சலின்றி - இடையறாமல். வேடர் சிலையால் வெள்ளமாகும்படி அப்புமாரியை

(இ - ள்.) வேடர் சிலையாலே வெள்ளமாம்படி அப்புமாரியை ஒழிவின்றுகத் தூவலின், நம்படை இருகால் உடைந்தபின், மஞ்சுசூழ் மழை போலக் கணையைப்பொழிந்து நிரையைப் பெயர்த்துப் புகழ்மாலையைச் சூடினனென்க. (௧௯௯)

692. தீம்ப யறி யன்ற சோறு செப்பி னுயி ரம்மிடா
நீங்க லாத நறுநெய் வெள்ளங் கன்ன லாயி ரங்குடம்
ஏந்து வித்து நாமி சைய வந்து தந்து நீக்கினன்
ஆங்கு நாம்ப சித்த சைந்த காலை யன்ற வண்ணலே.

(இ - ள்.) சொல்லின், அவ்வண்ணல், அன்று அவ்விடத்தே நாம் பசித்து இளைத்த பொழுதிலே, பருப்புச்சோறு ஆயிரமிடாவும், நறுநெய் வெள்ளமும் கன்னலும் நீங்கலாத ஆயிரமாயிரங்குடமும் ஏந்துவித்து வந்து நாம் உண்ணும்படி தந்து பசியைப் போக்கினனென்க. (௨௦௦)

693. இன்ன னென்ன வின்பு றுனி ழந்த னன்ன ரசென
என்னை வெளவும் வாயிரு னென்னுஞ் சூழ்ச்சி தன்னுளான்
அன்ன தால ரிறப வறிந்து கூத்தி கூறினள்
இன்ன தாற்ப டையமைத் தெழுமி னென்றி யம்பினன்.

---

எஞ்சலின்றித் தூவலின் எனமாறியியைக்க. உடைந்தபின் - தோற்ற பின்பு. மஞ்சு - வெண்மேகம். மழைக்கணை எனமாறுக. மாநிரை - பெரிய பசுக்கூட்டத்தை. பெயர்த்து - வேடரிடமிருந்து மீட்டு. அம் சில் ஓதியார் - அழகிய சிலவாகிய கூந்தலையுடைய மகளிர். புனைந்த - புகழ்ந்து கூறிய. இப்பாடலிற் கூறிய செய்தி கோவிந்தையாரிலம்பகத் தால் விளங்கும்.

692. தீம்பயறு இயன்ற சோறு - இனிய பருப்போடு கலந்த சோறு. செப்பின் - கூறினல். மிடா - பானை. மிடாச்சோறு : குறிஞ்சிப். 201. மிசைய - உண்ணும்படி. நீக்கினன் - பசியை யகற்றினன். அசைந்த காலை - இளைப்படைந்த போது. அண்ணல் - சீவகன்.

693. இன்னன் என்ன - சீவகன் இத்தன்மையன் என்று அமைச்சர் கூற. இன்புறுன் அரசு இழந்தனன் என - அதற்கு மகிழாதவனுகி 'அரசு இழந்தேன்' என்று கட்டியங்காரன் நினைந்து. வெளவும் வாயில்தான் என்னை என்னும் - சீவகனைக் கொல்லும் வழிதான் எவ்விதம் என்கின்ற. சூழ்ச்சி - எண்ணம் (சீவக. 9, ந.). அன்னதால் - கட்டியங் காரன் எண்ணம் அவ்விதமிருத்தலை. அரில் தப - குற்றம் நீங்க. கூத்தி - நாகமாலை. சூழ்ச்சி தன்னுளான் என்று கூத்தி கூறினள் என்க. சூழ்ச்சி தன்னுளான் என்பதன்பின், 'இது பட்டதென்றுள்' (சீவக. 670-71) என்று ஓலை கொண்டுவந்தவள் கந்துகன் சிறைப்புற மாகப் புத்திசேனனுக்குச் செய்தி கூறினளாக்கி முடித்து, அதன் பின்னே கந்துகன் 'ஓலையை அவட்கு நீட்டி யொண்மணிக் குழையு முத்து, மாலையும் படுசொலொற்றி வம்மென மறையநல்கி' (சீவக. 671) என்பதைக்கூட்டி, அதன்பின், "இன்னதாற் படையமைத்தெழுமின்" என்று இயம்பினன் எனமுடிக்க.

(இ - ள்.) அவன் வலியனுமாய் நமக்கு உதவியுஞ் செய்தானென்று அவர் கூற, அதற்கு மகிழானாய் [1] இவர்கருத்தாலும் அவன் வலியாலும் இனி அரசும் இழந்தேனல்லனோவென்று உட்கொண்டு இவனைக் கொல்லும் வழிதான் எங்ஙனே யென்னும் சூழ்ச்சிதன்னிடத்தே நின்றானென்க.

அன்னதால் - அவன்கருத்து அப்படியாயிருத்தலை ; [2] ஆதல், விகாரம். இன்னது - இக்காரியம் இத்தன்மைத்தாயிருந்தது ; என்றது, [3] தோற்றவர்களும் கட்டியங்காரனும் பகைப்பார்போலேயிருந்ததென்ற வாறு.

[4] அவன் விளம்பியதியாதென்னின், [5] ஐயனுக்கு முன்பே அறுபத்து நால்வர் இயைந்தாராதலின், தாழ்வில்லையென்று விளம்பினான் ; விளம்பிப் பின்னும் கந்துகன் அச்சிலையினானுக்கு ஆண்டுச்சேறற்குச் சிறிது தாழ்வுண்டென்றும் [6] மறைவல்லாற்கு உரைக்கும்பொழுதிலே, பெண் கொடி வந்து குவளை நீட்ட அதனைக்கொண்டான் ; கொண்டு வாசிக்கின்றவன், சேமத்தே வைக்க வென்று வாசித்தான் ; வாசித்து ஓலை கொண்டுவந்தவளைப்பார்க்க, அவள் மேலைநாட்பட்டதொன்று விளம்புவல் அடிகளென்றாள் ; அதுகேட்ட கந்துகன் திங்கள் விரவிய பெயரினாற்கு இவள் கூறுகின்ற இதனை நீ கேளென்றான் ; அப்பொழுது புத்திசேனன் கேட்டிருப்பத் தான் கண்ட செய்தி கூறுகின்றாள் ; சீவகற் கொணர்மினென்ன, வேலினானும் தோழரும் காணச்சென்றார் ; அப்பொழுது அவரும் சீவகன் அணிகவென்ன, அவனும் கொளுத்தியிட்டான், கொளுத்தி அரிவையை யணிந்தான் ; அணிந்த பின்பு அவள் காண்பார்மனத்தையெல்லாம் முற்படத் துளக்கினாள். துளக்கினபின்பு அவர் நெஞ்சம் பண்விட்டது ; அங்ஙனம் பண்விடும்படி கூத்தாடா நின்றாள் ; அங்ஙனம் தாமவரங்கின்மேலே கொம்பு ஆடக் கண்டாரெல்லாம், கயவர் சொல்லீரென்பாரும், பாவமென்பாரும், அமரர்மகளேயென்பாரும், காண்பாருமுளரேயென்பாரும், நோக்கிக்காணீரென்பாரும், நிறைகலங்குவாரும், நைவாரும், மெலிகின்றாருமாயினார் ; அங்ஙனமாம்படி அனங்கமாலை அவர்மனமென்னும் அரங்கின் மேலே ஆடினாள் ; ஆடி ஓலையை ஐயன்காண விட்டாள் ; விட்டும் அவனுக்கு விருப்பங் காணாமையின், இவைபெற்றேன் ; யான் பெற்றது ஏதென்று உட்கொண்டு தன் மனத்தைத் தேற்றி அரசனைநோக்காளாயினாள் ; ஆதலால், தான் வலிதிற்கொண்டு நீங்கிக் கோயில்புக்கான் ; புக்க பின்னும் மனத்தே செற்றம் நின்றது ; அதுநிற்க மாலையைச்சூழ்ந்து பறித்திட்டான் ; அங்ஙனம் பறித்தவளவிலே அவள் ஓவாதரற்றும் ; அங்ஙனம் பிறனலம் அரற்றக்கேட்டும் உருகித் தமர்க்குத் திறனல செப்பாநிற்கும் ;

(உரை) [1] இவர் - அமைச்சர். [2] ஆதல் என்பது ஆல் என்று வந்தது. [3] தோற்றவர்கள் என்றது அரசர்களை. [4] அவன் - கந்துக் கடன் ; இங்கே கூறுவது சீவக. 667-ஆம்பாடல் முதல் 693-ஆம் பாடல் வரையில் உள்ள கதைத்தொடர்பு. [5] ஐயன் - சீவகன். [6] மறைவல்லான் - புத்திசேனன்.

அங்ஙனஞ் செப்புகின்றவன், உரைமின் நீவிரென்றுநிற்க, அவரும், ஆடினான், நீக்கினான், சூடினான், நீக்கினான், ஆதலால் இன்னனென்ன, அதற்கு இன்புறுவாய் என்னரசும் இழந்தேனென்று உட்கொண்டு இவனைக் கொல்லுமாறு எங்ஙனேயென்னுஞ் சூழ்ச்சி தன்னிடத்தே நின்றான்; இதுபட்டதென்றாள்; அதனையுணர்ந்து கந்துகனும் ஓலையை நீட்டி அவட்குமாலைக்காலத்திலும் அங்குப்பிறந்த சொல்லை ஒற்றிவா வெனக்கூறிக் குழை முதலியனவற்றை மறையநல்கி அவளைப்போக்கி, புத்திசேனனைநோக்கி, அவன்கருத்து அன்னதாதலை ஐயமறவறிந்து நாகமாலை கூறினாள்; அது யான் ஓலை வாசகத்தே விளங்கினேன்; இனிக் காரியம் இன்னதாயிருந்தது; ஆதலாற் படையமைத்துப் போவீராகவென்றியம்பினானென்க.

செய்தி கூறுகின்றாள், இதுபட்டதென்றாளென்க. (உ০௧)

## (வேறு)

694. தாதைதா னுரைத்த வெல்லாந் தன்னுயிர்த் தோழன் கூறக், கோதைமுத் தணிந்த மார்பன் கூறெயி றிலங்க நக்காங், கேதமொன் றில்லை சேறு மென்றலு மிலங்கு வாட்கைப், போது லாங் கண்ணி மைந்தர் போர்ப்புலிக் குழாத்திற் சூழ்ந்தார்.

(இ - ள்.) மார்பன், கந்துகன் கூறிய காரியங்களையும் சேடி கூறிய வற்றையும் தோழன் கூறக்கேட்டு நக்கு, அவ்விடத்து நமக்கு வருவதொரு தீங்கு சிறிதுமில்லை; சேறுமென்ற அளவிலே, தோழர் அதற் குடன்பட்டுப் புலித்திரள்போலச் சூழ்ந்தாரென்க.

சேடிகூற்றிற்கு நக்கான்; கந்துகன் கூற்றிற்கு ஏதமின்றென்றான். உலாம் - [1] அலமரும். (உ০உ)

695. (௧) கண்ணுதற் கடவுள் சீறக் கனலெரி குளித்த காமன், மண்மிசைத் தோன்றி யன்ன வகைநல முடைய காளை, தெண் மணி யார மார்பன் றிருநுதன் மகளிர் நெஞ்சத், துண்ணிறை பருகும் வண்டா ருருவமை திருவின் மிக்கான்.

694. தாதை : கந்துக்கடன். தோழன் : புத்திசேனன். கோதை முத்து - பூமாலையையும், முத்துமாலையையும். மார்பன் - சீவகன். நக்கு - சிரித்து. ஏதம் - தீங்கு. சேறும் - செல்வோம். மைந்தர் - தோழர். புலிக் குழாத்தின் - புலிக்கூட்டத்தைப் போல.

(உரை) [1] அலமரும் - அசைகின்ற.

695. கடவுள் - சிவபெருமான். சீற - கோபித்தலால். கனலெரி : இரு பெயரொட்டு; வினைத்தொகையுமாம். வகைநலம் - அவயவஅழகு. தெண்மணி யாரம் - தெள்ளிய முத்துமாலை. தார் - பூமாலை. தாரினையும் மணியாரத்தினையுமுடைய மார்பன் எனமாறியியைக்க. திருநுதல் -

696. (உ) கருநெறி பயின்ற குஞ்சிக் காழகில் கமழ வூட்டி, வரிநிற வண்ண மாலை வலம்பட மிலேச்சி வாளார், திருநிற முகத்திற் கேற்பச் செம்பொனே ரோலை சேர்த்தி, எரிநிறக் குழையோர் காதிற் கிருளறச் சுடர வைத்தான்.

697. (ங) தென்வரைப் பொதியிற் றந்த சந்தனத் தேய்வை தேங்கொண், மன்வரை யகலத் தப்பி வலம்புரி யாரந் தாங்கி, மின்விரித் தனைய தொத்து விலைவரம் பறிய லாகா, இன்னுரைக் கலிங்க மேற்ப மருங்குலுக் கெழுதி வைத்தான்.

698. (ச) இரும்பறக் கழுவி யெஃகி னிருளற வடிக்கப் பட்ட, அரும்பெறற் சுரிகை யம்பூங் கச்சிடைக் கோத்து வாங்கிப், பெருந்தகைக் குருசில் கொண்டு பெருவலஞ் சுடர வீக்கித், திருந் திழை மகளிர் வெஃகுந் தேவிளங் குமர னைத்தான்.

---

அழகிய நெற்றி. மகளிர் நெஞ்சத்து நிறையைப் பருகத்தக்க உருவமைந்த என இயைக்க. உருஅமை - செயற்கையழகு அமைந்த. திருவின் மிக்கான் - செல்வத்தாற் சிறந்தவன்.

696. கருநெறிபயின்ற குஞ்சி; சீவக. 738, ந. அகில் - அகிற் புகை; ஆகுபெயர். குஞ்சியில் அகிலைக் கமழ ஊட்டி என்க. வரி - பாட்டு; சீவக. 1066, 2581. நிறம் - பாட்டின் ஒருவகைக் கூறுபாடு; வண்ணம் என்று கூறுவர் (சிலப். 3 : 63). வண்ணம் - அழகு. வரிநிற மாலையை வண்ணம்படக் குஞ்சிவலம் மிலைச்சி எனமாறியியைக்க; வலம் - இடம். வாள்ஆர் - ஒளிபொருந்திய. ஓரோலை சேர்த்திக் குழை யோர்காதிற்கு.........வைத்தான்; சீவக. 1009, 2060; "தோடு பெய் தொரு காதினிற் குழை தூங்க" (தே. சுந்தர. பனையூர், 1). ஓலை - தோடு. குழை - குண்டலம்.

697. பொதியில் - பொதியமலை. சந்தனத்தேய்வை - சந்தனக் குழம்பு. தேம் கொள் - கண்ணிற்கு இனிமை கொண்ட; சீவக. 1559, ந. அகலம் - மார்பு. தேம்கொள் அகலம், மன்வரை அகலம் எனப் பிரித்துக் கூட்டுக. வலம்புரியாரம் - வலம்புரி முத்தின் மாலை. நுரைக்கலிங்கம் - நுரைபோன்ற வெண்மையையுடைய ஆடையை; சீவக. 699. எழுதி வைத்தான் - சித்திரத்தில் எழுதினாற்போல உடுத்தான்.

698. கழுவி - உருக்கி. எஃகின் - இரும்பால். வடிக்கப்பட்ட - பண்ணப்பட்ட; சீவக. 1773. சுரிகை - உடைவாள். சுரிகையைக் கச்சி டைக்கோத்து வாங்கி எனஇயைக்க. சுரிகைகோத்த கச்சு: "கதிர்வாட் கச்சையர்", "பத்திரச் சுரிகையும், பத்திக் கச்சினொ டொத்தவை

இவை நான்கும் ஒரு தொடர்.

(க) திருவின்மிக்கான், பெயருமாம்.

(உ) வலம் - இடம். வண்டினது பாட்டின் நிறத்தையுடைய மாலையைக் குஞ்சியிடத்தே வண்ணம்பெறச் சூட்டி.

(௩) தெற்கிடத்து எல்லையாகிய பொதியில்; வரைப்பொதியில் : இருபெயரொட்டாகாது. மன் - பெருமை. மின்னை அகல விரித்த தன்மையை ஒத்து. நுரைபோலும் கலிங்கம்.

(௪) கழுவி - [1] வட்டாகவுருக்கி. அதனாலே இருளறப் பண்ணப்பட்ட சுரிகையைக் கையாற் பிடித்துக் கச்சை இடையிலே கோத்துவாங்கி வெற்றி விளங்க வீக்கியென்க; “சுரிகை நுழைந்த சுற்றுவீங்கு செறிவுடை” (பெரும்பாண். 73) என்றார் பிறரும். தேவாகிய குமரன்.

(இ - ள்.) கடவுள் சீறுதலின் எரியிலே மூழ்கிய காமன் மீண்டும் தோன்றினாலொத்த அவயவ அழகையுடைய காளை, தாரினையும் ஆரத்தினையுமுடைய மார்பன், குருசில், அவன் குஞ்சியிலே புகையையூட்டி மாலையை மிலைச்சி முகத்திற்கேற்ப ஓரோலையை ஒருகாதிற்குச் சேர்த்தி ஒரு குழையை யொருகாதிற்கிட்டான்; இட்டுக் குழம்பை அகலத்தே அப்பித் தாங்கிக் கலிங்கத்தை எழுதினாற்போல வுடுத்தான்; உடுத்துச் சுரிகையை வீக்கி மகளிர் நெஞ்சின் நிறையை வாங்குதற்குக் காரணமான செயற்கையழகு பொருந்தின இச்செல்வத்தால் மிக்கான்; அப்பொழுது முருகனையொத்தானென்க. (௨௦௩-௬)

699. வரைவிழித் திமைப்ப தொக்கும் வாளொளி யார மார்பின், விரைவழித் திளைய ரெல்லாம் விழுமணிக் கலங்க டாங்கி, நுரைகிழித் தனைய நொய்ம்மை நுண்டுகின் மருங்குல் சேர்த்தி, உரைகிழித் துணரு மொப்பி லோவியப் பாவை யொத்தார்.

---

பிறவும்” (பெருங். 1. 37 : 7 ; 2. 5 : 143-4). குருசில் - சீவகன். வலம்சுடர - வெற்றிவிளங்க. வாங்கி வலஞ்சுடரவீக்கி என இயைக்க; வீக்கி - கட்டி. தேவிளங் குமரன் - தேவாகிய முருகனை. இப்பாடலோடு, “சித்திரப் பிணையலும் பத்திரச் சுரிகையும், பத்திக் கச்சினொ டொத்தவை பிறவும், ஆரணங் காகிய பேரணி கலங்களும், உழைப்பெருஞ் சிலதியர் பிழைப்பிலர் நீட்ட, அருவரை பிளந்த வஞ்சுவரு நெடுவேல், ஒருவலத் துயரிய பொருவில் புட்கொடித், தளையவிழ் நறுந்தார்த் தனக்கிணை யில்லா, இளையவன் படிவ மேற்ப வியல்புறீஇ” (பெருங். 2. 5 : 143-50) என்பது ஒருவாறு ஒப்பிடற்குரியது.

(உரை) வட்டு - எஃகுருண்டை.

699. வரை - மலை; மார்புக்கு மலை உவமை. விரை - சந்தனம் முதலிய வாசனைப்பொருள்கள்; சீவக. 623, அடிக். வழித்து - பூசி.

(இ - ள்.) இளையரெல்லாம், மார்பிலே விரையைப்பூசிக் கலங்களை யணிந்து துகிலையுடுத்து வாக்காற்புகழ்தலரிதாய் மனத்தாலுணருமொப் பாற் பாவையையொத்தாரென்க.

இமைத்து விழிப்பதென்றூர், அசைவின்கட்பாடஞ்செய்தலின். பாவை இருபாற்கும் பொதுவாதல், "கைபுனை பாவை யெல்லாங் கதிர் முலை யாக்கினான்" (சீவக. 907) என்றதனானுங்கொள்க. (௨௦௭)

700. அரக்குநீ ரெறியப் பட்ட வஞ்சனக் குன்ற மன்ன
திருக்கிள ரோடை சூழ்ந்த செம்புகர் நெற்றித் தாகி
உருக்கியூ னுண்ணும் வேகத் துறுபுலி யனைய நாகம்
அருக்கனோர் குன்றஞ் சேர்ந்தாங் கண்ணலா னேறி னானே.

ஊனையுருக்கி.

(இ - ள்.) செம்புகர் நெற்றித்தாதலின், அரக்குநீரெறியப்பட்ட குன்ற மன்ன நாகத்தை, அருக்கன் ஒருமலையைச் சேர்ந்தாற்போலப் புலியனைய அண்ணலான் ஏறினானென்க. (௨௦௮)

701. விடுகணை விசையின் வெய்ய விளங்கொளி யிவுளித் திண்டேர்
கடுநடைக் கவரி நெற்றிக் காலியற் புரவி காய்ந்து
வடிநுனை யொளிறு மாலை வாட்படை மறவர் சூழ
அடுதிரைச் சங்க மார்ப்ப வணிநகர் முன்னி னானே.

இளையர் - சீவகனுடைய தோழர். இளையரெல்லாம் விரைவழித்து என மாறுக. கலம் - ஆபரணம். நொய்ம்மை - மென்மை; (மதுரைக். 40-42, ந.). துகிலுக்கு நுரை : சீவக. 697. ஒப்பின் - ஒப்பால். ஓவியப் பாவை - சித்திரத்தில் எழுதிய பாவை.

(உரை) [1] பாடம் - ஒளி; சீவக. 596, 2086, ந.

700. அரக்கு நீர் - இங்குலிகம் கரைத்தநீர்; சீவக. 2657, ந. செம்புகர் நெற்றித்தாகி அஞ்சனக்குன்ற மன்ன நாகம் என இயைக்க. திரு கிளர் - அழகு விளங்குகின்ற. ஓடை - நெற்றிப்பட்டம். செம்புகர் - சிவந்த புள்ளி. நெற்றித்தாகி - நெற்றியையுடையதாகி. ஊனை உருக்கி எனமாறுக. புலியனைய அண்ணல் என இயைக்க. நாகம் - யானை. அருக்கன் - சூரியன். அண்ணல் - சீவகன். அஞ்சனக் குன்றமன்ன நாகத்தை அருக்கன் குன்றம் சேர்ந்தாங்குப் புலியனைய அண்ணல் ஏறினான் எனமுடிக்க.

701. விசையின் - வேகத்தால். வெய்ய - விரும்பத்தக்க. இவுளி - குதிரை. குதிரையின் வேகத்திற்குக் கணையின் விசை : சீவக. 567, அடிக். இவுளி, தேருக்கு அடை. கவரிநெற்றிப் புரவி : "கவரி வேய்ந்த கலினமா", "மரைமயி ரணிந்தன மானமா" (சூளா. அரசியல். 236, 266). காலியற்புரவி - காற்றைப் போன்ற செலவுடைய குதிரை. நுனை - கூர்மை. ஒளிறும் - விளங்குகின்ற. மாலைவாட்படை - பூமாலையை அணிந்த வாளாகிய படை; மாலைபோன்ற வாளையுடைய படையுமாம். மாலைக்கு வாள் : "தாமலர் மாலை வாளா" (சீவக. 2656); "தார்புரிந் தன்னவாள்" (பதிற். 66 : 13). மறவர் - வீரர். நகர் : இங்கே யாழ் மண்டபம். தேரும், புரவியும், மறவரும் சூழ என உம்மை விரிக்க.

காய்ந்து வடித்த நுனையொளிறுகின்ற வாளாகிய படை. கரையை அடுகின்ற திரை. மங்கலத்திற்குச் சங்கு கூறினர்.

(இ - ள்.) தேர்முதலியன சூழ ஆர்ப்பச் சென்று யாழ்மண்டபத்தை அணுகினனென்க. (உ0௯)

702. தோற்றனண் மடந்தை நல்யாழ் தோன்றலுக் கென்று நிற்பார்
நோற்றன ணங்கை மைந்த னிளநல னுகர்தற் கென்பார்
கோற்றொடி மகளிர் செம்பொற் கோதையுங் குழையு மின்ன
ஏற்றன சொல்லி நிற்பா ரெங்கணு மாயி னாரே.

(இ - ள்.) மகளிர் கோதையும் குழையுமின்னநிற்க, மடந்தை தோன்றலுக்கு யாழைத் தோற்றாளென்பார்; நங்கை மைந்தனலனுகர் தற்கு நோற்றா ளென்பார்; தம்மனத்துக்கேற்றன சொல்லி நிற்பா ராயினார், எவ்விடத்து மென்க.

இவன் கல்வி உணர்தலிற் றெளிவுபற்றி, 'தோற்றனள்', என்று [1] இறப்பாற்கூறினர். (உ௧0)

(வேறு)

703. சுறாநி றக்கொ டுங்குழை சுழன்றெ ருத்த லைத்தர
அறாம லர்த்தெ ரியலா னழன்று நோக்கி யையெனப்
பொறாம னப்பொ லிவெனு மணிக்கை மத்தி கையினால்
அறுவி வந்து தோன்றினா னனங்க னன்ன வண்ணலே.

---

702. மடந்தை - காந்தருவதத்தை. தோன்றல் - சீவகன். மடந்தை தோன்றலுக்கு யாழில் தோற்றனள் என்று நிற்பார் எனமாறியியைக்க. நோற்றனள் - தவம்செய்தாள். இளநலம் - இளமையின்பத்தை. நங்கை மைந்தன் நலம் நுகர்தற்கு நோற்றனள் என்பார் என மாறியியைக்க. கோற்றொடி - திரண்ட வளையல்களையுடைய. பொற்கோதை - பொன்னா லாகிய மாலை. ஏற்றன சொல்லி - பொருந்தியவற்றைக் கூறி. மகளிர் கோதையும் குழையும் மின்ன நிற்பாராய், என்பாராய் எங்கணும் நிற்பா ராயினரென்க.

(உரை) [1] இறப்பால் - இறந்த காலத்தால்.

703. சுறா - மகரமீன். சுறாக்குழை - மகரகுண்டலம். சுழன்று - அசைந்து. எருத்து அலைத்தர - கழுத்தில் விழும்படி. அறா - கோபம் நீங்காத. தெரியலான் - கட்டியங்காரன். அழன்று - கோபித்து. தெரிய

[1] மனப்பொலிவு, விகாரம்.

(இ - ள்.) செற்றமருத கட்டியங்காரன், தனது மகரக்குழை அசைந்து கழுத்திலே விழும்படி எரிந்து பார்த்து வியவாநிற்க, அவனது பொருத மனத்தை அண்ணல் தனது பொலிவென்கின்ற மத்திகையாலே அடித்து வந்து தோன்றினனென்க.

எனவே பொலிவு [2] அவன்மனத்தைக் கேடுசெய்ததென்க. மத்திகை யென்றலின், கையிலிருக்குமென்று அடைகூறினர். (உகக)

704. குனிகொள் பாக வெண்மதிக் கூரி ரும்பு தாஅுறீஇப்
பனிகொண் மால்வ ரையெனப் படும தக்க ளிறிரீஇ
இனிதி ழிந்தி ளைய ரேத்த வின்னகிற் கொழும்புகை
முனிய வுண்ட குஞ்சியான் முரண்கொண் மாட முன்னினன்.

[1] குனி, விகாரம். பனி, [2] கடாத்திற்கு உவ்மம். முனிய - வெறுக்க.

(இ - ள்.) குஞ்சியான் வளைவுகொண்ட வெண்மதிப்பாகம்போலும் தோட்டியையழுத்திக் களிற்றையிருத்தி இளையர் இனிதாக ஏத்த இழிந்து யாழால் மாறுபாடுகொண்ட மாடத்தைச் சேர்ந்தானென்க. (உகஉ)

705. புதிதி னிட்ட பூந்தவிசி னுச்சி மேன டந்தவட்
புதிதி னிட்ட மெல்லணைப் பொலிந்த வண்ணம் போகுயர்
மதிய தேறி வெஞ்சுடர் வெம்மை நீங்க மன்னிய
உதய மென்னு மால்வரை யுவந்தி ருந்த தொத்ததே.

---

லான் அலைத்தர நோக்கி எனமாறியியைக்க. ஐ : வியப்பை உணர்த்தும் உரிச்சொல் (தொல். உரி. 87). பொரு மனம் : தன்னைக் கண்டு பொருத கட்டியங்காரன் மனத்தை. பொலிவு - அழகு. மத்திகை - குதிரைச் சம்மட்டி. அருவி - அடித்து. அண்ணல் - சீவகன். தெரியலான் ஐயென, அண்ணல் தோன்றினன் என்க.

(உரை) [1] மனம் பொலிவு என்பது மனப்பொலிவு என வலித்தல் விகாரம் பெற்றது. [2] அவன் - கட்டியங்காரன்.

704. குனிகொள் - வளைவுகொண்ட. கூரிரும்பு-அங்குசம். அங்குசத் திற்குப் பிறைச்சந்திரன் உவமை ; "அரைமதி யிரும்பொடு" (பெருங். 1. 32 : 96). உறீஇ - அழுத்தி. பனிவரை - இமயமலை. களிறு இரீஇ - யானையை இருத்தி. இழிந்து - இறங்கி. அகிற்புகையை முனிய உண்ட குஞ்சியை உடையவன் என்றது சீவகனை. முன்னினன் - சேர்ந்தான். குஞ்சியான், கூரிரும்பு உறீஇ, களிறு இரீஇ இளையர் இனிது ஏத்த இழிந்துமாடம் முன்னினன் என மாறிமுடிக்க.

(உரை) [1] குனிவு என்பது குனி எனவந்தது. [2] கடாம் - மதம்.

705. புதிதின் - புதிதாக. பூந்தவிசின் உச்சிமேல் நடந்து : சீவக. 617, அடிக். அணைப் பொலிந்த வண்ணம் - அணையின்மேல் பொலிவுடன்

[1] இன், அசை. போகுயர் மதி - உயர்ந்த மதி. [2] மலையும் மதியமும் சுடரும், மண்டபத்திற்கும் அணைக்கும் சீவகனுக்கும் உவமம்.

(இ - ள்.) அவ்விடத்துப் புதிதாகவிட்ட தவிசின்மேலே நடந்து சென்று புதிதாகவிட்ட வட்டவணைமேற் பொலிவுபெற்றிருந்த தன்மை, வெஞ்சுடர் மதியத்தையேறித் தன்னிடத்து மன்னிய வெம்மை நீங்கும் படி உதயவரையிலே உவந்திருந்த தன்மையை ஒத்ததென்க. (உகரு)

706. முருகு விம்மு கோதையார் மொய்ய லங்கல் வண்டுபோற்
பருகு வானி வணலம் பாரித் திட்ட விந்நகர்
உருகு மைங்க ணையொழித் துருவி னைய காமனூர்
கருதி வந்த தென்றுதங் கண்கள் கொண்டு நோக்கினூர்.

(இ - ள்.) உருவினால் வியப்பையுடைய காமனூர், இவள்நலம்பரந்த இந்த நகர்க்கண்ணே இவள்நலத்தை, அலங்கலை வண்டு பருகுமாறு போலப் பருகுவான்கருதி ஐங்கணையை ஒழித்துவந்ததொரு தன்மை யென்று நினைத்துக் கோதையார் தம் கண்களைக்கொண்டு அவனை நோக்கினூரென்க.

ஐங்கணை இரண்டு : "[1] அந்த ணரவிந்த மாம்பூ வசோகப்பூப், பைந்தளிர் முல்லை பனிநீலம் - ஐந்துமே, வீரவேன் மைந்தரையும் வேனெடுங்கண் மாதரையும், மாரவே ளெய்யு மலர்"; இவை திரவிய பாணம்; இங்கிதம், மதனம், வசீகரணம், மோகனம், சந்தாபம்; இவை பாவபாணம். (உகச)

---

அமர்ந்த தன்மை. போகுயர் - மிக உயர்ந்த; "போகுயர் சனியின் மண்டலம்" (கூர்ம. மண்டல. 12). மதியத்தின் மீது ஏறி. வெஞ்சுடர் - சூரியன். வெஞ்சுடர் மதியதேறி மன்னிய வெம்மை நீங்க உதயமால் வரையிருந்த தொத்தது என்க. சந்திரமண்டலத்துக்கு மேல் சூரிய மண்டலம் உள்ளது; சீவக. 532, அடிக்.

(உரை) [1] புதிதின் என்பவற்றில் உள்ளவை. [2] முறையே நிரனிறை யாகப் பொருள் கொள்க.

706. முருகு - வாசனை. தோகையார் - மகளிர். அலங்கல் வண்டு போல் - பூமாலையிலுள்ள தேனை வண்டு உண்ணுவது போல; இவள் நலம் - காந்தருவதத்தையின் நலம். பாரித்திட்ட - பரந்த. நகர் - இந் நகரிடத்தே. உருவின் ஐய - உருவத்தால் வியப்பையுடைய; ஐ - வியப்பு; சீவக. 703, அடிக். காமனூர், இந்நகரில் இவள் நலத்தை அலங்கல் வண்டு போல் பருகுவான் கருதி ஐங்கணையை ஒழித்து வந்ததென்று, கோதையார் தம் கண்கள் கொண்டு நோக்கினூர் என்க. சீவகனைக் காமனாக எண்ணினர்.

(உரை) [1] "மாம்பூ வசோகப்பூத் தாமரைப்பூ முல்லைப்பூ, தேம்பாய் தருகுவளைச் செவ்விப்பூ - மேம்பட்ட, மைந்துபூண் மார்ப மதனன் கணையான, ஐந்துபூ வாகு மவை" (தக்க. 71, மேற்.)

707\. (க) முனைத்தி றத்து மிக்கசீர் முனைவர் தம்மு னைவனார்
வனப்பு மிக்க வர்களின் வனப்பு மிக்கி னியனா
நினைத்தி ருந்தி யற்றிய நிருமி தம கனிவன்
கனைத்து வண்டு ளர்ந்ததார்க் காளை சீவ கன்னரோ.

இதுமுதல், "இனைய" (சீவக. 709) அளவும் ஒருதொடர்.

தவக்கூற்றின்மிக்க இருடிகள்தம் முனைவனாவான் - அயன். இவனென்பதனை, 'மார்பம்' (சீவக. 708) என்பதனோடு கூட்டுக. உளர்ந்த- சிதறின.

708\. (உ) பொன்னை விட்ட சாயலாள் புணர்மு லைத்த டத்தினால்
மின்னை விட்டி லங்குபூண் விரைசெய் மார்ப மோலையா
என்னை பட்ட வாறரோ வெழுதி நங்கை யாட்கொள்வான்
மன்னும் வந்து பட்டனன் மணிசெய் வீணை வாரியே.

திருவைக் கடந்த. மன்னும் - மிகவும்; தப்பாமலென்றவாறு. வாரி - யானையை அகப்படுத்துமிடம். [1] 'என்று' என வருவிக்க.

709\. (ங) இனைய கூறி மற்றவ டோழி மாரு மின்புற
வனைய லாம்ப டித்தலா வடிவிற் கெல்லை யாகிய
கனைவண் டோதி கைதொழுங் கடவுள்கண்ணிற் கண்டவர்
எனைய தெனைய தெய்தினா ரனைய தனைய தாயினார்.

707\. முனைத்திறத்து மிக்க சீர் முனைவர் - தவம் செய்த திறத்தால் மிக்க சிறப்பையுடைய முனிவர்கள்; முனை - தவம். முனைவனார் - பிரமன். இனியனா நினைத்திருந்து - கண்ணிற்கு இனியனாக ஒருவனைப் படைக்கவேண்டுமென்று நினைத்திருந்து. நிருமித மியற்றிய - சங்கற்பத் தால் சிருட்டித்த; நிருமிதம் - சங்கற்பம். வண்டு கனைத்து உளர்ந்த தார் - வண்டுகள் ஒலித்துச் சிதறின பூமாலை. இது முதல் இரண்டு பாடல்களும் காந்தருவதத்தையின் தோழியர் கூற்று.

708\. பொன் - இலக்குமி. சாயலாள் - காந்தருவதத்தை. மின் - ஒளி; ஐ, சாரியை. மார்பம் - சீவகனுடைய மார்பத்தை. பட்டவாறு என்னை - இந்நல்வினை உண்டாகிய விதம் எங்ஙனம்! ஆச்சரியக்குறிப்பு. நங்கை - காந்தருவதத்தை. (சீவகன்) மார்பம் ஓலையாக, சாயலாளாகிய நங்கை முலைத்தடத்தினால் எழுதி ஆட்கொள்வான் (வேண்டி) வீணை வாரியில் வந்து பட்டனன் எனமாறி முடிக்க. 'என்னைபட்டவாறு' என்பதனை 'இனையகூறி' (சீவக. 709) என்பதனோடு இயைத்துக் கொள்க.

(உரை) [1] என்னை பட்டவாறு என்பதன் பின் "என்று' என்பதைக் கூட்டுக.

709\. இனைய கூறி - இத்தன்மையவான மொழிகளைக்கூறி; கூறியவர் காந்தருவதத்தையின் தோழியர். வனைதல் - எழுதுதல். கனை வண்டு ஓதி - ஒலிக்கின்ற வண்டுகள் பொருந்திய கூந்தலையுடையவள்; காந்தருவதத்தை. கடவுளைக் கண்ணிற் கண்டவர். எனையது - எவ்வளவு. அனையது - அவ்வளவு. சீவகனைக் கண்டவர்கள் காமனைக் கண்களாற் கண்டது போன்ற இன்பத்தை யுற்றார்கள் என்றவாறு.

தோழிமாரும் : உம்மை சிறப்பு. எழுதலாந் தன்மையுடைத் தல்லாத. ஓதி : தத்தை. கடவுள் - காமன்.

(இ - ள்.) அயன் தான் படைத்த வனப்புமிக்கவ ரெல்லாரிலும் வனப்பு மிக்குக் கட்கினியனாக ஒருவனை யான் படைக்கவேண்டுமென்று நெடுநாள் நினைத்திருந்து நிருமிதத்தாலியற்றிய மகன் இச்சீவகன்; இவன் விரைசெய் மார்பம் ஓலையாகக்கொண்டு சாயலாளாகிய நங்கை தன் முலைத் தடத்தினாலே எழுதி அடிமைகொள்ளும்படி வீணைவாரியிலே வந்து தப்பாமல் அகப்பட்டான்; ஈதொரு நல்வினையுண்டாயவாறு எங்ஙனமிருந்ததென்று இத்தன்மையவான மொழிகளைக்கூறி அவள் தோழிமாரும் இன்புறுநிற்க, ஒழிந்தோரும் காமனைக் கண்ணுற்கண்டவர் எவ்வளவெவ்வளவாகிய இன்பத்தையுற்றார் அவ்வளவவ்வளவாகிய இன்பத்தின்வடிவு நாமாயினாரென்க.

[1] ஒருவனைப் படைக்கவேண்டுமென்றெனவும், கொண்டெனவும், ஈதொரு நல்வினையெனவும், ஒழிந்தோருமெனவும் வருவிக்க. (உகரு - எ)

(வேறு)

710. (க) குட்டநீர்க் குவளை யெல்லாங் கூடிமுன் னிற்க லாற்றாக், கட்டழ கமைந்த கண்ணா ணிறையெனுஞ் சிறையைக் கைபோய், இட்டநாண் வேலி யுந்திக் கடலென வெழுந்த வேட்கை, விட்டெரி கொளுவ நின்று ளெரியுறு மெழுகி னின்றாள்.

711. (உ) நலத்தைமத் தாக நாட்டி நல்வலி யிளமை வாராக், குலப்பிறப் பென்னுங் கையாற் கோலப்பா சங்கொ ளுத்திக், கலக்கியின் காமம் பொங்கக் கடைந்திடு கின்ற காளை, இலைப்பொலி யலங்கன் மார்ப மிமையவதென் றுருகுங் கொல்லோ.

(உரை) [1] இவற்றை முறையே, 'வனப்பு மிக்கினியனா' (சீவக. 707) என்பதன் பின்னும், 'மார்ப மோலையா' (சீவக. 708) என்பதன் பின்னும், 'என்னை' (சீவக. 708) என்பதன் பின்னும், 'இன்புற' (சீவக. 709) என்பதன் பின்னும் வருவிக்க.

710. குட்டம் - ஆழம். கட்டழகு - மிக்க அழகு. கண்ணாள் - காந் தருவதத்தை. நிறையெனும் சிறையைக் கைபோய் - நிறை யென்கிற தடையை நீங்கி; நிறை - நெஞ்சைக் கற்புநெறியில் நிறுத்தல் (குறள், 57, பரிமேல்.). நாண்வேலி உந்தி - நாணுகிற வேலியைப் பாய்ந்து; குறள், 1016. வேட்கையெரி கொளுவ - காமத்தீ யெரியும்படி. அவள் உள்ளம் சோர்ந்தமைக்கு எரியுறு மெழுகு உவமை; "எரியுறு மெழுகி னுள்ளஞ் சோர" (பெருங். 1. 46 : 249)

711. நலம் - வடிவழகு. வலி இளமை வாரா - வன்மையையும், இளமையையும் மத்தின் இருபக்கத்தும் பூட்டும் கயிறாகக் கொண்டு.

712. (௩) தீங்கரும் பெருத்திற் றூங்கி யீயின்றி யிருந்த தீந்தேன், நாங்கணுற் பருகி யிட்டு நலனுணப் பட்ட நம்பி, பூங்குழன் மகளிர் முன்னர்ப் புலம்பனீ நெஞ்சே யென்றாள், வீங்கிய காமம் வென்றார் விளைத்தவின் பத்தோ டொப்பாள்.

713. (௪) கண்ணெனும் வலையி னுள்ளான் கையகப் பட்டி ருந்தான், பெண்ணெனு முழலை பாயும் பெருவனப் புடைய நம்பி, எண்ணின்மற் றியாவ னுங்கொ லென்னிதற் படுத்த வேந்தல், ஒண்ணிற வுருவச் செந்தீ யுருவுகொண் டனைய வேலான்.

714. (௫) யாவனே யானு மாக வருநிறைக் கதவ நீக்கிக், காவலென் னெஞ்ச மென்னுங் கன்னிமா டம்பு குந்து, நோவவென் னுள்ளம் யாத்தாய் நின்னையு மாலை யாலே, தேவரிற் செறிய யாப்பன் சிறிதிடைப் படுக வென்றாள்.

---

குலம் - தாய்குலம், தந்தைகுலம். கையால் - இருகைகளால். கோலப் பாசம் - அலங்கரித்துக் கொண்டதனாலாய அழகென்னும் கடைகயிற்றை. கொளுத்தி - மத்திற் பூட்டி. காளை - சீவகன். காளையினுடைய மார்பத்தை. இயைவது - யான் பொருந்துவது. மு: " ஆருயி ரன்ன வென் னற்புவார் கொளீஇக், காரிகை மத்தினென் கடுவலி கடையும், வார்வளைத் தோளி" (பெருங். 3. 10 : 21-3) என்பதன் கருத்து இப் பாடலோடு ஒருவகையாக ஒப்பிடற்குரியது.

712. தீங்கரும்பு - இனிய கரும்பு. எருத்து - கழுத்து. ஈ - தேனீ. கரும்பிலுள்ள தேனடை : பெருங். 1. 48 : 146 - 7. சீவகனுக்குத் தேன் உவமை. நாம் கண்ணாலே பருகி என்க. பருகியிட்டு - பருகி; ஒரு சொல். நலன் - சீவகனுடைய வடிவழகை. தேன் என்றதற்கேற்பப் பருகி என்றார். நாம் கண்ணால் பருகி உண்ணப்பட்ட நம்பி. நெஞ்சே, நீ மகளிர் முன்னர்ப் புலம்பாதே. என்றாள் - என்று காந்தருவதத்தை தன் நெஞ்சொடு கூறினாள். வீங்கிய - மிக்க. காமம் வென்றார் - மெய் யுறு புணர்ச்சியை வென்ற தேவர்கள்.

713. கண் - ஞானக்கண். கையகப்பட்டு - என்றால் முற்றும் உணரப்பட்டு. உழலை - தடைமரம்; சீவக. 422. நம்பி, வலையி னுள்ளான், கையகப்பட்டிருந்தான் என்க. எண்ணின் - ஆராய்ந்தால். என்னிதற் படுத்த ஏந்தல் - என்னை இவ்வருத்தத்தில் அகப்படுத்திய சீவகன்; "எம்மிதற் படுத்தும் வெவ்வினை" (மணி. 8 : 40); "என்னிதற் படுத்த நன்னுதன் மாதரை" (பெருங். 1. 34 : 93). வேலானாகிய ஏந்தல் யாவன் ஆங்கொல் என மாறி யியைக்க.

714. நிறைக்கதவம் - நிறையாகிய கதவு; " நிறையெனுஞ்சிறை" (சீவக. 710) என்றார் முன். அடி : 1 - 2 : " யாவ னாயினு மாக மற்றென்,

715. (௬) கழித்தவே லேறு பெற்ற கடத்திடைப் பிணையின் மாழ்கி, விழித்துவெய் துயிர்த்து மெல்ல நடுங்கித்தன் றோழி கூந்தல், இழுக்கிவண் டிரியச் சேர்ந்தோர் கொடிப்புல்லுங் கொடியிற் புல்லி, எழிற்றகை மார்பற் கின்யா ழிதுவுய்த்துக் கொடுமோ வென்றாள்.

இவை ஆறும் ஒரு தொடர்.

(௧) குட்டம் - ஆழம். கடலெனத் [1] தரங்கித்து எழுந்த வேட்கை யாகிய எரி கொழுந்துபட்டு எரியநின்றாள். இது [2] கைம்மிகலென்னும் மெய்ப்பாடு.

(௨) தனது வடிவழகை மத்தாக நாட்டி வலியும் இளமையும் அம் மத்தினது இரண்டுதலையிலும் பூட்டும் வாராகக்கொண்டு ஒப்பனையழ காகிய கடைகயிற்றை அம்மத்திலே பூட்டித் தாய்குலனும் தந்தைகுலனு மென்கின்ற கைகளாலே காமமென்கிற கடலைப் பொங்கும்படி கலக்கிக் கடைந்திடுகின்ற காளையது மார்பம் இயையும் நல்வினை எந்நாளிலே உண்டாவதென்று ஐயமுற்று மற்றைநாளில் விடியற்காலத்தே இயையு மென்பதனைத் தனது ஞானத்தா லுணர்ந்தாளென்க. 'என்றாகும்' என்பது [3] விரைவென்னு மெய்ப்பாடு.

காவ னெஞ்சங் கட்டழித் தனனென" (பெருங். 3. 6 : 74 - 5). நெஞ்சில் ஒருவரும் புகாமை தோன்றக் கன்னிமாடம் என்றார். என் உள்ளம் நோவ யாத்தாய் என மாறியியைக்க. அடி : 1-3 : "நிறைத்தாழ் பறித்தென் னெஞ்சகம் புகுந்து, கள்வன் கொண்ட வுள்ளம்" (பெருங். 1. 33 : 150-51, அடிக்.). மாலையால் யாத்தல் : "கோதைகளி லியாத்திவனை நீர் கொணர்மின்" (சூயா. சுயம். 61). தேவரின் - தேவரைப்போல். நீயும் இமையா நாட்டம் பெறும்படி. செறிய - நெருங்க. யாப்பல் - கட்டுவேன். சிறிது இடைப்படுக - சிறிதுநேரம் தாமதிக்க.

715. கழித்த - உறையினின்றும் எடுத்த. வேலேறு பெற்ற பிணையின் - வேல் ஏறுதலைப்பெற்ற பெண்மானைப்போல்; "வேலேறு பெற்ற பிணையின் னனிமாழ்கி" (சீவக. 2344). கடம் - காடு. மாழ்கி - மயங்கி. வெய்துயிர்த்து - பெருமூச்செறிந்து. தோழி - வீணைபதி. தோழியின் கூந்தலில் வண்டு இழுக்கி இரியச் சேர்ந்து என்க; இழுக்கி இரிய - தப்பிக் கெடும்படி. ஓர் கொடிப்புல்லும் கொடியிற் புல்லி - ஒரு பூங்கொடியைத் தழுவும் வேறொரு பூங்கொடியைப் போலத் தோழியைத் தழுவி. மார்பற்கு - சீவகனுக்கு. இன்யாழ் - இனிய யாழ். உய்த்து - செலுத்தி. கொடுமோ - கொடுப்பாயாக; மோ : முன்னிலையசை.

(உரை) [1] தரங்கித்து - அலைவீசி; சீவக. 328, அடிக்.; "அகந்தரங் கித்து" (அரங்கத்தந். 21). [2] 'கைம்மிகலென்பது ஒழுக்கக் கேடு; அது சாதித் தருமத்தினை நீங்கினமை தன்னுள்ள நிகழ்ச்சியானே பிறர் அறியுமாற்றல் ஒழுகுதல்' (தொல் மெய்ப். 12, பேர்.) [3] 'விரை

(௩) 'கரும்பெருத்திற்றூங்கி' என்று எளிமை கூறினாள். இதற்கு முன்பு ஒருமகளிரும் இவனை நுகராதிருந்தமையுணர்ந்து, 'ஈயின்றி யிருந்த தீந்தேன்' என்றாள்; எனவே பிரமசரியங் கூறினார். நாம் கண்ணாலே நலத்தை உள்ளடக்கி நுகரப்பட்ட நம்பி. 'புலம்பல்' என்பது [4] சிதைவுபிறர்க்கின்மை யென்னுமெய்ப்பாடு. இன்பம் - சுவர்க்கத் தின்பம்.

(௪) ஞானக்கண்ணென்கின்ற வலையை வீசிக் குலமுதலியவெல்லாம் நோக்கும்படி அவ்வலையினுள்ளே யிருந்தான்; "இருகணும்புதைத்து வைக்கும்" (சீவக. 1578) என்றாற்போல; அந்தஞானத்தாலெல்லா முணர்தலின், 'கையகப்பட்டிருந்தான்' என்றாள். தன்மேல் வேட்கை செல்லாமையின், 'பெண்ணெனுமுழலைபாயும்' என்றாள்; யாழ்வென்ற பின் அல்லது அவற்கு வேட்கை நிகழாமை மேலே காண்க. யாவனுங் கொல் - தேவனோ மகனோ; இஃது [5] ஐயமென்னுமெய்ப்பாடு; "சிறந்துழி யையஞ் சிறந்ததென்ப, இழிந்துழி யிழிபே சுட்ட லான" (தொல். களவு. 3) என்பதனால். தலைவிக்கு ஐயம் நிகழாதேனும் ஈண்டுக் களவன்மை யானும் தனது ஞானத்தால் ஐயந்தீர்தல்வன்மையானும் ஐயம் நிகழ்ந் தது. மக்களால் தன்னை வருத்தலாகாமை முன்னே காண்டலின், என்னை இவ்வருத்தத்திலே அகப்படுத்தின ஏந்தலென்றாள். [6] உருவச்செந்தீ; உருவம் அடை. தீ வேலின்வடிவைக் கொண்டாற்போலும் வேலான்.

(௫) தேவனாயினுமாக, மகனாயினுமாக. இஃது [7] ஆராய்ச்சியென்னு மெய்ப்பாடு. காவலாகிய நிறைக்கதவைத் திறந்து. யாத்தாய், [8] எதிர் பெய்து பரிதலென்னுமெய்ப்பாடு. மாலையாலே - எனது இயல்பாலே; மேல் மாலையாற் பிணித்தலுந்தோன்ற. தேவரிற்செறிய யாப்பன் - தேவரைப்போலே இமையா நாட்டமாக நோக்கும்படி செறியப் பிணிப்பேன்.

(௬) உறைகழித்த [9] வேலேற்றை மருமத்தே தப்பாமற்பெற்ற கடத் திடைப் பிணையென்றார், பரிகாரமின்மையான். மாழ்கி விழித்து உயிர்த்

---

வென்பது இயற்கை வகையானன்றி ஒரு பொருட்கண் விரைவு தொழில் பட உள்ள நிகழுங் கருத்து' (தொல். மெய்ப். 12, பேர்.). [4] 'சிதைவு பிறர்க்கின்மை என்பது, அங்ஙனம் நகுநயம் மறைத்த வழியும் உள்ளம் சிதைந்து நிறையழியுமாகலின் அச்சிதைவு புறத்தார்க்குப் புலனாகாமை நெஞ்சினை நிறுத்தலும் என்றவாறு' (தொல். மெய்ப். 13, பேர்.). [5] 'ஐய மென்பது ஒரு பொருள் மேல் இரு பொருட்டன்மை கருதி வரும் மனத் தடுமாற்றம்' (தொல். மெய்ப். 12, பேர்.). [6] உருவம் என்பது பொரு ளின்றிச் செந்தீ என்பதற்கு அடைமொழியாக வந்தது. [7] 'ஆராய்ச்சி என்பது ஒரு பொருளை நன்றுதீதென்று ஆராய்தல்' (தொல். மெய்ப். 12, பேர்.). [8] 'எதிர்பெய்து பரிதலென்பது உருவு வெளிப்பாடு; அது தலை மகனையும் அவன் தேர் முதலாயினவற்றையும் தன்னெதிர்பெய்து கொண்டு பரிந்து கையறுதல்' (தொல். மெய்ப். 22, பேர்.). [9] வேலேற்றை - வேல் ஏறுதலை. [10] 'இடுக்க ணென்பது மலர்ந்தநோக்கமின்றி மையல் நோக்கம்பட வரும் இரக்கம்' (தொல். மெய்ப். 12, பேர்.). [11] 'நடுக்க

தென்பவை [10] இடுக்கணென்னுமெய்ப்பாடு. நடுங்கி : இது [11] நடுக்க மென்னும் மெய்ப்பாடு. 'மெல்லவழுக்கி' என்பது பாடமாயின், அவ் விடத்து நீங்கி யென்க. தன்தோழி கூந்தலில் வண்டு கெடும்படி அவளைச்சேர்ந்து. இது [12] கையாறென்னு மெய்ப்பாடு. எழிற்றகை மார்பனுக்கு இனிய யாழ் இந்த யாழாயினும் அவன் கல்வியறிதற்குப் பலயாழையுஞ் செலுத்திப் பின்பு இந்த யாழைக் கொடுப்பாயாக வென்று ளென்க.

(இ - ள்.) மிக்க அழகுடைய கண்ணாள், இன்பத்தோடொப்பாள், அவள் வேலான், வனப்புடைய நம்பி, என்னிதற்படுத்த ஏந்தல், இவன் ஆராய்ந்தால் யாவனுங்கொலென ஐயுற்று, யாவனேயாயினுமாக ; நமது ஞானக்கண்ணிடத்தான் ; அதனால், யானேக்கினவிடத்துக் கையகப் பட்டேயிருந்தான் ; அங்ஙனமிருந்து கடைந்திடுகின்ற காளையது மார்பு இயைவது என்றுவது கொல்லோவென்று ஐயுற்று நோக்கி அக்காலம் சிறிதுநீட்டித்தலின், அதற்கு ஆற்றுது சிறையைக் கைபோய் நாண் வேலியைப் பாய்ந்து காமத்தீயெரிய நின்றுள் ; அப்பொழுது எரியுறு மெழுகின் நின்றுள் ; அங்ஙனம் நின்று மாழ்கி விழித்து உயிர்த்து நடுங்கி மெல்லத் தோழிமேலே வீழ்ந்து அவளைப்புல்லி அங்ஙனம் கையா றுற்றவிடத்துத் தன்மனத்துநின்ற தலைவனைநோக்கி, நீக்கி மாடம் புகுந்து யான்நோம்படி என்னுள்ளத்தைப் பிணித்தாய் ; நின்னையும் பிணிப்பேன் ; சிறிதுபொழுது கழிகவென்றுள் ; என்ற பின்பு தன்னெஞ் சினை நோக்கி, நெஞ்சே, நலனுண்ணப்பட்ட நம்பி ஈயின்றியிருந்த தீந்தேனுதலால், மகளிர்முன்னே புலம்பாதொழிகவென்று ஆற்றுவித்துத் தேற்றிப் பின்பு தோழியைநோக்கி, இனிய யாழிது உய்த்துக்கொடுமோ வென்றுளென்க. (உகஅ-உரு)

(வேறு)

716\. (க) தடங்க ணாள்ப ணியினாற் றனவ் வீணை யொன்றினை
நெடுங்க ணாளெ ழினியை நீக்கி யுய்த்து நீட்டினாள்
மடங்கலன்னமொய்ம்பினான்வருகவென்றுகொண்டுதன்
கிடந்தஞானத்தெல்லையைக்கிளக்கலுற்று நோக்கினான்.

---

மென்பது அன்பும் அச்சமும் முதலாயின உடம்பிற் புலப்படுமாற்றன் உள்ளம் நடுங்குதல். புதல்வர்க்குப் பிணி இல்வழியும் எவனுங்கொல் என்று நடுங்குதல் அன்பான் நடுங்குதல் ; அச்ச மென்னுஞ் சுவை பிறந்த பின்னர் அதன் வழித்தோன்றிய நடுக்கம் அச்சத்தாற் றேன்றிய நடுக்கம்' (தொல். மெய்ப். 12, பேர்.). ஈண்டு அச்சத்தாற் றேன்றிய நடுக்கம். [12] 'கையாறென்பது அவ்வுயிர்ப்புமின்றி வினையொழிந் தயர்தல்' (தொல். மெய்ப். 12, பேர்.)

716\. தடங்கணாள் - காந்தருவதத்தை. நெடுங்கணாள்தான் எழினி யவ்வீணை யொன்றினை நீக்கி உய்த்து என மாறியியைக்க. நெடுங் கணாள் - வீணாபதி. எழினியவ்வீணை ஒன்றினை நீக்கி - உறையிலிடப் பட்ட உயர்ந்ததாகிய அவ்வீணையொன்றை மட்டிலும் நீக்கிவைத்து.

(வேறு)

717. (உ) சுரந்து வானஞ் சூன்முதிர்ந்து மெய்ந்நொந் தீன்ற துளியேபோற், பரந்த கேள்வித் துறைபோய பைந்தார் மார்பன் பசும்பொன்யாழ், நரம்பு தேனூர்த் தெனத்தீண்டி நல்லாள் வீணை பொல்லாமை, இருந்த முலையா ணின்றூளை நோக்கி யிசையி னிது சொன்னுன்.

718. (ஙு) நீர்நின் றிளகிற் றிதுவேண்டா நீரின் வந்த திது போக, வார்நின் றிளகுமுலையினுய் வாட்புண் ணுற்ற திதுநடக்க, ஒரு முருமே றிதுவுண்ட தொழிக வொண்பொ னுகுகொடியே, சீர்சால் கணிகை சிறுவன்போற் சிறப்பின் றம்ம விதுவென்றூன்.

719. (ச) கல்சேர் பூண்கொள் கதிர்முலையாய் காமத் தீயால் வெந்தவர்போற், கொல்லை யுழவர் சுடப்பட்டுக் குரங்கி வெந்த திதுகளிறு, புல்ல முரிந்த தெனப்போக்கித் தூம மார்ந்த துகி லுறையுள், நல்யாழ் நீட்ட வதுகொண்டு நங்கை நலத்த திது வென்றூன்.

---

உய்த்து - குற்றமுடைய வேறு பல வீணைகளைச் செலுத்தி. மொய்ம் பினுன் : சீவகன். கொண்டு - வீணைகளைக் கைக்கொண்டு. கிடந்த - பரந்து கிடந்த. கிளக்கலுற்று - அறிவிக்க எண்ணி.

717. வானம் - மேகம். சூல்முதிர்ந்து - கருப்பமுற்றி. துளி - பெரு மழை. வானம் சூல் முதிர்ந்து மெய்ந் நொந்து சுரந்தீன்ற துளியே போல் எனமாறி யியைக்க. கேள்வித் துறைபோகிய - நூற் கேள்விகளுக் குரிய துறைகளெல்லாம் முற்றக் கற்ற; மதுரைக். 760, ந; கம்ப. பாயிரம், 9. மார்பன் - சீவகன். யாழ்நரம்பு தேனூர்த்தெனத் தீண்டி - யாழின் நரம்பை வண்டு ஒலித்தாற்போல் தெறித்து. நல்லாள் - காந்த ருவதத்தையினுடைய. வீணை பொல்லாமை - வீணைகளின் குற்றத்தை. இருந்த முலை - உள்ளடங்கிய முலை. நின்றூளை - வீணுபதியை.

718. இளகிற்று - மெலிவடைந்தது; சீவக. 2146. இது - இவ் வீணை. இது நீரின் வந்தது - இவ்வீணையின் மரம் அழுகியது. வார் - கச்சு. முலையினுய் : விளி; என்றது வீணுபதியை. இது வாட்புண்ணுற் றது - இவ்வீணையின் மரம் வாளால் வெட்டுப்பட்டது. ஒரும் : அசை; சீவக. 631. இஃது உருமேறு உண்டது. ஒண்பொன் உகு கொடியே - ஒள்ளிய பொன்போன்ற தாதுக்களைச் சிந்தும் பூங்கொடி போல்வாய்; என்றது வீணுபதியை நோக்கி விளித்தது. கணிகை - வேசை. போக, நடக்க, ஒழிக என்பன வியங்கோள்.

719. வீணுபதி பேடியாதலின், 'கல்சேர் முலையாய்' என்று இகழ்ச்சி தோன்றக் கூறினுன். கொல்லை - முல்லைநிலம். உழவரால் சுடப்பட்டு. குரங்கல் - தாழ்தல்; சீவக. 262, 657. புல்ல - தழுவ. போக்கி - போக்குதலால். தூமம் - அகிற்புகை. நீட்ட - வீணுபதி கொடுக்க. இது நங்கை நலத்தது - இவ்வீணை காந்தருவதத்தையின் சிறந்த நலத்தையுடையது; உயர்ந்தது என்றபடி ; பொருந. 19; சிலப். 7 : 2-4.

இவை நான்கும் ஒருதொடர்.

(க) நெடுங்கண்ணாள் தானென்க. அவ்வீணை - தத்தை முற்கூறிய வீணை. எழினி - உறை.

(உ) வானம் சூல்முற்றி மெய்ந்நொந்து சுரந்தீன்ற பெருமழை எத்துறையுஞ்சென்று பயன்பட்டாற்போலப் பரந்த நூற்கேள்விகளெல்லாம் முற்றக் கற்றுப் பயன்படுமார்பன். எழாது உள்ளடங்கிய முலை. பொல்லாமை இதுவென்றானென்க; பொல்லாங்கு பலவற்றையும் சாதியொருமையான் 'இது' என்றான். நரம்பினிசையாற் பிறந்த பொல்லாமை யாவன: [1] "செம்பகை யார்ப்புக் கூட மதிர்வு", "செம்பகை யென்பது பண்ணோ டுளரா, இன்பமி லோசை யென்மனார் புலவர்", "ஆர்ப் பெனப் படுவ தளவிறந் திசைக்கும்", "கூட மென்பது குறியுற விளம்பின், வாய்வதின் வராது மழுங்கியிசைப் பதுவே", "அதிர் வெனப் படுவ திழுமென லின்றிச், சிதறி யுரைக்குந ருச்சரிப் பிசையே" என்பன. இவை மரக்குற்றத்தாற்பிறக்கும்; "நீரிலே நிற்ற லழுகுதல் வேத னிலமயக்குப், பாரிலே நிற்ற லிடிவீழ்த லேய்மரப் பாற்படல்கோ, ணேரிலே செம்பகை யார்ப்பொடு கூட மதிர்வுநிற்றல், சேரினேர் பண்க ணிறமயக் கப்படுஞ் சிற்றிடையே."

(௩) இளகிற்று - மெல்கிற்று. கட்ட ஆதாரமின்மையின், வார் இளகுற முலை. புண்ணுறுதல் - வெட்டுப்பட்டு நிற்றல். கணிகைசிறுவன் போலென்றது, நிலமயங்கினவிடத்தே நிற்றலின். வேண்டா, போக, நடக்க, ஒழிக என்றன இகழ்ச்சி.

(௪) கல்சேர் முலையாய்: இகழ்ச்சி. குரங்கி - தாழ்ந்து. [2] 'இது' என்பது இரண்டற்குங் கூட்டுக. நங்கைநலத்தது - நங்கையின் குலமுதலிய நலத்தைத் [3] தானுமுடைத்து. [4] அந்நலமாவன: "சொல்லிய கொன்றை கருங்காலி மென்முருக்கு, நல்ல குமிழுந் தணக்குடனே - மெல்லியலாய், உத்தம மான மரங்க ளிவையென்றார், வித்தக யாழோர் விதி", "தளமாய்ச் சமநிலத்துத் தண்காற்று நான்கும், உளதா யொருங்கூன மின்றி- யளவு, முதிரா திளகாது மூன்றுங் கூறுய, அதுவாகில் வீணைத்தண் டாம்", "கோடே பத்த ராணி நரம்பே, மாடக மெனவரும் வகையின வாகும்", "பதுமங் கழல்குடந் தாடியொ டுள்ளிபண் பூண்டுநின்ற, விதியமர் நண்டு குடையே குடுமிமெய்க் கோட்டுறுப்பு, மதியமர் போதிகை புட்டின் முகஞ்சுவர் மன்னொருத்தம், விதியமர் பத்தர்க் குறுப் பென் றுரைத்தனர் மின்னிடையே" என இவையும் பிறவும்.

(உரை) [1] இங்குக் காட்டும் மேற்கோட் பாடல்கள் சிலப்பதிகாரம், 8 : 29-30 அடியார்க்குநல்லார் உரையிற் காணப்படுகின்றன. [2] 'இது' என்பதை வெந்தது என்பதனோடும் முரிந்தது என்பதனோடும் கூட்டுக. [3] தானுமென்றது வீணையை. [4] அந்நலம் என்றது வீணையின் நலத்தை.

(இ - ள்.) தத்தையது ஏவலாலே அவ்வீணாபதிதான் அவ்வெழினியையுடைய வீணையொன்றினையும் நீக்கிவைத்து, ஒழிந்த வீணைகளைச் செலுத்திக் கொடுத்தாள்; அப்பொழுது மொய்ம்பினனும் இங்ஙனே வருகவென்றுகூறி அவற்றைக் கைக்கொண்டு தனது பரந்துகிடந்த ஞானத்தினளவை அறிவிக்க லுற்றுநோக்கினன்; நோக்கி அம்மார்பன், அவற்றின் நரம்பைத் தேனுர்த்தெனத் தெறித்து அவற்றினிசையாலே அவள் வீணைகளின் பொல்லாமை இதுவென்று வீணாபதி நின்றவளை நோக்கிச் சொன்னான்; எங்ஙனமெனின், முலையினாய், இந்தமரம் மெல்கிற்றதலின், இவ்வியாழ் வேண்டா; இந்தமரம் அழுகினதாதலால், இவ்வியாழ் போக; இந்தமரம் புண்ணுற்றதாதலால், இவ்வியாழ் நடப்பதாக; இந்தமரம் உருமேறுண்டதாதலால், இவ்வியாழ் ஒழிவதாக: இந்தமரம் சிறப்பின்றுதலால், இவ்வியாழ் ஒழிவதாகவென்று சொன்னான்; அங்ஙனங்கூறிய பின்னும் கதிர்முலையாய், இம்மரம் வெந்தது; இம்மரம் முரிந்ததென்று ஒழிந்த யாழ்களையும் போக்குதலால், நல்ல யாழை நீட்ட, அதனை வாங்கிக்கொண்டு நங்கைநலத்தது இதுவென்றுனென்க.

(உ உ ச-எ)

(வேறு)

720. இருநில மடந்தை யீன்ற திருவிசும் பென்னுங் கைத்தாய்
திருநல மின்னுப் பொன்ஞாண் முகின்முலை மாரித் தீம்பால்
ஒருநலங் கவினி யூட்ட வுண்டுநோய் நான்கு நீங்கி
அருநலங் கவினி வாள்வா யரிந்திது வந்த தென்றான்.

(இ - ள்.) மண்மகளீனப்பட்ட மரம், விசும்பென்னும் செவிலித்தாய் அழகியநலத்தையுடைய மின்னாகிய பொன்னணியினையுடைய முகிலாகிய முலையின் மாரியாகிய இனிய பாலை முழுவலன்போடே ஊட்ட உண்டு நோய் நீங்கி வளர்ந்து வாளின்வாயால் அரிந்துவந்தது, இவ்வியாழென்றுனென்க.

ஈன்றது பெயர்; சினைவினை முதலொடுமுடிந்தது. நற்றுயன்பு செவிலிக்குப்பிறந்து வளர்த்தமைதோன்ற, 'ஒருநலம்' என்றார்; நான்காவன: வெயிலும் காற்றும் நீரும் நிழலுமிகுதல். (உ உ அ)

---

720. நிலமடந்தை - பூமிதேவியால். ஈன்றது - பெறப்பட்டதாகிய இம்மரம். விசும்பென்னும் கைத்தாய் - ஆகாயமாகிய செவிலித்தாயினுடைய. முகில்முலை - மேகமாகிய முலையின். மாரித்தீம்பால் - மழையாகிய இனிய பாலை. ஒரு நலம் - ஒப்பற்ற அன்பு. நோய் நான்கு; 'ஆதவ, வாத, பய, சாயை என்பன' (சிலப். 7 : 1, அரும்பத.). நலம் கவினி - வளர்ந்து. வாளின் வாயால். அரிந்து - வெட்டப்பட்டு. இது - மடந்தை யீன்றது. கைத்தாய் ஊட்ட உண்டு வந்தது என்றான் என்க.

(மேற்.) அடி, 3 : சிலப். 7 : 1, அரும்பத.

721. தீந்தொடை நரம்பின் றீமை சிறிதலாப் பொழுது மோதிப்
பூந்தொடை யரிவை காணப் புரிநெகிழ்த் துரோமங் காட்டத்
தேங்கம ழோதி தோற்றாள் செல்வனுக் கென்ன மைந்தன்
வாங்குபு நபுலன் கையுள் வார்புரி நரம்பு கொண்டான்.

(இ - ள்.) மைந்தன், நரம்பின் தீமையை நெடும்பொழுதெல்லாம் ஆராய்ந்து கூறி அதற்கேற்ப அரிவைகாணும்படி முறுக்கையுடைத்து அதிற்கிடந்த மயிரைக் காட்டுதலின், அவையுள்ளோர் ஓதி இனிச் செல்வனுக்குத் தோற்றாளென்னுநிற்க, அவன் நபுலன் கையினரம்பை வாங்கிக்கொண்டானென்க.

தனக்குச் சேமமாக வந்தவற்றில் நரம்பையே வாங்கினான், யாழ் நன்றாதலின். கந்துகன் படையமைத்தெழுமினென்றதனால் [1]நந்தட்டனும் பதுமுகன்முதலாயினாரும் போர்க்கோலத்தோடும் புறத்து நின்றாரென்பது தோன்ற, நபுலன்கையில் நரம்பிருந்ததென்றார்; அது மேல், "பண்ணியல் யானைமேலான் பதுமுகன்" (சீவக. 747) என்பதனு லுணர்க. "கொடும்புரி மயிர்தும்பு முறுக்கிவை நான்கும், நடுங்கா மரபிற் பகையென மொழிப" என்றார். (உஉ௧)

722. பணிவரும் பைம்பொற் பத்தர் பல்வினைப் பவள வாணி
மணிகடை மருப்பின் வாளார் மாடக வயிரத் தீந்தேன்
அணிபெற வொழுகி யன்ன வமிழ்துறழ் நரம்பி னல்யாழ்
கணிபுகழ் காளை கொண்டு கடலகம் வளைக்க லுற்றான்.

721. சிறிதலாப் பொழுது - நீண்ட நேரம். ஓதி - ஆராய்ந்து கூறி. அரிவை - காந்தருவதத்தை. புரி - நரம்பின் முறுக்கு. உரோமம்- நரம்பினுள் இருந்த மயிர்; புரிநெகிழ்த்து உரோமங் காட்டல்: "தலை மயிர் தழீஇ, மணலகம் பொதிந்த துகளுடைத் தாதலும், பொன்னே காணெனப் புரிமுறை நெகிழ்த்துத், துன்னார்க் கடந்தோன் றேன்றக் காட்ட" (பெருங். 3. 15 : 44-7). காட்ட - காட்டுதலாலே. ஓதி - காந் தருவதத்தை. செல்வனுக்கு - சீவகனுக்கு. செல்வனுக்குத் தோற்றாள் என்ன என்று மாறுக. என்ன-என்று சபையிலுள்ளார் கூற. மைந்தன் - சீவகன். வாங்குபு கொண்டான் - வாங்கிக் கொண்டான். நபுலன் : சீவக னுடைய தம்பி.

(உரை) [1] இவர்கள் சீவகனுடைய தோழர்கள்.

722. பத்தர் - யாழின் ஓர் உறுப்பு. பவளத்தாலாகிய ஆணி. வாளார் - ஒளி பொருந்திய. வயிரமாடகம் என மாறுக. மாடகம் - வீக் குங் கருவி; மாடக மென்பது வகுக்குங் காலைக், கருவிளங் காழ்ப்பினை நால்விரல் கொண்டு, திருவியல் பாலிகை வடிவாக் கடைந்து, சதுரமூன் றுகத் துளையிடற் குறித்தே" (சிலப். 8 : 27-8, அரும்பத. மேற்.)

பணிவரும் - வாசித்தற்ருெழிலிலே வரும். வயிரமாடகம் - நால் விரலளவான பாலிகைவடிவாய் நரம்பை வலித்தல் மெலித்தல் செய்யும் கருவி; "இடக்கை நால்விரன் மாடகந் தழீஇ" (சிலப். 8 : 28) என்ருர் பிறரும். பொன்முதலியன அழகிற்கு இட்டன.

(இ - ள்.) [1]நூல்போனவன் புகழப்படுங்காளை, பத்தர் முதலிய வற்றையுடைய யாழைக்கொண்டு உலகினை வளைக்கலுற்ருனென்க. (உ௱௦)

723. குரல்குர லாகப் பண்ணிக் கோதைதாழ் குஞ்சி யான்றன்
விரல்கவர்ந் தெடுத்த கீத மிடறெனத் தெரித றேற்ருர்
சுரரொடு மக்கள் வீழ்ந்தார் சோர்ந்தன புள்ளு மாவும்
உருகின மரமுங் கல்லு மோர்த்தெழீஇப் பாடு கின்ருன்.

(இ - ள்.) குஞ்சியான், செம்பாலையைப் பண்ணித் தன்விரலாலே கவர்ந்தெடுத்த பாட்டைக் கண்டமென்று கருதிக் கருவியென்று தெளி தலையறியாராய்த் தேவருமக்களும் தம்மில் வாசியின்றி வீழ்ந்தார்; கின்னரமும் அசுணமும் சோர்ந்தன; மரமும் கல்லும் உருகின; அங்ஙனம் வாசித்த நிலையைக் குறித்து அதற்கேற்ப ஆளாபஞ் செய்து பாடாநின்ருனென்க.

"ஆழியு மாரும்போற் கீறி யதனருகே, ஊறி யொரோவொன் றுடன் கீறி - வாழி, எருதாதி கீழ்த்திசைகொண் டீராறு மெண்ணிக், கருதாய் நிலக்கயிற்றைக் கண்டு" (சினேந்திர. காண்ட. ஆரூடச்சக்கரம், 1). இப்பாலைத்திரிவிலே பத்தொன்பது நரம்பையுடைய மகரயாழ் குரல் குரலாமாறு காண்க. (உ௱௧)

---

தீந்தேன் ஒழுகியன்ன......நல்யாழ் : சிறுபாண். 226 - 7; புறநா. 70 : 1; "ஆசில் பாட லமிழ்துறழ் நல்யாழ்" (பெருங். 1. 37 : 150). கணிபுகழ் - நூலிற்றேர்ச்சி பெற்றவருற் புகழப்படுகின்ற. காளை - சீவகன். யாழைக் கொண்டு. கடலகம் - பூமி.

(உரை) [1] நூல் போனவன் - நூல் வல்லான்.

723. குரல் குரலாக வாசித்தல் "குரன்முத லாகவுங் குரலீ ருகவும்", "குரல்குர லாக வருமுறை பாலையிற்" (சிலப். 8 : 38, 28 : 33). குஞ்சியான் : எழுவாய். விரல் கவர்ந்தெடுத்த கீதம் - விரலால் கவர்ந் தெடுத்த யாழ்ப்பாடலை. மிடறென - கண்டப்பாட லென்று எண்ணி. தெரிதல் தேற்ருர் - கருவிப் பாடலென்பதைத் தெரிந்து கொள்ளுதலை அறியாதவராய். புள்ளும் மாவும் சோர்ந்தன - கின்னரப்பறவையும் அசுணமாவும் சோர்ந்தன. கின்னரம் இசையறிவிற் சிறந்தது; சீவக. 657, அடிக். ; 659, 660. அசுணமா இசையறிவிற் சிறந்தது; சீவக. 1402; பெருங். 1. 47 : 241-2; சூளா. நாட்டு. 28; மேரு. வைசயந்த 44; கம்ப. பாயிர. 8. ஓர்த்து - யாழ் வாசித்த நிலையை ஓர்ந்து. எழீஇ - ஆலாபனம் செய்து.

(வேறு)

724. (க) கன்னி நாகங் கலங்க மலங்கி
மின்னு மிரங்கு மழையென் கோயான்
மின்னு மழையின் மெலியு மரிவை
பொன்னுண் பொருத முலையென் கோயான்.

725. (உ) கருவி வானங் கான்ற புயலின்
அருவி யரற்று மலையென் கோயான்
அருவி யரற்று மலைகண் டழுங்கும்
மருவார் சாயன் மனமென் கோயான்.

726. (ரு) வான மீனி னரும்பி மலர்ந்து
கானம் பூத்த காரென் கோயான்
கானம் பூத்த கார்கண் டழுங்கும்
தேனுர் கோதை பரிந்தென் கோயான்.

இவை மூன்றும் ஒரு தொடர்.

இம்மூன்று கவியும் கூதிர்ப்பருவங்குறித்துப் பிரியக் கருதிய தலைவற்குத் தோழி அதற்கு முன் நிகழ்கின்ற காரின்றன்மையும், அது தலைவியை வருத்துந் தன்மையும் யான்கூறவேண்டுமோ? நீயே அறிதியன்றேவெனக் கூறிச் செலவழுங்குவித்தனவாக்குக. இளவேனில் நிகழ்ச்சிக்கண்ணே கார்கூற வேண்டிற்று; [1] யாழ்வென்றபின் அல்லது தன்மனத்தில் வேட்கை தோன்றுதாதலின், அதனைக்கூறவே வேட்கை தோன்றிற்றுகப் புலப்படுமென்பது கருதி.

724. நாகம் - பாம்பு. மலங்கிக் கலங்க எனமாறுக. மலங்கி - கெட்டு. இரங்கும் - ஒலிக்கும். மழை, மின்னும் இரங்கும் எனமாறியியைக்க. மின்னும் மழையின் - மின்னுகின்ற மழையால். யான் முலையையுடைய அரிவை மெலியும் என்கோ எனமாறியியைக்க. பொன்னுண் முலை : சீவக. 720.

725. கருவிவானம் - மின்முதலிய தொகுதியையுடைய மேகம். கான்ற - சொரிந்த. புயல் - நீர். மலையைக்கண்டு. அழுங்கும் - வருந்தும். சாயல் - சாயலையுடையவள்; ஆகுபெயர். யான் மலைகண்டு மருவார்சாயல் மனம் அழுங்கும் என்கோ என்று மாறியியைக்க.

726. வானமீனின் - ஆகாயத்தில் உண்டாகிய நட்சத்திரங்களைப் போல; செந்நிலத்துக்குச் செவ்வானமும், முல்லைப் பூக்களுக்கு மீனும் உவமை; குறுந். 108 : 3 - 4. கானம் - காடு. கார் - கார்காலத்தால். யான், காரினுல் கானம் பூத்தன என்கோ. அழுங்குதல் - அழிதல்; சீவக. 242. கோதை - பூமாலை போல்வாள். பரிந்து - வருந்தி. யான் கார்கண்டு கோதை பரிந்து அழுங்கும் என்கோ.

(உரை) [1] சீவக. 713, ந.

க. (இ - ள்.) யான் கன்னியாகிய பாம்பு மலங்கிக் கலங்கும்படி மழை மின்னு நிற்கும், இரங்கா நிற்குமென்கோ; யான் முலையினையுடைய அரிவை அம்மழையால் மெலியுமென்கோவென்க.

உ. (இ - ள்.) யான் புயலால் அருவியரற்றுமலையென்கோ; யான் அதனைக்கண்டு மருவுதல் நிறைந்த சாயல் மனமழுங்குமென்கோ வென்க.

ங. (இ - ள்.) யான் காரினுலே கானம் பூத்தனவென்கோ; யான் அதனைக்கண்டு கோதைபோல்வாள் பரிந்து அழுங்குமென்கோவென்க.

இத்தாழிசைக் கொச்சகவொருபோகுகள் [2] கந்தருவமார்க்கத்தான் இடைமடக்கின. இது மேல் வருவனவற்றிற்கும் ஒக்கும். (உஙஉ-ச)

(வேறு)

727. அண்ணலியாழ் நரம்பை யாய்ந்து மணிவிர றவழ்ந்த வாறும், பண்ணிய விலயம் பற்றிப் பாடிய வனப்பு நோக்கி, விண்ணவர் வீணை வீழ்த்தார் விஞ்சையர் கனிந்து சோர்ந்தார், மண்ணவர் மருளின் மாய்ந்தார் சித்தரு மனத்துள் வைத்தார்.

(இ - ள்.) தலைவனது விரல் நரம்பை ஆய்ந்து வாசித்தபடியும், அதில் தான் பண்ணிய செலவைக்குறிக்கொண்டு மிடற்றுற்பாடிய வனப்பையுமுட்கொண்டு, கின்னரர் வீணையைக் கைவிட்டார்; விஞ்சையர் நெஞ்சுருகி மெய் சோர்ந்தார்; மக்கள் தாம் அறியாதது கேட்ட மயக்கத்தாலே அறிவுகெட்டார்; இருடிகளும் இதுவும் பேரின்பமாயிருந்த தென்று உட்கொண்டாரென்க.

இதனால், முன்பு யாழ்வாசித்த தன்மையையும் அதற்கேற்பப் பாடின தன்மையையும் கேட்டோர் வியந்தபடி கூறினர். (உஙரு)

728. வீழ்மணி வண்டு பாய்ந்து மிதித்திடக் கிழிந்த மாலை
சூழ்மணிக் கோட்டு வீணைச் சுகிர்புரி நரம்பு நம்பி
ஊழ்மணி மிடறு மொன்றாய்ப் பணிசெய்த வாறு நோக்கித்
தாழ்மணித் தாம மார்பிற் கின்னரர் சாம்பி னரே.

[2] கந்தருவ மார்க்கத்தான் இடைமடக்கி வந்த செய்யுட்கள்; சீவக. 1247, 1611, 2563, 2739 முதலியன; தொல். செய். 149, ந. கந்தருவ மார்க்கம் - இசைப்பாட்டின் முறை.

727. அண்ணல் - சீவகன். விரல் தவழ்ந்த வாறும் - விரலால் வாசித்த படியும். இலயம் - பண்ணின் செலவு; தாள அறுதி என்பர்; சீவக. 682, 1258, ந.; "பேசிய விலயம் பிழையா மரபிற், பாடன் மகளிர் பாணி யளப்பவும்" (பெருங். 4. 12 : 189 - 90). விண்ணவர் - கின்னரர். வீணைவீழ்த்தார் - வீணையைக் கைவிட்டார். விஞ்சையர் - வித்தியாதரர். கனிந்து - மனமுருகி. மருளின் மாய்ந்தார் - மயக்கத் தால் அறிவழிந்தனர். சித்தர் - முனிவர்.

728. வீழ்வண்டு - தேனை விரும்பிய வண்டு; வீழ்தல் - விரும்புதல். மணிவண்டு - நீலமணி போலும் வண்டு. மிதித்திட - மிதித்தலால். கோடு-

(இ - ள்.) மதுவை விரும்பிய வண்டு குதித்து மிதித்தலால் அலர்ந்த மாலையினையும் கோட்டினையுமுடைய வீணையிற் சீவி முறுக்கின நரம்பும் நம்பி மிடறும் ஒன்றாய் ஏவல்செய்தபடியையுட்கொண்டு, கின்னரர் மேனி வாடினரென்க.

இதனால், கருவியும் கண்டமும் உடனிகழ்த்தினமையைக் கேட்டோர் வியந்தபடி கூறினர். (உ௬௬)

729. விண்ணவர் வியப்ப விஞ்சை வீரர்கள் விரும்பி யேத்த
மண்ணவர் மகிழ வான்கட் பறவைமெய்ம் மறந்து சோர
அண்ணலா னனங்க னாணப் பாடினா னரச ரெல்லாம்
பண்ணமைத் தெழுதப் பட்ட பாவைபோ லாயி னாரே.

(இ - ள்.) அண்ணல்தான், வியப்ப ஏத்த மகிழச் சோர நாணப் பாடினான்; அது கேட்ட அரசரெல்லாம் எழுதும்படி சமைத்து எழுதப் பட்ட பாவைபோலாயினரென்க.

இதனால், [1] கருவியை நீக்கி மிடற்றாற்பாடக் [2] கேட்டோர் வியந்த படி கூறினர். (உ௬எ)

(வேறு)

730. (க) பருந்து நிழலும்போற் பாட்டு மெழாலும்
திருந்துதார்ச் சீவகற்கே சேர்ந்தனவென் றெண்ணி
விருந்தாக யாழ்பண்ணி வீணைதான் றோற்பான்
இருந்தா ளிளமயில்போ லேந்திலைவேற் கண்ணாள்.

---

வீணையின் மருப்பு. மாலையினையும் கோட்டையுமுடைய வீணை. சுகிர்புரி நரம்பு - சீவிமுறுக்கின நரம்பு; மலைபடு. 23; புறநா. 109 : 15. நம்பி - சீவகன். ஊழ் - முறைப்பட. மணிமிடறு - அழகிய கழுத்து. வீணையின் நரம்புப் பாடலும், நம்பியின் மிடற்றுப்பாடலும் ஒன்றாய்ப் பணி செய்தன: "மிடறு நரம்பு மிடைதெரி வின்றி" (பெருங். 3. 14 : 275). சாம்பினார் - மேனி வாடினார்கள்.

729. விண்ணவர் - கின்னரர். விஞ்சைவீரர்கள் - வித்தியாதரர். பறவை - கின்னர மிதுனங்கள். பறவை மெய்ம்மறந்து சோர்தல்: பெருங். 3. 14 : 277 - 81. அண்ணல் - சீவகன். அனங்கன் நாணப் பாடினான்: சீவக. 607, அடிக். பண்ணமைத்து - பண்ணுதற்கு அமைத்து. பாவை ஆண்பாலுக்கும் வருதல்; சீவக. 699, அடிக்.

(உரை) [1] கருவி - யாழ். [2] சிறுபஞ்ச. 9.

730. பருந்தும் அதனுடைய நிழலும்: சிலப். அடியார். உரைப் பாயிரம்; பெருங். 3. 14 : 275-6. பாட்டு - கண்டப்பாடல். எழால் - வீணைப்பாடல். அடி. 1 : பெருங். 3. 14 : 275-6; சிலப். 3 : 143, அரும்பத; கந்த. திருக்கல்யாண. [1] (பி - ம்.) 'அதனிழலும்'. சீவகற்கே

731. (உ) கோதை புறந்தாழக் குண்டலமும் பொற்றோடும்
காதி னொளிர்ந்திலங்கக் காமர் நுதல்வியர்ப்ப
மாத ரெருத்த மிடங்கோட்டி மாமதுர
கீதங் கிடையிலாள் பாடத் தொடங்கினாள்.

இவையிரண்டும் ஒரு தொடர்.

(க) [1] பருந்து பறக்குமிடத்து முறையே உயர்ந்து அந்நிலத்தின் கண் நின்று ஆய்ந்து பின்னும் அம்முறையே மேன்மேல் உயர்கின்றாற் போலப் பாட வேண்டுதலின், அஃது உவமையாயிற்று; [2] "சிச்சிலி பூனை குடமுழக்கஞ் செம்மைத்தாம், உச்சிமலை நீர்விழுக்கா டொண் பருந்து - பச்சைநிற, வேயினிலை வீழ்ச்சியுடன் வெங்கா னிழற்பறவை, ஏயுங்கா லோசை யியல்பு" என்றார். 'விருந்தாகச்சேர்ந்தன' என்றாள், இதற்குமுன்பு பிறரிடத்தில்லாது இவனிடத்தே காண்டலின். 'வீணை' என்றது யாழையும் பாட்டையும். மயில் காரினைக் கருதியிருந்தாற்போல இவளும் புணரும் நாளினைக் கருதியிருத்தலின், மயில்போலென்றார். இளமயில்; இளமை - குணம்.

(உ) [3] உட்கும் நாணும் ஒருங்கு வருதலின், 'நுதல்வியர்ப்ப' என்றார். அது தன்னை அவனோக்கியவழிப் பிறந்த மெய்ப்பாடு; அது, "புகுமுகம் புரிதல் பொறிநுதல் வியர்த்தல்" (தொல். மெய்ப். 13) என்னுஞ் சூத்திரத்தானுணர்க. காதலையுடைய எருத்தம். கிடை - ஒப்பு.

(இ - ள்.) மயில்போலிருந்தாள், கண்ணாள், அவள்தான் யாழையும் பாட்டையும் யான் தோற்றற்குப் பருந்தும் அதன் நிழலும்போற் பாட்டும் யாழ்வாசினையும் சீவகற்கே விருந்தாகச்சேர்ந்தனவென்று கருதி யாழைப் பண்ணி வாசித்து மதுரகீதத்தில் அவனையொத்திலளாய்க் கோதை தாழ இலங்க வியர்ப்பக் கோட்டி அம்மதுரகீதத்தைப் பாடத் தொடங்கினாளென்க.

[4] யானென்றும், அம்மதுரகீதமென்றும் வருவிக்க. (உ௩அ - க)

---

என்றது வேறொருவரிடத்து இல்லையென்றபடி. விருந்தாகச் சேர்ந்தன என இயைக்க. தோற்பான் இருந்தாள் என்று தத்தையின் வினையாகக் கூறினர்; சீவக. 11, ந.

(மேற்.) அடி, 1 : சிலப். 8 : 41-4, அரும்பத.

731. கோதை - கூந்தல். புறந்தாழ - முதுகினிடத்தே தங்க. குண்டலமும் பொற்றோடும் : சீவக. 740, 1009. காமர் - அழகிய. மாதர் : காந்தருவதத்தை. எருத்தம் - கழுத்தை. கோட்டி - வளைத்து. கிடை - ஒப்பு.

(உரை) [1] சீவக. 238. [2] திருவால. திருவிளை. 54 : 9. [3] பெருங். 3. 6 : 87; 4. 13 : 100. [4] யான் என்பதை தோற்பான் (சீவக. 730) என்பதன்முன்னும், அம்மதுரகீதம் என்பதனைப் பாடத்தொடங்கினாள் (சீவக. 731) என்பதன் முன்னுங் கூட்டுக.

(வேறு)

732. (க) இலையா ரெரிமணிப்பூ ணேந்து முலையும்
சிலையார் திருநுதலுஞ் செம்பசலை மூழ்க
மலையா ரிலங்கருவி வாள்போல மின்னும்
கலையார்தீஞ் சொல்லினுய் காணர்கொல் கேள்வர்.

733. (உ) பிறையார் திருநுதலும் பேரமருண் கண்ணும்
பொறையார் வனமுலையும் பூம்பசலை மூழ்க
நிறைவா ளிலங்கருவி நீள்வரைமேன் மின்னும்
கறைவேலுண் கண்ணினுய் காணர்கொல் கேள்வர்.

734. (௩) அரும்பேர் வனமுலையு மாடமைமென் றோளும்
திருந்தேர் பிறைநுதலுஞ் செம்பசலை மூழ்க
நெருங்கார் மணியருவி நீள்வரைமேன் மின்னும்
கரும்பார்தீஞ் சொல்லினுய் காணர்கொல் கேள்வர்.

இவைமூன்றும் ஒருதொடர்.

இம்மூன்று தாழிசைக்கொச்சகமும் இளவேனில் வருகின்றமைகண்டு ஆற்றளாகிய தலைவி தோழிக்குரைத்தனவாகக்கூறினள், வேட்கையும் சிறிது புலப்பட்டு நிற்றலின்.

க. (இ - ள்.) இசைக்கலை நிறைந்த சொல்லினுய், முலையும் நுதலும் பசலையிலே மூழ்கும்படி ஒளிநிறைந்த வாள்போலிலங்கும் அருவி மலை மேலே மின்னும்; இதனைக் கேள்வர் காணரோவென்க.

உ. (இ - ள்.) கண்ணினுய், நுதல் முதலியன பசலையிலே மூழ்கும்படி ஒளிநிறைந்த வாள்போலிலங்குமருவி மலைமேலே மின்னும்; இதனைக் கேள்வர் காணரோவென்க.

---

732. இலையார்பூண் - இலையின் வடிவம் பொருந்திய ஆபரணம். எரிமணிப்பூண் - மாணிக்கமணிகளாற் செய்த ஆபரணம். சிலை ஆர் - வில்லைப்போன்ற. மலைஆர் - மலையிலே பொருந்திய. அருவிக்கு வாள் உவமை; "வாள்வனப் புற்ற வருவிக்............குன்றே" (ஐங். 312); "வாணிறங்கொண்ட வருவித்தே நம்மருளா, நாணிலி நாட்டு மலை" (கலித். 42 : 11-2); அகநா. 278 : 7. கலை - இசைக்கலை. கேள்வர் - கணவர்.

733. பிறை ஆர் - பிறைச்சந்திரனை ஒத்த. பேரமர் உண்கண் - பெரிய அமர்செய்யும் மையுண்ட கண்; கலித். 60 : 16; 108 : 16; 146 : 7, ந. பொறையார்முலை - சுமையாகப் பொருந்திய முலை. வாள் இலங்கு அருவி - வாள்போன்று விளங்கும் அருவி. கறை - விடம்.

734. அரும்பேர்முலை - அரும்பை ஒத்த முலை. ஆடமை மென்றோள் - அசைகின்ற மூங்கில்போலும் மெல்லிய தோள். நெருங்கார்மணி அருவி - நெருக்கம் பொருந்திய முத்துவடம் போலும் அருவி. அருவிக்கு முத்து வடம் : சீவக. 35; பரி. 18 : 46; பெருங். 1. 48 : 61 - 3.

ந. (இ - ள்.) சொல்லிறாய், முலைமுதலியன பசலையிலே மூழ்கும்படி முத்துவடம் போலுமருவி மலைமேலே மின்னும்; இதனைக் கேள்வர் காணுரோ வென்க.

[1] அருவி தெளிந்ததெனவே காலம் வேனிலாயிற்று. (உ௪௦ - ௪௨)

(வேறு)

735. பண்ணொன்று பாட லதுவொன்று பல்வளைக்கை
மண்ணொன்று மெல்விரலும் வாணரம்பின் மேனடவா
விண்ணின் றியங்கி மிடறு நடுநடுங்கி
எண்ணின்றி மாத ரிசைதோற் றிருந்தனளே.

'அதுவொன்று' என்றது, அவன் பாடின பாட்டையும் யாழையும். [1] மண்ணுதல் - பண்ணுதல்; "ஆவுதி மண்ணி" (மதுரைக். 494) என்றார் பிறரும். 'விரலும்' என்ற உம்மை எச்சவும்மையாதலின், [2] பாட்டுமென்று கொள்க. விண்ணென்றது, [3] முற்கூறிய [4] உள்ளாளத்திற்குரிய மூலாதாரந் தொடங்கிப் பிரமரந்திரத்தளவுநின்ற வெளியை. 'நடு நடுங்கி' என்றது கம்பிதப்பாட்டை; "எடுத்தல்பாட் டுச்சமா மெண் படுத்தன் மந்தம், தடுத்து நலிதல் சமமாம் - தொடுத்தியன்ற, தள்ளாத கம்பிதந் தானடுக்க னற்குடிலம், உள்வாங்கிப் பாட லுணர்" எனவே உள்ளாளத்திலே கம்பிதங் கலத்தலிற் குறையாயிற்று.

(இ - ள்.) அங்ஙனம்பாடத் தொடங்கினவள் பாடின பாட்டும் அதற் கேற்ற யாழும் ஒருதிறமாயிருந்தன; அவன்பாடின பாட்டும் யாழும் வேறொரு திறமாயிருந்தன. பின்பு உடனிகழ்ச்சியில் யாழைப்பண்ணி வாசித்தலைப் பொருந்தும் பல்வளைக்கையின் விரலும் அதற்கேற்கும் பாட்டுக்களும் நரம்புடன் நடவாவாயின; பின்பு [5] கருவியொழிந்த பாட்டும் விண்ணிலே நின்றியங்கி அக்காலத்தே கம்பித்தலைச்சேர்தலாலே வாதிற்கு எடுத்த கீதத்திற் சிறிது குறைந்து மாதர் இசைதோற்றாளென்க.

---

(உரை) [1] வாளையும், முத்துவடத்தையும் உவமை கூறினமையால் அருவி தெளிந்ததென்பது பெறப்பட்டது.

735. ஒன்று - ஒருதிறமாயிருந்தன. மண் ஒன்று பல்வளைக்கை மெல்விரல் என மாறியியைக்க. மண் ஒன்று - யாழைப்பண்ணி வாசித்தலைப் பொருந்தும். நரம்பின்மேல் - யாழ்நரம்புடன். மிடறும் விண் நின்று இயங்கி நடுநடுங்கி என மாறியியைக்க. நடுங்கி - நடுங்குதலால். மாதர் : காந்தருவதத்தை.

(உரை) [1] மண்ணுதல் - பண்ணுதல்; சீவக. 202, 1808, ந. [2] கண்டப்பாட்டு. [3] சீவக. 658, ந. [4] உள்ளாளம் - உள்ளாளப்பாட்டு. [5] கருவி - யாழ்.

" சிலைத்தொழில் ", " கருங்கொடி " (சீவக. 657 - 8) என்னும் கவிகளால் தெய்வத்தன்மையான பாட்டுடையளென்று கூறிவைத்து ஈண்டுக் [6] கற்றடிப்படுத்தாதாரைக் கூறுமாறுபோல, " விருந்தாக யாழ்பண்ணி " (சீவக. 730) என்றதற்கு யாழ் பண்ணுமுறைமையன்றியென்றும், ' பண்ணென்று பாடலதுவொன்று ' என்றதற்கு யாழுமிடறும் வேறுபட்டதென்றும், ' விண்ணின்றியங்கி ' என்றதற்கு அந்தரவோசையென்றும் கூறுதல் தேவர் கருத்தன்மையுணர்க. காமத்தாற்கலங்கி இவள் தோற்றாளென்னிற் சீவகற்கு [7] இசைவென்றியின்மையுமுணர்க. (உசௗ)

736\. மையார் நெடுங்கண்ணாண் மாமணியாழ் தானுடைந்து
நையா நடுநடுங்கா நனிநாண மீதூராப்
பொய்யாதோர் குன்றெடுப்பாள் போன்மெலிந்து பொன்மாலை
பெய்பூங் கழலாற்குப் பெண்ணரசி யேந்தினளே.

நைந்துநடுங்குதல் [1] இழவென்னுமெய்ப்பாடு, வெற்றியையிழத்தலின், நாணுள்ளம் பிறர்க்கு வெளிப்பட நிகழ்தலின் [2] நாணென்னுமெய்ப்பாடு. தோல்விதோன்ற மாலையிடுதலின் மேல் [3] இளிவரவென்னு மெய்ப்பாடு.

(இ - ள்.) கண்ணாளாகிய பெண்ணரசிதான், அங்ஙனம் யாழ்தோற்றலின் நமக்குத் தோல்வியுளதாயிற்றென்று நைந்து நிலைதளர்ந்து அவையிற் செல்ல வேண்டுதலின் நாணமீதூர்தலான் மெய்யாகவே ஒரு குன்றையெடுப்பாள்போலே குறைந்து பொன்மாலையைக் கழலாற்கு ஏந்தினாளென்க. (உசச)

737\. மெல்லென் சிலம்பரற்ற மேகலைகண் மின்னுமிழ
நல்ல பெடையன்ன நாண வடியொதுங்கி
ஒல்லென் னுயர்தவமே செய்ம்மி னுலகத்தீர்
எல்லீரு மென்பாள்போ லேந்தன்மேல் வீழ்த்தனளே.

---

[6] கற்றடிப் படுத்தல் ; சீவக. 1285. [7] பு. வெ. 357, 360.

736\. கண்ணாளாகிய பெண்ணரசி : காந்தருவதத்தை. யாழ் உடைந்து - யாழ்வாசித்தலில் தோற்று. நையா - நைந்து. நடுங்கா - நடுங்கி. மீதூரா - மீதூர்தலால். கழலாற்கு : சீவகனுக்கு. பெண்ணரசி, குன்றை எடுப்பாள்போல் மாலையை ஏந்தினாள்.

(மேற்.) அடி, 4 : தொல். களவி. 57, ந.

(உரை) [1] ' இழவென்பது தந்தையுந்தாயும் முதலாகிய சுற்றத்தாரையும், இன்பம் பயக்கும் நுகர்ச்சி முதலாயவற்றையும் இழத்தல் ' (தொல். மெய்ப். 5, பேர்.). [2] ' நாணுதலென்பது, நாணுள்ளம் பிறர்க்கு வெளிப்பட நிகழும் நிகழ்ச்சி ' (தொல். மெய்ப். 12, பேர்.). [3] ' இளிவரலென்பது இழிபு ; தானிளிவந்து பிறிதோர் பொருளை வியப்பது ' (தொல். மெய்ப். 3, பேர்.)

737\. மெல்லென் - மெல்லென்ற. மின் உமிழ - ஒளிவீச. நாண - நாணும்படி. ஒதுங்கி - நடந்து சென்று ; சீவக. 646, ந. உலகத்தீரெல்லீரும் உயர்தவமே செய்ம்மின் என்பாள்போல் என மாறியியைக்க. ஏந்தல்மேல் - சீவகன்மீது. வீழ்த்தனள் - மாலையைப் போட்டனள்.

(இ - ள்.) அங்ஙனமேந்தினவள், அரற்ற உமிழ நாண அடியால் நடந்து சென்று, உலகிலுள்ளீரெல்லீரும் ஒல்லென்னுமோசைபடப் புகழ்கின்ற உயர்தவமே செய்மினென்று கூறுவாளைப்போல ஏந்தல்கழுத்திலே அதனை வீழ்த்தாளென்க.

[1] குன்றென்றதற்கேற்ப, 'வீழ்த்தனள்' என்றார். [2] இங்ஙனமெய்துதற்குத் தவஞ்செய்யுங்கருத்து எல்லார்க்கும் இவள் பிறப்பித்தலின், 'என்பாள்போல்' என்றார். ஒல்லென - வெளியாகவென்றுமாம். (உசரு)

(வேறு)

738. நாகத்துப் படங்கொ ளல்கு னலங்கிளர் செம்பொன் மாலை
மேகத்துப் பிறந்தோர் மின்னு மணிவரை வீழ்ந்த தேபோல்
ஆகத்துப் பூட்டி மைந்த னடிதொழு திறைஞ்சி நின்றாள்
போகத்து நெறியைக் காட்டும் பூமகள் புணர்ந்த தொப்பாள்.

(இ - ள்.) போகத்தின் வழியைக்காட்டுந் திரு வந்து கூடிய தன்மையை யொப்பாள், அல்குலவள், ஒருமின் மேகத்தே பிறந்து மணிவரையிலே வீழ்ந்ததுபோலே பொன்மாலையைக் கணவன் ஆகத்தே பூட்டி அவனைத்தொழுது இறைஞ்சி நின்றாளென்க.

மாலை, அவனது முடிகூடாத கருநெறிபயின்ற குஞ்சி [1] எருத்தத்து அலைந்து கிடந்ததன்மேலே முதல்வீழ்ந்து பின்பு கழுத்திலே விழுந்தமை தோன்ற மேகமுவமை கூறினார். வீழ்வது பாடமாயின், கால மயக்கம். (உசகா)

739. செம்மல ரடியு நோக்கித் திருமணி யல்கு னோக்கி
வெம்முலைத் தடமு நோக்கி விரிமதி முகமு நோக்கி
விம்மிதப் பட்டு மாதோ விழுங்குவான் போல வாகி
மைம்மலர்த் தடங்க ணங்கை மரைமலர்த் தேவி யென்றான்.

(உரை) [1] குன்று என்றது முன்கவியில் உள்ளதனை. [2] "வீணை வென்றிவள் வெம்முலைப் பூந்தடம், ஆணை தோய்வதல் லால்.........மாண நற்றவஞ் செய்குவ மென்மரும்" (சீவக. 640) என்பது இங்கு அறியத் தக்கது.

738. நாகத்துப் படங்கொள் - பாம்பின் படத்தைப் போன்ற. அல்குல் : காந்தருவதத்தை; ஆகுபெயர். நலம் - அழகு. சீவகனுடைய குஞ்சிக்கு மேகமும், மார்பிற்கு மலையும், பொன்மாலைக்கு மின்னலும் உவமைகள். மைந்தன் : சீவகன். பூமகள் - இலக்குமி. ஒப்பாள் : காந்தருவதத்தை.

(உரை) [1] எருத்தம் - பிடரி.

739. மணி - மேகலையிற் கட்டிய மணி. வெம்முலை - விரும்பத் தக்க முலை; வெம்மை - விருப்பம். மாது, ஓ : அசை. விழுங்குவான் போலவாகி - பருகுவான்போலப் பார்த்து; சீவக. 1765; பொருந. 77;

(இ - ள்.) அங்ஙனம் நின்றமையால், விம்மிதப்பட்டு விழுங்குவான் போலேயாய்ப் பின்பு குறித்துநோக்கி ஐயம் நீக்குதற்குரிய கருவிகளாகிய அடி முதலியவற்றைக்கண்டு ஐயம் நீங்கியும் நுகர்தற்குரிய மாதரைத் திருவென்றே கருதினனென்க.

அடி நிலந்தீண்டியும், ஆடை மாசேறியும், மாலை வாடியும், கண் இமைத்தும் ஐயம் நீக்கும். விம்மிதம் - வியப்பு; அஃதாவது பிறர்கட் டோன்றிய புதுமையாற் பிறந்த [1]மருட்கையென்னுமெய்ப்பாடு. இது, தனக்கே பான்மையாயினமையின், [2]தன்கண் மறைந்துநின்ற வேட்கை புலப்பட்டு மனத்தினையும் கண்ணிணையும் அடிதொட்டு முடிகாறுஞ் செலுத்தினமை கூறிற்று. இவன் இங்ஙனங்கருதி வீணையொழிந்த அயர்தலாகிய [3]கையாறுற்றிருந்தமை மேலே, " தார்ப்பொலி மார்ப னேர்த்து " (சீவக. 758) என்றதனுனுணர்க. (௨௬௭)

740. கோதையுந் தோடு மின்னக் குண்டலந் திருவில் வீச
மாதரம் பாவை நாணி மழைமினி னொசிந்து நிற்பக்
காதலந் தோழி மார்கள் கருங்கயற் கண்ணி னாளை
ஏதமொன் றின்றிப் பூம்பட் டெந்திர வெழினி வீழ்த்தார்.

தோட்டினொளி கோதையிலே எறிப்பநிற்றலின், ' கோதையுந்தோடு மின்ன ' என்றார்.

(இ - ள்.) பாவை, அவையிலே நிற்றலின் நாணி மின்ன வீச நில நோக்கி மின்போல் நுடங்கிநிற்க, தோழியர் அவட்கு நாணத்தால்வரும் இறந்துபாடின்றாகச் சூழ வீழ்வதொரு திரையை வீழ்த்தாரென்க.

அகநா. 399 : 4; பெருங். 3. 7 : 80; " பருகுவ னன்ன வார்வத்த னாகி " (நன். 40). மைம்மலர் - நீலோற்பல மலர்; சீவக. 208. நங்கை காந்தருவதத்தையை. மரை - தாமரை; முதற்குறை. தேவி - இலக்குமி மு. சீவக. 1327. என்றான் - என்று எண்ணினான். விழுங்குவான் போலவாகி நோக்கி நங்கையை மரைமலர்த்தேவி என்றான் எனமுடிக்க

(உரை) [1]' மருட்கை யென்பது வியப்பு; அற்புதமெனினும் அமையும் ' (தொல். மெய்ப். 3, பேர்.). [2]தன் என்றது சீவகனை. [3]செயலற் றிருந்தமை.

740. கோதை - கூந்தல். திருவில்வீச - இந்திர வில்லைப்போல் ஒளி வீச. கோதையும், தோடும், குண்டலமும் : சீவக. 731, அடிக் மாதரம் பாவை : காந்தருவதத்தை. மழைமினின் - மேகத்திடத்து மின்னலைப்போல. ஒசிந்து - அசைந்து. பாவை நாணி, கோதையுந் தோடும் மின்ன, குண்டலம் திருவில்வீச, மழைமினின் ஒசிந்து நிற்ப என மாறியியைக்க. காதல் - அன்புடைய ; அம் : அசை. கண்ணினாளை காந்தருவதத்தைக்கு. ஏதம் - குற்றம். பூம்பட்டெழினி - பூக்கள் எழுதிய பட்டாலாகிய திரை ; " பூம்பட்டெந்திர வெழினி " (சீவக. 838)

**கண்ணினுளை : [1] உருபுமயக்கம்.**

741. வெள்ளிலை வேற்க ணுளைச் சீவகன் வீணை வென்றான்
ஒள்ளிய னென்று மாந்த ருவாக்கடன் மெலிய வார்ப்பக்
கள்ளராற் புலியை வேறு காணிய காவன் மன்னன்
உள்ளகம் புழுங்கி மாதோ வுரைத்தனன் மன்னர்க் கெல்லாம்.

(இ - ள்.) சீவகன் தத்தையை யாழும் பாட்டும்வென்றான், நல்ல னென்று மாந்தர் ஆர்ப்ப, அது பொருதே கட்டியங்காரன் மனம்புழுங்கி அரசரைக் கொண்டு சீவகனைப் போர்காணவேண்டி அரசர்க்கெல்லாம் சில தீமொழிகளைக் கூறினுனென்க.

அது மேற்கூறுகின்றார். [1] ஒள்ளியன் : திசைச்சொல். (உசக)

742. வடதிசைக் குன்ற மன்ன வான்குல மாசு செய்தீர்
விடுகதிர்ப் பருதி முன்னர் மின்மினி விளக்க மொத்தீர்
வடுவுரை யென்று மாயும் வாளம ரஞ்சி னீரேல்
முடிதுறந் தளியிர் போகி முனிவனம் புகுமி னென்றான்.

(உரை) [1] கண்ணினுளை - கண்ணினுட்கு ; இரண்டாம் வேற்றுமை யுருபு நான்காம் வேற்றுமையுருபாக மயங்கியது.

741. வெள்ளிலைவேல் - வெற்றிலைபோலும் கூரியவேல். வேற்க ணுள் : காந்தருவதத்தை ; ஒள்ளியன் - நல்லன் ; "ஒள்ளியனொரு மகன்" (சீவக. 2931). உவா - பௌர்ணிமை ; உவாநாளில் கடல் மிகுதியாகப் பொங்கி ஆர்க்கும் என்பது உணர்க. மாந்தர் மிகுதியாக ஆர்த்தமை தோன்ற உவாக்கடலைக் கூறினார் ; நைட. போர். 1. வேறு காணிய - வேறுபடுதலைக் காணவேண்டி. 'கள்ளாவா, புலியைக் குத்து' என்பது ஒரு பழமொழி. ஒருவன் பணமூட்டையோடு காட்டுவழியே போய்க்கொண்டிருந்தான். அப்பொழுது ஒரு திருடன் அவனைக்கண்டு துரத்தினுன். எதிரில் ஒரு புலி உறுமிக்கொண்டு வந்தது. இந்த இரண்டு அபாயங்களிலிருந்தும் தப்புவதற்கு அந்த வழிப்போக்கன் ஒரு தந்திரம் செய்தான். திருடனைப்பார்த்து 'அதோபார் ; அந்தப் புலியைக் குத்திக் கொன்றுவிடு ; நான் உனக்கே பணமுடிப்பைத் தந்துவிடு கிறேன்' என்றான். திருடன் அப்படியே புலியை எதிர்த்தான். புலி அவனை அடித்துத் தின்று பசி தீர்ந்தது. அதற்குள் வழிப்போக்கன் தப்பிப் பிழைத்து ஓடிப்போய்விட்டான்.

அவன் தனக்குப் பகையாக வந்த புலியையும் கள்ளனையும் முட்ட விட்டுத் தான் தப்பினுன். இந்த விஷயத்தைத்தான் 'கள்ளாவா புலியைக் குத்து' என்ற பழமொழி கூறுகிறது. மற்றைய அரசர்க்குக் கள்ளரும், சீவகனுக்குப் புலியும் உவமை. மன்னன் - கட்டியங்காரன். அகம் - மனம். மாது, ஓ : அசை. மன்னன் அகம்புழுங்கிக், கள்ளராற் புலியை வேறு காணிய மன்னர்க்கெல்லாம் உரைத்தனன் என்க.

(உரை) [1] ஒள்ளியன் : கன்னடமொழியில் நல்லன் என்னும் பொரு ளில் வழங்கப்படுகின்றது.

742. வடதிசைக்குன்றம் - மேருமலை. வான்குலம் - உயர்ந்த குலத்தை. மாசு - குற்றம். கதிர்விடுபருதி என மாறியியைக்க. விளக் கம் - ஒளி. வடு உரை - பழிச்சொல். வாளமர் - வாட்போரை. அளியிர்,

**(இ - ள்.)** வணிகன்மகளை அரசன்கோடலன்றி அரசன்மகளை வணிகனுக்கு நீங்கள் கொடுக்கின்றமையால், மேருப்போல் நிலை குலையாத நுங்குலத்திற்கெல்லாம் வடுவுண்டாக்கிக்கொண்டீர்; இதுவு மன்றி, இவன்முன்னர் நுமது ஒளியுங்குறைந்தீர்; இவ்வடுவுரை ஒரு காலத்தும் மாயாது. இதனை மாய்விக்கும் வாட்போரை அஞ்சினீ ராயின் அளிக்கத்தக்கீர். அரசைவிட்டுப்போய் முனிகளாய்க் காட்டிலே சென்மினென்றானென்க.

கலுழவேகனும் அரசனுதலான் இவரைநோக்கி நுங்குலமென்றான். (உ௬௦)

743. முல்லைப்பூம் பந்து தன்னை மும்மதக் களிற்று வேலிக், கொல்லைப்பூங் குன்றஞ் செய்தீர் குங்குமக் குழங்கன் மாலை, மல்லுப்பூத் தகன்ற மார்பீர் புகழெனும் போர்வை போர்த்துச், செல்வப்பூ மகளு நாளை யவனுழைச் செல்லு மென்றான்.

**(இ - ள்.)** அதுவேயன்றிப் பின்னும், மார்பினையுடையீர், கையாற் பிசைந்து போகடுவதொரு முல்லைப்பந்தைக் களிற்றை வேலியாகவுடைய கொல்லையிற் குன்றாக்கினீர்; இனி நும்முடைய நிலமகளும் புகழாகிய போர்வையைப் போர்த்து நாளை அவனிடத்தே செல்லுமென்றானென்க.

நீர் போரிற்கஞ்சிக் கலுழவேகன்மகளைக் கொடுக்கின்றமையின், யான் நினைத்ததளவாய்[1] என்கீழ் வாழ்கின்றவனை எனக்கு நிலைகுலைத் தலரிதாக்கினீரென்றானென்க. (உ௬௧)

744. திருமக ளிவளைச் சேர்ந்தான் றெண்டிரை யாடை வேலி
இருநில மகட்குஞ் செம்பொ னேமிக்கு மிறைவ னாகும்
செருநிலத் திவனை வென்றீர் திருவினுக் குரியீ ரென்றான்
கருமன நச்சு வெஞ்சொற் கட்டியங் கார னன்றே.

---

முடிதுறந்து போகி முனிவனம் புகுமின் என்றான் என்க. முனிவனம் புகுமின் - முனிவர்களாகிக் காட்டிற்குச் செல்லுங்கள்.

743. களிற்றுவேலி: நாட்டிற்கு எல்லையாக யானைகளை நிறுவுதல் மரபாதலின் இங்ஙனம் கூறினார்; "தன்மத வாரணம், திசைதொறு நிறுவிய திறலுறு தொல்சீர்" (நன். சிறப்புப்.). கொல்லை - கொல்லையில். குழங்கல் மாலை: சீவக. 863, 1494, 2037; குழங்கல் - மணம். குங்குமத்தையும் குழங்கல் மாலையினையும் உடைய மார்பீர்; மல்லுப் பூத்தகன்ற மார்பீர் எனப்பிரிக்க. மல் - மற்போர்; உகரம் சாரியை. பூமகளும், புகழெனும் போர்வை போர்த்து நாளை அவனுழைச் செல்லும் என மாறியியைக்க; அவன் - சீவகன்.

(உரை) [1] சீவகனை.

744. திருமகள் இவளை - இலக்குமி போன்ற இக்காந்தருவ தத்தையை. சேர்ந்தான் - சேர்ந்தவன். திரை - கடல்; ஆகுபெயர். நிலமகட்கும் - பூமிதேவிக்கும். நேமிக்கும் - சக்கரவாளகிரிக்கும். இறைவனாகும் - அரசனுவான். அடி, ௧-௨: கம்ப. மாரீசன். 75.

(இ - ள்.) கொடிய மனத்தினையும் நஞ்சாகிய கடுஞ்சொல்லினையு முடைய கட்டியங்காரன், இவளிலக்கணமிருந்தபடியால் திருமகளாகிய இவளைச்சேர்ந்தவனொருவன் தெண்டிரைவேலியை ஆடையாகவுடைய நிலமகட்கும் சக்கரவாளத்திற்கும் இறைவனுமாதலாற் போரிடத்து இவனை வென்று இவளைப் பெற்றீர், இப்பெருஞ்செல்வத்தை நுகர்தற் குரியீராவீரென்றானென்க. (உ௫உ)

745. அனிச்சப்பூங் கோதை சூட்டி னம்மனை யோவென் றஞ்சிப், பனிக்குநுண் ணுசுப்பிற் பாவை யொருத்திநாம் பலரென் றெண்ணித், துனித்துநீர் துளங்கல் வேண்டா தூமணிச் சிவிறி நீர்தூய்த், தனிக்கயத் துழக்கி வென்றீர் தையலைச் சார்மி னென்றான்.

(இ - ள்.) இவனை வென்றாலும் பாவையொருத்தி நாம் பல ராதலால் இவளைப்பெறுதற்குப் பின்னும் நம்மிற் போர்செய்யவேண்டு மென்று கருதி வெறுத்து மனந்துளங்கல்வேண்டா; நுமது உயிர் போகாதபடி கயத்திலே சிவிறியாலே நீரைத் தூவித் தனித்தனியே பொருது வென்றவர்கள் அவளைச் சேரக்கடவீரென்றானென்க.

[1] துணியலாகாமையிற் பன்மையாற் கூறினான். அம்மனையோ - [2] அம்மையோ. (உ௫௩)

746. வெந்திற லாளன் கூற வேகமோ டுரறி மன்னர்
பந்தணி விரலி னுடன் படாமுலைப் போகம் வேண்டிக்
கந்தெனத் திரண்ட திண்டோட் கந்துகன் சிறுவன் காயும்
ஐந்தலை யரவின் சீற்றத் தாரழல் குளிக்க லுற்றார்.

---

செருநிலத்து - போர்க்களத்தில். இவனை - சீவகனை. திருவினுக்கு - காந்தருவதத்தைக்கு. கருமனம் - கொடிய மனம்.

741-4. மு : நைட. போர்புரி. 1-5.

745. கோதை - மாலையை. சூட்டின் - சூட்டினால். அம்மனையோ; "அம்மனையோ வென" (சீவக. 760). பனிக்கும் - நடுங்குகின்ற. நுசுப்பிற்பாவை - இடையையுடைய காந்தருவதத்தை. துனித்து - வெறுத்து; கலித். 122 : 4, ந. துளங்கல் - வருந்துதல்; சீவக. 1747, ந. சிவிறி - நீர்வீசுந் துருத்தி. சிவிறியால் நீர்தூவல் : பெருங். 1. 42 : 188. கயம் - குளம். கயத்துச் சிவிறிநீர்தூய் உழக்கி என மாறியியைக்க; உழக்கி - பொருது. வென்றீர் - வென்றவர்கள். தையலை - காந்தருவதத்தையை.

(உரை) [1] சீவக. 645 ந. [2] 'அம்மையோவென ஒரு. வியப்பு' (கலித். 85 : 29, ந.)

746. திறலாளன் - கட்டியங்காரன். கூற - இவ்விதம் கூறவே. உரறி - முழங்கி. மன்னர், விரலினாள் போகம்வேண்டி, வேகமோடு உரறி என மாறி யியைக்க. பந்தணிவிரலினாள் - பந்தை ஆடுதலைக் கொண்ட விரலையுடையவள்; காந்தருவதத்தை; "பந்தட்ட விரலினாள்" (சீவக. 2648). படா - சாயாத. போகம் - இன்பம். கந்து - தூண்.

(இ - ள்.) அங்ஙனம் கட்டியங்காரன் கூற, அதுகேட்டு மன்னர் தத்தையது முலைப்போகத்தை விரும்பிக் கோபத்தோடே முழங்கிக் கந்துகன்பிள்ளையாகிய ஐந்தலைநாகத்தினது கோபமாகிய நஞ்சிலே அழுந்துதலுற்றாரென்க.

[1] தானும் நந்தட்டனுமொருதலையும், [2] பதுமுகனொழிந்த தோழர் மூவரும் மூன்றுதலையும், நபுலனும்விபுலனுமொருதலையுமாகப் படை வகுத்தெழுதலின், 'ஐந்தலையரவு' என்றார். அது, "சதுமுக மாகச் சேனை நமர்தலைப் பெய்க" (சீவக. 766) என்பதனானுணர்க. (உ௬௪)

747. பண்ணியல் யானை மேலான் பதுமுகன் பரவைத் தானை
கண்ணிய துணர்ந்து கல்லாக் கட்டியங் கார னெஞ்சில்
எண்ணிய தெண்ணி மன்ன ரிகன்மலைந் தெழுந்த போழ்தில்
தண்ணிய சிறிய வெய்ய தழற்சொலாற் சாற்று கின்றான்.

(இ - ள்.) பண்ணிலே பயின்ற யானைமேலானாகிய பதுமுகன், அரசர்தானை போர்குறித்தமையுமறிந்து கட்டியங்காரன் கள்ளராற் புலியை வேறு காண (சீவக. 741) எண்ணியதனையுமெண்ணி, அரசர் இகலிலே மாறுபட்டெழுந்த அளவிலே தண்ணிய சிறிய வெய்யவாகிய சொற்களாலும் தழல்போலுஞ் சொல்லாலும் சாற்றாநின்றானென்க.

அவை [1] சாம பேத தான தண்டம். சாமம் - இனிதாகக்கூறல்; அது குளிர்ந்திருத்தலின், 'தண்ணிய' என்றார். பேதம் - மென்மை யானும் வன்மையானும் மனத்தினைப் பேதித்தல்; அது பொய்யுமெய்யுங் கூறிப்பேதித்தலின், 'சிறிய' என்றார். தானம் - பகைவர்மனமகிழக் கொடுத்தல்; அஃது அவர்விரும்பப்படுதலின், 'வெய்ய' என விருப்பத் தாற்கூறினார்; "நின்வெய்யனாயின்" (கலித். 107) என்றாற்போல. தண்டம் - பின்பு அவராகாமல் அழித்தேவிடுதல்; அது தழல்போலிருத் தலின், 'தழல்' என்றார். (உ௬௫)

---

கந்துகன் சிறுவன் - சீவகன். காயும் - கோபிக்கின்ற. சிறுவனாகிய அரவின்சீற்றத்து அழல் என்க. சீற்றத்தாரழல் - கோபமாகிய விடத்தில்; அழல் - விடம்; "நச்சு நாகத்திரைழற் சீற்றத்தன்" (சீவக. 157, அடிக்.). மன்னர் குளிக்கலுற்றார் எனமுடிக்க.

(உரை) [1] தானும் என்றது சீவகனை; நந்தட்டன் - கந்துக்கட னுடைய மகன். [2] பதுமுகன் ஒழிந்த தோழர் மூவர்: சீதத்தன், புத்திசேனன், தேவதத்தன் என்பவர்கள்; சீவக. 292, அடிக்.

747. பண் - இராகம். தானை - அரசர்களுடைய சேனை. கண்ணி யது - சீவகனோடு போர்செய்ய எண்ணியதை. கல்லா - கல்விபயிலாத. கண்ணியதும், எண்ணியதும் என உம்மைவிரிக்க. எண்ணி - தான் ஆராய்ந்து. இகல் மலைந்து - போரிலே மாறுபட்டு. தண்ணிய - குளிர்ந்த. வெய்ய - விரும்பத்தக்க. தழல்போலும் சொல். பதுமுகன் சாற்றுகின்றான் என்க.

748. இசையினி லிவட்குத் தோற்றும் யானையால் வேறு மென்னின், இசைவதொன் றன்று கண்டீ ரிதனையா னிரந்து சொன்னேன், வசையுடைத் தரசர்க் கெல்லாம் வழிமுறை வந்த வாறே, திசைமுகம் படர்க வல்லே தீத்தொட்டாற் சுடுவ தன்றே.

**(இ - ள்.)** இவட்கு இசையால்தோற்ற நாம் [1] இசைக்கு வணங்கும் யானையால் வெல்லுதுமென்று கருதிற் பொருந்துவதொன்றன்று; அதுவும் வசையுடைத்துக்கண்டீர்; அதுவேயுமன்றித் தீண்டிுைற்சுடுவ தன்றோ தீயென்பது; இப்பிறர்மனை நயக்கின்ற தீவினையாகிய தீ நினைப்பினும் சுடுவதொன்று கண்டீர்; ஆதலால் இங்ஙனம் பழியும் பாவமுமாய் நீரே அறிதற்குரிய இக்காரியத்தினை நுமக்கு மாறுய யான் இரந்துகொண்டு நுங்கட்கெல்லாங் கூறினேன்; இனி, அடைவே வந்த வழியே திக்கிடங்களிலே கடுகப் போவீராகவென்றேனென்க.

[2] விலங்கினதறிவும் நுமக்கின்றென்றுன். [3] யானை நாதத்திற் றேற்றுதலின் அதற்கு வணங்குதலியல்பு. (உருசு)

749. தோளினுன் மிடைந்து புல்லுந் தொண்டைவா யமிர்தம் வேட்டோர், வாளினுன் மலைந்து கொள்ளின் வாழ்கநுங்கலையு மாதோ, கோளுலாஞ் சிங்க மன்னுன் கொடியினை யெய்தப் பெற்றீர், தாளினு னெய்யீ ராகித் தரணிதா விடுமி னென்றுன்.

---

(உரை) [1] 'அது, கொடுத்தல், இன்சொற் சொல்லல், வேறு படுத்தல், ஒறுத்தல் என நால்வகைப்படும்; இவற்றை வடநூலார் தான சாம பேத தண்டமென்ப' (குறள். 467, பரிமேல்.)

748. இசையினில் - சங்கீதத்தால். இவட்கு - காந்தருவதத் தைக்கு. வேறும் - வெல்வோம். என்னின் - என்றுநீர் கருதினல். வசை - பழிமொழி. வந்தவாறே - வந்தவழியே. திசைமுகம் - திக்கிடம். வல்லே படர்க - விரைவிற் போவீராக. அரசர்க் கெல்லாம் வசை யுடைத்துக் கண்டீர்; தொட்டாற் சுடுவதன்றே தீ! யான் இரந்து சொன்னேன் வந்தவாறே படர்க என மாறியியைக்க.

(உரை) [1] யானை இசைக்கு வணங்கல்: "காழ்வரை நில்லாக் கடுங்களிற்றொருத்தல், யாழ்வரைத் தங்கியாங்கு" (கலித். 2 : 26-7); (பெருங். 1. 35 : 100-101; 1-44 : 61-3; 3. 6 : 114-5; 4. 3 : 66-93); "ஐம்புல வேழத்தின் வெந்தொழில் வீயக், கருணை வீணை காமுறத் தழீஇ" (ஞானமிர்தம்); மேருமந்தர. வச்சிராயுத. 31. [2] விலங் கென்றது, இங்கே யானையைக் குறித்தது. [3] யானை நாதத்திற் றேன்றினமை: "வத்தவர் பெருமகன், படிவ விரதமொடு பயிற்றிய நல்யாழ், கடிமிகு கானத்துப் பிடிமிசை வழுக்கி......பிறப்புணர் பவைபோ லிறப்பவு நிற்ப......வேழமெல்லாம், சோர்ந்து கடுங்கதஞ் சுருங்குபு நீங்க" (பெருங். 4. 3 : 80-90)

749. மிடைந்து - நெருங்கி. தொண்டைவாய் அமிர்தம் - தொண்டைக் கனிபோன்ற வாயிடத்துள்ள அமிர்தத்தை. வேட்டோர் -

(இ - ள்.) இன்பத்தைவேட்டோர் தோளாற் புல்லிப்பெறுகின்ற அமிர்தத்தை நீர் வாளாற்பொருது வலிதிற்கொள்ளின், நுங்கலை நூறும் புகுவதாக ; அதுவுமன்றிச் சிங்கமன்னன் ஒருமகளைப் புணர நுமது நல்வினையால் தரணியைப் புணரப்பெற்றுநின்றீர். இனி முடியாத முயற்சியால் நொய்யீராகி அதனாற்பிறக்கின்ற வருத்தத்தைக் கைவிடுவீராகவென்றானென்க.

தா - ஈண்டு வருத்தம். இவை இரண்டுகவியும் [1] சாமம். வலிந்துகொள்கின்ற [2] இராக்கதம், " முன்னைய மூன்றுங் கைக்கிளைக் குறிப்பே " (தொல். களவு. 14) என்பதனால், ஒருதலைக்காமமாகிய கைக்கிளையாய் அது புணர்ச்சிக்குச் சிறப்பின்மையுணர்ந்திலீராதலின். நீர் கற்ற [3] இயலும் கெடுகவென்றான். (உ௯௭)

750. நாறும் மதத்தி னாலே நாகத்தை யிரிக்கு நாகம்
ஆறிய சினத்த தன்றி யதிங்கத்தின் கவளங் கொண்டால்
வேறுநீர் நினைந்து காணீர் யாவர்க்கும் விடுக்க லாகா
தூறித்தே னொழுகுங் கோதைநம்பிக்கு மன்ன ளென்றான்.

(இ - ள்.) தன்மதத்தாலே ஒழிந்த நாகங்களைக் கெடுப்பதொரு நாகம், மிக்க சினத்தையுடைத்தாய் அதிமதுரத்தின் குளகைக் கையிலே கொண்டால், அக்குளகை யாவர்க்கும் விடுவித்தலரிது ; கோதை நம்பிக்கும் அக்குளகின் தன்மையள் ; இதனைத் தனித்து ஆராய்ந்து காணீரென்றானென்க.

---

இன்பத்தை விரும்பினவர்கள். 'வேட்டோர், தோளினாற் புல்லும் அமிர்தத்தை வாளினால் மலைந்துகொள்ளின்' என மாறி இயைக்க. கலை - காமநூல். நுங்கலை வாழ்க என்றது இகழ்ச்சிக் குறிப்பு. கோள் - கொலை. சிங்கமன்னன் - சீவகன். கொடியினை - காந்தருவதத்தையை. தரணி பெற்றீர் - நீர் பூமியைப்பெற்றீர். தாளினால் - முடியாத முயற்சியால். நொய்யீராகி - மெலிவுடையீராகி. தா - வருத்தத்தை ; தொல். உரி. 46.

(உரை) [1] சாமம் - சாமோபாயம். [2] இராக்கதமணம். [3] இயல் - இயற்றமிழ்.

750. நாகம் - யானை. அதிங்கம் - அதிமதுரம் ; பெருங். 2. 18 : 46. அதிமதுரத்தழை யானைக்கு விருப்பமுடையது ; மதத்தை மிகுதி பண்ணுவது ; முல்லைப். 33, ந.; " அதிங்கத்தின், மரங்கொலு மதவேழ மதர்த்தெழுமயக்கத்தால் " (தணிகைப். வீராட்ட. 63). வேறுநினைந்து - தனித்து ஆராய்ந்து. விடுக்கலாகாது : முற்று. கோதை - காந்தருவதத்தை. நம்பி : சீவகன். சீவகனுக்கு யானையும், காந்தருவதத்தைக்கு அதிமதுரமும் உவமைகள். நாகம் அதிங்கத்தின் கவளங்கொண்டால் யாவர்க்கும் விடுக்கலாகாது ; கோதை நம்பிக்கும் அன்னள் ; வேறுநீர் நினைந்துகாணீர் என மாறியியைக்க. இது முதல் ஐந்துகவியும் பேதோபாயம்.

[1] குளகுபோல் [2] மதத்தை விளைப்பவள் இவளுமாதலால், விடுத்தலரி தென்றான். (உருஅ)

751. இளவள நாகு புல்லி யினத்திடை யேறு நின்றால்
உளவளங் கருதி யூக்க லுழப்பெரு துடைய தாமே
தளவள முகைகொள் பல்லாட் சீவகன் றழுவி நின்றாற்
கொளவுளை ந் தெழுவ தல்லாற் கூடுத லுங்கட் காமோ.

(இ - ள்.) அழகையுடைய இளநாகைப் புல்லித் தன்னினத்திலே ஏறு நின்றால் அதற்குள்ள அழகைத் தான் நுகரக் கருதி முயறலை உழுமெருது உடையதாமோ? அதுபோலத் தத்தையைச் சீவகன் தழுவி நின்றாற் கோடற்கு வருந்திப்போவதல்லது நுங்கட்குக் கூடுதல் கூடுமோ வென்றானென்க.

ஏறுபோல் எருது நுகராமையின், அதனோடு அரசரை உவமித்தான். (உருகூ)

752. எழுந்துவிண் படருஞ் சிங்கம் பெட்டைமே லிவர்ந்து நின்றால், மழுங்கமேற் சென்று பாய்தன் மறப்புலி தனக்குமாமோ, கொழுங்கயற் கண்ணி னாளைச் சீவக குமரன் சூழ்ந்தால், அழுங்கச்சென் றணைதல் பேய்கா ளநங்கற்கு மாவதுண்டோ.

(இ - ள்.) பேய்காள், சிங்கம் பெட்டைமேலே மேவிநின்றால், மேற்சென்று அதுகெடும்படி பாய்தல் புலிக்கும் கூடாதாகலின், நீர்கருதுகின்றதும் அத்தன்மைத்து; இனி அதுவுமன்றித் தத்தையைச் சீவகன் தழுவிநின்றாற் காமனுக்கும் அவ்விடத்து ஆவதொரு காரியமில்லை யென்றானென்க.

---

(உரை) [1] குளகு - தழை. இஃது இலைகளையுண்ணும் விலங்கினுணவு என்பர்; இங்கே யானையின் உணவாகிய அதிமதுரத்தழையைக் குறித்தது; முல்லைப். 33, ந.; கலித். 42 : 2; 43 : 20; அகநா. 392 : 2-3. [2] குறுந். 136 : 3.

751. வளம் - அழகு. நாகு - பசு. நாகு புல்லிய ஏறு : சீவக. 2062; ஐங். 445; நள. சுயம். 156. உளவளம் கருதி - நாகிற்குள்ள அழகைத்தான் நுகர எண்ணி. ஊக்கல் - முயற்சிசெய்தல். உழப்பு எருது - உழுதலைச் செய்யும் எருது. தளவள முகைகொள் - முல்லையின் அழகு பொருந்திய அரும்பைப்போன்ற. பல்லாள் - காந்தருவதத்தையை. கொள உளைந்து - கொள்ளுதற்கு முடியாமல் வருந்தி. எழுவதல்லால் - போவதல்லது. ஆமோ - அவளைப்பெற முடியுமோ. சீவகனுக்கு ஏறும், தத்தைக்கு நாகும், மற்றைய அரசர்க்கு எருதும் உவமைகள்.

752. படரும் - தாவுகின்ற. பெட்டை - பெண்சிங்கம். மழுங்க - கெடும்படி. மேற்சென்று - அச்சிங்கத்தின்மீது சென்று. மறப்புலி - வீரத்தையுடைய புலி. கண்ணினாள் - காந்தருவதத்தை. சூழ்ந்தால் - தழுவி நின்றால். அழுங்க - சீவகன் கெடும்படி. பேய்காள் என்றது அரசரை நோக்கி; விளி. அநங்கற்கும் - மன்மதனுக்கும்.

இதனால் [1] உழப்பெருதென்றற்கு வெறுத்தமை கண்டு [2] உயர்த்துக் கூறியும் விடுவித்தலரிதென்றான். "ஒட்டகங் குதிரை கழுதை மரை யிவை, பெட்டை யென்னும் பெயர்க்கொடைக் குரிய" (தொல். மரபு. 52) என்பதனுள், 'கொடை' என்றதனாற் சிங்கத்துக்கும் பெட்டை கொண்ட வாறு காண்க. தண்டித்து விடுக்கவேண்டுதலின், 'பேய்காள்' என்றான். (உ௬௦)

753. மத்திரிப் புடைய நாகம் வாய்வழி கடாத்த தாகி
உத்தமப் பிடிக்க ணின்றா லுடற்றுதல் களபக் காமே
பத்தினிப் பாவை நம்பி சீவகன் பால ளானால்
அத்திறங் கருதி யூக்க லரசிர்கா ளுங்கட் காமோ.

(இ - ள்.) அரசிர்காள், செற்றத்தையுடைய நாகம் மதத்ததாய்ப் பிடிக்கண் நின்றால் அதனைக் கெடுத்தல் யானைக்கன்றிற்குக் கூடுமோ? அது போலப் பாவை சீவகன்பாலளானால் அவளைப் பெறுந்திறத்தை நீர் கருதி முயறல் நுமக்குக் கூடுமோவென்றானென்க.

அரசராதலின், இவளைப் பெறுதற்குரியீராயினும் கலைகளானும் ஆண்மை முதலியவற்றானும் குறைபாடுடைமையிற் பெறலரி தென்றான். (உ௬௧)

754. தூமத்தாற் கெழீஇய கோதை தோட்டுணை பிரித்தல் விண்மேற், றாமத்தாற் கெழீஇய மார்ப னிந்திரன் றனக்கு மாகா, தேமுற்றீ ரின்னுங் கேண்மி னிரதியைப் புணர்து மென்று, காமத் தாற் கெழுமி னார்க்குக் காமனிற் பிரிக்க லாமே.

(இ - ள்.) மயக்கமுற்றீர், கோதையது தோட்டுணையாகிய சீவக னைப் பிரித்தல் இந்திரனுக்குங் கூடாது; இங்ஙனம் இவனைப் பிரித்தலே யன்றி, இன்னமுங்கேண்மின்; இரதியைக்கூடுவேமென்று வேட்கையாற் பொருந்தினார்க்கு அவளைக் காமனிடத்து நின்றும் பிரித்தல் கூடுமோ வென்றானென்க.

(உரை) [1] சீவக. 751. [2] புலி என்று உயர்த்திக்கூறியது.

753. மத்திரிப்பு - கோபம். நாகம் - யானை. கடாம் - மதம். பிடி - பெண்யானை. உடற்றுதல் - நாகத்தினிடமிருந்து பிடியைப் பிரித்தல். களபக்கு - யானைக்கன்றிற்கு; களபம் - யானைக்கன்று. ஆமே - முடியுமோ. பாவை: காந்தருவதத்தை. நம்பியாகிய சீவகன். அத் திறம் - தத்தையைப் பெறும் அவ்வகையை. ஊக்கல் - முயலுதல்.

754. தூமம் - அகிற்புகை. கெழீஇய - பொருந்திய. கோதை - பூமாலையையுடைய காந்தருவதத்தையினது. மாலைக்குப் புகை யூட்டு தல்: சீவக. 111, அடிக். தோள்துணை - தோளிற்குத்துணையாகிய சீவகனை. தாமம் - கற்பகமாலை. மார்பனாகிய இந்திரன். பிரித்தல் ஆகாது. ஏமுற்றீர் - மயக்கங் கொண்டீர்; சீவக. 2001, 2459, 2841, 2956. இரதி - மன்மதனுடைய மனைவி. கெழுமுதல் - பொருந்துதல்;

தெய்வத்தாலும் பிரித்தலரிதென்று கூறி, பின் இவள்தன்னைப் பிரித்தலும் அரிதென்றான். இவை ஐந்துகவியும் பேதம். (உ௬உ)

755. எம்மைநீர் வெல்லப் பெற்றீர் வென்றபி னிருந்த வேந்தன்
நும்மையும் வேறு செய்து நும்முளே பொருது வீந்தால்
வெம்மைசெய் துலக மெல்லா மாண்டிட விளக்கு நீதி
அம்மமற் றதனை யோரீ ரவன்கருத் தன்னதென்றான்.

(இ - ள்.) நீர் எம்மை ஒருவாற்றான் வெல்லப்பெற்றீராகப்பாரும்; அங்ஙனம் வென்றபின்பு கட்டியங்காரன் நும்மையும் பகைப்பித்து நும்மிலே நீர் பொருது பட்டால் நும்முலகெல்லாம் தான் ஆளுதற்கு ஒரு முறைமை உண்டாக்காநிற்கும்; அதனை என்னையொழிய வேறே ஆராய்ந்து பாரீர்; இவன் கருத்து [1] முன்பும் அத்தன்மைத்துக் காணுங் கோளென்றானென்க.

அம்ம : அசை. அரசருலகினைக் கட்டியங்காரன் கொள்ளாமல் அவரே பெறும்படி கூறினமையால், இக்கவி தானம். (உ௬௩)

756. சொற்றிற லன்றி மன்னீர் தொக்குநீர் காண்மி னெங்கள்
விற்றிற லென்று வில்வாய் வெங்கணை தொடுத்து வாங்கிக்
கற்றிரள் கழிந்து மண்ணுட் கரந்தது குளிப்ப வெய்திட்
டிற்றெமர் கல்வி யென்று னிடியுரு மேற்றொ டொப்பான்.

---

(பி - ம்.) 'கெழுமினூர்க்கு', 'கழுமினூர்க்கு'. காமனிற் பிரிக்கலாமே - மன்மதனிடமிருந்து இரதியைப் பிரிக்கமுடியுமோ.

755. வெல்லப் பெற்றீர் - வென்றுவிடுவதாக எண்ணினீரானாலும். வேந்தன் - கட்டியங்காரன். வேறு செய்து - வேறுபடச் செய்து. வீந்தால் - நீங்கள் இறந்தால். வெம்மை - கொடுமை. உலகமெல்லாம் - நும் உலகமெல்லாவற்றையும். நீதி விளக்கும் - ஒரு முறைமையை உண்டாக்கிக் கொள்வான். ஓரீர் - உணர்ந்துபாருங்கள். அவன் - கட்டியங்காரன்.

(உரை) [1] முன்பும் என்றது சச்சந்தனுடைய அரசைக் கைப்பற்றினமையைக் குறித்தது.

756. சொற்றிறல் - சொல் வன்மை. மன்னீர் - அரசர்களே. "ஏமாரு மன்னீ ரெயிறிறமின்" (தொல். புறத். 36, ந. மேற்.). தொக்கு - ஒன்றுகூடி. எங்கள் சொற்றிறலன்றி, விற்றிறலையும் தொக்கு நீர் காண்மின். கற்றிரள் - கல்லின்தொகுதியை. கழிந்து - துளைத்து நீங்கி. குளிப்ப - மூழ்கும்படி. கரந்தது, கற்றிரள் கழிந்து மண்ணுள் குளிப்ப எய்திட்டு எனமாறியிலையக்க; பெருங். 1. 55 : 142-3; திருச்சிற். 101; கம்ப. குலமுறை. 26. எய்திட்டு - எய்து; ஒருசொல். எமர் கல்வி இற்று; இற்று - இத்தன்மையையுடையது. ஒப்பான் - பதுமுகன். இதுமுதல் இரண்டுபாடலும் தண்டோபாயம்.

(இ - ள்.) உருமேற்றெடொப்பான், மன்னீர், எங்கள் சொல் வன்மையன்றி வில்வன்மையும் திரண்டு நீர் காண்பீராகவென்றுகூறி, வில்வாயிலே கணையைத்தொடுத்து நிரம்ப வாங்குதலாலே தன்னுள்ளே கரந்த அவ்வம்பு கற்றிரளைக் கழிந்து மண்ணுட்குளிப்ப வெய்து, எமர்கள் கல்வியெல்லாம் இத்தன்மைத்தென்றானென்க. (உசு௪)

757. ஆழியங் கழனி தன்னு ளம்பொடு கணையம் வித்திச், சூழ்குடர்ப் பிணங்கண் மல்க விளைத்தபின் றெழுதிப் பல்பேய்க், கூழ்படு குருதி நெய்யி னிறைச்சிச்சோ றூட்டி வென்றி, வீழ்தர வேட்டு நின்றா ரெய்துப வெகுளல் வேண்டா.

(இ - ள்.) [1] சக்கரவியூகமாக வகுத்த படையாகிய விளைநிலத்தே அம்பையும் தண்டாயுதத்தையும் விதையாக விதைத்துப் பிணமாகிய நெல்லை விளைவித்த பின்பு குருதியாகிய நெய்யுடனே இறைச்சியாகிய ஊழ்படுசோற்றைப் பல்பேய்க்கு ஊட்டி விசயமகள் விரும்பும்படி களம் வேட்டு நின்றவர்கள் இவளைப் பெறுகின்றார்கள்; ஒருபயனின்றி வெகுளல் வேண்டாவென்றானென்க.

இவை இரண்டும் தண்டம். (உசு௫)

758. போர்ப்பறை முழங்கி யெங்கும் பொருவளி புடைக்கப் பட்ட, கார்க்கடல் போன்று சேனை கலக்கமோ டுரறி யார்ப்பத், தார்ப்பொலி மார்ப னோர்த்துத் தன்கையில் வீணை நீக்கி, வார்ப் பொலி முலையி னாட்கு வாய்திறந் திதனைச் சொன்னான்.

(இ - ள்.) காற்றடித்த கடல்போல் எங்கும் பறைமுழங்கிச் சேனை ஆர்ப்ப அதனை மார்பன் ஓர்ந்து நீக்கித் தத்தைக்கு இதனை வாய்விட்டுக் கூறினானென்க.

---

757. ஆழியம் கழனி - சக்கர வியூகமாகிய வயல்; பு - வெ. 159. கணையம் - தண்டாயுதம்; பெருங். 3. 20 : 36. அம்பும் கணையமும் வித்துதல் : புறநா. 369 : 13. தொழுதி-கூட்டமான. ஊழ்படு-முதிர்ந்த. குருதியாகிய நெய். இறைச்சி - மாமிசம். குருதிநெய்யுடன் இறைச்சியாகிய ஊழ்படு சோற்றைப் பல்பேய்க்கு ஊட்டி என மாறியியைக்க. வென்றி - வெற்றியைத்தரும் துர்க்கை. வீழ்தர - விரும்பும்படி. வேட்டு- கள வேள்வியைச் செய்து. எய்துப - பெறுவார்கள்.

(உரை) [1] (பி - ம்.) சக்கரயூகம்.

758. போர்ப்பறை - போர்முரசம். வளி - காற்றினால். கார்-கருமை. கடல்போன்று சேனை ஆர்ப்ப. கலக்கம் - நிலைகுலைதல். உரறி-முழங்கி. மார்பன் - சீவகன். ஓர்த்து - அதனை அறிந்து. முலையினாட்கு-காந்தருவ தத்தைக்கு.

கலக்கம் - முன்னின்ற நிலைகுலைதல். உரறி - முழங்கி. [1] கையாறுற்றிருந்தவன் ஆரவாரமுண்டென்று செவிகொடுத்துணர்ந்தான். [2] ஓர்ந்து : விகாரம். [3] வீரத்தாற் காமங்கெட்டதென்று இரண்டன்சிறப்புங்கூறினர். (உசுசு)

(வேறு)

759. தேய்ந்து நுண்ணிடை நைந்துகச் செப்பினைக்
காய்ந்த வெம்முலை யாய்நின கண்கள்போல்
ஆய்ந்த வம்பினுக் காரிரை யாகிய
வேந்தர் வேண்டிநின் றூர்விம்ம னீயென்றான்.

(இ - ள்.) இடை குறைந்து கெடும்படி செப்பினைக் கெடுத்த முலையாய், நின்னுடைய கண்கள்போல் தப்பாதென்று ஆய்ந்த அம்பிற்கு இரையாவதற்கு வேந்தர் விரும்பிநின்றார் ; நீ வருந்தாதொழிகவென்றானென்க. (உசுஎ)

760. அண்ணல் கூறலு மம்மனை யோவெனாத்
துண்ணெ னெஞ்சின ளாய்த்துடித் தாயிழை
கண்ணி னீர்முலை பாயக் கலங்கினாள்
வண்ண மாக்கவின் சொல்லொடு மாய்ந்ததே.

(உரை) [1] சீவகன் கையாறுற்றிருந்தமை ; சீவக. 739, ந. [2] ஓர்ந்து என்பது ஓர்த்து என வலித்தல் விகாரம் பெற்றது ; சீவக. 723; மலைபடு. 23 ; பெருங். 3. 14 : 266. [3] ஒன்பது சுவைகளுள் ஒன்று அதிகரித்த பொழுது மற்றொன்று கெடுமாதலின், இங்கே, 'வீரத்தாற் காமங் கெட்டது' என்றார்; இப்படியே ஒரு சுவை மற்றொரு சுவையைக் கெடுத்த தாகக் கம்பரும் கூறுவர் ; "காமன், தன்றி றத்தையுங் கடந்தது சீற்றத் தின் றகைமை", "சீற்றமென்றொன்று தானே மேனிமிர் செலவிற் றாகித், தோற்றிய துன்ப நோயை யுள்ளுறத் துரந்த தம்மா" (கம்ப. நிந்தனைப். 60 ; பாசப். 23)

759. நைந்து - குறைந்து. முலைக்குச் செப்பு உவமை. வெம்மை - விருப்பம். 'முலையாய்' என்றது தத்தையை நோக்கி ; விளி. நின - நின்னுடைய. மகளிர்கண்கள் போன்ற அம்பு : சீவக. 439, அடிக் ; பெருங். 1. 41 : 72. இரையாகிய - இரையாவதற்கு. வேண்டி - விரும்பி. விம்மல் - வருந்தாதே.

760. அண்ணல் : சீவகன். அம்மனையோ ; சீவக. 745, அடிக். துண்ணெனன் - துணுக்கென்னும். ஆயிழை - காந்தருவதத்தை. முலையிற் பாய. கண்ணீர் முலைபாய்தல் : சீவக. 2049 ; கலித். 77 : 4, 146 : 7-8 ; புறநா. 143 : 13-4. வண்ணம் - நிறம். கவின் - தத்தையின் அழகு. சொல்லொடு - சீவகன் கூறிய சொல்லுடனே. கவின் மாய்ந்தது.

(இ - ள்.) தலைவன் அதனைக் கூறினுகை, ஆயிழை, அம்மையோ வென்னுத் துணுக்கென்ற நெஞ்சினளாய் மெய்ந்நடுங்கி அழுது கலங்கினுள்; அப்பொழுது அவளது கவின், அவன் கூறிய கூற்றுடனே [1] பொன்றக்கெட்டதென்க. (உ௬அ)

761. மேவி நம்பிக்கு வெம்பகை யாக்கிய
பாவி யேனுயிர் பாழுடல் பற்றுவிட்
டாவி யோநட வாயென் றழுதுதன்
காவி வாட்கண் கலங்க வதுக்கினுள்.

(இ - ள்.) உறவாயிருந்து நம்பிக்குக் கடிய பகையை விளைவித்த பாவியேனது உயிரே, நீ பாழுடலைக் கைவிட்டுப் போகின்றிலை; இங்ஙனம் போகாத நீயும் ஓராவியோவென்றழுது தன் கண்கலங்க அடித்துக் கொண்டாளென்க.

பாவியேனது பாழுடலும் பாடம். (உ௬௯)

762. பாழி நம்படை மேலதிப் பாரெலாம்
நூழி லாட்டி நுடக்கிக் குடித்திடும்
வாழி நங்கைகண் டாயென்று வாட்கணீர்
தோழி தூத்துகிற் றேுகையி னீக்கினுள்.

(இ - ள்.) தோழி, நங்காய், வலியையுடைய நம்படை மேலே நின்றது; இஃது இவர்களையேயன்றி இப்பாரிலுள்ளோரெல்லாரையும் கொன்று குவித்து ஒன்றுகக் கரைத்துக் குடித்துவிடுங்காணென்று கூறிக் கண்ணீரை முன்றுனையாலே துடைத்தாளென்க. (உ௭௦)

---

(உரை) [1] பொன்றக் கெட்டது - முற்றக் கெட்டது; சீவக. 403, ந.

761. நம்பிக்கு - சீவகனுக்கு. வெம்பகை - கொடிய பகையை. ஆக்கிய - உண்டாக்கிய. பாவியேன் உயிர் - பாவியாகிய என்னுடைய உயிரே. 'பற்றுவிட்டு நடவாய் (நீ) ஆவியோ என்று' எனமாறியியைக்க நடவாய் - போகவில்லை. காவி - நீலோற்பலம். காவியை ஒத்த நிறத்தையும், வாளை ஒத்த கூர்மையையும் உடைய கண். அதுக்கினுள் - அடித்துக்கொண்டாள். வருத்தத்தாற் கண்ணை அதுக்குதல் : வி - பா. சூது போர். 221.

762. பாழி - வன்மை. இப்பாரெலாம் - இப்பூமியிலுள்ளோரெல்லாரையும். நூழிலாட்டி - கொன்றுகுவித்து; மதுரைக். 257; மலைபடு. 86-7. நுடக்கி - ஒன்றுகக் கரைத்து. வாழி : அசை. நங்கை : காந்தருவதத்தை; விளி. தோழி : வீணுபதி. துகிலினது தோகையின். தோகை- முன்றுனை; கண்ணீரைத் தோகையின் நீக்கினுள் என்க.

763. எங்கள் பெண்மையு மீர்மலர்த் தார்மன்னர்
தங்க ளாண்மையுஞ் சால்வது காண்டுமென்
றிங்கு வார்முர லுங்கலை யேந்தல்குல்
நங்கை வாட்படை நங்கையைச் சூழ்ந்ததே.

தங்குகின்ற நீண்ட கலை.

(இ - ள்.) நங்கை வாட்படை, எங்கள்பெண்தன்மையிலும் மன்ன ராண்தன்மையிலும் அமைவதொன்று காணக்கடவேமென்று கூறி நங்கையைச் சூழ்ந்ததென்க. (உஎக)

(வேறு)

764. கூன்களுங் குறளு மஞ்சிக் குடர்வெந்து கொழும்பொற் பேழை, தான்கொளப் பாய வோடிச் சாந்துக்கோய் புகிய செல்வ, தேன்கொள்பூ மாலை சூடித் தாமமாய்த் திரண்டு நிற்ப, வான் பளிங் குருவத் தூணே மறைபவு மாய வன்றே.

(இ - ள்.) படையெழுச்சி கண்டு, கூன்களும் குறளும் அஞ்சி வெந்து பொற்பெட்டிதான் தங்களை உள்ளடக்கிக் கொள்வதாகக் கருதி அதனுள்ளே பாய்கைக்கும் சாந்திருந்த பரணிகளிலே புகுகைக்கும் ஓடிச் செல்வனவும் சூடித் திரண்டு நிற்பனவும், உருவத்தையுடைய பளிக்குத் தூணிலே மறைவனவுமாயினவென்க. (உஎஉ)

763. பெண்மை - பெண்தன்மை. ஆண்மை - ஆண்தன்மை. சால்வது - பொருந்துவதொன்றை. காண்டும் - காண்போம். இங்கு - தங்குகின்ற; இங்குதல் - தங்குதல்; சீவக. 1083, 2025, ந; புறநா. 283 : 8; பெருங். 1. 55 : 143. வார் - நீண்ட. கலை - மேகலை. இங்கு கலை, வார் கலை, முரலுங்கலை எனத் தனித்தனிக் கூட்டுக. நங்கைப்படை - பெண் படை; சீவக. 632-3. நங்கையை - காந்தருவதத்தையை.

764. கூன் - வளைந்த வடிவமுடையது. குறள் - மிகக் குறுகிய வடிவமுடையது; இவ்விரண்டும் சேர்த்தே வழங்கப்படும்; சிலப். 20 : 17; 27 : 214; 28 : 58; பெருங். 1. 38 : 178, 46 : 256-63. அஞ்சி - போரைக் கண்டு பயந்து. பேழை - பெட்டி. பாய - பாய்வதற்கும். சாந்துக் கோய் - சாந்துவைத்த பரணி; "சாத்துக்கோயும்," "கோலக் கோயுட் கொண்டுநிறை யமைத்த, சூடமை சாந்தும்" (பெருங். 3. 5 : 78, 9 : 43-4). புகிய - புகுவதற்கும். பாய, புகிய, ஓடிச்செல்வ என்க. செல்வ - செல்வனவும். தாமமாய் - மாலைவடிவமாகி. நிற்ப - நிற்பனவும். வான் உருவப் பளிங்குத் தூண் எனமாறியியைக்க. வான் - வெள்ளிய. தூண் - தூணில்.

765. இங்கித நிலைமை நோக்கி முறுவலித் தெரிபொன் மார்பன், நங்கையைக் காக்கும் வண்ண நகாநின்று மொழிந்து பேழ்வாய்ச், சிங்கந்தான் கடிய தாங்கோர் செழுஞ்சிங்க முழக்கிற் சீறிப், பொங்கிமேற் செல்வ தேபோற் பொலங்கழ னரலச் சென்றான்.

இங்கிதம் - குறிப்பின்றன்மை; அவை படையெழுச்சியும் அதற்கு இவை அஞ்சினமையும். இங்கிதனிலைமையும் பாடம். செழுமை - கொழுப்பு.

(இ - ள்.) பொன்மார்பன், நிலைமைநோக்கி முறுவலித்து நங்கையைப் பதுமுகன் காப்பானாகத் தான்கருதி அதனை அவளுக்கு நகாநின்று கூறிக் கடியதொரு சிங்கந்தான் அவ்விடத்திற் சிங்கங்களின் முழக்காலே சீறிக் கோபித்து அவற்றின்மேற் செல்வதுபோலே கழல் நரலப் பதுமுகன் நிற்கின்ற விடத்தே சென்றானென்க. (௨எ௩)

766. பதுமுக குமரன் மற்றிப் பாவையைக் காவ லோம்பி
மதுமுக மாலை நெற்றி மதகளி றுந்தி நிற்ப
நுதிமுக வாளும் வில்லு நுண்ணிலை வேலு மேந்திச்
சதுமுக மாகச் சேனை நமர்தலைப் பெய்க வென்றான்.

(இ - ள்.) பதுமுகன், வேறாக இப்பாவையைக் காத்தலைப் பேணிக் களிற்றை மண்டபத்தின் வாயிலளவும் செலுத்தி அதிலே நிற்க, நம்முடைய சுற்றத்தார், வாள்முதலியவற்றையேந்தி நம்சேனையை நான்கு கையாக அவர் வகுத்தவிடத்தே நிறுத்துகவென்றானென்க.

[1] பதுமுகனையொழிந்த தோழர்மூவரும் மூன்று கையும், நபுலவிபுலர் ஒரு கையும் ஆக நான்கு கை. (௨எ௪)

---

765. இங்கிதம் - குறிப்பு. முறுவலித்து - புன்னகை செய்து. எரிபொன் - ஓட்டற்ற பொன்னாலாகிய ஆபரணம்; பொன் : ஆகுபெயர். மார்பன் - சீவகன். மார்பன் நோக்கி முறுவலித்து என மாறியியைக்க. நங்கையை - காந்தருவதத்தையை. நகாநின்று மொழிந்து - கூறும் குறளும் செய்வனவற்றைப் பரிகசித்து நின்று கூறி. பேழ்வாய் - பெரிய வாய். கடியது - விரைவுடையது. முழக்கின் - முழக்கத்தாலே. பொங்கி - கோபித்து. மேல் - அச்சிங்கங்களின்மீது. பொலங்கழல் - பொன்னாலாகிய வீரக்கழல். நரல - ஒலிக்க. சென்றான் - பதுமுகனிருக்குமிடம் சென்றான்.

766. பாவையை - காந்தருவதத்தையை. காவலோம்பி - காத்தலைச் செய்து; சீவக. 473, ந. மாலையை நெற்றியிலேயுடைய களிற்றை. உந்தி - செலுத்தி. நுதி - கூர்மை. நுண்ணிலை வேல் - நுட்பமான கூரிய இலைபோன்ற வேல். சதுமுகமாக - நான்கு வகையாக; சதுர்முகமென்பது சதுமுகமென்று வந்தது. தலைப்பெய்க - இடத்தே நிறுத்துக. சேனையைச் சதுமுகமாகத் தலைப்பெய்க எனமாறியியைக்க. என்றான் - என்று சீவகன் கூறினான்.

(உரை) [1] சீவக. 746, அடிக்.

767. வட்டுடை மருங்குல் சேர்த்தி வாளிரு புடையும் வீக்கித்
தட்டுடைப் பொலிந்த திண்டேர் தனஞ்சயன் போல வேறிக்
கட்டளைப் புரவி சூழ்ந்து கால்புடை காப்ப வேவி
அட்டுயிர் பருகுங் கூற்றங் கோளெழுந்தனைய தொத்தான்.

(இ - ள்.) அவரை அங்ஙனம் ஏவித் தான் சேர்த்தி வீக்கித் தேரை ஏறிப் பண்ணிணையுடைய புரவியைப் பக்கத்தே சூழ்ந்து [1]கால்காப்பச் சிலரை ஏவிக் கூற்றம் கொல்லுகைக்கெழுந்த தன்மையை யொத்தா னென்க.

வாள் - உடைவாள். (உஎஎ)

768. புள்ளிரைப் பன்ன பொற்றார்ப் புரவித்தே ரிரவி போலா
உள்ளுருத் தெழுந்து பொங்கி யுடல்சினங் கடவ நோக்கி
முள்ளெயி றிலங்க நக்கு முடிக்குழா மன்னர் கேட்பக்
கள்ளவி ழலங்கன் மார்பன் கார்மழை முழக்கிற் சொன்னான்.

புள்ளிரைப்பன்ன - பறவையின் ஒலியையொத்த.

(இ - ள்.) அம்மார்பன், தேரிலே இரவிபோலேயிருந்து சினம் வெவ்விதாய் மனத்தே தோற்றி மிக்கு உடம்பினைச் செலுத்தாநிற்க, மன்னரைநோக்கி மிக நக்கு அவர்கேட்ப மழைமுழக்கம்போலே கூறினா னென்க. (உஎஅ)

769. முருகுலா முல்லை மாலை மூப்பிலா முலையி னார்நும், அரு குலாம் புலவி நோக்கத் தமிர்தமின் றுகுப்ப கொல்லோ, கருதலாம் படிய தன்றிக் கலதியம் பிவையுங் காய்ந்த, பொருதுலாம் புகழை வேட்டிவ் வெஃகமும் புகைந்த வென்றான்.

---

767. வட்டுடை - முழந்தாளளவாக வீரர் உடுக்கும் உடை விசேடம்; சீவக. 468, 2263, ந; மணி. 3 : 122; பெருங். 2. 4 : 122. புடை - பக்கம். வீக்கி - கட்டி. தட்டு - தேரின்தட்டு. தனஞ்சயன் - அருச்சுனன். தேரில் தனஞ்சயன் போல ஏறி. கட்டளைப்புரவி - பண்ணிணையுடைய குதிரை. கால் - தேரின் ஆரக்காலை. அட்டு - கொன்று. கூற்றம் - யமன். கோள் எழுந்தனையது - கொல்லுதற்கு எழுந்த தன்மையை.

(உரை) [1] தேர்ச்சக்கரத்தை வீரர் காத்துச் செல்லல் : கம்ப. நாக பாசப். 25.

768. புள் - பறவை. இரைப்பு - ஒலி. பொற்றார்ப்புரவி - பொன்னாற் செய்த கிண்கிணி மாலையையுடைய குதிரைகள். தாரின் ஒலிக்குப் புள்ளொலி உவமை. சீவகனுக்கு இரவி உவமை. இரவி - சூரியன். உள் உருத்து - மனத்தே தோன்றி, சினம் பொங்கி, உள்உருத்து எழுந்து உடலைக் கடவ நோக்கி என மாறியியைக்க. எழுந்து - மிக்கு. கடவ - செலுத்த. முள்ளெயிறு : சீவக. 1099, 2732. இலங்க - விளங்கும்படி. நக்கு - சிரித்து. முடியையுடைய குழாமன்னர். கள் - தேன். மார்பன் : சீவகன்.

769. முருகு - வாசனை. மாலையினையுடைய முலையினார்; மூப்பிலா முலையினார்; என்றது, பகையரசருடைய மனைவியரை. மூப்பு - தளர்வு.

(இ - ள்.) போர்செய்தலாலுண்டாம் புகழைவிரும்பி நினைக்கலாம் படியதன்றாகக் கேட்டினைச் செய்தலுடைய அம்பாகிய இவையும் காய்ந் தன ; இவ்வெஃகும் புகைந்தன ; ஆதலால், முலையினார் நீர் யாழ்வாசிக் கப்போந்தீரென்பதனால் நும்மிடத்தே பிறந்த புலவிநோக்கத்தாற் பின்பு தாம்பெறுகின்ற புணர்ச்சியின்பத்தைப் பாழேயுகுப்பர்கொல்லோவென்றா னென்க.

'அமிர்தமென்றுகுப்ப' என்றும் பாடம். (உஎஎ)

770. வாணிக மொன்றுந் தேற்றாய் முதலொடுங் கேடு வந்தால்
ஊணிகந் தீட்டப் பட்ட வூதிய வொழுக்கி னெஞ்சத்
தேணிகந் திலேசு நோக்கி யிருமுதல் கெடாமை கொள்வார்
சேணிகந் துய்யப் போநின் செறிதொடி யொழிய வென்றார்.

(இ - ள்.) ஊணைக் கைவிட்டுத் திரட்டப்பட்ட முதலோடே ஊதியத் திற்கும் ஒருகேடுவந்தால் அவ்விரண்டினும் ஊதியமாகிய நடப்பின் மேலே நெஞ்சத்து நடக்கின்ற திண்மையைக் கைவிட்டு இரண்டையும் இழப்பதில் முதல் பெறுகையும் ஊதியமென்று பார்த்துப் பெரிய முதல் கெடாதபடி அதனைக்கொள்வார் நின் குலத்தோர் ; நீயும் அது செய்யாது போர்குறித்தெழுதலின், நினக்குரிய வாணிகமொன்றும் அறியாய் ; இனி நின் செறிதொடியாகிய ஊதியத்தைக் கைவிட்டு நின்னுடம்பாகிய முத லைக்கொண்டு பிழைக்கப் போவென்றாரென்க.

---

'நும்' என்றது பகையரசரை. புலவிநோக்கத்து - (நீங்கள் பிரிந்து வந் தமையால் நும்மனைவிமாருக்கு நும்மீது உண்டான) ஊடலையுடைய பார் வையால். அமிர்தம் - பின்பு பெறக்கூடிய புணர்ச்சியின்பத்தை. உகுப்ப கொல்லோ - நும்மனைவியர் இழப்பரோ ; ஓ : அசை. கலதி அம்பு - தீமை யைச் செய்யும் அம்பு ; கலதிமை - தீமை ; சீவக. 2932. அம்பாகிய இவை யும். காய்ந்த - கோபித்தன. வேட்டு - விரும்பி. எஃகம் - வேல். புகழை வேட்டு, கருதலாம்படியதன்றி, அம்புகாய்ந்தன, எஃகமும் புகைந்தன, (ஆதலால்) முலையினார் அமிர்தம் இன்று உகுப்பகொல் என மாறிமுடிக்க. இக்கவி சீவகன் கூற்று.

770. தேற்றாய் - அறியாய். ஊண் இகந்து ஈட்டப்பட்ட முதலொடு ஊதியத்திற்கும் கேடுவந்தால் என மாறுக. ஊண் - உணவை. இகந்து - கைவிட்டு. ஈட்டப்பட்ட - சேர்க்கப்பட்ட. ஊதியம் - இலாபம். ஒழுக்கின்- ஒழுக்கத்தையுடைய. நெஞ்சத்து ஏண் - மனத்திண்மையை. இகந்து - கைவிட்டு. இலேசு - சிறிய இலாபம். நோக்கி - ஊதியத்தைக் காட்டிலும் முதலே பெரிதென்று பார்த்து. இருமுதல் - பெரிய முதல்தொகையை. ஊதியநெஞ்சத்து...கொள்வார் : குறள், 463. சேண் இகந்து - நெடுந் தூரத்தே நீங்கி. உய்யப்போ - பிழைக்கப்போ. தொடி - காந்தருவதத் தையை ; ஆகுபெயர். ஒழிய - நீங்க. தொடியொழிய உய்யப்போ என் றார் என மாறியியைக்க. சீவகனுக்கு முதலும், காந்தருவதத்தைக்கு ஊதியமும் உவமை. இக்கவி பகையரசர் கூற்று.

தேற்ருய், "தேற்ருய் பெரும பொய்யே" (புறநா. 59) [1] என்றது போல்நின்றது. இலேசு - சிறுமையாகிய ஊதியம். (உஎஅ)

771. தம்முடைப் பண்டந் தன்னைக் கொடுத்தவ ருடைமை கோடல், எம்முடை யவர்கள் வாழ்க்கை யெமக்குமஃ தொக்கு மன்றே, அம்முடி யரசிர்க் கெல்லா மென்கையி லம்பு தந்து, நும் முடைத் திருவுந் தேசு நோக்குமின் கொள்வ லென்ருன்.

(இ - ள்.) அதுகேட்டுத் தம்முடைய பண்டத்தைப் பிறர்க்குக் கொடுத்து அவர்களுடைமைகளை வாங்கிக்கோடல் எம் குலத்தோர் வாழ்வாதலின், அஃது எமக்குமொக்குமல்லவோ? இனி யான் நுங்கட்கெல்லாம் என் கையிலம்பைத் தந்து நும்முடைய [1] வீரஸ்ரீயையும் புகழையும் இப்பொழுதே கொள்வேன்; வல்லீராயின் அவற்றைக் காப்பீராகவென்ருனென்க. (உஎகூ)

772. மட்டுலாந் தாரி ஞய்நின் வனப்பிளே டிளமை கல்வி
கெட்டுலாய்ச் சிலம்பு செம்பொற் கிண்கிணி மகளிர் கோங்க
மொட்டுலா முலைகள் பாய்ந்த வகலத்துச் சரங்கண் மூழ்கப்
பட்டுலாய்க் கிடக்க லுற்ரு யென்சொலாய் பாவியென்ருர்.

(இ - ள்.) தாரிஞய், சிலம்புமுதலியவற்றையுடைய மகளிரது கோங்கரும்பு தோற்றுப்போம் முலைகள் உலாய்ப்பாய்ந்த அகலத்தே சரங்கள் உலாய்ப்பாய்கையிஞலே பட்டு நின்வனப்பு முதலியன கெட்டுக் கீழ்க்கிடக்கலுற்ற பாவி, நீ எதுசொல்லாயென்ருரென்க.

இஃது அரசர்கூற்று. (உஅ௦)

---

(மேற்.) அடி, 1 : சிவ. பா. 9. அதி. 2, சிவஞா.

(உரை) [1] தேற்ருயென்றது தேருயெனத் தன்வினையாய் நின்றது (புறநா. 59 : 4, உரை)

771. கொடுத்து அவர் உடைமையைக்கோடல் எனப்பிரிக்க. உடைமை - உடைமைப்பொருளை. கோடல் - கொள்ளுதல். எம்முடையவர் - எம் குலத்தவர்களுடைய; என்றது வணிககுலத்தை. ஒக்கும் - பொருந்தும். அம்முடி - அழகிய கிரீடம். அரசிர்க்கெல்லாம் - அரசராகிய உங்கட்கெல்லாம். திரு - வீரமகள். தேசு - புகழ். இக்கவி சீவகன் கூற்று.

(உரை) [1] வீரலக்ஷ்மி.

772. மட்டு - வாசனை. கோங்கமொட்டு உலாம் - கோங்கரும்பு தோற்றுப் போகும். அகலத்து - மார்பில். சரங்கள் உலாய் மூழ்க - அம்புகள் உலாவி மூழ்குதலாலே. தாரிஞய், மகளிர் முலைகள் பாய்ந்த அகலத்துச் சரங்கள் உலாய் மூழ்கப்பட்டு, வனப்பிளேடு இளமையும் கல்வியும் கெட்டு உலாய்க் கீழ்க்கிடக்கலுற்ற பாவி என்சொலாய் எனமாறியியைக்க.

773. எரிசுடர்ப் பருதி முன்ன ரிருளென வுடைந்து நீங்கப்
பொருபடை மன்னர் நுங்கள் புறக்கொடை கண்டு மற்றிம்
முருகுடைக் குழலி னுடன் முகிழ்முலை கலப்ப லன்றேல்
இருசுடர் வழங்கும் வையத் தென்பெயர் கெடுக வென்றான்.

(இ - ள்.) பருதிமுன்னர் இருள்கெடுமாறுபோல நீர் எனது தோற்றங் கண்டுபோக நுமது புறங்கண்டு பின்பு குழலினுளை முலையைக் கலப்பேன்; அது செய்திலேனாயின், என்புகழ் ஞாயிறும் திங்களும் வழங்குகின்ற உலகெங்கும் நடவாது கெடுவதாகவென்றானென்க.

இது சீவகன் வஞ்சினம். இது, முன் இளமைமுதலியவற்றை அவ்வரசர் கொன்று கூறலின், [1] அக்கொலை பொருளாகப் பிறந்த வெகுளியென்னும் மெய்ப்பாடு. இது, "நகுதக்கனரே" (72) என்னும் புறப்பாட்டினுட்கண்டு கொள்க. (உஅக)

(வேறு)

774. ஆண்மர வாணிலத் தப்பு வேல்செய்முள்
காண்வரு காட்டினக் களிற்று நீள்வரை
நீணில வேந்தெனும் வேழப் பேரினம்
பூண்முலைப் பிடிக்கவாய்ப் போர்செய் குற்றவே.

(இ - ள்.) ஆளாகிய மரத்தையுடைய வாளாகிய நிலத்தே அம்பு வேலாற் செய்த இடுமுள்ளையுடைய எல்லாரும் காண்டலுடைய காட்டில் இனக்களிறாகிய வரைமேலே வேந்தராகிய வேழத்திரள் தத்தையென்கிற பிடிக்கு அவாவிப் போர்செய்தலுற்றனவென்க.

பூண்முலை : வெளிப்படை (உஅஉ)

---

773. சுடர் - கிரணம். உடைந்து - தோற்று. மன்னராகிய நுங்களது. புறக்கொடை - புறம்கொடுத்து ஓடுதலை; "அழிகுநர்புறக்கொடை" (பு - வெ. 55). முருகு - வாசனை. குழலினுள் : காந்தருவதத்தை. கலப்பல் - கலப்பேன். இரு சுடர் - சூரியனும், சந்திரனும். இப்பாடல் 'வஞ்சினக் காஞ்சி' என்னும் துறையின்பாற்படும்; பு - வெ. 69.

(உரை) [1] "கொலையென்பது, அறிவும் புகழும் முதலாயினவற்றைக் கொன்றுரைத்தல்; 'உறுதுப் பஞ்சா துடல்சினஞ் செருக்கிச், சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை' (புறநா. 72) என்பது கொலைபொருளாக வெகுளிச் சுவை பிறந்தது; என்னை? சிறுசொற் சொல்லுதலென்பது புகழ்கொன்றுரைத்தலாகலின்" (தொல். மெய்ப். 10, பேர்.)

774. ஆளாகிய மரம். ஆள் - வீரர். அப்பு - அம்பு; வலித்தல் விகாரம். அம்பாலும் வேலாலும் செய்த முள். காட்டு - காட்டில். முள்ளையுடைய காட்டில், காண்வரு காட்டில் என்க. காண்வரு - எல்லாரும் காணுதலை

775. தாழிருந் தடக்கையு மருப்புந் தம்பியர்
தோழர்தன் ருள்களாச் சொரியு மும்மதம்
ஆழ்கடற் சுற்றமா வழன்று சீவக
ஏழுயர் போதக மினத்தொ டேற்றதே.

(இ - ள்.) [1]இசையேழினுலுமுயர்ந்த சீவகனுகிய யானை, கை நந்தட்டனுக, மருப்பு நபுலவிபுலராக, தோழர்நால்வரும் தாளாக, மும் மதம் தேரும் குதிரையும் காலாளுமாக, அரசராகிய ஆனைத்திரளுடனே போர்செய்யத் தொடங்கிற்றென்க.

[2]தன்னை யானையாக உருவகங்கூறலிற் கடற்சுற்றம் அதனை யொழிந்த மூன்று படையுமாம். யானைக்கு உத்தமலிலக்கணம் ஏழு முழவுயரம். இவன் வீணைவென்றமையின், ஏழுயர்போதகமென்ருர். (உஅரு)

776. குடையுடை வேந்தெனுங் குழாங்கொ ளுகமும்
கொடியெனும் பிடியுடைக் குமர வேழமும்
வெடிபடு போர்த்தொழில் காண விஞ்சையர்
இடியுடை யினமழை நெற்றி யேறினர்.

(இ - ள்.) வேந்தராகிய யானைகளும் தத்தையாகிய பிடியையுடைய சீவக குமாரனுகிய யானையும் தம்மிற் பகைத்தலுண்டாகிய போர்த் தொழிலைக் காண்டற்கு விஞ்சையர் மழைநெற்றியிலேயேறினரென்க.

வெடி - முழக்கமுமாம். (உஅச)

---

யுடைய. களிற்றுவரை - களிருகிய மலையின்மேலே. வேழப் பேரினம் - யானைகளின் பெரிய கூட்டம். பூண் - ஆபரணங்கள். முலைப்பிடிக்கு - காந்தருவ தத்தையாகிய பெண்யானையின் பொருட்டு. அவாய் - விரும்பி. வேழப் பேரினம் போர்செய்குற்ற என்க.

(மேற்.) அடி, 4 : கல். 'பூமணி', 25, மயில்.

775. தாழிருந்தடக்கை - தாழ்ந்த பெரிய வளைந்த துதிக்கை. தடக்கையும், மருப்பும் தம்பியராக. தம்பியர் - நந்தட்டனும் நபுலவிபு லரும். தோழர் - சீதத்தன், புத்திசேனன், பதுமுகன், தேவதத்தன் என்பவர்கள். தாள்களா - நான்கு கால்களாகவும். மும்மதம் - கன்ன மதம், கபோலமதம், கோசமதம் என்பவை. கடற்சுற்றமா - தேர், குதிரை, காலாள் என்பவைகளாகவும். ஏழுயர் சீவகபோதகம் எனமாறி யியைக்க. போதகம் - யானை. ஏழுயர் போதகம் : பாகவதம், சராசந்த. 32 ; வி. பா. இந்திர. 6. இனம் - யானைக் கூட்டம்.

(மேற்.) மு : நன். பொது. 59, மயிலை ; சங்கர.

(உரை) [1] இசை ஏழு - குரல்முதலான சுரங்கள் ஏழு. [2] தன்னை என்றது சீவகனை.

776. வேந்தெனும் நாகமும் - வேந்தராகிய யானைகளும். குழாம் - கூட்டம். கொடியெனும்பிடி - பூங்கொடிபோன்ற காந்தருவதத்தையாகிய பெண் யானை. குமரவேழம் - சீவககுமரனுகிய ஆண்யானை. வெடிபடு -

777. கரைபொரு கடலொடு கார்க ணுற்றென
முரைசொடு வரிவளை முழங்கி யார்த்தன
அரைசரு மமர்மலைந் தரணம் வீசினர்
குரைகடற் றானைபோர்க் கோலஞ் செய்தவே.

(இ - ள்.) கடலொலியோடே வான்முழக்கம் சேர்ந்ததென்னும்படி முரசும் வளையும் முழங்கி ஆர்த்தன; அப்பொழுது அரசரும் போரை [1] ஏறட்டுக் கொண்டு கவசத்தையணிந்தார்; அவர்தானையும் போர்க் கோலங் கொண்டனவென்க. (உஅரு)

778. தெய்வதம் வணங்குபு செம்பொன் வாயுளிட்
டெய்கணைப் படுமழை சிதறி யெங்கணும்
மொய்யமர் மலைந்தனர் முருகு விம்முதார்ச்
செய்கழற் சீவகன் வாழ்க வென்னவே.

(இ - ள்.) சீவகன்றோழரும் சீவகன் வாழ்கவென்று கூறுநிற்கத் தெய்வத்தை வணங்கிப் [1] பாடுகுறித்துப் பொற்றகடு தம்வாயுளிட்டு எவ்விடமும் பெய்கின்ற மழைபோலக் கணையைச் சிதறப் போரை மேற் கொண்டாரென்க.

[2] சிதறி, சிதறவென்க. (உஅசு)

---

பகைத்தல் உண்டாகிய. விஞ்சையர் - வித்தியாதரர். மழை நெற்றி - மேகத்தின் உச்சியிலே. இச்செய்யுட் கருத்தோடு, "குன்றேறி யானைப் போர் கண்டற்றாற் றன்கைத்தொன், றுண்டாகச் செய்வான் வினை" (குறள், 758) என்பது ஒருவாறு ஒப்புநோக்கற்பாலது.

777. கடலொடு - கடலொலியுடன். கார்கண் உற்றென - மேகமுழக்கமும் சேர்ந்தாற்போல. வளை - சங்கு. அரைசர் - அரசர். அமர் - போர். அரணம் வீசினர் - கவசத்தையணிந்தார்; "அரணம் வீசினர்" (சீவக. 1847). அரணம் - கவசம்; பெருங். 1. 46 : 11. குரை கடல் - ஒலிக்கின்ற கடல். போர்க்கோலம் செய்த - போருக்கு உரிய அலங்காரத்தைச் செய்து கொண்டன.

(உரை) [1] ஏறட்டுக்கொண்டு - மேற்கொண்டு.

778. வணங்குபு - வணங்கி. பொன் - பொற்றகடு. பொற்றகட்டை வாயுள் இட்டுப் போர் செய்தல்: "காஞ்சனத் தளிவம் வாய்க்கிட்டச்சுற முழங்கி" (சீவக. 2303); இதனை லோகாபிஸாரம் என்பர் வடநூலார். கணையை மழைபோற்சிதறி. செய்கழல் - தொழிலழகு பெற்ற வீரக்கழல்; சீவக. 611, அடிக். தலைவனை வாழ்த்திப் போர் தொடங்கல் : பெருங். 1. 43 : 42, 113; 3. 17 : 229. (தோழர்) சீவகன் வாழ்கவென்ன, தெய்வதம் வணங்குபு செம்பொன் வாயுளிட்டுக் கணைசிதறி அமர் மலைந்தனர் என்க.

(உரை) [1] பாடு - இறத்தல். [2] எச்சத்திரிபு.

779. கலந்தது பெரும்படை கணைபெய்ம் மாரிதூய்
இலங்கின வாட்குழா மிவுளி யேற்றன
விலங்கின தேர்த்தொகை வேழங் காய்ந்தன
சிலம்பின வியமரந் தெழித்த சங்கமே.

(இ - ள்.) அரசர்பெரும்படை கணையைப் பெய்மாரி போலத் தூவி இதனோடு கலந்தது; அப்பொழுது இரண்டுபடையில் வாட்குழாமும் இலங்கின; குதிரையும் ஒன்றையொன்று ஏற்றன; தேரும் ஒன்றை யொன்று தடுத்தன; வேழமும் ஒன்றையொன்று காய்ந்தன; இயமரமும் இயம்பின; சங்கும் ஒலித்தனவென்க.

இதனால், இரண்டுபடையும் கலந்தபடி கூறினார். (உஅஎ)

780. சுற்றணி கொடுஞ்சிலை மேகந் தூவிய
முற்றணி பிறையெயிற் றம்பு மூழ்கலின்
அற்றுவீழ் குழைமுக மலர்ந்த தாமரை
மற்றவை சொரிவதோர் மாரி யொத்தவே.

(இ - ள்.) சிலையாகிய மேகந்தூவிய நிரம்ப வலித்தல்பொருந்தின அம்பு மூழ்குதலால் அற்றுவீழ்கின்ற முகமாகிய அவை மலர்ந்த தாமரைப் பூவைச் சொரிவதொரு மாரியையொத்தனவென்க.

எயிற்றம்பு - [1] அலகம்பு. மற்று : அசை. (உஅஅ)

779. படை கணையை மாரிபோல் தூய்க் கலந்தது; தூய் - தூவி. வாட் குழாம் இலங்கின; இலங்கின - விளங்கின. இவுளி - குதிரை. ஏற்றன - பொருதன. தேர்த்தொகை விலங்கின எனமாறுக. தொகை - கூட்டம். விலங்கின - தடுத்தன. காய்ந்தன - கோபித்தன. இயமரம் சிலம்பின எனமாறுக. இயமரம் - ஒருவகை வாத்தியம்; ஊதுகொம்பு என்றும் கூறுவர்; பெருங். 3. 27 : 102; 5. 6 : 63, 7 : 14; சூளா. சுயம். 229, 280; நள. சுயம். 88. சங்கம் தெழித்த - சங்குகள் ஒலித்தன.

780. சுற்றணி - சுற்றிலும் அணியப்பட்ட. சிலையாகிய மேகம். சிலை - வில். தூவிய அம்பு, பிறையெயிற்றம்பு என்க. முற்ற அணி - நிரம்ப வலித்தல்பொருந்தின. எயிற்றம்பு : வி-பா. 1-ஆம் போர். 28, 16-ஆம் போர். 31, 55. பிறைபோலும் எயிற்றம்பு. மூழ்கலின் - மூழ்கு தலால். குழைமுகம் - குண்டலத்தோடு கூடிய முகம். முகம் அவை - முகமாகிய அவை. முகமவை தாமரையைச் சொரிவதொரு மாரியை ஒத்த என்க. மாரி - மழை.

(உரை) [1] அலகம்பு : "அஞ்சம்பையு மையன்றன தலகம்பையு மளவா" (கம்ப. கங்கைப். 3)

781. மறப்படை பசித்தன வயிறின் ருர்கெனக்
குறைத்தனர் குஞ்சரங் கூந்தன் மாத்துணித்
திறக்கின ரோடுதேர் மைந்த ரின்னுயிர்
துறக்கம்போய்ப் புகுகெனத் துணிய நூறினர்.

(இ - ள்.) மறப்புடை முன்பு வயிறுபசித்தன, அவை இன்று வயிறு நிறைகவென்று கூறிக் குஞ்சரத்தைக் குறைத்தார்; மாவைத் துணித்துத் தேரை இறக்கினர்; இன்னுயிர்போய்த் துறக்கம் புகுக வெனக்கூறி மைந்தரைத் துணிய வீசினரென்க. (உ அகூ)

(வேறு)

782. (க) ஆற்றுவீர் வம்மி னெம்மோ டாண்மைமேம் படீஇய வென்பார், ஏற்றவர் மார்பத் தல்லா லிரும்புமேல் விடாது நிற்பார், கூற்றம்போற் கொடிய யானைக் கோடுமு தகன்ற மார்பம், கீற்றுப் பட் டழகி தாகக் கிடக்கெனக் கொடுத்து நிற்பார்.

783. (உ) கழித்துவா ளமலை யாடிக் காட்டுவார் கண்கள் செந்தீ, விழித்துமேற் சென்ற வேழம் வேலினுல் விலக்கி நிற்பார், தெழித்துத்தேர்க் கயிறு வாளா வரிந்திட்டுப் புரவி போக்கிப், பழிப்பில கொணர்ந்து பூட்டு பாகநீ யென்று நிற்பார்.

---

781. மறப்படை - வீரம்பொருந்திய ஆயுதம். வயிறு - படையின் வயிறு. ஆர்க - நிறைக. குஞ்சரம் குறைத்தனர் - யானையை வெட்டினர். கூந்தல் - பிடரிமயிர்; "கூந்தன்மா கொன்று" (முத்.) மா - குதிரை. இறக்கினர் : முற்று. மாவைத்துணித்து ஓடுகின்ற தேரை இறக்கினர் என்க. மைந்தர் - வீரர். துறக்கம் - வீரசுவர்க்கம். நூறினர் - கொன்றர்.

782. ஆற்றுவீர் - செய்வீர். வம்மின் - வாருங்கள். ஆண்மை மேம் படீஇய - நுமது ஆண்மையை மேம்படுத்தும்பொருட்டு. மேம்படீஇய ஆற்றுவீர் வம்மின் என்பார் என மாறியியைக்க. ஏற்றவர் - எதிர் பொருதவருடைய. இருப்பு - இரும்பாலாகிய வேலை; ஆகுபெயர். மேல் - எதிர்பொருதவரின் மார்பின்மீது. விடாது - கைவிடாமல். கீற்றுப்பட்டு - கூறுபட்டு. அழகிதாக - அழகுடையதாக. கிடக்கென அகன்ற மார்பம் கொடுத்து நிற்பார் என இயைக்க. யானைக்கோடு...........நிற்பார் : "அண்ணல் யானை, இலங்குவான் மருப்பி னுதிமடுத் தூன்றினும், ஓடல் செல்லாப் பீடுடை யாளர்" (புறநா. 287 : 5-7)

783. கழித்து - உறையினின்றும் எடுத்து. வாளமலை : போர்க் களத்தில் வீரர், வாளை அசைத்து ஆடுங்கூத்து; பதிற். 56 : 4-8; இது வாளமலை யென்னும் துறையின் பாற்படும்; பு - வெ. 147. தீப்புறப்பட விழித்து என்க. வேழம் - யானையை. விலக்கி - தடுத்து. வேழத்தை வேலினுல் விலக்கி நிற்றல் : "கைவேல் களிற்றெடு போக்கி"

784. (ரு) ஐங்கதிக் கலினப் பாய்மாச் சிறிதுபோர் களையீ தென்பார், வெங்கதிர் வேலிற் சுட்டி வேந்தெதிர் கொண்டு நிற் பார், நங்கைகல் யாண நன்றே நமக்கென நக்கு நிற்பார், சிங்க மும் புலியும் போன்றார் சீவகன் றோழன் மாரே.

785. (சு) ஒருங்கவன் பிறந்த ஞான்றே பிறந்தவ ருதயத் துச்சி, இரும்பினாற் பின்னி யன்ன வெறுழ்வலி முழவுத் தோளார், விரும்புவார் வேழ வேற்போர் நூற்றுவர் நூறு கோடிக், கிருந் தனம் வருக வென்பா ரின்னண மாயி னாரே.

இவை நான்கும் ஒருதொடர்.

(க) எம்முடனே நுமதாண்மை மேம்படுத்துதற்குப் போரிற்கு ஆற்றுவீர் வாருங்கோளென்பார்; எதிர்ந்தவர் மார்பிலல்லாது எதிராதார் மார்பில் இரும்பினைக் கைவிடாது நிற்பார்; யானைக்கோடுழுது கீற்றுப் பட்டுக் கிடக்கவென்று மார்பை யானை குத்தக்கொடுத்து நிற்பாரென்க.

(உ) உறையைக்கழித்து வாட்கூத்தாடிக் காட்டுவார். செந்தீ விழித்து - நெருப்புப் புறப்பட விழித்து. பாகனைக் கோபித்துக் கயிற்றை யறுத்துப் புரவிகளைப் போக்கி, பாகனே, நீ நல்ல புரவிகளைக் கொணர்ந்து பூட்டென்று நிற்பார்.

---

(குறள், 774); "புகர்முகக் குஞ்சரமெறிந்த வெஃகம்" (தகடூர். 'வாதுவல்'). தெழித்து - கோபித்து. தேரிற் கட்டிய கயிற்றை. அரிந் திட்டு - அறுத்து. போக்கி - துரத்திவிட்டு. பழிப்பில - நல்ல குதிரைகளை. பாக : விளி.

784. ஐங்கதிப்பாய்மா - ஐந்துகதியையுடைய குதிரை. கலினம் - கடிவாளம். பாய்மாப்போர் சிறிது; ஈது களை என்பார் என மாறி யியைக்க. ஈது களை - இதைவிட்டு நீக்கு. வேலின் - வேலால். வேந்தைச் சுட்டி எதிர்கொண்டு நிற்பார் என மாறியியைக்க. வேந்து - வேந்தரை. நங்கை - காந்தருவதத்தையினுடைய. நக்கு - இகழ்ந்து சிரித்து. தோழன்மார் : எழுவாய்; இவர்கள் பதுமுகன் முதலான தோழரல்லர்; 782 முதல், 785 முடிய இவர்களுடைய செயல்களே கூறப்பட்டன; தோழன்மார் என்பதை 'இன்னணமாயினாரே' (785) என்பதனுடன் இயைத்துக் கொள்க.

785. ஒருங்கு - ஒன்றாக. அவன் - சீவகன். பிறந்தவர் - தோழன் மார். உதயத்து உச்சி - உதயகிரியின் சிகரத்தை. எறுழ்வலி - மிக்கவலி; "எறும் முன்பு" (புறநா. 7 : 6, உரை). இரும்பினாற் பின்னியன்ன தோள், முழவுத்தோள் எனப்பிரிக்க. வேழவேற்போர் விரும்புவார் - யானையோடு வேலால் போர்செய்தலை விரும்புவார். நூற்றுவராகிய யாம்; நூறுகோடிக்கு இருந்தனம் - நூறுகோடியளவான படையுடன் போர் செய்ய இருந்தேம்.

(௩) ஐங்கதி : " விக்கிதம் வற்கிதம் வெல்லு முபகண்ட, மத்திமஞ் சாரியோ டைந்து." கலினம் - கடிவாளம். பாய்மாப்போர் சிறிது, இதனைக் களை. வேந்தரை இவனெனக்கு இவனெனக்கென்று வேலாலே சுட்டி எதிர்கொண்டு நிற்பார். [1] நன்றென்றது. [2] பூசல்பெற்ற உவகையால்.

(௪) உதயத்து உச்சியை இரும்பினுற்கட்டினுலொத்த தோள். எறுழ்வலி - மிக்கவலி. வேழத்தோடே வேலாலே பொருதலை விரும்புவார். நூறு கோடி படைக்குப் போர்செய்யவிருந்தேம்.

(இ - ள்.) சீவகன்றேழுன்மார், அவன் பிறந்தவன்றே கூடப் பிறந்தவர், தோளார், விரும்புவார், வருகவென்பார், அவர்கள்தாம் இப் போரில் இன்னணமாயினுர் ; அஃது எங்ஙனேயென்னின், என்பார், விடாதுநிற்பார், கொடுத்துநிற்பார், காட்டுவார், விலக்கி நிற்பார், பூட்டென்று நிற்பார், களையென்பார், எதிர்கொண்டுநிற்பார், நக்கு நிற் பாராய்ச் சிங்கத்தையும் புலியையுமொத்தாரென்க.

[3] இவை நான்கு கையிலும் நின்ற படைத்தலைவரல்லாத் தோழர் பொருதபடிகூறின. (உகூ௦ - கூ௩)

786. கூட்டுற முறுக்கி விட்ட குயமகன் றிகிரி போல
வாட்டிறற் றேவ தத்தன் கலினமா மாலை வெள்வேல்
ஈட்டம்போழ்ந் தியானை நெற்றி யிருங்குளம் பழுத்தி மன்னர்
சூட்டொடு கண்ணி சூளா மணிசிந்தித் திரியு மன்றே.

இக்கவிமுதல் நான்கு கவியாற் படைத்தலைவராய் நின்ற தோழர் மூவரும் நபுலவிபுலரும் பொருதபடி கூறுகின்றுர்.

கூட்டு - [1] மட்டிரள். உற - அது வந்து சேருதலாலே. முறுக்கி விட்ட - திரித்துவிட்ட ; " பசுமட் குரூஉத்திரள் " (புறநா. 32) என்றுர் பிறரும். இனி [2] உசவுறவென்றுமாம் ; அது கரியுமெண்ணெயும். சூட்டு - போர்ப்பூ. சூளாமணி - முடியின்மணி.

(உரை) [1] நன்று : சீவக. 784. [2] பூசல் - போர். [3] இவை - இப் பாடல்கள்.

786. முறுக்கிவிட்ட - சுற்றிவிட்ட. குயமகன் - குயவன். திகிரி - சக்கரம் ; " கொட்புறு கலினப் பாய்மா குலான்மகன் முடுக்கி விட்ட, மட்கலத் திகிரி போல வாளியின் வருவ " (கம்ப. மிதிலைக். 13). வாட் டிறல் - வாள் வலியையுடைய. தேவதத்தன் : சீவகன் தோழர் நால்வருள் ஒருவன். மா - குதிரை. வேல் ஈட்டம் போழ்ந்து - வேற்படையின் கூட்டத்தைப் பிளந்து. நெற்றியில் குளம்பை அழுத்தி. கண்ணி - முடியி லணியும் பூமாலை ; அடையாளப்பூ. மன்னருடைய சூட்டையும், கண்ணி யையும், சூளாமணியையும் சிந்தி. தேவதத்தனுடைய கலினமா, குயமகன் திகிரிபோலத் திரியும் என்க.

(உரை) [1] மண்ணுகிய திரள். [2] உசவு : சீவக. 3076, ந.

(இ - ள்.) தேவதத்தனது மா போழ்ந்து அழுத்திச் சிந்தித் திகிரி போற்றிரியுமென்க. (உகூச)

787. பாய்ந்தது கலின மாவோ பறவையோ வென்ன வுட்கி
வேந்தர்தம் வயிறு வேவ நபுலமா விபுல ரென்பார்
காய்ந்துதம் புரவிக் காமர் குளம்பினாற் களிற்றி னோடை
தேய்ந்துகச் சேர்த்தி மாலைத் திருமுடித் திலகங் கொண்டார்.

மா, முற்கூறியவாறே கொள்க.

(இ - ள்.) நபுலவிபுலரென்று கூறுகின்றவர்கள், தம்புரவியினது குளம்பாலே பட்டம் தேய்ந்துகும்படி களிற்றினுதலிலே மாவோ பறவையோ பாய்ந்ததென்ன அப்புரவியைச் சேர்த்தி, அவற்றின் மேலிருந்த வேந்தர் உட்கி வயிறு வேம்படி அவர் முடியிற் சூட்டுமணி களை வாங்கிக்கொண்டாரென்க. (உகூரு)

788. காயத்தின் குழம்பு தீற்றிக் காரிரும் பெறிய மேகம்,
தோயுமுள் ளிலவின் கூன்காய் சினைதொறு முதிர்வ வேபோல்,
மாயங்கொல் மறவர் மாலைப் பைந்தலை யுதிர்ந்த செங்கட்,
சேயனான் றிருவின் பேரான் செழுஞ்சிலைப் பகழி யாலே.

(இ - ள்.) இரும்பிலே பெருங்காயத்தினது குழம்பைப்பூசி அதனாலே இலவினைவெட்ட அதன்காய் உதிர்வனபோல முருகனை யொப்பான் ஸ்ரீதத்தன் வில்லிற் றோன்றிய பகழியாலே மறவருடைய செவ்வி மாலைத்தலைகள் உதிர்ந்தன ; இது மாயமோவென்க. (உகூசா)

787. உட்கி - பயந்து. வேவ - வெந்துபோம்படி. நபுலவிபுலர் : சீவகன் தம்பியர் ; மா : இசைநிறைத்து நின்றது ; சீவக. 395, அடிக். காய்ந்து - கோபித்து. புரவியின் குளம்பினால். காமர் - அழகிய. ஓடை - நெற்றிப்பட்டம். உக - கெடும்படி. அரசரது மாலையையுடைய திருமுடியில் உள்ள திலகம். முடித்திலகம் - முடிமணி ; சூளாமணி. நபுல விபுலர், புரவிக்குளம்பினாற் களிற்றினோடை தேய்ந்துக, மாவோ, பறவையோ, பாய்ந்தது என்னச் சேர்த்தி, வேந்தர் உட்கி வயிறுவேவ (அவரது) திருமுடித்திலகம் கொண்டார் என்க.

788. காயம் - பெருங்காயம். தீற்றி - பூசி ; சீவக. 1081. இரும்பில் குழம்புதீற்றி என மாறுக. இரும்பு - இரும்பாலாகிய வாள் ; ஆகுபெயர். எறிய - இலவமரத்தை வெட்ட. மாயங்கொல் - இது மாயமோ ? மறவர் - வீரர். மாலையையுடைய தலை. உதிர்ந்த - உதிர்ந்தன. சேயனான் - முருகனை ஒப்பவனாகிய. திருவின் பேரான் - ஸ்ரீதத்தன். பகழி - அம்பு. இரும்பாலெறிய இலவின்காய் உதிர்வதுபோல, திருவின் பேரான் சிலைப்பகழியால் மறவர் தலை உதிர்ந்த ; மாயங்கொல் ! எனமாறி யியைக்க.

789. நீனிறப் பௌவ மேய்ந்து சூன்முற்றி நீல மேகம்
வானிற விசும்பி னின்ற மாரியின் மறைவ லாளன்
போனிறப் புத்தி சேனன் பொன்னணி பகழி சிந்தி
வேனிற மன்னர் சேனை கூற்றிற்கு விருந்து செய்தான்.

பொன்னிறம் போனிறமென விகாரம். 'போர்நிறம்' பாடமாயிற் போரொளியாம். நிறவேலையுடைய மன்னர்.

(இ - ள்.) பௌவத்தை மேய்ந்து சூல்முற்றுதலாலே நீலமேகம் விசும்பிலே மாறாது நின்ற காலமழைபோலே அந்தணனாகிய புத்தி சேனன் பகழியைச் சிந்திச் சேனையைக் கூற்றிற்கு விருந்தாக்கினா னென்க. (உகஎ)

(வேறு)

790. வீரவே லுடம்பெலாஞ் சூழ வெம்புலால்
சோருஞ்செங் குருதியுண் மைந்தர் தோன்றுவார்
ஓருமே லொண்மணிச் சூட்டு வைக்கிய
ஆரமே யமைந்ததேர்க் குழிசி யாயினர்.

(இ - ள்.) புலாலையுடைத்தாய்ச் சோருங்குருதி விட்டுச்சொரியாது உள்ளே நிற்கின்ற மைந்தர் வேல் உடம்பெலாஞ்சூழத் தோன்றுவார், சூட்டுமேல் வைத்தற்குப் பல ஆரும் தைத்து நிறைந்த தேர்க் [1] குறடாயினாரென்க.

ஓரும் : அசை. (உகஅ)

789. நீனிறப்பௌவம் - நீலநிறமுடைய கடலை. சூல் முற்றி - கருப்பம் முற்றுதலாலே. மாரியின் - மழையைப்போல. மறைவலாளனாகிய பொன்னிறத்தையுடைய புத்திசேனன். புத்திசேனன் அந்தணன் : சீவக. 668, அடிக். நிறவேல் மன்னர் என மாறுக. சேனையைக் கூற்றிற்கு விருந்து செய்தான்.

790. புலால் - மாமிசத்தையுடையதாய். சோரும் குருதி - ஒழுகுகின்ற இரத்தம். மைந்தர் - வீரர். மைந்தர் வீரவேல் உடம்பெலாம் சூழத்தோன்றுவார் எனமாறியியைக்க. ஓரும் : அசை ; சீவக. 631. ஒண் மணிச் சூட்டுமேல் வைக்கிய எனமாறியியைக்க. சூட்டு - ஆரக் காலைச் சூழ்ந்திருக்கும் வட்டை. வைக்கிய - வைத்தற்கு. ஆரம் - ஆரக்கால். குழிசி - வண்டியுருளையின் குடம் ; " காழமை குழிசிக் கதிர்த்த வாரத்துச், சூழ்பொற் சூட்டிற் சுடர்மணிப் புளகத்து " (பெருங். 1. 48 : 18 - 9) ; வேற்படைகளால் தைப்புண்ட வீரருக்கு ஆரக்கால் சூழ்ந்த குழிசி உவமை ; " நோன்குறட்டன்ன வூன்சாய் மார்பின் " (மதுரைக். 742) ; " ஆர்சூழ் குறட்டின் வேனிறத் திங்க ", " தச்சன், அடுத்தெறி குறட்டி னின்றுமாய்ந் தனனே " (புறநா. 283 : 8, 290 : 4 - 5)

(உரை) [1] குறடு - குடம்.

791. பொன்னனாள் புணர்முலைப் போகம் வேண்டிய
மன்னரோ டிளையவர் மறலி வாளமர்
இன்னண மித்தலை மயங்க வத்தலைக்
கொன்னவில் வேலினா னிலைமை கூறுவாம்.

(இ - ள்.) தத்தையது முலைப்போகத்தை விரும்பிய மன்னரோடே தோழர் மாறுபடுதலாலே வாட்போர் இப்படி இவ்விடத்தே மயங்காநிற்க, ஈண்டு வாராது ஆண்டு நின்ற வேலினான் றன்மை இனிக்கூறுவா மென்க. (உகக)

792. தம்பியைச் சீவக னோக்கிச் சாமரை
வெம்பரி மான்செவி வீர மந்திரம்
இம்பர்நம் மிடர்கெட விரண்டும் வல்லையாய்
நம்பிநீ மொழிகென நயந்து கூறினான்.

சாமரையினையும் செலவினையுமுடைய மான். [1] இரண்டும் - பறப்பிக்கு மதுவும், வேண்டுமிடத்தே நிறுத்துவிக்குமதுவும்.

(இ - ள்.) சீவகன், நந்தட்டனை நோக்கி இவ்விடத்தில் நமதிடர் கெடும்படி வீரமந்திரமிரண்டையும் நீ கற்று மானினது செவியிலே மொழிவாயாகவென்று சொல்லி அவற்றை அவனுக்கு விரும்பிக் கூறினா னென்க. (ருoo)

(வேறு)

793. மந்திரங் கேட்டு நான்கும் வானெட்டிப் புகுவ வேபோல்
அந்தரத் திவர்ந்த வாழிக் கானிலம் விட்ட மாலைச்
சுந்தரச் சுண்ண மேனி மகளிர்தங் கண்ணு ளிட்ட
மைந்தரு மிரும்பு மொவ்வா வான்புலங் காவல்கொண்டார்.

---

791. பொன்னனாள் : காந்தருவதத்தை. இளையவர் - சீவகனுடைய தோழர். மறலி - மாறுபடுதலாலே. வாளமர் மயங்க. அத்தலை - அவ் விடத்தே. கொன்னவில்வேலினான் - கொலைத்தொழிலிற் பழகிய வேலை யுடைய சீவகன்.

792. தம்பி - நந்தட்டன். வெம்பரி - கொடிய செலவினையுடைய. மான் - குதிரை. இம்பர் - இவ்விடத்தில். வல்லையாய் - நீ கற்றறிந்தா யாகி. நம்பி : விளி. நயந்து - விரும்பி. சீவகன், தம்பியை நோக்கி, நம்பி, இம்பர் நம் இடர்கெட வீரமந்திரம் இரண்டும் வல்லையாய் மான் செவியில் மொழிகெனக் கூறினான் என்க.

(உரை) [1] வீரமந்திரம் இரண்டும்.

793. நான்கும் - தேரிற் பூட்டிய நான்கு குதிரையும். "நால்குப் பண்ணினர் நால்வரு மேறினார்" (சீவக. 1774); "பால்புரை புரவி நால்குடன் பூட்டி" (பொருந. 165). வான் - ஆகாயத்தை. அந்தரம் - சுவர்க்கத்திற்கும் பூமிக்கும் இடையிலுள்ள இடம். இவர்ந்த - பறந்தன.

மந்திரம் - [1] காண்டமந்திரம். வான்புலம் - உண்மையறிவு ; அதுவே எல்லாவெற்றியுந்தருவதென்று உட்கொண்டு. காவல் - கவசம்.

(இ - ள்.) அம்மந்திரத்தை நந்தட்டன் கூறக்கேட்டு நான்குபுரவியும் அந்தரத்தே பாய்ந்தன ; வட்டத்தையுடைய உருள் நிலத்தை விட்டன ; அழகால் மகளிர் தம் கண்ணில் வைத்துக்கொண்டிருக்கின்ற சீவகனும் நந்தட்டனும் வான்புலத்தை இரும்புமொவ்வாத காவலாகக் கைக்கொண்டாரென்க. (௩௦௧)

794. வடிகயி றுய்ந்து முட்கோல் வலக்கையாற் றுங்கி வென்றி,
முடிகெனப் புரவி முள்ளா லுறுத்தினன் மொழித றேற்றேன்,
கடுகிய வண்ண மாவின் றரொலி காமர் பொற்றேர், படையது
செவியுங் கண்ணும் பற்றிநின் றிட்ட வன்றே.

(இ - ள்.) குதிரையைத் தொழிலிலே பயிற்றும் வாய்க்கயிற்றை ஆய்ந்து தாற்றுக்கோலையெடுத்து நமக்கு வெற்றியுண்டாவதாக வென்று புரவியை அம்முள்ளாலேயுறுத்திச் செலுத்தினன் ; அவை கடுகிய தன்மையைச் சொல்லுதலறியேன் ; மாவின்றரொலி படையினது செவியிலும் தேர் அதன்கண்ணிலும் விடாதே நின்றவென்க. (௩௦௨)

795. அண்ணறேர் பறவை யென்பா ரருவமே யுருவ மென்பார்,
மண்ணதே வான தென்பார் மனத்ததே முகத்த தென்பார்,
கண்ணதே செவிய தென்பார் கலங்கநூல் கழிய நோக்கிப்,
பண்ணிய வீதி பற்றி மண்டலம் பயிற்றி னனே.

---

ஆழிக்கால் - வட்டமான உருள். விட்ட - விட்டுநீங்கின. சுந்தரம் - அழகு. மாலையையுடைய சுந்தரமேனி மகளிர், சுண்ணம் பூசிய மேனி மகளிர் எனத்தனித்தனியியைக்க. சுண்ணம் - வாசனைப்பொடி. கண்ணுள் இட்ட - கண்ணிடத்துக் கொண்ட. மைந்தர் : சீவகனும் நந்தட்டனும். வான்புலம் - உண்மையறிவு. காவல் - கவசம்.

(உரை) [1] குதிரைகளை விரைவிற் செலுத்தும் மந்திரம்.

794. வடிகயிறு - குதிரையின் வாய்க்கயிறு. முட்கோல் - தாற்றுக் கோல். முடிகென - உண்டாவதாக என்று. புரவியை முள்ளால் உறுத்தினன் ; உறுத்தினன் - அழுத்தினன். (புரவி) கடுகியவண்ணம் மொழிதல் தேற்றேன் ; தேற்றேன் - அறியேன். மா - குதிரை. தார் - கிண்கிணிமாலை. படை : பகைவர்சேனை. மாவின்தாரொலி படையது செவியிலும், பொற்றேர் (படையது) கண்ணிலும் பற்றி நின்றிட்ட என்க. பற்றி - விடாமல். மாவும் தேரும் சீவகனுடையன.

795. அண்ணல் : சீவகன். தேருக்குப் பறவை : சீவக. 787 " கடும்பரிக்கதழ்சிற கைப்பநீ, நெடுந்தே ரோட்டிய " (பதிற் 25 : 12). எங்கும் சுற்றுகின்ற கதியால் அருவம் என்றனர். மண்ணதே - பூமியிடத்ததே. என்பாராய்க் கலங்க. கழிய - முடிய. வீதி, மண்டலம் என்பன கதிவகைகள். வீதியும் மண்டலமும் : சீவக. 1839. இப்பாட

என்பாரை எங்குங்கூட்டுக. அருவமென்றது, எங்கும் கலத்தலின்.

(இ - ள்.) தலைவன்றேரைச் சிலர் இப்படிக் கூறுவார் இப்படிக் கூறுவாராய்க் கலங்காநிற்க, நூலைக் கூர்க்கப்பார்த்து அதிற்பண்ணின வீதியைத் தொடங்கி மண்டலமென்கிற கதியைப் பயிற்றினானென்க. (௩0௩)

796. அகில்கொண்ட கொள்ளி வட்ட மாருயிர் மேயு நேமி,
முகில்கொண்ட மின்னுந் தோற்ப முறுகிய விசையிற் றாகி,
மிகல்கொண்ட விகலைத் தானே விழுங்கிய சிறகர்த் தோற்றிப்,
பகல்கொண்டு பறக்குந் தேராற் காளைதன் பைம்பொற் றேரே.

(இ - ள்.) காளைதன்றேர், அகில் தன்னிடத்தே கொண்ட கொள்ளி வட்டமும் காலசக்கரமும் மின்னும் தோற்கும்படி கடுகிய விசையிற்றாகி மாறுபாடுகொண்ட போரினைத் தானேவிழுங்குதற்கு ஒரு சிறகுதோற்றிப் பகலைக்கொண்டு பறப்பதொரு தேராயிருந்ததென்க.

அகில்கூறிற்று, நெய்யால் ஒளிமிகுதலின். மின் வீதிக்கும், ஒழிந்தன வட்டத்திற்கும் உவமை. (௩0௪)

797. காலற்ற வயிர மாலை வெண்குடை கவிழ்ந்த பிச்சம்
மேலற்ற கவசம் வீழ்ந்த சாமரை யற்ற வின்ஞாண்
மாலுற்ற மன்னர் தங்கண் மனங்கையற் றொழிந்த வள்ளல்
கோலொற்றக் குனிந்த வாறே சிலைகுனிந் தொழிந்த தன்றே.

---

லோடு, "முன்னேயுளன் பின்னேயுளன் முகத்தேயுள னகத்தின், தன்னேயுளன் மருங்கேயுளன் றலைமேலுளன் மலைமேற், கொன்னேயுள னிலத்தேயுளன் விசும்பேயுளன் கொடியோர், என்னேயொரு கடுப்பென்றிட விருஞ்சாரிகை திரிந்தான்" (கம்ப. மூலபல. 115) என்பது ஒப்பிடற்குரியது.

796. அகிலைத் தன்னிடத்தே கொண்ட கொள்ளிவட்டம். தேரின் வேகத்திற்குக் கொள்ளிவட்டம் : சீவக. 448, அடிக். அருயிர்மேயும் நேமி - காலசக்கரம் ; "வாழுயிர் மேற்செலும், கனைகடுங் கதழ்பரிக் காலசக் கரமும் போல்" (சீவக. 1839). கொள்ளிவட்டமும், திகிரியும் மண்டலகதிக்கும், மின்னல் வீதி என்ற கதிக்கும் உவமைகள். முறுகிய - விரைந்த. மிகல் - மாறுபாடு. இகல் - போர். விழுங்கிய - விழுங்குதற்கு. சிறகர் - சிறகு ; போலி. பகல் - சூரியன். தேர் : பயனிலை. ஆல் : அசை. காளை - சீவகன். காளை தன்தேர் : எழுவாய்.

797. வயிரமாலையையுடைய வெண்குடை காலற்றன ; கால் - காம்பு. பிச்சம் கவிழ்ந்த. கவசம் மேலற்ற. சாமரை வீழ்ந்தன. வில்லின் ஞாண் அற்ற ; ஞாண் - நாண். மாலுற்ற மன்னர் - காந்தருவதத்தையிடம் மயக்கம் கொண்ட அரசர். கையற்று ஒழிந்த - செயலற்றுக் குறைந்தன. வள்ளல் - சீவகன். கோலொற்ற - அம்பு தொடுத்தற்கு. சிலை குனிந்தவாறே குனிந்தொழிந்தது என மாறியியைக்க.

[1] வள்ளலென்றார், கடுகக்கொல்லாதே அவரை அஞ்சுவித்தலின்.

(இ - ள்.) வள்ளல் கோல்தொடுத்தற்கு வில் ஒருகால்வளைந்தபடியே முழுக்க வளைந்தேநின்றது; அப்பொழுது மாலைவெண்குடைகள் காம்பற்றன; பிச்சம் கவிழ்ந்தன; கவசம் அற்றன; சாமரை வீழ்ந்தன; வில் நாணற்றன; இவைகண்டு மன்னர்மனம் செயலற்றுக் குறைந்தன வென்க. (௫0௬)

798. நுங்களை வீணை வென்ற நூபுர வடியி னுடன், வெங்களித் தடங்கண் கண்டீர் விருந்தெதிர் கொண்மி னென்னு, அங்களி யரசர்க் கெல்லா மோரொன்று மிரண்டு மாகச், செங்களிப் பகழி யொப்பித் தூள்ளவா றூட்டி னானே.

(இ - ள்.) இவை பகழியல்ல; உங்களை யாழ்வென்ற தத்தையது கண்காணுங்கோள்; நீங்கள் விருந்தாய் வந்து இவற்றை எதிர்கொண்மி னென்று கூறி அரசர்க்கெல்லாம் ஒன்றுமிரண்டுமாகப் பகழியை விழுக்காடிட்டுத் [1]தரங்களிலே அழுத்தினானென்க.

'விருந்து' என்றதற்கு ஏற்ப, 'ஊட்டினான்' என்றார். இதனால், மனங்குறைந்தும் போகாதுநின்றவர்க்கு அவள்கண்ணைப் பெறுமாறு இங்ஙனமல்ல தில்லையென்று கூறி அவரை [2]நோவித்தபடி கூறினார். (௫0௭)

799. நன்மன வேந்தர் தங்க ணகைமணி மார்ப நக்கிப்
புன்மன வேந்தர் தங்கள் பொன்னணி கவசங் கீறி
இன்னுயிர் கவர்ந்து தீமை யினிக்கொள்ளு முடம்பி னாலும்
துன்னன்மி னென்ப வேபோற் சுடுசரம் பரந்த வன்றே.

---

(உரை) [1] வள்ளல் : சீவக. 449, ந.

798. நூபுரம் - சிலம்பு. அடியினாள் : காந்தருவதத்தை. களி - களிப்பு. கண் என்றது அம்புகளை; சீவக. 439. விருந்தாக எதிர்கொண்மின் என்னு என்க. ஓரொன்று - ஒவ்வொன்று. ஒப்பித்து - விழுக்காடிட்டு. ஊட்டினான் - உண்பித்தான்.

(உரை) [1] தரம் - வரிசை. [2] வருத்தியபடி.

799. வேந்தர் தங்கள் நகை - நற்குடியிற் பிறந்த அரசர்க்கு நகைப்பைத்தருவதாகிய. நக்கி - தீண்டி. தீமை - பிறர்மனையை விரும்புதலை; சீவக. 815, ந. இனிக் கொள்ளும் உடம்பினாலும் - மறுபிறப்பிற் கொள்ளுகின்ற உடம்பினாலும். துன்னன்மின் - பொருந்தாதீர். சுடுசரம் - கொதிக்கின்ற அம்பு. வேந்தர்தம் நகையாகிய தீமையை இனிக் கொள்ளும் உடம்பினாலும் துன்னன்மின் என்பவேபோல் சுடுசரம் புன்மன வேந்தர் கவசம்கீறி மார்பம் நக்கி இன்னுயிர் கவர்ந்து பரந்த என்க.

(இ - ள்.) நன்மனவேந்தர்தம் நகையாகிய பிறர்மனை நயத்தலை இனிக் கொள்ளுமுடம்பிலும் துன்னன்மினென்பனபோலச் சுடுசரங்கள் இப்புன்மனவேந்தருடைய கவசத்தைக் கீறி மணிமார்பைத் தீண்டி இன் னுயிரைக் கவர்ந்து பரந்தனவென்க.

'குடிப்பிறந்து பழிநாணுவார்க்கு' (குறள், 794) நகையென்முர். தீமை - பிறர்மனை நயத்தல். இதனால், நொந்தும் போகாதவர்களிலே சிலருயிரைப் போக்கினமை கூறினர். (எ௦எ)

800. மீனெறி தூண்டில் போன்ற வெஞ்சிலை நாண்க ளற்ற
தேனெறி குன்ற மொத்த திண்கச்சை துணிந்த வேழம்
மானெறி காட்டுந் திண்டேர் கயிறற்று மறிய வேந்தர்
ஊனெறி யாழி யேந்தி யொய்யென வுலம்பி யார்த்தார்.

(இ - ள்.) அவரேறின தேர்கள் கயிறற்று மறியாநிற்க, அவரேறின வேழங்கள் கச்சை துணிந்தவை குன்றமொத்தன; அவர்கையில் நாணற்ற சிலைகள் தூண்டில்போன்றன; இவைகண்டும் வேந்தர் பகைவர்மேலெறியும் ஆழியையேந்தி விரைய முழங்கியார்த்தாரென்க.

[1] ஊன்: ஆகுபெயர். இதனால், படாதுநின்ற அவரை அஞ்சுவிக்க அவர் பின்னும் போர்குறித்தெழுந்தமை கூறினர். (எ௦அ)

801. ஆர்ப்பெதிர் மாரி பெய்யு மணிநெடுங் குன்றம் போலப்
போர்க்கெதிர்ந் தவரு மார்த்தா ரார்த்தலும் பூண்ட வல்விற்
கார்க்கெதிர் மேகம் போலக் கணைமழை கான்ற திப்பால்
ஈர்த்தது குருதி வெள்ள மிறைச்சிக்குன் றுக்கி னனே.

---

800. மீனெறி தூண்டில்: குறுந். 54 : 4; ஐங். 278 : 3. மீனெறி தூண்டில்போலச் சிலை நாண்களற்ற; "வடிநா ணுதிகௌ வியவா ளையொடும், விடுமீ னெறிதூண் டில்விசைத் தனபோ, னடுநா ணிடையே றியவம் பிறெடும், நெடுநா ணறவிற் கணிமிர்ந் தனவே" (சூளா. அரசியல். 109). தேனெறி குன்றம் - வண்டுகள் மதத்தை விரும்பிப் பரத்தலையுடைய குன்றம்; என்றது யானையை; யானையைக் கூறினமை யின் 'தேனெறி குன்ற' மென்றார். கச்சை - யானையின் கீழ்வயிற்றிற் கட்டப்படும் கயிறு; "கச்சையானை" (சிலப். 5 : 142). வேழம் குன்ற மொத்த. மான் - குதிரை. நெறி - வழி. மறிய - சாய. ஊண் - பகைவ ருடம்பு. ஆழி - சக்கரம். ஒய்யென: ஒலிக்குறிப்பு; சீவக. 1838. உலம்பி - முழங்கி.

(உரை) [1] ஊனையுடைய பகைவருக்கானமையின் ஆகுபெயர்.

801. ஆர்ப்பெதிர் - பகையரசருடைய ஆர்ப்பிற்கு எதிரே. எதிர்ந்த வரும் - சீவகன் படையிலுள்ளவரும். பூண்ட - கொலைத்தொழிலை மேற் கொண்ட. வல்வில் - சீவகனுடைய வில். கார்க்கெதிர் மேகம்போல -

(இ - ள்.) மாரிபெய்யுங்குன்று எதிரொலியெழுமாறுபோல அரசரார வாரத்திற்கு எதிரே சீவகன்படையிலுள்ளாரும் ஆர்த்தார்; அங்ஙனம் இரண்டும் ஆர்த்தவளவிலே சீவகனது கொலைத்தொழிலைப் பூண்ட வில் மேகத்தின் மழைபோல அம்பைக் கான்றது; அதனாற்பிறந்த குருதி வெள்ளம் முன்பு அற்றுவீழ்ந்தவற்றைக் களத்திற்குப் புறம்பேயிழுத்தது; முடிவில் அவரை இறைச்சிக் குன்றாக்கிவிட்டானென்க. (ரு0க)

இதனால் அவர்படை பட்டபடி கூறினார்.

802. மன்னர்கள் வெகுண்டு விட்ட மறப்படை யழுவ மாரி
கொன்னுனை யெஃகி னீக்கிக் குனிந்துவிற் பகழி கான்ற
மின்னவி ரிலங்கு மொள்வாள் விழித்துயிர் விழுங்க வின்ன
தன்மையாற் றானை நீந்தித் தான்விளை யாடு கின்றான்.

(இ - ள்.) அங்ஙனம் ஆர்த்தவரசர் விட்ட படையாகிய பெரு மழையை இமையாதே விழித்துப்பார்த்து அம்பின்நெருக்கத்தாலே நீக்கி வில் குனிந்து கான்ற பகழி வாள் இவையிரண்டும் தானையினுயிரை விழுங்கும்படி தான் இம்முறையானே படைக்கடலை நீந்தி விளையாடா நின்றானென்க. (ருக0)

803. வேழவெண் கோட்டு மெல்கோ றின்றுகூன் குருதி வாளால்
ஆழநா வழித்து நெய்த்தோர் கொப்புளித் தழிந்த மாவின்
சூழ்குடர்க் கண்ணி சூடி நிணத்துகி லுடுத்து வெள்ளென்
பூழ்பெற வணிந்து சூற்பே யாடக்கண் டுவந்து நக்கான்.

மெல்கோல்: வினைத்தொகை.

(இ - ள்.) அங்ஙனம் விளையாடுகின்றவன், சூற்பேய்கள் கோடாகிய கோலாலே பற்சீவி வளைந்த வாளாகிய நாவழியாலே நாவழித்துக் குருதி யாகிய நீரைக்கொப்புளித்துக் குடராகிய கண்ணியைச் சூடி நிணமாகிய துகிலை யுடுத்து என்பாகிய பூணை முறைபெறவணிந்து ஆடக் கண்டு நக்கானென்க. (ருகக)

---

கார்காலத்தை ஏற்றுக்கொண்ட மேகத்தைப்போல. கணையாகிய மழையை. குருதிவெள்ளம் ஈர்த்தது. ஈர்த்தது - அற்று வீழ்ந்து கிடப்பவைகளை இழுத்துச் சென்றது. அரசரை இறைச்சிக் குன்றாக்கினான்.

802. அழுவமாரி - பெருமழையை. அழுவமாரியை விழித்து என மாறி இயைக்க; விழித்து - இமையாது பார்த்து. கொல் நுனை எஃகின் - கொல்லுகின்ற கூரிய முனையையுடைய அம்பினால். எஃகு: ஆயுதப் பொதுப்பெயர். வில் குனிந்து கான்ற பகழி என மாறியியைக்க. குனிந்து - வளைந்து. வில்லும், வாளும் (பகைவருடைய) உயிரை விழுங்க. அமரில் விளையாடல்: சீவக. 448, அடிக்.

803. கோட்டு மெல்கோல் - தந்தமாகிய மெல்கின்ற கோலாலே. தின்று - பல்தேய்த்து. கூன்வாள், குருதிவாள் எனத்தனித்தனிக் கூட்டுக. கூன் - வளைந்த. வாளால் - வாளாகிய நாவழியால். ஆழ -

804. வெளிற்றுடற் குருதி வெள்ள நிலையிது வென்ப வேபோற்
களிற்றுகிர்ப் பிறழ்பற் பேய்கள் கைகளை யுச்சிக் கூப்பி
அளித்தவை பாடி யாடக் குறுநரி நக்கு வேழம்
விளித்தன கழுகும் பாறும் விலாவிற்றுக் கிடந்த வன்றே.

(இ - ள்.) அவன் நக்கவளவிலே களிற்றுகிர்போலும் முறைகுலைந்த பற்களையுடைய பேய்கள் அளிக்கத்தக்கவை பாடி, உதிரம் நீங்கின பிணத்தையுடைய குருதிப்பெருக்கை இது நிலையென்றுகாட்டுவனபோலே கைகளைத் தம் தலைமேலே கூப்பியாட, வேழங்களைத்தின்ற நரிகள் கூப்பிட்டவை அதனைக் கண்டு நக்குக் கூப்பிட்டாற்போன்றன; [1] அதனைத்தின்று செருக்கிக் கிடந்த கழுகும் பாறும் அதற்குச் [2] சிரித்து விலாமுறிந்து கிடந்தனபோன்றன வென்க. (௩௧௨)

805. கடல்விளை யமுதங் கண்ட பொழுதினெய் கனிந்த தீஞ்சோற், றடிசிலஞ் சுவைமிக் காங்கு மண்ணலங் குமர னொன்னார், உடலின்மேற் றிரியுந் திண்டேர் காண்டலு மைந்தர் நெஞ்சத், திடல்பிளந் திட்ட வெஃகஞ் சுமந்தமர்த் திறத்தின் மிக்கார்.

---

ஆழும்பட. நெய்த்தோர் - இரத்தமாகிய நீரை. அழிந்த - இறந்த. குடராகிய கண்ணி. பேய்கள் குடரைக் கண்ணியாகச் சூடிக்கொள்ளுதல்; தக்க. 743; பு-வெ. 77. நிணமாகிய துகிலை உடுத்து. என்பு ஊழ்பெற அணிந்து - எலும்பை ஆபரணமாக முறைப்பட அணிந்துகொண்டு. பேயாடுதல்: முருகு. 51-6; 'பேய்க்குரவை' (பு-வெ. 145). இப்பாடற் பொருளொடு பரணிநூல்களில் வரும் கூழடுதல் என்னும் பகுதி ஒப்பிடற்பாலது.

804. வெளிற்றுடல் - இரத்தம் நீங்கின பிணம். வெள்ளநிலை...... கூப்பி; "தோடாழ் குளத்த கோடுகாத் திருக்கும்" (பெரும்பாண். 273). களிற்றுகிர்ப் பிறழ்பற் பேய்கள் - யானையின் நகங்கள் போன்ற, வரிசை தவறிய பற்களையுடைய பேய்கள்; சிறுபாண். 197-200; குறுந். 180 : 1-2. பேய்கள், அளித்தவை பாடி வெள்ளத்தை இது நிலை என்பவே போல் கைகளை உச்சிக் கூப்பிஆட என மாறியியைக்க. வேழம் குறுநரி நக்கு விளித்தன - யானையைத் தின்ற நரிகள் சிரித்துக் கூப்பிட்டாற் போன்றன. பாறு - பருந்து. விலா இற்றுக் கிடந்தவன்றே - சிரித்து விலாமுறிந்து கிடந்தன போன்றன.

(மேற்.) அடி, 1-3 : பெரும்பாண். 272-3, ந.

(உரை) [1] அதனை - பிணத்தை. [2] சிரித்து விலா வொடிதல்; "கையர் விலாவொடி யாக்கினு ரால்" (திருவால. 33 : 48)

805. கடல்விளை அமுதம் - உப்பு. அடிசில் சுவைமிக்காங்கு - உணவு ஒழிந்த சுவைகள் மிக்காற்போல; அம் : அசை; உம்மை, இசை நிறைத்து நின்றது. அண்ணலங்குமரன் - சீவகன். ஒன்னார் - பகைவர். குமரனுடைய தேரைக் காண்டலும். மைந்தர் - சீவகனுடைய தோழர். நெஞ்சத்திடல் - பகைவரது மார்பாகிய திடரை. மைந்தர் எஃகம் சுமந்து மிக்கார். மிக்கார் - களிப்பை மிகுதியாகக் கொண்டனர்.

(இ - ள்.) உப்பினைக் கண்ட காலத்தில் அடிசில் ஒழிந்த சுவைகள் மிக்காற்போலப் பகைவருடலின்மேலே திரிகின்ற குமரன்றேரைக் கண்ட வளவிலே தோழர், பகைவரது நெஞ்சாகிய திடலைப் பிளந்து போகட்ட வேலையெடுத்துப் போர்த்திறத்தே மிக்காரென்க.

மிக்காங்கும் : உம்மை இசைநிறை. இதனால் சீவகனைக் கண்டபின் தோழர் களிப்புமிக்கமை கூறினார். (ருகரு)

806. கடாந்திறந் திட்டு வானிற் களகள முழங்கும் வேழம்
படாந்திறந் தூழித் தீயிற் பதுமுகன் காட்டி யிட்டான்
தடாம்பிறை மருப்புத் திண்கை யபரகாத் திரங்க டம்மாற்
கொடாம்பிற குமரிப் போருட் பிறர்க்கெனக் கொன்ற தன்றே.

வரகாத்திரமென்பதனைத் தலையென்றும், அவரகாத்திரமென்பதனைக் காலென்றும் வடநூலார் கூறுவராதலின், தேவர் அதனைச்சிதைத்து, 'அபரகாத்திரம்' என்றார்; ஐராவதம் [1] ஐராபதமென்றாற்போல; எனவே அவரகாத்திரமென்றது கால்களை; இனி, [2] பின்கால் முன்காலென்பாரு முளர். [3] பிற : இடைச்சொல்.

(இ - ள்.) பதுமுகன், வான்போலக் கடாந்திறந்திட்டுக் களகள வென்னும் ஓசைபட முழங்குகின்ற வேழத்தை ஊழித்தீப்போலக் கொண்டுவந்து காட்டினான்; அது வளைந்த பிறைபோலுமருப்புக் கை கால்களென்கின்றவற்றாலே தத்தைகாரணத்தாற் பிறந்த போரிற் பிறர்க் குக் கொலைத்தொழிலைக் கொடேமென்று கொன்றதென்க.

குமரிப்போர் - [4] கன்னிப்போருமாம்.

இக்கவிமுதல் தத்தையைக் காத்துநின்ற பதுமுகன் பகைவர் தலை சாய்ந்தமைகண்டு பொருகின்றமை கூறுகின்றார். (ருகச)

---

806. கடாம் - மதம். வானின் - மழையைப்போல. வானின்கடாந் திறந்திட்டு என மாறுக. களகள : ஒலிக்குறிப்பு. படாம் - யானையின் முகபடாம். பதுமுகன் வேழத்தை ஊழித்தீயைப்போலக் காட்டியிட் டான்; காட்டியிட்டான் - காட்டினான்; ஒருசொல். தடாம்பிறை மருப்பு - வளைந்த பிறைச்சந்திரன் போன்ற தந்தம். கை - துதிக்கை. அபரகாத் திரம் - கால்; முன்கால்களைப் பரகாத்திரமென்றும், பின்கால்களை அபர காத்திரமென்றும் கூறுவதுமுண்டு; காத்திரம் என்பது கால் என்ற பொருளிலும் வந்துள்ளது; கம்ப. வரைக்காட்சி. 6. கொடாம் - கொடுக்க மாட்டோம். குமரிப்போருள் - காந்தருவதத்தையின் காரணமாக உண்டாய போரில். போருள் பிறர்க்குக் கொலைத்தொழிலைக் கொடாம் எனக் கொன்றது என மாறியியைக்க.

(உரை) [1] "பாழி யயிரா பதப்பகடு" (விக்கிரம. உலா); அரங்கத். 47. [2] சீவக. 2154, ந. [3] கொடாம்பிற என்பதிலுள்ளது. சீவக. 448, அடிக்.

807. மருப்பினால் வேழம் வீழா மன்னரை வாலிற் சீறு,
முருக்கித்தேர் தடக்கை தன்னான் முழங்கிப்பாய் மாக்கள் காலின்,
நெரித்திடாக் கண்ணுட் டீயாற் சுட்டுநீ றாக்கி நெய்த்தோர்,
ஒருக்கிப்பேய் பாடி யாட வுறுசிலை யுடன்று கொண்டான்.

(இ - ள்.) அஃது எங்ஙனங்கொன்றதென்னின் மருப்பாலே வேழத்தை வீழ்த்து, வாலினால் மன்னரைச் சீறி, கையினால் தேரை முறித்து, காலால் மாவைநெரித்து, கண்ணிற் கோபத்தீயால் நெய்த்தோரை நீறாக்கிக் கொன்றது; அதன்கொலையோடே அவனும் கொல்லக் கருதிப் பேய் பாடியாடும்படி சிலையை வாங்கிக்கொண்டானென்க. (௩௪௬)

(வேறு)

808. (௧) கொண்டான் பகழி தொடுத்தான்சிலை கால்கு னிந்த
தொண்டேர் மிசையு முருவக்களிற் றுச்சி மேலும்
வண்டார்ப் புரவி நிறத்தும்மற மன்னர் மேலும்
கண்டான் சொரிந்தான் கணைமாரி கலந்த தன்றே.

809. (௨) பைம்பொற் புளகப் பருமக்களி யானை யீட்டம்,
செம்பொன் னெடுந்தேர்த் தொகைமாக்கடல் சேனை வெள்ளம்,
நம்பன் சிலைவாய் நடக்குங்கணை மிச்சி லல்லால், அம்பொன்
மணிப்பூ ணரசும்மிலை யென்று நக்கான்.

இவை இரண்டும் ஒருதொடர்.

---

807. வேழம் - வேறு யானைகளை. வீழா - வீழ்த்து. வாலினால் மன்னரைச் சீறு; சீறு - கோபித்து. தடக்கையால் தேரை முருக்கி. முருக்கி - அழித்து. பாய்மா - குதிரை. காலினால் பாய்மாக்களை நெரித்து. கண்ணுட்டீயால் - கண்ணில் உள்ள கோபத்தீயால். தீயால் நெய்த்தோரைச் சுட்டு நீறாக்கி. கண்ணுட்டீயால் சுடல் : "சுடுநோக்கு" (சிலப். 5 : 84). ஒருக்கி - ஒரு சேர ஆக்கி, "ஒருக்கி நிரல்பொரூஉம்" (பெருங். 3. 20 : 95). ஆட - ஆடும்படி. உடன்று - கோபித்து. கொண்டவன் : பதுமுகன்.

(மேற்.) அடி, 3 : சிலப். 5 : 76 - 88, அடியார்.

808. கொண்டான் - வில்லைக் கையில் கொண்டவன். குனிந்தது - வளைந்து நின்றது. தார் - கிண்கிணிமாலை. நிறம் - உயிர்நிலை. கணைமாரி - சீவகன் எய்கின்ற அம்புமழை. கலந்தது - தான் எய்த அம்புகளோடு கலந்துசென்றதை. அன்று, ஏ : அசைகள். கணைமாரி கலந்ததைக் கண்டான் என மாறுக. இது பதுமுகனுடைய தொழில்.

809. பைம்பொற் புளகப் பருமக்களி யானை - பசுமையான பொன்னாலாகிய, கண்ணாடியைக்கொண்ட பருமத்தையுடைய யானை; சீவக. 1867 ; பெருங். 1. 45 : 14 ; சூளா. கல்யாணச். 105. தொகை - கூட்டம். வெள்ளம் - பெருக்கு. மா - குதிரை. நம்பன் - சீவகனுடைய.

(க) கணைமாரி, "மன்னர்கள்வெகுண்டு" (சீவக. 802) என்னும் கவியிற்கூறிய கணைமாரி.

(உ) புளகம் - யானையின் பருமத்தில் தைத்த கண்ணாடி. மாக்கடல் - புரவிக்கடல்.

(இ - ள்.) வில்லைக்கொண்டவன் அம்பைத் தொடுத்தான்; அப்பொழுது அது கால்வளைந்து கான்ற அவ்வம்பை மிசையிலும், உச்சி மேலும், நிறத்தும், மேலும் அழுந்துவனவாகச் சொரிந்தான்; அங்ஙனம் சொரிந்தவன் முன்பொருகின்ற சீவகன் வேறொரு முகத்தேநின்று எய்கின்ற கணைமாரி இதனோடு கலந்ததனைக்கண்டான்; கண்டு, இம்மாரியால் யானையீட்டம் தேர்த்தொகை கடல் வெள்ள மென்கின்றவையும் அரசும் நம்பன் கணைமிச்சிலல்லால் இல்லையாயிருந்தவென்று வியந்து யாம் இனி எங்ஙனம்பொருவேமென்று கருதி நக்கானென்க.

இனி, நான்குபடையிலும் [1]தான் சொரிந்தான்; சொரிந்தபின், அவன் கணைமாரி முன்பே கலந்ததனைக் கண்டானென்றுமாம். இதற்கு முன்பே அம்பாற்குறைந்த படைமேற்றைத்த அம்பினைக் கையுணர்ந்ததென்க. (௺கசு - எ)

(வேறு)

810. ஒருவனே சிலையு மொன்றே யுடையதோர் களிற்றின் மேலான், அருவரை மார்பிற் சென்ற தறிந்தில னெஃக மின்னும், பொருவரோ மன்ன ரென்றான் பொருசிலை மடக்கி யிட்டார், வருகளி யானை மீட்டார் வாட்படை வாங்கிக் கொண்டார்.

(இ - ள்.) இங்ஙனம் நக்க பதுமுகன்றன் துணையுமிலன், தனக்குச் [1]சேமவில்லுமில்லை, ஒருகளிற்றின்மேலான்; இவன்றன் பகைவரெறிந்த வேல் மார்பிற்றைத்ததும் அறிந்திலன்; பின்னும் மேற்சென்று மன்னர் பொருவரோவென்று இகழ்ந்தான்; இவன் நொந்தானென்று போர்செய்ய

சிலைவாய் நடக்கும் கணைமிச்சில் அல்லால் - வில்லிலிருந்து செல்லும் அம்பினால் எச்சிலாக்கப் பெறுதலல்லாமல். கணைஎச்சில்: சீவக. 2353. அரசும் - பிற அரசர்களும். இலை - இல்லை. யானையீட்டமும், தேர்த்தொகையும், மாக்கடலும், சேனைவெள்ளமும், அரசும் நம்பனுடைய கணைமிச்சிலல்லாமல் இல்லை என்று நக்கான் என்க. ஒரு வீரன் தன்வீரத்தைத் தலைவன்மேல் வைத்துக் கூறுதல் மரபு; குறள், 771.

(மேற்.) அடி, 3 - 4 : குறள், 771, பரிமேல்.

(உரை) [1]தான் என்றது பதுமுகனை.

810. ஒருவனே - போர்செய்பவனும் தானொருவனே. உடையதோர் களிற்றின்மேலான் - வீரமுடையதாகிய ஒருயானையின்மீதுள்ளான். எஃகம் மார்பிற் சென்றது அறிந்திலன். சிலை மடக்கியிட்டவர் சீவகனும் அவன் தோழரும்; மீட்டவரும் கொண்டவரும் பகையரசர்.

வாள்வாங்கிக்கொண்ட மன்னரெல்லாம் இதுகேட்டு மேல்வருகின்ற யானையை மீட்டார்; அதுகண்டு சீவகனும் தோழரும் இனி இவரை எய்ய வேண்டுவதில்லையென்று தம் கையில் வில்லை மடக்கினாரென்க.

இன்னும் - எல்லாரும் [2] கணையிச்சிலாய பின்னும். (கூகஅ)

811. செங்கண்மா றெழிக்கப் பட்ட வலம்புரித் துருவங் கொண்ட, சங்குவாய் வைத்து நம்பன் றெழித்தலுந் தறுக ணாளி, பொங்கிய முழக்கின் வேழப் பேரினம் புலம்பி னாற்போல், தங்குதார் மன்ன ரெல்லாந் தளர்ந்துகண் சாம்பி னாரே.

(இ - ள்.) கண்ணன் பாரதப்போரிலே முழக்கின வலம்புரியின் ஒப்பைக்கொண்ட சங்கை வாய்வைத்து நம்பன் முழக்கினானாக, அது கேட்டு யாளி முழக்கினாலே வேழத்திரள் வருந்தினாற்போல மன்னர் குறைந்து கண்ணொளி மழுங்கினாரென்க.

அவரஞ்சினமை கண்டு சங்கு வாய்வைத்தான். [1] துருவம் - ஒப்பு. (கூகக)

812. அருவரை நாகஞ் சுற்றி யாழியான் கடைய வன்று
கருவரை குடையப் பட்ட கடலெனக் கலங்கி வேந்தர்
திருவரை மார்பன் றிண்டேர் மஞ்ஞையே முருகன் றானென்
றொருவரோ டொருவர் கூடா வண்ணமே யுடைய லுற்றார்.

(இ - ள்.) ஆழியான் [1] மந்தரத்திலே பாம்பைச் சுற்றிக் கடைதலாலே அம்மலை கலக்கின கடலென்னும்படி வேந்தர் கலங்கி, மார்பன்றேர் மயிலேயென்றும், அவன்றான் முருகனேயென்றுங்கருதி, ஒருவரோடொருவர் கூடாத தன்மையாலே கெடுதல் மிக்காரென்க.

(உரை) [1]தக்க. 23. [2]கணையால் எச்சிலாக்கப்பட்ட பின்பும்.

811. செங்கண்மால் - கண்ணபிரான். தெழிக்கப்பட்ட - முழக்கிய. வலம்புரித்துருவம் - சங்கின் ஒப்பை; துருவம் - ஒப்பு. நம்பன்: சீவகன். தறுகண் - கடுகக் கொல்லுதலையுடைய; சிறுபாண். 140, ந. ஆளி - சிங்கம். பொங்கிய - மிகுந்த. ஆளியின் முழக்கினால். வேழப் பேரினம் - யானைக் கூட்டம். புலம்புதல் - வருந்துதல். தார் தங்கிய மன்னர்; தார் - மாலை. தளர்ந்து - குறைந்து. கண் சாம்பினார் - கண்ணொளி குறைந்தனர்.

(உரை) [1] துருவம்: த்ருவம் என்னும் வடசொல்லின் சிதைவு.

812. வரை - மந்தரமலை. நாகம் - வாசுகியென்னும் பாம்பு. ஆழி யான் - திருமால். ஆழியான் வரையில் நாகத்தைச் சுற்றிக்கடைய. கடைய - கடைதலால். குடையப்பட்ட - கலக்கப்பட்ட. கலங்கி - மனம் கலங்கி. கடலெனவேந்தர் கலங்கி என்க. மார்பன்: சீவகன். மார்பன் முருகன்றான், (அவனது) தேர் மஞ்ஞையே என்று எனமாறியியைக்க. என்று - என்று அவ்வரசர் எண்ணி. கூடாவண்ணம் - சேராத தன்மை யாலே. உடையலுற்றார் - தோற்று ஓடலுற்றார்.

(உரை) [1] சீவக. 963, ந.

கருமை - [2] பெருமை. அவன் [3] பலகைகளாற் படைவழங்கினாற் போல இவனும் படைவழங்குதலாலும் வடிவாலும் முருகனே. (௬உ௦)

813. முளிமரக் காடு மேய்ந்த முழங்கழல் போன்று மைந்தன்
தெளிநலக் குமரர் கூற்றிற் றெழித்தனர் பகழி சிந்தி
யொளிநல வுப்புக் குன்ற மூர்புனற் குடைந்த தேபோற்
களிநல மன்னர் தங்கள் கடற்படை யுடைந்த தன்றே.

(இ - ள்.) காட்டை மேய்ந்த அழல்போலப் போரில் தெளிந்துநின்ற நலத்தையுடைய மைந்தனும் குமரரும் மன்னர்கெடுகின்றமை கண்டு கூற்றுப்போல ஆர்த்தார்; அதுகேட்டு அவர்படை, கையில் அம்பையும் போகட்டு உப்புமலை ஓடுநீர்க்கு உடைந்தாற்போல உடைந்ததென்க. (௬உக)

814. உறுபடை மன்னர் தம்மை யுடற்றியொன் றுனுமின்றிச், சிறுபடை யவர்கள் வென்று செகுப்பவோ வென்ன வேண்டா, செறியெயிற் றுளிவேழப் பேரினஞ் செகுத்த தன்றே, உறுபுலி யொன்று தானே கலையின முடற்றிற் றன்றே.

(இ - ள்.) சிறுபடையாளர் மிக்க படையினையுடைய அரசரை வருத்தித் தமக்கு ஓரேதமுமின்றி வென்று போக்குபவோவென்று உலகத்தீர், கருதவேண்டா; விலங்கேயாயினும் யாளி வேழத்திரளைக் கெடுத்த தன்றே! புலியொன்றுதானே கலைத்திரளைக் கெடுத்ததன்றே; இவற்றைக் கண்டு தெளிவீராகவென்றாரென்க.

[2] சிலப். 5 : 204, அடியார். [3] முருகு. 104-6, ந.

813. முளிமரக்காடு - உலர்ந்த மரத்தையுடைய காடு; முளிதல் - உலர்தல்; சீவக. 2279, ந. மேய்ந்த - உண்ட. முளிமரக்காடுமேய்ந்த முழங்கழல்போல் போர்செய்தமை; "முளையழன் முளிபுற்கான மேய்ந்தென நீந்தினானே" (சீவக. 2279). தெளிநல மைந்தனும் குமரரும் என மாறியியைக்க. மைந்தன் - சீவகன். குமரர் - தோழர். கூற்றின் தெழித்தனர் - யமனைப்போல முழங்கினர். ஊர்புனல் - ஓடும்நீர். உப்புக் குன்றம் ஊர்புனற்கு உடைதல் : கலித். 138 : 16; அகநா. 206 : 14-5, 208 : 18-9; திரி. 83. உப்புக்குன்றம் பகைவர்படைக்கு : "கடும்புன னெருங்க வுடைந்துநிலை யாற்று, உப்புச் சிறைபோ லுண்ணெகிழ்ந் துருகி, வெப்ப மன்னர் வீக்கஞ் சாய, உடைந்துகை யகல" (பெருங். 3. 20 : 120 - 23). மன்னருடைய படை பகழி சிந்தி, உப்புக்குன்றம் புனற் குடைந்தது போல் உடைந்தது என மாறியியைக்க.

814. உறுபடைமன்னர் - பெரும்படையையுடைய பகையரசர். உடற்றி - வருத்தி. ஒன்றுனும் - ஒருகுற்றமேனும். செகுப்பவோ - அழிப்பார்களோ. சிறுபடையவர்கள் உறுபடை மன்னரை உடற்றிச் செகுப்பவோ எனமாறி யியைக்க; "சிறுபடையான் செல்லிடஞ் சேரி

பின்னிலிரண்டடியும் எடுத்துக்காட்டுவமை. இதுவும் மேலிற்கவியும் உலகந்தேறுதற்குத் தேவர் கூறினர். (௲௨௨)

815. நல்லவை புரியு மாந்தர் நாந்தகம் பிழைத்து வீழா
அல்லவை புரியு மாந்தர்க் கத்திர மொன்றும் வாயா
வெல்வதோ குணத்தின்மிக்கார் வெற்றிலைவிடினும்வேலாம்
இல்லையே வென்றி தீமை யிடங்கொண்ட மனத்தி னர்க்கே.

இருவர்க்கும் வெற்றி தோல்வியுளவாய காரணங்கூறினர். அல்லவை புரியுமாந்தர்க்கு நல்லவை புரியுமாந்தர் - தமக்குத் தீங்குசெய்ய விரும்பு வார்க்கு நன்மைசெய்ய விரும்புவார்; என்றது, தத்தையை வலிதிற் கோடற்கு [1] ஒருப்பட்டவர்க்குப் பதுமுகன் உறுதிகூறியதனை; அது, "எம்மைநீர் வெல்லப் பெற்றீர்" (சீவக. 755) என்னுங்கவி. குணத்தின் மிக்காரென்று நல்லவை புரிவார்க்கு வேறொருபெயர் கூறினர்; அது சுட்டு. [2] தீமை - பிறர்மனை நயத்தல்.

(இ - ள்.) ஒருவரையொருவர் வெல்லுந்தன்மையைக் கேட்கின்றீரா யின், அல்லவைபுரிவார்க்கு நல்லவைபுரிவார்கையில் வாள் தப்பி வீழா; அவர்க்கு 'அதுவும் மிகை; வெற்றிலையைவிடினும் அது தான் வேலாய் விழும். தீமை இடங்கொண்ட மனத்தினர்க்கு அத்திரம்பெறினும் சிறிதும் பயன்கொடா; ஆதலால், அத்தீயோர்க்கு ஒருகாலும் வென்றியேயில்லை யென்றாரென்க.

இனி வேறும் பொருள்தருமேனும் அதற்கு இயைபின்று. (௲௨௩)

---

னுறுபடையான், ஊக்க மழிந்து விடும்" (குறள், 498). செறி எயிறு - நெருங்கிய பற்களையுடைய. ஆளி: அத்தியாளி. ஆளி வேழத்தின் இனத்தைச் செகுத்தல்: "அணங்குடை யாளி தாக்கலிற் பலவுடன், கணஞ்சால் வேழங் கதழ்வுற் றாஅங்கு" (பெரும்பாண். 258-9); "ஆளி கண்ட வானை யினம்போல்......வயவர்நீங்க" (பெருங். 1. 56 : 44-5). கலையினம் - மான்கூட்டம். புலி மான்கூட்டத்தை உடற்றல்: "மறப்புலி யுடலின் மான்கண முளவோ" (புறநா. 90 : 3); "பாயும், புலிமுன்னர்ப் புல்வாய்க்குப் போக்கில்" (பழ. 234). இப்பாடலும் அடுத்த பாடலும் கவிக் கூற்று.

815. நாந்தகம் - வாள். பிழைத்து - தப்பி. அல்லவை - தீமை. அல்லவை புரியு மாந்தர்க்கு நல்லவை புரியு மாந்தரது நாந்தகம் பிழைத் துவீழா. வெற்றிலை விடினும் வேலாம் எனமாறியியைக்க. குணத்தின் மிக்கார் - நல்லவை புரியுமாந்தரைச் சுட்டியது. தீமை யிடங்கொண்ட மனத்தினர்க்கு அத்திரமொன்றும் வாயா; வென்றியே இல்லை எனமாறி யியைக்க. வாயா - பயன்கொடா; நல்லவை புரியுமாந்தரென்றது சீவகன் முதலியோரையும், தீமையிடங்கொண்ட மனத்தினரென்றது கட்டியங் காரன் முதலியோரையும் குறித்தன.

(உரை) [1] ஒருப்பட்டவர் - துணிந்தவர். [2] சீவக. 799, ந.

816. குழையுடை முகத்தி னுள்கட் கோணைப்போர் செய்த மன்னர், மழையிடை மின்னி னெய்தா மறைந்தனர் விஞ்சை வேந்தர், முழையிடைச் சிங்க மன்னன் மொய்யம ரேத்தி யார்த்தார், விழவுடை வீதி மூதூர் விருப்பொடு மலிந்த தன்றே.

(இ - ள்.) தத்தை காரணமாக மாறுபாட்டையுடைய போரைச் செய்த மன்னர் மின்போலப் புக்கவிடமறியாமற் கடுகப்போனார்; [1]மேகத்தினின்ற விச்சாதரர் சிங்கமன்னன் அமரை ஏத்தி ஆர்த்தார்; மூதூர் இவனைக் காண்டல் விருப்பத்தோடே மிக்கதென்க.

முழை இல்லறம்பூண்டதற்குக் கூறிற்று. (௬௨௪)

817. பார்மிசை யுலக மேத்தும் படுகளங் கண்டு பற்றார் [பிற்
போர்முகக் களிற்றுவெண் கோடுழுதசெஞ் சால்கொண்மார்
சீர்முகத் தோழர் சூழச் சீவகன் றிருவின் சாயல்
வார்முக முலையி னாளை மனைவயிற் கொண்டு புக்கான்.

(இ - ள்.) சீவகன், யானைக்கோடுழுத சாலைக்கொண்ட மார்பிற் றோழர் சூழ்ந்துசெல்ல, பாரில் உயர்ந்தோரேத்தும் களத்தைக்கண்டு வேள்விமுடித்துத் தத்தையைத் தன்மனையிலே கொண்டு புக்கானென்க. (௬௨௫)

818. நெய்க்கிழி வைக்கப் பட்டார் நெய்ப்பத்தற் கிடத்தப் பட்டார், புக்குழி யெஃக நாடி யிரும்பினாற் போழப் பட்டார், மைக்கிழிந் தொழுகுங் கண்ணீர் மாநிலத் துகுக்கப் பட்டார், கைக்கிழி கொடுக்கப் பட்டார் கலம்பல நல்கப் பட்டார்.

---

816. குழை - குண்டலம். முகத்தினாள் : காந்தருவதத்தை. கோணைப்போர் - மாறுபாட்டையுடைய போர்; ஐ : சாரியை; சீவக. 28, 540. மழை - மேகம். நொய்தா - விரைய. முழை - குகை. சிங்கமன்னன் : சீவகன். மூதூர் : இராசமாபுரம்.

817. களம் - போர்க்களம். களங்காணுதல் ஒருமரபு; கம்ப. களங்காண்படலம் பார்க்க. பற்றார் - பகைவர். சால் : உழவுத்தொழிலின் மரபுச் சொல். மார்பையுடைய தோழர். திரு - இலக்குமி. சாயலையுடைய முலையினாளென்றது காந்தருவதத்தையை. சீவகன் தோழர்சூழ, படுகளம்கண்டு முலையினாளை மனைவயிற் கொண்டு புக்கான் என்க.

(உரை) [1] வேள்வி - களவேள்வி; என்றது பேய்வயிறார உண்பித்ததை (பு - வெ. 160)

818. நெய்க்கிழி - நெய்யில் தோய்த்த துணி. நெய்ப்பத்தல் - நெய்யைக்கொண்ட சாலில். போரினாலுண்டாய புண் ஆறுவதற்கு நெய்க்கிழியில் வைக்கப்படுதலும், நெய்ப்பத்தலிற் கிடத்தப்படுதலும் இயல்பு. புக்குழி - புகுந்த இடத்தை. எஃகம் புக்குழிநாடி என மாறியியைக்க. இரும்பு - வாள். போழ்தல் - அறுத்தல். மைக்கு - மையுடன்; உருபு

(இ - ள்.) நெய்க்கிழி வைக்கப்பட்டாரும், கிடத்தப்பட்டாரும், எஃகம்புக்குழி நாடி இரும்பால் அறுத்து வாங்கப்பட்டாரும் சீவகனாற் கலம் பல நல்கப்பட்டார்; சுற்றம் அழும்படி பட்டாரெல்லாரும் கைக்கிழி கொடுக்கப்பட்டாரென்க. (௩௨௬)

819. முதுமரப் பொந்து போல முழுமெயும் புண்க ளுற்றார்க்
கிதுமருந் தென்ன நல்லா ரிழுதுசேர் கவளம் வைத்துப்
பதுமுகன் பரவை மார்பி னெய்க்கிழி பயிலச் சேர்த்தி
நுதிமயிர்த் துகிற்குப் பாயம் புகுகென நூக்கி னானே.

வைத்து - வைப்ப. நல்லானிழுதும் பாடம்.

(இ - ள்.) மரப்பொந்துபோலப் புண்ணுற்றார்க்கு மருத்துவர், இது மருந்தென்று கவளம் வையாநிற்க, தான் பதுமுகன் மார்பிலே கிழியைச் சேர்த்திக் காற்றுப்படாதபடி உள்ளே சீலையடைசின எலிமயிர்ப் [1] படத்தாற்செய்த சட்டையிலே புகுகவென்று கூறிப் [2] பரிகரித்தானென்க. (௩௨௭)

---

மயக்கம். உகுக்க - சுற்றத்தவர் உகுத்து அழும்படி. பட்டார் - போரில் இறந்தவர்களும். கைக்கிழி - கை யோலை; அஃதாவது இன்னாரின்னவை பெறுக என்று ஓலையிலெழுதிக்கொடுத்துமானியம் விடுதல்; புறநா. 287 : 9-10; 297 : 8-10; பெருங். 'விருத்திவகுத்தது'. கலம் - ஆபரணங்கள். நெய்க்கிழி வைக்கப்பட்டார் முதலிய மூவரும் கலம்பலநல்கப்பட்டாரென்றும், கண்ணீருகுக்கப்பட்டவர் கைக்கிழிகொடுக்கப்பட்டாரென்றும் மாறியியைக்க.

819. முழு மெயும் - மெய்முழுவதும்; மார்பம் முழுவதும் எனலுமாம்; சிலப். 5 : 226. மரப்பொந்து மேனியிற் புண்களுக்கு : " முழை படு முதுமரம் போலெவ் வாயும், மடைநுழைந் தறுத்த விடனுடை விழுப் புண் " (தகடூர்.) : " மொய்சமத் தெதிர்ந்தோர் மேனி முதுமரப் பொந்திற்றோன்றும் " (கூர்ம. சந்திர. 92). நல்லார் - மருத்துவர். நல்லார் இது மருந்தென்ன என்று மாறுக. இழுது-நெய். வைத்து - வைப்ப. பரவை - பரத்தல். பயில - மிக. சேர்த்தி - வைத்து. நுதிமயிர்த்துகிற்குப்பாயம் - எலியினது கூர்மையையுடைய மயிராற் செய்த ஆடையால் ஆகிய சட்டை. எலிமயிராற் செய்த ஆடை மிகுந்த வெப்பமுடையதென்பதும், குளிரை நீக்குவதென்பதும், அதனுள் காற்றுப்புகாதென்பதும், மிகவும் மென்மையையுடைய தென்பதும், பனிக்காலத்தில் அதை அணிவதுண்டென்பதும், அது கிடைத்தற்கரிய தென்பதும் பின்வரும் பாடல்களால் தெரிகின்றன; சீவக. 1874, 2471, 2680, 2686. நூக்கினான் - காத்தான்.

(மேற்.) அடி, 1 : சிலப். 5 : 224-34, அடியார்.

(உரை) [1] படம் - ஆடை. [2] பரிகரித்தல் - தீங்கினின்றும் காத்தல்; சீவக. 473, ந.

820. பார்கெழு பைம்பொன் றன்னாற் பண்ணவ னுருவ மாக்கி
ஊர்கெழு விழவு செய்தாங் குறுபொரு ளுவப்ப நல்கித்
தார்கெழு மின்னு வீசித் தனிவடந் திளைக்கு மார்பன்
போர்கெழு களத்துப் பாவம் புலம்பொடு போக்கி னானே.

(இ - ள்.) வடம் மின்னுவீசித் திளைக்கும் தார்கெழுமார்பன், பாரிற் பிறந்த பொன்னால் உருவமாக்கிச் செய்து தானமும் பண்ணிப் பாவத்தையும் புலம்பையும் போக்கினானென்க.

செற்றவர்ச்செகுத்தல் அறமேயாயினும், இவர் [1]ஆதியாய பகையன்மையிற் பாவமென்றார். புலம்பு - என்னகாரியத்தைச் செய்தேமென்னும் வெறுப்பு. (௩உ௮)

821. செய்தவப் பாவ மெல்லாந் தீர்த்திடுந் தீர்த்தன் பாதம்
எய்திய சேடங் கூவித் திறைஞ்சுபு தொழுது வாழ்த்தி
மையறு மணியிற் செய்த வலம்புரி யதனீர் கொண்டான்
வையக மளிக்க நீண்ட வலம்புரித் தடக்கை யானே.

---

820. பார்கெழு - பாறையிற் பொருந்திய. பண்ணவன் - அருகதேவன். உருவமாக்கி - வடிவம்செய்து. விழவு - உற்சவம். உறுபொருள் - மிக்க பொருளை. மின்னு - ஒளி; உகரம் சாரியை. தனிவடம் - ஒற்றை வடமான முத்துமாலை. மார்பன் - சீவகன். வடம் மின்னு வீசித்திளைக்கும் தார்கெழுமார்பன் எனமாறியியைக்க. களத்துப் பாவம் - போர்க்களத்துப் பிறரைக் கொன்றதனால் உண்டான பாவம். புலம்பு - வெறுப்பு. பாவத்தையும் புலம்பையும் போக்கினான். ‘அரசர், தேற்றவும் தேருமற் பொருதுபட்டாரேனும், அவர் கட்டியங்காரனைப்போற் பகையன்மையிற் சிறிது பாவமுளதென்று, அது தீர்த்தற்குப் பொன்னாற் பண்ணவனுருவமாக்கி விழாச்செய்து களத்துப் பாவம் போக்கினான்’ (சீவக. 454, ந.) என்று எழுதியிருப்பது ஈண்டு அறியற்பாலது. இங்ஙனம் பரிகாரம் செய்தல் ஶ்ராவகாசார நூல் விதி என்பர்.

(உரை) [1] ஆதியாய பகையென்றது இங்கே கட்டியங்காரனை உணர்த்தியது; சீவக. 1920.

821. செய்த அப்பாவமெல்லாம் எனப்பிரிக்க. தீர்த்தன் - அருகதேவன். பாதமெய்திய சேடம் - பாதத்தில் தரித்துச் சேஷப்பட்ட மலர்கள்; சிலப். 26 : 62-3. இறைஞ்சுபு - வணங்கி. மையறு - குற்றமற்ற. வலம்புரி - வலம்புரிச் சங்கின் வடிவமாக உலோகத்தாற் செய்யப்பெற்ற ஒரு பாத்திரம்; சங்கமன்று என்பர். “ஆடுவ துன்னடி வாரப் புனலடியேன்றலைமேற், சூடுவ துன்னடிச் சேட மலர்” (திருக்கலம். 45). வலம்புரித்தடக்கை - சங்கரேகை யமைந்த பெரிய கை; சீவக. 204, அடிக்; தடக்கையான் : சீவகன்.

பலபிறப்பிற் செய்த பாவத்தைத் தீர்க்குந்தீர்த்தன். [1] கூவுவித்து : விகாரம். [2] வலம்புரி கையிற் கிடத்தல் உத்தம விலக்கணம்.

(இ - ள்.) தடக்கையான், தீர்த்தன்பாதமெய்திய சேடத்தையும் வலம்புரியதனில் தீர்த்தநீரையும் கூவுவித்துத் தொழுது துதித்து அவற்றைக் கொண்டானென்க. (அ௨௧)

(வேறு)

822. கருமணி யழுத்திய காமர் செங்கதிர்த்
திருமணிச் செப்பெனச் செறிந்த வெம்முலை
அருமணி யலம்வரு மம்பொற் கொம்பனாள்
பெருமணக் கிழமையாம் பேசு கின்றதே.

(இ - ள்.) நீலமணியையழுத்தின மாணிக்கச்செப்பெனச் செறிந்த மணி அலமரு முலையினையுடைய கொம்பனாளிடத்துச் சீவகற்கு முற்பட்ட மணமாகின்ற உரிமை இனிக் கூறுகின்றதென்றாரென்க.

பெருமணமாங்கிழமையென்று மாறுக. மேல், மணமாதற்குக் காரணமாகின்ற உரிமையென்றது [1]சமாவர்த்தனத்தை. (அஅ௦)

823. நான்குநூ றாயிரங் குடத்து நல்லன
ஆன்றயிர் பானெயோ டழகி தாநிறைத்
தூன்றிகழ் வேலினான் வேள்விக் கூர்மருள்
கோன்றொறுக் காவலன் கொண்டு முன்னினான்.

---

(உரை) [1] கூவுவித்து என்பது கூவித்து என விகாரம் பெற்றது. [2] சீவக. 204.

822. கருமணி - நீலமணி. காமர் - அழகிய. செங்கதிர்த் திருமணி - சிவந்த கிரணங்களை வீசுகின்ற மாணிக்கம். முலைக்குச் செப்பு : சீவக. 759. செறிந்த - நெருங்கிய. செறிந்த அருமணி அலம்வரும் முலையென மாறுக; அலம்வரும் - அசைகின்ற. முலையையுடைய கொம்பனாள் : காந்தருவதத்தையினிடத்து. மணக்கிழமை - மணவுரிமை; "கடிமணக் கிழமை" (சீவக. 196). இப்பாடல் கவிக்கூற்று.

(உரை) [1] சமாவர்த்தனம் : பிரமசரியத்தை முடித்தற்குச் செய்யும் கிரியை; சீவக. 485, ந.

823. குடத்து - குடத்தில். நல்லனவாகிய தயிரும், பாலும் நெய்யொடு நிறைத்து. ஊன் - மாமிசம். வேலினான் : சீவகன். வேள்வி - மணம். ஊர் மருள் - ஊரார் வியக்கத்தக்க. வேலினானுடைய வேள்வி, ஊர் மருள் வேள்வி எனப்பிரிக்க. கோன் - இடையன். தொறுக்காவலன் - பசுக்கூட்டத்தைக் காவல் செய்பவன். கோனாகிய தொறுக்காவலன் வேலினானுடைய வேள்விக்குக் குடத்துத் தயிர் முதலியன நிறைத்துக் கொண்டு முன்னினான் என்க; முன்னினான் - சென்றான்.

இதுமுதல் சமாவர்த்தனம் நடவாநிற்கப் [1]பச்சைபுகுந்தபடி கூறுகின்றார்.

(இ - ள்.) இடையனாகிய தொறுக் காவலன், வேலினனது ஊர்மருள் வேள்விக்குக் குடத்திலே தயிரும் பாலும் நெய்யும் நிறைத்துக்கொண்டு முன்னின்றானென்க.

இனி இழந்தேமென்று ஊரார் மருளும் [2]சச்சந்தன்தொறுக்காவலனுமாம். (ருருக)

824. வளைநிற வார்செநெ லரிசிப் பண்டியோ
டளவறு சருக்கரைப் பண்டி யார்ந்தன
பிளவியல் பயறுபெய் பண்டி யுப்புநீர்
விளைவமை பண்டியின் வெறுத்த தாங்கொர்பால்.

நீர்விளைவமை உப்பு.

(இ - ள்.) சங்குநிறத்தையுடைய அரிசிப்பண்டியும், சருக்கரைப் பண்டியும் நிறைந்தன ; பருப்புப்பெய்த பண்டியும் உப்பமைந்த பண்டியோடே செறிந்தது அம்மனையில் ஒரு பக்கமெல்லாமென்க. (ருருஉ)

825. சினைத்துணர் முழுவன பலவின் றீங்கனி
கனைத்து வண் டுழல்வன வாழை மாங்கனி
எனைத்துள கிழங்குகாய் குருகொ டேந்திய
சனத்தினுற் றகைத்திடம் பெருது தாஞெர்பால்.

(இ - ள்.) பலவின்சினையிற் கொத்தினையுடைய முழுவன்ன கனியும் செறிந்து வண்டு உழல்வனவாகிய வாழைக்கனியும் மாங்கனியும்

(உரை) [1] பச்சைபுகுதல் - கலியாணத்திற்கு வரிசைபுகுதல். [2]நந்தகோன்.

824. வளை - சங்கு. செந்நெல் : அரிசிக்கு அடை. அரிசிக்குச் சங்கு உவமை ; "வளையறுத் தனையன வாலரி" (சீவக. 122) ; "வளைவாலரிசி" (பெருங். 1. 40 : 133) ; "வளையறை யனையவா லரிசி" (நல்லூர்ப். நைமிசா. 111). பண்டி - வண்டி. ஆர்ந்தன - நிறைந்தன. பிளவியல் பயறு - பிளத்தல் இயன்ற பயறு. நீர்விளை உப்பு அமை பண்டி எனமாறுக. நீர் - கடல். பண்டியின் - வண்டியோடு. வெறுத்தது - செறிந்தது. ஆங்கு - அம்மனையில்.

825. பலவின் சினைத்துணர் முழுவன தீங்கனி. துணருடைய தீங்கனி, முழுவன தீங்கனி எனப்பிரிக்க. துணர் - கொத்து. பலாப் பழத்திற்கு முழவு உவமை ; "கானப் பலவின் முழவுமருள் பெரும்பழம்" (மலைபடு. 511). கனைத்து - செறிந்து ; ஒலித்துமாம். உழல்வனவாகிய வாழைக்கனி, மாங்கனி. குருகு - குருத்து. எனைத்துள ஏந்திய - எவ்வளவுள்ளனவோ அவ்வளவும் ஏந்திய. சனம் - நகரமாந்தர். தகைத்து - நெருங்கி. ஓர்பால் இடம் பெருது.

கிழங்கும் காயும் குருகும் எவ்வளவுள அவ்வளவெல்லாமேந்திய சனங்களாலே நெருங்கி ஒருபக்கந்தான் இடம்பெறுதென்க. (௩௩௩)

826. மரகத மணிப்பசுங் காய்கொள் வான்குலை
கவர்பழுக் காய்க்குலை கனியக் காவுறீஇ
இவர்தரு மெல்லிலைக் காவு மேந்திய
உவரியாய்ச் சொரிந்திடம் பெருது தாஞெர்பால்.

(இ - ள்.) பசுங்காய்க்குலையையும் பழுக்காய்க்குலையையும் பரத்தலைத் தரும் வெற்றிலைப் [1]படலிகையையும் முற்றக் [2]காவிவந்து சொரிதலாலே வெள்ளமாய் ஒருபக்கந்தான் இடம்பெருதென்க. (௩௩௪)

ஏந்திய - உயர்ந்த. வேண்டியவும் பாடம்.

827. சண்பகந் தமநகந் தமால மல்லிகை
தண்கழு நீரொடு குவளை தாமரை
வண்டின மிசைகொள வாசப் பூச்சுமை
கொண்டவர் குழாம்பொலி வுற்ற தாங்கோர்பால்.

(இ - ள்.) சண்பகமும் தமநகக்கொழுந்தும் பச்சிலையும் மல்லிகையும் கழுநீரும் குவளையும் தாமரையுமாகிய வாசப்பூச்சுமையை வண்டினம் மேலே மொய்க்கக் கொண்டவர் திரள் அவ்விடத்து ஒருபக்கம் பொலிவுற்றதென்க. (௩௩௫)

828. ஆர்கெழு குறடுசூட் டாழி போன்றவன்
சீர்கெழு வளமனை திளைத்து மாசனம்
கார்கெழு கடலெனக் கலந்த வல்லதூஉம்
பார்கெழு பழுமரப் பறவை யொத்தவே.

826. மரகதமணி - பச்சை இரத்தினம். கவர் - விரும்பத்தக்க. கனிய - முற்ற. காவுறீஇ - காவடியிற் சுமந்துவந்து. இவர்தரும் - பரத்தலைத் தருகின்ற. மெல்லிலைக்கா - வெற்றிலையை வைத்த கா. கா - தோளில் சுமக்கும் காவடி. இங்கே அதில் வைத்த பெட்டியைக் குறித்தது. உவரியாய் - வெள்ளமாய். சொரிந்து - சொரிதலால். பசுங்காய்க்குலையும், பழுக்காய்க்குலையும், மெல்லிலைக்காவும் கனியக் காவுறீஇச் சொரிந்து, ஓர்பால் இடம்பெருது என்க.

(உரை) [1] படலிகை - பெட்டி; சீவக. 2707. ந. [2] காவி - சுமந்து.

827. தமநகம் - மரு. தமாலம் - பச்சிலை. மிசைகொள - மேலே மொய்க்கும்படி. வாசப்பூவின் சுமையை வண்டினம் மிசைகொளக் கொண்டவர் குழாம் என மாறியியைக்க. குழாம் - கூட்டம்.

828. ஆர்கெழுகுறடுசூட்டாழி: சீவக. 790, அடிக். ஆழி - சக்கரம். அவன் - சீவகன். அவனுடைய மனை, ஆழிபோன்று சீர்கெழுமின மனை எனத் தனித்தனி இயைக்க. மனையில் மாசனம் திளைத்துக் கலந்த என மாறியியைக்க. திளைத்து - இடைவிடாமல் நெருங்கி. கடலெனக் கலந்த - ஒலித்தலாற் கடல் என்று கூறும்படி கலந்தன. அல்லதூஉம் - அது வல்லாமலும். பழுமரப்பறவை - ஆலமரத்தின்கட் செல்லும்பறவை; பழுத்த மரத்தின்கட் செல்லும் பறவையுமாம். சனங்கள் அடைந்த மனைக்குப் பழுமரப்பறவை உவமை : சீவக. 93, அடிக்.

[1] அச்சுக் கோக்குங் குறடு மாளிகைக்கும், நடுவுபோக்கும் ஆர் தெருவு களுக்கும், விளிம்பிற்சூட்டு மதிலுக்குமுவமை.

(இ - ள்.) அவனுடைய உருவைபோன்று சீர்கெழுமின வளமனை யிலே மாசனம் நெருங்கி ஒலியாற் கடலெனக் கலந்தன ; அஃதொழிந்தும் அம்மாசனம் [2] பயன்கொள்ளுமுறைமையாற் பழுமரத்திற் பறவையு மொத்தனவென்க.

மனையைச்சூழப் [3] பச்சைநிரைத்தலின், [4] ஆழி போன்றென்றுமாம். (௬௬௯)

829. (௧) கையுறை யெழுதினர் கைந்நொந் தேடறுத்
தையென விருப்பமற் றன்ன தாதலான்
வையக மருங்கினின் வாழ்நர் மற்றிவன்
செய்தவ நமக்கிசை கென்னச் சென்றதே.

830. (௨) வாலரி கழுவிய வண்ணச் செம்புனல்
காலிய லிவுளியுங் களிறு மாழ்ந்தவட்
கோலநீர்க் குவளையு மரையும் பூத்துவண்
டாலிவண் குருகுபாய் தடங்க ளானவே.

(உரை) [1] காஞ்சிப். திருநகரப். 64. [2] "பழுமர முள்ளிய பறவை யின் யானுமவன், இழுமென் சும்மை யிடனுடை வரைப்பின்" (பொருந. 64 - 5). [3] பச்சை - கலியாண வரிசைப் பொருள்கள். [4] ஆழி - கடல் ; புறநா. 338 : 10-12.

829. கையுறையெழுதினர் - கலியாணத்திற்கு வந்த வரிசைகளின் கணக்கெழுதியவர். ஏடறுத்து - ஓலையைக் கிழித்து. ஐயென - வியவா நின்று. இருப்ப - இளைப்பாறி யிருப்பார்கள். மற்று : அசை. அன்ன தாதலால் - வரிசை அங்ஙன மிகுதலாலே. வையகமருங்கினில் - பூமியில். மற்று - வேறாக. இவன் செய்தவம் - இவன் செய்கின்ற சமாவர்த்தனக் கிரியை. இசைக - கூடுவதாக. என்ன - என்று கருதும்படி. இவன் செய்தவம், வையகத்தில் வாழ்நர் நமக்கிசைக என்ன என்று மாறி யியைக்க.

830. வாலரி - வெள்ளிய அரிசி. புனல் - கழுநீர். காலியலிவுளி - காற்றைப்போல் இயலுதலையுடைய குதிரை. ஆழ்ந்து - ஆழ ; எச்சத் திரிபு. அவண் - அவ்விடத்தே. கோலம் - அழகு. மரை - தாமரை. வண்டு ஆலி - வண்டு ஒலிக்கப்பட்டு. குருகு - நாரை. புனல் கழுநீர்த் தடங்களாயின.

831. (ங) உடுப்பன துகில்களு முரைக்கு நானமும்
தொடுத்தன மாலையுங் குழையுஞ் சாந்தமும்
கொடுப்பவர் கொள்பவர் வீழ்த்த பல்கலம்
அடுத்துவிண் பூத்ததோ ரழகின் மிக்கதே.

832. (ச) கலங்கழு மரவமுங் கருனை யாக்குவார்
சிலம்பொலி யரவமு மிச்சில் சீப்பவர்
இலங்குபொற் கிண்கிணி யிரங்கு மோசையும்
உலம்புமா லுவாக்கட லொலியின் மிக்கவே.

இவை நான்கும் ஒருதொடர்.

(க) மற்று : அசை. மற்றிவன்செய்தவம் - வேறாக இவன்செய்கின்ற [1] சமாவர்த்தனம் ; விரதங்கோடலின், 'தவம்' என்றார்.

(உ) [2] வாலரி, வாலசி இரண்டு பாடமும் விகாரம். ஆழ்ந்து - ஆழ.

(ங) உடுப்பன, தொடுத்தனவென்பனவற்றிற்கும் ஆகியவென விரிக்க. அடுத்து - நெருங்கி.

(ச) உலம்பு : கடற்கு அடை.

(இ - ள்.) வந்த [3] பச்சையெழுதி முதலிட்டவர்கள் கைநொந்து [4] பட்டோலைகளைக்கிழித்து ஐயென இளைப்பாறியிருப்பார்கள் ; பச்சை அங்ஙனம் மிகுதலின், அதற்கேற்பச் சோறுசமைத்தற்கு அரிசி கழுவிய கழுநீர் இவுளியும் களிறும் அழுந்தும்படி குவளையும் தாமரையும் பூத்து வண்டு ஒலிக்கப்பட்டுக் குருகு பாயுந்தடங்களாயின ; அங்ஙனம் சோறு மிகச் சமைத்தபின்பு கருனையாக்குவார் சிலம்பொலியின் அரவமும் உண்

831. உடுப்பனவாகிய துகில்களும். உரைக்கும் நானம் - தேய்த்துப் பூசிக்கொள்கின்ற புழுகுநெய். தொடுத்தனவாகிய மாலையும். குழை - மங்கலவணி ; சீவக. 2355. சாந்தம் - சந்தனம் ; "உரைக்கு நானமும், சுண்ணமுஞ் சாந்துஞ் சுரும்பிமிர் கோதையும், அணியுங் கலனு மாடையு நிறைந்த" (பெருங். 1. 38 : 60-62). கொடுப்பவராலும், கொள்பவராலும் வீழ்த்தப்பட்ட கலம். கலம் - ஆபரணங்கள். அடுத்து - நெருங்கி. விண் மீனைப் பூத்ததோர் அழகினும் மிக்கது. கலத்திற்கு மீனுவமை.

832. கலம் கழும் அரவமும் - தாலம் முதலிய பாத்திரங்களைக் கழுவுகின்ற ஒலியும் ; "கலம்பூச் சரவத் திலஞ்சி முற்றத்து" (பெருங். 1. 40 : 128). கருனை - பொரிக்கறி. மிச்சில்சீப்பவர் - எச்சிலைத்துடைப்பவர். இரங்கும் - ஒலிக்கின்ற. உலம்பும் - முழங்குகின்ற. மால் - பெரிய.

(உரை) [1] சமாவர்த்தனம் ; சீவக. 485, 822, அடிக். [2] வாலரிசி என்பது வாலரி என்று கடைக்குறைந்தும், வாலசி என்று இடைக்குறைந்தும் வந்தது. [3] பச்சை யெழுதல் - பலா, வாழை முதலிய காய்களின் கணக்கெழுதல். [4] "பட்டோலை வாசித் தவரவர்க் குள்ள பரிசிலெல்லாம்" (தனிப்.)

டற்குக் கலங்கழுவுகின்ற அரவமும் எச்சில்சீப்பார் கிண்கிணியிரங்கு மோசையும் கடலொலியினுமிக்கன; இங்ஙனமுண்ட பின்பு, துகிலும் நானமும் மாலையும் குழையும் சந்தனமும் அடுத்துக்கொடுப்பார் வாங்கு வார் வீழ்த்த கலம் விண்மீனைப் பூத்ததோரழகினு மிக்கது; இங்ஙனம் நிகழாநிற்க, இவன் செய்கின்ற சமாவர்த்தனம் உலகில் வாழ்வாரெல்லா ரும் நமக்கும் இது கூடுவதாகவென்று கருதும்படி நடந்ததென்க.

(௩௩௭ - ௪௦)

## (வேறு)

833. மூழிவாய் முல்லை மாலை முருகுலாங் குழலி னாளும்
ஊழிவாய்த் தீயொடொக்கு மொளிறுவாட்டடக்கையானும்
ஆழிவாய் விரலிற் காம னம்பொடு சிலைகை யேந்தத்
தாழிவாய்க் குவளை வாட்கட் டையலார் பரவச் சார்ந்தார்.

மூழிவாய் - பூவிடுபெட்டி. ஆழி - மோதிரம்; [1] விரற்சரடுமாம்.

(இ - ள்.) குழலினாளும் தடக்கையானும் காமன் அம்போடு சிலை யைக் கைவிரலால் ஏந்தாநிற்கத் தையலார் பரவாநிற்க ஓராசனத்தே சேரவிருந்தாரென்க. (௩௪௧)

834. இன்னிய முழங்கி யார்ப்ப வீண்டெரி திகழ வேதம்
துன்னினர் பலாசிற் செய்த துடுப்பினெய் சொரிந்துவேட்ப
மின்னியல் கலச நன்னீர் சொரிந்தனன் வீர னேற்றான்
முன்னுபு விளங்கு வெள்ளி முளைத்தெழ முருக னன்னான்.

---

833. மூழிவாய் முல்லைமாலை: சீவக. 2974. முருகு - வாசனை. குழலினாள்: காந்தருவதத்தை. தடக்கையான்: சீவகன். ஆழிவாய்ந்த விரலில். காமன் அம்பொடு சிலையை ஏந்தல்: சீவக. 2090. தாழி வாய்க்குவளை: சீவக. 2974; சிலப். 4 : 64, 5 : 192; பெருங். 3. 5 : 87; சூளா. நகர. 9, மந்திர. 76. தஞ்சைவாணன். 202. குவளைபோன்ற நிறத்தையும், வாள்போன்ற கூர்மையையும் கொண்ட கண்ணையுடைய தையலார். பரவ - புகழ; குழலினாளும் தடக்கையானும் சார்ந்தார்.

(உரை) [1] விரற்சரடு - விரற்புட்டில். விரற்கவசம்; "விரற்றலைப் புட்டில் வீக்கி வெஞ்சிலை கணையொ டேந்தி" (சீவக. 2202); கலித். 7 : 9, ந. "விரற்புனை கோதைவல் வில்லின் வல்லவர்" (வி - பா. 13-ஆம் போர். 254)

834. இன்னியம் - இனிய வாத்தியங்கள். திகழ - வளரும்படி. வேதம் - வேத மந்திரங்களால். துன்னினர்: அந்தணர். பலாசின் - புரசமரத்தால். துடுப்பு - சட்டுவம்; தருவி என்பர்: சீவக. 2466, ந. வேட்ப - ஓமஞ்செய்ய. நீர்சொரிய ஏற்றல்: சீவக. 489. முருகனன்னான், இயம் ஆர்ப்ப முன்னுபு துன்னினர் துடுப்பின் நெய்யை எரிதிகழ வேதத் தால் சொரிந்து வேட்பவெள்ளி முளைத்தெழ என்று மாறியியைக்க.

**(இ - ள்.)** முருகனன்னான், இன்னியம் ஆராநிற்க, முன்னாநின்று, துன்னினர் பலாசாற்செய்த துடுப்பின் நெய்யை மிக்கெழுகின்ற தீ வளரும்படி வேதமந்திரத்தால் தான்சொரிந்து ஓமம்பண்ணாநிற்க, வெள்ளிமுளைத்த அளவிலே ஸ்ரீதத்தன் நீரைச்சொரிந்தான்; அப்பொழுது இவனும் அதனை ஏற்றானென்க.

துன்னினர் - தனக்குச்செறிந்த அந்தணர். மின்னியல் - ஒளிவிடுகின்ற. அரசர்க்கும் வணிகர்க்கும் மந்திரத்திலும் தந்திரத்திலும் சிறிது வேறுபாடு உளதேனும் தான் இரண்டு குலத்திற்குமுரிய சடங்கு நிகழ்த்து தற்குரியனாதலிற் பிறர்க்குத் தெரியாமல் [1]தன் குலத்திற்கேற்ற சடங்கு தானே நிகழ்த்தினானென்பதூஉம், பிறர்க்குத் தெரியுமவற்றிற்குப் பிராயச்சித்தத்தைக் கருதினானென்பதூஉந்தோன்ற, 'முன்னுபு' என்றார். முன்னுதல் - கருதுதல். (௩௪௨)

835. இட்டவுத் தரிய மின்னு மெரிமணிப் பருமுத் தாரம்
மட்டவிழ் கோதை வெய்ய வருமுலை தாங்க லாற்றா
நெட்டிருங் கூந்த லாட னேர்வளை முன்கை பற்றிக்
கட்டழல் வலங்கொண் டாய்பொற் கட்டிரு னேறி னானே.

நெட்டிருங்குழல்: [1]நெடு, பண்புதொகுமொழியாதலிற் புணர்க்கப் படாதாயிற்று. நேர்வளை - ஒத்தவளை.

**(இ - ள்.)** உத்தரியமுதலியவற்றைச் சுமத்தலாற்றாத தத்தையது முன்கையைத் தான்பற்றி அழலைவலங்கொண்டு கட்டிலிலே ஏறினானென்க. (௩௪௩)

---

மின் - ஒளி. சொரிந்தனன் - ஸ்ரீதத்தன் சொரிந்தான். வீரன் - சீவகன். முன்னுபு - கருதி. வெள்ளி - சுக்கிரன். சுக்கிரன் களத்திரகாரகனாதலின் சுக்கிராஸ்தமனத்தில் விவாகம் செய்யலாகாதென்னும் விதிக்கேற்ப, 'வெள்ளி முளைத்தெழ' என்றார்.

(உரை) [1] தன்குலமென்றது அரசகுலத்தை.

835. இட்ட - போர்த்துக் கொண்ட. மின்னும் - ஒளிவீசுகின்ற. எரிமணி - விளங்குகின்ற மணி. கோதை - பூமாலை. வெய்ய - விரும்பத்தக்க; சீவக. 237. உத்தரியத்தையும், முத்தாரத்தையும், கோதையையும், முலையையும் என உம்மைவிரிக்க. தாங்கலாற்றா - சுமக்கமுடியாத. நெட்டிருங் கூந்தலாள் - நீண்ட கரிய கூந்தலையுடைய காந்தருவதத்தை. நேர்வளை - அளவொத்த வளையையணிந்த. கட்டழல் - மிக்க நெருப்பை. தீயை வலம் வருதல்: கலித். 69 : 3-5. ஆய்பொற்கட்டில் - ஆராய்ந்து செய்த பொன்னாலாகிய கட்டிலில்; பெருங்கதையிலுள்ள கட்டிலேற்றிய தென்னும் பகுதி இங்கே ஒப்புநோக்கற்பாலது.

(உரை) [1] தொல். குற்றியலுகரப். 77, ந.

836. மந்திரத் தரசன் காதன் மாதரம் பாவை தன்னைக்
கந்துகன் சிறுவன் வேட்ட கடிவினை நொடியின் மற்றோர்
அந்தர விசும்பிற் றேவர்க் கதிபதி யாய கோமான்
இந்திரன் றனக்கு மாகா தென்பது நடந்த தன்றே.

அந்தரவிசும்பில் - விசும்பாகிய அந்தரத்தில்; நடுவாகிய விசும்புமாம்.

(இ - ள்.) கலுழவேகன்மகளைக் கந்துகன்மகன் வேட்ட மணவினையைக் கூறின், இந்திரனுக்கும் கூடாதென்று கூறுகின்ற கூற்று நடந்ததென்க. (௬௪௪)

837. அடிமனை பவள மாக வரும்பொற லலகு சேர்த்தி
முடிமணி யழுத்திச் செய்த மூரிக்காழ் நெற்றி மூழ்கக்
கடிமலர் மாலை நாற்றிக் கம்பல விதானங் கோலி
இடுபுகை மஞ்சிற் சூழ மணவறை யியற்றி னாரே.

(இ - ள்.) சுற்றுச்சுவர் பவளப்பலகையால் நிரைத்துத் தலையிலே மணியழுத்திப்பண்ணின தூணை நாட்டி அதன்மேலே பொன்னாற்செய்த [1] கையலகைச்சேர்த்தி அத்தூணினெற்றி மறையும்படி படாமாகிய மேற்கட்டியைக் கட்டி மாலையை நாற்றிப் புகை மஞ்சுபோலே சூழ மணவறையை இயற்றினாரென்க. (௬௪௫)

838. ஐந்துமூன் றெடுத்த செல்வத் தமளிமூன் றியற்றிப் பூம்பட்
டெந்திர வெழினி வாங்கி யின்முக வாசச் செப்பும்
சந்தனச் சாந்தச் செப்புந் தண்மலர் மாலை பெய்த
இந்திர நீலச் செப்பு மிளையவ ரேந்தி னாரே.

836. மந்திரத்தரசன் - வித்தியாதர உலகத்து அரசன்; கலுழவேகன்; சீவக. 539, அடிக். அரசனுடைய காதலாகிய பாவை; காதல் - மகள். மாதரம்பாவை - காந்தருவதத்தை. சிறுவன் - சீவகன். கடிவினை - மணச்சடங்கை. நொடியின் - கூறினால்; நொடித்தல் - கூறுதல். மற்று: அசை. அந்தரத்தையுடைய விசும்பின்கண். கோமானாகிய இந்திரன். என்பது - என்று கூறுகின்ற கூற்று.

837. அடிமனை - சுற்றுச்சுவர். அலகு - கையலகு. முடியில் மணியை அழுத்திச்செய்த காழ். மூரிக்காழ் - வன்மையுள்ள தூணை. காழ் என்பதற்குப்பின் 'நாட்டி' என ஒருசொல் வருவித்துக்கொள்க. காழை நாட்டி அலகுசேர்த்தி எனமாறுக. நெற்றி - தூணின் உச்சி. மூழ்க - மறையும்படி. கடி - வாசனை. கம்பலமாகிய விதானம். விதானம் - மேற்கட்டி. கோலி - கட்டி. கம்பலவிதானங் கோலி மலர்மாலை நாற்றி எனமாறுக. புகை - அகிற்புகை. மஞ்சிற் சூழ - மேகம்போலச்சூழ; "அகிலெழு கொழும்புகை மஞ்சி னுடவும்" (சூளா. நகரச். 6)

(உரை) [1] சீவக. 593, ந.

838. ஐந்துமூன்றடுத்த அமளி: கலித். 10 : 10, 72 : 1, ந.; சிலப். 4 : 67; பெருங். 4. 5 : 51. எந்திர எழினி வாங்கி - எந்திரத்தால் இயங்கும் திரையை வளைத்து. இந்திர நீலச்செப்பு - இந்திர நீலமணியாற் செய்த செப்பு. இளையவர் - மகளிர்.

ஐந்தாய ஒன்று மும்மூன்றுகப்படுத்த. ஐந்தாவன: [1]"சிறுபூளை செம்பஞ்சு வெண்பஞ்சு சேணம், உறுதூவி சேக்கையோ ரைந்து." இருவரும் துயில்கோடற்கு இரண்டும் போகநுகர்தற்கு ஒன்றும் வேண்டுதலின், அமளி மூன்றாயின. இனிய முகவாசமாவன: "[2]தக்கோலந் தீம்பூத் தகைசா லிலவங்கம், கப்பூரஞ் சாதியோ டைந்து"; இவற்றோடு சருக்கரையும் தேனும் கூட்டுப. இது முதலிற் கவுட்கொண்டு பின்பு [3]பாகு கவுட்கொள்ளவேண்டுதலின், வாசச்செப்பென்ற பெயர் சிறப்பினாற்பெற்ற பெயர்.

(இ - ள்.) இளையவர், இயற்றி [4]மசகாரியை வளைத்துச் செப்புக்களை ஏந்தினரென்க. (௩௪௬)

839. (௧) கடைந்துபெய் மணிக்கைச் செம்பொற் காசறு தட்டிற் சூழ்ந்து, மிடைந்துபெய் மணிக்கட் பீலி மின்னுசாந் தாற்றி பொன்னார், அடைந்துவீ சால வட்ட மரிவைய ரேந்தி யாற்றத், தடங்கண்கள் குவளை பூப்பத் தையலோ டாடு மன்றே.

840. (௨) பஞ்சுசூழ் பரவை யல்குற் பசுங்கதிர்க் கலாபம் வீங்கச், செந்தளிர்க் கோதை சோரக் கிண்கிணி சிலம்பொ டேங்க, மைந்தருட் காம னன்னான் மகளிருட் டிருவ னாளை, அந்தரத் தமரர் பெற்ற வமிர்தெனப் பருகி னானே.

841. (௩) இளமுலை மணிக்கண் சேப்ப வெழுதுவிற் புருவ மேறக், கிளைநரம் பனைய தீஞ்சொற் பவளவாய் திகழத் தேன் சோர், வளமலர்க் கோதை தன்னை வாய்விடான் குழையப் புல்லி, அளமர லிலாத வின்பக் கடலகத் தழுந்தி னானே.

இவைமூன்றும் ஒருதொடர்.

---

(மேற்.) அடி, க.: மதுரைக். 713, ந.; சிலப். 4 : 58-71, அடியார்.

(உரை) [1]நெடுநல். 131-3; கலித். 72 : 1-8, ந. மேற். [2]சிலப். 5 : 26, அரும்பத. அடியார். மேற். [3]பாகு - பாக்கு. [4]மசகாரி - கொசுவலை.

839. மணிக்கை - மணியாற் செய்யப்பட்ட பிடி. காசு - குற்றம். மிடைந்து - நெருங்கி. மணிக்கட்பீலி - நீலமணிபோன்ற கண்ணையுடைய மயிலிறகு. சாந்தாற்றி - பூசிய சந்தனத்தை ஆற்றுவது. பொன்னார் ஆலவட்டம் என்க. அடைந்து ஆற்ற என இயைக்க. குவளைபூப்ப - செங்குவளை போலச் சிவப்ப. தையல் : காந்தருவதத்தை. ஆடும் - கூடுவான்.

840. பஞ்சு - துகில்; ஆகுபெயர். கலாபம் - மேகலைவகையுள் ஒன்று. செந்தளிர்க் கோதை - சிவந்த தளிரைச் சேர்த்துத் தொடுத்த மாலை. காமனன்னான் : சீவகன். அந்தரத்து அமரர் - ஆகாயத்திலுள்ள தேவர்.

841. மணிக்கண் - நீலமணியைப்போன்ற கண். சேப்ப - சிவப்ப. எழுதுவிற் புருவம் - எழுதினாற்போன்ற வில்லை ஒத்த புருவம். ஏற -

(க) கடைந்திட்ட மணிக்கையினையும் செம்பொற்றட்டினையும் தன்னைச் சூழ்ந்து மிடையப்பெய்த பீலியையுமுடைய சாந்தாற்றி - சிற்றால வட்டம். ஆடும் - புணரும்.

(உ) பஞ்சு : ஆகுபெயர். வீங்க - இன்பமிகுதியால் உடம்பு பூரித்தலின் இறுக. திருவனாளை - மகளிரிடத்துக் [1] கண்டார் விரும்பப்படுந் தன்மையைப் போல்வாளை; "திருவளர் தாமரை" (திருச்சிற். 1) போல. பருகுதல் - ஈண்டு [2] அதரபானமும் அல்குற்பானமும்.

(ரு) எழுதினாலொத்த விற்போன்ற புருவம். தேன்சோர்கோதையென்று காமச்செவ்வி கூறினார். அளமரல் - அலமரல்.

(இ - ள்.) அங்ஙனம் இளையவரேந்திய துப்புரவுகளை நுகர்ந்து, காமனன்னான், திருவன்னாளை இளமுலை மணிக்கண்சிவப்பக் குழையப் புல்லி, அக்கோதை தன்னைக் கிளை யென்னு நரம்புபோலுஞ் சொல்லையுடைய பவளவாய் திகழ அல்குலிற்கலாபம்வீங்க, அவ்விரண்டினையும் வாய்விடானாய் அமிர்தெனப் பருகினான்; அங்ஙனம்பருகி, அத்தையலோடே கோதை சோர ஏங்கப் புருவமேறக் கண்கள் குவளைபூப்ப ஆடும்; அங்ஙனமாடுதலிற் பிறந்த வியர் நீங்கும்படி சாந்தாற்றியையும் பொன்னாலவட்டத்தையும் அரிவையரேந்தித் தம்மையடைந்து ஆற்றும்படி இன்பக்கடலகத்தே அழுந்தினானென்க.

[3] புணர்ச்சியிறுதிக்கண் அவசத்தால் முலையிடைத் துயிலுந் துயிலை, 'இன்பக்கடல்' என்றார். இனிக் கரணவிசேடமாக்கிச் செவ்வனே பொருளுரைப்பாருமுளர்; அது பொருந்துமேனுமுணர்க. (ருசஎ-கூ)

842. இன்னணம் மொழுகு நாளு ளிளமரக் காவு காண்பான்,
பொன்னணி மார்பன் சென்று புகுதலு மொருவன் றோன்றித்,
துன்னியோ ரோலை நீட்டித் தொழுதனன் பெயர்ந்து நிற்ப,
மன்னிய குருசில் கொண்டு மரபினா னோக்கு கின்றான்.

(இ - ள்.) இவ்வாறு நடக்கின்ற நாளிலே திருத் தங்கிய மார்பன் பொழிலைக் காணவேண்டிச் சென்று புகுந்தானாக, ஒரு விச்சாதரன் றோன்றி அணுகி ஓலையை நீட்டித் தொழுதனனாய் மீண்டு போய்நிற்க, அவன் அதனை வாங்கிக்கொண்டு வழிபாட்டோடே வாசியாநின்றானென்க. (ருகூo)

மேலே செல்ல. கிளைநரம்பு - கிளை என்னும் நரம்பின் இசை. கோதை : காந்தருவதத்தை. குழைய - மனம் உருகும்படி. அளமரல் : போலி; சீவக. 49, அடிக்.

(உரை) [1] திருச்சிற். 1, பேர். [2] சீவக. 191. [3] 'பின்னர் அவசத்தான் முலையிடையிற்றுயிலும் துயிலையும் மறந்தாய்' (கலித். 128 : 14, ந.)

842. இன்னணம் - இன்னவண்ணம். காண்பான் - காணும் பொருட்டு. மார்பன் : சீவகன். ஒருவன் - கலுழவேகன் அனுப்பிய ஒரு வித்தியாதரன்; இவன் தரன்; சீவக. 849, ந. துன்னி - சீவகனை நெருங்கி. பெயர்ந்து நிற்ப - நீங்கி நிற்ப. குருசில் : சீவகன்.

(வேறு)

843. உருமுக்கதிர் வேற்கலுழ னோலையுல கென்னும்
பருமைக்குருப் பளிங்கிற்புகழ்ப் பஞ்சிமுழு தடுத்த
திருமிக்குடைச் செல்வன்றிறற் சாமிநனி காண்க
அருமையற னின்பம்பொரு ளாகெனவி டுத்தேன்.

உருமுப்போன்ற வேல். உலகென்னும் பளிங்கிலே புகழாகிய பஞ்சி ஓரிடமுமொழியாமற் பரந்த இச்செல்வத்தினை முற்பிறப்பில் தவமிகுதி யாலே யுடையவனாகிய செல்வன்.

(இ - ள்.) கலுழனோலை செல்வனாகிய சாமி காண்பானாக, இது வர விட்டேன், அறமும் இன்பமும் பொருளும் [1] தனக்கு இன்னும் மிக வுண்டாக வேண்டுமென்று கருதியென்க.

தேவனுதலிற் கூறினான். விடுத்தேன் : [2] விகாரம். (அ௪௩)

844. தத்தையொடு வீணைமனர் தாம்பொருது தோற்ப
மொய்த்தகலை நம்பிமுகிழ் முலையையிசை வெல்ல
வைத்தகதிர் வேலின்வலி யார்க்குரிய ளென்னச்
சித்தங்கரிந் தாங்குக்கொடி யான்செரு விளைத்தான்.

(இ - ள்.) மன்னர்தாம் தத்தையோடே வீணையாற்பொருது தோற்கத்தான் அவளை இசையாலே வெல்லக் கட்டியங்காரன் அதுபொறுதே சித்தம் கரிந்து வேலாற்போர்செய்து வென்றார்க்கு இவளுரியளெனச் சொல்லி அவ்விடத்தே ஒரு போரை விளைத்தானென்க.

---

843. உருமுக்கதிர்வேல் - பகைவர்க்கு இடிபோன்ற, கிரணங்களை யுடைய வேல். கலுழன் - கலுழவேகன். பருமை குரு பளிங்கில் - பருமையையும் நிறத்தையுமுடைய பளிங்கிலே. புகழாகிய பஞ்சி. அடுத்த - சேர்த்த. சாமி : சீவகசாமி. ஓலை.........காண்க : இன்னார் ஓலையை இன்னார் காண்க என்றல் மரபு.

(உரை) [1] தனக்கு - சீவகனுக்கு. [2] விடுவித்தேனென்பது விடுத்தே னென்று வந்தது.

844. மனர் - மன்னர். மன்னர் தத்தையொடு வீணையாற் பொருது தோற்ப என மாறியியைக்க. நம்பி - சீவகன். முகிழ் - அரும்பு. முகிழ் முலை : காந்தருவதத்தை. இசையால் வெல்ல. வைத்த - கூர்மை பொருந்திய. வேலின் வலியார்க்கு - வேலாற் போர்செய்து வெல்பவர்க்கு. சித்தம் கரிந்து - மனம் கருகி. கொடியான் : கட்டியங்காரன். செரு - போர். கொடியான் சித்தம் கரிந்து வேலின் வலியார்க்குரியள் என்னச் செருவிளைத்தான் என மாறியியைக்க.

வையெனக் குறிப்புணரநின்ற உரிச்சொல் வைத்தவென வினைமேல் தன் [1] மெய்தடுமாறிற்று ; [2] முண்முனைபோலக் கூர்த்தவேலென்க. (௬௪௨)

845. தேன்முழங்கு தார்க்குருசில் செம்பொனெடுந் தேர்மேல்
வான்முழங்கு வெஞ்சிலையின் வாளிமழை தூவி
ஊன்முழங்கு வெங்குருதி வேழமுடன் மூழ்க
வேன்முழங்கு தானைவிளை யாடியதுங் கேட்டேன்.

(இ - ள்.) [1] அவன் விளைத்த பொழுதிலே, குருசில் தேர்மேலேநின்று சிலையாகிய மேகத்தாலே அம்பாகிய மழையைத் தூவுதலாலே உடம்பிற் றோன்றிய குருதியாகிய வெள்ளத்திலே வேழங்கள் சேர அழுந்தும்படி தானையோடே நின்று விளையாடியதுவும் தரன் கூறக்கேட்டேனென்க.
தூவி - [2] தூவ. சிலையென்வாளியும் பாடம். (௬௪௩)

846. வந்துதரன் கூறியவிவ் வாய்மொழியு மன்றி
முந்துவரன் மொழிந்தபொருண் முற்றும்வகை நாடிப்
பந்துபுடை பாணியெனப் பாயுங்கலி மான்றேர்
எந்தைதிற முன்னமுணர்ந் தின்னணம் விடுத்தேன்.

'வாய்மொழி' என்றார், [1] நிமித்திகன் கூறக்கேட்டிருந்த காரியம் இப்பொழுது முற்றின செய்தியைத் தரன் கூறுதலின். வரன் - அச்சணந்தியடிகள்.

---

(உரை) [1] தொல். உரி. 1, ந. [2] முள்ளின்முனை.
845. தேன் - வண்டு. குருசில் : சீவகன். பொன்னுலாகிய தேர். வான் முழங்கு - மேகத்தைப்போல் முழங்கும். சிலையின் - வில்லாகிய மேகத்தால். வாளிமழை - அம்பாகிய மழையை. தூவி - தூவுதலால். ஊன்முழங்கு வெங்குருதி - பகைவருடைய உடலினின்றும் ஓசைபடச் சொரிகின்ற வெவ்விய இரத்தம். உடன்மூழ்க - சேர அழுந்தும்படி. தானையோடு விளையாடியதும் ; சீவக. 802.
(உரை) [1] அவன் - கட்டியங்காரன். [2] எச்சத்திரிபு.
846. வாய்மொழி - தப்பாதமொழி. முந்து - முன்பு. வரன் - அச்சணந்திமுனிவர். பொருள் - காரியம். முற்றும்வகை - முடியும் கூறுபாடு. பாணி - தாளம் ; "பந்துபுடைப் பன்ன பாணிப் பல்லடிச், சில் பரிக் குதிரைப் பல்வே லெழினி" (அகநா. 105 : 9-10). கலிமான் - மனஞ்செருக்கிய குதிரை. தேரையுடைய எந்தை. எந்தை - சீவகன். எந்தையென்றது உயர்வு குறித்தது. இன்னணம் - இவ்வாறு. எந்தை திறத்தில் தரன்கூறிய வாய்மொழியும், அன்றி முந்து வரன் மொழிந்த பொருளும், முற்றும் வகையும், முன்னம் உணர்ந்து நாடி இன்னணம் விடுத்தேன் என்க.
(உரை) [1] நிமித்திகன் கூறியது : சீவக. 539, 540.

(இ - ள்.) எந்தைதிறத்தில் அத் தரன்கூறியமொழியும், அன்றி வரன் மொழிந்த காரியமும், முடியுங்கூறுபாட்டையும் முன்பே குறிப் பாலே நாடியுணர்ந்து இனி யாம்சேறல் கருமமன்றென்று கருதித் தத்தையை ஸ்ரீ தத்தனுடனே வரவிட்டேனென்க.

கலுழவேகன் வந்தாற் சீவகசரிதை ஒன்றுமின்றும். (௫௩௪)

847. எள்ளுநர்கள் சாயவென தோளிரண்டு நோக்கி
வெள்ளிமலை முழுதுங்கொடி யெடுத்ததிக லேத்திக்
கள்செய்மலர் மார்பனுறு காப்பிகழ்த லின்றி
உள்ளுபொரு ளெம்முணர்த்தி யன்றியுள வேண்டா.

(இ - ள்.) என்னுடைய தோளிரண்டையும் நோக்கி இகழ்ந்திருக்கும் பகைவர் சாயும்படி [1] தான்பொருத போரையேத்தி மலைமுழுதும் கொடி யெடுத்தது ; ஆதலால் தனது வெற்றியும் தோல்வியும் எனவேயாதலின், இனி மலர்மார்பன், மிக்க காவலை இகழ்தலின்றித் தானினைத்திருக்கின்ற காரியங்களும் எம்மையறிவித்தல்லது மேல் நினைக்கவும் வேண்டா வென்க. (௫௩௫)

848. ஆம்பொருள்க ளாகுமது யார்க்குமழிக் கொண்ணுப்
போம்பொருள்கள் போகுமவை பொறியின்வகை வண்ணம்
தேம்புனலை நீர்க்கடலுந் சென்றுதர லின்றே
வீங்குபுனல் யாறுமழை வேண்டியறி யாதே.

847. எள்ளுநகர்கள் - இகழ்ந்திருக்கும் பகைவர்கள். சாய - தோற் றுக்கெடும்படி. என - என்னுடைய. தோள்நோக்கல் : சீவக. 1843; பெருங். 5. 7 : 134; கம்ப. சூர்ப்பணகைப். 109. வெள்ளிமலை : கலுழவேகனுடைய மலை ; சீவக. 526. இகல் ஏத்தி - பொருத போரைப் புகழ்ந்து. என தோளிரண்டும் நோக்கி எள்ளுநர்கள் சாய இகல் ஏத்தி மலை கொடி எடுத்தது எனமாறியியைக்க. கள் - தேன். மார்பன் : சீவகன். உறுகாப்பு - மிக்க காவல். இகழ்தலின்றி - இகழ்தலில்லாமல். உள்ளுபொருள் - தான் நினைக்கின்ற காரியங்களை. உளவேண்டா - நினைக்க வேண்டா ; உள - உள்ள.

(உரை) [1] தான் - சீவகன்.

848. ஆம் பொருள்களாகும்.........போம்பொருள்கள் போகும் : கம்ப. கும்ப - வதை. 165; பாகவதம், 7. 2 : 12; வி - பா. சூது போர். 230. (பி - ம்.) 'அவையார்க்கு மழிப்பண்ணு.' அழிக்க ஒண்ணு அது பொறியின் வகை வண்ணம் என மாறியியைக்க. ஒண்ணு - முடி யாத. பொறியின் வகை வண்ணம் - நல்வினை தீவினை என்ற இருவினை யின் கூறுகிய இயல்பு. நீர்க் கடலும் தேம்புனலைச் சென்றுதரலின்று - உப்பு நீரையுடைய கடலும் இனிய நீரைத்தருதல் ஒரு காலத்துமில்லை ; ஏ : அசை ; இது கட்டியங்காரனுடைய தீயகுணத்திற்கு உவமை. மழை யாறு வீங்குபுனல் வேண்டியறியாது. மேகமும் ஆற்றிற்கு மிக்க நீரை இயல்பாகக்கொடுத்தலன்றி, உவர்நீரை நன்னீராக்கிக் கொடுத்தலை

அதுவென்று ஒருமையாற்சுட்டினார், அழிக்கவொண்ணாத்தன்மை யைக் கூறலின். ஆம்பொருள்களாகும், போம்பொருள்கள் போகும்; அவையிரண்டும் யார்க்குமழித்தலாகாத் தன்மை இருவினையின் கூறாகிய இயல்பு. அங்ஙனமாதலின், தானும் கட்டியங்காரனுக்கத்திற்கும் சச்சந் தனழிவிற்கும் வருந்தாதொழிகவென்க. தேம்புனலை நீர்க்கடலும் சென்று தரலின்று - உப்புநீரையுடைய கடலும் உலகத்தே வந்து இனியநீரைத் தருதல் ஒருகாலத்துமில்லை; என்றது தீய குணத்தையுடையோர் பிறர்க்கு இனிமைசெய்ய அறியாரென்றவாறு. எனவே கட்டியங்காரன் எக்காலமும் நமக்குத் தீங்குசெய்வனென்றும், இக்குணத்தால் அவனுக் குக் கேடுவிளையுமென்றும் கூறினான்; " யார்கண்ணு மிகந்துசெய் திசை கெட்டா னிறுதிபோல், வேரொடு மரம்வெம்ப விரிகதிர் தெறுதலின் " (கலித். 10) என்றார் பிறரும். மழை யாறு வீங்கு புனல் வேண்டியறியாது- மேகம் யாற்றுக்கு மிக்க நீரைக்கொடுக்க விரும்பியறியாது; என்றது உவர்த்தநீரை நன்னீராக்கி யாற்றிற்குக் கொடுப்பேனென்னுங் கருத் தின்மை மேகத்திற்கு இயல்பென்றவாறு. எனவே நற்குண முடையோர் எக்காலத்தும் பிறர்க்கு இனிமை செய்வாராதலின், [1] தான் எக்காலத்தும் பிறர்க்கு இனியவைசெய்கவென்றான்.

(இ - ள்.) அழிக்கொண்ணாத அது பொறியின்வகைவண்ணம், அதுவேயுமன்றிக் கடலும் தரலின்று; மழையும் வேண்டியறியாதென்று வாசித்தானென்க.

இனி, " எள்ளுநர்கள் " (சீவக. 847) என்னுங்கவியளவும் ஓலைப் பாசுரமாக்கி, அதுகேட்ட சீவகன் கூறுகின்றானுக்குவாருமுளர். அதற்கு இகலேத்திக் கொடியெடுத்ததென்று அவன் வியந்ததற்குத் தான்வென்றா னாகக்கூறாது ஆக்கமுங்கேடும் பொறியின்வகையென்றானுக்குக; ஆக்கத் திற்கும் அழிவிற்கும் ஆற்றிலே உவமைகொள்க; கடல்வேண்டாதிருக்கப் புனல் தானேபோனது போம்பொருட்கும், யாறு மேகத்தைவேண்டா திருக்கப் புனல்தானே நிறைகை ஆம்பொருட்குமுவமை. சென்றுதரல் - போய்க்கொண்டுவருதல். (ருருசு)

849. மன்பெரிய மாமனடி மகிழ்ந்துதிசை வணங்கி
அன்பினக லாதவனை விடுத்தலர்ந்த கோதைக்
கின்பநிலத் தியன்றபொரு ளிவையிவைநுங் கோமான்
தந்தவெனச் சொல்லிநனி சாமிகொடுத் தானே.

விரும்பியறியாது: இது சீவகனுடைய இயல்பான நற்குணத்திற்கு உவமை. சீவக. 843 - முதல் 848 வரையில் ஓலையில் எழுதிய செய்திகள்.

(மேற்.) அடி, 1 : நன். வினை. 22, மயிலை; சங்கர.

(உரை) [1] தான் - சீவகன்.

849. மன் பெரிய - மிகப்பெரிய. மாமன் அடி - கலுழவேகனுடைய பாதங்களை. திசைவணங்கி - திசையை நோக்கித்தொழுது; " திசை நோக்கித் தொழுகின்றான் " (கம்ப. குகப். 30). அகலாதவனை - தரனை.

(இ - ள்.) சாமி, மிகப்பெரிய மாமனடியைத் திசைநோக்கி வணங்கி அன்பினுல் நீங்காது நின்ற தரனைப்போகவிட்டுத் தத்தைக்கு நும் கோமான் தந்த இன்பநிலத்திற்கு நனியியன்ற பொருள்கள் இவையிவை யெனச் சொல்லிக் கொடுத்தானென்க.

இன்பநிலம் - அனுபவிக்குந்துறைகள். அடிவீழ்ந்தும் : பாடம். (௫௯௭)

850. குங்குமமுஞ் சந்தனமுங் கூட்டியிடு கொடியா
வெங்கணிள முலையின்மிசை யெழுதிவிளை யாடிக்
கொங்குண்மலர்க் கோதையொடு குருசில்செலும் வழிநாள்
அங்கணகர்ப் பட்டபொரு ளாகியது மொழிவாம்.

(இ - ள்.) குருசில், கோதையுடைய முலைமேலே எழுது கொடியாக எழுதி அவளோடே விளையாடிச் செல்லும் பின்னுட்களிலே நகரியிற் பிறந்த நீர் விளையாட்டும்,[1] பிள்ளையாரிடத்தாகிய தன்மையும் இனிக் கூறுவேமென்றுரென்க.

என்றது, அதுகாரணத்தாற் பிள்ளையாரிடத்துப்பிறந்த செய்திகளை. [2] பொருளாகியதென்பது ஒருசொல்லுமாம். (௫௯௮)

௫ – காந்தருவதத்தையாரிலம்பகம் முற்றிற்று.

ஆகக்கவி, அ௫௦.

---

கோதைக்கு - காந்தருவதத்தைக்கு; இயன்ற பொருள் - தகுதியான பொருள்கள். நனி - மிக. சாமி - சீவகன். நுங்கோமான் தந்த இன்ப நலத்துக்கு நனி இயன்ற பொருளிவையிவை எனச்சொல்லிக் கொடுத்தான் என மாறியியைக்க.

850. கூட்டி - கலந்து. இடுகொடியா - எழுதுகின்ற தொய்யிற் கொடியாக. தத்தையின் முலையின்மிசை. குங்குமமும் சந்தனமும்...... எழுதல் : பெருங். 1. 40 : 143, 220-25. கொங்கு - வாசனை. கோதை : காந்தருவதத்தை. குருசில் : சீவகன். குருசில் கோதையொடு, எழுதி விளையாடிச் செலும் வழிநாள் எனமாறியியைக்க; வழிநாள் - பின்னுட்களில். நகர்ப்பட்ட பொருளும் ஆகியதும் என உம்மை விரிக்க; நகர் : இராசமாபுரம்.

(உரை) [1] சீவகன். [2] இப்பொருளில் ஆகியதென்பது சொல்லுருபு.

## நான்காவது
# குணமாலையாரிலம்பகம்



851. காசறு துறவின் மிக்க கடவுளர் சிந்தை போல
மாசறு விசும்பின் வெய்யோன் வடதிசை யயண முன்னி
ஆசற நடக்கு நாளு ளைங்கணைக் கிழவன் வைகிப்
பாசறைப் பரிவு தீர்க்கும் பங்குனிப் பருவஞ் செய்தான்.

அயனமென்றுது அயணமெனப் பாகதத்தாற் கூறினுர், செய்யுட் சொல்லென்று. வைகி - வைக. [1] கூதிர் தொடங்கிப் பாடிவீட்டிலிருந்து இளவேனிற்கண் இன்பநுகர்தற்கு மீள்வராதலின், 'பாசறைப் பரிவு தீர்க்கும்' என்றுர்.

(இ - ள்.) வெய்யோன், வடதிசைச் செலவைக்கருதி இருடிகள் சிந்தைபோல மாசற்ற விசும்பிலே குற்றமற நடக்குநாட்களிற் பின்பனி நீங்கும் பங்குனித் திங்களிலே காமன்தங்கும்படி இளவேனிலைப் பிறப் பித்தானென்க.

"தலைவந்த திளவேனில்" (சீவக. 648) என முன்னிகழ்கின்றதாகக் கூறிய காலத்தே ஈண்டு நீர்விளையாட்டு நிகழ்கின்றதென்பார், அக்காலத் தைச் சிறப்பித்துக் கூறுகின்றுர். (க)

852. தோடணிமகளிர்போன்றதுணர்மலர்க் கொம்பர்கொம்பின்
ஆடவர் போல வண்டு மடைந்தன வளியிற் கொல்கி
ஊடிய மகளிர் போல வொசிந்தன வூட றீர்க்கும்
சேடரிற் சென்று புல்லிச் சிறுபுறந் தழீஇய தும்பி.

---

851. காசறு - குற்றமற்ற. கடவுளர் - முனிவர். முனிவருடைய சிந்தையைப்போற் குற்றமற்ற ஆகாயம். வெய்யோன் - சூரியன். அயணம் - செலவு. வெய்யோன் வடதிசை அயணம் முன்னி விசும்பின் நடக்கும் நாளுள் எனமாறி யியைக்க. ஐங்கணைக் கிழவன் - மன்மதன். வைகி - தங்க; எச்சத்திரிபு. பாசறைப்பரிவு - பாடிவீட்டில் தனித்திருந்த துன்பத்தை. பங்குனி - பங்குனி மாதத்தில். பருவம் - இளவேனிற் பருவத்தை. பங்குனி மாதத்தில் இளவேனில் தோன்றுதல் : சீவக. 650, ந.

(உரை) [1] தொல். புறத். 21.

852. தோடு - பூ; ஆகுபெயர். போன்ற - போன்றன. துணர் - கொத்து. கொம்பர் - பூங்கொம்பு. கொம்பு மகளிர் போன்றன. கொம் பின் - பூங்கொம்பினிடத்து. ஆடவர்போல - மகளிரைச் சேரும் ஆட வரைப்போல. ஆடவர்க்கு வண்டு : 'வண்டோரனைவர் ஆடவர்'

(இ - ள்.) பூவையணிந்த மகளிரையொத்த கொம்பு; அவரிடத்து ஆடவரடையுமாறுபோல அக்கொம்புகளிலே வண்டுகளும் அடைந்தன; அவ்வாடவரிடத்து ஒல்கி ஊடிய மகளிரைப்போல அவ்வண்டின் கனத்திற்கு அக்கொம்புகள் ஒருபக்கத்தே தாழ்ந்தன; அவர் ஊடலைத்தீர்த்து [1]எதிர்முகமாக்கும் பெரியோரைப்போலத் தும்பிகள்சென்று அங்ஙனமுயர்ந்த சிறுபுறத்தைத் தழுவி ஒக்கநிறுத்தினவென்க.

சிறுபுறம் - உயர்ந்த பக்கம். "சொல்லிய கிளவி யறிவர்க்கு முரிய" (தொல். கற்பு. 13) என்றலின், அறிவிற்பெரியோரைச் சேடரென்றார். அளியிற்கு : [2]பிறர்க்கும் இவ்வாறு அருளுளதாமென்று புலவி நுணுக்கத்தால் ஊடிற்றுமாம். (உ)

(வேறு)

853. நான மண்ணிய நன்மண மங்கையர்
மேனி போன்றினி தாய்விரை நாறிய
கானங் காழகி லேகமழ் கண்ணிய
வேனி லாற்கு விருந்தெதிர் கொண்டதே.

(இ - ள்.) அங்ஙனம் பூத்தலின், மணஞ்செய்த மகளிர்மேனிபோல இனிதாய் விரைநாறிய கானம் அக்காமனுக்கு விருந்திடுதலை மேற்கொண்டதென்க. (ங)

854. கொம்ப ரின்குயில் கூய்க்குடை வாவியுள்
தும்பி வண்டொடு தூவழி யாழ்செய
வெம்பு வேட்கை விரும்பிய வேனில்வந்
தும்பர் நீடுறக் கத்தியல் பொத்ததே.

---

(இறை. 50, உரை). அளியிற்கு - வண்டுகளுக்கு. ஒல்கி - ஒரு பக்கமாகச் சாய்ந்து. ஊடிய - ஆடவரிடத்து ஊடல்கொண்ட. ஒசிந்தன - அப்பூங்கொம்புகள் சாய்ந்தன. சேடர் - 'ஊடின மகளிரை நாயகனோடு சேர்த்து வைப்பதிற் சமர்த்தர்' என்பர் பிரதாபருத்திரீயம் என்னும் வடநூலின் ஆசிரியர்; "இளையவர் பாலும், பொடித்தபொற் றனத்தார் மருங்கினுந் திரியும் புலவிதீர் சேடர்" (காஞ்சிப். திருக்கண். 186). சிறுபுறம் - முதுகுமாம். தும்பி - ஒருவகை வண்டு. பூங்கொம்பிற்கு மகளிரும், வண்டுகளுக்கு ஆடவரும், தும்பிக்குச் சேடரும் உவமைகள்.

(உரை) [1] எதிர் முகமாக்கல் - நாயகனையும் நாயகியையும் ஒன்றுபடுத்தல். [2] திருச்சிற். 366.

853. நானம் - கஸ்தூரியின் மணம். விரை - வாசனை. நாறிய - வீசுகின்ற. கானம் - இராசமாபுரத்துள்ள சோலை. அகிலே கமழ் கண்ணிய வேனிலாற்கு - அகிற்புகையின் மணமே வீசுகின்ற மாலையையுடைய மன்மதனுக்கு. விருந்து - விருந்து செய்தலை. எதிர்கொண்டது - மேற்கொண்டது.

854. கொம்பர் - பூங்கொம்பிலே. கூய் - கூவ; எச்சத்திரிபு. குடைதல் - குடைந்து விளையாடுதல். தும்பியும் வண்டும் : பெருங். 1. 33 : 28. யாழ்செய-யாழைப்போன்று ஒலிக்க; சீவக. 1196; "மழலை வண்டினம்

(இ - ள்.) கொம்பிலே குயில்கூவ எல்லாருங் குடைந்துவிளையாடும் வாவியிலே தும்பியும் வண்டும் தூவழியென்கின்ற பண்ணையுடைய யாழைக்காட்ட எரிகின்ற காமத்தைவிரும்புதற்குக் காரணமான வேனில் வருதலாலே நகரி மேலாகிய துறக்கத்தின் தன்மையை ஒத்ததென்க.

கூய் - கூவ. (௪)

855. நாக நாண்மலர் நாறு கடிநகர்
ஏக வின்பத்தி ராச புரத்தவர்
மாக நந்து மணங்கமழ் யாற்றயற்
போக மேவினர் பூமரக் காவினே.

(இ - ள்.) இணையிலாவின்பத்தையுடைய நகராகிய இராசமாபுரத்தார், யாற்றயலில் மாகநந்திய மணங்கமழ் பூமரக்காவிற் போகத்தை மனத்தாலே பொருந்தினரென்க.

[1] பொழிலுள் நுகர்ச்சியை முன்புகருதிப் பின்பு நீர்விளையாடக் கருதுகின்றமை கூறுகின்றார். (௫)

856. முழவங் கண்டுயி லாத முதுநகர்
விழவு நீர்விளை யாட்டு விருப்பினால்
தொழுவிற் றோன்றிய தோமறு கேவலக்
கிழவன் மூதெயில் போற்கிளர் வுற்றதே.

(இ - ள்.) இல்வாழ்க்கையிலுண்டான குற்றமற்ற [1] கேவலமடந்தையை யுடைய கிழவனது பொன்னெயில் வட்டம்போல் முதியநகர் நீர்விழவாகிய விளையாட்டின் விருப்பாலே போகலுற்றதென்க.

இனி, மூதெயிலுக்குத் திருநாளுக்குப் போவாரைப் போலவென்றுமாம். (௬)

---

நல்லியாழ் செய்ய...... கொம்ப ரிருங்குயில் விளிப்பது" (மணி. 4 : 4-13). வெம்பும் - எரிகின்ற. வேட்கை விரும்பிய - காமத்தை விரும்புதற்கு. வந்து=வர - வருதலால். உம்பர் - மேலாகிய. நீள் துறக்கத்து எனப் பிரிக்க. துறக்கம் - சுவர்க்கம். நகரி துறக்கத்தியல்பை ஒத்தது. இராசமாபுரத்திலுள்ளார், மனத்தாலே இன்பத்தைப் பெற்றமையின் துறக்கத்தின் இயல்பை ஒத்தது என்றார்.

855. நாகம் - ஒரு மரம். நாண்மலர் - விடியற்காலத்தே அலர்ந்த பூ. கடி - வாசனை. ஏக இன்பம் - இணையிலா இன்பம்; "ஏகவின்பக் காமம்" (சீவக. 1657, ந.) இராசபுரம் - இராசமாபுரம். கடி நகராகிய இராசமாபுரம். மாகம் நந்து - திசைகளெல்லாம் வளர்ச்சியுற்ற ; மாகம் - திசை ; மேகமுமாம். போகம் - இன்பத்தை. யாற்றயலில், மணங்கமழ் பூமரக்காவில் போகம் மேவினர் எனமாறியியைக்க.

(உரை) [1] பெருங். 1. 38 : 49-54.

856. முழவு - மத்தளம். முழவம் கண் துயிலாத நகர் : "முழவுத் துயிலறியா வியலு ளாங்கண்" (மலைபடு. 350). நீர்விழவாகிய விளையாட்டு என மாறியியைக்க. விழவு - விழா. நீர் விளையாட்டு : 'நீர் விளையாட்டுப் படலம்' என்பது கம்பராமாயணத்தில் ஓர் உறுப்பாகக் கூறப்பட்டுள்ளது ; இங்ஙனங் கூறுதல் காவியத்திற்கு இலக்கணம்.

857. வள்ள நீரர மங்கைய ரங்கையால்
உள்ளங் கூரத் திமிர்ந்துகுத் திட்டசாந்
தள்ள லாயடி யானை யிழுக்கின
வெள்ள நீர்வளை வெள்ள முரன்றவே.

(இ - ள்.) அரமங்கையரைப்போல்வார், தமதுமனம் களிப்பு மிகும்படி அங்கையாலே திமிர்ந்து உகுத்த சாந்து பனிநீர் சேருய் யானையடியிழுக்கின; கடலிற்பிறந்த சங்குகளும் வெள்ளமென்னும் எண்ணுக முழங்கினவென்க. (எ)

858. (க) நீந்து நித்தில வூர்தி நிழன்மருப்
பேந்து கஞ்சிகை வைய மிளவெயிற்
போந்து காய்பொற் சிவிகைநற் போதகம்
கூந்தன் மாலைக் குமரிப் பிடிக்குழாம்.

---

தொழுவின் - இல்வாழ்க்கையால்; தொழு - இல்வாழ்க்கை; சீவக. 3105. தோம் அறு - குற்றம் அற்ற. கேவல மடந்தையையுடைய கிழவன்; என்றது அருகதேவனை. கிழவனுடைய எயில்; எயில் - பொன்னெயில் வட்டம். எயில்போல், நகர் நீர்விளையாட்டு விருப்பினுற் கிளர்வுற்றது. கிளர்தல் - போதல்.

(உரை) [1] கேவல மடந்தை - முத்தியாகிய மங்கை; கேவலஞானம் என்றும் கூறப்படும்; சீவக. 3117, ந.

857. வள்ளநீர் - கிண்ணத்திலுள்ள பனிநீரும். அரமங்கையர் போன்ற மகளிர். உள்ளம் கூர - மனத்திற் களிப்புமிகும்படி. திமிர்ந்து - பூசி. மங்கையர் கூர, உகுத்திட்ட சாந்தும், வள்ளநீரும் என மாறியியைக்க. அள்ளலாய் - சேருகி. யானையினடியை. இழுக்கின - வழுக்கச் செய்தன. வெள்ளநீர் வளை - கடலிலுண்டாய சங்குகள். வெள்ளம் - ஒரு பெரிய எண். மு: "வள்ளத்தி னீர்கொண் டுமிழ்ந்த முலைச்சாந்து மறுகிற்பரந், தள்ளல் யானை யெல்லா மடிவழுக்கினவே" (தொல். உவம. 10. பேர், மேற்.); நள. சுயம். 13.

858. நீந்தும் - சனங்களின் நெருக்கத்தை நீந்துகின்ற; சீவக. 880. நித்தில ஊர்தி - முத்துப் பந்தல். நிழல் - ஒளி. கஞ்சிகைவையம்- உருவுதிரையை உடைய வண்டி; பெருங். 1. 56 : 194. மருப்பால் ஏந்திய வையம், கஞ்சிகையையுடைய வையம் என்க. வையம் - வண்டி. போந்து - ஒளிசென்று. காய் - கெடுக்கின்ற. இளவெயிலைக் காய்கின்ற பொற்சிவிகை. போதகம் - யானை. கூந்தலையும், மாலையையும் உடைய பிடிக்குழாம்; குமரிப்பிடி - இளைய பெண் யானை; "கூந்தலம்பிடிகள்", "குமரியம் பிடிக ளாடுங் குண்டுகட்சுனை" (கூர்ம. சம்பு. 34, 88)

859. (உ) ஏறு வாரொலி யேற்றுமி ேனுவெனக்
கூறு வாரொலி தோடு குலைந்துவீழ்ந்
தாறி ளுர்ப்பொலி யஞ்சிலம் பின்ளுெலி
மாறு கொண்டதொர் மாக்கட லொத்தவே.

இவை இரண்டும் ஒருதொடர்.

(க) கடத்தற்கருமையின், 'நீந்தும்' என்றுர்.

(இ - ள்.) மாந்தர்நெருக்கத்தைக் கடந்துபோகின்ற முத்தின் பந்தர், மருப்பாற்செய்த உருவுதிரையையுடைய [1] கொல்லாவண்டி, ஒளிபுறப்பட்டு இளவெயிலைக்கெடுக்கும் பொற்சிவிகை, போதகம் பிடித்திரளென்கின்ற இவற்றைத் தாமேயேறுவாரொலி, கூடப்போகின்ற திரள்குலைந்து அவர்களைக் கூடுதற்கு விரும்பிநின்று ஏறவிடுமினென்று கூறுவாரொலி, ஆர்ப்பொலி, சிலம்பொலி; இவ்வோசைநெறியாலே கடலோடு மாறுகொண்டதொரு கடலொத்தவென்க. (அ - கூ)

860. பொன்செய் வேய்த்தலைப் பூமரு மண்டலம்
மின்செய் வெண்குடை பிச்ச மிடைந்தொளி
என்செய் கோவென் றிரிந்த திழைநிலா
மன்செய் மாணகர் வட்டம்விட் டிட்டதே.

(இ - ள்.) பொன்ருற்செய்த காம்பிடத்தில் வட்டக்குடை, வெண்குடை, பீலிக்குடை இவைநெருங்குதலின், ஞாயிற்றினெளி, இனி யானென்செய்வேனென்று கெட்டது; அப்பொழுது பூண்களினெளி நகரெல்லையளவும் வட்டமாக விட்டெறித்ததென்க.

மன் - பெருமை. (கo)

---

859. ஏற்றுமின் - ஏறவிடுங்கள். தோடு - கூட்டம்; தொகுதி. குலைந்து - கெட்டு. தோடு குலைந்து வீழ்ந்து ஏற்றுமினேவெனக் கூறுவாரொலி என மாறியியைக்க. ஆறின் - இவ்வோசையின் நெறியாலே. மாறுகொண்டதோர் - கடலோடு பகை கொண்டதொரு.

(உரை) [1] பாய்கட்டின கட்டைவண்டியை மலைநாட்டார் கொல்லா வண்டி என்று வழங்குவரென்பர்.

860. வேய்த்தலை - காம்பிடத்தில். பூமரு - பூக்களை எழுதிய; அழகு பொருந்திய என்றுமாம். மண்டலம் - வட்டக்குடை. பிச்சம் - பீலிக்குடை. குடையும், பிச்சமும்: சீவக. 416, அடிக். மிடைந்து - நெருங்குதலால். ஒளி - சூரியனுடைய ஒளி. இரிந்தது - கெட்டது. இழை நிலா - ஆபரணங்களின் ஒளியானது. வட்டம் விட்டிட்டது - வட்டமான ஒளியை விட்டுவீசியது. ஒளியை வட்டமாக வீசுதல்: சீவக. 677, அடிக்.

861. திருந்து சாமரை வீசுவ தெண்கடல்
முரிந்த மொய்திரை போன்ற வகிற்புகை
புரிந்த தாமங்க ளாகவப் பூந்துகள்
விரிந்து வானின் விதானித்த தொத்ததே.

(இ - ள்.) அகிற்புகை, முறுக்கின மாலைகளை ஒவ்வாநிற்கச் சாமரைவீசுவன முரிந்த திரையையொத்தன; அப்பொழுது தூவின பூந்துகள் பரந்து வானிலே ஒருமேற்கட்டி கட்டின தன்மையையொத்த தென்க. (கக)

862. சோலை சூழ்வரைத் தூங்கரு வித்திரள்
மாலை யூர்திகள் வைய மிவற்றிடைச்
சீலக் கஞ்சிநற் போதகஞ் செல்வன
நீல மேக நிரைத்தன போன்றவே.

(இ - ள்.) சோலைமறைத்த மலையினின்றும் தூங்குமருவித்திரள் போலும் முத்தமாலையையுடைய பீலிவேய்ந்த ஊர்திகள் கொல்லாவண்டி இவற்றிற்கு நடுவே பாகன்பயிற்றின நிலைக்கு அஞ்சி யானைகள் செல்வன மேகநிரைத்தன போன்றவென்க. (கஉ)

863. (க) வழங்கு வங்கக் கலிங்கக் கடகமும்
அழுங்கு மாந்தர்க் கணிகலப் பேழையும்
தழங்கு வெம்மதுத் தண்டுந் தலைத்தலைக்
குழங்கன் மாலையுங் கொண்டு விரைந்தவே.

---

861. திருந்து சாமரை - குற்றமற்ற கவரி. வீசுவ - வீசுவன. முரிந்த : வளைந்த. திரை - அலை. சாமரைக்கு வெள்ளிய அலை உவமை. போன்ற - போன்றன. புரிந்த - முறுக்கிய. தாமம் - மாலை. அகிற்புகை தாமங்களுக்கு உவமை. வானின் - ஆகாயத்திடத்தில். விதானித்தது - மேற்கட்டி கட்டியதை. பூந்துகளுக்கு விதானம் உவமை.

862. வரையினின்றும் தூங்கும் அருவி. மாலை - முத்தமாலை. அருவித்திரள்போலும் முத்தமாலை : சீவக. 734, அடிக். வையம் - வண்டி. சீலம் என்பது யானையின் நல்ல இயல்பு; "சீல மில்லன சினக்களி றகற்றுகென்று" (சீவக. 2392); "சீல விகற்பந் தெரிந்தன னுரைத்தலும்" (பெருங். 1. 32 : 56). யானைக்கு மேகம் உவமை; அகநா. 125 : 8-9.

863. வங்கக்கலிங்கம் - கப்பலில் வந்த ஆடை; கலிங்கம் - ஆடை. கலிங்கக்கடகம் - ஆடை வைக்கும் ஒருவகைப்பெட்டி. அழுங்கும் - அணிகலங்களைக் கெடுத்த. பேழை - பெட்டி. தழங்கும் - கள்ளின் கடுமையால் முழங்குகின்ற. மதுத்தண்டு - மதுவைப் பெய்த மூங்கிற் குழாய்; வீரபானம் இருக்குங்குழாய்; சீவக. 1874, ந; "மதுத்தண் டீட்டமும்" (சூளா. நகர. 14). தலைத்தலை - இடந்தோறும். குழங்கல் மாலை - வாசனையையுடைய பூ மாலை. தலைத்தலைக்கொண்டு என இயைக்க.

864. (உ) வாச வெண்ணெயும் வண்டிமிர் சாந்தமும்
பூசு சுண்ணமு முண்ணு மடிசிலும்
காசில் போகக் கலப்பையுங் கொண்டவண்
மாசின் மாசனம் வாயின் மடுத்தவே.

இவை இரண்டும் ஒருதொடர்.

(க) மரக்கலத்தில் வந்த கலிங்கமும் கலமுமென்க.

(இ - ள்.) மாசனம் பிறர்க்குக்கொடுக்கும் புடைவைப்பெட்டிகளையும், அணிகலங்கெடுத்தலையுடையார்க்குக் கொடுத்தற்கு அணிகலப் பெட்டிகளையும், மதுப்பெய்து முழங்குகின்ற மூங்கிற்குழாய்களையும், மாலையையும் இடந்தோறும் இடந்தோறுங்கொண்டு, எண்ணெய்முதலியவற்றையும், [1] போகத்திற்குரிய யாழ்முதலியவற்றையுமிட்ட பெட்டிகளையுங்கொண்டு, விரைந்து அந்நகரின்வாயிலிலே நெருங்கினவென்க.
(கங - ச)

865. பாட லோசையும் பண்ணொலி யோசையும்
ஆட லோசையு மார்ப்பொலி யோசையும்
ஓடை யானை யுரற்றொலி யோசையும்
ஊடு போயுயர் வானுல குற்றவே.

(இ - ள்.) அப்பொழுது, பாடுதலாற்பிறந்தவோசையும், யாழ் வாசித்தலாற்பிறந்தவோசையும், ஆடுதலாற்பிறந்த இயங்களினோசையும், ஆரவாரமொலிக்கின்ற வோசையும், யானை பிளிறுகின்ற முழக்கினாற் பிறந்தவோசையும் தம்மிற்கலந்துபோய் வானுலகைச்சேர்ந்தவென்க.
(கரு)

---

864. வாசனையைக்கொண்ட எண்ணெய். வண்டு இமிர் சாந்தம் - வண்டுகள் ஒலிக்கின்ற சந்தனம். சுண்ணம் - வாசனைப் பொடி. காசில் - குற்றமில்லாத. போகக்கலப்பை - இன்பநுகர்ச்சிக்குரிய யாழ் வைக்கப்பட்ட பெட்டி ; கலம் - யாழ் ; "கலத்தொடு புணர்ந்தமைத்த கண்டத்தாற்பாடத் தொடங்குமன்" (சிலப். 7 : 24). போகத்திற்குரிய பொருள்களெனினுமாம் ; "போகக்கலப்பையும்" (பெருங். 1. 38 : 177, அடிக்.). நீர் விளையாட்டிற்குக் கொண்டு போகப்படும் பொருள்களை, பெருங். 1. 38 : 161-77-ஆம் அடிகளால் அறியலாம். அவண் - அந்நகரிடத்து. மடுத்த - நெருங்கின.

(உரை) [1] சீவக. 921 ; 'பாட்டுக்காமத்தை விளைவித்தலின் யாழை வாசித்து வீழ்துணை தழீஇ என்றார்' (மதுரைக். 559 - 61, ந.)

865. பண் - இங்கே யாழின் நரம்பு. பண் ஒலித்தலால் உண்டாகிய ஓசை. ஆடல் ஓசை - நாட்டியம் ஆடுதலின் ஓசை. ஆர்ப்பு - ஆரவாரம். ஓடை - நெற்றிப் பட்டம். உரற்றொலி - பிளிறுகின்ற முழக்கத்தால். ஊடுபோய் - கலந்துசென்று.

866. பூக்க ணீர்விளை யாடிய பொன்னுல
கோக்க நீள்விசும் பூடறுத் தொய்யென
வீக்க மாநகர் வீழ்ந்தது போன்றவண்
மாக்கண் மாக்கடல் வெள்ள மடுத்ததே.

(இ - ள்.) பொன்னுலகு பூக்களையுடைய நீரிலே விளையாடவேண்டி விசும்பை ஊடறுத்துவந்து நிலத்திலே விரைய வீழ்ந்த தன்மைபோலே மாக்களாகிய பெரியகடல் மாநகரில் வாயிலைக்கடந்து செல்கின்ற அவ்விடத்தில் வெள்ளத்தைநோக்கி [1]முகஞ்செய்ததென்க. (கசு)

867. மின்னு வாட்டடங் கண்ணியர் வெம்முலைத்
துன்னு வாட்டந் தணித்தலிற் றூநிறத்
தன்ன வாட்டத் தணிமலர்ப் பூம்பொழில்
என்ன வாட்டமு மின்றிச்சென் றெய்தினர்.

மின்போலுமிடையை, 'மின்' என்றார். வாட்டமும் : உம்மை இசைநிறை. என்ன 'எய்தினரென்க. இனி, என்னவாட்டமுமெனக் கூட்டி, கண்ணியர் தம்முலைநெருங்குதலின், தமக்குப் பிறந்த வாட்டத்தினைத் தாம் பொறுத்தலின் மேல் ஒரு வாட்டமுமின்றி அன்ன விளையாட்டை யுடையதொரு பொழிலிலே சென்று எய்தினரென்றுமாம்.

(இ - ள்.) வெம்முலைநெருங்குதலால் தமக்குவருகின்ற வருத்தத்தினை வாட்டடங்கண்ணியருடைய மின்போலுமிடைபொறுத்தலின், அவர் ஊர்திகளினின்றுமிழிந்து வாட்டமின்றி நடந்துசென்று, இஃது அன்னங்களின் விளையாட்டினையுடையதொரு பொழிலென்று கூறும்படி அப்பொழிலைச் சேர்ந்தாரென்க. (கஎ)

866. பூக்களையுடைய நீரில். விளையாடிய - விளையாடுதற் பொருட்டு. பொன்னுலகு - சுவர்க்கம். ஓக்கம் - உயர்ச்சி. ஒய்யென - விரைய. ஒய்யென வீழ்ந்தது போன்று என இயைக்க. வீக்கம் - பெருமை. மாக்கள் - சனங்கள். மாக்களாகிய மாக்கடல், மாநகரில் அவண் வெள்ளத்தை மடுத்தது எனமாறியியைக்க.

(உரை) [1] முகம் செய்தல் - எதிர்ப்படுதல் ; "வடதிசை முகஞ் செய்து" (சீவக. 1408)

867. மின் - மின்போன்ற இடை. துன்னுவாட்டம் - நெருங்குதலால் உண்டாகிய வருத்தத்தை. 'வாட்டத்தை மின் தணித்தலின்' எனமாறுக. தூநிறத்து அன்ன ஆட்டத்து - வெண்மை நிறத்தையுடைய அன்னங்களின் விளையாட்டினையுடைய. என்ன - என்று கண்டார் கூறும்படி. சென்று - நடந்துசென்று. வாட்டமின்றிச் சென்று (இஃது) அன்னத்தின் ஆட்டத்தையுடைய பூம்பொழில் என்ன எய்தினர் என மாறியியைக்க. மகளிருக்கு அன்னங்கள் உவமை.

(மேற்.) அடி, 4 : கல். 'உயிர் புகும்', 6, மயில்.

868. அள்ளு டைக்குவ ளைக்கய நீடிய
கள்ளு டைக்கழு நீர்ப்புனற் பட்டமும்
புள்ளு டைக்கனி யிற்பொலி சோலையும்
உள்ளு டைப்பொலி விற்றொரு பாலெல்லாம்.

அள்ளிக்கொள்ளுந்தன்மையையுடைய கயம். நீடிய புனற்பட்டம் - நீரறாத ஓடை. கனியாற் பொலிந்த புள்ளுடைச் சோலை. இஃது ஆற்றங் கரை.

(இ - ள்.) அப்பொழிலில், ஒருபாலெல்லாம், கயத்தையும் பட்டத் தையும் சோலையையும் உள்ளேயுடைத்தான பொலிவிற்றென்க. (கஅ)

869. செம்பு றக்கனி வாழையுந் தேன்சொரி
கொம்பு றப்பழுத் திட்டன கோழரை
வம்பு றக்கனி மாத்தொடு வார்சுளைப்
பைம்பு றப்பல விற்றொரு பாலெலாம்.

(இ - ள்.) ஒருபாலெல்லாம், சிவந்த புறத்தை யுடைத்தாய்க் கனி கின்ற வாழையினையும், கொழுவிய அரையினையுடைத்தாய்ப் புதுமை யுறக் கனிகின்ற மாவினையும், கொம்புறப் பழுத்துத் தேன்சொரி சுளையை இட்டனவாகிய பைம்புறப் பலவினையுமுடைத்தென்க. (கக)

870. கள்ள வானர முங்கன்னி யூகமும்
துள்ளு மாறொடு வேழத் தொகுதியும்
வெள்ளை யன்னமுந் தோகையும் வேய்ந்தவண்
உள்ளு மாந்தரை யுள்ளம் புகற்றுமே.

868. அள்ளுடை - அள்ளிக் கொள்ளுதலையுடைய. கயம் - குளம். கள் - தேன். கழுநீர் - செங்கழுநீர் மலர். பட்டம் - ஓடை; " தண்பட்ட மேவும் வயற்றஞ்சை " (தஞ்சைவாணன். 72). புள் - பறவை. கனியிற் பொலி புள்ளுடைச் சோலை என மாறியியைக்க. உள்ளுடை - இவைகளை உள்ளே உடைய. பொலிவிற்று - பொலிவினையுடையது.

869. செம்புறக்கனி வாழை - சிவந்த புறத்தையுடைய கனிந்த வாழைப்பழம்; செவ்வாழைப்பழம் எனப்படும். கோழரை - கொழுவிய அரையை யுடைய. வம்பு - புதுமை; வாசனையுமாம். மாத்தொடு - மாமரத் துடனும். பைம்புறம் - பசுமையான புறத்தை யுடைய. பலவிற்று - பலா மரத்தினையுடையது. கொம்புறப் பழுத்துத் தேன் சொரிகின்ற வார் சுளையை இட்டனவாகிய பைம்புறப் பலவிற்று என மாறியியைக்க. மு : சீவக. 1191.

870. கள்ளம் - திருட்டுத்தொழில். கன்னி ஊகம் - பெண்ணாகிய கருங்குரங்கு. வெள்ளையன்னம் : இனஞ்சுட்டிய பண்பு; சீவக. 930, ந. தோகை - மயில். வேய்ந்து - அணிந்து. அவண் - அப்பொழிலிடம்.

(இ - ள்.) அப்பொழிலிடம், வானரத்தையும் கருங்குரங்கையும் மானையும், வேழத்திரளையும் அன்னத்தையும் மயிலையுமணிந்து, துணையை நினைப்பாரை நெஞ்சை விரும்பப்பண்ணுமென்க. (உ0)

871. கோக்க ணங்கொதித் தேந்திய வேலென
நோக்க ணங்கனை யார்நுகர் வேய்தலின்
தாக்க ணங்குறை யுந்தடந் தாமரைப்
பூக்க ணம்பொழிற் பட்டது போன்றதே.

(இ - ள்.) அங்ஙனம் புகற்றுதலின் (சீவக. 870) வேலென நோக்குகின்ற நோக்கினையுடைய அணங்கனையார் கணவரிடத்து நுகர்ச்சியால் அவயவங்கள் [1] செவ்வி பெறுதலின் அவருறைவிடம், எல்லாரிடத்தினும் சென்றுசேரும் திருத் தங்கும் தாமரைப்பூக்கணம் ஓடையையொழிய ஒரு பொழிலிலேயுண்டான தன்மையையொத்ததென்க.

முகமுதலியன தாமரைக்கு உவமை. நோக்குதலால் அணங்கனையாருமாம். (உக)

872. கூறப் பட்டவக் கொய்ம்மலர்க் காவகம்
ஊறித் தேன்றுளித் தொண்மது வார்மணம்
நாறி நாண்மலர் வெண்மணற் றுய்நிழல்
தேறித் தெண்கயம் புக்கது போன்றதே.

---

உள்ளும் - தத்தம் துணையை நினைக்கின்ற. உள்ளம் புகற்றும் - மனத்தை விரும்பச் செய்யும்.

871. கோக்கணம் - அரசர் கூட்டங்களை. கொதித்து - கோபித்து. வேலென நோக்குகின்ற அணங்கனையாரென்றது மகளிரை. நுகர்வு - நுகர்ச்சி. ஏய்தலின் - பொருந்துதலால்; தாக்கணங்கு - எல்லாரிடத்திலும் சென்று தங்கும் திரு; சீவக. 1473. கணம் - கூட்டம். பொழிற் பட்டது - ஒரு சோலையில் உண்டான தன்மையை. மகளிர் அவயவங்களுக்குத் தாமரைப்பூக்கள் உவமை.

(உரை) [1] செவ்வி - அழகு; பரி. 12 : 21, பரிமேல்.

872. காவகம் - சோலையின் உள்ளிடம். தேன் - வைத்ததேன். தேன் ஊறித்துளித்து நாண்மலரினின்றும் வார்கின்ற மதுமணம் நாறி வெண்மணல் தாய் என மாறியியைக்க. தாய் - பரந்து. தேறி - தெளிந்து. தெண்கயம் - தெளிவுள்ள குளத்திலே. காவகம் கயம் புக்கது போன்றது. மு : "கயம்புக் கன்ன பயம்படு தண்ணிழல்", "கயங்கண் டன்ன......... பெருமரக்குழாம்" (மலைபடு. 47, 259-65); "அசோகந் தண்பொழில், மணிக்கயத் தியன்ற மறுவி றண்ணிழல்", "அழல்கண் ணகற்றி நிழன் மீக் கூரி, நீர்புக் கன்ன நீர்மைத் தாகி.........காவினு ளிரீஇ" (பெருங். 1. 40 : 121-2; 2. 13 : 17-29); "வெவ்வாறு மெனக்குளிர்ந்து வெயிலியங்கா வகையிலங்கும் விரிபூஞ்சோலை" (கம்ப. நாட விட்ட. 22)

**(இ - ள்.)** முற்கூறிய காவினுள்ளாகிய இடம், வைத்ததேன் ஊறித் துளித்துப் பூவினின்றும் வார்கின்ற மது மணநாறி மணல் தாய் நிழல் தெளிந்து இக்குளிர்ச்சியாலே கயத்திலே புக்கிருந்தாற்போன்றிருந்த தென்க. (உஉ)

873. காவிற் கண்டத் திரைவளைத் தாயிடை
மேவி விண்ணவர் மங்கையர் போன்றுதம்
பூவை யுங்கிளி யும்மிழற் றப்புகுந்
தாவி யந்துகி லாரமர்ந் தார்களே.

**(இ - ள்.)** பாலாவிபோலும் துகிலையுடைய குணமாலையும் சுரமஞ்சரியும் அந்த உள்ளாகிய காவிலே திரையை வளைத்து அதனுள்ளே மிழற்றப்புகுந்து அரமங்கையர்போன்று மேவியிருந்தாரென்க. (உங)

874. (க) பௌவ நீர்ப்பவ ளக்கொடி போல்பவள்
மௌவ லங்குழ லாள்சுர மஞ்சரி
கொவ்வை யங்கனி வாய்க்குண மாலையோ
டெவ்வந் தீர்ந்திருந் தாளிது கூறினாள்.

875. (உ) தூமஞ் சூடிய தூத்துகி லேந்தல்குற்
றமஞ் சூடிய வேற்றடங் கண்ணினாள்
நாமஞ் சூடிய நன்னுத னீட்டினாள்
காமஞ் சூடிய கண்ணொளிர் சுண்ணமே.

இவை இரண்டும் ஒரு தொடர்.

(க) எவ்வந்தீர்ந்திருந்தாள் - முன்பு ஒரு வெறுப்புமின்றியிருந்தவள்.

(உ) அல்குலிணையுடைய கண்ணினாள் - குணமாலை.

---

873. கண்டத்திரை - பல நிறத்தாற் கூறப்பட்ட திரை; சீவக. 647, அடிக். ஆயிடை - அதனுள்ளே. விண்ணவர் மங்கையர் - அரமங்கையர். பூவை - நாகணவாய்ப் பறவை; இப்பறவை பேசும் வன்மையுடையது. மிழற்ற - ஒலிக்க. ஆவியந்துகிலார் : குணமாலையும், சுரமஞ்சரியும். ஆவியந்துகில் - பாலாவியைப் போன்ற அழகிய ஆடை; சீவக. 67, அடிக்; 875. துகிலார் காவில் திரையை வளைத்து ஆயிடை விண்ணவர் மங்கையர் போன்று மேவியிருந்தார் என்க.

874. பௌவநீர்ப்பவளம் - கடல் நீரில் தோன்றிய பவளம். போல்பவளும், குழலாளுமாகிய சுரமஞ்சரி. எவ்வம் - வெறுப்பு. எவ்வந்தீர்ந்திருந்தாளென்றது சுரமஞ்சரியை; இது சுட்டுப்பெயர் மாத்திரையாய் நின்றது.

875. தூமம் - புகை. தாமம் - மாலை. அல்குலையும் தாமத்தையுமுடைய கண்ணினாள் : குணமாலை. நாமம் - பெயர். கண்ணினாளுடைய

(இ - ள்.) அங்ஙனமிருந்த காலத்தே குணமாலைபெயரைச் சுமந்த மாலையென்னுஞ்சேடி எல்லாரும் விரும்புந்தன்மையை மேற்கொண்ட சுண்ணத்தை நீட்டினாள்; அதுகண்டு கொடிபோல்பவள் குழலாள் சுரமஞ்சரி, அவள் குணமாலையுடனே இவ்வார்த்தையைக் கூறினாளென்க.

அது மேற்கூறுகின்றார். (உச - ரு)

876. சுண்ண மென்பதொர் பேர்கொடு சோர்குழல்
வண்ண மாலை நுசுப்பு வருத்துவான்
எண்ணி வந்தன கூறிவை யோவென
நண்ணி மாலையை நக்கன ளென்பவே.

(இ - ள்.) குழலினையும் நுசுப்பினையுமுடைய மாலாய், இவை சுண்ணமென்பதொரு பெயரை [1] ஏறட்டுக் கொண்டு நின்னை வருத்து வான் கருதி வந்தனவோ வென்றணுகி அவளைத்தான் நக்காள்; நக்கு, சொல்லின், என்னுடைய சுண்ணங்களைச் சொல்லாயெனச் சொன்னாளென்க. (உரு)

877. பைம்பொ னீளுல கன்றியிப் பார்மிசை
இம்ப ரென்சுண்ண மேய்ப்ப வுளவெனிற்
செம்பொற் பாவையன் னாய்செப்பு நீயெனக்
கொம்ப னாளுங் கொதித்திது கூறினாள்.

(இ - ள்) அதுகேட்ட குணமாலை, பாவையன்னாய் தேவருலகி னன்றி இவ்வுலகில் இவ்விடத்து என் சுண்ணத்தையொப்பன வேறு சில சுண்ணமுளவென்று அறிவோர்கூறின், நீயும் இப்பொழுது நின் சுண்ணத்தையும் இதற்கொக்குமென்று கூறுவாயாகவென்றுகூற, அது பொறாதே சுரமஞ்சரியும் கொதித்து இதனைக் கூறினாளென்க.

அது மேற்கூறுகின்றார். (உஎ)

---

நாமத்தைச் சூடிய நன்னுதல் - மாலை யென்னும் தோழி. காமம் - விருப்பம். சுண்ணத்தை நீட்டினாள்; சுண்ணம் - வாசனைப் பொடி.

876. பேர்கொடு - பெயரைக்கொண்டு. வண்ணம் - அழகு. சோர் குழலையும் நுசுப்பையுமுடைய மாலை; என்றது குணமாலையை விளித்தது. இவை - இச்சுண்ணம். 'மாலை, இவை சுண்ணமென்பதோர் பேர் கொடு வருத்துவான் எண்ணிவந்தனவோ வென நண்ணி, மாலையை நக்கனள்; கூறு' என மாறி முடிக்க. என்ப : அசை.

(உரை) [1] ஏறட்டுக்கொண்டு - மேற்கொண்டு; சீவக. 777, ந.

877. பொன் உலகன்றி - தேவருலகத்தில் மட்டும் அல்லாமல். இம்பர் - இவ்விடத்தில். ஏய்ப்ப உளவெனின் - ஒப்பனவாகிய வேறு சுண்ணம் உள்ளன என்று அறிஞர் கூறுவாரானால். பாவையன்னா யென்றது சுரமஞ்சரியை; விளி. செப்பு - உன் சுண்ணத்தை இதற்கு ஒப்பென்று கூறுவாயாக. கொம்பனாள் : சுரமஞ்சரி. கொதித்து - கோபித்து.

878. சுண்ணந் தோற்றனந் தீம்புன லாடலம்
எண்ணில் கோடிபொன் னீதும்வென் றூற்கென
வண்ண வார்குழ லேழையர் தம்முளே
கண்ணற் றூர்கமழ் சுண்ணத்தி னென்பவே.

தோற்றனம் : வினையெச்சமுற்று.

(இ - ள்.) சுண்ணந்தோற்றுப் புனலாடவுங்கடவேமல்லேம் ; மாற்றற்ற பொன் கோடியென்னுமிலக்கத்தை அருகனுக்குக் கொடுக்கக்கடவேமென்று கூறினாள் ; அங்ஙனங்கூறவே ஏழையரிருவரும் சுண்ணங்காரணத்தால் நட்புக்குலைந்தாரென்க. (உஅ)

(வேறு)

879. மல்லிகை மாலை மணங்கமழ் வார்குழற்
கொல்லியல் வேனெடுங் கண்ணியர் கூடிச்
சொல்லிசை மேம்படு சுண்ண வுறழ்ச்சியுள்
வெல்வது சூதென வேண்டி விடுத்தார்

கொல் - கொற்றொழில்.

(இ - ள்.) மாலையினையும் குழலினையுமுடைய இருவருங்கூடிச் சுண்ணத்தினது மாறுபாட்டிலே வெல்லுமது நமக்குச் சொல்லும்புகழ் மேம்படும் வெற்றியென்று அவ்வெற்றியை விரும்பி அவற்றைக்காட்டுதற்குப் போகவிட்டாரென்க. (உகூ)

880. இட்டிடை யாரிரு மங்கைய ரேந்துபொற்
றட்டிடை யந்துகின் மூடிய தன்பினர்
நெட்டிடை நீந்துபு சென்றனர் தாமரை
மொட்டன மென்முலை மொய்குழ லாரே.

878. தோற்றனம் - தோற்று. ஆடலம் - மூழ்க மாட்டேம். வென்றூற்குக் கோடிபொன் ஈதும் என என்று மாறியியைக்க. வென்றூற்கு - அருகதேவனுக்கு. என - என்று சுரமஞ்சரி கூறவே. ஏழையர் - குணமாலையும், சுரமஞ்சரியும். கண்ணற்றூர் - நட்புக்குலைந்தார். சுண்ணத்தின் - சுண்ணம்காரணமாக. சுண்ணத்தின் கண்ணற்றூர் என மாறுக.

879. குழலையுடைய கண்ணியர் : குணமாலையும் சுரமஞ்சரியும். சொல் இசை - சொல்லும் புகழ். சுண்ண உறழ்ச்சியுள் - சுண்ணங் காரணமாக வந்த மாறுபாட்டிலே. சூது - வெற்றியாகும் ; சூதாட்டத்தை ஜயமென்பது வடமொழி வழக்கு. சுண்ண உறழ்ச்சியுள் வெல்வது சொல்லிசை மேம்படு சூது என வேண்டி என மாறியியைக்க. வேண்டி - அவ்வெற்றியை விரும்பி.

880. இட்டிடை - சிற்றிடை ; குறள், 478. தட்டு - சுண்ணம் வைத்த தட்டு. மூடி - மூடிக்கொண்டு செல்ல. பினர் - பின்னே.

இட்டிடையார் - குணமாலையும் சுரமஞ்சரியும். இருமங்கையர் - [1] கனகபதாகையும் [2] மாலையும். மொய்குழலார் - சிலசேடியர்.

(இ - ள்.) இட்டிடையாருடைய மொய்குழலார், சுண்ணத்தினைத் தட்டிலேயிட்டுத் துகிலான்மூடிக்கொண்டு செல்ல அதன்பின்னே இரு மங்கையரும் அவை காட்டுதற்குக் கூடச்சென்றாரென்க. (௩௰)

(வேறு)

881. சீர்தங்கு செம்பொற் கொடிமல்லிகை மாலை சேர்ந்து
வார்தங்கு பைம்பொற் கழன்மைந்தர்கைக் காட்ட மைந்தர்
ஏர்தங்கு சுண்ண மிவற்றின்னலம் வேண்டின் வெம்போர்க்
கார்தங்கு வண்கைக் கழற்சீவகற் காண்மி னென்றார்.

சீர்தங்கு : அடை. செம்பொற்கொடி - கனகபதாகை. மாலையென்னும் பெயர்க்கேற்ப மல்லிகையடை கூறினார்.

(இ - ள்.) கொடியுமாலையுஞ்சேர்ந்து மைந்தர்கையிலே அவற்றைக் காட்ட, அவர் கூறுவார் : இவ்விரண்டும் நல்ல சுண்ணம் ; இவற்றின் நன்மை அறியவிரும்பிற் போரினையும் கையினையும் கழலினையுமுடைய சீவகனைக் காண்பீராகவென்றாரென்க. (௩௧)

882. வாண்மின்னு வண்கை வடிநூற்கடற் கேள்வி மைந்தர்
தாண்மின்னு வீங்கு கழலான்றனைச் சூழ மற்றப்
பூண்மின்னு மார்பன் பொலிந்தாங்கிருந் தான்வி சும்பிற்
கோண்மின்னு மீன்சூழ் குளிர்மாமதித் தோற்ற மொத்தே.

நெட்டிடை - நெடுந்தூரமான இடத்தை. நீந்துபு - நீந்தி ; சீவக. 858, அடிக். மொய்குழலார் - வேறு சில தோழியர். தாமரை மொட்டு நகிலுக்கு : சீவக. 2575. இட்டிடையாருடைய மொய்குழலார் தட்டில் மூடிச் செல்ல, அதன் பின்னர் இருமங்கையர் சென்றனர் எனமாறி முடிக்க.

(உரை) [1] கனகபதாகை : சுரமஞ்சரியின் தோழி. [2] மாலை : குணமாலையின் தோழி.

881. சீர்தங்கு - சிறப்புத் தங்கிய. செம்பொற்கொடி - கனகபதாகையென்னுந் தோழி. மல்லிகையை யணிந்த மாலை என்னுந் தோழி. கொடியும், மாலையும் சேர்ந்து என உம்மை விரிக்க. மைந்தர்கை - நகரில் இருந்த சில மைந்தர் கையில். காட்ட - சுண்ணத்தைக் காண்பிக்க. ஏர் - அழகு. நலம் வேண்டின் - நன்மையை அறிய விரும்பினால். கார் - மேகம். போரையும், கையையும், கழலையுமுடைய சீவகனை.

882. வடித்த நூல்களாகிய கடல்களின் கேள்வியையுடைய மைந்தர் ; என்றது சீவகனுடைய தோழரையும் தம்பியரையும் ; கழலான் - நந்தட்டன். அப் பூண்மின்னுமார்பன் : சீவகன் ; பூண் - ஆபரணம். பொலிந்து - பொலிவு பெற்று. கோள்மீனும், மின்னு மீனும் என மீனைக்

வாள் மின்னுதற்குக் காரணமான கை. மைந்தர் - தோழரும் நபுலவிபுலரும். [1] வீங்குகழல் : விகாரம். கழலான் - நந்தட்டன். அப் பூண் மின்னு மார்பனென்றது, முன்னிற்கவியில் [2] அவர் கூறிய சீவகனை.

(இ - ள்.) அப்பூண்மின்னுமார்பன், அவர் செல்கின்றபொழுது, மைந்தர் கழலான் இவர்கள் தன்னைச்சூழ அப்பொழிலிடத்தே பொலிவு பெற்று விசும்பிலே கோண்மீனும் மின்னுமீனும் சூழப்பட்ட மதித்தோற் றம் ஒத்திருந்தானென்க.

[3] ஞாயிறுபோல்வான் கலையைத்தோற்றுவிப்ப இருத்தலின், அவ னுக்கு ஈண்டு மதியை உவமை கூறினர்; "பான்மீ னடுவட் பான்மதி போல, இன்னகை யாயமோ டிருந்தோற் குறுகி" (சிறுபாண். 219-20) என்றார் பிறரும்.' இராகு கேதுக்களையொழிந்த ஏழுகோளுஞ் சூழப்பட்ட தொருமதி இல்பொருளுவமை. தோழர்நால்வரும் தம்பிமார்மூவரும் கோண்மீனுக்குவமை; மின்னுமீனுக்கு ஒழிந்த தோழருவமை. இனி, [4] ஞாயிறுந்திங்களுந்தனக்குவமையாதலின், ஒழிந்த ஏழுகோளுமாம். இனி, கழலானாகிய மார்பனென்பாருமுளர். (௩௨)

(வேறு)

883. (க) காளை சீவகன் கட்டியங் காரனைத்
தோளை யீர்ந்திட வேதுணி வுற்றநல்
வாளை வவ்விய கண்ணியர் வார்கழற்
றாளை யேத்துபு தங்குறை செப்பினர்.

கோளோடும் சேர்த்து உம்மை விரிக்க. கோள்மீன் - கோள்களாகிய மீன்கள்; 'ஈண்டுக் கோளென்றது, விளக்கமில்லாத இராகு கேது வென் னும் இரண்டும் நீக்கி நின்ற ஏழினும்' (பதிற். 14 : 3, உரை). மின்னு மீனென்றது மற்றைய நட்சத்திரங்களை. பூண்மின்னுமார்பன், மைந் தரும் கழலானும் தன்னைச் சூழ, ஆங்குப் பொலிந்து விசும்பில் கோளும் மீனும் சூழும் மதித்தோற்றமொத்து இருந்தான் என்க; மதுரைக். 769-70; பதிற். 90 : 17-8; புறநா. 396 : 26-7.

(மேற்.) அடி, 4 : மாறன். பொருளணி. 16.

(உரை) [1] வீக்குகழலென்பது வீங்குகழலென்றாயிற்று. [2] அவர் - நகரத்து மைந்தர். [3] (பி - ம்.) 'ஞாயிறுபோல அரசன்'. [4] புறநா. 59 : 6-7.

883. காளையாகிய சீவகன். ஈர்ந்திடவே - வெட்டுவதற்கென்றே. வாளின் தன்மையை வவ்விறுற் போன்ற கண்ணியரென்றது குண மாலையையும், சுரமஞ்சரியையும். தாளை - சீவகனுடைய பாதத்தை. ஏத்துபு - புகழ்ந்து.

884. (உ) சுண்ண நல்லன சூழ்ந்தறிந் தெங்களுக்
கண்ணல் கூறடி யேங்குறை யென்றலும்
கண்ணிற் கண்டிவை நல்ல கருங்குழல்
வண்ண மாலையி னீரெனக் கூறினான்.

இவை இரண்டும் ஒருதொடர்.

(க) செய்ந்நன்றியறிந்து கைம்மாறு செய்யக்கருதுதலும், பகைவர் செய்த தீங்குகுறித்து அவர்க்குத் தீங்குசெய்யக்கருதலும் அரசநீதி யென்பது தோன்ற, 'தோளையீர்ந்திடவே துணிவுற்றவாள்' என்றார்; "[1] ஆதியாயவரும்பகை நாட்டுதல்" (சீவக. 1920) என்றார்மேலும்.

(உ) 'இவைநல்ல' என்றது குணமாலை சுண்ணத்தை. அவர்க்கு இரண்டும் நன்றென்றாற்போலிருந்தது. [2] பலவுங்கூட இடித்தலின், இவையெனப் பன்மையாற் கூறினான்.

(இ - ள்.) கண்ணியர் அவன்றனை ஏத்தாநின்று, அண்ணலே, இச் சுண்ணங்களைச் சூழ்ந்தறிந்து இவற்றில் நல்லனவற்றை எங்கட்குக் கூறென்று தம்குறை செப்பினார்; அங்ஙனம் அடியேங்குறையிதுவென்று அவர்கூறின அளவிலே, கண்ணாலே பார்த்து, மாலையினீர், இவை நல்லனவெனக் கூறினானென்க. (௩௩ - ௪)

885. (க) மற்றிம் மாநகர் மாந்தர்க ளியாவரும்
உற்று நாறியுங் கண்டு முணர்ந்திவை
பொற்ற சுண்ண மெனப்புகழ்ந் தார்நம்பி
கற்ற தும்மவர் தங்களொ டேகொலோ.

884. சுண்ணம் நல்லன - இச் சுண்ணங்களில் நல்லனவற்றை. சூழ்ந்தறிந்து - ஆராய்ந்தறிந்து. அண்ணல்: சீவகன்; விளி. கூறு - கூறுவாயாக. நல்ல - நல்லன. குழலையுடைய மாலையினீர். கண்ணிற் கண்டு, மாலையினீர் இவை நல்லன எனக் கூறினான் என்க.

(உரை) [1] ஆதியாய பகை: சீவக. 820, அடிக். [2] 'நவமணிகளும், பொன்னும், சந்தனமும், கருப்பூர முதலியனவும் புழுகிலும் பனிநீரிலும் நனைய வைத்திடித்தலின், இடிக்க வல்லவர் பலரும் வேண்டிற்று' (மதுரைக். 399, ந.)

885. மற்று: அசை. நகரிலுள்ள மாந்தர்கள். உற்றும் - தொட்டும். நாறியும் - மோந்தறிந்தும். கண்டும் - கண்ணாற் பார்த்தும். உணர்ந்து - ஆராய்ந்து. பொற்ற சுண்ணம் - பொலிவுபெற்ற சுண்ணம். நம்பி: சீவகன்; விளி.

886. (உ) ஐய னேயறி யும்மென வந்தனம்
பொய்ய தன்றிப் புலமை நுணுக்கிநீ
நொய்திற் றேர்ந்துரை நூற்கட லென்றுதம்
கையி னுற்றெழு தார்கமழ் கோதையார்.

இவை இரண்டும் ஒருதொடர்.

(இ - ள்.) கோதையார், நின்னையொழிய மக்களெல்லாரும் தீண்டியும் மோந்தும் நோக்கியும் ஆராய்ந்து வேறுபாடு கூறாது இவை நல்ல சுண்ணமென்று புகழ்ந்துவிட்டார் ; நீ கற்றதும் அவர்தங்களுடனன்றே; ஆதலின், நூற்கடலே, இவற்றின் வேறுபாடு சீவகனேயறியுமென்று பிறர் கூறக்கேட்டு வந்தேம் ; அவர் கூறிய வார்த்தை மெய்யாம்படி நின்னறிவைக் கூரிதாக்கி ஆராய்ந்து கடிதாகவுரையென்று தொழுதாரென்க.

நாறியெனவே மோந்துணர்ந்ததாம். (ருரு - சு)

887. நல்ல சுண்ண மிவையிவற் றிற்சிறி
தல்ல சுண்ண மதற்கென்னை யென்றிரேற்
புல்லு கோடைய பொற்புடைப் பூஞ்சுண்ணம்
அல்ல சீதஞ்செய் காலத்தி னுயவே.

(இ - ள்.) இவை நல்ல சுண்ணம் ; இச்சுண்ணம் இவற்றிற் சிறிது நல்லவல்ல ; அதற்குக் காரணம் எங்ஙனேயென்று கேட்பீராயின், பொற்புடைச் சுண்ணமானவை கோடையிலிடித்தவை ; நல்லவல்லாதவை மாரியிலிடித்தவையென்றானென்க. (ருஎ)

888. வாரம் பட்டுழித் தீயவு நல்லவாம்
தீரக் காய்ந்துழி நல்லவுந் தீயவாம்
ஒரும் வையத்தி யற்கையன் றேவெனு
வீர வேனெடுங் கண்ணி விளம்பினுள்.

886. ஐயனே - சீவகனே. என - என்று பிறர் கூறக்கேட்டு. பொய்யது - பொய்ம்மை. புலமை நுணுக்கி - நின் அறிவைக் கூரிதாக்கி. நொய்தின் - விரைவாக. தேர்ந்து - ஆராய்ந்து. தேர்ந்துநொய்தின் உரை என மாறுக. நூற்கடலென்றது சீவகனை விளித்தது. கோதையார் - தோழியர்.

887. இவை நல்ல சுண்ணம் என்றது குணமாலையின் சுண்ணத்தை. அல்ல - நல்லன வல்லன. என்னை - என்ன காரணம். புல்லு - பொருந்திய. பொற்புடைச் சுண்ணம் கோடைய - நல்ல சுண்ணம் கோடைக்காலத்துச் செய்யப்பட்டன. அல்ல சீதஞ்செய் காலத்தினுய - நல்லவையல்லாத சுண்ணம் மாரிக்காலத்துச் செய்யப் பட்டன.

888. வாரம் - அன்பு. தீயவும் - தீங்குகளும். காய்ந்துழி - பகைத்திருந்த காலத்து. வாரம் பட்டுழி......தீயவாம் : " காமஞ் செப்பாது கண்டது மொழிமோ " (குறுந். 2 : 2); " காய்வதன்கண், உற்ற குணந்

நும்மிலே இதனை ஓர்ந்துபாருமென முன்னிலைப்பன்மையாக்கினர்; 'ஒரும்' என்னுமுற்றுச்சொல், "பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை" (தொல். வினை. 30) என்ற சூத்திரத்தில் விளக்கின நிகழ்கால உம்மீறன்றி எதிர்காலமுணர்த்தும் முன்னிலைப் பன்மையாகலின். இஃது [1] ஒருவரைக் கூறும் பன்மைக்கிளவி.

(இ - ள்.) கனகபதாகை ஒருவர்மேல் அன்புற்ற காலத்து அவர் செய்யும் தீங்குகளும் நல்லனவாம்; அன்பின்றி யிருந்தகாலத்து அவர் செய்யும் நன்மைகளும் தீயவாம்; இஃது உலகத்தியல்பன்றோ; இதனை நும்மிலே ஓர்ந்துபாருமென்று கூறிப் பின்னும் ஒருமொழி விளம்பினு ளென்க. (௲அ)

889. உள்ளங் கொள்ள வுணர்த்திய பின்னலால்
வள்ள னீங்கப் பெறுய்வலைத் தேனெனக்
கள்செய் கோதையி னுய்கரி போக்கினல்
தெள்ளி நெஞ்சிற் றெளிகெனச் செப்பினன்.

(இ - ள்.) வள்ளலே, என்னெஞ்சு நீ கூறிய தீங்குகளைக் கைக் கொள்ளும்படி அறிவித்தபின்னரல்லது போகப்பெறாய்; நின்னை யான் தடுத்தேனென்று அவள் விளம்பினுள்; அதுகேட்டு, அவனும் கோதை யினுய், [1] சான்றுலுணர்த்தினல் நெஞ்சாலே ஆராய்ந்து தெளிகவென்று கூறினனென்க.

போக்குதல், "நூலாற்போக்கினன்" என்றாற்போல உணர்த்தன் மேற்று. (௲௯)

890. கண்ணின் மாந்தருங் கண்ணிமை யார்களும்
எண்ணி னின்சொ லிகந்தறி வாரிலை
நண்ணு தீஞ்சொ னவின்றபுள் ளாதியா
அண்ண னீக்கினஃ தொட்டுவல் யானென்ருள்.

---

தோன்று தாகு முவப்பதன்கட், குற்றமுந் தோன்று கெடும்" (அறநெறிச். 23); "நெறிகெட வாரம் பட்டு நீதிமன் சொல்லக் கண்ட, அறிவுளோர்" (திருவால. 57 : 15). ஒரும் - உணர்ந்து பாரும். கண்ணி : கனக பதாகை.

(உரை) [1] தொல். கிளவி. 27.

889. உள்ளம் கொள்ள - என் மனம் ஏற்றுக்கொள்ளும்படி. வள் ளல் - சீவகன்; விளி. வலைத்தேன் - உன்னைச் சூழ்ந்து கொண்டேன். என - என்று கனகபதாகை கூற. கள் - தேன். கோதையினுய் என்றது கனகபதாகையை; விளி. கரி - சாட்சி. போக்கினல் - உணர்த்தினல். தெள்ளி - ஆராய்ந்து. நெஞ்சால் தெள்ளித் தெளிக எனச் செப்பினள் என்று மாறியியைக்க.

(உரை) [1] சான்று - சாட்சி.

890. கண்ணையுடைய மாந்தர். கண் இமையார் - தேவர். எண்ணின் - ஆராய்ந்தால். இகந்து - கடந்து. தீஞ்சொல் - இனிய சொல். நவின்ற - பயின்ற. புள் ஆதியா நீக்கின் என இயைக்க. அண்ணல் - சீவகன்; விளி. நீக்கின் - சுரமஞ்சரியின் சுண்ணத்தைக்

(இ - ள்.) அண்ணலே, எண்ணின், நின்சொல்லை மக்களினும் தேவரினும் கடந்தறிவாரில்லை ; ஆதலின், அவர்களையொழியத் தம்மினத்தில் ஒன்றை யொன்றழைத்த சொல்லையறிந்து அதிலே பயின்ற பறவை முதலாக இதனைத் தீதென்றுநீக்குமாயின், அதனைப் பொருந்துவே னென்றானென்க. (சo)

891. காவில் வாழ்பவர் நால்வ ருளர்கரி
போவர் பொன்னனை யாயெனக் கைதொழு
தேவ லெம்பெரு மான்சொன்ன வாறென்றாள்
கோவை நித்தில மென்முலைக் கொம்பனாள்.

நால்வரென்று உயர்திணையாற் கூறுதல், "ஒருவரைக் கூறும்" (தொல். கிளவி. 27) என்னுஞ் சூத்திரத்து ஒன்றென முடித்தலாற்கொள்க.

(இ - ள்.) அங்ஙனம் உடன்படுதலிற் சீவகனும், பறவைமுதலாக இதனைத் தீதென்று நீக்குமாயின் பொன்னனையாய், காவிலேவாழ்வன நான்கு சாதியுள, அவை நடுவாயுணர்த்துமெனக்கூற, கொம்பனாள், எம்பெருமான் அருளிச்செய்தபடியாமித்தன்மை ஆமென்றாளென்க.

"ஏவன் முரணும்" என்றாற்போல. (சக)

892. (க) மங்கை நல்லவர் கண்ணு மனமும்போன்
றெங்கு மோடி யிடறுஞ் சுரும்புகாள்
வண்டு காண்மகிழ் தேனினங் காண்மது
உண்டு தேக்கிடு மொண்மிஞிற் றீட்டங்காள்.

---

குற்றமுடையன வென்று நீக்குமானால். ஒட்டுவல் - மனம் பொருந்துவேன்.

891. கா - சோலை. நால்வர் உளர் - நான்கு சாதி உள்ளன. கரிபோவர் - அவை, சாட்சியாய் உணர்த்தும். போக்கல் - உணர்த்தல் ; சீவக. 889. பொன்னனையாய் - கனகபதாகாய் ; விளி. என - என்று சீவகன் கூற. ஏவல் - சொல்லல் ; சீவக. 907, 1547, 3036, ந. கோவை நித்திலம் - வடமாகிய முத்து மாலையையுடைய. கொம்பனாள் : கனக பதாகை. கொம்பனாள் கை தொழுது சொன்னவாறென்றாள் என மாறியியைக்க.

892. மங்கை நல்லவர் - மங்கைப் பருவத்தினையுடையவராகிய மகளிரது. இடறும் - திரிகின்ற. சுரும்புகாள் என்பதன் பின், 'மிஞிற்றீட்டங்காள்' என்பதனை இனம்பற்றி இயைத்துக் கொள்க ; மது - தேன். 'மது உண்டு மகிழ் வண்டுகாள்', 'மது உண்டு தேக்கிடும் தேனினங்காள்' எனத் தனித்தனிப் பிரித்தியைக்க. தேக்கிடுதல் : சீவக. 2495. வண்டும் தேனும் ஒரு குணத்தன ; "என்றன தேனின மிரங்கு வண்டொடு, சென்றன" (சீவக. 3034) ; மணி. 18 : 43. மிஞிறு - ஒருவகை வண்டு. சுரும்பும், மிஞிறும், வண்டும், தேனும் : சீவக. 3033, 3034.

893. (உ) சோலை மஞ்ஞை சுரமைதன் சுண்ணமும்
மாலை யென்னு மடமயில் சுண்ணமும்
சால நல்லன தம்முளு மிக்கன
கோல மாகக்கொண் டுண்மி னெனச்சொன்னான்.

இவை இரண்டும் ஒரு தொடர்.

கண்ணுமனமும்போன்று சேர்ந்து எங்கும் கடிதாக ஓடித் தட்டித் திரியும் சுரும்புகாள், மிஞிறுகாளென்க. மிஞிற்றிற் சுரும்பு சிறத்தலின், அதனை முற்கூறினார். கண்சென் றுழிச் செல்கின்ற மனத்தோடே உவமித்தலின் இது நிரனிறை ; இவை எல்லாமணத்திலும் செல்லும். மது வுண்டு மகிழ்கின்ற வண்டுகாள், மதுவுண்டு தேக்கிடுகின்ற தேன்காளென்க ; இவை நல்லமணத்தே செல்லும். சுரும்பு முதலியன கூறும் பாஷையைச் சீவகனுணர்ந்திருத்தலின் அதனால் அவற்றை அழைத்தானென்று கொள்க ; விக்கிரமாதித்தன் எறும்பின் பாஷையை யறிந்தானென்று கதை கூறுகின்றமையின். "தாதுண் டும்பி போதுமுரன் றுங்கு" (மதுரைக். 655) என்றும், "இரங்கிசை மிஞிறொடு தும்பிதாதாத" (கலித். 33) என்றுங்கூறுதலின், தும்பியது கிளையாம் இந்நான்குமென்க ; [1] "நண்டுந் தும்பியு நான்கறி வினவே, பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே" (தொல். மரபு. 31) என்று தும்பிக்குச் செவியின் றெனவே இவற்றிற்கும் செவியின்றாமாதலாலே வருத்தமிகுதியான் இவற்றை நோக்கி வாளாகூறியதன்றி வேறன்று; இவை ஈண்டுவந்து கரிபோதலில; கேள்வியில்லன வருதலென்னை ? என்பதுகடா ; அதற்கு விடை : ஆசிரியர், 'நண்டுந்தும்பியும்' என்று தும்பியைப் பின்வைத்தது, மேல் வருஞ்சூத்திரத்தின், "மாவு மாக்களு மையறி வென்ப" (தொல். மரபு. 32) என்ற ஐயறிவு இதற்குமேறுதற்கென்றுணர்க ; இதனை வாராததனால் வந்தது முடித்தலென்னுந் தந்திரவுத்தியாற்கொள்கவென்று ஆண்டு உரைகூறிப் போந்தாம் ; அதுவே ஆசிரியர் கருத்தென்பது [2] சான்றோருணர்ந்தன்றே, "பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த, தாதுண் பறவை பேதுற லஞ்சி, மணிநா யாத்த மாண்வினைத் தேரன்" (அகநா. 4) என்று அப்பொருடோன்றக் கூறியதென்றுணர்க. இக் கருத்தான் இவரும் [3] செவியுணர்வுண்டென்று கூறினார்.

---

(மேற்.) அடி, 2-3 : தொல். செய். 104, ந.; மு. கல். 'அருடருங்', 10-18, மயில்.

893. மஞ்ஞை சுரமை - மயில் போன்ற சாயலையுடைய சுரமஞ்சரி. மாலை - குணமாலை. சால - மிக. மிக்கன - மிக நல்லனவற்றை. கோலமாக - நல்லனவாக. உண்மின் - உண்ணுங்கள்.

(உரை) [1] இங்குக் கூறும் உரையாலும், "பல்காற் பறவை" (பெரும்பாண். 183) என்பதனுரையிற் காணப்படும் குறிப்புக்களாலும் இந்த இரண்டு நூல்களுக்கும் உரை செய்வதற்கு முன்னரே நச்சினார்க்கினியர் தொல்காப்பியத்திற்கு உரை செய்தனரென்று தெரிகிறது. [2] சான்றோரென்றது சங்கத்துப் புலவர்களை. [3] பெரும்பாண். 182-3, ந.

(இ - ள்.) அவள் அங்ஙனங் கூறுமளவில், சுரும்புகாள், மிஞிற்றீட்டங்காள், வண்டுகாள், தேன்காள், நீர் வம்மினெனவிளித்து, வந்த பின்னர் அவற்றைநோக்கி, சுரமஞ்சரிசுண்ணமும் குணமாலைசுண்ணமும் மிகவும் நல்லனவாயினும் இவற்றில் நல்லனவற்றை நன்றாகக் கொண்டு உண்மினென்று கூறினளென்க.

இங்ஙனங்கூறுது தான் கற்ற விஞ்சையின் ஆணையாற் கேள்வியுணர்வு பிறப்பித்தாளெனின், அவை கரிபோதலாகாவாம் ; " எண்ணினின்சொல்லிகந்தறி வாரிலை " (சீவக. 890) என்றலின். [4] வெருதிருத்தற்கு இருவரையும் மயிலென்றான். (௪௨ - ௩)

894. வண்ண வார்சிலை வள்ளல்கொண் டாயிடை
விண்ணிற் றூவியிட் டான்வந்து வீழ்ந்தன
சுன்ண மங்கை சுரமைய மாலைய
வண்ண வண்டொடு தேன்கவர்ந் துண்டவே.

(இ - ள்.) அங்ஙனங்கூறிய வள்ளல், இரண்டனையும் இரண்டு கையிலுங்கொண்டு ஆகாசத்தே தூவினுகை, அப்பொழுது அவற்றின் மேற்சென்ற சுரும்பும் மிஞிறும் இவை தீயவென்று உண்ணுதுபோதலின், சுரமைசுண்ணம் நிலத்தே வீழ்ந்தன. மாலைசுண்ணத்தை அவற்றின் மேற்சென்ற வண்டும் தேனும் விரும்பியுண்டனவென்க.

தூவியிட்டான் : ஒருசொல். சுரும்பும் மிஞிறும் ஒருகுணத்தவாதலின் சேர்ந்து ஒருகையை நோக்கின. மற்றையன ஒருகுணத்தவாதலின், சேர்ந்து மற்றைக் கையை நோக்கின. உண்ணுமல் வந்தவற்றிற்கு வையாமல் இவை உண்டலிற் கடிதுண்டனவென்பதுதோன்ற, ' கவர்ந்து ' என்றார். (௪௪)

895. தத்து நீர்ப்பவ ளத்துறை நித்திலம்
வைத்த போன்முறு வற்றுவர் வாயினீர்
ஒத்த தோவென நோக்கிநுந் நங்கைமார்க்
குய்த்து ரைம்மினிவ் வண்ண மெனச்சொனான்.

[4] சீவக. 895.

894. வள்ளல் : சீவகன் ; சீவக. 11, அடிக். ஆயிடை - அப்பொழுது. வள்ளல் சுண்ணத்தை அங்கையிற் கொண்டு விண்ணில் தூவியிட்டான் என மாறியியைக்க. சுரமைய வந்து வீழ்ந்தன என மாறிக்கூட்டுக. சுரமைய - சுரமஞ்சரியினுடைய சுண்ணம் ; வண்டுகள் உண்ணுமையின் கீழே விழுந்தன. மாலைய - குணமாலையினுடைய சுண்ணங்களை. வண்ணம் - நிறத்தையுடைய. கவர்ந்து - விரும்பி. வண்டு சுண்ணம் உண்ணுதல் : " அந்தர மருங்கின் வண்டுகை விடாஅச், சுந்தரப் பொடியுஞ் சுட்டிச் சுண்ணமும் " (பெருங். 1. 42 : 72-3)

(மேற்.) அடி, 2 : நன். வினை. 32, மயிலை ; சங்கர.

895. நீர் - கடல். பவளத்தே நித்திலத்தை வைத்தாற்போன்ற வாய் ; துவர் ஊட்டிய வாய் ; துவர் - செந்நிறம். பற்களுக்கு நித்திலமும், வாய்க்குப் பவளமும் உவமை. ஒத்ததோ - யான் முன்பு கூறியது

பவளத்தே உறைவன சில நித்திலத்தைக் கொண்டுவந்து வைத்தாற் போலும் வாயினீரென்க ; வேட்கைநிகழாதவிடத்தும் மகளிராயினுரைச் சிறப்பித்துக்கூறல் இயல்பென்பதுதோன்ற இருவரையும் சிறப்பித்துக் கூறினான். தான் நோக்கிய நோக்கந்தானே யான்கூறிய நடுவு நிலைமை நுமக்குப் பொருந்திற்றேவென்று கூறும்படியாக அவர்களைப் பார்த்தானென்க.

(இ - ள்.) அங்ஙனம் அவையுண்டபின்பு அவன் நோக்கி, வாயினீர், நங்கைமார்க்கு யான் [1]தேற்றினமுறைமையை மனங்கொள்ளும்படி கூறுவீரென்றானென்க. (சரு)

896. நீல நன்கு தெளித்து நிறங்கொளீஇக்
கோல மாக வெழுதிய போற்குலாய்
ஞாலம் விற்கும் புருவத்து நங்கைகண்
போலும் வேலவ னேபுகழ்ந் தேனென்றாள்.

(இ - ள்.) நீலமணியைக் கரைத்து நிறங்கொளுத்தி எழுதினாற்போல வளைந்து உலகைத் தமக்கு விலையாக விற்கும் புருவத்தினையுடைய சுரமஞ்சரி கண்போல் தப்பாத வேலவனே, நீ தேற்றினமுறைமையை யான் உடம்பட்டுப் புகழ்ந்தேனென்றாளென்க.

இஃது [1]இவற்கு வேட்கைநிகழ்வது கருத்தாகக் கூறினாள் ; அது மேல், "என்மனத்தினுள்ளன" (சீவக. 2006) என்பதனானுணர்க. (சசு)

(வேறு)

897. சோலையஞ் சுரும்பிற் சுண்ணந் தேற்றிய தோன்ற றன்னை
வேலையம் படுத்த கண்ணார் தொழுதனர் விரைந்து போகி
மாலைக்கு வென்றி கூற மழையிடிப் புண்டோர் நாகம்
ஆலையத் தழுங்கி யாங்கு மஞ்சரி யவல முற்றாள்.

---

பொருந்திற்றே. உய்த்து - மனம் கொள்ளும்படி. இவ்வண்ணம் - யான் இவ்விதம் சுண்ணத்தை ஆராய்ந்தமையை. நும் நங்கைமார்க்கு இவ்வண்ணம் உய்த்து உரைமின் என மாறியியைக்க.

(உரை) [1] தெளிவித்த முறைமையை.

896. நீலம் - நீலமணி. தெளித்து - கரைத்து ; சீவக. 371, 1003, ந. கொளீஇ - பொருத்தி. கோலம் - அழகு. குலாய் - வளைந்து. ஞாலம் விற்கும் - பூமியை விலையாக விற்கும். நங்கை : சுரமஞ்சரி. வேலவன் : சீவகன். கண்ணுக்கு வேலுவமை ; "வீர வேனெடுங் கண்ணி", "வேலையம் படுத்த கண்ணார்" (சீவக. 888, 897). புகழ்ந்தேன் - நீ சுண்ணத்தைத் தெளிவித்த முறையைப் புகழ்ந்தேன். இது குணமாலை கூற்று.

(உரை) [1] இவற்கு - சீவகனுக்கு.

897. சுரும்பிற் சுண்ணம் தேற்றிய - சுரும்பினாலே சுண்ணத்தின் குற்றத்தைத் தெளிவித்த. தோன்றல் - சீவகன். வேல் ஐயம்படுத்த கண் - வேலோ இது என்று ஐயப்படுத்திய கண். தொழுதனர் - தொழுது ; முற்றெச்சம். மாலைக்கு - குணமாலைக்கு. மழை - மேகம்.

சுரும்பு உண்ணுதுபோகவே சுண்ணத்தின் தீங்கு வெளிப்படலின், அதனுல்தேற்றியவென்ருர். இது [1]வெதிரேகம். மிஞிற்றிற் சுரும்பு சிறத்தலின், அதனைக் கூறினுர் ; [2]முன்னும் அதுநோக்கியன்றே கண் சென்றுழிச் செல்கின்ற மனத்தோடே அதனை உவமித்தது. முன்னர் (சீவக. 894) வண்டுந்தேனுமுண்ட வென்றது [3]அந்நுவயம்.

(இ - ள்.) சுரும்பால் தேற்றிய தோன்றலை வேலோவென்று ஐயப் படுத்தின கண்ணுர் தொழுதனராய் விரைந்துபோய்க் குணமாலைக்கு வென்றிகூற, அதுகேட்டுச் சுரமஞ்சரி ஒருநாகம் இடிப்புண்டு தானுறை கின்றவிடத்தே வருந்துகின்றுற்போல வருத்தமுற்றுளென்க.

ஆலயம் கன்னியாமாடத்திற்குவமை. (சஎ)

(வேறு)

898. திங்க ளங்கதிர் செற்றுழக் கப்பட்ட
பங்க யப்படு வொத்துளை பாவாய்
நங்கை யென்னெடுரை யாய்நனி யொல்லே
இங்க ணென்றடி வீழ்ந்திரந் திட்டாள்.

(இ - ள்.) திங்களின் கதிருழக்கப்பட்ட தாமரைமடுவையொத்து இவ்விடத்தே மிகவும் வருந்துகின்ற பாவாய், நங்காய், கடுக என்னுடனே முன்புபோலே நகையாடி உரையாயென்றிரந்தாள் குணமாலையென்க.

ஒத்துளை - ஒத்தாயென்றுமாம். (சஅ)

899. மாற்ற மொன்றுரை யாண்மழை வள்ளலென்
ஏற்ற சுண்ணத்தை யேற்பில வென்றசொற்
ருேற்று வந்தென் சிலம்படி கைதொழ
நோற்ப ணேற்றனை நீயென வேகினுள்.

நாகம் - பாம்பு. ஆலயம் - தான் உறைகின்ற இடம். அழுங்குதல் - வருந்துதல் ; இடியுண்ட நாகம் போல் வருந்துதல் ; "இடிகடவழ்ந் திட்டபட நாகமென வீழ்ந்தாள்" (சீவக. 1798) ; "இடியே றுண்ட நாகம் போலக், கொடியேர் சாயற் கொழுங்கவின் வாட" (பெருங். 2. 10 : 112 - 3). மஞ்சரி - சுரமஞ்சரி. அவலம் - வருத்தம்.

(உரை) [1]வெதிரேகம் - எதிர்மறை. [2]சீவக. 892. [3]உடன்பாட்டாற் கூறல்.

893. திங்களங்கதிர் - சந்திரனுடைய கிரணம். செற்று - கோபிக் கப்பட்டு. பங்கயப்படு - தாமரைமடு ; படு - மடு ; "தோட்டமும் படுவும்" (பெருங். 1. 49 : 26). உளைபாவாய் - வருந்துகின்றபாவை போல்வாய் ; என்றது சுரமஞ்சரியை. நங்கை : சுரமஞ்சரி ; விளி. நனி ஒல்லே - மிக விரைவாக. நனி ஒல்லே என்னெடுரையாய் என மாறுக. இங்கண் - இவ்விடம். இரந்திட்டவள் குணமாலை.

899. மாற்றம் - மறு வார்த்தை. மழை வள்ளல் : வஞ்சப்புகழ்ச்சி ; சீவக. 13, ந; "அறுகுளத் துகுத்து மகல்வயற் பொழிந்தும்,

(இ - ள்.) நின்மேல்விருப்பினால் எனது நல்ல சுண்ணத்தைத் தீதென்ற [1]வாசியறியாதான், இனி என்னையும் விரும்பித் தானேவந்து அக்காலத்துச் சொல்லுஞ்சொல்லுட்படத் தோற்றுச்சொல்லி என்னடியைத் தொழும்படி நோற்பேன்; அவன் நின்னை விரும்புதற்கு நீ முன்னேநோற்றாயென்று தன் குறிப்புக்கூறும்படி குணமாலையை நோக்கி அவளுரையாயென்றதற்குத் தானுரையாளளாய் ஏகினாளென்க.

இஃது உட்கோள். "பெருமையு முரனு மாடூஉ மேன" (தொல். களவு. 7) என்பதனால் தன் வேட்கை [2]மறைத்தான். "தீண்டிலே னுயிரி னுய்யேன், சீறடி பரவ வந்தே னருளெனத் தொழுது சேர்ந்து" (சீவக. 2062) என மேற்கூறலின், ஈண்டுச் சொற்றோற்று அடிதொழுவென்று கருதினாளென்றார். இக்கருத்து, அங்ஙனமுடிக்கின்ற [3]ஊழால் இவட்கு நிகழ்ந்தது. (சகூ)

900. கன்னி மாநகர்க் கன்னியர் சூழ்தரக்
கன்னி மாட மடையக் கடிமலர்க்
கன்னி நீலக்கட் கன்னிநற் றாய்க்கவள்
கன்னிக் குற்றது கன்னியர் கூறினார்.

(இ - ள்.) அங்ஙனமேகிய புதிய நீலமலர்போலுங் கண்ணினையுடைய கன்னி, கன்னியர்சூழச்சென்று அழிவில்லாத நகரிற் கன்னிமாடத்தைச் சேர்ந்தாளாக, அவள்நற்றாயாகிய சுமதி நீராடாது வருதற்குக் காரணங் கேட்டவட்கு அக்கன்னிக்குப்பிறந்த வருத்தத்தைச் சூழ்ந்துநின்ற அக்கன்னியர் கூறினாரென்க.

அவள் நற்றாய்க்கென்க. (௬௦)

---

உறுமிடத் துதவா துவர்நில மூட்டியும், வரையா மரபின் மாரி போல" (புறநா. 142 : 1-3). வள்ளல் - சீவகன். ஏற்ற - நல்ல. ஏற்பில என்ற சொல் - நல்லவையல்ல என்று கூறிய சொல்லை. தோற்று - தோற்றுச் சொல்லி. என் அடியைச் சீவகன் கைதொழ நோற்பல். நோற்பல் - யான் தவம் செய்வேன். நீ நோற்றனை - அவன் விரும்பும் வண்ணம் நீ முன்பே தவம் செய்தனை. மாற்றம் உரையாளாகி ஏகினாளென்க.

(உரை) [1]வாசி - வேறுபாடு. [2](பி - ம்.) 'மறைத்தலால் தன் மேனி தோன்றி நில்லாது குறைந்து.' [3]ஊழால் - ஊழ்வினையால்.

900. கன்னிமா நகர் - அழிவில்லாத பெரிய நகரம். கன்னியர் - தோழியர். கன்னிமாடம் : சீவக. 13, 714 அடிக். கன்னிநீலக் கடிமலர்க் கட்கன்னி - புதிய நீலமாகிய வாசனையையுடைய மலர்போலும் கண்ணை யுடைய சுரமஞ்சரி. கன்னி, கன்னியர் சூழ்தர நகரில் கன்னிமாடத்தை அடைய என மாறியியைக்க. அவள் நற்றாய்க்கு - சுரமஞ்சரியினுடைய நற்றாயாகிய சுமதிக்கு. கன்னிக்கு - சுரமஞ்சரிக்கு. கன்னியர் - தோழியர்.

901. (க) கண்கள் கொண்ட கலப்பின வாயினும்
பெண்கள் கொண்ட விடாபிற செற்றமென்
றொண்க ணாளவ டாயவ டந்தைக்குப்
பண்கொ டேமொழி யாற்பயக் கூறினாள்.

902. (உ) விண்ணிற் றிங்கள் விலக்குதன் மேயினார்
எண்ண நும்மக ளெண்ணமற் றியாதெனிற்
கண்ணி னாடவர்க் காணினுங் கேட்பினும்
உண்ண லேனினி யென்றுரை யாடினாள்.

903. (ங) இன்று நீர்விளை யாட்டினு ளேந்திழை
தொன்று சுண்ணத்திற் றோன்றிய வேறுபா
டின்றெ னாவிக்கோர் கூற்ற மெனநையா
நின்று நீலக்க ணித்திலஞ் சிந்தினாள்.

இவைமூன்றும் ஒருதொடர்.

(க) பெண்கள் சாதிப்பன்மையுணர்த்திற்று.

(உ) மற்று : அசை.

(ங) தொன்றுவேறுபாடு - ஊழினால் வந்த வேறுபாடு.

(இ - ள்.) ஒண்கணாளாகிய அவளுடைய தாய், கண்கள் ஒன்றன் குறிப்பினை ஒன்று தப்பாமற்கொண்ட கலப்பினவாயினும் வேறாகப் பெண்கள் தம் மனத்திற்கொண்ட செற்றங்களைவிடாவென்று தானுட் கொண்டு, அவள் தந்தை குபேரதத்தனுக்கு நும்மகளெண்ணம் விண்

901. கொண்ட - குறிப்பினைக்கொண்ட. பெண்கள் கொண்ட செற்றம்விடா - பெண்கள் தம் மனத்திற் கொண்ட கோபத்தை விடா. பிற - வேறாக. என்று - என்று தன் மனத்தில் எண்ணி. ஒண்கணாளவள் தாய் - ஒளி பொருந்திய கண்களையுடைய சுரமஞ்சரியினுடைய தாயாகிய சுமதி; எழுவாய். அவள் தந்தைக்கு - சுரமஞ்சரியினுடைய தந்தையாகிய குபேரதத்தனுக்கு; இவன் வணிகன். பண்கொள் தேமொழியால்- பண்ணின் தன்மைகொண்ட இனிய மொழிகளால்; "பண்கொண்ட சொல்லார்" (சீவக. 2353). பய - மெல்ல.

902. விண்ணில் உலாவும் திங்களை. மேயினாருடைய எண்ணத்தைப் போன்றது, நும்மகளுடைய எண்ணம். மற்று : அசை. யாதெனின் - அஃது எதுவென்றால். கண்ணின் - தன் கண்களால். கேட்பினும் - ஆடவர் பெயரைக் காதாற் கேட்டாலும். உண்ணலேன் - உண்ண மாட்டேன். உரையாடினாள் - வஞ்சினம் கூறினாள்.

903. ஏந்திழை : சுரமஞ்சரி. சுண்ணத்திற் றோன்றிய தொன்று வேறுபாடு என மாறியியைக்க. இன்று என் ஆவிக்கு எனப் பிரிக்க. நையா நின்று - வருந்தி நின்று. நீலக்கண் நித்திலம் - நீலமலர்போன்ற கண்ணினின்றும் நீர்த்துளியாகிய முத்தை.

ணிலே திரியுந் திங்களைத் திரியாமல் விலக்குதலைமேவினுரெண்ணமா யிருந்தது; அஃது யாதெனின், ஆடவரைக் கண்ணுற்காணினும் அவர் பெயரைச் செவியாற் கேட்பினும் உண்ணேனென்று வஞ்சினங்கூறினு ளாதலால். இன்று நீர்விளையாட்டிலே ஏந்திழை சுண்ணத்தாற்றோற்றிய தொன்றுவேறுபாடு இன்று என்னுவிக்குக் கூற்றுமென்று நையாநின்று தேமொழியாலே மனங்கொள்ள அறிவித்தாள்; அங்ஙனமறிவித்து அழுதாளென்க. (௯௧-௩)

(வேறு)

904. பட்டதெ னங்கைக் கென்னப் பாசிழைப் பசும்பொ னல்குல், மட்டவிழ் கோதை சுண்ண மாலையோ டிகலித் தோற்ருள், கட்டவிழ் கண்ணி நம்பி சீவகன் றிறத்திற் காய்ந்தாள், அட்டுந்தே னலங்கன் மார்ப வதுபட்ட தறிமோ வென்ருள்.

(இ - ள்.) அதுகேட்டு, நங்கைக்கு இங்ஙனம் வருந்துதற்குப் பிறந்தது என்னென்று குபேரதத்தன் கேட்பச் சுமதி கூறுவாள்; அலங் கன் மார்பனே, சுரமஞ்சரி குணமாலையுடனே இகலிச் சுண்ணந்தோற் ருள்; தோற்றவள்தான் அதனைத் தேற்றின நம்பி சீவகன்திறத்தாலே ஆடவரைக் காய்ந்தாள்; பிறந்த காரியம் அது; அதனை அறிவாயாக வென்ருளென்க. (௯௪)

905. பள்ளிகொள் களிறு போலப் பரிவுவிட் டுயிர்த்தென் பாவை, உள்ளிய பொருண்மற் றஃதே லோபெரி துவப்பக் கேட்டேன், வள்ளிதழ்க் கோதை மற்று நகரொடுங் கடியு மேனும், வெள்ளநீ ணிதியி னின்னே வேண்டிய விளைப்ப லென்றுன்.

---

904. பட்டது - நடந்த காரியம். 'நங்கைக்குப் பட்டது என் என்ன' என்று மாறியியைக்க. என்ன - என்று குபேரதத்தன் கேட்ப. பசும்பொன் பாசிழை - பசும்பொன்னுலாகிய பசுமையையுடைய ஆப ரணம். அல்குல் : சுமதி; ஆகுபெயர். கோதை : சுரமஞ்சரி. மாலை - குணமாலை. இகலி - மாறுபட்டு. கோதை மாலையோடு இகலிச் சுண்ணத் தில் தோற்ருள் என மாறியியைக்க. கட்டு அவிழ் - பூக்கள் முறுக்கு அவிழ்கின்ற. நம்பியாகிய சீவகன் திறத்தில். காய்ந்தாள் - கோபங் கொண்டாள். தேன் அட்டும் - தேனைச் சொரிகின்ற. பட்டது அது - நடந்த காரியம் அது. அறிமோ - அறிவாயாக; மோ : அசை.

905. பள்ளிகொள் - உறக்கம் கொள்ளும். பரிவு - துன்பம். உயிர்த்து - பெருமூச்செறிந்து; "பள்ளி யானையின் வெய்ய வுயிரினை" (நற். 253 : 2); "பள்ளி யானையி னுயிர்த்து" (குறுந். 142 : 4). உள் ளிய பொருள் - கருதிய காரியம். அஃதேல் - அதுவானால். ஓ : உவகைக் குறிப்பு. கோதை : சுரமஞ்சரி. மற்று : அசை. நகரொடுங் கடியுமேனும் - நகருள்பட ஆடவர் வராமல் தடுத்து நீக்க வேண்டுவாளாயினும். வெள்ளம் : ஒரு பேரெண். இன்னே - இப்பொழுதே. விளைப்பல் - முடிப்பேன்.

மற்று : வினைமாற்று. ஒ : மகிழ்ச்சிக்குறிப்பு.

(இ - ள்.) அதுகேட்டவன், துயில்கொள்ளும் யானைபோல வருத்தந் தோன்ற உயிர்த்தனனாய் என்பாவை நினைத்தகாரியம் வேறொன்றன்றி அத்தன்மையாயின், மிகப்பெரிதும் மனமகிழக்கேட்டேன் ; அக்கோதை தெருவினன்றி நகரினுமுட்பட ஆளைக்கடியுமேனும் வெள்ளமென்னு மெண்ணையுடைய நிதியாலே அவள் விரும்பியவற்றை இப்பொழுதே முடிப்பேனென்றானென்க. (௫௫)

906. இன்னதோர் காலத் தின்னா னொருமக ளின்ன தொன்றிற்
கின்னதோ ரிடத்தி னெல்லை யாட்கடிந் தொழுகி னாள்போல்
இன்னதோர் நகரி லென்றாங் கென்பெயர் நிற்க வேண்டும்
இன்னதோ ராரந் தம்மோ வென்றுகொண் டேகி னானே.

இதனால், [1]அதுவேயன்றிப் புகழும் நிறுத்துவேனென்கின்றான். [2]போல் : ஒப்பில்போலி ; "ஆங்க வுரையசை", "ஒப்பில் போலியு மப்பொருட்டாகும்" (தொல். இடை. 29, 30) என்றதனால் உரையசை யின்பொருளுணர்த்துமாயிற்று. ஆங்கென்றது அரசனிடத்தை.

(இ - ள்.) இத்தன்மைத்தானதொருகாலத்தே இன்னவணிகனுடைய ஒப்பில்லாத மகள் இத்தன்மையதொருகாரியத்திற்கு ஒரு தெருவிடத்தி னெல்லையில் ஆடவர் வாராமற் கடிந்தொழுகினாள், இத்தன்மைத்தான நகரிலேயென்று என்புகழ் நிற்கவேண்டும் ; விலையில்லாததோராரத்தைத் தருவாயாகவென்று கூறி, அதனை வாங்கிக்கொண்டு ஆங்கேகினானென்க.

"நல்லெயி லுழந்த செல்வர்த் தம்மின்" (மதுரைக். 731) என்றார் பிறரும். (௫௬)

907. வையக மூன்றும் விற்கு மாமணி யார மேந்திச்
செய்கழன் மன்னற் குய்த்துத் தன்குறை செப்ப லோடும்
ஐயென மன்ன னேவ வாள்வழக் கற்ற தென்ப
கைபுனை பாவை யெல்லாங் கதிர்முலை யாக்கி னானே.

---

906. இன்னான் - இன்ன வணிகனுடைய. ஒரு மகள் - ஒப்பற்ற பெண். இன்னது - இத்தன்மையதான. எல்லை ஆட்கடிந்து - எல்லையில் ஆடவரை வராமல் நீக்கி. நகரில் என் பெயர் நிற்க வேண்டும் என மாறியியைக்க. பெயர் - புகழ்; சீவக. 207, ந. ஆரம் - மாலை. தம்மோ - தருவாயாக ; வினைத்திரிசொல் ; சீவக. 1079, 1407 ; கலித். 92 : 62, ந. ஆங்கு ஏகினான் - அரசனிடம் சென்றான்.

(உரை) [1] ஆடவரைக் கடிதலேயன்றி. [2] ஒப்பில் போலி : சீவக. 211, அடிக்.

907. மணி ஆரம் - மாணிக்கமாலை; முத்துமாலையுமாம். செய்கழல் - தொழிலழகு பெற்ற வீரக்கழல் ; சீவக. 611, அடிக். மன்னற்கு - அரசனாகிய கட்டியங்காரனுக்கு. உய்த்து - மாலையைக் கொடுத்து. ஐயென -

(இ - ள்.) ஆரம் ஏந்திக்கொண்டுசென்று மன்னனுக்குக் கொடுத்துத் தன் காரியத்தைச் சொன்னுனக, அவன் அது குறையில்லையென்றுகூறு தலின், தெருவில் ஆள்வழங்குதலற்றது; அப்பொழுது அம்மாடத்தில் ஆண்பாவைகளெல்லாமழித்துப் பெண்பாவையாக்கினனென்க. (௬எ)

(வேறு)

908. சென்று காலங் குறுகினுஞ் சீவகன்
பொன்றுஞ் சாகம் பொருந்திற் பொருந்துக
அன்றி யென்னிறை யாரழிப் பாரெனு
ஒன்று சிந்தைய ளாகி யொடுங்கினள்.

(இ - ள்.) வாழ்நாள் தன்னெல்லையைச்சென்று குறுகிற்றாயினும் என்னைக் கூடுமாயிற் சீவகனது திருத்தங்கும் மார்பம் கூடுவதாக; அவனையொழிய என் நிறையை அழிப்பாரில்லையென்று ஒருமனத்தை யுடையளாயிருந்தாளென்க. (௬அ)

909. இன்பக் காரண மாம்விளை யாட்டினுள்
துன்பக் காரண மாய்த்துறப் பித்திடும்
என்ப தேநினைந் தீர்மலர் மாலைதன்
அன்பி னுலவ லித்தழு திட்டாள்.

உள்ளென்றது இருவர்மனமும் ஒன்றாய்நடக்கின்ற கடுநட்பினை.

(இ - ள்.) குணமாலை, இன்பத்துக்குக் காரணமாம் கடுநட்புத்தானே பகைக்கும் காரணமாய், ஒருவிளையாட்டினால் நட்பினைத் துறப்பிக்கு மென்கின்ற பழவார்த்தையையே நினைந்து வருந்தி அழுதாளென்க.

---

அவ்விதமே ஆகுக என்று. ஏவ - சொல்ல; சீவக. 891, அடிக். ஆள் வழக்கு அற்றது - ஆடவர் வழங்குதல் நீங்கியது. பாவை - ஆண்பாவை களை. முலையாக்கினன் - பெண் பாவையாகச் செய்தான். பாவை இரு பாற்கும் பொதுவாதல் : சீவக. 699, ந.

906-7. மு : "புள்ளு மாவு முள்ளுறுத் தியன்ற, ஆண்பெயர்க் கிளவி நாண்மகிழ் சடவ, வழுக்கிக் கூறினும் வடுவென நாணி" (பெருங். 1. 36 : 278-80.)

908. காலம் - வாழ்நாள். பொன் துஞ்சு ஆகம் - திருமகள் தங்கும் மார்பு; சீவக. 14, அடிக்; 1922. சீவகனுடைய ஆகம். பொருந்தின் - என்னைக் கூடுமானல். பொருந்தின் சீவகன் ஆகம் பொருந்துக என மாறியியைக்க. அன்றி - அவனை அல்லாமல். நிறை - மனத்தைக் கற்பு நெறியில் நிறுத்தல்; சீவக. 710, அடிக். நிறையை யார் அழிப்பார். எனு - என்று. ஒன்று சிந்தையளாய் - ஒருப்பட்ட மனமுடையவளாகி. ஒடுங்கினள் - அடங்கியிருந்தாள்.

909. இன்பக்காரணமாம் உள் - இன்பத்துக்குக் காரணமாகிய நட்பு. துன்பக் காரணமாய் - துன்பத்துக்குக் காரணமாய். விளையாட் டினால். துறப்பித்திடும் - நட்பினை நீக்கிவிடும். ஈர்மலர் மாலை - குளிர்ச்சி பொருந்திய மலரையணிந்த குணமாலை; எழுவாய்; மாலை என்றதற் கேற்ப மலர்கூறினர்; சீவக. 881, ந. அவலித்து - வருந்தி. அழுதிட் டாள் : ஒருசொல்.

அது [1] ‘கடுநட்புப்பகைகாட்டும்’ என்னும் பழமொழி. இனி, விளையாட்டினுள் அவ்விளையாட்டுத்தானே துன்பக்காரணமாய் இன்பத்தைத் துறப்பிக்குமென்ற பழமொழியுமாம். அது, ‘விளையாட்டே [2] சலமாம்’ என்னும் பழமொழி. (கூ)

910. தண்ண நீம்புன லாடிய தண்மலர்
வண்ண வார்தளிர்ப் பிண்டியி னடிக்
கெண்ணி யாயிர மேந்துபொற் றமரை
வண்ண மாமல ரேற்றி வணங்கினள்.

எண்ணி - இந்நட்பினைப்பிரித்த தீவினை நீங்கும் வழி இதுவென் றெண்ணி.

(இ - ள்.) அங்ஙனம் வருந்தினவள், புனலாட்டுவேண்டி எண்ணிப் பிண்டியினனடிக்கு ஆயிரம்பொற்றமரையையும் ஒழிந்த மலரினையு மேற்றி வணங்கினளென்க.

புனலாடப்போகின்றவள் இப்பிரிவிற்குப் பிராயச்சித்தம் பண்ணினள். (சுo)

911. ஆசை மாக்களொ டந்தணர் கொள்கென
மாசை மாக்கடன் மன்னவ னுடலின்
மீசை நீள்விசும் பிற்றலைச் சென்றதோர்
ஓசை யாற்சன மொண்ணிதி யுண்டதே.

மாசை - பொன். ஆடுதல் - பிறத்தல். மிசை மீசையென விகாரம். “உண்டற் குரிய வல்லாப் பொருளை, உண்டன போலக் கூறலு மரபே” (தொல். பொருளியல், 19) என்றதனால் உண்டதென்றார்; “குணனுணப் பட்டோர்” (கலித். 23) என்றாற்போல.

---

(உரை) [1] ‘கடுங்காற்று மழைகாட்டும்; கடுநட்புப் பகைகாட்டும்’ என்பது பழமொழி. [2] சலம் - கோபம்; ‘விளையாட்டே வினையாம்’ என்பது.

910. தண் - குளிர்ச்சி; அம் : அசை. புனலாடிய நீரில் மூழ்க வேண்டி. ஆடிய எண்ணி என இயைக்க. மலரையும் தளிரையுமுடைய பிண்டி. பிண்டியினன் - அருகன்; பிண்டி - அசோகமரம். “பூம்பிண்டிப் பெருமானடிகள்” (சீவக. 311); “கடிமலர்ப் பிண்டிக்கண் ணார் நிழற்கீழ், எந்த மடிகள்” (யா. கா. 1). ஏந்து - உயர்ந்த. ஆயிரம் பொற்றமரையையும் (வேறு) மலர்களையும் ஏற்றி.

911. ஆசை மாக்கள் - ஆதுலர். மாசை மாக்கடல் - பொற்கடல்; மிகுதி பற்றி, ‘கடல்’ என்றார்; “ஆசை மாக்களொ டந்தணர் கொள்

(இ - ள்.) மாக்களோடு அந்தணரும் கொள்வாராகவென்று மன்னவன் பெரியதொரு கடலுகப் [1] பொன்னிலே பிறத்தலின், அச்சனம் விசும்பிடத்திலே சென்றதோரோசையோடே அந்நிதியத்தைக் கைக்கொண்டதென்க.

இனி, பொன்னாகிய பெரிய கடலை ஆளுதலினென்றுமாம்; ஆளுதல்-தானமிடுதல். (சுக)

912. மகர வெல்கொடி மைந்தனை வாட்டிய
சிகரச் செவ்வரைத் தீநிறப் பொன்னெயில்
நிகரி னேமித னீணகர்க் காகெனு
நகர நாலிரு கோடி நயந்ததே.

(இ - ள்.) நகரிலுள்ளார் காமனை வாட்டிய நேமிஸ்வாமிகளுடைய பொன் மதிலையுடைத்தாகிய செவ்வரைபோலும் [1] ஸ்ரீகோயிலுக்கு ஆவதாகவென்று சொல்லி எட்டுக்கோடி பொன்னை நீராடுதானமாகக் கொடுத்தாரென்க.

இனி, காமனைவாட்டிய பொன்னெயிலையுடைய நேமீசுவரருமாம். அளித்ததும் : பாடம். (சுஉ)

---

கென, மாசை வாரி மன்னவ னுடி" (பெருங். 1. 39 : 15-6). மீசை - மேலேயுள்ள; நீட்டல் விகாரம். விசும்பிற்றலை - ஆகாயத்திடத்தே. சென்றதோர் ஓசையால் - சென்றதாகிய ஓர் ஓசையுடனே. உண்டது - கொண்டது.

(மேற்.) அடி, 1 : நன். உரி. 11, மயிலை.; 2 : கல். 'திங்கண்முடி', 11, மயில்.

(உரை) [1] பொன்னிலே பிறத்தல் - இரணிய கருப்பம்; அஃதாவது பொன்னாற் செய்யப்பெற்ற பசுவின் வாயினுள்ளே ஒருவன் புகுந்து பின்பு வெளிப்பட்டு அப் பொன்னாலாகிய பசுவை தானம் செய்தல்; இஃது அரசர்க்குரிய விதி.

912. மகர வெல்கொடி மைந்தன் : மன்மதன்; "மகர வெல்கொடி மகிழ்கணைக் காமற்கு" (பெருங். 3. 5 : 30). வாட்டிய - வருத்திய. வாட்டிய நேமிதன் பொன்னெயில் நகர்க்கு என இயைக்க. சிகரம் - உச்சி. செவ்வரைத் தீ நிறப்பொன்னெயில் - சிவந்த மலையைப்போன்ற வடிவத்தையும் நெருப்பை ஒத்த நிறத்தையுமுடைய பொன்மதில். பொன்னெயிலையுடைய நிகரில் நீணகர் என இயைக்க. நேமி - நேமி ஸ்வாமிகள்; இவர் 22-ஆம் தீர்த்தங்கரர். நகர்-ஸ்ரீ கோயில்; இதனால் இராசமாபுரத்தில் நேமி தீர்த்தங்கரருக்குக் கோயில் இருந்ததென்று தெரிகிறது. நகரம் - நகரசனங்கள்; ஆகுபெயர். கோடி என்பதன் பின் 'பொன்' என வருவித்துக் கொள்க. நயந்தது - கொடுத்தனர்.

(உரை) [1] ஸ்ரீகோயில் - சைத்தியம்.

(வேறு)

913. உவாமுத லிரவலர்க் குடைமை யுய்த்தவர்
கவான்முதற் கூப்பிய கனக மாழையால்
தவாவினை யடைகரை தயங்கு சிந்தைநீர்
அவாவெனு முடைகட லடைக்கப் பட்டதே.

(இ - ள்.) இரவலர்க்குப் பொன்னையொழிய யானைமுதலிய உடைமைகளை முற்படக் கொடுத்தவர்கள் பின்பும் அவ்விரவலர் காலடியிலே குவித்த பொற்கட்டியாலே அவருடைய கெடாத தீவினையாலுண்டாகிய சிந்தாகுலமென்னும் நீராலே அடைகரையுடைந்த ஆசையென்னுங்கடல் அடைக்கப்பட்டதென்க. (௯௩)

(வேறு)

914. சீரர வச்சிலம் பேந்துமென் சீறடி
யாரர வக்கழ லாடவ ரோடும்
போரர வக்களம் போன்றுபொன் ஞர்புனல்
நீரர வம்விளைத் தார்நிக ரில்லார்.

உவமவுருபு வினையெச்சமும் பெயரெச்சமுமாயே நிற்றலின், போன்று போலவெனத் திரிந்தது. புனலென்றது யாற்றினை; ஆகு பெயர்.

(இ - ள்.) பொன்னிறைந்த யாறு களத்தையொக்கும்படி நிகரில்லாராகிய சிலம்பேந்தின சீறடியையுடையார் அரவக்கழலாடவரோடுங்கூட நீரரவத்தை விளைத்தாரென்க. (௯௪)

913. உவா - யானை; "கட்டளை யானையு மத்தக வுவாவும்" (பெருங். 1. 42 : 30). இரவலர்க்கு உவாமுதல் உடைமை உய்த்தவர் என மாறியியைக்க; இரவலர்க்கு யானை முதலியவற்றை அளித்தல்: பெருங். 1. 59 : 74-81. உய்த்து அவர் எனப் பிரித்துப் பொருள் கொள்ளுதலுமாம். கவான்முதல் - இரவலரின் காலடியில். கூப்பிய - குவித்த. கனகமாழை - பொற்கட்டி. தவாவினை சிந்தைநீர் - கெடாத தீவினையால் உண்டாகிய வருத்தமாகிய நீரால்; சிந்தை - வருத்தம்; சீவக. 1124, 1304, 1701, ந. அவா - ஆசை. தவாவினை தயங்கு சிந்தை நீரால் அடைகரை உடைந்த அவாவெனுங் கடல் அடைக்கப்பட்டது என மாறியியைக்க.

914. அரவச்சிலம்பு - ஒலியையுடைய சிலம்பை. சீறடியார் - சிறிய அடியையுடைய மகளிர். அரவக்கழல் - ஒலியையுடைய வீரக்கழல். கழலையணிந்த ஆடவர். போரரவக்களம் - போர் செய்தலால் உண்டாகும் ஒலியையுடைய யுத்தகளம். போன்று - போல; எச்சத்திரிபு. பொன்ஞர் புனல் - பொன் நிறைந்த ஆறு. புனல் போர்க்களம் போலாகும்படி என மாறுக. சீவக. 2655; பரி. 11 : 50-61; பெருங். 1. 41 : 19-21. நீரரவம் - நீர்விளையாட்டொலி. நிகரில்லாதவராகிய சீறடியார் விளைத்தார் என்க.

915. கார்விளை யாடிய மின்னனை யார்கதிர்
வார்விளை யாடிய மென்முலை மைந்தர்
தார்விளை யாட்டொடு தங்குபு பொங்கிய
நீர்விளை யாட்டணி நின்றதை யன்றே.

**(இ - ள்.)** மைந்தர் தாரோடே, காரிலே நுடங்கிய மின்னையொப்பா ருடைய கச்சளாவிய முலைவிளையாட்டு நிலைபெறுநின்று மிக்க நீர்விளை யாட்டினழகு இடைவிடாது நின்றதென்க. (கரு)

(வேறு)

916. விடாக்களி வண்டுண விரிந்த கோதையர்
படாக்களி யிளமுலை பாய விண்டதார்க்
கடாக்களிற் றெறுழ்வலிக் காளை சீவகன்
அடாக்களி யவர்தொழில் காண வேகினான்.

காளை - நந்தட்டன்.

**(இ - ள்.)** களிவண்டு விடாதேயுண்ணும்படி விரிந்த கோதையரு டைய படாமுலை பாய்தலால் விண்ட தாரையுடைய சீவகன் ஒழுக்கக் கேடு பண்ணாத களிப்பையுடையவர் விளையாடுந்தொழிலைக் காணும்படி யாகக் காளை அவ்விடத்தினின்றும் போனானென்க.

என்றது : சுண்ணந்தேற்றுகின்ற காலத்திருந்த நந்தட்டன், சீவ கன் நீர் விளையாட்டின் விநோதங்காணப் [1] போதற்குத் தானும் தனக் குக் கூடுமவர்களுமாக வேறுபோயினானென்றவாறு. இவன்போகவே விநோதத்திற்குக்கூடும் புத்திசேனனும் ஒழிந்தோரும் சீவகனைக் கூடினா ராம்.

இக்கவியை, " இவையின் னனவும் பிறவும் " (சீவக. 933) என்னும் கவியோடே முடிக்க. (சுசு)

915. கார் - மேகத்தில். மின்னனையார் - மின்னலை ஒத்த மகளிரு டைய. வார் - கச்சு. தார் - பூமாலை. தங்குபு - நிலைபெற்று. மைந்தர் தாரொடு மின்னனையார் முலையிடத்து விளையாட்டில் தங்குபு என மாறி யியைக்க. பொங்கிய - மிக்க. அணி - அழகு. நின்றது - இடைவிடாமல் நிலைபெற்றது ; ஐ : சாரியை.

916. 'களிவண்டு விடாது உண' என மாறியியைக்க. உண - உண்ணும்படி. கோதையர் - கூந்தலையுடைய மகளிர். படா - சாயாத. களி - களிப்பைத்தருகின்ற. கோதையருடைய முலை. முலைபாய விண்ட தார் : சீவக. 589, 612. தாரையுடைய சீவகன் என இயைக்க. கடாம் - மதம். எறுழ்வலி - மிக்கவன்மை : சீவக. 785, அடிக். காளை - நந்தட் டன். அடாக்களி - ஒழுக்கக்கேடு பண்ணாத களிப்பு. தொழில் - விளை யாட்டுத் தொழிலை.

(உரை) [1] போதற்கு - போதற் பொருட்டு.

(வேறு)

917. ஒன்றே யுயிரை யுடையீ ரொருவிப் போமி னிவள்கண்
அன்றே கூற்ற மாகி யருளா தாவி போழ்வ
தென்றே கலையுஞ் சிலம்பு மிரங்க வினவண் டார்ப்பப் [மின்.
பொன்றோய் கொடியின் னடந்து புனல்சேர் பவளைக் காண்

இதுமுதல், அங்ஙனம் [1] வேறுபோயினார் தம்மிற்கூறுகின்றனவாம்.

(இ - ள்.) இவள்கண்ணல்லவோ கூற்றமாகி உயிரைப் போக்கு கின்றது; ஆதலால், சேமவுயிரின்றி ஒருயிரையுடையீர், நீங்கிப்போமி னென்றே கலையும் சிலம்பும் இரங்க வண்டு ஆர்ப்பக் காமவல்லிபோல நடந்துசென்று புனலைச் சேர்பவளைக் காண்மினென்க. (கூஎ)

918. அழல்செய் தடத்து ணமலர்ந்த வலங்கன் மாலை யதனை
நிழல்செய் நீர்கொண் டீர்ப்ப நெடுங்கண் ணிணையி னோக்கிக்
குழையும் பூணு நாணுங் கொழுந னுவப்ப வணிகென்
றிழைகொள் புனலுக் கீயு மிளையோ ணிலைமை காண்மின்.

கொழுநன் - வருணன்.

(இ - ள்.) அழலையுடைய தடத்திலே மலர்ந்த அசைகின்ற பொன் னரி மாலையைத் தெளிந்தநீர் தானே கொண்டுபோக அதனைநோக்கி நின்கொழுநன் நின்னை விரும்பும்படி பூண்பாயாகவென்று குழைமுதலிய வற்றையும் புனலுக்குக்கொடுக்கும் இளையோள் தன்மையைக் காண்மி னென்க. (கூஅ)

917. ஒன்றே உயிரை உடையீர் - ஒருயிரையே உடையீர். ஒருவி - நீங்கி. இவள்கண் அன்றே - இவளுடைய கண்ணல்லவா. கண் கூற்றம் : குறள், 1085. போழ்வது - பிளப்பது. போமின் என்றே கலையும் சிலம்பும் இரங்க என இயைக்க. கலை - மேகலை. இரங்க - ஒலிக்க. இனவண்டு - கூட்டமான வண்டுகள். பொன் தோய் கொடியின் - சுவர்க்கத்திற் பொருந்திய காமவல்லிக் கொடியைப் போன்று. புனல் - ஆற்று நீரை.

(உரை) [1] வேறு போயினார் - நந்தட்டன் முதலாயினார்.

918. அழல் - நெருப்பு. அழல் செய் தடத்துள் மலர்ந்த அலங்கல் மாலை - பொன்னரிமாலை; அலங்கல் - அசைதலையுடைய. நிழல் - ஒளி. ஈர்ப்ப - இழுத்துச் செல்ல. அதனைக் கண்ணிணையால் நோக்கி. குழை - குண்டலம். கொழுநன் : ஆற்றிற்குக் கணவனான வருணன். கொழுநன் உவப்பக் குழையும் பூணும் நாணும் அணிகென்று புனலுக்கு ஈயும் இளையோள் என மாறியியைக்க. இழை - அணி.

919. கோல நெடுங்கண் மகளிர் கூந்தல் பரப்பி யிருப்பப்
பீலி மஞ்ஞை நோக்கிப் பேடை மயிலென் றெண்ணி
ஆலிச் சென்று புல்லி யன்மை கண்டு நாணிச்
சோலை நோக்கி நடக்குந் தோகை வண்ணங் காண்மின்.

(இ - ள்.) மகளிர் பீலிமஞ்ஞையின் ஆடலைக்கண்டு தம் கூந்தலை உலரும்படி பரப்பியிருப்ப, அதன்பேடை அவரைத் தன்தோகைமயி லென்று கருதிச் சென்று புல்லி அல்லாமைகண்டு நாணி நடவாநிற்கும்; இங்ஙனமயங்கும்படியிருந்த தோகைபோல்வாள் வடிவைக் காண்மி னென்க.

இது [1] புலரவிரித்தலின், 'தோகை' என்றார். இனி, நாணவெனத் திரித்து மகளிர் கூந்தலைப் பரப்பியிருப்பப் பேடைமயில் அவர்களை நோக்கித் தன்பீலிமஞ்ஞையென்றெண்ணிப் புல்லி அல்லாமைதனைக் கண்டுநாண, அதுகண்டு தன்பேடை தன்னை அறிந்துபுணரும்படி சோலையைநோக்கிப் போகின்ற தோகையின் வண்ணத்தைக் காண்மி னென்றுமாம். (கூகூ)

920. மின்னெப் புடைய பைம்பூ ணீருள் வீழக் காணுள்
அன்னப் பெடையே தொழுதே னன்னை கொடியள் கண்டாய்
என்னை யடிமை வேண்டி னுடித் தாவென் றிறைஞ்சிப்
பொன்னங் கொம்பி னின்றாள் பொலிவின் வண்ணங் காண்மின்.

இது தோழிவார்த்தை.

அன்னப்பெடையென்றது தலைவியை. அன்னை - தோழிதாய். என்று - என்ன.

(இ - ள்.) பூண் வீழக்காணுளாய், பெடையே, தொழுதேன்; தாய் கொடியளாதலால், என்னை அடிமையாகவேண்டின் நீ நாடித்தாவென்று அவள் கூற, அதற்குநாணி இறைஞ்சிநின்றாள்: அவ்வண்ணத்தைக் காண்மினென்க.

நீரசைதலிற் கண்டிலள். (௯0)

919. கோலம் - அழகு. பரப்பி - பரவச்செய்து. பீலிமஞ்ஞையை நோக்கி மகளிர் கூந்தலைப் பரப்பி யிருப்ப என மாறுக; "கணங்கொ டோகையிற் கதுப்பிகுத் தசைஇ.........விறலியர் நிற்புறஞ் சுற்ற" மலைபடு. 44-6). பேடை - பெண்மயில். மயிலென்றெண்ணி - மகளிரை ஆண்மயிலென்று நினைத்து. ஆலிச்சென்று - கூவிச்சென்று. புல்லி - அம்மகளிரைத்தழுவி. அன்மை கண்டு - அம்மகளிர் மயிலல்லாமையை அறிந்து. நடக்கும்: முற்று. தோகை - மயில்போன்ற பெண்ணி னுடைய.

(உரை) [1] புலர - உலரும்படி.

920. மின் - மின்னலை. பூண் - ஆபரணம். காணுள் - காணுத வளாகி. அன்னப்பெடையே - பெண் அன்னம் போல்வாய்; என்றது தலைவியை. அன்னை - இங்கே, தோழியின் தாய். நாடித்தா - நீருள்

921. தூமங் கமழுங் கோதை தொடுத்த துயரி முலையாத்
தேமென் கீதம் பாலாச் சுரந்து திறத்தி னூட்டிக்
காமக் குழவி வளர்ப்பக் கணவன் புனலு ணீங்கிப்
பூமென் பொழிலுக் கிவர்வான் புகற்சி காண்மி னினிதே.

காமக்குழவி - காமத்தையுடைய இளமைச்செல்வி; அது காமமாகிய பிள்ளையை வளர்ப்ப அவன்வாயிலாகச் சென்றானென்றாற்போலவும் நின்றது.

(இ - ள்.) கோதைபோல்வாள் தொடுத்த நரம்பு முலையாக, அவற்றிற் றோற்றிய கீதம் பாலாகச் சுரந்தூட்டிக் காமக்குழவியை வளர்ப்ப, அது கேட்டுக் கணவன் புனலினின்று நீங்கிப் புணர்ச்சிவேட்கையாற் பொழிற்குப் போகின்றான்விருப்பம் இனிதுகாண்மினென்க.

இதனால், முன்னே குளித்தேறிக் [1] கூட்டத்தினைக் குறித்து யாழ்வாசித்தமை கூறினார். (எக)

922. கடலம் பவளம் மணையிற் கனபொற் கயிற்றிற் காய்பொன்
மடலங் கமுகி னூசன் மடந்தை யாட நுடங்கி
நடலைந் நடுவின் மகளிர் நூக்கப் பரிந்த காசு
விடலில் விசும்பின் மின்போன் மின்னி வீழ்வ காண்மின்.

---

விழுந்த ஆபரணத்தைத் தேடிக் கொடு. என்று - என்று தோழி கூற. இறைஞ்சி நிற்றல் தலைவியின் செயல். பொன்னங்கொம்பு - பொற்கொம்பு; அம் : அசை. பொலிவின் வண்ணம் - தோற்றத்தின் அழகை.

921. தூமம் - அகிற்புகை. கோதை - மாலை போலும் தலைவி. மாலைக்குப்புகையூட்டுதல்; "தேனுலா மதுச்செய் கோதை தேம்புகை கமழ வூட்ட" (சீவக. 111, அடிக்.). துயரி - யாழ்நரம்பு. கீதம் - நரம்பில் தோற்றிய பாட்டை. பாலாகச் சுரந்து ஊட்டி. காமக்குழவி - காமமாகிய குழந்தையை. புனலுள் - நீரினின்றும். பொழிற்கு இவர்வான் - புணர்ச்சி விருப்பத்தால் சோலைக்குள் போகின்றவனுடைய. புகற்சி - விருப்பத்தை. "களிப்பர் குளிப்பர் காமங் கொடிவிட, அளிப்ப" (பரி. 6 : 103-4)

(உரை) [1] பாட்டுக் காமத்தை விளைவித்தல் : சீவக. 864, அடிக்.

922. கடல் அம் பவளம் - கடலிற் பிறந்த அழகிய பவளம். பவளமாகிய மணையில். பொன்போன்ற நிறத்தைப்பெற்ற மடலையுடைய. கமுகின் ஊசல் : சீவக. 68, அடிக். நுடங்கி ஆட என்க. நடலை நடுவின் - துன்பத்தையுடைய இடையினையுடைய. நூக்க - தள்ள. பரிந்த காசு - அற்று விழுந்த மணிகள். விசும்பின் விடலில் மின்போல் என மாறுக. வீழ்வ - விழுகின்றவற்றை.

(இ - ள்.) கனத்த பவளப்பலகையிற் கோத்த பொற்கயிற்றாற் கமுகி லிட்டவூசலை மடந்தை நுடங்கியாடும்படி பொய்யான இடையினையுடைய மகளிர் நூக்க, அவர் கைதீண்டியபற்ற காசு விசும்பினின்றும் விடுதலின்றி வீழ்கின்ற மின்போல மின்னி வீழ்கின்றவற்றைக் காண்மினென்க. (எஉ)

923. நான நீரிற் கலந்து நலங்கொள் பூம்பட் டொளிப்ப
மேனி தோன்ற விளங்கி வெளிப்பட் டதற்கு நாணி
மான மகளிர் போல மணிமே கலைகள் பேசாத்
தானந் தழுவிக் கிடப்பச் செல்வோ டன்மை காண்மின்.

(இ - ள்.) பூம்பட்டு நானத்தையுடைய குளிக்கின்ற நீராலே நனைந்து உடம்பிலே ஒடுங்குதலின், தோன்ற விளங்கித் தம்மேனி வெளிப்பட்டதற்கு நாணி மானத்தையுடைய மகளிரைப்போல மேகலைகள் பேசாதே அல்குலைத் தழுவிக் கிடப்பப் போகின்றவள் தன்மையைக் காண்மினென்க.

நனைதலிற் பேசாதபடி பட்டு அழுந்திற்று. (எங)

924. தீம்பாற் பசியி னிருந்த செவ்வாய்ச் சிறுபைங் கிளிதன்
ஓம்பு தாய்நீர் குடைய வொழிக்கும் வண்ண நாடிப்
பாம்பா லென்ன வெருவிப் பைம்பொற் றோடு கழலக்
காம்பேர் தோளி நடுங்கிக் கரைசேர் பவளைக் காண்மின்.

(இ - ள்.) பசியாற்பாலுண்டற்கிருந்த கிளி தன்னைப் [1] பரிகரிக்கின்ற தாய் தன்பசியை யறியாது நீர்குடைதலாலே, அவளைத் தவிர்க்குந் தன்மையிது வென்றுநாடிப் பாம்பென்ன, அக்காம்பேர்தோளி அதற்கு வெருவி நடுங்கித் தோடுகழல வந்து கரைசேர்பவளைக் காண்மினென்க. (எச)

925. துணையி றோகை மஞ்ஞை யியற் கிவரும் வகைபோல்
மணியார் வளைசேர் முன்கை வலனு மிடனும் போக்கி
இணையி றேழி மார்க ளிறுமா லிடையென் றிரங்க
அணியார் கோதை பூம்பந் தாடு மவளைக் காண்மின்.

923. நானநீர் - புழுகுநீர். கலந்து - நனைந்து. பூம்பட்டு - பூத் தொழிலையுடைய பட்டு. தோன்ற விளங்கி மேனி வெளிப்பட்டதற்கு என்க. பேசா - ஒலியாமல். தானம் - தமக்குரிய இடத்தை. மு. சீவக. 2666.

924. பசியின் - பசியினால். தீம்பால் இருந்த - இனிய பாலை உண்ணுதற்கு இருந்த. கிளி : எழுவாய். ஓம்பு தாய் - தன்னைக் காக் கின்ற தாய். ஒழிக்கும் வண்ணம் - நீர்விளையாடலை ஒழிக்கும் விதத்தை. பாம்பால்; ஆல் : அசை. தோடு கழல - தோடு கழன்று விழும்படி. காம்பு ஏர் தோளி - மூங்கிலையொத்த தோளையுடையாள். தோளியாகிய சேர்பவளை.

(உரை) [1] பரிகரிக்கின்ற - காக்கின்ற.

925. துணை இல் தோகை மஞ்ஞை - பெடை இல்லாத ஆண்மயில். இயற்கு இவரும் - ஊசலைத் தின்னுதற்குச் செல்லும். மணி ஆர்வளை -

(இ - ள்.) பெடையில்லாத பீலிமயில் சுற்றிப்பறக்கின்ற மயிலைப் பிடித்தற்கு அவற்றின்மேற்செல்லுங் கூறுபாடுபோலத் தோழிமா ரிரங்கும்படி கோதை கையிற்பந்தை இடத்திலும் வலத்திலும் போக்கி அவற்றின்மேற் சென்றாடும் அவளைக்காண்மினென்க. (எரு)

926. திருவின் சாய லொருத்தி சேர்ந்த கோலங் காண்பான்
குருதித் துகிலின் னுறையைக் கொழும்பொன் விரலி னீக்கி
அரவ முற்றும் விழுங்கி யுமிழும் பொழுதின் மதிபோன்
றுருவத் தெண்க ணாடி காண்மின் றோன்றும் வகையே.

(இ - ள்.) திருப்போலும் சாயலையுடையாளொருத்தி தான்கொண்ட கோலத்தினைக் காணவேண்டிக் கண்ணாடிக்கிட்ட செம்பட்டுறையை விரலாலே நீக்காநிற்க, அக்கண்ணாடி செம்பாம்பு முழுதும் விழுங்கிக் காலுங் காலத்து மதியையொத்துத் தோன்றும் வகையைக் காண்மினென்க.

பொன் - [1] ஆழி. நீக்கி - நீக்க. (எசு)

927. பலகை செம்பொ னாகப் பளிங்கு நாயாப் பரப்பி
அலவ னாடும் வகைபோ லரும்பொற் கவறங் குருளக்
குலவும் பவழ வுழக்கிற் கோதை புரளப் பாடி
இலவம் போதேர் செவ்வா யிளையோர் பொருவார்க் காண்மின்

மணிகள் பொருந்திய வளை. முன்கையை வலப்பக்கத்தும் இடப்பக்கத்தும் போக்கி. இணையில் - ஒப்பு இல்லாத. இடை இறும் - இடைஒடியும். பந்தாடும் மகளுக்கு மயில் : "புகல்வரு மஞ்ஞை.........பந்தாடு மகளிரிற் படர்தரும்" (ஐங். 295 : 3-5)

926. திருவின்சாயல் - திருமகளைப்போன்ற மென்மையையுடைய. சேர்ந்தகோலம் - கணவனோடு சேர்ந்ததனால் உண்டாகிய அழகெனலுமாம்; "மாசறக் கண்ணடி வயக்கி வண்ணமும், தேசு மொளியுந் திகழ நோக்கி" (பரி. 12 : 20-21, பரிமேல்.). குருதித் துகில் - செந்நிறமுள்ள ஆடை. துகில் செம்மைக்கும் வரும்; சீவக. 34, ந. கண்ணாடியின் உறையை. பொன் - மோதிரம்; ஆகுபெயர். முற்றும் - முழுவதும். உருவத்தெண்கணாடி - நிறத்தையுடைய தெளிந்த கண்ணாடி. தோன்றும் வகையைக் காண்மின் என்க. கண்ணாடிக்கு மதியும் உறைக்கு அரவமும் உவமைகள்.

(உரை) [1] ஆழி - மோதிரம்.

927. பளிங்கு நாய்; "பளிக்குநாய் சிவப்பத் தொட்டு" (கம்ப. மிதிலைக். 17). அலவன் - நண்டு. அலவன் கவறுக்கு : கலித். 136 : 2-4. கவறு - குலுக்கி உருட்டப்படும் சூதாடு கருவி. குலவும் - விளங்கும். கோதைபுரள - மாலை அசைய. இலவம்போது ஏர் - இலவம் பூவை ஒத்த.

பாடி-தாயங்கூறி ; போகட்டென்றுமாம் ; அது மலைநாட்டார்வழக்கு. உழக்கு - பிடித்துப்போகடாமற் கவறிட்டு உருட்டுமுழக்கு.

(இ - ள்.) இளையோர் பொன்னாலே பலகையாகப் பளிங்காலே நாயாகச் செய்தவற்றைப் பரப்பிப் பாடிக் கோதையசையும்படி அலவனுடும்வகை போலே உருண்ட கவறு தன்னிடத்தே உருளும்படியாகப் பண்ணின பவழ உழக்காலே பொருவாரைக்காண்மினென்க. (எஎ)

928. தீம்பா லடிசில் லமிர்தஞ் செம்பொன் வண்ணப் புழுக்கல்
ஆம்பா லக்கா ரடலை யண்ப னீரூ றமிர்தம்
தாம்பா லவரை நாடித் தந்தூட் டயர்வார் சொரிய
ஓம்பா நறுநெய் வெள்ள மொழுகும் வண்ணங் காண்மின்.

அமிர்தம் - இவையொழிந்த சோறு. செம்பொன்வண்ணப்புழுக்கல் - பருப்புச்சோறு. ஆம்பால் - இவற்றிற்கெல்லாம் கூடுதற்குரிய பால். அக்காரடலை - அக்காரத்தினையடப்பட்டது ; அக்காரம் - சருக்கரை. அடிப்பல் நீரூறமிர்தம் - [1] புளிங்கறி.

(இ - ள்.) ஊட்டயர்வார்தாம், உண்ணும்பகுதியிலுள்ளோரை நாடித் தந்து அவர்களுக்குப் பாலடிசின் முதலியவற்றைச்சொரிதலின், அவற்றையுண்டற்கு வார்த்த நெய் வெள்ளமாயொழுகுந் தன்மையைக் காண்மினென்க.

அக்காரையாக அடப்பட்டதுமாம். (எஅ)

929. அள்ளற் சேற்று ளலவ னடைந்தாங் கனைய மெய்யிற்
கள்செய் கடலு ளிளமைக் கூம்பிற் கடிசெய் மாலைத்
துள்ளு தூமக் கயிற்றிற் பாய்செய் துயரி நிதியம்
உள்ளு காற்று வுழலுங் காமக் கலனுங் காண்மின்.

---

" இலமலர்ச் செவ்வாய் " (பெருங். 1. 33 : 118). இளையோர் - மகளிர். பவழ உழக்கிற் பொருவார் என இயைக்க.

(மேற்.) மு : கலித். 136 : 1-4, ந.

928. தீம்பால் அடிசில் - இனிய பாற்சோறு ; சீவக. 398. செம்பொன் வண்ணப் புழுக்கல் - சிவந்த பொன்னின் நிறத்தையுடைய பருப்புச்சோறு ; திருவிளை. நாடு. 32. ஆம் பால் - மேலேகூறியவற்றிற்கு ஆகும் பால். அக்காரடலை - அக்கார வடிசில் ; திவ். நாச்சியார். 9 : 6. அடலை - அடப்பட்டது. அண்பல் - நாவிளிம்பு அணுகுதற்குக் காரணமான பல் ; தொல். பிறப்பு. 4, ந. நீர் ஊறு அமிர்தம் - நீர் ஊறுதற்குக் காரணமான உணவு ; என்றது புளிங்கறியை. ஊட்டயர்வார்தாம் பாலவரை நாடித்தந்து எனமாறியியைக்க ; ஊட்டு அயர் வார் - உண்பித்தலைச்செய்வார். பாலவரை - உண்ணும் பகுதியில் உள்ளவரை. சொரிய - சொரிதலால்.

(உரை) [1] புளிங்கறி : நன். உயிரீற்றுப். 25, மயிலை.; சங்கர.

929. அள்ளற்சேறு : இருபெயரொட்டு ; அள்ளல் - செறிதலுமாம். அலவன் - நண்டு ; நண்டின்வரி மெய்க்கீற்றுக்கு ; " புள்ளிக் களவன்

கள் செய் கடல் - கள்ளுண்டார் தன்மையைச் செய்கின்ற நீர்விளையாடுகின்ற திரள்; கடல் : ஆகுபெயர்; "அடாக்களியவர்" (சீவக. 916) என்றார் முன்னும். கலம் - பரத்தை.

(இ - ள்.) இளமையாகிய 'கூம்பிற்கட்டின மாலையாகிய கயிற்றோடு சேர்ந்த தூமமாகிய பாயை விரித்து அதனையுயர்த்து நிதியமே நினைக்கப் படுகின்ற காற்றாகக்கொண்டு கள்செய்கடலிலே மெய்யுடனேயோடுங் காமக்கலத்தையுங் காண்மினென்க. (எக)

930. தாய்தன் கையின் மெல்லத் தண்ணென் குறங்கி னெறிய
ஆய்பொன் னமளித் துஞ்சு மணியார் குழவி போலத்
தோயுந் திரைக ளலைப்பத் தோடார் கமலப் பள்ளி
மேய வகையிற் றுஞ்சும் வெள்ளை யன்னங் காண்மின்.

(இ - ள்.) தாய் தன்கையினாலே குறங்கிலே மெல்லத்தடவ அவ்வசைவால் அமளியிலே துயிலுங் குழவியைப்போலச் செறியுந்திரைகள் வந்து அசைப்பக் கமலப்பள்ளியிலே மனம்பொருந்தினவகையிலே துயிலும் அன்னத்தைக் காண்மினென்க.

[1] காரன்னமுண்மையின், வெள்ளையன்னம் இனஞ்சுட்டின பண்பு. (அ০)

---

புனல்சேர் பொதுக்கம்போல், வள்ளுகிர் போழ்ந்தனவும் வாளெயி றுற்றனவும்" (கலித். 88 : 10-11). அடைந்தாங்கனைய - அடைந்தாற் போன்ற; ஆங்கு : அசை. மெய்யின் - உடம்புடன். கடல் : சீவக. 866. கூம்பு - பாய்மரம். கடிசெய் - வாசனையைச் செய்கின்ற. பாய் செய்து - பாயை விரித்து. உயரி - உயர்த்தி. உழலும் - திரியும். காமக்கலன் - காமத்தையுடைய பரத்தையாகிய கப்பல்; "கண்ண னாரொடு காமக் கலங்களே" (சூளா. இரத. 25). இளமையாகிய கூம்பிற்கட்டிய மாலையாகிய கயிற்றுடன், தூமமாகிய பாய் செய்து, நிதியமே காற்றாகக் கொண்டு, கடலுள் மெய்யுடன் உழலும் காமக்கலனுங் காண்மின் என மாறிமுடிக்க.

930. கையின் - கையால். தண்ணென் - குளிர்ச்சி பொருந்திய. குறங்கு - தொடை. எறிய - தடவ. குறங்கில் மெல்ல எறிய எனமாறியியைக்க. அமளித் துஞ்சும் - படுக்கையில் உறங்குகின்ற. குழந்தை உறங்குவதற்கு அதன் துடையைத் தட்டுதல் வழக்கம். தோய்தல் - செறிதல்; சீவக. 290, 1707, 2492, 2923, ந. திரை - அலை. அலைப்ப - அசைத்தலால். தோடு - இதழ். கமலப்பள்ளி - தாமரையாகிய படுக்கையில். மேய - பொருந்தின. வெள்ளையன்னம் : இனமுள்ள அடை; சீவக. 870.

(உரை) [1] காரன்ன முண்மையை, "யவனர், ஓதிம விளக்கு" (பெரும்பாண். 316-7) என்பதனுரையாலும், "பள்ள நீர்குடைந் தஞ்சிறைப் பாசிபோர்த் தெழுந்த, வெள்ளை யன்னத்தைக் கார ணமெனப் பெடை வீழ்ந்த, உள்ள மீட்டலமர" (திருவிளை. நகரச். 12) என்பதனாலும், "கார னங்குலாய்ப்ப டிந்த காட்சி யொப்ப" (காஞ்சிப். கழுவாய்ப். 16) என்பதனாலும் அறியலாகும்.

931. நீலத் துகிலிற் கிடந்த நிழலார் தழலம் மணிகள்
கோலச் சுடர்விட் டுமிழக் குமரி யன்னங் குறுகிச்
சால நெருங்கிப் பூத்த தடந்தா மரைப்பூ வென்ன
ஆலிச் சுடர்கள் கௌவி யழுங்கும் வண்ணங் காண்மின்.

(இ - ள்.) நீலத் துகிலிற் கிடந்த மணிகள் சுடரை மிகக் காலுதலின் அறியாத அன்னம் தாமரைப்பூவென்றுகருதி ஆலிச் சென்று குறுகி அதன் சுடர்களைக் கௌவி அவை அகப்படாமையினால் வருந்தும் தன்மையைக் காண்மினென்க.

துகிலுக்கு இலையுவமை. (அக)

932. வடிக்கண் மகளிர் வைத்த மரக தநன் மணிகள்
ஒடிக்கச் சுடர்விட் டுமிழ வுழையம் பிணையொன் றணுகிக்
கொடிப்புல் லென்று கறிப்பா னுவிற் குலவி வளைப்பத்
தொடிக்கட் பூவை நோக்கி நகுமா றெளிதோ காண்மின்.

(இ - ள்.) மகளிர்வைத்த மரகதமணிகள் கையாலொடிக்கலாம்படி சுடரை விட்டுக்காலுதலின், உழைமான் பிணையானதொன்று அதனை அறுகம்புல்லென்று கருதி அணுகிக் கறித்தற்குத் தான் கழுத்தை வளைத்து நாவாலே வளையாநிற்க, அதனைத் தொடிபோல் வட்டமான கண்ணையுடைய பூவை நோக்கி நகுமாறு எளிதாயிருந்ததனைக் காண்மினென்க.

ஓ : வியப்பு. (அஉ)

---

931. நிழல் - ஒளி. தழலம் மணிகள் - நெருப்பைப்போன்ற சிவப்பையுடைய மாணிக்கங்கள்; அம் : அசை. விட்டுமிழ - மிகச் சிந்துதலால். குமரியன்னம் - இளைய அன்னம். குறுகி - மணிகளிடம் சென்று. சால - மிக. என்ன - என்று கருதி. ஆலி - ஆரவாரித்து; கலித். 27-9, ந. சுடர்கள் - மணிகளின் ஒளியை. அழுங்கும் - வருந்துகின்ற. மணிகள் சுடர்விட்டு உமிழ்தலால், அன்னம் தாமரைப்பூ வென்ன ஆலிக், குறுகிச் சுடர்களைக் கௌவி அழுங்கும் வண்ணம் காண்மின் என மாறி முடிக்க. மணிக்குத் தாமரைப்பூவும் நீலத்துகிலுக்குத் தாமரையிலையும் உவமைகள்.

932. வடிக்கண் - மாவடுவின் வகிர்போன்றகண். வடி - மாவடுவின்வகிர்; சீவக. 2650. மரகதமணிகள் - பச்சைமணிகள். ஒடிக்க - கையால் ஒடிக்கத் தக்கபடி. உமிழ - உமிழ்தலால். உழையம்பிணை - ஆண்மானுக்குத் துணையான பெண்மான்; இருபெயரொட்டுமாம். கொடிப்புல் - அறுகம்புல். கறிப்பான் - கடித்தற்கு. மான்கறித்தல்; சீவக. 485. புல்லுக்கு மரகதஒளி : குறுந். 256 : 1, ஒப்பு. குலவி - கழுத்தை வளைத்து. குலவி நாவினால் வளைப்ப எனமாறுக. தொடிக்கட் பூவை - தொடி யென்னும் வளைபோன்ற கண்ணையுடைய நாகணவாய்ப் பறவை. நோக்கி - அந்த மானைப் பார்த்து. எளிது - எளிதாயிருந்தது.

933. இவையின் னனவும் பிறவு மெரிபொன் னாரை மார்பன்
கவிஞர் மதியி னகன்று காட்சிக் கினிய விழவிற்
சுவையின் மிகுதி யுடைய சோர்வில் பொருளொன் றதுதான்
நவையின் னகல நோக்கி நயந்த வண்ண மொழிவாம்.

மதியின் : [1] இன் : நீக்கம். சோர்வில்பொருள் - பஞ்சநமஸ்காரம். ஒன்று - [2] ஒருசீவன். நவையினகல - நாயுடம்பினீங்க. நோக்கி - நோக்க.

(இ - ள்.) அங்ஙனம் வெவ்வேறு போயினரெல்லாரும் காண்மி னென்று கூறும்படி இத்தன்மையவான இவையும் பிறவும் கவிகளாற் புகழவரியவாய்க் காண்டற்கினிய நீர்விழவிலே, ஆரமார்பன், ஒன்று நவையினகலும்படி சோர்வில்பொருளால் நோக்க, அதுதான் அப் பொருளால் விரும்பின தன்மையைக் கூறுவாமென்றாரென்க. (அரு)

(வேறு)

934. (க) அந்தணர்க் காக்கிய சோற்றுக் குவாலினை
வந்தொரு நாய்கது விற்றது கண்டவர்
உய்ந்தினிப் போதி யெனக்கனன் றோடினர்
சிந்தையி னின்றெரிர் தீயன நீரார்.

(மேற்.) அடி, 4 : சிலப். 10 : 56, 13 : 35, அடியார்.
917-32. பெருங். 1. 40 : 5-383; பரி. 11 : 122-32, 12 : 45-61.

933. மார்பன் : சீவகன். கவிஞர் மதியின் அகன்று - புலவருடைய கற்பனை செய்கின்ற அறிவினுற் புகழ்தற்கரியதாகி. காட்சிக்கு - பார்த்தற்கு. விழவில் - நீர்விழாவில். இவையின்னனவும்............காட்சிக் கினிய விழவு : பெருங். 1 : 40 : 384-90. சோர்வில்பொருள் - பஞ்ச நமஸ்காரம்; சீவக. 14, அடிக்; 1289. ஒன்று - ஒரு சீவனாகிய நாய். நவையின் அகல - இழிந்த நாய்ப் பிறப்பினின்றும் நீங்கும்படி. நோக்கி- நோக்க; எச்சத்திரிபு. நயந்த - பஞ்சநமஸ்காரத்தால் விரும்பிய. விழவில், மார்பன் ஒன்று நவையின் அகலும்படி சோர்வில் பொருளால் நோக்க அதுதான் நயந்த வண்ணம் மொழிவாம் என மாறி முடிக்க.

(உரை) [1] ஐந்தாம் வேற்றுமையுருபாகிய இன். [2] ஒரு சீவன் - நாய்.

934. ஆக்கிய - ஆக்கப்பட்ட. சோற்றுக்குவால் - சோற்றுக்குவியல். ஒருநாய் வந்து கதுவிற்று எனமாறி யியைக்க; கதுவிற்று - கௌவியது. அவர் - அந்தணர்; அவர் அதுகண்டு எனமாறுக. இனி உய்ந்து போதி - இனிப் பிழைத்துப் போவையோ. கனன்று - கோபித்து. சிந்தையில் - மனத்தில். தீயன நீரார் - தீயைப்போன்ற தன்மையை யுடையவர். தீயன நீராராகிய அந்தணர்க்கு என மாறிக்கொள்க.

935. (உ) கல்லொடு வன்றடி கையினர் காற்றினும்
வல்விரைந் தோடி வளைத்தன ராகிக்
கொல்வது மேயினர் கொன்றிடு கூற்றினும்
வல்வினை யார்வலைப் பட்டதை யன்றே.

936. (ங) வேள்வியி னுண்டி விலக்கிய நீவிர்கள்
ஆளெனக் கென்ற தறைவது மோரார்
தாளிற மூர்க்க ரதுக்கலிற் றண்டுறை
நீள்கயம் பாய்ந்தது நீந்துத லோடும்.

இவைமூன்றும் ஒருதொடர்.

(க) ஓடினர் - [1] ஓடி. அக்கினிசித்தரென்று கூறுவாராதலின், தம்முடைய சிந்தையிலே விடாதுநின்று விளங்குகின்ற தீப்போன்ற நீராரெனக் கொடுமை கூறினர்.

(உ) பட்டதை; ஐ : பகுதிப்பொருள் விகுதி.

(ங) ஆளென்று கதறுகின்றவோசை இப்பிறப்பில் என்னுண்டியை விலக்கின நீங்கள் மறுபிறப்பில் எனக்காளாவீரென்றாற்போன்றிருக்கச் சாற்றா நிற்கின்ற தன்மையையுமோராராய்; விலக்கினர் விலக்குண்டவர்க்கு அடிமையாய்ப் பிறப்பரென்பது உணராராதலின்.

(இ - ள்.) தீயனநீராராகிய அந்தணர்க்கு ஆக்கிய சோற்றுத்திரளை ஒரு நாய்வந்து கௌவிற்று; அவர் அதுகண்டு, இனிப் பிழைத்துப் போவையென்று கூறி ஓடி எடுத்த கல்லையும் தடியையும் கையிலே யுடையராய்க் கனன்று காற்றினும் கடுக விரைந்தோடி, அது நீள்கயத்தே பாய்ந்து நீந்தின அளவிலே வளைத்தனராகி அம்மூர்க்கர் அறைவது

935. கல்லையும் தடியையும் கொண்ட கையினராகி. வல்விரைந்து - மிக விரைந்து சென்று. வளைத்தனராகி - குளத்து நீரிற் பாய்ந்த அந்நாயை வளைத்தவர்களாய். கொன்றிடு கூற்றினும் கொல்வது மேயினர் எனமாறுக. கூற்றினும் - யமனைக் காட்டிலும் மிகுதியாக. கொல்வது மேயினர் - கொலைத் தொழிலைப் பொருந்தினர்கள். வினையார் - அந்தணருடைய. பட்டது - நாய் அகப்பட்டது. அன்று, ஏ : அசைநிலை.

936. விலக்கிய - தடைசெய்த. எனக்கு ஆள் - எனக்கு அடிமை யாவீர்கள். அறைவதும் - நாய் கூறுவதையும். ஓரார் - உணராதவராகி. தாள்இற - நாயின் கால் முறியும்படி. மூர்க்கரென்றது அந்தணரை. அதுக்கலின் - அடித்தலினால். துறையையுடைய கயத்தில்; கயம் - குளம். அது - அந்நாய். அது கயம் பாய்ந்து நீந்துதலோடும் 'வளைத் தனராய்' (சீவக. 935) எனமாறி, 'மூர்க்கர் அறைவதும் ஓராராகித் தாளிற அதுக்கலின்' என இயைத்து, 'வல்வினையார் வலைப்பட்டது, கொல்வது மேயினர்' (சீவக. 935) என முடித்துக் கொள்க.

(உரை) [1] முற்றெச்சம்.

மோராராய்த் தாளிற அடித்தலின், அது வல்வினையார்வலையிலே அகப்பட்டேவிட்டது; அதனைப் பின்னரும் கொன்றிடு கூற்றிற்காட்டிற் கொல்லுந்தன்மையை மேவினரென்க. (அச-கூ)

(வேறு)

937. மட்குட மல்லன மதியின் வெள்ளிய
கட்குடக் கன்னிய ரிருவ ரோடுடன்
துட்கென யாவரு நடுங்கத் தூய்மையில்
உட்குடைக் களிமக னொருவன் றோன்றினான்.

மட்குடமல்லனவாகிய கட்குடம்; கள்ளின் கடுமை பொறுத்தற்கு வெள்ளியாற் சமைத்த குடம்.

(இ - ள்.) களிமகனொருவன் கட்குடஞ்சுமந்த கன்னியராகிய மனைவியரிருவருடனே யாவரும் துணுக்கெனத் தோன்றினானென்க. (அஎ)

938. தோன்றிய புண்செய்வே லவற்குத் தூமது
வான்றிகழ் கொடியனார் வெள்ளி வட்டகை
ஊன்றிவாய் மடுப்பவோர் முழையுட் டீங்கதிர்
கான்றிடு கதிர்மதி யிரண்டு போன்றவே.

(இ - ள்.) அங்ஙனம் தோன்றிய அவற்கு மின்னுக்கொடிபோலு மனைவியரிருவரும் வெள்ளிவட்டகைகளை வாயிலேயழுத்தித் தூமதுவைக் கொடுப்ப, அவை, ஒருமுழையிலே கதிரைச்சொரிகின்ற மதியிரண்டை யொத்தனவென்க.

இஃது இல்பொருளுவமை. (அஅ)

937. மதியின் வெள்ளிய கட்குடம் - சந்திரனைப்போன்ற வெள்ளியாற்செய்த கட்குடம். குடத்தையுடைய கன்னியரிருவர். துட்கென - துணுக்கென்னும்படி. தூய்மையில் - பரிசுத்தமில்லாத. உட்குடை - அச்சத்தையுடைய. களிமகன் - கள்ளையுண்டதனால் களிப்பையுடைய மகன். களிமகன் ஒருவன் கன்னியரிருவருடன் தோன்றினான் என்க.

938. வேலவற்கு - களிமகனுக்கு. வான்திகழ் கொடியனார் - மேகத்தில் விளங்கும் மின்னற் கொடிபோன்ற மகளிரிருவரும். வெள்ளி வட்டகை - வெள்ளியாற் செய்யப்பட்ட கிண்ணம். ஊன்றி - அழுத்தி. மடுப்ப - கொடுப்ப. கொடியனார் வெள்ளிவட்டகைகளை வாயிலூன்றித் தூமதுவை மடுப்ப எனமாறியியைக்க. முழை - குகை. கதிர் - கிரணத்தை. கான்றிடும் - சொரிகின்ற. கதிர்மதி; கதிர் மதிக்கு அடை. களிமகன் வாய்க்கு முழையும், மதுவுக்குக் கிரணமும் வெள்ளி வட்டகை இரண்டுக்கும் மதி இரண்டும் உவமைகள்.

(வேறு)

939. அழலம் பூநற வார்ந்தழ லூர்தரச்
சுழலுங் கண்ணினன் சோர்தரு மாலையன்
கழலன் காழகம் வீக்கிய கச்சையன்
மழலைச் சொற்களின் வைதிவை கூறினான்.

(இ - ள்.) தீம்பூவாலாக்கின நறவை அங்ஙனமருந்துதலாலே வெம்மை பரக்கும்படி சுழலுங்கண்ணினனாய் மாலையினனாய்க் கழலனாய் வீக்கின கருங்கச்சையனாய் மழலைச்சொற்களாலே வைது மேல் இவ் வார்த்தையைக் கூறினானென்க. (அகூ)

940. புடைத்தென் னாயினைப் பொன்றுவித் தீருயிர்
கடுக்கப் பேர்த்தனிர் தம்மின் கலாய்க்குறின்
தடக்கை மீளிமை தாங்குமி னன்றெனின்
உடைப்பென் கட்குட மென்றுரை யாடினான்.

(இ - ள்.) என் நாயையடித்து உயிரைப்போக்கினீர், அவ்வுயிரை மீட்டனிராய்த் தருவீராக; அதுசெய்யாது கலாய்க்க நினைக்கின், என் கையில் வலியைத் தாங்குவீராக; அவ்விரண்டுமல்லவாயின், கட் குடத்தையுடைப்பேனென்று கூறினானென்க.

கட்குடமுடைத்தல், [1] சங்கேதம். [2] கடுக, [3] கலாய்க்க : விகாரம். (கூ0)

---

939. அழல் நறவு, பூநறவு எனப்பிரித்தலுமாம். அழல் நறவு - வெப்பத்தையுடைய மது; "வெப்புடைய மட்டுண்டு" (புறநா. 24); "உண்ண மதுவும்", "அழனறுந்தேறல்" (பெருங். 1. 38 : 60, 40 : 78, 160, அடிக்.). பூநறவு - பூவாலாக்கின மது. ஆர்ந்து - உண்ணுதலால். அழலூர்தர - வெம்மை பரக்கும்படி. கழலன் - வீரக்கழலை யுடையவன். காழகம் - கருமை; சீவக. 320, 1230. வீக்கிய - கட்டப்பட்ட. வீக்கிய காழகக் கச்சையன் என மாறுக. அடி, 1-3 : "சுழலுங் கண்ணினன் சோர்தரு மாலையன், அழனறுந் தேறலார மாந்திக், காழக மீக்கொண் டாமுந் தானையன்" (பெருங். 1. 40 : 77-9). கழலும் கச்சையும் : சீவக. 2303. மழலைச்சொற்கள் - தெளிவில்லாத மொழிகள்; "உண்டுமகிழ் தட்ட மழலை நாவிற் பழஞ்செருக் காளர்" (மதுரைக். 668-9); கண்ணினனாய், மாலையனாய், கழலனாய், கச்சையனாய் வைது கூறினானென்க.

940. என் நாயினைப் புடைத்துப் பொன்றுவித்தீர் என மாறி யியைக்க; பொன்றுவித்தீர் - உயிரைப் போகச் செய்தீர். கடுக்க - விரைய. உயிர் பேர்த்தனிர்தம்மின் - உயிரை மீட்டுத் தருவீராக. கலாய்க்க உறின். மீளிமை - வன்மையை; "மீளிமைசெய்யின்" (சீவக. 958); "மீளிமை மைந்தர்பதின்மரை" (கூர்ம. கண்ணன் சிவதீக்கை. 2). உடைப்பென் - உடைப்பேன்.

(உரை) [1] சங்கேதம் - குறிப்பு. [2] கடுக என்பது கடுக்க என்று விரித்தல் விகாரம் பெற்றது. [3] இது தொகுத்தல் விகாரம் பெற்றது.

(வேறு)

941. நல்வினை யொன்று மிலாதவ னுன்மறை
வல்லவர் தம்மை வருத்தலின் வல்லே
செல்சுடர் வேல்வல சீவக சாமிசென்
றல்லல கற்றிய ருந்துயர் தீர்த்தான்.

(இ - ள்.) நல்வினையொன்றுஞ் செய்தறியாதவன் அந்தணரை வருத்தலின் அதுகண்டு கீர்த்தியால் எங்குஞ்செல்கின்ற வேலைவல்ல சீவகன் வல்லே சென்று அக்களிமகன் நாயிழந்த அல்லலை முதற் போக்கிப் பின்பு அந்தணர் படுகின்ற துயரை நீக்கினனென்க. (கூசு)

942. மீண்டவ ரேகுத லும்விடை யன்னவன்
ஈண்டிய தோழரொ டெய்தின னாகி
மாண்ட வெயிற்றெகி னம்மற மில்லது
காண்டலுங் கட்கினி யான்கலுழ்ந் திட்டான்.

(இ - ள்) அவ்விருதிறத்தோரும் மீண்டுபோனவளவிலே கட்கினியானாகிய விடையன்னவன் தோழருடனே அணுகினனாய் நாய் நெஞ்சின் மறமில்லாததனைக் கண்டவளவிலே அருளான் அழுதானென்க.

[1] அருளான் இவனை விடையென்றார். இவன் [2] விளைதமொழிந்து நிற்றலின், தோழர்வந்து திரண்டமைதோன்ற, 'ஈண்டிய' என்றார்; எனவே தம்பியர்வந்தமையும் பெறுதும். (கூஉ)

943. நாயுடம் பிட்டிவ ணந்திய பேரொளிக்
காய்கதிர் மண்டலம் போன்றொளி கால்வதோர்
சேயுடம் பெய்துவை செல்கதி மந்திரம்
நீயுடம் பட்டு நினைமதி யென்றான்.

---

941. நல்வினை ஒன்றுமிலாதவன் என்றது களிமகனை. வருத்தலின் - துன்புறுத்தலால். வல்லே - விரைய. செல் - புகழால் எங்கும் செல்கின்ற; இது சீவகனுக்கு அடை. சுடரையுடைய வேலாற் செய்யும் போரில் வல்ல. அல்லல் - நாயை இழந்ததனால் களிமகனுக்கு உண்டான துன்பம். அருந்துயர் - அந்தணருடைய அரிய துன்பம்.

942. அவர் மீண்டு ஏகுதலும்; அவர் - அந்தணரும் களிமகனும். கட்கினியானாகிய விடையன்னவன் என மாறுக. ஈண்டிய - நெருங்கிய. தோழர் : புத்திசேனனும் ஒழிந்தோரும்; சீவக. 916, ந. மாண்ட - இறந்த. எகினம் - நாய். காண்டலும் - கண்டவுடன். கலுழ்ந்திட்டான் - அழுதான்.

(உரை) [1] தருமத்தை விடை வடிவமுடையதென்பர்; 'இமிலே றென்றது அறத்தினை; தருமத்திற்கு அது வடிவாகலின்' (சீவக. 3100, ந.); "அறமெனப் படுமால் வெள்ளேறு" (பாகவதம், 1. 7 : 40). [2] பொழுது போக்கு.

943. இவண் நாயுடம்பு இட்டு; இவண் - இவ்விடத்தே. நந்திய - பெருகிய. காய்கதிர்மண்டலம் - சந்திரமண்டலம். ஒளிகால்வது -

நந்திய - வளர்ந்த.

(இ - ள்.) யான் கூறுகின்ற மந்திரத்தை நீ ஒருப்பட்டு நினைவாயாக; நினைத்தால் இவ்விடத்தே நாயுடம்பைப் போகட்டுச் செல்கதியில் திங்கள் போல ஒளிகால்வதொரு பெரியவுடம்பைப் பெறுவையென்றுரைனென்க. (கூங)

944. என்றலுந் தன்செவி யோர்த்திரு கண்களும்
சென்றுகு நீரொடு செம்மலை நோக்கி
ஒன்றுபு வால்குழைத் துள்ளுவப் பெய்தலும்
குன்றனை யான்பதங் கூற வலித்தான்.

(இ - ள்.) என்று கூறினவளவிலே, அது தன்செவியாலே கேட்டு விசாரித்து இருகண்ணுலும் வடிந்து வீழ்கின்ற நீருடனே தலைவனை நோக்கி மனம் ஒருப்பட்டு அதுதோன்ற வால்குழைத்து மகிழ்ந்தவளவிலே, சலியாதவன் இது காலமென்றறிந்து மந்திரத்தைக் கூறத்துணிந்தானென்க. (கூச)

## (வேறு)

945. (க) நற்செய்கை யொன்று மில்லார் நாளுலக் கின்ற போழ்தின், முற்செய்த வினையி னீங்கி நல்வினை விளைக்கும் வித்து, மற்செய்து வீங்கு தோளான் மந்திர மைந்து மாதோ, தற்செய்கை தளிர்ப்பத் தாழ்ந்தாங் கதன்செவிச் செப்பு கின்றான்.

946. (உ) உறுதிமுன் செய்த தின்றி யொழுகினே னென்று நெஞ்சில், மறுகனீ பற்றெ டார்வம் விட்டிடு மரண வச்சத், திறுகனீ யிறைவன் சொன்ன வைம்பத வமிர்த முண்டாற், பெறுதி நற் கதியை யென்று பெருநவை யகற்றி னானே.

---

ஒளியை வீசுவது. செல்கதியில் சேயுடம்பை எய்துவை; சேயுடம்பு - பெரிய உடம்பு. உடம்பட்டு - மனம் ஒருவழிப்பட்டு. நினைமதி; மதி: அசை.

944. என்றலும் - என்று சீவகன் கூறியவுடன். செவி ஓர்த்து - தன்காதுகளால் கூர்ந்து கேட்டு. செம்மல்: சீவகன். ஒன்றுபு - மனம் ஒன்று பட்டு. நாய் வால்குழைத்தல் மகிழ்ச்சிக் குறிப்பு. குன்று அனையான் - நற்குணங்களால் மலைபோன்ற சீவகன். பதம் - ஐம்பதமாகிய மந்திரத்தை; என்றது பஞ்ச நமஸ்கார மந்திரத்தை. வலித்தான் - துணிந்தான்.

945. நாள் உலக்கின்ற போழ்தின் - வாழ்நாள் அழிகின்ற காலத்தில். முற்செய்த என்பதை நல்வினை என்பதோடு கூட்டுக. வினையின் நீங்கி - தீவினையினின்றும் நீங்கும்படி; நீங்கி: எச்சத்திரிபு. வித்தாகிய மந்திர மைந்தும் என்க. மற்செய்து - மற்போரைச் செய்து. தோளான்: சீவகன். மாது, ஓ: அசைகள். தாழ்ந்து தற்செய்கை தளிர்ப்ப; தாழ்ந்து - வணங்கி. தற்செய்கை - மந்திரத்தின் செய்கை. தோளானுகிய செப்பு கின்றான் என இயைக்க.

946. முன்செய்தது உறுதியின்றி - முற்பிறப்புக்களில் செய்ததாகிய நல்வினை இல்லாமல். நெஞ்சின் மறுகல் - மனத்திற் சுழலாதே.

947. (ரு) மனத்திடைச் செறும்பு நீக்கி மறவலை யாகி யைந்தும்
நினைத்திடு நின்க ணின்ற நீனிற வினையி னீங்கி
எனைப்பகற் றோறும் விள்ளா வின்பமே பயக்கு மென்றாற்
கனைப்பத வமிர்த நெஞ்சி னயின்றுவிட் டகன்ற தன்றே.

இவைமூன்றும் ஒருதொடர்.

(க) நீங்கி - நீங்க.

(உ) மறுகல் - சுழலாதேகொள். பற்று - உள்ளதன்மேற்று. ஆர்வம் - பெறக்கடவதன்மேற்று. விட்டிடு: ஒருசொல். இறுகல் - நிலைபெறாதே கொள்.

(ரு) செறும்பு - செற்றம். நீனிறவினை - கரிய பாவவினை.

(இ - ள்.) அங்ஙனம் துணிந்த தோளான், இம்மையில் நற்செய்கை யொன்றுமிலாதார் வாழ்நாள் கழிகின்ற காலத்து ஈண்டு அவர்செய்த தீவினையினின்று நீங்க முற்செய்த நல்வினையை விளக்கும் வித்தாகிய மந்திரம் ஐந்தையும் அவ்விடத்தே தாழ்ந்து அதன் செவியிலே செப்புகின்றவன், அம்மந்திரத்தின்செய்கை தழைக்கும்படியாக அதனை நின் மனத்திடைச் செறும்பை முதனீக்கிப் பின்பு இதற்குமுன் செய்த உறுதியின்றியேயொழுகினேனென்று மறுகல்; பற்றையும் ஆர்வத்தையும் விடு; இறுகலென்று பெருநவையகற்றினான். அங்ஙனமகற்றி இறைவன் சொன்ன அமிர்தத்தையுண்டால் நின்கணின்ற நீனிறவினையினீங்கி நற்கதியைப்பெறுதி; அக்கதிதான் உள்ளநாளெல்லாம் நீங்காத இன்பத்தையே தருமாதலான் மறவலையாகி இவ்வைந்தினையும் நினைத்திடென்று உபதேசித்தாற்கு அதுவும் ஐந்துபதமாகிய அமிர்தத்தை நெஞ்சாலே யுண்டு அவ்வுடம்பை விட்டுப்போயிற்றென்க. (கூரு-எ)

(வேறு)

948. பாடு பாணி முகமெனும் பான்மையின்
ஓடி யாங்கொ ருயர்வரை யுச்சிமேற்
கூடிக் கோலங் குயிற்றிப் படங்களை ந்
தாடு கூத்தரி னையெனத் தோன்றினான்.

---

பற்றும் ஆர்வமும்: சீவக. 3039; "பற்றவா வேரொடும் பசையற" (கம்ப. தாடகைவதை. 3). மரண அச்சத்து இறுகல் - மரணத்தால் வரும் பயத்தில் மனம் அழுந்தாதே. இறைவன்: அருகன். உண்டால் நற்கதியைப் பெறுதி. பெருநவை - மரணத் துன்பத்தை.

947. செறும்பு - குற்றம். மறவலையாகி - மறத்தல் இல்லையாகி. ஐந்தும் - ஐந்து மந்திரத்தையும். நீல் நிற வினை - கரிய பாவமாகிய வினை; "கருவினை கழுவப் பட்டு", "தொகலருங் கருவினை" (சீவக. 951, 3101). எனைப்பகல் தோறும் - எவ்வளவோ நாட்கள் தோறும். விள்ளா இன்பம் - நீங்காத இன்பம். என்றாற்கு - என்று உபதேசித்த சீவகனுக்கு. அனைப்பத அமிர்தம் - அந்த ஐம்பதமாகிய அமிர்தத்தை. அயின்று - உண்டு. விட்டு - நாயுடம்பை நீக்கி.

948. பாடு - சொல்லப்பட்ட; பாடுதல் - சொல்லுதல்; "அறம்பாடிற்றே யாயிழை கணவ" (புறநா. 34: 7). பான்மையின் - தன்மையினால்.

பாடு பாணிமுகம் எனும் பான்மையின் - [1] பரமாகமத்திற்கூறப் பட்ட [2] உயிர்போமுகங்களிற் பாணிமுகமென்னுங் கதியாலே; பாணி - கை; கைம்முகமாவது: சுட்டுவிரலும் பெருவிரலும் நீங்கினவிடம். அது போல முதல் நேரேயோடிப் பின் விலங்கியோடுதலாம். [3] வெள்ளிமலை யாதலின், 'உயர்வரை' என்றார்.

(இ - ள்.) ஓடி வரையுச்சிமேலே பொருந்திக் கூத்தரைப்போலே கோலமெல்லாம் குயிற்றப்பட்டு வியக்கத் தோன்றினானென்க. (கூஅ)

949. ஞாயில் சூடிய நன்னெடும் பொன்னகர்க்
கோயில் வட்டமெல் லாங்கொங்கு சூழ்குழல்
வேயி னன்னமென் றோளியர் தோன்றியங்
காயி னார்பரி யாளம டைந்ததே.

[1] ஞாயில்: ஆகுபெயர். பரியாளம்: பாகதம்.

(இ - ள்.) பொன்னகரிற் கோயிலுள்ள வரைப்பெல்லாம் மென் றோளியர் தோன்றித் தேவியராயினார்; அவ்விடத்தே ஒழிந்த பரிவாரமும் சேர்ந்ததென்க. (கூகூ)

---

கோலம் குயிற்றி - அலங்காரமெல்லாம் செய்யப்பட்டு. படம் களைந்து - வேடத்திற்குரிய ஆடைகளைக் களைந்து. கூத்தரின் - கூத்தரைப் போல். ஐயென - வியக்கும்படி.

(உரை) [1] பரமாகமம் - இங்கே சினாகமம். [2] உயிர்போகும் கதி பல்வகை; ஸித்தருடைய உயிர்போம் கதி அவிக்கிரக கதி; அதற்கு ஸமயம் க; ஸம்ஸார ஜீவனுடைய உயிர்போம் கதி விக்கிரக கதி; அது மூன்று வகைப்படும்: அவற்றுள் முதலாவது பாணிமுக்தாகதி; அது (ட) என்பது போல் ஒரு வளைவுடையது; அதற்கு ஸமயம் உ; அது தேவ ருக்கும் மனிதருக்கும் உரியது. இரண்டாவது இலாங்கல கதி: அது (ப) என்பது போல் இரண்டு வளைவுடையது; அதற்கு ஸமயம் ௩; அது விலங்குகளுக்குரியது. மூன்றாவது கோமூத்திர கதி; அது மூன்று வளை வுடையது; அதற்கு ஸமயம் ச; அது நரகர்க்குரியது. இவ்விஷயம் தத்துவார்த்த சூத்திரமென்னும் நூலிற் கூறப்பட்டுள்ள தென்பர். [3] வித்தியாதர மலை; சீவக. 395, 546.

949. ஞாயில் - ஏப்புழைக்கு நடுவாய் எய்து மறையும் சூட்டு; சீவக. 105, ந.; பு - வெ. 86. இங்கே மதிலுக்காயிற்று. கோயில் வட்டம் - கோயிலின் எல்லை. கொங்கு - வாசனை. வேயின் அன்ன - மூங்கிலை யொத்த; இன்: வேண்டாவழிச்சாரியை. ஆயினார் - தேவிய ராயினார். பரியாளம் - பரிவாரம்; பெருங். 1. 56: 201, 3. 23: 39, 5. 8: 56.

(உரை) [1] ஞாயிலென்னும் உறுப்பு அதனையுடைய மதிலுக்காயிற்று.

950. மிடைந்த மாமணி மேகலை யேந்தல்குற்
றடங்கொள் வெம்முலைத் தாமரை வாண்முகத்
தடைந்த சாய லரம்பையர் தம்முழை
மடங்க லேறனை யான்மகிழ் வெய்தினான்.

(இ - ள்.) சிங்கவேற்றையொப்பான், அல்குலையும் முலையையும் முகத்தையும் சேர்ந்த சாயலையுமுடைய அரம்பையரிடத்தேமகிழ்ச்சியைப் பொருந்தினானென்க. (கூ00)

(வேறு)

951. கற்றவைம் பதங்க ணீராக் கருவினை கழுவப் பட்டு
மற்றவன் றேவ னாகி வானிடு சிலையிற் றோன்றி
இற்றத னுடம்பு மின்னா விடரொழித் தினிய னாகி
உற்றவ னிலையு மெல்லா மோதியி னுணர்ந்து கண்டான்.

நூல்கள் இந்திரவில் இன்னவாறு தோன்றுமென்று அது தோன்று முறைமை கூறுவாகலின், அங்ஙனந்தோன்றுகின்ற தேவர்க்கு அஃது உவமையாயிற்று. இக்கருத்தானன்றே, "வானிடு வில்லின் வரவறியா" (நாலடி. கடவுள்.) என்றார் பிறரும். ஓதி - [1] அவதி ஞானம்.

இற்றவவ்வுடம்பும், உற்றவனிலைமையும் பாடம்.

(இ - ள்.) அவன்றான், கற்ற பஞ்சநமஸ்காரமும் நீராகத் தீவினை கழுவப்பட்டுச் சிலைபோலத்தோன்றித் தேவனாகி, போகட்ட உடம்பையும் இடரைக்கெடுத்துத் தனக்கு இனியனாய்த் தன்னைச் சேர்ந்த சீவக னிலையையு மெல்லாம் ஓதியாற் கண்டுணர்ந்தானென்க. (கூ0க)

(வேறு)

952. இரும்பி னீர்மை கெடுத்தெரி தன்னிறத்
தரும்பொ னாக்கிய வாருயிர்த் தோழனை
விரும்பி விண்ணிறுத் தொய்யெனத் தோன்றினான்
சுரும்புண் கண்ணிச் சுதஞ்சண னென்பவே.

---

950. மிடைந்த - நெருங்கிய. தடம் - உயர்ச்சி; பரப்பு எனினுமாம். வாள் - ஒளி. அடைந்த சாயல் - சேர்ந்த மென்மை. அல்குலையும், முலையையும், முகத்தையும், சாயலையும் உடைய அரம்பையர். மடங்கல் ஏறு - ஆண்சிங்கம்.

951. ஐம்பதங்கள் - பஞ்ச நமஸ்கார மந்திரங்கள். கருவினை - பாவமாகிய அழுக்கு; சீவக. 947, அடிக். வானிடு சிலையின் - மேகத்தில் தோன்றும் இந்திர வில்லைப்போல; சிலப். 15 : 156; மணி. 6 : 10; சூளா. துறவு. 209; மேரு. நால்வரு. 29. இற்ற - அழிந்த. தன் உடம் பென்றது நாயுடம்பை. இன்னா இடர் - தீங்கைத் தரும் துன்பத்தை. இனியனாகி உற்றவன் : சீவகன். ஓதி - மெய்ஞ்ஞானம்; சீவக. 1156; மணி. 5 : 107; பெருங். 2. 11 : 161-4.

(உரை) [1] அவதிஞானம் - முற்பிறப்பையறியும் அறிவு.

952. நீர்மை - தன்மையை. எரிதன் நிறத்து - நெருப்பின் நிறத்தைப்போன்ற. இரும்பின் நீர்மையைக் கெடுத்துப் பொன்னாகச் செய்தல்:

(இ - ள்.) அங்ஙனமுணர்ந்தவன், இழிந்த நிலையைக்கெடுத்து உயர்ந்த நிலையையாக்கிய தோழனைக் காட்சியைவிரும்பி விண்ணைக் கடந்து முன்னே வந்து கடுகத்தோன்றினான்; அவன்பெயர் சுதஞ்சண னென்று கூறுவரென்றாரென்க.

விண்ணறுத்தும், சுதஞ்சனனும் பாடம். (கூ௦உ)

(வேறு)

953. ஓசனை நறும்புகை கமழ வொண்ணிலா
வீசிய கதிர்பரந் திமைக்கு மேனியன்
மாசறு மணிமுடி மிடைந்த மாலையன்
பூசுறு பருதியிற் பொலிந்து தோன்றினான்.

நறும்புகை ஓரோசனை கமழாநிற்க இமைக்குமேனி; நிலாவை வீசிய மதிபோலே விளங்குமேனியன் - சுதஞ்சணன்; அவனுடைய முடிவந்து சேர்ந்த இயல்பினையுடையான் - சீவகன்; என்றது இவன் ஆசாரிய னாதலிற் கண்ட பொழுதே முடிவணங்கினான்; மேல், "எந்தை" (சீவக. 955) என்றும் "அண்ணலேந்தி" (சீவக. 1158) என்றும், "காய்கதிர் சுமந்து" (சீவக. 1168) என்றும், "உரிமைதன்னால்......ஆட்டி" (சீவக. 1169) என்றும், "எரிபொனீண்முடிகவித்தனன் பவித்திரற் றொழுதே" (சீவக. 2366) என்றும், "தாளாரவேத்தி" (சீவக. 3037) என்றும், "களிப்புற்றான்" (சீவக. 3085) என்றுங் கூறுதலின் இதுவே கருத்தாம். பூசுறுபருதியின் - கைசெய்த பருதி போல. விளக்கத்தானும், மதியைத் தோற்றுவித்தலானும் பருதியுவமை. இனி, மேனியனாய் மாலை யனாய்ப் பருதியிடத்தே தோன்றினானென்பாருமுளர்.

(இ - ள்.) மேனியனது முடிமிடைந்த சீவகன் அப்பொழுது பருதி போலத் தோன்றினானென்க. (கூ௦௩)

---

சீவக. 960, 1204. இரும்பைக் கெடுத்துப் பொன்னாக்கியவென்றது, இரும்புயிரென்று கூறப்படும் நரகருயிரைக் கெடுத்துப் பொன்னுயி ரென்று கூறப்படும் தேவருயிரைக் கொடுத்ததை உணர்த்தியது; இதன் விரிவை, சீவக. 3107-ஆம் பாடல் முதலியவற்றாலும் அவற்றினுரை யாலும் அறியலாகும். தோழனை - சீவகனை. விரும்பி - காணவிரும்பி. விண்ணிறுத்து - ஆகாயத்தைக் கடந்து. ஒய்யென - விரைய. சுரும்பு - ஒருவகைவண்டு. உண் - தாதை உண்ணும்.

953. ஓசனை: நாற்காதத்தின் அளவு ஒரு யோசனை யென்பது சைனருடைய கொள்கை; ஓசனை கமழுமென்றல் மரபு; "ஓசனை யுலாவி நாறுமே" (சீவக. 99, அடிக்.). கதிர் - சந்திரன்; சீவக. 943. நிலாவை வீசிய கதிர். இமைக்கும் - விளங்குகின்ற. கதிரைப்போல இமைக்கும் மேனியனென்றது சுதஞ்சணனை. முடி - சுதஞ்சணனுடைய கிரீடம். மிடைந்த - சேர்ந்த. மாலையன் - இயல்பினையுடையான்; மேனிய

(வேறு)

954. குன்றெனத் திரண்ட தோளான் குறுகலுங் குமர னோக்கி
நின்றவ னொடுங்க ணொன்று மிமைப்பில நிழலில் யாக்கை
அன்றியுங் கண்ணி வாடா தமரனே யென்று தேறி
நன்றவன் வரவு கேட்பா னம்பிநீ யாரை யென்றான்.

(இ - ள்.) சுதஞ்சணன் அங்ஙனம் குறுகின அளவிலே, சீவகன் நோக்கி, முன்னின்றவனுடைய யாக்கை நிழலில் யாக்கையாயிருந்தது; அன்றியும் கண்ணும் சிறிதும் இமைத்தனவில்லை; கண்ணியும் வாடா தென்று தேவனுதலைத் தேறி, அவன்வரவு நன்றாகக் கேட்க வேண்டி, நம்பி, நீ யாரென்றானென்க.

யாரை : ஐ [1] அசை. அமரனேயாதறேறியும் பாடம். (கஞ௪)

955. குங்குமக் குவட்டின் வீங்கிக் கோலம்வீற் றிருந்த தோளாய்
இங்குநின் னருளிற் போகி யியக்கரு ளிறைவ னாகிச்
சங்கவெண் மலையின் மற்றுச் சந்திரோ தயத்தி னுச்சி
அங்கியா னுறைவ லெந்தை யறிகமற் றென்று சொன்னான்.

இன் : உவமப்பொரு. சங்கவெண்மலை : மலையின்பெயர். மற்று இரண்டும் அசை.

(இ - ள்.) தோளாய், எந்தாய், யான் நின்னருளால் இங்குநின்றும் போய் அங்கே இயக்கருளிறைவனாகி மலையினுச்சியிற்சந்திரோதய மென்னும் நகரிலே யிருப்பேன்; அந்நிலைமை அறிவாயாகவென்று தேவன் கூறினானென்க. (கஞ௫)

---

னுடைய முடிமிடைந்த மாலையன் என்றது சீவகனைச் சுதஞ்சணன் வணங்கியதைக் கூறியபடி. பூசுறு - விளக்கப்பெற்ற. பருதியின் - சூரியனைப்போல. பொலிந்து - பொலிவுபெற்று. மாலையன் பருதியைப்போலத் தோன்றினான் என்க.

954. தோளான் : சுதஞ்சணன். குமரன் : சீவகன். நின்றவன் - தன் முன் நின்ற சுதஞ்சணனுடைய. ஒன்றும் - சிறிதும். இமைப்பில - இமைக்கவில்லை. நிழலில் யாக்கை - நிழலில்லாத யாக்கையாக உள்ளது. கண்ணி வாடாது - மாலை வாடவில்லை. அமரனே - இவன் தேவனே. தேறி - தெளிந்து. அவன் வரவு நன்று கேட்பான் - சுதஞ்சணனுடைய வரவை நன்றாகக் கேட்க வேண்டி. நம்பி : விளி. தேவர்க்கும் நரகர்க்கும் உள்ள சரீரம் வைக்ரீகசரீரமென்றும், அதற்குத் தடையும் ஆயுதச்சேதமும் இல்லையென்றும், இமையாமை, நிழலின்மை, மாலை வாடாமை, கால் நிலந்தோயாமை அதற்கு உண்டென்றும், மனிதர்க்கும் விலங்குகளுக்கும் உள்ள சரீரம் ஔதாரிக சரீரமென்றும் அவற்றிற்கு ஆயுதச்சேதமுதலியன உண்டென்றும் கூறுவர்.

(உரை) [1] ஐகாரம் முன்னிலை விளக்கியதெனினுமாம்; கலித். 98 : 1, ந.

955. குவட்டின் - சிகரத்தைப்போல. கோலம் - அழகு; அழகைத் தரும் தெய்வமுமாம். இயக்கர் - யக்ஷர். சங்கவெண்மலை : சுதஞ்சண

956. என்றவ னுரைப்பக் கேட்டே யிமயமு நிகர்க்க லாற்றாப்
பொன்றரு மாரி வண்கைப் புரவலன் புகன்று நோக்கி
வென்றவ ருலகம் பெற்ற வேந்துடை யின்ப மெல்லாம்
இன்றெனக் கெதிர்ந்த தென்றா னெரியுமிழ்ந்திலங்கும்வேலான்.

(இ - ள்.) என்று அவன்கூறக்கேட்டு, இமயமும் ஒக்கமாட்டாத பெரிய பொன்னை மாரிபோல எல்லார்க்குங்கொடுக்கும் வண்கையை யுடைய புரவலனாகிய வேலான், விரும்பிப்பார்த்து, சித்தக்ஷேத்திரத்தைப் பெற்ற [1] சித்தபரமேஷ்டிகளுடைய இன்பமெல்லாம் இன்று எனக்கு வந்ததென்றானென்க. (கஙகு)

957. சூடுறு கழலி னாற்குச் சுதஞ்சண னிதனைச் சொன்னான்
பாடல்வண் டாற்றும் பிண்டிப் பகவன திறைமை போல
மூடியிவ் வுலக மெல்லா நின்னடித் தருவ லின்னே
ஆடியுட் பாவை போனீ யணங்கிய தணங்க வென்றான்.

(இ - ள்.) பகைவர் சூடுதலுறுங்கழலினாற்குச் சுதஞ்சணன் இதனைச் சொன்னான்; அது யாதெனிற் பகவனது இறைமைத்தன்மை இவ்வுலகெல்லாம் அகப்படுத்தினாற்போல நினது இறைமைத்தன்மையாலே உலகெல்லா மகப்படுத்தி அதிற் பல்லுயிரும் கண்ணாடியிற்பாவைபோல நீ வருந்திய தொழிலுக்கு வருந்தும்படியாக நின்னடியிடத்தே தருவே னென்று சொன்னானென்க.

உள் - இடம். "மன்னுயி ரெல்லா நின்னஞ் சும்மே" (புறநா. 20) என்றார் பிறரும். (கஙஎ)

---

னுடைய மலையின்பெயர். மலையின் உச்சியில் சந்திரோதயத்து உறைவல் என மாறி இயைக்க. எந்தை : விளி.

956. அவன் : சுதஞ்சணன். இமயமுநிகர்க்கலாற்றா : பொன்னுக்கு அடை. பொன்னை மாரிபோற்றரும் வண்கையையுடைய புரவலன்; என்றது சீவகனை. புரவலனாகிய வேலான் என இயைக்க. புகன்று - விரும்பி. வென்றவர் - பிரகிருதிகளாகிய காதி, அகாதி யென்னும் இருவகைக் கன்மங்களையும் வென்ற ஸித்தர். உலகம் - ஸித்தக்ஷேத்திரம். வேந்துடை இன்பம் - சித்தருடைய இன்பம்; "வென்றார்தம் வீட்டின்பம்" (சீவக. 962); வேந்து : சாதி யொருமை. எதிர்ந்தது - கிட்டியது.

(உரை) [1] பஞ்சபரமேஷ்டிகளுள் ஒருவர்.

957. சூடுறுகழலினாற்கு - பகைவர் தம் முடிமீது சூடுதற்குரிய பாதத்தையுடைய சீவகனுக்கு. பாடலையுடைய வண்டு அரற்றும். பிண்டிப் பகவன் - அசோகமரத்தின்கீழ் எழுந்தருளியிருக்கும் அருகதேவன். மூடி - அகப்படுத்தி. இன்னே - இப்பொழுதே. ஆடி - கண்ணாடி. ஆடிப்பாவையின் இயல்பு : "கையுங் காலுந் தூக்கத் தூக்கும், ஆடிப் பாவை போல" (குறுந். 8 : 4-5); "மாற்றிரி, ஆடிப்பா வையோ டலர் நிழற் பாவை, கைகான் மெய்பிறி தெவையும் பையயத் தூக்கிற் றூங்கி மேக்குயர் புயர்தல்" (ஞானாமிர்தம், 6 : 20-23). நீ அணங்கியது அணங்க - நீ வருந்திய தொழிலுக்கு உலகத்து உயிர்களெல்லாம் வருந்தும்படியாக. இன்னே இறைமை போல மூடிப் பாவைபோல் நீ அணங்கியதணங்க நின்னடித் தருவல் என்றான் என மாறியியைக்க.

958. வாளொடு வயவ ரீண்டி வாரணத் தொழுவின் முற்றி
மீளிமை செய்யின் வெய்ய நண்பநின் னினைப்ப தல்லால்
நாளொடு பக்க நைந்து வீழினும் வீழ்த லில்லாக் [ருன்.]
கோளுடைக் கிழமை யொப்பாய் குறைவிலன் பிறவி னென்

(இ - ள்.) நாளோடு பக்கங்களும் கெட்டு வீழினும் வீழுந்தன்மை யில்லாத கோள்களினுடைய உரிமையோடொத்த உரிமையையுடையாய், வயவர் ஈண்டி யானைத்தொழுவோடே என்னை வளைத்து மீளிமை செய்தா ராயின், யான் விரும்பிய நண்பனே, நின்னை நினைப்பதல்லது பிற வாற்ருன் ஒன்றும் குறைவிலேனென்ருனென்க.

அருமைநோக்கி, 'செய்யின்' என்ருன். அங்ஙனம் மேல்வருகின்ற ஊழ் இக்கருத்தினைப் பிறப்பித்துநின்றது. 'முற்றி' எனவே சிறை கோடலன்றிக் சுட்டுதலின்மையுணர்க. (கூ௦அ)

959. இன்னிழ லிவரும் பூணு னிருவிசும் பிவர்த லுற்றுப்
பொன்னெழு வனைய தோளாற் புல்லிக்கொண் டினிய கூறி
நின்னிழல் போல நீங்கே னிடர்வரி னினைக்க வென்று
மின்னெழூஉப் பறப்ப தொத்து விசும்பிவர்ந் தமரன்
[சென்ருன்.

958. வயவர் - வீரர். ஈண்டி - என்னைநெருங்கி. வாரணத்தொழு - யானைத்தொழுவம். முற்றி - வளைத்து. மீளிமை - வன்மை; சீவக. 940, அடிக். இங்கே, வன்மையைக் கொண்ட போருக்காயிற்று. வெய்ய நண்ப - யான் விரும்பிய நண்பனே; வெய்ய - விரும்பிய; சீவக. 237, அடிக். நின் - நின்னை. நாள் - நாண்மீன்கள். நைந்து - கெட்டு. கோளுடைக்கிழமை - ஞாயிறு முதலிய கிழமைகள். ஏழுகோளுக்கும் அவற்றிற்கும் மிக்க உரிமை உண்டென்பர்; கிழமையென்பதன் பொருளே இதனைப் புலப்படுத்தும். கிழமை ஒப்பாய் - கிழமையோ டொத்த உரிமையையுடையாய். கிழமை ஒப்பாய், நண்ப, வயவர் மீளிமை செய்யின், நின்னை நினைப்பதல்லால் பிறவின் குறைவிலன் என்ருன் என மாறிமுடிக்க.

959. நிழல் இவரும் பூணன் - ஒளிபரக்கும் ஆபரணத்தை யுடைய சுதஞ்சணன். இவர்தலுற்று - போக எண்ணி. பொன் எழு - பொற்றூண். தோளானைப் புல்லி; தோளான்: சீவகன். இடர்வரின் - நினக்குத் துன்பம் வந்தால். இடர்வரின் நினைக்க: சீவக. 16, அடிக்; "என்பெயர் நினைந்தா லெவ்விடத் தாயினும், துன்ப நீக்குவெ னென் றவன்" (பெருங். 5. 2 : 56-7). நினைக்கவென்று இனிய கூறி என

(இ - ள்.) சுதஞ்சணன், விசும்பிலேபோகக்கருதிச் சீவகனைப் புல்லிக்கொண்டு, யான் நின்னிழல்போல நின்னை நீங்கேன்; நினக்கு ஓரிடர் வந்ததாயின் என்னை நினைப்பாயாகவென்று பின்னும் இனிய சொற்களைக்கூறி மின் மாயாது பறக்குநிலைபோலே அவன் விசும்பிலே உயர்ந்து பறந்துபோனானென்க. (கூ0கூ)

960. சொல்லிய நன்மை யில்லாச் சுணங்கனிவ் வுடம்பு நீங்கி
எல்லொளித் தேவ னாகிப் பிறக்குமோ வென்ன வேண்டா
கொல்லுலை யகத்திட் டூதிக் கூரிரும் பிரதங் குத்த
எல்லையில் செம்பொ னாகி யெரிநிறம் பெற்ற தன்றே.

கூர்ப்பு - மிகுதி; என்றது பொன்னாதற்கு வேண்டுஞ்செய்கைகளை முன்னேயுடைய இரும்பென்றவாறு.

(இ - ள்.) தானமுதலிய நன்மைகள் இம்மையிற்செய்யாத சுணங்கன், இவ்வுடம்பைநீங்கி இதற்குமுன்னர் நல்வினை வந்துதவி ஒருவன் உபதேசித்த மந்திரத்தால் தேவனாய்ப் பிறக்குமோவென்று உலகத்தார் கருதவேண்டா; உலையிலேயிட்டூதி உருகினமுகத்து இரதத்தைக்குத்த, இரும்பு மாற்றற்ற பொன்னாய் விளங்குநிறத்தைப் பெற்றதல்லவோ? இதுவும் அத்தன்மைத்தென்று கருதுகவென்றானென்க.

இதுவும் அத்தன்மைத்தென்று கூட்டிவிரித்தலின், இது சொல்லெச்சம். முன், "பெருநவையகற்றினான்" (சீவக. 946) என்றது உருகுகின்ற முகத்திற்குவமை. (கூகூ0)

---

இயைக்க. மின்எழூஉ - மின்னல் எழுந்து. இவர்ந்து - பறந்து. அமரன் - தேவனாகிய சுதஞ்சணன்.

960. நன்மை - தானம் முதலிய நல்வினை. இல்லா - இப்பிறப்பிற் செய்யாத. சுணங்கன் - நாய். எல் ஒளித்தேவனாகி - மிக்க ஒளியை உடைய தேவனாகி; எல்லொளி : ஒருபொருட் பன்மொழி. நாய் தேவனானமை; "தேவனு நாயாகுந் தீக்காட்சி யானும், தேவனு நற்காட்சியால்" (அருங்கலச். 38); 'நாய் தேவனாயிற்று' (தொல். வேற்றுமை மயங்கு. 19, சே.) என்னும் உதாரணம் இவ்வரலாற்றை உட்கொண்டது. கொல்லுலை யகத்து - கொல்லனது உலையில். ஊதி இரதங்குத்த என இயைக்க. குத்த - சொரிய; "சேதா நறுநெய் யாசின்று குத்தி" (பெருங். 1. 48 : 92). கூர் இரும்பு - மிகுதியான இரும்பு. எரிநிறம் - விளங்குகின்ற நிறத்தை. இரதத்தால் இரும்பு பொன்னாதல்; "இரும்பெரி பொன்செயு மிரத நீரதொன்று" (சீவக. 1204); "நிறக்கவல் லிரும்பைச் செம்பொனும் வண்ண நிகழ்த்திய விரதமே நிகர்ப்ப" (வி - பா. இந்திரப். 25)

(மேற்.) அடி, 1 - 2 : தொல். வேற்றுமைமயங்கு. 19, சே. மு : கல். 'வானவர்', 39, மயில்.

(வேறு)

961. எரிமாலை வேனுதியி னிறக்கிக் காம னடுகணையாற்
றிருமாலை வெம்முலைமேற் றிளைக்குந் தேவர் திருவுறுக
அருமாலை யெண்வினையு மகற்றி யின்பக் கடலாக்கித்
தருமாலை யல்லதியான் றலையிற் றாழ்ந்து பணிவேனே.

(இ - ள்.) எரியொழுங்குபோலும் வேலின்முனைகளான் [1]இரணியன் இராவணனன் முதலாயினோரைக்கொன்று பின் காமனுக்குத்தோற்று அவனெய்த கணையாலே முலைமேற்றிளைக்குந் தேவர்களெல்லாம் ஸ்ரீமான் களாக; நீக்குதற்கரிய எண்வினைகளையும் நீக்கி வீட்டின்பத்தை யுண்டாக்கித் தரும் அருகனை யல்லது யான் தலையாற்றாழ்ந்து வணங்கு வேனேவென்றானென்க.

[2]எண்வினை யாவனவற்றை, "எண்மர்கவிழ்ந்தனர்" (சீவக. 3076) எனத் துறவிற்கூறுவர் விரிய. (கககக)

962. ஒன்றாய வூக்கவேர் பூட்டி யாக்கைச் செறுவுழுது, நன்றாய நல்விரதச் செந்நெல் வித்தி யொழுக்கநீர், குன்றாமற் றாங்கொடுத்தைம் பொறியின் வேலி காத்தோம்பின், வென்றார் தம் வீட்டின்பம் விளைக்கும் விண்ணோ ருலகீன்றே.

---

961. எரிமாலை - தீயின் ஒழுங்குபோன்ற. நுதி - நுனி. இறக்கி - கொன்று. காமன் - மன்மதனுடைய. திரு மாலை - வீற்றுத்தெய்வத்தை யும் மாலைகளையுமணிந்த. திளைக்கும் - இடைவிடாது பயிலும்; சீவக. 50, ந. திரு உறுக - செல்வங்களைப்பெறுக; இகழ்ச்சிக் குறிப்பு. "அருஞ் செயற் பொருட்பிணி பெருந்திரு வுறுகென" (ஐங். 355 : 2). அருமாலை- நீக்குதற்கரிய இயல்பையுடைய. இன்பம் - வீட்டின்பம். ஆக்கித்தரும் - உண்டாக்கிக் கொடுக்கும். மாலை அல்லது - அருகதேவனை யல்லாமல்.

(உரை) [1] திருமால் இரணியனைக்கொன்றமை அகளங்காஷ்டகம் என்னும் சைனநூலிற் கூறப்பட்டுள்ளதென்பர். அருகனையே படைத்தல் முதலிய ஐந்தொழிற்குமுரிய கடவுளாகக் கூறுதல் சைனருடைய கொள்கையாதலின் ஈண்டு மாலென்றது அருகனைக் குறித்தது. [2] எண் வினையாவன : ஞானாவரணீயம், தரிசனாவரணீயம், வேதநீயம், யோகநீ யம், ஆயுஷ்யம், நாமம், கோத்திரம், அந்தராயம் என்னும் இவை.

962. ஒன்றாய - ஒன்றுபட்ட. ஊக்க ஏர் - முயற்சியாகிய ஏரை. ஊக்கம் - முயற்சி; யாக்கைச் செறு - உடம்பாகிய வயலை. நன்றாய - நன்மையாகிய. விரதமாகிய செந்நெல்லை. ஒழுக்கநீர் - நல்லொழுக்க மாகிய நீரை. குன்றாமல் - வற்றாமல். கொடுத்து - வயலிற் பாய்ச்சி. ஐம்பொறியாகிய வேலியை. காத்தோம்பின் - காத்துப் பரிகரித்தால்; "காளையைக் காவலோம்பி" (சீவக. 473). வென்றார் - சித்தர். வென்றார்தம் இன்பம்; "வென்றவ ருலகம் பெற்ற வேந்துடை யின்பம்" (சீவக. 956, அடிக்.). விண்ணோருலகு - சுவர்க்கம். விண்ணோருலகீன்று, வென்றார்தம் வீட்டின்பம் விளைக்கும் என மாறுக.

(இ - ள்.) [1] பகிராத முயற்சியாகிய ஏரைப்பூட்டி, உடம்பாகிய செய்யைத் தவத்தாலே வருந்துவித்து, விரதமாகிய செந்நெல்லை விதைத்து, [2] சாரித்திரமாகிய நீரை வற்றுமற் பாய்த்தி, ஐம்பொறியாகிய வேலியைப் புலனாகிய பசுக்கள் பிரியாதபடி காத்துப் [3] பரிகரிப்பின், அந்நிலை முதற் சுவர்க்கத்தினைத் தந்து, பின் வீட்டினைவிளைக்குமென்று ரெனன்க.

வென்றார் - சித்தபரமேஷ்டிகள். [4] இன் : சாரியை. "சொல்லிய" (சீவக. 960) முதலிய மூன்றுகவியும் சீவகன் தோழரை நோக்கிக் கூறியவை. (கசஉ)

(வேறு)

963. இத்தலை யிவர்க ளேக விமயநட் டரவு சுற்றி
அத்தலை யலற முந்நீர் கடைந்தவ ரரவ மொப்ப
மைத்தலை நெடுங்க ணாரு மைந்தரு மறலி யாட
மொய்த்திள வன்ன மார்க்கு மோட்டிரும் பொய்கை புக்கார்.

இனி, பொய்கைகளில் விளையாடுதல் கூறுகின்றார்.

[1] மந்தரத்தின்றொழிலை இமயத்துக்கேற்றினார், அது மலையரையனாதலின் : [2] "இமையவில் வாங்கிய" (கலித். 38) என்றார் பிறரும். அத்தலை - அக்காலத்து.

(இ - ள்.) சீவகனும் தோழரும் இவ்விடத்துநின்றும் போகாநிற்க, நகரின் மகளிரும் மைந்தரும் அக்காலத்தே இமயத்தை நட்டுப் பாம்பைச் சுற்றி முந்நீரலறக் கடைந்தவர் ஆரவாரத்தையொப்ப மாறுபட்டு ஆடுதற்குப் பொய்கையிலே புக்காரென்க. (கசங)

---

(உரை) [1] பகிராத - பிளவுபடாத. [2] சாரித்திரம் - நல்லொழுக்கம். [3] பரிகரிப்பின் - தீங்கை அகற்றினால். [4] பொறியின் என்பதிலுள்ளது.

963. இத்தலை - இவ்விடம். இவர்கள் : சீவகனும், அவன் தோழரும். இமயநட்டு அரவுசுற்றி - இமயமலையை மத்தாக நட்டு வாசுகி என்னும் பாம்பைக் கடைகயிறாகச்சுற்றி; "வடவரையை மத்தாக்கி வாசுகியை நாணாக்கி" (சிலப். ஆய்ச்சியர் குரவை). முந்நீர் அலற - கடல் ஒலிக்க. அரவம் - ஆரவாரத்தை. மைத்தலை நெடுங்கண் - மையைத் தன்னிடத்தேயுடைய நீண்ட கண்; தலை : ஏழனுருபு. மறலி - மாறுபட்டு. ஆட விளையாடும்பொருட்டு. ஆர்க்கும் - ஒலிக்கும். மோட்டிரும் பொய்கை - உயர்ந்த பெரிய பொய்கை.

(உரை) [1] "ஐந்தலை யுத்தி யரவுநா ணாகை, மந்தர வில்லி னந்தணன் விட்ட" (பெருங். 1. 43 : 119-20). [2] 'இமையவில் வாங்கிய - இமய மலையிடத்துப் பிறந்த மூங்கிலாகிய வில்லை வளைத்த' (கலித். 38, ந.); இமயத்தின் தொழிலை மேருவிற்கு ஏற்றிக் கூறுதலும் உண்டு ; "மேருக் குன்றத் தூறுநீர்ச் சரவணத்து" (மணி. 18 : 92)

964. கலந்தெழு திரைநுண் ணுடைக் கடிக்கய மடந்தை காமர்
இலங்குபொற் கலாபத் தல்கு லிருகரைப் பரப்பு மாக
அலர்ந்ததண் கமலத் தம்போ தணிதக்க முகத்திற் கேற்ப
நலங்கெழு குவளை வாட்க ணன்னுத னலத்தை யுண்டார்.

**(இ - ள்.)** இருகரைப்பரப்பும் அல்குலாக, அதிலே கலந்தெழுகின்ற திரையாகிய நுண்ணிய ஆடையினையும் கமலப்போதாகிய முகத்திற் கேற்ப அழகு தக்க குவளையாகிய வாட்கண்ணினையுமுடைய கயமடந்தை யாகிய நன்னுதல் நலத்தை நுகர்ந்தாரென்க.

ஏற்பவென்னுமெச்சம் தக்கவென்னும் வினைகொண்டது. (கசச)

965. தண்ணுமை முழவ மொந்தை தகுணிச்சம் பிறவு மோசை, எண்ணிய விரலோ டங்கை புறங்கையி னிசைய வாக்கித், திண்ணிதிற் றெறித்து மோவார் கொட்டியுங் குடைந்து மாடி, ஒண்ணுதன் மகளிர் தம்மோ டுயர்மிசை யவர்க ளொத்தார்.

**(இ - ள்.)** ஆடவர், ஓவாராய்த் தண்ணுமை முதலியவற்றினோசைகளையும் பிறவும் எண்ணிய வாச்சியங்களினோசைகளையும் விரலினாலும் அகங்கையினாலும் புறங்கையினாலும் தெறித்தும் கொட்டியும் குடைந்தும் இசையும்படி நீரிலே பிறப்பித்து மகளிர்தம்மோடாடித் தேவரையொத்தா ரென்க. (ககரு)

966. சிவிறியின் மாறு தூயுங் குங்கும மெறிந்துந் தேங்கொள்
உவறுநீ ருழக்கி யோட்டி யுடைபுறங் கண்டு நக்குத்
தவறெனத் தாமம் பூட்டித் தருதிறை கொண்டு மின்பத்
திவறினார் காம வெள்ளத் தேத்தருந் தன்மை யாரே.

---

964. திரையாகிய நுண்ணிய ஆடையையுடைய. கயமடந்தை - குளமாகிய பெண். காமர் - அழகிய. தாமரைப்பூவாகிய முகத்திற்கு ஒப்ப. நலம் கெழு - நன்மை பொருந்திய. அணிதக்க குவளை என இயைக்க. குவளைவாட்கண் - குவளைப்பூவாகிய ஒளி பொருந்திய கண்களையுடைய. மடந்தையாகிய நன்னுதல் என இயைக்க. பொய்கையைப் பெண்ணாக உருவகித்தல்: **சிலப். 4 : 72-4, அரும்பத.**

965. தண்ணுமை முதலியன வாத்திய விசேடங்கள். அங்கை - உள்ளங்கை. நீரில் வாத்திய ஓசைகளை உண்டாக்கல்: **மதுரைக். 363; மலைபடு. 295-6.** ஓவார் - ஒழிதலில்லாதவராய். உயர்மிசையவர்கள் - தேவர்கள்.

966. சிவிறியின் - நெடுந்துருத்தியால். தூயும் - தூவியும். குங்குமம் எறிந்தும் - குங்குமநீரை வீசியும். தேங்கொள் - இனிமையைக் கொண்ட. உவறுநீர் - ஊறுகின்ற நீரில்; "உவறுநீ ருயரெக்கர்" (**கலித். 136 : 2**). உடை புறம் கண்டு - தோற்றோடும் முதுகைக் கண்டு. தவறென - பயந் தாயென்று. தாமம் பூட்டி - மாலையை அணிவித்து. ஏத்தரும் தன்மை

சிவிறி - நெடுந்துருத்தி. தருதிறை : இடக்கர்.

(இ - ள்.) ஏத்தருந்தன்மையார், உவறுநீரிலே தூவியும் எறிந்தும் உழக்கி ஒட்டி முதுகுகண்டு நக்கு அஞ்சினுயென்றுபூட்டித் திறை கொண்டும், பின்னும் காமவெள்ளத்தின்பத்தே மிக்காரென்க. (கககூ)

967. சாந்தக நிறைந்த தோணி தண்மலர் மாலைத் தோணி, பூந்துகி லார்ந்த தோணி புனைகலம் பெய்த தோணி, கூந்தன்மா மகளிர் மைந்தர் கொண்டுகொண் டெறிய வோடித், தாந்திரைக் கலங்கள் போலத் தாக்குபு திரியு மன்றே.

(இ - ள்.) சாந்துமுதலியவற்றை மகளிரும் மைந்தருங்கொண்டு ஓடி எறிகையினலே, அவற்றையுடைய தோணிகள் தாம் கடலிற் கலங்கள் போலத் தம்மிற்றக்கித் திரியுமென்க. (ககஎ)

968. கலிவளர் களிறு கைந்நீர் சொரிவபோன் முத்த மாலை
பொலிவொடு திவண்டு பொங்கிப் பூஞ்சிகை யலமந் தாடக்
குலிகநீர் நிறைந்த பந்திற் கொம்பனு ரோச்ச மைந்தர்
மெலிவுகண் டுவந்து மாதோ விருப்பொடு மறலி னுரே.

பொங்கி - பொங்க.

(இ - ள்.) கொம்பன்னுர், களிறு கையாலே நீரைச் சொரிவனபோலே முத்தமாலை பொங்கப் பின்னின மயிரசைய மட்டத்துருத்தியினீரை ஓச்சுதலின் ஆடவர் வருத்தங்கண்டு உவந்து பின்னும் விருப்புடன் மாறுபட்டாரென்க. (ககஅ)

---

யார் - புகழ்தற்கரிய தன்மையையுடையவர். காமவெள்ளத்தின்பத்து இவறினுர் ; இவறினுர் - விரும்பினுர் ; இவறுதல் - விரும்புதல் ; "ஈட்ட மிவறி யிசைவேண்டா வாடவர்" (குறள், 1003)

967. துகில் ஆர்ந்த - ஆடைகள் நிறைந்த. புனைகலம் - அணியப் படும் ஆபரணங்கள். மகளிரும் மைந்தரும் ஓடி எறிய என்க. திரைக் கலங்கள் - கடலிற் செல்லும் கப்பல்கள் ; திரை : ஆகுபெயர். தாக்குபு - ஒன்றை ஒன்று தாக்கி.

968. கலிவளர் - தழைத்தல் வளர்ந்த. கைநீர் சொரிவபோல் - துதிக்கையினின்றும் நீரைச்சொரிவது போல. திவண்டு - அசைந்து. பொங்கி - பொங்க. அலமந்து ஆட - சுழன்று அசைய. குலிகநீர் நிறைந்த பந்தின் - சாதிலிங்கநீர் நிறைந்த மட்டத்துருத்தியால் ; பெருங். 1. 38 : 106, 42 : 191. கொம்பனுர் : மகளிர். ஓச்ச - வீச. மைந்தரது மெலிவைக் கண்டு உவந்து. மாது, ஓ : அசைகள். மறலினுர் - மாறுபட்டார்.

969. வண்ணவொண் சுண்ணம் பட்டு மாலையுஞ் சாந்து மேந்தி, எண்ணருந் திறத்து மைந்த ரெதிரெதி ரெறிய வோடி, விண்ணிடை நுடங்கு மின்னு மீன்களும் பொருவ போல, மண் ணிடை யமரர் கொண்ட மன்றலொத் திறந்த தன்றே.

ஓடி - இளைத்து.

(இ - ள்.) விண்ணிலே மின்னும் மீன்களும் தம்மிற் பொருவபோலே மைந்தர் மகளிரெதிரேயெதிரே சுண்ணமுதலியவற்றையேந்தி எறிய அவ்விரு திறத்தோரும் இளைத்த பின்னர் அமரர் மண்ணிடைக்கொண்ட மணத்தை யொத்த மணம் நிகழ்ந்து நீர்விளையாட்டுக் கழிந்ததென்க. (கசகூ)

(வேறு)

970. உரைத்த வெண்ணெயு மொண்ணறுஞ் சுண்ணமும்
அரைத்த சாந்தமு நானமு மாலையும்
நுரைத்து நோன்சிறை வண்டொடு தேனினம்
இரைத்து நீர்கொழித் தின்பமி றந்ததே.

(இ - ள்) நீர், சுண்ணமுதலியன நுரைத்து வண்டுந்தேனு மிரைத்துக் கொழித்து இனிமை மிக்கதென்க.
எச்சங்கள் செயப்படுபொருளன. (கஉ0)

(வேறு)

971. கத்திகைக் கண்ணி நெற்றிக் கைதொழு கடவு ளன்ன
வித்தக விளைய ரெல்லாம் விழுமணிக் கலங்க டாங்கி
முத்தணிந் தாவி யூட்டி முகிழ்முலை கச்சின் வீக்கிப்
பித்திகைப் பிணையல் சூழ்ந்து பெண்கொடி பொலிந்த வன்றே.

---

969. வண்ணம் - நிறம். சுண்ணத்தையும், பட்டையும், மாலையை யும், சாந்தையும் ஏந்தி. எண்ணரும் - எண்ணுதற்கரிய. மைந்தரும் மகளிரும். எறிய - வீச. நுடங்கும் - அசைகின்ற. மின் - மின்னல். மீன்கள் - நட்சத்திரங்கள். மகளிருக்கு மின்னலும் மைந்தருக்கு மீன் களும் உவமை. மன்றல் - மணம். இறந்தது - நீர்விளையாட்டு முடிந்தது.

970. உரைத்த - தேய்த்த. உரைத்த வெண்ணெய்; பெருங். 1. 41 : 131. சாந்தம் - சந்தனக் குழம்பு. நானம் - கஸ்தூரி. நோன்சிறை - வலிய சிறகையுடைய. இரைத்து - ஒலித்து. கொழித்து - வண்டலை நீக்கித் தெளிவுடையதாக்கி. இறந்தது - மிக்கது. நீர் நுரைத்துக் கொழித்து இறந்தது என்க.

971. கத்திகை - குருக்கத்தி மலர். கண்ணியை நெற்றியிலே யுடைய. கைதொழு கடவுள் - எல்லாரும் கையால் வணங்கும் தெய்வம்; என்றது முருகனை; கத்திகைக் கண்ணி; “ கத்திகைக் கண்ணியன் ”

கத்திகை - குருக்கத்தி. தாங்கி - தாங்க.

(இ - ள்.) குருக்கத்திக்கண்ணியணிந்த நெற்றியையுடைய முருகனை யொத்த இளையரெல்லாம் கலங்களைத் தாங்க, பெண்கொடிகளெல்லாம் ஊட்டி அணிந்து வீக்கிச் சூழ்ந்து பொலிந்தனவென்க. (கஉக)

972. திருந்துபொற் றேருஞ் செம்பொற் சிவிகையு மிடைந்து தெற்றிக், கருங்கயக் களிறு மாவுங் காலியற் பிடியு மீண்டி, நெருங்குபு மள்ளர் தொக்கு நெடுவரைத் தொடுத்த வெள்ளம், கருங்கடற் கிவர்ந்த வண்ணங் கடிநகர்க் கெழுந்த வன்றே.

(இ - ள்.) அவர்களேறுதலின், நெருங்காநின்று மள்ளர்செறிய வரையினின்றும் இடையறுது வீழ்கின்றவெள்ளம் கடற்குப் போனாற் போலே தேரும் சிவிகையும் பிணங்கிச் செறிந்து பெரிய களிறும் பிடியும் மாவுமீண்டி நகர்க்குப் போயினவென்க. (கஉஉ)

(வேறு)

973. கடலெனக் காற்றெனக் கடுங்கட் கூற்றென
உடல்சின வுருமென வூழித் தீயெனத்
தொடர்பிணி வெளின்முதன் முருக்கித் தோன்றிய
தடலருங் கடாக்களிற் றசனி வேகமே.

(இ - ள்.) அவ்வளவிலே கடாக்களிருகிய அசனிவேகம்; காலிற் சங்கிலி பிணித்த மரத்தையும் கம்பத்தையும் அடியிலே முறித்து முழக்காற் கடலெனக் கடுமையாற் காற்றெனக் கொடுமையாற் கூற்றெனக் கோபத்தால் இடியெனச் சேரக்கோறலின் ஊழித்தீயெனத் தோன்றிற் றென்க. (கஉ௩)

---

(சூளா. அரசியல். 257). வித்தக இளையர் - திறமையையுடைய சிறுவர்கள். கலங்கள் - ஆபரணங்கள். தாங்கி - தாங்க; எச்சத்திரிபு. முத்து - முத்து மாலையை. ஆவி - அகிற்புகையை. முகிழ் - மொட்டு. முலையைக் கச்சினுல் வீக்கி; வீக்கி - கட்டி. பித்திகைப் பிணையல் - பிச்சி மாலை; "வித்தகர் தொடுத்த பித்திகைப் பிணையலும்" (பெருங். 1. 42 : 74). பெண் கொடி பொலிந்த - பெண்களாகிய கொடிகள் விளங்கின.

972. சிவிகை - பல்லக்கு. மிடைந்து - நெருங்கி. தெற்றி - பிணங்கி. தெற்றிமிடைந்து என மாறுக. கருங்கயக்களிறு - கரிய பெரிய ஆண் யானை; கய - பெருமை. களிறும் பிடியும் என இயைக்க. மா - குதிரை. காலியற்பிடி - காற்றைப்போல் செல்கின்ற பெண்யானை. மண்டி - செறிந்து. நெருங்குபு - நெருங்கி. தொக்கு - ஒன்றுகூடி. வரைத்தொடுத்த வெள்ளம் - மலையினின்றும் அறுது வீழ்கின்ற வெள்ளநீர். இவர்ந்த வண்ணம் - போனவாறு போல. வெள்ளம் கடற்கு இவர்ந்த வண்ணம் தேரும், சிவிகையும், களிறும், பிடியும், மாவும் கடிநகர்க்கு எழுந்தன என மாறிமுடிக்க.

973. கடலென - முழக்கத்தாற் கடலைப்போல; பெருங். 1. 44 : 88. காற்றென - வேகத்தாற் காற்றைப்போல; பெருங். 1. 42 : 226.

(வேறு)

974. பொருதிழி யருவி போன்று பொழிதரு கடாத்த தாகிக்,
குருதிகொண் மருப்பிற் றுகிக் குஞ்சரஞ் சிதைந்த தென்னக்,
கருதிய திசைக ளெல்லாங் கண்மிசைக் கரந்த மாந்தர், பருதியின்
முன்னர்த் தோன்று மறைந்தபன் மீன்க ளொத்தார்.

(இ - ள்.) அக்குஞ்சரம் கடாத்ததாய் மருப்பிற்றுய்த் தன் தன்மை கெட்டதென்றுராக, அதன் கண் கருதிய திசைமிசை யெல்லாம் தோன்றுமற் கரந்த மக்கள், ஞாயிற்றின்முன் தோன்றுவாய் மறைந்த மீன்களை ஒத்தாரென்க.

மிசை - இடம். இது போகாமல் நின்றநிலையிலே மறைந்ததற் குவமை. (கஉச)

975. (க) கருந்தடங் கண்ணி தன்மேற் காமுக ருள்ளம் போல,
இருங்களி றெய்த வோடச் சிவிகைவிட் டிளைய ரேக, அரும்பெற
லவட்குத் தோழி யாடவ ரில்லை யோவென், றெருங்குகை யுச்சிக்
கூப்பிக் களிற்றெதி ரிறைஞ்சி நின்றாள்.

கூற்றென - கொடுமை செய்தலால் யமனைப்போல. உடல்சின உருமென - மாறுபட்ட கோபத்தாலே இடியைப்போல; பெருங். 1. 48 : 28-9. ஊழித்தீயென - ஒரு சேர அழித்தலாலே ஊழிக்காலத்துத் தீயைப் போல. அடி, 1-2 : “ காற்றெனக் கடலெனக் கருவரை யுருமெனக், கூற் றெனக் குஞ்சரங் கொண்டுபுக் கானரோ ” (சீவக. 1837); “ தோற்ற மலை கட லோசை புயல்கடாம், காற்றினிமிர்ந்த செலவிற்றுய்.........கொள்ளுந் தகைமைத்தே.........மாறன் களிறு ” (முத்தொள்ளாயிரம்); “ காற்றெ னத்தெறு கனலெனக் கனைகட லென்னக், கூற்ற மென்னமேற் றூண்டி னன் குவலயா பீடம் ” (பாகவதம், 10. 17 : 14). தொடர்பிணி வெளில் முதல் - சங்கிலியைக் கட்டிய மரத்தினடியை. தொடர் - சங்கிலி; சீவக. 101, 2242. முருக்கி - முறித்து. அடலரும் - கொல்லுதற்கரிய. கடாம் - மதம். களிறுகிய அசனிவேகம். அசனிவேகம் - கட்டியங்காரனுடைய பட்டத்து யானை. அசனிவேகம், வெளில் முதல் முருக்கிக் கடல் முதலி யன போலத் தோன்றியது என்க.

(மேற்.) அடி, 1-2 : நன். இடை. 5, மயிலை.; இ-வி. இடை. 5.

974. பொருது - அலைத்து. இழி - ஒழுகுகின்ற. குருதி கொள் மருப்பிற்றுகி - இரத்தத்தைக்கொண்ட தந்தத்தை உடையதாகி. சிதைந் தது - தன் இயல்பு கெட மதத்தைக்கொண்டது; “ கூற்ற வேழங் குணஞ் சிதைந் ததுகொல் ” (பெருங். 1. 43 : 135). என்ன - என்று நகர மாந்தர் கூற. கண் கருதிய திசை மிசைகளெல்லாம் - அசனி வேகத்தின் கண் செல்கின்ற திக்குகளின் இடமெல்லாம். கரந்த - தோன்றுமல் ஒளிந்துகொண்ட. பருதி - சூரியன். தோன்று மறைந்த - தோன்றுதன வாய் ஒளித்த. பன்மீன் - பல விண்மீன்கள். குஞ்சரம் கடாத்ததாகி, மருப்பிற்றுகிச் சிதைந்ததென்ன, மாந்தர், பருதி முன்னர் மறைந்த பன் மீனொத்தார் என முடிக்க.

975. கருந்தடங் கண்ணி - கரிய பெரிய கண்ணையுடைய குண மாலை. உள்ளம்போல - மனம் ஓடுமாறு போல. எய்த ஓட - குணமாலை

976. (உ) என்னைக்கொன் றிவள்க ணோடு மெல்லையி லொருவன் றோன்றி, இன்னுயி ரிவளைக் காக்கு மன்றெனி லென்கண் மாய்ந் தாற், பின்னைத்தா னவ தாக வென்றெண்ணிப் பிணைகொ ணோக்கி, மின்னுப்போ னுடங்கி நின்றாள் வீ ததை பொற்கொம் பொப்பாள்.

இவை இரண்டும் ஒருதொடர்.

(இ - ள்.) அங்ஙனம் மறைதலையறியாத குணமாலை, தன்மேலே காமுகர்நெஞ்சு ஓடுமாறுபோலக் களிறு அணுகச்சென்றதாக, இளையர் சிவிகையை விட்டுப் போக, அப்பொழுது, அந்தப் பிணைகொணோக்கி யாகிய பொற்கொம் பொப்பாள், அஞ்சி மின்போலே நடுங்கிநின்றாள்; அதுகண்டு அவட்குத் தோழியாகிய மாலை, என்னைக் கொன்று இவ ளிடத்தே ஓடுமெல்லையில் ஒரு வீரன்றோன்றி இவளையுயிரைக்காக்கும்; காத்திலனாயின் யானிறந்தாற்பின்னை ஆவதாகவென்று தன்னெஞ்சிலே நினைத்து இரண்டுகையினையும் தலைமேலே வைத்து இவ்விடத்தில் ஆண் மக்களில்லையோவென்று கூப்பிட்டுக் களிறு எதிரே சென்றணுகினவள விலே அஞ்சிக் கவிழ்ந்துநின்றாளென்க.

மேல் அங்ஙனம் வருகின்றவூழ் [1] இவளுக்கு அக்கருத்தினைப்பிறப் பித்தது. 'ஒருவன்' என்றது [2] உட்கோளாதலிற் பின், 'ஆடவர்' என்றாள். இக்கருத்தானன்றே மேலும், "நெடுங்கணாற் கவர்ந்த கள்வி, அஞ்சனத் துவலையாடி நடுங்கினாள்" (சீவக. 1024) என்றும், "நாட்டமு நடுக்கமும்" (சீவக. 1003) என்றும் கூறுகின்றதென்க. (கூஉரு-சு)

யிடம் அணுகச் செல்ல. காமுகர்நெஞ்சம்; "கார்விரி மின்ன னார்மேற் காமுகர் நெஞ்சி னோடும், தேர்பரி கடாவி" (சீவக. 442). சிவிகை - குணமாலையிருந்த பல்லக்கை. இளையர் - சிவிகையைத் தாங்கியவர்கள். அரும்பெறலவட்குத் தோழி - பெறுதற்கரிய குணமாலையினுடைய தோழி யாகிய மாலையென்பவள். ஒருங்கு - ஒன்றாக. இறைஞ்சி - கவிழ்ந்து.

976. இவள்கண் - குணமாலையினிடத்து. ஒருவன் - ஓர் ஆண் மகன். இவளை இன்னுயிர் - குணமாலையின் உயிரை; ஐயுருபை ஆற னுருபாக மாற்றிக் கொள்க. என்கண் மாய்ந்தால் - என்னிடத்து உயிர் மறைந்தால். பின்னைத் தானவதாக - பின்பு அவள் உயிர் நீங்குவதாக; தான்: அசை. பிணை - பெண்மான். பிணைகொள் நோக்கியாகிய பொற் கொம்பன்னாள்: குணமாலை. நுடங்கி - நடுங்கி. வீ ததை - பூக்கள் நெருங்கிய.

975-6. தடங்கண்ணி தன்மேல் களிறு எய்த ஓட இளையர் சிவிகை விட்டு ஏக (975), நோக்கியாகிய கொம்பன்னாள் மின்னுப்போல் நுடங்கி நின்றாள் (976); (அதுகண்டு) அவட்குத் தோழி (975), 'என்னைக் கொன்று இவள் கண் ஒடு மெல்லையில் ஒருவன் தோன்றி இவளை உயிரைக் காக்கும்; அன்றெனின் என்கண் மாய்ந்தால் பின்னைத் தானு வதாக என்றெண்ணி' (976) கை உச்சிக் கூப்பி ஆடவரில்லையோ வென்று களிற்றெதிர் இறைஞ்சி நின்றாள் (975) என மாறி முடிக்க.

(உரை) [1] இவள் - குணமாலையின் தோழியாகிய மாலை. [2] உட்கோள் - மனத்திலெண்ணியது.

977. மணியிரு தலையுஞ் சேர்த்தி வான்பொனி னியன்ற நாணல்
அணியிருங் குஞ்சி யேறக் கட்டியிட் டலங்கல் சூழ்ந்து
தணிவருந் தோழர் சூழத் தாழ்குழை திருவில் வீசப்
பணிவருங் குருசில் செல்வான் பாவைய திடரைக் கண்டான்.

(இ - ள்.) பிறரால் தாழ்வித்தலரிய குருசில், இரண்டுதலையிலும் மணியழுத்திப் பொன்னாற்செய்த கயிற்றாலே குழலையேறக்கட்டி அலங்கலை அதன் மேலே சூழ்ந்து அன்பு குறைதலரிய தோழர் சூழ வீசச் செல்கின்றவன் குணமாலையது வருத்தத்தைக் கண்டானென்க.

கட்டியிட்டு : ஒருசொல். குழலையேறக்கட்டியும் பாடம். (கஉஎ)

978. பெண்ணுயி ரவல நோக்கிப் பெருந்தகை வாழ்விற் சாதல்
எண்ணின னெண்ணி நொய்தா வினமலர் மாலை சுற்று
வண்ணப்பொற் கடக மேற்று வார்கச்சிற் றானை வீக்கா
அண்ணலங் களிற்றை வையா வார்த்துமே லோடி னானே.

(இ - ள்.) பெருந்தகை, பெண்ணுயிர் சாதலைநோக்கி, இவ்விடரை நீக்காதுபோய் வாழ்கின்ற வாழ்விற்காட்டிற் சாதல் அவலமில்லையென்று எண்ணினான் ; எண்ணிக் கடிதாகச் சுற்றி ஏற்றி வீக்கி அதனை வைது ஆர்த்து அதன் மேலே ஓடினானென்க.

"வேழநான்குவெல்லுமாற்றலன்" (சீவக. 689). ஆதலின், இக் களிறு அடர்க்க எளிதாயினும் அடர்த்தாற் கட்டியங்காரற்கும் நமக்கும் இன்னும் வேறுபாடு பிறக்குமென்றறிந்தவன் பின்னும் இதனைக்கண்டு போதலின், அவ்வேறுபாடு நன்றென்று எண்ணினானென்க. (கஉஅ)

---

977. இருதலையும் - இரண்டு பக்கமும். சேர்த்தி - அழுத்தி. இரு தலையும் மணி சேர்த்தி எனமாறியியைக்க. வான் - சிறந்த. பொனின் - பொன்னால். நாணால் - கயிற்றால் ; 'சுருளிருங் குஞ்சிபொன் ஞாணிற் பிணித்து' (இறை. 2. உரை). அணியிருங்குஞ்சி - அலங்காரம் செய்யப்பட்ட கரிய குஞ்சியை. அலங்கல் சூழ்ந்து - பூமாலையை அதன் மேலே சுற்றி. தணிவரும் - அன்பு குறைதற்கரிய ; தணிவு - குறைவு. தோழர் - நந்தட்டன் முதலாயினார். குழை - குண்டலம். திருவில் - இந்திரவில். பணிவரும் - பிறராற் பணிவித்தற்கரிய. குருசில் : சீவகன். செல்வான் - செல்கின்றவன். பாவையது - குணமாலையினுடைய.

978. பெண்ணுயிர் அவலம் நோக்கி - குணமாலையினுடைய உயிருக் குற்ற துன்பத்தைப் பார்த்து. பெருந்தகை : சீவகன். பெருந்தகை நோக்கி என்க. வாழ்வின் - இப்பெண்ணுக்குற்ற இடரை நீக்காது வாழ்கின்ற வாழ்வைக் காட்டிலும். சாதல் எண்ணினான் - இறத்தல் இனிது என்றெண்ணினான். நொய்தா - விரைவாக. மாலை - சீவகன் அணிந்த

979. குண்டலங் குமரன் கொண்டு குன்றின்மேல் வீழு மின்போல்
ஒண்டிறற் களிற்றி னெற்றி யெறிந்துதோ டொளித்து வீழ
மண்டில முத்துந் தாரு மாலையுங் குழலும் பொங்க
விண்டலர் கண்ணி சிந்த மின்னிற்சென் றெய்தி னானே.

(இ - ள்.) அங்ஙனமோடின குமரன் தான் செல்வதற்கு முன்னே களிறு இறைஞ்சாதபடி காதிற்குண்டலத்தை வாங்கிக்கொண்டு தோடு ஒலித்துவீழும்படி மலைமேலே வீழுமின்போலே அதன் மத்தகத்தே எறிந்து வட்டமான முத்துவடமும் தாரும் நெற்றிமாலையும் குழலும் பொங்கக் கண்ணி சிந்த மின்போற் சென்றெய்தினானென்க.

எறிந்தவிசையில் [1] தானேவீழ்ந்ததென்க. (கஉகூ)

980. படம்விரி நாகஞ் செற்றுப் பாய்தரு கலுழன் போல
மடவர லவளைச் செற்று மதக்களி றிறைஞ்சும் போழ்திற்
குடவரை நெற்றி பாய்ந்த கோளரி போன்று வேழத்
துடல்சினங் கடவக் குப்புற் றுருமென வுரறி யார்த்தான்.

---

மாலை. சுற்று - சுற்றி. கடகம் ஏற்று - கையிலணிந்திருந்த கடகத்தை மேலே ஏற்றி. கச்சிற்றானை வீக்கா - கச்சினால் ஆடையை இறுகக் கட்டி. அண்ணல் - பெருமை பொருந்திய. அம் : அசை. வையா - வைத்து. ஆர்த்து - முழங்கி. மேல் - யானைமேல்.

(மேற்.) அடி, 4 : சிலப். 15 : 48-53, அடியார்.

979. குமரன் : சீவகன். குமரன் குண்டலத்தைக் கொண்டு என மாறியியைக்க. களிற்றின் நெற்றியில் எறிந்து. குண்டலத்திற்கு மின்னலும் யானையின் நெற்றிக்கு மலையும் உவமை. தோடு - மற்றைக்காதில் அணிந்த தோடு; இஃது ஆடவர்காதணி ; சீவக. 2241. வீழ - விழும்படி. குமரன் குண்டலங்கொண்டு தோடு ஒலித்துவீழக் குன்றின்மேல் வீழு மின்போல் களிற்றி னெற்றியில் எறிந்து எனமாறியியைக்க. மண்டில முத்து - வட்டமான முத்துமாலை; மண்டிலம் : மண்டலமென்பதன் மரூஉ. தார் - மார்பிலணியும் பூமாலை ; சீவக. 2119. மாலை : நெற்றி மாலை. பொங்க - மிகுத்துக்காட்ட ; மாலையும் குழலும் பொங்குதல்; "நிரைத்தார் பொங்க", "கோதை பொங்க" (சீவக. 645, 677, ந.) கண்ணி - தலையிற்சூடும் மாலை ; சீவக. 193. மின்னிற் சென்று - மின்னலைப்போல் விரைவாகச் சென்று.

(உரை) [1] தானே வீழ்ந்தது தோடு.

980. நாகம் செற்று - பாம்பைக்கோபித்து. பாய்தரு - பாய்கின்ற. கலுழன் - கருடன். மடவரலாகிய அவளை; என்றது மாலையென்னும் தோழியை. செற்று - கோபித்து. மாலையென்னும் தோழிக்கு நாகமும் யானைக்குக் கருடனும் உவமைகள். இறைஞ்சும் போழ்தில் - வணங்கு

(இ - ள்.) அங்ஙனமெய்தினவன், விரிகின்ற படத்தையுடைய நாகத்தைச் செற்றுப் பாய்கின்ற கருடனைப்போல முன்புநின்ற மாலையென்னுஞ் சேடியைச் செறுத்துக் களிறு இறைஞ்சுகின்றவளவிலே அத்தகிரி நெற்றியிலே பாய்ந்த சிங்கத்தையொத்து அவ்வேழத்தின் உடல் சினத்தைச் செலுத்தும்படி அதன் மத்தகத்தினடுவே குதித்து இடியென முழங்கி ஆர்த்தானென்க.

குடவரை [1] புகருக்குவமை. (கூ௰)

981. கூற்றென முழங்கிக் கையாற் கோட்டிடைப் புடைப்பக் காய்ந்து, காற்றென வுரறி நாகங் கடாம்பெய்து கனலிற் சீறி, ஆற்றலங் குமரன் றன்மே லடுகளி றோட வஞ்சான், கோற்றொடிப் பாவை தன்னைக் கொண்டுயப் போமி னென்றான்.

(இ - ள்.) அவன், அங்ஙனமுழங்கி நாகத்தைக் கோட்டிடையிலே கையாலே கூற்றெனப் புடைத்தலின், அக்களிறு காய்ந்து முழங்கி மதஞ் சொரிந்து சீறி அக்குமரன்மேலே காற்றென ஓட அஞ்சானாய்க் குணமாலையைப் பிழைக்கக் கொண்டுபோமினென்றானென்க.

சேடிமேலும் குணமாலைமேலும் செல்கின்றதென்று அஞ்சினவன் தன்னை நோக்கினமையின் அஞ்சானாயினான். தலைமைபற்றிக் குணமாலையைக் கொண்டுபோமினென்றான். (கூ௧)

982. மதியினுக் கிவர்ந்த வேக மாமணி நாகம் வல்லே
பதியமை பருதி தன்மேற் படம்விரித் தோடி யாங்குப்
பொதியவிழ் கோதை தன்மேற் பொருகளி றகன்று பொற்
கதியமை தோளி னானைக் கையகப் படுத்த தன்றே. [றூர்க்

கின்ற போதில். குடவரை - அத்தமலை; அத்தமலை யானைக்கு: சீவக. 18, அடிக். நெற்றி - உச்சியில். கோளரி - சிங்கம். கடவ - செலுத்தும்படி. குப்புற்று - குதித்து; சீவக. 2202, ந. உருமென உரறி - இடியைப் போல முழங்கி. யானையின் நெற்றிக்குக் குடவரையும் சீவகனுக்குச் சிங்கமும் உவமைகள்.

(உரை) [1] புகர் - புள்ளி.

981. கோடு - தந்தம். புடைப்ப - சீவகன் அடிக்க. உரறி - முழங்கி. நாகம் - யானை. கடாம் - மதம். குமரன்: சீவகன். குமரன் முழங்கி நாகத்தைக் கோட்டிடையில் கையாற் கூற்றெனப்புடைப்பக் களிறு காய்ந்து உரறிச் சீறித் தன்மேலோட என மாறியியைக்க. அஞ்சான் - பயப்படாதவனாகி. பாவை: குணமாலை. உயக்கொண்டு போமின் - பிழைக்கக் கொண்டுபோங்கள்.

982. மதி - சந்திரன். இவர்ந்த - விரும்பிய. மா - கருமை. நாகம் - இராகுவென்னும் பாம்பு. வல்லே - விரைய. பதி அமை பருதி - தன் இருப்பைவிட்டு நீங்கிய சூரியன். நாகம் பருதிதன்மேல் வல்லே படம்

(இ - ள்.) மதியைக் கையகப்படுத்தற்கு விரும்பிய கரும்பாம்பு போகின்ற ஞாயிற்றின்மேலே விரைந்தோடினாற் போலக் குணமாலை மேற்சென்ற பொருகளிறு அவளைக் கைவிட்டுச் சீவகனைக் கைக்குள்ளே அகப்படுத்திற்றென்க.

பதி அமை பருதி - இருப்புத் தவிர்ந்த பருதி; "அமைந்த தினி நின்றொழில்" (கலித். 82) என்றதுபோல. கதியமைதேரினானையும் பாடம். (கரு௨)

983. கையகப் படுத்த லோடுங் கார்மழை மின்னி னெய்தா
மொய்கொளப் பிறழ்ந்து முத்தார் மருப்பிடைக் குளித்துக்
ஐயென வடங்கி வல்லா னுடிய மணிவட் டேய்ப்பச் [காற்கீழ்
செய்கழற் குருசி லாங்கே கரந்துசே ணகற்றி னானே.

(இ - ள்.) அங்ஙனம் கையாலகப்படுத்திக்கொண்டவளவிலே அது போர் தொடங்காநிற்க, குருசில், மழைமின்னினும் கடுக உடம்பு புரிந்து மருப்பிடையிலே புகுந்து காற்கீழே வட்டுப்போல அடங்கித் தான் கரந்து போய்க் களிற்றை அப்பொழுதே சேணிலே அகற்றினானென்க.

வல்லான் - பாய்ச்சுக்காட்டுவான். தான் அகலுதலின், அதனையகற்றினானாயினான். (கருரு)

(வேறு)

984. மல்ல னீர்மணி வண்ணனைப் பண்டொர்நாட்
கொல்ல வோடிய குஞ்சரம் போன்றதச்
செல்வன் போன்றனன் சீவகன் றெய்வம்போற்
பில்கு மும்மத வேழம் பெயர்ந்ததே.

---

விரித்தோடியாங்கு எனமாறியியைக்க. கோதை : குணமாலை. கோதை மேற் சென்ற களிறு. அகன்று - குணமாலையைவிட்டு நீங்கி. தோளினான் : சீவகன். கையகப்படுத்தது - கைக்குள்ளே அகப்படுத்தியது; அன்று, ஏ : அசைகள்.

983. கார்மழை மின்னின் - கரிய மேகத்திடைத்தோன்றும் மின்னலைக்காட்டிலும். நொய்தா - விரைய. மொய்கொள - நெருங்க. பிறழ்ந்து - தன் உடம்பை முறுக்கி. குளித்து - புகுந்து. மருப்பிடைக்குளித்தல் : "செருக்கொண் யானை மருப்பிடைத் திரிவும்" (பெருங். 1. 37 : 37). காற்கீழ் - யானைக்காலின் கீழே. அடி, 1-2 : "கையகத் தொழித்ததன் கையகம்புக்குப், பொய்பொரு முடங்குகை வெண்கோட்டடங்கி, மையிருங் குன்றின் விஞ்சைய னேய்ப்பப், பிடர்த்தலை யிருந்து பெருஞ்சினம் பிறழாக், கடக்களி றடக்கிய கருணை மறவ" (சிலப். 15 : 49-53). ஐயென - வியக்கும்படி. காலின்கீழ் வல்லானுடிய மணிவட்டேய்ப்ப ஐயென அடங்கிக் கரந்து எனமாறியியைக்க. மணிவட்டு : "சிறுஅர் நெல்லிவட்டாடும்" (நற். 3); "அரங்கின்றி வட்டாடி யற்றே" (குறள், 401). குருசில் : சீவகன்; எழுவாய். கரந்து - மறைந்து சென்று. யானையைச் சேணில் அகற்றினான்.

984. மல்லல் - வளம். நீர் - கடல். மணிவண்ணன் - திருமாலாகிய கண்ணபிரானை. பண்டு என்றது கிருஷ்ணாவதாரத்தை. குஞ்சரம்-குவல

(இ - ள்.) இக்குஞ்சரம் இவன்மேற்செல்லுகின்றபொழுது, முன்னொரு நாளிலே கண்ணனைக் கொல்லவோடிய குஞ்சரத்தையொத்தது; அப்பொழுது அச்சீவகனும் அக்கண்ணனையொத்தான்; பின்னர் அக்களிறாகிய தெய்வத்தைக் கண்ணன் கொல்லாதுவிட அது பெயர்ந்து தன்னிலையிலே போயினாற்போல இவனும் கொல்லாதுவிடுதலின், இவ்வேழமும் பெயர்ந்து தன்னிலையிலே போயிற்றென்க.

பகையன்மையின், இவன் விலங்கிற்கும் உயிரளித்தான். கண்ணன் தனக்குப் பகையாதலிற் கொன்றான். ஈண்டு அதனைக்கொல்லாதுவிட்டானாயின் அதுபோலுமெனப்பிறக்கூறியது இல்பொருளுவமை. கண்ணனைக்கொல்லத் தெய்வம் யானையாய் வருதலின், 'தெய்வம்' என்றார். (கஅச)

(வேறு)

985. ஒருகை யிருமருப்பின் மும்மதத்த தோங்கெழிற்குன் றனைய வேழம், திருகு கனைகழற்காற் சீவகன்வென் றிளையாட்கு டைந்து தேனார், முருகு கமழலங்கன் முத்திலங்கு மார்பினனைஞ் ஞூற்று நால்வர், அருகு கழல்பரவத் தனியேபோ யுய்யான மடைந்தா னன்றே.

(இ - ள்.) கைமுதலியவற்றையுடைய குன்றனைய வேழத்தைச் சீவகன் வென்று குணமாலைக்கு அறிவுமுதலியன தோற்றலின், ஐஞ்ஞூற்று நால்வர் கழல்பரவாநிற்கவும் தனியேபோய்ப் பொழிலிலே சேர்ந்தானென்க.

---

யாபீடம் என்னும் யானை. அச்செல்வன் - கண்ணபிரானை. தெய்வம் போல் - கண்ணபிரானாற் கொல்லப்படாது விடப்பட்ட அக்களிறாகிய தெய்வம் போயினாற்போல. மும்மதம் பில்கும் வேழம் : அசனிவேகம். பெயர்ந்தது - இயல்பான நிலையோடு சென்றது. சீவகனைக் கொல்லவந்த அசனிவேகம் கண்ணபிரானைக் கொல்லவந்த குவலயாபீடம் போன்றிருந்தது. கஞ்சனுக்கு நட்புள்ள தெய்வங்களாகிய பூதனை, கழுதை, குதிரை, மருதமரம், பனை, யானை, சகடம் என்ற ஏழனுள் யானையாகிய தெய்வமே கண்ணபிரானைக் கொல்லவந்தது; அந்தயானையைக் கொல்லாது விட்டமையின், கண்ணபிரான் கரிவரதனாயினான் என்பர்; இச்சரிதம் ஸ்ரீபுராணத்தில், 22-ஆம் தீர்த்தங்கரர் புராணத்திலுள்ளது.

985. ஒருகை இருமருப்பின் மும்மதத்தது என்றது முரண்தொடை. மும்மதத்ததாகிய குன்றனைய வேழத்தை. திருகு கனைகழல் - முறுக்கிய ஒலியையுடைய வீரக்கழல். இளையாட்கு : குணமாலைக்கு. உடைந்து - அறிவு முதலியன தோல்வியுற்று. முருகு - வாசனை. முத்து - முத்து மாலை. அலங்கலும், முத்தும் இலங்குகின்ற மார்பினன்; என்றது சீவகனை. ஐஞ்ஞூற்றுநால்வர் - சீவகனுடைய தோழர்கள்; சீவக. 292, 364, அடிக். கழல் - சீவகனுடைய பாதத்தை. பரவ - புகழ. உய்யானம் -

[1] தத்தை அறியலாகாதென்று பொழிலைச்சேர்ந்தான்.* (கூரு)

(வேறு)

986. மணிசெய் கந்துபோன் மருள வீங்கிய
திணிபொற் றோளினான் செல்ல னீக்கிய
அணிபொற் கொம்பினை யழுங்க லென்றுதன்
தணிவில் காதலார் தாங்கொ டேகினார்.

(இ - ள்.) கந்துபோல்வீங்கிய தோளினானாலே வருத்தம் நீக்கப்பட்ட குணமாலையைக் குறைவில்லாத காதலையுடையார்தாம் அழுங்கலென்று கொண்டேகினாரென்க.

மருள - கந்தென்றுமருளும்படி. [1] இவள்வேட்கைவருத்தத்தை யானைக்கு வருந்தினாளாக உட்கொண்டாராய், 'அழுங்கல்' என்றார். (கூசு)

987. முழங்கு தெண்டிரை மூரி நீணிதி
வழங்க நீண்டகை வணிகர்க் கேறனான்
விழுங்கு காதலாள் வேற்கட் பாவைதாய்
குழைந்த கோதையைக் கண்டு கூறினாள்.

பொழில். மார்பினனாகிய சீவகன், வேழத்தை வென்று ஐஞ்ஞாற்றுநால் வர் தன்கழல் பரவவும் தனியேபோய் உய்யானம் அடைந்தான் என்க.

(உரை) [1] தத்தை - காந்தருவதத்தை.

986. மணிசெய் - மணியாற்செய்த. கந்து - தூண். மருள - மயங்கும்படி. வீங்கிய - பெருத்த. தோளினான் - சீவகனால். செல்லல் நீக்கிய - வருத்தம் நீக்கப்பட்ட. பொற்கொம்பினை - பொன்னால் அமைந்த கொம்பு போன்ற குணமாலையை. அழுங்கல் - வருந்தாதே. தணிவில் - குறைவில்லாத. காதலார் : தோழியர். கொடு - கொண்டு. பொற்கொம்பினைக் காதலார்தாம் அழுங்கலென்று கொண்டு ஏகினார் எனமாறி முடிக்க.

(உரை) [1] இவள் வேட்கை வருத்தமென்றது குணமாலைக்குச் சீவகன் மீது உண்டான விருப்பத்தாற்பிறந்த வருத்தத்தை.

987. முழங்கு - ஒலிக்கின்ற. திரை - கடல்; ஆகுபெயர். மூரி - பெருமை. திரைபோலும் நிதியை. வழங்க - கொடுத்தற்கு. வணிகர்க்கு

*இதன்பின்,

"ஆடவர்க் கூட வனங்க னும்மதி
வாடிய வாட்கணி ரைத்தலும் வார்குழைச்
சேடியர் கைதொழத் தோற்றிய வொண்சுடர்
ஊடிய மாட மொளியிழை புக்காள்"

என்னுஞ்செய்யுளொன்று மூலமட்டுமுள்ள சில பிரதிகளிற் காணப் பட்டது.

பாவையுடைய தாய், வினயமாமாலையென்னும் பெயரையுணர்த் திற்று; பாவைபெயர் குணமாலையாதலின். வருத்தந்தோன்ற, 'குழைந்த கோதை' என்றார்.

(இ - ள்.) கடல்போல நிதியைவழங்குதலின் நீண்ட கையையுடைய குபேரமித்திரன் விழுங்குமாறுபோன்ற காதலையுடைய வினயமாமாலை தன் மகளைக்கண்டு ஒருமொழி கூறினாளென்க. (கூஅஎ)

988. நெய்பெய் நீளெரி நெற்றி மூழ்கிய
கைசெய் மாலைபோற் கரிந்து பொன்னிறம்
நைய வந்ததென் னங்கைக் கின்றெனா
உய்தல் வேட்கையா லுரைத்த லோம்பினார்.

(இ - ள்.) எரியினெற்றியிலே அழுத்திய மாலைபோலப் பொன்னிறம் கரிந்து நையும்படி நங்கைக்கு இன்றுவந்த வருத்தமென்னென்று கூறினாள்; அதுகேட்ட தோழிமாரும் அவளிறந்துபடாதிருக்க வேண்டுதலின், யானை கொல்லப் புகுந்ததென்றுரைத்தலை ஓம்பினாரென்க. (கூஅஅ)

989. முருகு விண்டுலா முல்லைக் கத்திகை
பருகி வண்டுலாம் பல்கு ழலினாள்
வருக வென்றுதாய் வாட்க ணீர்துடைத்
துருகு நுண்ணிடை யொசியப் புல்லினாள்.

ஏறனன் - குபேரமித்திரன்; இவன் குணமாலையினுடைய தந்தை. விழுங் கும் காதலாள் - விழுங்குதல் போன்ற காதலையுடைய விநயமாலை; இவள் குபேரமித்திரனுடைய மனைவி. வேற்கட்பாவை: குணமாலைக்கு. காதலா ளாகிய தாய்: குணமாலையினுடைய தாயாகிய வினயமாலை. குழைந்த கோதையை - வாடிய பூமாலையை, வருத்தமுடைய குணமாலையை.

988. எரியின் மிகுதிதோன்ற நெய்பெய் எரி என்றார். எரிநெற்றி - நெருப்பின் உச்சியில். மூழ்கிய - அழுத்திய. கைசெய்மாலை - கையாற் புனைந்த பூமாலை. பொன்னிறம் - பொன்போன்றநிறம். மாலைபோல் பொன்னிறம் கரிந்து. நைய - வருந்தும்படி. நங்கைக்கு: குணமாலைக்கு. 'நங்கைக்கு இன்று வந்தது என் என' என்று மாறியியைக்க. என - என்று விநயமாலை குணமாலையின் தோழியரைக் கேட்ப. உய்தல்வேட் கையால் - குணமாலை பிழைத்தலிலுள்ள விருப்பத்தால். உரைத்தல் ஓம் பினார் - யானை கொல்லப்புகுந்ததென்று சொல்லுதலைச் சொல்லாமல் இருந்தனர்.

989. முருகு - வாசனை. விண்டு - அலர்ந்து. உலாம் - பரக்கின்ற. முல்லைக்கத்திகை - முல்லைப்பூமாலை. உலாம் - சஞ்சரிக்கின்ற. முல்லைக் கத்திகை விண்டு உலாம் முருகைப்பருகி வண்டு உலாம் குழலினாள் என மாறியியைக்க. கூந்தல் ஐம்பாலாதலின் 'பல்குழலினாள்' எனப் பன்மை யாற் கூறினார். குழலினாள் - குணமாலையை. தாய் - விநயமாலை. உருகு- மெலிகின்ற. ஒசிய - வருந்தும்படி. தாய், குழலினாளை வருகவென்று (அவள்) கண்ணீரைத் துடைத்து இடை ஒசியப் புல்லினாள் என்க.

**(இ - ள்.)** அவர் கூறுமையின், அதனையறியாத தாய் முல்லைத் தொடையலர்ந்து பரக்கின்ற முருகைப்பருகி வண்டுலாங்குழலினளை வருகவென்று கண்ணீரைத் துடைத்து இடைவருந்தப் புல்லினளென்க. (கஅக)

990. கடம்பு சூடிய கன்னி மாலைபோல்
தொடர்ந்து கைவிடாத் தோழி மாரொடும்
குடங்கை யுண்கணாள் கொண்ட பண்ணையுள்
அடைந்த துன்பமொன் றறிவி னாடினாள்.

[1] இருவரும் கன்னியராதலிற் கன்னிமாலையென்றார். கண்ணிமாலை பாடமாயின், [2] கண்ணிகட்டினாற்போலுமாலையாம்.

**(இ - ள்.)** கடம்புபூத்த மாலைபோலே தொடர்ப்பட்டுக் கைவிடாத தோழிமாருடனே உண்கணாள்கொண்ட விளையாட்டின்மிகுதியால் வந்த வருத்தமே யென்று தன் அறிவாலே நாடினாளென்க. (கசo)

991. கம்மப் பல்கலங் களைந்து கண்டெறாஉம்
விம்மப் பல்கல நொய்ய மெய்யணிந்
தம்மென் மாலையு மடைச்சிக் குங்குமம்
கொம்மை மட்டித்தார் கொடிய னாளையே.

**(இ - ள்.)** தாய் அங்ஙனமிருந்தவளவிலே, கோலஞ்செய்கின்றவர்கள், கொடியனாளை அரிய தொழில்களையுடைய பேரணிகலங்களை வாங்கிக் கண்ணை ஒளிகெடுக்கும் நொய்ய கலங்களை மெய்யிலே விம்ம அணிந்து கழுநீர்மாலையையுஞ்சேர்த்திக் குங்குமத்தையும் முலையிலே பூசினாரென்க.

990. கடம்பு - ஒருவகைமரம். சூடிய - பூத்த. கன்னிமாலை - புதுமையையுடைய பூமாலை. மாலைபோல் பூத்தலின் மாலை என்றார்; "துறு நீர்க் கடம்பின் றுணையார் கோதை" (சிறுபாண். 69). கைவிடா - நீங்காத. கடம்பு பூத்த மாலைபோல் தொடர்பு நீங்காத தோழியர்; "திணி நிலைக் கடம்பின் றிரளரை வளைஇய, துணையமை மாலையிற் கைபிணி விடேஎம்" (குறிஞ்சிப். 176-7). குடங்கை - உள்ளங்கை. குடங்கை போன்ற கண்ணள்; 342, அடிக்., 1290, 2006, 3139. பண்ணையுள் - விளையாட்டினுள். அறிவின் நாடினாள் - தன் அறிவாலே தெரிந்து கொண்டாள்.

(உரை) [1] இருவரும் என்றது குணமாலை, சுரமஞ்சரி என்பவர்களை. [2] "கண்ணி கட்டிய கதிர வன்ன, ஒண்குரல் நொச்சித் தெரியல் சூடி" (நற். 200 : 1-2)

991. கம்மப்பல்கலம் - தொழிலையுடைய பல ஆபரணம்; பெருங். 1. 44 : 35, 2. 2 : 171. கண்தெறாஉம் நொய்ய பல்கலம் எனமாறுக. விம்ம மெய்யணிந்து; விம்ம - வீங்கும்படி. அடைச்சி - சேர்த்து. கொம்மை - நகிலில். மட்டித்தார் - பூசினார்.

உடம்பு [1] நுணுகுகின்றமையுணர்ந்து நொய்யவற்றை விம்ம அணிந்தார். புறத்தே கோலஞ்செய்ய அகத்தே சிதைவுபிறத்தலின், இது [2] புறஞ்செயச் சிதைதலென்னுமெய்ப்பாடு. (கசக)

992. அம்பொன் வள்ளத்து ளமிர்த மேந்துமெங்
கொம்பி னவ்வையைக் கொணர்மின் சென்றெனப்
பைம்பொ னல்குலைப் பயிரும் பைங்கிளி
செம்பொற் கொம்பினெம் பாவை செல்கென்றாள்.

வஞ்சிக்கொம்பின் றன்மையையுடைய தாய் - குணமாலை. பைம்பொனல் குலை - நின்னை ; என்றது குணமாலையை.

(இ - ள்.) வினயமாமாலை, பொற்கொம்பின் றன்மையுடைய எம்பாவாய், எனக்கு வள்ளத்தே பாலையேந்தும் எம் அவ்வையைச் சென்று கொணர்மினென்றுகூறி நின்னைப் பைங்கிளியழையாநிற்கும் ; இனி அது வருந்தாதபடி ஆண்டுச் செல்லென்று கூறினாளென்க. (கசஉ)

(வேறு)

993. நிறத்தெ றிந்துப றித்தநி ணங்கொள்வேற்
றிறத்தை வெளவிய சேயரிக் கண்ணினாள்
பிறப்பு ணர்ந்தவர் போற்றமர் பேச்செலாம்
வெறுத்தி யாவையு மேவல ளாயினாள்.

(இ - ள்.) கண்ணினாள், பிறப்புத் தீதென்றறிந்து பற்றற்றாரைப் போலே தமர்பேச்சையெல்லாங் கைவிட்டு உணவுமுதலியவற்றையும் பொருந்தாளாயினாளென்க.

சிறிது பொழுதுநின்று பறித்தவேல். 'வெறுத்து' என்னுந்துணையும் புலம்பித்தோன்றலென்னுமெய்ப்பாடு ; செய்தகோலம் துணையொடு கழியப் பெருதேயழிந்து சுற்றத்திடையும் தனியேதோற்றுதலின். மேவலளெனவே [1] இன்பத்தை வெறுத்தலும், [2] பசியடநிற்றலும் மெய்ப்பாடு. (கசங)

(உரை) [1] நுணுகுதல்-மெலிதல். [2] 'பூவும் சாந்தும் பூணும் துகிலும் முதலாயின கொண்டு புறத்தே கோலம் செய்ய அகத்தே சிதைவுண்டாதல்' (தொல். மெய்ப். 18, பேர்.)

992. வள்ளத்துள் - கிண்ணத்துள். அமிர்தம் ஏந்தும் - பாலை ஏந்துகின்ற. கொம்பு - வஞ்சிக்கொம்பு. அவ்வை - தாய். சென்று கொணர்மின் என. பயிரும் - அழைக்கும். பாவை : விளி.

993. நிறத்து - உயிர்நிலையில். வேல்திறத்தை - வேலின் கூறுபாட்டை. நிறத்து......கண்ணினாள் : குறுந். 272 : 5-7. பிறப்பு உணர்ந்தவர்போல் - பிறப்பைத் தீயதென்று அறிந்தவரைப்போல ; திருச்சிற். 97. தமர் பேச்செலாம் வெறுத்து ; தமர் - தம் சுற்றத்தவர். மேவலள் - விரும்பாதவள்.

(உரை) [1] 'யாழும் குழலும் பூவும் சாந்தும் முதலாக இன்பத்திற்கு ஏதுவாகிய பொருள் கண்டவழி அவற்றின்மேல் வெறுப்புத் தோன்றுதல்' (தொல். மெய்ப். 22, பேர்.) [2] 'பசிவருத்தவும் அதற்குத் தளராது உணவு மறுத்தல் (தொல். மெய்ப். 22, பேர்.)

994. குமரி மாநகர்க் கோதையங் கொம்பனாள்
தமரி னீங்கிய செவ்வியுட் டாமரை
அமரர் மேவரத் தோன்றிய வண்ணல்போல்
குமர னுக்கிய காதலிற் கூறினாள்.

(இ - ள்.) கொம்பனாள், கன்னிமாடத்தே சுற்றத்தைத் தானீங்கிய காலத்தே தேவர் வேண்டத் தாமரையிற்றோன்றிய முருகனைப்போலும் குமரனுண்டாக்கிய காதலாலே சிலசொற் கூறினாளென்க. (கசச)

995. கலத்தற் காலங்கல் லூரிநற் கொட்டிலா
முலைத்த டத்திடை மொய்யெருக் குப்பையா
இலக்க மென்னுயி ராவெய்து கற்குமால்
அலைக்கும் வெஞ்சர மைந்துடை யானரோ.

(இ - ள்.) கொடிய சரமைந்தும் ஐந்தாக எய்யவெடுத்த காமன், என்னைப் பெறுதலின் எனது முலைத்தடத்திடை எருக் குப்பையாக, எனதுயிர் இலக்காக எய்து என்னை அலையாநிற்கும்; ஆதலால், கல்லூரியையுடைய விற்பயிற்றுந் தானத்தே தான் விற்றொழிலைத் தொடங்குகின்ற காலமாக நினைத்துக் கற்கின்ற தொழிலை நடத்தாநின்றானென்க.

[1] கற்பார் எருவிலும் இலக்கிலுமெய்து கற்பராதலின். இது [2] மடந்தபவுரைத்தலென்னு மெய்ப்பாடு; அறிவுமடநீங்கிக் காமப்பொருட்கண்ணே அறிவு தோன்றநிற்றலின். (கசரு)

996. பூமி யும்பொறை யாற்றருந் தன்மையால்
வேமெ னெஞ்சமும் வேள்வி முளரிபோற்
றும மார்பனைச் சீவக சாமியைக்
காம னைக்கடி தேதம்மின் றேவிர்காள்.

---

994. குமரிமாநகர் - கன்னியாமாடத்தில். கொம்பனாள் : குணமாலை. தமரின் - சுற்றத்தாரிடமிருந்து. செவ்வியுள் - சமயத்தில். அமரர் மேவர - தேவர்கள் வேண்ட. தாமரைத்தோன்றிய அண்ணல் : முருகக் கடவுள் ; பரி. 5 : 49 ; பு - வெ. 209. குமரன் : சீவகன்.

995. கலத்தற்காலம் - விற்றொழிலைத் தொடங்குகின்ற காலம். கல்லூரி - கல்வி பயிலுமிடம். கொட்டில் - படைக்கலக்கொட்டில். இடை - நடுவிடம். எருக்குப்பை - எருக்குவியல். இலக்கம் - குறி. கற்கும் - கற்பான். அலைக்கும் - வருத்தும். சரம் ஐந்துடையான் : காமன்.

(உரை) [1] இலக்கத்தில் அம்பை எய்து கற்றல் ; " இளம்பல் கோசர் விளங்குபடை கன்மார், இகலின ரெறிந்த வகலிலை முருக்கு " (புறநா. 169). [2] 'விளையாடும் பருவத்து நிகழ்ந்த அறிமடம் நீங்கக் காமப் பொருட்கண்ணே சிறிது அறிவு தோன்றுதல்' (தொல். மெய்ப். 16, பேர்.)

996. பூமியும் - பொறுத்தலிற் சிறந்த பூமியும். என் நெஞ்சமும் வேள்வி முளரிபோல வேம். வேள்வி - யாகம். முளரி - தாமரைப்பூ. நெஞ்

(இ - ள்.) என்னெஞ்சமும் வேள்வியிலிட்ட தாமரைப்பூப்போலே பூமியு முட்படப் பொறையைச் செலுத்துதற்கரியதொரு தன்மையாலே வேவா நிற்கும்; ஆதலால், மார்பனைச் சாமியைக் காமனைத் தேவிர்காள், கடிதாக அழைத்துத் தருமினென்றுனென்க.

'வேம்' என்னுந்துணையும் [1] காதல்கைம்மிகல்; காமம் கையிகந்த வழி நிகழுமாதலின்; "உள்ளி னுள்ளம் வேமே" (குறுந். 102) என்பது உதாரணம். தம்மினென்பது, [2] தூதுமுனிவின்மைப்பாற்படும்; "கான லுங் கழறுது" (அகநா. 170) என்னும் பாட்டு உதாரணம்; [3] அறனளித் துரைத்தலுமாம். (௧௪௬)

997. (௧) கையி னுற்சொலக் கண்களிற் கேட்டிடும்
மொய்கொள் சிந்தையின் மூங்கையு மாயினேன்
செய்த வம்புரி யாச்சிறி யார்கள்போல்
உய்ய லாவதொர் வாயிலுண் டாங்கொலோ.

998. (௨) கண்ணும் வாளற்ற கைவளை சோருமால்
புண்ணும் போன்று புலம்புமென் னெஞ்சரோ
எண்ணில் காம மெரிப்பினு மேற்செலாப்
பெண்ணின் மிக்கது பெண்ணல தில்லையே.

---

சம்வேம்; "உள்ளி னுள்ளம் வேமே.........வான்றோய் வற்றே காமம்" (குறுந். 102 : 1-3). தாமம் - மாலை; ஒளியுமாம். தேவிர்காள் : விளி. கடிதே தம்மின் என்க.

(உரை) [1] 'காமம் கையிகந்தவழி நிகழும் உள்ளநிகழ்ச்சி' (தொல். மெய்ப். 23, பேர்.) [2] 'புள்ளும் மேகமும் போல்வன கண்டு சொல்லுமின் அவர்க்கென்று தூதிரந்து பன்முறையானும் சொல்லுதல்' (தொல். மெய்ப். 23, பேர்.) [3] 'அறக்கிழவனை அன்பு செய்தல்' (தொல். மெய்ப். 22, பேர்.)

997. கையினுற்சொல - வாயாற்பேச முடியாமல் கையால் காண் பிக்கவும். மொய்கொள் - குறைகளெல்லாம் செறிதல் கொண்ட. சிந்தை யின் - மனத்தால். மூங்கை - ஊமை. செய்தவம் - முற்பிறப்பிற் செய்த தவத்தை. சிறியார்கள் - அறிவிலார். செய்தவம் புரியாச் சிறியார்கள் போல மூங்கையு மாயினேன் என இயைக்க; "நோய்நிலை நுவல கிற்றி லள், ஊமரின் மனத்திடை யுன்னி விம்முவாள்" (கம்ப. மிதிலைக். 42). உய்யலாவதொர் வாயில் - யான் பிழைத்தற்குரிய தொரு தூது. உண் டாங் கொலோ - உண்டாகுமோ; கொல் : அசைநிலை.

(மேற்.) அடி, 1-2 : பிரயோக. காரகப். 5; இ-கொ. ஒழிபு. 5.

998. வாளற்ற - ஒளியற்றன; "கண்ணே, நோக்கி நோக்கி வாளிழந் தனவே" (குறுந். 44 : 1-2). சோரும் - கழன்றுபோகும்; ஆல் : அசை. புலம்பும் - வருந்தும். புண்ணும்; உம்மையை நெஞ் சென்பதொடு பிரித்துக் கூட்டுக. நெஞ்சரோ; அரோ : அசை. எண்

999. (ங) சோலை வேய்மருள் சூழ்வளைத் தோளிதன்
வேலை மாக்கடல் வேட்கைமிக் கூர்தர
ஒலை தாழ்பெண்ணை மாமட லூர்தலைக்
கால வேற்றடங் கண்ணி கருதினாள்.

இவைமூன்றும் ஒரு தொடர்.

(க) பிறர்க்குக் கூறலாகாமற் குறைகளெல்லாம் செறிதல்கொண்ட சிந்தையால், மூங்கையாயினேனென்றாள். இது [1] சிதைவுபிறர்க்கின்மை, புறத்தார்க்குப் புலனாகாமை நெஞ்சினில் நிறுத்தலின். சிறியார் - அறிவிலாதார். வாயில் - கூட்டுவார்.

(உ) [2] அவனுருவெளிப்படுதலின், அதனையேநோக்கி வேறொருபொருளினை நோக்காமையிற் காண்டற்கொழிலின்றாதலின், 'கண்ணும் வாளற்ற' என்றாள். இஃது [3] எதிர்பெய்துபரிதல். வளைசோருதல், [4] உடம்புநனிசுருங்கல். நெஞ்சும் புண்போன்று புலம்பும். இது முத

ணில் - எல்லையில்லாத. மேற்செலா - நடக்கமுடியாத. பெண்ணின் மிக்கது - பெண்மைச் சாதியைக்காட்டிலும் கொடுமை மிகுதியாகவுடையது. எண்ணில் காமம்............பெண்ணல தில்லை; "கடலன்ன காம முழந்து மடலேறாப், பெண்ணிற் பெருந்தக்க தில்" (குறள், 1137); "கண்ணிலாங் கவினொளிக் காளை மார்திறத், துண்ணிலா வெழுதரு காம வூழெரி, வெண்ணிலாச் சுடர்சுட விரிந்து நாண்விடாப், பெண்ணிலாம் பிறிதுயிர் பெரிய தில்லையே" (சூளா. குமாரகாலச். 14); "எண்ணில் காமமெரிப்பினு மேற்செலாப் பெண்மையும் நாணும்" (சிலப். 6 : 109-10, அடியார். உரை நடை)

999. சோலைவேய் மருள் - பொழிலிலேயுள்ள மூங்கிலைப் போன்ற. பசுமையின் மிகுதிதோன்ற 'சோலைவேய்' என்றார். வேய்மருள்தோளி, சூழ்வளைத்தோளி எனத் தனித்தனியியைக்க. தோளி : குணமாலை. வேலை மாக்கடல்; வேலை - கரை; கூர்தர - மிகுந்து பரத்தலாலே. வேட்கை கடல்போல் கூர்தர எனமாறியியைக்க. பெண்ணை - பனை. பெண்ணைமாமடல் - பனைமடலாற் செய்த குதிரையை. மடலூர்தலை - ஆடவர் மடலூரும் தன்மையை. ஆடவர் மடலேறுதல் : நற். 146, 377. காலவேல்; "காலன்வடிவாய வேலான்" (நள. கலிதொடர். 105). தடங்கண்ணியாகிய தோளி தன்வேட்கை கடல் போல் மிக்கூர்தரல் ஆடவர் காமத்தால் மடலூர்தலைக் கருதினாள் என்க. "கடலன்ன காமத்த ராயினும் பெண்டிர், மடலூரார் மைந்தர்மே லென்ப" (தொல். அகத். 35, ந. மேற்.) என்பதனாற் கருதினாளென்றார்.

(உரை) [1] 'சிதைவு பிறர்க்கின்மை என்பது அங்ஙனம் நகுநய மறைத்த வழியும் உள்ளஞ் சிதைந்து நிறையழியுமாகலின் அச்சிதைவு புறத்தார்க்குப் புலனாகாமை நெஞ்சினை நிறுத்தல்' (தொல். மெய்ப். 13, பேர்.) [2] அவன் - சீவகன். [3] 'எதிர்பெய்து பரிதலென்பது, உருவு வெளிப்பாடு; அது, தலைமகனையும் அவன் தேர் முதலாயினவற்றையும் தன்னெதிர் பெய்துகொண்டு பரிந்து கையறுதல்' (தொல். மெய்ப். 22, பேர்.) [4] 'உடம்பு நனி சுருங்கலென்பது, அவ்வுண்ணாமை உயிரிற்

லாகக் [5] கலக்கம்; கூறத்தகாதன கூறலின். அது தலைவிக்காயின், "பிறங்கிரு முந்நீர் வெறுமண லாகப், புறங்காலிற் போக விறைப்பேன்" (கலித். 144) என்றாற்போல்வனவும், தலைவற்காயின், மடலேறுதல் முதலிய கூறலுமாம். மேற்செலா - நடக்கமாட்டாத.

(ரு) சோலைவேய் பசுமைக்கு. ஊர்தலை - உலகத்தில் ஆடவர் மடலூரும் தன்மையை.

(இ - ள்.) வளைத்தோளி, கண்ணி, தன்வேட்கை கடனீர்போல மிக்குப் பரத்தலின், தவஞ்செய்யாதாரைப்போல மூங்கையுமாயினேன்; கண்ணும் வாளற்ற; வளையும் சோரும்; நெஞ்சும் புலம்பும்; இங்ஙனம் எல்லையில்லாத காமம் முழுக்கநின்று சுட்டாலும் பெண்ணைமாமடலூர்தலை மேற்செல்லாத பேதைச்சாதியிற்காட்டிற் கொடுமைமிக்கது பெண்ணல்லதில்லையாயிருந்ததென்று கூறி இக்காலத்தே பிழைக்கலாவதொரு வாயிலுண்டாமோவென்று கருதினாளென்க.

ஈண்டுக் கூறியது, புலனெறிவழக்கமல்லாத காந்தருவமாய் ஆசுரத்தின் பாற்படும் [6] கைக்கிளையாதலின், மெய்ப்பாட்டுப்பொருள்களை முறையிற் கூறாது மயங்கக்கூறினாரென்று கொள்க. (கசஎ - கூ)

1000. உய்யு மாறுரை யுன்னைய லாலிலேன்
செய்ய வாய்க்கிளி யேசிறந் தாயென
நைய னங்கையிந் நாட்டகத் துண்டெனிற்
றைய லாய்சம ழாதுரை யென்றதே.

தாய்தந்தையிலுஞ் சிறந்தாயென்றாள், அவர்க்குக் கூறலாகாதவை கூறுதலின்.

(இ - ள்.) அங்ஙனங் கருதினவள், அருகிருந்த கிளியைக்கண்டு, கிளியே, சிறந்தாய், உன்னையொழிய வேறொரு வாயிலை யானுடையேனல்லேன்; இனி, யான் உய்யும்படி வாயிலையுரையாயென்றாளாக, அக்

செல்லாது உடம்பிற் காட்டுதல்' (தொல். மெய்ப். 22, பேர்.). [5] 'கலங்கி மொழிதல் - கையொடுபட்ட கள்வரைப் போலச் சொல்லுவனவற்றைத் தடுமாற்றம் தோன்றச் சொல்லுதலும்; அஃதாவது தன் மனத்து நிகழா நின்றன தன்னையறியாமற் சில புலப்படச் சொல்லுதலாயிற்று' (தொல். மெய்ப். 18, பேர்.) [6] கைக்கிளை - ஒருதலைக் காமம்; ஈண்டு இஃது அகனைந்திணைக்கண் தழுவிக்கொள்ளப்படும் கைக்கிளை யன்றாதலின் அகப்புறமாகிய, 'ஆசுரத்தின்பாற்படும் கைக்கிளை' என்று கூறினர்.

1000. உய்யுமாறு - யான்பிழைக்கும்படி. உரை - தூதாக உரைப்பாயாக. உன்னையலால் இலேன் - உன்னை ஒழிய வேறொரு தூதை யான்பெற்றிலேன். என - என்று குணமாலை கூற. 'கிளியே, சிறந்தாய், உன்னையலால் இலேன்; உய்யுமாறு உரைஎன' என்று மாறியியைக்க. நங்கை: விளி. நையல் - வருந்தாதே. இந்நாட்டகத்து உண்டெனின் - சீவகன் இந்நாட்டிலே உள்ளானாயின். சமழாது - வருந்தாமல். என்றது - என்று கிளி கூறிற்று.

(மேற்.) அடி, 4: தொல். எச்ச. 56, ந.

கிளியும், நங்காய், நீ நையாதேகொள்ளென முற்கூறி, பின்னும், தையலாய், அவன் இந்நாட்டிலே யுண்டாயின் வருந்தாதே உரைப்பாயாக வென்றதென்க. (கூ௦)

1001. தெளிக யம்மலர் மேலுறை தேவியின்
ஒளியுஞ் சாயலு மொப்புமை யில்லவள்
களிகொள் காமத்திற் கையற வெய்தித்தன்
கிளியைத் தூ துவிட் டாள்கிளந் தென்பவே.

[1] கயம் - பதுமை யென்னுங்கயம்.

(இ - ள்.) தேவியிற்காட்டில் ஒளியும் சாயலும் வேறுப்பிலாதவள், காமத்தாலே செயலறவெய்தித் தன் வருத்தத்தை வெளியாகக்கூறித் தன் பிள்ளையைத் தூதாகப் போகவிட்டாளென்க. (கூகூ)

1002. பூணொ டேந்திய வெம்முலைப் பொன்னனாள்
நாணுந் தன்குல னுந்நலங் கீழ்ப்பட
வீணை வித்தகற் காணிய விண்படர்ந்
தாணுப் பைங்கிளி யாண்டுப் பறந்ததே.

தான் ஏந்திய பூணுடனே விருப்பஞ்செய்கின்ற முலை.

(இ - ள்.) நேயத்தையுடைய பைங்கிளி, பொன்னனாளது நாணும் குலனும் நன்மை குறையும்படி அவள் வேட்கையறிவித்தற்கு யாழ்வென்று கொண்ட தத்தையை விரும்பினவனைக் காணவேண்டி விண்ணிலே சென்று அவனிருக்கின்றவிடத்தே பறந்ததென்க. (கூ௨)

1001. தேவியின் - திருமகளைக் காட்டிலும். இன் : உறழ்பொரு. சாயல் - மென்மை. களித்தலைக்கொண்ட காமத்தால் ; "உள்ளக் களித்தலும்......காமத்திற்குண்டு" (குறள், 1281). கையறவு - கையாறு ; தொல். மெய்ப். 18. கிளந்து தூது விட்டாள் என்க ; கிளந்து - தன் வருத்தத்தைக் கூறி.

(உரை) [1] (பி - ம்.) 'கயம் - பத்மை, மகாபத்மை யென்னும் கயங்கள்.' சீவக. 183, ந.

1002. ஏந்திய பூணொடு என மாறுக. பொன்னனாள் : குணமாலை. குலன் - குலவொழுக்கம். கீழ்ப்பட - குறையும்படி. குலமகளிர் தம் காம நோயைக் கூற நாணுதல் : சீவக. 1028 ; "தாமுறு காமத் தன்மை தாங்களே யுரைப்ப தென்ப, தாமென லாவ தன்று லருங்குல மகளிர்க் கம்மா" (கம்ப. சூர்ப்பணகைப். 45) ; வி-பா. வேத்திரகீயச். 5. வீணை வித்தகன் : சீவக. 28, அடிக். காணிய - காண. ஆணு - நேயம் ; "ஆணு விசும்பி னகாய கங்கை" (மணி. பதிகம், 17) ; யாணு என்பதன் விகாரமாகக் கொள்ளின் அழகென்று கொள்க. ஆண்டு - சீவகனிருக்குமிடத்தில்.

(வேறு)

1003. கூட்டினான் மணிபல தெளித்துக் கொண்டவன்
தீட்டினான் கிழிமிசைத் திலக வாணுதல்
வேட்டமால் களிற்றிடை வெருவி நின்றதோர்
நாட்டமு நடுக்கமு நங்கை வண்ணமே.

(இ - ள்.) பலமணிகளையும் கரைத்துக்கொண்டு பலநிறத்து வண்ணங்களையுங் கூட்டினான்; அங்ஙனங்கூட்டினவன் கிழிமேலே குணமாலை யானையின் முன்னர் அஞ்சிநின்ற நடுக்கத்தையும் தன்னை நோக்கின நோக்கினையும் அவள் தன் செயலாகவே தீட்டினானென்க.

இக்கருத்தானன்றே, " நீல நெடுங்கணாற் கவர்ந்த கள்வி, அஞ்சனத் துவலையாடி நடுங்கினாள் " (சீவக. 1024) என்கின்றான். (கூ௫)

1004. நெகிழ்ந்துசோர் பூந்துகி ணோக்கி நோக்கியே
மகிழ்ந்துவீழ் மணிக்குழன் மாலை காறொடும்
முகிழ்ந்துவீங் கிளமுலை முத்தந் தைவரும்
புகழ்ந்துதன் றோள்களிற் புல்லு மெல்லவே.

(இ - ள்.) அங்ஙனமெழுதினவன், நெகிழ்ந்துவீழ்கின்ற துகிலொன்றையும் திருத்தலாகாதென்று மனத்தாற்குறித்து அதனைப் பார்த்துநின்றே மகிழ்ந்து குழன்முதலியவற்றைத் திருத்தத் தொடும்; முகிழ்ந்து வீங்கிளமுலையின் முத்தத்தையும் செவ்விதாக இடத்தொடும்; புகழ்ந்து தன் தோள்களின் மேலே மெல்லப்புல்லுமென்க.

நோக்கி : இது [1] நோக்கநோக்கம். நோக்கியே : இது [2] பொறியாநோக்கு நோக்கம். வெருவிநின்ற நடுக்கமெழுதலின், குலைந்தனவற்றை மயக்கத்தாற்றிருத்தத் தேடினானென்க. மாலை அவள் பெயருமாம். மணிக் [3]குரன்மாலையும் பாடம். (கூ௪)

1003. தெளித்து - கரைத்து. கொண்டவன் : பெயர். திலகவாணுதல் : குணமாலை. வேட்ட - விரும்பிய. வெருவி - அஞ்சி. நாட்டம் - பார்வை. நாட்டத்தையும் நடுக்கத்தையும் நங்கையின் வண்ணமாகவே கிழிமிசைத் தீட்டினானென்க.

1004. நோக்கி - மனத்தால் நோக்கி; இது நோக்கநோக்கம். நோக்கி - கண்ணாற்பார்த்து. வீழ்மணிக்குழல் - அவிழ்ந்து விழுந்த நீலமணிபோன்ற கூந்தலில். அணிந்த மாலையைக் கால் தொடும். கால் தொடும் - கையால் திருத்தத் தொடுவான். முகிழ்ந்து - அரும்பி. முத்தம் - முத்துமாலை. தைவரும் - தடவுவான். அடி, 3 : பெருங். 1. 40 : 50, 2. 16 : 85, 3. 24 : 181. மெல்லப்புல்லும்; புல்லும் - அச்சித்திரத்தைத் தழுவிக்கொள்வான்.

(உரை) [1] தொல். வேற்றுமைமயங்கு. 10. [2] பொறி - கண். [3] குரல் - ஐம்பாலுள் ஒருவகை; பு - வெ. 223, உரை.

1005. படைமலர் நெடுங்கணாள் பரவை யேந்தல்குல்
மிடைமணி மேகலை நோற்ற வெந்தொழிற்
புடைதிரள் வனமுலைப் பூணு நோற்றன
அடிமலர்த் தாமரைச் சிலம்பு நோற்றவே.

(இ - ள்.) படையுமலரும்போன்ற கண்ணாளுடைய வல்குலிலே மிடைந்த மேகலைநோற்றன; கொடிய தொழிலையுடைய முலையிற் பூண்களும் நோற்றன; அடித்தாமரையிற் சிலம்புகளும் நோற்றன; யானே நோலாதே னென்னுமென்க.

இது [1] குறிப்பெச்சம். அடிமலர் : ஒருசொல். (கஉரு)

1006. மின்னணங் குறுமிடை மேவர் சாயலுக்
கின்னண மிறைமகன் புலம்ப யாவதும்
தன்னணங் குறுமொழித் தத்தை தத்தையை
மன்னணங் குறலொடு மகிழ்ந்து கண்டதே.

[1] மேவரு : விகாரம். யாவதுமென்றது அறிவு முதலிய குணங்களை.

(இ - ள்.) இறைமகன் குணமாலைக்கு இன்னணம் புலம்பக்கண்டு, அவன் அங்ஙனம் மிக வருத்தத்தையுறுதலினாலே முடிந்ததென்று மகிழ்ந்து, தன்னுடைய குணமாலையது வருத்தமுற்ற மொழியை அறிவிக்கலுற்ற கிளி அதற்கு இடையீடாகக் காந்தருவதத்தை வருகின்ற நிலையைக் கண்டதென்க.

மன் - மிகுதி. எல்லாவழியானும் பெறுதற்குரியவன் வருந்துதலின், 'இறைமகன்புலம்ப' என்றார். (கஉசு)

1005. படைமலர் - படையும் மலரும்; "பண்டாரங் காமன் படையுவள் கண்காண்மின்" (பரி. 11 : 123). மிடைமணி - நெருங்கிய மணிகளையுடைய. நோற்ற - நோற்றன. புடைதிரள் - பக்கம் திரண்ட. வனம் - அழகு.

(மேற்.) மு : கல். 'வானவர்', 39, மயில்.

(உரை) [1] குறள், 1090, பரிமேல்.

1006. மின்னலை வருத்தலுறும் இடை. மேவர் = மேவரு - விரும்புதல் வரும்; காமரு காமர் எனவந்தாற்போல்வது. சாயலுக்கு - சாயலையுடைய குணமாலையின் பொருட்டு. இன்னணம் - இன்னவிதம். இறைமகன் : சீவகன். புலம்ப மகிழ்ந்து என இயைக்க; மகிழ்ந்தது கிளியின் தொழில். தன் அணங்கு உறுமொழி - தன்னுடைய குணமாலை வருத்தமுற்ற மொழியையுடைய. தத்தை - கிளி. தத்தையை - காந்தருவதத்தையை. மன் - மிகுதியான. அணங்குறலொடு - வருத்தத்தோடு. தத்தை, தத்தையை அணங்குறலொடு கண்டதென்க.

(உரை) [1] மேவருவென்பது மேவர் என்று கடைக்குறைந்தது.

1007. ஆடுபாம் பெனப்புடை யகன்ற வல்குன்மேற்
சூடிய கலைப்புறஞ் சூழ்ந்த பூந்துகில்
ஓடிய வெரிவளைத் துருவ வெண்புகை
கூடிமற் றதன்புறங் குலாய கொள்கைத்தே.

(இ - ள்.) பாம்பென அகன்ற அல்குன்மேற் சூடினமேகலையைப் புறத்தே சூழ்ந்த துகில் வளையவோடின உருவத்தையுடைய எரியை வெண்புகை கூடி வளைத்து அதன்புறத்தே நிலைபெற்ற தன்மைத்தென்க.

பாம்பு, அல்குற்கேயுவமையாதலின் [1] அடுத்துவரலுவமையன்று; "அடுக்கிய தோற்றம் விடுத்தல் பண்பே" (தொல். உவம. 36) என்றார். மற்று : அசை. "மாண்குலாங்குணத்தினால்" (சீவக. 2233) என்பர் பின்னும். (கூ௭)

1008. கொன்வளர் குவிமுலைக் கோட்டிற் றாழ்ந்தன
மின்வளர் திரள்வடம் விளங்கு பைங்கதிர்
இன்வள ரிளம்பிறை யெழுதப் பட்டன
பொன்வளர் செப்பின்மேற் பொலிந்த போன்றவே.

கொன் - பெருமை.

(இ - ள்.) முலைக்கோட்டிலே திரள்வடங்கள் கிடந்தன, எழுதப் பட்டனவாகிய பொன்வளர்ந்த செப்பின்மேலே கதிரையுடைய இனிமை வளர்ந்த பிறை பொலிந்தனபோன்றவென்க. (கூ௮)

1009. குண்டல மொருபுடை குலாவி வில்லிட
விண்டலர்ந் தொருபுடை தோடு மின்செய
மண்டல நிறைந்ததோர் மதிய மன்னதே
ஒண்டொடி திருமுகத் துருவ மாட்சியே.

---

1007. ஆடு - படம் விரித்தாடுகின்ற. புடை - பக்கம். கலைப்புறம் - மேகலையின் புறத்தே. பூந்துகில் - பூத்தொழிலமைந்த ஆடை. ஓடிய - வளைவாக ஓடிய. உருவ எரியை வெண்புகை கூடிவளைத்து எனமாறி யியைக்க. கூடி - சேர்ந்து. அதன்புறம் - எரியின்புறத்தை. குலாய - நிலைபெற்ற; சீவக. 2233. மேகலைக்கு எரியும், துகிலுக்குப் புகையும் உவமைகள்.

(மேற்.) அடி, 1 : நன். பொது. 50, மயிலை.; சங்கர.; இ - வி. பொது. 18.

(உரை) [1] சீவக. 107, ந.

1008. கோட்டில் - சிகரத்தில். தாழ்ந்தன - தங்கிக்கிடந்தன. மின் - ஒளி. திரள்வடம் - திரண்ட முத்துமாலைகள். வடம் முலைக்கோட்டில் தாழ்ந்தன. இன் - இனிமை; சீவக. 326, அடிக். முலைக்குச் செப்பும், முத்து வடத்துக்குப் பிறையும் உவமைகள்.

1009. ஒருபுடை - ஒருபக்கம். குலாவி - வளைந்து. வில்லிட - ஒளியை வீச. ஒருபுடை குண்டலம் வில்லிட. விண்டு அலர்ந்து - வேறுபட்டு விரிந்து. மின்செய - ஒளியை வீச. குண்டலமும் தோடும் :

(இ - ள்.) ஒண்டொடிமுகத்தின் உருவத்தினழகு, ஒருபுடையிலே குண்டலம் வில்லிட, ஒருபுடையிலே தோடு ஒளியைவீச வட்டநிறைந்த தொரு மதியமுண்டாயின் அதனையொக்குமென்க. (கஊகூ)

1010. பூணிற முலையவள் பொருவில் பூநுதல்
மாணிறக் கருங்குழன் மருங்கிற் போக்கிய
நாணிற மிகுகதிர்ப் பட்ட நல்லொளி
வாணிற மின்னிருள் வளைத்த தொத்ததே.

(இ - ள்.) பூணையும் நிறத்தையுமுடைய முலையினையுடையானது குழலின்பக்கத்தில் நாடோறும் நிறம்மிகுகின்ற பிறைபோலும் நுதலிலே கட்டிய நல்லொளிப்பட்டமானது பிறையைச்சேர்ந்த இருளை மின்வளைத்த தன்மையை ஒத்ததென்க. (கஊ0)

1011. கடிகமழ் பூஞ்சிகை காமர் மல்லிகை
வடிவுடை மாலைகா றொடர்ந்து வாய்ந்தது
நடுவொசிந் தொல்கிய நாறு மாமலர்க்
கொடியின்மேற் குயில்குனிந் திருந்த தொத்ததே.

(இ - ள்.) மல்லிகைமாலை தன்னிடத்தே கட்டப்பட்டுப் பூமுடி வாய்ந்தது, நடுவுவளைந்து நுடங்கிய பூங்கொடியின்மேலே குயில்வளைந் திருந்த தன்மையையொத்ததென்க. (கஊக)

---

சீவக. 696, அடிக். மண்டலம் - வட்டம். மதியமன்னது - மதியத்தை ஒக்கும். ஒண்டொடி : குணமாலை. மாட்சி - அழகு. முகத்தினது உருவமாட்சி மதியமன்னது. பிற்காலத்திற்கு ஆகாததாகிய ஒப்பனைக்கு இக்கவியை மேற்கோள்காட்டினர் நச்சினார்க்கினியர் ; தொல். செய். 80.

(மேற்.) அடி, 1 - 2 : தொல். செய். 80, ந.

1010. பூணையும் நிறத்தையுமுடைய முலையவள் ; குணமாலை. பூண் - ஆபரணம். பொருவில் - ஒப்பில்லாத. பூ - அழகிய. மாண் நிறம் - மாட்சிமைப்பட்ட நிறத்தையுடைய. மருங்கு - பக்கம். போக்கிய- கட்டிய. நாள்நிறம் மிகு கதிர் - நாள்தோறும் நிறம் மிகுகின்ற பிறைச் சந்திரன். பட்டம் - நெற்றிப்பட்டம். வாள்நிறம் - ஒளிபொருந்திய நிறத்தையுடைய. முலையவளுடைய குழலின் மருங்கில் நுதலிற் போக்கிய பட்டமானது இருளை வாணிறமின் வளைத்ததொத்தது எனமாறிமுடிக்க ; நெற்றிக்குப் பிறையும், கூந்தலுக்கு இருளும், நுதற்பட்டத்துக்கு மின்னும் உவமைகள்.

1011. கடி - வாசனை. பூஞ்சிகை - பூமுடி. காமர்வடிவுடைய மல் லிகைமாலை ; காமர் - அழகிய. கால்தொடர்ந்து - தன்னிடத்தே கட்டப் பட்டு. மல்லிகைமாலை, கால்தொடர்ந்து பூஞ்சிகை வாய்ந்தது என மாறியியைக்க ; மாலைகால்தொடர்ந்து ; சீவக. 637. ஒல்கிய - நுடங்கிய.

1012. சிலம்பொடு மேகலை மிழற்றத் தேனினம்
அலங்கலுண் டியாழ்செயு மம்பொற் பூங்கொடி
நலம்பட நன்னடை கற்ற தொக்குமிவ்
விலங்கரித் தடங்கணு ளியாவ ளாங்கொலோ.

(இ - ள்.) இவள் நடை, தேனினம் உண்டு பாடும் பொற்பூங்கொடி சிலம்பும் மேகலையுமொலிப்ப நடை கற்ற தன்மையையொக்கும்; இவள் யார் கொலென்று ஐயுற்றது கிளியென்க.

இஃது [1] இல்பொருளுவமை. (கசுஉ)

1013. யாவளே யாயினு மாக மற்றிவள்
மேவிய பொருளொடு மீண்ட பின்னலால்
ஏவலாற் சேர்கலே னென்று பைங்கிளி
பூவலர் சண்பகம் பொருந்திற் றென்பவே.

(இ - ள்.) பைங்கிளி, இவள் யாவளாயினுமாக; இதனுற்பெற்ற தென், இவள் தான் மேவிய காரியத்தை முடித்து மீண்டபின்னல்லது யான் குணமாலையது ஏவலாற் சேரக்கடவேனல்லேனென்று சண்பகத்தைப் பொருந்திற்றென்க.

ஏ [1] வல்லவனென்றுமாம். (கசுங)

---

நாறும் - மணம் வீசுகின்ற. குனிந்து - வளைந்து. மாலையைக் கொண்ட பூமுடிக்குப் பூங்கொடியின் மீதுள்ள குயில் உவமை; பிரபு. பிரபு தேவர். 7.

1012. மிழற்ற - ஒலிப்ப. தேனினம் - வண்டின் கூட்டம். அலங்கல் உண்டு - பூமாலையிலுள்ள பூக்களின் தாதை உண்டு; "மாலை தின்று தேனிசைகள் பாட", "சுரும்பெழுந் திருந்துணுந் தொங்கல்" (சீவக. 630, 661). யாழ்செயும் - யாழைப்போல ஒலித்தலைச்செய்யும். நலம்பட - அழகுண்டாகும்படி. பூங்கொடி, சிலம்பும் மேகலையும் மிழற்ற நடை கற்றதொக்கும் என மாறியியைக்க. இலங்கு அரி - விளங்குகின்ற செவ்வரியையுடைய. தடங்கணுள்: காந்தருவதத்தை. சீவக. 1007 முதல் 1012 வரையிலுள்ளன கிளியின் உட்கோள்.

(உரை) [1] பூங்கொடி நடைகற்ற தன்மையை ஒக்கும் என்றது இல் பொருளுவமை.

1013. இவள் யாவளேயாயினும் ஆக. மற்று: அசை. இவள்: காந்தருவதத்தை. மேவிய பொருளொடு - தான் விரும்பிய காரியத்தை முடித்தலோடு. மீண்டபின் அலால் - சீவகனை நீங்கித் தன்னிடத்திற்குத் திரும்பிச்சென்ற பின்பல்லது. ஏவலால் - குணமாலையினுடைய ஏவலால். பூக்களை அலர்ந்த சண்பகமரத்தை.

(உரை) [1] சீவகன்: ஏ - அம்பு; விற்றொழில்.

1014. மதுக்களி நெடுங்கணாள் வான்பொற் கிண்கிணி
ஒதுக்கிடை மிழற்றச்சென் றெய்தி யூன்கவர்
கதக்களி வேலினாற் கண்டு காமநீர்ப்
புதுத்தளி ரனையவள் புலந்து நோக்கினாள்.

(இ - ள்.) மதுவினது களிப்பைக்கண்ணிடத்தேயுடைய தத்தை, கிண்கிணி நடையிடத்தே ஒலிப்பச் சென்றணுகி ஊனைக் கவரும் வேலினானைக் கண்டு காமத்தாற் புலக்கையினாலே புதுநீரிற் றளிரையொக்க [1] நடுங்கினவள் பின்பு படத்தைக் குறித்துப் பார்த்தாளென்க.

"கொல்புனற் றளிரி னடுங்குவன ளின்று" (பதிற். 25) என்றாற் போல. இனிக் காமநீரால் வளர்ந்த தளிருமாம். (ககூச)

1015. (க) இதுவென வுருவென வியக்கி யென்றலும்
புதிது பூந்துகில் குழல்கள் சோர்தலால்
மதுவிரி கோதையம் மாலை நின்மனம்
அதுமுறை யியக்கலி னியக்கி யாகுமே.

1016. (உ) முளைத்தெழு மதியமுத் தரும்பி யாங்கென
விளைத்தது திருமுகம் வியர்ப்பு வெஞ்சிலை
வளைத்தன புருவமு முரிந்த வல்லையே
கிளைக்கமு நீர்க்கணுஞ் சிவப்பிற் கேழ்த்தவே.

---

1014. மதுக்களி - மதுவின் களிப்பை. நெடுங்கணாள் : காந்தருவ தத்தை. ஒதுக்கிடை - தன்னுடைய நடையிடத்தே. சென்று எய்தி - போய் அணுகி. ஊன் - மாமிசத்தை. கதக்களி - கோபத்தையும் வெற்றிக் களிப்பையுமுடைய. வேலினான் : சீவகன். காமத்தாற் புலந்து புதுநீர்த்தளிரனையவள் நோக்கினாள் எனமாறியியைக்க. புலந்து - ஊடுதலால்; எச்சத்திரிபு. நோக்கினாள் - சீவகன் கிழியில் எழுதிக் கொண்டிருந்த குணமாலையின் படத்தைப் பார்த்தாள்.

(உரை) [1] 'கோபத்தாலும் கரணத்தாலும் நடுங்கிற்றென ஊடலும் கூடலு முணர்த்திற்று' (சீவக. 134, ந.)

1015. இது - இப்படத்திலுள்ள உருவம். என உரு என - என்ன உருவம் என்று காந்தருவதத்தை கேட்ப. என - என்ன; இடைக்குறை. என்றலும் - என்று சீவகன் கூறுதலும். துகிலும் குழலும் சோர்தலால் இது புதிது. இது புதிது - இவ்வுருவம் புதியதோர் இயக்கியாகும். ஆடையுடன் பிறத்தலும், மயிர் பிறந்த காலத்திலிருந்தபடியே இருத்தலும் இயக்கர்க்கு இயல்பென்பர். கோதையையுடைய மாலை : குணமாலை. மது - தேன். நின் மனமது - உன்னுடைய மனத்தை; அது : பகுதிப் பொருள் விகுதி. முறை இயக்கலின் - முறையே அவள் வயமாகச்செலுத்துதலின். இயக்கியாகும் - குணமாலை இயக்கியாவாள்; இயக்கி யென்பதற்கு வேறு காரணம் கற்பித்துக் கூறினாள்.

1016. முத்தரும்பியாங்கு - முத்தைத் தோற்றுவித்தாற்போல. விளைத்தது - உண்டாக்கியது. திருமுகம் வல்லையே வியர்ப்பை விளைத்

இவை இரண்டும் ஒருதொடர்.

(௧) இயக்கி தெய்வமாதலின், 'இது' என்றார்.

(௨) எனவென்பதனைப்பிரித்து [1] முன்னே கூட்டுக. கிளைக்கழுநீர் - அலர்ந்த பூவிற்குக் கிளையாகிய கழுநீர்.

(இ - ள்.) இவ்வுரு என்னவுருவென்று ததத்தைகேட்ப, அவன் இயக்கி யென்ற அளவிலே, துகிலுங்குழலுஞ்சோர எழுதுதலின், இது புதியதோ ரியக்கி ; நீபொய்கூறிறுயுமல்லை ; அக்குணமாலை நின்மனமாகிய அதனை முறையே ஆற்றுமைமிகும்படி இயக்குதலின் இயக்கியாமென்றுளாக, மதியம் முத்தை அரும்பியாங்கு வல்லே திருமுகம் வியர்ப்பைவிளைத் தது ; புருவமும் ஏறிவளைந்தன ; கண்ணும் நீர்க்கீழரும்பினது (முருகு. 29) சிவப்பினுஞ்சிவந்தனவென்க. (௧௬௩ - ௬)

1017\. பாவைநீ புலவியி னீடல் பாவியேற்
காவியொன் றிரண்டுடம் பல்ல தூற்றுநீர்க்
கூவல்வாய் வெண்மணல் குறுகச் செல்லுமே
மேவிப்பூங் கங்கையுள் விழைந்த வன்னமே.

---

தது எனமாறி யியைக்க. சிலை - வில். சிலைவளைத்தனவெனப் புருவம் முரிந்த என்க. முரிந்த - வளைந்தன. வல்லையே - விரைவாக. கிளைக் கழுநீர் ; "கிளைக்கவின் றெழுதரு கீழ்நீர்ச் செவ்வரும்பு" (முருகு. 29); 'பசிசென்ற அரும்புகளினின்றும் மேலே போந்து அழகு பெற்றுத் தோன்றுகின்ற நீர்க்கீழ்நின்ற சிவந்த அரும்பை' (முருகு. 29, ந.) கணும் - கண்ணும். சிவப்பிற் கேழ்த்த - சிவப்பைக் காட்டிலும் சிவந்தன.

மு. "காதலன்மே லூடல் கரையிறத்தல் காட்டுமால், மாதர் நுதல் வியர்ப்ப வாய்துடிப்ப—மீது, மருங்குவளை வின்முரிய வாளிடுக நீண்ட, கருங்குவளை சேந்த கருத்து" (தண்டி. 58, மேற்.)

(உரை) [1] வளைத்தன என்பதனோடு கூட்டுக.

1017\. பாவை : காந்தருவதத்தை ; விளி. புலவி - ஊடல். நீடல் - நிலைபெருதே ; இருவர்க்கும் உடம்பு இரண்டல்லது பாவியேற்கு ஆவி ஒன்று ; ஆவி ஒன்று - உன்னுடைய உயிரே என்னுடைய உயிருமாகை யால் ஆவி ஒன்றே ; கலித். 87 : 3-4, ந. "இருவ ராகத்து ளோருயிர் கண்டனம் யாம்", "ஆருயி ரீருருக்கொண், டானந்த வெள்ளத் திடைத்திளைத் தாலொக்கும்" (திருச்சிற். 71, 307) ; "மருங்கிலா நங் கையும் வசையி லையனும், ஒருங்கிய விரண்டுடற் குயிரொன் ருயினர்" (கம்ப. மிதிலைக். 38). கூவல் - கிணறு. குறுக - அணுக. செல்லுமே : ஏகாரம் வினு ; செல்லாதென்றபடி. மேவி - பொருந்தி. விழைந்த - விரும்பிய. 'கங்கையுள்மேவி விழைந்த அன்னம் வெண்மணலை யுடைய ஊற்றுநீரிற் செல்லுமே' என முடிக்க ; "கங்கை முன்றுறைநீத், தன்னம் படியுங் கொலோவுவ ராழியி லாரணங்கே" (அம்பிகா. 478) ;

(இ - ள்.) அதுகண்டு, பாவாய் இருவர்க்கும் உடம்பு இரண்டல்லது பாவியேற்கு நின்னுயிரே என்னுயிராயிருக்கும்; இது நம் தன்மை; இனி, கங்கையிலே மேவி அதனை விரும்பிய அன்னம் மணலூற்றுநீரிலே அணுகச் செல்லாதே; அதனை நீயறிதியாதலிற் புலவியினீடலென்றானென்க.

கூவலிற்செல்லாதெனவே கங்கையைநிகர்க்கும் யாற்றிலே செல்லுமென்பதாயிற்று; எனவே குணமாலைமரபுங்கூறி அவளைவரைதலும் முறைமையென்று கூறினானும். (கசுஎ)

1018. பேரினும் பெண்டிரைப் பொறாது சீறுவாள்
நேர்மலர்ப் பாவையை நோக்கி நெய்சொரி
கூரழல் போல்வதோர் புலவி கூர்ந்ததே
ஆர்வுறு கணவன்மாட் டமிர்தின் சாயற்கே.

(இ - ள்.) வேறொரு பெண்டிரைப் பெயர்சொல்லவும் பொறாதே சீறுகின்றவள் அங்ஙனங்கூறிய சொற்பொருளுணர்ந்து, குணமாலையை எதிர்முகமாக நோக்கி அவள் வடிவின்மிகுதிகண்டமையாற் கணவனிடத்தே சாயலுக்கு அழல்போல்வதொரு புலவிமிக்கதென்க.

'நேரமர்ப்பாவையைநோக்கி' என்பது பாடமாயின், தனக்கு மாறாகிய பாவையை நேரேநோக்கியென்க. (கசுஅ)

1019. புலந்தவள் கொடியென நடுங்கிப் பொன்னரிச்
சிலம்பொடு மேகலை மிழற்றச் சென்னிமேல்
அலங்கல்வா யடிமல ரணிந்து குண்டலம்
இலங்கப்பேர்ந் தினமலர் சிதறி யேகினாள்.

---

"மான தப்பெருந் தடத்தினின் மருவிய வன்னம், கான கச்சிறு காக்கை சேர் தடங்கரு தாதால்" (பாகவதம், 1. 2 : 7)

(மேற்.) மு : நம்பி. கற்பு. 7.

1018. பெண்டிரைப் பேரினும் - வேறொரு மகளிரின் பெயரைச் சொன்னாலும். சீறுவாள் - கோபிப்பவளாகிய காந்தருவதத்தை. நேர் - எதிர்முகமாக. மலர்ப்பாவையை - படத்தில் எழுதப்பட்ட குணமாலையின் உருவத்தை. நோக்கி - பார்த்தமையால்; எச்சத்திரிபு. கூரழல் - மிக்க தீ. நெய்சொரி அழல்; சீவக. 988. புலவியின் மிகுதி தோன்ற நெய்சொரியழல்போல்வது என்றார். புலவி - ஊடல். கூர்ந்தது - முன்னையைக் காட்டிலும் மிக்கது. ஆர்வு - ஆர்வம். அமிர்தின் சாயல்; சீவக. 8, அடிக். சாயற்கு : காந்தருவதத்தைக்கு. சாயற்குக் கணவன் மாட்டுப் புலவி கூர்ந்தது என மாறியியைக்க.

1019. புலந்தவள் : தத்தை. பொன்னரிச் சிலம்பு - பொன்னாலாகிய பரல்களையுடைய சிலம்பு; சீவக. 2921. சென்னிமேல் - சீவகனுடைய தலை

**(இ - ள்.)** அங்ஙனம் புலந்தவள் கோபத்தாலே கொடியைப்போலே நடுங்கி அவன்றலேமேற்கிடந்த மாலேயிடத்தே சிலம்பும் மேகலேயும் மிழற்றும்படி தன்னடித் தாமரையைச் சூட்டி அவ்விடத்தினின்றும் பெயர்ந்து பின்பு மலரைச் சிதறித் தன்மனேயிலே யேகினுளென்க. (கசா கூ)

1020. துனிப்புறு கிளவியாற் றுணேவி யேகலும்
இனிப்பிறர்க் கிடமிலே யெழுவ லீங்கெனக்
கனிப்புறு சொல்லளேஇப் பறந்து காளேதன்
பணிக்கதிர்ப் பகைமலர்ப் பாதஞ் சேர்ந்ததே.

**(இ - ள்.)** அவன் கூறிய வெறுப்புற்ற வார்த்தையோடே தத்தை போயினுளாக, கிளி, இவள் ஊடல்நீங்காது போதலின் இவ்விடத்துப் பிறர்க்கிடமில்லே; இனி இவ்விடத்தினின்றுமெழுந்திருப்பேனென்று இனிமையுற்ற சொல்லேத் தன்னிலே கூறிப் பறந்துசென்று காளே தன்னுடைய மதியாகிய பகையையுடைய தாமரைபோலும் பாதத்தை வணங்கிற்றென்க. (கஎ௦)

1021. வாழ்கநின் கழலடி மைந்த வென்னவே
தோழியர் சுவாகதம் போது கீங்கெனச்
சூழ்மணி மோதிரஞ் சுடர்ந்து வில்லிட
யாழறி வித்தக னங்கை நீட்டினுன்.

**(இ - ள்.)** கிளி அங்ஙனம் வணங்கி, மைந்தனே, நின்னடி வாழ்வதாக வென்ன, வித்தகன், எந்தோழியர் நல்வரவே, இவ்விடத்தே போதுகவென்று கூறி மோதிரம் ஒளிவீசும்படி கையை நீட்டினுனென்க.

---

யின்மேல். அலங்கல்வாய் - மாலேயிடத்து. அடிமலர் - தன்னுடைய பாத தாமரையை. இலங்க - ஒளியால் விளங்க. பேர்ந்து - அவ்விடத்தினின்றும் நீங்கி. இனமலர் - தொகுதியான பூக்களே.

1020. துனிப்புறு கிளவியால் - சீவகன் கூறிய வெறுப்புற்ற வார்த்தையோடு. துணேவி : காந்தருவதத்தை. ஈங்கு எழுவல் என்று - இவ்விடத்தினின்றும் எழுந்திருப்பேன் என்று. கனிப்புறு - இனிமையுற்ற. அளேஇ - கிளி கூறி. காளே : சீவகன். பனி - குளிர்ச்சி. பனிக்கதிர்ப் பகை மலர்ப் பாதம் - சந்திரனுகிய பகையையுடைய தாமரை மலர்போன்ற பாதத்தை. சேர்ந்தது - வணங்கியது.

1021. மைந்த, நின் கழலடி வாழ்க. என்னவே - என்று கிளி கூறவே. தோழியர் - குணமாலேயும், சுரமஞ்சரியும். சுவாகதம் - நல்வரவு; கிளி என்ற பொருளும் உண்டு. சுவாகதம்; "சுவாகதங்கில வென்று" (திருவிளே. இரதவாதம். 15). ஈங்கு போதுக என - இவ்விடத்தே வருவாயாக என்று கூறி. சுடர்ந்து வில்லிட - விளங்கி ஒளி வீசும்படி. யாழறி வித்தகன் : சீவகன்; சீவக. 28, அடிக். வித்தகன் போதுக ஈங்கென மோதிரம் வில்லிட அங்கையை நீட்டினுன் என்க.

அடி வாழ்கவென்றல் முறைமை. குணமாலையையும் சுரமஞ்சரியை யும் குறித்துத் தோழியரென்றான். [1]'ஆ' என்று பாடமோதி, வியந்து, தோழி சுகமேவந்ததே யென்றுமாம். (கஎக)

1022. பொன்னியல் குரும்பையிற் பொலிந்த வெம்முலைக்
கன்னியர் தூதொடு காமர் பைங்கிளி
முன்னமே வந்தென முறுவ னோக்கமொ
டென்னைகொல் வரவென வினிய செப்பினான்.

(இ - ள்.) கன்னியர் வார்த்தையுடனே கிளி வந்ததென்று உட் கொண்டு மகிழ்ச்சிகொண்ட நோக்குடனே, என்குறிப்பே, நின்வரவு யாதனைக் கருதியோவென்று இனிய கூறினானென்க.

என்முன்னமே யென்றான், பின்பும், "ஆற்றாதேனாற்ற, விடுந்தசிறு கிளி" (சீவக. 1041) என்கின்றமையின். வந்தென: விகாரம். (கஎஉ)

1023. மையலங் களிற்றொடு பொருத வண்புகழ்
ஐயனைச் செவ்விகண் டறிந்து வம்மெனப்
பையர வல்குலெம் பாவை தூதொடு
கையிலங் கெஃகினாய் காண வந்ததே.

(இ - ள்.) அதுகேட்டு, எஃகினாய், எம்பாவை களிற்றொடு பொருத ஐயனைக் கண்டு அவன் செவ்வியறிந்து வாவெனக் கூறிய வார்த்தை யுடனே யான் வந்தது நின்செவ்வி காண்டற்கென்றதென்க.

செவ்வியறிதல் - வேட்கையுண்டில்லை யென்றறிதல். (கஎங)

(மேற்.) அடி, 2 : தொல். இடை. 31, ந; தொல். இடை. 30, தெய்வச். க - உ : நன். இடை. 22, மயிலை; சங்கர.

(உரை) [1]'தோழியா சுவாகதம் போதுகீங் கென' என்று பாட மாயின் அதுவும் இதற்கு உதாரணம்' (தொல். இடை. 31, ந.); இப் பாடத்தையே மற்றைய உரையாசிரியர்களும் கொண்டனர்.

1022. பொன்னியல் குரும்பையின் - பொன்னால் இயன்ற குரும்பை யைப்போல. கன்னியர் - சுரமஞ்சரியும், குணமாலையும். தூது - வார்த்தை; சீவக. 1023, ந; காரியமுமாம்; சீவக. 1876, ந. காமர் - அழகிய. முன்னம் - குறிப்பு; சீவக. 415, ந. வந்தென - வந்ததென்று நினைத்து. முறுவல் நோக்கம் - மகிழ்ச்சிகொண்ட பார்வை. என்னை கொல் - எதனைக் கருதியோ. கன்னியர் தூதொடு கிளி வந்தென என இயைக்க.

1023. களிறு : அசனிவேகம். வண்புகழ் - குணமாலையின் உயிரை அளித்ததனாலுண்டான புகழையுடைய. ஐயன் - சீவகன். செவ்வி - சமயமுமாம். வம்மென - வாரும் என்று கூற; 'இஃது உயர்த்துக் கூறு மொழி' என்பர் (சீவக. 357, ந.); "குறிவழி வம்மென" (பெருங். 1. 54 : 129). பாவை - குணமாலை. தூது - வார்த்தை; சீவக. 1022, அடிக். எஃகு - வேல்.

(வேறு)

1024. வெஞ்சின வேழ முண்ட வெள்ளிலின் வெறிய மாக
நெஞ்சமு நிறையு நீல நெடுங்கணாற் கவர்ந்த கள்வி
அஞ்சனத் துவலை யாடி நடுங்கினா ளிலைமை யென்னை
பைஞ்சிறைத் தத்தை யென்னப் பசுங்கிளி மொழியு மன்றே.

**(இ - ள்.)** **தத்தாய், கொடியவேழமென்னும் நோயுண்ட விளாம்பழம் போலே வெறுவியேமாம்படி நெஞ்சையும் நிறையையும் பிறரறியாமற் கண்ணினாற் கவர்ந்த கள்வி நடுங்கினாள்; அவளது தன்மை எங்ஙனே யென்று அவன் கேட்க, அக்கிளி அவள் தன்மையைக் கூறுமென்க.**

வேழம், [1] தேரைபோயிற்றென்றாற் போல்வதொரு நோயென்க. இனி, யானையுண்டது வெறுவிதாமென்றுமுரைப்ப. ஈண்டு [2] நாட்டமு நடுக்கமும் வருத்தினமை கூறினான். (கஎச)

(வேறு)

1025. (க) பூவணை யழலின்மேற் சேக்கும் பொன்செய்தூண்
பாவைதான் பொருந்துபு நிற்கும் பற்பல்கால்
ஆவியா வழலென வுயிர்க்கு மையென
மேவிப்பூ நிலமிசை யிருக்கு மெல்லவே.

---

1024. வேழமுண்ட - யானையென்னும் நோயால் உண்ணப்பட்ட. வெள்ளிலின் - விளாம்பழத்தைப்போல. வெறியமாக - உள்ளே ஒன்று மில்லாதேமாகும்படி. "வேழமுண்ட வெள்ளில்" (சீவக. 232, அடிக்.); 1122. வேழமுண்ட வெள்ளில்போல் உள்ளம் வெறிது: "களிறுண்ட, வெள்ளில்போன் றுள்ளம் வெறிது" (11-ஆம் திருமுறை, கபில. சிவ. 19). நிறையும்-ஒருப்பட்டமனத்தையும். கள்வி: குணமாலை. நெஞ்சம் கவர்ந்த கள்வி; "உடம்போடென்ற னுள்ளகம் புகுந்தென், நெஞ்சங் கவர்ந்த வஞ்சக் கள்வி" (மணி. 18:120-21). கண்ணாற் கவர்ந்த கள்வி: சீவக. 1068, உரை. அஞ்சனத்துவலையாடி - கண்ணினின்றும் விழும் மையோடு கூடிய துளியில் மூழ்கி. என்னை - என்னவாயிற்று. தத்தை - கிளியே; விளி. என்ன - என்று சீவகன் கேட்க.

(உரை) [1] "தேரையார் தெங்கிளநீ ருண்ணார் பழிசுமப்பர்" (தனிப்.) [2] சீவக. 1003.

1025. பூவணை அழலின் மேல் - பூம்படுக்கையாகிய நெருப்பின் மேல். சேக்கும் - தங்குவாள். தூணைப் பொருந்தி நிற்கும். பாவை: குணமாலை; எழுவாய். ஆவியா - ஆவித்து; கொட்டாவிவிட்டு; சீவக. 1651; "ஆவித் திழிந்த விந்திர குமரன்" (பெருங். 1. 47 : 170-71). உயிர்க்கும் - பெருமூச் செறிந்து நிற்பாள். ஐயென: வருத்தக் குறிப்பு. நிலமிசை மேவி மெல்ல இருக்கும்.

1026. (உ) பணித்தகு கோலமும் பந்தும் பார்ப்புருள்
மணிக்கழங் காடலண் மாமை தான்விளர்த்
தணித்தகை யாழினே டமுதம் விட்டொரீஇத்
துணைப்பெரு மலர்க்கணிற் றுயிலு நீங்கினாள்.

1027. (ங) திருந்துவேற் சீவக சாமி யோவெனும்
கருங்கடல் வெள்வளை கழல்ப வோவெனும்
வருந்தினேன் மார்புறப் புல்லு வந்தெனும்
பொருந்துபூங் கொம்பன பொருவின் சாயலே.

இவை மூன்றும் ஒரு தொடர்.

(க) அழலெழவும் பாடம்.

(ங) [1] உயிரைக் காத்த வருத்தம் இன்று உடம்பைக் காத்தற் கரியதோவென்று கருதி, 'வளைகழல்பவோ' என்றாள்.

(இ - ள்.) பாவைதான், பிறரைத் தாழ்விக்கத்தக்க கோலத்தையும் பந்தையும் பாராளாய் ஆடலளாய் விளர்த்து யாழையும் உணவையும் விட்டு நீங்கி உறக்கத்தையும் கைவிட்டாள்; இத்தன்மையேயன்றி உயிரு நீங்குமோவென்று கருதிப் பூம்படுக்கையாகிய நெருப்பிலே கிடந்து பார்க்கும்; அதினும் உயிர் நீங்காமையின், தூணைப்பற்றுக்கோடாகப் பொருந்தி நின்றும் பார்க்கும்; வருத்தக்குறிப்புத் தோன்ற ஐயெனக் கூறிப் போய்ப்பல்கால் ஆவித்து [2] நெட்டுயிர்ப்புக்கொள்ளாநிற்கும்; பின்பு அதுவுமன்றி நிலமிசை மெல்ல இருக்கும்; அங்ஙனமிருந்து பிறர்க்கு உவமைகூறுதற்கினிய சாயலையுடையாள், சீவகசாமி, வளை

1026. பணித்தகு கோலமும் - பிறரைத் தாழ்விக்கத்தக்க அலங் காரத்தையும். கோலமும் பார்ப்புருள்; பந்தையும் கழங்கையும் ஆடலள்; பந்தும், கழங்கும்: அகநா. 17 : 1-2, 49 : 1. மாமை விளர்த்து - அவ ளுடைய பொன்னிறம் வெளுத்துப்போய். அமுதம் - உணவையும். ஒரீஇ - நீங்கி. துணை - இரட்டையாகிய. துயிலும் - உறக்கத்தையும்.

1027. சீவக சாமி; விளி. ஓ : இரக்கக் குறிப்பு. எனும் - என்பாள். கடலிற் பிறந்த வளை. வளை - சங்கை அறுத்துச் செய்யப்பட்ட வளை. வளை கழல்பவோ - கையினின்றும் வளை கழலுவன ஆகுமோ. புல்லு - தழுவுவாய். வந்து மார்புறப் புல்லு எனும். புல்லு வந்து : "தீண்டு வந்தெனத் தேனின் மிழற்றினாள்" (சீவக. 1509). கொம்பன - கொம்பைப்போன்ற. பொருவின் சாயல் - பிறர்க்கு உவமை கூறுதற்கு இனிய சாயலையுடையவள்; குணமாலை : எழுவாய்.

(உரை) [1] உயிரைக்காத்த வருத்தமென்றது, சீவகன் யானையை அடக்கிக் குணமாலையின் உயிரைக் காப்பாற்றியதை. [2] நெட்டுயிர்ப்பு - பெருமூச்சு.

கழல அமையுமோவென்னும்; நின்னுருவம் வெளிப்பட்டதனைப் பல்காலுஞ்சென்றுபுல்லி அது தன்னெதிர்புல்லாமையின், யான் புல்லி வருந்தினேன்; இனி நீதான் வந்து மார்புறும்படி புல்லென்னும்; அது காணாமையின் ஓவென்று வருந்துமென்க. (௧0௨௭)

1028. கன்னிய ருற்றநோய் கண்ண ணுர்க்குமஃ
தின்னதென் றுரையலர் நாணி னுதலான்
மன்னும்யா னுணரலேன் மாத ருற்றநோய்
துன்னிநீ யறிதியோ தோன்ற லென்றதே.

(இ - ள்.) அங்ஙனம் பகர்ந்த கிளிதான், கன்னியர் தாமுற்ற காம நோயை நாணாலே கண்ணனுர்க்கும் இத்தன்மைத்தென்று உரையாராத லின், அவளும் எனக்குரையாள்; இனி, யான் மக்களினன்மையின் மாதருற்ற நோயைத் துன்னி மிகவுமறியேன்; தோன்றலே, நீ அஃதறி தியோ? கூறென்றதென்க. (௧0௨௮)

(வேறு)

1029. புள்ளின் வாயுரை கேட்டலும் பொன்செய்வேல்
எள்ளி நீண்டகண் ணுடிறத் தின்னுரை
உள்ளி னுருழைக் கண்டதொத் தானரோ
வள்ளன் மாத்தடிந் தானன்ன மாண்பினுன்.

1028. கன்னியர் - குலமகளிர். உற்ற - தாமடைந்த. நோய் - காம நோயை. நாணினுல் கண்ணனுர்க்கும் அஃது இன்னதென்று உரையலர் ஆதலால் எனமாறியியைக்க. கண்ணனுர்க்கும் - கண்போலச் சிறந்த வர்க்கும். குலமகளிர் தம் காமநோயைக் கூற நாணுதல்; சீவக. 1002, அடிக்; "மெல்லிய லொருத்திதான் விரும்புஞ் சேடியைப், புல்லிய கையினள் போதி தூதெனச், சொல்லுவா னுறுமுறு நாணுஞ் சொல்ல லள்" (கம்ப. உண்டாட்டுப். 46); துன்னி - பொருந்தி. அறிதியோ - நீ அறிவாயோ. தோன்றல் - சீவகன்; விளி. கிளி, 'யான் நோயைத் துன்னி உணரலேன்; தோன்றலே நீ அறிதியோ' என்றது எனமாறி யியைக்க.

1029. புள்ளின் - கிளியினுடைய. வேல் எள்ளி - வேலைப் பழித்து. கண்ணுள்: குணமாலை. இன்னுரை - இனிய வார்த்தைகளை. கண்ணுள் திறத்து இன்னுரையைப் புள்ளின் வாயுரையால் கேட்டலும் எனமாறி யியைக்க. உள்ளினுர் - பெறுதற்கு அரிதாக நினைத்தார் சிலரை. உழைக் கண்டது - தன்னிடத்தே வரக்கண்ட தன்மையை. மாத்தடிந்தான் - முருகன். மாண்பினுகிய வள்ளல் கண்டதொத்தான் என முடிக்க.

(இ - ள்.) குணமாலைதிறத்தில் இனியவுரைகளைக் கிளியின்வாயின் வார்த்தையாலே கேட்ட அளவிலே, வள்ளல், முருகனையொத்தமாண்பி னுன், பெறுதற்கரிதாக நினைத்தார் சிலரைத் தன்னிடத்தே வரக்கண்ட தன்மையை யொத்தானென்க. (கஎகூ)

1030. சொன்ம ருந்துதந் தாய்சொல்லு நின்மனத்
தென்ன மர்ந்தது ரைத்துக்கொ ணீயென
வின்னி மிர்ந்தநின் வீங்கெழிற் றோளவட்
கின்ம ருந்திவை வேண்டுவ லென்றதே.

(இ - ள்.) குணமாலை சொல்லும் சொல்லாகிய மருந்தினை யான் ஆற்றும்படி தந்த நீ நின்மனத்திற்குப்பொருந்தியது யாது? அதனை யுரைத்துக்கொள்ளென்றனுக, கிளி நின்னைப்போல வார்த்தையாலாற் றுள்; அவட்கு நின்தோளே இனிய மருந்து; இவை யான் பரிசிலாக வேண்டுவேனென்றதென்க. (கஅ0)

1031. பொற்குன் றயினும் பூம்பழ னங்கள்சூழ்
நெற்குன் றம்பதி நேரினுந் தன்னையான்
கற்குன் றேந்திய தோளிணை கண்ணுறீஇச்
சொற்குன் றுபுணர் கேன்சொல்லு போவென்றான்.

(இ - ள்.) அதுகேட்டவன், அவள்சுற்றத்தார் பொருளையும் ஊரை யும் தரவேண்டுமென்னினும் யான் அவற்றைக்கொடுத்துத் தோளிணை யைச் சேர்த்தித் தன்னைப் புணர்வேன்; இச்சொற் சலியாது, சென்று சொல், நீபோவென்றானென்க.

---

1030. சொல்லும் சொல் மருந்து - குணமாலை சொல்லுகின்ற சொல் லாகிய மருந்தினை. தந்தாய் - நான் ஆற்றியிருக்கும்படி தந்த நீ. அமர்ந்தது என் - நினது மனத்திற்குப் பொருந்தியது யாது. உரைத்துக் கொள் - சொல்லிப் பெற்றுக்கொள்வாய்; சொல்லுவாயாக வென ஒரு சொல்லுமாம். என - என்று சீவகன் சொல்ல. வில் நிமிர்ந்த தோள்: "வின்மரீஇ நீண்ட தோளான்", "விற்படை நிமிர்ந்த தோளான்" (சீவக. 1556, 1710). அவட்கு - குணமாலைக்கு. நின்தோளே அவட்கு இனிய மருந்து. இவை வேண்டுவல் - இவற்றையே யான் பரிசிலாக விரும்புவேன்.

1031. பொற்குன்று - பொன்னுலாகிய மலை. பழனம் - வயல். நெற் குன்று - நெற்களாலாகிய மலை. ஆம்பதி - மேலே கூறியவற்றையுடைய ஊரை. நேரினும் - கொடு என்று அவள் சுற்றத்தவர் வேண்டினும்; சீவக. 1042. தன்னை - குணமாலையை. சீவகன் கற்குன்றேந்தினமை: "தொட்டெ டுக்க லாவு லம்மொர் தோளி னேந்தி யாடினன்" (சீவக. 690). கண்ணுறீஇ - சேர்த்தி; சீவக. 415. சொற்குன்று - இச் சொல் சலியாது; தொகுத்தல் விகாரம். யான், தோளிணையைக் கண்ணுறீஇத் தன்னைப் புணர்வேன்; சொற்குன்றது; சொல்லுபோ என்றான் என்க.

"கற்குன்றேந்தியதோள்", "கொடுஞ்சிலையான்" (சீவக. 1041) எனத் தன்னை வியத்தல் குற்றமெனின், "கிழவி முன்னர்த் தற்புகழ் கிளவி, கிழவோன் [1]வினைவயி னுரிய வென்ப" (தொல். கற்பு. 40) என்பதன் கருத்தாற் குற்றமன்று. வினையாவது செயப்படுபொருள். பொருளுழுருங் கொடுத்துப் புல்லுவேனென்னும் கடைப்பிடியாகிய செயப்படுபொருளும் [2]ஆள்வினைக்குச் சிறப்புடைமையின், யானே புணர்வேனென்னும் ஆள்வினைக் கருத்தால் தன்னைப்புகழ்ந்துரைக்கவே, அதுபற்றுக்கோடாக ஆற்றுவாளென்பது பயனும். இது கைக்கிளை யாதலின், முன்னிலையன்றியும் புகழ்ந்தான்; புறத்திணையாயின் "தலைத்தா ணெடுமொழி தன்னொடு புணர்த்தலும்" (தொல். புறத்திணை. 5) தலைவற்குரித்து. (கஅக)

1032. சேலை வென்றகண் ணாட்கிவை செப்பரி
தோலை யொன்றெழு திப்பணி நீயென
மாலை மார்பன் கொடுப்பத் தினைக்குரல்
ஓலை யோடுகொண் டோங்கிப் பறந்ததே.

(இ - ள்.) அது கேட்ட கிளி, கண்ணாள்வருத்தந்தீரும்படி அவட்கு இவையெல்லாங் கூறுதலரிது; அதுவுமன்றி நின்வருத்தம் உண்மை யென்றுணரும்படி திருமுகத்தையும் திருவாழியையும் தந்தருளென்று கூற அவனும் பிறரயிராமல் தினைக்கதிரில்வைத்த ஓலையோடே ஆழியை யுங் கொடுப்ப, அக்கிளி அவற்றைக்கொண்டு உயர்ந்து பறந்ததென்க.

ஒன்றென்றது ஆழியை; மேல், "நாமமோதிரந்தொட்டு" (சீவக. 1040) என்பர். (கஅஉ)

1033. திருந்து கோதைச் சிகழிகைச் சீறடி
மருந்தின் சாயன் மணங்கமழ் மேனியாள்
பொருந்து பூம்பொய்கைப் போர்வையைப் போர்த்துடன்
கருங்கட் பாவை கவின்பெற வைகினாள்.

(உரை) [1]'வினையென்றது, கல்வியும், கொடையும், பொருள் செயலும், முற்றகப்பட்டோனை முற்றுவிடுத்தலுமாகிய காரியங்களை' (தொல். கற்பு. 40, ந.) [2]ஆள்வினை - முயற்சி.

1032. சேலை - சேல்மீனை. கண்ணாட்கு : குணமாலைக்கு. செப்பரிது- கூறுதலரிது. ஓலை ஒன்று - திருமுகத்தையும் மோதிர மொன்றையும். ஓலையைத் திருமுகமென்றல் மங்கலம் என்னும் தகுதி வழக்கு ; நன். 266, மயிலை. பணி - கொடு. என - என்று கிளிகூற. மார்பன் : சீவகன். தினைக்குரலில் வைத்த ஓலையோடு ; தினைக்குரல் - தினைக்கதிர்.

1033. கோதை - பூமாலை. சிகழிகை - மயிர்முடி. மருந்தின் சாயல் - அமிர்தைப் போன்றமென்மை. மேனியாள் : காந்தருவதத்தை.

மருந்து - அமுது; இதற்கு அமிர்தன்னசாயலுக்கு (சீவக. 8) உரைத்ததுரைக்க.

(இ - ள்.) கோதைமுதலியவற்றையுடைய தத்தை, அங்ஙனமேகி னவள் பொய்கை வடிவாக எழுதின படாத்தை மெய்ம்முழுதும் மறையப் போர்த்துக் கோபத்தாலே விழித்துக் கிடந்தாளென்க.

[1] பொய்கைபோலுங் கண்ணீர்ப்போர்வையுமாம். (கஅ௩)

1034. மறங்கொள் வெங்கதிர் வேலவன் வார்கழல்
கறங்க வேகித்தன் காதலி யூடலை
உறைந்த வொண்மலர்ச் சென்னியி னீக்கினான்
நிறைந்த தின்ப நெடுங்கணிக் கென்பவே.

(இ - ள்.) கிளிபோனபின், வருத்தந்தீர்ந்து, வேலன், தத்தையது மனையேறப்போய் அவளூடலை மலருறைந்த தன்றலையினாலே வணங்கி நீக்கினான்; அப்பொழுது அவளுக்கு இன்பம் நிறைந்ததென்க. (கஅச)

(வேறு)

1035. தன்றுணைவி கோட்டியினி னீங்கித் தனியிடம்பார்த்
தின்றுணைவற் சேர்வானிருந்ததுகொல் போந்ததுகொல்
சென்றதுகொல் சேர்ந்ததுகொல் செவ்வி யறிந்துருகும்
என்றுணைவி மாற்றமிஃ தென்றதுகொல் பாவம்.

---

கோதையையும், சிகழிகையையும், அடியையும், சாயலையும் உடைய மேனியாளாகிய பாவை. பொய்கைப் போர்வை - பொய்கையின் வடிவ மெழுதப்பட்ட போர்வையை. வைகினாள் - கிடந்தாள்.

(உரை) [1] சீவக. 1523, 1629; குறுந். 325 : 5-6.

1034. மறம் - வீரம். கதிர் - கிரணத்தையுடைய. கழல் - வீரக் கழல். கறங்க - ஒலிப்ப. காதலி: காந்தருவதத்தை. மலர் உறைந்த தன் சென்னியின். சென்னியின் நீக்கினான் - தலையால் அவளை வணங்கி ஊடலை நீக்கினான். நெடுங்கணிக்கு இன்பம் நிறைந்தது; நெடுங் கணிக்கு: காந்தருவதத்தைக்கு.

1035. துணைவி - மனைவி; ஈண்டுக் காந்தருவதத்தையை. கோட்டி - இருப்பிடம்; ஒருவரோடு சேர்ந்திருக்கும் இடம். இன்றுணைவற் சேர் வான் - இனிய சீவகனைச் சேரும்பொருட்டு. சென்றது கொல் - கிளி சென்றதோ. சேர்ந்தது - பொறுத்துப் பின் சேர்ந்ததுவோ. செவ்வி - சமயம். உருகும் - குணமாலை காமத்தீயால் உருகுவாள். என் துணைவி - குணமாலையினுடைய. மாற்றம் - வார்த்தை. என்றது கொல் - என்று கூறியதோ. "இவ்வளவிற் செல்லுங்கொ லிவ்வளவிற் காணுங்கொல், இவ்வளவிற் காத லியம்புங்கொல், இவ்வளவின், மீளுங்கொல்" (நள. சுயம். 40)

அக்கிளி செல்கின்றபொழுது குணமாலை கருதின தன்மை கூறு கின்றார்.

(இ - ள்.) கிளி சென்றதோ, சென்று இன்றுணைவனைத் தன்றுணைவி யும் தானுமிருக்கின்ற இருப்பினின்றுநீங்கித் தனியான இடத்தைப்பார்த் துச் சேரக்கருதியிருந்ததோ, அக்கோட்டியைப்பொறாதே போந்ததோ, பொறுத்துப்போய்ச் சேர்ந்ததோ,சேர்ந்து இது காலமென்றறிந்து நினக் குத் துணைவியாகின்ற குணமாலைவார்த்தையிஃது, அவள்தான் காமத் தீயானுருகும், இதற்கு நீ செய்யக்கருதுகின்றது என்னெனக்கூறிற்றோ, என்னோ இஃதொருபாவ மிருந்தபடி என்று கருதினாளென்க.

என் [1] பிள்ளையும் யானும்பட்டது எனென்றாள். (கஅ௫)

(வேறு)

1036. செந்தார்ப் பசுங்கிளியார் சென்றார்க்கோ ரின்னுரைதான்
தந்தாரேற் றந்தாரென் னின்னுயிர்தாந் தாராரேல்
அந்தோ குணமாலைக் காதகா தென்றுலகம்
நொந்தாங் கழுமுயன்று நோற்றானு மெய்துவனே.

(இ - ள்.) கிளியார் போனவருக்கு அவர்தாம் இனியதொரு வார்த்தையைத்தான் சொன்னாராயிற் கிளியார்க்கு முகமன் கூறினாரன்று; என்னுயிரைத் தந்தார்; அவர் அந்தோ! அங்ஙனங்கூறாராயின் அவ் விடத்து யான் சுரமஞ்சரியைப்போலே முயன்று தவஞ்செய்தாயினும் பின்பு எய்துவேனோ, ஆ! குணமாலைக்கு இவ்விறந்துபாடு தகாதென்று உலகம் நொந்து அழும்படி இறந்து பாட்டையெய்துவேனன்றோவென்று கருதினாளென்க.

செந்தார் - கழுத்திலிட்ட வரை. கிளியார், ஒன்றென முடித்தலாற் கொள்க. எய்துவனே : ஏகாரம் எதிர்மறை. அந்தோ, ஆ இவை இரக்கக் குறிப்பு. (கஅ௬)

(உரை) [1] பிள்ளை என்றது கிளியை ; மகளிர் வளர்க்கும் கிளி மான் முதலியவற்றைப் பிள்ளை யென்றல் மரபு ; " பிள்ளைக ளோடிருந்து பேசு வாள் " (மூவருலா, 2 : 206)

1036. செந்தார் - கிளியின் கழுத்திலுள்ள சிவப்புக்கோடு. செந் தார்ப் பசுங்கிளி " செந்தார்ப் பைங்கிளி " (அகநா. 34) ; " செந்தார்க் கிளிக்கு " (கூர்ம. கண்-பூமி. 18). கிளியாராகிய தூதுசென்றவர்க்கு. தந்தாரேல் - சீவகன் சொன்னால். என் இன்னுயிர்தாம் தந்தார். தாராரேல் - சீவகன் இனிய சொல் கூறவில்லையானால். குணமாலைக்கு ஆ, தகாது ; தகாது - இறந்துபடுதல் தக்கதன்று. நோற்றானும் - சுர மஞ்சரியைப் போலத் தவம்செய்தாயினும். எய்துவனே ; ஏகாரம், எதிர் மறை ; இறந்துபடுவேனென்றபடி.

(மேற்.) அடி, 1-2 - நன். பொது. 28, மயிலை.; சங்கர.

1037. சென்றூர் வரைய கருமஞ் செருவேலான்
பொன்றாங் கணியகலம் புல்லப் பொருந்துமேற்
குன்றுது கூடுகெனக் கூறிமுத்த வார்மணன்மேல்
அன்றுங் கணியிழையா ளாழி யிழைத்தாளே.

(இ - ள்.) அங்ஙனங்கருதின அணியிழையாள், காரியத்தின்முடிவு காரியங்கொள்ளப்போனாரறிவின் அளவாயிருக்கும்; என்கிளி பேதை யென்பது யானறிவேனன்றோ, இனி, அதன்வரவு பார்த்திராதே கூட லிழைத்துப் பார்ப்பேனென்றுகருதி, வேலானகலம் என்னைத் தழுவக் கூடுமாயிற் குன்றாதே கூடுவாயாகவென்றுகூறி முத்தாகிய மணலிலே அதனைப் போகவிட்ட அன்றே அப்பொழுதே கூடலுக்கு வட்டத்தை யிழைத்தாளென்க. (கஅஎ)

1038. பாகவரை வாங்கிப் பழுதாகிற் பாவியேற்
கேகுமா லாவி யெனநினைப்பப் பைங்கிளியார்
மாகமே நோக்கி மடவாளே யவ்விருந்தாள்
ஆகும்யான் சேர்வ லெனச்சென் றடைந்ததே.

(இ - ள்.) அங்ஙனமிழைத்தவள், அவ்வாழியுட்கீறுகின்ற கீற்றிலே ஒரு கீற்றிற் பாதியைக்கீறி இது கூடாதாயிற் கிளி நல்வரவாய் வந்த தேனும் அது கேளாதே எனக்கு உயிர்போகாநிற்குமேயென்றுகருதி அதனைவிட்டுக் கிளியின் வரவை நினைந்திருந்தாளாக, பைங்கிளி அடைந்ததென்க.

அடைந்தபடி: மாகமேநோக்கி அவ்விடத்திருந்தாள்யார்? இங்ஙன மிருப்பார் வேறின்மையிற் குணமாலையேயாகும்; இனி யான்சேர்வே னென்றணுகிற்று. தான் போனபின்புள்ள வேறுபாட்டால் ஐயுற்று வருத்தமிகுதி கண்டு தெளிந்தது. (கஅஅ)

1037. கருமம் சென்றூர் வரைய - காரியத்தின் முடிவுகள் தூதாகச் சென்றவருடைய அறிவின் அளவையுடையன. வேலான் - சீவகனுடைய. பொன்தாங்கு அணி அகலம் - ஆபரணங்களைத் தாங்கிய அழகியமார்பம். புல்ல - என்னைத்தழுவ. குன்றுது - குறையாமல். முத்தாகிய மணலின் மேல். அன்று - கிளியைத் தூதாகவிட்ட அன்றைக்கே. அணியிழையாள்: குணமாலை. ஆழி இழைத்தாள் - கூடற்சுழியை இழைத்தாள்; ஆழி - வட்டம். கூடலிழைத்து அவனைக் கூடுவேனே என்று ஆராய்தல்; 'கூடலாவது, வட்டமாகக் கோட்டைக் கீறி, அதுக்குள் சுழிசுழியாகச் சுற்றும் சுழித்து, இவ்விரண்டு சுழியாகக் கூட்டினால், இரட்டைப்பட்டால் கூடுகை, ஒற்றைப்பட்டால் கூடாமை என்று ஸங்கேதம்' என்பர் பெரிய வாச்சான் பிள்ளை (திவ், நாச்சியார். 'தெள்ளியார்' அரும்பத.); "செய்குறி யாழி வைகரோ றெண்ணி, யெழுதுசுவர் நினைந்த வழுது வார் மழைக்கண்" (அகநா. 351); "தாழ்கடற் றண்சேர்ப்பன் றாகல நல்குமே, லாழியாற் காணுமோ யாம்" (ஐந். ஐம். 43; முத். 73; தே. திருநா. கோழம்பம், 4, மருகல், 8; திருச்சிற். 186; கலிங்கத். ௩1; கம்ப. உண்டாட்டுப். 33, விபீடண. 28; அம்பிகா. 322)

1038. பாகவரை வாங்கி - கூடற்சுழியுள் ஒரு கீற்றிலே பாதியைக் கீறி. பழுதாயின் - இச்சுழி கூடாமற்போனால்; பாவியேற்கு ஆவி

1039. கண்டா ணெடிதுயிர்த்தாள் கைதொழுதாள் கையகத்தே
கொண்டா டிணைக்குரலுன் சூடினு டாழ்குழன்மேல்
நுண்டார்ப் பசுங்கிளியை நோவ வகட்டொடுக்கி [தாள்.
வண்டாரான் செவ்விவாய்க் கேட்டாடன் மெய்ம்மகிழ்ந்

(இ - ள்.) அணுகின அக்கிளியைக்கண்டாள்; கண்டு இஃது என் கூறுகின்றதோவென்று உயிர்த்தாள்; உயிர்த்துத் திணைக்கதிரைக்கண்டு அதிலே ஓலையுண்டென்று கருதித்தொழுதாள்: தொழுது முற்கொடுத்த ஆழியினைக் கையினுள்ளே மறையக்கொண்டாள்; கொண்டு அது பிற் கொடுத்த திருமுகத்தைத் தலைமேலேசூடினாள்; சூடி அக்கிளியை நோம்படி வயிற்றிலே அணைத்துக்கொண்டாள்; கொண்டு தாரான் வருத்தத்தை அதுகூறக்கேட்டாள்; கேட்டு உடம்பு குளிர்ந்தாளென்க.

வயிற்றிலே அணைத்தலியல்பு. (௧௦௩௯)

1040. தீம்பா லமிர்தூட்டிச் செம்பொன் மணிக்கூட்டிற்
காம்பேர் பணைத்தோளி மென்பறவை கண்படுப்பித்
தாம்பான் மணிநாம மோதிரந்தொட் டையென்னத்
தேம்பா வெழுத்தோலை செவ்வனே நோக்கினாள்.

---

ஏகுமால் எனமாறி யியைக்க. அடி, 1-2 கலித். 142: 24-5, உரை; "கூடற்பெருமானைக் கூடலார் கோமானைக், கூடப் பெறுவேனேற் கூடென்று - கூடல், இழைப்பாள்போற் காட்டி யிழையா திருக்கும், பிழைப்பிற் பிழைபாக் கறிந்து" (முத்தொள்ளாயிரம்). என நினைப்ப - என்று குணமாலை எண்ண. மாகம் - ஆகாயம். மடவாளே - குண மாலையே; ஏ: தேற்றம். அவ்விருந்தாள் - அவ்விடத்திருந்தாள்; "இந் நின்ற குருசில்" (கம்ப. குகப். 66). மாகமே நோக்கி அவ்விருந்தாள், மடவாளே ஆகும் என மாறியியைக்க. பின் இரண்டடியும் கிளியின் உட்கோள். என - என்று எண்ணி.

1039. நெடிது உயிர்த்தாள் - பெருமூச்செறிந்தாள். மோதிரத்தைக் கையகத்தே கொண்டாள். திணைக்குரல் - திருமுகம் வைக்கப்பட்ட திணைக் கதிரை. தாழ்குழன்மேல் சூடினாள் என மாறுக. அடி, 1-2: "வாங்கினண் முலைக்குவையில் வைத்தனள் சிரத்தால், தாங்கினண் மலர்க்கண்மிசை யொற்றின டடந்தோள், வீங்கினண் மெலிந்தனள் குளிர்ந்தனள் வெதுப்போ, டேங்கின ளுயிர்த்தனளி தின்னதெனலாமே" (கம்ப. உருக்காட்டுப். 66). நுண்தார் - நுண்ணிய வரையை யுடைய. நோவ - வருந்தும்படி. அகட்டொடுக்கி - வயிற்றில் அணைத்து. தாரான்: சீவகனுடைய. செவ்வி - நிலைமையை. வாய் - கிளியின் வாய் மொழியால்.

1040. தீம்பாலமிர்து - இனிய பாலுணவு; சீவக. 398, 928. ஊட்டி - உண்பித்து. கிளிக்குப் பாலூட்டல்: பெருங். 1. 33: 168-170. காம்பு - மூங்கில். பணை - பருத்த. தோளி - குணமாலை. பறவை - கிளியை. கண்படுப்பித்து - தூங்கப்பண்ணி. ஆம்பால் - ஆகும் பகுதி

(இ - ள்.) பெருந்தோளிதான் அவனோடே ஆம்பகுதியினையுடைய சீவகனென்னும் பெயரைப்பொறித்த மோதிரத்தையிட்டுப் பறவையைப் பாலமிர்தூட்டிக் கூட்டிலே துயில்கொள்ளுவித்து அவன்றன் எழுத்தையுடைய ஓலையை விரைய எதிர்முகமாக நோக்கி வாசித்தாளென்க.

தேம்பாமைக்குக் காரணமாகிய ஓலை. (கசo)

1041. கொடுஞ்சிலையா னோலை குணமாலை காண்க
அடுந்துயர முள்சுடவெந் தாற்றாதே னற்ற
விடுந்தசிறு கிளியால் விம்மனோய் தீர்ந்தேன்
நெடுங்கணு டானு நினைவகல்வா ளாக.

[1] இதற்கு, "பொற்குன்று" (சீவக. 1031) என்னுங்கவியிலே கூறினும். இன்னாரோலை இன்னார்காண்கவென்றல் முறைமை. [2] விடுத்த : விகாரம்.

(இ - ள்.) சீவகனோலையைக் குணமாலை காண்பாளாக; காமநோய் சுடுதலாலே வெந்து ஆற்றாத யான் ஆற்றும்படி தான்வரவிட்ட கிளியாலே மிக்க வருத்தந்தீர்ந்தேன்; நெடுங்கணுளாகிய தானும் வருத்தமிகாதொழிவாளாக வென்க. (கசக)

1042. ஈட்டஞ்சா னீணிதியு மீர்ங்குவளைப் பைந்தடஞ்சூழ்
மோட்டு வளஞ்சுரக்கு மூரு முழுதீந்து
வேட்டார்க்கு வேட்டனவே போன்றினிய வேய்மென்றோட்
பூட்டார் சிலைநுதலாட் புல்லா தொழியேனே.

---

யினையுடைய. நாமமோதிரம் - (சீவகன்) பெயர் பொறிக்கப்பட்ட மோதிரம்; "சுருவே றெழுதிய மோதிரந் தொட்டாள்" (கலித். 84 : 23); "நாமமோதிரம்" (பெருங். 3. 9 : 70; 4. 9 : 8-9); "மெய்ப்பேர், தீட்டியது...ஓராழி" (கம்ப. உருக்காட்டுப். 63). ஐயென்ன - விரைய; சீவக. 448; மணி. 23 : 63. தேம்பா ஓலை - வருந்தாமைக்குக் காரணமான ஓலையை. செவ்வனே - நேராக. தோளி, நாமமோதிரந்தொட்டுப் பறவைக்கு அமிர்தூட்டிக் கூட்டிற் கண்படுப்பித்து, ஓலையை ஐயென்னச் செவ்வனே நோக்கினாள் என மாறியியைக்க.

1041. சிலையான் : சீவகன். இன்னார் ஓலையை இன்னார் காண்க என்றல் மரபு; "கலுழனோலை......திறற்சாமி நனிகாண்க" (சீவக. 843, அடிக்.); "மதிமலி புரிசை" (11-ஆம் திருமுறை) என்னும் திருமுகப் பாசுரத்தாலு முணர்க. துயரம் - காமநோய். சுட - சுடுதலால். ஆற்றுதேன் அற்ற - பொறுக்கமுடியாத யான் பொறுக்கும்படி. விம்மல்நோய் - மிக்க வருத்தத்தை. நினைவு அகல்வாளாக - வருத்தத்தினின்றும் நீங்குவாளாக.

(உரை) [1] கொடுஞ்சிலையானென்று தன்னைவியந்ததற்குப் பொருள். [2] விடுத்த வென்பது விடுந்தவென மெலித்தல் விகாரம் பெற்றது.

1042. ஈட்டம் சால்-கூட்டமாக அமைந்த. நீள்நிதி-பெரும்பொருள். தடம் - குளம். மோட்டுவளம் - பெருமை பொருந்திய வளத்தை; மோடு -

(இ - ள்.) அறத்தான் ஈட்டமமைந்த பெரும்பொருட்டிரளையும், பெரு வளத்தைக்கொடுக்கும் ஊரினையும் குரவர் கருதினபடியேகொடுத்து, சிலைநுதலாளைத் தோளைப் புல்லாதொழியேனென்க.

[1] இரண்டாமுருபு இங்ஙனம்வருதல், "தெள்ளிது" (தொல். வேற்றுமை மயங்கு. 5) என்பதனுற்கொள்க. அரிய பொருள்களை வேட்டார்க்கு அவை பெற்ருற்போல் இனிய தோள். (கஙஉ)

1043. (க) குங்குமஞ்சேர் வெம்முலைமேற் கொய்தார் வடுப் பொறிப்பச், செங்கயற்கண் வெம்பனியாற் சிந்தை யெரியவித்து, மங்கை மகிழ வுறையேனேல் வாளமருட், பங்கப்பட் டார்மேற் படைநினைந்தே ஞகென்ருன்.

1044. (உ) நூல்புடைத்தாற் போற்கிடந்த வித்தகஞ்சேர் நுண் வரிகள், பான்மடுத்துத் தீந்தேன் பருகுவாள் போஞேக்கிச், சேல் படுத்த கண்ணீர் சுமந்தளஇ மெய்ம்மகிழ்ந்து, மால்படுத்தான் மார்பின் மணந்தாளே போன்மகிழ்ந்தாள்.

இவையிரண்டும் ஒருதொடர்.

---

பெருமை. சுரக்கும் - கொடுக்கும். ஈந்து - தாய்தந்தையர்களுக்குக் கொடுத்து. வேட்டார்க்கு - அரியபொருளை விரும்பினவர்களுக்கு. வேட்டனவேபோன்று - அவற்றைப் பெற்ருற் போன்று. வேட்டார்க்கு......... தோள்: "வேட்ட பொழுதி னவையவை போலுமே, தோட்டார் கதுப்பினுள் தோள்" (குறள், 1105). பூட்டார் சிலை - நாண் பூட்டுதல் பொருந்திய வில். நுதலுக்கு வில்லுவமை. நுதலாள் : குணமாலையை. நுதலாளுடைய தோளைப் புல்லா தொழியேன்.

(உரை) [1] நுதலாள் என்பதிலுள்ள ஐயுருபு.

1043. குங்குமம் - குங்குமச் சாந்து. கொய்தார் - என்னுடைய மார்பிலுள்ள, கத்தரித்துச் செய்யப்பட்ட பூமாலை. வடுப்பொறிப்ப - வடுவின்வாய் அழுந்தும்படி; "புரையப் பூண்ட கோதை மார்பினை, நல்லகம் வடுக்கொள முயங்கி" (அகநா. 100 : 2-3); "பூண்வடுப் பொறிப்பப் புல்லுவயின் வாரான்" (பெருங். 2. 16 : 87). கண்வெம் பனி - கண்ணினின்று வரும் வெப்பத்தையுடைய நீர் (பெருங். 1. 33 : 123-4). சிந்தைஎரி - மனத்திலுள்ள காமமாகிய தீயை. என் தார், நின் முலைமேல் வடுப்பொறிப்ப முயங்குதலால் உண்டாகிய கண்ணீரால் எரியை அவித்து. மங்கை - குணமாலை. பங்கப்பட்டார் - அச்சத்தால் இமைத்தலும் துணுக்கமும் கொண்டவீரர். படை விடுவதற்கு நினைந்தேஞக. பங்கப்பட்டார்மீது படைவிடுதல் தகாது; சீவக. 2258.

1044. வித்தகம் - உறுப்புக்கள்; எழுதும் வன்மையுமாம்; "வித்தக ரியற்றிய, கண்கவ ரோவியம்" (மணி. 3 : 130-31). வித்தகம் சேர் வரிகள்; பெருங். 1. 32 : 69-70. வரிகளை நோக்கி. பாலில் தேனை

(க) 'வெம்பனி' என்றான், புணர்ந்தாலன்றி முயக்கத்தளவால் உண்ணிறை வெப்பமுழுதும் தீராதென்று. பங்கப்படுதல் - இமைத்தல், துணுக்கிடுதல் முதலியன. [1] ஆகென்றான் : தொழிற்பெயர்.

(உ) சேல்படுத்த - சேலைத்தோற்பித்த.

(இ - ள்.) என்மாலை தன்முலைமேலே வடுவாயழுந்தும்படி யான் முயங்குதலிற் பிறந்த உவகைக் கண்ணீராலே சிறிதுதணிந்த காமத் தீயை அவித்துத் தான் என் அன்புடைமைக்கு மகிழும்படி உறைந்திலே னாயின், போரில் அஞ்சினார் மேலே படைவிட நினைந்தேனாகக் கடவே னென்று எழுதினவனுடைய நூலெற்றினாற்போலச் செவ்விதாய்க்கிடந்த உறுப்புக்கள்சேர்ந்த வரிகளைப் பாலிலே தேனைவார்த்துப் பருகுவாள் போலே இனிமையுற்று வாசித்து உவகையளைஇக் கண்ணீர்சுமந்து உடம்பு குளிர்ந்து மயக்கத்தையுண்டாக்கினவன் மார்பிலே கூடினாள் போலே இனிமையுற்றாளென்க. (ககூ௩ - ச)

1045. பாலவியும் பூவும் புகையும் படுசாந்தும்
காலவியாப் பொன்விளக்குந் தந்தும்மைக் கைதொழுவேன்
கோலவியா வெஞ்சிலையான் சொற்குன்றா னாகெனவே
நூலவையார் போனீங்க ணோக்குமினே யென்றாள்.

காற்றால் அவியாவிளக்கு - மணிவிளக்கு ; வெளிப்படை. அம்பு இடைவிடாமல் எய்கின்ற வில். நீங்களென்றது எழுத்துக்களை ; அவற் றின் தன்மையும் வடிவும் ஆசிரியர்க்கல்லது உணரலாகாமையின், நூலில் விளங்கக்கூறிற்றிலரேனும் சமயநூல்களிற் கூறுதலின், அவ் வெழுத்துக்களைத் [1] தெய்வமென்றே கொள்க.

---

மடுத்து என மாறுக. மடுத்து - ஊற்றி. பாலும்தேனும் ; "பாலொடு தேன்கலந் தற்றே" (குறள், 1121). சேல் படுத்த கண் - சேல்மீனைத் தோற்கச் செய்த கண். அளைஇ - உவகை கலந்து. அளைஇக் கண்ணீர் சுமந்து எனமாறுக. மால்படுத்தான் - காமமயக்கத்தை உண்டாக்கிய சீவகனுடைய. மணந்தாளேபோல் - கூடினவளைப்போல.

(உரை) [1] ஆகக்கடவேன் என்று எழுதினவன்.

1045. பாலவி - பாலன்னம். புகை - அகிற்புகை. படு சாந்து - அரைத்த சாந்து. கால் அவியாப் பொன் விளக்கு - காற்றால் அவியாத மணி விளக்கு ; சீவக. 1304, 2410 ; பெருங். 1. 32 : 72, 34 : 2. உம்மை யென்றது திருமுகத்தில் எழுதப்பட்ட எழுத்துக்களை. கோல் அவியாச் சிலை - அம்புகளை இடைவிடாமல் எய்கின்ற வில் ; கோல் - அம்பு. சிலை யான் : சீவகன். சொற்குன்றான் - சொல்லுதலில் சலியாதவனாயினும். நூலவையார் - தருமநூலோதினவர்கள். நீங்கள் நூலவையார்போல் ஆகெனவே நோக்குமின் என்றாள் எனமாறி யியைக்க.

(உரை) [1] இங்கே எழுத்துக்களைத் தெய்வமாகப் பாராட்டினமை, "மொழிப்பொருட் டெய்வம் வழித்துணை யாகென" (சிலப். 10 : 100) என்பதனை நினைப்பிக்கின்றது.

(இ - ள்.) சிலையான் நும்மை நீங்காது ஒற்றுமைப்படக் கூறிய சொற்குன்றுணுயினும் நீங்கள் தருமநூலோதினுர்களை நோக்குமாறு போல அச்சொல் இடையூறின்றி ஆகவென்றே கருதி நோக்குமின்; நும்மை யானும் பாலவி முதலியவற்றைத் தந்து கைதொழுவேனென்று ளென்க. (ககரு)

(வேறு)

1046. (க) மவ்வலங் குழலி னுளை மதியுடன் படுக்க லுற்றுச், செவ்வியுட் செவிலி சொல்லுஞ் சிலையிவர் நுதலி னுய்நின், அவ்வைக்கு மூத்த மாம னொருமகற் கின்றுன் றுதை, நவ்வியம் பிணைகொ ணோக்கி நகைமுக விருந்து செய்தான்.

1047. (உ) பண்டியாற் பண்டி செம்பொன் பல்வளை பரிய மாகக், கொண்டுவந் தடிமை செய்வான் குறையுறு கின்ற தன்றிக், கண்டவர் கடக்க லாற்றுக் கிழிமிசை யுருவு தீட்டி, வண்டிமிர் கோதை நின்னை வழிபடு நாளு மென்றுள்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(இ - ள்.) அவ்வளவிலே குணமாலையை மதியையறிவுறலுற்று அதற்கேற்ப வார்த்தைசொல்லுஞ்செவிலி, சிலைபோல்விளங்குநுதலினுய், நோக்கி, நின்தாய்க்கு மூத்ததமையன் நினக்கு மாமனுனவனுடைய ஒப்பில்லாத மகனுக்கு இன்று உன்தாதை நகைமுகமாகிய விருந்தையிட்டான்; அவ்வுடன்பாட்டாலே வளையையுடைய கோதாய், நின்

1046. மவ்வலங்குழலினுள் - முல்லைப்பூவைச் சூடிய கூந்தலை யுடையவள்; குணமாலை. மதி உடம்படுக்கலுற்று - மதியை அறிய எண்ணி. செவ்வியுட் சொல்லும் செவிலி - அதற்கேற்பக் கூறும் செவிலித் தாய். நின் அவ்வைக்கு மூத்தமாமன் ஒருமகற்கு - உன்னுடைய தாய்க்கு மூத்ததமையனும், உனக்கு மாமனுமானவனுடைய ஒப்பில்லாத மக னுக்கு. தாதை - குபேரமித்திரன். நவ்வியம் பிணைகொள் நோக்கி - பெண்மானைப் போன்ற நோக்கத்தையுடையாய்; என்றது குணமாலையை. நகைமுக விருந்து: குறுந். 292 : 7.

1047. பண்டியால் - வண்டியாலே. பண்டி செம்பொன் - ஒருவண்டி பொன்னை. பல்வளை - பலவாகிய வளையையணிந்த குணமாலை: விளி. பரியம் = பரிசம் - முலைவிலை. பொன்னைப் பரியமாக என இயைக்க. அடிமை செய்வான் - உனக்கு ஏவல் செய்தற்கு. குறையுறுகின்றதன்றி- குறைவுற்று நிற்பதல்லாமல். கண்டவர் - உன்னைப் பார்த்தவர்கள். கடக்கலாற்று உருவு - மேற்செல்லமாட்டாதபடி அமைந்த நின் உருவை. கிழி - சீலை. கிழிமிசைத் தீட்டி என இயைக்க. இமிர்தல் - ஒலித்தல். கோதை - குணமாலை; விளி. வழிபடும் - உன்மாமன் மகன் வணங்கு வான். என்றவள் செவிலித்தாய்.

மைத்துனன் நினக்கு முலைவிலையாக வண்டியாலே ஒருவண்டி பொன் கொண்டுவந்து நினக்கு ஏவல் செய்தற்கு இன்று குறையுற்று நிற்கின்றதேயன்றிக்கடக்கலாற்ரு நின்னுருவைக் கிழிமிசைத்தீட்டி நின்னை வழிபடுவதுஞ்செய்யுமென்ருளென்க.

[1] விருந்து செய்தானென்பது, [2] குறைக்குடன்பட்டானென்பதாம். (கசகூ-எ)

1048. மைத்துனன் வனப்பின் மிக்கான் வளர்நிதிக் கிழவன் காளை, உத்தம னுளது நாம மல்லதொன் றுரைத்த றேற்ருன், இத்திறத் திவன்க ணின்னை யெண்ணினு ரென்ன லோடும், தத்தையங் கிளவி கையாற் செவிமுத லடைச்சிச் சொன்னுள்.

(இ - ள்.) என்று பின்னும் நின்னைக்கோடற்குரியன், அழகின்மிக்கான், பொருளுடையன், இளையன், நற்குணமுடையவன், நின்பெயரல்லது வேருெரு பெயரைக்கூறவறியான், இக்கூறுபாட்டையுடைய இவனிடத்தே நின்னைக் கொடுக்கவெண்ணினுரென்ற அளவிலே குணமாலை கையாலே செவியைப் புதைத்து ஒருவார்த்தை கூறினுளென்க. (சகூஅ)

1049. மணிமதக் களிறு வென்ருன் வருத்தச்சொற் கூலி யாக
அணிமதக் களிற னுனுக் கடிப்பணி செய்வ தல்லால்
துணிவதென் சுடுசொல் வாளாற் செவிமுத லீர லென்ருள்
பணிவரும் பவளப் பாவை பரிவுகொண் டனைய தொப்பாள்.

---

(உரை) [1] சீவக. 1046. [2] குறைக்கு - குணமாலையை மணம்புரிய விரும்பி மாமன்மகன் கூறிய காரியத்திற்கு; உடம்பட்டவன் குபேரமித்திரன்.

1048. 'மைத்துனன்' என்றது மணஞ்செய்து கொள்ளுதற்குரிய முறையை உடையவனென்றபடி; சீவக. 187, ந. அடிக். வனப்பு - அழகு. நிதிக்கிழவன் - பெரிய பொருளுக்குத் தலைவன். காளை - இளம் பருவத்தையுடையவன். ஒன்று - வேருென்றனையும். உரைத்தல் தேற்ருன் - சொல்ல அறியான். திறம் - கூறுபாடு. இவன்கண் நின்னை எண்ணினுர் - இவனிடம் உன்னை மணஞ்செய்துகொடுக்க எண்ணினுர்கள். தத்தையங்கிளவி - கிளியைப்போன்ற சொற்களையுடைய குணமாலை. செவிமுதல் அடைச்சி - காதிடத்தைப் புதைத்து. அடைச்சி - அடைத்து.

1049. மணிமதம் - மணிகளையும் மதத்தையுமுடைய. களிறு வென்ருன் - அசனிவேகத்தை வென்ற சீவகன். வருத்தச்சொல் - என்பொருட்டு வருந்துதலையுடைய சொல்லுக்கு. களிறனுனுக்கு : சீவகனுக்கு. அடிப்பணி - அடிமைப்பணி : விகாரம்; சீவக. 552, ந; 1337. துணிவது என் - வேறு துணிவதற்குக் காரணம் என்ன. சுடுசொல்லாகிய வாளால். ஈரல் - அறுக்காதே. பணிவரும் - பணிவித்தற்கு அரிய. பவளம்போன்ற

(இ - ள்.) பவளப்பாவை வருத்தங்கொண்ட தன்மையையொப் பாள், கட்டுமணியையுடைய களிற்றைவென்றவன், "கொண்டுய்யப் போமின்" (சீவக. 981) என்ற சொல்லிற்குக் கூலியாக அவற்குத் தாழ்ந்து ஏவல்செய்வதன்றி வேறு கொடுக்கத் துணிதற்குக் காரண மென்? இங்ஙனம் சுடுசொல்லாகிய வாளாலே செவியிடத்தை ஈராதே கொள்ளென்றாளென்க.

[1] 'அடிச்செருப்பாவதல்லால்' என்றும் பாடம். (கககக)

1050. கந்துகப் புடையிற் பொங்குங் கலினமா வல்லன் காளைக், கெந்தையும் யாயு நேரா ராய்விடி னிறத்த லொன்றோ, சிந்தனை பிறிதொன் றாகிச் செய்தவ முயற லொன்றோ, வந்ததா னாளை யென்றாள் வடுவெனக் கிடந்த கண்ணாள்.

கந்துகப்புடையில் - பந்தினது புடைத்தல்போல. [1] ஆகி - ஆக; குரவர் நினைவு வேறாய்ப்போக. தான் இவனைப்பெறுதற்குத் தவஞ் செய்தல்.

(இ - ள்.) பின்னும், வடுப்போலுங்கண்ணாள், காளைக்கு எந்தையும் யாயும் நேராராயின் இறந்துபடுதலொன்று, தவமுயறலொன்று, இவ் விரண்டினுளொன்று நாளை நமக்கு வந்துற்றதென்று அழுதாளென்க. (உ00)

1051. தேனெய்போன் றினிய சொல்லாள் சிறுமுதுக் குறைமை கேட்டே, ஊனைநைந் துருகிக் கைத்தா யுண்ணிறை யுவகை பொங்க, ஆனெய்பாற் கிவர்ந்த தொத்த தழேற்கவென் பாவை யென்று, தானையாற் றடங்க ணீரைத் துடைத்துமெய் தழுவிக் கொண்டாள்.

---

வாயையுடைய பாவை; குணமாலை. பரிவு - துன்பம். பாவை பரிவு கொண்டனைய தொப்பாள்; எழுவாய்.

(உரை) [1] "அண்ணற் குமரற் கடிச்செருப் பாகென" (பெருங். 1. 36 : 310)

1050. கந்துகம் - பந்து. பொங்கும் - வேகம் மிகுகின்ற. கலினமா- குதிரை. கந்துகப் புடையிற்......மா; சீவக. 846, அடிக்; "பந்துபுடை பாணியிற் பொங்குமயிர்ப் புரவி" (பெருங். 1. 38 : 327). வல்லனாகிய காளை : சீவகன். யாய் - தாய்; விநயமாலை. நேராராயின் - மணம் செய்து கொடாவிட்டால். இறத்தல் ஒன்று; ஓ : ஐயம். சிந்தனை பிறிதொன்றாகி - தாய் தந்தையருடைய நினைவு வேறாகப் போகும்படி. தவம் முயறல் ஒன்று; தவம் முயறல் - சீவகனைப் பெறுதற்குத் தவம் செய்தல். இரண்டினுள் ஒன்று நாளைவந்தது; ஆல் : அசை. வடு - மாவின்வடு. கண்ணாள் : குணமாலை.

(உரை) [1] எச்சத்திரிபு.

1051. தேனில் நெய்கலந்தாற்போன்ற இனிய சொல்லாள்; குணமாலை. சிறுமுதுக்குறைமை - சிறிய பிராயத்தே பெரிய அறிவுடை மையை. சொல்லாளுடைய சிறுமுதுக்குறைமையை; "சிறுமுதுக்

(இ - ள்.) செவிலி, குணமாலையது சிறுமையிலே பேரறிவுடைமை யைக் கேட்டு ஊன் நைந்துருகி உவகை பொங்குகையினலே, நின் கருத்துப் பசுநெய் பாற்கு விரும்பிய தன்மையையொத்தது ; இனி பாவாய் ! அழேற்கவென்று தானையாலே கண்ணீரைத் துடைத்து; தழுவிக்கொண்டாளென்க.

ஊனை : ஐ அசை. பாற்கவர்ந்ததும் பாடம். (உ௦௪

1052. துகண்மனத் தின்றி நோற்ற தொல்வினைப் பயத்த் னன்றே, தகணிலாக் கேள்வி யான்கட் டங்கிய தென்று பின்னும், மகண்மனங் குளிர்ப்பக் கூறி மறுவலும் புல்லிக் கொண்டாங், ககன்மனைத் தாய்க்குச் சொன்ன ளவளுந்தன் கேட்குச் சொன்னள்.

(இ - ள்.) மனத்தில் அழுக்கின்றாய் நோற்ற நல்லவினைப்பயத்த னன்றே தட்டற்ற கேள்வியானிடத்தே நின்மனந் தங்கியதென்று குளிர சொல்லி இருகாலாவதும் புல்லிக்கொண்டு அவ்விடத்தில் [1] நற்றாய்க்கு [2] அறத்தொடு நின்றாள் ; அவளும் தன்கணவனுக்கு அறத்தொடுநின்ற ளென்க. (உ௦உ

குறைவிக்கு'' (சிலப். 16 : 68). ஊனை - உடல் ; ஐ அசை. கைத்தாய் கையிலேந்தி வளர்த்த தாய் ; செவிலித்தாய் ; சீவக. 363, அடிக் பொங்க - மிகுதலால். ஆன்நெய் பாற்கு இவர்ந்தது ஒத்தது - பசுநெய் பாலை விரும்பிய தன்மையைப் போன்றது ; பாற்கு : உருபு மயக்கம் அழேற்க - அழாதே. பாவை : குணமாலை ; விளி. என்பாவை அழேற்கவென்று எனமாறியியைக்க. தானை - புடைவை ; முன்றானை மாம். மெய் - உடம்புடன்.

1046-1051. இச்செய்யுட்களின் பொருளோடு, பெருங்கதை 1 36 : 57-123-ஆம் அடிகள் ஒப்பிடற்பாலன.

1052. துகள் - குற்றம். மனத்துத் துகளின்றி என மாறியியைக்க நோற்ற - செய்த. வினை - நல்வினை. பயம் - பயன். தகணிலாக்கேள்வி யான்கண் - தடையற்ற நூற்கேள்வியை உடைய சீவகனிடத்து தங்கியது - உன் மனம் நிலைபெற்றது. மகள் - குணமாலையினுடைய மறுவலும்புல்லி - இரண்டாம் முறையும் தழுவி. தாய்க்கு - வினய மாலைக்கு. கேட்கு - கணவனுக்கு ; குபேரமித்திரனுக்கு ; கேள் கணவன் ; ''கொண்டானிற், றுன்னிய கேளிர் பிறரில்லை'' (நான்மணிக்.

(உரை) [1] நற்றாய் - பெற்ற தாய் ; வினயமாலை. [2] அறத்தொ நிற்றல் - உண்மை கூறுதல் ; '' செவிலி நற்றாய்க் கறத்தொடு நிற்கும் நற்றாய் தந்தை தன்னையர்க் கறத்தொடு, நிற்கு மென்ப நெறியுணர் தோரே '' (நம்பி. அகத். 48)

1053. வினையமா மாலை கேள்வன் குபேரமித் திரற்குச் சொல்ல
அனையதே பட்ட தென்று லையனே நங்கைக் கொத்தான்
வனையவே பட்ட போலு மணிமருண் முலையி னாளைப்
புனையவே பட்ட பொற்றார்ப் புண்ணியற் கீது மென்றான்.

வினயமாமாலை : நற்றாய்பெயர். அனையதே - அப்படியே ; பெரியதொரு காரியமே ; ஏகாரம் வினா. என்றால் : ஒருவார்த்தைப்பாடு.

(இ - ள்.) நற்றாய், தன்கேள்வனாகிய குபேரமித்திரற்குக்கூற, அவனும் அவள் மனத்திற்பட்டது அனையதே ? என்றாற் குணமாலைக்கு ஒத்தான் சீவகனே ; அவளை அவனுக்குக் கொடுப்பேமென்றானென்க. (௨௦௩)

(வேறு)

1054. கற்றார் மற்றுங் கட்டுரை வல்லார் கவியென்னும்
நற்றேர் மேலார் நால்வரை விட்டாற் கவர்சென்றார்
சுற்றார் வல்விற் சூடுறு செம்பொற் கழனாய்கன்
பொற்றார் மார்பீர் போதுமி னென்றாங் கெதிர்கொண்டான்.

இம்மூன்று கலையும் வல்லார் நால்வர். என்னும் - என்று உலகங் கூறும். நான்கனுருபு அதற்குடம்படுதற்பாற்படும்.

(இ - ள்.) குபேரமித்திரன் இவர்களைத் தேர்மேலாராகப் போகவிட்டாற்கு அவரும் போனார் ; அப்பொழுது கந்துகன், மார்பீர், இங்ஙனம் போதுகவென்று வாயிலிலே சென்று எதிர்கொண்டானென்க. (௨௦௪)

---

1053. வினையமாமாலை, தன்கேள்வனாகிய குபேரமித்திரனுக்குச் சொல்ல. பட்டது - குணமாலையின் மனத்திற் பொருந்தியது. பட்டது அனையதே என்றால் எனமாறியியைக்க. ஐயன் : சீவகன். நங்கை - குணமாலை. வனையவேபட்ட போலும் முலை - எழுதப்பட்டன போன்ற அழகுவாய்ந்த முலை ; ஏ : இசைநிறை. மணிமருள் முலை - மணியை ஒத்தமுலை. முலையினாள் : குணமாலை. புனையவே பட்ட - அலங்கரிக்கப் பட்ட ; ஏ : இசைநிறை. புண்ணியற்கு - சீவகனுக்கு. ஈதும் - கொடுப் போம்.

1054. நூல்களைக் கற்றவர். கட்டுரை வல்லார் - புனைந்துரைப் பதில் வல்லவர். கவிவல்லார் - கவி இயற்றுதலில் வல்லவர். கற்றாரும், கட்டுரை வல்லாரும், கவிவல்லாருமாகிய நால்வர் என்க. என்னும் - என்று உலகத்தவராற் கூறப்படுகின்ற. தேர்மேலாராகிய நால்வரை. விட்டார்க்கு - சீவகனிடத்துப் போம்படி விட்ட குபேரமித்திரனுக்கு. அவர் - அந்நால்வர். நால்வரை விடுதல் ஒரு மரபு ; "நூலறி வாளர் நால்வரை விட்டபின்" (பெருங். 1. 37 : 277). விட்டாற்கு அவர் சென்றார் ; சீவக. 1061. வில்லையும், கழலையும் உடைய நாய்கன் ; என்றது கந்துகனை. சுற்றார்......நாய்கன் ; "சுற்றார் வல்விற் சூடுறு செம்பொற் கழலாற்கு" (சீவக. 1057). மார்பீர் என்றது நால்வரை. போதுமின் - வருக. ஆங்கு - வாயிலில்.

1055. (க) சீந்தா நின்ற தீமுக வேலான் மணிச்செப்பின்
ஈந்தான் கொண்டா ரின்முக வாச மெரிசெம்பொன்
காந்தா நின்ற கற்பக மன்னீர் வரப்பெற்றேன்
சேர்ந்தே னின்றே வீடென நாய்கற் கவர்சொன்னார்.

1056. (உ) யாமக ளீது நீர்மகட் கொண்மி னெனயாரும்
தாமக ணேரா ராயினுந் தண்ணென் வரைமார்பிற்
பூமகள் வைகும் புண்ணியப் பொற்குன் றனையானுக்
கியாமக ணேர்ந்தே மின்றென நாய்கற் கவர்சொன்னார்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) சீந்தாநின்ற - கோபியாநின்ற; வேலான் - கந்துகன்; விகார மாக்கி, சிந்தாநின்றவென்றுமாம். நாய்கற்கு - கந்துகற்கு. அவர் - வந்த நால்வரும்.

(உ) [1] தம்மகள் : விகாரம். நாய்கற்கு - உமக்கு. அவர் - குபேர மித்திரர்.

(இ - ள்.) வேலான் வெற்றிலையைச் செப்பிலே ஈந்தான்; அவரும் அதனைக்கொண்டார்; கொண்டபின்பு, கற்பகமன்னீர், நீர்வரப்பெற்றே னுதலின், இன்றே வீட்டைப்பெற்றேனென்று கந்துகன் முகமன்கூற, அதுகேட்ட அவர் யாம் மகளைத்தருவேமென்றும், நீர்மகளைக்கொண்மி னென்றும் வாய்விட்டுக்கூறி யாவரும் தம்மகளைக்கொடுக்க நேராராயி னும், இன்று புதிதாகச் சீவகற்கு யாம் மகட்கொடை நேர்ந்தேமென்று உமக்குக் குபேரமித்திரர் கூறினாரென்று கந்துகற்குக் கூறினாரென்க.

[2] அவர்கூறினபடியைத் தேவர்கூறினார். (உ0௬ - ௬ா)

---

1055. சீந்தாநின்ற - கோபிக்கின்ற; "சீந்தா வெமைப் பொருவான்" (தணிகைப். களவு. 57); "சீந்தி மாய்ப்பர்" (பேரூர்ப். அங்கிரன். 9). வேலான் : கந்துகன். முகவாசம் செப்பின் ஈந்தான் - வெற்றிலையைச் செப்பிலே வைத்துக் கொடுத்தான்; முகவாசம் - வெற்றிலை. வெற்றிலை வைத்த செப்பு; சீவக. 197, 2474. கொண்டார் - அந்நால்வரும் வெற்றிலையைக் கொண்டனர். செம்பொன் காந்தாநின்ற - செம்பொன் ஒளிவிடுகின்ற; இது கற்பகத்திற்கு அடை. வரப்பெற்றேன்- நீங்கள் இங்கு வரும் பாக்கியத்தைப் பெற்றேனுதலால். வீடு - மோட்சம். இன்றே வீடு சேர்ந்தேன் எனமாறியியைக்க. என - என்று கந்துகன் கூற. அவர் - அந்நால்வர்.

1056. ஈதும் - தருவேம். நீர் மகளைக்கொண்மின். என - என்றும். தாம்மகள் நேராராயினும் - தாமாகவே மகளைக் கொடுக்க உடம்படாராயி னும். யாமகள்......நேரார் : பெருங். 4. 15 : 71-2. தன் மார்பில் பூமகள் வைகும் புண்ணியத்தையுடைய பொற்குன்றனையானுக்கு; சீவகனுக்கு; பூமகள் - இலக்குமி; வைகும் - தங்கும். மகள்நேர்ந்தேம் - மகட் கொடுக்கச் சம்மதித்தோம். இன்று நேர்ந்தேம் எனமாறுக. நாய்கற்கு - கந்துகனுக்கு.

(உரை) [1] தாமகளென்றுனது விகாரம். [2] அவர் - நால்வர்.

1057. சுற்முர் வல்விற் சூடுறு செம்பொற் கழலாற்குக்
குற்றேல் செய்துங் காளையும் யானுங் கொடியாளை
மற்சேர் தோளான் றன்மரு மானுக் கருள்செய்யப்
பெற்றே னென்னப் பேசினன் வாசங் கமழ்தாரான்.

(இ - ள்.) அதுகேட்ட கந்துகன் குபேரமித்திரன் குணமாலையைச் சீவகற்குக் கொடுக்கப்பெற்றேனாதலின், அவனுக்குச் சீவகனும் யானும் குற்றேவல் செய்யக் கடவேமென்று தாழ்ந்து கூறினானென்க.

[1] குற்றேவல் : விகாரம். அவன் தானே மகட்கொடைநேர்தலானும் கொள்வார் தாழவே வேண்டுதலானும் இங்ஙனங்கூறினான். (உ0எ)

1058. விடைசூ ழேற்றின் வெல்புக ழான்றன் மிகுதாதை
கடல்சூழ் வையங் கைப்படுத் தான்போன் றிதுகூறக்
குடர்சூழ் கோட்ட குஞ்சரம் வென்ற வகையும்மப்
படர்சூழ் நெஞ்சிற் பாவைதன் பண்பு மவர்சொன்னார்.

'விடைசூழ்' என்றது தோழரைக்கருதி.

(இ - ள்.) ஏற்றினையொத்த சீவகன்றந்தை உலகைக் கைக்கொண்டான் போல மகிழ்ந்து தாழ்ந்துகூறுதலின். வந்தவர்கள் இவன் அக்களிற்றை வென்றபடியும் அதனாற் பாவைகொண்ட குணத்தினையும் விளங்கக் கூறினாரென்க.

பண்பு - [1] நேராராயின் இறந்துபடுதல், தவஞ்செய்தலென்றது. (உ0அ)

---

1057. சுற்முர்......கழலான் : சீவக. 1054. கழலாற்கு - குபேரமித்திரனுக்கு. குற்றேல் - குற்றேவல்; சீவக. 1140; "குற்றே லருளி", "குற்றேல் பிழையாது" (பெருங். 1. 32 : 15, 3. 24 : 87). செய்தும் - செய்வோம். காளை - சீவகன். யானுமென்றது கந்துகனை. கொடியாளை - பூங்கொடி போன்ற குணமாலையை. தோளான் : குபேரமித்திரன். மருமானுக்கு : சீவகனுக்கு. தோளான் தன்னுடைய கொடியாளை மருமானுக்கு அருள் செய்யப்பெற்றேனாதலின், கழலாற்குக் காளையும் யானும் குற்றேல் செய்தும் என்னப் பேசினன் எனமாறியியைக்க. தாரான் - கந்துகன் ; எழுவாய்.

(உரை) [1] குற்றேவல் என்பது குற்றேல் எனத்தொக்கது.

1058. தோழருக்கு விடைகளும், சீவகனுக்கு ஏறும் உவமை. ஏறு விடைகளுக்குள் உயர்ந்தது. ஏற்றின் - ஏற்றினைப்போன்ற ; வெல்புகழான் - வெற்றிப் புகழையுடைய சீவகன். தாதை - கந்துகன். கைப்படுத்தான் போன்று - கைக்கொண்டவன் போல மகிழ்ந்து. இது கூற - தாழ்ந்த இவ்வார்த்தையைக் கூறுதலின். கோட்டையுடையதாகிய குஞ்சரம்; என்றது அசனிவேகத்தை. அப்படர்சூழ் நெஞ்சிற் பாவை - அவ்வருத்தம் சூழ்ந்த மனத்தையுடைய குணமாலை ; படர் - வருத்தம். பண்பு - குணம். அவர் - வந்த நால்வர்.

(உரை) [1] சீவக. 1050, ந.

1059. மறையார் வேள்வி மந்திரச் செந்தீக் கொடியேபோற், குறையாக் கற்பிற் சீவகன் ருயுங் கொலைவேற்கட், பொறையொன் ருற்ருப் போதணி பொற்கொம் பனையாளை, நறையார் கோதை நன்றென வின்புற் றெதிர்கொண்டாள்.

வேதவேள்வியிற்றீ; மந்திரங்கூறும் தீ. கொடி - ஒழுங்கு. ஆற்ரு : [1] ஈண்டு வினையெச்சம்; இல்லறமென்கின்ற பொறையொன்றுமே நடத்தி அணிந்த கொம்பு : இல்பொருளுவமை; கொம்பனையாள் - வினயமா மாலை. நறையார் கோதை - குணமாலை.

(இ - ள்.) செந்தீக்கொடியே போலுஞ் சுநந்தையும், யான்கருதிய இதனைத் தான் முற்படமுடித்த தன்மை நன்றென்றுகூறிக் கொம்பனை யாளை யின்புற்றுப் பின்பு கொலைவேற்கண் நறையார்கோதையை விரும் பினுளென்க. (உ0௯)

1060. பொற்கச் சார்த்த பூணணி பொம்மன் முலையாளை
அற்கச் செய்த யாப்பின ராகி யவண்வந்தார்
பொற்பக் கூறிப் போகுது மென்ருர்க் கெழுகென்ருர்
வற்கம் மிட்ட வண்பரி மாவி னவர்சென்ருர்.

(இ - ள்.) அவண்வந்தார், குணமாலையைச் சீவகனிடத்தேயடை யும்படி பண்ணின யாப்பினராய்ப் பின்பு மணஞ்செய்யும்பொழுதையும் பொலிவு பெறும்படிகூறிப் போவேமென்ருர்க்கு அவர்களும் போகவென் ருர்; அவரும் பண்முற்றுப்பெற்ற மாவின்மேலே சென்ருரென்க.

முகூர்த்தம் தப்பாமல் முடித்தற்குக் கடிதிற்சென்ருர். (உ௧0)

---

1059. மறை - வேதம். வேள்வி - யாகம். மறையார் வேள்வித்தீ, மந்திரத்தீ எனத் தனித்தனி இயைக்க. தீக்கொடி - தீயின் ஒழுங்கு. கற்பினையுடைய சீவகன் தாய்; சுநந்தை; இவள் கந்துகன் மனைவி. பொறை - இல்லறமாகிய பாரம். ஆற்ரு - நடத்தி. போது - மலர். கொம் பனையாளை - குபேரமித்திரன் மனைவியாகிய வினயமாலையை. நன்றெனக் கொம்பனையாளை இன்புற்று எனமாறி இயைக்க. நறை - தேன். கோதை; குணமாலையை. எதிர்கொண்டாள் - விரும்பினுள். கொலைவேற் கண்ணை யுடைய நறையார் கோதையை எதிர்கொண்டாள் என இயைக்க.

(உரை) [1] ஆற்ரு - ஆற்றி.

1060. பொற்கச்சு ஆர்த்த - பொன்னுலாகிய கச்சினுற் கட்டப்பட்ட. பூண் - ஆபரணம். பொம்மல் - பெருமை. முலையாளை : குணமாலையை. அற்கச்செய்த - சீவகனிடத்தே அடையும்படி செய்த; அற்க - அல்க; வலித்தல் விகாரம். யாப்பினராகி - தொடர்புடையவராகி. அவண்வந் தார் - அங்கு வந்தவராகிய நால்வர்; எழுவாய். பொற்பக் கூறி-பொலிவு

(வேறு)

1061. மடந்தை திறத்தி னியையம்மகட் கூறி வந்தார்
விடந்தைத்த வேலாற் குரைத்தார்க்கவன் மெய்ம்ம கிழ்ந்
நுடங்குங் கொடிப்போல் பவனூபுர மார்ப்ப வந்து [தான்
தடங்கண் ணவடா யதுகேட்டலுந் தக்க தென்றாள்.

தைத்த - உள்ளேகிடக்கிற. நுடங்குகின்ற கொடிப்போல்பவள் - சுநந்தை. அது - [1] தன்னைக்கூறிய மொழி.

(இ - ள்.) குணமாலை திறத்தாலே அவர்கள் இயையும்படி மகளைக் கொடுப்பதாகப் பேசிவந்தவர்கள், குபேரமித்திரற்குக் குற்றேவல்செய்து சென்றதனை உரைத்தார்க்கு அவன் மகிழ்ந்தான். நூபுரமார்ப்பவந்து கொடிப் போல்பவள் கூறியமொழியைக் குணமாலைதாய் கேட்டலும் அவளுக்கு அது தக்கதென்றாளென்க. (௧௦௬௧)

1062. திருவிற் கமைந்தான் றிசைபத்து மறிந்த தொல்சீர்
உருவிற் கமைந்தாற் கமைந்தாளென யாரு மொட்டப்
பெருகுங் கணியிற் கணிபேசிய பேதி னாளாற்
பருகற் கமைந்த வமிர்தின்படர் தீர்க்க லுற்றார்.

---

பெறும்படிசொல்லி. என்றார்க்கு - என்று கூறிய அந்நால்வர்க்கு. எழுக என்றார் - போக என்று கந்துகன் முதலியோர் விடைகொடுத்தனர். வற்கம் - குதிரையின்மேல் இடுதற்குரிய கலனை முதலியன; கடிவாளமுமாம்; வல்கம் என்னும் வடசொல்லின் சிதைவு. பரிமாவின் - குதிரையின்மீது. அவர் : அந்நால்வர்.

1061. மடந்தை திறத்தின் இயைய - குணமாலையின் திறத்திலே கந்துகன் முதலியவர்கள் மனம் இசையும்படி. அம்மகள் கூறிவந்தார் : குணமாலையை மணம்செய்து கொடுக்கப் பேசிவந்த அந்நால்வர்கள். விடம் தைத்தவேல்-விஷத்தைத் தன்னுள்ளே கொண்டவேல். வேலாற்கு: குபேரமித்திரனுக்கு. உரைத்தார்க்கு - உரைத்த நால்வர்க்கு. அவன் : குபேரமித்திரன். நுடங்கு - அசைகின்ற. கொடிபோல்பவள் - சுநந்தை. நூபுரம் - சிலம்பு. தடங்கண்ணவள் தாய் - குணமாலைக்குத் தாயாகிய வினயமாலை. கொடிப்போல்பவள் கூறியதைக் கண்ணவள்தாய் கேட்டலும் எனமாறியியைக்க. அது தக்கது என்றாள் - சுநந்தைக்கு அது தக்கதே என்று வினயமாலை கூறினாள்.

(உரை) [1] தன்னை யென்றது வினயமாலையை.

1062. திருவிற்கு - குணமாலைக்கு. அமைந்தான் - சீவகன் பொருந்தினன். சீர் - புகழையுடைய. உருவிற்கு அமைந்தாற்கு - அழகிற்குப் பொருந்திய சீவகனுக்கு. அமைந்தாள் - குணமாலை பொருந்தினாள்.

(இ - ள்.) குணமாலைக்குச் சீவகன் அமைந்தான்; சீவகனுக்குக் குணமாலை அமைந்தாளென்று எல்லாரும் இசையும்படி பெருகுநூலையுடைய கணிகூறிய மயக்கமில்லாத நாளிலே குணமாலையது வருத்தத்தைத் தீர்க்கலுற்றாரென்க. (உசஉ)

1063. கரைகொன் றிரங்குங் கடலிற்கலி கொண்டு கல்லென்
முரசங் கறங்க முழவிம்மவெண் சங்க மார்ப்பப்
பிரசங் கலங்கிற் றெனமாந்தர் பிணங்க வேட்டான்
விரைசென் றடைந்த குழலாளையவ் வேனி லானே.

அவ்வேனிலான் - நுதல்விழிக்கு அழியாத காமன்.

(இ - ள்.) அவ்வேனிலான் கடல்போல ஆரவாரங்கொண்டு இயங்களெல்லாமியம்ப, மாந்தர் தேனினங்கலங்கிற்றென நெருங்கக் குழலாளை வேட்டானென்க. (உசங)

1064. மழைமொக்கு ளன்ன வருமென்முலை மாதர் நல்லார்
இழைமுற் றணிந்தா ரெழுநூற்றுவர் கோடி செம்பொன்
கழைமுற்று தீந்தேன் கரும்பார்வய லைந்து மூதூர்
குழைமுற்று காதின் மணிக்கொம்பொடு நாய்க னீந்தான்.

தீந்தேன் முற்றின கரும்பின்கழை; கழை - கோல்; "தீங்கட் கரும்பின் கழைவாங்கும்" (கலித். 40) என்ப.

ஒட்ட - இசையும்படி. பெருகுங்கணியிற் கணி - பெருகிய கணிதநூலையுடைய சோதிடன். பேதில் நாளால் - மயக்கமில்லாத நாளில். பருகற்கு அமைந்த அமிர்தின் - உண்ணுதற்குப் பொருந்திய அமிர்தம்போன்ற குணமாலையினுடைய. படர் - வருத்தத்தை.

1063. இரங்கும் - ஒலிக்கின்ற. கடலின் - கடலைப்போல. கரை... கடல்; சீவக. 280, அடிக்; "கரைபொரு திரங்குங் கனையிரு முந்நீர்" (மதுரைக். 235). கலி - ஆரவாரம். கல்லென் : ஒலிக்குறிப்பு. கறங்க - ஒலிப்ப. விம்ம - ஒலிக்க. முரசமும்முழவமும் : சீவக. 2414. வெண்சங்க மார்ப்பவேட்டல் : "மத்தளங் கொட்ட வரிசங்க நின்றூத...மதுசூதன் வந்தென்னைக், கைத்தலம் பற்றக் கனாக்கண்டேன் றோழீ நான்" (நாச்சியார். 6 : 6). பிரசம் - வண்டு; சீவக. 2691. பிணங்க - நெருங்கும்படி. வேட்டான் - மணம்செய்து கொண்டான். விரை - வாசனை. குழலாளை : குணமாலையை. வேனிலான் : சீவகன். வேனிலான் குழலாளை வேட்டான் என்க.

1064. மழைமொக்குள் - மழைபெய்யும்போது தோன்றும் கொப்புளம்; சீவக. 2651. மாதர் நல்லார் - இளையமகளிர். இழை - ஆபரணம். மாதர் நல்லார் எழுநூற்றுவரையும், முற்றும் இழையணிந்தார் எழுநூற்றுவரையும் எனத்தனித்தனி யியைக்க. கழைமுற்று - கோல்முற்றிய. கழைமுற்றிய கரும்பு : "தீங்கழைக் கரும்பே" (மலைபடு. 119); "கழைக் கரும்பின்" (புறநா. 137 : 6); "மூரிக்கழைக் கரும்பு" (சூளா. நாடு. 25). கரும்புடையுடைய வயல்களைப்பெற்ற ஐந்து ஊரையும். குழைமுற்று காதின் - குண்டலம் சூழ்ந்த காதினையுடைய. கொம்பு : குணமாலை. நாய்கன் : குபேரமித்திரன்.

(இ - ள்.) குழைசூழ்ந்த காதினையுடைய கொம்பை நீர்வார்த்துக் கொடுக்கின்றபொழுதே, இளையமகளிரெழுநூற்றுவரையும் முற்றும் இழையணிந்தாரெழுநூற்றுவரையும் கோடிசெம்பொன்னையும் ஐந்தூரை யுங்கொடுத்தானென்க. (உ௧௪)

(வேறு)

1065. பண்ணார் கிளவிப்பவ ழம்புரை செவ்வாய்க்
கண்ணார் கதிர்மென்முலைக் காம்படு மென்றோள்
விண்ணோ ருலகின்னொடு மிந்நிலத் தில்லாப்
பெண்ணா ரமிர்தேயவன் பெற்ற வமிர்தே.

(இ - ள்.) அவன்பெற்ற அமிர்து, தேவருலகத்தினும் இந்நிலவுலகத் தினும் இல்லாததொரு கிளவிமுதலியவற்றையுடைய பெண்தன்மை யார்ந்த அமிர்தேயென்க. (உ௧௫)

1066. தேதா வெனவண்டொடு தேன்வரி செய்யப்
போதார் குழலாள்புணர் மென்முலை பாயத்
தாதார் கமழ்தார்மது விண்டு துளிப்ப
ஈதா மவரெய்திய வின்ப மதே.

தேதா - [1] ஆளத்தி. வரி - பாட்டு. அவர் - தேவர்.

(இ - ள்.) தேன் வரிசெய்ய அவன்தார் மதுத்துளிக்கும்படி குழலாள் முலை பாய்ந்தெய்திய இந்தவின்பம் அவளெய்தின இன்பமென்க. (உ௧௬)

---

1065. பண்ணார் கிளவி - இசை பொருந்திய சொல். புரை - ஒத்த. கண் ஆர் - கண்ணிற்குஆர்ந்த. காம்படும் - மூங்கிலை வெல்லும். பெண் ஆர் அமிர்து - பெண்தன்மை நிரம்பிய அமிர்து; குணமாலை. அவன் - சீவகன். அவன் பெற்ற அமிர்து, பெண்ணாரமிர்து என்க.

1066. தேதா: ஒலிக்குறிப்பு. தேன்: ஒருவகைவண்டு. வரிசெய்ய - பாட்டை ஒலிக்க. தேதா......செய்ய; "தேதா வென்றே தேனொடு வண்டு திசைபாடும்" (சூளா. சுயம். 194). போது - மலர். குழலாள்: குண மாலை. பாய - பாய்தலால்; இதன்பின் எய்திய என ஒருசொல் வருவிக்க. தாது - மகரந்தப்பொடி. தார் - சீவகனுடைய பூமாலை. தார்விண்டு மதுத்துளிப்ப என இயைக்க; துளிப்ப - துளிக்கும்படி. ஈது - இந்த இன்பம்தான். அவர் - தேவர்கள். ஈது அவர் எய்திய இன்பமதே ஆம் எனமுடிக்க.

(உரை) [1] ஆளத்தி; சீவக. 657, ந; "மகரத்தி னொற்றுற் சுருதி விரவும், பகருங் குறினெடில்பா ரித்து - நிகரிலாத், தென்னா தெனாவென்று பாடுவரே லாளத்தி, மன்னாவிச் சொல்லின் வகை" (சிலப். பக். 104, அடியார். மேற்.)

1067. முந்நீர்ப் பவளத்துறை நித்தில முத்தம்
அந்நீ ரமிர்தீன்று கொடுப்ப வமர்ந்தான்
மைந்நீர் நெடுங்கண்புரு வங்கண் மலங்கப்
பொன்ற ரரிக்கிண்கிணி பூச லிடவே.

(இ - ள்.) கடலிற்பிறந்த பவளத்தேயுறைகின்ற நித்திலம் போலு மெயிறு அக்கடலிற்பிறந்த அமிர்தத்தைத் தானீன்று கொடுப்பக் கண்கள் புருவங்கள் இவைபிறழக் கிண்கிணியொலிப்பப் புணர்ச்சியைப் பொருந்தினனென்க.

அயின்றன்பாடமாயின், [1] பானமும் புணர்ச்சியும் உடனிகழ்ச்சி யாம். (உகஎ)

1068. கம்பார் களியானை கலக்க மலங்கி
அம்பே ரரிவாணெடுங் கண்புதைத் தஞ்சிக்
கொம்பே குழைவாயெனக் கேகுழைந் திட்டாய்
வம்பே யிதுவையகத் தார்வழக் கன்றே.

[1] கம்பமார் : விகாரம்.

(இ - ள்.) கொம்பே! யானைகலக்குதலிற்கலங்கிக் கண்ணைப்புதைத்து அஞ்சிக்குழைகின்ற நீ பொதுநோக்கத்தான் இவனிறந்துபடுவனென்று [2] அருள்நோக்கினைத் தந்தாயாதலின், எனக்கேவருந்தினாய், இங்ஙனஞ் செய்தல் உலகத்தார்வழக்கன்று; புதியதொரு வழக்கென்று நயப்புக் கூறினனென்க.

தாம் [3] வளைவார் பிறர்க்கு ஊற்றங்கோலாகாரென்பது உலகவழக்கு. நீ செய்தது அதுவன்று; "நீல நெடுங்கணாற் கவர்ந்த கள்வி" (சீவக. 1024) என்பது [4] பொதுநோக்கு. (உகஅ)

---

1067. முந்நீர் - கடல். வாய்க்குப் பவளம் உவமை. நித்தில முத்தம் - முத்துப்போன்ற பற்கள். அந்நீரமிர்து - அக்கடலிற் பிறந்த அமிர்தத்தை. கொடுப்ப - பற்கள் கொடுப்ப; "முள்வாயெயிற்றூறமிர்தம்" (சீவக. 491). மைந்நீர் - மையின் தன்மையையுடைய. கண்களும் புருவங்களும் மலங்க; மலங்க - பிறழ்ச்சியை அடைய. அரி - பரல்களை யுடைய. பூசலிட - ஒலிப்ப. பூசலிட அமர்ந்தான் என்க.

(உரை) [1] சீவக. 840-41, ந.

1068. கம்பம் - சட்டுத்தறி; கம்பார் களியானை; "கம்பார் களிற்றுப் பிரசங்கள்" (கூர்ம. இரா - வதை. 14). யானை : அசனிவேகம். மலங்கி - கலங்கி. அம்பேர் அரிவாள்நெடுங்கண் - அம்பை ஒத்த, அழகிய பெரிய செவ்வரி படர்ந்த ஒளியையுடைய நீண்ட கண்ணை. புதைத்து - பொத்தி. கொம்பே : விளி; என்றது குணமாலையை. அஞ்சிக்குழை வாய் - பயந்து குழைந்த நீ. குழைந்திட்டாய் - வருந்தினாய். குணமாலை சீவகன்பொருட்டு வருந்தியது; சீவக. 986, அடிக். வம்பே - புதுமையே. வையகத்தார் வழக்கு - உலகவழக்கு. இது வையகத்தார் வழக்கன்று; வம்பே என மாறுக.

(உரை) [1] கம்பமார் என்பது கம்பார் எனத் தொக்கது. [2] 'கூட்டி உரைக்கும் குறிப்புரையாகிய நோக்கு' (சீவக. 1965, ந.) [3] வளைவார் - வருந்துவார். [4] "ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்" (குறள், 1099)

1069. பூவார் புனலாட்டினுட் பூநறுஞ் சுண்ணம்
பாவாய் பணைத்தோட்சுர மஞ்சரி தோற்றாள்
காவா தவள்கண்ணறச் சொல்லிய வெஞ்சொல்
ஏவோ வமிர்தோவெனக் கின்றிது சொல்லாய்.

(இ - ள்.) பாவாய், பணைத்தோட்சுரமஞ்சரி புனலாட்டில் நறுஞ் சுண்ணந்தோற்றவள், வார்த்தை பரிகரியாதவள் [1]வாளாதே கண்ணறச் சொல்லிய வெவ்விய சொல் இன்று எனக்குத் துன்பமாயிற்றோ? இன்பமாயிற்றோ? நீ இதனைக் கூறாய், இன்பமேயாயிற்றன்றோவென்றானென்க.

காவாதவார்த்தை, "கூறிவையோ" (சீவக. 876) என்றவார்த்தை. அவள்சொல்லியசொல் இன்பமாயிற்றென்றான், "சுண்ணந்தோற்றனந் தீம் புனலாடலம்" (சீவக. 878) என்று அவள்கூறவே வென்றவர்புனலாடவே வேண்டுதலின், இவள் புனலாட்டயர்ந்து வருகின்றநேரத்துத் தான் களிற்றிடையுதவி எதிர்ப்பட்டதனால் இவ்வின்பம்பெறுதலின். தான், "கண்ணிற் கண்டிவைநல்ல" (சீவக. 884) என்றும், "சாலநல்லன" (சீவக. 893) என்றும், "உய்த்துரைமின்" (சீவக. 895) என்றுங்கூறுதலின், வாய்காவாதுகூறிற்றென்றல் பொருந்தாது. ஓவா வமிர்தும் பாடம். (உகக)

1070. (க) நற்றோ ளவள்சுண்ண நலஞ்சொ லுவான்
உற்றீர் மறந்தீர்மனத் துள்ளுறைகின்றாள்
செற்றா லரிதாற்சென்மின் போமின் றீண்டா
தெற்றே யறியாதவொ ரேழையே னேயான்.

---

1069. பூ ஆர் - பூக்கள் பொருந்திய ; புனலுக்கு அடை. புனலாட்டினுள் - நீர்விளையாட்டில். பாவாய் - குணமாலையே. சுரமஞ்சரியாகிய சுண்ணம் தோற்றவள். தோற்றாள் - தோற்றவள். காவாதவள் - வார்த்தையைக் கூறும் தன்நாவைக் காவாதவள். கண்அற - கண்ணோட்டமற ; சீவக. 878, ந. "கண்ணின்று கூறுத லாற்றான்" (கலித். 37 : 8) : "கண்ணின் றொருவர், குணனேயுங் கூறற் கரிதால்" (நாலடி, 353); "கண்ணின்று கண்ணறச் சொல்லினும்" (குறள், 184). காவா தவள்......வெஞ்சொல் ; "யாகாவா ராயினும் நாகாக்க" (குறள், 127) ; "காவா தொருவன்றன் வாய்திறந்து சொல்லுஞ் சொல்" (நாலடி. 63). ஏவோ - எனக்குத் துன்பமாயிற்றோ. அமிர்தோ - இன்பமாயிற்றோ ; இன்பமே ஆயிற்று என்றபடி.

(உரை) [1]வாளாதே - சும்மா ; நாலடி. 30.

1070. நற்றோளவள் : சுரமஞ்சரியினுடைய. சுண்ணநலம் - சுண்ணத்தினது நன்மையை. சொலுவான் உற்றீர் - சொல்லுதற்குப் பொருந்திய நீர். மறந்தீர் - என் நிமித்தம் அதனைமறந்தீர். சுரமஞ்சரி நும்மனத்துள் உறைகின்றாள். செற்றால் அரிது - அவள் கோபித்தால் அதைத்தீர்த்தல் அரிது. தீண்டாது போமின். எற்றே - என்னே ;

1071. (உ) தூமங் கமழ்பூந்துகில் சோர வசையாத்
தாமம் பரிந்தாடுதண் சாந்தந் திமிர்ந்திட்
டேமன் சிலைவாணுத லேற நெருக்காக்
காமன் கணையேர்கண் சிவந்து புலந்தாள்.

இவை இரண்டும் ஒருதொடர்.

(க) 'சென்மின்' எனத் தீண்டலின், 'தீண்டாதேபோமின்' என்றாள். [1] 'பணைத்தோள்' என்றதனாலும், 'தோற்றாள்' என்றதனாலும் ஊடுகின்றாள்.

(இ - ள்.) நும்முடைய நற்றோளவளது சுண்ணத்தையே நலஞ் சொல்லக் கருதினீர், எனது நல்வினையாலே அதனைமறந்தீர்; அவள் நும்மனத்தே யுறைகின்றாளாதலாற் கோபித்தாற் கோபம் தீர்த்தலரிது; இனி, இவ்விடத்தினின்றும் சென்மின்; என்னே! யான் நுமக்கு வருகின்ற ஏதத்திற்கு வருந்தாத ஏழையேனோ? இனி என்னையருளித் தீண்டாதேபோமினென்று துகிலை இறுகவுடுத்துப் பரிந்து திமிர்ந்து ஏவினையுடைய காமன்சிலைபோலும் புருவத்தை நுதலிலேயேற நெருக்கிக் கண்சிவந்து புலந்தாளென்க. (உஉ0 - உக)

1072. மின்னே ரிடையாளடி வீழ்ந்து மிரந்தும்
சொன்னீ ரவளற்பழ லுட்சொரிந் தாற்ற
இந்நீ ரனகண்புடை விட்டகன் றின்பம்
மன்னார்ந்து மதர்ப்பொடு நோக்கினள் மாதோ.

(இ - ள்.) அவன், அதுகண்டு குணமாலையடியிலே வீழ்ந்தும் இரந்துகொண்டும் சொல்லாகிய நீரை அவளன்பாலுண்டாகிய தீயிலே

சீவக. 310. அறியாத - நுமக்குவரும் துன்பத்திற்கு வருந்தாத. ஏழையேனோ - அறிவில்லாதவளோ. இப்பாடல் குணமாலையின் கூற்று.

1071. தூமம் - அகிற்புகை. அசையா - இறுக உடுத்து. தாமம் பரிந்து - மாலையை அறுத்து. சாந்தம் திமிர்ந்திட்டு - மார்பிற்பூசிய சந்தனத்தை உதிர்த்து. ஏ மன் சிலை - அம்பு பொருந்திய வில்போன்ற புருவத்தை; சீவக. 1042. ஏற நெருக்கா - நெற்றியில் ஏறும்படி நெருக்கி. காமன் கணையேர் - மன்மதனுடைய மலரம்பை ஒத்த. புலந்தாள் - ஊடினாள்.

(உரை) [1] சீவக. 1069.

1072. மின் - மின்னல். இடையாள் : குணமாலையினுடைய. இரந்தும் - யாசித்தும். சொல் நீர் - சொல்லாகிய நீரை. அவள் அற்பழலுள் - குணமாலையின் அன்பாலுண்டாகிய புலவித்தீயில். அற்பழல் : பெருங். 3. 1 : 65; 4. 4 : 55 ஆற்ற - அவிப்ப. இந்நீரன விட்டகன்று - இத்தன்மையவான புலவிவருத்தத்தை விட்டு நீங்கி. புடை - பக்கம். இன்பம் மன் ஆர்ந்து - இன்பம் மனத்தே மிக நிறைதலால். கண்களின் மதர்ப்பொடு புடைநோக்கினள் எனமாறியியைக்க. மாது, ஓ : அசை.

சொரிந்து அவித்தாளாக, இன்பம் மனத்தே மிகநிறைதலின், வருத்தத்தைக் கைவிட்டகன்று கண்களின் மதர்ப்போடே புடையிலே நோக்கினாளென்க.

கடைக்கணித்துப் பார்த்தாளென்க. (௨௨௨)

1073. இன்னீ ரெரிமாமணிப் பூண்கிடந் தீன்ற
மின்னா ரிளமென்முலை வேய்மருண் மென்றோட்
பொன்னார் கொடியேபுக ழிற்புகழ் ஞாலம்
நின்வா ணெடுங்கண்விலை யாகு நிகர்த்தே.

நிகர்த்தே : ஏகாரம் எதிர்மறை.

(இ - ள்) பூணுண்டாக்கின ஒளியசைகின்ற முலையினையும் தோளினையுமுடைய கொடியே! யான்புகழ நினைக்கின், ஞாலம் நின்கண்ணிற்கு நிகர்த்து விலையாகுமே? ஆகாது; ஆதலாற் புகழ்தலரிதென்றானென்க. (௨௨௩)

1074. தோளாற் றழுவித் துவர்த்தொண்டையஞ் செவ்வாய்
மீளா மணிமேகலை மின்னின் மிளிர
வாளார் மணிப்பூணவன் மாதரம் பாவைதன்னை
நாளாற் பெற்றநல்லமிர் தென்ன நயந்தான்.

(இ - ள்.) பூணவன், பாவைதன்னைத் தோளாலே தழுவி மேகலை மின்போற் பிறழாநிற்க அவள்செவ்வாயை நாட்காலத்திலேபெற்ற மீளா வமிர்தென்னப் பருகினானென்க.

மீளாவமிர்து - கருடன் வாங்கிக்கொண்டு வாரா அமிர்து. நயத்தல் பருகுதன்மேற்று. (௨௨௪)

(வேறு)

1075. சித்திர மணிக்குழை திளைக்கும் வாண்முகத்
தொத்தொளிர் பவளவா யோவக் கைவினைத்
தத்தரி நெடுங்கணா டன்னொ டாடுநாள்
வித்தகற் குற்றது விளம்பு கின்றதே.

---

1073. இன்னீர் - இனிய நீர்மையை உடைய. எரி - விளங்குகின்ற. பூண் - ஆபரணங்கள். ஈன்ற - உண்டாக்கின. மின் ஆர் முலை - ஒளி அசைகின்ற முலை. வேய்மருள் - மூங்கிலைப்போன்ற. முலையினையும் தோளையுமுடைய கொடிபோல்வாய்; என்றது குணமாலையை. புகழின் - உன்னைப் புகழ நினைத்தால். புகழுடைய ஞாலம்நின் கண்ணிற்கு நிகர்த்து விலையாகுமே என மாறியியைக்க; விலையாகாது என்றபடி; நிகர்த்து - ஒப்பாகி.

1074. துவர் பூசிய தொண்டைக்கனி போன்ற செவ்வாய். மிளிர - ஒளிவிட. வாளார் - ஒளிபொருந்திய. பூணவன் : சீவகன். மாதரம் பாவைதன்னை - குணமாலையை. பாவைதன்னைத் தழுவியென இயைக்க. நாளால் - விடியற்காலத்தில். நயந்தான் - விரும்பினான்; பருகினான்.

1075. சித்திரவேலைப்பாடமைந்த குழை. குழை திளைக்கும் - குண்டலம் அசைகின்ற. பவளம் ஒத்து ஒளிர்வாய் - பவளத்தை ஒத்து விளங்

(இ - ள்.) குழைதிளைக்குமுகத்தினையும் பவளத்தையொத்துவிளங்(
கின்ற வாயினையும் சித்திரம்போன்ற ஒப்பனையையுமுடைய குணமாலை
தன்னுடனே இங்ஙனம் புணருகின்றநாளிலே, வித்தகனுக்குற்றதொ(
தீவினை இனிக் கூறப்படுகின்றதென்க.

ஒகைவீணையவும் பாடம். (உஉ(

(வேறு)

1076. அரும்பெறற் குருசிற் கஞ்ஞான் றோடிய நாக நாணிக் கரும்பெறி கடிகை யோடு நெய்ம்மலி கவளங் கொள்ளா, திரும்ட செய் குழவித் திங்கண் மருப்பிடைத் தடக்கை நாற்றிச், சுருட பொடு வண்டு பாடச் சுளிவொடு நின்ற தன்றே.

(இ - ள்.) நீர்விளையாட்டினின்று குருசிலுக்குத்தோற்ற யானை நாணிக் கருப்பங்கடிகையும் கவளமுங்கொள்ளாதாய்க் [1]கிம்புரியிட்ட இளைய திங்கள் போலுமருப்பிடையிலே கையைநாற்றி மதஞ்செறித்( லின் உண்ணப்பெருதே சுரும்பும் வண்டும் பாடக் கோபத்தோடே நின்( தென்க. (உஉசு

1077. பகைபுறங் கொடுத்த வேந்திற் பரிவொடு பகடு நிற்பத் தகைநிறக் குழைக டாழ்ந்து சாந்தின்வாய் நக்கி மின்னப், புகை நிறத் துகிலிற் பொன்ஞாண் டுயல்வரப் போந்து வேந்தன், மிகை நிறக் களிற்றை நோக்கி வேழமென் றுற்ற தென்றான்.

---

குகின்ற வாய். ஒவக் கைவினை - சித்திரம் போன்ற அலங்காரம். நெடுங் கணாள் : குணமாலை. முகத்தினையும் வாயினையும் கைவினையையும் உடைய நெடுங்கணாள். ஆடுநாள் - புணர்கின்ற நாளில். வித்தகற்கு சீவகனுக்கு. விளம்புகின்றது - கூறப்படுகின்றது.

1076. குருசிற்கு : சீவகனுக்கு. அஞ்ஞான்று - அன்று நடந்( புனல் விளையாட்டில். ஓடிய நாகம் - தோற்றுச் சென்ற அசனிவேகம் நாணி - வெட்கமுற்று. கரும்பெறி கடிகை - கரும்புத்துண்டம். நெய்ம் மலிகவளம் - நெய்நிறைந்த சோற்றுக் கவளத்தை; "நெய்ம்மிதி கவ ளம்...கவரும்" (பெரும்பாண். 394-5); "நெல்லுடைக் கவளமொடு நெய்ம்மிதி பெறாஅ" (புறநா. 44 : 2). இரும்புசெய் மருப்பு - பூண் போடப்பட்ட தந்தம். குழவித் திங்கள் - இளையசந்திரன். மருப்புக் குழ வித் திங்கள் ; "பிறைமருப்பியானை" (பெருங். 3. 27 : 219). தடக்கை வளைந்த துதிக்கையை. நாற்றி - தொங்கவிட்டு. சுளிவு - கோபம்.

(உரை) [1] கிம்புரி - யானைக்கொம்பிலிடும் பூண் ; சீவக. 83, அடிக்.

1077. பகை புறங்கொடுத்த வேந்தின் - பகைவர்களுக்கு முதுகு கொடுத்த வேந்தனைப்போல. பரிவு - வருத்தம். பகடு : அசனிவேகம் குழைகள் சாந்தின் வாய்நக்கி மின்ன - குண்டலங்கள் தோளில் பூசிய

(இ - ள்.) பகடு பகைக்கு முதுகிட்ட வேந்துபோலே பரிவொடுநிற்ற லின், அதுகேட்டு வேந்தன்போந்து குழைகள் சாந்திடத்தே தீண்டிமின் னத் துகிலிலே பொன்றுணையைக் குனிந்து களிற்றை நோக்கி, யானை யுற்ற வருத்தமென்னென்று பாகனை வினவினானென்க. (௨௨எ)

1078. கொற்றவன் குறிப்பு நோக்கிக் குஞ்சரப் பாகன் கூறும், இற்றென வுரைத்த றேற்றே னிறைவநின் னருளி னுங்கொல் செற் றமிக் குடைமை யாற்கொல் சீவக னின்ன நாளால், மற்றிதற் குடற்சி செய்ய மதமிது செறித்த தென்றான்.

குறிப்புநோக்கியென்றார், சீவகனைக் குறைகூறலாகாதென்று கருதி னவன் அரசன்கோபநோக்கிப் பேணிக்கூறுதலின்.

(இ - ள்.) அரசன்குறிப்பைநோக்கிக் கூறுகின்ற யானைப்பாகன், இறைவனே! நின்னுடன்பாட்டினாலேயோ, இதனோடே அவ்விடத்துச் செற்றமுடைமையினாலேயோ, சீவகன் நீர்விளையாட்டினன்று இதற்குக் கோபத்தை மிக்குச்செய்ய இது மதம்செறித்தது; இதுதான்; யானும் விளங்கவுணர்தலைத் தெளியேனென்றானென்க.

மற்று : வினைமாற்று; பெண்ணுயிரைப் பிழைப்பித்தது இதற்கு உடற்சியாதலின். (௨௨அ)

1079. ஈண்டழற் குட்டம்போல வெரியெழத் திருகி நோக்கிக், கோண்டரு குறும்பர் வெம்போர் கோக்குழாம் வென்ற துள்ளி, மாண்டதில் செய்கை சூழ்ந்த வாணிகன் மகனை வல்லே, ஆண்டி றங் களைவெ னோடிப் பற்றுபு தம்மி னென்றான்.

---

சாந்தினிடத்தே தீண்டி ஒளிவீச; சீவக. 677. துயல்வர - அசைய. வேந் தன் : கட்டியங்காரன். வேந்தன் போந்து மின்ன, துயல்வரத் தாழ்ந்து களிற்றை நோக்கி எனமாறியியைக்க; தாழ்ந்து - குனிந்து. வேழம் உற் றது என் - யானை அடைந்த வருத்தம் யாது.

1078. கொற்றவன் குறிப்பு நோக்கி - கட்டியங்காரனுடைய கோபக் குறிப்பை அறிந்து. கூறுகின்ற பாகன். இற்றென - இன்ன காரணம் என்று. இறைவ : விளி. நின் அருளினுங்கொல் - உன் உடன்பாட்டி னாலோ. செற்றம் - கோபம். இன்ன நாளால் - நீர்விளையாட்டன்று. இதற்கு - அசனிவேகத்திற்கு. உடற்சி மிக்குச் செய்ய - கோபத்தை மிகு தியாக உண்டுபண்ண. மதம் செறித்தது - மதத்தை அடக்கியது.

1079. ஈண்டு - நெருங்கிய. அழற்குட்டம் - தீத்திரள்; "ஆடிய லழற்குட்டத்து" (புறநா. 229 : 1); "அழல்சேர் குட்டத்து" (சிலப். 23 : 134). திருகிநோக்கி - மாறுபடப் பார்த்து. கோண் தரு குறும்பர் - மாறுபாட்டைத் தருகின்ற வேடர்கள். கோக்குழாம் - காந்தருவதத்தை

(இ - ள்.) அதுகேட்ட அரசன், தீத்திரள்போலக் கோபித்து மதனனை நோக்கி, வேடருடனே போர்செய்துவென்றதனையும் காந்தருவதத்தை யாழ் வாசினையிலே வந்துகூடின இராசாக்களைவென்றதனையும் நினைத்து என்னுடனும் போர்த்தொழிலைக்கருதின செட்டிமகனை இப்பொழுதே அவனுண்மைக் கூற்றைப்போக்குவேன்; ஓடிக் கைக்கொண்டு தாருமென்றானென்க.

அரசனேவல்செய்ய வேண்டுதலின், 'பற்றுபுதம்மின்' என்றுகூறவே அவர் கட்டினாரென்றல் பொருந்தாமையுணர்க. (உஉகூ)

1080. கன்றிய வெகுளி வேந்தன் கால்வலி யிளையர் காய்ந்து, கொன்றுயிர் கொணர வோடுங் கொழுங்குடர்க் கண்ணி மாலை, ஒன்றிய வுதிரச் செச்சை யொண்ணிண மீக்கொ டானைத், தென் றிசைக் கிறைவன் றூதிற் செம்மலைச் சென்று சேர்ந்தார்.

(இ - ள்.) கொன்று உயிர் கொணரவோடுகின்ற, குடராகிய கண்ணியையும் மாலையையும் உதிரச்சட்டையையும் நிணமாகிய மேலே யுடுத்த புடைவையையுமுடைய யமன்றூதர்போலே வேந்தனிளையர் காய்ந்துசென்று செம்மலைச்சேர்ந்தாரென்க.

அவன்மனையைச் சூழ்ந்தார். (உ௩௰)

1081. சண்பக மாலை வேய்ந்து சந்தனம் பளிதந் தீற்றி, விண் புக நாறு சாந்தின் விழுமுலைக் காம வல்லி, கொண்டெழுந் துருவு காட்டி முகத்திடைக் குளித்துத் தோண்மேல், வண்டளி ரீன்று சுட்டி வாணுதல் பூப்ப வைத்தான்.

---

யாழ்வாசித்தபோது வந்திருந்த அரசர் கூட்டங்கள். குறும்பரையும், கோக்குழாத்தையும் தான்வென்றதை உள்ளி. உள்ளி - நினைத்து. மாண் டதில் செய்கை சூழ்ந்த - என்றேடும், மாட்சிமைப்படுதலில்லாத போரைச் செய்ய எண்ணிய. வாணிகன் மகனை - சீவகனது. ஆண்திறம் களைவென் - ஆண்மையின் கூறுபாட்டை நீக்கிவிடுவேன். பற்றுபு தம்மின் - பிடித்துக்கொண்டு வாருங்கள்.

1080. கன்றிய வெகுளி - தழும்பேறிய கோபம். வேந்தன் - கட்டியங்காரனுடைய. கால்வலி இளையர் - காற்றினைப்போன்ற வன்மையை யுடைய வீரர். காய்ந்து - கோபித்து. குடராகிய கண்ணியையும் மாலையையும். உதிரச்செச்சை - இரத்தமாகிய சட்டையையும். நிணம் மீக் கொள்தானை - நிணமாகிய மேலே உடுத்த ஆடையையுமுடைய. தென்றிசைக் கிறைவன் தூதின் - யமனுடைய தூதர்போல. செம்மலை : சீவகனை. இளையர் காய்ந்து சென்று செம்மலைச் சேர்ந்தார் என்க.

1081. வேய்ந்து - சூட்டி. பளிதம் - பச்சைக்கருப்பூரம். தீற்றி - பூசி. சாந்தின் - குழம்பால். சந்தனத்தையும், பளிதத்தையும் தீற்றி நாறுகின்ற சாந்தால் என்க. முலைகொண்டெழுந்து காமவல்லி உருவு

(இ - ள்.) சண்பகமாலையைச் சூட்டிச் சந்தனத்தையும் கருப்பூரத்தையும் வேதித்து நாறுகின்ற குழம்பாலே முலையை அடியாகத் தொடங்கியெழுந்து காமவல்லி, தனது வடிவைக்காட்டித் தோண்மேலே தளிரையீன்று முகத்திடையிலே மறைந்துபோய் நுதலிலே சுட்டியாகப் பூக்கும்படி வைத்தானென்க. (உ௱க)

1082. பண்ணடி வீழுந் தீஞ்சொற் பாவைநின் வனப்பிற் கெல்லாம், கண்ணடி கருங்க ணென்று மம்பருத் தூணி தன்னாற், புண்ணுடை மார்பத் தோவா தெய்தியா லெங்குப் பெற்றாய், பெண்ணுடைப் பேதை யென்றோர் நாண்முற்றும் பிதற்றி னானே.

(இ - ள்.) வனப்பிற்கெல்லாம் கண்ணடியாகிய பாவாய்! நின் கண்ணென்னும் அம்பறாத் தூணியில் நோக்கங்களாகிய அம்பினாலே பழைய புண்ணையுடைய நெஞ்சிடத்தே மாறாமல் எய்யாநின்றாய்; பேதாய்! இங்ஙனம் அம்பு மாறாததொரு தூணியை எவ்விடத்தே பெற்றாயென்று ஒருநாள் முழுதும் பிதற்றினானென்க.

கண்ணடி : [1] விகாரம்; [2] எல்லார்க்கும் அழகு இத்தன்மைத்தென்றுணர்த்துதலின், கண்ணடி உவமையாயிற்று. மார்பத்துழையென்று அத்திற்கு உழையை விரிப்பவே இடப்பொருளுணர்த்தி, அதற்குச் சேர்ந்த நெஞ்சினை யுணர்த்தும்; " அரசனுழையிருந்தான் " (குறள், 638) போல. பிதற்றினானென்றது [3] அவசத்தால். (உ௱உ)

---

காட்டி எனமாறி இயைக்க. காமவல்லியினுடைய உருவுகாட்டி; காட்டி - எழுதி. குளித்து - மறைந்து. ஈன்று - வைத்து. தோள்மேல் தளிரீன்று, முகத்திடைக் குளித்து, நுதலில் சுட்டியாகப் பூப்பவைத்தான் என மாறியியைக்க. சுட்டி - நெற்றிச்சுட்டி. மு : சீவக. 2442; பெருங். 1. 38 : 192-6.

1082. பண் அடிவீழும் தீஞ்சொல் - இசை தோல்வியடைந்து அடியில் வீழ்கின்ற இனிய சொல்லையுடைய. பாவை : குணமாலை; விளி. வனப்பு - அழகு. வனப்பிற்கெல்லாம் கண்ணடியாகிய பாவை என்க. நின் கண்ணென்னும் அம்பறாத்தூணி. அம்பறாத் தூணி தன்னால் - அம்புப்புட்டிலிலுள்ள உன் பார்வையாகிய அம்பினால். ஓவாது - இடையறாமல். எய்தியால் - எய்கின்றாய்; ஆல் : அசை. எங்குப் பெற்றாய் - இவ்வம்பறாத் தூணியை எவ்விடத்தே பெற்றாய். பெண்ணுடைய - பெண் தன்மையையுடைய. பேதை, எங்குப் பெற்றாயென்று பிதற்றினான் என மாறியியைக்க.

(உரை) [1] சீவக. 629, ந. [2] " தெரிவை மார்க்கொரு கட்டளை யெனச் செய்த திருவே " (கம்ப. சித்திரகூடப். 33). [3] அவசம் - மயக்கம்.

1083. திங்கள்சேர் முடியி னானுஞ் செல்வியும் போன்று செம் பொன், இங்குவார் கழலி னானுங் கோதையு மிருந்த போழ்திற், சிங்கவே றெள்ளிச் சூழ்ந்த சிறுநரிக் குழாத்திற் சூழ்ந்தார், அங்கது கண்ட தாதி யையனுக் கின்ன தென்றாள்.

(இ - ள்.) உருத்திரனும் உமையும்போலே கழலினானும் கோதையும் ஒன்றாயிருந்தவளவிலே சிங்கவேற்றை யிகழ்ந்துசூழ்ந்த நரிக்குழாம் போலே அவர்கள் மனையைச் சூழ்ந்தார்; அதுகண்ட சேடி சீவகனுக்கு இங்ஙனம் சூழ்ந்தாரென்றாளென்க. (உ௯௩)

1084. என்றவ ளுரைப்பக் கேட்டே யிடிபட முழங்கிச் செந்தீ, நின்றெரி வதனை யொத்து நீண்முழைச் சிங்க வேறு, தன்றுணைப் பெட்டை யோடு தான்புறப் பட்ட தொத்தான், குன்றிரண் டிருந்த போலுங் குங்குமக் குவவுத் தோளான்.

(இ - ள்.) தோளான், என்று அவள்கூறக்கேட்டுத் தீ வெடித்த லுண்டாக முழங்கி எரியுந்தன்மையையொத்த மனைவியோடே மணவறை யினின்றும் புறப்பட்டவன், சிங்கவேறு தன்றுணையாகிய பெட்டையோடே முழையினின்றும் புறப்பட்ட தன்மையை ஒத்தானென்க.

பெட்டையென்றதற்கு, "எழுந்துவிண் படரும்" (சீவக. 752) என்னும் கவியிலே கூறினாம். இவ்விரண்டு கவியிலும் சீவகற்குச் சிங்க வேறு உவமையும், பகைவர்க்கு நரியுவமையுமாகக் கூறினமையின், அவராற் கட்டலாகாமை யுணர்க. (உ௯௪)

1085. பொன்னரி மாலை தாழப் போதணி கூந்த லேந்திப்
பன்னரு மாலை யாற்குப் பட்டதை யெவன்கொ லென்னப்
பின்னரு மாலை யோராள் பெருநடுக் குற்று நின்றாள்
மன்னரு மாலை நாக மழையிடிப் புண்ட தொத்தாள்.

---

1083. முடியினான் : சிவபெருமான். செல்வி : உமாதேவியார். இங்குதல் : தங்குதல்; சீவக. 763, அடிக்; "இங்குகதிர் முத்தினொடு" (தே. திருஞா. மாகறல், 4). கழலினானும் கோதையும் - சீவகனும் குண மாலையும். அடி. 1-2 : பெருங். 5. 4 : 51-4. சிங்கவேற்றை எள்ளி; எள்ளி - இகழ்ந்து. நரிக்குழாத்தின் - நரியின் கூட்டத்தைப்போல. ஐயனுக்கு : சீவகனுக்கு.

1084. அவள் : தாதி. இடிபட - இடித்தல் உண்டாக. முழைச் சிங்க வேறு - குகையிலுள்ள ஆண்சிங்கம்; முழை கூறியது இல்லறம் பூண்டதைக் குறித்தது; சீவக. 816, ந. குவவு - திரட்சி. தோளான், புறப்பட்டது ஒத்தான் என முடிக்க.

1085. பொன்னரிமாலை கூந்தலில் உள்ளது. கூந்தலைக் கையா லேந்தி. பன்னரும் மாலையாற்கு - ஆராய்தற்கு இயலாத இயல்பினை யுடைய சீவகனுக்கு; மாலை - இயல்பு. பட்டது - உண்டான துன்பம்; ஐ : அசைநிலை. எவன் - யாது; கொல் : அசை. மாலை : குணமாலை.

(இ - ள்.) குணமாலை, இவன்வலியை ஓராளாய் ஆராய்தற்கரிய இயல்பினையுடையாற்குப் பிறந்த துன்பம் யாதுதானென்று யானைமுன்னர் நின்ற நடுக்கமேயன்றிப் பின்னரும் கூந்தலை மாலைதாழவேந்திப் பெரிய நடுக்கமுற்று நின்றவள், [1] மக்கட்டிரளில் நிலைபெறுதற்கரிய இயல்பினையுடைய நாகம் இடிப்புண்டு மக்கட்டிரளிலே நின்ற தன்மையையொத்தாளென்க. (உ௫௬)

1086. கடுகிய விளையர் நோக்குங் கண்ணிய பொருளு மெண்ணி
அடுசிலை யழல வேந்தி யாருயிர் பருகற் கொத்த
விடுகணை தெரிந்து தானை வீக்கற விசித்து வெய்தாத்
தொடுகழ னரல வீக்கிச் சொல்லுமின் வந்த தென்றான்.

(இ - ள்.) அரசனேவுதலிற் கடுகிவந்த இளையர்குறிப்பினையும் அவ்வரசன் யானையைக்கண்டு ஆண்டிறம் களையக் கருதிய காரியத்தையும் தான் எண்ணி, தானையை இனி இறுகாதென்னும்படி விசித்துக் கழலை வீக்கிச் சிலையையேந்திக் கணையைத்தெரிந்து வந்தகாரியம் சொல்லுமினென்றானென்க. (உ௫௭)

1087. (௧) அடிநிழற் றருக வென்றெம் மாணைவேந் தருளிச் செய்தான், வடிமலர்த் தாரி னாய்நீ வருகென வானி னுச்சி, இடியுரு மேற்றிற் சீறி யிருநிலஞ் சுடுதற் கொத்த, கடிமதின் மூன்று மெய்த கடவுளிற் கனன்று சொன்னான்.

1088. (௨) வாளிழுக் குற்ற கண்ணாள் வருமுலை நயந்து வேந்தன், கோளிழுக் குற்ற பின்றைக் கோத்தொழி னடாத்து கின்றான், நாளிழுக் குற்று வீழ்வ தின்றுகொ னந்த தின்டேர், தோளிழுக் குற்ற மொய்ம்ப பண்ணெனச் சொல்லி னானே.

---

ஓராள் - சீவகனது வன்மையை அறியாதவளாகி. பின்னரும் பெருநடுக்குற்று நின்றாள் என இயைக்க. பின்னரும்; உம்மை இறந்தது தழுவியது. மன்னரும் மாலை - மக்களது தொகுதியில் தங்குதற்கு அரிய இயல்பினையுடைய.

(உரை) [1] மக்கட்டிரளென்பது அவாய் நிலையான் வந்தது.

1086. கடுகிய இளையர் - விரைந்துவந்த வீரர். கண்ணியபொருள் - கட்டியங்காரன் கருதிய காரியம். சிலை - வில். கணை தெரிந்து - அம்புகளை ஆராய்ந்து; "தெரிகணை நோக்கி" (கலித். 39 : 22). தானை - ஆடையை. வீக்கு அற விசித்து - இனிமேல் இறுகுதல் இல்லாதபடி கட்டி. நரலக் கழலை வீக்கி; நரல - ஒலிப்ப. வந்தது சொல்லுமின் என்றான்; வந்தது - வந்த காரியத்தை.

1087. அடிநிழல்; "தாவி றுணிழற் றவிர்ந்தன்று லுலகே" (அகநா. கடவுள்.). ஆணைவேந்து : கட்டியங்காரன். வருகென - வருக வென்று இளையர் கூற. வானின் உச்சி - மேகத்தின் உச்சியில். இடி உருமேற்றின் - இடிக்கின்ற உருமேற்றைப் போல. சுடுதற்கொத்த : இது மதிலுக்கு அடை. கடி - காவல். கடவுளின் - கடவுளைப் போல.

1088. கண்ணாள் : விசயை. நயந்து - விரும்பி. வேந்தன் : சச்சந்தன். கோள் இழுக்குற்ற பின்றை - இறந்தபின்பு. கோத்தொழில் - அரச

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) இளையர் தம்மரசனைக் கூறலின், 'அடிநிழல்' என்றார். வடி மலர்த்தாரினாயெனப் புகழ்ந்து பின்னர் வருகவென இரந்துகூறினமை யானும் அவர் கட்ட வந்தவரன்மையுணர்க.

(உ) " இந்நன்னகர்க்குமன்னனே " (சீவக. 689) என முற்கூறிய தனை ஈண்டுங்கூறினானென்க. பிறர்தோளிழுக்குறுதற்குக் காரணமாகிய மொய்ம்பவென்றுமாம். இனி, [1]ஒருதொடராக்காதே விசயை முலையை விரும்பி வேந்தன்பட்டபின்பு கோத்தொழிலை நடாத்துகின்ற கட்டியங் காரன் நாளிழுக்குற்று வீழ்வது இன்றேயென்று கண்டார்கூறும்படி இவன் சொன்னானென்றுமாம்.

(இ - ள்.) சச்சந்தன் கொலையுண்டபின்பு, என்னையொழிய அநங்க மாலை முலையையும்விரும்பி அரசர்தொழிலையும் நடாத்துகின்ற சீவகன் வாழ்நாள் மாளுகின்றது இன்றுபோலேயிருந்தது; அவனைக் கைக் கொண்டுவருகவென்று எம் வேந்து அருளிச்செய்தான்; தாரினாய்! நீ அவனடிநிழலேறப் போதுகவென்று அவர் ஆணையிட்டுக்கூற, அது கேட்டு இடிக்கின்ற உருமேறுபோலே முழங்கி நிலத்தைப் பறந்துதிரிந்து சுடுதற்குப்பொருந்தின முப்புரத்தையும் எய்த கடவுளைப்போலே கோபித்து ஒருவார்த்தைசொன்னான். அது யாதெனின், நந்தனே! மொய்ம்பனே! இனிக் கட்டியங்காரன் தோளிழுக்குற்ற; நீபோய்த் தேரைப்பண்ணென்று சொன்னானென்க. (உகஎ-அ)

1089. வேந்தொடு மாறு கோடல் விளிகுற்றார் தொழில தாகும்
காய்ந்திடு வெகுளி நீக்கிக் கைகட்டி யிவனை யுய்த்தால்
ஆய்ந்தடு மழற்சி நீங்கு மதுபொரு ளென்று நல்ல
சாந்துடை மார்பன் றாதை தன்மனத் திழைக்கின் றானே.

னது காவற்றொழிலை. நடாத்துகின்றான் : கட்டியங்காரன். நாள் - ஆயுள். இழுக்குற்று - அழிந்து. நாளிழுக்குறுதல் : " நாளுற்றுலந்தான் " (சீவக. 455). நந்த - நந்தட்டனே; விளி. திண்டேர் பண்ணெனச் சொல்லி னான்; பண்ணுதல் - ஏறுதற்கேற்ப அமைத்தல்.

(உரை) [1] இப்பொருளே சிறப்புடையது.

1089. வேந்து - கட்டியங்காரன். விளிகுற்றார் - அழிதலுற்றவரு டைய. கைகட்டி - சீவகன் கையைப் போர்த்தொழில் செய்யாதபடி தடுத்து. இவனை - சீவகனை. உய்த்தால் - கட்டியங்காரனுடைய வீரர் களோடு போகவிட்டால். ஆய்ந்து - கட்டியங்காரன் ஆராய்ந்து. அடும் அழற்சி நீங்கும் - சீவகனை வருத்தும் கோபத்தினின்றும் தான் நீங்கு வான். அது பொருள் - அதுவே காரியம். மார்பன் தாதை - சீவக னுடைய தந்தையாகிய கந்துகன். இழைக்கின்றான் - நுண்ணிதாக ஆராய்ந்து நின்றான். மனத்திழைக்கின்றான் : " இழைத்துணர்ந் தீண் டிய கேள்வியவர் " (குறள், 417); " மாதர் தன்மனத் திழைப்ப " (பெருங். 3. 6 : 122)

(இ - ள்.) நந்தட்டன்போனபின்பு, கந்துகன் இவன்படைக் கோலத்தைக் கண்டு அரசனுடனே மாறுபடுதல் கெடுதலுற்ருர் தொழிலாம்; யாம் அது செய்யாது இவன் வெகுளியை நீக்கிக் கையைப் போர்த் தொழில் செய்யாதபடி விலக்கி இவனை இவர்களோடே போகவிட்டால் இவன் செய்தவற்றை நன்ருய் ஆராய்ந்து இவனை வருத்தும் வெகுளியைத் தானீங்கும்; அதுவே காரியமென்று தன்மனத்தே சூழாநின்ருனென்க.

கைகட்டுதலை, [1] 'பாம்பைவாயைக்கட்டிற்று' என்ருற்போலக் கொள்க. துறவின்கண்ணே சீவகன் அறங்கேட்ட பின்னர், "தொல்லையெம் பிறவியுந் தொகுத்த பாவமும், வல்லையே பணிமின மடிகள்" (சீவக. 2849) என்று சாரணரைக்கேட்க, அவரும் பாவங்கூறுகின்றவர், "தாமரைத், தடமுறை வீர்க்கிவை தடங்க ளல்லவே, வடமுலை யெனநடாய் வருடிப் பாலமு, துடனுறீ இ யோம்பினுர்" (சீவக. 2853) என்று முலைமேலே அணைத்துக் கொண்டு வளர்த்தார்களென்றுகூறி, பவணமாதேவன் தன்மகன் அசோதரனை நோக்கிக் கூறுகின்ருனுகத் தாம்கூறுகின்ற காலத்தும், "கிளைப்பிரி வருஞ்சிறை யிரண்டுங் கேட்டியேல்" (சீவக. 2867) என்றும், "பூவைகிளி தோகைபுண ரன்னமொடு பன்மா, யாவையவை தங்கிளையி னீங்கியழ வாங்கிக், காவல் செய்து வைத்தவர்க டங்கிளையி னீங்கிப், போவர்" (சீவக. 2875) என்றும் காவல் செய்து வைத்தாரென்றுங் கூறினமையானும், "மன்ன பிரித்தாய் பிரிந்தாய் சிறை வைத்ததனுற், பொன்ரை மார்ப சிறைப்பட்டனை போலும்" (சீவக. 2890) என்று தாம் கூறினமையானும், சாரணர்பாவங் கூறுகின்றவிடத்து அன்னப்பார்ப்பைக் கட்டினுரென்று கூருமையின், ஈண்டுக் கட்டுண்ணவேண்டும்பாவம் ஆண்டின்மையுணர்க. பிறரும் இச்சமயத்தார், "சிறுகா பெருகா முறைபிறழ்ந்து வாரா" (நாலடி. 110) என்றதனுலுமுணர்க. அன்றியும், தசகுமாரசரிதத்துள் அன்னப் பார்ப்பை நூலிட்டுக் காலைக்கட்டின பாவத்தாற் பின்பு [2] வெள்ளிவிலங்கு காலிற்கிடந்ததென்று ஆசாரியதண்டி கூறியவாற்ருனுமுணர்க. அன்றியும் அரசன் கைக்கொண்டுவரச் சொன்னவனை அவரும் அவன் கூறியவாறே கைக்கொண்டுபோயினுரென்னவே வேண்டுதலானும், அவர்கள் அவனை, "வடிமலர்த் தாரி னுய்நீ வருக" (சீவக. 1087) எனப் புகழ்ந்து இரந்துகொண்டமையானும், "சிங்கவே றெள்ளிச் சூழ்ந்த சிறுநரிக் குழாத்திற் சூழ்ந்தார்" (சீவக. 1083) என்றும், "அடுபுலி கண்ட மான் போ லாறல வாயி னுரே" (சீவக. 1137) என்றும், "மின்னிலங் கெயிற்று வேழம் வேழத்தாற் புடைத்து" (சீவக. 1154) என்னுங்கவியில் "என்னையிக் கிருமிகொன்று" என்றுங்கூறியிருத்தலானும், "நூபுரந் திருத்திச் சேந்த நுதிவிர னைந்த" (சீவக. 1111) என்றதற்குத் தோளை

(உரை) [1] பாம்பை, இரையையுண்ணுதபடி செய்தல். [2] தன்னுடைய முற்பிறப்பில், ஒரு முனிவர் அன்னப்பறவை வடிவங்கொண்டிருந்த பொழுது அவர்காலைத் தாமரைநூலாற் கட்டிய பாவத்தால் மகததேசத் தரசன் குமாரனுகிய இராசவாகனனென்பவன், மாளவ தேசத்தரச

யன்றி விரலைக்கட்டினுரென்றுங் கூறவேண்டுதலானும், [3] ஆசிரியன் கூற்றும் [4] குரவர்கூற்றும் மனத்தைப் போர் செய்யாமற்பிணித்தலின், இளையர் காவல்செய்து கொண்டுபோயினுரென்றலே தேவர்க்குக் கருத்தென்றுணர்க. "ஊன்பிறங் கொளிறும் வேலா ஞேர்த்துத்த னுவாத்தி சொல்லாற், ருன்புறங் கட்டப் பட்டு" (சீவக. 1090) என்றும், "ஈன்ற தாய் தந்தை வேண்ட விவ்விட ருற்ற தென்ருற், ரேன்றலுக் காண்மை குன்ரு தென்றசொல் லிமிழிற் பூட்டி" (சீவக. 1091) என்றும், தேவர் மனத்தை இறுகப்பிணித்தமைதோன்ற, 'கட்டி' என்றும், 'பூட்டி' என்றும் செய்யுள்செய்தமைபற்றி, [5] கந்தியாரும் இடையிடையே பாடியிட்ட செய்யுட்களிலும் அப்பொருள்தரக் கட்டியென்று செய்யுள்செய்தாரென்று உணர்க. அன்றியும் சிறைசெய்தலென்னுஞ் சொற்குக் காவலிடுதலே பொருளாமென்று தேவர் தாமே காவல்செய்து வைத்தவர்கள் என்று கூறியவாற்ருனும் கட்டலென்னுஞ்சொற்கு மனத்தை இறுகப்பிணித்தலென்று பொருள் கொள்க. (உ௬௯)

1090. ஊன்பிறங் கொளிறும் வேலா ஞேர்த்துத்த னுவாத்தி சொல்லாற், ருன்புறங் கட்டப் பட்டுத் தன்சினந் தணிந்து நிற்பத், தேன்பிறங் கலங்கன் மாலைச் சுநந்தையுந் துணைவன் ருனும், கோன்புறங் காப்பச் சேறல் குணமெனக் கூறி ஞரே.

புறந்தான் - புறப்பொருளாகிய வீரந்தான்.

**(இ - ள்.)** அங்ஙனம் கோபித்தவேலான், தான் ஆசிரியனுக்கு நேர்ந்த நிலைமையையோர்ந்து அவன்சொல்லாலே வீரந்தான் பிணிப்புண்ணப்பட்டுத் தன் சினம் ஆறிநின்ற அளவிலே அவற்கு அங்ஙனமிழைக்கின்ற கந்துகனும் சுநந்தையும் அரசன் காப்ப ஒழுகுதல் நமக்குக் குணமாவதென்று கூறினுரென்க.

---

னுடைய குமாரியாகிய அவந்திசுந்தரி யென்பவளோடு சேர்ந்திருக்கையில் வெள்ளிவிலங்கைப் பூண்டான். [3] ஆசிரியன் : அச்சணந்தி முனிவன். [4] குரவர் : கந்துக்கடனும் சுநந்தையும். [5] கந்தியாரென்பவர் தமிழ்ப்புலமை வாய்ந்த ஒருபெண்பாலார். இப்பெயர் ஆரியாங்கனைகளுக்குப் பொதுப்பெயராகவும் வழங்கும்; "மிகைபடு பொருளை நகைபடு புன்சொலிற், றந்திடை மடுத்த கந்திதன் பிழைப்பும்" (பரிபாடல், உரைச் சிறப்புப்பாயிரம்)

1090. வேலான் : சீவகன். ஓர்த்து=ஓர்ந்து - நுண்ணிதாக அறிந்து. உவாத்தி - ஆசிரியன்; உபாத்தியாயன் என்னும் வடமொழிச் சிதைவு; "ஆரண வுவாத்தி" (மணி. 13 : 4, 79). உவாத்தி...... கட்டப்பட்டு; "உவாத்தி யாதலி னுறுதியு மதுவென" (பெருங். 1. 44 : 131). புறங்கட்டப்பட்டு - தன் வீரம் பிணிக்கப்பட்டு. தேன் பிறங்கு - வண்டுகள் விளங்கிய. அலங்கல்மாலை - அசைதலையுடைய

முன்னர் அகப்பொருளை நிகழ்த்தினவன் பகைவரைக்கண்டு புறப்பொருள்நிகழ்த்தக் கருதியதனை ஆசிரியன்கூற்று விலக்கிற்றென்றார். அச்சொல் அரியதொன்றனை விலக்கிற்று. (உ௪௦)

1091. ஈன்றதாய் தந்தை வேண்ட விவ்விட ருற்ற தென்றாற்
றோன்றலுக் காண்மை குன்று தென்றசொல் லிமிழிற் பூட்டி,
மூன்றனைத் துலக மெல்லா முட்டினு முருக்கு மாற்றல்,
வான்றரு மாரி வண்கை மதவலி பிணிக்கப் பட்டான்.

(இ - ள்.) மூன்றாகியவுலகமனைத்தும் வந்துமுட்டினும் அவற்றை யெல்லாங்கெடுக்குமாற்றலையும் வண்கையினையுமுடைய மதவலி, இவ் விடருற்றது பெற்ற தாயும் தந்தையும் வேண்டிக்கொள்ளவாயிருந்த தென்று உலகங்கூறினால் நினக்கு ஆண்மைகுன்றுதென்று அவர் கூறிய சொல்லாலே கயிறுபோலே பூட்டிப் பிணிக்கப்பட்டானென்க.

[1] இன், உவமப்பொரு. அச்சொல் கயிற்றாற்பிணித்தாற்போல மனத்தைப் பிணித்தது. ஈண்டு இவர் கட்டிற்றிலரெனவே [2] இளையரான் மேற்கட்டலாகாமையுமுணர்க. (உ௪க)

(வேறு)

1092. குழலுடைச் சிகழிகைக் குமரன் றோளிணை
கழலுடை யிளையவர் கச்சின் வீக்கலின்
அழலுடைக் கடவுளை யரவு சேர்ந்தென
விழவுடை முதுநகர் விலாவிக் கின்றதே.

---

பூமாலை. துணைவன் : கந்துக்கடன். கோன் : கட்டியங்காரன். குணம் - நமக்கு நன்மையாகும்.

1091. தாய்தந்தை - சுநந்தையும், கந்துகனும். இடர் - கட்டியங் காரனுடைய ஆணைக்கடங்கியதுபோல் அவனிடம் சீவகன் செல்லுதல். என்றால் - என்று உலகத்தவர் சொன்னால். இவ்விடருற்றது தாய்தந்தை வேண்ட என்றால் எனமாறியியைக்க. தோன்றலுக்கு - சீவகனுக்கு. என்ற சொல் - என்று தாய்தந்தையர் கூறிய மொழியாலே. இமிழிற் பூட்டி - கயிறுபோலே பூட்டி. மூன்றாகிய உலகமனைத்தும் முட்டினும் எனமாறியியைக்க; முட்டினும் - எதிர்த்தாலும். எல்லாம் முருக்கும் ஆற்றல் - அவற்றையெல்லாம் அழிக்கும் வன்மையையுடைய. மதவலி : சீவகன்; சீவக. 519. அடிக். மதவலி இமிழிற் பூட்டிப் பிணிக்கப் பட்டான் என்க.

(உரை) [1] இமிழின் என்பதில் உள்ளது. [2] இளையர் - கட்டியங் காரனுடைய வீரர்.

1092. குழலுடைச் சிகழிகைக்குமரன் - குழற்சி பொருந்திய முடியினையுடைய சீவகன். குழலுடைச் சிகழிகை : பெருங். 1. 35 : 206-7; சூளா. சுயம். 240. இளையவர் - வீரர்கள். வீக்கலின் - கட்டுதலினால்.

(இ - ள்.) குழற்சியையுடைத்தாகிய முடியினையுடைய குமரன் றோளிணைகளைக் குரவர் அங்ஙனங் கச்சிட்டுக்கட்டினாற்போலப் போர்த் தொழில் செய்யாதபடி விலக்கினார்களாக, வந்த இளையவர் ஞாயிற்றை அரவுசேர்ந்ததென்னச்சேர்தலின், நகரம் அழாநின்றதென்க.

[1] இன், உவமப்பொருு. பாம்பு ஞாயிற்றை ஒளிகுறையும்படி மறைத்தாற்போல இவரும் இவனொளிகுறையும்படி சிறையாகக் கைக் கொண்டாரென்க. மனத்தை யிறுகப்பிணிக்கவே தோளைப்போர்த் தொழிலை விலக்கிற்றும். (உசஉ)

## (வேறு)

1093. தோளார் முத்துந் தொன்முலைக் கோட்டுத் துயன்முத்தும்
வாளா ருண்கண் வந்திழி முத்தும் மிவைசிந்தக்
காளாய் நம்பி சீவக சாமி யெனநற்றாய்
மீளாத் துன்ப நீள்கடன் மின்னின் மிசைவீழ்ந்தாள்.

தொன்மையைத் தோளின்முத்தோடும் முலையின்முத்தோடுங்கூட் டுக. மீளா - மீண்டு. துன்பமாகிய கடலென்றார், அழுகின்ற மக்கட் டொகுதியை.

(இ - ள்.) சுநந்தை, காரியத்தின்மேற்சென்ற கருத்துமீண்டு அன்பு தோற்றுதலின், காளாய்! நம்பி! சீவகசாமியெனக்கூறிப் பழைய முத்துக்களும் கண்ணாகிய கடலிற்படுகின்ற புதிய முத்துக்களுமாகிய இவைசிந்தக் கடலின்மேலே மின்போல வீழ்ந்தாளென்க. (உசங)

தோளிணையைக் கச்சினால் வீக்கல்; சீவக. 16. அழலுடைக் கடவுள்: சூரியன். அரவு - கேது வென்னும் பாம்பு. சேர்ந்தென - சேர்ந்ததென்னக் கட்டுதலினால். விழவு - திருவிழா. நகர் விலாவிக்கின்றது - நகரத்திலுள்ள மக்கள் அழுதனர்; "விலாவித் தன்றால் விழவணி நகரென்" (பெருங். 1. 47 : 263). அழலுடைக்......சேர்ந்தென. சீவக. 1138; "திங்க ளரவுறிற் றீர்க்கலா ராயினும், தங்காதல் காட்டுவர் சான்றவர்" (கலித். 140 : 17 - 8); "அங்கண்மதிய மரவின்வாய்ப் பட்டெனப், பூசல் வாயாப் புலம்புமனைக் கலங்கி, ஏதின் மாக்களு நோவர் தோழி...நலக்கே" (தொல். அகத். 3, ந. மேற்.)

(உரை) [1] கச்சின் என்பதிலுள்ளது.

1093. தோளார்முத்தும் - தோளிலணியும் மகரமீன் வடிவமாகச் செய்யப்பட்ட ஆபரணத்தின் வாயினின்றும் தொங்கும் பலவடங்களாகிய முத்தின் தொகுதியும்; சீவக. 170, 231, அடிக். கோடு - சிகரத்தில். துயல் - அசைகின்ற. கண்வந்திழிமுத்தும் - கண்களினின்றும் தோன்றி விழுகின்ற நீராகிய முத்துக்களும். முத்தும் ஆகிய இவை. நற்றாய்: சுநந்தை. மீளா - கட்டியங்காரனிடத்துச் சீவகனை அனுப்ப எண்ணிய கருத்து அன்பின் மிகுதியால் மீளப்பெற்று. துன்பமாகிய கடல்மிசை என இயைக்க. மின்னின் - மின்னலைப்போல. நற்றாய், காளாய், நம்பி, சீவகசாமியென, மீண்டு சிந்த, கடல்மிசை மின்னின் வீழ்ந்தாள் என்க.

1094. பாலா ராவிப் பைந்துகி லேந்திப் படநாகம்
போலா மல்குற் பொற்றொடி பூங்கட் குணமாலை
ஏலா தேலா தெம்பெரு மானுக் கிஃதென்னா
நூலார் கோதை நுங்கெரி வாய்ப்பட் டதுவொத்தாள்.

(இ - ள்.) துகிலையேந்தி நாகத்தினது படம்போலே வளரும் அல்குலையுடைய பொற்றொடியாகிய குணமாலை, என்னுயிரைத்தந்த நுமக்கு அதனால் இத்தீங்குவருதல் ஏலாதேலாதென்றுகூறி மாலை எரியிடத்தே வீழ்ந்ததனை யொத்தாளென்க.

நுங்குதல் - விழுங்குதல். (உ௪௪)

(வேறு)

1095. எரிதவழ் குன்றத் துச்சி யிரும்பொறிக் கலாப மஞ்ஞை
இரிவன போன்று மாடத் தில்லுறை தெய்வ மன்னார்
பரிவுறு மனத்தி னோடிப் பட்டதை யுணர்ந்து பொற்றார்
அரியுறழ் மொய்ம்ப வோவென் றாகுலப் பூசல் செய்தார்.

(இ - ள்.) மஞ்ஞை நெருப்புப்பரக்கின்ற மலையிற் கெட்டோடுவன வற்றை யொத்துத் தெய்வமன்னார், வருத்தமுற்ற மனத்தாலே மாடத்தே யோடி உணர்ந்து, மொய்ம்பனே! ஓவென்று வருத்தத்தையுடைய ஆரவாரத்தைச் செய்தாரென்க. (உ௪௫)

---

1094. பாலார் ஆவிப் பைந்துகில் - பாலில் எழுந்த ஆவியைப் போன்ற மெல்லிய ஆடை; சீவக. 541, 2395; "பானீர் நெடுங்கடற் பனிநா ளெழுந்த, மேனீ ராவியின் மெல்லி தாகிய, கழுமடிக் கலிங்கம்" (பெருங். 2. 7 : 154-6). நாகப்படம் போலாம் என மாறியியைக்க. அல்குலையுடைய பொற்றொடியாகிய குணமாலை. ஏலாது - தகாது. எம் பெருமானுக்கு - எம்தலைவராகிய நுமக்கு; என்றது சீவகனை. இஃது - இத்துன்பம் வருதல். எம்பெருமானுக்கு இஃது ஏலாது ஏலாதென்னா எனமாறியியைக்க. நூலார் கோதை - நூலிற் கோக்கப்பட்ட பூமாலை. நுங்கு எரிவாய்ப்பட்டது - விழுங்குகின்ற எரியிலே வீழ்ந்ததனை.

1095. பொறி - புள்ளிகளையுடைய. மஞ்ஞை - மயில். இரிவன - கெட்டு ஓடுவனவற்றை. இல்லுறை தெய்வமன்னார் - வீட்டுத் தெய்வம் போன்ற பிறமகளிர்; சீவக. 354, அடிக்; 1527. பரிவு - வருத்தம். தெய்வமன்னார் பரிவுறு மனத்தால் மாடத்தே ஓடி என மாறியியைக்க. பட்டதை - நடந்த செய்தியை. அரி உறழ் மொய்ம்ப - சிங்கம்போன்ற வன்மையுடையோய். பொற்றாரையும் மொய்ம்பையுமுடையான் : சீவகன். ஓ; இரக்கக் குறிப்பு. ஆகுலப்பூசல் - வருத்தத்தையுடைய ஆரவாரத்தை.

1096. கங்கையின் சுழியிற் பட்ட காமரு பிணையின் மாழ்கி
அங்கவர்க் குற்ற துள்ளி யவலநீ ரழுந்து கின்ற [மைப்
குங்குமக் கொடியோ டேந்திக் கோலம்வீற் றிருந்த கொம்
பொங்கிள முலையி னார்க்குப் புரவல னிதனைச் சொன்னான்.

(இ - ள்.) புரவலன், அவ்விடத்துச் சுநந்தை முதலாயினார்க்குற்ற துயரத்தை நினைத்துப் பிணையின்மாழ்கி அவலநீரிலே அழுந்துகின்ற முலையினார்க்கு இதனைக் கூறினானென்க.

முலையினார் - புறத்துமகளிர். வந்த இளையரைக் கொல்லாது விடுதலிற் புரவலனென்றார். (உசக)

1097. (க) கட்டுயி லனந்தர் போலக் கதிகளுட் டோன்று மாறும், விட்டுயிர் போகு மாறும் வீடுபெற் றுயரு மாறும், உட்பட வுணர்ந்த யானே யுள்குழைந் துருகல் செல்லேன், எட்பக வனைத்து மார்வ மேதமே யிரங்கல் வேண்டா.

1098. (உ) நன்மணி யிழந்த நாகர் நல்லிளம் படியர் போல, இன்மணி யிழந்து சாம்பி யிருநில மிவர்க ளெய்த, மின்னணி மதியங் கோள்வாய் விசும்பிடை நடப்ப தேபோற், கன்மணி யுமிழும் பூணான் கடைபல கடந்து சென்றான்.

இவையிரண்டும் ஒருதொடர்.

---

1096. பிணையின் மாழ்கி - பெண்மானைப் போல வருந்தி. அவர்க்கு உற்றது உள்ளி - சுநந்தை முதலாயினார்க்கு உற்ற துயரத்தை நினைத்து. அவலநீர் - துன்பக்கடலிலே. குங்குமச்சாந்தையும், எழுதப்பட்ட கொடியுருவத்தையும் ஏந்தி என்க. கோலம் - வீற்றுத் தெய்வம். கொம்மை - பெருமையையுடைய. முலையினார்க்கு : பிறமகளிர்க்கு. புரவலன் : சீவகன். புரவலன், அவர்க்குற்றதுள்ளிப் பிணையின்மாழ்கி அவலநீர் அழுந்துகின்ற முலையினார்க்கு இதனைச் சொன்னான் என மாறி யியைக்க.

1097. கட்டுயில் அனந்தர்போல - கண்ணுறக்கமும், விழிப்பும் போல; அனந்தர் - விழிப்பு. கதி - பிறப்பு. விட்டு - உடலைவிட்டு. கட்டுயில்போல உயிர்போகுமாறும் அனந்தர்போலக் கதிகளுள் தோன்றுமாறும் என மாறிப் பொருள் கொள்க ; "உறங்கு வதுபோலுஞ் சாக்காடுறங்கி, விழிப்பது போலும் பிறப்பு" (குறள், 339). வீடு - மோட்சம். உட்பட - நெஞ்சிலே பொருந்தும்படி. உள்குழைந்து - மனம்வருந்தி. உருகல் செல்லேன் - உருகேன். எட்பகவனைத்தும் - எள்ளின் பாதியளவும் ; "எட்பக வன்ன சிறுமைத்தே யாயினும்" (குறள், 889). ஆர்வம் ஏதமே - ஒருபொருள் மேல் ஆசை கொள்ளுதல் குற்றம் தரும் செயலாகும்.

1098. மணி - மாணிக்கம். இளம்படியர் - இளமைக்குத்தக்க வடிவத்தையுடைய மகளிர் ; "இளம்படியர் பாராட்ட" (சூளா. துறவு. 213) "இளம்படி யிவளுக்கு" (பெரிய திரு. 2. 7 : 2). மணியிழந்த நாகர் : சீவக. 1508 ; "அருமணி யிழந்த நாகம் போன்றதும்" (சிலப். 13 : 58); "நன்மணி யிழந்த நாகம் போன்றவள்", "மன்னவன் மகனுக்

(உ) படியர் - படிவத்தையுடையார்.

(இ - ள்.) பூணான், மணியையிழந்த நாகர்மகளிரைப்போலே சுற்றத்தார் சீவகனையிழந்து கெட்டு நிலத்தைச்சேர, அதுகண்டு, கண்ணுறக்கமும் உணர்ச்சியும்போலே உயிர்போம்படியும் பிறக்கும்படியும் வீடுபெறும்படியும் நெஞ்சிலேயுறும்படி உணர்ந்த யான் உருகுதலிற்செல்லேன் ; எள்ளில் ஒரு பாதியளவும் பொருள்கண்மேலே வேட்கைநிகழ்தல் ஒருவர்க்கு ஏதமே செய்யுமாதலின், அவ்வார்வத்தான் இரங்கல்வேண்டாவெனக் கூறிக் கடைபல கடந்து விசும்பிடையிற் கோள்களிடத்தேயுறையும் ஒளியணிந்த மதியம் அதனைக் கைவிட்டு நிலத்தே நடப்பதுபோலப் போந்தானென்க.

[1] கோள் - பரிவேடிப்புமாம் ; வந்தவர்கள்சூழ நடுவே போவதற்குவமை. பிடியரும் பாடம். (உசஎ - அ)

## (வேறு)

1099. வெந்த னம்ம னம்மென வெள்ளை நோக்கின் முள்ளெயிற்
றந்து வர்ப்ப வளவா யம்ம ழலை யின்சொலார் [லுள்
பந்து பாவை பைங்கழங்கு பைம்பொன் முற்றில் சிற்றி
நொந்து வைத்து நூபுரம் மொலிப்ப வோடி நோக்கினர்.

வெள்ளைநோக்கு - உள்ளே ஒன்றும் கொள்ளாதநோக்கு. முற்றில் - சிறு சுளகு.

(இ - ள்.) நோக்குமுதலியவற்றையுடைய பேதையர் தம்மைக்கண்டார் இவர்கண்மனம் வெந்தனவென்று கூறும்படி நொந்து பந்துமுதலியவற்றைச் சிற்றிலிலேவைத்து ஓடி நோக்கினரென்க. (உசகூ)

---

குற்றது பொருஅ, னன்மணி யிழந்த நாகம் போன்று'' (மணி. 7 : 131 ; 25 : 194-5). இல்மணி - வீட்டிலுள்ள மணிபோன்ற சீவகனை. சாம்பி - கெட்டு. இவர்கள் நிலமெய்த - சுற்றத்தவர்கள் பூமியில்விழ. மின்னணி மதியம் - ஒளியையணிந்த சந்திரன். கோள்வாய் - கிரகங்களிடத்தே ; கோள் - ஊர்கோளுமாம். கல்மணி உமிழும் பூணான் - கல்லிற்பிறந்த இரத்தினங்களின் ஒளியைச் சிந்துகின்ற ஆபரணத்தையுடையவன் ; சீவகன். பல கடை - பலவாயில்களை. சீவகனுக்கு மதியமும், அவனைச்சூழ்ந்து சென்ற வீரர்களுக்குக் கோள்களும் உவமைகள்.

(உரை) [1] பெருங். 2. 9 : 167-9.

1099. வெள்ளை நோக்கின் - உள்ளே ஒன்றும் கொள்ளாத பார்வையையுடைய ; சீவக. 2529 ; ''வெள்ளை நோக்கமொடு விரும்புபு விதும்பிப், பவழப் பாவையும் பந்துங் கிடைஇ'' (பெருங். 2. 15 : 100-101). முள்ளெயிறு : சீவக. 768, அடிக் ; பெருங். 1. 33 : 177, 35 : 172, 2. 14 : 56, 4. 5 : 16. துவர்பூசிய பவளம்போன்ற வாய். நோக்கினையும், எயிற்றையும், வாயையுமுடைய மழலை யின்சொலார் - பேதை மகளிர்.

1100. மல்லி கைம்ம லிந்த மாலை சோர வார்ந்த குண்டலம்
வில்லி லங்க மின்னுக்கோட்ட வீணை விட்டு வெய்துராய்
ஒல்லெனச் சிலம்ப ரற்ற வீதி மல்க வோடினார்
சில்சு ணாங்கி ளம்முலைச் செழும்ம லர்த்த டங்கணார்.

(இ - ள்.) முலையிணையுடைய மலர்த்தடங்கண்ணார், மாலைசோரக் குண்டலம் ஒளியைவீசக் கோட்டவாகிய யாழைக் கைவிட்டுப் பரந்து சிலம்பரற்ற வீதி நிறையும்படி ஓடினாரென்க. (உ௬0)

1101. நெய்த் தலைக்க ருங்குழ னிழன்றெ ருத்த லைத்தர
முத்த லைத்தி ளம்முலை முகஞ்சி வந்த லமரக்
கைத்தலங் கடுத்த டித்த பந்து நீக்கி வந்தவண்
மைத்தலை நெடுந்த டங்கண் மங்கை யர்ம யங்கினார்.

நெய் - புழுகு. சிவந்து - சிவக்க. கடுத்து - கடுக்க.

(இ - ள்.) மங்கையர், குழல் ஒளியைவீசிக் கழுத்திலேயலைய முலை முகம் சிவக்க முத்துஅலைத்தசையக் கைகடுக்க விசையோடே யடித்த பந்தை நீக்கி அவ்விடத்தேவந்து மயங்கினாரென்க. (உ௬௧)

---

முற்றில் - சிறுசுளகு; "நுளைச்சியர், முற்றி லார முகந்து" (கம்ப. நாட்டுப். 29). "முற்றிலைப் பந்தைக் கழங்கை" (திருவேங்கடத்தந்தாதி, 97). சிற்றில் - சிறுவீடு. பந்துமுதலியவற்றைச் சிற்றிலில் வைத்து என இயைக்க. நூபுரம் - சிலம்பு. மழலையின்சொலார், வெந்தன மனமென நொந்து சிற்றிலுள் வைத்து ஓடி நோக்கினார் என்க.

1100. மலிந்த - நிறைந்த. சோர - சிந்திட; வாடவெனினுமாம். வில்விலங்க - ஒளியை வீச. மின்னுக்கோட்ட வீணை - ஒளிபொருந்திய கோடு என்னும் உறுப்பிணையுடைய வீணையை. வெய்து உராய் - விரைவாகப் பரந்து. ஒல்லென : ஒலிக்குறிப்பு. அரற்ற - ஒலிக்க. மல்க - நிறையும்படி. சில்சுணங்கு - சிலவாகிய தேமல்களையுடைய. முலையிணையுடைய தடங்கணார் ஓடினார்; தடங்கணார் : பெதும்பைப் பருவத்து மகளிர்.

1101. நெய்த்தலைக் கருங்குழல் - புழுகைத் தன்னிடத்தேயுடைய கரிய கூந்தல். நிழன்று - ஒளியை வீசி. எருத்து அலைத்தர - கழுத்திலே அலைய. முத்து அலைத்து அலமர - முத்துமாலை அசைந்து ஒலிக்க. சிவந்து - சிவக்க; எச்சத்திரிபு. கடுத்து - கடுக்க; எச்சத்திரிபு; வலியுண்டாகும்படி என்றவாறு. பந்தை நீக்கி. அவண் வந்து - சீவகன் செல்லுமிடத்தே வந்து. மைத்தலை - மையைத் தன்னிடத்தே உடைய. மங்கையர் : மங்கைப்பருவத்து மகளிர். மயங்கினார் - வருந்தினார்கள்.

1102. கோதை கொண்ட பூஞ்சிகை கொம்மை கொண்ட வெம்முலை, மாது கொண்ட சாயலம் மடந்தை யர்ம னங்கசிந், தோத முந்து குப்பபோ லுண்கண் வெம்ப னியுகுத், தியாது செய்க மையவென் றன்பு மிக்க ரற்றினர்.

(இ - ள்.) முடிமுதலியவற்றையுடைய மடந்தையர், மனமுருகிக் கடலின் முத்துச் சிந்துவனபோலே கண்ணீரையுகுத்து, ஐயனே! யாங்கள் யாது செய்வேமென்று அவற்கு அன்புற்று அழுதாரென்க. (உ௬உ)

1103. செம்பொ னோலை வீழவுஞ் செய்க லங்கள் சிந்தவும்
அம்பொன் மாலை யோடசைந் தவிழ்ந்து கூந்தல் சோரவும்
நம்ப னுற்ற தென்னெனு நாட கம்ம டந்தையர்
வெம்பி வீதி யோடினர் மின்னி னன்ன நுண்மையார்.

(இ - ள்.) மின்னினையொத்த நுண்மையாராகிய நாடகமடந்தையர், நம்பனுற்றது என்னென்று வெம்பி, வீழவும் சிந்தவும் கூந்தல் மாலை யோடே அவிழ்ந்து அசைந்து சோரவும் வீதியிலே ஓடினரென்க. (உ௬௩)

1104. பூவ லர்ந்த தாரினன் பொற்பு வாடு மாயிடிற்
போவு டம்பு வாழுயிர் பொன்று நீயு மின்றெனு
வீக லந்த மஞ்ஞைபோல் வேனெ டுங்க ணீர்மல்க
ஆகு லத்த ரிவைய ரவ்வ யிற துக்கினர்.

1102. கோதை கொண்ட பூஞ்சிகை - பூமாலையைக் கொண்ட அழகிய கூந்தல்; சிகை - கூந்தல். கொம்மை - பெருமை; வட்டமுமாம். மாது கொண்ட - காதலைக்கொண்ட; மாது - காதல்; மாதர் என்னும் உரிச்சொல்லின் விகாரம்; சீவக. 356, அடிக். சிகையையும், முலையையும், சாயலையும் கொண்ட மடந்தையர். கசிந்து - உருகி. ஓதம் முத்து உகுப்ப போல் - கடலின் முத்து சிந்துவனபோல. உண்கண் - மையுண்ட கண்களினின்றும். வெம்பனி - வெம்மையையுடைய நீரை. செய்கம் - செய்வேம். அரற்றினர் - அழுதார்கள்.

1103. ஓலை - தோடு. செய்கலங்கள் - தொழிலழகுபெறச் செய்யப்பட்ட ஆபரணங்கள். அவிழ்ந்து அசைந்து என மாறுக. நம்பன்: சீவகன். நாடகம் மடந்தையர்; மகரவொற்றுச் சந்தம் நோக்கி விரிக்கப் பெற்றது. வெம்பி - மனம் வெதும்பி. நுண்மையாராகிய நாடக மடந்தையர் நம்பனுற்றது என்னென்று வெம்பி, வீழவும், சிந்தவும், சோரவும் ஓடினர் என்க. மடந்தையர்: மடந்தைப் பருவத்து மகளிர்.

1104. தாரினன்: சீவகனுடைய. பொற்பு வாடுமாயிடின் - அழகு கெடுமானால். உயிரே! நீ போ, உடம்பே! நீ இன்று பொன்று என்க. வீ கலந்த மஞ்ஞைபோல் - துன்பம் கொண்ட மயிலைப்போல. ஆகுலம் - துன்பத்தையுடைய. அரிவையர்: அரிவைப்பருவத்து மகளிர். அதுக்

(இ - ள்.) கேடுகலந்த மயில்போலே ஆகுலத்தையுடைய அரிவையர், கண்ணீர் மல்காநிற்க, தாரினுன் பொற்புக்கெடுமாயின், வாழுயிரே! நீ போவாயாக; உடம்பே! நீயும் இன்று பொன்றுவாயாகவென்று கூறி வயிற்றிலே அடித்துக்கொண்டாரென்க. (உ௫௪)

1105. தேன்மலிந்த கோதை மாலை செய்க லம்மு குத்துராய்க்
காண்மலிந்த காம வல்லி யென்ன தன்ன ராயரோ
பான்மலிந்த வெம்முலைப் பைந்து கில ரிவையர்
நூன்மலிந்த நுண்ணு சுப்பு நோவ வந்து நோக்கினர்.

(இ - ள்.) பானிறைந்த முலையினையும் துகிலினையுமுடைய அரிவையர், கோதை நெற்றிமாலை கலம் இவற்றைச்சிந்திப் பரந்து காற்று மிக்க காமவல்லி போலே அசைந்து நூல் பெருத்ததென்றற்குக் காரண மான நுசுப்பு நோம்படி வந்து நோக்கினரென்க. (உ௫௫)

1106. மாத ரார்கள் கற்பினுக் குடைந்த மாம ணிக்கலைத்
தீதி லார நூற்பெய்வார் சிதர்ந்து போகச் சிந்துவார்
போது லாம லங்க லான்முன் போந்துபூந் தெரிவையர்
ஆத காதெ னக்க லங்கி யவ்வயி றதுக்கினர்.

(இ - ள்.) முத்துக்கோக்கக் கற்ற கல்விக்குத்தோற்ற மாதரார்கள் கையில் ஆரங்களைவாங்கிக் கோப்பாராகிய தெரிவையர், அவற்றைச் சிதறிப் போம்படி சிந்துவாராய் அலங்கலான்முன்னேபோந்து, ஆ! உனக்கு இது தகாதெனக்கூறிக் கலங்கி வயிற்றிலே அடித்துக்கொண்டா ரென்க. (உ௫௬)

---

கினர் - அடித்துக் கொண்டார்கள். வருத்தத்தால் வயிறதுக்கல் : சீவக. 1106. மஞ்ஞைபோல் ஆகுலத்தையுடைய அரிவையர் கண்ணீர்மல்க, தாரினுன் பொற்பு வாடுமாயிடின் போ, பொன்று என வயிறதுக்கினர் என மாறி முடிக்க.

1105. கோதை : மார்பிலணியும் மாலை. மாலை : நெற்றியிலணிவது. செய்கலம் : சீவக. 1103, அடிக். கோதையையும், மாலையையும், கலத்தை யும் உகுத்து என்க. உராய் - பரந்து; சீவக. 1100. கால்மலிந்த காம வல்லி என்னது அன்னராய் - காற்றால் அசைதல் மிக்க காமவல்லிக் கொடி எத்தன்மையது அத்தன்மையுடையராய் அசைந்து நடந்தவராய் என்றபடி; கால் - காற்று. அரோ, அசை. மலிந்த - நிறைந்த. முலையை யும் துகிலையுமுடைய அரிவையர். நூல் மலிந்த நுண் நுசுப்பு - நூல் பெருத்தது என்று கூறுதற்குக் காரணமான நுண்ணிய இடை. அரிவையர் உகுத்து, காமவல்லி அன்னராய் நுசுப்பு நோவ வந்து நோக்கினர் என மாறியியைக்க.

1106. கற்பு - கல்வி. உடைந்த - தோற்ற. மணி - முத்து. மாமணிக் கலைக் கற்பினுக்கு உடைந்த மாதரார்களது என மாறி யியைக்க. தீதில் ஆர நூற்பெய்வார் - குற்றமில்லாத முத்துக்களை நூலில் கோப்பவர்; "நூலறு முத்திற் றண்சித ருறைப்ப" (குறுந். 104 : 2). பெய்வாராகிய தெரிவையரும் என்க. சிதர்ந்துபோக - சிதறிப் போகும்

1107. வட்டி கைம ணிப்ப லகை வண்ண நுண் டுகிலிகை
இட்டி டைநு டங்கநொந் திரிய லுற்ற மஞ்ஞையிற்
கட்டழ லுயிர்ப்பின் வெந்து கண்ணி தீந்து பொன்னுக
மட்ட விழ்ந்த கோதை யார்கள் வந்து வாயில் பற்றினர்.

(இ - ள்.) நொந்து கெடுதலுற்ற மயில்போலே கோதையார்கள் கரைத்த வண்ணத்தையும் எழுதுகோலினையும் வட்டிகைப் பலகையிலே போகட்டு அழல் போன்ற நெட்டுயிர்ப்பாலேவெந்து கண்ணிதீயப் பூண்கள் சிந்தாநிற்க இடை நுடங்க வந்து வாயிலைப் பிடித்தாரென்க.

தீந்து - தீய. இது கற்புடைமகளிரைக் கூறிற்று. (உ௫௭)

(வேறு)

1108. வினையது விளைவு காண்மி னென்றுகை விதிர்த்து நிற்பார், இனையனாய்த் தெளியச் சென்று லிடிக்குங்கொ லிவனை யென்பார், புனைநல மழகு கல்வி பொன்றுமா லின்றே டென்பார், வனைகலத் திகிரி போல மறுகுமெம் மனங்க ளென்பார்.

(இ - ள்.) தீவினையினது விளைவைக் காண்மினென்று கைநடுங்கி நிற்பார்; தன்வீரர்சையிலே இவன் அகப்பட்டுப் போந்தன்மையனாய்த் தன் மனந்தெளியச் சென்றால் இவனைக் கொல்லுமோவென்பார்; கொல்லுமாயின், இவனோடே செயற்கையழகும் இயற்கையழகும் கல்வியும் கெடுமென்பார்; எம்மனம் திகிரி போலே மருகுமென்பாரென்க. (உ௫அ)

---

படி. அலங்கலான் - சீவகன். தெரிவையர் - தெரிவைப் பருவத்து மகளிர். ஆ, தகாது; சீவக. 1036; 2789. வயிறதுக்கல்: சீவக. 1104, அடிக். சிந்துவாராய் அதுக்கினர்.

1107. வட்டிகை மணிப்பலகை - சித்திரம் எழுதுதற்குரிய அழகிய பலகை; வட்டிகை = வர்த்திகை - எழுதுகோல்; "வட்டிகைப் பலகையும்" (பெருங். 1. 38 : 169; 2. 10 : 86). வண்ணம் - எழுதுதற்குக் கரைத்த பலவகை வர்ணங்கள். துகிலிகை - எழுதுகோல். வண்ணத்தையும், துகிலிகையையும் பலகையில் இட்டு என்க; இட்டு - போட்டு. நுடங்க - அசைய. இரியலுற்ற - கெடுதலுற்ற. கட்டழலுயிர்ப்பின் - மிக்க நெருப்புப் போலும் பெருமூச்சினால். கண்ணி - சூடிய பூமாலை. தீந்து - தீய; எச்சத் திரிபு. பொன் உக - பொன்னாபரணங்கள் சிந்தும்படி. கோதையார் : பேரிளம்பெண்டிர். வாயில் - நகர்வாயிலை. மஞ்ஞைபோல் கோதையார் கள், இட்டு, பொன்னுக, இடை நுடங்க வந்து வாயில்பற்றினர் என மாறியியைக்க.

1108. வினையது - தீவினையினுடைய. கைவிதிர்த்து - கைநடுங்கி. இனையனாய் - சீவகன் வீரர்களுடன் அடங்கிச் செல்லும் இத்தன்மை யனாய். சென்றால் - கட்டியங்காரனிடம் போனால். இவனை இடிக்குங்

1109. நோற்றிலர் மகளி ரென்பார் நோங்கண்டீர் தோள்க ளென்பார், கூற்றத்தைக் கொம்மை கொட்டிக் குலத்தொடு முடியுமென்பார், ஏற்றதொன் றன்று தந்தை செய்தவிக் கொடுமை யென்பார், ஆற்றலள் சுநந்தை யென்பா ராதகா தறனே யென்பார்.

(இ - ள்.) இவனைப் பெற்றுவைத்தும் நெடுங்காலம் நுகர்தற்கு மனைவியரிருவரும் நோற்றிலரென்பார்; யாமுளேமாகவும் எம்மாலுள்ள பயன்கொள்ளாது இவன் இங்ஙனம் சிறைவாய்ப்போவதேயென்று தோள் களும் தம்மிலே நோங்காணுங்கோளென்பார்; கூற்றத்தைத் தட்டி யழைத்துத் தன் குலத்தோடும் கெடுமென்பார்; தந்தை காட்டிக் கொடுத்தது ஏற்றதொன்றன்றென்பார்; சுநந்தை ஆற்ருளென்பார்; அறக்கடவுளே! ஆ! இது தகாதென்பாரென்க. (உ௫௯)

1110. தூக்குமின் காளை சீறிற் றுற்றிவ னுளனோ வென்பார், காக்குமால் வையய மெல்லாங் காவல னாகி யென்பார், பாக்கியம் பெரிது மேகா ணிதுவுமோர் பான்மை யென்பார், நோக்கன்மி னுனுங் கண்டீர் நுதிகொளு கரிக னென்பார்.

(இ - ள்.) ஆராய்ந்து பாருங்கோள்; காளை சிறிது நெருங்கிச்சீறிற் கொண்டுபோகின்ற இம்மதனன் உளனோவென்பார்; இவன் இன்னும் காவலனாகி வையமெல்லாம் காக்குமென்பார்; நல்வினையே இவனுக்குப் பெரிதுகாண்; இதுவும் ஒரு தீவினைப் பயன் காணென்பார்; கூர்மை கொண்ட பலகலைவல்லோன் நோக்கின் நாணுமாகலின் நோக்கன்மி னென்பாரென்க.

பெரிதும்: உம்மை, இசைநிறை. (உ௬௦)

---

கொல் - கட்டியங்காரன் இவனைக் கொல்லுவானோ. புனை நலம் - செயற்கை யழகு. அழகு - இயற்கையழகு. பொன்றும் - கெடும்; ஆல் அசை. வனைகலத்திகிரி - பானைமுதலிய செய்தற்குரிய சக்கரம். மறுகும் - சுழலும். மனம்திகிரி போல மறுகுமென்பார்.

1109. மகளிர் நோற்றிலர் - காந்தருவதத்தையும் குணமாலையும் சீவகனை நீண்ட காலம் பெற்றிருந்தற்குத் தவம் செய்திலர். நோம் - வருந்தும். தோள்கள் நோம் கண்டீர் என்பார். கூற்றத்தைக் கொம்மை கொட்டி - யமனைத் தட்டியழைத்து; "கூற்றொடு கொம்மை கொட்டுவ" (சீவக. 2230); "கூற்றம், புறங்கொம்மை கொட்டினு ரில்" (பழ. 126); கொம்மை - புறமுமாம். கொம்மை கொட்டல்: சீவக. 529, 1834; பாகவதம். 10. 17: 17. முடியும் - கெடும். ஏற்றதொன்றன்று - தகுதியுடைய தொன்றன்று. தந்தை செய்த இக்கொடுமை - கந்துகன், கட்டியங்காரனிடம் சீவகனைப் போம்படி செய்தது. கொடுமை ஏற்றதொன்றன்று என்பார். சுநந்தை ஆற்றலள் என்பார்; ஆற்றலள் - சீவகனுடைய பிரிவைப் பொறுக்கமாட்டாள். அறனே - தருமதேவதையே.

1110. தூக்குமின் - ஆராய்ந்து பாருங்கள். காளை துற்றுச் சீறின் - சீவகன் நெருங்கிக் கோபித்தால். இவன் - மதனன். உளனோ: ஆவனோ.

1111. பூவரம் பாய கோதைப் பொன்னனார் புலவி நீக்கி
நூபுரந் திருத்திச் சேந்த நுதிவிர னொந்த வென்பார்
யாவரும் புகழு மைய னழகுகெட் டொழியு மாயிற்
கோபுர மாட மூதூர் கூற்றுண விளிக வென்பார்.

பூ வரம்பாய - பூக்களுக்கு எல்லையான. செம்பஞ்சுபட்டு விரல் சிவந்தன.

(இ - ள்.) விரல், வீரத்திற்கும் காமத்திற்கும் கொடைமுதலியவற்றிற்குந் தோற்றிய யாம் ஈண்டு இவன்வீரஞ்செய்யாமையின், வீரத்திற்கு உதவியாயிற்றிலேமென்று நொந்தனவென்பார்; ஐயனழகு கெட்டேவிடுமாயின், மூதூர்விளிகவென்பாரென்க. (௨௬௧)

1112. கருஞ்சிலை மறவர் கொண்ட கணநிரை விடுக்க வல்ல
இருஞ்சிலை பயின்ற திண்டோட் கிதுதகா தென்று குன்றிற்
கருங்கட றுளுப்பிட் டாங்குக் கல்லெனக் கலங்கிக் காமர்
அருங்கடி யரண மூதூ ராகுல மயங்கிற் றன்றே.

(இ - ள்.) என்பார் என்பாராய், கொடிய வில்லையுடைய மறவர் கொண்ட நிரையை விடுவிக்கவல்ல தோளுக்கு இவர் கைக்கொண்டு போகின்ற இதனைக் கண்டு பொறுத்துப்போதல் தகாதெனக் கூறுதலாலே, மூதூர், மலையாலே கடலைக்கலக்கினாற்போலே கலங்கி ஆகுல மயங்கிற்றென்க.

---

காவலனாகிய வையமெல்லாம் காக்குமால் என்பர்; 'இவன் அரசனென்றறியாதிருந்தும் உலகங் காத்தற்குரியனென்று பூமியும் புணர்கவென்றார்' (சீவக. 463, ந.). பாக்கியம் - நல்வினை. பான்மை - தீவினை. நாணும் - வெட்கங்கொள்வான். நுதிகொள் - கூர்மைகொண்ட. நாகரிகன் - பல கலைகளிலும் வல்லவன். நாகரிகமென்பதற்குக் கண்ணோட்டமென்று பொருள் கூறுவர்; குறள், 580, பரிமேல். "நஞ்சு முண்பர் நனிநா கரிகர்" (நற். 355 : 7). நாகரிகன் : சீவகன். நாகரிகன் நாணும்; நோக்கன்மின் என்பார்.

1111. பூ வரம்பாய கோதை - பூக்களுக்கு எல்லையாகிய மாலை; "பூவரை யேறிய கோதை" (சடகோப. 36). கோதையையுடைய பொன்னனார் : காந்தருவதத்தையும், குணமாலையும். புலவி - ஊடலை. நூபுரம் - சிலம்பை. சேந்த செம்பஞ்சு பூசிய கால்களைத் தொட்டுத் திருத்தியமையால் சிவந்திருந்த. விரல் - சீவகனுடைய விரல்கள். நொந்த - தாம் சீவகன் போர் செய்தற்கு உதவியாகவில்லையே என்று வருந்தின. பொன்னனாருடைய புலவியை நீக்கி அவருடைய நூபுரந் திருத்திச் சேந்த விரல் நொந்தன என்பார். ஐயன் - சீவகனுடைய. கெட்டொழியுமாயின் - கெட்டேவிடுமானால். மூதூர் - இராசமாபுரத்திலுள்ளவர்கள்; ஆகுபெயர். கூற்றுண - யமன் உண்ணும்படி. விளிக - இறப்பார்களாக. ஐயன் அழகு கெட்டால் விளிக : சீவக. 1104.

1112. மறவர் - வேட்டுவர். கணநிரை - பசுக்கூட்டம். விடுக்க வல்ல - விடுவிக்கவல்ல. சிலை பயின்ற - வில்லோடு பழகிய. தோட்கு இது தகாது - சீவகனுடைய தோளுக்கு, வீரர் அகப்படுத்திக் கொண்டு

நிரைமீட்ட தோளென்றார், ஆண்டுக் கொல்லாமைவென்றாற்போல ஈண்டும் கொல்லாமல் வெல்லவல்லவனென்பது கருதி. (உசூஉ)

1113. (க) இங்கன மிவர்க ளேக வெரியகம் விளைக்கப் பட்ட, வெங்கணை விடலை தாதை வியனக ரவல மெய்தி, அங்கவ ருகுத்த கண்ணீ ரடித்துக ளவிப்ப நோக்கிப், பொங்கம ருழக்கும் வேலான் புலம்புகொண் டழேற்க வென்றான்.

1114. (உ) மின்னினான் மலையை யீர்ந்து வேறிரு கூறுசெய் வான், துன்னினான் றுளங்கி னல்லாற் றுளங்கலம் மலையிற் குண்டே, அன்னதே துணிந்த நீதி யருநவை நமனு மாற்றான், என்னைநேர் நின்று வாழ்த லிருநிலத் தாவ துண்டே.

1115. (ங) வளைகடல் வலையிற் சூழ்ந்து மால்வரை வேலி கோலி, உளையரி படுக்க லுற்றான் படுப்பினும் படுக்க மற்றென், கிளையழ வென்னை வாள்வாய்க் கீண்டிட லுற்று நின்றான், தளையவிழ் கண்ணி சிந்தத் தன்றலை நிலத்த தன்றே.

இவை மூன்றும் ஒருதொடர்.

---

போகும் இத்தன்மையைக் கண்டு பொறுத்திருத்தல் தகுதியன்று. என்று - எனக்கூறுதலால். குன்றிற் கருங்கடல் துளுப்பிட்டாங்கு - மலையாற் கடலைக் கலக்கினாற்போல; "பெருநீர்க் கருங்கட றுளுப்பிட் டது போல்" (பெருங். 1. 38 : 29). கல்லென; ஒலிக்குறிப்பு. அருங்கடி அரணமூதூர் - அரிய காவல் பொருந்திய அரண்களையுடைய இராசமா புரம். ஆகுலம் மயங்கிற்று - துன்பத்தால் வருந்தியது.

1113. எரி - நெருப்பை. கணையையுடைய விடலை: சீவகன்; அவன் தாதை: கந்துகன். நகர் - வீடு. அவலம் - துன்பத்தை. உகுத்த - சொரிந்த. அடித் துகளை அவிப்ப. நோக்கி - சீவகன் பார்த்து. அமர் உழக்கும் - போரில் பகைவரைக் கலக்கும். புலம்பு - வருத்தம். அழேற்க - அழாதிருங்கள்.

1114. ஈர்ந்து - அறுத்து. இரு கூறாக வேறு செய்தற்கு. துன்னினான் - பொருந்தினவன்; பெயர். துளங்கினல்லால் - வருந்துவதல்லாமல். அம்மலைக்குத் துளங்கல் உண்டே; இல்லை யென்றபடி; ஏ, எதிர்மறை. அன்னதே - அத்தன்மையதே. கட்டியங்காரன் துணிந்த நீதியும் அன்னதே. நமனும் ஆற்றான் - யமனும் என்னுடன் பகைத்து உயிர் வாழான்; "கூற்றுவெகுண்டு வரினு மாற்றுமாற் றலையே" (பதிற். 14 : 10); "கூற்றம் வரினுந் தொலையான்" (கலித். 43 : 10); "கூற் றுடன்று மேல்வரினுங் கூடி யெதிர்நிற்கும், ஆற்ற லதுவே படை" (குறள், 765). என்நேர் நின்று - எனக்கு எதிராக நின்று; ஐ, அசை. வாழ்தல் ஆவது - உயிர் வாழ்கின்ற தன்மை. உண்டே; இல்லையென்றபடி. இருநிலத்து என்நேர் நின்று வாழ்தலாவது உண்டே என மாறியியைக்க.

1115. கடலாகிய வலையால் சூழ்ந்து. வரையாகிய வேலியைக் கோலி; வரை - மலை. கோலி - வளைத்து; "நெடுங்காழ்க் கண்டங் கோலி" (முல்லைப். 44). உளைஅரி - பிடரிமயிரையுடைய சிங்கத்தை.

(க) எரியை உள்ளேவிளைத்த வெங்களை. தாதைவியனகர் - கந்து கன் வீடு; எனவே குணமாலைவாயிலினின்றும் போந்தான்.

(உ) என்னை : ஐ, இடைச்சொல்.

(ங) உளை - கழுத்தின் மயிர். கடலாகிய வலையாற்சூழ்ந்து மலை யாகிய வேலியைக்கோலி அரியைப் படுக்கலுற்றாெருவன் அகப்படுப் பினும் அகப்படுக்க; அவற்றானும் என்னை அகப்படுத்தலரிது; அதுவும் இவற்கில்லை. இதனாலும் சிறைசெய்தானென்று உணர்க.

(இ - ள்.) இப்படியே இவர்கள் போகாநிற்க, கந்துகன் மனையிலுள் ளார் வருத்தமுற்று, அவ்விடத்து அவருகுத்த கண்ணீர் போகின்றவரடி யிற்றுகளை அவித்தலாலே, வேலான், அவர்களைநோக்கி, என்கிளையமும் படி என்னை வாளாற்கொல்லுகலுற்று முடியாததற்கு முயன்று நின்றான் தலையன்றே சில நாள் சென்றாற் கண்ணிசிந்த நிலத்திடத்தே வீழ்வ தென்று உட்கொண்டு, மலையை மின்னினாலேயறுத்து இருகூறாக வேறு செய்தற்குப் பொருந்தினவன் தான் நிலைகுலைதலன்றி அம்மலைக்கு நிலை குலைதலில்லை; அவன் துணிந்த நீதியும் அன்னதே; நமனும் என் முன்னே பகைத்து நின்று உயிர்வாழ்தலாற்றாதலின், நிலத்திலுள் ளார் என்முன்னே நின்று உயிர்வாழ்தலுளதாந்தன்மை இல்லை. அரி யைப் படுப்பினும் படுக்க; யான் அத்தன்மையேனுமல்லேன்; ஆதலால், நீங்கள் புலம்புகொண்டு அழாதொழிமினென்றானென்க.

சிலநாள்சென்றால் - ஓராண்டுசென்றால். (உசங - ௫)

1116. நீரகம் பொதிந்த மேக நீனிற நெடுநல் யானைப், போர் முகத் தழலும் வாட்கைப் பொன்னெடுங் குன்ற மன்னன், ஆர்கலி யாணர் மூதா ரழுதுபின் செல்லச் செல்வான், சீருறு சிலம்பி நூலாற் சிமிழ்ப்புண்ட சிங்க மொத்தான்.

---

படுக்கலுற்றான் - அகப்படுத்தப் பொருந்தினவன். படுப்பினும்படுக்க - சிங்கத்தை அகப்படுப்பினும் அகப்படுக்க; என்றது, அதுவும் முடியா தவன் என்னை அகப்படுத்தலரிது என்று கூறியபடி. கிளை - உறவினர். வாள்வாய்க் கீண்டிடலுற்றுநின்றான் - வாளினால் கொல்லலுற்று நின்ற வன்; என்றது கட்டியங்காரனை. கண்ணி - தலையிற் சூடும் மாலை. நிலத் ததன்றே - நிலத்திடத்தே வீழ்வதல்லவா. நின்றவனுடைய தலை கண்ணி சிந்த நிலத்ததன்றே என மாறியியைக்க.

1116. நீரகம் பொதிந்த மேகம் - சூல்கொண்ட மேகம். மேகம் போன்ற நீலநிறத்தையுடைய யானை. அழலும் - கோபிக்கின்ற. யானை யையும், வாட்கையினையுமுடைய குன்றமன்னன்; என்றது சீவகனை. ஆர்கலி யாணர் மூதூர் - ஆரவாரத்தையும் புதுவருவாயையுமுடைய இராசமாபுரத்திலுள்ளவர்கள். பின்செல்ல - சீவகனுக்குப் பின்னே போக. செல்வான் - வீரர் சூழ நடுவே செல்கின்றவன்; சீவகன். சிமிழ்ப்புண்ட -

(இ - ள்.) கரியமேகம் போன்ற நீலநிறத்தையுடைய களிற்றையும் வாட்கையினையுமுடைய குன்றமன்னன் அவர்களை அழேற்கவென்று கூறி, ஊரிலுள்ளார் அழுதுபின்னேபோக வீரர்க்குநடுவே போகின்றவன், சிலம்பி வாய்நீராலுண்டான நூலால் அகப்படுத்திக்கொண்ட சிங்கத்தையொத்தானென்க.

நூல், வீரர்க்குவமை. "புதன்மறைந்து, வேட்டுவன் புட்சிமிழ்த்தற்று" (குறள், 274) என்றாற்போலக் கொள்க. (உகசு)

1117. மன்னர்தம் வெகுளி வெந்தீ மணிமுகில் காண மின்னிப்
பொன்மழை பொழியி னந்து மன்றெனிற் புகைந்து பொங்கித்
துன்னினார் தம்மை யெல்லாஞ் சுட்டிடு மென்று செம்பொன்
பன்னிரு கோடி யுய்த்துக் கந்துகன் பணிந்து சொன்னான்.

(இ - ள்.) இவர்கள் இங்ஙனம்போகாநிற்க, கந்துகன், அரசர் வெகுளியாகிய தீ, மணியாகிய முகில் பழங்காசென்கின்ற மின்னை மின்னிப் பொன்னாகிய மழையைப்பெய்யின் விளியும்; அம்முகில் அங்ஙனம் பெய்யாதாயிற் பொங்கித் தன்னைநெருங்கினாரெல்லாரையும் சுடுமென்று கருதி பன்னிருகோடி பசும்பொன்னைக் குவித்துத் தாழ்ந்து கூறினானென்க.

இப்பொழுது வார்த்தை சிறிது தாழக்கூறினானென்க. (உகஎ)

1118. மன்னவ வருளிக் கேண்மோ மடந்தையோர் கொடியை
மூதூர், நின்மதக் களிறு கொல்ல நினக்கது வடுவென் றெண்ணி
என்மக னதனை நீக்கி யின்னுயி ரவளைக் காத்தான், இன்னதே
குற்ற மாயிற் குணமினி யாது வேந்தே.

---

கட்டப்பட்ட. சிலம்பி நூலால் சிமிழ்ப்புண்ட சிங்கம்; "மானிட மடங்கல் தாளதா மரைநுண் ணூலிற் சிமிழ்ப்புண்ட தன்மைத் தன்றே" (கூர்ம கண் - மணம். 166). குன்றமன்னனாகிய செல்பவன் சிங்கமொத்தான் சீவகனுக்குச் சிங்கமும், வீரர்க்கு நூலும் உவமை.

1117. வெகுளி வெந்தீ - கோபமாகிய கொடிய நெருப்பு. காணம் பழங்காசு; "காணம் பலவுங் கைந்நிறை கொடுப்ப" (மணி. 23 : 48) மணியாகிய முகில் காணமாகிய மின்னலை மின்னிப் பொன்னாகிய மழையைப் பொழிந்தால் நந்தும் என்க; நந்தும் - அழியும். வெகுளித் தீ நந்தும். அன்றெனின் - அவ்வாறு செய்யாவிட்டால். துன்னினார் தன்னை நெருங்கினவர்கள். தீ சுட்டிடும். அரசரது வெகுளி துன்னினாரையும் சுடுதல் : சீவக. 250. என்று - என்று எண்ணி. பன்னிருகோடி செம்பொன்னை உய்த்து; உய்த்து - கட்டியங்காரன் முன்னே குவித்து.

1118. கேண்மோ - கேட்பாயாக; மோ, முன்னிலையசை. மடந்தையாகிய ஒரு கொடிபோல்வாளை; குணமாலையை. மூதூர் - பழமையான இராசமாபுரத்தில். களிறு : அசனிவேகம். கொல்ல - கொல்லுகையில் அது - நின் களிறு ஒரு பெண்ணைக் கொன்றது என்னும் பழிச்சொல்

(இ - ள்.) அரசனே! அருள்பண்ணிக்கேட்பாயாக; மடந்தையாகிய கொடிபோல்வாளைப் பெண்கொலே பிறந்தறியா இவ்வூரிலே நின்களிறு கொல்லாநிற்க, நினக்கு அதுவடுவாமென்றெண்ணி நின்கீழ் வாழ்கின்ற என்மகன் அக்கொலையைநீக்கி அவளை உயிரைக்காத்தான்; இவ்வடு நீக்கியதே குற்றமாய் முடியுமாயின், வேந்தே! இனி நன்மையென்கின்றது யாது? கூறுவாயாக வென்றனென்க. (உகஅ)

1119. (க) நாண்மெய்க்கொணீ டட்டப் பட்டார் நடுக்குறு நவையை நீக்கல், ஆண்மக்கள் கடனென் றெண்ணி யறிவின்மை துணிந்த குற்றம், பூண்மெய்க்கொண் டகன்ற மார்ப பொறுமதி யென்று பின்னும், நீண்மைக்க ணின்று வந்த நிதியெலாந் தருவ லென்றான்.

1120. (உ) வாழிய ரிறைவ தேற்றான் மாநிரை பெயர்த்த காளை, பீழைதான் பொறுக்க வென்னப் பிறங்கிணை ரலங்கன் மாலை, சூழ்கதி ராரம் வீழ்நூல் பரிந்தற நிமிர்ந்து திண்டோள், ஊழ் பிணைந் துருமிற் சீறி யுடல்சினங் கடவச் சொன்னாள்.

இவையிரண்டும் ஒரு தொடர்.

(க) ஆண்மக்களென்றது அரசரை; உயிரைக்காத்தலும் அழித்தலு மவர் தொழிலாதலின்.

---

வடு - குற்றம். என் மகனென்றது சீவகனை. அவளது உயிரைக் காத்தான். இன்னதே - உனக்கு வரும் குற்றத்தை நீக்கிய இச்செயலே. குணம் - நன்மை யென்பது. இச்செய்யுளும் அடுத்த செய்யுளும் கந்துகன் கூற்று.

1119. நாண் - நாணம். நாணையே மெய்யாகக் கொண்டு ஈட்டப் பட்டார்; என்றது மகளிரை. நடுக்குறும் நவையை - நடுக்கமுறுதற்குக் காரணமாகிய குற்றத்தை. எண்ணி - தான்மீட்ட பசுக்கூட்டமென்று எண்ணி. அறிவின்மையால் துணிந்த குற்றத்தை. துணிந்த - குணமாலையினுயிரைக் காக்கத் துணிந்த. பூண் - ஆபரணம். பூணை மெய்யிலே கொண்டு. மார்ப என்றது கட்டியங்காரனை நோக்கிய விளி. பொறுமதி - பொறுப்பாயாக; மதி, முன்னிலையசை. என்ற பின்னும் - என்று கூறிய பின்னும்; இதன்பின் செவ்வி பெறுமையின் என்பதை வருவித்துக்கொள்க. நீண்மைக்கணின்று வந்தநிதி - தொன்று தொட்டு வந்த பொருள்.

1120. வாழியர் - வாழ்வாயாக. இறைவ : விளி. தேற்றான் - தெளியாதவனாகி. மாநிரை - பெரிய பசுக்கூட்டம். காளை : சீவகன். பீழை - குற்றத்தை. என்ன - என்று கந்துகன் கூற. பிறங்கு இணர் அலங்கல் மாலை - விளங்குகின்ற கொத்துக்களையுடைய அசைகின்ற பூமாலை. ஆரம் - முத்துமாலை. பரிந்து - அறுத்து. அற - அற்றுப் போம்படி.

(உ) [1] பிழை, விகாரம். வீழ்ந்த மாலைகட்டின நூல்பரிந்து முத்தாரமு மறவென்க. கையோடுகைமாறித் தோளிலேறத் தட்டி. பெயர்த்தம நிரையென்றெண்ணியென [2] முன்னே கூட்டுக; [3] அது நமக்கு அரமு மாய் அரசுக்கு வடுவுநீக்கிற்று; அத்தன்மைத்து [4] இதுவென்றெண்ணி

(இ - ள்.) தான் முற்கூறியதற்கு [5] முகமாகாமைகண்டு, மார்பனே மகளிர்நடுக்கத்தை நீக்குதல் ஆண்மக்கள் கடனென்று தேற்றுயை தான் பெயர்த்த மாநிரையென்றெண்ணி அறிவின்மையினாலே உயிரை காக்கத் துணிந்த குற்றத்தைப் பொறுப்பாயென்றான்; என்றபின்னு செவ்விபெருமையின், எனக்குத் தொன்றுதொட்டுவந்த பொருளெல்லா தருவேன்; இறைவனே! காளையதுபிழையை எனக்காகப் பொறுப்ப யாகவென்றானாக; நிரை மீட்ட தென்பதனாற் கோபமிக்குப் பரிந்து அ நிமிர்ந்து தோள்பிணைந்து சீறி உடல்சினம் கடவாநிற்க ஒருவார்த்தை கூறினானென்க. (உசுகூ-எO

1121. ஆய்களிற் றசனி வேக மதன்மருப் பூசி யாகச்
சீவக னகன்ற மார்ப மோலையாத் திசைகள் கேட்பக்
காய்பவன் கள்வ ரென்ன வெழுதுவித் திடுவ லின்னே
நீபரி வொழிந்து போய்நின் னகம்புகு நினைய லென்றான்.

---

அலங்கன்மாலை கட்டினநூல் பரிந்து, கதிர் ஆரம் அற எனமாறியியைக்க ஊழ் பிணைந்து - தோளில் முறைமாறிக் கையால்தட்டி. உடல்சினம் மிக்க கோபம். சொன்னவன் கட்டியங்காரன்.

(மேற்.) அடி, 2 : கல். 'பாய்திரை', 63, மயில்.

(உரை) [1] பிழையென்பது பீழையென நீட்டல் விகாரம் பெற்றது [2] முன்னே என்றது, "ஆண்மக்கள் கடனென்று" (சீவக. 1119) என் பதனை. [3] அது : ஆநிரையைமீட்டது. [4] இது : அசனிவேகத்தை அடக்கி குணமாலையினுயிரை மீட்டது. [5] முகமாகாமை - கட்டியங்காரனுடை முகம் பொலிவில்லாமையைப் பார்த்து.

1121. களிறாகிய அசனிவேகம் : கட்டியங்காரனுடைய யானை அசனி வேகமாகிய அதனுடைய மருப்பே ஊசியாக; ஊசி - எழுத்தாணி மார்பமே ஓலையாக. காய்பவன் - என்னாற் கோபிக்கப்படுகின்றவனு லால். கள்வரென்ன - திருடர்களைக் கொல்லுமாறுபோல. சீவகன் (என் னால்) காய்பவனாதலின், திசைகள் கேட்பக் கள்வரென்ன, அசனி வேகத்தின் மருப்பு ஊசியாக, (சீவகன்) மார்பம் ஓலையாக எழுதுவி திடுவல் என மாறியியைக்க. அடி, 1-3 : "மருப்பூசி யாக மறா கனல்வேன் மன்னர், உருத்தகு மார்போலை யாகத் - திருத்தக்க, வைய மெல்லா மெமதென் றெழுதுமே, மொய்யிலைவேன் மாறன் களிறு" (முத்தொள்ளாயிரம்). இன்னே - இப்பொழுதே. பரிவு - வருத்தம் நின் அகம் புகு - உன் வீட்டிற்குச் செல். நினையல் - சீவகனைப்பற்ற நினையாதே.

(இ - ள்.) சீவகன் யான் காயப்படுபவனாதலின், அவன்வென்ற [1]அரசரும் [2]வெள்ளிமலையும் கேட்கும்படி கன்வரைக்கொல்லுமாறுபோலே அவனால் வருந்திய அசனிவேகமாகிய அதன்மருப்பு எழுத்தாணியாக அவன் அகன்ற மார்பமே ஓலையாக எழுதுவிப்பேன்; நீ வருத்தமொழிந்துபோய் நின்னகத்தே செல்; இதனை நினையாதேகொள்ளென்று கூறினானென்க.

கொல்லுதலை எழுதுவிப்பேனென்றான், இதனால் தனக்குப் புகழ் நெடுங்காலம் நிற்குமென்றுகருதி. (உ௭க)

1122. நஞ்சனா னுரைப்பக் கேட்டே நாய்கனு நடுங்கி யுள்ளம், வெஞ்சின வேழ முண்ட விளங்கனி போன்று நீங்கி, எஞ்சினான் போல நின்றா னேத்தருந் தவத்தின் மிக்க, வஞ்சமில் கொள்கை யான்சொ லமிர்தினால் வற்புற் றானே.

(இ - ள்.) கட்டியங்காரன் அங்ஙனம் கூறக்கேட்டுக் கந்துகன், உள்ளம் நடுங்கிக் களிறுண்ட விளங்கனிபோன்று [1]வெறுவிதாக அறிவு முதலிய நீங்கி இறந்தான்போல நின்றான்; நின்றவன் இருடி முன்கூறிய சொல்லாகிய அமிர்தாலே ஆற்றினானென்க. (உ௭உ)

1123. மின்னிலங் கெஃகி னானைப் பெறுகலான் றந்தை மீண்டு, தன்னிலங் குறுக லோடுந் தாயழு தரற்று கின்றாள், என்னிலை யையற் கென்ன யாவதுங் கவல வேண்டா, பொன்னலங் கொடிய னையோர் பொருளுரை கேளி தென்றான்.

---

(உரை) [1]காந்தருவதத்தையின் யாழ்வாசினையின் போது வந்திருந்த அரசர்கள். [2]வெள்ளிமலை : சீவகனுக்குத் தத்தையைக் கொடுத்த கலுழ வேகனுடையது.

1122. நஞ்சனான் : கட்டியங்காரன். கேட்டே ; ஏ, அசை. நாய்கன் : கந்துகன். வேழம் உண்ட - யானையென்னும் நோயால் உண்ணப்பட்ட ; வேழமுண்ட விளங்கனி ; சீவக. 232, 1024, அடிக் ; "கரியுண் விளவி னிறையழிந்தாள்" (பிரபு. பிரபுதேவர்வந்த. 45). நீங்கி - அறிவு முதலியன அகன்று. உள்ளம் நடுங்கி விளங்கனி போன்று நீங்கி என மாறியியைக்க. எஞ்சினான் போல - இறந்தவனைப் போல. நின்றான் - நின்றவன் ; பெயர். ஏத்தரும் - புகழ்தற்கரிய. கொள்கையான் : முனிவனுடைய. சொல்லாகிய அமிர்தினால். வற்புற்றான் - வருத்தத்தை ஆற்றினான். நஞ்சனானென்றதற்கேற்ப அமிர்தினால் என்றார். நின்றவன் வற்புற்றான் என்க.

(உரை) [1]வெறுவிதாக - ஒன்றுமில்லையாக.

1123. எஃகினான் : சீவகன். பெறுகலான் - கட்டியங்காரனிடமிருந்து பெறாதவனாய். தந்தை : கந்துகன். தன் இலம் - தன் வீட்டை. தாய் : சுநந்தை. தாயாகிய அரற்றுகின்றவள். ஐயற்கு - சீவகனுக்கு. ஐயற்கு

(இ - ள்.) கந்துகன், சீவகனை அரசனிடத்துப்பெறுவாய் மீண்டு தன் மனையை அணுகினவளவிலே, தாய் அரற்றுகின்றவள், ஐயற்கு நிலை ஏதென்று கேட்க, நலத்தையுடைய பொற்கொடியன்னாய்! நீ சிறிதும் வருந்தவேண்டா; ஈதொரு காரியத்தையுடைய வார்த்தையைக் கேளென்றானென்க.

[1] பழையநிலையிலேயோ சிறையிலேயோவென்றாள். (உஎ௩)

1124. மதுமடை திறந்து தீந்தேன் வார்தரு கோதை நீமுன், செதுமகப் பலவும் பெற்றுச் சிந்தைகூர் மனத்தை யாகி, இதுமக வழியின் வாழே னிறப்பல்யா னென்னு மாங்கட், கதுமெனக் கடவு டோன்றிக் கடைமுகங் குறுக வந்தான்.

(இ - ள்.) இனிய தேனினத்துக்கு மடைதிறந்து மதுவொழுக்கு கின்ற கோதைபோல்வாய்! நீ முன் சாபிள்ளைபலவும்பெற்றுச் சிந்தனை மிக்க மனத்தினையுடையையாயிருந்து, இந்த மகவழியுமாயின், யான் உயிர்வாழேன்; இறந்துபடுவேனென்றவளவிலே, ஒருகடவுள், கடுகத் தோன்றித் தலைவாயிலைக் குறுக வந்தானென்க. (உஎச)

1125. கறவைகாண் கன்றின் வெஃகிக் கண்டடி பணிந்து காமர், நறவயா வுயிர்க்கு மாலை நாற்றிய விடத்து ளேற்றி, அறவியாற் காறு மூன்று மமைந்தநா லமிர்த மேந்தப், பறவைதா தூண்ட வண்ணம் பட்டினிப் பரிவு தீர்ந்தான்.

---

நிலை என் என்ன; என்ன - என்று சுநந்தை கேட்க. யாவதும் - சிறிதும். நலம் பொன்கொடியனாய் - நலத்தையுடைய பொற்கொடி போல்வாய்; என்றது சுநந்தையை. பொருள் உரை - காரியத்தையுடைய வார்த்தையை; பொருள் பொதிந்த வாசகத்தை எனினுமாம். கொடியனாய், கவலவேண்டா; இது ஓர் பொருளுரை கேள் என்றான் என மாறியியைக்க.

(உரை) [1] பழையநிலை - விலங்கு இடப்படாத நிலை.

1124. தேனுக்கு மடைதிறந்து மதுவை வார்தருகோதை என இயைக்க; வார்தரு - ஒழுக்குகின்ற. கோதை - பூமாலைபோன்ற சுநந்தை; விளி. செதுமக - சாம்பிள்ளை; "செதுமதித் தக்கன்" (தே. திருஞா. அம்பர் மாகாளம், 'படியுளார்' 5). சிந்தை கூர்மனத்தை யாகி - வருத்தம் மிக்க மனத்தை யுடையவளாகி; சிந்தை - வருத்தம்; சீவக. 913, அடிக். இது மக அழியின் - இந்தக் குழந்தை இறக்குமாயின். வாழேன் - யான் உயிரோடு இரேன். என்னும் ஆங்கண் - என்ற அளவில். கதுமென - விரைவாக. கடவுள் - ஒருமுனிவன். கடைமுகம் - தலைவாயிலை. கடவுள் கதுமெனத் தோன்றிக் கடைமுகம் குறுக வந்தான் என மாறியியைக்க.

1125. கறவை-கறக்கும்பசு. கறவையைக் கண்ட கன்றினைப்போல. வெஃகிக்கண்டு - அம்முனிவனை விரும்பிப் பார்த்து. காமர் - அழகிய. நறவு அயா உயிர்க்கும் மாலை - தேனைச் சிந்துகின்ற பூமாலையை. நாற்

அறவியாற்கு-அறத்திலே நிற்கின்றவற்கு. ஆறும்மூன்றும் அமைந்த அமிர்து - ஒன்பதுவகையும் அமைந்த அமிர்து; [1] ஒன்பதுவகை - [2] நவ புண்ணியக்கிரமம். நாலமிர்தாவன : உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன.

(இ - ள்.) அவனைக் கறவையைக்காண்கின்ற கன்றுபோலே விரும்பிக் கண்டு பணிந்து மாலைநாற்றியவிடத்தே வைத்து அவற்கு அமிர்தத்தை ஏந்தினேமாக, [3] வண்டு தாதுண்டாற்போலேயுண்டு பட்டினியாலுள்ள வருத்தத்தைத் தீர்ந்தானென்க. (உஎ௬)

1126. ஆய்மணிப் பவளத் திண்ணை யரும்பெறற் கரகத் தங்கட்
டூய்மணி வாச நன்னீர் துளங்குபொற் கலத்து ளேற்று
வேய்மணித் தோளி நிற்ப விழுத்தவ னியம முற்றி
வாய்மணி முறுவ ரேன்ற வந்தனை விதியிற் செய்தேன்.

முற்றி - முற்ற.

(இ - ள்.) மணியழுத்தின பவளத்திண்ணையிலிருந்து கரகத்து நீரை நிலத்தில்வீழாமல் கலத்திலே ஏற்று நீ நிற்க அவன் நியமங்களை முற்றினாக, யான் குறைகூறுதற்கு முத்துப்போலும் முறுவரேன்றும் படி நகைத்து வணங்கு முறையாலே வணங்கினேனென்றானென்க. (உஎ௬)

---

றிய - தொங்கவிட்ட. அறவியாற்கு - தருமத்தோடு பொருந்திய அம்முனிவனுக்கு; சீவக. 2877; "அறவியங் கிழவோன்" (மணி. 11 : 23); "அறவிய மனத்தினையாகி", "அறவியான் றனு மறவமிர்த மீந்தான்" (நீல. தரும. 65, 118). ஆறும் மூன்றும் அமைந்த அமிர்து, நாலமிர்து எனப் பிரித்தியைக்க. பறவை : வண்டு. தாது - பூவிலுள்ள மகரந்தப் பொடிகளை. பட்டினிப் பரிவு - பட்டினியாலுண்டாய வருத்தத்தை. தீர்ந்தவன் முனிவன். பறவை......தீர்ந்தான் : "தாது துற்றுபு தங்கிய வண்டனர்" (சீவக. 1632); "தாதுண் பறவை" (அகநா. 4 : 11)

(உரை) [1] (பி - ம்.) 'அஃதாவது மனோவாக்குக் காயங்களாலே அவன்மேலுடன்பா டென்பதனோடு கூடிய அமிர்து.' [2] நவபுண்ணியக் கிரமம்; "எதிர்கொள லிடநனி காட்டல் கால்கழீஇ, அதிர்பட வருச்சனை யடியின் வீழ்தரல், மதுரநன் மொழியொடு மனமெய் தூயராய், உதிர்க நம் வினையென வுண்டியேந்தினர்" (சீவக. 2828, ந. மேற்.) [3] பறவை தாதுண்ட வண்ணம் பட்டினிப் பரிவு தீர்த்தலை, மாதூகர விருத்தி யென்பர்; "நறவ வீழ்ந்த நறுமலர் தோறும்வண், டுறவ ருந்தி யிறலுற் றெடுங்குமால், அறவர் தங்க ளகந்தொறு மையமுண், துறவர் தங்குகை துன்னுதல் போலவே" (பிரபு. மாயையுற்பத்தி. 8)

1126. திண்ணையிலிருந்து. கரகத்தங்கண் - கமண்டலத்திலுள்ள. தூய்மணி வாச நன்னீர் - தூயமணி போல் விளங்கும் வாசனையை யுடைய நீரை. பொற்கலத்துள் ஏற்று - அம்முனிவன் விடும் கரகநீரை

1127. ஆறெலாங் கடலுள் வைகு மருந்தவத் திறைவ னூலுள், வேறெலாப் பொருளும் வைகும் விழுத்தவ வறிதி நீயே, ஊறிலா வுணர்வி னோக்கி யுரைமதி யெவன்கொன் மக்கட், பேறிலா ளல்லள் பெற்ற வுயிர்சென்று பிறக்கு மென்றேன்.

(இ - ள்.) வணங்கி, விழுத்தவனே! இவள் மக்கட்பேறில்லாதா ளல்லள்; பெற்ற மக்களுயிர் மற்றோரிடத்தே சென்றுபிறக்கும்; இனிப் பிள்ளை எத்தன்மைத்து; அதன் தன்மையை, ஆறெலாம் கடலுள்வைகு மாறுபோலே இறைவனூலிலே வேறு வேறுபட்ட எல்லாப்பொருளும் வைகும்! அப்பொருளெல்லாம் நீயே அறிதியாதலிற் கணிதநிலையும் தெரியாததன்று; நின்னுணர்வாலே பார்த்து உரைப்பாயாகவென்றே னென்றானென்க.

மக்களைப் [1] பின்னுங்கூட்டுக. இறக்குமென்னமாட்டாது [2] கூறினான். (உஎஎ)

1128. வம்பவிழ் கோதை தந்த வான்றுவர்க் காயை வீழ்த் தோர், செம்பழுக் காயை வாங்கித் திருநிலத் தெடுத்துக் கொண் டாங், கம்பழ நீண்ட வாட்க ணலமரு மணிசெ யம்பூங், கொம்படு நுசுப்பி னுய்க்குத் தந்தனென் பேணிக் கொண்டாய்.

---

நிலத்தில் விழாமல் பொற்பாத்திரத்தில் ஏற்று. தோளி : சுநந்தை. தோளியாகிய நீ. தவன் - முனிவன். நியமம் - அனுஷ்டானத்தை. முற்றி - முற்ற; எச்சத்திரிபு; முடித்திருந்தாளாக என்றவாறு. மணி - முத்து. வாயில் மணிபோலும் முறுவல் தோன்றும்படி சிரித்து. வந்தனை - வணக்கம். விதியின் - முறைப்படி. விதியின் வந்தனை செய்தேன் என மாறியியைக்க.

1127. ஆறெலாம் கடலுள் வைகும் : "கல்வீ ழருவி கடற்படர்ந் தாங்கு" (பெரும்பாண். 427); "தூமலர் துவன்றிய கரைபொரு நிவப் பின், மீமிசை நல்யாறு கடற்படர்ந் தாஅங்கு" (மலைபடு. 51-2); "இருங் கடற் கூங்கிவரும் யாறெ‌ன" (பரி. 16 : 27); "மலையி னிழிந்து மாக்கட னோக்கி, நிலவரை யிழிதரும் பல்யாறு போல" (புறநா. 42 : 19-20); "பெய்யு மாரியாற் பெருகு வெள்ளம்போய், மொய்கொள் வேலைவாய் முடுகு மாறுபோல்" (கம்ப. கையடைப். 16). வைகும் - தங்கும். இறைவன்நூல் - கடவுணூல். வேறெலாப் பொருளும் வைகும் - வேறு வேறு ஆகிய எல்லாப் பொருளும் தங்கும். ஆறெலாம் கடலுள் வைகு தல் போல எல்லாப் பொருளும் இறைவனூலுள் வைகும். விழுத்தவ - சிறந்த தவத்தையுடையவனே; என்றது முனிவனை. நீயே அறிதி - அவ்விறைவனூற்பொருளை நீயே அறிவாய். ஊறு - குறைபாடு. உணர் வினால் நோக்கி. உரைமதி - உரைப்பாயாக. மக்கள் எவன்கொல் - இனிப் பிறக்கும் பிள்ளையின் தன்மை எத்தன்மையது. சுநந்தையும் மக்கட்பேறில்லாதவளல்லள். இவள் பெற்ற உயிர் மற்றோரிடத்தே சென்று பிறக்கும்.

(உரை) [1] உயிர் என்பதனோடு கூட்டுக. [2] உயிர் சென்று பிறக்கும் என்று கூறினான்.

1128. வம்பு அவிழ் கோதை - வாசனை விரிந்த பூமாலை போன்ற சுநந்தை; விளி. தந்த - யான்கொடுத்த. வீழ்த்து - கீழே வீழ்ப்ப; எச்

வீழ்த்து - வீழ்ப்ப.

(இ - ள்.) அங்ஙனங்கூறியகாலத்தே, கோதாய்! யான்தந்த துவர்க்காயை நீ வீழ்ப்ப, அவனை வழிபட்ட நிலத்தே கிடந்ததொரு பழுக்காயை வளைந்து எடுத்து நுசுப்பினுய்க்குத் தந்தேன்; நீ அதனைப் பின்பு பேணிக்கொண்டாயென்க. (உஎஅ)

1129. (க) பெற்றவந் நிமித்தத் தானும் பிறந்தசொல் வகையினானும், அற்றமின் மணியை யங்கைக் கொண்டவர் கண்டு காட்டக், கற்பகங் காம வல்லி யனையநீர் கேண்மி னென்று, முற்றுபு கனிந்த சொல்லான் முனிவரன் மொழியுமன்றே.

1130. (உ) ஒன்றுநீர் கவலல் வேண்டா வுலகெலா மாளுஞ் சீர்த்திப், பொன்றிக ழுருவி னானோர் புண்ணியற் பெறுதி ரென்ன, நின்றநீ யுவந்து நீங்க நிகழ்பொரு ளெனக்குச் செப்பிப், பின்றையு நிகழ்வ துண்டு பேசுவல் கேளி தென்றான்.

இவையிரண்டும் ஒரு தொடர்.

(க) நிமித்தம் - துவர்க்காயைவீழ்ப்பப் பழுக்காயைக்கொடுத்தது. பிறந்த சொல்வகையாவது, இறக்குமென்றது சென்றுபிறக்குமென்றதனாற் போமதுவும் பிறக்குமதுவும் சொல்லியது. கொண்டவர் முனிவரனென்றது பன்மை யொருமைமயக்கம்.

---

சத்திரிபு. வாங்கி - வளைந்து. முனிவனை வழிபட்ட நிலமாதலின், 'திருநிலம்' என்றார். திருநிலத்துச் செம்பழுக்காயை வாங்கி எடுத்து என மாறியியைக்க. அம்பு அழ - அப்பு கண்ணின் கூர்மையைக் கண்டு அழும்படி. அலமரும் - அசைகின்ற. அணிசெய் - அழகுசெய்கின்ற. அலமரும் நுசுப்பு, அணிசெய்நுசுப்பு, பூங்கொம்பை அடும்நுசுப்பு எனத்தனித்தனி இயைக்க. கண்ணையுடைய நுசுப்பினாய்; என்றது சுநந்தையை. பேணிக் கொண்டாய் - விரும்பிக் கொண்டாய்.

1129. நிமித்தம்: துவர்க்காய் கீழேவிழப் பழுக்காய் பெற்றதாகிய நன்னிமித்தம்; சீவக. 1128. சொல்வகை: "உயிர் சென்று பிறக்கும்" (சீவக. 1127) என்று கூறியது. அற்றமில் மணியை அங்கைக் கொண்டவர் - அழிவில்லாத மணிபோன்றவனாகிய இறைவனை அகங்கையில் கொண்டுள்ளவனாகிய முனிவன். கண்டு - அந்நிமித்தத்தையும் சொல்வகையையும் தான் அறிந்து. காட்ட - நமக்கு அறிவிக்கவேண்டி. கற்பக தருவும் அதன்மீது படர்ந்த காம வல்லியும் முறையே கந்துகனுக்கும், சுநந்தைக்கும் உவமை; சீவக. 365. என்று - என்றுகூறி. முற்றுபு - காரியம் முற்றுப்பெற்று. கனிந்த சொல் - இனிய மொழி. கொண்டவராகிய முனிவரன் மொழியும் என்க.

1130. ஒன்றும் - சிறிதும். கவலல் - வருந்துதல். சீர்த்தி - மிக்க புகழையுடைய. பொன்னைப்போல் திகழும் உருவினனாகிய ஒரு புண்ணியனை; என்றது சீவகனை. பெறுதிர் என்ன - வளர்க்கப் பெறுவீர்கள் என்று முனிவன் கூற. நீ உவந்து நீங்க - அதைக் கேட்ட நீ மகிழ்ச்சி

(உ) பெறுதிரென்றது சுநந்தைக்குப் பிள்ளைபெறுவையென்றாற்போ லிருந்தது ; [1] அவன் கூறியது வளர்க்கப்பெறுவீரென்று.

(இ - ள்.) இறைவனை அங்கையிலே கொண்டிருக்கின்றவன், நிமித் தத்தாலும் சொல்லாலும் தான்கண்டு நமக்கு அறிவிக்கவேண்டி நீர் கேண்மினென்று காரியமுற்றுப்பெற்று இனியசொல்லாலே மொழியும் அம்முனிகளுக்கு வரனுனவன், நீர் சிறிதும் வருந்தவேண்டா ; உலக மெல்லாம் ஆள்வானொரு புண்ணியனைப்பெறுவீரென்றுகூற, அது கேட்டு நீ உவந்துபோனாயாக, பிறப்புத்தொடங்கி அவற்குத் துறவளவுநிகழும் நன்றாயபொருள்களை எனக்குக்கூறிப் பின்புநிகழ்வதொரு துன்பமுண்டு; அத்துன்பத்தைக் கூறுகின்றேன் கேளென்றானென்க. (உஎகூ - அ0)

1131. நிலவுறழ் பூணி னானை நெடுநக ரிரங்கக் கையாத், தலபல செய்து கொல்வா னருளிலான் கொண்ட போழ்திற், குலவிய புகழி னானைக் கொண்டுபோ மியக்க னஞ்சல், சிலபகல் கழிந்து காண்டி சிந்தியீ தென்று சொன்னான்.

(இ - ள்.) நீங்கள் அலபலசெய்து பூணினானைக் கையைத் தொழில் செய்யாதபடி பண்ணுதலாலே, அருளிலான் அவனைக்கொல்லக்கருதி நகரிரங்கும்படி கைக்கொண்ட காலத்தே அவனை ஓரியக்கன் கொண்டு போம் ; போனால் எட்டுத்திங்கள்சென்றாற் காண்பை ; இவ்வார்த்தையை அக்காலத்தே சிந்தியென்று சொன்னானுதலின், நீயும் அஞ்சாதேகொள் ளென்றானென்க. (உஅக)

1132. வசையற நிறைந்த கற்பின் மாலையு மாமி தானும், தசையற வுருகி வெந்து தம்முயிர் நீங்கு மாங்கண், நொசிதவன் சொற்க ளென்னு நோன்புணை தழுவி நெஞ்சிற், கசிவெனுங் கடலை நீந்திக் கரையெனுங் காலை கண்டார்.

---

யுடன் செல்ல. நிகழ் பொருள் - சீவகனுக்கு நிகழும் நற்காரியங்களை. பின்றையும் - பின்பும். நிகழ்வது உண்டு - சீவகனுக்கு நடக்கக்கூடிய துன்பமொன்று உண்டு. என்றான் - என்று முனிவன் கூறினான்.

(உரை) [1] அவன் - முனிவன்.

1131. நிலவு - பிறை. பூண் - முத்துவடம். பூணினானை : சீவகனை. நகர் - இராசமாபுரத்திலுள்ளவர்கள். கையாத்து - கைகளைப் போர் செய் யாதபடி கட்டுப்படுத்தினமையான் ; யாத்து - யாப்ப. அலபல - செய்தற் குரியன அல்லாதனவாகிய பலவற்றை. கொல்வான் - சீவகனைக்கொல்லக் கருதி. அருளிலான் : கட்டியங்காரன். கொண்டபோழ்தில் - சீவகனைக் கைக்கொண்ட போதில். பூணினானை அலபல செய்து கையாத்தமையால் அருளிலான் கொல்வான் நகரிரங்கக்கொண்ட போழ்தில் என மாறி யியைக்க. குலவிய - விளங்கிய. புகழினானை : சீவகனை. இயக்கன் கொண்டுபோம் ; போம் - போவான். காண்டி - காண்பாய். ஈது சிந்தி - இவ்வார்த்தையை அக்காலத்து நினைப்பாயாக. சொன்னான் - முனிவன் கூறினான் ; ஆதலின் நீ அஞ்சல் என்றான் என்க.

1132. வசை - குற்றம். கற்பினையுடைய மாலை : குணமாலை. மாமி : சுநந்தை. தசை - சதை. உயிர்நீங்கும் ஆங்கண் - சீவகனுடைய பிரி

**(இ - ள்.)** குணமாலையும் சுநந்தையும் உருகி வெந்து உயிர்நீங்கு கின்ற அளவிலே அதுகேட்டு, நுண்ணிய தவத்தையுடையவன் வார்த்தை யென்னும் [1] நோன்புணையைத் தழுவி வருத்தமென்கின்ற கடலைநீந்தி எட்டுத்திங்களென்கின்ற காலையாகிய கரையைக் கண்டாரென்க. (உஅஉ)

1133. திருக்குழன் மகளிர் நையச் சீவக சாமி திண்டோள்,
வரிக்கச்சிற் பிணிக்கப் பட்டான் மன்னனு லென்னக் கேட்டே,
தருக்குடை வேழம் வாளார் ஞாட்பினுட் டகைமை சான்ற,
மருப்புட னிழந்த தொத்தார் மன்னுயிர்த் தோழன் மாரே.

**(இ - ள்.)** மன்னவன் கைக்கொண்டுவரச்சொல்லுதலால், சீவகன், தன் தோளை இருமுதுகுரவராலே கச்சிட்டுக்கட்டினாற்போலத் தொழில் செய்யாதபடி பண்ணப்பட்டானென்று சிலர் கூறக்கேட்டு அவன் தோழர் யானை போரிலே மருப்பைச் சேர இழந்த தன்மையையொத்தாரென்க. (உஅங)

1134. நட்டவற் குற்ற கேட்டே பதுமுக னக்கு மற்றோர்
குட்டியைத் தின்ன லாமே கோட்புலி புறத்த தாகக்
கட்டியங் கார னென்னுங் கழுதைநம் புலியைப் பாய
ஒட்டியிஃ துணர லாமே யுரைவல்லை யறிக வென்றான்.

---

வால் உயிர்நீங்குகின்ற அப்பொழுது. நொசிதவன் - நுண்ணிய தவத்தைச் செய்த முனிவனுடைய. நோன் புணை - வலிய தெப்பம்; "நோன் புணை தழுவி" (சூளா. சுயம். 128). நெஞ்சிற் கசிவு - மனத்தி லுண்டாகிய வருத்தம். காலையாகிய கரையைக் கண்டார்; "முழுங்கு கடற் பட்டோ ருழந்துபின் கண்ட, கரையெனக் காலை தோன்றலின்" (பெருங். 1. 33 : 208-9)

(உரை) [1] (பி - ம்.) 'நொய்ய புணை.'

1133. நைய - வருந்த. வரிக்கச்சு - வரிதலையுடைய கச்சு. மன்னனுல் - கட்டியங்காரனுல். என்னக்கேட்டு - என்று சிலர் கூறக்கேட்டு. மன்னனுல், சீவகசாமி திண்டோள் கச்சிற் பிணிக்கப்பட்டான் என்னக் கேட்டு என மாறியியைக்க. தருக்கு - மதச்செருக்கு. வாளார் ஞாட்பு - வாட்போர். மருப்பு - தந்தத்தை. உடன் இழந்தது - சேர இழந்த தன்மையை. மன்உயிர்த்தோழன்மார் - சீவகனுக்கு நிலைபெற்ற உயிர் போல்வாராகிய தோழர்கள்; என்றது பதுமுகன் முதலியோரை. கேட்ட தோழன்மார், ஞாட்பினுள் வேழம் மருப்பிழந்ததொத்தார் என மாறி யியைக்க.

1134. நட்டவற்கு - தன்னுல் நட்புச்செய்யப்பட்ட சீவகனுக்கு. உற்ற கேட்டு - உண்டாகிய துன்பத்தைக் கேட்டு. நக்கு - இகழ்ந்து சிரித்து. கோட்புலி - கொலைசெய்கின்ற புலி. புறத்ததாக - தன்பக்கத்தி லுள்ளதாக; புலி புறத்ததாகக் குட்டியைத் தின்னமுடியாது : "புலிபுறங் காக்குங் குருளை போல" (புறநா. 42 : 10); "புலிதானே புறத்தாகக் குட்டிகோட் படாது" (கம்ப. சூர்ப்பணகை. 102). தின்னலாமே; ஏ,

(இ - ள்.) தான் நட்புப்பண்ணின சீவகனுக்குப் பிறந்த துன்பத்தைக் கேட்டுப் பதுமுகன் நக்கு, புலி புறத்ததாக அதன்குட்டியை வேறொன்றினால் தின்னலாமோ; அதுபோல யாம் உளேமாக அவனால் என் செய்யலாம்? அதுவேயுமன்றிக் கட்டியங்காரனென்னுங்கழுதை நம்புலியைப்பாய்தற்கு யாமும் பொருந்தி இவ்வார்த்தையை மெய்யென்று உணர்தலாகாதென்று திரளைநோக்கிக்கூறிப் பின்பு ஒற்றுப்போகின்றவனைநோக்கி, ஆண்டுப்பிறக்கின்ற வார்த்தையைக் கடுகவறிவாயாகவென்றானென்க.

மற்று, வினைமாற்று. தான் பாதுகாத்தற்றொழிலுடைமையிற் குட்டியென்றான். அது, "மடங்க லாற்றற் பதுமுகன் காக்க" (சீவக. 1896) என்பதனானு முணர்க. இனிப் புலியென்றது [1]சுதஞ்சணனைக் கருதியென்றுமுரைப்ப. (உஅச)

1135. சிலையொடு செல்வ னின்றாற் றேவரும் வணக்க லாற்றார்,
முலையுடைத் தாயொ டெண்ணித் தந்தையிக் கொடுமை செய்தான்,
கலைவல்லீ ரின்னுங் கேண்மி னின்னதென் றுரைக்கு மாங்கண்,
விரைவொடு சென்ற வொற்றாள் விளைந்தவா பேசு கின்றான்.

(இ - ள்.) அவன்போனபின்பு, பதுமுகன், கலைவல்லீர்! ஆண்டுப் பிறந்த செய்தி இத்தன்மைத்து; யாதெனிற் சீவகன் சிலையோடுநின்றால் தேவரும் அவனைத் தாழ்வித்தலாற்றாராதலின், அவனைத் தாழ்வித்தலரிது; இக்கொடுமைசெய்தான் நற்றாயோடெண்ணித் தந்தையே; இன்னமும் ஒற்றன்வந்தாலும் கேண்மினென்று உரைக்கின்றவளவிலே ஓடிவந்த ஒற்றன் செய்தி சொல்லாநின்றானென்க. (உஅரு)

---

எதிர்மறை. பதுமுகனுக்குப் புலியும், சீவகனுக்குப் புலிக்குட்டியும் உவமை. நம்புலி என்றது, சீவகனை. பாய - பாய்தற்கு. ஒட்டி - சம்மதித்து. இஃது உணரலாமே - இவ்வார்த்தையை உண்மையென்று உணரலாகாது; ஏ, எதிர்மறை. உரை - கட்டியங்காரனிடமாக உண்டாகும் சொல்லை. வல்லை - விரைய. அறிக என்றான் - ஒற்றியறிவாயாக என்று ஒருவனை நோக்கிக் கூறினான்.

(உரை) [1] சுதஞ்சணன் : சீவகனால் நாய்ப்பிறப்பின் நீங்கிய வித்தியாதரன்; துன்பம்வரின் என்னை நினைக்க என்று கூறியிருந்தமையால், இவனைக் கூறினார்.

1135. செல்வன் : சீவகன். வணக்கலாற்றார் - தாழ்வித்தற்குரிய வன்மையிலார். தாய் : சுநந்தை. எண்ணி - ஆராய்ந்து. தந்தை : கந்துக்கடன். இக்கொடுமை செய்தவன் தாயொடு எண்ணித் தந்தையே. கலைவல்லீர் என்றது தன்தோழரை. இன்னது - இத்தன்மையது. உரைக்கும் ஆங்கண் - சொல்லுமளவில். ஒற்றாள் - ஒற்றியறியச் சென்ற வீரன். விளைந்தவா - நடந்தவற்றை.

1136. இட்டிவேல் குந்தங் கூர்வா ளிருஞ்சிலை யிருப்புச் சுற்ரர், நெட்டிலைச் சூலம் வெய்ய முளைத்தண்டு நெருங்க வேந்தி, எட்டெலாத் திசையு மீண்டி யெழாயிரத் திரட்டி மள்ளர், கட்டழற் கதிரை யூர்கோள் வளைத்தவா வளைத்துக் கொண்டார்.

[1] ஈட்டி, விகாரம். இருப்புச்சுற்று - பூண். முளைத்தண்டு - [2] முளையினையுடைய தண்டாயுதம்.

(இ - ள்.) பதினாலாயிரமள்ளர், ஈட்டி முதலியவற்றை நெருங்க ஏந்தி எட்டாகிய எல்லாத்திசைகளிலுமீண்டிக் கதிரைப் பரிவேடிப்பு வளைத்தாற் போல வளைத்துக்கொண்டாரென்க. (உஅசு)

1137. பிடியொடு நின்ற வேழம் பெருவளைப் புண்ட வண்ணம்
வடிமலர்க் கோதை யோடும் வளைத்தலின் மைந்தன் சீறி
விடுகணை சிலையொ டேந்தி வெருவரத் தோன்ற லோடும்
அடுபுலி கண்ட மான்போ லாறல வாயி னாரே.

(இ - ள்.) பிடியோடுநின்ற பெருவேழம் வளைப்புண்டாற்போலே குணமாலையோடே கூட வளையிடத்தே வளைத்தலாலே மைந்தன்சீறிக் கணையைச் சிலையுடனேயேந்தித் தோன்றினவளவிலே அம்மள்ளர் புலியைக் கண்ட மான் போலே வழியல்லாவழிகளிலே போனாரென்க. (உஅஎ)

1138. (க) சூழ்கழன் மள்ளர் பாறச் சூழ்ச்சியிற் றந்தை புல்லி, வீழ்தரு கண்ண டம்மோய் விளங்குதோள் பிணிப்ப மற்றென், தோழரை வடுச்செய் திட்டே னென்றுதான் றுளங்கி நின்றான், ஊழ்திரைப் பாம்பு சேர்ந்த வொளிமிகு பருதி யொத்தான்.

1136. குந்தம் - எறிகோல். இருப்புச் சுற்றர் - இரும்புப்பூண் அமைந்த. ஈட்டிவேல்குந்தம் : "வேலு மீட்டியுங் கோலுங் குந்தமும்" (பெருங். 1. 46 : 57). முளைத் தண்டு ; தண்டாயுதம் என்பது. (பி - ம்.) 'முனைத்தண்டு.' எட்டாகிய எல்லாத்திசையும். ஈண்டி - சூழ்ந்து. ஏழாயிரத்திரட்டி மள்ளர் - பதினாலாயிரம் வீரர். கதிர் - சூரியன். ஊர்கோள் - பரிவேடம். வளைத்தவா - வளைத்தாற்போல. சீவகனுக்குக் கதிரும், வீரர்க்கு ஊர்கோளும் உவமை ; சீவக. 1138. இதுமுதல் மூன்று பாடல்களும் ஒற்றன் கூற்று.

(உரை) [1] ஈட்டி என்பது இட்டியெனக் குறுகியது. [2] "எழுமுளை வயிரத் தண்டு" (கம்ப. அட்சகுமாரன். 11)

1137. பிடியொடு நின்ற பெருவேழம் வளைப்புண்ட வண்ணம் என மாறியியைக்க. சீவகனுக்கு வேழமும் குணமாலைக்குப் பிடியும் உவமை ; பிடி - பெண்யானை. கோதை : குணமாலை. மைந்தன் : சீவகன். வெருவர - அஞ்சும்படி. தோன்றலோடும் - தோன்றியவுடன். புலியைக்கண்ட மானைப் போல ; சீவக. 814. ஆறல ஆயினர் - வழியல்லாதவழிகளிலே ஓடினார்கள் ; ஓடியவர் கட்டியங்காரனுடைய வீரர்.

1138. மள்ளர் - கட்டியங்காரனுடைய வீரர். பாற - கெட்டுப் போக. சூழ்ச்சியின் - தந்திரத்தால். தந்தை - கந்துகன். புல்லி - சீவகனை

1139. (உ) ஒற்றன்வந் துரைப்பக் கேட்டே யொத்ததோ வென்சொ லென்னாச், சுற்றினர் முகத்தை நோக்கிச் சூழிமால் யானை யன்னான், உற்றவிவ் விடரைத் தீர்க்கு முபாயநீ ருரைமி னென்றான், பொற்றிரட் குன்றம் போலப் பொலிவுகொண் டிருந்த தோளான்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) வருத்தத்தாற் கழன்று நீர் வீழ்கின்ற கண்ணுளாகிய. தம்மோய்-தாய்; சுநந்தை. புல்லி - அணுகி. ஊழித்திரைப்பருதி; ஊழி [1] விகாரம். இனி, மொய்விளங்குதோள்பாடமாயின், 'தம்' என்பது ஒருமைபன்மை மயக்கமாம். திரைப்பரப்புச்சேர்ந்தவும் பாடம்.

(உ) சூழி - முகபடாம். தோளான் - பதுமுகன்.

(இ - ள்.) மள்ளர் அங்ஙனம் கெட்டார்களாக, இது காரியமென்றென்று கருதித் தந்தை தாய் இவர்கள் புல்லி விளங்குதோளைச் சூழ்ச்சியாலே போர்த்தொழில்செய்யாதபடிசெய்ய, அவன் இவர்கள் வேண்டிக் கோடலின் எனக்கு வடுவில்லை; என்தோழர்க்கு வடுவுண்டாக்கினேனென்று கலங்கிநின்றான்; அப்பொழுது மள்ளர்சென்று கைக்கொள்ளுதலாற் பாம்புமறைத்த பருதியை யொத்தானென்று ஒற்றன்வந்து கூறக் கேட்டு, என்சொல் ஒத்ததோவென்று கூறிப் பதுமுகன் தன்னைச்சூழ்ந்து நின்றவர்கள் முகத்தை நோக்கிச் சீவகனுக்குற்ற இவ்விடரைத் தீர்க்கும் உபாயத்தை நீங்கள் உரைமினென்றானென்க. (உஅஅ-கூ)

1140. நிறைத்திங்க ளொளியோ டொப்பான் புத்திசே னினைந்து சொல்லும், மறைத்திங்க ணகரை வல்லே சுடுதுநாஞ் சுடுத லோடும், இறைக்குற்றேல் செய்த லின்றி யெரியின்வாய்ச் சனங்க ணீங்கச், சிறைக்குற்ற நீங்கச் செற்றாற் செகுத்துக்கொண் டெழுது மென்றான்.

---

அணுகி. வீழ்தருகண்ணள் தம்மோய் - வருத்தத்தால் நீர்வீழ்கின்ற கண்ணுளாகிய தாய்; என்றது சுநந்தையை. தம்மோய் - தாய்; "அருந்ததிக் கற்பினெம்மோய்" (கம்ப. சூர்ப்பணகை. 50). தோள்பிணிப்ப - சீவகனுடைய தோளைப் போர் செய்யாதபடி தடுப்ப. தந்தையும் தம்மோயும் புல்லி, தோளைச் சூழ்ச்சியால் பிணிப்ப எனமாறி யியைக்க. மற்று: வினைமாற்று. தோழரை - பதுமுகன் முதலாயினோரை. வடு - குற்றம். 'தான்' என்றது சீவகனை. துளங்கி - கலங்கி. ஊழ்திரை - ஊழிக்காலத்துக் கடலில் தோன்றிய. பாம்பு - கேது வென்னும் பாம்பு. பருதி - சூரியனை. ஊழ்திரைப் பருதியைப் பாம்பு சேர்ந்ததொத்தான் என மாறியியைக்க; சீவக. 1092.

1139. என்சொல் ஒத்ததோ என்னா - என்னுடைய வார்த்தை பொருந்திற்றோ என்றுகூறி. சுற்றினர் - தன்னைச் சூழ்ந்துநின்ற தோழர்களுடைய. சூழி - முகபடாத்தையணிந்த. யானையன்னான் உற்ற - சீவகன் அடைந்த. உபாயம் - தந்திரம். தோளான்: பதுமுகன். தோளான் உரைமின் என்றான் என்க.

(உரை) [1] ஊழி என்பது ஊழ்என வந்தது.

1140. நிறைத்திங்கள் - கலைநிரம்புதலையுடைய சந்திரன். ஒப்பாகிய புத்திசேனன். புத்திசேன்: சீவக. 1734. "சீயசேனும்" (மேருமந்தர.

(இ - ள்.) நிறைந்த திங்களொளியோடொப்பானாகிய புத்திசேனன் நினைந்து சொல்லும்; நாம் இப்பொழுதே மறைந்து ஊரைச்சுடுவேம்; சுட்டவளவிலே சனங்கள் இறைக்குக் குற்றேவல்செய்தலின்றி எரியை யவித்தற்கு நீங்கினார்களாக, மதனனைக்கொன்று சீவகனுக்குச் சிறையாகிய குற்றத்தை நீக்கிக் கொண்டுபோவேமென்றானென்க.

மறைந்து : விகாரம். [1] இவன் அந்தணனாதலின் முற்கூறினான்.

(உ௯௰)

1141. காலத்தீ நகரை மேயக் கடியரண் கடிந்த வம்பிற்
சாலத்தீச் சவரர் கோலஞ் செய்துநம் மறவ ரீண்டிக்
கோலத்தீ வேலி னானைக் கோயிலுள் வளைப்ப விப்பால்
ஆலைத்தீ யிடங்க டோறு மாகுலஞ் செய்து மென்றான்.

இக்கவிமுதல் பதுமுகன் கூற்று.

(இ - ள்.) நீ கூறியவாறே விரைய ஊழித்தீப்போலுந்தீயால் ஊர் முழுதும் சுடாதே முப்புரத்தைக்கடிந்த அம்புபோலே சிலவிடங்களை விட்டுச்சுட நம் மறவரீண்டித் தீய வேடர்கோலத்தைச்செய்து கட்டியங்காரனைக் கோயிலிலே வளைத்துக்கொள்ள இப்பகுதியிலே ஆலையிற் பாகடுந் தீயையுடைய நாடெங்கும் அழிக்கக்கடவோமென்றானென்க.

“உய்யவல் லாரொரு மூவரைக் காவல்கொண், டெய்யவல் லானுக்கே யுந்தீபற” (திருவா. திருவுந்தி. 4) என்றாற்போல. (உ௯௧)

---

பத்திர. 63). சொல்லும் - சொல்லுவான். மறைத்து - மறைந்து; வலித்தல் விகாரம். இங்கண் - இப்பொழுதே. சுடுதும் - சுடுவோம். நாம் நகரைவல்லே சுடுதும். இறைக் குற்றேல் செய்தலின்றி - அரசனுக்குக் குற்றேவல் செய்யாமல். குற்றேல்; சீவக. 1057, அடிக். நீங்க - எரியை அவித்தற்குச்செல்ல. சனங்கள் குற்றேல் செய்தலின்றி எரியின்வாய் நீங்க என மாறியியைக்க. சிறைக்குற்றம் நீங்க - சீவகனுக்குற்ற சிறையாகிய குற்றத்தை நீக்கி. செற்றாற் செகுத்து - சீவகனைச்சிறைசெய்த மதனனைக் கொன்று. செற்றாற் செகுத்துச் சிறைக்குற்றம் நீங்கக் கொண்டெழுதும் என்றான் என்க.

(உரை) [1] இவன் - புத்திசேனன்.

1141. காலத்தீ - ஊழிக்காலத்துத் தீப்போலும் நெருப்பு. மேய - உண்ண. கடியரண் - காவலோடு கூடிய திரிபுரத்தை. கடிந்த - எரித்த. அம்பின் - சிவபிரானுடைய அம்பைப்போல. அம்பினைப்போல் காலத்தீ மேய என மாறியியைக்க. சாலத்தீச்சவரர் - மிகக் கொடிய வேடருடைய. கோலம் செய்து - வேடத்தைக் கொண்டு. மறவர் - வீரர். கோலத்தீவேலினானை - நிறத்தையுடைய தீப்போலும் வேலையுடைய கட்டியங்காரனை. கோயில் - அரண்மனை. நம்மறவர் சவரர் கோலஞ்செய்து வேலினானைக் கோயிலுள் வளைப்ப என மாறியியைக்க. இப்பால் - இப்பகுதியில்.

1142. சிறைப்புறங் காத்துச் செல்லு மதனனைத் தெருவில் வீழப், பிறைத்தலை யம்பிற் சென்னி பெருநிலத் திடுவ லிட்டால், மறுக்குற்று மள்ளர் நீங்க மைந்தனைக் கொண்டு போகி, அறைத் தொழி லார்க்குஞ் செல்லா வருமிளை புகுமி னென்றான்.

(இ - ள்.) அங்ஙனஞ்செய்தால், யான் அம்பாலே சிறையைப் பாது காத்துத் தெருவிலே செல்லும மதனனைத் தலையை நிலத்தேவீழ இடுவேன்; இட்டால் [1]மறுகுதலுற்று மள்ளர் நீங்கினவளவிலே சீவகனைக்கொண்டு போய்க் கீழறுக்குந்தொழிலுடைய அமைச்சர்க்கும் நினைக்கவொண்ணாத காவற்காட்டிலே செல்லுமினென்றானென்க. (உகூஉ)

1143. மாற்றவர் மலைப்பி னாங்கே வாட்கடாக் கொண்டு நொய்தா, வேற்றுல கேற்றி நும்பின் விரைதர்வே னுலகிற் கெல் லாம், ஆற்றிய நட்பு வல்லே வலிப்புறீஇ யிடுமி னென்றான், கூற் றங்கள் பலவுந் தொக்க கூற்றத்திற் கூற்ற மொப்பான்.

கூற்றங்கள் பலவுந்திரண்ட கூறுபாட்டிலே விசேடித்த கூற்றத்தை யொப்பான்; "முத்தூற்றுக் கூற்றம்" (புறநா. 24, உரை) என்றாற் போல. தோழரிற் பதுமுகனுக்கு விசேடமுண்டென்றார். இனி, கூற்றத் தில் உவமை கூறுமிடத்துப் பலகூற்றங்களாலே பண்ணினதொரு கூற்ற மொப்பானென்றுமாம்.

(இ - ள்.) கூற்றமொப்பான், அங்ஙனஞ்செய்தாற் பகைவர் மலைந்த துண்டாயின் வாளாலே கடாவிட்டு, வல்லை விண்ணுலகேற்றி நும் பின்னே கடுக வருவேன்; நீங்கள் நடத்தியநட்பை உலகெல்லாம் நிலை பெறுத்தியிடுமினென்றானென்க. (உகூங)

---

ஆலைத்தீ - கரும்பாலையில் பாகை அடுகின்ற தீயையுடைய. ஆகுலம் செய்தும் - துன்பத்தைச் செய்து அழிப்போம். என்றான் - என்று பது முகன் கூறினான்.

1142. புறங்காத்து - பாதுகாத்து. மதனன் : கட்டியங்காரனுடைய மைத்துனன். தெருவில் செல்லும் மதனனை என மாறியியைக்க. பிறைத் தலையம்பு - அர்த்தசந்திரபாணம். அம்பால், மதனனுடைய சென்னியை நிலத்து வீழ இடுவல் என மாறியியைக்க. மறுக்குற்று - மறுகுதலுற்று. மள்ளர் - வீரர். மைந்தனை : சீவகனை. அறைத் தொழிலார்க்கும் - கீழ றுக்கும் தொழிலையுடைய மந்திரிகளுக்கும்; "அறைபோ கமைச்சர்" (சிலப். 5 : 130); "அறைபோக் கமைச்சின் முறைபோக் கெண்ணினும்" (பெருங். 3. 17 : 53); அறைபோதல் : சிலப். 4 : 10; பெருங். 1. 56 : 62, 4. 1 : 7. செல்லா - நினைக்கமுடியாத. மிளை - காவற்காடு; "கடி மிளை" (புறநா. 21 : 5, 181 : 5); "அருமிளை யுடுத்த வகழி" (சிலப். 13 : 183)

(உரை) [1] மறுகுதல் - மனம் சுழலுதல்.

1143. மாற்றவர் - பகைவர். மலைப்பின் - போர்செய்தால். வாள்

1144. காலனைச் சூழ்ந்த நோய்போ னபுலமா விபுலர் சூழ
வேலினை யேந்தி நந்தன் வெருவரத் தோன்ற லோடும்
மாலைதன் றுதை தானு மக்களும் வந்து கூடிப்
பாலவர் பிறரு மீண்டிப் பாய்புலி யினத்திற் சூழ்ந்தார்.

(இ - ள்.) காலன் ஏவின இடத்தே சேறற்கு அவனைச்சூழ்ந்தநோய் போல மாவின்மேலே நபுலவிபுலர் சூழ்ந்துவர நந்தட்டன் தோன்றின வளவிலே அவனுடனே குபேரமித்திரனும் அவன்மக்களும் தம்பகுதியி லுள்ளாரொழிந்தவரும் ஈண்டிவந்து தோழருடனே கூடி எல்லாரும் புலி யினம்போலே பதுமுகனைச் சூழ்ந்தாரென்க.

நபுலவிபுலர், 'கபிலபரணர்' போலக்கொள்க. (உகூச)

1145. மட்டுவா யவிழ்ந்த தண்டார்த் தாமரை நாமன் சொன்ன, கட்டமை நீதி தன்மேற் காப்பமைந் திவர்க ணிற்பப், பட்டுலாய்க் கிடந்த செம்பொற் கலையணி பரவை யல்குல், இட்டிடைப் பவளச் செவ்வாய்த் தத்தையு மிதனைக் கேட்டாள்.

(இ - ள்.) பதுமுகன்கூறிய வகுப்பமைந்த முறையிலே இவர்கள் காவலமைந்து நிற்ப, அல்குன்முதலியவற்றையுடைய தத்தையும் இச் செய்தியைக் கேட்டாளென்க. (உகூரு)

---

கடாக் கொண்டு - வாளினுல் கடாவிட்டு. கடாவிடல் : சீவக. 1153. நொய்தா - விரைய. வேற்றுலகு - வேறு உலகமாகிய விண்ணுலகம். விரைதர்வேன் - விரைவாக வருவேன். ஆற்றிய நட்பு - நீங்கள் செய்த நட்பினை. வலிப்புறீஇயிடுமின் - நிலைபெறுத்துமின். நட்பினை உலகிற் கெல்லாம் வலிப்புறீஇயிடுமின் என மாறியியைக்க. தொக்க - ஒன்றாகக் கூடிய. கூற்றம் - யமன். ஒப்பான் என்றது பதுமுகனை.

1144. காலன் - யமனுக்கு ஏவல் செய்பவன்; சீவக. 1487, ந; பரி. 3 : 8, உரை. நோய் - பிணி. காலனைச் சூழ்ந்த நோய் : சூளா. துறவு. 18. நபுலனும், விபுலனும். நந்தன் - நந்தட்டன். வெருவர - அஞ்சும் படி. மாலை தன்றுதை : குபேரமித்திரன்; மாலை : குணமாலை. மக்கள் - குபேரமித்திரனுடைய பிள்ளைகள். பாலவர் - தம்பகுதியிலுள்ளவர்கள். சூழ்ந்தார் - பதுமுகனைச் சுற்றிக்கொண்டார்கள்.

1145. தார் - பூமாலை. தாமரை நாமன் - பதுமுகன்; பதுமம் - தாமரை. கட்டு அமை நீதி - பகுப்பு அமைந்த முறைமை. காப்ப மைந்து - காவல்செய்து. இவர்கள் : தோழர்கள். உலாய் - பரவி. கலை - மேகலை. இட்டிடை - சிறிய இடை; சீவக. 880, அடிக். அல்குலையும், இடையையும், செவ்வாயையுமுடைய தத்தை; தத்தை - காந்தருவ தத்தை. இதனை : சீவகன் சிறைப்பட்ட செய்தியை.

1146. மணியியல் யவனச் செப்பின் மங்கலத் துகிலே வாங்கிக் கணைபுரை கண்ணி யேற்ப வுடுத்தபின் செம்பொற் செப்பிற், பிணையலு நறிய சேர்த்திப் பெருவிலை யாரந் தாங்கித், துணைவ னுக் குற்ற துன்பஞ் சொல்லிய தொடங்கி னாளே.

(இ - ள்.) அதுகேட்ட கண்ணி, தியானத்துக்கேற்ப வெண்டுகிலை யுடுத்த பின்பு நறியமாலைகளையுமணிந்து முத்தாரத்தையும் தாங்கிக் கணவனுக்குற்ற வருத்தத்தைத் தீர்த்தற்குத் தியானத்தைத் தொடங்கினா ளென்க. (உகசு)

1147. பொன்னணி மணிசெ யோடை நீரின்வெண் சாந்து பூசித், தன்னுடை விஞ்சை யெல்லாந் தளிரிய லோத லோடும், மின்னடு வாளும் வேலுங் கல்லொடு தீயுங் காற்றும், மன்னுட னேந்தித் தெய்வ மாதரைச் சூழ்ந்த வன்றே.

(இ - ள்.) அங்ஙனந்தொடங்கிய தளிரியல், மடலிலிருந்த சாந்தைப் பனிநீருடனே பூசித் தன்னுடைய மந்திரங்களெல்லாவற்றையும் ஓதின வளவிலே அவள் வழிபாட்டிற்கு விரும்பிவரும் தெய்வங்கள், வாள் வேல் முதலியவற்றை மிகுதியுடனே ஏந்திவந்து அவளைச் சூழ்ந்தவென்க.

இதனானும், பின், "விண்ணோர்களைவாழ்த்தி" (சீவக. 1160) என்ற தனானும் ஈண்டு விஞ்சையர் வாராமையுணர்க. சாந்துபூத்த, தன்னிடை விஞ்சையும் : பாடம். (உகஎ)

(வேறு)

1148. ஆரமின் னும்பணை வெம்முலை யாடமைத் தோளினாள்
வீரனுற் றதுயர் மின்னென நீக்கிய மெல்லவே
நேரமன் னும்வரு கென்றுநின் றாணினை ந் தாளரோ
பாருண்மன் னும்பழி பண்பனுக் கின்றுவி ளைந்ததே.

---

1146. மணியால் இயன்ற யவனச்செப்பில். மங்கலத்துகில் - வெள்ளிய ஆடை. கணை - அம்பு. கண்ணி : காந்தருவதத்தை. ஏற்ப - தியானத்திற்குப் பொருந்த. கண்ணி, துகிலை உடுத்தபின். செப்பில் வைத்த பிணையல். நறிய பிணையலும் சேர்த்தி - வாசனையையுடைய பூமாலையையும் அணிந்து. பெருவிலையையுடைய ஆரம் - முத்தமாலை. துணைவனுக்கு - தன் கணவனாகிய சீவகனுக்கு. துன்பம் சொல்லிய - துன்பத்தை நீக்குதற்கு; சொல்லுதல் - நீக்குதல்; "சொல்லிய" (புறநா. 39 : 1, 90 : 7). தொடங்கினாள் - தியானத்தைச் செய்தாள்.

1147. ஓடை - சந்தனம்வைக்கின்ற மடல் என்னும் பாத்திரம். வெண்சாந்தை நீருடன் பூசி. விஞ்சை - மந்திரம். தளிரியல் : காந்தருவதத்தை. தளிரியல், தன் விஞ்சையெல்லாம் ஓதலோடும் என மாறியியைக்க. மன்னுடன் - மிகுதியுடனே. மாதரை - காந்தருவதத்தையை. தெய்வம், வாள் முதலியவற்றை ஏந்தி மாதரைச் சூழ்ந்த என மாறி யியைக்க.

1148. ஆரம் - முத்தமாலை. பணை - பெருத்த. ஆடு அமைத்தோளி னாள்-அசைகின்ற மூங்கில்போலும் தோளையுடையவள்; காந்தருவதத்தை.

(இ - ள்.) முலையினையுடைய தோளினுள், தன்கணவனுக்குற்ற துயரை மின்போற் கடிதுமறையும்படி நீக்குதற்கு இவ்வாயிலிலே மிகவும் அணுகவருவார்களாகவென்று நின்றவள், பண்பனுக்கு இன்றுவிளைந்த தொரு பாரிலே மன்னுகின்ற பழியை மெல்லவே நினைந்தாளென்க.
அது மேற்கூறுகின்றார். (உகூஅ)

1149. மன்னன்செய் தசிறை மாகட லுட்குளித் தாழ்வுழித்
தன்னையெய் திச்சிறை மீட்டன டன்மனை யாளெனின்
என்னையா வதிவ னாற்றலுங் கல்வியு மென்றுடன் [வமே.
கொன்னும்வையங்கொழிக்கும்பழிக்கென்செய்கோ தெய்

சிறையெனவே கட்டில்லாமையுணர்க. என்னை : ஐ அசை. ஆவது ஒருமைபன்மைமயக்கம். கொன்னும் - பெரிதும்.

(இ - ள்.) அரசன்செய்த சிறைக்கடலிலே தான் முழுகியழுந்து கின்றவளவிலே தன்மனையாள் தன்னைச்சேர்ந்து சிறையைநீக்கினாளென்றால், இவன் ஆற்றலும் கல்வியும் என்னாகக்கடவனவென்றுகூறி உலகம் எடுத்துச்சொல்லும் பழிக்குத் தெய்வமே, யான் என்செய்வேனென்று நினைந்தாளென்க. (உகூகூ)

1150. (க) செல்வனுற்றசிறை செய்யவ ணீக்குமென் றாற்பழி, இல்லையா யின்னவள் யானெனும் வேற்றுமை யில்லையே, சொல் லின்வெள் ளிம்மலை தோடவிழ் தாமரைப் பொன்மலர், எல்லையா கும்பொதுப் பெண்ணவள் யான்குல மங்கையே.

---

வீரன் உற்ற - சீவகனுக்கு நேர்ந்த. மின்னென - மின்னலைப் போல விரைவாக மறையும்படி. நீக்கிய - நீக்குதற்கு. மன்னும் நேர வருக - மிகவும் அணுக வருவார்களாக. நின்றாள் - நின்றவள் ; காந்தருவதத்தை. மன்னும் - நிலைபெற்ற. பண்பனுக்கு - நற்குணமுடைய சீவகனுக்கு. நின்றவள், பண்பனுக்கு இன்று விளைந்ததாகிய, பாரில் மன்னும் பழியை நினைந்தாள் என மாறியியைக்க. அரோ : அசை.

1149. மன்னன் - கட்டியங்காரன். சிறையாகிய கடலுள். குளித்து - முழுகி. ஆழ்வுழி - சீவகன் அழுந்துகின்ற அளவிலே. தன்னை யென்றது சீவகனை. தன் மனையாள் தன்னை யெய்திச் சிறைமீட்டனள் எனின் எனமாறியியைக்க; மனையாளென்றது காந்தருவதத்தையை. என்னை ஆவது - என்ன ஆகக் கடவன. இவன் - சீவகனுடைய. இவன் ஆற்றலும் கல்வியும் என்னையாவது என்று எனமாறியியைக்க. என்று- என்றுகூறி. கொன்னும் - பெரிதும். வையம் கொழிக்கும் - உலகத்தவர் எடுத்துச்சொல்லும். தெய்வமே, பழிக்கு என்செய்கோ எனமாறி யியைக்க.

1150. செல்வன் : சீவகன். சிறையைச் செய்யவள் நீக்குமென்றால்; செய்யவள் - இலக்குமி ; என்றால் - என்று கூறினால். சீவகனுக்குப் பழி

1151. (உ) ஆவதா கபுக ழும்பழி யும்மெழு நாளவை
தேவர்மாட் டும்முள மக்களு ளில்வழித் தேர்கலேன்
நோமெனஞ் சம்மெனநோக்கிநின் றுள்சிறைப் பட்ட
காவற்கன் றிற்புனிற் றுவன கார்மயிற் சாயலே. [தன்

இவையிரண்டும் ஒரு தொடர்.

(க) [1] திருப்பார்க்கத் தீங்கெலாநீங்குமென்று உலகங் கூறுதலின், தானும் அதனாற் கூறுகின்றாள். ஏகாரம், தேற்றேகாரம்.

(உ) காவற்கன்று - தன் காவலையுடைய கன்று.

(இ - ள்.) செல்வனுற்ற சிறையைத் திருமகள் நீக்குமென்றுகூறிய வதனாற் பழி இல்லையாய்முடியுமாயின், அவளென்றும் யானென்றும் வேறுபாடில்லையே; வேறுபாடுசொல்லின், எனக்கெல்லை வெள்ளிமலை யாகும்; அவளுக்கெல்லை தாமரைப்பொன்மலராகும். அவள் பொது மகள்; யான் குலமங்கை. அதனாலும் பழியில்லையாம். அதுவுமன்றி ஈண்டுப் புகழும் பழியும் ஆவதாக; அவை தோன்றுநாள் தேவர்பக்கலுந் தோன்றும்; மக்களில் அவையில்லாத இடம் கண்டறியேன்; இவையெல் லாம் நினைக்குங்காலமுமன்று; என் நெஞ்சமும் நோமெனக்கூறி, மயிற் சாயல், ஒருசிறைப்பட்ட தன்கன்றிடத்துப் புனிற்று நோக்குதலொத்த நோக்கினை நோக்கிநின்றாளென்க.

ஆ விடுவிக்கநோக்கி நின்றாற்போலே நின்றாள்; இது பயனுவமம்.
(கூ00-கூ0க)

## (வேறு)

1152. (க) மாநகர் சுடுத லொன்றோ மதனனை யழித்த லொன்றோ, வானிக ரில்லா மைந்தர் கருதிய ததுவு நிற்க, வேய் நிக ரில்ல தோளி விஞ்சையால் விடுத்துக் கொள்ளப், போயுயிர் வாழ்தல் வேண்டே னெனப்பொருள் சிந்திக்கின்றான்.

---

இல்லையானால். அவள் - இலக்குமி. சொல்லின் - வேறுபாடு கூறினால். வெள்ளிம்மலை; சந்தம் நோக்கி மகரவொற்று மிக்கது. எனக்கு எல்லை, வெள்ளிமலை; இலக்குமியின் எல்லை, தாமரை மலர். அவள்: இலக்குமி. எல்லோரிடமும் தங்குகின்றமையால், திருமகளைப் பொதுப்பெண் என்றார்.

1151. புகழும், பழியும் ஆவதாக. அவை எழும்நாள் - புகழும் பழியும் தோன்றுகின்றவிடத்து. உள - தோன்றுகின்றன. இல்வழி - பழியில்லாத இடம். தேர்கலேன் - பார்த்தறியேன். என் நெஞ்சம் நோம் என; நோம் என - வருந்தும் என்று கூறி. காவலையுடைய கன்றி னிடத்து; புனிற்று அன - ஈன்ற அணிமையையுடைய பசுநோக்குதல் போன்ற; "கன்றுகாண் கறவையின்" (பெருங். 2. 10 : 41). அன - அன்ன. கார்மயிற் சாயல் : காந்தருவதத்தை. சாயல், சிறைப்பட்ட தன்கன்றினிடம் புனிற்று அன நோக்கு நோக்கிநின்றாள் எனமாறி யியைக்க. சீவகனுக்குக் கன்றும், தத்தைக்குப் புனிற்றும் உவமை.

(உரை) [1] ஒரு பழமொழி.

1152. மைந்தர் கருதியது ஒன்று மாநகரைச் சுடுதல்; ஒன்று மதனனை அழித்தல்; ஓகாரம் ஐயம்; தொல். உயிர்மயங்கு. 88. வான்-

1153. (உ) கச்சற நிமிர்ந்து மாந்தர்க் கடாவிடு களிறு போல, உச்சியு மருங்கும் பற்றிப் பிளந்துயிர் பருகிக் கோண்மா, அச்சுற வழன்று சிறி யாட்டினம் புக்க தொப்பக், குச்சென நிரைத்த யானைக் குழாமிரித் திடுவ லென்றான்.

இவையிரண்டும் ஒரு தொடர்.

(இ - ள்.) வானும் நிகரில்லா மைந்தர் கருதியது : ஒன்று மாநகரைச் சுடுதல் ; ஒன்று மதனனைக்கொல்லுதலாயிருக்கும். அதுவும் தாழ்விலலை; தத்தை தன் விஞ்சையால் என்னைவிடுவித்துக்கொள்ள யான்பிழைத்துப் போய்ப் பின்பு உயிர்வாழ்தலை வேண்டேனென்றுகருதிக் காரியத்தை நினைக்கின்றவன், தன் வயிற்றிற்கட்டின கச்சறும்படி நிமிர்ந்து பின் மாந்தரை உச்சியையும் மருங்கையும் பற்றிப்பிளந்து உயிரைக் கடாவிடு களிறுபோலே மதனனைக் கொன்று, புலி சீறி ஆட்டினத்தே புக்கதொப்ப, பாவாற்றியென்னும்படி நெருங்கவளைத்த யானைத்திரளையும் கெடுத்திடு வேனென்று கருதினனென்க.

ஆய்நிகரும் : பாடம். [1] ஆசிரியற்கு நேர்ந்ததற்குத் தாழ்வாகா தென்று இத்திரளைக் கொல்லக்கருதினன். (௯௦உ - ௯)

---

தேவருலகம். வானும் நிகரில்லாத மைந்தர் ; என்றது தன்தோழராகிய பதுமுகன் முதலாயினரை. வேய் - மூங்கில். வேயும் தனக்கு நிகரில் லாத தோளையுடையவள் : என்றது காந்தருவதத்தையை. விஞ்சையால்- தன்னுடைய மந்திரவன்மையால். விடுத்துக்கொள்ள - என்னைச் சிறையி னின்றும் விடுவித்துக்கொள்ள. போய் - யான் தப்பிப்போய். எனப் பொருள் சிந்திக்கின்றான் - என்று கருதி வேறொரு காரியத்தை நினைக் கின்றவன் ; சீவகன். இப்பாடலும் அடுத்த பாடலும் சீவகனது உட் கோள்.

1153. கச்சுஅற - வயிற்றிற் கட்டிய கச்சை அறும்படி. மாந்தரது உச்சியையும் மருங்கையும் பற்றிப் பிளந்து உயிரைக் கடாவிடும் களிறு போல என மாறியியைக்க. கடாவிடல் : சீவக. 1143. பருகி - மதன னுடைய உயிரை உண்டு. கோண்மா - கொல்லுதல் வல்ல புலி ; சீவக. 101. அச்சுற அழன்று - அச்சம் உண்டாகக்கோபித்து. ஆட்டினத்திற் புக்கதை ஒப்ப. குச்சென நிரைத்த - பாவாற்றியைப்போல் இடைவிடா மல் மொய்த்த ; " குச்சென நிரைத்தம் மாந்தர் " (சீவக. 615, அடிக்.) ; பாவாற்றி யென்பது நெய்யுந் தொழிலுக்கு உதவும் ஒருகருவி என்பர் நிரைத்தல் - இடைவிடாது மொய்த்தல். இரித்திடுவல் - கெடுத்திடுவேன்.

(உரை) [1] ஆசிரியற்கு நேர்ந்தது : " யாண்டுநேரெல்லை யாக வவன்றிறத் தழற்சி யின்மை, வேண்டுவ லென்று சொன்னான் வில்வலா னதனை நேர்ந்தான் " (சீவக. 393)

1154. மின்னிலங் கெயிற்று வேழம் வேழத்தாற் புடைத்துத் திண்டேர், பொன்னிலங் கிவுளித் தேராற் புடைத்துவெங் குருதி பொங்க, இன்னுயி ரவனை யுண்ணு மெல்லைநாள் வந்த தில்லை, என்னையிக் கிருமி கொன்றென் றேழனை நினைப்ப லென்றான்.

(இ - ள்.) அங்ஙனம் கருதினவன், பின்பு குருதிபொங்கும்படி வேழத்தை வேழத்தாலேபுடைத்துத் திண்டேரைப் பொன்னிலங்கு இவுளித்தேராலே புடைத்து நம் பகைவனுயிரை உண்ணுநாளெல்லை வந்ததில்லை ; இக்கிருமிகளைக்கொன்று பெறும்பயன் யாது? என்தோழனை நினைப்பேனென்று நினைத்தானென்க.

மக்களாகிய கருத்தின்மையின், 'கிருமி' என்றான். (௩0௪)

1155. தோழனுந் தேவி மார்தங் குழாத்துளான் றுளும்பு முந்நீர், ஏழ்தரு பருதி தன்மே லிளம்பிறை கிடந்த தேபோற், றாழ்தகை யார மார்பிற் சீவகன் குணங்க டம்மை, யாழெழீஇப் பாடக் கேட்டோ ரரம்பையைச் சேர்ந்தி ருந்தான்.

எழுதரும் இளங்கதிர்மேலே இளம்பிறைகிடந்தாற்போலத் தங்கின முத்தாரமார்பினையுடைய சீவகன். எழுதரு : விகாரம்.

(இ - ள்.) சுதஞ்சணனும் தேவிமார்திரளிலேயிருக்கின்றவன் ஓர ரம்பையைச் சேர்ந்து சீவகன் குணங்களைப் பாடக் கேட்டிருந்தானென்க. (௩0௫)

---

1154. எயிறு - தந்தம். வேழத்தை வேழத்தாலே புடைத்து. இவுளி - குதிரை. தேரைத் தேராற்புடைத்து. அவனை யென்றது கட்டியங்காரனை. அவன் இன்னுயிரை உண்ணும் நாள் எல்லை வந்ததில்லை என மாறியியைக்க. இக்கிருமி கொன்று என்னை - புழுக்கள் போன்ற இம்மக்களைக் கொன்று பெறும்பயன் யாது ; "கிருமி யோநம் மாறுநிற் பனமற் றென்றான்" (சூளா. அரசியல். 68). தோழனை யென்றது, நாயாயிருந்து பின் தேவனான சுதஞ்சணனை. "இடர்வரி னினைக்க" (சீவக. 959) என்று முன்னம் சுதஞ்சணன் கூறியிருந்தமையால், ஈண்டுத் தோழனை நினைப்பல் என்றான்.

1155. தோழன் : சுதஞ்சணன். ஏழ்தரு - தோன்றுகின்ற ; ஏழ்தல் - எழுதல் ; "ஏழ்ச்சியு மிறுதியுஞ் சூழ்ச்சியு முணர" (பெருங். 1. 58 : 58). பருதி - இளஞ்சூரியன். தாழ்தகை ஆரமார்பு - தங்கிய சிறந்த முத்துமாலையையுடைய மார்பு. மார்புக்குச் சூரியனும் முத்துமாலைக்குப் பிறையும் உவமை. மார்பினையுடைய சீவகன். யாழ் எழீஇ - வீணையில் இசையை எழுப்பி. பாட - ஓர் அரம்பை பாட. தோழனாகிய குழாத்துளான் ஓர் அரம்பையைச் சேர்ந்து சீவகன் குணங்களை (அவள்) யாழ் எழீஇப் பாடக் கேட்டு இருந்தான் எனமாறியியைக்க.

(வேறு)

1156. வயிரம்வேய்ந் தமணி நீண்முடி வாலொளி வானவன்
செயிரிற்றீர்ந் தசெழுந் தாமரைக் கண்ணிட னுடலும்
உயிரனு னைநினைந் தானுற்ற தோதியி னேக்கினுன்
மயிலனுர்க் குப்படி வைத்தவன் மால்விசும் பேறினுன்.

(இ - ள்.) வயிரமணி வேய்ந்த முடியினையும், வெள்ளைநிறத்தினையுமுடைய தேவனது குற்றத்தை நீங்கின கண் இடனுடினவளவிலே, இதனுல் எனக்குத் தீங்குவருமோவென்று நோக்காதே முதற் சீவகனை நினைந்தான்; நினைந்து அவனுற்ற துன்பத்தை அறிந்தான்; அறிந்து தேவிமார்க்குத் தன்னுருவை நிருமித்துவைத்துத் தன்னூர்தியாகிய மேகத்திலேயேறினுனென்க.

ஓதி - அவதிஞானம். [1] ஓலக்கங்குலையாமற் படிவம் வைத்தானென்க; [2] படிவம் : விகாரம். (௲௦௬)

1157. இடியுமின் னும்முழக் கும்மிவற் றனுல கந்நிறைந்
தொடியுமூ ழியிவ ணின்றுறு கால்வரை கீழ்ந்தென
நடலைநோக் கிக்கதிர் நாணுவ தொப்பம றைந்தபின்
கடலையேந் திநிலத் திட்டென மாரிக லந்ததே.

1156. வயிரமணி வேய்ந்த முடியினையும், வாலொளியையுமுடைய வானவன்; என்றது சுதஞ்சணனை; வால் ஒளி - வெண்மைநிறம். செயிர் - குற்றம். வானவனது கண் இடனுடலும். ஆடவர்க்குக் கண் இடனுடுதல் தீங்கைக் குறிப்பிப்பது. உயிரனுனை - சீவகனை. உற்றது - சீவகனுக்குற்ற கெடுதியை. ஓதியின் - அவதிஞானத்தால்; சீவக. 951, அடிக்; முக்காலத்திலும் நிகழ்வனவற்றை அறியும் அறிவை அவதி ஞானமென்பர்; இஃது ஐவகை ஞானங்களுள் ஒன்று; நீல. தரும. 93, 109, உரை. மயிலனுர்க்கு : தன்னுடைய மனைவியர்க்கு. படிவைத்து - தன்னுடைய உருவத்தை நிருமித்து வைத்துவிட்டு. விசும்பு - மேகத்தில்.

(உரை) [1] ஓலக்கம் - சபை. [2] படிவம் என்பது படி எனக்குறைந்தது.

1157. இடியும், மின்னலும், முழக்கும் என்கின்ற இவற்றுல் உலகம் நிறைந்து; நிறைந்து - நிறைய; எச்சத்திரிபு. ஒடியும் ஊழி - உலகம் அழியும் ஊழிக்காலம். வரைகீழ்ந்து - மலையைப் பிளக்க; "வேரொடுங் கீழ்ந்து வெளவி" (சீவக. 2727); "கீழ்ந்தறை போகிய" (கந்த. மார்க் கண்டேய. 86). என - என்று எண்ணும்படி. நடலைநோக்கி - சீவகன் சிறைப்பட்டதனுல் உண்டாய வருத்தத்தைப் பார்த்து. கதிர் - சூரியன். ஏந்தி - எடுத்து. உறுகால் கீழ்ந்து இவற்றன் உலகம் நிறைதலின் நடலைநோக்கி நாணுவதொப்பக் கதிர்மறைந்தபின் ஒடியும் ஊழி இன்று இவண் எனக்கடலை நிலத்திட்டென என்று மாறியியைக்க. மாரி - மழை.

*நிறைந்து* - [1] *நிறைய. கீழ்ந்து - கீழ.*

(இ - ள்.) அவ்வூர்தி, உறுகால் வரையைப்பிளக்க, இடியும் மின்னும் முழக்குமென் கின்றவற்றாலே தானிறைதலின், இந்நடலையைநோக்கி நம்மை யொழிய ஊழிநிகழ்ந்ததென்று நாணுந்தன்மையையொப்பக் கதிர் மறைந்த பின்பு, உலகமுடியும் ஊழி இன்று இப்பொழுதென்னும் படி கடலையெடுத்து நிலத்தே போகட்டாற்போலே பின்பு மழை கலந்த தென்க. (௩௦எ)

1158. விண்ணுமண் ணும்மறி யாதுவி லங்கொடு மாந்தர்தம்,
கண்ணும்வா யும்மிழந் தாங்கடல் கொண்டது காண்கெனப்,
பெண்ணுமா ணும்மிரங் கப்பெரு மான்மகன் சாமியை, அண்ண
லேந் தியக லம்புலிக் கொண்டெழுந் தேகினான்.

இழந்து - இழப்ப. விலங்குகள் மேயாமையின், வாயிழந்தன ; "மாமேயன்மறப்ப" (நெடுநல். 9) என்றார் பிறரும். ஆம் கடல் - மேல் ஊழிக்காலத்து வரும் கடல். பெருமான் - சச்சந்தன்.

(இ - ள்.) அம்மழையாலே விலங்கும் மக்களும், விண்ணும் மண் ணும் அறியாதே கண்ணும் வாயுமிழக்கும்படி ஆம்கடல்கொண்டதனைக் காண்பீராக வெனக்கூறிப் பெண்ணும் ஆணுமிரங்கச் சுதஞ்சணன்வந்து சாமியையெடுத்து மார்பிலேதழுவிக்கொண்டு மேனோக்கிப் போனா னென்க. (௩௦அ)

1159. குன்றுண்டோங் குதிர டோளவற் கொண்டெழுந் தேக
லும், நன்றுண்டா கவென நன்னுதல் வாழ்த்தினள் வாழ்த்தலும்,
ஒன்றுண்டா யிற்றவ ளுள்ளழி நோயுறு காளையை, என்றுண்டாங்
கொல்லினிக் கட்படு நாளெனுஞ் சிந்தையே.

---

(உரை) [1] எச்சத்திரிபு.

1158. இழந்து - இழக்கும்படி ; எச்சத்திரிபு. ஆம் கடல் - ஊழிக் காலத்து உண்டாகும் கடல். என - என்றுகூறி. பெருமான் மகன் சாமியை - சச்சந்தனுடைய மகனாகிய சீவகசாமியை. அண்ணல் - சுதஞ்சணன். ஏந்தி - எடுத்து. அகலம் புலிக்கொண்டு - தன் மார்பிலே தழுவிக்கொண்டு. எழுந்து - மேலெழுந்து.

1159. குன்று உண்டு - மலையை ஒத்து. தோளவற் கொண்டு - சீவகனை எடுத்துக்கொண்டு. ஏகலும்-சுதஞ்சணன் போகின்ற அளவில். நன்னுதல் : காந்தருவதத்தை. உள்ளழிநோய் - மனம் வருந்துகின்ற பிணி. காளை : சீவகன். கட்படும்நாள் - காணுகின்ற காலம். சிந்தை - நினைவு. அவளுக்குக் காளையைக் கட்படுநாள் என்று உண்டாங்கொல் என்னும் சிந்தையாகிய உள்ளழிநோய் ஒன்று உண்டாயிற்று என மாறி யியைக்க. சிந்தைநோய் : "சிந்தைநோய் கூர" (மணி. 15 : 70)

(இ - ள்.) சீவகனை அவன் கொண்டுபோகின்றவளவிலே, தத்தை நன்றுண்டாகவென்று வாழ்த்தினாள்; வாழ்த்தினவளவிலே அவளுக்கு இவனைக் காணுங்காலம் எந்நாளிலே உண்டாங்கொலென்னும் நினைவாகிய உள்ளழி நோயொன்று உண்டாயிற்றென்க.

உண்டு : உவமவாசகம். நாளென்றது, காலத்தையுணர்த்தும்.
(௲௱௫௯)

1160. சந்தமா லைத்தொகை தாழ்ந்துசாந் தங்கமழ் பூமியுள்
வந்தவிண் ணோர்களை வாழ்த்தியேத் திம்மலர் மாலைதூய்
எந்தைமார் களெழு கென்னவே கவிடுத் தாள்குரல்
சிந்தைசெய் யுஞ்சிற கர்க்கிளி தோற்குமந் தீஞ்சொலாள்.

சந்தம் - நிறம். தான்வழிபட்ட தேவர்கள் செய்துமுடிக்கின்ற காரியம் [1] பிறரான்முடிதலின், அவரைப் போகவென்றாள். குரலென்னு நரம்பு தான் இத்தன்மைபெறவேண்டுமென்று கருதும் சொல்லாள்.

(இ - ள்.) தான் வழிபட்ட பூமியிலே அவ்வழிபாட்டிற்குவந்த தேவர்களை மாலையைத் தூவி வாழ்த்தித் தோத்திரங்களைக்கூறி, எந்தைமார்கள்! போவீராகவென்று போகவிட்டாளென்க. (௲௱௬௰)

(வேறு)

1161. (க) மலைத்தொகை யானை மன்னன் மைத்துனன் மதனனென்பான், கொலைத்தொகை வேலி னானைக் கொல்லிய கொண்டு போந்தான், நலத்தகை யவனைக் காணா னஞ்சுயிர்த் தஞ்சி நோக்கிச், சிலைத்தொழிற் றடக்கை மன்னற் கிற்றெனச் செப்புகின்றான்.

---

1160. சந்தமாலை - நிறத்தையுடைய பூமாலை; சந்தம் - அழகுமாம். தாழ்ந்து - சொரிந்து. சாந்தம் கமழ் - சந்தனமணம் கமழ்கின்ற. தூய் - தூவி. மாலையைத் தூவி வாழ்த்தி ஏத்தி எனமாறுக. எந்தைமார்களென்றது தேவர்களை; விளி. எழுகென்ன - போகவென்று. குரல் சிந்தை செய்யும் சொலாள், கிளிதோற்கும் சொலாள் எனத் தனித்தனியியைக்க. குரல் சிந்தை செய்யும் - குரல் என்னும் யாழ்நரம்பு தானும், இவளுடைய சொல்லைப்போல் இனிமை பெறவேண்டுமென்று கருதுகின்ற. சிறகர் : போலி. சொலாள் : காந்தருவதத்தை; எழுவாய்.

(உரை) [1] 'பிறர்' என்றது சுதஞ்சணனை.

1161. மலைத்தொகை போன்ற யானைகளையுடைய மன்னன்; கட்டியங்காரன்; தொகை - கூட்டம். வேலினான் : சீவகன். கொல்லிய - கொல்லுதற்கு. போந்தான் - போந்தவன்; பெயர். போந்தவனாகிய மதனனென்பான். நலத்தகை அவனை - நன்மை சிறந்த சீவகனை. காணான் - காணாதவனாகி. நஞ்சு உயிர்த்து - விஷத்தைப்போலப் பெரு

1162. (உ) மன்னனாற் சீறப் பட்ட மைந்தனைக் கொல்லப் போந்தாம், என்னினிச் சொல்லிச் சேறு மென்செய்தும் யாங்க ளெல்லாம், இன்னது பட்ட தென்று லெரிவிளக் குறுக்கு நம்மைத், துன்னுபு சூழ்ந்து தோன்றச் சொல்லுமின் செய்வதென்றான்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(இ - ள்.) மன்னன் மைத்துனனாகிய மதனனென்பான் சீவகனை அரசன் கொல்லுகைக்குத் தான் கைக்கொண்டுபோந்தவன், அவனைக் காணானாய், அஞ்சி நோக்கி மன்னற்கு இத்தன்மைத்தெனக் கூறுகின்றவன், அரசனாற் சீறப்பட்ட சீவகனை அவன்கொல்லும்படி கைக்கொண்டு போந்த நாம் சென்று யாங்கள்பட்ட துன்பமெல்லாம் இத்தன்மைத் தென்றுகூறின், நம்மை நடை விளக்கு எரிக்கும்; இனி என்சொல்லிச் செல்வேம்? மேல் என்செய்யக்கடவேம்? செய்யுங்காரியத்தை எல்லாரும் நெஞ்சிலே விசாரித்துத் தோன்றச் சொல்லுங்கோளென்றானென்க. (௲௧௬௧ - ௨)

1163. வாழ்வதோ ருபாய நாடி மதியுடம் பட்டு வல்லே
சூழ்வினை யாள ராங்க ணொருவனைத் தொடர்ந்து பற்றிப்
போழ்படப் பிளந்து வாளிற் புரட்டியிட் டரியக் கண்டே
ஆழ்கல மாந்தர் போல வணிநக ரழுங்கிற் றன்றே.

(இ - ள்.) சூழ்வினையாளர் தாம் உயிர்வாழ்வதோருபாயத்தை நாடி மதியொருப்பட்டு அவ்விடத்தே ஒருவனைத் தொடர்ந்துபற்றி வகிர்படப் பிளந்து 'வடிவுதெரியாதபடி புரட்டியிட்டுவைத்து வாளாலரிய அதனைக் கண்டு ஆழ்ந்துபடும் மரக்கலத்தின்மாந்தரைப்போல நகர் அழுங்கிற் றென்க. (௲௧௬௩)

---

மூச்சைவிட்டு; சீவக. 2896. மன்னற்கு - கட்டியங்காரனுக்கு. இற் றென - இத்தன்மைத்தென. செப்புகின்றான் - செப்புகின்றவன்; பெயர்.

1162. மன்னனால் - கட்டியங்காரனால். சீறப்பட்ட - கோபிக்கப்பட்ட. மைந்தனை : சீவகனை. போந்தாம் - கைக்கொண்டு சென்ற நாம். சேறும் - செல்வேம். யாங்கள் பட்டதெல்லாம் இன்னது என்றால் - நாங்கள் பட்ட துன்பமெல்லாம் இத்தன்மையது என்று கூறினால். நம்மை எரிவிளக்கு உறுக்கும் - நம்மீது நடைவிளக்கு எரிக்கும்; அஃதாவது எரியும் விளக்கைத் தலையில் வைத்து நடக்கச்செய்யும் ஒருவகைத் தண்டனை; "வன்சொல் யவனர்ப்பிணித்து, நெய்தலைப்பெய்து" (பதிற். 2-ஆம் பதிகம்); கலிங்கத். 199; "தலையில்விளக் கேற்றிடுவா டான்" (பழம் பாடல், 'பாம்புசேர்'). சூழ்ந்து - ஆராய்ந்து. செய்வது - இனிச்செய்யும் காரியத்தை. இனி என் சொல்லிச் சேறும், என்செய்தும், செய்வது சூழ்ந்து தோன்றச் சொல்லுமின் என்றான் என மாறியியைக்க.

1163. சூழ்வினையாளர் உயிர்வாழ்வதாகிய ஓர் உபாயத்தை நாடி; நாடி - ஆராய்ந்து. உடம்பட்டு - ஒருப்பட்டு. சூழ்வினையாளர் : மதனன் முதலியோர். ஒருவனை - வழிப்போகும் ஒருவனை. போழ்படப் பிளந்து -

1164. காய்சின வெகுளி வேந்தே களிற்றொடும் பொருத காளை,
மாசனம் பெரிது மொய்த்து மழையினோ டிருளுங் காற்றும்,
பேசிற்றான் பெரிதுந் தோன்றப் பிழைத்துய்யப் போத லஞ்சி,
வாசங்கொ டாரி னானை மார்புபோழ்ந் துருட்டி யிட்டேம்.

மொய்த்து - மொய்ப்ப.

(இ - ள்.) அவர் அங்ஙனஞ்செய்து அரசனிடத்தேசென்று, வேந்தே! யாங்கள் செய்திகூறின், சீவகன்சுற்றம் பெரிதுமொய்த்த வளவிலே, மழையோடே இருளும் காற்றும் மிகத்தோன்றுதலாலே எங்களைத்தப்பி அவன் உய்யப்போதற்கு அஞ்சி, நீ யானைக்கிடும்படி கொணராதே அவன்மார்பைப் பிளந்து தள்ளிப்போகட்டேமென்றா ரென்க. (ருகச)

1165. அருள்வலி யாண்மை கல்வி யழகறி விளமை யூக்கம்,
திருமலி யீகை போகந் திண்புகழ் நண்பு சுற்றம், ஒருவரிவ்
வுலகில் யாரே சீவக னொக்கு நீரார், பெரிதரி திவனைக் கொன்றாய்
பெறுகெனச் சிறப்புச் செய்தான்.

---

இருபிளவுபடப் பிளந்து. வாளிற்புரட்டியிட்டு - வாளால் உருவு தெரியாதபடி வேறுபடுத்தி. அரிய - வெட்ட. ஆழ்கல மாந்தர்போல - கடலில் ஆழ்ந்து போகின்ற மரக்கலத்திலுள்ள மக்களைப்போல; "வந்ததே, ஆழ்கலத் தன்ன கலுழ்" (நாலடி. 12). நகர் - நகரத்திலுள்ள மாந்தர். அழுங்கிற்று - சீவகன் இறந்தானென்று எண்ணி வருந்தினர்.

1164. வேந்தே என்றது கட்டியங்காரனை; விளி. களிறு: அசனிவேகம். காளை: சீவகன். மாசனம்: சீவகனுடைய சுற்றத்தவர்கள். மொய்த்து - மொய்ப்ப; எச்சத்திரிபு. பேசின் - செய்தியைக் கூறினால். தான்: அசை. மழையினோடு இருளும் காற்றும் பெரிதும் தோன்ற என இயைக்க; பெரிதும் - மிகவும். உய்யப் போதல் அஞ்சி - சீவகன் பிழைத்துப்போதலுக்குப் பயந்து. தாரினானை - சீவகனை. போழ்ந்து - பிளந்து. உருட்டி இட்டேம் - தள்ளிக்கீழே போட்டோம். இப்பாடல் மதனன் முதலியவர்கள் கூறியது.

1165. அருள்: 'ஒன்றின் துயர்கண்டாற் காரணமின்றித் தோன்றும் இரக்கம்' (புறநா. 5 : 5, உரை); 'தொடர்பு பற்றாது இயல்பாக எல்லா வுயிர்கள் மேலும் செல்வதாகிய கருணை' (குறள், 25-ஆம் அதி. அவதாரிகை). கல்வி - கல்வியறிவு. அறிவு - இயற்கையறிவு. ஊக்கம் - முயற்சி. திருமலி ஈகை - செல்வம் மிகுதற்குக் காரணமான கொடை. அருள்முதல் சுற்றம் ஈறாய இவற்றிற்கெல்லாம் சீவகனை ஒக்கும் நீரார் ஒருவர் யாரே என மாறியியைக்க; ஏகாரம் எதிர்மறை; இல்லையென்றபடி; நீரார் - தன்மையையுடையவர். உலகில் பெரிது அரிது -

வலி - மெய்வலி. ஆண்மை - ஆளுந்தன்மை. அறிவு - இயல்பான வறிவு. திருமலியீகை - செல்வமிகுகின்ற கொடை. போகம் - எல்லா வற்றினும் நுகரவல்லனுதல். யாரே : ஏகாரம் எதிர்மறை.

(இ - ள்.) அருள்முதலியவற்றிற்குச் சீவகனையொக்குநீரார் ஒருவருமில்லை; இவ்வுலகின்கண்ணே இவனைக்கொல்லுதல் மிகவுமரிது; இத்தன்மையானைக் கொன்ற நீ இவற்றைப் பெறுவாயாகவென்று மதனனுக்குச் சிறப்புச் செய்தானென்க. (௫௧௫)

## ௪. குணமாலையாரிலம்பகம் முற்றிற்று.

ஆகக்கவி, ௧௧௯௫.

---

உலகிலே சீவகனைக் கொல்லுதல் மிகவும் அரிதாகும். இவனை - இத்தன்மையையுடைய சீவகனை. கொன்றாய் - கொன்றவனாகிய நீ; என்றது மதனனை; விளி. இப்பாடல் கட்டியங்காரன் கூற்று. அருள் முதலிய குணவிசேடங்களால் நிகரில்லாதவனென்று பகைவனாகிய கட்டியங் காரனும் பாராட்டப்பெற்றிருத்தலின் இக்காப்பியத் தலைவனாகிய சீவகன் உத்தமநாயகன் என்பதற்கு இக்கவி ஆதாரமாகவுள்ளது.

## ஐந்தாவது

# பதுமையாரிலம்பகம்

---

1166. வீட்டருஞ் சிறையிற் றேவன் விடுத்துயக் கொள்ளப் பட்ட, கோட்டமில் குணத்தி னன்போ யென்செய்கின் றன்கொ லென்னிற், கூட்டரக் கெறிந்த பஞ்சிற் கூடிய பளிங்கிற் றேன் றும், தீட்டரும் படிவ மன்னன் றிறங்கிளந் துரைத்து மன்றே.

வீட்டருஞ்சிறை - எல்லாவழியாலும் போக்குதலரிய சிறை. இந் நிலையிலும் [1] ஆசிரியனுக்கு நேர்ந்த மொழிதப்பாமையின், 'கோட்டமில் குணத்தினன்' என்றார். கூட்டரக்கெறிந்தபஞ்சு - செவ்வரக்கு ஊட்டின பஞ்சு; பளிங்கைக்கூடிய பஞ்சாலே அப்பளிங்கிடத்தே தோன்றும் படிவத்தையொப்பான் - சீவகன்.

(இ - ள்.) தன்னை உய்யக்கொண்ட குணத்தினனைச் சிறையி னின்றும் விடுவித்துக்கொண்டு போய்த் தேவன் என்செய்கின்றானோ வென்று கேட்பீராயின், அவன்செய்கின்ற நிலைமைதன்னை முற்படக் கிளந்து, பின்னர்ப் படிவமன்னன்திறத்தை உரைக்கக்கடவேமென்று தேவர் கூறினாரென்க.

"வண்டளிர்" (சீவக. 1225) என்னுங்கவியளவும் தேவன்செய்தி கூறினார். (க)

1167. விலங்கிவில் லுமிழும் பூணன் விழுச்சிறைப் பட்ட போழ்தும், அலங்கலந் தாரி னன்வந் தருஞ்சிறை விடுத்த போழ்தும், புலம்பலு மகிழ்வு நெஞ்சிற் பொலிதலு மின்றிப் பொன்னார்ந், துலங்கலந் துயர்ந்த தோளா னூழ்வினை யென்று விட்டான்.

---

1166. வீட்டரும் சிறையின் - போக்குதற்கரிய சிறையினின்றும். தேவன் : சுதஞ்சணன். விடுத்து - விடுவித்து. கோட்டம்இல் - குற்றம் இல்லாத. குணத்தினன் : சீவகன். 'உயக்கொள்ளப்பட்டகுணத்தினனை, சிறையின் விடுத்துப் போய்த் தேவன் என் செய்கின்றான் கொல் என்னின்' என மாறியியைக்க. கொல் : அசை. என்னின் - என்று கூறினால். கூட்டரக்கு எறிந்த - செவ்வரக்குக் கூட்டின. பஞ்சு - செம் பஞ்சு. பளிங்கைக்கூடிய பஞ்சால். தோன்றும் - அப்பளிங்கினிடத்தே தோன்றுகின்ற. தீட்டரும் - எழுதுதற்கு அரிய. படிவமன்னன் : சீவகனுடைய. கிளந்து - தேவன் திறத்தைக் கூறி. உரைத்தும் - பின்பு சொல்லுவேம்.

(உரை) [1] அச்சணந்தியாசிரியனுக்கு.

1167. விலங்கி வில் உமிழும் - குறுக்கிட்டு ஒளியைச் சிந்துகின்ற; சீவக. 2959, ந. பூணன் : கட்டியங்காரனுடைய. தாரினன் : சுதஞ் சணன். புலம்பல் - வருத்தம். பொலிதலின்றி - தோன்றுதலில்லாமல்.

**(இ - ள்.)** தோளான், கட்டியங்காரன்சிறையில் அகப்பட்ட பொழுதும் தேவன்விடுவித்தபொழுதும் புலம்பலும் மகிழ்வும் நெஞ்சிற்றோன்றுதலின்றி இரண்டையும் ஊழ்வினையென்றே கருதிவிட்டானென்க.

விழுச்சிறை - [1] அன்னத்தைச் சிறைசெய்தலிற் சீரிய சிறை. பொலிதலும் : உம்மை சிறப்பு. சிறைப்பட்டகாலத்தும் அவன் கொண்டுபோன காலத்தும் இவன்மனமிருந்தபடிகூறினர். இதனானே சாரணரும், "சிறைப்பட்டனை போலும்" (சீவக. 2890) என்றார். (உ)

1168. வானர முகள நாக மலர்துதைந் தொழுக வஞ்சித், தேனிரைத் தெழுந்து திங்க ளிருலெனச் சென்று மொய்க்கும், கானம ரருவிக் குன்றிற் காய்கதிர் சுமந்தோர் திங்கள், மேனிமிர்ந் தேறி யாங்குத் தேவன்வெற் பேறி னானே.

நாகமலர் தம்மிலே நெருங்கித் தேனொழுகும்படி வானரம் பாய்தலின் அவ்விடத்திருந்த தேனினம் அஞ்சிப்போய்த் திங்களை இருலென்றுகருதி மொய்க்கும் வெற்பு - சந்திரோதயம்.

**(இ - ள்.)** திங்கள் இளஞாயிற்றைச்சுமந்து ஒருவெள்ளிக்குன்றிலே ஏறினாற்போலே தேவன் சீவகனைக்கொண்டு தன்வெற்பிலே ஏறினானென்க. (ங)

உம்மை : சிறப்பு. உலம் கலந்து உயர்ந்த - உருண்டைக்கல்லை ஒத்து உயர்ந்த. தோளான் : சீவகன்; எழுவாய். மு : சீவக. 2640, 2825; "வேரிக் கமழ்தா ரரசன்விடுகென்ற போழ்தும், தாரித்த லாகா வகையாற் கொலை சூழ்ந்த பின்னும், பூரித்தல் வாட லிவற்றாற்பொலி வின்றி நின்றான், பாரித்த வெல்லாம் வினையின்பய னென்ன வல்லான்" (குண்டலகேசி); கம்ப. கைகேயி. 108; காட்சிப். 20; நள. சுயம். 5.

(உரை) [1] சீவக. 2867, 2890, ந.

1168. வானரம் உகள - குரங்குகள் பாய்தலினால். நாகமலர் - சுரபுன்னைப்பூ. துதைந்து - நெருங்கி. ஒழுக - தேன் ஒழுகும்படி. தேன் இரைத்து - வண்டுகள் ஒலித்து. இருல் - தேனடை. நாகமலர் ஒழுகும்படி, வானரம் உகளுதலால் தேன் எழுந்து திங்களை இருலென மொய்க்கும் எனமாறியியைக்க; 'வானூர் மதியம் வரைசேரி னவ்வரைத், தேனி னிருலென வேணி யிழைத்திருக்கும்" (கலித். 39 : 8-9). கான் அமர் - காட்டைப் பொருந்திய கான் அமர்குன்று, அருவிக்குன்று எனப் பிரித்தியைக்க. குன்று : வெள்ளிமலை. காய்கதிர் - பாலசூரியனை. திங்கள் கதிரைச் சுமந்து குன்றின்மேல் ஏறியாங்கு எனமாறியியைக்க. தேவன் : சுதஞ்சணன். சுதஞ்சணனுக்குத் திங்களும், சீவகனுக்குச் சூரியனும் உவமைகள். வெற்பு - தன்னுடைய சங்கவெண்மலை; சீவக. 955.

1169. திங்களைத் தெளித்திட் டன்ன பாற்கடற் றிரைசெய் தெண்ணீர், வெங்கள்விட் டலர்ந்த கண்ணி விண்ணவ னுரிமை தன்னால், மங்கல வகையி னாட்டி மணியணி கலங்கள் சேர்த்திப், பங்கய நெடுங்க ணானைப் பவித்திர குமர னென்றான்.

நீரென்றமையின், [1] திரைகூறினார்.

(இ - ள்.) விண்ணவன் தாமரைக்கண்ணானைத் தெண்ணீராலே உரிமையோடே கூடநின்று ஆட்டி மங்கலவகையின் மணிக்கலங்களையுஞ் சேர்த்திச் சுத்தகுமரனென்று கூறினானென்க.

சிறைப்பாவம் நீங்கினமைபற்றி, ' பவித்திரகுமரன் ' என்றான். (௪)

1170. பொன்னணி காம்பு செய்த பொழிகதிர்த் திங்கள் போலும், பின்னிய முத்த மாலைப் பிணையலாழ் குடையி னீழற், கன்னியர் கவரி வீசக் கனமணிக் குழைவில் வீச, இன்னிசைக் கூத்து நோக்கி யிருந்தனன் றிலக மன்னன்.

பொற்காம்பு செறித்ததொரு திங்கள் : இல்பொருளுவமை.

(இ - ள்.) திலகமொத்தவன், சல்லியும் தூக்குமாகவிட்ட முத்தமாலையையுடைய திங்கள்போலும் குடைநிழலிலே, கவரிவீச அதனெதிரே குழை ஒளியைவீச இசையோடு கூடிய கூத்தைத் தான்பார்த்து இருத்தற்குத்தக்க இருப்பிலே இருந்தானென்க. (ரு)

---

1169. திங்களைத் தெளித்திட்டன்ன - சந்திரனைக் கரைத்தாற் போன்ற; தெளித்தல் - கரைத்தல்; சீவக. 1566, ந. நீரின் தெளிவுக்குத் திங்களைக் கூறினார். வெங்கள் - விரும்பத்தக்க தேன். கண்ணி - பூமாலை. கண்ணியையுடைய விண்ணவன்; சுதஞ்சணன். உரிமை - சுதஞ்சணனுடைய மனைவியர். ஆட்டி - நீராட்டி. சேர்த்தி - அணிவித்து. நெடுங்கணான் : சீவகன். பவித்திரம் - பரிசுத்தம்; சீவக. 2311, 2366, 2655. விண்ணவன், நெடுங்கணானைத் தெண்ணீரால் உரிமையோடு, ஆட்டி, சேர்த்தி, பவித்திர குமரனென்றான் என மாறிமுடிக்க.

(உரை) [1] திரை - அலை.

1170. பொன்னணிகாம்பு - பொற்காம்பு. செய்த - செறித்த. பிணையல் - பூமாலை. முத்தமாலையையுடைய குடை, பிணையல் தாழ்ந்த குடை என்க. குடைக்குத் திங்கள் உவமை. கன்னியர் கவரிவீசுதல் : சீவக. 429, அடிக். குழை - குண்டலம். வில்வீச - ஒளியை வீச. இன்னிசைக் கூத்து - இனிய இசையோடு கூடிய நாடகம். திலகமன்னன் : சீவகன்; எழுவாய்.

1171. இருமலர்க் குவளை யுண்க ணிமைப்பிலாப் பயத்தைப் பெற்ற, அரிமலர்த் தாரி ளுன்ற னழகுகண் டளிய வென்னுத், திருமலர்க் கோதை யைம்பாற் றேவியர் தொடர்பு கேட்ப, எரி மணிப் பூணி ளுனு மின்னண மியம்பி னுனே.

**(இ - ள்.)** தேவியர், எம் கண்கள் அளிக்கத்தக்க தாரிஞன்றன் அழகைக் கண்டு இமையாதிருந்த பயனை இன்றுபெற்றனவென்று முகமன்கூறி, இவனுடன் நட்பு எங்ஙனமுண்டாயிற்றென்று தேவனைக் கேட்ப, அவனும் இப்படிக் கூறினுனென்க.

இருமை - கருமை. ஏமலியாகிய பிறப்பை மறையாமற் கூறலின், 'இன்னணம்' என்ருர். (சு)

(வேறு)

1172. பிணிக்குலத் தகவயிற் பிறந்த நோய்கெடுத்
தணித்தகை யுடம்பெனக் கருளி நோக்கினுன்
கணிப்பருங் குணத்தொகைக் காளை யென்றனன்
மணிக்கலத் தகத்தமிர் தனைய மாண்பினுன்.

பிணிக்குலம் - நோய்த்திரள்; எனவே விலங்காயிற்று. அந்நோய்க் கெல்லாம் அகமென்றது நாயை; "எரிநீர வேநரக மந்நரகத் துன்பத், தொருநீர வேவிலங்கு தானுடைய துன்பம்" (சீவக. 2777) என்பர் மேலும். அணித்தகை - அழகைத் தகைக்கின்ற. கணிப்பு - அளவு. மணிக்கலத்தமிர்தென்ருர், வடிவிற்குத் தக்க கலங்காத குணம் உண்டாதலின்.

1171. இருமலர்க் குவளை உண்கண் - கரிய மலராகிய குவளையை யொத்த மையுண்ட கண்கள்; இரண்டு குவளை மலரையொத்த கண்கள் எனினுமாம். இமைப்பிலாப் பயத்தை - இமைத்தலில்லாதிருந்ததன் பயனை. அரி - வண்டு. தாரினுன்: சீவகன். அளிய - அளிக்கத்தக்கன. திரு - அழகு. கோதை - பூமாலையையுடைய. ஐம்பால் - ஐந்துபிரிவுடைய கூந்தல். தேவியர்: சுதஞ்சணனுடைய மனைவியர். தொடர்பு - சீவக னேடு உண்டான நட்பை. கேட்ப - சுதஞ்சணனைக் கேட்க. தேவியர், தம் கண்கள் தாரினுன்றன் அழகைக்கண்டு இமைப்பிலாப் பயத்தைப் பெற்றன; அளிய என்னுத்தொடர்பு கேட்ப என மாறிவினையைக்க. பூணி னுன்: சுதஞ்சணன்.

1172. பிணிக்குலத்து அகம்வயின் - நோய்த்தொகுதிகளுக்கெல் லாம் இடமாகிய நாய்ப்பிறப்பில். நோய் - என்னுடைய நோயை. அணித்தகை - அழகைத் தடுக்கின்ற; தகைத்தல் - தடுத்தல்; "தகைக்குந ரில்லென்று" (மணி. 23 : 36). கணிப்பரும் - அளவிடற் கரிய. காளை: சீவகன். மாண்பினுன்: சுதஞ்சணன்; எழுவாய். மாண்பினுன், இக்காளை நோக்கினுன் என்றனன்.

(இ - ள்.) அமிர்தனைய மாண்பினான், விலங்குகளில் நாயாகிய பிறவியிடத்தே பிறந்த நோயைக்கெடுத்து இவ்வுடம்பினை எனக்கருளி இங்ஙனம் பார்த்தான், இக்காளை காணுங்கோளென்றானென்க. (எ)

1173. கடற்சுற வுயரிய காளை யன்னவன்
அடற்கரும் பகைகெடுத் தகன்ற நீணில
மடத்தகை யவளொடும் வதுவை நாட்டிநாம்
கொடுக்குவ மெனத்தெய்வ மகளிர் கூறினார்.

(இ - ள்.) காமனையொத்தவன் பகையைக்கெடுத்து அவற்கு நிலமாகிய மடத்தகையவளைக் கலியாணஞ்செய்து கொடுக்குவமென்று தெய்வமகளிர் கூறினாரென்க.

[1] ஒடு உருபுமயக்கம்; உம்மை, அசை. [2] நிலமகளொடு திருமகளுமாம். (அ)

1174. செருநிலத் தவனுயிர் செகுத்து மற்றெனக்
கிருநில மியைவதற் கெண்ணல் வேண்டுமோ
திருநிலக் கிழமையுந் தேவர் தேயமும்
தருநிலத் தெமக்கெனிற் றருகுந் தன்மையீர்.

(இ - ள்.) போர்நிலத்தே யானே அவனுயிரைப் போக்குவேன். எனக்கு நிலங்கூடுகின்ற இவ்வெளிய காரியத்திற்கு, போகபூமியையும் தேவர்தேயத்தையும் எமக்கு நிலத்தே தாருமென்றால் அங்ஙனம் தரவல்ல தன்மையீர், எண்ணல்வேண்டுமோவெனச் சீவகன் கூறினானென்க.

தரும், தருகும் [1] இரண்டும் விகாரம்; தருமிடத்து எமக்கே உரித்தாகவென்றுமாம். (கூ)

---

1173. சுறவு உயரிய காளை - சுறாமீனைக் கொடியாக மேம்படுத்திய மன்மதன். காளையன்னவன் : சீவகன். அடற்கரும்பகை - கொல்லுதற்கரிய பகைவனை. அன்னவனுடைய பகையை. நீணிலமாகிய மடத்தகையவளை - பூமியை. வதுவை நாட்டி - கலியாணம்செய்து. கொடுக்குவம் - கொடுப்பேம்.

(உரை) [1] மடத்தகையவளொடும் என்பதில் உள்ள மூன்றும் வேற்றுமை யுருபாகிய ஒடுவை, இரண்டாம் வேற்றுமையுருபாக மாற்றுதல். [2] ஒடுவை மூன்றும் வேற்றுமையுருபாகவே கொள்ளின் இப் பொருள் தரும்.

1174. அவன் - கட்டியங்காரன். உயிர் செகுத்தும் - உயிரைப் போக்குவேம். நிலம் இயைவதற்கு - பூமி கிடைத்தற்கு. திருநிலக்கிழமை- போக பூமி. எமக்கு நிலத்துத்தரும் - எங்களுக்கு இப்பூமியில் தாரும். தருகும் - தரக்கூடிய. எனக்குத் திருநிலக்கிழமையும், தேவர் தேயமும் தாருமென்னின். தருகும் = தரும் ; கு : சாரியை.

(உரை) [1] தாரும் என்பது, தருமெனவும், தருமென்பது தருகுமெனவும் விகாரப்பட்டன.

1175. (க) மண்மிசைக் கிடந்தன மலையுங் கானமும்
நண்ணுதற் கரியன நாடும் பொய்கையும்
கண்மனங் குளிர்ப்பன வாறுங் காண்பதற்
கெண்ணமொன் றுளதெனக் கிலங்கு பூணினாய்.

1176. (உ) ஊற்றுநீர்க் கூவலு ளுறையு மீனனார்
வேற்றுநா டதன்சுவை விடுத்தன் மேயினார்
போற்றுநீ போவல்யா னென்று கூறினாற்
காற்றின தமைதியங் கறியக் கூறினான்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) அரியனவாகிய குளிர்ப்பனவாகியவென்க.

(உ) அது - நுகர்ச்சி; சுவையதனையென்றுமாம். [1]இவன் கூட வாராதபடி, 'போற்று' என்றான்.

(இ - ள்.) பூணினாய்! நிலத்திடத்தே மலைமுதலியனவெல்லாம் கிடந்தன; அவற்றைச் சென்றுகாண்டற்கு எனக்கு ஓரெண்ணமுண்டு; அவை காணாதே கூவலில் உறையும் மீன்போலே தாம்பிறந்த ஊரிலே திரிந்தே விடுகின்றவர்கள் வேற்றுநாட்டு நுகர்ச்சியினுடைய இன்பத்தைக் கைவிடுதலைப் பொருந்தினாராதலின், யான் அவற்றைக்காண்டற்குப் போவேன். நீ இவ்விடத்தே பேணிக்கொண்டிருவென்று கூறினவனுக்கு வழியினது செய்தியை அவ்விடத்தே தெரியும்படி கூறினானென்க.

(கo - கக)

---

1175. மண்மிசை - பூமியிடத்து. கானம் - காடு. நண்ணுதற்கரியனவாகிய நாடும், பொய்கையும். கண்ணும் மனமும் குளிர்ப்பனவாகிய ஆறும். மலை முதலியன மண்மிசைக்கிடந்தன என மாறியியைக்க. காண்பதற்கு - அவற்றைப் பார்ப்பதற்கு. எனக்கு எண்ணமொன்றுளது என மாறுக. பூணினாய் என்றது சுதஞ்சணனை; விளி.

1176. ஊற்று நீரையுடைய கூவலுள்; கூவல் - கிணறு. கூவலுளுறையுமீனனார்: "உணற்கினிய விந்நீர் பிறிதுழியில் லென்னும், கிணற்றகத்துத் தேரைபோ லாகார்" (பழ. 61). வேற்று நாடு அதன் சுவை - வேற்று நாட்டினது நுகர்ச்சியினுடைய இன்பத்தை. மேயினார் - பொருந்தினாராதலின். மீனன்னார் மேயினாராதலின் என்க. நீ போற்று - நீ உன் சுற்றத்தைக் காத்துக்கொண்டிரு. யான்போவல். கூறினாற்கு - கூறிய சீவகனுக்கு. ஆற்றினது அமைதி - செல்லும் வழியினுடைய செய்தியை. அறிய - சீவகன் உணரும்படி. சுதஞ்சணன் கூறினான்.

(உரை) [1] இவன் : சுதஞ்சணன்.

(வேறு)

1177. இம்மலைக் கிரண்டு காத மிறந்தபி னிருண்டு தோன்றும்
அம்மலை யரண பாத மென்பதன் றாள்வாய்த் தோன்றும்
தம்வினை கழுவு கின்றார் சாரணர் தரணி காவல்
வெம்மையி னகன்று போந்து விழைவறத் துறந்துவிட்டார்.

(இ - ள்.) இம்மலைக்கு இருகாதம் இறந்தபின் இருண்டுதோன்றும் அம்மலையை அரணபாதமென்று பெயர்கூறுவர்; அதன் [1] தாள்வரையிலே வந்திருந்து, தோன்றுகின்ற இருவினையையும் கழுவுகின்றாராகிய சாரணர், வீட்டை விரும்புதலின், தரணிகாவலைத் துறந்துபோந்து பின் பற்றறத் துறந்து விட்டவர்களென்க.

அரணபாதம் - [2] ஸ்ரீகோயிலுள்ள மலை. (கஉ)

1178. சிந்தையிற் பருதி யன்னார் சேவடி யிறைஞ்ச லோடும்
வெந்திற லியக்கி தோன்றி விருந்தெதிர் கொண்டு பேணித்
தந்தவ ளமிர்த மூட்ட வுண்டவட் பிரிந்த காலைச்
சந்துடைச் சாரல் சேறி தரணிமேற் றிலக மன்னாய்.

(இ - ள்.) தரணிக்குத்திலகமன்னாய்! மலங்களைக்கெடுக்கின்ற சிந்தையாலே இருளகற்றும் பருதிபோல்வாரடியை இறைஞ்சினவளவிலே, இயக்கி தோன்றி எதிர்கொண்டு அமிர்தத்தைத் தந்து பேணி அவள் விருந்தூட்ட உண்டு, அவளைப் பிரிந்த காலத்தே அவ்வரணபாதத்தின் சாரலிலே செல்வாயாகவென்க.

அமிர்தம் - நுகரப்படுவன. (கரு)

---

1177. காதம் : ஓரளவு. இறந்தபின் - முடிந்தபின். இருண்டு தோன்றுகின்ற அம்மலையை அரணபாதம் என்பர். அரணபாதமென்பது ஜினாலயமுள்ள ஒருமலை. அதன் தாள் வாய் - அம்மலையின் அடியில். வினை - நல்வினை தீவினை இரண்டையும். தோன்றுகின்ற வினையை. கழுவுகின்றாராகிய சாரணர். வெம்மையின் - வீட்டை விரும்புதலால். தரணிகாவலை அகன்றுபோந்து. விழைவு அற - பற்று நீங்கும்படி. துறந்து விட்டார் - துறந்துவிட்டவர்கள்.

(உரை) [1] தாள்வரை : பாதசைலம் என்பது வடமொழி; "தாள் வரை யிழிந்து வந்து" (சூளா. அரசியல். 64). தாள்வரை, தாழ்வரை என்ற இரண்டும் வேறுவேறு சொற்கள். [2] ஸ்ரீகோயிலென்றது ஜினாலயத்தை.

1178. பருதி - சூரியன். சிந்தையால் பருதியன்னார்; "மலர்தலை யுலகின் மல்கிரு ளகலப், பருதியி னொருதா னாகி" (நன். சிறப்.). அன்னாருடைய சேவடியை. பேணி - விரும்பி. அவள் : இயக்கி. அமிர்த மென்றது உணவை. எதிர்கொண்டு அமிர்தம் தந்து பேணி அவள்

(வேறு)

1179. அங்குநின் றகன்றபி னையைங் காவதம்
வெங்களி விடுமத வேழப் பேரினம்
தங்கிய காடது தனிச்செல் வாரிலை
கங்கையின் கரையது கடலிற் றோன்றுமே.

(இ - ள்.) அங்குநின்றும் போனபின்பு, இருபத்தைங்காதவழி, வேழத்திரள் தங்கிய, கடல்போற்றோன்றும் காடு கங்கையின் கரையிடத்தது; அதனைத் தனியே போவாரில்லையென்க.

இங்கே யானைகூறிற்று, [1] அவன் அறஞ்செய்தனைக்கி; " பஞ்சவர் போல நின்ற பகட்டினப் பரிவு தீர்த்தான் " (சீவக. 1237) என்பர். (கச)

1180. புனலெரி தவழ்ந்தெனப் பூத்த தாமரை
வனமது வாளென வாளை பாய்வன
மனமகிழ் பெருந்தடம் வலத்திட் டேகுதி
இனமலர்த் தாரினு யிரண்டு காதமே.

(இ - ள்.) தாரினுய்! தாமரையையுடைய, வாளைபாய்வனவாகிய தடங்களை வலத்திட்டு அவ்வியானை திரியும்வனத்தே இருகாதம் ஏகுவாயாக வென்க. (கரு)

---

விருந்தூட்ட உண்டு என மாறியியைக்க. அவளைப் பிரிந்த காலை. சந்துடைச் சாரல் சேறி - சந்தனமரத்தையுடைய அரணபாதமலையின் சாரலை அடைவாயாக. திலகமன்னுய் என்றது சீவகனை ; விளி ; " திலக மன்னுன் " (சீவக. 1170)

1179. ஐயைங்காவதம் - இருபத்தைந்து காதம். வேழப் பேரினம் - யானைக்கூட்டம். வேழப்பேரினம் தங்கிய, கடலினைப்போல் தோன்றும் காடு கங்கையின் கரையது என மாறியியைக்க; காட்டுக்குக் கடல் : " கடல்போற் றோன்றல காடிறந் தோரே " (அகநா. 1 : 19). கரையது - கரையினிடத்துள்ளது. அது தனிச்செல்வாரிலை - அக்காட்டில் தனியே போகுமவரில்லை.

(உரை) [1] அவன் - சீவகன்.

1180. புனலில் எரிதவழ்ந்தது என்னும்படி பூத்த தாமரை. தாமரைக்குத் தீ ; " தீப்பட மலர்ந்த, கடவு ளொண்பூ " (பெரும்பாண். 289-90); " எரியகைந் தன்ன தாமரை " (அகநா. 106 : 1, 116 : 1). வாளை மீனுக்கு வாள் ; " வாளென வாளை பாய " (சீவக. 2583). தாமரை வனத்தையுடைய வாளை பாய்வனவாகிய தடம். தடம் - தடாகம். ஏகுதி - இடப்பக்கமாகச் செல்வாயாக. தாரினுய் என்றது சீவகனை ; விளி. தாரினுய், தடத்தை வலத்திட்டு இரண்டு காதம் ஏகுதி என்க.

1181. காந்திய மணியொடு வயிரம் பொன்கலந்
தேந்தனின் றேளென விரண்டு குன்றுபோய்ப்
பூந்துகின் மகளிரிற் பொலிந்து போர்த்ததோர்
பேந்தரு பேய்வனம் பெரிய காண்டியே.

ஏந்தல் : [1] தொழிற்பெயர். பெரிய அச்சந்தரும் பேய்.

(இ - ள்.) அங்ஙனம் இருகாதம்போய், மணிமுதலியவற்றைக் கலந்து ஏந்துதலையுடைய நின்றேளென்னும்படி இரண்டுகுன்று வளரப் பட்டுப் பேய்கள் மகளிரைப் போலே பொலிவுபெற்று மனத்தை மறைத்த தொரு காட்டைக் காண்பையென்க. (கசு)

1182. இளவெயின் மணிவரை யெறித்திட் டன்னதோர்
அளவரு குங்குமத் தகன்ற மார்பினாய்
களவினி னணிநலங் கவர்ந்த கள்வவென்
றுளர்மணிக் கொம்பனா ருருகி நைபவே.

உளர்தல் - அசைதல்.

(இ - ள்.) வெயில் வரையிலேயெறித்த தன்மையைப்போல்வதொரு மார்பினாய் ! நின்னை அவர்கண்டு, கள்வனேயென்றுகூறி உருகி நைவார் களென்க. (கஎ)

---

1181. காந்திய - ஒளிவிடுகின்ற. கலந்து ஏந்துதலையுடைய நின் தோள். குன்றுக்குத் தோள் உவமை. குன்றுபோய் - மலை வளரப் பெற்று. போர்த்ததோர் வனம் - மனத்தை மறைத்ததாகியதொரு காட்டை. பேம் தரு பேய் - பயத்தைக் கொடுக்கின்ற பேய் ; பேம் - அச்சம். பெரிய பேய், மகளிரிற் பொலிந்து போர்த்ததோர் வனத்தைக் காண்டி என மாறியியைக்க. காண்டி - காண்பாயாக ; ஏ : அசைநிலை.

(உரை) [1] ஏந்தல் - ஏந்துதல்.

1182. மணிகளையுடைய வரையில். எறித்திட்டன்னதோர் - வீசிய தன்மையைப் போல்வதொரு. அளவரு - அளவு செய்தற்கரிய. குங்கு மச்சாந்து பூசிய அகன்ற மார்பினாய் ; என்றது சீவகனை ; விளி. மார்புக்கு மணிவரையும், குங்குமச் சாந்துக்கு இளவெயிலும் உவமை. களவினின் - யாங்களறியாதபடி திருட்டுத்தன்மையால். அணிநலம் - எங்களுடைய அழகிய நலங்களை. உளர்மணிக் கொம்பனார் - அசைகின்ற மாணிக்கக் கொம்பு போன்ற மகளிர். உருகி நைபவே - உன்னைக் கண்டதனால் மனமுருகி வருந்துவார்கள் ; ஏ : அசைநிலை.

1183. பழங்குழைந் தனையதோர் மெலிவிற் பையென
முழங்கழல் வேட்கையின் முறுகி யூர்தரத்
தழும்பத மிதுவெனச் சார்ந்து புல்லலும்
பிழிந்துயி ருண்டிடும் பேய்க ளாபவே.

(இ - ள்.) வேட்கையினாலே, நெகிழ்ந்த பழம் குழைந்தனையதொரு மேனி மெலிவோடே மிக்கணுகுதலின், முயங்குங்காலையிதுவென்று புல்லினவளவிலே பேய்களாவர்; அவரைப் புல்லற்கவென்க. (கஅ)

(வேறு)

1184. கண்டபேய் நகரி னீங்கிக் காவதங் கடந்து தோன்றும்,
வெண்டலைப் புணரி வீசிக் கிடந்தபொற் றீவிற் றாகிக்,
கொண்டுலப் பரிய செந்நெல் கொடிக்கரும் புடுத்த வேலி,
நுண்டுகி னுழைந்த வல்குற் பவளமொத் தினிய தொன்றே.

(இ - ள்.) கண்ட பேய்நகரினின்றும்போய்க் காதங்கடந்தவளவிலே, இனியதொரு நாடு தோன்றுமென்க.

கடந்து - கடப்ப. தீவிற்றாகி - தீவின்தன்மைத்தாய். ஒழுங்கினையுடைய கரும்புசூழ்ந்த வேலியிடத்து, அறுத்துத் தொலைத்தற்கரிய செந்நெல், அல்குலில் துகிலுக்குள்ளே நுழைந்துகிடந்த [1] பவளமேகலையையுமொத்து, திரைசூழ்ந்து கிடந்ததொரு பொற்றீவினையுமொத்துத் தோன்றுமென்க. (கக)

1183. மெலிவின் - உடம்பு மெலிவுடன். பழம் குழைவடைந்தாற் போன்றதொரு உடம்பு மெலிவுடன். முழங்கு அழல் வேட்கையின் - முழங்குகின்ற, நெருப்புப் போன்ற ஆசையுடனே. முறுகி ஊர்தர - மிக்கு உன்பக்கம் அணுகுதலால். வேட்கையால், மெலிவுடன் (உன்னிடம்) முறுகி ஊர்தர என மாறியியைக்க. தழும் பதம் இதுவென - தழுவுகின்ற சமயம் இதுவென்று; தழும்: தழுவும் என்பதன் விகாரம். புல்லலும் - அம்மகளிரைத் தழுவியவுடன். ஆபவே - ஆவார்கள்: ஏ, அசை. மகளிராய்த் தோன்றிய அவர்கள், உடலைப்பிழிந்து உயிரை உண்டிடும் பேய்களாவார்கள்; அதனால், புல்லாதே என்றபடி.

1184. கடந்து - கடந்தால்; எச்சத்திரிபு. வெண்டலைப் புணரி - வெள்ளிய தலையையுடைய அலை; "வெண்டலைப் புணரி" (புறநா. 55 : 18). வீசிக்கிடந்த - சூழ்ந்துகிடந்த. தீவிற்றாகி - தீவின்தன்மையை ஒத்து. கொண்டு உலப்பரிய - அறுத்துக் கொண்டு தொலைத்தற்கரிய. கொடிக்கரும்பு உடுத்த - ஒழுங்கினையுடைய கரும்பு சூழ்ந்த. நுண்ணிய துகில். பவளம் - பவளத்தாலாகிய மேகலை; ஆகுபெயர். இனிய தொன்று - இனியதொரு நாடு. கரும்பின் பூவுக்குத் துகிலும் அலையும், செந்நெல்லுக்குப் பவளமேகலையும் பொற்றீவும் உவமைகள்.

(உரை) [1] பவளமேகலை : "செந்துகிர்க்கோவை" (சிலப். 4 : 29); "பவழஞ் சேர்ந்த பல்காழ்" (பெருங். 1. 43 : 146); "அனபவளமேகலையொடு" (தே. திருநா. கழிப்பாலை. 1)

1185. படுமழை பருவம் பொய்யாப் பல்லவ தேய மென்னும்
தடமலர்க் குவளைப் பட்டந் தழுவிய யாணர் நன்னாட்
டிடைநெறி யசைவு தீர விருந்தவ ணேக லுற்றாற்
கடநெறி கடத்தற் கின்னாக் கல்லத ரத்த முண்டே.

(இ - ள்.) பல்லவதேயமென்னும் நாட்டிடை நகரியிலே வழிவருத்தந் தீர இருதிங்களிருந்து, அவ்விடத்தினின்றும் போதலுற்ற காலத்துக் காட்டுவழி கடந்துபோதற்குப் பொல்லாததொரு கல்வழியுண்டு ; அதன் தன்மையைக் கேளென்க.

இதனால், பதுமையைக் கோடலும் கூறினான். (உ0)

(வேறு)

1186. (க) நுதிகொண் டனவெம் பரனுண் ணிலைவேல்
பதிகொண் டுபரந் தனபோன் றுளவால்
விதிகண் டவரல் லதுமீ துசெலார்
வதிகொண் டதொர்வெவ் வழல்வாய் சொலின்வேம்.

1185. படுமழை - பெய்கின்ற மழை : "படுமழை யாடும் வரை யகம்" (கலித். 103 : 20). பருவம் பொய்யாப் படுமழையையுடைய பல்லவதேயம் என மாறியியைக்க ; பருவம் பொய்யா - பருவகாலத்திற் பெய்தல் பொய்க்காத ; "வானம் பொய்யாது" (மணி. 25 : 108). தட மலர் - பெரியமலர். குவளைப் பட்டத்தையுடைய நாடு. யாணர் - புதுவரு வாயையுடைய. நெறி அசைவு தீர - வழிநடந்த வருத்தம் நீங்கும்படி. நாட்டிடை இருந்து. அவணின்றும் ஏகலுற்றால். கடநெறி - காட்டு வழியை. இன்னா கல் அதர் அத்தம் - துன்பத்தைத் தருகின்ற கல்வழியை யுடைய காடு ; அத்தம் - காடு.

1186. நுதி - கூர்மை. பரல் - பருக்கைக்கற்கள். நுண்ணிய இலை போற் கூரியவேல். வேல், பதிதல் கொண்டு பரந்தன போன்று வெம்பரல் உளவால் : ஆல், அசை ; "தீமே லயில்போற் செறிபரற் கானில்" (திருச் சிற். 228). விதிகண்டவர் அல்லது மீதுசெலார் - விதியினால், 'இறக்க' வென்று விதிக்கப்பட்டவர்களல்லாமல், வேறெவரும் அவ்வழியிற் போகார். வதிகொண்டதொர் வெவ்வழல் சொலின் - அவ்வழிதான் கொண்டதொரு வெம்மையைச் சொன்னால். வாய் வேம் - சொல்லிய வாயும் வெந்துபோகும் ; "வெம்மையைப் பகரினும் பகருநா, முடிய வேம்" (கம்ப. தாடகை. 6). வதி - வழி.

(மேற்.) அடி, 2 : கல். 'உழைநின்றீரும்' 15, மயில்.

1187. (௨) குழவிப் பிடிகுஞ் சரமாழ் குமெனத்
தழுவிச் சுடுவெவ் வழுருங் குவன
கெழுவிப் பெடையைக் கிளர்சே வறழீஇத்
தொழுதிச் சிறகிற் றுயராற் றுவன.

1188. (௩) கலையின் பிணைகன் றிடுமென் றுகசிந்
திலையின் னிழலவ் வயினின் மையிலுன்
நிலையின் னிழுரு னது நின் றுகொடுத்
துலையும் வெயினின் றுருகும் முரவோய்.

1189. (௪) கடநா கமதங் கலந்துக் கநிலத்
துடைநா ணெனமின் னெனவொண் மணியம்
படநா கமழன் றுபதைத் துவரும்
மடஞ மயலார் மனம்வைப் பதுவே.

இவை நான்கும் ஒருதொடர்.

---

1187. பிடி - பெண்யானை. மாழ்கும் - மயங்கும். குஞ்சரம், குழவியையுடைய பிடி மாழ்குமெனத் தழுவி அழல் தாங்குவன என மாறியியைக்க; “மடப்பிடியை மதவேழம், தடக்கையால் வெயின்மறைக்கும், இடைச்சுரம்” (யா-வி. 91, மேற்.). கெழுவி - பொருந்தி. பெடை - பெண் புறு. தழீஇ - தழுவி. தொழுதிச் சிறகு - திரட்சியையுடைய சிறகு. துயர் - வழியின் வெம்மையாலுண்டாகிய வருத்தத்தை. சேவல், பெடையைக் கெழுவித் தழீஇத், தொழுதிச் சிறகால் துயராற்றுவன; “மடப் பெடை யசைஇய வருத்தத்தை, மென்சிறக ராலாற்றும் புறவெனவு முரைத்தனரே” (கலித். 11 : 12-3); “செம்புருக்கி, வார்த்தா லனைய வழிநெடும் பாலை மடப்பெடைநோய், பார்த்தா தவந்தணி பாதவ மின்மையிற் பைஞ்சிறகாற், போர்த்தாலு மஞ்ஞைகண் டும்போவ ரோநம் புரவலரே” (தஞ்சை. 267)

1188. கலை - ஆண்மான். பிணை - பெண்மான். கன்றிடும் - வருந்தும். கசிந்து - உருகி. அவ்வயின் - அவ்வழியில். நிலையின் நிழல் - தான் நிற்கும் நிலையில் உண்டாகிய நிழலை. அது - அப்பெண்மானுக்கு. உலையும் - வருந்தும். வெயிலில் நின்று உருகும். உரவோய் - அறிவுடையோய்; என்றது சீவகனை; விளி.

1189. கடநாகம் - காட்டிலுள்ள யானை; மதத்தையுடைய யானை எனலுமாம். கலந்து - நீரல்லாத நீருடன்கலந்து. உக்க - சொரிந்த. உடை நாண் என - முறுக்கு உடைந்த கயிறுபோல. பாம்பிற்கு முறுக்கிய கயிறு: “புரிந்து, விடுகயிற்றின் மாசுணம் வீயுநீ ளத்தம்” (திணைமாலை நூற்றைம்பது, 75); “பொங்கழ லுகம் புற்றக நீங்கிப் புரிமிக முறுகிய கயிறென மிளிர” (யா-வி. 95, மேற்.). மின்னலைப்போல. மணியையுடைய படத்தையுடைய. நாகம் - பாம்பு. அழன்று - மனம்

(க) வதி - வழி. விதியைப் புறங்கண்ட தபோதனர் மேலேயெழுப் பறந்து போவதல்லது வேறுபோகாரென்றுமாம்.
(ங) இன்பிணை - இனிய பிணை.
(ச) 'மதங்கள்கலந்த நிலத்து' என்றும் பாடம்.
(இ - ள்.) உரவோய்! அந்த வழியில் வேல் பதிதல்கொண்டு பரந் தனவற்றையொத்து நுதிகொண்டனவாகிய பரல் உளவாயிருக்கும்; அது தன்னிடத்திற்கொண்டதொரு வெம்மையைச் சொல்லின், வாய்தான் வேம்; ஆயினும் சிறிது கூறுவேன். குஞ்சரம் குழவியையுடைய பிடி மயங்குமென்றுகருதி அழலைத் தாங்குவனவும், சேவல் பெடையைப் பொருந்தித் தழுவித் தம் திரட்சியையுடைய சிறகாற்காத்துத் துயராற்று வனவுமாய் வெயிலிலேநின்று உலையாநிற்கும். கலை, பிணை நிழலின்மை யின் உருகுமென்று கசிந்து அக்கலை தானின்று தன்னிலையிற் பிறந்த நிழலை அதற்குக்கொடுத்துத் தான் உருகாநிற்கும்; படநாகம் ஈரமாக நினைத்து யானையின்மதம் வெம்மை மிகுதியாலே நீரல்லாத நீருடனே கலந்து கோசத்தாலேயுக்க நிலத்தில் வந்து வீழ்ந்து அதன்வெம்மை பொருதே முறுக்குவிட்ட கயிறென மின்னெனப் பதைத்துப் போகா நிற்கும். இந்தவழியைப்போய் இறக்கவென்று விதியாலே விதித்துவிடப் பட்டவர்களல்லது மேற்போகாராதலான், அவ்விடத்திற்குப் புதிய ரானவர் போகவென்று கருதுதல் அறியாமையாம். நீயும் அவ்வழியில் மனம்வையாதேகொள்ளென்க. (உக-ச)

1190. நெறியிற் றளர்வார் தமநெஞ் சுருகிப்
பொறியிற் றளர்வார் புரிவார் சடையார்
அறிமற் றவர்தா பதரவ் வழியார்
கறைமுற் றியகா மருவே லவனே.

(இ - ள்.) வேலவனே! சிலதாபதர், சன்மார்க்கநெறியைத் தப்பி யிருப்பாருமாய்த் தம்நெஞ்சுருகி இந்திரியங்களிற் றளர்வாருமாய்ச் சடையாருமாய் அவ்விடத்தேயிருப்பார்; அவர்களைக்கண்டு அவர் தன்மையை அறிந்துபோவென்க. (உரு)

---

வெந்து. அயலார் மனம் வைப்பது மடனும் - அவ்விடத்திற்குப் புதிய வர்கள் போக நினைத்தல் அறியாமையாகும்; ஏ : அசை.

1190. நெறியிற்றளர்வார் - நல்ல நெறியினின்று தப்பியவராய். தமநெஞ்சு - தம்முடைய நெஞ்சு. பொறியின் - இந்திரியங்களில். புரிவார் சடையார் - முறுக்கிவிடப்பட்ட நீண்ட சடையையுடையவராய். அவர் அறி - அவர்கள் தன்மையை நீ கண்டறிவாயாக. தாபதர் - தவம் செய்யும் முனிவர். அவ்வழியார் - அவ்விடத்தேயுள்ளார். கறைமுற்றிய வேல் - விடம் பூசப்பட்ட வேல். வேலவனே, தாபதர் நெறியிற் றளர்வா ராய்ப் பொறியிற்றளர்வாராய்ச் சடையாராகி அவ்வழியார்; அவரை அறி எனமுடிக்க.

1191. (க) குலைவா ழைபழுத் தகொழும் பழனும்
நிலைமாத் தனதே முறுதீங் கனியும்
பலவீன் றனமுள் ளுடையள் ளமிர்தும்
மலையாற் றயல்யா வுமடுத் துளவே.

1192. (உ) வளர்பைம் பொனும்வா ளொளிநீண் மணியும்
ஒளிர்கின் றனவோ சனைநீ ணிலமும்
தளர்வொன் றிலர்தா பதர்தாம் விழையும்
குளிர்கொண் டதொர்சித் திரகூ டமதே.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) குலைவாழை பெயர். அள்ளுடை - செறிதலையுடைய. யாவும் - மரம் ஏனையவும்.

(உ) வாளொளி - பெரிய ஒளி. நிலமும்; உம்மை முற்றும்மை. 'தாம் வளையும்' என்பதூஉம் பாடம்.

(இ - ள்.) மலைக்கும் யாற்றிற்கும் அயலே வாழை பழுத்த பழமும், மாவிடத்தனவாகிய நிலைமையான கனிகளும், பலவீன்றனவாகிய தேமுறுபழமும், ஏனையவும் நெருங்கியுளவாதலால், தாபதர்தாம் உணர்விற்றளர்வொன்றிலராய் விழையும் ஒளிர்கின்றனவாகிய பொன்னு மணியும் நீண்ட ஓரோசனை யெல்லையாகிய நிலமும் குளிர்ச்சிகொள்ளப் பட்டது: அம்மலைதான் சித்திரகூடமென்னும் பெயரையுடைத்தென்க. (உசு-எ)

1191. குலைவாழை: ஒருவகை வாழைமரத்திற்குப் பெயர். கொழுவிய பழம். பழன் - பழம்; போலி. மாத்தன - மாமரத்தினிடத்தன வாகிய. தேம் உறு தீங்கனி - இனிமை பொருந்திய பழம்; தீங்கனி: இடுகுறிமாத்திரையாய் நின்றது. மாவிடத்தனவாகிய கனி, நிலைமையை யுடையனவாகிய கனி யென்க. பலவு - பலாமரம். பலவீன்றனவாகிய அள்ளுடை முள்ளமிர்து என மாறியியைக்க; அள் - செறிவு. முள் அமிர்து - முள்ளையுடைய பலவின் பழம்; இனிமை குறித்து அமிர் தென்றார். மலைக்கும், யாற்றுக்கும் அயலில். யாவும் - மற்றைய மரங் களும். மடுத்துள - நெருங்கியுள்ளனவாதலால்.

1192. வாளொளி - மிக்க ஒளியையுடைய. ஒளிர்கின்றன - விளங்கு கின்றனவாகிய. ஓரோசனை நீண்ட நிலமும். தளர்வொன்றிலர் - உணர் விறல் தளர்ச்சியொன்றுமில்லாதவராகி. விழையும் - விரும்புகின்ற. விழையும் நிலமும் என இயையும். சித்திரகூடம்: ஒருமலை. தாபதர் தாம் விழையும் நிலம் முற்றும் குளிர்கொண்டது; அது சித்திர கூடம் என முடிக்க.

1193. முழவின் னிசைமூ ரிமுழங் கருவி
கழையின் றுணிசந் தொடுகல் லெனவீர்த்
திழியும் வயிரத் தொடினம் மணிகொண்
டழியும் புனலஞ் சனமா நதியே.

(இ - ள்.) கழையின் துணியைச் சந்தோடேயீர்த்து வயிரத்தோடே மணியையுங்கொண்டு அச்சித்திரகூடத்தினின்று இழியும் அருவியானது மிகப் பெருகும் யாறு, அஞ்சனமாநதியென்னும் பெயரையுடைத்தென்க.
அழியும் - பெருகும். (உஅ)

1194. இதுபள் ளியிடம் பனிமால் வரைதான்
அதுதெள் ளறல்யா றுவைதே மரமாக்
கதிதள் ளியிரா துகடைப் பிடிநீ
மதிதள் ளியிடும் வழைசூழ் பொழிலே.

அவ்விடத்தேயிருந்து, இது பள்ளியென்று ஓரிடத்தைக்காட்டிக் கூறி, அதுமுதலாக முன்கூறியவற்றைக் [1] கூறிட்டுச் சுட்டிக் காட்டினன். உவையென்றது, ஒழிந்தவிரண்டுபக்கத்தையும்.

(இ - ள்.) இஃது அந்தப்பள்ளி; இதற்கு இடப்பக்கம் அந்தமலை தான்; வலப்பக்கம் அந்தயாறு; முன்னும்பின்னும் தேமாமரமும் வழை சூழ்பொழிலும். இவ்விடம் இன்பத்தால் அறிவைக்கெடுக்கும்; நீ போக்கைத் தவிர்ந்திராதே காரியத்தைக் கடைப்பிடித்துப் போவென்று னென்க. (உகூ)

---

1193. மூரி - பெருமை. முழவின் இசையைப் போல் முழங்குகின்ற அருவி : சீவக. 34, அடிக்; 1560, 2172; அகநா. 82 : 3-4; சிலப். 25 : 6; பெருங். 2. 16 : 81. கழையின் துணி - மூங்கிலின் துண்டு. சந்து - சந்தன மரம். கல்லென : ஒலிக்குறிப்பு. ஈர்த்து - இழுத்து. இழியும்- இறங்குகின்ற. இனம்மணி; சந்தம் நோக்கி மகரவொற்று மிக்கது. அழியும்புனல் - பெருகுகின்ற யாறு; புனல், ஆற்றுக்கு ஆகுபெயர். அஞ்சனமாநதி : சித்திரகூட மலையினின்றும்வரும் ஆற்றுக்குப் பெயர்.

1194. பள்ளி - முனிவர் தவம்செய்யுமிடம். இடம் பனிமால் வரை தான் - இதற்கு இடப்பக்கமாக உள்ளது அந்தமலைதான். தெள்ளறல் யாறு - தெளிந்த நீரையுடைய அஞ்சனமாநதி; அறல் - அற்றுவருதலை யுடைய நீர்; கலித். 28 : 16, ந. உவை - முன்னும் பின்னும் உள்ளன. நீ கதிதள்ளி இராது கடைப்பிடி - நீ அங்குப்போதலை நீங்கியிராமல் காரியத்தைக் கடைப்பிடித்துச் செல். மதிதள்ளியிடும் - இவ்விடம் இன்பத்தால் அறிவைக் கெடுக்கும். வழை - சுரபுன்னை மரம். உவை தேமாமரமும் வழைசூழ் பொழிலும்; மதிதள்ளியிடும்; நீ கதிதள்ளி யிராது கடைப்பிடி எனமாறி யியைக்க.

(உரை) [1] கூறிட்டு - பாகுபாடுசெய்து.

(வேறு)

1195. வருந்து நீர்மையம் மாதவர் பள்ளியுட்
குருந்த மேறிய கூரரும் பார்முல்லை
பொருந்து கேள்வரைப் புல்லிய பொன்னனார்
மருங்கு போன்றணி மாக்கவின் கொண்டதே.

அணிமருங்கு - [1] ஒப்பித்த வடிவு. மாக்கவின் - மிக்க அழகு.

(இ - ள்.) பயனின்றித் தவத்தால் வருந்துந்தன்மையையுடைய அத்தாபதர் பள்ளியிற் குருந்தத்தையேறிய அரும்பார்ந்த முல்லை தம்மனம் பொருந்திய கணவரைத் தழுவிய மகளிர்வடிவுபோலே மிக்க அழகினைக் கொண்டதென்க.

இது நின்னைக் கடைப்பிடித்துப் போகவிடுமென்பது கருத்து. (ரு0)

1196. குரவ நீடிய கொன்றையங் கானின்வாய்
வரகு வாளிற் றொலைச்சுநர் பாடலின்
அரவ வண்டொடு தேனினம் யாழ்செயும்
பரவை மாநிலம் பன்னிரு காதமே.

(இ - ள்.) அம்மலையை விட்டு இழிந்தாற் கொன்றைக்காட்டிடத்திற் பரப்பையுடைய விளைநிலம் பன்னிருகாதவழியாயிருக்குமென்க.

வரகை அரிவாளால் அறுப்பார் பாடுதலின், அம்மிடற்றுப்பாடலுக் கேற்ப வண்டும் தேனும் யாழைக்காட்டுநிலமென்க. (ருக)

---

1195. வருந்தும் நீர்மை - தவத்தால் வீணே வருந்துகின்ற தன்மையையுடைய. குருந்தம் - குருந்தமரத்தில். குருந்தமும் முல்லையும்: "பெருந்தண் முல்லைப் பிள்ளை யோடிக் குருந்தந் தழுவுங் கூட லூரே" (பெரியதிரு. 5. 2 : 7). கூரிய அரும்பைப் பொருந்திய முல்லை; எழுவாய். பொருந்து கேள்வரை - தம்மனத்திற்குப் பொருந்திய கணவரை. பொன்னனார் - மகளிருடைய. அணிமருங்குபோன்று - அலங்கரித்த வடிவத்தைப்போல; மருங்கு - இடையுமாம்; பெருங். 1. 49 : 92-7. கவின் - அழகு. முல்லை கவின் கொண்டது. கருத்து: "நீர்து ளும்பு வயிற்றின் னிழன்முகில், பார்து ளும்ப முழங்கலிற் பல்கலை, ஏர்து ளும்ப வெரீஇயிறை வற்றழீஇக், கார்து ளும்புகொம் பிற்கவி னெய்தினர்" (சீவக. 2672)

(உரை) [1] ஒப்பித்த - அலங்கரித்த.

1196. குரவம் - குராமரம். கொன்றையங்கானின் வாய் - கொன்றைக் காட்டிடத்தில். வரகினை வாளால் தொலைச்சுநருடைய; வாள் - அரிவாள்; தொலைச்சுநர் - அறுப்பவர்கள். பாடலின் - கண்டப்பாடலுக் கேற்ப. அரவம் - ஒலியை. யாழ்செயும் - வீணையைப்போலப் பாடுதலைச் செய்கின்ற. அரவ வண்டொடு தேனினம் யாழ்செயும்: "பாடல் வண்டியாழ் செயும்" (சீவக. 1207); "வல்லவர் யாழ்போல வண்டார்க்

1197. ஆங்க வெல்லை யிகந்தடு தேறலும்
பூங்கட் பொற்குட முந்நிறைத் தீண்டிய
ஏங்கு கம்பலத் தின்னிசை சூழ்வயற்
றேங்கு சீர்த்தக்க நாட்டணி காண்டியே.

(இ - ள்.) அந்தக் கடத்தின் எல்லையைக் கடந்துபோய்ப் பின்பு தக்க நாட்டினழகைக் காண்பாயென்க.

அடுநறவும் பூவாலாக்கின மதுவும் பொற்குடங்களிலே நிறைத்தலாலே அதனையுண்டு பாடுகின்ற இன்னிசையீண்டிய கம்பலத்தைச் சூழ்ந்த வயலினையும் சீரினையுமுடைய நாடென்க; "ஏங்கிய மிடறு" (சிலப். 3 : 51) என்றார். கம்பலை : உரிச்சொல்; ஈறுதிரிந்தது. (௯௨)

(வேறு)

1198. பாளைவாய் கமுகி னெற்றிப் படுபழ முதிர விண்டு
நீள்கழைக் கரும்பி னெற்றி நெய்ம்முதிர் தொடையல் கீறி
வாளைவா யுறைப்ப நக்கி வராலொடு மறலு மென்ப
காளைநீ கடந்து செல்லுங் காமரு கவின்கொ ளூடே.

(இ - ள்.) காளாய்! நீ காட்டைக்கடந்து செல்லுமந்நாடு, கமுகின் நெற்றியிலுண்டாகிய பழம் விண்டு உதிர்தலின், இறால்கிழிந்து அதிற் றேன் தம் வாயிலே துளிப்ப அதனை வாளை வராலோடே கூடநக்கித் தம்மில் மாறுபடாநிற்குமென்க.

நெய் - தேன். என்ப : அசை. (௯௩)

கும் புதலொடு" (கலித். 32 : 9); "அரவ வண்டின மார்த்துடன் யாழ் செயும்" (சிலப். 12 : 'மரவம்'); "அரவ வண்டினம் யாழென வார்ப்ப" (பெருங். 5. 2 : 18). பரவை மாநிலம் - பரப்பையுடைய பெரிய பூமி. அந்நிலம் பன்னிருகாதவழியையுடையது.

1197. ஆங்கு அவ்வெல்லை இகந்து - அக்காட்டின் அவ்வெல்லையைக் கடந்துசென்று. அடுதேறல் - காய்ச்சுதலுற்ற நறவு. பூங்கள் - பூவாலாக்கிய தேன். அடுதேறலும் பூங்களும் பொற்குடத்து நிறைத்தலால். ஏங்கு கம்பலம் - பாடுகின்ற ஒலி; ஏங்குதல் - பாடுதல்; கம்பலம் = கம்பலை - ஒலி; சீவக. 56, அடிக். இன்னிசையீண்டிய ஏங்கு கம்பலம் சூழ்வயலினையும், தாங்கிய சீரினையுமுடைய தக்கநாடு. நாட்டணி - நாட்டினது அழகை.

1198. பாளை - மடல். நெற்றிப் படுபழம் - உச்சியில் உண்டாகின்ற பழம். விண்டு உதிர என மாறுக. கமுகின் பழம் உதிர்தல் : சீவக. 31, 57, அடிக். கழைக்கரும்பு : சீவக. 1614. நெய் - தேன். கரும்பின் நெற்றியிலுள்ள நெய்; பெருங். 1. 48 : 146 - 7. நெய்முதிர்ந்த தொடையல் - இறல். கீறி - கிழிந்து. கமுகின் பழமுதிர்தலால் கரும்பின்

(வேறு)

99. அங்கதன் றனதிடங் கடந்து போம்வழிப்
பொங்குபூஞ் சண்பகப் போது போர்த்துராய்
அங்கநாட் டரிவையர் கூந்த ஞறித்தேன்
எங்குமொய்த் திழிவதோர் யாறு தோன்றுமே.

(இ - ள்.) அவ்விடத்தில் அந்த நாட்டினுடைய இடத்தைக் கடந்து
ரங்காலத்து ஓர்யாறு அங்குத்தோன்றுமென்க.

போதுபோர்த்துப் பரந்து அந்நாட்டின் மகளிர் கூந்தல்போலே
றித் தேன்மொய்க்கப்பட்டு இழிவதோர் யாறென்க. 'கடந்து' எனவே
மசரியைக் கொள்கின்றதும் கூறிஞறும். (ரு௪)

)0. (க) மின்னுடை மணிபல வரன்றி மேதகு
தன்னுடை நலம்பகிர்ந் துலக மூட்டலிற்
பொன்னுடைக் கலையல்குற் கணிகைப் பூம்புனல்
மன்னுடை வேலிஞய் வல்லை நீந்திஞல்.

ய்ம்முதிர் தொடையல்கீறி என மாறியியைக்க. வாய் உறைப்ப -
த்தேன் தம்வாயிலே துளித்திட; (அதனை) வாளை வராலொடு (சேர்ந்து)
கி மறலும் என மாறியியைக்க. மறலும் - தம்முள்மாறுபடும்.
ளை யென்றது சீவகனை. காமரு கவின்கொள் நாடு - விரும்பத்தக்க
ழகுகொண்ட நாடு; எழுவாய். நீ செல்லும் நாடு வாளையும் வராலும்
)லும் என்ப.

1199. அதன்றனது இடம் - அந்தத் தக்கநாட்டினுடைய இடத்தை.
ரங்கு - மிகுந்த. உராய் - பரந்து. அங்கு அந்நாட்டரிவையர் -
ப்விடத்து அந்நாட்டிலுள்ள மகளிருடைய. கூந்தல் நாறி - கூந்தலைப்
ால மணம்வீசி. தேன் - வண்டுகள். மொய்த்து - மொய்க்கப்பட்டு.
ழிவதோர் - இறங்கி ஓடுவதொரு. யாற்றிற்குக் கூந்தல் உவமை:
கோதையி ஞெழுகும்.........வையை" (மதுரைக். 339 - 40);
தைபோ கின்றாள் கூந்தல் வழீஇவந்து புவனஞ் சேர்ந்த, கோதை
ாற் கிடந்த கோதா விரியினைக் குறுகிச் சென்றார்" (கம்ப. ஆறு
ல். 27)

1200. மின்னுடை - ஒளியுடைய. வரன்றி - வாரிக்கொண்டு.
தகு - மிகச் சிறந்த. நலம் பகிர்ந்து - இன்பத்தைக் கூறுபடுத்தி.
கத்தை ஊட்டுதலிஞல். கலை - மேகலையணிந்த. கணிகையைப்
ான்ற பூம்புனல்; கணிகை - வேசை. மன் உடை வேலிஞய் - பகை
சர்கள் கெடுதற்குக் காரணமான வேலையுடையவனே; என்றது
கனை; விளி. வல்லை - விரைய. புனலை வல்லை நீந்திஞல் என்க.

1201. (உ) யானைவெண் மருப்பினு லியற்றி யாவது
மானமாக் கவரிவெண் மயிரின் வேய்ந்தன
தேனெயூன் கிழங்குகாய் பழங்கள் செற்றிய
கானவர் குரம்பைசூழ் காடு தோன்றுமே.

இவையிரண்டும் ஒரு தொடர்.

(உ) யாவதும் - எல்லாம். தேன்முதலியன செற்றிய குரம்பை.

(இ - ள்.) அரசர்கெடுதற்குக் காரணமாகிய வேலினாய்! மணிகளை பரித்துத் தன்னுடைய நலத்தைக் கூறுபடுத்தி உலகத்தை யூட்டலிற் ணிகையாகிய புனலை விரைய நீந்தினால், யானைக்கொம்பாலே கால்வளை முதலியமெல்லாமியற்றி மானமாவாகிய கவரியின் மயிராலே வேய்ந்தன பாகிய குரம்பைகள் சூழ்ந்த காடு தோன்றுமென்க. (௬௫-௬)

202. கடுந்துடிக் குரலொடு கடையுங் கட்குரல்
நெடுங்கைமான் குரன்மணி யருவி நீள்குரல்
அடும்புலிக் குரலொடு மயங்கி யஞ்சிய
இடும்பைமான் குரல்விளி யெங்கு மிக்கவே.

(இ - ள்.) அக்காடெங்கும் மிக்கவாகிய ஓசை துடிக்குரலும், கள் அரிக்குங் குரலும், யானையின் குரலும், அருவிவீழ்குரலும், புலிக்குரலா ஞ்சி மயங்கிய மான்குரலும், சீழ்க்கையுமென்க. (௬எ)

---

1201. இயற்றி - நடுகின்ற கால் முதலியன செய்து. யாவதும் - முழுவதும். மானத்தையுடைய மாவாகிய கவரியின் வெண்மயிரினால் வய்ந்தனவாகிய குரம்பை ; "கற்றையங் கவரி மயிரினின் வேய்ந்த சிறு டில்" (கூர்ம. சம்புத். 57); "வெண்கவரி மாவின் மென்மயிர்க் ற்றைவேய் சிற்றில்கள் வயங்கி" (சீகாளத்திப். கண்ணப்பச். 2). ன் - மாமிசம். செற்றிய - நிறைந்த. கானவர் - வேட்டுவர். தேன் தலியன செற்றிய குரம்பை; கானவருடைய குரம்பை என்க; ரம்பை - சிறு குடிசை.

1202. கடுந்துடிக் குரலொடு - மிக்க துடியினது ஒலியுடன். கள் டையுங் குரல் - கள்ளை அரிக்கின்ற ஓசை. நெடுங்கைமான் - நீண்ட திக்கையையுடைய யானை. மணியையுடைய அருவியினது நீண்ட ல். அடும் - கொல்லுகின்ற. புலிக்குரலொடு - புலியின் குரலால்; நபு மயக்கம். புலிக்குரலால் அஞ்சிமயங்கிய இடும்பையையுடைய மான் ல் எனமாறியியைக்க; இடும்பை - துன்பம். விளி - நாவினது னியை மடித்துச் செய்யும் ஒலி; இது சீழ்க்கை எனவும் வீளையெனவும் ங்கும்; சீவக. 120, அடிக்; கொக்கரிப்பென்றும் கூறப்படும்; சீவக. ', அடிக். எங்கும் மிக்கவாகிய ஓசைகள் துடிக்குரல் முதலியன.

1203. பொன்னணி திகிரியஞ் செல்வன் பொற்புடைக்
கன்னிய மகளிரிற் காண்டற் கரியன
நன்மணி புரித்தன வாவி நான்குள
கன்னவி றோளிநுய் காட்டு வாயவே.

அ : [1] அசை. பூரித்தன : [2] விகாரம். காட்டிடத்தனவாகிய வாவி.

(இ - ள்.) தோளிநுய் ! சக்கரவர்த்தியுடைய கன்னியராகிய மகளிரைப் போலே காண்டற்கரியனவாகிய வாவிகள் நான்குள ; அவற்றின் வேறுபாடு கேளென்க. (௩௮)

1204. அருங்கலச் சேயித ழார்ந்த வாவியொன்
றிரும்பெரி பொன்செயு மிரத நீரதொன்
றொருங்குநோய் தீர்ப்பதொன் றமிர்த மல்லதொன்
றரும்பவிழ் குவளைநீர் வாவி யாகுமே.

(இ - ள்.) அந்த வாவிகளில், பொற்றாமரை நிறைந்ததொன்று; இரதமாகிய நீரதொன்று ; எல்லா நோயையும் தீர்ப்பதொன்று ; அமிர்தமல்லதொன்று. ஆதலிற் குவளைநீர்வாவியல்லது நமக்கு நுகர்தற்காகாவென்க.

[1] ஏகாரம் : எதிர்மறை. இனி, நோய்தீர்ப்பதாகிய அமிர்தமொன்று. அல்லதொன்று என்றது நஞ்சினை ; நீர்வாவி அமிர்தமல்லாததொன்றென்றது நச்சுப்பொய்கை யென்றுமாம். (௩௯)

---

1203. திகிரியஞ் செல்வன் - சக்கரவர்த்தி; திகிரி - ஆஞ்ஞாசக்கரம். பொற்பு - அழகு. திகிரியஞ் செல்வனுடைய கன்னியராகிய மகளிரைப் போலக் காண்டற்கரியனவாகிய வாவி நான்கு உள ; "பாரி பறம்பிற் பனிச்சுனை போலக், காண்டற்கரியள்" (புறநா. 337 : 6-7). நன்மணிகள் பூரித்தனவாகிய வாவி; புரித்தன = பூரித்தன - நிறைந்தனவாகிய. வாவி - தடாகம். கல்நவில் - உலக்கல்லோடு பயின்ற. தோளிநுய் - சீவகனே ; விளி. காட்டு வாய - காட்டிடத்தனவாகிய. தோளிநுய், காண்டற்கரியன வாய், புரித்தனவாய், காட்டுவாயவாகிய வாவி நான்குள என மாறி யியைக்க.

(உரை) [1] கன்னிய என்பதிலுள்ளது. [2] குறுக்கல் விகாரம்.

1204. அருங்கலம் போன்றதாகிய சேயிதழ் ; சேயிதழ் - சிவந்த இதழையுடைய பொற்றாமரை ; ஆகுபெயர். ஆர்ந்த - நிறைந்த. இரும்பைப் பொன்னாகச் செய்கின்ற இரதமாகிய நீரையுடைய வாவியொன்று. எரிபொன் - விளங்குகின்ற பொன். ஒருங்கு நோய் - எல்லாநோயையும். தீர்ப்பதாகிய வாவியொன்று. அமிர்தமல்லதாகிய வாவியொன்று ; என்றது நச்சுப்பொய்கையை. அரும்பு - மொட்டு. குவளைபூத்த நீர்வாவி ஆகும் ; ஆகும் - உண்டற்குத்தக்கதாகும் ; மற்றைய வாவிகளின் நீர் நுகர்தற்குத் தகாதன.

(உரை) [1] ஆகுமே என்பதிலுள்ளது.

1205. கையடு சிலையினர் காட்டுள் வாழ்பவர்
பையுடை யாக்கையர் பாவ மூர்த்தியர்
ஐயெனத் தோன்றுவர் தோன்றி யாளழித்
துய்வகை யரிதென வுடலங் கொள்பவே.

(இ - ள்.) அவற்றைக்காத்துக் காட்டுள்வாழ்வார், சிலையினராய்த் தோற்பையணிந்த யாக்கையராய் விரையத்தோன்றுவர்; அங்ஙனந் தோன்றி அவற்றைக் கோடற்குச்சென்ற பாவமூர்த்தியரைப் பிழைத்த லரிதெனக் கூறி ஆளழித்து உடலைக்கொள்வரென்க.

[1] பையுள் : விகாரமுமாம். (சo)

1206. அண்ணன்மே லரிவையர் கண்ணின் மொய்த்தவண்
மண்ணின்மேன் மாந்தர்கண் மொய்க்கும் வாவியை
எண்ணமொன் றின்றியே யிடத்திட் டேகினற்
றுண்ணெனச் சிலையவர் தொழுது காண்பவே.

(இ - ள்.) நின்னிடத்து மகளிர்கண் மொய்க்குமாறு போல மாந்தர்கள் அவ்விடத்தை மொய்க்கும்வாவியை இடத்திட்டு அவற்றைக் கொள்ள வேண்டுமென்னும் நினைவு சிறிதுமின்றியே போனால் அச்சிலையவர் இவன் நல்வினையுடையவனென்று துணுக்கென மொய்த்துத் தொழுது காண்பரென்க.

இதனால், [1] அவற்றிற்கு இடமே போவென்றான். (சக)

1205. கை அடு சிலையினர் - கையில் கொல்லுதற்குரிய வில்லை யுடையவர்கள் ; என்றது வேட்டுவரை. பை உடையாக்கையர் - தோற் பையை உடைய உடம்பினை உடையவர். ஐயென - விரைய. ஆள் அழித்து - அக்காட்டு வழியில் செல்லும் ஆட்களைக்கொன்று. உய்வகை அரிதென - அவர்களிடமிருந்து தப்பிப்போகும் விதம் அரியதாகும் என்று கூறி. 'காட்டுள் வாழ்பவர், சிலையினராய், யாக்கையராய்த் தோன்றுவர் ; தோன்றிய அப்பாவ மூர்த்தியரை உய்வகை அரிதென ஆளழித்து உடலங் கொள்பவே' எனமாறி யியைக்க ; கொள்பவே - கொள்வார்கள் ; ஏ : அசை.

(உரை) [1] விகாரமாயின், 'பையுளையுடைய யாக்கையர்' எனக் கொள்க.

1206. அண்ணல்மேல் - பெருமை பொருந்தியவனாகிய நின்மீது ; என்றது சீவகனை. அரிவையர் - மகளிருடைய. கண்ணின் மொய்த்து - கண்கள் மொய்க்குமாறு போல. அவண் - அக்காட்டிடத்தை. மண்ணின் மேல் மாந்தர்கள் அவண் மொய்க்கின்ற வாவியை என மாறியியைக்க. அவ்விடத்திற்குச் சீவகன்மேனியும், மாந்தர்களுக்கு மகளிர் கண்களும் உவமைகள். எண்ணமொன்றின்றி - அவ்வாவியில் உண்ணவேண்டு மென்ற கருத்துச் சிறிதுமில்லாமல். வாவியை இடத்திட்டு எண்ண மொன்றின்றி யேகினால் எனமாறி யியைக்க. துண்ணென - துணுக் கென்று. சிலையவர் - வேடர்.

(உரை) [1] வாவிகளுக்கு.

1207. பாடல்வண் டியாழ்செயும் பசும்பொற் கிண்கிணித்
தோடலர் கோதைமின் றுளும்பு மேகலை
ஆடிய கூத்தித னசைந்த சாயல்போன்
றூடுபோக் கினியதங் கோரைங் காதமே.

(இ - ள்.) அவ்விடத்து, வண்டு யாழ்செய்யும் ஓரைங்காதமும் கிண்கிணி முதலியவற்றையுடைய கூத்திசாயல் போலே ஊடுபோக்கு இனியதொன்றாய் அகப்பட்டார் நீங்குதலரிதாயிருக்குமென்க. (சஉ)

1208. கோதைவீழ்ந் ததுவென முல்லை கத்திகைப்
போதுவேய்ந் தினமலர் பொழிந்து கற்புடை
மாதரார் மனமெனக் கிடந்த செந்நெறி
தாதின்மே னடந்ததோர் தன்மைத் தென்பவே.

(இ - ள்.) அவ்விடத்தே மாலைவீழ்ந்ததென்னும்படி முல்லையோடே கத்திகைப்போது மறைக்கப்பட்டு ஒழிந்த இனமலர்கள் தேனைப்பொழியப் பட்டுக் கற்புடைமகளிர் மனமெனக் கிடந்த செவ்விய நெறி நிலத்தி னன்றித் தாதின் மேலே நடந்ததொரு தன்மைத்தென்க. (சங)

1209. மணியியற் பாலிகை யனைய மாச்சுனை
அணிமணி நீண்மல ரணிந்த தாயிடை
இணைமலர்ப் படலிகை போலு மீர்ம்பொழில்
கணையுமிழ் சிலையினுய் கண்டு சேறியே.

---

1207. பாடல் வண்டு யாழ் செயும்: சீவக. 1196, அடிக். தோடு அலர்கோதை - இதழ் விரிந்த பூமாலை. மின் துளும்பு - ஒளியைச் சிந்துகின்ற. கிண்கிணியையும், கோதையையும், மேகலையையுமுடைய கூத்தி, ஆடிய கூத்தி என்க; ஆடிய - நாட்டியமாடிய. அசைந்த - இளைத்த; சீவக. 692, ந. வழியினது ஊடுபோக்கு; ஊடு - நடுவு. வண்டு யாழ் செயும் ஓரைங்காதமும் கூத்திதன் சாயல்போல் ஊடுபோக்கு இனியது என முடிக்க.

1208. கோதை - பூமாலை. என - என்று கூறும்படி. கத்திகைப் போது - குருக்கத்தி மலர். வேய்ந்து - மறைக்கப்பட்டு. முல்லைமலரோடு கத்திகைப்போதாலும் வேயப்பட்டு. பொழிந்து - தேனைச் சொரிந்து. கற்புடை மாதரார் - குலமங்கையருடைய. மனமென - நேர்மையான தூய மனத்தைப்போல. செந்நெறி - மாறுபாடில்லாத செவ்விய வழி; எழுவாய். தாது - பூக்களிலுள்ள மகரந்தப்பொடி. வழியின் மென்மைத் தன்மைக்குத் தாது கூறினுர். தன்மைத்து - தன்மையையுடையது. என்ப, ஏ: அசைநிலைகள்.

1209. மணிகளாலியன்ற பாலிகை; பாலிகை: ஒருபாத்திரம். பாலி கையைப்போன்று குழிவுடைய சுனை. அணிமணி நீண்மலர் அணிந்தது-

(இ - ள்.) சிலையினாய்! பாலிகையொத்த சுனைமலரால் அணியப் பட்டது; அதனையும், பூந்தட்டுப்போலும் பொழிலையும் கண்ணாலே கண்டு அவ்வழியைச் செல்வாயாகவென்க.

இடை - வழி. ஒன்றையும் நுகராதேகொள்ளென்றான். (சச)

1210. இலைப்பொலி பூண்முலை யெரிபொன் மேகலைக்
குலத்தலை மகளிர்தங் கற்பிற் றிண்ணிய
அலைத்துவீ ழருவிக ளார்க்குஞ் சோலைசூழ்
வலத்தது வனகிரி மதியிற் றோன்றுமே.

அருவிகளார்க்கும் வனகிரி.

(இ - ள்.) முலையினையும் மேகலையினையுமுடைய மகளிர் கற்புப் போல் திண்ணிய வனகிரி நினக்கு வலத்தது; அருவியாலும் குளிர்ச்சி யாலும் மதிபோற்றோன்றுமென்க. (சரு)

1211. கரியவன் றிருமுடி கவிழ்த்த சேவடிப்
பெரியவன் றிருமொழி பிறழ்த லின்றியே
மரியவ ருறைதலின் மதன கீதமே
திரிதரப் பிறந்ததோர் சிலம்பிற் றென்பவே.

அழகிய மணிபோலும் நீண்ட மலர்களாலே அணியப்பட்டது. சுனை அணியப்பட்டது. ஆயிடை - அவ்வழியில். மலர்ப்படலிகை - பூவிடு பெட்டி; சீவக. 2708, ந. ஈர்ம்பொழில் - குளிர்ச்சியையுடைய சோலை. பொழிலுக்குப் படலிகை உவமை. சிலையினாய் - சீவகனே; விளி. சேறி - செல்வாயாக.

1210. இலைப் பொலி பூண் - இலையின் உருவம் விளங்கிய ஆப ரணத்தையுடைய; "இலைப்பூண் டிளைக்கு மேந்திள முலையள்" (பெருங். 3. 5 : 22). எரி பொன் மேகலை - ஒளி விளங்குகின்ற பொன்னா லாகிய மேகலை. குலத்தலைமகளிர் - குலமங்கையர். முலையினையும், மேகலையையுமுடைய மகளிர். கற்பிற் றிண்ணிய - கற்பினைப்போல அசைவில்லாத தன்மையையுடைய. அலைத்து - கல்லையுருட்டி. ஆர்க்கும் - ஒலிக்கின்ற. வலத்தது - உனக்கு வலப்பக்கத்திலுள்ளது. அருவிகள் ஆர்க்கும் வனகிரி, சோலை சூழ் வனகிரி எனத் தனித்தனியியைக்க. மதியிற்றோன்றும் - அருவியை உடையதனாலும் குளிர்ச்சியாலும் சந்திர னைப் போற்றோன்றும்; வனகிரிக்குச் சந்திரன் உவமை.

1211. கரியவன் - இந்திரனுடைய. கவிழ்த்த - கீழேசாய்த்த. சேவடியினையுடைய பெரியவன்; அருகன். பெரியவனுடைய திருமொழி; என்றது ஜினாகமத்தை. பிறழ்தலின்றி - தப்புதலில்லாமல். மரியவர் - ஜினாகமத்திலே பழகிய முனிவர்கள்; மரியவர் : மருவியவர் என்பதன் விகாரம். மதனகீதமே திரிதர - மன்மதனுடைய கீதமட்டுமே அவ் விடத்தில் நீங்கியிருக்க. பிறந்ததோர் - மற்றைய இயல்பாயுள்ள ஓசைக ளெல்லாம் பிறந்ததொரு. சிலம்பிற்று - பக்கமலையையுடையது; உடை யது வனகிரி. என்ப, ஏ : அசைநிலைகள்.

(இ - ள்.) அஃது, இந்திரன் தலையைச்சாய்த்த சேவடியினையுடைய பெரியவன் அருளிச்செய்த ஆகமத்தைத் தப்புதலின்றி அதிலே மருவின இருடிகள் உறைதலின், காமனது கீதமொன்றுமே அவ்விடத்தினீங்க, இயல்பாலுள்ள ஓசைகளெல்லாம் பிறந்ததொரு பக்கமலையையுடைய தென்க. (சசு)

1212. ஏற்றரு மணிவரை யிறந்து போனபின்
மாற்றரு மணநெறி மகளிர் நெஞ்சமே
போற்பல கவர்களும் பட்ட தாயிடை
ஆற்றல்சால் செந்நெறி யறியக் கூறுவாம்.

மாற்றருநெஞ்சம் - வசப்படுத்தவொண்ணாத நெஞ்சம். கவர்ப்பு, பலவாதல் : விகாரம்.

(இ - ள்.) ஏறுமிடம் அரிய அவ்வரையைக் கடந்துபோய பின்பு புணர்ச்சி நெறியையுடைய பரத்தையரது நெஞ்சம்போல் வழி பல கவர்ப்புக்களு முண்டாயிற்றுதலின், அவ்வழியிடத்துச் செல்லுதலமைந்த செந்நெறியை அறியக் கூறுவேம் ; அதுகேளென்க. (சஎ)

1213. சுரும்புசூழ் குவளையோர் சுனையுண் டச்சுனை
மருங்கிலோர் மணிச்சிலா வட்ட முண்டவண்
விரும்பிவண் டிமிர்வதோர் வேங்கை வேங்கையின்
மருங்கிலோர் செந்நெறி வகுக்கப் பட்டதே.

---

1212. ஏற்றரு மணிவரை - ஏறுதற்கரிய நீலமணிபோன்ற மலையை. மணநெறி மகளிர் மாற்றரு நெஞ்சமேபோல் - புணர்ச்சிநெறியையுடைய வேசையரது, வசப்படுத்தற்கு முடியாத, பலவாறு செல்லும் மனத்தைப் போல. கவர் = கவர்ப்பு - பிரிவு. பட்டது - உண்டாயிற்றுதலால். அடி, 1-2 : "பெண்மனம் பேதித் தொருப்படுப் பென்னெனும், எண்ணிலாருவன்" (வளையாபதி) ; "கலையுணர் நெஞ்சிற் கூத்திய ருளம்போற் கவர்ந்து செல்" (கூர்ம. நவகண்ட. 50). ஆயிடை - அவ்வழியிடத்து. ஆற்றல்சால் செந்நெறி - செல்லுதற்குப் பொருந்திய செவ்விய வழியை. கூறுவாம் - சொல்லுவேம் ; என்றவன் சுதஞ்சணன்.

1213. சுரும்புசூழ் குவளையோர் சுனை உண்டு - வண்டுகள் சூழ்ந்த குவளைமலரையுடைய ஒரு சுனை உள்ளது. சுனையின் மருங்கில் ; மருங்கு - பக்கம். மணிகள் பதித்த சிலாவட்டம் - வட்டப்பாறை ; "சென்றொரு மணிச்சிலா வட்ட மேறினன்" (சூளா. சுயம். 41). அவண் - அச்சிலா வட்டத்தின் அருகில். இமிர்வதாகிய ஒரு வேங்கை மரம் உண்டு ; இமிர்தல் - ஒலித்தல். வேங்கையின் மருங்கில் ஒரு செந்நெறி உண்டு. வகுக்கப்பட்டது - அவ்வழி என்னுற் கூறப்பட்ட வழியாகும்.

(இ - ள்.) ஒருசுனையுண்டு ; அச்சுனைமருங்கிலே ஒருசிலாவட்டமுண்டு ; அதன் அருகே ஒரு வேங்கையுண்டு ; அவ்வேங்கையின் பக்கத்தே ஒரு செவ்விய வழியுண்டு ; அது யான் கூறப்பட்ட வழியென்க. (சஅ)

(வேறு)

1214. கைம்மலர்த் தனைய காந்தட் கடிமலர் நாறு கானம், மொய்ம்மலர்க் குவளைக் கண்ணி மொய்ம்பநீ முழுது நீந்தி, வைம்மலர்த் திலங்கு வெள்வேன் மத்திம தேய மாளும், கொய்ம்மலர்த் தாரி ேனைக் கண்ணுறு குணம தென்றான்.

(இ - ள்.) மொய்ம்பனே! இவ்வடையாளங்களைக்குறிக்கொண்டு கானத்தை முழுதுங்கடந்துபோய்க் கூர்மைமிக்குவிளங்கும் வேலையுடைய மத்திமதேயத்தையாளும் அரசனை எதிர்ப்படுதி; அது நினக்கு ஊழான் இயல்பாக வுள்ளதொன்றென்று வழிசொன்னனென்க.

குணம் - பண்பு. (சகூ)

1215. மண்ணகங் காவன் மன்னன் மாதரம் பாவை மாசில், ஒண்ணுதன் மகளைத் தந்தீங் குறைகென வொழுகு நாளுள், வெண்மதி யிழந்த மீன்போற் புல்லென வெய்தி நின்ற, அண்ணனின் ேறாழ ரெல்லா மவ்வழி யடைவ ரென்றான்.

(இ - ள்.) மண்காவலனாகிய வேந்தன், பாவையாகிய தன்மகளை நினக்குத் தந்து இவ்விடத்தேயுறைகவென்றுகூற, நீயும் அங்ஙனம் நடக்கும் நாளிலே, வருந்திநின்ற நந்தட்டனும் நின்றோழரும் எல்லாம் அவ்விடத்தே வந்து நின்னைச் சேர்வரென்றானென்க. (ருo)

---

1214. கைம்மலர்த்தனைய காந்தட்கடிமலர் - கையை விரித்தாற்போன்ற காந்தளாகிய நறுமணமுடைய பூ ; காந்தளுக்குக் கை உவமை. நாறுகானம் - வாசனை வீசுகின்ற காட்டை. மொய்ம்மலர்க்குவளைக் கண்ணி மொய்ம்ப - நெருங்கிய குவளைமலர் மாலையையுடைய சீவகனே ; விளி ; மலர்க்குவளை : முதலுக்கு ஏற்ற அடை. மொய்ம்ப, வானத்தை முழுதும் நீந்தி என மாறியியைக்க; நீந்தி - கடந்து சென்று. வைம்மலர்த்து இலங்கும் - கூர்மைமிக்கு விளங்குகின்ற. கொய்ம்மலர்த் தாரினான் - கத்தரித்த மலர்களாலாகிய மாலையையுடையவன்; தடமித்தன் என்பவன். வேலையுடைய தாரினான், மத்திமதேயம் ஆளும் தாரினான் என்க. கண்ணுறு - பார்ப்பாயாக. அதுகுணம் - அவனைக்காண்பதாகிய அது ஊழ்வினையால் இயல்பாகவே அமைந்த பண்பாகும். என்றான் - என்று வழியும் கூறினான்.

1215. மண்ணகத்திற்குக் காவலனாகிய மன்னன் ; என்றது தடமித்தனை. மாதரம்பாவை : சீவக. 740, 836, 1074. பாவையாகிய மாசிலாத ஒள்ளிய நுதலையுடைய மகளை என்றது தடமித்தன் பெண்ணாகிய கனக

(வேறு)

1216. நெட்டிடை நெறிகளு நிகரில் கானமும்
முட்டுடை முடுக்கரு மொய்கொள் குன்றமும்
நட்புடை யிடங்களு நாடும் பொய்கையும்
உட்பட வுரைத்தன னுறுதி நோக்கினன்.

(இ - ள்.) தூரிய இடத்தையுடைய வழிகளும், கானமும், போக்கில்லாத அருவழிகளும், குன்றமும் உறவுகொள்ளுமிடங்களும், நாடும், பொய்கைகளும் முன்னே தோன்றக்கூறினனாய், பின்பு, அவனுக்கு மந்திரங்களைக் கூற நினைந்தானென்க. (ருக)

1217. செல்கதி மந்திரஞ் செவியிற் செப்பிய
மல்லலங் குமரனை வாழ நாட்டவே
வல்லவன் மந்திர மூன்றுங் கொள்கெனச்
சொல்லின னவற்றது தொழிலுந் தோன்றவே.

---

மாலையை. ஈங்கு உறைகென - இங்கு இருப்பாயாகவென்று தடமித்தன் கூற. ஒழுகும் நாளுள் - அவன் கூறியதற்கேற்ப நீயும் அங்கு இருந்து வரும்நாளில். மதியிழந்த மீன்போல் - சந்திரனை நீங்கிய நட்சத்திரங்களைப் போல. சீவகனுக்குச் சந்திரனும், தோழருக்கு மீனும் உவமைகள்; சீவக. 23, அடிக். புல்லென எய்திநின்ற - பொலிவிழந்து வருத்தமடைந்து நின்ற; "புல்லென்னப்போகி" (சீவக. 2531). அண்ணல்: நந்தட்டன். அண்ணலும், நின்தோழரும் எல்லாம். நந்தட்டனைப் பிரித்துக் கூறினார், சகோதரனாதலின். அவ்வழி - மத்திம தேசமாகிய அவ்விடத்து.

1216. நெட்டிடைநெறி - நெடுந்தூரமான இடத்தையுடைய வழி. நிகரில் - ஒப்பில்லாத. முட்டுடை முடுக்கர் - வழிசென்று பின்பு இல்லையான இடங்களையுடைய, வளைந்த சந்துகள்; "முட்டு முடுக்கும்" (பெருங். 1. 33 : 16); 'முடுக்கர் - நீர்குத்தின இடங்கள்' (மலைபடு. 213, ந.). மொய் கொள் - நெருக்கம் கொண்ட. நட்பு - உறவு. நாடும் - நாட்டையும். பொய்கை - மானிடரால் ஆக்கப்பெறாத நீர்நிலை. உட்பட - சீவகனுடைய மனத்திலே நன்றாகப் பொருந்த. உறுதிநோக்கினன் - சீவகனுக்குப் பயனைத்தரும் மந்திரங்களைக் கூற நினைந்தான். உரைத்தனனாய் நோக்கினன்.

1217. செல்கதி மந்திரம் செவியிற் செப்பிய குமரனை - நற்கதியிற் செல்லுதற்குக் காரணமான மந்திரத்தைத் தன் செவியிலே அன்று செப்பிய சீவகனை; "செல்கதி மந்திரம்" (சீவக. 943); "செல்கதி மந்திரஞ் செவியிற் செப்பி" (பெருங். 1. 53 : 42); செப்பியது, சுதஞ்சணன் நாயாக இருந்தபோது; சீவக. 943-6. வாழும்படி நாட்டவல்ல

(இ - ள்.) நற்கதியிற் சேருமந்திரத்தைத் தனக்குச்செப்பிய கும ரனை வாழநாட்டவே வல்லவன், அஃது அவன் கருத்தன்மையின் அதனைத் தவிர்ந்து, இம்மந்திரமூன்றையும் குறிக்கொள்கவென்று அவற்றினுடைய தந்திரமும் தோன்றக் கூறினனென்க. (ருஉ)

1218. கடுந்தொடைக் கவர்கணைக் காமன் காமுறப்
படுங்குர றருமிது பாம்பு மல்லவும்
கடுந்திற னோய்களுங் கெடுக்கும் வேண்டிய
உடம்பிது தருமென வுணரக் கூறினான்.

(இ - ள்.) இது, காமன்விரும்பப்படும் சாரீரத்தைத்தரும்; இது பாம்பின்விடத்தையும், ஒழிந்த [1] மண்டலிமுதலியவற்றின் விடங்களை யும், கடுந்திறல்களையும், நோய்களையுங்கெடுக்கும்; இது வேண்டிய உடம்பைத் தருமென்று அவற்றின் வேறுபாடறியக் கூறினனென்க.

காற்று நெருப்பு நீர் முதலியவற்றை, 'கடுந்திறல்' என்றான். (ருங)

(வேறு)

1219. கந்தடு களிறு கொல்லுங் கருவரை யுழுவை யன்னான், மந்திர மூன்று மோதி வானவிற் புரையும் பைந்தார், இந்திரன் றன்னை நோக்கி யியக்கியர் குழாத்தை நோக்கிச், சிந்தையிற் செல்வ லென்றான் றேவனுஞ் செலவு நேர்ந்தான்.

---

வன்; என்றது சுதஞ்சணனை; நாட்ட - நிலைநிறுத்த. அவற்றது தொழிலும் - அம்மந்திரங்களினுடைய தந்திரமும். கொள்கென அவற்றது தொழிலும் தோன்றச் சொல்லினன் என மாறியியைக்க.

1218. கடுந்தொடை - கடிய தொடுத்தலையுடைய. கவர்கணைக் காமன்–ஒருவரை யொருவர் முயங்குதற்குக் காரணமான அம்பையுடைய மன்மதன்; "கவர்கணைச் சாமனார்" (கலித். 94 : 33-4, ந.); "கவர் கணை நோன்சிலைக் காம னிவனெனு, மைய வுள்ளமொடு" (பெருங். 2. 15 : 97-8); "காமவேள் கவர்கணை", "காமனார், ஐதுலாங் கவர் கணை" (சூளா. நகர. 18, குமார. 5); கவர்வு - விருப்பம்; தொல். உரி. 64; கவர்த்த அம்பெனலுமாம். இதுகாமனால் காமுறப்படும் குரல்தரும்; இது - இம்மந்திரம்; குரல் - சாரீரம். பாம்பும் - பாம்பின் விஷத்தையும். அல்லவும் - இஃது அல்லாத சீதமண்டலி முதலியவற்றின் விஷத்தையும். கடுந்திறல் : காற்று, தீ, நீர் முதலியவற்றையும். நோய்களையும் இம் மந்திரம் கெடுக்கும் என்க. இது வேண்டிய உடம்பைத் தரும் என மாறியியைக்க. உணர - மூன்று மந்திரங்களின் வேறுபாடு தெரியும்படி.

(உரை) [1] சீவக. 1276, ந.

1219. கந்து : கட்டுத்தறி. களிற்றைக் கொல்லுகின்ற கரிய கோடு களையுடைய உழுவையன்னான்; என்றது சீவகனை; உழுவை - புலி; சீவக. 1226, ந. மந்திரம் மூன்றையும் ஓதி. ஓதி - படித்து. வானவில்

(இ - ள்.) புலியன்னான், மந்திரமூன்றையும் படித்துச் சுதஞ்சணனை யும் பார்த்து அவன்தேவியர் திரளையும் பார்த்து மனம்போலே வருந்தா மற்கடிது செல்வேனென்றான் ; தேவனும் அவன்போக்கை உடன்பட்டா னென்க.

[1] தாரகமனமும் கலைகளிற்றென்றாதலின், அதுவல்லனென்பதும் இதனாற் பெற்றாம். செல்வமிகுதியான் இந்திரனென்றார். (௫௪)

1220. மனைப்பெருங் கிழத்தி மாசின் மலைமக டன்னை யான் சென், றெனைத்தொரு மதியி னங்கொ லெய்துவ தென்று நெஞ்சில், நினைத்தலுந் தோழ னக்கு நிழலுமிழ்ந் திலங்கு செம்பொற், பனைத்திரண் டனைய தோளாய் பன்னிரு மதியி னென்றான்.

வெள்ளிமலையிற் றோன்றிவந்த மனைப்பெருங்கிழத்திதன்னை, மாசில்லாத மகள்தன்னை.

(இ - ள்.) தத்தையையும் குணமாலையையும் எவ்வளவிற்றாம் ஒரு திங்களிலே யான்சென்றுகூடுந் தன்மையுண்டாமென்று நினைத்தவள விலே, அதனை யறிந்து, தோழன் நக்கு, தோளாய்! நீ எய்துவது பன் னிரண்டாமதியிலே யென்று கூறினானென்க.

---

புரையும் பைந்தார் - இந்திரவில்லைப் போன்ற பசிய மாலை ; சீவக. 2070, 2425 ; “ திருவிற் றாம முருவுபட நாற்றி ” (பெருங். 1. 49 : 82). தாரை யுடைய இந்திரன் ; என்றது சுதஞ்சணனை ; இந்திரனென்றார் செல்வ மிகுதியால். இயக்கியர் குழாம் - சுதஞ்சணனுடைய தேவியர் கூட்டம். சிந்தையிற்செல்வலென்றான் - மனத்தைப்போல விரைவாகச் செல்வேன் என்று கூறினான். “ நினைப்பிற் போகி நிலத்திழிந்தான் ” (சீவக. 1224). தேவன் - சுதஞ்சணன். செலவுநேர்ந்தான் - சீவகன் போதற்கு உடன் பட்டான்.

(உரை) [1] சீவக. 1408, 1612, ந.

1220. மலையிலிருந்து வந்த மனைப்பெருங்கிழத்தியையும் மாசில் லாத மகள் தன்னையும் ; என்றது முறையே காந்தருவதத்தையையும் குணமாலையையும் குறித்தது ; மலை - வெள்ளிமலை. காந்தருவதத்தை வெள்ளி மலையிலிருந்து சீதத்தனாற் கொணரப்பட்டவள் என்பது ஈண்டு உணரற்பாலது. எனைத்தொரு மதியின் எய்துவது ஆம் - எவ்வளவினை யுடைய தாகிய ஒரு திங்களிற் சென்று அடையும் தன்மை உண்டாகும் ; கொல் : அசைநிலை. தோழன் - சுதஞ்சணன். நிழலுமிழ்ந்து இலங்கு செம்பொன் - ஒளியை வீசி விளங்குகின்ற செம்பொன்னாலாகிய ஆப ரணத்தையுடைய ; பொன் : ஆகுபெயர். பனைத்திரண்டனைய - பனை திரண்டாற்போன்ற. செம்பொற்றோளாய், பனைத்திரண்டனைய தோளாய் எனப் பிரித்தியைக்க. தோளாய் என்றது சீவகனை ; விளி. நீ அவர்களை அடைவது பன்னிரண்டாம் மதியில் என்றான்.

கொல் : அசை. [1]இன் ஏழனுருபாதல் புறனடையாற்கொள்க. சீவகன் பன்னிருமதிக்குள்ளே இராசமாபுரத்தே சென்று குணமாலையையெய்தினானேனும் மனக்கவற்சியின்றி நிலைபெறவிருந்து எய்தாமையின், அதனைத் தேவன் கூறுதுயினன். இனித் தத்தையையே நினைந்தானென்னிற் குணமாலையை வரைந்ததற்கு நிகழ்ந்த ஊடல்தீர்த்துப் புணராமையின், அவளையே நினைந்தானென்க. (ருரு)

1221. ஆறிரு மதியி னெய்தி யரட்டனை யடர்த்து மற்றுன்
வீறுயர் முடியுஞ் சூடி விழுநிலக் கிழமை பூண்டு
சாறயர்ந் திறைவற் பேணிச் சார்பறுத் துய்தி யென்று
கூறினன் கதிர்கள் பொங்குங் குளிர்மணி முடியி னானே.

அரட்டன் - குறும்பன்.

(இ - ள்.) முடியினான், பின்னும், பன்னிரண்டாந்திங்களிலே இராசமாபுரத்தைச் சேர்ந்து கட்டியங்காரனையுங்கொன்று உனக்குத் தொன்றுபட்டு வந்த முடியையுஞ்சூடி நிலத்திற்கும் உரிமைபூண்டு விழாக்கொண்டாடி இறைவனை வழிபட்டுப் பிறப்பறுத்து வீடுபெறுவையென்று கூறினானென்க.

இது தேவியர்முன்னாதலின், வெளியான காரியங்கள் கூறினான்.

(ருசு)

1222. சொற்றிறற் சூழ்ச்சி மிக்க சுதஞ்சணன் சுருங்க நாடி, விற்றிறற் குருசிற் கெல்லாம் வேறுவே றுரைப்பக் கேட்டே, சுற்றிய தோழி மாரை விடுத்தனன் றெழுது நின்றான், கற்பக மரமுஞ் செம்பொன் மாரியுங் கடிந்த கையான்.

(உரை) [1]மதியின் என்பதிலுள்ளது; 'ஏழாவதற்கு இன்னென்பதோ ருருபு புறனடையாற் கொள்ளினும் அமையும்' (திருச்சிற். 286, பேர்.)

1221. ஆறிருமதியின் - பன்னிரண்டாம் மாதத்தில். எய்தி - இராசமாபுரத்தை அடைந்து. அரட்டனை : கட்டியங்காரனை. அடர்த்து - கொன்று. வீறு - வேறொன்றற்கில்லாத பெருமையையுடைய. நிலக்கிழமை பூண்டு - பூமிக்கு உரிமையைக் கொண்டு. சாறு அயர்ந்து - அருகனுக்கு விழாக்கொண்டாடி. இறைவற்பேணி சார்பறுத்து உய்தி - கடவுளை வழிபட்டு இருவகைப் பற்றாலாகிய பிறப்பை அகற்றி வீடுபெறுவாய்; "சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின்" (குறள், 359) என்பதற்குப் பரிமேலழகர், 'ஆகுபெயராற் சாருமிடத்தையும் சார்வனவற்றையுஞ் சார்பென்றார்' என்று எழுதிய உரை ஈண்டு அறியத்தக்கது. கதிர்கள் - கிரணங்கள். முடியினான் : சுதஞ்சணன் ; எழுவாய்.

1222. சொற்றிறல் - சொல்வன்மை. சூழ்ச்சி - மறைபொருளாகிய சில உபாயங்கள். விற்றிறற்குருசிற்கு : சீவகனுக்கு. சொற்றிறலை

(இ - ள்.) சொல்வலியையுடைய சுதஞ்சணன், மறைபொருளல்லாதவற்றை வேருகநாடி அங்ஙனம் சுருங்கக்கூறிப் பின்பு குருசிலுக்கு மறைபொருளாகிய சூழ்ச்சிமிக்கனவெல்லாம் வேருகக்கொண்டிருந்து கூறக்கேட்டு, அவன், பின்பு சுதஞ்சணனைத் தொழுது, சூழ்ந்துநின்ற தோழிமாரை விடுத்து நின்ருனென்க.

[1] ஆசாரியனைத்தலிற் ருெழுதானென்க. இனிப் போக்கு ஒருப்படுதலின், வழிபடு தெய்வத்தைத் தொழுதானென்றலுமாம். (௫௭)

(வேறு)

1223. சேட்டிளஞ் செங்கயல் காப்பச் செய்துவிற்
பூட்டிமேல் வைத்தன புருவப் பூமகள்
தீட்டிருந் திருநுதற் றிலக மேயென
மோட்டிருங் கதிர்திரை முளைத்த தென்பவே.

(இ - ள்.) அங்ஙனம் நின்ருகை, கயல்களைக்காக்கப்பண்ணி வில்லைப்பூட்டி மேல்வைத்தாற்போலும் புருவத்தினையும் கண்ணிணையுமுடைய நிலமகள் நுதலிலிட்ட திலகமென்னும்படி ஞாயிறு கடலிலே முளைத்தென்க. (௫௮)

யுடைய சுதஞ்சணன், (மறைபொருளல்லாதவற்றை) வேறுநாடிச் சுருங்கக்கூறி, (பின்பு) குருசிற்குச் சூழ்ச்சி மிக்கவெல்லாம் வேருக இருந்து உரைப்பக்கேட்டு என மாறியியைக்க; கேட்டு - சீவகன்கேட்டு. விடுத்தனன் - விடுத்து; முற்றெச்சம். தொழுது - சுதஞ்சணனை வணங்கி; அருகனை வணங்கியெனலுமாம். கொடைத் தொழிலாலே, கற்பகமரத்தையும், செம்பொன்னைப் பொழியும் மாரியையும் கடிந்த கையான்; என்றது சீவகனை; எழுவாய். மாரி - மேகம்; ஆகுபெயர். கடிந்த - வெறுத்த. கையான், தொழுது, (தன்னைச்) சுற்றிய தோழிமாரை விடுத்து நின்ருன் எனமாறியியைக்க.

(உரை) [1] தனக்கு மந்திரங்களை உபதேசித்தமையின் சுதஞ்சணனை ஆசாரியனென்ருர்.

1223. சேட்டிளஞ் செங்கயல் - பெருமையையும் இளமையையும் உடைய சிவந்த கயல்மீன்; என்றது கண்களை. கயலைக்காப்பச் செய்து; செய்து - பண்ணி. கயலை வில் காத்தல்: சீவக. 626, அடிக். வில்லைப் பூட்டி மேல் வைத்தன்ன புருவத்தையுடைய பூமகள்; அன = அன்ன - போன்ற; பூமகள் - பூமிதேவி. பூமகளின் கண்களுக்குக் கயலும், புருவத்திற்கு வில்லும் உவமைகள். பூமகளுடைய திருநுதலில் தீட்டிருந் திலகமேயென என்று மாறியியைக்க; நுதல் - நெற்றி; தீட்டுதல்-இங்கே இடுதல். மோட்டிருங் கதிர் - பெருமையையுடைய பெரிய சூரியன். திரைமுளைத்தது - கடலில் தோன்றியது; திரை - கடல்; ஆகுபெயர். சூரியனுக்குத் திலகம் உவமை. "முன்னங் குடைபோன் முடிநாயக மணிபோல், மன்னுந் திலகம்போல் வாளிரவி - பொன்னகலம், தங்கு

(வேறு)

1224. அழல்பொதிந்த நீளெஃகி னலர்தார் மார்பற் கிம்மலை
மேற், கழல்பொதிந்த சேவடியாற் கடக்க லாகா தெனவெண்ணிக்,
குழல்பொதிந்த தீஞ்சொல்லார் குழாத்தி னீங்கிக் கொண்டேந்தி,
நிழல்பொதிந்த நீண்முடியா னினைப்பிற் போகி நிலத்திழிந்தான்.

(இ - ள்.) நீண்முடியான், அலர்தார்மார்பற்கு இவ்வடியால் இம்மலை மேற் போகமுடியாதென்றுகருதிக் குழாத்தினின்றுநீங்கி ஏந்திக்கொண்டு நினைவுபோலேபோய் நிலத்தே இழிந்தானென்க. (௯௬)

1225. வண்டளிர்ச் சந்தனமும் வழையு மாவும் வான்றீண்டி,
விண்டொழுகு தீங்கனிகள் பலவு மார்ந்த வியன்சோலை,
மண்கருதும் வேலானை மறித்துங் காண்க வெனப்புல்லிக்,
கொண்டெழுந்தான் வானவனுங் குருசி றானே செலவயர்ந்தான்.

(இ - ள்.) அங்ஙனமிழிந்து, சந்தனமுதலியன வானைத்தீண்டப் பட்டு விரிந்து தேனொழுகும் கனிகள்பலவுநிறைந்த சோலையிலே, வேலானைப் பின்பும் காண்பேனாகவென்றுகூறிப் புல்லிக்கொண்டு தேவன் போனான்; குருசில் தானே போதலைச் செய்தானென்க.

முடிசூட்டுதற்கும் வீடுபெற்றபடி காண்டற்கும் வருதல்குறித்து, 'மறித்தும்' என்றான். ஈண்டு, 'மண்கருதும்' என்றது குறித்து, மேலும், "மண்கொண்டவேலான்" (சீவக. 2353) என்பர். இதற்குமுன் தனியேபோகாமையின், தேவர் நொந்துகூறினார். (௯௭)

---

கவுத்துவம்போ லுந்தித் தடமலர்போல், அங்க ணுலகளந்தாற் காம்" (தண்டி. 39, மேற்.)

1224. அழல் பொதிந்த எஃகு - விடம் பூசியவேல்; அழல் - விடம்; சீவக. 157, அடிக். எஃகினையுடைய அலர்ந்த தாரையுடைய மார்பற்கு; சீவகனுக்கு. கழல் - வீரக்கழல். கடக்கலாகாது - போகமுடியாது. மார்பற்குச் சேவடியால் இம்மலைமேல் கடக்கலாகாது எனஎண்ணி என்று மாறியியைக்க. குழல் பொதிந்த தீஞ்சொல்லார் - புல்லாங்குழலின் இசை பொதிந்த இனிய சொல்லையுடைய மகளிருடைய; என்றது சுதஞ்சணன் தேவிமாரை. சீவகனை ஏந்திக்கொண்டு. நீண்முடியான்: சுதஞ்சணன்; எழுவாய். நினைப்பிற்போகி: சீவக. 1219, அடிக். இழிந்தான் - இறங்கினான்.

1225. வண்டளிர்ச்சந்தனம் - வளப்பம் பொருந்திய தளிரையுடைய சந்தனமரம். வழை - சுரபுன்னைமரம். வான்தீண்டி விண்டு ஒழுகு தீங்கனிகள் - ஆகாயத்தைத் தீண்டி உடைந்து தேனொழுகுகின்ற இனிய பழங்கள். ஆர்ந்த - நிறைந்த. வியன் - இடம் அகன்ற. மண்கருதும் வேலான் - தனக்குரிய பூமியைக்கொள்ளக் கருதுகின்ற சீவகன். மறித்தும் - பின்பும். காண்க - நான் காண்பேனாக. என - என்று

1226. வாளுழலை பாய்ந்திளைய வளநாகிட் டினமென்னும்,
தாளொழியப் போரேறு தனியே போந்த தெனவெண்ணி,
நீளருவிக் கண்ணீர்வீழ்த் தலறிவண்ணங் கரிந்துருகிக்,
கோளுழுவை யன்றற்குக் குன்ற முநின் றழுதனவே.

வாள் : ஆகுபெயர். இளைய வளநாகு - தத்தையும் குணமாலையும். இனம் - தோழர்; இவற்குக் கால்போறலின், 'தாள்' என்றார். ஏறென்னும்பெயர்வரை வரைகளின் உட்கோள். புலிக்குத் தன்காடும் பிறகாடும் ஒக்குமென்று, 'உழுவையன்னான்' என்றார்.

(இ - ள்.) போரேறு, தோழரென்கின்ற கால் அவ்விடத்தேநிற்கவும் வாட்படையாகிய உழலையைப்பாய்ந்து நாகுகளைக் கைவிட்டுத் தனியே போந்ததென்றுகருதி, அருவியாகிய கண்ணீரைவீழ்த்துக் கூப்பிட்டு மனக்கவற்சியால் மேனிகருகி, அசும்புவீழ்தலின் உள்ளுருகிப் புலியை யன்றற்கு மலைகளும் நின்று அழுதனவென்க.

தேவர் தம் [1] குறிப்பை மலைகளின்மேலேற்றினார் (௬௪)

1227. மிக்கார்தங் கேட்டின்கண் மேன்மை யில்லாச்
சிறியார்போல், நக்காங்கே யெயிறுடைந்த நறவ முல்லை
நாள்வேங்கைத், தக்கார்போற் கைம்மறித்த காந்த ளந்தோ
தகாதெனவே, தொக்கார்போற் பன்மாவு மயிலுந் தோன்றித்
துளங்கினவே.

---

கூறி. புல்லிக்கொண்டு - சீவகனைத் தழுவிக்கொண்டு, எழுந்தான் - போனான். வானவன் - சுதஞ்சணன்; உம்மை : அசைநிலை. சோலையில் வேலானைக் காண்கவெனப் புல்லிக்கொண்டு வானவன் எழுந்தான். குருசில் : சீவகன். தானேசெலவயர்ந்தான் - தான் ஒருவனாகவே போனான்.

1226. வாளுழலை - வாட்படையாகிய தடைமரங்கள். இளைய வளநாகிட்டு - இளமைபொருந்திய வளப்பத்தையுடைய நாகுகளை விட்டு நீங்கி; நாகு என்றது, காந்தருவதத்தையையும் குணமாலையையும். இனமென்னும் தாளொழிய - பதுமுகன் முதலிய தோழர் என்கிற கால் நீங்கிநிற்ப. போரேறு : சீவகன். போரேறு, இனமென்னும் தாள் ஒழிய நாகை இட்டுத் தனியே போந்தது என எண்ணி என்று மாறியியைக்க. எண்ணியது மலை. அருவியாகிய கண்ணீரை வீழ்த்து. அலறி - வருத்தத்தால் முழங்கி. வண்ணம் கரிந்து - தன்மேனி கருகிப்போய். உருகி - ஊற்றெழுதலின் மனம் உருகி. கோள் உழுவையன்றற்கு - கொலைத்தொழிலையுடைய புலியைப்போன்ற சீவகனுக்கு. குன்றம் அருவியைக் கண்ணீராகக்கொண்டு அழுதல்; "கண்ணீ ரருவி யாக, அழுமே தோழியவர் பழமுதிர் குன்றே" (நற். 88 : 8-9)

(உரை) [1] வருத்தக் குறிப்பை; சீவக. 1225, ந.

1227. மிக்கார்தம் கேட்டின்கண் - அறிவினால் மிக்கோராகிய பெரியோர் துன்பமடைந்த காலத்தில். சிறியார் - அறிவிற் சிறியவராகிய

(இ - ள்.) பெரியோர் தம்கேட்டிடத்து அறிவில்லாத கீழ்மக்கள் நகுமாறு போலே, முல்லை, வேங்கைக்கண்ணே நின்று நக்கு அப்பொழுதே எயிற்றின் தன்மைகெட்டன; அதுகண்டு நன்மக்களைப்போலே, காந்தள், அந்தோ! இது தகாதென்று கைகவித்துவிலக்கின; அவ்வளவிலே சுற்றத்தாரைப்போலே மாவும் மயில்களும் தோன்றி நடுங்கினவென்க. (சுஉ)

1228. கொல்லை யகடணைந்து குறும்பு சேர்ந்து தமியாரை
முல்லை முறுவலித்து நகுதிர் போலு மினிநும்மைப்
பல்லை யுகுத்திடுவ மென்று பைம்போ தலர்சிந்தித்
தொல்லை நிறங்கருகித் தும்பி பாய்ந்து துகைத்தனவே.

(இ - ள்.) தும்பி, முல்லைகாள்! நீங்கள் கொல்லையின் நடுவை யணைந்து வேங்கையாகிய அரணைச்சேர்ந்து தமியாரை நும்முள்ளே சிறிதே நகைத்துப் பின்பு பிறரறியச் சிரியாநின்றீர்போலேயிருந்தீர்; இங்ஙனம் நகும் நும்மைப் பல்லையுகுத்திடுவேமென்று போதினும் அலரினுமுள்ள தேனைச்சிந்தித் தாம் கருகித் துகைத்தனவென்க.

போது - அலர்கின்றமுகை. இயல்பாகக் கருகினவேனும் இவ்வருத் தத்திற்குக் கருகியென்றார். 'தும்பியார்ந்து' என்றும் பாடம். (சுங)

1229. தோடேந்து பூங்கோதை வேண்டேங் கூந்த
றோடேலெம்மில், பீடேந் தரிவையரிற் பெயர்கென் றூடு
மடவார்போற், கோடேந்து குஞ்சரங்க டெருட்டக் கூடா
பிடிநிற்கும், காடேந்து பூஞ்சாரல் கடந்தான் காலிற் கழலானே.

---

கீழ்மக்கள். நக்கு - சிரித்து. ஆங்கே - அப்பொழுதே. எயிறு உடைந்த - பற்களின் தன்மைகெட்டன. நறவு - தேன். நாள் வேங்கை - தினை முதிரும் நாளில்மலரும் வேங்கைமரம். முல்லை வேங்கையிடம் நின்று நக்கு ஆங்கே எயிறு உடைந்த என மாறியியைக்க. தக்கார் - நன்மக்கள். கைம்மறித்த - கையைக் கவித்து விலக்கின. காந்தளுக்குக் கை உவமை; சீவக. 1214. தக்கார் போல், காந்தள் அந்தோ, தகாது எனக் கைம்மறித்த என மாறியியைக்க. தொக்கார் - உறவினர். பன்மாவும் - பலவிலங்குகளும். துளங்கின - நடுங்கின.

1228. கொல்லை அகடு அணைந்து - முல்லைநிலத்தின் நடுவிடத்தைப் பொருந்தி. குறும்பு சேர்ந்து - வேங்கைமரமாகிய அரணை அடைந்து; குறும்பு - அரண். தமியாரை - தனித்திருப்பவர்களை. முல்லை - முல்லை மலர்களே; விளி. முறுவலித்து - நுமக்குள்ளே சிறிது சிரித்து. நகுதிர் போலும் - பிறர் அறியும்படி நகைக்கின்றீர் போலுள்ளீர். உகுத்திடுவம் - சிந்தச்செய்வேம். போது அலர் சிந்தி - போதிலும் அலரிலும் உள்ள தேனைச்சிந்தி; போது - அலரும் பருவத்துள்ள அரும்பு; அலர் - மலர்ந்தபூ. தொல்லைநிறம் கருகி - தம்முடைய பழைய நிறம் கோபத் தாற் கருகுதலுற்று. தும்பி - ஒருவகைவண்டு; எழுவாய். பாய்ந்து துகைத்தன - மலரின்மீது பாய்ந்து சிதைத்தன. தும்பி, முல்லைகாள், நகுதிர்போலும் என்று சிந்திக் கருகித் துகைத்தன என்க.

1229. தோடு - இதழ். பூங்கோதை - பூமாலையை; கையுறை. கோதை வேண்டேமென்றது கையுறை மறுத்தல். எம் கூந்தலைத்

(இ - ள்.) நீ தருகின்ற கோதையை யாங்கள் வேண்டேம்; ஆதலிற் கூந்தலைத் தீண்டாதேகொள்; வழிமாறினாய்; இஃது எம்முடைய இல்லம்; நீ சொல்லும் பரத்தையரில்லேறப் போவாயாகவென்று ஊடும் மடவாரைப்போலே, களிறுகள் ஊடல்தீர்க்க ஊடல்தீராதே பிடிகள் நிற்குஞ்சாரலைக் காலாலே கழலான் போனானென்க.

இதற்குமுன், காலால் வழிநடவாமையின், தேவர் இங்ஙனங் கூறினார். (கூச

(வேறு)

1230. காழக மூட்டப் பட்ட காரிருட் டுணியு மொப்பான்
ஆழ்ளை யுடும்பு பற்றிப் பறித்துமார் பொடுங்கி யுள்ளான்
வாழ்மயிர்க் கரடி யொப்பான் வாய்க்கிலை யறித லில்லான்
மேழகக் குரலி னானோர் வேட்டுவன் றலைப்பட் டானே.

(இ - ள்.) ஒரு வேட்டுவன், கருமையூட்டப்பட்டதோர் இருட்டுணியையும் ஒப்பான்; பறித்தலால் மார்பு உள்ளேயொடுங்கியுள்ளான் கரடியொப்பான்; வெற்றிலை என்றுங்கண்டறியாதவன்; மேழகம் போலும் குரலினானாய் எதிர்ப்பட்டானென்க.

வாண்மயிரும், ஏழகமும் ஒருவகைப்பாடம். (கூரு

---

தொடேல்; கூந்தலை உரிமை கூறுவது ஒருமரபு: "கூந்த லுரியவா நினக்கே" (குறுந். 225 : 7); "ஒரூஉநீ யெங்கூந்தல் கொள்ளல்", "யாரிவ னெங்கூந்தல் கொள்வான்" (கலித். 87 : 1, 89 : 1); "கூந்தற் கிழவரை" (புறநா. 113 : 9). தொடேல் - தொடாதே. இது எம் இல்; இல் - வீடு. பீடு - பெருமை. அரிவையர் இல் பெயர்க - பரத்தையருடைய வீட்டிற்குப் போவாயாக. ஊடும் மடவார்போல் - ஊடுகின்ற குலமங்கையரைப் போல. கோடு - தந்தம். குஞ்சரங்கள் - ஆண்யானைகள். தெருட்ட - ஊடலைத் தீர்த்து நிற்க. கூடா - ஊடலினின்றும் நீங்காதனவாய். பிடி - பெண்யானைகள். காடேந்து பூஞ்சாரல் - காட்டில் உயர்ந்த பூக்களையுடைய சாரலை. சாரலைக் காலாற் கழலினான் கடந்தான்; கழலினான் : சீவகன். "காலின் னேகினானே" (சீவக. 1412)

1230. காழகம் - கருமை. இருளாகிய துணியையும் ஒப்பான். ஆழ்அளை உடும்பு பற்றி - ஆழ்ந்த வளையிலுள்ள உடும்புகளைப் பிடித்து. பறித்து - பறித்தலால். ஒடுங்கி - உள்புறமாக வளைந்து. கரடியொப்பான் : மணி. 16 : 68-9. வாய்க்கு இலை அறிதலில்லான்; இலை - வெற்றிலை; 'வெறுவாய்க்கிலை கெட்டவன்' என்பது ஒரு பழமொழி. மேழகக்குரலினான் - ஆட்டின் குரல்போலும் குரலையுடையவன்; மேழகம் - ஆட்டுக்கிடாய்; சீவக. 521, அடிக். குரலினனாகிய வேட்டுவன். தலைப்பட்டான் - எதிர்ப்பட்டான்.

1231. கொடிமுதிர் கிழங்கு தீந்தேன் கொழுந்தடி நறவொ டேந்திப், பிடிமுதிர் முலையி னுடன் றழைத்துகிற் பெண்ணி னோடும், தொடுமரைத் தோலன் வில்லன் மரவுரி யுடையன் றோன்ற, வடிநுனை வேலி னுன்கண் டெம்மலை யுறைவ தென்றான்.

(இ - ள்.) அவன், கொடிமுதிர்ந்த கிழங்குமுதலியவற்றைக் கள்ளுடனே யேந்தி, முதிர்ந்தமுலையினுளாகிய பிடிபோலும் தன்பெண்ணுடனே, செருப்பினனாய் வில்லினனாய் உடையினனாய் அனுகத் தோன்றினனாக, வேலினான் கண்டு, இருப்பது எம்மலையிலென்று கேட்டானென்க. (சுசு)

1232. மாலைவெள் ளருவி சூடி மற்றிதா தோன்று கின்ற, சோலைசூழ் வரையி னெற்றிச் சூழ்கிளி சுமக்க லாற்ரு, மாலையந் தினைகள் காய்க்கும் வண்புன மதற்குத் தென்மேல், மூலையங் குவட்டுள் வாழுங் குறவருட் டலைவ னென்றான்.

மற்று : அசை. இதா : திசைச்சொல்.

(இ - ள்.) அருவிசூடி, இதா தோன்றுகின்ற மலைத்தலையிலே ஒழுங்கு பட்ட தினைகள் கிளியெடுக்கவொண்ணுதவாகக் காய்ப்பது ஒருபுனம்; அதற்குத் தென்மேலமூலையிலுள்ள குவட்டில் வாழ்வாரில் வைத்து யான் தலைவனென்றானென்க. (சுஎ)

1231. கொடியில் முதிர்ந்த கிழங்கு. தடி - ஊன். நறவு - கள். கிழங்கு முதலியவற்றை நறவொடு ஏந்தி. பிடி - பெண்யானை. தழைத் துகிற் பெண் - தழையையே ஆடையாகவுடைய பெண்; “அந்தழை புனைந்த வஞ்சி” (சூளா. சுயம். 79). முதிர்ந்த முலையினுளாகிய பிடி போலும் பெண்ணினோடும் என்க. தோலன் - செருப்பையுடையவன். பெண்ணினோடும் தோலனாய், வில்லனாய், மரவுரியுடையனாய்த் தோன்ற. வடிநுனைவேலினான் - கூர்மை பொருந்திய நுனியைக்கொண்ட வேலை யுடைய சீவகன். கண்டு - அவ்வேடனைப் பார்த்து. நீ உறைவது எம் மலையில் என்றான் என மாறியியைக்க.

1232. மாலைபோன்ற அருவியைச் சூடி. இதா : “அறிந்திலேனிதா” (பரி. 8 : 60) என்பதற்கு, ‘ஈதாவென்பது ஒரு மரூஉமுடிபு; அஃது இக் காலத்து இந்தா வென்று வழங்கப்படும்; சுட்டுநீண்டது’ எனப் பரிமே லழகர் உரை யெழுதியுள்ளார்; “பலிதாவென்றான்” (பொன்வண்ணத். 33); “இந்தா விஃதோ ரிளங்குழவி” (கந்த. வள்ளியம்மை. 35). வரை யின் நெற்றி - மலையின் உச்சியில். அருவிசூடித் தோன்றுகின்ற மலையி னெற்றியில். கிளிசுமக்கலாற்ரு - கிளியால் எடுக்கமுடியாத. மாலையந் தினைகள் - வரிசையாகிய அழகிய தினைக்கதிர்களை. வரையினெற்றியில்

1233. ஊழினீ ருண்ப தென்னென் றுரைத்தலு முவந்து நோக்கி, மோழலம் பன்றி யோடு முளவுமாக் காதி யட்ட, போழ் நிணப் புழுக்க றேனெய் பொழிந்துகப் பெய்து மாந்தித், தோழ யாம் பெரிது முண்டுந் தொண்டிக்க ளிதனை யென்றான்.

(இ - ள்.) முறையால் நீர் உண்பதென்னென்று கேட்டபின், உவந்து பார்த்து, தோழ! ஆண்பன்றியோடே எய்ப்பன்றியையும் கொன்று சமைத்த புழுக்கலைத் தேனை மிகவார்த்துத் தின்று பின்பு நெல்லாலாக்கின கள்ளாகிய இதனையும் உண்பேமென்றானென்க. (கூஅ)

1234. ஊனொடு தேனுங் கள்ளு முண்டுயிர் கொன்ற பாவத், தீனராய்ப் பிறந்த திங்ங னினியிவை யொழிமி னென்னக், கானில் வாழ் குறவன் சொல்லுங் கள்ளொடூன் றேன்கை விட்டால், ஏனை யெம் முடம்பு வாட்ட லெவன்பிழைத் துங்கொ லென்றான்.

(இ - ள்.) முற்பவத்தில் ஊன்முதலியவற்றையுண்டு உயிரையுங் கொன்ற பாவத்தாலே இவ்விடத்து எயினராய்ப்பிறந்தது; இனி இவற்றைக் கைவிடுமினென்றுகூற, கானக்குறவன், பலரும் நன்றென்றுகூறும் கள்முதலியவற்றைக் கைவிட்டால் யாங்கள் எங்ஙனம் பிழைப்பேம், எம்முடம்பை நீவாட்டவேண்டா, ஒழிந்தவுடம்புகளை வாட்டுவாயாக வென்று சொன்னானென்க. (கூகூ)

மாலையந்தினைகள் கிளி சுமக்கலாற்றாதனவாகக் காய்க்கும் புனம். தென் மேற்கு மூலையிலுள்ள குவடு; அம் : அசை; குவடு - மலைச்சிகரம். (மேற்.) அடி. 4. நன். 301, மயிலை. 302, சங். சிவஞா.

(உரை) பி - ம். 1. ‘இந்தா’

1233. ஊழின் - முறையால். நீர் - நீங்கள். உரைத்தலும் - சீவகன் கூறுதலும். மோழலம்பன்றி - ஆண்பன்றி. முளவுமா - முள்ளம்பன்றி; “முளவுமா வல்சி யெயினர்” (ஐங். 364 : 1). காதி - கொன்று. அட்ட - சமைத்த. போழ் - பிளந்த. நிணமாகிய புழுக்கலை. தேனாகிய நெய்யை. பொழிந்து உகப்பெய்து - மிகப்பெய்து. மாந்தி - தின்று. தோழ என்றது சீவகனை; விளி. பெரிதும் உண்டும் - மிகவும் உண்பேம். தொண்டிக்கள் - நெல்லால் ஆக்கின கள். யாம் தொண்டிக்கள்ளாகிய இதனைப் பெரிதும் உண்டும் என்றான் எனமாறியியைக்க.

1234. ஊன் - மாமிசம். உயிரைக் கொன்ற பாவத்தால் இங்ஙன் ஈனராய்ப் பிறந்தது எனமாறியியைக்க; ஈனர் - இழிந்த வேட்டுவர். ஒழிமின் - கைவிடுங்கள். என்ன - என்று சீவகன் கூற. சொல்லும் - சொல்லுவான். ஏனை - ஒழிந்த உடம்புகளை; இதன்பின் ‘வாட்டுவாயாக’ என்பதை வருவித்து முடிக்க. வாட்டல் - வாட்டாதே. எவன் பிழைத்தும் - எங்ஙனம் பிழைப்போம்; கொல் : அசைநிலை. கைவிட்டால் எவன் பிழைத்தும்; எம் உடம்பு வாட்டல்; ஏனை வாட்டுக என்றான் என்க.

1235. ஊன்சுவைத் துடம்பு வீக்கி நரகத்தி லுறைத னன்றே, ஊன்றினு துடம்பு வாட்டித் தேவரா யுறைத னன்றே, ஊன்றியிவ் விரண்டி னுள்ளு முறுதிநீ யுரைத்தி டென்ன, ஊன்றினு தொழிந்து புத்தே ளாவதே யுறுதி யென்றான்.

(இ - ள்.) ஊனைச்சுவைத்து உடம்பைவீக்கி நரகத்திலுறைதல் நன்றோ? ஊனைத்தின்னுதே வாட்டித் தேவராயுறைதல் நன்றோ? கடைப் பிடித்து இவ்விரண்டினுள்ளும் நல்லது நீ கூறென்ன, ஊனைத்தவிர்ந்து தேவனுதலே உறுதியென்றானென்க. (எ௦)

1236. உறுதிநீ யுணர்ந்து சொன்னு யுயர்கதிச் சேறி யேடா, குறுகினு யின்ப வெள்ளங் கிழங்குணக் காட்டு ளின்றே, இறைவ னூற் காட்சி கொல்லா வொழுக்கொடூன் றுறத்தல் கண்டாய், இறுதிக்க ணின்பந் தூங்கு மிருங்கனி யிவைகொ ளென்றான்.

(இ - ள்.) நீ உறுதியுணர்ந்து கூறினுயாதலின், ஏடா! இனி உயர் கதியிலே போவை; இறைவனூலிற் காணப்படுவன, கொல்லாவிரதத் தோடே ஊன் துறத்தலுங்காண்; ஆதலிற் காட்டிற்கிழங்கையுண்ணவே இன்றே இன்ப வெள்ளத்தைச் சேர்ந்தாய்; இவ்வொழுக்கம் நினக்கு இறுதிக்கட் பேரின்பஞ் செறியுங் கனியாயிருக்கும்; குறிக்கொளென்று னென்க. (எக)

1237. என்றலுந் தேனு மூனும் பிழியலு மிறுக நீக்கிச், சென்றடி தொழுது செல்கென் றேம்பெய்நீள் குன்ற மென்று, குன்றுறை குறவன் போகக் கூரெரி வளைக்கப் பட்ட, பஞ்சவர் போல நின்ற பகட்டினப் பரிவு தீர்த்தான்.

---

1235. ஊனைச் சுவைபட உண்டு. உடம்பு வீக்கி - உடம்பைப் பெருக்கச்செய்து. ஊனைத்தினு து உடம்பைவாட்டி; வாட்டி - விரதத்தால் வாடச்செய்து. ஊன்றி - கடைப்பிடித்து. உறுதி - நல்லவற்றை. என்ன - என்று சீவகன் கூற. ஒழிந்து - அவற்றை நீக்கி. புத்தேள் - தேவன். உறுதி - நன்மையாகும். என்றான் - என்று வேடன் கூறினன்.

1236. சேறி - செல்வாய். ஏடா : உயர்திணை ஆண்பால் முன்னிலை ஒருமை. இறைவனூல் காட்சி - வினையினீங்கி விளங்கிய அறிவுடைய கடவுள் நூலிலே காணப்படுவன. ஒழுக்கு - ஒழுக்கம். கொல்லா வொழுக் கத்தோடு ஊனைத் துறத்தல் கண்டாய்; ஆதலால், கிழங்குண்ணவே இன்பவெள்ளம் இன்றே குறுகினுய் என்க. இன்பம் தூங்கும் இருங்கனி - பேரின்பம் மிகுந்த பெரிய பழமாயிருக்கும்: இவை - இவ்வொழுக்கம்; இவை இறுதிக்கண் இருங்கனியாகும்; கொள் என்றான் எனமாறி யியைக்க; கொள் - குறிக்கொள்வாயாக.

1237. என்றலும் - என்று சீவகன் கூறியவுடன். பிழியல் - கள். இறுகநீக்கி - முற்றிலும் கைவிட்டு. சீவகனுடைய அடியைத்தொழுது. நீள் குன்றம் செல்கு என்று; செல்கு - செல்வேன். குறவன் - வேட்டுவன்.

(இ - ள்.) என்றுகூறினவளவிலே, வேடன், தேன்முதலியவற்றைக் கைவிட்டுக் குறுகச்சென்று வணங்கி, என்குன்றமே செல்வேனென்றுகூறி அவன் போனானாக; அரக்குமாளிகையிலே நெருப்பாலே சூழப்பட்ட தருமன் முதலாயினாரைப்போலே காட்டுத்தீயால் வளைக்கப்பட்டு நின்ற யானைத்திரளின் வருத்தத்தை மழையைப் பெய்வித்து நீக்கினானென்க.

[1] தேவன்மலைக்கும் அரணபாதத்திற்கும் நடுவே இவ்விரண்டறமுஞ் செய்தான். (எ௨)

(வேறு)

1238. இலங்கொளி மரகத மிடறி யின்மணி
கலந்துபொன் னசும்புகான் றொழுகி மானினம்
சிலம்புபாய் வருடையொ டுகளுஞ் சென்னிநீள்
விலங்கல்சென் றெய்தினான் விலங்கன் மார்பினான்.

(இ - ள்.) மணிகலந்து அசும்பு கானுதலாற் சிலம்பிலே பரந்தொழுகப்பட்டு, மானினம் மரகதத்தையிடறி வருடையோடு உகளுஞ் சென்னியையுடைய அரணபாதத்தை விலங்கல் போலுமார்பினான் எய்தினானென்க. (எ௩)

1239. அந்தர வகடுதொட் டணவு நீள்புகழ்
வெந்தெரி பசும்பொனின் விழையும் வெல்லொளி
மந்திர வாய்மொழி மறுவின் மாதவர்
இந்திரர் தொழுமடி யினிதி னெய்தினான்.

கூர்எரி - மிக்க தீ; ஈண்டுத் துரியோதனாதியர் அரக்குமாளிகையிலிட்ட தீ. பஞ்சவர் - பாண்டவர். நின்ற - காட்டுத்தீயால் வளைக்கப்பட்டு நின்ற. பகட்டினப்பரிவு - யானைக் கூட்டங்களின் துன்பத்தை. எரியால் வளைக்கப்பட்ட பஞ்சவர்போல நின்ற பகட்டினத்தின் பரிவைத் தீர்த்தான்; "ஐவரென் றுலகேத்து மரசர்க ளகத்தராக், கைபுனை யரக்கில்லைக் கதழெரி சூழ்ந்தாங்குக், களிதிகழ் கடாஅத்த கடுங்களி றகத்தவா, முளிகழை யுயர்மலை முற்றிய முழங்கழல்" (கலித். 25 : 3-6)

(உரை) [1] தேவன் - சுதஞ்சணன்.

1238. மரகதம் : பச்சைமணி. அசும்பு - ஊற்று; பொசிவு. கான்று = கால; கால - சிந்துதலால். ஒழுகி - பரந்து ஒழுகப்பட்டு. சிலம்பு - மலையில். வருடை : மலையில் வாழும் ஒருவகை ஆடு; "மழையாடு சிமைய மால்வரைக் கவாஅன், வரையாடு வருடை" (பட்டினப். 138-9); "அவன்மலைப், போருடை வருடை" (நற். 359 : 7-8); "குறுங்கால் வருடை" (ஐங். 287). மானினம் வருடையொடு உகளுதல் : "கருங்கலை, கடும்பாட்டு வருடையொடு தாவன வுகளும், பெருவரை" (நற். 119 : 6-8). மணிகலந்து அசும்பு கான்று சிலம்பு ஒழுகி, மானினம் மரகதம் இடறி வருடையொடு உகளும் சென்னியையுடைய நீள்விலங்கல் எனமாறியியைக்க; சென்னி - உச்சி. விலங்கல் - மலை; அரணபாத மலை. விலங்கல்போலும் மார்பினான் : சீவகன்.

1239. அந்தர அகடு தொட்டு - ஆகாயத்தின் நடுவிடத்தைத் தீண்டி. அணவு பசும்பொனின்-மேல் நோக்கிச் செல்வதொரு பொன்னின் ஒளியை. விழையும் - ஒக்கும். மாதவர் - சைன முனிவர். அணவும்

(இ - ள்.) விசும்பினடுவைத் தீண்டி மேனோக்கிச்செல்வதொரு பொன்னினொளியை வெல்லும் ஒளியினையும், மந்திரத்தை விழையும் வாய்மொழியினையும், நீள்புகழினையுமுடைய மாதவரடியை வருந்தாமற் சேர்ந்தானென்க.

இதனால், தாள்வரையில் இருடிகளை முதலில் வணங்கினானென்றார். (எச)

(வேறு)

1240. முனிவரு முயன்று வான்கண் மூப்பிகந் திரிய வின்பக், கனிகவர் கணனு மேத்தக் காதிகண் ணரிந்த காசில், தனிமுதிர் கடவுள் கோயி ருன்வலங் கொண்டு செல்வான், குனிதிரை முளைத்த வெய்யோன் குன்றுசூழ் வதனை யொத்தான்.

(இ - ள்.) முனிவரும் வானிடத்துத் தமக்கு வருகின்ற மூப்புக் கைவிட்டுக் கெடும்படியாக அவ்விடத்து இன்பக்கனியை நுகருந் தேவரும் முயன்றேத்தக் காதிகண்ணரிந்த கடவுள்கோயிலை வலங்கொண்டு செல்கின்றவன் இளஞாயிறு மேருவைச்சூழ்ந்த தன்மையை ஒத்தானென்க.

காதி கண்ணரிந்த - உபாதிகளைத் தன்னிடத்து நில்லாதபடி வேரறுத்த. (எரு)

1241. தண்கயக் குற்ற போதுந் தாழ்சினை யிளிந்த வீயும், வண்கொடிக் கொய்த பூவும் வார்ந்துமட் டுயிர்ப்ப வேந்தித், திண்புக ழறிவன் பாதந் திருந்துகைத் தலத்தி னேற்றிப், பண்புகொள் குணங்கொள் கீதம் பாணியிற் பாடு கின்றான்.

---

பொன்னினை வெல்லும் ஒளியையும் மந்திரத்தை யுடைய வாய்மொழியையும் நீள்புகழையுமுடைய மாதவர் என மாறியியைக்க. மாதவருடைய அடியை, இந்திரர் தொழும் அடியை எனத் தனித்தனிப் பிரித்தியைக்க. அடியை எய்தினான் - வணங்கினான்.

1240. வான்கண் - ஆகாயத்திடத்து. மூப்பு இகந்து இரிய - தமக்கு வரும் கிழத்தன்மை நீங்கிக் கெடும்படியாக. இன்பமாகிய கனியை. கவர்கணனும் - உண்கின்ற தேவர்குழாமும். முனிவரும், இன்பக்கனி கவர்கணனும் முயன்று ஏத்த எனமாறியியைக்க. காதி கண்ணரிந்த - ஞாநாவரணீயம் முதலிய காதிகருமங்களைத் தன்னிடத்தே நில்லாதபடி வேரறுத்த; காதிகருமம் : "காதி வெவ்வினை கடையறு காலை" (பெருங். 3. 27 : 149). காசுஇல் - குற்றமில்லாத. தனி முதிர் கடவுள் - ஒப்பற்ற பழைய கடவுள்; அருகன். காதிகண்ணரிந்த கடவுள் : "காதிக்கண் ணரிந்து வென்ற வுலகுணர் கடவுள்" (சீவக. 2713). கோயில் : சினாலயம். செல்வான் - செல்லுகின்றவன்; சீவகன்; பெயர். குனிதிரை - வளைந்த அலையைக் கொண்ட கடல்; ஆகுபெயர். முளைத்த - தோன்றிய. குன்று - மேருமலையை. அருகன் கோயிலுக்கு மேருமலையும், சீவகனுக்குச் சூரியனும் உவமைகள். அடி, 3 - 4 : "மாமேருசூழ்வரு, மலர்கதிர்ப் பருதியிற் கிரணவே கன்றான், பலமுறை வலம்வர" (மேரு. மன்னனும் தேவியும். 67)

1241. கயம் குற்ற போதும் - தடாகத்தில் பறித்த அரும்பையும்; குற்ற - பறித்த; போது - மலரும் பருவத்து அரும்பு; சீவக. 1228, ந.

(இ - ள்.) கயத்திற்பறித்த போதையும் கொம்பில் இணுங்கின வீயையும் கொடியிற்கொய்த பூவையும் மதுவுயிராநிற்க ஏந்தக் கைத்தலத்தாலே பாதத்தேயேற்றி இயல்புகொண்ட குணங்களைத் தன்னிடத்தே கொண்ட பாட்டைத் தாளத்தோடே பாடாநின்றானென்க. (எசு)

(வேறு)

1242. ஆதி வேதம் பயந்தோய்நீ யலர்பெய்ம் மாரி யமைந்தோய்நீ, நீதி நெறியை யுணர்ந்தோய்நீ நிகரில் காட்சிக் கிறையோய்நீ, நாத னென்னப் படுவோய்நீ நவைசெய் பிறவிக் கடலகத்துன், பாத கமலந் தொழுவேங்கள் பசையாப் பவிழப் பணியாயே.

ஆதிவேதம் - கொலைமுதலிய நவிலாத வேதம். நீதிநெறி - சன்மார்க்கம். காட்சி - ஞானம்.

(இ - ள்.) இவையெல்லாஞ் செய்தாய் நீயாதலின், நின்னடியைத் தொழுவேமுடைய பிறவிக்கடலகத்துப் பற்றுகிய தொடர்ச்சி நீங்கும்படி திருவுள்ளம்பற்றுயென்றானென்க. (எஎ)

1243. இன்னாப் பிறவி யிகந்தோய்நீ யிணையி லின்ப முடையோய்நீ, மன்னா வுலக மறுத்தோய்நீ வரம்பில் காட்சிக் கிறையோய்நீ, பொன்னா ரிஞ்சிப் புகழ்வேந்தே பொறியின் வேட்கைக் கடலுழந்தி, ஒன்னா வினையி னுழல்வேங்க ளுயப்போம் வண்ண முரையாயே.

---

சினை இளிந்த வீயும் - கொம்பிற் பறித்த பூவையும்; இளிந்த - இணுங்கின; சீவக. 1479, ந. கொடியினின்றும் கொய்த பூவையும். மட்டு வார்ந்து உயிர்ப்ப - தேன் ஒழுகிச் சிந்திக்கொண்டிருக்க. அறிவன் - அருகதேவன். கைத்தலத்தால் அறிவன் பாதத்தே ஏற்றி என மாறி யியைக்க. பண்பு கொள் குணங்கொள் - இயல்பு கொண்ட குணத்தைத் தன்னிடத்தே கொண்ட. கீதம்பாணியிற் பாடுகின்றான் - பாட்டைத் தாளத்தோடு பாடுகிறான்; "ஓர் பாணிக்கீதம், பாடல் வேண்டுமென்று" (பெருங். 3. 14 : 245-6). பாடுகின்றவன் சீவகன்.

1242. ஆதிவேதம் : சைன வேதம். மாரி - மழை. மாரியில் அமைந்தோய் நீ. காட்சி - அறிவு; நற்காட்சி முதலியன. நவை - குற்றம். பிறவியாகிய கடல்; "பிறவிப் பெருங்கடல்" (குறள், 10) என்பதற்குப் பரிமேலழகர், 'காரண காரியத் தொடர்ச்சியாய்க் கரையின்றி வருதலின் பிறவிப் பெருங்கடலென்றார்' என்று உரை எழுதியுள்ளார். உன்பாதமாகிய கமலத்தை. தொழுவேமாகிய எங்களுடைய. பசையாப்பு அவிழ - ஆசையாகிய தொடர்பு நீங்கும்படி. பணியாய் - திருவுள்ளம் பற்றுவாயாக. இது முதல் மூன்று பாடல்கள் சீவகன் அருகனைத் துதித்தன.

1243. இன்னாப் பிறவி இகந்தோய் - துன்பத்தைத் தருவதாகிய பிறவிப் பிணியினின்றும் நீங்கியவனே. மன்னா உலகம் - நிலையாதலை

இணையில் இன்பம் - அநந்தசுகம். மன்னுவுலகம் - சுவர்க்கம். மறுத்தல் - அதிற்போகத்தைத் தவிர்த்தல்.

(இ - ள்.) பொன்னெயில்வட்டத்தில்வேந்தே! இத்தன்மையாகிய நீ ஐம்பொறியாலே வேட்கைக்கடலிலேயழுந்திப் பொருந்தாத தீவினையாலே வருந்துவேம் உய்யப்போம் தன்மையை அருளிச்செய்யாயென்றானென்க. (எஅ)

1244. உலக மூன்று முடையோய்நீ யொண்பொ னிஞ்சி யெயிலோய்நீ, திலக மாய திறலோய்நீ தேவ ரேத்தப் படுவோய்நீ, அலகை யில்லாக் குணக்கடலே யாரு மறியப் படாயாதி, கொலையி லாழி வலனுயர்த்த குளிர்முக் குடையி னிழலோய்நீ.

திறல் - அநந்தவீரியம்.

(இ - ள்.) இவற்றையுடையையாகிய நிழலோய்! அறவாழியை வலனுயர்த்த எண்ணிறந்த குணக்கடலே! நீ எல்லாரும் அறியப்படுவாயாகவென்றானென்க.

படாய் : செய்யாயென்னுஞ்சொல் செய்யென் கிளவியாய் நின்றது. இத்தேவபாணிக் கொச்சகவொருபோகு மூன்றானும் இறைவனைப் பாடினான். (எகூ)

---

யுடைய சுவர்க்கம்; உலகம் நித்தியம் என்பது தம் கொள்கையாதலின் இப்பொருள் கூறுவர் சைனர்; “மூவா முதலா வுலகம் மொருமூன்றும்” (சீவக. 1, அடிக்.) மறுத்தோய் - சுவர்க்கத்தின்பத்தை நீக்கியவனே. வரம்பில் காட்சி - எல்லைகாணமுடியாத அறிவு; அநந்த ஞானம். பொன் ஆர் இஞ்சிப் புகழ்வேந்து - பொன்னால் இயற்றிய மதிலிலுள்ள புகழை யுடைய கடவுளே. பொறியின் - ஐம்பொறிகளாலே. வேட்கையாகின்ற கடலில். ஒன்றா வினையின் - நன்மை பொருந்தாத அஷ்டகர்மமாகிய தீவினையால். உழல்வேம் - வருந்துவேம். உழல்வேமாகிய யாங்கள். உயப்போம்வண்ணம் - பிழைத்துப்போகும் விதத்தை.

1244. உலகம் மூன்று : நாகலோகம், பூலோகம், சுவர்க்கலோகம் என்பன; சீவக. 2813. பொன்னிஞ்சி எயில் - பொன்னெயில்வட்டம். அலகை இல்லா - அளவில்லாத; ஐ : சாரியை. குணக்கடல் : அநந்த ஞானாதி குணங்கள் என்பர்; சீவக. 2813, ந. “நற்கு ணக்கட லாடுத னன்றரோ” (கம்ப. கடவுள்.). அறியப்படாயாதி - அறியப்படுவாயாக. கொலையில் ஆழி வலன் உயர்த்த - கொலைத்தொழிலில்லாத தருமசக்கரத்தை வலப்பக்கத்தே உயர்த்திய. வலனுயர்த்த குணக்கடலே என்க. முக்குடை : சீவக. 139, அடிக்.

(வேறு)

1245. அடியுலக மேத்தி யலர்மாரி தூவ
முடியுலக மூர்த்தி யுறநிமிர்ந்தோன் யாரே
முடியுலக மூர்த்தி யுறநிமிர்ந்தோன் மூன்று
கடிமதிலுங் கட்டழித்த காவலனீ யன்றே.

(இ - ள்.) அடியை உலகமேத்திப் பூமழைபெய்ய, முடிந்தவுலகத்தின் மூர்த்தியை உறும்படி முத்தியையடைந்தவன் யார்தான்? அங்ஙனமடைந்தோன், காமம் வெகுளி மயக்கமென்கின்ற மூன்று மதிலையும் காவலழித்த நீயேயன்றே யென்றானென்க. (௰)

1246. முரணவிய வென்றுலக மூன்றினையு மூன்றிற்
றரணிமேற் றந்தளித்த தத்துவன்றான் யாரே
தரணிமேற் றந்தளித்தான் றண்மதிபோ னேமி
அரணுலகிற் காய வறிவரனீ யன்றே.

(இ - ள்.) மூன்றுமதிலையும் அழித்து, [1] அங்கம் பூர்வம் ஆதியென்கிற மூன்று ஆகமத்தாலும் உலகமூன்றின் தன்மையையும் தரணிமேலே தந்து வெளிப்படக்கூறின தத்துவன் யார்தான்? அங்ஙனங் கூறினவன், மதிபோலும் அறவாழியையுடைய உலகிற்கு அரணாய அறிவுக்கு வரனுள்ள நீயேயன்றே என்றானென்க. (௧௧)

---

1245. அடியை உலகமேத்தி அலராகிய மாரியைத் தூவ; அலர் மாரி - பூமழை. முடிஉலக மூர்த்தி - முடிந்த உலகத்தின் மூர்த்தியை. உற - பொருந்தும்படி. நிமிர்ந்தோன் - முத்தியடைந்தவன்; பெயர். யாரே - யார்தான்; யாரென்னும் வினா அறியான் வினாதலன்றி வியப்பின்கண் வந்து; புறநா. 77 : 6, 257 : 5, உரை. கடி - காவலையுடைய. மூன்று மதில் : முக்குற்றங்களாகிய மதிலை; கட்டழித்த - காவலை அழித்த. காவலனாகிய நீயன்றே. இதுமுதல் மூன்று பாடல்கள் சீவகன் சாரணரைத் துதிப்பன.

1246. முரண் அவிய - மாறுபாடு கெட. மூன்றின் - மூன்று ஆகமத்தாலும். மூன்றினால் உலகமூன்றினையும் தந்து அளித்த தத்துவன். அளித்த - வெளிப்படக் கூறிய. தத்துவன் - உண்மைப்பொருளானவன். அளித்தான் : ஆகமத்தைக் கூறினவன். மதி - சந்திரன். நேமி - தருமசக்கரம். அரண் - பாதுகாப்பு. அறிவரன் நீ யன்றே - அறிவுக்கு வரனுள்ள நீயல்லவா. நேமியையுடைய உலகிற்கு அரணாகிய அறிவரனீயன்றே என மாறியியைக்க.

(உரை) [1] அங்கம் முதலியன சைனாகமங்கள்; 'அங்காகமம், பூர்வாகமம், பகுசுருதியாகமம்' (சீவக. 2813, ந.); "ஆறிரண் டங்கமுமாய்ந்தீரேழ் பூர்வமும், கூறிரண்டெண் கேள்விகளிற் குன்றாமற் - றேறி, வரந்தருநல் லோத்துரைக்கும் வாய்மையார் பாதம், நிரந்தரநான் வந்திப்ப னின்று" (சீவசம்போதனை)

1247. தீரா வினைதீர்த்துத் தீர்த்தந் தெரிந்துய்த்து
வாராக் கதியுரைத்த வாமன்றான் யாரே
வாராக் கதியுரைத்த வாமன் மலர்நதைந்த
காரார்பூம் பிண்டிக் கடவுணீ யன்றே.

(இ - ள்.) தீவினையைப்போக்கி ஆகமத்தை அருளிச்செய்து மேல் வருதலில்லாத வீட்டினையுரைத்த வாமன் யார்தான்? அங்ஙனமுரைத்த வாமன் நீயேயன்றே யென்றானென்க.

இவை மூன்றிலும் [1] சாரணரைப்பாடினான்.

பா, [2] முற்கூறியவே ; கந்தருவ மார்க்கத்தால் இடைமடக்கின. (௮௨)

(வேறு)

1248. அம்மலைச் சினகரம் வணங்கிப் பண்ணவர்
பொன்மலர்ச் சேவடி புகழ்ந்த பின்னரே
வெம்மலைத் தெய்வதம் விருந்து செய்தபின்
செம்மல்போய்ப் பல்லவ தேய நண்ணினான்.

[1] சினகரம் - जिनगृहं

(இ - ள்.) அவ்வாரணபாதத்தில் ஸ்ரீகோயிலைவணங்கி அவ்விடத்தில் சாரணருடைய அடியைப்புகழ்ந்தபின்பாக, இயக்கி விருந்துசெய்தபின்பு, தலைவன், சாரலைப்போய்ப் பல்லவதேயத்தை நண்ணினானென்க. (௮௩)

1247. தீராவினை - விடாத தீவினை. தீர்த்தமென்றது ஆகமத்தை ; "உழல்வார்கள் சொற்றீர்த்த மென்று......தெளியேன்மின்" (தே. திருநா. கருகாவூர். 10). தெரிந்துய்த்து - அருளிச்செய்து. வாராக்கதி - திரும்பி வருதலில்லாத மோட்சத்தை. வாமன் - அருகன் ; சீவக. 160, 2738. நதைந்த - நெருங்கிய. பிண்டிக்கடவுள் - அருகன் ; பிண்டி - அசோகு. வாமன் கடவுளாகிய நீ அன்றே.

(உரை) [1] இங்கே சாரணரென்றது ஆலயத்திற்கு வந்திருந்த ஸஜீவராகிய முனிவரை என்பர். [2] முற்கூறியவே யென்றது, 'தேவ பாணிக் கொச்சக ஒருபோகு' (சீவக. 1244) என்றதை.

1248. அம்மலைச் சினகரம் - அரணபாத மலையிலுள்ள சினாலயத்தை. பண்ணவர் - சாரணருடைய. பின்னரே - பின்பாக ; ஏ : அசைநிலை. வெம்மலைத்தெய்வதம் - விரும்பத்தக்க அம்மலையிலுள்ள இயக்கியாகிய தெய்வம். செம்மல் : சீவகன். போய் - அம்மலைச்சாரலை அடைந்து.

(உரை) [1] விஷ்ணுக்ருஹம் விண்ணகரமென்றும், இராஜக்ருஹம் இராஜகரம் என்றும் மருவியமைபோல, ஜினக்ருஹம் என்பது சினகரம் என்றாயிற்று.

1249. அரியலார்ந் தமர்த்தலி னனந்தர் நோக்குடைக்
கரியவாய் நெடியகட் கடைசி மங்கையர்
வரிவரால் பிறழ்வயற் குவளை கட்பவர்
இருவரை வினாய்நகர் நெறியின் முன்னினான்.

(இ - ள்.) மதுவையுண்டு பொருதலின், மயங்கிய நோக்குடைய கொடியவாய் நெடிய கண்ணையுடைய கடைசிமங்கையர் குவளையைக் களை பறிப்பாரிருவரை வழிகேட்டு அந்தநெறியாலே நகரையணுகினானென்க.

இருவரும் ஒக்கக்கூறுதலின், அவ்வழியே போனான். (அச)

1250. அன்னமு மகன்றிலு மணிந்து தாமரைப்
பன்மலர்க் கிடங்குசூழ் பசும்பொற் பாம்புரிக்
கன்னிமூ தெயில்கட லுடுத்த காரிகை
பொன்னணிந் திருந்தெனப் பொலிந்து தோன்றுமே.

மகன்றில் - ஒருபுள். பாம்புரி - கீழே புறப்படப் படுத்தது.

(இ - ள்.) அங்ஙனம் முன்னினபொழுது, அன்னமும் மகன்றிலும் அணியப்பட்டுக் கிடங்குசூழ்ந்த பாம்புரியையுடைய மூதெயில், கடலை உடையாகவுடுத்த நிலமகள் பூணணிந்திருந்த தன்மைத்தெனப் பொலிந்துதோன்றா நிற்குமென்க. (அரு)

---

1249. அரியல் ஆர்ந்து - கள்ளைப் பருகி. அமர்த்தலின் - கண்கள் ஒன்றோடொன்று பொருதலால். அனந்தர்நோக்குடை - மயக்கம் கொண்ட பார்வையையுடைய. கரியவாய், நெடிய கண்ணையுடைய கடைசி மங்கையர்; என்றது உழத்தியரை. வரியையுடைய வரால்மீன் பிறழ்கின்ற வயலில். குவளை கட்பவர் - குவளைமலரைக் களையாகப் பறிப்பவர். மங்கையராகிய கட்பவரிருவரை. வினாய் - போதற்கு வழியை வினவி. நெறியின் - அம்மங்கையர் கூறிய வழியால். நகரை முன்னினான் - பல்லவதேயத்துள்ள சந்திராபமென்ற நகரை அணுகினான்.

1250. மகன்றில் : இது நீரில் வாழும் பறவைகளுள் ஒன்று; ஆணும் பெண்ணும் பிரிவின்றி இணைந்து வாழும் தன்மையையுடையன; இவை மருதத்திணைக் குரியவை; சீவக. 302; நம்பி. 23; "நீருறை மகன்றில்" (குறுந். 57); "குறுங்கான் மகன்றில்" (ஐங். 381 : 4); "அலர்ஞெமன் மகன்றில்" (பரி. 8 : 44). அணிந்து - அணியப்பட்டு. தாமரையாகிய பல மலரையுடைய கிடங்கு; என்றது அகழியை. பாம்புரி - மதிலினடியிலுள்ள ஆளோடிகள்; சீவக. 1444; "பத்திரப் பாம்புரி யத்தகக் கலாஅய்" (பெருங். 3. 3 : 17). கன்னிமூதெயில் - ஒருவரும் புகுதற்கரிய பழைய மதில். கிடங்குசூழ்ந்த எயில், பாம்புரியையுடைய எயில் என இயைக்க. கடலை ஆடையாக உடுத்த காரிகை; பூமிதேவி.

1251. அகிறரு கொழும்புகை மாடத் தாய்பொனின்
முகிறலை விலங்கிய மொய்கொ ணீள்கொடிப்
பகறலை விலங்குசந் திராபம் பான்மையின்
இகறலை விலங்குவேற் காளை யெய்தினுன்.

பொன்னின்கொடி ; முகில் அவ்விடத்தினின்றும் விலங்குதற்குக் காரணமான கொடி.

(இ - ள்.) அகிலுண்டாக்கின புகையையுடைய மாடத்திற்கொடி பகலை இடத்தேசென்று விலக்கும் சந்திராபமென்னும் நகரைக் காளை பான்மையினெய்தினுனென்க.

முகில்தலை விளங்கிய மாடத்திற் கொடியுமாம். (அசு)

1252. மலரணி மணிக்குட மண்ணு நீரொடு
பலர்நலம் பழிச்சுபு பரவ வேகினுன்
அலர்கதிர் கரும்பிளை மடுப்ப வாய்நகர்
உலகளந் தானென வுள்புக் கானரோ.

பொன் - ஆபரணம் ; ஆகுபெயர். எயிலுக்குப் பூமிதேவியும், எயிலைச் சூழ்ந்துகிடந்த கிடங்கு முதலியவற்றிற்குப் பூமிதேவியின் ஆடையாகிய கடலும், மற்றைய ஆபரணங்களும் உவமைகள். பொலிந்து - பொலிவு பெற்று.

1251. அகில்தரு-அகிலாலுண்டாக்கின. புகையையுடைய மாடத்து. முகில் தலைவிலங்கிய - மேகம் அவ்விடத்தினின்றும் விலங்குதற்குக் காரணமான. பொன்னின்கொடி - பொன்னுலாகிய கொடி. மாடத்தே உள்ள பொன்னின்கொடி பகல்தலை விலங்கும் ; பகல்தலைவிலங்கும் - சூரியனை அதன் இடத்தே சென்று விலக்குகின்ற. பான்மையின் - முறையால். இகல் தலை விலங்கு வேற்காளை - பகைவர் களத்தினின்றும் நீங்குதற்குக் காரணமான வேலையுடைய சீவகன். சந்திராபமென்னும் நகரைக் காளை எய்தினுன்.

1252. மலரை அணிந்த மணிக்குடத்தில் மண்ணுநீரால் ; நீரொடு - நீரால் ; உருபுமயக்கம். பலர் - பல்லவதேயத்துப் பலரும். நலம் பழிச்சுபு பரவ - தன் நன்மையைப் புகழ்ந்து ஏத்தும்படி. கதிர் - சூரியன். கரும்பிளை - கரிய பிள்ளை ; காக்கை. மடுப்ப - நெருங்க. கரும்பிளை கதிரை மடுப்ப என மாறியியைக்க. உலகளந்தான் என - திருமாலைப்போல. கரும்பிள்ளை கதிரை மடுப்ப, உலகளந்தானென நகருள் புக்கவன், பலரும் தன்னை மண்ணு நீராட்டி, நலம் பழிச்சுபு பரவ ஏகினுன் எனமாறி முடிக்க.

அலர்கதிர் - எழுகின்ற ஞாயிறு. கரும்பிள்ளை - கரிய பிள்ளை. இவன் வடக்குநோக்கிச் செல்கின்றபொழுது மேற்கிருந்த [1] கொடி ஞாயிற்றின்மேற் செல்லவே கொடிவலமாம்.

(இ - ள்.) கொடிவலம்பெற்று உலகளந்தானென்னும்படி நகரினுள் புக்கவன், தன்னைப் பின்பு அரசன்பரிவாரத்தார் பலரும் மணிக்குடத்தின் மண்ணுநீராலே ஆட்டிப் பரவும்படி ஏகினானென்க.

அது, "மழகளிற் றெருத்திற் றந்த மணிக்குட மண்ணு நீரால், அழகனை மண்ணுப் பெய்தாங்கு" (சீவக. 1345) என்பதனானுணர்க. இந் நிமித்தத்தின் பயன் அது. இனி நாட்டிற்கும் ஊரிற்கும் நிமித்த மென்றுவைத்து இரண்டு நிமித்தமென்பாருமுளர். (அஎ)

## (வேறு)

1253. சந்தனக் காவு சூழ்ந்து சண்பக மலர்ந்த சோலை
வந்துவீழ் மாலை நாற்றி மணியரங் கணிந்து வானத்
திந்திர குமரன் போல விறைமக னிருந்து காண
அந்தர மகளி ரன்னார் நாடக மியற்று கின்றார்.

(இ - ள்.) அவன் சென்றவளவிலே, மகளிரன்னார் பலருங்கூடி, காவைச் சூழ்ந்து சண்பகமலர்ந்த சோலையில் அரங்கை நிலத்தே வந்து வீழும் மாலையை நாற்றி அணிந்து குமரன்போலே இறைமகனிருந்து காண, நாடகத்தை நடத்தாநின்றாரென்க. (அஅ)

1254. குழலெடுத் தியாத்து மட்டார் கோதையிற் பொலிந்து மின்னும், அழலவிர் செம்பொற் பட்டங் குண்டல மாரந் தாங்கி, நிழலவி ரல்குற் காசு சிலம்பொடு சிலம்ப நீடோள், அழகிகூத் தாடு கின்றா ளரங்கின்மே லரம்பை யன்னாள்.

---

(உரை) [1] கொடி - காக்கை; காக்கை வலமாதல் நல்லசகுன மென்பர்.

1253. காவு - சோலையை. வந்துவீழ் - நிலத்தே வந்துவீழும். நாற்றி - தொங்கவிட்டு. சோலையில் அரங்கை வந்துவீழ் மாலையை நாற்றி அணிந்து என மாறியியைக்க. வானம் - சுவர்க்கம். இந்திர குமரன் - சயந்தன். இறைமகன் : சீவகன். அந்தரமகளிரன்னார் - தேவ மங்கையரைப் போன்றவர்கள். நாடகம் இயற்றுகின்றார் - நாடகத்தை நடத்தினார்கள்.

(மேற்.) அடி, 3 : நன். பொது. 59, மயிலை.; சங்கர.

1254. குழல் - கூந்தலை. யாத்து - தூக்கிக்கட்டி. மட்டு - தேன். கோதையிற் பொலிந்து - மாலையைச் சூடியதாற் பொலிவுபெற்று. அழல் அவிர் - நெருப்பைப்போல் விளங்குகின்ற. பட்டத்தையும் குண்டலத்தை

(இ - ள்.) அரம்பையையொப்பாளாகிய அழகி, குழலை எடுத்துக்கட்டி மாலையாலே பொலிவுபெற்றுப் பின்பு பட்ட முதலியவற்றைத் தாங்கிக் காசு சிலம்பொடே சிலம்ப அரங்கின்மேலே கூத்தாடாநின்றாளென்க.

"வாடிய வண்டட ளிரன்ன மேனி, ஆடியன் மகளி ரமைதி கூறின், நெறியி னீங்கிய நெடிய ரல்லோர், குறியிற் குறைந்த குறிய ரல்லோர், பாற்பட லில்லாப் பருமை யில்லோர்" என்னும் சூத்திரத்திற் கூறிய நிலைகளுடனே ஆசிரியனிட்ட அழகு கிடத்தலின், அழகியென்றார். (அகூ)

1255. தண்ணுமை முழவம் வீணை குழலொடு குயிலத் தண்பூங், கண்ணொடு புருவங் கைகால் கலையல்கு னுசுப்புக் காமர், ஒண்ணுதல் கொண்ட வாடற் றொட்டிமை யுருவ நோக்கி, வெண்ணெய்த்தீ யுற்ற வண்ண மாடவர் மெலிகின் றாரே.

(இ - ள்.) அங்ஙனமாடுகின்ற ஒண்ணுதலையுடையாள், தண்ணுமை முதலியன வாசியாநிற்கக் கண்முதலியவற்றாற்கொண்ட கூத்தினது ஒற்றுமை வடிவைநோக்கி ஆடவர் வெண்ணெய் தீயுற்றாற்போலே மெலியாநின்றாரென்க. (கூ0)

யும் ஆரத்தையும் தாங்கி. நிழல் அவிர் அல்குற்காசு - ஒளிவிளங்குகின்ற அல்குலிற் கட்டிய பல மணிகள்; காசு - மணி. காசு, சிலம்பொடு சிலம்ப; சிலம்ப - ஒலிக்க. நீண்டதோளையுடைய அழகியாகிய அரம்பையன்னாள் அரங்கின்மேல் கூத்தாடுகின்றாள் என்க. அழகி கூத்தாடுதல்: "ஆடலும் பாடலு மழகும்" (சிலப். 3 : 8); "ஆடலும் பாடலு மழகுங் காட்டி" (மணி. 18 : 104)

1255. தண்ணுமை - குடமுழவு; தண்ணுமையும் முழவும்: பெருங். 1. 37 : 91, 38 : 175. குழல் - புல்லாங்குழல். குயில - ஒலித்தல்செய்ய. பூப்போலும் கண். கலை - மேகலை. நுசுப்பு - இடை. காமர் - அழகிய. ஒண்ணுதல்: பெயர். கண் முதலியவற்றாற் கொண்ட. ஆடல் - கூத்தினுடைய. தொட்டிமை உருவம் - ஒற்றுமையுள்ள வடிவத்தை; "தொட்டிமையுடைய வீணை", "தொட்டிமை யுருவந் தோன்ற" (சீவக. 2047, 2085); "தொட்டிமை கலந்த" (பெருங். 1. 50 : 8); "தொட்டிமையுடைய தொண்டன்" (தே. திருநா. ஆரூர். 3). வெண்ணெய் தீயுற்றாற் போல் மெலிதல்: சீவக. 1309, 1597, 2627; "தீயுறுவெண்ணெயி னுருகு நெஞ்சமொடு" (பெருங். 1. 33 : 153); "வெண்ணெயின் குன்றந் தீயால் வெதும்புகின் றததனோ டொத்தான்" (சூளா. கல்யாணச். 194); "வெங்கனல் வெண்ணெய் போன்றுடைந்து" (மேரு. நால்வரும். 68)

1256. பாடலொ டியைந்த வாடல் பண்ணமை கருவி மூன்றும், கூடுபு சிவணி நின்று குழைந்திழைந் தமிர்த மூற, ஓடரி நெடுங்க ணம்பா லுளங்கிழிந் துருவ வெய்யா, ஈடமை பசும்பொற் சாந்த மிலயமா வாடு கின்றாள்.

(இ - ள்.) அவள் பின்னும் பாட்டோடே பொருந்திய கூத்தும் வாச்சியமு மாகிய இம்மூன்றுங் கூடிப் பொருந்திநின்று [1]மெல்கிக் கலந்து இனிமை மிகக் கண்ணாலெய்து இடுதலமைந்த சாந்தமழிய ஆடாநின்றா ளென்க.

சாந்தம், [2]அவள்பெயராக்கி அதற்கேற்பவுமுரைப்ப. (கக)

1257. வாணுதற் பட்ட மின்ன வார்குழை திருவில் வீசப், பூண்முலைப் பிறழப் பொற்றோ டிடவயி னுடங்க வொல்கி, மாணிழை வளைக்கை தம்மால் வட்டணை போக்கு கின்றாள், காண்வரு குவளைக் கண்ணாற் காளைமே னோக்கி னாளே.

(இ - ள்.) மாணிழை, பட்டம் மின்னக் குழைவீசப் பூண் முலையிலே பிறழத் தோடு இடப்பக்கத்தே நுடங்க ஒல்கிக் கையாலே வட்டணை போக்குகின்றவள் கண்ணாலே காளைமேலே பார்த்தாளென்க.

---

1256. பாடல் - கண்டப்பாட்டு. ஆடல் - கூத்து. பண்ணமைகருவி - இசைபொருந்திய வாத்தியம். மூன்றும்: இவை நிருத்த கீத வாச்சிய மென்றும், கொட்டாட்டுப் பாட்டென்றும் கூறப்படும். கூடுபு சிவணி நின்று - கூடிப் பொருந்தி நின்று. இழைந்து - கலந்து. அமிர்தம் ஊற - இன்பம் மிகும்படி. அரி - செவ்வரி. கண்ணாகிய அம்பால். உருவ - ஊடுருவிப் பாயும்படி; எய்யா-எய்து. ஈடு அமை சாந்தம் - இடுதலமைந்த சாந்து. இலயமா = லயமாக - அழிய. சாந்தம் அழிய ஆடுகின்றாள்.

(உரை) [1]மெல்கி - குழைந்து. [2]கூத்தாடுகின்றவள்.

1257. நுதற்பட்டம் - நெற்றிப்பட்டம். குழை - குண்டலம். திரு வில்வீச - இந்திர வில்லைப்போல் ஒளிவிட. பூண் - ஆபரணம். முலையில் பூண்பிறழ; பிறழ - அலைய. தோடு இடவயின் நுடங்க - தோடு இடப் பக்கத்தே அசைய. ஒல்கி - அசைந்து. மாணிழை: கூத்தி; எழுவாய். வளையையுடைய கையால். வட்டணை - கமலவர்த்தனை; போக்குகின்றாள் - காட்டுகின்றவள்; சீவக. 675, ந. அடிக். காண்வரு - அழகு விளங்கும்; முருகு. 165, ந. காளைமேல் - சீவகன் மீது.

கைவட்டணையாவன : அபவேட்டிதம், உபவேட்டிதம், வியாவர்த்திதம், பரிவர்த்திதம்; இவை பிறைக்கையாம். " தற்சனி முதலாப் பிடித்த லகம்வரின், அத்தொழி லாகு மபவேட் டிதமே", "தற்சனி முதலா விடுத்தல் புறம்வர, உய்த்த லாகு முபவேட் டிதமே", "கனிட்ட முதலாப் பிடித்த லகம்வர, விடுத்த லாகும் வியாவர்த் திதமே", "கனிட்ட முதலா விடுத்தல் புறம்வரப், படுத்த லாகும் பரிவர்த் திதமே", "ஆன்ற வபவேட் டிதமுப வேட்டிதம், தோன்றும் வியாவர்த் திதத்தோடு - மூன்றும், பரிவர்த் திதமு மெனப்பகர்ந்தா ரித்தை, உரிமைப் பிறைக் கையா னூர்." (கூஉ)

1258. நோக்கினு ணெடுங்க ணென்னுங் குடங்கையா னுண்டு கொண்டு, வாக்கமை யுருவின் மிக்கான் வனப்பினைப் பருக விப்பால், ஆக்கிய விலய நீங்கிற் றணங்கனு ணெடுங்கண் பில்கி, வீக்குவார் முலையி னெற்றி வெண்முத்தஞ் சொரிந்த வன்றே.

(இ - ள்.) பார்த்தவள், கண்ணென்னும் குடங்கையாலே முகந்து கொண்டு கவிகளாற் புகழ்தலாகா வடிவின் மிக்கானழகைப் பருகுதலாலே, இவ்விடத்துக் கண்முதலியவற்றாலாக்கிய தாளவறுதிகள் நீங்கின. பின்பு இமையாமை நோக்கிநின்றதனாற் கரித்து அவள்கண்கள் சிறு துவலையை வீசி முலைத்தலையிலே நீரைச் சொரிந்தனவென்க.

இது [1] பெருமைபற்றிய மருட்கையென்னும் மெய்ப்பாடு; கண் கரித்து நீர்வீழ்தலின், அழுகையென்னும் மெய்ப்பாடாகாது. (கூகூ)

1259. செருக்கய னெடுங்க ணுளத் திருமகன் காண்ட லஞ்சி, நெருக்கித்தன் முலையின் மின்னு நிழன்மணி வடத்தை மாதர், பொருக்குநூல் பரிந்து சிந்தாப் பூவெலாங் கரிந்து வாடத், தரிக்கிலாள் காமச் செந்தீத் தலைக்கொளச் சாம்பி னுளே.

---

1258. குடங்கை - உள்ளங்கை; நொண்டு கொண்டு - முகந்து கொண்டு; " குடங்கையி னுண்டு கொள்ளவுங் கூடும்" (சிலப். 10 : 85). கண் என்னும் குடங்கையால் நொண்டு கொண்டு; சீவக. 1630, 1783, 2553. வாக்கு அமை உருவின் - கவிகளாற் புகழ்தலாகாத வடிவால்; அமைதல் - இன்மையாதல்; சீவக. 107, ந.; வாக்கு அமை - திருத்தம் அமைந்தவெனலுமாம்; சீவக. 667, 1473, ந. பருக - கூத்தி பருகுதலாலே. இப்பால் - இவ்விடத்து. ஆக்கிய - கண் முதலியவற்றால் உண்டாக்கிய. இலயம் நீங்கிற்று - தாள அறுதிகள் நீங்கின. அணங்கனுள் - இமையா நாட்டத்தை யுடைமையால் தெய்வமகள் போன்ற கூத்தி. பில்கி - கரித்து ஊறி. வீக்கு வார் - கட்டிய கச்சு. நெற்றி - உச்சியில். வெண்முத்துப் போலும் நீரை. கண்கள் சொரிந்தன.

(உரை) [1] தொல். மெய்ப். 7.

1259. செருக்கயல் நெடுங்கணுள் - பொருகின்ற கயல்மீன் போலும் நீண்ட கண்ணையுடைய கூத்தி. திருமகன் : உலோகபாலன். கனக்கச

பொருக்கு - பொருவுக்கு ; [1] நிலக்குப்போல. அந்நூலெனச் சுட்டுக.

(இ - ள்.) பொருகின்ற கயல்போலும் கண்ணாள், தன்கண்ணீரை [2] உலோகபாலன் காண்டற்கஞ்சி அதற்கொட்புக்கு முத்துவடத்தைத் தன்முலையினாலே நெருக்கி அந்நூலை அறுத்துச்சிந்தி அம்மாதர் பூவெல்லாம் வாடும்படி காமத்தீத் தலைக்கொள்ளுதலாலே தரிக்கிலாளாய்க் கெட்டாளென்க. (கூசு)

1260. கன்னிமை கனிந்து முற்றிக் காமுறக் கமழுங் காமத், தின்னறுங் கனியைத் துய்ப்பா னேந்தலே பிறர்க ளில்லை, பொன்னினா லுடையுங் கற்பென் றுரைத்தவர் பொய்யைச் சொன்னார், இன்னிசை யிவற்க லாலென் னெஞ்சிட மில்லை யென்றாள்.

(இ - ள்.) இவற்கல்லது என்னெஞ்சு இடமில்லையாயிருந்தது ; ஆதலிற் கன்னித்தன்மையோடே முற்றிக்கனிந்து கமழும் காமமாகிய பழத்தை நுகர்வான் இவனே ; வேறு இதற்குரியாரில்லை ; இத்தன்மை கூறாதே, பரத்தையர்க்குக் கற்புப் பொருளான் உடையுமென்று கூறினவர் பொய்கூறினாரென்று கருதினாளென்க. (கூரு)

---

சீவகன் பாலுண்டான அன்பை அரசன் காணுதற்கு அஞ்சி. நிழல் - ஒளி. மணி - முத்து. மாதர் : கூத்தி; சுட்டு. பொருக்கு-கண்ணீரின் ஒப்புக்காக. நூல்பரிந்து - முத்துக்கோக்கப்பட்ட அந்நூலை அறுத்து. பொருக்கு, மின்னுகின்ற நிழலையுடைய தன் முலையினால் நெருக்கி நூலைப் பரிந்து என மாறியியைக்க. சிந்தா - சிந்தி. காமத்தீத் தலைக்கொள்ளுதலால் தரிக்கிலாளாகிச் சாம்பினாள் என மாறியியைக்க. தலைக்கொள - இடங்கொள்ளுதலால் ; எச்சத்திரிபு. சாம்பினாள் - வருந்திக் கெட்டாள்.

(உரை) [1] பொருவுக்கு என்பது பொருக்கென உகரச்சாரியை குறைந்து வந்தது செய்யுள் விகாரம்; "நிலக்குப்பொறை" (குறள், 570, 572) போல. [2] உலோகபாலன் : பல்லவதேயத்தரசனான தனபதியின் மகன் ; பதுமையின் சகோதரன்.

1260. கன்னிமை கனிந்து - கன்னித்தன்மை முதிர்ந்து ; "கன்னிமை கனிந்த காலத்தார்" (பரி. 19 : 90). காமுற - விருப்பமுறும்படி. கன்னிமை முற்றிக் கனிந்து கமழும் காமமாகிய நறுங்கனியை ; குறள், 1191 ; இனிய நறிய கனி. துய்ப்பான் ஏந்தலே - நுகர்பவன் இச் சீவகனே. பிறர்கள் இதற்கு உரியவரில்லை. கற்பு பொன்னினால் உடையும் என்று உரைத்தவர் என மாறி யியைக்க. கற்பு பொன்னினால் உடையும் - பரத்தையருடைய கற்பு பொருளால் கெடும் ; சீவக. 1597 ; 'பதிவிரதையைக் கெடுக்கப் பதினைந்து பொன்' என்பது ஒரு பழமொழி. இவற்கு - சீவகனுக்கு. இன்னிசையையுடைய இவற்கல்லது பிறர்க்கு என்னெஞ்சு இடமில்லை.

1261. கருஞ்சிறைப் பறவை யூர்திக் காமரு காளை தான்கொல், இருஞ்சுற வுயர்த்த தோன்ற லேத்தருங் குருசி ருன்கொல், அரும்பெறற் குமர னென்றுங் கறிவயர் வுற்று நின்ருள், திருந் திழை யணங்கு மென்ருேட் டேசிகப் பாவை யன்னுள்.

(இ - ள்.) தேசிகப்பாவை, அத்தன்மையானவள், குமரன் மயிலூர் தியையுடைய முருகனே! சுறவையுயர்த்த விளக்கத்தையுடைய காமன் ருனே என்று அறிவு வருத்தமுற்று நின்ருளென்க.

தேசிகப்பாவை : அவள்பெயர். அத்தன்மையாளென்றது, அவள் கல்வி முதலியவற்றைச்சுட்டிற்று. பாவையொப்பாள் பாடமாயின், உவமைகூறியது ; இவட்குப் பெயராகாமையுணர்க. (கூசு)

1262. போதெனக் கிடந்த வாட்கண் புடைபெயர்ந் திமைத்தல் செல்லா, தியாதிவள் கண்ட தென்றுங் கரசனு மமர்ந்து நோக்கி, மீதுவண் டரற்றுங் கண்ணி விடலையைத் தானுங் கண்டான், காதலிற் களித்த துள்ளங் காளையைக் கொணர்மி னென்ருன்.

(இ - ள்.) இவள்கண் புடைபெயர்ந்து இமைக்கின்றதில்லை ; கண்ட வுருவம் யாதென்று அவ்விடத்தே அரசனும் பொருந்திப்பார்த்துத் தானும் அவ்விடலையைக்கண்டான் ; அப்பொழுதே அவன்மேல் விருப் பத்தாலே நெஞ்சு களித்தது ; அதனலே காளையை இங்ஙனங் கொண்டு வாருங்கோளென்ருனென்க. (கூஎ)

1261. கரிய சிறகையுடைய பறவை ; என்றது ஈண்டு மயிலை. பற வையை ஊர்தியாகவுடைய காளை ; முருகன். இருஞ்சுறவு - பெரிய சுரு மீன். சுறவைக்கொடியாக உயர்த்திய தோன்றலாகிய ஏத்துதற்கரிய குருசில் - மன்மதன். அரும்பெறற்குமரன் - பெறுதற்கரிய இச்சீவகன். குமரன், காளை தான்கொல், குருசில்தான்கொல் என்று அயர்வுற்று நின்ருள் என மாறியியைக்க. இழை - ஆபரணம். அணங்கு - தெய்வம். தேசிகப்பாவை : கூத்தியின் பெயர். இழையையுடைய அணங்குபோன்ற மெல்லிய தோளையுடைய தேசிகப்பாவையாகிய அன்னவள் ; எழுவாய்.

1262. போது - மலர். போதெனக் கிடந்த கண், வாள்போலும் கூரிய கண் என்க ; "போதுகண் டனைய வாட்கண்" (சீவக. 1265). தேசிகப்பாவையினுடைய கண். புடைபெயர்ந்து - அசைந்து. இமைத் தல் செல்லாது - இமைக்கின்றதில்லை. கண்டது - பார்த்த உருவம். கண்டது யாதென்று ஆங்கு அரசனும் நோக்கி என மாறியியைக்க. அரசன் : உலோகபாலன். அமர்ந்து நோக்கி - பொருந்திப்பார்த்து ; சீவக. 1263, 1264. மீது - மேலே. கண்ணி - பூமாலை. கண்ணியை யுடைய விடலை என்றது சீவகனை. தானும் என்றது உலோகபாலனை. தானும் விடலையைக் கண்டான். காதலின் - சீவகன் மீதுள்ள விருப்பத்

(வேறு)

1263. கைவளர் கரும்புடைக் கடவுளா மெனின்
எய்கணை சிலையிறோ டிவன்க ணில்லையால்
மெய்வகை யியக்கருள் வேந்த னுகுமென்
றையமுற் றெவர்களு மமர்ந்து நோக்கினுர்.

கை - ஒழுக்கம்.

(இ - ள்.) இல்வாழ்க்கைவளர்தற்குக் காரணமான கரும்பையுடைய காமனுமென்று கருதின், கணையும் வில்லும் இவனிடத்தின்மையின், இவன் அவனல்லன்; வடிவின்வகையைப் பார்த்தால் இயக்கருள் வேந்தனுமென்று ஐயப்பட்டு எல்லோரும் அப்பொழுது பொருந்திப் பார்த்தாரென்க. (கூஅ)

(வேறு)

1264. மந்திர மறந்து வீழ்ந்து மாநிலத் தியங்கு கின்ற
அந்தர குமர னென்றுங் கியாவரு மமர்ந்து நோக்கி [ம்பி
இந்திர திருவற் குய்த்தார்க் கிறைவனு மெதிர்கொண் டோ
மைந்தனை மகிழ்வ கூறி மைத்துனத் தோழ னென்றுன்.

(இ - ள்.) அங்ஙனம் ஐயமுற்றுப் பின்னும் மந்திரத்தை மறத்தலாலே மாநிலத்தே வீழ்ந்து இயங்குகின்ற குமரனென்று யாவரும் அவ்விடத்தே பொருந்திப்பார்த்து இந்திரன்றிருப்போன்ற திருவையுடைய வன்கண்ணே செலுத்தினுர்க்கு அவனும் எதிர்கொண்டு பேணி அவனை மகிழ்வனவற்றைக் கூறி, நீ எனக்கு விளையாடும் முறைமையையுடைய தோழனென்றுனென்க.

---

தால். உள்ளம் களித்தது - உலோகபாலனுடைய மனம் மகிழ்ச்சி கொண்டது. காளையை - சீவகனை.

1263. கைவளர் - இல்வாழ்க்கையாகும் ஒழுக்கம் வளர்தற்குக் காரணமான ; கரும்பை வில்லாக உடைய கடவுள் - மன்மதன். எனின் - என்றுல். கணையோடு சிலை இவன்கண் இல்லை; இவன்கண் - சீவகனிடத்து; ஆல் : அசைநிலை. மெய்வகை - சீவகனுடைய உடம்பின் திறத்தைப் பார்த்தால். வேந்தனுகும் - வேந்தனுயுள்ளவன் போலும். அமர்ந்து நோக்கினுர் : சீவக. 1262, அடிக்.

1264. மந்திரம் - ஆகாயவழியிற் செல்லுதற்குரிய மந்திரம். மறந்து - மறத்தலால். மாநிலத்து வீழ்ந்து இயங்குகின்ற குமரன் என்று எனமாறியியைக்க ; " அந்தரத் தியங்குநர் மந்திர மறப்ப " (பெருங். 1. 42 : 77). இந்திரதிருவற்கு - இந்திரன்போலும் செல்வமுடைய உலோக பாலனிடத்து. உய்த்தார்க்கு - சீவகனைக் கொண்டுபோனவர்க்கு. இறைவனும் - உலோகபாலனும். ஓம்பி - பேணி. மைந்தனை - சீவகனை. மகிழ்வனவற்றைக்கூறி. மைத்துனமுறையையுடைய தோழன் என்றுன்;

அந்தரகுமரன் - தேவரில் ஒருசாதி. இளவரசாதலின், இறைவ னென்றார். (கூகூ)

1265. போதவிழ் தெரிய லானும் பூங்கழற் காலி னானும்
காதலி னொருவ ராகிக் கலந்துட னிருந்த போழ்தின்
ஊதுவண் டுடுத்த மாலை யுணர்வுபெற் றிலயந் தாங்கிப்
போதுகண் டனைய வாட்கட் புருவத்தாற் கலக்கு கின்றாள்.

வண்டுடுத்தமாலை - வண்டு சூழ்ந்த தேசிகப்பாவை.

(இ - ள்.) உலோகபாலனும் சீவகனும் காதலால் இருவருமொருவ ராகி இருந்தவளவிலே, அவள் இனிப் பெற்றேமென்று உணர்ச்சிபெற்று, நீங்கின இலயத்தைத் தப்பாமற்றாங்கி, கண்ணாலும் புருவத்தாலும் கலக்காநின்றாளென்க. (கoo)

1266. (க) தேனுகுக் கின்ற கண்ணித் திருமக ளாட விப்பால், ஊனுகுக் கின்ற வைவே லொருமக னுருமிற் றோன்றி, வானுகுக் கின்ற மீன்போன் மணிபரந் திமைக்கு மார்பிற், கானுகுக் கின்ற பைந்தார்க் காவலற் றொழுது சொன்னான்.

இதுமுதலாக, "பதுமை" (சீவக. 1273) என்னுங்கவியளவும் ஒரு தொடர்.

---

"மைத்துனத்தோழரெய்தி", "சேறு மைத்துனத்தோழ" (சூர்ம. கண். மணம். 188, கண். வை. 17)

1265. போதவிழ் தெரியலான் - பூக்கள் விரிந்த மாலையையுடைய உலோகபாலன். கழற்காலினான் : சீவகன். காதலின் - அன்பினால். இரு வரும் ஒருவராகி மனங்கலந்து. ஊதுவண்டு - தாதை உண்கின்ற வண்டு; சீவக. 349, ந.; "நறுந்தா தூதுங் குறுஞ்சிறைத் தும்பி" (குறுந். 239); "தும்பிதா தூத" (கலித். 33 : 23); "நறுந்தா தூதுந் தும்பி" (அகநா. 108 : 16). மாலைபோல்வாளாகிய தேசிகப்பாவை. இலயம் தாங்கி - தாள அறுதிகளை மீண்டும் கொண்டு. போதுகண்டனைய வாட் கண் ; "போதெனக் கிடந்த வாட்கண்" (சீவக. 1262). கண்ணாலும் புருவத்தாலும் கலக்குகின்றாள். கலக்குகின்றாள் - தன்னைப் பார்ப்பவ ருடைய மனத்தைக் கலங்கச் செய்து நின்றாள்.

1266. தேனை உகுக்கின்ற கண்ணியையுடைய திருமகள் ; தேசிகப் பாவை ; உகுக்கின்ற - சொரிகின்ற. கண்ணி - பூமாலை. ஆட - நாட்டிய மாடி நிற்ப. ஊன் - மாமிசம். வேலையுடைய ஒருமகன். உருமின் சொன்னானென இயைக்க ; உரும் - இடி. வான் - ஆகாயம். மீன் - நட்சத் திரம். மணி - முத்துமாலை. முத்துமாலைக்கு நட்சத்திரம் உவமை. கான் - வாசனையை. மார்பில் தாரையுடைய காவலனை ; என்றது உலோகபாலனை.

(க) உருமிற்சொன்னனென்க. பாம்புகடித்ததென்றலின், உருமு உவமையாயிற்று.

1267. (உ) கொய்தகைப் பொதியிற் சோலைக் குழவிய முல்லை மௌவல், செய்யசந் திமயச் சாரற் கருப்புரக் கன்று தீம்பூக், கைதரு மணியிற் றெண்ணீர் மதுக்கலந் தூட்டி மாலை, பெய் தொளி மறைத்து நங்கை பிறையென வளர்க்கின் றளே.

(உ) குழவிய ; அ : அசை. "பிள்ளை குழவி கன்றே போத்தெனக், கொள்ளவு மமையு மோரறி வுயிர்க்கே" (தொல். மரபு. 24). கன்றென் பதனை எல்லாவற்றிற்கும் ஏற்றுக. [1] இரண்டு மலையினும் இவனுணை அறிவித்தற்குக் கூறினர். பிறை - சந்திரன்.

1268. (ங) பவழங்கொள் கோடு நாட்டிப் பைம்பொனல் வேலி கோலித், தவழ்கதிர் முத்தம் பாய்த்தித் தன்கையாற் றீண்டி நன்னட், புகழ்கொடி நங்கை தன்பேர் பொறித்ததோர் கன்னி முல்லை, அகழ்கடற் றனை வேந்தே யணியெயி றீன்ற தன்றே.

---

1267. கொய்தகை - பறித்தற்குரிய தகுதியையுடைய. பொதியிற் சோலையில் குழவியாகிய முல்லையையும் மௌவலையும் சந்தையும். குழவி என்றது இளமையை உணர்த்தும். மௌவல் - செம்முல்லை ; மல்லிகை விசேடம் என்பர் ; சீவக. 485, ந. முல்லையும் மௌவலும் : சீவக. 485. சந்து - சந்தனக்கன்று. இமயச்சாரலிலுள்ள கருப்புரக்கன்றையும் தீம் பூவையும். கருப்புரக் கன்று : மலைபடு. 516, ந. கைத்தரு - கையாற் சொரிகின்ற. மணியிற்றெண்ணீர் - சந்திரகாந்தக் கல்லினின்றும் தோற்றின நீரை. மது - தேன். முல்லை முதலியவற்றிற்கு நீரையும் மதுவையும் கலந்து ஊட்டி. மாலையால் மூட்டம்பெய்து ஒளியை மறைத்து ; ஒளி - வெயிலை. நங்கை : பதுமை ; தனபதியின் பெண் ; உலோகபாலனுடைய தங்கை. பிறையென - பிறைச்சந்திரனைப்போல ; முல்லை முதலியவற்றின் வளர்ச்சிக்குப் பிறையின் வளர்ச்சி உவமை.

(உரை) [1] பொதியமலை, இமயமலை என்ற இரண்டும்.

1268. கோடு - கொம்பு. பவழத்தைக் கொள்கொம்பாக நாட்டி ; கொள்கொம்பு - கொடிபடர்தற்கு ஊன்றும் கொம்பு. பொனல் - பொன் னல். தவழ் கதிர் முத்தம் - தவழ்கின்ற கிரணங்களையுடைய முத்து. பாய்த்தி - பரப்பி. முத்தத்தை மணலாகப் பரப்பி. தீண்டி - தொட்டு. கொடிபோலும் நங்கை. நங்கைதன்பேர் பொறித்ததோர் கன்னிமுல்லை - தன் நற்றயான திலோத்தமையின் பெயரையிடப்பட்டதொரு இள மையையுடைய முல்லை. வேந்தேயென்றது உலோகபாலனை நோக்கிய விளி. எயிறு - பற்கள். முல்லை, எயிறுபோல் ஈன்றதன்றே என இயைக்க ; "இவள கூரெயி றீனுந் தகையவோ, தவள மெல்லிணர்த் தண்கொடி முல்லையே" (சீவக. 1331)

1269. (ச) வம்பலர் கோதை சிந்த மயிலென வொருத்தி யோடிக், கொம்பலர் நங்கை பூத்தாள் பொலிகெனக் குனிந்த விற்கீழ், அம்பலர் கண்ணி யார நிதியறைந் தோகை போக்கிக், கம்பலம் போர்த்த போலுங் கடிமலர்க் காவு புக்காள்.

1270. (ரு) நறவிரி சோலை யாடி நாண்மலர்க் குரவம் பாவை, நிறையப்பூத் தணிந்து வண்டுந் தேன்களு நிழன்று பாட, இறைவளைந் தோளி மற்றென் ரேழியீ தென்று சேர்ந்து, பெற லரும் பாவை கொள்வாள் பெரியதோ ணீட்டி னாளே.

(ரு) அணிந்து - அணிய. நிழன்று - நிழல்செய்து; "ஏரோர்க்கு நிழன்ற கோலினை" (சிறுபாண். 233) என்றுர் பிறரும்.

1269. வம்பலர் கோதை சிந்த - வாசனை பரந்த மாலை சிந்தும்படி. ஒருத்தி - பதுமையின் தோழி. ஒருத்தி கோதை சிந்த ஓடி என மாறி யியைக்க. கொம்பு - பூங்கொம்பு போல்வாய்; என்றது பதுமையை; விளி. நங்கை அலர் பூத்தாள் பொலிக என - முல்லையாகிய பெண் மலரைப் பூத்தாள், சிறக்க என்று பதுமையின் தோழி கூற. குனிந்த - வளைந்த. குனிந்த வில்லின்கீழ் அம்பைப்போல் அலர்ந்த கண்ணையுடை யவள்; என்றது பதுமையை; புருவத்திற்கு வில்லும், கண்ணிற்கு அம்பும் உவமைகள். நிதியை ஆர அறைந்து - நிதித்திரளை எல்லாரும் நிறையக்கொள்ளும்படி பறையறைந்து. ஓகைபோக்கி - தானடைந்த மகிழ்ச்சியைப் பலர்க்கும் சொல்லப்போகவிட்டு; ஓகை - உவகை யென் பதன் மரூஉ. முல்லைக்கொடி பூத்ததற்கு விழாச்செய்தல்: நைடதம். நாடு. 18. கம்பலம் - படாம்; துகில். கடி - வாசனை. காவு - சோலை. கம்பலத்தைப் போர்த்தது போன்ற மலரையுடைய கா; "கைவினைச், சித்திரச் செய்கைப் படாம்போர்த் ததுவே, ஒப்பத் தோன்றிய வுவவனந் தன்னை" (மணி. 3 : 167 - 9)

1270. நறவிரி சோலை யாடி - தேன் பரவும் சோலையில் விளையாடி. நற = நறு - தேன். குரவம்பாவை - குராமரத்தின் பூ; சீவக. 1563, 2690; ஐங். 344; திணைமா. 65; சூளா. சுயம். 80. பூத்தணிந்து - பூத்து அணிய; அணிந்து - அணிய; எச்சத்திரிபு. இதன்பின் 'கண்டு' என ஒருசொல் வருவிக்க. நிழன்று - நிழலைச்செய்து. குரவம் பாவையை, வண்டும் தேனும் நிழன்று பாடும்படி நிறையப் பூத்தணிந்து என மாறி யியைக்க. இறைவளைத் தோளி: பதுமை; எழுவாய். மற்று: அசை. இது என் தோழியென்று சேர்ந்து என மாறியியைக்க. சேர்ந்து - அணுகி. பாவை - குராமரத்தின்பூவை. கொள்வாள் - கொய்துகொள்ளு வாளாகி. தோள் - கை; சீவக. 10, ந.

1271. (சூ) நங்கைதன் முகத்தை நோக்கி நகைமதி யிதுவென் றெண்ணி, அங்குறை யரவு தீண்டி யௌவையோ வென்று போகக், கொங்கலர்க் கோதை நங்கை யடிகளோ வென்று கொம் பேர், செங்கயற் கண்ணி தோழி திருமகட் சென்று சேர்ந்தாள்.

(சூ) நகைமதியெனவே மறுவின்மையுணர்த்திற்று. குறையரவு: வினைத்தொகை; காலம் நீட்டித்தாற் பாம்பு குறைந்து ஒரு கோழிப்பறவை நீளம் பறந்துசெல்லுமென்றும்கூறி, அதனைக் குக்குடசர்ப்பமென்ப. அது, "அரிகுரற் கோழி நாமத் தரவவட் கடித்த தாக" (சீவக. 1755) என்றதனு முணர்க. தடுத்ததனை வெட்டுதல் பாம்பிற்கியல்பாதலின், முகத்தை நோக்கின பாம்பு அணுகின கையிலே தீண்டிற்றென்றுணர்க. நங்கையடிகள் - பதுமைதாய். ஏர் - ஒக்கும்.

1272. (எ) அடிகளுக் கிறைஞ்சி யைய னடிகளைத் தொழுது நங்கை, அடிகளைப் புல்லி யாரத் தழுவிக்கொண் டௌவை மாரைக், கொடியனு யென்னை நாளு நினையெனத் தழுவிக் கொண்டு, மிடைமின்னி னிலத்தைச் சேர்ந்தாள் வேந்தமற் றருளு கென்றான்.

---

1271. நங்கைதன் - பதுமையினுடைய. இது நகைமதி - இவ்வடிவம் ஒளியையுடைய மறுவில்லாத சந்திரனாகு உள்ளது; என்றது பதுமையின் முகத்தை. அம் குறை அரவு - அழகிய குறைந்த பாம்பு; தீண்டி - முகத்தைத் தீண்டாமல், கையைத் தீண்டி. தீண்டி - தீண்டுதலால்; எச்சத்திரிபு. ஒளவையோ என்று போக - அம்மையோ வென்று கூறி அவ்விடத்தை நீங்கி மீண்டுசெல்ல. கோதை: பதுமையே; விளி. நங்கையடிகளோவென்று - திலோத்தமையார் வந்தாரோ என்றுகூறி; "அஃதே யடிகளுமுளரோ வென்றாற்கு" (சீவக. 1884). கொம்பு ஏர் - பூங்கொம்பை ஒக்கும். கொம்பேர் தோழி, செங்கயற் கண்ணியாகிய தோழியென இயைக்க; தோழி என்றது பதுமையின் தோழியை. திருமகள்: பதுமை தோழி, கோதாய், நங்கையடிகளோவென்று திருமகளைச் சேர்ந்தாள் என மாறியியைக்க.

1272. அடிகளுக்கு இறைஞ்சி - தனபதியை வணங்கி; அடிகளுக்கு - அடிகளை; உருபு மயக்கம். ஐயன் - உலோகபாலனுடைய. நங்கை - திலோத்தமையினுடைய. ஒளவைமாரை ஆரத்தழுவிக் கொண்டு. ஒளவைமாரென்றது நற்றாய் ஒழிந்த மற்றைத் தாயர்களை. கொடியனுய் என்றது தோழியை. மின்னினை மிடைந்த மின்னைப்போல் கொடியனுளைத் தழுவிக்கொண்டு நிலத்தைச் சேர்ந்தாள் என மாறியியைக்க. 'வேந்த' என்றது உலோகபாலனை. அருளுக - திருவுள்ளம் பற்றுக; இன்னதை செய்தி கூறுதலின் 'அருளுக' என்றான்; பெருங். 1. 47: 98. என்றான் - என்று 'ஒரு மகன்' (சீவக. 1266) கூறினான்.

(ஏ) அடிகளுக்கு: உருபுமயக்கம். [1] இங்ஙனம் தான் நிகழ்த்தப் பெறுமையின், தனக்காக நிகழ்த்தென்றுளாயிற்று.

1273. (அ) பதுமையைப் பாம்பு தீண்டிற் றென்றலும் பையு ளெய்திக், கொதிநுனை வேலி னுயிங் கிருக்கெனக் குருசி லேகிக், கதுமெனச் சென்று நோக்கிக் காய்சினங் கடிதற் கொத்த, மதி மிகுத் தவல நீக்கு மந்திரம் பலவுஞ் செய்தான்.

(அ) ஏகி - ஏக.

(இ - ள்.) இங்ஙனம் தேசிகப்பாவை ஆடாநிற்க, இப்பால் வேலினை யுடைய ஒருமகன் தோன்றி மார்பினையும் தாரினையுமுடைய உலோக பாலனைத் தொழுது பதுமையைப் பாம்பு தீண்டிற்றென்று உருமிற் சொன்னான்; சொன்னவளவிலே உலோகபாலன் வருத்தமுற்றுச் சீவகனை நோக்கி, வேலினாய்! நீ இவ்விடத்தே யிருக்கவென்றுகூறி, அவ்விடத்தி னின்றும் போகாநிற்கின்றவளவிலே, பாம்பு கடித்தவாறு என்னையென்று வினவினாற்கு வேந்தே! நங்கை பொதியிற்சோலையிற் குழவியாகிய முல்லையினையும் மௌவலினையும் சந்தனத்தையும் இமயச்சாரற் கருப் பூரத்தையும் தீம்பூவையும் சந்திரகாந்தக்கல்லினின்றுந் தோற்றின நீரைத் தேனைக்கலந்தூட்டி மாலையை மூட்டாகப்பெய்து வெயிலைமறைத் துப் பிறையென வளர்க்கின்றவள், அவற்றிலே விசேடித்துப் பவளத் தைக் கொள்கொம்பாக நாட்டிப் பொன்னாலே வேலிகோலி முத்தை மண லாகப் பரப்பித் தன்கையாலே தீண்டி நல்லநாளிலே [1] திலோத்தமைதன் பெயரிட்டு வளர்த்ததொரு கன்னியாகிய முல்லை எயிறு போலே அரும் பிற்று; அதனைக் கண்டு ஒருத்தி கோதை சிந்த ஓடிக் கொம்பே!

(உரை) [1] தான் என்றது பதுமையை; இங்ஙனம் நிகழ்த்தப் பெறுமையாவது தன்னைப் பாம்புகடித்தமையின் தனபதி முதலியவர்களை இறைஞ்சுதலும் புல்லுதலும் முடியாமை.

1273. பையுள் எய்தி - வருத்தமடைந்து. வேலினாய் என்றது சீவ கனை. இங்கு இருக்கென - இங்கே இருப்பாயாக வென்று கூறி. குருசில்: உலோகபாலன். ஏகி - ஏக; எச்சத்திரிபு. இப்பாடலின் முதலிரண்டடி களையும் 'காவலற்றொழுது' (சீவக. 1266) என்பதன்பின் இயைத்துக் கொண்டு, பின் இரண்டடிகளையும் 'வேந்தமற் றருளுகென்றான்' (சீவக. 1272) என்பதன்பின் இயைத்துக்கொள்க. கதுமெனச் சென்று நோக்கி - விரைவாகப்போய்ப் பதுமையை நோக்கி. காய்சினம் கடிதற்கொத்த - விஷத்தின் வேகத்தைப் போக்குதற்குரிய. மதிமிகுத்து - புத்தியால் மிகுத்துக் கூறி. அவலம் - விஷத்தாலுண்டாகிய துன்பத்தை. பலவும் - பலமருந்துகளையும். கடிதற்கொத்த மந்திரத்தை மதிமிகுத்துக் கூறி அவலம் நீக்கும் பலவும் செய்தான் என மாறி யியைக்க.

(உரை) [1] பதுமையின் தாய்.

நங்கை அலர்பூத்தாள்; பொலிகவென்றுளாக, அம்பைத் தோற்றுவிக்கின்ற கண்ணி, நிதியை எல்லாரும் ஆரும்படி சாற்றிக்கொடுத்து, இவ்வுவகையைப் பலர்க்கும் சொல்லப்போகவிட்டுக் காவிலேசென்றுள்; சென்று சோலையிலே விளையாடிக் குரவம்பாவையை வண்டும் தேன்களும் நிழன்று பாடும்படி நிறையப்பூத்தணிய, அதனைக்கண்டு இஃது என் தோழியென்று சேர்ந்து அதனைக்கொய்தற்குத் தோளைநீட்டினுள். நீட்டினவளவிலே அழகிய குறைந்த அரவம் அவள்முகத்தைப்பார்த்து நாம் தீண்டுதற்குரிய மறுச்சேர்மதியன்றி இது நகையினையுடையதொரு மதியாயிருந்தது; நாம் தீண்டத் தகாதென்றெண்ணி அந்தக்கையிலே தீண்டுதலாலே அம்மேயோவென்ன மீண்டாளாக, அவள்தோழி, கோதாய்! திலோத்தமையார் வந்தாரோவென்று வினவிச் சென்று அவளைச்சேர்ந்தாள்; சேர்ந்தவளைநோக்கிக் கொடியனுய்! தனபதியை வணங்கி உலோகபாலனடிகளைத்தொழுது திலோத்தமையாரைப் புல்லி ஒழிந்த தாய்மாரைத்தழுவிக்கொண்டு நாளும் என்னை நினையெனக் கூறி மின்னைமிடைந்ததொரு மின்போல் தழுவிக்கொண்டு பின்பு நிலத்தே வீழ்ந்தாள்; வேந்தனே! இதனைத் திருவுள்ளம்பற்றென்று சொன்னுன்; அதுகேட்டுக் கடுகச்சென்று பார்த்து விடத்தின்வேகத்தைப் போக்குதற்குப் பொருந்தின மந்திரத்தைத் தன்மதியாலே மிகுத்துக்கூறி இவ்வவலத்தைத் தீர்த்தற்குரிய பல மருந்துகளையும் செய்தானென்க.

இங்ஙனம் மாட்டுறுப்பாகக் கூருது செவ்வனேகூறிற் பாம்புகடித்தமை கடுகக்கூறிற்ருகாமையுணர்க. (கஉக—அ)

1274. வள்ளருன் வல்ல வெல்லா மாட்டினன் மற்று மாங்கண்
உள்ளவ ரொன்ற லாத செயச்செய வூறு கேளா
தள்ளிலைப் பூணி னுளுக் காவியுண் டில்லை யென்ன
வெள்ளெயிற் றரவு கான்ற வேகமிக் கிட்ட தன்றே.

ஊறு - விடத்திற்கு இடையூருய மந்திரமும் மருந்தும்.

(இ - ள்.) உலோகபாலன் தான் வல்ல வித்தைகளெல்லாவற்றையும் செலுத்தினுன்; வேறும் அவ்விடத்துள்ளாரெல்லாரும் பலவூறுகளையுஞ் செய்யச்செய்ய, அவற்றைத் கேளாதே அவளுக்கு உயிர் உண்டு இல்லையென்னும்படி அரவு கான்ற நஞ்சு மிக்கதென்க. (கஉகூ)

1274. வள்ளல்: உலோகபாலன். மாட்டினுன் - செலுத்தினுன். ஒன்றலாத ஊறு செயச்செய - பல மந்திரங்களையும், மருந்துகளையும் செய்யச்செய்ய. கேளாது - அம்மந்திர மருந்துகளுக்கு அடங்காமல். அள் இலைப் பூணினுளுக்கு - நெருங்கிய இலை வடிவம் கொண்ட ஆபரணத்தையுடைய பதுமைக்கு. என்ன - என்று கூறும்படி. அரவு - குக்குட சர்ப்பம். கான்ற வேகம் மிக்கிட்டது - கக்கிய விடத்தின் வேகம் மிக்கது; அன்று, ஏ: அசைகள்.

1275. பைங்கதிர் மதிய மென்று பகையடு வெகுளி நாகம்
நங்கையைச் செற்ற தீங்குத் தீர்த்துநீர் கொண்மி னென்றும்
வங்கமா நிதியு நல்கி மகட்டரு மணிசெய் மான்றேர்
எங்களுக் கிறைவ னென்றுங் கிடிமுர செருக்கி னுனே.

(இ - ள்.) மறுச்சேர் மதியாகிய பகையையடுகின்ற வெகுளியை யுடைய நாகம், இது நாம் தீண்டுமதன்றி மறுவில்லாததொரு மதியா யிருந்ததென்று எண்ணுதலாலே, நங்கையைக் கையிலே கடித்தது; இவ் விடத்துத் தீர்த்தவர்கட்குத் தனபதி நாட்டையும் நிதியையுந்தந்து மகளையுந்தருமாதலின், இதனைத் தீர்த்து நீர் இவற்றைக்கொண்மி னென்று உலோகபாலன் முரசறைவித்தானென்க. (ககO)

1276. (க) மண்டலி மற்றி தென்பா ரிராசமா நாக மென்பார், கொண்டது நாக மென்பார் குறைவளி பித்தொ டையிற், பிண்டித் துப் பெருகிற் றென்பார் பெருநவை யறுக்கும் விஞ்சை, எண் டவப் பலவுஞ் செய்தா மென்றுகே ளாதி தென்பார்.

---

1275. பைங்கதிர் மதியமென்று - பசுமையான கிரணங்களுடைய மறுவில்லாத சந்திரனென்று எண்ணுதலால். பகையடு வெகுளி நாகம் - மறுவையுடைய மதியாகிய பகையைக் கொல்கின்ற கோபத்தையுடைய பாம்பு. செற்றது - கையிற் கடித்தது. நாகம், கதிர்மதியமென்று நங்கையைக் கையிற் செற்றது என மாறியியைக்க. தீர்த்து - விடத்தை நீக்கி. வங்க மாநிதி - கடல்கடந்து சென்று தேடிவந்த பெரிய பொருள் களை. மகள் தரும் - பதுமையையும் தருவான். மணிசெய் மான் - மணி களால் அலங்கரிக்கப்பட்ட குதிரை. தேரையுடைய எங்களுக்கு இறை வன்; என்றது தனபதியை. என்று - உலோகபாலன் உரைத்து. முரசு எருக்கினுன் - முரசை அறைவித்தான். இறைவன், நாடும் நிதியும் நல்கி மகளைத்தரும்; ஆதலின் ஈங்குத்தீர்த்து நீர் கொண்மின் என்று முரசு எருக்கினுன் எனமாறியியைக்க.

(மேற்.) அடி, 2 : தொல். உரி. 20, ந.

1276. மண்டலி : சீதமண்டலி; சீவக. 1218, அடிக். இராசமா நாகம் : ஒருவகைப் பாம்பு. கொண்டது - கடித்தது. நாகம் - நாகப் பாம்பு. ஐயின் - சிலேட்டுமத்தைக் காட்டிலும். பிண்டித்து - திரண்டு. ஐயிற்காட்டில் வளியும் பித்தும் பிண்டித்துப் பெருகின என்பார். பெரு நவை - இராசகன்னியாகிய பதுமைக்கு விடந்தீண்டியதாலுண்டாய குற்றத்தை. விஞ்சை - மந்திரம். எண்தவ - அளவு நீங்க. செய்தாம் - செய்தேம். விஞ்சை பெருநவை யறுக்கும் என்று எண்தவப்பலவும் செய்தாம் எனமாறி யியைக்க. இது கேளாது - இவ்விஷம் அடங்கிற் றில்லை.

1277. (உ) சிரையைந்தும் விடுது மென்பார் தீற்றுதுஞ் சிருங்கி யென்பார், குரைபுன லிடுது மென்பார் கொந்தழ லுறுத்து மென் பார், இரையென வருந்தக் கவ்வி யென்புறக் கடித்த தென்பார், உரையன்மி னுதிர நீங்கிற் றுய்யல ணங்கை யென்பார்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) மற்று : வினைமாற்று. இது சீதமண்டலியென்பார்; இது [1] கரு வழலை யென்பார்; கடித்தது நாகமென்பார்; வளியும் பித்தும் ஐயிற் காட்டில் திரண்டுபெருகின; இனி உயிர்மீளாதென்பார்; இவ்விஞ்சை பெரிய நவையறுக்குமென்றுகருதி எண்ணிறக்கப் பலவுஞ்செய்தேம்; அவற்றை இது கேட்டதில்லையென்பாரென்க. [2] ஏன்று - ஏற்றுக்கொண் டென்றுமாம். இராசமாமந்தமும் பாடமும்.

(உ) சிரையைந்து - கையிரண்டும் காலிரண்டும் நெற்றியுமாக ஐந்து. தீற்றுதல் - பூசுதல். சிருங்கி - ஒருமருந்து; சுக்குமாம். சிங்கி, பாடமாயிற் கற்கடகசிங்கியென்க. புனலிலிடுகின்றது, உயிருண்மை யறிதற்கும் நஞ்சு நீங்குதற்கும். அழலுறுத்தல் உயிருண்மையறிதற்கு.

(இ - ள்.) தீர்க்கவந்தவர்கள், என்பார் என்பாராயினரென்க.

(ககக-உ)

1278. கையொடு கண்டங் கோப்பார் கனைசுட ருறுப்பின் வைப்பார், தெய்வதம் பரவி யெல்லாத் திசைதொறுந் தொழுது நிற்பார், உய்வகை யின்றி யின்னே யுலகுடன் கவிழு மென்பார், மையலங் கோயின் மாக்கண் மடைதிறந் திட்ட தொத்தார்.

(இ - ள்.) கையையும் கண்டத்தையும் உழலைகோப்பார்; மருமங் களிலே விளக்கையெரிப்பார்; தொழுதுநிற்பார்; இதுகாரணத்தான் அரசன் இறந்துபடின், உலகு இன்னே கவிழுமென்பாராய் மாக்கள் ஆரவாரத்திலே மடைதிறந்த தன்மையையொத்தாரென்க.

1277. சிரை - நாடி. சிருங்கியைத் தீற்றுதும் என்பார். சிருங்கி : ஒருவகை மருந்து; தீற்றுதும் - பூசுவோம். புனலிடுதும் என்பார் - விடம் நீங்குதற்காக நீரில் இடுவோம் என்று கூறுவார். அழலுறுத்தும் என்பார் - உயிருளதோவென்றறிதற்காகத் தீயாற் சுடுதும் என்று கூறுவார். இரையென - பாம்பு, இவள்கையைத் தான் உண்ணுதற்குரிய இரையாகுமென்றெண்ணி. என்புஉற - எலும்பில் அழுந்தும்படி. உதிரம் நீங்கிற்று - உடலிலிருந்து இரத்தம் நீங்கியது. நங்கை உய்யலள் - பதுமை உயிர்பிழையாள்.

(உரை) [1] ஒருவகைப் பாம்பின் பெயர். [2] 'ஏன்று' என்பதை வேறு பாடமாகக் கொள்க.

1278. கண்டம் - கழுத்து. கையிலும் கண்டத்திலும் தடை மரத்தைக் கோப்பார். சுடர் - விளக்கு. உறுப்பின் - உயிர்நிலையான

மக்கட்குரிய மனனின்றி அறிவுகெட்டமையின், ஐயறிவுடையரென்று 'மாக்கள்' என்றார். (ககஙு)

1279. வெந்தெரி செம்பொற் பூவும் விளங்குபொன் னூலும் பெற்றார், மந்திர மறையும் வல்லா ரெழாயிரர் மறுவில் வாய்மை, அந்தரத் தறுவை வைப்பா ரந்தண ரங்கை கொட்டிப், பைந் தொடிப் பாவை யின்னே பரிவொழிந் தெழுக வென்பார்.

(இ - ள்.) பொன்னாலே பூவும் நூலும்பெற்றார், மந்திரமும் மறையும் வல்லார், மறுவில்லாத மந்திரத்தாலே விசும்பிலே புடைவையை நிறுத்து வாராகிய அந்தணர் ஏழாயிரம்பேர், கையைத்தட்டி, பாவை இப் பொழுதே வருத்தந் தீர்ந்து எழுவாளாகவென்பாரென்க. (ககச)

1280. பாம்பெழப் பாம்பு கொண்டாற் பகவற்கு மரிது தீர்த்தல்
தேம்பிழி கோதைக் கின்று பிறந்தநா டெளிமி னென்று
காம்பழி பிச்ச மாகக் கணியெடுத் துரைப்பக் கல்லென்
தூம்பழி குளத்திற் கண்ணீர் துகணிலத் திழிந்த தன்றே.

(இ - ள்.) பாம்பு உதிக்கின்றவளவிலே பாம்புதீண்டினால் இறைவற் கும் தீர்த்தலரிது ; ஈண்டுக் கோதைக்குப் பாம்பெழப் பாம்புகொண்டது இன்று ; பாம்பு தீண்டுகின்றகாலத்துப் பிறந்த நாளும் இன்று ; உதயா ரூடக்கவிப்புக்களிற் கவிப்பாகத் தெளியுங்கோளென்று கணி நூலையெடுத் துக் கூறக்கேட்டுக் [1] கையாறுநீங்கி அழுதாரென்க.

---

இடங்களில். உய்வகையின்றி - பிழைக்குந் திறமில்லாமல். உலகு இன்னே கவிழும் என்பார். மையல் - மயக்கத்தையுடைய. கோயில் மாக்கள் - அரண்மனையிலுள்ள மக்கள். ஆரவாரத்தால் மடை திறந் திட்டதொத்தார்.

1279. செம்பொன்னாலாகிய பூவும். பொன்னாலாகிய நூலும். பெற் றார் என்றது அந்தணரை. மந்திரமும் மறையும் வல்லவர். வாய்மை - மந்திரத்தால். அந்தரத்து - ஆகாயத்தில். அறுவை வைப்பார் - ஆடையை நிறுத்துவார். வாய்மையால் அந்தரத்து அறுவை வைப்பா ராகிய அந்தணர் ஏழாயிரர் கைகொட்டி என மாறியியைக்க. பாவை : பதுமை பரிவு ஒழிந்து - விஷத்தாலுண்டாகிய துன்பம் நீங்கி.

1280. பாம்பு எழ - பாம்பு உதிக்கின்ற காலத்தில் ; என்றது கிரக ணத்தை. பாம்பு கொண்டால் - பாம்பு ஒருவனைக் கடித்தால். பகவன் - கடவுள். பகவற்கும் தீர்த்தல் அரிது. கோதைக்கு : பதுமைக்கு. பிறந்த நாள் இன்று - பதுமை பிறந்த நாள் இல்லை. காம்பழி பிச்சமாக - காம்பு நீங்கிய பீலிக்குடையாக ; கவிப்பிற்கு வெளிப்படை. கணி - சோதிடன். தூம்பு - மடை. குளத்தினைப்போல். தூம்பழி குளம் : சீவக. 1976. துகள் - தூளி. துகளை யுடைய நிலத்தில்.

(உரை) [1] கையாறு - செயலறுதல்.

பாம்பு - இராகு. இன்றென்பது மறைப்பொருளுணர்த்திய வினைக் குறிப்பு. காம்பழிபிச்சம் கவிப்பிற்கு வெளிப்படை. ஞாயிற்றின்விமானம் பீலியாற்செய்யப்படுதலின், அதனைப் பீலியாற்செய்யப்படும் பிச்ச மென்றார். எனவே, ஞாயிறு நடுவே கவிப்பாக நின்றதென்றவாறாயிற்று. இதனாற் பயன் : அக்காலத்திற்றெய்வம் மாயோனாதலின், அவன் கருட னுடனே உலகைப் பார்க்கின்றமையின், அக்கருடன் பார்வையால் நஞ்சு நீங்குதலாம். (கககூ)

1281. நங்கைக்கின் றிறத்த லில்லை நரபதி நீயுங் கேண்மோ, கொங்கலர் கோங்கி னெற்றிக் குவிமுகிழ் முகட்டி னங்கட், டங்குதே னரவ யாழிற் றானிருந் தாந்தை பாடும், இங்குநம் மிடரைத் தீர்ப்பா னிளையவ னுளன்மற் றென்றான்.

[1] யாழ் - மிதுனராசி. மற்று : அசை.

(இ - ள்.) மிதுனராசியிலே தேனரவந்தங்கும் கொங்கு அலர் கோங்கி னெற்றியில் அரும்பின்றலையிடத்தே ஆந்தைதான் இருந்து பாடும்; இதனை, நரபதி! நீயும் கேட்பாயாக; இதனாலே நம்மிடரைத் தீர்ப்பான் ஓரிளையவன் இங்குளன்; இன்று நங்கைக்கு இறத்தலில்லை யென்றானென்க. (கஉ0)

1282. பன்மணிக் கடகஞ் சிந்தப் பருப்புடைப் பவளத் தூண்மேல், மன்னவன் சிறுவன் வண்கை புடைத்துமா ழாந்து சொன்னான், இன்னுமொன் றுண்டு சூழ்ச்சி யென்னுடைங் கிருந்த நம்பி, தன்னைக்கூய்க் கொணர்மி னென்றான் றரவந்தாங் கவனுங் கண்டான்.

1281. நங்கைக்கு - பதுமைக்கு. நரபதி யென்றது உலோக பாலனை; விளி. கேண்மோ - கேட்பாயாக. கொங்கு - வாசனை. கோங்கு - ஒருவகை மரம். நெற்றி - உச்சியில். முகிழ்முகட்டின் அங்கண் - மொட்டினது தலையிடத்தே. தேனரவம்யாழில் - வண்டின் ஒலிபோன்ற வீணையினிடத்து; என்றது மிதுனராசியிடத்து. யாழில், தேனரவம் தங்கும் கோங்கினெற்றியில் முகிழ்முகட்டினங்கண் ஆந்தை இருந்து பாடும்; இதனால் நம் இடரைத் தீர்ப்பானாகிய இளையவன் இங்கு உளன்; ஆதலால் நங்கைக்கு இன்று இறத்தலில்லை என்றான் என மாறியியைக்க.

(உரை) [1] மிதுனராசிக்கு யாழென்பது ஒரு பெயர்.

1282. கடகம் - கையிலணிவது. பருப்புடைத்தூண் - பருமையை யுடைய தூணை; "பருப்புடைத் தண்டஞ்சுற்றி" (கூர்ம. சுவேதன். 10). பருப்புடைத்தூண், பவளத்தூண் என இயைக்க. தூண்புடைத்து : பெருங். 1. 47 : 109-10; சூளா. அரசியல். 9. மன்னவன் சிறுவன் : உலோகபாலன். கைபுடைத்து - கையைக்கொட்டி. கடகம் சிந்தக் கை புடைத்தல்; சீவக. 258. தூண் மீது கையாலறைந்து கூறுதல் : "கைவ ழுங்குகென நின்ற தூணிடை யறைந்துரைக்குமிவை காவலன்" (வி. பா. கண்ணன்தூது. 120). மாழாந்து - மயங்கி. இன்னும் ஒன்று சூழ்ச்சி

(இ - ள்.) தனபதிதன்மகன் உலோகபாலன், கடகம் சிந்தும்படி தூண்மேலே கையைப்புடைத்து மயங்கி ஒரு வார்த்தை கூறினான்; இன்னும் ஒரு சூழ்ச்சியுண்டு; என்னோடு அங்கிருந்த இளையவனை அழைத்துக்கொண்டு வாருமினென்று கூறினான்; அவர்களும் கொண்டு வர, அவ்விடத்தேவந்து அவனும் இந்நிலையைக் கண்டானென்க. (கக௭)

1283. பறவைமா நாகம் வீழ்ந்து பலவுடன் பதைப்ப போன்றும்
சிறகுறப் பரப்பி மஞ்ஞை செருக்குபு கிடந்த போன்றும்
கறவைகன் றிழந்த போன்றுங் கிடந்தழு கின்ற கண்ணார்
இறைவளை யவரை நோக்கி யென்கொடி துற்ற தென்றான்.

பறவைமாநாகம் - குக்குடசர்ப்பம்; ஈண்டுப் பெண்பாலாகிய கூனும் குறளும் உவமேயப்பொருள். மயில் தோழியர்க்கும், கறவை செவிலியர்க்கும் உவமை.

(இ - ள்.) அங்ஙனங்கண்டவன், நாகங்கள் பதைப்பனபோன்றும், மயில்கள் மயங்கிக்கிடந்தனபோன்றும், கறவை கன்றிழந்தனபோன்றும் அழுகின்ற கண்ணாராகிய வளையவரைநோக்கி, என்னே! இவருற்றது கொடிதாயிருந்ததென்றானென்க. (கக௮)

1284. ஊறுகொள் சிங்கம் போல வுயக்கமோ டிருந்த நம்பி
கூறினான் கொற்ற வேந்தன் கொழுநிதி நிலத்து மற்றுன்
வீறுயர் புகழை வித்திக் கேண்மையை விளைத்தி யின்னே
நாறுபூங் கொம்ப னாளை நோக்கென நம்பி சொன்னான்.

உண்டு எனமாறியியைக்க; ஒன்று சூழ்ச்சி - ஒரு சூழ்ச்சி. நம்பி: சீவகனை. கூய்க்கொணர்மின் - அழைத்துக் கொண்டுவாருங்கள். தர - அவர்கள் சீவகனை அங்கே அழைத்துவர. அவனும் - சீவகனும். கண்டான் - பதுமையைப் பாம்பு கடித்த நிலைமையைப் பார்த்தான்.

1283. பறவை யென்றது இங்கே கோழியை. பறவைமா நாகம் - குக்குடசர்ப்பம்; சீவக. 1271, ந. சிறகு - தோகை. செருக்குபு - மயங்கி. கிடந்து - விழுந்து. கண்ணாராகிய வளையவரை. இறைவளையவர் - "இறைவளைத் தோளி" (சீவக. 1270). என் - என்னே. உற்றது கொடிது - இவர்களடைந்தது கொடியதாயிருந்தது.

1284. ஊறு கொள் - வருத்தத்தைக் கொண்ட. உயக்கம் - வருத்தம். நம்பி: உலோகபாலன். வேந்தன் - தனபதி. வீறுயர் - பெருமையால் உயர்ந்த. வேந்தனுகிய நிலத்துள் உன்புகழை வித்திக் கேண்மையை விளைத்தி; வித்தி - விதைத்து. கேண்மையை விளைத்தி - உறவை விளைக்கவல்லாய்; ஆதலால் கொம்பனாளை இன்னே நோக்கெனக் கூறினான் எனமாறியியைக்க. கொம்பனாள்: பதுமை. அது கேட்டு நம்பி சொன்னான்; நம்பி - சீவகன்.

(இ - ள்.) அதுகேட்டு, வருத்தத்தோடிருந்த உலோகபாலன், சீவகனைப் பார்த்து, நீ வேந்தனாகிய நிலத்தே புகழைவித்தி உறவை விளைக்கவில்லை; ஆதலின், கொம்பனாளை இன்னே நோக்கெனக் கூறினான்; அது கேட்ட சீவகனும் ஒருவார்த்தை சொன்னானென்க.

விளைத்தி, படுத்தலோசையாக்குக. (கககூ)

1285. புற்றிடை வெகுளி நாகம் போக்கறக் கொண்ட தேனும், மற்றிடை யூறு செய்வான் வானவர் வலித்த தேனும், பொற்றொடிக் கிறத்த லில்லை புலம்புகொண் டழேற்க வென்றான், கற்றடிப் படுத்த விஞ்சைக் காமரு காம னன்னான்.

(இ - ள்.) விஞ்சையையுடைய அந்தச் சீவகன், நாகம் மீட்சியில்லையாம்படி கடித்ததாயினும், வேறு இடையூறுசெய்தற்குத் தேவர்சூழ்ந்த நிலையாயினும் இவட்கு இறந்துபாடில்லை; நீ அழாதேகொள்ளென்று கூறினானென்க.

காமனன்னானென்றது [1] இவற்கொருபெயர். (க௨௦)

1286. பொழிந்துநஞ் சுகுத்த லச்ச மிரைபெரு வெகுளி போகம், கழிந்துமீ தாடல் காலம் பிழைப்பென வெட்டி னாகும், பிழிந்துயி ருண்ணுந் தட்ட மதட்டமாம் பிளிற்றி னும்பர், ஒழிந்தெயி றானஞ் செய்யுங் கோளென மற்றுஞ் சொன்னான்.

---

1285. வெகுளியையுடைய நாகம். போக்கறக் கொண்டதேனும் - இவளுயிர் திரும்புதலில்லையாம்படி கடித்ததானாலும். மற்று - வேறு. செய்வான் - செய்தற்கு. வானவர் வலித்ததேனும் - தேவர்களால் சூழ்ச்சி செய்யப்பட்டதாயினும்; வலித்தல் - சூழ்தல். பொற்றொடிக்கு: பதுமைக்கு. புலம்பு - வருத்தம். அழேற்க - அழாதீர்கள். அடிப்படுத்த விஞ்சை - பழகிய விஞ்சையையுடைய; விஞ்சை - மந்திரம். காமரு - விருப்பம் மருவிய. விஞ்சையையுடைய காமனன்னானென்றது சீவகனை. (உரை) [1] இவற்கு - சீவகனுக்கு.

1286. நஞ்சைப் பொழிந்து உகுத்தல்; பொழிந்து உகுத்தல் - கான்று சொரிதல். அச்சம் - பிறரிடம் கொண்ட பயத்தாற் கடித்தல். இரை - தனக்குரிய உணவென்று எண்ணிக் கடித்தல். பெருவெகுளி - மிக்க கோபத்தாற்கடித்தல். போகம் - பெண் பாம்புடன் கூடியிருக்குங் கால் அங்கு வருபவரைக் கடித்தல். கழிந்து மீதாடல் - மனமகிழ்ச்சி கொண்டு படமெடுத்தாடும்பொழுது தன்னிடம் வருபவரைக் கடித்தல். காலம் - தான் செல்கின்ற காலங்களில் வருபவரைக் கடித்தல். பிழைப்பு - பிறர் தனக்கு முன்பு செய்த பிழையை எண்ணியிருந்து அவரைக் கடித்தல். "பசியுற்றால் பயந்தால் நொந்தால் - கோபத்தால், பல்லின் விஷமிகுந்தால் மெல்லமிதித்தால் - இசையுறு தேவர் முனிவர் - காலனிவர் ஏவலினால்வினை தாவலினால், செய்தநன்றி கொன்றபேரைப் - பூருவ, சென்மப்

உகுத்தல் - [1] தன்றூற்பொறுத்தலருமையின், ஒன்றினைக்கௌவி நஞ்சைக் கான்று உகுத்தல். இரை - இரையென்றுகருதுதல். போகம் - இழைதல். கழிந்துமீதாடல் - மனக்களிகூர்ந்துநின்றுடுதல். பிழைப்பு - பிறர் தனக்குச் செய்த பிழையைக் கருதுதல். இவையெட்டும் அதன் குணம். தட்டம் - [2] दंष्ट्रा ; இது மேல்வாய்ப்பல். அதட்டம் - [3] अधोदंष्ट्रा ; இது கீழ்வாய்ப்பல். பிளிற்றல் - பிலிற்றல். உம்பர் - மேல். கொள்ளுதல், கோளென விகாரம். காலமொழிந்தவேழும் அகாலமாம்.

(இ - ள்.) உகுத்தல் முதலிய எட்டுக்காரணத்தாலே கடித்தலுளதாம் ; அங்ஙனங்கடித்தால் எயிறுகளுக்கு மேலாம் தட்டம் அதட்டமென்கின்ற எயிறுகளிலுண்டான நஞ்சைக் கடித்தவாயிலே காலுமாயிற் பிழிந்து உயிருண்ணும் ; 'அவற்றையொழிந்த எயிறுகளிலுண்டான நஞ்சைக் கடித்தவாயிலே காலுமாயின், வருத்தஞ்செய்யுமென்று கூறிப் பின்னும் அதனிலக்கணங்களிலே சில கூறினனென்க. (கஉக)

1287. அந்தண ஞறு மான்பா லவியினை யலர்ந்த காலை
நந்தியா வட்ட நாறு நகைமுடி யரச னுயிற்
றந்தியா முரைப்பிற் றுழைத் தடமலர் வணிக னுறும்
பந்தியாப் பழுப்பு நாறிற் சூத்திரன் பால தென்றான்.

---

பகையாளரை வன்மமுள்ளோரைப், பையரவம்வந்து கடிக்கும்'' (சித்தராரூடச்சிந்து). என எட்டினுகும் - என்று எட்டுக் காரணங்களாற் பாம்பு கடித்தலுண்டாகும். தட்டம் - பாம்பினுடைய மேல்வாய்ப்பல் ; அதட்டம் - கீழ்வாய்ப்பல். தட்டம் அதட்டமாம் பிளிற்றின் பிழிந்து உயிருண்ணும் - மேல்வாய்ப் பல்லிலும் கீழ்வாய்ப் பல்லிலும் உண்டாகின்ற விஷத்தைக் கடித்த இடத்தில் உமிழ்ந்தால் பிழிந்து உயிரை உண்டு விடும் ; பிளிற்றின் - உமிழ்ந்தால். உம்பர் ஒழிந்த எயிறு ஊனம் செய்யும் - மேற்கூறியவற்றை ஒழிந்த பற்களில் உண்டான விஷத்தை உமிழ்ந்தால் உடம்பிற்கு வருத்தத்தைச் செய்யும் ; ஊனம் - வருத்தம். கோள் - கொள்ளுதல். என - என்று சீவகன் கூறி.

(உரை) [1] தன்றுலென்றது பாம்பை. [2] தம்ஷ்ட்ரா. [3] அதோ தம்ஷ்ட்ரா.

1287. அந்தணன் : அந்தணச் சாதிப்பாம்பாகும். ஆன் பால் அவி - பசும்பாலன்னம். ஆன்பாலவியினைப்போல் நாறுமாயின் அந்தணன் எனமாறியியைக்க. நந்தியாவட்டம் : ஒருவகை மலர். நகை - ஒளி. அரசன் : இராசசாதிப் பாம்பாகும். அலர்ந்த காலத்து நந்தியாவட்டத்தைப் போல் நாறுமாயின் அரசன் எனமாறியியைக்க. யாம் தந்து உரைப்பின் - நாங்கள் சித்தராரூடநூலைக் கொண்டுவந்து கூறினுல். தடமலர் - பெரிய பூ. தாழை மலரைப் போல் நாறுமாயின் வணிகன் எனமாறியியைக்க. வணிகன் - வணிகசாதிப் பாம்பாகும்.

(இ - ள்.) [1] சித்தராரூடமென்னும் நூலினைக் கொண்டுவந்துகூறின், ஆன்பாலவியினை நாறுமாயின், அஃது அந்தணன்பாலதாம்; அலர்ந்த காலத்தில் நந்தியாவட்டத்தை நாறுமாயின், அஃது அரசன்பாலதாம்; தாழைமலர் நாறுமாயின், அது வணிகன்பாலதாம்; மற்றொன்றுங் கூடாத அரிதாரம் நாறுமாயின், அது சூத்திரன்பாலதாமென்று கூறினானென்க. (கஉஉ)

1288. கன்னியைக் கடித்த நாகங் கன்னியே கன்னி நோக்கம், அன்னதே யரசர் சாதி மூன்றெயி றழுந்தி யாழ்ந்த, கொன்னுமா நாகங் கொண்டாற் கொப்புளாம் விரலிற் றேய்த்தால், மன்னிய தெண்மட் டாயின் மண்டலிப் பால தென்றான்.

(இ - ள்.) கடித்தவாயை விரலாற்றேய்த்தால், அது மாநாகங் கொண்டதாயிற்கொப்புள் கொள்ளும்; தெண்மட்டுப்போல் நீர்பாயு மாயின் மண்டலிப்பகுதியாம்; இது கொப்புள் கோடலின், இவளைக் கடித்த பாம்பு கன்னியே; சாதி அரசர்சாதியே; தைத்தழுந்தின பல் யமதூதியொழிந்த காளி, காளாத்திரி, யமனென்னு மூன்றுமே; உதயமும் கன்னியே; ஆதலின், இஃது அன்னதேயென்றானென்க.

குக்குடசர்ப்பமாதலின், அதற்குக் கேடில்லையென்று கருதி, 'கன்னியே' என்றான். 'அன்னதே' என்றது, தான் முன் இறத்தலில்லை யென்றதனை. (கஉ௩)

1289. குன்றிரண் டனைய தோளான் கொழுமலர்க் குவளைப் போதங், கொன்றிரண் டுருவ மோதி யுறக்கிடை மயில னுடன், சென்றிருண் டமைந்த கோலச் சிகழிகை யழுத்திச் செல்வன், நின்றிரண் டுருவ மோதி நேர்முக நோக்கி னானே.

பந்தியா - வேறு ஒன்றும் கூடாத. பழுப்பு - அரிதாரம். பழுப்பைப்போல் நாறினால் சூத்திரன்பாலது; சூத்திரசாதிப் பாம்பாகும்.

(உரை) [1] (பி - ம்) 'விஷஹாஹஸம்'. 'சித்தராரூடச்சிந்து' என்ற விஷவைத்திய நூல் ஒன்று தமிழில் அருகி வழங்குகின்றது.

1288. கன்னியை - பதுமையை. நோக்கம் கன்னி - உதயமும் கன்னியே. அன்னதே - ஆதலால். யான் முன்பு இவள் இறவாள் என்று கூறினதுதான். இப்பாம்பின் சாதி அரசர்சாதியே. அழுந்தி ஆழ்ந்த மூன்று எயிறு - தைத்து அழுந்திய பற்கள் யமதூதி ஒழிந்த காளி, காளாத்திரி, யமன் என்னும் மூன்றுமே; "கடுவமரும், நாலெயிற்றுக்கும்- பெயர் சொல்வேன் - காளி காளாத்ரி யமன்யமதூதனும்" (சித்தரா ரூடச்சிந்து); முருகு. 148, ந. விரலிற்றேய்த்தால், மாநாகம் கொண்ட தாயின் கொப்புள் ஆம்; கொப்புள் - கொப்புளம். தெண்மட்டாயின் மண்டலிப்பாலது - தெளிந்த தேன்போல் நீர்வருமாயின் மண்டலி கடித்ததாகும்.

1289. தோளான் : சீவகன். குவளைப்போதை அழுத்தியென இயைக்க. ஒன்று இரண்டு உருவம் - மூன்று உரு. உறக்கிடை -

மலர் முதற்கு அடை. ஒன்றுமிரண்டுமென உம்மைத்தொகை. உரு உருவமென ஈறுதிரிந்தது. உறக்கத்திடத்து மயில். முகம் - தியானம். இவன் [1] ஐந்துரு ஓதினமையின், இவன் கூறிய மந்திரம் பஞ்சநமஸ்கார மாம்.

(இ - ள்.) தோளான், குவளைப்போதை அங்கே மூன்றுருவோதித் தான் சென்று மயிலனுள் தன் முடியிலேயழுத்தி, அவன் பெயர்ந்து நின்று பின்னும் இரண்டுருவோதி முகத்தை நேரே நோக்கினனென்க. (கஉச)

1290. நெடுந்தகை நின்று நோக்க நீள்கடற் பிறந்த கோலக்
கடுங்கதிர்க் கனலி கோப்பக் காரிருளுடைந்த தேபோல்
உடம்பிடை நஞ்சு நீங்கிற் றொண்டொடி யுருவ மார்ந்து
குடங்கையி னெடிய கண்ணாற் குமரன்மே னோக்கி னாளே.

(இ - ள்.) அந்நெடுந்தகை நின்று தியானித்து நோக்குதலின், கனலியெதிர்க்க இருளுடைந்தாற்போலே உடம்பில் நஞ்சு நீங்கிற்று; அது நீங்கின பின்பு அவன் வடிவை அவன் கண்ணால் நுகராநிற்க, அவ் வொண்டொடி தன் கண்களாலே குமரன்மேலே நோக்கினாளென்க.

ஆர்ந்து - ஆர. (கஉரு)

1291. நோக்கினா ணிறையு நாணு மாமையுங் கவினு நொய்திற்
போக்கினாள் வளையும் போர்த்தாள் பொன்னிறப் பசலை
மூழ்கித் [மூழ்கிற்
றாக்கினா ளநங்க னப்புத் தூணியை யமரு ளாற்ற
தோக்கிய முருக னெஃக மோரிரண் டனைய கண்ணாள்.

---

தூக்கத்தில். மயிலனுள் : பதுமை. சிகழிகை - மயிர்முடி. செல்வன் : சுட்டுப்பெயர் மாத்திரையாய் நின்றது.

(உரை) [1] ஐந்துரு வென்பன முதலிற் கூறிய மூன்றும், பின்பு கூறிய இரண்டும்.

1290. நெடுந்தகை - சீவகன். நோக்க - தியானித்துப் பதுமையைப் பார்த்தலால். கோலம் - அழகு. கதிர்க்கனலி - கிரணங்களையுடைய சூரியன் ; கனலி - சூரியன். கோப்ப - எதிர்க்க. உடம்பிடை - பதுமையினுடைய உடம்பில். சீவகனுடைய நோக்கிற்குச் சூரியனும், விஷத்திற்கு இருளும் உவமைகள். ஒண்டொடி உருவம் ஆர்ந்து - பதுமையினுடைய வடிவத்தைச் சீவகன் கண்ணால் நுகர ; ஆர்ந்து - ஆர ; எச்சத்திரிபு. குடங்கையின் - உள்ளங்கையைக் காட்டிலும். குமரன்மேல் - சீவகன் மேலே. பதுமை நோக்கினாள்.

1291. நோக்கினாள் - நோக்கியவள் ; பெயர். நிறை - மனத்தை ஒரு நெறியில் நிறுத்தல். கவின் - அழகு. நொய்தின் - விரைவாக. நிறை முதலியவற்றையும் வளையையும் நொய்திற் போக்கினாள் என்க. பொன்

முருகன் அமருள் அமையாது ஒக்கிய ஒருவேல் இரண்டானாலனைய கண்; "அஞ்சுடர் நெடுவே லொன்றுநின் முகத்துச், செங்கடை மழைக்க ணிரண்டா வீத்தது" (சிலப். 2 : 51 - 2) என்றார் பிறரும்.

(இ - ள்.) அங்ஙனம் பார்த்த கண்ணாள், நிறைமுதலியவற்றையும் வளையையும் முன்புநோக்கிப் போந்தவள், ஈண்டு அவற்றை நொய்திற் போக்கினாள்; போக்கினபின்பு பசலையைப் போர்த்துக்கொண்டாள்; அப்பொழுது தன்னுள்ளே அம்பெலாமுழுகிற்று; முழுகினபின்பு அவ்வடிவாலே காமற்கு ஓர் அப்புத்தூணியை உண்டாக்கினாளென்க. (கஉசு)

## (வேறு)

1292. ஆட்சி யைம்பொறி யாள னுடம்பெனும்
பூட்சி நீள்கொடிப் புற்றி னகத்துறை
வாட்க ணோக்கெனும் வையெயிற் றுரழல்
வேட்கை நாகத்தின் மீட்டுங் கொளப்பட்டாள்.

(இ - ள்.) தாம் ஏவல்கொள்ளுந் தொழிலையுடைய ஐம்பொறியை ஆளுதலையுடையானது உடம்பென்னும் புற்றிடத்தேயுறைகின்ற வேட்கையாகிய நாகத்தினது நோக்கென்னும் எயிற்றின் நஞ்சாலே, வாட்கண்ணிணையுடையாள் மீட்டும் கொள்ளப்பட்டாளென்க.

---

னிறப் பசலையால் உடம்பைப் போர்த்தாள்; பசலை - பசப்பு நிறம். மூழ்கிற்று - தன்மீது மன்மதபாணங்கள் அழுந்தின. ஆக்கினாள் - உண்டாக்கினாள். அனங்கன் - மன்மதன். அப்புத் தூணி - அம்பறாத் தூணி; அனங்கற்கு அம்புத்தூணியை ஆக்கினாள் எனமாறுக; என்றது மன்மத பாணம் புகுந்தமையால் தன்னுடைய வடிவை அப்புத் தூணியாக ஆக்கினாள் என்றவாறு. அமருள் - போரில். ஆறாது - அமையாமல். ஒக்கிய - பகைவரைக் கொல்லுதற்கு அறுதியிட்டு வைத்த; பட்டினப். 299, ந. எஃகம் - வேல். முருகன், அமருள் ஆறாது ஒக்கிய ஓர் எஃகம் இரண்டனைய கண்ணாள் என மாறியியைக்க; "முருகன் வேலும்......தனிக் கவர்ந்தவுனக்கு" (நைடதம், அன்ன. தூது. 119). கண்ணாள்: பதுமை; எழுவாய்.

(மேற்.) அடி, 4 : சிலப். 2 : 49-52, அடியார்.

1292. ஐம்பொறியாட்சியாளனுடைய உடம்பு என மாறியியைக்க; ஆட்சியாளன் - ஆளுதலையுடையவன். பூட்சி நீள்கொடி - மேற்கோளாகிய நீண்ட கொடி வளரப்பட்ட. உடம்பெனும் புற்று, பூட்சிநீள் கொடியையுடைய புற்று எனப்பிரித்தியைக்க. வாட்கண் - வாள்போலும் கண்ணையுடைய பதுமை. எயிற்றுரழல் - பல்லிலுள்ள அரிய விஷத்தால். வேட்கை நாகம் - ஆசையாகிய பாம்பு. புற்றினகத்து உறைகின்ற, வேட்கையாகிய நாகத்தினது நோக்கெனும் எயிற்றுரழலால் வாட்கண் மீட்டும் கொளப்பட்டாள் என மாறியியைக்க.

மேற்கோளாகிய கொடி வளரப்பட்ட புற்றென்க. வாட்கண் : உவமத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை ; இது பதுமைக்கு ஒரு பெயர். "நாட்ட மிரண்டு மறிவுடம் படுத்தற்குக், கூட்டி யுரைக்குங் குறிப்புரை யாகும்" (தொல். களவு. 5) என்றதனுல், இருவரும் எதிர் நோக்கியவிடத்துக் கூட்டும் குறிப்புரை நிகழ்த்தும் இயற்கைப்புணர்ச்சி நிகழாமையின், அவட்குநிகழ்ந்த முன்னிற்கவியிற்கூறிய வருத்தத்திற்கு இவன்வேட்கைநோக்கமே காரணமென்று இக்கவியிற்கூறினர். இந் நோக்கமின்றேல் இவட்கு இது நிகழாதென்க; "பெருமையு முரனு மாடூஉ மேன" (தொல். களவு. 7) என்பதனுன், [1] இவற்கு வருத்தம் புலப்படாதாயிற்று. (கஉஎ)

1293. மாழ்கி வெய்துயிர்த் தாண்மட வாளெனத்
தோழி மார்களுந் தாயருந் தொக்குடன்
சூழி யானையன் ருய்தொடி னஞ்சறும்
வாழி யென்றனர் வம்பலர் கோதையார்.

(இ - ள்.) கோதையாராகிய தோழியரும் செவிலியரும், மடவாள் மயங்கி உயிர்த்தாள் ; இனி, இது வேட்கையென்றெ கருதிச் சேரத் திரண்டு, யானையன்ருய்! வாழ்வாயாக ; நீ தீண்டித்தீர்ப்பையாயின், நஞ்சறுமென்றுரென்க.

அன்ருன், தொழிலிற் கூறு மானெ னிறுதியின் கூருய் ஆயேற்றது; தொல். விளி. 16. (கஉஅ)

1294. கண்ணிற் காணினுங் கட்டுரை கேட்பினும்
நண்ணித் தீண்டினு நல்லுயிர் நிற்குமென்
றெண்ணி யேந்திழை தன்னை யுடம்பெலாம்
தண்ணென் சாந்தம்வைத் தாலொப்பத் தைவந்தான்.

---

(உரை) [1] இவற்கு - சீவகனுக்கு.

1293. மாழ்கி - மயங்கி. மடவாள் : பதுமை. என - இவள் வேட்கையுற்ருள் என்று எண்ணி. தாயர் - செவிலித்தாயர். உடன் தொக்கு - சேரத்திரண்டு. சூழியானை - முகபடாத்தையணிந்த யானை. யானையன்ருயென்றது சீவகனை ; விளி. தொடின் நஞ்சு அறும் - நீ பதுமையைத் தீண்டினுல் விஷம் நீங்கும். வம்பு அலர் - வாசனை பரவிய. கோதையாராகிய தோழிமார்களும், தாயரும் மடவாள், மாழ்கி வெய்துயிர்த்தாள் என உடன் தொக்கு, யானையன்ருய், வாழி நீ தொடின் நஞ்சு அறும் என்றனர் எனமாறி முடிக்க.

1294. கட்டுரை - தன்னைக் காதலித்தோருடைய புனைந்துரையை. தீண்டினும் - தொட்டாலும். காணினும், கேட்பினும், தீண்டினும் என்பவைகளின் முன்பு தனித்தனியே 'காதலித்தோரை' என ஒருசொல் வருவித்து முடிக்க. ஏந்திழைதன்னை : பதுமையை. தண்ணென் - குளிர்ந்த. சாந்தம் வைத்தாலொப்ப - சந்தனத்தைப் பூசினுற்போல. தைவந்தான் -

(இ - ள்.) அதுகேட்டு, காதலித்தோரைக்காணினும் கேட்பினும் தீண்டினும் நல்லுயிர்நிற்கும்; அது நமக்கும் ஒக்குமென்றெண்ணிச் சாந்தம் பூசினாற்போலே குளிரும்படி ஏந்திழைதன்னை உடம்பெல்லாம் தைவந்தானென்க. (கஉகூ)

1295. மற்ற மாதர்தன் வாட்டடங் கண்களால்
உற்ற நோக்க முருதலதொர் நோக்கினிற்
சுற்றி வள்ளலைச் சோர்வின்றி யாத்திட்டாள்
அற்ற மில்லமிர் தாகிய வஞ்சொலாள்.

(இ - ள்.) அமிர்தமாகிய அஞ்சொலாள், தன்கண்களாலே தான் அவற்கு அன்புற்ற நோக்கத்தைப் பிறர் அயிராததொரு நோக்காலே வள்ளலைச்சுற்றித் தப்பாமற் கட்டினளென்க.

மாதர் - காதல். அற்றமிலமிர்து - ஒருவன் கைப்படாவமிர்து. (கூ0)

(வேறு)

1296. (க) விஞ்சையர் வீர னென்பார் விண்ணவர் குமர னென்பார், எஞ்சிய வுயிரை மீட்டா னிவனலா லில்லை யென்பார், மஞ்சுசூ ழிஞ்சி மூதூர் மாமுடிக் குரிசி றானை, நஞ்சுசூழ் வேலி னற்கே நங்கையைக் கொடுக்கு மென்பார்.

(க) போனவுயிரை மீட்டான் இவனல்லது வேறொருவனில்லை; இவ்வூரையுடைய தனபதி நாளை இவற்கே நங்கையைக் கொடுக்குமென்பாரென்க.

1297. (உ) விளங்கொளி விசும்பில் வெண்கோட் டிளம்பிறை சூழ்ந்த மின்போல், வளங்கெழு வடத்தைச் சூழ்ந்து வான்பொ னாண் டிளைப்பச் சேர்ந்த, இளங்கதிர் முலைக டம்மா லிவனைமார் பெழுதி வைகிற், றுளங்குபெண் பிறப்புந் தோழி யினிதெனச் சொல்லி நிற்பார்.

---

தடவினான். சாந்தம் வைத்தாலொப்ப ஏந்திழை தன்னை உடம்பெல்லாம் தைவந்தான் எனமாறியிசைக்க..

1295. மற்று : அசை. மாதர்தன் - காதலையுடைய தனது. உற்ற நோக்கம் - தான் சீவகனிடத்துக் காதலுற்ற குறிப்பினை. உறாததொர் நோக்கினில் - பிறர் ஐயமுறாததொரு நோக்கத்தால். வள்ளலை - சீவகனை. சோர்வின்றி - தப்பாமல். யாத்திட்டாள் - கட்டினாள். அற்றமில் - குற்றமில்லாத எனினுமாம். சொலாள் : பதுமை. அமிர்தாகிய சொலாள், தன் கண்களால் வள்ளலைச் சுற்றி யாத்திட்டாள் என்க.

1296. விஞ்சையர் - வித்தியாதரர். எஞ்சிய உயிரை - போன உயிரை. இவன் : சீவகன். இவனல்லாது வேறொருவனும் இல்லை. மஞ்சு - மேகம். இஞ்சி - மதில். இஞ்சியையுடைய மூதூர் : சந்திராபம். மூதூரையுடைய குரிசிலென்றது தனபதியை. வேலினற்கு : சீவகனுக்கு. நங்கையை : பதுமையை.

1297. ஒளியையுடைய விசும்பில். வெண்கோட்டு இளம்பிறை - வெண்மையான நுனிகளையுடைய இளைய சந்திரனை. பிறையைச் சூழ்ந்த

(உ) விசும்பிலே இளைய பிறையைச் சூழ்ந்த மின்போலே முத்து வடத்தைச் சூழ்ந்து பொன்ஞாண் அசைதலாலே சிவந்த இளையமுலைக ளாலே இவனை மார்பையெழுதி வைகப்பெறின், நிலைநில்லாத பெண் பிறப்பும் நன்றென்று சொல்லிநிற்பாரென்க. இவனை மார்பெழுதி வைகின் இனிதென்றார், [1] கொடிதென்றதனால்.

1298. (ரு) அருந்தவஞ் செய்து வந்த வாயிழை மகளிர் யார் கொல், பெருந்தகை மார்பிற் றுஞ்சிப் பெண்மையாற் பிணிக்கு நீரார், கருங்கணின் யாமுங் கண்டாங் காமனை யென்று சொல் லித், திருந்தொளி முறுவற் செவ்வாய்த் தீஞ்சொலார் மயங்கி னாரே.

இவை மூன்றும் ஒருதொடர்.

(இ - ள்.) தீஞ்சொலார், என்பார், என்பார், என்பார், சொல்லிநிற் பாராய் யாமும் காமனைக் கண்ணாலே கண்டேம்; இங்ஙனமன்றி இவன் மார்பிலே தங்கிப் பிணிக்குநீராராக அருந்தவஞ்செய்துவந்த மகளிர் யார்கொலென்று சொல்லி மயங்கினாரென்க. (கஉக - ரு)

1299. பன்மலர்ப் படலைக் கண்ணிக் குமரனைப் பாவை நல்லார்
மன்னவன் பணியின் வாழ்த்தி வாசநெய் பூசி நன்னீர்
துன்னினராட்டிச்செம்பொற்செப்பினுட்டுகிலுஞ்சாந்தும்
இன்னறும் புகையும் பூவுங் கலத்தொடு மேந்தி னாரே.

(இ - ள்.) தனபதியேவலாலே, நல்லார் குமரனைத் துன்னினராய் நெய்பூசி நன்னீராலாட்டி வாழ்த்தித் துகில்முதலியவற்றை ஏந்தினா ரென்க. (கஉச)

---

மின்னைப்போல வடத்தை - முத்துவடத்தை. திளைப்பச்சேந்த - இடை விடாமல் தங்குவதாற் சிவந்த. முத்துவடத்திற்குப் பிறைச்சந்திரனும் பொன்ஞாணுக்கு மின்னும் உவமைகள். சேந்த முலைகள் தம்மால். இவன்: சீவகன். இவனது மார்பை. வைகின் - தங்கப்பெற்றால். துளங்கு பெண்பிறப்பும் இனிது - நிலைநில்லாத பெண்பிறப்பும் இனிமையை யுடையதாகும். தோழி: விளி.

(உரை) [1] கொடிதென்றது சீவகன் முன்பு கூறியதை; "இறைவனை யவரை நோக்கி யென்கொடி துற்றதென்றான்" (சீவக 1283)

1298. இழை - ஆபரணம். இழையையுடைய மகளிர். பெருந்தகை மார்பில் - சீவகனுடைய மார்பில். துஞ்சி - தங்கி. பெண்மையால் பிணிக் கும் நீரார் - தமது பெண்மைத் தன்மையால் கட்டுகின்ற தன்மையை யுடையவராக. கணின் - கண்ணால். கண்டாம் - பார்த்தோம். ஒளியை யுடைய முறுவல். முறுவலையும் செவ்வாயையுமுடைய தீஞ்சொலார்; என்றது அங்குள்ள மகளிரை. தீஞ்சொலார், யாமும் காமனைக் கண்ணாற் கண்டாம்; பெருந்தகையைப் பிணிக்கும் நீராராக அருந்தவம் செய்த மகளிர் யார் கொல்? என்று சொல்லி மயங்கினார் என மாறியியைக்க.

1299. பலமலராலாகிய படலைக்கண்ணி; படலை - தழை; இது வகை மாலை யென்று கூறப்படும்; சீவக. 483, அடிக். கண்ணியையுடைய

1300. ஏந்திய வேற்பத் தாங்கி யெரிமணிக் கொட்டை நெற்றி
வாய்ந்தபொன் குயிற்றிச் செய்த மரவடி யூர்ந்து போகி
ஆய்ந்தநன் மாலை வேய்ந்த வரும்பெறற் கூடஞ் சேர்ந்தான்
பூந்தொடி மகளிர் போற்றிப் பொற்கலம் பரப்பி னாரே.

(இ-ள்.) அவர்களேந்தியவற்றைப் பொருந்த மெய்ப்படுத்து மணிக் கொட்டையை நெற்றியிலே யழுத்திப் பொன்னாற்செய்த மரவடியைத் தொட்டுப்போய்க் கூடத்தைச்சேர்ந்தான்; அப்பொழுது மகளிர் கலத்தைப் பரப்பினாரென்க. (கா௩)

1301. கன்னியர் கரக நீராற் றாமரை கழீஇய தொப்பப், பொன் னடி கழீஇய பின்றைப் புரிந்துவாய் நன்கு பூசி, இன்மலர்த் தவிசி னுச்சி யிருந்தமிர் தினிதிற் கொண்டான், மின்விரிந் திலங்கு பைம்பூண் வேற்கண்ணார் வேனி லானே.

(இ-ள்.) கன்னியர் நீராலே பொன்னடிகளைக் கழுவினபின்பு, வேனிலான், விரும்பி வாய்பூசித் தவிசின்மேலேயிருந்து அடிசிலை முற்பட இனியவற்றோடேயுண்டானென்க.

"நீராடிக் கால்கழுவி வாய்பூசி" (19) என்றும், கைப்பன வெல்லாங் கடைதலை த்தித்திப்ப" (25) என்றும் ஆசாரக்கோவையிற் கூறினார்.
(கா௪)

---

குமரனை - சீவகனை; பாவைபோன்ற நல்லார் : மகளிர்; மன்னவன் பணியின் - தனபதியினுடைய ஏவலால். வாசங்கலந்த எண்ணெய். துன்னினர் - அடைந்தவராய். செப்பில் துகில் முதலியவற்றை வைத்து ஏந்துதல் : சீவக. 2473-5. புகை - அகில் முதலியவற்றாலாக்கிய வாசனைப் புகை. கலம் - ஆபரணம். மன்னவன் பணியால், நல்லார் குமரனைத் துன்னினராய் நெய்பூசி, நீராலாட்டி, வாழ்த்திச் செப்பினுள், கலத்தொடு துகில் முதலியவற்றை ஏந்தினர் என மாறிமுடிக்க.

1300. ஏந்திய - மகளிர் ஏந்தியவற்றை. ஏற்பத் தாங்கி - பொருந்தத் தன் உடம்பில் அணிந்துகொண்டு. எரிமணிக்கொட்டை - ஒளிவிளங்கும் மணியாலாகிய குமிழை. நெற்றி - பாதக்குறட்டின் நுனியில். குயிற்றி - அழுத்தி. மரவடி - பாதக்குறடு. மணிக்கொட்டையை நெற்றியிற் குயிற்றிச் சிறப்பு வாய்ந்த, பொன்னாற்செய்த மரவடியை. ஊர்ந்து போகி - தொட்டு நடந்து சென்று. மாலையால் வேய்ந்த கூடத்தைச் சேர்ந்தான்; வேய்ந்த - அணிந்த; சீவக. 870, ந. போற்றி - சீவகனைப் புகழ்ந்து. பொற்கலம் - பொன்னாற்செய்த தட்டு.

1301. கரகநீரால் - கமண்டலத்திலுள்ள நீரால். கழீஇயது - கழுவியதை. சீவகனுடைய அடிக்குத் தாமரை உவமை. கன்னியர் பொன்னடியைக் கழுவிய பின்றை. புரிந்து - விரும்பி. தவிசின் உச்சி - ஆசனத்தின்மீது. அமிர்து இனிதிற் கொண்டான் - உணவை இனியவற்றோடே

1302. வாசநற் பொடியு நீருங் காட்டிடக் கொண்டு வாய்ப்பப்
பூசறுத் தங்கை நீரை மும்முறை குடித்து முக்காற்
காசறத் துடைத்த பின்றைக் கைவிர லுறுப்புத் தீட்டித்
தூசினு லங்கை நீவி யிருந்தனன் றேற்ற மிக்கான்.

(இ - ள்.) மிக்கவன், பொடியையும் நீரையும் அவர்கள் காட்டுதலின், அவற்றைக்கைக்கொண்டு பூசுந்தொழிலை முடித்து, அங்கையிற்கொண்ட நீரை முக்காற்குடித்து வாயை முக்காற்றுடைத்து விரலைக் கண்முதலிய வுறுப்புக்களிலே தீண்டுவித்துத் துடைத்திருந்தானென்க.

தூசு - [1] ஒலியல். "முக்காற் குடித்துத் துடைத்து முகத்துறுப், பொத்த வகையால் விரலுறுத்தி வாய்பூசல்" (ஆசாரக். 27) என்றுர் பிறரும். (கருஎ)

1303. சீர்கொளச் செய்த செம்பொ னடைப்பையுட் பாகு செல்ல, வார்கழற் குருசில் கொண்டு கவுளடுத் திருந்த வாங்கட், போர்கொள்வேன் மன்ன னெல்லாக் கலைகளும் புகன்று கேட்டு, நீர்கொண்மாக் கடல னுற்கு நிகரில்லை நிலத்தி லென்றுன்.

(இ - ள்.) பொன்னுற்செய்த அடைப்பையிற் பாக்கும் வெற்றிலையும் செல்ல, குருசில், அதனை வாங்கிக்கொண்டு தின்றிருந்தவளவிலே, தனபதி, இவன்கலைகளையெல்லாம் விரும்பிக்கேட்டு, இவற்கு நிலத்தில் நிகரில்லையென்றுனென்க. (கருஅ)

---

உண்டான். மின் - ஒளி. பூண் - ஆபரணம். வேற்கணர் - வேல்போலும் கண்ணையுடைய மகளிர். வேனிலான் - மன்மதனைப் போன்றவனுகிய சீவகன். பூணையுடைய வேற்கணுர்க்கு வேனிலான் அமிர்து இனிதிற் கொண்டான் என்க.

1302. வாசனைப்பொடி. காட்டிட - மகளிர் காட்டுதலால். கொண்டு - அவற்றைக் கைக்கொண்டு. பூசு அறுத்து - வாய்பூசுந் தொழிலை முடித்து. முக்கால் காசறத் துடைத்த பின்றை - மூன்றுமுறை வாயைத் துடைத்த பின்பு. விரல் உறுப்புத் தீட்டி - விரலைக் கண் முதலிய அங்கங் களிலே தொட்டு. தூசினுல் - மேலாடையால். நீவி - துடைத்து. தேற்ற மிக்கானென்றது சீவகனை.

(உரை) [1] ஒலியல் - மேலாடை.

1303. அடைப்பை - வெற்றிலைப் பை. செம்பொன்னுல் சீர்கொளச் செய்த அடைப்பை என மாறியியைக்க பாகு - பாக்கு ; இதனேடு 'வெற் றிலை' என ஒரு சொல்லை வருவிக்க. குருசில் : சீவகன். கொண்டு - பாக்கையும் வெற்றிலையையும் வாங்கிக்கொண்டு. கவுள் - கன்னம் ; ஈண்டு அதன் உட்புறத்தைக் குறித்தது. கவுளடுத்து - தின்று. மன்னன் - தனபதி. சீவகன் கற்ற கலைகளை யெல்லாம் புகன்று கேட்டு ; புகன்று - விரும்பி. கடலனுற்கு - சீவகனுக்கு ; கல்விகேள்விகளால் நிரம்பிய புலமையையுடையவனுதலின் 'கடலனுன்' என்றுர். நிலத்தில் நிகரில்லை என்றுன் எனமாறியியைக்க.

## (வேறு)

1304. பரிதி பட்டது பன்மணி நீள்விளக்
கெரிய விட்டன ரின்னிய மார்த்தன
அரிய பொங்கணை யம்மெ னமளிமேற்
குரிசி லேறினன் கூர்ந்தது சிந்தையே.

(இ - ள்.) அவ்வளவிலே ஞாயிறுபட்டது; மணியும் விளக்கும் எரியும்படியிட்டனர்; பல்லியங்களும் ஆர்த்தன; தனித்தார்க்குப் பொறுத்தற்கரிய படுக்கைமேலே குரிசில் ஏறினன்; அப்பொழுது வருத்த மிக்கதென்க. (௧௩௯)

1305. பூங்க ணவ்வயி னோக்கம் பொருதபோல்
வீங்கி வெம்மைகொண் டேந்தின வெம்முலை
ஈங்கி தென்னென விட்டிடை நைந்தது
பாங்கி லாரிற் பரந்துள தல்குலே.

(இ - ள்.) அவள்கண்கள், அவ்விடத்து யான் நோக்கின நோக்கத்தைப் பொறாதே நிலநோக்கி என்னைவருத்தினாற்போலே, பின்பு முலைகளும் வீங்கிக் கொடுமைகொண்டு ஏந்தி வருத்தின; இவ்விடத்திற் பொறுமை என்னே யென்று இடை நைந்தது; அதுகண்டு பிறரிடுக்கண் கண்டு மகிழ்வாரைப் போலே அல்குல் பரந்ததென்க.

பரந்துளது : ஒருசொல். இனிக் கண்கள் தமக்கு முற்பட்டு வருத்தியதற்குப் பொறுதனபோலே பின்பு முலைகளும் வருத்தின வென்றுமாம். (௧௪௦)

---

1304. பரிதிபட்டது - சூரியன் மறைந்தான். மணியையும், விளக்கையும் எரியும்படி இட்டனர்; இட்டனர் - வைத்தார்கள். இயம் - வாத்தியங்கள். அரிய - தனித்திருப்பவர்க்குப் பொறுத்தற்கரிய. அம் மென் அமளி - அழகிய மெல்லிய படுக்கை. பொங்கணையாகிய அம்மென் அமளிமேல் என்க. குரிசில் : சீவகன். சிந்தை கூர்ந்தது - காமத்தால் வருத்தம் மிக்கது.

1305. பூங்கண் - பதுமையினுடைய பூப்போலும் கண்கள். நோக்கம் பொருதபோல் - நான் நோக்கின நோக்கத்திற்குப் பொறாமல் நிலத்தைநோக்கி என்னை வருத்தினாற்போல. வெம்மை - கொடுமை. ஏந்தின - உயர்ந்தன. முலைவீங்கி வெம்மைகொண்டு ஏந்தினவாய் வருத்தின. இது என்என - இப்பொறுமை என்னென்று. இட்டு இடை - சிறிய இடை. பாங்கிலாரின் - பிறர் துன்பத்தைப் பார்த்து மகிழும் நன்மையில்லாரைப் போல. பரந்துளது - பரந்தது. அல்குல் பரந்துளது : “ வாமமே கலையினுள் வளர்ந்த தல்குலே ” (கம்ப. கார்முக. 62). இதுமுதல் நான்கு பாடல்கள் சீவகன் கூற்று.

1306. முருகு வார்குழ லாண்முகிழ் மென்முலை
பெருகு நீர்மையிற் பேதுற வெய்திநின்
றுருகு நுண்ணிடை யோவியப் பாவைதன்
அருகு நோக்கமெ னாவி யலைக்குமே.

**(இ - ள்.)** குழலாள், ஓவியப்பாவை, அவள் முலைகளும் அவை பெருகுந்தன்மையாலே வருந்துமிடையும் [1] குறிக்கொண்டு நோக்காத நோக்கமும் வருத்து மளவன்றி என்னாவியைக் கெடுக்குமளவாகா நின்றனவென்க. (கசக)

1307. புகைய வாவிய பூந்துகி லேந்தல்குல்
வகைய வாமணி மேகலை வார்மது
முகைய வாவிய மொய்குழல் பாவியேன்
பகைய வாய்ப்படர் நோய்பயக் கின்றவே.

**(இ - ள்.)** முகைவிரும்பின மொய்குழலையுடையாளது ஏந்து அல்குலிற் பூந்துகிலும், மேகலையும், பாவியேற்குப் பகையாந்தன்மையை யுடையவாய், நோயைப் பயவாநின்றனவென்க.

அல்குலைமறைத்தலின், [1] அவை பகையாயின. (கசஉ)

1308. போது லாஞ்சிலை யோபொரு வேற்கணோ
மாது லாமொழி யோமட நோக்கமோ
யாது நானறி யேனணங் கன்னவள்
காத லாற்கடை கின்றது காமமே.

---

1306. முருகு - வாசனை. குழலாள் - பதுமை. பெருகு நீர்மையின் - பெருகுகின்ற தன்மையால். பேதுறவு எய்தி - துன்பமடைந்து. உருகும் - வருந்துகின்ற. ஓவியப்பாவை : பதுமை. அருகு நோக்கம் - குறிக்கொண்டு நோக்காத நோக்கம். என் ஆவி அலைக்கும் - என் உயிரைக் கெடுக்கும். குழலாளாகிய ஓவியப்பாவையினுடைய முலையும் இடையும் நோக்கமும் என் ஆவியை அலைக்கும் என்க.

(உரை) [1] குறள், 1095.

1307. புகை அவாவிய பூந்துகில் - புகை ஊட்டப்பெற்ற, பூத்தொழிலமைந்த ஆடை. வகையவாம் மணிமேகலை - பலவகையையுடைய மணிகள் கோக்கப் பெற்ற மேகலை. வார் மது முகை - ஒழுகுகின்ற தேனையுடைய மொட்டு. அவாவிய - விரும்பிய. மொய்குழல் : பதுமை. பாவியேன் - பாவியாகிய எனக்கு. படர்நோய் பயக்கின்ற - காமமாகிய துன்பத்தைத் தருவதாகிய நோயை உண்டாக்குகின்றன. குழலாளது ஏந்து அல்குலின் துகிலும் மேகலையும் பாவியேற்கு நோயைப் பயக்கின்றன என மாறிமுடிக்க.

(உரை) [1] அவை துகிலும், மேகலையும்.

1308. போது உலாம் சிலையோ - மன்மதனுக்குரிய மலராகிய அம்பு உலாவுகின்ற வில்லோ; என்றது நெற்றியை. மாது உலாம் மொழி - காதலின் தன்மை உலாவுகின்ற சொல்; மாது = மாதர் - காதல். யாது நானறியேன் - இவற்றில் இன்னது என்னை வருத்துகின்றதென்று

(இ - ள்.) அணங்கன்னவளுடைய நுதலோ, கண்ணோ, நோக்கமோ, மொழியோ, காதலாலே காமத்தை மிகப்பண்ணுகின்றது; இவற்றில் இன்னதென்று யான்சிறிதும் அறிகின்றிலேனென்றானென்க.

சிலை - காமன் வில். இதனால், உறுப்புக்களெல்லாம் ஒக்கவருத்தின வென்றான். 'மொழியோ' என்றதனால், மொழியுங்கேட்டானென்பது பெற்றாம்; அன்றி, "அடிகளுக்கிறைஞ்சி" (சீவக. 1272) என்னும் கவியிற்கூற்றைத் தானும் பின்புகேட்டலின், மொழியோவென்றானென்றலுமொன்று. (கசஈ)

1309. (க) அண்ண லவ்வழி யாழ்துயர் நோயுற
வண்ண மாமலர்க் கோதையு மவ்வழி
வெண்ணெய் வெங்கனன் மீமிசை வைத்ததொத்
துண்ணை யாவுரு காவுள ளாயினாள்.

இதுமுதலாக, "பூமென்சேக்கை" (சீவக. 1315) அளவும் ஒரு தொடர்.

(க) அழுந்துதலுறுகின்ற வருத்தநோய் உறுநிற்க.

1310. (உ) பெயன்ம ழைப்பிற ழுங்கொடி மின்னிடைக்
கயன்ம ணிக்கணி னல்லவர் கைதொழப்
பயனி ழைத்தமென் பள்ளியுட் பைந்தொடி
மயனி ழைத்தவம் பாவையின் வைகினாள்.

---

யான் அறிகின்றிலேன். அணங்கன்னவள்: பதுமை. கடைகின்றது - மிகப்பண்ணுகின்றது; காமம் கடைதல்: குறுந். 340 : 1. அணங்கன்னவளுடைய சிலையோ, கண்ணோ, மொழியோ, காதலாற் காமத்தைக் கடைகின்றது; இன்னது என்று நான் அறியேன் என மாறியியைக்க.

1309. அண்ணல் - சீவகன். ஆழ்துயர் நோய் உற - அழுந்து தலுறுகின்ற வருத்தநோயை அடைய. கோதை: பதுமை. கனல் - நெருப்பு. மீமிசை - மேலே; ஒருபொருட்பன்மொழி; "கொல் களிற்று மீமிசை" (புறநா. 9 : 7); "ஓங்குயர் சமந்தத் துச்சி மீமிசை" (மணி. 11 : 22). உள்நையா உருகா - மனம் நைந்து உருகி. கனல்மிசை வைத்ததாகிய வெண்ணெயை ஒத்து உருகி; சீவக. 1255, அடிக்; "வெங்கனன் மீமிசை வைத்த வெண்ணெயின், நெஞ்ச முருக நிறுத்தலாற்றான்" (பெருங். 3 7 : 69 - 70). நாயகனும் நாயகியும் ஒருங்கே ஒருவரை யொருவர் நினைந்து வருந்துதல்: "காவினுட் காவலன் கலங்கக் கோயிலுட், பாசிழை யல்குற் பாவையும் புலம்பி" (பெருங். 3. 7 : 71-2); "எனவின் னனபன் னியிருந் துளைவாள்.........சோர்வுறு கால்.........அனகன் னினைகின் றனயா மறைவாய்" (கம்ப. கடிமணப். 12)

1310. பெயல் மழைப் பிறழும் கொடி மின் - பெய்தற் றொழிலையுடைய மேகத்தில் மாறுபடுகின்ற ஒழுங்குபட்ட மின்னல்; கொடி - ஒழுங்கு. மின்னைப்போலும் இடை. கயல் மணிக்கண் - கயல்மீன்

(உ) ஒழுங்குபட்ட மின்போன்ற இடையினையும் கண்ணினையு முடைய நல்லவர் கைதொழ. துணையுடையோர்க்குப் பயனுண்டாகப் பண்ணின பள்ளி.

1311. (ரு) வணங்கு நோன்சிலை வார்கணைக் காமனோ
மணங்கொள் பூமிசை மைவரை மைந்தனோ
நிணந்தெ னெஞ்சநி றைகொண்ட கள்வனை
அணங்கு காளறி யேனுரை யீர்களே.

(ரு) எல்லாரும் மனங்குழைதற்குக் காரணமான சிலை. பூமிசைத் தோன்றிய முருகன்; குறிஞ்சிநிலத்திற்குத் தெய்வமாகிய முருகன். நிணந்து-பிணித்து. பெரும்பான்மையும் தெய்வத்தன்மையுடைமையின், மகனோவென்றிலள். உரையீர்களே; ஏகாரம் : வினா.

1312. (சு) கடைகந் தன்னதன் காமரு வீங்குதோள்
அடையப் புல்லினன் போன்றணி வெம்முலை
உடைய வாகத் துறுதுயர் மீட்டவன்
இடைய தாகுமெ னுருமி லாவியே.

---

போன்ற அழகிய கண்; மணி - அழகு. இடையினையும் கண்ணையு முடைய நல்லவர்; என்றது மகளிரை. பயனிழைத்த பள்ளி - துணை யுடன் சேர்ந்திருப்பவர்க்கு இன்பப்பயன் உண்டாகச் செய்த படுக்கை. பைந்தொடி : பதுமை. மயன் : அசுரத்தச்சன். பாவையின் - பிரதி மையைப் போல.

1311. வணங்கு நோன்சிலை - எல்லாரும் மனம் குழைவதற்குக் காரணமான வன்மையையுடைய கரும்புவில். சிலையையும் கணையையு முடைய காமனோ; "கைச்சிலை கணையோ டேந்திக் காமனிக் கடையைக் காப்பான்" (சீவக. 2090); "பூமென் கணையும் பொருசிலையுங் கைக் கொண்டு, காமன் றிரியுங் கருவூரா" (சிலப். 5 : 49, அடியார். மேற்.); "கவர்கணை நோன்சிலைக் காம னிவனெனும்" (பெருங். 2. 15 : 97). மணங்கொள் பூமிசை மைந்தன் - வாசனையைக் கொண்ட தாமரைப் பூவின்மீது தோன்றிய முருகன்; "இமயக் குன்றினிற் சிறந்து, நின்னீன்ற நிரையிதழ்த் தாமரை" (பரி. 8 : 12-3). மை - மேகம். வரைமைந்தன் - மலைக்குத் தெய்வமாகிய முருகன். பூமிசை மைந்தன், மைவரைமைந்தன் எனப் பிரித்தியைக்க. நிணந்து - பிணித்து; "கட்டி னிணக்கு மிழிசினன்" (புறநா. 82 : 3, உரை). (பி - ம்.) 'நிணர்ந்து', 'நிணர்க்கும்.' என்னெஞ்சத்தை நிணந்து நிறைகொண்ட கள்வன்; சீவக. 714, அடிக்.; கள்வன் : சீவகன். அணங்குகாள் - தெய்வங்களே. காமனோ, மைந்தனோ வென்றறியேன்.

1312. கடைகந்து அன்ன தன் காமரு வீங்குதோள் - கடைந்து செய்த தூணைப் போன்ற அழகிய தன்னுடைய பெருத்த தோளால்.

(ச) ஆகத்தணிந்த வெம்முலையுற்ற பசப்புடையும்படி தன் தோளாலே புல்லினன்போன்று தடவி மீட்டவனென்க. இடை - இடம். போகாமல் நிறுத்துவார் ஒருவருமில்லாத உயிர்.

1313. (ரு) இறுதி யில்லமிர் தெய்துந ரீண்டியன்
றறிவி ளுடிய வம்மலை மத்தமா
நெறியி னின்றுக டைந்திடப் பட்டநீர்
மறுகு மாக்கடல் போன்றதென் னெஞ்சமே.

(ரு) சாதலில்லாமைக்குக் காரணமான அமிர்தத்தையெய்துந் தேவர்கள் திரண்டு தம்மறிவாலே அதனை ஆராயவேண்டி அன்று மந்தரம் மத்தாகநின்று நெறியிற்கடைந்திடப்பட்ட நீர்மறுகுங் கடலென்க.

1314. (சா) நகைவெண் டிங்களு நார்மட லன்றிலும்
தகைவெள் ளேற்றணற் ருழ்மணி யோசையும்
பகைகொண் மாலையும் பையுள்செ யாம்பலும்
புகையில் பொங்கழல் போற்சுடு கின்றவே.

---

அடைய - முழுவதும். உடைய - கெட்டுநீங்க. ஆகம் - மார்பு. துயரென்றது காமநோயால் உண்டாகிய பசலையை. மீட்டவனிடை - என் உயிரைப் பிழைக்கச் செய்தவனிடத்தே. ஆகத்து அணிந்த வெம்முலையின் உறுதுயர் உடையும்படி தன் தோளால் புல்லினன் போன்று கையால் தடவி மீட்டவன் என மாறியியைக்க. ஆரும் இல் ஆவி - நீங்காமல் நிறுத்துபவர் எவரும் இல்லாத உயிர். என் ஆவி மீட்டவனிடையதாகும் என்க.

1313. இறுதி இல் அமிர்து - சாவாமைக்குக் காரணமான அமிர்தத்தை. எய்துநர் - பெறுதற்கு விரும்பிய தேவர்கள். அன்று - அக்காலத்து. நாடிய - ஆராயவேண்டி. மலை மத்தமா - மந்தரமலையே மத்தாக. நீர் மறுகுகின்ற கடல்போன்றது; மறுகுதல் - கலக்கமடைதல். என்னெஞ்சம் மறுகுகின்ற கடல்போன்றது.

1314. நகை - ஒளி. மடல் - பனையின் மடல். நாரையுடைய மடலிலுள்ள அன்றில்; "மன்றப் பெண்ணை வாங்குமடற் குடம்பைத், துணைபுண ரன்றில்" (நற். 303 : 4-5); "மன்றவம் பெண்ணை மடல்சேர் வாழ்க்கை, அன்றிலும் பையென நரலும்" (குறுந். 177 : 3-4). தகை - பெருமை. ஏற்றணல் தாழ்மணி ஓசையும் - காளையினது அலைதாடியில் தங்கிய மணியினது ஒலியும். ஏற்றின் மணியோசை பிரிந்திருப்பவர்க்குத் துன்பத்தைச் செய்யும். மாலையும் - மாலைக் காலமும். பையுள் செய் - துன்பத்தைச் செய்கின்ற. ஆம்பலும் - ஆம்பற்பண்ணையுடைய குழலும். புகையில்லாத அழல் போல; அழல் - நெருப்பு.

(ஞ) நாரையுடைய மடல். கழுத்திலே தங்கிய மணி. ஆம்பல் - [1] ஆம் பற்பண்ணையுடைய குழல். புகையில்லா அழல் : இல்பொருளுவமை.

1315. (எ) பூமென் சேக்கையு ணற்றிய பூந்திரட்
டாமம் வாட்டுந் தகையவு யிர்ப்பளைஇக்
காமர் பேதைதன் கண்டரு காமநோய்
யாமத் தெல்லையோர் யாண்டொத் திறந்ததே.

(எ) பூந்தாமம்; திரளையுடைய தாமத்தை வாட்டுந் தகையவாகிய நெட்டுயிர்ப்புக் கலந்து. யாமம் - இரவு.

(இ - ள்.) அண்ணல், அங்ஙனம் நோயுறுநிற்க, கோதையும் நல்லவர் கைதொழச்சென்று அவ்வழிப்பள்ளியிலே தெய்வத்தச்சனியற்றிய பைந் தொடிப்பாவைபோலே வைகினாள்; அங்ஙனம் வைகினவள், திங்கள் அன்றில் முதலியன அழல்போற்சுடாநின்றன; அதனால், எனதுநெஞ்சம் கடல்போல மறுகாநின்றது; இங்ஙனம் மறுகும்படி என்னெஞ்சை நிணந்து நிறையைக் கொண்ட கள்வனை, யான் காமனோ! முருகனோ வென்று ஐயமுற்று இன்னனென்று அறிகின்றிலேன்; இல்லுறை தெய்வங்காள், நீங்களும் உரையீர்களோ? உரைத்திலிராயினும், என் ஆருயிர் ஆவி, துயர்மீட்டவன் இன்னும் அருளுவனோவென்று அவ னிடத்தே ஆகாநின்றதென்று தெய்வத்தை நோக்கிக் கூறி, உயிர்ப்பளைஇ வெண்ணெயை நெருப்பின்மேலே வைத்த தன்மையை யொத்து நெஞ் சுருகிப் பின்னும், அவன் அவ்விடத்தேயாதலின், இறந்துபடாளாயினாள்; அங்ஙனமிருந்த பேதைக்குத் தன் கண் தந்தநோயாலே இராப்பொழுதி னெல்லை ஓர் யாண்டை யொத்துக் கழிந்ததென்க. (கசச-ரு0)

1316. (க) மாதி யாழ்மழ லைம்மொழி மாதராள்
தாதி யவ்வையுந் தன்னமர் தோழியும்
போது வேய்குழற் பொன்னவிர் சாயலுக்
கியாது நாஞ்செயற் பாலதென் றெண்ணினார்.

---

(உரை) [1] "இயவர், தீங்குழ லாம்பலி னினிய விமிரும்" (ஐங். 215); "ஆம்பற் குழலாற் பயிர்பயிர்" (கலித். 108 : 62, ந.); "ஆய ரினம்பெயர்த் தாம்ப லடைதர" (திணைமொழியைம். 27); ஆம்பற் குழலென்பது கருவியாகும், பண்ணன்று எனக் காரணங்கூறி மறுப்பர் அடியார்க்கு நல்லார் (சிலப். 17 : 'பாட்டு' 4, உரை)

1315. பூமென் சேக்கையுள் - பொலிவு பெற்ற மெல்லிய படுக்கை யிடத்து. நாற்றிய பூந்திரள் தாமம் - தொங்கவிட்ட பூக்களின் தொகுதியை யுடைய மாலையை. வாட்டும் தகைய - வாடச்செய்யும் தன்மையவாகிய. அளைஇ - கலந்து. பேதை : பதுமை. தன் கண் தரும் காமநோயால்; "கருநெடுங் கண்டருங் காம நோயே" (நன். 402, மயிலை. மேற்.) யாமத்தெல்லை - ஓர் இரவின் கால அளவு. இறந்தது - நீங்கியது.

1316. மாது யாழ் மழலை மொழி மாதராள் - காதலையுடைய வீணை யைப்போலும் மழலைச் சொல்லையுடைய பதுமை; மகரம் சந்தநோக்கி

1317. (உ) அழுது நுண்ணிடை நையவ லர்முலை
முழுதுங் குங்கும முத்தொட ணிந்தபின்
தொழுது கோதையுங் கண்ணியுஞ் சூட்டினார்
எழுது கொம்பனை யாரிளை யாளையே.

1318. (௩) வேந்து காயினும் வெள்வளை யாயமோ
டேந்து பூம்பொழி லெய்தியங் காடுதல்
ஆய்ந்த தென்றுகொண் டம்மயில் போற்குழீஇப்
போந்த தாயம் பொழிலும் பொலிந்ததே.

இவை மூன்றும் ஒருதொடர்.

(க) காதலையுடைய யாழ்போலு மொழியினையுடைய பதுமை.

(உ) நுண்ணிடை: பதுமை. இளையாளென்றது அவளென்னுஞ் சுட்டு. கொம்பனையார்: செவிலியும் தோழியும்.

(௩) [1] நெருநற் பாம்புதீண்டின பொழிலிலே போகவிட்டது என்னென்று தனபதி கோபிக்கினும். ஆய்ந்தது - ஆராயப்பட்ட காரியம்.

(இ - ள்.) அவ்விரா அங்ஙனநீங்கிற்றாக, நுண்ணிடையினையுடையாள் அழுது நையாநிற்க, அம்மாதராள்தாதியாகிய தாயுந் தோழியும்,

---

விரிக்கப்பட்டது. தாதி - ஏவல்செய்பவள். அவ்வை - தாயாகிய திலோத்தமை. தன் அமர் - தன்னை விரும்புகின்ற. போது வேய்குழல் பொன் அவிர் சாயலுக்கு - பூக்கள் அணிந்த கூந்தலையும், பொன்னைப்போல் விளங்குகின்ற சாயலையுமுடைய பதுமைக்கு. மாதராளுடைய தாதி முதலானவர்கள் சாயலுக்கு நாம் யாது செயற்பாலது என்று எண்ணினார் என்க.

1317. நுண்ணிடையினையுடைய பதுமை அழுது நைய; நைய - வருந்த. முலைமுழுவதும் குங்குமத்தையும் முத்தையும் அணிந்தபின். கோதையையும் கண்ணியையும் சூட்டினார்; கோதை: மார்பிலணியும் மாலை; கண்ணி: தலையிலணியும் மாலை. கொம்பனையார்: செவிலித்தாயரும், தோழியரும். இளையாளை: பதுமையை. கொம்பனார் இளையாளை, அணிந்தபின் சூட்டினார் எனமாறியியைக்க. சூட்டினார் என்பதன் பின் 'நீ பொழிற்குப் போவென்று கூறி' என்பதை வருவிக்க.

1318. வேந்து காயினும் - நேற்றுப் பாம்புதீண்டிய சோலையில் மீண்டு போவது தகாது என்று தனபதி கோபித்தாலும். ஆயம் - தோழியர் கூட்டம். ஆடுதல் - விளையாடுதலே. ஆய்ந்ததென்று கொண்டு - ஆராயப்பட்ட காரியமென்று உட்கொண்டு. ஆயம் மயில்போற் குழீஇப் போந்தது எனமாறியியைக்க; குழீஇ - திரண்டு. பொழிலும் பொலிந்தது - அதனாற் சோலையும் பொலிவுபெற்றது.

(உரை) [1] நெருநல் - நேற்று.

இவள் வருத்தத்திற்கு யாம்செய்யத் தகுங்காரியம் யாதென்றெண்ணினர்; எண்ணி [2] அவனை எதிர்ப்பட்ட இடத்தைக்காண்டலும் அவனைக் கண்டாற்போறலின், வேந்துகாயினும் இவள் பொழிலிலேசென்று அவ் விடத்தே விளையாடுதலே காரிய மென்றுட்கொண்டு, கொம்பனையார் அவ் விளையாளை முலைமுழுதும் குங்குமத்தையும் முத்தையுமணிந்தபின்பு கோதையையும் கண்ணியையுஞ்சூட்டினர்; சூட்டி அப்பொழிலிலே போவென்றுகூற, ஆயமும் மயில்போற்றிரண்டு வந்து தொழுது கூடப்போந்தது; பொழிலும் அப்பொழுது பொலிவுபெற்ற தென்க.

[3] ‘ அழுது ’ என்றதற்குப் பாம்புகடித்தவிடத்தே போகவிடாநின்றே மென்றழுதாரென்றுமுரைப்ப. (கங௩ - ௫)

1319. (க) அலங்க ருன்றொடுப் பாரலர் பூக்கொய்வார்
சிலம்பு சென்றெதிர் கூவுநர் செய்சுனை
கலங்கப் பாய்ந்துட னாடுநர் காதலின்
இலங்கு பாவையி னுமணஞ் சேர்த்துவார்.

1320. (௨) தூசு லாநெடுந் தோகையி னல்லவர்
ஊச லாடுந ரொண்கழங் காடுநர்
பாச மாகிய பந்துகொண் டாடுநர்
ஆகி யெத்திசை யும்மமர்ந் தார்களே.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) பாவைகளை வாழ்க்கைப்படுத்துவார்.

(௨) தூசிலே அசைகின்ற [1] கொய்சகத்தையுடைய ஆயத்தார். பாசம் - அன்பு.

(இ - ள்) அவ்வாயத்தார் தொடுப்பார், கொய்வார், கூவுவார், ஆடுவார், சேர்த்துவார், ஊசல்முதலியன ஆடுவாராகி எத்திசைகளிலும் போய் அமர்ந்தாரென்க. (கங௪ - ௬)

---

[2] ‘ இனியாரோடு தலைப்பெய்த இடங்கண்டாலும் அவ்வினியாரைக் கண்டாலே போலும் ’ (இறை. 3, உரை). [3] சீவக. 1317; இப்பொருட்கு அழுதலைத் தோழி, தாயரென்பவரது தொழிலாகக் கொள்க.

1319. அலங்கல் - மாலை; தான் : அசை. அலர்ந்த பூவைக் கொய்வார். சிலம்பு - செய்குன்று. கூவுநர் - கூவுவார்கள். சுனையில் நீர் கலங்கும்படி பாய்ந்து. ஆடுநர் - நீரில் விளையாடுவார்கள். காதலின் - ஆசையால். இருபாவைகளை மணம் சேர்த்துவார்; மணம் சேர்த்துவார் - வாழ்க்கைப்படுத்துவார்கள்.

1320. தூசு உலாம் நெடுந்தோகையின் நல்லவர் - ஆடையிலே அசைகின்ற நீண்ட கொய்சகத்தையுடைய மகளிர். ஊசல் - ஊஞ்சல். பாசமாகிய - அன்புடையவாகிய. ஆடுநராகி.

(உரை) [1] கொய்சகம் : “ பட்டின் கொய்சகம் ” (சூளா. சுயம். 86)

1321. முருகு விம்மிய மொய்குழ லேழைதன்
உருகு நோக்கமு ளங்கிழித் துள்சுட
அரிவை யாடிய காவகங் காணிய
எரிகொள் வேலவ னேகின னென்பவே.

(இ - ள்.) வேலவன், பதுமை தனது நினைவுமிக்கு வருந்திப்பார்த்த பார்வை நெஞ்சைச் சுடுதலின், [1] அவளையெதிர்ப்பட்ட இடத்தைக் காண்டலும் அவளைக்கண்டாற்போறலின், அவளாடிய காவிடத்தைக் காண்டற்கு ஏகினு னென்க. (கருசு)

1322. மயிலி னாடலு மந்தியி னூடலும்
குயிலின் பாடலுங் கூடிம லிந்தவண்
வெயிலி னீங்கிய வெண்மணற் றண்ணிழல்
பயிலு மாதவிப் பந்தரொன் றெய்தினுன்.

(இ - ள்.) அங்ஙனமேகினவன், அவ்விடத்து, மயிலின் ஆடல் முதலியன கூடி மிக்கு வெயிலினின்று நீங்கிய வெண்மணற்றண்ணிழல் பயிலும் மாதவிப் பந்தரொன்றைச் சேர்ந்தானென்க.

மாதவி - குருக்கத்தி. (கருஎ)

1323. காது சேர்ந்தக டிப்பிணை கையது
தாது மல்கிய தண்கழு நீர்மலர்
ஓத நித்தில வட்டமொர் பொன்செய்நாண்
கோதை வெம்முலை மேற்கொண்ட கோலமே.

---

1321. முருகு - வாசனை. குழலையுடைய ஏழை : பதுமை. உருகு நோக்கம் - வருந்திப்பார்த்த பார்வை. உள்சுட - மனத்தைச் சுடுதலால். அரிவை ஆடிய காவகம் - பதுமை விளையாடிய சோலையினிடத்தை. காணிய - பார்க்கும்பொருட்டு. வேலவன் : சீவகன். என்ப, ஏ : அசைகள்.

(உரை) [1] "முருக்கின் புதுமலரான் முல்லை நகையால், நெருக்கி யெழுஞ் செவ்விள நீரால் - குருக்கொடியால், நான்ற குழைமுகத்தா னயந்த நன்னுதலைப், போன்ற துயர்பூம் பொழில்" (கிளவித் தெளிவு)

1322. மந்தி - பெண்குரங்கு. மலிந்து - மிக்கு. அவண் - அப்பொழி லிடத்தே. வெயிலினின்றும் நீங்கிய வெண்மையான மணலையுடைய நிழல் பயிலும் மாதவிப்பந்த ரொன்றை எய்தினுன். அவண், கூடி, மலிந்து, நிழல் பயிலும் பந்தரொன்றை எய்தினுன் என்க.

1323. சேர்ந்த - சேர்ந்தன. கடிப்பிணை : குதம்பைபோல்வதொரு ஆபரணம்; காதைப்பெருக்குவதற்கு இடப்படுவது; சீவக. 295, அடிக். தாது மல்கிய - மகரந்தப்பொடி நிறைந்த. கழுநீர்மலர் - குவளைப்பூ. கையது கழுநீர்மலர் : மகளிர் குவளைமலரைப் பிடித்திருத்தல் இயல்பு : சீவக. 1887 ; 'கைக்கொண்டு மோந்துயிர்க்கும் கழுநீர்ப்பூ' ((தொல். களவு. 4, ந). ஓத நித்தில வட்டம் - கடலில் உண்டாகிய முத்துக்களா லாகிய மாலை. கோதை : பதுமை. கோதையது காதைக் கடிப்பிணை சேர்ந்த; கையது கழுநீர்மலர்; முலையன நித்திலவட்டமும் பொன்னு ணும்; இவை அவள் மேற்கொண்ட கோலம் என்க; கோலம் - அலங்காரம்.

(இ - ள்.) கோதையது காதைச்சேர்ந்தன கடிப்பிணை; அவள்கையது கழுநீர்மலர்; அவள் முலையிடத்தன, முத்துவடமும் பொன்னாணும்; இஃது அவள் மேற்கொண்ட ஒப்பனையென்க.

இதனால், அவளொப்பனையைத் தேவர் வியந்து கூறினார். காமநோயினால் [1] நொய்தாக ஒப்பித்தார். (கருஅ)

1324. விண்பு தைப்பன வெண்மலர் வேய்ந்துளாற்
கண்பு தைப்பன காரிரும் பூம்பொழில்
சண்ப கந்தணி கோதைநின் றுடனி
நண்ப னைந்நினை யாநறு மேனியே.

(இ - ள்.) சண்பகத்தினது கோதையை யொத்த நறுமேனியையுடையாள், அக்கோலத்தோடே நண்பனை நினைத்துப் பொழிலிலே தனியே நின்றாளென்க.

விண்ணை மறைப்பனவாகிய பொழில்; மலராலே வேயப்பட்டு உள்ளிடம் கண்ணை மறைப்பனவாகிய பொழில். அஃது அவன் சேர்ந்த மாதவிப் பொழில். அணி : உவமவுருபு. (கருகூ)

1325. கறந்த பாலினுட் காசி றிருமணி
நிறங்கி ளர்ந்துதன் னீர்மைகெட் டாங்கவண்
மறைந்த மாதவி மாமைநி ழற்றலிற்
சிறந்த செல்வனுஞ் சிந்தையி னேக்கினான்.

(உரை) [1] நொய்தாக ஒப்பித்தார் - மெல்லிதாக அலங்கரித்தார்.

1324. விண்புதைப்பன - ஆகாயத்தை மறைப்பன. வேய்ந்து - அணியப்பட்டு. உளால் - உள்ளிடத்தே; உருபுமயக்கம். விண் புதைப்பனவாகிய பொழில், மலரால் வேய்ந்து உள்ளால் புதைப்பனவாகிய பொழில் எனத் தனித்தனியே பிரித்தியைக்க. சண்பகத்துக் கோதை அணி நறுமேனி - சண்பகமாலையைப் போன்ற நறுமேனியை யுடையாள்; பதுமை. நண்பனை - சீவகனை. நினையா - நினைந்து. நறு மேனியையுடையாள், நண்பனை நினையா, பொழிலில் தனிநின்றாள் என மாறியியைக்க.

1325. காசில் திருமணி - குற்றமில்லாத நீலமணி. நிறங்கிளர்ந்து - ஒளி விளங்க; கிளர்ந்து = கிளர - விளங்க; எச்சத்திரிபு. நீர்மை - தன்மை. கெட்டாங்கு - கெட்டதைப் போல. நீலமணியின் தன்மையைப் பாலால் ஆராய்ந்து கொள்ளுதல் : சீவக. 588, அடிக். அவண் மறைந்த மாதவி - அவ்விடத்து மறைந்து நின்ற மாதவிப்பூவின்மேல். மாமை நிழற்றலின் - மாமை நிறம் ஒளிவிடுதலால். மாமை : “நீர்வளராம்பற் றூம்புடைத் திரள்கால், நாருரித் தன்ன மதனின் மாமை”

(இ - ள்.) பாலினுள்ளே நீலமணி நிறங்கிளர அது தன்னீர்மை கெட்டாற் போல, அவள் மறைந்துநின்று மாதவிப்பூவின்மேலே மாமை நிறம் ஒளிவிடுதலிற் சீவகனும் விசாரத்தோடே பார்த்தானென்க.

கிளர்ந்து - கிளர. மாதவி : ஆகுபெயர். இவ்வொளி யாதென்று கருதினான். (கசுo)

1326. வரையின் மங்கைகொல் வாங்கிருந் தூங்குநீர்த்
திரையின் செல்விகொ றேமலர்ப் பாவைகொல்
உரையின் சாய லியக்கிகொல் யார்கொலிவ்
விரைசெய் கோலத்து வெள்வளைத் தோளியே.

வளைந்தநீர் ; பெரிய அசைகின்ற நீர்.

(இ - ள்.) இவ்வளைத்தோளி வரையரமகளோ! நீரரமகளோ! திருமகளோ! இயக்கியோ! யார்தானென்று ஐயமுற்றானென்க.

பதுமை முன்புகண்டவளாயினும் வேட்கைமிகுதியான் ஐயநிகழ்ந்தது. (கசுக)

1327. மாலை வாடின வாட்கணி மைத்தன
காலும் பூமியைத் தோய்ந்தன காரிகைப்
பாலின் றீஞ்சொற் பதுமையிந் நின்றவள்
சோலை வேய்மருள் சூழ்வளைத் தோளியே.

(இ - ள்.) வாடின, இமைத்தன, தோய்ந்தன ; ஆதலால், இவ்விடத்தினின்றவள் வளைத்தோளியாகிய அழகினையுடைய பதுமையென்று தெரிந்து தேறினானென்க. (கசுஉ)

---

(நற். 6 : 1-2) ; ஐங். 35 : 2-4. செல்வன் : சீவகன். சிந்தையின் - விசாரத்தோடு. நோக்கினான் - பதுமையைப் பார்த்தான்.

1326. வரையின் மங்கைகொல் - வரையரமகளோ ; கொல் : ஐயப் பொருளில் வந்தது. வாங்கு இரு தூங்கு நீர்த்திரை - வளைந்த பெரிய அசைகின்ற நீரையுடைய கடல் ; திரை - கடல் ; ஆகுபெயர். திரையின் செல்விகொல் என்றது நீரரமகளோ வென்றபடி. மலர்ப்பாவை - இலக்குமி. உரை இன் சாயல் - புகழ்ந்து கூறப்படும் இனிய சாயலையுடைய. சாயலையுடைய இயக்கிகொல் ; இயக்கி - இயக்கர் உலகத்துப் பெண். விரைசெய் கோலம் - வாசனையைச் செய்கின்ற அலங்காரத்தையுடைய. கோலத்தையுடைய தோளி, வெள்வளையையுடைய தோளி ; என்றது பதுமையை ; எழுவாய்.

1327. அடி, 1-2. : "பாயும் விடையரன் றில்லையன் னாள்படைக் கண்ணிமைக்குந், தோயு நிலத்தடி தூமலர் வாடும்" (திருச்சிற். 3).

1328. தேவர் பண்ணிய தீந்தொடை யின்சுவை
மேவர் தென்றமிழ் மெய்ப்பொரு ளாதலிற்
கோவந் தன்னமென் சீறடிக் கொம்பனாள்
பூவர் சோலை புகுவ லென் றெண்ணினான்.

தீந்தொடை - யாழ். மேவருதமிழ் - நாடகவழக்கும், உலகியல் வழக்கும் பொருந்துதல்வரும் அகப்பொருளில். மெய்ப்பொருளென்றது, முதற்கந்தருவமன்றிச் சுட்டியொருவர் பெயர் கொள்ளப்பட்டு ஐந்து நிலைபெற்ற [1] கந்தருவமாகிய உலகியல்வழக்கான இயற்கைப்புணர்ச்சியை. பூவர் : அர் பகுதிப் பொருள்விகுதி.

(இ - ள்.) அங்ஙனந்தேறினவன், யாழையுடைய கந்தருவர்பண்ணிய இனிய மணம் தமிழிற்பொருள் ; அதுவும் நமக்காமாதலிற் கொம்பனாள் நிற்கின்ற பூவையுடைய சோலையிலே யானுஞ்சென்று இயற்கைப் புணர்ச்சி புணர்வேனென்று எண்ணினானென்க.

[2] முதற்கந்தருவமன்மையின், எண்ணினானென்றார். (கசுரு)

---

காரிகை - அழகு. இந்நின்றவள் - இங்கே நின்றவள் ; "அவ்விருந்தாள்" (சீவக. 1038). "அவ்வெதிர்தாழாது" (கலித். 90 : 13-4. ந.); "இந்நின்றாள்" (கம்ப. குகப். 70). சோலையிலுள்ள வேய். வேய்மருள் தோளி, வளைசூழ் தோளி எனத் தனித்தனியே பிரித்தியைக்க ; மருள் : உவமவுருபு. தோளி : பதுமை. இந்நின்றவள், வளைத்தோளியாகிய காரிகையையுடைய பாலினைப்போலும் தீஞ்சொல்லையுடைய பதுமையே என மாறியியைக்க.

1328. தேவர் - கந்தருவர். தீந்தொடை - இனிய நரம்பையுடைய யாழ். இன்சுவை - கந்தருவமாகிய இனிய மணம் ; தீந்தொடைத்தேவர் பண்ணிய இன்சுவை ; தொல். களவு. 1. மேவர் = மேவரு - பொருந்துதல் வருகின்ற ; விகாரம் ; "மேவர்சாயலுக்கு" (சீவக. 1005, அடிக் ). தமிழினது மெய்ப்பொருள். தொடையையுடைய தேவர் பண்ணிய இன்சுவை தமிழின் மெய்ப்பொருளாகும் ; "இன்றமி ழியற்கை யின்பம்" (சீவக. 2063) ; "தள்ளாப் பொருளியல்பிற் றண்டமிழ்" (பரி. 9 : 25). கோவத்தன்ன - இந்திர கோபத்தைப் போன்று சிவந்த. கொம்பனாள் : பதுமை. பூவர்சோலை - பூக்களையுடைய சோலை ; அர் : பகுதிப்பொருள் விகுதி ; சிலப். 7 : 26 ; "பூவர்குழன் மாதர்" (பிரமோ. வஞ்சுளை. 40). கொம்பனாள் நிற்கின்ற சோலையில் புகுவலென்று எண்ணினான்.

(உரை) [1] 'இது சுட்டி ஒருவர் பெயர் கொள்ளப்படுதலின் உலகியல் வழக்கமான காந்தருவமாம்' (சீவக. 2063, ந.) என்பர்பின்.
[2] முதற்கந்தருவமென்றது நாடகவழக்காகிய கந்தருவத்தை.

1329. அல்லி சேரணங் கன்னவட் காயிடைப்
புல்லி நின்றமெய்ந் நாண்புறப் பட்டது
கல்செய் தோளவன் காமரு பேருணர்
வெல்லை நீங்கிற் றியைந்தன ரென்பவே.

(இ - ள்.) அவன் அங்ஙனமெண்ணிச் சென்றபொழுது, அணங் கன்னவட்கு நாணம் நீங்கிற்று; தோளவனுணர்வு அவனெல்லையைக் கடந்தது; அப்பொழுது இருவரும் கூடினாரென்க. (கஙஉச)

1330. களித்த கண்ணிணை காம்பென வீங்குதோட்
டெளிர்த்த வெள்வளை சேர்ந்தது மாமையும்
தளித்த சுண்ணஞ் சிதைந்தன குங்குமம்
அளித்த பூம்பட் டணிந்து திகழ்ந்ததே.

(இ - ள்.) அப்பொழுது, கண்ணிணை களித்தன; தோளில் வளைகளு மொலித்தன; போன மாமைநிறமும் வந்துசேர்ந்தது; பூசின சுண்ண மும் குங்குமமுமழிந்தன; இவனால் அருள்பண்ணப்பட்ட பட்டும் அணி யப்பட்டு விளங்கிற்றென்க.

இவள் புணர்ச்சியைக் கைவிட்டுப் பட்டணிந்தாளாதலின், [1]திகழ்ந்த தென்றார். (கஙஉரு)

---

1329. அல்லி சேரணங்கன்னவள் - இலக்குமியைப் போன்றவள்; "அல்லி சேரணங் கிற்கணங் கன்னவள்", "அல்லியுட் பாவை யன் னாள்" (சீவக. 162, 1505). அணங்கன்னவள்: பதுமை. ஆயிடை - சீவகனைக்கண்ட பொழுது. புல்லிநின்ற - தன்னைத் தழுவிநின்ற. நாண் புறப்பட்டது - நாணம் நீங்கியது. கல்செய்தோளவன் - கல்லைப்போன்ற தோளையுடைய சீவகன். தோளவனுடைய பேருணர்வு எல்லையை நீங் கிற்று; எல்லை - அளவு. இயைந்தனர் - கூடினர். தலைவனுக்கு அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி என்னும் நான்கு குணங்களும், தலைவிக்கு நாண், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் நாற்குணங்களும் புனலோடு வழியிற் புற்சாய்ந்தாற்போல வேட்கையால் மீதூரப்பட்டுச் சாய்ந்து கிடக்கும் என்பர்; இறை. 2, உரை. என்ப, ஏ: அசைகள்.

1330. கண்ணிணைகள் களித்த; களித்த - களிப்படைந்தன. காம் பென - மூங்கிலைப்போல. தோளில் வளைகள் தெளிர்த்த; தெளிர்த்த - ஒலித்தன. மாமையும் மெய்யில் சேர்ந்தது. தளித்த - மார்பில் பூசிய; சீவக. 129. சிதைந்தன - அழிந்தன. சுண்ணமும் குங்குமமும் சிதைந் தன. அளித்த - சீவகனால் அருள்செய்யப்பட்ட. அணிந்து - அணியப் பட்டு.

(உரை) [1] (பி - ம்.) 'நின்றதென்றார்.'

1331. குவளை யேய்ந்த கொடுங்குழை கூந்தலுள்
திவளும் வாழிய செம்பொறி வண்டுகாள்
இவள கூரெயி றீனுந் தகையவோ
தவள மெல்லிணர்த் தண்கொடி முல்லையே.

வாழிய : அசை.

(இ - ள்.) இவள் கூந்தலிலே துவளும் வண்டுகாள்! முல்லைகள் இவளுடைய எயிற்றை ஈனுந் தகைமையையுடையவோ? உளவேற் கூறுமினென்றானென்க. (கசுசு)

1332. பொன்றுஞ் சாகத்துப் பூங்கண்கள் போழ்ந்தபுண்
இன்றிப் பூண்கொ ளிளமுலைச் சாந்தலால்
அன்றித் தீர்ப்பன யாவையு மில்லையே
என்று மாத ரெழினல மேத்தினான்.

(இ - ள்.) நீ தங்கியமார்பிலே நினதுகண்களாகிய வேல் முன்பே பட்டு உருவிக்கிடந்த பழம்புண்களை இன்று இந்தமுலையிற்சாந்தல்லது மாறுபட்டுத் தீர்ப்பன வேறொன்றுமில்லையென்றுகூறி ஏத்தினானென்க.

இவையிரண்டும் [1] நயப்பு. பொன்னென்றது பதுமையை. ஆகம்-[2] நெஞ்சு. [3] இனித்தலைவிமுன்னுதலிற் பொன்றுஞ்சாகமென்று தன்னைப் புகழ்தலுமாம். (கசுஎ)

---

1331. ஏய்ந்த - பொருந்திய கொடுங்குழை - வளைந்த மகரக் குழையையுடையவள்; பதுமை; ஆகுபெயர். திவளும் - அசைகின்ற. பொறி - புள்ளியையுடைய. கொடுங்குழையினுடைய குவளையேய்ந்த கூந்தலுள் திவளும் வண்டுகாள் என மாறியியைக்க. இவள கூர் எயிறு ஈனும் தகையவோ - பதுமையினுடைய பற்களைப்போலும் அரும்பைப் பெறும் தன்மையையுடையனவோ? தவளமெல்லிணர் - வெண்மையான மெல்லிய பூங்கொத்துக்களையுடைய. இணரையுடைய முல்லைத்தண்கொடி எனமாறியியைக்க. வண்டுகாள்! முல்லைக்கொடி ஈனும்தகையவோ? என்றானென்க.

1332. பொன்துஞ்சு ஆகம் - திருமகள் தங்குகின்ற மார்பம்; "பொன்றுஞ்சு மார்பன்" (சீவக. 14, அடிக்.). பொன் என்றது, ஈண்டுப் பதுமையை நோக்கிய முன்னிலைப்படர்க்கை; ஆகமென்றது தன் மார்பத்தை. என் ஆகத்து, உன் கண்களாகிய வேல்கள் போழ்ந்த புண்ணை. பூண் - ஆபரணம். புண்ணை இன்று இப்பூண்கொள் இளமுலையிற் பூசிய சாந்தல்லது அன்றித் தீர்ப்பன யாவையும் இல்லை என்க; அன்றி - பகைத்து. "தங்குகண் வேல் செய்த புண்களைத் தடமுலை வேதுகொண் டொற்றி யே" (கலிங்கத்.). மாதர் எழில்நலம் - பதுமையினுடைய அழகின் நன்மையை.

(உரை) [1] நயப்பு - விருப்பம். [2] ஆகுபெயர். [3] இப்பொருளே சிறந்தது; தொல். கற்பு. 40.

333. (க) கண்ணணி வேய்ந்து கருங்குழல் கைசெய்து
வண்ண மாலை நடுச்சிகை யுள்வளை இச்
செண்ண வஞ்சிலம் பேறு துகளவித்
தண்ண லின்புறுத் தாற்றலி னாற்றினாள்.

334. (உ) திங்க ளும்மறு வும்மெனச் சேர்ந்தது
நங்க ளன்பென நாட்டி வலிப்புறீஇ
இங்கொ ளித்திடு வேனும ரெய்தினார்
கொங்கொ ளிக்குழ லாயெனக் கூறினான்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) நுண்ணிய தொழிலையுடைய அழகிய சிலம்பிலேறின பூந்தாதை
யும் துடைத்து.

(உ) நங்கள்: கள், அசை. நாட்டி - பிரிவென்பதொன்றுண்டென்று
நிலைபெறுத்தி. வலிப்புறீஇ - பிரிந்தும் பிரிவிலேமென்று தெளியும்படி
நெஞ்சை வற்புறுத்தி.

(இ - ள்.) அண்ணல், வேய்ந்து, மாலையைக் கொண்டைக்கு நடுவே
வளையமாக வைத்துக் குழலைக் கைசெய்து, துகளவித்து, இன்புறுத்தி,
நம் மன்பு திங்களுமறுவுமென்னும்படி சேர்ந்ததென்றுகூறி நாட்டி, வலிப்
புறீஇ ஆற்றுவித்தலின், ஆற்றினாள்; அங்ஙனம் ஆற்றினபின்பு, குழ
லாய். நுமரெய்தினார்; அவர்காணாதபடி இங்கே ஒளிப்பேனென்று கூறினா
னென்க.

[1] உடன்றோய்ந்து உடன்வளர்தலின், மறு உவமை. (கசூஅ - கூ)

1333. கண்ணணி - முடியிற் சூடும் மாலை. வேய்ந்து - பதுமையின்
தலையில் அணிந்து. குழல் கைசெய்து - கூந்தலைத் திறம்பட அலங்
கரித்து. வண்ணம் - நிறத்தையுடைய. மாலையைச் சிகையுள் நடு வளை இ-
மாலையைக் கொண்டையினிடத்து நடுவே வளையமாக வைத்து. செண்
ணம் - வடிவு; "செண்ணச் சிவிகை" (பெருங். 1. 37 : 269); கைசெய்
தல்; அகநா. 59 : 14. உரை. அம் - அழகிய. சிலம்பில் ஏறிய துகள
வித்து; துகள் அவித்து - பூந்தாதைத் துடைத்து. அண்ணல் : சீவகன்.
இன்புறுத்தி ஆற்றலின்; ஆற்றல் - ஆற்றுவித்தல்.

1334. நங்களன்பு திங்களும் மறுவும் எனச் சேர்ந்தது - நம் இருவ
ரிடத்துமுள்ள அன்பு சந்திரனும் அதனிடத்துக் களங்கமும் போல என்
றும் நிலைபெற்றுள்ளது. நங்கள்; கள்: அசை. நாட்டி - பிரிவுண்டென்று
நிலைபெறுத்தி. வலிப்புறீஇ - பிரியேனென்று கூறி வற்புறுத்தி. ஒளித்
திடுவேன் - மறைந்திடுவேன். நுமர் என்றது பதுமையின் தோழியரை.
கொங்கு - வாசனை. கொங்கையும் ஒளியையுமுடைய குழலாய்; என்றது
பதுமையை; விளி.

1335. மழையி டைக்குளித் திட்டதோர் வாண்மினின்
தழையி டைக்குளித் தான்றகை வேலினன்
இழையி டைக்குளித் தேந்திய வெம்முலை
வழையி டைக்குளித் தார்வந்து தோன்றினர்.

(இ - ள்.) மழையிடத்தே மறைந்த மின்போற் கடிதாக வேலினன் தழையிடத்தே மறைந்தான்; அப்பொழுது பூணிடத்தே மறைந்து ஏந்தின முலையினையுடைய மறைந்த ஆயத்தார் வந்து தோன்றினரென்க. (கஎo)

1336. மின்னேர் பூம்பொழின் மேதகச் செல்வதொத்
தன்ன நாணவ சைந்துசி லம்படி
மென்மெ லம்மலர் மேன்மிதித் தேகினள்
நன்ன லம்மவற் கேவைத்த நங்கையே.

(இ - ள்.) அன்பொன்றுமே அவனுக்கு உதவியாகவைத்த நங்கை தான் ஏகினளென்க.

முற்பிறப்பே தொடங்கி அன்புவைத்தவளென்றுமாம். ஒரு பொழிலிலே மின் பெருமைதகச் செல்லுந்தன்மையை யொத்து அடியாலே மிதித்து, அசைந்து, அன்னம் நாண ஏகினளென்க. (கஎக)

---

(உரை) [1] மதி தேயுங்கால் உடன்தேய்ந்தும், வளருங்கால் உடன் வளர்ந்தும் அதனைவிட்டகலாமல் இருப்பது பற்றி மறு உவமையாகக் கூறப்பட்டது; சீவக. 254.

1335. மழை - மேகம். குளித்திட்ட - மறைந்த. வாள்மினின் - ஒளியையுடைய மின்னலைப்போல. தழையிடை - சோலையில் உள்ள தழையிடத்தே. வேலினன் : சீவகன். விரைவாக மறைந்தமைக்கு மின்னே உவமை கூறினர். வேலினன் தழையிடைக் குளித்தான் என மாறியியைக்க. இழையிடைக் குளித்து ஏந்திய வெம்முலை - ஆபரணங்களிடத்தே மறைந்து உயர்ந்த வெவ்விய முலை. வழையிடைக்குளித்தார் - சுரபுன்னைமரத்திடத்தே மறைந்திருந்த ஆயத்தார். முலையினையுடைய குளித்தார் வந்து தோன்றினர்.

1336. மின் - மின்னல். மேதக - பெருமை சிறந்துநிற்க. மின் பொழிலிற் செல்வதொத்து. அன்னம் தன்னடையைக் கண்டு நாணும்படி அசைந்து; மணி. 3 : 151-153; சிலம்பையுடைய அடியால். மென்மெல மிதித்து - மெத்தெனமெத்தென மிதித்து; " நன்மா மயிலின் மென்மெல இயலி " (மதுரைக். 608). அடியால் மிதித்து அசைந்து ஏகினள். நலம் - அன்பு; சீவக. 2069, ந. அவற்கு - சீவகனுக்கு. நலமே அவற்கு வைத்த என ஏகாரத்தைப்பிரித்துக் கூட்டுக. நங்கை : பதுமை. நங்கை ஏகினள் என்க.

1337. திங்கள் சூழ்ந்தபன் மீனெனச் சென்றெய்தி
நங்கை தவ்வையுந் தோழியு நண்ணினார்
அங்க வாயம டிப்பணி செய்தபின்
தங்கள் காதலி னுற்றகை பாடினார்.

(இ - ள்.) திங்களைச்சூழ்ந்த மீனென்னும்படி சென்றெய்தி, அவ் விடத்தே ஆயம் ஏவல் செய்தபின்பு அவள்செவிலியும் தோழியும் சென் றணுகினார். இங்ஙனம் எல்லாருஞ்சேர்ந்து அவளை நலம்பாராட்டினா ரென்க.

தவ்வை - செவிலிக்கு மூத்தவள். பாம்புதீண்டின பொழிலாதலிற் காவலாகவந்தாரென்க. (கஎஉ)

1338. தழையுங் கண்ணியுந் தண்ணறு மாலையும்
விழைவ சேர்த்துபு மெல்லென வேகினார்
முழையுண் மூரிமு ழங்கரி யேறனான்
பழைய நண்பனைப் பண்புளி யெய்தினான்.

(இ - ள்.) அவர்கள் தழைமுதலியனவற்றில் அவள் விரும்புவனவற் றைச்சேர்த்தி அவளைக் கொண்டுபோனார்; போனபின்பு, சீவகனும் அவள் குணங்களைநினைத்து அந்நினைவோடே உலோகபாலனைச் சென் றெய்தினனென்க.

பண்பு - [1] கூட்டத்திற்பெற்ற குணங்கள். (கஎங)

1337. திங்களைச் சூழ்ந்தபன்மீன்: சீவக. 882. அடிக்; 'ஒண்ணு தல் மகளிர் தற்சூழத் தாரகை நடுவண் தண்மதிபோலச் செல்வாள்' (இறை. 2, உரை). பதுமைக்குத் திங்களும், அவளைச்சூழ்ந்து சென்ற ஆயத்தார்க்கு மீனும் உவமைகள். நங்கை: பதுமை. தவ்வை - செவி லித் தாய்க்கு மூத்தவள்; செவிலியின் மகளாய்த் தனக்கு மூத்தவள் (சீவக. 184, ந.). ஆயம் - உடன் சென்ற தோழியர்கூட்டம். அடிப் பணி - அடிமைப் பணி; விகாரம்; சீவக. 552, 1049, அடிக். தகை - பதுமையின் நலத்தை. பாடினார் - பாடிப் பாராட்டினார்கள். எய்தி, ஆயம் அடிப்பணிசெய்தபின், நங்கையைத் தவ்வையும் தோழியும் நண் ணினார், பாடினார் என்க.

1338. தழை - தழை விரவித்தொடுத்த ஒருவகைமாலை. கண்ணி முதலியவை மாலை விசேடங்கள்; சீவக. 193. 2054, 2656, 2919; "பல்வே றுருவின் வனப்பமை கோதை" (குறிஞ்சிப். 103); பரி. 19: 80-82, 20 : 29-30; பெருங். 2. 18 : 6. விழைவ - பதுமை விரும்புவன வற்றை. சேர்த்துபு - சேர்த்தி ஏகினார் - பதுமையுடன் சென்றனர். முழையுள் முழங்கு மூரி அரியேறனான் - குகையிடத்து முழங்குகின்ற வன்மையையுடைய ஆண்சிங்கம்போன்றவனான சீவகன்; சீவக. 816, 2004. நண்பனை - உலோகபாலனை. பண்புளி - பதுமையினுடைய குணங் களை எண்ணி; உளி - உள்ளி. அரியேறனான் பண்புள்ளி நண்பனை எய்தினான் என மாறியியைக்க.

(உரை) [1] கூட்டம் - புணர்ச்சி; திருச்சிற். 9, பேர்.

(வேறு)

1339. பூமியை யாடற் கொத்த பொறியின ளுத லானும்
மாமக ளுயிரை மீட்ட வலத்தின ளுத லானும்
நேமியான் சிறுவ னன்ன நெடுந்தகை நேரு மாயின்
நாமவற் கழகி தாக நங்கையைக் கொடுத்து மென்ருன்.

(இ - ள்.) அவர்கள் அங்ஙனமிருக்கின்றவளவிலே, தனபதி [1]மதிதரனை நோக்கி, பதுமையின் உயிரைத்தந்த வெற்றியையுடையனுதலானும், உலகை ஆளுதற்குப்பொருந்தின உத்தமவிலக்கணத்தை உடையனுதலானும் காமனையொத்த நெடுந்தகை உடன்படுவனுயின், நமக்கு நன்ருக நாம் பதுமையை அவனுக்குக் கொடுக்கக்கடவேமென்று கூறினுனென்க. (கஎச)

1340. மதிதர னென்னு மாசின் மந்திரி சொல்லக் கேட்டே
உதிதர வுணர்வல் யானு மொப்பினு முருவி னுனும்
விதிதர வந்த தொன்றே விளங்குபூண் முலையி னுளைக்
கொதிதரு வேலி னுற்கே கொடுப்பது கரும மென்ருன்.

ஒப்பு : "பிறப்பே குடிமை யாண்மை யாண்டோ, டுருவு நிறுத்த காம வாயில், நிறையே யருளே யுணர்வொடு திருவென, முறையுறக்

1325-1338. இச்செய்யுட்கள், கோவைநூல்களிற் காணப்படும் துறைப்பொருளமைதி முறையே அமையப்பெற்றன.

1339. ஆடல் - ஆளுதல். பொறியினனுதலானும் - சங்கரேகை சக்காரேகை முதலியன அமைந்த உத்தம இலக்கணத்தை உடையவனுதலாலும்; இவ்விலக்கணங்கள் பூமியை யாளுதற்குரிய சக்கரவர்த்திகளுக்கு இருத்தற்குரியன. மகள் : பதுமை. வலத்தினன் - வெற்றியையுடையவன். நேமியான் சிறுவனன்ன நெடுந்தகை - திருமாலினுடைய புதல்வனை மன்மதனை யொத்த சீவகன். நேருமாயின் - நாம் கூறுவதற்கு உடன்படுவானுனல். அவற்கு - சீவகனுக்கு. அழகிதாக - நமக்கு நன்ருக. நங்கையை - பதுமையை. அழகிதாக, நாம் நங்கையை அவற்குக் கொடுத்தும் என்ருன் எனமாறியியைக்க; கொடுத்தும் - கொடுப்பேம். இப்பாடல் தனபதியின் கூற்று.

(உரை) [1]மதிதரன் : தனபதியின் மந்திரி.

1340. சொல்லக்கேட்டு - தனபதி அவ்வாறு கூறக்கேட்டு : கேட்டவன் மந்திரி. யானும் உதிதர உணர்வல் - யானும் முன்பே உணர்வேன்; உதிதர - உதிக்க. ஒப்பினும் - சீவகனுடைய பிறப்பு முதலிய ஒப்புமையாலும். உருவினுனும் - தான் மகள்கொடுப்பதாகக் கூறிய வார்த்தையைக் காக்கவேண்டுமென்ற அச்சத்தாலும். விதி - ஊழ்வினை. முலையினுளை : பதுமையை. வேலினுற்கு : சீவகனுக்கு. கருமம் - காரியம். மந்திரி, ஒப்பினுனும், உருவினுனும், முலையினுளை வேலினுற்கே கொடுப்பது கருமம்; யானும் உதிதர உணர்வல்; விதிதரவந்தது ஒன்றே என்ருன் என மாறி முடிக்க.

கிளந்த வொப்பினை து வகையே" (தொல். மெய்ப். 25) என்பன. உரு - உட்கு; அது [1] விடந்தீர்த்தார்க்குக் கொடுப்பேமென்ற மொழி பிறழாமற் காக்கவேண்டு மென்னுமச்சம்.

(இ - ள்.) தனபதி அங்ஙனங்கூறக்கேட்டு, மதிதரனென்னுமமைச்சன், ஒப்பானும், உருவானும் பதுமையை வேலினுற்குக் கொடுப்பதே கருமம்; இது யானும் முன்பே நினையாநிற்பேன்; இதுதான் விதிதர வந்ததொன்றே என்றானென்க. (கஎரு)

1341. உள்விரித் திதனை யெல்லா முரைக்கென மொழிந்து விட்டான், தெள்ளிதிற் றெரியச் சென்றாங் குரைத்தலுங் குமரன் றேறி, வெள்ளிலை யணிந்த வேலான் வேண்டிய தாக வென்றான், அள்ளிலை வேல்கொண் மன்னற் கமைச்சனஃ தமைந்த தென்றான்.

(இ - ள்.) அதுகேட்ட தனபதி, மதிதரனைநோக்கி இக்காரியத்தை யெல்லாம் உள்விரித்து அவனுக்குத் தெள்ளிதினுரைப்பாயாகவென்று கூறிவிட்டான்; அவனுஞ்சென்று அப்படியே தெரிய உரைத்தவளவிலே, சீவகனும் தேறி, தனபதிவிரும்பிய காரியம் அங்ஙனமாகவென்றான்; அதுகேட்ட அமைச்சனும் தனபதிக்கு அக்காரியம் அப்படியே முடிந்ததென்றானென்க. (கஎசு)

1342. (க) பொன்றிய வுயிரை மீட்டான் பூஞ்சிகைப் போது வேய்ந்தான், அன்றியு மாமெய் தீண்டி யளித்தன னெழினின் மிக்கான், ஒன்றிய மகளிர் தாமே யுற்றவர்க் குரிய ரென்னு, வென்றிகொள் வேலி னுற்கே பான்மையும் விளைந்த தன்றே.

---

(உரை) [1] விடந்தீர்த்தோர்க்குக் கொடுப்பேமென்றது; சீவக. 1275.

1341. இதனை - இக்காரியத்தை. உரைக்கென - சீவகனுக்குக் கூறுவாயாகவென்று. இதனை யெல்லாம் உள்விரித்துத் தெள்ளிதின் உரைக்கவென மொழிந்து விட்டான் என்று மாறியியைக்க. தெள்ளிதின் - தெளிவாக. தெரிய உரைத்தலும் - மதிதரன் சீவகனுக்கு விளங்கச் சொல்லியவுடன். குமரன் : சீவகன். வெள்ளிலை - வெற்றிலை; சீவக. 815. அணிந்த : உவமவுருபு. வேலான் வேண்டியது ஆக - தனபதி விரும்பியது ஆகுக. என்றான் - என்று சீவகன் கூறினான். அள் - கூர்மை. மன்னற்கு : தனபதிக்கு. அமைச்சன் : மதிதரன். அஃது அமைந்தது - அக்காரியம் முடிந்தது.

1342. பொன்றிய - கெட்டுப்போன. பூஞ்சிகை - பூவை யணிந்த பதுமையினுடைய கூந்தலில். மெய்தீண்டி அளித்தனன் - பதுமையின் உடலைத் தொட்டு அவளுக்கு உயிரளித்தான். ஒன்றிய - 'மகளைத் தரும்' என்ற அவை தாமேவந்து பொருந்தின. உற்றவர்க்கு - சேர்ந்தவர்க்கு. என்னு - என்று கூறி. வேலினுற்கு : சீவகனுக்கு. பான்மை - ஊழ்வினை. உற்றவர்க்கு மகளிர் உரியர் என்னும்பான்மையும் வேலினுற்கே விளைந்தது என்று மாறியியைக்க.

1343. (உ) கோப்பெருந் தேவி கொற்றக் கோமக னிவைக ணாடி, யாப்புடைத் தையற் கின்றே நங்கையை யமைக்க வென்னத், தூப்புரி முத்த மாலை தொடக்கொடு தூக்கி யெங்கும், பூப்புரிந் தணிந்து கோயில் புதுவது புனைந்த தன்றே.

இவையிரண்டும் ஒருதொடர்.

(இ - ள்.) தனபதியும் திலோத்தமையும் உலோகபாலனும் தம்மிற் கூடி, அழகின்மிக்கான், உயிரைமீட்டான்; ஆதலால், [1] நாடும் நிதியும் நல்கி மகட்டருமென்ற அவை தாமேவந்து ஒன்றிய; அன்றியும் போது வேய்ந்தாளுதலானும் தீண்டிணுதலானும், [2] 'உற்றூர்க் குரியர் பொற்றொடி மகளிர்' என்று கூறிய பான்மையும் வேலிறைற்கே விளைந்ததல்லவோ வென்று இவைகளை நாடி, பதுமையை அவனுக்கு இப்பொழுதே கொடுத்தல் பொருத்தமுடைத்து; நீர் மணத்திற்கு வேண்டுவன அமைக்க வென்று உழையரைநோக்கிக் கூறினாராக; முத்தமாலையைச் சல்லியும் தூக்குமாக நாற்றி எங்கும் பூவை விரும்பி யணிந்து ஒரு கோயில் புதிதாகப் புனையப்பட்டதென்க. (கஎஎ-அ)

1344. கணிபுனைந் துரைத்த நாளாற் கண்ணிய கோயி றன்னுள், மணிபுனை மகளிர் நல்லார் மங்கல மரபு கூறி, அணியுடைக் கமல மன்ன வங்கைசேர் முன்கை தன்மேற், றுணிவுடைக் காப்புக் கட்டிச் சுற்றுபு தொழுது காத்தார்.

---

1343. கோ : தனபதி. பெருந்தேவி : தனபதியின் மனைவியாகிய திலோத்தமை. கோமகன் : உலோகபாலன். இவைகள் நாடி என்றது, சீவக. 1342-ஆம் பாடலிற் கூறியவற்றை. கோவும் தேவியும், கோமகனும் இவைகளை நாடி ; நாடி - ஆராய்ந்து. யாப்புடைத்து - பொருத்தமுடையது. ஐயற்கு - சீவகனுக்கு. நங்கையை - பதுமையை. நங்கையை ஐயற்கு இன்றே கொடுத்தல் யாப்புடைத்து என மாறியியைக்க. அமைக்க என்ன - கலியாணத்திற்கு வேண்டுவன அமைக்கவென்று ஏவலாளரை நோக்கிக் கூறினாராக. தூப்புரி முத்த மாலை - தூய்மையான வடங்களையுடைய முத்துமாலைகளை. தொடக்கொடு தூக்கி - சல்லியும் தூக்குமாகத் தொங்கவிட்டு ; சீவக. 1170, ந.; "பத்திர மாலை சித்திர மாகப், புடைப்புடை தோறுந் தொடக்கொடு தூக்கி" (பெருங். 3. 5 : 53-4). பூப்புரிந்து அணிந்து - பூவை விரும்பி அலங்கரித்து. புதுவது புனைந்தது - புதிதாகப் புனையப்பட்டது.

(உரை) [1] சீவக. 1275. [2] "உற்றூர்க் குரியர் பொற்றொடி மகளிர், கொண்டார்க் குரியர் கொடுத்தார்" (திருச்சிற். 225, பேர் மேற்.)

1344. கணி - சோதிடன். நாளால் - நாளில் ; உருபு மயக்கம். கண்ணிய கோயில் - நன்மைதரத்தக்கதென்று எண்ணிய மணக்கோயில். மணிபுனை - மணிகளை அணிந்த. அணி - அழகு. அங்கை சேர்முன்கை தன்மேல் - உள்ளங்கையையுடைய முன்னங்கைகளில் ; சீவகன், பதுமை

(இ - ள்.) கணி கூறிய நாளிலே, நன்றென்று கருதிய கோயிலிலே, நல்லார் மங்கலமரபுகூறி முன்கையிடத்தே இருவர்க்கும் காப்பைக்கட்ட மகளிர் தொழுது சுற்றிப் புறப்படாமற் காத்தாரென்க.

கட்டி - கட்ட. (கஎகூ)

1345. மழகளிற் றெருத்திற் றந்த மணிக்குட மண்ணு நீரால்,
அழகனை மண்ணுப் பெய்தாங் கருங்கடிக் கொத்த கோலம்,
தொழுதகத் தோன்றச் செய்தார் தூமணிப் பாவை யன்னார்,
விழுமணிக் கொடிய ளும் விண்ணவர் மடந்தை யொத்தாள்.

(இ - ள்.) மணிப்பாவையன்னவர், அழகனைக் களிற்றினெருத்திற் றந்த நீரால் குளிப்பாட்டி, அவ்விடத்தே கலியாணத்திற்கொத்த ஒப்பனையை நன்குமதிக்கும்படி தோன்ற ஒப்பித்தார்; அவ்வொப்பனையாலே கொடியனாளும் தேவர்மகளை யொத்தாளென்க. (கஅ௦)

(வேறு)

1346. கயற்க ணாளையுங் காமனன் னானையும்
இயற்றி னார்மண மேத்தருந் தன்மையார்
மயற்கை யில்லவர் மன்றலின் மன்னிய
இயற்கை யன்புடை யாரியைந் தார்களே.

(இ - ள்.) தனபதி முதலாயினார், பதுமையையும் சீவகனையும் மணத்தை முடித்தார்; முடித்தபின்பு அவர் தம்மிற் கூடினாரென்க.

கந்தருவர்மணம்போலே முன்பே மன்னிய இயற்கைப்புணர்ச்சியாலுள்ள அன்பையுடையாரென்க. கூடியபடி மேற்கூறுகின்றார். (கஅக)

---

யென்ற இருவர் கைமேலும். காப்பு - மங்கலக் காப்பு நாணை. சுற்றுபு - சீவகனையும் பதுமையையும் சுற்றி. நல்லார் காப்புக்கட்ட, மகளிர் தொழுது சுற்றிக் காத்தார் என்க.

1345. மழகளிறு - இளைய யானை. எருத்து - கழுத்து. அழகனை : சீவகனை. மண்ணுப்பெய்து - நீராட்டி. அழகனைக் களிற்றினெருத்தில் தந்த நீரால் மண்ணுப் பெய்து; சீவக. 623, அடிக்.; "இருங்களிற் றியானை யெருத்திற் றந்த, பொருந்த வறுநீர் விருப்புவன ராட்டி" (பெருங். 3. 22 : 200-201). கடிக் கொத்த கோலம் - கலியாணத்திற்குப் பொருந்திய அலங்காரத்தை. தொழுதக - நன்கு மதிக்கும்படி. பாவை யன்னார் செய்தார் என்க; செய்தார் - அலங்கரித்தார். கொடியனாள் : பதுமை. விண்ணவர் மடந்தை ; தேவமங்கை.

1346. கயல் போலுங் கண்ணாள் : பதுமை. காமனன்னான் : சீவகன் ; சீவக. 1785, ந. ஏத்தரும் தன்மையாரென்றது, தனபதி முதலாயினாரை. ஏத்தருந்தன்மையார், கண்ணாளையும், அன்னானையும் மணமியற்

1347. வாளும் வேலு மலைந்தரி யார்ந்தகண்
ணாளும் வார்கழன் மைந்தனு மாயிடைத்
தோளுந் தாளும் பிணைந்துரு வொன்றெய்தி
நாளு நாகர் நுகர்ச்சி நலத்தரோ.

(இ - ள்.) கண்ணாளும் மைந்தனும், அவ்விடத்தே, தோளுந் தோளும் தாளுந்தாளும் பிணைதலின், ஒரு வடிவைப்பெற்று, நாகர் நாடோறு நுகர்கின்ற நுகர்ச்சியின்பத்தை உடையராயினரென்க. (கஅ௨)

1348. (க) தணிக்குந் தாமரை யாணலந் தன்னையும்
பிணிக்கும் பீடினி யென்செயும் பேதைதன்
மணிக்கண் வெம்முலை தாம்பொர வாயவிழ்
தணிக்கந் தன்னவன் றாரங்கு டைந்ததே.

1349. (உ) பரிந்த மாலை பறைந்தன குங்குமம்
கரிந்த கண்ணி கலந்த மகிழ்ச்சியின்
அரிந்த மேகலை யார்த்தன வஞ்சிலம்
பிரிந்த வண்டிளை யார்விளை யாடவே.

இவையிரண்டும் ஒரு தொடர்.

---

றினர் எனமாறி யியைக்க. மயற்கை இல்லவர் மன்றலின் - குற்றமில்லாத கந்தருவருடைய மணத்தைப்போல. மன்னிய - முன்பே பொருந்திய. இயற்கையன்புடையார் : சீவகனும், பதுமையும். இயைந்தார்கள் - கூடினர்கள்.

(மேற்.) அடி, 1 : நன். பொது. 59, மயிலை.; மு : நம்பி. வரைவு. 29, உரை.

1347. மலைந்து - போர் செய்து. வாளையும் வேலையும் மலைந்து அரி ஆர்ந்த கண்ணாள்; அரி ஆர்ந்த - செவ்வரி படர்ந்த; கண்ணாள் : வகையுளி. கண்ணாளும், மைந்தனும் : பதுமையும் சீவகனும். ஆயிடை - அவ்விடத்தே. இருவரது தோளும் தாளும் பிணைந்த; பிணைந்து - ஒன்றாகச் சேர்தலால். ஒன்று உருவெய்தி - ஒரு வடிவத்தைப் பெற்று. நாகர் நுகர்ச்சி நலத்தர் - நாகலோகத்தவர் நுகருகின்ற நுகர்ச்சி யின்பத்தை உடையராயினர். நாகர் நுகர்ச்சி : சீவக. 11, 217, அடிக்.

1348. தணிக்கும் - எல்லாரழகையும் கீழ்ப்படுத்தும். தாமரையாள் நலம் - இலக்குமியின் அழகு. பிணிக்கும் பீடு - கட்டுப்படுத்திய அழகுடைய இவ்விருவர்தம் பெருமை. என்செய்யும் என்றது வியப்பு. பேதை : பதுமை. பொர - பொருதலால். வாயவிழ்ந்து - அரும்பின் வாய் விண்டு. கந்து அன்னவன் - தூண்போன்று நிலைகுலையாத சீவகனுடைய. தார் - பூமாலை. கந்தன்னவன் தார் வாயவிழ்ந்து உடைந்தது எனமாறி யியைக்க; உடைதல் - சிதைதல். முலைபொரத் தார் உடைதல் : சீவக. 589, 612, அடிக்.

1349. மாலை பரிந்த - மார்பிலணிந்த மாலைகள் அற்றன. குங்குமம் பறைந்த - மார்பிற் பூசிய குங்குமச்சாந்து அழிந்தன; பறைதல் - அழிதல்; "பறைந்திடை சோர்தரு பசலை", "பாவம்

(க) எல்லாரழகையும் தோற்பிக்கும் திருவினழகைப் பிணிக்கும் பீடு, இருவர்க்கும் பொது. வாயவிழ்தல் அரும்புவாயவிழ்தலும், அவ்விடத்தினின்றும் நிலைகுலைதலுமாம்; தார் - மாலையும் தூசியுமாம்; சிலைடையால்.

(உ) கரிந்த - கலவியாற்கரிந்தன. கலத்தல் - முயக்கம்.

(இ - ள்.) அங்ஙனம் கலந்த மகிழ்ச்சியாலே இளையார் விளையாடா நிற்க, பேதை தன்முலையாகிய யானை போர்செய்தலின், நிலைகுலையாதவன் தார் நெகிழ்ந்து அவ்விடத்தே உடைந்தது; அப்பொழுது அவன் மார்பிலே முத்த மாலைகள் அற்றன; குங்குமம் அழிந்தன; தலையிற்கண்ணி கரிந்தன. அவை பொருது பின்பு அவன் போர்செய்தலான் மேகலைகள் அற்றன; சிலம்புகள் ஆற்றாது ஆர்த்தன; வண்டுகள் இரிந்தன; இனித் திருமகளைப் பிணிக்குமிவர் பீடு மேல் என்செய்யும்! அவை நம்மாற் கூறுதற்கரியவென்றுரைக்க. (கஅரு-ச)

1350. கொழுமெ னின்னகிற் கூட்டுறு மென்புகை
கழுமு சேக்கையுட் காலையு மாலையும்
தழுவு காதற ணப்பிலர் செல்பவே
எழுமை யும்மியைந் தெய்திய வன்பினூர்.

(இ - ள்.) எழுபிறப்பும் பொருந்திப்பெற்ற அன்பினூர், தழுவு காதலாலே நெய்த்த அகிற்புகை திரண்ட சேக்கையிலே, காலையுமாலையுமுட்பட நீக்கமில்லாராய் அங்ஙன நடத்துவரென்க.

மென்புகை - மெல்லிய புகை. கூட்டு - கட்டி முதலியன. (கஅரு)

1351. நாறி யுஞ்சுவைத் துந்நரம் பின்னிசை
கூறி யுங்குளிர் நாடக நோக்கியும்
ஊறின் வெம்முலை யாலுழப் பட்டுமவ்
வேற ஞன்வைகும் வைகலு மென்பவே.

---

போலப் பறைந்துகை யகல'' (பெருங். 1. 43 : 153, 53 : 157). கண்ணி கரிந்த - முடியிற் சூடிய மாலை வாடின. கலந்த - கூடிய. மேகலை அரிந்த - அரையிற் கட்டிய மேகலாபரணம் அற்றன; அரிதல் - அறுதல்; சீவக. 121, ந. சிலம்பு ஆர்த்தன. வண்டு இரிந்த - மாலையிலுள்ள வண்டுகள் கெட்டு ஓடின. இளையார் : சீவகனும், பதுமையும்.

(மேற்.) அடி, 4 : சிலப். பதி. 12 - 20, அடியார்.

1350. கூட்டு - நேர்கட்டி முதலிய வாசனைத் திரவியங்கள். அகிலும் கூட்டும் பொருந்திய மென்புகை. கழுமு சேக்கை - மயங்கிய படுக்கை. தணப்பிலர் - பிரியாதவராய். எழுமையும் - ஏழு பிறப்பிலும். இயைந்து - ஒன்றுகப் பொருந்தி. அன்பினூர் : சீவகனும், பதுமையும். அன்பினூர், தழுவுகாதலாற் சேக்கையுள் தணப்பிலர் செல்ப எனமாறி முடிக்க.

1351. நாறியும் - வாசனைப் பொருள்களைத் தன் மேனியிற் பூசியும்; நறுமணமுள்ளவற்றை மோந்தும் என்றுமாம். நாறியும் - மோந்தும்; சீவக. 885, ந. சுவைத்தல் - சுவையுள்ளனவற்றை நுகர்தல். நரம்பின்

(இ - ள்.) அங்ஙனம் காலையுமாலையும் தீண்டுதற்கு இனிய முலையால் உழப்பட்டிருக்கவும், அவ்வேறருள், பின்னும் வேட்கைவிளைத்தற்காகத் தன் மேனியிலே நறியன நாறப்பட்டும், நாவிற்கினியன நுகர்ந்தும், இசையைக்கொண்டாடியும், நாடகங்களைநோக்கியும் நாடோறுந் தங்குமென்க. (கஅசு)

(வேறு)

1352. விரிகதிர் விளங்கு பன்மீன் கதிரொடு மிடைந்து திங்கட், டெரிகதிர் திரட்டி வல்லான் றெரிந்துகோத் தணிந்த போலும், சொரிகதிர் முத்த மின்னுந் துணைமுலைத் தடத்தில் வீழ்ந்தான், புரிகதிர்ப் பொன்செய் மாலைப் புகைநுதிப் புலவு வேலான்.

மிடைந்து - மிடைய. அணிந்த: பெயர். புரிகதிர் - மிக்க கதிர். கதிர் விளங்கு மீன்களின் கதிரோடே மிடையும்படி திங்களின்கதிரைத் திரட்டி வல்லவன் கோத்தணிந்தனவற்றை யொக்கும் கதிரையுடைய முத்தமின்னு முலையென்க.

(இ - ள்.) வேலான், அங்ஙனம் [1] துப்புரவுகளெல்லாம் நுகர்ந்த பின்னும் முலைத் தடத்தே வீழ்ந்தேவிட்டானென்க. (கஅஎ)

(வேறு)

1353. எழின்மாலை யென்னுயிரை யான்கண்டேனித்துணையே முலையிற் ருகிக், குழன்மாலைக் கொம்பாகிக் கூரெயிறு நாப்போழ்த லஞ்சி யஞ்சி, உழன்மாலைத் தீங்கிளவி யொன்றிரண்டு தான்மிழற்று மொருநாட் காறும், நிழன்மாலை வேலுண நீண்டகண்ணே நெய்தோய்ந்த தளிரே மேனி.

---

இசை கூறியும் - யாழ்ப்பாடலைக் கேட்டுப் புகழ்ந்து சொல்லியும். ஊறு இன்முலையால் - உறுதற்கு இனிய பதுமையினுடைய முலையால். ஏறனுன்: சீவகன். வைகலும் வைகும் - நாள்தோறும் தங்கும். ஏறனன், முலையால் உழப்பட்டும், நாறியும், சுவைத்தும், கூறியும், நோக்கியும் தங்கும் எனமாறி முடிக்க.

1352. கதிர் - கிரணம். மீன்களின் கதிரொடு. மிடைந்து = மிடைய - சேரும்படி; எச்சத்திரிபு. திங்கள் தெரிகதிர் திரட்டி - சந்திரனுடைய விளங்குகின்ற கிரணங்களை ஒன்றுகச் சேர்த்து. வல்லான் - வல்லமையுடையவன்; கோத்தணிந்தபோலும் - கோத்து அணிந்தனவற்றை ஒக்கும்; அணிந்த - அணிந்தனவற்றை; பெயர். கதிர்சொரி முத்தம் - முத்தமாலை. புரிகதிர்ப் பொன்செய்மாலை - மிக்க கிரணத்தையுடைய பொன்னுற் செய்த மாலையையுடைய. புகை நுதிப்புலவு வேலான் - கோபிக்கின்ற, நுனியில் ஊனைக் கொண்ட வேலையுடைய சீவகன். வேலான் வீழ்ந்தான்.

(உரை) [1] துப்புரவு - நுகரும் பொருள்கள்.

1353. எழில் மாலை என்னுயிர் - அழகினை இயல்பாகவுடைய என்

(இ - ள்.) யாவருங் காணாத உயிரை யான் கண்டேன்; அதன் தன்மை கூறுமளவில் இவ்வளவே கூறலாவது: முலையினையுடைத்தாய், நீண்ட கண்ணிணையும் தளிரையொக்கும் மேனியையும் குழலையும் மாலையையுமுடையதொரு கொம்பாய், கூரெயிறுபோழ்தற்கு அஞ்சியஞ்சி உழலும் இயல்பையுடைய தனது நாத்தான் ஒருநாளளவும் ஒன்றிரண்டு கிளவியை மிழற்றுமென்க.

எழின்மாலை என்னுயிர் - அழகை இயல்பாகவுடைய என்னுயிர். முதல் சினைவினையோடு முடிந்தது. இது நயப்பு. (கஅஅ)

1354. மாநீர் மணிமுகிலின் மின்னுக் கொடிநுசுப்பின் மயிலஞ் சாயல், ஏநீ ரிருபுருவ மேறி யிடைமுரிந்து நுடங்கப் புல்லித், தூநீர் மலர்மார்பன் றொன்னலந் தான்பருகித் துளும்புந் தேறற், றேனீர் மலர்மாலை தேன்றுளித்து மட்டுயிர்ப்பச் சூட்டி னானே.

[1] இன் ஏழனுருபாதல் புறனடையாற் கொள்க. ஏநீரிருபுருவம் - மேல் தன்னைப் புணர்ச்சியிலே ஏவுகின்ற புருவம். ‘மட்டுத்தேறல்’ என மாறி, காம பானத்தின் தெளிவென்க. தேனினத்தையுடைய நீர்ப்பூவாற் செய்த மாலை. உயிர்த்தல் - சுமைபோக்குதல்.

(இ - ள்.) முகிலிடத்து மின்போலும் நுசுப்பினையுடைய சாயல்; துளும்பு மட்டுத் தேறலைப் பருகுதலாலே தூயநீர்மையையுடைய மலர்ந்த மார்பன்றான் அவள் தொன்னலத்தைப் புருவம் ஏறிநுடங்கும்படி புல்லி, பின்னும் மாலையைத் தேன்றுளித்து உயிர்க்கும்படி சூட்டினானென்க. (கஅகூ)

---

உயிர்; என்றது பதுமையை. இத்துணையே - அவ்வுயிரின் தன்மை இவ்வளவே. குழல் - கூந்தல். குழலினையும் மாலையையும் உடையதொரு பூங்கொம்பாகி. போழ்தல் - பிளத்தல். அஞ்சி அஞ்சி: அடுக்கு. உழல் மாலை - வருந்துகின்ற இயல்பையுடைய. தீங்கிளவி - இனிய சொல். ஒரு நாட்காறும் - ஒருநாள் முடியுமளவும். எயிறு போழ்தற்கு அஞ்சி, உழலும் மாலையையுடைய நாத்தான், ஒரு நாட்காறும் ஒன்றிரண்டு கிளவியை மிழற்றும் எனமாறி யியைக்க; “அமிழ்துபொதி செந்நா வஞ்ச வந்த, வார்ந்திலங்கு வையெயிற்றுச் சின்மொழி யரிவையை” (குறுந். 14 : 1-2); “நல்கிறு வஞ்சு முள்ளெயிற்று மகளிர்” (புறநா. 361 : 16). நிழல்மாலை வேல் - ஒளியை இயல்பாக உடையவேல். உயிர், முலையிற்றாகி, நீண்ட கண்ணையும், தளிரையொக்கும் மேனியையும், குழலையும் மாலையையுமுடைய கொம்பாகி மிழற்றும் என்க. மு: “காணா மரபிற் றுயிரென மொழிவோர், நாணிலர் மன்ற பொய்ம்மொழிந் தனரே, யாஅங் காண்டுமெம் மரும்பெற லுயிரே,......... தோட்டே” (தொல். களவு. 10, ந. மேற்.)

1354. மாநீரையுடைய முகில், மணிபோன்ற முகில் என்க; மணி - நீலமணி. சூல்கொண்ட மேகத்திற்கு நீலமணியின் நிறம் உவமை. மின்னுக்கொடி போன்ற நுசுப்பு. நுசுப்பு - இடை. நுசுப்பினையுடைய சாயல்,

(வேறு)

1355. தேனடைந் திருந்த கண்ணித் தெண்மட்டுத் துவலை மாலை
ஊனடைந் திருந்த வேற்க ணொண்டொடி யுருவ வீணை
தானடைந் திருந்த காவிற் பாடினா டனிமை தீர்வான்
கூனடைந் திருந்த திங்கட் குளிர்முத்த முலையி னாளே.

(இ - ள்.) கண்ணியையும் மாலையையும் கண்ணினையும் தொடியை யுமுடைய தேசிகப்பாவை, தான்பொருந்தியிருந்த பொழிலிலே தனிமை தீர்தற்கு வீணையைப்பாடினாளென்க.

தேன் - தேனினம். கூன் - வளைவு. (கஙட௦)

1356. வார்தளிர் ததைந்து போது மல்கிவண் டுறங்குங் காவிற், சீர்கெழு குருசில் புக்கான் றேசிகப் பாவை யென்னும், கார்கெழு மின்னு வென்ற நுடங்கிடைக் கமழ்தண் கோதை, ஏர்கெழு மயில னாளை யிடைவயி னெதிர்ப்பட் டானே.

---

மயில்போலும் சாயல்; என்றது பதுமையை. ஏ நீர் இருபுருவம் - தன் னைப் புணர்ச்சிக்கு ஏவுகின்ற தன்மையையுடைய இரண்டு புருவங்கள். முரிந்து - வளைந்து. நுடங்கும்படி புல்லி. தூய நீர்மையையுடைய மலர் மார்பன் : சீவகன். தொன்னலம் - பதுமையினுடைய நலத்தை; "தொன்னலம் பருகி" (சீவக. 2081). துளும்பும் மட்டுத்தேறல் பருகி - ததும்புகின்ற காமபானத்தின் தெளிவைப் பருகுதலால். தேன் நீர் மலர்மாலை - வண்டுகளையுடைய நீர்ப்பூவாலாகிய மாலையை. உயிர்ப்ப - உயிர்க்கும்படி. சூட்டினான் - பதுமைக்குச் சூட்டினான். சாயல், பருகுத லால், தூநீர் மார்பன் புருவம் ஏற இடை நுடங்கப் புல்லி, மாலையைச் சூட்டினான் என்க.

(உரை) [1] சீவக. 1220, அடிக்.

1355. தேன் - வண்டுகள். கண்ணி : முடியிற் சூடும் மாலை. தெண் மட்டுத் துவலைமாலை - தெளிந்த தேன்துளியையுடைய மாலை; மார்பி லணிவது. ஊன் - மாமிசம்; வேலுக்கு அடை. கண்ணியையும், மாலையையும், கண்ணையுமுடைய ஒண்டொடி; என்றது தேசிகப் பாவையை. உருவவீணை - அழகு பொருந்திய யாழ். கா - சோலை. தனிமைதீர்வான் - தனித்திருக்கும் துன்பம் தீரும்பொருட்டு. கூன் வளைவு. கூனடைந்திருந்த திங்கள் - பிறைச்சந்திரன். முத்தமாலைக் குப்பிறை உவமை. முலையினாளாகிய ஒண்டொடி தானிருந்த காவில், தனிமை தீர்வதற்கு வீணையைப் பாடினாள் எனமாறி முடிக்க.

1356. ததைந்து - நெருங்கி. மல்கி - நிறைந்து. காவில் - சோலைக் குள். குருசில் : சீவகன். கார்கெழு - மேகத்திற் பொருந்திய. நுடங்கு - அசைகின்ற. கோதை - பூமாலை. ஏர் - அழகு. இடையையும் கோதை

(இ - ள்.) குருசில், காவிலே புக்கான்; புக்கவன் தேசிகப்பாவை யென்று பெயர்கூறும், இடையினையும் கோதையினையுமுடைய பரத்தையை அவ்விடத்தே கண்டானென்க. (கஙக)

1357. சிலம்பெனும் வண்டு பாட மேகலைந் தேன்க ளார்ப்ப
நலங்கவின் போது பூத்த பூங்கொடி நடுங்கி நாணக்
கலந்தனன் காம மாலை கலையின தியல்பிற் சூட்டப்
புலம்புபோய்ச் சாய லென்னும் புதுத்தளி ரீன்ற தன்றே.

(இ - ள்.) அவயவஅழகும் [1]சமுதாய சோபையுமாகிய பூவைப்பூத்த பூங்கொடி நாணும்படி சென்று சேர்ந்தான்; சேர்ந்தவன், காமமாகிய மாலையைக் காந்தருவமணங்கூறிய நூலினியல்பாலே பாட, ஆர்ப்பச் சேர்த்தினுனுக, அக்கொடி தனிமை நீங்கிச் சாயலென்னும் தளிரையீன்ற தென்க. (கஙஉ)

1358. சாந்திடைக் குளித்த வெங்கட் பணைமுலைத் தாம மாலைப்
பூந்தொடி யரிவை பொய்கைப் பூமக ளனைய பொற்பின்
வேந்தடு குருதி வேற்கண் விளங்கிழை யிவர்க ளுள்ளும்
ஆய்ந்தடி பரவ வைகு மரிவையர்க் கநங்க னன்னுன்.

தாமம் - ஒழுங்கு. முலையினையும் மாலையினையும் பூமகளனைய பொற்பினையுமுடைய அரிவை : பதுமை. வேந்து - தனபதி. அடுகின்ற வேற்கண்ணையுடைய விளங்கிழை : திலோத்தமை.

---

யையுமுடைய மயிலனுளை; தேசிகப்பாவை என்று கூறப்படுகின்ற மயிலனுளை என்க. இடைவயின் - அச்சோலையிடத்தே. எதிர்ப்பட்டான் - சீவகன் பார்த்தான்.

1357. பாட - ஒலிக்க. மேகலையாகிய தேன்கள் ஆர்ப்ப; தேன்கள் - ஒருவகை வண்டுகள். நலம் - அவயவங்களின் அழகு. கவின் - அலங்காரத்தால் திரண்டு தோன்றும் அழகு. போது - பூ. நலமும் கவினுமாகிய போதைப் பூத்த பூங்கொடி; தேசிகப்பாவை. நாண - நாணும்படி. கலை - கந்தருவ மணத்தைப்பற்றிக் கூறிய நூல்; காமநூல் என்றுமாம். சூட்ட - தேசிகப் பாவைக்கு அணிய. காமமாகிய மாலையைக் கலையினது இயல்பால், பாட, ஆர்ப்ப, சூட்ட என மாறியியைக்க. புலம்பு போய் - தனிமையாலுண்டாகிய வருத்தம் நீங்கி. பூங்கொடி தளிரையீன்றது.

(உரை) [1]சமுதாய சோபை - அலங்காரம் முதலிய எல்லாம் சேர்ந்த சேர்க்கையாலுண்டாகிய அழகு.

1358. சாந்து - குங்குமச் சாந்து. தாமம் - வரிசை; ஒளியுமாம். தொடி - தோள்வளை. அரிவை : பதுமை. பொய்கைப் பூமகள் - பதுமை யென்னும் பொய்கைநீரிலே பூத்த தாமரைப் பூவிலுள்ள திருமகள்.

(இ - ள்.) அநங்கனன்னான், வேந்து விளங்கிழையென்ற இவர்கள் நாளும் ஆராய்ந்து தன்னைப்பரவுதலாலே, தான் அரிவையடியிலே தங்கா நிற்குமென்க.

பதுமையையும், [1]பரத்தையையும் ஒக்கக் கூறலாகாமையுணர்க. (கசுரு)

1359. இங்ஙன மிரண்டு திங்க ளேகலு மேக வேலான்
அங்ஙனம் புணர்ந்த வன்பி னவண்முலைப் போக நீக்கி
எங்ஙன மெழுந்த துள்ள மிருளிடை யேக லுற்றான்
தங்கிய பொறியி னாக்கந் தனக்கொர்தே ராக நின்றான்.

(இ - ள்.) இங்ஙனம் இரண்டுதிங்கள் சென்றவளவிலே, வேலான், தங்கிய நல்வினையினாக்கம் தேராகநின்றவன், அங்ஙனம் உழுவலான் வந்த அன்பினையுடையவள்முலைப்போகத்தை நீக்கி இருளிடை ஏக லுற்றான் ; அதற்கு உள்ளம் எங்ஙனமெழுந்ததென்க.

கொண்டுபோதலின், நல்வினை தேராயிற்று. பிரிவிற்குத் தேவர் வருந்தினார். (கசுச)

1360. தயங்கிணர்க் கோதை தன்மேற் றண்ணென வைத்த மென்றோள், வயங்கிணர் மலிந்த தாரான் வருந்துறு வகையி னீக்கி, நயங்கிள ருடம்பு நீங்கி நல்லுயிர் போவ தேபோல், இயங்கிடை யறுத்த கங்கு லிருளிடை யேகி னானே.

---

பொற்பு - அழகு. முலையினையும் மாலையினையும் பொற்பினையுமுடைய அரிவை என்க. வேந்து : தனபதி. அடுகின்றவேல், குருதியையுடைய வேல் ; அடுதல் - பகைவரைக் கொல்லுதல். வேல் போலும் கண்ணை யுடைய விளங்கிழை : திலோத்தமை. பரவ - புகழ்தலால். வைகும் - தங்கும். அரிவையர்க்கு அநங்கனன்னான் ; சீவகன். அநங்கனன்னான் வேந்தும் விளங்கிழையும் பரவுதலால் அரிவையடியில் வைகும் என்க.

(உரை) [1] பரத்தை : தேசிகப்பாவை.

1359. இரண்டு திங்கள் - இரண்டுமாதம். ஏகவேலான் - ஒப்பற்ற வேலையுடைய சீவகன். அன்பின் அவள் - அன்பினையுடைய பதுமையினது. போகத்தை நீக்கி. பொறியின் ஆக்கம் - நல்வினையின் இலாபம். பொறியின் ஆக்கமே தனக்கொரு தேராக நின்றவன் : சீவகன். வேலானாகிய நின்றவன், போகத்தைநீக்கி, இருளிடை ஏகலுற்றான் ; உள்ளம் எங்ஙனம் எழுந்தது? என மாறி முடிக்க.

1360. தயங்கு இணர்க் கோதை - விளங்குகின்ற பூங்கொத்துக்களை யுடைய மாலையையணிந்த பதுமை. ‘தன்’ என்றது சீவகனை. தண்ணென - குளிரும்படி. தோள் - பதுமையினுடைய கையை. தாரான் : சீவகன். தாரான், கோதை வைத்த தோளை, அவள் வருந்துறுவகை நீக்கி எனயாறி யியைக்க. நயம் - விருப்பம். பதுமைக்கு உடம்பும்,

வகை - அவளை அவசமாக்குதல். [1] நல்லுயிர் - ஆன்மா; அது கனவிடைப் போய் நுகர்ந்து மீண்டும் அவ்வுடம்பின்கண் வருமாறுபோல, இவனும் பலரையும் நுகர்ந்து பின்பு கூடுவனென்றுணர்க. இனி, உடம்பு நல்லுயிரை நீங்கிப் போனாற்போலென்றும் உரைப்ப.

(இ - ள்.) தாரான், தன்மேலே பதுமை வைத்த கையை அவள் வருந்தாதபடி நீக்கிக் கங்குலிலே நல்லுயிர்போந்தன்மைபோலே இயக்கத்தை நடுவறுத்த இருளிடத்தே ஏகினானென்க. (கக௬ரு)

(வேறு)

1361. நீணி றக்குழ னேர்வளைத் தோளியைத்
தானு றக்கிடை நீத்தலுந் தன்பினே
வேனி றக்கண்வி ழித்தன ளென்பவே
பானி றத்துகிற் பையர வல்குலாள்.

(இ - ள்.) பதுமையைச் சீவகன் உறக்கத்திடத்தே பிரிந்தானாக, தான் பிரிந்த பின்னே அவள் கண்விழித்தனளென்க. (கக௬சு)

1362. ஆக்கை யுள்ளுறை யாவிகெ டுத்தவண்
யாக்கை நாடி யயர்வது போலவும்
சேக்கை நாடித்தன் சேவலைக் காணிய
பூக்க ணாடுமொர் புள்ளுமொத் தாளரோ.

யாக்கை நாடி - பிணித்தலைத் தேடி.

---

சீவகனுக்கு நல்லுயிரும் உவமைகள். இயங்கு இடை அறுத்த கங்குல் - யாவரும் இயங்குகின்ற இயக்கத்தை நடுவறுத்த இராத்திரி. கங்குலாகிய இருளில்.

(உரை) [1] நல்லுயிர் : சீவக. 332.

1361. நேர்வளை - ஒத்த வளை. குழலையுடைய வளைத்தோளியை; பதுமையை. உறக்கிடை - தூக்கத்திடத்தே. தன்பினே - சீவகன் பிரிந்த பின்பு. வேல்போன்ற கண், நிறத்தையுடைய கண் என்க; நிறம் - ஒளி. துகிலையுடைய அல்குலாள் கண்விழித்தனள் என்க; அல்குலாள் : பதுமை.

1362. ஆக்கை - உடம்பு. கெடுத்து - கெட்டுப்போக்கி. அவண் - அவ்விடத்தே. யாக்கை நாடி - கட்டுதற்கு உயிரைத் தேடி. அயர்வது போலவும் - உடம்பு வருந்துவதைப் போலவும். சேக்கை - படுக்கை. சேவலை - ஆண் அன்னத்தை. காணிய - காணவேண்டி. பூக்கள் நாடும் ஓர் புள்ளும் - அவ்வன்னம் தங்குகின்ற பூக்களில் தேடுகின்ற ஒரு பெண்ணன்னத்தையும். அடி, 3-4 : "எச்சார் மருங்கினு மெரிபுரை தாமரை, கண்ணுற மலர்ந்த தெண்ணீர்ப் பொய்கையுள், நீப்பருஞ் சேவலை நிலைவயிற் காணாது, பூக்கண் போழும் புள்ளிற் புலம்பி" (பெருங். 2. 18 : 64-7). ஒத்தவள் : பதுமை.

(இ - ள்.) அங்ஙனம்விழித்தவள், முயங்குதலைத் தேடிக் காணுமை யின், உடம்புதான் தன்னுள்ளே உறைகின்ற உயிரைக்கெடுத்து வருந் துவதொன்றுண்டாயின் அதனைப்போலவும் வருந்தி, அவனிருப்பிடங் களைத் தேடுகின்றபொழுது, தன்சேவலைக் காணவேண்டிச் சேக்கையிலே தேடி அங்குக் காணுமையின், அதுதங்கும் பூக்களைத்தேடும் அன்னத் தையும் ஒத்தாளென்க. (கக௬எ)

1363. புல்லும் போழ்தினும் பூணுறி னேமென
மல்லற் காளையை வைதுமி ழற்றுவாய்
இல்லி னீக்கமு ரைத்திலை நீயெனச்
செல்வப் பைங்கிளி தன்னையுஞ் சீறினாள்.

(இ - ள்.) நீ எனக்கன்புடையாரைப்போலே, என்னை அவன் விரும் பிப் புல்லுகின்ற காலத்தே நும்முயக்கம் இறுகில் இவட்குநோயெனக் காளையை வைது எனது மென்மையின் வளப்பத்தைக் கூறிப்போது கின்றாய். இல்லினின்றும் அவன் நீங்குகின்ற நீக்கத்தை எனக்கு உரைத் திலையென்று தன் கிளிதன்னையும் சீறினாளென்க.

பூண் அழுத்தினென்றுமாம். (கக௬அ)

1364. ஓவி யக்கொடி யொப்பருந் தன்மையெம்
பாவை பேதுறப் பாயலி னீங்கிநீ
போவ தோபொருளென்றிலை நீயெனப்
பூவை யோடும்பு லம்பிமி ழற்றினாள்.

(இ - ள்.) எம்பாவை பேதுறும்படி நீ பாயலினின்றும் நீங்கிப் போவது காரியமோவென்று கூறிற்றிலையென்று, ஒப்பருந்தன்மையை யுடைய ஓவியக்கொடி, பூவையோடு வருந்திக் கூறினாளென்க.

பாவையென்றது பட்டாங்கு கூறுதற்கண்வந்தது; "அம்பலம் போற், கோலத்தினாள்பொருட்டாக" (திருச்சிற். 27) என்றாற்போல. பாயலினின்று மென்பதோரிடைச்சொல் ஐந்தாவதற்கு விரிக்க. (கக௬௯)

---

1363. புல்லும் போழ்தின் - சீவகன் என்னைத் தழுவுகின்ற காலத்து. நும் பூண் உறின் - நுமது ஆபரணங்கள் மிகப் பொருந்தினால். நோம்என - பதுமைக்கு வருத்த முண்டாகுமென்று. காளையை - சீவ கனை. மல்லல் மிழற்றுவாய் - எனது மென்மையின் வளப்பத்தைக் கூறி நின்ற கிளியே; விளி. இல்லின் நீக்கம் - சீவகன் இவ்வரண்மனையி னின்றும் நீங்குகின்ற நீக்கத்தை. என - என்று கூறி. சீறினாள் - கோபித் தாள்.

1364. ஓவியக்கொடி - சித்திரத்தில் எழுதிய பூங்கொடி போன்ற பதுமை. ஒப்பருந்தன்மை யுடைய ஓவியக்கொடி என மாறுக. பாயல் - படுக்கை. பொருள் - காரியம். என்றிலை - என்று கூறவில்லை. பூவை - நாகணவாய்ப் பறவை; இது பேசும் வன்மை பெற்றது. புலம்பி- வருந்தி. எம்பாவை, பேதுறப் போவது பொருளோ என்றிலை என ஓவியக் கொடி, பூவையோடு மிழற்றினாள் என மாறி முடிக்க.

1365. தன்ஞெப் பாரையில் லானைத்த லைச்சென்றெம்
பொன்ஞெப் பாளொடும் போகெனப் போகடாய்
துன்னித் தந்திலை நீயெனத் தூச்சிறை
அன்னப் பேடையொ டாற்றக்க ழறினாள்.

போகவிடாய் : விகாரம்.

(இ - ள்.) நீ அவனிடத்தே சென்று எம் பொன்ஞெப்பாளொடுங் கூடப் போவாயாகவென்றுகூறி ஒப்பிலானைப் போகவிடாயாய் என்னிடத்தே கொண்டு வந்திலையென்று அன்னப்பேடையோடே மிகக் கழறினாளென்க. (உ௦௦)

1366. மையில் வாணெடுங் கண்வள ராதன
மெய்யெ லாமுடை யாய்மெய்ம்மை காண்டிநீ
ஐயன் சென்றுழிக் கூறுகென் றுய்மயில்
கையி னாற்றொழு தாள்கயற் கண்ணினாள்.

(இ - ள்.) துயிலாதனவாகிய கண்களை மெய்யெங்குமுடையாய், நீ உண்மைகாண்டி ; ஐயன்சென்றவிடத்தைக் கூறென்று மயிலைக் கயற் கண்ணாள் கையாற்றொழுதாளென்க.

கண் - பீலிக்கண் ; கண்ணென்றதற்கேற்ப வாளென அடைகூறினார். தனக்குத்தோற்றுத் துயிலாத கண்களையுடைமையின், அவளைக் காட்டு மென்று தொழுதாள். (உ௦௧)

1365. தனக்கு ஒப்பவரை இல்லாதவனை ; சீவகனை. தலைச்சென்று- அவனிடத்தே போய். பொன் - இலக்குமி. எம்பொன்ஞெப்பாளென்றதும் பட்டாங்கு கூறுதற்கண் வந்தது. போகென - உடன் போவாயாக வென்று. போகடாய் - சீவகனைப் போகவிடாயாய் ; விகாரம். துன்னித் தந்திலை - என்னிடம் அவனைக் கொண்டுவந்து தந்தாயில்லை. ஆற்ற - மிக. எம்பொன்ஞெப்பாளொடும் போகென, ஒப்பாரையில் லானைப் போக டாயாய்த் தந்திலை எனக் கழறினாள் என மாறி முடிக்க.

1366. மை இல் - குற்றமில்லாத. கண் - மயிலினது தோகையி லுள்ள பீலிக்கண். வளராதன - தூங்காதனவாகிய. வளராதனவாகிய கண்களை மெய்யலாமுடையாய் ; என்றது மயிலை ; விளி. நீ மெய்ம்மை காண்டி - நீ உண்மையை அறிவாய். ஐயன் : சீவகன். சென்றுழி - போன இடத்தை. கூறுகென்று - சொல்லுவாயாக வென்று கூறி. அடி, 1-3 : "ஓடா நின்ற களிமயிலே சாயற் கொதுங்கி யுள்ளழிந்து, கூடா தாரிற் றிரிகின்ற நீயு மாகங் குளிர்ந்தாயோ, தேடா நின்ற வென்னுயி ரைத் தெரியக் கண்டாய் சிந்தையுவந், தாடா நின்று யாயிரங்க ணுடை யாய்க் கொளிக்கு மாறுண்டோ" (கம்ப. பம்பைப். 27). கயல்போலுங் கண்ணினாள் : பதுமை. கண்ணினாள் மயிலைக் கையினாற் றொழுதாள் என மாறி முடிக்க.

1367. வளர்த்த செம்மையை வாலியை வான்பொருள்
விளக்கு வாய்விளக் கேவிளக் காயிவண்
அளித்த காதலொ டாடுமென் னாருயிர்
ஒளித்த தெங்கென வொண்சுடர் நண்ணினாள்.

[1] பிள்ளைகளுக்கு விளக்கம் காவலாக இடுதலின், எங்களை வளர்த்த மனக்கோட்ட மின்மை யுடையையென்றாள். வாலியை - தூயை.

(இ - ள்.) விளக்கே! நல்ல பொருள்களைக் கண்ணிற்குக் காட்டு வாய், நீதான் செம்மையை; வாலியையாதலால், நடந்து திரியுமென் னுயிர் எவ்விடத்தே ஒளித்தது; அதனை எனக்கு விளக்காயென்று விளக்கைச் சேர்ந்தாளென்க. (உ0உ)

1368. பருகிப் பாயிரு ணிற்பின ருதெனக்
கருகி யவ்விருள் கான்றுநின் மெய்யெலாம்
எரிய நின்றுந டுங்குகின் றாயெனக்
குரிய தொன்றுரைக் கிற்றியென் றாடினாள்.

[1] விளக்காமையின், அதனை இழித்துக் கூறுகின்றாள். உரைக்கிற்றி : இகழ்ச்சி.

---

1367. செம்மையை - குற்றமில்லாத செவ்வையான மனத்தையுடை யாய். வாலியை - தூய்மையையுடையாய். வான்பொருள் விளக்குவாய் - சிறந்த பொருள்களைக் கண்களுக்குத் தெரியச் செய்வாய். செம்மையை, வாலியை, விளக்குவாய் என்று கூறியவை விளக்கை நோக்கி; விளி. அளித்த - கிருபை செய்த; கொடுத்தவென்றுமாம். ஆடும் - நடந்து திரி கின்ற. என் ஆருயிரென்றது சீவகனை. ஆடும் என் ஆருயிர் எங்கு ஒளித்தது? விளக்காய் எனச் சுடரை நண்ணினாள் என மாறி யியைக்க; சுடர் - விளக்கு.

(உரை) [1] குழந்தைகளுக்கு விளக்கைக் காவலாக இடுதல்; "கள்ள மாயை,............சுடர் பார்த்தும்............நகைத்துங் கிடக்குமால்" (பிரபு. மாயையுற். 50)

1368. பாயிருள் - பரவிய இருட்டை. பாயிருளைப் பருகி என மாறுக. நிற்பின் அருதெனை - அவ்விருட்டு தன் உடலில் நிற்குமானால் நீங்காது என்று எண்ணி. கருகியென்றது விளக்கின் திரி கருகியதை. இருளைக்கான்று; கான்று - கக்கி. நடுங்குதலென்றது விளக்கிலுள்ள பிழம்பு அசைதலை. எனக்கு உரியதொன்றை உரைக்கிற்றி; ஒன்று - ஒரு காரியத்தை. உரைக்கிற்றி - சொல்லுவாய்; சொல்லமாட்டாய் என்றபடி. விளக்கோடு ஊடினாள்.

(உரை) [1] சீவகன் இருக்குமிடத்தை விளக்காமையின்.

(இ - ள்.) அவாவின் மிகுதியால் அருதென்று பாராதே இருளைப் பருகி, அவ்விருள் வயிற்றிலே நிற்பின் அருதென்றுகருதி, அதனை முகங் கருகிக் கான்று பின்னும் தங்கிற்றுளதேல் அது வருத்துமோவென்று நின்னுடம்பெல்லாம் எரியாநிற்க நடுங்குகின்ற நீ எனக்குரியதொரு காரியத்தை உரைப்பையென்று வெறுத்தாளென்க. (உ0௩)

1369. கோடி நுண்டுகி லுங்குழை யுந்நினக்
காடு சாந்தமு மல்லவு நல்குவேன்
மாட மேநெடி யாய்மழை தோய்ந்துளாய்
நாடி நண்பனை நண்ணுக நன்றரோ.

மாடத்திற் கொடிகளிலே கோடியும், அவை நாட்டுதற்குப்பண்ணுந் துளைகளும், சுதையுமென்க; கோடிப்புடைவையும், மகரக்குழையும், சந்தனமும் போல் ஒருபொருள் தோற்றிற்று.

(இ - ள்.) மாடமே! எப்பொருள்களையும் காணவல்லாய், ஈரமுடையாய், நினக்கு இவற்றைத் தருவேன்; நண்பனை நாடி நணுகுவாயாக; அது நினக்கு நன்றென்றாளென்க.

[1] அவனும் பல தருவனென்றாள். (உ0௪)

1370. ஆட கக்கொழும் பொன்வரை மார்பனைக்
கூடப் புல்லிவை யாக்குற்ற முண்டெனா
நீடெ ரித்திர ணீண்மணித் தூணொடு
சூட கத்திர டோளணி வாட்டினாள்.

---

1369. கோடிநுண்துகிலும் - மாடத்திலுள்ள கொடிகளிற்கட்டிய புதியதாகிய நுண்ணிய ஆடையும். குழை - கொடி நாட்டுதற்குப் பண்ணுந் துளை. ஆடு சாந்தமும் - பூசுதற்குரிய வெண்சாந்தும். அல்லவும் - மற்றைய பொருள்களையும். நெடியாய் - எல்லாப் பொருள்களையும் காணுதற்குரிய உயர்ச்சியையுடைய மாடமே. மழைதோய்ந்துளாய் - மேகம் உன்மீது படிதலாற் குளிர்ச்சியை யுடையாய். நண்பனை நாடி நண்ணுக - சீவகனைத் தேடிச் சேர்வாயாக. நினக்கு நன்று அவனை அடைதல் உனக்கு நன்மைதரத் தக்கது; அரோ : அசை.

(உரை) [1] அவன் : சீவகன்.

1370. ஆடகக் கொழும்பொன் : நால்வகைப் பொன்னுள் ஒன்று; சீவக. 479, 510. பொன்வரைபோலும் மார்பனை - சீவகனை. கூட - என்னோடு கூடும்படி. கூடும்படி புல்லிவையாத குற்றம் நுமக்கு உண்டு எனா. எனா - என்று. சூடகத்தோடும் தோளணிகளோடும் கூறி. எரித்திரள் போன்ற மணித்தூண் : எரி - நெருப்பு. சூடகம் - ஒருவகைக் கைவளையல்; முன் கையில் அணிவதுமாம்; "சூடகமுன்கைச் சுடர்க்குழை மகளி

(இ - ள்.) பொன்வரைபோலு மார்பனைக் கூடும்படி தழுவி வையாத குற்றம் நுமக்கு உண்டென்றுகூறி எரித்திரள்போலும் மணித்தூரேரடே எற்றிச் சூடகத்தையும் தோளணியையும் போக்கினளென்க. (உ0ரு)

1371. கொலைகொள் வேலவன் கூடல னேகினன்
இலைகொள் பூணுமக் கென்செயு மீங்கென
மலைகொள் சந்தனம் வாய்மெழுக் கிட்டதன்
முலைகொள் பேரணி முற்றிழை சிந்தினள்.

(இ - ள்.) முற்றிழை, வேலவன் கூடலனாய் ஏகினன்; இப்பூண் இவ்விடத்து நுமக்கு என்னபயனைத் தருமென்று கூறித் தன்முலை கொண்ட பேரணிகளைச் சிந்தினளென்க. (உ0சு)

1372. அருங்க லக்கொடி யன்னவ னேகினன்
இருந்திவ் வாகத் தெவன்செய்விர் நீரென
மருங்கு ளேவ வளர்ந்த வனமுலைக்
கருங்கண் சேந்து கலங்க வதுக்கினள்.

(இ - ள்.) நுமக்கு அருங்கலத்தையும் எழுதுகொடியையுமொத்து நீங்காதவன் ஏகினன்; இனி நீர் இவ்வாகத்தேயிருந்து என்ன காரியத்தைச்செய்வீரென்று அழகிய முலையிற் கரிய கண் சிவந்து கலங்கும்படி அடித்துக்கொண்டாளென்க.

---

றொடு" (பெருங் ; 3. 6 : 91). தோளணி - தோளில் அணியும் தொடி என்னும் ஆபரணம். வாட்டினள் - தூரேரடு எற்றிக்கெடுத்தாள். சூடகத்தையும் தோளணியையும் வாட்டினள்.

1371. வேலவன் : சீவகன். கூடலன் ஏகினன் - என்னோடு கூடாதவனாகிப் பிரிந்து சென்றான். இலைகொள் பூண் - இலையின் வடிவத்தைக் கொண்ட ஆபரணம் : சீவக. 653, 1210, 2107, அடிக். இப்பூண் ஈங்கு நுமக்கு என் செய்யும் என என்று மாறி யியைக்க ; என - என்று நகில்களோடு கூறி. மலைகொள் சந்தனம் - பொதியின் மலையிலிருந்து கொள்ளப்பட்ட சந்தனத்தாலாகிய குழம்பை. மெழுக்கிட்ட - பூசப்பட்ட. முற்றிழை - உடம்பு முழுவதுமணிந்த ஆபரணங்களையுடைய பதுமை. முற்றிழை பேரணியைச்சிந்தினள் என்க.

1372. அருங்கலம் கொடி அன்னவன் - நுமக்கு அரிய ஆபரணங்களையும், எழுது கொடியையும் போன்று பிரியாத சீவகன் ; "அகன்றுறிருந்தனந் தம்மின்மன்னோர், இழையா யிருந்தன மென்று லவருடனேகுவமே" (கோடீச். 169) ; "சிங்கிமணி மார்பிடத்தில்........... பூணுகிற் றனத்தை.விட்டுப் பிரியேனே" (சர. குற.). அருங்கலமும், கொடியும் நகிலுக்குரியன. ஆகம் - மார்பு. நீர் இவ்வாகத்திருந்து என்

[1] அருங்கலக்கொடி அதுக்கினுளென்றுமாம்; அதற்கு அன்னவன், சுட்டாம். (உ०எ)

1373. மஞ்சு சூழ்வரை மார்பனைக் காணிய
துஞ்ச லோம்புமி னென்னவுந் துஞ்சினீர்
அஞ்ச னத்தொடு மையணி மின்னென
நெஞ்சி னீணெடுங் கண்மலர் சீறினாள்.

(இ - ள்.) வரைமார்பனை நீர் எப்பொழுதுங் காண்டற்குத் துயிலாதே கொள்ளுமென்று யான்கூறவும் துயின்றீர்; இனி அஞ்சனத்தையும் மையையும் அணிமின் அணிமினென்று கண்ணை நெஞ்சாலே சீறினாளென்க.

அணிமின்: குறிப்பு. பின்னும் [1] அவை காட்டவேண்டுதலின், அவைகேளாமற் சீறினாள். (உ०அ)

1374. அரக்குண் டாமரை யன்னதன் கண்மலர்
விருத்தி மாதர் விலக்க வெரீஇக்கொலோ
வருத்த முற்றன ளென்றுகொன் மேகலை
குரற்கொ டாது குலுங்கிக் குறைந்ததே.

விருத்தி - சீவிதம்.

செய்வீர் என என்று மாறியியைக்க; நீர் என்றது நகில்களை நோக்கிக் கூறியது. என - என்று கூறி. மருங்குல் - இடை. முலையினது கருங்கண். சேந்து கலங்க - சிவந்து கெடும்படி. அதுக்கினாள் - மார்பின் மீது அடித்துக்கொண்டாள்.

(உரை) [1] இப்பொருளில், அருங்கலக் கொடி என்றது பதுமையை.

1373. மஞ்சு - மேகம்; வரைக்கு அடை. காணிய - காணும் பொருட்டு. துஞ்சல் ஓம்புமின் என்னவும் - தூங்காதீர் என்று யான் சொல்லிய பின்பும். துஞ்சினீரென்றது தன் கண்களை நோக்கி; விளி. அஞ்சனம் - மையில் ஒருவகை; மருந்துறுப்பாகக் கூறப்படும்; "யோகத் தஞ்சனம்", "அஞ்சனம்......இன்ன, மருந்துறுப்பு" (பெருங். 1. 34 : 15, 3. 17 : 146 - 51). அணிமின் என்றது இகழ்ச்சிக் குறிப்பு. என - என்றுகூறி. நீள் நெடுங்கண் - மிக நீண்ட கண். கண்ணாகிய மலரை. கண்மலரை நெஞ்சினாற் சீறினாள்.

(உரை) [1] அவைகாட்டவேண்டுதலின் - அக்கண்கள் சீவகனைக் காண்பிக்க வேண்டியனவாக உள்ளமையால்; 'நெஞ்சினால் சீறினாள்' என்று கூறியமையால் 'அவை கேளாமற் சீறினாள்' என்றார்.

1372 - 3. (மேற்.) மு : சிலப். 4 : 47 - 57, அடியார்.

1374. அரக்குண்தாமரை - செந்நிறத்தைக் கொண்ட தாமரைப்பூ. தாமரையை யொத்த கண்ணாகிய மலரினது; விருத்தி விலக்க - கண்களுக்

(இ - ள்.) மாதர் அழுதுசிவந்த கண்மலரின் அஞ்சனத்தையும் மையையும் விலக்குதலாலே நமக்கும் ஏதம் வருமென்று வெருவியோ? இவள்தான் வருந்தினளென்றோ? மேகலை அசைந்து ஆரவாரியாதே ஓசையடங்கியதென்க.

குலுங்கல் - அசைதல். மெய்யசையாமல் அவசமானபடி கூறினர். (உ௦௯)

(வேறு)

1375. துனிவா யினதுன் னுபுசெய் தறியேன்
தனியே னொருபெண் ணுயிரென் னொடுதான்
இனியா னிஙனே யுளனே யுரையீர்
பனியார் மலர்மேற் படுவண் டினமே.

(இ - ள்.) [1]மெல்லியவண்டினமே! யான் நும்மைப்போல் தனித்தறியேன்; அவனைப்பொருந்திநின்று அவற்கு வெறுப்பானவை செய்தறியேன்; ஆதலிற்றான் என்னோடினியவன்; ஆதலால் உரைத்தீரென்று நும்மை வெருவேன்; நீட்டித்துரைப்பிற் போகின்றவுயிர்தானும் ஒரு பெண்ணுயிர்; இது கண்டிருத்தல் பாதகம்; இதுபோவதற்கு முன்பே, இவ்விடங்களிலேயுளனோ? உளனாயின், அவ்விடத்தை உரையீரென்றாளென்க.

உளனே; ஏகாரம்: வினா. (உ௧௦)

---

குச் சீவிதமாக இடப்பெற்ற அஞ்சனத்தையும் மையையும் அழித்தலாலே; விருத்தி - சீவிதம்; சீவிப்பதற்காக விட்ட நிலம்; "விருத்தி கொடுத்துத் திருத்தகு செய்தொழில்" (பெருங். 4. 3 : 24); "அரசொடு நட்டவ ராள்ப விருத்தி" (வளையாபதி). மாதர் : பதுமை; எழுவாய். வெரீஇக்கொலோ - பயத்தை அடைந்தோ; கொல் : அசைநிலை. குரல் கொடாது - ஒலித்து ஆரவாரம் செய்யாமல். குலுங்கி - அசைந்து. குறைந்தது - ஒலியடங்கியது. மேகலை குலுங்கிக் குரற்கொடாது குறைந்தது என மாறியியைக்க.

1375. துன்னுபு துனிவாயின செய்தறியேன் - சீவகனைப் பொருந்தி நின்று அவனுக்கு வெறுப்பானவற்றை யான் செய்திலேன்; துனி - வெறுப்பு. தனியேன் - இதுகாறும் சீவகனைப் பிரிந்து தனித்திருந்திலேன். ஒரு பெண் உயிர் - நீங்கள் அவனுள்ள இடத்தை உரையாமற் போனால், இறந்துபோவது ஒரு பெண்ணுயிராகும்; பெண்ணுயிருக்கு இரங்குதல் வேண்டுமென்று கூறியவாறு. இனியான் - சீவகன் எனக்கு இனியவன்; ஆதலால் அவனுள்ள இடத்தைச் சொல்லுங்கள் என்று கூறியவாறு. இஙனே உளனே - இவ்விடத்தே அவன் உள்ளானோ? பனி - குளிர்ச்சி. படு வண்டினம் - ஒலிக்கின்ற வண்டின் கூட்டமுமாம்; வண்டினமே, தனியேன் துனிவாயின செய்தறியேன்; என்னொடுதான் இனியான்; ஒருபெண்ணுயிர், இஙனே உளனே? உரையீர் என மாறியியைக்க.

(உரை) [1]படுத்தலோசை மெல்லிய ஓசையென்னும் பொருளில் வருதல் அறிக.

1376. நிரைவீ ழருவிந் நிமிர்பொன் சொரியும்
வரையே புனலே வழையே தழையே
விரையார் பொழிலே விரிவெண் ணிலவே
உரையீ ருயிர்கா வலனுள் வழியே.

அருவிநிரையையுடைய மாற்றுள்ள பொன்விளங்கும்வரை - செய்குன்று.

(இ - ள்.) வரைமுதலியவற்றை விளித்து உயிர்காவலனிருக்கின்ற விடத்தை உரையீரென்றாளென்க. (உகக)

1377. எரிபொன் னுலகின் னுறைவீ ரிதனைத்
தெரிவீர் தெரிவில் சிறுமா னிடரிற்
பரிவொன் றிலிராற் படர்நோய் மிகுமால்
அரிதா லுயிர்காப் பமரீ ரருளீர்.

(இ - ள்.) அமரீர்! நீர் பொன்னுலகிலேயிருப்பீராதலின், அவன் போன வழியைத்தெரிந்திருப்பீர்; அங்ஙனந்தெரிந்திருப்பவும் தெரிவில்லாத மானிடரைப்போலே அருளிலிராயிராநின்றீர்; எனக்கு நோய்மிகாநின்றது; அதனால் உயிர்காத்தல் இனி அரிது; இதனைக் காக்கும்படி அவனை அருளீரென்றாளென்க. (உகஉ)

1378. புணர்வின் னினிய புலவிப் பொழுதும்
கணவன் னகலின் னுயிர்கை யகறல்
உணர்வீ ரமரர் மகளீ ரருளிக்
கொணர்வீர் கொடியே னுயிரைக் கொணர்வீர்.

1376. நிரை - வரிசை. நிமிர்பொன் - மாற்றுயர்ந்த பொன். அருவி நிரையையுடைய பொன் சொரிகின்றவரை. வழை - சுரபுன்னை மரம். விரை - வாசனை. உயிர்காவலன் உள்வழி - சீவகனிருக்குமிடத்தை; ஏ : அசை. இப்பாடல் முதலியவற்றோடு, "மலையே மரனே மயிலே குயிலே............உலையா வலியா ருழைநீ ருரையீர்" (கம்ப. சடாயுவுயிர். 77) என்பது முதலிய பாடல்கள் ஒப்புநோக்கற்பாலன.

1377. எரிபொன் - விளங்குகின்ற பொன். இதனை - சீவகன் சென்ற இடத்தை. தெரிவீர் - அறிந்திருப்பீர் தெரிவில் - அறிந்திலாத. சிறு மானிடரின் - அறிவிற்சிறிய மனிதரைப்போல. பரிவு ஒன்றிலிர் - இரக்கமில்லாதவராயுள்ளீர்; ஆல் : அசை. படர்நோய் மிகும் - சீவகன் பிரிவாலுண்டாகிய துன்பமாகிய பிணி மிக்கது; ஆல் : அசை. உயிர் காப்பு அரிதால் என மாறுக; காப்பு - காத்தல். அமரீர் - தேவர்களே; விளி; "அமரீ ரசுரீ ரழுவ கரையீர்" (யா. வி. 53, மேற்.). அருளீர் - சீவகனை அகப்படச் செய்யுங்கள்.

1378. புணர்வின் இனிய புலவி - புணர்ச்சியைக் காட்டிலும் இனிமையையுடைய ஊடல்; "ஊடியும் புணர்ந்ததொத் தினியவளுளாளரோ" (சீவக. 1996). அகலின் - உம்மை விட்டுப் பிரிந்தால். உயிர்கையகறல்

(இ - ள்.) அமரர்மகளிர்! கொடியேனுயிரைத்தருவீராக; அது தருமாறெங்ஙனேயென்னின், புணர்ச்சியிற்காட்டிலினிய புலவிக் காலத்தும் கணவனீங்கில் உயிர்நீங்குதலையறிவீராதலின், அருளி அவனைக் கொண்டுவாருங்கோளென்றாளென்க. (உகங)

1379. நகைமா மணிமா லைநடைக் கொடிநின்
வகைமா மணிமே கலையா யினதேல்
அகையா தெனதா விதழைக் குமெனத்
தகைபா டவலாய் தளர்கோ தளர்கோ.

(இ - ள்.) மாலையினையுடைய நடந்து திரியுங்கொடியே! எனதாவி நின்மேகலையாயிற்றாயின், தாழாதே தளிர்க்குமென்று நலத்தைப் பாராட்டவல்லவனே! தளர்கோ தளர்கோவென்றாளென்க.

இது முதல், [1] எதிர்ப்பெய்துபரிதல். ஓகாரம் : எதிர்மறை. இறந்து படுவேனென்பது கருத்து. தளர்கு, [2] தன்வினையுரைக்கும் தன்மைச் சொல். வல்லாய் - பொய்யுரைக்க வல்லாய். (உகச)

1380. புனைதார் பொரநொந் துபொதிர்ந் தவென
வினையா ரெரிபூண் முலைகண் குளிர
உனகண் மலரா லுழுதோம் பவலாய்
நினையா துநெடுந் தகைநீத் தனையே.

---

உணர்வீர் - உமது உயிர் நீங்குதலை அறிவீராதலால். அமரர் மகளிர் என்றது தேவமங்கையரை; விளி. அருளி - கருணைசெய்து. கொடியேன் உயிரை - கொடியவளாகிய என்னுடைய உயிர்போன்ற சீவகனை. உயிரைக் கொணர்வீர் கொணர்வீர் என்க.

1379. நகை - ஒளி. மணிகளாலாகிய மாலை. மாலையினையும் நடையையும் உடைய கொடி : பதுமை; விளி. இது சீவகன் கூற்றைப் பதுமைகொண்டுகூறுவது. கொடியே, எனது ஆவி நின்மேகலையாயின தேல் என மாறியியைக்க. அகையாது தழைக்கும் என - தாழாமல் தளிர்த்திடும் என்று. தகைபாடவலாய் - என் நலத்தைப் பாராட்ட வல்லவனே; தகைபாடல் : சீவக. 1337. என்றது சீவகனது உருவெளிப் பாட்டை நோக்கிக் கூறியது. தளர்கோ - தளர்வேனோ; இறப்பேனென்றவாறு.

(உரை) [1] 'எதிர்பெய்து பரிதல் என்பது உருவுவெளிப்பாடு; அது தலைமகனையும் அவன்தேர் முதலாயினவற்றையும் தன்னெதிர் பெய்து கொண்டு பரிந்து கையறுதல்' (தொல். மெய்ப். 22, பேர்.). [2] தொல். வினை. 6.

1380. புனைதார் - சீவகன் அணிந்த மார்பின் மாலை. பொர - பொருதலால். பொதிர்ந்தவென - வீங்கின வென்றுகூறி. வினையார் எரிபூண் - தொழிலமைந்த விளங்குகின்ற ஆபரணத்தையுடைய.

(இ - ள்.) மாலைபட்டழுந்த அது பொறாதே நொந்துவீங்கின வென்று கூறி, முலைதமதுகண் குளிரும்படி உன்னுடைய கண்மலராலே யுழுது பொய்யை மெய்யாகப் பரிகரிக்கவல்லவனே! நெடுந்தகாய்! இதனை மெய்யென்று கருதினவள் யாப்பிரிந்தால் ஆற்றுளென்று நினையாதே நீத்தாய்; இனி ஆற்றும்வகை கூறென்றாளென்க.

வகுத்த [1] தூசிப்படை பொருதலின், நொந்து புடைக்கொண்டன வென்று கருதிக் கண்குளிர ஓம்பவல்லாயென்றும் ஒருபொருள் தோன்றிற்று. (உகரு)

1381. அருடேர் வழிநின் றறனே மொழிவாய்
பொருடேர் புலனெய் தியபூங் கழலாய்
இருடேர் வழிநின் றினைவேற் கருளாய்
உருடே ருயர்கொற் றவன்மைத் துனனே.

கொற்றவனும், மைத்துனனுமென உம்மைத்தொகை. ஏகாரம்: ஈற்றசை.

(இ - ள்.) கழலாய்! தனபதியும், உலோகபாலனும் நின்னுடனரு ளிருக்கும்படியை ஆராயுமிடத்து, அவர்கள் தத்துவத்தையாராயுமறி வைப் பெறவேண்டிநின்று அவர்கட்கு அறனைமொழிகின்ற நீ இருள் செறிந்தவிடத்தே நின்று வருந்துகின்றவெனக்கு அருளுகின்றிலை; ஆதலால், நினக்கு முற்பட [1] சொல்லுதலெளிதாய்ச் சொல்லியவண்ணஞ் செய்தல் அரிதாயிருந்ததென்றாளென்க. (உகசு)

---

முலைகள் தம் கண் குளிரும்படி. உன - உன்னுடைய; என்றது சீவகனை. முலையிற் கண்மலரால் எழுதல்: சீவக. 687. ஓம்பவலாய் - தீங்கை நீக்கவல்லவனே. நினையாது நீத்தனை - உன்பிரிவை யான் ஆற்றேன் என்பதைக் கருதாமல் என்னைப் பிரிந்தாய்.

(உரை) [1] முன் படை.

1381. அருள் தேர்வழி - உன்னிடம் அருளிருக்கும்படியை ஆராயு மிடத்து. அறனே மொழிவாய் - அவர்கட்குத் தருமத்தையே கூறுகின்ற நீ. பொருள் தேர்புலன் எய்திய - தத்துவப்பொருளை ஆராய்கின்ற அறிவைப்பெறவேண்டி. இருள் தேர்வழிநின்று இனைவேற்கு - இருட்டு நெருங்கிய இடத்தே நின்று வருந்துகின்ற எனக்கு. தேரையுடைய கொற்றவன்: தனபதி. மைத்துனன் - சீவகனுக்கு மைத்துனனாகிய உலோகபாலன். பூங்கழலோய், கொற்றவனும் மைத்துனனும் அருள் தேர்வழி, பொருள்தேர் புலனெய்திய நின்று அறனே மொழிவாய்; இனைவேற்கு அருளாய் எனமாறி முடிக்க.

(உரை) [1] "சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாம், சொல்லிய வண்ணஞ் செயல்" (குறள், 664)

1382. மிகவா யதொர்மீ ளிமைசெய் தனனோ
உகவா வுனதுள் ளமுவர்த் ததுவோ
இகவா விடரென் வயினீத் திடநீ
தகவா தகவல் லதுசெய் தனையே.

"உகப்பே யுயர்தல்" (தொல். உரி. 8). நீத்திட - பெருக்கிட.

(இ - ள்.) இடர்தான் பிறரிடத்துச்செல்லாதே என்னிடத்தே மிகுத்திடுதற்கு யான் அறிவின்மையின் மிகவுமாயதொரு வன்மை செய்தேனோ? அன்றி நின்னுள்ளந்தான் ஒருகால் அன்புமிக்குப் பின்பு உவர்த்ததோ? கூறுவாயாக வென்றுள். அவ்வெளிப்பட்டவுருவம் கூறாது நிற்றலின், அதனைநோக்கி, நீ தகவல்லாதது செய்துநின்றாய்; இனித் தகும்படி வந்து முயங்குவாயாக வென்றுளென்க.

விடந்தீர்த்து உயிரைத்தந்தவன் முன்னின்று முயக்கந்தராது இறந்துபடுவித்தலை, 'தகவல்லது' என்றுள். தகவா: பெயருமாம்.

(உகஎ)

1383. குளிர்துன் னியபொன் னிலமே குதலால்
தளரன் னநடை யவடாங் கலளாய்
ஒளிர்பொன் னரிமா லையொசிந் திநனே
மிளிர்மின் னெனமின் னிலமெய் தினளே.

(இ - ள்.) பொன்னரிமாலை, அவ்வுருவம் வந்துமுயங்காது நிற்றலின், தன்மேனியிற் காமத்தீயாறிக் குளிர்ச்சி நெருங்கவேண்டி முயங்குதற்குப் பொன்னிலத்தே அவள்தான் சேறலின், அப்பொழுது அவசத்தாலே தளர்ந்த அன்னம்போலுநடையைத் தாங்கமாட்டாளாய் ஒசிந்து இந்நிலத்தேபிறபு மின்னென நிலத்தே வீழ்ந்தாளென்க.

பொன்னரிமாலை: பெயர். மீநிலமும் பாடம். (உகஅ)

---

1382. மீளிமை - வன்மை. உகவா - முதலில் அன்பு உயர்ந்து. உவர்த்ததுவோ - பின்பு வெறுப்படைந்ததோ. இகவா - பிறரிடத்துச் செல்லாமல். இடர் - துன்பம். நீத்திட - மிகச் செய்தற்கு. தகவா - தகும்படி வந்து என்னைப் புல்லுவாயாக. தகவல்லது செய்தனை - அன்று உயிரை யளித்த நீ இன்று என்னைப் புல்லாது நிற்கின்ற தகுதியற்ற காரியத்தைச் செய்தாய். இடர் இகவாது என்வயின் நீத்திடற்கு யான் மிகவாயாதொரு மீளிமை செய்தனனோ? உனது உள்ளம் உகவா உவர்த்ததுவோ? தகவல்லது செய்தனை; தகவா எனமாறி முடிக்க.

1383. குளிர் துன்னிய - தனது காமத்தீத் தணிவதற்குக் குளிர்ச்சியை அடையவேண்டி. ஏகுதலால் - பதுமை செல்லுதலால்; தளர்ந்த அன்னத்தைப் போலும் நடையையுடையவள் தாங்கலளாய். ஒளிர் - விளங்குகின்ற. பொன்னரிமாலை: பதுமை; ஆகுபெயர்.

1384. தழுமா வலிமைந் தவெனத் தளரா
எழுமே ழடியூக் கிநடந் துசெலா
விழுமீ நிலமெய் திமிளிர்ந் துருகா
அழுமா லவலித் தவணங் கிழையே.

அங்ஙனம் வீழவும் தழுவாமையின், 'மாவலிமைந்த' என்றாள். ஏழடி செல்வது ஒருமரபு.

(இ - ள்.) அவ்வணங்கிழை, அவலித்துப் பின்னும் முயங்குதற்குத் தளரா எழும்; எழுந்து ஏழடியளவு நடந்துசெல்லா, 'மாவலிமைந்தனே' என்றுகூறித் தழுவும்; 'ஆண்டு அவ்வுருவம் பற்றுக்கோடாகாமையின் வீழும்; வீழ்ந்து நிலத்தையெய்திப் புரண்டு உருகியழுமென்க.

மீநிலம் - மேலாநிலம். (உகக)

(வேறு)

1385. கரப்புநீர்க் கங்கை யங்கட் கடிமலர்க் கமலப் பள்ளித், திருத்தகு திரைக டாக்கச் சேப்புழிச் சேவ னீங்கப், பரற்றலை முரம்பிற் சின்னீர் வறுஞ்சுனைப் பற்று விட்ட, அரத்தவாய்ப் பவளச் செந்தாட் பெடையன்ன மழுவ தொத்தாள்.

(இ - ள்.) தான் சேவலைக்கூடுதலாலே, முன்பு தானிருந்த பாலை நிலத்திற் சுனையிற் பற்றைவிட்ட பெடையன்னம், கங்கையின் அழகிய கள்ளையுடைய கமலப்பள்ளியிலே திரைகள் அலைத்துத்துயிற்றச் சேவலோடுதுயில்கின்றவளவிலே, அதுநீங்குதலால் அச்சுனையில் இருந்து அழுவதுண்டாயின், அதனை யொத்தாளென்க.

---

ஒசிந்து - துவண்டு. இங்ஙனே - இந்தப்பூமியில். மின்என - மின்னலைப் போல. மின் - மின்போலும் பதுமை. நிலம் எய்தினள் - வீழ்ந்தாள். பொன்னரிமாலையாகிய மின் எய்தினள் என்க.

1384. தழும் - தழுவும். மாவலி மைந்த - மிக்க வலியையுடைய சீவகனே; சச்சந்தனுடைய மகனே யென்றுமாம்; மாவலி - சச்சந்தன்; சீவக. 222. தளரா எழும் - தளர்ந்து எழுவாள். ஊக்கி - வலிய முயன்று; சீவக. 534. ஏழடி நடந்துசெல்வது ஒருமரபு; சீவக. 179, அடிக். "காலி னேழடிப் பின்சென்று" (பொருந. 166, ந.). செலா - சென்று. விழும் - விழுவாள். மிளிர்ந்து - புரண்டு. உருகா - உருகி. அவலித்து - வருந்தி. அவ்வணங்கிழை : பதுமை. அணங்கிழை, அவலித்து, தளரா எழும்; ஊக்கி ஏழடி நடந்துசெலா, மாவலிமைந்த வெனத் தழும்; விழும்; நிலமெய்தி உருகியழும் எனமாறி முடிக்க.

1335. கரப்புநீர்க் கங்கை - பாதாள கங்கையில். அம் கள் கடிமலர்க் கமலப் பள்ளி - அழகிய தேனையுடைய, வாசனை பொருந்திய மலராகிய தாமரைப் படுக்கையில். திரு - அழகு. தாக்க - அலைத்துத் தூங்கச் செய்ய; சீவக. 930. சேப்புழி - பெண்ணன்னம் ஆணன்னத்தோடு தூங்குமிடத்து. சேவல் நீங்க - ஆணன்னம் பிரிந்து செல்லுதலால்.

கங்கைக்கு நடுவிற் பாதாளகங்கை; சடையிற் கரத்தலுமாம். அவனைக் கூடியபின்பு [1]தந்தையில்லம் கங்கையாய், அவனீங்குதலால் அச்சுனையின் தன்மைத்தாயிற்று; அன்னம் சுனையில்தங்குதல்: இல் பொருளுவமை. (உஉ0)

1386. மெழுகினுற் புனைந்த பாவை வெய்துறுத் தாங்கு மோவா, தழுதுநைந் துருகு கின்ற வாயிடைத் தோழி துன்னிக், கெழீஇயினுள் கேள்வி நல்யாழ்க் கிளைநரம் பனைய சொல்லாள், கழிபெருங் கவலை நீங்கக் காரண நீர சொன்னுள்.

(இ - ள்.) அங்ஙனம் ஓவாதழுது மெழுகாற்செய்த பாவையைத் தீயுறுத்தாற்போல நைந்துருகுகின்ற அக்காலத்தே, கெழீஇயினுளாகிய தோழி துன்னி, நரம்பனைய சொல்லாள் கவலை நீங்கியிருக்கும்படி, காரணமான தன்மையையுடையனவற்றைக் கூறினுளென்க.

ஆங்கும்: உம்மை இசைநிறை. காமமும், இருவினையும் நிலையாமையு முதலியவற்றை, 'காரண நீர' என்ருர். பிரிவுணர்த்தி ஆற்றுவித்துப் பிரியாமையின், இங்ஙனம் ஆற்றுவிக்கின்ருள். (உஉக)

---

பரல் தலை முரம்பின் - பருக்கைக்கற்களைத் தன்னிடத்தேயுடைய மேட்டு நிலத்தில். முரம்பிலுள்ள சின்னீரையுடைய வறுஞ்சுனையில். பற்று - ஆசையை. அரத்தவாய்ப் பவளச் செந்தாட் பெடையன்னம் - செந்நிறத்தையுடைய வாயையும், பவளத்தைப் போன்று சிவந்த பாதத்தையுமுடைய பெண்ணன்னம். சுனையில் பற்றுவிட்ட பெடையன்னம், கங்கைக் கமலப்பள்ளியில் சேப்புழிச் சேவல்நீங்க அழுவதை ஒத்தாள் எனமாறி முடிக்க. பதுமைக்குப் பெடையன்னமும் சீவகனுக்கு ஆணன்னமும் உவமைகள்.

(உரை) [1] தந்தையில்லம் - தனபதியின் நகர்; கங்கை தூய்மைக்கும், சுனை தூய்மையின்மைக்கும் கூறப்பட்டன.

1386. புனைந்த - செய்த. வெய்து உறுத்தாங்கு - தீத்தீண்டினுற்போல. ஓவாது - நீங்காமல். அடி, 1-2: "மெழுகுசெய் பாவையின் மெல்லிய லசைந்து", "ஆசி லணியிழை தீயயல் வைத்த, மெழுகுசெய் பாவையி னுருகு நெஞ்சினள்" (பெருங். 2. 16 : 115, 3. 7 : 88-9). ஆயிடை - அப்பொழுது. துன்னி - பதுமையை அடைந்து. கெழீஇயினுளாகிய தோழி துன்னி என மாறியியைக்க. கேள்வி - சுருதியையுடைய. கிளை நரம்பனைய சொல்லாள் - கிளையென்னும் நரம்பினது இசையைப் போன்ற சொல்லையுடைய பதுமை. நீங்க - நீங்கும்படி. காரணநீர சொன்னுள் - காரணமான நல்ல தன்மையையுடைய சொற்களைக் கூறினுள்; "காரணக் கிளவி நீர கூறி", "காரணக் கிளவி நீர காட்டி" (பெருங். 1. 35 : 112, 36 : 96). தோழி சொன்னுள்.

1387. தெள்ளறல் யாறு பாய்ந்த திரைதவழ் கடலின் வெஃகி
அள்ளுற வளிந்த காம மகமுறப் பிணித்த தேனும்
உள்ளுற வெந்த செம்பொ னுற்றநீர்ப் புள்ளி யற்றுற்
கள்ளுற மலர்ந்த கோதாய் காதலர் காத லென்றாள்.

(இ - ள்.) கோதாய்! உலகிற் காதலித்தோர் காதலிக்கும்படி கேள்; நுகருந்தன்மையுறும்படி பழுத்த காமம் கடலிற்காட்டின்மிக்கு ஆடவர் நெஞ்சை இறுகப்பிணித்ததேனும் தோன்றுதிருக்கவேண்டிழுல் உருகின பொன்னிலுற்ற நீர்ப்புள்ளிபோலத் தோற்றுதாமென்றாளென்க.
அற்று - அத்தன்மைத்து. (உஉஉ)

1388. ஓடரி யொழுகி நீண்ட வொளிமலர் நெடுங்க ணாரைக்
கூடரி யுழுவை போல முயக்கிடைக் குழையப் புல்லி
ஆடவ ரழுந்தி வீழ்ந்தும் பிரிவிடை யழுங்கல் செல்லார்
பீடழிந் துருகும் பெண்ணிற் பேதைய ரில்லை யென்றாள்.

(இ - ள்.) அத்தன்மைத்தாகிய காமத்தையுடைய ஆடவர் கண்ணாரை முயக்கிடத்தே வருந்தும்படி புல்லி அழுந்திவீழ்ந்தும் பிரிவிடத்து அரியும் உழுவையும்போல வருந்தார்; அத்தன்மையின்றியே பிரிவிடத்து வருந்தும் பெண்ணிற்காட்டிற் பேதையார் உலகத்து இல்லைகாணென்றாளென்க.

இப்பேதைமைவிளக்கின்றமை மேற்கூறுகின்றாள். கூடுதல் - பெடையோடு கூடுதல். (உஉா)

---

1387. தெள்ளறல் யாறு - தெளிந்த அற்று வருதலையுடைய நீரைக் கொண்ட ஆறு. கடலின் வெஃகி - சமுத்திரத்தைக் காட்டிலும் மிக்கு. அள்ளுற அளிந்த காமம் - உண்ணும் தன்மை பொருந்தும்படி பழுத்த காமம். அகம் உறப் பிணித்ததேனும் - அடவாது மனத்தை இறுக வசப்படுத்தியதாயினும். காமம் கடலின் வெஃகி அகத்தை உறப்பிணித்த தேனும் என மாறியியைக்க; "காத லுனுங் கடலினும் பெரிதே" (நற். 16௦ : 10). வெந்த - உருகின. செம்பொன்னில் உற்ற நீர்ப்புள்ளியைப் போல உருத்தோற்றுது. புள்ளியற்று - புள்ளியின் தன்மையையுடையது. காமம் அற்று என்க. கள் - தேன். கோதாய் - பதுமையே; விளி. காதலருடைய காதலின் தன்மை அது.

(மேற்.) அடி, 1 : கல். 'பழமை', 11, மயில்.

1388. ஓடு அரி - பரந்த செவ்வரியையுடைய. ஒழுகி - நீண்டு. ஓடரி நெடுங்கணார், ஒழுகி நீண்ட நெடுங்கணார், மலர்போலும் நெடுங் கணார் எனத் தனித்தனிப் பிரித்தியைக்க; நெடுங்கணார் : மகளிர். கூடு அரி உழுவை போல - தன் பெடையோடு கூடுகின்ற சிங்கத்தையும் புலியையும்போல. குழையப் புல்லி - வருந்தும்படி தழுவி. பிரிவிடை - பிரியுமிடத்து. அழுங்கல் செல்லார் - மகளிரை நினைத்து வருந்தார்.

1389. பேதைமை யென்னும் வித்திற் பிறந்துபின் வினைக ளென்னும், வேதனை மரங்க ணாறி வேட்கைவேர் வீழ்த்து முற்றிக், காதலுங் களிப்பு மென்னுங் கவடுவிட் டவலம் பூத்து, மாதுய ரிடும்பை காய்த்து மரணமே கனிந்து நிற்கும்.

(இ - ள்.) அறியாமையென்கின்ற வித்தினிடமாகத் தீவினை யென்னும் வேதனைமரங்கள் பிறந்து, தோற்றி, ஆசையென்கின்ற வேரை வீழவிட்டு, தான்முற்றி, பெறாததன்மேற்செல்லுங் காதலும் பெற்றதன் மேற்செல்லும் களிப்புமென்னும் கவடுகளைவிட்டு, அவலத்தைப்பூத்து, கவலையைக்காய்த்து, மரணத்தைத்தருகின்ற கையாற்றினை இவ்வுடம்பு நுகரும்படி பழுத்துத் தந்து, பின்னும் அங்ஙனங்காய்த்தற்கு அம்மரந் தான் நிற்குமென்றானென்க.

பழுத்தல் - உடம்புபோதல். தீவினை நிற்றலின், நிற்குமென்றது. [1] ஏகாரம் : தேற்றம். (உஉச)

1390. தேன்சென்ற நெறியுந் தெண்ணீர்ச் சிறுதிரைப் போர்வை போர்த்து, மீன்சென்ற நெறியும் போல விழித்திமைப் பவர்க்குத் தோன்றா, மான்சென்ற நோக்கின் மாதே மாய்ந்துபோ மக்கள் யாக்கை, ஊன்சென்று தேயச் சிந்தித் துருகுவதோ தகுவ தென்றான்.

விழித்திமைப்பவர் - மக்கள். ஓகாரம் : எதிர்மறை.

---

ஆடவர், நெடுங்கணாரைப் புல்லி அழுந்தி வீழ்ந்தும் அரியும் உழுவையும் போலப் பிரிவிடை அழுங்கல் செல்லார் என மாறியியைக்க. பீடு-பெருமை. உருகும் - பிரிவிடத்து வருந்துகின்ற. பெண்ணைக்காட்டில் பேதைய ரில்லை; பேதையர் - அறிவில்லாதவர்.

1389. வித்தின் - விதையினிடமாக. வினைகள் - தீவினைகள். பேதைமைவித்தில் தீவினையென்னும் வேதனைமரங்கள் பிறந்து நாறி என மாறி யியைக்க; நாறி - தோன்றி. வேட்கையாகிய வேரை வீழ்த்து; வீழ்த்து - வீழச்செய்து; வேட்கை - ஆசை. காதலும் - தான் பெறாத பொருளின்மீது உண்டாகின்ற விருப்பமும். களிப்பும் - தான் பெற்ற பொருளின் மீது உண்டாகின்ற உவகையும். கவடு - கிளை. அவலம் - வருத்தம். அவலமாகின்ற பூவைப்பூத்து. மாதுயர் இடும்பை - பெரிய துன்பத்தைத் தருகின்ற கவலை. இடும்பையாகிற காயைக் காய்த்து, மரணமாகிற கனியைக் கனிந்து; கனிந்து - பழுத்து. அடி. 4 : "காய் முதிர் கனியி னூழ்த்து வீழுமிவ் வியாக்கை" (சீவக. 1435). மரம் நிற்கும் என்க.

(உரை) [1] மாணமே என்பதிலுள்ளது.

1390. தேன் - வண்டுகள். நெறி - வழி. திரை - அலை. திரை யாகிய போர்வையைப் போர்த்து. தேன் சென்ற வழியையும் மீன்சென்ற வழியையும் அறிதல் முடியாது. மீன்சென்ற நெறிபோல் தோன்றா; "மீன்சென்ற நெறியைப் போலும்" (மேரு. பத்திர. 113); "மீனெறி

(இ - ள்.) மாதே ! மக்கள்யாக்கை, தேனினஞ்சென்றவழியும் மீன் போன வழியும்போலப் போனவழியும் மக்கட்குத்தோன்றுவாய் மாய்ந்து போம் ; அங்ஙனம்போவதனை வேதனையால் தேய வருத்திக் கெடுவது நமக்குத் தகாதென்றுளென்க. (உஉ௬)

1391. (க) பிரிந்தவற் கிரங்கிப் பேதுற் றழுதநங் கண்ணி னீர்கள், சொரிந்தவை தொகுத்து நோக்கிற் றொடுகடல் வெள்ள மாற்ரு, முரிந்தநம் பிறவி மேனுண் முற்றிழை யின்னு நோக்காய், பரிந்தழு வதற்குப் பாவா யடியிட்ட வாறு கண்டாய்.

1392. (உ) அன்பினி னவலித் தாற்ரு தழுவது மெளிது நங்கள், என்பினி ஞவி நீங்க விறுவது மெளிது சேர்ந்த, துன்பத்தாற் றுகைக்கப் பட்டார் துகைத்தவத் துன்பந் தாங்கி, இன்பமென் றிருத்தல் போலு மரியதிவ் வுலகி லென்ருள்.

---

கரந்தென மீள வேகினோம்" (வி - பா. குருகுல. 64). விழித்திமைப் பவர்க்கு - பனிதர்க்கு. மான்சென்ற நோக்கின்மாதே - மானினது பார்வையைப்போன்ற நோக்கினையுடைய பதுமையே. மாதே, மக்கள் யாக்கை தோன்றுவாய் மாய்ந்துபோம். ஊன் - உடம்பு. சிந்தித்து உகுவதோ தகுவது - வருந்திக் கெடுவதோ தகுதியையுடையது ; தகா தென்றபடி.

1391. பிரிந்தவற்கு - பிரிந்து சென்ற கணவனுக்காக. பேதுற்று - வருத்தமடைந்து. சொரிந்தனவற்றைத் தொகுத்து நோக்கினல் ; தொகுத்து - ஒன்றுசேர்த்து. தொடுகடல் - தோண்டப்பட்ட கடலின். ஆற்ற - அளவிடவாகா. முரிந்த - கெட்ட. முற்றிழை - பதுமை ; விளி. நோக்காய் - யான் சொல்வதை ஆராய்ந்து பார்ப்பாயாக. முற்றிழாய், இன்னும் நோக்காய் ; மேனுளில் முரிந்த நம் பிறவிகளிற் பிரிந்தவர்க்கு அழுத கண்ணினீர்கள் வெள்ளம் ஆற்ரு என மாறியியைக்க. பரிந்து - இரங்கி. பாவாய் : பதுமையே ; விளி. அடியிட்டவாறு - தொடங்கின படி ; "கண்ணறை மன்ன னொருதேவி, ஆரு வெள்ளத் துன்புற வன்றே யடியிட்டாள்" (வி - பா. 4 - ஆம் போர். 41). பாவாய், பரிந்தழு வதற்கு அடியிட்டவாறு கண்டாய் என மாறியியைக்க.

1392. அன்பினின் - கணவனிடத்துள்ள அன்பினல். அவலித்து - அவன் பிரிந்தகாலத்து வருந்தி. ஆற்ருது - பிரிவைப் பொறுக்கமுடி யாமல். எளிது - செய்தற்கு எளிய காரியமாகும். நங்கள் - நமது ; கள் : அசை. என்பினின் - உடம்பினின்றும். (பி - ம்) 'என்பினி ஞவிசோர.' இறுவதும் - இறந்துபோதலும். சேர்ந்த துன்பத்தால் - கணவர் சேர்ந்து பின் பிரிந்ததனுல் உண்டான வருத்தத்தால். துகைக்கப்பட்டார் - வருத்தப்பட்ட மகளிர். (பி - ம்.) 'துடைக்கப்பட்டார்.' துகைத்த அத்துன்பம் - வருத்திய அந்தத் துன்பத்தை. தாங்கி - பொறுத்து.

இவை இரண்டும் ஒருதொடர்.

(உ) [1] கள் : அசை. [2] போலும் : ஒப்பில்போலி.

(இ - ள்.) முற்றிழாய்! இன்னும் யான் கூறுகின்ற நனை நெஞ்சாலே நோக்காய்; மேனுளிற்கெட்ட நம் பிறவிகளிலே இப்பொழுது பிரிந்தவனே கணவனாக, அவற்கே அழுத கண்ணீர்கள் சொரிந்தனவற்றைத் தொகுத்துப் பார்த்தாற் கடலினீர் [3] உறையிடவுமாற்றாது; அங்ஙனங் கழிந்தநாளேயன்றி, பாவாய்! இது மேலும் அழுதற்குத்தொடங்கினபடி காண்; ஆதலின், அங்ஙனமழுதலுமெளிது; நம்முடம்பின் உயிர் போகும்படி இறத்தலுமெளிது; தங்காதலர் சேர்ந்து பிரிந்ததனாற் பிறந்த துன்பத்தாலே வருத்தப்பட்ட மகளிர் அங்ஙனம் வருத்தின அவ் வருத்தத்தைப்பொறுத்து இது நமக்கின்பமென்று கருதியிருத்தலே இவ் வுலகில் அரிய காரியம்; இதனை நீயும் நிகழ்த்தவேண்டாவோவென்றானென்க. (உஉசு-எ)

1393. (க) மயற்கையிம் மக்கள் யோனிப் பிறத்தலும் பிறந்து வந்தீங், கியற்கையே பிரிவு சாத லிமைப்பிடைப் படாத தொன்றாற், கயற்கணி னளவுங் கொள்ளார் கவற்சியுட் கவற்சி கொண்டார், செயற்கையம் பிறவி நச்சுக் கடலகத் தழுந்து கின்றார்.

1394. (உ) இளமையின் மூப்புஞ் செல்வத் திடும்பையும் புணர்ச்சிப் போழ்திற், கிளைநரிற் பிரிவு நோயில் காலத்து நோயு நோக்கி, விளைமதுக் கமழுங் கோதை வேலினும் வெய்ய கண்ணாய், களைதுய ரவலம் வேண்டா கண்ணிமைப் பளவு மென்றாள்.

---

அவ்வருத்தத்தை இன்பமென்றிருத்தலே இவ்வுலகில் அரியது; அரியது - செய்தற்கரிய செயலாகும்.

(உரை) [1] நங்கள் என்பதிலுள்ளது. [2] இருத்தல்போலும் என்பதிலுள்ளது. [3] சீவக. 270, ந.

1393. மயற்கை - குற்றம். பிறந்து வந்து - பலபிறப்பிலும் பிறந்து தோன்றி. பிறந்துவந்து ஈம்மக்கள் யோனியிற் பிறத்தலும் மயற்கை என மாறியியைக்க. இமைப்பிடைப்படாததொன்றால் - இமைப் பளவும் நடுவே தங்காததொன்றாதலால். கயற்கணின் அளவும் - கயல்மீனினது கண்ணினளவும்; இது சிறுமைக்கு எடுத்துக் காட்டிய அளவு; சீவக. 54, அடிக். கவற்சி - வருத்தம். உள் - மனத்தே. கொண்டார் : பெயர். செயற்கையம் பிறவி - பற்றுடைய மனத்தால் உண்டாகிற பிறவி. நச்சு - விடம். பிறவியாகிய நச்சுக்கடலகத்து; துன்பத்தைத் தருதலின் நச்சுக்கடலென்றார்.

1394. இளமையில் - இளமைப் பருவத்தில். செல்வத்து - பொருளுடைய காலத்து. இடும்பை - வறுமைத்துன்பம். கிளைநரிற் பிரிவும் - கணவனிடமிருந்து பிரிவு வருமென்றும். நோயில்லாத காலத்து. நோக்கி - வருமென்று ஆராய்ந்து பார்த்து. கோதை - பூமாலை; வேலுக்கு அடை. கண்ணாய் என்றது பதுமையை; விளி. களை - நீக்கு

இவை இரண்டும் ஒருதொடர்.

(க) மயற்கை - [1] தூரால். கயற்கணினளவும் - கயல்போலும் கண்ணிற்றோன்றும் ஒரு மாத்திரையளவும்.

(இ - ள்.) அங்ஙனம் ஆற்றவேண்டுதலிற் பலபிறப்பிலும் பிறந்து வந்து இம்மக்கள் யோனியிற் பிறத்தலும் மயற்கை; அப்பிறவிக்குப் பிரிவும் சாதலும் இமைப்பளவும் இடையீடுபடாததொன்றாதலான், ஒரு மாத்திரையும் கவற்சிகொள்ளார்; இயற்கையேயென்றுகொள்வார்; அன்றி, உள்ளே கவற்சி கொண்டார், பற்றுள்ளத்தாலுளதாம் பிரவியாகிய நச்சுக்கடலிலே அழுந்தாநின்றார்; ஆதலால், கண்ணாய்! நீ இளமையிலே மூப்புவருமென்றும், செல்வத்தே மிடிவருமென்றும், புணர்ச்சிக் காலத்தே பிரிவுவருமென்றும், நோயில்காலத்தே நோய்வருமென்றும் நோக்கி உயிருடன்தங்குமளவும் துயரைக்களைவாயாக; இவ்வவலம் வேண்டாவென்றானென்க. (உஉஅ-கூ)

1395. (க) முத்திலங் காகந் தோய்ந்த மொய்ம்மலர்த் தாரி னாங், கைத்தலத் தகன்ற பந்திற் கைப்படுங் கவல வேண்டா, பொத்திலத் துறையு மாந்தை புணர்ந்திருந் துரைக்கும் பொன்னே, நித்தில முறுவ லுண்டா னீங்கினா னல்லன் கண்டாய்.

1396 (உ) வடிமலர்க் காவி னன்று வண்டளிர்ப் பிண்டி நீழல், முடிபொருள் பறவை கூற முற்றிழை நின்னை நோக்கிக், கடிய தோர் கெளவை செய்யுங் கட்டெயிற் றரவி னென்றேன், கொடியனாய் பிழைப்புக் கூறேன் குழையலென் றெடுத்துக் [கொண்டாள்.

---

வாயாக. அவலம் - வருத்தம். சண்ணிமைப்பளவும் - உயிரோடு இருக்குமளவும். கண்ணிமைப்பளவும் துயரம் களை; அவலம் வேண்டா என்றான் எனமாறியியைக்க.

(உரை) [1] தூரால் - செத்தை; குற்றம்.

1395. முத்து இலங்கு - முத்தமாலை விளங்குகின்ற; ஆகத்திற்கு அடை. ஆகத்தில் தோய்ந்த மலர்த்தாரினையுடையான்: சீவகன். கைத் தலத்தினின்றும் அகன்ற பந்தினைப்போல. கைப்படும் - அகப்படுவான். பொத்து இலத்து - பொந்தாகிய வீட்டில்; இலத்து - இல்லத்து. புணர்ந் திருந்து - பெடையும் ஆணுமாகச் சேர்ந்திருந்து. உரைக்கும் - சீவகன் வருதற்குரிய நற்சகுனமான சொல்லைக் கூறும். பொன்னே - பதுமையே; விளி. நித்திலம் போன்ற முறுவலை உண்டான்; சீவகன்; முறுவல்: அதில் ஊறும் நீருக்கு ஆகுபெயர். பொன்னே. கவலவேண்டா, தாரினானாகிய முறுவலுண்டவன் நீங்கினானல்லன்; பொத்தில்லத்து ஆந்தை உரைக்கும்; பந்தைப்போல் அகப்படும் கண்டாய் என மாறிமுடிக்க.

1396. காவில் - சோலையில். பிண்டி நீழல் - அசோகமரத்தின் நிழலில். முடிபொருள் பறவை கூற - உயிர்போகின்ற காரியத்தை

இவை இரண்டும் ஒருதொடர்.

(இ - ள்.) பொன்னே! யான் நெடுநாள் எங்ஙனமாற்றுவேனென்று கவலவேண்டா; நித்திலமுறுவலுண்டான் நம்மைத்துறந்தானல்லன்; காரியத்தால் நீங்கினான்; அதற்குக் காரணமென்னெனின், பொருந்தாகிய இல்லிலேயுறையும் ஆந்தை பேடும் சேவலுங்கூடியிருந்து அவன்வரவைக் கூறாநிற்கும்; அதனால், அவன் நம் கையினகன்ற பந்து நம் கையிலே வருமாறுபோலே அகப்படுவன்; முற்றிழாய்! யான் ஒருகாலத்தும் பிழைப்புக்கூறேன்; அது நீயேயறிவாய்; அன்று காவிலே பிண்டி நிழலிலே அப்பறவை முடியுங்காரியத்தைக் கூறுதலின், நின்னை நோக்கி, இஃது அரவினாலே கௌவைசெய்யுமென்று கூறினேனாதலால்; கொடியனாய்! இதனையும் நீ தெளிந்து இனிக் குழையாதேகொள்ளென்று கூறி, அவளை எடுத்துக்கொண்டாளென்க. (உரு௦-ருக)

1397. அலங்கலுங் குழலுந் தோழி யங்கையி னடைச்சி யம்பூம், பொலங்கலக் கொடிய ளுடன் கண்பொழி கலுழி யொற்றிக், கலந்தகி னாறு மல்குற் கவான்மிசைக் கொண்டிருந்தாள், புலர்ந்தது பொழுது நல்லா ணெஞ்சமும் புலர்ந்த தன்றே.

(இ - ள்.) அங்ஙனமெடுத்த தோழி, கையாலே கொடியனாள் அலங்கலையும் குழலையுஞ்செருகிக் கண்ணீரையுந்துடைத்து அல்குலையுடைய குறங்கின்மேலே கொண்டிருந்தாள்; அப்பொழுது இரவும் விடிந்தது; அவள் நெஞ்சும் தெளிந்ததென்க. (உருஉ)

---

ஆந்தை உரைக்க. முற்றிழை: பதுமை; விளி. கௌவை - துன்பம். அரவின் - பாம்பினால். பறவையின் சொல், அரவினால் ஓர் கௌவை செய்யும் என்றேன் எனமாறியியைக்க. கொடியனாய் என்றது பதுமையை; விளி. பிழைப்புக் கூறேன் - தவறானவற்றைச் சொல்லேன். குழையல் - ஆதலால் நீ வருந்தாதே. எடுத்துக்கொண்டாள் - பூமியிலிருந்து பதுமையைத் தூக்கிக்கொண்டாள்.

1397. அலங்கல் - மாலை. குழல் - கூந்தல். அடைச்சி - முறைப்படி சேர்த்து. பொலங்கலம் - பொன்னாலாகிய ஆபரணம். பூங்கொடியனாள், பொலங்கலத்தையுடைய கொடியனாள் எனத் தனித்தனியே பிரித்தியைக்க. கொடியனாள் - பதுமை. தோழி, அங்கையால், கொடியனாள்தன் அலங்கலையும் குழலையும் அடைச்சி எனமாறியியைக்க. கலுழி - கலங்கிய கண்ணீர். ஒற்றி - துடைத்து. கவான் மிசை - தன் துடையின்மீது. கொண்டிருந்தாள் - பதுமையை வைத்துக்கொண்டிருந்தாள். பொழுது புலர்ந்தது - இரவுச்சாலம் விடிந்தது. நல்லாள்: பதுமையினுடைய. புலர்ந்தது - தெளிவடைந்தது.

1398. பண்கனிந் தினிய பாடற் படுநரம் பிளகி யாங்குக்
கண்கனிந் தினிய காமச் செவ்வியுட் காளை நீங்கத்
தெண்பனி யனைய கண்ணீர்ச் சேயிழை தாய ரெல்லாம்
தண்பனி முருக்கப் பட்ட தாமரைக் காடு போன்றார்.

(இ - ள்.) பண்முற்றுப்பெற்று இனிய பாட்டையுடைய ஒலிக்கின்ற நரம்பு பாடற்கண்ணே நெகிழ்ந்தாற்போலே மெய்யிடங்குழைந்து இனிய காமச்செவ்வியிலே சேயிழையைக் காளை நீங்கினானாதலின், அவள் தாயரெல்லாரும் பனிமுருக்கின தாமரைக்காடுபோலே முகங்கருகினாரென்க. (உகூகூ)

1399. (க) சில்லரிச் சிலம்பு சூழ்ந்த சீறடித் திருவி னற்றாய், முல்லையங் குழலி னாய்நின் முலைமுதற் கொழுநன் மேனாட், சொல்லியு மறிவ துண்டோ வெனக்குழைந் துருகி நைந்து, மெல்லியல் கங்குல் சொல்லிற் றிற்றென மிழற்று கின்றாள்.

(வேறு)

1400. (உ) வினைக்குஞ் செய்பொருட் கும்வெயில் வெஞ்சுரம்
நினைத்து நீங்குத லாண்கட னீங்கினாற்
கனைத்து வண்டுணுங் கோதையர் தங்கடன்
மனைக்கண் வைகுதன் மாண்பொ டெனச்சொன்னான்.

1398. பண்கனிந்து - இராகம் முற்றுப்பெற்று. படுநரம்பு - ஒலிக்கின்ற யாழ்நரம்பு. பாடலையுடைய நரம்பு. இளகியாங்கு - நெகிழ்ந்தாற் போல. கண்கனிந்து - பதுமையினது மெய்யிடம் குழைந்து; கண் - இடம். செவ்வி - சமயம். காளை : சீவகன். நீங்க - நீங்கியமையால். தெண்பனி - தெளிவுள்ள பனித்துளி. கண்ணீரையுடைய சேயிழை : பதுமை. சேயிழையைக் காளை நீங்க எனமாறியியைக்க. தாயர் - நற்றாய் முதலிய தாய்மார். முருக்குதல் - அழித்தல். தாயர் பனியாற் கருகிய தாமரையைப்போல் முகங்கருகினர்.

1399. சில்லரிச்சிலம்பு - சிலவாகிய பரல்களையுடைய சிலம்பு. சூழ்ந்த - வளைந்த. திரு : பதுமை. நற்றாய் : திலோத்தமை. முல்லையங்குழலினாய் என்றது பதுமையை; விளி. நின்முலைக்கு முதல்வனாகிய கொழுநன்; என்றது சீவகனை. சொல்லியும் அறிவதுண்டோ - தான் பிரிவு தோன்றச் சொல்லியும் நீ அறிந்ததுண்டோ. என - என்று திலோத்தமைகேட்ப. குழைந்து - நெகிழ்ந்து. நைந்து - கெட்டு. மெல்லியல் : பதுமை. மெல்லியல் குழைந்து உருகி நைந்து எனமாறியியைக்க. கங்குல் சொல்லிற்று இற்று என - முன் இரவில் சீவகன் கூறியது இத் தன்மைத்து என்று.

1400. வினைக்கும் - போர்த்தொழிலுக்கும். செய்பொருட்கும் - பொருள் தேடுதற்கும். நினைத்தும்-தம் மனைவிமாரை எண்ணிவருந்தியும்.

1401. (ரு) விரைசெய் தாமரை மேல்விளை யாடிய
அரைச வன்னம மர்ந்துள வாயினும்
நிரைசெய் நீலநி னைப்பில வென்றனன்
வரைசெய் கோலம ணங்கமழ் மார்பினான்.

இவைமூன்றும் ஒருதொடர்.

(ரு) நீலம் - பரத்தை. எனவே குலமகளிரையே இனி நுகர்வே னென்றான். அரசவன்னம், அரசவாழ்க்கைபோல அக்குச்சாரியை கொடுத்துச் செய்கைசெய்து, "அம்மரபொழுகும்" (தொல். குற்றிய லுகர. 12) என்ற மிகையான் முடிக்க.

(இ - ள்.) பதுமையுடைய நற்றாய், குழலினாய்! நின்முலைக்குமுதல் வணங்கிய கணவன் முன்னாட் பிரிவுதோன்றச் சொல்லியுமறிவதுண்டோ வென்று வினவ, அவள் நெகிழ்ந்துருகிக்கெட்டு, கங்குலில் அவன் கூறியது இத்தன்மைத்தென்றுகூறுகின்றவள், தன்மனைவியைநினைந்து வருந்தியும் பின்னும் போர்த்தொழிற்கும் பொருட்கும் வெஞ்சுரத்தைப் போதல் ஆண்மக்கள் தொழில்; அவர் அங்ஙனநீங்கினால் மனைவியர்தந் தொழில் இறந்துபடாதே மனையிடத்திலிருத்தலென்று கூறினான்; அங்ஙனங்கூறி, வரைபோலுமார்பினான், தாமரைமேல் விளையாடிய அன்னம் ஆண்டு நீலம்பயின்றுளவாயினும் அந்நீலத்தை நினையா வென்றும் கூறினானென்றாளென்க. (உருச - ரு)

1402. பொன்வி ளைத்த புணர்முலை யாள்சொல
இன்ன ளிக்குரல் கேட்ட வசுணமா
அன்ன ளாய்மகிழ் வெய்துவித் தாளரோ
மின்வ ளைத்தன மேகலை யல்குலாள்.

---

நீங்குதல் - போதல். ஆண்கடன் - ஆண்மக்களது கடமையாகும். நினைத்தும், வினைக்கும் பொருட்கும் சுரத்தில் நீங்குதல் ஆண்கடன் எனமாறியியைக்க. கனைத்து - ஒலித்து. உணும் - தாதை உண்ணு கின்ற. கோதையையுடையவர்; கற்புடைய மகளிர். மனைக்கண் வைகுதல் - கணவரது பிரிவை ஆற்றி வீட்டின்கண் இருத்தல். மாண்பு - நற்குணநற்செய்கைகள். கோதையரது கடன் மாண்பொடு மனைக்கண் வைகுதல் எனச்சொன்னான் எனமாறியியைக்க.

1401. விரைசெய் - வாசனையைச் செய்கின்ற. அரசவன்னம் - இராசான்னப்பறவை. அமர்ந்துளவாயினும் - அங்கு மிகுதியாக உள்ளன வானாலும். நிரை - வரிசை. நீலம் - நீலோற்பலமலரை. நினைப்பில - அமர்தற்கு நினையா. நீலம் அமர்ந்துளவாயினும் நினைப்பில என மாறியியைக்க. வரைசெய் - மலையையொத்த. கோலம் - அழகு. சீவக னுக்கு அரச அன்னமும், குலமகளிருக்குத் தாமரையும், பரத்தையருக்கு நீலமலரும் உவமைகள். மார்பினான் : சீவகன். மார்பினான் என்றனன் என்று பதுமை கூறினாள்.

1402. பொன் விளைத்த - பசலையைத் தோற்றுவித்த. முலையாள் : பதுமை. சொல - சொல்லுதலால். அசுணமா : பெருங். 1. 47 : 241-2;

பொன் - பசப்பு. அசுணமா - இசையறிவதொரு விலங்கு; "அசுணங் கொல்பவர் கைபோ லன்றும்" (நற். 304) என்றார்.

(இ - ள்.) திலோத்தமை, பதுமை அங்ஙனங்கூறக்கேட்டு இனிய அளிக்கத்தக்க குரல் நரம்பைக்கேட்ட அசுணமாப்போலே தான் மகிழ்ச்சி யுற்று அவளை மகிழ்ச்சியெய்துவித்தாளென்க.

அது மேற்கூறுகின்றார். (உ௯எ)

1403. அன்னந் தானவன் றாமரைப் போதுநீ
நின்னை நீங்கின னீங்கலன் காதலான்
இன்ன தாலவன் கூறிற்றெ னச்சொனாள்
மன்ன னாருயிர் மாபெருந் தேவியே.

(இ - ள்.) தனபதியது உயிராகிய தேவி, அவன்கூற்று இத் தன்மைத்தாயிருந்தது; எங்ஙனேயென்னின், அன்னம் அவன்; தாமரைப்பூ நீ; நின்னைக் காரியமிருந்தபடியால் இப்பொழுது நீங்கினான்; காதலிருந்தபடியால் முழுக்க நீங்கானென மகிழ்வெய்தக் கூறினாளென்க.

[1] இவளிறந்துபடுவளென்று நீலங்கூறிற்றிலள். 'நின்னினீங்கினன்' என்றும் பாடம். (உ௯அ)

(வேறு)

1404. சொரிபனி முருக்க நைந்து சுடர்முகம் பெற்ற போதே
பரிவுறு நலத்த வன்றே பங்கய மன்ன தேபோல்
வரிவளைத் தோளி கேள்வன் வருமென வலித்த சொல்லாற்
றிருநலம் பிறந்து சொன்னா டேனினு மினிய சொல்லாள்.

---

சூளா. நாட்டுச். 28; மேரு. வைசயந்த. 44; கம்ப. பாயிரம், 8; சித்திர கூடப். 24. மகிழ்வு எய்துவித்தாள் - தான் உவகையடைந்து பதுமையை யும் மகிழ்ச்சியுறச் செய்தாள்; அரோ: அசை. மின் வளைத்தன - மின்னலை வளைத்தாற்போன்ற. மேகலையையுடைய அல்குலாள்; என்றது திலோத்தமையை; எழுவாய்.

1403. அன்னம் அவன்: தான்: அசை; அவனென்றது சீவகனை. நீயென்றது பதுமையை. நின்னை நீங்கினன் - உன்னைக் காரியத்தின் பொருட்டு இப்பொழுது பிரிந்தான். காதலால் நீங்கலன் - உன்மீதுள்ள விருப்பத்தால் முழுவதும் பிரிந்திரான். அவன் கூறிற்று இன்னதால் - சீவகன் கூறியது இத்தன்மையாகும்; ஆல்: அசை; அவன் கூறியது; சீவக. 1401. மன்னன்: தனபதி. மன்னனுக்கு ஆருயிர்போல்பவளாகிய மாபெருந்தேவி; என்றது திலோத்தமையை. தேவி சொன்னாள் என்க.

(உரை) [1] இவள் - பதுமை. நீலமென்றது பரத்தையரை; சீவக. 1401, ந.

1404. சொரிகின்ற பனி. முருக்க - கெடுத்தலால். சுடர்முகம் - சூரியனுடைய தோற்றம். பரிவு - அன்பு. பங்கயம் - தாமரை. பனியால் தாமரை கெடுதல்: சீவக. 1398. பங்கயம் நைந்து, பரிவுறும் நலத்த

(இ - ள்.) பங்கயம், பனிகெடுத்தலிற்கெட்டு, ஞாயிறு தோன்று நிலைமையைப்பெற்றபொழுதே அன்புறுநலத்தையுடையவன்றே, அது போலச் சொல்லாளாகிய வளைத்தோளி, தன்கேள்வன் வருமெனத் தாய் கூறிய கூற்றாலே நலம் பிறந்து தன்னுள்ளே ஒருமொழிகூறினளென்க. (உருகூ)

1405. நஞ்சினை யமுத மென்று நக்கினு மமுத மாகா
தஞ்சிறைக் கலாப மஞ்ஞை யணங்கர வட்ட தேனும்
அஞ்சிறைக் கலுழ னுகு மாட்சியொன் றுனு மின்றே
மஞ்சனுக் கினைய நீரேன் வாடுவ தென்னை யென்றாள்.

அவன்கூடிய பின்பு நீங்குந்தன்மையைத் தானுடைமையில் தன்னை நஞ்சென்றாள் ; நீக்கமிலின்பந் தருதலிற் பிறரை அமுதமென்றாள். அட்டதென்றது, பாம்பு பல்லுயிரையும் வருத்துந்தன்மையை மயில் கொன்று அஞ்சுவித்ததனை ; " செய்ந்நன்றி கொன்ற மகற்கு " (குறள், 110) என்றாற்போல.

(இ - ள்.) அவன் தனக்குக் கட்கினிமைமாத்திரையால் நஞ்சை அமுதமென்று உட்கொண்டு நுகர்ந்தானாயினும், அந்நஞ்சு நஞ்சேயாய் விடும் ; அதுவுமன்றி மயில் அரவைத் தனக்குள்ளேயாக்கிக்கொண்டு தன்னையேநோக்கும்படி அஞ்சுவித்ததாயினும், கருடனைப்போலச் சேணிடையினும் நினைப்பித்து அஞ்சுவிக்க வல்ல மாட்சி சிறிதும் அதற் கில்லை ; மஞ்சனுக்கு நஞ்சும் மயிலும் போலு நீர்மையையுடைய யான், அமுதமும் கருடனும்போலு மகளிரைப்போலே வருந்துவது என்னென்று ளென்க.

---

வன்றே எனமாறியியைக்க. பதுமைக்குப் பங்கயம் உவமை. வரிவளைத் தோளி - கீற்றுக்களையுடைய வளையையணிந்த தோளையுடைய பதுமை. கேள்வன் - தனக்குக் கணவனாகிய சீவகன். வலித்த சொல்லால் - தன் தாய் துணிந்து கூறிய மொழியால். திருநலம் - விரும்பத்தக்க அழகு. சொன்னாள் - தனக்குள்ளே கூறிக்கொண்டாள். சொல்லாளாகிய தோளி சொன்னாள் என்க.

1405. நஞ்சு - விஷம். நக்கினும் - நுகர்ந்தாலும். நஞ்சு அமுத மாகாது ; நஞ்சேயாகும். சிறையாகிய கலாபத்தையுடைய மஞ்ஞை. அணங்கு அரவு அட்டதேனும் - பிற உயிர்களை வருத்துகின்ற பாம்பைப் பிடித்து அதை அச்சமுறச் செய்தாலும் ; " மஞ்ஞை குஞ்சரங் கோளி ழைக்கும், பாம்பைப் பிடித்துப் படங்கிழித் தாங்கு " (திருச்சிற். 21). கலுழனாகும் மாட்சி - கருடனைப்போலச் சேய்மைக்கண் தன்னைக் கண்ட விடத்தும் பாம்பை அச்சமுறச் செய்கின்ற திறமை. ஒன்றானும் - சிறிதும். இன்று - மயிலுக்கு இல்லை ; ஏ : அசை. பதுமைக்கு நஞ்சும் மயிலும், பிறமகளிர்க்கு அமுதமும் கருடனும் உவமைகள். மஞ்சன் : சீவகன். இனைய நீரேன் - நஞ்சும் மயிலும்போலும் இத்தன்மையை யுடைய யான். வாடுவது - அமுதமும் கருடனும் போன்ற பிறமகளிரை ஒப்ப வருந்துவது.

இதனால், தன் [1] வீறின்மையையும், பிரிவின்கண் வருந்துந் தன்மையின்மையையுங் கூறினார். (உசo)

1406. பொய்கையுட் கமலத் தங்கட் புள்ளெனு முரச மார்ப்ப, வெய்யவன் கதிர்க ளென்னும் விளங்கொளித் தடக்கை நீட்டி, மையிருட் போர்வை நீக்கி மண்ணக மடந்தை கோலம், பையவே பரந்து நோக்கிப் பனிவரை நெற்றி சேர்ந்தான்.

(இ - ள்.) அவ்வளவிலே, வெய்யோன், பையவே பரந்து மண்ணக மடந்தைகோலத்தை மனத்தாலே நோக்கிக் கமலத்திலே வண்டுக ளென்னும் பள்ளியெழுச்சிமுரசம் ஆரவாரியாநிற்பத் தன்கதிர்க ளென்னுங் கையைநீட்டி அம்மண்மடந்தையது இருளாகிய போர்வையை நீக்கி உதயகிரியினெற்றியிலே சேர்ந்தானென்க. (உசக)

1407. செவ்வழி யாழி னூறுந் தீஞ்சொலாட் குற்ற தெல்லாம், அவ்வழி யரசற் குய்த்தார்க் கரசனு மவல மெய்தி, எவ்வழி யானு நாடி யிமைப்பின தெல்லை யுள்ளே, இவ்வழித் தம்மி னென்று னிவுளித்தேர்த் தானை யானே.

(இ - ள்.) மகரயாழைப்போல் இனிமையூறுஞ் சொல்லாளாகிய பதுமைக்குப்பிறந்த வருத்தமெல்லாம் தானையானாகிய தனபதிக்கறிவித் தார்க்கு அவனும் வருந்தி, எவ்விடத்தேயாயினும் அவனைத்தேடி ஒரு கணத்தெல்லைக்குள்ளே இவ்விடத்தே தாருங்கோளென்றானென்க. (உசஉ)

---

(உரை) [1] வீறு - வேறொன்றற்கில்லாத அழகு.

1406. கமலத்தங்கண் - தாமரைமலரில். புள்ளெனும் முரசம் - வண்டுகளின் ஒலியாகிய முரசவாத்தியம். வெய்யவன் - சூரியன். மை : இருளுக்கு அடை. இருளாகிய போர்வையை. மண்ணக மடந்தை கோலம் - பூமிதேவியினது அழகை. பனிவரை : உதயகிரி. வரையினது நெற்றியை ; நெற்றி - உச்சி. வெய்யோன், பரந்து நோக்கி ஆர்ப்ப நீட்டி நீக்கிச் சேர்ந்தான் என மாறிமுடிக்க.

1407. செவ்வழியாழின் ஊறும் தீஞ்சொலாள் ; "செவ்வழித் தீந் தொடை சிதைந்தன கிளவியென், எவ்வளைத் தோளியை" (பெருங். 3. 1 : 200 - 201). சொலாட்கு : பதுமைக்கு. உற்றது - சீவகன் பிரிவால் உண்டாகிய வருத்தத்தை. அரசற்கு - தனபதிக்கு. உய்த்தார்க்கு - அறிவித்தவர்க்கு. அரசனும் - தனபதியும். எவ்வழியானும் - எவ் விடத்தேயாயினும். நாடி - சீவகனைத்தேடி. இவ்வழி - இவ்விடத்தே. இவுளி - குதிரை. தானையானாகிய அரசற்கு உய்த்தார்க்கு அரசனும் தம்மின் என்றான் எனமாறியியைக்க.

(வேறு)

1408. மின்னுளே பிறந்ததோர் மின்னின் மேதகத்
தன்னுளே பிறந்ததோர் வடிவு தாங்குபு
முன்னினான் வடதிசை முகஞ்செய் தென்பவே
பொன்னுளே பிறந்தபொன் னனைய பொற்பினான்.

(இ - ள்.) பொற்பினான், தன்னைத் தேடிவந்தார் அறியாதபடி, மின் மேகமாக அதற்குள்ளே பிறந்த மின்போலே தன்னிடத்திலே தோற்றின தொரு புதுவடிவைத் தான் தாங்கி வடதிசையைநோக்கிப் போகக் கருதினா னென்க.

கடுமைக்கும் வடிவிற்கும் மின் உவமை. இஃது [1] இல்பொருளுவமை. இதனால், தூரகமனங் கூறினார். பொன்னுளே பிறந்தபொன் - ஓட வைத்த பொன். (உசரு)

1409. வீக்கினான் பைங்கழ னரல வெண்டுகில்
ஆக்கினா னிருதுணி யணிந்த பல்கலன்
நீக்கினா னொருமகற் கருளி நீணெறி
ஊக்கினா னுவவுறு மதியி னொண்மையான்.

(இ - ள்.) மதிபோனிறைந்த கலைகளையுடையான், முன்பு ஒலிக்கும் படி கழலைக் கட்டினவன், இப்பொழுது கடிதிற்போவதற்கு நொய்தாகத் துகிலை இருதுணியாக்கினான்; ஆக்கிப் பூண்களை எதிர்ந்தானொருவற்கு அருளிக் கொடுத்தான்; கொடுத்து நெறியைப்போதற்கு முயன்றா னென்க. (உசச)

(வேறு)

1410. வேந்தனால் விடுக்கப் பட்டார் விடலையைக் கண்டு சொன்னார், ஏந்தலே பெரிது மொக்கு மிளமையும் வடிவு மஃதே, போந்ததும் போய கங்குல் போம்வழிக் கண்ட துண்டேல், யாந்தலைப் படுது மைய வறியினீங் குரைக்க வென்றார்.

---

1408. மின்னலுக்குள்ளே பிறந்ததொரு மின்னலைப்போல. தன்னுளே - தன்னிடத்திலே; தன்னென்றது சீவகனை. வடிவு தாங்குபு - புதிய உருவத்தைத்தாங்கி. வடதிசை முகஞ்செய்து முன்னினன்-வடக்குத்திக்கை நோக்கிப் போக நினைத்தான். என்ப, ஏ : அசைகள். பொற்பினான் : சீவகன் ; எழுவாய்.

(உரை) [1] மின்னுளே பிறந்த மின் என்றது இல்பொருளுவமை.

1409. வீக்கினான் - முன்பு கட்டினவன்; சீவகன். நரல - ஒலிக்க. துணி - துண்டம். கழலை நாலும்படி வீக்கினவன் துகிலை இருதுணி ஆக்கினான் எனமாறியியைக்க. கலம் - ஆபரணங்களை. நீக்கினான் - கழற்றி. தான் அணிந்த பல்கலங்களை ஒருமகனுக்கு அருளிநீக்கினான் எனமாறியியைக்க. நீணெறி ஊக்கினான் - நீண்டவழியில் போவதற்கு முயன்றான்; ஊக்கம் - முயற்சி. மதியின் உவவுறும் ஒண்மையான் - சந்திரனைப்போல நிறைந்த கலைகளையுடைய சீவகன்; எழுவாய்.

1410. வேந்தனால் விடுக்கப்பட்டார் - தனபதியால் சீவகனைத்தேடிக் கொணரும்படி அனுப்பப்பட்டவர்கள். விடலையை - சீவகனை. ஏந்தலே

(இ - ள்.) அரசனாற் போகவிடப்பட்டவர்கள், சீவகனைக்கண்டு ஒரு வார்த்தை கூறினார்; இளமையும் வடிவும் இத்தன்மைத்தேயாதலான், நின்னையே அவன்பெரிதுமொக்கும்; போந்ததும் போனவிரவிலே; போகின்றவிடத்து யாங்கள் அவனைக்கண்டதுண்டாயின் அப்பொழுதே சென்று தலைப்படுவேம்; அது பெற்றிலேம்; ஆதலின், ஐய, நீ இவ்விடத்தே அவனைக் கண்டறியின் உரைப்பாயாகவென்றாரென்க. (உ௪௫)

1411. நெய்கனிந் திருண்ட வைம்பா னெடுங்கணாள் காத லானை, ஐயிரு திங்க ளெல்லை யகப்படக் காண்பி ரிப்பாற், பொய்யுரை யன்று காணீர் போமினம் போகி நுங்கள், மையலங் களிற்று வேந்தன் மைந்தனுக் குரைமி னென்றான்.

[1] அவர் கூறுதொழியவும், மேல் தான் கூறுகின்றமொழி உண்மையென்று அவருணர்ந்து போதற்கும் சோதிடத்தால் அறிந்து கூறுவாரைப் போலே, 'நெடுங்கணாள் காதலானை' என்றான்.

(இ - ள்.) காதலானை ஒன்பதாந்திங்களிலே காண்பீர்; இப்பாற் காணீர்; யான்கூறியது பொய்யுரையன்று; இனிப்போமின்; போய் நுங்கள் வேந்தனுக்கும் மைந்தனுக்கும் உரைப்பீராகவென்றானென்க.

யான்கூறிய நாளுக்குள்ளே காண்பீரென்க. 'ஐயிருதிங்களெல்லை யகப்பட' என்றது, பத்தாகிய எல்லைக்குள்ளே ஒருதிங்கள் குறைய வென்றவாறு; எனவே ஒன்பதாந் திங்களாயிற்று. போமினம் : அம் : அசை. (உ௪௬)

௬ – பதுமையாரிலம்பகம் முற்றிற்று.

ஆகக்கவி, ௧௪௧௧.

---

யென்றது சீவகனை; முன்னிலைக்கண் வந்தது; திருச்சிற். 137, பேர். இஃதே - இத்தன்மைத்தேயாதலால். இளமையும் வடிவும் இஃதேயாதலால் ஏந்தலை பெரிதுமொக்கும் எனமாறியியைக்க. போய கங்குல் - போன இரவிலே போம் வழி - போகின்றவிடத்து. கண்டதுண்டேல் - சீவகனைப் பார்த்ததுண்டானால். தலைப்படுதும் - எதிர்ப்படுவோம். யாம் கண்டதுண்டேல் தலைப்படுதும் எனமாறியியைக்க. ஐய : விளி. அறியின் - நீ சீவகனைப் பார்த்தறிந்திருந்தால்.

1411. நெய் - புழுகு. ஐம்பாலையுடைய நெடுங்கணாள் - பதுமை. கண்ணாளுடைய காதலானை - சீவகனை. ஐயிருதிங்கள் எல்லை அகப்பட - பத்துமாதங்களாகிய எல்லைக்குள் ஒருமாதங்குறைய; ஒன்பதாம் மாதத்தில் என்றபடி. இப்பாற்காணீர் - இதற்குள்ளாக அவனைக் காணப் பெறீர். பொய்யுரையன்று - யான் கூறுவது பொய்வார்த்தையன்று. போமினம் - போங்கள். வேந்தன் : தனபதி. மைந்தன் : உலோகபாலன். வேந்தனுக்கும் மைந்தனுக்கும் உரைமின் என்க. இப்பாடல் சீவகன் கூற்று.

(உரை) [1] அவரென்றது, அரசனால் விடுக்கப்பட்டவர்களை.

ஆறாவது

# கேமசரியாரிலம்பகம்

1412. வானின் வழங்கும் வண்கை மணிசெய் யார மார்பிற்
றேனும் வழங்கும் பைந்தார் விசயை சிறுவன் றேங்கொள்
நானம் வழங்குங் கோதை நைய வெய்ய வாய
கானம் வழங்கள் மேவிக் காலின் னேகி னானே.

(இ - ள்.) கையினையும் மார்பினையும் தாரினையு முடைய, விசயை சிறுவன், பதுமைவருந்தக் கானத்தே போதலைப்பொருந்தி, ஊர்திகளின்றிக் காலாலே சென்றானென்க.

தேனும் : உம்மை இசைநிறை. [1] அரிஞ்சயன்குலத்தில் விசயை சிறுவன் இங்ஙனம் போவதேயென்று இரங்கி, 'விசயைசிறுவன்' என்றார். (க)

1413. சிலைகொ ணாணிற் றீராத் திருந்து கற்பின் னவர்தம்
இலைகொள் பூந்தா ருழுத வின்ப வருத்த நீங்க
முலைகொள் கண்கள் கண்ணின் னெழுதி முள்கு மொய்ம்ப
மலைகொள் கானம் முன்னி மகிழ்வோ டேகு கின்றான். [ன்

நாணிற்றீராக்கற்பு - நாண் தான்கெடுமளவும் ஒருவாக்கிற் புரிந்த முறுக்குடையாமையின், அதுபோலும் தீராக்கற்பு. வருத்தம் - புணர்ச்சியாலுண்டான அவசம்.

---

1412. வானின் வழங்கு வண்கை - மேகத்தைப் போலக் கைம்மாறு கருதாமல் கொடுக்கின்ற வள்ளன்மையையுடைய கை. மணி செய் ஆரம் - முத்துக்களாலாகிய மாலை. கையினையும் மார்பினையும் தாரினையுமுடைய சிறுவன், விசயையின் சிறுவன் எனத் தனித்தனிப் பிரித்தியைக்க. சிறுவனென்றது சீவகனை. தேம் கொள் - கண்ணிற்கு இனிமை கொண்ட; சீவக. 1559, ந. நானம் - கஸ்தூரி; புழுகுமாம். கோதை - கூந்தலையுடைய பதுமை; ஆகுபெயர். நைய - வருந்த. வெய்யவாய கானம் - வெம்மையையுடைய காட்டிடத்தே. வழங்கல்மேவி - போதலைவிரும்பி. காலின் ஏகினான் : சீவக. 1229 1540, ந.

(மேற்.) அடி, உ : கல். 'உழைநின் றீரும்', 23, மயில்.

(உரை) [1] அரிஞ்சயன் : விசயையின் பாட்டன் ; சீவக. 201, ந.

1413. சிலை - வில். நாணின் - முறுக்குடையாத நாண்கயிற்றைப் போல. தீரா - தான் நின்ற நிலையினின்றும் வேறுபடாத. திருந்து கற்பின

(இ - ள்.) கற்பினவர்தம் இன்பவருத்தநீங்க முலை தம்மிடத்தே கொண்ட கண்களைத் தன்கண்ணினாலெழுதி [1] முள்குமொய்ம்பன் கானத்தைப்பொருந்தி வெறுப்பற்றுப் போகாநின்றானென்க. (உ)

1414. கனிகொள் வாழைக் காட்டுட் கருமை மெழுகி யவைபோன், றினிய வல்லா முகத்த முசுவுங் குரங்கு மிரியத், துனிவு தீர நோக்கித் தோன்றல் செல்லு முன்னாற், பனிவெண் டிரை சூழ் கடல்போற் பழுவந் தோன்றிற் றவணே.

கரிய மையை மெழுகிவைத்தவைபோலு முகத்தவாகிய முசு. முன்னால் : ஆல் அசை. பழுவம் - [1] முன்கூறிய கல்லதரத்தம்.

(இ - ள்.) வாழைக்காட்டில் முசுவும் குரங்கும் தன்னைக்கண்டு இரிதலின், அவை துனிவுதீரும்படி அருளிப்பார்த்துத் தலைவன்போம் அவ்விடத்தின்முன்னே கடல்போலே ஒரு காடு தோன்றிற்றென்க. (ங)

1415. பருகு வாரிற் புல்லிப் பயங்கண் மாறத் துறக்கும்
முருகு விம்மு குழலார் போல மொய்கொ டும்பி
உருவப் பூங்கொம் பொசியப் புல்லித் தீந்தேன் பருகி
அருகு வாய்விட் டார்ப்ப வண்ணல் மெல்லச் சென்றான்.

---

வர்தம் - மாறுபாடில்லாத கற்புடைய மகளிரது. முலைக்கண்களைக் கண்ணினால் எழுதி முள்குதல்; சீவக. 687, 1380, அடிக். முள்கல் - முயங்குதல்; சீவக. 420, அடிக். மொய்ம்பன் : சீவகன். கானம் முன்னி - காட்டைப் பொருந்தி.

(உரை) [1] (பி - ம்.) 'மூழ்கும்.'

1414. கருமைமெழுகியவைபோன்று - கரிய மையை மெழுகிவைத்தவற்றைப்போன்று. கருமை மெழுகியவைபோன்ற முகமுடைய முசுக்கலை : "மாமுக முசுக்கலை" (முருகு. 303, ந.); "மைப்பட் டன்ன மாமுக முசுக்கலை" (குறுந். 121 : 2); "மைபட் டன்ன மாமுக முசுவினம்" (அகநா. 267 : 9). இனிய அல்லாமுகத்தனவாகிய முசுவும் குரங்கும்; "என்றும், குரங்கினு ணன்முகத்த வில்" (பழ. 58). இரிய - தன்னைக்கண்டு பயந்து ஒடுதலால். துனிவு தீர நோக்கி - அந்தக் குரங்குகளின் அச்சம் நீங்கும்படி அருளோடு பார்த்து. தோன்றல் : சீவகன். முன்னால் - முன்னே. கடல்போற் பழுவம் : சீவக. 1179, அடிக். பழுவம் - காடு. தோன்றல் செல்லும் அவண் பழுவம் தோன்றிற்று என்க.

(உரை) [1] முன்கூறியது : "கடநெறி கடத்தற் கின்னாக் கல்லதரத்த முண்டே" (சீவக. 1185)

1415. புல்லி - தழுவி. பருகுவாரைப்போல் புல்லுதல் : "பருகுவனன் போலப் பல்லூழ் முயங்கி" (பெருங். 4. 8 : 108). பயம் கண்மாற - பொருள் தன்னிடத்தினின்றும் மாறுதலாலே; பயம் - கைப்பொருள். துறக்கும் - தன்னையடைந்த அடவர்களை விட்டுப் பிரிகின்ற. முருகு - வாசனை. குழலார்போல - பரத்தையரைப்போல; "நிறைந்தோர்த் தேரு

(இ - ள்.) நீரைப் பருகுவாரைப்போலே புல்லிக் கைப்பொருளறுத லாலே அவரைத் துறக்கும் பரத்தையரைப்போலே, தும்பி தேனுள்ள காலத்துக் கொம்பொசியப் புல்லி அதனைப் பருகி அது வறிதாக அக் கொம்பைவிட்டுத் தூற்றுவனபோல ஆர்ப்ப, அதனைக்கண்டு தலைவன் சென்றானென்க.

அப்பழுவத்திற்போகாதே சித்திரகூடத்தைநோக்கிப் போனானென்க. (ச)

1416. செல்வர் மனத்தி னோங்கித் திருவின் மாந்தர் நெஞ்சின், எல்லை யிருளிற் றாகிப் பூந்தா தினிதி னொழுகிக், கொல்லும் மரவின் மயங்கிச் சிறியார் கொண்ட தொடர்பிற், செல்லச் செல்ல வஃகு நெறிசேர் சிலம்பு சேர்ந்தான்.

(இ - ள்.) திருமிக்கார் மனம்போலே மேனோக்கி, செல்வமில்லாதார் நெஞ்சுபோலே பகலே இருளையுடைத்தாய், பூந்தாது இனிதுபோலே ஒழுகி, பாம்பு போலே தலைகரந்து, கீழ்மக்கள் நட்புப்போலே செல்லச் செல்லக் குறையும் வழிபொருந்திய மலையைச் சேர்ந்தானென்க.

"யானைக், கயிற்றுப்புறத் தன்ன கன்மிசைச் சிறுநெறி" (அகநா. 128) என்றும், "எடுத்துநிறுத் தன்ன விட்டருஞ் சிறுநெறி" (மலைபடு. 16) என்றுங் கூறுதலின், வழியை, 'ஓங்கி' என்றார். இனிதுபோ லெனவே துன்பமே யுணர்த்திற்று; "மண்பக வீழ்ந்த கிழங்ககழ் குழியைச், சண்பக நிறைத்த தாதுசேர் பொங்கர், பொய்யறைப் படுத் துப் போற்றா மாக்கட்குக், கையறு துன்பங் காட்டினுங் காட்டும்" (சிலப். 10 : 68-71) என்றார் பிறரும். இனி, 'மாவின் மயங்கி' என்று பாடமோதிப் புலிமுதலியவற்றால் மயங்கி யென்று முரைப்ப. (ரு)

---

நெஞ்சமொடு குறைந்தோர், பயனின் மையிற் பற்றுவிட் டொரூஉம், நயனின் மாக்கள் போல வண்டினம், சுனைப்பூ நீத்துச் சினைப்பூப் படர" (அகநா. 71 : 1-4); மணி. 18 : 19-20, 108-9. மொய்கொள் தும்பி-மொய்த்தலைக்கொண்ட வண்டுகள். உருவம் - அழகு. ஒசிய - சாயும்படி. தேன்பருகி - அப்பூங்கொம்பிலுள்ள தேனை உண்டு. அருகு - பக்கத்தே. வாய்விட்டு ஆர்ப்ப - அப்பூங்கொம்பில் தேனில்லை யாக, அதைவிட்டு நீங்கி வைவன போன்று ஒலிக்க. அண்ணல் : சீவகன். சென்றான் - அக்காட்டை யகன்று போனான்.

1416. மனத்தின் ஓங்கி - மனத்தைப் போலப் பெருகி. திருவில் மாந்தர் - வறியவர். எல்லை இருளிற்றாகி - பகற்காலத்தும் இருளை யுடையதாகி; எல்லை ; ஐ : சாரியை. கொல்லும் அரவின் மயங்கி - கொலைத் தொழிலைச் செய்கின்ற பாம்பைப் போல வழியிடம் மறைந்து. சிறியார் கொண்ட தொடர்பின் செல்லச்செல்ல அஃகும் நெறி - கீழ் மக்கள் கொண்ட நட்பினைப்போலப் போகப்போகக் குறைகின்றவழி : "பட்டிமை யொழுக்கிற்......நிரம்பா நெறியின வாகி" (பெருங். 1. 50 : 9-11). சிறியார் தொடர்பு செல்லச்செல்லத் தேய்தல் : "வானூர் மதியம்

1417. சுனைகள் கண்க ளாகச் சூழ்ந்த குவளை விழியா
வனைய லாகா வுருவ நோக்கி மைந்தற் கிரங்கி
இனைவ போலும் வரையின் னருவி யினிதி னாடி
நனைகொள் போது வேய்ந்து நாதற் பாடு கின்றான்.

(இ-ள்.) தன்னைச்சூழ்ந்த குவளை கண்களாக விழித்து மைந்தனுரு வத்தைநோக்கி அவற்கிரங்கி அழுவனபோலும் அருவியையுடைய வரையிற் சுனைகளிலே யாடி நனையைத் தம்மிடத்தேகொண்ட போதாலே திருவடிகளை மறைத்து நாதனைப் பாடாநின்றானென்க. (சு)

(வேறு)

1418. செய்தா னிருவினையின் பயத்தைச் சேருஞ் சென்றென்றி, எய்தா னதன்பயத்தைப் பிறனே துய்த்த லியல்பென்றி, கொய்தாமந் தாழ்ந்தொசிந்த குளிர்பூம் பிண்டிக் கோமானே, இஃதேநின்சொ லியல்பென்று லடியே னின்னைத் தொழுதேனே.

(இ-ள்.) இருவினையையுஞ் செய்தவொருவன் அவ்வினையின் பயனைச் சென்று அனுபவிக்குமென்று கூறுநின்றாய்; ஆன்மாவொன்றுதலின், அவனனுபவிப்பனென்றாய்; பிறப்புவேற்றுமையாற் செய்தவனாய் நின்று எய்தான் [1] பிறனாய்த்துய்ப்பனென்றாய்; கோமானே! நின் வார்த்தை இரண்டுபட்டிருத்தலின், நினக்கு அஞ்சித் தொழுதேனென்றானென்க. (எ)

---

போல் வைகலுந் தேயுமே, தானே சிறியார் தொடர்பு" (நாலடி. 125). சிலம்பு - மலை.

1417. சுனைக்குக் கண் உவமை. சூழ்ந்த - தன்னைச் சூழ்ந்த. விழியா - கருவிழிகளாக. வனையலாகா - எழுத முடியாத; "ஓவியர்க் கெழுத வொண்ணா வுருவத் தோய்" (கம்ப. வாலிவதை. 78). மைந்தன்: சீவகன். இனைவபோலும் - வருந்தியழுவன போன்ற. அருவிகண்ணீராக மலையழுதல்: சீவக. 1226, அடிக். ஆடி - நீராடி. நனை - தேன்; சீவக. 1495. போது வேய்ந்து - மலரால் அருகனுடைய பாதத்தை மறைத்து. நாதன் - அருகன்.

1418. செய்தான் - இருவினையையும் செய்தவொருவன். இருவினை - நல்வினை, தீவினையென்ற இரண்டும். பயம் - பயன். சென்று சேரும் என்றி - போய் அனுபவிப்பான் என்று கூறினாய். எய்தான் - ஒரு பிறப்பிலே வினையைச்செய்து அப்பிறப்பிலேயே பயனையடையாதவன். அதன் பயத்தை - முற்பிறப்பிற் செய்த வினையின் பயனை. பிறனே - மறுபிறப்பிற் பிறனாய்ப் பிறந்தவனே. கொய் தாமம் - கத்தரித்துச் செய்தமாலை; மாலையென்னும் பொதுமைபற்றிக் கூறப்பட்டது. தாழ்ந்து - தங்கி; சீவக. 1314, ந. பிண்டிக் கோமான்: அருகன்; பிண்டி - அசோகு.

(உரை) [1] (பி-ம்.) 'பிறனாய்த்துய்த்தலின், அனுபவிப்பனென்றாய்.'

1419. உண்டே தனதியல்பி னுணருங் காலை யுயிரென்றி, உண்டாய வவ்வுயிரே பிறிதி னில்லை யெனவுரைத்தி, வண்டார்த்து நாற்காதம் வண்ண மாலை சுமந்தொசிந்து, கொண்டேந்து பூம் பிண்டிக் கோமா னின்னைத் தொழுதேனே.

(இ - ள்.) உணருங்காலத்து உயிர் தனதியல்பால் உண்டேயென்று கூறுநின்றாய்; உண்டாய அந்தவுயிர்தானே பிறிதொன்றினியல்பான் இல்லை யெனவுரையாநின்றாய்; ஆதலின், கோமானே; நின்னைத் தொழுதேனென்றானென்க.

ஒருபொருளிலே உண்டுமில்லையுங்கூறினார். உயிர் ஒருவனிடத்துண்டு, தூணிலில்லை. தூணிலில்லாமையும் இவ்வுயிர்க்கேற்றுக. இதனால் உயிர் தனக்கே உண்டும் இல்லையும் தங்கின. இத்தன்மை வேறுபாட்டால் அங்கில்லை. (அ)

1420. காதலா லெண்வினையுங் கழிப வென்றி யக்காதல், ஆதலா லெண்வினையுங் கழியா வென்று மறைதியாற், போது லாய்த் தேன்றுளித்துப் பொழிந்து வண்டு திவண்டுலாம், கோதை தாழ் பூம்பிண்டிக் கோமா னின்னைத் தொழுதேனே.

(இ - ள்.) இறைவன்மேலே வைத்த காதலாலே எண்வினையும் கழிவன வென்று கூறுநின்றாய்; அக்காதல் மற்றொரு பாவகாரியத்திலே வைத்தால், எண்வினையும் நீங்காவென்றும் சாற்றுநின்றாய்; ஆதலால், கோமானே! நின்னைத் தொழுதேனென்றானென்க.

இவை இருபுறவாழ்த்து. துறவிலே, "எண்மர்கவிழ்ந்தனர்" (சீவக. 3076) என்பதனாலுணர்க.

இவை தேவபாணித் தாழிசைக் கொச்சகவொருபோகு. (கூ)

---

1419. உணருங்காலை, உயிர்தனதியல்பால் உண்டே யென்று என மாறியியைக்க. உண்டு - ஒருவகையாகவுண்டு; ஸ்யாதஸ்தி. அவ்வுயிரே - அந்த உயிர்தான். பிறிதின் இல்லை - வேறொன்றினது இயல்பாலே உண்டாதல் இல்லை. இல்லை - ஒருவகையாக இல்லை; ஸ்யாந்நாஸ்தி. உரைத்தி - சொன்னாய். ஆர்த்து - ஒலிப்ப; எச்சத்திரிபு. நாற்காத அளவு பரந்த மாலையையுடைய பிண்டி. "வண்டரற்ற நாற்காதம் வகை மாண வுயர்ந்தோங்கும், தண்டளிர்ப்பூம் பிண்டிக்கீழ்" (யா - வி. 83, மேற்.)

1420. காதலால் - கடவுளின்மீது வைத்த அன்பாலே. எண்வினை: சீவக. 961, அடிக். கழிப - நீங்குவன. அக்காதல் ஆதலால் - அந்த அன்பை வேறொரு பாவகாரியத்திலே வைத்தலால். அறைதி - கூறுகின்றாய்; ஆல்: அசை. போது உலாய் - பூக்கள் சூழ்ந்து; உலாய் - சூழ்ந்து; சீவக. 550, ந. தேனைத் துளித்துப் பொழிந்து. திவண்டு உலாம் - அசைந்து உலாவுகின்ற. கோதைதாழ் - பூமாலை தங்கிய.

(வேறு)

1421. இனிதி னிங்ஙன மேத்திவ லங்கொண்டு
முனிவர் சித்திர கூடமு னுதெனத்
தனிதி னேகுபு தாபதர் வாழ்வதோர்
பனிகொள் பூம்பொழிற் பள்ளிகண் டானரோ.

(இ - ள்.) இங்ஙனம் மிடற்றின் இனிமையோடே ஏத்தி வலஞ் செய்துவிட்டு முனிவருடைய சித்திரகூடம் முன்னிடத்ததென்று தேவன் கூறுதலின், அதனை இப்பொழுது குறித்துத் தனியேபோகாநின்று, அப் பள்ளியைக் கண்டானென்க.

சித்திரகூடம் - பள்ளியின்பெயர். [1] தனித்து : விகாரம்; [2] இன் றும், அரோவும் அசை. (க0)

1422. புல்லு மல்லியும் போகுயர் நீள்கழை
நெல்லு நீர்விளை கேழலுந் தோரையும்
அல்ல தீம்பழங் காய்கிழங் காதியா
நல்ல வேநுகர் வார்பள்ளி நண்ணினான்.

போகுயர்நீள்கழைநெல் - வளர்ந்த மூங்கிலரிசி; [1] ஆகுபெயர். நீராலே விளைந்தகேழல் - குளநெல். தோரை - ஒருநெல்.

(இ - ள்.) ஊனை நுகராதே, புல் முதலியவற்றையும், அவையல்ல வாகிய பழம் காய் கிழங்குமுதலாக நல்லவற்றையுமே நுகர்வார் தவப் பள்ளியை நண்ணினானென்க. (கக)

1421. இங்ஙனம் இனிதின் ஏத்தி எனமாறியியைக்க; இனிதின் - கண்டப்பாடலின் இனிமையாலே. முனிவர் வசிக்கும் சித்திரகூடம். முனுது என - முன்னிடத்ததென்று சுதஞ்சணன் கூறியமையால். தனிதினேகுபு - தனியாக ஏகி; "தனிதினின்ற" (தணிகை. வீராட்ட. 34). தாபதர் - முனிவர். பனி - குளிர்ச்சி. பொழிலையுடைய பள்ளியை.

(உரை) [1] தனித்து என்பது தனிது என்றுயிற்று, உரித்து உரிது என்றாற்போல; கலித். 76 : 17, ந. [2] தனிதின் என்பதிலுள்ளது.

1422. புல் - புல்லரிசி. அல்லி - அல்லிக்காயிலுள்ள அரிசி. புல்லும் அல்லியும் நுகர்வார் : சீவக. 1430. போகுயர் - மிக உயர்ந்த : சீவக. 705, அடிக். (பி - ம்.) 'போகிய.' உயர்ந்து நீண்டகழை; கழைநெல் - மூங்கிலரிசி; கழை - மூங்கில். கேழல், தோரை யென்பன நெல்லின் வகை. அல்ல - அவையல்லனவாகிய. ஆதியா - முதலாக. நல்லவே - மாமிசமல்லாத நல்லனவற்றை. நுகர்வார் பள்ளி - உண்ணுகின்ற முனிவருடைய சித்திரகூடத்தை.

(உரை) [1] நெல் அதனுடைய அரிசிக்காயிற்று.

1423. (௧) அரிய கொள்கைய ராரழ லைந்தினுள்
மருவி வீடுவ ளைக்குறு மாட்சியர்
விரிய வேதம்வி ளம்பிய நாவினர்
தெரிவி றீத்தொழிற் சிந்தையின் மேயினர்.

1424. (௨) வள்ளி யின்னமு தும்வரை வாழையின்
தெள்ளு தீங்கனி யுஞ்சில தந்தபின்
வெள்ள மாரிய னைய்விருந் தார்கென
உள்ள மாட்சியி னுருவந் தோம்பினர்.

இவை இரண்டும் ஒருதொடர்.

(௧) [1] அரியகொள்கையாவன : நாலிருவழக்கிற்றாபதபக்கம் ; "நீர் பலகான் மூழ்கி நிலத்தசைஇத் தோலுடையாச், சோர்சடை தாழச் சுடரோம்பி - ஊரடையார், கானகத்த கொண்டு கடவுள் விருந்தோம்பல், வானகத் துய்க்கும் வழி" (பு - வெ. 168) என்பனவும் நின்றனவுமாம்.

(இ - ள்.) கொள்கையராய்ப் பஞ்சாக்கினிக்கு நடுவே மருவி மாட்சிமை யுடையராய் நாவினராய்க் காமவேட்கையையுடைய சிந்தை யோடே பொருந்தினவர், முதல் வள்ளிக்கிழங்கையும் கனியையுங் கொடுத்தபின்பு, பலர்க்கும் பயன்படுகின்றவனே ! இனி உண்பாயாக வென்றுகூறி, நெஞ்சழகை யுடையவர்கள் உவந்து பேணினரென்க.
(௧௨ - ௩)

1423. அரிய கொள்கையர் - செய்தற்கு அரிய விரதங்களை யுடைய வராய். கொள்கை - விரதம் ; குறள், 899, பரிமேல். ஆரழலைந்தினுள் - பொறுத்தற்கரிய பஞ்சாக்கினியின் நடுவில். வீடு - மோட்சம். வேதத்தை விரிய விளம்பிய என மாறியியைக்க ; விரிய - விரிவாக. தெரிவில் தீத் தொழிற் சிந்தையின் - விளங்குதலில்லாத தீய காரியமாகிய காம வேட்கையையுடைய மனத்தோடு. மேயினர் - பொருந்தினவர்கள். கொள்கையராய், மாட்சியராய், நாவினராய், சிந்தையோடு மேவினவர் ; எழுவாய்.

1424. வள்ளி இன்னமுதும் - வள்ளிக்கிழங்காலாகிய இனிய உணவையும். வரைவாழையின் - மலைவாழையினது. தெள்ளு - ஆராய்ந்த. தந்தபின் - சீவகனுக்குக் கொடுத்த பின்பு. மாரி - மழை. வெள்ளத்தையுடைய மாரியனை என்றது சீவகனை நோக்கி ; விளி ; பலர்க்கும் பயன்படுகின்ற வள்ளன்மையை யுடைமையால் 'மாரியனை' என்றார். ஆர்க என - உண்பாயாகவென்றுகூறி. உள்ளமாட்சியினர் - நெஞ்சழகையுடைய முனிவர்கள். ஓம்பினர் - சீவகனை உபசரித்தார்கள்.

(உரை) [1] 'செயற்கரியவாவன, இயமம் நியமம் முதலாய எண் வகை யோக வுறுப்புக்கள் ; நீரிற் பலகான்மூழ்கல் முதலாய நாலிரு வழக்கிற்றாபத பக்கமென்பாருமுளர் ; அவை நியமத்துள்ளே அடங்கலின் நீத்தாரது பெருமைக் கேலாமை யறிக' (குறள், 26, பரிமேல்.)

1425. பாங்கின் மாதவர் பான்மதி போன்றிவன்
வீங்கு கல்வியன் மெய்ப்பொருட் கேள்வியன்
ஆங்கு நாமும ளக்குவ மென்றுதம்
ஓங்கு கட்டுரை யொன்றிரண் டோதினர்.

பாங்கு - நல்லவிடம் ; " பாங்கர்ப்பல்லி " (அகநா. 9) என்ப.

(இ - ள்.) அங்ஙனம் பேணினபின்பு, மாதவர், இவன் மதிபோலே எல்லாக்கலையு நிறைந்த கல்வியன், தத்துவத்தின்கேள்வியன், அப்படியான அவ்விடத்து நாமும் இவனையறியக்கடவேமென்று தம் கட்டுரை ஒன்றிரண்டைக் கூறினரென்க. (கச)

1426. ஐயர் கூறலு மண்ணலுங் கூறுவான்
சையம் பூண்டுச முத்திர நீந்துவான்
உய்யு மேற்றொடர்ப் பாட்டினிங் கியாவையும்
எய்தி னர்களு முய்பவென் றோதினன்.

(இ - ள்.) அவர் கூறுகின்றவளவிலே சீவகனும் கூறுகின்றவன், கல்லைக் கழுத்திலேகட்டிக் கடலை நீந்துகின்றவன் பிழைப்பனாயிற் காம நுகர்ச்சியோடே இவ்விடத்து விரதங்களையெய்தினவர்களும் பிழைப்பரென்று நூல்களை எடுத்தோதினனென்க.

[1] அவர் மனைவியரோடே துறத்தலிற் றொடர்ப்பாடென்றான். (கரு)

---

1425. பாங்கின் மாதவர் - நல்ல இடமாகிய சித்திரகூடத்திலுள்ள முனிவர். பான்மதி - பால்போன்ற வெண்மையான சந்திரன். இவன் : சீவகன். வீங்கிய கல்வியன் - நிறைந்த கல்வியறிவையுடையவன். இவன் மதிபோன்று வீங்குகல்வியன் எனமாறியியைக்க. மெய்ப்பொருள் கேள்வியன் - உண்மைப்பொருளின் கேள்வியையுடையவன். அளக்குவம்- இவன் கல்வியறிவினெல்லையை அளந்து அறிவோம். ஓங்குதல் - உயர்தல்.

1426. ஐயர் - தலைமையையுடைய முனிவர். அண்ணல் : சீவகன். சையம் பூண்டு - கல்லைக் கட்டிக்கொண்டு. நீந்துவான் உய்யுமேல் ; உய்யுமேல் - பிழைப்பானால். தொடர்ப்பாட்டின் - காமநுகர்ச்சியோடு ; " மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் " (குறள், 345). யாவையும் எய்தினர் உய்ப - எல்லா விரதங்களையும் எய்தப்பெற்ற முனிவர்களும் பிறவிக் கடலினின்றும் பிழைப்பார்கள்.

(உரை) [1] அவர் - சித்திரகூடத்திலுள்ள முனிவர்.

1427. வீடு வேண்டிவி முச்சடை நீட்டன்மெய்ம்
மூடு கூறையின் மூடுதல் வெண்டலை
ஓடு கோடலு டுத்தலென் றின்னவை
பீடி லாப்பிற விக்குவித் தென்பவே.

(இ - ள்.) அங்ஙனமோதினவன், வீடுபெறவிரும்பிச் சடையை நீட்டுதல், [1] சீவரம்போர்த்தல், கபாலமேந்துதல், [2] ஏகாந்தமாதலென்று கூறிய இத்தன்மையன பிறவிக்கு வித்தென்று தத்துவமுணர்ந்தோர் கூறுவரென்றும் ஓதினானென்க. (கசு)

1428. ஏம நன்னெறி யெந்நெறி யன்னெறி
தூய்மை யின்னெறி யாமுந்து ணிகுவம்
காமன் றாதைநெ றியின்கட் காளைநீ
தீமை யுண்டெனிற் செப்பெனச் செப்பினான்.

(இ - ள்.) யாங்கள் நிற்கின்றவழி நல்வழி; இஃதொழிந்தன நீ கூறியவாறே தூய்மையில்லாதவழி; அது யாமும் தெளிந்திருப்பேம்; திருமால் கூறிய இவ்வழியிடத்தில் தீங்குண்டாயின், காளாய்! நீ சொல்லென்று அவர் கூற, அவனுஞ் சொன்னானென்க. (கஎ)

(வேறு)

1429. (க) தூங்குறிக் கிடந்து காயும் பழங்களுந் துய்ப்ப நில்லா, பாங்கலா வினைக ளென்றூர் பகவனா ரெங்கட் கென்னின், ஓங்குநீண் மரத்திற் றூங்கு மொண்சிறை யொடுங்கல் வாவல், பாங்கரிற் பழங்க டுய்ப்பப் பழவினை பரியு மன்றே.

---

1427. வீடுவேண்டி - மோட்சத்தைப் பெறவிரும்பி. சடை நீட்டல் - சடைவளர்த்தல். மெய் மூடுகூறையின் மூடுதல் - உடம்பைப் போர்த்தற்குரிய துவரூட்டின ஆடையால் போர்த்துக் கொள்ளுதல். தலை ஓடு - கபாலம். கோடல் - கொள்ளுதல். பீடு - பெருமை. வித்து - விதை. மு: "மழித்தலு நீட்டலும் வேண்டா வுலகம், பழித்த தொழித்து விடின்" (குறள், 280)

(உரை) [1] சீவரம் - துவரூட்டின ஆடை. [2]ஏகாந்தமாதல்: "ஏகாந்த நெறிபுக் கின்மை கண்டவ னொருவ னைத்தே" (மேரு. நால்வரும். 12)

1428. ஏமம் - பாதுகாப்பு. எந்நெறி - யாங்கள் நிற்கின்றவழி. (பி - ம்.) 'இந்நெறியந்நெறி.' எந்நெறி ஏம நன்னெறியாகும் என மாறுக. அல்நெறி - இஃதல்லாத வழிகள். யாமும் துணிகுவம் - நீ கூறிய தன்மையை நாங்களும் தெளிந்துள்ளோம். காமன்தாதை நெறியின் கண் - மன்மதனுடைய தந்தையாகிய திருமாலாற் கூறப்பட்ட இவ்வழியினிடத்து. காளை: சீவகன்; விளி. செப்பென - சொல்லுவாயாக வென்று முனிவர் கூற. செப்பினான் - சீவகனும் கூறினான்.

1429. தூங்கு உறிக்கிடந்து - தொங்குகின்ற உறியிலே கிடந்து. துய்ப்ப - உண்ணுதலால். பாங்கலாவினை - நன்மையல்லாதவினை;

1430. (உ) அல்லியும் புல்லு முண்டாங் காரழ லைந்து ணின்று, சொல்லிய வகையி னேற்பத் துணியும்வெவ் வினைக ளென்னிற், கல்லுண்டு கடிய வெம்புங் கானுறை புறவ மெல்லாம், புல்லிய வினையை வென்று புறக்கொடை காணு மன்றே.

1431. (ரு) நீட்டிய சடைய மாகி நீர்மூழ்கி நிலத்திற் சேர்ந்து, வாட்டிய வுடம்பின் யாங்கள் வரகதி விளைத்து மென்னிற், காட்டிடைக் கரடி போகிக் கயமூழ்கிக் காட்டி னின்று, வீட்டினை விளைக்க வேண்டும் வெளிற்றுரை விடுமி னென்றான்.

இவைமூன்றும் ஒருதொடர்.

(இ - ள்.) எங்களுக்குப் பகவனார் உறியிலே கிடந்து இவற்றை நுகராத் தீவினைகள் நில்லாவென்று கூறினாரென்று கூறுவீராயின் மாத்திற் பக்கத்தே தூங்கும் வாவல் பழங்களை நுகர அதற்கும் இருவினைகள்

தீவினை. பகவனாரென்றது திருமாலை. என்னின் - என்று கூறினால். எங்கள் பகவனார், கிடந்து துய்ப்ப வினைகள் நில்லா என்றார் என்னின் எனமாறியியைக்க. ஓங்குநீள் - மிக உயர்ந்த. தூங்கும் - தொங்குகின்ற. சிறை ஒடுங்கு தலையுடைய வாவல் - வௌவால். பாங்கரில் - பக்கத்தில். பாங்கரின் மரத்தில் எனமாறுக. துய்ப்ப - உண்ணுதலால். பழவினை பரியுமன்றே - அவ்வௌவாலுக்கு இருவினைகளும் நீங்குமல்லவோ ?

1430. அல்லியும் புல்லும் - அல்லிக்கொட்டையிலுள்ள அரிசியையும், புல்லரிசியையும். ஆங்கு - அவ்விடத்தே. ஆரழலைந்துள் - பொறுத்தற்கரிய ஐந்து அக்கினிகளின் நடுவில். சொல்லிய வகையின் - திருமாலாகிய பகவனார் கூறிய வகையினால். வெவ்வினைகள் துணியும்என்னின் எனமாறியியைக்க. துணியும் - கெடும். கற்களையுண்டு. வெம்புகின்ற கடிய கானில் என மாறியியைக்க. புறவம் - புறாக்கள். புறாக்கள் கற்களை உண்ணுவது இயல்பு; இதனால் தூதுணம்புற வென்று கூறப்படும். புல்லிய வினையை - தம்மைப் பொருந்திய இருவினைகளை. புறக்கொடை காணல் - முதுகுபுறத்தைக் காணுதல்; "புலம்பு புறக்கொடுப்ப" (அகநா. 4 : 5); "புறக்கொடுத்திறத்தி" (புறநா. 8 : 7); "அழிகுநர் புறக்கொடை" (பு-வெ. 55, கொளு.)

1431. நீட்டிய - நீள விடப்பட்ட. சடையமாகி - சடையையுடையவர்களாகி. வாட்டிய உடம்பின் - விரதத்தால் வாடச்செய்த உடம்பினாலே. வரகதி விளைத்தும் - மேலான நிலையை உண்டுபண்ணிக் கொள்வோம். என்னின் - என்று நீங்கள் கூறினால். கயம் - குளம். கரடி காட்டினின்றும் போகிக் கயத்தில் மூழ்கி எனமாறியியைக்க. வீட்டினை - மோட்சத்தினை. விளைக்கவேண்டும் - பெறவேண்டுமன்றோ. சடையுடைமையின் கரடியை உவமை கூறினார். வெளிற்றுரை விடுமின் - பயனில்லாத சொற்களை நீக்குவீராக.

அழியுமல்லவோ! அதுவுமன்றி, இவற்றையுண்டு அழலிடையிலே நின்று பகவனூர்கூறிய வகையால் நோற்ப வெவ்வினைகள் அறுமென்னின், கல்லையுண்டு வெம்பும் கடிய கானிலே உறைகின்ற புறவுகளெல்லாம் இரு வினையைவென்று முதுகுகாணுமல்லவோ! அதுவுமன்றி, சடையமாய் மூழ்கிச் சேர்ந்து வாட்டிய உடம்பாலே யாங்கள் மேலான கதியை விளை விப்பேமென்னின், காட்டிற்கரடி அக்காட்டினின்றும்போய்க் கயத்திலே மூழ்கி வீட்டினைப்பெறவேண்டும்; ஆதலால், நும் பயனில்லாதவுரையைத் தவிர்வீராகவென்றுனென்க. (கஅ - உ0)

1432. (க) கலைவளர் கிளவி யார்தங் காமர்மென் சேக்கை நீங்கி, இலைவளர் குரம்பை யங்க ணிருநிலஞ் சேக்கை யாக, முலை வள ராகந் தோய முழுவினை முரியு மாயின், மலைவளர் குறவர்க் கம்மா வினைகளு மாயு மன்றே.

1433. (உ) வெண்ணிறத் துகிலி னுங்கண் வீழ்ந்துமா சாகி நின்ற, ஒண்ணிற வுதிரந் தன்னை யுதிரத்தா லொழிக்க லாமே, பண்ணிறக் கிளவி யார்தம் பசையினுற் பிறந்த பாவம், கண்ணிற முலையி னுர்தங் கலவியாற் கழிக்க லாமே.

1434. (ந) நுண்டுகில் வேத லஞ்சி நெருப்பகம் பொதிந்து நோக்கிக், கொண்டுபோய் மறைய வைத்தாற் கொந்தழல் சுடாது மாமே, கண்டத்தி னுவியார்தங் கடிமனை துறந்து காட்டுட், பண்டைச்செய் தொழிலிற் பாவம் பறைக்குற்றுற் பறைக்க லாமே.

---

1432. கலை வளர்தற்குக்காரணமான கிளவியையுடையவர்-மகளிர்; கிளவி - சொல். சேக்கை - படுக்கை; நிலமாகிய சேக்கை: "வல்லிப் பந்தர் வண்டுவா ழொருசிறை, நிலமகட் புணருஞ் சேக்கையும்" (ஆசிரியமாலை). குரம்பை - சிறுகுடிசை. ஆகம் - மார்பு. முழுவினை - இருவினையும். சேக்கை நீங்கிக் குரம்பையில் நிலமே சேக்கையாகக் கிளவியார்தம் ஆகத்தைத்தோய என மாறியியைக்க. முரியுமாயின் - கெடுமானுல். மலையில் வளர்கின்ற குறவர்களுக்கு. அம்மாவினைகளும் - அந்தப்பெரிய தீவினைகளும். மாயுமன்றே - கெடுமல்லவா?

1433. துகிலினுங்கண் - ஆடையினிடத்து. மாசாகி - குற்றமுடைய தாகி. ஒள்ளிய நிறத்தையுடைய உதிரத்தை; உதிரம் - இரத்தம். ஒழிக்க லாமே - போக்கமுடியுமோ; முடியாதென்றவாறு; ஏ: எதிர்மறை. பண் ணிறக் கிளவியார் - இராகத்தின் தன்மையையுடைய சொல்லாராகிய மகளிர். பசையினுல் - பற்றினுல். பிறந்த பாவத்தை. கண்ணையும் நிறத்தையுமுடைய முலையினுர். கலவி - கூட்டம். கழிக்கலாமே - நீக்க முடியுமோ; முடியாவென்றவாறு; ஏ: எதிர்மறை.

1434. நுண்ணிய துகில் வேதற்கு அஞ்சி. நெருப்பு அகம் பொதிந்து - தீயைத்துகிலினுள்ளே மூடி. அழல் - தீ. சுடாதுமாமே -

1435. (ச) நோய்முதிர் குரங்கு போல நுகர்ச்சிநீர் நோக்கல் வேண்டா, காய்முதிர் கனியி னூழ்த்து வீழுமிவ் வியாக்கை யின்னே, வேய்முதிர் வனத்தின் வென்றா னுருவொடு விளங்க நோற்றுப், போய்முதிர் துறக்கத் தின்பம் பருகுவ புரிமி னென்றான்.

இவை நான்கும் ஒருதொடர்.

(உ) கண்ணையுடைய நிறத்ததமுலை.

(ங) சுடாதும்; உம்மை: இசைநிறை. கண்டத்திலே புழுகையுடையார்; இனி, 'கண்டத்தினவியார்' என்பதற்குக் [1] கட்டி முதலிய உறுப் பாற்புகைத்த அகிற்புகையையுடையாரென்றுமுரைப்பர்; "பேருறுப் பாகிய கண்டப்புகை" என்றார் வளையாபதியிலும்.

(இ - ள்.) சேக்கையினின்றுநீங்கிக் குரம்பையிலே நிலம் சேக்கை யாகக் கிளவியார்தம் ஆகத்தைத்தோய இருவினைகெடுமாயின், குறவர்க்கும் அந்தப் பெரிய வினைகளும் கெடுமல்லவோ? அதுவுமன்றி, வெண்டுகிலிலே வீழ்ந்து மாசாகி நின்ற உதிரத்தை உதிரத்தாலே போக்கவொண்ணாது; அதுபோலக் கிளவியார்தம் பற்றினாலே பிறந்தபாவத்தை அவர் கூட்டத்தாலே போக்கவொண்ணாது; அதுவுமன்றி, துகில்வேதற்கஞ்சிப் பின்னும் நெருப்பை உள்ளே பொதிந்து வைத்தால் அது சுடுமல்லவோ? அதுபோல, நாவியார்தம் மனையைத் துறந்தகல அவரை நெஞ்சாலே நோக்கிக் காட்டிலே கொண்டுபோய்வைத்து, முன்புசெய்த தொழிலிற் பிறந்த பாவத்தைப் போக்கலுற்றாற் போக்கவொண்ணாது; ஆதலால், நீர் குரங்குபோலே காமநுகர்ச்சியைநோக்கல்வேண்டா; இவ்வியாக்கை

---

சுடாதோ; சுடும் என்றவாறு; உம்மை: இசைநிறை. கண்டத்தில் நாவியார் - கழுத்தில் புழுகைப்பூசிய மகளிர். பண்டைச் செய்தொழிலிற் பாவம் - முற்பிறப்பிற் செய்த செய்கையாற் பிறந்த பாவத்தை. பறைக் குற்றால் பறைக்கலாமே - கெடுக்கலுற்றாற் கெடுக்க முடியுமோ; முடியா வென்றவாறு; ஏ: எதிர்மறை; பறைதல் - கெடுதல்.

1435. நோய் முதிர் குரங்குபோல் - காமநோய் முதிரப் பெற்ற குரங்குகளைப்போல. நுகர்ச்சி - காமநுகர்தலை. காய்முதிர் கனியின் - முன்பு காயாக இருந்து பின்பு முற்றிய பழத்தைப்போல. ஊழ்த்து - முதிர்ச்சியையடைந்து. இவ்வியாக்கை கனியினைப்போல ஊழ்த்துவீழும் எனமாறியியைக்க; "கனியுதிர்ந்து வீழ்ந்தற் றிளமை" (நாலடி. 17). இன்னே - யாக்கை முதிர்வடையாதிருக்கும் இப்பொழுதே. வேய்முதிர் - மூங்கில் முற்றிய. வென்றான் உருவொடு - காமனைவென்ற அருகனுடைய வடிவத்தோடு. நோற்றுப்போய். முதிர்துறக்கத்தின்பம் - முற்றுப்பெற்ற சுவர்க்கத்தின்பத்தை. பருகுவ புரிமின் - நுகர்தலை விரும்புங்கள்.

(உரை) [1] கட்டிமுதலியன வாசனைப்பொருள்கள்.

கனியின் ஊழ்த்து வீழும் ; அதற்குமுன்னே இவ்வனத்தே காமனை வென்றுன் வேடத்தோடே நின்று நோற்றுப்போய்ச் சுவர்க்கத்தின்பத்தை நுகர்தலை விரும்புமினென்றானென்க.

ஏகாரமெல்லாம் எதிர்மறை. (உக - ச)

1436. மெய்வகை தெரிதன் ஞானம் விளங்கிய பொருள்க டம்மைப், பொய்வகை யின்றித் தேறல் காட்சியைம் பொறியும் வாட்டி, உய்வகை யுயிரைத் தேயா தொழுகுத லொழுக்க மூன்றும், இவ்வகை நிறைந்த போழ்தே யிருவினை கழியு மென்றான்.

(இ - ள்.) ஞானமாவது உண்மையறிதல் ; காட்சியாவது அங்ஙன மறிந்த பொருள்களைப் பொய்யின்றாகத் தெளிதல் ; ஒழுக்கமாவது ஐம் பொறிகளையும் ஐம்புலன்களிற் செல்லாமற்கெடுத்து உயிரைக்கெடாதே அவ்வுயிருய்யும் வகையொழுகுதல் ; இம்மூன்றொழுக்கமும் இப்படி நிறைந்த பொழுதே இருவினையும் கெடுமென்றானென்க. (உரு)

1437. குன்றனு னுரைப்பக் கேட்டே பாகத்தார் குடும்ப நீக்கி, இன்றுகண் விடுக்கப் பட்டேம் யாமென வெழுந்து போகி, வென்றவன் பாதஞ் சேர்ந்து வீட்டுநன் னெறியைப் பெற்றார், சென்றது பருதி வட்டஞ் செம்மலு மசைவு தீர்ந்தான்.

(இ - ள்.) சலிப்பில்லாதவன் கூறக்கேட்டு, நல்வினை வந்தடையும் பருவத்தினையுடையார் தம்மனைவியரைத் துறந்து, யாம் இன்று நின்னாலே அறிவுண்டாக்கப்பட்டேமென்று கூறி எழுந்துபோய் இறைவன் அடியைச்சேர்ந்து வீட்டுக்குச்செல்லும் நல்லவழியைப் பெற்றார் ; அவ்வளவிலே ஞாயிறு பட்டது ; தலைவனும் இளைப்புத் தீர்ந்தானென்க.

வட்டமென்றது நாடோறும் வட்டமாய் மாமேரு வருதலை. (உசு)

---

1436. மெய்வகை தெரிதல் - பொருளின் உண்மையை அறிதல். பொய்வகையின்றித் தேறல் - பொய்யின் தன்மை இல்லாமல் தெளிதல். ஐம்பொறியும் வாட்டி - ஐந்து இந்திரியங்களையும் ஐம்புலன்களிற் செல்லவொட்டாமற் கெடுத்து. உய்வகை - உயிர்பிழைக்கும் தன்மையாக. உயிரைத் தேயாது - உயிரினைக் கெடாமல். உயிரைத் தேயாது உய்வகை ஒழுகுதல் என மாறியியைக்க. மூன்றும் - நன்ஞானம், நற்காட்சி, நல்லொழுக்கம் என்பனவாகிய இரத்தினத்திரயங்களும் ; சீவக. 374, அடிக். இருவினை - நல்வினை தீவினை யென்ற இரண்டும். மு : சீவக. 2845 ; அருங்கலச். 2 ; சூளா. இரத. 83 ; மேரு. வைசயந்த. 107 ; அறநெறிச். 11.

(மேற்.) அடி, 1-2 : கல். “ பாய்திரை ” 65, மயில்.

1437. குன்றனன் : சீவகன். பாகத்தார் - நல்வினை வந்தடையும் பருவத்தையுடைய முனிவர்கள். குடும்பம் நீக்கி - மனைவி முதலியவரைத் துறந்து. யாம் இன்று கண்விடுக்கப்பட்டேம் என - நாங்கள்

(வேறு)

1438. அசைவு தீர்ந்திரு ளஃகிய காலையே
வசையி னீங்கியி ஞர்வழி காட்டலிற்
றிசையும் யாறுந் தெரிந்துகொண் டேகினான்
மிசையு மில்லதோர் மெய்ப்பொறி யாக்கையான்.

நீங்கியினார் ; இன் : அசை.

(இ - ள்.) உடம்பிற்குக்கூறுகின்ற இலக்கணத்தையுடைத்தாய்த் தேவருலகினுமில்லாததோர் யாக்கையான், அங்ஙனம் இளைப்பாறிப் பொழுது விடிந்தவளவிலே குற்றத்தினின்று நீங்கினார் வழிகாட்டலின், திசையையும் யாற்றையும் தெளிந்துகொண்டு போனானென்க. (உஎ)

(வேறு)

1439. படம்புனைந் தெழுதிய வடிவிற் பங்கயத்
தடம்பல தழீஇயது தக்க நாடது
வடங்கெழு வருமுலை மகளிர் மாமைபோன்
றிடம்பெரி தினிதத னெல்லை யெய்தினான்.

(இ - ள்.) புனைந்தெழுதிய படத்தின்வடிவுபோலப் பங்கயத்தடம் தழுவப்பட்டது ; தன்னிடம் மகளிர் மாமைபோலே நுகர்வார்க்குப் பெரிதும் இனியது ; அதுதான் தக்கநாடென்னும் பெயரையுடையது ; அதன் எல்லையைச் சேர்ந்தானென்க. (உஅ)

---

இன்று உன்னால் அறிவுண்டாகக்கப்பட்டேம் என்று கூறி. வென்றவன் - அருகனுடைய. வட்டம் பருதி சென்றது - மாமேருவை வட்டமாய்ச் சுற்றிவருகின்ற சூரியன் மறைந்தான். செம்மலும் : சீவகனும். அசைவு - இளைப்பு.

1438. இருள் அஃகிய காலை - இருட்டுக் குறைந்த விடியற்காலத்து. வசையின் நீங்கியினார் - குற்றத்தினின்று நீங்கிய முனிவர்கள். யாறு - வழி. மிசையும் இல்லது - தேவருலகத்தும் இல்லாததாகிய. மெய்ப் பொறி - உடம்பிற்குக் கூறப்படுகின்ற இலக்கணம். யாக்கையான் : சீவகன். மெய்ப்பொறி மிசையும் இல்லதோர் யாக்கையான் என மாறி யியைக்க. யாக்கையான் ஏகினான் எனமுடிக்க.

1439. பங்கயத்தடம் - தாமரைத்தடாகம். புனைந்தெழுதிய படத்தின் வடிவைப்போலப் பங்கயத்தடம் தழீஇயது என மாறியியைக்க ; தழீஇயது - பொருந்தியது. தக்கநாடது - தக்கநாடென்னும் பெயரையுடையது ; இந்நாட்டிலுள்ளது கேமமாபுரமென்னும் நகரம் ; அதற்குத் தலைவன் நரபதிதேவன் என்பவன்.; சீவக. 1448. வடம் கெழு - முத்து மாலை பொருந்திய. வருமுலை - எழுகின்ற முலை ; சிறுபாண். 72, ந. இடம் - தன்னிடம். அதன் எல்லையை - தக்கநாடாகிய அதனெல்லையை.

1440. தேங்கயத் தணிமலர் தெகிழ்ந்த நாற்றமும்
பூங்குழன் மடந்தையர் புனைந்த சாந்தமும்
ஆங்கெலா மகிற்புகை யளாய வாசமும்
தாங்கலாற் றக்கநா டாய தென்பவே.

(இ - ள்.) இனிய கயத்தின்மலர் வாய்விட்ட நாற்றத்தையும், சந்தனத்தையும், அகிற்புகை கலந்தநாற்றத்தையும், அவ்விடமெல்லாம் தரித்தலின், தக்கநாடென்னும் பெயர்த்தாயிற்றென்க.

இவற்றைத் தாங்குதலின், தக்கநாடு. (உகூ)

1441. (க) சண்பக நறுமலர் மாலை நாறுசாந்
தொண்பழுக் காயினோ டுருவ மெல்லிலை
உண்பத மியாவர்க்கு மூன மில்லது
வண்புகழ் நாட்டது வண்ண மின்னதே.

1442. (உ) கரும்பணி வளவயற் காமர் தாமரை
வரம்பணைந் ததனுதற் கிடந்த வார்செநெல்
அரங்கணி நாடக மகளி ராய்நுதற்
சுரும்புசூ ழிலம்பகத் தோற்ற மொத்ததே.

தன் இடம் மகளிர் மாமை போன்று நுகர்தற்குப் பெரிதும் இனிது; தக்க நாடது; அதனைல்லையை எய்தினன் என மாறியியைக்க.

1440. தேங்கயத்து - இனிய நீரையுடைய குளத்தில் உள்ள. தெகிழ்ந்த நாற்றமும் - வாய்விட்ட வாசனையையும்; "காவின்மேற் கடிமலர் தெகிழ்ந்த நாற்றமும்" (சீவக. 1935). புனைந்த சாந்தமும் - பூசிய சந்தனத்தையும். ஆங்கெலாம் - அந்நாட்டினிடமெலாம். அளாய வாசமும் - கலந்த வாசனையையும். நாற்றத்தை ஆங்கெலாம் தாங்கலால் தக்க நாடாயது என்க. தக்கநாடாயது - தகுதியையுடைய நாடாயிற்று.

இச்செய்யுளும் இதற்குரிய பழைய உரையும் சில பிரதிகளிற் காணப் படவில்லை.

1441. சண்பக நறுமலர்மாலை - சண்பகமாகிய வாசனையையுடைய பூமாலை. நாறு - மணம் வீசுகின்ற. உருவமெல்லிலை - அழகிய வெற்றிலை; மெல்லிலை: வினைத்தொகை; சீவக. 62, ந. உண்பதம் - உண்ணுதற்குரிய உணவு. மாலையும், சாந்தும், பழுக்காயினோடு மெல்லிலையும், உண்பதமும் யாவர்க்கும் ஊனமில்லது என்க; ஊனம் - குறைவு. இல்லது - இன்மையால். நாட்டது - தக்கநாட்டிலுள்ளது. வண்ணம் இன்னது - தன்மை எக்காலமும் இத்தன்மைத்து. நாட்டது புகழ்வண்ணம் இன்னது என மாறிமுடிக்க.

1442. கரும்பை யணிந்த வளத்தைக் கொண்ட வயலில். வரம்பு அணைந்து - வயலின் வரம்பைச்சேர; அதன் நுதற்கிடந்த செநெல் -

இவை இரண்டும் ஒருதொடர்.

(க) சண்பகமாலைமுதலியன யாவருக்கும் குறைவின்மையிற் பிறந்த புகழென்க.

(உ) [1] அணைந்து - அணைய. சுரும்புசூழ்தாமரையென்க; சுரும்பு மயிர்க்கு உவமை.

(இ - ள்.) அந்நாட்டில், வயலில், தாமரை சாய்ந்து வரம்பைச்சேர அதன் நுதலிலேகிடந்த செந்நெல், மகளிர் நுதலில் தலைக்கோலத்தை யொத்தது; அங்ஙனஞ்சிறந்த நாட்டது புகழின்வண்ணம் எக்காலமும் இத்தன்மைத்தென்க. (ரு௦-ருக)

1443. வண்டுவாழ் கொடுந்துறைக் கன்னி வாளைமேல்
நண்டுகி ருற்றென நடுங்கி நாணிஞல்
விண்டொளித் தூண்டுறந் தொடுங்கும் வீழ்புனல்
கொண்டபூங் கிடங்கணி நகரங் கூறுவாம்.

(இ - ள்.) ஒருகன்னி, தன்மேலே உகிருற்றென நாணத்தாலே நடுங்கி அவ்விடத்தைக் கைவிட்டுப்போய் ஒளித்து ஊணைத் துறந்து ஒடுங்குமாறு போலே, வளைந்த துறையில் வாளை தன்மேலே நண்டுகிருற்றென நடுங்கியொடுங்கும் ஆழ்ந்த புனலைத் தன்னிடத்தே கொண்ட கிடங்குசூழ்ந்த நகரம் இனிக் கூறுவாமென்றாரென்க. (ருஉ)

---

அந்தத் தாமரையின் நெற்றியிற் சாய்ந்து கிடந்த செந்நெற்கதிர். அரங்கு - நாடகசாலை. நுதல் - நெற்றி. சுரும்பு - வண்டு. சுரும்புசூழ் தாமரை எனமாறுக. மகளிருடைய நுதலிற் சூழ்ந்த இலம்பகத்தை ஒத்தது என்க; இலம்பகம் - தலைக்கோலமென்னும் ஆபரணம்; வயந் தகமுமாம். தாமரைக்கு மகளிர் முகமும், நெற்கதிருக்குத் தலைக்கோல மும் வண்டுகளுக்குக் கூந்தலும் உவமைகள். மு : " புள்ளிமி ழகல்வய லொலிசெய்நெ லிடைப்பூத்த, முள்ளரைத் தாமரை முழுமுதல் சாய்த்த தன், வள்ளித ழுறநீடி வயங்கிய வொருகதிர், அவைபுக ழரங்கின்மே லாடுவா ளணிநுதல், வகைபெறச் செரீஇய வயந்தகம் போற்றோன்றும், தகைபெறு கழனி " (கலித். 79 : 1-6) ; " செந்தாமரைப்பூ வுறநிமிர்ந்த செந்நெல்லின், பைந்தாரப் புனல்வாய்ப்பாய்ந் தாடுவாள் - அந்தார், வயந்தகம்போற் றோன்றும் வயலூரன் " (திணைமாலை. 128)

(உரை) [1] எச்சத்திரிபு.

1443. துறையிலுள்ள கன்னிவாளை; கன்னி - இளமை. உகிர் உற் றென - நகம் பொருந்திற்றென்று. விண்டு - அவ்விடத்தைவிட்டுப் போய். ஊண் - உணவு. கொடுந்துறை - வளைந்த நீர்த்துறையில். வீழ்புனல் - ஆழ்ந்த நீரை. கிடங்கணி நகரம் - அகழிசூழ்ந்த கேமமாபுரமென்னும் நகரம். மு : " வரியகட் டலவன் வள்ளுகி ருற்றெனக், கன்னி வாளை யுண்ணு தொடுங்கும், தண்பணை " (பெருங். 1. 58 : 100-102)

1444. அகழ்கிடங் கந்துகி லார்ந்த பாம்புரி
புகழ்தகு மேகலை ஞாயில் பூண்முலை
திகழ்மணிக் கோபுரந் திங்கள் வாண்முகம்
சிகழிகை நெடுங்கொடி செல்விக் கென்பவே.

(இ - ள்.) மதிலாகிய செல்விக்கு அகழ்ந்த அழகிய கிடங்கு துகில்; பாம்புரி மேகலை; ஞாயில் முலை; கோபுரம் திங்களையொத்தமுகம்; நெடுங்கொடி சிகழிகையென்க. (௩௩)

1445. நாட்டிய மணிவரை கடைந்து நல்லமிர்
தூட்டினு மதனைவிட் டுறைந ரின்மையால்
ஈட்டிய வளநிதி யிறைகொண் மாநகர்ச்
சூட்டுவைத் தனையதச் சுடர்ப்பொ னிஞ்சியே.

(இ - ள்.) அந்தப்பொன்னிஞ்சி, மந்தரமென்று பேர்நாட்டிய வரையாலே கடலைக்கடைந்து அமிர்தத்தையூட்டினும் அந்நகரைவிட்டுப்போய் உறைவாரின்மையின், அந்நகர் நகர்களுக்குத் தலையென்று சூட்டு வைத்தாலொத்ததென்க.

இனி, [1] அகரம் பண்டறிசுட்டாக்கி, அம்மணிவரையைநாட்டி யென்றும், உறைநரின்மையால் [2] நிதிதங்குமென்றுமாம். (௩௪)

---

1444. அகழ் அம் கிடங்கு - அகழ்ந்த அழகிய அகழி. பாம்புரி - மதிலினடியேயுள்ள ஆளோடிகள்; சீவக. 1250, அடிக். ஞாயில் = ஞாயில்-மதிலின்மேல் ஏப்புழைக்கு நடுவாய். எய்துமறையும் சூட்டென்னும் உறுப்பு. திங்களைப்போன்ற முகம். சிகழிகை - மயிர்முடி. செல்விக்கு - மதிலாகிய பெண்ணுக்கு. செல்விக்கு, கிடங்கே துகில், பாம்புரியே மேகலை, ஞாயிலே முலை, கோபுரமே முகம், கொடியே சிகழிகை என்க; மு : சீவக. 105, அடிக்.; பெருங். 3. 3 : 17-38.

(மேற்.) மு : நன். பொது. 59, மயிலை.; சங்கர.

1445. நாட்டிய மணிவரை - மந்தரமென்று பெயர் நாட்டப்பெற்ற அழகிய மலையாலே. அதனைவிட்டு - கேமமாபுரமென்னும் அந்நகரை நீங்கி. உறைநர் - தேவருலகத்தில் தங்குபவர். ஈட்டிய - முயற்சியால் தேடிச்சேர்க்கப் பெற்ற. இறைகொள் - தங்குதல்கொண்ட. மாநகர்ச் சூட்டுவைத்தனையது - கேமமாபுரம், மற்றைய நகரங்களுக்குத் தலைமையானது என்று உச்சிச்சூட்டு வைத்தாற் போன்றது. சுடரையுடைய பொன்னாலாகிய இஞ்சி; இஞ்சி - மதில். இஞ்சி சூட்டுவைத்தனையது என்க.

(உரை) [1] நாட்டிய வென்பதன் ஈற்றில் உள்ளதை. [2] நிதியென்பதற்கு முதல்வகையான பொருள் அரசனென்று கொள்ளவேண்டும்; 'சங்கநிதி -அரசன்' (சீவக. 139, ந.)

1446. ஏறிசுற விளையவ ரேந்து பூங்கொடி
மறிதிரை வரைபுரை மாட மாக்கலம்
பெறலருந் திருவனு ரமுதம் பேரொலி
அறைகடல் வளநக ராய தென்பவே.

(இ - ள்.) பேரொலிவளநகர், வீரர் சுறவாக, கொடி மறிதிரையாக, மாடம் மரக்கலமாக, மகளிர் அமுதமாக அறைகடலாயிற்றென்க.

இத்தொடர், [1] வேறுபடவந்த உவமவிசேடமாம். (௩௭)

(வேறு)

1447. மதியக டுரிஞ்சுஞ் சென்னி மாடநீண் மறுகு தோறும், பொதியவிழ் மாலை வீழ்ந்து பொன்செய்நன் கலன்கள் சிந்தி, நிதியறை திறந்து நோக்கி யன்னதோர் நீர்மை யெய்திப், புதிய வர்க் கியங்க லாகாப் பொற்பொடு பொலிந்த தன்றே.

(இ - ள்.) அந்நகரி, தெருவெங்கும் மயிர்முடி குலைதலின் முத்த மாலை வீழ்ந்து பேரணிகலங்களும் சிந்துதலாலே, நிதியறையைத் திறந்துபார்த்தாலொத்ததொரு தன்மைபெற்று, அச்சஞ்செய்தலிற் புதிய வர்க்கு இயங்கலாகாத அழகோடே பொலிந்ததென்க. (௩௮)

1446. சுறவு : ஒருவகை மீன். இளையவர் - வீரர். வீரருக்குச் சுறவு உவமை ; சீவக. 1845, 2325 ; "சுறவினத் தன்ன வாளோர்" புறநா. 13 : 7). மறிதிரை - கீழ்மேலாகப் புரளுகின்ற அலை. வரைபுரைமாடம் - மலையை யொத்த மாடங்கள். கலம் - கப்பல். பெறலருந்திருவனார் - பெறுதற்கரிய திருமகளைப் போன்ற மகளிர். அறை கடல் - ஒலிக்கின்ற கடல். நகர் - கேமமாபுரம். பேரொலியையுடைய வளநகர், இளையவர் சுறவாக, கொடி திரையாக, மாடம் கலமாக, மகளிர் அமுதமாக அறை கடல்போன்றது.

(உரை) [1] தொல். உவம. 32.

1447. மதி அகடு உரிஞ்சும் - சந்திரனது நடுவிடத்தைத்தேய்க் கின்ற. சென்னி - உச்சியையுடைய. மறுகு - தெரு. பொதி அவிழ்மாலை - மயிர் முடியினின்றும் அவிழ்ந்த முத்தமாலைகள். கலங்கள் - ஆபரணங் கள். சிந்தி - சிந்துதலால். நோக்கியன்னதோர் நீர்மை எய்தி - பார்த்தாற் போன்றதொரு தன்மையைப்பெற்று. புதியவர்க்கு - அந்நகரைக் காண வரும் புதிய மனிதர்களுக்கு. இயங்கலாகாப்பொற்பொடு - சிந்திக் கிடக்கும் ஆபரணம் முதலியவற்றைக் கண்டு திகைத்து, மேற்செல்ல வொண்ணாத அழகுடனே. அந்நகரம் பொலிந்தது என்க.

(வேறு)

1448. கேமமா புரமெனுங் கேடி னல்லிசைப்
பூமிமேற் றிலகம்வைத் தனைய பொன்னகர்த்
தாமநீ ணெடுங்குடைத் தரணி காவலன்
நாமம்வே னரபதி தேவ னென்பவே.

(இ - ள்.) உலகிற்குத் திலகமிட்டாலொத்த கேமமாபுரமென்னும் பெயரையுடைய பொன்னகரில், இசையையும் குடையையுமுடைய அரசன் பெயர் நரபதிதேவனென்று கூறுவாரென்க. (௩௭)

1449. (க) அந்நகர்க் கரசனே யனைய வாண்டகை
மெய்ந்நிக ரிலாதவன் வேத வாணிகன்
கைந்நிக ரமைந்தவேற் கமழுந் தாரினன்
மைந்நிகர் மழைக்கணார் மருட்ட வைகுவான்.

(வேறு)

1450. (உ) வார்சிலை வடிப்ப வீங்கி வரையெனத் திரண்ட தோளான், சோர்புய றொலைத்த வண்கைச் சுபத்திரன் மனைவி பெற்ற, சீர்நலங் கடந்த கேம சரியெனத் திசைக ளெல்லாம், பேர்நலம் பொறித்த பெண்மைப் பெருவிளக் காகி நின்றாள்.

---

1448. கேடில் நல்லிசை - கெடுதலில்லாத நல்லபுகழையுடைய; காவலனுக்கு அடை. பூமிமேல் திலகம் வைத்தனைய கேமமாபுரமென்னும் நகரில் என மாறியியைக்க. தாமத்தையுடைய நீண்ட குடை; தாமம் - மாலை. இசையையும் குடையையுமுடைய தரணி காவலன் என்க. காவலனுடைய நாமம் நரபதிதேவன் என்ப என்க; "நாமவே னரபதி யுலகங் காத்தநாள்" (சூளா. நகர. 18)

1449. அரசனே யனைய - நரபதி தேவனையே போன்ற. ஆண்டகை - ஆடவரிற் சிறந்தவன். "வீறுசான் மன்னர் விழையுங் குடியுள" நான்மணிக். 53). மெய்ந்நிகரிலாதவன் - வடிவொப்பில்லாதவன். வேதவாணிகன்; "வேதவாணிக ரல்லாதார் கலத்திற் பிரிவு வேதநெறி பன்மையின் ஆராய்ச்சியின்று" (தொல். அகத்திணை. 11, ந.); பட்டினப். 205-7, ந. கைந்நிகர் அமைந்த வேல் - கைக்கு ஒப்பமைந்த வேல். வேலையும் தாரையுமுடையவன். கணார் : மகளிர். மருட்ட - மயக்க. வைகுவான் - அவ்வின்பத்தே தங்குவான். இப்பாடலிற் கூறப் பட்டவன் சுபத்திரன் என்னும் வாணிகன்.

1450. வார்சிலை வடிப்ப வீங்கி - நீண்ட வில்லைப்பயிற்றுதலாலே பெருத்து. சோர்புயல் தொலைத்த வண்கை - சொரிகின்ற மேகத்தைத் தன் கொடைத் தொழிலால் கெடச்செய்த வள்ளன்மையையுடைய கை. தோளானாகிய கையையுடைய சுபத்திரன்; அவன் மனைவி; நிப்புதி யென்பவள்; இது நிஸ்ப்ருதி என்பதன் விகாரம். அவள்பெற்ற

இவை இரண்டும் ஒரு தொடர்.

(இ - ள்.) அந்நகரிக்கு அரசனையொத்த ஆண்டகை, வடிவொப்பில்லாதவன், வேதத்தையுடைய வாணிகன், கைக்கு ஒப்பமைந்த வேலினையும் தாரினையுமுடையான்: மகளிர்மயக்க அவ்வின்பத்தே தங்குவான், வில்லைப் பயிற்றுதலாற் பெருத்துத் திரண்ட தோளான், சுபத்திரன்; அவன் மனைவி நிப்புதி பெற்ற கேமசரி, திசையெல்லாம் தன் பெயரையும் அழகையும் எழுதினதொரு பெண்மையையுடைய விளக்கெனவாகி நின்றாளென்க.

ஆகியெனவே நுகரும் பருவத்தாளென்றார். (௩அ - ௯)

1451. மாசிலாள் பிறந்த ஞான்றே மதிவலான் விதியினெண்ணிக், காசிலாள் கண்ட போழ்தே கதமென நாணப் பட்டான், தூசுலா மல்கு லாட்குத் துணைவனும் புணர்மினென்று, பேசினா னன்று கொண்டு பெருவிருந் தோம்பு கின்றான்.

(இ - ள்) அம்மாசிலாள் பிறந்தபொழுதே, கணி நூலாலேயெண்ணி, இவள் கண்டபொழுதே நாணப்பட்டவன் இவட்குக் கணவனும்; அவற்குக் கொடுங்கோளென்று கூறினன்; அன்று தொடங்கிச் சுபத்திரனும், அவள் அவனைக் காண்டற்கு ஆடவர்க்கு விருந்திடுதலைப் பேணுநின்றானென்க.

தன் கணவரல்லாதார் அவட்கு ஆடவராய்த் தோன்றாரென்பது தோன்றப் பலரையும் நோக்குகின்றவளை, 'மாசிலாள்' என்றும், 'காசிலாள்' என்றும் பெயர் கூறினார். (௪௦)

1452. தாழ்தரு பைம்பொன் மாலைத் தடமலர்த் தாம மாலை, வீழ்தரு மணிசெய் மாலை யிவற்றிடை மின்னி னின்று, சூழ்வளைத் தோளி செம்பொற் றூணையே சார்ந்து நோக்கும், ஊழ்படு காத லானை யொருபிடி நுசுப்பி னாளே.

தாமம் - ஒழுங்கு.

---

பெண்ணின் பெயர் கேமசரி. சீர்நலம்கடந்த - மற்ற மகளிரது சிறப்புடைய அழகைவென்ற; சீவக. 182. பேர்நலம் பொறித்த - தன் பெயரையும், அழகையும் எழுதிய. பெண்மைத் தன்மையையுடைய விளக்காகி. கேமசரி நின்றாள் என்க.

1451. மாசிலாள்: கேமசரி. மதிவலான் - சோதிடன். விதியின் எண்ணி - சோதிட நூலாலே ஆராய்ந்து. காசிலாள்: கேமசரி; சுட்டுப் பெயரளவாய் நின்றது. கதுமென - விரைய. நாணப்பட்டான் - நாணப் பட்டவன். அல்குலாட்கு: கேமசரிக்கு. துணைவனும் - கணவனாவான். புணர்மின் - அத்தகையவனுக்கு இவளைக் கொடுங்கள். மதிவலான் பேசினான் என்க. அன்றுகொண்டு - அன்று தொடங்கி. பெருவிருந்து ஓம்புகின்றான் - கேமசரி அத்தகையவனைக் காணும்பொருட்டு ஆடவர்க்கு விருந்து அளித்தலை விரும்பிச் செய்கின்றான்.

1452. தாழ்தரு - தங்கிய. தாமமாலை - வரிசையையுடைய மாலை; தாமம் - ஒளியுமாம். வீழ்தரு - விரும்புகின்ற. மின்னின் - மின்னலைப்

(இ - ள்.) அவன் விருந்தோம்புமிடத்தே, ஒரு பிடியிலடங்கும் நுசுப்பினளாகிய தோளி, பொன்மாலை, பூமாலை, விரும்பும் மணிமாலை யென்கின்ற இவற்றிடையே தூணைச்சார்ந்து, மின்போலே நின்று தனக்குத் தொன்றுபட்டு வருகின்ற காதலானை, அவர்களில் உளனோவென்று நோக்குமென்க. (சக)

1453. சேயிழை கணவ னாகுந் திருமகன் றிறத்து நாளும்
ஆயிரத் தெட்டு நேர்ந்த வாரமு தடிசி லூட்டி
ஏயின வகையி னாலே யாறிரண் டெல்லை யாண்டு
போயின வென்ப மற்றப் பூங்கொடிச் சாய லாட்கே.

[1] ஊட்டி - ஊட்ட.

(இ - ள்.) சுபத்திரன் கணிகூறிய வகையாலே கேமசரிக்குக் கணவனாகிய திருமகன் தோன்றுதற்பொருட்டு நாடோறும் அமுது போலும் அடிசிலை விருந்திற்கு ஊட்டாநிற்க, அவட்குப் பன்னிரண்டாகிய எல்லையையுடைய யாண்டுகள் கழிந்தனவென்க.

[2] "என்றிறத் தவலங் கொள்ளல்" (புறநா. 253) என்றாற்போல.
(சஉ)

1454. முருக்கிதழ் குலிக மூட்டி வைத்தன முறுவற் செவ் வாய்த், திருக்கவி னிறைந்த வெங்கட் பணைமுலைத் தேம்பெய் கோதைப், புரிக்குழற் பொன்செய் பைம்பூட் புனையிழை கோல நோக்கித், தரிக்கலா துருகி நையுந் தடமலர்க் கோதை நற்றாய்.

---

போல. தோளி : கேமசரி. ஊழ்படு காதலானை - தொன்று தொட்டு வருகின்ற காதலையுடைய கணவனை. ஒருபிடி நுசுப்பினள் : சீவக. 613, அடிக். ஒருபிடி நுசுப்பினளாகிய தோளி, சார்ந்து நின்று காதலானை நோக்கும் என மாறிமுடிக்க. மகளிர் ஒன்றைச் சார்ந்து நின்று நோக்குதல் : சீவக. 319, அடிக்.

1453. சேயிழை ; கேமசரியினுடைய. திருமகன் திறத்து - திருமகன் தோன்றுதற் பொருட்டு. ஆயிரத்தெட்டு வகையான அடிசில், அமுது போலும் அடிசில் என்க. ஊட்டி - விருந்தாக வருபவர்களுக்கு உண்பிக்க. ஏயின - பொருந்திய. ஆறிரண்டெல்லையாண்டு - பன்னிரண்டு வருடம். மற்று : அசை. பூங்கொடி போலும் சாயலாட்கு ஆறிரண்டெல்லை யாண்டுபோயின வென்ப என மாறியியைக்க; சாயலாட்கு : கேமசரிக்கு.

(உரை) [1] எச்சத்திரிபு. [2] இது, 'திருமகன்றிறத்து' என்பதற்கு ஒப்புமை.

1454. முருக்கம்பூவைப் போன்று சிவந்த இதழ். குலிகம் - இங்குலிகம். குலிகமூட்டி யன்ன செவ்வாய் என இயைக்க. திருக்கவின் - திருமகளது அழகு. தேம் - தேன். கோதை - பூமாலை. புரிக்குழல் - நெறித்தலையுடைய கூந்தல் ; சீவக. 2688, ந. புனையிழை : கேமசரி, இதழையும், முறுவலையும், செவ்வாயையும், முலையையும், குழலையும்,

(இ - ள்.) முறுவல் முதலியவற்றையுடைய திருவினது கவினிறைந்த புனையிழையின் கோலமுதிர்ச்சியை அவள் தாய் நோக்கி உருகி நையா நிற்குமென்க. (சங)

1455. மாவடு மருட்டு நோக்கின் மதிமுக மழைக்கண் மாசில்
பூவொடு புரையுஞ் சாயல் புனைநலந் தனித்து வைக
ஏவடு பிணையி னோக்கி யிறைவளை கழல நின்ற
தாய்படுந் துயர மெல்லாந் தாரவ னீக்கி னானே.

மருட்டு நோக்கு - நோக்கினாரை மருட்டும் நோக்கு.

(இ - ள்.) மதிமுகத்திலே மானைவருத்தும் நோக்கினையுடைத்தாகிய கண்ணினையுடைய கேமசரி தனித்துவைகுதலின், ஏவுண்ட மான்பிணை போலே நோக்கி வருந்தின தாய் பட்ட வருத்தத்தை யெல்லாம் சுபத்திரன் நீக்கினானென்க. (சச)

1456. போதுவாய் திறந்த போதே பூம்பொறி வண்டு சேர்ந் தாங், கூதுமே மகளிர்க் கொத்த போகமு மன்ன தொன்றே, யாதுநீ கவல வேண்டா வாரமு குடைய நம்பி, காதலான் றவத்தின் மிக்கான் கண்ணுறு நாளை யென்றான்.

---

பூணையுமுடைய புனையிழை. கோலம் - அழகு. தரிக்கலாது - தாங்காமல். நையும் - வருந்துவாள். கோதை நற்றாய் - கேமசரியின் தாயாகிய நிப்புதி. நற்றாய் புனையிழையின் கோலம் நோக்கி நையும் என மாறி முடிக்க; திணைமாலை. 62, கருத்து.

1455. மாவினை அடுகின்ற நோக்கு, மருட்டுகின்ற நோக்கு என்க; மா - மான்; சீவக. 359; "மாவென்ற மடநோக்கின்" (கலித். 57 : 2, ...); மாவடு மருட்டுநோக்கின்......வாய்" (கூர்ம. கண். மணம். 165). ...ட்டும் - தன்னைப் பார்த்தவரை மயங்கச் செய்கின்ற. மதிபோன்ற ...த்தில் நோக்கினைக் கொண்ட கண்ணையுடைய சாயல்: கேமசரி. புனை தனித்து வைக - புனைந்த அழகோடு தனியிருந்து தங்குதலால். ...டுபிணையின் நோக்கி - அம்பால் எய்யப்பட்ட பெண்மானினைப் ...று பார்த்து. இறைவளை - கையில் அணிந்த வளை. தாய்: நிப்புதி. ...: சுபத்திரன்.

ப... ந... மரு... முக... நலம் ... ஏ அ... போன்... தாரவன்...

1456 ... போது - பூ. பூம்பொறிவண்டு - அழகிய புள்ளிகளையுடைய வண்டு. ... சேர்ந்து ஆங்கு ஊதுமே - அப்பூவைச் சேர்ந்து அதிலுள்ள தாதுக்களை... ...பும் தேனையும் உண்ணுமல்லவோ? அன்ன தொன்றே மகளிர்க் கொ... ...த்த போகமும் எனமாறுக; அன்னதொன்றே - பூவில் வண்டுண்பத... ...கிய அத்தன்மையதொன்றேயாகும். ஒத்த - பொருந்தின. "மலரினு மெ... ...லிது காமஞ் சிலரதன், செவ்வி தலைப்படு வார்" (குறள், 1289). காதல... ...ன் - கேமசரியால் காதலிக்கப்படுபவன். தவத்தின் மிக்கான் - கேமச... ...ரியைப் பெறுவதற்கு மிக்க தவத்தைச் செய்தவன். கண்ணுறும் - எதி... ...ர்ப்படுவான். நாளைக் கண்ணுறும்; நீ யாதும் கவல வேண்டா என்றான் என மாறியியைக்க.

ஊதுமே ; ஏகாரம், வினை. ஒன்றே ; ஏகாரம், தேற்றம்.

(இ - ள்.) பூ நெகிழ்ந்தபோதே வண்டு நுகருமல்லவோ? அத் தன்மைய தொன்றே மகளிர்க்குப் பொருந்தின நுகர்ச்சியும் ; ஆதலின், நம்பி, இவள் காதலிக்கப் படுவான், இவளை நுகர்தற்குத் தவஞ் செய்தவன் ; நாளைத் தானேவந்து எதிர்ப்படும் ; இனி நீ சிறிதும் வருந்த வேண்டாவென்று ஆற்றுவித்தானென்க. (சரு)

(வேறு)

1457. பொன்னிலத் தெழுந்ததோர் பொருவில் பூங்கொடி
மின்னுவிட் டெரிவதோர் நலத்தள் வீங்கிருள்
பின்னிவிட் டனகுழற் பெருங்கட் பேதையூர்
துன்னினன் றெருடுகழற் குருசி லென்பவே.

(இ - ள்.) அவ்வளவிலே குருசில், இருளைப் பின்னிவிட்டாலன்ன குழலிணையும் கண்ணிணையுமுடைய காமவல்லிபோல் ஒளிவிட்டு விளங்குவதொரு நலத்தினளாகிய பேதையூரைச் சேர்ந்தானென்க. (சசா)

1458. மல்லிகை மணங்கமழ் மாலை வார்குழற்
சில்சுணங் கிளமுலைச் சிறுமி தந்தையும்
செல்வனைத் திருநகர்ச் சேட்பட் டானரோ
பல்கதிர் மணியொளி பரந்த பூணினான்.

(இ - ள்.) பூணினனாகிய மாலைமுதலியவற்றையுடைய இவள் தந்தையும் அங்ஙனந்துன்னின சீவகனை எதிர்ப்பட்டானென்க. (சஎ)

1459. தென்றிசை முளைத்ததோர் கோலச் செஞ்சுடர்
ஒன்றிமற் றுத்தரம் வருவ தொத்தவண்
மன்றல்கொண் மார்பினான் வந்தொ ரானிழல்
நன்றுவந் திருந்தன னதற் சிந்தியா.

1457. பொன்னிலம் - தேவருலகம். பூங்கொடி - காமவல்லிக்கொடி; பொன்னிலத் தெழுந்த என்றமையின் காமவல்லிக் கொடி யென்பது பெறப்பட்டது. மின்னுவிட்டு எரிவதோர் - ஒளிவிட்டு விளங்குவதொரு. இருளைப் பின்னிவிட்டாலன்ன குழல். பூங்கொடியைப்போல் மின்னு விட்டு, எரிவதோர் நலத்தினளாகிய பேதை என மாறியியைக்க. பேதை : கேமசரி. குரிசில் பேதையினுடைய ஊரைத் துன்னினன் என மாறியியைக்க; குருசில் : சீவகன். ஊர் : கேமமாபுரம். என்ப, ஏ : அசை நிலைகள்.

1458. சில் சுணங்கு - சிலவாகிய தேமல். சிறுமி : கேமசரி. மாலையையும் குழலையும் முலையையுமுடைய சிறுமி என்க. சிறுமியினுடைய தந்தை : சுபத்திரன். செல்வனை : சீவகனை. நகர்ச்சேட்பட்டான் - கேமமாபுரத்தில் எதிர்ப்பட்டான் ; அரோ : அசை. கதிர் - கிரணம். பூணினனாகிய தந்தை செல்வனைச் சேட்பட்டான் என மாறிமுடிக்க.

1459. முளைத்ததோர் - தோன்றியதொரு. சுடர் - சூரியன். ஒன்றி - நிலத்திலே வந்து பொருந்தி. மற்று : அசை. உத்தரம் - வடதிசையில்.

(இ - ள்.) அவ்வளவிலே, தென்றிசையிலே முளைத்ததொரு ஞாயிறு நிலத்தே நடந்து வடதிசையிலே வருந்தன்மையையொத்து, மார்பினான், வடக்கு நோக்கிவந்து, நமோ அரஹந்தாணமென்று கூறி மந்திரத் தியானஞ் செய்து அவ்விடத்தே ஓராலநிழலிலே மிகவும் மகிழ்ந்திருந்தா னென்க.

சீவகன் வேற்றுநாட்டின் சுவைகளை அறிந்து நுகரவேண்டு மென்றற்குத் [1]தேவனும் [2]இவற்கு ஊழ்வகையான் உறவுகொண்டு நுகர்ச்சியையெய்துமிடங்களை நாடி ஆண்டுச்சேறற்கு வழிகூறலின், வடதிசையிற்போதல் உளதாயிற்றென்றுணர்க. விசயமாதேவியாரைக் கண்டாற் பின்பு இராசமாபுரத்தை நோக்குவனென்றுணர்க. (சஅ)

1460. (க) குடைகவித் தனைய து கோல மாமுடி
அடியிணை யாமையின் வடிவு கொண்டன
புடைதிரள் விலாவும்வில் வளைந்த பொற்பின
கடிகமழ் தாமரை கண்ணின் வண்ணமே.

1461. (உ) குறங்கணி மயிரொடு கோல மார்ந்தன
பிறங்கிய வுறுப்பின்மேற் பெரிய நோக்கின
கறங்கிசை மணிமுழா வெருத்தங் காண்டகு
மறங்கெழு பெரும்புலி வாயின் வண்ணமே.

---

அவண் - கேமமாபுரத்தே. மன்றல் - வாசனை. மார்பினன் : சீவகன். வந்து - வடக்குத்திசையை நோக்கிவந்து. சீவகனுக்குச் சூரியன் உவமை. நாதற்சிந்தியா, அவண் ஓரானிழலில் நன்று உவந்திருந்தனன் என மாறியியைக்க; நாதற்சிந்தியா - அருகனைத் தியானித்து. ஆல்நிழல் - ஆலமரத்தின் நிழலிலே. நன்று உவந்து - மிகவும் மகிழ்ந்து.

(உரை) [1] தேவன் : சுதஞ்சணன். [2] இவற்கு : சீவகனுக்கு.

1460. முடி குடை கவித்தனையது - சீவகனுக்குத் தலையும் உச்சி உயர்ந்து, சுற்றிலும் தாழ்ந்து குடையைக் கவித்தாற்போன்றுள்ளது. புறவடிகளுக்கு ஆமை உவமை. புடைதிரள் விலா - பக்கம் திரண்ட விலா. விலாவின் வளைவுக்கு வில் உவமை. கடி - வாசனை. கண்களுக்குத் தாமரை உவமை. வண்ணம் - தன்மை. இப்பாடல் முதல் ஆறுபாடல் களில் சீவகனுடைய உருவ வருணனை கூறப்படுகின்றது.

1461. குறங்கு அணிமயிரொடு கோலமார்ந்தனவாகிப் பிறங்கிய உறுப்பின்மேல் பெரிய நோக்கின என்க; குறங்கு - தொடை. அணிமயி ரொடு - வரிசைகொண்ட மயிருடன். பிறங்கிய உறுப்பின்மேல் - பெருத்த உறுப்புக்களைக்காட்டிலும். பெரிய நோக்கின - பெரியனவாகிய அழகை யுடையன ; நோக்கு - அழகு ; மதுரைக். 13, ந. கறங்கிசை மணிமுழா- ஒலிக்கின்ற இசையையுடைய அழகிய குடமுழா. எருத்தம் குடமுழாவை

1462. (௩) வரையகன் மார்பிடை வரியு மூன்றுள
புரைதபு பொன்புரை நாவு முள்ளுடைத்
தருவரைத் தோள்களு மமரர் கோன்களிற்
றுருவுகொ டடக்கையி னுருவு கொண்டவே.

1463. (௪) இலங்குபொன் னிறுவரை யனைய வேந்தலுக்
கலங்கிதழ்த் தாமரைக் கொட்டை யன்னதாய்
வலஞ்சுழிந் தமைவரக் குழிந்த வாய்ப்பொடு
நலங்கிளர் நாபியு மினிது நாறுமே.

1464. (௫) தடித்திறை திரண்டுதம் மளவிற் கேற்றசூற்
கெடிற்றழ கழிப்பன கிளர்பொற் றோரைய
கடிப்பகை நுழைவறக் கதிர்த்த கைவிரல்
அடுத்தமூக் கருமணி வயிரத் தோட்டியே.

ஒக்கும்; எருத்தம் - பிடரி. காண்தகு - அழகு பொருந்திய. மறம் - வீரம்; வாயின் வண்ணம் புலியின்வாயை ஒக்கும்; சிறுகி வளைந் திருத்தலின் புலிவாயை உவமை கூறினர்.

1462. வரையைப்போன்று அகன்ற மார்பிடை; வரை - மலை. வரி - இரேகை. மார்பில் இரேகை மூன்று இருத்தல்; சீவக. 1706; முருகு. 104-5, ந.; பதிற். 48 : 10, 88 : 30-35; புறநா. 68 : 5, 161 : 27; பெருங். 5. 2 : 8. புரைதபு - குற்றமற்ற. பொன்புரை - பொன்னை ஒத்த. நாவும் முள்ளுடைத்து - நாக்கும் சருச்சரையையுடையதாயிருக் கும். வரைபோன்ற தோள்கள். அமரர்கோன் களிற்று உருவுகொள் தடக்கை - இந்திரனது யானையாகிய ஐராவதத்தினுடைய அழகுகொண்ட வளைவுடைய கை; சீவக. 174, ந. தோள்களும் களிற்றினது தடக்கை யின் உருவுகொண்ட என்க; உருவு - வடிவம்.

(மேற்.) அடி, 1 : புறநா. 63 : 5, உரை.

1463. இலங்கு பொன் இறு வரை அனைய ஏந்தலுக்கு - விளங்கு கின்ற பொன்னாகிய பெரிய மலையை ஒத்த தலைவனாகிய சீவகனுக்கு; இறுவரை : பரி. 7 : 40, 13 : 3; கலித். 41 : 11; அகநா. 322 : 4. அலங்கு - விளங்குகின்ற. 'அன்னதாய் - ஒத்ததாய். அமைவர - பொருந்துதல் வர. வாய்ப்பொடு - தன்மையோடு. நலம் கிளர் - அழகு விளங்குகின்ற. இனிது நாறுமே - நன்றாகத் தோன்றும். நாபிக்குத் தாமரைக் கொட்டை உவமை.

1464. தடித்து இறை திரண்டு தோரையவாய்க் 'கடிப்பகை நுழை வறக் கதிர்த்த கைவிரல் தம் அளவிற்கேற்ற சூற்கெடிற்றழகழிப்பன என மாறியியைக்க; இறை - இரேகை. தோரை - மூங்கிலரிசி. கடிப்பகை - வெண்சிறுகடுகு; இது சிறுமைக்கு எடுத்துக் காட்டப்படும் அளவு; "கடிப்பகை யனைத்தும் கேள்வி போகா" (மலைபடு. 22). கதிர்த்த -

1465. (சூ) வார்ந்திலங் கெயிறணி பவழ மாண்டவாய்
ஆர்ந்தபூ வங்கையு மடியுந் தாமரை
தேர்ந்தனன் றிருமகள் கணவ னுமெனத்
தீர்ந்தனன் சொல்லலைஇத் தேர்க்கொண் டேறினான்.

இவை ஆறும் ஒருதொடர்.

(ரூ) "ஆரந் தாழ்ந்த வம்பகட்டு மார்பிற், செம்பொறி வாங்கிய...... தோள்" (104 - 6) என்றார் முருகாற்றுப்படையிலும்.

(ரு) தோரை - மூங்கிலரிசி; [1] வரிக்குவமை.

(இ - ள்.) அங்ஙனம் எதிர்ப்பட்ட சுபத்திரன், பொன்னாகிய பெரிய மலையையொத்த தலைவனுக்கு முடியும் உச்சி சிறிதுயர்ந்த முறைமைப் படத் தாழ்ந்து சுற்றொத்தலிற் குடைப்புறத்தையொக்கும்; கண் தாமரையையொக்கும்; முகத்திற்குப்பொருந்தின மூக்கும் வயிரத்தோட்டியையொக்கும்; சிறுகி வளைந்திருத்தலின் வாயின்வடிவம் புலியின் வாயையொக்கும்; எயிறணிந்த அவ்வாய்தான் வார்ந்துநிறத்தாற் பவழத்தையொக்கும்; குற்றமற்றபொன்னையொக்குநாவும் சருச்சரையையுடைத்தாயிருக்கும்; தோட்கட்டும் குடமுழாவையொக்கும்; ஒழுக நோக்குதலின், தோள்களும் ஐராவதத்தின் கையையொக்கும்; அகங்கையும் ஆர்ந்த தாமரைப் பூவையொக்கும்; தடித்து இறைதிரண்டு தோரையவாய் வெண்சிறுகடுகும் நுழையாதபடி நெருங்கின கைவிரலும் தம்மளவிற்கேற்ற சூற்கெடிற்றையொக்கும்; வரைபோலுமார்பிலே உத்தமவிலக்கணமாகிய மூன்றுவரியுமுள; விலாவும் வில்லுப்போல் வளைந்த பொற்பினையுடைய; நாபியும் விளங்குகின்ற இதழையுடைய தாமரைக் கொட்டையையொத்ததாய் வலத்தே சுழிந்து பொருந்துதல் வரக் குழிந்த வாய்ப்போடே நன்றாகத் தோன்றும்; குறங்கும் தாமணிந்த மயிரோடே கோலமார்ந்தனவாகிய ஒழிந்த பெருத்த உறுப்புக்களிற் காட்டிற் பெரிய அழகையுடைய; புறவடியிரண்டும் ஆமையின் வடிவைக்

நெருங்கிய. சூற்கெடிறு - கருப்பங்கொண்ட கெளிற்று மீன்; "கடிறு பலத்ரி கானதரிடை" (பெரியாழ். 3. 2 : 6) என்பதில் களிறு என்பது கடிறு என்று எதுகையில் வந்தாற்போலக் கெளிறு என்பது கெடிறு என இங்கே வந்தது. கைவிரலுக்குக் கெளிற்றுமீன் உவமை. அடுத்த - பொருந்திய. மூக்குக்கு வயிரத்தோட்டி உவமை.

1465. இலங்கு எயிறணிந்த வாய் வார்ந்து மாண்ட பவழத்தை ஒக்கும் என்க; இலங்கு - விளங்குகின்ற; வார்ந்து - நீண்டு. வாய்க்குப் பவளம் உவமை. அங்கையும் ஆர்ந்த பூவை ஒக்கும்; ஆர்ந்த - அழகு பொருந்திய. திருமகள் கணவனுமெனத் தேர்ந்தனன் - சீவகனைத் திருமாலாகுமோவென்று ஆராய்ந்தான். சொல் அளைஇத் தீர்ந்தனன் - சீவகனோடு கலந்துபேசி அவன் திருமாலல்லனென்று ஐயநீங்கினனாகி. தேர்க்கொண்டு ஏறினான் - சீவகனையும் தேரில் ஏற்றிக்கொண்டு தானும் ஏறினான்.

(உரை) [1] வரி - விரலினிரேகை.

கொண்டன; உள்ளடியும் தாமரையையொக்கும். ஆதலால், இவன் திருமாலாமென்று தன்னிலே ஆராய்ந்தான்; அங்ஙன மாராய்ந்து, சொல்லின் அளவில் அவன் அன்றென்று ஐயந்தீர்ந்தனனாய்த் தேரிலே கொண்டு ஏறினனென்க. (சகூ-ருச)

1466. தேரிவ ரூர்ந்தனர் செல்ல விற்றலைக்
கூருகிர் விடுத்ததோர் கோல மாலையைப்
பேரிசை வீணையிற் சூட்டிப் பெண்கொடிக்
காரிகை யுலகுணர் கடவுட் பாடுமே.

(இ - ள்.) இவர்கள் தேரையேறினராய்ச் செல்லாநிற்க, மனையிடத்தே பெண்கொடியாகிய காரிகை, அரும்பை வலிய அலர்த்திக் கட்டின கழுநீர் மாலையை வீணையிலே சூட்டி வாசித்துக் கடவுளைப்பாடா நிற்குமென்க. (ருரு)

(வேறு)

1467. வீங்கோத வண்ணன் விரைததும்பு பூம்பிண்டித்
தேங்கோத முக்குடைக்கீழ்த் தேவர் பெருமானைத்
தேவர் பெருமானைத் தேனார் மலர்சிதறி
நாவி னவிற்றுதார் வீட்டுலக நண்ணுரே.

ஓதவண்ணன் - கடல்வண்ணன்; நேமிஸ்வாமிகள்.

1466. இவர் தேரில் ஊர்ந்தனராய்ச் செல்ல எனமாறியியைக்க; இவர்: சீவகனும் சுபத்திரனும். இல்தலை - சுபத்திரனுடைய வீட்டினிடத்தே. பெண் கொடியாகிய காரிகை, மாலையை வீணையிற் சூட்டிக் கடவுளைப் பாடுமே யென மாறியியைக்க; பெண் கொடியாகிய காரிகை: கேமசரி. கூருகிர் விடுத்ததோர் கோலமாலை - கூரிய நகத்தால் வலிய அலரவைத்ததொரு செங்கழுநீர் மலர்மாலை; "விரலுளர்ப் பவிழ்ந்த வேறுபடு நறுங்காற், குண்டுசுனை பூத்த வண்டுபடு கண்ணி" (முருகு. 198-9); "தண்கயத் தமன்ற வொண்பூங் குவளை, அரும்பலைத் தியற்றிய சுரும்பார் கண்ணி" (அகநா. 180 : 5-6); "முகிழின், காலமன்றியுங் கையி னெரித்த, கழுநீர்க் குவளை" (பெருங். 1. 35 : 182-4). மாலையை வீணையிற் சூட்டல்மரபு; "நரந்தப் பல்காழ்க் கோதை சுற்றிய, ஐதமை பாணி வணர்கோட்டுச் சீறியாழ்" (புறநா. 302 : 4-5); "செழுங் கோட்டின் மலர்புனைந்து" (சிலப். 7 : கட்டுரை); "அன்ன மாலையை யாழிடைப் பிணித்து" (கம்ப. அகலிகைப். 6). கடவுள் - அருகனை. பாடும் - வீணையை வாசித்துப் பாடுவாள்.

1467. வீங்கு ஓதம் - பொங்குகின்ற கடல்; பெரிய கடலுமாம். ஓத வண்ணன் - நேமிஸ்வாமிகள்; திருக்கலம்பகம், காப்பு, உரை. தேங்கோதம்போல் விரைததும்பும் பூம்பிண்டியிடத்து முக்குடைக்கீழ்த்

(இ - ள்.) கடல்வண்ணனைத் தேங்கோதம்போலத் தேன்றதும்பும் பூம்பிண்டியிடத்தே முக்குடையின்கீழிருக்கின்ற தேவர்பெருமானை அவனை மலரைத்தூவித் துதியாதார்வீட்டைச் சேராரென்றுளென்க. (சு)

1468. அடல்வண்ண வைம்பொறியு மட்டுயர்ந்தோர் கோமான்
கடல்வண்ணன் முக்குடைக்கீழ்க் காசின் றுணர்ந்தான்
காசின் றுணர்ந்தான் கமல மலரடியை
மாசின்றிப் பாடாதார் வானுலக நண்ணாரே.

(இ - ள்.) உயிர்க்கிழவனை வருத்துதல் இயல்பாகவுடைய ஐம்பொறியையும்வென்ற இருடிகள் தலைவன், கடல்வண்ணன், உணர்ந்தான், அவனது திருவடியை நெஞ்சிலழுக்கின்றித் துதியாதார் வீட்டைச் சேராரென்றுளென்க. (சுஎ)

1469. பூத்தொழியாப் பிண்டிக்கீழ்ப் பொங்கோத வண்ணனை
நாத்தழும்ப வேத்தாதார் வீட்டுலக நண்ணாரே
வீட்டுலக நண்ணார் வினைக்கள்வ ராறலைப்ப
ஓட்டிடுப வெண்குணனுங் கோட்பட் டுயிராவே.

பூத்தொழியா - பூத்து மாறுத.

(இ - ள்.) கடல்வண்ணனை நாத்தழும்பும்படி ஏத்தாதார் வீட்டைச் சேரார்; அங்ஙனம் வீடுபெறுதார் பின்பு வினையாகிய கள்வர் வழிபறித்தலாலே எண்குணனும் அவர்கைக்கொள்ளப்பட்டு வருந்தி நெட்டுயிர்ப்புக் கொண்டு ஓடிடுவரென்றுளென்க.

---

தேவர் பெருமானை எனமாறியியைக்க; தேங்கு ஓதம் - தேங்கிய கடல் நீரைப்போல. விரைததும்பும் - பூவிலுள்ள தேன் ததும்புகின்ற. தேவர் பெருமானை - அருகனை. தேன் ஆர் மலர்சிதறி - தேன் பொருந்திய பூக்களைத் தூவி. நாவினால் நவிற்றாதவர். வீட்டுலகம் - மோட்சவுலகத்தை. நண்ணார் - அடையார். இது முதல் மூன்று பாடல்கள் கேமசரி துதித்தவை.

1468. அடல் வண்ண ஐம்பொறியும் அட்டு உயர்ந்தோர் - உயிரை வருத்துகின்ற தன்மையையுடைய ஐந்து இந்திரியங்களையும் வென்று உயர்ந்த முனிவர். உயர்ந்தோருடைய கோமான் : அருகன். காசின்று உணர்ந்தான் - குற்றமில்லாமல் மெய்ப்பொருளை உணர்ந்தவன். கோமானும், கடல் வண்ணனுமாய உணர்ந்தவன் - அருகன். மாசின்றி - மனத்தல் குற்றமில்லாமல். வானுலகம் - மோட்சம்.

1469. பூத்து ஒழியா - பூக்களைப் பூத்து ஒழியாத. நாத்தழும்ப ஏத்தல்; "முல்லை, நாத்தழும் பிருப்பப் பாடா தாயினும்" (புறநா. 200 : 9-10). வீட்டுலகம் நண்ணாதவர் வினைக்கள்வர் ஆறலைப்ப எண்குணனும் கோட்பட்டு உயிரா ஓட்டிடுப என மாறியியைக்க. வினைக்கள்வர் - தீவினையாகிய ஆறலைகள்வர். ஆறலைப்ப - வழிபறித்தலால். கோட்பட்டு - கள்வரால் அவர் கொள்ளப்பட்டு. உயிரா - பெருமூச்செறிந்து. ஓட்டிடுப - ஓடிடுவர்.

ஏகாரம் : ஈற்றசை. ஓடிடுப, [1] விகாரம். எண்குணம் - அநந்த ஞானாதி குணங்கள். [2] இவனை வணங்காதார்க்கு நுகரப்பெறுமையாலுள தாம் பற்று ஒழிவின்றாய் வருவதன்றி நுகர்ச்சியெய்திப் பற்றற்று வீடு பெறுதல் கூடாதாயிருந்ததென்பது கருத்து. முன்பு வணங்காமையின், இவ்வருத்தமுற்றே மென்றாள்.

[3] இவை படர்க்கையாதலிற் பொருள்வேறுபட்டு [4] முற்கூறியவை போன்ற கொச்சகம். (கூஅ)

(வேறு)

1470. முத்துமிழு முந்நீர் மணிவண்ணன் மூன்றுலகும்
பத்திமையாற் பாடப் படுவான்றாள் பாடக்கேட்
டொத்தரம்பை யன்னா ளுவந்திவளோ டொப்பானோர்
வித்தகனை யின்னே பெறுக வெனவுரைத்தாள்.

(இ - ள்.) நிப்புதி, மூன்றுலகும் பாடப்படுவானாகிய கடல்போலும் மணிவண்ணன்றாளைக் கேமசரி பாடக்கேட்டு, மகிழ்ந்து அவள்கருத்தும் தன் கருத்தமொத்தலின், தான், ஒரு வித்தகனை இப்பொழுதே இவள் பெறவேண்டுமென்று இறைவனைப் பராயினாளென்க. (கூகூ)

(வேறு)

1471. நிலந்தினக் கிடந்தன நிதியந் நீணகர்ப்
புலம்பறப் பொலிவொடு புக்க காலையே
இலங்குபூங் கொடியன வேழை நோக்கமும்
உலங்கொடோ ளுறுவலி நோக்கு மொத்தவே.

---

(உரை) [1] விரித்தல் விகாரம். [2] இவனை - அருகனை. [3] இவை யென்றது மேற்கூறிய மூன்று பாடல்களை. [4] முற்கூறியவைபோன்ற கொச்சகமென்றது, தேவபாணித் தாழிசைக் கொச்சக வொருபோகை; சீவக. 1242-4, 1418-20, ந. தேவபாணிக் கொச்சகம் முன்னிலைப் பரவலாய் வருமாதலின் பொருள் வேறுபட்ட தென்றார்.

1470. முத்து உமிழும் முந்நீர் - முத்துக்களைச் சிந்துகின்ற கடல். அரம்பையன்னாள், மூன்றுலகும் பத்திமையால் பாடப்படுவானாகிய மணிவண்ணன்றனைப் பாடக்கேட்டு உவந்து எனமாறியியைக்க; அரம்பையன்னாள் : நிப்புதி. பத்திமை; மை : பகுதிப்பொருள் விகுதி; "பத்திமையு மடிமையையுங் கைவிடுவான்" (தே. சுந்தர.). மணி வண்ணன் : அருகன். பாடக்கேட்டு - கேமசரி பாட அதனைக் கேட்டு. இவளோடு ஒப்பானோர் வித்தகனை - கேமசரியோடு ஒத்தவனாகிய ஒரு வல்லவனை. பெறுக - கேமசரி பெறுவாளாக. உரைத்தாள் - அருகனை நோக்கிப் பரவினாள்.

1471. நிலம் தினக் கிடந்தன நிதியம் - பூமிதின்னும்படி கிடந்தன வாகிய செல்வம்; "நிலம்பொறுக் கலாத செம்பொ னீணிதி" (சீவக. 402,

மண் தின்னக்கிடந்த நிதி.

(இ - ள்.) அறத்தால்தேடின பொருளையுடைய அவன் அம்மனையிலே அவர்கள் வருத்தந்தீரும்படி சென்று புக்கவளவிலே கேமசரிநோக்கமும் சீவகன்நோக்கமும் ஒப்பநோக்கினவென்க. (௬௦)

(வேறு)

1472. கண்ணுறக் காளையைக் காண்டலுங் கைவளை
மண்ணுறத் தோய்ந்தடி வீழ்ந்தன மாமையும்
உண்ணிறை நாணுமு டைந்தன வேட்கையும்
ஒண்ணிறத் தீவிளைத் தாளுருக் குற்றாள்.

(இ - ள்.) காளையை அங்ஙனமெதிர்ப்படக்கண்டாளாக, கண்டவளவில் நாற்றின கையில் வளைகள் காலடியிடத்தே மண்ணுறச் செறிந்து வீழ்ந்தன ; மாமையும் நிறையும் நாணும் கெட்டன ; வேட்கையையும் தீப்போல் விளைவித்துக்கொண்டாள் ; அத்தீயாலே தான் உருக்குண்டாளென்க. (௬௧)

1473. வாக்கணங் கார்மணி வீணைவல் லாற்கவள்
நோக்கணங் காய்மன நோய்செய நொந்தவன்
வீக்கணங் கார்முலை வேய்நெடுந் தோளியொர்
தாக்கணங் கோமக ளோவெனத் தாழ்ந்தான்.

(இ - ள்.) திருத்தத்தையுடைய தெய்வத்தன்மைநிறைந்த அழகிய யாழை வல்லவனுக்கு அவள்நோக்கம் வருத்தமாய் மனத்தைத நோய்

---

அடிக்.) ; “ நிலந்தினத் துறந்த நிதியத் தன்ன ” (அகநா. 127 : 10). நிதியத்தையுடைய நீணகரில் ; நகர் - மனை. புலம்பு அற - கேமசரி முதலியவர்களுடைய வருத்தம் நீங்கும்படி. புக்க காலை - சீவகனும் சுபத்திரனும் புகுந்தவளவிலே. கொடியன்ன ஏழை : கேமசரி. உலம்கொள் தோள் உறுவலி - உருண்டைக்கல்லின் தன்மையைக்கொண்ட தோளையுடைய மிக்க வலியையுடைய சீவகன். ஏழையின் நோக்கமும், உறுவலியின் நோக்கும் ஒத்தவே என்க ; ஒத்தவே - ஒப்பநோக்கின ; ஏ : அசை ; “ கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் ” (குறள், 1100)

1472. காளையைக் கண்ணுறக் காண்டலும் - சீவகனைக் கேமசரி எதிர்ப்படப் பார்த்தவுடன். கையின் வளைகள், அடியில் மண்ணுற வீழ்ந்தன என மாறியியைக்க. மாமையும் உள்நிறையும், நாணும் உடைந்தன ; உடைந்தன - கெட்டன. வேட்கையையும் தீப்போல விளைத்தாள் ; விளைத்தாள் - தான் விளைவித்துக்கொண்டாள். உருக் குற்றாள் காமத்தீயால் மனமுருகுதலை யடைந்தாள்.

1473. வாக்கு - திருத்தத்தையுடைய ; சீவக. 667, ந. அணங்கு ஆர்மணி வீணை வல்லாற்கு - மாதங்கி யென்னும் தெய்வம் பொருந்திய அழகிய யாழில்வல்ல சீவகனுக்கு ; அணங்கார்வீணை : பொருந. 20, ந.

செய்தலாலே அவன் நொந்து கச்சுக்கட்டின வருத்தநிறைந்த முலையினை யும் தோளினையுமுடைய கேமசரியை, ஒருதிருவே! மகளோ! என்று ஐயுற்றுக்குறைந்தானென்க. (சா௨)

1474. நல்வளத் தாமரை நாணிய வாண்முகக்
கொல்வளர் வேற்கணி ளுள்குழைந் தாளெனச்
சொல்வளர்த் தாரவ டோழியர் சோர்குழல்
மல்வளர் மார்பனை வந்துவ ளைந்தார்.

கொற்றொழிலிலே கிடந்த வேல்.

(இ - ள்.) சோர்குழலையும் முகத்தையுமுடைய வேற்கண்ணிளுள் இவனைக்கண்டு வருந்தினளென்று அவள்தோழிமார் இச்சொல்லைப்பரப் பினர்; அதுகேட்டு எல்லாரும் வந்து சீவகனைச் சூழ்ந்தாரென்க. (சாந)

1475. நினைப்பரு நீணிறை நிப்பதி சேர்ந்தாங்
கினத்திடை யேறனை யானெழி னோக்கிப்
புனக்கொடி பொற்பொடு புண்ணிய நம்பி
வனப்பினை யேகண்டு வாட்கண கன்றாள்.

அவள் நோக்கு அணங்காய் - கேமசரியின் நோக்கம் வருத்தமாய். மனத்தை நோய் செய்தலால் நொந்து. அவன்: சீவகன். வீக்கு அணங்கு ஆர்முலை வேய்நெடுந்தோளி - கச்சாற் கட்டின வீற்றுத் தெய்வம் பொருந்திய முலையினையும் மூங்கில் போன்ற தோளினையு முடைய கேமசரியை. தாக்கணங்கோ - எல்லாரிடத்துஞ் சென்றுதங்கும் திருமகளோ; சீவக. 871, ந. தாக்கணங்கு - தாக்கிவருத்துவதோரணங் கெனலுமாம்; குறள், 1082, பரிமேல். மகளோ - மண்ணிடத்து மகளோ; ஓகாரங்களிரண்டும் ஐயப்பொருளன. தாழ்ந்தான் - ஐயத்தால் மனத்தே குறைபாடுற்றான்.

(மேற்.) அடி, 1: தஞ்சை: 78, சொக்கப்ப.

1474. குழலையும் தாமரை நாணிய முகத்தையுமுடைய கண்ணி ளுள் குழைந்தாளென அவள் தோழிமார் சொல் வளர்த்தார் என மாறி யியைக்க; நாணிய - நாணுவதற்குக் காரணமான. கொல்வளர் வேற் கண் - கொலைத் தொழில் வளருகின்ற வேல்போன்ற கண். கண்ணிளுள்: கேமசரி. குழைந்தாள் என - சீவகனைக்கண்டு வருந்தினள் என்று. சொல்வளர்த்தார் - அச்சொல்லை எங்கும் பரப்பினர்கள். மல்வளர் மார் பனை - மல்லுத்தொழிலில் வளர்ந்த மார்பையுடைய சீவகனை.

1475. நிறையையுடைய நிட்புதி; நிறை - மனத்தை ஒருவழியில் நிறுத்துதல். ஆங்கு சேர்ந்து - சீவகனிருக்குமிடத்தை அடைந்து. இனத்திடை ஏறனையான் - பசுக்கூட்டங்களிடையே யுள்ள ஏறுபோன்ற சீவகன். புனக்கொடி, பொற்பொடு ஏறனையான் எழில்நோக்கி என மாறியியைக்க; புனக்கொடி - புனத்திடத்து வளர்ந்த பூங்கொடி போன்ற

நிப்புதி - நிஸ்ப்ருதி.

(இ - ள்.) நிப்புதி, அவ்விடத்தேவந்து கேமசரியழகோடே ஏறனே யானெழிலேயும் ஒக்குமோவென்றுநோக்கிப் பின்பு நம்பியது அழகுமிகுதி யாலே அதனையே பார்த்து உடம்பெல்லாம் கண்ணுனளென்க.

வாட்கண்ணிணையுடையாள் மீண்டுபோனுளென்றுமாம். (சு௪)

1476. வள்ளலே வாசநெய் பூசிம ணிக்குடத்
தெள்ளற னீர்சொரிந் தாட்டினர் தேம்புகை
உள்ளுற வுண்டக லிங்கமு டுத்தபின்
கள்ளவிழ் கண்ணிக லத்தொட ணிந்தார்.

(இ - ள்.) வள்ளலே நெய்யைப்பூசி நீரைச்சொரிந்து ஆட்டினர்; ஆட்டின பின்பு அவன்றன் கலிங்கத்தை உடுத்தான்; உடுத்தபின்பு, அவர் கண்ணியையும் கலத்தையுமணிந்தாரென்க. (சு௫)

1477. மங்கல வெள்ளேவ ழித்துமுத் தீர்த்தபின்
கொங்கலர் கோதையர் கொண்டக மெய்தி
அங்கதிர்ப் பொற்கலந் தாரமிர் தேந்தினர்
செங்கயற் கண்ணியர் சீரின யின்றன்.

(இ - ள்.) கோதையர், உண்கின்றவிடத்தைச் சந்தனத்தாலே மெழுகி முத்தாலே கோலமிட்டபின்பு, அவனைக்கொண்டு புகுந்து பொற் கலத்திலே அடிசிலேந்தினர்; அவனும் அவர் புகழ்ச்சியுடனே உண்டா னென்க. (சு௬)

---

கேமசரி; "புனவளர் பூங்கொடி யன்னாய்" (கலித். 92 : 1). எழில் நோக்கி - அழகை ஒக்குமோ வென்று பார்த்து. புண்ணியநம்பி வனப் பினையே - சீவகனுடைய அழகையே.

1476. வள்ளலே : சீவகனை. வாசநெய் - வாசங்கலந்த எண்ணெய். குடத்திலுள்ள தெள்ளறல் நீரைச்சொரிந்து. தேம்புகை உள்ளுற உண்ட கலிங்கம் - நுகர்தற்கினிய வாசனைப் புகையை உள்ளேபொருந்த ஊட்டப் பட்ட ஆடையை. கண்ணியைக் கலத்தொடு அணிந்தார்; கண்ணி - பூமாலே; கலம் - ஆபரணம்.

1477. மங்கல வெள்ளே - சந்தனத்தால். வழித்து - சீவகன் உண்ணு தற்குரிய இடத்தை மெழுகி. முத்து ஈர்த்தபின் - முத்துக்களாலே கோல மிட்ட பின்பு. கொங்கு - வாசனை; தாதுவுமாம். கோதையர் : மகளிர். கொண்டு அகமெய்தி - சீவகனை அழைத்துக்கொண்டு வீட்டினுள் சென்று. கதிர் - ஒளி. பொற்கலத்து - பொற்றட்டில். கண்ணியர்சீரின் - மகளி ருடைய புகழுரையுடனே. அயின்றன் - சீவகனும் உண்டான்.

(வேறு)

1478. பத்தியிற் குயிற்றிய பைம்பொற் றிண்ணைமேற்
சித்திரத் தவிசினுட் செல்வன் சீர்பெற
நித்தில மணியுறழ் கரக நீரினால்
அத்துறை விடுத்தன னலர்ந்த தாரினான்.

(இ - ள்.) தாரினானாகிய செல்வன், அங்ஙனமுண்டபின்பு, பொன்னாற் பத்தியோடு செய்த திண்ணையிடத்தே தவிசின்மேலே உறைந்து கரகத்தின் நித்திலமணிபோலும் நீரராலே பூசுதற்குரிய தொழில்களை யெல்லாம் முடித்து விட்டானென்க. (சுஎ)

1479. இளிந்தகாய் கமழ்திரை வாச மீண்டியோர்
பளிங்குபோழ்ந் தருகுபொன் பதித்த பத்தியின்
விளிம்புமுத் தழுத்திய யவனக் கைவினைத்
தெளிந்தபொன் னடைப்பையுட் பாகு சென்றவே.

(இ - ள்.) ஒரு முழுப்பளிங்கையறுத்து அதன்பக்கத்தே பத்தியாகப் பொன்னிடப்பட்டனவற்றிலே இளுங்கின காயும் திரையும் சென்றன. திரை - வெற்றிலை. [1] இன் : அசை. இவை உபசரித்து எடுத்துக் காட்டப்பட்டன. யவனத்திற்றச்சர் பொன்னாற்செய்து விளிம்பு முத்தழுத்திய கைவினையையுடைய அடைப்பையிலே பாக்கும் வெற்றிலையும் முகவாசமுமீண்டிச் சென்றன. இவை தின்றற்குச் சென்றன.

இனி, [2] ஒன்றாக உரைப்பாருமுளர். (சுஅ)

---

1478. தாரினானாகிய செல்வன் திண்ணையுள் தவிசின்மேல் சீர்பெற என மாறியியைக்க; செல்வன் - சீவகன். பத்தியிற் குயிற்றிய - ஒழுங்காகச் செய்த. சீர்பெற - சிறப்புற அமர்ந்து. நித்திலமணி உறழ் - முத்தாகிய மணியை ஒத்த; இது நீருக்குவமை. கரகம் - கமண்டலம். அத்துறை விடுத்தனன் - வாய்பூசுதல் முதலியவற்றிற்குரிய தொழில்களை யெல்லாம் முடித்து விட்டனன்.

1479. போழ்ந்து - அறுத்து. பத்தியின் - வரிசையாக. இளிந்த காய் - பறித்த பாக்கு; இளிந்த - பறித்த; சீவக. 1241, அடிக். திரை - வெற்றிலை; சீவக. 197, ந. யவனம் - யவனதேசத்துத் தச்சர். அடைப்பை - வெற்றிலை வைக்கும் பை. பாகு - பாக்கு. வாசம் - முகவாசம்; சீவக. 2474. ஓர் பளிங்கு போழ்ந்து அருகு பத்தியின் பொன்பதித்தவற்றில் இளிந்த காயும், கமழும் திரையும் சென்றவே; யவனத்தில் பொன்னால் விளிம்பு முத்தழுத்திய கைவினையையுடைய தெளிந்த அடைப்பையுள் பாகும் வாசமும் ஈண்டிச் சென்றவே எனமாறி இயைத்து முடிக்க.

(உரை) [1] பத்தியின் என்பதிலுள்ளது. [2] ஒன்றாக உரைத்தலாவது : உபசாரத்திற்கும் தின்றற்கும் இரண்டு சென்றனவெனக் கூறுமை.

1480. பாசிலை சுருட்டுபு கறித்துப் பல்லினைத்
தேசிகம் படத்துடைத் துமிழ்ந்து தேங்கமழ்
வாசம்வாய்க் கொண்டனன் மணிசெய் குண்டலம்
வீசிவில் விலங்கிவிட் டுமிழ வென்பவே.

தேசு, தேசிகமெனத் திரிந்தது.

(இ - ள்.) குண்டலமசைந்து ஒளியைக் குறுக்கிட்டுக் காலும்படி வெற்றிலையைச் சுருட்டிக் கறித்து அதிற்குறையாலே பல்லினை [1] ஒளியுண்டாகத் துடைத்து அதனை உமிழ்ந்து பின்பு வெற்றிலையைத் தின்றானென்க. (சுகூ)

1481. (க) பண்ணுலாங் கிளவிதன் பரவை யேந்தல்குல்
வண்ணமே கலையிவை வாய்ந்த பூந்துகில்
உண்ணிலாய்ப் பசுங்கதி ருமிழ்வ பாவியேன்
கண்ணையு மனத்தையுங் களங்கொண் டிட்டவே.

இதுமுதல், "கலைத்தொகை" (சீவக. 1489) ஈறாக ஒன்பதும் ஒரு தொடர்.

(இ - ள்.) பண்ணொத்த கிளவிதன்னுடைய அல்குலும் மேகலையும் துகிலுமாகிய இவை, பாவியேன் கண்ணையும் மனத்தையும் தமக்கு இருப்பிடமாகக் கொண்டுவிட்டனவென்க.

துகிலுக்குள்ளே நிலைபெற்றுநின்று ஒளியுமிழ்வனவாகிய மேகலை. (எo)

1480. பாசிலை சுருட்டுபு கறித்து - பசுமையான வெற்றிலையைச் சுருட்டிக் கடித்து. தேசிகம்பட - ஒளியுண்டாக; தேசிகம் - ஒளி; "சிறப்பிடை யறுத தேசிக முடையது" (பெருங். 3. 2 : 43). உமிழ்ந்து - கடித்த வெற்றிலையை உமிழ்ந்து. வாசம்வாய்க் கொண்டனன் - மீண்டும் வெற்றிலையை வாயிற்கொண்டு தின்றான். மணியாற்செய்த குண்டலம் வீசி; வீசி - அசைந்து. வில் விலங்கிவிட்டு - ஒளியைக் குறுக்கேயிட்டு. உமிழ - சிந்தும்படி. குண்டலம் வில்லுமிழ வாசம்வாய்க் கொண்டனன் என்க. என்ப, ஏ இரண்டும் அசைநிலைகள்.

(உரை) [1] (பி - ம்.) 'ஒளியைக் குறுக்கே காலத் துடைத்து.'

1481. பண் உலாம் கிளவிதன் - இராகத்தை யொத்த மொழியை யுடைய கேமசரியினது. கிளவியாளது அல்குலும், அதனிடத்தே வாய்ந்த பூந்துகிலும், அதனுள் நிலாய மேகலையுமாகிய இவை பாவியேனுடைய கண்ணையும் மனத்தையும் களங்கொண்டிட்டவே என மாறி முடிக்க; களங்கொண்டிட்டவே - தமக்குரிய நிலைக்களமாகக் கொண்டுவிட்டன; ஏ : அசை. இதுமுதல் ஒன்பது பாடல்கள் சீவகன் கூற்று.

1482. (உ) கடிகமழ் குழலினுற் கட்டி மெய்யெலாம்
நடுவொசி நோன்சிலைப் புருவத் தாற்புடைத்
தடுமலர் நெடுங்கணு லாவி போழ்ந்திடாக்
கொடியவ ளிளமுலை கொல்லுங் கொல்லுமே.

**(இ - ள்.)** சிலையாகிய புருவத்தாலேயடித்து மலரையடும் கண்ணு கிய வாளாலே உயிரைப்போக்காத கொடியவள், என்மெய்யெல்லாம் தன் குழலாகிய கயிற்ருலே கட்ட, முலையாகிய யானை என்னுயிரைக் கொல் லுங்கொல்லுமென்க.

முலைதான் வருத்தலுடைமையிற் ருனும் வினைமுதலாம். கட்டி, கட்ட வென்க. (எக)

1483. (ரு) கடியன கச்சினுற் கட்டப் பட்டன
கொடியன குங்குமங் கொட்டப் பட்டன
அடிநிலம் பரந்துமுத் தணிந்த வெம்முலை
இடைநிலஞ் செகுப்பன வென்னை யென்செயா.

**(இ - ள்.)** இயல்பாக மணமுடையவாய்க் கச்சினுற்கட்டப்பட்டன வாய் எழுதுகொடியையுடையனவாய்க் குங்குமமிடப்பட்டனவாய் அடி பரந்து முத்தணிந்தமுலை, தம்மைச்சுமந்திருக்கின்ற இடையைக் கெடுப்பன ; என்னைப் பெற்ருல் எல்லாம் செய்யுமல்லவோவென்க.

[1] உலகில் தொழிலாற்கடியவர்கள் கட்டுண்ணப்படுவரென்றும், மனம் கொடியவர்கள் ஒன்ருற் புடையுண்ணப்படுவரென்றும் ஒரு பொருள் தோன்றிற்று. (எஉ)

---

1482. புடைத்து - என்னை அடித்து. கணுல் ஆவிபோழ்ந்திடா - கண்ணுகிய வாளால் என் உயிரைப்போக்காத. கொடியவள் : கேமசரி. கடி - வாசனை. குழல் - கூந்தல். கட்டி - கட்ட ; எச்சத்திரிபு. முலை கொல்லும் - முலையாகிய யானை வருத்துகின்றது. நடுவொசிந்த நோன் சிலையாகிய புருவத்தாற் புடைத்து நெடுங்கணுல் ஆவிபோழ்ந்திடாத கொடியவள், மெய்யெல்லாம் குழலினுல் கட்ட முலைகொல்லும் கொல்லும் எனமாறிமுடிக்க.

1483. கடியனவாய்க் கச்சினுற் கட்டப்பட்டன ; கடியன - இயற்கை வாசனையையுடையவாகி. கொடியனவாய்க் குங்குமம் கொட்டப்பட்டன ; கொடியன - எழுதும் தொய்யிற்கொடியை உடையனவாய் ; கொட்டுதல் - பூசுதல். அடிநிலம் பரந்து - அடியிடம் பரவி. முத்து - முத்தயாலை. இடைநிலம் செகுப்பன - தன்னைத்தாங்குகின்ற இடையிடத்தை அழிக் கின்றன. என்னை என்றது சீவகனை. என்செயா - என்னதான் செய்ய மாட்டா ; எல்லாம் செய்யுமல்லவோ என்றவாறு.

(மேற்.) அடி, ரு : நேமி. உரி. 4, உரை. ச : நன். 440, மயிலை, 439, சங்.

(உரை) [1] இது தொனிப்பொருள்.

1484. (ச) கரியவுள் வெறியன கட்டப் பட்டன
புரிவொடு புறத்திடப் பட்ட பூங்குழல்
தெரியின்மற் றென்செயா செய்ய நீண்டன
பெரியகண் போலவும் பேது செய்யுமே.

(இ - ள்.) கரியனவாய் உள்ளே மணத்தையுடையனவாய்க் கட்டி முடிக்கப்பட்டனவாய்க் கடைகுழைதலுடனே எருத்தத்தே கிடத்தப்பட்ட குழல்கள், செய்யனவாய் நீண்டனவாகிய கண் வருத்துமாறுபோலவும் வருத்தாநின்றன; ஆராய்ந்துபார்த்தால் எல்லாஞ்செய்ய வல்லன வென்க.

கொடியனவாய் உள்ளே கள்ளின்மயக்குடையனவாய்க் கட்டுண்ணப் பட்டனவாய் எப்பொழுதும் திருகுதலுடனே தம்மிடத்தினின்றும் கீழ்ப் போந்து கிடக்கும்படி புறத்திடப்பட்டனவாயென்றும் ஒருபொருள்தோன் றிற்று. உள் [1] வெறுவியனவுமாம். (எங)

1485. (ரு) காதன்மை கண்ணுளே யடக்கிக் கண்ணெனும்
தூதிறைற் றுணிபொரு ளுணர்த்தித் தான்றமர்க்
கேதின்மை படக்கரந் திட்ட வாட்கணேக்
கோதநீ ரமுதமு முலகும் விற்குமே.

(இ - ள்.) வாட்கண்ணிணையுடையாள் தன் வேட்கையையெல்லாம் தன் கண்ணுள்ளே கிடத்தி அக்கண்ணெனகின்ற தூதாலே தான் துணிந்தபொருளை எனக்கறிவித்துச் சுற்றத்தார்க்கு அவ்வேட்கை தோன்றுதபடிமறைத்த நோக்கம் அமுதத்தையும் உலகையும் தனக்கு விலையாகவிற்குமென்க.

[1] 'தன்னுள்ளே' என்பதூஉம் பாடம். (எச)

---

1484. வெறியன - மணத்தையுடையன. புரிவு - முறுக்கு. புறத்து - பிடர்ப்பக்கத்தில். குழல் - கூந்தல். செய்ய - சிவந்த. கண்போல - கண் வருத்தம் செய்வதைப்போல. பேதுசெய்யும் - அக்கூந்தலும் வருத்தத் தைச் செய்கின்றன; கூந்தலைப் பன்மையாற் கூறியது ஐம்பாலாதல் பற்றி. கரியவாய் உள்ளே வெறியனவாய்க் கட்டப்பட்டனவாய்ப் புறத் திடப்பட்டனவாகிய பூங்குழல், செய்யவாய் நீண்டனவாகிய பெரிய கண் போலவும் பேதுசெய்யும்; தெரியின் என்செயா எனமாறி முடிக்க; தெரியின் - ஆராய்ந்து பார்த்தால். மற்று : அசை.

(உரை) [1] உள் வெறுவியன - உள்ளே ஒன்றுமில்லாதன.

1485. காதன்மை கண்ணுளே அடக்கி - தனது ஆசையை யெல்லாம் தன் கண்களினுள்ளே அடங்கச்செய்து. துணிபொருள் உணர்த்தி - தனது வேட்கையாகிற துணிந்த பொருளை எனக்கு அறிவித்து. தமர்க்கு ஏதின்மை படக் கரந்திட்ட நோக்கு - தன் உறவினர்க்கு அவ்வேட்கை யாகிற துணிந்த பொருள் தோன்றாதபடி மறைத்த நோக்கம். வாட்கண் : சேமசரி; எழுவாய், ஓதநீர் அமுதம் - கடல்நீரிற் பிறந்த அமிர்தம். நோக்கம் அமுதத்தையும், உலகையும் விற்கும் என்க.

(உரை) [1] கண்ணுளே என்பதன் பிரதிபேதம்.

(வேறு)

1486. (௬) மிகுகொடா முத்தஞ் சூட்டி மீளிமை தீர்த்து மின்னும், நகுகொடா மணிக ணல்ல தெளித்துக்கொண் டெழுதி நன்பொன், முகபடாம் வைப்ப வாட்செற் றழன்றுகண் கரிந்த முல்லைத், தொகுகடாங் கோதை வெய்ய துணைமணி முலைக டாமே.

மீளிமை - சொங்கையின்வலி. பன்னீராண்டுஞ்சென்று முலைமுதிர் தலின், கண்கருகினவென்றார்.

(இ - ள்.) முல்லைப்பூவினது திரண்டதேன் பரக்குங் கோதையை யுடைய முலைகள்தாம், ஒழிந்தவற்றிற்குக்கொடாத மிகுகின்ற மீளிமை யைத்தீர்த்து முத்தஞ்சூட்டி மின்னும் தம்மையிகழாத நல்லமணிகளைக் கரைத்துக்கொண்டெழுதி நல்ல பொற்கச்சாகிய முகபடாத்தையும் வைப்ப, இவ்விடையீட்டாலே வெளியேநின்று கொல்லமாட்டாதே உள்ளே நின்று ஆளைச்செறுத்து நோக்கி நெஞ்சழன்று கண்கருகினவென்க. (௭௬)

1487. (௭) தேன்கறி கற்ற கூழைச் செண்பக மாலை வேற்கண், ஊன்கறி கற்ற கால ஞெண்மணித் தடக்கை வைவேல், கூன்பிறை நுதலோர் கூற்றங் குவிமுலை நமன்கைப் பாசம், யான்பிற னளியன் வாழ்வா ஞசைப்பட்டி ருக்கின் றேனே.

கறிகற்ற - மேயக்கற்ற. வேற்கண், கண்ணென்னுமாத்திரை ; "கருங்கண்ணன்" (திருச்சிற். 53) என்புழிப்போல. பிணியால் உடம்பை வாட்டலின், ஊனைமேயக் கற்றவென்றார்.

1486. கொடா - மற்றையவற்றிற்குக் கொடாத. மீளிமை - வலி. மின்னும் நகுகொடா - மின்னலும் தம்மைக் கண்டு இகழ வொண்ணாத. தெளித்து - கரைத்து ; சீவக. 371, அடிக். பொன்முகபடாம் - பொற்கச் சாகிய முகபடாத்தை. செற்று - கோபித்து நோக்கி. அழன்று - மனங் கருகி. கண் - முலைக்கண். தொகு கள் தாம் கோதை - ஒன்று கூடிய தேன் பரக்கின்ற பூமாலை ; தாம் = தாவும் - பரவும். துணைமுலைகள்தாம், தீர்த்துச் சூட்டி நகுகொடா தெளித்துக்கொண்டு எழுதிவைப்பச் செற்று அழன்று கண்கரிந்த என மாறிமுடிக்க.

1487. தேன் கறிகற்ற கூழை - வண்டுகள் உண்ணக் கற்ற கூந்தல். கூழையையுடைய சண்பகமாலை; கேமசரி. செண்பகமாலையினுடைய வேற்கண். ஊன்கறிகற்ற - மாமிசத்தை உண்ணுதலைக்கற்ற ; வேலுக்கு அடை. காலன் - யமன். கண் காலனுடைய கைவேலை ஒக்கும். கூன் பிறைநுதல் - வளைந்த பிறையைப் போன்ற நெற்றி. நுதல் கூற்றத்தை ஒக்கும் ; கூற்றம் - யமன். முலை நமனுடைய கைப்பாசத்தை ஒக்கும். அளியனாய் வாழ்வான் ஆசைப்பட்டிருக்கின்றேன் ; யான் பிறனே என மாறியியைக்க ; வாழ்வான் - உயிர்வாழ்வதற்கு.

(மேற்.) அடி, ௪ : நன். 439, மயிலை. 440, சங்கர.

(இ - ள்.) சண்பகமாலைதன் கண் காலன்கையில் வேல்; நுதல் நிகரில்லாத அவன்றான்; முலை அவன்கையிற் பாசம்; இங்ஙனமாகவும் யான் உயிர் வாழ்தற்கு ஆசைப்பட்டிராநின்றேனாதலின், யான் பிறனே யென்க.

[1] ஏகாரம் : தேற்றம். மக்களிலல்லேனென்பது. காலன் - கூற்றம்; கூற்றம், நமனென்பன சுட்டுப்பெயர். இனி, [2] காலன் கூற்றத்திற்கு ஏவல் செய்யுமவனுமாம். (எசு)

## (வேறு)

1488. (அ) திருவிற்குங் கற்பகத் தெரியன் மாலையார்
உருவிற்கோர் விளக்கமா மொண்பொற் பூங்கொடி
முருகற்கு மநங்கற்கு மெனக்கு மொய்சடை
ஒருவற்கும் பகைத்தியா லொருத்தி வண்ணமே.

"மெல்லெழுத் துறழு மொழியுமா ருளவே" (தொல். புள்ளி. 17) என்னும் பொதுவிதியால், குளந்தாது குளத்தாதுபோல்வனவற்றை முடித்த தன்மையின், குளங்கரை, குளக்கரைபோலே உறழும் வழக்கின வல்ல வென்பதறிவித்தற்கு, "செல்வழி யறிதல் வழக்கத் தான" என்று கூறினமையிற் சண்பகங்கோடென முடித்ததூஉம் பொதுவிதியன்றிச் சிறப்பன்றாதலால், தேவர் அவ்வாறு கற்பகந்தெரியலென்றமையுணர்க.

(இ - ள்.) கற்பகத்தில் தெரிதலையுடைய மாலையார்ந்ததோர் உருவிற்கு விளக்கமாம் பூங்கொடி திருவிற்கும், முருகற்கும், அநங்கனுக்கும், எனக்கும், இறைவற்கும் பகைத்தியாயிராநின்றாள்; ஒருத்தி வடிவிருக்கும்படி என்னென்க.

அழகையும், வேலையும், வில்லையும், அறிவையும், பிறையையும் வாங்குதலிற் பகையென்றான். 'திருவிற்கோர்' என்பதூஉம் பாடம். இனி, பூங்கொடியொருத்தி திருவிற்கும், முருகற்கும், அநங்கனுக்கும், இறைவற்கும் வடிவே பகைத்தியாயிராநின்றாள்; எனக்கு அவ்வாறன்றி உயிர்க்கே பகைத்தியாயிராநின்றாளென்றுமாம். (எஎ)

---

(உரை) [1] இருக்கின்றேனே யென்பதிலுள்ளது. [2] சீவக. 1144, அடிக்.

1488. கற்பகத் தெரியல்மாலையார்ந்த உருவிற்கோர் விளக்கமாம் பூங்கொடி, திருவிற்கும், முருகற்கும், அநங்கற்கும், எனக்கும், ஒருவற்கும், பகைத்தியால் என மாறியியைக்க; கற்பகத் தெரியல் - கற்பக மரத்தில் விளங்குதலையுடைய. பூங்கொடி : கேமசரி. திரு - இலக்குமி. ஒருவன் : சிவபெருமான். அழகை வாங்கிக்கொண்டமையால் திருவினுக்கும், வேலை வாங்கிக்கொண்டமையால் முருகனுக்கும், கரும்பு வில்லை வாங்கிக் கொண்டமையால் மன்மதனுக்கும், அறிவை வாங்கிக்கொண்டமையால் எனக்கும், பிறைச்சந்திரனை வாங்கிக்கொண்டமையால் சிவ

1489. (௬) கலைத்தொகை நலம்பல கடந்த காளைதான்
நலத்தகை யவணல நினைப்ப நாய்கனும்
மலைத்தொகை மதந்தவழ் யானை மன்னவன்
நிலத்தவர்க் கறிவுற நெறியிற் செப்பினான்.

*அரசன் செறிந்திருத்தலின், அவனுக்கும் பரிவாரத்திற்கும் மணத்தை அறிவித்தான்.*

(இ - ள்.) *காளைதான்* [1] " *களங்கொண்டிட்டவே* " *என்பது முதலிய வற்றை யெல்லாங்கூறித் தன்மேல் அன்பின் தகைமையையுடையவள் நலத்தை நினைக்க, சுபத்திரனும் அறிவித்தானென்க.*

கேமசரிவருத்தம், " கண்ணுற ", " நல்வள " (சீவக. 1472, 1474) *என்பனவற்றிற் கூறினார்.* (எஅ)

1490. இடியுமி ழெறிதிரை முழக்கிற் பல்லியம்
கொடியணி வியனகர்க் குழுமி யார்த்தெழக்
கடிமண மியற்றினர் கடவு ணாளினால்
வடிமலர்க் கோதையை மைந்தற் கென்பவே.

---

பெருமானுக்கும் பகைத்தியா யிருந்தாள்; வேலென்றது கண்ணையும், வில்லென்றது புருவத்தையும், பிறை யென்றது நுதலையும் குறித்தன. பகைத்தியால் - பகையையுடையவளானாள்; ஆல் - அசை. ஒருத்தி வண்ணம் இத்தன்மையாயிருந்தது என் என்று வியந்தபடி.

1489. *கலைத்தொகை நலம்பல கடந்த காளைதான்* - கலைத்தொகுதி களின் நன்மை பலவற்றை அறிந்து அவற்றைக் கடந்த சீவகன். *நலத் தகையவள் நலம் நினைப்ப* - தன்மீது அன்பின் தகைமையுடையவளான கேமசரியின் இன்பத்தைப் பெற நினைத்தலும்; நலம் - அன்பு. *நாய்க னும்* - அதையறிந்த சுபத்திரனும். யானைக்கு மலை உவமை. *மன்னவ னுக்கும் நிலத்தவர்க்கும் அறிவுறச் செப்பினான்* என்க. மன்னவன் : நரபதிதேவன். நிலத்தவர் என்றது அரசனுடைய சுற்றத்தாரை. *அறி வுற* - சீவகனுக்கும் கேமசரிக்கும் மணம் நிகழவிருத்தலை அவர்கள் அறியும்படி.

(உரை) [1] சீவக. 1481.

1490. கொடியணிந்த நகரில் இடியுமிழ் முழக்கின், எறிதிரை முழக் கின் பல்லியம் குழுமி ஆர்த்தெழ என மாறியியைக்க; *முழக்கின்* - ஒலியைப்போல. *திரைமுழக்கின்* - கடலொலியைப் போலவும். *பல்லியம்* - பல வாத்தியங்கள். கடவுள் நாளில் கோதையை மைந்தற்குக் கடிமணம் இயற்றினர் என மாறியியைக்க; *கடவுள்நாள்* - நல்லநாள். கோதை : கேமசரி. மைந்தன் : சீவகன்.

(இ - ள்.) நகரிலே, இடியுமிழ்ந்த முழக்குப்போலவும் திரைமுழக்குப் போலவும் பல்லியம் திரண்டு ஆர்த்தெழாநிற்க, நல்லநாளிலே கோதையை மைந்தனுக்கு வாழ்க்கைப்படுத்தினாரென்க. (எகூ)

1491. மணிக்குட மழுத்திவைத் தனைய தோளினான்
கணிக்கிடங் கொடாநலங் கதிர்த்த காரிகை
அணிக்கிட னாகிய வரிவை தன்னொடும்
பிணித்திடை விடாதவன் பெற்ற வின்பமே.

வடிவிற்குக் கூறிய நூல்வல்லவற்கும் புகழ இடங்கொடாத நலம்.
[1] பிணித்து - பிணிக்க.

(இ - ள்.) தோளினானலத்தை அரிவையது காரிகைதன்னோடும் அவர் அங்ஙனம் பிணித்தலின், அவன் பெற்றவின்பம் இடைவிடாதாயிற் றென்க. (அ0)

1492. பூந்துகில் பொருதிரை பொம்மல் வெம்முலை
ஏந்திய மணிவரை யிரக்க நீர்த்தரங்
காய்ந்தவன் றோளிணை நாக மாகவைத்
தீந்ததக் கடலவற் கமுத மென்பவே.

(இ - ள் ) துகில் பொருதிரையாக, பெருமையையுடைய ஏந்தியமுலை வரையாக, தனதருள் நீரின் அசைவாக வலியதோளிரண்டும் பாம்பாக வைத்து அவன் கடைதலின், அக்காமக்கடல் அவற்கு அமுதத்தைக் கொடுத்த தென்க.

இவற்றால், முயக்கமும் அதரபானமுங் கூறினார். அவன்காட்டக் காண்டலின், அவற்கென அவன்மேலேற்றினார். (அக)

---

1491. மணியாற்செய்த குடத்தை வைத்து அழுத்தியதைப்போன்ற தோளினான் ; சீவகன். கணிக்கு இடம்கொடா நலம் - வடிவத்தைப்பற்றிக் கூறியநூலில் வல்லவனுக்கும், இவ்வடிவத்தைக் கண்டு புகழ்தற்கு இடம் கொடாத அழகு ; கணி - நூல்வல்லவன். தோளினானுடைய நலத்தை அரிவையது காரிகை தன்னொடும் பிணித்தலால் என மாறி யியைக்க. அணிக்கிடனாகிய அரிவை - ஆபரணங்கள் விரும்பி அடைதற் கிடமாகிய கேமசரி. காரிகை - அழகு. பிணித்து - ஒன்றாகப் பிணித்த லால். (பி - ம்.) 'பிணித்திடை கொடாதவன்.' அவன் பெற்ற இன்பம் இடைவிடாது என மாறுக ; அவன் : சீவகன்.

(உரை) [1] எச்சத்திரிபு.

1492. துகிலுக்குத் திரை உவமை ; திரை-அலை. பொம்மலையுடைய ஏந்திய வெம்முலை என மாறியியைக்க ; பொம்மல் - பெருமை. முலைக்கு வரை உவமை. வரை - மந்தரம். இரக்கம் நீர்த்தரங்கு - தனது அருள் நீரின் அசைவாக ; தரங்கு - அசைதல். ஆய்நத வன்தோளிணை நாகமாக வைத்து - ஆராய்ந்தெண்ணப்பட்ட வலிய தோளிரண்டையும் வாசுகி யென்னும் பாம்பாக வைத்துக்கடைதலால். அக்கடல் அவற்கு அமுதம்

1493. சந்தனச் சேற்றிடைத் தாம வார்குழற்
பைந்தொடி படாமுலை குளிப்பப் பாய்தலின்
மைந்தன தார்குழைந் துடைய வாய்திறந்
தஞ்சிலம் பணியல்குற் கலையொ டார்த்தவே.

(இ-ள்.) மைந்தனுடைய தார் அவன்றன் மார்பிற் சேற்றிடையிலே யுடையும்படி பைந்தொடிமுலை குளிப்பப் பாய்தலின், வாய்விட்டுச் சிலம்பும் கலையும் ஆர்த்தனவென்க.

அவன் முயங்கினபின்பு புணர்ச்சித்தொழிலை நிகழ்த்தினளவ ளென்க. யானைபாய்தலின், தூசி சேற்றிலே [1]யுடைந்ததென்றும் அதற்குச் சிலம் ஆர்த்தாரென்றும் ஒருபொருள் தோன்றிற்று. (அஉ)

(வேறு)

1494. கோதையுங் குழலும் பொங்கக் குவிமுலைக் குழங்கன் மாலைப், போதுகப் பொருது பூணும் பொருகடன் முத்து மூழ்கக், காதலுங் களிப்பு மிக்குக் கங்குலும் பகலும் விள்ளார், சாதலும் பிறப்பு மில்லாத் தன்மைபெற் றவர்க ளொத்தார்.

(இ - ள்.) அவன்றொழில்களைக்கண்டு, அவளும் தன்கோதையும் குழலும் பொங்க, முலையின்மாலையிற் போது சிந்த, பூணும் முத்தும் ஒன்றிலே யொன்று மூழ்கப் புணர்ச்சித்தொழிலை நிகழ்த்தலின், இருவரும் காதலும் களிப்பும் மிக்கு விள்ளாராய்த் தேவரையொத்தாரென்க. (அ௩)

ஈந்தது என்பவே என மாறியியைக்க; அக்கடல் - அந்தக்காமமாகிய பாற்கடல். அவற்கு : சீவகனுக்கு. அமுதம் - இன்பத்தை. என்ப, ஏ : இரண்டும் அசைநிலைகள்.

1493. மைந்தன தார் சந்தனச் சேற்றிடையில் உடையும்படி பைந்தொடியது முலை குளிப்பப் பாய்தலின் என மாறியியைக்க. மைந்தன தார் - சீவகனுடைய மார்பிலுள்ள மாலைகள். தாமவார்குழற் பைந்தொடி - மாலையையணிந்த நீண்ட கூந்தலையுடைய கேமசரி. படாமுலை - சாயாதமுலை. சிலம்பும், அல்குலிலணிந்த கலையும் வாய் திறந்து ஆர்த்த என்க; கலை - மேகலை.

(உரை) [1]தோற்றோடுவோரைக் கண்டு ஆர்த்தல் : "இருபெரு வேந்தர்......ஓடுபுறங் கண்ட ஞான்றை, ஆடுகொள் வியன்களத் தார்ப்பினும் பெரிதே" (அகநா. 116 : 15-9)

1494. கோதையும் - மாலையும். குழலும் பொங்க - கூந்தலும் விசையால் எழுந்து நிற்ப; சீவக. 677. அடிக். குழங்கல் மாலை - மண முடைய பூமாலை; சீவக. 743. அடிக். மாலையினது போது உக; உக - சிந்த. பூணும் முத்தும் மூழ்கப் பொருதலால்; பூண் - ஆபரணம். மூழ்க - ஒன்றிலேயொன்று மூழ்க. கங்குலிலும் பகலிலும் விள்ளார்;

1495. புனைமலர்த் தாரி னானும் போதணி கொம்ப னாளும்
நனைமலர்க் காவு மந்தண் வாவியு நல்ல வாடிச்
சுனைமலர்க் குவளை குற்றுச் சூழ்மலர்க் கண்ணி சூட்டி
வினைநல நுகர்ந்து செல்வார் விதியினான் மிக்க நீரார்.

(இ - ள்.) ஊழினால் அன்புமிக்காராகிய தாரினானும் கொம்பனாளும் காவிலும் வாவியிலும் ஆடிக் குற்றுக் கட்டி இங்ஙனம் நல்வினையின் பயத்தை நுகர்ந்து செல்லாநிற்பரென்க. (அச)

1496. பொழிந்துகு காதல் பூண்டு புல்லுகை விடாது செல்லக், கழிந்தன விரண்டு திங்கள் காளையு மற்றோர் நாளாற், பிழிந்து கொள் வனைய பெண்மைப் பெய்வளைத் தோளி தன்னோ, டழிந்தவீ ழருவிக் குன்றி லாய்மலர்க் காவு புக்கான்.

(இ - ள்.) நிறைந்து புறந்தோன்றுகின்ற காதலைப் பூண்டு இங்ஙன முயக்கத்தைக் கைவிடாது ஒழுகாநிற்க, இரண்டுதிங்கள் சென்றன; அவ்வளவிலே மற்றைத்திங்களில் ஒருநாளிலே, காளையும் வடித்துக் கொண்டாற்போலும் பெண்மையினையுடைய தோளிதன்னோடே காவிலே சென்றுபுக்கானென்க. (அரு)

---

விள்ளார் - பிரியாதவராகி. பெற்றவர்கள் : தேவர்கள். கடலளவாகிய ஆயுளையுடையவராதலின் தேவர்கள், சாதலும் பிறப்புமில்லாத் தன்மை பெற்றவர்கள் என்று உபசரித்துக் கூறப்பட்டனர். சீவகனுக்கும் கேமசரிக்கும் தேவர்கள் உவமை.

1495. தாரினான் : சீவகன். கொம்பனாள் : கேமசரி. நனை - தேன்; சீவக. 1417, அடிக். கா - சோலை. வாவி - தடாகம். நல்ல வாவியும் ஆடி என மாறியியைக்க; ஆடி - நீராடி; "யாறுங் குளனுங் காவு மாடிப், பதியிகந்து நுகர்தலு முரிய வென்ப" (தொல். கற்பு. 50). சுனையில் உள்ள மலராகிய குவளையைக்குற்று; குற்று - பறித்து. மலரால் கண்ணி கட்டி; கண்ணி - மாலை. வினைநலம் - நல்வினையின் பயனை. விதியினால் மிக்க நீரார் - ஊழ்வினையால் இயல்பாக அன்புமிக்க தன்மையையுடைய வர்கள். மிக்கநீராராகிய தாரினானும் கொம்பனாளும் நுகர்ந்து செல்வார் என மாறிமுடிக்க.

1496. பொழிந்து உகு காதல் - நிறைந்து புறத்தே தோன்றுகின்ற காதலை. பூண்டு - தமக்குரியதாக மேற்கொண்டு. புல்லு - முயக்கத்தை. இரண்டு திங்கள் கழிந்தன என மாறுக; திங்கள் - மாதம். காளை : சீவகன். நாளால் - நாளில்; உருபுமயக்கம். கொள்வனைய - கொண்டாற் போலும். பெண்மையையுடைய தோளி தன்னோடு : கேமசரியோடு. அழிந்துவீழ் அருவி - பெருகி விழுகின்ற அருவி நீரையுடைய; அழிதல் - பெருகுதல். காளையும், தோளிதன்னோடு குன்றிலுள்ள காவிற்புக்கான் என்க.

1497. காஞ்சனக் கமுகு காய்பொற் கனிக்குலை வாழை சூழ்ந்து
பூஞ்சினை நாகந் தீம்பூ மரக்கருப் பூரச் சோலை
மாஞ்சினை மயில்க ளாடச் சண்பக மலர்கள் சிந்தும்
தீஞ்சுனை யருவிக் குன்றஞ் சீர்பெற வேறி னானே.

(இ - ள்.) பொன்போலுங் குலைக்கமுகும், பொன்போலும் கனியையுடைய வாழையும் சூழப்பட்டுத் தன்னிடத்தே நாகத்தையும் தீம்பூமரத்தையுமுடைய கருப்பூரச்சோலையில் மாஞ்சினையிலே மயில்களாடச் சண்பக மலர்கள் சிந்தும் இனிய சுனையையுடைய குன்றத்தை ஏறினானென்க. (அ௬)

1498. தினைவிளை சாரற் செவ்வாய்ச் சிறுகிளி மாத ரோப்பப், புனைவளைத் தோளி சொல்லைக் கிளியெனக் கிள்ளை போகா, நனைவிளை கோதை நாணிப் பொன்னரி மாலை யோச்சக், கனைகழற் குருசி னண்ணிக் கவர்கிளி யோப்பி னானே.

(இ - ள்.) அம்மலையில் தினைவிளைந்தபுனத்திற் கிளியை மாதரோட்ட, அக்கிளி அவள்சொல்லைத் தன்னினத்தின்சொல்லென்று கருதிப் போகாவாக, அவள் அதற்கு நாணிப் பொன்னரிமாலையை ஓச்சினாளாக, பின்னும் போகாமைகண்டு அவள்கருத்து முடித்தற்குக் குருசில், அக்கிளியையணுகி ஓட்டினானென்க.

இவன் நீங்கல்வன்மைகண்டு புலவிகூர்ந்ததனைத் தீர்த்தபடி மேற்கூறுகின்றார். (அஎ)

1497. காஞ்சனக் குலைக்காய்க்கமுகு - பொன்போலும் குலையில் காய்களையுடைய கமுகமரம்; காஞ்சனம் - பொன். கமுகும் வாழையும் சூழப்பட்டு. நாகத்தையும் தீம்பூமரத்தையுமுடைய கருப்பூரச்சோலை; நாகம் - சுரபுன்னைமரம். தீம்பூமரம் : ஒருவகைமரம்; சீவக. 1267, 1901. சோலையில் உள்ள மாஞ்சினையில்; சினை - கிளை. சுனையையும் அருவியையுமுடைய குன்றத்தில்; இஃது அரண்மனைக்கு அங்கமாக இயற்றப்பட்ட குறிஞ்சி நிலத்திலுள்ளது; சீவக. 148, ந; பெருங். 1. 46 : 265-86.

1498. தினைவிளைசாரலென்றது தினைப்புனத்தை. சாரல் - சாரலில். கிளியை மாதர் ஓப்ப; மாதர் - கேமசரி. ஓப்ப - ஓட்ட. தலைவன் தலைவியோடு கிள்ளை யோப்புதல் : குறுந். 346 : 4-5; அகநா. 308 : 6-10. வளைபுனை தோளி : கேமசரியினுடைய. கிள்ளை, தோளியது சொல்லைக் கிளியெனப் போகா என மாறியியைக்க; கிள்ளை - கிளி. கிளியென - தம்மினத்தைச் சேர்ந்தவொரு கிளியின் சொல்லென்று எண்ணி. போகா - தினைப்புனத்தை விட்டுப்போகாவாக; "கிளியவள் விளியென வெழலொல்லாவே" (குறுந். 291 : 4). கோதை : கேமசரி. மாலையால் ஓச்ச. குருசில்: சீவகன். நண்ணி - கிளியை அணுகி. கவர்கிளி - விருப்பத்தையுடைய கிளி; தினையை உண்ணுகின்ற கிளியுமாம்.

1499. கொந்தழல் வேற்க ணாலென் ணாவிகூட் டுண்ட கொம்பே, செந்தழை யலங்க லேந்திச் சீறடி பரவ வந்தேன், உய்ந்தினிப் பணிசெய் வேனோ வுடம்பொழித் தேகு வேனோ, பைந்தழை யல்குற் பாவாய் பணியெனப் பரவி னானே.

(இ - ள்.) எரிகின்ற அழலையுடைய வேற்கண்ணாலே என்னுயிரைத் திறைகொண்ட கொம்பே! தழையையும் மாலையையுமேந்தி நின்னடியைப் பரவவந்தேன், பாவாய்! இனி உயிருடனிருந்து நின்னேவல் செய்யக் கடவேனோ? இறந்துபடக்கடவேனோ? இரண்டிலொன்றை அருளிச்செய் யென்று பரவினானென்க. (அஅ)

1500. வீணையுங் குழலும் பாலு மமுதமுங் கரும்புந் தேனும், பாணியாழ் கனியும் வென்ற பைங்கிளி மழலைத் தீஞ்சொல், வாணிக மகளிர் தாமே வாணிகம் வல்ல ரென்னாப், பூண்முலை பொதிர்ப்பப் புல்லிப் புனைநலம் பருகி னானே.

பாணியாழ், பாட்டையுடைய யாழுமென்க. இவன் இறந்துபடு வேனோ வென்றதற்குக் குறுமுறுவல்கொண்டு ஒருமொழிகொடுப்பவே ஊடற்றீர்ந்ததாகலின், அச்சொல்லை மழலைத்தீஞ்சொலென்று மகிழ்ந்தான். அம்மொழி கூறலாகாமையிற் கூறிற்றிலர்.

(இ - ள்.) வீணைமுதலியவற்றைவென்ற சொல்லினையுடைய வாணிக மகளிர்தாம் [1] முதல்கெட ஊதியஞ்செய்யாரேயென்று வியந்து புல்லிப் பருகினானென்க.

முதல் - [2] தன்னுயிர். ஊதியம் - ஊடல். (அகூ)

---

1499. வேல்போன்ற கண்ணால் என் ஆவியைக் கூட்டுண்ட கொம்பே; என்றது கேமசரியை நோக்கி; விளி. கூட்டுண்ட - கொள்ளை கொண்ட. தழையையும் அலங்கலையும் ஏந்தி. உய்ந்து - உயிருடனிருந்து. பணிசெய்வேனோ - உனக்கு ஏவல்செய்திருப்பேனோ. பாவாய்: கேமசரி; விளி. பணியென - கட்டளையிடுவாயாக வென்று.

1500. குழல் - புல்லாங்குழல். பாணியாழ் - பாட்டையுடைய வீணை யும். அடி, 1-2 : "குழலும் வீணையும் யாழுமென் றினையன குழைய, மழலை மென்மொழி கிளிக்கிருந் தளிக்கின்ற மகளிர்" (கம்ப. ஊர்தேடு. 6). வீணை முதலியவற்றை வென்றசொல், கிளிபோலும் மழலைத் தீஞ் சொல் எனத் தனித்தனிப் பிரித்தியைக்க. சொல்லையுடைய வாணிகமக ளிர்தாமே; தாம் : அசை. வாணிகம் வல்லர் என்னா - முதல்கெட ஊதி யம் செய்யாத வாணிகத்தில் வல்லமை யுடையர் என்று வியந்து கூறி. பொதிர்ப்ப - வீங்க. புனைநலம் - கேமசரியது அலங்கரிக்கப்பட்ட நலத்தை.

(உரை) [1] "இலேசு நோக்கி யிருமுதல் கெடாமை கொள்வார்" (சீவக. 770, ந.). [2] தன்னென்றது சீவகனை.

1501. திங்களங் குழவி செவ்வா னிடைக்கிடந் திமைப்ப தேபோற், குங்கும மார்பிற் பூண்ட குளிர்கதி ரார மின்ன, மங் கையோ டிருந்த போழ்தோர் மணிவண்டு கண்டு சொன்னான், கங்குற் னீங்க லுற்றுக் கமழ்மல ரணிந்த தாரான்.

(இ - ள்.) தாரான், பிறை செக்கர்வானிலே கிடந்து விளங்குவது போலே தனது குங்குமமார்பிலே தங்கிய ஆரம் விளங்கும்படி நீங்கி மங்கையுடனிருந்த வளவிலே, வந்ததொரு வண்டைக்கண்டு, இரவு பிரி யக்கருதி ஒருவார்த்தை கூறினானென்க. (௯0)

1502. மணிவண்டிம் மாதர் கோதை மதுவுண வந்த போழ் தங், கிணைவண்டங் கிறந்து பாடின் றிருக்குமே யிரங்க லின் றாய்ந், துணைவண்டு துஞ்சி னீயுந் துஞ்சுவை யென்று நின்கட், பணிகொண்ட தின்மை யாற்றான் பரிவொடு மிருக்கு மன்றே.

மணிவண்டு : அண்மைவிளி. இருக்குமே ; ஏகாரம் : வினா.

(இ - ள்.) வண்டே! நீ மதுவுண்ண வந்தபொழுது, நின்பெடை அவ்விடத்தே இறந்துபாடின்றாய் வருத்தமுமின்றாயிருக்குமோ? இங் ஙனேயன்றோ : தான் இறந்துபடின், துணைவண்டாகிய நீயும் இறந்து படுவையென்றுட்கொண்டு இறந்துபடாதே உன்னிடத்தே உரியதொரு தொழிலை அடியிலே தன்னிடத்தாக்கொள்ளாமையால் அன்புடனே ஆற்றி யிருக்குமல்லவோவெனச் சொன்னானென்க.

பணியென்றது, மகளிரிருந்து இல்லறத்தை நிகழ்த்துதற்கு வேண்டு வன தேடி வருதல் ஆடவர்க்குப் பணியாதலை. (௯௧)

---

1501. திங்களங்குழவி - பிறைச்சந்திரன். இமைப்பதேபோல் - விளங்குவதைப்போல. குளிர் கதிர் ஆரம் - குளிர்ந்த கிரணங்களையுடைய முத்துமாலை. குங்குமச்சாந்து பூசிய மார்பிற்குச் செவ்வானும், ஆரத்திற் குத் திங்கட்குழவியும் உவமைகள். ஆரத்திற்குப் பிறை ; "மேல்பாற் பிறையென விளங்க வமைந்த, தொருகாழார மொளிபெற வணிந்து" (பெருங். 3. 22 : 220-21). மங்கையொடு - கேமசரியோடு. மணிவண்டு - நீலமணிபோன்ற வண்டை. வண்டைக்கண்டு கங்குல் தானீங்கலுற்றுச் சொன்னான் என மாறியியைக்க. கங்குல் - இரவில். நீங்கலுற்று - பிரியக் கருதி. தாரான் சொன்னான் என்க ; தாரான் - சீவகன்.

1502. மணிவண்டு : விளி. இம்மாதர்கோதை மது உண வந்த போழ்து - இந்தக்கேமசரி யணிந்த பூமாலையில் தேனை உண்ணுவதற்கு வந்த இச்சமயத்தில். இணைவண்டு - உனக்கொத்த பெடை வண்டா னது. அங்கு இறந்துபாடின்றி இருக்குமே ; ஏ : வினாப்பொருளில் வந் தது. இரங்கலின்றாய் - நின் பிரிவிற்கு வருந்துதலில்லாமல். தான் துஞ்

1503. குழவியாய்ப் பிறந்து வெய்யோன் குமரனாய் முறுகியிப் பால், விழைவுதீர் கிழவ னாகி விழுக்கதி ருலந்து வீழ, மழலைவண் டுழல நக்க மல்லிகை யலங்கல் சூட்டிக், குழல்புரை கிளவி யோடுங் கொழும்புகை யமளி சேர்ந்தான்.

(இ - ள்.) வெய்யோன், முன்பு குழவியாய்ப்பிறந்து பின்பு குமர னாய் வெம்மைமிக்கு மீளும் பகுதியிலேவந்தாற் கிழவனாய்க் கதிருலந்து படுதலின், [1] சீவகன் வண்டு உழலும்படியலர்ந்த அலங்கலைச்சூட்டிக் கிளவியோடே அமளியைச் சேர்ந்தானென்க.

[2] உம்மை, இசைநிறை. (கூஉ)

1504. திருத்துயில் பெற்ற மார்பன் றிருந்துதா ருழக்க வின்ப, வருத்தமுற் றசைந்த கோதை வாளொளித் தடங்க ணீலம், பொருத்தலும் பொன்ன னாளைப் புறக்கணித் தெழுந்து போகிப், பருச்சுடர்ப் பவழ நோன்றாழ்ப் பன்மணிக் கதவு சேர்ந்தான்.

(இ - ள்.) அம்மார்பன், மாலை உழக்குதலாலே இன்பத்தாற்பிறந்த வருத்தத்தையுற்று இளைத்தகோதை தன்கண்ணாகியநீலத்தைக் குவித்த வளவிலே, அவன் அவளைத் திரியப்பார்த்து எழுந்திருந்துபோய்ப் பவ ழத்தாழையுடைய மணிக்கதவைச் சேர்ந்தானென்க.

துயிறல் - தங்குதல். (கூஙு)

---

சின், துணைவண்டாகிய நீயும் துஞ்சுவையென்று, நின்கண் பணிகொண் டது இன்மையால் பரிவொடு இருக்குமன்றே என மாறியியைக்க. தான் துஞ்சின் - பெடைவண்டாகிய தான் இறந்தால். நின்கண் - உன்னி டத்து. பணிகொண்டது இன்மையால் - உரியதொரு காரியத்தைத் தன் னிடத்துக் கொள்ளாமையால். பரிவு - அன்பு. இருக்குமன்றே - உன்பிரி வைப் பொறுத்து இருக்குமல்லவோ? இப்பாடல் சீவகன் கூற்று.

1503. குழவியாய் - குழந்தையாய். வெய்யோன் - சூரியன்; எழு வாய். முறுகி - வெம்மைமிக்கு. வெய்யோன் குமரனாய் முறுகி; "உரவுச் சினந் திருகிய வுருகெழு ஞாயிறு" (புறநா. 25 : 3); "தெறுகதிர்ச் செல்வன் முறுகிய நண்பகல்" (பெருங். 5. 2 : 19). விழைவுதீர் கிழவ னாகி - ஆசை நீங்கிய முதியவனாகி. கதிருலந்துவீழ - கிரணங்கள் கெட்டு அந்தமலையில் வீழ்தலால். உழல நக்க - உழலும்படி அலர்ந்த. அலங்க லைச் சூட்டி. குழல்புரை கிளவியோடு - புல்லாங்குழலின் இசையை யொத்த இனிய மொழியையுடைய கேமசரியுடன். புகை - வாசனைப்புகை. புகையூட்டப்பெற்ற அமளியைச் சேர்ந்தான்.

(உரை) (பி - ம்.) [1] 'அங்ஙனஞ் சீவகன்.' [2] கிளவியோடுமென்பதி லுள்ளது.

1504. திருத்துயில்பெற்ற மார்பன் - திருமகள் தங்குதலைப்பெற்ற மார்பையுடைய சீவகன்; சீவக 14. அடிக், "திருச்சேரகலத்துப் பிரச் சோதனன்" (பெருங். 1. 42 : 10). மார்பனுடைய தார் உழக்க;

1505. அல்லியுட் பாவை யன்னா ளறிவுரு வகையி னொற்றி
மெல்லவே திறந்து நீக்கி மின்னுவிட் டிலங்கு பைம்பூட்
கொல்சின மடங்க லன்னான் கொழுநிதி மாட நீந்திப்
பல்கதிர்ப் பருதி போலப் பாயிரு ளேகி னானே.

(இ - ள்.) மடங்கலன்னான், திருவையொப்பாள் திறக்கின்றவோசை கேட்டறியாதபடி முற்பட நிலையோடே கதவைத்தள்ளிமெல்லத் தாழ் திறந்து பின்பு முடியத்திறந்து நீந்திப்பருதிபோலே இருளிலேபோனா னென்க. (௯௪)

1506. தாளுடைத் தடங்கொள் செவ்வித் தாமரைப் போது போலும், வாளுடை முகத்தி னுடன் வருமுலைத் தடத்தின் வைகி, நாளினும் பெருகுகின்ற நகைமதி யனைய காதற், கேள்வனைக் கனவிற் காணாள் கிளர்மணிப் பூணி னாளே.

(இ - ள்.) அவன் அங்ஙனம் போகின்றவளவிலே, பூணினளாகிய தாமரைப்போதுபோலு முகத்தினள், தன்முலைத்தடத்தே தங்கி நாடோறும் வளருகின்ற பிறையையொத்த காதலையுடைய கணவன் றன்னைக் கனவிலே காணாளாயினாளென்க.

கனாக்காண்கின்றவள் அவன் போகக்கண்டாளென்க. (௯௫)

---

நார் உழக்க - பூமாலை வருத்துதலாலே. அசைந்தகோதை - இளைத்த கேமசரி. கண்ணாகிய நீலத்தைப் பொருத்தலும்; நீலம் - குவளைமலர்; பொருத்தலும் - மூடியவளவிலே; உறங்கினாளென்றவாறு. பொன்னனாள் : கேமசரி. புறக்கணித்து - திரியப்பார்த்து. பருச்சுடர் - மிக்க ஒளியையுடைய. பவழத்தாழையுடைய மணிக்கதவை.

1505. அல்லியுட்பாவை - தாமரை மலரிலுள்ள திருமகள்; சீவக. 329, அடிக். அல்லி - அகவிதழ்; தாமரைக்காயிற்று. அன்னாளென்றது கேமசரியை. ஒற்றி - கதவினை நிலையோடு அப்புறம் தள்ளி. நீக்கி - நன்றாகத் தாழ்ப்பாளைத் திறந்து. மின்னுவிட்டு - ஒளிவிட்டு. பூணையுடைய மடங்கலன்னான் : சீவகன்; எழுவாய். நிதியையுடைய மாடத்தை நீந்தி; நீந்தி - கடந்துசென்று. பருதி - சூரியன்; சீவகனுக்கு உவமை. பாயிருள் - பரந்த இருட்டில். பாவையன்னாள் அறிவுருவகை மடங்கலன்னான் ஏகினான்; சீவக. 1360.

1506. தடங்கொள் தாளுடைச் செவ்வித்தாமரைப்போது என மாறி யியைக்க; தடம் - தடாகம். தாளுடை - தண்டையுடைய. செவ்வி - அழகு. முகத்தினள் : கேமசரி. வருமுலை - எழுகின்றமுலை. நாளினும் பெருகுகின்ற - நாள்தோறும் வளருகின்ற. நகை - ஒளி. காதலையுடைய கேள்வனை : சீவகனை. பூணினளாகிய முகத்தினள் காணாளென்க.

1507. அரந்தினப் பிறந்த பைம்பொ னரும்பிய முலையி னாளைக், கரந்தவன் றங்கு நீங்கக் கதிர்வளை யணங்கு மென்றோள், வரந் தரு தெய்வ மன்னாள் வைகிரு ளனந்த றேறிப், பரந்தெலாத் திசையு நோக்கிப் பையவே பரிவு கொண்டாள்.

(இ - ள்.) முலையினாளையொளித்து அவன் அங்ஙனம்போகாநிற்க, அவள் கனவாலே விழித்து அனந்தல் தீர்ந்து விடியற்காலத்திருளிலே எல்லாத் திசையையும் பரந்துபார்த்து முறைமைப்பட வருத்தங் கொண்டாளென்க.

அராவுதலாற்பிறந்த பொடியாகிய பொன் - சுணங்கு. வளையால் வருந்தும் தோள். கணவற்கு நினைத்தனகொடுத்தலின், வரந்தரு தெய்வம். (௬௬)

1508. திருமணி குயின்ற செம்பொற் றிருந்துபூங் கொம்ப னாடன், கருமணிப் பாவை யன்னான் கரந்துழிக் காண்டல் செல்லாள், எரிமணி விளக்க மாடத் திருளறு காறு மோடி, அருமணி யிழந்தோர் நாக மலமரு கின்ற தொத்தாள்.

(இ - ள்.) பொன்னாற்செய்த கொம்பனாள், தன்கண்ணிற் கருமணியிற் பாவையையொப்பான் மறைந்த விடத்தைக் காணாளாய் மணி விளக்கத்தையுடைய மாடத்தில் விளக்கொளியுள்ளவளவும் ஓடித்தேடி, நாகம் தன்கண்ணாகிய மணியையிழந்து வருந்துவதனையொத்தா ளென்க. (௬௭)

---

1507. அரந்தினப்பிறந்த பொன் - அரத்தால் அராவுதலால் உண்டாகிய பொற்பொடி; கூர்ம. சூரியன். 3; நவகண்ட. 44; பொன்னென்றது தேமலை. அரும்பிய - தோன்றிய. முலையினாளை : கேமசரியை. கரந்து - மறைத்து. அவன் - சீவகன். வளையால் அணங்கும் தோளையுடைய வரந்தரு தெய்வ மன்னாள் ; கேமசரி ; அணங்கும் - வருந்துகின்ற. வரந்தருதெய்வம் : சீவக. 165 ; "தொழுதார்க்கு வரங் கொடுக்குந் தடங்கண்ணி" (சூளா. அரசியற். 407). அனந்தல்தேறி வைகிருளில் எலாத்திசையும் பரந்து நோக்கி என மாறி யியைக்க; அனந்தல்தேறி - மயக்கம் நீங்கி; அனந்தல் - மயக்கம் ; சீவக. 1249. வைகிருள் - விடியற்காலத்திருள். பையவே - முறைமைப் பட. பரிவு - வருத்தம்.

1508. மணியையுடைய செம்பொனாற் குயின்ற பூங்கொம்பனாள் என்க; கொம்பனாள் : கேமசரி. கருமணியைப்போலும்பாவை ; என்றது கருவிழியை. அன்னான் : சீவகன். கரந்துழி - மறைந்த இடத்தை. காண்டல் செல்லாள் - பார்க்கமுடியாதவளாய். மணியினது விளக்கத்தை யுடைய மாடத்தில். இருள் அறுகாறும் - ஒளியால் இருட்டில்லாத இடம் வரையில். ஓர் நாகம் மணியை யிழந்து அலமருகின்றதை ஒத்தாள்; சிலப். 13 : 55 ; மணி. 7 : 131.

(வேறு)

1509. யாண்டை யாயைய வஞ்சினெ னுருயிர்
ஈண்டு டம்பொழித் தேகவ லிக்குமால்
நீண்ட தோளவ னேநிறை யானிலேன்
தீண்டு வந்தெனத் தேனின்மி ழற்றினுள்.

ஒளிக்கக் கண்டுகொளென்று முன்பும் விளையாடுவாராதலின், இப்பொழுதும் அதுவாகநினைந்து, 'யாண்டையாய்' என்றும், 'அஞ்சினென்' என்றும் கூறினுள். நீண்டதோள் உத்தமவிலக்கணம்.

(இ - ள்.) ஐயனே! நீ எவ்விடத்தே நிற்கின்றுய்; யான் அஞ்சினேன்; இனி நீ தானேவாவென, வாராதிருத்தலின், தோளவனே! உயிர் இப்பொழுது உடம்பினைக் கைவிட்டுப்போகத் துணியாநின்றது; ஆதலின், நிறையழிந்தேன்; இனித் தீண்டுவந்தென மிழற்றினுளென்க.

'தீண்டுவந்து' என்றுள், [1]'கண்டேன் சீதையை' என்றாற்போல. (கூஅ)

1510. கனிகொள் காமங்க லந்துயி ரொன்றலின்
இனியர் மங்கைய ரென்பது கூறுவாய்
பனிகொண் மாமதி போற்பசப் பூரயான்
தனிய ளாவது தக்கது வோசொலாய்.

(இ - ள்.) மங்கையர், அன்பு கனிதல்கொண்ட வேட்கை தம்மிற் பொருந்தி உயிர் ஒன்றுபடுமிடத்து இனியராயிருப்பர்; அத்தன்மையில்லாத விடத்து இனியரல்லரென்பது முன்பு கூறுகின்ற நீ யாம் இங்ஙனம் ஒன்றி ஒழுகுகின்ற நாளிலே பனி மூடிய மதிபோற் பசக்கும்படி யான் தனிப்பது நினக்குத் தக்கதோ? கூறுயென்றுளென்க. (கூகூ)

1509. ஐய, யாண்டையாய் என மாறுக; யாண்டையாய் - எவ்விடத்துள்ளாய். உயிர் - எனது உயிர். ஈண்டு - இப்பொழுது. வலிக்குமால் - துணிகின்றது; ஆல்: அசை. ஐயவென்றதும் நீண்ட தோளவனே யென்றதும் சீவகனை நோக்கி; விளி. நிறையிலேன் - மனமழிந்தேன். "அஞ்சனமின் யாவிரும்" (பெருங். 3. 27 : 195) என்றாற்போல முதலில், 'தீண்டு' என்றுள். தேனின் - தேன்போலுமினிய சொல்லால். இதுமுதல் இருபத்திரண்டு பாடல்கள் கேமசரியின் கூற்று.

(உரை) [1]"கண்டனென் கற்பினுக் கணியைக் கண்களால்" (கம்ப. திருவடி 58)

1510. கனிகொள் காமம் - கனிதல்கொண்ட வேட்கை. உயிரொன்றலின் இனியர் - இருவர் உயிரும் ஒன்றுபடுமிடத்து இனியராயிருப்பர். மங்கையர், இனியர் என்பது கூறுவாய்; கூறுவாய் - முன்பு கூறுகின்ற நீ; என்றது சீவகனை நோக்கி; விளி. பனிகொள் மாமதியைப்போல் பசப்பூர; "செய்வுறு மண்டில மையாப் பதுபோல், மையில் வாண்முகம் பசப்பூ ரும்மே" (கலித். 7 : 7 - 8); பசப்பூர - பசப்படையும்படி. தனியளாவது - தனித்திருப்பது. தக்கதுவோ - தக்கதோ.

1511. கழலு நெஞ்சொடு கைவளை சோருமாற்
சுழலுங் கண்களுஞ் சூடுறு பொன்னென
அழலு மேனியு மாற்றலெ னையவோ
நிழலி னீப்பருங் காதலு நீத்தியோ.

(இ - ள்.) ஐயனே! போகின்றதொரு நெஞ்சோடே வளையும் போகாநின்றது; கண்களும் பரந்து பாவாநின்றன; மேனியும் உருகுகின்ற பொன்னென அழலாநின்றது; ஆதலின் ஆற்றலேன்; யான் இங்ஙனமாகவும், நீ நிழல்போல நீத்தற்கரிய காதலையும் கைவிடுதியோவென்றுளென்க.

ஐயவோ: ஓ, இரக்கக்குறிப்பு. நீத்தியோ: ஓகாரம், வினா. (கூ00)

1512. திருந்து மல்லிகைத் தேங்கமழ் மாலையான்
புரிந்து சூடினும் பூங்கொடி நுண்ணிடை
வருந்து மான்மட வாயெனும் வஞ்சநீ
கரிந்தி யானையக் காண்டலும் வல்லையோ.

(இ - ள்.) மல்லிகைமாலையை யான் விரும்பிச்சூடினும், 'இடை முரியுமென்றறியாத பேதாய்! நினது நுண்ணிடை வருந்தாநிற்குமே' என்றுகூறும் பொய்யைவல்லாய்! யான் கருகி நையக் காணுதலும் நீ வல்லையோ? என்றுளென்க.

ஓகாரம் வினா. (கூ0க)

1513. தொண்டை வாயிவ டொய்யில்வ னமுலை
கண்டு தேவர்க னிபவென் றேத்துவாய்
வண்டு கூறிய வண்ணம றிந்திலேன்
விண்டு தேன்றுளிக் கும்விரைத் தாரினாய்.

---

1511. கழலும் நெஞ்சொடு - உன்னிடத்தே செல்கின்றதொரு நெஞ்சுடனே. சோரும் - கழலும். கண்களும் சுழலும் என மாறுக. மேனியும் பொன்னென அழலும் என மாறியியைக்க; அழலும் - கொதிக்கின்றது. ஆற்றலென் - பொறுக்ககில்லேன். நிழலைப்போல் நீத்தற்கரிய காதலையும் நீத்தியோ என்க; நீத்தியோ - கைவிட்டாயோ.

1512. மாலையை யான் புரிந்து சூடினும்; புரிந்து - விரும்பி. மடவாய், பூங்கொடிபோலும் உன் நுண்ணிடை வருந்துமால் எனும் வஞ்ச என மாறியியைக்க; வருந்துமால் - வருந்தும்; ஆல்: அசை. வஞ்ச - பொய் கூறுபவனே; என்றது சீவகனை. யான் கரிந்து நையக் காண்டலும் நீ வல்லையோ என மாறியியைக்க; கரிந்து - கருகி.

1513. தொண்டைவாயினையும் தொய்யிலெழுதிய வனமுலையையுமுடைய இவளைத் தேவர்கண்டு கனிபவென்று ஏத்துவாய் என மாறியியைக்க; தொண்டைக்கனிபோலும் வாய். 'இவள்' என்றது சேமசரியை. தேவர் - பிரமன். கனிப - உலகத்தை அழிப்பதோர் உருவத்

(இ - ள்.) வாயினையும் முலையினையுமுடைய இவளைப்படைத்த பொழுது, அயனுர்தாங் கண்டு, உலகைப்படைத்த நாமே அதனையழிப்ப தோருருவையும் படைத்தோமேயென்று வருந்துவரென்று முன்னிலைப் புறமொழிகூறிப் புகழா நின்றவனே! தாரிஞய்! நீ வண்டைக்கூறிய தன்மையை யானறிந்திலேன்; அறியின், இங்ஙனம் விடேனென்ருளென்க.

தேவரென்றது, [1] ஒருவரைக்கூறும் பன்மைக்கிளவி; "மண்மேற், றேவரென்றேயிறுமாந்து" (திருவா. திருச்சத. 4) என்ருர்பிறரும். இனி, இவள் வாயையும் முலையையுங்கண்டு தெய்வமகளிர் வருந்துவரென்றுமாம். (௧௫௰௨)

## (வேறு)

1514. முலைவைத் ததடத் திடைமுள் கலுறிற்
றலைவைத் துநிலத் தடிதை வருவாய்
சிலைவித் தகனே தெருளே னருளாய்
உலைவித் தனையென் னுயிர்கா வலனே.

முலைவைத்த தடம் - யாம்பிறந்தவிடமும் சிறிதுகிடக்கவேண்டுமென்று முலைதான் அருள்பண்ணிவைத்த தடம்; இது கொண்டு கூறிற்று; "எஞ்சுற்ற மென்றிரங்கா தாகமெல்லாங் கவர்ந்திருந்து" (சீவக. 2502) என்பமேலும். இருவரும் முன்பு உருதிருத்தலின்மையின், உறினெனவே முன்பு ஊடறீர்த்துக் கூடநினைக்கினென்பது பெற்ரும். நின் [1] வளைவெல்லாம் வருத்தமாயிற்றென்பதுதோன்ற, 'சிலைவித்தகனே' என்ருள். எவனென்னும் வினு என்னென நின்றது.

(இ - ள்.) சிலைவித்தகனே! உயிர்காவலனே! நீகூறிய தடத்திடையிலே ஊடறீர்த்துக் கூடநினைக்கின், தலையை நிலத்தேவைத்து அடியைத்

தைப் படைத்தோமே யென்று வருந்துவர். (பி - ம்.) 'கனல்பவென்.' ஏத்துவாய் என்றது சீவகனை நோக்கி; விளி. தாரிஞய், வண்டைக் கூறிய வண்ணம் அறிந்திலேன் என மாறியியைக்க. தாரிஞய் என்றது சீவகனை; விளி. சீவகன் வண்டைப் பார்த்துக் கூறியது : சீவக. 1502.

(உரை) [1] தொல். கிளவி. 27.

1514. தடம் - உயர்ந்த இடம். முள்கலுறின் - முயங்க நினைத்தால். தைவருவாய் - தடவுவாய். உலைவித்தனை - இப்பொழுது என் மனத்தைச் சலிப்பித்தாய். தெருளேன் - நீ என்னைப் பிரிந்ததற்குக் காரணத்தை அறியேன். அருளாய் - பிரிவிற்குக் காரணம் என்னென்று கூறுவாயாக. சிலைவித்தகனே, உயிர்காவலனே, தடத்திடை முள்கலுறின், தலையை நிலத்தே வைத்து அடி தைவருவாய், உலைவித்தனை, தெருளேன் அருளாய் என மாறிமுடிக்க.

(உரை) [1] வளைவு - பணிவு; என்றது, தலைவைத்து நிலத்தடி தைவந்ததை; "வில்வணக்கந், தீங்கு குறித்தமை யான்" (குறள், 827)

தடவுகின்றநீ இப்பொழுது சலிப்பித்தாய்; இதற்குக்காரணம் தெளிகின்றிலேன்; அதற்குக் காரணமென்னென்று அருளிச்செய்யாயென்றாளென்க.

வைத்தநிலம் பாடமாயின், காலைவாங்கினால் அந்நிலத்தில் அடியைத் தைவருவாயென்க. (௧௫௰௩)

1515. கடனித் திலம்வைத் தகதிர்ம் முலையின்
இடனெத் துணையத் துணையும் மெழுதி
உடனொத் துறைவா னுழைவா ரலனேல்
மடனொத் துளதென் னுயிர்வாழ் வதுவே.

(இ - ள்.) வடமணிந்த முலையினாலே தன்மார்பிடம் எவ்வளவுண்டு அவ்வளவும் யானெழுத, என்னுடனே ஒத்துறைகின்றவன் இனி என்னிடத்தில்லை வாரானாயின், என்னுயிர் வாழும் நிலைமை முற்பட்ட அறியாமையையொக்கு மென்றாளென்க.

எழுதி - எழுத. அது: வண்டைக்கூறியதனைத் தான் அறியாதிருந்தது. ஒத்துளது: ஒருசொல். [1] முலையெங்கும் தொய்யிலெழுதியுறைவானென்றுமாம். (௧௫௰௪)

1516. பெறுமன் பினளென் பதுபே சினலால்
அறுமன் பினளென் றறைவா ரிலையால்
இறுமென் பொடினைந் துநைவேற் கருளி
நறுமென் கமழ்தா ரவனே நணுகாய்.

கமழ்தார், பெயர் மாத்திரை.

1515. நித்திலம் வைத்த - முத்துமாலையை யணிந்த. முலையினால் இடன் எத்துணையுண்டோ அத்துணையும் எழுதி என்க. இடனென்றது சீவகனுடைய மார்பிடத்தை. எழுதி - எழுத; எச்சத்திரிபு. உடன் உறைவான் - என்னுடன் தங்குகின்றவனாகிய சீவகன். உழை வாரலனேல் - என்னிடத்து வரவில்லை யானால். என் உயிர் வாழ்வது, மடனொத்துளது என மாறியியைக்க; வாழ்வதுவே - வாழ்கின்ற அந்நிலைமை; ஏ: அசை நிலை. மடனொத்துளது - அறியாமையை ஒக்கும்.

(உரை) [1] முலைமுழுதும் தன் கண்களால் எழுதி யெனலுமாம்; சீவக. 687, அடிக்.

1516. பெறும் அன்பினள் என்று - என்னிடத்து நீ காட்டிய அன்பினாலே, என் சுற்றத்தார் என்னை, நாள்தோறும் பெறுகின்ற அன்புடையவள் என்று. பேசினலால் - கூறுவதல்லாமல். அறும் அன்பினளென்று - குறையும் அன்புடையவள் என்று. அறைவாரிலையால் - கூறுவாரில்லை; ஆல்: அசை. இறும் என்பொடு - உருகுகின்ற எலும்புடனே. இனைந்து - வருந்தி. நைவேற்கு - மனமழிகின்ற எனக்கு. அருளி - அருள்செய்து. அருளி நணுகாய் என இயைக்க. தாரவனே என்றது சீவகனை; விளி.

(இ - ள்.) நறிய தாரவனே! நீ நிகழ்த்தின நிலைமைகண்டு, என் சுற்றத்தார் இவள் நாடோறும் பெருமன்பினளென்பது பேசினன்றித் தேயுமன்பினளென்று கூறுவாரில்லை; உருகுமென்போடு வருந்தி நைவேற்கு இன்னும் அருளி நணுகாயென்றாளென்க. (குO௬)

1517. நுனசீ றடிநோ வநடந் துசெலேல்
எனதா வியகத் துறைவா யெனுநீ
புனைதா ரவனே பொயுரைத் தனையால்
வினையே னொழியத் தனியே கினையே.

(இ - ள்.) தாரவனே! இப்பொழுது தீவினையையுடைய யானிருப்ப நீ தனியே ஏகினாயாதலின், முன்பு, எனது ஆவியகத்தேயுறைவாய்! நின்னுடைய சீறடிநோவ நடந்துதிரியாதே கொள்ளென்று கூறுநீ பொய்யை யுரைத்தாயென்றாளென்க. (குOரு)

1518. பருமுத் துறையும் பணைவெம் முலைநின்
திருமுத் தகலந் திளையா தமையா
எரிமொய்த் தனலும் மிகல்வே லெரிபுண்
மருமத் தனலும் வகைசெய் தனையே.

அவள் முத்துவடந்தங்கும் பெருத்த விரும்பியமுலையென்று, அவற்றைப் பின் பிரிதல்வன்மையின், அவள் கருத்துவேறாக எண்டுக்கூறினாள்: [1] முத்து - கண்ணீர்; பணை - பிழைத்தல்; வெம்மை - காமத்தீயாலே வெவ்விதாதல்; கண்ணீர்தங்கும் யான்பிழைக்கும் வெவ்விய முலையென்று கொள்க.

(இ - ள்.) நீ கூறுகின்றபொழுதே பின்பு இவையுளவாமெனக் கருதிக் கூறிய முலைகள், தம்முன்னே நின்று நின்னகலம் முயக்கத்தைக்

1517. நுனசீறடி - உன்னுடைய சிறியபாதம்; நுன் : திசைச்சொல்; சீவக. 324, ந. செலேல் எனும் - செல்லாதே யென்று கூறுகின்ற. வினையேன் ஒழிய - தீவினையையுடையேனாகிய யான் தனித்திருக்கும்படி. தாரவனே, வினையேன் ஒழியத் தனியேகினையாதலின், எனது ஆவியகத்து உறைவாய்; நுனசீறடி நோவநடந்து செலேல் எனும் நீ பொய்யுரைத்தனை என மாறிமுடிக்க.

1518. முத்து - முத்தமாலை. அகலம் - மார்பு. திருமுத்து-திருமகள் சேரும் எனலுமாம்; முத்துதல் - சேர்தல்; சீவக. 504, ந. திளையாதமையா - முயங்காமல் ஆற்றமாட்டா. மருமத்து எரிபுண்ணில் வேல் அனலும் வகை செய்தனையே என மாறியியைக்க; மருமம் - உயிர்நிலை. அனலும்வகை - எரியும் தன்மையை. எரிபுண்ணில் வேலிட்டதன்மை: "வெந்தபுண் வேலெறிந் தற்றால்", "வெந்ததோர் புண்ணின்கண் வேல்கொண்டு நுழைப்பான்போல்" (கலித். 83 : 30, 84 : 30, 120 : 17); "தழலுறு புண்மேற் கருவி பாய்ந்தென" (பெருங். 4. 13 : 130)

(உரை) [1] "பூப்போ லுண்கண் புலம்புமுத் துறைப்ப"

கொடாதே நிற்றலின், அதனை முயங்காமையால் ஆற்றுகின்றனவில்லை; ஆதலின் நீ மருமத்திடத்து முன்பே தீப்பட்டதொரு புண்ணிலே காய்ந்த வேல் நின்றெரியும் தன்மையைச் செய்தாயென்றாளென்க.

முன்னர் முயங்கிப் பிரிந்தபிரிவு புண்ணிற்கும், இப்பொழுது முன்னின்று முயக்கங்கொடாதநிலை வேலிற்குமுவமை. இத்துணையும் [2] எதிர்பெய்துபரிதல். "உடம்பு முயிரும் வாடியக் கண்ணும்" (தொல். பொருளியல், 9) என்னுஞ் சூத்திரவிதியால், [3] முலையை இங்ஙனங்கூறினாள். (கoஎ)

1519. புனமா மயிலே பொழிலே புனலே
வனமார் வழையே வரையே திரையே
இனமா மணிசூ ழெரிபூ ணவனைத்
துனயான் பெறுகோ தொழுதே னுரையீர்.

(இ - ள்.) மயில் முதலியவற்றை விளித்து, நும்மைத்தொழுதேன்; இனி யான் பூணவனை இன்னும் சேரப்பெறுவேனோ? பெறுவேனாயின், அவனிருக்கின்றவிடத்தைக் கூறீரென்றாளென்க. (கoஅ)

1520. கொடுவெஞ் சிலைவாய்க் கணையிற் கொடிதாய்
நடுநா ளிரவின் னவைதான் மிகுமால்
நெடுவெண் ணிலவின் னிமிர்தேர் பரியா
தடுமால் வழிநின் றறனே யருளாய்.

நிலவின்நிமிர்தேர் - நிலவினையுடைய மதி; அது வட்டத்தால் தேருருள்போறலின், தேரென்றாள்.

---

(முல்லைப். 23). [2] சீவக. 1379, அடிக். [3] 'காதும் ஓதியும் முதலியன கூறப்பெறா; கண்ணும் தோளும் முலையும்போல்வன புணர்க்கப்படும்' (தொல். பொருளியல், 8, ந.)

1519. புனம் - தினைப்புனம். வனமார் - காட்டிற் பொருந்திய. வழை - சுரபுன்னை. திரை - கடல்: ஆகுபெயர். இனம் - தொகுதியாகிய. மாமணி - பெரியமணி. எரி - விளங்குகின்ற. பூணவனை: சீவகனை. தொழுதேன், யான், பூணவனைத்துனப்பெறுகோ, உரையீர் என மாறியியைக்க; துனப்பெறுகோ - அடையப் பெறுவேனோ; துன - துன்ன; இடைக்குறை.

1520. கொடுவெஞ்சிலை வாய்க்கணை - வளைந்த வெம்மையான வில்லிடத்துள்ள அம்பு. கணையினும் கொடிதாய். நாள் நடுஇரவின் என மாறியியைக்க. இரவின் நவைதான் - இரவு செய்கின்ற வருத்தந்தான். நிலவினையுடைய நிமிர்தேரென்றது சந்திரனை. பரியாது - எனக்கு இரங்காமல். அடுமால் - என்னை வருத்தும்; ஆல்: அசை. வழிநின்று - என் பக்கமாக நின்று. அருளாய் - அருள் செய்வாயாக.

(இ - ள்.) கணையிலுங்கொடிதாய் இரவுசெய்கின்ற வருத்தந்தான் மிகாநின்றது ; மதி, பிரிந்திருத்தற்கு இரங்காதே தானும் அடாநின்றது; இவ்வளவுக்கு என்கூற்றிலே நின்று, அறக்கடவுளே ! அருளாயென்று ளென்க. (கூ0கூ)

1521. கயலா லிவையென் றுகவிழ்ந் துகிடந்
தயலே னறியா மையுரைத் ததெலாம்
இயலா ததுவோ வினியேற் கினியீர்
உயலா வதுகண் மலர்கா ளுரையீர்.

கிடந்து - கிடக்க. அவசமாக்கித் தன்னைக் கூடாமையின், 'அய லேன்' என்றாள். உரைத்ததனை ; 'பொன்னுரைத்தது' என்றாற்போல அவன்செய்த தொழிலென்றுகொள்க. அது சொல்லிற்றெல்லாமென்றாற் போலவுநின்றது. இனியீர் : இகழ்ச்சிக் குறிப்பு.

(இ - ள்.) அவன், இக்கண்கள் கயலாயிருந்தனவென்று நும்மைப் புகழ்தலின், அதற்கு நீர் அன்புற்றுக்கிடக்க, அயலேனாகிய யான் அறியா மல் நுமக்குக் கூறியதெல்லாம் பிரிவையோ? [1] கண்ணிற்சிறந்த உறுப் பில்லையென்று நும்மிடத்து இனியேனாகிய எனக்கு இனியீராயிருந்தீர் ; நும்மை அவன் புலால் நாறுகின்ற கயலென்று புகழப் போக்குடன் பட்டீர் ; யான், கண்மலர்காளெனப்புகழாநின்றேன் ; இனி உய்யலாம் வழி உரையீரென்றாளென்க. (கூகூ0)

1522. நெறிநீர் வளையு நிழனித் திலமும்
பொறிநீ ரபுனைந் தெழுதிப் புகழும்
வெறிதா ரவனெவ் வழியே கினனீர்
அறிவீ ருரையீ ரமர்தோ ளிணைகாள்.

நெறித்தநீர் - கடல்.

1521. இவை கயலால் என்று - இக்கண்கள் கயல்மீன்களாயிருந்தன வென்று புகழ்ந்து கூற ; ஆல் : அசை. கவிழ்ந்து கிடந்து - நீர் அன் புற்றுக்கிடக்க ; கிடந்து - கிடக்க ; எச்சத்திரிபு. அயலேன் - அயலேனாகிய யான். உரைத்ததெலாம் - சீவகன் கூறியதெல்லாம். இயலாததுவோ - இப்பொழுது பிரிந்ததாகிய பிரிவைப்பற்றித் தானோ? இனியேற்கு இனியீர் - உங்களுக்கு இனியேனாகிய எனக்கு இனியவராயுள்ளீர் ; என்றது கண்களை. கண்மலர்காள், உயலாவது உரையீர் எனமாறுக ; உயலாவது - யான் பிழைக்கும் வழியை.

(உரை) [1] "கண்ணிற் சிறந்த வுறுப்பில்லை" (நான்மணிக். 56)

1522. நெறிநீர் - கடல். நிழல் - ஒளி. பொறிநீராகிய வளையை யும் நித்திலத்தையும் புனைந்து என மாறியியைக்க ; பொறிநீர - பொறித் தாற்போலும் தன்மையனவாக. எழுதி - தோள்மேல் கரும்பையும் முலையின்மேல் தொய்யிற்கொடி முதலியவற்றையும் எழுதி ; " நெடு மென்றோட், பெய்கரும் பீர்க்கவும் வல்ல னிளமுலைமேற், றொய்யி

(இ - ள்.) அவனிணைவையமர்ந்த தோளிணைகாள்! பொறித்தாற் போலும் தன்மையவாக வளையையும் முத்தையுமணிந்து [1] கரும்பையு மெழுதி உம்மைப் புகழும் மணத்தையுடைய தாரவன் எவ்விடத்தே போயினன்? முயக்கத்தை நெகிழ்ந்துபோகவிட்ட நீர் இவன் போன விடம் அறிவீர்; நும்மை இன்னும் யான் புகழ்தற்கு அவ்விடத்தைக் கூறீரென்றாளென்க. (கககக)

1523. இழுதார் சுடர்வே லிளையா னகலத்
துழுதீ ருடன்வெம் முலைகாள் வயிரத்
தொழுவாய் விடையைத் தொடர்கிற் றிலிரென்
றழுதா டடமா கவணாங் கிழையே.

ஓரிடத்தும் பற்றின்றி யிருத்தலின், விடை. முறித்தற்காகாமையின், 'வயிரத்தொழு' என்றாள்.

(இ - ள்.) அணங்கிழை, முலைகாள்! இளையானகலத்தே சேரச் சின்னாளுழுதநீர் அவ்வுழவின்பயனை முற்றப்பெற்றுவிடுமளவும் போகாத படி அவனைத் தொழுவாய்ப் பிணித்திலீர்; நுமக்கும் அஃதரிதாயிற்று; இனி யான் செய்வதென்னென்று தடமாக அழுதாளென்க. (ககஉ)

1524. தகைவா டியதன் னிழல்கண் ணுருநீர்
வகைவா டிவருந் தியழு வதுகண்
டகையே லமர்தோ ழியழே லவரோ
பகையா பவரென் றனள்பான் மொழியே.

லெழுதவும் வல்லன்" (கலித். 143 : 31-3). வெறி - வாசனை. தாரவன் : சீவகன். 'நீர்' என்றது தோள்களை. அறிவீர் - அவன்போன இடத்தை அறிந்துள்ளீர். அமர்தல் - விரும்புதல்.

1523. இழுது ஆர் - நெய்பூசிய; இழுது - நெய்; சீவக. 445. வேலினையுடைய இளையானகலத்து; இளையான் : சீவகன். அகலம் - மார்பு. உழுதீரென்றது, நகில்களை. உழுதல் - முயங்குதல். உடன் - அவ்வுழுதலுடன். தொழுவாய் - தொழுவிடத்து. விடையை - ஏறுபோல் வாளுகிய சீவகனை. "வையைத் தொழுவத்துத் தந்து வடித்திடித்து, மத்திகை மாலையா மோதி யவையத்துத், தொடர்ந்தே மெருது தொழில் செய்யா தோட, விடுங்கடன் வேளாளர்க் கின்று" (பரி. 20 : 60 - 63). தொடர்கிற்றிலிர் - பிணித்திலீர். தடமாக அழுதாள்; தடமாக - கண்ணீர் ஒரு தடாகமாகும்படி; சீவக. 830. அணங்கிழை : கேமசரி; எழுவாய்.

(மேற்.) அடி, 4 : நன். பொது. 5, மயிலை; இ - வி. பொது. 35.

1524. பான்மொழி : கேமசரி. தகைவாடிய - அழகு கெட்ட. அமர் தோழி - அன்பு பொருந்திய தோழி; என்றது தன் நிழலைநோக்கி. அகையேல் - வருந்தாதே. அழேல் - அழாதே. அவர் - சீவகன். ஆபவரோ - ஆவாரோ : ஆகாரென்றபடி; ஓ : எதிர்மறை. பான்மொழி,

(இ - ள்.) பான்மொழி, தானழுத கண்ணீரிலே தோற்றின தன் அழகு கெட்ட நிழல் வாடி வருந்தி அழுவதனைக்கண்டு, எனக்கு அன்பமர்ந்த தோழி! நீ வருந்தாதேகொள்; அழுவதுஞ்செய்யாதே கொள்; முடிவில் அவர் நமக்குப் பகையாவரோவென்று ஆற்றுவித்தா ளென்க.

ஓகாரம் எதிர்மறை. இனிப் பளிங்கிற்றோற்றிய நிழலுமாம். (கக௩)

1525. வெறிமா லைகள்வீழ்ந் துநிலம் புதையப்
பொறிமா லைபுனை நிழல்கா ணலளாய்
நெறிநா டியபோ யினணீ டினள்கண்
டெறிவாள் வளைகொண் டுவரும் மினியே.

பொறிமாலை - விதியை இயல்பாகவுடையாள்; பெயர்.

(இ - ள்.) தன் தலையின்மாலைகள் வீழ்ந்து கண்ணீரையுடைய நில மறைதலின், பொறிமாலை, அந்நிழலாகிய தோழியைக் காணாளாய், அவள், அவன் போனவழியைத் தேடுதற்குப்போனாள்; நீட்டிப்பதுஞ் செய்தாள்; இனி அவனைக்கண்டு வளையைக்கொண்டு வருவாளென்றாளென்க.

எனவே அவனைத் தான் கொண்டுவருமென்றுளாம். (கக௪)

1526. மடமா மயிலே குயிலே மழலை
நடைமா ணனமே நலமார் கிளியே
உடனா டுமெனை யனையென் றுருகாத்
தொடையாழ் மழலை மொழிசோர்ந் தனளே.

நலமார் மழலைக்கிளி.

---

கண்ணுக்கு நீரில் தன்தகை வாடிய நிழல், வகை வாடி வருந்தி அழுவது கண்டு, அமர்தோழி, அகையேல் அழேல், அவர் பகையாபவரோ வென்றனள் என மாறி முடிக்க.

1525. வெறி - வாசனை. நிலம்புதைய - கண்ணீரையுடைய நிலத்தே மறைதலால். பொறிமாலை - ஊழ்வினையை இயல்பாகவுடைய கேமசரி. நிழல் - நிழலாகிய தோழியை. நெறிநாடிய - சீவகன்சென்ற வழியைத் தேடுதற்கு. நீடினள் - தாமதித்தாள். இனி, கண்டு எறிவளைகொண்டு வரும் என மாறியியைக்க. கண்டு - சீவகனைப் பார்த்து. எறிவளை - அறுக்கப்படும்வளை; சிலப். 7 : 12, அரும்பத. வரும் - வருவாள்.

1526. மழலை மொழியையுடைய நடைமாண் அனமே எனலுமாம்; நடைமாண் - நடையினால் மாட்சிமைப்பட்ட. அடி : 1 - 2 : "மணிக் கண் மஞ்ஞையு மழலை யன்னமும்............கருங்குயிற் பெடையுங்,......... கிளியும்" (பெருங். 2. 15 : 28 - 30). உடன் ஆடும் - என்னுடன் விளையாடும். ஐயனை : சீவகனை. என்று - என்று சொல்லி. உருகா - மனமுருகி. தொடை - நரம்பு. யாழ்போலும் மழலைமொழி; கேமசரி. சோர்ந்தாள் - மயில் முதலியவற்றிற்குக் கூறும் காரியத்தை மறந்தாள். இக்கவியும் இதன் பழைய உரையும் மிக இன்புறற்பாலன.

(இ - ள்.) யாழ்போலு மழலைமொழியையுடையாள், மயில் முதலிய வற்றை விளித்து, என்னுடனே விளையாடும் என் ஐயனையென்ற வளவிலே, உருகி, அவற்றிற்குக் [1] கூறுகின்ற காரியத்தை மறந்தா ளென்க. 'ஐயனை' என்னும் இரண்டாமுருபிற்கு, 'தேடுமின்' என்னும் வினைவருவிக்க. (கக௫)

(வேறு)

1527. (க) மல்லுறை யலங்கன் மார்பன் பிரிவெனு மெரியுள் வீழ்ந்து, கல்லுறை நாகு வேய்த்தோட் கதிர்மணி முறுவற் செவ் வாய், வில்லுறை புருவ மாதர் வெந்தனள் கிடப்ப மின்றோய், இல்லுறை தெய்வ நோக்கி யிரங்கிநின் றுரைக்கு மன்றே.

1528. (உ) புண்ணவாம் புலவு வாட்கைப் பொலன்கழற் புனைந்த பைந்தார்க், கண்ணவாம் வனப்பி னானைக் காமனே கண்ட போழ்தும், பண்ணவாம் பவளச் செவ்வாய்ப் படாமுலைப் பரவை யல்குற், பெண்ணவா நிற்கு மென்றாற் பிணையனாட் குய்த லுண்டோ.

---

(உரை) [1] கூறுகின்ற காரியமாவது, 'தேடுமின்' என்றது.

1527. மாதர், மார்பனது பிரிவெனும் எரியுள் வீழ்ந்து வெந்தன ளாய்க் கிடப்பநோக்கி, இரங்கி நின்றுரைக்கும் இல்லுறை தெய்வம் என மாறியியைக்க. மல்லுறை - மற்றொழில் பொருந்திய. மல்லுறை மார் பன், அலங்கலையுடைய மார்பனென்று தனித்தனிப் பிரித்தியைக்க; மார்பன் : சீவகன். பிரிவெனும் எரி ; "பிரிவி னுஞ்சுடு மோபெருங் காடு" (கம்ப. நகர்நீங்கு. 226). கல் - மலை. நாகுவேய் - இளைய மூங்கில். வில்உறை - வில்லின் தன்மை பொருந்திய. தோளையும், முறுவலையும், செவ்வாயையும், புருவத்தையுமுடைய மாதர் என்க; மாதர் : கேமசரி. மின்தோய் - ஒளிபொருந்திய. நோக்கி - கேமசரியைப் பார்த்து. இரங்கி - வருந்தி.

1528. புண்ணை அவாவும் வாள் ; புலவு வாளுக்கு அடையாய் நின்றது. பொலன்கழல் - பொன்னாலாகிய வீரக்கழல். கண் அவாம் - பார்ப்பவருடைய கண்கள் விரும்புகின்ற. கையினையும், கழலினையும், தாரினையுமுடைய கண் அவாவும் வனப்பினான் என இயைக்க ; வனப் பினான் : சீவகன். பண்அவாம் - இராகம் விரும்புகின்ற ; இதன்பின் 'மொழி' என ஒருசொல் வருவிக்க. பண்அவாவும் மொழியினையும், செவ்வாயையும் முலையையும், அல்குலையுமுடைய பெண் என்க. பெண் அவாநிற்கும் - பெண்மைத் தன்மையை விரும்பும் ஆசை மனத்தில் நிற்கும். காமனும் பெண்மையை விரும்பும் வனப்பினான் : "ஆடவர் பெண்மையை யவாவுந் தோளினாய்" (கம்ப. தாடகைவதை. 24). பிணையனாட்கு - பெண்மான் போன்ற கேமசரிக்கு. உய்தல் - பிழைக்குந் தன்மை.

1529. (ரு) கடத்திடைக் கவளந் தேனெய் கனியைத் தோய்த் தினிய துற்றத், தடக்கையாற் கொடுத்துப் புல்லுந் தவழ்மதக் களிறு நீங்கின், மடப்பிடிக் குய்த லுண்டோ வாலடிக் குஞ்சி சூட்டும், கொடைக்கையான் பிரிந்த பின்றைக் கோதையாட் குய்தலுண்டோ.

இவைமூன்றும் ஒருதொடர்.

(உ) புண்ணை அவாவும் வாள். காமனே : ஏகாரம் பிரிநிலை. பெண்ணை வாயும் பாடம்.

(இ - ள்.) மலையிடத்தேநின்ற இளைய வேய்போலுந் தோள் முதலிய வற்றையுடைய மாதர் கணவன் பிரிவாகிய எரிக்குள்ளே வீழ்ந்து வெந்தன ளாய்க் கிடந்தவளவிலே, அவளைநோக்கி வருந்திநின்று கூறும் இல்லுறை தெய்வம், கைமுதலியவற்றையுடைய கண்ணவாவும் வனப்பினுனைக் காமனேயுட் படக் கண்டபொழுதும் அவற்கு வாய்முதலியவற்றையுடைய பெண்டன்மையை யெய்துவதோராசை நெஞ்சிலே நிற்குமென்றால் இவட் குப் பிழைத்தலுண்டோ? தேனெய்யைக் கனியைத் தோய்த்தலாலே இனி யவாகிய கவளத்தைத் துற்றும்படி கையாலேகொடுத்துப் புல்லுங் களிறு நீங்கின், பிடிக்குக் கடத்திடை உய்யுந்தன்மையுண்டாமோ? அதுபோல ஊடறீர்த்துப் புணரும் கொடைக்கையான் பிரிந்தபின்பு கோதையாட்குப் பிழைக்குந்தன்மை யுண்டாமோவென்று கூறிற்றென்க. (கக௬-அ)

1530. முயங்கினான் சொன்ன வண்டாய் முகிழ்முலைத் தெய் வஞ் சேர, உயங்குவா ளுணர்ந்து கேள்வற் கூனமும் பிரிவு மஞ்சி, இயங்குவா னின்ற வாவி தாங்கின ளென்ப போலும், வயங்குபொன் னீன்ற நீல மாமணி முலையி னாளே.

---

1529. கடம் - காடு. தேனெய்யிற் கனியைத் தோய்த்து இனிய வாகிய கவளத்தைத்துற்ற என மாறியியைக்க; துற்ற - உண்ணும்படி. புல்லும் - தழுவுகின்ற. களிறு - ஆண்யானை. நீங்கின் - பெண்யானையை விட்டுப் பிரிந்தால். பிடிக்குக் கடத்திடை உய்தலுண்டோ என மாறி யியைக்க; உய்தல் - பிழைத்திருக்குந்தன்மை. அடிக்குஞ்சி சூட்டும் - ஊடலைத் தீர்ப்பதற்காகக் கேமசரியின் பாதத்திலே தன் தலையை அணி விக்கின்ற. கொடைக்கையான் : சீவகன். கோதையாட்கு : கேமசரிக்கு. கேமசரிக்குப் பெண்யானையும், சீவகனுக்கு ஆண்யானையும் உவமை.

1530. தெய்வம் - இல்லுறை தெய்வம். கேள்வற்கு : சீவகனுக்கு. ஊனம் - குறைபாடு; இங்கே பெண் பழி. பிரிவு - இறத்தல். என்ப போலும் - என்று கூறுவனபோன்ற. முயங்கினான் : சீவகன்; அவன் சொன்ன வண்டு : சீவக. 1502. தெய்வம் வண்டாய்ச் சேர என இயைக்க. உயங்குவாள் : கேமசரி; உயங்குதல்-வருந்துதல். இயங்குவான் நின்ற

ஊனம் - பழி. பிரிவு - இறந்துபாடு. பொன் - பசப்பு.

(இ - ள்) தெய்வம், நினது இறந்துபாடு நின்கேள்வற்கு ஊனமும் பிரிவுமாமென்று கூறுவதுபோலும், முயங்கினன்கூறிய வண்டாய்ச் சேர்தலின், முலையினள், வருந்துகின்றவள், அதனைக்கண்டு உணர்ந்து அஞ்சிப் போதற்கு ஒருப்பட்டுநின்ற ஆவியைப் போகாமல் தாங்கினுளென்க.

அவன், "துணைவண்டு துஞ்சி னீயுந் துஞ்சுவை" (சீவக. 1502) என்றதனை நினைத்து ஆற்றினுள்; தன் தெய்வத்தன்மையால் அதனைத் தெய்வம் நினைப்பித்தது. (கககூ)

1531. வஞ்சவாய்க் காமன் சொன்ன மணிநிற வண்டு காணீர், துஞ்சுவேன் றுயரந் தீரத் தொழுதகு தெய்வ மாவீர், மஞ்சு தோய் செம்பொன் மாடத் தென்மனை தன்னு ளென்றுள், பஞ்சி மேன் மிதிக்கும் போதும் பனிக்குஞ்சீ றடியி னுளே.

துணைவண்டையும் நெஞ்சாலேகருதி, 'வண்டுகாள்' என்றுள்.

(இ - ள்.) சீறடியினுள், காமன்சொன்னவண்டுகாள்! நீங்கள் இறந்து படுவேனது துயரந்தீரும்படி என்மனைதன்னுள் தெய்வமாவீராக வென்றுளென்க.

நும்மால் இறந்துபாடு நீங்கினேன்; இனி, இரங்காத நும்மைக் கண்டு இரக்கமுந்தீரும்படி இல்லுறை தெய்வமாயிருப்பீரென்றுள்; "இரக்குமே யிரங்க லின்றுய்" (சீவக. 1502) என்றுறுதலின். இது தெய்வத்தன்மையாற் கூறுவித்தது தெய்வம். (கஉo)

1532. நொந்தெடுக் கலாது வீங்கும் வனமுலை நுசுப்பிற் றேய்ந்தோர், பந்தெடுக் கலாத நங்கை பால்கடை வெண்ணெய்ப் பாவை, வெந்துடன் வெயிலுற் றுருங்கு மெலிந்துக விளங்கும் வெள்ளி, வந்துவா னிட்ட சுட்டி வனப்பொடு முளைத்த தன்றே.

---

ஆவி - உடலைவிட்டுப் போதற்குத் துணிந்துநின்ற உயிரை. தெய்வம், கேள்வற்கு ஊனமும் பிரிவும் என்று சொல்லுவன போலும், முயங்கினன் சொன்ன வண்டாய்ச் சேர்தலின், முலையினளாகிய உயங்குவாள், உணர்ந்து அஞ்சி, இயங்குவான் நின்ற ஆவியைத் தாங்கினள் என மாறிமுடிக்க.

1531. வஞ்ச வாய்க்காமன் - பொய் கூறிய வாயையுடைய சீவகன். துஞ்சுவேன் - இறந்துபோவேனுடைய. தொழுதகு - வணங்கத்தக்க. மஞ்சு - மேகம். மாடத்தையுடைய என்மனை தன்னுள். பனிக்கும் - வருந்துகின்ற. பஞ்சி...சீறடி : திருச்சிற். 209. சீறடியினுள் : கேமசரி. சீறடியினுள், வண்டுகாள், நீர் என்மலைதன்னுள் தெய்வமாவீர் என்றுள் என மாறிமுடிக்க.

1532 முலையை எடுக்கலாது நொந்து தேய்ந்த நுசுப்பாலே ஓர் பந்தெடுக்கலாத நங்கை என மாறியியைக்க; எடுக்கலாது - தாங்கமுடியாமல். நங்கை : கேமசரி. பாலிலிருந்து கடைந்தெடுத்த வெண்ணெய். வெண்ணெய்ப்பாவை வெயிலுற்று உடன் வெந்தாங்கு மெலிந்துக என மாறியியைக்க; "வெயில்வெண்ணெய்ப் பாவைபோன் மெலிகின் றுரே", "வெண்ணெய்க்குன் றெரியுற் றுற்போன் மெலிந்துபின் னிற்கு மன்றே"

வீங்குமுலையை எடுக்கமாட்டாது நொந்து தேய்ந்து வருந்து நுசுப் பாலே பந்தெடுக்கலாத நங்கையென்று அவளியல்புகூறினர் ; 'வருந்தும்' என வருவிக்க. இனி, [1] நுசுப்புப்போல் தேய்ந்தென்றுமாம்.

**(இ - ள்.)** நங்கை, ஈண்டு வெண்ணெய்ப்பாவை வெயிலுற்று உடனே வெந்தாற்போல உகாநிற்க, வானுக்கிட்ட சுட்டிபோல வெள்ளி வந்து முளைத்ததென்க.

இறந்துபாடுநீங்கி வருந்தினள். (கஉக)

1533. எரிநுதி யுற்ற மாவி னிளந்தளிர் போன்று மாழ்கிப், புரிநரம் பிசையிற் றள்ளிப் புன்கணுற் றழுத லாலே, அரிகுரற் கொண்ட பூச லகத்தவர்க் கிசைப்ப வீண்டித், திருவிரி கோதை நற்றாய் நிப்புதி சேர்ந்து சொன்னாள்.

[1] ஈண்டி - ஈண்ட.

(இ - ள்.) எரியைச்சேர்ந்த தளிர்போலேமயங்கித் தன்மிடற்றை நரம்போசையினின்றும் நீக்கி வருத்தமுற்று அழுதலாலே, அவ்வோசை அகத்திலுள்ளார்க்கு இசைப்ப, அவர் திரண்டவளவிலே அவணற்றாயாகிய நிப்புதி அணுகி ஒருமொழி கூறினளென்க. (கஉஉ)

1534. விழுத்திணைப் பிறந்து வெய்ய வேட்கைவே ரரிந்து மெய்ந்நின், றிழுக்கமொன் றானு மின்றி யெய்திய தவத்தின் வந்து, வழுக்குத லின்றி விண்ணோன் வச்சிர நுதியி னிட்ட, எழுத்தனான் றந்த வின்ப மின்னுநீ பெறுதி யென்றாள்.

---

(சீவக. 682, 1597); வெந்தாங்கு-வெந்ததைப்போல. உக - கெட. வானுக் கிட்ட சுட்டிபோலும் வனப்பொடு வெள்ளிவந்து முளைத்தது என மாறி யியைக்க. வான் - ஆகாயம். சுட்டி : நெற்றியில் அணிவது. வெள்ளி - சுக் கிரன். வெள்ளிமுளைத்தது என்றது விடியற்காலத்தைக் குறிப்பித்தது.

(உரை) [1] "மென்மருங்குல்போல் வேறுள வங்கமு மெலிந்தாள்" (கம்ப. காட்சிப். 3)

1533. எரிநுதி உற்ற - நெருப்பின் நுனியைச்சேர்ந்த. மா-மாமரம். எரியுற்ற தளிரின் மாழ்கி : குறுந். 383 : 5 ; மாழ்கி - மயங்கி. புரிநரம்பு இசையிற்றள்ளி - தன் கண்டத்தொலியை, முறுக்கிவிடப்பட்ட நரம்பை யுடைய யாழொலியினின்றும் வேறாக நீக்கி. புன்கண் - வருத்தம். அரி குரற் கொண்ட பூசல் - கேமசரியது, அரித்து எழும் குரலாற்கொண்ட அழுகை. அகத்தவர்க்கு - வீட்டிலுள்ளவர்களுக்கு. இசைப்ப - ஒலித்தல் செய்ய. ஈண்டி - அகத்தவர்கள் கேமசரியிருக்குமிடத்திற் கூட ; ஈண்டி - ஈண்ட. திருவைப் போன்ற நற்றாய், விரிந்த கோதையையுடைய நற்றாய்; நற்றாயாகிய நிப்புதி. சேர்ந்து - கேமசரியின் அருகே அடைந்து.

(உரை) [1] எச்சத்திரிபு.

1534. விழுத்திணை - சிறந்த குடியில். மெய்ந்நின்று இழுக்கம் ஒன்றானுமின்றி வேட்கைவேர் அரிந்து என மாறியியைக்க ; மெய்நின்று-

விண்ணோன் வச்சிரநுதியினிட்டவெழுத்தனன் - அயன்வச்சிரத்தா லிட்ட எழுத்துப்போலே தப்பாதவன்.

(இ - ள்.) உயர்ந்தகுடியிலேபிறந்து உண்மையிலேநின்று சன் மார்க்க நெறியில் தப்பொன்றுமின்றி வேட்கையாகிய பிறவியின் வேரை யரிந்து நாம் முன்செய்த தவத்தினாலே எழுத்தன்னான் வந்து தந்தவின் பத்தை, வழுக்குதலின்றி இன்னும் நீயேபெறுவையென்றாளென்க. (௧௨௩)

1535. பிறங்கின கெடுங்கள் யாவும் புணர்ந்தவர் பிரிவர் பேசின், இறங்கின வீழு மேலா யோங்கிய வெண்ணில் யோனிப், பிறந்தவர் சாவர் செத்தார் பிறப்பவே யென்ன நோக்கிக், கறங் கிசை வண்டு பாடுங் கோதைநீ கவல லென்றாள்.

(இ - ள்.) கோதாய்! மேலாய் வளர்ந்தன தாழ்ந்து வீழும்; பிறந் தவரெல்லாரும் சாவர்; செத்தாரெல்லாரும் பிறப்பர்; இன்னுங்கூறின், மிக்க வனப்புக்களெல்லாம் ஒருகாற் கெடும்; அங்ஙனங்கெட்டாலும் பிரிந்தவர்களெல்லாரும் புணர்வரேயென்று பார்த்து நீ கவலாதேகொள் ளென்றாளென்க.

பிறங்கினகள்யாவுமெனவும், [1] பிரிந்தவர்புணர்வரெனவு மாறுக. (௧௨௪)

1536. எரிதலைக் கொண்ட காமத் தின்பநீர்ப் புள்ளி யற்றாற், பிரிவின்கட் பிறந்த துன்பம் பெருங்கட லனைய தொன்றால், உருகிநைந் துடம்பு நீங்கி னிம்மையோ டும்மை யின்றி, இரு தலைப் பயனு மெய்தாரென்றுயாங் கேட்டு மன்றே.

---

உண்மையிலேநின்று. இழுக்கம் - தப்பு. ஒன்றுனும் - சிறிதாயினும். வேட்கைவேர் அரிந்து - ஆசையாகிய வேரினை அறுத்து; சீவக. 409, அடிக். எய்திய தவத்தின் - நாம் முன்செய்த தவத்தினால். விண்ணோன் வச்சிர நுதியினிட்ட எழுத்தனன் வந்து தந்த இன்பத்தை வழுக்குத லின்றி இன்னும் நீ பெறுதி என்றாள் என மாறியியைக்க; விண்ணோன்: பிரமன். எழுத்தனன்: சீவகன். வச்சிரநுதியினிட்ட எழுத்து: சீவக. 544, ந. வழுக்குதலின்றி - தப்புதலில்லாமல். இதுமுதல் நான்குபாடல் கள் நிப்புதியின் கூற்று.

1535. பிறங்கினகள் யாவும் - மிக்க அழகுகளெல்லாம்; கள்: அசை. மேலாய் ஓங்கிய இறங்கின வீழும்; இறங்கின - தாழ்ந்தனவாய். பிறப்ப- பிறப்பார்கள். கவலல் - வருந்தாதே.

(உரை) [1] விகுதிபிரித்துக் கூட்டுக; பிரயோக. 19, உரை.

1536. நீர்ப்புள்ளியற்றால்-நீர்த்துளியை யொத்திருக்கும். கடலனைய தொன்றால் - கடலை ஒப்பதாயிருக்கும்; ஆல் இரண்டும் அசை. நீர்த்துளி சிறுமைக்கும், கடல் பெருமைக்கும் கூறப்பட்டன. உருகிநைந்து - பிரிவினாலே மனமுருகி வருந்தி. இம்மை - இப்பிறப்பு. உம்மை - மறு

(இ - ள்.) காமத்திடத்துப் புணர்ச்சியாற்பெறுமின்பம் நீர்த் துளியை யொத்திருக்கும்; பிரிவாற்பிறந்த துன்பம் பெரியகடலையொப்ப தொன்றுயிருக்கும்; ஆதலின், இப்பிரிவாலே பெறுதற்கரிய மக்கள் யாக்கை நீங்குமாயின், இம்மையிலும் மறுமையிலும் செய்துகொள்ளு நன்மையுமின்றி, இரண்டிடத்துப் பெறும் பயனையும் பெருரென்று உணர்ந்தார் கூறக்கேட்டிருப்போமல்லவோ? ஆதலின், இது தகாதுகா ணென்றுளென்க. (கஉரு)

1537. மன்னுநீர் மொக்கு ளொக்கு மானிட ரிளமை யின்பம்,
மின்னினைத் திறக்குஞ் செல்வம் வெயிலுறு பனியி னீங்கும்,
இன்னிசை யிரங்கு நல்யா ழிளியினு மினிய சொல்லாய்,
அன்னதால் வினையி னாக்க மழுங்குவ தென்னை யென்றாள்.

(இ - ள்.) இனிய சொல்லாய்! மக்களிளமை மிகவும் நீர்மொக்குளை யொக்கும்; அவரின்பம் மின்னையொத்துத் தோன்றி மாயும்; அவர் செல்வம் வெயிலைக்கண்ட பனிபோல் நீங்கும்; ஆதலின், தீவினையினாக் கம் அப்படி வலிதாயிருக்கும்; இதற்கு வருந்திப் பெறுவது என்னை யென்று ஆற்றுவித்தாளென்க.

இசையொலிக்கும் யாழின் இளியென்னுநரம்பு. (கஉசா)

1538. பஞ்சிறை கொண்ட பைம்பொற் கலைபுறஞ் சூழ்ந்து வைத்து, நஞ்சிறை கொண்ட நாகப் படம்பழித் தகன்ற வல்குல்,
வெஞ்சிறைப் பள்ளி யாக விழுமுலைத் தடத்து வைகத்,
தஞ்சிறைப் படுக்க லாதார் தம்பரி வொழிக வென்றாள்.

பஞ்சு : ஆகுபெயர்.

---

பிறப்பு. இன்றி - செய்து கொள்ளும் நன்மையில்லாமல். இருதலைப் பயன் - இம்மைப்பயனும் மறுமைப்பயனும். கேட்டுமன்றே - கேட்டிருப் போமல்லவோ.

1537. மானிடரது இளமைக்கு நீர் மொக்குள்: "நீரிற் குமிழி யிளமை" (நீதிநெறி. 1); நீர்மொக்குள் ஒக்கும் - நீர்க்கொப்புளம்போல் விரைவில் அழியும்; "துளிப்பெயன் மொக்குளினெளித்த லஞ்சுவென்" (பெருங். 1. 36 : 343). இன்பம் மின்னினைப்போல் இறக்கும்; இறக்கும்- தோன்றியவுடன் மறையும். மொக்குளும் மின்னும் உவமை : சீவக. 2754. இரங்கும் - ஒலிக்கின்ற. யாழ் இளியினும் - வீணையினது இளி யென்னும் நரம்பினொலியைக் காட்டிலும்; "இளிகொண்ட தீஞ்சொ லிளமா வெயிற்றி" (பு - வெ. 15). வினையின் ஆக்கம் அன்னதால் - தீவினையின் செயல் அத்தன்மையுடையது; ஆல் : அசை. அழுங்கு வது - வருந்துவது.

1538. பஞ்சு - ஆடை; ஆகுபெயர். இறைகொண்ட - தங்குதல் கொண்ட. கலை - மேகலை. புறம்சூழ்ந்து - புறத்தே காவலிட்டு. நஞ்சு -

(இ - ள்.) நஞ்சு குடிகொண்ட பாம்பினது படத்தைப்பழித்து அகன்ற, துகில் தங்கின, பைம்பொற்கலையையுடைய அல்குலாலே புறத்தே காவலிட்டு வைத்து முலைத்தடந்தான் ஒருசிறைக்கோட்டமாக அம்முலைத்தடத்தே தங்கும்படி தம்பாலே அகப்படுத்தமாட்டாதமகளிர் தம்முடைய வருத்தத்தைத் தவிர்வாராகவென்றாளென்க.

இது, கேமசரி தன்னிலேகூறி ஆற்றினாள்; தாய்கூற்றுமென்பர். (கஉஎ)

1539. வாசமிக் குடைய தாரான் வண்டினுக் குரைத்த மாற்றப், பாசத்தா லாக்கப் பட்ட வாவிய ளல்ல தெல்லாம், பேசினோர் பிணையன் மாலை பிசைந்திடப் பட்ட தொத்தாள், தூசுலாம் பரவை யல்குற் றூமணிப் பாவை யன்னாள்.

(இ - ள்.) மணிப்பாவையன்னாள், வாசமுடைய தாரான் வண்டினுக் குக்கூறிய வார்த்தையாகிய பிணிப்பாலே அன்பு மிக்குண்டாக்கப்பட்ட உயிரொன்றையுமுடையாள், அவ்வுயிரொழிய உடம்புமுழுவதும் நாம் சொல்லிற் பிசைந்து போகட்டதொரு கட்டுதலையுடைய மாலையை யொத்தாளென்க.

அல்லதெல்லாம் மாலையையொத்தாளெனச் சினைவினை முதலொடு முடிந்தது. எல்லாமென்றது ஒருபொருளின் பலவிடங்குறித்துநிற்றல், "பல்வழிநுதலிய" (தொல். பெயர். 32) என்றதனாற்கொள்க. (கஉஅ)

1540. பையர விழுங்கப் பட்ட பசுங்கதிர் மதிய மொத்து
மெய்யெரி துயரின் மூழ்க விதிர்விதிர்த் துருகி நையும்
மையிருங் குழலி னுடன் மைந்தனை வலையிற் சூழ்ந்து
கையரிக் கொண்டுங் காணாள் காளையுங் காலிற் சென்றான்.

---

விடம். சிறைப்பள்ளியாக - சிறைச்சாலையாக. வைக - தங்கும்படி. தம் சிறைப்படுக்கலாதார் - தம்பால்அகப்படுத்தமாட்டாத மகளிர். பரிவு - வருத்தம். அல்குலால் புறஞ்சூழ்ந்துவைத்து முலைத்தடம் பள்ளியாக வைகச் சிறைப்படுக்கலாதார் பரிவொழிக வென்றாள் என மாறிமுடிக்க. (மேற்.) மு. சிலப். 8 : 45 - 71, அடியார்.

1539. தாரான் : சீவகன். மாற்றப் பாசத்தால் - வார்த்தையாகிய கயிற்றால். ஆக்கப்பட்ட - அன்பு மிகுதியால் உண்டாக்கப்பட்ட; நீங் காதபடி கட்டப்பட்ட எனலுமாம்; சீவக. 1882, ந. அல்லதெல்லாம் - உயிரொழிய உடம்பெல்லாம். பேசின் - கூறுமிடத்து. பிசைந்திடப் பட்டதொருபிணையல் மாலையை ஒத்தாள் என மாறியியைக்க; பிணையல்- கட்டுதல். தூசு - ஆடை. மணியாற் செய்த பாவையன்னாள் என்றது கேமசரியை. பாவையன்னாளாகிய ஆவியள், பிணையல் மாலையை ஒத் தாள் என மாறிமுடிக்க.

1540. அரவால் விழுங்கப்பட்ட மதியத்தை ஒத்து; "பாம்புசேர் மதிபோலப் பசப்பூர்ந்து" (கலித். 15 : 17); "அரவுநுங்கு மதியி னுதலொளி கரப்ப" (அகநா. 313 : 7). எரியும் துயரத்தில். விதிர் விதிர்த்து - நடுநடுங்கி; (பி - ம்.) 'விதுவிதிர்த்து.' குழலினாள் : கேமசரி. தன் மைந்தன் - தன் கணவனாகிய சீவகனை; மைந்தன் -

(இ - ள்.) பாம்புதீண்டின மதியையொத்துப் பசந்து மெய் எரியுந் துயரத்திலே மூழ்கும்படி நடுநடுங்கி நெஞ்சுசுருகி நையுங்குழலினுள், தன் கணவனை வலைபோலே கையரிக்கொண்டு தேடியும் கண்டிலள்; அவனும் காலாலே நடந்துபோனானென்க.

[1] அரா : விகாரம். காலின், காற்றுப்போலேயென்றுமாம். (கஉகூ)

1541. காழகச் சேற்றுட் டீம்பால் கதிர்மணிக் குடத்தி னேந்தி, வீழ்தரச் சொரிவ தேபோல் விளங்கொளித் திங்கட் புத்தேள், சூழிருட் டொழுதி மூழ்கத் தீங்கதிர் சொரிந்து நல்லார், மாழைகொண் முகத்திற் றோன்றி வளைகடன் முளைத்த தன்றே.

(இ - ள்.) பாலைப் பளிக்குக்குடத்தேயெடுத்துக் கருஞ்சேற்றிலே வீழும்படி சொரியுந்தன்மைபோலே திங்களாகிய தெய்வம் தன்கதிரை இருளிலே குளிக்கும்படி சொரிந்து மகளிருடைய பசத்தல்கொண்ட முகம்போலே தோன்றி முளைத்ததென்க.

மாழை - பொன். விடியற்காலத்தெழுந்த நிலவு இருளைக்கெடுத்த லாற்றாமையின், இங்ஙனங் கூறினார். (கங௦)

1542. ஏறனாற் கிருளை நீங்கக் கைவிளக் கேந்தி யாங்கு
வீறுயர் மதியந் தோன்ற விரைவொடு போய பின்றை
மாறிலாப் பருதி வட்டம் வருதிரை முளைத்த வாங்கண்
ஆறுசெ லொருவற் கண்ண லணிகல மருள லுற்றான்.

---

கணவன்; "நினக்கிவன் மகனாத் தோன்றிய தூஉம்" (மணி. 21 : 29) என்புழி மகனென்பதுபோல. வலையின் - வலையினைப்போல. கையரிக் கொண்டு சூழ்ந்தும் - கைகளால் அரித்தல்கொண்டு தேடியும். கையரிக் கொண்டு : சீவக. 38, அடிக். காளை - சீவகன். காலின் - காலால்.

(உரை) [1] அராவென்பது அரவெனக் குறியதன் இறுதிச்சினை கெட்டது; தொல். உயிர்மயங்கு. 32.

1541. பாலை மணிக்குடத்தினேந்திக் காழகச் சேற்றுள் வீழ்தரச் சொரிவதேபோல் எனமாறியியைக்க; மணிக்குடம் - பளிங்காற் செய்த குடம்; காழகம் - கருமை; வீழ்தர - வீழும்படி. திங்களாகிய புத்தேள்; புத்தேள் - தெய்வம் : புறநா. 27 : 14. புத்தேள், கதிரை இருட்டொழுதி மூழ்கச்சொரிந்து என மாறியியைக்க; இருட்டொழுதி - இருட்கூட்டத்தில். திங்களுக்குப் பாற்குடமும், இருளுக்குக் கருஞ்சேறும் உவமை. நல்லார் - மகளிரது. மாழைகொள் முகத்தின் - பசலைகொண்ட முகத்தைப்போல; மாழை : பொன்; பசலைநிறம்; "தன்சொ லுணர்ந்தோர் மேனி, பொன்போற் செய்யு மூர்கிழ வோனே" (ஐங்குறு. 41 : 3 - 4). கடலில் தோன்றி முளைத்தது என மாறியியைக்க. அன்று, ஏ : அசைகள்.

1542. ஏறனாற்கு : சீவகனுக்கு. கைவிளக் கேந்தியாங்கு இருளை நீங்கும்படி மதியம்தோன்ற என மாறியியைக்க : "கைவிளக் கெடுத்த

(இ - ள்.) ஏறனுற்குக் கைவிளக்கெடுத்தாற்போல, வழி இருளைக் கைவிடும்படி மதி தோன்றுதலாலே போயபின்பு, நிகரில்லாத ஞாயிற்றினது வட்டம் கடலிலே முளைத்தவளவிலே, தலைவன் வழிப்போவானொருவனுக்கு அணிகலங்களைக் கொடுக்கலுற்றானென்க. (௲௫௪௧)

(வேறு)

1543. எவ்வூரி ரெப்பதிக்குப் போந்தீர்நும் மனைவியர்தா மெனைவர் மக்கள், ஒவ்வாதார் தாமெனைவ ரொப்பார்மற் றெனைவர்நீ ருரைமி னென்றாற், கிவ்வூரே னிப்பதிக்குப் போந்தேனென் மனைவியரு நால்வர் மக்கள், ஒவ்வாதார் தாமில்லை யொப்பா னொருவனென வுரைத்தான் சான்றோன்.

(இ - ள்.) எவ்வூரிலேயிருப்பீர், எவ்வூர்க்குவந்தீர், நும்மனைவியர் எத்துணைவர், பிள்ளைகள் ஒழுக்கமில்லாதார் எத்துணைவர், ஒழுக்கமுடையார் எத்துணைவரென்று வினவியினவனுக்கு, இப்பொழுது இவ்வுடம்பினிடத்தேன், இவ்வுடம்பெடுத்தற்குப் போந்தேன், எனது மனைவியரும் நால்வர், மக்கள் ஒவ்வாதாரில்லை, 'ஒப்பானொருவனுளனென்று உணர்வுடையான் கூறினானென்க. (௲௫௪௨)

1544. ஒப்பா னொருமகனே நால்வ ரொருவயிற்றுட் பிறந்தா னென்ன, நக்கான் பெருஞ்சான்றோ னம்பிபோல் யாருலகி லினியா ரென்ன, மிக்கா னுரைப்பதுவு மிக்கதே போலுமால் வினவிக் கேட்பேன், தக்காய் குறித்ததுரை யென்றான் றானுரைப்பக் கேட்கின் றானே.

தென்ன வந்தது கடவுட் டிங்கள்" (கம்ப. தைலமாட்டு. 49). ஏந்தியாங்கு - எடுத்ததைப்போல. தோன்ற - தோன்றுதலால். மாறிலா - நிகரில்லாத. பருதிவட்டம் - சூரியனது வட்டம்; சீவக. 1437. வருதிரை - கரையைச் சாரவருகின்ற அலையையுடைய கடல்; ஆகுபெயர். முளைத்த ஆங்கண் - தோன்றிய அப்பொழுது. அண்ணல் ஆறுசெல் ஒருவற்கு அணிகலம் அருளினான் என மாறியியைக்க; சீவக. 1409. அண்ணல்: சீவகன். ஆறு - வழி.

1543. எப்பதிக்கு - எந்த ஊர்க்கு. எவ்வூரீர் எப்பதிக்குப் போந்தீர்: சீவக. 1637; "எந்நிலத்தீ ரெப்பதியீ ரெத்திசைக்குப் போகின்றீர்" (வி - பா. அருச். தீர்த்த. 22). எனைவர் - எத்துணைவர். மக்களில் ஒவ்வாதவர் எனைவர்; ஒப்பார் எனைவர்; ஒவ்வாதார் - நல்லொழுக்கமில்லாதவர். ஒப்பார் - நல்லொழுக்கமுடையவர். என்றாற்கு - என்று வினவிய வழிப்போக்கனுக்கு. அடி, 3 - 4: (பி - ம்.) 'மனைவியுமற் றொருத்தி மக்கள், ஒவ்வாதார் தாமில்லை யொப்பாரே நால்வரென வுரைத்தான் சான்றோன்.' சான்றோன் - உணர்வுடையோன்; என்றது சீவகனை.

1544. ஒப்பானாகிய ஒருமகனே நால்வரது ஒருவயிற்றுட் பிறந்தான் என்ன; என்ன-என்று சீவகன் சொல்ல. நம்பிபோல் உலகில் இனியார்யார் என்னப் பெருஞ்சான்றோன் நக்கான் என மாறியியைக்க; நம்பியென்றது

(இ - ள்.) ஒப்பானாகிய அவ்வொருமகன்றானே நான்கு தாய்மாரது ஒரு வயிற்றிலே பிறந்தானென்று அங்ஙனங்கூறினானாக, இவனைப்போல் உலகில் இனியார் யாவரென்றுகூறி அறிவில்லாதவன்றான் நக்கான்; நக்குப் பின்னும், அறிவுமிக்கவன்கூறிய வார்த்தையும் மிக்கதுபோலே யிராநின்றது; யான் கடாவிக்கேட்பேனென்று கருதி, தக்காய்! நீ நினைத்ததனைக் கூறென்றான்; அவனுரைப்பத் தான் கேளாநின்றானென்க. (௧௫௫௩)

1545. நற்றானஞ் சீல நடுங்காத் தவமறிவர் சிறப்பிந் நான்கு, மற்றாங்குச் சொன்ன மனைவியரிந் நால்வரவர் வயிற்றுட் டோன்றி, உற்றானொருமகனே மேற்கதிக்குக் கொண்டுபோ முரவோன் றன்னைப், பெற்றார் மகப்பெற்றா ரல்லாதார் பிறர் மக்கள் பிறரே கண்டீர்.

(இ - ள்.) தானம் சீலம் தவம் இறைவர்பூசனை யென்றுசொல்லிய இந்நான்கும் முன் கூறிய மனைவியர்; இந்நால்வர் வயிற்றினும் பிறந்து பயன்தருவானாகிய நல்வினை யென்கின்ற மகனே மேற்கதிக்குக் கொண்டு போம் உரவோன்; அவனைப் பெற்றாரே மகப்பெற்றார்; அல்லாதார் மகப் பெற்றாரல்லர்; பெற்ற மகவும் அவர் மகவல்ல கண்டீரென்றானென்க. (௧௫௫௪)

1546. படநாகந் தோலுரித்தாற் போற்றுறந்து கண்டவர் மெய் பனிப்ப நோற்றிட், டுடனாக வைம்பொறியும் வென்றார்க் குவந்தீத றான மாகும், திடனாகத் தீந்தேனுந் தெண்மட்டு முயிர்க் குழா மீண்டி நிற்றற், கிடனாகு மூனுமிவை துறத்தலே சீலமென் றுரைத்தார் மிக்கார்.

---

சீவகனை; இனியார் - இனியவர்கள். பெருஞ்சான்றோனென்றது அறிவில்லாதவன் என்பதைக் குறிப்பித்தது. மிக்கான் - அறிவு மிக்கானாகிய சீவகன். தக்காய் - தகுதியுள்ளவனே; என்றது சீவகனை. குறித்தது உரை - நீ நினைத்ததைக் கூறுவாயாக. பெருஞ்சான்றோன் நக்கானாய் உரையென்றான் என்க. உரைப்பத் தான் கேட்கின்றான் என மாறி யியைக்க; உரைப்ப - சீவகன் கூற.

1545. தானம், சீலம், தவம், அறிவர்சிறப்பு இந்நான்கும் மனைவியர் என்க; அறிவர்சிறப்பு - இறைவர்பூசனை. உற்றான் ஒரு மகனே - பயன்தருவானாகிய நல்வினையென்கின்ற மகனே. மேற்கதிக்கு - மேலாய மோட்ச கதிக்கு. தன்னை - மகனாகிய அவ்வுரவோனை. அல்லாதார் பிறர் - அவ்வுரவோனைப் பெறாதவர்கள் மகப்பெற்றாரல்லர். மக்கள் பிறரே - அவர் பெற்ற மக்களும் அவர் மக்களல்லர்.

1546. படநாகம் தோலுரித்தாற்போல்துறத்தல்: சீவக. 3039; "உரிகளை யரவ மானத் தானே......சென்றனன்" (புறநா. 260); "வாளரவு தோலும் விடமுநீத் தென்னநீத்த" (சூடா. 12:98); 'துறவற மாவது, நாகம் தோலுரித்தாற்போல அகப்பற்றும் புறப்பற்றும் அறுத்து

(இ - ள்.) படநாகம் தோலுரித்தாற்போலே அகமும்புறமும் தூய வாகத் துறந்து நோற்றுத் தம்வயத்தனவாக ஐம்பொறியையும் வென்றார்க்கு உவந்து கொடுத்தல் தானமாம்; தேன்முதலியவற்றைத் திடனாகத் துறத்தல் சீலமாமென்று மிக்கவர் கூறினாரென்றானென்க.

நாகம் தோலுரிக்கும்பொழுது நஞ்சும் காலும். (கடுரு)

1547. ஓவா திரண்டுவவு மட்டமியும் பட்டினிவிட் டொழுக் கங் காத்தல், தாவாத் தவமென்றார் தண்மதிபோன் முக்குடைக் கீழ்த் தாதை பாதம், பூவே புகைசாந்தஞ் சுண்ணம் விளக்கி வற்றாற் புனைத லாளும், ஏவா விவைபிறவும் பூசனையென் றீண் டியநூல் கரைகண் டாரே.

ஏவா - சொல்லி.

(இ - ள்.) அறமீண்டிய ஆகமத்தைக் கரைகண்ட இருடிகள், தாதை பாதத்தே நாடோறும் பூமுதலியவற்றாற்புனைதலையும், இவையொழிந்த பிறவற்றாற்புனைதலையும் பூசனையென்றேவி, இரண்டு உவாவிலும் அட்டமியிலும் பட்டினிவிட்டு ஓவாது ஒழுக்கங்காத்தலைக் கெடாத தவ மென்றாரென்க. (கடுசு)

1548. இந்நால்வர் துணைவியராக் காதன் மகனிவனு வுடை யார் போகிப், பொன்றார மார்பிற் புரந்தர ராய்ப்பூமி முழுது மாண்டு, மன்னாகி முக்குடைக்கீழ் வாமன் சிறப்பியற்றி வரம்பி லின்பம், பின்னா விளைவித்துப் பிறவா வுலகெய்தல் பேச லாமே.

---

இந்திரிய வசமறுத்து முற்றத்துறத்தல்' (சிலப். 14 : 11, உரை). பனிப்ப - நடுங்கும்படி. உடனாக - தம் வயத்தனவாக. திடனாக - மனத்தில் நிச்சயமுற. தெண்மட்டு - தெளிந்த கள். உயிர்க்குழாம் - சீவராசிகள். ஊனும் - மாமிசமும். மிக்கார் உரைத்தார் என மாறுக; மிக்கார் - அறிவால் மிக்கவர்.

(மேற்.) அடி, 2 : கல். 'பற்றலர்' 4 - 10, மயில்.

1547. ஓவாது - ஒழியாமல். இரண்டு உவவும் அட்டமியும் பட்டினி விட்டு ஓவாது ஒழுக்கம் காத்தல் தவம் என மாறியியைக்க; "உவாவட் டமியின்க ணல்வகை யூணும், அவாவறுத் தல் போதக மெனல்" (அருங்கல. 115). பட்டினி : "பட்டினி நோன்பிகள்" (சிலப். 15 : 164). 'உவவு' என்பதற்குச் சதுர்த்தசியென்று பொருள்கூறிச் சதுர்த்தசியி லும் அட்டமியிலும் பட்டினியிருத்தலின் பயன்கள் முறையே, 14-ஆவ தாகிய அயோகி குணஸ்தானத்தை அடைதலும் எண்வினைகளைக் கெடுத்தலுமென்று சொல்லுவர். தாதை : அருகன். புனைதல் - அலங் கரித்தல். ஏவா = ஏவி - சொல்லி. ஈண்டிய - தருமஞ்சேர்ந்த. நூலைக் கரைகண்டார் : சைனமுனிவர்கள். கரைகண்டார், தாதைபாதத்தே நாளும் புனைதலைப் பூசனையென்று ஏவி ஒழுக்கம் காத்தலைத் தவமென்றா ரென மாறிமுடிக்க.

1548. இந்நால்வர் - தானம், சீலம், தவம், அறிவர்சிறப்பென்ற இந்நால்வரும். மகன் : நல்வினை. போகி - சுவர்க்கத்தை அடைந்து.

(இ - ள்.) இந்நால்வரும் மனைவியராக இவன் மகனுகவுடையார் சுவர்க்கத்தேபோய் இந்திரராய் அவ்விடத்தையாண்டு பின்பு சக்கரவர்த்தியாய்ப் பூமி முழுவதையும் ஆண்டு வாமனுக்குப் பூசனைகளை நடத்தி [1] அதீதாவத்தையை விளைவித்துப் பின்பு வீடுபெறுதல் உண்மையென்றே கூறலாயென்றனென்க. (கரு௭)

1549. மட்டார்பூம் பிண்டி வளங்கெழு முக்குடைக்கீழ் மாலே கண்டீர், முட்டாத வின்பப் புதாத்திறக்குந் தாளுடைய மூர்த்தி பாதம், எட்டாலும் பத்தாலு மில்லாதார்க் கிவ்வுலகி லின்ப மேபோல், ஒட்டாவே கண்டீர் வினையவனைத் தேருதார்க் குணர்ந்தீ ரன்றே.

பாதம் - அடி.

(இ - ள்.) இன்பக்கதிக்குச் செல்லும் கதவைத்திறக்குந் தாளாகிய பாதத்தையுடைய மூர்த்தி, முக்குடைக்கீழ் மாலேகாண்; அவனைத்தேருதார்க்கு, பொருள் பத்தெட்டுக்கூட இல்லாதார்க்கு இவ்வுலகத்தின்பம் கிட்டாதவாறுபோல நல்வினை கூடா; இத்தன்மையையுணர்ந்தீரல்லவோ வென்றுனென்க.

[1] ஆனும், உம்மும் அசைகள். உணர்ந்தீர்: [2] ஒருவரைக்கூறும் பன்மை. (கரு௮)

---

மார்பினையுடைய புரந்தரராய்; புரந்தரர் - இந்திரர். மன்னுகிப் பூமி முழுதும் ஆண்டு என மாறுக; மன்னுகி - சக்கரவர்த்தியாகி. வாமனுக்குச் சிறப்பியற்றி; வாமன் - அருகன். வரம்பிலின்பம் விளைவித்து - அதீதாவஸ்தையை உண்டாக்கி. பின்று பிறவா உலகெய்தல் - பின்னுகை மோட்சத்தைப் பெறுதல்.

(உரை) [1] (பி - ம்.) 'அருகந்தாவத்தையை'

1549. மட்டு - தேன். மால் - அருகன். முட்டாத - குறைவில்லாத. இன்பப்புதா - இன்பக்கதிக்குச் செல்லும் கதவு. தாள் - தாழ்ப்பாள். இன்பப்புதாத்திறக்கும் தாள்: "துறக்கந் திறப்பதோர் தாள்" (அற நெறி. 191). எட்டாலும் பத்தாலும் இல்லாதார்க்கு இவ்வுலகின்பம் ஒட்டா; "பத்தெட் டுடைமை பலருள்ளும் பாடெய்தும்" (நாலடி. 281); "பொருளில்லார்க் கிவ்வுலக மில்லாகி யாங்கு" (குறள், 247). ஒட்டா - கிட்டா. வினை - நல்வினை. அவனைத் தேருதார் - அருகனைத் தெளியாதவர்கள். மூர்த்தி, மாலேகண்டீர்; அவனைத் தேருதார்க்கு இவ்வுலகின்பமே போல், வினை ஒட்டா; உணர்ந்தீரன்றே என மாறிமுடிக்க.

(உரை) [1] எட்டாலும் பத்தாலும் என்பதில் உள்ளவை: உம்மை ஐய வும்மையெனலுமாம்; தொல். இடை. 7. [2] தொல். கிளவி. 27.

1550. வேற்றுவ ரில்லா நுமரூர்க்கே செல்லினும் வெகுண்டீர் போல, ஆற்றுணாக் கொள்ளா தடிபுறந்து வைப்பீரே யல்லிர் போலும், கூற்றங்கொண் டோடத் தமியே கொடுநெறிக்கட் செல்லும் போழ்தின், ஆற்றுணாக் கொள்ளீ ரழகலா லறிவொன்று மிலிரே போலும்.

ஏகாரம், போலும் : அசைகள். [1] இன், ஏழனுருபாதல் புறனடையாற் கொள்க.

(இ - ள்.) அயலாரில்லாத சுற்றத்தாரூர்க்கே போயினும் அவருடனே வெகுண்டு ஆண்டுச் செல்லாதீர்போலப் பொதிசோறு கைக்கொள்ளாமற் புறத்து ஓரடியிட்டிடீர்; இத்தன்மையீர்! கூற்றம் நும்மைக் கட்டிக்கொண் டோட நுமரில்லாதவூர்க்குத் தனியே போம்பொழுது உண்ணுமூணுக்குப் பொதிசோறு இப்பொழுதே தேடிக் கொள்கின்றிலீர் ; ஆதலின், அழகன்றி அறிவொன்று முடையீரல்லிர்போலே யிருந்தீரென்றானென்க. (கடுகூ)

1551. அளைவது காம மடுநறவு நெய்யொழுகு மூனும் பின்னு, விளைவது தீவினையே கண்டீ ரிவைமூன்றும் விடுமி னென்றாற், றளையவிழ் கோதையார் தாமஞ்சேர் வெம்முலைபோல் வீங்கிக் கண்சேந், துளையவுறுதி யுரைப்பாரை யோஒபாவ முணரா ரேகாண்.

(இ - ள்.) அருந்துவதாகிய காமத்தாலும் கள்ளாலும் ஊனாலும் பின்பு விளைவது தீவினையே காணுங்கோள் ; இவைமூன்றையும் கைவிடுங்கோளென்று பிறர்க்குக் கூறினால், இங்ஙனம் தாம்வருந்தக் காரியங்கூறுவாரை முலைபோற் பொருமிக் கோபித்து உணரார்காண் ; ஓ! இஃதொருபாவமிருந்தபடி என்னனென்றானென்க. (கசா0)

---

1550. வேற்றுவர் இல்லா - அயலார் இல்லாத ; வேற்றுவர் : சீவக. 2986. நுமர் - உறவினர். வெகுண்டீர்போல - உறவினரிடத்துக்கோபங் கொண்டவர்போல. ஆற்றுணா - கட்டுச்சோறு. வைப்பீரே யல்லிர் - வைத்திடீர். கூற்றம் கொண்டோட - யமன் நும்மைக் கட்டிக்கொண்டு ஓடுகையில்; "கூற்றங்கொண் டோடும் பொழுது" (நாலடி. 120). தமியே - தனியே. கூற்றம்.........கொடுநெறிக்கட் செல்லும் போழ்தில் : "கூற்றம், தொடுத்தாறு செல்லுஞ் சுரம்" (நாலடி. 5). ஆற்றுணாக் கொள்ளீர் : "தோட்கோப்புக் காலத்தாற் கொண்டுய்ம்மின்", "செல்வுழி வல்சி, இறுகிறுகத் தோட்கோப்புக் கொள்ளார்" (நாலடி. 20, 328); "ஆற்றுணா வேண்டுவ தில்" (பழ. 55). ஒன்றும் - சிறிதும்.

(மேற்.) மு : திருநூற். 14, உரை.

(உரை) [1] போழ்திற் என்பதிலுள்ளது ; சீவக. 1220, அடிக்.

1551. **அளைவதாகிய காமமும் நறவும் ஊனும் என்க; அளைவது-உண்பது. பின்னு - பின்பு. கண்டீர் - காணுங்கள். தளை - கட்டு. கோதையார் : மகளிர். தாமம் - மாலை. உளைய உறுதி உரைப்பாரை, முலைபோல் வீங்கிக்**

1552. இழுதன்ன வெண்ணிணத்த செந்தடிக்கே யேட்டைப் பட் டிரும்பிற் போர்த்த, பழுதெண்ணும் வன்மனத்தா ரோட்டை மரச் செவியர் கேளார் பால்போன், றொழுகி யழுதூறு நல்லறத்தை யோர்கிலரூன் செய்கோட் டக்குக், கழுகுண்ண வள்ளூர மேசுமந்து புள்ளிற்கே புறஞ்செய் கின்றார்.

ஓட்டையென்றார், உட்கொள்ளாமையின். ஊன்செய்கோட்டக்கு - ஊனாற் செய்தவுடம்பிற்கு. வள்ளூரம் - ஊன்.

(இ - ள்.) நிணத்தவாகிய தசையைப் பெறவேண்டுமென்றே யிளைத்து அவ்வள்ளூரமே சுமந்து கோட்டத்துக்குப் புறஞ்செய்கின்றார், ஓர்கிலராய்க் கழுகுண்ணும்படி அக்கழுகிற்கே புறஞ்செய்கின்றார்; இதனை இங்ஙனம் பழுதெண்ணும் இரும்பாற் போர்த்த வன்மனத்தார் ஓட்டை மரச்செவியராய் அறத்தைக் கேளாரென்றானென்க. (கசக)

1553. கையாற் பொதித்துணையே காட்டக் கயற்கண்ணா ளதனைக் காட்டாள், ஐயா விளாம்பழமே யென்கின்றீ ராங்கதற்குப் பருவ மன்றென், செய்கோ வெனச்சிறந்தாள் போற்சிறவாக் கட்டுரையாற் குறித்த வெல்லாம், பொய்யே பொருளுரையா முன்னே கொடுத்துண்டல் புரிமின் கண்டீர்.

---

கண் சேந்து உணரரார்காண்; ஓ, பாவம் என மாறியியைக்க. உளைய - தாம் வருந்த. உறுதி - காரியம். வீங்கி - பொருமி. கண் சேந்து - கோபித்து. ஓ, பாவம் என்றது இரங்கிக் கூறியவாறு.

1552. இழுது - நெய். நிணத்தவாகிய செந்தடி; தடி - தசை. ஏட்டைப்பட்டு - பெறவேண்டுமென்று இளைத்துப்போய். வள்ளூரமே சுமந்து ஊன்செய்கோட்டக்குப் புறஞ் செய்கின்றாரெனப் புறஞ்செய் கின்றாரென்பதை முன்னும் கூட்டுக. பழுதெண்ணும் இரும்பிற் போர்த்த வன்மனத்தார் ஓட்டை மரச்செவியராய் நல்லறத்தைக் கேளார் என மாறி யியைக்க. கோட்டக்கு - உடம்பிற்கு. புள்ளிற்கே - அக்கழுகிற்கே. புறஞ் செய்கின்றார் - காவல் புரிகின்றார். பழுதெண்ணும் வன்மனத்தார்; "பழுதெண்ணு மந்திரியின்" (குறள், 639); பழுது - குற்றத்தை. ஓட்டை மரச்செவி: "கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியால், தோட்கப் படாத செவி" (குறள், 418); இது மூவகைச் செவியுள் ஒன்று; சீவக. 2718, ந.

1553. பொதித்துணை - பொருட்டிரளின் அளவை. காட்ட - கணவன் குறிசெய்து காட்டினாக. கயற்கண்ணாள்: அவன் மனைவி. அதனைக் காட்டாள் - அப்பொருட்டிரளைக் காண்பியாதவளாகி. காட்டாளாய்ச் சிறந்தாள் போல் என இயைக்க. அதற்கு - அப்பழம் உண்ணுதற்கு. பருவமன்று - நும் உடலின் நிலை ஏற்றவாறு இல்லை. அடி : 1-2 :

(இ - ள்.) மொழியின்றிக் கையாலே பொருட்டிரளின் அளவைக் காட்டினனாக, கண்ணுளாகிய மனைவி அதனைக்காட்டாளாய் அவற்குச் சிறந்தாள் போல, ஐயனே! விளாம்பழமே வேண்டுமென்றுநின்றீர்; அது தருதற்கு [1]விக்குள் வந்தடுத்தலிற் பருவமன்று: என்செய்வேனென்றுகூறி, ஆங்கவன் மற்றுக்காட்டியவெல்லாவற்றிற்கும் அவள் கட்டுரையாலே பொய்ப்பொருள் கூறுவதற்குமுன்னே பிறர்க்குக் கொடுத்துண்டலை விரும்புவீராக வென்றானென்க.

[2]பன்மை : சாதிப்பன்மை. (கடுசஉ)

(வேறு)

1554. பனிமதி யின்கதிர் பருகு மாம்பல்போல்
முனிமதி முகத்தியர் முறுவ னம்பினூர்
துனிவளர் கதிகளுட் டோன்றி நாடகம்
கனியநின் ருடுவர் கடையில் காலமே.

**(இ - ள்.) மதியை முனிகின்ற முகத்தியருடைய அம்மதியின்கதிரை உள்ளடக்குவதோர் ஆம்பல்போலும் முறுவலையுடைய வாயை நச்சினூர், முடிவில்லாதகாலமெல்லாம், தீக்கதிகளிலே தோன்றி வெவ்வேறியாக்கை கொண்டு முற்றத்திரிவரென்றானென்க.** (கடுசங)

1555. நிழனிமிர் நெடுமதி நிகரி றீங்கதிர்ப்
பழனவெண் டாமரை பனிக்கு மாறுபோற்
குழனிமிர் கிளவியார் கோல மஞ்சினூர்
தொழநிமிர்ந் தமரராய்த் துறக்க மாள்வரே.

---

"சிறுகாலை யேதமக்குச் செல்வுழி.........பொன்னும் புளிவிளங்கா யாம்" (நாலடி. 328). குறித்தவெல்லாம் சிறவாக் கட்டுரையால் பொய்யே பொருளுரையாமுன்னே என மாறியியைக்க; குறித்தவெல்லாம் - கணவன் கையாற் குறித்துக்காட்டியவற்றிற்கெல்லாம். கட்டுரையால் - அவன் மனைவியது கூற்றாலே. பொய்யே பொருள் - பொய்ப்பொருள். உண்டல் - உண்ணுதலை.

(உரை) [1]விக்குள் - விக்கல். [2]'புரிமின் கண்டீர்' என்றது.

1554. (பி - ம்.) 'பனிமதி பொழிகதிர்'. மதிமுனி முகத்தியரது மதியின் கதிரைப் பருகும் ஆம்பல்போல் முறுவலை நம்பினூர் என மாறியியைக்க; மதிமுனி - சந்திரனைக் கோபிக்கின்ற. பருகும் - உள்ளடக்குகின்ற. ஆம்பல் வாய்க்கு உவமை. முறுவல் நம்பினூர் - முறுவலையுடைய வாயை விரும்பினவர்கள். கடையில் காலம் துனிவளர் கதிகளுள் தோன்றி நாடகம் கனிய நின்றுடுவர் என மாறியியைக்க; கடையில் - முடிவில்லாத. துனி வளர்கதி - தீய பிறப்பு; துனி - வெறுப்பு. நாடகம் என்றது வெவ்வேறு உடம்பு கொள்வதை. கனிய - முற்ற.

1555. நிழல் நிமிர் - ஒளிமிக்க. பழனம் - வயலிலுள்ள. மதியின் கதிரால் தாமரை பனிக்குமாறுபோல்; பனித்தல் - அஞ்சுதல். குழல்

(இ - ள்.) ஒளிமிக்க பெரிய மதியின் கதிருக்குத் தாமரை அஞ்சுமாறு போலே கிளவியார்கோலத்திற்கு அஞ்சினர் பலருந்தொழும்படி மிக்குத் தேவராய்ச் சுவர்க்கத்தை ஆளுவரென்றுனென்க. (கசச)

(வேறு)

1556. இன்னவா றுறுதி கூறி யெரிமணி வயிர மார்ந்த, பொன்னவிர் கலங்க ளெல்லாம் பொலிவொடு புகன்று நீட்டிச், சென்மினீ ரென்று கூற வலங்கொண்டு தொழுது சென்றான், வின்மரீஇ நீண்ட தோளான் வெயிற்கட நீந்த லுற்றான்.

(இ - ள்.) அங்ஙனம் அணிகலம் அருளலுற்றவன், இங்ஙனம் அவனுக்கு உறுதியைக்கூறிக் கலன்களை விரும்பிக்கொடுத்து நீர்போமென்று கூற, அவனும் வலங்கொண்டு தொழுதுபோயினான்; போயினபின்பு, தோளான் கடத்தைப்போகலுற்றானென்க. (கசரு)

**சா. — கேமசரியாரிலம்பகம் முற்றிற்று.**

**ஆகக்கவி, கருருசா.**

---

நிமிர் - புல்லாங்குழலின் இசையைப்போல் மிக்க. கிளவியார் : மகளிர். கோலம் - அழகு. அஞ்சினர் : முனிவர்கள். கிளவியாரது கோலத்திற்கு அஞ்சினர் தொழும்படி. நிமிர்ந்து - மிக்கு. துறக்கம் - சுவர்க்கம்.

1556. உறுதி - நன்மை பயக்கும் சொற்களை. மணியும், வயிரமும் ஆர்ந்த கலங்களெல்லாம்; ஆர்ந்த - பொருந்திய; கலம் - ஆபரணம். புகன்று நீட்டி - விரும்பிக்கொடுத்து. நீர் என்றது வழிப்போக்களை. கூற - சீவகன் கூற. சென்றான் - வழிப்போக்கன் போயினன். வில் மரீஇ - வில்லோடு பழகி; வில்லின் தழும்புமருவி என்றுமாம். தோளான் : சீவகன். வெயிற்கடம் - வெயிலையுடைய காட்டை. நீந்தல் - கடத்தல்.

ஏழாவது

# கனகமாலையாரிலம்பகம்

1557. இரங்கு மேகலை யல்கு லின்கனித் தொண்டையந் துவர் வாய், அரங்கக் கூத்திக ணன்பின் மனையவட் டுறந்துசெல் பவர் போற், பரந்த தீம்புனன் மருதம் பற்றுவிட் டினமயி லகவும், மரங் கொல் யானையின் மதநா றருஞ்சுர மவன்செலற் கெழுந்தான்.

(இ - ள்.) அல்குலையும் வாயையுமுடைய பரத்தைமேல் அன்பாலே மனையாளைத் துறந்து செல்வாரைப்போல மருதநிலத்தைவிட்டு, அகவும் நாறும் சுரத்தைப் போதற்கு அவனெழுந்தானென்க.

[1]பயின்று பாம்பையும் [2]பாகனையுங்கோறலின், பரத்தையர்க்கு மயிலையும் ஆனையையுமுடைய காடு உவமிக்கும்பொருளாயிற்று. சுரம் - அவன் கூறிய [3]கானவர்குரம்பைசூழ் காடு. (க)

1558. கலவ மாமயி லெருத்திற் கடிமல ரவிழ்ந்தன காயா, உலக மன்னவன் றிருநா ளொளிமுடி யணிந்துநின் றவர்போற், பலவும் பூத்தன கோங்கம் பைந்துகின் முடியணிந் தவர்பின், உலவு காஞ்சுகி யவர்போற் பூத்தன மரவமங் கொருங்கே.

---

1557. இரங்கும் - ஒலிக்கின்ற. தொண்டையின்கனிபோலும் துவர் பூசிய வாய். அரங்கக்கூத்தி என்றது பரத்தையை. அரங்கக்கூத்தி: "அரங்கியன் மகளிர்" (பெருங். 1. 35 : 71); "அரங்கக்கூத்தியர்" (கூர்ம. சந்திர. 55). கூத்திகண் அன்பின் - கூத்திமீதுள்ள காதலால். மனையவள் - மனைவியை. மருதம் - மருதநிலத்தை. அகவும் - கூவுகின்ற. மரம் கொல் - மரத்தை முறிக்கின்ற. அகவும், நாறும் சுரத்தை; சுரம் - அருவழி. அவன் : சீவகன்.

(உரை) [1]பயின்று - பழகி. [2]"யானை, அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும்" (நாலடி. 213). [3]சீவக. 1201.

1558. கலவம் - தோகை. எருத்தின் - கழுத்தின் நிறத்தைப்போல. காயாம்பூவுக்கு மயிலெருத்து: "கருநனைக் காயாக் கணமயி லவிழவும்" (சிறுபாண். 165); "புல்லென் காயாப் பூக்கெழு பெருஞ்சினை, மென் மயி லெருத்திற் றோன்றும், கான வைப்பிற்" (குறுந். 183 : 5 - 7). கோங்கம்பலவும், மன்னவன் திருநாளில் முடியணிந்து நின்றவர்போல் பூத்தன என மாறியியைக்க. உலகமன்னவன் - சக்கரவர்த்தி. மரவம் துகில் முடியணிந்து அவர்பின் உலவு காஞ்சுகியவர்போற் பூத்தன என மாறியியைக்க; மரவம் பூவுக்குத் துகில்: குமர. பிரபந். 73. துகில் முடி யணிந்த காஞ்சுகியர் : "துகில் முடித்து.........பெருமூதாளர்" (முல்லைப். 53-4); "அவிர் துகின் முடித்து" (மதுரைக். 494); துகில்முடி - தலைப்பாகை. அவர்பின் - அரசர் பின்னே.

(இ - ள்.) காயா, மயிலின் கழுத்துப்போலே மலர்விரிந்தன; கோங்கம் பலவும், சக்கரவர்த்தி முடிசூடும் நாளிலே முடிசூடிச் சேவிக்கும் அரசரைப் போலே பூத்தன; மரவம், [1] மயிர்க்கட்டுக் கட்டி அவ்வரசர்பின்னே திரியும் [2] சட்டையையுடைய மிலேச்சரைப்போலே சேரப்பூத்தனவென்க. (உ)

1559. ஓங்கு மால்வரை வரையா டுழக்கலி னுடைந்துகு பெருந் தேன், தாங்கு சந்தனந் தளரத் தழுவி வீழ்வன தகைசால், ஆங் கண் மாலுல களப்பா னாழி சங்கமொ டேந்தி, தேங்கொண் மார் பிடைத் திளைக்குஞ் செம்பொ னாரமொத் துளவே.

(இ - ள்.) வரையாடு உழக்குதலின், இருலுடைந்து வரையினின் றொழுகும் பெருந்தேன் விழுகின்றபொழுது, தம்மைத்தாங்கின சந்தனம் தளரும்படி அம்மலையைத் தழுவி வீழ்வன, மால், உலகை எப்பொழுதும் அளப்பான், ஆழியைச் சங்குடனேயேந்தி, அவன் மார்பிடத்தே அசையு மாரமொத்தனவென்க.

தேன்வீழ்வன ஒத்தன. அங்கண் : விகாரம். தேம் - கட்கினிமை. வரை தாங்கின சந்தனமுமாம். (ங)

1560. வீழ்ந்து வெண்மழை தவழும் விண்ணுறு பெருவரை பெரும்பாம், பூழ்ந்து தோலுரிப் பனபோ லொத்த மற்றவற் றருவி, தாழ்ந்து வீழ்ந்தவை முழவிற் றதும்பின மதுகரம் பாடச், சூழ்ந்து மாமயி லாடி நாடகந் துளக்குறுத் தனவே.

---

(மேற்.) அடி, 1 : நன். பொது. 50, மயிலை.; சங்கர.; இ - வி. பொது. 18 ; மு : இ - வி. அணி. 26.

(உரை) [1] மயிர்க்கட்டு : முல்லைப். 53; மதுரைக். 494, ந. [2] முல்லைப். 66.

1559. வரையாடு உழக்கலின் உடைந்து வரையினின்று உகு பெருந்தேன் சந்தனம் தளரத் தழுவி வீழ்வன என மாறியியைக்க; உழக்கலின் - மிதித்தலால்; சீவக. 1899, ந. சந்தனம் - சந்தனமரம். தழுவி - மலையைத் தழுவி. ஆங்கண் - அங்கண்; நீட்டல்விகாரம். மால் - திருமால். ஆழி - சக்கரத்தை. ஏந்தி : பெயர். தேம்கொள் - கண்ணிற்கு இனிமைகொண்ட; சீவக. 1653. மார்பு - திருமாலின் மார்பு. திளைத்தல் - அசைதல். (பி - ம்) 'மார்பிடைத் ததும்பும்.' தேன் வீழ்வன, திருமால் மார்பின் ஆரத்தை ஒத்தன; "மாயோன் மார்பி லாரம் போல, மணி வரை யிழிதரு மணிகிள ரருவி" (தொல். செய். 78, பேர். மேற்.)

(மேற்.) அடி, 4 : கல். 'பாய்திரை' 6, மயில்.

1560. வெண்மழை வீழ்ந்து தவழும் பெருவரை என்க; மழை - மேகம். வீழ்ந்து - படிந்து. ஊழ்ந்து - கழன்று. வரைக்குப் பாம்பும், பாம்புரிக்கு வெண்மேகமும் உவமைகள். அவற்று - அம்மலையிலுள்ள.

(இ - ள்.) மஞ்சுபடிந்து தவழுமலை, பெரும்பாம்பு [1] ஊழ்ந்து தோலுரிப்பனபோலையாய், அம்மஞ்சுபோனபின்பு அப்பாம்பையொத்தன; அம்மலையில் அருவிவீழ்ந்தவை முழவுபோலமுழங்கின; அது கேட்டு, மயில்கள், வண்டுகள் பாட வளைந்தாடிப் பிறராடு நாடகங்களை வருத்தமுறுத்தினவென்க. (௪)

1561. கருவி தேனெனத் தூங்குங் கதிரணி யிறுங்கொடு தினை சூழ், பொருவில் யானையின் பழுப்போற் பொங்கு காய்க்குலை யவரை, அருவி யையவனங் கரும்பு மடக்கருங் கவைக்கதிர் வரகும், உருவ வெட்பய றுழுந்து மல்லவு மெல்லையின் றுளவே.

(இ - ள்.) [1] கைத்தளமும், தேனிறாலுமென்னும்படி தூங்கும் கதிரணிந்த இறுங்கையும், தினையையுஞ் சூழ்ந்த யானையின் விலாவெலும்பு போலும் காயையுடைத்தாகிய குலையையுடைய அவரையும், அருவியால் விளைந்த ஐவனநெல்லும், கரும்பும், கடாவிட்டுக்குவித்தற்கரிய வரகும், எள்ளும், பயறும், உழுந்தும், ஒழிந்தவுணவுகளும் எல்லையின்றியுள வென்க.

கருவித்தேன் பாடமாயின், தொகுதித்தேனென்க. (௫)

---

அருவிக்கு முழவு : சீவக. 34, அடிக். ததும்பின - முழங்கின. மயில் மதுகரம் பாடச் சூழ்ந்து ஆடி நாடகம் துளக்குறுத்தன என மாறியியைக்க; மதுகரம் - வண்டுகள். சூழ்ந்து - வளைந்து. நாடகம் துளக்குறுத்தன - பிறர் ஆடுகின்ற நாடகங்களைப் பழித்து வருத்தமுறுத்தின. வண்டுபாட மயிலாடல் : அகநா. 82 : 6 - 9.

(உரை) [1] (பி - ம்.) 'ஊழ்த்துத்.'

1561. கருவியென, தேனென என்க; கருவி - கைத்தளமென்னும் ஒருவகைக் கேடகம். தேன் - தேனடை. தூங்கும் - தொங்குகின்ற. கதிரை யணிந்த இறுங்கு; இறுங்கு - சோளம். கருவியும் தேனடையும், இறுங்குக்கு உவமை. பழு - விலாவெலும்பு. யானைப்பழுவைப்போலும் காயையுடைய குலையவரை; "மதமால் யானைப் பழுக்குலை யவரை" (திருவிளை. நாட்டு. 29). அருவியால் விளைந்த ஐவனம் : "ஐவனம் வித்தி, அருவியின் விளைக்கு நாடனொடு" (குறுந். 371 : 2 - 3); ஐவனம் - மலைநெல். அடக்கருங் கவைக்கதிர் வரகு - குவித்தற்கரிய பிளவுகொண்ட கதிரையுடைய வரகு; மலைபடு. 112-3. உருவம் - அழகு.

(உரை) [1] கைத்தளம் : சீவக. 1606, ந.; "அதள்புனையரணம்" (சிலப். 14 : 170) என்பதற்கு, 'தோற்கைத்தளமும்' என்று பொருளெழுதியுள்ளார் அடியார்க்கு நல்லார்; கைத்தளம் தேன்கூட்டிற்கும் உவமையாகக் கூறப்படும்; "கைத்தளம் போலத் தூங்குங் கமழ்பசுந் தேனிறால்", "கைத்தள மென்னப்பூத்த............தேனிறால்" (கூர்ம. சம்புத். 64; பிலக்க. 50)

1562. யானை வெண்மருப் புலக்கை யறையுர லவலை மிடித்த
தேனெய் வாசவற் குவவித் தீங்கனி வாழையின் பழனும்
ஊனை யுண்டவ ருருகும் பசுந்தினைப் பிண்டியு மொருங்கே
மானி ஞேக்கியர் நோக்கி வழிதொறு மீவதவ் வழியே.

கனிவாழை : ஒரு பெயர். ஊனை : ஐ அசை.

(இ - ள்.) அவ்வொருப்பட்ட அத்தன்மையையுடைய அவ்விடம், மானிஞேக்கியர், ஐவனநெல்லை மருப்புலக்கையாலே பாறையாகிய உரலிலேயிடித்த அவலையும், தேனையும், பழத்தையும், உண்டவர் ஊனுருகும் பிண்டியையும் ஒருங்கே குவித்து இளைத்தவரைநோக்கி வழிகள்தோறும் ஈயுந்தன்மையையுடைத்தென்க.

பாசவல் : விகாரம். (சு)

1563. (க) குறிஞ்சி யெல்லையி னீங்கிக் கொடிமுல்லை மகண் மொழிந் தாடச், செறிந்த பொன்னிதழ்ப் பைந்தார்க் கொன்றை யஞ் செல்வற்குக் குரவம், அறிந்து பாவையைக் கொடுப்பத் தோன்றி யஞ்சுட ரேந்த, நிறைந்த பூங்குருந் துகுதே னீர்பெய் தார்த்தன சுரும்பே.

---

1562. ஐவனத்தை யானையது மருப்பாகிய உலக்கையால் அறையாகிய உரலில் இடித்த அவல் என மாறியியைக்க; "முத்தார் மருப்பின், வகைசா லுலக்கை வயின்வயி ஞேச்சி", "வயக்களிற்றுக் கோடுலக்கை யாக............ஆடுகழை நெல்லை யறையுரலுட் பெய்து", "கொல்யானைக் கோட்டால் வெதிர்நெற் குறுவாநாம்" (கலித். 40 : 4 - 5, 41 : 1-3, 42 : 7 - 8); "வஞ்சி மகளிர் குறுவரே வான்கோட்டால்" (சிலப். 29 : 28); பெருங். 2. 14 : 49-50. அறை - பாறை. வாசவல் : பாசவலென்பதன் விகாரம்; பாசவல் : சீவக. 68, அடிக். குவவி - குவித்து. நோக்கியர் : மகளிர். நோக்கி - பசியால் இளைத்தவரைப் பார்த்து. ஈவது - கொடுக்கும் தன்மையையுடையது. அவ்வழி - அவ்விடம். அவ்வழி, நோக்கியர், அவலையும் தேனையும் பழத்தையும் பிண்டியையும் ஒருங்கே குவவி நோக்கி ஈவது என மாறிமுடிக்க.

1563. முல்லைக்கொடி என மாறுக. மகள் மொழிந்தாட - மகட்பேசிச் செல்லுதலால். இதழாகிய தாரையுடைய கொன்றையாகிய செல்வற்கு. குரவம், தன் பாவையைக் கொன்றையஞ் செல்வற்குக் கொடுப்ப என மாறியியைக்க. குரவம் பாவை : சீவக. 1270, அடிக். தோன்றி - செங்காந்தட்பூ. சுடரேந்த - விளக்கெடுப்ப. சுரும்பு குருந்தில் உகுகின்ற நிறைந்த தேனீரைப் பெய்து ஆர்த்தன என மாறியியைக்க; சுரும்பு - வண்டுகள். தேன் நீர் - தேனாகிய நீரை.

1564. (உ) அரக்குண் பஞ்சுக டிரட்டி யருமணி மரகதப் பலகைப், பரப்பி யிட்டன போலக் கோபங்கள் பயிர்மிசைப் பரவ, உரைத்த மென்றயிர்ப் பித்தைக் கோவலர் தீங்குழ லுலவ, நிரைக் கண் மாமணி கறங்க நீணிலங் கடந்தன னெடியோன்.

இவை இரண்டும் ஒரு தொடர்.

(இ - ள்.) முல்லைக்கொடி மகட்பேசிச் செல்லுதலின், அதனையறிந்து குரவம் தன்பாவையைப் பொன்னிதழாகிய தாரையுடைய கொன்றை யாகிய செல்வனுக்குக் கொடாநிற்க, தோன்றி விளக்கெடுக்க, சுரும்புகள் குருந்தினின்று உகும் தேனாகிய நீரைவார்த்து ஆரவாரித்தன; அவை ஆரவாரித்தவளவிலே, செம்பஞ்சையுருட்டி மரகதப்பலகையிலே பரப் பினாற்போலே கோபங்கள் பயிர்மேலே பரவாநிற்க, தயிரைவார்த்த மயிரினையுடைய கோவலர் ஊதும் குழலோசை பரக்க, ஆனிரைக்கண் பூண்ட மணிகறங்க நெடியோன், குறிஞ்சிநிலத்தெல்லையினின்று நீங்கி முல்லைநிலத்தைக் கடந்தானென்க.

முல்லைக்கொடி இரண்டிலும் படர்ந்தது. நடுவேநின்ற குருந்திற் சுரும்பெழ, அஃது அசைந்து தேனைச்சொரிந்ததனாற் சுரும்பைப் பாவைக்குத் தந்தையாக்கினர். கோபங்கள் பரவவெனவே கார்காலமாம். (எ - அ)

1565. வள்ளி வாரிய குழியின் வளர்பொன்னும் வயிரமு மிமைக்கும், சுள்ளி வேலியி னீங்கித் துறக்கம்புக் கிடுமெனச் சூழ்ந்து, வெள்ளி வெண்டிரள் விசித்து நிலத்தொடு தறிபுடைத் தவைபோற், றுள்ளி வீழ்புய ரருவி வனகிரி தோன்றிய தவணே.

---

1564. அரக்குண் பஞ்சிகள் - செந்நிறம் ஊட்டப்பட்ட பஞ்சுகளை. திரட்டி - உருட்டி. பலகையில் பரப்பியிட்டனபோல. கோபங்கள் - இந்திர கோபங்கள். பயிருக்கு மரகதப் பலகையும், இந்திர கோபத் துக்குச் செம்பஞ்சியும் உவமைகள். தயிரை உரைத்த பித்தையை யுடைய கோவலர் என மாறியியைக்க; உரைத்த - தடவிக்கொண்ட; "மேம்பா லுரைத்த வோரி...............கூழா ரிடையன்" (பெரும்பாண். 172 - 5). பித்தை - தலைமயிர்; சீவக. 428. கோவலர் - இடையர். குழல் உலவ - குழலோசை பரக்க. நிரைக்கண் - பசுக் கூட்டத்தி னிடையே. நிலம் - முல்லைநிலத்தை. நெடியோன் : சீவகன்.

1565. வள்ளி வாரிய குழியில் - வள்ளிக்கிழங்கு அகழ்ந்த குழியி னிடத்தே. இமைக்கும் - ஒளிவிடுகின்ற. சுள்ளி வேலியின் நீங்கி - மரா மரத்தாலாகிய வேலியினின்றும் தப்பி; சுள்ளி - மராமரம்; சீவக. 1608; குறிஞ்சிப். 66, ந. சூழ்ந்து - ஆராய்ந்து. வெள்ளி வெண்டிரள் விசித்து - வெள்ளிக் கம்பிகளை உச்சியிற் பூட்டிக் கட்டி. வீழ் - வீழ்கின்ற. இமைக்கின்ற வனகிரி, அருவியையுடைய வனகிரி என்க. அவண் தோன்றியது எனமாறுக.

(இ - ள்.) பக்கத்திற்போகாதபடி வேலியாகவிட்ட மராமரத்தின் வேலியினின்றுந்தப்பி மேலே துறக்கத்தே போமென்றுநினைத்து வெள்ளிக்கம்பிகளைத் தலையிலேபூட்டி வலித்து நிலத்தோடே தறியைப்புடைத்துக் கட்டினாற்போலே நாற்றிசையும் விழும் அருவியையுடைய வனகிரி அவ்விடத்தே தோன்றிற்றென்க.

வள்ளிக்கிழங்கு அகழ்ந்த குழியிலே பொன்னும் வயிரமும் இமைக்கும் வனகிரி யென்க. (கூ)

1566. அண்ண லாருன்செலு முன்னா லணிமலர்ப் பூம்பொழி லதனுள், வண்ண மாச்சுனை மாநீர் மணிதெளித் தனையது ததும்பித், தண்ணெனன் றுமரை கழுநீர் நீலந் தாதவி ழாம்பல், எண்ணில் பன்மலர் கஞலி யினவண்டு பாண்முரன் றுளதே.

ஆல் : அசை.

(இ - ள்.) அவ்வனகிரிக்கு முன்னே, தலைவன்செல்லுகின்ற பொழிலுக்குள்ளே பளிங்கைக் கரைத்தனையதாகிய நீர்நிறைந்து அதிலே தாமரை முதலிய பூவும் பிறவும் நெருங்கி வண்டு பாண்சாதிபோலே பாடப்பட்டு ஒரு சுனை உளதாயிற்றென்க. (கo)

(வேறு)

1567. கானத்தி னேகு கின்றான் கடிபொழிற் கவின்கண் டெய்தித், தானத்தி லிருத்த லோடுந் தையலா ளொருத்தி தானே, வானத்தி னிழிந்து வந்த வானவர் மகளு மொப்பாள், நானமும் பூவுஞ் சாந்து நாறவந் தருகு நின்றாள்.

'கானத்தினேகுகின்றான்' என்று பெயர்கூறவே, 'வனசரிதன்' என்னும் வடமொழிப்பெயரையும், 'தானம்' எனவே இருடிகள் உறைவிடமென்பதனையும் உணர்த்தின.

---

1566. முன்னால், அண்ணல் செலும் பொழிலதனுள் மணிதெளித்தனையதாகிய சுனை நீர்ததும்பி என மாறியியைக்க : முன்னால் - அந்த வனகிரிக்கு முன்பு; ஆல் : அசை. அண்ணல் : சீவகன். மணி - பளிங்கை. தெளித்தல் - கரைத்தல். ததும்பி - நிறைந்து. தண்ணென் - குளிர்ந்த. நீலம் - நீலோற்பலம். கஞலி - நெருங்கி. பாண்முரன்று - பாண்சாதியைப் போல ஒலித்து. உளது - உள்ளது.

1567. கானத்தின் ஏகுகின்றான் இருத்தலோடும், தையலாளொருத்தி, தானத்தில் அவன் கவினைக்கண்டு என மாறியியைக்க. ஒருத்தி : அனங்கமாவீணை. தானத்தில் - அந்தச் சோலையில். கவின் - அழகு. சாந்து - குங்குமச் சாந்து.

(இ - ள்.) சீவகன் கடிபொழிலிலே சென்றிருந்தவளவிலே, வானவர் மகளுமொப்பாளாகிய தையலாளொருத்தி, அத்தானத்தி லுறைவானொருவனசரிதன்கவினைக்கண்டு, நானமுதலியன நாறத் தானேவந்து அருகே நின்றாளென்க.

இங்ஙனம்கூறாது சீவகன் கவினைக்கண்டு அவள் எய்தினளென்று கூறின், மேல் இவற்கு இவள் வேட்கைவிளைத்தலின், இவன் நெஞ்சு தன் தன்மை திரிந்ததனை இவன் தேற்றினனென்று கூறுவர்; அங்ஙனம் கூறவே மனம்வாக்குக்காயமென்னும் மூன்றினாற் செய்துகொள்ளும் பாவங்களிற் சிறந்த மனத்தாற்செய்துகொள்ளும் பாவமும் சீவகற்கு எய்திற்றுமாதலானும், [1] உழுவலன்போடு தோன்றிய மகளிரிடத்தல்லது இவற்கு வேட்கைநிகழாதென்பது இத் தொடர்நிலைச் செய்யுட்குக் கருத்தாதலானும் அது மாறுபடக்கூறிற்று மென்றுணர்க. (கக)

1568. குறிஞ்சிப்பூங் கோதை போலுங் குங்கும முலையினுடன்,
நிறைந்தபொற் கலாபந் தோன்ற நெடுந்துகில் விளிம்பொன் றேந்
திச், செறிந்ததோர் மலரைக் கிள்ளித் தெறித்திடாச் சிறிய
நோக்கா, நறும்புகைத் தூது விட்டு நகைமுகங் கோட்டி நின்றாள்.

குறிஞ்சிப்பூ குங்குமத்திற்குவமை. தோன்ற - சிறிதே உடைநெகிழ்தலாலே. ஒன்று - ஒருகை. ஒருகையாலே அத்துகிலின் விளிம்பைத் தாங்கி மற்றைக்கையாலே விநோதம் தோன்றத்தெறித்து. சிறிய நோக்கா - கடைக்கணித்துப்பார்த்து. காற்றுவாக்கிலே நின்று புகையைத் தூதுவிட்டு. கோட்டி - சாய்த்து.

(இ - ள்.) முலையினாள், ஏந்தித் தெறித்து நோக்கி விட்டுக் கோட்டி நின்றாளென்க. (கஉ)

---

(உரை) [1] உழுவலன்போடு தோன்றிய மகளிரிடத்தல்லது சீவகனுக்கு வேட்கை நிகழாதென்று ஈண்டுக்கூறியது, "ஏகு நல்வழி யல்வழியென்மனம், ஆகு மோவதற் காகிய காரணம், பாகு போன்மொழிப் பைந்தொடி கன்னியே, யாரும் வேறிதற் கையுற வில்லையே" (கம்ப. மிதிலை. 147) என்பதனை நினைப்பிக்கின்றது.

1568. கோதை - பூமாலை. குங்குமச் சாந்திற்குக் குறிஞ்சிப்பூ உவமை. கலாபம் - பதினாறு வடங்கொண்ட மேகலை. தோன்ற - நெகிழ்ந்து தோன்றுதலால். துகிலின் விளிம்பொன்றை ஏந்தி; "ஒருகைதுகிலேந்தி" (தஞ்சைவாணன். 27). ஏந்தி - கையால் தாங்கி. கிள்ளி - மற்றொரு கையால் கிள்ளி. தெறித்திடா - தெறித்து; மலர் முதலியவற்றைக் கிள்ளித் தெறித்தல்: "வெள்ளிற் குறுமுறி கிள்ளுபு தெறியா" (முருகு. 37); "பல்லிதழெதிர்மலர் கிள்ளி" (அகநா. 389 : 4). சிறிய நோக்கா - கடைக்கண்ணாற் பார்த்து. புகையைத் தூதுவிட்டு. முகம் கோட்டி - முகத்தைச் சாய்த்து.

1569. அணிகல வரவத் தாலு மமிழ்துறழ் நாற்றத் தாலும், பணிவருஞ் சிங்க நோக்கிற் பணையெருத் துறழ நோக்கி, மணி மலர் நாகஞ் சார்ந்து வழையொடு மரவ நீழற், றுணிவருஞ் சாய னின்ற டோன்றறன் கண்ணிற் கண்டான்.

(இ - ள்.) தோன்றல், அரவத்தாலும் நாற்றத்தாலும் அத்திசை யைச் சிங்கநோக்குப்போலே கழுத்து மாறுபடப் பார்த்து வழையோடு கூடிய மரவத்தினிழலிலே நாகத்தைச்சார்ந்துநின்றாள்; அங்ஙனநின்று ளாகிய அச்சாயலைக் கண்ணாலே கண்டானென்க.

நெஞ்சால் நோக்கிற்றிலன். துணிவருஞ்சாயல் - தெய்வமோ அல் லளோவென்று துணிவரிய சாயல். (கங)

1570. கண்டவன் கண்ணி னோக்க நடுங்கித்தன் காதிற் றாழ்ந்த, குண்டலஞ் சுடர வொல்கிக் கொடிநடுக் குற்ற தொப்ப, நுண்டுகிற் போர்வை சோர நுழைமழை மின்னி னிற்ப, எண் டிசை மருங்கு நோக்கி யியக்கிகொ லிவண்மற் றென்றான்.

(இ - ள்.) அங்ஙனங்கண்டவன், நெஞ்சானன்றிப் பொறியானோக்கு தலின், வேட்கையின்மைகண்டு, கொடிநடுக்குற்றதொப்ப நடுங்கி ஒல்கி மஞ்சிலே நுழையுமின்போலே போர்வைசோர அதனுள்ளே மறைந்து நிற்ப, இவளுடன் கூடவந்தாருளரோவென்று எண்டிசையிடத்தையு நோக்கி, இங்ஙனம் தனியே வருதலின், இவள் ஓர் இயக்கிபோலேயிருந் தாளென்று கருதினானென்க. (கச)

---

1569. அரவம் - ஒலி. அமிழ்து உறழ் - அமிர்தை வென்ற. பணி வரும் - தாழ்த்தற்கரிய. சிங்கநோக்கின் - முன்னும் பின்னும் பார்க்கின்ற சிங்கத்தின் நோக்கைப்போல. பணை எருத்து உறழ - பருத்த தன் கழுத்து மாறுபட. நோக்கி - அனங்கமாவீணை இருக்கின்ற திசையைப் பார்த்து. மணிபோலும் மலரையுடைய நாகம்; நாகம் - ஒருவகை மரம். வழையொடு கூடிய மரவ நிழலில் நாகத்தைச் சார்ந்து நின்றாளாகிய சாயலை என மாறியியைக்க; வழை - சுரபுன்னைமரம். தோன்றல்: வன சரிதன்.

1570. கண்டவன்: வனசரிதன். நோக்க - அவளைப் பார்த்தலால். கொடி நடுக்குற்றதொப்ப நடுங்கிச் சுடா ஒல்கி, மழையில் நுழையுமின்னி னைப்போல் துகிற்போர்வை சோர நிற்ப என மாறியியைக்க; ஒல்கி - அசைந்து. மழை - மேகம். துகிலாகிய போர்வை. நிற்ப - அப்போர்வை யுள் அனங்கமா வீணை மறைந்து நிற்க. நோக்கியவன் வனசரிதன். இவள் இயக்கிகொல் என்றான் என மாறியியைக்க; சீவக. 1326.

1571. எண்ணத்தி லியக்கி யென்றே யிருப்பமற் றெழுத லாகா, வண்ணப்பூங் கண்க ளம்பா வாணுதற் புருவம் வில்லா, உண் ணிறை யுடைய வெய்வா னுருவச்சா தகத்துக் கேற்பப், பெண்ண லங் கிடந்த பேதை பெண்ணலங் கனிய நின்றாள்.

வடிவுகூறுமிலக்கணத்திற்கு இசையப் பெண்ணலங் கிடந்த பேதை.

(இ - ள்.) அவன் தன்கருத்திலே இயக்கியென்றே யிருப்ப, பேதை பின்னர் இவன் நிறை கெடும்படி கண்கள் அம்பாக நுதலிற்புருவம் வில் லாகக் கொண்டு எய்யவேண்டித் தன் பெண்ணலம் முற்றுப்பெறநின்று ளென்க. (கரு)

1572. முறுவன்முன் சிறிய தோற்ற முகைநெறித் தனையவுண் கட், குறுநெறி பயின்ற கூந்தல் குறும்பல்கா லாவிக் கொள்ளாச், சிறுநுதற் புரவ மேற்றாச் சேர்துகிற் றானை சோர, அறியுந ராவி போழு மநங்கனைங் கணையு மெய்தாள்.

(இ - ள்.) அரும்பை அலர்த்தினாலொத்த கண்ணினையுடைய கூந் தல், அணுகிப் பல்கால் ஆவிக்கொண்டு மேற்போர்த்த துகிலோடே உடுத்த தானையும் நெகிழாநிற்க, அக்காமன்றானெய்வதற்கு முன்னாகச் சிறியவாக முறுவலையும் தோற்றுவித்துப் புருவமாகிய வில்லை வலித்து, காமனெய்யும் ஐந்தம்பையும் தானெய்தாளென்க.

---

1571. எண்ணத்தில் - வனசரிதனுடைய கருத்திலே. எழுதலாகா - சித்திரத்தில் எழுதமுடியாத. வண்ணம் - நிறம். பேதை, நிறை உடை யக் கண்கள் அம்பாக, புருவம் வில்லாக, எய்வான் பெண்ணலம் கனிய நின்றாள் என மாறியியைக்க. உருவச்சாதகத்துக்கேற்பப் பெண்ணலம் கிடந்த பேதை - வடிவத்தைப்பற்றிக் கூறும் இலக்கண நூலுக்குப் பொருந்தப் பெண்மை அழகு அமைந்த அநங்கமாவீணை. மனத்தின் உள்நிறை உடைய - வனசரிதனுடைய மனத்தின் நிறுத்தும் தன்மை கெடும்படி. எய்வான் - எய்யும் பொருட்டு. கனிய - முற்றுப்பெற.

1572. முன் சிறிய முறுவல் தோற்ற - காமன் தன் பாணங்களை எய் வதற்கு முன்பாகச் சிறியவாகச் சிரிப்பைத் தான் தோற்றுவித்து; "தானோக்கி மெல்ல நகும்" (குறள், 1094). முகை - அரும்பை. நெறித் தனைய - அலரச் செய்தாலொத்த; புறவிதழை ஒடித்தாலன்ன வெனலு மாம். குறுநெறி பயின்ற கூந்தல்: "குறுநெறிக் கொண்ட கூழைக் கூந் தலுள்" (பெருங். 1. 46 : 221). கூந்தல் : அநங்கமாவீணை. குறும்பல் கால் - ஒன்றுக்கொன்று அணித்தாகப் பலகால். ஆவிக்கொள்ளா - கொட் டாவிகொண்டு. ஏற்ற - வளைத்து. சோர - நெகிழ. போழும் - பிளக் கின்ற. அநங்கனது ஐங்கணையையும்; அநங்கன் - மன்மதன். கூந்தல், கொள்ளா, துகிலும் தானையும் சோர, முன் தோற்ற, ஏற்ற எய்தாள் என மாறிமுடிக்க.

'அறியுநராவிபோழுமம்பு' எனவே [1] இவனெஞ்சு தன்தன்மை சிறிது திரிகின்றமை பெற்றும். (கசு)

1573. வடுப்பிள வனைய கண்ணாள் வல்லவ னெழுதப் பட்ட,
படத்திடைப் பாவை போன்றோர் நோக்கின ளாகி நிற்ப, அடிப்
பொலிந் தார்க்குஞ் செம்பொ னணிமணிக் கழலி னனம், மடத்
தகை குறிப்பு நோக்கி மனத்திது சிந்திக் கின்றான்.

பவதத்தனை, 'கழலினன்' என்று ஒரு பெயரால் தேவர் கூறினர்.

(இ - ள்.) பாவை அழியுமளவும் ஒருகருத்தாய்நின்று அழியுமாறு போலே கண்ணாள் இவனைக்கூடுவதொரு கருத்தினளாய்நிற்ப, பவதத்த னுடைய அம்மடத்தகை கருத்தை அவ்வனசரிதன் தானறிந்து மனத்தே இதனை நினையாநின்றானென்க.

என்றது, [1] தன் தன்மைதிரிந்த நெஞ்சினைத் தேற்றுநின்றானென்ற வாறு. அது மேற்கூறுகின்றார். (கஎ)

(வேறு)

1574. கடிமாலை சூடிக் கருப்பூர முக்கித்
தொடைமாலை மென்முலையார் தோடோய்ந்த மைந்தர்
கடைமாலை மற்றவரே கண்புதைப்பச் செல்லும்
நடைமாலைத் திவ்வுலக நன்றரோ நெஞ்சே.

---

(உரை) [1] இவன் : வனசரிதன்.

1573. வடுப்பிளவனைய கண்ணாள் ; "வடுப்போழ்ந் தன்ன வாளரி நெடுங்கண்" (பெருங். 1. 46 : 223). வல்லவனால் எழுதப்பட்ட பாவை போன்று கண்ணாள், ஓர் நோக்கினளாகி நிற்ப என மாறியியைக்க. வல்லவன் - சித்திரக்கலையில் வல்லவன். கண்ணாள் : அநங்கமாவீணை. ஓர் நோக்கினளாகி - வனசரிதனைக் கூடுவதாகிய ஒரு கருத்துடைய வளாய். அடியில் பொலிந்து ஆர்க்கும். கழலினன் : பவதத்தன் என்னும் ஒரு வணிகன் ; இவன் அநங்கமாவீணையின் கணவன். அம்மடத்தகை : அநங்கமாவீணையினுடைய. நோக்கி - வனசரிதன் அறிந்து.

(உரை) [1] தன்னென்றது வனசரிதனை.

1574. கடி - வாசனை. முக்கி - உண்டு. தொடை - தொடுத்தல். கடைமாலை - பின்பு சிலநாளிலே. அவரே - அம்மகளிரே. கண்புதைப்ப - முன்பு தம்மைக் கூடின அம்மைந்தரின் முதுமைப்பருவத்தைக் கண்டு தம் கண்களைப் பொத்திக்கொள்ளும்படி. செல்லும் நடை - செல்லுகின்ற ஒழுக்கத்தை. இவ்வுலகம் மாலைத்து என மாறுக ; மாலைத்து - இயல்பாக வுடையது. நன்றரோ - இவ்வியல்பு நன்று ; அரோ அசை. நெஞ்சே யென்றது வனசரிதன் தன் மனத்தை விளித்துக் கூறியது.

இதுமுதல் ஐந்து பாடல்கள் வனசரிதன் கூற்று.

(இ - ள்.) நெஞ்சே! சூடி முக்கி முலையாரைக்கூடின மைந்தர் பின்பு சிலநாளிலே அவர் கண்புதைத்துக்கொள்ளும்படி செல்கின்ற ஒழுக்கத்தை இவ்வுலகம் இயல்பாகவுடைத்து; இவ்வியல்பு நன்றாயிருந்த தென்றானென்க.

அவரென்றது சாதிபற்றி. (கஅ)

1575. நாவி யகல மெழுதி நறுநுதலார்
ஆவி தளிர்ப்ப வவர்தோண்மேற் றுஞ்சினார்
தூவி யொழிபுள்ளிற் றோன்றித் துயருழப்பக்
காவி நெடுங்கண்புதைத் தாங்ககல்வர் நெஞ்சே.

(இ - ள்.) நெஞ்சே! புழுகை அகலத்தே பூசி நுதலார் ஆவி தழைக்கும்படி அவர்தோண்மேலே தங்கினவர், இளமை சென்றபின்பு கடைமயிர் கழிந்த பறவைபோலே தோன்றி வருந்துதலாலே, அவர்கண்ணைப் புதைத்து அவ்விடத்தினின்றும் அகலுவரென்றானென்க.

இதனால், [1] இருதலையுமொத்த அன்பின்திறங்கூறினார். (கக)

1576. இன்புகை யார்ந்த விழுதார்மென் பள்ளிமேல்
அன்புருகு நல்லா ரவர்தோண்மேற் றுஞ்சினார்
தம்புலன்கள் குன்றித் தளரத்தங் காதலார்
அன்புருகு கண்புதைத் தாங்ககல்வர் நெஞ்சே.

இழுதார்மென்பள்ளி - இழுதுபோலே மென்மைநிறைந்த பள்ளி; "வெண்ணெய்போன் றாறினியள்" (சீவக. 480) என்றார் முன்பும்; இழுதார் இன்புகையுமாம்.

---

(மேற்.) அடி, 1 : நன். உரி. 16, மயிலை.; சங்கர.

1575. நாவியை அகலத்தே எழுதி; அகலம் - மார்பு. நுதலாரது ஆவி தளிர்ப்ப; நுதலார் : மகளிர்; தளிர்ப்ப - குளிரும்படி. துஞ்சினார் - தங்கிய ஆடவர்கள். தூவி ஒழிபுள்ளின்தோன்றி - இறகு உதிர்ந்தொழிந்த பறவையைப்போலத் தம் முதுமையால் தோன்றி. துயருழப்ப - ஆடவர் வருந்துதலாலே. அம்மகளிர் கண்ணைப் புதைத்து ஆங்கு அகல்வர்; ஆங்கு - அவ்விடத்தினின்றும்.

(உரை) [1] இருதலையும் - கணவன் மனைவி என்ற இருவரிடத்தும்.

1576. புகையார்ந்த பள்ளி, இழுது ஆர்மென் பள்ளி எனத் தனித் தனியேபிரித்தியைக்க; இழுதார் மென்பள்ளி : சீவக. 3137; "இழுதுறழ் மென்மைய" (பெருங். 3. 14 : 59). புகை ஆர்ந்த - வாசனைப்புகையூட்டப் பெற்ற. இழுது - வெண்ணெய். அன்பாலுருகுகின்ற நல்லாராகிய அவரது; நல்லார் : மகளிர். துஞ்சினார் : ஆடவர். குன்றித்

(இ - ள்.) நெஞ்சே! பள்ளிமேலே அன்பாலுருகும் நல்லாராகிய அவர் தோண்மேலே தங்கினர், மூப்பால் தம்புலன்கள் குறைந்து தளர்தலாலே, அம்மகளிர் தம் கண்ணைப் புதைத்து அகல்வரென்றானென்க.

இதனாற் புலன் குறையுமென்றார். இவள் விரும்பப்பெற்றேமே என்று புணர்ந்தார்க்குப் பின் வருவது இதுகாணென்றான். (உ0)

(வேறு)

1577. என்பினை நரம்பிற் பின்னி யுதிரந்தோய்த் திறைச்சி மெத்திப், புன்புறந் தோலைப் போர்த்து மயிர்புறம் பொலிய வேய்ந்திட், டொன்பது வாயி லாக்கி யூன்பயில் குரம்பை செய்தான், மன்பெருந் தச்ச னல்லன் மயங்கினார் மருளவென்றான்.

(இ - ள்.) நெஞ்சே! தச்சன், உதிரத்தைத்தோய்த்து நரம்பாலே என்பினைக்கட்டித் தசையை அப்பிப் புன்புறமறையத் தோலைப் போர்த்து அப்புறம் பொலிவுபெறும்படி மயிராலே வேய்ந்து ஒன்பது வாயிலாக்கி நன்றென்று மயங்கினார்மருளக் குரம்பைசெய்தான்; ஆதலால், மிகவும் நல்லனாயிருந்தானென்றானென்க. (உக)

1578. வினைப்பெருந் தச்ச னல்லன் மெய்ம்மைநா நோக்க லுற்றால், எனக்குற்றுக் கிடந்த தென்றாங் கிருகணும் புதைத்து வைக்கும், நினைப்பினாற் பெரிய ரென்னா னீந்தினார் கலைக ளென்னான், மனத்தையுங் குழையச் செத்து மாண்பினன் மாதோ வென்றான்.

---

தளர - குறைந்து தளர்தலால். காதலார் அன்பாலுருகிய கண்ணைப் புதைத்து அகல்வர் என்க; காதலார் : சுட்டுப்பெயர்மாத்திரை.

1577. பின்னி - கட்டி. உதிரம் - இரத்தத்தை. இறைச்சி மெத்தி - தசையை அப்பி. போர்த்து - மறைத்து. மயிரை வேய்ந்திட்டு என மாறியியைக்க. புறம் - வெளிப்புறம். ஒன்பது வாயில் : "ஒண்ணுளே யொன்பது வாசல் வைத்தாய்" (தே. திருநா.). குரம்பை - கூடு. மன்பெருந்தச்சன் - மிகப்பெரிய தச்சன். மு : "என்பினை நரம்பிற் பின்னி யுதிரந்தோய்த் திறைச்சி மெத்திப், புன்புறந் தோலின்மூடி......... ஒன்பது வாயிற் றாய வூன்பயில் குரம்பை" (மேரு. வைசயந்த. 116); "இடையுறு மென்பினை நரம்பி னார்த்திடாப், புடையுறு மிறைச்சியாற் பொதிந்து போக்கற, மிடைதரு தோலினான் வேயப் பட்டதோர், உடலினை யானென வுரைக்க லொண்ணுமோ" (பாகவதம், 5. 2 : 31)

1578. வினை - படைக்குந் தொழில். நல்லன் - நல்லனாயிருந்தான். மெய்ம்மையை நாம் நோக்கலுற்றால்; மெய்ம்மையை - உடம்பின் உண்மைத் தன்மையை. இருகணும் - ஞானக்கண்ணும் ஊனக்கண்ணும். புதைத்து - மறைத்து. நினைப்பினாற் பெரியர் என்னானாய், கலைகளை நீந்தினார் என்னானாய் என்க; நினைப்பு - அறிவு; கலைகளை நீந்தினார் -

(இ - ள்.) நெஞ்சே! படைக்குந்தொழிலையுடைய தச்சன், உடம்பி னுண்மையை நாம் பார்க்கத்தேடினால் அப்பொழுது எனக்கு [1] உறுகோ ளாய்க் கிடந்ததென்று பார்க்கும்படி ஞானக்கண்ணையும் ஊனக் கண்ணையும் மறைத்து வையாநிற்கும்; அதுவுமன்றி, இயல்பான அறிவு மிக்காரென்றுைய்க் கல்வி மிக்காரென்றுைய் எல்லாருள்ளங்களையும் தளரும்படி செத்தும் மாண்பினதாதலால், நல்லனுயிருந்தானென்று னென்க. (உஉ)

1579. (க) என்றவ னிருப்ப மாத ரென்வர விசைப்பி னல்லால், ஒன்றுமற் றுருகல் செல்லா னென்றெடுத் தோது கின்றாள், மன்றலந் தோழி மாருள் வனத்திடைப் பண்ணை யாடக், குன்றி டைக் குளிர்க்கு மின்போற் குழாமழை முகட்டிற் செல்வான்.

1580. (உ) மயிலின மிரிய வாங்கோர் மடமயி றழுவிக் கொண்ட, வெயிலிளஞ் செல்வன் போல விஞ்சைய னெற்கொண் டேகத், துயிலிய கற்பி னுடன் றுணைவிகண் டிடுவித் திட்டாள், அயிலியல் காட்டுள் வீழ்ந்தே னநங்கமா வீணை யென்பேன்.

1581. (ங) தாயிலாக் குழவி போலச் சாதுய ரெய்து கின்றேன், வேயுலாந் தோளி னுர்தம் விழுத்துணைக் கேள்வநிற்கண், டாயி னேன் றுறக்கம் பெற்றே னளித்தரு ளாதுவிட்டாற், றீயினு ளமிர்தம் பெய்தாங் கென்னுயிர் செகுப்ப லென்றாள்.

இவைமூன்றும் ஒருதொடர்.

---

கல்விமிக்கார்; என்னுைய் - என்று கருதானுகி. மனத்தையும் - எல்லா ருள்ளத்தையும். செத்தும் - வெட்டும்.

(உரை) [1] உறுகோள் - ஆதாரம்; "குளங்கோடு மென்றிதுவு முறுகோளே" (கம்ப. சூர்ப்பணகை. 140)

1579. அவன் : வனசரிதன். மாதர் : அநங்கமாவீணை. வரவு . தான் காட்டுள்வந்த வரலாறு. ஒன்றும் - சிறிதும். மற்று : அசை: மன்றல் - மணம். பண்ணை - மகளிர் விளையாட்டு. குளிர்க்கும் - தங்கும்; திசைச்சொல். மின் வித்தியாதரனுக்கு உவமை. குழா மழை - கூட்ட மாகிய மேகத்தின். முகடு - உச்சி.

1580. இரிய - கெட்டோட. மயிலைத் தழுவிக்கொண்ட. சூரியன் விஞ்சையனுக்கு உவமை. எற்கொண்டு - என்னைக்கொண்டு. துயிலிய - நிலைபெற்ற. கற்பினுள் : விஞ்சையன் மனைவி. அயில் இயல் - கொடுமை இயன்ற. மு : மணி. 3 : 28 - 41.

1581. தாயிலாக்குழவி : புறநா. 4, 230, 379; மணி. 13 : 11, 25 : 111-2. சாதுயர் - சாகின்ற துன்பம். வேய் உலாம் - மூங்கிலை ஒத்த. விழுத்துணை - சிறந்த துணைவனுகிய. துறக்கம்பெற்றேனுயினேன். அளித்து - தலையளி செய்து. பெய்தாங்கு - பெய்தாற்போல. செகுப்பல் - அழிப்பேன்.

(இ - ள்.) என்று நெஞ்சினைத் தேற்றி அவனிருந்தவளவிலே, மாதர் யான்வந்தபடி கூறினல்லது சிறிதும் அருளானென்றுகருதிக் கேட்கக் கூறுகின்றவள், தோளினூர்க்குத் துணையாகிய கேள்வனே! மலையிடத்தே தங்கும் மின்போல் மழைமேலே செல்வானாகிய விஞ்சையன், வனத்திடையிலே மணத்தையுடைய என் தோழிமாருள்ளே யான்விளையாடாநிற்க, மயிற்றிரள்கெட அதற்குள்ளே ஒரு மயிலையெடுத்துக்கொண்ட இளஞாயிறுபோலே என்னைக் கொண்டுபோனானாகை, தங்கிய கற்பினாளாகிய அவன் துணைவி என்னைக்கண்டு போகவிடுத்தாள்; இக்கொடிய காட்டிலே வீழ்ந்தேன்; யான் அநங்கமா வீணையென்று பெயர்கூறப்படுவேன்; நின்னைக்காண்பதற்குமுன் தாயிலாக் குழவிபோலத் துயரெய்துகின்ற யான் நின்னைக்கண்டு துறக்கம்பெற்றேனாயினேன்; இனி என்னை அருள்பண்ணிநோக்கி அருளாதேவிட்டால் தீயினுள்ளே அமிர்தத்தைப் பெய்தாற்போலே என்னுயிரைக் காமத்தீயினுள்ளே பெய்து கெடுப்பேனென்றாளென்க.

மயிலுவமை தோழிமாரஞ்சியோடியதற்கு. உலாம்: உவமைச்சொல். சந்நியாசியன்மையின், தோளினூர்துணைவவென்றாள். (உரு-ரு)

1582. மணியெழு வனைய தோளும் வரையென வகன்ற மார்பும்
தணிவருங் கயத்துப் பூத்த தாமரை யனைய கண்ணும்
பணிவரும் பருதி யன்ன முகமுமென் றயர்ந்து காமப்
பிணியெழுந் தவலிக் கின்ற பேதைநீ கேளி தென்றான்.

தணிவு - வற்றுதல். பணிவு - தாழ்வு.

(இ - ள்.) தோளும், மார்பும், கண்ணும், முகமும் [1] வருத்துமென்று மயங்கிக் காமநோய் தோன்றி வருந்துகின்ற பேதாய்! நீ இங்ஙனங் கருதின இவ்வுடம்பின் றன்மையைக்கேளென்றானென்க. (உசு)

1583. போதொடு நான மூழ்கிப் பூம்புகை தவழ்ந்து முல்லைக்,
கோதைகண் படுக்குங் கூந்தல் குரைவளி பித்தோ டையேய்,
ஏதஞ்செய் மலங்க ணெய்த்தோ ரிறைச்சியென் பீருண் மூளை,
கோதஞ்செய் குடர்கள் புன்றோ னரம்பொடு வழும்பி தென்றான்.

1582. மணி எழு - அழகிய கணையமரம். வரை - மலை. கயத்து - குளத்தில். பருதி - சூரியன். காமப்பிணி - காமமாகிய நோய். அவலிக்கின்ற - வருந்துகின்ற. பேதை: விளி. இது - இவ்வுடம்பின் தூயதல்லாத தன்மையை.

(உரை) [1] வருத்துமென்னும் பயனிலை வருவிக்கப்பட்டது.

1583. போது - மலர். நானம் - புழுகிலை. புகை - அகிற்புகை. கூந்தல்: விளி. குரைவளி - ஒலிக்கும் காற்று. வளி, பித்து, ஐ: குறள், 941. ஏதம்செய் - துன்பத்தைச் செய்யும். நெய்த்தோர் - இரத்தம்.

(இ - ள்.) நானத்தே மூழ்கிப் புகை தவழப்பட்டுப் போதோடே கோதைதுயில் கொள்ளும் கூந்தால்! இவ்வுடம்பு ஏதஞ்செய்கின்ற வளியையும் பித்தையும் ஐயையும் பொருந்தின மலங்களும், குருதியும், தசையும், என்பும், ஈரலும், மூளையும், பொல்லாங்கு செய்யும் குடர்களும், தோலும், நரம்பும், வழும்புமாயிருக்குமென்று கூறினானென்க.

பூமுதலியவற்றாற் கூந்தல் நன்றாயிற்றென்றான். (உ௭)

1584. விழுக்கொடு வெண்ணஞ் சல்லா வுகிர்மயி ருமிழ்கட் பீளைப், புழுப்பயில் குரம்பை பொல்லாத் தடிதடிக் கீழ்ந்த போழ் தில், விழித்தியார் நோக்கு கிற்பார் பிள்ளையார் கண்ணுட் காக்கை, கொழிப்பரும் பொன்னிற் றோன்றுங் கொள்கைத்தாற் கொடியே யென்றான்.

விழுக்கும் வெண்ணஞ்சும் ஊன்விசேடம்; வெண்ணஞ்சு - நிணமு மாம். அல்லா - இவையொழிந்த. கண்ணுமிழ்பீளை. பிள்ளையார் - கரிக்குருவியார்; கரிக்குருவியார் கண்ணுக்குக் காக்கையார் பொன்னொத் துத் தோன்றுமென்பது ஒருபழமொழி.

(இ - ள்.) கொடியே! விழுக்குமுதலியவற்றையுடைய புழுப்பயில் கின்ற இவ்வுடம்பு வேறுவேறுபட்டுக் கிடந்தபொழுது விழித்துப்பார்ப்பார் ஒருவருமில்லை; இஃது அங்ஙனம் வேறுபடாமையின், விளைகின்ற காமத்தாலே 'காக்கை கரிக்குருவிக்குப் பொன்போற்றோன்றும் கொள்கையையுடைத்தாயிற்றுக்கா ணென்றானென்க. (உ௮)

1585. உருவமென் றுரைத்தி யாயி னிறைந்ததோற் றுருத்தி தன்னைப், புருவமுங் கண்ணு மூக்கும் புலப்பட வெழுதி வைத் தாற், கருதுவ தங்கொன் றுண்டோ காப்பியக் கவிகள் காம, எரியெழ விகற்பித் திட்டா ரிறைச்சிப்போ ரிதனை யென்றான்.

---

ஈருள் - ஈரல். கோதம் - தீமை. வழும்பு : "வைத்த தடியும் வழும்புமா மற்றியற்றுள்" (நாலடி. 46)

1584. விழுக்கொடு வெண்ணஞ்சு : புறநா. 326 : 10,371 : 22. (பி - ம்.) 'வெண்ணெஞ்சு.' உகிர் - நகம். பீளையையுடைய குரம்பை. பொல்லாத தடி தடியாக; தடி - இறைச்சி. கீழ்ந்த - பிளந்த. நோக்கு கிற்பார் யார் - அருவருப்படையாமல் நோக்கும் வன்மையுடையார் யார்? பொன்னின் - பொன்னைப்போல. கொள்கைத்தால்; ஆல் : அசை. கொடியே யென்றது அநங்கமாவீணையை.

1585. உருவம் என்று - உடம்பின் வெளிப்புறம் அழகுடையது என்று. நிறைந்த - இரத்தம் முதலியவைகளால் நிரம்பிய. புலப்பட - நன்றாக. கருதுவதங்கொன்று உண்டோ - அத்துருத்தியின் உருவம் அழகாயுள்ளதென்று கருதுவதொரு பொருளுண்டோ; இல்லையென்ற

(இ - ள்.) உள்ளொழியப் புறத்தின்வடிவு நன்றென்றுரைத்தியாயின், முற்கூறியவெல்லாம் நிறைந்ததொரு தோற்றுருத்தியைப் புருவ முதலியன நன்ருக எழுதிவைத்தால் நன்றென்று கருதுவதொரு பொருளில்லையே ; ஆதலின், இறைச்சித்திரளாகிய இதனைக் காப்பியஞ் செய்யுங்கவிகள் மக்கட்குக் காமத்தீயெழும்படி வேறுபடுத்தினர்கள் காணென்ருனென்க.

இவை இவட்குத் தெளிவு நிகழுமென்று கூறினன். இவர்கள் இங்ஙனம் நிற்பப் பவதத்தன் கூறி வருந்துகின்றமை மேற்கூறுகின்ருர். (உகூ)

(வேறு)

1586. (க)

காதன்மாமன்மடமகளேகருங்குழன்மேல்வண்டிருப்பினும்
ஏதமுற்றுமுரியுநுசுப்பென்றுன்னியல்பேத்துவேன்
ஓதம்போலவுடன்றுடன்றுநையநீயொண்டாமரைக்
கோதைபோல்வாயொளித்தொழிதல்கொம்பேகுணனுருமே.

1587. (உ)

வண்ணத்திங்கண்மதிமுகத்தவாளோகருங்கயல்களோ
உண்ணுங்கூற்றேவொளிவேலோபோதோவுணர்கலேனுற்
பண்ணின்றீஞ்சொலாய்படாமுலைப்பாவாய்கொடியேபாங்கின்
உண்ணுந்தேனேயமிர்தேயென்னின்னுயிரேயெங்கணுயோ.

---

வாறு. இறைச்சிப்போராகிய இதனைக் கவிகள், மக்களுக்குக் காமவெரியெழும்படி விகற்பித்திட்டார் என்ருன் என்க. காப்பியம் : " காப்பிய வாசனை கலந்தவை சொல்லி '' (பெருங். 4. 3 : 42)

(மேற்.) அடி, 1 : தொல். உரி. 4, ந. 3-4 : சிலப். உரைப்பாயிரம், பக். 8, அடியார்.

1586. மாமன் - பவதத்தனது மாமனுன ஸ்ரீமான் என்பவன். ஏதமுற்று - துன்பமடைந்து. நுசுப்பு - இடை. உன் இயல்பை ஏத்துவேன். ஓதம்போல உடன்று உடன்று நைய - யான் கடலைப்போல, வருந்தி வருந்திக் கெடும்படி. ஒண்டாமரையிற் கோதைபோல்வாய் - திருமகளைப் போல்வாய். ஒளித்தொழிதல் - மறைந்து நீங்குதல். குணனுருமே - நல்ல குணத்தின் செயலாகுமே ; ஆகாதென்றவாறு. மகளே, கோதை போல்வாய், கொம்பே என்னும் அடுக்கிய விளிகளால் காதற்சிறப்புப் புலப்படும். இதுமுதல் ஏழு பாடல்கள் பவதத்தன் கூற்று.

1587. திங்கள் மதிமுகத்த - சந்திரனும் மதித்தமுகத்தில் உள்ளன ; மதிமுகம் : வினைத்தொகை. உண்ணும் - உயிரை உண்கின்ற. போதோ - மலரோ. வாள்முதலியன கண்ணிற்கு உவமை. பண்ணின் - இராகத்தைப் போன்ற. படாமுலை - சாயாத முலையையுடைய. (பி - ம்.) ' பாவாய் பாங்கின் '. பாங்கின் - நல்ல இடத்திலுள்ள. உண்ணும் - உண்ணப்படுகின்ற. (பி - ம்.) ' ஆரமிர்தேயின்னுயிரே '. எங்கணுயோ - எவ்விடத்துள்ளாய் ; ஓ : வியப்பு.

1588. (௩)

இலவம்போதேரெழிற்றகையசீறடிகளஞ்சியொல்கிப்
புலவன்சித்திரித்தபொற்சிலம்புநகப்பூநிலத்துமேல்
உலவும்போழ்துமென்னுவிமலர்மேன்மிதித்தொதுங்குவாய்
கலவமஞ்ஞையனையாய்கட்காதலொழிகல்லேனால்.

இவை மூன்றும் ஒரு தொடர்.

(௨) [1] என்னென்பது வினா. ஓ : வியப்பு.

(௩) ஏர் - ஒப்பு. புலவன் - பொன்செய் கொல்லன்.

(இ - ள்.) காதலையுடைய என் மாமன்மகளே! திருவையொப்பாய்! கொம்பே! தீஞ்சொல்லாய்! பாவாய்! கொடியே! தேனே! அமிர்தே! இனியவுயிரே! சீறடியொல்கிச் சிலம்பொலிப்பப் பூநிலத்துலவும் பொழுதும் அந்நிலத்திலன்றி என்மனமாகிய மலர்மேலே நடப்பாய்! நினது திங்கள் மதித்த முகத்திலுள்ளன வாளோ, கயலோ, கூற்றோ, வேலோ, போதோவென்றும், வண்டிருப்பினும் இடைமுரியுமென்றும் நின்னியல்பையேத்துவேன்; அந்தப் பூவிலே மிதித்துத் திரிகின்ற நீ யான் கடல்போல் மறுகி நையும்படி மறைந்து நீங்குதல் நினக்குக் குணமாமோ? இதற்குக் காரணமென்? அஃதுணர்கிலேன்; நின்னிடத்துக் காதலையும் நீக்கமாட்டேன்; இனி நீ எவ்விடத்தாய்? கூறென்றானென்க. (௩௦ - ௩௨)

1589.

பணிசெயாயத்துப்பந்தாடுகின்றாயைக்கண்டுமாழ்கிப்
பிணிசெய்நோயேன்யான்கிடப்பப்பிறர்வாயதுகேட்டலும்
துணிகபோதுமெனவிடுத்தாய்போந்தேன்றுயருழப்பநீ
மணிசெய்மேகலையாய்மாற்றந்தாராய்மறைந்தொழிதியோ.

(இ - ள்.) ஆயத்தே பந்தாடுகின்ற நின்னைக்கண்டு மயங்கிப் பிணித்தலைச்செய்யு நோயேனாய்க்கிடக்க, அந்நோயைப் பிறர்கூறக் கேட்டவளவிலே; யாம் உடன் போகக் கடவேம்; அதனைத்தான் துணிக

---

(உரை) [1] 'அமிர்தேயென்' என்பதிலுள்ளது.

1588. இலவம்போது ஏர் - இலவம்பூவை ஒத்த. அடிக்கு இலவம்பூ உவமை. ஒல்கி - அசைந்து. புலவன் - பொற்கொல்லன். நக - ஒலிப்ப. பூநிலத்துமேல் - பூப்பரப்பிய பூமியின்மீது. ஆவிமலர் - மனமாகிய மலர். கலவம் - தோகை. மஞ்ஞையனையாய்கண் - மயிலைப்போன்ற உன்னிடத்து. காதலை ஒழிகல்லேன்; ஒழிகல்லேன் - நீக்கமாட்டேன்.

1589. பணிசெய் ஆயத்து - ஏவல் செய்கின்ற தோழியர் கூட்டத்தே. ஆடுகின்றாயை - ஆடுகின்ற நின்னை. மாழ்கி - மயங்கி. நோயேனாய் யான் கிடப்ப. அது - நின்னிடத்து யான்கொண்ட அக்காமநோயை. போதும் துணிக என விடுத்தாய் என்க; போதும் - யாம் உடன்போவோம். துணிக - அதனைத் துணிவாயாக. எனவிடுத்தாய் - என்றிகூறி விடுத்தாய்; (பி - ம்.) 'எனவுரைத்தாய்.' போந்தேன் -

வென்று கூறிவரவிட்டாய் ; அக்கூற்றாலே போந்த யான் வருந்தும்படி, மேகலையாய்! மறுமாற்றஞ் சொல்லாயாய் மறைந்துபோகின்றாயோ என்றானென்க. (௯௯)

1590. இயக்கிநின்னேடிணையொக்குமென்று நலஞ்செகுப்பான், மயக்கிக் கொண்டுபோய் வைத்தாயென் மாதரைத் தந்தருளிநீ, நயப்ப வெல்லாந் தருவலெனத் தொழுது நல்லி யானைதன், வயப் பிடிகெடுத்துமாழாந்த தொப்பமதி மயங்கினான்.

இயக்கி : விளி.

(இ - ள்.) அங்ஙனங்கூறி, இயக்கி! என்மாதரை நின்னோடிணைத் தற்கண் ஒப்பளென்றுகருதி அவளலத்தைக்கெடுத்தற்கு அறிவைக் கலக் கிக் கொண்டுபோய் மறைத்துவைத்தாய் ; நீ அவளைத் தந்தருளுவாயாக; தந்தால் நீவிரும்பினவெல்லாம் தருவேனென்று வணங்கி, யானை தன் வலிய பிடியைக் கெடுத்து மயங்கினாற்போல மயங்கினானென்க. (௯௪)

1591. மல்லற்றொல்வளத்துமத்திமநன்னாட்டுவண்டாமரை
புல்லும்பேரூர்ப்புகழ்த்தத்தன்காதற்சினதத்தைக்கும்
செல்வநாமற்குஞ்சித்திரமாமாலைக்குஞ்சுற்றத்தார்க்கும்
அல்லல்செய்தேனவட்சென்றாலென்னுரைக்கேனென்செய்
[கேனே.

(இ - ள்.) வளப்பத்தையுடைய செல்வத்தையுடைத்தாகிய மத்திம தேசத்திற் பதுமபுரத்தில், என் தந்தை கீர்த்திதத்தனுக்கும், என்தாய் சினதத்தைக்கும், என்மாமன் ஸ்ரீமானுக்கும், என்மாமி சித்திரமாமாலைக் கும், ஒழிந்த சுற்றத்தார்க்கும் வருத்தஞ் செய்தேன்; யான் அவ்விடத்தே சென்றால் என்னுரைப்பேன்! இனி இவ்விடத்து யான் என்செய்வே னென்றானென்க. (௯௫)

---

நீ கூறியபடி போந்த யான். மாற்றம் - மறுவார்த்தை. தாராயாய் மறைந்தொழிதியோ ; ஓ : வியப்பு.

1590. இயக்கி - யக்ஷிதேவதை ; விளி. இணையொக்கு மென்று - ஒப்பிடுதற்கண் என்மனைவி ஒப்பாவாள் என்று கருதி. நலம் செகுப் பான் - அவள் அழகைக் கெடுத்தற்கு. என் மாதரை - என் மனைவியாகிய அநங்கமாவீணையை. நீ தந்தருளு. நயப்ப - விரும்புவனவற்றை. யானை - ஆண்யானை. வய - வலி ; தொல். உரி. 68. பிடியைக்கெடுத்து - பெண் யானையை இழந்து. மாழாந்தது ஒப்ப - மயங்கியதைப்போல. மதி - அறிவு.

1591. மல்லல் வளத்து - மிக்க செல்வத்தையுடைய. தாமரைபுல்லும் பேரூர் - பதுமபுரத்தில். புகழ்த்தத்தன் - கீர்த்திதத்தன் ; இவன் பவதத்த னுடைய தந்தை. சினதத்தை : பவதத்தனுடைய தாய். செல்வநாமன் : ஸ்ரீமான் ; இவன் பவதத்தனுடைய மாமன். சித்திரமாமாலை : பவதத்த னுடைய மாமி. அல்லல் - துன்பம். அவட்சென்றால் - அவ்விடத்துக்கு யான் போனால்.

1592. உண்ணுநீர்வேட்டசைந்தேனெனவுரைப்பக்காட்டுளுடி
நண்ணிப்பொய்கைதலைப்பட்டுநற்றாமரையிலையினுட்
பண்ணிநீர்கொண்டுவந்தேன்படாமுலைப்பாவாயென்
றண்ணலாற்றுதழுதழுதுவெந்துருகிநைகின்றானே.

(இ - ள்.) தலைவன், பாவாய்! நீ தண்ணீர்வேட்டு இளைத்தேனெனக் கூறுதலாலே, காட்டிலே பொய்கையை நாடிக் கிடைத்து அதனை நண்ணித் தாமரையிலையைக்கோலி அதனுள்ளே தண்ணீர் கொண்டுவந்தேன்; நின்னைக் கண்டிலேனென்றுகூறி அழுது அழுது உருகி நையாநின்றானென்க. (சு௬)

1593. குழைகொள்வாண் முகத்துக் கோல்வளையைக் காணான் குழைந்தழுகின்ற, அழகன்சொல்லுமணிசெய்கோதைகாமமுங் கண்டுங்கேட்டும், முழவுத்தோளான்முறுவலித்தீங்கேயிருநீயென், றிழையச்சொல்லியிளையானிளையானையெய்தினானே.

தோளான் - இவர்கள் செய்தியைக் கண்டிருந்த சீவகன். இழையச் சொல்லி யென்றது தாமுறைவிடத்தே வந்தார்க்குத் தாம் நுகர்வன வற்றைக் கொடுத்துப் பேணிவிடுத்தல் வனசரிதர்க்கியல்பாதலின், சீவகன் போக்கொருப்பட்டமை கண்டு, அவ் வனசரிதனும் யானுகர்வன வற்றை நீயுநுகர்ந்து வழிவரல் வருத்தந் தீர்ந்து ஏகுவாயாகவென்றாற்கு, அவனும் தனக்கு அவ்வருத்தமின்மையை அவன் மனம்பொருந்தச் சொல்லியென்றவாறு. ஈங்கே யிருவென்றது - எப்பொழுதும் இப்படியே மனத்தைச் சென்றவிடத்தாற் செல்லவிடாதே (குறள், 422) விலக்கி யிருக்கவென்றவாறு. ஆங்கு உவமவுருபாயினமையின், [1] ஈங்கும் உவம வுருபாம் புறனடையால்; இவ்விடத்தே [2] இருவென்று உபசாரமுமாம். சீவகன் அவளை இங்கேயிருவென்றுபொருந்தக்கூறல் அவற்கு இயை யாமையுணர்க.

---

1592. அசைந்தேன் - இளைத்தேன். உரைப்ப - நீ கூறுதலாலே. பொய்கையைநாடித் தலைப்பட்டு நண்ணி என்க; தலைப்பட்டு - எதிர்ப் பட்டு. பண்ணி - பாத்திரமாகக் கோலி. அண்ணல் : பவதத்தன். நைகின்றான் - வருந்துகின்றான்.

1593. குழை - குண்டலம். முகத்தையுடைய கோல்வளையை : அநங்கமாவீணையை. காணாளைக்குழைந்து அழுகின்ற; குழைந்து - வருந்தி. அழகனது சொல்லைக்கேட்டும் கோதையது காமத்தைக் கண்டும் என்க; அழகன் : பவதத்தன். கோதை : அநங்கமாவீணை. தோளான் : சீவகன். முறுவலித்து - புன்முறுவல் செய்து. இழையச்சொல்லி - வன சரிதன் தனக்குச்செய்த உபசாரத்திற்குப் பொருந்தத் தான் மறுமொழி கூறி. இளையான் : சீவகன். இளையானை - பவதத்தனை.

(உரை) [1] முறுவலித்தீங்கே என்பதிலுள்ளது. [2] (பி - ம்.) ‘இருவென விகாரமுமாம்.’

(இ - ள்.) சீவகன், கோல்வளையைக்காணுமல் அழுகின்ற பவதத்தன் கூற்றைக் கேட்டும், அநங்கமாவீணை வனசரிதன்மேல் நிகழ்த்தின காமத்தைக்கண்டும் நக்கு, வனசரிதனுபசாரத்திற்கு இழையச் சொல்லி, அவனை இப்படியே நீ எக்காலமுமிருவென்றுகூறி, அவன் பவதத்தனைச் சேர்ந்தானென்க. (௬எ)

1594. என்னை கேளீ ரென்னுற்றீ ரென்ன பெயரீ ரென்ருற்குப், பொன்னங் குன்றிற் பொலிந்ததோ ணம்பி யொருபொற் பூங் கொடி, என்னுநீராளை யீங்கேகெடுத்தேனென்பாவத்தாற், பன் னூற் கேள்வியுடையேன்யான் பவதத்தனென்பே னென்ருன்.

இர் ஈறு, ஓகாரம்பெறுதலேயன்றி, ஈர்பெறுதலும், "ஏனைப் புள்ளி யீறுவிளி கொள்ளா" (தொல். விளிமரபு, 12) என்பதனுற்கொள்க.

(இ - ள்.) கேளீர்! நீர் என்னவருத்தமுற்றீர்? அதற்குக்காரண மென்னை? என்ன பெயரையுடையீர்? என்று கேட்ட சீவகற்கு, நம்பி! இவ்விடத்தே என்பாவத்தாலே வல்லிபோல்வாளைக் கெடுத்தேன்; யான் நூற்கேள்வியுடையேன்; பவதத்தனென்று பெயர்கூறப்படுவேனென்ரு னென்க. (௬அ)

(வேறு)

1595. கைப்பொருள் கொடுத்துங் கற்றல் கற்றபின் கண்ணு மாகும், மெய்ப்பொருள் விளைக்கு நெஞ்சின் மெலிவிற்கோர் துணையு மாகும், பொய்ப்பொருள் பிறகள் பொன்னும் புகழுமாந் துணைவி யாக்கும், இப்பொரு ளெய்தி நின்றீ ரிரங்குவ தென்னை யென்ருன்.

கற்றல்: அல்லீற்றுவியங்கோள்; "இற்றெனக்கிளத்தல்" (தொல். கிளவி. 19) போல.

---

1594. என்னை - வருத்தமுற்றதற்குக் காரணம் என்ன. பெயரீர் - பெயரையுடையீர். என்ருற்கு - என்றுகேட்ட சீவகனுக்கு. பொன்னங் குன்றின் - பொற்குன்றைப்போல; அம்: சாரியை. நம்பி என்றது சீவகனை; விளி. என் பாவத்தால் நீராளை ஈங்கே கெடுத்தேன்; நீராளை யென்றது அநங்கமா வீணையை. கெடுத்தேன் - இழந்தேன்.

(மேற்.) அடி, 1: தொல். விளி. 12, ந.

1595. கற்றல் - கற்க. கண்ணுமாகும் - ஞானக்கண்ணுமுண்டா கும். மெய்ப்பொருள் விளைக்கும் - ஞானக்கண் உண்மைப்பொருள்களை விளைவிக்கும். நெஞ்சின் மெலிவிற்கு - மனவருத்தத்திற்கு. பிறகள் பொய்ப்பொருள்; கள்: அசை. பொன் ஆம் - பொருள்கள் உண்டாகும். புகழாம் துணைவியும் ஆக்கும் - கீர்த்திமகளையும் உண்டாக்கும். இப் பொருள் - இக்கல்விப் பொருளை. இரங்குவது என்னை - வருந்துதற்குக் காரணம் என்ன? இதுமுதல் நான்கு பாடல்கள் சீவகன்கூற்று.

(இ - ள்.) தனக்கு இடுக்கண்வந்தால் உதவும் பொருளைக் கொடுத்தும் கற்க; கற்றபின் ஞானக்கண்ணுமுண்டாகும்; அது தத்துவத்தினை விளக்கும்; வருத்தத்திற்கு உதவியுமாம்; ஆதலின், இதனையொழிந்த பொருள்கள் பொருளல்ல; இதனால் மீண்டும் பொருள்களுண்டாம்; கீர்த்திமகளையுமுண்டாக்கும்; இப்பொருளைப் பெற்றுநின்ற நீர் அறியாமல் வருந்துதற்குக் காரணமென்னென்றானென்க.

புகழும் துணைவியுமென்றுமாம். (௩௯)

1596. அன்புநா லாக வின்சொ லலர்தொடுத் தமைந்த காதல்
இன்பஞ்செய் காமச் சாந்திற் கைபுனைந் தேற்ற மாலை
நன்பகற் சூட்டி விள்ளா தொழுகினு நங்கை மார்க்குப்
பின்செலும் பிறர்க ணுள்ளம் பிணையனார்க் கடிய தன்றே.

(இ - ள்.) அன்பு நூலாக இன்சொல்லாகிய பூவைத்துக் கட்டிக் காதலாகிய சாந்தாலே கைபுனைந்து ஏற்றவின்பஞ்செய்கின்ற காம மாலையை நங்கைமார்க்குப் பகற்பொழுதுஞ்சூட்டி நீங்காதிருப்பினும் அவர்க்குக் கண்ணும் மனமும் பிறர்பின்செல்லும்; அஃது அடியிலே யுள்ளதன்றேயென்றானென்க.

பகல் - வெளியுமாம். (௪௦)

1597. பெண்ணெனப் படுவ கேண்மோ பீடில பிறப்பு நோக்கா, உண்ணிறை யுடைய வல்ல வொராயிர மனத்த வாகும், எண்ணிப் பத் தங்கை யிட்டா லிந்திரன் மகளு மாங்கே, வெண்ணெய்க்குன் றெரியுற் றுற்போன் மெலிந்துபின் னிற்கு மன்றே.

---

1596. இன்சொல்லாகிய அலரைத்தொடுத்து; அலர் - பூ. அமைந்த - பொருந்திய- காதலாகிய சாந்தால். கைபுனைந்து காமமாகிய இன்பஞ் செய் மாலையை நங்கைமார்க்குச் சூட்டி விள்ளாதொழுகினும் பிணைய னார்க்குக் கண்ணும் உள்ளமும் பிறர்பின்செலும் என்க: விள்ளாது - நீங்காமல்; பிணையனார்க்கு - மகளிர்க்கு. மு: மகளிரியல்பு; "மாரியுந் திருவு மகளிர் மனமும், தக்குழி நில்லாது பட்டுழிப் படுமெனும், கட்டுரை யன்றியும்" (பெருங். 1. 35 : 156 - 8); "ஏந்தெழின் மிக்கான் .........மாதர்க், கயலார்மே லாகு மனம்" (நீதிநெறி. 82)

1597. பெண்ணெனப்படுவ - பெண்ணென்று கூறப்படுவனவற்றின் இயல்பை. பீடில - மனவன்மையுடையனவல்ல. பிறப்பு நோக்கா - தான் பிறந்த குடிப்பிறப்புக் கெடுமென்று பாரா. உள் - மனத்தே. பத்து - பத்துப்பொருள். இந்திரன் மகளும் என்றது உயர்வுகுறித்து நின்றது. வெண்ணெய்க்குன்றெரியுற்றாற்போல் மெலிதல்; "வெண்ணெயின் குன்றந் தீயால் வெதும்புகின் றதனே டொத்தான்" (சூளா. கல்யாண. 194). மெலிந்து பின்னிற்கும்; மணி. 20 : 72. பொருளால் மகளிர் கற்புக்கெடும்: "பொன்னினா லுடையுங் கற்பு" (சீவக. 1260)

**(இ - ள்.)** பெண்ணென்று கூறப்படுவனவற்றினியல்பைக் கேட்பாயாக; மனவலியுடையவல்ல; குடிப்பிறப்புக்கெடுமென்று பாரா; நிறையுடையவல்ல; ஆயிரமுகமாகவெழும் மனத்தவாய்; பத்துப்பொருளை அகங்கையிலேயிட்டாற் பொருட்குறைபாடில்லா இந்திரன்மகளேயாயினும் உருகி அவர் பின்னே நிற்குமென்றானென்க. (சுக)

1598. சாமெனிற் சாத லோதை றன்னவன் றணந்த காலைப், பூமனும் புனைத லின்றிப் பொற்புடன் புலம்ப வைகிக், காமனை யென்றுஞ் சொல்லார் கணவற்கை தொழுது வாழ்வார், தேமலர்த் திருவோ டொப்பார் சேர்ந்தவன் செல்ல றீர்ப்பார்.

**(இ - ள்.)** கணவன் சாகிற்சாக; நோவின்நோக; அவன் நீங்கினால், இதனாற்பயன் என்னையென்று மிகவும் பூவும் புனைதலின்றி அழகுடனே தனிப்பத் தங்கிக் காமனென்று பெயருங்கூறாராய்க் கணவனையே வணங்கிவாழ்வார், அவனுக்குத் திருவோடொப்பார்; அவன் செல்லறீர்ப்பாரென்றானென்க.

வாழ்வாரென்னுமெழுவாய்க்கு ஒப்பார் தீர்ப்பாரென்னுமிரண்டு பெயரும், "பெயர்கொள வருதல்" (தொல். வேற்றுமை. 5) என்பதனாற் பயனிலையாயின. [1] ஐ : அசை. இதனாற் கற்புடைமகளிரியல்பு கூறினான். (சுஉ)

1599. அன்னணின் றோழி யையா வவளென்னைக் கண்ட கண்ணாற், பின்னைத்தான் பிறரை நோக்காப் பெருமட மாது தன்னை, என்னையா னிழந்து வாழு மாறென விரங்கி னானுக், கன்னளோ வென்று நக்கா னணிமணி முழவுத் தோளான்.

---

1598. சாம் எனின் சாதல் - கணவன் இறப்பானாயின் தானும் இறக்க; சாதல்: வியங்கோள். "கற்றல்" (சீவக. 1595) போல. நோதல் - கணவன் வருந்தினால் தானும் வருந்துக. தன்னவன் - தன் கணவன். தணந்த காலை - நீங்கினவிடத்து. மனும் பூப் புனைதலின்றி - மிகவும் பூவை அணிதலில்லாமல். பொற்புடன் - இயற்கையழகுடனே. புலம்பவைகி - தனிப்பத் தங்கி. சொல்லார் - பெயரையும் கூறாதவராய்; "ஆண்பெயர்க் கிளவி நாண்மகிழ் கடவ, வழுக்கிக் கூறினும் வடுவென நாணி, ஒழுக்க நுனித்த வூராண் மகளிர்" (பெருங். 1. 36 : 279 - 81). கணவனைக் கைதொழுது. வாழ்வார் - வாழ்கின்ற கற்புடைய மகளிரே. மலர்த்திரு - திருமகள். சேர்ந்தவன் செல்லல் தீர்ப்பார் - தன்னைச் சேர்ந்தவனான கணவனது துன்பத்தை நீக்குபவராவர்.

**(மேற்.)** அடி, 3 : சிலப். 9 : 54 - 64, அடியார்.

**(உரை)** [1] காமனை யென்பதிலுள்ளது.

1599. ஐயா நின்தோழி; ஐயாவென்றது சீவகனைநோக்கி; விளி. நின்தோழி என்றது. "நின், னெஞ்சமர் தோழி" (பெருங். 5. 3 : 30 -

(இ - ள்.) ஐயா! நின்தோழி, கணவற் கைதொழுது வாழ்வாரோ டொப்பவள்; அவள் தான் என்னைப்பார்த்த கண்ணாற் பிறரைப்பாராத மாது; அவளை யிழந்தும் யான் வாழு மாறு எங்ஙனேயென்று வருந்தின வனுக்குத் தோளான் அன்னளோவென்று நக்கானென்க.

அன்னளோவென்றது யான்கூறியவற்றாலும் தெளிவுநிகழாமல் இவனை வருத்துந்தன்மையளோவென்றவாறு. [1] நகை பிறரறியாமை பற்றி 'நிகழ்ந்தது; இனி, யாம் இவன் இடுக்கணுக்கு உதவியாகு மென்று மனமகிழ்ந்தானென்றுமாம். (சுஅ)

(வேறு)

1600.

இனையல்வேண்டாவிம்மந்திரத்தையோதிநீயொருவில்லேவள
வனையவெல்லைசென்றாலியக்கிகொணர்ந்தருளுநீ
புனைசெய்கோல்வளையைக்கைப்படுதியென்றாங்கவன்போதலும்
அனையமாதரைக்கண்டாங்கடிபுல்லிவீழ்ந்தரற்றினான்.

மந்திரம் - மகளிரை வசீகரிப்பதொருமந்திரம்.

(இ - ள்.) நீவருந்தல்வேண்டா; இம்மந்திரத்தையோதி ஒரு வில்லி னது அம்புசென்றவளவையொத்த எல்லையைப்போனால், அவ்விடத்தே இயக்கி கொண்டுவந்துதரும்; அவளைக்காண்பையென்றுகூறி இவன் போன அளவிலே, அவனுஞ்சென்று அங்ஙனம்மெலிந்து பின்னிற்கும் (சீவக. 1597) தன்மையையுடைய மாதரை அவ்விடத்தேகண்டு வீழ்ந்து அடியைப்புல்லி அரற்றினனென்க.

---

31) என்பதுபோல நின்றது. அன்னள் - கணவனை வணங்கிவாழ்வா ரோடு ஒப்பவள். யான் இழந்து வாழுமாறு என்னை என இரங்கினானுக்கு: இழந்து - அவளை இழந்து. என்னை - எவ்விதம்? இரங்கினானுக்கு - வருந்திய பவதத்தனுக்கு. அன்னளோ - கணவனை வணங்கிவாழ்வா ரோடு ஒப்பவளோ? தோளான் : சீவகன்.

(உரை) [1] 'அவளறிவின்மையை யிகழ்ந்த புதிய சிறுநகையோடு' (சிலப். 12 : 51 - 3, அடியார்.)

1600. இனையல் - வருந்துதல். ஒருவில் ஏவளவனைய - ஒரு வில்லி னது அம்புசென்ற அளவை ஒத்த; "அம்பிட் டெயுந்தூரம்" (தனிப்.); ஏ - அம்பு. இயக்கி - யக்ஷிதேவதை. உன்மனைவியைக் கொணர்ந்து அருளும். புனைசெய் - அலங்கரிக்கப்பட்ட. கோல்வளையை : அநங்கமா வீணையை; (பி - ம்.) 'மேகலையை.' கைப்படுதி - காண்பாய். அவன் : சீவகன். மாதரை : அநங்கமாவீணையை. ஆங்குக்கண்டு வீழ்ந்து அடி புல்லி அரற்றினான் என்க.

[1] தான்கண்டமை கூறிற்றிலன், [2] இவன்றான் நம்மையுந் தீங்கு கருதுவனென்று. (சச)

1601. பட்டவெல்லாம்பரியாதுரைத்தானவளுங்கேட்டாள்
விட்டாளார்வமவன்கணிவன்மேன்மைந்துறவினால்
மட்டார்கோதைமனைதுறந்தாண்மைந்தனுமங்கைமேலே
ஒட்டிவிள்ளாவார்வத்தனாகியுருவமோதினான்.

(இ - ள்.) அங்ஙனம் அரற்றின மைந்தனும் தானுற்றவெல்லாவற்றையும் வருந்தாதேகூறினான்; கோதை, அடியிலே மனையைத் துறந்து போந்தவள், அவளும், இவன் விள்ளாவார்வத்தனாய் இவளைப்பெற வேண்டுமென்று ஒட்டி அம்மந்திரத்தைப் பலவுருவையோதினானாகை யாலே, அவற்றைக் கேட்டாள்; கேட்டு இவன்மேலன்பு வலியுற்றபடி யாலே, அவ்வனசரிதன்மேற்சென்ற வேட்கையை விட்டாளென்க.

அவன்கணார்வமென மாறுக. அம்மந்திரம் அவள் நெஞ்சை இங்ஙனம் பிணிப்பித்ததென்றுணர்க. (சரு)

(வேறு)

1602. மெழுகு செய்படம் வீழ்முகின் மத்தகத்
தொழுகும் வெள்ளரு வித்திர ளோடைசூழ்ந்
திழுகு பொன்மதத் தின்வரைக் குஞ்சரம்
தொழுது வேய்முதற் றூசங்கொண் டேறினான்.

---

(உரை) [1] தான் என்றது சீவகனை. [2] இவன்றானென்றது பவதத்தனை.

1601. பட்டவெல்லாம் - தானுற்ற துன்பத்தை யெல்லாம். பரியாது - வருந்தாமல். அவளும் : அநங்கமாவீணையும். கேட்டாள் - மந்திரத்தைக் கேட்டாள். அவன்கண் - வனசரிதனிடத்து. இவன் : பவதத்தன். மைந்து உறவினால் - அன்பு வலியுறுதலாலே. கோதை : அநங்கமா வீணை. மைந்தன் : பவதத்தன். ஒட்டி - அவளைப் பெற வேண்டுமென்று அறுதியிட்டு. உருவமோதினான் - மந்திரத்தை உருவோதினான்; உரு : உருவமென ஈறு திரிந்தது; சீவக. 1289; (பி - ம்.) 'உருவோதினான்.' கோதையாகிய மனைதுறந்தவளும், மைந்தன் உருவமோதினமையைக் கேட்டாளாகி அவன்கண் ஆர்வத்தை விட்டாள் என்க.

1602. முகிலாகிய மெழுகு செய்படம். வீழ்தல் - படிதல். அருவித் திரளாகிய மத்தகத்து ஓடை; ஓடை - நெற்றிப்பட்டம். இழுகுபொன் - உரிஞ்சுபொன். பொன்னாகிய மதம். வரையாகிய குஞ்சரத்தை. தொழுது - ஸ்ரீ கோயிலைத் தொழுது. வேய் முதலாகிய தூசங்கொண்டு; வேய்முதல் - மூங்கில் வேர்; தூசம் - புரோசைக்கயிறு; சீவக. 1833;

(இ - ள்.) படிந்த முகிலாகிய மெழுகுசெய்படத்தையும், ஒழுகும் வெள்ளருவித்திரளாகிய மத்தகத்தோடையினையும், ஏறுவார்காலைச் சூழ்ந்துகிடந்து உரிஞ்சும் பொன்னாகிய மதத்தையுமுடைய வரையாகிய யானையைத் தொழுது மூங்கில்வேராகிய புரோசைக் கயிற்றைப்பிடித்து அம்மூங்கிற்கவையிலே அடியிட்டேறினானென்க.

ஸ்ரீகோயிலைத்தொழுதான். யானையேறுவாரும் தொழுதல் இயல்பு. (சசு)

1603. நிரைத்த தீவினை நீங்கநெ டுங்கணார்
வரைக்க ணேறலின் வாலரிப் பொற்சிலம்
புரைத்து மின்னிருண் மேற்கிடந் தாலுமொத்
தரைத்த லத்தக மார்ந்ததொர் பாலெலாம்.

(இ - ள்.) இடைவிடாத தீவினைபோம்படி தொழுதற்கு மகளிர் வரையிலேறுதலாலே, அவரடியிற்சிலம்பு உரைக்கப்பட்டு, ஒருபாலெல்லாம், மின் இருண்மேற்கிடந்த தன்மையையுமொத்து, அவரடி ஒக்கமிதிக்கப்பட்டு ஒருபாலெல்லாம் செம்பஞ்சுமார்ந்ததென்க.

அரைத்த அலத்தகமென விகாரமுமாம். (சஎ)

1604. சாந்துங் கோதையுந் தண்ணறுஞ் சுண்ணமும்
ஆய்ந்த பூம்புகை யும்மவி யுஞ்சுமந்
தேந்து பொன்விளக் கேந்தியி டம்பெறு
மாந்தர் சும்மைம லிந்ததொர் பாலெலாம்.

(இ - ள்.) சந்தன முதலியவற்றைச் சுமந்து உயர்ந்த பொன்னாற் செய்த விளக்கையுமேந்தி இடம்பெறாத மக்களாரவாரம் ஒருபாலெல்லாம் மிக்கதென்க. (சஅ)

---

"தூசக்கரி யுரித்தான்" (தே. திருநா. நெய்த்தான. 7); "பின்னவ னேறித் தூசப் பெருவடம் பிடித்த பின்னை" (சூளா. கல்யாண. 102). மலையை யானையாக உருவகித்தார்.

1603. நிரைத்த - இடைவிடாத. நீங்க - போம்படி. நெடுங்கணார் : மகளிர். வரைக்கண் ஏறலின் - மலையில் ஏறுதலால். அரி - பரல்களை யுடைய. நெடுங்கணாருடைய பொற்சிலம்பு மலையில் உரைத்து; உரைத்து - தேய்க்கப்பட்டு. கிடந்தாலுமொத்து - கிடந்த தன்மையையும் ஒத்து. சிலம்பினுரைப்பிற்கு மின்னும், மலைக்கு இருளும் உவமைகள். அரைத்து - அம்மகளிரால் ஒருசேர மிதிக்கப்பட்டு. அலத்தகம் ஓர்பாலெலாம் ஆர்ந்தது - அம்மகளிரது காலிற்பூசிய செம்பஞ்சுக்குழம்பு அம்மலையில் ஒரு பகுதியெல்லாம் பொருந்தியது; அலத்தகம் - செம்பஞ்சு.

1604. சாந்து - சந்தனம். கோதை - பூமாலை. நறுஞ்சுண்ணம் - வாசனைப்பொடி. புகை - அகிற்புகை. அவி - தேவருணவு. ஏந்து - உயர்ந்த. மாந்தர் சும்மை - மக்களின் ஆரவாரம். ஓர்பாலெலாம் மலிந்தது; மலிந்தது - மிக்கது.

1605. துறந்த மன்னவர் தூமுடி தோள்வளை
நிறங்கொ ளாரம்பைம் பூணிழற் குண்டலம்
பிறங்கு வெங்கதிர் மின்னொடு பின்னிவீழ்ந்
துறங்கு கின்றன போன்றவொர் பாலெலாம்.

(இ - ள்.) துறந்தவரசர் தம்முடைய முடிமுதலியன கிடந்தவொரு பாலெல்லாம், கதிரும் மின்னும் பின்னிவீழ்ந்து உறங்குகின்றனபோன் றனவென்க.

ஈண்டுத் துறப்பதற்குமுன் உண்டான உடைமையாம். (சகூ)

1606. கருவித் தேன்கலை கையுறக் கீண்டுடன்
மருவிப் பைங்கறி வாரிப் பழந்தழீஇ
வெருவி நாகம் பிளிற்ற விரைந்துராய்
அருவி நின்றதி ரும்மொரு பாலெலாம்.

(இ - ள்.) கைத்தளம்போலுந்தேனிருல், ஆண்முசுவின் கையுறுத லாலே சேரக்கிழிந்து விரைந்து பரந்து மிளகைவாரிப் பழத்தைத் தழுவி நாகம் வெருவிக்கூப்பிடும்படி ஒருபாலெல்லாம் அருவியாய் நின்றதிரு மென்க. (௫௦)

1607. வெங்க திர்க்கட வுள்வியன் றேர்வரைத்
தங்கு சந்தனக் கோட்டிடைப் பட்டெனப்
பொங்கு மான்குளம் பிற்குடை பொற்றுகண்
மங்கு லாய்த்திசை யாவையு மல்கின்றே.

(இ - ள்.) வரையிற்றங்கிய சந்தனக்கோட்டிடையிலே ஞாயிற்றின் தேர் அகப்பட்டதாக, அத்தேரிற்பூண்ட மான் தன்னடியையூன்றி அதனைக் கொண்டு போகின்றபொழுது, குளம்பாலே குடைந்த துகள் திசைகளெல்லாம் இருளாக நிறைந்ததென்க.

ஆய் - ஆக. (௫௧)

---

1605. (பி - ம்.) 'மன்னர்தந்.' முடி - கிரீடம். தோள்வளை - வாகு வலயம். ஆரம் - முத்துமாலை. போன்ற - போன்றன. பால் - பக்கம். கதிரும் மின்னும் முடிமுதலியவற்றுக்கு உவமை. மு. கூர்ம. சம்புத் தீவு. 100; பிலக்க. 21.

1606. கருவித்தேன் - தொகுதியாகிய தேனெனலுமாம்; சீவக. 1561, ந. கலை - ஆண்குரங்கு. கீண்டு - கிழிந்து. பைங்கறி - பசிய மிளகு. நாகம் - யானை. உராய் - உலாவி.

1607. வெங்கதிர்க் கடவுள் - சூரியன். கோடு - கிளை. மான்குளம் பின் - குதிரையினுடைய குளம்புகளால். பொற்றுகள் - பொன்போன்ற மகரந்தப் பொடி. மங்குல் - இருள்; "மங்குன் ஞாயிற்று" (பரி. 13 : 1, பரிமேல்.). மல்கின்று - நிறைந்தது.

1608. சுனைய நீலமுஞ் சுள்ளியுஞ் சூழ்மலர்
நனைய நாகமுங் கோங்கமு நாறிணர்ச்
சினைய சண்பகம் வேங்கையோ டேற்றுபு
முனைவன் மேற்றுதி முற்றெடுத் தோதினான்.

சுனையிடத்தனவாகிய நீலம். சூழ்மலர்ச்சுள்ளி - மராமரம். நாறிணர்க்கோங்கம்.

(இ - ள்.) நீலப்பூ முதலியவற்றை வேங்கைப்பூவோடே திருவடி மேலேயேற்றி முனைவன்மேலுள்ள துதிகளை முழுக்கவெடுத்துத் துதித்தானென்க.

மிடறுள்ளவளவும் எடுத்தென்றுமாம். (௬௨)

(வேறு)

1609. முனிமை முகடாய மூவா முதல்வன்
தனிமைத் தலைமை தனதுதா னென்ப
தனிமைத் தலைமை தனதுதா னென்றாற்
பனிமலர்தூய் நின்று பழிச்சாவா றென்னே.

முனிமை : குணப்பண்பு.

(இ - ள்.) முனித்தன்மைக்கு மேலாகிய ஒப்பில்லாத தலைமை முதல்வன் தனதேயென்பர்; அங்ஙனங்கூறுதலான், அவனை உலகம் பழிச்சாதிருக்கின்றது அறியாமையன்றோ வென்றானென்க. (௬௩)

1610. மலரேந்து சேவடிய மாலென்ப மாலால்
அலரேந்தி யஞ்சலிசெய் தஞ்சப் படுவான்
அலரேந்தி யஞ்சலிசெய் தஞ்சப் படுமேல்
இலரே மலரெனினு மேத்தாவா றென்னே.

சேவடிய ; அ : அசை, சுட்டுமாம்.

---

1608. சுனைய - சுனையிலுள்ளனவாகிய. சுள்ளி - மராமலர். நனைய - தேனையுடைய. ஏற்றுபு - ஏற்றி. முனைவன் : அருகன்.

1609. முனிமை - முனிவருடைய தன்மை; "முனிமையிற் றனிய னாகி" (மேரு. மன்னனும். 174). முகடாய - மேலான; "முகடுய ருலக முன்னிய முனிவரும்" (பெருங். 1. 38 : 219). தனிமை - ஒப்பில்லாமை. மலரைத்தூய்; தூய் - தூவி. பழிச்சாவாறு - துதியாத விதம்.

1610. மலர் ஏந்து - தாமரை மலர் தான் தாங்கிய; பூமேனடந்தானென்பதைக் குறித்தது; "வெறிகமழ் தாமரை மீமிசை யொதுங்கிய, அறிவனை வணங்கி" (யாப்பருங்கலம், காப்பு.). மாலால் - இந்திரனால். மலரிலரேயெனினும்; ஏத்தாவாறு - நாவினாற் புகழாத விதம்.

(இ - ள்.) மலர்தானேந்தின அடியையுடைய மால், இந்திரனால் வணங்கி மதிக்கப்படுவானென்பர்; அங்ஙனமாயின், உலகத்தார் மலரில ரெனினும் ஏத்தாதிருக்கின்றது அறியாமையன்றேவென்றானென்க. (ருச)

1611. களிசேர் கணையுடைய காமனையுங் காய்ந்த
அளிசே ரறவாழி யண்ண லிவ னென்பர்
அளிசே ரறவாழி யண்ண லிவனேல்
விளியாக் குணத்துதிநாம் வித்தாவா றென்னே.

(இ - ள்.) காமனைவென்ற அருள்பொருந்திய அறவாழியையுடைய தலைவன் இவனேயென்பர்; அங்ஙனங்கூறின், நாம் துதிகளைப்பரப்பா திருத்தல் அறியாமையன்றோவென்றானென்க.

அயனும் அரியும் அரனும் இவனேயென்பதுகருத்து.

[1] பா : முற்கூறியவற்றோடொக்கும். (ருரு)

(வேறு)

1612. இன்னண மேத்தி யிறைவ னடிதொழு
தன்ன முறங்கு மணிவரை மேனின்று
பொன்னங் கழலா னிழிந்து பொழிமழை
மின்னி னடந்து மிகுசுரஞ் சென்றான்.

(இ - ள்.) கழலான், இப்படியேத்தித் தொழுது வரையிடத்துநின்று மிழிந்து நடந்து சுரத்தை மின்போலே கடிதுசென்றானென்க.

சுரம் - பாலை. இதனானும் [1] தூரகமனம் வல்லனென்றார். (ருசா)

1613. மாலைக் கதிர்வேன் மலங்க மணிமலர்க்
கோலை விடுக ணுருகு கொடியிடை
ஏலங் கமழ்குழ லேழை யவரன்ன
ஆலைக் கரும்பி னகநா டணைந்தான்.

---

1611. களிசேர் - மயக்கம் சேர்தற்கு காரணமான. அறவாழி - தரும சக்கரம். விளியா - அழியாத.

(உரை) [1] தேவபாணிக் கொச்சக ஒருபோகு; சீவக. 1469, அடிக்.

1612. இன்னணம் - இன்னவண்ணம். கழலான் : சீவகன். மின்னின் - மின்னலைப்போல; இது விரைவுக்கு உவமை.

(உரை) [1] சீவக. 1219, அடிக்.

1613. மாலைவேல் - பூமாலையையணிந்த வேல். மலங்க - கலங்கும் படி. மணிமலர் - நீலமலர்; மணிமலர்க்கு ஓலைவிடுகண் : "கூற்றை... வருகென்றோலைவிட்டு......மதர்க்கும் வேற்றடங்கண்" (கூர்ம. கண் - மணம். 252). ஏலம் - மயிர்ச்சாந்து. இடையையும் குழலையுமுடைய.

(இ - ள்.) வேல் கெடுதலின், தானும் போர்வேண்டின் வருகவென்று மலர்க்கு ஓலைவிடும் கண்ணிணையும் இடையிணையும் குழலிணையுமுடைய [1] மகளிரைப்போலே ஐம்புலனுக்கும் வேண்டும்பொருள்களையுடைய மத்திம தேசத்தைச் சேர்ந்தானென்க.

அகம் - மருதம்; "அகநாடு புக்கவ ரருப்பம் வௌவி" (மதுரைக். 149) என்றார். (ருஎ)

## (வேறு)

1614. வழைச்சறு சாடிமட் டயின்று மள்ளர்தாம்
கழைக்கரும் பெறிந்துகண் ணுடைக்கு மெந்திர
மழைக்குர லெனமயி லகவ வார்செந்நெற்
புழைக்கடைப் புனலலைத் தொழுகும் பொற்பிற்றே.

(இ - ள்.) மள்ளர், இளமையற்ற மட்டையுண்டு கரும்பைக்குறுகத் தறித்து மழைக்குரலென்று மயிலகவச் சாறுகொள்ளும் ஆலையிற்சாறு செந்நெற்செறுவிற் கடைமடையாலே புனலை அலைத்தொழுகும் பொற்பினையுடைத்து அந்நாடென்க.

எந்திரமொழுகுமென்று [1] இடத்துநிகழ்பொருளின்றொழில் இடத்திற் கேற்றின ஆகுபெயர். (ருஅ)

1615. தாமரை மலர்தலை யடுத்துத் தண்கமழ்
தூமலர்க் குவளைகா லணைத்துத் தோலடிக்
காமரு பெடைதழீஇ யன்னங் கண்படும்
தேமலர்த் தடந்தழீஇத் திசைகண் மல்கின்றே.

---

ஏழையவர் - மகளிர். ஆலைக்கரும்பின் - ஆலையிலிடுதற்குரிய கரும்பையுடைய; "ஆலைக் கலமருந் தீங்கழைக் கரும்பே" (மலைபடு. 119). அகநாடு - மருதநிலத்தையுடைய நாடு.

(மேற்.) அடி, 3-4 : நன். பொது. 59, மயிலை.

(உரை) [1] மகளிரைப் போலே ஐம்புலனுக்கும் வேண்டும் பொருள்களையுடைய என்பது, "கண்டுகேட்டு" (குறள், 1101) என்பதன் பொருளாகவுள்ளது.

1614. வழைச்சறு சாடிமட்டு அயின்று : பெரும்பாண். 280-81; வழைச்சு - முற்றுத்தன்மை. கழைக்கரும்பு : கரும்பினுள் ஒருவகை. கண் - கணு. கரும்பின் எந்திரம் : பெரும்பாண். 259-60; ஐங்குறு. 55 : 1. மழைக் குரலென - மேகத்தின் இடியோசையென மகிழ்ந்து. புழைக்கடை - கடை மடையால்; புறநா. 42 : 13; உரை. பொற்பிற்று - பொலிவினையுடையது.

(மேற்.) அடி, 2-4 : கல். 'பாய்திரை', 39-42, மயில்.

(உரை) [1] குறள், 215, பரிமேல்.

1615. தலையடுத்து - தலையணையாகச் சேர்த்து. தோலடிப்பெடை - அன்னப்பெடையை. தழீஇ - தழுவி. கண்படும் - தூங்கும். தடம் - தடாகம். மல்கின்று - மிக்கது.

(இ-ள்.) அந்நாடு, அன்னம் தாமரைமலரைத் தலையணையாகச் சேர்த்துக் குவளையைக் காலணையாகச் சேர்த்து என்பில்லாத அடியையுடைய பெடையைத் தழுவிக் கண்டுயில் கொள்ளுந் தடங்கள் திசைகளெல்லாந் தழுவி நீர்மல்கா நின்றதென்க. (௬௯)

1616. கண்பயி லிளங்கமு கெருத்திற் காய்பரீஇக்
கொண்டிள மந்திக ளெறியக் கோட்டிடைத்
திண்கனி முசுக்கலை சிதறுந் தேம்பொழில்
மண்டமர் கடந்தவன் மகிழ்வொ டேகினான்.

(இ-ள்.) அமரைக் கடந்தவன், கோட்டிடையிலே மந்திகளிருந்து கமுகின் காயை வாங்கிக்கொண்டு எறியக் கலை தோற்றுக் கனியைச் சிதறும் பொழிலை மகிழ்ச்சியோடே போனானென்க.

இஃது அந்நாட்டின் நகரைச்சூழ்ந்த பொழில். (௭०)

1617. களிறுமாய் கதிர்ச்செந்நெற் கழனி நாட்டிடை
ஒளிறுவே னரபதி நகர மொய்யெனப்
பிளிறுவா ரிடிமுர சார்ப்பப் பெய்கழல்
வெளிறிலாக் கேள்வியான் விருப்பொ டெய்தினான்.

(இ-ள்.) களிறு மறைகின்ற செந்நெற் கதிரையுடைத்தாகிய கழனியையுடைய நாட்டிடத்தில் நரபதிநகரைக் குற்றமற்ற கேள்வியான் முரசார்க்கின்ற காலத்திலே விருப்பத்தோடே சேர்ந்தானென்க.

முரசார்த்தல் நன்னிமித்தம். (௭௧)

1618. புறநகர் மணமக னொருவன் போதர்வான்
இறைமகன் வினையினு னென்ன பேரவே
துறைவளர் நாட்டொடு நகரஞ் சொல்லென
அறிகவென் றலரிவாய் கமழக் கூறினான்.

---

1616. கண்பயில் - கணுக்கள் நெருங்கிய. காய்பரீஇ - காய்களை வாங்கிக்கொண்டு; (பி-ம்.) 'காய்பறீஇக்.' திண்கனியைச் சிதறும். மண்டு அமர் - மிக்குச் செல்லுகின்ற போர்களை. கடந்தவன் : சீவகன்.

1617. களிறுமாய் - ஆண்யானை மறைதற்குக் காரணமான : சீவக. 54, அடிக். ஒளிறுவேல் - விளங்கும் வேலையுடைய. நரபதி - அரசன். நகரம் : ஏமமாபுரம். ஒய்யென - விரைய. வார்முரசு - வாரால் கட்டப்பட்ட முரசு. வெளிறு - குற்றம்; சீவக. 200. கேள்வியான் : சீவகன்.

1618. புறநகரிடத்தே. மணமகனாகிய போதர்வான் ஒருவனை. இறைமகன் : சீவகன். பேர - பெயரையுடையன; (பி-ம்.) 'பேர்த்தென.' அலரி : சீவகனது வாய்க்கு உவமை.

(இ - ள்.) இறைமகன், கலமிழியுந்துறைமிக்க நாடும் நகரமும் என்ன பெயரையுடையன, சொல்லென்று வாய்விட்டு அலரிப்பூக்கமழ வினவினன் ; அதுகேட்டுப் புறநகரினின்றும் போதருவானாகிய மணமகனொருவன் அப்பெயர்களை அறிகவென்று கூறினானென்க. (சூ௨)

1619. (௧) மந்திம தேசமா நாடு மற்றிநாட்
டெத்திசை நிதியமு மிறைகொண் டில்லவர்க்
குய்த்துமூர் கொடுப்பவ ரேம மாபுரம்
இத்திசைக் கையநீ புதியை போன்மெனா.

1620. (௨) அன்னதே யென்றலி னடிசிற் காலமால்
என்னொடு பேசினாய் தவிர்மற் றீங்கெனப்
பொன்னகர் புக்கபி னறிவல் போகென்றான்
வின்மரீஇ வாங்கிய வீங்கு தோளினான்.

இவை இரண்டும் ஒரு தொடர்.

(௨) அறிவல். [1] மறுத்தற்பொருட்டாய இறைபயந்தது. வில்லைப் பயின்று வளைத்த.

(இ - ள்.) நாடு மத்திமதேசமென்னும் பெயரையுடைத்தாம் ; இந் நாட்டில் எத்திசைநிதியமும் இறைகொள்ளுதலால் இல்லவர்க்கு உய்த்துங் கொடுப்பவரூர் ஏமமாபுரமென்னும் பெயரையுடைத்தாம் ; ஐயனே ! நீ இத்திசைக்குப் புதியைபோலு மென்று அவன்கூற, அங்ஙனம் புதியேனென்று சீவகன் கூறுதலின், அவன் என்னுடனே வார்த்தை கூறினாய் : அதனால், நட்பிற்குத் தாழ்வில்லை ; அடிசிற்காலமுமாயிருந்தது ; இவ்விடத்தே தங்கென்றுகூற, தோளினான், நகரிலே சென்றபின்பு பார்ப்பேன் ; இப்பொழுது போக வென்றானென்க. (சூ௩ - ௪)

1621. புணர்மருப் பியானையின் புயல்கொண் மும்மதம்
மணமகள் கதுப்பென நாறு மாநகர்த்
துணைமலர்க் கண்ணியுஞ் செம்பொன் மாலையும்
இணைமலர்த் தாரினா னிடறி யேகினான்.

1619. நாடு - நாட்டின் பெயர். இறைகொண்டு - தங்குதலால். உய்த்தும் கொடுத்தல் : சீவக. 36. போன்ம் - போலும். என - என்று மணமகன்கூற.

1620. அடிசிற்காலம் - உண்டற்குரிய காலம். தவிர் - தங்கு. "புசாஅக் காலைப் புக்கெதிர்ப் பட்டுழிப், பகாஅ விருந்தின் பகுதி" (தொல். களவு. 16) என்பதற்கு நச்சினார்க்கினியர் எழுதியவுரை இங்கே அறிதற்பாலது. நகருள்ளே புக்கபின். வாங்கிய - வளைத்த. வின்மரீஇ வீங்குதோளினான் ; சீவக. 1556, அடிக் ; கூர்ம. இரா - வதை. 16.

(உரை) [1] தொல். கிளவி. 13, ந.

1621. புணர் மருப்பு - தம்மிற் கூடிய மருப்பையுடைய. புயல் கொள் - மேகத்தைப் போன்ற. கதுப்பென - கூந்தலைப்போல. யானை

**(இ - ள்.)** தாரினான், பிணையலையும் மாலையினையுமிடறி, யானை யினது மழைபோலு மும்மதம் கதுப்பெனநாறு நகரிலே ஏகினானென்க.
இடறி : நிகழ்காலமுணர்த்திற்று. (சுரு)

1622. வண்டுகொப் புளித்துணு மாலை மார்பனைக்
கண்டுவப் பளித்தவர் கடைக்க ணேக்கற
மண்டபப் பளிக்கறை மருங்கொர் மாநிழல்
கொண்டவற் களித்ததோர் குளிர்கொள் பொய்கையே.

**(இ - ள்.)** தம்கண்கள் மாலைமார்பனைப் பார்த்து மனத்துக்கு மகிழ்ச்சி கொடுக்கப்பட்ட மகளிருடைய அக்கடைக்கண்கள் பின்பு தன்னைக் காட்சியின்றி ஏக்கறும்படி போய் மாநிழலை இருப்பிடமாகக் கொண்டவற்கு ஒரு பொய்கை வருத்தத்தைக் கொடுத்ததென்க.
ஏக்கற - இளைத்து இடைய. மண்டபம் போலும் பளிக்கறை. (சுசு)

(வேறு)

1623. வண்சிறைப் பவளச் செவ்வாய்ப் பெடையன்ன மடமை கூரத், தன்கய நீருட் கண்ட தன்னிழல் பிறிதென் றெண்ணிக், கண்டனங் கள்வ மற்றுன் காதலி தன்னை நீர்க் கீழ்ப், பண்டைய மல்லம் வேண்டா படுக்கவென் றூடிற் றன்றே.

**(இ - ள்.)** சிறையினையும் வாயினையுமுடைய பெடையன்னம், அறியாமை மிகுதலாலே நீரிலேகண்ட தன்நிழலை வேறொரு பெடையென்று கருதி, கள்வனே! நின்காதலிதன்னை நீரின்கீழே கண்டேம்; இனி, முன்புபோல் தேற்றத்தேறேம்; அகப்படுக்கவேண்டாவென்று ஊடிற் றென்க. (சுஎ)

---

மதம் நாறுதல்; மதுரைக். 44-7; புறநா. 22, 93. துணைமலர்க்கண்ணி - கட்டப்பட்ட மலர்களாலாகிய கண்ணி.

1622. உவப்பு அளித்தவர் - மகிழ்ச்சி யளிக்கப்பட்ட மகளிர். ஏக்கற : "மதியேக் கறூஉ மாசறு திருமுகத்து" (சிறுபாண். 157). மாநிழல் - மாமரத்தின் நிழலை. பொய்கை வருத்தத்தை அளித்தது.

1623. பெடையன்னம் : எழுவாய். கூர - மிகுதலால். கயநீருள் - பொய்கையின் நீருள். பிறிது என்று - வேறொரு பெடையென்று. கள்வ என்றது அன்னத்தை நோக்கி; விளி. நீர்க்கீழ்க்காதலியைக் கண்டனம். படுக்கவேண்டா - என்னை அகப்படுத்த வேண்டா. அன்று, ஏ : அசைகள்.

(மேற்.) மு : நன். பொது, 58, மயிலை; சங்கர; இ-வி. பொது. 53.

1624. செயிர்ப்பொடு சிவந்து நோக்கிச் சேவலி னகலச் சேவல், அயிர்ப்பதெ னின்னை யல்லா லறியலே னன்றி மூக்கின், உயிர்ப்பதுன் பணியி ைலே யூடனீ யென்று பல்காற், பயிர்ப் பறச் சிறகாற் புல்லிப் பணிந்துபாண் செய்த தன்றே.

(இ - ள்.) அங்ஙனம் ஊடிய பேடை குற்றத்தோடே கோபித்து நோக்கிச் சேவலினின்று நீங்க, சேவல், யான் நின்னையன்றி வேறொன் றறியேன்; என்னை அயிர்ப்பதென்? அதுவுமன்றி, யான் உயிர்தாங்கி யிருப்பது நின் ஏவலாலே; ஆதலின் நீ ஊடாதே கொள்ளென்று மனங் கொள்ளாதிருக்கின்றமை நீங்கப் பல்காற்புல்லி வணங்கித் தாழ்ச்சிசெய்த தென்க. (சு அ)

1625. கலையுணர் மகளிர் நெஞ்சிற் காமத்திற் கனிந்த வூடல், நிலையுணர் மைந்தர் நீக்கி நெறியினாற் புணர்ந்த தொப்ப, அலர் மிசைப் பெடையி னூட லன்புகொள் சேவ னீக்கிக், குலவிய புணர்ச்சி நோக்கிக் குன்றனான் சிந்திக் கின்றான்.

கலை - மகளிர்க்குரியவாகிய மணிமேகலையிற் கூறிய [1] கலைகள்; கரணமுமாம். கனிந்த - பழுத்த.

(இ - ள்.) மகளிர் நெஞ்சில் ஊடலைத் தீர்க்கு முறைமையை யறிந்த மைந்தர் தீர்த்துப் புணர்ந்த தன்மையை யொப்ப, சேவல் பெடையி னூடலை நீக்கித் தாழ்ந்த புணர்ச்சியை நோக்கி முன்பு சலியாதவன் இப் பொழுது நினையாநின்றானென்க. (சு கூ)

1626. தன்னையான் முகத்தை நோக்கிற் றன்முலை முகத்தை நோக்கும், பின்னையான் பலவும் பேசிற் றநொன்று மிழற்றும் பைம்பூட், பொன்னவாஞ் சுணங்கு போர்த்த பொங்கிள முலையி னாளென், முன்னையாள் போன்று தத்தை முகத்துளே தோன்று கின்றாள்.

---

1624. செயிர்ப்பு - குற்றம். சிவந்து - கோபித்து. அகல - பெடை நீங்க. அயிர்ப்பது என் - சந்தேகப்படுதற்கு யாது காரணம். பணி யினால் - ஏவலால். ஊடல்: எதிர்மறை முற்று. பயிர்ப்பு - அருவருப்பு. பல்காற்புல்லியென்க. பாண் - தாழ்ச்சி; "பாணேபேசி" (திருவா. திருச்சதகம், 84)

1625. கலையுணர் மகளிர்: பரத்தையர்; கலை.........காமத்தின்: சீவக. 2107; "கலையினுங் களியினும்......மடவோர் மருட்ட" (பெருங். 1. 34: 3-4). காமத்தின் - காமத்தால். கனிந்த - முற்றிய. ஊடலை மைந்தர் நீக்கி. அன்னச் சேவலுக்கு மைந்தர் உவமை. குலவிய - தாழ்ந்த. குன்றனான்: 'சலியாமையும் பெருமையும்பற்றிக் குணங்களைக் குன்றாக உருவகம் செய்தார்' (குறள், 29, பரிமேல்.)

(உரை) [1] மணி. 2: 18-32.

1626. தன்னை - காந்தருவதத்தையை. அடி, 1: குறள், 1094; கலித். 61: 56. பொன் அவாம் - பொன்னின் தன்மையை விரும்பும்.

(இ - ள்.) அவளூடல்தீர்த்தற்கு யான் தன்னை முகத்தைப்பார்த்
தால்தான் எதிர்நோக்கின் ஊடல்தீருமென்றிறைஞ்சி நிற்கும்; பின்ட
யான் ஊடல் தீரப்பலவுங்கூறின், அவற்றைக்கெடுத்துத்தான் ஒரு
மொழியை மெல்லக்கூறும்; இத்தன்மையையுடைய முலையினளாகிய
தத்தை முன்னையாள்போன்று என்முகத்துள்ளே தோன்றிநின்ற
ளென்றானென்க.

அவாம் - விரும்பும்; [1] ஈற்றுமிசையுகரம் மெய்யொடுங்கெட்டது
[2] குணமாலையால் தத்தைக்கு நிகழ்ந்த ஊடறீர்த்ததனை நினைத்தான்
ஒழிந்தோர்க்கு அங்ஙனம் நிகழ்ந்த ஊடலின்மையின். முன்னர் ஊடிய
நிலைமையாகவே தோற்றுதலின், 'முன்னையாள்போன்று' என்றான்
(ஏ௦

(வேறு)

1627. (க) பரிவுற் றுற்பய னின்றியும் பாவைமார்
முரிவுற் றார்களின் மூர்ச்சனை செய்பவாற்
பிரிவிற் றோன்றிய பேரன்பெ னப்படும்
எரியின் மூழ்கியி றந்துப டுங்கொலோ.

இது முதல் மூன்றுகவியும் ஒருதொடர்.

(க) பாவைமார், அன்புற்றால் ஒரு பயனின்றியும் வருத்தமுற்றா
போல நெட்டுயிர்ப்புக் கொள்வார்கள்; ஈண்டு அதுவன்றிப் பிரிவாதலின்
அப்பிரிவால் தோன்றிய அன்பென்னுநெருப்பிலேயழுந்தி இறந்த
படுமோவென்க. இவ்வாறு [1] அருள் பிறர்க்காகுமென்றாற்போல
கருதுதல் பரிவு.

1628. (உ) வாளி யம்பன வாட்டடங் கண்ணிதன்
தோளு மென்முலைப் பாரமுந் தொன்னலம்
நாளு நாளினு நைந்துநைந் துள்சுடப்
பூளை மெல்லணை மேற்புர ளுங்கொலோ.

---

சுணங்கு - தேமல். முலையினளாகிய தத்தை. என்முகத்துளே தோன்ற
கின்றாள்: என்றது உருவெளித் தோற்றத்தைக் கூறியபடி.

(உரை) [1] தொல். வினை. 41. [2] சீவக. 1014 - 9.

1627. பரிவுற்றால் - அன்பு செய்தால். முரிவுற்றார்களின் - வருத்த
முற்றவரைப்போல; "நினைத்திருந்து நோக்கினுங் காயு மனைத்துநீர்
யாருள்ளி நோக்கினீ ரென்று" (குறள், 1320). எரியில் - நெருப்பில்
அன்பெனும் எரி: "அற்புத்தீ யழலு ணிற்ப" (சீவக. 1707)

(உரை) [1] சீவக. 852, அடிக்.

1628. கண்ணி: காந்தருவதத்தை. தொன்னலம் - பழைய அழகு
"தொல்கவின் றொலைந்து" (குறுந். 381 : 1). நாளினும்: இன்
சாரியை; சீவக. 363, ந. அணை - படுக்கை.

(உ) [1] வாளியம்பு - அலகம்பு. 'பூளைமெல்லணை' என்றான், [2] பூளை
யெவற்றாற் சமைத்தலின். தடங்கண்ணி உள்சுடுதலாலே தோளும்
யும் தம் தொன்னலம் நாடோறும் நாடோறுங்கெட்டுப் புரளுமோ
க. முன்பு என்றோளாகிய அணைமேல்துயின்றாள், இப்பொழுது
கிய அணையிலே புரளுமோவென்றானென்க.

(ரு) உருகி வாடியென் னுற்றது கொல்லெனக்
கருகி வாடிய காமரு கோதைதன்
இருக ணீருமி டைமுலை பாய்ந்துகக்
குருகு பாய்தட மாகவ முங்கொலோ.

(ரு) யான்போந்தபின்பு அவனுற்றதென்னென்று நினைந்து உருகி
தலாலே கருகிவாடியதொருகோதைபோல்வாள், தன்முலையிடை
ாம்படி தன்னிரு கண்ணினீரும் வடிந்து வீழ அழுமோவென்க;
;ங்கால் வெண்குருகு மேயும், பெருங்குள மாயிற்றென் னிடைமுலை
ந்தே" (குறுந். 325) என்றார் பிறரும்.

(இ - ள்.) இங்ஙனந்தோன்றின இவள் இறந்துபடுமோ! புரளுமோ!
மோ! என்செய்கின்றாளென்றானென்க. (எக-ரு)

வண்டு வாழ்பயில் கோதைம ணமுதற்
கண்ட ஞான்றுதன் கண்ணொனுங் கைகளால்
நொண்டு கொண்டு பருகிய நோக்கமொன்
றுண்டெ னுவி யுருக்கி யிடுவதே.

(இ - ள்.) யான் பயின்ற கோதை கூட்டத்திற்குமுன்னே கண்ட
ு தன்கண்ணென்னுங் கைகளாலே முகந்துகொண்டு பருகிய,
ுவியையுருக்குவதொரு நோக்கமுண்டு; அஃது இப்பொழுதும்
னம் உருக்காநின்றதென்றானென்க.

(பருகியநோக்கமென்க). இஃது, அவளுடலுடன்தோன்றியதே
ித் தலைநாள்தோன்றியவாறும் தோன்றின தன்மை கூறிற்று. (எச)

(உரை) [1] சீவக. 90, அடிக். [2] சீவக. 838, ந.

1629. உற்றது என் - சீவகன் அடைந்தது யாது. கருகி - கரிந்து.
தை : மாலைபோல்வாளாகிய காந்தருவதத்தை. முலையிடைப் பாய்ந்து
. குருகு - நாரை. தடமாக அழுதல்; சீவக. 830, அடிக்.

1630. பயில்கோதை - தான் பழகிய காந்தருவதத்தை. நொண்டு -
ந்து; "நுண்வலையா னொண்டெடுத்த" (திணைமாலை. 32). கண்
னுங் கையால் நொண்டு : சீவக. 1258, 2553. உருக்கியிடுவதாகிய
க்கம் என்க.

1631. காத லாளுட லுள்ளுயிர் கைவிடின்
ஏத மென்னுயி ரெய்தியி றக்குமற்
ருத லாலழி வொன்றில ளல்லதூஉம்
மாதர் விஞ்சையும் வல்லளு மல்லளோ.

(இ - ள்.) யாம் [1] இருதலைப்புள்ளின் ஓருயிரேமாதலின், காதலாள் உயிர் நீங்கின் என்னுயிரும் ஏதமெய்தி நீங்கும்; இதுநீங்காமையின், அவளும் இறந்துபட்டிலள்; இதுவும் அறிதற்கு ஓருபாயம்; அல்லதிலும், விஞ்சையும் வல்லளல்லளோ? அதனாற் [2] பன்னிருமதியினென்று தேவன் கூறியவதனையும் பிற பான்மைகளையுமுணர்ந்து ஆற்றுவளென்றுனென்க.

அல்லதிலுமெனஏழனுருபுவிரிக்க; அல்லதூஉமென்றது, முன் வருந்துவளோவென்றதனையும் உணர்த்திற்று. அவட்கு மிக்க வருத்தமின்மை மேல் வரவிடும் [3] ஓலையானும், இவன்சென்றகாலத்துக் [4] குணமாலையிடத்தே போமென்றதனானுமுணர்க. (எரு)

1632. காதன் மிக்குழிக் கற்றவுங் கைகொடா
ஆதல் கண்ணகத் தஞ்சனம் போலுமால்
தாது துற்றுபு தங்கிய வண்டனார்க்
கேத மிற்றென வெண்ணுமென் னெஞ்சரோ.

(இ - ள்.) தாதை உண்டுநின்று அதிலேதங்கிய வண்டையொக்கும் தலைவராயினார்க்குக் காதலான்வருமேதம் இவ்வாறு பெருகுமாயிருந்ததென்று அறிவுடையோர் என்னையிகழ்ந்து கூறும்படி நெஞ்சு எண்ணுநின்றது; இங்ஙனமெண்ணும்படி காதல் மிக்கவிடத்துத் துன்பத்திற்குத் துணையென்று கற்ற கல்வியும் பிறர்குற்றம் நீக்குதற்கு உதவுதலன்றி என்குற்றநீக்குதற்கு உதவாதொழிதல் கண்ணினுட்கிடந்த அஞ்ச

1631. என்னுயிர் ஏதம் எய்தி; ஏதம் - துன்பத்தை. ஆதலால் - என்னுயிர் நீங்காமையால். மாதர் : காதற்குருவதத்தை. விஞ்சைவல்லள் : சீவக. 1147.

(உரை) [1] கலித். 89 : 4; அகநா. 12 : 5; பரி. 8 : 72 - 3, பரிமேல்; குறள், 1109, பரிமேல்.; திருச்சிற். 12, பேர். [2] சீவக. 1220. [3] சீவக. 1767 - 8. [4] சீவக. 2098.

1632. மிக்குழி - மிக்கவிடத்து. கற்றவும் - தான் கற்ற கல்வியும். கைகொடாவாதல் - தன் குற்றத்தை நீக்க உதவாமல் நீங்குதல். அஞ்சனம் - மை. அடி. 1-2 : “நுண்ணிய நூல்பல கற்பினு மற்றுந் தன், உண்மை யறிவே மிகும்” (குறள், 373). தாது துற்றுபு தங்கிய வண்டனார்க்கு - பூவிலுள்ள தாதை உண்டு, அப்பூவில் தங்கிய வண்டை ஒக்கும் கணவர்க்கு; சீவக. 2699; “தாதுண்ணும், வண்டிற் றுறப்பான் மலை” (கலித். 40 : 24-5). ஏதம் - காமத்தால் வருந்துன்பம். என் - யாது?

(மேற்.) அடி, 1-2 : குறள், 373, பரிமேல்.

னத்தை ஒக்குமாயிருந்தது; இங்ஙனம் இஃது உதவாதொழிதற்குச்செய்த தீவினையாதென்றானென்க.

பவதத்தன் வருத்தத்திற்கு யானுரைத்தாங்கு என்வருத்தத்திற்கும் உணர்வுடையோர் இவ்வாறுகூறுவரென்று அவர்கூறும் மொழியைத் தான் கொண்டு கூறினான். எண்ணுமென்றது, இறந்துபடுமோவென்பது முதலியவற்றை. நெஞ்செனவே எனது நெஞ்சென்பது படும்; என், "என்னெனப் படுங்கொ றேழி" (அகநா. 206; குறுந். 194) போல் நின்றது. கண்ணிடத்துக்கிடந்த அஞ்சனம் அதற்குப்பயன் கொடாதது போலக் கல்வி நெஞ்சிற்கிடந்தும் பயன் தந்ததில்லையென்றான்; [1] சச்சந்தனை நந்தகோன்முதலாயினாரும் இழித்துக் கூறினமைகண்டு நமக்கு [2] இதுதகாதென்றான். இனி இற்றென என்னெஞ்செண்ணும்; இது வண்டனார்க்கு ஏதமென்றுமாம்; 'இற்று' என்றது முற்கூறிய வருத்தத்தை; வண்டனார் - உத்தமர். இனி, வண்டனார் - தபோதனர்; [3] பிரமராசனராதலின், அப்பெயராயிற்று. அவர்க்கே வருத்தமில்லாததென்று எண்ணுமென்றுமாம்; இன்று: இற்றென விகாரம். (எசு)

1633. நறவெங் கோதையர் நன்னலங் காதலான்
மறவெங் காமத்து வந்துற்ற தீவினைப்
பறவைத் தேர்நர கத்துப்ப தைக்குங்கால்
அறிவ னல்லதங் கார்சர ணாகுவார்.

(இ - ள்.) மகளிர் நலத்திலுள்ள காதலானும், அவரைப்புணர்த லானும் வந்துசேர்ந்த தீவினையாகிய பறத்தற்றொழிலையுடைய தேரிலே போய் நரகத்தே பதைக்குங்கால் அவ்விடத்தே அறிவனல்லது வேறு சரணாவாரில்லையே; ஆதலின், ஈண்டு அவனேயன்றே சரணென்றா னென்க. (எஎ)

1634. வேட்கை யூர்தர விம்முற வெய்திய
மாட்சி யுள்ளத்தை மாற்றிம லர்மிடை
காட்சிக் கின்பொய்கைக் காமர்ந லனுண்டு
மீட்டு மங்கிருந் தான்விடை யேறனான்.

---

(உரை) [1] சீவக. 475. [2] இது - இக்காமத்தான்வரும் துன்பம். [3] பிரமராசனர்; சீவக. 1125, அடிக். பிரமரம் - வண்டு.

1633. நற - தேன்; வாசனையுமாம் - கோதையரது நலத்திலுள்ள காதலால்; கோதையர் - மகளிர். நலம் - இன்பம். மறவெங்காமத்து - பாவத்தையுடைய கொடிய காமத்தால். காதலாலும் காமத்தாலும் வந்துற்ற தீவினையாகிய பறவைத்தேரில் போய்; பறவை - பறத்தல். அறிவன் : அருகன். சரண் - புகலிடம்.

1634. வேட்கை - காமம். ஊர்தர - மேலிடுதலால். விம்முறவு - வருத்தம். மாட்சி உள்ளத்தை - மாய்தலையுடைய மனத்தை; மாட்சி - மாய்தல். மாற்றி - கெடுத்து. மிடைதல் - நெருங்குதல். காட்சிக்கு

(இ - ள்.) ஏறனுன், வேட்கை மேலிடுதலாலே வருத்தமுற்ற மாய் தலையுடைய உள்ளத்தைக்கெடுத்து அப்பொய்கையின் நலத்தைநுகர்ந்து மீட்டும் அவ்விடத்தேயிருந்தானென்க.

வருத்தத்திற்குக் காரணமாகின்றவிடத்து இருத்தலருமைதோன்ற 'மீட்டும்' என்றார். (எஅ)

(வேறு)

1635. (க) நேரார் நேரு நீணிதி துஞ்சுந் நிறைகோயில்
ஆரா வெம்போ ராய்தட மித்த னரசற்கும்
நாரார் கற்பின் னுகிள வேய்த்தோ ணளினைக்கும்
சீராற்றேன்றிச்செல்வமொடெல்லாந்திருத்தக்கான்.

1636. (உ) விண்டார்த் தேய்க்கும் வெம்பரி மான்றேர் விசயன்னென், றுண்டா நின்றான் றன்புக ழூழி யுலகேத்த, வண்டார் சோலை வார்மண நாறப் புகுகின்றான், கண்டான் சேர்ந்தான் காளையைக் கல்விக் கடலானே.

இவை இரண்டும் ஒரு தொடர்.

(இ - ள்.) அரசனுகிய தடமித்தனுக்கும், நசையார்ந்த கற்பினையும் தோளினையுமுடைய நளினைக்கும் தலைமையோடேபிறந்து, செல்வத் தோடே கல்விமுதலியனவெல்லாம் அழகுதக்கவன், விசயனென்று பெயர் கூறப்பட்டு உலகமெல்லாம் தன்புகழ் ஊழிக்காலமுண்டாக ஏத்தநின்ற வன், பகைவர்தரு நிதிதங்குங் கோயிலிற்சோலையிலே தன் மணநாறச் செல்கின்றவன், கல்விக் கடலானுகிய காளையைக் கண்டான்; கண்டு சேர்ந்தானென்க.

மணநாறுதலாற் கண்டானென்றுமாம். (எகூ - அ௦)

---

இனிய பொய்கையின் நலனையுண்டு; நலன் - இன்பம். மீட்டும்-வேட்கை யைப் பொறுத்தற்கரிதாக இருந்தபின்பும். ஏறனுன் : சீவகன்.

1635. நேரார் நேரும் - பகையரசர்கள் திறையாகக் கொடுக்கும். துஞ்சும் - தங்கிய. கோயில் - அரண்மனை. ஆரா - அமையாத. ஆராயப் பட்ட போரினையுடைய அரசனுகிய தடமித்தனுக்கும். நாரார் - அன்பு பொருந்திய. நாகிளமை - மிக்க இளமை; சீவக. 218, ந. கற்பினையும் தோளையுமுடைய நளினைக்கும்; நளினை : தடமித்தன்மனைவி. எல்லாம்- கல்விமுதலியவெல்லாவற்றுலும். திருத்தக்கான் - அழகு தக்கவன்; என்றது விசயனை.

1636. விண்டார்த் தேய்க்கும் - தன்னேடு மாறுபட்டவரை அழிக் கின்ற. என்று - என்று பெயர்கூறப்பட்டு. உலகு தன்புகழ் ஊழி உண்டாக ஏத்த நின்றவன். கல்விக்கடலானுகிய காளையைக் கண்டான், சேர்ந்தான் என்க. காளை : சீவகன்; கண்டான் - கண்டு; முற்றெச்சம்.

1637. இந்நாட் டிவ்வூ ரிவ்விட மெய்தா ரிவண்வாழ்வார், எந் நாட் டெவ்வூ ரெப்பெய ராய்நீ யுரையென்றாற், கந்நாட் டவ்வூ ரப்பெய ரல்லாப் பெயர்சொன்னான், பொய்ந்நாட் டேனும் பொய் யல வாற்றாற் புகழ்வெய்யோன்.

இவண் - இவ்வுலகில் ; என்றது, தனக்கு [1] நடக்குமிடத்தை.

(இ - ள்.) அங்ஙனஞ் சேர்ந்தவன், இவ்வுலகில் இந்நாட்டில் இவ் வூரில் வாழ்வார் இவ்விடத்தைச்சேரார் ; ஆதலின், இவன் இவ்விடத் தானல்லனென்று உட்கொண்டு, நீ எந்நாட்டில் எவ்வூரில் எப்பெயரை யுடையாய் ? உரையென்று வினாயினாற்கு, புகழ்வெய்யோன்றான், சொல் லாற் பொய்யாக நாட்டிக்கொள்ளப்பட்டதாயினும் பொருளாற் பொய்யல் லாததொரு வழியாலே ஏமாங்கதமென்னு நாட்டில் இராசமாபுரத்திற் சீவகனென்னும்பெயரையன்றிப் [2] பொருளால் அப்பெயரேயாகக் கூறினா னென்க.

எனவே மறைந்தொழுகுகின்றமை பெற்றாம். (அக)

1638. வாமான் றிண்டேர் வள்ளலு முள்ளம் மிகை கொண்டெங், கோமாற் குய்ப்பன் கொள்பயன் மிக்கான் கொலை வேலான், ஏமா றில்லா விந்திர னேயும் மிவனொவ்வான், போமா றாய்வென் பொற்பொடு கூடும் வகையென்றான்.

வாமான் - தாவுமான். [1] கோமாற்கு : உருபுமயக்கம். இந்திரனே யும் : உம்மை சிறப்பு ; ஏகாரம் பிரிநிலை.

---

1637. இந்நாட்டென்றது மத்திம தேயத்தை. இவ்விடத்தை இவண்வாழ்வார் எய்தார் என்க. என்றாற்கு - என்றுகேட்ட விசயனுக்கு. அந்நாட்டு - அவ்வேமாங்கத நாட்டு. அவ்வூர் - இராசமாபுரத்தில். அப்பெயரல்லாப் பெயர் - சீவகன் என்னும் பெயரன்றிக் குறிப்பால் அப் பெயரேயாக. பொய்ந்நாட்டேனும் - பொய்யாக எடுத்துக் கூறப்பட்ட தாயினும். பொய்யல ஆற்றால் - பொருளால் பொய்யல்லாததொரு வழி யால். புகழ்வெய்யோன் - புகழை விரும்பியவனை சீவகன் ; சீவக. 237. வெய்யோன் சொன்னான் என்க.

(உரை) [1] நடக்கும் - ஆணைக்குட்பட்டு நடக்கின்ற. [2] (பி - ம்.) 'பொருளான் மெய்யாகக்'

1638. வாமான் - தாவுகின்ற குதிரை. வள்ளல் : விசயன். மிகை - தனது அறிவின்மிகுதியால். கோமாற்கு : தடமித்தனுக்கு. கொள் பயன் - யாம் கொள்கின்ற பயனையுடைய. ஏ மாறு இல்லா - அம்புவிடுத லில் தனக்கு நிகரில்லாத. இவன் : சீவகன். ஒவ்வானாதலின் கோமாற்கு இவன் கூடும்வகை உய்ப்பன் ; போம் ஆறு ஆய்வென் என்றான் என்க ; போம் ஆறு - இவன் போம் வழியை.

(உரை) [1] ஏழனுருபு நான்கனுருபாக மயங்கியது.

(இ - ள்.) ஏத்தொழிலில் நிகரில்லாதவிந்திரனும் இவனையொவ் வாஞதலின், இக்கொலைவேலான் யாம்கொள்ளும் பயன்மிக்கவனென்று வள்ளலும் தன்னறிவின்மிகையாலே குறிக்கொண்டு எங்கோமானிடத்தே இவன் நெஞ்சாலே சென்றுகூடுங் கூற்றாலே செலுத்துவேன்; அங்ஙனஞ் செலுத்துதற்கு இவனெஞ்சுபோம்வழியை ஆராய்ந்துபார்ப்பேனென்று கருதினனென்க. (அ௨)

1639. பூங்கழ லானைப் புண்ணிய நம்பி முகநோக்கி
ஈங்கிது நின்னு டிப்பதி நின்னூ ரிதுநின்னில்
வீங்கிய திண்டோள் வெல்புக ழாய்நின் கிளையென்றாற்
காங்கது வெல்லா மண்ணலு நேர்ந்தாங் கமைகென்றான்.

இவனையெதிர்ப்படுதலின் விசயனை, 'புண்ணியநம்பி' என்றார்.

(இ - ள்.) விசயன் சீவகன்முகத்தைப்பார்த்து, வெல்புகழாய்! இங் ஙனம் நட்புக்கொண்டவிடத்து, இந்நாடு நின்னுடைய நாடு; இவ்வூர் நின்னுடைய வூர்; இந்த இல் நின்னுடைய இல்; யாங்களெல்லாம் நின் னுடைய சுற்றமென்று உறவுகூறினனுக்கு, அவ்விடத்துக்கூறிய உப சாரத்தினது பன்மையெல்லாவற்றையும் அண்ணலும் அப்பொழுது உடன்பட்டு இனி இவை மொழியற்க வென்றானென்க. (அ௩)

(வேறு)

1640. மன்னவன் சிறுவ னங்கோர் மாங்கனி யுண்ண லுற்று, மின்னவிர் கணையிற் பல்காற் பிழைப்பெய்து மீண்டு நிற்பப், பொன்னவிர் கழலி னனைப் பொருசிலை கணையின் வாங்கி, இன் னமிர் தூறு கின்ற விருங்கனி யறவெய் திட்டான்.

---

1639. புண்ணியநம்பி பூங்கழலான் முகத்தைநோக்கி; நம்பி: விசயன்; பூங்கழலான்: சீவகன். பதி - ஊர். இதுநின்னில்: "இசைக்க வேண்டா விதையுன தில்லென" (பெருங். 1. 34 : 43); இல் - வீடு. நின் கிளை - யாங்கள் உன்னுடைய உறவினர். என்றாற்கு - என்று கூறிய விசயனுக்கு. அது வெல்லாம் - உபசாரத்தினது பன்மையெல்லாவற்றை யும். அண்ணலும்: சீவகனும். நேர்ந்து - உடன்பட்டுக் கூறி. அமைக- இவற்றைமொழியற்க; "ஆக வமைக வதுவேயவ் வரசநீதி" (சூளா. அரசியற். 211)

1640. சிறுவன்: விசயன். உற்று - கருதி; சீவக. 1501. மின் அவிர்கணையின் - ஒளி விளங்குகின்ற அம்பாலே. பிழைப்பெய்து= பிழைப்ப எய்து - தவறிப்போம்படியாக எய்து; தொகுத்தல். மீண்டு நிற்ப - அது முடியாமையாலே மாங்கனியுண்ணும் கருத்து ஒழிந்து நின்றானாக. கழலினன்: சீவகன். சிலையைக்கணையினோடு வாங்கிக் கனியை அறும்படி எய்திட்டான்; எய்திட்டான் - எய்தான்; ஒரு சொல்.

(இ - ள்.) விசயன் அவ்விடத்தே ஒருமாங்கனியையுண்ணக் கருதி அது வருவதற்குக் கணையாலே பிழைப்பவெய்து அக்கருத்து மீண்டு நின்ருஞக, சீவகன் வில்லை அம்புடனேவாங்கி அக்கனியையறும்படி யெய்தானென்க. (அச)

1641. எய்தவக் கணையு மாவி னிருங்கனி யதுவும் பூமிக், கெய்தவச் சிலையி னெல்லை யணுகலு மேந்த ஞேக்கி, எய்தவவ் விடத்து நின்றே யெய்தவத் தடக்கை கொண்டாற், கெய்தச் சென் றைய ஞரத் தழுவிக்கொண் டிதனைச் சொன்ஞன்.

(இ - ள்.) தானெய்த அவ்வம்பும், மாவினது கனியாகிய அதுவும் தானெய்த அவ்வில்லின்துயரத்திலே பூமிக்கண் அணுகின அளவிலே, ஏந்தல் பார்த்து எய்தஅவ்விடத்தேநின்று எய்த அக்கையிலேவாங்கிக் கொண்டவனுக்கு விசயன் அணுகச்சென்று தழுவிக்கொண்டு இதனைக் கூறிஞனென்க. (அரு)

1642. வண்சிலை கொண்ட வாறும் வார்கணை தொடுத்த வாறும், கண்கணை வைத்த வாறுங் கற்செய்தோ ளிருந்த வாறும், திண்சரம் விட்ட வாறுஞ் சென்றகோல் போந்த வாறும், கண்டெலாம் வியந்து நோக்கி வில்லுடைக் கடவு ளென்ருன்.

(இ - ள்.) முட்டிவிசேடமானபடியையும், நிலைவிசேடமாகநின்று கணையைத்தொடுத்தபடியையும், இலக்கடைந்தபடியையும், தோள் பிறழாமற் கிடந்த படியையும், அம்புவிட்ட நொய்ம்மையையும், கோல் காம்பை யறுத்துக் கூட வந்தபடியையும் எல்லாங்கண்டு அதிசயித்து அவனைப் பார்த்து நீ வில்லைப் படைத்த கடவு ளென்ருனென்க. (அசு)

1643. மராமர மேழு மெய்த வாங்குவிற் றடக்கை வல்வில், இராமனை வல்ல னென்ப திசையலாற் கண்ட தில்லை, உராமன மிவன்க ணின்றி யுவக்குமா செய்வ லென்று, குராமலர்க் காவி னீங்கிக் கோயிலே கொண்டு புக்கான்.

---

1641. சிலையினெல்லை - விற்கிடையளவில். ஏந்தல் : சீவகன். எய்த - அம்பினை எய்த. கொண்டாற்கு - கொண்ட சீவகனுக்கு. ஐயன் எய்தச் சென்று - விசயன் அணுகப்போகி.

1642. சிலைகொண்டவாறும் - வில்லைக்கையில் கொண்ட தன்மை யையும். கண்கணைவைத்தவாறும் - இலக்குப்பார்த்தற்காகக் கண்ணை அம்பின் நுனியிலே செலுத்திய தன்மையையும். கல்செய் - கல்லை ஒத்த; செய் : உவமச்சொல்; சீவக. 2490. சரம் - அம்பு. கோல் - அம்பு. போந்தவாறும் - கனியின் காம்பையறுத்து உடன்வந்த தன்மையையும். சீவகனை வில்லுடைக்கடவுள் என்ருன்.

1643. வல்வில்-பல இலக்குக்களையும் ஊடுருவிச் செல்ல எய்யும் வில் வன்மை; புறநா. 152 : 1 - 6, அடிக்; வல்விலிராமன் : “ அரக்கர் தலை வன்றன், வற்பார் திரடோ ளைந்நான்குந் துணித்த வல்வி லிராமனிடம் ”

(இ - ள்.) வில்லேத் தேவிபொருட்டு வளேத்த கையினேயுடைய இராமனே மராமரமேழும் உருவவெய்த வலிய விற்றெழிலேவல்லனென்பது வார்த்தையன்றிக் கண்ணுற்கண்டதில்லே; இதுகண்டேன்; இனி நீங்கிப் போமுள்ளம் இவனிடத்தின்றுக இவன் உவக்குமாறு செய்வேனென்று உட்கொண்டு, தான் காவினின்றுநீங்கி அவனேக் கோயிலிலே கொண்டு புக்கானென்க. (௮௭)

1644. வழிவரல் வருத்த மோம்பி வயிரப்பூ ணணிந்த மார்பன், அழிகவுள் யானே வேந்தற் கவன்றிற மறியச் சொன்னுன், மொழியெதிர் விரும்பி மன்னன் மூரிவிற் றடக்கை யாற்குக், கழிபெரு முகமன் கூறிக் காதலங் காளே யென்ருன்.

(இ - ள்.) விசயன், வழிவருதலாலுண்டான வருத்தத்தை உணவு முதலியவற்ருலே தீர்த்துத் தடமித்தனுக்கு அவன் கூறுபாடெல்லாமறியக் கூறினுன்; அவனும் அக்கூற்றை எதிரேவிரும்பிச் சீவகனுக்கு மிகப் பெரிய உபசாரங்களேக்கூறி, காளாய்! நின்மேற் காதலேயுடையேமென்ருனென்க. (௮௮)

1645. கிலுத்தங்கூர்ப் பரங்க ளென்னு மிரண்டினுட் கிலுத்தஞ் சார்ந்து, நலத்தகு விரல்க ளேந்தி னிம்பர்மூ விரலி னீளம், சிலேத் தழும் பியானேத் தோலி னூற்றுரை சிறுமீனெத்த, இலக்கணக் கிடக்கை கண்டே யேவினுக் கரசனென்ருன்.

கிலுத்தம் - முன்கைச்சந்து. கூர்ப்பரம் - முழங்கைக்குமுன். யானேத் தோல் காழ்ப்பேறினபடிக்கும், அதிலே நூற்றையுரைத்தது வெண்மைக் கும், சிறுமீன் தழும்பின்வடிவிற்குமுவமை.

(பெரியதிரு. 5. 1 : 4). இசையலால் - வார்த்தையாற் கூறக்கேட்பதன்றி. உராமனம் - நம்மை நீங்கிப்போகும் உள்ளம். இன்றி - இல்லாமல். உவக்குமா = உவக்குமாறு - இவன் மகிழும் விதத்தை. என்று - என்று விசயன் எண்ணி. குராமலர் - குரவம்பூவையுடைய. கோயிலே - அரண் மனேயினுள்ளே. கொண்டு - சீவகனே அழைத்துக்கொண்டு.

1644. வழிவரல்வருத்தம் - சீவகனுக்கு வழிநடந்ததால் உண்டான வருத்தத்தை. ஓம்பி - தீர்த்து. மார்பன் : விசயன். அழிகவுள் - மதமொழுகுகின்ற கன்னத்தையுடைய. வேந்தற்கு : தடமித்தனுக்கு. அவன் திறம் - சீவகனது தன்மையை. மொழியை எதிரே விரும்பி. மன்னன் : தடமித்தன். தடக்கையாற்கு : சீவகனுக்கு. கழிபெருமுகமன் - மிகப்பெரிய உபசாரங்களே. காதலம் - உன்பால் அன்புடையோம். காளே : சீவகன்; விளி.

1645. நலத்தகு - விரும்பத்தக்க. இம்பர் - இப்பக்கத்தே. மூவிர லின் நீளம் சிலேத்தழும்பின் அளவு. சிலேத்தழும்பாகிய இலக்கணக் கிடக்கை கண்டு; "மத்திம தேய மன்னன், கொன்னூர் கொடுவெஞ் சிலே கண்டெதிர் கொண்ட வாறும்" (சீவக. 21, ந.); "விற்றழும் பதனே

(இ - ள்.) அவன் பின்னும் கிலுத்தம் கூர்ப்பரமென்றவிரண்டிலும் முன்கைச்சந்தைச்சேர்ந்து, உத்தமவிலக்கணத்தையுடைய விரல்களைந் திற்கருகே யானைத்தோலின் நூற்றுரையையும் சிறுமீனையுமொத்த மூவிரலினீளத்தையுடைய சிலைத்தழும்பாகிய இலக்கணத்தினது கிடக்கையைக்கண்டு விற்றொழிலுக்கு அரசனென்றானென்க. (அகூ)

1646. அண்ணலஞ் சிலைவ லாரு ளமோகமா வாசா னிற்பின், விண்ணகு வெள்ளி வெற்பின் விஞ்சைய ருலகி னல்லால், மண்ணக த்தில்லை யென்பார் வாயினை மடங்க வந்தான், புண்ணகத் துறையும் வேலா னெனப்புகழ்ந் தரசன் சொன்னான்.

அமோகமாவாசான் - தப்பாத பெரிய ஆசிரியன்; அமோகம் - தப்பாமை; மாஆசான் - பெரியஆசிரியன்; [1] இன், உருபுமயக்கம். [2] இன்னும், ஐயும் அசை.

(இ - ள்.) பின்னும் தலைமையையுடைய வில்வல்லாரில் துரோணாசாரியனுக்குப் பின்பு விஞ்சையருலகினல்லது மண்ணிடத்து வில்வல்லாரில்லையென்பார் வாய்மடங்கும்படி வேலான் தோன்றினானென்று புகழ்ந்து, அரசன் பின்னும் ஒருமொழி கூறினானென்க.

அது மேற்கூறுகின்றார். (கூ௦)

1647. விற்றிற னம்பி தேற்றான் விருந்தின னிவனு மன்றி, மற்றுமோர் நால்வ ருள்ளார் மாண்பினால் வளர்ந்த தில்லை, கொற்றநீ கொடுக்கல் வேண்டுங் குறையெனக் குருசி னேர்ந்தான், அற்றைநா ளாதி யாக வவர்களும் பயிலு கின்றார்.

---

நோக்கி" (கூர்ம. கண். மணம். 133). நூற்றுரை - சுண்ணாம்பை உரைத்தது. (பி - ம்.) 'மீன் போன்ற.' ஏவினுக்கு - வில்லின் தொழிலுக்கு; (பி - ம்.) 'ஏவினுக்காசான்.'

1646. சிலைவலாருள் - விற்றொழில் வல்லவருள். அமோகம் : வடசொல். ஆசான் : துரோணர்; இவருடைய பெருமை வி - பா. 15-ஆம் போர். 32-ஆம் செய்யுள் முதலியவற்றால் அறியலாகும். வெள்ளிவெற்பின் - வெள்ளி மலையையுடைய; சீவக. 395, 546, 2361. உறையும் - உறைதற்குக் காரணமான. அரசன் : தடமித்தன்.

(உரை) [1]ஆசானின் என்பதிலுள்ளது. [2]வாயினை யென்பதிலுள்ளன.

1647. நம்பி : விசயன். தேற்றான் - அறியான். நால்வர்பெயர் : சீவக. 1681. மாண்பு - கல்வியினால் வரும் மாட்சி. கொற்றம் - படைக்கலப் பயிற்சி. குறை - காரியம். குருசில் - சீவகன். நேர்ந்தான் - உடன்பட்டான்.

(இ - ள்.) விசயன் விற்றிறலையறியான் ; அதற்குப்புதியன் ; இவனு மன்றி வேறும் ஒருநால்வருளர் ; அவரும் கல்விமாட்சியோடு வளர்ந்த தில்லை ; இவர்களுக்குக் கல்வி நீ கொடுக்கல்வேண்டும் ; இஃது எனக்குக் காரியமெனச் சொன்னுகை, அதற்குச் சீவகனும் நேர்ந்தான் ; நேர்ந்த பின்பு அற்றைநாள் முதலாக அவர்களும் அக்கல்வியைப் பயிலாநின்ரு ரென்க. (௬௧)

(வேறு)

1648. கழலிற்செந்தாமரையடிகள் புல்லித்தங்காதல்கூர, நிழலி னீங்கார்நினைத்தனநினைப்பினமைவாளுக்கி, அழலிற்சாரா தகலா தொழுகவொருநாளவன்போகிப், பொழிலின்மிக்கதனிற் புக்கான் மணமகளிர்போற்பொலிந்ததே.

(இ - ள்.) அங்ஙனம் பயிலுகின்றவர்கள், செருப்புப்போலே அடி களைப் பொருந்திக் காதல்மிகுதலாலே நிழல்போல் நீங்காராய், அவ னினைத்தனவற்றை ஒருகணத்தின்முடித்துத் தீப்போலே அணுகாது அகலாதொழுகாநிற்க, அவன் ஒருநாளிலேபோய்ப் பொழில்களில் நன்மை மிக்கதொன்றைச் சேர்ந்தான் ; அதுவும் பலமணத்தால் மணமகளிரைப் போலப் பொலிந்ததென்க.

"[1] ஒண்ணுதன் மகளிர் கழலொடு மறுகும், விண்ணுயர்ந் தோங்கிய கடற்றவும்" (பதிற். 30) என்ரூர் பிறரும். (௬௨)

1649. பாசிப்பாசத் துப்பைம்பொனிரைத்தாலி பூத்தவேங்கை, மாசில்வெண்டுகிலைநீர் தோய்த்து மேற்போர்த்தவண்ணமேபோற், காசின்மட்டொழுகப்பூத்தவழிஞ்சில் கண்ணூர்கவின் கொண்டன, பேசிற்செந்தலைய வெண்கறைய புன்கம்பொரிய ணிந்தவே.

---

1648. கழலின் - செருப்புப்போல. அடிகளைப் புல்லி. கூர - மிகுத லால். நிழலினீங்கார்......அழலிற்சாராதகலாது : "அழலி னீங்கா னணுகா னஞ்சி, நிழலி னீங்கான்" (நன். பாயிரம்). அவன் : சீவகன். மிக்கதனில் - மணம் மிக்க ஒன்றில். நறுமணமிகுதியால் பொழிலுக்கு மணமகளிர் உவமை.

(உரை) [1] 'இனிக் கழலென்றதனைக் கழலையுடைய தலைமகன் காலாக்கி அக்காலொடு தலைமகளிர் புணர்ந்து உடன்போகுமென்பாரு முளர்' என்பது இப்பகுதியின் பழையவுரை.

1649. பாசிப்பாசத்து - பச்சைக்கயிற்றால். நிரைத்தாலி - வரிசை யாகிய பொற்றாலியை. வேங்கைபூத்த : பூத்த : முற்று. மாசு - அழுக்கு (பி - ம்.) 'பூந்துகில்.' காசு - குற்றம். அழிஞ்சிலின் பூவுக்கு நீரில் தோய்த்த துகில் உவமை. கண்ணூர்கவின் - கண்ணிற்கு நிறைந்த அழகு. புன்கம் - புன்கமரம். புன்கம்பூவிற்கு நெற்பொரி : குறுந். 53 : 2-4, ஒப்பு. கறை - மறு. புன்கம் அணிந்தன, கொண்டன என்க.

(இ - ள்.) வேங்கை பச்சைக்கயிற்றிலே நிரைத்தலையுடைய பொற்றுலிபோலே பூத்தன ; அழிஞ்சில் வெண்டுகிலை நீரைத்தோய்த்து மேலே போர்த்தாற்போலே தேனொழுகும்படி பூத்தன ; புன்கு செந்தலைய வெண் கறையவாகிய பொரிபோலே பூத்தன : இவற்றைக்கூறின் இவைதாம் கண்ணிற் கார்ந்ததொரு கவின்கொண்டனவென்க.

வெள்ளைமறுவையுடையவென்க. (கூரு)

1650. கோடுதையாக்குழிசியோடாரங்கொளக்குயிற்றிய
ஓடுதேர்க்கான்மலர்ந்தனவகுளமுயர்சண்பகம்
கூடுகோழிக்கொழுமுள்ளரும்பினவங்கோசிக
ஆடைபூத்தனபாதிரிவெண்கடம்புபந்தணிந்தவே.

குறட்டோடே ஆர்களழுந்தத் தைத்துச்செய்த தேருருளை ; மேற் சூட்டுவையாத தேருருளை.

(இ - ள்.) மகிழ் தேருருளைபோலேபூத்தன ; சண்பகம் கோழி யிடத்தே கூடின முள்ளைப்போலே அரும்பின ; பாதிரி கோசிகவாடை போலே பூத்தன ; வெண்கடம்பு பந்தணிந்தனவென்க. (கூச)

1651. வெருகுவேட்பச்சிரிப்பனபோன்முகைத்தமுல்லைவெய்
யவாய், அரவுபைத்தாவித்தன்னவங்காந்தளவிழ்ந்தலர்ந்தன,
குரவங்கொண்டகுறும்பூழ்போற்கொழுங்கான்முகைசுமந்தன,
குருதிக்கூரெயிறுகூத்தியர்கட்கொண்டகொடித்தளவமே.

---

1650. கோடு - மேற்சூட்டு. தையா - பொருத்தாத. குழிசி - குடம். ஆரம் - ஆரக்கால். குயிற்றிய - அமைத்த. வகுளம் - மகிழமாம். முள் - காலினிடத்துள்ள முள். சண்பகம் முள் அரும்பின. பாதிரிப்பூவுக்குக் கோசிக வாடை உவமை : "பைங்கூற் பாதிரிப் போதுபிரித் தன்ன, அங்கோ சிகமும்" (பெருங். 1. 42 : 204-5) ; கோசிகம் - பட்டாடை. கடம்பம்பூவிற்குப் பந்து உவமை.

1651. வெருகு - காட்டுப்பூனை. வேட்ப - விரும்ப. முகைத்த - அரும்பைத் தோற்றின. முல்லையரும்புக்கு வெருகின் சிரிப்பு : குறுந். 220 : 3-5, ஒப்பு. வெய்யவாய் : அரவுக்கு அடை. பைத்து - படம் விரித்து. ஆவித்தன்ன - கொட்டாவிகொண்டாலன்னவாக ; "பாம்பு பைத் தாவித்தன்ன மென்காந்தட் பருமுகை யவிழ்ந்து" (கூர்ம. பிலக்க. 52). குரவம் : எழுவாய். கொண்ட - கையிலே கொண்ட. குறும் பூழின்கால் குரவம்பாவைக்கு உவமை ; குறும்பூழ்க் கொழுங்கால்போல் எனமாறுக. குருதி - சிவப்பு. தளவம் - செம்முல்லை ; "தளவின் சிரல் வாய்ச் செம்முகை" (ஐங்குறு. 447) ; "புதன்மிசைத் தளவி னிதன்முட் செந்நனை" (அகநா. 23 : 3). தளவம், கூத்தியர்கட் கூரெயிறு கொண்ட என்க.

**(இ - ள்.)** முல்லை வெருகு விரும்பச் சிரிப்பனபோலே அரும்பின; [1] குருதிக்காந்தள் பாம்பு படத்தைவிரித்துக் கொட்டாவிகொண்டாலன் னவாக முகை நெகிழ்ந்து பின்பு அலர்ந்தன; குரவம் கையிலேபிடித்த குறும்பூழின்கால் போலே கொழுவிய முகையைச் சுமந்தன; தளவம் கூத்தியரிடத்துக் கூரெயிறுபோலே அரும்பினவென்க. (கூ௫)

1652. சொன்ன நன்மலருமல்லனவும் வீழ்பலவின் சூழ்சுளை களும், நன்மைநூலினயந்தோன்றநன்பொன்விரலினுதியினுற், பன்மணியுமுத்தும் பவளமும்பைம் பொன்னுங்கோத்தாலொப்ப, என்னவமரருமருளத்தொடுத்தானினமாலையே.

**(இ - ள்.)** மாலைகட்டுமாறுகூறிய நூலின்நயந்தோன்றத் தேவரும் மருள மணிமுதலியனவற்றைக்கோத்தாற்போலே முற்கூறிய மலர்களை யும் ஒழிந்தவற்றையும் சுளைகளையுங்கொண்டு விரனுதியாலே ஒரு [1] வகை மாலையைக் கட்டினனென்க. (கூ௬)

1653. ஊனுண் சிங்கக்குழவி யெயிற்றே ரொளியெயிற்றினுன், தேனுண்போதிற்பிணையலும்பந்தும்புனைந்துதேமார்ந்த, நானந் தோய்த்துநனைகலவைநாறுமதந்தெளித்தபின், பானுண்டீஞ் சொல்லாளோர்படுவிவண்டார்ப்பவந்திறைஞ்சினுள்.

**(இ - ள்.)** சிங்கக்குழவியின் எயிற்றையொக்குமெயிற்றினுன், அவ் வகைமாலையொழியப் போதாலே ஒருமாலையையும் பந்தையும் பின்னுங் கட்டி, இவற்றை இனிமைநிறைந்தபுழுகைத்தோய்த்து அவற்றினரும்பு களுக்குச் சந்தனத்தோடுகூடிய பனிநீரையும் புழுகையுந்தெளித்த

---

(உரை) [1] " காந்தட், குருதி யொண்பூ " (நற். 34 : 2-3)

1652. அல்லனவும் - இவையல்லாத மலர்களும். சூழ்சுளை - தின் பார் விரும்பிச் சூழும் சுளை; " தாழ்கோட் பலவின் சூழ்சுளைப் பெரும் பழம் " (பெரும்பாண். 356, ந.). பொன் - மோதிரம்; ஆகுபெயர். மணி - மாணிக்கம்; மணி முதலியன பலவகைமலர்களுக்கு உவமை. என்ன அமரரும் - எப்படிப்பட்ட உயர்ந்த தேவரும். மருள - மயங்கும் படி.

(உரை) [1] சீவக. 483, 1889, 2693, ந.

1653. சிங்கக்குழவி - சிங்கக்குட்டி. எயிற்றினுன் : சீவகன். போதின் - அரும்புகளால். பிணையல் - மாலை. மலர்களாற் பந்துசெய் தல் : " தண்மலர் நறும்பைந்து " (பெருங். 3. 8 : 64). தேம் - இனிமை. நானம் - புழுகு. நனை - அரும்புகளுக்கு. கலவை - சந்தனத்தோடு கலந்த பனிநீர். நாறுமதம் - புழுகு. படுவி - பணிசெய்யும் குறியவள்.

பின்பு, பாலைப்போலத் [1] தீவிதாகிய கூரியசொல்லையுடையாள் ஒ
தொழில்செய்யுங்குறளி வந்து வணங்கினாளென்க.

[2] ஓலைப்பாசுரமான மாலையைப் பிறர் அயிராதபடி இவையுங்கூட
கட்டினான். "குஞ்சரம் பெறுமே குழவிப் பெயர்க்கொடை" (தொல்
மரபு. 19) என்றதனுள், 'கொடை' என்றதனாற் சிங்கக்குழவியு
கொண்டவாறு காண்க. (கூ6

1654. நெடிய வாட்கண்கள் வாயாவிமைப் பெனுஞ் சொல்லின்
மற்றெங், கொடியிற்கொத்தவிவையென்றுணம்பியுங்கொள்
வென்றான், வடுவும்வேலுமலருங்கயலும்வனப்பழித்தகண், அ
யஞ்சிலம்பினாட்குய்த்திறைஞ்சிக்காட்டவவள்கொண்டாள்.

(இ - ள்.) அப்படுவி, தன்கண்கள் வாயாக இமைப்பென்னு
சொல்லாலே இம்மாலைகளும் பந்தும் கனகமாலைக்குப்பொருந்தினவெ
ளாள்; சீவகனும் கொள்கவென்று கொடுத்தான்; கொடுத்தபின்
அவனை வணங்கி அவற்றைக்கொண்டுபோய், வடுமுதலியவற்றை
கெடுத்த கண்ணினையும் அடியிலே சிலம்பையுமுடையாளுக்குக் காட்
அவளும் வாங்கிக்கொண்டாளென்க.

படுவிகுறிப்பறிந்து கொடுத்தான். (கூ அ

1655. (க) கொண்டு கோதை மலரெழுத்து மெல்விரலின்மே
ருங்கிநோக்கும், வண்டுசேர்ந்தகுழலாள்வருமுலைகள்பாயவண்
டார், விண்டுதேன்றுளிப்பவேற்றடங்கண்டாமாடுநாடகம், கண்
வாழாதவர்வாழ்க்கையெல்லாஞ்சவரர்வாழ்க்கையே.

---

(உரை) [1] தீவிது - இனியது. [2] ஓலைப்பாசுரம் : சீவக. 671, 2148
பெருங். 4. 13 : 61-91.

1654. இமைப்பு - இமைத்தல். சொல்லின் - சொல்லால். மற்று
அசை. இவை எம்கொடியிற்கு ஒத்தவென்றாள்; இவை - இம்மா
களும் பந்தும். கொடியிற்கு : கனகமாலைக்கு; இவள், தடமித்தனுடை
மகள். என்றாள் - என்று அந்தக் குறியவள் கூறினாள். நம்பி : சீவகன்
வடு - மாவடு. மலர் - நீலோற்பலமலர். வடுமுதலியவற்றினது வனப்பை
அழித்த கண். கண்ணையும் அடியிற் சிலம்பையுமுடையாட்கு - கன
மாலைக்கு. காட்ட - சீவகன் கொடுத்தவற்றை அக்குறியவள் காட்ட
அவள் : கனகமாலை.

1655. கோதை கொண்டு - அம்மாலையை வாங்கிக்கொண்டு. வி
லின் மேற்றுங்கி மலராகிய எழுத்தை நோக்கும்; நோக்கும் - பார்த்து
வாசிக்கின்ற. குழலாள் : கனகமாலை. வருமுலை - எழுகின்றமுலை
பாய - பாய்தலால். தார் - மார்பின்மாலை. விண்டு - அலர்ந்து. தட
கண் - பெரிய கண்கள். நாடகம் : 'கண்டார்க் கின்பஞ்செய்தலின்
நாடகமென்றார்' (திருச்சிற். 219, பேர்.). சவரர் வாழ்க்கையே - அறிவி

1656. (உ) ஆம்பலூறுமரக்கார்பவளவாயாரமுதன்னார்
பாம்புபைத்தாங்கனையபவழப்படவரவல்குலார்
தாம்பலருமருட்டவகிறவழுந்தண்பூவணைக்
காம்பின்மென்றோள்கவின்வளரவைகல்கலப்பென்பவே.

1657. (ங) ஆகந்தாநேர்மணிப்பலகையாகமுலைகணாயாகப்
போகக்கேற்றபுனைபவழவல்குல்கழகமாக
ஏகவின்பக்காமக்கவறாடலியைவதன்றேல்
ஆகநோற்றிட்டடங்கலாண்மைக் கழகென்பவே.

இவைமூன்றும் ஒருதொடர்.

(இ - ள்.) அம்மாலையைவாங்கிக்கொண்டு விரன்மேலேதாங்கி மலராகிய எழுத்தை வாசிக்குங்குழலாள், அரக்காம்பல்போல நாறும்பவளவாயார், அமுதன்னார், பாம்பின்படமனைய அல்குலாராகிய மகளிர்தாம் பலரும் ஆடுநாடகங்களைக்கண்டு வாழாதவர் வாழும்வாழ்வெல்லாம் மக்கட்பிறப்பிற்பிறந்தும் நன்குநுகராத வேடரதுவாழ்வாயிருக்கும்; அதுவேயன்றி, அவரைக்கலக்குமிடத்து வேற்றடங்கண்தாம் பாம்பு பைத்தாங்கு மருட்ட வளவிய தார் தேன் துளிக்கும்படி வருமுலைகள் பாய அவர்தோள் கவின்வளர அணையிலேதங்குதல் கலப்பென்றுகூறுவர்; அங்ஙனங்கலந்து தனதாகம் பலகையாக அவர்முலைகள் நாயாக அல்குல் சூதுபொருமிடமாக இணையில்லாத இன்பத்தையுடைய காமமாகிய கவறாடல் கூடாதாயின், இவையெல்லாம் மேலுண்டாம்படி தவஞ்செய்தடங்குதல் ஆண்மைக்கு அழகென்று கூறுவாரென்று வாசித்தாளென்க.

குழலாள் வாசித்தாளென்க. விடமேறினாற்போலே மருட்ட. நாடகம் - அவர் வசீகரிக்கிற நிலைமை. (கூகூ-௧0௧)

---

லாத வேடரது வாழ்க்கையே ஆகும். இது முதலிய மூன்று பாடல்கள் ஓலைப்பாசுரத்திலுள்ள செய்தி.

1656. அரக்கார்ந்த ஆம்பல் நாறும்வாயார்: "அரசகாம்ப றைறும் வா யம்மருங்குற் கன்னோ" (நாலடி. 396). அடி, 2: கூர்ம. சம்பு. 85. பைத்தாங்கு அனைய - படம் விரித்தாலொத்த. பவழம் - பவழமேகலை. படவரவல்குல்: பெயர்மாத்திரையெனலுமாம். மருட்ட - மயக்க. அகிற்புகை தவழும் அணையில்; அணை - படுக்கை. காம்பு - மூங்கில். வைகல் - தங்குதல். கலப்பு - கூடல்.

1657. ஆகம் - மார்பு. பலகை - வல்லுப் பலகை. போகக்கேற்ற - போகத்திற்கேற்ற. நாய்: சூதாடுகருவியுள் ஒன்று. பவழவல்குல்: சீவக. 1184. அடிக். அல்குல் கழகமாக; கழகம் - சூது ஆடுமிடம். "திருவிற்கான் மணிப்பூ ணகம் பலகையாத் தெண்முத் தாரம், அருவிக்கால் வரைமென் கொங்கைச் சூதொட்டி யாடி வென்றும்" (திருவிளை. நகர. 48). ஏக இன்பத்தையுடைய காமமாகிய கவறாடல்; ஏகஇன்பம் -

(வேறு)

1658. பின்னி விட்ட பிடித்தடக்கை யிரண்டு போன்று திரண்டழகார், கன்னிக் கலிங்க மகிலார்ந்து கவவிக் கிடந்த குறங்கினுள், மின்னுக் குழையும் பொற்றோடு மிளிர வெருத்த மிடங்கோட்டி, என்னு மிமையா ணினைத்திருந்தா ளியக்கி யிருந்த வெழிலொத்தாள்.

(இ - ள்.) முறைமைப்படநோக்கி இடைவெளியின்றியிருத்தலிற் பிடியினுடைய சேர்த்துவிட்ட கையிரண்டையொத்துத் தாம்திரள்வதுஞ் செய்து கணவன் தீண்டாத கலிங்கம் விரும்பிக்கிடந்த குறங்கினுள், அங்ஙனம்வாசித்து, குழையும் தோடும்பிறழக் கழுத்தை இடத்தே சாய்த்துச் சிறிதுமிமையாளாய் அவனிடத்துப் புணர்ச்சியை நினைத்திருந்தவள் இயக்கியிருந்த அழகை யொத்தாளென்க.

இயக்கியும் தனக்குமேலாய இறைவனைத் தியானித்து இமையா திருப்பாளென்றுணர்க. (கஎ௨)

1659. கொடுவெஞ் சிலையைக் கொளையமைத்துக் கொதிநீர்ப் பகழி கொளவாங்கிக், கடுவெங் குறவ னெயப்பட்ட கன்னிப் பிணையி னிலைகலங்கித், தொடிதோ ணடப்பத் தோடேம்பத் துணைவெம் முலைகள் பசப்பூர, நெடுமாத் தோகை மென்சாய னெஞ்சிற் கிவ்வா றுரைக்கின்றாள்.

---

இணையில்லாத இன்பம்; சீவக. 855. இயைவதன்றேல் - முடியாதாயின். ஆக - இவையெல்லாம் மறுபிறப்பிலாவது உண்டாகும்படி. நோற்றிட்டடங்கல் - தவம்செய்தடங்குதல்.

1658. பின்னிவிட்ட - சேர்த்துவிட்ட. கன்னிக்கலிங்கம் - கணவன் தீண்டாத ஆடை. அகிலார்ந்து - அகிற்புகை யூட்டப்பெற்று. கவவி - அகத்திட்டு. குறங்கினுள் : கனகமாலை ; குறங்கு - துடை. துடைக்குப் பிடியின்கை : சீவக. 353, 2695. மிளிர - ஒளிவிட. எருத்தம் - கழுத்தை. இடம் கோட்டி - இடப்பக்கத்தே சாய்த்து. என்னும் - சிறிதும். இமையாளாகி நினைத்திருந்தாள் ; நினைத்திருந்தாள் - சீவகனைச் சேரவேண்டி எண்ணியிருந்தாள். கண் இமையாதிருந்தமையின் 'இயக்கி' என்றார்.

1659. சிலையைக் கொளை அமைத்து - வில்லில் நாணைப்பூட்டி ; கொளை - நாண் ; "கடுங்கொளைக் கொளீஇ" (பெருங். 1. 45 : 52). பகழி - அம்பை. கொளவாங்கி - நிரம்பவலித்து. குறவனால் எய்யப்பட்ட. கன்னிப்பிணை - இளைய பெண்மானினது. நிலைகலங்கி - இறந்துபோகும் நிலையினின்றும் தப்பி. தொடி தோளினின்றும் நடப்ப : நடப்ப - விழும்படி. தேம்ப - மெலிவடைய. மாத்தோகை - கரிய மயில். தோகைபோலும் சாயலையுடையாள் - கனகமாலை ; எழுவாய்.

(இ - ள்.) அங்ஙனமிருந்த கரிய மயில்போலும் சாயலையுடையாள் வில்லை நாணேஏற்றிட்டு அம்பைநிரம்பவலித்துக் குறவனெய்யப்பட்ட கன்னிப்பிணையினிலையைத் தப்பித் தொடி தோளில் நின்றும் விழும்படி தோள் மெலியாநிற்க, முலைகள் பசப்பூராநிற்க நெஞ்சிற்கு இப்படிக் கூறுநின்றாளென்க.

நிலையைத்தப்புதல் - இறந்துபாடுநீங்குதல். மாலையைத் தன்சேடி கொண்டுவருதலின், அவற்கு நிகழ்ந்தவேட்கை தன்னிடத்தேதயென்று கருதி இறந்துபாடுநீங்கினாள். பிணைபோலென்றால் மேல்வருத்தமின்றி இறந்து பாடுதோன்றுமாம். (கசுரு)

1660. ஒன்றே யெயிற்ற தொருபெரும்பே யுலகம் விழுங்க வங்காந்து, நின்றாற் போல நிழலுமிழ்ந்து நெடுவெண் டிங்க ளெயிறிலங்க, இன்றே குருதி வானவா யங்காந் தென்னை விழுங்குவான், அன்றே வந்த திம்மாலை யளியே னாவி யாதாங்கொல்.

(இ - ள்.) ஒரெயிற்றையுடையதொரு பெரும்பேய் உலகத்தை விழுங்கும்படி வாயை அங்காந்துநின்றாற்போலே இம்மாலை திங்களாகிய எயிறு நிழலுமிழ்ந்திலங்கச் செக்கர்வானாகிய வாயை அங்காந்து என்னை இன்றே விழுங்குதற்கு வந்துற்றதல்லவோ, இனி என்னாவி இதன் கண்ணதோ? என் கண்ணதோ? அறிகிலேனென்றாளென்க.

[1] ஏ : அசை. 'வந்தது' என விரைவுபற்றி எதிர்காலத்தை இறந்த காலத்தாற் கூறினாள். (கசுச)

1661. வருந்தி யீன்றாண் மறந்தொழிந்தாள் வளர்த்தாள் சொற்கேட் டில்கடிந்தாள், முருந்தின் காறுங் கூழையை முனிவார் நின்னை யென்முனிவார், பொருந்திற் றன்றா லிதுவென்னாய் பொன்று மளித்திவ் வுயிரென்னாய், திருந்து சோலைக் கருங்குயிலே சிலம்ப விருந்து கூவுதியால்.

---

1660. எயிற்றது - பல்லையுடையதாகிய. அங்காந்து - வாயைத் திறந்து. மாலை - அந்திப்பொழுது. நிழல் - ஒளி. குருதிவானம் - செவ்வானம். இம்மாலை திங்களாகிய எயிறு இலங்க, வானமாகிய வாயை அங்காந்து என்னை இன்றே விழுங்குவான் வந்ததன்றே என்க. மாலைக் காலத்திற்குப் பேயும், திங்களுக்குப் பேயின் பல்லும், செவ்வானத்திற்குப் பேயின் வாயும் உவமைகள்; "சாதக மென்னவுந் தழைத்த மாலைய" (கம்ப. மிதிலைக். 63). அளியேன் ஆவி - அளிக்கத்தக்க என்னுடைய உயிர்.

(உரை) [1] ஒன்றே என்பதிலுள்ளது.

1661. வருந்தியீன்றாளென்றது, தாய்க்குயிலை. ஒழிந்தாள்-உன்னை விட்டு நீங்கினாள். வளர்த்தாளென்றது செவிலியாகிய காக்கையை.

(இ - ள்.) நல்ல சோலையிற்குயிலே! நீ அருள்செய்து: மாலை வருகின்ற காலத்தே யாம்கூவுதல் பிரிந்த இவர்க்குப் பொருந்திற்றன் றென்றுங் கருதாயாய் இவருயிர் தான் போமென்றுங் கருதாயாய் முழங்க விருந்து கூவாநின்றாய்; இத்தன்மையையுடைய நின்னை வருந்திப் பெற்றவள் அவ்வருத்தத்தையும் மறந்து உறவைக்கைவிட்டாள்; எடுத்து வளர்த்தவளும் நின்சொல்லின் கடுமையால் இல்லினின்றும் கடிந்தாள்; நீ தான் என்பளவுஞ்செல்லும் மயிர்ப்பாடுமுடையை; ஆதலின், இனி நின்னை வெறுப்பார் நின்பிறப்பையோ, வளர்ப்பையோ, வடிவையோ வெறுப்பாரென்றாளென்க.

'கருங்குயிலே' என்றது சோலைக்கு [1]மறுவேயென்ற தன்மைத்து; இது, [2]செறலின்கட்டிணை மயக்கம். (௧௦௬)

1662. பெருவெண் டிங்கண் மாலகப்பூ மலைந்து பெட்ப
நகுகின்ற, துருவு கொண்ட குரலன்றி லுயிர்மே லாம்ப லுலாய்
நிமிரும், ஒருபெண் பாலேன் யாகை வுலக மெல்லாம் பகையாகி,
எரிகொன் றீன்ற விலைப்பலிபோ லிருத்தி யாலென் னின்னுயிரே.

(இ - ள்.) அன்றில்கள் தம்குரலாலே வடிவைக் கொண்டன; திங்கள் அகப்பூவோடே மலைந்து அதன்கேடு கண்டு மிகவும் நகா நின்றது; ஆம்பலென்னும்பண் சுற்றிலேயுலாவி இவ்வுயிரின்கேடு கண்டு இதன்மேலே நடவா நின்றது; இங்ஙனம் உலகிலுள்ள பொருளெல்லாம் பகையாதற்குப் பற்றாதே யானொரு பெண்பாலேனாயிருந்தேனென்றுட் கொண்டு யானிங்ஙனமாகவும், கொடியவுயிரே! நீ தீயேய்ந்து வேறொரு வடிவாகவீன்ற இலைச்சாம்பல்போலே இராநின்றாய்; இஃது நீயிருக்கு மளவன்றால்; நினக்கு நினைவு என்னென்றாளென்க.

---

சொற்கேட்டு - உன்னுடைய குரலைக்கேட்டு. இல்கடிந்தாள் - தம்மின மன்றென்று உன்னை வீட்டினின்றும் போக்கினாள். அடி, 1 : பிரபு. பிரபுதேவர். 63. முருந்தின் காறும் கூழையை - அடிக்குருத்தினளவும் சென்ற மயிரையுடையாய்; என்றது இகழ்ச்சி. முனிவார் - உன்னை வெறுப்பவர்கள். அளித்து - இரங்கத்தக்கது. இது பொருந்திற்றன்றால் என்னாய் - நாம் கூவுதல் பிரிந்த இவர்க்குப் பொருந்தியதன்று என்று கருதாய்; ஆல் : அசை. இவ்வுயிர் பொன்றும் என்னாய்; பொன்றும் - கெடும்; என்னாய் - என்றுகருதாய். சிலம்ப - முழங்க. கூவுதியால் - கூவுகின்றாய்; ஆல் : அசை.

(மேற்.) மு : நன். பொது. 59, மயிலை; சங்கர.

(உரை) [1]மறு - குற்றம். [2]செறல் - கோபித்தல்.

1662. மால் அகப்பூ - மயக்கத்தைக் கொண்ட இதயதாமரையோடு. மலைந்து - பொருது. பெட்ப - மிகவும். அன்றில் குரலால் உருவு கொண்டன. ஆம்பல் உலாய் உயிர்மேல் நிமிரும் என்க; ஆம்பல் - ஆம்பற் பண்; "ஆம்பலந்தீங்குழல்" (சிலப். 17 : 'பாம்புகயிறு'.); உலாய் -

அகப்பூ - இதயகமலம். [1] உலகம் : ஆகுபெயர். [2] ஆகி - ஆக. பின்னும் இலைபோறலின், 'ஈன்ற' என்றார்; இது தொழிலுவமம். ஏகாரம் : எதிர்மறை. (கசுசு)

1663. வேமென் னெஞ்ச மெய்வெதும்பும் விடுக்கு மாவி வெய்துயிர்க்கும், பூமென் குழலார் புறநோக்கி நகுவார் நகுவ தாயினேன், தாம மார்பன் றன்புனைந்த தண்ணென் மாலை புணையாக, யாமக் கடலை நீந்துவேன் யாரு மில்லாத் தமியேனே.

[1] ஏகாரம் : எதிர்மறை.

(இ - ள்.) காமத்தீயால் நெஞ்சு வேம்; ஆகலின், மெய் வெதும்பா நின்றது; உடம்பைக் கைவிடுகின்ற ஆவியும் போகாதேநின்று நெட்டுயிர்ப்புக் கொள்ளாநின்றது; யானும் மகளிருடைய பொல்லாங்கைப் பார்த்து நகுவார் நகப்படும் பொல்லாங்கின் வடிவாயினேன்; இங்ஙனமாகிய தமியேனை மாலை புணையாக யாமமாகிய கடலைநீந்துவேன்; நீந்துதலரிதென்றாளென்க.

அவன்கையாற் புனைதலின், [2] அதுகொண்டு நீந்தலாமோவென நினைத்து அதனை மறுத்தாள். (கசுஎ)

1664. செம்பொற் கடம்பன் செவ்வேலுங் காமன் சிலையிற் றொடுத் தலர்ந்த, அம்பும் வென்ற வரிநெடுங்க ணம்மா மதிவாண் முகத்தினாள், வம்பு பூத்து முருகுலாய்த் தேன்கொப் புளித்து நின்றதோர், கொம்பு வெந்தீ யிடைப்பட்ட தொத்தாள் விரைசெய் கோதையே.

---

சுற்றிலும் பரந்து; நிமிரும் - நடக்கும். யான் ஒரு பெண்பாலேனாக. எரிகொன்று - தீயால் உண்ணப்பட்டு. இலைப்பலி - இலைச்சாம்பல்.

(உரை) [1] உலகத்திலுள்ள பொருளுக்கானமையின் ஆகுபெயர். [2] எச்சத்திரிபு.

1663. என்னெஞ்சம்வேம்; வேம் - காமத்தீயால் வெந்துபோம். விடுக்கும் - உடலைவிடுகின்ற. குழலார்புறம் நோக்கி - மகளிருடைய பொல்லாங்கைப்பார்த்து. நகுவதாயினேன் - இகழப்படும் பொல்லாங்கிற் கிடமாயினேன். மார்பன் : சீவகன். தண்ணென் - குளிர்ந்த. புணையாக - தெப்பமாக; மாலை புணையாதல் : சீவக. 1674. யாமமாகிய கடலை; யாமம் - இரவு.

(உரை) [1] தமியேனே என்பதிலுள்ளது. [2] அது - பூமாலை.

1664. பொற்கடம்பன் - பொன்போலும் கடப்பம்பூமாலையையணிந்த முருகனது. காமன் - மன்மதன். அலர்ந்த அம்பு - மலர்ந்த பூவாகிய அம்பு. (பி - ம்.) 'அம்புபூத்த.' வேலையும் அம்பையும் வென்ற

(இ - ள்.) முருகன்வேலையும் காமனம்பையும் வென்ற கண்ணிணை யுடைய முகத்தினளாகிய கோதை, பூத்தலால் மணந்தங்கித் தேனைக் கொப்புளித்து நின்றதொரு கொம்பு தீயிடைப்பட்டதொத்தாளென்க. (கூ0அ)

(வேறு)

1665. மணிநிற மாமை சாயல் வளையொடு வண்டு மூசும்,
அணிநிறப் போர்வை யாய வரும்பெற லுணும் விற்றுப்,
பணிநலம் புதிய துண்டான் பன்மலர் மாலை கொண்டேன்,
பிணிநிறப் புறஞ்சொ லென்னும் பெருமிஞி றூர்ப்ப வென்றாள்.

(இ - ள்.) நீலமணிபோலும் மாமையினையும், மென்மையையும், வளையையும், மகளிர்க்குப் போர்வையாகிய நாணையுங்கொடுத்து எல்லா ரும் தாழ்கின்ற என்னலத்தைப் புதுமையையுண்டானது வண்டுமூசு மாலையை, நோயைநிறமாகவுடைய புறஞ்சொலென்னும் மிஞிறூர்ப்பக் கொண்டேனென்றாளென்க. (கூ0கூ)

1666. காதலான் காதல் போல வகன்றுநீண் டலர்ந்த வாட்கட்
போதுலாங் கோதை மாதர் புனைந்தலர் தொடுத்த மாலை
ஆதலா லலர தாகா தொழியுமே யழுங்க லென்று
மாதுலா மழலைச் செவ்வாய் மடக்கிளி மொழிந்த தன்றே.

(இ - ள்.) நின்கணவனது காதல்போலே அகன்று நீண்டு அலர்ந்த கண்ணையும் கோதையையுமுடைய மாதரே! இஃது அலராற்புனைந்து தொடுத்தமாலையாதலின், அலரிடத்ததாகாதேபோமோ; இனி வருந்தா தொழியென்று கிளி ஆற்றுவித்ததென்க. (கூகூ0)

---

கண்ணையுடைய முகத்தினளாகிய கோதை - கனகமாலை. வம்பு - புதுமை. முருகு உலாய் - வாசனைதங்கி. கொப்புளித்து - சிந்தி. கொம்பு - பூங்கொம்பு.

1665. மணி நிறம் - நீலமணிபோலும் நிறத்தையுடைய; "மணி மிடை பொன்னின் மாமை" (நற். 304 : 6). மாலையையும் சாயலையும் வளையையும் நாணையும் விற்று. விற்று - சீவகனிடம் கொடுத்து. பணி நலம் புதிய துண்டான் - எல்லாரும் பணியத்தக்க என் நலத்தினது புதுமையை உண்டவனாகிய சீவகனது; "நலம்புதி துண்டுள்ளா நாணிலி" (கலித். 83 : 21). வண்டுமூசு மலர்மாலையை என இயைக்க. புறஞ்சொல் - அயலார் கூறும் பழிமொழியை. மிஞிறு - வண்டு.

1666. காதலான் - சீவகனது. போது உலாம் - பூக்கள் தங்கிய. கண்ணையும் கோதையையுமுடைய மாதர்; கனகமாலை : விளி. அலராற் புனைந்து தொடுத்த மாலையாதலால் அலரது ஆகாது ஒழியுமே; ஒழியா

(வேறு)

1667. என்னையுள் ளம்பிணித் தென்னலங் கவர்ந்தவீர்ந் தாரினன், தன்னையா னும்பிணிப் பேனெனத் தன்மணிச் செப்பினுள், மன்னுமா லைகொடுத் தவனுக்குய்த் தீயெனத் தொழுதுகொண், டன்னமென் னவொதுங் கிச்சிலம் பரற்றச்சென் றணுகினாள்.

(இ - ள்.) என்மனத்தை இறுகப்பிணித்து என்னலத்தையுங் கொண்டதாரினன்றன்னை யானும் அங்ஙனம் பிணிப்பேனென்று கருதி, மற்றைநாள் தன்செப்பின்மாலையை அநங்கவிலாசினியின் கையிலே கொடுத்து, கொண்டுபோய் அவனுக்குக்கொடுவென, அவளும் தொழுது வாங்கிக்கொண்டு சென்று அவனை யணுகினாளென்க. (கககக)

1668. அணுகிமுன் னின்றவ நங்கவி லாசினி யங்கைகூப்பிப், பிணையனீட் டப்பெருந் தகையஃதே லான்முக நோக்கலும், துணையிலாத் தோகையென்னங்கைக்குத்தொங் கலெடுப் பாயுநீ, மணி செய்மென் றோண்மருந் துநீயா றுயிருநீ யேலென்றாள்.

(இ - ள்.) அங்ஙனமணுகி முன்னே நின்ற அநங்கவிலாசினி தொழுது மாலையைக்கொடுக்க, அதனை அவன்வாங்காதே அவளைப் பார்த்தவளவிலே, அவளும் ஒப்பில்லாத மயிலாகிய என்னங்கைக்குத் தொங்கல் தொடுப்பாயும் நீயே; தோண்மெலிவுக்கு மருந்தும் நீயே; உயிரும் நீயே : ஆதலின், இதனை வாங்கிக்கொள்ளென்றாளென்க. (ககஉ)

---

தென்றவாறு. அழுங்கல் - வருந்தாதே. மாது உலாம் - காதல் தங்கிய. மழலைச்சொல் லையுடைய கிளி.

1667. என் உள்ளத்தைப் பிணித்து என்க. ஈர்ந்தாரினன் - குளிர்ந்த மாலையையுடைய சீவகன்; (பி - ம்.) 'ஈர்மலர்த்தாரினன்.' என - என்றுகருதி. மன்னும் - பொருந்திய. செப்பில் வைத்தமாலை : சீவக. 2474. கொடுத்து - அநங்கவிலாசினியின் கையிற் கொடுத்து. அவனுக்கு : சீவகனுக்கு. உய்த்து - கொண்டுபோய். அணுகினாள் - சீவகனை அடைந்தாள்.

1668. பிணையல் நீட்ட - கனகமாலைகொடுத்த மாலையைச் சீவகனிடம் கொடுக்க. பெருந்தகை : சீவகன். ஏலான் - ஏற்றுக்கொள்ளாதவனாகி. அநங்கவிலாசினியின் முகத்தை நோக்கலும். துணையில் - ஒப்பில்லாத. நங்கைக்கு : கனகமாலைக்கு; தோகை - மயில். தொங்கல் - பூமாலை. மணிசெய் - மணிகளால் அழகு செய்யப்பெற்ற. தோளுக்கு மருந்தும் நீ. ஏல் - இம்மாலையை வாங்கிக்கொள்.

(வேறு)

1669. மன்னர்கோயிலுறைவார்பொறிசெறித்தமாண்பினரே
என்னவஞ்சிறுயென்றவனை நக்காட்கஃதன்றுகோதாய்
இன்னகொள்கையேற்கேலாதென்னவிலங்கெயிற்றினள்
அன்னமன்னநடையினுடான்வருந்துமெனநேர்ந்தான்.

(இ - ள்.) அதுகேட்டவன், அரசர்கோயிலிற்றங்குவார் ஐம்பொறியையும் அடக்குவாரே ; இது தகாதுகாணென்ருனுக, நீ அஞ்சிறுயென்று அவனை இகழ்ந்தவளுக்கு, அவன் பின்னும், கோதாய்! அதுவன்று : ஆசிரியனுய் நிற்கின்ற தன்மையேனுக்கு இது பொருந்சாதுகாணென்ருனுக, அவளும் கனகமாலை இறந்துபடும் இதுவாங்காதொழியினென்று கூற, அதற்கஞ்சி நேர்ந்தானென்க. (கசகூ)

1670. குலிகமார்ந்தகொழுந்தாமரையன்னவண்கைநீட்டி
ஒலியலேற்ருனிஃதூழ்வினையாலுள்ளஞ்சுடுமாலென்ன
இலைகொள்பைம்பூணிளமுலையாள்போகிக்கனகமாலை
மெலியவெம்பிநைகின்ருளுய்யும்வகைதொடங்கினுள்.

(இ - ள்.) அங்ஙனநேர்ந்து தாமரையன்ன கையைநீட்டி மாலையை வாங்கினுன் ; வாங்கி உழுவலன்பாலே இதுதான் என்னுள்ளத்தைச் சுடாநின்றதென்ருனுக, அது கேட்டபின் அநங்கவிலாசினிபோய், கனகமாலை வருந்துகின்றவள் பிழைக்குமுபாயத்தைச் செய்யத்தொடங்கினுளென்க. (கசகச)

---

1669. கோயில் - அரண்மனையில். பொறி செறித்த - ஐம்பொறியையும் அடக்கிய. என்ன - என்று சீவகன் கூறினுனுக. நக்காட்கு - இகழ்ந்த அநங்கவிலாசினிக்கு. அஃது அன்று - நான் ஏலாமைக்குக் காரணம் அஞ்சுதல் அன்று. கோதாய் : அநங்கவிலாசினி; விளி. இன்ன கொள்கையேற்கு - ஆசிரியனுகவுள்ள இத்தன்மையையுடையேனுக்கு. ஏலாது - இது பொருந்தாது. என்ன - என்று சீவகன்கூற. எயிற்றினுள் : அநங்கவிலாசினி. நடையினுள் : கனகமாலை. வருந்தும் என - வருந்துவாள் என்று கூற. நேர்ந்தான் - சீவகன் அம்மாலையை வாங்க உடன்பட்டான்.

1670. குலிகமார்ந்த - சாதிலிங்கம் ஊட்டப்பெற்ற. ஒலியல் - மாலையை ; சீவக. 2682 ; சூளா. துறவு. 34. ஊழ்வினை - உழுவலன்பு. உள்ளம் - என் மனத்தை. சுடுமால் என்ன - சுடுகின்றது என்று கூறினுனுக ; ஆல் : அசை. இலைகொள் பைம்பூண் : சீவக. 1371, அடிக். முலையாள் : அநங்கவிலாசினி. நைகின்ருளாகிய கனகமாலை உய்யும் வகையை ; உய்யும்வகை - பிழைக்கும் உபாயத்தை.

1671. நீர்செய்காந்தமணிகூந்தளம்பாவைநீண்டழகிய, வேர் செய்சாந்திற்கழுநீர்விரைகமழும்பூக்கள்கோத்த, வார்செய்தண் டாமரைவளையமைவரையின்வெள்ளருவிநீர், சீர்செய்கோமகளைச் சேர்த்தினுள்சீதஞ்செய்யாதொழிந்தனவே.

(இ-ள்.) சாந்தோடே சந்திரகாந்தக்கல்லையும், நீண்டு அழகிய கூந் தளம்பாவையையும், கழுநீரையும், ஒழிந்த பூக்களையும், கோத்த நெடிய தாமரை வளையத்தையும், அருவிநீரையும் கோமகளை அணிவித்தாள்; அவை குளிர்ச்சிசெய்யாதே கொதித்தனவென்க.

கூந்தளம்பாவை - பூவிசேடம். (கக௫)

1672. பவ்வத்தங்கட்பிறந்துபனிபெயர்க்குந் தண்ணூற்றதாகி
எவ்வமன்னர்படவுலகம்விற்குமருமணியினைச்
செவ்வனூலிற்சித்திரிக்கப்பட்டதனைச்சேர்த்திப்பின்னும்
மவ்வனறுங்குழலாட்குமற்றுமிவைகணாடினாள்.

ஊறு - பரிசம்.

(இ-ள்.) கடலிலேபிறந்து பனியைக்கெடுக்கும் குளிர்ந்த ஊற்றை யுடையதாய் மன்னர் வருந்தமுறும்படி உலகைவிற்கும் முத்தை நூலிற் கோக்கப்பட்டதனைப் பின்னுமணிந்து குழலாட்கு வேறும் இப்பரிகாரங் களை நாடினாளென்க. (கக௬)

1673. களிசெய் கோசிகநீர் விழக்கடிமாலை மேற்றொடர்ந்து கீழ், நளிசெய் தண்பூஞ்சலஞ் சயனமாக்கி நன்னீர்பிலிற்றும் வாய்க், குளிர்கொள்சாந்தாற்றிபொன்னலவட்டங் கொண்டேந்தி வீசச், சளிகொள்சந்தின்கொழுஞ்சாந்தமாகமுழுதுமெழுகினாள்.

---

1671. நீர்செய்காந்தமணி - சந்திரகாந்தக்கல். விரை - வாசனை. வார் - நீண்ட. கழுநீர்மலரையும், ஒழிந்த பூக்களையும், கோத்ததாமரை வளையத்தையும், அருவிநீரையும் கோமகளைச் சேர்த்தினாள்; கோமகள்: கனகமாலை. சேர்த்தினாள் - அணிவித்தாள். சீதம் - குளிர்ச்சியை.

1672. பவ்வம் - கடல். பனிபெயர்க்கும் - பனியை நீக்கும். ஊற்ற தாகி - பரிசத்தை உடையதாகி., மன்னர் எவ்வம்பட உலகத்தை விற்கும் மணி. எவ்வம்பட - துன்பமுறும்படி. மணி - முத்து; உலகம் விற்கும் மணி: சீவக. 386. செவ்வன் - நேரே. சித்திரிக்கப்பட்டதனை - கோக்கப் பட்ட அம்முத்தை. பின்னும் சேர்த்தி என்க. மவ்வல் நாறும் - முல்லை மலரின் மணம் வீசும். குழலாட்கு: கனகமாலைக்கு. மற்றும் - வேறும். இவைகள் - இப்பரிகாரங்களை.

1673. களிசெய் கோசிகநீர் - கஞ்சிதோய்த்த கோசிகப்பட்டின் நீர். விழ - மாலையால்வந்து விழும்படி. மாலையை மேலேதொடர்ந்து;

**(இ - ள்.)** மேலேகட்டி நீரைத்தாங்கிநின்ற கஞ்சிதோய்த்த கோசிகப் பட்டின்நீர் மாலையாலே வந்துவிழும்படி மாலையைச் சூழக்கட்டிக் கீழேசெறிவு செய்த பூவையுடைய நீரிலே படுக்கையைஆக்கி நீரைப் பிலிற்றும் வாயையுடைய சாந்தாற்றி ஆலவட்டமென்கின்றவற்றை ஏந்திக்கொண்டு வீசாநிற்க, குளிர்கொண்ட சந்தனக்குழம்பைப் பூசினு ளென்க. (கசஎ)

1674. கொம்மை வெம்முலையிற்சாந்தங்குளிர்செயா தாவிவாட்ட
அம்மென்மாலைமுகங்கரியநீர் துளும்பநின்றுநீடி
வெம்மைமிக்கதுவீரன்றொடுத்தவிளங்குமாலை
பொம்மெலோதிக்குத்தானேதுணையாம்புணையாயிற்றே.

**(இ - ள்.)** இளையமுலையிற் சந்தனம் கொதித்து உயிரைக்கெடுக்க, சுற்றின மாலை கருக, கீழ்நின்றநீர் வெம்மையாற்கொதித்தெழ நீட்டித்து நின்று வெம்மைமிக்கது; அப்பொழுது வீரன்கட்டின மாலைதானே ஓதிக்குத் துணையாவதொரு தெப்பமாயிற்றென்க. (கசஅ)

1675. வாசநீலங்கழுநீர்குவளைபடைசாற்றிவந்
தோசனைக்கணுடையுநெடுங்கட்கனகமாலை
தாசிதூதாகத்தாமம்புணையாகச்செல்லுநாளுட்
காசில்கல்விக்கடலைக்கரைகண்டார்காளைமாரே.

**(இ - ள்.)** நீலப்பூமுதலியன போர்கூறிவந்து ஓரோசனைநீளத்தே உடையும் நெடுங்கண்ணையுடைய கனகமாலை, தனக்கு அநங்கவிலாசினி தூதாக, மாலை தெப்பமாக நடக்கின்ற நாளிலே, விசயன் முதலாயினர் கல்விக்கடலைக் கரைகண்டாரென்க. (கசகூ)

---

தொடர்ந்து - கட்டி. நளிசெய் - செறிவுசெய்த. பூஞ்சலத்தில் சயனமாக்கி; பூஞ்சலம் - பூவையுடைய நீரில். சயனம் - படுக்கையை. சாந்தாற்றி - பூசிய சந்தனத்தை ஆற்றுகின்ற சிற்றாலவட்டம்; வாயையுடைய சாந்தாற்றியும் ஆலவட்டமும்: சீவக. 839, ந. சளிகொள் - குளிர்ச்சி கொண்ட. சந்தின் - சந்தனமரத்தினது. சாந்தத்தை ஆகமுழுவது மெழுகினாள்; (பி - ம்.) 'சாந்திற்கொழுஞ் சாந்தமாக முலைமே லெழுதினாள்.'

1674. கொம்மை - வட்டமுமாம். ஆவிவாட்ட - கனகமாலையின் உயிரைக்கெடுக்க. மாலையினது முகம் கரிய; கரிய - கருக. துளும்ப - வெம்மையால் கொதித்தெழ. நீடிநின்று - நீட்டித்துநின்று. வீரன்: சீவகன். ஓதிக்கு: கனகமாலைக்கு. துணையாம் - துணையாகின்ற. புணையாயிற்று - தெப்பமாயிற்று; (பி - ம்.) 'புணையாயிற்றன்றே.' மாலையைத் தெப்பமாகக் கூறுதல்: சீவக. 1663.

1675. நீலம் முதலியன உடையும்; உடையும் - தோற்றற்குக் காரணமான. தாசி: அநங்கவிலாசினி. புணை - தெப்பம். கல்விக்கடலைக் கரைகண்டார்: "நெஞ்சம் புணையாக் கலைமாக்கட லீந்தி" (சீவக. 11). காளைமார்: விசயன் முதலாயினோர்.

(வேறு)

1676. பொருசரஞ் சலாகை வெய்ய புகன்றனர் துரக்கு மாறும்
வருகணை விலக்கு மாறும் வாளமர் நீந்து மாறும்
கருவியுட் கரக்கு மாறுங் கணைபுறங் காணு மாறும்
விரியமற் றவர்க்குக் காட்ட வீற்றிருந் தவருங் கற்றார்.

(இ - ள்.) வெய்யசரத்தையும் இருப்புநாராசத்தையும் விரும்பி எய்யுமாறும், தம்மேல் வருமம்பை அம்பாலேவிலக்குமாறும், அமரிலே கொள்ளு நிலமறிந்துகொள்ளுமாறும், எய்தாற் கருவியாலேமறைத்துச் சேமஞ்செய்யுமாறும், சேர்ந்தாற் பகைவர்கணை புறமாக்கித் தம்கணை செலுத்துமாறும் அவர்க்கு விரியக்காட்ட, அவரும் வருத்தமின்றிக் கற்றாரென்க.

எனவே, "தொடையும் விலக்குஞ் செலவுஞ் சேமமும், தவிர்த்து வினை செயலு மெனவை வினையாம்." இவற்றை வடநூலார் [1] பஞ்ச கிருத்தியமென்பர்; இவை தலைமைபற்றி வில்லையே கூறினவேனும் படைக்கலங்கட்கெல்லாம் பொது. (கஉ௦)

1677. வேலுடைத் தடக்கை யார்கள் வேழமேற் சென்ற போழ்திற், காலிடைக் கரக்கு மாறுங் கையிடைத் திரியு மாறும், வாலிடை மறியு மாறு மருப்பிடைக் குளிக்கு மாறும், நூலிடைக் கிடந்த வாறே நுனித்தவன் கொடுப்பக் கொண்டார்.

---

1676. சரம் - அம்பு. சலாகை - இருப்புக்கம்பி. புகன்றனர் - விரும்பியவராய். துரக்குமாறும் - செலுத்தும் விதத்தையும். வருகணை - தம் மேல் வரும் அம்பை. வாளமர் நீந்துதல் : சீவக. 257. கருவி - கவசம்; சீவக. 2214. கருவியுட்கரக்குமாறும்.........காணுமாறும் : "ஒட்டும் பாய்த்துளுங் கரந்தொருங் கிருக்கையும்" (பெருங். 1. 37 : 36). வீற்றிருந்து - கவலையின்றியிருந்து.

(உரை) [1] பஞ்சகிருத்தியம் : நிவாரணம் - தடை, சேதம் - வெட்டுதல், பிரத்யுத்தானம் - எதிர்ப்பாணம் தொடுத்தல், நித்திராணம் - ரக்ஷணம், பிரகரணம் - காலதேசத் தொழிலின் பார்வை என ஐந்துபெயர்களமைந்த சுலோகமொன்று மிகவும் பிழைபட்டுச் சில பிரதிகளிற் காணப்படுகின்றது. அதன் உருவம் சிறிதும் புலப்படவில்லை; இவற்றின் பெயர் ஆகர்ஷணம், விகர்ஷணம், ஸங்கர்ஷணம், பிரகர்ஷணம், உத்கர்ஷணமென்றிருக்க வேண்டுமென்கின்றனர் வடமொழிப் புலவர்; (பி - ம்.) 'பஞ்சாங்கம்.'

1677. தடக்கையார்கள் : விசயன் முதலாயினோர். மேல் வேழம் சென்றபோழ்தில் என்க : மேல் - தம்மேலே; சென்றபோழ்தில் - கொல்வதற்காக வந்தபொழுது. கால் - யானையின்கால். கரத்தல் - ஒளித்தல். கை-துதிக்கை. மறியுமாறும்-பிறழும்படியையும். மருப்பிடைக் குளித்தல்:

(இ - ள்.) தம்மேலே வேழஞ்சென்றபொழுது அதன்காலிடையிலே புகுந்து மறையும்படியையும், அது கையாலே வளைத்தபொழுது அதன் கைக்கு நடுவே உடம்பு பிறழும்படியையும், அது தாலவட்டத்தாலே வீசினால் அது படாதபடி போய் அதன்காலிடையிற் புகுதும்படியையும், அது கோறற்கு இறங்கினாற் கொம்பிரண்டிற்கும் நடுவே ஆம்படியையும் கூரிதாகக் கற்றவன், அத்தொழிலை நூலிற்கிடந்தபடியே கற்பிக்க, அத் தடக்கையார்களும் கற்றாரென்க.

இது, தனித்து யானையுடன் போர்செய்யுமாறு கூறிற்று. (கஉக)

1678. கொடிநெடுந் தேரின் போருங் குஞ்சரங் குறித்த போரும்
கடுநடைப் புரவிப் போருங் கரப்பறக் கற்று முற்றி
இடனறிந் திலங்கும் வைவா ளிருஞ்சிலை குந்த மூன்றும்
உடனறிந் தும்ப ரார்க்கு முரைப்பருந் தகைய ரானார்.

(இ - ள்.) தேராற் பொரக்கருதின போரையும், குஞ்சரத்தாற் பொரக் கருதினபோரையும், புரவியாற் பொரக்கருதின போரையும் வெளியாகக் கற்றுத் தழும்பியிருந்து, இவ்வூர்திகளிலிருந்தால் ஒன்றற்கொன்று உதவுதலறிந்து வினைசெய்யுமிடமறிந்து செலுத்தும்பொழுது வாளும், இலங்கும் வில்லும், எறிகோலுமென்கின்ற மூன்றையும் சேர அறிந்து, மேலாயநிலத்திற்றேவர்க்கும் புகழ்தற்கரிய தகையராயினாரென்க. (கஉஉ)

1679. தானையு ளன்றி நின்ற தனியிட மொற்றி மன்னர்,
தானைமேற் சென்ற போழ்தும் வென்றியிற் றளர்த லின்றித்,
தானையை யுடைக்கும் வெம்போர்த் தருக்கினர் மைந்த ரென்று,
தானைசூழ் மன்னற் குய்த்தார் மன்னனுந் தருக வென்றான்.

---

"செருக்கொள் யானை மருப்பிடைத் திரிவும்" (பெருங். 1. 37 : 37). (பி - ம்.) 'மருப்பிடை யொளிக்குமாறும்.' குளித்தல் - மறைதல். நூல் - யானைப் போரைப்பற்றிக் கூறும் நூல். நுனித்தவன் - நுட்பமாகக் கற்ற சீவகன். நுனித்தவன் நூலிடைக் கிடந்தவாறு கொடுப்பத் தடக்கையார்கள் கொண்டார் எனமுடிக்க.

1678. கொடியை யுடைய நெடுந்தேர். குஞ்சரம் - யானையால். கடுநடைப்புரவி - விரைந்த செலவையுடைய குதிரையால். கரப்பறக்கற்று - மறைவின்றி வெளியாகப்பயின்று. முற்றி - முடித்து. இடன் அறிந்து - தொழில் செய்யுமிடமறிந்து. குந்தம் - எறிகோல்; வேலுமாம். உடனறிந்து - சேர அறிந்து. உம்பர் - தேவர். உரைப்பரும் - இவர் திறமையைப்புகழ்தற்கரிய. தகையர் - தன்மையர்.

1679. தானை - சேனை. தனியிடம் ஒற்றி - தனியே நின்ற இடத்தை ஒற்றிப்பார்த்தறிந்து. மன்னர் - பகையரசர். தானைமேல் - தம்சேனை

(இ - ள்.) தாம்படையினுளன்றித் தனியேநின்றவிடத்தை ஒற்றிப் பார்த்துப் பகைவர்படை மேற்சென்றகாலத்தும் வெற்றியில் தளருந் தன்மையின்றி அப்படையைக்கெடுக்கும் போர்த்தொழிலிலே பிள்ளைகள் மிகுத்தாரென்று தடமித்தனுக்குச் சொன்னார்; அவனும் யாம் காணும்படி அவரைக் கொணர்கவென்றானென்க. (கஉரு)

1680. மழையொடு சூழ்ந்து கொண்ட வான்றுகள் சிலையி னீக்கிக், குழைமுக நெற்றி நக்கக் கோலவிற் பகழி வாங்கி, இழைபக விமைப்பி னெய்திட் டெறிந்துமின் றிரிவ வேபோல், விழைவுறு குமரர் புக்குச் சாரியை வியத்த ரானார்.

சூழ்ந்துகொண்ட மழையையும் தூளியையும் வில்லாலே நீக்குதல் - சரகூடங்கட்டி அதனால் விலக்கிக் காட்டுதல். அத்திரங்கற்ற தன்மையையும், பயன்கொண்ட தன்மையையும் இத்தொடர்நிலைச்செய்யுளுட் கூறுமையின், நெருப்பு நீருமாகிய அத்திரங்களைவிட்டானென்றல் பொருந்தாது; [1]விசயன் காண்டவ வனமெரித்ததும் சரகூடங்கட்டி யென்றுணர்க.

(இ - ள்.) குமரர், சரகூடங்கட்டி, பின்பு குழையைநக்கும்படி அவ் வில்லைவலித்துப் பகழியாலே நூல்பிளக்கவெய்து வாளாலே நூல்பிளக்க வெட்டி வேலாலே நூல்பிளக்கவெறிந்து பின்னும் மின்திரியுமாறுபோலச் சாரியை திரியுந்தொழிலிலேபுக்கு வியக்கத்தக்காராயினாரென்க.

---

மேலே; தளர்தல் இன்றி - சோரும் தன்மையில்லாமல். அடி, 1-2. "தனியி னாயினுந் தானையொ டாயினும், புகவும் போக்கும் பொச்சாப் பின்றி" (பெருங். 1. 37 : 41-2). தானையை - பகைவர்படையை: உடைக்கும் - கெடுக்கின்ற. போர் மைந்தர் தருக்கினார் என்று - போர்த் தொழிலில் விசயன் முதலாயினார் மிக்காரென்று. மன்னற்கு : தடமித்த னுக்கு. உய்த்தார் - சொன்னார்கள். தருக - மைந்தரைக்கொணர்க.

1680. சூழ்ந்துகொண்ட மழையையும் துகளையும் சிலையின் நீக்கி என்க; "மழைத்துளி படினும் வான்றுகள் சூழினும், விலக்கித் தவிர்க் கும் விற்றொழி லுள்ளிட்டு" (பெருங். 1. 37 : 49-50); சிலையின் - வில்லி னது சரகூடத்தால். முகத்திலுள்ள குழையினது நெற்றியை நக்கும்படி என்க; குழை - குண்டலம். நெற்றி - உச்சியை. வாங்கி - வளைத்து. பகழியை எய்திட்டு. இழைபக இமைப்பின் எய்து - நூல்பிளக்கும்படி இமைப்பொழுதில் அம்பை எய்து; "நுண்படை நூல்வழிச் சிதறி" (பெருங். 1. 37 : 48). இழைபகவென்பதை எய்து, இட்டு, எறிந்து என்ப வற்றோடு தனித்தனியே கூட்டுக. வாளால் இட்டு, வேலால் எறிந்து; இட்டு - வெட்டி. குமரர் : விசயன் முதலாயினார். சாரியை - திரியும் தொழிலிலே; பெருங். 1. 37 : 30. வியத்தரானார் - வியக்கத்தக்கவ ராயினார்.

(உரை) [1]விசயன் - அருச்சுனன்.

மழைகூறவே புயமுட்டியும், துகள்கூறவே சிரோமுட்டியும், குழை நெற்றிநக்க வாங்கியெனவே [2] கந்தரமுட்டியுங்கூறினர்; மேனோக்கியும் கீழ்நோக்கியும் நேருமேயெய்தலாம். (கஉச)

1681. விசயனே விசயன் விற்போர்க் கதம்பனே முருகன் வேற்போர்த், திசையெலாம் வணக்கும் வாட்போர்க் கந்தணன் செம்பொ னுமன், அசைவிலான் யானைத் தேர்ப்போர்க் கசலனே யசல கீர்த்தி, வசையிலான் புரவிச் சேனென் றியாவரும் புகழப் பட்டார்.

(இ - ள்.) விற்போருக்கு விசயன் அருச்சுனனே, வேற்போருக்குக் கதம்பன் முருகனே, வாட்போருக்குத் திசையெல்லாம் வணக்கும் கனகன் பரசுராமனே, யானைப்போருக்கும் தேர்ப்போருக்கும் அசல கீர்த்தி அசைவிலானாகிய அசலனென்னும் வீரனே, புரவிக்குச் சேனன் வசையில்லாதவனே யென்று இவ்வைவரும் எல்லாராலும் புகழப்பட்டா ரென்க.

வசையிலானென்றது நகுலனை. (கஉரு)

1682. காவலன் மக்க ளாக்கங் கண்டுகண் குளிர்ந்து நோக்கி, ஏவலா னரச னென்றே யிருபிறப் பாள னல்லார்க், காவதன் றின்ன மாட்சி யவனையா னிகளம் பெய்து, காவல்செய் திடுவல் வல்லே காளையைக் கொணர்மி னென்றான்.

---

[2] கந்தரம் - கழுத்து.

1681. விற்போருக்கு விசயன், விசயனே; விசயனே - அருச்சுனனே. வேற்போருக்குக் கதம்பன் முருகனே. வாட்போர்க்குச் செம்பொனுமன் அந்தணனே; செம்பொனுமன்: கனகன். அந்தணன் - பரசுராமன். யானைப்போர்க்கும் தேர்ப்போர்க்கும் அசலகீர்த்தி, அசைவிலானாகிய அசலனே; அசலன்: சச்சந்தனுடைய சேனாபதி; பிராமண வருணத்தவன்; புத்திசேனனுடைய தந்தை; சீவக. 1790, ந. புரவிப் போர்க்குச் சேன், வசையிலானே; சேன் - சேனன். வசையிலான்: நகுலன். விசயன், கதம்பன், கனகன், அசலகீர்த்தி, சேனன் என்ற ஐவரும் கனகமாலையின் சகோதரர்.

1682. காவலன்: தடமித்தன். மக்கள் ஆக்கம் - விசயன் முதலாயினரது கல்வியை. ஏவலான் - வில்வல்லவனாகிய சீவகன்; சீவக. 1935. அரசனே இருபிறப்பாளனே என்று ஐயமுற்றான்; இருபிறப்பாளன்: பிராமணன். அல்லார்க்கு - வணிகர் முதலாகிய வருணத்தார்க்கு. இன்ன மாட்சி ஆவதன்று - இக்கல்வித்திறமை உண்டாகாது. அவனை: சீவகனை. நிகளம் - விலங்கு. காவல்செய்திடுவல்வல்லே; "மடக்கிடன் மனமொடு" (பெருங். 1. 34 : 50) என்பதும் அதனுரையும் கண்டு அறியத்தக்கன. காளையை: சீவகனை.

(இ - ள்.) அரசன், மக்கள்கல்வியைக்கண்டு மகிழ்ந்துநோக்கி, அந்த ஏவலான் [1] ஒன்று அரசனுதல், ஒன்று அந்தணனுதலாம்; இரண்டு மொழிந்த சாதியிலுள்ளார்க்கு இக்கல்வியுண்டாகாது; ஆதலால், அவனை யான் நீங்காததொரு தளையையிட்டுச் சிறைசெய்வேன்; இப்பொழுதே அவனைக் கொணர்மினென்றானென்க.

[2] நிகளம் - மகட்கொடுத்தல். (கஉகூ)

1683. கல்வியுங் கொடிது போலுங் காவலன் காளை தன்னை, ஒல்லலன் சிறைசெய் கின்ற னென்றவன் கருதிற் றோரார், பல் சனம் பரிந்து நிற்பப் பார்த்திப குமரன் சேர்ந்தான், வில்வலாற் கொண்டு வேந்தன் வேறிருந் திதனைச் சொன்னான்.

(இ - ள்.) அரசன் இக்கல்வியுடைய காளைதன்னைப் பொறுனைய்ச் சிறை செய்யா நின்றானுதலாற் கல்வியும் கொடிதுபோலேயிருந்ததென்று கருதி, அவனினைத்ததறியாராய்ப் பலரும் வருந்திநிற்கின்றவளவில், சீவகன் சென்றான்; அங்ஙனஞ்சென்றவனை அவ்வரசன் வேறேகொண் டிருந்து இவ்வார்த்தையைக் கூறினானென்க. (கஉஎ)

1684. புண்முழு திறைஞ்சுங் கோட்டுப் பொருகளி றனைய தோன்றல், மண்முழு தன்றி வானும் வந்துகை கூடத் தந்தாய், கண்முழு துடம்பிற் பெற்றேன் காளைகைம் மாறு காணேன், பண்முழு துடற்றுந் தீஞ்சொற் பாவைநின் பால ளென்றான்.

பறவைகளெல்லாம்படியும் கோட்டையுடைய களிறு. [1] இவர்க்கு நீகொற்றங்கொடுத்தலின், மண்முழுதும்வந்து கைகூடுதலன்றி மறுமை

(உரை) [1] ஒன்று என்பதன் விசேடப் பிரயோகம் : சீவக. 1152, 1706, 1745. [2] இது குறிப்புப்பொருள்; காற்கட்டென்பது உலக வழக்கு.

1683. காவலன் : தடமித்தன். காளை : சீவகன். ஒல்லலன் - பொருதவனுய். சிறைசெய்கின்றானுதலால் கல்வியும் கொடிதுபோலும் என்று, அவன் கருதிற்று ஓராராய்ப் பல்சனம் பரிந்துநிற்ப என்க; அவன் கருதிற்று - தடமித்தன் சீவகனுக்கு மகட்கொடுக்கக் கருதியதை. ஓரார் - அறியாதவராகி. பரிந்து - வருந்தி. குமரன் : சீவகன். வில்வலாற் கொண்டு - சீவகனை அழைத்துக்கொண்டு. வேந்தன் : தடமித்தன். இதனை - இவ்வார்த்தையை.

1684. புள்முழுது - பருந்தும் கழுகும் முதலிய பறவைகளெல்லாம். இறைஞ்சும் - மாமிசத்தை உண்ணுதற்குப் படிகின்ற. தோன்றல் : சீவகன்; விளி. மண் - பூமி. கைகூட - கிடைக்கும்படி. தந்தாய் - ஞானநெறியையும் கொடுத்தாய். உடம்பிற் கண்முழுதும்பெற்றேன். காளை : சீவகன்; விளி. கைம்மாறு - பிரதியுபகாரம். பண் - இராகம். உடற்றும் - பகைக்கின்ற. பாவை : கனகமாலை.

(உரை) [1] இவர்க்கு : விசயன் முதலாயினர்க்கு.

யில் வானும் வந்து கைகூடும்படி ஞானநெறியையுந்தந்தாய்; நல்வினை செய்தாருடம்பிற் கண்முழுதும் யான் பெற்றேனென்றது, இவர் போர்த் தொழில் காணப்பெறுதலின் ஊனக்கண்ணும், இவரை நன்னெறியைச் சேர்வித்தலின் ஞானக் கண்ணும் பெற்றேனென்றவாறு.

(இ - ள்.) தோன்றல்! தந்தாய்; யானும்பெற்றேன்; ஆதலிற் காளாய்! கைம்மாறுகாணேன்; என்பாவை நின்பாலளாகின்ற இவ்வளவே கைம்மாறென்றானென்க.

இனி வியந்துகூறுகின்றவன் மண்ணும் விண்ணும் கைகூடத் தந்தாய்; யானும் உடம்பெல்லாம் கண்பெற்றேனென்றுமாம்; இந்திரனானேனென்றுமாம். (கஉஅ)

1685. முடிகெழு மன்னன் சொல்ல மொய்கொள்வேற் குருசி றேற்றான், வடிவமை மனனொன் றாக வாக்கொன்றா மறுத்த லோடும், தடிசுவைத் தொளிறும் வேலான் றன்கையான் முன்கை பற்றி, இடிமுர சனைய சொல்லா லிற்றென விளம்பு கின்றான்.

(இ - ள்.) அங்ஙனமரசன்கூற, குருசில், தன்கருத்தைத் தெளிவியா னாய் அவள்வடிவு பொறித்துக்கிடக்கின்ற மனம் வேட்கைசெல்லாநிற்க வார்த்தை வேட்கையின்றாக மறுத்தவளவிலே, அவ்வரசன் தன்கையாலே அவன் கையைப்பிடித்து இத்தன்மைத்தென்று ஒருமொழி கூறாநின்றா னென்க.

வடியமை பாடமாயின், ஆராய்ச்சியமைந்தவென்க. (கஉகூ)

1686. பூவியல் கோயில் கொண்ட பொன்னனா ளனைய நங்கை
காவியங் கண்ணி வந்து பிறத்தலுங் கணிக ளீண்டி
மூவிய றிரித லின்றிச் சாதக முறையிற் செய்தார்
ஏவியல் சிலையி னாய்க்கே யுரியளென் றுரைப்ப நேர்ந்தான்.

---

1685. மன்னன்: தடமித்தன். குருசில்: சீவகன். தேற்றான் - தன் கருத்தைத் தெளிவியாதவனாகி. வடிவு - கனகமாலையின் வடிவம். ஒன்றாக - அவளிடத்து ஆசையுடையதாக. வாக்கு ஒன்றா - கூறுகின்ற வார்த்தையில் ஆசையில்லாததாக. தடி - மாமிசம். தடிசுவைத்தல் வேலுக்கு அடை. வேலான்: தடமித்தன். முன்கை - சீவகனுடைய முன்கையை; இடிமுரசு: வினைத்தொகை; உம்மைத்தொகையுமாம். இற்றென - இத்தன்மைத்தென்று.

1686. பூவால் இயன்ற கோயிலைக்கொண்ட பொன்னனாள்: திருமகள்; கோயில் - இருப்பிடம். நங்கையாகிய கண்ணி: கனகமாலை. கணிகள் - சோதிடர். மூவியல்: சிரோதயம், பூபதனம், தெரியுங்காலம். திரிதலின்றி - தப்புதலில்லாமல். சாதகத்தை முறையிற்செய்தார்; முறை

(இ - ள்.) அவ்வரசன் திருவையொத்த நங்கையாகிய கண்ணி பிறந்தவளவிலே, கணிகளீண்டி [1] உதயாரூடக்கவிப்புக்களில் தப்பின்றாகச் சாதகத்தை நினக்கேயுரியமுறைமையாற் செய்தாராதலின், நினக்கே இவளுரியளென்றுகூற, அவனும் நேர்ந்தானென்க.

கலைகளும் வடிவுமுதலியனவும் உடையவனொருவனென்றலின், இவனேயாயிற்று. (கரு௦)

1687. வாருலா முலையி னுட்கும் வரிசிலைத் தடக்கை யாற்கும்
சீருலாங் கோலஞ் செய்தார் செப்பினார் வதுவை நன்னாட்
பாரெலா மறிய நின்று படாமுர சார்ப்பத் தீவேட்
டேருலாங் கோதை யின்பத் திளநலம் பருகு கின்றான்.

(இ - ள்.) முலையினுட்கும் தடக்கையாற்கும் மணஞ்செய்யுநாட் செப்பினார்; செப்பி மணக்கோலஞ்செய்தார்; செய்தபின்பு ஒலியவியா முரசார்ப்பத் தீயிலே ஆகுதிபண்ணி அவன் அக்கோதைநலத்தைப் பருகாநின்றானென்க. (கருக)

1688. மோட்டிளங் குரும்பை யன்ன முலைக்கடாக் களிறு முத்தம்
சூட்டிய வோடை பொங்க நாணெனுந் தோட்டி மாற்றி
ஆட்டிய சாந்த மென்னு முகபடா மழித்து வெம்போர்
ஓட்டற வோட்டிப் பைந்தா ருழக்கியிட் டுவந்த வன்றே.

பெரிய இளங்குரும்பை : வடிவிற்குவமை.

---

யின் - உனக்கே உரிய முறைமையால். சிலையினுய்க்கே - உனக்கே; உரியள் - கனகமாலை உரியவள். உரைப்ப - தடமித்தன் கூற. நேர்ந்தான் - சீவகன் அதற்கு உடன்பட்டான்.

(உரை) [1] உதயாரூடக் கவிப்பு : சீவக. 1280, ந.

1687. முலையினுட்கும் : கனகமாலைக்கும். தடக்கையாற்கும் : சீவகனுக்கும். வதுவை நன்னாளைச் செப்பிக் கோலம்செய்தார் என்க; வதுவை - மணம்; கோலம் - மணத்திற்குரிய அலங்காரத்தை. பார் - பூமி. படாமுரசு = கண்படாமுரசு - ஒலிநீங்காத முரசம். தீவேட்டு - தீயில் ஆகுதியைப்பண்ணி. கோதை - கனகமாலையது. இளநலம் - இளமைப்பருவத்தின் அழகை. பருகுகின்றான் - பருகாநின்றான்.

1688. மோடு - பெருமை. முலையாகிய கடாக்களிறு; எழுவாய். சூட்டிய முத்தமாகிய ஓடைபொங்க; முத்தம் - முத்தமாலை. ஓடை - நெற்றிப்பட்டம். பொங்க - அசைய. நாண் - நாணம். தோட்டி - அங்குசம். மாற்றி - கெடுத்து. ஆட்டிய - பூசிய. சாந்தம் - குங்குமச் சாந்து. முகபடாத்தை அழித்து. வெம்போர் - விரும்பின முயக்கமாகிய போரில். ஓட்டற - பொருந்தாத இடமில்லையென்னும்படி. ஓட்டி -

**(இ - ள்.) அவன் பருகுகின்றபொழுது அவள்முலையாகிய யானைகள் சூட்டிய முத்தமாலையாகிய பட்டமசையாநிற்க நாணென்னுந் தோட்டியைக்கெடுத்துச் சாந்தமென்னும் முகபடாத்தையழித்து விரும்பின முயக்கத்தில் உருதவிடமில்லையென்னும்படி மார்பிடமெங்குமுறுவித்து மாலையையுழக்கிப் போகட்டு மகிழ்ந்தனவென்க.**

[1] கொடிய போரை இனிக்கேடில்லையென்னும்படி கெடுத்துத் தூசியை யுழக்கியென்றும் கொள்க. (கஅஉ)

1689. ஒண்மணிக் குழைவில் வீச வொளிர்ந்துபொன் ஞாலை மின்ன, வண்ணமே கலைக ளார்ப்ப வான்சிலம் பொலிப்ப முத்தும், கண்ணியும் பசும்பொ ணுணுங் கதிர்முலை புடைப்பக் காமர், அண்ணலங் குமரன் றன்னொ டாயிழை யாடி னாளே.

குமரனொடு ஆயிழையாடினாளெனவே, [1] ஒருவினையொடுச்சொலுயர்பின் வழித்தாய் இருவருமாடினரென்பதுபட நின்றது. எனவே அவன் வண்ண மேகலையார்ப்பச் சிலம்பொலிப்ப ஆடினனென்றும், அவள் வீச மின்னப் புடைப்ப ஆடினாளென்றுங்கொள்க; இவன்காட்டக் கண்டாளனவேண்டுதலின். (கஅஅ)

1690. மூசுதேன் வாரி யல்குற் பட்டபின் முலைக ளென்னும், மாசறு கந்தின் மென்றோண் மணித்தொடர்க் கொளுத்தி வாட்கண், ஆசறு வயிரத் தோட்டி நுதலணிந் தமுதச் செவ்வாய், காசறு கவள மாகக் களிறுகோட் பட்ட தன்றே.

**போகாமல் வளைத்தலிற் கண் தோட்டியாயிற்று. அதற்கேற்ப நுதலணிந்தென்றார்; கூட நிமிராமைக்கு வைரமென்றார்.**

---

மார்பிடமெங்கும் பொருந்தச்செய்து. **தார் உழக்கி** - மாலையைமிதித்து. இட்டு - கீழேபோகட்டு. உவந்தவன்றே - மகிழ்ந்தன; அன்று, ஏ: **அசைகள்.**

(உரை) [1] இது தொனிப்பொருள்; தூசி - முன்படை.

1689. குழை - குண்டலம். வில் - ஒளி. ஒளிர்ந்து - விளங்கி. ஆர்ப்ப - ஒலிப்ப. முத்து - முத்தமாலை. கண்ணி - மாலை. புடைப்ப - வீங்க. குமரன்: சீவகன். ஆயிழை: கனகமாலை.

(உரை) [1] "ஒருவினை யொடுச்சொ லுயர்பின் வழித்தே" (தொல். வேற்றுமைமயங்கு. 8); இச்செய்யுளுக்கு வினைமுடிவாகிய உரை பிரதிகளிற் காணப்படவில்லை.

1690. மூசுதல் - மொய்த்தல். அல்குலாகிய வாரியிற் பட்டபின்; வாரி - யானையை அகப்படுத்துமிடம்; பட்டபின் - அகப்பட்ட பின்பு. கந்து - கம்பம். தோளாகிய தொடர்; தொடர்க்கொளுத்தி - சங்கிலியால் பூட்டி. கண்ணாகிய வயிரத்தோட்டியை நுதலில் அணிந்து. கனகமாலையது செவ்வாய் கவளமாக. களிறு - சீவகனாகிய யானை; எழுவாய்.

(இ - ள்.) சீவகனுகிய களிறு, செவ்வாய் கவளமாக அல்குலாகிய கூடத்தே அகப்பட்டபின்பு, தன்முலைகளென்னும் கம்பத்திலே தோளாகிய சங்கிலியாலே பூட்டிக் கண்ணுகிய தோட்டியை நுதலிலேயணிந்து இங்ஙனம் தப்பாமற்பிணிக்கப்பட்டதென்க. (காரு௪)

1691. ஒப்பிணை தனக்கி லாதா னுறுவரை யகல மூழ்கிச்
செப்பிணை யனைய செங்கேழ் வனமுலை பொருது சேப்பக்
கற்பக மரத்தைப் புல்லிக் கைவிடா தொழிந்து காமத்
துப்புர வுமிழுங் காம வல்லியின் றேற்ற மொத்தாள்.

(இ - ள்.) தனக்கு இணைக்குமொப்பிலாதான் அகலத்தே தன் முலைகள் சிவக்கும்படி பொருதுமூழ்கப்பட்டுத் தான் வல்லியின் றேற்றத்தை ஒத்தாளென்க.

கற்பகத்தைக் கைவிடாதே புல்லித் தங்கி அதற்குத் துப்புரவைக் கொடுப்பதொரு வல்லி : இல்பொருளுவமை. (காரு௫)

1692. காய்வுறு வேட்கை தன்னுற் கங்குலும் பகலும் விள்ளான், வேய்வெறுத் தமைந்த தோளாள் விழுத்திரை யமுத மென்று, சேய்நலங் கடந்த செல்வன் றிருநலந் தெளித்திட் டாற்ற, வாய்விடாள் பருகி யிட்டாண் மடக்கிள்ளை மருட்டுஞ் சொல்லாள்.

கோட்பட்டது - தப்பாமற் கட்டப்பட்டது. களிறு, கவளமாக, வாரியிடத்தே, கந்தில் தொடராலே கொளுத்தி அணிந்து கோட்பட்டது என்க; "கதுப்பயல் விளங்குஞ் சிறுநுதல், புதுக்கோள் யானையிற் பிணித்தற்று லெம்மே" (குறுந். 129 : 5-6)

1691. தனக்கு இணைக்கும் ஒப்பிலாதான் : சீவகன்; இணைக்கும் - ஒப்பாகக் கூறுதற்குரிய. அகலத்தே மூழ்கி; அகலம் - மார்பு. செப்பு இணை அனைய - செப்பு இரண்டை ஒத்த. கேழ் - நிறம். சேப்பப் பொருது; சேப்ப - சிவப்படையும்படி. கைவிடாது - நீங்காமல். ஒழிந்து - தங்கி. துப்புரவு உமிழும் - நுகரும் பொருள்களைக் கொடுக்கின்ற. சீவகனுக்குக் கற்பகமரமும், கனகமாலைக்குக் காமவல்லியும் உவமைகள்.

1692. காய்வுறு - எரிகின்ற. வேட்கை - காமம். கங்குலிலும் பகலிலும் விள்ளானாய்; விள்ளான் - நீங்காதவனாகி. வேய்வெறுத்து - மூங்கிலின் வனப்பைக்கெடுத்து. தோளாள் : கனகமாலையை. விழுத்திரை அமுதம் - சிறந்த கடலிற்றேன்றிய அமிர்தம்; திரை - கடல்; ஆகுபெயர். சேய்நலம் கடந்த செல்வன் - முருகனது அழகை வென்ற சீவகன். திருநலம் - கனகமாலையது இன்பத்தை. தெளித்திட்டு - தெளிவித்து. ஆற்ற - அவளுக்கு ஊடலால் உள்ளம் கலங்காதபடி ஆற்றுவித்தலால்.

வேய்தான் ஒவ்வாமையான், வெறுத்து [1] மாறின தோள்.

(இ - ள்.) செல்வன் எரிகின்ற காமத்தாலே விள்ளானுய்த் தோளாளை அமுதமென்றுகருதி அவள் ஊடலாற கலங்காதபடி நலத்தைத் தேற்றி ஆற்றுவித்தலாலே அவள் நீங்காமற் பருகிளுளென்க. (கரு௬)

1693. திரையிடைக் கொண்ட வின்னீ ரமுதுயிர் பெற்ற தென்னும், உரையுடைக் கோதை மாத ரொளிநல நுகர்ந்து நாளும், வரையுடை மார்ப னங்கண் வைகின னென்ப மாதோ, கரைகட லனைய தானைக் காவலன் காத லானே.

உயிர் - சீவகன்.

(இ - ள்.) வரைதோற்கின்றமார்பன், அமிர்து தனக்கோருயிரைப் பெற்றதென்று உலகங்கூறுமுரையை இப்பொழுதுடைய மாதரது நலத்தை நாளும் நுகர்ந்து அரசனது காதலாலே அவ்விடத்தே சிலநாள் தங்கிளுனென்க. (கரு௭)

1694. வாளிளுன் மிடைந்த கண்ணுள் வருமுலைத் தடத்துள் வைகித், தோளிளுன் மிடைந்து புல்லித் தொண்டைவா யமுத மாந்திக், காளைசெல் கின்ற நாளுட் கட்டியங் காரன் மூதூர், மீளிவேற் குருசிற் குற்ருர்க் குற்றது விளம்ப லுற்றேன்.

மிடைந்து - மிடைய.

(இ - ள்.) காளை முற்கூறியவாறே வாளாலே போர்செய்யப்பட்ட கண்ணுளது முலைத்தடத்தே வைகிப் புல்லி மாந்தி நடக்கின்றநாளிலே, இராசமாபுரத்திலிருக்கின்ற அக்காளைக்குற்ருர்க்கு உற்ற காரியத்தைக் கூறலுற்றேனென்ருரென்க. (கரு௮)

---

பருகியிட்டாள் - பருகிளுள். கிள்ளையைமருட்டுகின்ற சொல்லாள் : கனகமாலை. செல்வன் தோளாளை ஆற்ற. சொல்லாள் பருகியிட்டாள் என்க.

(உரை) [1] (பி - ம்.) 'மாற்றின தோள்.'

1693. திரை - கடல். அமுது உயிரைப்பெற்றது என்னும் உரையை உடையகோதை ; கனகமாலைக்கு அமுதும் சீவகனுக்கு உயிரும் உவமை. கோதையாகிய மாதரது நலத்தை ; மாதர் : கனகமாலை. நலம் - இன்பம். வரையுடைமார்பன் : சீவகன் ; உடைதல் - தோற்றல் ; (பி - ம்.) 'வரை யகன் மார்பனங்கு.' வைகினன் - தங்கிளுன் ; என்ப, மாது ஓ : அசை கள். காவலன் : தடமித்தன். மார்பன், நுகர்ந்து காவலன் காதலால் வைகினன் என்க.

1694. மிடைந்த - போர்செய்யப்பட்ட. கண்ணுள் - கனகமாலையது. மிடைந்து - நெருங்க ; எச்சத்திரிபு. காளை : சீவகன். கட்டியங்காரனது மூதூரில் ; மூதூர் - இராசமாபுரம். குருசிற்கு : சீவகனுக்கு. உற்ருர்க்கு - உறவினர்க்கு. உற்றது - உற்றகாரியத்தை.

1695. வெண்மதி யிழந்த மீன்போல் விடலைக்குத் தம்பி மாழாந், தொண்மதிச் சூழ்ச்சி மிக்கா னுள்ளுழி யுணர்தல் செல்லான், புண்மதித் துடைந்த போது பொழிந்துமட் டொழுகு நன்னாட், டுண்மதி வருந்த நாடி யொளிநக ரெய்தி னானே.

(இ - ள்.) சீவகற்கிளையான் மதியையிழந்த உரோகிணிபோலே மயங்கி மதியாற் சூழ்ச்சிமிக்கானிருப்பிடமறியானாய் நாட்டின்கண்ணே அறிவுவருந்தத் தேடிப் பின்பு குணமாலையகத்தைச் சேர்ந்தானென்க. (கஙௌ)

1696. வெள்ளிவெண் மலைக்கு வேந்த னொருமகள் வேற்கட் பாவை, ஒள்ளிழை யவளைக் கேட்பா னுறுவலி செல்லு மாங்கண், வள்ளிதழ்க் கோதை தானே யிட்டதோர் வண்ணந் தன்னைக், கொள்ளத்தான் முரல லுற்றுக் கோலமை வீணை கொண்டாள்.

(இ - ள்) ஆண்டுக்கானாதே, கலுழவேகன்மகள், பாவை, ஒள்ளிழை யவளைக்கேட்டற்கு அவன்செல்கின்ற அளவிலே, அக்கோதை தானே புணர்த்ததொரு புணர்ப்புவிசேடத்தைத் தானே மனங்கொள்ளப்பாட லுற்று வீணையைக் கைக்கொண்டாளென்க. (கசo)

1697. ஆடகச் செம்பொ னாணி யானெய்வார்ந் தனைய நுண்கோல், மாடக நொண்டு கொண்டு மாத்திரை நிறைய வீக்கிச், சூடக மணிந்த முன்கைத் தொகுவிரல் சேப்ப வெற்றித், தோடலர் கோதை கீதந் துணிவினிற் பாடு கின்றாள்.

---

1695. மதியம் இழந்த மீன்போல் தம்பிமாழாந்தது : சீவக. 23, அடிக். விடலைக்குத் தம்பி : சீவகனுக்குத் தம்பியான நந்தட்டன். மாழாந்து - மயங்கி. மதியாற் சூழ்ச்சி மிக்கான் : சீவகன் ; சூழ்ச்சி - ஆராய்ச்சி. உள்ளுழி - இருப்பிடத்தை. உணர்தல்செல்லான் - அறியா தவனாய் ; (பி - ம்.) 'உணர்தறேற்றான்.' புள் - வண்டு. மதித்து - குடை தலால். உடைந்த போது - அலர்ந்த பூ. மட்டு - தேன். நாட்டுள் - ஏமாங்கதநாட்டில். மதி - அறிவு. நாடி - தேடி. நகர் : குணமாலை யிருக்குமிடத்தை.

1696. வெள்ளிவெண்மலை - வித்தியாதரமலை. வேந்தன் : கலுழ வேகன். பாவையாகிய ஒள்ளிழையவளை; காந்தருவதத்தையை. உறுவலி: நந்தட்டன். செல்லுமாங்கண் - செல்கின்றபொழுது. கோதை : காந்தரு வதத்தை. இட்டதோர் வண்ணம் - புணர்த்ததொரு புணர்ப்பு விசே டத்தை. கொள்ள - தன்மனம் கொள்ளும்படி. முரலலுற்று - பாடக் கருதி. கோல் - நரம்பு.

1697. ஆணியிற்கட்டின கோல் ; கோல் - நரம்பு. ஆன்நெய் நரம்புக்கு : "நெய்வார்ந் தன்ன துய்யடங்கு நரம்பின்" (நற். 300 : 8). கோலை மாடகத்தால் நொண்டுகொண்டு ; மாடகம் : முறுக்காணி ; நொண்டு - முகந்து. மாத்திரை - சுருதியின் அளவு. வீக்கி - கட்டி.

மாடகம் - பாலிகைவடிவான விசிக்குங்கருவி.

(இ - ள்.) கோதை பொன்றுணியிற்கட்டின நெய்யொழுகின்ற போன்ற நரம்பினை மாடகத்தாலே முகந்துகொண்டு நிறையவீக்கிக் குவிந்தவிரல் சிவக்கும்படி தெறித்துப்பார்த்துக் கீதத்தைத் தெளிவோடே பாடாநின்றாளென்க. (கசக)

(வேறு)

1698. (க) இறுமருங்குல் போதணியி னென்றிணைந்து கையின்
நறுமலர்கள் சிந்துவார் நண்ணார் துறந்தார்
நண்ணார் துறப்ப நனிவளையுந் தோடுறப்பக்
கண்ணோவா முத்துறைப்பத் தோழி கழிவேனோ.

இக்கவிமுதல் நான்கும் ஒருதொடர்.

(க) தோழி! அவர் துறப்ப, வளையும் துறப்ப, கண் மாறாதேயழு, இங்ஙனம் கழிவேனோ? கழியாதொரு நாளும் வருமோவென்றாளென்க. ஓகாரம் : வினா. ஒழிந்தவற்றிற்கும் இவ்வாறு கூறுக.

1699. (உ) பூமாலை சூடிற் பொறையாற்றா நுண்மருங்குல்
ஏமாரா தென்றிணைவா ரெண்ணார் துறந்தார்
எண்ணார் துறப்ப வினவளையுந் தோடுறப்ப
மண்ணார்வேற் கண்டுயிலா தோழி மருள்வேனோ.

(உ) முலைப்பாரத்தைச் சுமத்தலாற்றாத மருங்குல் மாலை சூடின் முறியும். மண்ணுதல் - மஞ்சனமாடுதல்; கடைதலுமாம். துயிலாவா மென்க.

---

சூடகம் - முன்கைவளை. தொகுவிரல் - குவிந்தவிரல். சேப்ப - சிவக்கும் படி; (பி - ம்.) 'சிவப்ப வொற்றி.' தோடு - இதழ். கோதை - காந்தருவதத்தை. கீதம் - பாட்டு. துணிவினில் - தெளிவோடு.

1698. போது அணியின் மருங்குல் இறுமென்று இனைந்து; சீவக. 1512; போது - மலர். இறும் - முறியும். இனைந்து - வருந்தி. கையிலுள்ள நறுமலர்களை. சிந்துவார் - கீழேபோகடுவாராகிய சீவகசாமி. துறந்தார் - நீங்கினர். வளை - தோள்வளை. தோள் துறப்ப - தோளை விட்டுநீங்க. ஓவா - ஒழியாமல். முத்து உறைப்ப - முத்துப்போன்ற நீரைத்துளிக்க. தோழி : விளி. கழிவேனோ - யான் நீங்குவேனோ.

1699. சூடின் மருங்குல் ஏமாராது என்று இனைவார் என்க; பொறை - முலையின்பாரத்தை. ஏமாராது - இன்புறுமல் முறியும்; "காய்களிற்றி னிடைமருப்பிற் கவளம்போன் றேமாரா" (சீவக. 3017). அடி, 1 - 2: குறள், 1115. இனைவார் - வருந்துபவராகிய சீவகசாமி. எண்ணார் - யான் பிரிவை ஆற்றேனென்பதை எண்ணாதவராகி. மண் ஆர் - மஞ்சனமாடுதல் பொருந்திய; என்றது கண்ணீர் சொரிதலைக் கூறியது. தோழி : விளி. மருள்வேனோ - மயங்குவேனோ.

1700. (௩) வண்டூத வம்மருங்கு ளோமென்று பூமாலை
கொண்டோச்சுங் காதலார் கூடார் துறந்தார்
கூடா ரவர்துறப்பக் கோல்வளையுந் தோடுறப்பத்
தோடார்பூங் கண்டுயிலா தோழி துயர்வேனே.

(௩) வண்டூத - வண்டு இயல்பான மணத்தையூத. ஒப்பனைக்குப் பூவும் மாலையும் வந்த அளவிலே, பூவை அவள்கையினின்றுஞ் சிந்தி மாலையை அவள் சூடாதபடி தன்கைக் கொண்டு, இஃதெடுத்தி லேனுயின் மருங்குல் முறியுமென்றுகூறி, படிந்த வண்டை அதனுனோட்டினுரென் றுணர்க.

[1] பா முற்கூறிற்றேயாம்.

(வேறு)

1701. (௪) ஊன்றகர்த் தனைய போன்று மூடெரி முளைப்ப
போன்றும், தோன்றுபூ விலவத் தங்கட் டொகையணி லனைய
பைங்காய், கான்றமென் பஞ்சி யார்ந்த மெல்லணை யாழ்கை
நீக்கித், தேன்றயங் கிணர்பெய் கோதை சிந்தையி னீட்டி னாளே.

(௪) தகர்க்கப்பட்ட ஊன்போன்றும், எரி பலவாய் முளைப்பனபோன் றும் தோன்றும் பூவையுடைய இலவத்திடத்து அணிலனைய காய் கான்ற பஞ்செனக.

(இ - ள்.) அங்ஙனம் பாடுகின்றவள், கழிவேனே? மருள்வேனே? துயர்வேனே? என்று பாடி யாழைவைத்து அணையிலே சாய்ந்து வருத் தத்திலே நீட்டித்தாளென்க. (கசஉ - ௬)

---

1700. வண்டு ஊத - வண்டு இயற்கை வாசனையை ஊத; '' வண் டூது சாந்தம்'' (கலித். 93 : 1). நோம் - வருந்தும். ஓச்சும் - வண்டை ஓட்டுகின்ற. காதலார் : சீவகசாமி. துயர்வேனே - வருந்துவேனே.

(உரை) [1] முற்கூறிற்றேயாமென்றது தாழிசைக் கொச்சக வொரு போகை; சீவக. 1469, அடிக்.

1701. தகர்த்தனைய ஊன்போன்றும்; தகர்த்தல் - சிதறச்செய்தல்; ஊன் - மாமிசம். எரி - நெருப்பு. முளைப்ப - தோன்றுவன. இலவம் பூவுக்கு ஊனும், எரியும் உவமைகள். பூவையுடைய இலவத்தங்கண். தொகை - கூட்டம். இலவங்காய்க்கு அணில் உவமை; '' இலவத் தலங்கு சினை பயந்த, பூளையம் பசுங்காய் புடைவிரிந் தன்ன, வரிப்புற வணி லொடு'' (பெரும்பாண். 83-5). ஆர்ந்த மெல்லணை - பொருந்திய மெல்லிய படுக்கையில். கோதை : காந்தருவதத்தை. சிந்தையின் - வருத்தத்திலே.

(வேறு)

1702. நுண்ணிய வரியொடு திரண்டு நோக்குநர்
கண்மனங் கவற்றிய காமர் தொண்டைவாய்
அண்ணலை நினைந்துவெய் துயிர்ப்ப வாய்நலம்
வண்ணத்தின் மழுங்கிவாட் கண்ணி வாடினாள்.

நுண்ணிய வரியோடே திரண்டு விருப்பமருவின வாய்.

(இ - ள்) வாட்கண்ணி நோக்குநர் கண் மனங்கவற்றிய அண்ணலை அங்ஙனம் நினைந்து வெய்துயிர்த்தலாலே வாயினது ஆய்நலம் பழைய வண்ணத்தினின்று நீங்கப்பட்டு மேனியும் வாடினாளென்க. (கசசு)

1703. மின்றவழ் மணிவரை மாலை மார்பனைப்
பொன்றவ ழிளமுலை பொருது புல்லுநாள்
என்றுகொ லெனநினை நந் திருந்த செவ்வியுட்
சென்றனன் சீவகற் கிளைய செல்வனே.

பொருது - பொர.

(இ - ள்.) அங்ஙனம் வாடினவள் வரைபோலுமார்பனை இப்பசலை பரந்த முலைகள் புல்லுநாள் என்றுதானென்று சென்றநாள்ஒழிந்த நாளைத் தன் ஞானத்தால் நினைந்திருந்த காலத்திலே நந்தட்டன் சென்றானென்க. (கசஎ)

(வேறு)

1704. ஐவிலி னகல நின்றாங் கடிதொழு திறைஞ்சி னாற்கு,
மைவிலை பெற்ற கண்ணாள் மைந்தனை மருண்டு நோக்கிக்,
கைவிலுங் கணையு மில்லாக் காமன்போந் திருக்க வென்ன, மொய்
வெல்லுங் குருதி வேலான் மூவிற்க ணிறைஞ்சி நின்றான்.

---

1702. நோக்குநர் - தன்னைப்பார்ப்பவருடைய. கண்ணையும் மனத்தையும் கவற்றிய; கவற்றிய - கவலைச்செய்த. காமர் - விருப்பம் மருவின. தொண்டைவாய் - தொண்டைக்கனிபோலும் வாயையுடைய. அண்ணலை : சீவகனை. உயிர்ப்ப - உயிர்த்தலால். ஆய் நலம் - தோழிமாரால் ஆராய்ந்து புனையப்பட்ட அழகு; "ஆய மாய்ந்தவென், நலம்" (குறுந். 245 : 1-2). வண்ணத்தின் மழுங்கி - பழைய தன்மையினின்றுங் கெட்டு. வாட்கண்ணி : காந்தருவதத்தை.

1703. மாலைக்கு மின்னும் மார்புக்கு வரையும் உவமைகள். மார்பனை : சீவகனை. பொன்தவழ் - பசலைபரந்த. பொருது - பொர; எச்சத்திரிபு. என்றுகொல் எந்நாளோ; கொல் : ஐயம். செவ்வி - சமயம். சீவகற்கு இளைய செல்வன் சென்றனன்; செல்வன் : நந்தட்டன். சென்றனன் - காந்தருவதத்தை யிருக்குமிடத்தே போனான்.

1704. ஐவிலின் அகல நின்று - ஐந்துவிற்கிடை நீளத்தே நின்று; "ஐவிலின் கிடக்கை, நீங்காது நின்ற நேரிழை" (மணி. 4 : 89-90). அடி தொழுது - காந்தருவதத்தையின் அடியை வணங்கி. இறைஞ்சி

(இ - ள்.) ஐந்துவிற்கிடைநீளத்தே நின்று அவ்விடத்தே வணங்கிக் கவிழ்ந்துநின்றவனுக்கு மை விலை பெறுதற்குக் காரணமானகண்ணுள் அவனை மருண்டுபார்த்து, வேலான்! இங்ஙனே போந்திருக்கவென்று கூற, அக்காமனும் பின்னை மூன்றுவிற்கிடை நீளத்தேவந்து வணங்கி நின்றானென்க.

மொய் - பகை. இறைஞ்சினாற்குக் கூறவென்க. அவன்கேட்டதற்கு மருண்டாள். வேலான் போந்திருக்கவென்று அவள்கூறக் காமன் இறைஞ்சி நின்றானென்று தேவர் கூற்றாக்குக. இனிப் பிள்ளையை உவந்துகூறுமாறே கூறினாளென்று அவள்கூறலுமாம். (கசஅ)

1705. திங்கள்வாண் முகமு நோக்கான் றிருமுலைத் தடமு நோக்கான், அங்கதிர்க் கலாப மின்னு மணியல்குற் பரப்பு நோக்கான், செங்கயற் கண்ணி னுடன் சீறடிச் சிலம்பு நோக்கி, எங்குளா ரடிக ளென்னு வின்னண மியம்பி னானே.

(இ - ள்.) கயற்கண்ணினாளுடைய, முன்பு திங்களையொக்குமுகத்தில் இப்பொழுதுநிகழ்கின்ற வாட்டத்தையுநோக்கானாய், முன்பு நன்றாகிய முலை இப்பொழுது பசந்தபசப்பையு நோக்கானாய், முன்பு கலாபமின்னு மல்குலில் ஆடைமாசுண்ட தன்மையையு நோக்கானாய்த் தானிறைஞ்சி நிற்றலின் அடியிற் சிலம்பொன்றையுமே நோக்கி, எங்குளாரடிகளென்று இப்படி ஒருவார்த்தை கூறினானென்க.

[1] உம்மைகள் வருத்தத்தின்சிறப்புணர்த்தின. அவள்வாடியிருந்த வருத்த மிகுதியைத் தானுணராதே அவட்குப் பொருந்தாததொருமொழி மேற்கூறுகின்றானென்பார், இன்னணமியம்பினானென்றார். (கசகூ)

1706. பொறிகுலாய்க் கிடந்த மார்பிற் புண்ணியன் பொன்றி னானேல், வெறிகுலாய்க் கிடந்த மாலை வெள்வளை முத்த நீக்கி, நெறியினா னேற்ற லொன்றோ நீளெரி புகுத லொன்றோ, அறிய லென் கொழுநன் மாய்ந்தா லணிசுமந் திருப்ப தென்றான்.

பொறி - மூன்றுவரி.

---

னாற்கு - முகம்கவிழ்ந்துநின்ற நந்தட்டனுக்கு. கண்ணுள் : காந்தருவ தத்தை. மைந்தனை : நந்தட்டனை. காமனைப் போந்திருக்க வென்ன; காமன் : நந்தட்டன்; விளி. என்ன - என்று காந்தருவதத்தை கூற. மொய் - போர். வேலான் : நந்தட்டன். மூவிற்கண் - மூன்றுவிற் கிடைத் தூரத்தில்.

1705. கண்ணினான் : காந்தருவதத்தை. அடிகள் என்றது சீவகனை. என்னு - என்று. இன்னணம் - இப்படி.

(உரை) [1] முகமும், தடமும், பரப்பும் என்பவற்றில் உள்ளவை.

1706. பொறிகுலாய்க் கிடந்தமார்பு : சீவக. 1462, அடிக். புண்ணியன் : சீவகன். பொன்றினானேல் - இறந்து விட்டானாயின். வெறி -

(இ - ள்.) புண்ணியன் பொன்றிவிட்டானாயின், நீ நோற்றலொரு காரியம்; அஃதன்றி எரியிலே புகுதலொருகாரியம்; இவ்விரண்டுமன்றிக் கணவனிறந்தால் அணி சுமந்திருப்பது யான் கேட்டறியேனென்று னென்க. (கூ0)

1707. காய்தழல் கவரப் பட்ட கற்பக மரத்திற் கன்றி,
ஆய்கழற் குருசில் வாடி யற்புத்தீ யழலு ணிற்ப, வாய்மொழிந்
துரைக்க லுற்றாள் வளைகுழற் கற்றை வண்டார்த், தோய்பிழி
துளிக்குங் கண்ணிச் சுரும்புசூழ் கொம்ப னாளே.

(இ - ள்.) அங்ஙனங்கூறிக் குருசில் தீமேய்ந்த கற்பகம்போலே அன்பாகிய தீயின்வெம்மையிலே வாடிக் கன்றிநின்றானாக, அதனைக் கண்டு பண்ணியகுழற் [1]பற்றத்தையும், வளவிய தாரினையும், செறிந்த மதுவைத்துளிக்கும் கண்ணியினையுமுடையதொரு கொம்பனாள், முற்பட அவன் மறைந்து வேற்றுருக்கொண்டிருக்கின்றபடியைக் கூறிவிட்டுப் பின்செய்திகூறுதலுற்றாளென்க. (கூக)

1708. மதுமுகத் தலர்ந்த கோதை மாற்றமைந் தற்கு
ரைப்பாள், கொதிமுகக் குருதி வைவேற் குருசிலோ நம்மை
யுள்ளான், விதிமுக மணங்க ளெய்தி வீற்றிருந் தின்ப முய்ப்ப,
மதிமுக மறியு நாமே வாடுவ தென்னை யென்றான்.

---

வாசனை. மாலையையும் வளையையும் முத்தத்தையும் நீக்கி. நெறியினால் - கணவனை யிழந்தோர் செய்யும் முறைமையாலே. நோற்றல் - கைம்மை நோன்புபூணல்; ஒன்றோ - ஒரு காரியம்; ஓ : அசை. நோற்றலும் எரி புகுதலும் : மணி. 2 : 45-8. கொழுநன் மாய்ந்தால் அணிசுமந்திருப்பது அறியலென் என்றான் என்க. அறியலென் - யான்கேட்டறியேன்.

1707. தழல் - தீ; கவரப்பட்ட - கவர்ந்த; (பி - ம்.) 'கதுவப்பட்ட.' குருசில் கற்பகமரத்தினைப்போல் அற்புத்தீயழலுள் வாடிக்கன்றி நிற்ப வென்க; குருசில் : நந்தட்டன். அற்புத்தீயழலுள் - அன்பாகிய தீயின் வெம்மையில்; சீவக. 1627, அடிக். கன்றி - வாடி. வாய்மொழிந்து - உண்மையை உரைத்து. குழற்கற்றை - கூந்தலின்தொகுதி. தோய்பிழி - செறிந்ததேனை. சுரும்பு - வண்டு. குழலையும் தாரையும் கண்ணியையு முடைய கொம்பனாள் : காந்தருவதத்தை; தார், கண்ணி என்பன மாலை வகைகள். கொம்பனாள் உரைக்கலுற்றாள்.

(உரை) [1] பற்றம் : சீவக. 2820, ந; கலித். 93 : 22, ந.

1708. கோதை : காந்தருவதத்தை. மாற்றம் - மறுவார்த்தை. மைந்தற்கு : நந்தட்டனுக்கு. குருசில் : சீவகன். உள்ளான் - நினையா தவனாய். விதியின் முகத்தால் மணங்களையெய்தி; விதி - ஊழ்வினை. வீற் றிருந்து - கவலையின்றியிருந்து. உய்ப்ப - நடத்தாநிற்க. மதிமுகம் - மதி

(இ - ள்.) கோதை நந்தட்டனுக்கு வார்த்தைகூறுகின்றவள், குரு சிலோ நம்மை நினையானும் ஊழின்முகத்தாலே உளவாய மணங்களைச் செய்து இன்பத்தைநிகழ்த்த, மதிமுகமென்னும் விஞ்சையையறிந்திருக் கின்ற நாமே இதற்குப்புலப்பதன்றி அவர்க்கு ஏதமுண்டாமென்று வாடுவது என்னென்றாளென்க.

நாமெனத் தன்னையுயர்த்துக்கூறினாள். இதனால், அவன் செய்தி கூறினாள். (கஎ௨)

1709. வேண்டிய தெமக்கு நேரின் வில்வலாய் நுமைய ஞரைக்
காண்டியென் றுரைப்பக் காளை யெழுமையு மடிமை நேர
மாண்டதோர் விஞ்சை யோதி மதிமுகந் தைவந் திட்டாள்
நீண்டது பெரிது மன்றி நினைத்துழி விளக்கிற் றன்றே.

(இ - ள்.) வில்வல்லாய்! யாம்வேண்டிய அடிமைத்தொழிலை நீ யெமக்கு நேரின் நம்முடைய தமையனரைக் காண்பையென்று தத்தை அசதியாடிக் கூற, அவனும் இம்மையேயன்றி யெழுமையும் அடிமை யாகக்கடவேனென்று நேர்ந்தானாக, அவள் ஒரு விஞ்சையையோதித் தன் முகத்தைத் தடவினாள்; அவ்விஞ்சை அவனிருந்தவிடத்தை இவனுக்கு விளக்கிற்றென்க.

நீண்டதென்றது இவனுக்கு மிகவும் அரிய காட்சியை. அரிதன்றாக விளக்கிற்றென்றவாறு. பெருமை - அருமை. இனித் தூரியவூர் தூரிதன் றாகவென்றலுமாம். (கஎ௩)

1710. பொற்புடை யமளி யங்கட் பூவணைப் பள்ளி மேலாற், கற்பக மாலை வேய்ந்து கருங்குழற் கைசெய் வானை, முற்படக் கண்டு நோக்கி முறுவல்கொண் முகத்த னாகி, விற்படை நிமிர்ந்த தோளான் றொழுதுமெய் குளிர்ந்து நின்றான்.

---

முகம் என்னும் வித்தையை; வித்தைகளுள் மகாவித்தை-500, க்ஷுல்லக வித்தை - 700, ஆகவித்தை - 1200 - உம் விஞ்சையர்க்குரியன வென்றும் மதிமுகம் என்பது அவற்றுள் க்ஷுல்லக வித்தையைச் சார்ந்ததென்றும் சொல்லுவர்; இந்தவித்தை ஆபோகினியென்று ஸ்ரீபுராணத்திற் கூறப் படுகின்றது. வாடுவது - சீவகனுக்குத் துன்பமுண்டாகுமென்று வருந் துவது.

1709. வேண்டியது - யாம்வேண்டிய அடிமைத்தொழிலை. நேரின் - உடம்பட்டால். வில்வலாய்: என்றது நந்தட்டனை; விளி. நும் ஐயனை - நும் தமையனை சீவகனை. காண்டி - காண்பாய். காளை: நந்தட்டன். அடிமையென்று நேர; நேர - உடன்பட்டுக் கூறினானாக. மாண்டது - மாட்சிமைப்பட்டதாகிய. விஞ்சை - மந்திரம். மதிபோலும் தன் முகத்தை. தைவந்திட்டாள் - தடவினாள். நீண்டது பெரிது மன்றி - சீவகன் காட்சியை நந்தட்டனுக்கு மிகவும் அரியதல்லாததாக.

1710. பூவணைப்பள்ளியாகிய அமளியங்கண்; அமளியங்கண் - படுக்கையினிடத்தே. மேலால் - மேலேயிருந்து. கனகமாலைக்கு மாலையை

அழகிய கள்ளையுடைய பூவணைப்பள்ளியாகிய பொற்புடையமளி யென விசேடித்துநின்ற இருபெயரொட்டு. கற்பகம் : அரசர் தமதாணை யால் இவ்வுலகிற் கொணர்ந்த கற்பகம் தேவரதுசாபத்தால் தன்னிலை யன்றிப் பூவளவே யுண்டாயிற்றென்க. மந்தாரமும் அவ்வாறும்; கவி ரமும் அவ்வாறும். இனி உத்தரகுருவிலுள்ள கற்பகம் ஈண்டுக்கொணர்ந் தாரென்றுமாம். கனக மாலைக்குக் கற்பகமாலையென்று ஒரு பெயருமாம்.

(இ - ள்.) அமளிமேலேயிருந்து வேய்ந்து கைசெய்வானை நந்தட் டன் எதிர்முகமாகக்கண்டு மகிழ்ந்த முகத்தனாய்த் தொழுது குளிர்ந்து நின்றானென்க.

நோக்கியென்றது, தத்தை [1]அவன் வேற்றுருக்கொண்டிருப்பா னென்று கூறியவதனை மனத்தால் நோக்கி யென்றவாறு. (௧௯௪)

(வேறு)

1711. செய்த விஞ்சையைத் தேமொழி மாற்றலும்
மைய னெஞ்சொடு வண்டிமிர் தாரினான்
பொய்ய தன்மையிற் பூங்கழ லானடிக்
கெய்து கேனரு ளாயென் றிறைஞ்சினான்.

அடிக்கு : உருபு மயக்கம்.

(இ - ள்.) தேமொழி தான்செய்த விஞ்சையை மாற்றின அளவிலே, தாரினான், 'வீற்றிருந்தன்பமுய்ப்ப' (சீவக. 1708) என்றது பொய் யன்மையாலே, யான் சீவகனடியைச் சார்வேன்; அதற்கருளென்று மையல்நெஞ்சினோடு இறைஞ்சினானென்க. (௧௯௫)

---

வேய்ந்து; வேய்ந்து - அணிந்து. குழலைக்கைசெய்வானை; கைசெய் வானை - அலங்கரிப்பவனாகிய சீவகனை. நோக்கி - மனத்தாலறிந்து. தோளான் : நந்தட்டன்; (பி - ம்.) 'மற்படத் திரண்ட தோளான்.' தொழுது - காந்தருவதத்தையை வணங்கி.

(உரை) [1] அவன் : சீவகன்.

1711. தேமொழி விஞ்சையை மாற்றலும்; தேமொழி : காந்தருவ தத்தை. மையல் - மயக்கம். தாரினான் : நந்தட்டன். பொய்யது அன்மை யின் - சீவகன் வேற்றுருக்கொண்டிருப்பது பொய்யல்லாமையாலே. கழலான் அடிக்கு - சீவகன் அடியை. இறைஞ்சினான் - காந்தருவதத் தையை வணங்கினான்.

1712. மதுக்கை மாலையும் வண்டிமிர் சாந்தமும்
புதுக்கச் சார்ந்தபொன் வாளுஞ் சுரிகையும்
கதுப்பி னுனமுங் காமர் கலங்களும்
பதிக்கட் டம்மெனப் பாவையு மேவினாள்.

கையையுடைய மதுமாலை. மயிருக்கு இனிய புழுகு.

(இ - ள்) பாவையும் மாலை முதலியவற்றை யானிருக்கின்றவிடத்தே தாருங்கோளென்று ஏவல்செய்வார்க்குக் கூறி அவர் கொண்டுவந்த வற்றை நீ அணியென்று இவனை ஏவினாளென்க. (கருசு)

1713. மணியின் மேற்புறம் போர்த்தன்ன மாக்கதிர்
துணிய வீசுந் துளங்கொளி மேனியன்
பணியிற் பல்கலந் தாங்குபு சென்றபின்
அணிசெய் கோதையங் காமினி யோதினாள்.

(இ - ள்.) பளிக்குமணியின்மேலே இளைய கதிரைப் போர்த்தன்ன வாகத் தத்தையது பணியாலே தன் பழையவடிவிற்குப் புறத்தே இருள் துணியவீசும் ஒளி மேனியையுடையனுய்க் கலங்களையும் ஒழிந்தவற் றையுந் தாங்கிச் சென்ற பின்பு, அவள் அழகிய ஆகாசகாமினியை ஓதினாளென்க.

பல்கலமெனவே படைக்கலங்களுமடங்கின. பணியினென்றது, இப் பொழுது சீவகன் கொண்டுநிற்கிற நிறமும் வடிவும் அவனைக்காணு மளவும் இவனுக்கு நிற்கவென்று நிருமித்ததனை. இங்ஙனநிருமித்தது, நந்தட்டனை வடிவுடனே கொண்டுபோய் அரசன் கோயிலில் 'ஆடவர் குறுகா அருங்கடிவரைப்பினுள்ளே' (நெடுநல். 107) வைத்தாற் சீவகனறி வதற்கு முன்னே தீங்கு பிறக்குமென்று கருதியும், புறம்பேவிட்டாற் சீவகனென்னும் பெயர் வழங்காமல் அப்பொருடருவதொரு பெயர் ஆண்டு வழங்குகின்றமையின் இவற்கு அறிந்து கோயிலுட்சேறலரி தென்று கருதியுமென்றுணர்க. அஃது "அந்நாட்டவ்வூ ரப்பெய ரல்லாப் பெயர்சொன்னான்" (சீவக. 1637) என்பதனானுணர்க. இதனானே

1712. மதுக்கை மாலை - மதுவைத் தன்னிடத்தேயுடைய மாலை. கச்சு ஆர்ந்த - கச்சிலே பொருந்திய. சாந்தம் - சந்தனம். சுரிகை - உடைவாள். கதுப்பு இன்னனம் - கூந்தலுக்கு இனிய புழுகையும். கலம் - ஆபரணங்கள். பதிக்கண் - யானிருக்கின்ற இடத்தே. தம் என - கொண்டுதாருங்களென்று ஏவலாளர்க்குக் கூறி. பாவை : காந்தருவ தத்தை ; எழுவாய்.

1713. மணி - பளிங்குமணி. மாக்கதிரைப் போர்த்தன்னவாக ; மாக்கதிர் - இளையகதிர். துணிய - இருள்துண்டாகும்படி. மேனியன் : நந்தட்டன். பணியின் - காந்தருவதத்தையின் ஏவலால். கலம் - ஆப ரணம். தாங்குபு - மேனியில் தாங்கி. கோதை - காந்தருவதத்தை. காமினி - கமனஞ் செய்தற்குக் கருவியாகவுள்ள மந்திரத்தை.

சுதஞ்சணனை நீங்கின பின்பு தன்னைமறைத்தற்கு வடிவும் பெயரும் வேறாகவே நிகழ்த்துகின்றானென்ப தூஉம் பெற்றும். வடிவுமறையாக்கால் [1] இவை மறைத்ததனாற் பயனின்றாம். இவ்விலம்பகங்களிற் சீவக னென்ற பெயர் தேவர் கூற்று. பொருளுரைக்குமிடத்து அப்பெயரே கூறிப் பொருளுரைக்க வேண்டுதலின் வந்தது. [2] அந்நிலத்தார் அப் பெயரறியாரென்றுணர்க. இனி இவ்வாறன்றி அரசர்குலத்திலும் வணிகர் குலத்திலும் பிறந்தவர்கட்குச் சிறிது வடிவொப்பன்றி ஒருவடிவேயென்று மேற்கூறுதல் பொருந்தாது. அது தேவர்க்குக் கருத்தாயின், ஈண் டன்றிப் பிறண்டும் [3] இருவர்க்கு மொருவடிவென்றே கூறுவர்; அது கூறாமையாலும் இதுவே தேவர்க்குக் கருத்தென்றுணர்க. (கருஎ)

1714. சாந்தி னன்மெழு கித்தட மாமலர்
ஆய்ந்த தாமங்க ணாற்றி யகிற்புகை
ஏந்தி யிட்டிளை யாரொடு நீங்கினாள்
காந்தி வண்டுணுங் கற்பகக் கோதையே.

(இ - ள்.) கோதை, அதனையோதி இவன்கிடக்கின்ற இடத்தை மெழுகி நாற்றிப் புகைத்து ஆயத்தோடே போந்தாளென்க.
காந்தி - பசித்து. (கருஅ)

1715. தூம மார்ந்த துகிலணைப் பள்ளிமேற்
காமன் றம்பியிற் காளை கிடந்தபின்
ஏம மாபுரத் திட்டதொர் மாதெய்வம்
நாம நல்லொளி நந்தனை யென்பவே.

(இ - ள்.) நந்தட்டன் சாமனைப்போலே அப்பள்ளிமேலே கிடந்த பின்பு ஒருதெய்வம் அவனைக்கொண்டுபோய் ஏமமாபுரத்தே அரசன் கோயிலுக்குள்ளே இட்டுவைத்ததென்க.

---

(உரை) [1] இவையென்றது தன்நாடு, ஊர், பெயரென்பவற்றை. [2] அந்நிலத்தாரென்றது மத்திமதேயத்தாரை. [3] இருவர்க்கும் - சீவகன், நந்தட்டனென்ற இருவருக்கும்.

1714. தடம் - குளத்திலுள்ள. தாமங்கள் - மாலைகளை. நாற்றி - தொங்கவிட்டு. ஏந்தியிட்டு - புகைத்து; (பி - ம்.) 'ஏந்துவித்து.' இளை யாரொடு - தோழியரோடு. நீங்கினாள் - நந்தட்டன் கிடக்கின்ற இடத்தை விட்டு நீங்கினாள். கோதை : காந்தருவதத்தை.

1715. தூமம் ஆர்ந்த - அகிற்புகை ஊட்டப்பெற்ற துகிலணை யாகிய பள்ளிமேல். காமன் தம்பியின் - சாமனைப்போல : சீவக. 43, அடிக். காளை : நந்தட்டன். ஏமமாபுரம் : தடமித்தனுடைய நகர். நாம நல்லொளி நந்தனை - அச்சந்தரும் நல்ல ஒளியையுடைய நந்தட்டனை. ஒரு தெய்வம் நந்தனை ஏமமாபுரத்திட்டது.

[1] நாமம் - அச்சம்; உரிச்சொல் ஈறுதிரிந்தது. அச்சங்கூர்தலாலும் [2] நிருமித்த வடிவாயிற்று. (கஙகூ)

1716. மின்னும் பூணும் மிளிர்கதி ராரமும்
பொன்னும் பூத்ததொர் கற்பகப் பூமரம்
அன்ன காளை யமர்துயி றேறினன்
மன்னும் வெஞ்சுடர் மாக்க லிவர்ந்ததே.

(இ - ள்.) விளங்கும் பூண்முதலியவற்றைப் பூத்ததொரு கற்பக மரத்தை யொத்த காளை துயிலுணர்ந்தான்; அவ்வளவிலே, ஞாயிறும் உதயகிரியிலே வந்து பரந்ததென்க. (கஙo)

(வேறு)

1717. செய்யவாய் நெடிய கண்ணாள் செல்கென விடுக்கப் பட்ட, வெய்யவாட் டடக்கை வீர னிருத்தலும் விசய னென்பான், கைய வாஞ் சிலையி னானைக் கண்டுவந் தருகு சேர்ந்தான், பையவாய்ப் பரந்த வல்குற் பாவையர்க் கமிர்த மன்னான்.

கையில் அவாவுதற்குக் காரணமான சிலையினனெனவே காமனும்.

(இ - ள்.) தத்தையாலே போவென்று விடப்பட்ட நந்தட்டனிருந்த அளவிலே, அமிர்தமன்னனாகிய விசயனென்பான், அவனைக்கண்டு மகிழ்ந்து அருகே சேர்ந்தானென்க. (கஙக)

1718. தெய்வமே கமழு மேனித் திருவொளி கலந்த மார்பின், ஐயநீ யாரை யென்றாற் கவனுரை கொடாது விட்டான், பையவே பெயர்ந்து போகிப் பனிமலர்க் கோதை மார்பின், மையலங் களிறு போலு மைத்துனற் கிதனைச் சொன்னான்.

---

(உரை) [1] நாம் என்பது உரிச்சொல். [2] நிருமித்தவடிவு - காந்தருவ தத்தையால் நிருமிக்கப்பட்ட தெய்வவடிவு.

1716. மின்னும் - ஒளிவிடுகின்ற. ஆரம் - முத்துமாலை. பொன் - பொன்னாலாகிய ஆபரணம். (பி - ம்.) 'கற்பகப்பொன்மரம்.' காளை : நந்தட்டன். நந்தட்டனுக்குக் கற்பகமரம் உவமை. துயில்தேறினன் - தூக்கத்தினின்றும் தெளிவடைந்தான். மன்னும் - நிலைபெற்ற. சுடர் : சூரியன். மாக்கல் - உதயகிரியில். இவர்ந்தது - ஏறிப்பரந்தது.

1717. கண்ணாள் : காந்தருவதத்தையால். செல்கென - சீவகனிடம் போவாயாகவென்று. விடுக்கப்பட்ட - விடப்பட்ட; (பி - ம்.) 'பணிக்கப் பட்ட.' வீரன் : நந்தட்டன். விசயன் : தடமித்தனுடைய மகன். அவாம்- விரும்புகின்ற. சிலையினானை : நந்தட்டனை. உவந்து - மகிழ்ந்து. பாவையர்க்கு - மகளிர்க்கு. அமிர்தமன்னனாகிய விசயனென்பான் சேர்ந்தான்.

1718. தெய்வமே - தெய்வத்தன்மையே. மேனியையும் மார்பினையு முடைய ஐய : என்றது நந்தட்டனை; விளி. யாரை - யார்; ஐ : அசை.

சீவகன்கொண்ட வடிவுகொண்டு நின்றதொரு தெய்வமாதலின், தெய்வமே கமழுமேனியாய் அவற்குத்தோன்றிற்று. வடிவொன்றேயாக வும் தெய்வத்தன்மையைத் தன்னுணர்வுமிகுதியானுணர்தலின், [1] இவற் குச் சிறிது வேறுபாடுமுண்டென்றறிந்து நீ யாரையென்றான். யாரை ; ஐ : அசை.

(இ - ள்.) மேனியையும் மார்பினையுமுடைய ஐய! நீ யாரென்று வினவினாற்கு அவன் மறுமொழி கொடாதேவிட்டான் ; அதனாலே அவன் மீண்டுபோய்க் கோதைமார்பினையுடைய மைத்துனனுக்கு இச்செய்தி யைக் கூறினானென்க.

[2] வசுந்தரி அவற்குக்கூற, அவன்கண்டசெய்தியை இதனையென்றார். இவ்விடத்திருந்து உரைகொடாதிருந்ததும், அவன்வெருதபடிகாத்ததும் [3] இவன் மேல் தங்கிய தெய்வமென்றுணர்க. (கசுஉ)

1719. (க) சந்தனக் களியும் பூவுந் தமனியக் குடத்து ணீரும், கெந்தநா றகிலு முத்துங் கிளரொளி விளக்கு மேந்தி, அந்தில்விற் பயிற்றுந் தானம் வழிபட வாங்குச் சென்றாள், மந்திர மடந்தை யன்னாள் வசுந்தரி வந்து சொன்னாள்.

1720. (உ) ஆரகிற் சேக்கை நீங்கி வெறுநிலத் தடிக டாமே, நீரிதிற் கிடந்த தென்கொ லென்றியா னினைந்து போகிச், சேர் துணை கழறச் சென்றேன் செல்வியோ டாங்குக் கண்டேன், போர் பல கடந்த வேலோய் மாயங்கொல் போற்றி யென்றாள்.

---

என்றாற்கு - என்று கேட்ட விசயனுக்கு. அவன் : நந்தட்டன். உரை கொடாது - மறுமொழிபேசாமல். பையவே - மெதுவாக. பெயர்ந்து - மீண்டு. கோதையை யணிந்த மார்பினையுடைய மைத்துனற்கு, களிறு போலும் மைத்துனற்கு என்க ; கோதை - பூமாலை. மைத்துனற்கு : சீவ கனுக்கு. விசயன் சொன்னான்.

(உரை) [1] இவற்கு : நந்தட்டனுக்கு. [2] வசுந்தரி : தடமித்தனுடைய அரண்மனையில் வேலைசெய்பவள் ; அவற்கு - விசயனுக்கு. [3] இவன் : நந் தட்டன்.

1719. சந்தனக்களி - சந்தனக்குழம்பு. தமனியம் - பொன். கெந் தம் - வாசனை. அகில் - அகிற்புகை. அந்தில் : அசைநிலை. விற்பயிற்றும் தானம் - விற்றொழில் பயிற்றுகின்ற இடத்தை. மந்திர மடந்தை - மந்திர மாகிய மகள். மடந்தையன்னாளாகிய வசுந்தரி. இது முதல் நான்கு பாடல்கள், வசுந்தரி தனக்குக் கூறியதையும் தான் கண்டதையும் விச யன் சீவகனுக்குக் கூறுவன.

1720. அகிற்சேக்கை - அகிற்புகையூட்டப்பெற்ற படுக்கையை. அடிகள்தாம் : சீவகசாமி. நீரிதின் - நல்லநீர்மையோடே. கழறச்சென் றேன் - கனகமாலையைக் கோபித்தற்குப் போனேன். செல்வியோடு சேர் துணையை ஆங்குக்கண்டேன் என்க ; செல்வி : கனகமாலை. துணை : சீவ

1721. (ங) கணைகடி கண்ணி சொல்லக் காணிய யானுஞ் சென் றேன், மணியிலங் கொண்பொன் வைவாள் கேடக மருங்கு வைத்த, இணைகடி சீய மன்னு னிளமையும் வனப்பு மேரும், துணையமை வடிவுஞ் சொல்லி னிற்பொறி யொற்றிக் கொண்டான்.

1722. (ச) நீண்டதோ ணெடிய செங்க ணீலமாய்ச் சுரிந்த குஞ் சிப், பூண்டதோ ரார மேனிப் பொன்னுரைத் திட்ட தொக்கும், காண்டகு காதிற் றாழ்ந்த குண்டலங் குவளைப் பைந்தார், ஆண் டகை யழகன் யார்கொ லறியல னவனை யென்றான்.

இவை நான்கும் ஒருதொடர்.

(க) அந்தில் : அசை.

(இ - ள்.) மந்திரமாகிய மடந்தையை ஒப்பாளாகிய வசுந்தரி விற் பயிற்றுநந்தானத்தை வழிபடுதற்குச் சந்தனக்குழம்பு முதலியவற்றை யேந்தி அவ்விடத்தேசென்றவள் வந்து எனக்கு ஒருவார்த்தை கூறினாள்; அவள் கூறினபடி : அடிகடாம் சேக்கையைநீங்கி வெறுநிலத்தே நீர்மை யோடே கிடந்தகாரணமென்னென்று நினைத்துப்போய்க் கனகமாலையைக் கோபித்தற்குச் சென்றேன்; சென்றநான் அவளுடனே அவ்விடத்தே கண்டேன்; ஆதலின், வேலோய்! அவர்செய்தி மாயம்போலேயிருந்தது; அந்நிலைமையைப் பாதுகாத்துக்கொள்ளென்று கூறினாள்; அவள் அங்ஙன ணங் கூறுதலின், யானும் அச்செய்தியைக் காண்டற்குச் சென்றேன்.

---

கன். வேலோய் என்றது விசயனை; விளி. மாயம்கொல் - சீவகனுந் தன்மை மாயமோ. போற்றி - நீ அந்நிலைமையைப் பாதுகாத்துக்கொள் வாயாக; போற்றி : பரிகாரமுமாம்; சீவக. 264, ந. என்றாள் - என்று வசுந்தரி கூறினாள்.

1721. கணைகடி கண்ணி - அம்பைக்கடிகின்ற கண்ணையுடைய வசுந்தரி. சொல்ல - அவ்விதம் சொன்னமையால். காணிய - அத்தன் மையைக் காணும்பொருட்டு. மணி - இரத்தினம். பொன்னுலாகிய வாள் வாளையும் கேடகத்தையும். மருங்கு - பக்கத்தில். இணை கடி - தனக்கு ஒப்பாகக் கூறும்பொருளைக் கடிகின்ற; ஒப்பில்லாத என்றவாறு; சீய மன்னனென்றது நந்தட்டனை. வனப்பு - பல உறுப்பும் திரண்டவழிப் பெறுவதோர் அழகு. ஏர் - எழுச்சி. துணையமை வடிவு - ஒப்பில்லாத வடிவம்; அமைதல் - இல்லையாதல். சொல்லின் - இன்னதென்று கூறு னால். நிற்பொறி - உன்னுடைய உத்தம விலக்கணங்களை. ஒற்றிக்கொண் டான் - தன்னிடத்துப் பொருத்திக் கொண்டான்.

1722. நீலநிறக்குஞ்சி : "நீல மாமணி நிமிர்ந்தியன் றன்ன கோலங் கொண்ட குறுநெறிக் கூழை" (பெருங். 2. 15 : 90-91); "இ திர நீலமொத் திருண்ட குஞ்சியும்" (கம்ப. மிதிலைக். 56). நீலமாய் - நீ மணியின் நிறமாய். சுரிந்தகுஞ்சி - கடைகுழன்ற மயிர் : குறிஞ்சிப்

சென்று யான்கண்டஒப்பில்லாத சீயமன்னன்றன்னுடைய இளமை யையும், வகுப்பழகையும், தோற்றப்பொலிவையும், ஒப்பில்லாதவடிவை யுங் கூறின், நின் உத்தம இலக்கணத்தை யொற்றிக்கொண்டேயிருந் தான்; அங்ஙனமிருந்த தோளையும் கண்ணையும் குஞ்சியையும் கல்லிலே பொன்னுரைத்ததொக்கும் ஆரமேனியையும் குண்டலத்தையுமுடைய அழகன் யார்? அவனை யானறிகின்றிலேனென்றானென்க.

வசுந்தரி அடிகள்வெறுநிலத்தே கிடந்தாரென்று கழறச்சென்றே னென்றமையானும், விசயன் நிற்பொறியொற்றிக் கொண்டானென்றமை யானும், உவமைகூறுதலின்றி [1] இருவரும் இருவர்க்குமொருவடிவென்றே கூறினர். உவமையாவது சிறிதொத்து இரண்டிற்கும் வேறுபாடுணர்த் துவது; இஃது அஃதன்மையுணர்க. பொறியும் ஒன்றிலழுத்தினால் ஒப் பன்றி யதுவேயாயிருக்கு மென்றுணர்க. இவ்வாற்றானும் நிருமித்த மையே கூறிற்றாம். வசுந்தரி [2] மகடூஉவாதலிற் தெய்வத்தன்மையுணர்ந் திலள். (கசு௲ - சு)

1723. இனத்திடை யேறு போலு மெறுழ்வலி யுரைத்த மாற்றம்
மனத்திடை மகிழ்ந்து கேட்டு மைந்தனந் தட்ட னேயாம்
புனத்திடை மயில னாளாற் பொருளுரை பெற்று வந்தான்
எனத்தவி ராது சென்றாங் கெய்தின னென்ப வன்றே.

'யாம்' என்றே பாடம்; மைந்தன்யாமென்பவெனக் கூட்டுக. பொருளுரை - மந்திரம்.

(இ - ள்.) விசயன்கூறிய கூற்றை இவன்கேட்டு உட்கொண்டு தாங் கண்ட மைந்தனை நாமென்பார்கள்; அதற்குக்காரணம் தத்தைபொருளு ரையாலே யான்கொண்ட இவ்வடிவைப்பெற்று நந்தட்டனே வந்தா னென்று கருதி மனத்திடைமகிழ்ந்து தங்காதே அப்பொழுதே அவ் விடத்தே சென்றணுகினானென்க.

---

107-12; கலித். 4 : 2, ந. பொன் உரைத்திட்ட தொக்கும் ஆரம்பூண்ட தோர் மேனி. காண்தகு - அழகுதக்க. குவளைப்பைந்தார் - செங்கழுநீர் மாலை. தோள் முதலியவற்றையுடைய ஆண்டகையாகிய அழகன் யார் கொல்? அழகனென்றது நந்தட்டனை. அவனை அறியலன் என்றான்.

(உரை) [1] இருவரும் - வசுந்தரி, விசயனென்ற இருவரும். இருவர்க் கும் : சீவகனுக்கும் நந்தட்டனுக்கும். [2] மகடூஉ - பெண்பால்.

1723. இனத்திடை ஏறுபோலும் எறுழ்வலி - பசுக்கூட்டங்களி டையேயுள்ள ஏறுபோன்ற மிக்க வலியையுடைய விசயன்; இனத்திடை ஏறு : சீவக. 751, 1475, 1847, 1916. மாற்றம் - வார்த்தையை. கேட்டு- சீவகன் கேட்டுக்கொண்டு. மைந்தன் - இவர்கள் கூறுகின்ற வீரன். மயி லனாள் பொருளுரையால் - காந்தருவதத்தையது மந்திரமொழியால். பெற்று - யான் கொண்ட வேற்றுவடிவைத் தானும் பெற்று. என - என்று கருதி. தவிராது - தங்காமல். ஆங்கு - நந்தட்டனிருக்கும் அவ்விடத்தே. அன்று, ஏ ; அசைகளுமாம்.

என்பவெனப் பன்மையாற் கூறிற்று, வசுந்தரி கூற்றையுங் கருதி. அன்றே - அப்பொழுதே. (கசுஎ)

1724. கருமுகிற் பொடித்த வெய்யோன் கடலிடை நடப்ப தேபோல், திருமுகஞ் சுடர நோக்கிச் சீவகன் சென்று சேர்ந்தான், தருமனை யரிதிற் கண்ட தனஞ்சயன் போலத் தம்பி, திருமலர்த் தடக்கை கூப்பிச் சேவடி தொழுது வீழ்ந்தான்.

கடலிடைத்தோற்றின இளங்கதிர் கருமுகிலிடத்தே விடாது நடப்பதேபோலு முகம். முகில் குழலிற்கும், வெய்யோன் முகத்திற்கு முவமை; "கடற், றேற்றுஞ் செஞ்சுடர் போலச் சுடர்ந்ததே" (சீவக. 2497) என்பர் பின்னும்.

(இ - ள்.) சீவகன் தன்முகஞ்சுடர நோக்கிச் சென்று சேர்ந்தான்; அப்பொழுது தருமனை அரிதாகக் கண்ட விசயனைப் போலே தம்பி தொழுது வீழ்ந்தானென்க. (கசுஅ)

1725. தாமரைத் தடக்கை கூப்பித் தாண்முதற் கிடந்த தம்பி, தாமரைத் தடத்தை யொத்தான் றமையனும் பருதி யொத்தான், தாமரைக் குணத்தி னானை மும்முறை தழுவிக் கொண்டு, தாமரைச் செங்க ணானுந் தன்னுறு பரிவு தீர்ந்தான்.

(இ - ள்.) அங்ஙனந் தொழுது கிடந்த தம்பி தாமரைத் தடத்தை யொத்தான்; தமையனும் அவன் முகமுதலியவற்றை யலர்த்தலிற் பருதியை யொத்தான்; அவ்வழிபாட்டின் பின்பு தாமரை யென்னு மெண்ணையுடைய குணத்தினனை அன்பின் மிகுதியால் முக்காற்றழுவிக் கொண்டு பின்பு சீவகனும் தனக்குற்ற வருத்தமெல்லாந் தீர்ந்தானென்க.

---

1724. பொடித்த - தோன்றிய. வெய்யோன் கருமுகிலில் நடப்பதே போலும் முகம் என்க; வெய்யோன் - சூரியன். முகிலில் - மேகத்திடத்தே. சுடர - ஒளிவிட. தருமனை : தருமபுத்திரனை. அரிதின் - அரிதாக. தனஞ்சயன் - அருச்சுனன். பாண்டவர் துவைதவனம் என்ற வனத்தில் தங்கியிருந்தபொழுது இந்திரராசனென்னும் வித்தியாதரனுடைய பகையைக் கடிதற்குத் தனியே சென்ற அருச்சுனன் மீண்டு வருதற்கு ஐந்துவருடம் சென்றனவென்பர். தம்பி : நந்தட்டன். சேவடி - சீவகனுடைய பாதத்தை.

1725. தாள்முதல் - சீவகனுடைய பாதத்திடத்தே. தம்பி : நந்தட்டன். தடம் - தடாகம். தமையன் : சீவகன். பருதி - சூரியன். தாமரைக் குணத்தினனை - தாமரையென்னும் எண்ணைப்போல் அளவுகடந்த நற்குணத்தையுடைய நந்தட்டனை; தாமரை யென்னும் எண்; முருகு. 165, ந. செங்கணான் : சீவகன். தன்னுறு பரிவு - தனக்குற்ற வருத்தத்தை.

என்றது, யான்போந்தபின்பு, [1] இருமுதுகுரவருற்றதென்னென்று தனக்குற்றுக் கிடந்த பரிவும் [2] இவன் வாய்க் கேட்டுத் தீர்ந்தானென்க. (கசுஉகு)

1726. என்னுறு நிலைமை யோரா தெரியுறு தளிரின் வாடிப்,
பொன்னுறு மேனி கன்றிப் போயினீர் பொறியி லாதேன்,
முன்னுற விதனை யோரேன் மூரிப்பே ரொக்க லெல்லாம்,
பின்னுறு பரிவு செய்தேன் பேதையேன் கவல லென்றான்.

எனக்குற்ற நிலைமையை ஓராதென்றது [1] தேவன் கொண்டு போந்த நிலைமையையறிந்தும், உண்மை யென்றுணராதே யென்றவாறு; "கொண்டுபோமியக்கன்" (சீவக. 1131) என்று [2] இருடிகூறிய கூற்றைக் கந்துகன் கூறக் கேட்டும் இவர் வருந்துவரென்று இங்ஙனம் கூறினான். பொறியிலாதேனென்றது இருமுதுகுரவரையும் வழிபட்டிருக்கும் நல்வினையில்லாதேனென்றவாறு.

(இ - ள்.) பொறியிலாதேன் கட்டியங்காரனுற் சிறை செய்வித்தும் பிரிவிப்பதொரு தீவினைவந்து முன்னிற்றலாற் குணமாலையது ஓருயிர்க்காகப் பல்லுயிர்க்குந் தீங்குவருகின்றவிதனை ஓரேனாய்ப் பேதையேனாகிய யான் மதனன்மேல் ஏவாமையின், மேனிகன்றிப்போன நீங்களும் ஒக்கலும் எல்லாம் என்னுறு நிலைமையோராதே வாடிப் பின்பு முடிய அனுபவிக்கும் துன்பத்தைச் செய்தேன்; இனி நீ வருந்தாதே கொள்ளென்றானென்க.

இதனையென்றது, [3] களிற்றிடையுதவியதனை. முன்னும், "ஊழ் வினை யென்றுவிட்டான்" (சீவக. 1167) என்றார். இனி, முன்னுற வென்றதனை அச்சணந்தியாசாரியர்க்கு நேருகின்ற பொழுதென்னின், அது பொருந்தாது; என்னை? தான்மேல் வருகின்றதறியானுதலானும், ஆசிரியன் கூற்றாலே ஓர் யாண்டு அவனிருப்பனென்றுணர்ந்த, "இன்னுயி ரவனை யுண்ணு மெல்லைநாள் வந்ததில்லை" (சீவக. 1154) என்று தான் கூறினமையானுமென்பது. (கஎ௦)

---

(உரை) [1] இருமுதுகுரவர் : சிலப். 16 : 67; என்றது இங்கே கந்துக் கடனையும், சுநந்தையையும். [2] இவன் : நந்தட்டன்.

1726. என்உறு - எனக்கு உற்ற. ஓராது - உணராமல். தளிரினைப் போல் வாடி. கன்றி - கருகி. பொறி - தாய்தந்தையரோடிருக்கும் நல்வினை. முன்னுற - முன்னதாகவே. ஒக்கல் - சுற்றம். பின்உறுபரிவு - பின்பு முற்ற அநுபவிக்கும் துன்பத்தை. பேதையேன் செய்தேன். கவலல் - நீ வருந்தாதே.

(உரை) [1] தேவன் - சுதஞ்சணன். [2] கந்துகன் வீட்டிற்கு வந்த ஒரு முனிவன்; சீவக. 1124. [3] களிற்றிடை உதவியது : குணமாலையைக் கொல்லவந்த அசனிவேகமென்னும் யானையையடக்கி அவளைப் பிழைக்கச் செய்த உதவி.

1727. ஆக்கமுங் கேடு முற்றீ ரடிகளே யல்லிர் மேலேட்
பூக்குலா மலங்கன் மாலைப் புட்கொடி யாற்கு முண்டே, வீக்
வார் முலையி னுர்போல் வெய்துயிர்த் துருகி நைய, நோக்கின
ரென்னை யென்று னுதியழற் குட்ட மொப்பான்.

(இ - ள்.) நந்தட்டன், ஆக்கமுங் கேடுமுற்றீர் நீரேயல்லீர் ; மு
னுள்ள இராமனுக்குமுண்டு ; அவன் இங்ஙனஞ் செய்யாதே கேட்டிற்கு
தம்பியையு முதவியாகக் கொண்டான் ; நீர் உடன்பிறந்த மகளிரை
போலே உதவாதேயிருந்து வருந்தும்படி என்னைப் பார்த்தீரென்
னென்க.

நோக்கினீரென்றது, தேர் [1] பண்ணிவந்து கண்டவனை மதன
மேலே செல்லென்னுதே நில்லென்று நோக்கியதனை. (கஎ

1728. குரவரைப் பேண லின்றிக் குறிப்பிகந் தாய பாவம்
தரவந்த பயத்தி னுலித் தாமரைப் பாத நீங்கிப், பருவரு
துன்ப முற்றேன் பாவியே னென்று சென்னி, திருவடி மிசையில்
வைத்துச் சிலம்பநொந் தழுதிட் டானே.

(இ - ள்.) அவன், முற்பிறப்பிற் குரவரைப்பேணலின்றி அவர்கரு
தைக் கடத்தலானுண்டாய பாவந்தருதலான் வந்த பயனுலே, பாவியே
இப்பாதத்தை நீங்கி மிக்க வருத்தமுற்றேனென்று சென்னிமிசையி
அடியை வைத்து நொந்து அழுதானென்க. (கஎஉ

---

1727. ஆக்கமும் கேடும் - நன்மையும், தீமையும். அடிக
யல்லிர் - நீர்மட்டுமல்லீர் ; அடிகள் என்றது சீவகனை. மேலே - முன்ன
அலங்கல் - அசைதலையுடைய. மாலையையுடைய புட்கொடியாற்கும்
இராமனுக்கும் ; புள் - கருடன். அடி, 1-2 : "தாதை யேவலி
மாதுடன் போகிக், காதலி நீங்கக் கடுந்துய ருழந்தோன், வேத முதல்வ
பயந்தோனென்பது, நீயறிந் திலையோ நெடுமொழி யன்றோ" (சிலப். 1
46-9, அடியார்.). முலையினுர் போல் - உடன்பிறந்த மகளிரைப்போ
நைய - யான் வருந்தும்படி. என்னை நோக்கினீரென்றுன். அழ
குட்டம் - தீத்திரள். ஒப்பான் : நந்தட்டன் ; எழுவாய்.

(உரை) [1] பண்ணி - ஏறுதற்கேற்ப அமைத்து.

1728. குரவரை-ஆசாரியரை. குறிப்பு இகந்து ஆய - ஆசாரியரி
கருத்தைக்கடந்து நடந்தமையால் உண்டாய. தர - தருதலால். பயத்
னுல் - தீயபயனுலே. தாமரைப்பாதமென்றது சீவகன் பாதத்தை. ப
வரும் துன்பம் - மிக்கதுன்பத்தை ; சென்னியைத் திருவடியின் மி
வைத்து. சிலம்பநொந்து - வாயால் முழங்கக் கூறிவருந்தி ; சிலம்ப
முழங்க.

1729. பரிந்தழு கின்ற தம்பி பங்கய மனைய செங்கண், பொருந்துபு துடைத்து வேண்டா புலம்புதல் காளை யென்று, மருந்தனு ளுறையுங் கோயின் மடுத்துடன் கொண்டு புக்கான், அருந்ததிக் கற்பி னாளை யடிபணிந் தவனுங் கண்டான்.

(இ - ள்.) காளை! வருந்துதல் வேண்டாவென்று கூறித் தம்பி கண்ணைத் துடைத்து அமுதனாளிருக்குங் கோயிலிலே வலிதிற் கொண்டு புக்கான்; அவனும் அவளை வணங்கிக் கண்டானென்க. (கஎஙு)

1730. கொழுநனைக் குறிப்பி னாலே குமரன்யா ரென்று நோக்கக், கழுமிய கற்பி னாய்நின் மைத்துன னைய னென்ன, எழுமையும் பெறுக வின்ன விளங்கிளைச் சுற்ற மென்றாள், கொழுமலர்த் தடங்கட் செவ்வாய்க் குவிமுலைக் கொம்ப னாளே.

(இ - ள்.) கொம்பனாள், தன்கணவனைக் குறிப்பினாலே இவன் யாரென்று கேட்ப, கற்பினாய்! ஐயன் நின்மைத்துனனென்றானாக, அவளும் இத்தன்மைத்தான இளங்கிளையாய சுற்றம் எழுபிறப்பும் பெறுவேனாகவென்றாளென்க. (கஎச)

1731. குடவரை யனைய மார்பிற் குங்கும மெழுதிக் கோல, வடவரை வைரச் சாதி வாலொளி கலந்த பைம்பூண், தடவரை மார்பின் மின்னத் தம்பியோ டமிர்த முண்டான், படவர வல்கு லாளும் பான்மையால் விருந்து செய்தாள்.

---

1729. தம்பியின் செங்கண்ணைத் துடைத்து. பொருந்துபு - பொருந்தி. காளை, புலம்புதல் வேண்டாவென்று; காளை என்றது நந்தட்டனை; விளி. என்று - என்று சீவகன்கூறி. மருந்தனாள் - அமுதன்னா ளாகிய கனகமாலை. கோயில் - அந்தப்புரத்தில். மடுத்து - வலிதின். அருந்ததி போலும் கற்பினாள்; கனகமாலை. அவனும் கற்பினாளை அடி பணிந்து கண்டான்; அவன்: நந்தட்டன்.

1730. கொழுநனை: சீவகனை. குமரன் - நந்தட்டன். கொம்பனாள் நோக்க. கழுமியகற்பினாய் - நிறைந்த கற்பையுடையாய்; என்றது கனகமாலையை. ஐயன் நின்மைத்துனன் என்ன; ஐயன்: நந்தட்டன். என்ன - என்று சீவகன்கூற. இன்ன இளங்கிளைச் சுற்றம் எழுமையும் பெறுக வென்றாள்; இன்ன - இத்தன்மையான. இளங்கிளைச் சுற்றம்: "இளங்கிளையாரூரன்" (தே. சுந்தர. குருகாவூர். 10); "ஏவது மாறு விளங்கிளைமை" (இனியது. 4); "நம்பனிளங் கிளைநன்குணராத" (கம்ப. சூளாமணி. 82). எழுமையும் - ஏழுபிறப்பும். பெறுக - யான் பெறுவேனாக. கொம்பனாள்: கனகமாலை; எழுவாய்.

1731. குடவரை - அத்தகிரியை. குங்குமமெழுதிய மார்பில்; மார்பில் - நந்தட்டனுடைய மார்பில். கோலம் - அழகு. வடவரை -

(இ - ள்.) குங்குமமெழுதலாலே அத்தகிரியையொத்த நந்தட்டன் மார்பிலேயணிந்த சாதிவைரத்தின் ஒளிகலந்த பூண் சீவகனது வரை போலுமார்பிலே மின்னும்படி எதிரேயிருந்து கூடவுண்டான்; அல்குலாளும் விருந்திடு கூற்றாலே விருந்துசெய்தாளென்க. (கஎரு)

1732. விருந்தவள் செய்த பின்றைத் தம்பியுந் தானும் வேறா,
இருந்தழி யென்னைக் காணு துற்றதை யெவன்கொ லென்று,
பொருந்தினர் செய்த தெல்லாம் புரைவிடுத் துரைமோ வென்னக்,
கருங்கழற் செங்கட் பைந்தார்க் காளையீ துரைக்கின் றானே.

(இ - ள்.) அவள் விருந்து செய்தபின்பு தம்பியும் தானும் தனித்திருந்தவிடத்து, என்னைக் காணுமையினுற் குரவர் முதலாயினர் உற்ற வருத்தமென்னென்று அதனை முதற்கேட்டுப் பின்பு தோழன்மார் செய்த கூறுபாடெல்லாம் வேறுபடுத்திச் சொல்லாயென்று சீவகன்கூற, நந்தட்டனும் இதனைக் கூறுநின்றானென்க.

உரைக்கின்றவன், இடுவித்திட்டாளென்றுரைத்தானென, "சொல்லிய" (சீவக. 1747) என்னுங்கவியோடு முடிக்க. புரை - கூறுபாடு. கருங்கழல் - கொடிய கழல். சீவகன், தான் முன்பு அவர் செய்திகண்டு போந்தபின்பு அவர் செய்தபடி கேட்கின்றான், குணமாலையாரிலம்பகத்தில் நந்தட்டனுடன் தோழன்மார் கூடுதற்குமுன்பு அவர் தம்மிற்கூறிய வாறு [1] இவனறியாமைதலின், தானும் அவரும் கூடினபின்பு பிறந்த செய்தி [2] இவன் கூறுகின்றான். இதனால் [3] அதற்கிது வேறுபாடாயிற்று. (கஎசு)

---

இமயமலையினது. வைரச்சாதியின் ஒளிகலந்த. பூண் - ஆபரணங்கள். மார்பின் மின்ன - சீவகனது மார்பில் மின்னும்படி; என்றது எதிரேயிருந்து உண்டதனைக் குறிப்பித்தது. தம்பியோடு - நந்தட்டனோடு. அமிர்தம் - உணவு. அல்குலாளும்: கனகமாலையும். பான்மையால் - விருந்து செய்யும் பகுதியால்.

1732. அவள் விருந்து செய்தபின்றை; அவள்: கனகமாலை. தம்பி: நந்தட்டன். தானும்: சீவகனும். காணாமையினால் உற்றதை; உற்றதை - தாய்தந்தையர் முதலாயினர் அடைந்த வருத்தம்; ஐ: அசை. எவன் கொல் - யாது; கொல்: அசை. என்று - என்றுகேட்டு. பொருந்தினர்: பதுமுகன் முதலான தோழர்கள். புரைவிடுத்து - கூறுபாடுசெய்து. உரைமோ - சொல்வாய்; மோ: முன்னிலையசை. என்ன - என்று சீவகன் கேட்ப. காளை: நந்தட்டன். ஈது - இதனை.

(உரை) [1] இவன்: நந்தட்டன். [2] நந்தட்டன். [3] அதற்கு - தாய் தந்தையருற்றதற்கு. இது - தோழன்மார் செய்தனவாக இவ்விலம்பகத்திற் கூறுவது.

1733. புண்ணுமிழ் குருதி போர்த்த பொருகளம் போன்று தோன்றி, அண்ணலங் கதிரு மத்த மடைந்துசெவ் வான்கொ ளந்தித், துண்ணெனக் களத்தி னீங்கித் தொன்னகர்ப் புறத்துத் தொக்கே, எண்ணுமின் செய்வ தென்றான் பதுமுக னெரியும் வேலான்.

(இ - ள்.) கதிரும் அத்தகிரியையடைதலாலே குருதிபோர்த்த களம் போலே தோன்றிச் செக்கர்வான்கொண்ட அந்தியிலே, எல்லாரும் [1]மழை யின் மிகுதியாற் சென்ற அளவிலே, பின்பு நின்னைக் காணுமையின், அவ்விடத்து நின்றுநீங்கி நகரிடத்தே குவிந்து யாம் மேற்செய்யுங் காரி யத்தை எண்ணுமினென்றான், வேலானாகிய பதுமுகனென்க. (கஎஎ)

1734. மின்னென மிளிரும் பைம்பூட் புத்திசேன் வெகுண்டு வெய்ய, கன்னவி றோளி னானைக் காண்கலே மாயி னின்னே, மன்னனை வாளி னானே வானகங் காட்டி மூதூர், தன்னையுஞ் சவட்டிப் போகிச் சாமியைச் சார்து மென்றான்.

(இ - ள்.) அப்பொழுது, புத்திசேனன் 'வெகுண்டு, தோளினானைக் காணேமாயின் இப்பொழுதே, கட்டியங்காரனைக் கொன்று ஊரையுமழித் துப்போய்ச் சீவகனைச் சேர்வேமென்றானென்க. (கஎஅ)

1735. சிலையொடு திரண்ட திண்டோட் டேவமா தத்த னென்பான், மலையுடை யுருமிற் சீறி மாற்றல னுயிரை யுண்டல், இலையுடைக் கண்ணி யீர்க்கிஃ தெளிதுநங் குருசி லுண்மை, உலைவிறோ டின்மை யாராய்ந் தொறுப்பதே துணிமி னென்றான்.

---

1733. போர்த்த - மறைத்த. களம் - யுத்த பூமி. கதிர் : சூரியன். அத்தம் - அத்தகிரியை. அடைந்து - அடைதலால். போர்க்களத்திற்குச் செவ்வானம் உவமை ; பு. வெ. 70. அந்தி - மாலைக்காலத்தில். நகர்ப்புறத் துத் தொக்கே - இராசமாபுரத்தின் வெளியிடத்தே ஒன்றுகூடி ; ஏ : அசை. செய்வது எண்ணுமினென்றான் ; செய்வது - மேற்செய்யும் காரியத்தை. எண்ணுமின் - ஆராய்ந்து கூறுங்கள். வேலானாகிய பதுமுகன். இது முதல் பதினைந்து பாடல்கள் நந்தட்டன் கூற்று.

(உரை) [1] சீவகனைச் சுதஞ்சணன் தூக்கிச் சென்றபோது மழை பெய்தமை ; சீவக. 1157-8.

1734. பூண் - ஆபரணம். புத்திசேன் - புத்திசேனன். கல் நவில் தோளினானை - கல்லை உவமையாகக் கூறுகின்ற தோளையுடைய சீவகனை. இன்னே - இப்பொழுதே. மன்னனை : கட்டியங்காரனை. வாளினால் வானகம் காட்டி - கொன்று. மூதூர் : இராசமாபுரம். சவட்டி - அழித்து. சாமியை - சீவகசாமியை. சார்தும் - தேடி அடைவோம்.

1735. சிலையொடு - உருண்டைக் கல்லால் ; சிலை - வில்லுமாம். தோளையுடைய தேவதத்தன்; இவன் விசயதத்தன் என்பவனுடைய

தேவமாதத்தன், 'உலோகமாபாலன்' (சீவக. 395) போற்கொள்க.

(இ - ள்.) உலக்கல்லாலே திரண்ட தோளையுடைய தேவதத்தன், மலையை யுடைக்கின்ற உருமுப்போலே சீறிப் பகைவனுயிரையுண்டலாகிய இத்தொழில் உமக்கெளிதாதலின், நங்குருசிலுண்மையும் இன்மையும் வருத்தத்தோடே நின்று ஆராய்ந்து பின் பகையைக் கோறலைத் துணிமினென்றானென்க.

[1] அவன் சிறையாயிருக்கின், [2] இஃது ஆகாதென்றான். (கஎக)

1736. பவ்வத்துப் பிறந்த வெய்ய பருதிபோற் றிறலி னாற்குத், தெவ்வரைக் கிழங்கி னோடுந் தின்றுநீ சொன்ன வாறே, எவ்வத் தைத் தணித்து மென்றான் சீதத்த னென்ன லோடும், மவ்வல மணந்த தண்டார்ப் பதுமுக னிதனைச் சொன்னான்.

பருதி இருளை அகற்றுமாறுபோல தன்னைச் சூழ்ந்த பகையை நீக்குதற்குரியனாதலின், அவற்குத் தீங்குவாராதென்றான். திறலினாற்கு; கு : பகைப் பொருட்கண் வந்த நான்காமுருபு. [1] மக்கள் நூற்றுவரையும் சேரக் கொறற்குக் கிழங்கினோடுமென்றான்.

(இ - ள்.) சீதத்தன், புத்திசேனன் கூறியவாறே திறலினாற்குப் பகைவரைக் கொன்று எவ்வத்தைத் தீர்ப்பேமென்றான்; என்ற அளவிலே பதுமுகன் இதனைக் கூறினானென்க.

அம் : அசை. (கஎ0)

மகன்; சீவகன் தோழருள் ஒருவன். மலையையுடைக்கின்ற உருமைப் போல்; உரும்-இடி. மாற்றலன் : கட்டியங்காரனுடைய. உண்டல் இஃது - உண்ணுதலாகிய இத்தொழில். இலையையுடைய கண்ணியீர்க்கென்றது பதுமுகன் முதலான தோழரை ; கண்ணி - மாலை. எளிது - எளியகாரியமாதலால். குருசில் உண்மையையும் இன்மையையும் உலைவினோடு ஆராய்ந்து; குருசில் : சீவகன். உண்மை - உயிரோடுள்ளமை. உலைவினொடு - வருத்தத்தோடு. ஒறுப்பதே - பின் கட்டியங்காரனைத் தண்டிப்பதே.

(உரை) [1] அவன் : சீவகன். [2] இஃது : கட்டியங்காரனைக் கொல்லுதல்.

1736. பவ்வம் - கடல். பருதி - சூரியன். திறலினாற்கு : சீவகனுக்கு. தெவ்வரை - பகையான கட்டியங்காரன் முதலியவரை. பகைவரை மீண்டும் தோன்றுதவாறு மக்களோடும் அழித்தல்தோன்ற, "கிழங்கினோடுந் தின்று" என்றான். நீ யென்றது புத்திசேனனை. எவ்வத்தை - சீவகனுக்குற்ற துன்பத்தை. தணித்தும் - தீர்ப்போம். சீதத்தன் தணித்துமென்றான். என்னலோடும் - என்று சீதத்தன் கூறிய வளவிலே. மவ்வல் அம் மணந்த - முல்லை மலர் கலந்த ; அம் : அசை.

(உரை) [1] கட்டியங்காரன் மக்கள் நூற்றுவர் காளாங்காரகன் முதலியோர்.

1737. நம்பிநந் தட்டன் கேட்க நங்கட்குக் குரவ ருள்ளார், தம்பரி வகற்றி யோம்பி நீர்க்கடன் மரபு தாங்கிக், கம்பஞ்செய் பரிவு நீங்கிக் கற்பிப்பார்க் குவர்த்துக் சொல்லார், இம்பரிவ் வுலக மொப்பாய்க் கென்னையா னுரைப்ப தென்றான்.

(இ - ள்.) தம்மைக்கற்பித்தற்குரியார்க்குத் தாம் உவர்த்துச்சொல் லார்; ஆதலான், இவ்விடத்து இவ்வுலகொழுக்கந் தன்னையொக்குநினக்கு இனி யான் கூறுவதெவன்? ஆயினும் கூறுகின்றேன்; நந்தட்டன்! இதனைக் கேட்பாயாக; இந்நடுக்கஞ்செய்கின்ற வருத்தத்தினின்றும் நீ நீங்கி நமக்குக் குரவராயுள்ளார் வருத்தத்தையுநீக்கி அவரிருக்குமளவும் அவரைப்பேணி அவரிறந்தால் நீர்க்கடனாகிய முறைமையைச் செய்வா யாகவென்று கூறினானென்க.

நீர்க்கடன் - [1] உதகக்கிரியை, எவன் என்னெனநின்றது; ஐ : அசை. (கஅக)

1738. ஓம்படை சாற்றற் பால துள்ளவர்க் காகு மன்றே, ஆம் புடை யென்க ணில்லை யங்கையென் கண்க ளாகத், தேம்படு தாரி னீர்க்குஞ் செல்வற்குஞ் செய்வ செய்தேன், காம்படு காட்டுத் தீயிற் கனன்றுட னெழுக வென்றேன்.

(இ - ள்.) உயிருடனேயிருப்பார்க்கன்றே இவரைப் பாதுகாத்துக் கொள்ளென்றுகூறுவது; உயிர்வாழும்பக்கம் என்னிடத்தில்லை; ஆதலின், இது கூறவேண்டா; என்கண்கள் கையாக அவற்றினீராலே நுமக்கும் செல்வனுக்குஞ்செய்யும் நீர்க்கடன் மரபெல்லாம் செய்துவிட்டேன்; இனிக் காட்டுத் தீப்போல சேரவெழுகவென்றேனென்றானென்க.

---

1737. நம்பியாகிய நந்தட்டன்; விளி. கேட்க - கேட்பாயாக. குரவராயுள்ளார் தம் பரிவகற்றி; குரவர் : கந்துகன், சுநந்தை என்பவர். பரிவு - வருத்தம். ஓம்பி - அவரைப் பாதுகாத்து. நீர்க்கடனாகிய மரபு; மரபு - முறைமை. தாங்கு - செய்வாயாக. இக்கம்பம் - இந்நடுக்கத்தை. பரிவுநீங்கித் தாங்கு. இம்பர் - இவ்விடத்து. யான் உரைப்பது என் என்றான்.

(உரை) [1] (பி - ம்.) 'பலிகன்மம்.'

1738. உள்ளவர்க்கன்றே ஓம்படைசாற்றற்பாலதாகும்; உள்ள வர்க்கு - உயிரோடிருப்பவர்க்கு; ஓம்படை - பாதுகாப்பு. ஆம்புடை - உயிருடனிருக்கும்பக்கம். என்கண் - என்னிடத்து; என் என்றது நந்தட்டனை. என் கண்கள் கையாக; "நெகிழ்ந்த நீரிற் கண்கை யாக... ஒருயிர்க் கணவற்கு நீருகுப் பனள்போல்" (பெருங். 3. 24 : 180-83). தாரினீர்க்கும் என்றது பதுமுகன் முதலியோரை. செல்வற்கும் : சீவக னுக்கும். செய்வ - செய்யக் கடவதாகிய நீர்க்கடனை; என்றது கண் ணீரை. காம்பு அடு - மூங்கிலை அழிக்கின்ற. கனன்று - கோபித்து.

அழுதது : [1] இழவென்னுமெய்ப்பாடு. 'தாரினீர்க்கு' எனவே சுற்ற மெல்லாமடங்கும். (கஅ௨)

1739. கோட்டிளங் குழவித் திங்க ளிரண்டன்ன வெயிற்றுக் கோளே, வேட்டவோர் சிங்கஞ் சூழ்ந்த வேங்கையி னினத்தின் வெய்ய, வாட்படை யெழுந்து வாழ்க சீவக னென்னு மாங்கட், பாட்டினை யொருவ னெங்கள் பரிவறப் பாடி னானே.

கோடு - வளைவு.

(இ - ள்.) முன்பு சிங்கத்தைச்சூழ்ந்த புலித்திரள்போலே வெய்ய வாகிய நமது வாட்படை அச்சிங்கத்தின் ஏதந்தீர்த்தற்கு யான் அங் ஙனங்கூறக் கேட்டு எழுந்திருந்து சீவகன் வாழ்கவென்ற அளவிலே, எங்கள் வருத்தந்தீர ஒருத்தன் பாட்டினைப் பாடினானென்க.

நீயும் யாங்களும் சிங்கமும் புலியும்போலிருப்போமென்றான். (கஅ௩)

1740. வருவர்நங் கேள்வ ரின்னே வானுதற் பசலை தீர, உருகி நைந் துடன்று முன்கை வளையுக மெலிய வேண்டா, அருவிமும் மதத்த யானை யதிர்ந்துழிக் காரென் றெண்ணித், தெரிவில பேதை முல்லை பூத்தன தெளியி தென்றான்.

---

(உரை) [1] 'இழவென்பது, தந்தையுந்தாயுமுதலாகிய சுற்றத்தாரை யும் இன்பம் பயக்கும் நுகர்ச்சி முதலாயவற்றையுமிழத்தல்' (தொல். மெய்ப். 5, பேர்.)

1739. கோடுஇளங்குழவித்திங்கள்-நுனியையுடைய இளைய பிறைச் சந்திரன். இரண்டன - இரண்டைப்போன்ற. எயிற்றுக் சோளே வேட்ட- பற்களாற் கொலைசெய்தலையே விரும்பிய. சிங்கத்தைச் சூழ்ந்த வேங்கை யின் இனம்; வேங்கை - புலி. தோழருக்குப் புலிக்குழாம்: சீவக. 1748, 1750. படை - நமது சேனை. சீவகன் வாழ்கவென்னுமாங்கண்; என்னு மாங்கண் - என்று கூறுமளவிலே. தலைவனை வாழ்த்திப் போர்தொடங்கு தல்: சீவக. 778, அடிக். பரிவு அற - வருத்தம் கெட. ஒருவன் பாட்டி னைப்பாடினான்.

1740. கேள்வர் - கணவர். இன்னே - இப்பொழுதே. பசலைதீர - பசப்பு நீங்க. உடன்று - கோபித்து. முன்கைவளை - சூடகம். உக - சிந்தும்படி. அருவிபோன்ற மதத்தையுடைய. அதிர்ந்துழி - முழங் கினவிடத்து. கார் - கார்காலம். தெரிவில - அறியாதனவாய். பேதை முல்லை; குறுந். 66, ஒப்பு; "பேதைப்பித்திகத்து" (குறுந். 94 : 1). இதுதெளி - இது கார்ப்பருவமன்று என்பதைத் தெளிவாயாக. என்றான் - என்றுபாடினான்.

(இ - ள்.) யானை மதத்தவாய் அதிர்ந்துழி அவற்றைக்காரென் றெண்ணி ஆராயாதே முல்லை பூத்தன; இதனைப் பருவமன்றென்று தெளிநீ; இன்னே மெலியவேண்டா; யான் அவரிடத்தேசென்றுற் குறித்த பருவத்தே நீட்டித்தாராயின் மெலியவுமமையும்; யான் சென்றபொழுதே நின்பசலைதீரக் கேள்வர் வருவாரென்று பாடினனென்க.

இது, பருவமன்றென்று தலைவியையாற்றுவித்துத் தூதுசெல்கின்ற பாணன்கூற்று; "நிலம்பெயர்ந் துறைதல் வரைநிலை யுரைத்தல், கூத்தர்க்கும் பாணர்க்கும் யாத்தவை புரிய" (தொல். கற்பு. 28) என்னும் கற்பியற் சூத்திரத்தானும், "அரக்கத்தன்ன......தேரே" என்னும் (14) அகப்பாட்டில், "யாங்கா குவங்கொல் பாண வென்ற, மனையோள் சொல்லெதிர் சொல்லல் செல்லேன், செவ்வழி நல்லியா ழிசையினென் னையெனைக், கடவுள் வாழ்த்திப் பையுண் மெய்ந்நிறுத், தவர்திறஞ் செல் வேன் கண்டனென் யானே" என்பதனானுங்கொள்க. எனவே சீவகன் இப்பொழுது வாரானென்பதூஉம், யாம்சென்று பின்புகொண்டுவருவே மென்பதூஉம், இதற்குக் கருத்தென்று தேறிப் போர்த்தொழில் தவிர்தல் பயனும். இனி, என்றுளென்று பாடமோதித் தோழி ஆற்றுவித்தாளென் றல் ஈண்டைக்குப் பொருந்தாது. இன்னேவருவரெனக்கூட்டி இப் பொழுதே வருவரென்றால், [1] இவனும் இப்பொழுதே வருவனென்பது கருத்தாமாதலிற் பொருந்தாது. (கஅச)

1741. பாட்டினைக் கேட்ட லோடும் பழம்பகை நட்பு மாமே
ஓட்டியுங் கோறு மன்றே நம்பிதா னுண்மை பெற்றால்
நாட்டிடம் பரந்து போகி நாடுது நாங்க ளென்று
ஈட்டமும் வேறு மாகி யிலைப்புரை கிளைத்திட் டேமே.

ஆமே; ஏகாரம்: எதிர்மறை.

(இ - ள்.) பாட்டினைக் கேட்டஅளவிலே, அதன் பொருளைக்கருதிச் சீவகன் பிழைத்தபடியையறிந்தாற் பின்பு சிலநாள் கழித்தும் அவனைக்

---

(உரை) [1] இவனும் - சீவகனும்.

1741. பகை யென்றது கட்டியங்காரனை. நட்பும் ஆமே - பின்பு நட்பாதலும் உண்டோ; இல்லையென்றவாறு; நம்பி: சீவகன். உண்மை- உயிரோடு இருக்கும் தன்மையை. பெற்றால் - நாம் அறிந்தால். ஒட்டி யும் - சில நாள் கழித்த பின்பாயினும். கோறும் - கொல்வேம். பரந்து போகி - நான்கு பக்கமும் பரவிச்சென்று. நாடுதும் என்று - தேடுவோ மென்று கருதி. ஈட்டமும் - கூட்டமாயும். வேறும் - தனித்தும். இலைப் புரைகிளைத்தல்: "இலைப்புரை கிளைத்து" (காஞ்சிப். வாணீசப். 34, திருக்கண். 106; தணிகை. நாரதன். 10)

கொல்வே மன்றோ! அஃதென்னெனின், [1] "பழம்பகை நட்பாதல் இல்" என்னும் பழமொழியுமுளதன்றே; இனி யாம் பரந்துபோய் நாட்டிடமெல்லாம் நாடுது மென்றுகருதித் தனித்தும் திரண்டும் எவ்விடமுந்தேடினோமென்றானென்க.

நாடு - [2] நானிலத்திற்கும் பொதுப்பெயர். 'இலைப்புரைகிளைத்தல்' ஒரு பழமொழி. (கஅ௬)

1742. (க) மணிபொதி துகிலிற் றோன்று மஞ்சுசூழ் வரைக ணாடி, அணிநகர் யான்சென் றெய்தி மாலைதன் மனையைச் சேர்ந் தேன், துணைமலர்க் காந்த ளூழ்த்துச் சொரிவபோற் றோன்றி முன்கை, அணிவளை நலத்தோ டேக வங்ஙன மிருந்து நைவாள்.

1743. (உ) என்னைக்கண் டடிசி லாக்க வையர்க்கென் றவல நீங்கப், பொன்னைக்கண் டனைய சாய லவர்புரிந் தடிசி லேந்தத், துன்னிநோ யுற்ற மஞ்ஞைத் தோற்றம்போ லிருந்த நங்கை, பின்னைநாட் குவளை நீர்வீழ் பெற்றிய கண்ண ளாகி.

1744. (௩) அடிகளை யின்றி நீரே யுண்ணவும் வல்லீ ரானீர், கடியிர்நீ ரைய னீரே யெனக்கசிந் துருகிக் காய்பொற், கொடிதுக ளார்ந்த வண்ணங் குழைந்துமா நிலத்து வீழ்ந்த, பெடைமயிற் சாய லாடன் பேதுகண் டாங்கு மீண்டேன்.

இவை மூன்றும் ஒருதொடர்.

---

(உரை) [1] பழமொழி, 97. [2] பாலையொழிந்த நான்கு நிலங்கள்.

1742. மணிபொதி துகிலின் - நீலமணியை மூடிய ஆடையைப் போல. மலைக்கு மணியும் வெண்மேகத்துக்கு ஆடையும் உவமைகள். வரைகளை நாடி; நாடி - ஆராய்ந்து. நகர்: இராசமாபுரம். மாலை - குணமாலையினுடைய. ஊழ்த்து - பதனழிந்து. வளைக்குக் காந்தள்மலர்: "வளையுடைந் தன்ன வள்ளிதழ்க் காந்தள்" (மலைபடு. 519); "கோடல் வீயுகு பவைபோ, லிலங்கே ரெல்வளை" "ஊழுறு கோடல்போ லெல்வளை யுகுபவால்", "ஊழுற்ற கோடல்வீ, இதழ்சோருங் குலைபோல விறை நீவு வளையாட்கு" (கலித். 7 : 15-6, 48 : 11, 121 : 13-4); "உடை வளைகடுப்ப மலர்ந்த காந்தள்" (புறநா. 90 : 1)

1743. அவலம் நீங்குப்படி ஐயர்க்கு அடிசிலாக்க என்று; அவலம்-தனக்குற்ற வருத்தம். ஐயர்க்கு: நந்தட்டனுக்கு. அடிசில் ஆக்க - உணவு சமைக்க. என்று = என்ன - என்று குணமாலை கூற. சாயலவர்: தோழியர். அடிசில் புரிந்து - உணவைச்சமைத்து. ஏந்த - ஏந்திநின்ற அளவிலே. துன்னி - என்னை அணுகி. நங்கை: குணமாலை. பின்னை நாள் குவளை - மற்றையநாளது குவளைமலரினின்றும்; வாடியமலரென்ற வாறு. பெற்றிய - தன்மையையுடைய.

1744. அடிகளையின்றி - சீவகசாமி உடனில்லாமல். நீரே - தனியாகவுள்ளநீரே; என்றது நந்தட்டனை; ஆனீர் - ஆயினீர். நீர் கடியிர்;

(இ - ள்.) யான்சென்று வரைகளைநாடி நகரையெய்திக் குணமாலை மனையைச் சேர்ந்தேன் ; அப்பொழுது காந்தட்பூப்பழகி உதிர்வனபோலே தோன்றி வளை நலத்தோடே ஏகவிருந்து அங்ஙனம்நைகின்றவள் என்னைக் கண்டு எனது அவலநீங்கும்படி ஐயர்க்கு அடிசிலாக்குகவென, அவருமாக்கி அடிசிலை ஏந்தினராக, நோயுற்ற மயில்போலிருந்த நங்கையணுகிச் செவ்வியழிந்த குவளை நீர் வீழுந்தன்மையையுடைய கண்ணளாய், ஐயரே ! அடிகளையின்றி நீரேயுண்ணவும் வல்லீராயினீர் ; நீர்கொடியீரென்று கசிந்துருகிப் பொற்கொடி துகளார்ந்தாற்போலே நிலத்தே விழுந்த சாயலாடன் வருத்தங்கண்டு அவ்விடத்தினின்றும் மீண்டேனென்றனென்க.

[1] ஆக்குக : விகாரம். [2] என்று - என்ன. பொன் - திரு. பின்னை : ஐ அசை. பின்னாள் - மற்றைநாள். [3] பெடைமயிலென்றார், பொலிவழிதலின். (கஅசா - அ)

1745. செல்வனை யின்று நாடிச் சேவடி தொழுத லொன்றோ,
அல்லதிவ் வுடம்பு நீங்க வேற்றுல கடைத லொன்றோ,
எல்லையிவ் விரண்டி னொன்றை யிப்பகன் முடிப்ப லென்னா,
மல்லிகைக் கோதை யைம்பான் மலைமகண் மனையைச் சேர்ந்தேன்.

(இ - ள்.) அங்ஙனமீண்டு, செல்வனைக்கண்டு வணங்குதல் ஒரு காரியம் ; அது கூடாதாயின், இறத்தலொருகாரியம் ; இவ்விரண்டினொன்றை இன்றைப்பகற்பொழுதினெல்லையின் முடிப்பேனென்றுகருதித் தத்தைமனையைச் சேர்ந்தேனென்க. (கஅசரு)

1746. மணியொலி வீணை பண்ணி மாண்டகோ றடவ மாதர்,
அணிமுலைத் தடத்தி னேற்றி வெப்பராற் றட்ப மாற்றிப்,
பிணைமலர்க் கோதை கீதம் பாடயான் பெரிதும் பேதுற்,
றிணைமலர்க் கண்ணிக் கொவ்வா விளிவரு கிளவி சொன்னேன்.

---

கடியிர் - கொடியீர். ஐயனீரே - ஐயரே ; நந்தட்டனை ; விளி. என - என்று கூறி. பொற்கொடி துகளை ஆர்ந்தவண்ணம். சாயலாள் : குணமாலை. குணமாலைக்குப் பொற்கொடி உவமை. பேது - வருத்தத்தை. ஆங்கு - அவ்விடத்தினின்றும்.

(உரை) [1] ஆக்குகவென்பது ஆக்க என்றாயிற்று. [2] சீவக. 1743. [3] சீவக. 1744.

1745. செல்வனை : சீவகனை. வேற்றுலகு - சுவர்க்கம். ஒன்றோ - ஒரு காரியம் ; ஓ : அசை. ஒன்றென்பதன் விசேடப் பிரயோகம் : சீவக. 1682, அடிக். இவ்விரண்டினொன்றை இப்பகல் எல்லையின் முடிப்பல் : என்னா - என்றுகூறி. கோதை - மாலையையணிந்த. மலைமகள் : காந்தருவதத்தை ; சீவக. 1696, 1751.

1746. பண்ணி - சுருதியமைத்து. மாண்டகோல் - மாட்சிமைப்பட்ட நரம்பை. தடவ-தடவுதற்கு. வீணையைப் பண்ணிக் கோலைத்தடவ. மாதர்:

(இ - ள்.) கோதையையுடைய அம்மாதர், அழகிய ஓசையையுடைய யாழைப்பண்ணி அதனரம்பைத் தடவுதற்கு முலைத்தடத்தே சேர்த்தி அதன் வெப்பத்தாலே அதன் குளிர்ச்சியை மாற்றிப் பாட, யான் பித்தேறி அவளுக்குப் பொருந்தாத கிளவியைக்கூறினேனென்றானென்க.

இளிவருகிளவி, "பொறிகுலாய்" (சீவக. 1706) என்னுங்கவி.

(கசுo)

1747. சொல்லிய வென்னை நோக்கித் துளங்கலும் மடிகள் பாதம், புல்லயான் புணர்ப்ப லென்று பொழுதுபோய்ப் பட்ட பின்றை, எல்லிருள் விஞ்சை யோதி யிவ்வழி யிடுவித் திட்டாள், சொல்லுமி னடிக ணீரும் போந்தவா றெனக்கு மென்றான்.

(இ - ள்.) அங்ஙனங்கூறிய என்னைநோக்கி வருந்தாதேகொள்; நும்மடிகள் பாதத்தை நீ சேரும்படி யான்கூட்டுவேனென்று கூறி ஞாயிறுபட்ட பின்பு விஞ்சையையோதி விடியற்காலத்திருளிலே இவ்விடத்தே இடுவித்தாளென்று உரைத்தான்; அங்ஙனமுரைத்தபின்பு, அடிகளே! நீரும் போந்தவாறு எனக்குக்கூறுமினென்றானென்க.

காளையீதுரைக்கின்றவன் (சீவக. 1732) இடுவித்திட்டாளென்றுரைத்தானெனக் கூட்டுக. (கசுக)

1748. (க) தாதையா ருவப்பச் செய்வான் றாழ்கச்சிற் பிணிப்புண் டைய, போதரா நின்ற போழ்திற் போர்ப்புலிக் குழாத்திற் சீறிக், காதனஞ் சுற்ற மெல்லாங் கையிலங் கெஃக மேந்திச், சாதலே புரிந்து தோன்றுந் தன்மையந் நகரிற் கண்டேன்.

---

காதலையுடைய. வெப்பரால் - வெம்மையால். வெப்பர் - வெம்மை; "புத்தகற் கொண்ட புலிக்கண் வெப்பர்" (புறநா. 269 : 4). தட்பம் - அவ்வீணை நரம்பின் குளிர்ச்சியை. மாற்றி - கெடுத்து. அடி, 1-2: "தண்மையிற் றிரிந்த வின்குரற் றீந்தொடை, கொம்மை வருமுலை வெம்மையிற் றடைஇக், கருங்கோட்டுச் சீறியாழ் பண்ணுமுறை நிறுப்ப" (நெடுநல். 68-70). கோதை : காந்தருவதத்தை; பேதுற்று - மயக்கமடைந்து. கண்ணிக்கு : காந்தருவதத்தைக்கு. ஒவ்வா - பொருந்தாத. இளி வருகிளவி - இழிந்த சொல்லை; 'இளிவரலென்பது இழிபு' (தொல். மெய்ப். 3, பேர்.)

1747. சொல்லிய - இளிவருகிளவியைக் கூறிய. துளங்கல் - வருந்தாதே. அடிகள்பாதம் - சீவகனது அடியை. புல்ல - நீசேரும்படி. புணர்ப்பல் என்று - கூட்டுவேனென்றுகூறி. விஞ்சையை ஓதி எல்லிருளில் இவ்வழி இடுவித்திட்டாள். விஞ்சையை - மதிமுகமென்னும் மந்திரத்தை; எல் இருள் - விடியற்காலத்திருளில். எல்லிருள்விடுத்தல்: "எல்லிருள் விடுப்ப வெழுந்தனன் போகி" (பெருங். 3. 25 : 165). அடிகள் : விளி. எனக்கும் போந்தவாறு சொல்லுமின் என்றான்.

1748. தாதையார் : கந்துக்கடன். செய்வான் - செய்வதற்காக. தாழ்கச்சின் - தங்குகின்ற கச்சால். ஐய ; என்றது, நந்தட்டனை; விளி.

(இ - ள்.) ஐயனே! தாதையார் மனமகிழ அவரேவல்செய்தற்காக விடாமற்றங்குவதொரு கச்சிட்டுப்பிணித்தாற்போல அவர்சொல்லாற் பிணிப்புண்டு போதுகின்ற காலத்தே, நம் சுற்றமெல்லாம் எஃகமேந்திப் புலிக்குழாம்போலே சீறிச் சாதற்கொருப்பட்டுத் தோன்றுமியல்பை அந் நகரிற்கண்டேனென்க.

கச்சின் : இன் உவமப்பொரு.

1749. (உ) கண்டபி னின்னைக் காண்பேன் கருவரை யுலம்பிப் பல்கால், விண்டுவு முடைய வாலின் வெடித்துராய் வெகுண்டு நோக்கா, எண்டிசை யோரு மெள்கக் குஞ்சர மிரியப் பாயும், ஒண்டிறற் சிங்க மன்ன கதழொளி யுடற்சி கண்டேன்.

கருவரையிற்சிகரமும் அஞ்சியுடையும்படி வாலினாலே பல்காலும் வீசி வெகுண்டு பரந்துநோக்கி எண்டிசையோரும் அச்சங்கூரும்படி குஞ்சரத்தைக் கெடப்பாயும் சிங்கமென்க; "பழிவந்து மூடுமென் [1] றெள்குதும்" (திருச்சிற். 92) என்றாற்போல; அஃகவும்பாடம். கதழொளி - மிக்கவொளி.

(இ - ள்.) அவரைக் கண்டபின்பு நின்னைக் காண்கின்ற யான் சிங்க மன்ன நின்னுடற்சியைக் கண்டேனென்றானென்க.

முன்பு [2] அவன் சிங்கத்தையின்றி எழுந்தேமென்றதற்கு [3] நீ அப் புலித் திரளுக்குச் சிங்கமென்றானென்க. விண்டு : விகாரம்.

1750. (ங) சினந்தலைப் பெருக்கித் தீக்கோ ளுறுப்பினைச் சுருக்கித் தீப்போல், அனன்றுநில் லாத கண்ணா னிறுத்தின செவியிற் றாகி, முனம்புக வடக்கிப் பின்போந் திருந்துபாய் வான மைந்த, இனந்தலைப் புலியோ டொக்குந் தோழர்நின் னிடத்திற் கண்டேன்.

---

எஃகம் - வேல். சாதலே புரிந்து - இறத்தற்குத் துணிந்து. சுற்றமெல்லாம் சீறித்தோன்றும் தன்மையை. சுற்றத்திற்குப் புலிக்குழாம்; சீவக. 1144. அந்நகரில் - இராசமாபுரத்தில். இதுமுதல் பதினொரு பாடல்கள் சீவகன் கூற்று.

1749. கண்டபின் - கோபித்தெழுந்த நம் உறவினரைப் பார்த்த பின்பு. காண்பேன் - காண்கின்ற யான். உலம்பி - முழங்கி. விண்டு - உச்சி. வெடித்து - வீசி. உராய்நோக்கா - பரந்து நோக்கி. எள்க - பயப்படும்படி. குஞ்சரம் - யானையை. இரிய - செட. கதழ்தல் - மிகுதல். உடற்சி - மாறுபாட்டை. நந்தட்டனுக்குச் சிங்கம் உவமை.

(உரை) [1] 'எள்குதும் - கூசுதும்' (திருச்சிற். 92, பேர்.). [2] அவன் - நந்தட்டன். [3] நீயென்றது நந்தட்டனை.

1750. சினம் - கோபத்தை. தலைப்பெருக்கி - இடத்தே பெருகச் செய்து. தீக்கோள் உறுப்பினை - கொல்லுதலாகிய தீய கோட்பாட்டினை யுடைய அங்கங்களை. அனன்று - கோபித்து. நில்லாத கண்ணால் - ஒரு

(இ - ள்.) அதன்பின் சினத்தை இடத்தே பெருக்கித் தீக்கோட்டாட்டையுடைய உறுப்புக்களைச்சுருக்கி அழன்று சுழல்கின்ற கண்ணோடே நோநிறுத்தின செவியிற்றாய் உடம்பினைக்குறைத்துப் பின்போந்திருந்து முன்னே செல்லப் பாய்தற்கிருந்த திரட்சியையிடத்தேயுடைய புலியோடொக்குந் தோழரை நின்னிடத்தே கண்டேனென்றானென்க.

1751. (ச) கூடநீர் நின்ற பெற்றி கண்டிப்பா னேக்கு வேற் கோர், கேடகம் வாளொ டேந்திக் கெடுகவிந் நகர மென்னு, மாடத்தி னுச்சி நின்ற மலைமக டன்மை கண்டே, ஆடவர்க் குழுவை யொப்பா யஞ்சினே னதன்க ணென்றான்.

(இ - ள்.) நீர் அங்ஙனம் சேரநின்ற தன்மைகண்டு தாதையார் கருத்தன்மையின், நும்மையேவாதே இப்பக்கத்தைப்பார்ப்பேன்பொருட்டுக் கெடுக இந்நகரென்று ஏந்திநின்ற தத்தைதன்மை கண்டு, புலியொப்பாய்! அந்நிலையிலே அஞ்சினேனென்றானென்க.

“ தாதை ” (சீவக. 1748) முதல், இதனளவும் ஒருதொடர்.

(கசஉ-ரு)

1752. பெண்ணிடர் விடுப்ப வாழ்விற் சாதலே பெரிது நன் றென், றெண்ணினே னமர்கள் வீயு மியல்பினு னெருங்கப் பட்டுக், கண்ணிநா னியக்கன் றன்னைச் சிந்தித்தேன் கடவுள் வாழ்த்தி, அண்ணல்வந் தழுங்கத் தோன்றி யாங்கென்னைக் கொண்டு போந்தான்.

---

நிலையில் நில்லாது சுழல்கின்ற கண்களுடனே. செவியிற்றாகி - காதையுடையதாகி. அடக்கி முனம்புகப் பாய்வானமைந்த - உடலைச்சுருக்கி முன்னே செல்லப் பாய்தற்கு அமைந்த. இனந்தலை - இனத்தினிடத்தேயுள்ள. தோழரைக் கண்டேன். தோழர்க்குப் புலிக்குழாம்: சீவக. 1739, அடிக்.

1751. கூட - சேர. நீர் என்றது நந்தட்டனை உள்ளிட்ட தோழரை. இப்பால் - இப்பக்கத்தை. நோக்குவேற்கு - பார்ப்பேனாகிய என் பொருட்டு. என்னு - என்றுகூறி. மலைமகள் - காந்தருவதத்தை; சீவக. 1745, அடிக். ஆடவர்க்கு - வீரர்க்கு. உழுவை - புலி. உழுவை ஒப்பாயென்றது, நந்தட்டனை; விளி. அதன்கண் அஞ்சினேன் என்றான்; அதன்கண் - அந்நிலையில்.

(மேற்.) அடி, 1 : தொல். வினை. 6, ந; இ - வி. பத. 11.

1752. இடர் - துன்பத்தை. விடுப்ப - நீக்குதலால். வாழ்வின் - உயிர்வாழ்தலைக்காட்டிலும். பெரிதும் - மிகவும். அடி, 1 : சீவக. 1152. நமர்கள் - நம் உறவினர். வீயும் - இறக்கின்ற. நெருங்கப்பட்டு - நெருங்கப்படுதலால். கண்ணி - கருதி. கடவுளை வாழ்த்தி இயக்கன்றன்னைச் சிந்தித்தேன்; கடவுள் : அருகன். இயக்கன் : சுதஞ்சணன். அண்ணல் : சுதஞ்சணன். அழுங்க - என்னைச் சுற்றியிருந்தவர் வருந்தும்படி. ஆங்கு - அவ்விடமிருந்து.

(இ - ள்.) தன்மனையாள் தன் இடரை நீக்க உயிர்வாழ்தலின், இறத்தல் மிக நன்றென் றெண்ணினேன் ; எண்ணி நமக்கு ஒருசெயலின்றாக்கி நம் சுற்றமும் வீயும்வகையோடே முன்செய்த தீவினை நெருங்கப்படுதலாலே, இந்நிலைக்கு இறைவனல்லது வேறொருவரின்றென்று கருதி இறைவனை வாழ்த்தி, இயக்கனுக்கு யான் கூறிய நிலையைக்கைவிட்டுப் பின்பு இயக்கன்றன்னையே நினைத்தேன் ; அவன் வந்து தோன்றி அவ்விடத்தினின்றும் என்னைக்கொண்டு போந்தானென்றானென்க.

"வாரணத் தொழுவின் முற்றி, மீளிமை செய்யின்" (சீவக. 958) என்ற நிலையைவிட்டு. வாழ்த்துதல் - ஓம்ணமோ அரஹந்தாணமென்றல். அழுங்க - சூழ்ந்தவர் வருந்த. (கஎகூ)

1753. மந்திர மூன்றுந் தந்து வானவன் விடுப்பச் செல்வேற், கிந்திர திருவிற் சூழ்ந்த வினமழைக் குழாத்தின் வேழம், கொந்தழற் காட்டுத் தீயால் வளைப்புண்ட குழாத்தை நோக்கிச், சிந்தித்துக் கவன்று நிற்பத் திருமழை பொழிந்த தன்றே.

மந்திரமும் பிறவுமுண்மையின், உம்மை, "இனைத்தென வறிந்த சினைமுதற் கிளவிக்கு, வினைப்படு தொகுதியி னும்மை வேண்டும்" (தொல். கிளவி. 33) என்னு மும்மையன்றி, மூன்று மந்திரமும், வழிமுதலியனவுமென எச்சவும்மை. செல்வேற்குக் கவன்றென்க. எண்ணிறந்த இனக்களிற்றின் துயரை நீக்குதற்குரிய யான் நீக்காதொழியின், [1] மூவகைப்பாவத்திலும் உடன்பாடாகிய பாவமெய்தி நெருநற் சுற்றமும் யானுமுற்ற துன்பம்போல் இதுவும் பின்புவருமென்று எனக்குக் கவன்றென்றான். முன்பு, "வேழப்பேரினந், தங்கியகாடு" (சீவக. 1179) என்றார். சிந்தித்து நிற்ப - தெய்வத்தைப்பார்த்து நிற்ப. அன்றே- அப்பொழுதே. இந்திரவில்லும், மேகமும் தீச்சூழ்ந்த யானைக்குவமம்.

(இ - ள்.) தேவன்விடுப்பக் குழாத்தைநோக்கிச் செல்வேற்குக் கவன்று சிந்தித்து நிற்ப, மழை அன்றே பெய்ததென்க.

---

1753. மந்திரம் மூன்று : சீவக. 1217. வானவன் : சுதஞ்சணன். விடுப்ப - மலையினின்றும் என்னைப் பூமியிற் கொணர்ந்துவிட. இந்திர திருவில் - இந்திரவில் ; சீவக. 121, 539. மழைக்குழாத்தின் - மேகக் கூட்டத்தைப் போல. காட்டுத்தீயால் வளைப்புண்ட வேழக்குழாத்தை நோக்கி ; சீவக. 1237, அடிக். சிந்தித்து நிற்றல் சீவகன் தொழில். கவலல் மழையின் தொழில். நோக்கிச் செல்வேற்கு மழைபொழிந்தது ; செல்வேற்கு - செல்லும் என்பொருட்டு.

(உரை) [1] மூவகைப் பாவம் : செய்தல், செய்வித்தல், உடன்பாடு என்பன ; இவற்றை முறையே கிருதம், காரிதம், அனுமோதம் என்பர் வடநூலார் ; சீவக. 2781, ந.

சீவகன் மற்றும் வழியில் நிகழ்ந்தனவெல்லாங்கூருது இதனையே கூறிய தென்னையெனின், "யாண்டுநே ரெல்லை" (சீவக. 393) என்ற மொழி நந்தட்டனறியானுதலின், இன்னும் இராசமாபுரத்துச் சென்ருலும் இத்துன்பமுளதாமோவென்று கருதினும் அதுகருதாதபடி மற்றை நாளே அத்தீவினையுள்ளது நீங்கவேண்டும் பேரறஞ் செய்தே னென்ருனென்க; இனிச் செல்வேற்கு மழைபொழிந்ததெனக்கூட்டி, தேவன், "பாம்புமரிலவுங், கடுந்திறனுேய்களுங் கெடுக்கும்" (சீவக. 1218) என்ற மந்திரத்தைக் கூறலின், அவன் கூறிய மந்திரமே இம் மழையைப் பெய்வித்ததென்றுமாம். இதற்கு நெருநற் சுற்றமுற்ற துயரை இவையுமுற்றனவென்று கவன்றென்க. இம்மந்திரங்களின் பெருமையால் இனி நமக்கு எவ்விடத்தும் ஒரேதமின்றென்பதறிவித்தல் பயனுக இதுகூறிற்ரும். (கஎஎ)

1754. (க) வெல்களிற் றச்ச நீக்கி விரைவொடு வனத்தி னேகிப், பல்லவ தேய நண்ணித் தனபதி யென்னு மன்னன், நல்வனப் புடைய தேவி திலோத்தமை பெற்ற நம்பி, செல்வன்மற் றுலோக பாலன் றிருமகள் பதுமை யென்பாள்.

1755. (உ) அரிகுரற் கோழி நாமத் தரவவட் கடித்த தாகத், திருவிழை யவளைத் தீர்த்தேன் றீர்விலா நண்பு வேண்டிப், பொருகளி யானை மன்னன் புனையிழை யவளைத் தந்தான், இருமதி கழிந்த பின்றை யிடையிராப் பொழுதிற் போந்தேன்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(இ - ள்.) அங்ஙனம் அக்களிற்றின் அச்சத்தை நீக்கி ஏகிப் பல்லவ தேசம் நண்ணி அதற்குரிய செல்வனுகிய தனபதியென்னும் மன்ன னுடைய தேவி திலோத்தமை பெற்றபிள்ளை உலோகமாபாலன்; மகள் பதுமை; அவளைக் குக்குடசர்ப்பம் கடித்ததாக, அவளுக்கு அதனைத் தீர்த்தேன்; அதனுலே என்னேடுறவுவேண்டி அவ்வரசன் அவளைத் தந்தான்; தந்து இரண்டுதிங்கள் சென்றபின்பு போந்தேனென்ரு னென்க.

களிற்றினச்சம் நீக்கவே [1] தன்சுற்றத்திற்கும் அச்சமின்ரும். (கஎஅ - க)

---

1754. களிற்றச்சம் நீக்கியது; சீவக. 1237. பெற்ற நம்பியாகிய செல்வன் உலோகமாபாலன் என்பவன்.

1755. கோழிநாமத்து அரவு - குக்குடசர்ப்பம்; சீவக. 1271, 1283, ந; "குக்குட வடிவிற் பாம்பாய்ப் பிறந்தவக் குபதன்" (மேரு. நால் வரும். 26); நீல. சாங்கிய. 47, உரை. அவட்கடித்தது - பதுமையைக் கடித்தது. திருவிழை அவளை - திருமகளும் விரும்பும் அழகுடைய பதுமைக்கு. தீர்விலா - நீங்காத. மன்னன்: தனபதி. அவளை: பதுமையை. தந்தான் - எனக்கு மணம் செய்துகொடுத்தான். இருமதி - இரண்டுமாதங்கள். இராப்பொழுதிடைப்போந்தேன்; போந்தேன் - பதுமையைப் பிரிந்து சென்றேன்.

(உரை) [1] தன் என்றது சீவகனை.

1756. வாவிப்புண் ணடையி னுளை வஞ்சித்துத் தக்க நாட்டை
மேவியான் காண லுற்றுச் சார்தலு மிப்ப ருள்ளான்
தூவிப்பொன் மாட மூதூர்ச் சுபத்திர னென்னைக் கண்டே
ஆவிக்க ணறிவு போல வளவளா யன்பு பட்டான்.

வணிகர் :—[1] இப்பர், கவிப்பர், பெருங்குடியரென்று மூன்றுபாலார். தூவிப்பொன் - [2] கிளிச்சிறை; தூவியுமாம்.

(இ - ள்.) யான் அங்ஙனம் அவளை ஒளித்துப்போந்து தக்கநாட்டை மேவி மூதூரைக் காணலுற்றுச் சார்ந்த அளவிலே, இப்பருள்ளானாகிய சுபத்திரன் கண்டு ஆவியிடத்து அறிவுகலந்தாற்போலக் கலந்து அன்புற்றானென்க. (௨௦௦)

1757. பண்ணமை தேரி னேறி யவனொடியா னிருந்து போகி,
விண்ணுயர் செம்பொன் மாடத் திழிந்தவண் விளங்கப் புக்கேன்,
வெண்ணிலா முத்தஞ் சூழ்ந்த வெம்முலைத் தடங்க ணுளை,
மண்ணெலாஞ் செல்ல நின்ற மகிழ்ச்சியின் மகிழ்ந்து தந்தான்.

அவண் விளங்க - [1] அவள் நாணுதலின், மனைவிளங்கிற்று. உலகம் தன்னிடத்திலே செல்லநின்ற மகிழ்ச்சியாவது அரசவுரிமை. [2] இன் பொரு.

---

1756. வாவிப்புள் - தடாகத்திலுள்ள அன்னம். புள்போலும் நடையினுளை : பதுமையை. வஞ்சித்து - மறைந்து பிரிந்து. மூதூரைக் காணலுற்று ; மூதூர் : கேமமாபுரம் ; இது தக்கநாட்டிலுள்ள நகர். இப்பர் என்னும் வணிகர் குடியிலுள்ளானாகிய சுபத்திரன். ஆவிக்கண் - உயிரிடத்து. அறிவுபோல - அறிவு கலந்தாற்போல. அளவளாய் - கலந்து.

(உரை) [1] வணிகர் மூன்றுவகையரென்பதும் அவர்களிலக்கணமும் பின்னுள்ள வெண்பாவால் விளங்கும்; “இப்பர் கவிப்பர் பெருங்குடி வாணிகரென், றெப்புடைய மூவ ருரைக்குங்காற்—றப்பின், மிதியடியே ருனைமிசை நோக்கினர்கண் காணு, நிதியுடைய ராவர் நிலத்து” (சீவசம்போதனை, 6 : உலோகாதிகாரம், 42); இஃது எதிர்நிரனிறை. [2] கிளிச்சிறை : நால்வகைப் பொன்னுள் ஒன்று.

1757. பண் அமை தேரில் - சமைத்திருந்ததேரில். அவனொடுதேரில் ஏறியிருந்து போகி என்க. அவனொடு - சுபத்திரனொடு. இழிந்து மாடத்து அவண் விளங்கப்புக்கேன் ; இழிந்து - இறங்கி. அவண் - அவ்விடம். முத்தம் - முத்துமாலை. தடங்கணுளை : கேமசரி என்பவளை. மண் எலாம் - பூமிமுழுவதும். மகிழ்ச்சியின் - உவகையைப்போல.

(உரை) [1] அவள் - கேமசரி. [2] மகிழ்ச்சியின் என்பதிலுள்ளது.

(இ - ள்.) அவன் அங்ஙனம் அன்புற்றுக்கொண்டுபோதுதலின், நான் அவனுடனே தேரிலேயேறியிருந்து போய் இழிந்து மாடத்தே புக்கேன்; புக்கபின் தன் மகளை மகிழ்ந்து தந்தானென்க. (உ௦க)

1758. அவ்வழி யிரண்டு திங்கள் கழிந்தபி னவளி னீங்கி
இவ்வழி நாடு காண்பான் வருதலு மிறைவன் கண்டே
செவ்வழி பாட ராகிச் சிலைத்தொழில் சிறுவர் கற்ப
மைவழி நெடுங்க ணாளைத் தந்தனன் மதலை யென்றான்.

(இ - ள்.) மதலாய்! அவ்விடத்தே இரண்டுதிங்கள் போன அளவிலே அவளில்லினின்று நீங்கி இவ்விடத்து இந்நாடுகாண்டற்குவந்தேன்; வந்த அளவிலே, இறைவன் சிறுவர் செவ்விய வழிபாடராகி விற்றொழிலைக் கற்ப, அதனை அவன் கண்டு கருமைமிக்க கண்ணாளைத் தந்தானென்று னென்க.

ஏனைப்படைக்கலங்களின்தொழிலும், யானைமுதலிய ஏற்றத் தொழிலும் கற்றாரேனும் அவை கூறாது விற்றொழிலை கூறினார்; அதன் [1] சிறப்பு நோக்கி.

"பெண்ணிடர்" (சீவக. 1752) என்னுங் கவிமுதல் இவ்வளவும் ஒரு தொடராக்கி, என்றானென முடிக்க. (உ௦உ)

1759. தானுழந் துற்ற வெல்லாந் தம்பியை யுணரக் கூறித்,
தேனுழந் தரற்றுந் தாரான் குரவரைச் சிந்தித் தாற்கு,
வானிழிந் தாங்குக் கண்ணீர் மார்பக நனைப்பக் கையால்,
ஊனுமிழ்ந் திலங்கும் வேலா னொற்றிமற் றிதனைச் சொன்னான்.

---

1758. அவ்வழி - அவ்விடத்தே. இரண்டு திங்கள் - இரண்டுமாதம். அவள் இல் நீங்கி - கேமசரியின் வீட்டினின்றும் அகன்று. இவ்வழி - இவ்விடத்து. நாடு - மத்திமதேயத்தை. காண்பான் - பார்ப்பதற்கு. இறைவன்: தடமித்தன். சிறுவர் - விசயன்முதலிய ஐவர். செவ்விய வழிபாடுடையராகி. கற்பக்கண்டு - என்னிடம் படைக்கலம் பயில அதனைத் தடமித்தன் அறிந்து. நெடுங்கணாளை: கனகமாலையை. மதலை என்றது நந்தட்டனை; விளி.

(உரை) [1] சீவக. 1676, ந.

1759. தான் என்றது சீவகனை. உழந்து உற்றவெல்லாம் - வருந்தி அடைந்தவற்றையெல்லாம். தம்பியை: நந்தட்டனுக்கு; உருபுமயக்கம். உணர - அறிய. தேன் - வண்டு. வானிழிந்தாங்கு - மேகம் ஒழுகினாற் போல. குரவரைச் சிந்தித்தாற்குத் தாரான் கண்ணீரால் மார்பகத்தை நனைப்ப; குரவரை - கந்துகனையும் சுநந்தையையும். சிந்தித்தாற்கு - பார்க்கப்பெற்றிலேமேயென்று வருந்தி நினைத்த சீவகன்பொருட்டு. தாரான்: நந்தட்டன். வேலான் கையால் ஒற்றி இதனைச்சொன்னான்; வேலான்: சீவகன்.

(இ - ள்.) சீவகன் தானுற்றனவெல்லாவற்றையும் தம்பியை அறியக் கூறி, குரவரைக்காணப்பெற்றிலமேயென்று நினைத்தவன்பொருட்டு நந்தட்டனழுதானாக, சீவகன் அதனைத்துடைத்து இதனைச் சொன்னானென்க.

இனி, கூறி - கூற; சீவகன்கூற இதனைக் குரவருங் கேட்கப் பெற்றிலமேயென்று சிந்தித்த நந்தட்டனுக்குக் கண்ணீர் மார்பிடத்தை நனைப்பவென்றுமாம். (உ০௩)

1760. திண்பொரு ளெய்த லாகுந் தெவ்வரைச் செருக்க லாகும், நண்பொடு பெண்டிர் மக்கள் யாவையு நண்ண லாகும், ஒண்பொரு ளாவ தையா வுடன்பிறப் பாக்க லாகா, எம்பியை யீங்குப் பெற்றே னென்னெனக் கரிய தென்றான்.

[1] எம்பி : முன்னிலைப்படர்க்கை.

(இ - ள்.) ஐயனே! எய்தலாம்; செருக்கலாம்; நண்ணலாம்; ஆக்கலாகா ஒண்பொருளாவது உடன்பிறப்பு. இத்தன்மையையாகிய நின்னை இவ்விடத்தே பெற்றேன்; எனக்கு இனி அரியதில்லையென்றானென்க. (உ০௪)

(வேறு)

1761. தேனிற் பாலெனச் செல்வன் றம்பியோ
டானி யம்பல கழிய வாயிடை
வேனிற் குன்றெனத் தோழர் வெந்துமெய்
ஊனி னைகின்றார் செய்வ தன்னினார்.

---

1760. தெவ்வரை - பகைவரை. செருத்தல் - அழித்தல். நண்ணலாகும் - அடையமுடியும். ஆக்கலாகா ஒண்பொருளாவது உடன்பிறப்பாகும். ஐயா - ஐயனே; என்றது நந்தட்டனை; விளி. எம்பியாகிய நின்னையீங்குப்பெற்ற எனக்கு அரியது என்என்றான்; "எம்பி நீயுளை, யாவ தேவலி", "தம்பியுடையான் பகையஞ்சான்" (கம்ப. அயோமுகி. 88, இந்திரசித்துவதை. 69); "இன்றுனைத் துணையாப் பெற்றே னெம்பிரா னருளும் பெற்றேன், ஒன்றெனக் கரிய துண்டோ" (கந்த. வள்ளி. 254)

(மேற்.) அடி, 4 : இ-வி. பொது. 6; மு : நன். பொது. 29, மயிலை; சங்கர.

(உரை) [1] இங்கே, 'எம்பி' என்பது முன்னிலைப் படர்க்கையாக வந்தாற்போல, "எந்தை வல்லதி யாவர்வல் லாரென" (கம்ப. சடாயு காண். 40) என்பதில் 'எந்தை' என்பதும் வந்திருத்தல் காண்க.

1761. தேனிற் பால்போல; சீவக. 1915, 2077; "பாலொடு தேன் கலந் தற்றே" (குறள், 1121); "ஆன்முலைப் பிறந்த வானிற வமிர்தம், மலைப்பெய் நெய்யொடு தலைப்பெய் தாங்கு" (பெருங். 2. 8 : 11-2);

**(இ - ள்.)** சீவகனுக்கு நந்தட்டனுடனே தேனிடத்துப்பால்போலே இனிதாகப் பலபொழுது கழியாநிற்க, அவ்விராசமாபுரத்தே, தோழர் வேனிற்குன்றென மனங்கொதித்து உடம்பில் ஊன்மெலிகின்றவர், செய்யுங்காரியத்தை நினைத்தாரென்க.

ஊனின் : இன் அசை. (உ०௬)

1762\. (௧) நாடு மின்னினி நாங்கள் செய்வதென்
றீடி லிருந் தெண்ணி நால்வரும்
ஆடு மஞ்ஞையஞ் சாயற் றத்தைமெய்
வாட லொன்றிலள் வஞ்ச மாங்கொலோ.

1763\. (௨) கள்ள முண்டெனிற் காண்டு நாமென
மெள்ள வெய்தினர் வினவக் கூறினள்
வள்ளற் குற்றதும் மறைந்த வண்ணமும்
வெள்ளி வெண்மலை வேந்தன் பாவையே.

இவையிரண்டும் ஒருதொடர்.

(௧) நாங்கள் : கள் பகுதிப்பொருள்விகுதி.

**(இ - ள்.)** தோழன்மாரெல்லாரும் வருத்தத்தோடேயிருந்து அங்ஙனமெண்ணி இனி 'நாம் செய்யுங்காரியத்தைத் துணிமின்' என்றுகூறி, தத்தை, வருத்தமில்லாளாதலின் அவன்கரந்துறைகின்றுனே அங்ஙனங் கரந்துறைதலுண்டாயின் நாம்காண்பேமென்று துணிந்து மெல்லச் சென்று அவர்கேட்ப அவள் அவன்கரந்திருக்கிறபடியையும், அவனுக்கு அவ்விடத்துற்ற நன்மைகளையுங் கூறினளென்க. (உ०௬ - எ)

---

"நெய்த்தலைப் பால்கலந் தனைய நேயத்தான்" (கம்ப. கலன்காண். 3). செல்வன் : சீவகன். தம்பி : நந்தட்டன். பல ஆனியம் - பல நாட்கள் ; சீவக. 359. கழிய - நீங்க. ஆயிடை - அவ்விராசமாபுரத்தே. வேனிற் குன்றென வெந்து - வேனிற்காலத்து வெம்மை கொண்ட மலையைப்போல மனம்கொதித்து. தோழர் : பதுமுகன் முதலாயினர். மெய்யின் ஊன் நைகின்றவர் ; நைதல் - மெலிதல். தோழர் உன்னினர்.

1762\. நால்வரும் - பதுமுகன், புத்திசேனன், சீதத்தன், தேவதத்தன். செய்வது நாடுமின் - செய்யவேண்டியதை ஆராயுங்கள். என்று - என்றுகூறி. ஈடு - வருத்தம். மஞ்ஞைபோலும் சாயலையுடைய தத்தை.

1763\. கள்ளம் - வஞ்சனை. நாம் காண்டும் என எய்தினர். வள்ளற்கு : சீவகனுக்கு. மறைந்த வண்ணம் - சீவகன் மறைந்திருக்கின்ற தன்மையையும். வேந்தன் பாவை : கலுழவேகன் மகளான காந்தருவதத்தை. பாவை கூறினள்.

1764. மற்ற வள்சொலக் கேட்ட மைந்தர்கள்
இற்ற தம்முயி ரியல்பிற் பேர்த்தவட்
பெற்ற மாந்தரிற் பெரிது மெய்குளிர்ந்
தற்ற மன்மையி னவல நீங்கினார்.

(இ - ள்.) அவள்கூறக்கேட்ட மைந்தர்கள், பின்னைப் போன உயிரை முறையான்மீட்டு அவ்விடத்தே பெற்ற மாந்தரைப்போலே மெய் குளிர்ந்து அக்கூற்றுப் பொய்யன்மையின், வருத்தம் நீங்கினாரென்க. (உ௦அ)

1765. திருவின் சாயறன் சீற டிச்சிலம்
புருவக் குஞ்சிவா யுறுத்தி யொய்யென
உருகு முள்ளத்தி னுடம்பு வீங்கினார்
பருகு காதலிற் பாடி யாடினார்.

இன், பொரு. சிலம்பு : ஆகுபெயர் ; [1] அடியைநோக்கி வணங்கி.

(இ - ள்.) அங்ஙனம் அவர்வருத்தம் நீங்குதலின், வணங்கி அவனிடத்து அன்பால் உருகுமுள்ளத்தால் உடம்புபூரித்தார் ; அவனைக் காண்பேமென்னுங் காதலாற் பாடியாடினாரென்க. (உ௦கூ)

(வேறு)

1766. பைத்தர வத்திரை சிந்திய பல்கதிர்
மொய்த்தெரி நித்திலம் வைத்தன பல்லினள்
இத்திரு வின்னுரு வந்தொழு தார்தம
தெத்துய ருங்கெடு மென்றின சொன்னார்.

---

1764. அவள் : காந்தருவதத்தை. மைந்தர்கள் : தோழர்கள். இற்றதம் உயிர் - போன தமது உயிரை. பேர்த்து - மீட்டு. அவண் - அவ்விடத்தே. மாந்தரின் - மனிதரைப்போல. அற்றம் அன்மையின் - காந்தருவதத்தை கூறியது பொய்யன்மையாலே. அவலம் - வருத்தம்.

1765. சாயல் : காந்தருவதத்தை. உருவம் - அழகு. அடிச் சிலம்பைக் குஞ்சிவாய் உறுத்தி ; குஞ்சிவாய் - தம் தலையிடத்தே. உறுத்தி - பொருத்தி. உருகும் உள்ளத்தின் - சீவகனிடத்து உள்ள அன்பால் உருகுகின்ற மனத்தால். பருகுகாதல் : "பருகு வன்ன காத லுள்ளமொடு" (அகநா. 399 : 4)

(உரை) [1] அடியைத் தீண்டலாகாமையின் இவ்வாறு கூறினார்.

1766. அரவத்திரை பைத்து - ஒலியையுடைய கடலினது அலை பொங்கி. கதிர் - கிரணம். எரிநித்திலம் - விளங்குகின்ற முத்துக்களை. சிந்திய நித்திலம். வைத்தன - வைத்தாற்போன்ற. பல்லினளாகிய இத்திருவென்றது காந்தருவதத்தையை. என்று இன ; இன = இன்ன - இத்தன்மையன.

(இ - ள்.) அரவத்திரை பொங்கிச் சிந்திய விளங்குகின்ற நித்தி லத்தை வைத்தாற்போலும் பல்லினளாகிய இத்திருவின்வடிவைத் தொழுதாருடைய எல்லாத்துயருங் கெடுமென்று இத்தன்மையன கூறினு ரென்க. (உ௬௦)

1767. ஐயனை யாமவ ணெய்துவ மாயிழை
நொய்தி னுரைபொரு ளுண்டெனி னெய்தென
மையெழுத் தூசியின் மாண்டதொர் தோட்டிடைக்
கைவளர் கோதை கரந்தெழுத் திட்டாள்.

(இ - ள்.) ஆயிழாய் ! யாம் அவ்விடத்தேசென்று ஐயனைச்சேர்வேம்; சேர்ந்தாற் கூறுங் காரியமுளதேற் கடிதிற்கூறெனு, அவள் மையைத் தோய்த்தெழுதும் எழுத்தையுடைய எழுத்தாணியாலே தோட்டிடையிலே எழுத்தைக்கரந்து கடிதாக எழுதினுளென்க.

மை - மஷி. அவ்வெழுத்தறிந்தாலும் பிறர் வாசியாதபடியெழுதி னுள். கை - கற்பொழுக்கம். (உ௬௧)

1768. ஆங்குருக் காரரக் கிட்டதன் மீமிசைப்
பூங்குழை யாற்பொறி யொற்றுபு நீட்டத்
தேங்குழ லாடொழு தாடிசை செல்கெனப்
பாங்கரங் குப்படர் குற்றன ரன்றே.

(இ - ள் ) தேங்குழாள் அங்ஙனமெழுதி அரக்கிட்டு அதன்மேலே காதிற்குழையாலே இலச்சினையிட்டு இஃது அவனிருக்கின்றதிசையே செல்கவெனத் தெய்வத்தைத்தொழுதாள் ; தொழுது அதனை நீட்ட, தோழன்மார் அவ்விடத்தே போகலுற்றாரென்க.

[1] நபுலனும் விபுலனும், [2] குரவரைநோக்கிச் சிலபிள்ளைகள்நிற்க வேண்டுமென்றலின், நின்றார். (உ௬௨)

---

1767. ஐயனை : சீவகனை. ஆயிழை : காந்தருவதத்தை ; விளி. பொருள் உண்டெனின் நொய்தின் உரை என - சீவகற்குக் கூறும் காரியம் உளதாதலைல் விரையச் சொல்லுவாயாக என்று தோழர்கூற. ஊசி - எழுத்தாணி. தோடு - பூவிதழ். கைவளர் கோதை - கற்பொழுக் கம் வளர்கின்ற காந்தருவதத்தை. எழுத்து காந்து இட்டாள் - எழுத் தைப் பிறர் வாசியாதபடி மறைத்து எழுதினுள். கோதை, ஊசியால் தோட்டிடைக் கரந்து நொய்தாக இட்டாள்.

1768. உருக்கார் அரக்கிட்டு எழுதிய தோட்டின்மீது உருக்குத லமைந்த அரக்கையிட்டு. மீமிசை - மேலே ; ஒருபொருட் பன்மொழி. குழையால் - குண்டலத்தால். பொறி ஒற்றுபு - முத்திரையிட்டு. குழ லாள் : காந்தருவதத்தை ; திசை - சீவகனிருக்கின்ற திசைக்கு. குழலாள், அரக்கிட்டு, பொறியொற்றித் திசைசெல்கெனத் தொழுதாளாகி நீட்ட. பாங்கர் - தோழன்மார். படர்குற்றனர் - போகலுற்றார்.

(உரை) [1] இவர்கள் சீவகன்தம்பியர். [2] குரவரை நோக்கி - தாய் தந்தையருக்காக.

1769. வேந்திரி யக்கணை வித்திய வெஞ்சிலைக்
காய்ந்திரிக் கும்புரு வக்கருங் கண்ணியர்
ஆய்ந்தரிக் குந்நற வம்மலர் மாலையை
வேய்ந்தரிக் கும்மிஞி றூர்ப்ப விடுத்தாள்.

(இ - ள்.) வேந்து இரிய வித்துதற்குக் காய்ந்து சிலையிற்றங்குங் கணையைக்கெடுக்கும் புருவத்துட்டடங்குங் கண்ணியராலே ஆராய்ந்து தீமணங்களைந்து தொடுக்கும் மாலையைச் சூழ்ந்து மேயுமிஞிறூர்ப்ப விடுத்தாளென்க.

தன்றலையைச்சாய்த்துப் போமென்றலின், மிஞிறூர்த்தது. (உகரு)

(வேறு)

1770. (க) அலங்கு வெண்மதி யைப்பசி யடையவப் பகலே
நிலங்கொண் டோங்கின நிரம்பின புகர்சுழி யுடைய
உலம்பி முன்னிரு தாள்களு முமிழ்வன போல்வ
விலங்கு பாய்வன விடுகணை விலக்குவ கலிமா.

1771. (உ) அள்ளற் சேறரு மணல்புன லருவரைப் படினும்
உள்ளம் போற்செல்வ வுரனசை வில்லன வமருட்
கொள்ளி மண்டிலம் போற்கொடி படத்திரிந் திடுவ
வெள்ளி மால்வரைத் தாழ்வதின் மேம்படப் பிறந்த.

1769. வேந்து இரிய வித்திய காய்ந்து - அரசர் கெடும்படி வித்துதற்குக் கோபித்து. சிலையிற் கணையை இரிக்கும்; இரிக்கும் - கெடுக்கின்ற. கண்ணியர் - மகளிரால். ஆய்ந்து அரிக்கும் - ஆராய்ந்து தீயவற்றைக் களைந்து தொடுக்கின்ற. நறவம் - தேனையுடைய. வேய்ந்து அரிக்கும் மிஞிறு - சூழ்ந்து மேய்கின்ற வண்டுகள்.

1770. அலங்கு - விளங்குகின்ற. ஐப்பசி - அச்சுவதிநாள். அப்பகலே - அன்றே. நிலம்கொண்டு ஓங்கின - பூமியிற் பிறந்துவளர்ந்தன. புகரையும் சுழியையும் உடைய ; புகர் - புள்ளி. உலம்பி-முழங்கி. தாள் - கால். விலங்கு பாய்வன - குறுக்கே பாய்வன. விடுகணை விலக்குவ - தம்மேலிருந்து விடும் அம்பைப் பின்னிடச் செய்வன. குதிரையின் செலவிற்குக் கணை; ''கணைவிடு விசைய'' (பெருங். 1. 48 : 8). கலிமா - குதிரை. இதுமுதல் மூன்று பாடல்கள் குதிரைப்படையின் வருணனை.

1771. அள்ளற்சேறு : இருபெயரொட்டு; அள்ளல் - செறிவுமாம்; சீவக. 929. உள்ளம் போற்செல்வ - தம்மீது ஏறிய வீரரது மனம்போலச் செல்வன; ''உள்ளம் போல வுற்றுழி யுதவும், புள்ளியற் கலிமா'' (தொல். கற்பு. 53); '' மேலோ ருள்ளம் போல நூலோர், புகழப் பட்ட போர்வல்

1772. (ரு) ஈரைஞ் ஞூற்றினை யிருபதின் முரணிய தொகைய
வீர ரேறின விளங்கொளிப் பக்கரை யமைந்த
தாரும் புட்டிலு மரற்றுவ சாமரை யணிந்த
ஓருங் கூடின மள்ளரு மொலித்தெழுந் தனரே.

இவை மூன்றும் ஒரு தொடர்.

(இ - ள்.) மதி அசுவதி நட்சத்திரத்தைச் சேர அற்றைநாளிலே பிறந்து வளர்ந்தன; புகரையும் சுழியையுமுடையன; காலைக் கால்வன போல்வன; குறுக்குப்பாய்வன; தம்மேலிருந்தெய்த அம்பைப் பின்னிடுவன; சேறுமுதலியவற்றைச் செல்வன; உரன்கெடாதன; கொள்ளி வட்டம்போல் இடையறுமல் திரிவன; பிறந்தன; அமையப்பட்டன; அரற்றப்பட்டன; அணியப்பட்டனவாய் இருபதினுயிரமென்னுந் தொகையையுடைய கலிமா வீரரேறப்பட்டன வந்துகூடின; மற்றுள்ள வீரரும் எழுந்திருந்தாரென்க.

புட்டில் - கெச்சை. ஓரும் : அசை. (உகசு - சுா)

(வேறு)

1773. வடித்த போத்தொடு வன்செல லத்திரி
கடுத்த வொட்டகங் காற்செல்வ யாவையும்
நொடிப்பின் மாத்திரை நூற்றுவில் லேகுவ
எடுத்த பண்ட மியைந்துட னென்பவே.

புரவி" (பெருங். 3. 20 : 26-7). உரன் அசைவில்லன - வன்மை கெடாதன. அமர் - போர். மண்டிலம் - வட்டம்; சீவக. 448. கொடிபட - ஒழுங்குண்டாக. தாழ்வதில் - சரிவில். மேம்பட - மேன்மையுண்டாக.

1772. ஈரைஞ்ஞூற்றினை இருபதின் முரணிய தொகை : இருபதினுயிரம். பக்கரை - குதிரைக்கலனை. தாரும் புட்டிலும் அரற்றுவ; "பொன்னரிப் புட்டிலுந் தாரும் பொங்குபு.........புரவிமொய்த்தவே" (சீவக. 2216); தார் - கிண்கிணிமாலை. புட்டில் - கெச்சை; "அரிபெய் புட்டிலார்ப்ப.........பாய்பரி நன்மா" (அகநா. 122 : 19-20); "அரிபெய் புட்டிலார்ப்ப" (பெருங். 3. 20 : 25). அணிந்தவாய்க் கூடின. ஓரும் : அசை. மள்ளர் - வீரர்.

1773. போத்து - எருது. வன்செலல் - வலிய செலவையுடைய. அத்திரி - கோவேறு கழுதை. கடுத்த - விரைந்து செல்லுதலையுடைய. கால்செல்வ - காற்றைப்போல விரைவாகச் செல்வன. நொடிப்பின் மாத்திரை - ஒரு நொடியில்; இன் : அசை. இயைந்து உடன்பண்டம் எடுத்த- மனம் பொருந்தி ஒருசேரப் பண்டத்தைச் சுமந்தன. என்ப, ஏ : அசைகள்.

வடித்தபோத்து - பண்ணின எருது. அத்திரி - கோவேறு கழுதை. கடுத்த - கால்கடிய. இன் : அசை.

(இ - ள்.) ஒரு நொடியளவிலே நூறென்னுமெண்ணையுடைய விற்கிடை போவனவாகிய போத்து முதலியனவும் பிறவும் மனம் பொருந்திச் சேரப்பண்டத்தைச் சுமந்தனவென்க. (உகஎ)

1774. ஞாலம் விற்பன பைங்கிளி நன்னிறத்
தாலு மாபவ ளக்குளம் பார்ந்தன
காலி னொய்யன கண்வெளவு காட்சிய
நால்கு பண்ணினர் நால்வரு மேறினர்.

(இ - ள்.) விற்பன ; ஆர்ந்தன ; நொய்யன ; காட்சியனவாகிய கிளி நிறத்து ஆலுமா நான்குபண்ணினர் ; அவற்றிலே நால்வரும் ஏறினரென்க.

நால்கு ; இது பெயர்த்திரிசொல் ; "பால்புரை புரவி நால்குடன் பூட்டி" (பொருந. 165) என்றார்பிறரும். (உகஅ)

1775. நாளும் புள்ளு நயத்தகு நன்னிலைக்
கோளு மோரையுங் கொண்ட நிமித்தமும்
ஆளு மாந்தரி னாய்ந்துகொண் டாயிடைத்
தாளி னூக்குபு சாத்தொ டெழுந்தவே.

கொண்டநிமித்தம்-பறவையொழிந்தனகொண்டநிமித்தம். கொண்டு-கொள்ள.

(இ - ள்.) அவர் அங்ஙனமேறி நயக்கத்தக்க நாள்முதலியவற்றை எப்பொழுதும் 'ஆளுமாந்தரைப்போல ஆய்ந்துகொள்ளாநிற்க, எருது முதலியன காலாலே முயன்று அவ்விடத்துப்போகின்ற சாத்துடனே போயினவென்க.

---

1774. பைங்கிளிநன்னிறத்து மா ; சீவக. 1860. ஆலும் - ஒலிக்கின்ற. காலின் நொய்யன - காற்றைக்காட்டிலும் வேகமுடையன. விற்பனவும், ஆர்ந்தனவும், நொய்யனவும், காட்சியனவுமாகிய மா நால்கு ; மாநால்கு : "நால்குடன் பூட்டி" (பெரும்பாண். 489); "நன்னால்கு பூண்ட கடும்பரி" (அகநா. 104 : 6); பண்ணினர் - ஏறுதற்கு ஏற்ப அமைத்தனர்.

1775. நாளும் புள்ளும் : புறநா. 124 : 1 ; "நாளும் புள்ளுங் கேளா வூக்கமொடு" (தகடூர்.). புள் - பறவையினிடமாக அறியும் நிமித்தம். நயத்தகு - விரும்பத்தக்க. நன்னிலையிலுள்ள கோளையும் ; கோள் - கிரகம். ஓரை - முகூர்த்தம். ஆளும் மாந்தரின் - கைக்கொள்கின்ற மனிதரைப் போல. கொண்டு - கொள்ள ; எச்சத்திரிபு. தாளின் ஊக்குபு - எருது முதலியன காலாலே முயன்று. சாத்தொடு - வணிகர் திரளுடனே ; "சாத்தொடு போந்து" (சிலப். 11 : 190) ; "குதிரையைக் கொண்டு குடநா டதன்மிசைச், சதிர்படச் சாத்தாய்த் தானெழுந் தருளியும்" (திருவா. கீர்த்தி. 27-8)

புறப்பட்டுநின்றுநாட்கேட்டது, போக்கின் விரைவால் (உகக)

1776. பறையுஞ் சங்கும் பரந்தொலித் தார்த்தெழ
உறைகொள் வாளினோ டொண்சுடர் வேன்மினச்
சிறைய ழிந்ததொர் செம்புனல் போன்றவண்
அறைக டற்படை யார்ப்பொ டெழுந்தவே.

(இ - ள்.) பறை ஒலிக்க, சங்கு ஆர்த்தெழ, வாளும்வேலுமின்னக் கடற்படை கரையுடைந்த நீர்போல விரைந்து ஆர்ப்போடெழுந்த வென்க.

உறைதல் கொண்ட வாள். (உஉ0)

1777. காய்த்த செந்நெலின் றாழ்கதிர் நெற்றிமேற்
பூத்த முல்லையின் போது பொழிந்துக
நீத்த நீர்வய லன்னமு நாரையும்
ஏத்தல் சான்முரு டார்ப்ப விரிந்தவே.

(இ - ள்.) முருடு முழங்குதலாலே வயலில் அன்னமும் நாரையுமிரிந் தனவென்க.

தம் கால்பட்டு நெற்கதிரின் றலையிலே முல்லைப்பூத் தேனைச்சொரிந்து சிந்தும்படியென்க. இது நிலமயக்கம். (உஉக)

1778. அளகு சேவலொ டாடியங் காய்க்குலை
மிளகு வார்கொடி யூசல் விருப்புறூஉம்
சுளகு வார்செவித் தூங்குகைக் குஞ்சரம்
இளகு காடிள கப்பரி கொண்டவே.

---

1776. பறை - முழவு. பறை ஒலிக்க, சங்கு ஆர்த்தெழ; "தாழும் பறையொடு சங்கமணந் தியம்ப" (பெருங். 1. 56 : 189). உறைகொள் வாள் - உறையைக் கொண்ட வாளெனினுமாம். மின - மின்ன. சிறை அழிந்ததொர் செம்புனல் போன்று - கரையுடைந்ததொரு புதுநீர்போல; "சிறையழி புனலிற் சென்றுமே னெருங்கி" (பெருங். 1. 46 : 16). அறைதல் - ஒலித்தல். கடல்போலும்படை.

1777. செந்நெல்லினது தாழ்ந்த கதிரின் நெற்றிமேல்; நெற்றி - தலை. பொழிந்து - தேனைச்சொரிந்து. உக - சிந்தும்படி. வெள்ளமாகிய நீரையுடைய வயலில். முருடு - ஒருவகைப்பறை; "சங்கு முருடு மொலிப்ப" (பெருங். 3. 19 : 195). ஆர்ப்ப - ஒலித்தலால். இரிந்த - கெட்டு ஓடின. முருடு ஆர்ப்ப, அன்னமும் நாரையும் இரிந்த.

1778. அளகு - கோட்டானின் பெடை. ஆடி - விளையாடி. அம் - அழகிய. காய்க்குலையையுடைய மிளகுகொடியாகிய ஊசலை; ஊசல் - ஊஞ்சல். விருப்புறூஉம் - விரும்பும். சுளகுபோன்ற செவியையும் தூங்குகையையுமுடைய குஞ்சரம்; சுளகு - முறம்; தூங்குதல் -

இளகுகாடு - தழைத்தகாடு.

(இ - ள்.) கூகைப்பெடை சேவலோடே புணர்ந்து மிளகுகொடி யாகிய ஊசலைவிரும்புங்காடு அசையும்படி யானை அவ்வோசைகளைக் கேட்டுச் செலவு கொண்டனவென்க.

அளகு - காட்டுக்கோழியுமாம் ; " கோழி கூகை யாயிரண் டல்லவை, சூழுங் காலை யளகென லமையா " (தொல். மரபு. 55). [1] இனி, குஞ்சர மிளகுங் காடு இளகும்படி படை பரிகொண்டதென்றுமாம். (உஉஉ)

1779. அருவிக் குன்றமு மைவனச் சாரலும்
குருவி யார்த்தெழு கொய்புனக் கானமும்
திருவிற் றீர்ந்தவர் தேயமுந் தேர்ந்துபோய்
மருவி மாதவர் பள்ளியுள் விட்டதே.

திருவிற்றீர்ந்தவர் - செல்வமில்லாதவர்.

(இ - ள்.) படை குன்றமுதலியவற்றை எதிரவருகின்றானோவென்று தேர்ந்துபோய்த் தாபதப்பள்ளியிலே மருவிவிட்டதென்க. (உஉங)

(வேறு)

1780. வண்டுதுயில் கொண்டுகுயி லாலிமயி லகவி
விண்டுமது விட்டுவிரி போதுபல பொதுளிக்
கொண்டுதளிர் வேய்ந்துசினை தாழ்ந்துநனை யார்ந்தொன்
றுண்டுபொழி லிமையவர்க ளுலகமுறு வதுவே.

தொங்குதல். இளகு காடு இளக - தழைத்த காடு அசையும்படி. பரி கொண்ட - செலவுகொண்டன.

(உரை) [1] இப்பொருளே சிறப்புடையது.

1779. ஐவனம் - மலைநெல். ஆர்த்தெழு - ஒலித்தெழுகின்ற. புனம் - தினைப்புனம். புனத்தையுடைய கானம். திருவின் தீர்ந்தவர் - செல்வத்தி னின்றும் நீங்கியவர். தேர்ந்து - சீவகனுள்ளானோ வென்று ஆராய்ந்து. பள்ளியுள் மருவிவிட்டது ; மருவிவிட்டது - படை தங்கிவிட்டது.

1780. ஆலி - கூவி. அகவி - கூவி. விரிபோது பலபொதுளி விண்டு மதுவிட்டு ; பொதுளி - தழைத்து. விண்டு - அலர்ந்து. விட்டு - விடுதலால். தளிரைக் கொண்டுவேய்ந்து ; வேய்ந்து - அணியப்பட்டு. சினை - கிளை. நனை - அரும்பு. இமையவர்கள் உலகமுறுவதொரு பொழில் உண்டு ; உறுவது - ஒப்பது.

(இ - ள்.) துயில்கொண்டு ஆலிப் போதுபலபொதுளி மதுச்சொரிதலாலே மழையென்று மயிலகவித் தளிரைக்கொண்டுவேய்ந்து தாழ்ந்து ஆர்ந்து தேவருலகை யொப்பதொருபொழில் ஆண்டுண்டென்க.

எச்சங்களைச் செயப்படுபொருளாக்குக. (உஉச)

1781. காவிகமு நீர்குவளை யாம்பல்கடிக் கமலம்
தூவிமட நாரைதுணை யன்னம்பயின் முதுமீன்
மேவியுறை வண்டினெடு மல்கிவிழை தகைய
வாவியொடு காவினிடை மாந்தர்பதி கொண்டார்.

(இ - ள்.) மாந்தர், காவிமுதலிய பூக்களும், நாரையும், அன்னமும், மீனும் வண்டோடேநிறைந்து விரும்புந்தகைமையையுடைய வாவியோடு கூடிய காவினிடத்தே பதிதல்கொண்டாரென்க. (உஉரு)

1782. ஐயருறை பள்ளியிட மாண்டழகர் காணச்
செய்கழலர் தாரரவ ரெங்குந்திரி கின்றார்
கொய்தகைய பூம்பொதும்பர்க் குளிருமரப் பலகைச்
செய்யவளிற் சிறிதுமிகை சேயவளைக் கண்டார்.

(இ - ள்.) அழகராகிய அவர், அவ்விடத்து இருடிகளுறையும் பள்ளியிடத்தைக்காண்டற்குக் கழலராய்த் தாரராய்த் திரிகின்றவர் பூம்பொதும்பரில் மரப்பலகையிலேயிருக்கும் விசயையைக்கண்டாரென்க.

செய்யவளிற்காட்டின்மிகுதி இப்பொழுது சிறிது தூரியவள். குளிரும் : திசைச்சொல். மலர்ப்பலகையும் பாடம். (உஉசு)

---

1781. காவி - நீலோற்பலமலர். கடிக்கமலம் - வாசனையையுடைய தாமரை. தூவி - சிறகு. பயில்கின்ற மீன்; பயிலல் - பழகுதல். மல்கி - நிறைந்து. விழைதகைய வாவியொடு - விரும்பும் தன்மையையுடைய தடாகத்துடன்கூடிய. கா - சோலை. பதிகொண்டார் - தங்கினார்.

1782. ஐயர் - முனிவர். ஆண்டு - அவ்விடத்து. அழகர் : தோழன்மார். காண - காண்பதற்கு. அழகர், ஆண்டுப் பள்ளியிடத்தைக் காண. கழலராய்த் தாரராய் எங்கும் திரிகின்றவர். பொதும்பர் - சோலையின் மரச்செறிவில். குளிரும் - இருக்கின்ற; சீவக. 494, ந; அடிக். செய்யவளின் - திருமகளைக்காட்டிலும். மிகை - பெருமை; (பி - ம்.) 'மிகு செய்யவளை.' சேயவளை - தூரியவளான விசயையை. மரப்பலகையிற் குளிரும் சேயவளைக் கண்டார்.

1783. (க) அந்நுண்டுகிற் கல்லரத்த மல்குலது வருத்தச்
செந்நுண்டுகி லுத்தரியம் புதைந்துசுவல் வருத்த
மைந்நுண்குழற் சிறுவன்மனம் வருத்தவடி வேற்கண்
கைந்நொண்டன கவற்சிநனிவருத்தக்கலுழ்ந் தாற்ருள்.

1784. (உ) மாசொடுமி டைந்துமணி நூற்றனைய வைம்பால்
பூசுதலு மின்றிப்பிணி கொண்டுபுறந் தாழ
வாசமலர் மறைந்தவழி வாமனடிக் கேற்றித்
தோசமறத் துதிகண்மனத் தோதித்தொழு திருந்தாள்.

**இவையிரண்டும் ஒரு தொடர்.**

**(இ - ள்.)** துகிலிற்ருேய்த்த அரத்தம்போலுங்கல் தன்வெம்மையால் அல்குலாகியவதனை வருத்துதலானும், துகிலாகிய மேற்போர்வையழுந்திச் சுவலை வருத்துதலானும், சீவகன் மனத்தைவருத்துதலானும், அரசனையிழக்கும்படி நிகழ்த்தின ஒழுக்கத்தாலே முகந்துகொண்டனவாகிய கவற்சி வருத்துதலானும் கண்கலுழ்ந்து ஆற்ருளாய் மாசோடு மிடைந்து நீலமணியைக் கம்பியாக்கிலுெலொத்த மயிர் கழுவுதலுமின்றிச் சடையாய்த் தாழ மலரை வாமனடியிலேயேற்றிக் குற்றமறத் தோத்திரங்களையும் மனத்திலோதி வணங்கி மறைந்தவழியிலே இருந்தாளென்க.

[1] கருத்து, சீவகன்வாழ்வே கருதுதலின் மறைதலாயிற்று. (உஉஎ-அ)

1785. சிந்திப்பலென் சிறுவன்றிற மினியென்றெழி னெடுங்கண்
வந்துபனி வார்ந்துமுலைக் கலிங்கமது நனைப்ப
அந்திலிருந் தாளவளுக் கடைந்துமன நடுங்கி
வந்தித்திருந் தார்மகிழ்ந்து காதன்மிக மாதோ.

---

1783. துகிலிற் ருேய்த்த அரத்தம்போலுங்கல்; கல் - நற்செங்கல்லின் வெம்மை; "செங்கற் பொடிக்கூறை வெண்பற் றவத்தவர்" (திவ். திருப்பாவை, 14). அல்குலை வருத்த. துகிலாகிய உத்தரியம். புதைந்து - அழுந்தி. சுவலை வருத்த; சுவல் - தோள்; கலித். 1 : 11, ந. மை - கருமை. சிறுவன் : சீவகன். கைந்நொண்டன கவற்சி - சச்சந்தனிறக்கும்படி செய்த ஒழுக்கத்தால் முகந்துகொண்டனவாகிய கவலை; சீவக. 10, ந. கவற்சி வருத்துதலால் கண்கலுழ்ந்தாற்ருள்.

1784. மிடைந்து - ஒன்ருேடொன்று நெருங்கி. மணி நூற்றனைய ஐம்பால் - நீலமணியைக் கம்பியாக்கிலுற்போன்ற ஐந்து பகுதியுடைய கூந்தல். பூசுதல் - கழுவுதல். பிணி கொண்டு - சடையாகத் திரண்டு. புறம் - பின்னே. மலரை வாமனடியில் ஏற்றி; ஏற்றி - ஏற்கச்செய்து; தூவியென்றபடி. தோசம் அற - குற்றம் நீங்க. துதிகளை மனத்தே ஓதி. மறைந்தவழியில் இருந்தாள்.

(உரை) [1] சீவக. 353, அடிக்.

1785. இனி என் சிறுவன் திறம் சிந்திப்பலென்று; இனி - இப்பொழுது. சிறுவன்திறம் - சீவகன் தன்மையை. கண்ணில் பனிவார்ந்து

(இ - ள்.) அங்ஙனமிருந்தவள், இப்பொழுது என்பிள்ளை திறத்தைச் சிந்திப்பேனென்று சிந்தித்துக் கண்ணிற்பனிவந்து வீழ்ந்து முலையிற் கலிங்கமாகிய அதனை நனைப்ப அவ்விடத்தேயிருந்தாள்; இருந்தவட்கு நம்பிள்ளைகளென்று ஒருகாதல் மிகும்படி அவர்கள் மனநடுங்கி வணங்கிச் சேர்ந்து மகிழ்ந்திருந்தாரென்க.

[1] இவரால் அழுகை மாற்றினள். (உஉகூ)

1786. (க) வரையுடுத்த பள்ளியிட மாகவதின் மேயோள்
விரையுடுத்த போதுறையும் வேனெடுங்க ணாள்கொல்
உரையுடுத்த நாவுறையு மொண்ணுதல்கொ லன்றித்
திரையுடுத்த தேமொழிகொ லென்றுதெரி கல்லார்.

1787. (உ) மங்கலம டிந்ததிரு மாமகளை யொப்பீர்
இங்குவர வென்னைகுலம் யாதடிகட் கென்ன
எங்குலமு மெம்வரவும் வேண்டிலெளி தன்றே
நுங்குலமு நும்வரவு நீருரைமி னென்றாள்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) உடுத்த - சூழ்ந்த.

(இ - ள்.) பள்ளி இருப்பிடமாக அதனுள்ளே மேவினவள், திருமகளோ! நாமகளோ! மண்மகளோவென்றுதெரியாராய், மங்கலங்கெட்ட

---

வந்து; பனி - நீர். வார்ந்து - ஒழுகி. கலிங்கமாகிய அதை. அந்தில் - அவ்விடத்தில். அவளுக்கு : விசயைக்கு. அவளுக்குக் காதல் மிகும்படி, மனநடுங்கி வந்தித்து அடைந்து மகிழ்ந்திருந்தார்; வந்தித்து - வணங்கி.

(உரை) [1] இவரால் - தோழன்மாரால்.

1786. வரை உடுத்த - மலைகள் சூழ்ந்த. பள்ளியே இடமாக; இடம் - இருப்பிடம். மேயோள் - பொருந்தியவள். விரை - வாசனை. போது - தாமரையில். வேல்போலும் நெடுங்கணாள் கொல் : திருமகளோ. உரை - சொல். நாவில் உறையும் ஒண்ணுதல் கொல் - நாமகளோ. அன்றி - அல்லாமல். திரை உடுத்த - கடலை ஆடையாகவுடுத்த. தேமொழிகொல் : பூமிதேவியோ; கொல் : ஐயப்பொருளன. தெரி கல்லார் - அறியாதவராகி.

1787. மடிந்த - கெட்ட. ஒப்பீரென்றது விசயையை நோக்கி; எளி. வரவு என்னை - வருதற்குக் காரணம் யாது? அடிகட்குக் குலம் யாது என்ன; அடிகள் என்பது முன்னிலைக்கண் வந்தது; இச்சொல் பெண்பாற்கும் வரும்; சீவக. 1792, 1884, 1909; "ஏத முண்டோ வடிகளீங் கென்றலும்" (சிலப். 14 : 24); "அடிகள் போக யானுமொருவன்" (பெருங். 3. 8 : 70). என்ன - என்று தோழன்மார் கூற. வேண்டில் - கேட்கவேண்டுமாயின். எளிது அன்று - கூறுதலெளிதாயினும் இவ்வேடத்தாற் கூறலாகாது.

திருவை யொப்பீர், இங்குவந்தவரவு எங்ஙனே? அடிகளுக்குக் குலம் யாதென்றுகேட்ப, எம்குலமும் எம்வரவுங்கேட்கவேண்டிற் கூறுதல் எளிதாயினும் இவ்வேடத்தாற் கூறலாகாது. இனி நுங்குலத்தையும், நும் வரவையும் நீர்கூறுமினென்றுளென்க. (உ௬௦ - ௬௧)

1788. மோட்டுமுது நீர்மலங்கு மொய்த்தவிள வாளை
பூட்டுசிலை யிறவினொடு பொருதுதுயின் மடியும்
ஈட்டமுடை யவர்களுறை யிராசபுர மென்னும்
நாட்டமுடை நகரமெம தாகுமுறை பதியே.

மோட்டுநீரின் மலங்கும், வாளையும், பூட்டின விற்போலுமிறவோடே பொருதுதுயிலும் இராசமாபுரம்.

(இ - ள்.) பொருட்டிரளுடையாருறையும் இராசமாபுரமென்னும் அழகுடைய நகர் எமதுறைபதியாமென்க. (உ௬உ)

1789. பொன்னுடைய மார்பிற்புகழ் மந்திரிபொ லந்தார்ந்
தன்னுடைய நுண்ணுணர்விற் சாகரற்குத் தக்காள்
கொன்னெடிய வாட்கட்குரு தத்தைசீ தத்தன்
மன்னடுங்க வீங்குதிர டோண்மடங்க லன்னோன்.

பொன் - திரு. தன்னுணர்வு - தன் மந்திரநூலிற் கூறியவுணர்வு.

(இ - ள்.) இம்மடங்கலன்னான், அந்நகரில் மந்திரியாகிய சாகரற்குத் தக்க மனைவியாகிய குருதத்தை மகன் ஸ்ரீதத்தனென்றுனென்க. (உ௬௩)

1790. அளப்பரிய நான்மறையி னுனசல னென்பான்
திளைக்குந்திரு வொப்புடைய திலோத்தமைதன் சிறுவன்
விளைத்திரும்பு மேய்ந்தொழிந்த மிச்சில்வரை மார்பன்
இளைப்பலிவன் றேசுரைப்பிற் புத்திசேனிவ் விருந்தான்.

---

1788. மோட்டுநீர் - பெருமையையுடைய நீரில். மலங்கு வாளை இறவு என்பன மீன்வகைகள்; இறவுக்கு வில் உவமை; "பகழியுஞ் சிலையுமான...கயலொடு பச்சிறுப் பிறழும்" (பெரும்பாண். 269-70); "இறவுக் கலித்துப், பூட்டறு வல்விலிற் கூட்டுமுதற் றெறிக்கும்" (அகநா. 96 : 1-2); "முடங்கிறவு, பூட்டுற்ற வில்லேய்க்கும்" (திணை மாலை. 131). ஈட்டம் - பொருட்டிரள். இராசபுரம் - இராசமாபுரம். நாட்டம் - அழகு. எமது உறை பதியாகும்.

1789. மந்திரி - சச்சந்தனுடைய மந்திரி. பொலந்தார் - பொன்னாலாகிய மாலையை யணிந்த. மந்திரியாகிய சாகரற்கு. சாகரற்குத் தக்காள் : உயர்திணையில் நான்கனுருபு வந்தது. கொன் - அச்சம். குருதத்தையின் மகனான சீதத்தன். மன் - அரசர். மடங்கல் - சிங்கம்.

1790. நான்கு மறைகளைக்கற்றவனான அசலன் : சீவக. 1681, அடிக். திளைக்கும் - இடைவிடாமல் தங்கும். இரும்பு......மார்பன் : சீவக.

விளைத்து - தனக்கு ஒரு போரையுண்டாக்கிக்கொள்ளுதலாலே. இரும்புகளெல்லாமேய்ந்து குறைகிடந்த எச்சிலாகிய மார்பனுவான் : சச்சந்தன். 'வளைத்து' என்பது பாடமாயிற் சூழ்ந்தென்க.

(இ - ள்.) இவ்விடத்திருந்தவன், சச்சந்தனுடைய அந்தணனாகிய அசலன் மனைவி திலோத்தமைதன் சிறுவனாகிய புத்திசேனன் ; அவன் புகழைக் கூறில் இளைப்பேனென்றானென்க.

இவன் சேனாபதி. (உ௩௪)

1791. செட்டிதன பாலன்மனை யாள்சினவு வாட்கட்
பட்டநுதன் மின்னினகு பவித்திரைக்குத் தோன்றி
மட்டுமலர் மார்பின்மத யானையெயி றுழுதாங்
கிட்டகுறி தார்திவளப் பதுமுகனிவ் விருந்தோன்.

(இ - ள்.) அரசற்குரிய செட்டியாகிய தனபாலன்மனையாளாகிய பவித்திரைக்குப் பிறந்து தன்மார்பிலே தழும்புந்தாரும் விளங்க இவ்விடத்திருந்தான் பதுமுகனென்க.

நான்கனுருபு அதற்குப்படுபொருளின் பாற்படும். பட்டம் நுதலிலே மின்போலே நகுமென்னும் பெயரெச்சம் பவித்திரையென்னும் நிலப்பெயர் கொண்டது ; "அரவம்புன் சடைமிடைந்த, மின்னனையான்" (திருச்சிற். 125) போல. (உ௩௫)

1792. பொன்னகருள் வேந்தன்பெய ராற்பொறியும் பெற்றான்
வின்மரிய தோள்விசய தத்தனுயிர்க் கவசம்
பின்னரிய கற்பினவள் பிரீதிமதி காதற்
றன்மகனென் யானடிக டேவதத்த னென்பேன்.

2281, 2353 ; புறநா. 180 : 4. தேசு உரைப்பின் இளைப்பல் - இவன் புகழைக்கூறின் இளைப்பேன் ; தேசு - புகழ் ; "சொற்பங்க முறநிமிரிசையின் சும்மையை" (கம்ப. சடாயுகாண். 8). புத்திசேன் - புத்திசேனன் ; சீவக.1140, அடிக். இவ்விருந்தான் : சீவக. 1327, அடிக்.

1791. மனையாளாகிய பவித்திரை. பட்டம் : "பட்ட நெற்றியிற் பொட்டிடை யேற்றும்" (பெருங். 4. 12 : 88). எயிறு - தந்தம். குறி - தழும்பு. யானையெயிறுழுத குறி : சீவக. 817. குறியும் தாரும் திவள ; தார் - மாலை. திவள - விளங்க. இவ்விருந்தோன் பதுமுகன்.

1792. நகர் : இராசமாபுரம். வேந்தன் : சச்சந்தன். பெயராற் பொறியும் - பெயரோடு கூடிய பட்டத்தையும் ; "தென்னவன் பெயரொடு சிறப்புப் பெற்ற" (சிலப். 16 : 109). பொறி - பட்டம் ; ஆகுபெயர். வின்மரியதோள் : சீவக. 1556, 1620, அடிக். மரிய - மருவிய ; "தழிய சாயலவர்" (சீவக. 2026). சச்சந்தனுயிர்க்குக் கவசம் போன்றவன்

ஒரு பெயரை யெழுதப்படுதலிற் பட்டத்திற்குப் பொறியென்று பெயர் கூறினர் ; ஆகுபெயர்.

(இ - ள்.) அடிகளே! அந்நகரிலே அரசன் பெயராற் பட்டமும் பெற்றவன் ; அரசனுயிர்க்கு ஒருகவசம் ; விசயதத்தனென்னும் இயற் பெயரையுமுடையவன் ; அவன் மனைவி மகளிரான் மலைத்தற்கரிய கற்பினையுடைய பிரீதிமதி; அவள் தன் காதன்மகனேனாகிய யான் தேவதத்தனென்னும் பெயரை யுடையேனென்க.

நால்வர்க்குந்தாயரைக்கூறி அவர்புதல்வரென்றது, மகடூஉவாற் குலந்தூய்மை பெறுதலானும் மகடூஉவிற்குக் கூறுதலானுமென்றுணர்க. (உ௱௬)

1793. எங்கள்வினை யாலிறைவன் வீடியவஞ் ஞான்றே
எங்களுயிர் நம்பியொடு யாங்கள்பிறந் தேமா
எங்கடமர் நம்பிக்கிவர் தோழரென வீந்தார்
எங்கெழிலென் ஞாயிறென வின்னணம் வளர்ந்தேம்.

(இ - ள்.) அரசன்பட்ட அற்றைநாளிலே யாங்கள் முற்பவத்திற் செய்த நல்வினையாலே எங்களுயிர்போலுநம்பியோடே கூடவந்து பிறந்தேமாக, எங்கள் தமர் இவர் நம்பிக்குத் தோழரென்று எம்மை யீந்தார் ; யாமும் எங்கெழிலென் ஞாயிறென வளர்ந்தேமென்க.

அரசன் சுற்றத்தையெல்லாம் கட்டியங்காரனழிக்கின்றமைநோக்கி யும் கந்துக்கடன் தமக்கு இன்றியமையாமைநோக்கியும் இவர்கள்தமர் தோழரென ஈந்தார் ; இங்ஙனஞ்செய்வித்தது தோழர்முற்பிறப்பிற்செய்த நல்வினையென்றுணர்க. இனி, "அழுகுரல்" (சீவக. 330) என்னுங் கவியில், "உழிதருபெருநிதி" என்றதனைத் தோழராக்கி, இவரைக் கட்டியங்காரன் கந்துக்கடற்குக் கொடுத்தானென்பார்க்கு இக்கவியில், 'எங்கடமர்தோழரெனவீந்தார்' என்றல் பொருந்தாமையுணர்க. (உ௱எ)

---

விசயதத்தன். பின்னரிய - மகளிரால் பொருதற்கரிய. பிரீதிமதி : விசயதத்தன் மனைவி. மகனென்யான் - மகனாகவுள்ளேன் யான் ; என் : தன்மையை உணர்த்திநின்றது ; "அந்தணன் மகனென்" (பெருங். 3. 6 : 195). அடிகள் : விசயை ; விளி.

1793. வினையால் - தீவினையால். இறைவன் : சச்சந்தன். வீடிய - இறந்த. உயிர்போலும் நம்பியொடு : சீவகனோடு. பிறந்தேமாக. தமர் - உறவினர். நம்பிக்கு : சீவகனுக்கு. இவர் என்றது அங்குநின்ற தோழரைச் சுட்டியது. எங்கெழிலென்ஞாயிறு : "எங்கெழிலென் ஞாயி றெமக்கேலோ ரெம்பாவாய்" (திருவா. எம்பாவை, 19) ; "எங்கெழி லென் ஞாயி றெமக்கு" (தனிப்பாடல்.) ; ஞாயிறு - சூரியன்.

(மேற்.) அடி, 1 : தொல். பெயர். 15, ந.

1794. யாண்டுநிறைந் தேகியபி னந்தனவற் கிளையார்
மாண்டகுணத் தார்நபுல விபுலரொடு மன்னும்
ஈண்டவளர்ந் தேந்தவிசி னுச்சிமிசை யெய்தித்
தீண்டரிய வெம்மையொடு திக்கயங்க ளெனவே.

'யாண்டு நிறைந்தேகியபின்' என்பதனையும், 'மாண்டகுணத்தார்' என்பதனையும் மூவர்க்குங் கூட்டுக.

(இ - ள்.) யாங்கள்பிறந்து ஓராண்டுகழிந்தபின்பு பிறந்த, அவனுக் கிளையாராகிய நந்தன் நபுலவிபுலரோடே யாங்களும் திக்கயங்களென்னும் படி எண்மராய்த் தவிசினெய்திப் பகைவர் தீண்டற்கரிய வெம்மையோடே மிகவுங்கடுக வளர்ந்தேமென்க.

'இளையான்' என்பது பாடமாயின், அவனுக்கிளையான் நந்தன்; அங்ஙனமாண்ட குணத்தார் நபுலவிபுலரென்க. அங்ஙனம் மாண்ட குணத்தாரெனவே தம்பியரென்னும் பொருள் தோன்றிற்று. (உ௲அ)

1795. விற்றொழிலும் வாட்டொழிலும் வீணைபொரு தொழிலும், மற்றொழிலுந் தேர்த்தொழிலும் வாரணத்தின் றொழிலும், நற்றொழில வாசியொடு நன்கலைக ணீந்திக், கற்றனங்கள் யாமுமுடன் கற்பனக ளெல்லாம்.

பொருதல் - தடவுதல். நன்கலைகள் - நூல்கள்.

(இ - ள்.) யாமும் அவருடனேகூடக் கற்கப்படும் விச்சைகளெல்லாம், முதலில் நன்கலைகளிலேநீந்திப் படைத்தொழில்களையுங்கற்று அவற்றிற்குப் பின்பு வீணைத்தொழிலையுங்கற்றேமென்க.

விற்றொழில் முதலியவற்றைக் குதிரையின்றொழிலோடே கற்றேமென்க. [1] அ : அசை. (உ௲கூ)

1794. யாண்டு = ஆண்டு - ஒருவருடம். அவற்கு : சீவகனுக்கு. குணத்தாராகிய நபுலவிபுலர். அவற்கு இளையாராகிய நந்தன், நபுலன், விபுலன் என்பவரோடு. மன்னும் - மிகவும். ஈண்ட - விரைய; பெருங். 3. 13 : 26. தவிசு - ஆசனம். தீண்டரிய - தீண்டுதற்கரிய; 'எண்மர்' என்னும் தொகை தோன்ற 'திக்கயங்களெனவே' என்றார்.

1795. மல்தொழில் - மற்போர். வாரணம் - யானை. வாசி நற்றொழிலொடு; வாசி - குதிரை. கற்றனங்கள் - கற்றேம்; கள் : அசை. உடன் - சீவகனுடனும் தம்பியருடனும். கற்பனகள் : சீவக. 2489; "செய்வனகள் செய்யக்கண்டு" (தே. திருநா. ஆவடு. 2); "திருவாள னென் மகளைச் செய்தனகள்" (பெரியதிரு. 5. 5 : 1)

(மேற்.) அடி, 4 : தொல். பெயர். 15, ந.

(உரை) [1] நற்றொழில என்பதிலுள்ளது.

1796. (க) வெஞ்சிலையின் வேடர்தொறு மீட்டுவிசும் பேகும்
விஞ்சையரை யன்மகளை வீணைபொரு தெய்திக்
குஞ்சரமும் வென்றுகுண மாலைநல னுண்ட
நம்பியவ னுமமெவ னென்னினிது வாமே.

1797. (உ) கந்துக்கட னென்றநகர்க் காதிமுது நாய்கன்
முந்திப்பெறப் பட்டமகன் மூரிச்சிலைத் தடக்கைச்
சிந்திப்பவ ரவலமறு சீவகனென் றேழுன்
அந்திலொரு நாளவனை யரசனொரு தவற்றால்.

1798. (௩) தொடிகடவழ் வீங்குதிர டோளிறுக யாத்துக்
கடிகடவழ் குழன்மகளிர் கசிந்துமனங் கரியக்
கொடிகடவழ் மாடநகர்க் கொல்லவென மாழ்கி
இடிகடவழ்ந் திட்டபட நாகமென வீழ்ந்தாள்.

இவைமூன்றும் ஒருதொடர்.

**(இ - ள்.)** அங்ஙனங்கற்றுப் பின் நிரைமீட்டுக் கலுழவேகன்மகளை யாழாலே வென்றெய்தி யானையையும் வென்று குணமாலைநலனுண்ட நம்பி என் தோழனும்; அவனுமம் யாதெனிற் சிந்திப்பவர் அவலமறு தற்குக்காரணமான சீவகனென்னுமிதுவாம். அந்நகரிடத்தே ஒரு

---

1796. சிலையின் - வில்லால். வேடர்கைக்கொண்ட தொறுவை மீட்டு; தொறு - பசுக்கூட்டம். விசும்பு ஏகும் - ஆகாயத்தில் சஞ்சரிக்கின்ற. விஞ்சை அரையன் : கலுழவேகன். மகளை : காந்தருவதத்தையை. குஞ்சரம் : அசனிவேகமென்னும் யானை. நலன் - இன்பத்தை. நம்பியாகிய அவனது நாமம் எவன் என்னின்; எவன் - யாது.

1797. கந்துக்கடனென்ற நாய்கன். முந்திப்பெறப்பட்ட மகன் - தான் முற்படப்பெற்ற பிள்ளை. தடக்கையையுடைய சீவகன். அவலம் - துன்பம். அந்தில் - அவ்விராசமாபுரத்தே. அவனை : சீவகனை. அரசன் : கட்டியங்காரன்.

1798. தொடி - தோள்வளை. சீவகனது தோளை இறுக யாத்து. யாத்து=யாக்க - கட்ட; எச்சத்திரிபு. கடிகள் - வாசனை; கள் : அசை. அது கண்ட மகளிரது மனம் கசிந்து கரிய. நகரில் கொல்ல என; என - என்று தேவதத்தன் கூறினவளவிலே. மாழ்கி - மயங்கி. தவழ்ந்திட்ட - உடம்பு முழுவதும் தவழ்ந்த. விசயை வீழ்ந்தாள். அடி, 3-4 : "பகையி னொருங்கிக், கட்டெரி கொளீஇக் கரந்தன ரெனவும், ஒட்டிய தோழற் குற்றதை யறியான், பகையடு தறுக ணிமையகன்று பிறழ, உரை பெயர்த்துக் கொடாஅன் யூகி மாழ்க" (பெருங். 2. 9 : 149 - 153)

நாளிலே அரசனுடையதொரு தவற்றாலே கந்துக்கடனென்ற நாய்கன், தான் முற்படப்பெற்ற மகனுடைய ரூரிச்சிலைத் தடக்கையையுடைய தோளைச் சிலைத்தொழில் செய்யாமல் இறுகும்படி மனத்தைப்பிணிக்க, பின்பு அவ்வரசன் அவனை மகளிர் மனங்கரிய நகரிலேகொல்லவென்று தேவதத்தன்கூற, விசயைமாழ்கி வீழ்ந்தாளென்க.

கொல்லக் கொலைக்களங்குறுகலுமென்னப் புகுகின்றான், கொல்ல வென்றவளவிலே வீழ்ந்தாள். அரசன்கொல்லும்படி அவன்சென்று கொலைக்களங்குறுகலுமெனப் பொருளுரைக்க. நாய்கன் பிணிக்கவென்க. இடிகள் உடம்பெங்குந் தவழ்ந்த நாகமென்றது இல்பொருளுவமை. "மோட்டுமுது நீர்" (சீவக. 1788) என்னுங் கவிதொடங்கிக் கொல்ல வென்ற சொல்லோடே முடிக்க. ஒரு பெண்ணுயிரைக் காத்தவனைக் கோறல் அறனன்மையின், அரசன் தவறென்றார். யாத்து - யாக்க. (உ௪௦ - ௪உ)

(வேறு)

1799. மாதவப் பெருமை வண்ண மாநகர் நம்பிக் குற்ற
ஏதத்தைக் கேட்ட லோடு மிருகணும் பிறழ்ந்து மாழ்கிக்
காதற்றம் மகனுக் குற்ற நவையெனக் கலங்கி வீழ்ந்தார்
ஆதலா னங்கை யாரே யருள்பெரி துடைய ரென்றார்.

(இ - ள்.) நகரிலே நம்பிக்குப்பிறந்த ஏதத்தைக்கேட்ட அளவிலே தம் மகனுக்குற்ற நவையென்றுகூறும்படி இருகண்ணும் மேலே செருகி அறிவழிந்து கலங்கிவீழ்ந்தார்; ஆதலால் தாமேபெரிதும் அவளுடையரா விருந்தார்; இங்ஙனம் அருளைப்பிறப்பித்த தவப்பெருமையின் வண்ணம் இருந்தபடி யென்னென்றாரென்க. (உ௪௩)

1800. மாழ்குபு மயங்கி வீழ்ந்த மாபெருந் தேவி தன்னை
ஆழ்துய ரவித்தற் கொத்த வரும்பெறல் யோக நாடிக்
காழ்பரிந் தரைத்த சாந்தின் களிதரு நீரிற் றேற்ற
யாழ்புரை கிளவி யாற்றாண் மயங்கிவீழ்ந் தரற்று கின்றாள்.

1799. 'தவப்பெருமையின் வண்ணம்' என்னேயென்று வியந்தவாறு. நகரில் நம்பிக்குற்ற ஏதத்தை; நம்பி : சீவகன். ஏதம் - துன்பம். பிறழ்ந்து - மேலே செருகி. காதலையுடைய தம் மகனுக்கு. என - என்று கூறும்படி. நங்கையாரே - நங்கையாகிய இவர் தாமே.

1800. மாழ்குபு - அறிவழிந்து. தேவிதன்னை : விசயையை. துயர் அவித்தற்கு - வருத்தத்தை நீக்குதற்கு. பெறலரும் யோகத்தை நாடி; யோகம் - மருந்து. காழ்பரிந்து அரைத்த சாந்தின்களி - முத்துவடத்தை அறுத்து அம்முத்துக்களைச் சேர்த்து அரைத்த சந்தனக் குழம்போடு. தரு நீரின் - தந்த பனிநீராலே. தேற்ற என்பதன்பின் 'தெளிந்து' என ஒரு சொல் வருவிக்க. கிளவி : விசயை. ஆற்றாளாய் அரற்று கின்றாள்.

(இ - ள்.) அங்ஙனம் வீழ்ந்த தேவியை வருத்தந்தீர்த்தற்கொத்த மருந்து இதுவென்றுநாடி முத்துவடத்தையறுத்துக் கூடவரைத்த சந்தனக்குழம்போடே தந்த பனிநீராலே தேற்றத் தெளிந்து யாழ் போலுங்கிளவி ஆற்றுளாய் அழாநின்றாளென்க.

கையாற்றின் நீங்கி நின்றாள். (உசச)

(வேறு)

1801. கைம்மாண் கடற்படையுட் காவலனை யாண்டொழியப்
பொய்ம்மா மயிலூர்ந்து போகிப் புறங்காட்டுள்
விம்மாந் தியான்வீழ வீழ்ந்தேன் றுணையாகி
எம்மானே தோன்றிறை யென்னை யொளித்தியோ.

கை - படைவகுப்பு. [1] ஐ : அசை. விம்மாந்து - பொருமி.

(இ - ள்.) என்பிள்ளாய்! அரசன்படுதலாலே யான் பொறிமயிலை யூர்ந்து போய்ப் புறங்காட்டிலே வீழ அங்ஙனம் வீழ்ந்தேற்குத் துணை யாய்த்தோன்றின நீ இப்பொழுது என்னையொளிக்கின்றாயோ வென்க. (உசரு)

1802. கையா ரிலங்கெஃகிற் கந்துக் கடன்கொடுபோய்
மொய்யா ருவகையணுய் முற்றிழைக்குத் தான்கொடுப்ப
நையாள் வளர்த்த சுநந்தை நவையுறவென்
ஐயாவென் னையாவென் னையா வகன்றனையே.

கந்துக்கடன் சுநந்தையென்றது, வருவார் கூறக் கேட்டு.

---

1801. கை மாண் - பக்கப்படையால் மாட்சிமைப்பட்ட. காவலன் : சச்சந்தன். ஆண்டு ஒழிய - அவ்விராசமாபுரத்தே இறத்தலால். பொய்ம்மாமயில் - மயிற்பொறி; உயிரின்மையின் இவ்வாறு கூறினார். புறங்காடு - சுடுகாடு. விம்மாந்து - வருத்தத்தால் பொருமி; பெருங். 3. 24 : 196. வீழ்ந்த எனக்குத் துணையாகி. 'எம்மானே' என்றது சீவகனை நினைந்து கூறியது. ஒளித்தியோ - ஒளிக்கின்றாயோ.

(மேற்.) அடி, 4 : தொல். விளிமரபு, 37, ந. நன். பெயர். 48, மயிலை; இ - வி. பெயர். 58.

(உரை) [1] காவலனை என்பதிலுள்ளது.

1802. கையில் எஃகினையுடைய கந்துக்கடன். கொடுபோய் - சீவகனை எடுத்துக்கொண்டுபோய். மொய்ஆர் - செறிவு நிறைந்த. முற்றிழை: சுநந்தை. நையாள் - வருந்தாளாய். நவையுற - வருத்தமுறும்படி.

(மேற்.) அடி, 4 : தொல். இடை. 34, ந. நன். பொது. 44, மயிலை.

(இ - ள்.) கந்துக்கடன் செறிவுநிறைந்த உவகையனும் எடுத்துக் கொண்டுபோய்ச் சுநந்தைக்குக் கொடுப்ப வருந்தாதேவளர்த்த அவள் வருந்தும்படி, என்னையா ! அகன்றுயே என்க.

[1] விரைசொல்லடுக்காதலின், மூன்றுயிற்று. என்னையா : விளியன்று; இரக்கக்குறிப்பு. நின்னை வளர்த்தற்குரிய [2] நல்வினையுடையவளும் வருந்த அகன்றுயே என்றுள். (உசசு)

1803. மின்னிரைத்த பைம்பூண் விளங்கிலைவேல் வேந்தன்
முன்னுரைத்த மூன்று கனவும் புணையாக
என்னுயிரைத் தாங்கி யிருந்தேன் வலியாகா
தென்னரசே யென்பூசல் கேளா திறந்தனையே.

(இ - ள்.) என்னரசே! வேந்தன் மேல்விளையும்படியைக்கூறிய மூன்று கனவும் புணையாக இறந்துபடாதிருந்தேனுக்கு வலியாகாதே என்பூசலையும் கேளாதே இறந்தாயே என்க.

[1] ஒன்றுபயத்தலின், ஒழிந்தவிரண்டும் பயக்குமென்றிருந்தாள். [2] அரசன் நீயுயிர்கொண்டிருந்து நின்புதல்வனுற் பகையைவெல்கென்று போகவிடுத்தலின், என் [3] பூசலென்றுள். கேளாதே - முடியாதே. (உசஎ)

1804. கோவமா வாகிக் குடியோம்பி நின்குடைக்கீழ்ப்
பாவமே செய்தேன் பரிவெலா நீங்கினுற்
போவம்மா வென்றுரைப்பப் போவேன்முன் போயினுய்
ஆவம்மா வம்மாவென் னம்மா வகன்றனையே.

---

(உரை) [1] தொல். எச்ச. 28. [2] நல்வினையுடையவளுமென்றது சுநந்தையை.

1803. மின் - ஒளி. நிரைத்த - இடைவிடாத; சீவக. 1603, ந. பூண் - ஆபரணம். வேந்தன் : சச்சந்தன். மூன்று கனவு : சீவக. 219, 225, 226. புணையாக - தெப்பமாக. இருந்த எனக்கு வலியாகாது ; வலி - துணை. பூசல் - வருத்தத்தை ; கலித். 34 : 23, ந. கேளாது - முடியாமல்.

(உரை) [1] ஒன்று பயத்தலென்றது சச்சந்தன் இறந்தமையை ; ஒழிந்த இரண்டாவன : சீவகனுக்கு எண்மர்மனைவியாதலும், அவனது ஆக்கமும் ; சீவக. 225, ந. [2] அரசன் : சச்சந்தன். [3] பூசல் - போர்.

1804. கோ அ மாவாகி - அரசனும் அழகிய திருவுமாய் இருந்து. குடி ஓம்பி - நாட்டு மக்களைப் பாதுகாத்துநிற்க. பாவமே செய்த யான். பரிவெலாம் நீங்கினுல் - உன் அரசாட்சியைக்கண்டு என் வருத்தமெல்லாம் நீங்கினுல் அதன் பின்பு. அம்மா போ என்று உரைப்ப - நீ என்னை ‘ அம்மா, நீ துறவு பூண்டுபோ ’ என்றுகூற. போவேனுகிய எனக்குமுன். அம்மா : “ அரங்கத்தம்மா பள்ளி யெழுந்தருளாயே ” (திவ். திருப் பள்ளி. 1)

அம்மா - அழகிய திரு. ஓம்பி - ஓம்ப. அரசனுடனிறந்திலேன்; இருந்து பகையையும் வென்றிலேனென்று பாவமேசெய்தேனென்றாள். பரிவு - தான் நினைத்தவை முடியாத பரிவு. போவம்மா : அம்மை அம்மாவென விளியேற்றது ; "முறைப்பெயர் மருங்கி னையெ னிறுதி, ஆவொடு வருதற் குரியவு முளவே" (தொல். விளிமரபு, 9) என்றதனால். அம்மாவென அடுக்கிய திசைச்சொல்லாகிய [1] விலாவணை, "கடிசொ லில்லை" (தொல். எச்ச. 56) என்பதனாற்கொள்க. அன்றி, அம்மவென்ற அகரவீற்றிடைச்சொற் கேட்பித்து உரையசையாயவிடத்து, "உரைப் பொருட் கிளவி நீட்டமும் வரையார்" (தொல். உயிர்மயங்கு. 10) என்பதனானீண்டு அதுபின்பு, "அம்மவென்னு மசைச்சொ னீட்டம், அம்முறைப் பெயரொடு சிவணா தாயினும், விளியொடு கொள்ப தெளியு மோரே" (தொல். விளிமரபு, 36) என்பதனால், 'அம்மாகொற்றா' என்ற வழிக்கொற்றாவென்பது எதிர்முகமாக்கத் தான் கேளாயென்னும் பொருள் தந்து அதனொடுகூடி எதிர்முகமாக்கி நின்றதாதலிற் [2] பிரிந்துநின்று விளியேலாதென்றுணர்க. இதனாற் பிள்ளாயென விளித்தல் பொருந்தாது.

(இ - ள்.) உலகைக்காத்துச் செல்வத்தையுங்கொடுத்தலிற் கோவும் அழகிய திருவுமாய்நின்று நின்குடைக்கீழ்க்குடியை நீயோம்ப, அதனைக் கண்டு யான் பரிவு நீங்கினாற் பின்பு, அம்மா! நீ துறந்துபோவென்னப் போவேன் முன்னே போனாய் ; அங்ஙனம்போன நீ ஆ! ஐயோ! ஐயோ! இனி அகன்றே விட்டாயோ? இதற்குக்காரணமென்னென்க.

ஆ : இரக்கக்குறிப்பு. ஏகாரம் : வினா. (உ௪௮)

1805. கோமான் மகனே குருகுலத்தார் போரேறே
ஏமாங் கதத்தா ரிறைவாவென் னின்னுயிரே
காமா கடலுட் கலங்கவிழ்த்தேன் கண்ணுணீர்
பூமாண் புனைதாராய் நோக்காது போதியோ.

---

(மேற்.) அடி, 4 : தொல். இடை. 34, ந.

(உரை) [1] விலாவணை : அழுகை ; பெருங். உரிமை விலாவணை. [2] சீவக. 2300, ந.

1805. கோமான் : சச்சந்தன். ஏமாங்கத நாட்டிலுள்ளார்க்கு இறைவா. கடலுட்கலம் கவிழ்த்தேனென்றது சச்சந்தன் இறந்ததனைக் குறித்தது; "கலங்கவிழ்ந்த நாய்கன்போற் களைதுணை பிறிதின்றி" (யா-வி. 86, மேற்.). கண்ணுள் நீரைநோக்காது. பூமாண்புனைதாராய் - பூக்களால் மாட்சிமைப்பட அலங்கரிக்கப்பட்ட மாலையையுடைய சீவகனே.

குருகுலத்தார் பலருளராதலின், 'ஏமாங்கதத்தாரிறைவா' என்றாள். உவப்பின்கட் புதல்வனைக்கூறுவதனை ஈண்டுக்கூறி, 'காமா' என்றாள். கலங்கவிழ்த்தது - அரசன்பட்டது. கண்ணுணீர்நோக்காதென்றது, நீ பகை வென்றால் யான் நின் தந்தையை நோக்கி அழுகின்றநீரை நோக்காதே யென்றவாறு.

'கண்ணுணீ' என்றும் பாடம்.

(இ - ள்.) மகனே! ஏறே! இறைவா! உயிரே! காமா! தாராய்! என் கண்ணீரை நோக்காதே போகின்றாயோவென்றாளென்க. (உசகூ)

1806. கந்தார் களியானைக் காவலனார் கான்முளையை
வந்தார்வாய்த் தீதின்மை கேட்டு மறைந்திருந்து
நொந்தேன் பலகாலு நோயோடே வீகின்றேன்
அந்தோ வறனேமற் றாற்றேனா லாற்றேனால்.

(இ - ள்.) சச்சந்தன் பிள்ளையைத் தீதின்மையை வந்தார் கூறக் கேட்டு நோன்பிலே மறைந்திருந்து பலகாலுநொந்தேன்; நொந்தயான், அந்தோ! இனி ஆற்றேன்; ஆற்றேன்; ஆதலின் அறனே! இந் நோயுடனே இறவாநின்றேனென்க. (உ௫0)

1807. முன்னொருகா லென்மகனைக் கண்டேனென் கண்குளிரப்
பின்னொருகாற் காணப் பிழைத்ததென் றேவிர்காள்
என்னொப்பார் பெண்மகளி ரிவ்வுலகிற் றோன்றற்கென்
றன்னப் பெடைநடையா ளாய்மயில்போல் வீழ்ந்தனளே.

(இ - ள்.) நடையாள், தேவிர்காள்! என்மகனை என்கண்குளிர முன்னொருகாற்கண்ட யான் பின்னொருகாற்காண்டற்குத் தப்பின தீவினை யாது? அதனைக் கூறுவீர்; இனி என்னைப்போற் பாவிகளான மகளிர் தோன்றற்கவென்று அரற்றி வருந்தின மயில்போலே வீழ்ந்தாளென்க.

அரற்றுகின்றவள், இங்ஙனமரற்றினாளென்று, "மாழ்குபு" (சீவக. 1800) என்னுங்கவிமுதல், ஒருதொடராகமுடிக்க. தாபதர்க்குக் [1] குல முதலிய கூறலாகாதென்றவள் தன்னுணர்வழிந்து அரற்றினமையிற் [1] குலனேயன்றி மறைபொருளெல்லாங்கூறினாள்; தோழர் நல்வினை அங்ஙனம் நிகழ்த்திற்று. (உ௫க)

1806. கந்து - கட்டுத்தறி. காவலனார் : சச்சந்தன். கான்முளைக்குத் தீதின்மையை வந்தார்வாய்க்கேட்டு; கான்முளை : சீவகன்; பலகாலும் நொந்தேன். நோயோடு - சீவகன் இறந்தானென்று கூறியமையாலேற் பட்ட வருத்தத்தோடு. வீகின்றேன் - சாகிறேன். அறனே - தரும தேவதையே. ஆற்றேன் - பொறுக்கமாட்டேன்.

1807. என் கண்குளிரக்கண்டேன். காண - காண்பதற்கு. பிழைத்தது என் - தப்பின தீவினை யாது. தோன்றற்க என்று; தொகுத்தல். நடையாள் : விசயை. ஆய்மயில் - வருந்தின மயில்; சீவக. 299.

(உரை) [1] குலமுதலியன கூறலாகாதென்றது; சீவக. 1787.

1808. புண்மல்கு மத்தகத்த போர்வேழம் பொற்பழித்த
மண்மல்கு தாரான் பெருமாட்டி வாய்மொழிகேட்
டுண்மல்கு நெஞ்சினரா யொய்யெனவே வெய்துயிராக்
கண்மல்கு நீரார் முகமுகங்க ணோக்கினரே.

தோட்டி [1] நீவாது கிடத்தலிற் புண்மிக்க மத்தகம்.

(இ - ள்.) கட்டியங்காரன் ஏறின யானையைக்கொன்ற பண்ணுதல் மிக்க தாரினையுடைய சச்சந்தன்தேவியது வார்த்தையைக்கேட்டு அரசன் பட்டதற்கு வெய்துயிர்த்துத் தேவியிருந்ததற்கு மகிழ்ச்சிநிறைந்த நெஞ்சினராய்க் கண்மல்கு நீரையுடையராய் அவர் தம்மின் முகம் பார்த்தாரென்க.

"ஆவுதி [2] மண்ணி" (மதுரைக். 494) என்றார்பிறரும். கூற்றின்றிக் [3] குறிப்புநிகழ்ந்தது, வழிபாடுதோன்ற. (உ௫உ)

1809. கண்டீர் கருமம் விளைந்தவா றென்றாராய்
வண்டாரார் வண்கடக மின்னத்தங் கைம்மறித்துக்
கொண்டாங் கடல்வேலி கீழ்மகனைக் கூற்றமாய்
உண்டா முயிரென் றுவப்பெழுந் தாடினரே.

(இ - ள்.) தாரார், காரியமுடிந்தபடி கண்டீரேயென்று வெளியாகக் கூறினாராய், இவன் ஒருபொருளோவென்று கைம்மறித்து இனிக் கூற்றமாய்க் கீழ்மகனுயிரையுமுண்டோம்; உலகையும் கொண்டோமென்று கூறி உடம்பு உவகைமிக்கு ஆடினாரென்க. (உ௫௩)

---

1808. புண்மல்கு மத்தகத்த போர்வேழம். வேழம் - கட்டியங்காரனுடைய யானையது. பொற்பழித்த - அழகையழித்துக்கொன்ற. மண் மல்கு - பண்ணுதல் மிக்க; தாரான்: சச்சந்தன். பெருமாட்டி: விசயையது. உள்மல்கு - மகிழ்ச்சிநிறைந்த. ஒய்யென வெய்துயிர்த்து. கண்ணில் மல்கும் நீரையுடையவராய், முகமுகங்கள் நோக்கினர் - ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக்கொண்டனர்; "முகமுகம் பார்த்தனர்" (திருவால. 57 : 23) ; "முகமுகநோக்கியெண்ணி" (வி-பா. சூது. 268)

(உரை) [1] நீவாது - நீங்காமல். [2] மண்ணுதல் - பண்ணுதல். [3] குறிப்பு நிகழ்ந்ததென்றது தோழன்மார் ஒருவருக்கொருவர் முகம் பார்த்துக் கொண்டதை.

1809. கருமம் விளைந்தவாறு கண்டீர் என்றாராய்; கருமம்-காரியம். தாரார்: தோழர். கைமறித்து - கையைக்கவிழ்த்து; சீவக. 1227, ந; "நன்னக ரதனை நோக்கி நளினக்கைம் மறித்து" (கம்ப. கடறுவு. 93). கடல்வேலியைக் கொண்டோம்; கடல்வேலி: பூமி. கீழ்மகனை: கட்டியங்காரனை. கூற்றமாய் உயிருண்டாம் என்று; உண்டாம் - உண்டோம். உவப்பு எழுந்து - மகிழ்ச்சிமிக்கு.

1810. வீழ்ந்து மயில்போல் விசயை கிடந்தாளைத்
தாழ்ந்து பலதட்பந் தாஞ்செய்ய வேல்பெற்றுப்
போழ்ந்தகன்ற கண்ணாள் புலம்பா வெழுந்திருப்பச்
சூழ்ந்து தொழுதிறைஞ்சிச் சொன்னா ரவன்றிறமே.

(இ - ள்.) விசயை மயில்போலே வீழ்ந்துகிடந்தவளைத் தாழ்ந்து பல குளிர்ச்சிகளைச் செய்ய உணர்ச்சிபெற்று அரசனுயிரைப் போழ்ந்தகன்ற கண்ணாளெழுந்திருப்ப, கைகுவித்து வணங்கிச் சூழ்ந்து அவன் பிழைத்தபடி கூறினாரென்க. (உருச)

(வேறு)

1811. கொலைக்களங் குறுகலுங் கொண்டோர் தெய்வதம்
நிலைக்கள மிதுவென நீக்க நீங்கினான்
இலக்கண மடப்பிடி யியைந்தொர் போதகம்
மலைக்கணத் திடைமகிழ்ந் தனைய மைந்தனே.

கொல்லக் கொலைக்களங்குறுகுதலும் தேவன் நீக்கினானென்று தேவதத்தன் [1] கூறப்புகுந்ததனைத் தாம் கொண்டு கூறுகின்றார்.

(இ - ள்.) போதகம் மடப்பிடியோடு இயைந்து மகிழ்ந்தாற்போலக் குணமாலையோடு மகிழ்ந்திருந்த மைந்தன், தன்னை அரசன் கொல்லும்படி தான் கொலைக்களத்தைக் குறுகின அளவிலே, ஒருதெய்வம் தன்னுணர்வாலே பார்த்து இஃது இடமென்றுநீக்க, அத்துன்பத்தை நீக்கினானென்று கூறினாரென்க.

மலைக்கணம் தோழர்க்குவமை. (உருரு)

1810. மயில்போல் வீழ்ந்து கிடந்தாளாகிய விசயையை. தாழ்ந்து - வணங்கி. தட்பம் - குளிர்ச்சியை. ஏல்பெற்று - உணர்ச்சி அடைந்து. போழ்ந்தகன்ற கண்ணாள் - சச்சந்தனுயிரைப் பிளந்தகன்ற கண்ணாளாகிய விசயை; சீவக. 10, 1783, ந. புலம்பா - புலம்பி. அவன்திறம் சொன்னார் - சீவகன் உயிர்பிழைத்தபடியைக் கூறினார்.

1811. கொண்டு - தன் அறிவாலே பார்த்து. தெய்வதம் என்றது சுதஞ்சணனை. இது நிலைக்களமென நீக்க; நிலைக்களம் - தக்கஇடம். நீங்கினான் - சீவகன் அத்துன்பத்தினின்றும் நீங்கினான். இலக்கணம் - உத்தம இலக்கணத்தையுடைய. போதகம் : ஆண்யானை. சீவகனுக்குப் போதகமும் குணமாலைக்குப் பிடியும் உவமைகள். மைந்தன் : சீவகன். மைந்தன் குறுகலும் நீக்க நீங்கினான்.

(உரை) [1] சீவக. 1798.

1812. பூவுடைத் தெரியலான் போர்வை நீத்தினிக்
கோவுடைப் பெருமக னுதல் கொண்டனம்
சேவடி சேர்ந்தனந் தொழுது சென்றென
மாவடு நோக்கியுண் மகிழ்ந்து கூறினாள்.

சென்று - செல்ல.

(இ - ள்.) யாங்கள் நின்னைத்தொழுதுபோதற்குச் சேவடியைச் சேர்ந்தேம்; அங்ஙனஞ்சேர்ந்த யாங்கள் தெரியலான் தன்னை வணிக னென்று மறைத்த போர்வையைக் கைவிட்டுத் தான் அரசனுதலைக் கண்டேமென்று கூற, அதுகேட்டு விசயையும் மகிழ்ந்து ஒருமொழி கூறினாளென்க. (உருகூ)

(வேறு)

1813. தரணி காவலன் சச்சந்த னென்பவன்
பரணி நாட்பிறந் தான்பகை யாவையும்
அரணி லானென்கட் டங்கிய வன்பினுல்
இரணி யன்பட்ட தெம்மிறை யெய்தினன்.

(இ - ள்.) பரணிநாட்பிறந்தானாகிய சச்சந்தன் அந்நாளின்விசேடத் தாற்பகை யெல்லாவற்றிற்கும் ஒரு காவலில்லாதவன்; என்னிடத்தே தங்கிய அன்பாலே தரணியைக்காவானாய்ப் பின்பு இரணியன்பட்டதனைத் தானும்பட்டானென்க.

[1] இன்ன நாட்பிறந்த இன்னானென்றல் அரசர்க்குமரபு. [2] பரணி யானை பிறந்த நாளாதலின், அதுபோலப் பகையை மதியானென்றாள். இரணியன் பட்டது - தன்னை இடிக்குந்துணையார் சொற்கொள்ளாதே (குறள், 447) வேறொரு தத்துவமின்றென்றதனாற் கேடுவிளைந்து உதவி யின்றி நின்றநிலை; இறைவனுற்றது - [3] அமைச்சர் நிலமுந்திருவும் நீங்குமென்றது கொள்ளாதே கட்டியங்காரனே எனக்குள்ளானென்று

---

1812. தெரியலான் : சீவகன்; தெரியல் - மாலை. போர்வைநீத்து - வணிகசாதியென்று மறைத்த போர்வையை நீக்கி. கோவுடைப் பெரு மகன் - இராசபுத்திரன். தொழுது சென்று சேவடி சேர்ந்தனம் கொண்டனம் என; தொழுது - உன்னை வணங்கி. சென்று = செல்ல - போதற்கு. சேர்ந்தனம் - சேர்ந்த யாங்கள். கொண்டனம் - அறிந்துகொண்டோம். என - என்று கூற. நோக்கி : விசயை.

1813. தரணியைக் காவலன்; காவலன் - காவாதவனாகி. பரணி நாட் பிறந்தானாகிய சச்சந்தனென்பவன். யாவையும் - எல்லா வற்றிற்கும். அரண் இலான் - தனக்குக் காவலில்லாதவன். என்கண் - என்னிடத்து. தரணியைக் காவலனாய் இரணியன் பட்டதனைப்போல் எம் இறையும் எய்தினன்; இறை : சச்சந்தன்.

(உரை) [1] இன்னநாளிற் பிறந்த இன்னானென்றல் மலைநாட்டில் இக் காலத்தும் வழங்குகின்றது. [2] 'பரணி பிறந்தான் தரணியாள்வான்' என்பது ஒரு பழமொழி; 'பரணியான் பாரவன்' (நன், 150, மயிலை.). [3] நிமித்திகன் முதலிய அமைச்சர்.

**பின் உதவியின்றி நின்றநிலை. காவலன் 'உண்ணலன்' போல் ஈண்டு மறையையுணர்த்திற்று. (உ௫ஏ)**

1814. விசயை யென்றுல கோடிய வீறிலேன்
பசையி னாற்றுஞ்சி யான்பட்ட தீதெலாம்
இசைய நம்பிக்கெ டுத்துரைத் தென்னுழை
அசைவின் றையனைத் தம்மி னெனச்சொன்னாள்.

**(இ - ள்.)** அங்ஙனமெய்தியவன், விசயையென்று எங்கும்பரந்த நல்வினையில்லாதேன் மேல்வைத்த பற்றால் துஞ்சுதலாலே, யானுற்ற தீங்கெல்லாவற்றையும் நம்பிக்கு முறைமைப்படக்கூறி இதனால் அவன் வருந்தாதபடி ஐயனை என்னுழைத்தாருமினென்று கூறினாளென்க. (உ௫அ)

1815. கோதை வேனம்பிக் கல்லதை யிப்பொருள்
யாதுங் கூறன்மின் யாரையுந் தேறன்மின்
ஏத மின்னன வின்னண மெய்தலாற்
பேதை யாரொடும் பெண்ணொடும் பேசன்மின்.

**(இ - ள்.)** இக்காரியத்திற் சிறிதும் சீவகனுக்கல்லது பிறர்க்குக் கூறன்மின் ; யாவும் தேறன்மின் ; இத்தன்மையவாகிய குற்றங்கள் நினைவின்றியும் வருதலின், அறியாதாருடனும் மகளிருடனும் பேசன்மினென்றாளென்க.

*இன்னனவென்றது, தான்பிறப்புணர்த்திய அதனை. இன்னண மென்றது, தன்னினைவின்றி [1] விலாவத்திற்கூறிய அதனை.* (உ௫௯)

---

1814. உலகு ஓடிய - உலகெங்கும்பரந்த. வீறு இலேன் பசை - நல்வினையில்லாத என்மீதுள்ள ஆசை; நீர்வேட்கைபோல நின்றது. துஞ்சி - இறத்தலால். தீதெலாம் - தீங்கெல்லாவற்றையும். நம்பிக்கு இசைய எடுத்துரைத்து - சீவகனுக்கு முறைமைப்பட எடுத்துக்கூறி. அசைவின்று - அவன் வருந்தாதபடி. ஐயனை : சீவகனை ; சுட்டுப்பெயர் மாத்திரையாய் நின்றது. என்னுழைத்தம்மின்.

1815. கோதைவேல்; சீவக. 7, 491 ; கோதை - உறை; பூமாலையுமாம். இப்பொருளில் யாதும் நம்பிக்கல்லதைக் கூறன்மின் ; பொருள் - காரியம். யாதும் - சிறிதும். நம்பி : சீவகன், அல்லதை - அல்லது ; ஐ : அசை. பிறருக்குக் கூறன்மின். தேறன்மின் - நுமக்குரிய துணைவராகத் தெளிந்து கொள்ளாதீர். இன்னனவாகிய ஏதம் - துறவியாகிய யான் பிறப்புணர்த்தியது போன்ற குற்றங்கள். இன்னணம் எய்தலால் - நினைவில்லாமலும் வருதலால். பேதையார் - அறிவில்லாதவர். பெண் - பிற மகளிர்.

(உரை) [1] விலாவத்தில் - அழுகையில்.

1816. பகைவ ருள்ளமும் பாம்பின் படர்ச்சியும்
வகைகொண் மேகலை மங்கையர் நெஞ்சமும்
மிகைசென் மேகத்து மின்னுஞ்செந் நில்லலா
புகைசெய் வேலினீர் போற்றுபு சென்மினே.

மிகை - மேல்.

(இ - ள்.) வேலினீர்! பகைவர் நெஞ்சும், பாம்பின் போக்கும், மகளிர் நெஞ்சும், மின்னும் செவ்விதாக நில்லாவாதலின், உள்ளத்தையும் நெஞ்சையும் பேணி ஒழுகுமினென்றுளென்க. (உகo)

(வேறு)

1817. வணக்கருஞ் சிலையி னுனை யொருமதி யெல்லை நாளுட், குணத்தொடு மலிந்த பாதங் குறுகயாங் கொணர்ந்த பின்றைப், பணித்ததே செய்து பற்றார் பகைமுத லடர்த்து மென்றார், மணிக் கொடி மாசுண் டன்னுண் மற்றதே துணிமி னென்றாள்.

(இ - ள்.) யாங்கள் குணத்தொடுமலிந்த சீவகனை ஒரு திங்களளவாகிய நாளுக்குள்ளே நின் திருவடியைச் சேரும்படி கொணர்ந்தபின்றை அருளிச் செய்த காரியமே செய்து, தழும்பேறிக்கிடந்த நிறைந்த பகையை முற்பட அடர்ப்பேமென்றார்; அவளும் அதுவே துணிமினென்றாளென்க.

பிறரால் வணக்கருஞ்சிலை. அடிப்பட்ட பகை - கட்டியங்காரன்.

(உகக)

1818. பொறிதவ நெருங்க நோற்றுப் புகரற நிறைந்த கொள்கைச், செறிதவ விசயை பாதஞ் சென்னியின் வணங்கி மீண்டு, வெறிகமழ் சோலை நண்ணி வேண்டிய வடிசில் கைதொட், டெறி படை யெழுக வென்றார் வளை யெழுந் தார்த்த வன்றே.

---

1816. படர்ச்சி - செல்லுதல். மேகலையையுடைய மங்கையரது நெஞ்சம். மிகை - மேலே. மின் - மின்னல். செந்நில்லலா - நேராக நில்லாவாதலால். போற்றுபு சென்மின் - பகைவர் உள்ளத்தையும், மகளிர் நெஞ்சத்தையும் பாதுகாத்து நடமின்.

1817. குணத்தொடு மலிந்த வணக்கருஞ் சிலையினானை : சீவகனை ; வணக்கருஞ்சிலை - பகைவரால் வளைத்தற்கரிய வில். ஒருமதி எல்லை நாளுள் - ஒருமாதமாகிய அளவுள்ள நாட்களுக்குள்ளே. பாதம் குறுக - உமது அடியை அடையும்படி. பணித்ததே - நீர் ஏவிய காரியத்தையே. பற்று ஆர்பகை - தழும்பேறிக்கிடந்த நிறைந்த பகையை ; என்றது கட்டியங்காரனை. முதல் அடர்த்தும் - முற்படக் கொல்லுவேம். கொடி மாசுண்டதை அன்னாள் - விசயை ; அன்னாள் - போன்றவள். மற்று : அசை. அதே - அக்காரியத்தையே.

1818. பொறிதவ நெருங்க - ஐம்பொறிகளும் வேட்கை மிகவும் ஒடுங்கும்படி. புகரற - குற்றம்நீங்க. கொள்கைச் செறிதவ விசயை -

(இ - ள்.) ஐம்பொறியும் புலன்களிற் செல்லுகின்ற வேட்கை மிகவும் நெருங்கும்படி நோற்றுக் குற்றமற நிறைந்த விரதங்களையுடைய விசயை பாதத்தை வணங்கிமீண்டு நண்ணணி உண்டு படையெழுகவென்றார் ; வளை எழுந்து ஆர்த்தவென்க.

தவவிசயை - முற்பவத்தில் தவத்தையுடைய விசயையென்றொரு பெயர். (உகூஉ)

1819. பைந்துகின் மகளிர் தேன்சோர் பவளவாய் திகழ நாணிச், சிந்தித்துக் கூந்தல் வாங்கிச் செவ்வணந் துடைப்ப தேபோல், இந்திர கோபங் கௌவி யிறகுளர் கின்ற மஞ்ஞை, அந்தரந் திவர்ந்த பாய்மா வரும்பொற்று ரரவத் தாலே.

திகழ : இடக்கர்.

(இ - ள்.) மகளிர் தமது வாய்திகழ்தலாலே, அதற்கு நாணி அது தீருமுபாயம் நினைந்து கூந்தலைக்குலைத்து அச்சிவந்தவண்ணத்தைத் துடைக்கின்ற தொழிலைப்போலே கோபத்தைக்கௌவி இறகை உளர்கிற மயில்கள் மாவின் தார்மணியோசையாலே பறந்தனவென்க. (உகூங)

1820. சாந்தின்மேற் றொடுத்த தீந்தேன் றண்மதிக் கோடு போழப், போந்துமட் டருவி வீழும் பொன்னெடுங் குன்று மந் தண், ஏந்துபூங் காவு சூழ்ந்த விரும்புனல் யாறு நீந்தி, மாந்தரே மலிந்த நாடு மடுத்துடன் சென்ற தன்றே.

[1] தேன் : ஆகுபெயர்.

சென்னியால் வணங்கி. வெறி - வாசனை. அடிசில் கைதொட்டு - உணவையுண்டு. எறிபடை - பகைவரைக்கொல்கின்ற சேனை. வளை - சங்கம்.

1819. தேன்சோரும் பவளம் போலும் வாய். மகளிரது வாய்திகழ் தலால். சிந்தித்து - அதைத்தீர்க்கும் உபாயத்தை எண்ணி. கூந்தலை வாங்கி ; வாங்கி - குலைத்து. செவ்வணம் - வாயினது சிவந்த நிறத்தை. இந்திர கோபப்பூச்சிகளைக் கௌவி. உளர்தல் - கோதுதல். மகளிருக்கு மயிலும், அவரது வாய்க்கு இந்திரகோபமும், அவரது கூந்தலுக்கு மயிலின் தோகையும் உவமைகள். மஞ்ஞை பாய்மாவின் பொற்றார் அரவத்தால் அந்தரத்து இவர்ந்த ; பாய்மா : தோழரது குதிரைகள். பொற்றார் - கிண்கிணிமாலை. இவர்ந்த - பறந்தன.

1820. சாந்தின்மேல் தொடுத்த - சந்தனமரத்திலே வைத்த. தேன்: தேனடை. மதியினது கோடுபோழ ; கோடு போழ - நுனிகிழித்தலால். மட்டு போந்து அருவிபோல் வீழும் குன்று. அம்தண்ஏந்து - அழகையும் குளிர்ச்சியையும் தாங்கிய. நாடுமடுத்து - நாட்டை நெருங்கி. உடன் - ஒருசேர.

(இ - ள்.) அப்படை, சந்தனத்திலேவைத்த இருலை மதிக்கோடு கிழித்தலாலே அதின்மட்டு அவ்விருலினின்றும் போந்து அருவிபோலே வீழும் மாந்தரியங்காத குன்றையும், யாற்றையுங் கடந்து மாந்தரே மலிந்த நாட்டிலே சென்றதென்க. (உசுச)

1821. மதுக்குலா மலங்கன் மாலை மங்கையர் வளர்த்த செந் தீப், புதுக்கலத் தெழுந்த தீம்பாற் பொங்கலி னுரையிற் பொங் கிக், கதிர்த்துவெண் மாடந் தோன்றுஞ் செவ்வெயிற் காத நான் கின், நதிக்கரை வந்து விட்டார் நச்செயிற் றரவோ டொப்பார்.

(இ - ள்.) தேனுருத அசைகிற மாலையையுடைய மங்கையர் வளர்த்த தீயாலே பொங்கிப் புதுக்கலத்தினின்றுமெழுந்த பாற்பொங்கலினுடைய நுரைபோலே இட்டிகையாற்செய்த எயிலைக்கடந்து வெண்மாடந்தோன் றும் ஏமமாபுரத்திற்கு நாற்காதத்தளவில் நதிக்கரையிலே, அரவோடொப் பார் சென்றுவிட்டாரென்க.

எயில் : ஆகுபெயர். வரவு : செலவினையுணர்த்தும். (உசுரு)

## (வேறு)

1822. மானயா நோக்கியர் மருங்குல் போல்வதோர்
கானயாற் றடைகரைக் கதிர்கண் போழ்கலாத்
தேனயாம் பூம்பொழிற் றிண்ணை வெண்மணற்
றானையா நால்வருந் தணப்பின் றெய்தினார்.

கான ; அ : அசை. கண் - இடம். தேனினநீங்கமாட்டாது வருந் தும். தானையா நால்வரும் - தானையுண்டாதற்குக் காரணமான நால் வரும்.

(இ - ள்.) மான்வருந்து நோக்கியர் இடைபோலும் நுடக்கமும் அழகுமுடைய கான்யாற்று நீரடைகரையிற் பொழிலில் உயர்ந்த மண லிலே நால்வரும் சென்றாரென்க. (உசுசு)

(உரை) [1] தேனையுடைய இருலுக்காயிற்று.

1821. குலாம் - நீங்காத. செந்தீயால் எழுந்த. பொங்கலினுடைய நுரையைப்போல. கதிர்த்து - ஒளியுடையதாகி. செவ்வெயில் - செங்கல் லாற் செய்யப்படுதலின் செந்நிறமுடைய மதில். விட்டார் - தங்கினார். அரவோடு ஒப்பார் விட்டார்.

1822. மான் அயாம் - மான்வருந்துதற்குக் காரணமான. மருங்குல் போல்வது - இடையை ஒப்பதாகிய. யாற்றை அடைந்த கரையில். கதிர் - சூரியன். கதிர்......பொழில் : “வெயினுழை பறியாக் குயினுழை பொதும் பர்” (பெரும்பாண். 374). திண்ணை வெண்மணல் : பெருங். 1. 40 : 124. தானை ஆம் நால்வரும் ; ஆம் - ஆதற்குக் காரணமான.

1823. வார்ந்துதேன் றுளித்துமட் டுயிர்த்து வார்மணல்
ஆர்ந்துபோ தருந்தவி சடுத்த தொத்துமேற்
றூர்ந்துதேன் வண்டொடு துதைந்துள் புக்கவர்
போந்துபோக் கரியதப் பொழிலின் பெற்றியே.

(இ - ள்.) அப்பொழிலின்தன்மை, வைத்ததேன் வார்ந்து துளித்துப் பூவின் மது ஒழுகி மணலிலே போது ஆர்ந்து தவிசடுத்ததொத்து மேல்வெளியடங்கித் தேனும் வண்டும் நெருங்கி உள்ளேபுக்கவர்க்குப் புறப்பட்டுப்போதலரிதாயிருந்ததென்க.

செய்தெனெச்சங்களைக் காரணமாக்குக. (உகஎ)

1824. தாதணி கொழுநிழ லிருந்து தண்மதுப்
போதணி யலங்கருழ் பொருவின் மார்பனை
யாதுநா மடைதிற முரைமி னீரெனக்
காதலாற் பதுமுகன் கண்டு கூறினான்.

(இ - ள்.) அப்பொழிலினிழலிலேயிருந்து சீவகனை யாமடையுந் திறம் யாது? அதனை நீருரைமினென்ற அளவிலே, பதுமுகன் விசாரித்துக் காதலாலே கூறினானென்க. (உகஅ)

1825. (க) திருக்கிளர் மன்னவன் சேனை மாநகர்
பொருக்கொளி யினநிரை கோடுங் கொண்டபின்
முருக்கொளி மலரடி மூரி மொய்ம்பனைச்
செருக்களத் தெதிர்ப்படச் சிதைவ தில்லையே.

1823. தேன் - ஈக்கள் கூட்டில் வைத்த தேன். மட்டு - பூவிலுள்ள தேன். மணல் போது ஆர்ந்து - மணலில் மலர்கள் நிறைந்து. தவிசு - ஆதனம். தூர்ந்து - அடைத்து. துதைந்து - நெருங்கி. போந்து போக்கு - வெளியே புறப்பட்டுச்செல்லல். பெற்றி அரியது.

1824. தாது அணி - பூந்தாதை அணிந்த; "தாதுபடு தண்ணிழ லிருந்தன மாக" (குறிஞ்சிப். 106). மதுவையுடைய போது. மார்பனை: சீவகனை. அடைதிறம் யாது? நீர் உரைமின் என. கண்டு - ஆராய்ந்து.

1825. மன்னவன்: தடமித்தன் - நகர்: ஏமமாபுரம். பொருக்கு = பொருவுக்கு - ஒப்புக்கு. கோடும் - கொள்வேம். முருக்குமலர் அடிக்கு உவமை. மொய்ம்பன்: சீவகன். சிதைவது - கெடுவது.

1826. (உ) சேட்குலாஞ் சிலையொடு திளைத்த பின்னவர்
வாட்கலாம் வலித்தமர் தொடங்கின் வல்லையே
மீட்கலாம் விருப்புடைத் தெழுக வென்றுதன்
ஆட்கெலாஞ் செப்பின னலர்ந்த தாரினான்.

இவைஇரண்டும் ஒருதொடர்.

[1] பொருக்கு - பொருவுக்கு; நிலக்குப்போல. என்றது, துரியோதனன் விராடபுரத்தே நிரையடித்துத் தருமன் முதலாயினாருண்மை யுணர்ந்ததற்கு, யாமும் இவனுண்மையை உணருகின்ற தன்மை யொக்கும்படி யென்றவாறு.

(இ - ள்.) பொருவுக்கு மன்னன் மணிநிரையை யாமுங்கொள்வேம்; கொண்டபின்பு, சீவகன் மீட்கவந்தால் அவனைப் போர்க்களத்தே காண்டற்குச் சிதைவதில்லை; அதற்குக்காரணம்; வளைந்தவில்லுடனே தூரத்தேபொருதபின் அவரணுகி வாட்போரைத்தொடங்கின் நாம் படையைக் கடுகமீட்கலாம்; ஆதலான், இதுவிருப்பமுடைத்து; இனி எழுக வென்று தன்னை யொழிந்த மூவர்க்குங்கூறி, பின்பு, அவன் படைக்குங் கூறினானென்க. (உகூகூ - எ0)

(வேறு)

1827. (க) இருங்கடன் மணிநிரை யெய்திநாங் கொண்டபின்
அருங்கடி யணிநக ரையனாங் கில்லையேற்
பெரும்படை தான்வரிற் பின்றிநீங் கிற்பழி
தரும்படித் தன்றியுஞ் சாற்றுவல் கேண்மினே.

---

1826. சேண் - நெடுந்தூரத்தில். குலாம் - வளைந்த. திளைத்தல் - போர்செய்தல். அவர் : தடமித்தன் படையிலுள்ளார். வாட்கலாம் வலித்து - வாட்போரைச் செய்யத் துணிந்து. வல்லை - விரைய. மீட்கலாம் - நம்படையை மீளச்செய்யலாம். ஆட்கு எலாம் - வீரர்க்கெல்லாம்; ஆள் - வீரர் : "ஆளமர் வெள்ளம் பெருகி னதுவிலக்கி" (பு-வெ. 32). தாரினான் : பதுமுகன்.

(உரை) [1] சீவக. 1259, ந.

1827. கடல்போலும் பெரிய நிரையை; நிரை - பசுக்கூட்டம். அருங்கடி - செல்லுதற்கரிய காவலையுடைய. நகரில் அங்கு ஐயன் இல்லையேல்; நகர் - ஏமமாபுரம். ஐயன் : சீவகன். படை : தடமித்தனுடைய சேனை. பின்றி நீங்கின் - யாம் மீண்டுபோனால். பழிதரும் படித்து - பழிதரும்படியாயிருக்கும். சாற்றுவல் - வேறொன்று கூறுவேன். இதுமுதல் இரண்டுபாடல்கள் புத்திசேனன் கூற்று.

1828. (உ) மஞ்சுசூழ் விசும்பிடை மணந்துமின் மிளிர்வபோல்
வஞ்சமின் மறவர்வாண் மிளிர்ந்துபாய் குருதியுட்
குஞ்சரங் குளிப்பதோர் நீத்தமா மாதலால்
எஞ்சலில் கொள்கையீ ரெண்ணிச்சூழ் மின்களே.

1829. (ஙூ) என்றனன் புத்திசே னென்னுநான் மறையினுன்
நன்றதே பொருளென நால்வரு மிருந்துழி
ஒன்றிமுன் விடுத்தவர் மூவரொற் றுட்கள்வந்
தின்றிதாற் பட்டதென் றியம்புகின் றுர்களே.

இவைமூன்றும் ஒருதொடர்.

(இ - ள்.) புத்திசேனனென்னும் அந்தணன், யாமெய்தி நிரையைக் கொண்டபின் அருங்கடியணிநகரில் ஐயனில்லையாயிற் பெரும்படை வரும்; அது வந்தால் அஞ்சினுரைப்போலே யாம் மீண்டுபோந்தாற் கெட்டார்களென்று பழிதரும்படியாயிருக்கும்; அதுவன்றியும் பின்னு மொன்றுகூறுவேன்; அதனைக்கேண்மின்; யாம் மீளாமல் நின்றுல் மின்போல் மறவர்வாள் மிளிர்தலாற்பிறந்த ஒளியையுடைய குருதியிலே யானைகுளிப்பதொரு குருதிப்பெருக்குண்டாம்; ஆதலால் ஒழியாத கொள்கையீர்! இனி இதனையும் எண்ணிச் சூழுமினென்றுன்; என்ற பின்னும் பெரிதும் பதுமுகன்கூறிய அதுவே காரியமென்று நால்வரு மிருந்த அளவிலே, தாம் பொருந்தி முன்பேவிடுத்தவராகிய ஒற்றுட்கள் மூவர்வந்து இன்று பிறந்தசெய்தி இதுவென்று கூறுநின்றுரென்க.

(உஎக - ஙூ)

1830. (க) வளையசுந் தரமெனும் வாரண மால்வரை
முளையிளந் திங்கள்போன் முத்துடைக் கோட்டது
கிளையிளம் பிடிகளைஞ் ஞூற்றிடைக் கேழரக்
களையவஞ் சனவரை யனையதக் களிறரோ.

---

1828. மணந்து - கலந்து. மின் - மின்னல். மிளிர்தல் - ஒளி விட்டு விளங்குதல். மறவர்: வீரர். மிளிர்ந்து - மிளிர்தலால். பாய் குருதியில் - பரவிய இரத்தத்திலே. குளிப்பதோர் - மூழ்குவதொரு. நீத்தம் ஆம் - இரத்தப்பெருக்கு உண்டாகும். எஞ்சல்இல் - ஒழியாத. எண்ணிச்சூழ்மின் - ஆராய்ந்து செய்யுங்கள்.

1829. நன்று அதே பொருளென - பெரிதும் பதுமுகன் கூறிய நிரைகொள்ளலாகிய அதுவே நாம் செய்யும் காரியம் என்று. ஒன்றி - பொருந்தி. விடுத்தவராகிய ஒற்றுட்கள் மூவர் வந்து, இன்று பட்டது இதால் என்று இயம்புகிறுர்கள்; "ஒற்றொற் றுணராமை யாள்க வுடன் மூவர், சொற்றொக்க தேறப் படும்" (குறள், 589); பெருங். 3. 25 : 48-50. பட்டது - நடந்தகாரியம். இதால் - இதுவாகும்; ஆல் : அசை.

1830. வளையசுந்தரம் : தடமித்தனுடைய பட்டத்துயானை. வாரண மாகிய வரை. முளை இளந்திங்கள் - தோன்றிய பிறைச்சந்திரன். கிளை - உறவுடைய. கேழ் அரக்கு அளைய - நிறத்தையுடைய அரக்களாவின.

1831. (உ) கடுமதக் களிப்பினாற் காரென முழங்கலின்
விடுகலார் பாகரும் வெருவரக் கொன்றிடப்
பிடியொடுங் கந்தணை வின்றிநீ ருருள்பிளந்
தடுகளி றந்தப்போ திகைபரிந் தழன்றதே.

இவையிரண்டும் ஒருதொடர்.

(இ - ள்.) வளையசுந்தரமென்னும் வாரணம் கோட்டதாயிருக்கும்; பிடிகளுக்கிடையிலே நின்று நிறத்தையுடைய அரக்களாவின அஞ்சன வரையனையதாயிருக்கும்; அக்களிறுதான் மதத்தாலே முழங்கலிற் பாகரும் விடுகலராயிருந்தார்; அவ்வடுகளிறு வெருவரும்படி கொன்றிடுவதற்கு அணைவின்றிப் பிளந்து பரிந்து அழன்றதென்க.

நீருருள் - சகடமாகப்பண்ணணித் தண்ணீரேற்றியுருட்டுவதொன்று. இனி ஈருருள்பிளந்தென்றோதின், உள்ளீரலைப் பிளந்து கொன்றிடவெனக் கூட்டுக. அந்தப்போதிகை - பின்னங்காலிற் சங்கிலி. (உஎச-ரு)

1832. கண்ணுமிழ் தீயினாற் சுடநிறங் கரிந்தபோற்
பண்ணுமிழ் வண்டுலாய்ப் பரத்தரா நின்றசீர்
அண்ணலங் களிற்றினை யடக்கினான் சீவகன்
வண்ணமே கலையினார் மனமெனப் படிந்ததே.

(இ - ள்.) கண்ணில் தீயாற்சுடுதலின் நிறங்கருகினாற்போலும் வண்டு உலாவப்பட்டுப் பரத்தலைத்தராநின்ற சீரையுடைய அக் களிற்றைச் சீவகன் அடக்கினான்; அப்பொழுது அவனிடத்தே மகளிர் மனந்தாழ்ந்தாற்போல வந்து தாழ்ந்ததென்க.

'வண்டுலாம்பார்த்தர' என்ற பாடத்திற்கு வண்டுலாங்களிற்றைப் பார்க்கின்ற சீரை நமக்குத்தருதற்கு அடக்கினானென்க. (உஎசு)

---

1831. காரென முழங்கலின் - மேகத்தைப்போல முழங்குதலால். பாகரும் விடுகலார். வெருவர - அஞ்சும்படி. பிடி - பெண்யானை. அணை வின்றி - கூடுதலில்லாமல். கந்தையும் நீருருளையும் பிளந்து; கந்து - கட்டுத்தறி. களிறு: வளையசுந்தரம்; எழுவாய். அந்தப் போதிகை பரிந்து - பின்னங்காற்சங்கிலியை அறுத்து; "அந்தப் போதிகை யிடை பரிந் தழியக், கந்துமுதல் கிழித்துக் காரென வுரறி" (பெருங். 1. 44 : 77-8)

1832. கண்ணுமிழ்தீ : சீவக. 807. சுட - சுடுதலால். கரிந்த போலும் வண்டு. பண் உமிழ்வண்டு - இராகங்களை ஒலிக்கின்ற வண்டுகள். உலாய் - யானையின்மீதுஉலாவப்பட்டு. பரத்தராநின்றசீர் - பரவுகின்ற சிறப்பையுடைய. களிற்றினை : வளைய சுந்தரத்தை. சீவகன் அடக்கினான். மேகலையினார் மனமென - மகளிரது மனம் அவனிடத்துத் தங்கினாற்போல. யானை அவனுக்குப் படிந்தது; படிந்தது - தாழ்ந்தது.

1833. இறுவரை யிவர்வதோ ரிலங்கெயிற் றரியென
உறுவரை மார்பினன் றூசங்கொண் டொய்யெனப்
பெறலருங் குஞ்சர மேறலிற் பெருஞ்சனம்
அறைகடற் றிரையொலித் தாங்கென வார்த்ததே.

(இ - ள்.) மிக்க வரைபோலுமார்பினன் பெரிய வரையிற் பாய்வ தோர் அரியென்னும்படி படிவித்தற்கரிய குஞ்சரத்தைப் புரோசைக் கயிற்றைப் பிடித்துக்கொண்டு விரைய ஏறுதலாலே சனம் சமுத்திரம் ஆங்கேயொலித்ததென ஆர்த்ததென்க. (உஎஎ)

1834. அங்கையந் தலத்தினு லப்புதா தையெனக்
கொங்கலர் கண்ணியான் கொம்மைதான் கொட்டலும்
பொங்கிய வுவகையிற் பொலிந்துமாக் களிறவன்
தங்கிய பயிர்த்தொழி றடக்கையாற் செய்ததே.

(இ - ள்.) கண்ணியான், [1] அப்புதுஅப்புது, ஆதுஆது, ஐஐ என்று கூறி, அங்கையாகிய அழகியதலத்தாற் பொய்க்கத்தட்டின அளவிலே, அக்களிறு உவகையாற் பொலிந்து அவன்கட்டங்கிய பயிராற் றொழில் களைத் தன் கையாலே செய்ததென்க.

பயிராவன : பரிபரியென்பனமுதலியன. தொழில் - தோட்டிமுதலி யன எடுத்துக்கொடுத்தல். (உஎஅ)

1833. இறுவரை இவர்வதோர் - பெரியமலையில் ஏறுவதொரு. அரி யென - சிங்கத்தைப்போல. உறுவரை மார்பினன் - பெரியமலைபோன்ற மார்பையுடைய சீவகன். தூசங்கொண்டு - யானையது புரோசைக் கயிற்றைப்பற்றிக்கொண்டு ; சீவக. 1602, அடிக். ஒய்யென - விரைய. குஞ்சரம் - வளைய சுந்தரத்தின் மீது. சனம் - மக்கள். ஆங்கு ஒலித்து என - அவ்விடத்து முழங்கினாற்போல. சனம் ஆர்த்தது.

1834. அங்கையாகிய தலத்தினால் ; அங்கை-உள்ளங்கை. அப்புது, ஆது, ஐ என ; என - என்று கூறி. கண்ணியான் : சீவகன். கொம்மை கொட்டலும் - யானையின் முதுகுபுறத்தைத் தட்டினவளவிலே ; சீவக. 2230. பொங்கிய - மிக்க. களிறு உவகையாற் பொலிந்து. அவன் தங்கிய - சீவகனிடத்துத் தங்கிய. பயிரால் தொழிலைத் தடக்கையாற் செய்தது ; "பயிர்கொள் வேழத்துப் பணையெருத் திரீஇ", "பயிரிற் சொல்லியது பிழையா.........பிடி" (பெருங். 1. 38 : 124 ; 42 : 240-42) ; பயிர் - யானையைத் தொழிற்படுத்தற்குரிய பேச்சுக்கள். தடக்கையால் - வளைந்த துதிக்கையால்.

(உரை) [1] இவை யானைப் பேச்சான மொழிகள் ; முல்லைப். 35, ந. மலைபடு. 326-7, ந.

1835. கொட்டையம் புரோசைதா னிருவடங் கொண்டுடன்
கட்டினன் கருவலித் தடக்கையாற் றேட்டியும்
இட்டன னிரண்டுட னிமிழ்க்கொளீஇ யிலங்குபொற்
பட்டமும் பனிவரை மின்னெனக் கட்டினன்.

(இ - ள்.) கொடிய வலியையுடைய கையாலே தலையின் மணி முடியையுடைய புரோசைக்கயிற்றை இரண்டுவடங்கொண்டு சேரக்கட்டினன்; கட்டி, நெடுந்தோட்டியையும் குறுந்தோட்டியையுந்தம்மிற் பிணைத்து அதின் கழுத்திலேயிட்டான்; இட்டுக் கயிற்றைக்கோத்துப் பட்டத்தையுங்கட்டினனென்க. (௨எகூ)

1836. கச்சையும் வீக்கினன் கறங்கிரு மணியணிந்
தச்சுறு கொழுந்தொடர் யாப்பழித் தடியிணை
உச்சியும் புரோசையுட் குளிப்பவுய்த் துறுவலி
மெச்சிமேல் வேந்தனும் விழைதகத் தோன்றினன்.

அச்சுறுகொழுந்தொடர் - விசையாதபடி மரங்களிலே இரும்பைத் தைத்துக் கழுத்திலே மாலைபோலேயிடுவதொன்று.

(இ - ள்.) உறுவலி, கீழ்வயிற்றிற்கட்டுங் கச்சையுங்கட்டினன்; கட்டி இரண்டுபக்கத்திலே மணியையுமணிந்து தொடரையுங்கட்டவிழ்த்து அடியிரண்டின் உச்சியையும் புரோசைக்குள்ளேயழுந்தச் செலுத்திப் [1] புலிமுகப்பில் இருக்கின்ற அரசனும்புகழ்ந்து விரும்பும்படி வந்துதோன்றினனென்க. (௨அ0)

---

1835. கொட்டையம்புரோசை - முடிமணியையுடைய புரோசைக் கயிறு. கருவலித்தடக்கையால் - கொடிய வன்மையையுடைய அகன்ற கையால். கையால் புரோசையை இருவடங்கொண்டு கட்டினன். இரண்டுதோட்டியும் உடன் இமிழ்க்கொளீஇ இட்டனன்; உடன் இமிழ்க் கொளீஇ - தம்மிற் பிணைத்து. இட்டனன் - யானையின் கழுத்திலேயிட்டான். பனிவரையிடத்து மின்னெனப்பட்டம் கட்டினன்; பட்டம் - நெற்றிப்பட்டம்.

1836. கச்சை யானை : "கச்சையங் களிநல் யானை", "கச்சையங் களிற்றொடு", "கச்சையங் கருங்களி யானை" (சூளா. அரசியற். 27, 59, 130); "கச்சையங் கடகரி" (கம்ப. அயோத்தி. மந்திர. 26). கறங்கு - ஒலிக்கின்ற. வீக்கினன் - கட்டினன். அச்சுறு கொழுந்தொடர்; யானையின் வேகத்தை அடக்குவதொரு கருவி; தொடர் - சங்கிலி. யாப்பழித்து - கட்டவிழ்த்து. அடி இணை - சீவகனுடைய பாதமிரண்டின். குளிப்ப உய்த்து - அழுந்தச் செலுத்தி. உறுவலி : சீவகன்; எழுவாய். வேந்தனும் மெச்சி விழைதக; வேந்தன் : தடமித்தன்; விழைதக - விரும்பும்படி. உறுவலி, வீக்கி, அணிந்து, அழித்து, உய்த்துத் தோன்றினனென முடிக்க.

(உரை) [1] புலிமுகப்பு : "மாடத்துக், கைபுனை கிளர்வேங்கை" (பரி. 10 : 45 - 6); "புலிமுகமாடம்" (பெருங். 2. 9 : 68; 4. 15 : 108);

1837. கோற்றொடிப் புரிசையுட் கொற்றவ னின்றையன்
ஏற்றியல் காண்டுநா மிவட்டரு கென்னவே
காற்றெனக் கடலெனக் கருவரை யுருமெனக்
கூற்றெனக் குஞ்சரங் கொண்டுபுக் கானரோ.

(இ-ள்) தொடிபோலே வளைந்தபுரிசையிலே கொற்றவன் பொருந்த வந்து நின்று நாம் ஏற்றினதியல்பைக் காண்பேம்; இவ்விடத்தே கொண்டுவருகவென்ன, இவனும் விசையாற் காற்றென, ஒலியாற் கடலென, வடிவால் வரையென, அச்சத்தாலுருமென, கொலையாற் கூற்றென அதனையுள்ளே கொண்டுபுக்கானென்க. (உ௮௧)

1838. குழவியஞ் செல்வனேர் குன்றுகொண் டொய்யென
அழகிதாப் பறப்பதே போலவு மார்புயல்
மழையையூர்ந் தோடுமோர் வானவன் போலவும்
எழுதலா காவண மிருந்தன னென்பவே.

(இ-ள்.) இளஞாயிறு ஒருகுன்றைக் கவானிடைக்கொண்டு கடுகப் பறக்கின்ற தொழிலைப்போல் தன்னிடத்தே தொழிலையுடையனுயும், மழையையேறியோடுந் தேவனைப்போலத் தன்னிடத்தேதொழில் கிடக்கவும் எழுதலாகாதபடியிருந்தானென்க. (உ௮உ)

---

"புலிமுகவாயில்", "கொடிப்புலி முகத்து வாயிற் கோட்டை" (உதயண குமார காவியம், உஞ்சைக் காண்டம், 72, 100); இப்பெயர் இக் காலத்துச் சிலவிடங்களில் ஒலிமுகமென்று வழங்குகின்றது.

1837. கோல்தொடி புரிசை - திரண்ட வளையைப்போல் வளைந்த மதில்; கூர்ம. கண் - பூமி. 65. கொற்றவன் : தடமித்தன். நாம் ஐயனது ஏற்றியல்பைக்காண்டும். ஐயன் : சீவகன். ஏற்றியல்பு காண்டும் - யானையேற்றத்தின் இயல்பைக் காண்பேம். இவண் தருக என்ன. உரும் - இடி. குஞ்சரம் : வளையசுந்தரம். அடி, 3-4 : சீவக. 973, அடிக்.

1838. குழவியஞ் செல்வன் - இளஞ்சூரியன்; சூளா. அரசியற். 345, சுயம். 232. குன்று - இங்கே உதயகிரி. ஒய்யென - விரைய; 'ஒய்யென்பது யானையைப் பாகர் வையும் ஆரியமொழி யெனினுமமையும்' (சிலப். 15 : 48, அடியார்.). சீவகனுக்கு இளஞ்சூரியனும் யானைக்கு உதயகிரியும் உவமைகள்; "குழவி ஞாயிறு குன்றிவர் வதுபோல், மழகளிற் றெருத்தின் மைந்துகொண் டிருந்த, மன்ன குமரன்" (பெருங். 1. 33 : 129-31). புயல் ஆர்மழையை ஊர்ந்தோடும் வானவன் - நீர் நிறைந்த மேகத்தை ஏறி ஓடுகின்ற வித்தியாதரனை; "மையிருங் குன்றின் விஞ்சைய னேய்ப்ப" (சிலப். 15 : 51)

1839. வனைகலத் திகிரியும் வாழுயிர் மேற்செலும்
கனைகடுங் கதழ்பரிக் காலசக் கரமும்போல்
வினைதகு வட்டமும் வீதியும் பத்தியும்
இனையவை யேமுற விமைப்பினி னியற்றினான்.

கனை கடுங்கதழ்பரி - மிகவுங்கடிதாகிய மிக்க செலவினையுடைய.

(இ - ள்.) திகிரியுஞ்சக்கரமும்போலே தொழிற்குத்தக்க வட்டமும் வீதியும் பத்தியுமாகிய இத்தன்மையவற்றைத் தப்பாதபடியே 'ஒருகணத்திலே நடத்தினானென்க. (உஅங)

1840. ஒருவனே களிறுமொன் றேருநூ றாயிரம்
திரிவவே போன்றன திசையெலாங் குஞ்சரக்
குரியவன் னிவனலா லுலகினில் லிலனென
அரிதுணர் வேத்தவை யமைகமற் றென்றதே.

ஓரும் : அசை.

(இ - ள்.) அதுகண்டு அரிதென்றுணர்ந்த அரசவைதானும், ஒருவனே, களிறுமொன்றேயாயிருக்கவும் ஏறினபடி திசையெல்லாம் எண்ணிறந்த யானை திரிவனபோலேயிருந்தன; ஆதலால் இவனல்லது இவ்வுலகிற் குஞ்சரமேறுதற்கு மற்றொருவனிலனென்றுகூறி அமைகவென விலக்கிற்றென்க. (உஅச)

1841. வள்ளுகிர் நுதியினால் வரிநுத லுறுத்தலும்
உள்ளுணர் குஞ்சரம் மொய்யென நிற்றலும்
எள்ளரும் மிருமணி கிணினென விசைத்தன
வெள்ளநீர்ப் பெருஞ்சனம் வியந்துகை விதிர்த்ததே.

1839. கலம் வனை திகிரி - பானைமுதலிய செய்தற்குரிய சக்கரம். உயிர்மேற்செலும் காலசக்கரம்; "ஆருயிர் மேயு நேமி" (சீவக. 796). வினைதகு - தொழிற்குத் தக்க. வட்டம், வீதி, பத்தி என்பன யானையின் கதிவிசேடங்கள்; சீவக. 795, அடிக்; "வீதி வட்டமொ டாதிய கதியயின்" (பெருங். 3. 20 : 41). இனையவை - இத்தன்மையவான கதிவிசேடங்களை. ஏமுற - தப்பாதபடி.

1840. ஒருவனே - யானையின்மீதுள்ளவன் சீவகன் ஒருவனே. களிறும் ஒன்றே. திசையெலாம் களிறுநூறாயிரம் திரிவவே போன்றன. அடி, 1-2. சீவக. 450. இவனலால், உலகினில் குஞ்சரக்கு இலன்; இவன் : சீவகன். குஞ்சரக்கு - யானை ஏற்றத்திற்கு. என - என்று கூறி. வேத்தவை = வேந்தவை - இராசசபை. அமைக - பொருந்துக.

1841. வள் உகிர் நுதியினால் - தோட்டிநுதியென்னும் பெரியநகத்தினது நுனியால். வரியையுடைய நுதலில். உறுத்தலும் - அழுத்தினவுடன்.

**(இ - ள்.)** தோட்டி நுதியென்னும் உகிர் நுதியால் நுதலிலேயழுத்தின அளவிலே இவன் மனத்தையுணரும் யானை கடுகநின்றதாக, மணியிசைத்தன; அப்பொழுது சனம் அதிசயித்துக் கைவிதிர்த்ததென்க.

ஓடுகின்ற விசையாலே ஒலியடங்கின மணி நின்றபொழுது இசைத்த வென்க. (உஅரு)

1842. (க) என்மன நின்மன மென்றிரண் டில்லையாற்
றன்மனத் துளபொரு டான்றனக் குரைப்பதொத்
துன்மன மென்மன மென்பதொத் திழைத்ததால்
நன்மனக் குஞ்சர நம்பியோ டென்மரும்.

1843. (உ) தேவனே மகனலன் செல்வன்மற் றென்மரும்
பாவையே நோற்றனள் பாரின்மே லென்மரும்
கோவனும் மக்களுங் குளிர்ந்துதோ ணோக்கினர்
ஓவென வையகத் தோசைபோ யுயர்ந்ததே.

இவையிரண்டும் ஒருதொடர்.

**(இ - ள்.)** நன்மனத்திற் பொருளைத் தான் தனக்குரைக்குந்தன்மையை யொத்து ஏவல்செய்தலாலே என்மனம் உன்மனமென்று கூறுவதாகிய நன்மனக்குஞ்சரம் நம்பியோடொத்துத் தொழிலைச்செய்தது;

---

உள் உணர் குஞ்சரம் - சீவகனது உள்ளத்தை உணரும் யானை. ஒய்யென - விரைய. எள்ளரும் - இகழ்தற்கரிய. மணி - யானையின் மணி. வியந்துகை விதிர்த்தல் : சீவக. 1108, 2366.

1842. தன், தான், தனக்கு என்பன யானையை. உன்மனம் என் மனம் என்பதாகிய நன்மனக் குஞ்சரம், நம்பியோடு ஒத்து இழைத்தது; குஞ்சரம் : வளையசுந்தரம். நம்பி : சீவகன். இழைத்தது - அவன் ஏவிய தொழிலைச் செய்தது. இழைத்ததால் இரண்டில்லை. என்மரும் - என்று கூறுவார்களும்.

1843. செல்வன் மகன் அலன் தேவனே; செல்வன் : சீவகன். மகன்; மனிதன். பாவை : கனகமாலை. கோவன் - அரசன்; என்றது தடமித்தனை. குளிர்ந்து - மனமகிழ்ந்து. தோள்நோக்கல் : பெருமகிழ்ச்சிக் குறிப்பு; "தோணோக்க மாடாமோ" (திருவா. தோணோ. 2-6). "திண்டோண் மகிழ்ந்தன ணோக்கி" (பெருங். 5. 7 : 134); "நரனிருந்து தோள்பார்க்க நான்கிடந்து புலம்புவதோ" (கம்ப. சூர்ப்பணகை. 109); பல்வரிக் கூத்தினுள் ஒன்றாகிய தோள்வீச்சென்பது தோணோக்கமென வழங்கும்; (சிலப். பக். 89, அடியார்.). என்மரும் என்மருமாய் ஓவென்றலின் ஓசை உயர்ந்தது; கோவனும் மக்களும் தோணோக்கினரென முடிக்க.

ஆதலால் அக்குஞ்சரத்திற்கும் நம்பிக்கும் என்மனம் நின்மனமென்று இரண்டில்லையாயிருந்த தென்பாரும், செல்வன் தேவனேயென்பாரும், பாவை நோற்றனளென்பாருமாய் ஓவென்றலின், ஓசையுயர்ந்தது; அப்பொழுது அரசனும் மக்களும் தோளைநோக்கினரென்க.

என்பார் என்மரெனத் திரிந்தது; "உண்மருந் தின்மரும்" (பதிற். 24) என்றாற்போல. இனி ஆயினரென வினைகோடலின், மாரீறு விகாரமாய் நின்றதெனில் தனக்குரிய எதிர்காலமுணர்த்தாமையுணர்க. (உஅ௬-எ)

1844. பிண்டமுண் ணும்பெருங் களிறுபூட் டிய்யவண்
வண்டரும் மோவரும் பாடமா நகர்தொழக்
கொண்டதன் றம்பியுந் தானுங்கோ யில்புகக்
கண்டனங் கண்ணினே யென்றுகண் டவர்சொனார்.

(இ - ள்.) பட்டத்திற்குரிய யானையைக் கம்பத்தோடேசேர்த்துக் கட்டிக் [1]கடிகையாரும் [2]ஏத்தாளிசுளும் புகழ நகர்தொழத் தம்பியுந் தானும் தமக்கென்று கைக்கொண்ட கோயிலிலே புக, கண்ணாலே கண்டேமென்று ஒற்றர் கூறினரென்க.

ஏகாரம் : அசை. கண்டவரென்றது [3]முன்னரியம்புகின்றாரென்ற ஒற்றரைச்சுட்டிநின்றதொரு பெயராகக்கொண்டு, அவர் இங்ஙனங் கூறினரென்க. நந்தட்டன் கூடநிற்றலாற் சீவகனென்றுணர்ந்தார். (உஅஅ)

1845. பாத்தில்சீர்ப் பதுமுகன் படிவவொற் றாளர்சொற்
கோத்தெனக் கொடுத்தனன் கொழுநிதி யுவகையிற்
றூத்திரட் சுருவினந் தொக்கபோன் மறவரும்
ஏத்தருஞ் சிலைகைவா ளிலங்குவே லேந்தினர்.

---

1844. பிண்டம் - கவளம். களிறுபூட்டி - யானையைச் சம்பத்தே கட்டி. வண்டர் - கடிகையர்; "வண்டர், குழுக்களுங்குலே குலேந்திட" (திருவிளை. விறகுவிற்ற. 48); (பி-ம்.) 'பண்டர்.' ஓவர் - ஏத்தாளிகள்; "ஊழி வாழியென் றோவர் தோன்ற" (சிலப் 26 : 124); "நாணுள்ளத், தவிகை யோவரு மொருவழி யகன்றிட" (திருவிளை. விறகுவிற்ற. 50). தம்பியும் தானும் கொண்ட கோயில்புக; தம்பி : நந்தட்டன். தானுமென்றது சீவகனை. கொண்ட கோவில் - தமக்கென்று கொண்ட அரண்மனையிலே. கண்ணினே கண்டனமென்று கண்டவர் சொன்னார்; கண்ணினே - தம் கண்ணால் ; ஏ : அசை. கண்டவர் : ஒற்றர்.

(உரை) [1]கடிகையார் - மங்கலப்பாடகர்; சீவக. 2367. [2]ஏத்தாளிகள் - வாழ்த்துக் கூறுபவர்; சீவக. 2139, ந.

1845. பாத்தில்சீர் - நீங்குதலில்லாத சிறப்பையுடைய. படிவ ஒற்றாளர் சொற்கு - மறைந்த வடிவம் கொண்ட ஒற்றர் கூறிய சொல்லுக்கு; "துறந்தார் படிவத்தராகி...ஒற்று" (குறள், 586); "படிவ வொற்றிற்

(இ - ள்.) நீக்கமில்லாத சீரையுடைய பதுமுகன் மறைந்தவேடங் கொண்ட ஒற்றரொருவர் கூறியசொற்கு இருவர்சொல்லுஞ் சேர்ந்த தென்று கருதி உவகையால் நிதியைக் கொடுத்தான்; கொடுத்தபின் சுறு வினம்பலவும் தொக்கபோலுமறவரும் சிலையையும் வாளையும் வேலையும் கையிலேயேந்தினரென்க.

ஒத்தது, ஓத்தெனவிகாரம்; ஓத்து: விதியுமாம். (உஅக)

1846. வேனிரை வாண்மதில் பிளந்துவெஞ் சமத்திடைத்
தேனிரை களிற்றின்மேற் றிண்குளம் பழுத்துவ
ஆனிரை வளைப்பதோர் பொருளெனச் சிரித்துடன்
மாநிரை பண்ணினர் வடித்தநூற் கேள்வியார்.

(இ - ள்.) கேள்வியார் வேலாகிய காவற்காட்டையுடைய வாண்மதிலைச் சமத்திடையிலே பிளந்து களிற்றின்மேல் அழுத்துவனவாகிய மாநிரை இப்பொழுது நிரைகொள்வது காரியமாயிருந்ததென்று சேரநக்கு அம்மா நிரையைப் பண்ணினரென்க. (உகூ0)

(வேறு)

1847. விடையுடை யினநிரை விழுங்கள் மேயினர்
துடியொடு சிறுபறை துவைத்த வால்வளை
முடியுல குறநிமிர்ந் தார்த்த மொய்கழல்
அடுபடை யிளையரு மரணம் வீசினர்.

---

பட்டாங் குணர்ந்து" (பெருங். 3. 25 : 3). ஓத்தென = ஒத்ததென - சேர்ந்ததென்று கருதி. உவகையால் நிதியைக்கொடுத்தனன். தூதிரள் - வலியதிரட்சியையுடைய. சுறு - ஒருவகைமீன். மறவர் - வீரர். வீரருக்குச் சுறுவினம் உவமை : சீவக. 1446, அடிக் ; "சுறவினத்தின்......வித்தக வீரரும்" (பெருங். 1. 45 : 89-90); "சுறுவெறி வீர ரானர்" (மேரு. பலதேவர். 11). சிலையையும் வாளையும் வேலையும் ஏந்தினர்.

1846. வேசி நிரை வாள்மதில் - வேலாகிய காவற்காட்டையுடைய வாளாகிய மதிலை ; "வான்மதி லாக வேன்மிளை யுயர்த்து" (பதிற். 33 : 7). சமத்திடையிற் பிளந்து. தேன்நிரைகளிறு - மதத்தை உண்ண விரும்பி வண்டுகள் நிரைத்த யானை ; தேன் இரைகளிறெனப் பிரித்தலு மாம். ஆனிரை - பசுக்கூட்டத்தை. ஓர்பொருள் - ஒரு காரியமாயிருந் தது ; இகழ்ச்சி. மாநிரை - தாம் ஏறி வந்த குதிரைக்கூட்டத்தை. கேள்வியார் : தோழன்மார். கேள்வியார், ஆனிரையை வளைப்பது ஓர் பொருளென உடன் சிரித்து, குளம்பழுத்துவனவாகிய மாநிரையைப் பண்ணினர் என முடிக்க.

1847. விடையுடை இனநிரை - காளைகளையுடைய பசுக்கூட்டத்தை ; சீவக. 1723, அடிக். விழுங்கல் - கொள்ளுதலை. பறை - ஆகோட்பறை ;

(இ - ள்.) அங்ஙனம் நிரைகோடலைமேவினாராக, துடியும் பறையு மிசைத்தன ; வளை தேவலோகத்தளவுஞ் செல்ல ஆர்த்தன ; இளையருங் கவசத்தை யணிந்தாரென்க. (உகூக)

1848. (க) காந்தளங் கடிமலர்க் கண்ணி நெற்றியர்
ஆய்ந்தளந் தியற்றிய வத்து ணுடையர்
வேய்ந்துணி யலமரும் புறத்தர் வெஞ்சுடர்
ஏந்தெழி னவியமு மேந்து தோளினர்.

1849. (உ) கோனுடை யினநிரை காக்குங் கோவலர்
தேனொடு கடிச்சுரும் பரற்றுந் தேமலர்க்
கானிடை யினநிரை காவல் போற்றுமின்
ஆனிடை யழித்தபுள் ளென்று கூறினர்.

ஆய்ந்து - வடித்து. அளந்தியற்றுதல் - இப்புடைவைக்கு இஃது அளவென்று அளந்துபண்ணுதல். அத்து - சிவப்பு. வேய்ந்துணி, வேய்த் துணி - உறழ்ச்சி ; அஃது ஊதுங்குழல். ஒளியைத் தன்னிடத்தே ஏந்திய ; நவியம் - கோடாலி.

(இ - ள்.) அவர் அங்ஙனமெழுகின்ற அளவிலே, நெற்றியராய் ஆடையராய்ப் புறத்தராய்த் தோளினராய் அரசனது இனங்களையுடைய நிரையைக்காக்குமாயர், ஆனிடையிலே காரியெழுந்தனவாதலாற் காட் டில் நிரையைக் காவல்போற்றுமினென்று கூறினாரென்க. (உகூஉ-ங)

---

சீவக. 418, ந. துவைத்த - ஒலித்தன. துடியும், பறையும் ஒலிக்க, நிரை கொள்ளல் : சீவக. 418. வால்வளை - வெள்ளிய சங்கு. வளை, உலகின் முடியுறநின்று ஆர்த்த. கழலையும், படையையுமுடைய இளையர் : வீரர். அரணம் வீசினார் - கவசத்தை அணிந்தார் ; சீவக. 777, அடிக்.

1848. கடி - வாசனை. கண்ணியையுடைய நெற்றியர். அத்து உண் ஆடையர் - துவரூட்டப்பெற்ற ஆடையையுடையர் ; "அத்துண் ணுடை யாய்கோ லிடையன்" (யா-வி. 75, மேற்.). வேய்ந்துணி - புல்லாங்குழல் ; வேய் - மூங்கில். அலமரும் - அசைகின்ற. புறம் - முதுகு. சுடரை ஏந்திய எழிலையுடைய நவியம் ; கோடாலி ; இஃது ஒடியெறிதற்குக் கொள்வது. குழலும், நவியமும் ஆயர்க்கு உரியன ; சீவக. 422.

1849. கோனுடை - அரசனுடைய. இனநிரை - காளைகளையுடைய பசுக்கூட்டத்தை. கோவலர் - இடையர். தேனும் சுரும்பும் வண்டின் வகைகள். அரற்றும் - ஒலிக்கின்ற. மலரையுடைய கானிடை ; கான் - காடு. ஆனிடையில் புள்அழித்த வாதலால் கானிடை உள்ள இனநிரை யைக் காவல் போற்றுமின் என்று கூறினர் ; சீவக. 420 ; ஆனிடை - பசுக்கூட்டத்தே. புள் அழித்தல் - காரிப்பறவை எழுதல் ; "மணிநிரைக் கட்சியுட் காரியெழும்" (பு-வெ. 3, பி-ம்.)

1850. விடுபொறி யரவென விளங்கு வெஞ்சிலை
அடுகணை சிதறின ரார்த்த வால்வளை
கடுகின காலிய லிவுளி காண்டலும்
முடுகுபு கோவலர் முந்து காற்பெய்தார்.

விடுபொறி - வீசுகின்ற பொறி.

(இ - ள்.) அவர் சிலையாலே கணையைச்சிதறினர் ; வளையார்த்தன; இவுளி கடுகின ; இவற்றைக் காண்டலுங் கோவலர் நிரையைக்காத்தற்கு முற்பட ஓடினரென்க. (௧௮௪௯)

1851. அளைச்செறி யிரும்புலி யனைய வாடவர்
வளைத்தனர் மணிநிரை வன்க ணுயரும்
விளைத்தனர் வெருவரத் தக்க வெஞ்சொலால்
உளைத்தனர் பூசல்விட் டுணர்த்த வோடினர்.

(இ - ள்.) அவ்வளவிலே ஆடவர் நிரையைவளைத்தார் ; ஆயரும் உளைத்தனராய்ப் போரை விளைத்தார் ; விளைத்தவர் அப்பூசலைக் கைவிட்டு வெஞ்சொல்லால் உணர்த்த ஓடினரென்க. (௧௮௫௦)

(வேறு)

1852. தேர்த்தொகைத் தானை மன்னன் சீவகற் கிளைய நம்பி, வார்த்தொகை முழவம் விம்ம மல்லுறழ் தோளி னானை, நீர்த் தொகைக் கழனி நாடு நெடுநகர்ப் பெயரு நுங்கள், சீர்த்தொகைக் குலனு மெல்லாந் தெரிந்தெமக் குரைமோ வென்றான்.

---

1850. பொறி - தீப்பொறி ; புள்ளியெனலுமாம். பொறியையுடைய அரவு. வில்லுக்குப் பாம்பு உவமை : சீவக. 2158 ; "அரவுற ழுஞ்சிலை" (குறிஞ்சிப். 158); கலித். 50 : 6-7. சிலையால் கணையைச் சிதறினர். வளைஆர்த்த. காலியல் இவுளிகடுகின - காற்றைப்போல் விரைந்து செல் லும் குதிரைகள் விரைந்தன. காண்டலும் - இவற்றைப் பார்த்தவுடன். முடுகுபு - முடுகி. முந்து - முற்பட. காற்பெய்தார் - ஓடினர்.

1851. அளையிலே செறிந்த ; அளை - குகை. மணிநிரையை வளைத்தனர். போரை உளைத்தனராய் விளைத்தனர். பூசல் - போரை. வெஞ்சொலால் உணர்த்த.

1852. மன்னன் : தடமித்தன். விம்ம - ஒலிப்ப. நம்பியாகிய தோளினானை : நந்தட்டனை. கழனியையுடைய நாடு ; கழனி - வயல். நுங்களது நாடும், நகர்ப்பெயரும் குலனும் எமக்கு உரைமோ என்றான்.

இதுமுதலாக ஆயர்செல்கின்றகாலத்து அரசனிருக்கும்படி கூறுகின்றார். தெரிந்து - [1] தெரிய.

(இ - ள்.) [2] நரபதி, சீவகற்கு இளைய நம்பியாகிய நந்தட்டனை நும்முடைய நாட்டின்பெயரையும், நகரின்பெயரையும், குலத்தையும் எமக்குத் தெரியவுரைப்பாயாகவென்றானென்க. (உகூசு)

1853. திருக்குறிப் பன்ன தாயிற் செப்புவ லடிகள் செம்பொன், அரித்தசும் பொழுகு குன்றத் தருவியின் வெரீஇய மஞ்ஞை, பரித்தவை பழன நாரைப் பார்ப்பொடு மருதிற் சேக்கும், உரைத் தகு நாடு மூரும் குலத்துட னுணர வென்றான்.

(இ - ள்.) அடிகளே! திருவுள்ளக்கருத்து அத்தன்மைத்தாயின், நீயுணரும்படி குன்றத்தருவியான் வெருவிய மயில்களோடினவை நாரைப்பார்ப்போடே மருதிலே தங்கும் புகழ்தற்குத்தக்க நாட்டையு மூரையுங் குலத்தோடே செப்புவேனென்றானென்க. (உகூஎ)

1854. பொருகய லுகளிப் பாயப் பூஞ்சிறைக் குமரி யன்னம், குருகினோ டிரியச் செந்நெற் கொழுங்கதிர் குவளை யெற்ற, முருகுவின் டிரியத் தீந்தேன் முழங்குநீர்க் கழனி நன்னா, டெரியுமிழ்ந் திலங்கும் வேலோ யேமமாங் கதம தென்றான்.

கயல் பிறழ்ந்து பாய்தலினாலே அஞ்சிய அன்னமுங் குருகுமிரிதலின், அவற்றின் மெய்தீண்டிச் செந்நெற்கதிர் குவளைமேலெற்றுதலின் நறுநாற்றம் விட்டு உலாவ, அதற்குத் தேனினமுழங்குநாடென்க. கதிர் குவளையென்றே பாடம்.

(இ - ள்.) வேலோய்! அந்நாடு ஏமாங்கதமென்றானென்க.

ஏமமாங்கதமது : பகுதிப்பொருள்விகுதி. (உகூஅ)

---

(உரை) [1] எச்சத்திரிபு. [2] நரபதி : தடமித்தன்.

1853. திருக்குறிப்பு - திருவுள்ளக்கருத்து. அடிகள் : தடமித்தன்; விளி. அசும்பு - ஊற்று. அருவியின் வெரீஇய மஞ்ஞை - அருவியினது ஒலியால் அஞ்சிய மயில்கள். பரித்தவை - ஓடியவை. மஞ்ஞை நாரைப் பார்ப்பொடு மருதிற் சேக்கும்; பார்ப்பு - குஞ்சு. மருது - மருதமரம். சேக்கும் - தங்கும்; "நிரையாமா சேக்கு நெடுங்குன்ற நாட" (நாலடி. 319). உரைத்தகு - புகழ்ந்து சொல்லுதற்குத் தக்க. உணரச் செப்புவல் என்றான்.

1854. கயல் உகளிப்பாய - கயல்மீன் பிறழ்ந்து பாய்தலாலே. சிறை - சிறகு. குமரியன்னம் - இளைய அன்னம். இரிய - கெட்டோடுதலால். முருகு விண்டு இரிய - வாசனைவிட்டுவீச. தேன் - வண்டுகள். வேலோய் : என்றது தடமித்தனை; விளி.

1855. பூந்துகிற் கொடுத்த தீந்தே னகிற்புகை பொன்ன ஞர்தம், கூந்தலிற் குளித்த வண்டு கொப்புளித் திட்ட வாசம், மாந்தர்மேற் றவழ்ந்து மாட மிருள்படப் புதையுஞ் செல்வத், தேந்துபொன் னிஞ்சி மூதூ ரிராசமா புரம தென்றான்.

(இ - ள்.) துகிற்குக் கொடுத்த அகிற்புகையும் வண்டுகொப்புளித்த தேனும் மாந்தர்மேல் தவழ்ந்து இருள்படுத்தலாலே மாடம் புதையுஞ் செல்வத்தினையும், இஞ்சியையுமுடைய அம்மூதூர் இராசமாபுர மென்றா னென்க. (உ௯௯)

1856. எங்குல மடிகள் கேட்க வென்றலு மெழுந்தோர் பூசல், பொங்குளைப் புரவி வெள்ளம் போக்கற வளைத்து முற்றி, இங்குள நிரையை யெல்லாங் கவர்ந்ததென் றிட்ட போழ்தே, திங்கள்வெண் குடையி னான்றன் றிருச்செவிக் கிசைத்த தன்றே.

(இ - ள்.) அடிகள்! எங்குலத்தைக் கேட்கவென்று நந்தட்டன் கூறினவளவிலே, நிரையையெல்லாம் புரவிவெள்ளமெழுந்து, கோலி வளைத்துக் கவர்ந்ததென்று ஆயர் ஒரு பூசலிட்டபொழுதே, அப்பூசல் அரசன் செவியிடத்தே யிசைத்ததென்க. (௩௦௦)

1857. எரித்திறல் வென்றி வேந்தற் கிற்றென விசைப்பச் சீறி, மருப்புறக் கந்து பாய்ந்து முழங்குமால் களிறு போலத், திருக்கிளர் மணிசெய் பொற்றூண் டீப்படப் புடைத்துச் செங்கண், உருத்தெரி தவழ நோக்கி யுடல்சினங் கடவச் சொன்னான்.

---

1855. துகிற்குக் கொடுத்த அகிற்புகையும் வண்டு கொப்புளித்திட்ட வாசத்தையுடைய தேனும் மாந்தர்மேல் தவழ்ந்து இருள்படுத்தலால்; கொடுத்த - ஊட்டப்பெற்ற. மாடம் புதையும் செல்வத்தையும் இஞ்சி யையுமுடைய மூதூர்; புதையும் - மறைகின்ற. இஞ்சி - மதில்.

1856. அடிகள் எங்குலம் கேட்க என்றலும்; அடிகளென்றது தட மித்தனை; விளி. என்றலும் - என்று நந்தட்டன் கூறியவுடன். பொங்குளை - அசையும் தலையாட்டத்தையணிந்த. போக்கற - யாம் மீளுதலில்லாதபடி. முற்றி - கோலி. புரவிவெள்ளம் எழுந்துமுற்றி, வளைத்து நிரையைக் கவர்ந்ததென்று ஓர் பூசலிட்டபோழ்தே. குடையினான்; தடமித்தன். இசைத்தது - அப்பூசல் ஒலித்தது.

1857. எரித்திறல் வென்றி வேந்தற்கு - தீப்போலும் வலியையும் வெற்றியையும் உடைய தடமித்தனுக்கு. இற்றென இசைப்ப - அப்பூசல் இன்னதன்மைத்து என்று உணர்த்தியதனால். மருப்பு உற - தந்தம் அழுந்தும்படி. கந்தைப்பாய்ந்து. திருக்கிளர் - அழகுவிளங்குகின்ற. கோபத்தால் தூணைப்புடைத்தல்; சீவக. 1282, அடிக்; கண்ணால்

எரிபோலும் வலியையுடைய வென்றி. கொன்று வெல்கின்ற வெற்றி.

(இ - ள்.) வேந்தற்கு அப்பூசலிசைத்தவளவிலே, சீறி, மருப் பழுந்தக்குத்தி முழங்குங் களிறுபோலே அக்கோபத்தாலே தூணிலே தீப் பிறப்ப அடித்து, நோக்கிச் சினம் உடலைச்செலுத்த ஒருமொழி கூறினு னென்க. (௲௦௧)

1858. நாற்கடற் பரப்பும் வந்து நன்னகர்க் கண்ணுற் றென்ன,
வேற்கடற் றானை பாய்மா விளங்கொளி யிவுளித் திண்டேர்,
கூற்றென முழங்கு மோடைக் குஞ்சரக் குழாத்தோ டேகிப்,
பாற்கடற் பரப்பின் வல்லே படுநிரை பெயர்க்க வென்றான்.

(இ - ள்.) நாற்கடலும் வந்து நகரிலே கூடினவென்னும்படி குஞ் சரக் குழாத்தோடே தானையும் மாவும் தேரும் நகரிலே கூடிச் சென்று பாற்கடற் பரப்புப்போலப் பாலுண்டான நிரையை வல்லே பெயர்க்க வென்று கூறினானென்க. (௲௦௨)

1859. கண்ணகன் கடலங் கோடும் பறைகளு முழங்கி விம்ம
விண்ணகத் தியங்கு மேகக் குழாமென நிரைத்த வேழம்
திண்ணுகப் புரவித் திண்டேர் விரைந்தன நிரந்த பாய்மா
மண்ணக மலிரக் காலாட் கடல்கிளர்ந் தெழுந்த தன்றே.

(இ - ள்.) சங்கும் பறைகளு முழங்கி யொலியா நிற்ப வேழமும் தேரும் விரைந்தன ; மாப்பரந்தன ; காலாட்கடல் மிக்கெழுந்ததென்க. (௲௦௩)

---

உருத்துநோக்கி ; உருத்து - கோபித்து. சினம் உடல்கடவ - கோபம் உடம்பினைச் செலுத்த ; சீவக. 768, ந ; உடல் சினம் - மாறுபடும் சின மெனலுமாம் ; புறநா. 72 : 6, உரை.

1858. காலாட்படை முதலிய நான்கு படையும் கூறுதலின், 'நாற் கடற்பரப்பும்' என்றான். நகர்க்கண் உற்ற என்ன - நகரிலே வந்து கூடின என்னும்படி. வேலை யுடைய கடல்போலும் தானை ; என்றது காலாட் படையை ; தலைமைபற்றி வேலைமட்டும் கூறினர். பாய்மா - குதிரைப்படை. இவுளியை உடைய தேர் - தேர்ப்படை. ஓடை - நெற்றிப் பட்டம். குஞ்சரக்குழாம் - யானைப்படை. பாற்கடற்பரப்பினைப் போலும் படுநிரையை வல்லே பெயர்க்க என்றான் ; படுநிரை - பாலுண்டாதலை யுடைய பசுக்கூட்டம். பெயர்க்க - மீட்க.

1859. கண் அகல் - இடமகன்ற. கோடு - சங்கு. சங்கும் கோடும்: பு - வெ. 24. முழங்கிவிம்ம ; விம்ம - பெருக. மேகக்குழாமென நிரைத்த வேழம் - மேகக்கூட்டத்தைப் போல இடைவிடாத யானைத் தொகுதி. வேழமும் தேரும் விரைந்தன. பாய்மா நிரந்த; நிரந்த - பரந்தன. மலிர - நிறையும்படி. காலாட்கடல் - காலாட்படையின் பரப்பு. கிளர்ந்து - மிக்கு.

1860. பானிறக் கவரி நெற்றிப் பசுங்கிளி நிறத்த பாய்மாத்
தானுறப் பண்ணித் திண்டேர்த் தம்பிகோல் கொள்ள [வேறிக்
கூனிறக் குழவித் திங்கட் குளிர்கதி ரார மார்பிற்
றேனிறங் கொண்ட கண்ணிச் சீவக குமரன் சொன்னான்.

பானிறக்கவரி - பால்போலுங்கவரி. கூன் - வளைவு. தேனையுடைய ஒளிகொண்ட மாலை.

(இ - ள்.) சீவகன்றான், மாவைத் தேரிலேயுறும்படிபண்ணித் தம்பி செலுத்த அத்தேரையேறி ஒருமொழி கூறினானென்க. (௩௦௪)

1861. மன்னவ னிரைகொண் டாரை வளநகர்த் தந்து மன்னன்
பொன்னவிர் கழலிற் றங்கள் புனைமுடி யிடுவி யேனேல்
இன்னிசை யுலகந் தன்னு ளென்பெயர் சேற லின்றாய்க்
கன்னிய மகளிர் நெஞ்சிற் காமம்போற் கரக்க வென்றான்.

கன்னிய ; அ : அசை.

(இ - ள்.) அரசனிரையைக் கவர்ந்தவரை இந்நகரிலேகொண்டு வந்து அவ்வரசனடியிலே அவர்முடியையிடுவியேனாயின், கன்னியராகிய மகளிர்நெஞ்சிற் காமம்போலே என்பெயர் உலகில் நடவாது மறைக வென்றானென்க.

அரசனைக் காணுமற் போந்து வஞ்சினங் கூறினான். (௩௦௫)

---

1860. பால்போலும் நிறத்தையுடைய கவரியை நெற்றியிலே உடைய பாய்மா; பசுங்கிளிபோலும் பச்சைநிறமுடைய பாய்மா; சீவக. 1774. பாய்மா தேர் உறப்பண்ணி - குதிரையைத் தேரில் பொருந்தும்படி பூட்டி. தம்பி : நந்தட்டன். கோல் - சம்மட்டி. ஏறி - தேரிலே தான் ஏறி. பிறைபோலும் முத்துமாலையை யணிந்த மார்பில். தேன் நிறம் கொண்ட - தேனையுடைய ஒளியைக்கொண்ட. கண்ணியை யணிந்த சீவககுமரன்.

1861. மன்னவன் நிரை தடமித்தனுடைய பசுக்கூட்டத்தை. நகரில் தந்து. மன்னனுடைய கழலில் - தடமித்தனுடைய பாதத்திலே. தங்கள் முடி - நிரைகவர்ந்தவருடைய முடியை. இன்னிசை - இனிய புகழையுடைய. சேறலின்றாய் - நடவாமல். பெயர்கெடுக என்றல் : சீவக. 773. கன்னிமகளிரது நெஞ்சிற் காமத்தைப்போலக் கரக்க; "கன்னி காமம் போல வுள்ள, இன்மை யுரையா விடுக்க ணாளிரும்" (பெருங். 4. 2 : 24-5); "கன்னியர்தம் வேட்கையே போலுங் களிமழலை, தன் மணிவா யுள்ளே தடுமாற" (நள. 190). கரக்க - மறைக. கன்னியர் காமம்போல் என்பெயர் உலகில் சேறலின்றாய் மறைக.

1862. பார்மலி பரவைத் தானைப் பரப்பிடைப் பறப்ப தேபோல்
நீர்மலி கடாத்த கொண்மூ நெற்றிமேன் மின்னி னெய்தாத்
தார்மலி மார்பன் றிண்டேர் தோன்றலுந் தறுகண் மைந்தன்
சீர்மலி பகழி யேந்திப் பதுமுகன் சிலைதொட் டானே.

கடல்போல் நிறைந்த மதத்தையுடைய மேகத்தின் றலையிற் றேன்றுவதொரு மின்னினுங் கடிதாகத்தேர் தோன்றிற்று. மேகம் - யானை.

(இ - ள்.) தானையிடையிலே பறப்பதுபோலே தேர் தோன்றின வளவிலே, மைந்தனாகிய பதுமுகன் பகழியையேந்திச் சிலையையெடுத்தா னென்க. (௲௬௱௬௰௨)

1863. குடைநிழற் கொற்ற வேந்த னொருமகற் காணக் குன்று
அடிநிழ லுறைய வந்தே மடியம்யா மென்ன வெய்த
விடுகணை சென்று தேர்மேற் பின்முறை வீழ்த லோடும்
தொடுகழற் குருசி னோக்கித் தூத்துகில் வீசி னானே.

[1] விடுகணை : ஒருபெயர்.

(இ - ள்.) அடியேமாகிய யாம் தன்குன்றுவடி நிழலிலே உறைய வேண்டிச் சச்சந்தன்மகனாகிய தன்னைக் காணவந்தேமென்று அறிவிக்கும்படி எழுதி யெய்த அம்புசென்று தேர்மேலே மாறிவீழ்ந்தவளவிலே குருசில் நோக்கிப் பதுமுகனேயென்றறிந்து மேற்போராதபடி துகிலை வீசித் தன்படையை விலக்கினானென்க. (௲௬௱௬௰௩)

---

1862. பார்மலி : பரவைக்கு அடை. (பி - ம்.) 'பார்மலி கடலந் தானை.' நீர்மலிகடாத்த - கடல்நீர்போல் நிறைந்த மதத்தையுடைய. கொண்மூ - மேகமாகிய யானையது. மின்னின் நொய்தா - மின்னலைக் காட்டிலும் விரைய. நொய்தாக மார்பனுடைய தேர் தோன்றலும்; மார்பன் : சீவகன். தறுகண் - அஞ்சாமை. மைந்தனாகிய பதுமுகன் பகழியை ஏந்திச் சிலையைத் தொட்டான்.

1863. அடியம்யாம், குன்று அடிநிழல் உறைய, கொற்ற வேந்தனுடைய ஒரு மகனைக் காணவந்தேம் ; குன்று - குறைவில்லாத. அடி - சீவகன்பாதம். உறைய - தங்கும்பொருட்டு. வேந்தன் : சச்சந்தன். மகன் : சீவகன். என்ன எய்த கணை - என்று தெரிவிக்கும்படி எழுதிப் பதுமுகன் எய்த அம்பு. தேர்மேல் - சீவகனது தேரின்மீது. அம்பு சீவகன்மீது படாமைதோன்ற, 'பின்முறை வீழ்தலோடும்' என்றார். குருசில் : சீவகன். நோக்கி - அம்பில் எழுதியது பதுமுகனே யென்றறிந்து. துகில் வீசினான் : "மறையோ ரெல்லா முத்தரியம், விண்ணிலேற விட்டார்த்தார்" (பெரிய. வெள்ளானைச். 13). போரை நிறுத்தும் பொருட்டுத் துகிலை வீசினான்.

(உரை) [1] எய்த விடுகணை யென்றுவந்தமையின் இவ்வாறாயிற்று.

1864. ஏந்தலைத் தோழ ரெல்லா மிணையடி தொழுது வீழச்
சேந்தன கண்ணி னுலுந் திண்ணெழிற் றேளி னுலும்
வாய்ந்தவின் சொல்லி னுலு மாலைதாழ் முடியி னுலும்
ஆய்ந்தவன் சிறப்புச் செய்தா னவலநோ யவருந் தீர்ந்தார்.

(இ - ள்.) அரசனுதலறிந்தமையிற் சீவகனைத் தோழரெல்லோருந் தொழுது அடியிலே வீழ்ந்தவளவிலே, அவன் இவர்க்குச்செய்யுஞ் சிறப்பிவையென்றுராய்ந்து அத்தரங்களிலே தோளாலுஞ் சொல்லாலும் முடியாலும் கண்ணுலுஞ் சிறப்புச்செய்தான்; அவரும் நோய்தீர்ந்தாரென்க. (௩௦௮)

1865. கழலவாய்க் கிடந்த நோன்றுட் காளைதன் காத லாரை
நிழலவா யிறைஞ்சி நீங்கா நெடுங்களிற் றெருத்த மேற்றி
அழலவாய்க் கிடந்த வைவே லரசிளங் குமரர் சூழக்
குழலவாய்க் கிடந்த கோதை தாதையூர் கொண்டு புக்கான்.

தன்னிழலைப் பகையென்றவாவித்தாழ்ந்து. கொல்லனுலையை விரும்பினவேல்; "கொற்றுறைக் குற்றில" (புறநா. 95) போல. அரசு நடாத்துதற்குரிய இளைய குமாரர். மொழியை [1] வங்கியம் விரும்பிக் கிடத்தற்குக்காரணமான கனகமாலை.

(இ - ள்.) காளை தன்தோழரை யானையிலேயேற்றிக் குமரர் சூழ நரதேவனூரிலே கொண்டுபுக்கானென்க.

சீவகனும் அரசிளங்குமரரும் தோழர்நால்வருடனே யானையேறினு ரென்பது ஏற்றி என்பதனுற் பெற்றும். (௩௦௯)

---

1864. ஏந்தலை : சீவகனை. தோழர் : பதுமுகன் முதலியவர். சேந்தனகண் - இயல்பாகச் சிவந்தனவாகிய கண்கள். கண்ணினுல் பார்த்தும், தோளினுல் தழுவியும், இன்சொல்லினுல் புகழ்ந்தும், முடியினுல் அசைத்தும் சிறப்புச்செய்தான். ஆய்ந்து - அவர்க்குச்செய்யும் சிறப்பைத் தகுதிக்கேற்ப ஆராய்ந்து. அவன் : சீவகன். அவரும் அவலநோய்தீர்ந்தார்; அவர் : தோழர்; அவலநோய் - சீவகனைப்பிரிந்த வருத்தத்தாலாகிய நோய். மு : பாகவதம், 1. 4 : 62; திருவிளை. திருமணப். 95. அவரவர் தகுதிக்குத் தக்கபடி ஒழுக வேண்டுமென்பது இப்பாடலால் அறியப்படுகின்றது.

1865. கழலவாய் - வீரக்கழலையுடையனவாய். நோன்றுட்காளை - வலிய அடியையுடைய சீவகன். காதலாரை : தோழரை. நிழல் அவாய் இறைஞ்சி நீங்கா - தன் நிழலைத் தனக்குப் பகையாகிய யானை யென்று விரும்பிப் பூமியில் தாழ்ந்து நீங்காத. எருத்தம் - பிடர். ஏற்றி - ஏறச்செய்து. அழல் அவாய் - கொல்லனுலையின் தீயை விரும்பி. வேலையுடைய அரசிளங்குமரர் : விசயன் முதலாயினர். குழல் அவாய்க்கிடந்த கோதை - மொழியைப் புல்லாங்குழல் விரும்பிக் கிடத்தற்குக் காரணமான கனகமாலை. தாதையூர் - தடமித்தனுடைய ஊராகிய ஏமமாபுரத்தில்.

(உரை) [1] வங்கியம் - புல்லாங்குழல்.

(வேறு)

1866. வானக்கி நின்று நுடங்குங்கொடி மாட மூதூர்ப்
பானக்க தீஞ்சொற் பவளம்புரை பாவை யன்ன
மானக்க நோக்கின் மடவார்தொழ மைந்த ரேத்த
யானைக்கு ழாத்தி னிழிந்தாரரி மானொ டொப்பார்.

நக்கி - தீண்டி. நக்க - கெடுத்த.

(இ - ள்.) அரிமானொடொப்பார் மூதூரிலே சொல்லையும் நோக்கினையு முடைய பாவையன்ன மடவார் தொழ மைந்தரேத்த யானைத்திரளி னின்றும் இழிந்தாரென்க.

[1] நிறத்தாற் பவளம்புரையுமடவார். சீவகனுமரசிளங்குமரருந் தோழர்நால்வரும் யானையினின்றும் இழிகின்ற காலத்துச் சீவகனையும் அரசிளங்குமரரையும் மகளிர் தொழுதாரென்றுணர்க. (௩௧0)

1867. செம்பொற் புளகத் திளஞாயிறு செற்ற கோயில்
வம்பிற் றுளும்பு முலைவாணெடுங் கண்ம டவார்
நம்பப் புகுந்து நரதேவ னருளி னெய்திப்
பைம்பொற் புளகக் களிற்றானடி தாம்ப ணிந்தார்.

(இ - ள்.) கச்சோடே மாறுபட்டசையு முலையினையும், கண்ணினையு முடைய மடவார் விரும்பப் பொன்னாற்செய்த கண்ணாடியால் இளஞா யிற்றைக் கெடுத்த கோயிலிலேபுகுந்து நரதேவனழைக்கச் சென்றணுகி அவனடியைத் தாம் வணங்கினாரென்க. (௩௧௧)

---

1866. வான் நக்கி - ஆகாயத்தைத் தீண்டி. நுடங்கும் - அசைகின்ற. மூதூர் - ஏமமாபுரத்தில். பால் நக்க - பாலின் சுவையை இகழ்ந்த. பாவை - கொல்லிப்பாவை. மான் நக்க - மானினது பார்வையைக் கெடுத்த. சொல்லையும், நோக்கினையுமுடைய பாவையன்ன மடவார். மைந்தர் : வீரர். குழாத்தினின்றும் இழிந்தார்; இழிந்தார் - இறங்கினர். அரிமான் - சிங்கம். ஒப்பார் : சீவகன் முதலியவர்; எழுவாய்.

(உரை) [1] சீவக. 192; மணி. 4 : 124-5.

1867. செம்பொன்னாலாகிய புளகத்து; புளகத்து - கண்ணாடியால். ஞாயிறு செற்ற - சூரியனைக் கெடுத்த. கோயில் - அரண்மனையில். வம்பின் துளும்பும் முலை - கச்சிற்குள் ளே அசைகின்ற முலை. மடவார் நம்பக் கோயிலில் புகுந்து; நம்ப - விரும்பும்படி. நரதேவனது அருளால் எய்தி; நரதேவன் : தடமித்தன். பைம்பொற் புளகக்களிறு : சீவக. 809; பெருங். 1. 45 : 14-5. களிற்றான் : தடமித்தன்; சுட்டுப் பெயர் மாத்திரையாய் நின்றது.

1868. வல்லான் புனைந்த வயிரக்குழை வார்ந்து வான்பொற்
பல்பூ ணெருத்திற் பரந்தஞ்சுடர் கால மன்னன்
மல்லார் திரடோண் மருமான்முக நோக்க மைந்தர்
எல்லா மடிக ளெனக்கின்னுயிர்த் தோழ ரென்றான்.

வாரப்பட்டு வாலிதாகிய பொன்னாற் செய்த பூண்.

**(இ - ள்.)** மன்னன் பூணையுடைய எருத்திலே குழைபரந்து ஒளி காலும்படி மருமான்முகத்தை இவர் யாரென்னுங்குறிப்புப்படப்பார்க்க, அடிகளே! மைந்தரெல்லாரும் எனக்கு உயிர்போலுந் தோழரென்றா னென்க. (ரு௬௨)

1869. வார்பொன் முடிமேல் வயிரம்முழச் சேந்த செல்வத்
தார்பொன் னடிசூழ் மணியங்கழ லானை வேந்தன்
கார்மின் னுடங்கு மிடைமங்கையைக் காண்க சென்றென்
றேர்மின்னு தாரா னருளத்தொழு தேகி னாரே.

**(இ - ள்.)** அரசர்முடியில் வைரம் உழுதலாலே சிவந்த செல்வத்தை யுடைய அடியைப் பொன்னிடத்திலே நிறைந்த மணியையுடைய கழல் சூழ்ந்த தாரானாகிய யானையையுடையவேந்தன் கனகமாலையைச்சென்று காண்கவென் றருளிச்செய்ய, அவரும் ஏகினாரென்க.

வார்தல் - பெருகுதல். ஆர்பொன் - திருவுமாம். (ரு௬௩)

1870. தழுமுற்றும் வாராத் திரடாமங்க டாழ்ந்த கோயில்
முழுமுற்றுந் தானே விளக்காய்மணிக் கொம்பி னின்றாள்
எழுமுற்றுந் தோளார் தொழுதாரின்ன ரென்று நோக்கக்
கழுமிற்றுக் காதல் கதிர்வெள்வளைத் தோளி னாட்கே.

---

1868. வல்லான் - தொழில்வல்லவன். குழை - குண்டலம். வார்ந்து - ஒழுகி. வான் - சிறந்த. பூணையுடைய பிடரில். மன்னன், எருத்திற் குழை பரந்து சுடர்காலும்படி மருமான் முகத்தை நோக்க; மன்னன் : தடமித்தன். மருமான் : சீவகனது. நோக்க - உடன்வந்தோர் யாரென்று வினவும் குறிப்புத் தோன்றப்பார்க்க; குறிப்பு நோக்கினால் வினவல் : சீவக. 1730. மைந்தர் : உடன்வந்தோர். அடிகள் : தடமித்தன்; விளி. என்றான் - என்று சீவகன் கூறினான்.

1869. முடிமேல் - சிற்றரசரது கிரீடத்தின்மேலுள்ள. வயிரம் உழ - வயிரம் அவர் வணங்கும்போது உழுதலால். சேந்த அடி - சிவந்த பாதத்தை. செல்வத்துப் பொன்ஆர்மணி சூழ்கழல்; பொன் ஆர் - பொன்னால் அமைந்த. ஆனை - யானை. வேந்தன் : தடமித்தன். கார் மின்நுடங்கு - மேகத்து மின்னலைப் போலத்துவளும். மங்கை : கனக மாலை. ஏர்மின்னு - அழகுவிளங்கும். சென்றுகாண்க என்று தாரான் அருள ; தாரான் : தடமித்தன்.

1870. தழுமுற்றும் வாரா : "தழுமுற்றும் வாரா" (கூர்ம. கண். பூமி. 19). முற்றும் தழுவவாராத திரண்ட தாமங்கள். தாமம் - மாலை.

முழுதும் : முழுமென விகாரம்.

(இ - ள்.) முற்றுந் தழுவவொண்ணதை தாமந்தாழ்ந்தகோயிலின் முழுதுந் தானே விளக்காய்ச்சென்று முற்றுமணிக்கொம்புபோல் நின்ற வளை எழுப்போலுந்தோளார் தொழுதார் ; அவள் [1] என்னரென்று குறிப்புப்பட நோக்க, அவ்வளவிலே சீவகன் இவர் எனக்கு இத்தன்மையரென்று அவளைநோக்க, அவட்குக் காதல் நிறைந்ததென்க.

இனி முழுமுற்றும், ஒரு சொல்லாக்கியுமுரைப்ப. (ருகச)

1871. துறக்கம் மிதுவே யெனுந்தொன்னகர் மன்னன் மங்கை
தொறுக்கொண்ட கள்வ ரிவரோவெனச் சொல்லி நக்காங்
கொறுக்கப் படுவா ரிவரென்றங் கசதி யாடி
வெறுக்கைக் கிழவன் மகளென்ன விருந்து செய்தாள்.

(இ - ள்.) மன்னன்மகள், இவரோ ஆங்குநிரையடித்த கள்வரென்று கூறி நக்கு, இவர் இனித் தண்டஞ்செய்யத்தகுவரென்று நகையாடி, அப்பொழுதே அளகைக்கோன்மகள் விருந்துசெய்தாலென்ன விருந்து செய்தாளென்க. (ருகரு)

1872. அருந்தீத் தொழிலே புரிந்தான்மறை யாய வெல்லாம்
விருந்தா விரிப்பா னவன்சீவக சாமி வேறு
இருந்தாற்கொ ரோலை கொடுத்தானெரி குண்ட லத்தாற்
பொருந்தார் பொறியைப் புறநீக்குபு நோக்கு கின்றான்.

---

தாழ்ந்த - தங்கிய. கோயில் - அரண்மனையில். முழுமுற்றும் - முழுவதும் ; ஒருசொல். மணிக்கொம்பினைப்போல் நின்றளை ; என்றது, கனகமாலையை. எழுமுற்றும் - தூணைப்போலும். தோளார் : தோழன்மார். நோக்க - வினவும் குறிப்போடு பார்க்க ; சீவக. 1730. இன்னர் என்று - இத்தன்மையானவரென்று. நோக்க - சீவகன் கனகமாலையைப் பார்க்க. தோளிணைட்குக் காதல் கழுமிற்று - கனகமாலைக்கு அவரிடத்தில் அன்பு நிறைந்தது.

(உரை) [1] என்னர் - எத்தன்மையர்.

1871. துறக்கம் - சுவர்க்கம். எனும் நகர் - என்று கூறப்படும் ஏமமாபுரத்தில். மன்னன் மங்கை - தடமித்தன் மகளாகிய கனகமாலை. இவரோ தொறுக்கொண்ட கள்வர் எனச் சொல்லி ; தொறுக்கொண்ட - பசு நிரையைக் கைக்கொண்ட. நக்கு - சிரித்து. இவர் ஒறுக்கப்படுவார் என்று அசதியாடி ; ஒறுக்கப்படுவார் - தண்டிக்கப்படுவார். அசதியாடி - பரிகாசச் சொற்களைக் கூறி ; "ஒண்ணுதன் மாதர்......அசதிக் கிளவி நயவர மிழற்றி", "அசதி யாடிய, மைதவழ் கண்ணி" (பெருங். 2. 17 : 187-91 ; 3. 15. 17-8) ; "ஐயன்மார் போந்ததென் றசதி யாடினன்" (சூளா. அரசியற். 254). வெறுக்கைக் கிழவன் மகளென்ன - செல்வத்திற்கு உரியவனை குபேரன் மகளைப் போல.

1872. அருந்தீத் தொழிலே புரிந்தான் - செய்தற்கரிய அக்கினிகாரியங்களையே செய்தவனாகிய புத்திசேனன். விருந்தா-புதிதாக. விரிப்பான் -

(இ - ள்.) புத்திசேனன், மறைந்தகாரியங்களெல்லாம் புதிதாகப் பின்பு கூறவேண்டி இப்பொழுது சீவகன் தனியேயிருந்தவனுக்கு ஓரோலையைக் கொடுத்தான்; அதனை அவன் வாங்கிச் குண்டலத்தோடே பொருந்துதல் நிறைந்த குழையைப் புறத்தினின்று நீக்கி வாசியாநின்றானென்க.

பொறி, [1] தத்தம்பொருள்வயிற் றம்மொடு சிவணிய ஆகுபெயரிலேயாய்க் குழையையுணர்த்திற்று. (ருகசு)

(வேறு)

1873. மற்றடிகள் கண்டருளிச் செய்க மலரடிக்கீழ்ச்
சிற்றடிச்சி தத்தையடி வீழ்ச்சிதிரு வடிகட்
குற்றடிசின் மஞ்சனத்தை யுள்ளுறுத்த காப்பும்
பொற்புடைய வாகவெனப் போற்றியடி வீழ்ந்தேன்.

மற்றுக் காப்பென்க; அரசன் நுகருவனவற்றைக் [1] காப்பென்றல் மரபு. அடியிலே யுற்றுப் போற்றியென்க. என்றது, சமைக்கின்ற பொழுதேயுற்றுக் காக்கப்பட்டென்றவாறு.

---

விரித்துக் கூறவேண்டி. அவன் : புத்திசேனன். வேரு இருந்தாற்கு - தனியே இருந்தவனுக்கு. எரிகுண்டலத்தால் - விளங்குகின்ற குண்டலத்தோடு. பொருந்து ஆர்பொறியை - பொருந்துதல் நிறைந்த குண்டலத்தாலிட்ட முத்திரையை ; சீவக. 1768. புறத்தினின்றும் நீக்கி.

(மேற்.) அடி, 3-4 : கல். 'அண்டமீன்ற', 5-10, மயில்.

(உரை) [1] தொல். வேற்றுமை மயங்கு. 33.

1873. அடிகள் : சீவகன் ; விளி. சிற்றடிச்சியாகிய தத்தை ; அடிச்சி - அடியாள். மலரடிக்கீழ் அடிவீழ்ச்சி ; அடிவீழ்ச்சி - வணக்கம் ; சீவக. 2587 ; "செங்கண்மால் சேவடிக்கீ முடிவீழ்ச்சி" (நாச்சியார். 9 : 7). அடிசிலையும் மஞ்சனத்தையும் உள்ளுறுத்த காப்பும் போற்றிப் பொற்புடையவாகவென ; சீவக. 1893 ; உள்ளுறுத்த - உள்ளிட்ட. காப்பு : "காப்புடை நறுநீர்" (பெருங். 1. 57 : 87). போற்றி - காப்பாற்றப்பட்டு. இதுமுதல் எட்டுப்பாடல்கள் காந்தருவதத்தை ஓலையில் எழுதிய செய்திகள்.

(மேற்.) அடி, 1 : தொல். இடை. 14, தெய்வச் ; நன். இடை. 14, மயிலை : சங்கர.

(உரை) [1] காப்பென்பது மஞ்சட்காப்பு, மாக்காப்பு, எண்ணெய்க் காப்பு, மிளகுகாப்பென்று இக்காலத்தும் இருவகை வழக்கிலும் வழங்கும் ; 'குரவர்க்குக் காப்புக்களைக் குறித்துப் போற்றியென்றல் மரபு' (சிலப். 13 : 95-7, அடியார்.) என்பதும் ஈண்டறியற்பாலது.

(இ - ள்.) திருவடிகட்கு அடிசிலையும் மஞ்சனத்தையுமுள்ளிட்டன வும் மற்றுக்காப்புக்களும் அடியிலேயுற்றுப் போற்றப்பட்டுப் பொற்புடைய வாக வேண்டுமென்று சிற்றடியாளாகிய தத்தை மலரடிக்கீழ் வீழ்ந்தேன்; அவ்வடி வீழ்ச்சியை அடிகள் நெஞ்சாலே கண்டருளுகவென்க.

இவைகாத்தல் தனக்குக் கடனாதலின், முற்கூறினாள். (ருகஎ)

1874. வயிரமணிக் கலன்கமழுங் கற்பகநன் மாலை
உயிரைமதஞ் செய்யுமதுத் தண்டொடுடை யாடை
செயிரினறுஞ் சாந்துசிலை யம்புமணி யயில்வாள்
மயிரெலியின் போர்வையொடெம் மன்னன்விடுத் தானே.

மதுத்தண்டு - வீரபானமிருக்கும் குழாய்.

(இ - ள்.) கலுழவேகன், எலிமயிர்ப்போர்வையோடே கலமுதலிய வற்றை வரவிட்டானென்க.

உம்மையும் உருபும் விரிக்க. (ருகஅ)

1875. வந்தவனை யாருமறி யாமன்மறை யாகத்
தந்துதரன் கேட்பவிது சாமிவலித் தானு
ஐந்துமதி யெல்லையினை யாண்டுடைய னாகி
அந்திலகன் றன்றமரொ டாங்கணெனச் சொன்னேன்.

(இ - ள்.) தரன்வந்தவனை யாரும் அறியாதபடி மறையாகக் கொண்டு வந்துவைத்து அவன் கேட்கும்படி ஓராண்டிற்கு ஐந்து திங்களளவு குறையாகவுடையனாய்த் தமரோடே ஏமமாபுரத்தேயகன்றா னென்று இக்காரியம் சாமிதானேயருளிச்செய்தானாகக் கூறினேனென்க.

தோழர் ஏமமாபுரத்து ஏறப்போவதற்குமுன்பே ஏழுதிங்கள் சென்றமை, "இங்கிவர்க ளிவ்வாறு" (சீவக. 462) என்னுங் கவியிற் கூறினும். பின்பு தோழர் தாபதப்பள்ளியிற் செல்ல ஒன்றும், "ஒருமதி யெல்லைநாளுட்......கொணர்ந்த பின்றை" (சீவக. 1817) எனவே

---

1874. வயிரத்தாலும் மணியாலும் ஆகிய கலன்; ஆபரணம். மதம் செய்யும் - மதமுடையதாகச் செய்கின்ற. மதுத்தண்டு : சீவக. 863, அடிக். செயிர் இல் - குற்றமில்லாத. அயில் - வேல். எலிமயிராற் செய்த போர்வை ; சீவக. 819, அடிக்; "எலிப்பூம் போர்வையொடு" (பெருங். 1. 47 : 179). எம்மன்னன் : கலுழவேகன். விடுத்தான் - தரன் என்பவனை அனுப்பினான். அடி, 3-4 : மதுரைக். 225-8.

1875. வந்தவனை - தரனை. தந்து - கொண்டு. கேட்ப - கேட்கும் படி. யாண்டுக்கு ஐந்துமதி எல்லையினை உடையனாகித் தமரோடு ஆங்கண் அகன்றான் என இது சாமி வலித்தானாகச் சொன்னேன்; உடையனாகி - குறையாக உடையனாய். தமர் : தோழர். ஆங்கண் - ஏமமாபுரத்தே. சாமிவலித்தானு - சீவகசாமி கூறினானாக.

சீவகன் வந்து விசயையைக் காண ஒன்றும், இவளைக் கண்டு [1] ஊரேறப்போக ஒன்றும், [2] மாமனுரிடத்து ஏறப்போக ஒன்றும் மீண்டு ஊரேற வர ஒன்றும் ஆக ஐந்து திங்களுஞ் சென்றவாறுணர்க. (௲௧௯)

1876. பட்டபழி வெள்ளிமலை மேற்பரத்த லஞ்சித்
தொட்டுவிடுத் தேனவனைத் தூதுபிற சொல்லிப்
பட்டபழி காத்துப்புக ழேபரப்பி னல்லால்
விட்டலர்ந்த கோதையவ ரால்விளைவ துண்டோ.

(இ - ள்.) கட்டியங்காரன் சிறைசெய்தானென்று பிறந்த பழி மலைமேற் பரத்தலையஞ்சி வேறே சில காரியங்களைக் கூறி அவனை என்னைத் தொட்டுச் சூளுறவுகொண்டு போகவிட்டேன்; இனி இப்பழியை மறைத்து அரசவுரிமையை எய்துவதொழிய மகளிரை மணஞ்செய்கின்ற அதனால் விளைவதொரு புகழில்லையென்க.

பழி வெள்ளிமலைமேற் பரத்தலஞ்சியெனவே, இவன் சிறைப்பட்டமை கலுழவேகனும் அறிந்திலனென்பது பெற்றும். ஈண்டு இங்ஙனங் கூறவே, "பொன்னணி" (சீவக. 1147) என்னுங் கவியில், 'தெய்வ மாதரைச் சூழ்ந்த' என்றும், "சந்தமாலை" (சீவக. 1160) என்னுங் கவியில், 'வந்த விண்ணோர்களை' என்றும், அவள் வழிபட்ட தெய்வங்கள் வந்து நினைத்தவை முடித்துக்கொடுக்குமென்றதன்றித் தன்படையாகிய விஞ்சையர் ஈண்டுவந்தாரென்றுமை யுணர்க; அவ்விஞ்சையரை அழைக்குங்கால், "தன்னுடை விஞ்சை யெல்லாந் தளிரிய லோத லோடும்" (சீவக. 1147) என்ன வேண்டாவாகலின். (௲௨௰)

---

(உரை) [1] ஊர்: இராசமாபுரம். [2] மாமனுர்: கோவிந்தராசன்.

1876. பட்டபழி - சீவகசாமியைக் கட்டியங்காரன் சிறைசெய்தானென்பதனுற் பிறந்த பழி. பரத்தல் - பரவுதலை. தூதாகப் பிறசொல்லி அவனைத் தொட்டுவிடுத்தேன்; பிற - வேறுசில காரியங்களை. அவனை: தரனை. தொட்டு - என்னைத்தொட்டுச் சூளுறவு கொண்டு. விடுத்தேன் - மீண்டுபோக விட்டேன். பட்ட பழி காத்து - கட்டியங்காரனுலுற்ற பழியை மறைத்து. விட்டு - விண்டு. கோதையவரால்: பதுமை, கேமசரி, கனகமாலை முதலிய மகளிரை மணம்செய்து கொள்வதனுல். விளைவது - விளைகின்ற புகழ். உண்டோ - இல்லை; ஓ: எதிர்மறை.

1877. அல்லதுவு மெங்கைகுண மாலையவ ளாற்ருள்
செல்லுமதி நோக்கிப்பக லேசிறியை யென்னும்
பல்கதிரை நோக்கிமதி யேபெரியை யென்னும்
எல்லியிது காலையிது வென்பதறி கல்லாள்.

(இ - ள்.) அப்பழியன்றிப் பின்னும் ஒருபழி விளைப்பாள்போன்று எங்கையாகிய குணமாலை ஆற்ருளாய் இரவிது பகலிஃது என்பதறியாளாய், அவள் மதியை, வெம்மையாற் பகலே, சிறியையென்னும்; கதிரை, தண்மையால் மதியே, பெரியையென்னுமென்க. (௩௨௧)

1878. அரவுவெகுண் டன்னவக லல்குனிலம் புல்லித்
திருவில்வளை ந் தனையதிரு மேகலையி னீங்கிப்
புருவமதி முகமும்புகழ் தோளும்புணர் முலையும்
உருவமழிந் தடிச்சியுள ளாங்கொலுணர் கலனே.

(இ - ள்.) பாம்பு கோபித்துப் படம்விரித்தாற்போலுமல்குலையுடையாள், நிலத்தேவீழ்ந்து வில்வளைந்தனைய மேகலையையுடைய திருவினின்று நீங்கிப் புருவத்தையுடையதொரு மதிபோலுமுகமும் தோளும் முலையும் வடிவழிதலாலே அடிச்சி பிழைப்பளோ? இறப்பளோ? அறியேனென்ருளென்க.

திருவின்தன்மை கெட்டடென்க. (௩௨௨)

1879. நாளைவரு நையலென நன்றெனவி ரும்பி
நாளையெனு நாளணிமைத் தோபெரிதுஞ் சேய்த்தோ
நாளையுரை யென்றுகிளி யோடுநகச் சொல்லும்
நாளினுமிந் நங்கைதுயர் நாளினுமற் றிதுவே.

---

1877. அல்லதும் - அப்பழியையல்லாமலும். எங்கையாகிய குணமாலை யென்னும் அவள்; எங்கை - என் தங்கை. ஆற்ருள் - நும்பிரிவைப் பொருளாகி. செல்லுமதி - ஆகாயத்தில் ஊர்ந்து செல்கின்ற சந்திரனை. என்னும் - என்று கூறுவாள். கதிரை - சூரியனை. எல்லி - இரவு. காலை - பகல். அறிகல்லாள், சிறியை என்னும்; பெரியை என்னும்; அறிகல்லாள் - அறியாதவளாகி.

1878. அரவு - பாம்பு. வெகுண்டன்ன - கோபித்துப் படம் விரித்தாற்போன்ற. அல்குல் : குணமாலை. நிலத்தேபுல்லி. புல்லி - வீழ்ந்து. திருவில் - இந்திரவில். மேகலையையுடைய திருவின் நீங்கி; திரு - கண்டாரால் விருப்பப்படும் தன்மை ; சீவக. 840, ந. புருவத்தையுடைய மதிபோலும் முகமும். உருவம் - வடிவம் ; அழகு எனலுமாம். அழிந்து - கெடுதலால். அடிச்சி உளள் ஆம்கொல் - குணமாலை உயிரோடு இருப்பாளோ? கொல் : ஐயப்பொருளில் வந்தது. உணர்கலன் - அறியேன்.

1879. வரும் - சீவகன் வருவான். நையல் - வருந்தாதே. என - என்று கிளிகூற. அணிமைத்தோ - சமீபத்தில் உள்ளதோ. பெரிதும் - மிக

(இ - ள்.) சீவகன் நாளை வரும்; நீ நையாதேகொள்ளென்று கிளி கூற, அது நன்றென்று விரும்பி, நீ கூறிய நாளையென்னு நாள் அணித்தோ ? சேய்த்தோ ? அந்நாளைக்கூறென்று, அது நக, அதனோடே சொல்லும் ; இந்த நங்கையது துயர் நாளினும் நாளினும் இத்தன்மைத் தென்க.

மற்று : அசை. (௩௨௩)

(வேறு)

1880. நோக்கவே தளிர்த்து நோக்கா திமைப்பினு நுணுகு நல்லார், பூக்கம ழமளிச் சேக்கும் புதுமண வாள னார்தாம், நீப்பிலார் நெஞ்சி னுள்ளா ராதலா னினைத்தல் செய்யேன், போக்குவல் பொழுதுந் தாந்தம் பொன்னடி போற்றி யென்றாள்.

(இ - ள்.) பார்க்கவே தளிர்த்துப் பாராது இமைப்பினும் மெலியு நல்லார் அமளியிலே தங்கும் நித்தகல்யாணர்தாம் நீங்குதலில்லாராய் என்னெஞ்சிடத்தாராதலால், யான் வருந்தேனாய்ப் பொழுதுபோக்கு வேன் ; இனித் தாம் தம்மைப் பாதுகாப்பாராகவென்றெழுதினாளென்க. (௩௨௪)

1881. இலவம்பூ வரக்குண் டன்ன பஞ்சிமெல் லடியி னாடன், புலவிச்சொற் பொறித்த வோலை திருமுடி துளக்கி நோக்கித், தலைவைத்த காப்பு விஞ்சை கொண்டபின் றாமஞ் சூழ்ந்து, கொலைவைத்த குருதி வேலான் றோழரைக் குறுகி னானே.

---

வும். சேய்த்தோ - சேய்மைக்கண் உள்ளதோ. நாளை உரை-அந்தநாளைக் கூறுவாயாக. அணிமைத்தோ, சேய்த்தோ : " அணித்தோ சேய்த்தோ கூறுமின் " (புறநா. 173 : 12). நக - கிளி பரிகசிக்கும்படி. சொல்லும் - குணமாலை கூறுவாள். இந்நங்கை துயர் நாளினும் நாளினும் இதுவே ; நங்கை : குணமாலை. நாளினும் - ஒவ்வொருநாளும் ; இன் : சாரியை. இதுவே - இத்தன்மையதே.

1880. தளிர்த்து - மனம் குளிர்ச்சியடைந்து. இமைப்பினும் - இமைத்துப் பார்த்தாலும். நுணுகும் நல்லார் - மெலிகின்ற மகளிரது ; என்றது, பதுமை, கேமசரி, கனகமாலை என்பவர்களை. அடி, 1 : குறள், 1187. அமளிச்சேக்கும் - படுக்கையில் தங்குகின்ற. புதுமணவாளனா ரென்றது சீவகனை. நீப்பிலார் - நீங்காதவராய். நெஞ்சின் - என் மனத்தில். செய்யேன் - வருந்தேன். என்றாள் - என்று எழுதினாள்.

1881. இலவம்பூ அரக்குண்டன்ன - இலவம்பூவில் சாதிலிங்கம் ஊட்டப்பெற்றாலொத்த. பஞ்சிமெல்லடி - செம்பஞ்சு ஊட்டப்பெற்ற மெல்லிய பாதம். அடிக்கு இலவம்பூ உவமை : சீவக. 1583. அடியினாள் : காந்தருவதத்தை. பொறித்த - எழுதிய. ஓலையை நோக்கித் திருமு

(இ - ள்.) அங்ஙனம் அவள் புலவிச்சொற்பொறித்த ஓலையை வாசித்துத் தலைசாய்த்து ஓலையின் முடிவிலெழுதின தனக்குக் காவலாகிய விஞ்சையை உட்கொண்டபின்பு, வெற்றிமாலைசூழப்பட்டுக் கொலைத் தொழிலைத் தன்னிடத்தே கொண்ட வேலான் தோழரைச் சேர்ந்தானென்க.

ஒழிந்த காரியங்களுமுளவேனும், புது மணவாளனுரென்றதனாற் புலவி பொறித்ததாயிற்று. [1] (ருஉ௬)

1882. எங்கோமற் றென்றிறநீர் கேட்ட தென்றுற் கெரிமணிப்பூட், செங்கோன் மணிநெடுந்தேர்ச் செல்வன் காதற் பெருந்தேவி, தங்காத் தவவுருவந் தாங்கித் தண்டா ரணியத்துள், அங்காத் திருந்தாளைத் தலைப்பட் டைய வறிந்தோமே.

(இ - ள்.) நீர்என்திறம் எங்கேயோகேட்டதென்று வினுயினுற்கு, ஐயனே, சச்சந்தன்தேவி விசயை தண்டகாரணியமென்கின்ற வனத்திலே தனக்கேலாத தவவுருவைத் தாங்கி மனத்தை நீ வாழவேண்டுமென்கின்ற ஆசை பிணிக்கப்பட்டுத் துறவோருறைகின்ற அவ்விடத்தே இருந்தவளை எதிர்ப்பட்டு நின்திறம் அறிந்தோமென்றுரென்க.

"ஆத்த பொறிய" (நாலடி. 290), "ஆத்த வறிவினர்" (நாலடி. 351) என்றாற்போல, ஆத்தென்றுர்; இனி உளங்காத்தென்றும் பாடமோதுப. (ருஉ௭)

1883. என்னேமற் றென்னேநீர் மொழிந்த தென்னே யெனவிரும்பி, முன்னே மொழிந்தாற்போன் முறைநின் றெல்லா முடன்மொழிய, மன்னுரைஞ் சிந்துவபோன் மலர்ந்த செந்தாமரைக்கண்ணீர், பொன்னுர மார்பின்மேற் பொழியப் புன்கணுற்றுனே.

---

துளக்கி; துளக்கி - அசைத்து. தலைவைத்த - முடிவில் எழுதிய. தனக்குக் காப்பாகிய விஞ்சையை. கொண்டபின் - அறிந்தபின்பு. தாமம் சூழ்ந்து-மாலை அணியப்பட்டு. வேலான்: சீவகன். தோழரை: பதுமுகன் முதலியவரை.

(உரை) [1] இக்கவியின் பின்னே பின்வருஞ் செய்யுள் சில பிரதிகளிற் காணப்படுகின்றது: "அடிகணீ ரரச ராத லறிந்திலே மேலை நாட்கட், டொடியணி தோளு நல்ல வாகமும் புல்லி நும்மைக், குடிவழி வந்த தோலாக் கந்துகன் மகனென் றெண்ணி, அடிகளு மிகழ்ந்த தெல்லா மருளுக வென்று நின்றுர்."

1882. நீர் என்திறம் எங்கோ கேட்டது என்றுற்கு; என்றுற்கு - என்று கூறிய சீவகனுக்கு. பூணையும், செங்கோலையும், தேரையும் பெற்ற செல்வன்; என்றது சச்சந்தனை. தேவி: விசயை. தங்கா - தனக்குப் பொருந்தாத. ஆத்து - ஆசையால் பிணிக்கப்பட்டு; "ஆத்த வன்பின்" (பெருங். 2. 16 : 91). தலைப்பட்டு - எதிர்ப்பட்டு. ஐய: சீவகனை நோக்கிய விளி.

1883. விரும்பி, நீர்மொழிந்தது என்னே, என்னே யென; என்னே - எவ்வாறு. என - என்று சீவகன் வினவ. முன்னே நின்று மொழிந்தாற்

விரைவாதலின், மூன்றடுக்கினர். விசயையிருக்கின்றமை [1] ஆசிரியன் கூறக்கேட்டதன்றிச் செய்தி விளங்காமையின், ஈண்டு இங்ஙனம் கேட்கின்றான்.

(இ - ள்.) தான் விரும்பி நீர்கூறிய மொழி எங்ஙனேயென்று வினவ, அவரும் தேவிதான் இவன்முன்னே நின்று கூறினாற்போலச் செய்தியெல்லாம் அடைவே சேரச்சொல்ல, அதுகேட்டு, முத்தஞ்சிந்துவது போலே கண்ணீர் மார்பிலே சொரிய வருந்தினானென்க. (௩௨எ)

1884. அஃதே யடிகளும் முளரோ வென்றாற் கருளுமா
றிஃதா விருந்தவா றென்றார்க் கென்னைப் பெறவல்லார்க்
கெய்தா விடருளவே யெங்கெங் கென்றத் திசைநோக்கி
வெய்தா வடிதொழுது வேந்தன் கோயிற் கெழுந்தானே.

(இ - ள்.) பிறந்த செய்தி அஃதேயென்று அவையெல்லாங் கேட்டபின், என்னைப்பெறவல்ல தீவினையையுடையவர்க்கு எய்தாதிருப்பன சில தீவினை இனி இல்லை; அத்தீவினையையுற்ற அடிகளும் இருக்கின்றாரோ வென்று வினயினாற்கு, அவரும் இப்பொழுது நல்வினையாகிய தெய்வம் நமக்கு அருளுநெறியிருந்தபடி இத்தன்மைத்தாவிருந்ததென்றார்; என்றவர்க்கு அவனும் அவரிருக்கின்ற திசை எங்கேயெங்கேயென்று கூறி அத்திசையைநோக்கி விரைய வணங்கிப் பின்பு அரசன் கோயிலுக்குப் போனானென்க. (௩௨அ)

---

போல் - விசயை சீவகன் முன்புநின்று கூறியதைப்போல. மொழிய - தோழர் கூற. ஆரம் - முத்து. பொழிய - சொரிய. புன்கண் உற்றான் - வருத்த மடைந்தான்.

(உரை) [1] ஆசிரியன் - அச்சணந்தியாசிரியன்.

1884. அஃதே - நடந்த செய்தி அத்தன்மையதே; "அஃதே யஃதே யாங்கார வேகன்" (சூளா. அரசியற். 206). என்னைப் பெற வல்லார்க்கு எய்தா இடர் உளவே, அடிகளும் உளரோ என்றாற்கு; உளவே : இல்லையென்றவாறு. அடிகளும் : விசயையும். என்றாற்கு-என்று கூறிய சீவகனுக்கு. அருளுமாறு இஃதா இருந்தவாறு என்றார்க்கு; அருளுமாறு - நல்வினைத் தெய்வம் நமக்கு அருளிய வழி. இஃதா - இத்தன்மைத்தாக. என்றார்க்கு - என்று கூறிய தோழர்க்கு. எங்கெங்கென்று - அவர் இருக்கின்ற இடம் எங்கே எங்கே யென்று சீவகன் கூறி. வெய்தா - விரைய. அடி - விசயையின் பாதத்தை. திசை நோக்கித் தொழுது : சீவக. 849, அடிக். வேந்தன் கோயிற்கு - தடமித்தனது அரண்மனைக்கு.

1885. இலைவிரவு பூம்பைந்தார் வேந்த னேந்தல் குலங்கேட் பான், மலைவிரவு நீண்மார்பின் மைந்தன் றோழர் முகநோக்கிக், கொலைவிரவு கூர்நுதிவேற் குமர னென்னக் குருகுலத்தான், கலைவிரவு தீஞ்சொல்லார் காம னென்றார் கமழ்தாரார்.

(இ - ள்.) இவன்சென்ற அளவிலே, வேந்தன் சீவகன்குலத்தைக் கேட்கவேண்டி, அவன்தோழர்முகத்தை நோக்கிக் குமரன் எக்குலத்தா னென்று வினாதலுற்றுக் குமரனென்ற அளவிலே, சொல்லாராகிய தாரார் அவன்குறிப்பறிந்து இக்காமன் குருகுலத்தானென்றாரென்க.

[1] விரவு : உவமவுருபு. (௩௨௬)

1886. அண்ணல் குருகுலத்தா னென்றால் யான்முன் கருதிய தென், எண்ணம் வெளிப்பட்டான் கரந்த மைந்த னெரிசெம் பொன், வண்ண வரைமார்ப முயங்கி நுண்ணூான் மதியாரோ, டெண்ணி வியநெறியால் விடுத்தான் கோயில் புக்கானே.

என்றாலென்பது ஒருசொல்விழுக்காடு. நந்தட்டன் [1] நாடும் ஊரும் முதலியன கூறலின் உணர்ந்தான். வியம் : ஏவலாதலிற் போக்கின் மேற்று.

---

1885. வேந்தன் : தடமித்தன். ஏந்தலது குலத்தைக் கேட்க வேண்டி ; ஏந்தல் : சீவகன். மலைவிரவு - மலையைப்போன்ற. மைந்தன் தோழர் - சீவகனுடைய தோழரது. கூரிய நுதியையுடைய வேல். குமரன் என்ன ; என்ன - என்று சொன்ன அளவிலே. சொல்லாராகிய தாரார் இக்காமன் குருகுலத்தான் என்றார். கலைவிரவு தீஞ்சொல்லார் - பலகலைகளும் கலந்த இனிய சொல்லையுடையார். தாரார் : தோழர். காமன் : சீவகன். சீவகன் குருகுலத்தானென்பது : சீவக. 1805.

(உரை) [1] மலைவிரவு என்பதிலுள்ளது.

1886. அண்ணல் : சீவகன். முன்கருதியது - முன்பு எண்ணிய குலமே. என் எண்ணத்தில் வெளிப்பட்டான் என்று கூறி. கரந்த மைந்தன் - குலம் முதலியவற்றை மறைத்த சீவகன். மைந்தனது மார்பை முயங்கி; முயங்கி - தழுவி. நுண்ணூல் மதியாரோடு - நுண்ணிய நூல்களில் வல்ல மந்திரியரோடு. எண்ணி - மேல்செய்யவேண்டுவன வற்றை ஆராய்ந்து. வியநெறியால் விடுத்தான் - போகவிடும் வழியாலே போகவிட்டான். சீவகன் கோயில்புக்கான் ; கோயில் - கனகமாலையின் அரண்மனையில்.

(உரை) [1] நந்தட்டன் நாடும் ஊரும் முதலியன கூறியது : சீவக. 1854, 1855.

(இ - ள்.) தலைவன் குருகுலத்தானென்றால் இது யான் முன் கருதிய குலமே; என்னெண்ணத்திலே வெளியானானென்றுகூறி எழுந்திருந்து கரந்த மைந்தன்மார்பிலே முயங்கி அமைச்சருடனே காரியத்தை யெண்ணி அவனைப் போகவிடுநெறியாலே போகவிட்டான்; அவனும் போக்கறிவித்தற்குக் கனகமாலைகோயிலிலே சென்றானென்க.

அரசனுகவே போகவிட்டான். (௩௩0)

1887. விள்ளா வியனெடுந்தேர் வேந்தன் காதன் மடமகளே,
கள்ளாவி கொப்புளிக்குங் கமழ்பூங் கோதா யென்மனத்தின்,
உள்ளாவி யுள்ளாய்நீ யொழிந்தா யல்லை யெனக்கையிற்,
புள்ளாவிச் செங்கழுநீர்க் குவளை செய்தாள் புனைபூணாள்.

(இ - ள்.) வியனெடுந்தேர்வேந்தன் காதல் நீங்காத மடமகளே! கள்ளின் நாற்றத்தைக் கொப்புளிக்குங்கோதாய்! நீ என் மனத்தி னுள்ளே உறைகின்ற உயிராயுள்ளாய்; ஆதலின், நீயென்னையகன்றா யல்லையென்று பிரிவுணர்த்த அதனையுணர்ந்து பூணாள் தன்கையிலிருந்த வண்டிற்குயிராகிய செங்கழுநீரை நெட்டுயிர்ப்பாலே கருங்குவளை யாக்கினாளென்க.

இனி, [1] கள்ளை நீராவியாகக் கொப்புளிக்குமென்றும், [2] உயிரிலே யிருத்தலினென்றும், [3] அன்னங்களையுடைய வாவியிற் கழுநீரென்று முரைப்ப. (௩௩௧)

---

1887. வேந்தனது காதல் விள்ளா மடமகளே; வேந்தன் : தடமித்தன். விள்ளா - நீங்காத. மகளே : கனகமாலாய்; விளி. கள் ஆவி - தேனின் மணத்தை. கோதாய் : கனகமாலாய். மனத்தினுள் ஆவியாக உள்ளாய். நீ ஒழிந்தாயல்லை - நீ என்னை நீங்கினாயல்லை. என - என்று தன் பிரிவை உணர்த்த. பூணாள் செங்கழுநீரைக் குவளையாகச் செய்தாள்; பூணான் : கனகமாலை. புள் ஆவிச் செங்கழுநீர் - வண்டிற்கு உயிராகவுள்ள செங்கழுநீர்ப் பூவை. குவளைசெய்தாள் - சீவகன்பிரிவை யுணர்ந்து அதற்காற்றாது விட்ட தனது பெருமூச்சால் கரிய குவளைப் பூவாகச் செய்தாள். அடி, 4 : "புதல்வன் புன்றலைத், தூநீர் பயந்த துணையமை பிணையல், மோயின ளுயிர்த்த காலை மாமலர், மணியுரு விழந்த வணியழி தோற்றம்" (அகநா. 5 : 22-5)

(உரை) [1] கள்ளாவி என்பதற்கு. [2] உள்ளாவி என்பதற்கு. [3] புள்ளாவி என்பதற்கு.

1888. வார்முயங்கு மென்முலைய வளைவேய்த் தோளாண் மன மகிழ, நீர்முயங்கு கண்குளிர்ப்பப் புல்லி நீடோ ளவனீங்கித், தேர்முயங்கு தானையான் சிறுவர் சேடா ரகன்மார்பம், தார் முயங்கிக் கூந்தன்மா விவர்ந்தான் சங்க முரன்றவே.

(இ - ள்.) அதுகண்டு, அவளை மனமகிழவும் கண்குளிரவும் புல்லி, அவன் அங்குநின்றும்போய் நரதேவன் புதல்வராகிய மைத்துனன் மாருடைய மார்பைத் தழுவிக்கொண்டு மாவையேறினான்; அப்பொழுது நன்னிமித்தமாகச் சங்கம் முழங்கினவென்க. (௩௩௨)

எ – கனகமாலையாரிலம்பகம் முற்றிற்று.

ஆகக்கவி, ௧௮௮௮.

---

1888. வார் - கச்சு. முலையவளை : கனகமாலையை. தோளாளது மனம் மகிழவும் கண்குளிர்ப்பவும் புல்லி. தோளவன் : சீவகன். தானையானுடைய சிறுவர் மார்பத்தைத் தாரோடு முயங்கி; தானையான் சிறுவர்-தடமித்தன் புதல்வராகிய விசயன் முதலிய ஐவர். சேடு - பெருமை. தார் - பூமாலை. முயங்கி - தழுவி. கூந்தன்மா - பிடரிமயிரையுடைய குதிரையை ; சீவக. 781, அடிக். முரன்றவே - முழங்கின ; ஏ : அசை.

எட்டாவது

# விமலையாரிலம்பகம்

1889. முருகுகொப் புளிக்குங் கண்ணி முறிமிடை படலை மாலைக், குருதிகொப் புளிக்கும் வேலான் கூந்தன்மா விவர்ந்து செல்ல, உருவவெஞ் சிலையி ஞற்குத் தம்பியிஃ துரைக்கு மொண் பொற், பருகுபைங் கழலி ஞருட் பதுமுகன் கேட்க வென்றே.

**(இ - ள்.) தலையின் மாலையினையும், வகைமாலையினையும், வேலினையு முடைய சீவகன் மாவையேறிப்போகாநிற்க, அவனுடைய தம்பியாகிய நந்தட்டன் பொன்னாற்செய்த கழலினையுடைய தோழரிற் பதுமுகன் கேட்பாயாகவென்று இக்காரியத்தையுரைக்குமென்க.**

**அது மேற்கூறுகின்றார். சிலையினற்கு : [1] உருபுமயக்கம். காலை அகத்திட்ட கழல். (க)**

1890. விழுமணி மாசு மூழ்கிக் கிடந்ததிவ் வுலகம் விற்பக்
கழுவினீர் பொதிந்து சிக்கக் கதிரொளி மறையக் காப்பிற்
றழுவினீ ருலக மெல்லாந் தாமரை யுறையுஞ் செய்யாள்
வழுவினர் தம்மைப் புல்லாள் வாழ்கநுங் கண்ணி மாதோ.

---

**1889. முருகு - வாசனை. கண்ணி : தலையின் மாலை. முறிமிடை படலைமாலை : வகைமாலை ; சீவக. 483, அடிக். ; முறி - தளிர். கண்ணியையும் மாலையையுமுடைய வேலான் ; சீவகன். கூந்தன்மா : சீவக. 1888, அடிக். உருவம் - அழகு. சிலையினற்குத்தம்பி : நந்தட்டன். கழலினருள் பதுமுகன் கேட்கவென்று இஃது உரைக்கும். கழலினர் : தோழர். பதுமுகன் : விளி. இஃது - இக்காரியத்தை.**

**(மேற்.) அடி, 2 : குறள், 1182, பரிமேல்.**

**(உரை) [1] நான்கனுருபு ஆறனுருபாக மயங்கியது.**

**1890. மாசுமூழ்கி - அழுக்கில்மறைந்து. மணி, இவ்வுலகம் விற்பக் கிடந்ததனைக் கழுவினீர் ; கழுவினீர் - வெளியாக்கினீர். மணிகழுவினீ ரென்றது, 'சீவகன் சச்சந்தன்மகன்' என்பதை வெளிப்படுத்தியதை. சிக்கப் பொதிந்து ஒளிமறையக் காப்பின் உலகமெல்லாம் தழுவினீர் ;**

(இ - ள்.) பெரிய மணி மாசேறி உலகைவிலையாகப் பெறும்படி கிடந்ததனைக் கடுக வெளியாக்கினீர் ; இதனால், ஒருதீங்கின்றி நுங்கண்ணி வாழ்வதாக ; இனி முன்புபோலே அஃப்படப்பொதிந்து மறையக்காப்பீராயின், உலகெல்லாங்கைக்கொண்டீர் ; காவாது வழுவினீராயின், இங்ஙனம் வழுவினுரைத் திருச்சேராளென்றானென்க.

சிக்க - அகப்பட. (உ)

1891. தொழுததங் கையி னுள்ளுந் துறுமுடி யகத்துஞ் சோர, அழுதகண் ணீரி னுள்ளு மணிகலத் தகத்து மாய்ந்து, பழுதுகண் ணரிந்து கொல்லும் படையுட னொடுங்கும் பற்று, தொழிகயார் கண்ணுந் தேற்றந் தெளிகுற்றார் விளிகுற் றாரே.

சோர - வார.

(இ - ள்.) கையிலும், முடியிலும், கண்ணீரிலும், பூணிலும் கொல்லும் படை ஒடுங்குமாதலால், அப்பழுதையாராய்ந்து அக்கூடாநட்புடையோரைத் தம்மிடத்துநின்று நீக்கிப் பின்னும் யாவர்சிலரிடத்தும் தெளிதலைப் பற்றுதொழிக ; அன்றித் தெளிதலுற்றார் விளிதலுற்றாரென்றானென்க.

அரசர்க்கு ஒருதுன்பம்வந்தவிடத்து அவர் நட்புடையோர்போல அழுத கண்ணீரும் கொலைசூழ்தலின் கண்ணீரிலும் படையொடுங்கிற்றாம் ; "ஒன்னார், அழுதகண் ணீரு மனைத்து" (குறள், 828) என்றார் தேவரும். (ங)

---

சிக்கப் பொதிந்து - அகப்பட மூடி. காப்பின் - காப்பீரானால். தழுவினீர் - கைக்கொண்டீர். வழுவினூர் தம்மைச் செய்யாள் புல்லாள் - இங்ஙனம் காத்தலைத் தவறினாரைத் திருமகள் அடையாள். நும் கண்ணி வாழ்க ; "வாழ்கநின்கண்ணி" (புறநா. 198 : 11) ; "வார்கழல் வேந்தே வாழ்கநின் கண்ணி", "வாழ்கநின் கண்ணி வாய்வாள் வேந்து" (மணி. 5 : 28, 18 : 63)

1891. சோர - ஒழுகும்படி. அணிகலம் - ஆபரணம். கையிலும், முடியிலும், கண்ணீரிலும், அணிகலத்திலும் கொல்லும் படை ஒடுங்குமாதலால் பழுது ஆய்ந்து கண்அரிந்து யார்கண்ணும் தேற்றம் பற்றுது ஒழிக; தொழுத கையிலும் படை : "தொழுத கையுளும் படையுள" (வி. பா. வாரணா. 119). ஒடுங்கும் - மறைந்திருக்கும். பழுது - அக்குற்றத்தை. கண் அரிந்து - கூடாநட்பினரைத் தன்னிடத்தே இல்லாதபடி நீக்கி ; சீவக. 1240. தேற்றம் பற்றுது ஒழிக - தெளிதலைக் கொள்ளாமல் நீக்குக. விளிகுற்றார் - இறத்தலையுற்றாராவர்.

1892. தோய்தகை மகளிர்த் தோயின் மெய்யணி நீக்கித் தூய்நீர்
ஆய்முது மகளிர் தம்மா லரிறபத் திமிரி யாட்டி
வேய்நிறத் தோளி னூர்க்கு வெண்டுகின் மாலை சாந்தம்
தானல கலங்கள் சேர்த்தித் தடமுலை தோய்க வென்றான்.

(இ - ள்.) கூடுதற்குரிய மகளிரைக் கூடவேண்டின், அவர்பூணை நீக்கி ஆராய்ந்து தெளிந்த மூப்பிமாராலே குற்றமறத்திமிர்ந்து தூய நீராட்டி அவர்க்குத் துகின்முதலியவற்றைச்சேர்த்திப் பின்பு தான் அவர் முலையைத் தோய்வானாகவென்றானென்க. (ச)

1893. வண்ணப்பூ மாலை சாந்தம் வாலணி கலன்க ளாடை,
கண்முகத் துறுத்தித் தூய்மை கண்டலாற் கொள்ள வேண்டா,
அண்ணலம் புள்ளோ டெல்லா வாயிரம் பேடைச் சேவல்,
உண்ணுநீ ரமிழ்தங் காக்க யூகமோ டாய்க வென்றான்.

அண்ணலம்புள் - அரசவன்னம். சேவல் - சக்கரவாகப்புள்.

(இ - ள்.) பூமாலைமுதலியவற்றைப் புள்ளின்கண்ணிலும் சேவலின் முகத்திலுமுறுத்தித் தூய்மைகண்டல்லது கைக்கொள்ளவேண்டா; தண்ணீரிலும் சோற்றிலும் தீங்கு வாராமற்காத்தற்குக் கருங்குரங்கிற்கு இட்டு ஆராய்கவென்றானென்க.

அன்னம் கண் குருதிகாலும்; சக்கரவாகம் முகங்கடுக்கும்; கருங் குரங்கு உண்ணாது. (ரு)

---

1892. தோய்தகை - சேரும் தகுதியையுடைய. மகளிரைத் தோயின்; தோயின் - சேரவேண்டுமாயின். மெய்யணிநீக்கி - அம்மக ளிரது உடம்பிலணிந்த ஆபரணத்தை அகற்றி. முதுமகளிர் தம்மால் அரில்தபத் திமிரித் தூய்நீராட்டி; அரில்தப - குற்றம் நீங்க. திமிரிஆட்டி - பூசிஆட்டி; "திமிரியாடி", "திமிரியாட" (கூர்ம. நவகண்ட. 27, 32). வேய்போலும் தோள்; நிறத்தையுடைய தோள். தோளினூர்க்கு: அம் மகளிருக்கு. தான்: அசை. நலகலங்கள் சேர்த்தி - நல்ல ஆபரணங் களையும் அணிவித்து.

1893. வண்ணம் - நிறத்தையுடைய. வால் அணிகலன்கள் - தூய ஆபரணங்கள். அடி, 1-2 : வி-பா. வாரணா. 120. அண்ணலம்புள்ளின் கண்ணிலும் சேவலின் முகத்திலும் உறுத்தி; ஆயிரம் பேடைச்சேவல் - ஆயிரம் பெடைகளுக்குச் சேவலொன்றாகவுள்ள சக்கரவாகப்பறவை. உறுத்தி - பொருத்தி. கண்டலால் - கண்டல்லது. எல்லா - தோழனே; பதுமுகன்; விளி. நீரையும், அமிழ்தத்தையும் காக்க; அமிழ்தம் - உணவு. காக்க - தீங்குவாராமல் காத்தற்கு. யூகம் - கருங்குரங்கு.

1894. அஞ்சனக் கோலி னாற்று நாகமோ ரருவிக் குன்றிற், குஞ்சரம் புலம்பி வீழக் கூர்நுதி யெயிற்றிற் கொல்லும், பஞ்சியின் மெல்லி தேனும் பகைசிறி தென்ன வேண்டா, அஞ்சித்தற் காத்தல் வேண்டு மரும்பொரு ளாக வென்றான்.

(இ - ள்.) அஞ்சனக்கோலால் அடித்தற்குப் பற்றாததொருநாகம் தன் எயிற்றாலே அருவிக்குன்றுவீழ்வபோற் குஞ்சரம் புலம்பிவீழக் கொல்லும் ; ஆதலின், பஞ்சியிற்காட்டின் மெல்லிதாயினும் பகையைச் சிறிதென்று கருதவேண்டா ; அதனை அரும்பொருளாக நினைத்து அஞ்சித் தன்னைக் காக்கவேண்டுமென்றானென்க. (சு)

1895. பொருந்தலாற் பல்லி போன்றும் போற்றலாற் றாய ரொத்தும், அருந்தவர் போன்று காத்து மடங்கலா லாமை போன்றும், திருந்துவேற் றெவ்வர் போலத் தீதற வெறிந்து மின்ப, மருந்தினான் மனைவி யொத்து மதலையைக் காமி னென்றான்.

இஃது இவனைக் காக்கும்வண்ணம் கூறுகின்றது.

(இ - ள்.) விடாமல் இவனிடத்திருத்தலிற் பல்லியைப்போன்றும், இவற்கு வேண்டுவனசெய்துபோற்றலின் தாயரையொத்தும், அருந்தவர் சீலமுதலியவற்றைத் தப்பாமற் காக்குமாறுபோல இவற்கும் அவை தப் பாமற் காத்தும், ஐம்பொறியும் தமக்கு அடங்கலின் ஆமையையொத் தும், இவற்குத் தீதுண்டானால் அது தீரும்படி பகைவரைப்போலே யிடித்

1894. அஞ்சனக் கோலின் ஆற்றா நாகம் - மை எழுதும் கோலினால் அடித்தற்கும் பற்றாததொரு சிறிய பாம்பு. குன்றினைப்போல் குஞ்சரம் வீழக்கொல்லும் ; "சிறுவெள் ளரவி னவ்வரிக் குருளை, கான யானை யணங்கியாஅங்கு" (குறுந். 119 : 1-2). பஞ்சியின் - பஞ்சைக்காட் டிலும். என்னவேண்டா - என்று நினைக்கவேண்டா. அரும்பொருளாக அஞ்சித் தற்காத்தல்வேண்டும் ; அரும்பொருளாக - சிறியபகையையும் அரிய பகையாக; "எரியுந் தீத்திர ளெட்டுணைத் தாயினும், கரியச் சுட்டிடுங் காந்திக் கனலுமேற், றெரியிற் றெல்பகை தான்சிறி தாயினும், விரியப் பெற்றபின் வென்றிடு கிற்குமே" (சூளா. சீயவதை. 71). "அருப்ப மென்று பகையையு மாரழல், நெருப்பை யும்மிகழ்ந் தாலது நீதியோ" (கம்ப. முதற்போர். 92)

1895. பல்லி : "அச்சுடைச் சாகாட் டாரம் பொருந்திய, சிறுவெண் பல்லி போல" (புறநா. 256 : 2-3). போற்றலால் - வேண்டுவன செய்து பாதுகாத்தலால். அடங்கலால் ஆமை : குறள், 126. தெவ்வர் - பகைவர். தீது அற - சீவகனுக்குத் தீங்கு நீங்கும்படி. எறிந்தும் - இடித்தும். இன்ப மருந்தினால் - இன்பந்தரும் உணவுகளை நுகர்வித்தலால். மதலை - பற்றாகவுள்ளவன். காமின் - காப்பீராக.

தும், அடிசிலில் இவன் விரும்புவனவே தேடி நுகர்வித்தலின் மனைவியை யொத்தும் நமக்குப் பற்றுனவனைக் காப்பீராகவென்றுனென்க.

"வான மூன்றிய மதலை போல" (பெரும்பாண். 346) என்றார் பிறரும். தாம் அடங்கியே இவனையடக்கல்வேண்டுமெனக் கூறுகின்றவன் இங்ஙனம் கூறினுனென்க. பலரும் கேட்டலிற் காமினென்றுன். (எ)

1896. பூந்துகின் மாலை சாந்தம் புனைகலம் பஞ்ச வாசம்
ஆய்ந்தளந் தியற்றப் பட்ட வடிசினீ ரின்ன வெல்லாம்
மாந்தரின் மடங்க லாற்றற் பதுமுகன் காக்க வென்றுங்
கேந்துபூண் மார்ப னேவ வின்னண மியற்றி னானே.

(இ - ள்.) அது கேட்ட சீவகன், அவர்களை நெஞ்சாலே ஆராய்ந்து பார்த்து அவர்களில் துகில்முதலிய இத்தன்மைய வெல்லாவற்றையும் நெஞ்சாலே அளந்து பதுமுகன் காப்பானுகவென்றேவ, அவனும் இப்படிக் காத்தலை நடத்தினுனென்க. (அ)

(வேறு)

1897. சிறுகண்யா னையினினஞ் சேந்துசே வகங்கொளத்
துறுகலென் றுணர்கலாத் துள்ளிமந் திம்மக
நறியசந் தின்றுணி நாறவெந் தனகள்கொண்
டெறியவெள் கிம்மயிர்க் கவரிமா விரியுமே.

(இ - ள்.) யானைத்திரள் துயில்கோடலிற் குரங்கின்குட்டிகள் அதனைக்கல்லென்றுகருதி யானையென்றுணராவாய் மேலேதுள்ளிச் சந்தனக்குறடு வெந்தனவற்றைக்கொண்டு ஒன்றையொன்றெறிய, அது கண்டு கவரிமா துணுக்கென்று இரியுமென்க.

துள்ளும் பாடமாயின், துள்ளுமகவென்க. (கூ)

---

1896. துகில், மாலை, சாந்தம், கலம்: சீவக. 1893. பஞ்சவாசம்: சீவக. 838, 2358; பெருங். 2. 3 : 46. மடங்கலாற்றல் - சிங்கம் போலும் வலியையுடைய. மார்பன்: சீவகன். பதுமுகன் இயற்றினுன். துகில் முதலியவற்றைக் கொடுக்கும் தொழிலை மிக்க உண்மையுள்ளவர் களிடம் ஒப்பித்தல் அரசர்க்கு இயல்பு; "உடையு மடிசிலு முருமண்ணு வாவிற்குக், கடனு வைத்தலிற் கைபுனைந் தியற்றி, அகன்மடி யவன்று னமர்ந்து கொடுப்ப" (பெருங். 3. 9 : 128-130)

1897. சிறுகண்யானை: சிறுபாண். 142. இனம் - கூட்டம். சேவகம் கொள - துயில்கொள்ளுதலால். மந்திமக துறுகல் என்று உணர்கலா துள்ளி - குரங்குக்குட்டிகள் அவற்றைப் பெரிய கல்லென்று எண்ணி, யானை யென்று அறியாதனவாய், அவற்றின்மீது துள்ளியோடி. நறிய சந்தின் துணி - வாசனையுள்ள சந்தனக்கட்டை. நாற - மணம்வீச. வெந்தனகள் - வெந்தனவற்றை. கவரிமா எள்கி இரியும்; எள்கி - துணுக்கென்று அஞ்சி.

1898. புகழ்வரைச் சென்னிமேற் பூசையிற் பெரியன
பவழமே யனையன பன்மயிர்ப் பேரெலி
அகழுமிங் குலிகமஞ் சனவரைச் சொரிவன
கவழயா னையினுதற் றவழுங்கச் சொத்தவே.

(இ - ள்.) பவழமேயனையவாகிய மயிரையுடைய வெருகிற்பெரியனவாகிய பேரெலி அஞ்சனவரையிலேயிருந்து அகழும் சாதிலிங்கம் தாழ்வரையின் தலையிலே வீழ்கின்றவை யானையின் நுதலிலே தவழும் பட்டுக்கச்சை யொத்தன வென்க.

"வெவ்வாய் வெருகினைப் பூசை யென்றலும்" (தொல். மரபு. 68) என்றார். (௧௦)

1899. அண்ணலங் குன்றின்மேல் வருடைபாய்ந் துழக்கலின்
ஒண்மணி பலவுடைந் தொருங்கவை தூளியாய்
விண்ணுளு வுண்டென வீழுமா நிலமிசைக்
கண்ணகன் மரமெலாங் கற்பக மொத்தவே.

(இ - ள்.) குன்றின்மேற்றிரியும் வருடைமான் பாய்ந்துமிதித்தலின் மணிகள் பலவுமுடைந்து செந்தூளியாய் அத்தூளி தேவருலகை உளுவுண்டதென்னும்படி நிலத்தேவீழாநிற்கும்; அங்ஙனம் விழுதலின், நிலத்தின்மரமெல்லாம் அதுபோர்த்துக் கற்பகத்தையொத்தனவென்க. (௧௧)

---

1898. பூசையின் - காட்டுப்பூனையைக் காட்டிலும். பூசையிற் பெரியனவாகிய எலி, பவழமேயனையனவாகிய மயிரையுடைய எலி. அடி. 2-3: "இந்திர கோப நிறத்தபன் மயிர்ப்பே ரெலியகழ்ந்து...... சுந்தரச் சுண்ணம்" (கூர்ம. வானவர். 9). எலி, அஞ்சனவரையினின்று அகழும் இங்குலிகம், வரைச்சென்னிமேல் சொரிவன, யானையின் நுதலிற் தவழும் கச்சு ஒத்தன; அகழும் - தோண்டுகின்ற. இங்குலிகம் - சாதிலிங்கம். வரைச்சென்னிமேல் - தாழ்வரையின் தலையில். சொரிவன - வீழ்கின்றவை. கச்சு - பட்டுக்கச்சு. பவளம், கவளம் என்பன பவழம் கவழமென்று வந்தன; சீவக. 191; "கவழக் களிப்பியன்மால் யானைசிற் றுளி, தவழத்தா னில்லா ததுபோல்" (திணைமா. 42); "பவழவரை...... கவழமனை மேவுகளி யானை" (சூளா. துறவு. 191)

1899. அண்ணல் - பெருமை. வருடை - மலையாடு; சீவக. 1238, 1559. உழக்கலின் - மிதித்தலால். ஒருங்கு - ஒன்றாக. தூளியாய் - செந்தூளியாகி. உளுவுண்டென - உளுத்தது என்னும்படி. நிலமிசை வீழும். விழுதலால் மரமெலாம் கற்பக மொத்தன.

1900. மானிடம் பழுத்தன கிலுத்தமற் றவற்றயற்
பான்முரட் பயம்பிடைப் பனைமடிந் தனையன
கானிடைப் பாந்தள்கண் படுப்பன துயிலெழ
ஊனுடைப் பொன்முழை யாளிநின் றுலம்புமே.

(இ - ள்.) மக்கள்வடிவாகப் பழுத்தனவாயிருந்தன, கிலுத்த மென்னுமரம். பின்னை அவற்றயலிற் கானிடையிலே பால்போல வெள்ளிய ஏற்றிழிவுடைய நிலத்திற் குழியிடையிலே பனைகிடந்தனையன வாகிய பாந்தள் துயில்வன துயிலெழும்படி யாளிநின்று இடிக்குமென்க.
முரண் - மாறுபாடு. முரட்பரம்பும் பாடம். (கஉ)

1901. சாரலந் திமிசிடைச் சந்தனத் தழைவயின்
நீரதீம் பூமரந் நிரந்ததக் கோலமும்
ஏரில வங்கமும் மின்கருப் பூரமும்
ஒருநா விகலந் தோசனை கமழுமே.

திமிசு - ஒருமரம்.

(இ - ள்.) திமிசுசூழ்ந்த சந்தனமரத்தில் தழைக்கு நடுவே நின்ற நீர்மையையுடைய தீம்பூமரமும், தக்கோலமரமும், இலவங்கமரமும், கருப்பூரமரமும் புழுகோடேகூடி நாற்காதவெல்லை நாறுமென்க. (கௗ)

1902. மைந்தரைப் பார்ப்பன மாமகண் மாக்குழாம்
சந்தன மேய்வன தவழ்மதக் களிற்றினம்
அந்தழைக் காடெலாந் திளைப்பவா மானினம்
சிந்தவால் வெடிப்பன சிங்கமெங் கும்முள.

---

1900. மானிடம் போற் பழுத்தன கிலுத்தம்; "மானிடம் பழுக்குங் கிலுத்த நீள்வனம்" (கூர்ம. சப்பு. 32); மானிடம் - மக்கள் வடிவம். கிலுத்தம்: ஒருவகைமரம். அயல் - பக்கத்திலே. கானிடையில் பால் போலும் முரட்பயம்பிடைப் பனைகிடந்தனையனவாகிய பாந்தள்; முரட் பயம்பிடை - ஏற்றிழிவுடைய நிலத்தின் குழிகளில். பாந்தள் - பாம்பு. பாம்பிற்குப் பனை: வி-பா. காண்டவ. 21. கண்படுப்பன - துயில்வன வற்றை. ஊனையுடைய முழையில் யாளி உலம்பும்; ஊன் - மாமிசம். முழை - குகை. யாளி - அத்தியாளி. உலம்பும் - முழங்கும்.

1901. தழைவயின் - தழைக்கு நடுவே. நீர - நீர்மையையுடைய. நிரந்த - வரிசையாகவுள்ள. ஓரும்; அசை. நாவி - புழுகு. ஓசனை: நாற்காத எல்லை; சீவக. 99, அடிக். இப்பாடலிற் கூறியவை பஞ்ச வாசத்திற்குரிய மரங்கள் போலும்; சீவக. 1896, அடிக்.

1902. மைந்தரைப் பார்ப்பனவாகிய மகண்மாக் குழாமும்; 'மகண்மாக்க, ளம்பொனலயத் தாணிறண் பாவையை யாடவரென......

(இ - ள்.) பார்ப்பனவாகிய பெரிய மகண்மாக்குழாமும், மேய்வன வாகிய களிற்றினமும், திளைப்பனவாகிய ஆமானினமும் சிந்தும்படி வால்வெடிப்பனவாகிய சிங்கம் எவ்விடத்தும் உளவாயிருக்குமென்க.

இனி, இவை நான்கும் எங்குமுளவென்றுமாம். (கச)

1903. வருக்கையின் கனிதொறும் வானரம் பாய்ந்துராய்ப், பொருப்பெலாம் பொன்கிடந் தொழுகிமேற் றிருவில்வீழ்ந், தொருக்குலாய் நிலமிசை மிளிர்வவொத் தொளிர்மணி, திருக்கிள ரொளிகுலாய் வானகஞ் செகுக்குமே.

(இ - ள்.) பொருப்பெலாம், கனிதோறும் வானரம்பாய்கையினாலே அதிற்றேன் பரந்தொழுகிப் பொன்கிடந்து மணியொளிகுலாவி மேலுண் டாகிய திருவில் நிலமிசைவீழ்ந்து ஒருங்குவளைந்து மிளிர்வனவற்றை யொத்து விசும்பை வெல்லுமென்க.

செய்தெனெச்சங்களைக் காரணமாக்குக. பொருப்பெலாம் செகுக்கும். ஒருங்கு : விகாரம். (கரு)

1904. வீழ்பனிப் பாறைக ணெறியெலாம் வெவ்வெயிற், போழ் தலின் வெண்ணெய்போற் பொழிந்துமட் டொழுகுவ, தாழ்முகில் சூழ்பொழிற் சந்தனக் காற்றசைந், தாழ்துயர் செய்யுமவ் வரு வரைச் சாரலே.

---

நோக்கும்'' (காஞ்சிப். நகரேற்று. 86). மைந்தரை : சீவகன் முதலிய வரை. மகண்மா : விலங்கின் சாதியுள் ஒன்று ; நீல. சாங்கிய. 47, உரை. சந்தனம் மேய்வன - சந்தனத்தழைகளை உண்ணுவனவாகிய. திளைப் பனவாகிய ஆமானினம் ; திளைத்தல் - இடைவிடாது பழகுதல். ஆமான் - காட்டுப்பசு. குழாமும், இனமும் சிந்தும்படி வால்வெடிப்பனவாகிய சிங்கம் ; வெடித்தல் - வீசுதல்.

1903. வருக்கை - பலா. பாய்ந்து - பாய்தலால். உராய்ஒழுகி - தேன்பரந்து ஒழுகி. திருவில் - இந்திரவில். ஒருக்கு உலாய் = ஒருங்கு உலாய் - ஒன்றாக வளைந்து. மணி - பலநிறமுடைய மணி. திரு கிளர் - அழகு விளங்குகின்ற. செகுக்கும் - வெல்லும். பொருப்பெலாம் பொன் கிடந்து, மணி ஒளிகுலாய், திருவில் நிலமிசை வீழ்ந்து ஒருங்குலாய் மிளிர்வவொத்து வானகத்தைச் செகுக்கும் என முடிக்க.

1904. பனிப்பாறைகள் - பனிக்கட்டிகள். நெறி - வழி. வெயிற் போழ்தலின் - வெயில் உருக்குதலாலே. மட்டு - தேன். தாழ்முகில் - தங்கிய மேகம். மட்டு ஒழுகுவனவாகிய பொழிலில். அவ்வருவரைச் சாரலின் நெறியெலாம் ஆழ்துயரைச் செய்யும் ; ஆழ்துயர் - மிக்க துன்பத்தை.

(இ - ள்.) வீழ்ந்த பனிக்கட்டிகள் வெயிலுருக்குதலாலே, வெண்ணெய் போலே பொழிவதுஞ்செய்து மட்டொழுகுவனவாகிய முகில் சூழ் பொழிலிற் சந்தனக்காற்றுமசைந்து, இப்படி அவ்வருவரைச்சாரலின் நெறியெல்லாம் ஆழ்துயரைச் செய்யுமென்க. (கசு)

1905. கூகையுங் கோட்டமுங் குங்கும மும்பரந்
தேகலா காநிலத் தல்கிவிட் டெழுந்துபோய்த்
தோகையு மன்னமுந் தொக்குட னூர்ப்பதோர்
நாகநன் காவினு ணயந்துவிட் டார்களே.

(இ - ள்.) கூகைமுதலியன பரத்தலின், அழகாற் போதற்கரிய நிலத்தே தங்கி அவ்விடத்தைவிட்டெழுந்துபோய் மயிலுமன்னமுமார்ப்ப தொரு காவிலே விட்டாரென்க.

கூகை - ஒரு கொடி. (கஎ)

(வேறு)

1906. பூத்தகி றவழும் போர்வை பூசுசாந் தாற்றி பொன்னூற், கோத்துநீர் பிலிற்றுங் காந்தங் குங்கும வைரப் பொற்கோய், சாத்துறி பவழக் கன்னல் சந்தன வால வட்டம், நீத்தவ ரிடத்து நாற்றி நிழன்மணி யுலகஞ் செய்தார்.

(இ - ள்.) அகிற்புகை பொலிவுபெற்றுப்பரக்கும் படாமுதலியவற்றையும், சிற்றாலவட்டத்தையும், காந்தத்தையும், குங்குமம் வைக்கும் வைரமழுத்தின [1]குகையையும், பரணிக்கூட்டையும், பவழக்கரகத்தையும் சந்தனமரத்தாற் செய்த பேராலவட்டத்தையும் தாபதரிடத்தேதூக்கி, அவ்விடத்தைத் தேவருலகாக்கினாரென்க. (கஅ)

---

1905. கோட்டம், குங்குமம் என்பன மரவகைகள். பரந்து - பரந்திருத்தலால். ஏகலாகா - செல்லுதற்கு முடியாத. நிலத்து அல்கி - பூமியில் தங்கி; (பி - ம்.) ‘நிலத்தஃகி.’ தோகை - மயில். தொக்கு - சேர்ந்து. நாகத்தையுடைய காவில் விட்டார்கள்; நாகம் - சுரபுன்னை மரம்; ஒருவகைமரமுமாம்; சீவக. 1569. விட்டார் - தங்கினார்கள்.

1906. அகில்பூத்துத் தவழும் போர்வை - அகிற்புகை பொலிவு பெற்றுப்பரக்கின்ற மேற்போர்வை. பூசுசாந்தாற்றி-மேலே பூசியசாந்தை ஆற்றுவது; சிற்றாலவட்டம்; சீவக. 839. பொன்னூல் - தலையிற்கட்டும் பொற்கயிறு. நீர்பிலிற்றும் காந்தம் - சந்திரகாந்தக்கல்; பிலிற்றும் - துளிக்கும். குங்குமம் வைக்கும் கோய்; கோய் - பரணி; சீவக. 764, அடிக்; சிறுபஞ்ச. 17. சாத்துறி - பரணிக்கூடு. கன்னல் - கமண்டலம். நீத்தவர் - துறவிகள். நாற்றி - தூக்கி. நிழல்மணியுலகம் - ஒளியையுடைய அழகிய தேவருலகம்.

(உரை) [1](பி - ம்.) ‘கோயையும்’, ‘பேழையையும்’

1907. நித்தில முலேயி ஞர்த நெடுங்கணு ளேக்கப் பெற்றும், கைத்தலந் தீண்டப் பெற்றுங் கனிந்தன மலர்ந்த காண்க, வைத் தலர் கொய்யத் தாழ்ந்த மரமுயி ரில்லே யென்பார், பித்தல ராயிற் பேய்க ளென்றலாற் பேச லாமோ.

(இ - ள்.) மகளிர் கண்ணுல் நோக்கப்பெற்றும், கையால் தீண்டப் பெற்றும் கனியாதன கனிந்தன; மலராதன மலர்ந்தன; அவர் கையை வைத்து அலர்கொய்யத் தாழ்ந்துகொடுப்பதுஞ் செய்தன; காண்க; ஆதலின், மரம் உயிரில்லேயென்பார் பித்தர்; அல்லராயிற் பேய்க ளென்று பேசுதலல்லது வேறே பேசலாமோவெனத் தம்முட்கூறிஞ ரென்க. (கக)

1908. பொறிமயி லிழியும் பொற்ருர் முருகனிற் பொலிந்து, மாவின், நெறிமையி னிழிந்து மைந்தன் மணிக்கைமத் திகையை நீக்கி, வெறுமையி னவரைப் போக்கி வெள்ளிடைப் படாத நீரால், அறிமயி லகவுங் கோயி லடிகளேச் செவ்வி யென்ருன்.

வெறுமையினவர் - அறிவின்மையை யுடையவர். வெள்ளிடை - வெள்ளிய இடம்.

(இ - ள்.) மைந்தன், மயிலினின்றிழியுமுருகனேப்போல மாவி னின்று இழியுநெறியானிழிந்து கையினின்றும் மத்திகையை நீக்கி அறிவி லாதாரைச் செவ்வியறியப் போகவிடுத்தலால் தேவியையறிந்து வெளியா மிடமுண்டாம்; அஃதாகாததொரு தன்மையாலே நீதானே சென்று அடிகளேச் செவ்வியறியென்ருனென்க.

---

1907. நித்திலம் - முத்துமாலே. முலேயிஞர் : மகளிர். கனிந்தன - கனியாதன கனிந்தன. மலர்ந்த - மலராதன மலர்ந்தன. மகளிருறுப் பால் மலர்கள் அலர்தலுண்டு என்பர்; ஆனேக்காப். ஆரஞ்சாத்து. 26. வைத்து - மகளிர் கையைவைத்து. கொய்ய - பறித்தற்கு. தாழ்ந்த - வணங்கிக் கொடுத்தன. மரங்களுக்கு உயிருண்டு என்பர்; நீல. மொக்கல. 96-108, உரை. பித்தலராயிற் பேய்கள்; "பெரும்பே டிகளல ரேற் பித்தரே யன்ருே" (நள. கலிதொடர். 72). என்றலால் - என்று கூறுவதல்லது.

(மேற்.) அடி, 1-2 : தஞ்சைவாணன். 276, சொக்க.

1908. பொறிமயில் இழியும் - புள்ளிகளேயுடைய மயிலினின்றும் இறங்கும். முருகனின் - முருகக்கடவுளேப் போல. மாவின் - குதிரையி னின்றும். நெறிமையின் - இறங்குகின்ற வழியால். மைந்தன் : சீவகன். கையினின்றும் மத்திகையைநீக்கி; மத்திகை - குதிரைச் சம்மட்டி. வெறுமையினவரை - அறிவில்லாதவரை. போக்கி - போக்குதலால். வெள்ளிடைப்படாத நீரால் - வெளியாமிட மாகாததொரு தன்மையால். அடிகளேச் செவ்வியறி என்ருன்; அடிகள் : விசயை. செவ்வி - சமயம். என்ருன் - என்று பதுமுகனே நோக்கிக் கூறிஞன்.

அன்புசெலுத்தலின் அவனோடேகூடச்செல்கின்றவன் செவ்வி யறிந்தே சேறல் நீதியாகலானும், பதுமுகன் தன்னையறிவிக்கத் தேவி யறியவேண்டுதலானும் செவ்வியறியென்றானென்க. (உ0)

1909. எல்லிருட் கனவிற் கண்டேன் கண்ணிட னாடு மின்னே
பல்லியும் பட்ட பாங்கர் வருங்கொலோ நம்பி யென்று
சொல்லின டேவி நிற்பப் பதுமுகன் றொழுது சேர்ந்து
நல்லடி பணிந்து நம்பி வந்தன னடிக ளென்றான்.

(இ - ள்.) விடியற்காலத்திருளிலே கனவிலே நம்பிவரக்கண்டேன்; இடக்கண் ஆடும்; நல்ல இடத்தே பல்லியும்பட்டன; ஆதலால் நம்பி இன்னேவருமோவென்று கூறினளாய்த்தேவிநின்ற அளவிலே, பதுமுகன் சேர்ந்து தொழுதுவணங்கி, அடிகளே, நம்பிவந்தானென்றானென்க.

எல் - பகல். நம்பி : நம் முதனிலையாக நமக்கு இன்னானென்னும் பொருள்பட வருவதோர் உயர்ச்சிச் சொல். (உக)

1910. எங்கணா னைய னென்றாட் கடியன்யா னடிக ளென்னாப், பொங்கிவில் லுமிழ்ந்து மின்னும் புனைமணிக் கடக மார்ந்த, தங்கொளித் தடக்கை கூப்பித் தொழுதடி தழுவி வீழ்ந்தான், அங்கிரண் டற்பு முன்னீ ரலைகடல் கலந்த தொத்தார்.

முன்னீர் - முற்பட்ட நீர்மை; அஃதாவது, 'உதிரம் உறவறியும்' என்னும் பழமொழி.

---

1909. எல்லிருள் - விடியற்காலத்திருளிலே. கண்டேன் - சீவகன் இங்கு வரப்பார்த்தேன். கண் இடனாடும்; பல்லியும்பட்டன; "பல்லியும் பாங்கொத் திசைத்தன, நல்லெழி லுண்கணு மாடுமா லிடனே" (கலித். 11 : 21-2); "பூங்க ணிடமாடுங் கனவுந் திருந்தின......பாங்கத்துப் பல்லி படும்" (ஐந். எழு. 41); பாங்கர் பல்லியும்பட்ட - நல்ல இடத்தே பல்லியும் ஒலித்தன; "பாங்கர்ப் பல்லி படுதொறும் பரவி" (அகநா. 9 : 19). நம்பி வருங் கொலோவென்று சொல்லினளாய்த் தேவிநிற்ப; நம்பி : சீவகன். தேவி : விசயை. அடிகள், நம்பிவந்தனன் என்றான்; அடிகள் : விசயை; விளி.

1910. ஐயன் எங்கணான் என்றாட்கு - சீவகன் எவ்விடத்துள்ளான் என்று வினவிய விசயைக்கு. அடிகள் ஐயன் யான் என்னா; அடிகள் : விசயை; விளி. என்னா - என்று சீவகன் கூறி. பொங்கி வில் உமிழ்ந்து - மிக்கு ஒளியைச் சிந்தி. ஒளிதங்கிய தடக்கையைக் கூப்பி; கூப்பி - குவித்து. அங்கு - அவ்விடத்து. முன்னீரால் இரண்டு அற்புக்கடல் கலந்ததொத்தார்; முன்னீர் - முற்பட்ட நீர்மையால். முன்னீர் : நிலத்திற்கு முன்னே தோன்றிய நீரென்று கூறிக் கடலுக்கு அடையாக்கினுமாம்.

(இ - ள்.) ஐயன் எவ்விடத்தானென்று வினவினாட்குச் சீவகன் றானும் அன்பு மிகுதியாற்கூடச்சேறலின், இவனென்று பதுமுகன் கூறுமல், அடிகளே! அடியேன் யானென்னுத் தொழுது அடியைப் பிடித்துவீழ்ந்தான்; அவ்விடத்து அவ்விருவரும் முன்னீராலே இரண்டு அற்புக்கடல் கலந்த தன்மையையொத்தாரென்க.

இதுகருதி, முன் 'வெள்ளிடைப்படாத' (சீவக. 1908) என்றார். (உஉ)

1911. திருவடி தொழுது வீழ்ந்த சிறுவனைக் கண்ட போழ்தே, வருபனி சுமந்த வாட்கண் வனமுலை பொழிந்த தீம்பால், முரு குடை மார்பிற் பாய்ந்து முழுமெய்யு நனைப்ப மாதர், வருகவென் களிறென் றேத்தி வாங்குபு தழுவிக் கொண்டாள்.

(இ - ள்.) அங்ஙனம்வீழ்ந்த சிறுவனைக்கண்டபொழுதே வாட்கண் சுமந்த பெருகுகிற நீரும், முலைபொழிந்தபாலும் அவனெழுந்திருக்கின்ற காலத்தே மெய்யை நனைத்தலாலே, ஐய! நீயிங்கேவருகவென்றேத்தி அவனுடைய மார்பிற்காட்டில் தன்மார்பு பாய்ந்து அவனை ஒடுங்கும்படி தழுவிக்கொண்டாளென்க.

[1] இன் : உறழ்பொரு. பாய்ந்து பாயவெனத்திரித்து, ஏத்தி, வாங்கி அவை முருகுடைமார்பிற்பாயத் தழுவிக்கொண்டாளென்றுமாம். (உ௩)

1912. காளையாம் பருவ மோராள் காதன்மீக் கூர்த லாலே
வாளையா நெடிய கண்ணுண் மகனைமார் பொடுங்கப் புல்லித்
தாளையா முன்பு செய்த தவத்தது விளைவி லாதேன்
தோளையாத் தீர்ந்த தென்று டொழுதகு தெய்வ மன்னுள்.

1911. சிறுவனை : சீவகனை. வாட்கண்சுமந்தபனி; பனி - நீர்த்துளி. பனியும் பாலும் மெய்யை நனைப்ப; மெய் - சீவகனுடைய உடம்பு. நனைப்ப - நனைத்தலால். மாதர், என்களிறே வருக வென்று ஏத்தி மார்பின் பாய்ந்து வாங்குபு தழுவிக்கொண்டாள்; மாதர் : விசயை. களிறு : காதற்சொல்; தொல். கிளவி. 56. வருகவென்களிறு; "போர் யானை வந்தீக வீங்கு" (கலித். 86 : 10); "செல்கவென் களிறென" (பெருங். 1. 36 : 347); "அன்னை, பொருகளிறு வருகவளர் போரேறு வருகவெழிற் பூவை வண்ண, வருகவென...மகிழ்வு பூத்தாள்" (பாகவதம், சகடமுதைத்த. 21). மார்பின் பாய்ந்து - சீவகன் மார்பைக்காட் டிலும் தன்மார்பு பாய்ந்து. வாங்குபு - ஒடுங்கும்படி.

(உரை) [1] மார்பின் என்பதிலுள்ளது.

1912. காளையாம் பருவம் ஓராள்-சீவகனுக்கு இஃது இளமைப்பருவ
மென்று எண்ணுதவளாய், காதல்மீக் கூர்தலால் - மகனிடத்துள்ள அன்பு

(இ - ள்.) அருந்ததிபோல்வாளாகிய விசயை, [1] ஈது இளமைப்பருவம் ; இனித்தழுவலாகாதென்று ஓராளாய்க் காதல்பெருகிப்பரத்தலாலே மகனைக் குழவிப்பருவம்போலே தன்மார்பிலே ஒடுங்கும்படிதழுவி, ஐயனே ! முற்பிறப்பின் முயற்சியாற்செய்த தவப்பயனில்லாதேன் தோளில் வருத்தம் தீர்ந்ததென்றுளென்க.

அரசனைக்கோறலின், [2] வாளையொக்கும் நெடியகண்ணுளென்று அவட்குப்பெயராயிற்று ; ஐ : அசையுமாம். (உச)

1913. வாட்டிறற் குருசி றன்னை வாளம ரகத்து ணீத்துக்
காட்டகத் தும்மை நீத்த கயத்தியேற் காண வந்தீர்
சேட்டிளம் பருதி மார்பிற் சீவக சாமி யீரே
ஊட்டரக் குண்ட செந்தா மரையடி நோவ வென்றாள்.

(இ - ள்.) பெருமையையுடைய இளைய பருதிபோலுமார்பினையுடைய சீவகசாமியீரே ! தாமரைபோலும் அடிநோம்படி, அரசனை அமரிலே கைவிட்டு நும்மைச் சுடுகாட்டிலே கைவிட்ட கொடியேனைக் காண வந்தீர் ; இஃதோர் அன்பின் மிகுதியிருந்தவாறு என்னென்றுளென்க.

" பண்புகொள் பெயரு மதனோ ரற்றே " (தொல். விளிமரபு, 23) என்ற சூத்திரத்தில், சீவகசாமியென்னும் இருபெயரொட்டுப்பண்புத் தொகை, தன்னினமுடித்தலென்பதனாற் சீவகசாமியாரென ஆரீறாய்ச் சீவகசாமியீரேயென ஈரொடு ஏகாரம்பெறுதல்கொள்கவெனக் கூறினும். (உரு)

பெருகிப்பரத்தலால் ; வாளை ஆம்நெடிய கண்ணாள் : விசயை ; ஆதல் - ஒத்தல் ; " ஆள்வா ரிலிமா டாவேனோ " (திருவா) ; (பி - ம்.) ' வாளயினெடிய கண்ணாள்.' "வாளையா நெடிய கண்ணாள்" என்பதும் அதனுரையும் '.தாதுலராதகோதை " (திருவிளை. மாமனை. 23) என்பதற்குரிய பொருளை விளக்கின. மகனை : சீவகனை. ஐயா - ஐயனே ; என்றது சீவகனை ; விளி. முன்பு தாள் செய்த தவத்தது விளைவு இலாதேன் - முற்பிறப்பில் முயற்சியாற் செய்த நற்றவத்தின் பயனில்லாதேன் ; என்றது சச்சந்தன் இறந்ததனை. தோள் அயா - தோளில் வருத்தம். தெய்வ மன்னாள் : விசயை ; எழுவாய்.

(மேற்.) அடி, 3 : தொல். விளி. 23, ந.

(உரை) (பி - ம்.) [1] ' இஃதிளமை.' [2] சீவக. 10, ந.

1913. குருசில் : சச்சந்தன். காட்டகத்து - சுடுகாட்டிலே. கயத்தியேற்காண - கொடியவளாகிய என்னைக் காணுதற்கு ; கயத்தி - கொடியவள் ; சீவக. 678, ந. சேடு - பெருமை. மார்புக்குப் பருதி உவமை ; " சேட்டிளம் பருதி போலு......மார்பன் " (சீவக. பக். 225). மார்பினையுடைய சீவகசாமியீர் ; விளி. ஊட்டரக்குண்ட செந்தாமரையடி - ஊட்டுதற்குரிய செம்மை ஊட்டப்பெற்ற செந்தாமரைபோலும் பாதம்.

1914. கெடலருங் குரைய கொற்றங் கெடப்பிறந் ததுவு மன்றி
நடலையு ளடிகள் வைக நட்புடை யவர்க ணைய
இடைமகன் கொன்ற வின்னா மரத்தினேன் றந்த துன்பக்
கடலகத் தழுந்த வேண்டா களைகவிக் கவலை யென்றான்.

குரைய : அசை. கொற்றம் கெட - அரசன்பட. நட்புடையவர் - சச்சந்தனோடு நட்புக்கொண்டவர் ; என்றது தோழருடைய தந்தையரை.

(இ - ள்.) கொற்றங் கெட நட்புடையவர் நைய அடிகள் வருத்தத்தே தங்கப் பிறந்ததுவுமன்றி இப்பொழுதும் இடையன்கொன்ற மரத்தின் தன்மையுடையேனாகிய யான் தந்த துன்பக்கடலிலே அழுந்த வேண்டா ; இத்துன்பத்தைக் களைகவென்றானென்க.

உயிருடனிருந்தேனாய்ப் பகையைவென்றேனுமல்லேன் ; உயிரை நீத்தேனுமல்லேனென்று கருதி மரத்தினேனென்றான். (உசு)

1915. (க) யானல னௌவை யாவாள் சுநந்தையே யையற் கென்றும், கோனலன் றந்தை கந்துக் கடனெனக் குணத்தின் மிக்க, பானிலத் துறையுந் தீந்தே னனையவா யமிர்த மூற, மானலங் கொண்ட நோக்கி மகன்மன மகிழச் சொன்னாள்.

1916. (உ) எனக்குயிர்ச் சிறுவ னாவா னந்தனே யைய னல்லை, வனப்புடைக் குமர னிங்கே வருகென மருங்கு சேர்த்திப், புனக்கொடி மாலை யோடு பூங்குழ றிருத்திப் போற்றார், இனத்திடை யேற னுக் கின்னளி விருந்து செய்தாள்.

---

1914. கெடலரும் - கெடுதற்கரிய. கொற்றம் - அரசுரிமை ; ஈண்டுச் சச்சந்தனுக்கு ஆயிற்று. கெட - அழியும்படி. அடிகள் நடலையுள் வைக ; அடிகள் : விசயை. நடலை - வருத்தம். வைக - தங்க. நட்புடையவர்கள் - சச்சந்தனுக்கு நண்பாகவுள்ளவர்கள் ; என்றது தனபாலன், அசலன் முதலியவர்களை. நைய - வருந்தும்படி. இடைமகன் கொன்ற இன்னா மரத்தினேன் ; "இடையனெறிந்த மரமே யொத்திராமே......அருளாய்" (பெரிய திரு. 11. 8 : 6) ; "இடையனெறிந்த மரம்" (பழ. 314). இக்கவலை களைக என்றான் ; கவலை - துன்பம்.

1915. ஐயற்கு ஔவையாவாள் சுநந்தையே, யானலன் ; ஐயற்கு : சீவகனுக்கு ; முன்னிலைப் படர்க்கை. ஔவை : தாய். தந்தையாவான் கந்துக்கடனே, கோனலன் ; கோன் : சச்சந்தன். பால்நிலத்து உறையும் தீந்தேன் அனையவாய் - பாலினிடத்தே தங்கிய இனிய தேனைப்போன்றனவாய் ; சீவக. 1761, அடிக் ; அமிர்தம் ஊற - இனிமை ஊறும்படி. நோக்கி : விசயை. மகன் : சீவகன்.

1916. எனக்கு உயிர்போலும் சிறுவனாவான் நந்தனே ; கைகேயியின் கூற்றாகவுள்ள, "இராமனைப் பயந்தவெற் கிடருண் டோவென்றாள்" (கம்ப. மந்தரை. 47) என்னும்பாடற்பகுதி ஈண்டு ஒப்புநோக்கற்பாலது.

இவையிரண்டும் ஒருதொடர்.

இருமுதுகுரவர்க்கும் துன்பஞ்செய்தேனென்றலின், உனக்கு இவ ரன்றோ இருமுதுகுரவரென்கின்றாள்.

(உ) ஐயன் : முன்னிலைப்படர்க்கை.

(இ - ள்.) குணத்தின்மிக்க விசயை, நினக்குத்தாயாவாள் சுநந் தையே ; யானல்லேன் ; தந்தையாவான் கந்துக்கடனே ; கோனல்ல னென்று பாலிடத்தே தங்கும் தேனையொப்பனவாய் இனிமையூறும்படி வார்த்தை கூறினாள் ; கூறிப் பின்னும் புனக்கொடிபோல்வாள் சீவகன் மகிழும்படி எனக்கு உயிர்போலுஞ் சிறுவனாவான் நந்தட்டனே ; நீ யல்லை ; ஆதலால், குமரன் ! இவ்விடத்தே வருகவென்றுகூறி அருகே யணைத்துத் திருத்தி அவனுக்கு இனிய தண்ணளியாகிய விருந்தைச் செய்தாளென்க. (உஎ-அ)

1917. (க) சிறகராற் பார்ப்புப் புல்லித் திருமயி லிருந்த தேபோல், இறைவிதன் சிறுவர் தம்மை யிருகையி னாலும் புல்லி, முறைமுறை குமரர்க் கெல்லா மொழியமை முகமன் கூறி, அறுசுவை யமிர்த மூட்டி யறுபகல் கழிந்த பின்னாள்.

(வேறு)

1918. (உ) மரவ நாக மணங்கமழ் சண்பகம்
குரவங் கோங்கங் குடம்புரை காய்வழை
விரவு பூம்பொழில் வேறிருந் தாய்பொருள்
உருவ மாத ருரைக்குமி தென்பவே.

நந்தன் - நந்தட்டன். ஐயனல்லை - நீயல்லை ; என்றது சீவகனை. குமரன் : நந்தட்டன் ; விளி. புனக்கொடி : விசயை ; எழுவாய். மாலையையும் குழலையும் திருத்தி ; திருத்தி - அழகுபெறத் துடைத்து. போற்றாரினத் திடை - பகைவரது கூட்டத்திடையில். ஏறனுக்கு : நந்தட்டனுக்கு. இன்னளிவிருந்து - இனிய கருணையாகிய விருந்தை.

1917. பார்ப்பு - மயிற்குஞ்சு. சிறகராற்புல்லி ; புல்லி - தழுவி. இறைவி : விசயை. சிறுவர் : சீவகனும், நந்தட்டனும். குமரர் : தோழர். அமைந்த முகமனாகிய மொழியைக் கூறி. அமிர்தம் - உணவு. அறு பகல் - ஆறுநாட்கள். ஆறுநாட் கூறுதல் மரபு ; சீவக. 2193, 2393.

1918. மரவம் : சீவக. 1558. குரவம் - குராமரம். குடம்புரை காய் வழை - குடத்தை ஒத்தகாயையுடைய சுரபுன்னைமரம். பொழிலில் வேறிருந்து ; வேறிருந்து - காரியத்திற்குரியவரைத் தனியே அழைத் திருந்து. ஆய் இது பொருள் உருவமாதர் உரைக்கும் ; ஆய் இது பொருள் - ஆராய்ந்த இக்காரியத்தை. உருவமாதர் : விசயை ; உருவம்- அழகு.

இவையிரண்டும் ஒருதொடர்.

(இ - ள்.) மயில் தன் பார்ப்புக்களை இரண்டு சிறகாலும் புல்லி யிருந்த நிலைபோலத் தன்சிறுவரை இரண்டு கையினாலும் புல்லி அமைந்த முகமணுகிய மொழிகளை முறைமுறையே தோழர்க்கெல்லாங் கூறி அடிசிலையூட்டி ஆறுநாள் கழிந்தபின்பு, அம்மாதர் மரவமுதலிய விரவியபொழிலிலே, காரியத்திற்குரியவரை வேறேகொண்டிருந்து நூற்கண் ஆராய்ந்த இப்பொருளை உரையாநிற்குமென்க. (உகூ-ங௦)

1919. நலிவில் குன்றொடு காடுறை நன்பொருட்
புலிய ரைமகட் கோடலும் பூமிமேல்
வலியின் மிக்கவர் தம்மகட் கோடலும்
நிலைகொண் மன்னர் வழக்கென நேர்பவே.

(இ - ள்.) அழித்தற்கரிய மலையிலும் காட்டிலுமுறைகின்ற பெரும் பொருளையுடைய குறுநிலமன்னர்மகளைக் கொள்ளுதலும், வலியவரசர் மகளைக்கொள்ளுதலும் தம்முன்னுள்ளோர்நிலையைக் கொள்ளவேண்டிய மன்னர் முறைமையென்று மதிவல்லோர் நேர்வரென்றானென்க.

எனவே வலியின்மிக்கவர்களை நீ கொண்டது நன்றென்றாள். (ஙக)

1920. நீதி யாலறுத் தந்நிதி யீட்டுதல்
ஆதி யாயவ ரும்பகை நாட்டுதல்
மோதி முள்ளொடு முட்பகை கண்டிடல்
பேது செய்துபி ளந்திடல் பெட்டதே.

1919. நலிவுஇல் - அழித்தற்கரிய. உறை - தங்கிய. நன்பொருளை யுடைய புலியரைது மகளைக்கோடலும்; நன்பொருள் - பெரும்பொருள். புலியரை : குறுநிலமன்னர். வலியின் மிக்கவர் : முடியுடையரசர். கோடல் - மணம் செய்து கொள்ளுதல். மன்னர்வழக்கு என - அரசரது முறைமையென்று. நேர்பவே - கூறுவார்கள்; ஏ : அசை.

1920. அறுத்து - அறுதியிட்டு. அந்நிதி - ஆறிலொருபாகமான அப்பொருளை. ஆதியாய அரும்பகை - தொன்றுதொட்டுவந்த அரிய பகையை. நாட்டுதல் - தம் நெஞ்சில் நிலைபெறுத்திக்கொள்ளல். மோதி - ஒருவரோடொருவரைப் பொரவிட்டு. முள்ளொடு முட்பகைகண்டிடல்; "கள்ளினாற் கள்ளறுத்தல் காண்டு மதுவன்றே, முள்ளினான் முட்களையு மாறு" (பழ. 54). (பி - ம்.) 'முட்புடை.' பேது - பேதம்; பிளந்து இடல் - வினைஞரைப்பிரித்துத் தம்மோடு கூட்டிக்கொள்ளல். பெட்டது - அரசரால் விரும்பப்பட்ட காரியமாகும்.

(மேற்.) அடி, 2-3 : கல். 'பகையுடன்' 1-9, மயில்; 3-4 : குறள், 450, பரிமேல்.

(இ - ள்.) அரசநீதியாலே ஆறிலொன்ருக அறுதியிட்டு அப் பொருளை ஈட்டுதல், தொன்றுபட்டபகையைத் தந்நெஞ்சிலே நிலை பெறுத்துதல், [1]முள்ளைக்கொண்டு முள்ளைக்களையுமாறுபோலே தமக்கு ஒன்ருராய்உறவாயிருப்பவரிருவரைத் தம்மிற்பேதுசெய்து ஒருவரைக் கொண்டு ஒருவரை மோதியிடுதல், தம்மிற்கூடிவந்து வினைசெய்வாரைப் பிரித்துத் தம்மோடே கூட்டிக் கோடல் இவை அரசர் விரும்பப்பட்ட காரியமென்ருளென்க. (௯௨)

1921. ஒற்றர் தங்களை யொற்றறி ஞய்தலும்
கற்ற மாந்தரைக் கண்ணெனக் கோடலும்
சுற்றஞ் சூழ்ந்துபெ ருக்கலுஞ் சூதரோ
கொற்றங் கொள்குறிக் கொற்றவற் கென்பவே.

(இ - ள்.) ஒற்றரை ஒற்றரைக்கொண்டு ஆராய்தலும், நீதிநூல் கற்ற அமைச்சரைக் கண்ணென்றுகோடலும், மந்திரிச்சுற்றத்தையும் தந்திரிச்சுற்றத்தையும் இவன் இதற்குரியனென்று விசாரித்துப்பெருக்க லும் வெற்றிகொள்ளுங்கருத்தை யுடைய அரசற்கு உபாயமென்ரு ளென்க. (௯௩)

1922. (க) வென்றி யாக்கலு மேதக வாக்கலும்
அன்றி யுங்கல்வி யோடழு காக்கலும்
குன்றி ஞர்களைக் குன்றென வாக்கலும்
பொன்றுஞ் சாகத்தி ஞய்பொருள் செய்யுமே.

(உரை) [1](பி - ம்.) 'முள்ளொடு முட்பகைக்கின்ற நிலையைக் கண்டவை யொன்ரென்றைக்.'

1921. ஒற்றர் தங்களை ஒற்றரால் ஆய்தல்: "ஒற்ருெற்றித் தந்த பொருளையு மற்றுமோர், ஒற்றினு லொற்றிக் கொளல்", "ஒற்ருெற் றுண ராமை யாள்க" (குறள், 588, 589); "ஒற்ருெற் றியவரை யொற்றி ஞய்ந்து", "ஒற்று மாக்களை யொற்றறி ஞயா" (பெருங். 3. 23 : 53, 3. 25 : 48). கற்றமாந்தரைக் கண்ணெனக்கொள்ளுதல் : சீவக. 1924; "சூழ்வார் கண்ணுக வொழுகல்" (குறள், 445). கற்றமாந்தர் : அமைச் சர். சுற்றம் சூழ்ந்து பெருக்கல்; "சுற்றமொடு, நுகர்தற் கினிதுநின் பெருங்கலி மகிழ்வே" (பதிற். 12 : 24-5). கொற்றம் கொள்ளும் குறியை யுடைய கொற்றவற்குச்சூது; கொற்றம் - அரசுரிமை; குறி - கருத்து; சூது - உபாயம்.

1922. ஆக்கல் - உண்டாக்குதல். மேதகவு - மேம்பாடு. குன்றினர் களை - குறைந்தவர்களை. பொன்துஞ்சு ஆகத்திஞய் - திருத்தங்கும் மார்பினையுடையாய்; சீவக. 908, அடிக்.; என்றது சீவகனை; விளி. செய்யும் - தேடும்.

(மேற்.) அடி, 4 : கல். 'நிணமுயிர்', 9-11; 'குரவமலர்ந்த', 12-15, மயில்.

1923. (உ) பொன்னி னாகும் பொருபடை யப்படை
தன்னி னாகுந் தரணி தரணியிற்
பின்னை யாகும் பெரும்பொரு ளப்பொருள்
துன்னுங் காலைத் துன் னாதன வில்லையே.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) செய்தல் - தேடுதல்.

**(இ - ள்.)** ஆகத்தினாய்! அங்ஙனந்தேடும்பொருள் பலவெற்றியை யுண்டாக்கலும், மதிப்பையுண்டாக்கலும், கல்வியையும் அழகையுமுண் டாக்கலும், குறைந்தவரைப் பெருகவாக்கலுமன்றியும், இப்பொருளாலே படையாம்; அதனாலே தரணியாம்; அதனாலே பின்னைப் பெரிய பொரு ளாம்; அது கைகூடுமளவில் வீடும் கிடைக்குமென்றானென்க.

என்றவள் இங்ஙனமுரைக்குமென வருவிக்க. (ருச - ரு)

1924. நிலத்தி னீங்கி நிதியினுந் தேய்ந்துநம்
குலத்திற் குன்றிய கொள்கைய மல்லதூஉம்
கலைக்க ணாளரு மிங்கில்லை காளைநீ
வலித்த தென்னென வள்ளலுங் கூறுவான்.

**(இ - ள்.)** இங்ஙனமுரைத்துப் பின்னும், காளாய்! நிலத்தினின்று நீங்கிப் பொருளினுங்குறைந்து நம் குலத்திற்குறைந்த கொள்கையேம்; இந்நிலையே யன்றி இதனை நீக்கற்குரிய அமைச்சருமில்லை; இந்நிலைக்கு நீ துணிந்த காரிய மென்னென்று தேவிகேட்ப, அவனும் ஒருமொழி கூறு வானென்க. (ருரு)

---

1923. பொன்னின் பொருபடை ஆகும் - இப்பொருளால் போருக் குரிய சேனை உண்டாகும். தரணி - பூமி. தரணியால், பின்னைப் பெரும் பொருள் ஆகும். துன்னுங்காலை - வந்துசேருமளவில். துன்னாதன - அடைய முடியாத பொருள்கள்.

(மேற்.) அடி, 3-4 : சிலப். பதிகம், 12-20, அடியார்.; மு : குறள், 437, பரிமேல்.

1924. நிலத்தின் நீங்கி - நமக்குரிய நிலத்தினின்றும் அகன்று. நிதி- பொருள். தேய்ந்து - குறைந்து. கொள்கையம் - கொள்கையை உடை யோம். கலைக்கணாளர் - மந்திரிமார்; சீவக. 1921, அடிக். காளை : சீவ கன்; விளி. நீவலித்தது - நீ துணிந்த காரியம். என் என - என்ன என்று விசயை கேட்ப. வள்ளல் : சீவகன். (பி - ம்.) ‘ கூறினான்.’

(வேறு)

1925. எரியொடு நிகர்க்கு மாற்ற லிடிக்குரற் சிங்க மாங்கோர், நரியொடு பொருவ தென்றாற் சூழ்ச்சிநற் றுணையொ டென்னும், பரிவொடு கவல வேண்டா பாம்பவன் கலுழ னாகும், சொரிமதுச் சுரும்புண் கண்ணிச் சூழ்கழ னந்த னென்றான்.

(இ - ள்.) சிங்கம் [1] தனக்குநிகராகிய சிங்கத்தோடேயன்றி நரி யோடே பொரக்கடவதென்றால் அவ்விடத்து அருளிச்செய்த சூழ்ச்சியும் துணைகளு மென்னாய்முடியும்; அதுபோல யான் அவனுடனே பொருவ தானல், அவை வேண்டா ; யானேயுமன்றிப் பொருமளவில் அவன் பாம் பும் நந்தட்டன் கருடனுமாயிருக்கும் ; ஆதலால், எம்மேல் வைத்த அன் பாலே இதற்கு வருந்த வேண்டாவென்றானென்க.

[2] இவனைக்காணக் கெடுவனென்றான். (௯௭)

1926. கெலுழனே நந்த னென்னக் கிளரொளி வனப்பி னானைக், கலுழத்தன் கையாற் றீண்டிக் காதலிற் களித்து நோக்கி, வலி கெழு வயிரத் தூண்போற் றிரண்டுநீண் டமைந்த திண்டோள், கலிகெழு நிலத்தைக் காவா தொழியுமோ காளைக் கென்றாள்.

(இ - ள்.) அதுகேட்ட தேவி, நந்தன்கருடனேயென்று காதலிற் களித்து நோக்கி அவனை மனமுருகும்படி தன்கையினாலே தீண்டி இத் தோள்கள் உனக்கு நிலத்தைக்கொண்டு தந்து அதனைக்காவாதே யிருக்குமோவென்றாளென்க.

[1] தந்தெனை வருவிக்க. கலி - கட்டியங்காரன். காளை - சீவகன். (௯௮)

---

1925. எரி - தீ. ஆற்றலையும் குரலையுமுடைய சிங்கம். ஆங்கு - அவ்விடத்து. சூழ்ச்சியும் துணையும் என் ஆம் ; என் ஆம் - என்னவாய் முடியும். சீவகனுக்குச் சிங்கமும் கட்டியங்காரனுக்கு நரியும் உவமை கள். பரிவொடு = பரிவால் - எம்மேல்வைத்த அன்பாலே. அவன் பாம்பு- கட்டியங்காரன் பாம்பாவான். சொரியும் மதுவைச் சுரும்பு உண்ணும் கண்ணி : மாலை. கண்ணியையும் கழலையுமுடைய நந்தன் கலுழனாகும்; நந்தன் : நந்தட்டன்.

(உரை) [1] (பி - ம்.) ‘ தனக்குநேராக.’ [2] இவனை : நந்தட்டனை ; கரு டனைக்காணுமளவில் பாம்பு கெடுமாதலின் இவ்வாறு கூறினர்.

1926. நந்தன் கெலுழனே யென்ன ; என்ன - என்று விசயைகூறி. வனப்பினானை : நந்தட்டனை. கலுழ - மனமுருகும்படி. காதல் - அன்பு. தோள் : நந்தட்டனுடைய தோள். கலி கெழுநிலத்தை - கட்டியங்கார னிடத்துப் பொருந்திய நம் பூமியை. காளைக்கு : உனக்கு ; என்றது சீவ கனை ; முன்னிலைப்படர்க்கை. இத்தோள், காளைக்கு நிலத்தைத்தந்து காவா தொழியுமோ என்றாள்.

(உரை) [1] ‘ நிலத்தை ’ என்பதன்பின் வருவிக்க.

1927. (க) இடத்தொடு பொழுது நாடி யெவ்வினைக் கண்ணு மஞ்சார், மடப்பட லின்றிச் சூழு மதிவல்லார்க் கரிய துண்டோ, கடத்திடைக் காக்கை யொன்றே யாயிரங் கோடி கூகை, இடத் திடை யழுங்கச் சென்றுங் கின்னுயிர் செகுத்த தன்றே.

1928. (உ) இழைபொறை யாற்ற கில்லா திட்டிடை தளர நின்ற, குழைநிற முகத்தி னார்போற் குறித்ததே துணிந்து செய்யார், முழையுறை சிங்கம் பொங்கி முழங்கிமேற் பாய்ந்து மைதோய், வழையுறை வனத்து வன்க ணரிவலைப் பட்ட தன்றே.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) மடம்படல் : விகாரம்.

(இ - ள்.) காட்டிலே ஒருகாக்கை எண்ணிறந்த கூகையிருக்கின்ற இடத்தே அவைவருந்தும்படி பகற்காலத்தே சென்று கொன்றதல்லவோ; சிங்கம் இடமறியாதே செறிந்த வனத்தின் நரிமேலே [1] பாய்ந்து அந்நரி யாகிய வலையிலே அகப்பட்டதல்லவோ ; ஆதலால், யாம் வீரமுடையே மென்று மகளிரைப் போலே தாம்நினைத்ததே துணிந்து செய்யாராய்க் காலத்தையும் இடத்தையும் நாடி ஆண்டுச் செய்யும் வினையிடத்தும் அஞ் சாராய்ச் சூழுமறிவினையும் வல்லார்க்குப் பின்னை அரியவினையுண்டோ வென்றுளென்க.

1927. இடத்தையும் பொழுதையும் நாடி எவ்வினைக்கண்ணும் அஞ் சார்; "ஞாலங் கருதினுங் கைகூடுங் காலம், கருதி யிடத்தாற் செயின்" (குறள், 484); "கால மறிந்தாங் கிடமறிந்து" (நீதிநெறி. 52). மடப் படலின்றி = மடம்படலின்றி - அறியாமையிற்படுதலில்லாமல். சூழும் - சூழ்ச்சிசெய்யும். அஞ்சாராய்ச்சூழும் மதிவல்லார்க்கு அரியதுண்டோ; இல்லை; ஓ : எதிர்மறை. கடம் - காடு. அழுங்க - அந்தக்கூகைகள் வருந் தும்படி. உயிர்செகுத்ததன்றே - அக்கூகைகளின் உயிரை அழித்ததல் லவா? காக்கை கூகையைவெல்லல்; குறள், 481. ஒரு காக்கை பல கூகையைக் கொன்றது என்று கூறியது ஒரு வீரன் பலரைக் கொல்வ தற்கு முடியும் என்பதைப் புலப்படுத்தியது; "பல மென்றிகழ்த லோம்பு மின்" (புறநா. 301); "ஒலித்தக்கா லென்னா முவரி யெலிப்பகை, நாக முயிர்ப்பக் கெடும்" (குறள், 763); "பாயிரங் கூறிப் படைதொக்கா லென்செய்ப, ஆயிரங் காக்கைக்கோர் கல்" (பழ. 165)

1928. இழையின் பொறையை ஆற்றகில்லாது; இழை-ஆபரணம்; பொறை - பாரம். இட்டிடை - சிறுகிய இடை. குழையையும் நிறத்தையு முடைய முகத்தினார் : மகளிர்; நிறம் - ஒளி; (பி - ம்.) 'குழையுடை முகத்தினர்.' குறித்ததே - தாம் கருதியதையே. முழை - குகை. மேற் பாய்ந்து - நரியின்மீது பாய்ந்து. மை - கருமைநிறம். வழை - சுர புன்னைமரம். சிங்கம் நரியாகிய வலையிற்பட்டதன்றே.

(உரை) [1] (பி - ம்.) 'பாய்ந்தாலன்னதாகிய.'

வீரத்தையே கருதாமற் காலமுமிடமுமறிந்து செய்கவென்ருள்; “பகல்வெல்லுங் கூகையைக் காக்கை” (குறள், 481) என்றும், “காலாழ் களரி னரியடும்” (500) என்றும் தேவருங்கூறினர். (௩௯-௪௦)

1929. ஊழிவாய்த் தீயோ டொப்பான் பதுமுக னுரைக்கு மொன்ருர், ஆழிவாய்த் துஞ்ச மற்றெம் மாற்றலா னெருங்கி வென்று, மாழைநீ ணிதியந் துஞ்சு மாநிலக் கிழமை யெய்தும், பாழியாற் பிறரை வேண்டேம் பணிப்பதே பாணி யென்ருன்.

(இ - ள்.) அதுகேட்டுத் தீயோடொப்பாகிய பதுமுகன், எம்மாற்றலால் நெருங்கிப் பகைவரை ஆழிவாயிலேபடும்படி வென்று நிலக்கிழமையை எய்துவேமாதலின், வலியாற்பிறரை விரும்பேம்: அருளிச்செய்யுமதே தாமதமென்ருனென்க.

எய்தும்: பன்மைத்தன்மை. ‘பாழியேம்’ என்றும் பாடம். (௪௧)

1930. பொருவருங் குரைய மைந்தர் பொம்மென வுரறி மற்றித்
திருவிருந் தகன்ற மார்பன் சேவடி சேர்ந்த யாங்கள்
எரியிருந் தயரு நீர்மை யிருங்கதி ரேற்ற தெவ்வர்
வருபனி யிருளு மாக மதிக்கவெம் மடிக ளென்ருர்.

பொருவுதல்: விகாரம்.

---

1929. ஊழிவாய்த்தீ - ஊழிக்காலத்து நெருப்பு. ஒப்பாகிய பதுமுகன் உரைக்கும். உரைக்கும் - சொல்லுவான். எம் ஆற்றலால் நெருங்கி ஒன்ருரை ஆழிவாயில் துஞ்சவென்று; ஒன்ருர் - பகைவர். துஞ்ச - இறக்கும்படி. மாழை - பொன். துஞ்சும் - தங்கிய. நிலக்கிழமை - நிலவுரிமையை. எய்தும் = எய்துதும் - அடைவோம்; ‘சூளுறும்’ (சீவக. 2126) என்பதுபோல ஈண்டும் தன்மைப் பன்மை. பாழி - வலி. பணிப்பதே - தாம் அருளிச்செய்வதே. பாணி - தாமதமாகும்.

1930. பொருவரும் - ஒப்பில்லாத. குரைய : அசை ; சீவக. 1914. மைந்தர் : பதுமுகனெழிந்த தோழர் ; எழுவாய். பொம்மென - கடுக. உரறி - முழங்கி. திரு இருந்த மார்பன், அகன்ற மார்பனென்பன சீவகனை. மார்பனது சேவடியை. எரி - தீ. அயரும் நீர்மையையுடைய கதிர் : சூரியன். அயரும் நீர்மை - வருந்தும் தன்மை. ஏற்ற தெவ்வர் - எம்முடன் எதிர்த்த பகைவர். எம்அடிகள் மதிக்க என்ருர் ; அடிகள் : விசயை ; விளி. மதிக்க - நினைத்தருளுக. சீவகனைச் சேர்ந்த தோழருக்குச் சூரியனும், பகைவருக்குப் பனியும் இருளும் உவமைகள்.

(இ - ள்.) ஒழிந்த தோழர், கடுகமுழங்கி இச்சீவகனடியைச்சேர்ந்த யாங்கள் வெம்மைக்கு நாமொவ்வோமென்று நெருப்பிருந்து வருந்துந் தன்மையையுடைய ஞாயிறும், எம்முடனெதிர்த்த தெவ்வர் பனியும் இருளுமாக எம்மடிகள் மதித்தருளுகவென்றாரென்க. (சஉ)

(வேறு)

1931. கார்தோன்ற வேம லருமுல்லை கமலம் வெய்யோன்
தேர்தோன்ற வேம லருஞ்செம்மனின் மாமன் மற்றுன்
சீர்தோன்ற வேம லருஞ்சென்றவன் சொல்லி னோடே
பார்தோன்ற நின்ற பகையைச்செறற் பாலை யென்றாள்.

(இ - ள்.) அதுகேட்ட தேவி, செம்மால்! காரும் தேரும் தோன்றின அளவிலே முல்லையும் கமலமும் மலருமாறுபோல, உன்சீர்தோன்றின பொழுதே நின்மாமன் அகமலர் மலரும்; ஆதலால், அவனிடத்தே சென்று அவனேவலோடே பகையைக் கொல்வாயாக வென்றாளென்க.

பார் நின்றாலே விளங்க. நின்ற - நிலைபெற்றுநின்ற. (சந)

1932. நன்றப் பொருளே வலித்தேன்மற் றடிக ளாளைச்
சென்றப் பதியு ளெமர்க்கேயென துண்மை காட்டி
அன்றைப் பகலே யடியேன்வந் தடைவ னீமே
வென்றிக் களிற்றா னுழைச்செல்வது வேண்டுமென்றான்.

(இ - ள்.) அடிகளே! கூறியது நன்று; தோழரறிவித்த அன்றைப் பகற்பொழுதே அந்தக் காரியமே யானும்துணிந்தேன்; இனி நாளை இராசமாபுரத்தே சென்று என்சுற்றத்திற்கு யானிருந்தபடியை அறிவித்து ஒருநாளிருந்து மற்றைநாளேபோந்து அடியேனடைவேன்; நீர் என் மாமனிடத்து ஏறச்செல்லுநிலைமையை விரும்புமென்றானென்க.

1931. கார் - கார்காலம். முல்லைமலரும். கமலம் - தாமரை. வெய்யோனுடைய தேர். செம்மல் : சீவகன் ; விளி. உன்சீர்தோன்றவே நின் மாமன் மலரும் ; சீர் - புகழ். மாமன் மலரும் - கோவிந்தன் மனம் மலரும். சென்று - மாமனிடம்போய். அவன் சொல்லினோடே - கோவிந்தனுடைய ஏவலோடு. பகையை - கட்டியங்காரனை. செறற்பாலை - கொல்லத்தக்காய்.

1932. நன்று - கூறியது நல்லது. அன்றைப் பகலே அப்பொருளே வலித்தேன் - தோழர் என்திறத்தைக் கூறிய அன்றைப் பகற்பொழுதே அக்காரியத்தையே யானும் செய்யத் துணிந்தேன். அடிகள் : விசயை ; விளி. நாளைப்பதியுள் சென்று ; பதியுள் - இராசமாபுரத்தே. எமர்க்கே - என்உறவினர்க்கு ; ஏ : அசை. நீமே - நீர்; ஏ : பிரிநிலை. களிற்றானுழை: கோவிந்தனிடத்து.

" இளையவண் மகிழ்வ கூறி " (சீவக. 2101) என்னுங்கவியானும், " வீட்டகந்தோறும் " (சீவக. 2110) என்னுங்கவியானும், " ஊர்தோறு" (சீவக. 2111) என்றதனானும் அன்றைப்பகலே வருவேனென்றல் பொருந்தாமையுணர்க. " கிளந்த வல்ல செய்யுளுட் டிரிநவும் " (தொல். குற்றியலுகரப். 78) என்றதனால், நும்மென்னுஞ்சொல் நீயிரென முழுவதுந் திரியாது மகரநிற்பத் திரிந்து நீமெனநின்றது ; ஏகாரம் : பிரிநிலை; இனி நீமென்று ஒரு திசைச்சொல்லுமாம். (சச)

1933. வேற்றைவந் தன்ன நுதிவெம்பரற் கான முன்னி
நூற்றைவ ரோடு நடந்தாணுதி வல்வின் மைந்தன்
காற்றிற் பரிக்குங் கலிமான்மிசைக் காவ லோம்பி
ஆற்றற் கமைந்த படையோடதர் முன்னி னனே.

நுதி - முன்பு ; " மதியேர் நுதலார், நுதிக்கோலஞ் செய்து " (திருச்சிற். 360) என்றாற்போல. ஓம்பி - ஓம்ப.

(இ - ள்.) வல்வின்மைந்தன் படையாலே தேவிக்குக்காவலிட, அவளும் அவன் போவதற்குமுன்பே நூற்றைவரோடே கானமுன்னி நடந்தாள் ; நடந்த பின்பு அவன் மான்மிசையேறி அதரைப்போகத் தொடங்கினனென்க.

பகைவர்க்கஞ்சி அவன் படையைக் காவலிட்டபின்பு, தேவிதான் தனக்குக் காவலாகத் தன்னைப்போல் நோன்புகொண்ட மகளிராய்ப் பள்ளியிலுறைவார் நூற்றைவரோடே போனாள் ; தவஞ்செய்வார் தனியே போதல் மரபன்றென்று. இனி வல்வின்மைந்தன் முன்பு படையோடே மான்மிசையிலேயேறி அதரை முன்னினவன் தேவிக்குக்காவலோம்ப, அவள்நோன்புகொண்ட மகளிர் நூற்றைவரோடே நடந்தாளென்றுமாம். இனி நடந்தாளென்று பாடமோதி, முன்பு படையோடே அதர்முன்னினவன் மாமிசையிலுள்ளாரைத் தேவிக்குக்காவலாகவோம்பித் தான் நூற்றைவரோடும் போனனென்பாருமுளர். (சரு)

1933. பரலுக்கு வேல் : சிறுபாண். 7-8; மலைபடு. 373; திருச்சிற். 228. வேல் தைவந்தன்ன நுதியையுடைய வெவ்விய பரலைக் கொண்ட கானத்தை. தைவந்தன்ன - தொட்டாற் போன்ற. நுதி - கூர்மை. பரல் - பருக்கைக்கல். படையோடு காவலோம்பி நுதிநூற்றைவரோடு கான முன்னி நடந்தாள். காவல் ஓம்பி = காவல் ஓம்ப - காவலிட. நுதி - சீவகன் போவதற்கு முன்பே. நூற்றைவர் : தாபதப்பள்ளியிலுறையும் மகளிர் ; இவர்கள் விசயைக்குத் துணையாக இருப்பவர். மைந்தன் : சீவகன். காற்றினைப்போலேபரிக்கும் மான்மிசை ; பரிக்கும் - செல்லுகின்ற; மான் : குதிரை. அதர் முன்னினன் - வழியைப் போகத் தொடங்கினன்.

1934. மன்றற் கிடனு மணிமால்வரை மார்பன் வான்கண்
நின்றெத் திசையு மருவிப்புன னீத்த மோவாக்
குன்றுங் குளிர்நீர்த் தடஞ்சூழ்ந்தன கோல யாறும்
சென்றப் பழனப் படப்பைப்புன னாடு சேர்ந்தான்.

மன்றற்கு - கல்யாணத்திற்கு. வான் தன்னிடத்தே மாருதுபெய்த லின், அருவிநீர்ப் பெருக்கொழியாத குன்று. படப்பை - தோட்டம்.

(இ - ள்.) மார்பன் குன்றையும் ஆற்றையுங்கடந்து அவ்வேமாங்க தத்தைச் சேர்ந்தானென்க. (சசு)

(வேறு)

1935. காவின்மேற் கடிமலர் நெகிழ்ந்த நாற்றமும்
வாவியு ளினமல ருயிர்த்த வாசமும்
பூவிரி கோதையர் புனைந்த சாந்தமும்
ஏவலாற் கெதிரெதிர் விருந்து செய்தவே.

(இ - ள்.) நெகிழ்ந்த காவின் நாற்றமுதலியன வில்வல்லாற்கு விருந்து செய்தனவென்க. (சஎ)

1936. கரும்பின்மேற் றொடுத்ததேன் கலிகொ டாமரைச்
சுரும்பின்வாய்த் துளித்தலிற் றுவைத்த வண்டொடு
திருந்தியாழ் முரல்வதோர் தெய்வப் பூம்பொழிற்
பொருந்தினன் புனைமணிப் பொன்செய் பூணினன்.

---

1934. மன்றல் - கலியாணம். இடனாகிய மார்பன், வரைபோலும் மார்பன் : சீவகன். வான் கண் நின்று - மேகம் தன்னிடத்தே இடை யறாது பெய்தலால்; நின்று - நிற்ப; 'நிற்பவென்பது நின்றெனத் திரிந்து நின்றது' (குறள், 11, பரிமேல்.). நீத்தம் - வெள்ளம். ஓவா - ஒழியாத. சென்று - கடந்து. பழனத்தையும் படப்பையையுமுடைய நாட்டை; நாடு - ஏமாங்கதம்.

1935. கா - சோலை. நெகிழ்ந்த நாற்றம் - வாய்விட்ட வாசனை; சீவக. 1440, அடிக். வாவி - தடாகம். உயிர்த்த - வீசிய. கோதையர் : மகளிர். ஏவலாற்கு - வில்வல்லானாகிய சீவகனுக்கு; ஏ - அம்பு; விற் றொழில்.

1936. தொடுத்த - வைத்த. கலிகொள் - ஆரவாரத்தைக் கொண்ட. சுரும்பு - ஒருவகை வண்டு. கரும்பில் வைத்த தேன் தாமரையிலுள்ள சுரும்பின்வாயில் துளித்தல்; "அறையுறு கரும்பி னணிமடற் றொடுத்த, நிறையுறு தீந்தே னெய்த்தொடை முதிர்வை, உழைக்கவின் றெழுந்த புழற்காற் றாமரைச், செம்மல ரங்கட்......உண்ணெகிழ்ந் துறைக்கும்" (பெருங். 1. 48 : 146-150). துவைத்த - ஒலித்தனவாய். சுரும்பும்வண் டும் யாழ்போல் முரலும்; சீவக. 1196, அடிக்; பொருந. 211. பூணினன் பொழிலைப் பொருந்தினன்; பூணினன் : சீவகன்.

(இ - ள்.) பூணினான், கரும்பில்வைத்த தேன் சுரும்பின்வாய்த் துளித்தலின், அச்சுரும்பொலித்தவை பின்பு வண்டோடு யாழ்போல முரலும் பொழிலைப் பொருந்தினானென்க. (சஅ)

1937. பொறைவிலங் குயிர்த்தன பொன்செய் மாமணிச்
செறிகழ லிளைஞருஞ் செல்ல னீங்கினார்
நறைவிரி கோதையர் நாம வேலினாற்
கறுசுவை நால்வகை யமுத மாக்கினார்.

(இ - ள்.) குதிரை முதலியன சுமத்தலைவிட்டு இளைப்பாறின ; இளையரும் வருத்தம் நீங்கினார் ; அவ்வளவிலே கோதையர் வேலினாற்கு அடிசில் சமைத்தாரென்க. (சகூ)

1938. கட்டியி னரிசியும் புழுக்குங் காணமும்
புட்டில்வாய்ச் செறித்தனர் புரவிக் கல்லவும்
நெட்டிருங் கரும்பொடு செந்நெல் மேய்ந்துநீர்
பட்டன வளநிழற் பரிவு தீர்ந்தவே.

(இ - ள்.) கருப்புக் கட்டியுடனே கலந்த அரிசியும் காணமுமிட்ட புட்டிலை நீரிலேயலைந்தனவாகிய புரவிக்கு வாயிலே செறித்தார் ; அவை யொழிந்த எருது முதலியனவும் மேய்ந்து நிழலிலே கிடந்து வருத்தந் தீர்ந்தனவென்க. (ரு0)

1939. குழிமதுக் குவளையங் கண்ணி வார்குழற்
பிழிமதுக் கோதையார் பேண வின்னமு
தழிமதக் களிறனா னயின்ற பின்னரே
கழிமலர் விழித்தகண் கமலம் பட்டவே.

---

1937. விலங்கு பொறையுயிர்த்தன - சீவகன் முதலியோர் ஏறிவந்த குதிரை முதலியன சுமத்தலை நீங்கி இளைப்பாறின. இளைஞர் : சீவகன் முதலியவர். செல்லல் - வழிவந்த வருத்தம். நறை - தேன். கோதையர் : மகளிர். நாமவேலினாற்கு - அச்சந்தரும் வேலையுடைய சீவகனுக்கு; நாம் - அச்சம் ; உரிச்சொல் ஈறுதிரிந்தது. அறுசுவையோடு கூடிய நால்வகை அமுதத்தை ஆக்கினார். நால்வகை அமுதம் : பக்ஷ்ய, போஜ்ய, லேஹ்ய, சோஷ்யங்கள் என்பர். அமுதம் - உணவு.

1938. கட்டியின் அரிசியும் - வெல்லக் கட்டியோடு கலந்ததாகிய அரிசியும். புழுக்கும் - வெந்த. காணம் - கொள். அரிசியும் காணமும் உடைய புட்டிலைப் புரவிக்கு வாயிலே செறித்தார் ; புட்டில் - குதிரைக்கு உணவுகட்டும் மொக்கணியென்னும் கருவி. அல்லவும் - அவையல்லாத எருது முதலியனவும். நீர்பட்டனவாகிய புரவியென இயைக்க. பரிவு - வருத்தம்.

1939. கண்ணியையும் குழலையுமுடைய கோதையார் : மகளிர். பேண - உபசரிக்க. அழிமதக்களிறு - ஒழுகுகின்ற மதத்தையுடைய

குழிமதுக்குவளை - குழியிற் குவளை.

(இ - ள்.) களிறனான் கோதையர் பேண இன்னமுதையுண்டபின்பு, கழியின் மலர்கள் கண்விழித்தன ; கமலம் துயின்றனவென்க. (ருக)

1940. எரிமணி யிமைத்தன வெழுந்த தீம்புகை
புரிநரம் பிரங்கின புகன்ற தீங்குழல்
திருமணி முழவமுஞ் செம்பொற் பாண்டிலும்
அருமணி யின்குர லரவஞ் செய்தவே.

(இ - ள்.) அவ்வந்திக் காலத்தில் மணிவிளங்கின ; அகிற்புகை எழுந்தன ; நரம்பு இரங்கின ;குழல் பாடலைக்கூறின ; அழகியமுழவமும் கஞ்சதாளமும் குதிரைமணியின் குரலோடே யொலித்தனவென்க. (ருஉ)

1941. தெளித்தவின் முறுவலம் பவளஞ் செற்றவாய்க்
களிக்கயன் மழைக்கணார் காமங் காழ்கொளீஇ
விளித்தவின் னமிர் துறழ் கீதம் வேனலான்
அளித்தபின் னமளியஞ் சேக்கை யெய்தினான்.

தெளித்தவின்முறுவல் - விளக்கிய இனிய முறுவல்.

(இ - ள்.) மகளிர் பாடிய கீதத்தைச் சீவகன் கொண்டாடிய பின்பு காமத்தே வயிரங்கொண்டு படுக்கையாகிய தங்குமிடத்தை எய்தினானென்க. (ருங)

---

யானை. களிறனான், கோதையர் பேண அமுதை அயின்ற பின்னர் ; களிறனான் : சீவகன். கழிமலர் கண் விழித்த - உப்பங்கழியிலுள்ள குவளைப்பூக்கள் மலர்ந்தன. கமலம் கண்பட்ட - தாமரை குவிந்தன. கண் என்பதை இரண்டற்கும் கொள்க. சைனர் பகலிலேயே உண்பவ ராதலின், 'பகலுணா' இக்கவியிற் கூறப்பட்டமை கூர்ந்து அறிதற் பாலது ; வல்சி (சீவக. 591) என்பதற்குப் பகற்சோறென்று பொரு ளெழுதியதும் இக்காரணங் கொண்டே.

1940. இமைத்தன - விளங்கின. தீம்புகை எழுந்தது. புகை - அகிற்புகை. புரிநரம்பு இரங்கின. முறுக்கிவிட்ட நரம்பையுடைய வீணைகள் ஒலித்தன. குழல்புகன்ற - புல்லாங்குழல் பாடலை இசைத்தன. மணி - அழகு. பாண்டில் - கஞ்சதாளம். மணியின் குரலோடு அரவம் செய்த ; மணி - குதிரைக்குக் கட்டிய மணி.

1941. தெளித்த - விளக்கிய. முறுவலையும் வாயையுமுடைய கண்ணார் ; மகளிர். கண்ணார் விளித்த கீதத்தை வேனலான் அளித்த பின் காமத்தே காழ்கொளீஇ அமளியஞ் சேக்கையை எய்தினான் ; விளித்தல் - பாடுதல் ; "விளியாதான் கூத்தாட்டு" (திரி. 11); "குயில் விளிப்பது காணாய்" (மணி. 4 : 13). வேனலான் - மன்மதன் போன்ற சீவகன். அளித்தபின் - கொண்டாடிய பின்பு. காழ்கொளீஇ - வயிரம் கொண்டு. அமளியஞ் சேக்கை - படுக்கையாகிய தங்குமிடத்தை.

1942. தீங்கரும் பனுக்கிய திருந்து தோள்களும்
வீங்கெழிற் றோள்களு மிடைந்து வெம்முலை
பூங்குளிர் தாரொடு பொருது பொன்னுக
ஈங்கனங் கனையிரு ளெல்லை நீந்தினன்.

(இ - ள்.) கரும்பைக் கெடுத்த தோள்களும் எழிற்றோள்களும் மிடைதலாலே முலை அவன் தாரோடே பொருது பூண்கள் சிந்தும்படி இரவெல்லையை இங்ஙனம் நீந்தினனென்க.

"வியநெறியால்விடுத்தான்" (சீவக. 1886) என்றலின் இவன் நுகர்தற்குரிய மகளிர் பலரும் வந்தாரென்க. (ருச)

1943. கனைகதிர்க் கடவுள்கண் விழித்த காலையே
நனைமலர்த் தாமரை நக்க வண்கையாற்
புனைகதிர்த் திருமுகங் கழுவிப் பூமழை
முனைவனுக் கிறைஞ்சினன் முருக வேளனன்.

(இ - ள்.) முருகவேளனன், ஞாயிற்றால் உலகம் கண்விழித்த காலையிலே தாமரைப்பூவைக் கெடுத்த கையாலே முகங்கழுவிப் பூமழையைப் பெய்து முனைவனுக்கு வணங்கினனென்க.

கடவுள் தோன்றின காலமுமாம். நனைமலர் : முதற்கேற்ற அடை. 'மழை பெய்து' எனவருவிக்க. இரண்டனுருபு மயக்கமுமாம், முனைவனையென்று. (ருரு)

1944. நாட்கடன் கழித்தபி னும வேலினன்
வாட்கடி யெழினகர் வண்மை காணிய
தோட்பொலி மணிவளைத் தொய்யின் மாதரார்
வேட்பதோர் வடிவொடு விரைவி னெய்தினன்.

1942. கரும்பை அனுக்கிய தோள்கள்; என்றது மகளிரது தோள்களை; அனுக்கிய - தம் அழகால் அதனைக் கெடுத்த. எழிற்றோள்கள் : சீவகனுடைய தோள்கள். மிடைந்து - நெருங்குதலால். தார் : சீவகனது மார்பின் மாலை. பொன் உக - பொன்னாலாகிய ஆபரணங்கள் சிந்தும்படி. ஈங்கனம் - இவ்வாறு. கனையிருள் எல்லை - செறிந்த இரவின் எல்லையை.

1943. கதிர்க்கடவுளால் கண்விழித்த காலையில்; கதிர்க்கடவுள் : சூரியன். நனை - தேன். தாமரையை நக்க கையால்; நக்க - இகழ்ந்த. கதிரையுடைய முகத்தை. முகங்கழுவிக் கடவுளை வணங்குதல்; சீவக. 220, அடிக். பூவாகிய மழையை. முனைவனுக்கு : அருகனுக்கு. இறைஞ்சினன் - வணங்கினன். வேளனன் : சீவகன்.

1944. நாட்கடன் - விடியற்காலத்துச் செய்யும் கடன்கள்; சீவக. 1991. வேலினன் : சீவகன். வாள் கடி எழில்நகர் வண்மை காணிய.

(இ - ள்.) வேலினுன், நாட்காலத்துச் செய்யுங் கடன்களை முடித்த பின்பு மகளிர் விரும்புவதொரு வடிவைக்கொண்டு ஒளியின் மிகுதியை யுடைய ஊரின்வண்மையைக் காண்டற்கு விரைவோடெய்தினுனென்க. (ருசு)

1945. அலத்தகக் கொழுங்களி யிழுக்கி யஞ்சொலார்
புலத்தலிற் கழைந்தபூ ணிடறிப் பொன்னிதழ்
நிலத்துகு மாலைகா றொடர்ந்து நீணகர்
செலக்குறை படாததோர் செல்வ மிக்கதே.

(இ - ள்.) அவன்கால் இங்குலிகச் சேற்றிலேயிழுக்கிப் பூணிலே யிடறி மாலையும் சேரத் தொடரப்படுதலாலே போகத் தொலையாதிருப்ப தொரு செல்வம் நீணகர்க்கு மிக்கதென்க. (ருஎ)

(வேறு)

1946. கத்தி கைக்கழு நீர்கமழ் கோதையர்
பத்தி யிற்படு சாந்தணி வெம்முலை
சித்தி யிற்படர் சிந்தையி னுரையும்
இத்தி சைப்படர் வித்திடு நீரவே.

கத்திகை - தொடை விசேடம்.

(இ - ள்.) கோதையருடைய முலை, பத்தியிலேயுண்டாஞ் சித்தியிலே செல்கின்ற துறவோரையும் இல்லறத்திலே செலுத்துவித்திடும் தன்மை யையுடையவா யிருக்குமென்க. (ருஅ)

---

ஒளியின் மிகுதியையும் அழகையுமுடைய இராசமாபுரத்தின் வளப்பத் தைக் காணும் பொருட்டு. வளையையும் தொய்யிலையுமுடைய மாதரார் : மகளிர். வேட்பதோர் - விரும்புவதொரு.

1945. அலத்தகக் கொழுங்களி இழுக்கி - சீவகன் பாதம் இங்குலிகச் சேற்றிலே வழுக்கப்பட்டு. அஞ்சொலார் : மகளிர். புலத்தலின் - தம் கணவரோடு ஊடுதலால். பூணிலே இடறி. நிலத்து உகுத்த பொன் னிதழையுடைய மாலை. கால்தொடர்ந்து - ஒருசேரக் கட்டுதலாலே. நகர் : இராசமாபுரம். அடி, 2-3 : சீவக, 1621. செல - போக. நகர்க்குச் செல்வம் மிக்கது.

1946. கத்திகை - குருக்கத்தி என்றுமாம். கழுநீர் - செங்கழுநீர் மலர். கோதையர் : மகளிர். பத்தி - வரிசையுமாம். கோதையரது முலை, பத்தியிற் படு சித்தியிற் படர்கின்ற சிந்தையினுரையும் இத்திசைப் படர்வித்திடும் நீர ; பத்தியிற்படு - பக்திசெய்தலிலே உண்டாகும். படர்தல் - செல்லுதல். சிந்தையினர் - துறவிகள். இத்திசை - இல் வாழ்க்கையிடத்திலே ; நீர - தன்மையையுடையன.

1947. வஞ்சி வாட்டிய வாண்மி னுசுப்பினார்
பஞ்சி யூட்டிய பாடகச் சீறடி
குஞ்சி சூட்டிய மைந்தர்கு ழாமலால்
இஞ்சி வட்ட மி டம்பிறி தில்லையே.

(இ - ள்.) வட்டமாகிய மதிலினிடமெல்லாம், மகளிரடியைக் குஞ்சியிலே சூட்டிய மைந்தர்திரளல்லது வேறுதிரளில்லையென்க. (௬௯)
வாட்டிய - கெடுத்த.

1948. மின்னி னீள்கடம் பின்னெடு வேள்கொலோ
மன்னு மைங்கணை வார்சிலை மைந்தனோ
என்ன னோவறி யோமுரை யீரெனாப்
பொன்னங் கொம்பனை யார்புலம் பெய்தினார்.

(இ - ள்.) பொற்கொம்பனையார், இவன் மேனியினொளியாலே முருகனோ! காமனோ! யார்தானறிகிலம்; உரையீரென்று வருந்தினாரென்க. (௭௦)

1949. விண்ண கத்திளை யானன்ன மெய்ப்பொறி
அண்ண லைக்கழி மீன்கவர் புள்ளென
வண்ண வார்குழ லேழையர் வாணெடுங்
கண்ணெ லாங்கவர்ந் துண்டிடு கின்றவே.

---

1947. வஞ்சி வாட்டிய நுசுப்பினார், ஒளியையுடைய மின்போன்ற நுசுப்பினார்; மகளிர். வஞ்சிவாட்டிய - வஞ்சிக்கொடியைக் கெடுத்த. பஞ்சி ஊட்டிய சீறடி, பாடகமணிந்த சீறடி. பஞ்சி - செம்பஞ்சுக் குழம்பு. பாடகம்: மகளிர் காலிலணியும் ஒருவகையாபரணம். குஞ்சி - தலை. நுசுப்பினாரது அடியைத் தம் குஞ்சியில் சூட்டிய மைந்தர் குழாமல்லது. மகளிரடியை மைந்தர் தலையிற் சூடியது, அவரது ஊடல்தீர்த்தற்கு. வட்டமாகிய இஞ்சியிடத்தில்; இஞ்சி - மதில். பிறிது - வேறு கூட்டம்.

1948. மின்னின் வேள் கொலோ - சீவகன், மேனியது ஒளியால் முருகனோ; கொல்: அசை. கடம்பினையுடைய வேள். ஐங்கணையையும் சிலையையுமுடைய மைந்தனோ - மன்மதனோ. அடி, 1–2 : சீவக. 1311. என்னனோ - யார்தான்; ஓ : அசை. கொம்பனையார் : மகளிர். புலம்பு - வருத்தம்.

1949. இளையான் அன்ன - முருகனைப்போன்ற. மெய்ப்பொறி அண்ணலை - மேனியில் உத்தம இலக்கணங்களையுடைய சீவகனை. ஏழையரது கண்ணெலாம் அண்ணலை, கழியிலுள்ள மீனைக் கவர்கின்ற புள்ளெனக் கவர்ந்து உண்டிடுகின்றவே; ஏழையர் : இராசமாபுரத்து மகளிர். கழி - உப்பங்கழி. கவர்ந்து - சீவகனுடைய மேனியின் அழகை விரும்பி.

(இ - ள்.) அங்ஙனம் புலம்பின ஏழையர் கண்ணெல்லாம் முருகனுடைய உத்தமவிலக்கணத்தை யொத்த இலக்கணத்தையுடைய அண்ணலை நீர்வடிந்த கழியின் மீனைக் கவரும் பறவையென்னும்படி கைக்கொண்டு நுகராநின்றன வென்க.

இது தொழிலுவமம். (சுக)

(வேறு)

1950. புலாத்தலைத் திகழும் வைவேற் பூங்கழற் காலி னானை,
நிலாத்தலைத் திகழும் பைம்பூ ணிழன்மணி வடத்தோ டேந்திக்,
குலாய்த்தலைக் கிடந்து மின்னுங் குவிமுலை பாய வெய்தாய்க்,
கலாய்த்தொலைப் பருகு வார்போற் கன்னியர் துவன்றி னாரே.

புலால் நாற்றம் தலையிலே திகழும் வேல்.

(இ - ள்.) சீவகனைக் [1] கலவியிலே வெய்தாய்க் கலாய்த்து அக்கலாந் தீர்ந்து தம்முலை பாய நுகர்வாரைப்போலே கன்னியர் நெருங்கினாரென்க.

நிலாத்தன்னிடத்தே திகழும் மணிவடத்தோடே பூண் தலையிலே கிடந்து மின்னும் ஏந்திக் குவிந்த முலையென்க. (சுஉ)

1951. வேனெடுங் கண்க ளம்பா விற்படை சாற்றி யெங்கும்,
தேனெடுங் கோதை நல்லார் மைந்தனைத் தெருவி லெய்ய,
மானொடு மழைக்க ணோக்கி வானவர் மகளு மொப்பாள்,
பானெடுந் தீஞ்சொ லாளோர் பாவைபந் தாடு கின்றாள்.

(இ - ள்.) நல்லார், கண்களம்பாக விற்படையையமைத்து மைந்தனைத் தெருவிலே எங்கும் எய்யாநிற்க, நோக்கினையுடையாள், நெடு வானவர்மகளு மொப்பாள், பால்போலுஞ்சொல்லாள், ஒருபாவை, அவள் பந்தாடாநின்றாளென்க.

நெடுமை - பெருமை. (சுங)

---

1950. புலா - மாமிசநாற்றம்; வேலுக்கு அடை. வேலையுடைய கழற்காலினானை : சீவகனை. மணிவடத்தோடு பூண்கிடந்து மின்னும் முலை, ஏந்திக் குவிந்த முலை; மணிவடம் - முத்துமாலை. குலாய் - விளங்கி. வெய்தாய் - விரைவாக. கலாய்த்து - கோபித்து. ஒலை = ஒல்லை - விரைய. பருகுவார் - இன்பம் நுகர்வார். துவன்றினார் - நெருங்கினார்.

(உரை) [1] (பி - ம்.) ‘கலாவி.’

1951. கண்கள் அம்பாக. சாற்றி - அமைத்து. தேனைக்கொண்ட நெடுங்கோதை; பூமாலை. கோதையையுடைய நல்லார் : மகளிர். மைந்தனை : சீவகனை. நோக்கியும், ஒப்பாளும், சொல்லாளுமாகிய ஓர் பாவை; என்றது விமலையை.

(வேறு)

1952. குழன்ம லிந்த கோதை மாலை பொங்க வெங்க திர்ம்முலை
நிழன்ம லிந்த நேர்வ டந்நி ழற்ப டப்பு டைத்தர
எழின்ம ணிக்கு ழைவில் வீச வின்பொ னோலை மின்செய
அழன்ம ணிக்க லாப மஞ்சி லம்பொ டார்ப்ப வாடுமே.

(இ - ள்.) அவள், குழலிற் கோதையும் மாலையும்பொங்க, முத்து வடம் முலையிலே புடைத்தலைச் செய்ய, குழை வில்லைவீச, ஓலை ஒளியை யுண்டாக்க, கலாபமும் சிலம்புமொலிப்ப ஆடுமென்க. (சுச)

1953. அங்கை யந்த லத்த கத்த வைந்து பந்த மர்ந்தவை
மங்கை யாட மாலை சூழும் வண்டு போல வந்துடன்
பொங்கி மீதெ ழுந்து போய்ப்பி றழ்ந்து பாய்த லின்றியே
செங்கயற்கண் புருவந் தம்மு ளுருவஞ் செய்யத் திரியுமே.

(இ - ள்.) ஐந்துபந்து, அங்கையாகிய அழகிய நிலத்திடத்தவாக மங்கை முதலாடுதலாலே, அதிலேயமர்ந்தவை பின் முறைமை குலைந்து போய் வீழ்தலின்றி மாலையைச்சூழும் வண்டுபோலே பொங்கி மீதெழுந்து போய் உடனே வந்து கண்ணும் புருவமும் கூடத்திரிந்து அழகுசெய்யத் திரியுமென்க. (சுரு)

1954. மாலை யுட்க ரந்த பந்து வந்து கைத்த லத்தவாம்
ஏல நாறி ருங்கு ழற்பு றத்த வாண்மு கத்தவாம்
நூலி னேர்நு சுப்பு நோவ வுச்சி மாலை யுள்ளவாம்
மேலெ ழுந்த மீநி லத்த விரல கைய வாகுமே.

1952. குழலில் மலிந்த கோதை; கோதை - பூமாலை. மாலை - மார்பின்மாலை. பொங்க - மிகுத்துக் காட்ட; சீவக. 645, ந. நிழல்மலிந்த - ஒளிநிறைந்த. நேர்வடம் - முத்துமாலை. நேர்வடம் முலையில் புடைத்தர; புடைத்தர - அடித்தலைச்செய்ய. வில் - ஒளி. மின்செய - ஒளிவிட. அழல்மணிக்கலாபம் - தீப்போலும் நிறத்தையுடைய மணிகளைக்கொண்ட கலாபம்; கலாபம் - ஒருவகை மேகலை. கலாபமும் சிலம்பும் ஆர்ப்ப ஆடும்: ஆடும் விமலை பந்தாடுவாள்.

1953. அங்கையாகிய அம்தலத்தகத்த; தலத்தகத்த - இடத்தினுள்ளே யுள்ளனவாக. மங்கை: விமலை. ஆட - விளையாட. பொங்கி - மிக்கு. பிறழ்ந்து பாய்தலின்றி - முறைமை குலைந்துபோய் வீழ்தலில்லாமல். கண்ணும் புருவமும் உருவம் செய்யத் திரியும்; உருவம் - அழகு.

1954. கரந்த - மறைந்த. ஏலநாறு இருங்குழல் - மயிர்ச்சாந்தின் மணம் வீசுகின்ற கரிய கூந்தல்; ஏலம் - மயிர்ச்சாந்து, குழற்புறத்தவாகிய பந்து, முகத்தவாம். நூலின்நேர் - நூலை ஒத்த. உச்சி-உச்சியிற் சென்றதாகிய பந்து.

**(இ - ள்.)** மாலையின் மறைந்த பந்து கையிடத்தவாம்; குழற்புறத்த வாகிய பந்து முகத்திடத்தவாம்; நுசுப்புநோம்படி உச்சியிற்போன பந்து மீண்டும் மாலைக்குள்ளேயாம்; மாலைமேலேபோய் உயர்ந்த பந்து மீண்டும் விரலிடத்தன, கையிடத்தனவாமென்க. (சுசு)

1955. கொண்டு நீங்கல் கோதை வேய்தல் குங்கு மம்ம ணிந்துராய், எண்டி சையு மேணி யேற்றி லங்க நிற்றல் பத்தியின், மண்டி லம்வ ரப்பு டைத்தன் மயிலிற் பொங்கி யின்னணம், வண்டுந் தேனும் பாட மாதர் பந்து மைந்துற் றுடுமே.

**(இ - ள்.)** மாதர், வண்டுந்தேனும் தேனை நுகராதே நின்றுபாட மயில்போற் பொங்கி உராய் எண்டிசையும் பந்தைக்கொண்டு உலாவுதல், இடையே குங்குமமணிந்து கோதைவேய்தல், படிமுறையாக அடித்தல், அப்பத்தியோடே தன்னைச்சூழ்ந்துவர அடித்தலென்கின்ற இந்நிலைமை களிலே வலியுற்று இங்ஙனம் பந்தாடுமென்க. (சுஎ)

1956. பந்து மைந்துற் றுடு வாள்ப ணைம்மு லையிற் குங்குமம், சுந்த ரப்பொ டிதெ ளித்த செம்பொற் சுண்ணம் வாணுதற், றந்து சுட்டி யிட்ட சாந்தம் வேரின் வார்ந்தி டைம்முலை, இந்தி ரதி ருவி னெக்கு ருகி யென்ன வீழ்ந்தவே.

**(இ - ள்.)** அங்ஙனமாடுகின்றவளுடைய நுதலிலே கொண்டுவந்து சுட்டியாகவிட்ட சாந்தமும், முலையிலிட்ட குங்குமமும், சிந்துரப் பொடியும், ஓட வைத்த பொற்சுண்ணமும், வியர்வையினாற்கரைந் தொழுகி முலையிடையிலே இந்திரவில் நெகிழ்ந்துருகி ஒழுகினாற்போலே வீழ்ந்தவென்க. (சுஅ)

---

1955. உராய் - பரந்து. ஏணி - எல்லை. பத்தியின் - வரிசைப்படி. மண்டிலம் - வட்டம். புடைத்தல் - அடித்தல். மயிலைப்போல் பொங்கி. மாதர் : விமலை. மைந்துற்று - வலியுற்று.

1952-55. இவற்றிற் கூறிய பந்துவிளையாட்டு விகற்பங்கள் முதலியன, பெருங்கதை, ‘பந்தடிகண்டது’ (4 : 15) என்னும் பகுதி யால் விளங்க அறியலாகும்.

1956. ஆடுவாள் - ஆடுகின்ற விமலையினுடைய. சுந்தரப்பொடி - சிந்துரப்பொடி. தெளித்த-ஒடவைத்த. நுதலில் தந்து சுட்டியாக இட்ட சாந்தம். சுந்தரப்பொடி : “சுந்தரப் பொடியுஞ் சுட்டிச் சுண்ணமும்” (பெருங். 1. 42 : 73). சுட்டி இட்ட சாந்தம் - சுட்டியாக இடப்பட்ட சந்தனம். வேரின் வார்ந்து - வேர்வையாற் கரைந்தொழுகி. குங்குமச் சாந்து முதலியன, வேரினால் வார்ந்து முலையிடையில் இந்திரவில் நெக் குருகியென்ன வீழ்ந்த; “சாதிங் குலிக மாதி யாகச், சுட்டிச் சுண்ண மொடு மட்டித்துக் கலந்த, குங்குமக் கொழுஞ்சேறு கூடக் குழைத்திட், டிந்திர வின்னெகிழ்ந் துருகி யாங்கு” (பெருங். 1. 40 : 211-224). பல நிறமுடைமையின் இந்திரவில் உவமை ஆயிற்று. இந்திரதிருவில் : சீவக. 539, அடிக்.

1957. நன்ம ணிச்சி லம்பி ஞேடு கிண்கி ணிந்ந கந்நகும், மின்ம லர்ந்த முல்லை மாலை நக்கி மிக்கி றந்தெழுந்து, பொன்ம லர்ந்த கோதை பந்து பொங்கி யொன்று போந்துபாய்ந்து, மின்ம லர்ந்த வேலி ஞன்முன் வீதி புக்கு வீழ்ந்ததே.

(இ - ள்.) சிலம்பும் கிண்கிணியும் நகாநிற்பப் பொன்னைமலர்ந்த தொருமின்போல நகுங் கோதையதொரு பந்து, மலர்ந்த முல்லைமாலையை மிக்குத்தீண்டுதலாலே தன்வரையையிறந்து எழுந்துபாய்ந்து பொங்கிப் போந்து வீதிபுக்கு வேலிஞன்முன்னே வீழ்ந்ததென்க. (சுகூ)

1958. வீழ்ந்த பந்தின் மேல்வி ரைந்து மின்னி னுண்ணு சுப்பிஞள், சூழ்ந்த காசு தோன்ற வந்து கின்னெ கிழ்ந்து பூங் குழல், தாழ்ந்து கோதை பொங்கி வீழ்ந்து வெம்மு லைக டைவரப், போழ்ந்த கன்ற கண்ணி வந்து பூங்கொ டியி ஞேக்கிஞள்.

(இ - ள்.) நுசிப்பிஞளாகிய ஆவியைப் போழ்ந்தகன்ற கண்ணி, துகில்நெகிழ்தலிற் காசுதோன்றக் குழல் தாழ்ந்துவீழ்தலின் அதிற் கோதை முலையைத் தைவர வீழ்ந்த பந்தின்மேலே வேட்கை செலுத்தி விரைந்துவந்து கொடிபோலே நோக்கிஞளென்க. (எ௦)

(வேறு)

1959. மந்தார மாலை மலர்வேய்ந்து மகிழ்ந்து தீந்தேன்
கந்தாரஞ் செய்து களிவண்டு முரன்று பாடப்
பந்தார்வஞ் செய்து குவளைக்கண் பரப்பி நின்ருள்
செந்தா மரைமேற் றிருவின்னுரு வெய்தி நின்ருள்.

---

1957. மணிகளையுடைய சிலம்பு. சிலம்பும் கிண்கிணியும் நக; நக - விளங்க. நகும்பந்து என்க. மலர்ந்த முல்லைமாலையை மிக்கு நக்கி; நக்கி - தீண்டுதலால். இறந்தெழுந்து - தன் எல்லையைக் கடந்து மேலே போய். கோதையது பந்து ஒன்று; கோதை : விமலை. பாய்ந்து பொங்கிப் போந்து. மின் மலர்ந்த - ஒளி பரந்த. வீதிபுக்கு வேலிஞன் முன் வீழ்ந்தது; வேலிஞன் : சீவகன்.

1958. மின்போலும் நுசுப்பிஞளாகிய போழ்ந்தகன்ற கண்ணி : விமலை. போழ்ந்து - தன்னைப்பார்ப்பவருடைய உயிரைப் பிளந்து. சூழ்ந்த காசு - அரையிற் சுற்றியுடுத்த மேகலை. கோதை - பூமாலை. தைவர - தடவ. பூங்கொடியின் - பூங்கொடியைப்போல. கண்ணி, பந்தின்மேல் விரைந்து கொடியினைப்போல நோக்கிஞள்.

1959. மந்தாரமாலையின் மலரை. வேய்ந்து - மொய்த்து. தேனை யுண்டு மகிழ்ந்த வண்டு. கந்தாரம் - காந்தாரம் என்னும் ஒருவகைப் பண்.

(இ - ள்.) களிவண்டு மந்தாரமாலையின்மலரை மொய்த்து அதிற்றேனையுண்டு மகிழ்ந்து காந்தாரமென்னும் பண்ணையாக்கி [1]ஆளாபஞ்செய்து பாடும்படி பந்திலே ஆர்வஞ்செய்துநின்று அவனைக் காண்டலின், அவன்மேலே கண்ணைப்பரப்பி இமையாதுநின்றவள், முன்பு கண்ணிமைத்த குறைபாடு தீர்தலின், திருவின்வடிவை நேரே பெற்றுநின்றாளென்க. (எக)

1960. நீர்தங்கு திங்கள் மணிநீணிலந் தன்னு ளோங்கிச்
சீர்தங்கு கங்கைத் திருநீர்த்தண் டுவலை மாந்திக்
கார்தங்கி நின்ற கொடிகாளையைக் காண்ட லோடு
பீர்தங்கிப் பெய்யா மலரிற்பிறி தாயி னாளே.

ஓடு : உடனிகழ்ச்சி.

(இ - ள்.) கங்கையினீரையுண்டு சந்திரகாந்தக்கல்லாகிய நிலத்திலே வளர்ந்து பசுமை தங்கி நின்றதொரு கொடி அவனைக் காண்டலோடே பழம்பூப்போலே வெளுத்து வேறாயினாளென்க. (எஉ)

1961. பெண்பா லவர்கட் கணியாய்ப்பிரி யாத நாணும்
திண்பா னிறையுந் திருமாமையுஞ் சேர்ந்த சாயல்
கண்பாற் கவினும் வளையுங்கவர்ந் திட்ட கள்வன்
மண்பா லிழிந்த மலரைங்கணை மைந்த னென்றாள்.

முரன்றுபாட - ஆளாபனம்செய்து பாடாநிற்க. பந்தில் ஆர்வம்செய்து - பந்தின்மீது வேட்கைகொண்டு. நின்றாள் - நின்றவளாகிய விமலை. திரு - இலக்குமி. கண் இமையாது நிற்றலின், 'திருவின்னுருவெய்தி' என்றார்.

(உரை) [1] (பி - ம்.) 'யாழுரவஞ்', 'ஆளாவஞ்.'

1960. திங்கள் மணி நிலந்தன்னுள் - சந்திரகாந்தக் கல்லாகிய நிலத்தில். ஓங்கி - வளர்ந்து. கங்கைநீரின் துவலையை மாந்தி; துவலை - துளி. மாந்தி - உண்டு. கார் தங்கி நின்ற கொடி - பசுமை உறைந்து நின்றதொரு கொடிபோலும் விமலை. காளையை : சீவகனை. பெய்யா மலரைப் போலப் பீர்தங்கிப் பிறிதாயினாள்; பெய்யாமலர் - பழம்பூ. பீர்தங்கி - பசலைபூத்து.

1961. பெண்பாலவர்கட்கு - மகளிர்க்கு. அணி - ஆபரணம். பிரியாத - நீங்காத. பெண்பால்......நாண் : "சேணு மெம்மொடு வந்த, நாணும்" (நற். 15 : 9-10). திண் பால் நிறை - வலிய பகுதியையுடைய மனவொருமை. திருமாமை - அழகிய நிறம். சாயல் : விமலை. தன் கண்ணால் என்கவினையும் வளையையும் கவர்ந்திட்ட கள்வன் : சீவகன். மண்பால்இழிந்த - பூமியில் வந்திறங்கிய. மலராகிய ஐங்கணையையுடைய மைந்தன் : மன்மதன்.

(இ - ள்.) மகளிர்க்குப் பூணும் நீங்காத நாணும், நிறையும், மாமையும் சேர்ந்த சாயலையுடையவள், தன்கண்ணாலே என்னழகையும் வளையையும் கவர்ந்த கள்வன், வடிவுகொண்டு உலகிலேவந்த காமனென்று கருதினாளென்க.

சாயல் : ஆகுபெயர். (எஃ)

1962. என்று ணினைந்தா ளிதுபோலுமிவ் வேட்கை வண்ணம்
சென்றே படினுஞ் சிறந்தார்க்கு முரைக்க லாவ
தன்று யரிதா யகத்தேசுட் டுருக்கும் வெந்தீ
ஒன்றே யுலகத் துறுநோய்மருந் தில்ல தென்றாள்.

(இ - ள்.) என்று கருதினவள் தன்னிலேநினைந்தாள் ; நினைந்தபடி : இந்தவேட்கையென்று உலகங்கூறுகின்ற தன்வண்ணம் இதுபோலேயிருந்தது ; இதுதான், இறந்துபடினும் குரவர்க்குங்கூறலாவதொன்றன்றாய்ப் பொறுத்தற்குமரிதாய் உள்ளேநின்று சுட்டுருக்கும் வெந்தீயாயிருந்தது ; இதுதான் நோய்களிலே வைத்துக்கொண்டு வேறுபரிகாரமற்றதுமாயிருந்தது ; இதுவுமொரு நோயென்று நினைந்தாளென்க. (எச)

1963. நிறையாது மில்லை நெருப்பிற்சுடுங் காம முண்டேற்
குறையா நிறையி னொருகுன் றியுங் காம மில்லை
பறையா யறையும் பசப்பென்று பகர்ந்து வாடி
அறைவாய்க் கடல்போ லகன்காம மலைப்ப நின்றாள்.

(இ - ள்.) மகளிர்க்கு நிறைநிற்குமிடத்து ஒருகுன்றியளவும் காமம் இல்லையாயிருந்தது ; காமமுண்டாயின், நிறை ஒன்றுமில்லையாயிருந்தது ; அதுவுமன்றி அதனைமறைத்தாலும் பசப்புச் [1] சாற்றுமாயிருந்ததென்றுகூறி வாடிக்கடல்போலே காமம் மேன்மேல் அலைப்ப நின்றாளென்க. (எரு)

1962. என்றாள் - என்று கருதிய விமலை. இவ்வேட்கைவண்ணம் இதுபோலும் ; வேட்கை - காதல். சென்றேபடினும் - இறந்துபட்டாலும். சிறந்தார்க்கும் - தாய்தந்தையருக்கும் ; உரைக்கலாவதன்றாய் - கூற முடியாததொன்றாய். அரிதாய் - உரையாக்கால் அவ்வேட்கையைப் பொறுத்தற்கும் அரியதாய். அகத்தே - மனத்துள்ளே. தீ - காமத்தீ. அடி, 2-3 : பெருங். 1. 33 : 202-3. தீயொன்றே உலகத்துறு நோய்களில் மருந்தில்லது என்றாள் ; மருந்தில்லது : "மருந்திற் றீராது மணியிழைகாது" (தொல். களவு. 11, ந. மேற்.)

1963. (பி - ம்.) 'நிறையொன்று மில்லை.' நெருப்பினைப்போல் சுடுகின்ற காமம் உண்டாயின் நிறையாதும் இல்லை ; யாதும் - சிறிதும். அடி, 1 : மணி. 5 : 20 ; சூளா. கல்யாண. 155. குறையா நிறையின் - குறையில்லாத நிறையோடு இருக்குமிடத்து. ஒருகுன்றியும் - ஒருகுன்றிமணியினளவும் ; புறநா. 159 : 25. பசப்புப் பறையாய் அறையும் - காதலை மறைத்தாலும் பசலை நிறம் அதனைப் பறைசாற்றும். அறைவாய் - ஒலித்தல் வாய்த்தலையுடைய.

(உரை) [1] சாற்றுமாய் - சொல்லுவதாய்.

1964. நெஞ்சங் கலங்கி நிறையாற்றுப் படுத்து நின்றாள்
அஞ்செங் கழுநீ ரலர்ந்தம்மதி வாண்மு கத்தே
வஞ்சம் வழங்கா தவன்கண்களி னேக்க மாதோ
தஞ்சம் வழங்கித் தலைக்கொண்டது காம வெந்தீ.

**(இ - ள்.)** பொய்கூறுதவன் தன்கண்ணாலே, அங்ஙனம் நெஞ்சு கலங்கி நிறையைப்போக்கி நின்றவளது கழுநீர் மலர்ந்ததொரு மதிபோலுமுகத்தே நோக்கினுகை, அவளெதிர்நோக்கினுல் நிகழ்ந்த காமத்தீ அவற்கு எளிமையை முதற்கொடுத்துப் பின்பு பாம்புபோல் தலைக்கொண்டதென்க. (எசு)

1965. பூவுண்ட கண்ணாள் புருவச்சிலை கோலி யெய்ய
ஏவுண்ட நெஞ்சிற் கிடுபுண்மருந் தென்கொ லென்னு
மாவுண்ட நோக்கின் மடவாளை மறித்து நோக்கிக்
கோவுண்ட வேலான் குழைந்தாற்றல னுயி ரனே.

[1] உண்ட : உவமவாசகம்.

**(இ - ள்.)** வேலான், பூப்போலுங்கண்ணாள் புருவமாகிய வில்லை வளைத்துக் கண்ணாகிய அம்பாலேயெய்தலின் ஏவுண்ட என்னெஞ்சிற் புண்ணுக்கு இடுமருந்து யாதென்றுராய்ந்து குழைந்து வேறுமருந் தின்மையின், இவளே மருந்தென்று அவளை மீண்டும்பார்த்து ஆண்டுப் பெறற்குக் [2] கூட்டியுரைக்கும் குறிப்புரையாகிய நோக்காலே உயிரைப் பெற்று ஆற்றுமையிலே நின்றானென்க.

இதனுல், முன்புபோலப் பொதுநோக்குப் பெறின், இறந்துபடுத லுக்கு மருந்தன்றென்று கருதினுனும். (எஎ)

---

1964. (பி - ம்.) 'நெஞ்சங் கலுழ்ந்து.' நிறை ஆற்றுப்படுத்து நின்றாள் - தன்நிறையைச் சீவகனிடத்துப் போக்கிநின்றவளது. கண்ணிற்குச் செங்கழுநீர்மலர் உவமை. வஞ்சம் வழங்காதவன் - பொய் கூறுதவனுன சீவகன். வழங்காதவன் நின்றாளது முகத்தே நோக்க. மாது, ஒ இரண்டும் அசைகள். காமத்தீ தஞ்சம் வழங்கித் தலைக் கொண்டது. விமலையது நோக்கினுற் பிறந்த காமத்தீ. தஞ்சம் வழங்கி - சீவகனுக்கு, முதலில் எளிமையைத்தந்து. தலைக்கொண்டது - பின்பு அதிகரித்தது.

1965. கண்ணாள் : விமலை. புருவமாகிய சிலையைக் கோலி ; கோலி - வளைத்து. எய்ய - எய்தலால். ஏவுண்டநெஞ்சிற்புண் - விமலையது கண்ணம்பால் தைக்கப்பட்ட என்மனத்திற் புண்ணுக்கு. இடும் மருந்து என்கொல் என்னு ; என்னு - என்று எண்ணி. மா - மாவடு. மடவாளை : விமலையை. மறித்தும் - மீட்டும். கோ உண்ட வேலான் - பகையரசர் களின் உயிரையுண்ட வேலையுடைய சீவகன். குழைந்து - வருந்தி.

(உரை) [1] பூவுண்ட, மாவுண்ட என்பவற்றிலுள்ளன. [2] (பி - ம்.) 'கூடி.'

1966. காமக் கடுநோய்க் கனல்சூழ்ந் துடம் பென்னு மற்றிவ்
வீமத்தி னோடு முடனேசுட வேக லாற்றான்
தூமத்தி னார்ந்த துகிலேந்திய வல்கு லாதை
பூமொய்த் திருந்த கடைமேற்புலம் புற்றி ருந்தான்.

(இ - ள்.) காமநோயாகிய கனல் சூழ்ந்து உடம்பென்னும் விறகுடனே உயிரை முழுக்கச் சுடுதலிற் போகலாற்றானாய் விமலையுடைய தாதையாகிய சாகரதத்தனுடைய கடையிலே வருந்தியிருந்தானென்க. (எஅ)

(வேறு)

1967. நாவிநோய் செய்த நறுங்குழலா ணீலக்
காவிநோய் செய்த கருங்கயற்கட் பூங்கொடியென்
ஆவிநோய் செய்த வணங்கென் றறியாதேன்
மேவிநோய் தீர விளைத்தருவா ரில்லையே.

கயற்கண் : ஒருபெயர். நறுங்குழலாள் - மானிடமாது.

(இ - ள்.) அங்ஙனமிருந்தவன், காவிக்குநோய்செய்த கண்ணிணையுடைய கொடியை என்னுயிரையுமுட்பட வருத்தியதொரு தெய்வமென்றே கருதி நறுங்குழலாளாகவுணராதே பின்னும் மயங்கினேனை மேவி மிக்க வருத்தந் தீரும்படி என்னுற்றனையென்று வினவுவாரின்றாயிருந்ததென்றானென்க.

[1] இனி, குழலாள், கொடி, அணங்கென்றுகூறி, அறிவுகலங்கினேனையென்றுமாம். (எகூ)

---

1966. நோயாகிய கனல். உடம்பென்னும் ஈமத்தினோடு; ஈமம் - விறகு; புறநா. 231. சுட - சுடுதலால். தூமத்தின் ஆர்ந்த துகில் - அகிற்புகையால் ஊட்டப்பெற்ற ஆடை; (பி - ம்.) 'தூமத்தினனைத்துகில்.' அல்குல் : விமலை. தாதை - சாகரதத்தனுடைய. பூ மொய்த்திருந்த - பூமாலைகள் அணியப்பெற்றிருந்த; (பி - ம்.) 'பூமொய்த்த மார்பன்.' புலம்புற்று - வருந்தி; ஏகலாற்றானாய்த் தாதையது கடைமேல் புலம்புற்றிருந்தான்.

1967. நாவிக்கு நோய் செய்த நறுங்குழலாள்; நாவி - கஸ்தூரி. நீலக் காவிக்கு நோய் செய்த கண்; கயல்போலுங் கண்; நீலக்காவி - நீலோற்பல மலர். கண்ணிணையுடைய பூங்கொடி. (பி - ம்.) 'கருங்கயற் கண் மாதராள்.' என் ஆவிக்கு நோய் செய்த அணங்கு; அணங்கு - வருத்தும் தெய்வம். என்று - என்றுகூறி. அறியாதேன் மேவி - அறிவு கலங்கினேனை அடைந்து. நோய்தீர - எனது காம நோய் நீங்கும்படி. விளைத்தருவார் - வினவுவார்.

(மேற்.) அடி, 2 : தக்க. 380, உரை. (பி - ம்.)

(உரை) [1] இப்பொருள் சிறப்புடையது.

1968. தெண்ணீர்ப் பனிக்கயத்து மட்டவிழ்ந்த தேங்குவளைக்
கண்ணீர்மை காட்டிக் கடல்போ லகன்றவென்
உண்ணீர்மை யெல்லா மொருநோக்கி னிற்கவர்ந்த
பெண்ணீர்மை மேனுட் பிறந்து மறியுமோ.

(இ - ள்.) சிறியதொரு குளத்தே அலர்ந்த குவளைபோலுங் கண்ணின் தன்மையைக்கொண்டு அதனொருநோக்கினாலே கடல்போ லகன்ற என்னுள்ளி லறிவையெல்லாங் கவர்ந்ததொரு பெண்தன்மை முன்னாளிலும் பிறந்தறியுமோ? இன்று என்னை வருத்துதற்குத் தோன்றியதன்றோவென்றானென்க. (அ0)

1969. கருங்குழலுஞ் செவ்வாயுங் கண்மலருங் காதும்
அரும்பொழுகு பூண்முலையு மாருயிர்க்கே கூற்றம்
விருந்தினராய் வந்தாரை வெற்றுடலா நோக்கும்
பெருந்திருவி யார்மகள்கொல் பேரியாதாங் கொல்லோ.

(இ - ள்.) அங்ஙனம் ஒருநோக்கினாலே விருந்தினரைப் பிணமாக நோக்கும் பெருந்திருவியுடைய குழன்முதலிய இக்கூற்றமெல்லாம், எளியவுயிரொன்றனையும் அழித்தற்கேதான்; இத்தன்மையையுடைய இவள் எந்நல்வினையுடையோர் மகள்? இவட்குப் பெயர் கூற்ற மென்றாமோ, பெண்ணென்றாமோவென்றானென்க. (அக)

1970. வாருடுத்த வெம்முலைய வண்டார்பூங் கோதையைப், பேர்கொடுத்தார் பெண்ணென்றார் கூற்றமே யென்றிட்டாற், றாருடுத்த நீண்மார்பர் தம்முயிர்தாம் வேண்டுபவேல், நீருடுத்த விந்நகரை நீத்திட் டொழியாரோ.

---

1968. பனி - குளிர்ச்சி. கயம் - குளம். மட்டு - தேன். குவளை போலும் கண்ணின் நீர்மையைக் காட்டி ; நீர்மை - தன்மை. என் உள் நீர்மை யெல்லாம் - எனது உள்ளத்தில் அறிவு முழுவதையும். ஒரு நோக்கினில் - ஒரு பார்வையாலே. பெண்ணீர்மை - பெண்தன்மை. அறியுமோ ; ஓ : எதிர்மறை.

1969. கண்ணாகிய மலரும். அரும்பு ஒழுகு - அரும்பின் தன்மை ஒழுகுகின்ற. குழல் முதலியன ஆருயிர்க்கே கூற்றமாகும் என்றுமாம். வெற்றுடலா நோக்கும் பெருந்திருவி - உயிரற்ற உடம்பாகும்படி பார்க்கின்ற இப் பெருஞ் செல்வி ; என்றது விமலையை ; திருவி - செல்வி. பேர் யாது ஆம்கொல்.

1970. வார் உடுத்த - கச்சுச்சூழ்ந்த. (பி - ம்.) 'பூண்முலைய வம்பார்பூ.' முலையையுடைய பூங்கோதையை : விமலையை. பேர் கொடுத்தார் - பெயரிட்டவர்கள். தார் - பூமாலை. மார்பர் : பெயரிட்டவர்கள். தம்முயிரைத் தாம் வேண்டுபவராயின் ; (பி - ம்.) 'வேண்டுவரேல்' இந்நகரை - இராசமாபுரத்தை. நீத்திட்டு - கைவிட்டு. ஒழியாரோ - நீங்காரோ.

வாருடுத்த - வார் சூழ்ந்த.

(இ - ள்.) இவளைப் பெயரிட்டவர்தாம் தம்முயிர் தீங்குருதிருத்தல் வேண்டுவாராயிற் கூற்றமென்னார், பெண்ணென்றார்; தாருடுத்த நீண் மார்பர் கூற்றமென்றிடுவாராயின், இந்நகரைக்கைவிட்டுத் தாமிருத்தற் குரியதோர் இடத்தேயிராரோ, அங்ஙனமிராமையிற் பெண்ணென்றே பெயரிட்டாரென்று பெயரைத் தெளிந்துகூறினானென்க.

[1] தந்தையைப் பேர்கொடுத்தாரென்று ஒருவரைக்கூறும் பன்மையாற் கூறினார். நீண்மார்பரென்றது, அப்பெயரைச் சுட்டிக் கூறிற்று. (அஉ)

1971. பைங்கண் மணிமகர குண்டலமும் பைந்தோடும்
திங்கண் முகத்திலங்கச் செவ்வா யெயிறிலங்கக்
கொங்குண் குழலுழக் கோட்டெருத்தஞ் செய்தநோக்
கெங்கெங்கே நோக்கினு மங்கங்கே தோன்றுமே.

(இ - ள்.) மகரவடிவாகச் செய்த குண்டலமும் தோடும் முகத்தே யிலங்க, எயிறு சிறிதிலங்க, குழல் எருத்திலேவீழச் சாய்த்த கழுத்துத் தந்த பார்வை பார்த்தவிடமெங்கும் தோன்றுநின்றதென்றானென்க.

இஃது [1] எதிர்பெய்து பரிதல். [2] முன்பெற்ற அருளைக்கினை வியந்தான். (அங)

1972. வாளார் மதிமுகத்த வாளோ வடுப்பிளவோ
தாளார் கழுநீரோ நீலமோ தாமரையோ
நீள்வேலோ வம்போ கயலோ நெடுங்கண்ணோ
கோளார்ந்த கூற்றமோ கொல்வான் றொடங்கினவே.

(இ - ள்.) இந்த மதிபோலுமுகத்திற்கிடக்கின்றவை, ஒருகால் அங்ஙனம் அருளைக்கமுஞ்செய்தலிற் கண்ணோ, கயலோ, வடுப்பிளவோ, கழுநீரோ, நீலமோ, தாமரையோவென்றற்குந்தக்கு, ஒருகாற் பொதுநோக்கமும் செய்து கொல்வான் தொடங்கினவாதலின், கூற்றமோ, வாளோ, வேலோ, அம்போவென்றற்குந்தக்கு, இருபகுதியுமுடையவா யிருந்தனவென்றானென்க. (அச)

---

(உரை) [1] தந்தை : சாகரதத்தன்.

1971. (பி - ம்.) 'பைம்பொன் மணிமகர குண்டலமும் பொற்றோடும்.' முகத்தே இலங்க, செவ்வாயில் எயிறு இலங்க; இலங்க - விளங்க. கொங்கு உண் - வாசனை ஊட்டப்பெற்ற. குழல் தாழ - கூந்தல் கழுத்திலே வீழ. கோட்டு எருத்தம் செய்த நோக்கு - சாய்த்த கழுத்துத் தந்த பார்வை.

(உரை) [1] சீவக. 715, அடிக். [2] சீவக. 1965, ந.

1972. வாளார் - ஒளிபொருந்திய. முகத்த - முகத்திற்கிடக்கின்றவை; என்றது கண்களை. தாள் - தண்டு. நீலம் - நீலோற்பலமலர். கோள் ஆர்ந்த கூற்றமோ - உயிரைத் தன் வயமாகக் கொள்ளுதல் பொருந்திய கூற்றமோ. மு. குறள், 1085.

(மேற்.) அடி, 1 : நேமி. உரி. 2, உரை.

(வேறு)

1973. என்றுங்கொன் மாதர் நலமெய்துவ தென்று சிந்தித்
தொன்றார்க் கடந்தான் புலம்புட்கொண் டிருந்த லோடும்
அன்றே யமைந்த பசும்பொன்னட ராறு கோடி
குன்றாமல் விற்றான் குளிர்சாகர தத்த னென்பான்.

(இ - ள்.) ஒன்றார்க்கடந்தான் இங்ஙனங்கூறி மாதர் நலத்தை எய்துந் தன்மை என்று கூடுமென்று நினைந்து வருந்தியிருந்தானாக, அற்றை நாளே ஆண்டுறையுஞ் சாகரதத்தன் மாற்றமைந்த தகட்டுப்பொன் ஆறுகோடி யென்னு மெண்ணிற்குறையாதபடி சரக்கை விற்றானென்க.

[1] குளிர் : திசைச்சொல். (அரு)

1974. திருமல்க வந்த திருவேயெனச் சேர்ந்து நாய்கன்
செருமல்கு வேலாய்க் கிடமாலிது வென்று செப்ப
வரிமல்கி வண்டுண் டறைமாமலர்க் கண்ணி மைந்தன்
எரிமல்கு செம்பொ னிலமாமனொ டேறி னானே.

திருவேயென்று [1] உவப்பின்கட் பான்மயங்க உவமித்தார். வண்டுகள் மதுவையுண்டு வரியென்னும் பண்ணை அறைகின்ற கண்ணி.

(இ - ள்.) நாய்கன் எனக்குச் செல்வமிக வந்த திருவேயென்று சேர்ந்து இனி இவ்வில்லம் நினக்கு இருப்பிடமாயிருந்ததென்று [2] செப்ப, அதுகேட்ட அம்மைந்தன் அம்மாமனோடே பொன்னிலத்தே ஏறினானென்க. (அசு)

1973. ஒன்றார்க் கடந்தான், மாதர் நலம் எய்துவது என்றாங்கொல் என்று சிந்தித்துப் புலம்புகொண்டிருந்தலோடும் ; ஒன்றார்க்கடந்தான் - பகைவரை வென்றானாகிய சீவகன் ; மாதர் நலம் - விமலையின் இன்பத்தை; புலம்பு - வருத்தம். அன்றே, சாகரதத்தன் அடர் பசும்பொன் ஆறு கோடிக்குக் குன்றாமல் விற்றான். அடர்பொன் - தகட்டுப்பொன்.

(உரை) [1] 'குளிருமென்னும் வினைச்சொல் குளிரெனத் தொழிலின் மேல் நின்றது ; இருப்பென்றவாறு' (சீவக. 494, ந.) ; 1782.

1974. திரு மல்க வந்த திருவே - எனக்குச் செல்வம் மிகும்படி வந்த திருமகளே ; என்றது சீவகனை ; விளி. நாய்கன் : சாகரதத்தன். செரு - போர். வேலாய்க்கு என்றது சீவகனை ; முன்னிலை. இது இடம் என்று செப்ப. வண்டுமல்கி யுண்டு வரி அறைகின்ற மலர்க்கண்ணி ; வரி : ஒருவகைப்பண் ; வரிப்பாடல். கண்ணியையுடைய மைந்தன் : சீவகன் எரிமல்கு - ஒளி நிறைந்த. மாமன் : சாகரதத்தன். மைந்தன் மாமனோடு பொன்னிலத்தே ஏறினான்.

(உரை) [1] உவப்பினால் ஆண்பால் பெண்பாலாக மயங்க உவமிக்கப் பட்டது ; தொல். உவமம். 6, பேர். (பி - ம்.) [2] 'செப்புவது.'

1975. (க) நம்பன் சிறிதே யிடைதந்திது கேட்க நாளும், அம்பொன் னகரு ளமைந்தேன்மற் றெனக்க மைந்தாள், கம்பம் மிலாதாள் கமலைக்கு விமலை யென்பாள், செம்பொன் வியக்கு நிறத்தாடிரு வன்ன நீராள்.

1976. (உ) பூம்பாவை வந்து பிறந்தாளப் பிறந்த போழ்தே, ஆம்பால வெல்லா மறிவாரன் றெழுதி யிட்டார், தூம்பியாது மில்லாக் குளம்போன்றதென் றேமில் பண்டம், கூம்பாத செல்வக் கொடியேயிது கேண்மோ வென்றான்.

1977. (ங) மங்கைக் குரியான் கடையேறும்வந் தேற லோடும், வங்கந் நிதிய முடன்வீழுமற் றன்றி வீழா, தெங்குந் தனக்கு நிகரில்லவ னேற்ற மார்பம், நங்கைக் கியன்ற நறும்பூவணைப் பள்ளி யென்றான்.

---

1975. நம்பன் : சீவகன் ; விளி. இடை - சமயம் ; “இடையின்று குறுகி” (புறநா. 54 : 2) ; “தளரிடை யறியுந் தன்மையள்” (மணி. 4 : 98). நகருள் நாளும் அமைந்தேன் : நகர் - இராசமாபுரம். எனக்கு அமைந்தவளும் கம்பமில்லாதவளுமாகிய கமலைக்கு ; கம்பமிலாதாள் - கற்பில் அசைவில்லாதவள். கமலை : சாகரதத்தனுடைய மனைவி ; விமலையின் தாய். பொன்னேவென்று வியக்கும் நிறத்தாள். திரு - திருமகள். இது முதல் நான்கு பாடல்கள் சாகரதத்தன் கூற்று.

(மேற்.) அடி, 1 : தொல். விளிமரபு, 12, ந ; இ - வி. பெயர். 49.

1976. பூம்பாவையாகிய இவள் வந்து பிறந்தாள். பிறந்த அப்போழ்தே. ஆம் பாலவெல்லாம் அறிவார் - மேல் நடக்கும் காரியங்களையெல்லாம் அறிபவராகிய சோதிடர். என் தேமில் பண்டம் தூம்பு யாதும் இல்லாக்குளம் போன்றது ; தேமில் பண்டம் - குற்றமற்ற பொருள் ; தூம்பு யாதுமில்லாக் குளம் - மடை சிறிதுமில்லாத குளம். இது கூம்பாத செல்வக் கொடியே - பண்டத்தின் இந்நிலையும், உனக்குக் குறையாத செல்வம் வரும் ஒழுங்கே யாகும். கேண்மோ - மேலும் கேட்பாயாக. என்றான் - என்று சோதிடன் கூறினான்.

1977. மங்கைக்குரியான் - விமலைக்கு உரிய கணவன். கடையில் ஏறுவான். வங்கந்நிதியம் உடன்வீழும் - கப்பலால் ஈட்டப்பட்ட திரவியம் உன் கடையில் சேரத்தங்கும். அன்றிவீழாது - அவ்வாறல்லாமல் பொருள் தங்காது. நிகரில்லவனுடைய மார்பமே நங்கைக்கு இயன்ற பள்ளியாகும் என்றான் ; நிகரில்லவன் - நிதியம் தங்கும்படி வந்த ஒப்பில்லாதவன். நங்கைக்கு : விமலைக்கு.

1978. (ச) ஏழாண்டின் மேலு மிரண்டாண்டிரண் டெய்தி நின்றாள், வீழா நிதியு முடன்வீழ்ந்தது வில்வ லாய்க்கே, ஊழாயிற் றெல்கு நுசுப்பஃக வுருத்து வீங்கிச், சூழாரம் வைத்த முலை யாணலஞ் சூழ்க வென்றான்.

இவை நான்கும் ஒருதொடர்.

(க) கம்பமிலாதாள் - கற்பில் அசைவிலாதாள்.

(உ) தூம்பில்லாக்குளம் போன்றதென்றான், சரக்கு விலைபோகா மையின். கொடி - ஒழுங்கு ; "கொடிக்கூறை" (புறநா. 22) என்றார்.

(ங) வீழும் - நின்னிடத்தே தாழும். மற்று : அசை.

(இ - ள்.) நம்பன், சிறிதேயிடந்தந்து இதனைக்கேட்க ; இந்நகரிலே நாளுமிருந்தேன் ; இங்ஙனமிருந்தேற்கு அமைந்தாளாய்க் கம்பமில்லா தாளாகிய கமலைக்கு விமலையென்பாள் நிறத்தாள், நீராள், பாவை, இவள் வந்து பிறந்தாள் ; பிறந்தவப்பொழுதே மேல் ஆங்காரியங்களை யெல்லாமறியுங் கணிகள் சாதகஞ்செய்தார் ; செய்தவன்றே எனது குற்ற மற்ற பண்டம் தூம்பில்லாத குளத்தை [1] யொத்தது ; அதற்குக் காரணம் விளைவினோகை ; அவர்களிலொருவன் இந்நிலையும் நினக்குச் செல்வம் வருமொழுங்கே ; அது வரும்வழியும் கேளென்றான் ; என்றவன் இவளுக் குரிய கணவன் கடையிலே வந்தேறும் ; ஏறினவளவிலே நிதியம் சேர விழும் ; அல்லது வீழாது ; அங்ஙனம்வீழும்படி வந்தவன்மார்பமே இவட்குப் பள்ளியாவதுமென்றான் ; அதற்கேற்ப வீழாநிதியும் இப் பொழுது வீழ்ந்தது ; யாண்டும் பதினொன்றற்றுப் பன்னிரண்டாயிற்று. ஆதலின், நினக்கே ஊழாயிற்று ; இனி இவள்நலத்தைத் தழுவுவாயாக வென்றானென்க.

கமலைக்குப் பிறந்தாளென்க. [2] கணி சாகரதத்தனை உவந்து, 'செல்வக் கொடியே' என்றானென்றுமாம். (அ எ - கூ ௦)

---

1978. ஏழாண்டின்மேலும் இரண்டு இரண்டு ஆண்டு எய்தி - பதினோராண்டைக் கடந்து. வீழ்ந்தது - என்னிடத்தே வந்து தங்கியது. வில்வலாய்க்கே - வில்வல்லானாகிய உனக்கே ; என்றது சீவகனை ; (பி - ம்.) 'வேலினாய்க்கே.' ஊழாயிற்று - மணம்புரியும் நல்வினை உண் டாயிற்று. ஒல்கு நுசுப்பு அஃக - துவளும் இடை குறையும்படி. வீங்கி - பெருத்து. வைத்த - வைக்கப்பட்ட. முலையாள்நலம் : விமலையது இன் பத்தை.

(உரை) [1] (பி - ம்.) 'ஒத்ததற்குக்.' [2] கணி - சோதிடன்.

(வேறு)

1979. ஏற்ற கைத்தொடி வீழ்ந்தென வேந்தலைத்
தேற்றி ளுன்றிரு மாநலஞ் செவ்வனே
தோற்ற மாதருந் தோன்றலைக் காண்டலும்
ஆற்றி ளுடனா தாவியுந் தாங்கினாள்.

[1] வீழ்ந்தது : விகாரம்.

(இ - ள்.) எடுத்த கையிலே ஒருதொடி தானேவந்து வீழ்ந்த தன்மை போல நமக்கும் இதுவந்ததென்று கருதும்படி அவன் ஏந்தலை இங்ஙனம் கூறித் தேற்றினான்; தேற்றினபின் மாதரும் தோன்றலை உள்ளே வரக்கண்டவளவிலே தனதாவியையும் போகாமல்தடுத்தாள்; தடுத்து, 'நலஞ்சூழ்க' என்று தந்தை அவற்குக் கூறியது தானும் பின்பு கேட்டலின், ஆற்றுவதுஞ் செய்தாளென்க. (கக)

1980. அம்பொற் கொம்பனை யாளையும் வார்கழற்
செம்பொற் குன்றனை யானையுஞ் சீர்பெறப்
பைம்பொ னீணகர்ப் பல்லிய மார்த்தெழ
இம்ப ரில்லதொ ரின்பமி யற்றினார்.

இன்பமென்றது மணத்தை; ஆகுபெயர்.

(இ - ள்.) நகரிலே பல்லியங்களாரநிற்பக் கொம்பனையாளையும் குன்றனையானையும் இன்பத்தையியற்றினாரென்க. (கஉ)

1981. கட்டி லேறிய காமரு காளையும்
மட்டு வாயவிழ் மாமலர்க் கோதையும்
விட்டு நீங்குத லின்மையின் வீவிலார்
ஒட்டி யீருடம் போருயி ராயினார்.

---

1979. ஏற்ற கைத்தொடி வீழ்ந்தென - எடுத்த கையிலே ஒரு வளையல் தானே வந்து தங்கினாற் போல; "ஏற்ற முன்கைத் தொடிவீழ்ந் தற்றால்" (பெருங். 1. 36 : 119). ஏந்தலை : சீவகனை. திருமா நலம் செவ்வனே தோற்ற மாதர் - திருமகள் தன் பெரிய அழகு நேராகத் தோற்றற்குக் காரணமான விமலை. தோன்றலை : சீவகனை. ஆற்றினாள் - வேட்கையைப் பொறுத்திருந்தாள்.

(உரை) [1] வீழ்ந்தது என்பது வீழ்ந்தென்றாயிற்று.

1980. நகரில் பல்லியம் ஆர்த்தெழக் கொம்பனையாளையும் குன்றனையும் இன்பம் இயற்றினார்; கொம்பனையாள் : விமலை. குன்றனான்: சீவகன். இம்பர் இல்லதொர் இன்பம் - இவ்வுலகில் நடந்ததில்லாத தொரு இன்பத்தை.

1981. கட்டிலேறிய : பெருங். 2. 3-ஆம் பகுதியாகிய 'கட்டி லேற்றியது' என்பது இங்கே அறிதற்பாலது. காளை : சீவகன். கோதை :

(இ - ள்.) பிணிப்பினையுடைய இல்வாழ்க்கையிலே சென்ற காளையும் கோதையும் தம்மிரண்டுடம்புமொன்ருய் விட்டு நீங்குதலின்மையின், விட்டு நீங்கி நுகருமக்களது மெய்வருத்தமாகிய கேடில்லாதவர் அங்ஙனம் ஒருடம்பாதலேயன்றி மனமுமொன்ருயினுரென்க.

உயிரொன்றெனவே மனமுமொன்றென்பது போதரும். (கூங)

1982. நிலவு வெண்கதிர் நீர்மைய பூந்துகில்
கலவங் கண்புதை யாதுக னற்றலின்
உலக மூன்றுமு றுவிலைத் தென்பவே
புலவு வேற்கண்ணி னுண்முலைப் போகமே.

(இ - ள்.) அவர் அங்ஙனமாதலின், அதற்குமுன் நீங்காமல் நிலை பெறும் பூந்துகில் மேகலையை மறையாதே தானே நெகிழ்ந்து அவனைக் கனற்றுதலின், ஆண்டுப்பெற்ற நுகர்ச்சியின்பம் உலகமூன்றும் உறுகின்ற விலையையுடைத்தென்க.

அவன் கொளுத்த அவள்கோடலிற் கனற்றுதல் அவன் மேலாயிற்று. முலைப்போகமென்ருர், உடம்பைப் பற்றி இன்பநுகராநிற்க நிகழ்வதொரு கரணமென்பது தோன்ற. (கூச)

1983. தேன வாங்கமழ் கண்ணியுந் தெவ்வர்தம்
ஊன வாங்கதிர் வேலுறு காளையும்
கான வாங்கடி நாறுமென் பள்ளிமேல்
வான வாம்வகை யால்வைகி னூர்களே.

---

விமலை. வீவிலார் - மெய்வருத்தமாகிய கேடில்லாதவராய். ஒட்டி - ஒன்ருகி. ஒட்டி 'யீருடம்போருயிராயினுர். "இருவராகத்துளோருயிர் கண்டனம்" (திருச்சிற். 71); "கூடியிரு வருமொருவ ரெனவிதயங் கலந்ததற்பின்" (வி-பா. அருச்சுனன் தீர்த்த. 30)

1982. நிலவு வெண்கதிர் நீர்மைய பூந்துகில் - நிலாவினது வெள்ளிய கிரணங்களைப்போலும் தன்மையையுடைய பூத்தொழிலைக் கொண்ட ஆடை; "நிலாவுறழ் பூந்துகில்" (பெருங். 5. 1 : 137, 8 : 80). "திங்கள் சொரிநிலவு.........ஏந்திழையார் பூந்துகிலா மென்று" (தண்டி. 53, மேற்.). கலவம் கண்புதையாது - மேகலையை மறையாமல். கனற்றலின் - துகில் நெகிழ்ந்து சீவகனைச் சுடுதலால், கண்ணினுளது முலைப்போகம் உலகமூன்றும் உறு விலைத்து; கண்ணினுள் : விமலை. விலைத்து - விலையையுடையது.

1983. தேன் அவாம் - வண்டுகள் விரும்புகின்ற. கண்ணி : விமலை. தெவ்வர்தம் ஊன் அவாம் - பகைவரது மாமிசத்தை விரும்புகின்ற; வேலுக்கு அடை. காளை : சீவகன். கான் அவாம் கடி நாறும் மென்பள்ளி மேல் - காடுகள் விரும்புகின்ற வாசனை வீசுகின்ற மெல்லிய படுக்கையின் மேல். வான் அவாம் வகையால் - தேவர் விரும்புகின்ற தன்மையாலே; வான் : ஆகுபெயர். வைகினுர் - இன்பம் நுகர்ந்து தங்கினுர்கள்.

(இ - ள்.) கண்ணியும் காளையும் கானம் விரும்பும் மணமெல்லாம் நாறும் பள்ளிமேலே வைகினுரென்க.

மக்களது மெய்வருத்தமின்றி நுகர்ந்தமைதோன்றத் தேவர் அவாவும் வகையென்ருர். இத்துணையும் மணஞ்செய்த அன்றைநுகர்ச்சி கூறிற்று. (கூ௬)

(வேறு)

1984. வெண்மதி நெற்றி தேய்த்து விழுத்தழும் பிருப்ப நீண்ட, அண்ணனன் மாடத் தங்க ணகிற்புகை யமளி யேறிப், பண்ணமை மகர வீணை நரம்புரீஇப் பாவை பாட, மண்ணமை முழவுத் தோளான் மகிழ்ச்சியுண் மயங்கி ஞனே.

(இ - ள்.) மதியின்தலை தேய்த்தலின், தழும்பிருப்ப நீண்ட மாடத்தில் அமளியிலே சென்றேறிப் பாவை யாழ்வாசித்துப் பாட அதுகேட்டுத் தோளான் இன்பமகிழ்ச்சியிலே மயங்கினுனென்க.

இதுமுதல் மற்றைநாளைப்புணர்ச்சிகூறுகின்ருர். அதுவும் அமளி யேறி யென்றதனல், நீங்கியிருந்து நாட்கடன் கழித்தெய்தினுரென் றுணர்க. இங்ஙனம் இரண்டுநாள் ஈண்டுச் சென்றமை தோன்ற, மேலே, "நாளிரண்டு சென்ற" (சீவக. 1995) என்ருர். (கூகூ)

1985. இன்னரிச் சிலம்போ டேங்கிக் கிண்கிணி யிகலி யார்ப்பப், பொன்னரி மாலை தாழப் பூஞ்சிகை யவிழ்ந்து சோர, மின்னிருங் கலாபம் வீங்கி மிளிர்ந்துகண் ணிரங்க வெம்பித், துன்னருங் களிகொள் காமக் கொழுங்கனி சுவைத்து விள்ளான்.

(இ - ள்.) ஊற்றின்பத்தைச் சிறிதுநீங்கின புணர்ச்சியை விரும்பிச் சிலம்பும் கிண்கிணியுமார்ப்ப, மாலைதாழ, சிகைசோர, கலாபம் விம்மிப் பிறழ்ந்தொலிப்பக் காமமாகிய கனியைச் சுவைத்துப் பகலெல்லாம் நீங்கிற்றிலனென்க.

---

1984. மதிநெற்றி தேய்த்து - சந்திரனது உச்சி, தேய்த்தலால். அகிற்புகை ஊட்டப்பெற்ற அமளியில் ஏறி. பண் - இராகம். வீணையின் நரம்பை உரீஇ; உரீஇ = உருவி - தடவ. பாவை : விமலை. மண் அமை முழவு - மார்ச்சனைமண் அமைந்த மத்தளம். முழவு போலும் தோளான் : சீவகன். மகிழ்ச்சி : இன்பத்தாலாகிய உவகை.

1985. அரியையுடைய சிலம்பு; அரி - பரல். ஏங்கி - ஒலித்து. இகலி - மாறுபட்டு. பொன்னரிமாலை - பொன்னை அரிந்துதொடுத்த மாலை. பூஞ்சிகை - பூவையணிந்த முடி; சீவக. 195. (பி-ம்.) 'பூஞ்சிகை யலம்வந் தாட.' மின் இருங்கலாபம் - ஒளியையுடைய பெரிய மேகலை. வீங்கி - விம்மி. கண்மிளிர்ந்து இரங்க - பிறழ்ந்து ஒலிப்ப. துன்னரும் - கிட்டுதற்கரிய. காமமாகிய கனியை. விள்ளான் - நீங்காதவனுன் : சீவக. 188. அடி, 4 : சீவக. 192, 2089.

கனி - சாரம். தாழ்தலானும் சோர்தலானும் ஊற்றினைச் சிறிது நீங்கின கரணமாம். (கூஎ)

1986. தொழித்துவண் டிமிருங் கோதை துணைமுலை முள்கப் பூம்பட், டழித்துமட் டொழுகுந் தாரான் மணிவள்ளத் தாய்ந்த தேறல், எழிற்பொலி மாதர்க் கேந்த வினிதினி னுகர்ந்து காமக், கொழித்திரை கடலுண் மூழ்கிக் கோதைகண் டுயின்ற வன்றே.

தொழித்து - சிதறி.

**(இ - ள்.)** அக்கரணம் நிகழ்ந்தபின், கோதைதுணைமுலைகள் பூம் பட்டை யழித்து நீங்காமன்முயங்கலின், மட்டொழுகுந்தாரான் மாதர்க் குத் தேறலை வள்ளத்தே ஏந்த, அவள் அதனை இனிதாக நுகர்ந்து காம மாகிய கொழித்து இரைக்குங் கடலிலே மீண்டுமமுழுந்துதலின், அவன் துயில்வதற்கு முன்னே அவள் கண்கள் சிறிது துயின்றனவென்க. (கூஅ)

1987. பாசிலை சுருட்டி மைந்தன் கொடுக்கிய பரந்து மின்னும், தூசுலா மல்கு றீண்டத் துயிற்கண்கள் விழித்த தோற்றம், வாசவான் குவளை மெல்ல வாய்விடா நின்ற தொக்கும், ஏசுவ தொன்று மில்லா விணைவட முலையி னட்கே.

வெற்றிலை மடித்துக்கொடுத்தற்கென்றது இடக்கர். புணர்ச்சிக்கண் நாண் தோன்றலின், தூசு நெகிழ்ந்து மேற்கிடந்தமைதோன்ற உலாவு மென்றார்.

---

1986. தொழித்து - பூந்துகளைச் சிதறி; சீவக. 2673; "சிதர் சிதர்ந் துகுத்த செவ்வி வேனில்", "மலருண் வேட்கையிற் சிதர்சிதர்ந் துகுப்ப" (அகநா. 277 : 18, 317 : 7); "சிதர்தொழிற் றும்பியொடு மதர்வண்டு மருட்ட" (பெருங். 1. 33 : 28). (பி - ம்). 'கொழித்து.' இமிரும் - ஒலிக்கின்ற. கோதை : விமலை. பூம்பட்டையழித்து முள்க; முள்க - முயங்குதலால். தாரான் : சீவகன். மணி - அழகு. வள்ளம் - கிண்ணம். தேறல் - காமபானமாகிய மதுத்தெளிவு : சீவக. 2083; மதுரைக். 779-81. தாரான் மாதர்க்குத் தேறலை வள்ளத்தில் ஏந்த; மாதர்க்கு : விமலைக்கு. காமமாகிய கடலுள் மூழ்குதலால். கோதையது கண் துயின்ற. கோதை : விமலை.

1987. பாசிலை சுருட்டி - வெற்றிலையைமடித்து. மைந்தன் : சீவகன். கொடுக்கிய - கொடுத்தற்கு. தூசுலாம் அல்குல் - துகில் பரந்த அல்குலை. துயிலுதலையுடைய கண்கள். வாசவான்குவளை - வாசனையை யுடைய சிறந்த குவளைப்பூ. மெல்ல - சிறிது. வாய்விடாநின்றதொக்கும் - மலரும் தன்மையைப் போன்றது. அடி, 2-3 : சீவக. 66, அடிக். ஏசுவது - இகழ்வது. ஒன்றும் - சிறிதும். இணைவடம் - இரட்டைவட மான முத்துமாலை. முலையினட்கு : விமலைக்கு. மைந்தன், முலையினட் குக் கொடுக்கிய தீண்ட, விழித்த தோற்றம் ஒக்கும் என முடிக்க.

(இ - ள்.) மைந்தன் புணர்ச்சிவேண்டி விமலையதல்குலைத் தீண்ட அவட்குக் கண்விழித்த தோற்றம் குவளை முன்பு அலருந்தன்மையன்றி மெல்லென அலருந்தன்மையை ஒக்குமென்க. (கூகூ)

1988. கங்குற்பாற் புகுந்த கள்வ னிவனெனக் கதுப்பிற் ருழ்ந்த, தொங்கலான் முன்கை யாத்துச் சொல்லுநீ வந்த தென்ன, நங்கையான் பசித்து வந்தே னெப்பொரு ணயப்ப தென்ருட், கங்கலுழ் மேனி யாய்நின் னணிநல வமிழ்த மென்ருன்.

[1] அனந்தராதலின், தானறியாமற்புகுந்த கள்வனென்று [2] அசதி யாடினுள்.

(இ - ள்.) இவன் கள்வனென்று கூறித் தப்பாதபடி மாலையாற் கையை யாத்து இனி நீ வந்த காரியங்கூறென்று கேட்க, யான் பசியால் வந்தேனென்றுகூற, நீவிரும்புவனவற்றில் இப்பொழுது விரும்புவது எப்பொருளையென்று வினுயினுட்கு, அழகொழுகுகின்ற மேனியாய்! நின் அழகாகிய அமிழ்தமுழுது மென்ருனென்க.

பசித்துண்பார்க்கு உணவுகள் பலவென்பது தோன்ற, எப்பொரு ளென்ருள். (கoo)

1989. செயிர்த்தவள் சிவந்து நோக்கிச் சீறடி சென்னி சேர்த்தி, அயிர்ப்பதென் பணிசெய் வேனுக் கருளிற்றுப் பொருள தென்ன, உயிர்ப்பது மோம்பி யொன்று முரையலை யாகி மற்றிப், பயிர்ப்பில்பூம் பள்ளி வைகு பகட்டெழின் மார்ப வென்ருள்.

---

1988. கங்குல்பால் - இரவினிடத்து. இவன் கள்வன் என; என - என்றுகூறி. கதுப்பில் தாழ்ந்த தொங்கலால் - தன் கூந்தலில் தங்கிய மாலையாலே. யாத்து - கட்டி. நீ வந்தது சொல்லு என்ன; நீ என்றது சீவகனை; என்ன - என்று விமலை கேட்ப. நங்கை: விமலை; விளி. யான் பசித்துவந்தேன் என்று சீவகன்கூற. எப்பொருள் நயப்பது என்ருட்கு; நயப்பது - விரும்புவது; என்ருட்கு - என்று விஞவிய விமலைக்கு. அம் கலுழ் மேனியாய் - அழகு ஒழுகுகின்ற மேனியையுடையாய்; "அங்க லுழ் மேனி" (குறுந். 143 : 7); "அங்கலி ழாகம்", "அங்கலிழ் மேனி" (ஐங்குறு. 106 : 4, 174 : 4). மேனியாய், நின் என்பன விமலை யை. நலமாகிய அமிழ்தமுழுவதும் வேண்டும் என்ருன்.

(உரை) [1] அனந்தர் - மயக்கம். [2] அசதியாடல், சீவக. 1871, அடிக்.

1989. செயிர்த்தவள் - ஊடல்கொண்ட விமலை. சிவந்து - கோபித்து. நோக்கி - சீவகனை நோக்க. அடியைச் சென்னியில் சேர்த்தி. அயிர்ப்பது என் - என்னிடத்து ஐயம் கொள்கின்ற தன்மை யாது. அருளிற்றுப் பொருளதென்ன - தாம் அருளியதே காரியமாகும் என்று சீவகன் கூற.

முன்பு நின்னலமென்றதனால், பிறர்நலமன்றி நின்னலமென்பது [1] போதருதலின், அதுசெயிராம். நோக்கி - நோக்க. பயிர்ப்பு - அருவருப்பு.

(இ - ள்.) தான் குற்றங்கூறலின், அவள் கோபித்துப் பார்க்கச் சென்னியை அடியிலே சேர்த்தி, என்னை அயிர்க்கின்ற தன்மை என்னென்றுவினவ, அதற்கு மறுமொழிகொடாமையின், தான் நெட்டுயிர்ப்புக் கொண்டு நினதேவலே செய்வேனுக்கு அருளினது யாதொன்று அது காரியமென்றுரைக்க, அதற்கு வருந்தி, பயிர்ப்பில்லாத மார்பனே! நீ இத் தன்மையன சிறிதுங் கூறுயாகி அதனால்வரும் இறந்துபாட்டையுமோம்பி இப்பள்ளியிலே இனித்தங்கென்றுளென்க.

அதுபொருளென்றான், இறந்துபடுவாயென்னினும் அதுவே தனக்குப் பொருளென்பது தோன்ற. எனவே ஊடலும் கூடலும் கூறினாரென்க. (கஅக)

1990. உள்ளிழு துடைய வெம்பி யுற்பல வுருவு கொண்ட, வெள்ளியிற் புனைந்த கோல விளக்கொளி வெறுவி தாக, வள்ளிதழ்க் கோதை வல்லான் வட்டிகை நுதியின் வாங்கிப், பள்ளிமே லெழுதப் பட்ட பாவைபோ லாயி னாளே.

(இ - ள்.) வெள்ளியாற்செய்த விளக்கு இழுதுடையும்படி தீ மிக்கெரிதலின் அரக்காம்பலின் வடிவைக் கொண்ட ஒளி பின்பு விடியற்காலமாதலின் அவ்வொளி கெடாநிற்கக் கோதை புணர்ச்சியவசத்தாலே பாவைபோலாயினாளென்க.

எழுதவல்லவன் துகிலிகைநுதியாலே வட்டிகைப்பலகையையொழித்துப் பள்ளிமேலெழுதினதொரு பாவை; வாங்குதல் ஈண்டு ஒழித்தன் மேற்று. இனி, "கட்டிலேறிய" (சீவக. 1981) என்னுங் கவிமுதலியவற்றை ஒருநாளைக் கூட்டமாக்கியுமுரைப்ப. (கஅஉ)

---

பயிர்ப்பில்லாத மார்ப, ஒன்றும் உரையலையாகி, உயிர்ப்பதுமோம்பி இப்பள்ளியில் வைகு என்றாள்: உயிர்ப்பதும் ஓம்பி - இறந்துபடுதலையுங் காத்து.

(மேற்.) மு: தஞ்சை. 56, சொக்க.

(உரை) [1] (பி - ம்.) 'பொருந்துதலின்.'

1990. வெள்ளியாற் புனைந்த விளக்கு, உள்ளே இழுது உடைய வெம்பி; இழுது உடைய - நெய் கெடும்படி; வெம்பி - தீ மிக்கு எரிதலால். உற்பல உருவுகொண்ட ஒளி வெறுவிதாக - செவ்வாம்பல் மலரின் வடிவத்தைக்கொண்ட தீப்பிழம்பு கெடாநிற்க; "பகலிற் றோன்றும் பல்கதிர்த் தீயின், ஆம்பலஞ் செறு" (ஐங். 57). கோதை: விமலை. வல்லான் - சித்திரமெழுதுதலில் வல்லவன். வட்டிகை நுதியின் - எழுதுகோலின் நுனியால். வாங்கி - எழுதும் பலகையை ஒழித்து. பள்ளி - படுக்கை.

(வேறு)

1991. மங்கையர் பண்ணிய மருத யாழ்குழல்
நங்கையைப் பிரியுமிந் நம்பி யின்றென
அங்கதற் கிரங்கின வாரும் பேதுறக்
கங்குல்போய் நாட்கடன் கழிந்த தென்பவே.

(இ - ள்.) புணர்ந்தோரெல்லாம் விடிந்தமையுணர்ந்து பிரிகின்ரேமே யென்று பேதுறும்படி மங்கையரெல்லாரும் பண்ணிப்போந்த யாழும் குழலும் இன்று தாமேயருளி, யாம் பிரிவித்தலின், இந்நம்பி இந் நங்கையைப் பிரியாநிற்குமேயென்று அப்பிரிவிற்கு இரங்குவனபோலே யிரங்கின. அவை அங்ஙனமிரங்க, கங்குல் அவ்விடத்தினின்றும் போக, நாட்கடன் கழிந்த தென்க.

மருதம் - காலைப்பண். போய் - போக. (கoரு)

1992. ஏந்துபூங் கோதைக டிருத்தி யேர்படச்
சாந்துகொண் டிளமுலை யெழுதித் தையறன்
காந்தள முகிழ்விரல் கையி னற்பிடித்
தாய்ந்தவட் கிதுசொலு மலங்கல் வேலினன்.

(இ - ள்.) வேலினன், ஏர்படத்திருத்தி எழுதி அவள்விரலைக் கையாலே பிடித்து ஆற்றுவிக்குநெறியையாய்ந்து அவட்கு இப்பிரிவை யுணர்த்தாநிற்கு மென்க. (கoச)

1991. பண்ணிய - வாசித்த. மருதயாழ் - மருதம் என்ற காலைப் பண்ணையுடைய வீணை ; "யாழோர் மருதம் பண்ண" (மதுரைக். 658); புறநா. 149. யாழும் குழலும், ஆரும் பேதுற இந்நம்பி, நங்கையைப் பிரியும் என அதற்கு இரங்கின; பேதுற - வருந்தும்படி. நம்பி : சீவகன். நங்கை : விமலை. இரங்கின - இரங்குவனபோல இசைத்தன. கங்குல்- இரவு. நாட்கடன் : சீவக. 1944.

1992. ஏந்திய பூங்கோதைகளை ஏர்படத்திருத்தி ; கோதை - மாலை. ஏர்பட - அழகுண்டாக. சாந்து - குங்குமச்சாந்து. முலையில் எழுதி. தையல்தன் : விமலையினுடைய. காந்தள் அம்முகிழ் விரல் - காந்தளது அழகிய மொட்டுப்போலும் விரலை; "காந்தண் மெல்விரல்" (குறுந். 167 : 1). ஆய்ந்து-தன் பிரிவைப் பொறுத்திருக்கும் வழியை ஆராய்ந்து. அவட்கு : விமலைக்கு. இது சொலும் - இப்பிரிவைச் சொல்லுவான். அலங்கலையுடைய வேலினன் : சீவகன் ; எழுவாய்.

1993. பூவினுட் டாழ்குழற் பொன்செ யேந்தல்குல்
மாவினுட் டாழ்தளிர் மருட்டு மேனியாய்
காவினுட் டோழரைக் கண்டு போதர்வேன்
ஏவினுட் டாழ்சிலை யெறிந்த கோலினே.

செய்பொன் - மேகலை.

(இ - ள்.) குழன்முதலியவற்றையுடைய மேனியாய்! ஏத்தொழி லிடத்து வலியின்றிக் குறைந்த வில்லெய்த அம்புபோலே போய்த் தோழரைக் கண்டு மீள்வேனென்று சொன்னானென்க.

'தாழ்சிலை யெறிந்தகோலின்' என்றதனால் தூரிதன்றி அணிய விடத்தே போய்வருவேனென்றானென்று அவள் கருதினாள்; அவன் கருதியது, வலியில்லாத அம்பு [1] இலக்கிற்பட்டுவைத்து மீண்டுவந்ததேனும், எய்தவனிடத்து வாராது மாறிப்போமாறுபோலே யானும் நின்னிடத்து வாராது இந்நகரிலே மீண்டுவருவேனென்பது; அது தமர்க்கு உண்மை காட்ட மேல்வருகின்றமையை நோக்கிக் கூறினான். (கoரு)

1994. என்றவ னுரைத்தலு மெழுது கண்மலர்
நின்றநீ ரிடைமணிப் பாவை நீந்தலின்
மன்றனா றரிவையைத் தெருட்டி மாமணிக்
குன்றனான் கொடியவள் குழைய வேகினான்.

(இ - ள்.) என்று அவன் கூறினானாக, கொடியினுடைய மையெழுதிய கண்மலரில் ததும்பி வீழாதே நின்ற நீரிடத்தே மணிப்பாவை நீந்துதலின், அவ்வரிவையைத் தேற்றி அவன் அவள் குழையப் போயினானென்க. (கoசு)

அ — விமலையாரிலம்பகம் முற்றிற்று.

ஆகக்கவி, ககூகூச

---

1993. செய்பொன் ஏந்து - மேகலையை ஏந்திய. மா - மாமரம். தாழ்தல் - தங்குதல். தளிரை மருட்டுகின்ற மேனியாய்: என்றது விமலையை; விளி. கா - சோலை. போதர்வேன் - மீள்வேன். ஏவினுள் - அம்புத் தொழிலிடத்து. தாழ்சிலை எறிந்த கோலின் - வலிகுறைந்த வில் எய்த அம்புபோல. கோலினைப்போற் போதர்வேன்.

(உரை) [1] (பி - ம்.) 'இலக்கைப்பட்டு அதை.'

1994. அவன்: சீவகன். எழுது கண் மலர் - மையெழுதிய கண்ணாகிய மலரில்; "எழுதுவாட்டடங்கண்" (கூர்ம. சூரியன். 4). மணியிலுள்ள பாவை. மன்றல் - வாசனை. அரிவையை: விமலையை. தெருட்டி - வருத்தத்தினின்றும் தெளிவித்து. குன்றனான்: சீவகன். கொடியாகிய அவள் என்றுமாம்; அவள்: விமலை. குழைய - வருந்த. கொடியது கண்மலரில் பாவை நீந்தலின் தெருட்டிக் குன்றனான் அவள் குழைய ஏகினான் என முடிக்க.

ஒன்பதாவது

# சுரமஞ்சரியாரிலம்பகம்

1995. வாளி ரண்டு மாறு வைத்த போன்ம மைக்கண் மாதரார், நாளி ரண்டு சென்ற வென்று நைய மொய்கொள் காவினுட், டோளி ரண்டு மன்ன தோழர் தோன்ற லேப்பு ணர்ந்தபின், தாளி ரண்டு மேத்தி நின்று தைய லுமம் வேண்டினர்.

மாறு - எதிர். மாதரார் - [1] கூடவந்தவர்.

(இ - ள்.) காவிடத்து மாதரார் இரண்டுநாள் கழிந்தவென்று வருந்தா நிற்க, அவ்விடத்தே தோழர் தோன்றலைச் சேர்ந்தபின்பு, அவன் மணக்கோலங்கண்டு ஏத்திநின்று நீர் மணஞ்செய்த தையல் நாமத்தை எமக்குக் கூறுக வென்றாரென்க.

இனி விமலையிடத்து ஒருநாளைக் கூட்டமேயுளதென்பார்க்கு மாத ரார் நையும்படி தோழர் நாமம்வேண்டினரென்க. என்றது: இவர் கேட்டது கொண்டு சுரமஞ்சரியைச் சீவகன் கூடவேண்டுமொழி புத்தி சேனன் கூற, அவன் மற்றைநாளும் அவரைப்பிரிதலின், நாளிரண்டு சென்றவென்று அவர் நைதற்குக் காரணமாயிற்றென்றவாறு. (க)

1996. பாடு வண்டி ருந்த வன்ன பல்க லைய கலல்குல்
வீடு பெற்ற வரும் வீழும் வெம்மு லைவி மலையென்
றூடு வான ணிந்த சீர ரம்பை யன்ன வாணுதல்
ஊடி னும்பு ணர்ந்த தொத்தி னிய வரு ளாளரோ.

1995. மாறுவைத்த போல் - எதிராக வைத்தவற்றைப் போன்ற. மாதரார் - சோலையிலே தங்கிய மகளிர். நைய - வருந்த. காவினுள், மாதரார் நைய. தோன்றலை: சீவகனை. புணர்ந்தபின் - அடைந்த பின்பு. தையல் நாமம் - சீவகன் மணந்த பெண்ணின்பெயரை. வேண்டினர் - தமக்குக் கூறும்படி வேண்டிக் கொண்டனர்.

(உரை) [1] சீவகனுடன் வந்தவர்கள்.

1996. பாடுவண்டு - ஒலிக்கின்ற வண்டு. வண்டு இருந்தாலொத்த பல் கலையையுடைய அல்குல்; "வரியல்குல், வண்டிருப் பன்ன தகைத்து" (யா-வி. 84, மேற். 'கல்லின்மேல்'). பல்கலை - பலவடங்களை

" வண்டிருப் பன்ன பல்கா ழல்குல் " (பொருந. 39) என்றுர்பிறரும். வீடு பெற்றவரும் விரும்பும் முலையினையும், அல்குலினையும், சீரினையு முடைய அரம்பையென்க.

(இ - ள்.) ஊடல் கடிதிற்றீர்தலிற் புணர்ந்த தன்மையையொத்து இனியவளாய் அரம்பையையொத்த வாணுதல் விமலையென்று 'பெயர் கூறப்பட்டு உளளாயினுளென்றுனென்க. (உ)

1997. அம்பொ ரைந்து டைய்ய காம னைய்ய னென்ன வந்த ணன், நம்பு நீர ரல்லர் நன்கு ரங்கு நீர ராயினும், தங்கு ரவ்வர் தாங்கொ டுப்பி னெஞ்சு நேர்ந்து தாழ்வர்தாம், பொங்க ரவ்வ வல்கு லாரெ னப்பு கன்று சொல்லினுன்.

நம்பு - நசை. பொல்லாங்குக்கு நன்றுன குரங்கு.

(இ - ள்.) அதுகேட்டவர் ஐயன் காமனென்றே வியந்தாராக, புத்திசேனன் கூறுவான் ; குடிப்பிறந்த மகளிர்தாம் தம்குரவர் தம்மைக் கொடுப்பாராயின் அக்கொடுக்கப்பட்டார் மகளிர்விரும்புநீரரல்லராய்ப் பொல்லாராயினும் தாம் அதற்கு நெஞ்சாலே நேர்ந்து அவரை வழிபடு வர் ; இங்ஙனம் வியக்க வேண்டாவென்று நகையாடலை விரும்பிக் கூறினு னென்க. (ங)

யுடைய மேகலை வீடு பெற்றவர் - துறவிகள். வீழும் - விரும்புகின்ற. ஆடுவான் அணிந்தசீர் - நாட்டியமாடும் பொருட்டு அலங்கரித்துக் கொண்ட சிறப்பினையுடைய. முலையையும் அல்குலையும் சீரையுமுடைய அரம்பை. இனியவளாய், அரம்பையன்ன வாணுதல், விமலையென்று உளாள். என்று - என்று பெயர்கூறப்பட்டு.

(மேற்.) அடி, 4 : தக்க. 26, உரை.

1997. ஐந்து அம்புடைய காமன் : மன்மதன். ஐயனைக்காமன் என்ன ; ஐயன் : சீவகன். என்ன - என்று தோழர் முதலியவர் கூற. அந்தணன் : புத்திசேனன். அரவவல்குலார், தம்குரவர் தம்மைக் கொடுப்பின், நம்பும் நீரரல்லராய், நன்குரங்கு நீரராயினும் நெஞ்சு நேர்ந்து தாழ்வர் எனப்புகன்று சொல்லினுன் ; குரவர் : தாய்தந்தையர். நம்புநீரர் - விரும்பும் தன்மையுடையார். நன்குரங்கு நீரராயினும் - தீமைக்கு நன்றுய குரங்கின் தன்மையையுடையராளுலும் ; (பி - ம்.) 'மென்குரங்கு.' நேர்ந்து தாழ்வர் - கணவர்க்கு உடன்பட்டு வணங்கு வர் ; (பி - ம்.) 'நொந்து தாழ்வர்.' புகன்று - விரும்பி. அடி, 1-3 : பிரபு. பிரபுதேவர். 78.

(மேற்.) மு. தொல். செய். 18, ந.; இ-வி. எழுத். 20 ; சிதம்பரப். ஒழிபு. 1, உரை.

1998. அற்று மன்று கன்னி யம்ம டந்தை மார ணிநலம்
முற்றி ஞரை நீடு வைப்பின் மூள்கும் வந்து பாவமும்
குற்ற மற்று மாகு மென்று கோதை சூழ்ந்து கூறிஞர்க்
குற்ற டுத்த யாவு யிர்த்தொ ழிதல் யார்க்கு மொக்குமே.

அற்றுமன்று - அத்தன்மையதுமன்று.

(இ - ள்.) கன்னியராகிய அம்மகளிர் நலமுதிர்ந்தவர்களைக் கொடாதே நெடுநாள் வைப்போமாயின், அதற்குப் பாவம் வந்து புகுதும்; மற்றும் குடிப்பழியுமுளதாமென்று கருதி, பேசிஞர்க்குத் தாமே கோதையைச் சூழ்ந்துகொண்டு சென்றுகொடுத்துத் தம்பாரங்கழித்து இளைப்புத் தீர்ந்துவிடுதல் [1] குடிப்பிறந்து பழிநாணுவார்க்கெல்லாம் ஒக்குமாதலான், இதுவும் அங்ஙனம் வந்ததாதலின், நீர் வியத்தல் வேண்டாவென்ருனென்க. (ச)

(வேறு)

1999. (க) மதுக்குடம் விரிந்தன மாலை யாரொடும்
புதுக்கடி பொருந்துதி புக்க வூரெலாம்
விதிக்கிடை காணலாம் வீதி மாநகர்
மதிக்கிடை முகத்தியோர் மடந்தை யீண்டையாள்.

---

1998. அற்றும் - அத்தன்மையதும். கன்னியராகிய அம்மடந்தைமார். நலம் முற்றிஞரை - அழகு முற்றுப் பெற்றவர்களை. நீடு - நெடுநாள். பாவம்வந்து மூள்கும்; மூள்கும் - புகுதும். மற்றும் குற்றமாகும். என்று கூறிஞர்க்குக் கோதையைச் சூழ்ந்து உற்று அடுத்து; கோதை: பெண். உற்று அடுத்து - கொண்டுசென்று கொடுத்து. அயா உயிர்த்து ஒழிதல் - இளைப்புத்தீர்ந்து விடுதல்; சீவக. 600, அடிக்.; 2947; "பார் மக ளயாவுயிர்த் தடங்கிய பின்னர்" (சிலப். 13 : 29); "அழுதன ளேங்கி யயாவுயிர்த் தெழுதலும்" (மணி. 21 : 29); (பி-ம்.) 'உற்றதே தயாவயிர்த்.' ஒக்கும் - பொருந்தும்.

(உரை) [1] குறள், 794.

1999. மதுக்குடம் விரிந்தன மாலையார் - தேனையுடைய குடம் விரிந்தாற்போலும் பூக்களைக்கொண்ட மாலையையுடைய மகளிர்; "மதுக் குடம் விரிந்ததன்ன......கமலப்போதோ" (கூர்ம. கண். மணம். 170); "மதுக்குடம் விரிந்தாற்போலு மென்மலர்" (நைடதம், அன். தூது 3). புக்க ஊரெலாம் மாலையாரொடும் புதுக்கடி பொருந்துதி; மாலையார்: மகளிர்; புதுக்கடி - புது மணம். விதிக்கிடை காணலாம் வீதி - சிற்ப நூலின் கட்டளைக்கு ஒப்புப் பார்க்கலாகும் வீதியையுடைய; கிடை - ஒப்பு. மதி கிடை முகத்தி - சந்திரனுக்கு ஒப்பான முகத்தையுடையவள். முகத்தியாகிய ஓர் மடந்தை; என்றது சுரமஞ்சரியை.

2000. (உ) ஆடவர் தனதிடத் தருகு போகினும்
நாடிமற் றவர்பெயர் நயந்து கேட்பினும்
வீடுவ லுயிரென வெருளு மற்றவள்
சேடியர் வழிபடச் செல்லுஞ் செல்வியே.

2001. (ங) காமனே செல்லினுங் கனன்று காண்கிலாள்
வேமெனக் குடம்பெனும் வேய்கொ டோளியை
ஏமுறுத் தவணல நுகரி னெந்தையை
யாமெலா மநங்கமா திலக னென்றுமே.

இவை மூன்றும் ஒருதொடர்.

(க) விதிக்கிடை காணலாம் - சிற்பநூற்கு ஒப்புக்காணலாம். நகர் - வீடு. மதிக்கிடை - மதிக்கொப்பு. வீதியையும் நகரையுமுடைய ஊரென்க.

(இ - ள்.) அவன் பின்னும் நீ புக்கவூரெல்லாம் மகளிரோடே புது மணஞ் செய்வை ; ஆயினும் ஒரு மடந்தை நீ மணஞ்செய்த இவ்வூரி டத்தே இருக்கின்றாள் ; மற்றவள்தான் ஆடவர் தன்மனைக்கு அருகே செல்லினும், தன்னருகிருந்தோர் அவர் பெயரை நாடிக் கேட்பினும் உயிரை விடுவேனென வெருளா நிற்கும். அச்செல்விதான் சேடியர் வழி படச் செல்லாநிற்கும் ; காமனே செல்லினும் காணாளாய் எனக்கு உடம்பு வேமென்னுநிற்கும். அவளை மயக்கமுறுத்தி அவள் நலத்தை நீ நுகரின் நின்னை யாங்கள் காமனுக்குத்திலகனென்று பெயர்கூறுவே மென்றா னென்க.

[1] மா : "தட்குமா காலே" (புறநா. 193) என்றாற்போனின்றது. (ரு-எ)

(வேறு)

2002. தாசியர் முலைக டாக்கத் தளையவிழ்ந் துடைந்த தண்டார்
வாசங்கொண் டிலங்கு முந்நூல் வலம்படக் கிடந்த மார்ப
பேசிய பெயரி னுளைப் பேதுறு தொழிவே னுகின்
ஆசுமன் பிலாத புன்பெண் கூந்தல்யா னணைவ லென்றான்.

---

2000. தனது இடத்து அருகு - தன்வீட்டிற்குப் பக்கத்தே. அவரது பெயரை நாடிக்கேட்பினும் ; அவர் : ஆடவர். உயிர் வீடுவல் என வெருளும் ; வீடுவல் - விடுவேன். மற்று : அசை.

2001. காமன் - மன்மதன். கனன்று - கோபித்து. காண்கிலாளாய் எனக்கு உடம்பு வேம் எனும் ; வேம் எனும் - வெந்துபோகும் என்று கூறுவாள். தோளியை : சுரமஞ்சரியை. ஏமுறுத்து - மயங்கச் செய்து ; சீவக. 754, அடிக். அவள்நலம் நுகரின் - அவளது இன்பத்தை நுகர்ந்தால். எந்தையை : சீவகனை ; முன்னிலைப்படர்க்கை. எந்தையை அநங்கமாதிலகன் என்றும் ; என்றும் - என்று கூறுவேம்.

(உரை) [1] அநங்கமாதிலகன் என்பதில் உள்ளது.

2002. தளை - கட்டு. உடைந்த - விரிந்த. தாரின்வாசம் கொண்டு இலங்குமார்ப ; தார் - பூமாலை. மார்ப : புத்திசேனன் ; விளி. பேசிய

அதற்குத் தானும் அசதியாடி வஞ்சினங்கூறுகின்றான்.

(இ - ள்.) சேடியர்முயக்கத்தாற் பிணிப்பு நெகிழ்ந்து விரிந்த வாசங்கொண்டிலங்குந்தாரும் நூலுங்கிடந்த மார்பனே, நீ கூறிய பெயரையுடையாளை மயக்க முறுத்தாதே விடுவேனாயின், சிறிதும் அன் பில்லாதாளை யான் கூடுவேனாகக் கடவேனென்றானென்க. (அ

2003. வண்டுதேன் சிலைகொ ணாணு மாந்தளிர் மலர்க ளம்பாக் கொண்டவன் கோட்டந் தன்னுட் கொடியினைக் கொணர்ந்து நீலம், உண்டது காற்றி யாண்பே ரூட்டுவ லுருவக் காமன் கண்டபொற் படிவஞ் சார்ந்து கரந்திரு நாளை யென்றான்.

வண்டுந்தேனுஞ் சிலைகொண்ட நாணாக, மலர்கள் அம்பாக கொண்டவனென்க. தளிர்போலும் மேனியையுடைய கொடி. இனி சிலைகள் பாடமாயிற் சேமவில்லைக்கூட்டுக. வெண்ணூல் நீலமுண்ட தனைக் காற்றினாற்போல, அவள் புதிதாகக்கொண்ட கோட்பாட்டை போக்கி அவட்கு இயல்பாகக் கோடற்குரிய ஆண்பெயரை ஊட்டுவே னென்றானென்க. காற்றியென்றதற்கேற்ப ஊட்டுவேனென்றான்; வ வையுடைய காமனைப் பொன்னாற்செய்த வடிவமென்க.

(இ - ள்.) காமன்கோட்டத்தே நீ கூறிய கொடியினைக் கொணர்ந்து நாளை ஊட்டுவேன்; நீ அப்படிவத்தைச் சேர்ந்து கரந்திருவென்ற னென்க. (கூ

பெயரினாளை - நீ கூறிய சுரமஞ்சரியை. பேதுறுத்து - மயங்கச்செய்யாமல் ஆசும் - சிறிதும். புன்பெண் கூந்தல் யான் அணைவல் - அற்பமான பெண்ணின் கூந்தலைப் பொருந்துவேன். கூந்தலை உரிமை கூறுவது ஒரு மரபு; சீவக. 1229, அடிக்.; "கூந்த லணைகொடுப்பேம் யாம்" (கலித். 101 : 42)

2003. வண்டும் தேனும் சிலைகொள் நாணாக் கொண்டவன் கோட டம் - காமன் கோட்டம். மாந்தளிர்போலும் மேனியையுடைய கொடி யினை; என்றது சுரமஞ்சரியை. நீலம் உண்டது காற்றி - வெண்ணூல் நீலநிறமுண்டதனைப் போக்கினாற்போலச் சுரமஞ்சரியின் புதிய கொள் கையைக் கெடுத்து; "நீல முண்டதும் வெள்ளை நிறமாமே" (தே திருஞா. சிராப். 5); "ஆகாதே, உண்டது நீலம் பிறிது" (பழ. 168) "நீல முண்ட நூலிழை வண்ணம், கொண்டது விடாமைக் குறிப்பொடு கொளுத்தல்" (பெருங். 2. 9 : 88-9). ஆண்பேர் ஊட்டுவல் - அவள் மணம் செய்து கொள்ளுதற்குரிய ஆணின் பெயரைக் கொள்ளச் செய் வேன். காமனுடைய படிவத்தைச் சார்ந்து. கரந்திரு - மறைந்திரு.

(வேறு)

2004. இழைக்கண் வெம்முலை யிட்டிடை யேந்தல்குல்
மழைக்கண் மாதரை மாலுறு நோய்செய்வான்
முழைக்கண் வாளரி யேறன மொய்ம்பினான்
உழைக்க ணாளர்க்கு ரைத்தெழுந் தானரோ.

(இ - ள்.) மொய்ம்பினான் முலை முதலியவற்றையுடைய மாதரை நோய் செய்யவேண்டித் தன்முகத்திடத்துக் கண்போல் ஏவல்கொள்ளுந் தன்மையார்க்கு அங்ஙனங்கூறி எழுந்திருந்தானென்க. (கo)

2005. சோருங் காரிகை யாள்சுர மஞ்சரி
ஆரஞ் சூடிய வம்முலைப் பூந்தடம்
தாரு மார்பமுந் தண்ணெனத் தோய்வதற்
கோரு முள்ளமு டன்றெழு கின்றதே.

சோரும் - ஒழுகும்.

(இ - ள்.) அங்ஙனம் எழுந்தவனதுள்ளம் காரிகையாளாகிய சுரமஞ்சரி முலைத்தடத்தைத் தாருமார்பமும் குளிரும்படி கூடுதற்கு வருந்தியெழுகின்றது, பலருங்கூறக் கேட்டிருத்தலின், அவள்வடிவை இத்தன்மைத்தென்று ஓராநிற்குமென்க.

[1] ஆண்டுக் கனகபதாகை கூறலானும், தானுணர்ந்தமை தோன்ற, "பணைத்தோட்சுரமஞ்சரி" (சீவக. 1069) என்றமையானும், ஈண்டுப் புத்திசேனன் கூறினமையானும், ஊழானும் வருந்தி அவள்வடிவை ஒரு மென்றார். 'தண்ணென' எனவே வருந்தினான். (கக)

2004. முலையையும், இடையையும், அல்குலையும், கண்ணையு முடைய மாதரை : சுரமஞ்சரியை. மால் உறுநோய் செய்வான் - மயக்கம் பொருந்தும் காமநோயைச் செய்யும் பொருட்டு. அரியேறன மொய்ம்பினான் - ஆண் சிங்கம் போன்ற வன்மையையுடைய சீவகன் ; எழுவாய். உழைக்கணாளர்க்கு - தன்னிடத்துக் கண்போலும் தன்மையையுடைய தோழர்க்கு என்றுமாம்.

2005. சோரும் காரிகையாள் - ஒழுகுகின்ற பேரழகுடையவள். காரிகையாளாகிய சுரமஞ்சரியது. ஆரம் - முத்துமாலை. உள்ளம் முலைத்தடத்தைத்தாரும் மார்பமும் தண்ணெனத் தோய்வதற்கு உடன்றெழுகின்றது ஓரும் ; உள்ளம் - சீவகனது மனம். தண்ணென - குளிரும்படி. உடன்று - வருந்தி. ஓரும் - சுரமஞ்சரியின் வடிவை இத்தன்மைத்தென்று உணரும்.

(உரை) [1] சீவக. 896, உரை.

(வேறு)

2006. (க) கடைந்தபொற் செப்பெனக் கதிர்த்து வீங்கின
வடஞ்சுமந் தெழுந்தன மாக்கண் வெம்முலை
மடந்தைதன் முகத்தவென் மனத்தி னுள்ளன
குடங்கையி னெடியன குவளை யுண்கணே.

2007. (உ) ஏத்தரு மல்லிகை மாலை யேந்திய
பூத்தலைக் கருங்குழற் புரியி னாற்புறம்
யாத்துவைத் தலைக்குமிவ் வருளி லாணலம்
காய்த்தியென் மனத்தினைக் கலக்கு கின்றதே.

2008. (௩) சில்லரிக் கிண்கிணி சிலம்புஞ் சீறடிச்
செல்விதன் றிருநலஞ் சேரும் வாயிருன்
அல் லலங் கிழவனோ ரந்த ணாளனாய்ச்
செல்லல்யான் றெளிதக வுடைத்தென் றெண்ணினான்.

இவைமூன் றும் ஒருதொடர்.

இவை ஓர்கின்றபடியும் கூடுமுபாயமும் கூறுகின்றன.

(க) மனத்தினுள்ளன வென்றது, "நங்கைகண், போலும் வேல வனே" (சீவக. 896) என்று சொன்னதை உட்கொண்டு.

(உ) ஏத்துதல் தரும் : [1] விகாரம்.

2006. கதிர்த்து - ஒளியுடையனவாகி. மாக்கண் - கரிய கண்ணையுடைய. முலை வீங்கினபோன்றன. மடந்தைதன் - சுரமஞ்சரியினுடைய. முகத்தவாகி என்மனத்திலுள்ளனவாகிய கண்கள் குடங்கையின் நெடியன. குடங்கையினெடிய கண் : சீவக. 342, 990, அடிக்.

2007. இவ்வருளிலாள், குழலாகிய புரியினால் என்னையாத்து அலைக்கும் ; புரி - கயிறு. யாத்து - கட்டி. அலைக்கும் - வருத்துவாள். நலம் என் மனத்தினைக் காய்த்திக் கலக்குகின்றது ; நலம் - இவளது அழகு. காய்த்தி - வெம்மைப்படுத்தி ; "காடுகை காய்த்திய நீடுநா ளிருக்கை" (பதிற். 82 : 9)

2008. சில்லரி - சிலவாகிய பரல்களையுடைய. சிலம்பும் - ஒலிக்கின்ற. சீறடியையுடைய செல்வி : சுரமஞ்சரி. செல்வியின் நலத்தைச் சேரும் வாயில்தான் ; வாயில் - வழி. அல்லலையுடைய கிழவனாகிய ஓரந்தணாளனாய் யான் செல்லல்; அல்லல் - பசித்துன்பம். செல்லல் - போதலே; தெளிதகவுடைத்து - அங்ஙனம் செல்லுதலே அவள் சந்தேகியாமல் தெளியும் தன்மையை யுடையதாகும்.

(உரை) [1] ஏத்தரும் என்று விகாரமுற்றது.

(ஈ) அல்லல் - பசிப்பிணி.

(இ - ள்.) வடஞ்சுமந்தெழுந்தனவாகிய முலை செப்பென வீங்கின போலேயிருந்தன ; மடந்தைமுகத்தனவாகி என்மனத்தனவாகிய கண் கள் குடங்கையி னெடியனபோலே யிருந்தன ; இவற்றையுடைய இவ்வரு ளிலாள் தன் குழலாகிய கயிற்றாலே என்னை யாத்து அலையாநின்றாள் ; இவள்நலம் இங்ஙனம் என்மனத்தினைக் கலக்காநின்றது. இத்தன்மை யையுடைய செல்வி நலத்தை இனிச்சேரும் வழிதான் ஒருகிழவனாகிய அந்தணனாய் யான்செல்லுதலே ; அங்ஙனம் செல்வேன் ; அச்செலவு அவளயிராமல் தெளிதகவுடைத்தென்று கருதினானென்க. (கஉ-௩)

2009. அணங்கர வுரித்ததோ லனைய மேனியன்
வணங்குநோன் சிலையென வளைந்த யாக்கையன்
பிணங்குநூன் மார்பினன் பெரிதொர் பொத்தகம்
உணர்ந்துமூப் பெழுதின தொப்பத் தோன்றினான்.

(இ - ள்.) அங்ஙனங்கருதினவன் பாம்பின்தோலையொத்த மேனிய னாய், வில்லென வளைந்த யாக்கையனாய், உத்தரீயத்தோடு பிணங்கிய நூன்மார்பினனாய், மூப்பிலக்கணமெழுதும்படி கூறியநூலினையுடைய தொரு பொத்தகத்தையுணர்ந்து, அம்மூப்பை எழுதிய தன்மையொப்பத் தோன்றினானென்க. (கரு)

2010. வெண்ணரை யுடம்பினன் விதிர்த்த புள்ளியன்
நுண்ணவி ரறுவைய னொசிந்த நோக்கினன்
கண்ணவிர் குடையினன் கைத்தண் டூன்றினன்
பெண்ணலங் காதலிற் பேயு மாயினான்.

(இ - ள்.) அவன் நரையுடம்பினனாய்த் தெறித்த புள்ளியனாய் நுண் ணிதாய்ப் பிறின புடைவையனாய்த் தலை வளைதலின் வளைந்த நோக்கின

2009. அணங்கு அரவு - வருத்துகின்ற பாம்பு. வணங்கு நோன் சிலை - வளைந்த வலிய வில். பிணங்கும் - உத்தரீயத்தோடு மாறுபட்ட ; பிணங்கு நூன் மார்பு : மணி. 6 : 151. பொத்தகம் உணர்ந்து - மூப் பிலக்கணம் கூறிய புத்தகத்தை அறிந்து. மூப்பை எழுதினதொப்ப.

2010. வெண்ணரை உடம்பினன் - வெளுப்பாக நரைத்த உடம்பை உடையவன். விதிர்த்த - தெறித்த. அடி, 1 : "வெண்ணரைக், குறைந்த கூந்தலர் கோசிகம் போலப், புள்ளி விதிர்த்த வுள்ளுறு மேனியர்" (பெருங். 1. 43 : 153-5). நுண் நவிர் அறுவையன் - நுண்ணிதாகிய பிறின ஆடையையுடையவன் ; நவிர் : அகநா. 1 : 16. நொசிந்த - வளைந்த. கண் நவிர் குடை - பிறலையுடைய குடை. பெண்ணின் நலத்திடத் துள்ள காதலால் பேயும் ஆயினான் ; பெண் : சூரமஞ்சரி. நலம் - இன்பம்.

ளுய்ப் பீறின குடையினளுய் வலியாக ஒரு தண்டையூன்றிப் பெண்ண லத்தைக் காதலித்து அதனைப் [1] பெற்றே போதலிற் பேயின்தன்மையனு மாயினுனென்க.

" பலிகொண்டு பெயரும் பாசம் போலத், திறைகொண்டு பெயர்தி " (பதிற். 71) என்றாற்போல. (கசு)

2011. யாப்புடை யாழ்மிட றென்னுந் தோட்டியாற்
றூப்புடை யவணலந் தொடக்கும் பாகனுய்
மூப்பெனு முகபடாம் புதைந்து முற்றிழை
காப்புடை வளநகர் காளை யெய்தினுன்.

(இ - ள்.) காளை பிணிப்பையுடைய யாழையொத்த மிடறென்னும் தோட்டியாலே, ஆடவரை நீக்கின தூய நெஞ்சிடத்தையுடையவள் நலத்தைப் பிணிக்கும் பாகனுய் மறைந்து சுரமஞ்சரி மனையை எய்தினுனென்க.

[1] இவனையறியாதபடி மறைத்தலின், முகபடாமென்ருர் [2]. (கஎ)

(வேறு)

2012. தண்டுவலி யாகநனி தாழ்ந்துதளர்ந் தேங்கிக்
கண்டுகடை காவலர்கள் கழறமுக நோக்கிப்
பண்டையிளங் காலுவப்பன் பாலடிசி லிந்நாட்
கண்டுநயந் தார்தருவ காதலிப்ப னென்றான்.

---

(உரை) [1] (பி - ம்.) 'பெறப்போதலிற் பேய்த்தன்மையுமாயினு னென்க.'

2009 - 10. பெரிய. தடுத்தாட். 29-32.

2011. யாப்பு - கட்டு. யாழை ஒத்த மிடறு. தூப்புடையவள் - தூய நெஞ்சிடத்தையுடைய சுரமஞ்சரியது. நலம் தொடக்கும் - இன்பத்தைப் பிணிக்கின்ற. மூப்பு - முதுமை. முகபடாத்தால் புதைந்து; புதைந்து - தன் உருவம் தெரியாதவாறு மறைந்து. காப்பு - காவல். முற்றிழை வள நகர்: சுரமஞ்சரியது மனையை. காளை: சீவகன்.

(உரை) [1] (பி - ம்.) 'இவனை.' [2] இக்கவியின் பின்பு, பின்வரும் செய்யுளொன்று சில பிரதிகளிற் காணப்படுகின்றது; உரையில்லை:

" நற்றொடி மகளிரு நகர மைந்தரும், எற்றிவன் மூப்பென விரங்கி நோக்கவே, பொற்றொடி வளநகர் வாயில் புக்கனன், பற்றிய தண்டொடு பைய மெல்லவே."

2012. தண்டு வலியாக - தன்கையிற் கொண்ட ஊன்றுகோலே பற்றுக்கோடாக. தாழ்ந்து - வணங்கி. ஏங்கி - இளைத்து நின்று. கடைகாவலர்கள் - வாயில்காப்பவர். கழற - வந்தகாரியம் என்னவென்று கேட்க. இளங்கால் - இளமைப்பருவத்தில். காவலர் கண்டு, கழற, தாழ்ந்து, ஏங்கி, நோக்கி, இளங்கால் பாலடிசில் உவப்பன்; இந்நாள் நயந்தார் தருவனவற்றைக் காதலிப்பன் என்றான்; நயந்தார் - என்னால் விரும்பப்பட்ட மகளிர்.

(இ - ள்.) அங்ஙனமெய்தினவனைக் கடைகாப்பார் கண்டு கழற, அவர் முகத்தை நோக்கி, தண்டே பற்றுக்கோடாகத் தாழ்ந்து நிலை தளர்ந்து இளைத்துநின்று, பண்டையிளம்பருவத்திற் பாலடிசிலொன் றுமேயுவப்பேன்; இப்பருவத்தில் யான் கண்டு விரும்பப்பட்ட மகளிர் தருவனவெல்லாம் காதலிப்பேனென்றானென்க.

இஃது இடக்கர். எனவே செவிகேளாமையின், தம்பசியையே[1] கூறி னானென்று அவர் உணர்ந்தார். இதற்கு, இப்பொழுது என்னைக்கண்டு நயந்தார் தரும் உணவுகளென்னும் ஒருபொருள் தோன்றிற்று. (கஅ)

2013. கையிற்றொழு தார்கழிய மூப்பிற்செவி கேளார்
மையலவர் போலமனம் பிறந்தவகை சொன்னார்
பையநடக் கென்றுபசிக் கிரங்கியவர் விடுத்தார்
தொய்யின்முலை யவர்கள்கடைத் தோன்றனனி புக்கான்.

(இ - ள்.) இதுகேட்ட அவர்கள், மூப்பாலே மிகச்செவிகேளாராய்ப் பித்தரைப்போல மனத்தில் தோற்றியவகையே சொன்னாராதலிற் பசியு டையரென்று பசிக்கிரங்கி, இனிப் பைய நடக்கவென்று கையால் தொழு தாராய் விடுத்தார்; விடுத்தபின்பு தோன்றல் மகளிர் காக்கின்ற வாயி லிலே சென்றானென்க. (கக)

2014. கோதையொடு தாழ்ந்துகுழல் பொங்கிஞிமி றார்ப்ப
ஓதமணி மாலையொடு பூண்பிறழ வோடி
ஏதமிது போமினென வென்னுமுரை யீயான்
ஊதவுகு தன்மையினொ டொல்கியுற நின்றான்.

(உரை) [1] (பி - ம்.) 'கூறினாரென இருந்தார்.'

2013. கழிய - மிக. மூப்பின் - முதுமைப் பருவத்தால். மையலவர் - மயக்கங்கொண்டவர்; பித்தர். மனம் பிறந்த வகை - தம்மனத்திற் றோன்றியவாறு. அவர், பசிக்கு இரங்கி, பைய நடக்க என்று கையினால் தொழுதாராகி விடுத்தார்; அவர்: வாயில்காவலர். தோன்றல் முலையவர் களுடைய கடையில் புக்கான்; கடை - வாயில்.

(மேற்.) மு: நன். உரி. 12, மயிலை.

2014. கோதையும் குழலும் தாழ்ந்து; கோதை - பூமாலை. தாழ்ந்து = தாழ - கீழே சரிய. ஞிமிறு பொங்கி ஆர்ப்ப; பொங்கி - மிக்கு. ஓதமணிமாலை - கடலில் தோன்றிய முத்தாலாகிய மாலை. இது ஏதம் போமின் என - இவ்விடத்து நீர்வருதல் துன்பம் தரத்தக்கது; மீண்டு செல்லும் என்று அம்மகளிர் கூற. என்னும் - சிறிதும். ஊத உகு தன் மையினொடு - ஊதப்பறக்கும் தன்மையோடே; "ஊதுறப் பறப்பதா யுலர்ந்த யாக்கை" (கம்ப. மீட்சிப். 249); "ஊதினும் பறக்கு மென்ன வுயர்நரம் பெழுந்து தோன்ற" (கூர்ம. அந்தகா. 94). உற - கிட்ட.

**(இ - ள்.)** அம்மகளிர் கோதையுங்குழலுந்தாழ, ஞிமிறு பொங்கி யார்ப்பக்கடலிற்பிறந்த முத்தமாலையும் பூணும் பிறழ ஓடிவந்து இவ் வரத்து நுமக்கு ஏதமாயிருக்கும் ; மீண்டு போமினென்று கூற, அதற்குச் சிறிதும் மறுமொழி கொடாமல் ஊதப்பறக்குந்தன்மையோடே வந்து கிட்ட நின்றானென்க.

தாழ்ந்து - தாழ. (உ0)

2015. கச்சுவிசித் தியாத்தகதிர் முலையர்மணி யயில்வாள்
நச்சுநுனை யம்புசிலை நடுங்கவுட னேந்தி
அச்சமுறுத் தமுதுபுளித் தாங்குத்தம தீஞ்சொல்
வெச்சென்றிடச் சொல்லிவிரி கோதையவர் சூழ்ந்தார்.

**(இ - ள்.)** அங்ஙனம் உறநிற்றலின், அவ்விரிகோதையவர் கச்சு விசித்த முலையராய், வாளையும் சிலையுடனே நஞ்சுதோய்த்த நுனையினை யுடைய அம்பையுமேந்தி, இவன் நடுங்கும்படி அச்சமுறுத்து அமிர்தம் தன்தன்மை திரிந்தாற்போலத் தஞ்சொல் வெவ்விதாகக் கூறிச் சூழ்ந்தா ரென்க. (உக)

2016. பாவமிது நோவவுரை யன்மின்முது பார்ப்பார்
சாவர்தொடி னேகடிது கண்டவகை வண்ணம்
ஓவியர்தம் பாவையினொ டொப்பரிய நங்கை
ஏவல்வகை கண்டறிது மென்றுசிலர் சொன்னார்.

**(இ - ள்.)** அவர்களிலே சிலர் முதுபார்ப்பாரை நோவ உரைக்கின்ற விது பாவமாதலின், நோவவுரையன்மின் ; தீண்டுவேமாயிற் கடிதுசாவர் ; ஆதலின் தீண்டன்மின் ; ஓவியர்தம் பாவையால் வண்ணமொப்பரிய நங்கைக்கு நாம் கண்டவகையைக் கூறி அவளது ஏவல்வகையைக் கண்டு பின்பு இவரை நீக்குந்தன்மையை அறிவேமென்று கூறினரென்க. (உஉ)

---

2015. விசித்து யாத்த - இறுக்கிக் கட்டிய. முலையர் - வாயில் காக்கும் மகளிர். அயில் - வேல். நச்சுநுனை அம்பு - விடம் தோய்த்த நுனியையுடைய அம்பு. நடுங்க - சீவகன் நடுங்கும்படி. அச்சமுறுத்து - பயங்கொளுத்தி. அமுது புளித்தாற்போலும் தீஞ்சொல் ; "கன்னல் புளித்திட மொழியுமரம்பை" (கூர்ம. மனுவந். 27). வெச்சென்றிட - வெம்மையுடையதாக. கோதையவர் : மகளிர்.

2016. முதுபார்ப்பாரை நோவ உரையன்மின். தொடின் கடிது சாவர் - தொட்டால் விரைவாக இறப்பர். வண்ணம் ஒப்பரிய நங்கைக்குக் கண்ட வகையைக் கூறி ஏவல் வகையைக் கண்டறிதும் ; நங்கை : சுர மஞ்சரி. அறிதும் - இம்முதியவனை நீக்கும் தன்மையை அறிவோம்.

2017. கையவளை மையகுழ லையரிய வாட்கண்
நையுமிடை வெய்யமுலை நங்கையொரு பார்ப்பான்
உய்வதில னூழின்முது மூப்பினொடும் வந்தான்
செய்வதுரை நொய்தினெனச் சேறுமெழு கென்றாள்.

(இ - ள்.) கையிடத்தனவாகிய வளையினையும், கருமையையுடைய குழலினையும், வியக்கத்தக்க செவ்வரியையுடைய கண்ணினையும், இடையினையும், முலையினையுமுடைய நங்காய்! ஒருபார்ப்பான் ஊழான் முதிய மூப்போடே வந்தான்; அவன்றான் உய்யுந்தன்மையிலன்; அவனிடத்துச் செய்யும் காரியத்தை அவனிறப்பதற்கு முன்னே கடிதிற்கூறென்ன, அவளும் அவன் இத்தன்மையனுயின், யாம் செல்லக்கடவேம்; நீர் முன்னே செல்கவென்றாளென்க.

ஊழிமுது மூப்பாயின், காலமாக்குக. (உரு)

2018. மாலைபல தாழ்ந்துமதுப் பிலிற்றிமணங் கமழும்
கோலவகிற் றேய்வைகொழுஞ் சாந்தமுலை மெழுகிப்
பாலைமணி யாழ்மழலை பசும்பொனிலத் திழிவாள்
சோலைவரை மேலிழியுந் தோகைமயி லொத்தாள்.

சாந்தமணிந்த முலையையுடைய மழலையாளென்க. காவிடத்திற் கன்னிமாடமாதலின், சோலைவரையென்றார்.

(இ - ள்.) பாலையாழ் போலும் அழகிய மழலைச்சொல்லையுடையாள், அகிற்றேய்வையான் மெழுகப்பட்டு மாலை தாழ்தலின் மதுத் துளித்து மணங்கமழும் பொன்னிலத்தினின்றும் இழிகின்றவள் வரையிடத்தினின்றிழியும் மயிலையொத்தாளென்க. (உச)

---

2017. மைய - கருமையையுடைய. ஐ அரி - வியக்கத்தக்க செவ்வரி; ஐ - வியப்பு. வளையையும் குழலையும் கண்ணையும் இடையையும் முலையையுமுடைய நங்கை : என்றது சுரமஞ்சரியை; விளி. உய்வதிலன் - பிழைக்குந்தன்மையில்லாதவன். ஊழின் - ஊழால். நொய்தின் செய்வது உரையென; என - என்று மகளிர் கூற. சேறும் - செல்வோம். எழுக என்றாள் - நீங்கள் முன்னே செல்லுக என்று சுரமஞ்சரி கூறினாள்.

2018. தாழ்ந்து - தாழ்தலால். பிலிற்றி - துளித்து. அகில்தேய்வை மெழுகி - அகிலின் குழம்பால் மெழுகி; சீவக. 624, ந. பாலையாழ் போலும் மணிமழலை; சுரமஞ்சரி; மணி - அழகு; பாலைப்பண் இனிமைக்குக் கூறப்பட்டது; பதிற். 65 : 14-5, உரை. மெழுகித் தாழ்ந்து பிலிற்றிக் கமழும் பொன்னிலத்தினின்றும் இழிவாள். மழலையாளாகிய இழிகின்றவள் வரையினின்றிழியும் மயிலை ஒத்தாள்; பெரும்பாண். 330 - 31.

2019. சீறடிய கிண்கிணிசி லம்பொடுசி லம்ப
வேறுபடு மேகலைகண் மெல்லெனமி ழற்றச்
சேறுபடு கோதைமிசை வண்டுதிசை பாட
நாறுமலர்க் கொம்பர்நடை கற்பதென வந்தாள்.

(இ - ள்.) அடியவாகிய கிண்கிணி சிலம்போடே ஒலிப்ப, மேகலைகள் மிழற்ற தேன்விளைகின்ற கோதையிடத்து வண்டுகள் அத்தேன் புட்ப தூளியிலே கலந்து சேறுகையினால் அத்தேனை நுகரப்பெறாமல் திசை தோறுமெழுந்து பாட, கொம்பு நடைகற்கின்ற தன்மையென்ன வந்தாளென்க.

துகிலுள்ளும் புறம்புங்கிடத்தலின், வேறுபடுமேகலையென்றார். (உ௬)

2020. வந்தவர வென்னையென வாட்கண்மட வாய்கேள்
சிந்தைநலி கின்றதிரு நீர்க்குமரி யாட
அந்திலதி னையபய னென்னைமொழி கென்றாள்
முந்திநலி கின்றமுது மூப்பொழியு மென்றான்.

(இ - ள்.) நீ வந்த வரத்து என்னகாரியத்தைக் கருதியென்று அவள்வினவ, மடவாய்! கேள்; சிந்தையிலே நின்று வருத்துகின்ற அழகிய நீர்மையையுடைய நின்னைப் புணரவந்தேனென்றானாக, அச் சொல்லை ஆடவேண்டுமென்று நினைத்தலின், சித்தத்தே நலிகின்ற தீர்த்த நீராகிய குமரியாற்றை ஆடவந்தேனென்றானாக அவள்கருதி, அவ்வி யாற்றிலாடுதலாலுண்டாய பயன் எத்தன்மைத்து? அதனைக்கூறென்றாள்; அவனும் தான்வருங்காலத்து வாராது முன்னேவந்து நலிகின்ற மூப்புப்போமென்றானென்க.

2019. கிண்கிணியும் சிலம்பும் : சீவக. 2008; பெருங். 2. 2 : 207-8. சிலம்ப - ஒலிக்க. மிழற்ற - ஒலிக்க. சேறுபடு - தேன் உண்டாகின்ற. திசைதோறும் பறந்து பாட. நாறும் - வாசனைவீசுகின்ற. கற்பதென - கற்கின்றது என்று கூறும்படி.

2020. என்னை என - என்ன காரியத்தைக் கருதியென்று சுரமஞ்சரி கேட்ப. திருநீர்க் குமரியாட வந்தேனென்றான்; குமரி - குமரியாறு, பெண்; குமரியென்பதை இங்ஙனம் சிலேடைப் பொருளில் அமைத்தல் இயல்பு; "மழவுறக் கங்கை யாடி வந்தனன் குமரி யாட" (திருவால. 23 : 19); "மூப்பகல......குமரியெய்தி யினிதாட வேண்டிவரு கென்றனன்" (கந்த. வள்ளி. 97); "குமரியாடக் குறுகிய விசய னென்றான்" (கூர்ம. கண். மணம். 133); "திரைக்குமுடன் மூப்பிது சிதைந்திளமை சேர்நும், வரைக் குமரியாடவென" (தணிகை. களவு. 129). அந்தில் : அசை. அதினைய பயன் - அவ்வாற்றில் ஆடுவதாலுண்டாய நன்மை. முந்தி - முன்னே; (பி - ம்.) 'முந்தை.'

(மேற்.) அடி, 2 : பிரயோக. திங்ங. 6; மு : மாறன். பாயிரம், 25.

அஃது இவளைக்கூடலின் இம் மூப்பை நீக்குதலைக் கருதிக் கூறினன்; மேற்காமன்கோட்டத்திற் கூடுவதன்முன்னே மூப்புநீக்கிற்று, இனிக் கூட்டத்திற்கு ஐயமில்லையென்று கருதி. இக்கூற்று இவட்கு முற்பட இம்மூப்புப்போமென்றுற்போலிருந்தது. (உசு)

2021. நறவிரிய நாறுகுழ லாள்பெரிது நக்குப்
பிறருமுள ரோபெறுநர் பேணிமொழி கென்னத்
துறையறிந்து சேர்ந்துதொழு தாடுநரி லென்றுற்
கறிதிர்பிற நீவிரென வையமிலை யென்றான்.

நறவு இரிய - பூமணங்களெல்லாம் தோற்க.

(இ - ள்.) அதுகேட்டு அவள் மிகநக்குக் குமரியாடி நின்னையொழிய இளமைபெறுவார் பிறருமுளரோ? அறிவீராயின், விசாரித்துக் கூறுவீரென்றுளாக; நீ கொண்ட விரதத்தைக் கெடுத்துக் கூடுந்துறை இம் மூப்பாலென்றறிந்து நின்னையணுகிக்கூடுவார் என்னையொழிய இல்லைக் காணென்றவனுக்கு இம் மூப்புப்போந்துறை அறிந்து ஆடுநர் இல்லைக் காணென்றுரைக அவள் கருதி, நீர் உலகத்தாரறியுந் துறையன்றியே வேறொருதுறையறிவீரேயென்று இகழ்ந்து கூறினளாக, அதற்கு ஐயமில்லைக்காணென்றானென்க. (உஎ)

2022. செத்தமர மொய்த்தமழை யாற்பெயரு மென்பார்
பித்தரிவ ருற்றபிணி தீர்த்துமென வெண்ணி
அத்தமென மிக்கசுட ரங்கதிர்சு ருக்கும்
மொய்த்தமணி மாடமிசை யத்தகவ டைந்தாள்.

(இ - ள்.) செத்ததொருமரம் பெருமழையால் உயிரைப்பெறு மென்கின்ற இவர் பித்தர்; இனி இவருற்ற பசியைத் தீர்ப்போமென்று கருதி அப்பசியைத் தீர்க்கும்படி மாடமிசையே சேர்ந்தாளென்க.

எனவே இவனைக் கொண்டுபோந்தாளாம். அத்தகிரியென்று ஞாயிறு கதிரைக் குவிக்குமாடமென்க. (உஅ)

2021. நறவு இரிய நாறு குழலாள் - பூக்களின் மணம் தோற்றுக் கெடும்படி வாசனை வீசுகின்ற கூந்தலையுடைய சுரமஞ்சரி. பெறுநர் பிறரும் உளரோ, பேணி மொழிக என்ன; பெறுநர் - குமரியாடி இளமை பெறுபவர்கள். பேணி - விசாரித்து. என்ன - என்று சுரமஞ்சரி கேட்ப. ஆடுநர் இல் என்றற்கு - ஆடுபவர்கள் இல்லை என்று கூறிய சீவகனுக்கு. நீவிர் பிற அறிதிர் என - நீர் வேறு துறை அறிவீரோ என்று சுரமஞ்சரி பரிகசித்துக் கூற.

2022. செத்தமரம் - பட்டுப்போன மரம். மொய்த்த மழையால் பெயரும் என்பார் - பெரிய மழையினால் திரும்ப உயிரைப்பெறும் என்று கூறுபவர். என்பாராகிய இவர் பித்தர். பிணி தீர்த்தும் - பசித் துன்பத்தைப் போக்குவோம். அத்தம் என - அத்தமனகிரி யென்று எண்ணி. சுடர் கதிரைச் சுருக்கும் மாடம்; சுடர் - சூரியன். கதிர் - கிரணம். அத்தக - அழகு பொருந்த.

2023. வடிவமிது மூப்பளிது வார்பவள வல்லிக்
கடிகைதுவர் வாய்கமலங் கண்ணொடடி வண்ணம்
கொடிதுபசி கூர்ந்துளது கோல்வளையி னீரே
அடிசில்கடி தாக்கியிவ ணேகொணர்மி னென்றாள்.

(இ - ள்.) வளையினீர்! வாய் பவளக்கொடி துணித்ததாய்க் கண்ணும் அடியும் கமலமலராயிருக்கின்ற இம் மூப்புவடிவு நமக்கு அளிக்கத் தக்கது; இதனை அளியாதிருப்பிற் கொடிது; அதுவேயுமன்றிப் பசியும் மிக்குளதாயிருந்தது; ஆதலின், அடிசிலைக் கடிதாகச் சமைத்து இவ் விடத்தே கொணர்மி னென்றாளென்க. (உகூ)

2024. நானமுரைத் தாங்குநறு நீரவனை யாட்டி
மேனிகிளர் வெண்டுகிலும் விழுப்பொனிய னூலும்
பானலங்கொ டங்கிளவி பவித்திரமு நல்கத்
தானமர்ந்து தாங்கியமை தவிசின்மிசை யிருந்தான்.

(இ - ள்.) தீங்கிளவி அப்பொழுதே அவனை வாசவெண்ணெயை ஊட்டுவித்து நறுநீரால் ஆட்டுவித்து, புனைந்த புடைவையையும் பொற் பூணூலினையும் பவித்திரத்தையும் நல்க, அவன் அமர்ந்து மெய்ப்படுத்தி இட்ட தவிசின் மேலே இருந்தானென்க. (௩௦)

2025. திங்கணலஞ் சூழ்ந்ததிரு மீன்களெனச் செம்பொற்
பொங்குகதிர் மின்னுபுகழ்க் கலங்கள்பல பரப்பி
இங்குசுவை யின்னமுத மேந்தமிகு சான்றோன்
எங்குமிலை யின்னசுவை யென்றுடன யின்றான்.

2023. துவர் பூசிய வாய் பவளவல்லிக்கடிகையாய், கண்ணும் அடியும் கமலவண்ணமாயுள்ள மூப்பு வடிவமாகிய இது அளிது; கடிகை - துண்டம்; அளிது = அளித்து - அன்பு செய்யத்தக்கது. கூர்ந்துளது - மிக்கதாயுள்ளது. வளையினீர் : ஏவல் மகளிர்; விளி. கடிது - விரைவாக. இவணே - இவ்விடத்தே.

2024. நானம் உரைத்து - வாசனை எண்ணெயைப் பூசுவித்து; சீவக. 864, 2692. அவனை : சீவகனை. மேனிகிளர் - நிறம் விளங்குகின்ற. பொன் இயல் நூலும் - பொன்னாற்செய்த பூணூலையும். பாலின் நலத்தைக் கொண்ட கிளவி; சுரமஞ்சரி; எழுவாய். தான் என்றது சீவகனை. தாங்கி - ஆடை முதலியவற்றை யணிந்து.

2025. திங்களை நலத்தோடு சூழ்ந்த மீன்கள் கதிரைச் சூழ்ந்த தென்னும்படி; கலம் - தட்டு. செம்பொற்றட்டுக்குச் சூரியனும், பக்கத் தட்டுக்களுக்கு மீன்களும் உவமைகள். இங்கு சுவை - தங்கிய ஆறு

(இ - ள்.) மதியை நலத்தோடே சூழ்ந்த மீன்கள் பொங்குகதிரைச் சூழ்ந்த தென்னும்படி செம்பொற்கலத்தையும் பக்கத்தட்டங்களையும் பரப்பித் தங்கின அறுசுவையடிசிலை ஏந்த, சான்றோன், எவ்விடத்து மில்லை இத்தன்மைத்தாய சுவையென்று வியந்து, அவ்வியப்புடனே அயின்றானென்க. (ரு.க)

2026. தமிழ்தழிய சாயலவர் தங்குமலர்த் தூநீர்
உமிழ்கரக மேந்தவுர வோனமர்ந்து பூசி
அமிழ்தனைய பஞ்சமுக வாசமமைத் தாய்ந்த
கமழ்திரையுங் காட்டவவை கொண்டுகவு ளடுத்தான்.

(இ - ள்.) இனிமை தழுவிய சாயலையுடையவர் மலர்தங்கும் தூநீரை உமிழும் கரகத்தை யேந்த உரவோன் பூசி ஐந்துவகைப்பட்ட முக வாசத்தைக்கூட்டி ஆய்ந்த வெற்றிலையையுங் காட்ட, அவற்றை வாங்கிக் கொண்டு கவுளடுத்தானென்க. (ரு.உ)

2027. வல்லதெனை யென்னமறை வல்லன்மட வாயான்
என்னையெவ னென்னப்பொரு ளெய்திமுடி காறும்
சொல்லுமினு நீவிர்கற்ற காலமெனத் தேன்சோர்
சில்லென்கிளிக் கிளவியது சிந்தையில னென்றான்.

(இ - ள்.) அங்ஙனமிருந்தபின்பு, நீர்வல்லதென்னென்று அவள் வினவ, மடவாய்! யான் மறைந்த வேடங்கோடலை வல்லேனென்றானாக, அவள் அதனை வேதத்தை வல்லேனென்றானாகக் கருதி, அவ்வேதம் அநந்தசாகை யாதலின் நீர்கற்றவெல்லை எவ்வளவென்று வினவ, அவன்

சுவையையுடைய. ஏந்த - மகளிர் ஏந்திநிற்க. சான்றோன் : சீவகன்; (பி - ம்.) 'சான்றோர்.' இன்னசுவை எங்கும் இல்லையென்று உடன் அயின்றான். இன்ன சுவை - இத்தன்மைத்தாகிய இனிய சுவை.

2026. தமிழ்தழிய சாயலவர் - இனிமை தழுவிய மென்மையை யுடைய மகளிர்; "தமிழினுமினிய மென்மையவாகி" (கூர்ம. வானவர். 13); தழிய - தழுவிய; "மரிய" (சீவக. 1792) போல; "வெங்கதிர் தழிவந், தூர்பூண்டன" (கம்ப. கரன் வதை. 99). மலர்தங்கும் தூநீரை உமிழும் கரகத்தை ஏந்த; கரகம் - கமண்டலம். உரவோன் : சீவகன். பஞ்சமுகவாசம் : சீவக. 1896, அடிக். அமைத்து - கூட்டி. திரை - வெற்றிலை; சீவக. 197, 1479, அடிக். கவுள் அடுத்தான் - கன்னத்தி லடக்கிக் கொண்டான்.

2027. வல்லது எனை என்ன - நீர்வல்லது என்ன என்று சுரமஞ்சரி கேட்ப. மடவாய் யான் மறைவல்லன் என்று சீவகன் கூற; மறை - வேதம், மறைந்த வேடம். எல்லை எவன் என்ன - நீர் கற்ற எல்லை எவ் வளவு என்று சுரமஞ்சரி கேட்ப. பொருள் எய்தி முடிகாறும் - தத்து

**அதற்கு யான் நினைத்த காரியத்தைப் பெற்றுமுடியுமளவு மென்றுரைக, அவள் அதனை வேதம் தான் கருதிய தத்துவத்தை முற்றவுணர்த்தி முடியுமளவு மென்றுரைகக் கருதி, இக்கலையெல்லாம் நீர்கற்ற காலத்தை இன்னுங் கூறுமென்று வினவ, அவன் அதற்குக் கிளிச்சொல்லென்கின்ற சில கிளவியையுடையாய்; அக்காலங்கூற நினைவிலேனென்றுரைனென்க.**

என்றது : மேலும் வினவும் உத்தரமும் பெருகுதல் கருதி, அஃது எனக்குக் கருத்தன்றென்றான்; அவள் அதனை நினைந்திருந்திலேனென்றுரைகக் கருதினாள். (௩௩)

2028. இன்னவர்க ளில்லைநிலத் தென்றுவியந் தேத்தி
அன்னமன மென்னடையி னாளமர்ந்து நோக்கப்
பின்னையிவள் போகுதிறம் பேசுமென வெண்ணித்
தன்னஞ்சிறி தேதுயின்று தாழவவ ணக்காள்.

**(இ - ள்.)** சுரமஞ்சரி, இந்நிலத்தில் இத்தன்மையையுடையவர்கள் இல்லையென்று ஏத்தி அவள் நோக்கினாளாக, அவன் இனி இவள் நம்மைப் போமாறு கூறுவளென்று கருதி மிகவும் சிறிதே துயின்று தலைதாழ, அவள் அதுகண்டு நக்காளென்க. (௩௪)

2029. கோலமணி வாய்க்குவளை வாட்கண்மட வாளைச்
சாலமுது மூப்புடைய சாமிமுக நோக்கிக்
காலுமிக நோஞ்சிறிது கண்ணுந்துயில் குற்றேன்
ஏலங்கமழ் கோதையிதற் கென்செய்குரை யென்றான்.

---

வத்தை உணர்த்தி முடியுமளவும்; காரியத்தைப் பெற்று முடியுமளவும். நீவிர் கற்ற காலத்தை இன்னும்சொல்லும் என; என - என்று சுரமஞ்சரி கேட்ப. கிளியைப் போலும் சிலவாகிய கிளவியையுடையாய் : சுரமஞ்சரி; விளி. அதுசிந்தையிலன் - அதன் எல்லையை மறந்தேன்; எனக்குக் கருத்தன்றென்பது சீவகன் கருதிய பொருள்.

2028. நடையினாள், நிலத்து இன்னவர்கள் இல்லையென்று ஏத்தி அமர்ந்து நோக்க; அன்னத்தை அன்ன நடையினாள்; சுரமஞ்சரி. அமர்ந்து நோக்க - விரும்பிப் பார்த்தனளாக. பின்னை - இனிமேல். இவள் : சுரமஞ்சரி. போகுதிறம் பேசும் என - நம்மை வெளியே போமாறு கூறுவாளென்று. தன்னம் சிறிது - மிகச் சிறிது. தாழ - தலையைச் சாய்க்க. அவள் : சுரமஞ்சரி.

2029. மணிவாய் - முத்துப்போலும் பற்களையுடைய வாய்; பவளம் போன்ற வாயுமாம். வாயையும் கண்ணையுமுடைய மடவாளை; சுரமஞ்சரியை. சால - மிக. சாமி - சீவகசாமி. சாமி மடவாள் முகத்தை நோக்கி. காலுமிக நோம் - வாடைக்காற்று மிகுதலால் நெஞ்சு வருந்தும்; கால்கள் மிக வருந்தும். சிறிது - சற்றுநேரத்தில், கண்ணும் துயில்குற்றேன் - இறந்து படும் தன்மையை எய்தி

கோலமணி - அழகிய முத்து; என்றது, முறுவலை. இத்திங்கள் கார்த்திகையாம்.

(இ - ள்.) சாமி, மடவாளைப்பார்த்து, வாடைக்காற்று மிகுதலாலே நெஞ்சுநோம்; இதனாலே சிறிதுபொழுதில் இறந்துபடுந் தன்மையை யெய்தினேன்; கோதாய், இதற்கு என்செய்வேன்! உரையாயென்று னென்க.

[1] 'கண்ணிமைப்பளவும்' என்றது உயிருடனிருந்ததலையுணர்த்தினாற் போல, கண்டுயிலுதலும் இறந்துபாட்டை யுணர்த்திற்று. அதனை, காலு நோம் கண்ணுந் தூங்குமென்றாகக் கருதினாள். (ருஞ)

2030. மட்டுவிரி கோதைமது வார்குழலி னுடன்
பட்டுநிணர் கட்டில்பரி வின்றியுறை கென்றாள்
இட்டவணை மேலினிது மெல்லெனவ சைந்தான்
கட்டழல்செய் காமக்கட லைக்கடைய லுற்றான்.

(இ - ள்.) அங்ஙனங் கருதினவள், பட்டுக்கச்சு நிணர்ந்த தன் கட்டிலிலிட்ட அணைமேலே வருத்தமின்றித் தங்குகவென்றாள்; அது கேட்டு அழலின்றன்மையைச் செய்கின்ற காமக்கடல் அலையின்றி நின்றதனை அலைக்கலுற்றவன் அதன்மேலே தன் வருத்தந் தோன்ற அசைந்தானென்க. (ருசு)

2031. காலையொடு தாழ்ந்துகதிர் பட்டது கலங்கி
மாலையொடு வந்துமதி தோன்றமகிழ் தோன்றி
வேலனைய கண்ணியர்தம் வீழ்துணைவர் திண்டோள்
கோலமுலை யாலெழுதக் கூடியதை யன்றே.

னேன்; கண்கள் தூங்குதலையும் எய்தினேன். ஏலம் - மயிர்ச்சாந்து. கோதை : சுரமஞ்சரி; விளி. என்செய்கு - என் செய்வேன்.

(உரை) [1](பி - ம்.) 'கண்ணிமைப்பவாவும்.'

2030. மட்டு - பூந்தாது. கோதையில் மது வார்கின்ற குழலினாள் : சுரமஞ்சரி; கோதை - பூமாலை. பட்டு நிணர் கட்டில் - பட்டுக்கச்சாற் பிணித்த கட்டில்; "பட்டுநிணர் கட்டிற் பல்படை குளிப்ப" (பெருங். 3. 5 : 56). நிணர்தல் - பிணித்தல்; "கட்டி ணிணக்கும்" (புறநா. 82 : 3); நிணவென்னும் முதனிலையே பெரும்பாலும் வழங்கும்; அண, அண ரென வந்தாற் போல்வது இது. கட்டிலில் இட்ட அணைமேல் பரிவின்றி உறைக என்றாள்; அணை - படுக்கை. பரிவு - வருத்தம். கட்டு அழல் செய் - மிக்க நெருப்பின் தன்மையைச் செய்கின்ற; கட்டு - மிகுதி; சீவக. 253, அடிக். கடையலுற்றவன் அணைமேல் அசைந்தான்.

2031. கதிர் காலையொடு தாழ்ந்து கலங்கிப்பட்டது; கதிர் - சூரியன். காலை - பகற்பொழுது. பட்டது - மேற்றிசையிற் சாய்ந்தது. மாலை -

(இ - ள்.) கதிர் பகற்பொழுதோடே மேற்றிசையிலே வீழ்ந்து கலங்கிப்பட்டது; பட்ட பின்பு மாலைக்காலத்தோடே மதிவந்து தோன்றலின், மகளிர் மகிழ்ச்சி தோன்றித் தம் கணவர்தோளை முலையாலே யெழுதும்படி இராக்காலம் கூடிற்றென்க. (௩௭)

2032. ஏந்துமலர்ச் சேக்கையகில் வளர்த்தவிடு புகையும்
ஆய்ந்தமலர்க் கோதையமிர் துயிர்க்குநறும் புகையும்
கூந்தலகிற் புகையுந்துகிற் கொழுமெனறும் புகையும்
வாய்ந்தவரை மழையினுயர் மாடத்தெழுந் தனவே.

(இ - ள்.) சேக்கையிடத்து அகில் வளர்த்த புகையும் [1]கோதைக்குப் புகைத்த அகிற்புகையும் கூந்தற்குப் புகைத்த அகிற்புகையும் துகிற்குப் புகைத்த அகிற்புகையும் பயன்றருமலையின் மழையென்ன, மாடத்தே எழுந்தனவென்க. (௩௮)

2033. ஆசிலடு பாலமிர்தஞ் சிறியவயின் றம்பூங்
காசில்கடி மாலைகல நொய்யமதி கவற்கும்
தூசுநறுஞ் சாந்தினிய தோடிவைக டாங்கி
மாசின்மட வார்கண்மணி வீணைநரம் புளர்ந்தார்.

---

மாலைக்காலம். தோன்ற - தோன்றுதலால்; (பி - ம்.) 'மாலையொடு கங்குலிடை வந்துமதி தோன்ற.' கண்ணியர் மகிழ்தோன்றித் துணைவர் தோளை எழுதக்கூடியது; கண்ணியர் : மகளிர். மகிழ்தோன்றி - உவகை தோன்றி. தம்வீழ்துணைவர் - தம்மை விரும்புகின்ற கணவரது. கூடியது - இராப்பொழுது சேர்ந்தது. ஐ, அன்று, ஏ : அசைகள்.

2032. மலரை ஏந்திய சேக்கையிடத்து. அகிலால் வளர்த்த புகை. கோதை உயிர்க்கும் புகையும்; கோதை - பூமாலை. அமிர்து - இனிமை. துகிலினது புகையும். வாய்ந்த - அழகு பொருந்திய. வரையிடத்து மழையைப்போல் மாடத்து எழுந்தன; மழை - வெண்மேகம்.

(உரை) [1] சீவக. 111, அடிக்.

2033. அடுபாலமிர்தம் - காய்ச்சிய பாற்சோறு. சிறிய அயின்று - சிறிது உண்டு; "உண்டி சுருங்குதல் பெண்டிர்க் கழகு" (கொன்றை வேந்தன்). காசில் - குற்றமில்லாத. கடி - வாசனை. நொய்ய கலம் - அணிதற்கு மெல்லியவான ஆபரணங்கள். கவற்கும் - வருத்துகின்ற. தூசு - ஆடை. மணி வீணை நரம்பு உளர்ந்தார் - அழகிய வீணையின் நரம்பைத்தடவி வாசித்தார்கள். மடவார், அயின்று, தாங்கி, உளர்ந்தார் என முடிக்க.

ஆசில் - குற்றமற்ற. கூதிராதலின் பாலடிசில் கூறினர். சிறிய அயின்றென்றது, மடவார் [1]அற்பாகாரிகளென்பதுபற்றி. நொய்ய கலம். மதிகவற்கும் - அறிவை வருத்தும்.

(இ - ள்.) மடவார், அடிசிலை அயின்று மாலைமுதலியவற்றைத் தாங்கி யாழை வாசித்தாரென்க. (௩௯)

2034. பூஞ்சதங்கை மாலைபுகழ்க் குஞ்சிப்பொரு வில்லார்
வீங்குதிர டோளுந்தட மார்பும்விரை மெழுகித்
தீங்கரும்பு மென்றனைய வின்பவளச் செவ்வாய்த்
தேங்கொளமிர் தார்ந்துசெழுந் தார்குழையச் சேர்ந்தார்.

(இ - ள்.) ஒருபுறமாலையினையும் குஞ்சியினையுமுடைய ஆடவர் தோளிலும் மார்பிலும் விரையை மெழுகி இனிய பவளவாயிலுண்டாகிய கரும்பை மென்றனைய அமிர்தத்தையுண்டு மாலை வாடும்படி முயங்கினரென்க. (௪௦)

2035. பொன்னறையு ளின்னமளிப் பூவணையின் மேலான்
முன்னியதன் மன்றலது முந்துறமு டிப்பான்
மன்னுமொரு கீதமது ரம்படமு ரன்றுற்
கின்னமிர்த மாகவிளை யாருமது கேட்டார்.

(இ - ள்.) அணையிடத்தான், அக்காலத்திலே தானினைந்திருந்த காந்தருவமாகிய அதனை முற்பட முடிக்கவேண்டி, நிலைபெற்றதொரு கீதத்தை இனிமையுண்டாகப் பாடினாற்கு இளையாரும் அதனை இனிதாகக் கேட்டாரென்க.

[1] நான்காமுருபிற்கு இவர்கேட்டது கொடைப்பொருட்டாம். (௪௧)

---

(உரை) [1] பதுமினி, "அற்பவுண்டியாள்" என்பர் காமநூலார்.

2034. (பி - ம்.) 'புகழ்க்குருசில்.' மாலையையும் குஞ்சியையுமுடைய பொருவில்லார் - ஆடவர். பொருவில்லார், மகளிரது தோளிலும் மார்பிலும் விரையை மெழுகி; விரை - வாசனைச்சாந்து. மகளிரது பவளம்போலும் வாயிடத்துக் கரும்பு மென்றாற்போலும் அமிர்தத்தை ஆர்ந்து; ஆர்ந்து - உண்டு. தார் குழையச் சேர்ந்தார் - மாலை வாடும்படி முயங்கினர்கள்; சீவக. 2062; "குழைகவென் றூரே" (புறநா. 73 : 14)

2035. அமளியிடத்து அணையின் மேலானாகிய சீவகன். முன்னிய - தான் கருதிய. மன்றலது - காந்தருவமணமாகிய அதனை. முந்துற முடிப்பான் - முற்பட முடிக்கவேண்டி. கீதத்தை மதுரம்பட முரன்றாற்கு: சீவகனுக்கு. கீதம் - பாட்டு. முரலுதல் - பாடுதல். இளையாரும் இன்னமிர்தமாக அது கேட்டார்; அது - சீவகன் பாடிய பாட்டை.

(உரை) [1] முரன்றாற்கு என்பதிலுள்ள நான்கனுருபு.

(வேறு)

2036. மன்ம தன்ம ணிக்கு ரன்ம ருட்டுமென்று மால்கொள்வார்
இன்ன தன்றி யக்க ரின்னி யக்க வந்த தென்றுதம்
பின்னு முன்னு நோக்குவார் பேது சால வெய்துவார்
கன்னி தன்ம னத்தி ழைத்த காளை நாமம் வாழ்த்துவார்.

(இ - ள்.) காமனது அழகிய குரலேயென்றும், மருட்டுமென்றும் மால் கொள்வார்; இத்தன்மைத்தன்று இயக்கரால் நடத்தப்படுதலின் வந்ததென்று நோக்குவார்; எய்துவார்; இப்பாட்டுடையான் சீவகனே யென்று அவனை வாழ்த்துவாராயினரென்க. (சஉ)

2037. கொம்பி னொத்தொ துங்கி யுங்கு ழுங்கன் மாலை தாங்கியும்
அம்பி னொத்த கண்ணி னார டிக்க லம்ம ரற்றவும்
நம்பி தந்த கீத மேந யந்து காண வோடினார்
வெம்பு வேட்கை வேனி லானின் வேற லானு மாயினான்.

(இ - ள்.) [1]அங்ஙனமானவர், இடைவருந்துமென்று கலங்கள் அரற்ற நிற்கவும் ஒதுங்கியும் தாங்கியும் கீதத்தை விரும்பிச் செவிப் புலனாற் கேட்டற்கு ஓடினார்; அப்பொழுது அவனும் கட்புலனாகாமை யாலும் பாட்டினாலும் காமனேயாயினானென்க.

கேள்வியுமுணரப்படுதலிற் காட்சியேயாம். நாடினாரும் பாடம். (சங)

2036. மணி - அழகு. மன்மதனுடைய குரலென்றும், மருட்டும் என்றும் மால்கொள்வார்; கொண்டவர் மகளிர். இயக்கரின் இயக்க வந்ததென்று - இயக்கரால் நடத்தப்படுதலின் வந்ததென்று. சாலப் பேது எய்துவார்; சால - மிக. பேது - மயக்கம். கன்னிதன் மனத் திழைத்த காளை - சுரமஞ்சரியினுடைய மனத்தில் வஞ்சினத்தை உண்டாக்கின சீவகனுடைய; கன்னி தனது மனத்திலே அமைத்துக் கொண்ட எனலுமாம். நாமம் - சீவகன் பெயரை.

2037. கொம்பின் - பூங்கொம்பினைப் போல. குழுங்கல்மாலை - வாசனையையுடைய பூமாலை. கண்ணினார் : மகளிர். அடிக்கலம் - பாதத்திலணிந்த ஆபரணங்கள். நம்பி : சீவகன். காண - கேட்க; "பேச்சைக்கண்டு" (திருவால. 16 : 28). கண்ணினார், அரற்றவும், ஒதுங்கியும், தாங்கியும் ஓடினார். வெம்பும் - விரும்புகின்ற; சீவக. 2, அடிக். வேனிலானின் வேறலானும் ஆயினான் - கண்ணுக்குத் தெரி யாமையாலும், பாட்டினாலும் மன்மதனது தன்மையில் வேறல்லாத வனாயினான். மன்மதன் இசையறிவிற் சிறந்தவன்; சீவக. 607, 664.

(உரை) [1] (பி - ம்.) 'அங்ஙனம் அவர்.'

2038. தாம மாலை வார்கு ழற்ற டங்க ணூர்க்கி டங்கழி
காம னன்ன காளை தன்க ருத்தொ டொத்த தாகலான்
மாம லர்த்தெ ரியலான்ம ணிமி டற்றி டைக்கிடந்த
சாம கீத மற்று மொன்று சாமி நன்கு பாடினான்.

**(இ - ள்.)** மகளிர்க்கு நம்வயத்தனாகானென்று தம்மிடத்தினின்று நீக்கப்படுவானாகிய காமனையொத்த காளை, தன்னினைவோடு அவர் கருத்துமொத்த தாதலிற் கொன்றைமாலையையுடைய இறைவனது [1]நீலமணிபோலும் மிடற்றிடத்தே கிடந்ததொரு சாமகீதத்தைச் சாமி பின்னும் நன்றாகப் பாடினானென்க.

தெரியலானைச் சீவகனெனின், பின்னர்ச் சாமியென்னும்பெயர் வேண்டாவாம். (சச)

2039. கள்ள மூப்பி னந்த ணன்க னிந்த கீத வீதியே
வள்ளி வென்ற நுண்ணி டைம ழைம லர்த்த டங்கணார்
புள்ளு வம்ம திம கன்பு ணர்த்த வோசை மேற்புகன்
றுள்ளம் வைத்த மாம யிற்கு ழாத்தி னோடி யெய்தினார்.

---

2038. தாமமாலை - ஒளியையுடைய பூமாலை. தடங்கணார்க்கு : மகளிர்க்கு. இடம் கழி காமன் அன்ன காளை - தம்மிடத்தினின்றும் அகற்றப்படுவானாகிய மன்மதனை ஒத்த சீவகன்; "இடங்கழி காமமொ டடங்கா னையவன்", "இடங்கழி காமமொ டடங்கா னாகி" (மணி. 10 : 22, 18 : 119). தன் கருத்தோடு மகளிர் கருத்தும் ஒத்ததாகலால். மாமலர்த்தெரியலான் மணிமிடற்றிடைக் கிடந்த சாமகீதம் - கொன்றை மலர் மாலையையுடைய சிவபெருமானது நீலமணிபோன்ற கழுத்திடத்தே அமைந்த சாமவேதமாகிய கீதத்தை; "பாடினார் சாம வேதம்", "சாமவேத கந்தருவம் விரும்புமே" (தே. திருநா. அதிகை, மடக். 2, சந்தி. 1); "வேத வின்னிசை விளங்கிழை பாட" (பெருங். 1. 37 : 130); "வீணையி னிசைபட வேதம் பாடுவான்" (கம்ப. சடாயுவுயிர். 21); 'யாழ்கெழு மணிமிடறு - சாமவேதம் பாடின மணிபோலும் நிறத்தை யுடைய மிடறு' (அகநா. கடவுள். 15, உரை). மற்றும் - பின்னும். சாமி - சீவகசாமி.

(உரை) [1] "நீல மணிமிடற் றொருவன் போல" (புறநா. 91 : 6)

2039. கள்ளமூப்பின் அந்தணன்-பொய்த்தன்மைகொண்ட முதுமை வேடத்தையுடைய அந்தணனாகிய சீவகனது. கனிந்த கீத வீதியே - முற்றுப்பெற்ற பாட்டின் வழியே. வள்ளி - கொடியை. கணார் : மகளிர். புள்ளுவமகன் - பறவைகளின் ஓசை யியல்பை அறிந்த வேட்டுவனாகிய மகன். மதியால் புணர்த்த; மதி - அறிவு. புணர்த்த - வஞ்சித்த. புகன்று - விரும்பி. மயிற்குழாத்தின் - மயிலின்கூட்டம் அவ்வோசை வழியே ஓடுவதுபோல. மயிற்குழாத்தினைப்போல், தடங்கணார், கீத வீதியே ஓடி எய்தினார் என முடிக்க. (மேற்.) மு : தக்க. 610, உரை.

(இ - ள்.) வேடனாகிய மகன் மதியாற்புணர்க்கப்பட்ட தம்மோசை யாக அழைக்கின்ற ஓசைமேலே விரும்பி மனம்வைத்த மயிற்றிரள் ஓடு மாறு போலே தடங்கண்ணாரெல்லாம் அந்தணனது முற்றுப்பெற்ற கீதத் தின் வழியே ஓடிச்சேர்ந்தாரென்க.

வள்ளி - வல்லி. புள்ளுவமகன் - புள்ளிேனசையைத் தன்னிடத்தே யுடைய மகன். (சரு)

## (வேறு)

2040. இனிச்சிறி தெழுந்து வீங்கி யிட்டிடை கோறு நாங்கள், ஏனக்கொறு கொறுப்ப போலு மிளமுலைப் பரவை யல்குற், கனிப்பொறை மலிந்த காமர் கற்பக மணிக்கொம் பொப்பாள், பனிப்பிறைப் பூணி னான்றன் பாண்வலைச் சென்று பட்டாள்.

[1] கொறுகொறுத்தல், குறிப்புச்சொல்லாகிய இரட்டைக்கிளவி.

(இ - ள்.) நாங்கள் மேல் இந்நிலையிற் சிறிதெழுந்து வீங்கி இடை யைக் கொல்வேமென்று கோபிப்பனபோலும் முலையினையும் அல்குலையு முடைய தொரு பழமாகிய பாரமிக்க கற்பகக்கொம்பொப்பாள், பூணினனது பாட்டாகிய வலையிலே சென்று அகப்பட்டாளென்க. (சசு)

2041. அடிக்கல மரற்ற வல்குற் கலைகலந் தொலிப்ப வந்து, முடிப்பதென் பெரிது மூத்தேன் முற்றிழை யரிவை யென்ன, வடிக்கணா ணக்கு நாணித் தோழியை மறைந்து மின்னுக், கொடிக்குழாத் திடையோர் கோலக் குளிர்மணிக் கொம்பி னின்றாள்.

---

2040. இட்டிடை - சிறிய இடை. இடையைக்கோறும்; கோறும் - கொல்வேம். அடி, 1-2 : "இறும நுங்கொழி யப்பணைத் தின்னும் வீங் குதும் யாமெனக், கொறுகொ றுத்தெழுந் தோங்கிய கொம்மை வெம் முலைக் கோதைதன்" (கூர்ம. கண். மணம். 193). பொறை மலிந்த - பாரம் மிக்க. காமர் - அழகு மருவிய. முலையையும், அல்குலையுமுடைய கனியாகிய கற்பகக் கொம்பொப்பாள் ; சுரமஞ்சரி. பிறைப்பூண் - பிறை போன்ற வடிவமுடைய முத்தமாலை. பூணினான் : சீவகன். பாண்வலை - பாட்டாகிய வலையிலே. பட்டாள் - அகப்பட்டாள்.

(உரை) [1] "கொறுகொறுத்தா ரென்றொருவர் கூறுங்கா லுள்ளம், துடி துடித்துத் துள்ளி விடும்" (நன். 395, மயிலை. மேற்.)

2041. அடிக்கலம் - பாதத்திலணிந்த ஆபரணம். அல்குலின்மீது அணிந்த கலை ; கலை - மேகலை. அரிவை, வந்து முடிப்பது என் ; யான் பெரிதும் மூத்தேன் என்ன ; அரிவை : சுரமஞ்சரி ; விளி. முடிப்பது என் - முடிக்கும் காரியம் யாது. என்ன - என்று சீவகன் கூற. வடிக் கணாள் : சுரமஞ்சரி ; வடி - மாவடுவின்வகிர். கொம்பின் - கொம்பி னைப் போல.

முடிப்பது, இடக்கர்.

(இ - ள்.) அரிவை, அரற்ற ஒலிப்ப வந்து முடிப்பது என்ன ? யான் பெரிது மூத்தேனேயென்ன, அவள் நாணி நக்குத் தோழியை முன்னிடத்தே கொண்டு மின்னுக்குழாத்திடையிற் கொம்புபோலே நின்றாளென்க. (சஎ)

2042. இளையவற் காணின் மன்னோ வென்செய்வீர் நீவி ரென்ன, விளைமதுக் கண்ணி மைந்தர் விளிகெனத் தோழி கூற, முளை யெயிற் றிவளை யாரு மொழிந்தன ரில்லை யென்றோ, உளைவது பிறிது முண்டோ வொண்டொடி மாதர்க் கென்றான்.

(இ - ள்.) நீர் என்னையொழிய இளையவனைக் கண்டீராயின், மிகவும் என் செய்வீரென்றானாக, நீ கூறிய அவர்பெயரும் இவ்விடத்துக் கெடுக வென்று தோழி கூற, இங்ஙனங்கூறியது இவளைப் பேசினாரில்லை யென்றோ ? இவட்கு வருந்துங்காரியமாக அவர் செய்தது பிறிது முண்டோ ? கூறென்றானென்க. (சஅ)

2043. வாய்ந்தவிம் மாதர் சுண்ணஞ் சீவகன் பழித்த பின்றைக், காய்ந்தன ளென்று கூறக் காளைமற் றிவட்குத் தீயான், மாய்ந்தனன் போலு மென்ன மாதரா ரொருங்கு வாழ்த்தி, ஆய்ந்தன மைய னுய்ந்தா னறிந்தன மதனை யென்றார்.

வாய்ந்த : [1] விகாரம். [2] மாய்தல் - மறைதல், சாதல்.

(இ - ள்.) இம்மாதர்வாய்த்த சுண்ணத்தைச் சீவகன் பழித்த பின்பு ஆடவரைக் காய்ந்தனளென்று கூற, அதுகேட்டு இவட்குத் தீயானாகிய காளை மாய்ந்தான்போலுமே யென்றானாக, மகளிரெல்லாம் [3] நூறும்புகுவா

2042. இளையவற்காணின் - என்னையன்றி ஓரிளையவனை நீங்கள் பார்த்தீரானால். மது விளையும் கண்ணியையுடைய மைந்தர். மைந்தர் விளிகென - நீர் கூறிய இளையவரது பெயரும் கெடுவதாக என்று. முளை யெயிற்றிவளை : சுரமஞ்சரியை ; முளைஎயிறு - நாணல் முளைபோலும் பற்கள் ; "கிளையரி னாணற் கிழங்குமணற் கீன்ற, முளையோ ரன்ன முள்ளெயிற்றுத் துவர்வாய்" (அகநா. 212 : 4-5). ஒண்டொடியாகிய மாதர்க்கு உளைவது பிறிதும் உண்டோ ; மாதர்க்கு - சுரமஞ்சரிக்கு. உளைவது - வருந்தும்படி அவ்விளையவர் செய்தது. பிறிதும் - வேறு எதுவும்.

2043. இம்மாதரது வாய்ந்த சுண்ணத்தைச் சீவகன் பழித்த பின்றை ; மாதர் : சுரமஞ்சரி. வாய்ந்த - எல்லாநன்மையுமுடைய. காய்ந்தனள் - எல்லா ஆடவரையும் கோபித்தனள். கூற - தோழி கூற. இவட்குத் தீயானாகிய காளை மாய்ந்தனன் போலும் என்ன ; காளை : சீவகன். என்ன - என்று சீவகன் கூற. மாதரார் : தோழியர். வாழ்த்தி - சீவகனை வாழ்த்தி. ஐயன் உய்ந்தான் ; அதனை ஆய்ந்தனம்- அறிந்தனம் என்றார் ; ஐயன் : சீவகன்.

(உரை) [1] மெலித்தல் விகாரம். [2] இது சிலேடை. [3] நூறும்புகுதல் ; "வேதநூற் பிராய நூறு மனிதர்தாம் புகுவ ரேனும்" (திருமாலை, 3)

னென்று வாழ்த்தி ஐயன் உய்ந்தான்; அதனை ஆராய்ந்தேம்; பின்பு விளங்குவதுஞ் செய்தே மென்றாரென்க.

அது மேற்கூறுகின்றார். (௫௯)

2044. காலுற்ற காம வல்லிக் கொடியெனக் கலங்கி நங்கை, மாலுற்று மயங்க யாங்கண் மடக்கிளி தூது விட்டேம், சேலுற்ற நெடுங்கட் செவ்வாய்த் தத்தைதன் செல்வங் கண்டே, பாலுற்ற பவளச் செவ்வாய்த் தத்தையாற் பரிவு தீர்ந்தேம்.

(இ - ள்.) நங்கை அவற்குற்றது கேட்டுக் கலங்கிப் பித்தேறி மயங்கு தலின், யாங்கள் தத்தையைக் கண்டறிந்துவாவென்று கிளியைத் தூது விட்டேம்; அங்ஙனம்போய்ச் சேலையொத்த கண்ணிணையுடைய தத்தை தன் பொலிவைக் கண்டு வந்து கூறிய அத்தத்தைசொல்லாலே வருத்தந் தீர்ந்தேமென்றாரென்க.

[1] சொல்லென்பதை வருவிக்க. பாலுற்ற - பாலுண்ட. (௬௦)

2045. அன்பொட்டி யெமக்கோர் கீதம் பாடுமி னடித்தி யாரும், முன்பட்ட தொழிந்து நுங்கண் முகவியர் முனிவு தீர்ந்தார், பொன்றொட்டேம் யாமு நும்மைப் போகொட்டோம் பாடல் கேளா, தென்பட்டு விடினு மென்றா ரிலங்குபூங் கொம்பொ டொப்பார்.

---

2044. கால் உற்ற - காற்றால் அலைக்கப்படுதலுற்ற. நங்கை: சுரமஞ்சரி. நங்கை, கலங்கி, மாலுற்று மயங்க; மயங்க-மயங்குதலால்; (பி - ம்.) 'மாலுற்ற மயங்கி.' கிளியைத் தத்தையிடம் தூதுவிட்டேம். சேலுற்ற - சேல்மீனை ஒத்த; உற்ற: உவமவுருபு; சீவக. 10, ந. தத்தைதன் செல்வம் கண்டு - காந்தருவதத்தையின் பொலிவைப் பார்த்து. பால் உற்ற - பாலை உண்ட. செவ்வாயையுடைய தத்தை: கிளி. தத்தைதன் செல்வத்தைக் கண்டு கூறிய தத்தைசொல்லால் பரிவு தீர்ந்தேம்.

(உரை) [1] தத்தை என்பதன் பின் வருவிக்க.

2045. அன்பொட்டி - எம்மிடத்து அன்பு செய்தலைப் பொருந்தி. அடித்தியார் - தலைவியார்; என்றது சுரமஞ்மரியை; அடித்தி - அடியவள்; பெருங். 1. 47 : 29, 226; இப்பெயர் அடிச்சியெனவும் பழங்கும்; சீவக. 481, அடிக். முன்பட்டது - ஆடவரைக்காணேன் ... ன்று விரதங்கொண்டது; சீவக. 902. நுங்கண் முகவியர் - நும்மிடத்து ...கம்புகுதலையுடையராய். முனிவு - வெறுப்பு. என்பட்டுவிடினும் பாடல் ...களாது நும்மைப் போகொட்டோம், பொன்தொட்டேம் என்றார்; பொன் ...தாட்டேம் - திருமகள் போலுமிவளை ஆணையிட்டேம். ஒப்பார்: மகளிர்; ...முவாய்.

மூத்த அந்தணனாதலின், அடித்தியாரென்றார்.

(இ - ள்.) கொம்பொடொப்பார், அடித்தியாரும் ஆடவரைக்காணே னென்று நெஞ்சிற்கொண்டதனைத் தவிர்ந்து நும்மிடத்து முகவியராய் முனிவு தீர்ந்தாராதலின், நீரும் எம்மிடத்து அன்புசெய்தலைப் பொருந்தி எமக்கு ஒரு கீதத்தைப் பாடுமின்; நீர் என்பட்டுவிடினும் பாடல்கேளாமல் நும்மைப் போகவொட்டோம்; அதற்கு யாமும் இவளை யாணையிட்டே மென்றாரென்க. (௫௧)

2046. பாடுதும் பாவை பொற்பே பற்றிமற் றெமக்கு நல்கின், ஆடமைத் தோளி னீரஃ தொட்டுமேற் கேண்மி னென்ன, நாடியார் பேயைக் காண்பார் நங்கைகா ளிதுவு மாமே, ஆடுவ தொன்று மன்றிவ் வாண்மக னுரைப்ப தென்றார்.

(இ - ள்.) தோளினீர்! பாவை தனது தோற்றப்பொலிவு தொடங்கி ஒழிந்தவற்றையும் எமக்கு நல்குவாளாயின், பாடக்கடவேம்; அதனை ஒட்டுவாளாயின், கேண்மினென்றானாக, அவர்கள் அதனைப் பொன்னா யிருப்பதொரு பேயைப் பிடித்து எமக்குத்தரிற் பாடுவேமென்றானாகக் கருதி, பொன்னல்லாத பேய்தன்னை நாடிக்காண்பார் யார்? அதுவுமன்றி இவ்வாண்மகன் பொற்பேயென்று கூறுகின்றது இவ்வுலகில் நிகழ்வ தொன்றன்றாதலால் இதுவும் நாமொட்டுதற்காமேயென்றாரென்க.

உலகிலில்லாததற்கு உடம்படலாம், அஃது ஒருவனாற் காட்டமுடியா தாதலின். "ஒருபொரு ளிருசொற் பிரிவில வரையார்" (தொல். எச்ச. 64) என்னுஞ்சூத்திரத்து, 'வரையார்' என்றதனால், 'பொற்பே' என்னும் ஏகார வீற்றுப் பெயர் வேறுமொரு பொருள்தந்து நிற்றலிற் பேயென்று யகரவீறுமாய் நின்றது. இதற்கு யகரவொற்று விகாரத்தாற் றொக்கதாம்; "அருங்கழி காத மகலுமென் றாழென் றலந்துகண்ணீர், வருங்கழி காதல் வனசங்கள்" (திருச்சிற். 190) என்ற விடத்து, 'அலர்ந்து' என்பது, [1] அலந்து என்று விகாரப்பட்டு நின்றாற்போல. (௫௨)

---

2046. பாடுதும் - பாடுவேம். பாவை: சூாமஞ்சரி. பொற்பேபற்றி- தோற்றப் பொலிவு முதலியன தொடங்கி, பொன்னாலாகிய பேயைப் பிடித்து. ஒட்டுமேல் - ஒப்புக்கொண்டால். தோளினீர், பாவை நல்கின், பாடுதும்; ஒட்டுமேல் கேண்மின் என்ன; என்ன - என்று சீவகன் கூற. இவ்வாண்மகன் உரைப்பது ஆடுவது ஒன்றுமன்று ஆதலால், இதுவும் ஆமே என்றார்; ஆடுவதொன்றுமன்று - இவ்வுலகில் நிகழ்வதொன்றன்று. இதுவும் ஆமே - இதற்கு உடம்படலாம்.

(மேற்.) அடி, 1: தொல். எச்ச. 64, ந.

(உரை) [1] 'அலந்து கண்ணீர் வருமென்பது இருபொருட்டாதலின், மலர்ந்து கள்ளாகிய நீர் வருமென்றுரைக்க. இப்பொருட்கு அலர்ந் தென்பது இடைக்குறைந்து நின்றதாகக்கொள்க' (திருச்சிற். 190, பேர்.)

2047. பட்டுலாய்க் கிடந்த செம்பொன் பவளமோ டிமைக்கு மல்குல், ஒட்டினு ளதனை யோரா துலம்பொரு தோளி னுனும், பட்டவா ணுதலி னுய்க்குப் பாடுவல் காமன் றந்த, தொட்டிமை யுடைய வீணைச் செவிச்சுவை யமிர்த மென்றான்.

(இ - ள்.) பட்டுச் சூழ்ந்து கிடந்த அல்குலையுடையாள், அவன் கருதிய பொருளையோராதே இல்லாததற்கு ஒட்டலாமென்று கருதி ஒட்டினாள்; ஒட்டினபின் தோளினானும் காமன் பாடின ஒற்றுமையை யுடைய சாரீர வீணையாலாகிய, செவிக்கு இனிமைதரும் அமிர்தத்தை வாணுதலையுடைய நினக்குப் பாடுவேனென்றானென்க.

இனி, பொன்னாலே பேயைப் பண்ணிக் கொடுப்போமென்று ஒட்டினா ளென்பாருமுளர். காமனைக் கூறினான், இவள் வரம்வேண்டப் போதலைக் கருதி. (௩௫)

2048. வயிரவில் லுமிழும் பைம்பூண் வனமுலை மகளிர் தம்முள், உயிர்பெற வெழுதப் பட்ட வோவியப் பாவை யொப் பாள், செயிரில்வாண் முகத்தை நோக்கித் தேன்பொதிந் தமுத மூறப், பயிரிலா நரம்பிற் கீதம் பாடிய தொடங்கி னானே.

(இ - ள்.) நின்ற மகளிரிற் சுரமஞ்சரிமுகத்தைப் பார்த்துக் கீதத் தைப் பாடுதற்குத் தொடங்கினானென்க.

நரம்பிற்பயிரில்லாத கீதம் - நரம்பொடு கூடி மறைகின்ற அருவருப் பில்லாத கீதம்; துனித்துப்பாடுதல் அரிதென்றார். அமுதம் - இனிமை. நரம்போடே பாடினானென்பாருமுளர். (௩௪)

2047. உலாய் - சூழ்ந்து. பவளமோடு இமைக்கும் அல்குல் - பவளத்தாலாகிய மேகலையால் ஒளிவிடுகின்ற அல்குலையுடைய சுரமஞ் சரி; "பவழுப்படவர வல்குலார்" (சீவக. 1656). அதனை ஓராது ஒட்டி னாள்; அதனை - சீவகன் கருதிய பொருளை. ஒட்டினாள் - உடம்பட்டாள். தோளினான்: சீவகன். காமன் தந்த தொட்டிமையுடைய வீணையால், செவிக்குச் சுவைதரும் அமிர்தத்தை நுதலினாய்க்குப் பாடுவல் என்றான்; தந்த - பாடின. தொட்டிமை - ஒற்றுமை; சீவக. 1255, அடிக்.

2048. வயிரவில் உமிழும் - வயிரத்தின் ஒளியைச் சிந்துகின்ற. பாவை ஒப்பாள்: சுரமஞ்சரி. நரம்பிற் பயிரிலாத கீதம்; பயிர் - அரு வருப்பு; சீவக. 1989, ந. பாடிய - பாடுதற்கு. பாவையை ஒப்பாளது முகத்தை நோக்கிப் பாடத் தொடங்கினான்.

(வேறு)

2049. தொடித்தோள் வளைநெகிழத் தொய்யின் முலைமேல்
வடிக்கேழ் மலர்நெடுங்கண் வார்புயலுங் காலும்
வார்புயலுங் காலும் வளைநெகிழு நந்திறத்த
தார்வமுறு நெஞ்ச மழுங்குவிக்கு மாலை.

(இ - ள்.) வட்டமான வளை நெகிழாநிற்க, வடுவகிர்போலும் நிறத்தையுடைய கண்ணும் முலைமேலே நீரைக் காலும்; அங்ஙனங் காலுதற்கும் நெகிழ்தற்குங்காரணமாகிய நம்மிடத்துளதாகிய ஆர்வ முற்ற நெஞ்சினை மாலை வந்து வருந்துவிக்குமென்க. (௫௫)

2050. ஐதேந் தகலல்கு லாவித் தழலுயிராக்
கைசோர்ந் தணலூன்றிக் கண்ணீர் கவுளலைப்பக்
கண்ணீர் கவுளலைப்பக் கையற் றியாமினையப்
புண்ணீரும் வேலிற் புகுந்ததான் மாலை.

(இ - ள்.) மெல்லிய காஞ்சியையேந்திய அல்குலையுடையாய், கொட்டாவி கொண்டு உயிர்த்துச் சோர்ந்து கையை அணலிலேயூன்றுதலாலே, கண்ணீர் கவுளையலைப்ப வீழும்; அங்ஙனம் அலைத்தலின், யாம் கையற்று அதன்மேலே இனையும்படி மாலை வந்ததென்க.

[1] 'வீழும்' எனவருவிக்க. (௫௬)

2051. அவிழ்ந்தேந்து பூங்கோதை யாகத் தலர்ந்த
முகிழ்ந்தேந் திளமுலைமேற் பொன்பசலை பூப்பப்
பொன்பசலை பூப்பப் பொருகயற்கண் முத்தரும்ப
அன்புருகு நெஞ்ச மழுங்குவிக்கு மாலை.

2049. தொடி - வட்டம். தொய்யில் எழுதப்பட்ட முலைமேல். கேழ் - நிறம். புயல் - நீர். கண், புயலை முலைமேல் காலும்; காலும் - சொரியும். காலுதற்கும், நெகிழ்தற்கும் காரணமான நெஞ்சு; நம் திறத்ததாகிய ஆர்வமுற்ற நெஞ்சு. நெஞ்சத்தை மாலை அழுங்குவிக்கும்; மாலை - மாலைக்காலம்.

2050. ஐது ஏந்து - மெல்லிய மேகலையை ஏந்திய. அல்குல் : தோழி; விளி. ஆவித்து - கொட்டாவி கொண்டு; சீவக. 346, 1752. அழல் உயிரா - நெருப்புப் போல உயிர்த்து. கை அணலூன்றி - கையைக் கன்னத்திலே ஊன்றுதலால்; "கையணல், வைத்த வெயிற்றியர்" (பு-வெ. 12). கண்ணீர் கவுளலைத்தல் : "உயிரொழுகக் கண்ணீர் கவுளலைப்ப" (நைடதம், பிரிவுறு. 13); கவுள் - கன்னம். கையற்று - செயலற்று. இனைய - வருந்தும்படி. புண்ணை ஈரும் வேலைப்போல் மாலை புகுந்தது; குறள், 1221.

(உரை) [1] கவுளலைப்ப வென்பதன்பின் வருவிக்க.

2051. கோதை : தோழி; விளி. ஆகத்தலர்ந்த முலை; ஆகம் - மார்பு. முகிழ்ந்தேந்து இளமுலை : சீவக. 1004, அடிக். முகிழ்ந்து -

(இ - ள்.) கோதாய்! எனது ஆகத்தில் வீங்கின முலைமேலே பொன் போலும் பசலை பொலிவு பெறும்படிதோன்றும்; அங்ஙனம் பூவாநிற்க, அரும்பா நிற்க, நெஞ்சை மாலை வந்து அழுங்குவிக்குமென்க.

[1] 'தோன்றும்' என வருவிக்க. இத்தாழிசைமூன்றும், தனக்கு வேட்கை நிகழ்ந்ததாகக் கூறலாகாமையின், மாலைப்பொழுது கண்டு ஆற்றாத தலைவி தோழிக்குக் கூறிற்றாகக் கூறினான். இதனைத் தலைவன் ஆற்றாமைக் கூறிற்றென்பாருமுளர். (௫௭)

(வேறு)

2052. பாடினான் றேவ கீதம் பண்ணினுக் கரசன் பாடச், சூடக மகளிர் சோர்ந்து செருக்கிய மஞ்ஞை யொத்தார், ஆடகச் செம்பொற் பாவை யந்தணற் புகழ்ந்து செம்பொன், மாடம்புக் கநங்கற் பேணி வரங்கொள்வ னென்றாள்.

(இ - ள்.) பண்ணினுக்கரசன் தேவனாற்பெற்ற பாட்டைப் பாடினான்; அங்ஙனம் பாடினாகை, மகளிர் சோர்ந்து மயங்கிய மயிலையொத்தார்; அப்பொழுது சுரமஞ்சரி அந்தணனைப்புகழ்ந்து நாளைக் கோயிலிலே புக்கு நமக்குத் தெய்வமாகிய காமனை வழிபட்டு இப்பாட்டையுடைய சீவகனைத் தரவேண்டுமென்று வேண்டிக்கொள்வேனென்று கூறினாளென்க. (௫௮)

2053. மடலணி பெண்ணை யீன்ற மணிமருள் குரும்பை மான
உடலணி யாவி நைய வுருத்தெழு முலையி னாளும்
அடலணி தோழி மாரு மார்வத்திற் கமும விப்பாற்
கடலணி திலகம் போலக் கதிர்திரை முளைத்த தன்றே.

அரும்பி. பொன் போலும் பசலை பூப்ப; பூப்ப - பொலிவுபெற. முத்தரும்ப - முத்துப்போலும் நீர்த்துளியைத் தோற்றுவிக்க. நெஞ்சத்தை மாலை அழுங்குவிக்கும்.

(உரை) [1] பூப்பவென்பதன்பின் வருவிக்க.

2052. பண்ணினுக்கு அரசன் தேவகீதம் பாடினான். சூடகமகளிர் - சூடகமென்னும் முன்கைவளையை யணிந்த மகளிர். செருக்கிய - மயங்கிய; சீவக. 1283; "சொல்வகை செருக்கி" (பெருங். 1. 35 : 192). பாவை : சுரமஞ்சரி. அந்தணன் : சீவகன். நாளை மாடம் புக்கு; மாடம் : காமன்கோட்டம். அநங்கனைப் பேணி. வரம் கொள்வல் - சீவகனைத் தரவேண்டுமென்று வேண்டிக்கொள்வேன்.

(மேற்.) அடி, 1 : நன். பொது. 5, மயிலை; பிரயோக. சமாச. 2; இ-வி. பொது. 35.

2053. மடலைத் தன்னிடத்தே அணிந்த பெண்ணை - பனை. மணிமருள் - நிறத்தால் நீலமணியைப் போன்ற. ஆவி - ஆடவரது உயிர்.

வடிவால், பனையீன்ற குரும்பையை மானத் தோன்றின முலை; நிறத்தால், மணிமருள் முலை.

(இ - ள்.) சுரமஞ்சரியும், பிறரை வருத்துதலுடையராய் அவளைச் சூழ்ந்த தோழிமாரும் வரம்வேண்டவெண்ணும் வேட்கையிற்றிரள, இப் பாற் கடலிடத்தே கதிரெழுந்ததென்க. (௪௯)

2054. பொன்னியன் மணியுந் தாருங் கண்ணியும் புனைந்து செம்பொன், மின்னியற் பட்டஞ் சேர்த்தி யானெய்பால் வெறுப்ப வூட்டி, மன்னியற் 'பாண்டில் பண்ணி மடந்தைகோல் கொள்ள வையம், இன்னியற் பாவை யேற்பத் தோழியோ டேறி ளுளே.

(இ - ள்.) நிலைபெற்ற செலவினையுடைய எருத்தை மணிமுதலிய வற்றாற் புனைந்து சேர்த்தி ஊட்டிப் பண்ணி ஒருமகள் செலுத்துங் கோலைக் கொள்ள, பாவை தோழியுடனே ஆடவரைக் காணுமற் போம் போக்கிற்கு இயைய வண்டியையேறிளுளென்க. (௫௦)

2055. ஆடவ ரிரிய வேகி யஞ்சொல்லார் சூழக் காமன்
மாடத்து ளிழிந்து மற்றவ் வள்ளலை மறைய வைத்துச்
சூடமை மாலை சாந்தம் விளக்கொடு தூப மேந்திச்
சேடியர் தொழுது நிற்பத் திருமகள் பரவு மன்றே.

(இ - ள்.) அரசனுணையால் ஆடவர் போக மகளிர் சூழவேகி இழிந்துகூட வந்தவனைத் தான் பரவுகின்றது கேளாதபடி கடியறையிலே

பெண்ணையீன்ற குரும்பை மான எழுமுலை; மணிமருள் முலை. உருத்து- தோன்றி; "உருத்தெழு வனமுலை" (குறுந். 276 : 3). முலையினுள் : சுரமஞ்சரி; (பி - ம்.) 'உருத்தவெம் முலையினுளும்.' ஆர்வத்தில் கழும - காமனிடம் வரங்கேட்க எண்ணிய ஆசையால் திரள. கதிர் திரையிடத்து முளைத்தது.

2054. தார், கண்ணி என்பன மாலைவகைகள். சேர்த்தி - அணி வித்து. நெய்யையும் பாலையும் வெறுப்ப ஊட்டி; வெறுப்ப - மிக. ஊட்டி - உண்பித்து. பாண்டில் - எருது; நாரை யெருது என்பர்; சிறுபாண். 260, ந. பண்ணி - ஊர்தற்கேற்பப் பூட்டி. பாண்டிலைப்புனைந்து, சேர்த்தி, ஊட்டிப் பண்ணி. மடந்தைகோல் கொள்ள - ஒருமகள் எருத்தைச் செலுத்தும் கோலைக் கையிற் கொள்ள; "கோல்கொள் கன்னியர் மேல்கொண் டேறி", "பாகனை யொழித்துக் கூன்மகள் கோல்கொள" (பெருங். 1. 38 : 156, 3. 5 : 97). பாவை, தோழியோடு ஏற்ப வையத்தை ஏறிளுள்; வையம் - வண்டி.

2055. இரிய - போக. அஞ்சொல்லார் : மகளிர். காமன்மாடம் - காமன்கோயில்; பெருங். 3. 6 : 99. இழிந்து - இறங்கி. வள்ளலை - சீவ கனை. சூடுதற்கு அமைந்த மாலை. திருமகள் : சுரமஞ்சரி. பரவுதல் - போற்றுதல்.

மறைய வைத்துச் சேடியர் சூடுதலமைந்த மாலைமுதலியவற்றையேந்தித் தன்னைத் தொழுது நிற்பத் திருமகள் பரவாநிற்குமென்க. (கூக)

2056. பொன்னிலஞ் சென்னி புல்ல விடமுழந் தாளை யூன்றி, மின்னவிர் மாலை மென்பூங் குழல்வலத் தோளின் வீழக், கன்னியங் கமுகின் கண்போற் கலனணி யெருத்தங் கோட்டித், தன்னிரு கையுங் கூப்பித் தையலீ துரைக்கு மன்றே.

(இ - ள்.) தையல், இடமுழந்தாளையூன்றி மாலையுங்குழலும் வலத்தோளிலே வீழும்படி கமுகின் கண்போலுங்கழுத்தை வலத்தே சாய்த்து நிலத்தைச் சென்னி புல்லும்படி வணங்கி எழுந்திருந்து இரண்டுகையினையும் குவித்து நின்று இதனைக் கூறுமென்க. (கூஉ)

2057. தாமரைச் செங்கட் செவ்வாய்த் தமனியக் குழையி னுயோர், காமமிங் குடையேன் காளை சீவக னகலஞ் சேர்த்தின், மாமணி மகர மம்பு வண்சிலைக் கரும்பு மான்றேர், பூமலி மார்ப வீவ னூரொடும் பொலிய வென்றுள்.

(இ - ள்.) கண்ணையும் வாயையுமுடைய குழையினுய், இவ்விடத்தே ஒருவரம் வேண்டுதலையுடையேன்; அது யாதெனின், பூமலிமார்பனே, எனக்குச் சீவகனைத் தருதல்; அங்ஙனந்தரின் நினக்கு மகரக்கொடியும், அம்பும், சிலையாகிய கரும்பும், தேரும் ஊரோடே பொலியத் தருவே னென்றுளென்க.

காமமிக்கும் பாடம். (கூங)

---

2056. நிலத்தைச் சென்னி புல்ல; புல்ல - பொருந்தும்படி. மாலையும் குழலும் வலத்தோளில் வீழ. கன்னியங்கமுகு - ஈனுத இளங்கமுகு; சீவக. 169. கமுகினது கண்போலும் எருத்தம்; கலனையணிந்த எருத்தம்; கலன் - ஆபரணம்; எருத்தம் - கழுத்து. கோட்டி - வலப் பக்கத்தே சாய்த்து. கூப்பி - குவித்து. தையல்: சுரமஞ்சரி; எழுவாய். ஈது - இதனை.

2057. அடி, 1: "தாமரைச் செங்கட் டமனிய விணைக்குழைக், காமன் கோட்டத்து" (பெருங். 3. 4: 58-9). குழையினுய் என்றது மன்மதனை; விளி. இங்கு ஓர் காமம் உடையேன் - இவ்விடத்தே ஒருவரம் வேண்டுதலையுடையேன். காளையாகிய சீவகனகலத்தே என்னைச் சேர்த்தின்; சேர்த்தின் - சேர்வித்தால். பூமலிமார்ப என்றது மன்மதனை; விளி. மகரமும், அம்பும், கரும்பும், தேரும், ஊரொடு ஈவல் என்றுள்; ஈவல் - தருவேன். மன்மதனை வணங்குதல்: "காமவேள் கோட்டந் தொழுதார்" (சிலப். 9: 60); நாச்சியார் திருமொழி. 1: 1-9.

2058. மட்டவிழ் கோதை பெற்ருய் மனமகிழ் காத லானை, இட்டிடை நோவ நில்லா தெழுகென வேந்த ரேழன், பட்டிமை யுரைத்த தோராள் பரவிய தெய்வந் தான்வாய், விட்டுரைத் திட்ட தென்றே வேற்கணுள் பரவி மீண்டாள்.

(இ - ள்.) கோதாய்! நின்காதலானைப்பெற்ருய் : இனி இடைநோவ நில்லாதே போவென்று புத்திசேனன் வஞ்சனைகூறினமை யறியாதே தான் பரவிய தெய்வம் தன்வாய்விட்டுக் கூறிற்றென்றே பின்னும் பரவி வேற்கண்ணுள் மீண்டாளென்க. (கூச)

2059. அடியிறை கொண்ட செம்பொ னுடைகச் சிலம்பி னுளக், கடியறை மருங்கி னின்ற மைந்தனைக் கண்டு நாணி, வடியுறு கடைக்க ணோக்க நெஞ்சுதுட் கென்ன வார்பூங், கொடியுற வொசிந்து நின்ருள் குழைமுகத் திருவோ டொப்பாள்.

அடியிறை கொண்ட - அடியிலே தங்குதல் கொண்ட. ஆடகச் செம்பொனுற் செய்த சிலம்பு. கடியறை - மணவறை.

(இ - ள்.) சிலம்பினுளாகிய திருவோடொப்பாள், அறையிடத்தே பழைய வடிவைக்கொண்டு நின்ற சீவகனை நெஞ்சு துணுக்கெனக் கண்டு வடுவகிர்போலும் கடைக்கண் நோக்காநிற்க நாணிக் கொடிபோல வளைந்துநின்ருளென்க. (கூரு)

2060. இலங்குபொன் ஞேலை மின்ன வின்முகஞ் சிறிது கோட்டி
அலங்கலுங் குழலுந் தாழ வருமணிக் குழையோர் காதிற்
கலந்தொளி கான்று நின்று கதிர்விடு திருவில் வீச
நலங்கனிந் துருகி நின்ரு ளுமவேற் காமர் கண்ணுள்.

---

2058. கோதை : சுரமஞ்சரி; விளி. காதலானைப் பெற்ருய்; இடைநோவ நில்லாது எழுக என; என - என்று காமன் கோயிலில் மறைந்திருந்த புத்திசேனன் கூற. ஏந்தல் தோழன் - சீவகன் தோழனை புத்திசேனன். பட்டிமை உரைத்தது - வஞ்சனையாகக் கூறியதை. ஓராள் - அறியாதவளாய். பரவிய - தன்னுற் போற்றப்பட்ட. வேற்கணுள் : சுரமஞ்சரி.

2059. அடியில் இறைகொண்ட; இறை - தங்குதல். சிலம்பினுள் : சுரமஞ்சரி. கடியறை : பெருங். 3. 13 : 15, 44. மைந்தனை : சீவகனை. வடியுறுகடைக்கண் - வடுவகிர்போலும் கடைக்கண். மைந்தனை நெஞ்சு துட்கென்னக் கண்டு நோக்க. கொடியுற ஒசிந்து - கொடியைப்போல வளைந்து. ஒப்பாள் : சுரமஞ்சரி. சிலம்பினுளாகிய திருவோடொப்பாள் என்க.

2060. இனிய முகத்தைச் சிறிது கோட்டி; கோட்டி - சாய்த்து. அலங்கல் - மாலை. குழை திருவில் வீச. திருவில் - இந்திரவில்; பலநிறத்திற்கு உவமை. நலம் கனிந்து - அன்பு முற்றி. கண்ணுள் : சுரமஞ்சரி. கண்ணுள் உருகி நின்ருள் எனமுடிக்க.

(இ - ள்.) வேல்போலுங்கண்ணுள், அலங்கலும் குழலுந்தாழ, குழை திருவில் வீச ஓலே மின்ன முகத்தைச் சிறிதுசாய்த்து, அன்பு முற்றி, நெஞ்சுருகி நின்றுளென்க.

கதிர்கலந்து நின்று ஒளியைக் கான்றுவிடு மணிக்குழை; அதற் கியல்பு. (௬௬)

2061. எரிமணிக் கலாபத் திட்ட விந்திர நீல மென்னும்
ஒருமணி யுந்தி நேரே யொருகதி ருமிழ்வ தேபோல்
அருமணிப் பூணி னுடை னவ்வயி றணிந்த கோலத் [தன்றே.
திருமயி ரொழுக்கம் வந்தென் றிண்ணிறை கவர்ந்த

(இ - ள்.) அங்ஙனம் நின்ற நிலையை அவன்கண்டு மேகலையிலழுத்தின இந்திரநீலமென்னும் ஒப்பில்லாத மணி பலகதிரையுமிழாதே உந்திநேரே ஒரு கதிரை உமிழுந்தன்மைபோலப் பூணினுளது வயிற்றை அழகுசெய்த அழகுடைய மயிரொழுக்கம் வந்து என்னிறையைக் கவர்ந்ததல்லவோ, இனி ஒழிந்தன என்செய்யுமென்று தன்னிலே கூறினுனென்க. (௬௭)

2062. தேறினேன் றெய்வ மென்றே தீண்டிலே னுயி னுய்யேன், சீறடி பரவ வந்தே னருளெனத் தொழுது சேர்ந்து, நாறிருங் குழலி னுளை நாகணை விடையிற் புல்லிக், கோறெடுத் தநங்க னெய்யக் குழைந்துதார் திவண்ட தன்றே.

(இ - ள்.) நின்னடியைப் பரவவந்தேன்; வந்த யான் நின்னைத் தெய்வமென்றே கருதிப் பின்பு மானிடமென்றே தேறினேன்; இனித் தீண்டேனுயின் உய்யேன்; அருளாயென்று சேர்ந்து அநங்கனெய்தலாற் கொடுப்பாரும் அடுப்பாருமின்றி நாகை அணைகின்ற விடைபோலே புல்ல, தார் குழைந்து வாடிற்றென்க.

புல்லி - புல்ல. (௬௮)

---

2061. எரிமணிக் கலாபம் - ஒளி விளங்குகின்ற மணிகளையுடைய மேகலை. உந்தி - கொப்பூழ். பூணினுள்: சுரமஞ்சரி. வயிறு அணிந்த கோலத் திருமயிரொழுக்கம் - வயிற்றை அழகுசெய்த அழகுடைய மயிரொழுங்கு. என் திண் நிறை - எனது வலிய ஒருமைப்பட்ட மனத்தை; "என்றிண்ணிறை" (கம்ப. மிதிலைக். 147). மு: நைடதம், அன். தூது. 91.

2062. தெய்வமென்றே தேறினேன் - நின்னைத் தெய்வம் என்றே எண்ணிய யான். பின்பு மானிடப் பெண்ணென்று தெளிந்தேன். குழலினுளை: சுரமஞ்சரியை. நாகு அணை விடையின் - பசுவை அணைந்த ஏறுபோல; சீவக. 751, அடிக். புல்லி=புல்ல - தழுவ. கோல் - மலரம்பு. அநங்கன் எய்தலால், விடைபோற் புல்ல, தார்குழைந்து திவண்டது; தார்குழையச் சேர்தல்: சீவக. 2034, அடிக். திவண்டது - வாடியது.

2063. கலைபுறஞ் சூழ்ந்த வல்குற் கார்மயிற் சாய லாளும்
மலைபுறங் கண்ட மார்பின் வாங்குவிற் றடக்கை யானும்
இலைபுறங் கண்ட கண்ணி யின்றமி ழியற்கை யின்பம்
நிலைபெற நெறியிற் றுய்த்தார் நிகர்தமக் கிலாத நீரார்.

(இ - ள்.) மயிற்சாயலாளும், பச்சிலையை இடத்தேயுடைத்தாகிய கண்ணியையுடைய மலைதோற்ற மார்பினையுடைய தடக்கையானுமாகிய தமக்கு ஒப்பிலாத நீரார் இனிய தமிழ் கூறிய இயற்கைப்புணர்ச்சியாகிய இன்பம் நிலைபெறும்படி முறைமையின் நுகர்ந்தாரென்க.

இது, [1] சுட்டி ஒருவர் பெயர்கொள்ளப்படுதலின், உலகியல் வழக்கான காந்தருவமாம். (சுகூ)

2064. குங்குமங் குயின்ற கொம்மைக் குவிமுலை குளிர்ப்பத் தைவந், தங்கலுழ் மேனி யல்குற் காசுடன் றிருத்தி யம்பொற், பொங்குபூஞ் சிலம்பிற் போர்த்த பூந்துக ளவித்து மாதர், கொங் கலர் கோதை சூட்டிக் குழனலந் திருத்தி னானே.

(இ - ள்.) அங்ஙனம் நுகர்ந்து, வேட்கைதீர நுகராமையிற் பிறந்த வெப்பம் நீங்கும்படி மாதருடைய முலையையும் அழகொழுகுகிற மேனியையும் குளிரத்தடவி, புணர்ச்சியாற்குலைதலின் அல்குலில் மணிகளையுஞ் சேரத்திருத்தி, சிலம்பிற்போர்த்த பொங்குபூந்தாதையுந் துடைத்து, கோதையைமுன்புபோலே சூட்டிக் குழனலத்தையுந் திருத்தினானென்க.

அவ்விடம் பூப்பரப்பிக் கிடத்தலின், பூந்துகள் கூறினர். (எ௦)

---

2063. கலை - மேகலை; ஆடையுமாம். கார்மயிற் சாயலாள் - கார்காலத்து மயில்போலும் சாயலையுடைய சுரமஞ்சரி; "கமழ்பூம் புறவிற் கார்பெற்றுக் கலித்த, ஒண்பொறி மஞ்ஞை போல்வதோர், கண்கவர் காரிகை" (தொல். களவு. 23, ந. மேற்.). மலைபுறம் கண்ட - மலையைத் தோற்கச் செய்த. கண்ணியை அணிந்த மார்பினையுடைய தடக்கையான்: சீவகன். இலைபுறம் கண்ட - பச்சிலையைத் தன்னிடத்தே உடைய. இன்றமிழ் இயற்கை இன்பம் - இனிய தமிழகப்பொருள்நூல் கூறிய இயற்கைப் புணர்ச்சியாகிய இன்பத்தை; சீவக. 1328, அடிக். நெறியின் - அகப்பொருள்நூலில் கூறிய முறையால். துய்த்தார் - நுகர்ந்தார். சாயலாளும் தடக்கையானுமாகிய நீரார், துய்த்தாரென முடிக்க.

(உரை) [1] சீவக. 1328, ந.

2064. குங்குமம் குயின்ற - குங்குமச்சாந்தைப் பூசிய. கொம்மை - பெருமை; வட்டமுமாம். அங்கலுழ்மேனி: சீவக. 1988, அடிக். மேனியையும் முலையையும் தைவந்து; "தொய்யி லிளமுலை யினிய தைவந்து"

(வேறு)

2065. வானார் கமழ்மதுவுஞ் சாந்து மேந்தி மதுத்துளித்து வண்டுஞ் சுரும்பு மூசும், தேனார் பூங்கோதாய் நினக்குக் காமன் சிலையிரண்டுஞ் செவ்வனே கோலித் தந்தான், தாரைப் பண்ணித் தடறு நீக்கித் தண்குருதி தோய்த்துத் தகைமை சான்ற, ஊனார்ந்த வோரிணை யம்புந் தந்தா னென்னை யுளனாக வேண்டி னானே.

(இ - ள்.) வானின்கண்ணே நிறைந்து கமழுகின்ற மதுவையும் சாந்தையும் ஏந்தி அம்மதுவைத் துளித்தலின், மூசும் வண்டும் சுரும்பும் தேனினமும் நுகரும் கோதாய், நின்னைக் கண்டுவைத்து நினக்குக் காமன் தன்கையில் வில்லையும் சேமவில்லையும் நேரே வளைத்துத் தந்தான்; அதுவுமன்றி அவன்றான் தாழ்வரப் பண்ணிக் குருதியைத் தோய்த்து உறையை நீக்கி அழகு நிறைந்த ஓரிணையம்பையும் தந்தான்; ஆதலால், என்னை உயிருடனிருக்கவேண்டி யிருந்தானென்று இகழ்ந்து கூறினானென்க.

ஏகாரம் : தேற்றம். நோக்கிய மேனி வாடுதலின், ‘ஊனார்ந்த’ என்றார். (எக)

2066. கண்ணக்க கண்ணிக் கமழ்பூங்குழற் கரும்பேர் தீஞ்சொலாள் கதிர்மு லைகளின், வண்ணக்கு வானு நிலனு மெல்லாம் விலையே மழைமின்னு நுசுப்பி னாளைப், பெண்ணுக் கணியாக வேண்டி மேலைப் பெரியோர் பெருமான் படைத்தா னென்று, புண்ணக்க வேலான் புகழ நாணிப் பூநோக்கிப் பூக்கொசிந்த கொம்பொத் தாளே.

---

(கலித். 54 : 12); தைவந்து - தடவி. அல்குலிற் காசை உடன்திருத்தி; காசு - மேகலையிற் கட்டிய மணிகள்; உடன் - சேர. சிலம்பிற் போர்த்த பொங்கு பூந்துகளவித்து : சீவக. 1333; துகள் அவித்து - தூசியைத் துடைத்து. மாதர் : சுரமஞ்சரி. கோதை - பூமாலையை. குழலின் நலத்தையும்; நலம் - அழகு.

2065. வான் - சிறப்பு எனலுமாம். துளித்து - துளித்தலால். மூசுகின்ற வண்டும், சுரும்பும், தேனும் ஆர்கின்ற கோதாய்; மூசுதல் - மொய்த்தல். ஆர்தல் - உண்ணுதல். கோதாய் : சுரமஞ்சரி; விளி. சிலையிரண்டுமென்றது புருவமிரண்டனையும். கோலி - வளைத்து. தடறு - உறை. ஊன் - மாமிசம். இணையம்புமென்றது கண்களிரண்டையும். உளனாக - உயிருடனிருக்கும்படி.

(மேற்.) மு : சிலப். 2 : 42-5, அடியார்.

2066. கள் நக்க கண்ணி - தேனைச் சிந்தவிட்ட பூமாலை. கண்ணியையும் குழலையுமுடைய தீஞ்சொலாள் : சுரமஞ்சரி. முலைகளின் வண்ணக்கு; வண்ணக்கு = வண்ணத்துக்கு - அழகுக்கு. விலையே - விலையாகுமா? ஆகாவென்றவாறு; ஏ : எதிர்மறை. மழையில் மின்னுப்

(இ - ள்.) புள் மகிழ்ந்த வேலான், நுசுப்பினுளை அயன் படைக்கின்ற பொழுதே பெண்களுக்கு ஒரு திலகமாக வேண்டிப் படைத்தானாதலின், இவளுடைய முலைகளின் வண்ணத்துக்கு வானும் நிலனுமெல்லாம் விலைபோதாவென்று புகழ, அவள் நாணிப் பூவுக்கு ஒசிந்த கொம்பையொத்தாளென்க.

இது முன்னிலைப் படர்க்கை. மதுவைப் புறப்படவிட்ட கண்ணியையும் குழலையுமுடைய சொல்லாள், சுட்டுப்பெயர். (எ௨)

(வேறு)

2067. இறங்கிய மாதர் தன்னை யெரிமணிக் கடகக் கையாற்,
குறங்கின்மேற் றழுவி வைத்துக் கோதையங் குருதி வேலான்,
அறந்தலை நீங்கக் காக்கு மரசன்யா னாக நாளைச்,
சிறந்தநின் னலத்தைச் சேரே னுய்விடிற் செல்க வென்றான்.

(இ - ள்.) வேலான், அங்ஙனம் நாணிய மாதரைக் கையாற்றழுவிக் குறங்கின் மேலே வைத்துக்கொண்டு நாளை நின்னலத்தைச் சேரேனாயின், யான் கட்டியங்காரனாகக் கடவேன்; நீ இனிச் செல்வாயாக வென்றானென்க. (எ௩)

2068. வில்லிடு மணிசெ யாழி மெல்விரல் விதியிற் கூப்பி,
நல்லடி பணிந்து நிற்ப நங்கைநீ நடுங்க வேண்டா,
செல்கெனச் சிலம்பு செம்பொற் கிண்கிணி மிழற்ற வொல்கி,
அல்குற்கா சொலிப்ப வாயம் பாவைசென் றெய்தி னாளே.

---

போலும் நுசுப்பினுளை : சுரமஞ்சரியை; மழை - மேகம். பெண்ணுக்கு அணியாக - பெண்களுக்கெல்லாம் ஓர் ஆபரணமாக. பெரியோர் பெருமான் : பிரமன். புள் நக்க வேலான் - பருந்து முதலிய பறவைகள் மகிழ்தற்குக் காரணமான வேலையுடைய சீவகன். வேலான், நுசுப்பினுளைப் பெருமான் படைத்தானாதலின், தீஞ்சொலாளது, முலைகளின் வண்ணக்கு வான்முதலிய விலையே யென்றுபுகழ. பூநோக்கி நாணி - பூப்போலும் பார்வையினையுடைய சுரமஞ்சரி நாணம் கொண்டு. பூவுக்கு ஒசிந்த. (பி - ம்.) 'பூத்தொசிந்த.'

2067. இறங்கிய மாதர்தன்னை - நாணங்கொண்ட சுரமஞ்சரியை. கையால் தழுவிக் குறங்கின்மேல் வைத்து; குறங்கு - துடை. கோதை - பூமாலையையுடைய. வேலான் : சீவகன். அறம் தலை நீங்கக் காக்கும் அரசன் - தருமம் தன்னிடத்தினின்றும் நீங்கும்படியாக உலகைக் காவல் செய்கின்ற கட்டியங்காரன். வேலான், வைத்து, நாளைச் சேரேனுய்விடின், யான் அரசனாக; ஆக - ஆகக்கடவேன். செல்க - நீ செல்வாயாக.

2068. வில்லிடுமணிசெய் ஆழி - ஒளிவிடுகின்ற மணியாற் செய்த மோதிரத்தையுடைய. அடி - சீவகனது பாதத்தை. நங்கை : சுரமஞ்சரி; விளி. என - என்று சீவகன் கூற. சிலம்பும், கிண்கிணியும் மிழற்ற. அல்குலிற் காசு ஒலிப்ப; காசு - மேகலையிற் கட்டிய மணிகள். ஆயம் - தோழியர் கூட்டம். பாவை : சுரமஞ்சரி. (பி - ம்.) 'பரவச்.' பாவை, மிழற்ற ஒலிப்ப ஆயத்தைச் சென்றெய்தினாள்.

ஆழி - மோதிரம்.

(இ - ள்.) அவள் போதற்கு ஒருப்பட்டுக் கணவனைத் தொழுதல் விதியாதலின், கைகூப்பித் தொழுது வணங்கி நிற்ப, நங்காய்! நீ நடுங்க வேண்டா; செல்கென்று அவன்கூற, அவள், சிலம்பும் கிண் கிணியுமிழற்றக் காசு ஒலிப்ப ஒல்கிச் சென்று ஆயத்தைச் சேர்ந்தா ளென்க. (எச)

2069. பருமணிப் படங்கொ ளுகப் பையெனப் பரந்த வல்குல்
எரிமணிப் பூணி னுனுக் கின்னல மொழிய வேகித்
திருமணிச் சிவிகை யேறிச் செம்பொனீண் மாடம் புக்காள்
விரிமணி விளங்கு மாலை வெம்முலை வேற்க ணாளே.

(இ - ள்.) பரிய மணியைப் படத்தே கொண்ட பாம்பினது பட மென்னப் பரந்த அல்குலையும் மாலையினையும் முலையினையுமுடைய வேற் கணுள், சீவகனிடத்தே அன்புநிற்கத் தான்போய்ச் சிவிகையிலேறி மாடத்தே புக்காளென்க. (எரு)

2070. (க) திருவிற்றன் மாரி கற்பான் றுவலைநாட் செய்வ தேபோல், உருவிற்றாய்த் துளிக்குந் தேற லோங்குதார் மார்பன் றோழர், பொருவிற்ற னம்பி காம திலகனென் றிருந்த போழ்திற், செருவிற்றாழ் நுதலி னாள்கண் மணத்திறஞ் செப்பு கின்றார்.

---

2069. மணியைப் படத்தே கொண்ட நாகத்தினது பை; பை - படம். அல்குலையும், மாலையையும், முலையையுமுடைய வேற்கணாள் - சுரமஞ்சரி. பூணினுனுக்கு: சீவகனிடத்து. நலம் ஒழிய - அன்பு நிற்க. சிவிகை - பல்லக்கு. (பி - ம்.) 'செம்பொனின் மாடம்.' மாடத்தே புக்காள்.

2070. திருவில், தான் மாரிகற்பதற்குத் துவலையை நாட்செய்வதே போல; "வெண்மழை, அகலிரு விசும்பிற் றுவலை கற்ப" (நெடுநல். 19-20). உருவிற்றாய் - வடிவுடையதாய். தேறலைத் துளிக்கும் தார். பூ மாலைக்கு இந்திரவில் உவமை: சீவக. 2424, 2425; புறநா. 10 : 10, 36 : 12, 61 : 14. மார்பன் தோழர்: சீவகன் தோழர். பொருவிற்றன் நம்பி - நாம் உவமிக்கின்ற நம்பி; நம்பி: சீவகன். செரு வில் தாழ்நுதலினாள் கண் - போரில் நாண் ஏறிடப்பட்ட வில் தோற்கின்ற நெற்றியினையுடைய சுரமஞ்சரியிடத்து. சீவகன் மணம் செய்த திறத்தை.

(மேற்.) அடி. 1: தொல். வினை. 32, ந.; நன். வினை. 25, மயிலை.; இ-வி. வினை. 21.

2071. (உ) கனைகட லமுதுந் தேனுங் கலந்துகொண் டெழுதப் பட்ட, புனைகொடி பூத்த தேபோற் பொறுக்கலா நுசுப்பிற் பாவை, நனைகுடைந் துண்டு தேக்கி நன்மணி வண்டு பாடும், புனைகடி மாலை மாதர் திறத்தித் மொழிந்து விட்டார்.

இவையிரண்டும் ஒரு தொடர்.

(உ) எழுதப்பட்ட 'நனையையுடையதொரு கொடி; கொடி அமுதை யும் தேனையும் தன்னுள்ளே கலந்துகொண்டு, இரண்டு முகையைப்பூத்த [1] தன்மை போலிருக்கின்ற முலைகளைப்பொருத நுசுப்பினையுடைய பாவை போலு மாதர்; வண்டு குடைந்து உண்டு தன்வயிற்றை நிறைத்துப் பாடும் மாலையையுடைய மாதரென்க. திறம் - சுற்றம்.

(இ - ள்.) இந்திரவில் தான் மழைபெய்யக் கற்பதற்குத் துவலையை நாட்கொள்வது போலும் வடிவிற்றாய்த் தேறலைத் துளிக்கும் தாரை யுடைய மார்பினையுடைய சீவகன்றோழர், யாம் உவமிக்கின்ற நம்பிதான் காமதிலகனென்று கூறி இருந்தவளவிலே, ஏறிடப்பட்ட வில் தோற் கின்ற நுதலினுளிடத்து இவன் மணம்செய்யுந் திறம் இஃதென்று செப்பு கின்றவர்கள் அம்மாதருடைய சுற்றத்தாரிடத்தே இம்மணத்தைக் கூறி விட்டாரென்க. (எசு - எ)

2072. ஐயற்கென் றுரைத்த மாற்றங் கேட்டலு மலங்க ணுய்கன், வெய்யதேன் வாய்க்கொண் டாற்போல் விழுங்கலோ டுமிழ்த றேற்றான், செய்வதெ ஞேற்றி லாதே ஞேற்றிலா டிறத்தி னென்று, மையல்கொண் டிருப்ப வப்பாற் குமரிதன் மதியிற் சூழ்ந்தாள்.

---

2071. கனைகடல் - ஒலிக்கின்ற கடலிடத்து. பூத்ததே போல் பொறுக்கலா - இரண்டு அரும்புகளைப் பூத்ததைப்போலிருக்கின்ற முலை களைப் பொறுக்க முடியாத. நுசுப்பினையுடைய பாவை. நனை - அரும்பு. தேக்கி - வயிற்றை நிறைத்து. கடி - வாசனை. வண்டு, உண்டு தேக்கிப் பாடும் மாலை. மாலையையுடைய மாதர். பாவைபோலும் மாதருடைய திறத்து; மாதர் : சுரமஞ்சரி. திறத்து - உறவினரிடத்து. இது : கலியாணத்தை.

(உரை) [1](பி - ம்.) ‘தன்மைபெற விருக்கின்ற.’

2072. ஐயற்கு : சீவகனுக்கு. மாற்றத்தை நாய்கன் கேட்டலும்; மாற்றம் - வார்த்தை. நாய்கன் : குபேரதத்தன்; சுரமஞ்சரியின் தந்தை. வெய்ய தேன் - வெப்பத்தையுடைய தேனை. விழுங்குதலையும், உமிழ்தலை யும் தேற்றுனாய்; தேற்றுனாய் - அறியாதவனாய்; என்றது, அவர்கள் கூறிய மாற்றத்திற்கு உடம்படுதலும், மறுத்தலும் இல்லாதிருந்த நிலை யைக் கூறியபடி. நோற்றிலாதேன், நோற்றிலாள் திறத்துச் செய்வது என் என்று; நோற்றிலாதேன் - நல்வினை யில்லாத யான்; நோற் றிலாள் : சுரமஞ்சரி. மையல் - மயக்கம். குமரி : சுரமஞ்சரி. தன் மதியிற் சூழ்ந்தாள் - தன் புத்தியால் தாய்தந்தையர்க்குத் தோழி வாயி லாக அறத்தொடு நிற்றலை ஆராய்ந்தாள்.

(இ - ள்.) சீவகற்கு இவளைத் தரவேண்டுமென்று கூறிய மாற்றத்தை நாய்கன் கேட்ட அளவிலே, உடம்படுதலையும் மறுத்தலையுந்தேற்ருய் நல்வினை யில்லாதேன் நல்வினையில்லாதாள்திறத்திற் செய்வது என்னென்று கலங்கியிருப்ப, குமரி அவ்விடத்தே தன்மதியாலே அறத்தொடுநிற்பதாகச் சூழ்ந்தாளென்க.

வெய்ய தேனை வாயிடத்திற்கொண்டால் வெம்மையால் நஞ்சென்று விழுங்காதேயும் இனிமையால் உமிழாதேயுமிருக்குமாறுபோல, இவள் விரதத்தால் உடம்படாதேயும் சீவகனுதலின் மருதேயும் இருந்தான். (எஅ)

2073. பொற்பமை தாமக் கந்து பொருந்திய மின்னுப் போல, எற்பக வெரியு மாலைப் பவளத்தூண் பொருந்தி யின்னீர்க், கற்பெனு மாலை வீசி நாணெனுங் களிவண் டோப்பிச், சொற்புக ரின்றித் தோழிக் கறத்தினோ டரிவை நின்ருள்.

(இ - ள்.) சுரமஞ்சரி தாமத்தையுடைய கந்தைப் பொருந்திய மின் போலே ஞாயிறு தோற்க எரியும் மாலையையுடைய தூணைச்சேர்ந்து நின்று கற்பாகிய மாலையை வீசி நாணென்னும் வண்டை யோட்டிச் சொற்குற்றமின்ருகத் தோழிக்கு அறத்தொடு நின்ருளென்க.

மாலையாலோட்டவே வண்டு மிகவும் நீங்காதாம்; "உயிரினுஞ் சிறந்தன்று நாணே நாணினுஞ், செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று" (தொல். களவு. 22) என்றதனுல், சிறிது நாணைவிட்டாள். [1] இன் : அசை. (எகூ)

2074. வழிவளர் மயிலஞ் சாயற் பவழப்பூம் பாவை யன்ன, கழிவளர் கயற்க ணங்கை கற்பினை யறிந்து தோழி, அழிமது மாலை சேர்த்தி யடிபணிந் தார வாழ்த்திப், பொழிமதுப் புயலைங் கூந்தற் செவிலியைப் பொருந்திச் சொன்னுள்.

---

2073. பொற்பு - அழகு. தாமக்கந்து - மாலையையுடைய தூணை. எல்பக எரியும் - சூரியன் தோற்கும்படி ஒளிவிளங்குகின்ற. பவளத்தூண் : "பவளத் தூண்களும்" (சூளா. சுயம். 222). ஓப்பி - ஓட்டி. நாண் நீக்கி அறத்தொடு நிற்றல் : இறை. 29. சொற்புகரின்றி - சொற்குற்றமில்லாமல். அரிவை : சுரமஞ்சரி ; எழுவாய்.

(உரை) [1] அறத்தினோடு என்பதில் உள்ளது.

2074. வழிவளர் - நல்லநெறியிலே வளர்ந்த என்றுமாம். மயில் போலும் சாயல். பவழத்தாலாகிய பாவை. கழிவளர்கயல் - உப்பங்கழியில் வளர்ந்த கயல்மீன். கயல்போலும் கண். சாயலையுடைய பாவை போலும் நங்கையது - சுரமஞ்சரியினுடைய. மதுவைப் பொழியும் புயலைப் போன்ற கூந்தலையுடைய தோழி அறிந்து. அழிமது - ஒழுகுகின்ற தேனையுடைய. மாலையைச் சேர்த்தி, வாழ்த்தி அடியைப் பணிந்து

(இ - ள்.) [1] ஆசாரத்திலே வளர்ந்ததொரு மயில்போலுஞ் சாயலை யுடைய பாவையன்ன நங்கையது கற்பினை, மதுவைப் பொழிவதொரு புயல் போன்ற ஐங்கூந்தலையுடைய தோழியறிந்து மாலையைச் சேர்த்தி வாழ்த்திப் பணிந்து போய்ச் செவிலியைப் பொருந்தி அறத்தொடு நின்றாளென்க.

கழியில் வளர்ந்த கயல். (அ0)

2075. நனைவளர் கோதை நற்றாய் நங்கைக்கீ துள்ள மென்று
சுனைவளர் குவளை யுண்கட் சுமதிக்குச் செவிலி செப்பக்
கனையிருட் கனவிற் கண்டேன் காமர்பூம் பொய்கை வற்ற
அனையதாங் கன்னி நீரின் றற்றதா நங்கைக் கென்றாள்.

(இ - ள்.) அச்செவிலி கோதையுடைய நற்றாகிய சுமதிக்கு இது நங்கைக்கு நினைவென்று அறத்தொடுநிற்ப, அவள் இரவுக்கனவிலே ஒரு பொய்கைவற்றக் கண்டேனாதலால், அப்பொய்கையினீர் போன்ற தன்மையதாம் கன்னிநீரும் நங்கைக்கு இன்று அற்றதாயிருந்ததென்றாளென்க. (அக)

2076 (க) கெண்டையுஞ் சிலையுந் திங்க ளிளமையுங் கிடந்து தேங்கொள், தொண்டையங் கனியு முத்துந் தொழுதக வணிந்து தூங்கும், குண்டல முடைய திங்க ளிதுவெனு முகத்தி தாதை, வண்புகழ்க் குபேர தத்தன் கேட்டனன் மனைவி சொன்னாள்.

2077. (உ) செருவிளைத் தனலும் வேலோய் சிறுமுதுக் குறைவி தானே, பெருவளைப் பிட்டுக் காத்த கற்பிது போலு மையன், கரிவிளைத் தாய்ந்த சுண்ணம் வாட்டின னென்று கண்டாய், திருவிளை தேம்பெய் மாரி பாற்கடற் பெய்த தென்றாள்.

---

செவிலியைப் பொருந்திச் சொன்னாள்; சேர்த்தி - அணிவித்து. இப் பாடலில், தோழி செவிலிக்கு அறத்தொடுநிற்றல் கூறப்பட்டது.

(உரை) [1] ஆசாரம் - அருவி பெருகும் மலைப்பக்கம்; "மணிவரைச் சாரன் மஞ்ஞை போல" (பெருங். 3. 13 : 50)

2075. நனை - அரும்பு; தேன் எனலுமாம். செவிலி, கோதையுடைய நற்றாயாகிய சுமதிக்கு, ஈது நங்கைக்கு உள்ளமென்று செப்ப; கோதை : சுரமஞ்சரி; ஈது - சீவகனை மணக்கின்றதாகிய இக்காரியம். (பி - ம்.) 'நங்கைக்கிஃதுள்ளம்.' கனைஇருள் - மிக்க இருளிடத்து. பொய்கை வற்றக் கண்டேன். அனையதாம் கன்னிநீர் - அத்தன்மைய தாகும் கன்னித்தன்மை. நங்கைக்கு இன்று அற்றதாம் - சுரமஞ்சரிக்கு இன்றோடு நீங்கியதாகும்.

2076. கெண்டைமீன் கண்களுக்கும், சிலை புருவத்திற்கும், இளமை யையுடைய திங்கள் நுதலுக்கும், தொண்டைக்கனி வாய்க்கும், முத்து பற்களுக்கும் உவமைகள். தூங்கும் - தொங்குகின்ற. முகத்தி : சுர மஞ்சரி. முகத்தியினுடைய தாதையாகிய குபேரதத்தன். மனைவி : சுமதி.

2077. வேலோய் என்றது குபேரதத்தனை; விளி. சிறுமுதுக்

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) இளமையையுடைய திங்கள். கெண்டை முதலியன கிடக்கப் பட்டுத் தொண்டைக்கனியையும் முத்தையுமணிந்து குண்டலத்தை யுடையதொரு திங்கள்; இல்பொருளுவமை. தொழுதக - நன்குமதிப்ப.

(இ - ள்.) அச்செய்தியை, மனைவி, வேலோய், சிறியாளாகிய பேரறிவாட்டிதானே பெரிய காவலிட்டுக் காத்த இந்தக்கற்பு, தனது ஆய்ந்த சுண்ணத்தைச் சீவகன் கரிபோக்கித் தீதென்றுனென்று கருதிப் போலேயிருந்ததென்று சொன்னாள்; சொல்லி இதுநமக்குத் தேன்மாரி பாற்கடலிலே பெய்தது கண்டாயென்றாள். இதனை மதிபோலுமுகத்தி தாதையாகிய குபேரதத்தன் கேட்டனனென்க.

இனி, பிரித்து முடிப்பாருமுளர். (அஉ - ௩)

2078. கேட்பது விரும்பி நாய்கன் கிளைக்கெலா முணர்த்தி யார்க்கும், வேட்பன வடிசி லாடை விழுக்கலன் மாலை சாந்தம், கோட்குறை வின்றி யாக்கிக் குழுமியங் கறங்கி யார்ப்ப, நாட்கடி மாலை யாற்கு நங்கையை நல்கி னானே.

(இ - ள்.) நாய்கன், கேட்கப்படுவதாகிய அதனை விரும்பிக் கேட்டுச் சுற்றத்திற்கெல்லாமறிவித்து விரும்பப்படுவனவாகிய அடிசின்முதலிய வற்றை யார்க்கும் கொள்ளக் குறைவின்றாகவுண்டாக்கி இயம் ஆர்ப்ப நல்ல நாளிலே சீவகற்குச் சுரமஞ்சரியைக் கொடுத்தானென்க.

' கேட்டலும் ' என்றும் பாடம். (அச)

---

குறைவி-சிறுபருவத்திலேயே பேரறிவுடையவள்; "சிறுமுதுக் குறைவி" (அகநா. 17 : 9); "சிறுமுதுக் குறைவிக்குச் சிறுமையுஞ் செய்தேன்" (சிலப். 16 : 58); "சிறுமுதுக் குறைவி" (பெருங். 2. 18 : 83, 3. 22 : 68). வளைப்பிட்டு - காவல்செய்து. ஆய்ந்த சுண்ணத்தை ஐயன் கரி விளைத்து வாட்டினனென்றுபோலும்; ஐயன் : சீவகன். கரி - சாட்சி; என்றது வண்டுகளை. வாட்டினன் என்றுபோலும் - சுண்ணம் தீதெனக் கூறினனென்று எண்ணிப் போலும். அடி, 4 : சீவக. 1761, அடிக்.; "ஆன்பாற் றெண்கட லமுதுற வளைஇய, தேன்பெய் மாரியிற் றிறவ தாக" (பெருங். 1. 34 : 101-2); "நெய்த்தலைப் பாலுக்காங்கு" (சூளா. சுயம். 275)

2078. நாய்கன் கேட்பது விரும்பி - குபேரதத்தன் கேட்கப்படுவ தாகிய அதனை விரும்பிக்கேட்டு. கிளை - சுற்றம். வேட்பன - விரும்பப் படுவனவாகிய. யார்க்கும் கோட்குறைவின்றி ஆக்கி; கோட்குறை வின்றி - கொள்ளுதலிற் குறைபாடில்லாமல். குழுமு இயம் - கூடிய வாத்தியங்கள். நாள் - நல்லநாளிலே. கடி - வாசனை. மாலையாற்கு : சீவகனுக்கு. நங்கையை - சுரமஞ்சரியை.

2079. பரியகஞ் சிலம்பு பைம்பொற் கிண்கிணி யார்ந்த பாதத், தரிவைய ராடன் மிக்கா ரருமணி வீணை வல்லார், உரியநூற் றெண்மர் செம்பொ னொன்றரைக் கோடி யூன்றார், எரியழன் முன்னர் நேர்ந்தே னென்மகட் கென்று சொன்னான்.

(இ - ள்.) நல்கினவன், பரியகமுதலியன ஆர்ந்த பாதத்தையுடைய ஆடன்மிக்கார் வீணைவல்லாராகிய உரிய அரிவையர் நூற்றெண்மர், பொன் ஒன்றரைக்கோடி, ஊர் மூன்று இவற்றை என்மகட்குக் கொடுத்தே னென்று அழலின்முன்னே நின்று கூறினானென்க. (அரு)

2080. மாசறு மணியு முத்தும் வயிரமு மொளிரு மேனி
ஆசறு செம்பொ னார்ந்த வலங்கலங் குன்ற னானும்
தூசுறு பரவை யல்குற் றாமணிக் கொம்ப னாளும்
காசறக் கலந்த வின்பக் கடலகத் தழுந்தி னாரே.

(இ - ள்.) மணிமுதலியனவும் அலங்கலும் ஒளிரும் மேனியை யுடைய மேருவையொப்பானும், அல்குலையுடைய கொம்பனாளும் இன்பக் கடலிலே அழுந்தினாரென்க. (அசு)

அது மேற்கூறுகின்றார்.

2081. பொன்வரை பொருத யானைப் புணர்மருப் பனைய வாகித், தென்வரைச் சாந்து மூழ்கித் திரள்வடஞ் சுமந்து வீங்கி, மின் வளர் மருங்குல் செற்ற வெம்முலை மணிக்கண் சேப்பத், தொன் னலம் பருகித் தோன்ற றுறக்கம்புக் கவர்க ளொத்தான்.

---

2079. பரியகம் - காற்சரியென்னும் ஆபரணம். அடி, 1. : "பரிய கஞ் சிலம்பு செம்பொற் கிண்கிணி பாதஞ் சேர்த்தி" (சீவக. 674). ஆடன்மிக்காரும், வீணைவல்லாருமாகிய உரிய அரிவையர் நூற்றெண்மர். என்மகட்கு நேர்ந்தேனென்று எரியழல் முன்னர்ச் சொன்னான்; நேர்தல் - கொடுத்தல்.

2080. மணியும், முத்தும், வயிரமும், அலங்கலும் ஒளிர்கின்ற மேனியையுடைய குன்றனான்; என்றது சீவகனை. தூசு - ஆடை. கொம்பனாள் : சுரமஞ்சரி.

2081. சீவகன் மார்பிற்குப் பொன்வரையும், சுரமஞ்சரியின் முலை களுக்கு மருப்பும் உவமைகள். தென்வரைச் சாந்து மூழ்கி - பொதியில் மலையின் சந்தனத்தால் மூழ்கப்பட்டு; "தென்மலைச் சாந்து மூழ்கி", "தென்மலைச் சந்தனஞ் செறிந்து" (சூளா. சுயம். 83, 137). முலை யினது கண் சேப்ப - சிவப்ப. தோன்றல் : சீவகன். (பி - ம்.) 'துறக்கம் பெற்றவர்கள்.'

'பொன்வரை' என்றது இவன் மார்பை. மூழ்கிச் சுமந்து வீங்கி மருங்குலைச் செற்ற முலை.

(இ - ள்.) தோன்றல், மருப்பனையவாகி மார்பைப் பொருத முலைக் கண் சிவக்கும்படி அவள்தொன்னலத்தைப் பருகித் துறக்கம் புக்கவர் களையொத்தானென்க. (அஎ)

2082. வரிக்கழற் குருசின் மார்பு மடந்தைவெம் முலையுந் தம்முட், செருச்செய்து திளைத்துப் போரிற் சிலம்பொலி கலந்த பாணி, அரிப்பறை யனுங்க வார்க்கு மேகலைக் குரலோ டீண்டிப், புரிக்குழல் புலம்ப வைகிப் பூவணை விடுக்க லானே.

திளைத்து - திளைக்க. ஈண்டி - ஈண்ட.

(இ - ள்.) குருசில் மார்பும் முலையும் தம்மிலே முற்படப் போர் செய்து பின்பு செய்யும் போரிலே திளைத்தலின், பாணி கலந்த பறை கெட ஆர்க்கும் மேகலைக்குரலோடே சிலம்பொலி ஈண்டக் குழல் குலைந்து தனிப்பத் தங்கி விடுக்கலானுயினு னென்க.

[1] திளைத்த போரும் பாடம். (அஅ)

2083. மணியியல் வள்ளத் தேந்த மதுமகிழ்ந் தனந்தர் கூர, அணிமலர்க் குவளைப் பைம்போ தொருகையி னருளி யம்பொற், பிணையனு ளருகு சேரிற் பேதுறு நுசுப்பென் றெண்ணித், துணை யமை தோள்க டம்மாற் றோன்றறுன் புல்லி னனே.

(இ - ள்.) தோன்றறுன் பின்னும் புணரக் கருதி அதற்குக் களி கூரும்படி மதுவை வள்ளத்தே ஒருகையாலேந்த, அதனையுண்டு மயக்க

2082. வரி - கீற்று. குருசில் : சீவகன். மடந்தை : சுரமஞ்சரி. போரில் திளைத்து ; திளைத்து = திளைத்தலால் - இடைவிடாது பயிலுத லால். பாணி கலந்த அரிப்பறை அனுங்க ஆர்க்கின்ற மேகலையோடு சிலம்பொலி ஈண்டி ; பாணி - தாளம். அனுங்க - கெட. ஈண்டி = ஈண்ட - நெருங்க. புலம்ப - தனித்திருப்ப. வைகி - தங்கி. விடுக்கலான் - விட்டு நீங்கலனுயினுன்.

(உரை) [1] (பி - ம்.) 'இளைத்த போரும்.'

2083. மதுவை மணியாலியன்ற வள்ளத்திலேந்த ; வள்ளம் - கிண்ணம். கிண்ணத்தில் மதுவேந்தல் : சீவக. 1986. மதுமகிழ்ந்து அனந்தர் கூர - அம்மதுவை உண்டலால் மயக்கம் மிகுதலின். பிணையனுளைச் சேரின், நுசுப்புப் பேதுறுமென்றெண்ணிக் குவளைப்போதை ஒரு கையி னுலருளி ; குவளைப்போதை யருளியது மோந்து இன்புறுதற்பொருட் டெனினுமாம் ; பதிற். 42 : 10-11, உரையைப் பார்க்க. பிணையனுள் : சுரமஞ்சரி. துணை அமை - ஒப்பில்லாத. தோன்றல் : சீவகன் ; எழு வாய்.

மிகுதலின், இப்பிணையனுளைப் புணரின் இடைமுரியுமென்றெண்ணிக் கூந்தற்குப் போதை ஒருகையாலே கொடுத்து மார்புற முயங்கிற் புணர்ச்சிவேட்கை மிகுமென்று சிறிது நீங்கித் தோளால் நெகிழப் புல்லி னுனென்க.

'அஞ்சொற், பிணையலு நறிய சேர்த்தி' என்பது பாடமாயின், புகழ் மாலை சூட்டியென்க. (அகூ)

2084. (க) மல்லலங் கங்கை போலும் பலர்முயங் கார மார்பிற், புல்லன்மின் போமின் வேண்டா வென்றவள் புலந்து நீங்க, முல் லையங் கோதை யொன்றும் பிழைப்பிலேன் முனிய னீயென், றல்ல லுற் றரத்த மார்ந்த சீறடி தொழுதிட் டானே.

2085. (உ) வட்டிகைப் பாவை நோக்கி மகிழ்ந்திருந் திலிரோ வென்னுத், தொட்டிமை யுருவந் தோன்றச் சுவரையே பொருந்தி நின்ருய், கட்டழ குடைய நங்கை நீயெனக் கருதிக் கண்ணுன், ஒட்டியா னேக்கிற் றென்ரு னொருபிடி நுசுப்பி னுட்கே.

2086. (ங) நுண்டுகி னெகிழ்ந்த வல்குன் மணிபரந் திமைப்ப நொந்து, கண்களை யிடுகக் கோட்டிக் காமத்திற் செயிர்த்து நோக் கிக், குண்டல மிலங்கக் கோதை கூந்தலோ டவிழ்ந்து சோர, ஒண்டொடி யூடி நின்ரு ளொளிமணிப் பூங்கொம் பொப்பாள்.

---

2084. மார்பினுற் புல்லன்மின். வேண்டா - எம்மைத் தீண்ட வேண்டா. அவள் : சுரமஞ்சரி. புலந்து - ஊடல்கொண்டு. கோதை : சுர மஞ்சரி ; விளி. ஒன்றும் - சிறிதும். பிழைப்பு - தவறு. நீ முனியல் என்று. அல்லலுற்று - துன்பமடைந்து. அடி - சுரமஞ்சரியின் பாதத்தை.

2085. வட்டிகைப்பாவை - வட்டிகையால் எழுதிய பாவைபோல் வாள் ; சுரமஞ்சரி. தொட்டிமை உருவம் தோன்ற அதை நோக்கி மகிழ்ந் திருந்திலிரோ என்னு ; தொட்டிமை உருவம் : சீவக. 1255, அடிக். தோன்ற - பளிங்குச் சுவரிலே தோன்ற. என்னு - என்று சுரமஞ்சரி கூறி ஊடல் கொள்ள. நுசுப்பினுட்கு, நங்கை, யான்கண்ணுன் ஒட்டி நோக்கிற்று, சுவரையே பொருந்திநின்ற நின்நிழலைக் கட்டழகுடைய நீ யெனக் கருதி என்ருன் ; ஒருபிடி நுசுப்பினுள் : சீவக. 613, அடிக். நங்கை : சுரமஞ்சரி ; விளி. நோக்கிற்று - நோக்கியது.

2086. அல்குலிடத்து மணிபரந்திமைப்ப ; மணி - மேகலையிற் கட் டிய மணிகள். கண்களை இடுகக் கோட்டி : " மழைக்கண், கொழுங்கடை யிடுக நோக்கிமணி பிறழ" (பெருங். 1. 35 : 186-7) ; இடுகக் கோட்டி - சுருங்கப் பார்த்து. காமத்தாலே செயிர்த்து நோக்கி ; செயிர்த்து - கோபித்து. கோதை - பூமாலை. பூங்கொம்பொப்பாளாகிய ஒண்டொடி ஊடிநின்ருள் ; ஒண்டொடி : சுரமஞ்சரி ; எழுவாய்.

இவை மூன்றும் ஒருதொடர்.

(இ - ள்.) கொம்பொப்பாளாகிய ஒண்டொடி, அவன் மார்புற முயங்காமையின், பிறர் முயங்க வைத்தானென்று கருதி, பலரும் கங்கைபோல் ஆயிர முகமாக முயங்குமார்பினால் இனிப் புல்லன்மின்; தீண்ட வேண்டா; போமினென்று அவள் புலந்து நீங்கிநிற்ப, அவளுருவம் பளிக்குச்சுவரிலே எறித்ததனை அவளேயென்று கருதி, கோதாய்! யான் பிழைப்பிலேன்; நீ முனியலென்று அடியைத் தொழுதான்; அதனால், எம்மையே தொழுதானென்று புலவிதீராது பின்னும் வட்டிகைப்பாவை போல்வாள், என்னுருவம் பளிங்கிலே தோன்றலிற் சிறிது [1] பாடமிக்குத் தோன்ற அதனிடத்து நன்மையே நோக்கி மகிழ்ந்திருந்திலிரோவென் றுக் காமந்தாலே மனநொந்து செயிர்த்துக் கண்களை இடுகக் கோட்டி நோக்கி யிமைப்ப இலங்கச் சோர ஊடி நின்றாள்; நின்ற அந்நுண்ணு சுப்பிறைட்கு, நங்காய்! யான் கண்ணால் ஒட்டி நோக்கிற்று, நீ பளிக்குச் சுவரிலே பொருந்திநின்றாயாதலின், நின்னிழலைக் கட்டழகுடைய நீ யென்று கருதிக்காணன்றானென்க.

நம்மின் மிக்க வடிவு கண்டு விரும்பினானென்று ஊடினாள்.

(உ) [2] 'என்ன' என்று பாடமாயின், என்று கூறியூடினாளென்க.

(௬௦-௬௨)

2087. கிழவனாய்ப் பாடி வந்தென் கீழ்ச்சிறை யிருப்பக் கண் டேன், எழுதிய பாவை நோக்கி யிமையவித் திருப்பக் கண்டேன், ஒழிகவிக் காம மோரூ ரிரண்டடிக்க மாயிற் றென்றாங், கழுதகண் ணீர்கண் மைந்த னாவிபோழ்ந் திட்ட வன்றே.

(இ - ள்.) அங்ஙனந் தேற்றவும் கொண்டது விடாத குணமுடைமை யின், கேளாளாய், கிழவனாய் என்காவலிடத்தே வந்து பாடியிருப்ப அது கண்டேன்; பளிங்கிற்றோற்றிய பாவையை விரும்பி ஒருபடத்திலே யெழுதவேண்டி இமையாது நோக்கியிருப்பவும் கண்டேன்; ஓரிடத்தே இரண்டுமுறைமை நிகழ்ந்ததாதலால், ஈண்டு நிகழ்த்துகின்ற காமத்தை யொழிகவென்று அழுத கண்ணீர்கள் மைந்தனுயிரைக் கெடுத்தவென்க.

---

(உரை) [1] பாடம் - சோதி. [2] 'என்ற' (சீவக. 2085) என்ற இடத்து 'என்ன' என்று பாடம் கொள்க.

2087. கிழவனாய் என்கீழ்ச்சிறை வந்து பாடியிருப்பக் கண்டேன்; சிறை - காவலிடம். பாவையை எழுதிய நோக்கி இமையவித்திருப்பக் கண் டேன்; பாவையை - பளிங்கிற்றோன்றிய என்னிழலாகிய பாவையை. எழுதிய - எழுதும்பொருட்டு. ஓரூரில் இரண்டு அடிக்க மாயிற்றாதலால் இக்காமம் ஒழிக என்று; அடிக்கம் - முறைமை; "அடிக்கஞ்சுருக்கேல்" (ஆத்திசூடி); "ஒரு ரிரண்டடிக்கங் காட்டினையால்" (பதினோராந் திரு முறை, பொன்வண். 73). என்று - என்று கூறி. சுரமஞ்சரி அழுத கண் ணீர்கள். மைந்தன்: சீவகனது.

நீர்களென்றதனை, "என், பாராட்டைப் பாலோ சில" (கலித். 85) என்றாற் போலக்கொள்க. (கூ௩)

2088. அலங்கரு தவிழ வஞ்செஞ் சீறடி யணிந்த வம்பூஞ்
சிலம்பின்மேற் சென்னி சேர்த்திச் சிறியவர் செய்த தீமை
புலம்பலர் பொறுப்ப ரன்றே பெரியவ ரென்று கூறி
இலங்குவேற் கண்ணி யூட லிளையவ னீக்கி னானே.

(இ - ள்.) இளையவன், இது தீரும் உபாயநாடி, வேற்கண்ணி யூடலை, சிறியவர் செய்த தீமையைப் பெரியவர் வெறாராய்ப் பொறுப்ப ரல்லவோவென்று கூறி, சிலம்பின்மேலே தாதவிழும்படி தன்சென்னி யைச் சேர்த்தி நீக்கினானென்க. (கூ௪)

2089. யாழ்கொன்ற கிளவி யாட னமிழ்துறழ் புலவி நீக்கிக், காழின்றிக் கனிந்த காமக் கொழுங்கனி நுகர்ந்து காதற், றாழ் கின்ற தாம மார்பன் றையலோ டாடி விள்ளான், ஊழ்சென்ற மதி யம் வெய்யோ னொட்டியொன் றாய தொத்தான்.

(இ - ள்.) காதலால் தங்குகின்ற சீவகன், கிளவியாளது புலவியை நீக்கி அவளோடே கூடி நீங்கானாய் விதையின்றிப் பழுத்த காமமாகிய கனியை நுகர்ந்து முறையானிறைந்த உவவுமதியை வெய்யோன் பொருந்தி ஒன்றான தன்மையை யொத்தானென்க. (கூ௫)

---

2088. அடி - சுரமஞ்சரியின் பாதம். அடியில் அணிந்த சிலம்பின் மேல், தன் அலங்கலின் தாது அவிழும்படி சென்னியைச் சேர்த்தி; சேர்த்தி - அணிவித்து. சிறியவர் செய்த தீமையைப் பெரியவர் புலம்பல ராய்ப் பொறுப்பரன்றே என்று கூறி; "பொறுப்பரன் றேபெரி யோர்சிறு நாய்கடம் பொய்யினையே" (திருவா. நீத்தல். 6); "பேதையர் பிழைத் தது பொறுத்தல் வேண்டுமால்" (சூளா. அரசியற். 80); "பிழைத்தது பொறுத்த லென்றும் பெரியவர் கடனே யென்பர்" (கம்ப. அகலிகை. 80). புலம்பலர் - வெறுப்பில்லாதவராய்; (பி - ம்.) 'புலம்பலர் பொறும்பர் பொய்தீர்.' கண்ணியது ஊடலை; கண்ணி: சுரமஞ்சரி. இளையவன்: சீவகன்.

2089. யாழ் கொன்ற கிளவியாள் - வீணையினிசையை அழித்த இனிய சொல்லையுடைய சுரமஞ்சரி. அமிழ்துறழ் புலவி - அமிழ் தத்தை ஒத்த இனிய ஊடல்; ஊடல் இனியதென்பது: சீவக. 1378, 1996. காழ் - விதை. கனிந்த - பழுத்த. காழின்றி............கனி: குறள், 1191. காதலால் தாழ்கின்ற மார்பன்: சீவகன்; தாழ்தல் - தங்குதல். தையலோடு ஆடி விள்ளான் - சுரமஞ்சரியோடு கூடி நீங் காதவனாய். ஊழ் - முறை. மதியத்தை வெய்யோன் ஒட்டி ஒன்றாய தொத்தான்; "வெங்கதிர்க் கனலியுந் தண்கதிர் மதியமும் தங்கதிவழு

2090. பச்சிலைப் பட்டு முத்தும் பவளமு மிமைக்கு மல்குல், நச்சிலை வேற்கண் மாதர் நகைமுக முறுவன் மாந்தி, இச்சையுங் குறிப்பு நோக்கி யெய்வதே கரும மாகக், கைச்சிலை கணையோ டேந்திக் காமனிக் கடையைக் காப்பான்.

பச்சிலைப்பட்டு - பசிய இலைத்தொழிலையுடைய பட்டு. மாந்தி - மாந்த.

(இ-ள்.) அல்குலையும் கண்ணையுமுடைய மாதரது முறுவலை அவன் மாந்தும்படி அவனினைவையும், அவண் முகத்திற் குறிப்பையு நோக்கி, எய்வதே தனக்குத் [1] தொழிலாகக் கையிலே வில்லை அம்புடனே யேந்தி இவ்வாயிலை இப்பொழுது காப்பான் காமனே, வேறொருவனல்லனென்று தேவர்கூறினாரென்க. (௬௬)

2091. கடிப்பிணை காது சேர்த்திச் சிகழிகைக் காத நாறத்
தொடுத்தலர் மாலை சூட்டிக் கிம்புரி முத்த மென்றோள்
அடுத்தணிந் தாகஞ் சாந்தி னணிபெற வெழுதி யல்குல்
உடுத்தபொற் கலாபந் தைவந் தொளிவளை திருத்தி னானே.

---

வித் தலைப்பெய்தாற்போலவுந்தலைப் பெய்து'' (இறை. 2, உரை); ''மதியமு ஞாயிறுங் கதிதிரிந் தோடிக், கடனிற விசும்பி னுடனின் றுங்குப்......இருவரு மவ்வழிப் பருகுவனர் நிகழ'' (பெருங். 1. 32 : 22-7); ''அஞ்சுடர்நீள் வாண்முகத் தாயிழையு மாறிலா, வெஞ்சுடர் நீள் வேலானும் போதரக்கண் டஞ்சி, ஒருசுடரு மின்றி யுலகுபா ழாக, இருசுடரும் போந்தனவென் றார்'' (திணைமாலை. 71). சுரமஞ்சரிக்கு மதியமும் சீவகனுக்குச் சூரியனும் உவமைகள்.

2090. நச்சு இலைவேல் - விடந்தோய்த்த இலைபோற் கூரிய வேல். மாதரது நகைமுகத்துத் தோன்றிய முறுவலை மாந்தி; மாதர் : சுரமஞ்சரி. மாந்தி=மாந்த - சீவகன் உண்ணும்படி. இச்சையும் - சீவகனது வேட்கையையும். குறிப்பும் - சுரமஞ்சரியது முகத்திற்குறிப்பையும். கருமம் - காரியம். சிலையைக் கணையோடு ஏந்தி இக்கடையைக் காப்பான் காமனே; ''விரைமலர் வாளியொடு......திரிதர'' (சிலப். 4 : 82-3); ''பூமென் கணையும் பொருசிலையுங் கைக்கொண்டு, காமன் றிரியுங் கரு வூரா'' (சிலப். 5 : 49, அடியார். மேற்.); பெருங். 1. 54 : 138.

(மேற்.) அடி, 4 : சிலப். 4 : 77-84, அடியார்.

(உரை) [1] (பி - ம்.) 'தொழிலாதலாலே.'

2091. காதிலே கடிப்பிணையைச் சேர்த்தி; சீவக. 295, அடிக். ; 1323; பெருங். 1. 34 : 199. கடிப்பிணை : காதிலணியும் ஒருவகை அணி. சிகழிகையில் மாலைசூட்டி; சிகழிகை - முடி. தோளில் கிம்புரி வடிவமுள்ள முத்து மாலையை அணிந்து; சீவக. 170, அடிக். ; கிம்புரி - மகரவாய்; நெடுநல். 95-7, ந. அடுத்து - சேர்த்து. ஆகத்தைச் சாந்தால் எழுதி. அல்குலை உடுத்த கலாபத்தை; உடுத்த - சூழ்ந்த. தைவந்து - தடவி.

(இ - ள்.) பிரியக்கருதி, காதிலே கடிப்பிணையையிட்டு, முடியிலே மாலையைச்சூட்டி, தோளிலே கிம்புரி வடிவான முத்தத்தைச்சேர்த்தி அணிந்து, ஆகத்தைச் சாந்தாலே எழுதி, அல்குலைச் சூழ்ந்த கலாபத்தைத் தைவந்து வளையைத் திருத்தினானென்க. (கூஎ)

2092. இலங்குவெள் ளருவிக் குன்றத் தெழுந்ததண் டகரச் செந்தீ
நலங்கிள ரகிலுந் தேனுங் கட்டியு நன்கு கூட்டிப்
புலம்பற வளர்த்த வம்மென் பூம்புகை யமளி யங்கண்
விலங்கர சனைய காளை வெள்வளைக் கிதனைச் சொன்னான்.

(இ - ள்.) குன்றிலெழுந்த தகரவிறகிற்றீயிலே அகின்முதலியவற்றைக் கூட்டியிட்டுக் குற்றமற வளர்த்த புகையினையுடைய அமளிக்கண்ணே யிருந்து சிங்கவேற்றையொத்த காளை சுரமஞ்சரிக்கு இதனைக் கூறினானென்க. (கூஅ)

2093. கருமநீ கவல வேண்டா கயற்கணாய் பிரிவல் சின்னாள்,
அருமைநின் கவினைத் தாங்க லதுபொரு ளென்று கூறப்,
பெருமநீ வேண்டிற் றல்லால் வேண்டுவ பிறிதொன் றுண்டோ,
ஒருமைநின் மனத்திற் சென்றே னுவப்பதே யுவப்ப தென்றாள்.

(இ - ள்.) கயற்கண்ணாய்! நீ கவலவேண்டா; யான் கூறுகின்ற காரியம் யாதெனின், சிலநாள் நின்னைப்பிரிவேன்; பிரிந்தால் நின் கவினைத்தாங்குவாயாக; அஃது அருமையையுடைய பொருள்காணென்று கூற, பெரும! நீ விரும்புவதன்றி யான்விரும்புவது வேறொன்றுண்டோ, யான் ஒரு படிப்பட்ட நின்னுடைய மனம்போலே ஒழுகினேனாதலின், நின்மனமுவப்பதேகாண் என்மனமுவப்பதென்றாளென்க.

தாங்கல் : அல்லீற்று வியங்கோள். பொருள் - காரியம். வேண்டுவ : ஒருமை பன்மைமயக்கம். (கூகூ)

2092. தகரச்செந்தீ - தகரவிறகாலாக்கின தீயில்; தகரம் - ஒருவகைவாசனைமரம். கட்டி - நேர்கட்டி யென்னும் வாசனைப் பொருள்; சீவக. 534, அடிக். புலம்பு அற - குற்றங்கெட. அம் மென் புகை - அழகிய மெல்லிய புகை. புகை ஊட்டப்பெற்ற அமளியிடத்து. அடி, 1-3: சீவக. 349, அடிக். விலங்கரசு : சிங்கம். காளை : சீவகன். வெள்வளைக்கு : சுரமஞ்சரிக்கு.

2093. கயற்கண்ணாய், நீ கவலவேண்டா; கருமம்; சின்னாள் பிரிவல்; கருமம் - யான் கூறும் காரியம் யாதென்றால். பிரிவல் - பிரிவேன். நின்கவினைத் தாங்கல்; தாங்கல் - தாங்குவாயாக. அஃது அருமையையுடைய பொருள் என்று சீவகன் கூற. பெரும : விளி; என்றது சீவகனை. வேண்டிற்று - விரும்புவது. ஒருமையைக் கொண்ட நின்மனம்போலச் சென்றேனாதலால்.

2094. நாணொடு மிடைந்த தேங்கொ ணடுக்குறு கிளவி கேட்டே
பூண்வடுப் பொறிப்பப் புல்லிப் புனை நலம் புலம்ப வைகேன்
தேன்மிடை கோதை யென்று திருமக னெழுந்து போகி
வாண்மிடை தோழர் சூழத் தன்மனை மகிழ்ந்து புக்கான்.

**(இ - ள்.) அவள், அங்ஙனங்கூறிய நாணொடு மிடைந்த கிளவியைக் கேட்டு, கோதாய்! நின்னலம் புலம்ப வைகேனென்று புல்லிச் சீவகன் போய்த் தோழர் சூழச்சென்று தன்மனையிலே புக்கானென்க.**

பிரிவாற் சிறிது நடுக்குற்ற கிளவி. (௧௦௦)

2095. புரவியுங் களிறு நோக்கிப் பொன்னெடுந் தேரு நோக்கி
இரவினும் பகலு மோவா தென்மகன் யாண்டை யானென்
றழுதகண் ணீரி னாலே கைகழீஇ யவலிக் கின்ற
மெழுகெரி முகந்த தொக்குந் தாய்மெலி வகற்றி னானே.

**(இ - ள்.) புரவிமுதலியவற்றை நோக்கி, இவற்றை விட்டு என்மகன் எவ்விடத்திருக்கின்றானென்று இரவும் பகலும் ஓவாது அழுத கண்ணீ ராலே கைகழுவி வருந்துகின்ற தாயது, மெழுகு நெருப்பை முகந்தாற் போல நெஞ்சுருகுகின்ற வருத்தத்தை நீக்கினானென்க.**

[1] இருடிகூற்றைச் சிந்தித்திருத்தலின், கந்துகன் மெலிவையகற்றினா னெனல் வேண்டாவாயிற்று. (௧௦௧)

2096. ஒற்றரு முணர்த லின்றி யுரையவித் துறுப்பி னாலே, சுற்றத்தார்க் குரைப்ப வீண்டித் தொக்குடன் றழுவிக் கொள் வார், எற்றுவா ரினைந்து சோர்வார் நம்பியோ நம்பி யென்னா, உற்றுடன் றழுத கண்ணீர் காலலைத் தொழுகிற் றன்றே.

2094. மிடைந்த - நெருங்கிய. தேம் கொள் - இனிமைகொண்ட. கிளவி - சுரமஞ்சரியின் சொல்லை. தன்பூணினது வடு சுரமஞ்சரிமீது பொறிப்பப் புல்லி; பெருங். 2. 16 : 87 ; பூண் - ஆபரணம். கோதை, நலம் புலம்ப வைகேனென்று கூற ; புலம்ப - தனித்து வருந்தும்படி. வைகேன் - பிரிந்திரேன். கோதை : சுரமஞ்சரி ; விளி. திருமகன் : சீவகன். மனையிற்புக்கான்.

2095. ஓவாது - இடைவிடாமல். என்மகன் என்றது சீவகனை. கழீஇ - கழுவி. அவலிக்கின்ற - வருந்துகின்ற. அவலிக்கின்ற தாயி னுடைய மெழுகு எரி முகந்ததொக்கும் மெலிவை அகற்றினான் ; தாய் : சுநந்தை. மெலிவு - வருத்தம்.

(உரை) [1] இருடி கூறியது : சீவக. 1124 - 1131.

2096. ஒற்றர் - அரசனால் ஒற்றறிய விடப்பட்டவர்கள். உரை யவித்து - தன் வாயினாலொன்றுங் கூறாமல். உறுப்பினால் - தன் அங்கங்

**(இ - ள்.)** ஒற்றரும் உணர்தலின்றாக உரையைத்தவிர்த்து உறுப்பாலே சுற்றத்தார்க்கு வரவையுணர்த்த, அவர் ஈண்டிச் சேரத் தழுவிக் கொள்வாராய், எற்றுவாராய்ச் சோர்வாராய்த் தொக்கு, நம்பியோ! நம்பியோ! என்று அழுத கண்ணீர் காலையிழுத்து ஒழுகிற்றென்க.

இஃது உவகைக்கலுழ்ச்சி. (௧0௨)

2097. கந்துகன் கழறக் கல்லென் கடற்றிரை யவிந்த வண்ணம், வந்தவர் புலம்பு நீங்க மறைபுறப் படுமென் றெண்ணி, எந்தைதா னிறந்த நாளின் றெனநக ரியம்பி யாரும், அந்தமி லுவகை தன்னு லகங்குளிர்ப் பெய்தி னாரே.

**(இ - ள்.)** இவ்வழுகையால் இம்மறை புறப்படுமென்றெண்ணிக் கந்துகன் கழறுகை, கடற்றிரை கல்லென்கின்ற ஒலியவிந்தாற்போல வந்த சுற்றம் அழுகையைத் தவிர, பின்னரும் அந்தமிலுவகையாலே, [1] நாயனார் போன நாள் இன்றென்று அகத்திலுள்ளோரெல்லாரும் கூறி அழுத பின்பு அகமகிழ்ச்சி யெய்தினாரென்க. (௧0௩)

2098. செங்கயன் மழைக்கட் செவ்வாய்த் தத்தையு மகிழ்ந்து தீஞ்சொல், எங்கையைச் சென்று காண்மி னடிகளென் றிரந்து கூற, மங்கல வகையிற் சேர்ந்து மதுத்துளி யருத மாலை, கொங்கலர் கண்ணி சேர்த்திக் குங்கும மெழுதி னானே.

களினாலே. உரைப்ப - தன்வரவை உணர்த்த. ஈண்டி - உறவினர்கள் செறிந்து. கொள்வார் - கொள்வாராய். எற்றுவார் - புடைத்துக் கொள்வாராய். என்னு - என்றுகூறி. கால் அலைத்து - காலையிழுத்து.

2097. மறை புறப்படுமென்றெண்ணிக் கந்துகன் கழற, திரையிடத்துக் கல்லென்னு மொலி அவிந்தவண்ணம் வந்தவர் புலம்பு நீங்க; மறை - சீவகன் இராசமாபுரத்து வந்துள்ளான் என்னும் இரகசியம். புறப்படுதல் - வெளிப்படுதல். கழற - அழுபவர்க்கு இடித்துக் கூறுதலால். புலம்பு நீங்க - அழுகையை அகற்ற. உவகை தன்னால், எந்தை இறந்த நாள் இன்று என நகரில் இயம்பி, யாரும் அகம் குளிர்ப்பெய்தினார். எந்தை : கந்துக்கடனின் தந்தை. சீவகனுக்காகச் செய்த ஆரவாரத்தை மறைக்கும்பொருட்டு 'எந்தையிறந்த நாள் இன்று என' அழுதனர்.

(உரை) [1] நாயனார் : கந்துக்கடனுடைய தந்தை.

2098. தத்தை : காந்தருவதத்தை. மகிழ்ந்து - சீவகனைக்கண்டு உவந்து. அடிகள், எங்கையைச் சென்று காண்மின் என்ற தீஞ்சொல்லால் கூற ; அடிகள் : சீவகன் ; விளி. எங்கையென்றது குணமாலையை. கூற- தத்தை சொல்ல. சேர்ந்து, மாலையையும் கண்ணியையும் மங்கலவகையினாற் சேர்த்தி ; சேர்ந்து - குணமாலையை அடைந்து ; சேர்த்தி - குணமாலைக்கு அணிந்து.

(இ - ள்.) இவனைக்கண்டு தத்தையுமகிழ்ந்து, அடிகளே, சென்று குணமாலையைக் காண்மினென்று புலவியில்லாத தீஞ்சொல்லாலே இரந்துகூற, அவனுஞ் சேர்ந்து மாலையையும் கண்ணியையும் மங்கலக் கூற்றுலே முதற்சேர்த்திக் குங்குமத்தை அணிந்தானென்க.

[1] தேவன், "பன்னிருமதியின்" (சீவக. 1220) என்றதனைத் தானுணர்தலிற் [2] றனக்குக்கூட்டமின்மையுணர்தலானும், [3] அவள்வருத்த மிகுதியானும் இங்ஙனமிரந்து கூறினாள். குணமாலை, கணவன் வருதலின் மங்கலவணிக்கு உடம்பட்டுப் பின்பு கூட்டத்திற்கு உடம்படாது கூறுகின்றாள். (க0சு)

2099. தீவினை யுடைய வென்னைத் தீண்டன்மி னடிகள் வேண்டா
பாவியே னென்று நொந்து பரிந்தழு துருகி நையக்
காவியங் கண்ணி யொன்றுங் கவலல்யா னுய்ந்த தெல்லாம்
நாவியே நாறு மேனி நங்கைநின் றவத்தி னென்றான்.

[1] இவளைத் தீண்டிச் சீவகன் கொலையுண்டானென்று உலகங்கூறலின், தீவினையுடைய வென்னையென்றாள். தான் விலக்கவும் இவன் தீண்டலின், பின்னும் வேண்டாவென்றாள். இவனைப் பெற்றுவைத்தும் இங்ஙனம் நீக்கிக் கூறவேண்டலிற் பாவியேனென்றாள்.

(இ - ள்.) 'அடிகளே! தீண்டன்மின்; வேண்டா; பாவியேன்' என்று அன்புற்று அழுது நையாநிற்க. கண்ணி, கவலல்; யான் எல்லாவற்றையும் பிழைத்தது, நீ செய்துவைத்த நல்வினையாலேகாணென்றானென்க.

"நந்ததிண்டேர்.........பண்" (சீவக. 1088) என [2] ஆசிரியனைத் தப்பப் புகுந்ததனையும், "பெண்ணிடர் விடுப்ப" (1752) என வந்த தன்மையையும், தான் கட்டியங்காரன் [3] பரிகரத்தைக் கொல்வேமோ வென்று நினைத்ததனையுங்கருதி 'எல்லாம்' என்றான். (க0௬)

---

(உரை) [1] தேவன் : சுதஞ்சணன். [2] தனக்குஎன்றது காந்தருவதத்தையை. [3] அவள் : குணமாலை.

2099. அடிகள், என்னைத் தீண்டன்மின், வேண்டா பாவியேன் என்று; அடிகள் : சீவகன்; விளி. என்று - எனக் குணமாலை கூறி. பரிந்து - வருந்தி. நைய - நைந்துநின்றுளாக. கண்ணி : குணமாலை; விளி. ஒன்றும் கவலல் - சிறிதும் வருந்தாதே. நாவி - கஸ்தூரி. மேனியையுடைய நங்கையாகிய நினது. யான் எல்லாவற்றிலும் உய்ந்தது, நினது தவத்தினுல் என்றான்.

(உரை) [1] (பி - ம்.) 'இவள்காலைத்.' [2] ஆசிரியனைத் தப்பப் புகுந்தது : 'கட்டியங்காரனிடத்து ஓர் யாண்டிறுதியளவாக அழற்சியின்மை வேண்டுவல்' என்று அச்சணந்தி யாசிரியன் கூறிய கூற்றைத் தவறிக் கட்டியங்காரனிடத்துக் கோபம் கொண்டமை; சீவக. 393. [3] பரிகரம் : நாற்புறத்தும் தொழில் செய்வோர் தொகுதி.

2100. அன்னமென் னடையு நோக்குஞ் சாயலு மணியு மேரும், மின்னினுண் ணுசுப்பும் வெய்ய முலைகளு முகமுந் தோன்ற, என்மனத் தெழுதப் பட்டா யாயினு மரிவை கேளாய், உன்னையான் பிரிந்த நாளோ ரூழியே போன்ற தென்றான்.

அணி - அழகு. ஏர் - எழுச்சி.

(இ - ள்.) என்று பின்னும், அரிவாய்! கேளாய்; நடைமுதலியன வெல்லாம் என்மனத்தெழுதப்பட்டு நீங்காதிருந்தாயாயினும் நின்னை மெய்யுறு புணர்ச்சியின்றிப் பிரிந்த ஒருநாள் ஒரூழிக்காலம்போலே யிருந்ததுகாண்; இன்னும் என்னைவருத்தாதேகொள்ளென்றானென்க. (கοசு)

2101. இளையவண் மகிழ்வ கூறி யின்றுயி லமர்ந்து பின்னாள்
விளைபொரு ளாய வெல்லாந் தாதைக்கே வேறு கூறிக்
கிளையவர் சூழ வாமான் வாணிக னாகிக் கேடில்
தளையவிழ் தாம மார்பன் றன்னகர் நீங்கி னானே.

(இ - ள்.) தாமமார்பன், இங்ஙனம் அவள் மனமகிழ்வனவற்றைக் கூறி அவளைக்கூடி மற்றைநாள் தாதைக்கு மேல்முடியுங் காரியங்களைத் துணிந்து கூறிச் சுற்றம் சூழத் தாவுங்குதிரையைக் கொள்ளும் வாணிகனாகி அதற்கு ஒரு வேடங்கொண்டு தன்மனையினின்றும் போனானென்க. 'பின்னாள்' என்று ஈண்டுக் கூறலின், "அன்றைப்பகலே........... வந்தடைவன்" (சீவக. 1932) என்றல் ஆகாதென்றுணர்க. (கοஎ)

க - சுரமஞ்சரியாரிலம்பகம் முற்றிற்று.

ஆகக்கவி, உகοக.

---

2100. என்மனத்து எழுதப்பட்டாயென்றது சீவகன் குணமாலையை இடையறாது நினைத்திருந்தமையை உணர்த்தியது. அரிவை : குணமாலை; விளி.

2101. இளையவள் : குணமாலை. மகிழ்வ - மனமகிழ்வனவற்றை. (பி - ம்.) 'மகிழ்ந்து கூறி.' பின்னாள் - மற்றைநாள். விளைபொருள் - மேல் விளையுங் காரியத்தை. தாதைக்கு : கந்துக்கடனுக்கு. வேறு கூறி - துணிந்து சொல்லி. கிளையவர் - சுற்றத்தார். வாமான் வாணிகனாகி - குதிரைகொள்ளும் வணிகரது வேடங்கொண்டு. மார்பன் : சீவகன்; எழுவாய். தன் நகரினின்றும் நீங்கினான்.

## பத்தாவது

# மண்மகளிலம்பகம்

2102. குடம்புரை செருத்தற் குவளைமேய் கயவாய்க் குவிமுலைப் படர்மருப் பெருமை, நடந்தவா யெல்லா நறுமலர் மரையி னிலைச் சொரிந்தவந் தீம்பால், தடஞ்சிறை யன்னங் குருகொடு நாரைப் பார்ப்பின மோம்புதண் மருதம், மடங்கல்போற் றிறலார் மாமணி கறங்க வளவயற் புள்ளெழக் கழிந்தார்.

செருத்தல் மடி. கயவாய் - பெரிய வாய். பால் : எழுவாய்.

(இ - ள்.) திறலார், செருத்தன் முதலியவற்றையுடைய எருமை தான் போனவிடமெல்லாம் தாமரையின் இளைய இலையிலே சொரிந்த பால், அன்னமும் குருகும் நாரையுமாகிய பார்ப்பினத்தை வளர்க்கும் மருதநிலத்தே மணிகறங்குதலிற் புள்ளெழப் போயினரென்க.

[1] இவை பாலுண்டல் நிலப்பண்பு. (க)

2103. புரிவளை யலறிப் பூசலிட் டீன்ற பொழிகதிர் நித்தில முழக்கி, வரிவளை சூழும் வலம்புரி யினத்துட் சலஞ்சல மேய்வன நோக்கி, அரிதுணை ரன்னம் பெடையெனத் தழுவி யன்மையி னலமர லெய்தித், திரிதரு நோக்கந் தீதிலார் நோக்கி நெய்தலுங் கைவலத் தொழிந்தார்.

தீது - ஈண்டு வேட்கை.

---

2102. செருத்தல் - பால் தங்கிய மடி. கயம் - பெருமை. செருத் தலையும் வாயையும் முலையையும் மருப்பையும் உடைய எருமை. அடி, 1 : கூர்ம. குரியன் மரபு. 43; நைடதம், நாடு. 20. நடந்த வாய் - சென்ற இடம். மரையின் நாகிலை - தாமரையின் இளைய இலையில். எருமையின்பால் இலையில் சொரிதல் : "பைங்க ணெருமை படுகன் றோம்பிச், செருத்தல் செற்றிய தீம்பா லயல, உருவ வன்னமொடு குருகு பார்ப்பெழுப், பாசடைப் பிலிற்றும் பழனப் படப்பை" (பெருங். 1. 48 : 142 - 5). ஓம்பும் - பாதுகாக்கும். மருதம் - மருதநிலத்தை. திறலார் : சீவகன் முதலியவர். மணி கறங்குதலால் புள் எழ. கழிந்தார் - கடந்து சென்றார்கள்.

(உரை) [1] இவை : அன்ன முதலியன.

2103. புரிவளை - முறுக்கிய சங்கு. அலறி - நொந்து. பூசலிட்டு - முழங்கி. நித்திலம் - முத்து. வலம்புரியைக்காட்டிலும் சலஞ்சலம் சிறந்தது. அரிது உணர் அன்னம் - பாலையும் நீரையும் அரிதாக

(இ - ள்.) தீதிலார், புரிந்த வளை சூன்முதிர்ச்சியினாலே மெய்ந் நொந்து கூப்பிட்டு ஈன்ற முத்தையுழக்கி ஆயிரஞ்சங்கு சூழத்திரியும் வலம்புரியாயிரத்துக்குள்ளே சலஞ்சலமெய்வனவற்றை நோக்கிப் பாலை யும் நீரையும் பிரிக்கவல்ல அன்னம் பெடையென்று சென்று தழுவி அவையன்மையின் வருந்தி மறித்துப்போகின்ற நோக்கத்தைத் தாம் பார்த்துத் தனக்குரிய ஒழுக்கத்திடத்தின் நெய்தனிலத்தையும் போனா ரென்க. (உ)

2104. கோட்டிளங் கலையுங் கூடுமென் பிணையுங் கொழுங்கதிர் மணிவிளக் கெறிப்பச், சேட்டிளங் கொன்றைத் திருநிழற் றுஞ்சச் செம்பொறி வண்டவற் றயலே, நாட்டிளம் படியார் நகைமுகம் பருகு நல்லவர் போன்மலர் பருகும், மோட்டிள முல்லை மொய்ம் மலர்க் கான முருகுவந் தெதிர்கொள நடந்தார்.

(இ - ள்.) உயர்ந்த கொன்றைநிழலிலே மணிவிளக்கெறிப்பக் கலை யும் பிணையும் [1] துஞ்ச வண்டுகள் அக்கொன்றைக்கயலே நின்ற முல்லை மலர்களை மகளிர்முகத்தின் நகையைப் பருகும் ஆடவரைப் போலப் பருகுதற்குக் காரணமான முருகு எதிர்கொள்ள அம்முல்லைமலரை யுடைய கானத்தைப் போனாரென்க. (ங)

2105. குழவிவெண் டிங்கட் கோட்டின்மேற் பாயக் குளிர்புனல் சடைவிரித் தேற்கும், அழலவிர் சூலத் தண்ணலே போல வருவி நீர் மருப்பினி னெறியக், கழைவளர் குன்றிற் களிறுநின் றுடுங் கடிநறுஞ் சந்தனச் சாரல், இழைவளர் முலையார் சாயல்போற் றோகை யிறைகொள்பூங் குறிஞ்சியு மிறந்தார்.

---

உணர்ந்து பிரிக்கவல்ல அன்னம். சலஞ்சலத்தைப் பெடையன்ன மெனத் தழுவி. அன்மையின் - பெடையன்னமல்லாமையால். அலமரல் - மனச்சுழற்சி. திரிதரும் நோக்கம் - திரும்பிச் செல்கின்ற நோக் கத்தை. கைவலத்து நெய்தலும் ஒழிந்தார் - தனக்குரிய ஒழுக்கத் திடத்தையுடைய நெய்தனிலத்தையும் நீங்கினார்.

2104. கலை - ஆண்மான். பிணை - பெண்மான். கொன்றை நிழ லில் விளக்கெறிப்ப, கலையும் பிணையும் துஞ்ச; துஞ்ச - உறங்காநிற்க. பொறி - புள்ளி. அவற்றயலே - கொன்றைமரங்களினருகே. வண்டு, அயலே நாட்டிய முல்லை மலரை, இளம்படியாரது முகத்தைப் பருகும் நல்லவர்போலப் பருகுதற்குக் காரணமான முருகு எதிர்கொள்ள மலர்க் கானத்தை நடந்தார்; இளம்படியார் - மகளிர்; "இல்லிருக்கு மிளம்படி யார்" (சூளா. துறவு. 208); "இளம்படி யிவளுக் கென்னினைந் திருந் தாயிடவெந்தை யெந்தைபி ரானே" (பெரியதிரு. 2. 7 : 2); (பி - ம்.) 'இளம்பிடியார்.' நல்லவர் : ஆடவர். முருகு - வாசனை. இப்பாடலில் முல்லைநிலம் கூறப்பட்டது.

(உரை) [1] (பி - ம்.) 'துஞ்சும்படி.'

2105. புனல், திங்களது கோட்டின்மேற் பாயும்படி சடையை விரித்து ஏற்கும் சூலத்தண்ணல்; புனல் : கங்கைநீர். கோடு-நுனி. சூலத் தண்ணல் : சிவபெருமான். அருவிநீர் மருப்பினில் எறியும்படி களிறு குன்

(இ - ள்.) கங்கையினீர் இளையதாகிய பிறைக்கோட்டிலே வீழ ஒற்றைச் சடையை விரித்துநின்று ஏற்கும் இறைவனைப்போலே அருவி நீர் மருப்பிலே வீழக் களிறு குன்றிலே நின்றுடுஞ்சாரலிலே தோகைகள் தங்குதல் கொண்ட குறிஞ்சிநிலத்தையும் போனாரென்க.

இஃது இல்பொருளுவமை. [1]கங்கைக்குத்தலைப்பாகிய இமவானிற் பதுமையென்னும் பொய்கையில் நீர்விழுகின்ற தாழ்வரையில் உருத்திரப் படிமமிருத்தலின், 'சூலத்தண்ணல்' என்றார். (ச)

2106. ஊன்றலைப் பொடித்தாங் கனையசெஞ் சூட்டி ளொளி மயிர் வாரண மொருங்கே, கான்றபூங் கடம்பின் கவட்டிடை வளைவாய்ப் பருந்தொடு கவர்குரல் பயிற்றும், ஆன்றவெம் பாலை யழன்மிதித் தன்ன வருஞ்சுரஞ் சுடர்மறை பொழுதின், ஊன்றி னார் பாய்மா வொளிமதிக் கதிர்போற் சந்தன மொருங்குமெய் புதைத்தே.

ஆங்கென்றது முற்கூறிய [1]முல்லையும் குறிஞ்சியுஞ்சேர்ந்த இடத்தை. கவர்குரல் - இரைகளைக் கவர்ந்துகொள்ளுகைக்கு விரும்பு கின்ற குரல். வாரணமும் பருந்தும் பாலைநிலத்தினது வெப்பமிகுதியின் நாள்வழியிளைப்பால் ஓரிடத்திருந்தும் ஒன்றையொன்று நலியமாட்டா மையின், ஓரிடத்திருந்து கவர்குரல் பயிற்றுமென்றார். [2]வெம்மை : விகாரம்.

---

றில் நின்றுடும் சாரல் ; மருப்பு - தந்தம். எறிய - வீழ. சாரல் - மலைச்சார லில். இழை - ஆபரணம். முலையார் : மகளிர். தோகை : மயில். இறை - தங்குதல். குறிஞ்சியும் இறந்தார் - குறிஞ்சிநிலத்தையும் கடந்தார்.

(உரை) [1] கங்கைக்குத் தலைப்பில் 'கங்காகூடம்' என்று ஒரு சிறு மலையுண்டென்பர்.

2106. ஊன்தலை பொடித்தனைய - மாமிசம் தலையில் தோன்றினா லொத்த. சூட்டு - உச்சிக்கொண்டை. வாரணம் - கோழி. அடி, 1 : கூர்ம. பிலக்க. 40. கான்ற - பூக்களையுதிர்த்த ; (பி - ம்.) 'கான்றபூ மராவின்.' கவடு - கிளை. வாரணம் பருந்தொடு கவர்குரல் பயிற்றும் ; கவர்குரல் - விரும்புங் குரலை ; பெடையை யழைக்கின்ற குரலெனலு மாம் ; மலைபடு. 510, ந ; "கலவ மஞ்ஞை கவர்குரல் பயிற்றி" (பெருங். 1. 54 : 35). அழல் மிதித்தன்ன வெம்மை யான்ற பாலையாகிய சுரத்தை ; அழல் - தீயை. சுடர்மறை பொழுதின் - சூரியன் மறைகின்ற காலத்தே. மதிக்கதிர்போலும் சந்தனத்தே மெய்புதைத்து மாவை ஊன்றினார் ; சந்தனக்கலவை குளிர்ச்சியை உடைமையினால், மதிக்கதிர்போல் என்றார். புதைத்து - மறைக்கப்பட்டு. மா ஊன்றினார் - குதிரையை விரையச் செலுத்தினார்கள்.

(உரை) [1]முல்லையுங் குறிஞ்சியும் சேர்ந்த இடம் பாலையாதல், "முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து, நல்லியல் பழிந்து நடுங்குதுயர் றுறுத்துப், பாலை யென்பதோர் படிவங் கொள்ளும்" (சிலப். 11 : 64-6) என்பதனாலுமறியப்படும். [2] வெம்மை யென்பது வெம் எனக்

(இ - ள்.) ஊன் தலையிலே தோற்றினாலொத்த சூட்டினையுடைய வாரணம், வெம்மையாற் பூவையுதிர்த்த கடம்பிலிருக்கின்ற பருந்துடனே யிருந்து சேரக் குரலைப்பயிற்றும் அவ்விடத்து அழன்மிதித்தன்ன வெம்மையமைந்த பாலையாகிய சுரத்தை அந்திக்காலத்தே மதிபோலுஞ் சந்தனத்தே உடம்பு சேர மறையப்பட்டு மாவை விசையிலே செலுத்தினா ரென்க.

வெம்மைமிகுதியால், அந்திக்காலத்தே போனார். "நடுவ ணைந்திணை நடுவண தொழியப், படுதிரை வையம் பாத்திய பண்பே" (தொல். அகத்திணை. 2) என்று பாலைக்கு நிலமின்றென்றமையானும், "நடுவு நிலைத் திணையே நண்பகல் வேனிலொடு, முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே" (தொல். அகத்திணை. 9) என்றமையானும், அக்காலமன்றி இவர் செல்கின்ற காலம் முன்பனிதொடங்குகின்ற காலமாகவும் பாலை கூறியவாறு என்னையெனின், [3] காலம் பொதுவாய்த் தேயந்தோறும் வேறுபட்டிருக்கும்; சித்திரையும் வைகாசியும் குடகமலைக்குக் கார் காலத்தை யாக்கினாற்போல மார்கழித் திங்களும் இவர்போகின்ற தேயத் திற்கு முதுவேனிலாய் வெம்மையை விளைத்துப் பாலையையாக்கிற்று. இனி இமயத்தைச் சூழ்ந்தவிடம் தெய்வத்தினாணையால் எக்காலமும் மாறாமல் ஓரிடம் ஒருகாலமாயேயிருக்குமாதலின், அவ்விடத்தே இவர் போகின்றாரென்றுமாம். (௬)

2107. நிலையிலா வுலகி னின்றவண் புகழை வேட்டவ னிதியமே போன்றும், இலைகுலாம் பைம்பூ ணிளமுலைத் தூதி னின்கனித் தொண்டையந் துவர்வாய்க், கலைவலார் நெஞ்சிற் காமமே போன் றுங் கடவுளர் வெகுளியே போன்றும், உலைவிலார் நில்லா தொரு பகலுள்ளே யுருப்பவிர் வெஞ்சுரங் கடந்தார்.

இதுவும் அவ்விடத்தே அவர் போகின்ற கடுமை கூறிற்று.

கடைக்குறைந்தது. [3] 'ஓரோர் தேயத்திற்கு ஓரொருகாலம் மாறி நிகழ் தலின் வேற்றுப்புலம் படரவென்றார்' (சிலப். 14 : 120-25, அடியார்.)

2107. வேட்டவன் - விரும்பியவனது. வண்புகழ் - கொடையாற் பெறும் புகழ். அடி, 1 : "நில்லா மையே நிலையிற் றாகலின், நல்லிசை வேட்ட நயனுடை நெஞ்சிற், கடப்பாட் டாளனுடைப்பொருள் போலத், தங்குதற் குரியதன்று" (குறுந். 143 : 3-6). இலைகுலாம்பைம்பூண் : சீவக. 1371, அடிக். முலையாகிய தூதினையும், தொண்டைக்கனிபோலும் வாயினையுமுடைய கலைவலார்; கலைவலார் : பரத்தையர் : சிலப். 14 : 167, 22 : 138-9; மணி. 2 : 29. பெருங். 1. 35 : 84-6. கடவுளர் வெகுளியே போன்றும் - முனிவரது கோபம் கணத்திற்றோன்றி மறைதல் போலவும்; குறள், 29, பரிமேல். உலைவிலார் - கேடில்லாராகிய சீவகன் முதலியவர். ஒருபகல் - ஒரு முகூர்த்தம்.

(இ - ள்.) கேடிலார், தாழாதே ஒருமுகூர்த்தத்தே, புகழை விரும் பினவன் கையிற்பொருள் போமாறு போலேயும், பூணையுடைய முலை யாகிய தூதினையும் தொண்டைபோலும் வாயினையுமுடைய பரத்தையர் காமம் போமாறு போலேயும், இருடிகள்கோபம் போமாறுபோலேயும் சுரத்தைக் கடுகப்போனாரென்க.

கனி : முதற்கேற்ற அடை. கலைகளாவன : " வேத்தியல் பொது விய லென்றிரு திறத்துக், கூத்தும் பாட்டுந் தூக்குந் துணிவும், பண்ணி யாழ்க் கரணமும் பாடைப் பாடலும், தண்ணுமைக் கருவியுந் தாழ்தீங் குழலும், கந்துகக் கருத்து மடைநூற் செய்தியும், சுந்தரச் சுண்ணமுந் தூநீ ராடலும், பாயற் பள்ளியும் பருவத் தொழுக்கமும், காயக் கரணமுங் கண்ணிய துணர்தலும், கட்டுரை வகையுங் கரந்துறை கணக்கும், வட்டி கைச் செய்தியு மலராய்ந்து தொடுத்தலும், கோலங் கோடலுங் கோவை யின் கோப்பும், காலக்கணிதமுங் கலைகளின் றுணிவும், நாடக மகளிர்க்கு நன்கனம் வகுத்த, ஓவியச் செந்நா லுரைநூற் கிடக்கையும் " (2 : 18-31) என மணிமேகலையிற் கூறப்பட்டனவாம். (சு)

2108. புதுக்கலம் போலும் பூங்கனி யாலும் பொன்னிணர்ப் பிண்டியும் பொருந்தி, மதுக்கலந் தூழ்த்துச் சிலம்பிவீழ் வன போன் மலர்சொரி வகுளமு மயங்கிக், கதிர்த்ததண் பூணி கம்பு டாழ் பீலிக் கனைகுர லுரைவண் டானம், எதிர்த்ததண் புனல்சூ ழின்னதிக் கரைமே லிளையவ ரயாவுயிர்த் தெழுந்தார்.

(இ - ள்.) வேட்கோவரிடத்துப் புதுக்கலத்தையொக்கும் பொலிவு பெற்ற கனியையுடைய ஆலும் பிண்டியும் பொருந்தி, முன்னர்ச்செவ்வி கலந்து, பின்பு காம்பு கழலுதலிற் சிலம்பிவீழ்வனபோல மலரைச்சொரி கின்ற மகிழு மயங்கி, பூணியும் கம்புளும் சிறுசின்னம்போலும் செறிந்த குரலையுடைய நாரையும் வண்டானமும் எதிர்த்த நதிக்கரைமேலே இளை யவர் இளைப்பாறிப் போனாரென்க.

பூணி, கம்புளென்பன இறந்தவழக்கு. (எ)

---

2108. புதுக்கலம் - புதிய பானை ; ஆலங்கனிக்கு உவமை ; " புதுக் கலத் தன்ன கனிய வாலம் " (ஐங்குறு. 303). கனியையுடைய ஆலும். பிண்டி - அசோகு. மதுவைக் கலந்து ஊழ்த்து ; ஊழ்த்து - சொரிந்து. வகுளம் - மகிழம்பூ. பூணி - ஒரு பறவை ; பெருங். 1. 51 : 69. கம்புள் - சம்பங்கோழி. தாழ்பீலிக் கனை குரல் நாரை - சிறுசின்னம்போலும் செறிந்த குரலையுடைய நாரை ; " நாரை......பீலி தகைதரப் பிளிறும் " (ஆனைக்காப். நாடு. 84). (பி - ம்.) 'எதிர்த்தபூம் புனல்.' இளையவர் : சீவகன் முதலியோர். அயாவுயிர்த்து - இளைப்பாறி ; சீவக. 600, 2947, ந.

2109. அள்ளிலைப் பலவி னளிந்துவீழ் சுளையுங் கனிந்துவீழ் வாழையின் பழனும், புள்ளிவா ழலவன் பொறிவரிக் கமஞ்சூன் ஞெண்டினுக் குய்த்துநோய் தணிப்பான், பள்ளிவாய் நந்து மாமையும் பணித்துப் பன்மலர் வழிபடக் குறைக்கும், வெள்ள நீர்ப் படப்பை விதையம்வந் தடைந்தே வேந்தனுக் குணர்த்த முன் விடுத்தார்.

**(இ - ள்.)** செறிந்த இலையையுடைய பலவின் சுளையையும், வாழைப் பழத்தையும் புள்ளியையுடைத்தாய் ஆண்டு வாழும் அலவன், நிறைந்த சூலையுடைய பெடைக்குக் கொடுத்து அதன் வேட்கையைத் தணித்தற்கு நத்தையையும் ஆமையையுமிதித்து மலரை வழியாம்படி குறைக்கும் விதையத்தைச் சேர்ந்து வேந்தனுக்கு அறிவிக்கும்படி முன்னே ஆள் விட்டாரென்க. (அ)

2110. வீட்டிடந் தோறும் வில்லக விரல்போற் பொருந்திநின் றொருங்கெதிர் கொள்கென், றேட்டின்மேற் றீட்டித் திருவெழுத் திட்டாங் கிறைவனுந் தமர்களைப் பணிப்ப, நாட்டகத் தமிர்து நளிகட லமிர்து நல்வரை யமிர்தமு மல்லாக், காட்டகத் தமிர்துங் காண்வரக் குவவிக் கண்ணகன் புறவெதிர் கொண்டார்.

---

2109. அள்ளிலைப் பலவின் அளிந்து வீழ்சுளை; "அள்ளிலைப் பலவி னெற்றி யளிந்துவீழ் சுளையின்" (கூர்ம. இராமனவ. 73); அள் - செறிவு. அளிந்து - கனிய முதிர்ந்து. புள்ளியையுடைய அலவன் - ஆண் நண்டு. கமஞ்சூல் ஞெண்டினுக்கு - நிறைந்த கருப்பத்தையுடைய பெடைநண்டிற்கு. ஆணண்டு பெண்ணண்டிற்குப் பழம் அளித்தல்; "அகலிலை நாவ லுண்டுறை யுதிர்த்த, கனிகவின் சிதைய வாங்கிக் கொண்டுதன், தாழை வேரளை வீழ்துணைக் கிடூஉம், அலவற் காட்டி" (அகநா. 380 : 4-7); "அலவன்றன் சீர்ப்பெடையின், வாய்வண் டனையதொர் நாவற் கனிநனி நல்க" (திருச்சிற். 84). தணிக்கும் பொருட்டு நந்தையும் ஆமையையும் பணித்து மலரை வழிபடக் குறைக்கும்; நந்து - சங்கு. பணித்து - மிதித்து. விதையம் - விதேகதேசம். வேந்தன் - கோவிந்தராசன்; விசயையின் சகோதரன். தூதுவரை விடுத்தார்.

2110. வீட்டிடம் - விட்ட இடம்; தொகுத்தல். வில்லகவிரல்போல் பொருந்தி - வில்லை அகப்படப் பிடித்த விரல்களைப்போல நெருங்கி நின்று; கவவுக்கை நெகிழாமல் அணைந்து நிற்றலை உணர்த்தியது. ஒருங்கு - சேர. சீவகனை எதிர்கொள்கவென்று. தீட்டி - எழுதி. இறைவன் : கோவிந்தராசன். தமர் - உறவினர். அமிர்து - நுகரும் பொருள்கள். குவவி - குவித்து. புறவிற் சீவகனை எதிர்கொண்டார்; புறவு - முல்லைநிலம்.

வீட்டிடம், [1]விகாரம். " வில்லக விரலிற் பொருந்தி " (குறுந். 370) என்றார் பிறரும்.

(இ - ள்.) இறைவனும் தன்னுட்டவர்க்கு, விடுதலையுடைய இடங்க டோறும் விற்பிடித்த விரல்போற் கிட்டிநின்று சேர எதிர்கொள்கவென்று நினைப்பிட்டுத் திருவெழுத்துச் சாத்தித் திருமுகங்கொடுத்துக் [2]காரியப் பெயரையும் ஏவ, அவரும் அமிர்துகளைக் குவித்து முல்லைநிலத்தே சென்று எதிர்கொண்டாரென்க.

நாட்டிலமிர்து: " செந்நெற் சிறுபயறு சேதா நறுநெய்தீங், கன்னற் கதலியோ டைந்து." கடலமிர்து: [3] " ஓர்க்கோலை சங்க மொளிர்பவளம் வெண்முத்தம், நீர்ப்படு முப்பினோ டைந்து." வரையமிர்து: [4] " தக்கோலந் தீம்பூத் தகைசா லிலவங்கம், கப்பூரஞ் சாதியோ டைந்து." காட்டிலமிர்து: " அரக்குலண்டு செந்தே னணிமயிற் பீலி, திருத்தகு நாவியோ டைந்து." அமிர்தென்றது, பொருள்களை. (கூ)

2111. பொருமத யானைப் புணர்மருப் பேய்ப்பப் பொன்சுமந் தேந்திய முலையார், எரிமலர்ச் செவ்வாய் திறந்துதே னூற வேத்துவார் பூக்கடுய்த் தொழுவார், வருகுலைக் கமுகும் வாழையு நடுவார் வரையுமி ழாவிபோன் மாடத், தருநறும் புகையு மேந்துவா ரூர்தோ றமரர்த முலகமொத் ததுவே.

ஆவி - நெட்டுயிர்ப்பு.

(இ - ள்.) ஊர்தோறும் பூணைச் சுமந்து மருப்பேய்ப்ப ஏந்திய முலையார் எத்துவார் தொழுவார் ஏந்துவாராக, ஆடவர் கன்னிக்கமுகும் வாழையும் நடுவாராக, நாடு தேவருலகத்தையொத்ததென்க.

இனி நகரின்செய்தி கூறுகின்றார். (கo)

(வேறு)

2112. பாடி னருவிப் பயங்கெழு மாமலை
மாட நகரத்து வாயிலுங் கோயிலும்
ஆடம் பலமு மரங்கமுஞ் சாலையும்
சேடனைக் காணிய சென்றுதொக் கதுவே.

(உரை) [1] நீட்டல்விகாரம். [2] காரியப்பெயர் - காரியஸ்தர்; " காரி யப்பேர், ஆர்தட் டினுந்தட்டு வாராமலே " (தனிப்பாடல்). [3] சிலப். 10 :102-11, அடியார். மேற். [4] சீவக, 838, அடிக்.

2111. பொன்சுமந்து மருப்பேய்ப்ப ஏந்திய முலையார்; அந்நாட்டு மகளிர்; பொன் : ஆபரணம். எரிமலர்ச் செவ்வாய் - முருக்கிதழ் போலும் சிவந்தவாய். தூய் - தூவி. (பி - ம்.) ' வரையுமிழருவி.' ஊர்தோறும் ஏத்துவார், தொழுவார், நடுவார், ஏந்துவாராக.

2112. பாடு - ஒலி. பயம் கெழு - பயன்பொருந்திய. அடி, 1 : " பாடி னருவிப் பயங்கெழு மீமிசை " (மலைபடு. 278). மலைபோலும்

பாடினருவி - ஒலி இனிய அருவி. உலகைத் தாங்குமவனாதலின் சேடனென்றார்.

(இ - ள்.) சேடனைக்காண்டற்கு மலைபோலுமாடத்தையுடைய நகரிடத்து வாயின்முதலியவற்றிலே ஊர் தொக்கதென்க.

அம்பலம் - பலரும் கூத்துக்காணுமிடம். அரங்கம் - நாடகமாடுமிடம். (கக)

2113. பல்கதி ராரமும் பூணும் பருமித்துக்
கொல்சின வெந்தொழிற் கோடேந் திளமுலை
நல்லெழின் மங்கையர் நன்னுதற் சூட்டிய
வெல்கதிர்ப் பட்டம் விளங்கிற் றொருபால்.

(இ - ள்.) ஆரத்தையும் பூணையும் பல பிரகாரமாக அணிந்து இளமுலையாகிய கோட்டையேந்திய மங்கையராகிய யானைகளின் நுதலிற் சூட்டிய பட்டம் ஒருபக்கம் விளங்கிற்றென்க. (கஉ)

2114. சுண்ணமுஞ் சூட்டுஞ் சொரிந்து வார்குழற்
கண்ணி மகாரொடு காற்சிலம் பார்த்தெழ
அண்ணலைக் காணிய வார்வத்திற் போதரும்
வண்ண மகளிர் வனப்பிற் றொருபால்.

(இ - ள்.) ஒருபக்கம், அண்ணலைக் காணவேண்டிச் சுண்ணத்தையும் சூட்டையும் கண்ணியையும் சொரிந்து சூலகின்ற குழலையுடைய மகாரையெடுத்துக்கொண்டு சிலம்பொலிப்ப ஆர்வத்தோடே போதும் மகளிர் வனப்பினையுடைத்தென்க.

தலையிற்சுண்ணமணிந்தார், மகாராதலின். (கங)

---

மாடத்தையுடைய நகரத்தில். ஆடுதற்குரிய அம்பலம்; பெருங். 3. 14 : 21. சேடனை : சீவகனை.

2113. ஆரம் - முத்துமாலை. பூண் - ஆபரணம். பருமித்து - பல வரிசையாக அணிந்து. மங்கையரது நுதலில் சூட்டிய பட்டம்; சீவக. 1791, அடிக். ஒருபால் விளங்கிற்று.

2114. சுண்ணம் - வாசனைப்பொடி. சூட்டு - நெற்றிச்சூட்டு. சுண்ணத்தையும் சூட்டையும் கண்ணியையும் சொரிந்து; சீவக. 193. வார்குழல் மகாரொடு - சூலகின்ற குஞ்சியையுடைய குழந்தைகளுடன். அண்ணலை : சீவகனை. காணிய - பார்க்கவேண்டி. போதரும் - செல்கின்ற.

2115. எதிர்நலப் பூங்கொடி யெள்ளிய சாயற்
கதிர்நல மங்கையர் காறுடர்ந் தோட
முதிரா விள முலை முத்தொடு பொங்க
அதிரரிக் கிண்கிணி யார்க்கு மொருபால்.

(இ - ள்.) ஒருபக்கம், தோற்றின நலத்தையுடைய கொடியை யிகழ்ந்த சாயலினையும் கதிர்த்த நலத்தையுமுடைய மங்கையர் தம்முலைகள் முத்தோடு கோபிக்க ஓடலின், இடை முரியுமென்று நடுங்கின கிண்கிணி இங்ஙனம் போகன்மினென்று காலைக் கட்டிக்கொண்டு கூப்பிடுமென்க.

முத்தொடு பொங்குதல் - முத்துவடம் புடைத்தற்குக் கோபித்தல். (கச)

2116. கருங்க ணிளமுலை கச்சற வீக்கி
மருங்கு றளர மழைமருண் மாடம்
நெருங்க விறைகொண்ட நேரிழை யார்தம்
பெருங்க ணலமரும் பெற்றித் தொருபால்.

(இ - ள்.) ஒரு பக்கம், முலையைக் கச்சாலிறுக வீக்கி இடைதளர வந்து மாடத்தே தங்குதல்கொண்ட மகளிர்கண்கள் இவனைக் காண்டற்கு இடம்பெறாது அலமருந்தன்மையுடைத்தென்க. (கரு)

2117. மின்னு குழையினர் கோதையர் மின்னுயர்
பொன்வரை மாடம் புதையப் பொறிமயில்
துன்னிய தோகைக் குழாமெனத் தொக்கவர்
மன்னிய கோல மலிந்த தொருபால்.

---

2115. எதிர்நலம் - தோற்றின நலத்தையுடைய. கொடியை எள்ளிய ; எள்ளிய - இகழ்ந்த. சாயலையும் நலத்தையுமுடைய மங்கையர் ஓட. முதிரா - முற்றாத. பொங்க - புடைத்தலாற் கோபிக்க. கிண்கிணி கால்தொடர்ந்து ஆர்க்கும் ; சீவக. 637 ; கால்தொடர்ந்து - காலைக் கட்டி.

2116. முலையைக் கச்சு அற வீக்கி ; அற வீக்கி - இறுகக்கட்டி. மருங்குல் தளரும்படி. மழை - மேகம். மாடத்தே இறைகொண்ட நேரிழையார் ; இறை - தங்குதல். நேரிழையாரது கண் அலமரும் பெற்றித்து ; அலமரும் - சுழலுகின்ற.

2117. மின்னு - ஒளிவிடுகின்ற. மின் உயர் - ஒளியால் உயர்ந்த. புதைய - மறையும்படி. துன்னிய தோகையையுடைய பொறிமயிற் குழாமென ; துன்னிய - நெருங்கிய. பொறி - புள்ளி. மாடம் புதையும் படி குழையினராய்க் கோதையராய் மயிற்குழாமெனத் தொக்கவரது கோலம் மலிந்தது ; மலிந்தது - மிக்கது.

(இ - ள்.) ஒருபக்கம், ஒளிமிக்க மேருப்போலும் மாடம் புதையும்படி குழையினராய்க் கோதையராய்த் துன்னிய தோகையையுடைய பொறி மயிற் குழாமெனத் தொக்கவர்கோலம் மிக்கதென்க. (கசு)

2118. பாடன் மகளிரும் பல்கலை யேந்தல்குல்
ஆடன் மகளிரு மாவண வீதிதொ
ரோட வுதிர்ந்த வணிகல முக்கவை
நீடிருள் போழு நிலைமைத் தொருபால்.

(இ - ள்.) ஒருபக்கம், பாடன்மகளிரும், ஆடன்மகளிரும் ஓடுதலிற் கழன்ற கலம் சிந்தினவை நிலைபெற்ற இரவினிருளைக் கெடுக்கு நிலைமைத்தாயிருந்ததென்க.

குடைமுதலியவற்றின் இருளுமாம். (கஎ)

2119. கோதையுந் தாரும் பிணங்கக் கொடுங்குழைக்
காதன் மகளிரு மைந்தருங் காணிய
வீதியு மேலும் மிடைந்து மிடைமலர்த்
தாதடுத் தெங்குந் தவிசொத் ததுவே.

(இ - ள்.) மகளிருமைந்தரும் காதலால் இவனைக் காண்டற்குத் தம்மாலைகள் பிணங்கும்படி வீதியிலும் மேலும் மிடைதலின், அம்மலரிற் றுது நெருங்கி யெங்கும் தவிசையொத்ததென்க. (கஅ)

2120. மானக் கவரி மணிவண் டகற்றவங்
கானை யெருத்தத் தமர குமரனிற்
சேனைக் கடலிடைச் செல்வனைக் கண்டுவந்
தேனை யவரு மெடுத்துரைக் கின்றார்.

2118. கலை - மேகலை. ஓடுதலால் உதிர்ந்த அணிகலம் உக்கவை; உக்கவை - சிந்தியவை. நீடு - நிலைபெற்ற. இருளைப்போழும் நிலைமைத்து; போழும் - கெடுக்கும்.

2119. கோதை, தார் என்பன மாலைவகைகள். பிணங்க - தம்முள் மாறுபட. காணிய - சீவகனைக் காணவேண்டி. மிடைந்து - நெருங்குதலால்; மலரிலுள்ள தாது. அடுத்து - நெருங்கி. தாது தவிசுபோல்வது: 'தண்டாது தவிசுபடப் போர்த்ததோர் பளிக்குப் பாறை' (இறை. 2, உரை); தவிசு - ஆசனம்.

2120. கவரி-சாமரை. மணிபோலும் வண்டென்றது சீவகனணிந்த பூமாலையின் மீது மொய்த்த வண்டுகளை. (பி - ம்.) 'வண்டகற்றவோ, ரானை.' ஆனையின் எருத்தத்தில்; எருத்தம் - கழுத்து. அமரகும ரனின் - தேவகுமரனைப்போல. செல்வனை: சீவகனை. ஏனையவரும் - எல்லாரும்.

மானக்கவரி ; “ மயிர்நீப்பின் வாழாக் கவரி ” (குறள், 969) ; ஆகு பெயர்.

(இ - ள்.) அவ்வீதியிடத்திற் சேனைக்கடலிடையிலே யானையெருத் தத்ததே தேவகுமரனைப்போலே சாமரை வீச இருந்த செல்வனைக் கண்டு உவந்து எல்லாரும் எடுத்துச்சொல்லாநின்றாரென்க. (௧௯)

2121. (௧) தேமல ரங்கட் டிருவே புகுதக
மாமலர்க் கோதை மணாளன் புகுதக
காமன் புகுதக காளை புகுதக
நாம வெழில்விஞ்சை நம்பி புகுதக.

2122. (௨) மின்றோய் வரைகொன்ற வேலோன் புகுதக
இன்றேன் கமழ்தா ரியக்கன் புகுதக
வென்றோன் புகுதக வீரன் புகுதக
என்றே நகர மெதிர்கொண் டதுவே.

இவையிரண்டும் ஒரு தொடர்.

(௧) மலரிடத்துத் திரு ; மலரங்கண் - மலர்போலும் கண்ணுமாம். [1] உவப்பின்கட் பான்மயங்கிற்று. கோதை - திரு ; இலக்கணையுமாம்.

(இ - ள்.) திருப் புகுதுக, திருமால் புகுதுக, காமன் புகுதுக, காளை புகுதுக, விச்சாதரகுமாரன் புகுதுக, மேகத்தைத் தீண்டின வரையைப் பிளந்த முருகன் புகுதுக, இயக்கன் புகுதுக, அருகன் புகுதுக, வீரன் புகுதுகவென அந்நகரி எதிர்கொண்டதென்க.

புகுதக : ஒரு சொல்விழுக்காடு. (௨௦ - ௨௧)

2121. (பி - ம்.) ‘ தேமலா லலங்கட் டிருவே.’ புகுதக என்று வர வேற்றல் : “ நல்லார் புகுதகவென ” (நீல. குண்டல. 22). கோதை : திரு மகள். மணாளன் : திருமால். காளை - காளைபோல்வாய். விஞ்சைநம்பி - வித்தியாதர குமரன்.

(மேற்.) அடி, 1 : தொல். கிளவி. 57, ந. பிரயோக. திங்ஙு. 7 ; இ - வி. பொது. 5 ; 1-2 : கல். ‘ வடிவிழு ’ 2-13, மயில். மு. நன். பொது. 28, மயிலை. நேமி. மொழியாக்க. 12, உரை.

2122. வரை - கிரவுஞ்சகிரி. வேலோன் : முருகன். இயக்கன் - யட்சகுமரன். வென்றோன் - காதிகன்மங்களை வென்ற அருகன் ; சீவக. 878. என்றே - என்று வரவுகூறி.

(உரை) [1] சீவக. 1974, அடிக்.

(மேற்.) மு : நன். பொது, 41, மயிலை. சங்கர. இ-வி. பொது. 24.

2123. (க) இடிநறுஞ் சுண்ணஞ் சிதறியெச் சாரும்
கடிகமழ் மாலையுங் கண்ணியுஞ் சிந்தித்
துடியடு நுண்ணிடைத் தொண்டையஞ் செவ்வாய்
வடியடு கண்ணியர் வாழ்த்துபு நிற்பார்.

இக்கவிமுதல், "என்னேர்" (சீவக. 2128) என்னுங்கவியளவும் ஒருதொடர்.

(க) இடையினையும், வாயினையுமுடைய கண்ணியர் எவ்விடமும் இடித்த சுண்ணத்தைச் சிதறி, மாலையையுங்கண்ணியையுஞ் சிந்தி வாழ்த்திநிற்பார்.

2124. (உ) சுரும்பிமிர் மாலை தொழுவனர் நீட்டி
இரும்பிடி நின்னடை கற்ற வெமக்கு
விரும்பினை யாய்விடின் மெல்ல நடமோ
கருங்கணிற் காமனைக் காணமற் றென்பார்.

(உ) பிடியைத் தொழுவாராய் மாலையை நீட்டி, இரும்பிடி நின்னடையை வேண்டிக் கற்றவெமக்கு அன்புற்ருயாயிற் காமனை இக்கண்ணுலே காணும்படி மெல்ல நடப்பாயாகவென்பார்.

இது, [1] பிடிக்கு முன்னின்று மகளிர் கூற்று.

2125. (ங) மடநடை பெண்மை வனப்பென்ப தோராய்
கடுநடை கற்ருய் கணவ னிழப்பாய்
பிடியலை பாவி யெனப்பூண் பிறழ்ந்து
புடைமுலை விம்மப் புலந்தனர் நிற்பார்.

---

2123. இடித்த நறுஞ்சுண்ணத்தை; இடி - மாவுமாம். எச்சாரும் - எவ்விடமும். கடி - வாசனை. வாழ்த்துபு - சீவகனை வாழ்த்தி. கண்ணியர், சிதறி, சிந்தி வாழ்த்துபு நிற்பார்.

2124. தொழுவனராய் மாலையை நீட்டி; தொழுவனர் - பெண் யானையை வணங்கினராய். பிடி : விளி. விரும்பினையாய்விடின் - அன்புற்ருயானல். கண்ணுல், காமனைக் காணும்படி மெல்ல நடமோ என்பார்; காமனை : சீவகனை. நடமோ - நடப்பாயாக; "எலாஅ மடப்பிடியே யெங்கூடற் கோமான், புலாஅ நெடுநல் வேன் மாறன் - உலாஅங்காற், பைய நடக்கவுந் தேற்ருயா னின்பெண்மை, ஐயப் படுவ துடைத்து" (முத்.)

(உரை) [1] (பி - ம்.) 'பிடிக்குப்பின்.'

2125. பெண்மைக்கு வனப்பு மடநடை யென்பது ஓராயாய்; மடநடை - மெல்லிய நடை. கற்ருய் - கற்ற நீ; என்றது பெண்யானையை. பாவி பிடி யலை யென - பாவியாகிய நீ பெண்யானை யல்லை என்று கூறுதலால். புலந்தனர் - வெறுத்தனராய்.

(ரு) பெண்மைக்கழகு மென்னடையென்பதோராயாய்க் கடிய நடையைக்கற்ற நீ கணவனையிழக்கக் கடவை ; பாவி, நீதான் பிடியல்லைகாணென்று கூறி, அதுபோனவழியை மெய்யைச் சாய்த்துப் பார்த்தலிற் பூணும் பிறழ்ந்து முலையுமொருபக்கத்தே விம்ம வெறுத்து நிற்பார்.

இது பிடிக்குப் பின்னின்ற மகளிர் கூற்று.

2126. (௪) மயிர்வாய்ச் சிறுகட் பெருஞ்செவி மாத்தாட்
செயிர்தீர் திரள்கைச் சிறுபிடி கேள்வன்
அயிரா வணத்தொடு சூளுறு மையன்
உயிர்கா வலற்கொண் டுதவநில் லென்பார்.

(௪) மயிரையுடைய வாய் முதலியவற்றையுடைய சிறுபிடி, நின் கேள்வனாகிய ஐராவணத்தோடே சூளுறுவேம் ; இனிச் சூளுருதபடி ஐயனாகிய உயிர்காவலனைக் கொண்டு அவன் எமக்கு உதவும்படி நில்லென்பார்.

'சூளுறும்' என்பது, 'சேறும்' என்றாற்போலப் பன்மையுரைக்கும் தன்மைச்சொல்.

2127. (௫) கருணைக் கவளந் தருதுங் கமழ்தார்
அருமை யழகிற் கரசனை நாளைத்
திருமலி வீதியெஞ் சேரிக் கொணர்மோ
எரிமணி மாலை யிளம்பிடி யென்பார்.

(௫) இளம்பிடியே, பெறுதற்கரிய, அழகிற்கு அரசனானவனை எம் சேரியில் வீதியிலே நாளைக்கொணர்வாயாக ; கொணர்ந்தாற் கருணையையுடைய கவளத்தைத் தருவேமென்பார்.

2128. (௬) என்னோர் மருங்கினு மேத்தி யெரிமணிப்
பொன்னார் கலையினர் பொற்பூஞ் சிலம்பினர்
மின்னார் குழையினர் கோதையர் வீதியுள்
மன்னன் குமரனை வாழ்த்தி மகிழ்ந்தார்.

---

2126. "மயிர்வாய்ச்சிறுகட்பிடி" (நைடதம், அன் - தூது. 74). மா - பெருமை. திரள்கை - திரட்சியையுடைய துதிக்கை. சிறுபிடி : விளி. நின் கேள்வனாகிய அயிராவணத்தொடு ; (பி - ம்.) 'அயிராவதம்.' சூளுறும் - சூளுறுவேம் ; இச்சொல் சூளறும் எனவும் வழங்கும் ; "என்னொடு சூளறும்" (தே. சுந்தர. திருப்புனவாயில். 1, 7)

2127. கருணைக்கவளம் - பொரிக்கறியையுடைய உண்டையை. அழகிற்கு அரசனை : சீவகனை. எம்சேரியிடத்து வீதியில் கொணர்மோ ; கொணர்மோ - கொணர்வாயாக. இளம்பிடி : விளி.

2128. (பி - ம்.) 'எறிமணிப் பொன்னாரரவல்குற்.' வீதியுள் கலையினராய், சிலம்பினராய், குழையினராய், கோதையராய் மருங்கின் என்

(சூ) ஏத்துதல் - புகழ்தல். வாழ்த்துதல் - பல்லாண்டு முதலியன கூறல்.

(இ - ள்.) அந்நகரில் வீதியிலே சிலமகளிர் வாழ்த்துபுநிற்பார், நடமோவென்பார், புலந்தனர் நிற்பார், நில்லெனபார், தருதுமென்பா ராய்க் கலையினராய்ச் சிலம்பினராய்க் குழையினராய்க் கோதையராய் மருங்கில்நின்ற எல்லோரும் அரசகுமரனை ஏத்தி வாழ்த்தி மகிழ்ந்தா ரென்க. (உஉ-எ)

(வேறு)

2129. விளங்குபாற் கடலிற் பொங்கி வெண்டிரை யெழுவ வேபோற், றுளங்கொளி மாடத் துச்சித் துகிற்கொடி நுடங்கும் வீதி, உளங்கழித் துருவப் பைந்தார் மன்னவன் கோவில் சேர்ந் தான், இளங்கதிர்ப் பருதி பெளவத் திறுவரை யிருந்த தொத்தான்.

(இ - ள்.) இளங்கதிர்ஞாயிறு கடலிடத்து உதயகிரியிலே யிருந்த தன்மையையொத்தவன், பாற்கடலில் வெண்டிரை பொங்கி யெழுவன போல மாடத்துச்சியிற் கொடி நுடங்கும் வீதியினடுவேபோய் மன்னவன் கோயிலைச் சேர்ந்தானென்க. (உஅ)

2130. இழையொளி பரந்த கோயி லினமலர்க் குவளைப் பொற்பூ, விழைதரு கமல வட்டத் திடைவிராய்ப் பூத்த வேபோற், குழை யொளி முகமுங் கோலக் கொழுங்கயற் கண்ணுந் தோன்ற, மழைமின்னுக் குழாத்தின் மாலை மங்கையர் மயங்கி நின்றார்.

(இ - ள்.) கோயின்மங்கையர், கமலப்பூவின் வட்டத்திடையே குவளைவிராய்ப் பூத்ததுபோலே முகமும் கண்ணுந்தோன்ற மெய்ம் மறந்து மின்றிரள்போலே கலந்துநின்றாரென்க. (உகூ)

---

ரேரும் ஏத்தி மன்னகுமரனை வாழ்த்தி மகிழ்ந்தார்; மன்னகுமரன்: மணி. 4 : 63, 24 : 1; பெருங். 1. 33 : 131.

2129. மாடத்துக்குப் பாற்கடலும், துகிற்கொடிக்கு வெண்டிரையும் உவமை. நுடங்கும் - அசைகின்ற. வீதியுளம் கழித்து - வீதியின் நடுவே போய். மன்னவன் கோயில் - கோவிந்தராசனுடைய அரண்மனையை. பெளவம் - கடல். வரை - உதயகிரி. ஒத்தான் : சீவகன்; எழுவாய்.

2130. மலராகிய குவளைப்பூ. (பி - ம்.) 'இனமலர்க் கமலப் பொற்பூ, விழைதரு குவளை.' கமல வட்டத்திடைப் பூத்த குவளைப்பூப் போல் முகமும் கண்ணும் தோன்ற; சீவக. 2133; "தாமலர்த் தாமரைப் பூவி னங்கண், மாயிதழ்க் குவளை மலர்பிணைத் தன்ன, திரு முகத் தலமரும் பெருமதர் மழைக்கண்" (அகநா. 361 : 1-3); "குவளை மலர்ந்த தாமரை" (கம்ப. மாரீசன் வதைப். 115). கோயில்மங்கையர், மழையிடத்து மின்னுக்குழாத்தைப்போல மயங்கி நின்றார்; மழை - மேகம். மயங்கி - கலந்து.

2131. எரிக்குழாஞ் சுடரும் வைவே லேந்தலைக் கண்டு கோயிற், றிருக்குழா மனைய பட்டத் தேவியர் மகிழ்ந்து செய்ய, வரிக்குழா நெடுங்க ணாரக் கொப்புளித் துமிழ வம்பூ, விரைக்குழா மாலைத் தேனும் வண்டுமுண் டொழுக நின்றார்.

(இ - ள்.) பட்டத்தேவியர், ஏந்தலை நெடுங்கண்ணாலே கண்டு இங்ஙனம் ஒருமகனைப் பெற்றேமேயென்று மகிழ்ந்து மாலையிடத்தே மறைந்துநின்றாரென்க.

பூவில் விரையொழுகுதலாலே தேனும் வண்டும் முதற் கொப்புளித்துப் பின் ஆரவுண்டு உமிழும்படி திரளுதலையுடைத்தாகிய மாலையென்க. (௩௦)

2132. அலங்கலு தவிழ்ந்து சோர வல்குற்பொற் றோரை மின்னச், சிலம்பின்மேற் பஞ்சி யார்ந்த சீறடி வலத்த தூன்றி, நலந் துறை போய நங்கை தோழியைப் புல்லி நின்றாள், இலங்கொளி மணித்தொத் தீன்ற வேந்துபொற் கொடியொ டொப்பாள்.

அவிழ்ந்து - அவிழ.

(இ - ள்.) மாணிக்கக்கொத்தையீன்ற பொற்கொடியோடொப்பாளாகிய அழகின் கூறெல்லாம் நிரம்பிய நங்கை தாதுசோர, அலங்கலவிழ, அல்குற் பொன் வடமின்ன இடைக்காலிற்சிலம்பின்மேலே வலத்ததாகிய சீறடியை ஊன்றித் தோழியைச் சார்ந்துநின்றாளென்க. (௩௧)

2131. எரிக்குழாம் சுடரும் - தீயின் தொகுதி ஒளிவிடுகின்ற. ஏந்தலை : சீவகனை. கோயில் - அரண்மனையில். திருக்குழாம் அனைய - திருமகள் பலரின் தொகுதியைப் போன்ற. (பி - ம்.) ‘திருக்குழாமலையப்.’ தேவியர், ஏந்தலைக் கண்ணாரக் கண்டு மகிழ்ந்து. பூவில் விரை ஒழுகுதலால் தேனும் வண்டும் கொப்புளித்து உண்டு உமிழும்படியுள்ள மாலையிடத்து மறைந்து நின்றார்; விரை - வாசனை.

2132. அலங்கல் - பூமாலை. அல்குலில் பொற்றோரை மின்ன : “தணிப்பொற் றோரைத் தகையொளி சுடர” (பெருங். 1. 34 : 205); பொற்றோரை - பொன்வடம். (பி - ம்.) ‘பொற்றேரை’, ‘பொற்றுரை.’ வலத்ததாகிய சீறடியை. நலம் துறைபோய - அழகெல்லாம் நிரம்பிய. மணித்தொத்து ஈன்ற - மாணிக்கக் கொத்தை ஈன்ற. பொற்கொடியொப்பாளாகிய நங்கை தோழியைப் புல்லிநின்றாள்.

2133. தாமரைப் போதிற் பூத்த தண்ணறுங் குவளைப் பூப் போற், காமரு முகத்திற் பூத்த கருமழைத் தடங்கண் டம்மாற், றேமலர் மார்பி ளுனை நோக்கினாள் செல்வன் மற்றப், பூமலர்க் கோதை நெஞ்ச மூழ்கிப்புக் கொளித்திட் டானே.

(இ - ள்.) அவள், தாமரைப்பூவிலே பூத்த குவளைப்பூப்போலே முகத்திலே பொலிவுபெற்ற கண்களாலே மார்பினானை நோக்கினாள்; அவனும் அவள் நெஞ்சிலே மறைந்து புக்கு அவ்விடத்தினின்றும் போந்து கட்புலனாகாமையாயினானென்க.

மூழ்கவெனத்திரிந்து, நெஞ்சிலே புக்கு மூழ்க ஒளித்தானென்றுமாம். (௩௨)

(வேறு)

2134. விண்ணாறு செல்வார் மனம்பேதுறப் போந்து வீங்கிப்
பண்ணாறு சொல்லாள் முலைபாரித்த வென்று நோக்கக்
கண்ணாறு சென்ற களியையங்கணைக் காம னன்ன
புண்ணாறு வேலான் மனமூழ்கினள் பொன்ன னாளே.

தேவருலகிலே [1] சாசாரனென்னுந் தேவர்கோவாயிருந்து போதுகின்ற பொழுது அத்தேவர் இவன் கண்டுப் போகின்றானென்று மனம் வருந்தும்படி போந்து, இவ்வுலகிலே கண்ணுக்குப் புலனாதலைப் பொருந்தினானொரு காமனையொத்த சீவகனென்று தேவர் இவனை வியந்து கூறினார். புண்தோற்றுதற்குக் காரணமான வேலான்.

(இ - ள்.) வேலான், பண் தோற்றுஞ்சொல்லாள் முலை வீங்கிப் பாரித்தவென்று நோக்கினானாக, அவன்மனத்தே அவள் மறைந்தாளென்க.

---

2133. அடி, 1-2 : சீவக. 2130, அடிக். கண்தம்மால் - கண்ணால். தேமலர் மார்பினான் : சீவகன். (பி - ம்.) 'தேமலர்த்தாரினானை.' செல்வன் : சீவகன். கோதை நெஞ்சம் - அந்நங்கையது மனத்திடையில். மூழ்கி - மறைந்து.

2134. விண் - தேவருலகில். செல்வார் - தேவர்களது. பேதுற - மனம் வருந்தும்படி. (பி - ம்.) 'வெய்துறப்.' சொல்லாள் : அந்நங்கையது. பாரித்த - ஒருப்பட்டன, அடியிட்டன; திருச்சிற். 132, பேர். கண் ஆறு சென்ற - கண்ணுக்குப் புலனாதலைப் பொருந்தின. வேலான் : சீவகன். விண்ணாறு செல்வார் மனம் பேதுறப் போந்து கண்ணாறு சென்ற காமனன்ன வேலான் நோக்க. மனம் - சீவகன் மனத்தே. பொன்னனாள் : அந்நங்கை.

(உரை) [1] சீவகன், முற்பிறப்பிலே, பதினாறு கற்பலோகங்களுள் ஒன்றாகிய ஸஹஸ்ரார கற்பத்தில் இந்திரனாக இருந்தவனாதலால் இங்ஙனம் கூறினர்; பதினாறு கற்பங்களாவன : (1) சௌதர்மம், (2) ஈசா

இனி [2] அமிர்தகலசம்போந்தென்றால், முலையைக்கண்டு தேவர்வருந்
திருரென்றே பொருள் தருதலிற் குற்றமாம். (௩௩)

2135. மைதோய் வரையி னிழியும்புலி போல மைந்தன், பெய்
தாம மாலைப் பிடியின்னிழிந் தேகி மன்னர், கொய்தாம மாலைக்
கொழும்பொன்முடி தேய்த்தி லங்கும், செய்பூங் கழலைத் தொழு
தான்சென்னி சேர்த்தி னானே.

(இ - ள்.) மைந்தன் வரையினின்றிழியும் புலிபோல பிடியினின்றி
ழிந்துபோய் மாமனை முதற் கையாற்றொழுதான்; தொழுது மன்னர்முடி
தேய்த்தலாலே இலங்கும் அவனடியைத் தன்சென்னியிலே சேர்த்தினா
னென்க.

கொய்த ஒழுங்குபட்ட மாலையினையுடைய மன்னர். [1] கழல், ஆகு
பெயர். (௩௪)

2136. பொன்னனங் குவட்டிற் பொலிவெய்தித் திரண்ட திண்
டோள், மன்னன் மகிழ்ந்து மருமானை விடாது புல்லித், தன்
னன்பு கூரத் தடந்தாமரைச் செங்கண் முத்தம், மின்னும் மணிப்
பூண் விரைமார்ப நனைப்ப நின்றான்.

குவட்டின் - குவடுபோல.

(இ - ள்.) மன்னன் மருமானை விடாமற் றோளாற்புல்லி அன்பு
மிகுதலின், தான் அழுதகண்ணீர் அவன்மார்பை நனைக்கும்படி நின்றா
னென்க. (௩௫)

---

னம், (3) சனற்குமாரம், (4) மாகேந்திரம், (5) பிரமம், (6) பிரமோத்
தரம், (7) இலாந்தவம், (8) காமிஷ்டம், (9) சுக்கிரம், (10) மகாசுக்
கிரம், (11) சதாரம், (12) ஸஹஸ்ராரம், (13) ஆநதம், (14) பிராண
தம், (15) ஆரணம், (16) அச்சுதமென்பனவாம். இவை ஸ்ரீ புராணத்
திலும் மேருமந்தர புராணத்திலும் சொல்லப்பட்டன. [2] (பி - ம்.)
'அமிர்தமும் கலசமும்'

2135. மைந்தன் : சீவகன். பிடியின் - பெண்யானையினின்றும்.
மன்னரது முடிதேய்த்து இலங்கும் கழலைத் தொழுதவனைச் சென்னி
யைச் சேர்த்தினான்; கழல் : கோவிந்தராசனது பாதம்.

(உரை) [1] கழலையுடைய பாதத்துக்காயிற்று.

2136. அடி, 1 : "பொன்னனங் குவட்டிற் பொலிதோட்சக தேவன்
மன்றே" (பாகவதம், 10. 41 : 41). (பி - ம்.) 'திரண்ட தோளான்.'
மன்னன் : கோவிந்தராசன். மருமான் - உடன்பிறந்தாளுடைய மகன்;
என்றது சீவகனை. கூர - மிகுதலால். கண்முத்தம் சீவகனது மார்
பத்தை நனைப்ப; முத்தம் - நீர்த்துளி.

(மேற்.) அடி, 1 : தொல். குற்றியலுகரப். 78, ந.

2137. ஆனுது வேந்தன் கலுழ்ந்தானெனக் கோயி லெல்லாம், தானுது மின்றி மயங்கித்தடங் கண்பெய் மாரி, தேனுர் மலரீர்த் தொழுகச்சிலம் பிற்சி லம்பும், கானுர் மயிலின் கணம் போற்கலுழ் வுற்ற தன்றே.

(இ - ள்.) வேந்தன் தானென்கின்றதன்மை யாதுமின்றி மயங்கி ஆறுதழுதானென்று கருதிக் கோயிலெல்லாம் மலையிலழுகின்ற மயிற் றிரள் போலே கண்பெய்த மாரி மலரீர்த்து ஒழுகும்படி அழுதலுற்ற தென்க.

உற்றது : ஒருமைபன்மைமயக்கம். கானுர்சிலம்பு. (ரு.சு)

(வேறு)

2138. பகைநரம் பிசையுங் கேளாப் பைங்கதிர்ப் பசும்பொற் கோயில், வகைநலம் வாடி யெங்கு மழுகுரன் மயங்கி முந்நீர், அகமடை திறந்த தேபோ லலறக்கோக் கிளைய நங்கை, மிகை நலத் தேவி தானே விலாவணை நீக்கி னுளே.

(இ - ள்.) நரம்பிசையிற்பகையும் கேட்டறியாத கோயிலுள்ளார் சச்சந்தன் தன்மையைக் கேட்டலின், அழகுவாடி அழுகுரலெங்குங் கலந்து கடலிடத்துக் கரையைத்திறந்தாற்போல அலறுதலிற் கோவுக்கு இளைய நங்கையாகிய விசயை தானே வந்து அழுகையை நீக்கினுளென்க.

மிகையாகிய குணத்தையுடைய தேவி. (ரு.எ)

2137. வேந்தன், தானுதுமின்றி மயங்கி ஆனுது கலுழ்ந்தானென; வேந்தன் : கோவிந்தராசன். தானுதுமின்றி - தான் அரசன் என்கின்ற தன்மை சிறிதுமில்லாமல். ஆதும் - யாதும். ஆனுது - அமையாமல். என - என்று கருதி. கோயிலெல்லாம் கானுர்ந்த சிலம்பிற் சிலம்பும் மயிலின் கணம் போற் கண்பெய்மாரி ஒழுகக் கலுழ்வுற்றது. கோயில் : அரண்மனையிலுள்ளவர்கள். கான் - காடு. சிலம்பிற் சிலம்பும் - மலை யிடத்தழுகின்ற.

2138. பகைநரம்பிசையும் கேளா - பகைநரம்பினது ஒலியையும் கேட்டிராத எனலுமாம் ; பகைநரம்பு : யாழில் நின்ற நரம்பிற்கு ஆரு வது நரம்பும், மூன்ருவது நரம்பும் ; " நின்ற நரம்பிற் காறு மூன்றும், சென்றுபெற நிற்பது கூடமாகும்" (சிலப். 8 : 33-4, அடியார். மேற்.) கூடமெனினும் பகையெனினுமொக்கும். கோயில் : அரண்மனையிலுள் ளாரது. நலம் - அழகு. மயங்கி - கலந்து. முந்நீரகம் - கடலிடத்து. மடை - கரை. அலற - அலறுதலால். கோக்கிளைய நங்கையாகிய தேவி ; என்றது விசயையை. கோ : கோவிந்தராசன். விலாவணை - அழுகையை ; பிராகிருதம். பின்பு, அந்தப்புர விலாவணை, கோயில் விலாவணை, நகர விலாவணை என வருவனவற்ருலும், பெருங்கதையில் உள்ள உழைச் சனவிலாவணை, உரிமை விலாவணை யென்பவற்ருலும் அறிக.

2139. பல்கதிர் மணியும் பொன்னும் பவழமுங் குயிற்றிச் செய்த, செல்வப்பொற் கிடுகு சூழ்ந்த சித்திர கூட மெங்கும், மல்குபூந் தாமந் தாழ்ந்து மணிப்புகை கமழ வேந்தன், வெல்புகழ் பரவ மாதோ விதியுளி யெய்தி னானே.

(இ - ள்.) மணிமுதலியவற்றை அழுத்திச்செய்த கிடுகுகள் சூழத் தூக்கின சித்திரகூடமெங்கும் தாமந் தாழப்பட்டுப் புகை கமழாநிற்க, [1] ஏத்தாளிகள் புகழைப்பரவ, வேந்தன் முறையாலே அதனைச்சேர்ந்தா னென்க. (௩அ)

2140. எரிமணி யடைப்பை செம்பொற் படியக மிலங்கு பொன்வாள், கருமணி முகடு வேய்ந்த கஞ்சனை கவரி கொண்ட, வருமுலை மகளிர் வைத்து வான்றவி சடுத்து நீங்கப், பெருமக னெண்ணங் கொள்வா னமைச்சரோ டேறி னானே.

படியகம் - படிக்கம். கஞ்சனை - கலசப்பானை. காஞ்சனக்கவரி பாட மாயின், பொற்காம்பிட்ட கவரியென்க.

(இ - ள்.) அவனெய்தின பின்பு, அடைப்பைமுதலியவற்றைக் கொண்ட மகளிர் அவற்றை ஆசனத்தருகேவைத்து நீங்க, சீவகன், மாமனுடனே காரியம் விசாரித்தற்கு அவனமைச்சருடனே சென்றேறினா னென்க. (௩௯)

2141. உலந்தநா ளவர்க்குத் தோன்று தொளிக்குமீன் குளிக் குங் கற்பிற், புலந்தவே னெடுங்கட் செவ்வாய்ப் புதவிநாட் பயந்த நம்பி, சிலம்புநீர்க் கடலந் தானைச் சீதத்தற் கரசு நாட்டிக், குலந்தரு கொற்ற வேலான் கொடிநகர் காக்க வென்றான்.

---

2139. குயிற்றி - அழுத்தி. கிடுகு - தட்டி; சட்டமென்றுமாம்; சீவக. 113, ந. தாமம் தாழ்ந்து - மாலை தாழவிடப்பட்டு. வேந்தன்: கோவிந்தராசன். விதியுளி - முறையாலே.

(உரை) [1] ஏத்தாளிகள் - வாழ்த்துக் கூறுபவர்; சீவக. 1844, அடிக்.

2140. அடைப்பையும் படியகமும்.: “ பயில்வினை யடைப்பையொடு படியகந் திருத்தி ” (பெருங். 3. 14 : 88); அடைப்பை - வெற்றிலை முதலியவை வைத்த பை. மணியால் முகட்டை வேய்ந்த கஞ்சனை; கஞ்சனை - கலசப் பானை. கவரி : சாமரை. வருமுலை - எழுகின்றமுலை. தவிசை அடுத்து வைத்து நீங்க. பெருமகன் : சீவகன். எண்ணம் கொள்வான் - காரியாலோசனை செய்யும் பொருட்டு. அமைச்சரோடு - கோவிந்தராசனுடைய மந்திரிமாரோடு.

2141. நாளுலந்தவர்க்கு - தமக்குரிய வாழ்நாள் கெடுதலையுற்ற வர்க்கு. ஒளிக்கும் - மறைகின்ற. மீன் குளிக்கும் - அருந்ததி தோற்கின்ற. கற்பினையுடைய புதவி. அடி, 1 : “ வாழ்நா ளறியும் வயங்குசுடர் நோக்கத்து, மீனொடு புரையுங் கற்பின் ” (பதிற். 89 : 18-9). புதவி :

(இ - ள்.) அவ்வளவிலே கோவிந்தன், நாளற்றவர்க்குத் தோன்றாதே மறையும் அருந்ததி தோற்குங் கற்பினையும், வேலைப்புலந்த கண்ணினை யும், வாயினையுமுடைய புதவியென்னுந் தேவி பயந்த நம்பியாகிய சீதத் தனுக்கு நல்ல நாளிலே அரசைநாட்டி நீ இந்நகரைக் காப்பாயாக வென்றானென்க.

குலந்தருதல் - புதல்வற்பயந்து மேலுங் குலத்தை வளர்த்தல். தான் அக்கடன் கழித்துப் பொருதுபடக்கருதுதலின், அதற்கு அமைச்சர் உடன்படாரென்று அவரை வினவாது தானே அரசளித்தான்; "வீறு சால் புதல்வற் பெற்றனை யிவணர்க், கருங்கட னிறுத்த செருப்புகன் முன்ப" (பதிற். 74) என்றாற்போல. (௪௦)

2142. மாற்றவ னொற்ற ரொற்று வகையினின் மறைய நம்பிக், காற்றின தோழர்க் கெல்லா மணிகல மடிசி லாடை, வேற்றுமை யின்றி வேண்டூட் டமைத்தன னருளி யிப்பால், ஏற்றுரி முரச நாண வெறிதிரை முழக்கிற் சொன்னான்.

(இ - ள்.) பகைவனொற்றர் ஆராயாத கூற்றாலே மறையும்படி சீவகற்கு உதவியாகிய தோழர்க்கெல்லாம் அணிகலமுதலியவற்றைச் சீவகற்கமைத்தாற்போல அமைத்தனாய்த் தலையளிசெய்துவிட்டு இப்பால் [1]வென்ற ஏற்றி னுரிபோர்த்த முரசநாணத் திரைமுழக்குப் போல் ஒருமொழி கூறினானென்க.

வேண்டூட்டடிசில் - தாந்தாம் விரும்பப்படுகின்ற பொருள்களை யுடைய அடிசில். இன்றி - இன்றாக. "வென்றதன் பச்சை சீவாது போர்த்த, திண்பிணி முரசம்" (புறநா. 288) என்றார்பிறரும். [2]நீ கொன்ற சீவகன் றோழர்க்குக் கோவிந்தன் சிறப்புச்செய்தானென்று ஒற்றர் கட்டியங்காரற்குக் கூறினால் மேலுறவாகி யாம் கொலைசூழ்கின்றது தவறுமென்று கருதி மறையக் கொடுத்தான். சீவகன் வேறொரு வேட மாதலின், அவனை ஒற்றலாகாதாம். (௪௧)

---

பிருதிவிசுந்தரி என்பதன் சிதைவு; இவள் கோவிந்தராசனுடைய மனைவி. புதவி பயந்த நம்பியாகிய சீதத்தனுக்கு. வேலான் : கோவிந்த ராசன்; எழுவாய். நகரைக்காக்க என்றான்.

2142. மாற்றவன் ஒற்றர் - பகையரசனுடைய ஒற்றர்கள். ஒற்று வகையினின் - ஒற்றியறியாதவகையால். நம்பிக்கு : சீவகனுக்கு. ஆற்றின - உதவி செய்த. அணிகலத்தையும் வேண்டூட்டடிசிலையும் ஆடையையும் வேற்றுமையின்றி அமைத்தனனாய். அருளி - தலையளி செய்து. ஏற்றுரி முரசம் : சீவக. 2152; மணி. 1 : 29-36; பெருங். 1. 38 : 100; 43 : 195; யா-வி. 93, மேற். 'தாழிநம்பிணர்.'

(உரை) [1] சீவக. 2899; மதுரைக். 732-3; அகநா. 334 : 1-2; சிலப். 5 : 88, அடியார். [2] (பி - ம்.) 'நீ தோற்ற.'

2143. கட்டியங் கார னம்மைக் காண்பதே கரும மாக,
ஒட்டித்தான் விடுத்த வோலை யுளபொரு ளுரைமி னென்னத்,
தொட்டுமேற் பொறியை நீக்கி மன்னனைத் தொழுது தோன்ற,
விட்டலர் நாகப் பைந்தார் விரிசிகன் கூறு மன்றே.

(இ - ள்.) தன் மைத்துனன் அரசவுரிமையைக் கோவிந்தனே எய்தக் கருத்துடையனென்று தான்கருதிக் கட்டியங்காரன்றான்[1] கருத்தறிதலே காரியமாகத் துணிந்து வரவிட்ட ஓலையிலுள்ள காரியத்தை நீருரைமினென்ன, விரிசிகன் அவ்வோலையையெடுத்து மேலிட்ட இலச்சினையை வாங்கி அரசனைத் தொழுது தோன்றக் கூறுநின்றானென்க. (சஉ)

2144. விதையத்தார் வேந்தன் காண்க கட்டியங் கார னோலை,
புதையவிப் பொழிலைப் போர்த்தோர் பொய்ப்பழி பரந்த தென்
மேற், கதையெனக் கருதல் செய்யான் மெய்யெனத் தானுங்
கொண்டான், சிதையவென் னெஞ்சம் போழ்ந்து தெளிப்பினுந்
தெளிநர் யாரே.

(இ - ள்.) கட்டியங்காரனோலையை விதையத்தார்வேந்தன் காண்பானாக, ஒருபொய்ப்பழி உலகிலுள்ளோரறிவைக் கெடுத்து என்மேலே கிடந்ததனைத் தானுமுட்படப் பொய்வார்த்தையென்று கருதுதலைச் செய்யானாய் மெய்யென்று கொண்டான்; இனி என்னுயிர் கெடும்படி என்மனத்தைப் பிளந்து காட்டித் தெளித்தாலும் வேறுதெளிவாரில்லை; ஆயினும் நானுதலிற் றெளிவிக்கின்றேனென்றானென்க. (சங)

---

2143. கருமம் - காரியம். ஒட்டி - துணிந்து. ஓலையிலுள்ள பொருளை உரைமின் என்ன; என்ன - என்று கோவிந்தராசன் கூற. பொறியை நீக்கி - அவ்வோலையின் மீதிட்ட இலச்சினையை அகற்றி. (பி - ம்.) 'பொறியை வாங்கி.' மன்னனை: கோவிந்தராசனை. விரிசிகன்: கோவிந்தராசனுடைய வேலைக்காரன். (பி - ம்.) 'விரசிகன்.' விரிசிகன், ஓலையைத் தொட்டு, நீக்கித் தொழுது தோன்றக் கூறும்.

(உரை) [1] (பி - ம்.) 'கருத்திற்கே.'

2144. கட்டியங்காரனோலையை விதையத்தார் வேந்தன் காண்க; சீவக. 843, 1041, அடிக். ஓர் பொய்ப்பழி, இப்பொழிலைப் புதையப் போர்த்து என்மேற் பரந்தது; பொய்ப்பழியென்றது சச்சந்தனைக் கட்டியங்காரன் கொன்றானென்பதை. பொழில் - பூமியிலுள்ளார். போர்த்து - அறிவை மறைத்து. கதையென - பொய்யென்று. மெய் - உண்மை. சிதைய - என்னுயிர் கெடும்படி. போழ்ந்து - பிளந்து. தெளிப்பினும் - தெளிவித்தாலும். இது முதல் நான்கு பாடல்கள் கட்டியங் காரன் அனுப்பிய ஓலையிலுள்ள செய்திகள்.

(மேற்.) அடி, 3: சிலப். உரைப்பாயிரம். பக். 9, அடியார்.

2145. (க) படுமணிப் பைம்பொற் சூழிப் பகட்டின மிரியப் பாய்ந்து, கொடிநெடுந் தேர்க ளூறிக் கொய்யுளை மாக்கள் குத்தி, இடுகொடி யணிந்த மார்ப ரிருவிசும் பேறச் சீறி, அடுகளிற் றசனி வேக மலமர வதனை நோனன்.

2146. (உ) நூற்றுவர் பாகர் தம்மைப் பிளந்துயி ருண்ட தென்னும், மாற்றத்தைக் கேட்டுச் சென்று மதக்களி றடக்கி மேற்கொண், டாற்றலங் கந்து சேர்த்தி யாப்புற வீக்கும் போழ்திற், கூற்றென முழங்கி வீழ்த்துக் கொல்லக்கோ லிளகிற் றன்றே.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) எழுதுகொடியணிதற்குக் காரணமான மார்பையுடைய ஆடவர்; வீரத்திற்குக் கொடியெடுத்தல் மரபு.

(இ - ள்.) அசனிவேகம் பாய்ந்து நூறிக் குத்திச் சீறிச் சுழல, அதனைப் பொருஅய்ப் பாகரை ஏவினுகை, அது பாகர்நூற்றுவரைக் கொன்றதென்கின்ற வார்த்தையைக் கேட்டுச் சென்று தான் அதனை அடக்கி ஏறிக் கந்திலே சேர்த்திக் கட்டுகின்ற அளவிலே, வீழ்த்துக் கூற்றெனக் கோறலின், அரசன் பட்டானென்க.

கோலிளகிற்று : [1] மங்கலமரபு. (சச - ரு)

2145. பகட்டினம் - யானைக் கூட்டம். இரிய - கெடும்படி. நூறி - அழித்து. கொய்யுளை மாக்கள் - கத்தரித்து மட்டஞ் செய்த பிடரிமயிரை யுடைய குதிரைகளை. இடுகொடியணிந்த மார்பர் - எழுதுகொடியை யணிந்த மார்பினையுடைய வீரரை; சீவக. 2181, 2264; 2477, 2483; "மீளிவன் கொடிவிடை வேந்தர் மார்பினும், தோளினுந் தீட்டிய தொண்டை மன்னவா" (சிலாஸாசனப்பாடல்); "வாணன் கொடி யெழுதா மார்பில்லை" (தனிப்.). சீறி - கோபித்து. அசனிவேகம் : கட்டியங்காரனுடைய பட்டத்து யானை. அலமர - சுழல. நோனன் - பொருதவனாய்.

2146. மாற்றம் - வார்த்தை; கேட்டு - சச்சந்தன் கேட்டு. (பி - ம்.) 'மாற்றத்தைக் கேட்ட லோடு மால்கொண் மணிமதக் களிறு.' களிறு : அசனிவேகத்தை. மேற்கொண்டு - அதன் மேலேறி. கந்து - கட்டுத்தறி. யாப்புற - பிணிப்புறும்படி. கோல் இளகிற்று : சச்சந்தன் இறந்தான்.

(உரை) [1] (பி - ம்.) 'மங்களமுமாம்.'

2147. தனக்கியா னுயிரு மீவேன் ருன்வரப் பழியு நீங்கும், எனக்கினி யிறைவன் ருனே யிருநிலக் கிழமை வேண்டி, நினைத் துத்தா னெடிதல் செல்லா தென்சொலே தெளிந்து நொய்தாச், சினக்களி யானை மன்னன் வருகெனச் செப்பி னுனே.

(இ - ள்.) மன்னன் உலகங்கூறும் பொய்யை நினைத்துத் தான் தாழாதே யான்தெளித்த சொல்லையே தெளிந்து தான்வந்து தெளியப் பழியும் நீங்கும்; தனக்கு யான் உயிரையுமுட்படத்தருவேன்; இனி எனக்கு இறைவன் தானேயாதலின், இந்நிலக்கிழமையை விரும்பிக் கடுக வருகவென்று விரிசிகன் வாசித்தானென்க.

'வருக' என்னுமளவும் ஓலைப்பாசுரம். [1] நெடித்தல்: விகாரம். உயிரு மீவேனென்றது ஊழ்கூறுவித்தது. (சகூ)

2148. ஓலையுட் பொருளைக் கேட்டே யொள்ளெயி றிலங்க நக் குக், காலனை யளியன் ருனே கையினுல் விளிக்கு மென்னு, நூல் வலீ ரிவனைக் கொல்லு நுண்மதிச் சூழ்ச்சி யீதே, போல்வதொன் றில்லை யென்ருன் புனைமணிப் பொன்செய் பூணுன்.

(இ - ள்.) அவ்வோலையிற்காரியத்தைச் சீவகன்கேட்டு நக்குத் தானே காலனைக் கையால் விளிக்குமென்று தன்னிலே கருதி, நூல்வலீர்! இவனைக் கொல்லுதற்குக் காரணமான சூழ்ச்சி இதுவேபோல்வது வேறில்லையென்ருனென்க.

மதியாற்சூழுஞ்சூழ்ச்சியீதென்றது, நட்பாய்ப் போதுகின்றதனை. (சஎ)

2147. 'தனக்கு' 'தான்' 'தானே' என்பன கோவிந்தராசனை. இறைவன் - அரசன். தானேயாதலால். நிலக்கிழமை வேண்டி - நிலத்தின் உரிமையை விரும்பி. நெடிதல் செல்லாது - தாமதியாமல். நொய்தா - விரைவாக. மன்னன்: கோவிந்தராசன்.

(உரை) [1] நெடித்தலென்பது நெடிதலென்ருயிற்று; "நெடித்தல் செல்லாய் விடுத்த னீயென" (பெருங். 1. 54 : 89)

2148. ஓலையுள் - கட்டியங்காரனனுப்பிய திருமுகத்தில். கேட்டு - சீவகன் கேட்டு. அளியன்ருனே, காலனைக் கையினுல் விளிக்கும் என்னு: "கூற்றத்தைக் கையால் விளித்தற்ருல்......செயல்" (குறள், 894). அளியன்ருனே - நம்மிடத்தன்புள்ளவனுகிய கட்டியங்காரன்தானே. காலன் - யமன். விளிக்கும் - அழைக்கின்ருன். என்னு - என்று சீவகன் எண்ணி. இவனை: கட்டியங்காரனை. கொல்லுதற்குச் சூழ்ச்சியீதேபோல்வதில்லை; சூழ்ச்சி - உபாயம். ஈதே - இதுவே. (பி - ம்.) 'புனைவினைப்.' பூணுன்: சீவகன்; எழுவாய்.

2149. கள்ளத்தா னம்மைக் கொல்லக் கருதினு னுழுந் தன்னைக், கள்ளத்தா லுயிரை யுண்ணக் கருதினே மிதனை யாரும், உள்ளத்தா லுமிழ வேண்டா வுறுபடை வந்து கூட, வள்ளுவார் முரச மூதூ ரறைகென வருளி னானே.

இஃது, அதுகேட்ட கோவிந்தன்கூற்று. வள்ளுவார் : பெயர்த்திரி சொல்.

(இ - ள்.) யாவர் சிலரும் உள்ளத்தினின்றுந் தோற்றுவிக்க வேண்டா ; கள்ளத்தால் நம்மைக் கொல்லக் கருதினான் ; நாமும் அவனை அங்ஙனங் கருதினேமாதலின், இந்நட்பை முதற்சாற்றிப் பின்பு படை கூடும்படி சாற்றி ஊரிலே முரசறைகவென்று கோவிந்தனருளிச்செய்தா னென்க. (சஅ)

2150. கட்டியங் கார னோடு காவல னொருவ னானான், விட்டுநீர் நெல்லும் பொன்னும் வழங்குமின் விளைவ கூறின், ஒட்டல னிறை வன் சொன்னீர் நாநும வல்ல வென்னக், கொட்டினான் றடங்கண் வள்வார்க் குளிறிடி முரச மன்றே.

மேல்விளையும் காரியங்களைச் சொல்லுநீர்மையையுடைய நாக்கள் அவற்றைக்கூறின், அந்நா நும்முடையனவல்லவென்று அறிவுடையோர் அறிவில்லார்க்குக் கூறும்படியாகச் சாற்றினானென்க. இது முரசறை வான் கூற்றெனின், பகைமை கூறிற்றேயாமாதலின், அவன் கூற்றன்று.

(இ - ள்.) காவலன் பகையைவிட்டுக் கட்டியங்காரனோடு உறவா னான் ; இனி அவ்விறைவன் நெல்லும் பொன்னும் வழங்காதிருத்தற்கு உடம்படானாதலின், நீர் அவற்றை இரண்டுநாட்டிலும் ஒக்க வழங்குமி னென்று உறவு தோன்ற முதற்சாற்றினானென்க. (சகூ)

2149. கள்ளம் - வஞ்சனை. தன்னை - கட்டியங்காரனை. உள்ளத் தால் உமிழவேண்டா - மனத்தினின்றும் வெளிப்படுத்த வேண்டா. (பி - ம்.) 'உள்ளத்தில்.' உறுபடை - மிக்கசேனை. கூட - கூடும்படி. வள்ளுவார் - முரசறையும் வள்ளுவர். மூதூரில் முரசத்தை அறைக வென்று. கோவிந்தராசன் அருளினான்.

2150. காவலன் : கோவிந்தராசன். விட்டு ஒருவனானான் - பகையை விட்டு ஒற்றுமையுடையனானான். நெல்லும் பொன்னும் ஒக்கவழங்கி முர சறைதல், இருநாட்டினரும் பகைமை நீங்கி உறவாயிருத்தலைப் புலப் படுத்தும் ; "தண்ணுஞ் சேனையுந் தகைக்கோ சம்பியும், பண்டுகண் ணழிந்த பகையினை நீக்கிப், பொன்னு நெல்லும் புரிவின் வழங்குகென், றென்றெனப் பயிற்றி யுருமிடித் தன்ன, வென்றி முரசம் வீதிதோ றெருக்கி" (பெருங். 1. 37 : 194-8). விளைவகூறின் இறைவன் ஒட்டல னாதலால். சொன்னீர் நா நும அல்ல - சொன்னவராகிய உங்களது நாக்கு நும்முடையனவல்ல எனலுமாம். தடங்கண் - பெரிய கண் ; கண் - அடிக் கப்படும் இடம். (பி - ம்.) 'மணிக்கண்.' முரசத்தைக் கொட்டினான்.

2151. விண்டவ ருடலங் கீறிச் சுளித்துநின் றழலும் வேழம், ஒண்கொடி யுருவத் திண்டே ரொளிமயிர்ப் புரவி பண்ணி, வண் கழ லணிந்து மள்ளர் வாள்வலம் பிடித்து நாளைத், தெண்டிரைப் பரப்பு நாணத் திருநகர்த் தொகுக வென்றான்.

(இ - ள்.) மள்ளர் வேழமுதலியவற்றைப்பண்ணி அணிந்து பிடித்து நாண நாளை நகரிலே தொகுவாராகவென்று பின்பு சாற்றினானென்க. (௬O)

2152. ஏற்றுரி போர்த்த வள்வா ரிடிமுர சறைந்த பின்னாட்
காற்றெறி கடலிற் சங்கு முழவமு முரசு மார்ப்பக்
கூற்றுடன் றனைய தானை கொழுநில நெளிய வீண்டிப்
பாற்கடற் பரப்பின் வெள்வாட் சுடரொளி பரந்த வன்றே.

ஈண்டி - ஈண்ட.

(இ - ள்.) அங்ஙனஞ்சாற்றின மற்றைநாட் கடல்போல் சங்குமுதலி யன ஆர்ப்பத் தானை ஈண்டுதலிற் பாற்கடல்போலே வாளொளி நகரிலே பரந்த வென்க. (௬க)

2153. புதையிரு ளிரியப் பொங்கிக் குங்குமக் கதிர்க ளோக்கி, உதையத்தி னெற்றி சேர்ந்த வொண்சுடர்ப் பருதி போலச், சுதை யொளி மாடத் துச்சி வெண்குடை நீழற் றோன்றி, விதையத்தார் வென்றி வேந்தன் விழுப்படை காணு மன்றே.

(இ - ள்.) வேந்தன், செறிந்த இருள்கெடும்படி கதிர்களைப் புறப்பட விட்டுப் பொங்கி உதயகிரியைச்சேர்ந்த பருதிபோல மாடத்துச்சியிலே குடை நிழலிலே தோன்றிப் படையைக் காணாநிற்குமென்க. (௬உ)

---

2151. விண்டவர் - பகைவரது. சுளித்து - மாறுபட்டு. (பி - ம்.) 'சுவைத்து.' பண்ணி - ஏறுதற் கேற்ப அமைத்து. மள்ளர் - வீரர். திரை - கடல். வேழமும், தேரும், புரவியும் பண்ணி, மள்ளர், வாளைப் பிடித்து நாளை நகரில் தொகுக என்றான்; தொகுக - ஒன்றுசேருக.

2152. ஏற்றுரி போர்த்த முரசம் : சீவக. 2142, அடிக். பின்னாள் - மற்றை நாளில். காற்றாலெறியப்பட்ட கடலைப்போல. முழவம் - மத்த ளம். கூற்றுடன்றனைய - யமனோடு மாறுபட்டாலொத்த. (பி - ம்.) 'கூற் றுடன் றன்ன.' நிலம் நெளியும்படி ஈண்டுதலால். பாற்கடலின் பரப் பினைப்போல, வாளொளி பரந்தது.

2153. புதை இருள் இரிய - செறிந்த இருட்டு கெட்டு ஓடும்படி. குங்குமக்கதிர்கள் - சிவந்த கிரணங்களை. ஓக்கி - புறப்படவிட்டு; (பி - ம்.) 'ஏந்தி.' உதையம் - உதயகிரி; "உதயமென்னு மணிவரை யுச்சி" (இறை, 3, உரை). பருதி - சூரியன். சுதை ஒளி மாடம் - வெண்சாந் தின் ஒளியையுடைய மாடம். வேந்தன் : கோவிந்தராசன். படையைக் காணும்.

(வேறு)

2154. (க) அரும்பனைத் தடக்கை யபரகாத் திரம்வாய் வாலெயி றைந்தினுங் கொல்வ, கருங்கடற் சங்குங் கறந்தவான் பாலுங் கனற்றிய காலுகி ருடைய, பெரும்புலி முழக்கின் மாறெதிர் முழங் கிப் பெருவரை கீண்டிடுந் திறல, திருந்தியே ழுறுப்புந் திண்ணி லந் தோய்வ தீயுமிழ் தறுகணிற் சிறந்த.

இதுமுதல், "செம்பொனீண்முடி" (சீவக. 2167) அளவும் ஒரு தொடர்.

2155. (உ) கவிழ்மணிப் புடைய கண்ணிழ லுறிற் கனன்றுதந் நிழலொடு மலைவ, அவிழ்புயன் மேக மனையமும் மதத்த வறுபதிற் றறுபதா நாகம், புகழ்பருந் தார்ப்பப் பூமதம் பொழிவா னின்றன விராயிரங் கவுள்வண், டிகழ்மதஞ் செறித்த விராயிரத் தைஞ்ஞூ றிளையவு மத்துணைக் களிறே.

இவையிரண்டும் ஒருதொடர்.

அவரகாத்திரத்திற்கு, "கடாந்திறந்து" (சீவக. 806) என்னுங்கவி யிற் கூறினும்.

(இ-ள்.) கை, பின்கால், முன்கால், தாலவட்டம், கொம்பென்கின்ற ஐந்தாலுங்கொல்வன, சங்கையும் பாலையும் வெண்மையாற்கெடுத்த உகி ரையுடையன, புலிமுழக்கினால் எதிரேமுழங்கி அதனைக் காணாமையின், அது தங்குமலையைக்கிழிக்குந்திறல, ஏழுமுழமுந் திருந்தி நிலந்தோயு முறுப்பு மூன்றும் நிலந்தோய்வன, சிறந்தன, புடையன, மலைவனவாய்ச் சொரிகின்ற நீரையுடைய மேகமனைய மதத்தவாகிய நாகம் மூவாயிரத் தறுநூறு; புகழும் பருந்துமார்ப்ப, மதம்பொழிதற்குநின்றன இரண்டா யிரம்; கவுளைவண்டு இகழும்படி மதமடைத்தன இரண்டாயிரத்தைஞ் ஞூறு; களிற்றுக் கன்றுகள் இரண்டாயிரத்தைஞ்ஞூறென்க.

---

2154. அபரகாத்திரம் - கால்கள்; சீவக. 806, ந; அடிக். (பி-ம்.) 'அவரகாத்திரமும் வாலெயிறெனு மைந்தினும்.' அடி, 1: சீவக. 806. ஆன்பால் - பசுவின்பால். சங்கையும் ஆன்பாலையும் தன்வெண்மை நிறத்தால் கனற்றிய உகிருடையன; கனற்றிய - கெடுத்த. புலியின் முழக்கிற்கு மாறாக எதிர்முழங்கி. கீண்டிடும் - கிழித்திடுகின்ற. எழுறுப் பும் நிலம் தோய்வ; "ஏழுறுப்புறத் தாழ்ந்த" (வி-பா. சூது. 79). சிறந்த - சிறந்தன.

2155. கவிழ்ந்த மணியைப் புடையில் உடையன; புடை - பக்கம். (பி-ம்.) 'கவிழ்மணியுடைய'. கண் நிழல் நாறின்-தம்கண்களிடத்துத் தம் நிழல் தோன்றினால். யானை தன் நிழலோடு மலைதல்: "தன்னிழல் கண்டு சீறுங் கருத்தது" (வி-பா. 16-ஆம் போர். 23). நாகம் அறுபதிற்றறுபது-

ஆக யானை பதினாயிரத்தறுநூறு. ஏழும் திருந்தியெனமுடிக்க. உறுப்பு மூன்றாவன ; கையும், [1] கோசமும், [2] தாலவட்டமும் ; இவற்றோடு கால்நான்குங்கூட்டி ஏழுறுப்பு நிலந்தோயுமென்பாருமுளர்.

(௫௩-௪)

2156. குந்தமே யயில்வாள் குனிசிலை மூன்றுங் குறைவிலார் கூற்றொடும் பொருவார், அந்தர மாறா யானைகொண் டேறப் பறக்கெனிற் பறந்திடுந் திறலார், முந்தமர் தம்முண் முழுமெயு மிரும்பு மேய்ந்திட வெஞ்சமம் விளைத்தார், கொந்தழ லஞ்சாக் குஞ்சர மிவர்ந்தார் கோடியே விருத்தியா வுடையார்.

(இ - ள்.) தீக்கு அஞ்சாத குஞ்சரங்களை ஏறினவர்கள் எறிகோல், வாள், வில்லென்கின்ற மூன்றிலும் தாழ்வற்றவராய்க் கூற்றோடும் பொருமவராய் அந்தரம் வழியாக ஏறும்படி யானையைக்கொண்டு பறக்கவென்னிற் பறக்குந்திறலாராய் முற்பட்ட போரிலே மெய்ம்முழுதும் இரும்பு மேயும்படி சமரத்தை விளைத்தவராய்க் கோடிபொன்னைச் சீவிதமாக வுடையாராயிருப்பாரென்க. (௫௫)

2157. குங்கும நறுநீர் பந்திநின் றாடுங் குதிரையா றாயிரத் திரட்டி, பொங்குவெண் மயிர்சூழ் பொற்படை பொலிந்த வறுபதி னாயிரம் புரவி, வெங்கணை தவிர்ப்ப வெள்ளிவெண் படைய வாய்விடி னிலவரை நில்லாப், பைங்கதிர்க் கொட்டைக் கவரிசூழ்ந் தணிந்த பகரினத் தொகையன பாய்மா.

யானை மூவாயிரத்தறுநூறு. பொழிவான் - பொழிதற்கு. இராயிரம் - இரண்டாயிரம் யானைகள். கவுளை வண்டு இகழ்கின்ற மதம் செறித்த யானைகள் இராயிரத்தைஞ்ஞூறு ; கவுள் - கன்னம். இளையவும் - யானைக் கன்றுகளும்.

(உரை) [1] (பி - ம்.) 'கொம்பும்' [2] தாலவட்டம் - வால்.

2156. குந்தம் - எறிகோல். அயில் - வேல். அந்தரம் ஆறா - ஆகாயமே வழியாக. முந்து அமர்தம்முள் - முற்பட்ட போரிடத்து. இரும்பு மேய்ந்திட - ஆயுதங்கள் உண்ணும்படி. சமம் - போர். அழலுக்கு அஞ்சாத குஞ்சரத்தை இவர்ந்தவர். கோடியே - ஒரு கோடி பொன்னை. விருத்தியா - சீவிதமாக ; சீவக. 1374.

2157. பந்தியில் நின்று குங்குமநீரை ஆடும் குதிரை. ஆறாயிரத் திரட்டி - பன்னீராயிரம். பொற்படை பொலிந்த வெண்மயிர் சூழ்புரவி பதினாயிரம் ; பொற்படை - பொன்னாலாகிய கலனை. வெங்கணை தவிர்ப்ப : சீவக. 1770, அடிக். வெள்ளிவெண்படைய - வெள்ளியாலாகிய கலனையையுடையன. (பி - ம்.) 'வெண்குசைய'. வாய்விடின் - வாயிற் பூட்டப்பட்ட கடிவாளத்தைத் தளர்த்தினால். கொட்டைக்கவரி - குமிழையுடைய கவரி ; இது குதிரையின் நெற்றியுச்சியிற் கட்டுவது. அணிந்த பாய்மாவைப் பகரின் அறுபதினாயிரம் என்னும் தொகையன.

(இ - ள்.) புறப்படாமற் பந்தியிலே நின்று குங்குமங்கலந்த பனி நீரையாடும் [1] நம்பிரான் பன்னீராயிரம்; பொற்கலனையாற்பொலிந்த மயிர்சூழ்புரவி அறுபதினாயிரம்; தம்மேலிருந்து எய்த அம்பைப் பின்னிடுவன, வெள்ளிக்கலனையுடையன, குசையை நெகிழவிடிற் பறப்பன வாய்ச் சூழ்ந்து கவரியணிந்த பாய்மாக் கூறின், அறுபதினாயிரமென்கின்ற எண்ணையுடையவாயிருக்குமென்க.

ஆகக் குதிரை நூறாயிரத்துமுப்பத்தீராயிரம். (௫௬)

2158. வேய்நிறக் கரும்பின் வெண்ணிறப் பூப்போன் மிடைந் தொளிர் குந்தமும் வாளும், தோநிலை யரவின் றேற்றமே போலுஞ் சிலைகளும் பிறகளுந் துறைபோய், ஊனமொன் றில்லா ருயர்குடிப் பிறந்தா ராயிர மடுகளங் கண்டார், பானிலாப் பூணோர் படைத்தொழிற் கலிமாப் பண்ணுறுத் தேறினா ரவரே.

(இ - ள்.) மூங்கில்போலுங் கரும்பினது பூப்போலும் குந்தமுதலிய வற்றையும் ஒழிந்தவற்றையும் முற்றக் கற்றுப் பிற குறைவற்றார், குடிப் பிறந்தார், களங்கண்டார், பூணோராகிய அவர் அம்மாவைப் பண்ணி ஏறினாரென்க.

தோம் - குற்றம். அயிலாலே பொருது. இனி ஏறினாராகிய அவர் இத்தன்மையரென்றுமாம். (௫௭)

(வேறு)

2159. (க) தறுக ணாண்மைய தாமரை நிறத்தன தகைசால்
மறுவில் வான்குளம் புடையன மாளவத் தகத்த
பறையி னாலுவ படுசினை நாவலின் கனிபோற்
குறைவில் கோலத்த குளிர்புனற் சிந்துவின் கரைய.

---

(உரை) [1] உத்தம இலக்கணமமைந்த குதிரையைக் குதிரை நம்பிரான் என்று கூறுதல் மரபு; இது வைணவ சம்பிரதாயத்திலும் வழங்குகின்றது; "குதிரை, நம்பிரா னேறி நடந்தருளி" (அழகர் கிள்ளைவிடு தூது. 152)

2158. வேய்போலும் கரும்பு. கரும்பின் வெண்பூப்போன்று ஒளிரும் குந்தம்; "கரும்பின், வேல்போல் வெண்முகை பிரிய" (நற். 366 : 7-8); "தோடுகொள் வேலின் றோற்றம் போல, ஆடுகட் கரும்பின் வெண்பூ நுடங்கும்" (புறநா. 35 : 9-10). தோம்நிலை - குற்ற நிலையையுடைய. அரவு சிலைக்கு : சீவக. 1850, அடிக்.; 2308; வி - பா. 16-ஆம் போர். 23. பிறகளும் - ஒழிந்தவற்றையும். துறைபோய் - முற்றக் கற்று; சீவக. 717, அடிக். "வீணையொ டவைதுறை போகி" (பெருங். 1. 37; 178). ஊனம் - குறைவு. (பி - ம்.) 'உயர்குடிப் பிறந்தா ரயிலம ரடுகளங்.' பால், நிலாவுக்கு அடை. நிலாப்போலும் ஒளியையுடைய பூணோர். மாப்பண்ணுறுத்து - குதிரையை ஏறுதற்கேற்பப் பண்ணி. (பி - ம்.) 'ஏறினர் பலரே.'

2159. தறுகண் ஆண்மைய - அஞ்சாமையையும் வீரத்தையுமுடையன. வான்குளம்பு - வெண்மையான குளம்பு. மாளவத்தகத்த - மாளவ

2160. (உ) பார சூரவம் பல்லவ மெனும்பதிப் பிறந்த
வீர வாற்றல விளைகடுந் தேறலி னிறத்த
பாரிற் றேர்செலிற் பழிபெரி துடைத்தென நாணிச்
சோரும் வார்புய றுளங்கவிண் புகுவன துரகம்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(இ - ள்.) மாளவதேசத்திடத்தனவாகிய துரகம் ஆண்மைய, நிறத்தன, வெண்குளம்புடையனவாயிருக்கும்; சிந்துவின்கரையனவாகிய துரகம் பறையொலிபோல முழங்குவ, நாவலின்கனிபோலுங் கோலத்தவாயிருக்கும்; பாரசூரவம் பல்லவமென்னும் பதியிற்பிறந்த துரகம் ஆற்றல, நிறத்த, விண்புகுவனவா யிருக்குமென்க.

வீரத்தை நடத்துதலையுடையன. (சஅ-சு)

2161. பீலி மாமயி லெருத்தெனப் பெருவனப் புடைய
மாலை மாரட்டத் தகத்தன வளரிளங் கிளியே
போலு மேனிய பொருகடற் கலத்தின்வந் திழிந்த
கோல நீர்ப்பவ ளக்குளம் புடையன குதிரை.

மாலை - ஒழுங்கு. மாரட்டமென முதலெழுத்தை நெடிலாக ஓதுக; மஹாராஷ்ட்ரம்.

(இ - ள்.) மாரட்டதேசத்திடத்தனவாகிய குதிரைகள் மயிற்கழுத்துப்போலும் நிறத்தனவாயிருக்கும்; கலத்தின் வந்திழிந்தன குதிரைகள் கிளிபோலுநிறத்தனவாய்ப் பவளக்குளம்புடையனவாயிருக்குமென்க. (சுo)

தேசத்திடத்தனவாகிய குதிரை. (பி - ம்.) 'மாளுவத் தகத்த, பறையினுலுறுபடு.' பறையின் ஆலுவ - பறையொலியைப் போல முழங்குவன. குதிரையின் நிறத்திற்கு நாவற்கனி உவமை. கோலம் - நிறம். சிந்துவின்கரைய - சிந்துநதியின் கரையிடத்தவாகிய குதிரை.

2160. பாரசூரவம், பல்லவம் என்பன ஊர்களின் பெயர்கள். தேறலின் நிறத்த - தேன்போன்ற பழுப்பு நிறமுடையன. சோரும் - நீரைச்சொரிகின்ற. புயல் - மேகம். விண் - ஆகாயத்திடத்தே. அடி. 3-4 : சீவக. 2525; " தூய்மை யின்றென மாநிலத் தியங்கா......புரவி " (பெருங். 1. 38 : 322-7)

2161. மயிலெருத்தென - மயிலின் கழுத்தைப்போலே. வனப்பு - நிறஅழகு. மாரட்டம் : மஹாராஷ்டிர தேசம். பச்சைக் குதிரையின் நிறத்திற்குப் பச்சைக்கிளி உவமை ; சீவக. 1860, அடிக். கலம் - கப்பல். இழிந்த - இறங்கியவை ; மதுரைக். 321-3. பவளம்போலும் குளம்பு.

2162. இன்ன பொங்குளைப் புரவிபண் ணுறுத்தன வியறேர், பொன்னும் வெள்ளியு மணியினும் பொலிந்துவெண் மதியம், தன்னை யூர்கொண்ட தகையன தொகைசொலி னறுநூ, றென்னு மீறுடை யிருபதி னுயிர மிறையே.

மதி குறட்டிற்குவமம். [1] பரிவேடிப்பு சூட்டிற்குவமம்.

(இ - ள்.) தகையனவாய்ப் பொன்முதலியவற்றாற்புனையப்பட்டு இத் தன்மையவாகிய புரவி பண்ணுறுத்தனவாகிய தேர்த்தொகை சொலின், அறுநூறென்னுமெண்ணினை ஈற்றிலேயுடைய இருபதினுயிரமென்க.

இறையே : விளி. (கக)

2163. நொச்சி மாமலர் நிறத்தன நொடிவரு முந்நீர்
உச்சி மாக்கதிர் போற்சுடு மொளிதிக ழயில்வாள்
எச்சத் தல்லவு மெறிபடை பயின்றுதம் மொன்னர்
நிச்சங் கூற்றினுக் கிடுபவர் தேர்மிசை யவரே.

புகரால் நொச்சிமலர்போலும் நிறத்தனவாய் முந்நீரை மாக்கதிர் உச்சியிற்சுடுமாறுபோலச் சுடும் ஒளிதிகழ் வாளென்க. எச்சத்து நொடி வருமென்க.

(இ - ள்.) தேராட்கள், தமக்குரிய வில்லொழிந்தவிடத்துக் கற்றற் குரியவென்று கூறுதல் வரும் வாளையும் அல்லாத படைகளையும் உட் படப்பயின்று தம்பகைவரை நிச்சம் கூற்றினுக்கு விருந்தாக இடுபவரா யிருப்பாரென்க. (கஉ)

2162. பண்ணுறுத்தன இயல்தேர் - ஊர்தற்கேற்பச் சமைக்கப்பட் டனவாகிய செல்கின்ற தேர்கள். ஊர்கொண்ட - பரிவேடம் கொண்ட; அடி, 2-3 : சிறுபாண். 250-53. தொகை சொலின் - தேர்த்தொகையி யின் எண்ணைக் கூறினல். இருபதினுயிரத்து அறுநூறு. இறையே - அரசனே ; விளி.

(உரை) [1] பரிவேடிப்பு - சுற்றியதென்பது பொருள்.

2163. நொச்சிமலர் போன்ற நிறத்தன. நிறத்தனவாய் முந்நீரை உச்சியிற் கதிர்சுடுமாறுபோல் சுடும் ஒளிதிகழ்கின்றனவாகிய வாள் ; அயில் - கூர்மை ; வேல் எனலுமாம். (பி - ம்.) 'நொடிவரு முதுநீர்.' எச்சத்து நொடிவரும் வாளையும் அல்லனவற்றையும் ; எச்சத்து - வில் லொழிந்தவிடத்து. நொடிவரும் - பயிலுதற்குரியவென்று கூறுதல் வரும். ஒன்னர் - பகைவரை. நிச்சம் - நித்தம். தேர்மிசையவர் : தேர் வீரர்.

(வேறு)

2164. (க) எயிற்றுப்படை யாண்மையினி னிடிக்கும்புலி யொப்பார், பயிற்றியவில் வாள்பணிக்கும் வேலொடுடன் வல்லார், துயிற்றியபல் கேள்வியினர் தூற்றிக்கொளப் பட்டார், அயிற்றுப் படை யார்கண்மத யானைகத னறுப்பார்.

2165. (உ) காலனொடு சூழ்ந்தகடு நோய்களையு மொப்பார்
ஆலுங்கட றூர்த்தன்மலை யகழ்தலிவை வல்லார்
ஞாலமறி யாண்டொழிலர் நான்கிலக்க முள்ளார்
மேலுநும ராலுரிமை யுட்சிறப்புப் பெற்றார்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) எயிலது துப்பை அடைகின்ற வலியினாலென்றுமாம்.

(இ - ள்.) தமதாண்மையால் எயிறுகிய படையையுடைய புலியை யொப்பார், வில்லையும் வாளையும் பிறர் தம்பக்கலிலே கற்கும்படி வேலோடே கூடவல்லார், தம்மிடத்தே தங்கப் பண்ணிய பலநூற்கேள்வி யினையுடையார், தெரிந்துகொள்ளப்பட்டார், வேலினது வலியாலே பகை வரது யானையைக் கதனறுப்பார், வருத்திக்கோறலிற் காலனையும் பற்றின நோயையுமொப்பார், செருக்கினுற் கடல்தூர்த்தல் மலையகழ்த லென்கின்ற இத்தொழிலை வல்லார், ஆண்டொழிலர், [1] நுமராற் சிறப்புப் பெற்றாராகியவர் நான்குநூறாயிரமென்னும் எண்ணிடத்தாரென்க. (சுரு - ச)

2164. ஆண்மையினால் எயிறுகிய படையையுடைய புலி. பணிக்கும் - பிறர் தம்மிடம் கற்கச்செய்யும். துயிற்றிய - தம்மிடத்தே தங்கச் செய்த. கேள்வி - அறிவு. தூற்றிக்கொளப்பட்டார் - எல்லோராலும் தெரிந்துகொள்ளப்பட்டவர்கள். அயில்துப்பு - வேலின் வலியாலே. அடையார்களது மதயானையை; அடையார் - பகைவர். கதன் அறுப் பார் - கோபத்தைக் கெடுப்பார்.

2165. காலன் - யமனுக்கு ஏவல் செய்பவன்; சீவக. 1144, அடிக். காலனைச் சூழ்ந்த நோய்; சீவக. 1144, அடிக். ஆலும் - ஒலிக்கின்ற. கடலைத் தூர்த்தல் மலையையகழ்தல் என்ற இவைகளில் வல்லார்; "மலை யகழ்க் குவனே கடறூர்க் குவனே" (பட்டினப். 271); கலிங்கத். 330. இவைவல்லார் - இத்தொழில்களில் வல்லவர்கள். (பி - ம்.) 'இவைகிற் பார்.' ஞாலம் அறி - உலகத்தவரால் அறியப்பட்ட. நுமரால் - நும்மால்.

(உரை) [1] (பி - ம்.) 'அரசராற்.'

2166. சிங்கத்துரி போர்த்தசெழுங் கேடகமும் வாளும்
பொங்குமயில் வேலும்பொரு வில்லுமுடன் பரப்பி
மங்குலிடை மின்னுமதி யுஞ்சுடரும் போல
வெங்கட்டொழிற் கூற்றுமரண் சேரவிரிந் தன்றே.

கேடகத்திற்கு ஞாயிறும், வாளிற்கும் வேலிற்கும் மின்னும் வில்லிற்குப் பிறையும் உவமை.

(இ - ள்.) இக்காலாட்படையும் கேடகமுதலியவற்றைப் பரப்பி கூற்றும் தனக்கு ஓரரணைச்சேரும்படி விரிந்ததென்க. (சூ

(வேறு)

2167. செம்பொ னீண்முடித் தேர்மன்னர் மன்னற்குப்
பைம்பொ னாழிதொட் டான்படை காட்டினன்
அம்பொ னொண்கழ லானயி ராவணம்
வெம்ப வேறினன் வெல்கென வாழ்த்தினர்.

ஆழிதொட்டான் - [1] ஏனாதிமோதிரஞ்செறித்த சேனாபதி.

(இ - ள்.) அங்ஙனம் படையைக் காண்கின்ற மன்னர்மன்னற் ஆழிதொட்டான், இறையே, மதத்தவாகிய நாகம் அறுபதிற்றறுபது மதம்பொழிவானின்றன ஈராயிரம், மதஞ்செறித்தன ஈராயிரத்தைஞ் ஞாறு, இளைய களிறும் ஈராயிரத்தைஞ்ஞாறு ; இக்குஞ்சரங்களை யேறின வர்கள் கோடியே விருத்தியாவுடையராயிருப்பார் ; குதிரை ஆறுயிர திரட்டி, புரவி அறுபதினாயிரம், பாய்மாவும் அறுபதினாயிரமாயிருக்கும்

2166. சிங்கத்துரி - சிங்கத்தின் தோல். கேடகம் - பரிசை. கேட மும் வாளும் : "வாளொடு கேடகம் வயந்தகற் கீந்து" (பெருங். 1 53 : 117). பொங்கும் அயில்வேல் - மிகுந்த கூர்மையையுடையவேல் மங்குல் - மேகம். மின் - மின்னல். சுடர் - சூரியன். கூற்று - யமன் அரண்சேர - தனக்கு ஒரு பாதுகாப்பான இடத்தை அடையும்படி பரப்பி விரிந்தது.

2167. மன்னர் மன்னற்கு : கோவிந்தராசனுக்கு. ஆழி தொட் டான் - ஏனாதிப் பட்டத்திற்குரிய மோதிரத்தை அணிந்த சேனாபதி படையைக் காட்டினன். கழலான் : கோவிந்தராசன். அயிராவணம் கோவிந்தராசனுடைய பட்டத்து யானைக்குப் பெயர். வெம்ப - கடுக விரும்பும்படி எனலுமாம். வெல்கவென்று.

(உரை) [1] ஏனாதி யென்பது அரசனாற் கொடுக்கப்படும் பட்டம் சீவக. 2569, ந. "போர்க்கட லாற்றும் புரவித்தேர்ப் பல்படைக்குக் கார்க்கடல் பெற்ற கரையன்றோ - போர்க்கெல்லாந் தானாதி யாகிய தார் வேந்தன் மோதிரஞ்சேர், ஏனாதிப் பட்டத் திவன்" (தொல். புறத். 8, ந மேற்.) ; "சோழிக வேனாதி" (மணி. 22 : 205)

பூஞராகிய அவர் அம்மாவைப் பண்ணியேறினர்; மாளவத்தகத்தன வாகிய துரகம் ஆண்மைய, நிறத்தன, வெண்குளம்புடையனவா யிருக்கும்; சிந்துவின் கரையனவாகிய துரகம் ஆலுவ, கோலத்தனவா யிருக்கும்; பாரசூரவம் பல்லவமென்னும் பதியிற் பிறந்த துரகம் ஆற்றல, நிறத்தன, விண்புகுவனவாயிருக்கும்; மாரட்ட தேசத்தகத்தன வாகிய குதிரை மயிற்கழுத்துப்போலும் நிறத்தனவாயிருக்கும்; மரக் கலத்தின் வந்திழிந்த குதிரைகள் கிளிபோலும் நிறத்தவாய்ப் பவளக் குளம்புடையனவாயிருக்கும். இப்புரவிபண்ணுறுத்த தேர் இருபதிஞ யிரத்தறுநூறு. இத்தேராட்கள் கூற்றினுக்கு இடுபவராயிருப்பவர்; சிறப்புப்பெற்றாராகிய அவர் நான்குநூறுயிரமென்னுமண்ணிடத்தார். இக்காலாட்படையும் கூற்றும் அரண் சேரும்படி பரந்ததென்று சொல்லிப் படைகாட்டினன்; அதுகண்டு அவனும் ஐராவணத்தைக் கடுக ஏறினன்; அப்பொழுது வெல்கவென்று வாழ்த்தினரென்க.

இவ்வியானைக்கு அது பெயர். (கூகூ)

2168. சிறுவெண் சங்குமு ரன்றன திண்முர
சறையு மாக்கடல் காரென வார்த்தன
நெறியி னல்கின புள்ளுநி மித்தமும்
இறைவன் கண்வல னாடிற்றி யைந்தரோ.

(இ - ள்.) அப்பொழுது சங்கு முழங்கின; முரசு கடலும் காரு மென ஆர்த்தன; நெறியிலே பறவைகளும், நிறைகுடமுதலியனவும் நன்மையே அறிவித்தன; இறைவன் வலக்கண் பலகாலும் துடித்த தென்க. (கூஎ)

2169. மல்லல் யானைக் கறங்கு மணியொலி
அல்ல தைங்கதி மான்கொழுந் தாரொலி
கல்லெ னார்ப்பொலி மிக்கொளிர் வாண்மினிற்
செல்லு மாக்கடல் போன்றது சேனையே.

2168. முரன்றன - முழங்கின. அறையும் - ஒலிக்கின்ற; கடற்கு அடை. முரசு, கடலையும் கரையும் போல ஆர்த்தன; கார் - மேகம். நெறியில் - வழியிலே. (பி - ம்.) 'நெறியின் மல்கின.' புள்ளும் நிமித்த மும் நல்கின; புள் - பறவைகள். நிமித்தம் - புள்ளொழிந்த நன்னிமித் தங்கள். இறைவன்கண் - கோவிந்தராசனது வலக்கண். ஆடவர்க்கு வலக்கண் துடித்தல் நன்னிமித்தம்.

2169. யானைச் கறங்கும் - யானையினிடத்து ஒலிக்கும். அல்லது - அல்லாமல். ஐங்கதிமான் - ஐந்து வகையான செலவையுடைய குதிரை யது. தார் - கிண்கிணிமாலே. கல்லென் : ஒலிக்குறிப்பு. ஒளிர்வாள் மினின் - விளங்குகின்ற வாளொளியோடு.

(இ - ள்.) சேனை, இவ்வொலிகளுமிக்கு வாளொளியோடே நடப்ப தொரு கடலையொத்ததென்க.

"விக்கிதம் வற்கிதம் வெல்லு முபகண்ட, மத்திமஞ் சாரியோ டைந்து." (கூஅ)

2170. மாலை மாமதி வெண்குடை மல்கிய
கோலக் குஞ்சி நிழற்குளிர் பிச்சமும்
சோலை யாய்ச்சொரி மும்மதத் தானிலம்
பாலை போய்மரு தம்பயந் திட்டதே.

(இ - ள்.) பாலைநிலம், குடையாலும் குஞ்சியாலும் பிச்சத்தாலும் குளிர் நிழற்சோலையாய், மதத்தாலே பாலைத்தன்மை போய் மருதத் தன்மையை உண்டாக்கிற்றென்க. (கூகூ)

2171. மன்றன் மாமயி லார்த்தெழ மானினம்
கன்றி னோடுக லங்கின காற்பெய
வென்றி வேற்படை யஞ்சிவ னத்தொடு
குன்றெ லாங்குடி போவன போன்றவே.

(இ - ள்.) பெடையோடு கூடுகின்ற மயில்களெல்லாம் ஆர்த் தெழுதலாலும், மானினங்களெல்லாம் கன்றோடே கலங்கியோடுதலாலும், படைக்கு அஞ்சிக் காடும் மலையும் குடிபோவனபோலே இருந்தன வென்க. (எ०)

(வேறு)

2172. படுகண் முழவி னிமிழருவி வரையுங் காடும் பலபோகி,
இடுமண் முழவி னிசையோவா வேமாங் கதநாட் டெய்தியபின்,
நெடுவெண் ணிலவி னெற்றிதோய் நிழலாற் செம்பொற் புரிசையே,
கடிமண் காவல் கருதினான் கோயி லாகக் கருதினான்.

---

2170. மாலை - வரிசை. மதிபோலும் குடை. மல்கிய - நிறைந்த. குஞ்சி - சிற்றணுக்கன் என்னும் ஒருவகை விருது. பிச்சம் - பீலிக் குடை. குஞ்சியும் பிச்சமும் : சீவக. 437, அடிக். குடையாலும் குஞ்சத் தாலும் பிச்சத்தாலும் குளிர்ந்த நிழலையுடைய சோலையாய். நிலம் - பாலைநிலம்; எழுவாய். யானைசொரிகின்ற மதத்தாலே பாலைத்தன்மை போய் மருத நிலமாயிற்று.

2171. மன்றல் மாமயில் - பெடையோடு கூடிய ஆண்மயில்; மன்றல் - மணத்தல். கன்று - மான்கன்று. கலங்கினவாய்க் காற்பெய; காற்பெய - ஓட; சீவக. 1850. எழுதலாலும் காற்பெய்தலாலும். படைக்கு அஞ்சி.

2172. படுகண் முழவின் - ஒலிக்கின்ற கண்ணையுடைய மத்தளத் தைப்போல; சீவக. 2865. மண் இடு முழவு - மார்ச்சனையிட்ட மத்தளம். ஓவா - நீங்காத. ஏமாங்கத நாட்டை எய்தியபின். நிலவிடத்து நெற்றி

(இ - ள்.) சீவகன் காத்தற்ருெழிலேயுடைய மண்ணே அவன் காக்கு மாறு கருதிய கோவிந்தன், அருவியையுடைய பல வரையையும் காட்டை யும் போய் ஏமாங்கதத்தைச் சேர்ந்தபின்பு புரிசையின் புறத்தையே தனக்குக் கோயிலாகக் கருதினுனென்க.

மதிற்புறத்தே [1] விட்டான். (எக)

2173. போக மகளிர் வலக்கண்க டுடித்த பொல்லாக் கனுக் கண்டார், ஆக மன்னற் கொளிமழுங்கிற் றஞ்சத் தக்க குரலினுற், கூகை கோயிற் பகற்குழறக் கொற்ற முரசம் பாடவிந்து, மாக நெய்த்தோர் சொரிந்தெங்கு மண்ணும் விண்ணு மதிர்ந்தவே.

(இ - ள்.) அவன்விட்ட பொழுது கட்டியங்காரன் தேவிமார் வலக் கண்துடித்த; அவர் கனுக்கண்டார்; அவற்கு மேனி ஒளிகெட்டது; அவையே யன்றிக் கூகை கோயிலிலே பகலேயிருந்து அஞ்சுதக்க குரலாலே குழற, முரசு ஒலியவிய, மாகத்தினின்றும் குருதி சொரிய, மண்ணும் விண்ணும் அதிர்ந்த வென்க.

[1] பூகம்பமும், வெள்ளிடியும். (எஉ)

2174. கூற்றம் வந்து புறத்திறுத்த தறியான் கொழும்பொ னுல காள்வான், வீற்றிங் கிருந்தே னெனமகிழ்ந்து வென்றி வேழ மிருநூறும், காற்றிற் பரிக்குந் தேர்நூறுங் கடுங்கா லிவுளி யாயி ரமும், போற்றி விடுத்தான் புனேசெம்பொற் படையே யணிந்து புனேபூணுன்.

---

தோய்கின்ற; நெற்றி - மதிலுச்சி. நிழல் - ஒளி. புரிசை - மதில். கடி மண்காவல் கருதினுன் - சீவகன் காத்தற்குரிய பூமியை அவன் காவல் புரியுமாறு கருதிய கோவிந்தராசன்; எழுவாய். (பி - ம்.) 'கடியன காவல்.' கோயில் - தனக்குரிய இருப்பிடம். புரிசையிடத்தையே கோயிலாகக் கருதினுன்.

(உரை) [1] விட்டான் - தங்கினுன்.

2173. போகமகளிர் - கட்டியங்காரனுடைய போகத்திற்குரிய மகளிர்; மனேவியர். மகளிரது வலக்கண் துடித்தல் முதலியன தீய நிமித் தங்கள். பொல்லாக்கனு - தீய கனவு. மன்னற்கு ஆகத்தே ஒளிமழுங் கிற்று; மன்னற்கு : கட்டியங்காரனுக்கு. ஆகம் - மேனி. கூகை - கோட்டான். கோயில் : அரண்மனேயில். கூகை பகற்காலத்துக் குழறல் தீய நிமித்தம்; "பின்பகலே யன்றியும் பேறு ரகநாட்டு, நன்பகலுங் கூகை நகும்" (பு - வெ. 39). (பி - ம். ) "குழறத் தோமின் முரசம்'. பாடவிந்து - ஒலிகெட்டுப்போக. மாகம் நெய்த்தோர் சொரிந்து - ஆகா யத்தினின்றும் இரத்தம் சொரிய.

(உரை) [1] மண்ணிற்குப் பூகம்பமும், விண்ணிற்கு வெள்ளிடியும் கொள்க.

2174. கூற்றம் : சீவகன் ; கட்டியங்காரனுடைய உயிரைக் கொள்ளு தற்கு வந்தமையால், 'கூற்றம்' என்ருர். புறத்து இறுத்தது - மதிலின்

(இ - ள்.) பட்டுப்போய்ப் பொன்னுலகை ஆளுதற்குரியானாகிய பூணான், சீவகன்வந்து 'தன்னைக்கோறற்குப் புறத்திருந்ததறியானாய் இனிக் கோவிந்தனையுங்கொன்று வீற்றிருந்தேனன்றோவென்று கருதித் தன்னினைவு முடிந்ததென்று தன்னைப்போற்றி மகிழ்ந்து வேழமுதலிய வற்றைப் பொற்படைகளாலே அணிந்து கோவிந்தனுக்குப் போகவிட்டா னென்க.

பொன்னுலகாளுதற்கென்றுமாம். (எங)

2175. மன்ன னுங்கோர் மதவேழம் வாரி மஞ்ஞை னென்ப தூஉம், மின்னுங் கொடித்தேர் விசயமும் புரவி பவன வேகமும், பொன்னிற் புனைந்து தான்போக்க நிகழ்வ தோரான் மகிழ் வெய்தி, முன்யான் விட்ட வினைக்களிற்றி னிரட்டி விடுத்தா னெனப்புகழ்ந்தான்.

(இ - ள்.) அவற்றிற்கு நிகராகக் கோவிந்தன்றான் வேழங்களில் வாரிமஞ்ஞையனென்னும் வேழத்தையும், தேர்களிலே விசயமென்னுந் தேரையும், புரவிகளிற் பவனவேகமென்னும் புரவியையும் அணிந்து அவனிடத்தே போகவிட, மகிழ்ந்து யான் முன் களிற்றோடே போக விட்டனவற்றின் இரட்டித்த சிறப்புடையனவற்றை வரவிட்டானென்று கட்டியங்காரன் புகழ்ந்தானென்க.

நின்பெரும்படை என்சிறுபடைக்கு நிகர்க்குமென்பதுதோன்ற வர விட்டானென்றுணராமையின், 'நிகழ்வ தோரான்' என்றார். (எச)

(வேறு)

2176. வீங்குநீர் விதையத் தார்கோன் கட்டியங் காரன் றன்னோ, டாங்கவ னொருவ னாகி யன்பெனு மயில்கொள் வாளால், வாங்கிக்கொண் டுயிரை யுண்பான் வஞ்சத்தாற் சூழ்ந்த வண்ணம், ஓங்குநீ ரோத வேலிக் குணரயா முரைத்து மன்றே.

---

புறத்தே வந்து தங்கியதை. அறியான் - அறிந்து கொள்ளாதவனாய். காற்றின் பரிக்கும் - காற்றைப்போலச் செல்லுகின்ற. கடுங்கால்இவுளி - விரைந்து செல்லும் காலையுடைய குதிரை. போற்றி - தன்னைப் புகழ்ந்து கொண்டு. பொற்படையால் அணிந்து விடுத்தான். பொன்னுலகாள் வானாகிய பூணான் : கட்டியங்காரன் ; எழுவாய்.

2175. மன்னன் : கோவிந்தராசன். வாரிமஞ்ஞளன் என்னும் வேழத்தையும், விசயமென்னுந்தேரையும் பவனவேகமென்னும் புரவியை யும் கட்டியங்காரனிடத்துப் போக்க ; போக்க - போக விட்டானாக. நிகழ்வது ஓரான் - மேல் நடப்பதை அறியானாகிய கட்டியங்காரன். களிற்றின் - யானைப்படையைக் காட்டிலும். இரட்டி - இரட்டித்த சிறப் புடையனவற்றை.

2176. நீர்வளப்பமுடைய விதையநாடு ; விதையம் - விதேகம். கோன் - கோவிந்தராசன். ஒருவனாகி - கூடியிருந்து. அன்பெனும் வாளால் அவனுயிரை ஆங்குவாங்கிக்கொண்டு உண்பதற்கு ; அன்பு : சீவகன். அவன் : கட்டியங்காரன். கோன் சூழ்ந்தவண்ணத்தை. ஓத

(இ - ள்.) கோவிந்தன் கட்டியங்காரன்றன்னோடு கூடியிருந்து அன்பென்னும் கூர்மைகொண்ட வாளாலே அவனுயிரை அவ்விடத்தே [1]வாங்கிக்கோடற்கு வஞ்சனையாலே சூழ்ந்த செய்தியை யாம் உலகிற்கு அறிய உரைப்பேமென்றாரென்க.

அன்பென்றது, சீவகனை ; ஆகுபெயர். (எ௬)

2177. பெருமகன் காதற் பாவைப் பித்திகைப் பிணையன் மாலை
ஒருமக ளேக்கி னுரை யுயிரொடும் போகொ டாத
திருமக ளவட்குப் பாலா னருந்திரி பன்றி யெய்த
அருமக னுகு மென்றுங் கணிமுர சறைவித் தானே.

(இ - ள்.) கோவிந்தன் அன்புவைத்த பாவையாகிய ஒப்பில்லாத மகள், தன்னை நோக்கினுரை உயிரை வாங்குந்திரு, அவட்குக் கணவனுவான் எய்தற்கரிய திரிபன்றி எய்த அரிய மகனுமென்று முரசைச் சாற்றுவித்தானென்க. (எ௬)

2178. ஆய்மதக் களிறு திண்டே ரணிமணிப் புரவி யம்பொற், காய்கதிர்ச் சிவிகை செற்றிக் கலந்தவை நுரைக ளாகத், தோய் மழை யுலக வெள்ளந் தொன்னகர்த் தொக்க தேபோல், ஆய்முடி யரச வெள்ள மணிநக ரீண்டிற் றன்றே.

உலகவெள்ளம் - உலகத்தைக் கொள்ளும் வெள்ளம்.

---

வேலி : பூமி. பூமியிலுள்ளவர்க்கு உரைத்தும் ; உரைத்தும் - கூறுவேம். இது கவிக்கூற்று.

(உரை) [1] (பி - ம்.) 'வாங்கிக் கொண்டுண்டற்கு.'

2177. பெருமகன் : கோவிந்தராசன். பாவை : இலக்கணை ; இவள் கோவிந்தராசனுடைய பெண். பித்திகைப் 'பிணையல் - பிச்சி மாலை ; சீவக. 971, அடிக். பிணையல்மாலை : சீவக. 488, அடிக். (பி - ம்.) 'பாவை பழிப்பிலாப்.' மாலையையுடைய ஒருமகள். போகொடாத - திரும்பப்போகவிடாத. (பி - ம்.) 'போகடாத.' பாவையும், மகளும், திருமகளுமான அவட்கு ; இலக்கணைக்கு. பாலான் - ஊழ்வினையாற் கணவனுவான். திரிபன்றியெய்து மணம் செய்து கொள்ளுதல் ; 'ஆசுர மாவது :—கொல்லேறு கோடல், திரிபன்றி யெய்தல், வில்லேற்றுதல் முதலியன செய்து கோடல்' (தொல். களவு. 1, ந.). அரிய மகனுவானென்று.

(மேற்.) அடி, 2-3 : பிரயோக. திங்ங. 4.

2178. சிவிகை - பல்லக்கு. செற்றி - நெருங்கி. கலந்தவைகள் நுரைகளாக. தோய்மழை உலகவெள்ளம் - செறிந்த நீரையுடைய யுகாந்த வெள்ளம். (பி - ம்.) 'தோய்மணி', 'தோய்வரை.' நகரில் தொக்கதைப்போல். அரசவெள்ளம் - அரசர்களுடைய கூட்டம். நகர் - இராசமாபுரத்தில்.

(இ - ள்.) செறிந்த நீரையுடைய உகாந்தவெள்ளம் வரைகளோடு நகரிலே தொக்கதுபோல அரசவெள்ளம் களிறுமுதலியன செற்றிக் கலந்தவை நுரைகளாகக்கொண்டு அணிநகரிலே ஈண்டிற்றென்க. (எஎ)

2179. நல்லவள் வனப்பு வாங்க நகைமணி மாலை மார்பர், வில் லன்றே யுவனிப் பாரும் வெங்கணை திருத்து வாரும், சொல்லுமி னெமக்கு மாங்கோர் சிலைதொட நாளென் பாரும், பல்சரம் வழங்கு வாரும் பரிவுகொள் பவரு மானூர்.

(இ - ள்.) தம்மை இலக்கணையது அழகு மனத்தை வளைவித்தலின், அவ்வரசர் அன்றே வில்லை எய்யத் தொடங்குவாரும், திருத்துவாரும், எமக்கும் அவ்விடத்தே சிலைதொட நாட்சொல்லுமினென்பாரும், வழங்கு வாரும் இவையும் அறியாதே பரிவுகொள்வாருமாயினரென்க.

வாங்க - இழுக்கவென்றுமாம். (எஅ)

2180. பிறையெயிற் றெரிகட் பேழ்வாய்ப் பெருமயிர்ப் பைம் பொற் பன்றி, அறையெனத் திரியு மாய்பொற் பூமியி னிறைந்து மன்னர், உறுகணை யொன்றும் வில்லு முடன்பிடித் துருவ நேமிப், பொறிதிரி வதனை நோக்கிப் பூமுடி துளக்கி நின்றார்.

அறை - [1] பத்திராலாபனம்.

(இ - ள்.) எயிறுமுதலியவற்றையுடைய பொற்பன்றி, என்னை யாவ ராலும் எய்ய அரிதென்று சாற்றுகின்றதென்னத் திரியுமந்நிலத்தே மன்ன ரெல்லாம் நிறைந்து கணையொன்றையும் வில்லையும் சேரப்பிடித்துச் சக்கரத்தினுள்ளே பன்றிதிரிவதனை நோக்கித் தலையசைத்து நின்றா ரென்க. (எகூ)

---

2179. நல்லவள் வனப்பு வாங்க - இலக்கணையினது அழகு அரசர் களது மனத்தை வளைவித்தலால். நகை - ஒளி. மார்பர் : அரசர், அன்றே வில்லை உவனிப்பாரும் ; உவனிப்பார் - குறிபார்த்தெய்வார் ; "உவனித் தெறிந்த, குந்தக் கடைமணி" (பெருங். 1. 45 : 17-8). எமக்கும் ஆங்குச் சிலைதொட நாள் சொல்லுமின் என்பாரும். சரம் - அம்பு. வழங்குதல் - எய்தல். பரிவு - வருத்தம்.

2180. எரிகண் - எரிகின்ற கண். பேழ்வாய் - பெரியவாய். (பி - ம்.) 'பெருமயிர்த் துறுகட் பன்றி.' அறையென - தன்னை எய்ய அரிதென்று கூறுவதென்ன. திரிகின்ற பூமியில். (பி - ம்.) 'பூமியு ணின்று.' மன்னர் நிறைந்து. உடன் - சேர. உருவநேமிப் பொறி திரிவதனை - அழகிய சக்கரத்துள்ளே பன்றிப்பொறி திரிவதனை. முடிதுளக்கி - தலையையசைத்து.

(உரை) [1] பத்திராலாபனம் - தான் துன்பமடையாதிருத்தலைச் சொல்லுதல். (பி - ம்.) 'பத்திராலம்பனம்', 'பத்திராலேபனம்', 'வச்சிராலம்பனம்.'

2181. ஏந்தெழி லாகஞ் சாந்தி னிடுகொடி யெழுதிக் காதிற், காய்ந்தெரி செம்பொற் றோடுங் கனமணிக் குழையு மின்ன, வேந்தருள் வினிதை வேந்தன் வெஞ்சிலை தளர வாங்கி, ஆய்ந்தபொற் பன்றி நெற்றி யருந்துக ளார்ப்ப வெய்தான்.

**(இ - ள்.)** அவ்வரசரில், விினிதையிலரசன் தனதாகத்தே எழுது கொடியைச் சாந்தாலே எழுதிக் காதிலே தோடும் குழையுமின்ன வில்லை வளைய வாங்கிப் பன்றியின் நெற்றியிலே அம்புபட்டுத் துகளெழ எய்தா னென்க. (அ௦)

2182. குடர்தொடர் குருதிக் கோட்டுக் குஞ்சர நகரத் தார்கோன், சுடர்நுதற் பட்ட மின்னச் சுரும்பிமிர் கண்ணி சிந்த, அடர்கதிர்ப் பைம்பொற் பூணு மாரமு மகலத் தொல்கப், படர்சிலை குழைய வாங்கிப் பன்றியைப் பதைப்ப வெய்தான்.

குடர்தொடர்ந்த குருதிக்கோடு, குஞ்சரமென்ற பெயர்க்கு அடை; குஞ்சரநகரம் - அத்தினபுரம். அடர் - நெருக்கம்.

**(இ - ள்.)** கோன் - மின்னச் சிந்த ஒல்க வில்லை வளைய வாங்கிப் பன்றியைத் துளங்க எய்தானென்க. (அக)

2183. வார்மதுத் துளிக்கு மாலை மணிமுடித் தொடுத்து நாலக்
காா்மதங் கடந்த வண்கைக் காம்பிலிக் காவன் மன்னன்
ஏர்மதக் கேழ லெய்வா னேறலும் பொறியி னேறுண்
டார்மதக் களிற்று வேந்தர்க் கருநகை யாக வீழ்ந்தான்.

---

2181. தனது ஆகத்தே இடுகொடியைச் சாந்தால் எழுதி; இடு கொடி - எழுதுகொடி. காதில் தோடும், குழையும் மின்ன. வேந்தர்களுள், விினிதை நாட்டிற்கு வேந்தன்; எழுவாய். திரிபன்றியின் நெற்றியில். துகள் ஆர்ப்ப - தூசி எழ.

2182. கோடு - தந்தம்; யானைக்கு அடை. குஞ்சரநகரம் - அஸ்தின புரம். கோன் - அரசன். கண்ணி - மாலை. அடர்கதிர் - நெருங்கிய கிரணங்களையுடைய. ஆரம் - முத்துமாலை. அகலத்து ஒல்க - மார்பிலே அசைய. குழைய வாங்கி - வளைய வளைத்து. பதைப்ப - அசையும்படி.

(மேற்) அடி, 1 : கல். ‘சலியாப்பராரை’ 33-9, மயில்.

2183. மாலையை முடியில் தொடுத்து; தொடுத்து - கட்டி. நால - அம்மாலை தொங்கும்படி. கார் மதங்கடந்த. மேகத்தின் செருக்கை வென்ற. காம்பிலிதேசத்தைக் காத்தலையுடைய மன்னன் : எழுவாய். கேழல் எய்வான் - திரிபன்றியை எய்யும்பொருட்டு. பொறியினால் ஏறுண்டு; ஏறுண்டு - எறியப்பட்டு. நகையாக - சிரிப்பிற்கிடமாக.

(இ - ள்.) காரினது செருக்கைவென்ற கையினையுடைய காம்பிலியின் மன்னன், கேழலை எய்யவேண்டி முடியிற்கட்டி மதுத்துளிக்கு மாலை நாலும்படி விசையுடனே சக்கரத்தே ஏறின அளவிலே அதன் விசையினாலே ஏறுபட்டு வேந்தர்க்கு ஒரு நகையாக வீழ்ந்தானென்க. (அ௨)

2184. முலைவட்டப் பூணு முத்து முள்கலிற் கிழிந்து பொல்லா
இலைவட்டத் தாம மார்பிற் கோசலத் திறைவ னெய்த
குலைவட்டக் குருதி யம்பு வானின்மேற் பூச லுய்ப்பான்
சிலைவட்ட நீங்கி விண்மேற் செவ்வனே யெழுந்த தன்றே.

முலையிடத்து வளைந்த பூணும் முத்தும் படுதலிற் பூக்கிழிந்து பொல்லாதாகிய தாமம்; இனிப் பொல்லாமுத்தென்று கூட்டித் துளையிடாத நாயகமுத்தென்றுமாம். குலைவட்டம் - அம்பிற்குதை.

(இ - ள்.) கோசலநாட்டின் இறையவனெய்த அம்பு, வானிடத்தே பூசலைச் செலுத்துதற்கு வில்லின்வட்டத்தினின்று நீங்கி நேரே எழுந்ததென்க. (அ௩)

2185. ஊடிய மடந்தை போல வுறுசிலை வாங்க வாரா
தாடெழு வளைய திண்டோ ளவந்திய னதனை நோனான்
நாடெழுந் தார்ப்ப மற்றந் நன்சிலை முறித்திட் டம்பை
வாடினன் பிடித்து நின்றான் மணமகன் போல நின்றான்.

ஆடு - வெற்றி.

(இ - ள்.) அவந்தியின் வேந்தன், தன்சிலை ஊடிய மடந்தையைப் போலே வளைக்க வளையாதாக அதனைப் பொறானாய் அச்சிலையை வலியுடனே வாங்கி நாடார்ப்ப முறித்து அம்பையே பிடித்து வாடினனாய் நின்றான்; [1] நின்றவன் மணமகன்போல நின்றானென்க. (அ௪)

---

2184. வட்டப்பூண் - வளைந்த ஆபரணங்கள். முலையிடத்துப் பூணும் முத்தும் முள்குதலால். (பி - ம்.) 'முயங்கலிற் கிழிந்து.' கிழிந்து - பூக்கள் கிழிந்து. தாமம் - மாலை. மார்பினையுடைய கோசலத்திறைவன். பூசல் உய்ப்பான் - போரைச் செலுத்துதற்கு. சிலையின் வட்டத்தினின்றும் நீங்கி. செவ்வனே - நேராக.

2185. வாங்க வாராது - வளைக்க, அது வளையாததாக. அவந்தியன் : அவந்திநாட்டின் அரசன். நோனான் - பொறாதவனாய். நாடு - ஏமாங்கத நாட்டிலுள்ளவர்கள். (பி - ம்.) 'மற்றத் தனிசிலை முரித்திட் டம்பே.' அம்பைப் பிடித்து வாடினனாய் நின்றான்.

(மேற்.) அடி, 1 : நன். பொது. 30, மயிலை.

(உரை) [1] (பி - ம்.) 'நின்றவனிளையுடுத்த கோமகன் அம்பை (மகளிரை)ப்பிடித்து நின்றாற்போலே.'

2186. பில்கித்தே னொழுகுங் கோதைப் பிறர்மனை யாள்கட் சென்ற, உள்ளத்தை யுணர்வின் மிக்கா னொழித்திடப் பெயர்ந்த தேபோல், மல்லனீர் மகத ராசன் றுரந்தகோன் மருள வோடிப், புல்லியப் பொறியை மோந்து புறக்கொடுத் திட்ட தன்றே.

(இ - ள்.) பிறர்மனையாளிடத்துச் சென்ற நெஞ்சை அறிவால் மிக்கான் மீட்க அது மீண்டாற்போலே, மகததேயத்தரசன் எய்தகோல் கண்டார் இது படுமென்று மருளும்படி ஓடி அப்பொறியைப் பொருந்தித் தீண்டி மீண்டு போயிற்றென்க. (அ௬)

2187. தென்வரைப் பொதியி லார மகிலொடு தேய்த்த தேய்வை, மன்வரை யகலத் தப்பி மணிவடந் திருவில் வீச, மின்னென விட்ட கோலை விழுங்கக்கண் டழுங்கி வேர்த்துக், கன்மலிந் திலங்கு திண்டோட் கலிங்கர்கோன் மெலிந்து மீண்டான்.

(இ - ள்.) கலிங்கத்தினரசன், ஆரம் அகிலொடு தேய்த்த குழம் பையப்பி வடம் மின்னென வில்லை வீசாநிற்க எய்த கோலைப் பொறி விழுங்கக் கண்டு இரங்கி வேர்த்து மேனி மெலிந்து மீண்டானென்க. (அ௭)

2188. கன்மழைப் பொற்குன் றேந்திக் கணநிரை யன்று காத்து
மன்னுயி ரின்று காக்கும் வாரண வாசி மன்னன்
மின்னிழை சுடர வாங்கி விட்டகோ லுற்று ருதாய்
மன்னுயிர் நடுங்க நாணி மண்புக்கு மறைந்த தன்றே.

2186. பில்கி - துளித்து. கோதையையுடைய பிறர்மனையாளிடத்து. உணர்வு - அறிவு. ஒழித்திட - அவ்வுள்ளத்தை மீட்க. (பி - ம்.) ‘ஒளித்தி டாப்.’ பெயர்ந்ததேபோல் - அவ்வுள்ளம் மீண்டாற்போல. துரந்த கோல் - எய்த அம்பு. மருள - கண்டோர் மயங்கும்படி. பொறியைப் புல்லி மோந்து; பொறி : திரிபன்றி. மோந்து - தீண்டி. புறக்கொடுத்திட்டது - மீண்டது.

2187. தென்வரையாகிய பொதியிலிடத்துப் பிறந்த ஆரம்; ஆரம் - சந்தனம். தேய்த்த - அரைத்த. தேய்வை - குழம்பை. அகலம் - மார்பு. மணிவடம் - முத்துமாலை. வில் - ஒளி. மின்னென வீசாநிற்க. மின்னைக் கோலுக்கு உவமை யாக்கினுமாம். தான்விட்ட கோலைத் திரிபன்றி விழுங்கக் கண்டு; கோல் - அம்பு. அழுங்கி - வருந்தி. கலிங்கதேசத் தரசன்; எழுவாய்.

2188. அன்று, கல்மழைக்குக் குன்றையேந்தி நிரையைக்காத்து; என்றது இவனைத் திருமாலாகக்கூறியபடி. (பி - ம்.) ‘கனநிரை.’ வாரண

**(இ - ள்.)** அன்று கன்மழைக்குக் குன்றையேந்தி நிரையைக் காத்து இன்று உயிரைக்காக்கும் வாரணவாசியின் மன்னனெய்த [1] அம்பு, அதனிடத்தே அழுந்த நாணிச் சிறிதுற்று மிகவுருதாய் மக்கள் தம்மேலே வருமென்று நடுங்கும்படி போய் மண்புக்கு மறைந்ததென்க. (அஎ)

2189. எரிகதிர்ப் பைம்பொற் சுண்ண மிலங்கமெய்ம் முழுது மப்பிப், புரிகழ லணிந்த நோன்ருட் போதன புரத்து வேந்தன், அரிதினிற் றிகிரி யேறித் திரிந்துகண் சுழன்று சோர்ந்து, விரி கதிர்க் கடவுள் போல வெறுநிலத் தொலிப்ப வீழ்ந்தான்.

**(இ - ள்.)** சுண்ணத்தையப்பிக் கழலையணிந்த காலையுடைய போதன புரத்தின் வேந்தன் சக்கரத்திலே அரிதாக ஏறி அது கொள்ளிவட்டம் போல் திரிதலின், அதில் நிற்றலாற்ருதே கண்சுழன்று சோர்ந்து பலரும் ஆரவாரிக்கும்படி ஞாயிறு தன்வட்டத்தினின்றும் நிலத்தே வீழ்ந்தாற் போல வீழ்ந்தானென்க. (அஅ)

2190. மலையச்செஞ் சாந்து முந்நீர் வலம்புரி யீன்ற முத்தும், இலைவைத்த கோதை நல்லா ரிளமுலைப் பொறியு மார்ந்து, சிலை வைத்த மார்பிற் றென்னன் றிருமணிப் பன்றி நோக்கித், தலை வைத்த தம்பு தானுந் தரணிமேற் பாதம் வைத்தான்.

**(இ - ள்.)** சாந்தும் முத்தும் முலைத்தழும்பும் நிறையப்பட்டு மலையை யொப்பாக வைத்த மார்பிற்றென்னனெய்த அம்பு பன்றியை நோக்கிச் சென்று தலைவைத்தது; தானும் நிற்றலாற்ருது நிலத்திலே காலைவைத்தானென்க. (அகூ)

---

வாசி - காசி. இழை - ஆபரணம். வாங்கி - வளைத்து. உற்று உருதாய் - திரிபன்றியிடத்தே சிறிது பொருந்தியும் பொருந்தாததுமாய்.

(உரை) [1] (பி - ம்.) 'கோல்.'

2189. சுண்ணத்தை மெய்யில் அப்பி. நோன்ருள் - வலிய காலை யுடைய. அரிதினின் - அரிதாக. திகிரி - திரிபன்றியின் சக்கரத்திலே. கதிர்க்கடவுள் - சூரியன்.

2190. மலையம் - பொதியமலை. வலம்புரி - ஒருவகைச் சங்கம். இலைவைத்த கோதை - பச்சிலைவைத்துத் தொடுத்த மாலை. முலைப் பொறி - முலைத்தழும்பு. சிலை - மலை. மார்பினையுடைய தென்னன் : பாண்டியன். அடி, 1-3 : அகநா. 13 : 1-6. தென்னன் எய்த அம்பு பன்றியை நோக்கித் தலைவைத்தது; 'தானும்' என்றது பாண்டியனை.

2191. விற்றிறல் விசய னென்பான் வெங்கணை செவிட்டி
நோக்கி, ஒற்றுபு திருத்திக் கைம்மே லுருட்டுபு நேமி சேர்ந்தாங்,
குற்றதன் சிலையின் வாய்ப்பெய் துடுவமை பகழி வாங்க, இற்று
வின் முறிந்து போயிற் றிமைப்பினி னிலங்கித் திட்டான்.

(இ - ள்.) விசயன், தன்கணையை ஒருக்கடித்துநோக்கி இடக்கை மேலே யமுக்கித் திருத்தி உருட்டாநின்று நேமியிலே குதித்துத் தனக்குற்ற வில்லிலே தொடுத்துச் சிறகமைந்த [1] பகழியை வாங்கினுகை, வில் இரண்டாய் முறிந்து போயிற்று ; ஒருகணத்திற் குதித்தானென்க. (கoo)

2192. குண்டல மிலங்க வாங்கிக் குனிசிலை யுறையி னீக்கிக்,
கொண்டவன் கொழும்பொற் ருரு மாரமு மிளிர வேறிக், கண்டு
கோ னிறைய வாங்கிக் காதுற மறித லோடும், விண்டுநா ணற்ற
தாங்கே விசயனும் வீக்க மற்ருன்.

(இ - ள்.) அவன் குண்டலமிலங்கும்படி சேமவில்லை வாங்கிக் கொண்டு உறையினின்றுநீக்கித் தாரும் ஆரமும் பிறழ ஏறிப் பன்றி மூன்றும் கூடுங்காலத்தைக்கண்டு கோலை நிறைய வாங்குதலாலே, அது காதிலே செல்ல மறிகின்ற அளவிலே நாண் அற்றது; அப்பொழுதே எய்கின்ற கருத்தைக் கைவிட்டு விசயனும் தன்பெருமை குறைந்தானென்க.

விண்டு : [1] விகாரம். [2] சீவகனிடத்தே கற்றலின், எய்தற்குரியனுகிய இவற்கு ஊழ் இங்ஙனஞ் செய்தது. (கoக)

---

2191. விசயன் : கனகமாலையின் சகோதரருள் ஒருவன். கணையைச் செவிட்டி நோக்கி ; செவிட்டி - நேராகநின்று. (பி - ம்.) 'செவிட்ட நோக்கி.' கைம்மேல் ஒற்றுபு - கையின்மேல் அமுக்கி. உருட்டுபு - உருட்டி. நேமி - திரிபன்றியின் சக்கரத்தை. (பி - ம்.) 'உற்றவன் சிலையை.' சிலையின்வாய்ப் பெய்து - வில்லினிடத்தே தொடுத்து. உடு அமை பகழி - பக்கத்தே சிறகமைந்த அம்பினை. வாங்க - வளைத்தாகை. வில் இற்றுமுறிந்து போயிற்று. இலங்கித்திட்டான் - குதித்தான்.

(உரை) [1] (பி - ம்.) 'அப்பகழியை.'

2192. அவன், வேறு சிலையை வாங்கிக்கொண்டு உறையினின்றும் நீக்கி ; அவன் : விசயன். மிளிர - பிறழ. கோல் - அம்பு. மறிதலோடும் - மீள்கின்றவளவிலே. விண்டு - விட்டு. நாண் - கயிறு. வீக்கம் அற்ருன் - பெருமை குறைந்தான்.

(உரை) [1] சீவக. 1749, ந. [2] (பி - ம்.) 'சீவகனுடனே.' சீவகனிடத்து விசயன் கற்றது : சீவக. 1647, 1675-9.

2193. உளைவனப் பிருந்த மான்றே ரொளிமுடி மன்ன ரெல்லாம்
வளைவனப் பிருந்த தோளாள் வருமுலைப் போகம் வேண்டி
விளைதவப் பெருமை யோரார் விற்றிறன் மயங்கி யாரும்
களைகலார் பொறியை யாங்கோ ராறுநாள் கழிந்த வன்றே.

(இ - ள்.) மன்னர் யாவரும் விற்றிறல்விளைத்தற்குக் காரணமான தவத்தின்பெருமை நமக்கில்லையென்றோராராய்த் தோளாளுடைய முலைப் போகத்தை விரும்பி அறிவுமுதலியன கலங்குதலிற் பொறியைக் [1] களை யாராக, இப்படியே ஆறுநாள் சென்றவென்க.

மயங்கி - மயங்க. (கூஉ)

(வேறு)

2194. பனைக்கை யானை மன்னர் பணியப் பைம்பொன் முடியிற்
கனைக்குஞ் சுரும்பார் மாலை கமழ மதுவுந் தேனும்
நனைக்குங் கழலோன் சிறுவ னுமை வெள்வேல் வலவன்
நினைக்க லாகா வகையா னேரா ருயிர்மே லெழுந்தான்.

(இ - ள்.) மன்னர் வணங்குதலின், அவர்முடியிற் கனைக்குஞ் சுரும்பும் தேனுமார்ந்த மாலையின் மதுக்கமழும்படி நனைக்கும் அடியையுடைய சச்சந்தன் புதல்வனாகிய வேல்வெற்றியையுடையவன் அவர் நினைக்கவொண்ணாத வஞ்சனையாலே பகைவருயிரைக் கொள்ள எழுந்தானென்க.

[1] உம்மை மாற்றுக. (கூஈ)

2193. உளைவனப்பு - பிடரிமயிரின் அழகு. மான் - குதிரை. வளை - தோள்வளை. தோளாள் : இலக்கணையினுடைய. வருமுலை - எழுகின்ற முலை. விற்றிறல் விளைத்தற்குரிய தவப்பெருமை, தமக்கு இல்லை யென் பதை ஓராராகி மயங்கி. பொறியைக் களைகலாராக ; பொறி : திரிபன்றி. ஆறுநாள் கழிந்தது என்றல் : சீவக. 2393.

(உரை) [1] (பி - ம்.) 'களையாராயப்படியே.'

2194. பணிய - வணங்குதலால். முடியில் - அம்மன்னரது தலை யில். (பி - ம்.) 'முடிமேல்.' கனைக்கும் - ஒலிக்கின்ற. (பி - ம்.) 'மாலை தவழ்ந்து.' சுரும்பும் தேனும், ஆர்ந்த மாலையில் மதுக்கமழும்படி நனைக்கும் கழலோன் ; என்றது சச்சந்தனை. சிறுவனாகிய வலவன் : சீவகன் ; வலவன் - வெற்றியையுடையவன். நேரார் - பகைவர்.

(உரை) [1] 'மதுவும்' என்பதிலுள்ள உம்மையை, 'சுரும்பு' என்ப தற்கு மாற்றுக.

2195. காரின் முழங்குங் களிறுங் கடலின் முழங்குந் தேரும்
போரின் முழங்கும் புரவிக் கடலும் புகைவாட் கடலும்
சீரின் முழங்கு முரசு மலறுஞ் சிறுவெண் சங்கும்
நீரின் முழங்க முழங்கு நீல யானை யிவர்ந்தான்.

முன்னின்ற இரண்டு இன்னும் உவமப்பொரு. போரின் : இன் : ஏது. சீரின் - சீரோடு.

(இ - ள்.) களிறு முதலியன நீர்மையோடே முழங்காநிற்கத் தான் கரிய யானையை மேற்கொண்டானென்க. (கூச)

2196. கல்லார் மணிப்பூண் மார்பிற் காம னிவனே யென்ன
வில்லார் கடலந் தானை வேந்தர் குழாத்துட் டோன்றப்
புல்லான் கண்ணி னோக்கிப் புலிகாண் கலையிற் புலம்பி
ஒல்லா னொல்லா னாகி யுயிர்போ யிருந்தான் மாதோ.

(இ - ள்.) அவ்வியானையின்மேல் வந்த வேலான், வேந்தர் இவனே காமனென்னும்படி அவர் குழாத்திலே தோன்றினுகை, தானிற்குமுறை மையில் நிற்கமாட்டாத கட்டியங்காரன் பொருந்தானுய்த் தான் கண்ணுல் நோக்கிப் புலிகாண் கலைபோல் அறிவுமுதலியன போயிருந்தானென்க. (கூரு)

2197. புலியாப் புறுத்திக் கொண்டேன் போக்கி விட்ட பிழைப்பும், வலியார் திரடோண் மதனன் னவனைப் பிழைத்த பிழைப்பும், நலியு மென்னை நலியு மென்னக் களிற்றி னுச்சி, இலையார் கடகத் தடக்கை புடைத்து மெய்சோர்ந் திருந்தான்.

2195. காரின் - மேகத்தைப்போல. கடலின் - கடலைப்போல. போரின் - யுத்தத்தினுல். புகை வாள் - கோபிக்கின்ற வாட்படை. சீரின் - சிறப்பினேடு. அலறும் - ஒலிக்கின்ற. நீரின் - தமக்குரிய நீர்மையோடு. முழங்க - முழங்காநிற்க. யானையில் இவர்ந்தான்.

2196. (பி - ம்.) 'கல்லார் சாமர் மணிப்பூட் காமன்.' என்ன - என்று கூறும்படி. தோன்ற - தோன்றினுகை. ஒல்லான் ஒல்லான் புல்லான் ஆகி - தான் நிற்கும் முறைமையில் நிற்கமாட்டாத கட்டியங்காரன் பொருந்தியிரானுகி. கண்ணினுல் சீவகனை நோக்கி. புலிகாண் கலையின் - புலியைக்கண்ட மானைப்போல. அறிவழிந்திருந்தமையின், 'உயிர்போ யிருந்தான்' என்முர்.

2197. புலியாப்புறுத்திக் கொண்டேன் - புலியை அகப்படுத்திக் கொண்ட யான்; "புலியையாப் புறுத்த தென்ன.........வன்சிறைப் படுத்த மாற்றம்" (கூர்ம. கண் - பூமி. 52). போக்கி விட்ட - அப்புலியை வாலுருவிப் போக விட்ட. மதனன் : கட்டியங்காரனுடைய மைத்துனன்.

(இ - ள்.) புலியை அகப்படுத்திக்கொண்டயான் அதனை [1] வாலுருவி விட்ட தப்பும் என்னை நலியாநிற்கும்; மதனனாகிய அவனை இவன் தப்பின தப்பும் என்னை நலியாநிற்குமென்று கூறிக் களிற்றினுச்சியிலே கையைப்புடைத்து அவசமாயிருந்தானென்க.

யாப்புறுத்திக்கொண்டேனென்றது, [2] அநங்கமாலைகூத்திற் சீவகன் தனியே வந்தமை கருதி. (கூசு)

2198. மைபூத் தலர்ந்த மழைக்கண் மாழை மானேர் நோக்கிற், கொய்பூங் கோதை மடவார் கொற்றங் கொள்கென் றேத்தப், பெய்பூங் கழலான் வேழத் திழிந்து பிறைபோற் குலாய, செய் பூண் சிலைநா ணெறிந்தான் சேரார் நாளுக் கனவே.

மாழை - இளமை. குலாய சிலை; செய்யப்பட்டசிலை; நாண் பூண்ட சிலை.

(இ - ள்.) மை அழகுபெற்றலர்ந்த கண்முதலியவற்றையுடைய மடவார் ஏத்தக் கழலான் இழிந்து நின்று சிலையின் நாணையெறிந்தான்; அப்பொழுதே பகைவர்நாள் உலந்தனவென்க.

[1] பிள்ளைகளையும், [2] அவனையும் சேரக் கோறலின், 'சேரார்' என்றார். (கூஎ)

(வேறு)

2199. கனிபடு மொழியி னுடன் காரிகை கவற்ற வந்து
குனிசிலை தோற்ற மன்னர் கொங்குகொப் புளிக்கு நீலப்
பனிமலர்க் காடு போன்றார் படர்சிலை தொடாத வேந்தர்
இனிதினின் மலர்ந்த வேரார் தாமரைக் காடு போன்றார்.

---

பிழைத்த பிழைப்பும் - தப்பவிட்ட தப்பும். நலியும் - வருத்தும். என்ன - என்று கூறி. களிற்றின் உச்சியிற் கையைப்புடைத்து. கடகக்கை புடைத்தல் : சீவக. 1282.

(உரை) [1] "வயப்புலியை வாலுருவி விடுகின் றீரே" (வி - பா. சூது போர். 265). [2] சீவக. 672.

2198. பூத்து - அழகுபெற்று. மாழைமான் நேர்நோக்கு - இளைய மானைப்போன்ற பார்வை. கண்ணையும், நோக்கையும், கோதையையுமுடைய மடவார். கொற்றம் - வெற்றி. கழலான் : சீவகன். வேழத்தினின்றும் இழிந்து. பிறைபோற் குலாய சிலை - பிறைச்சந்திரனைப் போல் வளைந்த வில்; "இடைநாட் பிறையி னேர்ந்திய திருவில்" (பெருங். 1. 37 : 26); கம்ப. இந்திரசித்துவதை. 45. எறிந்தான் - தெறித்தான்.

(உரை) [1] பிள்ளைகளென்றது, கட்டியங்காரனுடைய பிள்ளைகள் நூற்றுவரை. [2] அவன் - கட்டியங்காரன்.

2199. மொழியினுள் தன் : இலக்கணையினுடைய. காரிகை கவற்ற - அழகு வருத்துதலால். சிலையில் தோற்ற. கொங்கு கொப்புளிக்கும் - தேனைத் தன்னிடத்தினின்றும் சொரிகின்ற. நீலம் - நீலோற்பலமலர்.

(இ - ள்.) கனிபோலுமொழியினுளது அழகு கேள்வியான் வருத்து தலின், வந்து சிலைதோற்ற மன்னர் [1] ஞாயிறுபோன்ற சீவகனைக் கண்டு நீலத்தின் நெருக்கத்தையொத்தார்; சிலைதொடாத வேந்தர் அவனைக் கண்டு கொங்கு கொப்புளிக்கும் தாமரையின் நெருக்கத்தை யொத்தா ரென்க. (கூஅ)

2200. போர்த்தகல் விசும்பில் வந்து பொறித்திரி பன்றி மூன் றும், நீர்த்தகப் புணர்ந்த போதி னெடுந்தகை மூன்று மற்றுச், சூர்த்துடன் வீழ நோக்கிச் சுடுசரஞ் சிதற வல்லான், ஓர்த் தொன்றே புணர்ப்ப நாடி யொருபகல் காறு நின்றான்.

போருக்குத் தகுதலையுடைய பன்றி; என்றது ஒன்று இடந்திரிய ஒன்று வலந்திரிகின்ற மாறுபாட்டினை.

(இ - ள்.) நெடுந்தகை, பொறியாலே விசும்பிற்றிரிகின்ற பன்றி மூன்றும் வந்து நீர்மைதகப் புணர்ந்த காலத்து அவை சேர அற்றுச் சுழன்று விழும்படி ஓர்த்துப் பல சரத்தைச் சிதறவல்லவன் அப்பொழுது அவை மூன்றும் ஒன்றாந் தன்மையே [1] கூட்டுதற்கு நாடி ஒரு முகூர்த்தத் தளவும் நோக்கிநின்றானென்க.

இவன் குப்புற்று நேமியில் நிற்குங்காலத்து 'அவையும் ஒன்றுமாத லின், 'ஒன்றே புணர்ப்ப' என்றார். (கூகூ)

2201. பொறியின்மே லேற றேற்றா ணாணினாற் போதல் செய் யான், நெறியின்வில் லூன்றி நிற்ப நிழன்மணிப் பன்றி யற்று, மறியுமோ வென்று முன்னே மணிமுடி சிதறி வீழ்ந்த, செறி கழன் மன்னர் நக்குத் தீயத்தீ விளைத்துக் கொண்டார்.

---

பனி - குளிர்ச்சி. திரிபன்றியை எய்தற்குச் சிலையைத் தொடாத வேந் தர். ஏர் ஆர் - அழகு நிறைந்த. சீவகனுக்குச் சூரியனும், பன்றியை எய்தலில் தோற்ற அரசருக்கு நீலமலரும், பன்றியை எய்யக் கருதா திருந்த அரசருக்குத் தாமரையும் உவமைகள்.

(உரை) [1] இது வருவித்துக் கொள்ளப்பட்டது.

2200. போர்த்தகல் - போருக்குத் தகுதியாதலையுடைய; பன்றிக்கு அடை. பொறியால் விசும்பில் திரிகின்ற பன்றி மூன்றும் வந்து. நீர்த்தக- நீர்மைக்குப்பொருந்த. புணர்ந்த போதின் - அவை மூன்றும் ஒன்றாகச் சேர்ந்தபோது. நெடுந்தகை : சீவகன்; எழுவாய். சூர்த்து - சுழன்று. வீழ - விழும்படி. சுடுசுரம் - கொதிக்கும் அம்பு. நெடுந்தகையாகிய வல் லவன். ஓர்த்து - கூர்ந்து பார்த்து. ஒன்றே புணர்ப்ப - மூன்றும் ஒன்று தலைக் கூட்டுதற்கு. (பி - ம்.) 'ஒன்றாய்ப் புணர்ப்ப.' ஒரு பகல் - ஒரு முகூர்த்தம்.

(உரை) [1] (பி - ம்.) 'கூடுதற்கு'

2201. பொறி - பன்றி சுழலும் சக்கரம். ஏறுதலைத் தேற்றான்; தேற்றான் - அறியாதவனாகி. நாணினால் - சக்கரத்தின் மேலேறின் அரசர்

(இ - ள்.) திகிரிமேலேறுதலும் அறியானுய்ப் போகின் நகுவ ரென்று நாணினுற் போதலைச் செய்யானுமாய் வில்லை ஊன்றிநிற்ப, பன்றி அற்று விழுமோ வென்று கூறி, முன்பு வீழ்ந்த மன்னர் நக்குத் தீயும்படி கோபத்தை விளைத்துக்கொண்டாரென்க.

'நெறியின்' என்றுர், [1] அத்தொழிற்கேற்ப நின்ற நிலைதோன்ற. சிதறி - சிதற. (கூ00)

2202. சிரற்றலை மணிகள் வேய்ந்த திருந்துபொற் றிகிரிச் செம்பொன், உரற்றலை யுருவப் பன்றி யிடம்வலந் திரிய நம்பன், விரற்றலைப் புட்டில் வீக்கி வெஞ்சிலை கணையோ டேந்திக், குரற் றலை வண்டு பொங்கக் குப்புற்று நேமி சேர்ந்தான்.

சிச்சிலியின் தலைபோன்ற நிறத்தையுடைய மணிகள் வேய்ந்த உரு வப் பன்றி. புட்டில் [1] விரற்சரடு. குரல் - மயிர்.

(இ - ள்.) திகிரியின் மேலுண்டாகிய உரலிடத்துப் பன்றிகள் இடத் திலும் வலத்திலும் திரியாநிற்க, நம்பன் வீக்கி ஏந்தி வண்டு பொங்கும் படி குதித்து அத்திகிரியைச் சேர்ந்தானென்க. (கூ0க)

2203. ஒள்ளழல் வைரப் பூணு மொளிர்மணிக் குழையு மின்ன, ஒள்ளழற் கொள்ளி வட்டம் போற்குலாய்ச் சுழலப் பொன்ஞாண், ஒள்ளழ னேமி நக்க மண்டல மாக நின்றுன், ஒள்ளழற் பருதி மேலோர் பருதிநின் றதனை யொத்தான்.

---

இகழ்வர் என்னும் நாணத்திருல். போதலைச் செய்யானுமாகி. (பி - ம்.) 'போதறேற்றுன்.' நிழல் - ஒளி. மறியுமோ - விழுமோ. மறியுமோ வென்று மன்னர் நக்குத் தீய; தீய - கெட. தீ - கோபம்.

(உரை) [1] (பி - ம்.) 'தொழிற்கேற்ப.'

2202. சிரல்தலைமணிகள் - சிச்சிலியென்னும் பறவையின் தலை யைப் போன்ற நிறமுள்ள மணிகள். உரற்றலை - உரல்போலும் தலையை யுடைய பன்றியெனலுமாம்; "உரற்றலைக், கேழற்பன்றி" (புறநா. 152 : 3-4, உரை). நம்பன் : சீவகன். விரற்றலை - விரலினிடத்து. புட் டில் : விரலிற் கோத்துக் கொள்வது. வீக்கி - கட்டி. குரல்தலை - மயிரி னிடத்து. குப்புற்று - குதித்து.

(உரை) [1] (பி - ம்.) 'கைச்சரடு.'

2203. பூண் - ஆபரணம். குழை - குண்டலம். குலாய்ச் சுழல - வளைந்து சுழலாநிற்க. (பி - ம்.) 'குலாய்ச்சுடர்ந்து.' அழலை நக்க நேமி, கொள்ளிவட்டம்போல் சுழல. மண்டலமாக - வட்டமாக. பருதி மேல் - வட்டத்தின்மேல். பருதி - சூரியன்.

வைரப்பூணும், அழல்போலும் மணிக்குழையும், பொன்னும் மின்ன நின்றனென்க.

(இ - ள்.) அழலை நக்க நேமி அவ்வழலையுடைய கொள்ளிவட்டம் போலே சுழலாநிற்க, அதன்மேலே மண்டலவிருப்பாக நின்றவன் தானிருத்தற்குரிய மண்டலத்தினுள்ளிராதே அதன்மேலே ஒருஞாயிறு நின்ற தன்மையையொத்தானென்க.

பருதி - வட்டம்; "பருதி போகிய புடைகிளை கட்டி" (பதிற். 74) என்றாற்போலக் கொள்க. (கoஉ)

2204. அருந்தவக் கிழமை போல விருதவில் லருத நாண்வாய்த், திருந்தினார் சிந்தை போலுந் திண்சரஞ் சுருக்கி மாறாய், இருந்தவன் பொறியும் பன்றி யியற்றரும் பொறியு மற்றுங், கொருங்குட னுதிர வெய்தா னூழித்தீ யுருமொ டொப்பான்.

தவக்கிழமை [1] இரண்டிற்குமுவமை; இவ்வுவமைகூறிற்று, [2] விசயனுக்கு அவை இற்றும், அற்றும் போனமை கருதி. திருந்தினார்-இருடிகள்.

(இ - ள்.) உருமேற்றையும் தீயையுமொப்பான், தவக்கிழமைபோல இருதவில்லில் அருத நாண்வாய்த் தொடுத்த சரத்தை வில்லினுள்ளே யாம்படி நிரம்ப வளைத்துக் கட்டியங்காரன் நல்வினையும் பன்றியாகிய பொறியும் சேர அற்று அவ்விடத்தே விழும்படி எய்தானென்க.

அதனையெய்தவன்றே [3] அவனும் படுதலின், 'உடன்' என்றார். (கoங)

2205. இலங்கெயிற் றேன மேவுண் டிருநிலத் திடித்து வீழக், கலங்குதெண் டிரையுங் காருங் கடுவளி முழக்கு மொப்ப, உலம்புபு முரசங் கொட்டி யொய்யெனச் சேனை யார்ப்பக், குலம்பகர்ந் தறைந்து கோமான் கோவிந்தன் கூறி னானே.

---

2204. இருத - முறியாத. அருத - அற்றுப்போகாத. திருந்தினார் சிந்தை - தருமநெறியினின்றும் தவறாத முனிவரது மனம். சரம் சுருக்கி- அம்பினை வில்லினுள்ளே பொருந்த வளைத்து. மாறாய் இருந்தவன் பொறி - கட்டியங்காரனுடைய நல்வினை. பன்றியுள்ள பொறியும். ஒருங்குடன் அற்று ஆங்கு உதிர எய்தான். தீயையும் உருமினையும் ஒப்பான்: சீவகன்.

(உரை) [1] (பி - ம்.) 'இரண்டற்கும்.' [2] "வின்முறிந்து போயிற்று", "நாணற்றது" (சீவக. 2191, 2192). [3] அவன்: கட்டியங்காரன்.

2205. ஏனம் - பன்றி. ஏவுண்டு - அம்புபட்டு. இடித்து - முழங்கி. திரை - கடல். கார் - மேகம். கடுவளிமுழக்கு - கடுங் காற்றின் ஒலி. (பி - ம்.) 'முழக்கு மேய்ப்ப.' உலம்புபு - முழங்கி. ஒய்யென: ஒலிக்குறிப்பு. (பி - ம்.) 'குலம்பறைந் தறைந்து.' கோமானாகிய கோவிந்தன்.

(இ - ள்.) அப்பன்றி அங்ஙனம் ஏவுண்டு இடித்து நிலத்தே விழு தலிற் சேனை கடல் முதலியவற்றையொப்ப முழங்காநின்று முரசைக் கொட்டி ஆராநிற்ப, கோமானாகிய கோவிந்தன் சீவகன்குலத்தைக் கட்டியங்காரனுக்கு முற்படக் கூறிப் பின்பு எல்லாருமறியச் சாற்றினானென்க.

இனி, குலத்தைப்பகர்ந்து நின்னைக் கொல்வேனென்று வஞ்சினங் கூறினானென்றுமாம். (கoச)

2206. வானிடை யொருவன் றோன்றி மழையென முழங்கிச் சொல்லும், தேனுடை யலங்கல் வெள்வேற் சீவக னென்னுஞ் சிங்கம், கானுடை யலங்கன் மார்பிற் கட்டியங் கார னென்னும், வேன்மிடை சோலை வேழத் தின்னுயிர் விழுங்கு மென்றான்.

(இ - ள்.) வானிடத்தே தோன்றிச் சொல்லுமொருவன், சீவக னென்னுஞ் சிங்கம் வேலாகிய சோலையில் நிற்கின்ற கட்டியங்காரனென் னும் வேழத்தினுயிரை விழுங்குமென்று கூறினானென்க.

ஒருவன் - இயக்கன். (கoரு)

(வேறு)

2207. விஞ்சையர் வெம்படை கொண்டுவந் தாயென
அஞ்சுவ லோவறி யாயென தாற்றலை
வெஞ்சம மாக்கியுன் வீக்கறுத் துன்னொடு
வஞ்சனை வஞ்சம றுத்திடு கென்றான்.

(இ - ள்.) விஞ்சையர்படையைக் கொண்டுவந்தாயென்று யான் அஞ்சுவேனோ? [1] எனதாற்றலை நின்தந்தையறிவன்; நீயறியாய்; இனி யாம் போர் செய்திட்டால் உன்னையும் என்னைக் களவாற் கொலைசூழ்ந்த கோவிந்தனையும் அக்களவைத் தீர்த்து வீக்கமறுத்திடுவேனென்றானென்க.

வீக்கம் - பெருமை. (கoசா)

---

2206. வானிடைத் தோன்றிச் சொல்லும் ஒருவன். அலங்கல் - மாலை. கான் - வாசனை. மார்பினையுடைய கட்டியங்காரன். (பி - ம்.) 'அலங்கன் மாலைக்.' வேன்மிடை சோலை : "வேலின் வனம்" (கம்ப. கரன்வதைப். 166). கட்டியங்காரனென்னும் வேழத்தினது உயிரை.

2207. விஞ்சையர் - வித்தியாதரர். அஞ்சுவலோ - யான் பயப்படு வேனோ? எனதாற்றலை நீ அறியாய். சமம் ஆக்கிடின் - யாம் போர் செய்தால். உன்னையும் வஞ்சனையும் வஞ்சமறுத்து வீக்கம் அறுத்திடுவே னென்றான்; வஞ்சன் : கோவிந்தராசன். வஞ்சம் - என்னைக் கொலை சூழ்ந்த வஞ்சகத்தை; வீக்கம் - பெருமை. (பி - ம்.) 'அறுத்திடுகின் றேன்.' இப்பாடல் கட்டியங்காரன் கூற்று.

(உரை) [1] (பி - ம்.) 'என்வலியை.'

2208. சூரியற் காண்டலுஞ் சூரிய காந்தமஃ
தாரழ லெங்ஙனங் கான்றிடு மங்ஙனம்
பேரிசை யானிசை கேட்டலும் பெய்ம்முகிற்
காரிடி போன்மத னன்கனன் றிட்டான்.

(இ - ள்.) சூரியகாந்தமாகிய அது சூரியனைக்கண்ட அளவிலே அழலை எங்ஙனம் காலும்? அதுபோல மதனன் சீவகன்வெற்றியைக் கேட்ட அளவிலே கார்காலத்தின் முகிலிடிபோலக் கோபித்தானென்க. (கoஎ)

2209. காற்படை யுங்களி றுங்கலி மாவொடு
நூற்படு தேரு நொடிப்பினிற் பண்ணி
நாற்படை யுந்தொகுத் தான்மக்க ணச்சிலை
வேற்படை வீரரொர் நூற்றுவர் தொக்கார்.

(இ - ள்.) கட்டியங்காரன் காலாளாகிய படையும் களிறும் மாவும் நூல் வழிப்பட்ட தேருமாகிய நால்வகைப்படையையும் ஒருகணத்திற் சமைத்துத் தொகுத்தான்; தொகுத்த அளவிலே வேற்படைவீரராகிய அவன்மக்கள் நூற்றுவரும் தொக்காரென்க.

நஞ்சு தோய்த்த அலகையுடைய வேல். (கoஅ)

2210. விற்றிற லான்வெய்ய தானையும் வீங்குபு
செற்றெழுந் தான்படை யுஞ்சின மொய்ம்பொடு
மற்றவர் மண்டிய வாளமர் ஞாட்பினுள்
உற்றவர்க் குற்றதெ லாமுரைக் குற்றேன்.

---

2208. சூரியகாந்தமாகிய அஃது சூரியனைக் காண்டலும் அழலை எங்ஙனம் கான்றிடுமோ அங்ஙனம்; கான்றிடும் - கக்கும்: அங்ஙனம் - அது போல. மதனன், பேரிசையானுடைய இசையைக் கேட்டலும் கார் காலத்து முகிலிடிபோல் கனன்றிட்டான்; பேரிசையான் இசை - சீவக னுடைய வெற்றி.

2209. காற்படை - காலாட்படை. கலிமா - குதிரைப்படை. நூற்படு தேர் - நூலிற் கூறியவழியே உண்டாக்கப்பட்ட தேர்ப்படை. நொடிப் பினில் - ஒரு கணத்தில். பண்ணி - போரிற்கேற்பச் சமைத்து. நச்சு = நஞ்சு - விடம். இலைவேல் - அலகையுடைய வேல்; சூளா. அரசியற். 104. வேற்படைவீரராகிய மக்கள்; என்றது கட்டியங்காரனுடைய பிள்ளைகள் நூற்றுவரை.

2210. விற்றிறலான்: சீவகன். வீங்குபு = வீங்கி - மிக்கு. செற்றெழுந் தான்: கட்டியங்காரன். மொய்ம்பு - வன்மை. மற்று: அசை. வாளம ராகிய ஞாட்பினுள்; அமர் - போர். ஞாட்பு - போர். உற்றது - நடந்த செய்தியை.

(இ - ள்.) சீவகன்றனையும், கட்டியங்காரன்படையும், அவர்தாங் களுமுற்று மொய்ம்பொடு மிக்குச்சென்ற வாட்போராகிய போரிலே, அவர்கட்குற்ற செய்திகளெல்லாம் உரைக்கலுற்றேனென்றானென்க.

உற்றதெல்லாம் : ஒருமைபன்மைமயக்கம். (கoக)

(வேறு)

2211. அத்தமா மணிவரை யனைய தோன்றல
மத்தகத் தருவியின் மணந்த வோடைய
முத்துடை மருப்பின முனைக்கண் போழ்வன
பத்தியிற் பண்ணின பரும யானையே.

(இ - ள்.) அத்தகிரியையொத்த தோன்றல; அதனருவி போல் மத்தகத்தே மணந்த ஓடைய; மருப்பின; பகைப்புலத்தை அவரெதிர்ந்த இடத்தே கொல்வனவாகிய பருமயானைகள் அணிகளிலே சமைந்தன வென்க. (கக0)

2212. கோல்பொரு கொடுஞ்சிலை குருதி வெம்படை
மேலவ ரடக்குபு வேழ மேறலின்
மாலிரு விசும்பிடை மணந்த வொண்கொடி
கால்பொரு கதலிகைக் கான மொத்தவே.

(இ - ள்.) மேலாட்கள், வில்லையும் ஒழிந்த படைகளையும் வேழங் களின் மேலே அடக்கி அவற்றையேறலின், எடுத்த கொடி காற்றடித்து இலை கிழிந்த கதலிகைக்காட்டையொத்தனவென்க. (ககக)

---

2211. அடி, 1 : சீவக. 18; களவழி. 7. தோன்றல - நெடுந் தூரத்தாராலும் காணுதற்குரிய தோற்றத்தையுடையன; பெருங். 3. 26 : 69. அருவியைப்போல் மத்தகத்தே மணந்த ஓடைய; மணந்த - கலந்த; ஓடை - நெற்றிப்பட்டம். அடி, 1-2 : "குன்றுகண் டன்ன தோன்றல குன்றின், அருவி யன்ன வுருவுகொ ளோடைய" (பெருங். 1. 48 : 22-3). முனைக்கண் - போர்முனையிடத்தே. போழ்வன - எதிர்ந்தவரைக் கொல் வன. யானை பத்தியிற் பண்ணின; பத்தி - வரிசை.

2212. கோல் - அம்பு. வேழங்களின் மேல் அடக்குபு ஏறலின்; அடக்குபு - அடக்கி. மணந்த - கலந்தெழுந்த. கால்பொரு - காற்று லடிக்கப்பட்ட. கதலிகைக் கானம் - வாழைக்காடு.

2213. (க) குடையுடை நிழலின கோல மார்ந்தன
கிடுகுடைக் காப்பின கிளர்பொற் பீடிகை
அடிதொடைக் கமைந்தன வரவத் தேர்த்தொகை
வடிவுடைத் துகின்முடி வலவர் பண்ணினர்.

2214. (உ) கொய்யுளைப் புரவிகள் கொளீஇய திண்ணுகம்
பெய்கயி றமைவரப் பிணித்து முள்ளுறீஇச்
செய்கயி றுய்ந்தன சிலையு மல்லவும்
கையமைத் திளைஞருங் கருவி வீசினர்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(இ - ள்.) [1] மேலே நாட்டின குடையினுடைய நிழலின; அம்பு படாதபடி நாற்றின [2] கிடுகுடைத்தாகிய காப்பின; பொற்றட்டுக் கோல மார்ந்தன; எய்யுங்காலத்து அடிவைத்து நிற்றற்கும், எய்தற்றொழிற்கும் அமைந்தனவாகிய தேர்த்திரளிலே தலைக்கட்டினையுடைய பாகர் புரவி களைப்பூட்டின நுகத்திற்பெய்த கயிற்றைத் தேருடனேபிணித்துப் பண்ணினர்; பண்ணின பின்னர் அவை முள்ளுறுத்தி வாய்க்கயிறும் ஆய்ந்து பிடிக்கப்பட்டன; அப்பொழுது தேர்வீரரும் வில்லையும் ஒழிந்த படைகளையும் கையிலேயமைத்துக் கவசத்தை அணிந்தாரென்க. (ககஉ - ௩)

2215. (க) பறந்திய றருக்கின பரவை ஞாட்பினுட்
கறங்கெனத் திரிவன கவரி நெற்றிய
பிறந்துழி யறிகெனப் பெரிய நூலவர்
குறங்கெழுத் துடையன குதிரை யென்பவே.

---

2213. கோலம் - அழகு. கிடுகுடைக் காப்பின - அம்பு படாதபடி தடுத்தற்கமைந்த கிடுகையுடையனவாகிய காவலையுடையன. அடி தொடைக்கமைந்தன - அடிவைத்து நிற்றற்கும் அம்புகளை வைத்து எய்தற்கும் அமைந்தன. அடி, 2 : “ அடிதொடைக் கமைந்த கிடுகுடைக் காப்பின் ” (பெருங். 1. 48 : 17). அரவம் - ஒலி. வடிவு - அழகு. துகில் முடி வலவர் - தலைக்கட்டையுடைய தேர்ப்பாகர். வலவர் தேர்த்தொகை களில் குதிரைகளைப்பண்ணினர்.

2214. கொய்யுளை - கத்தரித்து மட்டஞ்செய்த பிடரிமயிர். புரவி களைக் கொளீஇய நுகத்தில்; கொளீஇய - பூட்டிய. பெய்கயிறு - நுகத் திற் கோத்த கயிற்றை. பிணித்து - தேரிற்கட்டி. முள் உறீஇ - தாற்றுக் கோலைப் பொருத்தி. கயிறு - கடிவாளம். கையில் அமைத்து. இளைஞர் - வீரர். கருவி - கவசத்தை. வீசினர் - அணிந்தார்; சீவக. 777, 1847.

(உரை) [1] (பி - ம்.) ‘ மேல்நட்ட.’ [2] கிடுகுடைக்காப்பை ரதகுப்தி யென்றும் வரூதமென்றுங் கூறுவர் வடநூலார்.

2215. பறந்தியல் தருக்கின - பறந்து செல்லும் தருக்குடை யன; “ புள்ளியற் கலிமா ” (தொல். கற்பியல், 35); “ பறத்தரல் விசையி

2216. (உ) கொன்னுனைக் குந்தமுஞ் சிலையுங் கூர்நுதி
மின்னிலை வாளொடு மிலேச்ச ரேறலிற்
பொன்னரிப் புட்டிலுந் தாரும் பொங்குபு
முன்னுருத் தார்த்தெழப் புரவி மொய்த்தவே.

இவையிரண்டும் ஒருதொடர்.

(இ - ள்.) பறந்துசெல்லுஞ் செலவிலே தருக்கின; பரந்தலையுடைய போரிலே திரிவன; நெற்றிய; நூலவர் பிறந்தவிடமறிகவென்று குறங்கிலே எழுதின எழுத்தையுடையனவாகிய குதிரைகளை [1] மேலாளாகிய மிலேச்சர் குந்தத்தோடும் வில்லோடும் வாளோடும் ஏறலின், அப்புரவிகள் [2] கெச்சையும் தாருமார்ப்ப மொய்த்தனவென்க.

என்ப : அசை. (கககச - ரு)

2217. மாலையுங் கண்ணியு மணந்த சென்னியர்
ஆலுபு செறிகழ லார்க்குங் காலினர்
பாலிகை யிடையறப் பிடித்த பாணியர்
சாலிகை யுடம்பினர் தறுக ணாளரே.

---

னும்", "பறவை யிரும்பிடி" (பெருங். 1. 48 : 72, 133). பரவை ஞாட்பினுள் - கடலைப்போன்ற போர்க்களத்தில் எனலுமாம். கறங்கு - காற்றுடி. கவரியையுடைய நெற்றியன. பிறந்துழி - குதிரைகள் பிறந்த இடத்தை. குறங்கில் எழுதிய எழுத்துடையன; குறங்கு - துடை.

2216. கொல்நுனைக் குந்தம் - கொல்லுதற்குரிய முனையையுடைய எறிகோல்; வேல் எனலுமாம். (பி - ம்.) 'கொன்னிலைக் குந்தமுஞ்.' இலைபோலும் நுதியையுடைய வாள். மிலேச்சர் ஒருவகைவீரர்; இவர்கள் குதிரையைச் செலுத்தும் ஆற்றலிற் சிறந்தவர்கள்; "மிலைச்ச ரேறித் தலைப்படைத் தருக்குவ" (பெருங். 3. 26 : 74). பி - ம்.) 'மிலைச்ச ரேற்றலிற்.' பொன்னரிப்புட்டில் - பொன்னுலாகிய பரல்களைக்கொண்ட கெச்சை. கெச்சையும் தாரும் : சீவக. 1772, அடிக். தார் - கிண்கிணி மாலை. பொங்குபு - மிகுத்து.

(உரை) [1] (பி - ம்.) 'மேலாகிய.' [2] (பி - ம்.) 'செச்சை.'

2217. மாலை : மார்பிலணிவது. கண்ணி : முடியிலணிவது. ஆலுபு - முழங்கி. பாலிகை இடையறப் பிடித்த பாணியர் - கத்திப்பிடியின் நடுவறும்படி பிடித்த கையினர்; "பாலிகை விளிக்கும் பண்ணமை பற்றினர்" (பெருங். 3. 20 : 13). சாலிகை உடம்பினர் - கவசமணிந்த மெய்யினர்.

(இ - ள்.) தறுகணுளர், ஆலுபு, சென்னியர், காலினர், [1] வாண் முட்டியை இடையறும்படி பிடித்த கையினர், கவசமணிந்த உடம்பினரா யிருந்தாரென்க.

இவர் காலாட்கள். (கககூ)

2218. போர்மயிர்க் கேடகம் புளகத் தோற்பரம்
வார்மயிர்க் கிடுகொடு வள்ளித் தண்டையும்
நேர்மரப் பலகையு நிரைத்த தானையோர்
போர்முகப் புலிக்கடல் புகுந்த தொத்ததே.

(இ - ள்.) மயிர் போர்த்த பரிசையையும், கண்ணுடி தைத்த கடகினையும், மயிர்க்கிடுகினையும், பிரப்பங்கொடியாற் பண்ணின பரிசையினையும், வலிய பலகையினையும், நிரைத்த அக்காலாளாகிய படை புலிக் கடல் புகுந்த தன்மையை ஒத்ததென்க.

'பரந்தது' எனவும் பாடம். (ககஎ)

(வேறு)

2219. பார்நனை மதத்த பல்பேய் பருந்தொடு பரவச் செல்லும்
போர்மதக் களிறு பொற்றேர் நான்கரைக் கச்சமாகும்
ஏர்மணிப் புரவி யேழா மிலக்கமேழ் தேவ கோடி
கார்மலி கடலங் காலாள் கற்பகத் தாரி ளுற்கே.

(இ - ள்.) சீவகற்குப் பேயும் பருந்தும் பரவச்செல்லும் மதத்த வாகிய களிறும் தேரும் ஒரோவொன்று நான்கரைக் கச்சமாகும்; புரவி ஏழுநூறுயிரமாம்; காலாள் ஏழுதேவகோடியாமென்க.

கச்சம், தேவகோடி யென்பன [1] சில எண்ணுப் பெயர்கள். கார் - கறுப்பு. (ககஅ)

---

(உரை) [1] வாண்முட்டி - கத்திப்பிடி.

2218. அடி, 1 : பெருங். 1. 46 : 60. மயிர்போர்த்த கேடகம் : சூளா. அரசியற். 159. புளகத் தோற்பரம் - கண்ணுடி தைத்த கிடுகு; சூளா. அரசியற். 274. மயிரணிந்த கிடுகு. வள்ளித்தண்டை - பிரப்பங் கொடியாற் செய்த கிடுகு. தானையோர் : காலாட் படையினர்.

2219. பேயும் பருந்தும் பாவச் செல்லும் மதத்தவாகிய களிறு. கச்சம் : ஒருவகைப் பேரெண்; கூர்ம. கண் - பூமி. 21. ஏழாம் இலக்கம் - ஏழுலட்சம். காலாட்படை ஏழு தேவகோடி அளவாகும். தாரினுற்கு : சீவகனுக்கு.

(உரை) [1] சில எண்ணுப் பெயர்கள் - ஒருவகையான பேரெண்கள்.

2220. நிழன்மணிப் புரவித் திண்டேர் நிழறுழாய்க் குனிந்து குத்தும், அழறிகழ் கதத்த யானை யைந்தரைக் கச்ச மாகும், எழின்மணிப் புரவி யேழா மிலக்கமேழ் தேவ கோடி, கழன்மலிந் திலங்குங் காலாள் கட்டியங் காரற் கன்றே.

(இ - ள்.) கட்டியங்காரற்குத் தேரும் யானையும் ஒரோவொன்று ஐந்தரைக் கச்சமாம்; புரவி ஏழுநூறுயிரமாம்; காலாள் ஏழுதேவகோடி யாமென்க. (கககக)

(வேறு)

2221. குலங்கெழு மகளிர்தங் கோல நீப்பவும்
அலங்குளைப் புரவியுங் களிறு மாளவும்
நிலமக ணெஞ்சுகை யெறிந்து நையவும்
புலமகன் சீறினன் புகைந்த தெஃகமே.

(இ - ள்.) மகளிர் கோலத்தைக் கைவிடவும், புரவியும் களிறும் படவும் தன்கணவராகிய மன்னர்படுதலின், நிலமகள் நெஞ்சிலே கையாலே அடித்துக்கொண்டு வருந்தவும், சீவகன் சீறினான்; அவனெஃகமும் [1] புகைந்ததென்க.

"நிலமக ளழுத காஞ்சியும்" (புறநா. 365) என்றார் புறத்திலும். 'புலமகன்' என்றார், ஓர்யாண்டுஞ் சென்று சீறலின். (கஉ0)

2222. குணில்பொரக் குளிறின முரசம் வெள்வளை
பணைபரந் தார்த்தன பம்பை வெம்பின
இணையில வெழுந்ததாழ் பீலி யெங்கணும்
முணையினற் கடலக முழக்க மொத்தவே.

---

2220. நிழல் - ஒளி. நிழலைத் துழாய்க் குனிந்து குத்துகின்ற யானை; துழாய் - துழாவி; "கவிழ்ந்து நிழறுழாம் யானை" (தண்டி. மேற்.). இப்பாடலிற் கட்டியங்காரனுடைய சேனையின் அளவு கூறப் பட்டது.

2221. குலம் கெழு - நற்குலத்திற் பொருந்திய. கோலம் - மங்கல அணிகள். மாளவும் - இறக்கவும். நெஞ்சில் கையால் எறிந்து; எறிந்து - புடைத்து. புலமகன் - அறிவுடைய சீவகன். எஃகம் புகைந்தது.

(உரை) [1] (பி - ம்.) 'எரிந்ததென்க.'

2222. குணில் பொருதலால் முரசம் குளிறின; குணில் - குறுந்தடி; குளிறின - முழங்கின. வளையும் பணையும் ஆர்த்தன; வளை - சங்கம். பணை - ஒருவகை முரசம். வெம்பின - ஒலித்தன. தாழ்பீலி இணை யிலவாய் எழுந்தன; தாழ்பீலி : சிறுசின்னம் : சீவக. 2108. முணை யினால் - ஓசை மிகுதியால்; முணை - மிகுதி. கடலகத்து முழக்கத்தை ஒத்தன.

(இ - ள்.) பெருங்கடிப்பு எறிதலின் முரசம் முழங்கின; வளையும் பணையும் பரந்தார்த்தன; பம்பை ஒலித்தன; சிறுசின்னம் தமக்கொப் பின்றியே எழுந்தன; இவ்வோசைகளின் மிகுதியாலே எவ்விடத்தொலி யும் கடலிடத்து முழக்கையொத்தன வென்க.

பணை - முரசின் விசேடம். பம்பை - வாச்சிய விசேடம். (கஉக)

2223. முடிமன ரெழுதரு பருதி மொய்களி
றுடைதிரை மாக்கல மொளிறு வாட்படை
அடுதிற லெறிசுரு வாகக் காய்ந்தன
கடலிரண் டெதிர்ந்ததோர் கால மொத்ததே.

(இ - ள்.) மன்னர் பருதியாகக் களிறு மரக்கலமாகக் குதிரை திரை யாக வாட்படை சுருவாகத் தம்மிற் காய்ந்தனவாகிய இரண்டு கடல் போர் செய்தற்கு எதிர்ந்ததொரு காலமுண்டாயின் அதனை ஒத்தது, இக்கால மென்க. (கஉஉ)

2224. அருங்கணை யடக்கிய வாவ நாழிகை
பெரும்புறத் தலமரப் பிணித்த கச்சினர்
கருங்கழ லாடவர் கருவில் வாய்க்கொளீஇச்
சொரிந்தனர் கணைமழை விசும்பு தூர்ந்ததே.

(இ - ள்.) கொடிய கழலையுடைய வீரர், கட்டின [1] கச்சினராய் அம்பறாத்தூணி தம்முதுகிலேயசையும்படி வில்லிடத்தே அம்பைத் தொடுத்து அதனைச் சொரிந்தார்; அப்பொழுது விசும்பு தூர்ந்ததென்க.

தூணியைப் பிணித்த கச்சுமாம். (கஉஙு)

2223. முடிமனர் - கிரீடத்தையுடைய மன்னர். பருதி - சூரியன். களிறுகலமாக; கலம் - கப்பல். மா திரையாக; மா - குதிரை; திரை - அலை. காய்ந்தன - கோபித்துப் பொருதனவாகிய சேனை. போர்க் களத்திற்குக் கடல்: "வங்கமு மீனெறியு மாக்களு மீன்சுறவும், பொங்குந் திரையும் பொருகடலும் - இங்கிவை, தேர்த்திரளுங் காலாளுந் திண் களிறும் வெம்பரியும், போர்க்களமும் போலும் பொலிந்து" (கிளவித் தெளிவு)

2224. கணை - அம்பு. ஆவநாழிகை - அம்பறாத்தூணி. புறம் - முதுகு. அலமர - அசையும்படி. கருங்கழல் - கொடிய வீரக்கழல். கச்சினராகிய ஆடவர். வில்வாய்க் கணையைக் கொளீஇ மழைபோற் சொரிந்தனர்; கொளீஇ - தொடுத்து.

(உரை) [1] (பி - ம்.) 'கச்சையராய்.'

2225. நிணம்பிறங் ககலமுந் தோளு நெற்றியும்
அணங்கருஞ் சரங்களி னழுத்தி யையென
மணங்கமழ் வருபுனன் மறலு மாந்தரிற்
பிணங்கமர் மலைந்தனர் பெற்றி யின்னதே.

(இ - ள்.) சரங்களால் வருத்துதற்கரிய மார்பு முதலியவற்றிலே அச்சரங்களை அழுத்துதலிற் பெருகின குருதியிலே நின்று, புதுப்புனலிற் போர் செய்யும் மாந்தரைப்போலே பிணங்குகின்ற அமரை மேற்கொண்டவர் தன்மை இன்னதென்க.

அது மேற் கூறுகின்றார். (கஉச)

2226. கழித்தனர் கனலவாள் புகைந்து கண்கட
விழித்தன தீந்தன விமைகள் கூற்றெனத்
தெழித்தனர் திறந்தன ரகல மின்னுயிர்
அழித்தன ரயிலவ ரரவ மிக்கதே.

(இ - ள்.) அவர் கூற்றுப்போலே கோபித்தார் ; கோபித்தலிற் கண்கள் தீப்போல விழித்தன ; அதனால் இமைகள் தீந்தன ; அக்கோபத்தை முடித்தற்கு வாள்புகைந்து கனலும்படி உறைகழித்தார் ; கழித்து அகலத்தைத் திறந்தார் ; திறந்து உயிரைப் போக்கினர் ; அதன்பின்பு வேலாற் பொருகின்றவர் போரரவம் மிக்கதென்க. (கஉரு)

2227. பொருங்களத் தாடவர் பொருவில் பைந்தலை
அரும்பெறற் கண்ணியோ டற்று வீழ்வன
கருங்கனிப் பெண்ணையங் கானங் கால்பொர
இருங்கனி சொரிவன போன்ற வென்பவே.

---

2225. நிணம் - கொழுப்பு. அகலம் - மார்பு. அணங்கரும் - வருத்துதற்கரிய ; மார்பு முதலியவற்றிற்கு அடை. சரங்களினால் அழுத்தி. ஐயென : ஒலிக்குறிப்பு ; வியப்பெனலுமாம். வருபுனல் - புதிதாக வருகின்ற செந்நிற நீரில். மறலும் மாந்தரின் - விளையாட்டுப் போரைச் செய்யும் மனிதரைப் போல. (பி - ம்.) 'மதித்து மாந்தரிற்.' பிணங்கமர் - மாறுபட்ட போரில்.

2226. வாளைக் கனலும்படி உறையினின்றும் கழித்தனர். கண்கள் தீப்போல் விழித்தன. இமைகள் தீந்தன ; தீந்தன - கருகின ; (பி - ம்.) 'தீய்ந்தன.' தெழித்தனர் - ஆரவாரித்தனர். அகலத்தைத் திறந்தனர்; அகலம் - பகைவருடைய மார்பை. உயிரை அழித்தனர். அயிலவர் அரவம் - வேல்வீரரது போர் முழக்கம்.

2227. களம் - போர்க்களம். ஆடவரது தலைகள். கண்ணி - மாலை. தலை, கண்ணியோடு அற்றுவீழ்வன என்றுமாம் ; வீழ்வன - வீழ்கின்றவை. கரிய கனியையுடைய பெண்ணைக் கானம் ; பெண்ணை - பனை

(இ - ள்.) தும்பைமாலையோடும் பொரும் ஆடவர் செவ்வித்தலைகள் அற்றுக்களத்தே வீழ்கின்றவை, கனியையுடைய பனங்காடு காற்றடித் தலின் அப்பழத்தைச் சொரிவன போன்றனவென்க.

இது முதற்கூறிய அம்பாலும் வாளாலும் தலைகளற்றதற்குவமை. (கஉசு)

2228. பணைமுனிந் தாலுவ பைம்பொற் றாரின
கணைவிசை தவிர்ப்பன கவரி நெற்றிய
துணையமை யிளமைய தோற்ற மிக்கன
இணைமயிர்ப் புரவியோ டிவுளி யேற்றவே.

(இ - ள்.) பந்தியினிற்றலை வெறுத்து ஆலுவன; தாரின; தவிர்ப் பன; நெற்றியன; போரிற்கு உதவியாயமைந்த இளமையன; வடிவு மிக்கனவாகிய புரவியும் புரவியும் தம்மிற் [1] போரைத் தொடங்கின வென்க. (கஉஎ)

2229. கூருளி முகம்பொரக் குழிசி மாண்டன
ஆரொளி யமைந்தன வாய்பொற் சூட்டின
காரொளி மின்னுமிழ் தகைய காலியற்
றேரொடு தேர்தமுட் சிறந்து சேர்ந்தவே.

(இ - ள்.) உளிவாயால் தொழிற்படுதலின், நடுவுநிற்குங் குறடு மாண்டன; அதனிற்றைத்த ஆர் அமைந்தன; சூட்டின; காரின் மின் ளொளியைக் காலும் தகைமையனவாகிய உருளையாற்செல்லுதலையுடைய தேரும் தேரும் தம்மின் மிக்குப்போரைத் தொடங்கினவென்க. (கஉஅ)

---

கால்பொர - காற்று அடித்தலால். இருங்கனி - கரிய பனம்பழம். வீரர் தலைக்குப் பனங்கனி உவமை: "தலையிறுபு தாரொடு புரள, 'நிலை தொலைபு வேர்தூர்மடல், குருகு பறியாநீளிரும் பனைமிசைப், பலபதி னுயிரங் குலைதரை யுதிர்வபோல்" (பரி. 2 : 41 - 4); "இலங்கையர் கோனைப், பானுநேர் சரத்தாற் பனங்கனி போலப் பருமுடி யுதிரவில் வளைத்தோன்" (பெரியதிரு. 9. 1 : 7); "பெண்ணைத் தீங்குலைத் தொடுத்த, விளைவுறு தீங்கனி வீழ்ச்சி யேய்ப்பத்......தலைபல புரளவும்" (பெருங். 1. 46 : 20 - 22); களவழி. 24; மேரு. பலதேவன். 15.

2228. பணை - குதிரைப்பந்தி; நெடுநல். 93. ஆலுவ - முழங்கு வன. தார் - கிண்கிணிமாலை. கணையின் விசையைத் தவிர்ப்பன: சீவக. 1770, அடிக். கவரிநெற்றிய : சீவக. 2215. துணை - உதவி. தோற்றம் - வடிவு. இவுளி - குதிரை.

(உரை) [1] (பி - ம்.) 'பொரத்தொடங்கின.'

2229. உளி முகம் பொர - உளியின் வாயால் தொழிற்பட்டமை யால். குழிசி - குறடு. மாண்டன - மாட்சிமைப்பட்டன. ஆர் - ஆரக் கால். சூட்டு - விளிம்பு. காரின் மின்னொளியை உமிழ்தகைய. தகைய வாகிய தேர். தமுள் - தம்முள்.

2230. அஞ்சன மெழுதின கவள மார்ந்தன
குஞ்சரங் கூற்றொடு கொம்மை கொட்டுவ
அஞ்சன வரைசிற குடைய போல்வன
மஞ்சிவர் குன்றென மலைந்த வேழமே.

(இ - ள்.) எழுதப்பட்டன; ஆர்ந்தன; கூற்றை நன்குமதித்துக் கொம்மைகொட்டுவன; ஓடுகின்ற விசையாற் பறக்கின்ற மலையை யொப்பனவாகிய குஞ்சரமும் வேழமும் குன்றுகள் மலைந்தவென்ன மலைந்தவென்க.

[1] மஞ்சு': கொடிக்குவமை. (கஉகூ)

2231. மாக்கடற் பெருங்கலங் காலின் மாறுபட்
டாக்கிய கயிறரிந் தோடி யெங்கணும்
போக்கறப் பொருவன போன்று தீப்படத்
தாக்கின வரசுவாத் தம்மு ளென்பவே.

(இ - ள்.) பெருங்கலங்கள் நங்குரத்திற்கட்டிய கயிறு காற்றுலற்று எவ்விடத்தினும் போக்கறவோடி மாறுபட்டுப் பொருவனபோலே, அரச ரேறிய யானைகள் [1] கோடுங்கோடும் சந்தித்துத் தீப்பிறக்கும்படி தம்மிற் பொருதனவென்க. (கா௦)

2232. விடுசரம் விசும்பிடை மிடைந்து வெய்யவன்
படுகதிர் மறைந்திருள் பரந்த தாயிடை
அடுகதி ரயிலொளி யரசர் மாமுடி
விடுகதிர் மணியொளி வெயிலிற் காய்ந்தவே.

---

2230. அஞ்சனம் - மை; யானைக்கு மைபூசுதல் : சீவக. 2434; பெருங். 1. 48 : 184. கூற்றொடு கொம்மை கொட்டுவ : சீவக. 1109, அடிக்; "கூற்றொடுங் கொம்மை கொட்டிக் குனிக்கும்" (நைடதம், போர். 27); கொம்மை கொட்டல் - தட்டியழைத்தல். அஞ்சனவரை - கரிய மலை. குஞ்சரமும் வேழமும் குன்றென மலைந்தன. யானைக்கு மலை உவமை : சூளா. அரசியற். 104.

(உரை) [1] மஞ்சு - வெண்மேகம்.

2231. கலம் - கப்பல். காலின் - காற்றுல். ஆக்கிய கயிறு அரிந்து - நங்குரத்திற்கட்டிய கயிறு அற்று; "வீங்குபிணி நோன்கயி றரீஇ" (மதுரைக். 376). தீப்பட - தீப்பிறக்கும்படி. அரசுவா தம்முள் தாக்கின; அரசுவா - அரசரேறிய யானைகள். மு : மணி. 4 : 30 - 44.

(உரை) [1] கோடும் கோடும் சந்தித்தல் : சீவக. 2254.

2232. மிடைந்து - நெருங்குதலால். வெய்யவன் - சூரியனுடைய. ஆயிடை - அப்பொழுது. கதிரையுடைய அயிலின் ஒளி; அயில் - வேல்; (பி - ம்.) 'அடுதிற லயிலொளி.' வெயிலின் - சூரியனைப்போல். அவ்

(இ - ள்.) சரம் விசும்பிடத்தே நெருங்குதலின் வெய்யவன் கதிர்கள் மறைந்து இருள்பரந்தது; அப்பொழுது அவ்விருளைப் படைக்கலங்களி னொளியும் மணியொளியும் வெயில் கெடுக்குமாறுபோலக் கெடுத்தன வென்க. (கசுக)

2233. பூண்குலாம் வனமுலைப் பூமி தேவிதான்
காண்கலேன் கடியன கண்ணி னாலெனச்
சேண்குலாங் கம்பலஞ் செய்ய தொன்றினால்
மாண்குலாங் குணத்தினன் மறைத்திட் டாளரோ.

(இ - ள்.) மண்மகள் தான், தனது நற்குணத்தாலே, இங்ஙனம் கடிய மறங்களை என் கண்ணாற் காணமாட்டேனென்று கருதிப் பெரிய நிலமெல்லாம் பரந்த உதிரமென்கின்ற செய்யதொரு படாத்தாலே மறைத்தாளென்க.

குணத்தினாளும் பாடம். (கசுஉ)

(வேறு)

2234. கலைக்கோட்ட வகலல்குற் கணங்குழையார் கதிர்மணிப் பூண், முலைக்கோட்டா லுழப்பட்ட மொய்ம்மலர்த்தா ரகன் மார்பர், மலைக்கோட்ட வெழில்வேழந் தவநூறி மதயானைக், கொலைக்கோட்டா லுழப்பட்டுக் குருதியுட் குளித்தனரே.

கலையையுடைய அல்குல்; கோடு - பக்கம்.

(இ - ள்.) கோட்டமாகிய அல்குலையுடைய மகளிர் முலைக்கோட்டால் உழப்பட்ட மார்பர், இப்பொழுது மலைக்குவட்டின் தன்மையையுடைய வாகிய வேழத்தை நூறி அவற்றின் கோட்டாலுழப்பட்டுக் குருதியுள்ளே குளித்தாரென்க. (கசுந)

---

விருளை. அயிலொளியும், மணியொளியும் வெயிலைப்போல் காய்ந்த; காய்ந்த - கெடுத்தன.

2233. பூண் - ஆபரணம். கடியன - கொடியனவாகிய பாவச்செயல் களை. சேண்குலாம் - நெடுந்தூரம் பரந்த. செய்யது கம்பலம் - இரத்த மாகிய சிவந்த போர்வை. மாண்குலாம் - மாட்சிமை பொருந்திய. பூமிதேவி, குணத்தினால், கடியனவற்றைக் கண்ணினாற் காண்கலே னெனக் கம்பலமொன்றினால் தன்னை மறைத்திட்டாள்; களவழி. 32.

2234. கலைக்கோட்ட - மேகலையை யணிந்த பக்கத்தையுடைய. குழையார் : மகளிருடைய. முலைக்கோடு - முலையாகிய கொம்பு. உழப் பட்ட மார்பரென்றது வீரரை. மலைக்கோட்ட எழில் வேழம் - மலைச் சிகரத்தின் அழகையுடைய யானையை. தவ நூறி - மிக அழித்து. கோடு - தந்தம்.

2235. மணமாலை மடந்தையர்த மெல்விரலாற் றெடுத்தணிந்த
இணர்மாலை யிருங்குஞ்சி யீர்ங்குருதிப் புனலலைப்ப
நிணமாலைக் குடர்சூடி நெருப்பிமையா நெய்த்தோரிற்
பிணமாலைப் பேய்மகட்குப் பெருவிருந் தயர்ந்தனரே.

[1] ஈர்க்குங் குருதி : விகாரம்.

(இ - ள்.) மணஞ்செய்த இயல்பையுடைய மகளிரணிந்த மாலையையுடைய குஞ்சியை இழுத்தோடுங் குருதிநீர் அலைப்ப, அந்நெய்த்தோரிலே நெருப்புப்போலே விழித்துக் கிடந்துநிணவொழுங்கையுடைய குடரைச் சூடிப் பிணத்தைத் தின்னும் இயல்பையுடைய பேய்க்குத் தம்மை விருந்துசெய்தாரென்க. (கஙச)

2236. தோலாப்போர் மறமன்னர் தொடித்தோள்க ளெடுத்தோச்சி, மேலாண்மே னெருப்புமிழ்ந்து மின்னிலங்கு மயில்வாளாற், காலாசோ டறவெறிந்த கனைகழற்கா லலைகடலுள், நீலநீர்ச் சுருவினம்போ னெய்த்தோருட் பிறழ்ந்தனவே.

(இ - ள்.) மன்னர் தோளையுயர்த்து வாளாலே ஓச்சி மேலாண்மேல் வெட்டுகின்ற காலத்து, [1] சந்நாகத்தோடேயறும்படி வெட்டப்பட்ட கழற்கால்கள், கடலினீரிலே நீலச்சுருவினம் பிறழ்ந்தாற்போலே குருதியிலே பிறழ்ந்தனவென்க. (கஙரு)

---

2235. மணமாலை மடந்தையர் - கலியாணம்செய்த இயல்பையுடைய மகளிர்; நறுமணமுள்ள மாலையை யணிந்த மகளிர் எனலுமாம். இணர்மாலை - பூங்கொத்துக்களையுடைய மாலை. மாலையைக் கொண்ட குஞ்சியை. ஈர்ங்குருதி = ஈர்க்குங்குருதி - இழுத்துச்செல்லும் இரத்தம்; குளிர்ந்த இரத்தம் எனலுமாம். அலைப்ப - அலைத்தலால். நிணமாலை - நிணத்தின் ஒழுங்கு. நெருப்பைப்போல் இமைத்து. நெய்த்தோர் - இரத்தம். விருந்து அயர்ந்தனர் - தம்மை விருந்துசெய்தார்கள்.

(உரை) [1] தொகுத்தல் விகாரம்.

2236. தோலாத போரையுடைய மன்னர். (பி - ம்.) 'விறன்மன்னர்.' தோள்களை எடுத்து; தோள் - கை. எடுத்து - உயர்த்தி. வாளால் ஓச்சி. மேலாள்மேல் காலாசோடு அற எறிந்த - யானை மேலேயுள்ள வீரர்மீது, கவசத்தோடே அறும்படி வீசப்பட்ட; ஆசு - கவசம். கவசத்தோடு கூடிய காலுக்கு நீலச்சுருவினம் உவமை: "காலாசோ டற்ற கழற்கா லிருங்கடலுள், நீலச் சுருப்பிறழ்வ போன்ற புனலுடன், நேராரை யட்ட களத்து" (களவழி. 9)

(மேற்.) அடி, 4 : நன். உயிரீற்றுப். 21, மயிலை.

(உரை) [1] சந்நாகம் = ஸந்நாஹம் - கவசம்.

2237. கருவியூ டுளங்கழிந்து கணைமொய்ப்பக் கதஞ்சிறந்து
குருவிசேர் வரைபோன்ற குஞ்சரங் கொடியணிந்த
உருவத்தே ரிறமுருக்கி யுருணேமி சுமந்தெழுந்து
பருதிசேர் வரைபோலப் பகட்டினம் பரந்தனவே.

(இ - ள்.) பலகாரத்தினூடே போய்க் கணைகள் மொய்த்தலிற் சில குஞ்சரங்கள் நினைவுபோய்க் குருவிசேர்ந்த வரைபோன்றன ; சில பகட்டினம் பருதியெழுந்து சேர்ந்த வரைபோலக் கதஞ்சிறந்து முருக்கித் தேருருளையைச் சுமந்து பரந்தனவென்க.

இற முருக்கி - பொடியாக முறித்து. (கஙகூ)

2238. மாலைவாய்ப் நெடுங்குடைமேன் மதயானைக் கைதுணிந்து
கோலநீள் கொழுங்குருதி கொளவீழ்ந்து கிடந்தன
மேலைநீள் விசும்புறையும் வெண்மதியம் விசும்பிழுக்கி
நீலமா சுணத்தோடு நிலத்திழிந்த தொத்தனவே.

(இ - ள்.) யானையின்கோலம் குருதியைக்கொள்ளும்படி கைகள் அற்றுக் குடைமேலே வீழ்ந்துகிடந்தவை, முன்பு விசும்பிலேயுறையும் மதியம் அதனைத் தப்பிக் கரும்பாம்போடே நிலத்தே வீழ்ந்த தன்மையை யொத்தனவென்க.

மேலை : ஐ அசை. (கஙஎ)

---

2237. கருவி - யானைக்கு அணியும் ஒரு கருவி. ஊடு - நடுவே. மொய்ப்ப - மொய்த்தலால். கதம் - கோபம். குஞ்சரம் வரைபோன்ற. யானையின்மேல், தைத்த அம்புகளுக்கு மலைமீது சேர்கின்ற குருவிகள் உவமை ; "குன்றத் திறுத்த குரீஇயினம் போல, அம்புசென் றிறுத்த வரும்புண் யானை" (புறநா. 19 : 8-9) ; "யானைமேல் யானை நெரிதர வானுது, கண்ணேர் கடுங்கணை மெய்ம்மறைப்ப வெவ்வாயும், எண்ணருங் குன்றிற் குரீஇயினம் போன்றனவே" (களவழி. 8) ; "கோல் பொரக் குளித்த யானை குருவிசேர் குன்ற மொத்த" (மேரு. பலதேவர். 15). நேமி - தேருருளையை. பருதி - சூரியன். பகட்டினம் - சிலயானைகள். தேருருளையைச் சுமந்தெழுந்த யானைக்குப் பருதி சேர்ந்த மலை உவமை ; "அத்தேர்ப், பருதி சுமந்தெழுந்த யானை யிருவிசும்பிற், செல்சுடர் சேர்ந்த மலைபோன்ற" (களவழி. 4)

2238. யானையின் கோலம் குருதிகொள்ளும்படி கைதுணிந்து குடைமேல் வீழ்ந்துகிடந்தன ; கோலம் - அணியப்பட்டவை. கை - துதிக்கை. கிடந்தன - கிடந்தவை. விசும்பினின்றும் இழுக்கி ; இழுக்கி - தப்பி. நீலமாசுணம் - கரும்பாம்பு ; என்றது இராகுவை. குடைமேல் யானைத்துதிக்கை வீழ்ந்து கிடத்தலுக்கு, மதியம் பாம்போடு நிலத்தே வீழ்ந்து கிடத்தல் உவமை ; களவழி. 22 ; சூளா. அரசியற். 276.

2239. அஞ்சன நிறநீக்கி யரத்தம்போர்த் தமருழக்கி
இங்குலிக விறுவரைபோன் றினக்களி றிடைமிடைந்த
குஞ்சரங்கள் பாய்ந்திடலிற் குமிழிவிட் டுமிழ்குருதி
இங்குலிக வருவிபோன் றெவ்வாயுந் தோன்றினவே.

(இ - ள்.) முற்படவே அஞ்சனநிறத்தைப்போக்கி அரத்தத்தைப் பூசுதலின், சாதிலிங்கத்தையுடைய பெரிய வரையையொத்து மிடைந்த இனக்களிறுகள், அமரையுழக்கிச் சென்று பகைவர்யானைகளைப் பாய்தலின், உமிழ் குருதி சாதிலிங்கவருவிபோலே எங்குந் தோன்றினவென்க. (௧௩௮)

2240. குஞ்சரந் தலையடுத்துக் கூந்தன்மாக் காலணையாச்
செஞ்சோற்றுக் கடனீங்கிச் சினவுவாள் பிடித்துடுத்த
பஞ்சிமேற் கிடந்துடைஞாண் பதைத்திலங்கக் கிடந்தாரை
அஞ்சிப்போந் தினநரியோ டோரிநின் றலறுமே.

நீங்கி - நீங்க. [1] பஞ்சி : ஆகுபெயர்.

(இ - ள்.) குஞ்சரத்தைத் தலையணையாக அடுத்து மாவைக் காலணையாக அடுத்து வாளைப்பிடித்து உடுத்த துகிலின்மேலே [2] வல்லிக் கயிறு கிடந்து துளங்கியிலங்கச் செஞ்சோறுகிய கடன் நீங்கும்படி பட்டுக் கிடந்தவரை அஞ்சிக் குதித்துப்போய் நின்று இனநரியும் ஓரியும் அலறு மென்க. (௧௩௯)

---

2239. அஞ்சனநிறம் - கருநிறம். அரத்தம்போர்த்து - சிவப்பைப் பூசுதலால். அமர் - போர். இங்குலிக இறுவரை - சாதிலிங்கத்தை யுடைய பெரிய மலை. அடி. 1-2 : "அஞ்சனக் குன்றேய்க்கும் யானை யமருழக்கி, இங்குலிகக் குன்றேபோற் றோன்றுமே" (களவழி. 7). வரையைப்போன்று மிடைந்த இனக்களிறுகள் குஞ்சரங்களைப் பாய்த லால்; குஞ்சரங்கள் : பகைவர் யானைகள். குமிழி - கொப்புளம். எவ் வாயும் - எவ்விடத்தும்.

2240. குஞ்சரத்தைத் தலையடுத்து; தலையடுத்து - தலைக்கு அணை யாகச் சேர்த்து. மா - குதிரை. செஞ்சோற்றுக்கடன் நீங்கி - தாம் உண்ட செஞ்சோற்றுக்கடன் நீங்கும்படி; "சோறுவாய்த் தொழிந் தோர்" (முல்லைப். 72) ; குறள், 780 ; கம்ப. கும்பகருண. 156 ; வி-பா. நிரைமீட்சி. 90, 17-ஆம் போர். 20. பஞ்சிமேல் - ஆடையின்மீது. உடைஞாண் கிடந்து பதைத்து இலங்க ; உடைஞாண் : சீவக. 2263. பதைத்து - துளங்கி. கிடந்தாரை - வீழ்ந்துகிடந்தவராகிய வீரரை ; இதன்பின் 'கண்டு' என ஒருசொல் வருவிக்க. நரியும் ஓரியும் அலறும் ; ஓரி : கிழநரி.

(உரை) [1] பஞ்சியாலாகிய ஆடைக்காயிற்று. [2] இஃது அல்லிக்கயி றெனவும் வழங்கும்.

2241. காதலார்க் கமிர்தீந்த கடற்பவழக் கடிகைவாய், ஏதிலாப் புள்ளுண்ணக் கொடேமென்று வாய்மடித்துக், காதணிந்த பொற் றோடுங் குண்டலமு நகநகா, வீதனைந்த வரைமார்பர் விஞ்சையர் போற் கிடந்தனரே.

(இ - ள்.) வரைமார்பர், தம்மனைவியர்க்கு அமிர்தீந்த வாயை அவ் வமிர்தையுண்டற்குக் காரணமில்லாத பறவைகளுண்ணக் கொடே மென்றாற்போல வாயை மடித்து, தோடும் குண்டலமும் நகத் தாமும் நக்கு விஞ்சையர்போற் கிடந்தாரென்க.

ஏது - காரணம். உயிர் போகாதாரைப்போற் கிடத்தலின், 'விஞ் சையர்போல்' என்றார். (கசo)

2242. குடர்வாங்கு குறுநரிகள் கொழுநிணப் புலாற்சேற்றுட், டொடர்வாங்கு கதநாய்போற் றோன்றின தொடித்திண்டோள், படர்தீரக் கொண்டெழுந்த பறவைகள் படநாகம், உடனேகொண் டெழுகின்ற வுவணப்பு ளொத்தனவே.

(இ - ள்.) புலால் நாற்றத்தையுடைய நிணச்சேற்றிலே நின்று குடரை வாங்கும் நரிகள் சங்கிலியை [1] வலிக்கும் நாய்போல் தோன்றின; இரைதேரும் நினைவு தீரத் தோளைக் கொண்டெழுந்த பறவைகள் பட நாகத்தைக் கொண்டெழுகின்ற கருடனை ஒத்தனவென்க. (கசக)

---

2241. காதலார்க்கு - மனைவியர்க்கு. கடலிற்றோன்றிய பவழம். பவழக்கடிகைவாய் - பவழத்துண்டம்போலும் வாயை. ஏது இலா - காரணமில்லாத. தோடும் குண்டலமும் நக; நக - ஒளிவிடாநிற்க. நகா - தாமும் நக்கு. வீ - மலர். மார்பர் : வீரர். மார்பர், வாய்மடித்து நக்குக் கிடந்தனர்; கலிங்கத். 481.

2242. புலாலையுடைய நிணச்சேற்றுள் குடரை வாங்குகின்ற குறு நரிகள், தொடரை வாங்குகின்ற நாய்போற்றோன்றின; "குடர்கொண்டு வாங்குங் குறுநரி கந்திற், றொடரொடு கோணாய் புரையும்" (களவழி. 34). புலால் - புலால் நாற்றம். தொடர் - சங்கிலி. படர்தீரத் தோளைக் கொண்டெழுந்த பறவைகள், படநாகத்தைக் கொண்டெழுகின்ற உவ ணப்புள்ளை ஒத்தன; "வயவர் துணித்திட்ட, கைவாயிற் கொண் டெழுந்த செஞ்செவிப் புன்சேவல், ஐவாய் வயநாகங் கவ்வி விசும்பி வரும், செவ்வா யுவணத்திற் றோன்றும்" (களவழி. 26); படர்தீர - இரையுண்ணும் வருத்தம் நீங்கும்படி. தோள் - கை. உவணப்புள் - கருடன்.

(உரை) [1] வலிக்கும் - இழுக்கும்.

2243. வரையோடு முருமிடிப்ப வளையெயிற்றுக் கொழுங் குருதி, நிரையுளை யரிநன்மா நிலமிசைப் புரள்வனபோற், புரை யறுபொன் மணியோடைப் பொடிப்பொங்கப் பொருதழிந், தரைசோடு மரசுவா வடுகளத்து ளாழ்ந்தனவே.

(இ - ள்.) எயிற்றினையும் உளையினையுமுடையவாகிய அரிமா உரு மேறு இடித்தலின் வரைகளோடே வீழ்ந்து குருதியையுடைய நிலத்தே புரள்வனபோல, அரசுகள் அரசுவாக்களோடே களத்தே வீழ்ந்து புரண் டனவென்க.

புரையறு மணி - [1] குற்றங்கெட்ட மணி. பொன்னோடையின்மணி பொடியாய்ப் பொங்கும்படி பொருதலின், அழிந்தாழ்ந்தனவென்க. (கசஉ)

2244. தடம்பெருங் குவளைக்கட் டாழ்குழலார் சாந்தணிந்து, வடந்திளைப்பப் புல்லிய வரைமார்பம் வாள்புல்ல, நடந்தொழுகு குருதியு ணகாக்கிடந்த வெரிமணிப்பூண், இடம்படு செவ்வானத் திளம்பிறைபோற் றோன்றினவே.

(இ - ள்.) மகளிர் தாமே சாந்தணிந்து எரிகிற மணிவடம் திளைப் பப்புல்லிய மார்பை வாள் புல்லுதலின் நடந்துபோகின்ற குருதியிலே விளங்கிக்கிடந்த முத்துவடம் செக்கர்வானிற் பிறைபோற்றோன்றின வென்க.

இத்துணையும் இரண்டுபடைக்கும் பொது. (கசங)

---

2243. உரும் - இடி. நிரை உளை - ஒழுங்குபட்ட பிடரிமயிரை யுடைய. அரிமா - சிங்கம். புரை - குற்றம். பொன்னோடையின் மணி; ஓடை - நெற்றிப்பட்டம். பொடிப்பொங்க - பொடியாய் மிகும்படி. பொருது - பொரலால். அரைசு - அரசர்கள்; எதுகைபற்றிய போலி; கம்ப. கையடை. 9. அரசுவா - இராசயானை; சீவக. 2231, 2968. அரசர்க்கு அரிமாவும், யானைக்கு மலையும் உவமை: களவழி. 35.

(உரை) [1] (பி - ம்.) 'குற்றங் கைவிட்ட.'

2244. குவளைபோலும் கண்ணையுடைய குழலார்; மகளிர். சாந்து - குங்குமச்சாந்து. வடம் - ஆடவர் மார்பிலணிந்த முத்துமாலை. புல்லிய மார்பத்தை வாள்புல்லுதலால். குருதியுள் நகாக்கிடந்த - இரத்தத்தில் ஒளிவிட்டுக்கிடந்த; நகா - நக்கு. எரிதல் - விளங்குதல். மணிப்பூண் - முத்துவடம். இடம்படு - இடமகன்ற. குருதியையுடைய மார்பிற்குச் செவ்வானமும், முத்துவடத்திற்கு இளம்பிறையும் உவமைகள்.

(வேறு)

2245. காளமா கிருளைப் போழ்ந்து கதிர்சொரி கடவுட் டிங்கள்,
கோளரா விழுங்க முந்நீர்க் கொழுந்திரைக் குளித்த தேபோல்,
நீளம ருழக்கி யானை நெற்றிமேற் றத்தி வெய்ய, வாளின்வாய்
மதனன் பட்டான் விசயன்போர் விசயம் பெற்றான்.

இதுமுதலாகப் பிரித்துக் கூறுகின்றார்.

(இ - ள்.) கருமை மேன்மேலும் பெருகாநின்ற இருளைக் கெடுத்துக் கதிரையீன்ற திங்கள் பாம்பு விழுங்குதலின் உயரப்போய்ப் பின்பு கடலிலே அழுந்தியதொரு தன்மை போலே, மதனன் அமரையுழக்கி விசயனது யானை நெற்றியிலே பாய்ந்து அவன் வாளின்வாயிலே பட்டுப் படைக்குள்ளே வீழ்ந்தான்; விசயனும் போரிலே வெற்றியைப் பெற்றா னென்க. (கசச)

2246. மன்மத னென்னுங் காளை மணியொலிப் புரவித் தேர்
மேல், வின்மழை சொரிந்து கூற்றிற் றெழித்தனன் றலைப்பெய்
தார்ப்பக், கொன்மலி மார்பன் பொற்றேர் கொடுஞ்சிலை யறுப்பச்
சீறிப், பொன்வரைப் புலியிற் பாய்ந்து பூமிமேற் றோன்றி னானே.

(இ - ள்.) அவன் தம்பி மன்மதனென்னுங்காளை விசயனைத் தலைப் பெய்து தேர்மேலே நின்று வில்லாலே மழையைச் சொரிந்து தெழித்தனனாய் ஆர்ப்ப, அவ்விசயன் தேரிற்கயிற்றையும் வில்லையுமறுப்ப, அவன் சீறி வரையினின்றும் பாயும் புலிபோலே நிலத்திலே பாய்ந்து தோன்றினானென்க. (கசரு)

---

2245. காளம் ஆகு இருளை - கருமை நிறம் மேன்மேலும் பெருகுகின்ற இருட்டை. (பி - ம்.) 'காளமிருளை.' கதிர் - கிரணம். திங்கள் தன்னைக் கோளரா விழுங்குதலால் முந்நீரிடத்துக் குளித்ததேபோல்; கோளரா - இராகுவென்னும் பாம்பு. குளித்தல் - அழுந்துதல். யானை விசயனுடையது. தத்தி - பாய்ந்து. மதனன்: கட்டியங்காரன் மைத்துனன். விசயன்போரில் விசயத்தைப் பெற்றான்; விசயன்: கனகமாலையின் சகோதரருள் ஒருவன்.

2246. மன்மதன்: மதனனுடைய தம்பி. 'தேர்மேல்' என்பதன் பின் 'நின்று' என ஒரு சொல் வருவிக்க. விசயனுடைய தேர்மேற் சொரிந்து என்றுமாம். வில்லால் அம்பாகிய மழையைச் சொரிந்து. கூற்றினைப்போல் தெழித்தனனாய்; தெழித்தல் - முழங்குதல். தலைப் பெய்து - விசயனைக் கூடி எதிர்த்துநின்று. மார்பன்: விசயன். மன்மதனுடைய தேரையும் சிலையையும் அறுப்ப. சீறி - மன்மதன் கோபித்து. வரையிடத்துப் புலியைப்போல் பூமிமேற்பாய்ந்து.

2247. நெற்றிமேற் கோல்கண் மூன்று நெருப்புமிழ்ந் தழுந்த வெய்யச், சுற்றுபு மாலை போலத் தோன்றறன் னுதலிற் சூடிப், பொற்றதோர் பவழந் தன்மேற் புனைமணி யழுத்தி யாங்குச், செற்றெயி றழுந்தச் செவ்வாய் கௌவிவா ளுரீஇ னானே.

(இ - ள்.) அங்ஙனந்தோன் றின மன்மதன் நெற்றியை மாலைபோலே சூழ்ந்து [1] சென்று அந்நெற்றியிலேயழுந்தும்படி விசயன் மூன்றம்பை எய்தானாக, அவன் அவற்றை மாலைபோலே தன்னுதலிலே சூடிக் கோபித்துப் பவழத்தின்மேலே முத்தையழுத்தினாற்போலச் செவ்வாயிலே எயிறழுந்தும்படி வாயைமடித்து வாளையுருவினானென்க.

பொற்றது - பொலிவுபெற்றது. (கஉசஎ)

2248. தோளினா லெஃக மேந்தித் தும்பிமே லிவரக் கையால், நீளமாப் புடைப்பப் பொங்கி நிலத்தவன் கவிழ்ந்து வீழக், கீளிரண் டாகக் குத்தி யெடுத்திடக் கிளர்பொன் மார்பன், வாளினாற் றிருகி வீசி மருப்பின்மேற் றுஞ்சி னானே.

தும்பி - யானை.

(இ - ள்.) அந்த வாளை அவன் கையாலே ஏந்தி விசயனேறியிருந்த யானையின்மேலே பொங்கிச் சென்றானாக, அவ்வியானை அவன் தூரியனாம்படி தன் கையிற் [1] றண்டாலடிக்கையினால் அவன் கவிழ்ந்து நிலத்தே வீழ, அவ்வியானை சென்று அவனை இரண்டு கூறாகக் குத்திக் கொம்பிலே எடுப்ப, அப்போது உணர்ச்சியுண்மையின், உடம்பு சிறிதுதிருகி வாளாலே வெட்டி அக்கொம்பிலே பட்டானென்க.

---

2247. மன்மதனுடைய நெற்றியின்மேல். கோல்கள் - அம்புகள். சுற்றுபு எய்ய - சூழ்ந்து எய்தானாக. (பி - ம்.) 'சுற்றுறு மாலை.' தோன்றல் : மன்மதன். நுதல் - நெற்றி. மாலை யென்றதற்கேற்பச் 'சூடி' என்றார். பொற்றதோர் - பொலிவு பெற்றதொரு. பவழத்தில் மணியை அழுத்தியாங்கு; மணி - முத்து. செற்று - கோபித்து. செவ்வாயில் எயிறழுந்தக் கௌவி. வாய்க்குப் பவளமும், பற்களுக்கு முத்தும் உவமை. வாளை உருவினான்.

(உரை) [1] (பி - ம்.) 'சென்ற நெற்றியிலே.'

2248. எஃகத்தைத் தோளினால் ஏந்தி; எஃகம் - வாள். தோள் - கை. தும்பிமேல் - விசயனுடைய யானையின்மீது. இவர - எதிர்த்துச் செல்ல. கையால் - துதிக்கையால். நீளமா - மன்மதன் தூரியனாகும்படி. அவன் கவிழ்ந்து நிலத்து வீழ; அவன் : மன்மதன். இரண்டு கீளாக - மன்மதன் இரண்டு கூறாகும்படி. மார்பன் : மன்மதன். திருகி - மாறுபட்டு எனலுமாம். வாளினால் யானையை வீசி; வீசி - வெட்டி. துஞ்சினான் - இறந்தான்.

(உரை) [1] (பி - ம்.) 'தண்டா லொத்துகையில்.'

இத்துணையும் மதனனும் மன்மதனும் விசயனோடு பொருதுபட்டபடி கூறினர். (கசஎ)

2249. நனைகலந் திழியும் பைந்தார் நான்மறை யாளன் பைம்பொற், புனைகலக் குப்பை யொப்பான் புத்திமா சேனன் பொங்கி, வனைகலத் திகிரித் தேர்மேன் மன்னரைக் குடுமி கொண்டான், கனையெரி யழலம் பெய்த கண்ணுதன் மூர்த்தி யொத்தான்.

நனை கலந்து இழியும் பைந்தார் - அரும்புகள் இடையிலே கலக்கப் பட்டு அலர்ந்தவற்றில் தேனிழியுந்தார்; நனை - தேனுமாம். மா : அசை. எரிகிற அழலாகிய அம்பு.

(இ - ள்.) அந்தணன், பொற்கலத்தொகுதியையொப்பான், புத்தி சேனன், அவன் பொங்கித் திகிரிபோலே வட்டமாக வருந்தேரில் அரசரை வெற்றிகொண்டான்; அப்பொழுது அவன் திரிபுரமெரித்த இறைவனை யொத்தானென்க. (கசஅ)

2250. செண்பகப் பூங்குன் றொப்பான் றேவமா தத்தன் வெய்தா, விண்புக வுயிரைப் பெய்வான் வீழ்தரு கடாத்த வேழம், மண்பக விடிக்குஞ் சிங்க மெனக்கடாய் மகதர் கோமான், றெண்கடற் றனை யோட நாணிவேல் செறித்திட் டானே.

(இ - ள்.) பொன்னணிதலிற் சண்பகம்பூத்த மலையையொப்பானாகிய தேவதத்தன், பல்லுயிரையும் வருந்தாமல் விண்ணிலே புகும்படி செலுத்த வேண்டி வேழத்தின்மேலே சிங்கமென இருந்து அதனை மகதர் கோன்மேலே வெய்தாகச் செலுத்தி அவன் தானையோடலின் நாணி மீண்டானென்க. (கசகூ)

2249. நனை - தேன்; அரும்பு எனலுமாம். கலச்குப்பை - ஆபரணத்தொகுதி. நான்மறையாளனும் ஒப்பானுமாகிய புத்திமா சேனன்; சீவக. 1790. கலம் வனைதற்குரிய திகிரிபோன்ற கதியையுடைய தேரின்மேல். மன்னர் : பகையரசர். குடுமிகொண்டான் - வெற்றி கொண்டான்; "தொல்லிலங்கைக் குடுமிகொண்டு" (கூர்ம. சுவேத. 5). எரிகின்ற அழலாகிய அம்பைத் திரிபுரத்தின்மீது எய்த; அழலம்பு : சிலப். 6 : 41. கண்ணுதல் மூர்த்தி : சிவபெருமான்.

2250. செண்பகப்பூவையுடைய குன்று. செண்பகப்பூ பொன்னாபரணத்திற்கு உவமை. ஒப்பானாகிய தேவமாதத்தன்; சீவக. 1792; மா : அசை. வெய்தா - விரைவாக. பகைவருடைய உயிரை விண்புகப் பெய்ய வேண்டி; பெய்தல் - செலுத்தல். (பி - ம்.) 'சொரிதரு கடாத்த.' தன் வேழத்தைச் சிங்கமெனக்கடாய்; கடாய் - செலுத்தி. மகதர்கோமானுடைய தானை ஓடுதலால். வேலை உறையிற் செறித்திட்டான்.

2251. சின்னப்பூ வணிந்த குஞ்சிச் சீதத்தன் சினவு பொன் வாள், மன்னருட் கலிங்கர் கோமான் மத்தகத் திறுப்ப மன்னன், பொன்னவிர் குழையும் பூணு மாரமுஞ் சுடர வீழ்வான், மின்ன விர் பருதி முந்நீர்க் கோளொடும் வீழ்வ தொத்தான்.

சின்னப்பூ - விடுபூ.

(இ - ள்.) சினவுமன்னரிற் கலிங்கர்கோமான் தலையிலே ஸ்ரீதத்தன் வாள் தங்கிற்றாக, அவன் குழைமுதலியன சுடரப் படைநடுவே வீழ்கின்றவன், பருதி கோளுடனே கடலில் வீழ்வதனை ஒத்தானென்க.

கோளிற்குக் குழைமுதலியன உவமம். (கசுO)

2252. கொடுஞ்சிலை யுழவன் மான்றேர்க் கோவிந்த னென்னுஞ் சிங்கம், மடங்கருஞ் சீற்றத் துப்பின் மாரட்ட னென்னும் பொற் குன், றிடந்துபொற் றாளி பொங்கக் களிற்றொடு மிறங்கி வீழ, அடர்ந்தெறி பொன்செ யம்பி னழன்றிடித் திட்ட தன்றே.

மடக்கரு : விகாரம்.

(இ - ள்.) மாரட்டனென்னும் பொன்மலை பொற்றாளி பொங்கும்படி மார்பிடந்து களிற்றோடுந்தாழ்ந்து வீழும்படி வில்லுழவனாகிய கோவிந்த னென்னுஞ் சிங்கம் அழன்று அடர்ந்து சென்று அம்பாலே இடித்த தென்க.

சிங்கமுமலையுமாதலின், 'இடித்திட்டது' என்றார். கோவிந்தமகா ராசன் மாரட்டனோடு பொருதபடி கூறினார். (கசுக)

---

2251. சின்னப்பூ - விடுபூ; "வேலவற்கு மலர்ச்சின்னஞ் சொரிவன" (சூளா. இரத. 53); "நறுங்கோதை யோடு நனைசின்னமு நீத்த நல்லார்", "சின்னப்பூச் செருகு மென்பூ" (கம்ப. பூக்கொய். 12, கோலங்காண். 17). சீதத்தன் : சீவக. 1789. சினவுதல் - கோபித்தல். சீதத்தனுடைய வாள் கலிங்கர்கோமானுடைய மத்தகத்தில் இறுப்ப; மத்தகம் - தலை. இறுப்ப - தங்கிற்றாக; என்றது வெட்டியதைக் கூறிய படி. மன்னன் : கலிங்கராசன். ஆரம் - முத்துமாலை. சுடர - ஒளிவிட. வீழ்வான் - வீழ்கின்றவன். பருதி கோளொடு முந்நீரில் வீழ்வதனை ஒத்தான். பருதி - சூரியன். கோள் - மற்றைய கிரகங்கள். குழைமுதலிய வற்றிற்குக் கோள்களும் கலிங்கராசனுக்குச் சூரியனும் உவமைகள்.

2252. சிலையுழவனாகிய கோவிந்தன் - கோவிந்தராசன். மடங்கரு = மடக்கரு - மடக்குதற்கரிய. துப்பு - வன்மை. மாரட்டனென்னும் பொற் குன்றத்தைப் பொற்றாளி பொங்கும்படி இடந்து; இடந்து - பிளந்து. இறங்கி - தாழ்ந்து. வீழும்படி அழன்று அடர்ந்து, அம்பினால் இடித்திட் டது; அழன்று - கோபித்து.

2253. கோங்குபூத் துதிர்ந்த குன்றிற் பொன்னணி புளகம் வேய்ந்த, பாங்கமை பருமயானைப் பல்லவ தேச மன்னன், தேங் கமழ் தெரியற் றீம்பூந் தாரவ னூர்ந்த வேழம், காம்பிலிக் கிறைவ னூர்ந்த களிற்றொடு மலைந்த தன்றே.

பாங்கு - உறவு. தெரிதலையுடைய தீவிய பூந்தாரவன் - உலோக பாலன்.

(இ - ள்.) கோங்குபூத்து உதிர்ந்துகிடந்த குன்றுபோலே பொன் னாற் செய்த கண்ணாடி தைத்த யானையையுடைய பல்லவதேசத்தின் மன்னனாகிய தாரவனேறின வேழம் காம்பிலிக்கிறைவனேறின களிற் றோடே மலைந்ததென்க. (கஙஉ)

2254. கொந்தழல் பிறப்பத் தாக்கிக் கோடுகண் மிடைந்த தீயால்
வெந்தன விலையி லாத சாமரை வீர மன்னன்
அந்தரம் புதைய வில்வா யருஞ்சரம் பெய்த மாரி
குந்தத்தால் விலக்கி வெய்ய கூற்றென முழங்கி னானே.

(இ - ள்.) அப்பொழுது அவற்றின்கோடுகள் அழல் பிறப்பத் தாக்க மிடைந்த தீயாலே சாமரை வெந்தன; அப்பொழுது உலோகபாலன் விசும்பு மறையும்படி தன்வில்வாயினின்றும் பெய்த சரமாரியைக் காம் பிலிமன்னன் தன் எறிகோலாலே விலக்கி முழங்கினானென்க.

தாக்கி - தாக்க. (கஙங)

2255. மற்றவ னுலோக பாலன் வயங்குபொற் பட்ட மார்ந்த, நெற்றிமே லெய்த கோலைப் பறித்திட வுமிழ்ந்த நெய்த்தோர், உற் றவன் களிற்றிற் பாயத் தோன்றுவா னுதயத் துச்சி, ஒற்றைமாக் கதிரை நீட்டி யொண்சுட ரிருந்த தொத்தான்.

2253. குன்றின் - மலையைப்போல. புளகம் - கண்ணாடி. வேய்ந்த - தைத்தணிந்த. கண்ணாடிக்குக் கோங்கமலரும், யானைக்குக் குன்றும் உவமைகள்; கலித். 42 : 16-8; பெருங். 3. 27 : 73-5. யானையை யுடைய பல்லவதேச மன்னன்; என்றது உலோகபாலனை; இவன் பது மையின் சகோதரன்; சீவகனுடைய மைத்துனன். தெரியல் தார் - விளங்குதலையுடைய மாலை. மன்னனாகிய தாரவன் ஊர்ந்த வேழம். காம் பிலி : ஒருதேசம்.

2254. அழல் பிறப்பத் தாங்கி - தீப்புறப்படப் பொருதலால்; "தீப் படத் தாக்கின வரசுவா" (சீவக. 2231). கோடு - தந்தம். கோடுகள் தாக்க மிடைந்த தீயாலே சாமரை வெந்தன. வீரமன்னன் : உலோக பாலன். அந்தரம் - ஆகாயம். வில்வாயினின்றும் பெய்த சரமாரியை. குந்தம் - எறிகோல். விலக்கியவன் காம்பிலி மன்னன்.

2255. மற்று : அசை. அவன் : காம்பிலி மன்னன். உலோகபால னுடைய நெற்றியின்மேல். கோல் - அம்பு. பறிக்கு - உலோகபாலன்

(இ - ள்.) அங்ஙனமுழங்கின காம்பிலிமன்னன் தன்வில்லையேந்தி, உலோகபாலனது நெற்றியிலேயழுந்த எய்த கோலைத் தான்பறித்திடு தலின் உமிழ்ந்த குருதி தானேறின வலிய களிற்றிலே வீழத் தோன்று கின்ற உலோகபாலன், ஞாயிறு ஒற்றைக்கதிரைப் புறப்படவிட்டு உத யத்துச்சியிலே இருந்த தன்மையை யொத்தானென்க.

[1] இதனைக் காம்பிலிமன்னன்மேல் ஏற்றுவாருமுளர். (கஉசச)

2256. கொடுமரங் குழைய வாங்கிக் கொற்றவ னெய்த கோல்கள்
நெடுமொழி மகளிர் கோல நிழன்மணி முலைக ணேர்பட்
டுடனுழ வுவந்த மார்ப மூழ்கலிற் சிங்கம் போலக்
கடன்மருள் சேனைசிந்தக் காம்பிலி மன்னன் வீழ்ந்தான்.

(இ - ள்.) அங்ஙனமிருந்த உலோகபாலன் வில்லை வலித்து எய்த கோல்கள் சென்று அவன்மார்பிலே மூழ்கலின், தன்சேனை கெடும்படி சிங்கம் பட்டு வீழ்ந்தாற்போலக் காம்பிலிமன்னன் பட்டுவீழ்ந்தா னென்க.

தம் கற்பின் மிகுதியால் வஞ்சினங்கூறுதற்குரிய மகளிர். இத்துணை யும் காம்பிலிமன்னனும் உலோகபாலனும் பொருதபடி கூறினர். (கஉசரு)

2257. பொன்னிறக் கோங்கம் பொற்பூங் குன்றெனப் பொலிந்த மேனி, நன்னிற மாவின் மேலா னலங்கொடார் நபுல னென்பான், மின்னிற வெஃக மேந்தி வீங்குநீர் மகதை யார்கோன், கொன்னி றக் களிற்றி னெற்றிக் கூந்தன்மாப் பாய்வித்தானே.

---

தான் பறித்திடலால். நெய்த்தோர் - இரத்தம். உற்ற வன்களிற்றிற்பாய- உலோகபாலன் ஏறிய வலிய யானையின்மீது வீழ. தோன்றுவான் - தோன்றுகின்ற உலோகபாலன். சுடர் ஒற்றைக் கதிரை நீட்டி உதயத் துச்சியில் இருந்ததை ஒத்தான்; சுடர் - சூரியன்; உதயம் - உதயகிரி; சீவக. 2153, அடிக். உலோகபாலனுக்குச் சூரியனும், அவன் நெற்றியிற் றோன்றும் இரத்தத்திற்கு ஒற்றைக்கதிரும், யானைக்கு உதயகிரியும் உவ மைகள்.

(உரை) [1] இதனை : உலோகபாலனுக்குக் கூறியதனை.

2256. கொடுமரம் - வில்லை. வாங்கி - வளைத்து. கொற்றவன் - உலோகபாலன். மகளிரது முலைகள் உழுதலால் உவந்த மார்பத்தில். உலோகபாலனெய்த கோல்கள் காம்பிலி மன்னனுடைய மார்பத்தில் மூழ்குதலால். சேனை சிந்தும்படி சிங்கம்போலக் காம்பிலி மன்னன் வீழ்ந் தான்.

2257. பொற்பூங் கோங்கமும் பொன்னிறக்குன்றமும் என்ன. மேனியையுடைய புரவிமேலானுகிய தாரணிந்த நபுலனென்பான்; நபு லன் - சீவகனுடைய தம்பி. எஃகம் - வாள். தன்னுடைய கூந்தன்மாவை மகதையார் கோனுடைய களிற்றினெற்றியிலே பாய்வித்தான்; மா - குதிரை. (பி - ம்.) ‘கொன்னிறக் களிற்றுச்சிக்.’

(இ - ள்.) பொலிவினையுடைய பூங்கோங்கமும் பொன்னிறக்குன் றமுமென்னப் பொலிந்த மேனியையுடைய புரவிமேலானாகிய நபுலனென் கின்றவன், வாளையெடுத்து மகதையார்கோன் களிற்றினுச்சியிலே அம் மாவைப் பாய்வித்தானென்க.

கொன் - அச்சம். (௧௫௬)

2258. ஏந்தறன் கண்கள் வெய்ய விமைத்திட வெறித லோம்பி, நாந்தக வுழவ னாணி நக்குநீ யஞ்சல் கண்டாய், காய்ந்திலே னென்று வல்லே கலினமாக் குன்றிற் பொங்கிப், பாய்ந்ததோர் புலி யின் மற்றோர் பகட்டின்மேற் பாய்வித் தானே.

நாந்தகம் - வாள்.

(இ - ள்.) அம்மகதையார்கோன் கண்கள் இமைத்தலின், நபுலன் அவனை வெட்டாதே, இவன்மேலே வந்தேனேயென்று நாணி நக்கு, நின் னைக் காய்கின்றிலேன்; நீ அஞ்சலென்று தேற்றித் தன்மாவை ஒருகுன்றி னின்றும் ஒருகுன்றிலே பொங்கிப்பாய்ந்த புலிபோல அக்களிற்றினின் றும் வேறொரு வெய்ய களிற்றின்மேலே பாய்வித்தானென்க. (௧௫௭)

2259. கைப்படை யொன்று மின்றிக் கைகொட்டிக் குமர னார்ப்ப, மெய்ப்படை வீழ்த்த னாணி வேழமு மெறிதல் செல்லான், மைப்படை நெடுங்கண் மாலை மகளிர்தம் வனப்பிற் சூழ்ந்து, கைப்படு பொருளி லாதான் காமம்போற் காளை மீண்டான்.

(இ - ள்.) அவன் அங்ஙனம் பாய்வித்த களிற்றிலிருந்த குமரன் தன் கையிற் படைகளொன்றுமின்றாய் மற்போர் செய்தற்குக் கையைத் தட்டி ஆர்த்தானாக, அவனை வெட்டுதலை நாணி அவன் வேழத்தையு மெறியானாய் மீண்டானென்க.

2258. ஏந்தலுடைய கண்கள் இமைத்திடலால் உழவன் எறிதல் ஓம்பி நாணி; ஏந்தல் : மகதராசன். உழவன் : நபுலன். எறிதல் ஓம்பி- அவனை வெட்டுதலினின்றும் நீங்கி. கண்ணிமைத்தவர்களோடு வீரர் போர் செய்யார்; "விழித்தகண் வேல்கொண் டெறிய வழித்திமைப்பின், ஓட்டன்றோ வன்க ணவர்க்கு" (குறள், 775). அஞ்சல் - பயப்படாதே. காய்ந்திலேன் - உன்னைக் கோபிக்கின்றிலேன். தன் கலினமாவை, குன் றிற் பாய்ந்ததொரு புலியினைப்போல ஓர் பகட்டின்மீது பாய்வித்தான்; மா - குதிரை. பகடு - யானை.

2259. கைகொட்டியது மற்போர் செய்தற்கு. குமரன் : ஒரு போர் வீரன். அக்குமரன் மெய்யிற் படையால் வீழ்த்தலை நாணி; வீழ்த்தல் - வெட்டுதல். வேழம் : குமரனுடைய யானை. எறிதல் - வெட்டுதல். நிரா யுதபாணிகளோடு போர்செய்தல் குற்றம்; சிறுபஞ்ச. 41. மை பூசிய கண், படைபோலும் நெடுங்கண். கண்ணையும் மாலையையுமுடைய மகளி ருடைய வனப்பினாலே. சூழ்ந்து - இம்மகளிர் புணர்தற்குரியர் என்று எண்ணிச்சென்று. காளை : நபுலன்.

மகளிர்தம் அழகாலே இவர் புணர்தற்குரிய மகளிரென்று நினைத்துச் சென்று அவர்க்குப் பொருள்வேட்கையென்கின்ற குறைபாடுண்மை கண்டு, அக்காலத்து அவர்க்குக் கொடுத்துப் புணரவேண்டும்பொருளில்லாதவன் காமம் போலே மீண்டானென்க. அவற்குக் கொடுத்தற்குத் தன் கைப்படையொழிய வேறின்மையிற் படைவழங்காது மீண்டான். இனி மகளிர், தம்மழகாலே ஒருவனை இவன் புணர்ச்சிக்குத் தக்கானென்று கருதிச்சென்று தன்கையிடத்தேயுண்டாம் பொருளையுடையனல்லாதானிடத்து அவர்வேட்கை மீளுமாறுபோல மீண்டானென்றுமாம். இது பான்மயக்குவமம். [1] மற்போர் - எருமைமறமாம். இத்துணையும் நபுலன் போர் கூறினர். (கருஅ)

(வேறு)

2260. மண்காவலை மகிழாதிவ னுடனேபுக ழொழிய
விண்காவலை மகிழ்வீர்நனி யுளிரோவென விபுலன்
வண்காரிருண் மின்னேயுமிழ் நெய்வாயதொ ரயில்வாள்
கண்காவல கழுகோம்புவ துயராநனி வினவும்.

இருளையுடைய காரின் மின்னையேயுமிழும் நெய் தோய்ந்த வாயையுடைய வாள். கண் காவல - கண்ணைக் குத்துவ.

(இ - ள்.) விபுலன், கழுகை ஓம்புவதாகிய வாளையுயர்த்து மண் காவலை மகிழாதே இவ்வுலகுடனே புகழ் நிற்க என்னோடே பொருது விண்காவலை மிகவும் விரும்பும் வீரருள்ளீரோ? உண்டாயின், மேல் என்னோடு பொருதற்கு வாருமென்று வினவுமென்க.

நபுலன் சென்று மீளுதலின், இவன் விரைவிச் சென்றான். (கருகூ)

---

(உரை) [1] மற்போர் எருமை மறமென்பது, புறநா. 80, 274-ஆம் பாடல்களின் உரைகளாலும், 'எருமைமறம்' (பு. வெ. 139) என்னும் துறையாலும் விளங்கும்.

2260. *மண்காவலை* - நிலத்தைக் காத்தலை. *இவனுடனே* - இவ்வுலகத்துடனே. *ஒழிய* - நீங்கிநிற்க. *மகிழ்வீர் உளிரோ* - விரும்புகின்ற வீரர் உள்ளீரோ. *என* - என்று. விபுலன் : சீவகனுடைய தம்பி. *அயில்* - கூர்மை. கழுகை ஓம்புவதாகிய வாளை உயர்த்து ; ஓம்புவது - பாதுகாப்பது ; என்றது வீரர்களையும் யானைமுதலியவற்றையும் வெட்டி மாமிசத்தை உண்ணக்கொடுத்தலைக் குறித்தது. *வினவும்* - வினவுவான். விபுலன், வாளையுயர்த்து உளிரோவென வினவும்.

2261. வீறின்மையின் விலங்காமென மதவேழமு மெறியான்
ஏறுண்டவர் நிகராயினும் பிறர்மிச்சிலென் றெறியான்
மாறன்மையின் மறம்வாடுமென் றிளையாரையு மெறியான்
ஆறன்மையின் முதியாரையு மெறியானயி லுழவன்.

(இ - ள்.) அதற்கு எதிர்ப்பாரின்மையின், [1] வேலுழவன், மத வேழத்தை எறிந்தாலும் விலங்கையெறிந்தானென்பரென்று நினைத்து அதனாலே வெற்றியின்மையின் வேழத்தையும் வெட்டானாய், முன்பு வெட்டுண்டவர் தனக்கு 'ஒப்பாராயினும் பிறர்படை தீண்டின எச்சி லென்று அவரையும் வெட்டானாய், தனக்கிளையாரையும் நிகரன்மையின் மறம் வாடுமென்று வெட்டானாய், அறமன்மையின் தன்னின் மூத்தோரை யும் வெட்டானாய் நின்றானென்க. (கசுo)

2262. ஒன்றாயினும் பலவாயினு மோரோச்சினு ளெறிய, வென்றாயின மதவேழமு முளவோவென வினவிப், பொன்றாழ் வரைப் புலிப்போத்தெனப் புனைதார்மிஞி றார்ப்பச், சென்றானிகல் களிறாயிர மிரியச்சின வேலோன்.

(இ - ள்.) அங்ஙனம் நின்ற வேலோன், இத்திரளிலே சென்றால் ஒன்றேயாயினும் பலவேயாயினும் ஒருவெட்டிலே வெட்டுதற்குப் பல போரிலும் வென்று எனக்குப் [1] பற்றுவனவாகிய வேழமாயினுமுண்டோ

---

2261. வீறு - வெற்றி. விலங்கென்று எண்ணி ஒரு வீரன் யானை யுடன் போர்செய்யவில்லை என்பது ; "யானைக்கீ தென்கையி லெஃகமால்- தானும், விலங்கா லொருகைத்தால்" (தகடூர். 'வான்வணக்கி'); "தானால் விலங்காற் றனித்தாற் பிறன்வரைத்தால், யானை யெறித லிளி வரவால் - யானை, ஒருகை யுடைய தெறிவலோ யானும், இருகை சுமந்து வாழ் வேன்" (தொல். புறத். 5, ந. மேற்.). ஏறுண்டவர் - வெட்டுப்பட்ட வர் ; பிறர்மிச்சிலென்று எறியான் - பிறருடைய படையால் தீண்டப்பட்ட எச்சில் என்று வெட்டான் ; சீவக. 809, அடிக். இளையாரையும் மாறன் மையால் மறம் வாடுமென்று எறியான் ; மாறு - ஒப்பு. மறம்வாடும் - வீரம்கெடும். ஆறு - நல்ல நெறி ; தருமம். அயிலுழவன் : விபுலன் ; எழுவாய்.

(மேற்.) மு : குறள், 384, பரிமேல்.

(உரை) [1] (பி - ம்.) 'விபுலன்.'

2262. ஓரோச்சினுள் - ஒரு வெட்டிலே. எறிய - வெட்டுதற்கு. வென்று ஆயின வேழம் - பலபோரிலும் வெற்றிபெற்று எனக்குப் போதிய னவாகிய யானை. பொன் தாழ்வரை - பொன்தங்கிய மலையிடத்துள்ள. புலிப்போத்தென்னும்படி ஆயிரங்களிறு இரிய மிஞிறார்ப்பச் சென்றான் ; புலிப்போத்து - ஆண்புலி. வேலோன் : விபுலன் ; எழுவாய். யானை யுடன் போர்செய்வோர் வேலேந்தி நிற்றல் இயல்பு ; புறநா. 301, 323 ; குறள். 774 ; பு - வெ. 140.

(உரை) [1] பற்றுவன - போதியன.

வென்று வினவி, மேருவிலிருக்கிற புலியேறென்னும்படி ஆயிரங்களிறிரிய மிஞ்ிரர்ப்ப யானையின்மேலே சென்றானென்க.

'அயிலுழுவன்' (சீவக. 2261), 'வேலோன்' என்றது, யானையி லிருந்து பொருமிடத்து வேல்வேண்டுமென்று கருதி. (உசுக)

2263. புடைதாழ்குழை பொருவில்லுயர் பொன்னோலையொ டெரிய, உடைநாணொடு கடிவட்டினொ டொளிர்வாளினொ டொரு வன், அடையாநிக ரெறிநீயென வதுவோவென நக்கான், கிடை யாயின னிவனேயெனக் கிளராணழ குடையான்.

(இ - ள்:) ஒப்பில்லாத உயர்ந்த ஓலையோடே குழைவிளங்க வல்லிக் கயிற்றோடும் மிக்க வட்டுடையோடும் வாளோடும் ஒருவீரன் வந்து அவனைச் சேர்ந்து, நீயெனக்குநிகர்; என்னைவெட்டென்றுரைக, இவனே உலகிற்கெல்லாம் ஒப்பாயினானென்று கூறும்படி விளங்கும் ஆணழகை யுடைய விபுலன் நக்கானென்க.

'அதுவோவென நக்கான்' என்றது, முற்பட மார்பு கொடுத்தா னென்னும் புகழை நீ எய்தக்கருதியோ? அப்புகழைத் தாரேனென்று நக்கானென்றவாறு. (உசுஉ)

2264. இன்னீரின திரைமேலிரண் டிளவெஞ்சுட ரிகலி, மின் னோடவை சுழன்றாயிடை விளையாடுகின் றனபோற், பொன்னு ணினர் பொருவில்லுயர் புனைகேடகந் திரியாக், கொன்வாளினர் கொழுந்தாரினர் கொடிமார்பினர் திரிந்தார்.

(இ - ள்.) கடலிடத்தனவாகிய திரைமேலே இரண்டிளஞாயிறு இருந்து அவைதாம் இகலிக் கையிற்பிடித்த மின்னோடே சுழன்று விளை யாடுகின்றவை போலே நாணினர் வாளினர் தாரினர் மார்பினராய்க் கேடகத்தைத் திரித்து யானையைக்கொண்டு சாரிகையிலே திரிந்தா ரென்க.

மின் : வாளிற்குவமை (உசுரு)

2263. புடை - பக்கத்தில். பொருவில்லாத உயர்ந்த ஓலை. ஓலை குழையோடு எரிய; எரிய - விளங்க. உடைநாண் - அரைநாண்; சீவக. 2240. வட்டுடையும் வாளும்: சீவக. 767, அடிக். வட்டுடை - முழந் தாளளவாக வீரர் உடுக்கும் உடை விசேடம். ஒருவன் அடையா - ஒரு வீரன் விபுலனைச் சேர்ந்து. நீ எனக்கு நிகர்; என்னை எறிவாய் என; என - என்று அவ்வீரன் கூற. ஆணழகுடையான், இவனே கிடையா யினனென்றெண்ணி அதுவோவென நக்கான்; ஆணழகுடையான்: விபுலன். கிடை - ஒப்பு.

2264. நீரின - கடலிடத்தனவாகிய. திரை - அலை. இளவெஞ்சுடர்- பாலசூரியன். இகலி - தம்முள் மாறுபட்டு. மின் - ஒளி எனலுமாம். ஆயிடை - அவ்விடத்து. பொருவில்லாத உயர்ந்த கேடகத்தைத் திரித்து. கொன் - அச்சம். கொடியையெழுதிய மார்பினர்.

2265. விருந்தாயினை யெறிநீயென விரைமார்பகங் கொடுத் தாற், கரும்பூணற வெறிந்தாங்கவ னினதூழினி யெனவே, எரிந் தாரயி லிடைபோழ்ந்தமை யுணராதவ னின்றான், சொரிந்தார்மல ரரமங்கையர் தொழுதார்விசும் படைந்தான்.

(இ - ள்.) அங்ஙனங் களிற்றோடு திரிதலிற் சேர்ந்து வெட்டுதல் கூடாமையின் வேற்போரைக் கருதி, யான் வந்தபின் வந்தமையின் நீ எனக்கு விருந்தாயினையாதலின் நீ முற்பட வேலாலெறியென்று விபுலன் தன்மார்பைக் கொடுத்தவற்கு, அவனும் கவசத்தளவு அறும்படி எறிந்து, இனி எறியுமுறை நினக்கென்றானாக, விபுலனெறிந்த நொய்ம்மையாலே வேல்பட்டுருவின படியை அவன்றானறியாதே விசும்பைச்சேர்ந்தான்; சேர்ந்து அவன் ஆங்கு நின்றான்; அப்பொழுது அரமங்கையர் மலரைச் சொரிந்தார்; சொரிந்து தொழுதாரென்க.

விண்ணுலகை விரும்பிய விபுலன் ஈண்டுநிற்க, நல்வினையால் அவன் விண்ணுலகிலே நின்றானென்று தேவர்கூறினார்; அவன் ஆங்கு நின்றா னென்க; நிலைபெற்றிருந்த நிலையை அவன் அங்கே நின்றானென்றல் உலகவழக்கு. இனி 'அடைந்தார்' என்ற பாடத்திற்கு இருவருமடைந் தாரென்பார்க்கு அவனின்றானென்பதனை யானைமேல் நின்றானென்றல் மரபன்மையின், காலாளாய் இருவரும் நின்றாரெனல்வேண்டும்; அது முற்கூறிய உவமங்கட்குப் பொருந்தாதாம். அயிலை வாளாக்குதல் பொருத்தமின்று. இத்துணையும் விபுலன் பொருதபடி கூறினார். (௬௬௪)

---

2265. விருந்தாயினையாதலால், நீ எறி என மார்பகத்தைக் கொடுத்தாற்கு; என - என்றுகூறி. கொடுத்தாற்கு - கொடுத்த விபுல னுக்கு. பூண் - கவசத்தை. அவன் - அவ்வீரன். பூண் - விபுலனணிந்த கவசம். இனி நினது ஊழ் எனவே - இனிமேல் உன்னுடைய முறையாகு மென்று அவ்வீரன் கூறவே; போரில் முறையுண்டென்பதை, "வாண் மிகு மறமைந்தர், தோண்முறையான் வீழுமுற்றவும்" (மதுரைக். 53-4), "என்முறை வருகவென்னான் கம்மென, எழுதரு பெரும்படை விலக்கி, யாண்டு நிற்கு மாண்டகை யன்னே" (புறநா. 292), "இணையாருமி லவனேர்வர வெய்தாவலி செய்தாய், அணையாயினி யெனதூழென வடராவெளி படராப், பணையார்புய முடையானிடை சிலவிம்மொழி பகர்ந்தான்" (கம்ப. முதற்போர். 180) என்பவற்றாலுணர்க. (பி - ம்.) 'இனி யென்ன.' விபுலனெறிந்த அயில்போழ்ந்தமையை அவன் உண ராது நின்றான்; அவன் - அவ்வீரன். சொரிந்து தொழுதார்.

(மேற்.) அடி, 1-2 - சிறுபாண். 232; மதுரைக். 53-4, ந.

(வேறு)

2266. நித்திலக் குப்பை போல நிழலுமிழ்ந் திலங்கு மேனிப், பத்திப்பூ ணணிந்த மார்பிற் பதுமுகன் பைம்பொற் சூழி, மொய்த் தெறி யோடை நெற்றி மும்மதக் களிற்றின் மேலான், கைத்தலத் தெஃக மேந்திக் காமுகற் கண்டு காய்ந்தான்.

(இ - ள்.) மார்பிலணிந்த பத்திகளையுடைய முத்துப்பூணாலே நித் திலத்திரள்போல நிழலுமிழ்ந்திலங்கு மேனியையுடைய பதுமுகன், முகபடாத்தையும் ஓடைநெற்றியையுமுடைய களிற்றின்மேலிருந்தவன், எஃகத்தையேந்திக் காமுகனைக் கண்டு காய்ந்தானென்க. (கசரு)

2267. மாற்றவன் சேனை தாக்கித் தளர்ந்தபின் வன்கண் மள்ளர், ஆற்றலோ டாண்மை தோன்ற வாருயிர் வழங்கி வீழ்ந் தார், காற்றினாற் புடைக்கப் பட்டுக் கடலுடைந் தோடக் காமர், ஏற்றிளஞ் சுருக்க ளெங்குங் கிடந்தவை போல வொத்தார்.

மாற்றவன் - காமுகன்.

(இ - ள்.) அவன் காய்ந்தவனைக்கண்டு காமுகன்சேனை வந்து தாக்குதலின், பதுமுகன்படை கெட்டது; அதன்பின்பு அதனோடு கெடாதே மீண்டு நின்ற வன்கண்மள்ளர், ஏறுகிய சுருக்கள்போல வலி யும் ஆண்மையும் தோன்றநின்று பொருது பட்டுக்கிடந்தவர்கள், பெருங் காற்றால் அடிக்கப்பட்டு கடலுடைந்துபோக அச்சுருக்கள் நிலமெங்கும் கிடந்தவற்றை ஒத்தாரென்க.

காற்றுக் காமுகன்படைக்கும், கடல் பதுமுகன் படைக்கும் உவமை. போல, ஒத்தாரென்ற இரண்டும் உவமவுருபாதலின், போலவென்பதனை முன்னே கூட்டுக. (கசசு)

---

2266. மார்பிலணிந்த பூணால் நித்திலக்குப்பை போல நிழலுமிழ்ந் திலங்கும் மேனியையுடைய பதுமுகன்; பூண் : முத்துமாலை. குப்பை - தொகுதி. நிழல் - ஒளி. சூழி - முகபடாம். களிற்றின் மேலானாகிய பது முகன், எஃகத்தை ஏந்திக் காமுகனைக் காய்ந்தான்; காமுகன் : கட்டியங் காரன் படையைச் சார்ந்த ஒருவீரன்.

2267. மாற்றவன் சேனை - பகைவனான காமுகனுடைய சேனை. தாக்க - தாக்குதலால். தளர்ந்த பதுமுகன் படை தோல்வியடைந்தது. பின் - பின்பு. மள்ளர் : பதுமுகன்படையில் எஞ்சிய வீரர். மள்ளர், சுருக்கள் போலத் தோன்ற நின்று, அச்சுருக்கள் கிடந்தவற்றை ஒத்தார்.

2268. தூசுலாம் பரவை யல்குற் றுணைமுலை மகளி ராடும், ஊசல்போற் சேனை யோடப் பதுமுகன் களிற்றை யுந்தி, மாசில் சீர் மழையி னெற்றி மாமதி நுழைவ தேபோற், காய்சினக் களிற்றி னெற்றி யாழிகொண் டழுத்தி னானே.

கெட்ட படை மீண்டும் பொருது கெடுதலின், ஊசலோடு உவமித்தார்.

(இ - ள்.) [1] தன்முன்னின்ற சேனை கெடுதலிற் பதுமுகன் பொருதுய்க் களிற்றைச்செலுத்தி ஆழியைக் கையிலே வாங்கிக்கொண்டு சென்று மழையினெற்றியிலே மதி நுழையுமாறுபோலக் காமுகன்களிற்றி னெற்றியிலே அழுத்தினானென்க. (கசுஎ)

2269. பெருவலி யதனை நோனான் பிண்டிபா லத்தை யேந்தி, அருவரை நெற்றிப் பாய்ந்த வாய்மயிற் றோகை போலச், சொரி மதக் களிற்றின் கும்பத் தழுத்தலிற் றோன்றல் சீறிக், கருவலித் தடக்கை வாளிற் காளையை வெளவி னானே.

பிண்டிபாலம் - தலையிலே பீலிகட்டப்பட்டு எறிவதொரு படை. யானை சேர்ந்தமையின், வாளாலே வெட்டினான்.

(இ - ள்.) காமுகன் அதனைப் பொருதுய்ப் பிண்டிபாலத்தை யெடுத்து மலைத்தலையிலே பாய்ந்த தோகைமயில்போலே பதுமுகன் களிற்றின் மத்தகத்தை அழுத்துதலின் அவன் சீறித் தன்கையில் வாளாலே காமுகனை வெட்டினானென்க.

பீலியையுடையதாதலின், மயிலோடுவமித்தார். கருவலி - பெரியவலி. (கசுஅ)

2268. தூசு - ஆடை. மகளிர் ஆடுகின்ற ஊசலைப்போல; ஊசல் - ஊஞ்சல். உந்தி - செலுத்தி. மழை - மேகம். (பி - ம்.) 'மாமதி செல்வதேபோல்.' ஆழி - சக்கரத்தை. களிற்றின் நெற்றிக்கு மேகத்தின் உச்சியும், சக்கரத்திற்கு மதியும் உவமைகள்; "செல்வப்போர்க் கதக் கண்ணன் செயிர்த்தெறிந்த சினவாழி......எல்லைநீர் வியன்கொண்மூ விடைநுழையுமதியம்போல், மல்லலோங் கெழில்யானை மருமம்புக் கொளித்ததே" (யா - வி. 15, மேற்.). களிறு: காமுகனுடைய யானை.

(உரை) [1] (பி - ம்.) 'இவன்றன்முன்'

2269. பெருவலி: காமுகன். நோனான் - பொருதவனாகி. வரையின் நெற்றியிற் பாய்ந்த மயிற்றோகைபோல. கும்பம் - மத்தகம். பதுமுகனுடைய யானைக்கு மலையும், பிண்டிபாலத்திற்குத் தோகைமயிலும் உவமைகள்; "அருவரை புகுமயி லனைய வாயின, கருவரை யனையன களிநல் யானையின், பெருவரை முகம்புகும் பிண்டி பாலமே" (சூளா. அரசியற். 270). தோன்றல்: பதுமுகன். வலியையுடைய தடக்கை வாளினால் காளையை வெளவினான்; காளை: காமுகனை. வெளவினான் - வெட்டினான்.

2270. தீமுகத் துமிழும் வேற்கட் சில்லரிச் சிலம்பி னூர்தம், காமுகன் களத்து வீழக் கைவிர னுதியிற் சுட்டிப், பூமுக மாலை மார்பன் பொன்னணி கவச மின்னக், கோமுகன் கொலை வல் யானை கூற்றெனக் கடாயி னானே.

மகளிர்தம்மிடத்துக் காமுகன். பூமுகம் - பூப்போலு முகமெனச் செவ்வி கூறினார்.

(இ - ள்.) காமுகன் பட்ட அளவிலே, அவன்தம்பி மாலைமார்பனாகிய கோமுகன், என் தமையனைக் கொன்றவனிவனென்று சுட்டிக் காட்டிக் கவசமின்னக் களிற்றைக் கடாவினானென்க. (௨௬௯)

2271. சாரிகை திரியும் யானை யுழக்கலிற் றரணி தன்மேல், ஆர்கலிக் குருதி வெள்ள மருந்துகள் கழுமி யெங்கும், வீரியக் காற்றிற் பொங்கி விசும்புபோர்த் தெழுதப் பட்ட, போர்நிலைக் களத்தை யொப்பக் குருதிவான் போர்த்த தன்றே.

களம் - இடம். குருதிவான் போர்த்தது - செக்கர்வானிட்டது.

(இ - ள்.) அவன் அங்ஙனஞ்சேறலின், போர்செய்யும் நிலைமை எழுதப்பட்ட இடத்தை ஒப்பத் தப்பாமற் சாரிகையிலே திரிகின்ற யானைகள் கடல்போலுங் குருதிவெள்ளத்தையுழக்கலின், அது துகளாய்த் திரண்டு, புரவியுங்களிறுமெடுத்த பெருங்காற்றாலே பொங்கி விசும் பெங்கும் போர்த்துச் செக்கர்வானிட்டதென்க. (௨௭௦)

2272. சென்றது தடக்கை தூணி சேந்தகண் புருவங் கோலி, நின்றவிற் குனிந்த தம்பு நிமிர்ந்தன நீங்கிற் றாவி, வென்றிகொள் சரங்கண் மூழ்கி மெய்ம்மறைத் திட்டு மின்றேய், குன்றின்மேற் பவழம் போலக் கோமுகன் றோன்றி னானே.

2270. தீயை முகத்து உமிழ்கின்ற வேல். வேல்போலும் கண். கண்ணையுடைய சிலம்பினார்; மகளிர். வீழ - வீழ்ந்தாகை. மாலைமார்பனாகிய கோமுகன் விரலின் நுதியாற் சுட்டி, கவசம் மின்ன, யானையைக் கடாயினான்; கோமுகன் : காமுகன் தம்பி; சுட்டி - பதுமுகனைச் சுட்டிக் காட்டி.

2271. யானை குருதிவெள்ளத்தை உழக்குதலால்; உழக்கல் - மிதித்துக் குழப்புதல். துகள் - தூசி. கழுமி - திரண்டு. வீரியக்காற்று - பெருங்காற்று. போர்த்து - மறைத்து. குருதிவான் - செக்கர்வானம்.

2272. கை தூணியிற் சென்றது; தூணி - அம்பறாத்தூணி. கண் சேந்த; சேந்த - சிவந்தன. கோலிநின்ற - வளைந்து நின்றன. குனிந்தது - வளைந்தது. ஆவி நீங்கிற்று; ஆவி - கோமுகன் படையிலுள்ளவருடைய உயிர். மெய் மறைத்திட்டு - கோமுகன் உடம்பை மறைத்து.

(இ - ள்.) பதுமுகன் கை தூணியிலே சென்றது; அப்பொழுது கண்கள் சிவந்தன; புருவங்கள் வளைந்தேநின்றன; வில்லும் வளைந்தது; அம்புகள் நேரேசென்றன; அவன்முன்னின்ற படைகளினுயிரெல்லாம் போயின; போனபின்பு அவன்மேலே அம்புகள் அழுந்தி மெய்யை மறைத்து அதிலே சில உருவிப் போதலிற் குருதிபோர்த்துக் கோமுகன் மின்செறிந்த மலையிற் பவழம்போலத் தோன்றினனென்க. (கஎக)

2273. பனிவரை முளைத்த கோலப் பருப்புடைப் பவழம் போலக்
குனிமருப் புதிரந் தோய்ந்த குஞ்சரங் கொள்ள வுந்திக்
கனிபடு கிளவி யார்தங் கதிர்முலை பொருது சேந்த
துனிவரை மார்பன் சீறிச் சுடுசரஞ் சிதறி னானே.

(இ - ள்.) முலைபொருது சிவந்த மார்பன், பனிவரையிலே முளைத்த பருமையையுடைய பவழம்போலே குருதிசெறிந்த குனிமருப்பையுடைய குஞ்சரத்தைப் போர்கொள்ளும்படி செலுத்திச் சீறிச் சரத்தைச் சிதறினனென்க.

வரைவெறுக்கு மார்பன் - கோமுகன். (கஎ௨)

2274. பன்னலம் பஞ்சிக் குன்றம் படரெரி முகந்த தொப்பத், தன்னிரு கையி னாலுந் தடக்கைமால் யானை யாலும், இன்னுயிர் பருகிச் சேனை யெடுத்துக்கொண் டிரிய வோட்டிக், கொன் முரண் டோன்ற வெம்பிக் கொலைக்களிற் றுழவ னார்த்தான்.

(இ - ள்.) அங்ஙனஞ்சிதறி, எஃகுதலையுடைய பஞ்சியாகிய மலையை எரிமுகந்த தன்மையையொப்பத் தன்கையாலும் யானையாலும் பதுமுகன்சேனை விசையெடுத்து ஓடும்படி பொருது ஆண்டுப் போகாது நின்றவருயிரைப்பருகிப் பெரிய வலிதோன்ற வெம்பிக் கோமுகன் ஆர்த்தானென்க.

இதனைப் பதுமுகன் பொருதானென்பாருமுளர். (கஎ௩)

---

2273. முளைத்த - தோன்றிய. பருப்புடை - பருமையையுடைய. (பி - ம்.) 'பரூஉப்புடைப் பவள மேபோல்.' வரையில் முளைத்த பவளத்தைப்போல உதிரம் தோய்ந்த மருப்புடைய குஞ்சரத்தை; குஞ்சரம் - கோமுகனது யானை. கொள்ள - போரில் எதிர்கொள்ளும்படி. வரை துனி - மலையை வெறுக்கின்ற. மார்பன்: கோமுகன்; எழுவாய். மார்பன் உந்திச் சீறிச் சரத்தைச் சிதறினான்.

2274. பன்னலம்பஞ்சி - சுகிர்தலையுடைய பஞ்சு; அம்: சாரியை. பஞ்சியாகிய மலை. தன் என்றது கோமுகனை. உயிர் - பதுமுகன் படையிலுள்ளாரது உயிரை. சேனை - பதுமுகனுடைய சேனை. எடுத்து - விசையெடுத்து. கொன்முரண் தோன்ற - அஞ்சத்தக்க மாறுபாடு தோன்றும்படி; கொன் - அச்சம். வெம்பி - கோபித்து. உழவன்: கோமுகன்.

2275. தருக்கொடு குமர ஞர்ப்பத் தன்சிலே வளேய வாங்கி,
ஒருக்கவன் கையும் வாயு முளங்கிழித் துடுவந் தோன்றச்,
சுருக்குக்கொண் டிட்ட வண்ணந் தோன்றலெய் திடுத லோடும்,
மருப்பிறக் களிறு குத்தி வயிரந்தான் கழிந்த தன்றே.

(இ - ள்.) அங்ஙனம் பொருத செருக்கோடே கோமுகன் வளேயை வாயிலேவைத்து ஆர்த்தாளுக, பதுமுகன் அதுபொருதே தன்வில்லே வலித்துச்சேரச் சுருக்குக்கோத்தாற்போலே கையையும் வாயையும் கிழித்துப் பின்பு அவனுள்ளத்தையுங்கிழித்து ஈர்க்குத் தோன்றும்படி பலஅம்பையும் எய்கிற அளவிலே, கோமுகன்களிறு தன்மருப்பிறும்படி பதுமுகன் களிற்றைக் குத்தலின், அதன்கோளகை போயிற்றென்க. (கஎச)

2276. நித்தில மணிவண் டென்னு நெடுமதக் களிறு பாய,
முத்துடை மருப்பு வல்லே யுடைந்துமுத் தொழுகு குன்றின்,
மத்தக யானே வீழ்ந்து வயிரங்கொண் டொழிந்த தாங்குப்,
பத்திரக் கடிப்பு மின்னப் பதுமுகன் பகடு பேர்த்தான்.

(இ - ள்.) [1] கோடு புய்க்கலாது நின்ற அக்களிற்றைப் பதுமுகனேறின நித்திலமணிவண்டென்னுங்களிறு திருகிக் குத்துதலின், முன்பு தைத்துநின்ற மருப்பு முரிந்து முத்தைச் சொரிந்து முத்தொழுகு மலேபோலே அவ்வியானே வீழ்ந்து செற்றங்கொண்டு பட்டது; அப்பொழுது பதுமுகன் தன் களிற்றை மீட்டானென்க.

பத்திரக்கடிப்பு - நன்ருகிய குதம்பை. இத்துணேயும் பதுமுகன் பொருதபடி கூறிஞர். (கஎரு)

---

2275. தருக்கு - செருக்கு. குமரன் : கோமுகன். ஆர்ப்ப - ஆர்த்தாளுக. தன் என்றது பதுமுகனே. வளேய வாங்கி - குழைய வளேத்து; சீவக. 2182, 2256. ஒருக்கு = ஒருங்கு - ஒரே சமயத்தில். அவனுடைய கையையும் வாயையும் உள்ளத்தையும் கிழித்து; அவன் : கோமுகன். உடுவம் - ஈர்க்கு. தோன்றல் - பதுமுகன். களிறு - கோமுகன் யானே. பதுமுகன் யானேயைக் குத்தி. வயிரம் - யானேத்தந்தத்திற் கிடும்பூண்; சீவக. 83, அடிக். "நிரைவயிரக் கோட்டா னிலவும்" (தண்டி. 57, மேற்.). கழிந்தது - கழன்று போயிற்று.

2276. நித்திலமணி வண்டு : பதுமுகனுடைய யானேக்குப் பெயர். பாய - பாய்தலால். குன்றின் - மலேயைப்போல. யானே - கோமுகனுடைய யானே. வயிரம் - தீராத கோபம். ஆங்கு - அவ்விடத்து. பத்திரக் கடிப்பு - அழகுடைய குதம்பை என்னும் அணி; சீவக. 2277; "பத்திரக் கடிப்பினன்" (சூளா. அரசியற். 257). பகடுபேர்த்தான் - தன் யானேயை அவ்விடத்தினின்றும் மீட்டான்.

(உரை) [1] கோடுபுய்க்கலாது நின்ற - கொம்பை மீள வாங்கமாட்டாது நின்ற; "கோடுபுய்க் கல்லா துழக்கு நாடகேள்", "மறமிகு வேழந்தன்

2277. (௧) பத்திரக் கடிப்பு மின்னப் பங்கியை வம்பிற் கட்டிக், கொத்தலர்த் தும்பை சூடிக் கோவிந்தன் வாழ்க வென்ருக், கைத் தலத் தெஃக மேந்திக் காளைபோய் வேறு நின்ருன், மத்தக யானை மன்னர் வயிறெரி தவழ்ந்த தன்றே.

2278. (௨) மேகலைப் பரவை யல்குல் வெள்வளை மகளிர் செஞ் சாந், தாகத்தைக் கவர்ந்து கொண்ட வணிமுலைத் தடத்து வைகிப், பாகத்தைப் படாத நெஞ்சிற் பல்லவ தேய மன்னன், சேவகன் சிங்க நாதன் செருக்களங் குறுகி ஞனே.

இவையிரண்டும் ஒருதொடர்.

(௨) வைகி-வைக. (௧) குருகுலத்தை விளக்குதலானும், சீவகற்கும் உலோகபாலற்கும் இறைவனுதலானும் கோவிந்தனை வாழ்த்தினுன்.

(இ - ள்.) மகளிரது ஆகத்தை இடங்கொண்டு பெருத்த சாந் தணிந்த முலைத்தடத்தே தங்காநிற்கவும் அவர்கள் கூற்றிலே செல்லாத நெஞ்சினையுடைய உலோகபாலன்சேவகனுகிய சிங்கநாதன் மயிரைக் கச்சாலே கட்டிச்சூடி வேலையேந்தி வாழ்கவென்று மின்ன வேறே நின்ருன்; ஆண்டுத் தன்னெதிர்சென்ருேர் இன்மையின், அக்காளை செருக்களத்தைக் குறுகினுன்; அப்பொழுது மன்னர்வயிற்றில் எரி தவழ்ந்ததென்க.

பாகம், பங்குமாம். (௧எ௬ - எ)

---

மாறுகொண் மைந்தினுற், புகர்நுதல் புண்செய்த புய்கோடு போல" (கலித். 38 : 9, 53 : 3-4); "கோட்டினிற் குத்திக் குடர்புய்த் துய்த்து" (மணி. 13 : 47); புய்த்தல்: புறநா. 28 : 12; களவழி. 39; கம்ப. அதிகாயன். 222.

2277. பத்திரக்கடிப்பு : சீவக. 2276, அடிக். பங்கி - தலைமயிர். வம்பு - கச்சு. தும்பை சூடுதல், போர்க்கெழுதல்பற்றி. கோவிந்தன் : கோவிந்தராசன். தலைவனை வாழ்த்திப் போர்க்கெழுதல்; சீவக. 778, அடிக். காளை : உலோகபாலனுடைய சேவகனை சிங்கநாதன். மன்னர் : பகையரசர்.

2278. மகளிரது ஆகத்தைக் கவர்ந்து கொண்ட செஞ்சாந்து பூசிய முலைத்தடத்து வைகி; ஆகம் - மார்பு. வைகி - தங்க. பாகத்தைப்படாத - அப்பெண்டிரது கொள்கை வகையே செல்லாத. நெஞ்சினையுடைய மன்னன். பல்லவதேய மன்னன் : உலோகபாலன். செருக்களம் - போர் செய்யும் இடத்தை.

2279. புனைகதிர் மருப்புத் தாடி மோதிரஞ் செறித்துப் பொன் செய், கனைகதிர் வாளை யேந்திக் கால்கழ லணிந்து நம்மை, இனையன பட்ட ஞான்று லிறைவர்க ணினைப்ப தென்றே, முனையழன் முளிபுற் கான மேய்ந்தென நீந்தி னானே.

(இ - ள்.) அங்ஙனங் குறுகினவன், யானைக்கொம்பாற் செய்த ஆசின்கண்ணே புனைகதிரையுடைய மோதிரத்தைச் செறித்து அவ் வாசிலே பொன்னிட்ட வாளையேந்திக் காலைக் கழலையணிந்து நம்மை இறைவர்கள் நினைத்துக் கொண்டாடுவது இத்தன்மையவான வெற்றிக ளுண்டான நாள்களாலே யென்று கருதி உலர்ந்த புற்கானத்தை அழல் மேய்ந்தாற்போலப் போரை வெட்டிக் கடந்தானென்க.

[1] பாடு குறித்தலின், வாளைவாங்கினான். இத்துணையும் சிங்கநாதன் செயல் கூறினார். (கஎஅ)

2280. தாரணி பரவை மார்பிற் குங்கும மெழுதித் தாழ்ந்த, ஆரமும் பூணு மின்ன வருவிலைப் பட்டி னங்கண், ஏர்படக் கிடந்த பொன்ஞா ணிருள்கெட விழிப்ப வெய்ய, பூரண சேனன் வண்கைப் பொருசிலை யேந்தி னானே.

(இ - ள்.) தாரணிந்த மார்பிலே ஆரமும் பூணும் மின்னாநிற்கக் குங்குமத்தையெழுதிப் பட்டின்கண்ணே அழகுபடக்கிடந்த வல்லிக் கயிறு விளங்கப் பூரணசேனன் வில்லையேந்தினானென்க.

இருள் கெடுகையினாலே விழிப்ப - ஓட வைக்கையினாலே விளங்க. (கஎகூ)

---

2279. மருப்புத் தாடியின் மோதிரத்தைச் செறித்து; மருப்புத் தாடி - யானைக்கொம்பாற் செய்த கைப்பிடி. காலிற்கழலை அணிந்து. நம்மை இறைவர் நினைப்பது இனையன பட்ட ஞான்றுலென்று; இறைவர் - அரசர். இனையன பட்ட ஞான்றுல் - இத்தன்மையவான வெற்றிக ளுண்டான காலத்துத்தான். என்று - எனக்கருதி. முளிபுற்கானத்தை அழல் மேய்ந்தாற்போலப் போரை நீந்தினான்; சீவக. 813, அடிக்; முளி புற்கானம் - உலர்ந்த புல்லை யுடைய காடு. நீந்தினான் - கடந்தான்.

(உரை) [1] பாடு - இறந்துபடுதல்.

2280. தாரையணிந்த பரவை மார்பில்; தார் - பூமாலை; பரவை - பரத்தல். தாழ்ந்த - தங்கிய. ஆரம் - முத்துமாலை. அரிய விலையை யுடைய பட்டு. பட்டின் அங்கண் - பட்டினிடத்து. ஏர்பட - அழகு பொருந்த. பொன்ஞாண் - பொன்னாற்செய்த அரைஞாண். விழிப்ப - விளங்க. பூரணசேனன் : கட்டியங்காரனுடைய படைத்தலைவன். கையிற் சிலையை ஏந்தினான்.

2281. ஊனமர் குறடு போல விரும்புண்டு மிகுத்த மார்பிற்
றேனமர் மாலை தாழச் சிலைகுலாய்க் குனிந்த தாங்கண்
மானமர் நோக்கி னாரு மைந்தருங் குழீஇய போருட்
கானமர் காம னெய்த கணையெனச் சிதறி னானே.

(இ - ள்.) இறைச்சி கொத்தும் பட்டடைமரம்போல இரும்புமேய்ந்து பசிதீர்ந்து மிகுத்துவைத்த மார்பின் மாலை தாழ மெய் வளைதலாலே சிலை குனிந்தேநின்றது; அப்பொழுது, மகளிரும் மைந்தரும் திரண்ட போரிலே காமனெய்த கானமர் கணையென்னும்படி கணையைச் சிதறினானென்க.

காமன் ஒருவனாய் நின்று பலரையுமெய்தலின், உவமம். (கஅo)

2282. வண்டலை மாலை தாழ மதுவுண்டு களித்து வண்கைப்
புண்டலை வேலை யேந்திப் போர்க்களங் குறுகி வாழ்த்திக்
கண்படு காறு மெந்தை கட்டியங் கார னென்றே
உண்டொலை யார்க வேலென் றுறுவலி தாக்கி னானே.

வண்டு அலைமாலை-மதுவுண்டு களித்து வண்டு அலைகிற மாலை; நிகழ்கால முணர நின்றது. களித்த பாடமாயின், அகரத்தைச் சுட்டாக்கி அவ்வுறு வலியென்க.

(இ - ள்.) அப்பூரணசேனன், வில்லைநீக்கி மாலைதாழக் கையாலே வேலையேந்திக் களத்தைக் குறுகிக் கட்டியங்காரன் உலகெல்லாந்துஞ்சும் ஊழியளவும் வாழ்வானாகவென்று வாழ்த்தி இவ்வேல் உயிர்களைக் கடுக வுண்டு வயிறு நிறைவதாகவென்று கூறிப் பொருதானென்க. (கஅக)

---

2281. ஊன் அமர் குறடுபோல இரும்புண்டு மிகுத்த மார்பின் - ஊனைக்கொத்துதலையுடைய மரக்கட்டையைப்போல இரும்பால் உண்ணப்பட்டு மிகுத்துவைத்த மார்பிலே; "எஃகா டூனங் கடுப்ப மெய்சிதைந்து" (பதிற். 67 : 17). குலாய் - மெய்வளைதலால். சிலை குனிந்தது - வில் வளைந்தது. நோக்கினார் : மகளிர். குழீஇய போருள் - திரண்ட காமப் போரிடத்து. காமன் எய்த கானமர்கணை யென்னும்படி. கான் - வாசனை. மன்மதன் அம்பு மலராதலின் 'கானமர் கணை' என்றார்.

2282. மதுவை உண்டு களித்து வண்டு அலைகின்ற மாலை தாழும் படி. கையில் வேலை ஏந்தி. எந்தையாகிய கட்டியங்காரன், உலகம் கண்படுகாறும் வாழ்கவென்று வாழ்த்தி; இறைவனாதலின் 'எந்தை' என்றான். கண்படுதல் - இறத்தல். வேல் ஒலை உண்டு ஆர்கவென்று; ஒலை = ஒல்லை - விரைவாக. உண்டு - பகைவரது உயிரை உண்டு. ஆர்க - வயிறுநிறைவதாக. உறுவலி : பூரணசேனன்.

2283. கூற்றென வேழும் வீழாக் கொடிநெடுந் தேர்க ணூரு
ஏற்றவர் தம்மைச் சீறு வேந்திர நூழில் செய்யா
ஆற்றலங் குமரன் செல்வா னலைகடற் றிரையி னெற்றி
ஏற்றுமீ னிரியப் பாய்ந்த வெறிசுறு வேறு போன்றான்.

(இ - ள்.) பூரணசேனன், வீழ்த்து நூறிச் சீறி [1] ஒருகண்மாயம் போலக் கொன்றுகுவித்தலைச்செய்து செல்கின்றவன், கடல்முகட்டில் ஏறுகிய மீன்களிரியப் பாய்ந்த சுறுவேறுபோன்றானென்க. (கஅ௨)

2284. மாலைக்க ணாம்பல் போல மகளிர்தங் குழாத்திற் பட்டார்
கோலவாட் போருட் பட்டாற் குறுமுயற் கூடு கண்டு
சாலத்தாம் பனிக்கும் பொய்கைத் தாமரை நீர ராயின்
ஞாலத்தா ராண்மை யென்னு மெனநகா வருகின் றானே.

(இ - ள்.) மகளிர் குழாத்தில், மாலைக்காலத்து ஆம்பல்போல மகிழ்ச்சியுற்றவர்கள், வாட்போரிற்சென்றால் மதியைக் கண்டு மயங்கும் தாமரையின் தன்மையராயினாராயின், ஞாலத்தார் வீரத்தையாளுந் தன்மை என்னாய்முடியுமென்று நக்கு வாராநின்றானென்க.

இத்துணையும் கட்டியங்காரன்படைத்தலைவன் பூரணசேனன்செயல் கூறினார். (கஅ௩)

2285. முடிச்சடை முனிவ னன்று வேள்வியிற் கொண்ட வேற்கண், மடத்தகை மகளிர் கோல வருமுலை யுழக்கச் சேந்து, கொடிப்பல வணிந்த மார்பிற் கோவிந்தன் வாழ்க வென்று, நடத்துவா னவனை நோக்கி நகாச்சிலை பாரித் தானே.

---

2283. வேழம் வீழா - யானையை வீழ்த்து; தேர்களை நூறு; நூறு = நூறி - அழித்து. ஏற்றவர் - எதிர் பொருதவர். சீறு - கோபித்து. ஏந்திர நூழில் செய்யா - எந்திரத்தைப் போலக் கொன்று குவித்தலைச் செய்து; எந்திரம் ஏந்திரமென்று நீட்டல் விகாரமுற்றது. குமரன் : பூரணசேனன்; எழுவாய். திரையினெற்றி - கடல்முகட்டில். ஏற்றுமின் - ஏறுகிய மீன்கள். செல்கின்றவன் சுறுவேறுபோன்றான்.

(உரை) [1] கண்மாயம் - கண்கட்டு வித்தை; "கண்டுங் கண்டிலே னென்னகண் மாயமே" (திருவா. திருச்சத. 42)

2284. மகளிர் குழாத்தில் மாலைக்கண் ஆம்பல்போலப்பட்டார்; பட்டார் - மகிழ்ச்சியுற்றவர்கள். போருள்பட்டால் - போரிடத்துச் சென்றால். முயற்கூடு - சந்திரனை; "முயற்கூடு தாக்க விறுற்கூடுடையு முடிச்சிலம்பா" என்பர். சால - மிக. பனிக்கும் - மயங்குகின்ற; தாமரைக்கு அடை. தாமரை நீரராயின் - தாமரை மலரைப்போன்ற தன்மையையுடையரானால். நகா-நக்கு.

2285. அன்று வேள்வியிற் கொண்ட சடைமுடியையுடைய முனிவன்போலும் கோவிந்தன்; மார்பினையுடைய கோவிந்தன்; வேள்வி-தக்கன்

முனிவன் - வீரபத்திரதேவன் ; இறைவன் தன்னைப்போலே படைத்தலின், அவனை முனிவனென்ருர். அன்று தக்கன்வேள்வியைத் தவிர்ப்பான் வேண்டி இறைவன் தாஞகப்படைத்துக்கொண்ட முனிவனைப் போலும் கோவிந்தன் ; வேற்கண்மகளிர் முலையுழக்குதலிற் சிவக்கப்பட்டுக் கொடியணிதற்குக் காரணமான மார்பினையுடைய கோவிந்தன்.

(இ - ள்.) கோவிந்தன் வாழ்கவென்று நடத்துகின்ற சிங்கநாதன், பூரணசேனனை நோக்கி நக்கு வில்லை வளைத்தானென்க. (கஅச)

2286. போர்த்தநெய்த் தோர ஞகிப் புலாற்பருந் தார்ப்பச் செல்வான், சீர்த்தகை யவனைக் கண்டென் சினவுவே லின்னு மார்ந் தின், றூர்த்துயி ருன்னை யுண்ணக் குறைவயி றருமென்ருங், கார்த்தவாய் நிறைய வெய்தா னம்புபெய் தூணி யொத்தான்.

(இ - ள்.) போர்த்த குருதியனுய்ச் செல்கின்ற பூரணசேனன், சிலை பாரித்த சிங்கநாதனைக்கண்டு, என்கையில் வேல் இன்னும் வயிறு நிறைந்ததில்லை ; உன்னுயிரை ஊற்றியுண்ணக் குறைவயிறு நிறையுமென்று ஆர்த்தவாய் அப்பொழுதே நிறையும்படி சிங்கநாதனெய்தான் ; அப்பொழுது பூரணசேனன் அம்புபெய் தூணியையொத்தானென்க. (கஅரு)

2287. மொய்ப்படு சரங்கண் மூழ்க முனையெயிற் றுளி போல, அப்பணைக் கிடந்த மைந்த னருமணித் திருவில் வீசும், செப்பிள முலையி ஞர்கண் சென்றுலாய்ப் பிறழச் சிந்திக், கைப்பட வெடுத் திட் டாடும் பொலங்கழற் காயு மொத்தான்.

---

செய்த யாகம். கொண்ட - சிவபெருமாஞற் படைத்துக்கொள்ளப்பட்ட. முனிவன் : வீரபத்திரக் கடவுள். பல கொடிகளை அணிந்த மார்பு. நடத்துவான் - போரை நடத்துபவஞகிய சிங்கநாதன். அவனை : பூரணசேனனை. நகா - நக்கு. பாரித்தான் - வளைத்தான்.

2286. போர்த்த - மறைத்த. நெய்த்தோரஞகி - இரத்தத்தை உடையவஞகி. புலாலையுடைய பருந்து ஆர்ப்ப. செல்வான் : பூரணசேனன். அவனை : சிங்கநாதனை. என் வேல் இன்னும் ஆர்ந்தின்று ; ஆர்ந்தின்று - வயிறு நிறைந்ததில்லை. உன் உயிரை ஊர்த்து உண்ணக் குறைவயிறு ஆரும் ; ஊர்த்து - ஊற்றி ; ஆரும் - நிறையும். என்று - என்று கூறி. சிங்கநாதன் எய்தான். பூரணசேனன் வாய் அம்பு பெய்த தூணியை ஒத்தது ; " வாயே, பொங்குநுனைப் பகழி மூழ்கலின்......ஆவநாழிகை யம்புசெறித் தற்றே " (தொல். புறத். 24, ந. மேற்.)

2287. மொய்ப்படு சரங்கள் - போரிற் சிங்கநாதன் எய்த அம்புகள். மூழ்க - பூரணசேனன் உடம்பில் மூழ்குதலால். முனை - கூர்மை. ஆளி - சிங்கம். அப்பணைக் கிடந்த மைந்தன் - அம்புப் படுக்கையிற் கிடந்த பூரணசேனன் ; " அப்பணைக் கிடந்த காளை " (தகடூர்யாத்திரை). முலையினர் : மகளிர். உலாய் - உலாவி. பிறழ - மாறுபட. சிந்தி - தமக்

(இ - ள்.) பின்னும் சிங்கநாதனெய்த சரங்கள் சென்று மூழ்குதலின், ஆளிபோல அப்பணையிலே கிடந்த பூரணசேனன், கழலினுடைய காயையு மொத்தானென்க.

பொலஞ்செப்பையொத்த முலையினாராடுமென்க; "பொற்பே பொலிவு" (தொல். உரி. 37) என்றும், "பொன்னென் கிளவி யீறுகெட" (தொல். புள்ளி மயங்கு. 69) என்றும் சூத்திரஞ்செய்தமையின், பொலம் பொலிவாகாமையுணர்க. கண்பிறழப்பரப்பி ஆடுங்கழலென்க. இத்துணையும் சிங்கநாதனோடு பொருது பூரணசேனன் பட்டபடி கூறினார். (கஅசு)

2288. புனைகதிர்ப் பொன்செய் நாணிற் குஞ்சியைக் கட்டி நெய்த்தோர், நனைகதி ரெஃக மேந்தி நந்தன்வாழ் கென்ன நின்ற, வினையொளிர் காளை வேலைக் கடக்கலார் வேந்தர் நின்றார், கனைகடல் வேலை யெல்லை கடக்கலா வண்ண நின்றார்.

(இ - ள்.) பொன்னாற்செய்த நாணால் தன்மயிரைக் கட்டிக் குருதியால் நனைந்த வேலையேந்தி நந்தட்டன் வாழ்வானாகவென்று நின்ற போரில் விளங்கின காளை கையில் வேலைக் கடக்கமாட்டாராய் வேந்தர் நின்றவர்கள், கடல் கரையினெல்லையைக் கடக்கமாட்டாத தன்மைபோல நின்றாரென்க.

இவன் நந்தட்டன் சேவகன். (கஅஎ)

2289. நின்றவப் படையு ளானே யொருமக னீலக் குஞ்சி, மன்றல மாலை நெற்றி மழகளி றன்றி வீழான், வென்றியங் கொளிறும் வெள்வேன் மின்னென வெகுண்டு விட்டான், சென்றவேல் விருந்து செங்கண் மறவனைக் கெதிர்கொண் டானே.

---

காயை யெறிந்து. ஆடும் - விளையாடுகின்ற. மகளிர் ஆடுகின்ற கழற்காய்; கழற்காய் - கழற்சிக்காய். அடி, 2-4: "அப்பணைக் கிடந்தோன், கமழ்பூங் கழற்றிங் காய்போன் றனனே" (தொல். புறத். 24, ந. மேற்.); "கதிரவன் காதன் மைந்தன் கழலிளம் பசுங்கா யென்ன, எதிரெதிர் பகழி தைத்த யாக்கையன்" (கம்ப. நாகபாசப். 200)

2288. பொன்னாணினாற் குஞ்சியைக் கட்டல்: சீவக. 977, அடிக். நெய்த்தோரால் நனைந்த எஃகத்தை. நந்தன் - நந்தட்டன். வினையொளிர் - போர் செய்யும் தொழிலால் விளங்குகின்ற. காளை: நந்தட்டனுடைய சேவகன். காளையினுடைய வேலைக் கடக்கமாட்டாராய் வேந்தர் நின்றவர். எல்லை - கரையினெல்லையை.

2289. அப்படையிலுள்ளானாகிய ஒரு மகன், நீலக்குஞ்சியையுடைய ஒருமகன்; அப்படை யென்றது கட்டியங்காரனுடைய படையை. மன்றல - வாசனையையுடைய. மாலையை நெற்றியிலேயுடைய மழகளிறு. வென்றி ஒளிறுகின்ற வேலை விட்டான்; வேலாகிய விருந்தை மறவன் எதிர்கொண்டான்; மறவன்: நந்தட்டன் சேவகன்.

(இ - ள்.) களிறன்றி வீழானுயக் கட்டியங்காரன் படையினுள்ளா னுய் நின்ற நீலக்குஞ்சியையுடைய ஒருமகன் வெகுண்டு வேலை மின் னென விட்டான் ; அங்ஙனஞ் சென்ற வேலாகிய விருந்தை நந்தட்டன் சேவகன் மகிழ்ந்து எதிர்கொண்டானென்க.

மன்றல ; அ : அசை. வென்று புகழ்பரந்த ஒளிறும் வேல். (கஅஅ)

2290. மான்வயி ருர்ந்து நோக்கும் வெருவுறு மருளி னோக்கிற், றேன்வயி ருர்ந்த கோதைத் தீஞ்சொலார் கண்கள் போலும், ஊன் வயி ருர்ந்த வெள்வே லொய்யெனப் பறித்து நக்கான், கான்வயி ருர்ந்து தேக்கிக் களிவண்டு கனைக்குந் தாரான்.

மணத்தைத் தேக்கி வயிறுநிறைந்த வண்டொலிக்குந் தாரான் : நந் தட்டன் சேவகன்.

(இ - ள்.) தாரான், மான் வயிறு நிறைந்தபொழுதுநோக்கும் அச்ச முற்ற மருளேக்கினையுடைய மகளிர்கண்கள் போலும் வேலை விரையப் பறித்து இதுவும் ஒரு வேல்பெற்றேமேயென்று நக்கானென்க.

[1] இன் : அசை. (கஅகூ)

2291. விட்டழல் சிந்தி வெள்வேல் விசும்பின்வீழ் மின்னி னெய் தாகக், கட்டழ னெடுங்கண் யாது மிமைத்திலன் மகளி ரோச்சும் மட்டவிழ் மாலை போல மகிழ்ந்துபூண் மார்பத் தேற்றுக், கட்டழ லெஃகஞ் செல்லக் கானெறி யாயி னனே.

(இ - ள்.) நந்தன்சேவகன் கையில் வேல் அழலை விட்டுச்சிந்தி மின் னின் நொய்தாகச் செல்ல அவன் கண்கள் சிறிதுமிமைத்திலன் ; அங்ங னம் இமையாதே நின்று பின்னும் அவன் விட்ட வேல்களையும் மகளி ரோச்சும் மாலைபோலே மகிழ்ந்து மார்பிலேயேற்றுச் சாளரமாய் நின்ரு னென்க.

2290. வயிருர்ந்து - வயிறு நிறைந்து. வெருவுறு - அச்சமுற்ற. மரு ளின் நோக்கின் - மருண்ட நோக்கினையுடைய. நோக்கினையும் கோதை யையும் உடைய தீஞ்சொலார் ; மகளிர். கண்கள்போன்ற வேலை. ஒய் யென - விரைய. கான் - வாசனை. கனைக்கும் - ஒலிக்கின்ற. தாரான் : நந்தட்டன் சேவகன்.

(உரை) [1] மருளின் என்பதிலுள்ளது.

2291. வேல் அழலை விட்டுச் சிந்தி மின்னினைப்போல் நொய்தாகச் செல்ல. அழல்போலும் கண். யாதும் - சிறிதும். ஓச்சும் - வீசுகின்ற. இமைத்திலனுய், எஃகத்தை மாலைபோல மார்பத்தேற்றுக் கானெறியா யினன் ; என்றது கட்டியங்காரன் சேவகனை. கால் நெறியாயினன் - காற்றுச் செல்லும் வழியாகிய சாளரமாயினன்.

கட்டியங்காரன்சேவகன் நந்தட்டன்சேவகனோடு பொருது பட்டான். காற்றுப்போம் வழி சாளரமாம்; "மான்கட் காலதர் மாளிகை யிடங்களும்" (சிலப். 5 : 8) என்றார் பிறரும். (௬௯௦)

2292. கவிமதங் கடந்து காமர் வனப்புவீற் றிருந்த கண்ணார், குவிமுலை நெற்றித் தீந்தேன் கொப்புளித் திட்ட பைந்தார்ச், செவிமதக் கடலங் கேள்விச் சீவகன் கழல்கள் வாழ்த்திச், சவி மதுத் தாம மார்பிற் சலநிதி தாக்கி னானே.

(இ - ள்.) செவ்வித்தேனையுடைய தாமமார்பிற் சலநிதியென்னும் வீரன் புகழுங் [1] கவிஞர்மதத்தைக்கடந்து அழகுவீற்றிருந்த கண்ணாருடைய முலைத் தலையிலே தேனைக் கொப்புளித்த தாரினையும் கேட்டோர் செவிக்குப் பொருந்துவதாகிய கடல்போலுங் கேள்வியினையுமுடைய சீவகன் கழல்களை வாழ்த்திப் போரைத் தொடங்கினானென்க.

இவன் சீவகன் தோழன். (௬௯௧)

2293. (௧) குஞ்சரங் குனிய நூறித் தடாயின குருதி வாடன், நெஞ்சக நுழைந்த வேலைப் பறித்துவான் புண்ணு ணீட்டி, வெஞ் சம நோக்கி நின்று மிறைக்கொளி திருத்து வாற்கண், டஞ்சிமற் றரசர் யானைக் குழாத்தொடு மிரிந்திட் டாரே.

2294. (உ) தோட்டுவண் டொலியன் மாலைத் துடியிடை மகளி ராய்ந்த, மோட்டுவெண் முத்த மின்னு முகிழ்முலை யுழுது சாந் தம், கோட்டுமண் கொண்ட மார்பங் கோதைவாள் குளித்து மூழ் கிக், கோட்டுமண் கொள்ள நின்றான் குருசின்மண் கொள்ள நின்றான்.

---

2292. கவிமதம் கடந்து - கவிஞர் கற்பிக்கின்ற கொள்கையைக் கடந்து; பாகவதம், இரணியனை. 93. காமர் - அழகிய. வனப்பு - பல வுறுப்பும் திரண்டவழித் தோன்றுவதோரழகு. நெற்றி - உச்சி. கொப்புளித்திட்ட - உமிழ்ந்த. கண்ணாரது முலையின் நெற்றியில் கொப்புளித் திட்ட தார். செவி மதக்கடலங் கேள்வி - காதிற்குப் பொருந்திய மிக்க கடல்போலும் கேள்வியினையுடைய. சவிமது - செவ்வியையுடையதேன். மார்பினையுடைய சலநிதி; சீவகன் தோழன்.

(உரை) [1] (பி - ம்.) 'கவிஞர் கருத்தை.'

2293. குஞ்சரத்தைக் குனிய நூறி; குனிய - வீழ. தடாயின - வளைந்த; சீவக. 284. வாளைப் புண்ணுள் நீட்டி; நீட்டி - செருகி. நெஞ்சகம் - மார்பிடத்தை. சமம் - போர். மிறைக்கொளி திருத்துவானைக் கண்டு; மிறை - வளைவு. (பி - ம்.) 'சொளீஇத்திருத்து.' மு : சீவக. 284, அடிக்.

2294. தோட்டு வண்டு - இதழில் வண்டையுடைய எனலுமாம். ஒலியன்மாலை : சீவக. 2700. மாலையையும் இடையையுமுடைய மகளிர்.

இவையிரண்டும் ஒரு தொடர்.

(க) நுழைந்த வேல் - பட்டுருவாத வேல். வெஞ்சமநோக்கிநின்று - யாம் சுவர்க்கமெய்தும்படி வரும் வெஞ்சமம் நமக்கு இனியில்லையென்று கருதி நின்று ; நோக்கி : இது நோக்கனோக்கம்.

(உ) தோடு - தொகுதி. ஒலியல் - ஒலித்தல். ஆய்ந்த - தெரிந்து கோத்த. மகளிர்முலையுழுது சாந்தைத் தலையிலே கொண்ட மார்பு ; சலநிதிமார்பு.

(இ - ள்.) அவன் குஞ்சரங்களை வீழவெட்டி வளைந்தவாளைத் தன் னெஞ்சில் நின்றவேலைப் பறித்து அப்புண்ணிலேசெருகி அவ்வாளின் வளைவுக்கு [1] இளக்கத்தைப் போக்குகின்றவனைக் கண்டு அரசர் கெட்டார் ; கெடுதலின், நமக்கு இனி வெஞ்சமமில்லையென்று கருதி நின்று அக்கருத் தேயாய்த் தன்னுடம்பென்னும் நினைவின்றிக் கை அம்மார்பிற் புண் ணிலே அவ்வாளைப் பலகாலுஞ் செலுத்துதலின், அவ்வாள் முழுகித் தசையைக் குத்தியெடுப்பநின்றவன் சீவகன் மண் பெற நின்றானென்க.

வாள் உருவாதிருத்தலின், தசையைக் குத்தியெடுத்துக் குருதியிலே குளித்துநின்றதென்க. கெட்ட அரசர் மீண்டுவந்து வெட்டினரென் பார்க்கு வாள்குளித்து மூழ்கிற்றென்றல் மரபன்மை யுணர்க. இத்துணை யும் சலநிதி பொருதுநின்றபடி கூறினர். (கக௨ - ௩)

2295. எரிமணிக் குப்பை போல விருளற விளங்கு மேனித், திருமணிச் செம்பொன் மார்பிற் சீவகன் சிலைகை யேந்தி, அரு மணி யரச ராவி யழலம்பிற் கொள்ளை சாற்றி, விரிமணி விளங்கு மான்றேர் விண்டொழ வேறி னானே.

(இ - ள்.) மேனியையும், மார்பினையுமுடைய சீவகன், சிலையை யேந்தி அரசருயிரைத் தன்னம்பினாலே கொள்ளைகொள்ளுந் தன்மை யைத் தன்னெஞ்சிலே அமையப்பண்ணித் தேரை யேறினானென்க.

---

முத்தம் - முத்தமாலை. சாந்தைக் கோட்டில் மண்கொண்ட மார்பம் ; மண்கொண்டமார்பம் ; "அகலம், கோட்டுமண் கொள்ளா முலை" (முத்.) ; நள. சுயம். 102 ; கூர்ம. ஆதவர். 8. கோடு - உச்சி ; மண் கொண்ட - அலங்கரித்தல்கொண்ட. மார்பத்தில் வாள்மூழ்கி. கோட்டு மண் கொள்ள நின்றான் - குத்தியெடுத்தவனை சலநிதி. குருசில் : சீவகன். மண் - தனக்குரிய பூமியை.

(உரை) [1] (பி - ம்.) 'விளக்கத்தை.'

2295. குப்பை - தொகுதி. சிலையைக் கையில் ஏந்தி. அரசர் ஆவியை அழலம்பினாற் கொள்ளை சாற்றி ; சீவக. 2309 ; அழலம்பு - தீயாகிய அம்பு ; சீவக. 2249. கொள்ளை சாற்றி - கொள்ளைகொள்ளும் தன்மையைக்கூறி. விண்தொழும்படி தேரில் ஏறினான் ; விண் : விண் ணிடத்துள்ள தேவர்.

செம்பொன் : [1] ஆகுபெயர். பார்த்துநின்ற விஞ்சையர் தொழ. (கஉசச)

2296. கருவளி முழக்குங் காருங் கனைகட லொலியுங் கூடி, அருவலிச் சிங்க வார்ப்பு மாங்குடன் கூடிற் றென்னச், செருவிளை கழனி மள்ள ரார்ப்பொடு சிவணிச் செம்பொற், புரிவளை முரச மார்ப்பப் போர்த்தொழி றொடங்கி னனே.

(இ - ள்.) பெருங்காற்றின்முழக்கும் காரின்முழக்கும் கடலின்ஒலியும் தம்மிற் கூடப்பட்டு அவ்விடத்தே சிங்கஆர்ப்பும் சேரக்கூடிற்றென்னும்படி செருவிளைகிற கழனியில் வளைமுரசமார்க்கிற ஆர்ப்போடே பொருந்தி வீரரும் ஆராநிற்கப் போர்த்தொழிலைத் தொடங்கினானென்க. (கஉசரு)

2297. அரசர்த முடியும் பூணு மாரமும் வரன்றி யார்க்கும்
முரசமுங் குடையுந் தாரும் பிச்சமுஞ் சுமந்து மாவும்
விரைபரித் தேரு மீர்த்து வேழங்கொண் டொழுகி வெள்ளக்
குரைபுனற் குருதி செல்லக் குமரன்விற் குனிந்த தன்றே.

'அரசர்தம்' என்பதனை எங்குங் கூட்டுக.

(இ - ள்.) வெள்ளமாகிய நீர்போலுங் குருதி, முடி முதலியவற்றை அரித்து முரச முதலியவற்றைச்சுமந்து மாவையும் தேரையுமிழுத்து வேழத்தையும் மெல்லக் கொண்டொழுகி நடக்கும்படி குமரன் வில் வளைந்ததென்க.

இது பொருகின்ற முறைமை கூறிற்று. (கஉசசு)

2298. கேழ்கிள ரெரிகட் பேழ்வாய்க் கிளர்பெரும் பாம்பி னோடும், சூழ்கதிர்க் குழவித் திங்க டுறுவரை வீழ்வ தேபோல், தாழிருந் தடக்கை யோடுந் தடமருப் பிரண்டு மற்று, வீழ்தரப் பரந்த வப்பு நிழலிற்போர் மயங்கி னரே.

(உரை) [1] செம்பொன்னாலாகிய ஆபரணத்திற்காயிற்று.

2296. கருவளி - பெருங்காற்று. வளியின் முழக்கும், காரின் முழக்கும்; கார் - மேகம். அரிய வலியையுடைய. செரு - போர். கழனியில் மள்ளர் ஆர்ப்போடு; கழனி - ஈண்டுப் போர்க்களம். மள்ளர் - வீரர். சிவணி - பொருந்தி. வளையும் முரசமும் ஆர்ப்ப.

2297. வரன்றி - வாரிக்கொண்டு. ஆர்க்கும் - ஒலிக்கின்ற. பிச்சம் - மயிற்பீலி. மா - குதிரை. ஈர்த்து - இழுத்து. வேழத்தைக் கொண்டு. குரைபுனல் - ஒலிக்கின்ற நீர். குமரன் : சீவகன். குனிந்தது - வளைந்தது.

2298. கேழ் கிளர் - நிறம் விளங்குகின்ற. பாம்பு - இராகு வென்னும் பாம்பு. குழவித்திங்கள் - பிறைச்சந்திரன். துறுவரை - பெரிய மலையினின்றும். தடக்கை - வளைந்த துதிக்கை. தடமருப்பு - வளைந்த

(இ - ள்.) அது குனிந்தபொழுது, பெரும்பாம்போடே இரண்டு இளம்பிறை மலையினின்றும் வீழ்ந்தன்மைபோலே கையோடே மருப்பிரண்டுமற்று யானையினின்றும் வீழும்படி பரந்த அம்பினிழலாலே அரசர் மனங்கலங்கிப் போரை அறிந்திலரென்க. (௧௧௭)

2299. ஆடவ ராண்மை தோற்று மணிகிளர் பவழத் திண்கை
நீடெரி நிலைக்கண் ணடிப் போர்க்களத் துடைந்த மைந்தர்
காடெரி கவரக் கல்லென் கவரிமா விரிந்த வண்ணம்
ஓடக்கண் டுருவப் பைந்தா ரரிச்சந்த னுரைக்கின் றனே.

(இ - ள்.) ஆடவராண்மை தோற்றும் நிலைக்கண்ணடியாகிய போர்க்களத்தே நெஞ்சுடைந்த மைந்தர் காட்டை எரி கவரக் கவரிமா ஓடினாற்போல ஓடக்கண்டு கட்டியங்காரனமைச்சனாகிய அரிச்சந்தன் ஒருமொழி கூறுநின்றானென்க.

கண்ணடியில் அழகும் அழகின்மையும் தோன்றுமாறுபோலக் களத்திலும் ஆண்மையும் ஆண்மையின்மையுந் தோன்றலின், அதனை உவமித்தார். மிக்க வீரரன்மையின், கவரிமா உவமமாயிற்று. (௧௧௮)

2300. மஞ்சிவர் மின்ன னார்தம் வாலரிச் சிலம்பு சூழ்ந்து
பஞ்சிகொண் டெழுதப் பட்ட சீறடிப் பாய்த லுண்ட
குஞ்சியங் குமரர் தங்கண் மறம்பிறர் கவர்ந்து கொள்ள
அஞ்சியிட் டோடிப் போகி னண்மையார் கண்ண தம்மா.

(இ - ள்.) அவன், இதனைக் கேட்பீராக : மைந்தீர்! மகளிருடைய சீறடியாலே பாய்தலுண்ட குஞ்சியையுடைய குமரர் தம் வீரத்தைப் பிறர்கொள்ள ஓடுவராயின், இனி ஆண்மை யாரிடத்ததென்றானென்க.

சிலம்புசூழப்பட்டு எழுதின அடி. நீர் மகளிரிடத்தன்றிப் போரிலும் ஆடவராக வேண்டுமென்றான். குமரர் : முன்னிலைப்படர்க்கை. கேட்

---

தந்தம். மருப்பிற்குப் பிறையும், துதிக்கைக்குப் பாம்பும் உவமைகள். வீழ்தர - வீழும்படி. அப்புநிழலின் - சீவகனுடைய அம்பின் நிழலாலே.

2299. ஆண்மை - வீரம். வீரம் தோற்றுகின்ற நிலைக்கண்ணடியாகிய போர்க்களத்தில். உடைந்த மைந்தர் - தோற்றுப்போன வீரர். காட்டை எரிகவரக் கவரிமா இரிந்த வண்ணம் ; கல்லென்னும் ஒலியையுடைய கவரிமா. மைந்தர், கவரிமா இரிந்தவண்ணம் ஓடக்கண்டு. உருவம் - அழகு.

2300. மஞ்சு - மேகம். மின்னனார் - மகளிர். மின்னனாருடைய சீறடியாற் பாய்தலுண்ட குஞ்சியையுடைய குமரர். மறம் - வீரத்தை. அஞ்சியிட்டு - பயந்து; ஒருசொல். ஆண்மை யார்கண்ணது - வீரம் யாரிடத்தது. (பி - ம்.) 'ஆண்மையார்க் கான தம்மா.'

பிக்கு மிடத்தே வருகின்ற அம்மவென்னுமசைச்சொல், "உரைப்பொருட் கிளவி நீட்டமும் வரையார்" (தொல். உயிர்மயங்கு. 10) என்றதனால், அம்மாவென நீண்டு, அது, "விளியொடு கொள்ப" (தொல். விளி மரபு, 36) என்றதனால், அம்மாமைந்தீரெனநின்றது; முற்கூறிய மைந் தரை விளித்தானும்; "அம்ம வாழி கேளிர்" (அகநா. 130) என்றாற் போல ஈண்டும் பன்மை யுணர்த்திற்று. (௧௯௯)

2301. உழையின முச்சிக் கோடு கலங்குத லுற்ற போதே
விழைவற விதிர்த்து வீசி விட்டெறிந் திடுவ தொப்பக்
கழலவ ருள்ள மஞ்சிக் கலங்குமே லதனை வல்லே
மழைமினி னீக்கி யிட்டு வன்கண்ண ராப வன்றே.

உழையினம், கழலவர் : எழுவாய். இட்டு - போகட்டு.

(இ - ள்.) வீரர் தம்முள்ளம் உடம்பின்மேல் வேட்கையாலே அதனைக் கைவிடுதலஞ்சிக் கலங்குமேல், உழைமான் தலையிற் கோடு கழ லுங்காலத்து அதன்மேல் வேட்கையால் மனம் கலங்குதலுற்ற பொழுதே அதனிடத்திலே வேட்கையறும்படி விட்டு அதனை அசைத்து வீசிப் போகடுந்தன்மையை யொப்ப, அவர் அவ்வுடம்பின்மேலே வேட்கையை வல்லே நீக்கி மின்போல் தோன்றின வாய் தெரியாமல் மறைத்திட்டு வன்கண்ணராவர்; அது நுமக்கு வேண்டுமென்றானென்க. (௨௦௦)

2302. தற்புறந் தந்து வைத்த தலைமகற் குதவி வீந்தாற்
கற்பக மாலை சூட்டிக் கடியர மகளிர்த் தோய்வர்
பொற்றசொன் மாலை சூட்டிப் புலவர்கள் புகழக் கன்மேல்
நிற்பர்தம் வீரந் தோன்ற நெடும்புகழ் பரப்பி யென்றான்.

2301. உழையினம் - மான்கூட்டம். கோடு - கொம்பு. கோடு கழல்வதனால் கலங்குதலுற்ற போது. விழைவு - விருப்பம். விதிர்த்து - உடம்பு நடுங்கி. (பி - ம்.) 'விட்டெறிந் திட்ட தொப்ப.' கழலவர் - வீரர். அதனை - அக்கலக்கத்தை. மழையிடத்து மின்னைப்போல் நீக்கியிட்டு. இட்டு - போகச்செய்து. வன்கண்ணராப - தறுகண்மையுடையராவர். அன்று, ஏ : அசைகள். (பி - ம்.) 'ஆவ ரன்றே.'

2302. தற்புறந்தந்து - தன்னைப் பாதுகாத்து. தலைமகற்கு - தலை வனுக்கு. வீந்தால் - இறந்தால். அரமகளிரைத் தோய்வர். பொற்ற - பொலிவு பெற்ற. புலவர் சொன்மாலையைச் சூட்டிப்புகழ; "நாப்புலவர் சொன்மாலை" (பு - வெ. 31). கல்மேல் நிற்பர் - வீரக்கல்லின்மீது நிற்பர்; அஃதாவது, போரில் இறந்த வீரன்பொருட்டு அவனுடைய உற்றார் முதலியோரால் அவன் பெயரும் பெருமையும் எழுதப்பட்டுத் தெய்வமாகப் பாவித்து வழிபடப்பெற்ற கல்; "செல்லா நல்லிசைப் பெயரொடு நட்ட, கல்லேசு கவலை யெண்ணுமிகப் பலவே" (மலைபடு.

(இ - ள்.) வீரர்தாம், தம்மைப் பாதுகாத்து இவர் இடுக்கண் வந்தால் உதவுவரென்று வைத்த தம் தலைவற்கு அங்ஙனமுதவி வீரந் தோன்றப் புகழ்பரப்பி வீந்தால் அவர்தாம் சுவர்க்கத்தே சென்று அர மகளிரைக் கூடுவர் ; அதுவேயன்றி இவ்விடத்தே புலவர் சொன்மாலை யைச் சூட்டிப் புகழுக் கன்மேல் நிற்பர் ; ஆதலால் நமக்கும் இவை எய்தலாமென்றானென்க. (உoக)

2303. பச்சிரும் பெஃகிட் டாங்குப் படையைக்கூர்ப் பிடுத லோடும், கச்சையுங் கழலும் வீக்கிக் காஞ்சனத் தளிவம் வாய்க் கிட், டச்சுற முழங்கி யாரா வண்ணலங் குமரன் கையுள், நச்செயிற் றம்பு தின்ன நாளிரை யாக லுற்றார்.

(இ - ள்.) உருகின இரும்பிலே எஃகு வைத்தாற் போலப் படையை அவன் அங்ஙனம் கூர்மையிட்ட அளவிலே அவர் வீக்கி இட்டு முழங்கி ஆர்த்துச் சீவகன் கையிலம்புண்ணத் தமது நாள் அதற்கு இரையாதலை யுற்றாரென்க.

[1] பொற்றளிவம் - பொற்சின்னம். அம் : அசை. (உoஉ)

2304. வடதிசை யெழுந்த மேகம் வலனுராய் மின்னுச் சூடிக், குடதிசைச் சேர்ந்து மாரி குளிறுபு சொரிவ தேபோற், படர் கதிர்ப் பைம்பொற் றிண்டேர் பாங்குற விமைப்பி னூர்ந்தான், அடர்சிலை யப்பு மாரி தாரைநின் றிட்ட தன்றே.

(இ - ள்.) அவர் அங்ஙனம் வருதலின், சீவகன் தேரை அழகுபெற ஏறினான் ; அப்பொழுது அப்புமாரி, தாரைமாரி சொரியுந் தன்மைபோல் மாறாது நின்றதென்க.

388-9) ; "ஆடவர், பெயரும் பீடு மெழுதி யதர்தொறும், பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்" (அகநா. 131 - 9-11) ; "நல்லிசை சூடி, நடுக லாயினன் புரவல னெனவே" (புறநா. 221 : 12-3) ; பு-வெ. 176, 248-52.

2303. பச்சிரும்பு - உருகிய இரும்பிலே. கூர்ப்பிடுதலோடும் - கூர்மையிட்டவளவிலே. கச்சை - அரையிற் கட்டுவது. காஞ்சனத் தளிவம் வாய்க்கிட்டு - பொன்னாலாகிய சின்னத்தை வாயுள் இட்டு : சீவக. 778, அடிக். ஆரா - ஆர்த்து. குமரன் கையுள் அம்பு தின்ன ; குமரன் : சீவகன். தமது வாழ்நாள் இரையாகலுற்றார்.

(உரை) [1](பி - ம்.) 'பொற்றெளிவம்.'

2304. வலன் உராய் - வலமாக உலாவி. மின்னுச்சூடிக் குளிறுபு மாரியைச் சொரிவதே போல் ; குளிறுபு - முழங்கி. தேரில் ஊர்ந்தான் அப்புமாரி தாரைபோல் நின்றிட்டது ; அப்புமாரி - அம்புமழை. தாரை - இடையறாத மழைக்கால்.

வடதிசை யெழுந்த மேகம் வலமாகச் சென்று குடதிசையிற் சேர்ந்து மின்னைச் சூடி முழங்கி மாரியைச் சொரிவது போலென்க. (உ0௩)

2305. அற்றுவீழ் தலைகள் யானை யுடலின்மே லழுந்தி நின்ற
பொற்றதிண் சரத்திற் கோத்த பொருசரந் தாள்க ளாகத்
தெற்றிமேற் பூத்த செந்தா மரைமலர் போன்ற செங்கண்
மற்றத்தா துரிஞ்சி யுண்ணும் வண்டின மொத்த வன்றே.

(இ - ள்.) அவ்வம்பால் அற்று வீழ்கின்ற தலைகள் பட்ட யானைகளின் மேல் நின்ற பொலிவையுடைய சரங்களிற் கோத்தவை, அவ்வம்பு தாள்களாகத் திண்ணைகளிலே பூத்த செந்தாமரைமலரை ஒத்தன; அவற்றின் கண்கள் அப்பூவின் வண்டினத்தை ஒத்தனவென்க.

[1] ஏவன்மையிற் சரத்திற் கோக்க எய்தான். (உ0௪)

(வேறு)

2306. திங்க ளோடுடன் குன்றெலாந் துளங்கி மாநிலஞ் சேர்வ போற், சங்க மத்தகத் தலமரத் தரணி மேற்களி றழியவும், பொங்கு மாநிரை புரளவும் பொலங்கொ டேர்பல முறியவும், சிங்கம் போற்றொழித் தார்த்தவன் சிறுவர் தேர்மிசைத் தோன்றினர்.

(இ - ள்.) அதனைக் கண்டு கட்டியங்காரன் புதல்வர், சிங்கம் போலே கோபித்து ஆர்த்து அழியவும் புரளவும் முறியவும் தோன்றினரென்க.

சீவகன் படை இங்ஙனம் பட அவர் தோன்றினரென்க. திங்களோடே குன்றுகளெல்லாம் சேர வீழ்ந்தாற்போலே சங்குகள் மத்தகத்தே யசையக் களிறுகள் வீழ்ந்தன. (உ0௫)

2305. தலைகள், சரத்திற் கோத்தன. சரம் தாள்களாக - அம்புகளே தாமரைத் தண்டுகளாக. தெற்றிமேல் - திண்ணையின்மீது. கோத்தவை, மலர்போன்றன. மற்று: அசை. அத்தாது - அந்தத் தாமரையிலுள்ள பூந்தாதை. செங்கண், வண்டினம் ஒத்தன. தலைகளுக்குத் தாமரையும், யானைகளுக்குத் திண்ணையும், அம்புகளுக்குத் தாமரைத்தண்டுகளும், கண்களுக்கு வண்டுகளும் உவமைகள்.

(உரை) [1] ஏவன்மை - விற்றொழில் வன்மை.

2306. துளங்கி - அசைந்து. சங்கம் மத்தகத்து அலமர - சங்குகள் யானையின் மத்தகத்தே அசைய. யானைக்கு மலையும், சங்குகளுக்குத் திங்களும் உவமைகள். மா நிரை - குதிரைக் கூட்டங்கள். தொழித்து - கோபித்து; சீவக. 2337, ந. அவன் சிறுவர் - கட்டியங்காரனுடைய மைந்தர்கள்.

2307. சந்த னஞ்சொரி தண்கதிர்த் திங்க ளந்தொகை தாம்பல, குங்கு மக்கதிர்க் குழவியஞ் செல்வ னோடுடன் பொருவபோல், மங்குன் மின்னென வள்ளறேர் மைந்தர் தேரொடு மயங்கலின், வெங்கண் வில்லுமிழ் வெஞ்சர மிடைந்து வெங்கதிர் மறைந்ததே.

(இ - ள்.) குங்குமம்போலுங் கதிரையுடைய இளஞாயிற்றோடே சந்தனம் போலும் தண்கதிரைச் சொரிகிற பலதிங்களந் தொகைதாம் சேரப் பொருவன போலே வள்ளல் தேரோடே மைந்தர் தேரும் மயங்கு தலின், சரம் மிடைதலாலே கதிர் மறைந்ததென்க. (உ௦௬)

2308. குருதி வாளொளி யரவினுற் கொள்ளப் பட்டவெண் டிங்கள்போற், றிருவ நீர்த்திகழ் வலம்புரி வாய்வைத் தாங்கவன் றெழித்தலும், பொருவில் கீழ்வளி முழக்கினுற் பூமி மேற்சன நடுங்கிற்றே, அரவ வெஞ்சிலை வளைந்ததே யண்ணல் கண்ணழ லுமிழ்ந்ததே.

(இ - ள்.) அவன் குருதிபோலும் மிக்க ஒளியையுடைய செம்பாம் பாலே கொள்ளப்பட்ட திங்கள்போலக் கையாலே வலம்புரியைப் பிடித்து வாயிடத்தே வைத்து முழக்கின அளவிலே, கீழ்நோக்கி யெழுந்த ஒப் பில்லாத காற்றின் முழக்காலே சனம் நடுங்கிற்று ; அப்பொழுது வில்லும் வளைந்தது ; கண்ணும் அழலை உமிழ்ந்ததென்க.

திருவ ; அ : அசை ; திருத் திகழ்ந்த அக்கடலுமாம். (உ௦௭)

2309. கங்கை மாக்கடற் பாய்வதே போன்று காளைதன் கார்முகம், மைந்த ரார்த்தவர் வாயெலா நிறைய வெஞ்சரங் கான்றபின், நெஞ்சம் போழ்ந்தழ லம்புண நீங்கி னுருயிர் நீண்முழைச், சிங்க வேறுகள் கிடந்தபோற் சிறுவர் தேர்மிசைத் துஞ்சினர்.

---

2307. சந்தனம் போலும் தண்ணிய கதிரைச் சொரிகின்ற பல திங்களந் தொகை, கட்டியங்காரனுடைய மைந்தர்க்கு உவமை; திங்களந் தொகை - சந்திரர் பலரின் கூட்டம். குங்குமம் போலும் கதிரையுடைய குழவியஞ் செல்வன் சீவகனுக்கு உவமை ; குழவியஞ் செல்வன் - பால சூரியன். மங்குல் - மேகம். வள்ளலின் தேரோடு மைந்தர் தேர்மயங் கலின் ; வள்ளல் - சீவகன். மைந்தர் - கட்டியங்காரன் புதல்வர். வில் லுமிழ்ந்த சரம். மிடைந்து - நெருங்குதலால். கதிர் - சூரியன்.

2308. குருதிதோய்ந்த வாள்போலும் ஒளியையுடைய அரவு எனலு மாம். வலம்புரி - சங்கத்தை. அவன் - சீவகன். தெழித்தலும் - முழக்குதலும், சங்கத்திற்குத் திங்களும், கைக்குப் பாம்பும் உவமைகள். கைக்குப் பாம்பு : சீவக. 2468. கீழ்நோக்கி யெழுந்த பொருவில்லாத முழக்கினுல். அரவம் - பாம்பு. வில்லுக்குப் பாம்பு உவமை : சீவக. 1850, அடிக். அண்ணலது கண் அழலை உமிழ்ந்தது ; அண்ணல் : சீவகன்.

2309. கங்கை கடலில் பாய்வதைப் போன்று. (பி - ம்.) ‘கங்கை மால்.’ காளை தன் கார்முகம் - சீவகனுடைய வில் ; எழுவாய். மைந்த

(இ - ள்.) சீவகன் வில், கங்கை கடலிலே ஆயிரமுகமாகப் பாயுந் தன்மையை யொத்து மைந்தர் ஆர்த்தவர் வாயெல்லாம் நிறையும்படி அம்பைக் கான்றபின்பு சில அம்புகள் அவர் நெஞ்சைப் பிளந்து உயிரை யுண்டலின், உயிர் நீங்கப்பட்டாராய் முழைகளிலே சிங்கவேறு கிடந்தாற் போலே சிறுவர் தேர்மிசையிலே பட்டுக் கிடந்தாரென்க.

நீங்கினர் : வினையெச்சமுற்று. இத்துணையும், கட்டியங்காரற்கு உதவியான அரசருடனும், அவன் படைத்தலைவருடனும், [1] அவன் புதல்வர் அணிவகுத்து வந்தவருடனும் சீவகன் பொருதபடி கூறினர். (உ0அ)

2310. நிவந்த வெண்குடை வீழவும் வேந்தர் நீள்விசும்
பேறவும், உவந்து பேய்க்கணை மாடவு மோரி கொள்ளை
கொண் டுண்ணவும், கவந்த மெங்கணு மாடவுங் களிறு மாவொடு
கவிழவும், சிவந்த சீவக சாமிகண் புருவ மும்முரி முரிந்தவே.

இதுமுதலாகத் தனியே பதுமவியூகம் வகுத்துநின்ற கட்டியங்கார னுடன் சீவகன் பொருகின்றமை கூறுகின்றார்.

(இ - ள்.) குடை வீழவும், அவனைச் சூழ்ந்த வேந்தர் விசும்பேறவும், ஆடவும், உண்ணவும், குறைத்தலை எங்குமாடவும், களிறும் மாவும் கவிழவும் சீவகசாமி கண்கள் சிவந்தன ; அவற்றிற்கு உதவியாகப் புருவ மும் முரிதலைச் செய்தவென்க.

எச்சங்கள் எதிர்காலம் நோக்கின. குறையாகிய தலையையுடை யதனைக் குறைத்தலையென்றது ஆகுபெயர். அவன் படைவகுப்பைக் கண்டு சீவகற்குக் கோபம் நிகழ்ந்தமை கூறினர். 'முரிமுரிந்த' என்பதனை, "அணியலுமணிந்தன்று" (புறநா. 1) என்றாற் போலக் கொள்க. (உ0கூ)

---

ராகிய ஆர்த்தவருடைய வாயெல்லாம் நிறையும்படி. ஆர்த்த வாய் நிறைய அம்பெய்தல் ; சீவக. 2286. அம்பின் செலவிற்குக் கங்கையின் பரந்த செலவும், மைந்தர் வாய்க்குக் கடலும் உவமைகள். வில் கான்ற பின். அழலம்பு நெஞ்சத்தைப் போழ்ந்து உண்ணுதலால் உயிர் நீங்கினர் ; அழலம்பு : சீவக. 2295. (பி - ம்.) 'நெஞ்சம் பொங்கழல்.' முழையில் சிங்கவேறுகள் கிடந்தாற்போல். சிறுவர் - கட்டியங்காரன் புதல்வர். துஞ்சினர் - இறந்தார்.

(உரை) [1] (பி - ம்.) 'அவனுடனும் அவன் புதல்வரதனியை வகுத்து.'

2310. நிவந்த - உயர்ந்த. உவந்து ஆடவும். ஓரி - கிழநரி. கவந்தம் - தலையற்ற உடல். மா - குதிரை. சீவகசாமியின் கண்கள் சிவந்தன. முரிமுரிந்த - வளைதலைச் செய்தன.

2311. பொய்கை போர்க்களம் புறவிதழ் புலவு வாட்
படை புல்லிதழ், ஐய கொல்களி றகவித ழரச ரல்லிதன் மக்களா,
மையில் கொட்டையம் மன்னனு மலர்ந்த தாமரை வரிசையாற்,
பைய வுண்டபின் கொட்டைமேற் பவித்தி ரத்தும்பி பறந்ததே.

(இ - ள்.) அங்ஙனங்கோபித்து, பொய்கை போர்க்களமாக புற விதழ் வாட்படையாக, அதற்குள்ளிற் புல்லிய இதழ் களிருக, உள்ளிற் சிறியவிதழ் அரசராக, அல்லி தன்பிள்ளைகளாக, கொட்டை தாருகை மலர்ந்ததொரு பதும வியூகத்தை முறையாலே மெல்லக் கொன்றபின்பு அக்கொட்டைமேலே தும்பி பறந்ததென்க.

குலனுங்குணனுமுதலியன தூயனென்பது தோன்ற, 'பவித்திரத் தும்பி' என்றார். (உ௧௦)

(வேறு)

2312. கலைமுத்தங் கொள்ளு மல்குற் கார்மழை மின்ன னார்தம்,
முலைமுத்தங் கொள்ளச் சாந்த மழிந்துதார் முருகு விம்மும்,
மலைமுத்தங் கொள்ளு மார்பின் மன்னனுங் கண்டு காய்ந்தான்,
சிலைமுத்தங் கொள்ளுந் திண்டோட் செம்மலுந் தீயிற் சேந்தான்.

(இ - ள்.) மேகலை பொருந்துதலைக்கொள்ளும் அல்குலையுடைய மகளிர் தம்முலைகள் புல்லுதலிற் சாந்தமழிந்து தாரிற்றேன் விம்மும் மார்பினையுடைய மன்னனும் சீவகனைக்கண்டு காய்ந்தான்; விற்பொருந் தும் தோளினையுடைய சீவகனும் அவனைக் கண்டு தீப்போலக் கோபித் தானென்க.

மலையை உவமிக்கப் பொருந்தும் மார்பு. (உ௧௧)

---

2311. போர்க்களம் முதலியன முறையே பொய்கை முதலியன வாக உருவகம் செய்யப்பட்டன. ஐய - வியக்கத்தக்க. மை இல் - குற்ற மில்லாத. மன்னனு - கட்டியங்காரனுகை. மலர்ந்த தாமரை - மலர்ந்த தொரு பதுமவியூகத்தை. வரிசையால் - முறைமையால். பைய உண்ட பின் - மெல்லக் கொன்றபின்பு. கொட்டைமேல் : கட்டியங்காரன்மீது. பவித்திரத்தும்பி - பரிசுத்தமான சீவகனுகிய வண்டு; சீவக. 1169, அடிக். தாமரையென்றதற் கேற்பத் தும்பி என்றார். தாமரையின் இதழ் வகை இதிற் கூறப்பட்டிருத்தல் போல, பின்குறிப்பிட்டுள்ள இடங்களி லும் ஒருவகையாகக் கூறப்பட்டுள்ளது; பெரும்பாண். 402-5; பரி. திரட்டு. 7 ; பெருங். 3. 3 : 50-109.

2312. கார்மழை - கரிய மேகத்திடத்து. முலை முத்தம்கொள்ள - முலைகள் புல்லுதலைச் செய்தலால். தார்முருகு - மாலையிலுள்ள தேன்; முருகு - வாசனை எனலுமாம். மலைமுத்தம் கொள்ளும் மார்பின்-மலையை ஒப்பிடப் பொருந்துதலைக் கொண்ட மார்பினையுடைய. மன்னன் : கட்டி

2313. தன்மதந் திவண்ட வண்டு தங்கிய காட்டுள் வேழம், பின்மதஞ் செறித்திட் டஞ்சிப் பிடிமறந் திரிந்து போகும், வென் மதக் களிற்று வெய்ய வசனிவே கத்தின் மேலான், மின்னுமிழ் மாலை வேந்தன் வீரற்கு விளம்பி னானே.

(இ - ள்.) தன்மதத்திலே [1] திளைத்த தேனினம்போய்த் தங்கிய காட்டிலே வேழங்கள் அவற்றின் நாற்றத்தாலே அஞ்சி மதஞ் [2] செறித்துப் பிடியை மறந்து கெட்டுப்போதற்குக் காரணமான களிறாகிய அசனி வேகத்தின் மேலானாகிய வேந்தன் சீவகனுக்கு ஒருமொழி கூறினா னென்க.

இதனால், யானையின் வலி கூறினார். (உகஉ)

2314. நல்வினை யுடைய நீரார் நஞ்சுணி னமுத மாகும், இல்லையே லமுது நஞ்சா மின்னதால் வினையி னாக்கம், கொல் வல்யா னிவனை யென்று மிவன்கொல்லு மென்னை யென்றும், அல்லன நினைத்தல் செல்லா ரறிவினாற் பெரிய நீரார்.

---

யங்காரன். காய்ந்தான் - கோபித்தான். சிலைமுத்தம் கொள்ளும் திண் டோட் செம்மல் - வில்பொருந்துதலைக்கொண்ட வலிய தோளையுடைய சீவகன்; "சிலைமுத்தங் கொண்ட திண்டோட் டேவகன்" (கூர்ம. கண். அவ. 1)

2313. மதத்திலே திவண்ட வண்டு; திவண்ட - மூழ்கிய. அஞ்சி, மதம் செறித்திட்டுப் பிடியை மறந்து இரிந்துபோகும்: அஞ்சி - மதத்தின் நாற்றத்திற்குப் பயந்து. செறித்திட்டு - மிக்கு; ஒரு சொல். இரிந்துபோதற்குக் காரணமான களிறாகிய அசனிவேகம்; இவ்யானை கட்டியங்காரனுடைய பட்டத்துயானை. மின் - ஒளி. மேலானாகிய வேந்தன்: கட்டியங்காரன். வீரற்கு: சீவகனுக்கு.

(உரை) (பி - ம்.) [1] 'துதைந்த.' [2] 'செறிந்து.'

2314. நீரார் - தன்மையார். நஞ்சு உணின் அமுதமாகும் - தாம் விடத்தையுண்டாலும் அது அமுதம்போலாகும். இல்லையேல் - நல் வினை இலரானால். உண்டது அமுதானாலும் நஞ்சுபோலாகும். வினையின் ஆக்கம் இன்னதால். அடி, 1-2: "அஞ்சுதரு தீவினையி னாரமுது நஞ்சாம், நஞ்சமமு தாமுரிய நல்வினையின் மாதோ" (வி - பா. சம்பவ. 100). அறிவினாற் பெரிய நீரார், யான் இவனைக் கொல்வல் என்றும், இவன் என்னைக் கொல்லுமென்றும் அல்லன நினைத்தல் செய்யார்; அல்லன - தம் காரியமல்லனவற்றை. நினைத்தல் செல்லார் - நினையார்; "இமைத்தல் செல்லான்" (சீவக. 2506) என்பதுபோல.

(இ - ள்.) நல்வினையுடையார் பகைவரிட்ட நஞ்சையுண்டால் அதுவும் கொல்லாது; அந்நல்வினையின்றேல் தானழியாதிருத்தற்கு உண்ட அமிர்தும் கொல்லும்; இருவினையினுக்கம் இத்தன்மைத்தாயிருந்தது; ஆதலின், அறிவுடையார், யான் இவனைக்கொல்வேனென்றும் இவன் என்னைக்கொல்வனென்றும் பொருளல்லன நினையார்; ஆதலின், இது நின் செயலென்று கருத வேண்டாவென்றானென்க.

என்றது: தன்சிறையை [1] அவன் தெய்வத்தால் நீங்கின தன்மையையும், [2] தனக்கு அரணாகவிட்ட வியூகம் பட்ட தன்மையையும் காட்டியபடி. (உகங)

2315. அகப்படு பொறியி னுரை யாக்குவா ரியாவ ரம்மா
மிகப்படு பொறியி னுரை வெறியராச் செய்ய லாமோ
நகைக்கதிர் மதியம் வெய்தா நடுங்கச்சுட் டிடுத லுண்டே
பகைக்கதிர்ப் பருதி சந்து மாலியும் பயத்த லுண்டே.

(இ - ள்.) நீ கேளாய்: நின்கையிலே அகப்படுதற்குக் காரணமான தீவினையுடையாரை ஆக்குவார் யாரென்று தன்புதல்வர் பட்டமைகருதிக் கூறினான். ஆதற்குவேண்டும் நல்வினையுடையாரை வெறுவியராக்கலாமோவென்று அவர்கள் நூற்றுவராலும் நின்னைக் கொல்லக்கூடாதாயிற்றேயென்று கூறினான். இங்ஙனம் என் புதல்வர் நின் கையாலே படுதலின், இனி ஞாயிறும் தன் தன்மைதிரிந்து தட்பமுடைத்தாதலும் உலகிலேயுண்டாம். நீ அவரைக் கோறலின், மதியம் [1] தன் தன்மை திரிந்து வெவ்விதாதலும் உலகிலுண்டாமென்று அவரை வியந்து கூறினானென்க.

ஏகாரங்கள்: தேற்றம். பகை - மதிக்குப் பகை. (உகச)

2316. புரிமுத்த மாலைப் பொற்கோல் விளக்கினுட் பெய்த நெய்யும், திரியுஞ்சென் றற்ற போழ்தே திருச்சுடர் தேம்பி னல்லால், எரிமொய்த்துப் பெருக லுண்டோ விருவினை சென்று தேய்ந்தாற், பரிவுற்றுக் கெடாமற் செல்வம் பற்றியா ரதனை வைப்பார்.

---

(உரை) [1] அவன்: சீவகன். [2] தனக்கு என்றது கட்டியங்காரனை.

2315. அகப்படுதற்குக் காரணமான பொறியினுரை; பொறி - ஈண்டுத் தீவினை. ஆக்குவார் - உண்டாக்குவார். மிகப்படு பொறியினுரை - மிகுதியாக உண்டான நல்வினை உடையவரை. வெறியரா - நல்வினையில்லாதவராக. மதியம் வெய்தாகச் சுட்டிடுதல் உண்டே; "வாய்மையிற் பொய்தோன்றிற், றிங்களுட் டீத்தோன்றி யற்று" (கலித். 41 : 23-4). பருதி சந்தையும் ஆலியையும் பயத்தலுண்டே; சந்து - சந்தனம்; ஆலி - ஆலங்கட்டி.

(உரை) [1] (பி - ம்.) 'தன்றண்மை.'

2316. பொற்கோல் விளக்கு - பொன்னாலாகிய தண்டையுடைய விளக்கு. அற்ற போழ்தே - கெட்ட போதே. சுடர் - பிழம்பு. தேம்பினல்

புரி - வடம். கோல் - தண்டு.

(இ - ள்.) நெய்யும் திரியும் மாண்ட பொழுதே அழகிய விளக்கு அவிதலன்றி நெருப்புச்செறிந்து மிகுதலுண்டோ? அதுபோலப் பெரிய நல்வினை மாண்டாற் செல்வம் கெடாதபடி அதனைப் பிடித்து வைப்பார் யாவருமில்லை; ஆதலின், இது நின்செயலன்று காணென்றானென்க.

முன்னே, "மொய்யமர் பலவும் வென்றான்" (சீவக. 205), தன் புதல்வர் சூழக் கிடக்கின்றமை கண்டும் செற்றம் மிக்கு மேற்செல்லாது இங்ஙனம் கூறினான், [1] அரசகுலமன்மையின். (உகரு)

2317. நல்லொளிப் பவளச் செவ்வாய் நன்மணி யெயிறு கோலி
வில்லிட நக்கு வீர னஞ்சினை யென்ன வேந்தன்
வெல்வது விதியி னாகும் வேல்வரி னிமைப்பே னாயிற் [றான்.
சொல்லிநீ நகவும் பெற்றாய் தோன்றறன்மற் றென்னை யென்

(இ - ள்.) சீவகன் அதுகேட்டு, இவன் இங்ஙனம் குறைந்தே நிற்பனாயின், கோறல் அரிதென்று கருதி, அவற்குச் செற்றமிகும்படி பெருகச்சிரித்து, நீ அஞ்சினாய்காணென்ன, வேந்தன் கூறுவான்: வெல்லுந்தன்மை விதியாலுண்டாம்; அது யான் கூறேன்; தோன்றால்! நின்கையில் வேல்வந்தால் இமைப்பேனாயின், ஈண்டு என்னைக்கூறிய அஞ்சினாயென்ற சொல்லை ஆண்டுக் கூறி நீ சிரிக்கவுங்கடவை என்றானென்க.

பெற்றாய்: காலமயக்கம். (உகசு)

---

லால் - கெட்டாலல்லாமல். எரிமொய்த்து - தீச்செறிந்து. அடி, 1-3: "விளக்குநெய், தேய்விடத்துச் சென்றிருள் பாய்ந்தாங்கு நல்வினை, தீர் விடத்து நிற்குமாந் தீது" (நாலடி. 51); "புண்ணிய நறுநெயிற் பொருவில் காலமாம், திண்ணிய திரியினில் விதியென் றீயினில், எண் ணிய விளக்கவை யிரண்டு மெஞ்சினால், அண்ணலே யவிவதற் கையம் யாவதோ" (கம்ப. கிளைகண்டு. 75). இருவினை - பெரிய நல்வினை. செல்வம் கொடாமல் அதனைப்பற்றி வைப்பார் யார்?

(உரை) [1] அரசகுலமன்மையினென்றது கட்டியங்காரன் அரசகுலத் தானல்லாமையைக் குறித்தது.

2317. மணி எயிறு - முத்துப்போலும் பற்கள். கோலி வில்லிட - வரிசையாக ஒளிவிடும்படி. வீரன் நக்கு: வீரன் - சீவகன்; நக்கு - பெருகச் சிரித்து. என்ன - என்றுகூற. வேந்தன் - கட்டியங்காரன். உன்வேல் என்மேல் வரின். நீ என்னை அஞ்சினாயென்ற சொல்லைச் சொல்லி. நகவும் பெற்றாய் - சிரிக்கவும் பெறுவை. தோன்றல் - சீவகன்; விளி.

2318. (க) பஞ்சிமெல் லடியி னூர்தம் பாடகந் திருத்திச் சேந்து, நெஞ்சுநொந் தழுத கண்ணீர் துடைத்தலி னிறைந்த கோல, அஞ்சனக் கலுழி யஞ்சே றுடிய கடக வண்கை, வெஞ்சிலை கொண்டு வெய்ய வுருமென முழங்கிச் சொன்னான்.

(வேறு)

2319. (உ) இல்லாளை யஞ்சி விருந்தின்முகங் கொன்ற நெஞ்சிற், புல்லாள னாக மறந்தோற்பி னெனப்பு கைந்து, வில்வா ளழுவம் பிளந்திட்டு வெகுண்டு நோக்கிக், கொல்யானை யுந்திக் குடைமேலுமொர் கோறொ டுத்தான்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) திருத்திச் சிவந்து கண்ணீர் துடைத்தலின் அஞ்சனமாகிய கலக்கத்தையுடைய சேற்றையாடிய நிறைந்த கோலத்தையுடைய கை.

(உ) அழுவம் - பரப்பு.

(இ - ள்.) அங்ஙனம் கூறிக் கையிலே வில்லையெடுத்து உருமென முழங்கி, மறம் தோற்றேனாயின், மனையாளையஞ்சி விருந்தின்முகத்தை மகிழ்ச்சிசெய்யாதுவிட்ட புல்லாளனாகக்கடவேனென்று வஞ்சினஞ் சொன்னான்; சொல்லிப் புகைந்து பிளந்து நோக்கி உந்திச் சச்சந்தனைக் கொன்ற தவற்றின் [1]மேலே சீவகனையுங் கொல்லக் கருதி ஓரம்பைத் தொடுத்தானென்க.

சச்சந்தனைக்கொன்று குடை கவித்தலின், குடையிட்டுநிற்பதன் மேலுமெனவே அவனைக்கொன்றமை கூறிற்றாம். இனி, ' மேலும் வழங்கினனே ' என்று பாடமோதி, சீவகனெய்தமை பொறுது கட்டியங் காரன் அம்புதொடுத்தானென்பாருமுளர். • (உகஎ - அ)

---

2318. பாடகம் - மகளிர் காலில் அணிவது. அஞ்சனக் கலுழியஞ் சேறு - மையாகிய கலங்குதலையுடைய சேற்றை. ஆடிய நிறைந்த கோலத்தையுடைய கை. கையிற் சிலையைக் கொண்டு. உரும் - இடி.

2319. மறம் தோற்பின், இல்லாளை அஞ்சி விருந்தின் முகத்தைக் கொன்ற நெஞ்சினையுடைய புல்லாளனாக எனப்புகைந்து; " இல்லாளை யஞ்சுவா னஞ்சுமற் றெஞ்ஞான்றும், நல்லார்க்கு நல்ல செயல் " (குறள், 905); " இன்னேக்கிய ரில்வழி யெய்திய நல்விருந்தும்...... ஆமென மீண்ட தவ்வேல் " (கம்ப. சடாயுவுயிர். 119). மறம் - வீரம். புல்லாளன் - அற்பன். புகைந்து - கோபித்து. வில்லும் வாளுமாகிய அழுவத்தைப் பிளந்திட்டு; பிளந்திட்டு - பிளந்து; ஒருசொல். கோல் - அம்பு.

(மேற்.) அடி, 1 - 2 : குறள், 905, பரிமேல்.

(உரை) [1] (பி - ம்.) ' மேலும்.'

2320. தொடுத்தாங்க வம்பு தொடைவாங்கி விடாத முன்னம்
அடுத்தாங்க வம்புஞ் சிலையும்மத ஞாணு மற்றுக்
கடுத்தாங்கு வீழக் கதிர்வான்பிறை யம்பி னெய்தான்
வடித்தாரை வெள்வேல் வயிரம்மணிப் பூணி னானே.

(இ-ள்.) சீவகன், கட்டியங்காரன் ஆங்குத் தொடுத்த அவ்வம்பைத் தொடையை நிரம்பவாங்கி விடுதற்குமுன்னே, அவ்வம்புமுதலியன சேர அவ்விடத்தேயற்றுக் கோபித்துப் போனாற்போல வீழும்படி எய்தா னென்க.

'தொடுத்த', 'வடித்த' என்பன விகாரம். கடுத்து - கடுகியென்று மாம். (உகக)

2321. அம்புஞ் சிலையு மறுத்தானென் றழன்று பொன்வாள்
வெம்பப் பிடித்து வெகுண்டாங்கவன் றேரின் மேலே
பைம்பொன் முடியான் படப்பாய்ந்திடு கென்று பாய்வான்
செம்பொன் னுலகி னிழிகின்றவொர் தேவ னொத்தான்.

(இ - ள்.) பொன்முடியான், அம்பையும் வில்லையும் அவனறுத்தா னென்று வெகுண்டு வாளை அழன்று வெம்பும்படி பிடித்துச் சீவகன் தேரிலே பட்டுக்கிடக்கும்படி அத்தேரிடத்தே பாயக்கடவேனென்று பாய்கின்றவன், யானையினின்றும் போந்தபொழுது, நல்வினையுலந்து பொன்னுலகினின்றும் போதுகின்ற ஒரு தேவனை ஒத்தானென்க. (உஉ0)

2322. மொய்வார் குழலார் முலைப்போர்க்கள மாய மார்பிற்
செய்யோன் செழும்பொற் சரஞ்சென்றன சென்ற தாவி
வெய்தா விழியா வெருவத்துவர் வாய்ம டியா
மையார் விசும்பின் மதிவீழ்வது போல வீழ்ந்தான்.

2320. ஆங்குத் தொடுத்த அவ்வம்பை. தொடை - மீண்டும் தொடுத்தலை. விடாத முன்னம் - விடுவதற்குமுன்பு. (பி - ம்.) 'எல்லை மடுத்தாங்கு வம்பு.' அவ்வம்பும் சிலையும் நாணும் 'ஆங்கு அடுத்து அற்றுக் கடுத்தாங்கு வீழும்படி. பிறையம்பினால் எய்தான்; அடுத்து - ஒன்றாக. கடுத்தாங்கு - கோபித்துப் போனாற்போல. வடித்தல் - பயிற்றல். தாரை - ஒழுங்கு. வேலையுடைய பூணினான் : சீவகன்.

2321. அவன் அறுத்தானென்று : அவன் - சீவகன். அழன்று - கோபித்து. வாளை வெம்பும்படி பிடித்து. முடியான் தேரின்மேலே படப் பாய்ந்திடுகென்று பாய்வான்; முடியான் - சீவகன். பட - இறக்கும் படி. பாய்ந்திடுகென்று - சீவகன் தேரின்மேலே பாய்வேனென்று. பாய்வான் - பாய்கின்ற கட்டியங்காரன்.

2322. மொய்வார் குழலார் - நெருங்கிய நீண்ட கூந்தலையுடைய மகளிரது. முலைக்குப் போர்க்களமாகிய கட்டியங்காரனுடைய மார்பில்.

(இ - ள்.) மகளிர்முலைக்குப் போர்க்களமாகிய மார்பிலே சீவகனம்பு கள் சென்றனவாக, அவனது ஆவிசென்றது ; அப்பொழுது விழித்துக் கண்டார் வெருவ வாயை மடித்து விசும்பினின்றும் மதி வீழுந்தன்மை போல வீழ்ந்தானென்க.

சச்சந்தனை, "வெஞ்சுடரி ஞண்டகை யவிந்தான்" (சீவக. 289) என்று ஞாயிற்றிேனுடு உவமை கூறிப்போந்து, அவன்புதல்வன் அவனேயாமாதலின், ஈண்டும் சீவகனைச் செய்யோனென்று ஞாயிருக்கி அஞ்ஞாயிற்றின் முன்னர் மதி நில்லாதே கெடுமென்பதுதோன்ற, 'மதிவீழ்வதுபோல வீழ்ந்தான்' என்ருர். மேகத்தை யானைக்குவமை கூறினுர். இதனுல், சச்சந்தன் பட்ட அன்றுதொட்டு இன்றளவும் கட்டியங்காரன் கொடுங்கோலிருள் பரப்ப அரசாண்ட தன்மையும், அதுதான் இராக்காலத்தே இருள் பரந்து நிற்ப மதியாண்ட தன்மைத் தென்றும் கூறினுர். (உஉக)

## (வேறு)

2323. கட்டியங் கார னென்னுங் கலியர சழிந்த தாங்குப்
பட்டவிப் பகைமை நீங்கிப் படைத்தொழி லொழிக வென்னுக்
கொட்டினர் முரச மள்ள ரார்த்தனர் குருதிக் கண்ணீர்
விட்டழு தவன்க ணுர்வ மண்மக ணீக்கி னுளே.

(இ - ள்.) கட்டியங்காரனென்னும் கலியாகிய அரசு பட்டது ; இனி மாறுபாடு நீங்கிப் போர்த்தொழிலொழிகவென்று அவ்விடத்தே முரசைக் கொட்டினுர் ; அதுகேட்டு வீரரார்த்தனர் ; அப்பொழுது மண்மகள், குருதியாகிய கண்ணீரைச் சொரிந்து அழுது அவன்கண் ஆர்வத்தைக் கைவிட்டாளென்க. (உஉஉ)

---

செய்யோன் - சீவகனுடைய. சரம் - அம்பு. கட்டியங்காரனுடைய ஆவி சென்றது. வெய்தாக விழித்து. வெருவ - கண்டார் அஞ்சும்படி. மை - மேகம். வாயை மடித்து, விசும்பினின்றும் மதிவீழ்வது போல வீழ்ந்தான்.

(மேற்.) அடி, 2 : நன். வினை. 32, மயிலை, சங்கர ; பிரயோக. திங்ஙு. 5.

2323. கலியாகிய அரசு அழிந்தது ; சீவக. 1926. பட்ட - தோன் றிய. படைத்தொழில் ஒழிக - போர்த்தொழில் நீங்குக. ஆங்கு முரசத் தைக் கொட்டினர். மள்ளர் - வீரர். குருதியாகிய கண்ணீரை விட்டு அழுது. அவன்கண் - கட்டியங்காரனிடத்து. மண்மகள் - பூமிதேவி. மண்மகள் விட்டு அழுது நீக்கினுள் என்க.

2324. ஒல்லைநீ ருலக மஞ்ச வொளியுமிழ் பருதி தன்னைக்
கல்லெனக் கடலி னெற்றிக் கவுட்படுத் திட்டு நாகம்
பல்பகல் கழிந்த பின்றைப் பன்மணி நாகந் தன்னை[தான்.
வல்லைவாய் போழ்ந்து போந்தோர் மழகதிர் நின்ற தொத்

(இ - ள்.) நாகம் ஒளியுமிழ்பருதியை உலகமஞ்சும்படி கடலிலே கடுக விழுங்குகையினாலே அப்பன்மணி நாகத்தைப் பலநாட்சென்ற பின்பு வாயைப் பிளந்து போந்து அக்கதிர் நின்ற தன்மையையொத்தான் சீவகனென்க.

அது, "மந்திரிமா நாகமுடன்விழுங்கிற்று" (சீவக. 290) என்றதனை. இது [1] தந்தை புதல்வனாய்ப் பிறப்பனென்னும் விதிபற்றிக் கூறினார். (உஉ௩)

2325. கோட்டுமீன் குழாத்தின் மள்ள ரீண்டினர் மன்னர் சூழ்ந்தார், மோட்டுமீன் குழாத்தி னெங்குந் தீவிகை மொய்த்த முத்தம், ஆட்டுநீர்க் கடலி னார்த்த தணிநகர் வென்றி மாலை, கேட்டுநீர் நிறைந்து கேடில் விசயைகண் குளிர்ந்த வன்றே.

கோட்டுமீன் - சுறா. மோட்டுமீன் - உடு. முத்தை அலைக்கின்ற நீர். இன்கள், பொரு. [1] கனவு பொய்யாக இறந்துபடாதிருத்தலின், 'கேடில் விசயை' என்றார். மாலை - ஒழுங்கு.

---

2324. நாகம், பருதிதன்னை உலகமஞ்சும்படி கடலின் நெற்றியிலே ஒல்லைக்கவுட்படுத்திடலால்; நாகம் - கேதுவென்னும் பாம்பு. நெற்றி - உச்சி. ஒல்லை - விரைவு. கவுட்படுத்திடல் - விழுங்குதல். வல்லை - விரைய. வாயைப் போழ்ந்து போந்து மழகதிர் நின்றதொத்தான்; சீவக. 2371, 2523; பெருங். 1. 33 : 129 - 31. மழகதிர் - பாலசூரியன்.

(உரை) [1] நாலடி. 367.

2325. கோட்டுமீன் - கொம்பையுடைய சுறாமீன். வீரர்க்குச் சுறா மீன்கள் உவமை; சீவக. 1845, அடிக். ஈண்டினர் - நெருங்கினர். மோட்டுமீன் - மேலேயுள்ள நட்சத்திரம். நட்சத்திரக் குழாத்தினைப் போல் தீவிகை மொய்த்தன; தீவிகை - விளக்கு. முத்தை ஆட்டுகின்ற நீரையுடைய கடலைப்போல நகர் ஆர்த்தது; ஆட்டுதல் - அலைத்தல். வென்றிமாலையைக்கேட்டு விசயை கண் நீர் நிறைந்து குளிர்ந்தன; மாலை - இயல்பு.

(உரை) [1] "முன்னுரைத்த மூன்று கனவும் பொய்யாக, என் னுயிரைத் தாங்கி யிருந்தேன்" (சீவக. 1803)

(இ - ள்.) மள்ளர் ஈண்டினர்; அரசர் சூழ்ந்தார்; விளக்கு மொய்த்தன; நகர் ஆர்த்தது; விசயை வெற்றியொழுங்கைக் கேட்டு அரசனை நினைத்தலின், கண் நீர்நிறைந்து பின்பு குளிர்ந்தனவென்க.

அவன்புதல்வரைக் கொன்று பின் அவனைக் கொன்றதனை 'ஒழுங்கு' என்றார். (உ௨௪)

2326. அணிமுடி யரசர் மாலை யழனுதி வாள்க ளென்னும், மணிபுனை குடத்தி னெய்த்தோர் மண்ணுநீர் மருள வாட்டிப், பணைமுலைப் பைம்பொன் மாலைப் பாசிழைப் பூமி தேவி, இணை முலை யேக மாக நுகரிய வெய்தி னானே.

(இ - ள்.) முடியினையும் மாலையினையும் குருதி தோய்ந்த வாள் களையுமுடைய நெருப்பினது கொழுந்தென்னும் அரசர், சீவகனை மணி புனை குடத்தின்மண்ணுநீராலே ஆட்ட, அவன் நிலமகள் முலையைப் பொதுவற நுகர்தற்கு அவளைப் பொருந்தினானென்க.

ஆட்டி - ஆட்ட. இது [1] வீராபிடேகம். முலையினையும், மாலையினை யும், இழையினையுமுடைய நிலமகள். இனி அரசரைக்கொண்டு வாள்க ளென்னுங்குடத்தின் நெய்த்தோராகிய மண்ணுநீராலே மண்மகளையாட்டு வித்து அவளையெய்தினானென்பாருமுளர். (உ௨௫)

க௦ - மண்மகளிலம்பகம் முற்றிற்று.

ஆகக் கவி, உ௩௨௬.

---

2326. மாலையையுடைய அரசரைக் கொண்டு. குடத்தின் - குடத்தி னால். நெய்த்தோராகிய மண்ணுநீரால். மண்மகளை ஆட்டி; ஆட்டி - ஆட்டுவித்து. பூமிதேவியின் முலையை ஏகமாக நுகரிய எய்தினான்; ஏகமாக - தானொருவனாகை. நுகரிய - அனுபவித்தற்கு.

(உரை) [1] வீராபிடேகம் - பகைவரை வென்ற வீரர்க்குப் பண்ணும் அபிஷேகம்; இது விசயாபிஷேகமெனவும் வழங்கும்; "திருமகண் மருவிய செங்கோல் வேந்தன்" என்னும் மெய்க்கீர்த்தியில் 'திசையது நிகழ வீராபிஷேகம் பண்ணி' எனவும், "திருமாதர் புவியெனும் பெரு மாதர்" என்னும் மெய்க் கீர்த்தியில் 'விசயாபிஷேகஞ் செய்து' எனவும் வருதல் காண்க. இவை சிலாசாசனத்திற் கண்டவை.

# பதின்மூன்றாவது

# பூமகளிலம்பகம்

2327. கண்ணாடி யன்ன கடிமார்பன் சிவந்து நீண்ட
கண்ணாடி வென்று களங்கண்டு நியம முற்றிக்
கண்ணாடி வண்டு பருகுங்கமழ் மாலை மூதூர்க்
கண்ணாடி யானை யவர்கைதொழச் சென்று புக்கான்.

**கண்ணாடி**, தன்னைச் சேர்ந்தவர் செயலாயே இருக்குமாறுபோல இம் மார்பும் தன்னைச்சேர்ந்த மகளிர்செயலாயே இருத்தலின், '**கண்ணாடி யன்ன மார்பன்**' என்று இன்பச்சிறப்புக் கூறினார்; **கடி** - வரைவு; "கையுங் காலுந் தூக்கத் தூக்கும், ஆடிப் பாவை போல, மேவன செய்யுந்தன் புதல்வன் றாய்க்கே" (குறுந். 8) என்றாற்போல; கண்ணாடி போல முதுகுகாட்டாத மார்பனென்பாருமுளர்; பகைவர் வீரத்தினழகை விளக்கும் மார்புமாம். **கண் ஆடிவென்று** - கண் எல்லாரிடத்தும் உலாவி வென்று; "காலாடு போழ்தின்" (நாலடி. 113) என்றாற்போல. **நியம முற்றி** - களவேள்வி முதலியன முடித்து. முன்னே மஞ்சனமாடுதலிற் பின் களவேள்விமுடித்தான். **கள் நாடி** - கள்ளைத் தேடி. **மாலை** களணிந்த மூதூர்க்கண்ணே. **ஆடு யானையவர்** - வெற்றி யானை யுடையவர்.

(இ - ள்.) மார்பன், நியமமுற்றி மூதூரிலே சென்று புக்கானென்க.
(க)

2328. கூடார் புலியு முழைக்கோளரி யேறு மன்ன
கூடார் மெலியக் கொலைவேனினைந் தானை யேத்திக்
கூடார மாலைக் குவிமென்முலைக் கோதை நல்லார்
கூடார மாட மயில்போலக் குழீஇயி னாரே.

---

2327. கண்ணாடியின் இயல்பு : சீவக. 957, அடிக்.; "ஆடியுட் பாவை யன்னாள்" (தஞ்சை வாணன். 389). மார்பன் - சீவகன். கண் ஆடி - கண்கள் எல்லாரிடத்தும் உலாவிச் சென்று. நியமம்முற்றி - போர்க்களவேள்வியை முடித்து. கள்ளை நாடி வண்டு பருகுகின்ற. மூதூர்க்கண் - இராசமாபுரத்தே. ஆடு யானையவர் - வெற்றியைக் கொண்ட யானையையுடைய வீரர்.

(மேற்.) அடி, 1 : நன். உரி. 16, மயிலை ; சங்கர ; நேமி. உரி. 3.

2328. கூடு ஆர் புலி - கூட்டிலே இருந்த புலி ; பகைவர்க்குவமை ; "கொடுவரிக் குருளை கூட்டுள் வளர்ந்தாங்கு" (பட்டினப். 221). முழையிலுள்ள அரியேறு : ஆண்சிங்கம். அன்ன - ஒத்த. கூடார் -

கூட்டிலேயிருந்த புலியையும் முழையில் அரியையுமொத்த பகைவ ரென்றது, சூரபன்மனையும் ஒழிந்த அவுணரையும்; அவர்வருந்தும்படி வேல் நினைந்தானென்றது முருகனை; "அவுணர் நல்வல மடங்கக் கவிழிணர், மாமுத றடிந்த.........சேஎய்" (முருகு. 59-61) என்றார்; தேவர், இவனுக்கு முருகனென்று ஒருபெயர் கூறினார்; மேலும், "திருமால் போந்தான்" (சீவக. 2369) என்பர்.

(இ - ள்.) கூடின ஆரமுதலியவற்றையுடைய நல்லார், சீவகனை ஏத்திக் கூடகாரங்களிலும் மாடங்களிலும் மயில்போலத் திரண்டாரென்க.

கூடாரம் - கூடகாரம்; நெற்கூடுகள். (உ)

(வேறு)

2329. மாலைச் செற்றான் மக்களொ டெல்லா முடனேயிம்
மாலைச் செற்றான் வைந்நுனை யம்பின் னிவனென்பார்
மாலைக் கின்றே மாய்ந்தது மாயாப் பழியென்பார்
மாலைக் கேற்ற வார்குழல் வேய்த்தோண் மடநல்லார்.

மால் - சச்சந்தன்.

(இ - ள்.) நல்லார், கட்டியங்காரனை மக்களோடு எல்லாருஞ் சேர இம்மாலைக்காலத்தே அம்பாலே இவன் கொன்றானென்பார்; குண மாலைக்கு மாயாப் பழி இன்றே மாய்ந்ததென்பாராயினாரென்க.

[1] இவளைத் தீண்டித் துன்பமுற்றானென்னும் பழி. பூமாலைக்கேற்ற குழல். (௩)

2330. நாகந் நெற்றி நன்மணி சிந்தும் மருவிபோல்
நாகந் நெற்றிந் நன்மணி யோடை நறவிம்மும்
நாகந் நெற்றிந் நன்மலர் சிந்தி நளிர்செம்பொன்
நாகந் நெற்றி மங்கைய ரொத்தார் மடநல்லார்.

---

பகைவர். வேலை நினைந்தான்; என்றது ஈண்டுச் சீவகனை. கூடு ஆர மாலை - கூடின முத்து மாலையை யணிந்த. நல்லார் - மகளிர். கூடாரத்திலும் மாடத்திலும்.

2329. மாலைச் செற்றான் - சச்சந்தனைக் கொன்றவனை கட்டியங் காரனை. மக்களொடு - அவன் மக்கள் நூற்றுவரோடு. இம்மாலை இவன் அம்பினால் செற்றான் என்பார்; இம்மாலை - இம்மாலைக்காலத்தே. இவன் - சீவகன். மாலைக்கு - குணமாலைக்கு. பழி மாய்ந்தது என்பார். மாலை - பூமாலை. நல்லார் - மகளிர்; எழுவாய்.

(உரை) [1] சீவக. 2099, ந.

2330. மணியையுடைய நாகநெற்றியில் சிந்துகின்ற அருவிபோல; நாகநெற்றி - மலையின் உச்சியில். மணியோடையையுடைய நாகநெற்றி யில் மலர்சிந்தி; நாகம் - யானை. நற விம்முகின்ற நாகநெற்றியிலுள்ள மலரை; நற - தேன்; நாகநெற்றி - சுரபுன்னைமரத்தின் உச்சி. யானைக்கு

**(இ - ள்.) மணியையுடைய மலைத்தலையிலே வந்து வீழும் அருவி போலே மணியோடையையுடைய யானையினெற்றியிலே சுரபுன்னைத் தலையிலுண்டான பூக்களைச் சொரிதலாலே, மாடங்களின்மேல் நின்ற மடநல்லார், சுவர்க்கத்திடத்திற் பூச்சொரிகின்ற மங்கையரை ஒத்தா ரென்க. (ரு)**

2331 கோடிக் கோடுங் கூம்புயர் நாவாய் நெடுமாடம்
கோடிப் பட்டிற் கொள்கொடி கூடப் புனைவாரும்
கோடித் தானைக் கொற்றவற் காண்பா னிழைமின்னக்
கோடிச் செம்பொற் கொம்பரின் முன்முன் றொழுவாரும்.

**(இ - ள்.) கோளாலே திக்குக்களிலே ஓடுகின்ற நாவாய் தந்த புதிய பட்டினால் தைத்த கொடிகளை மாடங்களிலே சேரக் கட்டுவாரும், கொற்றவனைக்காண வேண்டிக் கொம்புபோலே வளைந்து அவனைத் தொழுவாருமாயினாரென்க.**

**இருபது பட்டிற்குக் கோடியென்பதைப் பெயராக்கியுமுரைப்ப. கோடியென்னும் எண்ணையுடைய படை. (௬)**

2332. அம்புகை வல்வில் லார்கழன் மள்ளர் திறலேத்த
அம்புகைக் கொண்டா லாரிவற் கீண்டு நிகராவார்
அம்புகை யார்ந்த வந்துகி லல்குல் லவிர்கோதாய்
அம்புகைக் காணு மையனைக் கையிற் றொழுதென்பார்.

---

**மலையும், சுரபுன்னைமலருக்கு அருவியும் உவமைகள். நாகநெற்றி மங்கையர் - சுவர்க்கத்திடத்துத் தேவமங்கையரை.**

**2331. கோள் திக்கு ஓடும் கூம்பு உயர்நாவாய் கோடிப்பட்டு - கோள்களால் திக்குகளில் செல்லுகின்ற பாய்மரத்தையுடைய உயர்ந்த தோணியால் தருவித்த புதிய பட்டு; கோடி - புதுமை. பட்டினாற் கொண்ட கொடியை மாடத்திற் புனைவாரும். தானை - சேனை. கொற்ற வன் - சீவகனை. செம்பொற் கொம்பரின் கோடி - செம்பொன்னாலாகிய கொம்பைப்போல வளைந்து. முன் - சீவகன் முன்பு. காணும் பொருட்டுக் கொம்பைப்போல் தொழுவார் ; தொழுவார் - வணங்குவார்.**

**2332. அம்பு உகை - அம்பைச்செலுத்துகின்ற. வில்லையும் கழலையு முடைய மள்ளர் - வீரர். திறல் - சீவகனது வன்மையை. அம்பு கைக் கொண்டால் - பூமியைக் கைப்பற்றிக் கொண்டால் ; அம்பு - நீர் ; நீர் சூழ்ந்த பூமிக்காயிற்று. இவற்கு ஈண்டு நிகராவார் யார் ? அம் புகை ஆர்ந்த - அழகிய அகிற்புகை நிறைய ஊட்டப்பெற்ற. அவிர்தல் - விளங்குதல். கோதாய் : ஒருத்தியை நோக்கிய விளி. ஐயனைக் கையாற் றொழுது கையில் அம்பைக்காணும் என்பார் ; ஐயன் : சீவகன் ; அம்பு - வளையல்.**

(இ - ள்.) அம்பை உகைக்கின்ற வில்லையுடைய வீரரேத்த உலகை இங்ஙனம் கைக்கொண்டால் இனி இவற்கு ஈண்டு நிகராவார் யாரென்பாரும், கோதாய்! ஐயனைக் கையாற்றொழுது கையில் வளையைக் காண்கிலேமென்பாருமாயினரென்க.

அம்பு சூழ்தலின், அம்பென்று உலகிற்குப் பெயராயிற்று; ஆகு பெயர். அழகிய புகையார்ந்த துகில். (சா)

2333. மைத்துன நீண்ட மாமணி மாடம் மிசையேறி
மைத்துன நீண்ட வாட்டடங் கண்ணார் மலர்தூவ
மைத்துன மன்னர் மால்களி றேறிப் புடைசூழ
மைத்துன நீண்ட மாமணி வண்ண னவனொத்தான்.

மை துன்ன - மேகம் நெருங்க. வாள் மைத்து உன்ன நீண்ட கண் - வாள் ஒளி மழுங்கி நினைக்கும்படி நீண்ட கண்; மைத்தல் - ஒளிகெடுதல்; "மைம்மைப்பி னன்று குருடு" (பழ. 188) என்றாற்போல. மை துன்ன - கருமை பொருந்த.

(இ - ள்.) மாடத்தையேறி மகளிர் மலர் தூவ, மைத்துன அரசர் சூழச் செல்கின்ற அவன் மணிவண்ணனை ஒத்தானென்க. (எ)

(வேறு)

2334. ஊது வண்டரற் றும்முயர் தாமரைப்
போது பூங்கழு நீரொடு பூத்துடன்
வீதி மல்கின போன்மிளிர் வேற்கணும்
மாத ரார்முகப் பூவு மலர்ந்தவே.

(இ - ள்.) தாமரைப்பூக் கழுநீரோடே பூத்து மல்கினபோலே மகளிர் முகப்பொலிவும் கண்ணும் பரந்தனவென்க. (அ)

---

2333. மை துன நீண்ட மாடம்; மை - மேகம். துன = துன்ன - நெருங்க. வாள் மைத்து உன நீண்ட கண்ணார்; மைத்து - ஒளிமழுங்கி. உன - கண்ணின் ஒளியையும் நீட்சியையும் நினைக்கும்படி. மைத்துன மன்னர் புடைசூழ: "மைத்துன மன்னரும்......புடைசூழ" (பெருங். 1. 38 : 132-4). மை துன - கருமை பொருந்த. அவன் மணிவண்ணனை ஒத்தான்; அவன்: சீவகன்; மணிவண்ணன் - திருமால்.

2334. ஊதுவண்டு - தாதை ஊதுகின்ற வண்டு. கழுநீர் - செங்கழுநீர்மலர். மல்குதல் - நிறைதல். முகப்பூ - முகப்பொலிவு. மகளிர் முகத்துக்குத் தாமரையும், கண்களுக்குச் செங்கழுநீர்மலர்களும் உவமை; சீவக. 2130, அடிக்.

2335. வீணை வித்தகன் வேந்தடு வீங்குதோள்
காணுங் காரிகை யார்கதிர் வெம்முலைப்
பூணு மாரமு மீன்றுபொன் பூத்தலர்ந்
தியாண ரூரம ராபதி போன்றதே.

(இ - ள்.) ஊர், காரிகையாரையும் அவரணிந்த கலங்களையும் தான் ஈன்று, வேய்ந்த பொன்னுற்பொலிவு பெற்றுப் பரத்தலின், சீவகனை வந்து காண்பதோர் அமராபதியை ஒத்ததென்க. (கூ)

2336. தேம்பெய் கற்பகத் தாரவன் சேர்தலும்
பூம்பெய் கோதைப் புரிசைக் குழா நலம்
ஓம்பு திங்க ளுலந்து சுடர்கண்ட
ஆம்ப லாய்மலர்க் காடொத் தழிந்ததே.

(இ - ள்.) சீவகன் கோயிலைச் சேர்ந்த அளவிலே, பெய்யப்பட்ட பூங்கோதையையுடைய புரிசையிடத்திருந்த மகளிரழகு, மதி படுதலின் இளஞாயிற்றைக் கண்ட ஆம்பலினுடைய குவிந்த மலர்த்திரளை ஒத்துக் கெட்டதென்க. (கo)

(வேறு)

2337. மாகம் முழக்கின் மணிநாகம் பதைப்ப வேபோல்
ஆகம் மறவ ரகன்கோயில்புக் கம்பொன் மாலைத்
தோகைம் மடவார் துவர்வாய்துடித் தஞ்ச வெம்பா
வேகம் முடைத்தாய் விழியாத்தொழித் தேகு கென்றார்.

---

2335. வேந்தை அடுகின்ற தோளையுடைய வித்தகன்; வேந்து - பகையரசர்; சாதியொருமை. வீணைவித்தகன் - சீவகன்; சீவக. 28, 1002, அடிக். பொன்பூத்து அலர்ந்து - பொன்னுற் பொலிவு பெற்றுப் பரத்தலின். யாணரூர் - புதுவருவாயையுடைய இராசமாபுரம். அமராபதி - இந்திரனுடைய நகரம். ஊர், காரிகையாரையும் பூண் முதலியவற்றையும் ஈன்று அலர்தலின் வித்தகனைக் காணும் அமராபதியைப் போன்றது.

2336. தாரவன் - சீவகன். புரிசையிடத்திருந்த மகளிர் குழாத்தின் நலம்; மகளிர் - கட்டியங்காரனைச் சேர்ந்த மகளிர். நலம் - அழகு. திங்கள் உலந்து - சந்திரன் கெடுதலாலே. சுடர் - சூரியனை. நலம் ஆம்பலின் மலர்க்காட்டை ஒத்து அழிந்தது. கட்டியங்காரனுக்குத் திங்களும், சீவகனுக்குச் சூரியனும் உவமைகள்.

2337. மாகம் முழக்கின் - ஆகாயத்திடத்து இடியாலே. நாகம் - பாம்பு. பதைப்பவே போலாகும்படி. மறவர் - சீவகனுடைய வீரர். கோயில் புக்கு - கட்டியங்காரனைச் சார்ந்த மகளிரிருக்கும் அரண்மனையில் புகுந்து. மடவார் - அம்மகளிர். வெம்பா - வெம்பி. விழியா - விழித்து. தொழித்து - கோபித்து. மறவர், மடவார், துடித்து வெம்பி அஞ்சும்படி ஏகுக என்றார்.

**(இ - ள்.)** மடவார், விசும்பில் இடியோசையாலே பாம்புகள் பதைப்பன போலே ஆம்படி, மறவர், கோயிலிலே புக்கு, இவ்விடத்தினின்றும் ஏருகவென்றுரென்க.

அப்பொழுது, அவர் துடித்து வெம்பி அஞ்ச, விழித்துக் கோபித்துக் கூறினுரென்க. அழாமற் பொருமுதலின் வாய் துடித்தது. (கக)

2338. செய்பாவை யன்னுர் சிலம்பார்க்குமென் சீற டியார்
செய்பூந் தவிசின் மிசையல்லது சேற லில்லார்
மையார்ந்த கண்ணீர் மணிப்பூண்முலை பாய விம்மா
வெய்தா மடவார் வெறுவெந்நிலத் தேகி ளுரே.

**(இ - ள்.)** அதுகேட்டு, திருவையொப்பார் சீறடியார் சேறலில்லாராகிய மடவார், கண்ணீர் முலையிலே பாயும்படி பொருமி வெய்தாக அழுது வெவ்விய வெறுநிலத்தே போயினுரென்க. (கஉ)

2339. நெருப்புற்ற போல நிலமோந்துழிச் செய்ய வாகிப்
பருக்கென்ற கோல மரற்பல்பழம் போன்று கொப்புள்
வருத்தம் மிழற்றிப் பசும்பொற்சிலம் போசை செய்யச்
செருக்கற்ற பஞ்சி மலர்ச்சீறடி நோவச் சென்றுர்.

**(இ - ள்.)** அங்ஙனமேகுதலின், நிலமோந்துழி நெருப்புற்ற போலச் செய்யவாகுதலாலே வாடின இலவமலரையொத்த சிற்றடியில் மரற்பழம் போன்று கொப்புளித்த கொப்புள் வருத்துதலின் வருந்திச் சிலசொல்லிச் சிலம்பொலிப்ப அவ்வடி நோம்படி சென்றுரென்க.

பருத்துக்காட்டினவெனவே 'கொப்புளித்தன' என்பதாயிற்று. (கங)

2338. பூந்தவிசு - பூக்களாலாகிய மெத்தை. சேறலில்லார் - வேறு இடங்களிற் செல்லாதவர். கண்ணீர் முலையிற் பாயும்படி. விம்மா - விம்மி. வெய்தா - வெம்மையாக. வெவ்விய வெறுநிலத்து.

2339. நிலத்தை மோந்துழி நெருப்புற்ற போலச் செய்யவாகுதலால்; மோந்துழி - பொருந்தியவிடத்து. செருக்கற்ற மலர்போலும் சீறடி பருக்கென்ற மரற்பழம் போன்று கொப்புள் கொண்டு வருத்த, மிழற்றி ஓசைசெய்ய நோவச் சென்றுர்; செருக்கற்ற - வாடின. மலர் - இலவ மலர். பருக்கென்ற - பருத்துக்காட்டின. மரற்பழம் போன்ற கொப்புள்; "மரற்பழுத் தன்ன மறுகுநீர் மொக்குள்" (பொருந. 45); கொப்புள் - கொப்புளம். மிழற்றி - சில வார்த்தைகளைச் சொல்லி.

2340. (க) பொற்பூண் சுமந்து பொருகோட்டை யழித்து வெம் போர், கற்பா னெழுந்த முலையார்களங் கண்டு நீங்கி, நற்பூ ணணிந்த முலையார்நிலை கால்ச ரிந்து, நெற்றிந் நிறுத்து வடம் வைத்த முலையி னாரும்.

2341. (உ) செங்காற் குழவி தழீஇயினார்திங்கள் புக்க நீரார்
அங்கான் முலையி னரும்பால்வரப் பாயி னாரும்
பைங்காசு முத்தும் பவழத்தொடு பைம்பொ னார்ந்த
பொங்கார் முலையார் திருமுற்ற நிறைந்து புக்கார்.

இவையிரண்டும் ஒரு தொடர்.

(க) அழித்தென்பது, எதிர்காலம் நோக்கிய இறந்தகாலச் சொல்.

(உ) நிறைந்து - நிறைய.

(இ - ள்.) பூணைச்சுமந்து யானைக்கோட்டைக் கெடுத்துப் போரைக் கற்பனவாக எழுந்த முலையாரும்,[1] நுகர்ந்துவிட்டுப் பேரணிகலமணிந்த முலையாரும், நிலைதளர்ந்து ஏந்தி வடங்கிடந்த முலையாரும், இளஞ்சூலு டையாரும், திங்கள் சென்றவரும், முலையிலே பால்வரும்படி சூல்முதிர்ந் தாருமாகிய மகளிர் முற்றத்தே நிறையச் சென்றாரென்க.

சீவகன், இவர்பெறும் புதல்வர் அரசகுலமன்மையின், தன் குலத்திற் குப் பகைவரன்மை உணர்ந்து அருளால் தீங்குசெய்யாது அவரைப் போகவிடுகின்றானென்று மேற்கூறுகின்றார். கட்டியங்காரன் அருளின் மையாற் பகையென்றும், பெண்கொலை புரிந்து குலத்தோடுங் கோற (சீவக. 261) லெண்ணினானென்றும் ஆண்டுக் கூறினார். எதிர்வந்து பொருதலின், முன்பு அவன் புதல்வரைக் கொன்றானென்றார். (கச-ரு)

2340. பூண் - ஆபரணம். கோடு - யானைத்தந்தம். அழித்து - கெடுத்து. நிலைகால் சரிந்து - நிலைதளர்ந்து. நெற்றிநிறுத்து - உச்சியில் ஏந்திய. வைத்த - கிடந்த.

2341. திங்கள் புக்க நீரார் - ஒருமாதக் கருவுடையார். முலையிற் பால் வரும்படி பாயினாரும் ; பாயினார் - கருப்பமுற்றியவரும். (பி - ம்.) 'பாலவராயினாரும்.' தழீயினாரும் நீராரும் பாயினாருமாகிய முலையார் புக்கார்.

(உரை) [1] (பி - ம்.) 'களத்தை விட்டு.'

2342. பெய்யார் முகிலிற் பிறழ்பூங்கொடி மின்னின் மின்னு
நெய்யார்ந்த கூந்த னிழற்பொன்னரி மாலை சோரக்
கையார் வளையார் புலிகண்ணுறக் கண்டு சோரா
நையாத் துயரா நடுங்கும்பிணை மான்க ளொத்தார்.

(இ - ள்.) அவர், சீவகனைக் கண்டு பெய்கின்ற முகிலிற் பிறழும் மின்போலே மின்னிக் குலைந்த கூந்தலினின்று மாலை சோரும்படி நைந்து வருந்திச் சோர்ந்து புலியைக் கண்டு நடுங்கும் பிணைமான்களை ஒத்தாரென்க. (கரு)

2343. (க) வட்டம் மலர்த்தா ரவனாலருள் பெற்று வான்பொற்
பட்டம் மணிந்தா ளிவர்தங்களுள் யாவ ளென்ன
மட்டா ரலங்க லவன்மக்களுந் தானு மாதோ
பட்டா ரமருட் பசும்பொன்முடி சூழ வென்றார்.

2344. (உ) மாலே றனையா னெடுமக்களுக் கஃதோ வென்னு
வேலேறு பெற்ற பிணையின்னனி மாழ்கி வீழ்ந்து
சேலேறு சின்னீ ரிடைச்செல்வன போன்று செங்கண்
மேலேறி மூழ்கிப் பிறந்தாழ்ந்த விறந்து பட்டாள்.

இவையிரண்டும் ஒரு தொடர்.

(இ - ள்.) உழையரை நோக்கிக் கட்டியங்காரனால் அருள் பெற்றுப் பட்டமணிந்தவள் இவர்களுள் யாவளென்று சீவகன் கேட்க, நீ கேட்ட வட்குக் களத்திற் செய்தி கூறுகின்றவர் அவள் பொறுக்கும்படி கூறுதே

2342. பெய்தலார்ந்த முகிலிடத்துப் பிறழும் மின்னினைப்போல் மின்னி. நெய் - புழுகு. நிழல் - ஒளி. கூந்தலினின்றும் மாலை சோர. கையிலார்ந்த வளையார்; மகளிர். சோரா - சோர்ந்து. நையா - வருந்தி. துயரா - துன்பமுற்று. பிணைமான் - பெண்மான். சீவகனுக்குப் புலியும், அம்மகளிருக்குப் பிணைமான்களும் உவமைகள்.

2343. வட்டமாகிய தாரையணிந்த அவனால்; அவன் - கட்டியங்காரன். பட்டம் அணிந்தாள் - மாதேவிப் பட்டமணிந்த மங்கை. என்ன - என்று சீவகன் கேட்ப. அவளுக்குக் களத்துச் செய்தி கூறியவர், முடி சூழ, அவன் தானும் மக்களும் பட்டார் என்றார்; பசும்பொன் முடிசூழ: சீவக. 2371. என்றார் - என்று அவளிடம் கூறினார்கள்.

2344. ஏறனையானெடு மக்களுக்கும் அஃதோ என்னு. ஏறனை யான் - கட்டியங்காரன். என்னு - என்று கூறி. வேலேறு பெற்ற பிணை யின் நனிமாழ்கி - வேலால் புண்பட்ட பெண்மானைப்போல மிகக் கலங்கி; சீவக. 715, அடிக். சின்னீர் - வற்றி அரித்துச் செல்லும் நீர். கண்கள் ஆழ்ந்தன. உடனே இறந்துபட்டாள்; இதன்பின், 'என்றார்' என ஒரு சொல்வருவிக்க.

முடிகள் சூழ்ந்து கிடக்கக் கட்டியங்காரன் தானும் மக்களும் பட்டா ரென்று கூறினர்; அதுகேட்டு அவள், ஏறனையாரொடு மக்களுக்கு முற் றது அஃதோவென்று இறந்து பட்டாள்காணென்றுரென்க.

யாவளென்று வினவ இறந்துபட்டாளென்று உத்தரங்கூறினர். என்றுரெனா வருவிக்க. வட்டத் தார். மால் - பெருமை. அஃதோவென் றது, "மன்னர்தீ, ஈண்டு தங்கிளை யோடு மெரித்திடும்" (சீவக. 250) என்று அமைச்சர் கூற, அவன் கேளாதிருந்தமை தான் கேட்டிருந் தலின், அது பின்பு பயந்தபடியோவென்றாள். சேல் வற்றின சின்னீரிற் கடிதிற் சேறலின்றி மெல்லச் செல்லும்மவைபோற் கண்ணும் மெல்ல ஏறி மறிந்து கீழ்மேலாய் வீழ்ந்தன வென்று இறந்துபட்ட செய்தி கூறினர். (கஎ - அ)

2345. ஐவா யரவி னவிராரழல் போன்று சீறி
வெய்யோ னுயிர்ப்பின் விடுத்தேனென் வெகுளி வெந்தீ
மையா ரணல மணிநாகங் கலுழன் வாய்ப்பட்
டுய்யா வெனநீ ருடன்றுள்ள முருகல் வேண்டா.

(இ - ள்.) பாம்பினது நஞ்சு ஒன்றற்கு உயிருள்ளளவும் வெகுண்டு அவ்வுயிர் போயபின்பு அவ்வெகுட்சி போமாறுபோலே யானும் கட்டியங் காரன் உயிர்போய பின்னரே என்வெகுளியாகிய தீயையும் போகவிட் டேன்; இனி, நீர் கருமை நிறைந்த கழுத்தையுடைய நாகங்கள் கருடன் வாய்ப்பட்டு உய்யா; அதுபோல் எமக்கும் இனி உய்தலின்றென்று கருதி உள்ளம் வருந்தி உருகல்வேண்டாவென்றானென்க. (கசு)

2346. மண்கேழ் மணியி னுழையுந்துகி னூலின் வாய்த்த
நுண்கேழ் நுசுப்பின் மடவீர்நும்மை நோவ செய்யேன்
ஒண்கேழ்க் கழுநீ ரொளிமுத்த முமிழ்வ தேபோற்
பண்கேழ் மொழியீர் நெடுங்கண்பனி வீழ்த்தல் வேண்டா.

---

2343-4. சீவக. 224, அடிக்.

2345. ஐவாய் அரவின் அழல்போன்று சீறி: "ஐந்தலை நாக மழல வெகுட்டி" (பெருங். 2. 8 : 29); அழல் - விடம்; சினத்துக்கு உவமை; சீவக. 157, ந. வெய்யோன் - கட்டியங்காரன். மை ஆர் அணல மணி நாகம் - கருமை நிறைந்த கழுத்திலே மணியையுடைய பாம்பு. என - அதுபோல் நமக்கும் உய்தலின்றென்று கருதி. உள்ளம் உடன்று - மனம் வருந்தி.

2346. துகில்நூலைப்போல நுழையும் நுசுப்பினையுடைய மண் கேழ் மணியின் வாய்த்த மடவீர்; மண் கேழ் மணியின் - கழுவுதல் பொருந் தின மணியினைப்போல. நோவன - துன்புறுத்தும் செயலை. கேழ் - நிறம். கழுநீர் - செங்கழுநீர்மலர்; கண்களிற்குவமை. முத்தம் - நீர்த் துளி. பண்கேழ் மொழியீர் - இராகத்தை ஒத்த மொழியை உடையீர்.

**(இ - ள்.)** துகிலினுள்ளே மறையும் மண்ணுதல் பொருந்தின மணி போல் வாய்த்த மடவீர்! யான் நும்மை நோவனவற்றைச் செய்யேன்; ஆதலால், மொழியீர்! இனிக் கழுநீர் முத்தைக் கால்வதுபோல அழல் வேண்டாவென்றானென்க.

போர்த்து நின்றதற்கு உவமை. நூலிற்காட்டில் நுண்ணிய நுசுப் பினையுடைய மடவீர். கேழ் - நிறம். (உ௦)

2347. என்னுங்கட் குள்ள மிலங்கீர்வளைக் கையி னீரே, மன் னிங்கு வாழ்வு தருதும்மவற் றானும் வாழ்மின், பொன்னிங்குக் கொண்டு புறம்போகியும் வாழ்மி னென்றான், வின்னுங்க வீங்கி விழுக்கந்தென நீண்ட தோளான்.

**(இ - ள்.)** வில்லை வலிக்க வீங்கி நீண்ட தோளான், ஈரப்பட்ட வளைக்கையினீரே! நும்மன்னன் நுமக்குத் தந்த சீவிதங்களை யாமும் இவ்விடத்தே தருவேம்; அவற்றைக்கொண்டு ஈண்டிருந்தும் உயிர்வாழ் மின்; அன்றி ஈங்குநின்றும் பொன்னைக்கொண்டு நும் சீவிதங்களிலே போயும் உயிர்வாழ்மின்; இரண்டில் நும் 'கருத்து யாது? கூறுமென்றா னென்க. (உக)

2348. தீத்தும்மும் வேலான் றிருவாய்மொழி வான்மு ழக்கம்
வாய்த்தங்குக் கேட்டு மடமஞ்ஞைக் குழாத்தி னேகிக்
காய்த்தெங்கு சூழ்ந்த கரும்பார்தம் பதிகள் புக்கார்
சேய்ச்செந் தவிசு நெருப்பென்றெழுஞ் சீற டியார்.

**(இ - ள்.)** மிகச்சிவந்த தவிசையும் நெருப்பென்று நீங்குஞ் சீறடி யார், தீயைப் புறப்படவிடும் வேலானுடைய வார்த்தையாகிய வான்

---

2347. உங்கட்கு உள்ளம் என்? இலங்குதல் - விளங்குதல். ஈர் வளைக்கையினீர் - அறுக்கப்பட்ட வளையல்களையணிந்த கையையுடையீர். மன்வாழ்வு இங்கு தருதும் - நுமக்குக் கட்டியங்காரன் கொடுத்த விருத்தி களை யாமும் இங்குக் கொடுப்பேம். இங்கு நின்றும் பொன்னைக் கொண்டு. புறம்போகியும் - வெளியிடங்களிலே சென்றும். வில் நுங்க - வில்லை விழுங்கும்படி. விழுக்கந்தென - சிறந்த தூணைப்போல. தோளான் : சீவகன்.

2348. தீத்தும்மும் வேலான் - நெருப்பைப் புறப்படவிடும் வேலை யுடைய சீவகன்; கூர்ம. இரா - வதை. 20. திருவாய்மொழியாகிய முழக் கத்தை அங்கு வாய்த்துக் கேட்டு; வாய்த்து - வாய்ப்ப. தெங்கங்காய் சூழ்ந்த. பதி - ஊர். சேய்ச்செந்தவிசும் - மிகச் சிவந்த மெத்தையை யும். எழும் - அங்குநின்றும் நீங்கும். சீறடியார் : மகளிர்; எழுவாய்.

(மேற்.) அடி, 1 : நேமி. உரி. 2, உரை ; பிரயோக. திங்நு. 13.

முழக்கத்தை அவ்விடத்தே வாய்ப்பக்கேட்டு, போவேமென்று கூறி, மயிற்குழாம்போலே மகிழ்ந்து போய்த் தம் பதிகளிலே புக்காரென்க.

மயில் மழைக்கு மகிழ்தலின், மயில்போலென்றார். (உஉ)

2349. காதார் குழையுங் கடற்சங்கமுங் குங்கு மமும்
போதா ரலங்கற் பொறையும்பொறை யென்று நீக்கித்
தாதார் குவளைத் தடங்கண்முத் துருட்டி விம்மா
மாதார் மயிலன் னவர்சண்பகச் சாம்ப லொத்தார்.

மாலையாகிய பாரம்.

**(இ - ள்.)** காதல்நிறைந்த மயிலன்னவர், தம் கணவனையிழத்தலிற் குழை முதலியவற்றைப் பாரமென்றே நீக்கி அழுது சண்பகப்பூவாடலை ஒத்து நோன்பை மேற்கொண்டிருந்தாரென்க. (உங)

2350. ஆய்பொற் புரிசை யணியாரகன் கோயி லெல்லாம்
காய்பொற் கடிகைக் கதிர்க்கைவிளக் கேந்தி மள்ளர்
மேய்பொன் னறையும் பிறவும்விரைந் தாய்ந்த பின்றைச்
சேய்பொற் கமல மகள்கைதொழச் சென்று புக்கான்.

கடிகை - துணித்தது; என்றது பொன்போர்த்த மூங்கிற்குழாயை.

**(இ - ள்.)** மள்ளர் கடிகையோடு கூடிய கைவிளக்கை ஏந்திப் புரிசை சூழ்ந்த கோயிலையும் பொன்னறையையும் பிற இடங்களையுமெல்லாம் கடுகிச் சோதித்துக் காவலிட்ட பின்பு, திருமகள் வணங்க அவ்விடத்தே முருகன் சென்று புக்கானென்க. (உச)

---

2349. குழை - குண்டலம். சங்கம் - சங்கினாற் செய்யப்பட்ட வளை; ஆகுபெயர். அலங்கலாகிய பொறையும்; அலங்கல் - மாலை; பொறை - பாரம். குழையை நீக்குதல்: சீவக. 2355. கண்ணினின்றும் முத்தை உருட்டி; "மாதர் செங்கண்.........புலம்புநீ ருருட்டி" (மணி. 3 : 8-9); முத்து - நீர்த்துளி. விம்மா - விம்மி. மாது ஆர் மயிலன்னவர் - காதல் நிறைந்த மயிலைப் போன்ற மகளிர். சண்பகச் சாம்பல் - சண்பகப் பூவின் வாடலை; சாம்பல் - பூவின் வாடல்; "ஆம்பற் பூவின் சாம்ப லன்ன" (குறுந். 46 : 1)

2350. புரிசையையுடைய கோயிலெல்லாம்; கோயில் - அரண்மனை. கடிகை - மூங்கிற்றுண்டு. கதிர் - ஒளி. மள்ளர், கைவிளக்கை ஏந்திப் பொன்னறையையும் பிறவற்றையும் ஆய்ந்த பின்றை; பொன்னறை - பொக்கிஷம். கமலமகள் - திருமகள். சேய் புக்கான்; சேய் - சீவகன்

2351. முலையீன்ற பெண்ணைத் திரடாமங்க டாழ்ந்து முற்றும்
மலையீன்ற மஞ்சின் மணிப்பூம்புகை மல்கி விம்மக்
கலையீன்ற சொல்லார் கமழ்பூவணைக் காவல் கொண்டார்
கொலையீன்ற வேற்கண் ணவர்கூடிய மார்பற் கன்றே.

தாழ்ந்து - தாழ. முலைபோலும் காயையீன்ற பனைபோலும் தாமம். மலையீன்ற மஞ்சுபோலே மாடமுற்றும் புகை நிறைந்து புறம்போத.

(இ - ள்.) கலைகளைத் தோற்றுவித்த சொல்லார், சீவகற்குப் பள்ளி யிடத்தை, தாழ விம்மக் காத்தலை மேற்கொண்டாரென்க. (உ௬)

2352. போர்க்கோல நீக்கிப் புகழ்ப்பொன்னி னெழுதப் பட்ட
வார்க்கோல மாலை முலையார்மண் ணுறுப்ப வாடி
நீர்க்கோலஞ் செய்து நிழல்விட்டுமிழ் மாலை மார்பன் [ருன்.
தார்க்கோல மான்றேர்த் தொகைமாமற் ருெழுது சொன்

(இ - ள்.) முத்தமாலை நிழல்வீசு மார்பன், போர்க்கோலத்தைப் போக்கி, பொன்னுலே எழுதப்பட்ட கச்சையும் கோலத்தையும் மாலையை யுமுடைய முலையார் நீராட்ட ஆடி அதற்குத்தக்க கோலத்தைச்செய்து தூசியினழகினையும் தேர்த்திரளையுமுடைய மாமனை வணங்கி ஒருமொழி கூறினுனென்க.

களவேள்வி முடித்துக் களத்தினின்றும் வருதலின், பின்னும் மஞ்சனமாடினுன். (உ௭)

2351. பெண்ணை - பனை. பெண்ணைபோன்ற திரண்ட தாமங்கள் தாழ மலையீன்ற மஞ்சினைப்போல் மாடமுற்றும் புகை விம்ம; மஞ்சு-வெண்மேகம்; விம்ம - மாடமெங்கும் சூழ்ந்துபோக. கலை - நூற்கலைகள். கலையீன்ற சொல்லாரென்றது, ‘சொல்வித்தகமுடையார்’ என்பதைக் குறிப்பித்தவாறு. பூவணை - பூவாலாகிய படுக்கையை. கண்ணவர் - மகளிர். மார்பற்கு - சீவகனுக்கு. சொல்லார், மார்பற்குப் பூவணையைக் காவல்கொண்டார்.

2352. போர்க்கோலம் : “ போர்க்கோலஞ் செய்து ” (கம்ப. கும்ப. 154). வார் - கச்சு. கோலம் - அலங்காரம். வாரையும் கோலத்தையும் மாலையையுமுடைய முலையார் ; நீராட்டும் மகளிர். மண்ணுறுப்ப - சீவகனை நீராட்ட. நீர்க்கோலம் செய்து - நீராடியபின், அணிதற்குத் தக்க அணிகளை அணிந்து. நிழல் - ஒளி. மார்பன் - சீவகன். தார்க் கோலம் - தூசியின் அழகு. கோலத்தையும் தேர்த்தொகையையுமுடைய மாமனைத் தொழுது ; மாமன் - கோவிந்தராசன்.

2353. எண்கொண்ட ஞாட்பி னிரும்பெச்சிற் படுத்த மார்பர், புண்கொண்டு போற்றிப் புறஞ்செய்கெனப் பொற்ப நோக்கிப், பண்கொண்ட சொல்லார் தொழப்பாம்பணை யண்ணல் போல, மண்கொண்ட வேலா னடிதைவர வைகி னானே.

ஞாட்பின் ; இன் : பொரு.

(இ - ள்.) [1] தேவாசுரம், இராமாயணம், மகாபாரதமென்கின்ற போரில் வீரர் புண்படுமாறுபோலப் புண்பட்ட வீரர் புண்ணைப்போற்றிக் கொண்டு காத்தருளுவீராகவென்று கூறினான் ; கூறித் தானும் கூடப் போய்ப்பொற்ப நோக்கிப் பின்பு பள்ளிகொண்டானென்க.

பலர் புண்களையுமறிந்து பரிகரித்தமையால், [2] அவனைக்கூறினான். செய்க : வேண்டிக்கோடற்பொருட்கண் வந்த வியங்கோள். இனி அப்போரோடு எண்ணுதல்கொண்ட போரென்று தேவர்கூற்றுமாம். " மண் கருதும் வேலான் " (சீவக. 1225) என்றதற்கு ' மண்கொண்ட வேலான் ' என்றார். (உஎ)

## (வேறு)

2354. வாள்க ளாலே துகைப்புண்டு வரைபுண் கூர்ந்த போல் வேழம், நீள்கால் விசைய நேமித்தே ரிமைத்தார் நிலத்திற் காண் கலாத், தாள்வல் புரவி பண்ணவிழ்த்த யானை யாவித் தாங் கன்ன, கோள்வா யெஃக மிடம்படுத்த கொழும்புண் மார்ப ரயா வுயிர்த்தார்.

2353. எண்கொண்ட ஞாட்பின் - எண்ணுதலைக் கொண்ட பழைய போர்களைப்போல. இரும்பெச்சிற்படுத்த மார்பர் - இரும்பாலுண்ணப் பட்ட மார்பினையுடைய வீரர் ; சீவக. 2281, அடிக். புறஞ்செய்க - காத்துக்கொள்க. சொல்லார் - மகளிர். பாம்பணையண்ணல் - திருமால். வேலான் : சீவகன். அடிதைவர - தன்பாதத்தை ஏவல்செய்வோர் வருட. வைகினான் - தானும் நித்திரை செய்தான்.

(உரை) [1] இவ்வுரையும், இதற்குரிய மூலமும், " உயிர்த்தொகை யுண்ட வொன்பதிற் றிரட்டியென், றியாண்டு மதியு நாளுங் கடிகையும், ஈண்டுநீர் ஞாலங் கூட்டி யெண்கொள " (சிலப். 27 : 8 - 10) என்பதனாலும், ' தேவாசுரயுத்தம் பதினெட்டாண்டிலும் இராமராவணயுத்தம் பதினெட்டு மாதத்திலும் பாண்டவ துரியோதன யுத்தம் பதினெட்டு நாளிலும் செங்குட்டுவனும் கனகவிசயரும் செய்த யுத்தம் பதினெட்டு நாழிகையிலும் முடிந்தவென்று எண்ண ' என்னும் அதன் அரும்பத வுரையாலும், " தேவாசுர ராமாயண மாபாரத முளவென், றோவாவுரை யோயும்படி யுளதப்பொரு களமே " (களம் பாடியது, 1) என்னுங் கலிங்கத்துப்பரணியாலும் பொருட்டொடர்பு பெற்று விளங்குதல் காண்க. [2] அவனை : திருமாலை.

2354. வரையிடத்துப் புண் கூர்ந்ததுபோலும் வேழம். கால் - காற்று. தாளால் வலிய புரவி. ஆவித்தன்ன - கொட்டாவி கொண்டாற் போன்ற. எஃகம் - வாள். இடம்படுத்த - புண்ணாகும்படி இடம் உண்டாக்கின. அயாவுயிர்த்தார் - இளைப்பாறினார் ; சீவக. 2108.

கூர்ப்பு - மிகுதி. ஆங்கு - அப்பொழுது.

(இ - ள்.) வேழமும், காற்றுப்போலும் விசையவாகிய தேரும், இமைத்தவர் பின்பு நிலத்திற் காணாத புரவியும், பண்ணவிழ்த்த யானை கொட்டாவி கொண்டாலனையவாம்படி வாள் இடம்படுத்தின புண்ணை யுடைய மார்பரும் இளைப்பாறினாரென்க. (உஅ)

2355. கொழுவாய் விழுப்புண் குரைப்பொலியுங் கூந்தன் மகளிர் குழைசிதறி, அழுவா ரழுகைக் குரலொலியு மதிர்கண் முரசின் முழக்கொலியும், குழுவாய்ச் சங்கின் குரலொலியுங் கொலைவல் யானைச் செவிப்புடையும், எழுவார் யாழு மேத்தொ லியு மிறைவன் கேளாத் துயிலேற்றான்.

(இ - ள்.) அழகிய இடும்பைதரும் புண்வாய் காற்றைப் புறப்பட விடுகின்ற ஒலியையும், பட்டவர்க்கு மகளிரழுகின்ற அழுகைக்குரலிற் பிறந்த ஒலியையும், முரசினது நடுங்கின கண் முழங்குதலிற் பிறந்த ஒலியையும், திரண்ட வாயையுடைய சங்கினது முழக்கத்தாலெழுந்த ஓசையையும், நொந்த யானையது செவிப்புடையையும், எழுவுவார் யாழை யும், ஏத்துகிற ஒலியையும் இறைவன் கேட்டுத் துயிலுணர்ந்தானென்க. (உகூ)

2356. தொடித்தோண் மகளி ரொருசாரார் துயரக் கடலு ளவர்நீந்த, வடிக்கண் மகளி ரொருசாரார் வரம்பி லின்பக் கடனீந் தப், பொடித்தான் கதிரோன் றிரைநெற்றிப் புகழ்முப் பழநீர்ப் பளிங்களைஇக், கடிப்பூ மாலை யவரேந்தக் கமழ்தா மரைக்கண் கழீஇயினான்.

---

2355. விழுப்புண் - முகத்திலும் மார்பிலும் பட்ட புண்; குறள், 776, பரிமேல். புண்குரைப்பொலி : "மலர்மார்பின், வென்வேன் முகந்தபுண் வெய்துயிர்ப்ப" (பு - வெ. 62). குழைசிதறியது மங்கல மிழந்ததைக் குறித்தது; "மாற்றரசர் மணிமுடியுந் திறலுந் தேசு மற்றவர்தங் காதலிமார் குழையுந் தந்தை, காற்றளையு முடன்கழல வந்து தோன்றி" (பெரியதிரு. 4. 4 : 1). செவிப்புடை - காதைப் புடைத்த லாற் பிறந்த ஓசை. இறைவன் : சீவகன். கேளா - கேட்டு. துயி லேற்றான் - தூக்கத்தினின்றும் விழித்தான், "கயலேர் கண்ணி துயிலேற் றெழவே" (பெருங். 2. 11 : 66)

2356. அவர் : "செல்லா றிழுக்கிச் சுடுகாடவள் சேர்ந்த வாறும்" (சீவக. 9) என்பதனுள் 'அவள்' என்பதற்கு எழுதிய விசேடவுரை இங்கே அறிதற்பாலது. வடிக்கண் - மாவடுவின் பிளவைப்போன்ற கண். வரம்பு இல் - எல்லை இல்லாத. பொடித்தல் - தோன்றுதல். நெற்றி - உச்சியில். முப்பழநீர் : சீவக. 75. அளைஇ - கலந்து. கடி - மணம்; சிறப்புமாம். கண்கழீஇயினான் : அவையல்கிளவி; தொல். எச்ச. 46, ந.

(இ - ள்.) பட்டவருடைய மகளிரொருகூற்றுர் துன்பக்கடலிலே நீந்தா நிற்க, வென்றவர்மகளிரொருகூற்றுர் இன்பக்கடலிலே நீந்தா நிற்கக் கதிரோன் கடலிலே தோன்றினுன்; அப்பொழுது அவன் கடு, நெல்லி, தான்றி ஊறின நீரிலே கருப்பூரத்தைக் கரைத்து மகளிரேந்தக் கண்ணைக் கழீஇயினுனென்க. (௩௦)

2357. முனைவற் றொழுது முடிதுளக்கி முகந்து செம்பொன் கொளவீசி, நினைய லாகா நெடுவாழ்க்கை வென்றிக் கோல விளக் காகப், புனையப் பட்ட வஞ்சனத்தைப் புகழ வெழுதிப் புனை பூணுன், கனைவண் டார்க்கு மலங்கலுங் கலனு மேற்பத் தாங் கினுன்.

(இ - ள்.) பூணுன், பிறராற் பெறலாமென்று கருதலாகாத செல்வத் திற்கும், வெற்றிக்கோலத்திற்கும் விளக்கமாம்படி முனைவனை அஞ்சலி செய்து வணங்கித் தானம் பண்ணிக் கைசெய்யப்பட்ட அஞ்சனத்தை யெழுதி அலங்கலையும் கலத்தையும் பொருந்தத் தாங்கினுனென்க. (௩௧)

2358. முறிந்த கோல முகிழ்முலையார் பரவ மொய்யார் மணிச் செப்பில், உறைந்த வெண்பட் டுடுத்தொளிசேர் பஞ்ச வாசங் கவுட்கொண்டு, செறிந்த கழுநீர்ப் பூப்பிடித்துச் சேக்கை மரீஇய சிங்கம்போல், அறிந்தார் தமக்கு மநங்கனு யண்ணல் செம்மாந் திருந்தானே.

(இ - ள்.) அண்ணல், தளிர்த்த கோலத்தை யுடைய முகிழ்த்த முலையார் பரவ உடுத்துக் கவுட்கொண்டு பூவைப்பிடித்து இக்கோலத் தாலே அறிந்தார்க்கும் அநங்கனேயாய், ஆண்மையினுற் சேக்கையை மரீஇயதொரு சிங்கம் போலே அச்சேக்கையிலே வீற்றிருந்தானென்க.

முலையார் மெலியவும் பாடம். இது மற்றைநாளிற் [1] சமயம். (௩௨)

2357. முனைவற் றொழுது - அருகனை வணங்கி; துளக்கி - வணங்கி; "துளங்கா மணிமுடியார்" (தே. திருநா. பந்தணை.). கொள்ளும்படி செம்பொன்னை வீசி. நெடுவாழ்க்கை - அரசச் செல்வம். அஞ்சனம் - மை; அரசர் மை யணிந்துகொள்ளுதல் மரபு; "அமிழ்தியல் யோகத் தஞ்சனம் வகுத்து" (பெருங். 1. 34 : 15). கனைவண்டு - மிகுதியான வண்டு. அலங்கல் - மாலை. கலன் - ஆபரணம். மு : பெருங். 1. 34 : 14-8.

2358. முறிந்த - தளிர்த்த. முகிழ் - அரும்பெனினுமாம். செப்பி லுறைந்த பட்டு : சீவக. 1299, அடிக். பஞ்சவாசம் : சீவக. 838. கழு நீர்ப்பூப் பிடித்து : சீவக. 429. சேக்கை......இருந்தான் : சீவக. 2371; பெருங். 1. 34 : 146 ; சூளா. அரசியற். 388. சேக்கை - ஆசனத்தில். மரீஇய - பொருந்திய. அநங்கனுயென்றது அறிய முடியாமை பற்றி.

(உரை) [1] சமயமென்றது சமயமிருக்கும் மண்டபத்தே வீற்றிருந்த காட்சியை; சீவக. 2370, ந; மலைபடு. 549, ந. ; "சமயமண்டப நிறைந்திருந்த திரிசங்கு மைந்தன்" (அரிச்சந்திர. வேட்டஞ்செய். 16)

2359. வார்மீ தாடி வடஞ்சூடிப் பொற்பார்ந் திருந்த வன முலையார், ஏர்மீ தாடிச் சாந்தெழுதி யிலங்கு முந்நீர் வலம்புரி போற், கார்மீ தாடிக் கலம்பொழியுங் கடகத் தடக்கைக் கழ லோனைப், போர்மீ தாடிப் புறங்கண்ட புலால்வேன் மன்னர் புடைசூழ்ந்தார்.

ஆடி - ஆட.

(இ - ள்.) கச்சையறுத்துச் சூடிஆர்ந்து அடிபரந்த முலையாரது அழகு மேலாம்படி சாந்தையுமெழுதிக் காரை வென்று சங்கநிதிபோற் கலத்தையும் பொழியும் கையினையுடைய கழலோனைப் போரை வென்று பகைவரைப் புறங்கண்ட அரசர் சூழ்ந்தாரென்க. (௩௩)

(வேறு)

2360. தொல்லை நால்வகைத் தோழருந் தூமணி நெடுந்தேர்
மல்லற் றம்பியு மாமனு மதுவிரி கமழ்தார்ச்
செல்வன் றாதையுஞ் செழுநக ரொடுவள நாடும்
வல்லைத் தொக்கது வளங்கெழு கோயிலு ளொருங்கே.

(இ - ள்.) தோழரும் தம்பியும் மாமனும் தாதையும் பழைய ஊரும் நாடும் கோயிலிலே விரையத் திரண்டனவென்க.

நந்தட்டன் சிறந்தமையிற் கூறினர். [1] திணைவிராய் எண்ணி அஃறிணையான் முடிந்தது ; [2] பன்மையொருமை மயக்கம். (௩௪)

---

2359. வார் - கச்சு. வடம் - முத்துவடம். பொற்பு ஆர்ந்திருந்த - பொலிவு நிறைந்திருந்த. முந்நீர் வலம்புரி - கடலில் தோன்றிய வலம்புரி யென்னும் சங்கு. கார் மீதாடி - மேகத்தை வென்று. கலம்பொழியும் கை - இரப்போர்க்கு ஆபரணங்களை அளிக்கும் கை ; " இலம்படு புலவ ரேற்றகைந் நிறையக், கலம்பெயக் கவிழ்ந்த கழறொடித் தடக்கையின் " (மலைபடு. 576 - 7) ; " கலம்பெயக் கவிழ்ந்த கழறொடித் தடக்கை " (அகநா. 213) ; " கழறொடி கவைஇய கலம்பொழி தடக்கை " (பெருங். 1. 35 : 102). போர்மீதாடி - போரில் வென்று. புறங்கண்ட - பகைவர் முதுகைக் கண்ட.

2360. தொல்லை - பழமை. நால்வகைத் தோழர் : சீவக. 776, அடிக். மல்லல் - வளன். மாமன் - கோவிந்தராசன். மது விரி - தேன் பரவுகின்ற. தாதை - கந்துக்கடன். வல்லை - விரைய. கோயிலுள் தொக்கது என்க.

(மேற்.) மு : நன். பொது. 27, மயிலை. சங்கர ; இ - வி. பொது. 4.

(உரை) [1] தொல். கிளவி. 51. [2] மயக்கமென்றது தொக்கதென்னும் ஒருமை வினைமுற்றைக் கருதி.

2361. துளங்கு வெண்மதி யுகுத்தவெண் கதிர்தொகுத் தது போல், விளங்கு வெள்ளியம் பெருமலை யொழியவந் தெழிலார், வளங்கொண் மாநகர் மழகதிர் குழீஇயின போலக், களங்கொண் டீண்டினர் கதிர்முடி விஞ்சையர் பொலிந்தே.

(இ - ள்.) மதி சொரிந்த கதிரைக் குவித்த தன்மைபோல் விளங்கும் வெள்ளிமலையிலே கலுழவேகனிருப்ப, ஒழிந்த விஞ்சையரெல்லாரும் வந்து மாநகரை இடங்கொண்டு இளங்கதிர் திரண்டாற்போலே பொலிந்து ஈண்டினரென்க.

ஒழிய - தங்க. (௯௬)

2362. (க) எண்ண மென்னினி யெழின்முடி யணிவது துணிமின்
கண்ண னாரொடு கடிகையும் வருகென வரலும்
பண்ணி னார்முடி பழிச்சிய மணிபொனிற் குயிற்றி
அண்ண லாய்கதி ரலம்வரப் புலமக ணகவே.

2363. (உ) விரியு மாலையன் விளங்கொளி முடியினன் றுளங்கித்
திருவின் மால்வரைக் குலவிய தனையதோர் தேந்தார்
அருவி போல்வதோ ராரமு மார்பிடைத் துயல
எரியும் வார்குழை யிமையவ னொருவன்வந் திழிந்தான்.

இவையிரண்டும் ஒரு தொடர்.

(க) இனியென்றது, காலங்கழிக்குமது அன்றென்றவாறு. என்றதனானே, புரோகிதன்முதலாகத் துறைதோறும் வரிக்கவேண்டுவாரை வரித்ததுவும், அங்குரார்ப்பணம் அதிவாசம் முதலிய சடங்குகளெல்லாம்

2361. உகுத்த - சொரிந்த. வெள்ளியம் பெருமலை - வித்தியாதரர் வாழும் மலை. ஒழிதல் - தங்குதல்; "மின்னுக்கொடியொத் தொழிந்திட்டாள்" (சீவக. 2504). மழகதிர் - இளஞ்சூரியன். களம் - இடம். விஞ்சையர் குழீஇயின போலப் பொலிந்து ஈண்டினர்.

2362. இனி எண்ணம் என் - இனிமேலும் கருதுவது யாதுளது? முடி அணிவது - கீரீடத்தைச் சூட்டுவதை. வரலும் - வந்தவுடன். மணியைப் பொன்னிற் குயிற்றி முடிபண்ணினார்; குயிற்றி - அழுத்தி. கதிர் அலம்வர - சூரியன் மனம் சுழலும்படி. புலமகள் - நாமகள்.

2363. திருவில் - இந்திரவில். வரைக்குலவியது அனையது - மலையில் விளங்கியதைப் போன்றதாகிய. தார் - மாலையும்; உம்மை விரிக்க. மாலைக்குத் திருவில்: சீவக. 2425; அகநா. 175 : 15-6 : பெருங். 3 : 14 : 168. ஆரம் - முத்துமாலை. அருவி முத்துமாலைக்கு; சீவக. 35, அடிக். துயல - அசைய. எரியும் - விளங்கும்.

நிகழ்த்தி முகூர்த்தம் பார்த்திருந்ததுவும் தோன்றக் கூறிற்றும். கண்ணனுர் - உபதிருஷ்டா ; என்றது புரோகிதனை ; இஃது [1] ஒருவரைக் கூறும் பன்மை. கடிகை - [2] முகூர்த்த விதானி. பழிச்சிய - புகழ்ந்த. மணிகளைப் பொன்னிலே அழுத்தி அவற்றின் கதிர்கள் அசையும்படி முடியைப் பண்ணினுருமென்க. அண்ணல் - தலைமை.

(இ - ள்.) முன்தொக்கவரெல்லாரும் முடியணியுந் தன்மையைத் துணிமினென்று அமைச்சரை நோக்கிக் கூற, அவரும் முடியைப் பண்ணினுரும், கடிகையும், கண்ணனுரும் வருகவென்றழைப்ப, அவர்கள் வந்த அளவிலே, திருவில் துளங்கி மால்வரையிலே குலவிய தன்மையையொப்பதொரு தாரும், அருவிபோல்வதொரு முத்தாரமும் மார்பிலே துயலாநிற்ப, விளங்கொளி விரியுமியல்பினனும் முடியினனும் இமையவனெருவன் வந்திழிந்தானென்க.

முடியமைத்தற்குக் கூறிய நூலெல்லாம் முற்ற முடித்தலின், நாமகள் மகிழவென்ருர் ; புலமகள் நகப் பண்ணினுருமென்க. (நூ௭ - எ)

2364. கொம்மை யார்ந்தன கொடிபட வெழுதின குவிந்த, அம்மை யார்ந்தன வழகிய மணிவட முடைய, வெம்மை செய்வன விழுத்தகு முலைத்தட முடைய, பொம்மெ லோதியர் பொழி மின்னுக் கொடியென விழிந்தார்.

(இ - ள்.) அவன்தேவியர், பெருமையார்ந்தன, எழுதப்பட்டன, குவிந்தன, அழகிய கருமைநிறைந்தன, வடமுடையன, கொடியனவாகிய முலையையுடைய ஒழுகுகின்ற மின்னெழுங்கென இழிந்தாரென்க.

பொங்கி மெத்தென்ற ஓதி. (௩அ)

2365. மையல் யானையின் படுமதங் கெடப்பகட் டரசன், செய்த மும்மதம் போற்றிசை திசைதொறுங் கமழும், தெய்வ வாசத்துத் திருநகர் வாசங்கொண் டொழிய, வெய்யர் தோன் றினர் விசும்பிடைச் சிறப்பொடும் பொலிந்தே.

(உரை) [1] தொல். கிளவி. 27. [2] முகூர்த்தம் விதிப்பவன்.

2364. கொம்மை - வட்டம் எனினும் ஆம். கொடி - தொய்யிற் கொடி. அம்மை - அழகிய கருமை. மணிவடம் - முத்துவடம். வெம்மை - விருப்பம். தடம் - உயர்ந்த இடம். பொம்மெலோதி : சீவக. 1674. மின்னுக்கொடி - மின்னலின் ஒழுங்கு ; கொடி - ஒழுங்கு ; "கொடிக்கூரை" (புறநா. 22 : 15, உரை). இழிந்தார் - இறங்கினுர்.

2365. மையல் - மயக்கம். படுமதம் - தோன்றிய மதம் ; மிக்க மதமெனலுமாம். பகட்டரசன் - யானைகளுக்குத் தலைவனுன யூதநாதன்; சீவக. 2436 ; கம்ப. வரைக்காட்சி. 7. யானையின் மும்மதம் நாறுதல் :

(இ - ள்.) இழிந்தவர்கள், யானையின்மதங் கெடும்படி களிற்றரச னுண்டாக்கின மதம்போலே திசைதோறும் கமழும் தெய்வமணத்தாலே நகரிலுள்ள மணம் கைக்கொள்ளப்பட்டு அடங்கும்படி பொலிந்து கடுக நகரிடத்தே தோன்றினரென்க.

சிறப்பென்றது உபகரிக்கக் கொண்டுவந்தனவற்றை. (ரு௯)

2366. வெருவி மாநகர் மாந்தர்கள் வியந்துகை விதிர்ப்பப்
பருதி போல்வன பாற்கட னூற்றெட்டுக் குடத்தாற்
பொருவில் பூமழை பொன்மழை யொடுசொரிந் தாட்டி
எரிபொ னீண்முடி கவித்தனன் பவித்திரற் றெழுதே.

சொரிந்து - சொரிய.

(இ - ள்.) பூமழை பொன்மழையோடே சொரியாநிற்க, அவன் பருதி போலும் நூற்றெட்டுக்குடத்தாலே பாற்கடலிலே முகந்து ஆட்டி, மாந்தர் அஞ்சி வியந்து கைவிதிர்க்கும்படி தொழுது முடியைக் கவித்தானென்க.

'பவித்திரன்' என்றார், நெஞ்சிற்றூய்மை தோன்ற. [1] ஆசிரிய னுதலிற்றெழுதான். (௬௦)

2367. தேவ துந்துபி தேவர்கட் கோகையுய்த் துரைப்பான்
ஆவி யம்புகை யணிகிளர் சுண்ணமோ டெழுந்த
நாவி னேத்தின ரரம்பையர் நரம்பொலி யுளர்ந்த
காவன் மன்னருங் கடிகையுங் கடவது நிறைத்தார்.

தேவதுந்துபி - தெய்வவாச்சியம். அவி ஆவி யெனவிகாரம்; என்றது, ஹோமத்தால் விளைந்த ஹவிஸ்ஸை. நரம்பு பாட்டொலியோடே வாசிக்கப்பட்டன; மன்னர் கைக்காணிக்கையிட்டு வணங்கினர்; கடிகையர் மங்கலம் பாடினர்.

---

"நாகாதிபன் விடுமும்மத நாறுந்திசை புக்கான்" (வி - பா. அருச்சுனன் தீர்த்த. 10). வாசத்து - வாசனையால். ஒழிய - நீங்கும்படி. யானை யரசன் தன்மதத்தால் மற்ற யானைகளைக் கெடுத்தல் : சீவக. 750, 2313. விசும்பிடைச் சிறப்பு - தேவலோகத்திலுள்ள சிறந்த பொருள்கள்.

2366. வெருவி - அச்சமுற்று. கைவிதிர்த்தல் : பெருங். 1. 32 : 58. பருதி - சூரியன். குடத்தால் ஆட்டி. பொரு - ஒப்பு. முடிகவித்தல் சுதஞ்சணன் செயல். பவித்திரன் - தூயவன் : என்றது சீவகனை; சீவக. 1169, 2655.

(உரை) [1] பஞ்சநமஸ்காரத்தை உபதேசித்தமையின் சீவகனை ஆசிரியனென்றார்.

2367. தேவதுந்துபி எழுந்த என்க. நரம்பு - வீணையின் நரம்பு. ஒலி - மிடற்றுப்பாட்டின் ஒலி. கடிகை : சீவக. 1844, ந. கடவது - கடமையை ; என்றது கடிகையார் மண்ணுமங்கலம் பாடுதலை ; தொல். புறத். 36, ந.

**(இ - ள்.)** துந்துபி, உரைத்தற்கு அவியோடும், புகையோடும் சுண்ணத்தோடும் எழுந்தன; அரம்பையரேத்தினர்; உளர்ந்தன; மன்னரும் கடிகையரும் நிறைந்தாரென்க.

ஏத்துநர் பாடமாயின், ஏத்துநராகிய அரம்பையரென்க. (சக)

2368. திருவ மாமணிக் காம்பொடு திரள்வடந் திளைக்கும்
உருவ வெண்மதி யிதுவென வெண்குடை யோங்கிப்
பரவை மாநில மளித்தது களிக்கயன் மழைக்கட்
பொருவில் பூமகட் புணர்ந்தன னிமையவ னெழுந்தான்.

திருவமாமணி - அழகிய மணி; அ : அசை. காம்பும் வடமும் திளைக்கும் மதி; இல்பொருளுவமை. குடை - அபிடேகாங்கமாகிய கொற்றக்குடை.

**(இ - ள்.)** குடை ஓங்கி நிலத்தை அளித்தது; அங்ஙனமளித்தலிற் கயல்போலுங் கண்ணையுடைய பூமகளை அவன் புணர்ந்தான்; புணர்ந்த பின் சுதஞ்சணன் போயினனென்க. (சஉ)

(வேறு)

2369. மின்னுங் கடற்றிரையின் மாமணிக்கை வெண்கவரி விரிந்து வீசப், பொன்னங் குடைநிழற்றப் பொன்மயமா முழைக் கலங்கள் பொலிந்து தோன்ற, மன்னர் முடியிறைஞ்சி மாமணி யங் கழலேந்தி யடியீ டேத்தச், சின்ன மலர்க்கோதைத் தீஞ் சொலார் போற்றிசைப்பத் திருமால் போந்தான்.

---

2368. வடம் - முத்துமாலை. திளைக்கும் - இடைவிடாமல் தங்கும். உருவம் - அழகு. வெண்குடைக்கு மதி உவமை. பூமகட் புணர்ந்தனன் - பூமியாகிய பெண்ணைச் சேர்ந்தனன்; இவ்விலம்பகத்தின் பெயர் இதனுட் குறிப்பிட்டமை காண்க.

2369. கடற்றிரையின் - பாற்கடலின் அலையைப்போல; "பாலின் வெண்பர வைத்திரை......பரந்தெனச் சாமரை பதைப்ப" (கம்ப. நிந்தனைப். 16). பொன்னங்குடை நிழற்ற : சிலப். 28 : 1-2; நிழற்ற - நிழலைச் செய்ய. உழைக்கலம் - பக்கத்தில் வைத்துக்கொள்ளுதற்குரியன வும், பொன், வெள்ளி முதலியவற்றாற் செய்யப்பட்டனவுமான பாத்திரங் கள்; பெருங். 1. 39 : 58, 56 : 197; "உழைக்கல மாதர்களேந்தி வர" (மேரு. சமவசரண. 232); "மங்கல வுழைக்கல மருங்கு சேர்ந்தன", "மங்கல வுழைக்கலம் பரப்ப", "மகளிர் மங்கல வுழைக்கலஞ் சுமந்த னர்", "உழைக்கலமகளி ரென்று" (சூளா. குமாரகால. 19, மந்திர சாலை. 140, தூதுவிடு. 39, கல்யாண. 172). மன்னர்...அடியீடேத்த : "அருந்திறன் மாக்க ளடியீ டேத்த" (சிலப், 26 : 90); "அணங்கனையா ரடியீடேத்த" (சூளா. சுயம்வர. 247). சின்ன மலர் : சீவக. 2251, அடிக்.; "சின்னமாம் பன்மலர்க ளன்றே சூடி" (தே. திருநா. நாகைக் காரோணம்)

(இ - ள்.) திரைபோற் கவரி வீசத் திருவின் வடிவாகிய குடை உலகை நிழற்றக் கலங்கள் தோன்ற ஏத்த இசைப்பத் திருமால் நன்னில மிதித்தற்குப் போந்தானென்க.

பொன் - திரு ; " நன்பொன் போகிய வொண்பொன் ஞரம் " போல. இது பவனிக்குடையாதலிற் பொற்குடையாயிற்றென்றுமாம். கழலை யேந்தி அடியிடுதலை மன்னர் முடியாலே யிறைஞ்சி ஏத்த. சின்னமலர் - விடுபூ. காத்தற்றொழிலாலும், வடிவாலும் திருமாலென்றே கூறினார். அடுத்து இரண்டு பவனி அரசர்க்காகாமையிற் கல்யாணத்திற்குப் பின்பு பவனிகூறுவார் ஈண்டு நன்னிலமிதித்து மண்டபத்தே புகுந்தமை தோன்ற 'அடியீடேத்த' என்றார். (சங)

2370. மந்தார மாமாலை மேற்றொடர்ந்து தழுவவராத் தாம மல்கி, அந்தோவென் றஞ்சிறைவண் டேக்கற வின்புகைபோய்க் கழுமி யாய்பொற், செந்தா மரைமகளே யல்லதுபெண் சாராத திருவின் மிக்க, சிந்தா மணியேய்ந்த சித்திரமா மண்டபத்துச் செல்வன் புக்கான்.

தழுவவராத் தாமங்களில் தேனை உண்ணப்பெறுதே வண்டுகள் ஏக்கறும்படி புகை பரந்து. திருவல்லது பெண்சாராததெனவே [1]சமய மிருக்குமண்டபமாம்.

(இ - ள்.) தொடரப்பட்டு மல்கப்பட்டுக் கழுமப்பட்டுத் திருவல்லது பெண் சாராத மண்டபத்தே திருவான்மிக்க சிந்தாமணியின் தன்மை பொருந்திய செல்வன் புக்கானென்க.

மேல் நினைத்தன கொடுக்கின்றானுதலின், 'சிந்தா மணியேய்ந்த செல்வன்' என்றார். (சச)

2371. பைங்க ணுளையெருத்திற் பன்மணி வாளெயிற்றுப் பவள நாவிற், சிங்கா சனத்தின்மேற் சிங்கம்போற் றேர்மன்னர் முடிகள் சூழ, மங்குன் மணிநிற வண்ணன்போல் வார்குழைக டிருவில் வீசச், செங்கட் கமழ்பைந்தார்ச் செஞ்சுடர்போற் றேர்மன்ன னிருந்தா னன்றே.

---

2370. கழுமி - செறிந்து. சீவகனைச் சிந்தாமணி யென்று அவன் தாய் அழைத்தது (சீவக. 311) இங்கே நினைத்தற்குரியது. செந்தாமரை மகளே அல்லது பிறபெண் சாராத மண்டபம் : பெருங். 2. 4 : 21-2.

(உரை) [1] சமயமிருக்கும் மண்டபம் - திருவோலக்க மண்டபம்.

2371. பைங்கண்...சிங்கம் : "பைங்கண் மதர்வைப் பகுவா யரி யேறு" (சூளா. பாயிரம், 1). உளை - பிடரிமயிர். சிங்கம் மன்னர் களுக்கு உவமை. மங்குல் - மேகமுமாம். மணிநிறவண்ணன் - திருமால். செஞ்சுடர் - சூரியன். சூரியனை உவமை கூறுதலின் தேர்மன்னனென்று கூறினர்.

(இ - ள்.) பைந்தாரையுடைய மணிநிறவண்ணன்போலுஞ் சீவகன், முடிகளையுடைய தேர்மன்னர் சிங்கம்போற் சூழக் குழைகள் திசையெங்கும் வில்லை வீசக் கண்முதலியவற்றையுடைய சிங்காசனத்தே ஞாயிறுபோல வீற்றிருந்தானென்க.

மங்குல் - திசை. எனவே தந்தையைப்போல் இருந்தானென்றார். (சஉ)

(வேறு)

2372. வார்பிணி முரச நாண வானதிர் முழக்க மேய்ப்பத்
தார்பிணி தாம மார்பன் றம்பியை முகத்து ணோக்கி
ஊர்பிணி கோட்டஞ் சீப்பித் துருதவ ஞண்ட நாட்டைப்
பார்பிணி கறையி னீங்கப் படாமுர சறைவி யென்றான்.

[1] உள் : உருபுமயக்கம் பாரிற்குக் கட்டின கடமையினின்று நீங்க. என்றது, ஆறிலொன்றையும் தவிரவென்றவாறு.

(இ - ள்.) சீவகன், தம்பியை முகத்தை நோக்கி ஊர்களிலுள்ளாரைப் பிணித்த சிறைக்கோட்டத்தையும் இடிப்பித்து முன் அரசாட்சியுருதவன் ஆண்ட நாட்டைப் [2] பதினறியாண்டளவும் கடமைகொள்ளாமை தோன்ற முரசறைவி யென்று முரசம் நாண வான்முழக்க மேய்ப்பக் கூறினனென்க.

கறையினீங்கவென்பது கடமைகொள்ளாமையென்னும் பொருட்டாய் நாட்டையென்னும் இரண்டாவதற்கு முடிபாயிற்று ; ஐ : அசையுமாம். (சங)

2373. கடவுள ரிடனுங் காசில் கணிபெறு நிலனுங் காமர்
தடவளர் முழங்குஞ் செந்தீ நான்மறை யாளர் தங்கள்
இடவிய நிலத்தோ டெல்லா மிழந்தவர்க் கிரட்டி யாக
உடனவை விடுமி னென்று ரொளிநிலா வுமிழும் பூணான்.

2372. முரசும் வான்முழக்கமும் : சீவக. 543, ந. அரசர் முடிசூடுங் காலத்தும் மகப்பெற்ற காலத்தும் சிறைவிடுதலும் வரிநீக்குதலுமாகியவற்றைச் செய்தல் மரபு; சீவக. 306 ; "சிறைப்படு கோட்டஞ் சீமி னியாவதும், கறைப்படு மாக்கள் கறைவீடு செய்ம்மின்", "சிறையோர் கோட்டஞ் சீமி னியாங்கணும், கறைகெழு நாடு கறைவீடு செய்ம்மின்" (சிலப். 23 : 126-7, 28 : 203 - 4) ; மணி. 19 : 157-62 ; பெருங். 3. 27 : 220. தாமமார்பன் - சீவகன். உருதவனென்றது கட்டியங்காரனை. பார்பிணி கறை - நிலத்தை வரையறுத்துக் கட்டி அளவிட்ட வரி. படா - ஒலி அடங்காத.

(உரை) [1] 'முகத்துள்' என்பதில் உள்ளது. [2] ஏழாண்டென்பதும் ஒரு மரபென்று தெரிகின்றது : "சிறைவிடுமின் சிறைக்களமுஞ் சீத்திடுமினேழாண்டு தேயத் தீட்டும், இறைவிடுமின்" (திருவிளை. 4 : 28)

2373. கடவுளர் இடன் - தேவாலயங்களுக்கு விட்ட இறையிலி நிலங்கள். தடவென்றது தூபமுட்டியின் பெயர் ; இங்கே ஓமகுண்டத்திற்

(இ - ள்.) அங்ஙனஞ் சாற்றக் கூறிய பூணன், பின்பு அமைச்சரை நோக்கி, அந்தணர்தம்முடைய பெரிய இறையிலிநிலத்தோடே தேவர்கள் இறையிலிநிலத்தையும் சோதிடநூலோர் இறையிலிநிலத்தையும் ஒழிந்த இறையிலிநிலங்களையும் முன்புபோலே இறையிலியாக விடுமினென்று பின்னும் அவனுண்ட காலத்து அவற்றையுடனிழந்தவர்க்கு இரட்டியாக விடுமினென்றானென்க.

விடுமினென்ற முன்னிலைப்பன்மையான் அமைச்சரை நோக்கிக் கூறினமை யுணர்க. [1] விடுமினென்றதனை இரண்டிடத்திற்கும் ஏற்றுக. உடனிழத்தல் - அவன் சேர மாற்றுதலின் இழத்தல். (சஎ)

2374. (க) என்றலுந் தொழுது சென்னி நிலனுறீஇ யெழுந்து போகி, வென்றதிர் முரசம் யானை வீங்கெருத் தேற்றிப் பைம்பொற், குன்றுகண் டனைய கோலக் கொடிநெடு மாட மூதூர்ச், சென்றிசை முழங்கச் செல்வன் றிருமுர சறைவிக் கின்றான்.

2375. (உ) ஒன்றுடைப் பதினை யாண்டைக் குறுகட னிறைவன் விட்டான், இன்றுளீ ருலகத் தென்று முடனுளீ ராகி வாழ்மின், பொன்றுக பசியு நோயும் பொருந்தலில் பகையு மென்ன, மன்றல மறுகு தோறு மணிமுர சார்த்த தன்றே.

2376. (ங) நோக்கொழிந் தொடுங்கி னீர்க்கு நோய்கொளச் சாம்பி னீர்க்கும், பூக்குழன் மகளிர்க் கொண்டான் புறக்கணித் திடப்பட் டீர்க்கும், கோத்தரு நிதியம் வாழக் கொற்றவ னகரோ டென்ன, வீக்குவார் முரசங் கொட்டி விழுநக ரறைவித் தானே.

காயிற்று ; "வடபான் முனிவன் றடவினுட் டோன்றி" (புறநா. 201 : 8); "வடதிசை மருங்கின் மறைகாத் தோம்புநர், தடவுத்தீ யவியாத் தண் பெரு வாழ்க்கை" (சிலப். 26 : 248 - 9). தடாவென்பது தடவு, தட, தடமெனவும் வழங்கும் ; திருச்சிற். 202, கொளு, பேர் ; தக்க. 475. இடவிய - பரந்த இடங்களையுடைய. உடன் - ஒருங்கே.

(உரை) [1] நிலத்தோடு இடனும் நிலனும் எல்லாம் விடுமின், அறை விடுமினென இரண்டிடத்தும் கூட்டி உரைசெய்தார்.

2374. குன்று மாடத்திற்கு உவமை.

2375. ஒன்றுடைப் பதினையாண்டைக்கு - பதினாறு வருடங்களுக்கு. கடன் - வரி. பசியும் நோயும் பகையும் பொன்றுக : சீவக. 377 ; "பசியும் பிணியும் பகையு நீங்கி" (சிலப். 5 : 72, மணி. 2 : 70) ; குறள், 734. மன்றல மறுகு - மணத்தையுடையனவாகிய வீதிகள்.

2376. நோக்கு - பார்வை. மகளிர் - பரத்தையர் பொருட்டாக. கொண்டான்-கணவன்; புறக்கணித்திடப்பட்டீரென்பதற் கேற்ப எழுவாய்

இவை மூன்றும் ஒரு தொடர்.

(க) அறைவிக்கின்றான் : பெயர்.

(உ) உறு - மிகுதி. என்ன - என்று பறையன் கூறுநிற்க; என்ன முரசம் ஆர்த்ததென்க. அன்றே - அப்பொழுதே.

(ங) நோக்கொழிந்தார் - கண்கெட்டவர். சாம்புதல் - பொருளின்றிக் குவிதல். மகளிர் - பரத்தையர்; பரத்தையரிடத்து வேட்கையாலே கொண்டவன் பாதுகாவாத வறுமையையுடைய மகளிர்க்கும். கோ - பசு: [1] கோத்தலை விகாரமாக்கி, கோத்தலைத் தருநிதியம் - இடையறுத பொருளென்றுமாம்.

(இ - ள்.) என்று சீவகன் கூறின அளவிலே, நந்தட்டன் எழுந்திருந்து தொழுது வணங்கிப்போய் மூதூரிலே விரையச் சென்று முழங்கும்படி முரசறைவிக்கின்றவன், முரசறைவிக்கின்றவனுக்கு இறைவன் அருளிய மொழியைச் சாற்றென்று கூற, அவனும் வென்றதிர் முரசத்தை யானை யெருத்தத்திலேற்றிப் பசியும் நோயும் பகையும் போன்றுக; இன்றுளீர்! உலகத்துடனே என்றுமுள்ளீராய் வாழ்வீரென வாழ்த்தி, இறைவன் இந்நாட்டைப் பதிறுண்டிற்குக் கடமையிழந்தானென்று கூறுநிற்க முரசமார்த்தது; அப்பொழுதே நோக்கொழிந்தீர்க்கும் சாம்பினீர்க்கும் புறக்கணிக்கப்பட்டீர்க்கும் கொற்றவன் மனைகளுடனே கோவையும் நிதியத்தையும் நீர் வாழும்படி தருமென்று முரசறைவான் கூறும்படி அவனுக்கறிவித்து அவனைக் கொண்டு நகரிலே முரசைக்கொட்டி அறைவித்தானென்க.

[2] அரசன் கூறுதன தான் கூறிச் சாற்றுவித்தானல்லன்; அவன் அரசாட்சி பெற்றுச் செய்யும் அறங்கள் தனக்கு முற்கூறியவற்றைப் பின் தான் சாற்றுவித்தானென்று கொள்க. (சஅ - ௬௦)

---

பன்மையாக வாராமையின் ஒருமை பன்மை மயக்கம்; "ஏவ லிளையர் தாய் வயிறு கரிப்ப" என்புழிப்போல. நகர் - வீடு. வீக்கு வார் முரசம் - வாரால் கட்டப்பெற்ற முரசம்.

(உரை) [1] கோ - கோத்தல்; முதனிலைத் தொழிற்பெயரெனக் கொள்ளுதலும் பொருந்தும். [2] 2372, 2373-ஆம் பாடல்களில் சீவகன் இட்ட கட்டளையினும் வேறுன சில செய்திகள் இம்மூன்று செய்யுட்களில் உள்ளமை பற்றி இங்ஙனம் எழுதினர்.

2377. திருமக னருளப் பெற்றுத் திருநிலத் துறையு மாந்தர்,
ருவனுக் கொருத்தி போல வுளமகிழ்ந் தொளியின் வைகிப்,
ருவரு பகையு நோயும் பசியுங்கெட் டொழிய விப்பாற், பெரு
றல் வேந்தர் வேந்தற் குற்றது பேச லுற்றேன்.

(இ - ள்.) இங்ஙனம் அரசன்றன் அருளப்பெறுதலின், அவனிலத்
ன் மக்களெல்லாம், பகையும் நோயும் பசியும் கெட்டேபோக,
நவனுக்கு ஒருத்தி போல மனமகிழ்ந்து ஒளியோடே தங்காநிற்கச்
ல்கின்ற நாளிலே, வேந்தற்குற்றதொன்று கூறுதலுற்றேனென்று
ன்க.

வைகி - வைக. (கூகு)

கக - பூமகளிலம்பகம் முற்றிற்று.

ஆகக் கவி, உ௩எஎ.

---

2377. திருமகன் - சீவகன். குடிகளும் அரசனும் மனமொன்றி
ன்பவாழ்வில் ஈடுபட்டமையின், 'ஒருவனுக்கு ஒருத்திபோல மகிழ்ந்து'
ன்றார். ஒளி - தாம் உளராகும் காலத்து மிக்குத் தோன்றுதலுடைமை;
றள், 971, பரிமேல். பருவரு - துன்பத்தைச் செய்யும். பகையும்
நாயும் பசியும் கெடுதல் : சீவக. 2375, அடிக்.

பன்னிரண்டாவது

# இலக்கணையாரிலம்பகம்

(வேறு)

2378. அலங்க லேந்திய குங்கும வருவரை மார்பன், கலந்த காரிகை யவர்களைத் தருகென வருள, இலங்கு மாலைவெள் ளரு விய வெழில்வரை மணந்த, புலம்பு நீள்சுரம் போய்க்கொணர்ந் தருளொடுங் கொடுத்தார்.

**(இ - ள்.)** மாலையையேந்திய வரைபோலுமார்பன், தான் மணஞ் செய்த மகளிரைத் தருவீராகவென்று அருளிச்செய்ய, அவரும் அவ னருளிச் செயலோடே வருத்தமிக்க சுரத்தைப் போய்க் கொணர்ந்து கொடுத்தாரென்க.

அருவியவாகிய வரைகள். (க)

2379. மோடு கொண்ணிலா முளைத்தெழு பருதிகண் டறியாப்
பாடு வண்டொடு பறவையு நடுக்குறுங் காப்பின்
மாட மாமணிச் சிவிகையின் மயிலென விழிந்தார்
வீடு கண்டவர் போன்றுமின் னிடுகொடி யனையார்.

**(இ - ள்.)** மின்னையும், எழுதுகொடியையு மனையார், மதியையும் பருதியையும் கண்டறியாத மாடத்தின்கண்ணே வண்டும் பறவையும் அஞ்சும் காவலையுடைய சிவிகையினின்றும் மயிலிழிந்தாற் போல இழிந்தாரென்க.

---

2378. இலங்கு மாலை - விளங்குகின்ற வரிசையாகிய; இது வரைக்கு அடை. மணந்த - கலந்த. புலம்பு - வருத்தம்.

2379. மோடு - பெருமை. நிலாவும் பருதியும் கண்டறியாத மாடம். காப்பினையுடைய மாடமென்பதும் பொருந்தும்; "புள்ளு மில்லா வொள்ளொளி யிருக்கையுள், மறைபுறப் படாஅச் செறிவின ராகி" (பெருங். 3. 24 : 216-7); "உள்ளுணின் றொலிபுறப் படாத தொண் சிறைப், புள்ளுமல் லாதவும் புகாத நீரது...மந்திர சாலை" (சூளா. மந்திர. 2); கம்ப. நகர்நீங்கு. 184; யுத்த. மந்திர. 8. மாடத்தின்கண் சிவிகையினின்றும் மயிலைப்போல இறங்கினர். மாடச்சிவிகை யெனலு மாம்; பெருங். 1. 38 : 255. வீடு - சாபத்தினின்றும் விடுபடுதல். மின்னும் இட்ட கொடியும் அனையார்; மின்னற்கொடி போன்றவரென் பதும் ஆம். சீவகன் பிரிவால் அவர்கள் முன்பு வருத்தமுற்றிருந்தனர்.

துன்பமுறுதற்கு ஒரு சாபம் பெற்று அச்சாபம் வீடுகண்டவரைப் போலே மகிழ்ந்து இழிந்தாரென்க; வீடுகண்டவர் பின் வருத்தநீங்கினுற் போல இவரும் வருத்த நீங்கினுரென்றுமாம். (உ)

2380. அன்று சூடிய மாலைய ராடிய சாந்தர்
பொன்றி வாடிய மேனியர் பொன்னிறை சுருங்கார்
சென்று காதலன் றிருவிரி மரைமல ரடிமேல்
ஒன்றி வீழ்ந்தனர் குவளைக்க ணுவகைமுத் துகவே.

**(இ - ள்.)** இவன் பிரிகின்ற அன்று சூடிய மாலையராய், ஆடின சாந்தினராய், கெட்டு வாடிய மேனியராய், பெறுதற்கரிய நிறைகெடாத வர்கள், கண் உவகைமுத்து உகும்படி சென்று காதலனடி மேலே வீழ்ந்தாரென்க. (ஙு)

2381. இலங்கு பூண்வரை மார்புற வெடுத்தவன் முயங்க
மலங்கி வாட்கண்கள் வருபனி சுமந்துடன் வெருவிக்
கலங்கு நீரிடைக் கலக்குறு கருங்கய லிணைபோற்
புலம்பி யோடின செவியுற நெடியன பொலிந்தே.

**(இ - ள்.)** சின்னீரிடத்தே வெருவக் கலங்கலுற்ற கயலிணை போல இவன் பிரிவிற்கு மலங்கிப் புலம்பி ஓடின வாட்கண்கள், ஈண்டு அவன் அவரைச் சேரவெடுத்து முயங்குதலிற் பொலிந்து உவகைக் கண்ணீரைச் சுமந்து, செவியுற நெடியனவாயினவென்க.

வெருவி : வெருவவென்க. ஓடுதல் - கெடுதல்; "ஓடிய துணர் தலும்" (சிறுபாண். 214) என்றாற்போல. (ச)

2382. வேனல் வாய்ப்பட்டு விரிமுகை தளிரொடு கரிந்த
கானக் கார்முல்லை கார்மழைக் கெதிர்ந்தன போல
மான மங்கையர் வாட்டமும் பரிவுந்தங் கணவன்
தேனெய் மார்பகந் தீண்டலுந் தீர்ந்தொளி சிறந்தார்.

---

2380. அன்று : பண்டறி சுட்டு. பொன்நிறை - பொன்போன்ற பெறுதற்கரிய நிறை. காதலன் - சீவகன். மரைமலர் - தாமரை மலரைப் போன்ற. உவகை முத்து - ஆனந்தக்கண்ணீர்.

2381. மார்பு உற - மார்பிலே பொருந்த. அவன் - சீவகன். முயங்க - தழுவுதலால். வரு பனி - கண்ணீர். வெருவி - வெருவ; எச்சத்திரிபு. கண்கள் ஓடின என்க.

2382. வேனல் - வேனில்; "இளவேனல் வந்ததா லென்னுங்கொ லின்று, வளவேனற் கண்ணி மனம்" (சிலப். வேனிற் காதை, இறுதி வெண்பா). கரிந்த - கருகிய. கார்மழைக்கு - கரிய மழையை. எதிர்தல் - ஏற்றுக்கொள்ளல். தேனுகிய நெய்யைப்போன்ற மார்பகம். அடி, 2-4: சீவக. 195; தோளவன்......மாரிப்புயலொத்தான் : "குலம்பாராட்டுங் கொம்புமொர் முல்லைக் கொடியொத்தாள்" (சூளா. கலியாணச். 297)

(இ - ள்.) முதுவேனிலிடத்தே அகப்பட்டுக் கரிந்த முல்லை மழையை ஏற்றுக்கொண்டனபோல மங்கையர் தம் கணவன் மார்பைத் தீண்டின அளவிலே மேனியில் வாட்டமும் மனத்தில் வருத்தமும் தீர்ந்துபோய் ஒளி மிக்காரென்க.

மழைக்கு; கு : உருபுமயக்கம். மானம் - புலவி. தேனைப்போன்ற மார்பென்றார், தேனுக்கு இன்சுவை நிகழ்ந்தகாலத்தே புளிச்சுவை நிகழுமாறு போல, இம்மார்பும் இம்மகளிர்க்கு இன்பம் நிகழ்த்தினகாலத்தே பிறர்க்கும் இவ்வாறு இன்பம் நிகழ்த்துமேயென்னும் கருத்தை அவர்க்குப் பிறப்பித்தலின்; இனி, தூதாய் வந்த தேனினம் இளைக்கிற மார்புமாம். (ரு)

2383. சேலுண் கண்ணியர் சிலம்பொடு திலகமுந் திருத்தி
மாலை நல்லன மதுக்கமழ் தகையன மிலைச்சிக்
கோல மென்முலைக் குங்கும மிடுகொடி யெழுதிச்
சோலை வேய்மரு டோண்முத்துந் தொழுதக வணிந்தார்.

(இ - ள்.) சேடியர், தேவியர்க்குச் சிலம்பிலேநின்றும் திலகத்தளவும் திருத்தி முடியிலே மதுக்கமழ் தகையனவாகிய மாலைகள் நல்லனவற்றைச் சூட்டி முலையிலும் தோளிலும் குங்குமத்தாலே எழுதுகொடி எழுதிக் கணவன் தொழுதல் தரும்படி முத்துவடத்தையும் அணிந்தாரென்க. (சு)

2384. நஞ்சு மேய்ந்திளங் களிக்கயன் மதர்ப்பன போல
அஞ்சி வாட்கண்கண் மதர்த்தன வலர்ந்துடன் பிறழப்
பஞ்சு சூழ்மணி மேகலை பரிந்தவை சொரிய
வஞ்சி நுண்ணிடை கவின்பெற வைகினன் மாதோ.

[1] அவசத்தாற் பிறந்த [2] அனந்தர்நோக்கினை, 'நஞ்சு' என்றார். உடன் - எல்லாம். பஞ்சு : ஆகுபெயர். [3] தனது நுண்மையான் ஊற்றின்பம் நிரம்பப் பெறுத இடை [4] மெய்புகுவன்ன முயக்கத்தாலே (அகநா. 11 : 10, 365 : 7) ஊற்றின்பம் பெறும்படி வைகுதலின், 'நுண்ணிடை கவின்பெற' என்றார்.

---

2383. சேலுண் கண்ணியர் - சேலையொப்பப் பிறழும் கண்ணையுடைய தோழியர். திருத்தி - திருத்தமாக அணிந்து. நல்லன வென்றது சாதிச் சிறப்பையும் மதுக்கமழ்தகையன வென்பது செவ்வியையும் உணர்த்தின. இடுகொடி - மன்மதனது கரும்புபோல எழுதும் தொய்யில்.

2384. நஞ்சு மேய்ந்த கயல்: "விடங்கொண்ட மீனைப் போலும்" (தனிப்.). மதர்த்தன - செருக்கடைந்தனவாய். பஞ்சு - ஆடை. பரிந்து - அற்று.

(உரை) [1] அவசம் - உணர்வழிதல். [2] அனந்தர் நோக்கு - மயக்கத்தோடு பார்க்கும் பார்வை. [3] சிறுபாண். 59-60, ந. [4] மெய்புகு அன்ன முயக்கம் - ஒருவரது மெய் மற்றவரது மெய்யுட் புகுந்தாற்போன்ற புணர்ச்சி.

(இ - ள்.) கயல் நஞ்சை மேய்தலிற் செருக்குவனபோலக் கண்கள் அலர்ந்து இறுமாந்து அஞ்சிப் பிறழ, மேகலை அற்று அவை மணியைச் சொரிய, இடை கவின்பெற வைகினுளென்க. (எ)

2385. அரிபொற் கிண்கிணி யணிகிளர் சிலம்பொடு சிலம்பும்
திருவச் சீறடிச் செழுமலர்க் கொழுங்கயன் மழைக்கண்
உருவ நுண்ணிடை யொளிமணி வருமுலை யுருவார்
எரிபொன் மேகலை யிலக்கணை கடிவினை நொடிவாம்.

ஐதாகிய பொன்னுவது தகடு. திருவ ; அ : அசை.

(இ - ள்.) கிண்கிணி சிலம்பொடு சிலம்பும் திருவையுடைய சீறடித் தாமரை முதலியவற்றையுடைய இலக்கணையது மணவினையைக் கூறுவா மென்றாரென்க. (அ)

2386. ஆழி மால்கட லகன்பெருங் கேள்விக டுறைபோய்
ஊழி னன்றியு முறுவினை யோரையின் முடிப்பான்
சூழி யானையுந் துளங்குபொற் சிவிகையு முடையான்
வேழ வேந்தற்கு விழுப்பெருங் கணிவிரித் துரைத்தான்.

(இ - ள்.) கரையையுடைய பெரிய கடல்போன்ற நூல்களை முற்றக் கற்று யானையும் சிவிகையும் பெற்றானாகிய கணி, 'விதியால் தானே முடிதலே யன்றி இந்நல்வினையை ஓரையானும் முடித்தற்குப் பொருந்திய நாள்களை அரசனுக்கு விரித்துரைத்தானென்க. (கூ)

2387. (க) ஓங்கு கொற்றவற் கோதிய வுயர்பெரு நாளால்
வீங்கு வெள்ளியங் குன்றென விளங்கொளி யுடைய
தேங்கொண் மாலையுந் திலகமு மணிந்ததிண் குணத்த
பாங்கிற் பண்ணின நூற்றெட்டுப் படுமதக் களிறே.

இதுமுதல், "மாலை வாண்முடி" (சீவக. 2392) அளவும் ஒரு தொடர்.

(க) கொற்றவற்கோதிய நாளென்றதனால், "நவநக்ஷத்ரோந்ருபதி" என்றபடி, சன்மநக்ஷத்திரமுதலாக ஒன்பது நாள்களாதலின், இக்கல் யாணத்துக்கு அந்நாளொன்பதிலும் பொருந்துவதொரு நாளுக்குப்

---

2385. அரி - மென்மை. உருவத்தால் நுண்ணிதாகிய இடை. நொடிவாம் - சொல்வோம்.

2386. ஆழி - கரை ; "பெருங்கடற், காழி யனையன் மாதோ" (புறநா. 330 : 3 - 4). துறைபோதல் - முற்றக்கற்றல். யானைபெறுதல் : பெருங். 2. 2 : 20. கணி - சோதிடன்.

2387. குன்றெனப் பண்ணினவென்க. பாங்கிற் பண்ணின - அலங்கரிக்கப்பெறும் வகைபட அலங்காரம் செய்யப்பெற்றன.

பொருந்துவதொரு நாளிலே முரசு சாற்றுகின்றுரென்க. மாலையும் திலக மும் அணியப்பட்ட களிறு. திண்குணம் - மாறுபடாத சீலம்; குணத்த வாய் மதத்தையுடைய களிறுகள் விளங்கொளியையுடைய வெள்ளிக்குன் றெனப் பண்ணப்பட்டன; வெள்ளணியணிந்தனவென்க.

2388. (உ) விளங்கு வெண்டுகி லுடுத்துவெண் சாந்துமெய் பூசித்
துளங்கு மஞ்சிகை துளைச்சிறு காதினுட் டுளங்க
வளங்கொண் மாலைகள் சூடிமுத் தணிந்துவண் முரசம்
கலங்கொள் வேழத்தி னேற்றினர் கடிமுர சறைவான்.

(உ) மஞ்சிகை - காதணி. சிறுதுளைக் காது. முரசறைய வேண்டி, துளங்காநிற்க உடுத்துப் பூசிச் சூடி அணிந்து முரசை அவற்றில் தலைவ ருகிய வேழத்திலே ஏற்றிருரென்க.

2389. (ௌ) கேண்மின் கேண்மின்கள் யாவரு மினியன கேண்மின்
பூண்மி னித்தில மணிவடம் பூசுமின் சாந்தம்
வாண்மி னுண்ணிடை வருந்தினுஞ் சூட்டணிந் தழகார்
ஆண மாகிய வருவிலை வண்ணப்பட் டுடுமின்.

(ௌ) கேண்மின் விரைசொல்லடுக்காதலின், மூன்ருயிற்று. ஆணம் - நேயம்.

2390. (ச) பிள்ளை வெண்பிறைச் சிறுநுதற் பெரும்பட்ட மணிமின்
உள்ள மேனியு மொளிர்மணிக் கலங்களிற் புனைமின்
வள்ளல் வாய்மொழி யான்படு பாலமிர் தல்லால்
உள்ள மேவினும் பிறவுணப் பெறீரெழு நாளும்.

(ச) பிள்ளைப்பிறையென்பது, "பிள்ளை குழவி" (தொல். மரபு. 24) என்னுஞ் சூத்திரத்து உம்மையை எச்சப்படுத்தி அதனுற் கொள்க. உள்ள மேனி - முன்பு அணியணிந்த இடமொழிய உள்ள மேனி. வள்ளல் வாய் மொழி - அரசன் அருளிச்செயல். நெஞ்சம் பிறவற்றிலே மேவினும்.

---

2388. களங்கொள் வேழம் - பகைவர் போர்க்களத்தைத் தனதாக் கிக் கொள்வதற்கு உதவும் வேழம்; புறநா. 53 : 5.

2389. நித்திலவடத்தையும் மணிவடத்தையும் பூண்மின். வாள் மின் நுண்இடை - ஒளியையுடைய மின்னலைப்போன்ற நுண்ணிய இடை. ஆணம் - அன்பு; பெருங். 3. 8 : 72. வண்ணப்பட்டு - பல நிறங்களையுடைய பட்டு.

2390. பிள்ளை வெண்பிறை யென்றது மூன்றும் பிறையை. பால மிர்து - பாற்சோறு. ஏழுநாள் : சீவக. 2392.

2391. (ரு) வாழை மல்கிய மணிக்குலைக் கமுகொடு நடுமின்
தாழ நாற்றுமின் ருமங்க ளகிற்குடம் பரப்பி
யாழின் பாடலு மாடலு மரங்குதோ றியற்றிப்
போழு மால்விசும் பெனப்பல பொலங்கொடி யெடுமின்.

(ரு) கமுகோடே வாழையை. அகிற்குடம் - தூபக்குடம். விசும்பைப் போழுமென.

2392. (சா) மாலை வாண்முடி மன்னவன் மணவினை யெழுநாட்
சீல மில்லன சினக்களி றகற்றுகென் றணிந்த
கோல மார்முர சிடியுமிழ் தழங்கென முழங்க
நீல மாக்கட னெடுநகர் வாழ்கென வறைந்தார்.

(சா) மணவினை நிகழும் எழுநாளும் சீலமில்லனவாகிய கொலைக் களிற்றை அகற்றுக.

(இ - ள்.) கொற்றவற்கோதிய நாளிலே முரசறைதற்குக் களிறுகள் பண்ணின ; அக்களிற்றில் தலைவனாகிய வேழத்திலே முரசையேற்றினார் ; ஏற்றி நெடுநகர் வாழ்கவெனக் கூறி அரசன் திருவாய்மொழியாகிய இனியவற்றை யாவருங் கேண்மின் : இவ்வெழுநாளும் இடைவருந்தினும் பூண்மின் ; பூசுமின் ; அணிந்து உடுமின் ; அணிமின் ; புனைமின் ; பாலடிசிலே யுண்மின் ; நடுமின் ; நாற்றுமின் ; பரப்பி இயற்றி எடுமின் ; இன்னும் இவ்வெழுநாளும் களிற்றை அகற்றுகவென்று கூறி இடியொலி போலே முரசை முழங்க அறைந்தாரென்க. (கo - கரு)

2391. நீலமணி போன்ற குலையையுடைய கமுகு. தாமங்களைத் தாழும்படி நாலவிடுங்கள். அகிற்குடம் : " தூமக் குடமா யிரமாய் " (சீவக. 2455); " தசும்புறு மகிலின் றூபம் " (வி - பா. இந்திரப்பிரத்த. 33). அரங்கு - ஆடரங்கு. என - என்று கண்டோர் சொல்லும்படி.

2392. சீலம் இல்லன சினக்களிறு - நிறையழிகொல் யானை ; அவற்றை அகற்றுவிட்டாலும், அவற்றின் செலவை முன்னர்ப் பறை யறைவித்துத் தெரிவியாவிட்டாலும் மனிதர் துன்புறுவாராதலின் இங்ஙனங் கூறினார் ; " நிறையழி கொல்யானை நீர்க்குவிட் டாங்குப், பறை யறைந் தல்லது செல்லற்க வென்னா, இறையே தவறுடை யான் " (கலித். 56 : 32-4). இடி உமிழ்தழங்கு என - இடி வெளிப்படுத்தும் ஓசையைப் போலே.

2387-92 : பெருங். 2. 2 : 28 - 55.

(வேறு)

2393. முரச மார்ந்தபின் மூவிரு நாள்கள்போய்
விரைவொ டெங்கணும் வெள்வளை விம்மின
புரையில் பொன்மணி யாழ்குழ றண்ணுமை
அரவ வானி னதிர்ந்த வணிமுழா.

ஆர்த்த : விகாரம். போய் - போக ; போகாநிற்க இவையும் நிகழ்ந் தனவென மேல் வருவனவற்றையும் உடனிகழ்ச்சியாக்குக. புரை - குற்றம்.

(இ - ள்.) முரசமார்த்தபின், ஆறுநாள் செல்லாநிற்க, எங்கணும் விரைவுடனே வளை விம்மின ; யாழ் குழல் தண்ணுமை முழா இவை வான்போலே அதிர்ந்தனவென்க. (கசு)

2394. விண்வி ளக்குவ போல்விரி பூந்துகள்
கண்வி ளக்கிக் கலந்தவெண் சாந்தினால்
மண்வி ளக்கி மலர்ப்பலி சிந்தினார்
பண்வி ளக்கிய பைங்கிளி யின்சொலார்.

(இ - ள்.) பண்ணைத் தோற்றுவித்த சொல்லார், தேவருலகத்துத் [1] துராலைத் துடைக்குமாறுபோலே சிந்தின மணிகள் முதலியவற்றோடே கண்கலந்த விரிந்த பூந்துகளைத் துடைத்துச் சாந்தினால் நிலத்தை மெழுகி இல்லுறை தெய்வத்துக்குப் பூப்பலியையும் சிந்தினாரென்க.

[2] விளக்குதல் : தகுதி பற்றிய வழக்கு. (கஎ)

2395. ஆய்ந்த மோட்டின வான்படு பாலுலை
போந்து பொங்கிய வாவியி னாற்பொலிந்
தேந்து மாடங்க டாமிழி னென்பன
பூந்து கில்புறம் போர்த்தன போன்றவே.

2393. வெள்வளை - வெள்ளிய சங்குகள். பொன்னும் மணியும் புனைந்து செய்த யாழ். அரவத்தையுடைய மேகத்தைப்போல.

2394. விளக்குவ - விளக்குதல் ; தொழிற்பெயர். பலி - பூசைத்திர வியம். பசுங்கிளியைப் போன்ற இனிய சொல்லினையுடைய மகளிர்.

(உரை) [1] துரால் - குப்பை. [2] ‘பூந்துகள் கண்விளக்கி’ என் பதில் உள்ளது.

2395. ஆய்ந்த - அழகமைந்த. மோடு - வயிறு. “பாலா ராவிப் பைந்துகில்” (சீவக. 1094) என்பது கருதி இங்கே ஆவிக்குத் துகி லென்று மாற்றிக் கூறினார். பூந்துகில் - மெல்லிய துகில். “ஆன்படு பாலமிர் தல்லால்......உணாப்பெறீர்” (சீவக. 2390) என்னும் அரசனது கட்டளை கருதிப் பாலுலை வைத்தனர்.

**(இ - ள்.)** இழியென்னும் ஓசையையுடையவாகிய மாடங்கள்தாம் அழகிய வயிற்றையுடையவாகிய ஆனிலே தோற்றிய பாலுலே பானை யின் புறம்பே போந்து பொங்கிய ஆவியினாலே பொலிந்து பூந்துகிலைப் புறம்போர்த்தன போன்றனவென்க. (கஅ)

2396. திருவி னல்லவர் செம்மலர்ச் சீறடி
பரவி யூட்டிய பஞ்சரத் தக்களி
விரவி மீநிலஞ் சேர்ந்தொளி பூத்துராய்க்
குருதி வானிலங் கொண்டது போன்றதே.

**(இ - ள்.)** திருவினும் நல்லவர் தம்மடியைச் சேடியர் பரவி யூட்டிய செம்பஞ்சின் சேறு நிலத்தின்மீதே விரவிச் சேர்தலின், அவ்வொளி, பூத் துப் பரந்து செக்கர்வான் நிலத்தைக்கொண்ட தன்மை போன்றதென்க. (கக)

2397. பால்வெண் டிங்கண் மணிக்கை படுத்தவை
போலு மாடியி னோக்கிப் பொலங்கலக்
கோலஞ் செய்பவர் கோல வெறிப்பினால்
மாலை வண்டின மாலைக்கண் கொண்டவே.

**(இ - ள்.)** திங்கள் மணிக்காம்பு சேர்த்தினவற்றையொக்கும் கண் ணாடியில் நோக்கிப் பொற்கலத்தையுடைய கோலத்தைச் செய்பவர் கோலத்தால் வரும் கண்வெறிப்பாலே ஒழுங்கையுடைய வண்டினங்கள் கண் தோன்றாவாயினவென்க. (உ0)

2398. போக மாமழை போழ்ந்து புதத்தொறும்
மாக மேந்துவ போன்மணித் தோரணம்
ஆக நாற்றின தாம மணிக்குடம்
ஏக மாநகர் வீதி நிரைத்தவே.

---

2396. செம்பஞ்சு ஊட்டினும் பொறுத்தலருமை கருதிப் பரவினர். பஞ்சு அரத்தக்களி - செம்பஞ்சுக் குழம்பின் சிவந்த சேறு. மீநிலம் - நிலத்தின்மேல்; மீகண்ணென்பது போல மாறிநின்றது. உராய் - பரவி. குருதிவான் - செந்நிறங் கொண்ட வானம்.

2397. கோலம் செய்பவர் - ஆபரணங்களை அணிவிப்பவர். வெறிப்பு - கண்ஒளி மழுங்கல்; கண்வெறியோடிற்றென்பது வழக்கு. மாலை - ஒழுங்கு. மாலைக்கண் - பார்க்கும் ஆற்றலின்றி மயங்கிய கண். மிக்க ஒளியை நோக்கிற் கண்வெறியோடுதல் இயல்பு; "வாளற்றுக், கண்ணுங் காட்சி தவ்வின" (நற். 397 : 2-3); "கண்ணே, நோக்கி நோக்கி வாளிழந் தனவே" (குறுந். 44 : 1-2); "வெளிறுகண் போகப் பன்னாட் டிரங்கி" (புறநா. 177 : 2)

2398. போகம் மாமழை - நுகர்வதற்குரிய பொருள்களைத் தரும் மழை; இங்கே மேகம்; "துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்

(இ - ள்.) தனக்கு நிகரில்லாத நகர்வீதியிலே வாயில்தோறும் மழையைப் போழ்ந்து மாகத்தை ஏந்துவபோலும் தோரணங்களிலே தாமங்கள் பொருந்த நாற்றப்பட்டன; மணிக்குடங்கள் வரிசையாக வைக்கப் பட்டனவென்க. (உக)

2399. ஆடன் மங்கையர் கிண்கிணி யார்ப்பொலி
பாட லின்னொலி பண்ணமை யாழொலி
மோடு கொண்முழ வின்முழக் கீண்டிய
மாட மாநகர் மாக்கட லொத்ததே.

மங்கையர் கிண்கிணி அசைதலிற் பிறந்த ஒலி.

(இ - ள்.) இவ்வொலிகளாலே நகர் கடலையொத்ததென்க.

முழக்கத்தால் ஈண்டின ஒலி. (உஉ)

2400. சுந்த ரத்துகள் பூந்துகள் பொற்றுகள்
அந்த ரத்தெழு மின்புகை யாலரோ
இந்தி ரன்னகர் சாறயர்ந் திவ்வழி
வந்தி ருந்தது போன்மலி வுற்றதே.

(இ - ள்.) [1] இந்நகர், சிந்துரத்துகளாலும் பூந்துகளாலும் பொற்றுகளாலும் புகையாலும் அமராபதி சாறயர்ந்து ஈண்டு வந்திருந்தாற் போலே மிகுதியுற்றதென்க. (உங)

---

குத், துப்பாய தூஉ மழை" (குறள், 12). போழ்ந்து - பிளந்து. மாகம் - ஆகாயம். ஆக - பொருந்த; "ஆக வமைக வதுவேயவ் வரச நீதி" (சூளா. அரசியற். 211). ஏகமாநகர் - தனிச்சிறப்புடைய இராசதானி நகரம். நிரைத்த - வரிசையாக அமைக்கப்பெற்றன.

2399. ஆடல்மங்கையர் - கூத்துப்பயிலும் மகளிர். தாளத்துக்கேற்ப அடிபெயர்த்து ஆடுதலின் அவர் கிண்கிணி ஆர்ப்பொலியைக் கூறினர். மோடு - பெருமை. ஈண்டிய - சேர்ந்த.

2400. சுந்தரத்துகள் - சிந்துரப்பொடி. அந்தரம் - வானம். சாறு - விழா.

(உரை) [1] மலிவுற்றதென்று ஒருமையால் முடிதலின் அதற்கேற்ப 'இந்நகர்' என்ற எழுவாயை வருவித்தார்.

(வேறு)

2401. நிரந்து கன்னலு நெய்யு நீந்தப்பெய்
திரந்து பாலமிர் தெங்கு மூட்டுவார்
பரந்து பூந்துகில் பன்ம ணிக்கலம்
சுரந்து கொள்கெனச் சுமக்க நல்குவார்.

(இ - ள்.) எவ்விடமும் பரந்து சென்று இரந்துகொண்டு கன்னலை யும் நெய்யையும் தொலைக்கவொண்ணுதபடி பெய்து பாலடிசிலை ஊட்டு வார்; துகிலையும் கலத்தையும் கொண்டுவந்து கொள்கவென்று சுமக்கும் படி நல்குவாரென்க. (உச)

2402. வருக்கை யின்பழம் வாழை யின்கனி
திருக்கொண் மாங்கனி தெளித்த தேறலைக்
கருப்புச் சாற்றெடு கலந்து கைசெய்து
புரித்த தெங்கிள நீரும் பூரிப்பார்.

(இ - ள்.) பலாப்பழம் முதலியவற்றை நீராக்கின தேறலை இனிய கருப்புச் சாற்றேடே கலந்து சமைத்து அதனையும் விரும்புவித்த இள நீரையும் பூரிப்பாரென்க. (உரு)

2403. கூந்த லேந்திய கமுகங் காய்க்குலை
ஆய்ந்த மெல்லிலை பளித மாதியா
மாந்தர் கொள்ளைகொண் டுண்ண மாநிலம்
ஏந்த லாம்படித் தன்றி யீட்டுவார்.

கூந்தல் - தலை.

---

2401. நிரந்து - நிரல்படக் கோத்து (குறள், 648, பரிமேல்.); "நிரந்திலங்கு வெண்பன் மடந்தை" (குறுந். 52 : 4). கன்னல் - கருப் பஞ்சாறு. வெள்ளம் போலப் பெய்தலின் நீந்தப் பெய்தென்றார். பால மிர்து - பாற்சோறு. மிகுதியாக அளித்தலின் சுமக்க நல்குவாரென்றார்.

2402. முக்கனியுங் கூறினார். தேறல் - தெளிந்த சாறு. கை செய்து - பக்குவம்பண்ணி. புரித்த - புரியும்படி செய்த; புரிதல் - விரும்புதல். பூரிப்பார் - நிரப்பிவைப்பார்.

2403. கூந்தலின்கண் ஏந்திய; கூந்தல் - உச்சி; "பூகமுங் கூந் தலின் குலை வாரி" (தே. திருஞான.). ஆய்ந்த - காம்பிற்கிள்ளிய; மெல்லிய எனலுமாம். பளிதம் - கருப்பூரச் சுண்ணம். ஆதியாவென் றது 'ஏலமுதலிய தாம்பூலத்திற்குரிய வாசப்பொருள்களை நினைந்து. கொள்ளைகொண்டு - மிகுதியாகக்கொண்டு.

(இ - ள்.) கருப்பூரமுதலாகப் பாக்கையும் வெற்றிலையையும் மாந்தர் கொள்ளைகொண்டு சுமக்கலாம்படித்தன்றாக மாநிலம் உண்ணும்படி ஈட்டுவாரென்க.

[1] வெற்றிலையையுண்ணவென்றல் மரபன்மையின், ஈண்டு மாநில முண்ணவெனவே மண்ணுண்ணும்படி யென்னும் பொருட்டாம்; "அடகுபுலால் பாகுபாளிதமு முண்ணான்" என்பது பன்மைபற்றிக் கூறிற்றெனவேவேண்டும்; பாகு பசிப்பிணி தீர நுகரும்பொருளன்மை யின். இனி, மாந்தர் முற்கூறிய பாலடிசில்முதலியவற்றை உண்டலின், அவர் தின்றற்குப் பளிதமுதலியவற்றைக் கொள்ளைகொண்டு சுமக்கலாம் படித்தன்றாக ஈட்டுவாரென்றுமாம். ஏந்தல் - சுமத்தல். (உசு)

2404. தூம மார்ந்தன துப்பு ரவ்வுகள்
ஏம மாயின வேந்தி நிற்றலால்
நாம நன்னகர் நன்பொற் கற்பகம்
காம வல்லியுங் களங்கொண் டிட்டதே.

(இ - ள்.) மெய்க்குறுதியாகிய தூமத்தையும், அதனை யொழிந்து ஆர்ந்தனவாகிய நுகர்பொருள்களையும், ஆடவரும் மகளிரும் ஏந்தி நிற்றலின், இந்த நன்னகரைக் கற்பகமும் காமவல்லியும் இடங்கொண்டு தம்மிடத்தைக் கைவிட்டன போன்றனவென்க.

இட்டது : ஒருமைபன்மை மயக்கம். (உஎ)

2405. வழுவின் மாந்தரு மாவு மல்கிய
தொழுதி தன்னையான் சுமக்க லேனென
முழுது மண்மகண் முற்றும் வாய்திறந்
தழுதிட் டாணெயும் பாலு மாகவே.

---

(உரை) [1] உண்ணவென்னும் சொல் பசிப்பிணி தீர நுகரும் பொருளொடு சார்த்தி வழங்குவதாதலின் இங்ஙனம் உரையெழுதினர்.

2404. துப்புரவுகள் - நுகர்பொருள்கள். ஏமம் - பாதுகாப்பு; இன்பமுமாம். நாமம் - புகழ். ஆடவருக்குக் கற்பகமும் மகளிருக்குக் காமவல்லியும் உவமைகள்.

2405. வழு - குற்றம். வழுவுடை மாந்தர் மல்குங் காலத்து நிலமகள் அழுதல் இயல்பு; அவ்வியல்புபற்றியதன்று இது. மா- விலங்குகள். தொழுதி - தொகுதி. வழிந்தோடும் நெய்யையும் பாலையும் மிக்க ஒலியையும், மண்மகளின் கண்ணீரென்றும் அழுகையொலி யென்றும் கூறினர்.

(இ - ள்.) மண்மகள் மாந்தரும் மாவும் நிறைந்த தொழுதி தன்னை யான் முழுதும் சுமக்கலாற்றேனென்று வாய்முற்றுந் திறந்து நெய்யும் பாலுமாக அழுதிட்டாள்போலே இருந்ததென்க.

எனவே அரவம் கூறினர். (உஅ)

(வேறு)

2406. கொடியெழுந் தலமருங் கோயில் வாயில்கள்
மடலெழுந் தலமருங் கமுகும் வாழையும்
மடியிருந் துகிலுடை மாக்க ணாடியும்
புடைதிரள் பூரண குடமும் பூத்தவே.

(இ - ள்.) கோயில்வாயில்களெல்லாம், கமுகும் வாழையும் மடித் துகிலையுடைய கண்ணாடியும் நிறைகுடமும் பொலிவுபெற்றனவென்க.(உகூ)

2407. கடிமலர் மங்கையர் காய்பொற் கிண்கிணி
உடைமணி பொற்சிலம் பொலிக்குங் கோயிலுட்
குடைநிழன் மன்னர்தங் கோதைத் தாதுவேய்ந்
தடிநிலம் பெறாததோர் செல்வ மார்ந்ததே.

(இ - ள்.) மங்கையர்கிண்கிணியும், மேகலையும், சிலம்பும் ஒலிக்குங் கோயிலிடமெல்லாம், மன்னர்தங் கோதையிற்றாது வேய்தலின், அம் மகளிரடி தாதொழிந்து நிலத்தைத் தீண்டப்பெறாததொரு செல்வம் மிக்க தென்க. (௩௦)

2408. துளங்குபொற் குழைகளுந் தோடுஞ் சுண்ணமும்
கிளர்ந்தகில் சாந்துபூக் கமழ்ந்து கேழ்கிளர்
இளங்கதி ரெறிமணிப் பூணு மாரமும்
விளங்கிமே லுலகினை வெறுப்பித் திட்டதே.

(இ - ள்.) இக்கோயில், குழைகளும் தோடும் ஒளி கிளரப்பட்டுச் சுண்ணமும் அகிலும் சாந்தும் பூவும் கமழப்பட்டுப் பூணும் முத்தாரமும் விளங்கப்பட்டு மேலுலகை இகழப்பண்ணிற்றென்க. (௩க)

2406. கொடி - துவசம். அலமரும் - சுழலும். துகில் : கண்ணாடிக்கு உறை. புடைதிரள் - பக்கந் திரண்ட. வாயில்கள் பூத்த என்க.

2407. கடி - வாசனை. மலரையணிந்த மங்கையர். காய்ந்த பொன்னாற் செய்த கிண்கிணி. உடைமணி : திருச்சிற். 385. கோயில் - அரண்மனை. கோதை - மாலை. அடிநிலம் பெறாததோர் செல்வமென்றது அடி நிலம் தீண்டப் பெறாத தேவர் நிலையை நினைப்பித்தற்பொருட்டுக் கூறியது.

2408. குழைகளும் தோடும் : "குழையுந் தோடும் பையவே கனிவிப்பாரும்" (சூளா. சுயம்வர. 84). கேழ் - நிறம். மேலுலகு - சுவர்க்கம்.

2409. விரிந்துவான் பூத்தென விதானித் தாய்கதிர்
அருங்கலப் பொடியினு லாய்பொற் பூமகள்
மருங்குல்போற் குயிற்றிய நகரின் மங்கலப்
பெருந்தவி சடுத்தனர் பிணையன் மாலையார்.

**(இ - ள்.)** வான் மீனை விரிந்து பூத்ததென விதானித்து அருங் கலங்களை இடித்த பொடியாலே மண்மகளிடைபோலே நுடங்கும்படி கோலமிட்டவிடத்தே அரசர்க்கு உரிய மகளிர் மங்கலமாகிய ஆசனத்தை யிட்டாரென்க. (௩௨)

2410. நலங்கிளர் காணமு மணியு நன்பொனும்
வலம்புரி முத்தமுங் குவித்த மங்கலம்
இலங்கின மணிவிளக் கெழுந்த தீம்புகை
கலந்தவா யிரத்தெண்மர் கவரி யேந்தினர்.

காணம் - பழங்காசு.

**(இ - ள்.)** காணம் முதலியன குவிக்கப்பட்டன ; அவற்றின்மேலே அட்ட மங்கலம் இலங்கின ; விளக்கு எழுந்தன ; புகை கலந்தன ; ஆயிரத்தெண்மர் கவரி வீசினரென்க. (௩௩)

2411. மங்கலப் பெருங்கணி வகுத்த வோரையால்
மங்கல மன்னவன் வாழ்த்த வேறலும்
மங்கல வச்சுதந் தெளித்து வாய்மொழி
மங்கலக் கருவிமுன் னுறுத்தி வாழ்த்தினர்.

**(இ - ள்.)** மங்கலங் கூருநிற்க, மன்னவன், மங்கலநாளைக் கூறுங் கணிவகுத்த முகூர்த்தத்துடனே ஆசனத்திலே ஏறினவளவிலே மங்கல மாகிய அறுகும் அரிசியுமிட்டு அபிமந்திரித்த பொற்கருவியை [1]மஞ்சிகன் சேர்த்தினுகை வாழ்த்தினரென்க.

உறுத்தி - உறுத்த. (௩௪)

---

2409. வான் - ஆகாயம். பூத்தென - நட்சத்திரங்களைத் தோற்று வித்தாற்போல. விதானித்து - மேற்கட்டி கட்டி. பூமகள் - பூமியாகிய பெண். பிணையல்மாலை - தொடுத்தலையுடைய மாலை ; சீவக. 488, அடிக்.

2410. காணம் - பொற்காசு. குவித்த - குவிக்கப்பட்டன. விளக்கு எழுந்தன. தீம்புகை கலந்தன. ஆயிரத்தெட்டுக் கூறுதல் ஒரு மரபு ; சிலப். 5 : 164-6 ; பெருங். 2. 5 : 10.

2411. கணி - சோதிடன் ; பெருங்கணி : அரசனுடைய கணியைப் பெருங்கணியென்றல் மரபு ; "ஆசான் பெருங்கணி யருந்திற லமைச்சர்" (சிலப். 26 : 3) ; "வெற்ற வேந்தன் கொற்றப் பெருங்கணி, கூறிய முழுத்தம்" (பெருங். 3. 22 : 244-5). ஓரை - முகூர்த்தம். மங்கல அச்சுதம் தெளித்து : "சாலவச்சுதந் தெளித்த பின்றை" (பேரூர்ப். தெய்வயா. 123)

(உரை) [1] மஞ்சிகன் - மயிர்வினைஞன்.

2412. முழங்கின வின்னிய மொய்த்த தேத்தொலி
கொழுங்கயற் கண்ணிஞர் கொண்டு பொன்னகல்
இழிந்தனர் திருமயி ரேற்ப நீரதில்
நிழன்றன சாமரை நிரைசங் கார்த்தவே.

(இ - ள்.) இன்னியம் முழங்கின; ஏத்தொலியும் சிறந்தது; சாமரை நீர்மையோடே நிழன்றன; சங்கு ஆர்த்தன; அப்பொழுது மகளிரும் திருமயிரைப் பொன்னகலிலே பொருந்தக் கொண்டு மண்டபத்தினின்று இழிந்தாரென்க. (ந௭)

2413. பாற்கடன் முளைத்ததோர் பவளப் பூங்கொடி
போற்சுடர்ந் திலங்கொளிப் பொன்செய் கோதையை
நாட்கடி மயிர்வினை நன்பொற் ருமரைப்
பூக்கடி கோயிலாள் புலம்ப வாக்கிஞர்.

பாற்கடல் கூறிஞர், [1] குலத்தின் தூய்மைக்கு.

(இ - ள்.) பவளக்கொடிபோல் விட்டு விளங்குகின்ற ஒளியினையுடைய இலக்கணையைப் பூவாகிய சிறப்பையுடைய கோயிலிற்றிரு ஒவ்வேமென்று வருந்தும்படி நல்ல நாளிலே [2] மயிர்வினைக்கல்யாணத்தை ஆக்கிஞரென்க.

'கடிக்கோயில்' என்றும் பாடம். (ந௮)

(வேறு)

2414. விரைத்தலை மாலை சூட்டி மின்னஞ ரங்கை சேப்ப
அரைத்தசாந் தணிந்த கோட்ட வாயிரத் தெட்டு வேழம்
நிரைத்தன மண்ணு நீர்க்கு முரசொடு முழவம் விம்ம
வரைத்தலைத் துவலை போன்று மதநில நனைப்ப வன்றே.

---

2412. இயம் - வாத்தியங்கள். ஏத்து ஒலி - புகழ்தலாலுண்டான ஒலி. திருமயிரைப் பொன்னகலிலே ஏற்பக்கொண்டு இழிந்தனர். நிழன்றன - நிழலைச்செய்தன; "ஏரோர்க்கு நிழன்ற கோலினை" (சிறுபாண். 233). நிரை சங்கு - வரிசையான சங்குகள்.

2413. கோதை - இலக்கணை. கடிகோயிலாள் - சிறந்த கோயிலையுடைய திருமகள். புலம்ப - வருந்த.

(உரை) [1] சீவக. 223, அடிக். [2] மயிர்வினைக் கல்யாணமென்றது இங்கே புருவமொதுக்குதலை என்பர்.

2414. விரைத்தலைமாலை - வாசனையைத் தன்னிடத்தேயுடைய மாலை. சேப்ப - சிவப்ப. கோட்ட - தந்தத்தையுடைய. ஆயிரத்தெட்டு யானை மண்ணு நீர்க்குச் செல்லல்; "கோல யானை நாலிரண்டு மிகையா, ஆயிர மணிந்தவை கோயிலுட் டரூஉம்" (பெருங். 2. 2 : 203 - 4). விம்ம - ஒலிப்ப. வரைத்தலை - மலையினிடத்து. மதநீருக்குத் துவலை உவமை. நனைப்ப வேழம் நிரைத்தன.

(இ - ள்.) வரைத்தலைத் துவலைபோலே மதம் நிலத்தை நனையா நிற்க மின்னனார் மாலையைச் சூட்டித் தாம் அரைத்த சந்தனத்தை யணிந்த வேழங்கள், இயங்கள் விம்மாநிற்க மஞ்சனநீர் கொண்டுவருதற்கு நிரைக்கப்பட்டனவென்க.

கோட்டவாகிய வேழம். (௬௭)

2415. கான்முகம் புதைத்த தெண்ணீர் கவர்ந்துபொற் குடங்களார்த்தி, ஊன்முகம் புதைத்த வேற்கண் ணவர்களிற் றுச்சியேற்றி, வான்முகம் புதைத்த பன்மீன் மதியென மருண்டு நோக்கத், தேன்முகம் புதைத்த மாலைக் குடைநிழற் றிருவிற் றந்தார்.

கான் : ஆகுபெயர்.

(இ - ள்.) நிணத்தை யழுத்திய வேல்போலும் கண்ணினார், பூமுக மறைத்த நீரை முகந்து பொலிவினையுடைய குடங்களை நிறைத்து அவற்றை மீனும் மதியு மென்று நோக்கும்படி அக்களிற்றிலே யேற்றி அவர் குடைநிழலிலே செல்வத்தோடே தந்தாரென்க.

குடங்கட்குப் பன்னிறமுடைமையானும், சிறுமைபெருமையானும் மீனும் மதியமும் உவமமாயின. [1] தேனினம் முகத்தை மறைத்த மாலை. (௬௮)

2416. (க) இழைத்தபொன் னகரின் வெள்ளி யிடுமணை மன்னரேத்தக், குழைப்பொலிந் திலங்கு காதிற் கொற்றவ னிருந்தபின்றை, மழைக்கவின் றெழுந்த வார்கொண் மணிநிற வறுகைநெய்தோய்த், தெழிற்குழை திருவில் வீச மகளிர்நெய் யேற்றுகின்றார்.

---

2415. கான் - வாசனை ; அதனையுடைய பூவுக்கு ஆயிற்று. ஆர்த்தி-நிறைத்து. ஊன்முகம் புதைத்தல் வேலுக்கு அடை. உச்சியில் ஏற்றி. மீனும் மதியும் என்ன. மாலைக்குடை - மாலையை யணிந்த குடை. திருவின் - செல்வத்தோடு.

(உரை) [1] தேனினம் : வண்டினுள் ஒருவகை.

2414-5. மு. பெருங். 1. 42 : 134-6 ; 2. 5 : 9-16.

2416. இழைத்த......இடுமணை : "நுண்ணிது வரித்த...மணை சேர்த்தி" (பெருங். 1. 42 : 95-7). ஏத்த, மணையில் இருந்த பின்றை மழைக் கவின்று - மழையால் அழகுபெற்று. மணிநிற அறுகை - நீலமணி போன்ற அறுகம்புல்லை ; "பயம்பம லறுகைத், தழங்குகுரல் வானின் றலைப்பெயற் கீன்ற, மண்ணுமணி யன்ன மாயிதழ்ப் பாவை" (அகநா. 136 : 11-3). அறுகை நெய் தோய்த்து ஏற்றல் : சீவக. 487, அடிக்.

2417. (உ) மின்னுமிழ் வைரக் கோட்டு விளங்கொளி யிமய மென்னும், பொன்னெடுங் குன்றம் போலப் பூமிமே னிலவி வையம், நின்னடி நிழலின் வைக நேமியஞ் செல்வ ஞகி, மன்னு வாய் திருவோ டென்று வாழ்த்திநெய் யேற்றி ஞரே.

இவை இரண்டும் ஒரு தொடர்.

(இ - ள்.) பொன்ஞலிழைத்த நகரிலே வெள்ளியாற்செய்யப்பட்ட மணையிலே அரசரேத்தக் கொற்றவனிருந்த பின்பு, மகளிர் மழைக்குக் கிளைத்தெழுந்த அறுகை நெய்யைத் தோய்த்துக் குழை வில்லை வீச நெய் யேற்றுகின்றவர்கள், இமவானைப்போலே நிலத்திலே நிலைபெற்று நின் அடிநிழலிலே உலகம் வைகச் [1] சக்கரவாளசக்கரவர்த்தியாய் இலக்கணை யோடே மன்னுவாயாக வென்று வாழ்த்தி நெய்யை யேற்றிஞரென்க.

(ரு௯ - ௬௦)

(வேறு)

2418. நீடு நீர்மணி நீரு மல்லவும்
ஆடு நீரன வத்து மண்களும்
ஊடு மின்னனு ருரிஞ்சி யாட்டிஞர்
கூடி யின்னியங் குழுமி யார்த்தவே.

நீடு நீர் - கங்கைமுதலிய தீர்த்தநீர். மணிநீர் - சந்திரகாந்தக்கல்லி னீர். அல்லவென்றது, அத்தையும் மண்ணையுமொழிந்த ஐந்துவிரையை யும், முப்பத்திருவகை ஓமாலிகையையுமாம். அத்து - துவர்; 'பத்து மண்' என்றும் பாடம். மண்ஞவன; "ஆனையே றேனக்கோ டாற்றங் கரைபுற்று, வானவர்தங் கோயிலெழில் வான்கழனி - பானிலவு, முத்தெறி யும் வெண்டிரைநீர் மூதூர் வடதருவேர், பத்துமிதன் மண்ஞகப் பார்." ஒழிந்தனவற்றிற்கு, "கங்கையின் களிற்றி னுச்சி" (சீவக. 623) என்ற கவியிற் கூறிஞம். ஊடு - இடை.

---

2417. வயிரக் கோட்டு இமயம்: "இமயத்துப் பிறந்த வயிரச் சாதி" (பெருங். 1. 58 : 38). இமயமென்னும் குன்றுபோல் நிலவல்: "நிலியரோ......பொற்கோட் டிமயமும் பொதியமும் போன்றே" (புறநா. 2); "பொன்னணி நெடுமலை போலவும்......மன்னுகவிவர்" (பெருங். 2 : 3 : 92-3); "பூமலி நாவற் பொழிலகத்துப் போய்நின்ற, மாமலைபோன் மன்னுக நீ" (பு - வெ. 226). அடிநிழல்: சீவக. 1087; "தாணிழல் வாழ்நர்" (புறநா. 161 : 30)

(உரை) [1] சக்கரவாள சக்கரவர்த்திகள்: புறநா. 175-ஆம் பாடலின் விசேடவுரை.

2418. அத்து - துவர்; துவர் உரிஞ்சி ஆட்டுதல்: சீவக. 623. கூடி - தம்முள் ஒத்து. குழுமி - திரண்டு. ஆர்த்த - ஒலித்தன.

(இ - ள்.) இடைமின்னையொப்பார், பூசுநீரனவாகிய அத்தாலும், மண்ணாலும், அல்லனவற்றாலும் உரிஞ்சி நீர்களாலே ஆட்டினார்; அப்பொழுது இயங்கள் தம்மில் அளவொத்துத் திரண்டு ஆர்த்தனவென்க. (சக)

2419. திருவ மன்னவன் சென்னித் தேர்மன்னர்
பொருவெண் பொற்குட முமிழும் பொங்குநீர்
பருதி தன்னொளி மறையப் பான்மதி
சொரியுந் தீங்கதிர்த் தோற்ற மொத்தவே.

திருவ ; அ : அசை.

(இ - ள்.) சீவகன்சென்னியிலே உமிழும் மன்னரெடுத்த வெள்ளிக் குடத்துநீர், பருதியினொளி மறைய மதி சொரியும் கதிரையொத்தன வென்க.

வெண்பொனென்ப, வெள்ளியை. (சஉ)

2420. துளங்கு மாமணித் தூண்க ணான்கினால்
விளங்கு வெள்ளிவேய்ந் தாய்ந்த மாலைசூழ்
வளங்கொண் மாமணிக் கூடஞ் சேர்த்தினார்
இளங்க திர்கொலோ விருந்த தென்னவே.

மணித்தூண் நான்கினால் விளங்கு கூடம், வெள்ளியால் வேய்ந்து மாலை சூழ்கூடம்.

(இ - ள்.) கதிர் இருந்ததோவென்னக் கூடத்தே சென்றிருக்கும்படி பண்ணினாரென்க. (சங)

2421. ஆய்ந்த பானிற மாய்பொற் கம்பலம்
வேய்ந்த பொங்கணை வெண்பொற் கட்டின்மேல்
நீந்து நித்தில விதான நீழலாற்
கேந்தி னாரணி யேந்து நீர்மையார்.

---

2419. மன்னவன் - சீவகன். வெண்பொன் - வெள்ளி. பருதி - சூரியன் ; இது கிரீடத்துக்கு உவமை. பால்மதி - பாலைப்போன்று வெள்ளிய சந்திரன்.

2420. துளங்கும் - ஒளி அசையும். மணிக்கூடம் - அழகிய கூடம். இளங்கதிர் - பாலசூரியன்.

2421. நீந்து நித்திலம் : சீவக. 858, ந. நீழலால் - நிழலில்; உருபு மயக்கம்.

(இ - ள்.) தெரிந்த பானிறம் ஒளிகெட்ட பொலிவினையுடைய கம்பலம் வேய்ந்த அணையையுடைய வெள்ளிக்கட்டிலின்மேலே நீத்தத்திலுண்டான நித்திலவிதானத்தின் நிழலிலே இருந்தவர்க்கு [1] ஒப்பனைக்குரியார் அணியை ஏந்தினரென்க.

ஆய்தல் - [2] உள்ளதனுணுக்கம். மானிறவாய்பொனும் பாடம். (சச)

2422. ஈரங் கொன்றபி னிருண்ம ணிச்சுடர்
நீர வாய்நிழ லுமிழுங் குஞ்சியை
ஆர கிற்புகை வெறியி னலமைத்
தேர்ப டச்செய்தா ரெழுதிற் றென்னவே.

(இ - ள்.) நீலமணியினது ஒளியினீரவாய் நிழலுமிழுங்குஞ்சியை ஆற்றின பின்பு அகிற்புகையினது மணத்தாலே அமைத்து எழுதிற்றென்ன அழகுபட முடித்தாரென்க. (சரு)

2423. ஈடில் சந்தன மேந்து தாமரைத்
தோடின் பயில்வினுற் பூசித் தூமலர்
வீடு பெற்றன வின்றெ டென்னவே
சூடி னனரோ சுரும்புண் கண்ணியே.

இடுதலில் : விகாரம்; இடுதல் - உவமித்தல். இது வழக்கு. வீடுபெற்றனவென்றது, இவன் சூடிய மலர் பெற்ற அழகு தாம் சூடுங் காலத்திற் பிறவாமை கண்டு எல்லாரும் தம்மைச் சூடுந்தன்மையைக் கைவிடுதலை மலர் பெற்றனவென்றவாறு.

(இ - ள்.) சந்தனத்தைத் தாமரையிதழின் கனத்தோடே பூசி மலர் வீடு பெற்றன இன்றேடென்னும்படி அம்மலரையுடைய கண்ணியைச் சூடினனென்க. (சசு)

2424. மற்ப கம்மலர்ந் தகன்ற மார்பின்மேல்
விற்ப கக்குலா யாரம் வில்லிடக்
கற்ப கம்மலர்ந் தகன்ற தோவெனப்
பொற்ப கப்பொலங் கலங்க டாங்கினன்.

---

(உரை) [1] ஒப்பனை - அலங்காரம். [2] தொல். உரி. 32.

2422. கொன்றபின் - போக்கிய பின்பு. மணி - நீலமணி. வெறி - மணம். ஏர்பட - அழகு உண்டாக.

2423. தாமரைத் தோடின் பயில்வு - தாமரைப்பூவினது அகவிதழின் அளவு; "சாந்தின், காசறு குவளைக் காம ரகவிதழ் பயில மட்டித்து" (சீவக. 622). வீடு - கைவிடப்படுதலை. கண்ணி - தலையிலணியும் மாலை.

2424. மல் - மல்யுத்தம். பக - நீங்க. மலர்ந்து - பரந்து. மற்பக மலர்ந்தகன்ற மார்பு : "மற்பக மலர்ந்த திண்டோண் மைந்தரும்" (பாகவதம், 10. 17 : 32). வில்பக - இந்திரவில் கெடும்படி. குலாய் - விளங்கி; வளைந்து எனலுமாம். பொற்பு - பொலிவு.

(இ - ள்.) மற்றெழில்தான், பிறரிடத்துநின்றும் போம்படி தன்னிடத்தே பரக்கப்பட்டு அகன்ற மார்பின்மேலே இந்திரவில் தோற்கும் படி குலாவி ஆரம் வில்லிடாநிற்கக் கற்பகம் பூத்துப் பரந்ததோ வென்னும்படி பொற்பை அகத்தேயுடைய ஒழிந்த கலங்களை அணிந்தானென்க. (௪௭)

2425. உருவ மார்ந்தன வுரோமப் பட்டுடுத்
தெரியும் வார்குழை சுடர விந்திர
திருவி லன்னதார் திளைப்பத் தேங்குழல்
அரிபெய் கண்ணியர்க் கநங்க ளுயினன்.

(இ - ள்.) எலிமயிர் முதலியவற்றாற் செய்த பட்டை உடையாக வுடுத்துக் குழை சுடரத் .தார் திளைப்பக் கண்ணியர்க்கு அநங்கனாயினானென்க.

செயவெனெச்சங்கள், "ஆன்வந் தியையும் வினைநிலையான்" (தொல். வினை. 35) முடிந்தன. இவளை யொழிந்தோர்க்கு அரியனாய் வருத்துதலின், அநங்கனென்றார். (௪௮)

2426. தாவி ருழ்வடந் தயங்க நீருறீஇ
மேவி யச்சுதந் தெளித்த பின்விரைந்
தாவி யும்புகை சுழற்றி யாடியும்
வீவில் வெஞ்சுடர் விளக்குங் காட்டினர்.

(இ - ள்.) மகளிர், வடந்தயங்க விரைந்துமேவி அச்சுதத்தை நீரிலேயுறுத்தித் தெளித்த பின்பு தூபபாத்திரம் [1]ஆவித்த புகையைச் சுழற்றி விளக்கையும் ஆடியையும் காட்டினரென்க.

ஆவி அம் புகை : வினைத்தொகை. இவை காட்டுதலியல்பு. (௪௯)

2427. உவரி மாக்கட லொல்லென் வெண்டிரை
இவரி யெழுவபோன் றிலங்கு வெண்மயிர்க்
கவரித் தொகைபல வீசுங் காவலர்
இவரித் தொகையென்ப தின்றி யாயினர்.

---

2425. உருவம் - செந்நிறம். உரோமப்பட்டு - எலிமயிராற் செய்த பட்டு. எரிதல் - விளங்குதல். இந்திரதிருவில்லன்ன தார்-இந்திரவில்லைப் போன்ற மாலை; சீவக. 2070. திளைப்ப-தங்க. அரி - செவ்வரி, கருவரி. கண்ணியர் : மகளிர்.

2426. தா - கெடுதல். உறீஇ = உறுத்தி - பொருத்தி. அச்சுதம் : சீவக. 2411. ஆடி - கண்ணாடி. வீவு - அவிதல்.

(உரை) [1] ஆவித்த - வாய்விட்ட.

2427. கவரிக்கு அலை உவமை; சீவக. 2369. இவரி - பரந்து.

உவரிநீரையுடைய கடற்றிரை பரந்து எழுவன போன்றிலங்கும் கவரி; மயிர்க்கவரி : [1] முதற்கேற்ற அடையடுத்த ஆகுபெயர். இத் தொகையர் : விகாரம்.

(இ - ள்.) இவர் இத்தொகையரென்பதின்றுகக் கவரி வீசும் காவலர் திரண்டாரென்க. (௬௦)

2428. அறுகு வெண்மல ரளாய வாசநீர்
இறைவன் சேவடி கழுவி யேந்திய
மறுவின் மங்கலங் காட்டி ஞர்மணக்
குறைவில் கைவினைக் கோல மார்ந்ததே.

(இ - ள்.) அறுகையும் மலரையுங் கலந்த நீரானே இறைவனடியைக் கழுவி, எடுத்த அட்டமங்கலங்களையும் காட்டினார்; அப்பொழுது குறைவில்லாத கைவினையையுடைய மணக்கோலம் ஆர்ந்ததென்க. (௬௧)

(வேறு)

2429. ஊனிமிர் கதிர்வெள்வே லுறைகழித் தனபோலும்
தேனிமிர் குவளைக்கட் டிருமக ளனையாளைப்
பானிமிர் கதிர்வெள்ளி மணைமிசைப் பலர்வாழ்த்தி
வானிமிர் கொடியன்னார் மணியணை மிசைவைத்தார்.

(இ - ள்.) ஊனிலே வளர்ந்த வேல் உறை கழித்தவற்றையொக்கும் கண்ணையுடைய இலக்கணையை மேகத்திலே பரந்த மின்னுக்கொடியை யொப்பார் பலரும் வாழ்த்தி வெள்ளிமணையிலிட்ட அழகிய அணையிலே இருத்தினாரென்க.

பால்போலப் பரந்த கதிர். (௬௨)

2430. வரைவிளை வளர்பொன்னே வலம்புரி யொருமணியே
திரைவிளை யமிர்தம்மே திருவிழை யெனவேத்தி
வரைவளை முழவிம்ம மணிகிள ரொலியைம்பால்
அரைவிளை கலைநல்லா ரறுகினெய் யணிந்தனரே.

---

(உரை) [1] கவரி - இங்கே மானைக் குறித்தமையின் இங்ஙனம் உரை எழுதினார்.

2428. அறுகும் வெண்மலரும். அளாய - கலந்த. இறைவன் - சீவகன். குறைவில் மணக்கோலமென மாறிக் கூட்டுக. ஆர்ந்தது - நிறைந்தது.

2429. உறைகழித்த வேல் கண்ணுக்கு உவமை. துன்பத்தைச் செய்தலின் வேலும், இன்பத்தைச் செய்தலின் குவளையும் உவமை ஆயின; சீவக. 491, ந.

2430. வரை விளை - மலையில் விளைந்த. அடி, 1 : சிலப். 2 : 73. அமிர்தம்மே : சந்தம் நோக்கி ஒற்று விரிந்தது. வரி - கீற்று. முழ -

(இ - ள்.) நல்லார், திருவிழையானவள், பொன்னே, மணியே, அமுதேயென்று ஏத்தி வளையும் முழவும் விம்மாநிற்க அவளைம்பாலிலே அறுகாலே நெய்யை யணிந்தாரென்க.

ஏகாரம் : தேற்றம். 'திருவிழைக' என்று பாடமாயின், விளியாக்கி, நின்னைத் திரு விரும்புகவென்க. அரசென்னும் பண்புப்பெயர், அரை யெனப் பண்புமாத்திரை விளக்கிற்று; அரசியல் முற்றுப்பெற்ற நூற் கலையைவல்ல நல்லாரென்க. (ருங)

2431. கள்ளவிழ் கமழ்கோதைக் காவலன் றிருமகளை
வெள்ளணி மதயானை விழுமணிக் குடமேற்றித்
தெள்ளறன் மண்ணுந்நீ ராட்டினர் தேமலர்மேல்
ஒள்ளிழை யவளொத்தா ளுருவநுண் ணுசுப்பினாள்.

(இ - ள்.) வெள்ளணியணிந்த யானையிரண்டின்மேலே குடத்தை யேற்றிக் காவலன்மகளை நீராட்டினர்; அங்ஙனம் இரண்டினாலும் ஆட்டு தலின் திருவையொத்தாள், அவளென்க. (ருச)

2432. வான்மலர் நுரைசூடி மணியணி கலன்சிந்தாத்
தானிள மணலெக்கர்த் தவழ்கதிர் மணியாரம்
ஏனைய நறுஞ்சுண்ணங் குங்கும மிடுங்களியாத்
தேனின மிசைபாடத் தீம்புன னடந்தஃதே.

(இ - ள்.) அவராட்டின தீம்புனல்தான், மணியும் ஆரமும் இள மணலாலிடும் எக்கராக ஏனையவாகிய சுண்ணமும் குங்குமமும் வண்ட லாகக் கொண்டு மலராகிய நுரையைச் சூடி அணிகலங்களின் மணியை மணியாகச் சிந்தித் தேனினம் பாட நடந்ததென்க. (ருரு)

முழா. மணி கிளர் - நீலமணியின் தன்மை விளங்கும். ஒலி ஐம்பால் - தழைத்த ஐந்து பகுதியான கூந்தலில். நல்லார் - மகளிர். அறுகின் - அறுகம்புல்லால்.

2431. காவலன் - கோவிந்தராசன். மங்கலத்தின் பொருட்டு யானைக்கு வெள்ளணியணிதல் இயல்பு; "வெண்டுகில் பூட்டிய வேழக் குழுவியும்" (பெருங். 1. 39 : 74). விழுமணி - சிறந்த மணி. மண்ணுந் நீர் : ஒற்று விரித்தல் விகாரம். மலர்மேல் ஒள்ளிழையவள் - திருமகள். நுசுப்பினாள் : சுட்டுப்பெயர் மாத்திரையாய் நின்றது.

2432. மலருக்கு நுரை உவமை. சிந்தா - சிந்தி. களி - சேறு. புனல் : எழுவாய். நடந்தஃது - நடந்தது; "என்னலனே, ஆறு நோயொடு கான லஃதே" (குறுந். 97 : 1-2) என்புழிப்போல விரித்தல் விகாரம்.

2433. நான்றபொன் மணிமாலை நகுகதிர்ப் பவளத்தூண்
ஊன்றின வொளிமுத்த மண்டபத் தொளிர்திங்கள்
கான்றன கதிர்காய்த்தும் வட்டணைக் கதிர்முத்தம்
ஈன்றபொன் விதானத்தின் னீழலுய்த் திரீஇயினரே.

(இ - ள்.) பொன்மாலையும் மணிமாலையும் நான்ற பவளத்தூண் நாட்டப்பட்ட முத்தமண்டபத்தே அவளையுய்த்துத் திங்களினுடைய கான்றனவாகிய கதிரைத் தானெறிக்கும் வட்டவணையிலே இருத்தினு ரென்க.

விதானத்தின் நீழலில் அணை. (௫௬)

2434. மையணி மதயானை மத்தக வகலல்குல்
நெய்யணி குழன்மாலை நிழலுமிழ் குழைமங்கை
மெய்யணி கலன்மாலை மின்னிருந் துகிலேந்திக்
கையணி குழன்மாலைக் கதிர்முலை யவர்சூழ்ந்தார்.

(இ - ள்.) கையாலணிந்த குழலையும் மாலையையும் முலையையு முடைய மகளிர், அணிகலமுதலியவற்றை யேந்தி, அஞ்சனமணிந்த யானையின் மத்தகம் போலும் அல்குல் முதலியவற்றையுடைய மங்கை யைச் சூழ்ந்தாரென்க.

கையணி - கைசெய்யப்பட்டனவென்றுமாம். (௫௭)

2435. அவ்வளை யவிராழிக் கால்பொலிந் தழகார்ந்த
மைவிளை கழுநீர்க்கண் விலாசியு மணியல்குற்
கைவளை யலங்கார மாலையுங் கமழ்கோதை
நைவள மிகுசாய னங்கையைப் புனைகின்றார்.

(இ - ள்.) கோதையினையும், நட்டபாடையினுமிக்க மெல்லிய மொழி யினையுமுடைய நங்கையை அழகிய வளைந்த விரன் மோதிரத்தையுடைய கால் பொலிவுபெற்று அழகார்ந்த விலாசியும், கையில்வளையையும் மணி யல் குலையுமுடைய அலங்காரமாலையும் [1] ஒப்பியாநின்றாரென்க.

2433. நான்ற - தொங்கிய. மாலையைப் பொன்னோடும் கூட்டுக. காய்த்தும் - எறிக்கும். வட்டணை - வட்டவணை ; தொகுத்தல்.

2434. மையணி யானை : "மையணி யிரும்பிடி", "மையணி வேழ முமாவும் பண்ணி", "மையணி யானை தாங்கித் தழும்பிய" (பெருங். 1. 48 : 184, 55 : 134, 56 : 133, 2. 12 : 37); "இழையஞ்சன மால்களிறு" (கம்ப. அதிகாயன். 21). மத்தகம் அல்குற்குவமை. நெய் - புழுகு. குழை - காதணி. மங்கை - இலக்கணையை.

2435. வளையாழி : வினைத்தொகை. ஆழி - காலாழி. மை - கருமை. விலாசி, அலங்காரமாலை : இலக்கணையின் தோழிமார்கள். நைவளம் - ஒரு பண். சாயல் - மெல்லிய மொழி ; ஆகுபெயர்.

(உரை) [1] ஒப்பியா நின்றார் - அலங்கரிக்கின்றார்.

மைவிளை கழுநீர் - நீலோற்பலம். (௫௮)

2436. யானையு ளரசன்ற னணிகிளர் வலமருப்பீர்ந்
தூனமி லொளிர்செம்பொன் பதித்தொளி மணியழுத்தி
வான்மண முறச்செய்த மங்கல மணிச்சீப்புத்
தான்முகில் சுழிமதிபோற் றன்னுறை நீக்கினளே.

(இ - ள்.) களிற்றரசனது வலக்கொம்பை அறுத்துப் பொன்னைப் பதித்து மணியழுத்தி மணந்தங்கச்செய்த சீப்பை விலாசிதான் முகிலி னின்றுங் கழியு மதிபோல அதனுறையினின்றும் நீக்கினாளென்க. (௫௯)

(வேறு)

2437. மைந்நூற் றனைய மாவீ ழோதி வகுத்துந் தொகுத்தும் விரித்தும், கைந்நூற் றிறத்திற் கலப்ப வாரிக் கமழு நானக் கலவை, ஐந்நூற் றிறத்தின் னகிலின் னாவி யளைந்து கமழ வூட்டி, எந்நூற் றிறமு முணர்வா ளெழிலேற் றிமிலின் னேற்ப முடித்தாள்.

(இ - ள்.) எந்நூற்றிறமுமுணர்வாள், தன்கையாலே, இருளை நூற் றனைய வண்டுவீழோதியைக் கலவையையும் புகையையும் வியக்கத்தக்க நூல்வழியோடே அளைந்து ஊட்டிக் கலக்க வாரி முகத்துக்கேற்ப இமில் போலே முடித்தாளென்க.

கையால் முடித்தாள். [1]குழலையும் அளகத்தையும் வகுத்தும், கொண்டையைத் தொகுத்தும், பனிச்சையையும் துஞ்சையையும் விரித் தும் நூற்றிறத்தின்.........முடித்தாளென்க. (௬௦)

2438. கரும்புந் தேனும் மமிழ்தும் பாலுங் கலந்த தீஞ்சொன் மடவாட், கரும்பும் மிலையு மயக்கி யாய்ந்த முல்லைச் சூட்டு மிலைச்சித், திருந்து திங்கள் சூழ்ந்த மின்னிற் செம்பொற் பட்டஞ் சேர்த்தி, விரும்பும் முத்தம் மாலை நான்ற விழுப்பொன் மகரஞ் செறித்தாள்.

2436. யானையுளரசன் : சீவக. 2365, அடிக். "இருங்களிற் றின நிரை யேந்தல்" (குறுந். 180 : 2). வலமருப்பு - வலப்பக்கத்துத் தந்தம். ஊனம் - குற்றம். வான் மணம் - சிறந்த வாசனை. முகில்கழிமதி - மேகத் தினின்றும் நீங்கிய சந்திரன்.

(மேற்.) அடி, 1 : பிரயோக. திங்ஙு. 15.

2437. மை நூற்றன்ன - மையை நூலாக நூற்றாற்போன்ற ; "இரு டிருக்கிட்டு" (சீவக. 164). மா - வண்டு. ஓதி - கூந்தலை. அகிலின் ஆவி - அகிற்புகை. ஏற்று இமிலின் - காளையின் திமிலைப்போல. மு. பெருங். 1. 34 : 190-93.

(உரை) [1] குழல் முதலியன ஐம்பாலின் வகைகள்.

2438. கரும்பும்.........தீஞ்சொல் : "குழலும் யாழு மமிழ்துங் குழைத்த நின், மழலைக் கிளவிக்கு" (சிலப். 2 : 58-9); "கரும்பு மமுதுங்

**(இ - ள்.)** தீஞ்சொன்மடவாட்குத் திங்களைச்சூழ்ந்த மின்போலே பட்டத்தைச் சேர்த்தி அரும்பும் இலையும் இடையிட்டுக் கட்டின [1] முல்லைச்சூட்டைக் கற்புக்கு மிலைச்சி முத்தமாலை நான்ற மகரவாயான பணியை அணிந்தாளென்க. (சுக)

2439. கள்ளுந் தேனும் மொழுகுங் குவளைக் கமழ்பூ நெரித்து வாங்கிக், கிள்ளை வளைவா யுகிரிற் கிள்ளித் திலகந் திகழப் பொறித்துத், தெள்ளும் மணிசெய் சுண்ணம் மிலங்கத் திருநீர் நுதலின் னப்பி, உள்ளம் பருகி மதர்த்த வாட்கண் ணுருவம் மையிற் புனைந்தாள்.

கள்ளும் - களவு காணும்; "கள்ளத்தாற் கள்வே மெனல்" (குறள், 282) என்றார். கமழ்தேனும் பொசியுமளவன்றி யொழுகும் குவளைப்பூ வென்க.

**(இ - ள்.)** கிள்ளையின் வளைவாய்தான் தன்றன்மையைக் கள்ளும் உகிராலே மயிரைக் கோத்து வாங்கி அதனுள்ளே குவளைப்பூவைப் புற விதழைக் கிள்ளி நெரித்துத் திகழப் பொறித்துத் திருநீர் நுதலிலே திலகத்தை மணிச் சுண்ணத்தாலே இலங்க அப்பிக் கண்ணை நிறத்தை யுடைய மையாலே புனைந்தாளென்க.

பொறித்து - எழுதினாற்போல வைத்து. கணவனுள்ளத்தைப்பருகி. (சுஉ)

2440. நாகம் மருப்பி னியன்ற தோடுந் நலங்கொள் சுறவுக் குழையும், போக நீக்கிப் பொருவிஃ றிருவில் லுமிழ்ந்து மின்னுப் பொழியும், ஏக மாகி யெரியும் மணியின் னியன்ற கடிப்பு வாங்கி, மேக விசும்பிற் றேவர் விழைய விளங்கச் சேர்த்தி னாளே.

---

கொற்றேனுங் கலந்த கனிவா யந்தீஞ்சொல்" (கூர்ம. கண் - மணம். 234). அரும்பும் இலையும் கலந்த சூட்டு : "புலராப் பச்சிலை யிடையிடுபு தொடுத்த, மலரா மாலை" (புறநா. 33). முல்லைச் சூட்டு மிலைச்சி : "மங்கல நறுஞ்சூட்டு மரபி னணிந்து" (பெருங். 3. 22 : 211). பட்டத் திற்கு மின்னல் உவமை. நான்ற - தொங்கிய. விழுப்பொன் - மாற்றுயர்ந்த பொன்.

(மேற்.) அடி, 1 : சிலப். 2 : 53 - 61, அடியார்.

(உரை) [1] சீவக. 624, அடிக்.

2439. நெரித்து - புறவிதழை ஒடித்து. கிள்ளை - கிளி. கிளியின் மூக்கு உகிருக்கு உவமை : பொருந. 34 ; பெருங். 2. 15 : 76, 4. 7 : 42. உகிரின் - நகத்தால். திலகம் - பொட்டு. மணியாற் செய்யப்பட்ட சுண்ணம். சுண்ணத்தை அப்பி எனலுமாம் ; "அளகத் தப்பிய, செம் பொற் சுண்ணஞ் சிதர்ந்த திருநுதல்" (பெருங். 1. 33 : 119-20). உருவம் - நிறம்.

2440. நாகமருப்பு - யானைத்தந்தம். சுறவுக்குழை - மகரகுண்டலம். பொருவில் திருவில் ; திருவில் - இந்திரவில் போன்ற பலநிற ஒளி. எரியும் - ஒளிவிடும். கடிப்பு - ஒருவகைக் காதணி. தேவர் - தெய்வ மகளிர்.

(இ - ள்.) நாகமருப்பினியன்ற தோட்டையும் நலங்கொண்ட மகரக் குழையையுங் காதினின்றும் போக நீக்கி, மின்னுனது சொரியும் பொரு வில்லாத திருவில்லைத் தான் உமிழ்ந்து ஏகமாகி எரியுமணியின் இயன்ற குதம்பையை ஏந்தி நின்றவள் கையினின்றும் வாங்கிக்கொண்டு அவள் விளங்கச் சேர்த்தினளென்க.

தேவர் : ஈண்டுப் பெண்பன்மை. (கூ௩)

(வேறு)

2441. விலங்கரம் பொருத சங்கின் வெள்வளை தெளிர்க்கு முன்கை, நலங்கிளர் பவள நன்பொன் விரன்மணி யாழி மின்னக், கலந்தின்று பணைத்த தோளுங் கவின்வளர் கழுத்து மார்ந்த, வலம்புரி யீன்ற முத்த மணிநிலா நக்க வன்றே.

(இ - ள்.) வளைந்த வாளரமறுத்த சங்கவளையொலிக்கும் முன் கையில் நலங்கிளர் பவளம்போலும் விரலிலணிந்த நன்பொன்மணியாழி மின்னநிற்க, தோளிலும் கழுத்திலும் அணிந்த முத்தம் நிலாவைக் கெடுத்தனவென்க.

[1] இன் : அசை. (கூ௪)

2442. மாமணி முகடு வேய்ந்த மரகத மணிச்செப் பன்ன
தூமணி முலைக டம்மைத் தொழுதகக் கமழுஞ் சாந்திற்
காமரு காம வல்லிக் கொடிகவின் கொண்டு பூத்துத்
தூமணிக் கொழுந்து மென்றோட் டுயல்வர வெழுதி னாளே.

மரகதமணியைத் தலையிலே அழுத்திய பெரிய பவழச் செப்பு. இவள் நிறம் பவழத்தின் நிறமென்றார், பலவிடத்தும்.

(இ - ள்.) காமவல்லியாகிய கொடி முலைகள் தம்மை இடங்கொண்டு கவின் பூத்துத் தோளிலே கொழுந்து அசையும்படி தொழுதகச் சாந்தி னால் எழுதினாளென்க. (கூ௫)

2441. விலங்கு அரம் பொருத - வளைந்த அரத்தால் அராவப்பட்ட; "வேளாப் பார்ப்பான் வாளரந் துமித்த வளை" (அகநா. 24 : 1-2). தெளிர்க்கும் - ஒலிக்கும்; "செறிதொடி தெளிர்ப்ப வீசி" (அகநா. 106 : 8). பவளத்தைப்போன்ற விரலில். கலந்தின்று - ஆபரணத்தை உள்ளே அடக்கி. பணைத்த - பெருத்த. தோளிலும் கழுத்திலும் ஆர்ந்த. (உரை) [1] 'சங்கின்' என்பதிலுள்ளது.

2442. முகடுவேய்ந்த - உச்சியிலே அழுத்திய. மணி - அழகு. சாந் தினால் கொழுந்தை எழுதினாள் என்க. காமரு - விருப்பம் மருவின. மென்றோள் துயல்வர - மெல்லியதோளில் அசையும்படி. இதிற் கூறப் பட்ட சிற்ப விசேடம் மிகப் பாராட்டற்பாலது; சீவக . 1081, அடிக்.

2443. நாண்சுமக் கலாத நங்கை நகைமின்னு நுசுப்பு நோவப்,
பூண்சுமக் கலாத பொன்ஞாண் வடத்தொடு புரள நோக்கிப்,
பாண்குலாய் வண்டு பாடும் படுகணை மறந்து காமன், காண்
கிலேன் கடிய வென்று வுருகிமெய் கரந்திட் டானே.

(இ - ள்.) பிறராற் சுமக்கலாகாத நாணினையுடைய நங்கையது நுசுப்பு நோம்படி சுமக்கலாகாத பூணும் நாணும் முத்துவடமும் புரள வணிய, அதனைக் காமனோக்கி மலர்க்கணையை எய்ய மறந்து இங்ஙனம் கடியன காண்கிலேனென்று கருதி இவடன் மெய்யிலே கரந்து வேட்கையை விளைவித்தானென்க.

அநங்கனானன். (சுசு)

2444. அவாக்கிடந் தகன்ற வல்கு லணிகிளர் திருவிற் பூப்பத்,
தவாக்கதிர்க் காசு கண்டா ராவியைத் தளரச் சூட்டிக், கவாய்க்
கிடந் தணங்கு நாறுங் கண்கொளாப் பட்டு டுத்தாள், உவாக்
கதிர்த் திங்க ளம்மென் கதிர்விரித் துடுத்த தொத்தாள்.

(இ - ள்.) கண்டாராவி தளரும்படி காசுகள் அவாத்தன்மை கிடந் தகன்ற அல்குலிலே சூட்டப்பட்டுத் தெய்வத்தன்மை நாறும் பட்டைத் தானுடுத்தவள் நிறைமதியின் கதிரை விரித்துடுத்த தன்மையை ஒத்தாளென்க.

திருவிற்போலப் பூப்பச் சூட்டி. ஆவியை ; ஐ: அசை. கவாய் - கவ்வி. கண்கொளா - [1] இழைதெரியாத. அணிந்தாள்பாடமாயின் விலாசியாக்குக. (சுஎ)

---

2443. நகைமின்னு நுசுப்பு - ஒளியையுடைய மின்னலைப் போன்ற இடை. பூணும் ஞாணுமென உம்மை விரிக்க. வண்டுபாடும் கணையென்றது மலர்க்கணையென்றபடி. காமன் : எழுவாய்.

2444. அவாக்கிடந்து - ஆசையைப் போலப் பரந்து ; " அவாப்போலகன்றத னல்குல் " (யா. கா. ஒழிபு. 8, மேற்.). தவாக்கதிர்க்காசு - கெடாத ஒளியையுடைய மணிகளை. அல்குலிற் காசைச் சூட்டி. கண் கொளாப்பட்டு : " நோக்கு நுழைகல்லா நுண்மைய......அறுவை " (பொருந. 82-3). உவா - கலைநிறைதல். திங்களுடைய கதிரை.

(உரை) [1] " இழைமருங் கறியா நுழைநூற் கலிங்கம் " (மலைபடு. 561)

2445. இடைச்செறி துறங்கு கௌவிக் கிம்புரி யிளக மின்னும், புடைச்சிறு பரடு புல்லிக் கிண்கிணி சிலம்போ டார்ப்ப, நடைச் சிறு பாதங் கோல மணிவிர லணிந்து நாகத், துடைச்சிறு நாவிற் றோகை யிரீஇயினண் மாலை சேர்ந்தாள்.

(இ - ள்.) ஒருகூறு கிம்புரிவடிவான குறங்குசெறி குறங்கைக் கௌவி நெகிழப் பரட்டைப்புல்லிக் கிண்கிணியும் சிலம்புமார்ப்ப அணிந்து பாதத்திலும் விரலிலும் அணிவனவற்றையும் அணிந்து பாம்பி னுடைய சிறிய நாப்போலுந் தோகையை விலாசி தாழ இருத்திவிட்டாள்; பின்பு அலங்காரமாலை சேர்ந்தாளென்க. (சுஅ)

2446. அம்மல ரடியுங் கையு மணிகிளர் பவழ வாயும், செம் மலர் நுதலு நாவுந் திருந்தொளி யுகிரோ டங்கேழ், விம்மிதப் பட்டு வீழ வலத்தக மெழுதி யிட்டாள், அம்மலர்க் கண்டமுள் ளிட் டரிவையைத் தெரிவை தானே.

(இ - ள்.) அம்மாலைதான், அரிவையை மாலையணிந்த கழுத்தையுள் ளிட்டு உகிரோடே அடிமுதலியவற்றையெல்லாம் அதிசயித்து விரும்பும் படி அலத்தகத்தை எழுதினாளென்க.

செம்மலர் - நெற்றிமாலை. (சுகூ)

2447. வாண்மதர் மழைக்க ணோக்கி வருமுலைத் தடமு நோக்கிக்
காண்வர வகன்ற வல்குற் கண்விருப் புற்று நோக்கிப்
பாணுவண் டரற்றுங் கோலச் சிகழிகைப் படியு நோக்கி
ஆண்விருப் புற்று நின்றா ரவ்வளைத் தோளி னாரே.

2445. குறங்குசெறி - துடையில் அணியும் ஓராபரணம்; சீவக. 174, அடிக்.; காற்சிறுபரடுபுல்லிக் கிண்கிணியும் சிலம்பும் ஆர்த்தல்: சீவக. 177, அடிக். பெருங். 1. 35 : 208; 2. 3 : 85-6; 19 : 185-6. நாகத்து - பாம்பினது. தோகை - முன்றானை.

2446. அம்மலரடி - அழகிய மலரைப்போன்ற பாதம். விம்மிதப் பட்டு - கண்டவர் ஆச்சரியப்பட்டு. வீழ - விரும்ப. அலத்தகம் - செந் நிறம். 'இக்கவியிற் கூறப்பெற்ற கோலம் பிற்காலத்தில் வழங்காதாயிற் றென்பர் ; தொல். செய். 80, ந.

(மேற்.) மு : தொல். செய். 80, ந.

2447. காண்வர - அழகுவர. பாணு - பாட்டு. சிகழிகை - மயிர் முடி. (பி - ம்.) 'சிகழிகை வடிவும்.' மகளிர் ஆண் விருப்புறுதல் : சீவக. 587, அடிக்.; கம்ப. கோலங்காண். 19. அ வளை - அழகிய வளை.

(இ - ள்.) தோளினுர், விருப்பமுற்றுத் தம் கண்ணுலே அவள்கண்ணேயும் நோக்கி, முலேயையும் நோக்கி, அல்குலேயும் நோக்கி, பாட்டையுடைய வண்டொலிக்கும் முடியின் வடிவையும் நோக்கி இவளே நுகர்தற் குரிய ஆண்மையை விரும்பி நின்ருரென்க. (எ0)

(வேறு)

2448. தெருள்கலான் படைத்தவன் காணிற் செவ்வனே
மருள்கலா தவர்களு மருள்வர் மம்மர்நோய்
இருளிலா ரெங்ஙன முய்வ ரின்னதால்
அருளிலா ரவணல மணிந்த வண்ணமே.

(இ - ள்.) அருளிலாதார் அவளழகை அணிந்தவண்ணம், இப்படி ஆண்மையை விரும்புந் தன்மையாயிருந்தது ; இனி அயனும், காணின், நாம்படைத்த வடிவன்றென்று மயங்குவன் ; இருடிகளும் நேரே மயங்குவர் ; இத்தன்மையாயதனேக் கண்டால் மயக்கநோயையுடைய இல்வாழ்வார் எங்ஙனம் பிழைப்பாரென்ருரென்க. (எக)

2449. அலர்ந்தவந் தாமரை யல்லிப் பாவையைப்
புலந்துகண் சிவந்தன போன்று நீர்பிரிந்
திலங்கிமின் னுமிழ்ந்துலா மேனி யேந்துபொன்
மலர்ந்ததோர் கற்பக மணிக்கொம் பாயினுள்.

(இ - ள்.) பூண்கள் இலங்கி மின் உமிழ்ந்து உலாம் மேனியையுடையாள் திருவை நிகராகக் கூறற்குப் புலந்து கோபித்தனபோலக் கண்கள் கோபிக்கப்பட்டுக் கற்பகக்கொம்பாயினுளென்க.

நீர்பிரிந்து - கோபித்து. மையெழுதுதலிற் சிவந்து கோபித்ததனே நல்வினேயுடையாரிடத்தே சென்று மீளுந் திருவையொப்பாகக் கூறிய தற்குப் பொருது கோபித்தவெனத் தற்குறிப்பேற்றமாகக் கூறிற்ரும். (எஉ)

2450. மருடகு மல்லிகை மாலே வல்லவன்
பொருடகத் தொடுத்தன புனேந்த பூஞ்சிகை
இருடுணித் திடையிடை யியற்றி வெண்ணிலாச்
சுருடுணித் தொருவழித் தொகுத்த தொத்ததே.

2448. படைத்தவன் - பிரமதேவன். மருள்கலாதவர்களும் - முனிவர்களும். மம்மர் - மயக்கம். இலார் - இல்வாழ்வார். அருளிலாரென்றது இலக்கணேயை அலங்கரித்தவர்களே. அணிந்த வண்ணம் இன்னது.

2449. தாமரை அல்லிப்பாவை - திருமகள் ; "அல்லி சேரணங் கிற்கணங் கன்னவள்" (சீவக. 162). புலந்து - வெறுத்து. கற்பகக் கொம்பு : "கற்பகத்தின் பூங்கொம்போ" (பெரிய. தடுத்தாட்கொண்ட. 140)

2450. மருள்தகு-மயக்கம் பொருந்தற்குக் காரணமான. வல்லவன்-தொடுத்தலில் வல்லவன். எழுதித்து வடிவுபட மல்லிகைமாலே கட்டப்பட்ட

(இ - ள்.) வல்லவன் எழுத்துவடிவுபடக் கட்டினவாகிய மல்லிகை மாலையைப் புனைந்தமுடி. இருளையுந் துணித்து நிலாச்சுருளையுந் துணித்து ஒன்றை விட்டொன்றாக இயற்றி ஓரிடத்தே குவித்ததன்மையை யொத்ததென்க. (எங)

2451. கோமக ளுருவமாய்க் கூற்றம் போந்தது
போமினும் முயிருயக் கொண்டு போய்மனம்
காமின மெனக்கலை சிலம்பு கிண்கிணி
தாமனும் வாயினுற் சாற்று கின்றவே.

(இ - ள்.) கூற்றம் கோமகள்வடிவாய்க் கோறற்கு வந்ததாதலின், நும் உயிரை உய்யக்கொண்டு போமின்; போனாலும் ஆண்டு மனம் வருந்துதலைக் காமினென்று கலைமுதலியனதாம் தம் வாயினாலே மிகவும் சாற்றா நின்றனவென்க.

அம் : அசை. (எச)

2452. அருளிலா ரிவடம ரன்ன ராயினும்
உருடிரை யுலகெலா முருளு மின்றெனக்
கருதின கவரிசாந் தாற்றி வெண்குடை
அரிவையை மறைத்தன வால வட்டமே.

(இ - ள்.) அரிவையை ஆண்டுக் கவரி சாந்தாற்றிமுதலியன மறைத்தன; அவை, இன்று உருளுகிற திரையையுடைய உலகமெல்லாம் கெடுமெனக் கருதி, அணிந்த இவள்தமர் அருளிலாராயிருந்தார்; அவர் அத்தன்மையராயினும் யாம் அவை கெடாமல் அருளுதுமென்று கருதின போலே இருந்தனவென்க. (எரு)

---

தென்று இங்கே கூறியிருத்தல் பண்டைக்காலத்திற் சிற்பவேலையின் நுட்பம் நன்கமைந்திருந்த தென்பதைப் புலப்படுத்துகின்றது; தன் கருத்தை மானனீகையென்பவள்மட்டும் அறிந்து கொள்ளும்பொருட்டு வாசவதத்தையின் நெற்றியில் உதயணன் கோலஞ்செய்து அவள்பால் அனுப்பினனென்று பெருங்கதையில் முகவெழுத்துக் காதையிற் கூறப் பட்டிருத்தல் இதனை வலியுறுத்தும். கூந்தலுக்கு இருளும், மல்லிகைப் பூவிற்கு நிலாச்சுருளும் உவமைகள்; " மறுவகத் தடக்கிய மதியம் போலச், சிறுமுகச் சிகழிகை புடைமுதல் புதைஇய, மல்லிகை நறுஞ் சூட்டு வெள்ளிதின் விளங்க " (பெருங். 1. 46 : 231-3)

2451. கோமகளுருவிற்குக் கூற்றம்; " வேண்டுருவங் கொண்ட தோர் கூற்றங்கொல் " (கலித். 56 : 9); சிலப். 5 : 219-23. கலை - மேகலை. மனும் = மன்னும் - மிகவும்.

2452. தமர் - உறவினர். உருளும் - கெடும். சாந்தாற்றி - சிற்றால வட்டம். சாந்தாற்றியும் ஆலவட்டமும் : சீவக. 839. அரிவை-இலக்கணை.

(வேறு)

2453. (க) கரும்பே தேனே யமிர்தே காமர் மணியாழே
அரும்பார் மலர்மே லணங்கே மழலை யன்னம்மே
சுரும்பார் சோலை மயிலே குயிலே சுடர்வீசும்
பெரும்பூண் மன்னன் பாவாய் பூவாய் பிணைமானே.

2454. (உ) அம்மெல் லனிச்சம் மலரு மன்னத் தூவியும்
வெம்மை யாமென் றஞ்சி மெல்ல மிதியாத
பொம்மென் னிலவப் பூம்போ தனநின் னடிபோற்றி
இம்மென் கலையா ரிடுவென் றேத்த வொதுங்கினாள்.

இவை இரண்டும் ஒருதொடர்.

கணவற்கு மெய்ம்முழுதும் இனிதாயிருத்தலின், கரும்பு. நல்லாருறுப்பெல்லாங் கொண்டு இயற்றலின், தேன். இவ்வுலகிலில்லாத மிக்க சுவையும், உறுதியுங்கொடுத்தலின் அமிர்து. காமவேட்கையை விளைவித்து இனிய பண் தோற்றலின், மழலையையுடையதொரு யாழ். கணவற்குச் செல்வத்தைக் கொடுத்தலின், திரு. நடையால் அன்னம். சாயலால் மயில். காலமன்றியும் கேட்டோர்க்கு இன்பஞ்செய்தலின், குயில். மன்னன்மகளேயென்றல் புகழன்மையின் மன்னன் பாவாயென்றது, அவன் [1] கண்மணிப்பாவையென்பதுணர்த்திற்று; இனி இவள் கொல்லிப்பாவையல்லள், மன்னன் பாவையென்றுமாம். சேடியர் கற்பித்த கட்டளை தப்பாமற் கூறலின் பூவை. நோக்கத்தால் மான்.

(இ - ள்.) இம்மென்கின்ற ஓசையையுடைய கலையார் பலரும், கரும்பு முதலிய பெயர்களாலே விளித்து, அனிச்சத்தையும் தூவியையும் மெல்லமிதித்தாலும் வெம்மை பிறக்குமென்றஞ்சி அவற்றை மிதியாத நின்னடியைப் பேணி இடுவாயாகவென்று ஏத்த அவளும் அங்ஙனம் நடந்தாளென்க. (எசு - எ)

---

2453. மழலை யன்னம் - இளைய அன்னம்; சீவக. 1526, அடிக். பிணைமான் - பெண்மான்.

2454. அடி, 1-2: குறள், 1120. இலவம் போது அடிக்கு: சீவக. 1588. அடிபோற்றி: சூளா. சுயம்வரச். 247; கம்ப. மிதிலைக். 30. இம்மென் - இம்மென்னும் ஒலிபட ஒலிக்கும். கலையார் - மேகலையையணிந்த மகளிர். ஒதுங்கினாள் - நடந்தாள்.

(உரை) [1] சீவக. 26, ந.

2455. தூமாண் டுமேக் குடமா யிரமாய்ச் சுடர்பொற்றூண்
தாமா யிரமாய்த் தகையார் மணித்தூ ணொருநூறுய்ப்
பூமாண் டாமத் தொகையாற் பொலிந்த குளிர்பந்தர்
வேமா னியர்தம் மகளின் விரும்ப நனிசேர்ந்தாள்.

(இ - ள்.) தூய்மை மாண்ட தூமக்குடமாயிரமாய் விளங்குகின்ற பொற்றூண்தாம் ஆயிரமாய்க் குளிர்ந்த பந்தரிலே சமைத்த மணித் தூண் ஒரு நூறுய்த் தாமத்தாற் பொலிந்த வேள்விச்சாலையைத் தெய்வ மகளைப் போல விரும்பும்படி சேர்ந்தாளென்க. (எஅ)

2456. தேனூர் காமன் சிலையுங் கணையுந் திறைகொண்ட
வானூர் மதிவாண் முகமும் மடமான் மதர்நோக்கும்
கோனூர் மகடன் வடிவு நோக்கிக் குடைமன்னர்
ஆனூர் கண்ணூ டழல்போ யமையா ரானூரே.

காமன் சிலையையும் தேனூர் கணையையும் வென்ற புருவமும் கண்ணும் : முகத்திற்கு அடை.

(இ - ள்.) அரசன் மகளுடைய முகத்தையும், பார்வையையும், வடிவையும் நோக்கி, மன்னராயினூரெல்லாம் கண்பொறிபோய் அமையா ராயினூரென்க. (எகூ)

(வேறு)

2457. வண்டலர் கோதை வாட்கண் வனமுலை வளர்த்த தாயர், கண்டுயி ருண்ணுங் கூற்றங் கயிறுரீஇக் காட்டி யிட் டார், உண்டுயிர் சிலர்கண் வாழ்கென் றுத்தரா சங்கம் வைத்தார், தெண்டிரை வேலி யெங்குந் தீதின தாக மாதோ.

---

2455. தூ - தூய்மை. தகை - அழகு. பூமாண் தாமம் - பூக்களால் மாட்சிமைப்பட்ட மாலை. வேமானியர் - விமானத்தாற் சஞ்சரிப்பவர்; பாகதச் சிதைவு; "விண்ணக மருங்கின் வேமா னியர்மகள்" (பெருங். 3. 5 : 89); "வேமானியரென வைவரித் தேவர்" (நீல. தரும. 61)

2456. காமன்சிலை - கரும்பு; இது புருவத்திற்கு உவமை. திறை கொண்ட - வென்ற. கோனூர் - கோவிந்தராசனுடைய.

2457. வண்டு அலர் - வண்டு பரவிய. கண்ணையும் முலையையு மென உம்மை விரிக்க. முலைகூற்றம் : சீவக. 637. கயிறுரீஇக் காட்டி யிட்டார்; "காவார் கயிறுரீஇவிட் டார்" (திணைமா. 47). சிலர்கண் உயிரையுண்டு. உத்தராசங்கம் - மேலாடை; "உத்தரா சங்கமிட் டொளிக்குங் கூற்றமே" (கம்ப. எழுச்சி. 17). திரைவேலி - உலகம். அடி, 4 : சீவக. 2466.

(இ - ள்.) கோதையை வளர்த்த தாயர் அவள் கண்ணையும் முலை யையும் கூற்றமென்றே யறிந்து உலகெங்கும் தீதிடத்ததாம்படி கோறற் குக் கயிறுரீஇக் காட்டினர்; பின்பு அருள் பிறந்து, இவற்றுள் வாட்கண் சிலருயிர்களையுண்டு வாழ்க, முலைகள் அதனை ஒழிகவென்று உத்தரி யத்தை வைத்தாரென்க. (அ0)

2458. கண்ணினு லின்று கண்டாங் கூற்றினைக் காமர் செவ் வாய், ஒண்ணுத லுருவக் கோலத் தொருபிடி நுசுப்பிற் றீஞ் சொல், வண்ணணித்த லாவ தில்லா வருமுலை மதர்வை நோக்கிற், பெண்ணுடைப் பேதை நீர்மைப் பெருந்தடங் கண்ணிற் றம்மா.

வண்ணணித்தல் - வர்ணித்தல். பெண்தன்மையையுடைய பேதை நீர்மை.

(இ - ள்.) இன்று கூற்றினைக் கண்ணாலே கண்டனம்; அதன் தன்மை கூறின் செவ்வாய் முதலியவற்றை உடைத்தா யிருந்ததென்று கண்டார் கூறினரென்க. (அக)

2459. அரத்தக மருளிச் செய்த சீறடி யளிய தம்மாற், குரற்சிலம் பொலிப்பச் சென்னிக் குஞ்சிமேன் மிதிப்ப நோற் றான், திருக்குலாய்க் கிடந்த மார்பிற் சீவக னாங்க ளெல்லாம், தரித்திலந் தவத்தை யென்று தார்மன்ன ரேமுற் றாரே.

மருளி - மருள; திரிந்தது.

(இ - ள்.) பிறர்மருளச் செம்பஞ்சியணிந்த அளிய சீறடிகளாலே சென்னியிற் குஞ்சியிலே சிலம்பு ஒலிக்கும்படி மிதிக்க நோற்றான் சீவகனே; யாங்களெல்லாம் அதற்குத் தவஞ் செய்திலேமென்று அரசர் மயக்குற்றாரென்க. (அ உ)

2460. கோவிந்த னென்னுஞ் செம்பொற் குன்றின்மேற் பிறந்து கூர்வேற், சீவக னென்னுஞ் செந்நீர்ப் பவளமா கடலுட் பாய்வான், பூவுந்தி யமுத யாறு பூங்கொடி நுடங்கப் போந்து, தாவிரி வேள்விச் சாலை மடுவினுட் டாழ்ந்த தன்றே.

---

2458. இன்று கண்டாம் கூற்றினை : குறள், 1083; கூற்றினை - கண்ணுக்குப் புலப்படாத யமனை. கோலத்து - அழகையும். பெண் - அமைதித் தன்மை. கண்ணிற்று - கண்களையுடையது.

2459. அரத்தகம் - செம்பஞ்சுக்குழம்பு. அளியவாகிய சீறடி தம்மால். குஞ்சிமேல் மிதித்தல் ஊடற் காலத்து; சீவக. 134. நோற்றான் - தவஞ்செய்தவன். குலாய் - விளங்கி. தவத்தைத் தரித்தில மென்று. ஏமுற்றார் - மயக்கமடைந்தனர்.

2460. இலக்கணையை ஆறாக உருவகிக்கின்றார். பாய்வான் - பாயும்பொருட்டு. பூவுந்தி - நந்தியாவட்டப் பூவைப்போன்ற கொப்பூழ்; பூவையுடைய நீர்ச்சுழி. தாஇரி-குற்றம் நீங்கிய. தாழ்ந்தது - தங்கியது.

செந்நீர் - புதுநீர். பூவுந்தி : உவமமும் வேற்றுமையுந்தொக்கன. உந்தி கொப்பூழையும் ஆற்றிடைக் குறையையும், கொடி மருங்குலையும் படர்கொடியையும் உணர்த்தும்.

(இ - ள்.) பூவுந்தியையுடைய அமுதமாகிய யாறு, கோவிந்தனென்னும் மேருவிலே பிறந்து சீவகனென்னும் செந்நீர்க் கடலிலே சேர வேண்டிக் கொடி நுடங்கப் போந்து யாகசாலையாகிய மடுவிலே சிறிது பொழுது தங்கிற்றென்க. (அ௩)

2461. சாணிடை நெடிய வாட்கண் டளையவிழ் குவளை பூப்பப், பூணுடை முலையின் பாரம் பொறுக்கலாச் சுளிவின் மேலும், நாணட நடுங்கிக் கையா னகைமுகம் புதைத்த தோற்றம், சேணிடை யரவு சேர்ந்த திங்களை யொத்த தன்றே.

(இ - ள்.) முலைப் பாரத்தைப் பொறுக்கமாட்டாதே வருத்தத்தின் மேலும் நாண் அடுதலாலே நடுங்கி நடுவு சாணளவாக நெடியகண் அலருகின்ற குவளைபோலப் பொலிவு பெறும்படி முகத்தைக் கையாலே மறைத்த தோற்றம், விசும்பிடையில் அரவு சேர்ந்த மதியை யொத்த தென்க.

கையிடையிலே கண் தோன்றுதலின், அலர்கின்றுற் போன்ற தென்றுர். (அச)

2462. (க) முத்துமிழ் திரைக ளங்க மொய்கொள்பா தால முத்தீ, ஒத்தன வேலை வேள்வி யொலிகட லுன்கு நாண, வைத்த நான் மறையு நீந்தி வான்குண மென்னுஞ் சாலி, வித்திமே லுலகத் தின்பம் விளைத்துமெய் கண்ட நீரார்.

---

மு. “ஆள்வரை யனைய தானை யச்சுவக் கிரீவ னென்னும், நீள் வரை மருங்கி னின்ற திருவெனு மருவி நீத்தம், தாள்வரை யிழிந்து வந்து தகைமணி நீல வண்ணன், வாள்வரை யகல மென்னுங் கருங் கடன் மடுக்கு மன்றே” (சூளா. அரசியற். 64)

2461. சாணிடை - சாணளவு. குவளைப்பூவின்தன்மை தோன்ற. சுளிவு - கோபம். நாண் அட - நாணம் வருத்துதலால்; “நாணடச் சாய்ந்த நலங்கிள ரொருத்தின்” (பொருந. 31). சேணிடை - ஆகாயத்தில். அரவு கைக்கு உவமை. முகம்புதைத்தது நாணத்தால். அடி, 3-4 : சீவக. 2468.

2462. இச்செய்யுளில் மணம்புரிவிக்கும் அந்தணரியல்பு கூறப்படும். அங்கம் - வேதாங்கம். கடல் நான்கு : “நாற்கடல் கடந்தவ னமோவென் றிட்டிட” (சீவக. 3035). மேலுலகத்தின்பம் - சுவர்க்கத்தின்பத்தை. மெய் - உண்மைப்பொருளை.

2463. (உ) தருமணற் றருப்பை யார்ந்த சமிதையிம் மூன்றி ஞனும், விரிமல ரணிந்த கோல வேதிகை யியற்றி யானெய், ஒருமணி யகலுட் பெய்தோர் பொன்னக லார்ந்த தூபம், இரு மணி யகலு ணீர்பெய் திடவயி னிரீஇயி ஞரே.

இவை இரண்டும் ஒரு தொடர்.

(க) மொய்கொள் பாதாலம் - வலிகொண்ட பாதாலம்; என்றது வடவாமுகாக்கினியை; கடலிடையிலே பாதாலத்தே செல்ல நீரை வாங்கு தலின், அதற்குப் பாதாலமென்று பெயர் கூறினர். குணம்: ஆகுபெயர்.

(உ) தருமணல் - தண்டிலார்த்தமாகக் கொண்டுவந்த மணல். தண் டிலமாவது அக்கினியைப் பிரதிஷ்டிக்கிறவிடத்தே சதுரமாகப் பரப்பு கின்ற மணல். தருப்பை - தர்ப்பை. ஆர்ந்த சமிதை-சமிதைக்குக் கூறு மிலக்கணம் குறைவற்ற சமிதை; என்றது [1] பருதிகளையும், வேண்டும் சமிதைகளையும். வேதிகை - விவாகார்த்தமாகவிட்ட சதுஸ்தம்பவேதிகை. இயற்றுதலாவது வேதிகையில் அக்கினியைப் பிரதிஷ்டிக்குமிடத்தே தண்டிலத்தைக் கற்பித்து அதிலே அக்கினியைப் பிரதிஷ்டித்துத் தருப் பையை நான்கு விளிம்பிலும் சூழ வைத்துப் பருதிகளைக் கீழ்த்திசை யொழிந்த திசைகளிலே வைத்தல் முதலியன. இருமணியகலென்பது பிரணீத பாத்திரமும், புரோக்ஷணீ பாத்திரமும். ஒருமணியகல் - [2] ஆச்சியஸ்தாலி. பொன்னகலார்ந்த தூபம் பெய்தென்றதுவும், மேலிற் கவியில் "ஆன்பாலவி" என்றதுவும் மதுபர்க்கார்த்தமாக வைத்தவை. [3] "संगतायवरायसमप्यर्त्ते स्वामिनातुवधूर्जलपूर्वकम् । स्थाप्यतेच-विवाहमहीतले पावकोविधिवन्मधुपर्क्कः ॥ என்று விவாகவேதிகை யிலே அக்கினியைப் பிரதிஷ்டித்து மதுபர்க்கங் கூறினர்.

(இ - ள்.) திரைகள் அங்கமாகவும், பாதாலம் மூத்தீயாகவும், ஒத் தனவாகிய கரைகள் வேள்வியாகவும் இங்ஙனம் ஒலிசெய்யுங் கடனுன்கும் நாணும்படி வைத்த நான்மறைகளை நீந்தி நற்றொழிலாகிய சாலிநெல்லை வித்திச் சுவர்க்கத்தின்பத்தை விளைத்து வீடுணர்ந்த நீராராகிய அந்தணர் வேதிகையிலே மணல் முதலிய மூன்றினுலுமியற்றி இருமணி யகலிலே நீர்பெய்து ஒருமணி யகலிலே நெய் பெய்து பொன்னகலிலே தூபம் பெய்து வைக்குமிடமாகிய இடங்களிலே வைத்தாரென்க.

(அ௫ - கூ)

---

2463. வேதிகை - திண்ணை. பொன்னகல் - பொன்னுற் செய்த அகல். இரீஇயினர் - இருத்தினர்.

(உரை) [1] பருதி - நீளமான சமிதை; சமிதை 12 - அங்குல நீள முள்ளதாக இருத்தல் வேண்டுமென்பர். [2] ஆச்சியம் - நெய். [3] இது கபர்த்தி காரிகை யென்பர்.

2464. நெற்பொரி நிறையப் பெய்து நிழலுமிழ் செம்பொன் மூழிக், கற்புரி கடவு ளான்பா லவியொடு கலப்ப வைத்து, முற் பெரி யானை யாகத் தருப்பையான் முடிந்து மூன்று, பொற்புரி வரையும் பொய்தீர் சமிதைக ளிரண்டும் வைத்தார்.

பொற்கலத்தே நெற்பொரியை நிறையப் பெய்து; பொரி - இலாச ஹோமார்த்தமான பொரி. கற்புரி கடவுள் - அச்மாரோபணார்த்தமான அம்மி. ஆன்பாலவி - பாலுநெய்யுங் கலந்தது. முற்பெரியான் - பிருஹ்மா. தருப்பையான் முடிந்து - பிருஹ்மமுடியாகத் தருப்பை யான் முடிந்து. மூன்றுபொற்புரி வரையென்றது தண்டிலத்தை மேற்கே தொடங்கிக் கிழக்கே முடியத் தெற்கில் விளிம்பிலும் நடுவிலும், வடக்கில் விளிம்பிலும், தெற்கே தொடங்கி வடக்கே முடிய மேற்கில் விளிம்பிலும், நடுவிலும், கிழக்கில் விளிம்பிலும் கீறுகின்ற கீற்றுக்களை. அக்கினியைப் பிரதிஷ்டிப்பதற்கு முன்பே கீறுகின்றவற்றை ஈண்டுக் கூறினாரென் றுணர்க. முதன் மூன்று கீறிக் குறுக்குமூன்று கீறுதல் தோன்ற மூன்றென்ருெழியாது பின்னரும் பொலிவுபெறப் புரிந்தவரையென்ருர். மூன்றுவரையைக் குண்டமென்றல் பொருந்தாது. பொய்தீர் சமிதைக ளிரண்டாவன : தென்கீழைக்கோடியிலும், வடகீழைக்கோடியிலும் வைக்கும் ஆகார சமிதைகள் இரண்டும்.

(இ - ள்.) நிறையப் பெய்து அவியொடு கலப்பக் கடவுளையும் வைத்து முடிந்து வரையையுங் கீறிச் சமிதைகளிரண்டையும் வைத்தா ரென்க. (அஎ)

2465. மந்திர விதியின் மாண்ட சிறுவிரற் றருப்பை சூழ்ந்து, முந்துநா மொழிந்த நெய்யை முனைமுதிர் தருப்பை தன்ருல், மந் திரித் தமைய முக்கான் மண்ணிமற் றதனை நீக்கிச், சிந்தித்து மறையிற் செந்தீத் தண்டிலத் தங்கண் வைத்தார்.

மந்திர விதியின் - வேதோக்தமானபடியே. முனையென்றது நறுக்கி நெய்க்குள்ளே போகடுகிற தருப்பாக்கிரத்தை. அமைய மந்திரித்து முனை முதிர்ந்த நெய்யென்க.

(இ - ள்.) தருப்பை நுனியை நறுக்கியிட்ட நெய்யை, சிறுவிரலாலே தருப்பையைச் சூழ்ந்து அத்தருப்பைதன்ருலே இருகையாலும் இடை யருதபடி முக்கால் மண்ணி, அதனைச் செந்தீயிலே போகட்டுத் தண்டிலத்திற் செந்தீக்கு அருகே வைத்தாரென்க.

---

2464. நெல்லினது பொரியை. மூழி - பாண்டவிசேடம். பெரி யானை ; ஐ : அசை.

2465. சிறுவிரலால் சூழ்ந்து. நாம் மொழிந்த. முக்கால் மண்ணி - மும்முறை கழுவி.

மறையிற் சிந்தித்து - வேதோக்தமானபடியே தியானித்து; தியானித்து வைத்தாரென்க. (அஅ)

2466. தண்டிலத் தகத்திற் சாண்மே லெண்விரற் சமிதை நாளுன், கெண்டிசை யவரு மேத்தத் துடுப்புநெய் சொரித லோடும், கொண்டழற் கடவுள் பொங்கி வலஞ்சுழன் றெழுந்த தென்ப, தெண்டிரை வேலி யெங்குந் திருவிளை யாட மாதோ.

(இ - ள்.) சமிதை பதினுறையும் நெய்யையும் சொரிந்த அளவிலே சாண்மேல் எண்விரலகலமாகப் பரப்பிய தண்டிலத்திடையில் அழற் கடவுள் அவற்றைக் கைக்கொண்டு பொங்கி எண்டிசையவரும் ஏத்தும்படி திரு விளையாட வலத்தே சுழன்றெழுந்ததென்க.

துடுப்பு - தருவி. என்ப : அசை. (அகூ)

2467. கரையுடைத் துகிலிற் றேன்றுங் காஞ்சன வட்டின் முந்நீர்த், திரையிடை வியாழந் தோன்றத் திண்பிணி முழவுஞ் சங்கும், முரசொடு முழங்கி யார்ப்ப மொய்கொள்வேன் மன்ன ரார்ப்ப, அரசரு ளரச னய்பொற் கலசநீ ரங்கை யேற்றான்.

(இ - ள்.) வெண்டுகிலிற்றேன்றும் பொன்வட்டுப்போலே, கரையை யுடைய முந்நீர்த்திரையிலே பிருகற்பதி உதயமாக முழவு முதலியனவும் அரசரும் ஆர்ப்ப அரசரிற்றலைவன் அகங்கையில் நீரையேற்றானென்க.

அக்கினியைப் பிரதிஷ்டித்து உதகம்பண்ணுதலும் உளதாகலின், இங்ஙனம் கூறினர். (கூ௦)

2468. குளிர்மதி கொண்ட நாகங் கோள்விடுக் கின்ற தேபோல், தளிர்புரை கோதை மாதர் தாமரை முகத்தைச் சேர்ந்த, ஒளிர்வளைக் கையைச் செல்வன் விடுத்தவ ளிடக்கை பற்றி, வள ரெரி வலங்கொண் டாய்பொற் கட்டிரு னேறி னனே.

---

2466. தண்டிலம் - ஓமம் பண்ணுதற்குக் கற்பித்த இடம். துடுப்பு நெய் சொரிதலோடும் : "துடுப்பிற் றேய்த்த சேதா நறுநெய்" (பெருங். 2. 3 : 83). திரு - அழகு; திருமகள். அழற் கடவுள் கொண்டு பொங்கி, ஏத்தும்படி விளையாட எழுந்தது என முடிக்க.

2467. கரையையுடைய முந்நீர் என்க. காஞ்சன வட்டில் - பொற் கிண்ணம். கடலுக்குத் துகிலும், வியாழத்திற்குப் பொன்வட்டிலும் உவமைகள். அரசருள் அரசன் - சீவகன்.

2468. நாகம் - இராகுவென்னும் பாம்பு. கோள் - கிரகணம். கோதை முகத்தைச் சேர்ந்த கையை மாதர் விடுக்க; கோதை - இலக்கணை. இலக்கணை முகத்துக்கு மதியும் மாதரது கைக்கு நாகமும் உவமைகள்; சீவக. 2461. செல்வன் - சீவகன். கட்டிலேறல் : பெருங். 3. 22 : 285.

(இ - ள்.) நாகம் மதியைக் கொண்ட கோளை விடுக்கின்றாற்போலே கோதைமுகத்தைச் சேர்ந்த கையை மாதர் விடுக்க, செல்வன், அவள் இடக்கையைப் பற்றி எரியை வலங்கொண்டு கட்டிலிலே ஏறினானென்க.

தளிர்புரை கை. [1] விடுத்து - விடுக்க. [2] அநந்தரமுள்ள ஓமங்களையும் பண்ணிப் பாணிக்கிரகணமும் பண்ணி அக்கினியை வலங்கொண்டான்; எனவே பொரியாலுள்ள ஓமமும் அம்மியிற் கால்வைத்ததும் பெற்றாம். கட்டில் - விவாகம்பண்ணி எழுந்திருந்து சாந்தியான கூத்தும் ஆலத்தியும் கண்டு அருந்ததி காணப் போமளவும் இருக்கும் கட்டில். இஃது அரசியல். (௯௧)

2469. (௧) விளங்கொளி விசும்பிற் பூத்த வருந்ததி காட்டி யான்பால், வளங்கொளப் பூத்த கோல மலரடி கழீஇய பின்றை, இளங்கதிர்க் கலத்தி னேந்த வயினிகண் டமர்ந்தி ருந்தான், துளங்கெயிற் றுழுவை தொல்சீர்த் தோகையோ டிருந்த தொத்தான்.

(வேறு)

2470. (௨) பொன்னங் காழிற் பொலிந்த முத்து விதானம் புணர்ந்துதேன், மன்னு மாலை பலதாழ்ந்து மணப்புகை விம்மி மல்கிய, அன்னத் தூவி யடர்பஞ்சி யவிர்மயி ராதி யாகப், பன்னிச் சொன்ன பதினைந்தும் படுத்தார் பாவை மார்களே.

இவை இரண்டும் ஒரு தொடர்.

(௧) [1] உண்டிருத்தல் மரபு. உவமை: இல்பொருளுவமை.

(௨) பொற்காம்பிலே விதானம் புணரப்பட்டு மாலை தாழப்பட்டுப் புகைமல்கிய மணவறையிலே தூவிமுதலியவற்றைப் படுக்கும் பதினைந்தும் படுத்தாரென்க. வேண்டினவிடத்தே நடுதற்குச் சமைத்த முத்துப்பந்தர்.

---

(உரை) [1] எச்சத்திரிபு. [2] பின்பு செய்தற்குரியனவாக உள்ள.

2469. பூத்த - தோன்றிய. ஆன்பால் - பசுவின்பால். ஆன்பாலால் அடியைக் கழுவி. வளங்கொளப் பூத்த கோலம்: மலருக்கு அடை. கலம் - பாத்திரம். கலத்தில் அயினியை ஏந்தக் கண்டு. அயினி - அன்னம். உழுவை - புலி. தோகை - மயில். சீவகனுக்குப் புலியும் இலக்கணைக்கு மயிலும் உவமைகள்; பெருங். 2. 7 : 126-7.

2470. பொன்னங்காழ் - பொற்காம்பு; அம்: அசை. விதானம் - மேற்கட்டி. புணர்ந்து - புணரப்பட்டு. தாழ்ந்து - தாழப்பட்டு. தூவி, பஞ்சி, மயிர் முதலிய பதினைந்து; இவை மிக மென்மையையுடையன. பன்னிச் சொன்ன - ஆராய்ந்து சொல்லிய. படுத்தார் - பரப்பினார்கள்.

(உரை) [1] அயினி கண்டு என்றமையின் இங்ஙனம் எழுதினர்.

(இ - ள்.) அருந்ததியை மனைவிக்குக் காட்டிக் கூறி அறைவாசலிலே பாலாலே மலரடியைக் கழுவிய பின்பு பாலடிசிலையேந்தக் கண்ணுற் கண்டு பாவைமார் படுத்த படுக்கையிலே அமர்ந்திருந்தவன் புலி மயிலோடிருந்த தன்மையை ஒத்தானென்க. (கூஉ - ங)

(வேறு)

2471. பனிமயிர் குளிர்ப்பன பஞ்சின் மெல்லிய
கனிமயிர் குளிர்ப்பன கண்கொ ளாதன
எலிமயிர்ப் போர்வைவைத் தெழினி வாங்கினர்
ஒலிமயிர்ச் சிகழிகை யுருவக் கொம்பனார்.

(இ - ள்.) தழைத்த மயிரான் முடித்த முடியையுடைய கொம்பனார், பனித்தலால் மயிர் பிறர்க்குக் குளிர்ப்பன; மெல்லியன; நெருப்பின்கண் வேதற்குரிய மயிரை வேவாமற் குளிரப்பண்ணுவன; நுண்மையாற் கண்கொளாதனவாகிய எலிமயிர்ப்போர்வையை வைத்து உருவுதிரையை வளைத்தாரென்க. (கூச)

2472. விழுத்தகு மணிச்செவி வெண்பொற் கைவினை
எழிற்பொலி படியக மிரண்டு பக்கமும்
தொழிற்பட வைத்தனர் துளும்பு மேகலைக்
கழித்தவே லிரண்டுகண் டனைய கண்ணினார்.

(இ - ள்.) கண்ணினார், மணியாற் செய்த வளையினையும் வெள்ளியாற் செய்த தொழிலினையுமுடைய படிக்கத்தை இருவர்க்கும் தொழிற் படும்படி இரண்டு பக்கத்திலும் வைத்தாரென்க. (கூரு)

(வேறு)

2473. (க) அங்கருங் காலி சீவி யூறவைத் தமைக்கப் பட்ட
செங்களி விராய காயுஞ் செம்பழுக் காயுந் தீந்தேன்
எங்கணுங் குளிர்த்த வின்னீ ரிளம்பசுங் காயு மூன்றும்
தங்களி செய்யக் கூட்டித் தையலார் கைசெய் தாரே.

2471. பனித்தல் - நடுங்குதல். மெல்லிய - மென்மையையுடையன. எலிமயிர்ப் போர்வை : சீவக. 819, அடிக். எழினி - ஈண்டு உருவுதிரை. ஒலித்தல் - தழைத்தல்; சீவக. 653, அடிக்.

2472. மணியாற் செய்த செவி; செவி - படியகத்தின் காது. கைவினை - தொழில். படியகம் - காளாஞ்சி. மேகலையையுடைய கண்ணினார்; மகளிர்; எழுவாய். கழித்த - உறையினின்று கழற்றிய; சீவக. 2429.

2473. செங்களி விராய காய் - செங்குழம்பு கலந்த பாக்கு; களிப் பாக்கு. தேன்போல் குளிர்த்த; குளிர்த்த - குளிர்ப்பித்த. இன்னீரிளம் பசுங்காய்; மதுரைக். 400. கைசெய்தார் - கலந்து அமைத்தார்.

2474. (உ) கைசெய்து கமழு நூறுங் காழ்க்கும்வெள் ளிலையுங் காமம், எய்தநன் குணர்ந்த நீரா ரின்முக வாச மூட்டிப், பெய்த பொற் செப்பு மாலைப் பெருமணிச் செப்புஞ் சுண்ணம், தொய் யறப் பெய்த தூநீர்த் தொடுகடற் பவளச் செப்பும்.

2475. (ஈ) தாமணி நானச் செப்புஞ் சலஞ்சலக் கலன்பெய் செப்பும், தூமணித் துகில்க ளார்ந்த வலம்புரித் துலங்கு செப்பும், காமநீர்க் காம வல்லி கவின்கொண்டு வளர்ந்த தேபோல், நாமவே னெடுங்கட் பாவை நயப்பன வேந்தி னுரே.

இவை மூன்றும் ஒரு தொடர்.

(க) கருங்காலிமரத்தைச் சீவி ஊறவைத்துக் காய்த்தின செங்களி யைக் கலந்த காயும் பழுக்காயும் தேன்போலே மெய்ம்முழுதையுங் குளிர்ப்பித்த இனிய நீரையுடைய பசுங்காயுமாகிய இம்மூன்றையுங் கூட்டிக் கருப்பூரமுதலியவற்றைக் கலந்தாரென்க; தம் களி - தமக்கு இயல்பாகிய களி.

(உ) கைசெய்யப்பட்டுக் கமழும் சுண்ணும்பும். ஊட்டி - கூட்டி. தொய்யற - குற்றமற.

(ஈ) தாமமணிந்த செப்பு. சலஞ்சலவடிவாகிய செப்பு. வலம்புரி வடிவாகிய விளங்கு செப்பு.

**(இ - ள்.)** நன்குணர்ந்த நீரராகிய தையலார், இவர்களுக்குக் காம வேட்கை பொருந்தும்படி கைசெய்த பாக்கினையும் வெற்றிலையினையும் நூற்றையும் இனிய முகவாசத்தோடே கூட்டிப் பெய்த செப்பையும், ஒழிந்த செப்புக்களையும், காமவல்லி வளர்ந்ததேபோலும் பாவை மற்றும் விரும்புவனவற்றையும் ஏந்தினுரென்க. (கூசு - அ)

(மேற்.) அடி, 1-2 : மதுரைக். 400-401, ந.

2474. கமழும் நூறு - வாசனைச் சுண்ணும்பு. காழ்க்கும் வெள் ளிலை - உறைக்கின்ற வெற்றிலை. நீரார் - மகளிர். மாலை வைத்த செப்பு. சுண்ணம் பெய்த செப்பு. தொய் - குற்றம்.

2475. தாமணி : விகாரம். கலன் - ஆபரணம். துகில்கள் வைத்த செப்பு. காமவல்லி வளர்ந்ததே போலும் பாவைக்கு நயப்பனவற்றை ஏந்தினுர்; பாவை - இலக்கணை.

2473-75 : பெருங். 2. 2 : 70-74, 3. 14 : 81-6.

2476. விரிகதி ரார மின்னித் தாரெனுந் திருவில் வீசிக், குரி சின்மா மேகம் பெய்த கொழும்புயற் காம மாரி, அரிவைதன் னெஞ்ச மென்னு மகன்குள நிறைந்து வாட்கட், கரியமை சேறு சிந்திக் கலிங்குக டிறந்த வன்றே.

(இ - ள்.) சீவகனாகிய கொழுவிய நீரையுடைய கரிய மேகம், ஆர மாகிய மின்னை மின்னித் தாரென்னுந் திருவில்லை வீசிப் பெய்த காம மாகிய மாரியாலே இலக்கணையது நெஞ்சென்னுங் குளம் நிறைந்து கண்ணாகிய கலிங்குகள் மையாகிய அமைந்த சேற்றினைச் சிந்தித் திறந் தனவென்க.

என்றது, அவன் விளைவித்த காமவின்பம் நிறைதலின், உவகைக் கண்ணீர் வீழ்ந்தனவென்றவாறு. [1] புயல் - நீர்; "புயலன் றலர்சடை யேற்றவன்" (திருச்சிற். 240) என்றார். (கூகூ)

2477. தோக்கையந் துகிலி னுடன் றுணைமுலை பொருது சேந்த
ஏக்கொசி விலாத வில்லா னிடுகொடி யகல மின்றேன்
தேக்கிவண் டிமிருங் கோதை செல்வன்றா ருழக்க நைந்து
பூக்கொய்து துவண்ட கொம்பின் பொற்பின ளாயி னாளே.

தோக்கை - கொய்சகம். ஏத்தொழிலுக்குக் கெடுதலில்லாத. சிவப்பு, கோபமும், தார், தூசியுமாக வேறும் பொருள் பயந்து நிற்கும்.

(இ - ள்.) சீவகனது மார்பாகிய மலையுடனே இலக்கணையுடைய முலைகளாகிய யானைகள் முதற்பொருது சிவந்தன; அதுபொழுதே அச் செல்வன் தார் பின்பு, உழக்க, அக்கோதை, நைந்து, பூக்கொய்து துவண்ட கொம்பின் தன்மையளாயினாளென்க.

இதனால் இருவர் புணர்ச்சியுங் கூறினார். இடுகொடி முலையென்க. (கூ௦௦)

---

2476. ஆரம் - முத்துமாலை. தார் - பூமாலை. குரிசிலாகிய மேகம்; குரிசில் - சீவகன். மா - கருமை. காமமாகிய மாரியால்; மாரி - மழை. அரிவை - இலக்கணை. கலிங்குகள் - ஒருவகை மதகுகள்.

(உரை) [1] மேகமென்று முன் வந்தமையின் புயல் நீராயிற்று.

2477. தோக்கையந்துகிலினாள் - கொய்சகத்தையுடைய புடைவை யையணிந்த இலக்கணை; அம் : அசை; "நீடாழ்பு தோக்கை" (பரி. 22 : 49). சேந்த - சிவந்தன. ஏக்கு ஒசிவிலாத - விற்றொழிலுக்குக் கெடுதலில்லாத. வில்லான் - சீவகன். வில்லானுடைய அகலத்தோடு முலைபொருது சேந்த. மார்பிற் கொடி எழுதுதல் : சீவக. 2483. கோதை - இலக்கணை. செல்வன் - சீவகன். பொற்பு - ஈண்டுத் தன்மை.

2478. அணித்தகு பவள மேற்பக் கடைந்துமுத் தழுத்தி யம்பொன், துணித்தடி விளிம்பு சேர்த்தித் தொழுதகச் செய்த வண்கை, மணிச்சிரற் சிறகு நாண வகுத்தசாந் தால வட்டம், பணித்தகு மகளிர் வீசிப் பாவையைக் குளிர்ப்பித் தாரே.

**பவளத்தைக் கடைந்து அடியிலே ஏற்ப முத்தை யழுத்தித் தொழுதல் தகச்செய்த காம்பினையுடைய ஆலவட்டம்.**

**(இ - ள்.)** பொற்றகட்டை நறுக்கி விளிம்பிலே சேர்த்திப் பீலியிட்டுச்சிச்சிலியின் சிறகு நாண வகுத்த சந்தன ஆலவட்டத்தாலே வீசுதற்றொழிற்குத் தக்க மகளிர் வீசிப் பாவையைக் குளிர்ப்பித்தாரென்க. (கoக)

(வேறு)

2479. சேந்து நீண்டசெழுந் தாமரைக் கண்களின்
ஏந்தி மாண்டமுலைக் கண்களி னெழுதிச்
சாந்த மாகமெழு தித்தகை மாமலர்
ஆய்ந்து சூட்டியவ னஞ்சலி செய்தான்.

**(இ - ள்.)** அவள் அவசம் நீங்கும்படி மகளிர் குளிர்ப்பித்த நிலையைக்கண்டு தானும் அதற்கேற்பச் சாந்தத்தாலே ஆகத்தை யெழுதி மலரைச் சூட்டிக் குளிர்ப்பித்த நிலையைக் கூட்டத்திற்கு இடையீடு செய்தானெனக் கருதி அவளுடைய நிலையைக் கண்டு தன்னுடைய தாமரையைப்போலுங் கண்களாலே அவள் முலைக்கண்களிலே யெழுதி அடியைத் தொழுதானென்க.

இஃது ஊடல் தீர்த்தமை கூறிற்று. (கoஉ)

2480. மணிசெய் வீணைமழ லைக்குழல் பாண்டிலொ
டணிசெய் கோதையவர் பாடிய கீதம்
பணிவில் சாயல்பரு கிப்பவ ளக்கொடி
மணியு முத்துமலர்ந் திட்டதொத் தாளே.

பாண்டில் – தாளம்.

2478. கை - விசிறியின் காம்பு. கையினையுடைய ஆலவட்டம். மணிச்சிரல் - நீலமணியைப் போன்ற சிச்சிலியென்னும் பறவை. ஆலவட்டத்தின் பரப்பிற்குச் சிச்சிலியின் சிறகு உவமை. பணித்தகு = பணிக்குத்தக்க - வீசுதற்றொழிற்குத் தக்க. பாவை - இலக்கணை. மு: பெருங். 1. 34 : 214-8.

2479. சேந்து - சிவந்து. மாண்ட - மாட்சிமைப்பட்ட. சாந்தத்தால் ஆகத்தே எழுதி. அவன் - சீவகன். அஞ்சலிசெய்தல் - அடியைத் தொழுதல்.

2480. மணியினுற் செய்த கோட்டையையுடைய வீணை. மழலை மொழியைப் போலும் ஒலியையுடைய குழல்; மழலையென்பது சிறு

(இ - ள்.) கோதையவர் வீணை குரல் பாண்டிலென்கின்றவற்றோடே பாடிய கீதத்தைச் சாயல் கேட்டு, ஒருபவளக்கொடி மணியையும் முத்தத்தையும் பூத்த தன்மையையொத்தாளென்க.

மணி - பவளம்; வாய்க்கு உவமை. இவர் பண்டு செய்த நிலைமை தோன்றப் பாடிய பாட்டினாற் சிறிது முறுவல் கொண்டாளென்றார்; அது பாடுதல் மரபு. பாட்டுக்குப் பரிசில் கொடுத்தாளென்றாற்போலவும் நின்றது. (கஎ௩)

2481. எய்த்து நீர்ச்சிலம் பின்குரன் மேகலை
வித்தி மாதர்வருத் தம்விளைத் தாளெனத்
தத்து நீர்த்தவ ளைக்குரற் கிண்கிணி
உய்த்தொர் பூசலுட னிட்டன வன்றே.

(இ - ள்.) அவன் புணர்தலால், தவளைக்குரல்போன்ற குரலையுடைய கிண்கிணியும் நீர்மையையுடைய சிலம்பும் உடனே பூசலிட்டன; அப்பொழுதே அந்நிலையை உணர்ந்து அவள் புணர்தலால் இன்குரல் மேகலையும் காதலைவித்தித் தமக்கு வருத்தத்தை விளைத்தாளென்பன போல அவற்றுடனே பூசலையிட்டனவென்க.

அன்றே - அப்பொழுதே. உய்த்து - அவன் புணர்ச்சியை நீக்கி. (கஎ௪)

2482. ஏந்தி நாங்களுட னேயிடு பூசலை
வேந்தர் வேந்தன்கொடுங் கோலின னாகி
ஆய்ந்து கேட்டுமரு ளானென் றவிந்தன
சாந்த மேந்துமுலை யாள்கலந் தாமே.

ஏந்தி - எடுத்து.

(இ - ள்.) இருவரும் வேறு வேறாக நிகழ்த்துகின்ற தொழிலைத் தவிர்தலின், அவளணிந்த கலங்கள் தாம், இவள் வருந்துமென்று யாங்கள் சேரவிடுகின்ற பூசலை வேந்தன் கேட்டும் கொடுங்கோன்மன்னனாய் ஆய்ந்தருளான்; இனி யாம் ஒழிவேமென்று கருதினாற்போலே ஒலியவிந்தனவென்க.

கலங்கள் இரண்டு காலத்தும் அவட்கேயொலித்தலின், அவள்கலமென்றே கூறினார். (கஎ௫)

---

பான்மை வாச்சியங்கட்கும் கூறப்படும்; பெருங். 1. 40 : 86; "மழலை வீணையர் மகிழ்திரு வலஞ்சுழி" (தே.). கோதையவர் - மகளிர். கீதத்தைச் சாயல் பருகி; சாயல் - மென்மையையுடைய இலக்கணை. மணி - பவளம். முத்து, பற்களுக்குவமை.

2481. எய்த்து - உணர்ந்து. தவளைக்குரற் கிண்கிணி; "தவளையங்கிண்கிணி" (பெருங். 4. 12 : 161). இன்குரலையுடைய மேகலை பூசலிட்டன.

2482. உடனேயிடு பூசலை - சேரச்செய்கின்ற ஆரவாரத்தை. கேட்டும் கொடுங்கோலினனாய் ஆய்ந்து அருளான். அவிந்தன - ஒலியடங்கின. கலம் - ஆபரணம்.

(வேறு)

2483. வீடுமலி யுலகினவர் போலவிளை யாடும்
தோடுமலி கோதையொடு துதைந்தவரை மின்போல்
ஆடுகொடி யணிந்தவுய ரலங்கல்வரை மார்பன்
கூடுமயிர் களையும்வகை கூறலுறு கின்றேன்.

வீடுமலி யுலகினவர் - சிவலோகம், பரமபதமென்கின்ற உலகிலுள்ள அரனும் அரியும். இவர்களுக்கு நித்த சம்போகமுள்ளது. இனி, அதிகார தேவர்கள் அதிகாரத்தின் முடிவிற் கற்பம் அறுதியாகவிருந்து முத்தி யெய்துவரென்பதனால், உலகமென்றது வீடுபெறுதற்குக் காரணமான சுவர்க்கமென்றுமாம். இனி, போகமொழிந்தவற்றைக் கைவிடுதன்மிக்க உலகமென்றும் சுவர்க்கமாம். கொடியணிதற்குக் காரணமான மார்பு; வரையிற்றுதைந்த மின்போலே மாலையைத் தனக்கென்றே வரைந்த மார்பு.

(இ - ள்.) கோதையுடனே உலகினவர்போலே விளையாடும் மார்பன் இலக்கணையுடனே கூடுவதொரு மயிர் களையுஞ் சடங்கினைக் கூறுதலுறு கின்றேனென்றாரென்க.

நாலாம் நாள் அரசர்க்கு மயிர் களைதல் முறைமையென்று கூறுத லின், அது கூறுகின்றார். (கoசு)

2484. உச்சிவரை வளர்ந்திளமை யொழிந்தவுயர் திண்காழ்
இச்சவிய வல்லவென வெழுதியவை யூன்றிக்
கச்சுவிளிம் பணிந்ததொழிற் கம்பல விதானம்
நச்சுமணி நாகருறை நாகமென விரித்தார்.

(இ - ள்.) வரையுச்சியிலே வளர்ந்து முற்றின காம்புகள் இப்படி அழகுடையன வல்லவென்னும்படி எழுதினவற்றை நட்டுக் கம்பலமாகிய விதானத்தை நாகலோகமென விரித்தாரென்க. (கoஎ)

---

2483. அடி, 1 : சீவக. 2081 ; மேரு. மன்னனுந். 36. தோடு - இதழ். கோதை - இலக்கணை. கொடியணிந்த மார்பு : சீவக. 2477. கோதையோடு விளையாடும் மார்பன். கூறல் உறுகின்றேன் - கூறுதலைச் செய்கிறேன்.

2484. இளமை ஒழிந்த - முற்றிப்போன. காழ் - மூங்கில். இச்ச விய - இத்தகைய அழகுடையன ; சவி - அழகு. ஊன்றி - நட்டு. கம்பல மாகிய விதானத்தை. நஞ்சையும் மணியையும் உடைய நாகர். நாகம் - நாகலோகம்.

2485. முத்தக நிறைந்தமுளை யெயிற்றுமத யானை
மத்தகமுந் திருமகடன் வடிவும்பட மாதோ
ஒத்தகல மெண்முழமென் ருேதிநக ரிழைத்தார்
மொய்த்தெரிசெம் பொற்றுகளி னூன்முடிவு கண்டார்.

மத்தகமும் எயிறுமுடைய யானை.

(இ - ள்.) நூன்முடிவு கண்டார், நகரைத் தன்னில் ஒத்த அகலம் எண் முழமென்ருேதி அதனுள்ளே இரண்டருகும் யானையும் பொற்றுக ளால் நடுவே திருவுமாகக் கோலஞ்செய்தாரென்க. (கு௦அ)

2486. உழுந்துபய றுப்பரிசி யப்பமருங் கலங்கள், கொழுந்து படக் கூப்பிநனி யாயிர மரக்கால், செழுந்துபடச் செந்நெனி றைத் தந்நுண்கொடி யறுகின், கொழுந்துகுறைத் தணிந்து கொலை வேற்கணவ ரமைத்தார்.

(இ - ள்.) வேற்கண்ணவர், உழுந்துமுதலியவற்றைக் கொழுந்து படக் கூப்பி ஆயிரமரக்காலிலே செந்நெல்லை வளமைப்பட நிறைத்து அவற்றிலே அறுகை யணிந்து இங்ஙனம் அமைத்தாரென்க.

செழுந்து : உரிச்சொல் ஈறுதிரிந்தது. (கு௦கூ)

2487. செங்கய லிரட்டைதிரு வார்சுடர்க ணுடி
பொங்குகொடி வார்முரசந் தோட்டிபுணர் கும்பம்
மங்கலங்க ளெட்டுமிவை மணியிற்புனை ந் தேந்தி
அங்கயற்க ணரிவையர்க டென்கிழக்கி னின்ருர்.

(இ - ள்.) அரிவையர், தம்மை மணியாலே புனைந்து, புணர்கயல் முதலிய மங்கலங்களெட்டையும் ஏந்தித் தென்கிழக்கே நின்ருரென்க.

---

2485. முத்து அகத்தே நிறைந்த முளைபோன்ற கொம்பினையும் மதத்தையுமுடைய யானை. இரண்டு யானைகளிடையே வீற்றிருக்கும் திரு மகளின் (கஜலக்ஷ்மியின்) திருவுருவத்தை அமைத்தல் மரபு; சீவக. 2595, ந.; நெடுநல். 81-3, ந.; “ வரிநுத லெழில்வேழம் பூநீர்மேற் சொரி தரப், புரிநெகிழ் தாமரை மலரங்கண் வீறெய்தித், திருநயந் திருந் தன்ன ” (கலித். 44 : 5-7). நகர் - மண்டபம். இழைத்தார் - கோலஞ் செய்தார். நூல் - சிற்பநூல்.

2486. அப்பம் என்பனவற்றை அருங்கலங்களிற் குவித்து. செந் நெல்லைச் செழுந்துபட நிறைத்து; செழுந்து=செழுமை - வளப்பம். அறுகின் கொழுந்தைக் குறைத்து அணிந்து. வேற்கண்ணவர் : எழு வாய்.

2487. கணுடி=கண்ணுடி. தோட்டி - அங்குசம்.

(மேற்.) அடி, 1 : சிலப். 5 : 151, அரும்பத.

[1] திருவாரென்றது, சாமரையடியை. இனி, கும்பத்தோடே புணர்ந்த மங்கலங்களெட்டுமெனவே சாமரை கூறிற்றென்றுமாம். (ககo)

2488. வெள்ளுருவ மாலைவட கீழிருவர் மின்போல்
ஒள்ளுருவ வாளுருவி நின்றனர்தென் மேல்பால்
உள்ளுருக நோக்கியுய ருழுத்தகலு மேந்திக்
கள்ளுருவ மாலையவர் கைதொழுது நின்றார்.

(இ - ள்.) வெள்ளிய வடிவையுடைய மாலையணிந்த மகளிரிருவர் வாளையுருவி வடகிழக்கே நின்றார்; கள்ளையுடைத்தாகிய அழகிய மாலையுடைய மகளிர் உழுத்தகலையுமேந்தி அன்பினால் நெஞ்சுருகத் தெய்வத்தை நோக்கித் தொழுது தென்மேற்கே நின்றாரென்க. (கக௧)

2489. தோரைமலர் நீரறுகு துளும்புமணித் தாலம்
ஆரவட மேற்றிசைக்க ணிருந்தவவிர் பஞ்சிச்
சீர்நிறைய வரையகலந் திருத்தத்திரு நோக்கும்
வாரமுறைக் கருவிவடக் கிருந்தனகண் மாதோ.

(இ - ள்.) மூங்கிலரிசி முதலியன துளும்பும் மணித்தாலம் வடமேற்றிசையிலே ஆரவிருந்தன; வரையகலத்தைச் சீர்நிறையத் திருத்துதற்கு, பட்சபாத முறைமையாகத் திருமகளுக்கும் பொற்கருவி பஞ்சியின்மேலே வட திசைக்கண்ணே இருந்தனவென்க.

பஞ்சி - வெண்டுகில். ‘உறைகருவி’ பாடமாயின், வாரம் உறைகிற கருவியென்க. (ககஉ)

2490. பானுரையி னெய்யவணைப் பைங்கதிர்கள் சிந்தித்
தானிரவி திங்களொடு சார்ந்திருந்த தேபோல்
வேனிரைசெய் கண்ணியொடு மெல்லென விருந்தான்
வானுயர வோங்குகுடை மன்னர்பெரு மானே.

---

(உரை) [1] (பி - ம்.) ‘திருவார்ந்த தென்றது, சாமரையை; விகாரம்.’

2488. ஒள்ளிய உருவத்தையுடைய வாள். உழுத்தகல் - உழுந்தை நிரப்பிய அகல். கள் - தேன். உருவம் - அழகு.

2489. தோரை - மூங்கிலரிசி. மணித்தாலம் - மாணிக்கத்தட்டு. இருந்த - இருந்தன. கருவி பஞ்சியின்மேல் வடக்கே இருந்தன. இருந்தனகள்; கள் : அசை.

2490. பால் நுரையினைப்போலும் அணையில். இரவி - சூரியன். வேல் நிரைசெய் - வேலின் வரிசையைப்போன்ற. கண்ணி : இலக்கணை. மன்னர் பெருமான் - சீவகன்.

(இ - ள்.) இரவிதான் பைங்கதிர்களைச் சிந்தித் திங்களோடே சார்ந்து அணையிலே இருந்த தன்மைபோலே மன்னர்பெருமானும் இலக்கணையோடே பொருந்தி இருத்தலின் மென்மைதோன்ற இருந்தானென்க.

செய் : உவமச்சொல். (கக௩)

(வேறு)

2491. குளநென் முன்றிற்கனி தேன்சொரி சோலைக் குளிர்மணி
வளமை மல்கியெரி யம்மட மந்திகை காய்த்துவான்
இளமை யாடியிருக் கும்வனத் தீர்ஞ்சடை மாமுனி
கிளையை நீங்கிக்கிளர் சாபத்தி னுவித னுயினுன்.

(இ - ள்.) குளநெல் உணங்கும் முன்றிலின்கண்ணே கனி தேனைச் சொரிகின்ற சோலையிடத்தே மணி எரிய, அதனைத் தீயென்று மந்தி கருதிக் கைகாய்த்துதற்கு இளமையாடியிருக்கும் வனத்தின் முனி தன்னை ஒருவன் சபித்தலின், வந்துதோன்றின சாபத்தாலே சுற்றத்தைநீங்கி நாவிதனுயினுனென்க. (ககச)

2492. (க) ஆய்ந்த கேள்வியவன் கான்முளை யாய்வழித் தோன்றினுன், தோய்ந்த கேள்வித்துறை போயலங் காரமுந் தோற்றினுன், வேந்தன் றன்னுற்களிற் றூர்தி சிறப்பொடு மேயினுன், வாய்ந்த கோலமுடை யான்பெரு மஞ்சிகர்க் கேறனுன்.

(வேறு)

2493. (உ) நித்தில வடமும் பூணு மாரமு நிழன்று தாழ
ஒத்தொளிர் குழைகள் காதி னுன்றுபொன் னூச லாடப்
பைத்தர வல்குற் பாவை கரகநீர் சொரியப் பாங்கின்
வித்தகன் பூசி வெள்வேல் வேந்தனுக் கிறைஞ்சி னுனே.

---

2491. குளநெல் - ஒருவகை நெல். கனி தேனைச் சொரிகின்ற சோலையில். மணி எரிய. மடமந்தி - இளைய பெண்குரங்கு. கைகாய்த்துதற்கு இளமையாடியிருக்கும் வனத்தில். (பி - ம்.) 'உளமையாடி.' முனி - ஒரு முனிவன். கிளை - சுற்றம். சாபத்தால் நாவிதனுயினுன்.

2492. ஆய்ந்த கேள்வியவன் வழியில் கான்முளையாய்த் தோன்றினுன் ; கேள்வியவன் - அம்முனிவன். கான்முளை - பிள்ளை. துறைபோய்- முற்றக்கற்று. தோற்றினுன் - கண்டான். சிறப்பொடு - வரிசையோடு. மஞ்சிகர் - நாவிதர்.

2493. நிழன்று - ஒளிவீசி. நான்று - தொங்கி. பொன்னூசலைப் போல் ஆட. பாவை - பெண்ணொருத்தி. பாங்கின் - முறைமைப்படி. வித்தகன் : நாவிதன். பூசி - வாய்கழுவி. வேந்தனுக்கு - சீவகனை.

இவையிரண்டும் ஒருதொடர்.

(இ - ள்.) கேள்வியையுடைய அம்முனிவழியிலே பிள்ளையாய்த் தோன்றினான்; தொக்க நூற்கேள்வி முற்றக்கற்று அலங்காரமென்பதொரு நூலும் கண்டான்; அரசனாலே வரிசையுடனே யானையும் பெற்றான்; அழகுடையான்; தன்தொழில் மிகுதியால் நாவிதர்க்கேறானான்; வித்தகன்; அவன், ஒருபாவை போல்வாள், நித்திலவடமுதலியன தாழக் குழையூசலாடக் கரகத்தின் நீரைவார்க்கப் பாங்கோடே வாய்பூசி வேந்தனை வணங்கினானென்க.

வேந்தனுக்கு; கு : உருபுமயக்கம். (கக௫ - ௬)

2494. நச்செயிற் றரவி னேக்கின் மன்னரை நடுங்க நோக்கி
வச்சிர வண்ணன் காப்ப வாழிய வூழி யென்னா
அச்சுதங் கொண்டு மன்ன னடிமுடித் தெளித்து நங்கை
உச்சிவண் டிமிரு மாலை யொளிமுடிச் சிதறி னானே.

(இ - ள்.) அரவினோக்குப்போலே உன்பகைவரை நடுங்கும்படி நோக்கி வச்சிரவண்ணன் காப்ப ஊழிகாலம் வாழ்வாயாகவென்று அறுகையும் அரிசியையும் கைக்கொண்டு மன்னனடியிலும் முடியிலுந் தெளித்து அவற்றை இலக்கணையுடைய முடியினுச்சியிலே தெளித்தானென்க.

செல்வமுண்டாதற்கு வைச்சிரவணனைக் கூறினான். (கக௭)

2495. வாக்கினிற் செய்த பொன்வாண் மங்கல விதியி னேந்தி
ஆக்கிய மூர்த்தத் தண்ணல் வலக்கவு ளுறுத்தி யார்ந்த
தேக்கணின் னகிலி னாவி தேக்கிடுங் குழலி னாளை
நோக்கல னுனித்து நொய்தா விடக்கவு ளுறுத்தி னானே.

(இ - ள்.) நூல்விதியோடே வாக்குண்டாகப் பொன்னாற்சமைத்த மங்கலமான கத்தியையெடுத்து மூர்த்தத்தே அண்ணலது வலக்கவுளிலே யுறுத்தி இலக்கணையைக் குறித்து நோக்காதே சிறிதே நோக்கி அவளிடக்கவுளிலே உறுத்தினானென்க.

---

2494. நோக்கின் - நோக்கினைப் போலே. மன்னரை - பகையரசரை. வச்சிரவண்ணன் காப்ப வாழி : "வச்சிரவண்ணனாய் வாழ்வான்" (ஏலாதி. 50); "வச்சிர வண்ணனை வழிபட் டொழுகுவேன்" (பெருங். 5. 2 : 47); வச்சிரவண்ணன் - குபேரன்; 'வைச்ரவணன்' என்னும் வடமொழிச் சிதைவு. ஊழிவாழியர்; அர் : அசை. அச்சுதம் - அரிசியும் அறுகும். நங்கையது முடியினுச்சியிற் சிதறினான்; சிதறுதல் - தெளித்தல்.

2495. வாக்கினிற் செய்த பொன்வாள் - மயிர்க்கத்தி; வாக்கு - திருத்தம். அண்ணலது வலக்கவுளில் உறுத்தி; கவுள் - கன்னம். குழலினாளை - இலக்கணையை. நுனித்து நோக்கலன் - குறித்துப் பாராதவனாய். இடக்கவுள் - இடக் கன்னத்தில். மு : பெருங். 2. 4 : 162-205.

ஆக்கிய மூர்த்தத்து - பொருந்தவிட்ட முகூர்த்தத்தே. நெய்யை இடத்தேயுடைய அகிற்புகையையுண்டு தேக்கிடும் குழல். (கக௮)

2496. ஆய்ந்தபொன் வாளை நீக்கி யவிர்மதிப் பாகக் கன்மேற்,
காய்ந்தவாள் கலப்பத் தேய்த்துப் பூநிறீஇக் காமர் பொன்ஞாண்,
தோய்ந்ததன் குறங்கில் வைத்துத் துகிலினிற் றுடைத்துத்
தூய்தா, வாய்ந்தகைப் புரட்டி மாதோ மருடகப் பற்றி ளுனே.

(இ - ள்.) உறுத்தின பொற்கத்தியைப் போக்கிப் பின்பு இரும்பும் எஃகும் ஒருநீர்மையாகக் காய்ந்த மயிர்க்கத்தியை மதிப்பாகம் போலும் கல்லிலே தீட்டிப் பூவை அக்கல்லிலே நிறுத்தித் தன் துடையிலே வைத்துப் பின்பு சீலையிலே துடைத்துக் கையிலே தூய்தாகப் புரட்டி உற்றது தெரியாதபடி முகத்தைத் தீண்டினுனென்க.

[1] "பூவைநிறுத்தியிட்டு" என்ப. குனிதலின், பொன்ஞண் தோய்ந்த குறங்கென்றுர். (கககூ)

(வேறு)

2497. ஏற்றி யும்மிழித் தும்மிடை யொற்றியும்
போற்றிச் சந்தனம் பூசுகின் றுனெனக்
கூற்ற ஞன்முகங் கோலஞ்செய் தான்கடற்
ரேற்றுஞ் செஞ்சுடர் போலச் சுடர்ந்ததே.

(இ - ள்.) ஏற ஒதுக்கியும் இழிய ஒதுக்கியும் நடுவுதிறந்தும் கூற்றஞன் முகத்தை அழகுசெய்தான்; அது ஞாயிறுபோலே விளங்கிற் றென்க.

சந்தனத்தைப் போற்றிப் பூசுகின்றுனென ஏற்றியும் இழித்து மென்க. (க௨௦)

---

2496. பொன்வாளை, மதிப்பாகம் போலும் கல்லின்மேல் தேய்த்துத், துகிலினுல் துடைத்துக் கையில் தூய்தாகப் புரட்டி; "வாளினைப், பஞ்சிப் பட்டொடு துரூஉக்கிழி நீக்கிய, பைங்கதி ரவிர்மதிப் பாகத் தன்ன, அங்கேழ்க் கன்மிசை யறிந்துவாய் தீட்டி, வெங்கேழ்த் துகின் மிசை விதியுளி புரட்டி" (பெருங். 2. 4 : 165-9). மாது, ஓ : அசைகள். மருடக - செய்தது தெரியாதபடி.

(உரை) [1] (பி - ம்.) 'பூவுதிரத் தீண்டி', 'பூவுதிரத்தீட்டி.'

2497. ஒற்றி - ஒதுக்கி. சந்தனம் பூசுகின்றுனென வென்றது குளிர்ச்சியா யிருந்ததென்பதைக் குறிப்பித்தவாறு. கூற்றனுடைய முகத்தைக் கோலம் செய்தான்; கூற்றஞன் - சீவகன். கோலம் - அழகு. முகம் சுடர்ந்தது.

2498. கோதைப் பாரத்தி னுநந்தன் ணணினும்
ஏதி லான்முக நோக்கும் மிளிவினும்
பாத நோக்கிய பான்மதி வாண்முகம்
ஏத மின்றியெ டுத்தனண் மெல்லவே.

**(இ - ள்.)** மாலையின் பாரத்தாலும், இயல்பாகவுள்ள நாணத்தாலும், நாவிதன் முகத்தை நோக்குகின்ற இளிவரவாலும் கவிழ்ந்த முகத்தை ஏதமின்றும்படி அவள் மெல்ல எடுத்தாளென்க. (கஉக)

2499. உருவச் செங்கய லொண்ணிறப் புள்வெரீஇ
இரிய லுற்றன போன்றிணைக் கண்மலர்
வெருவி யோட விசும்பிற் குலாவிய
திருவிற் போற்புரு வங்கடி ருத்தினன்.

**(இ - ள்.)** சிச்சிலிக்கு வெருவிக் கயல் கெடுதலுற்றனபோலே கண்கள் வெருவியோடும்படி புருவங்களைத் திருத்தினனென்க.

கண்கள் அஞ்சிப்பார்க்க விசும்பில் வளைத்த திருவில். (கஉஉ)

2500. ஆர மின்ன வருங்குயந் தான்களை ந்
தோரு மொண்டிறற் கத்தரி கைத்தொழில்
நீரிற் செய்தடி யேத்துபு நீங்கினன்
தாரன் மாலைத் தயங்கிணர்க் கண்ணியான்.

தான் : சுட்டு.

**(இ - ள்.)** தாரன் கண்ணியானாகிய அந்நாவிதன், மயிர்க்கத்தியை நீக்கிக் கத்தரிகையாற் செய்யுந்தொழிலை நீர்மையாற்செய்து வாழ்த்தி நீங்கினனென்க. (கஉங)

---

2498. கோதை - பூமாலை. நாண் - நாணம். ஏதிலான் முகத்தை நோக்குகின்ற இளிவினாலும்; ஏதிலான் - நாவிதன். இளிவு - இளிவரவு. தன்பாதத்தை நோக்கிய முகத்தை எடுத்தனள்; எடுத்தனள் - மேலே தூக்கினாள்.

2499. புள்ளிற்கு வெரீஇக் கயல் இரியலுற்றன போல; புள் - சிச்சிலிப்பறவை. வெரீஇ - வெருவி. கயல் கண்ணிற்கு உவமை. திருவில்போலும் புருவங்களை.

2500. குயம் - மயிர்க்கத்தியை. ஓரும் - அசை. கத்தரிகையாற் செய்யும் தொழிலை நீரிற் செய்து; நீரின் - நீர்மையால். ஏத்துபு - புகழ்ந்து. கண்ணியான் : நாவிதன் ; எழுவாய்.

(வேறு)

2501. அன்னப் பெடைநடுக்கி யசைந்து தேற்று நடையாளும்
மன்னர் குடைநடுக்கும் மாலை வெள்வேன் மறவோனும்
மின்னு மணிக்குடத்தின் வேந்த ரேந்தப் புனலாடிப்
பொன்னங் கடிமலருந் துகிலுஞ் சாந்தும் புனைந்தாரே.

**(இ - ள்.)** அன்னப்பெடையை அஞ்சுவித்து இளைத்து நடக்கின்று ளென்று பிறரைத்தெளிவியாத நடையையுடையாளும் மறவோனும் வேந்தர் மணிக்குடத்தே நீரையேந்த மஞ்சனமாடி மலர்முதலியவற்றை அணிந்தாரென்க. (கஉச)

2502. எஞ்சுற்ற மென்றிரங்கா தாக மெல்லாங் கவர்ந்திருந்து
தஞ்சுற்றம் வேண்டாத முலைக்கீழ் வாழ்வு தளர்கின்ற
நஞ்சுற்ற வேனெடுங்கட் பாவை நல்கூர் சிறுநுசுப்பிற்
கஞ்சுற் றுழிப்புலர்ந்தாங் கணிந்தா ரம்ம மணிவடமே.

**(இ - ள்.)** இடந்தந்து நம்மைத்தோற்றுவித்த ஆகமென்றருளாதே அவ்வாகத்தையெல்லாம் கைக்கொண்டு அடிபரந்து தாம் பிறந்த இடத்தையுட்படவேண்டாமற் கொடியவாகிய முலையின்கீழேயிருந்து குடி வாழ்க்கை தளருகின்ற நுசுப்பிற்கு, இவ்விடத்தை விடிவதற்கு முன்னே தப்பிப்போக வேண்டுமென்று அஞ்சினவிடத்தே விடிந்தாற்போல வடத்தையணிந்தார் ; இத்தீங்கினைக் கேட்பீராகவென்க.

நஞ்சு தோய்த்த வேல். பாவையது நுசுப்பு. [1] நல்கூர் : அடை. (கஉரு)

2503. சுடுமண் மிசைமாரி சொரியச் சூழ்ந்து சுமந்தெழுந்து, நெடுநன் னிமிராவி நாறு நெய்தோய் தளிர்மேனி, துடிநுண் ணிடைப்பெருந்தோட் டுவர்வா யேழை மலர்மார்பன், கடிநன் மலர்ப்பள்ளி களிப்பக் காமக் கடலாழ்ந்தான்.

2501. அன்னப்பெடையை நடுக்கி; நடுக்கி - அஞ்சுவித்து. அசைந்து - இளைத்து. மன்னர் - பகையரசரது. மறவோன் - சீவகன். வேந்தர் குடத்தில் நீரை ஏந்தப் புனலாடி. (பி - ம்.) 'ஏந்த மண்ணுடிப், பொன்னும்.'

2502. எம் சுற்றம் என்று இரங்காது - முலைதோற்றுதற்கிடம் கொடுத்த ஆகத்தை எமது உறவினரென்று எண்ணியருளாமல். ஆகம் - மார்பு. தம் சுற்றம் - தம் உறவினராகிய ஆகத்தை. தளர்கின்ற நுசுப்பிற்கு, பாவையது நுசுப்பிற்கு. அஞ்சுற்றுழிப் புலர்ந்தாங்கு - அச்சமுற்ற விடத்து விடிந்தாற்போல. மணிவடம் - முத்துமாலை.

(உரை) [1] நுசுப்பிற்கு அடை; சிறுபாண். 59.

2503. மாரி சுமந்தெழுந்து சுடுமண்மிசைச் சொரிய நிமிர்ந்த ஆவிபோல நாறும் மேனி ; மகளிர் மேனியின் நறுமணத்திற்குக் கூறிய

(இ - ள்.) மாரி நீரைச்சுமந்து உலகை வலமாக வந்து உயர்ந்து வெங்கார் மண்ணிலே சொரிய நிமிர்ந்த ஆவிபோல நாறும் மேனிமுதலிய வற்றையுடைய இலக்கணை கடிமணப்பள்ளியிலே களிக்கும்படி மலர்மார் பன் காமக்கடலிலே அழுந்தினனென்க.

எழுந்தவும் பாடம். (கஉகூ)

(வேறு)

2504. வழங்கு தாரவன் மார்பிடை மட்டுகப்
புழுங்கு கோதைபொற் பின்றிறம் பேசலாம்
விழுங்கு மேகம் விடாது தழீஇக்கிடந்
தொழிந்த மின்னுக் கொடியொத் தொழிந்திட்டாள்.

உலகம் கொண்டாடப்படுதலின், 'வழங்குதாரவன்' என்றார். மட்டு உகாநிற்கவும் பின்னரும் மட்டையுகுத்தற்குப் புழுங்குவதொரு கோதை யென்று இக்கோதைக்கு விசேடங்கூறினர்; புழுக்கம், வேட்கையால் தோற்றுமென்க.

(இ - ள்.) தாரவன் மார்பிடைத்தங்கிய கோதைபோல்வாளுடைய அழகின்கூற்றைச் சிறிது உவமைகூறலாம்; தன்னை உள்ளடக்குதற் குரிய மேகத்தை உள்ளடக்கமாட்டாதே புறத்தே தழீஇக்கிடத்தலாலே பழைய தன்மையை ஒழிந்ததொரு மின்னையொத்துத் தங்கினளென்க. (கஉஎ)

2505. தாம மார்பனுந் தையலு மெய்யுணர்
வாமி தென்றறி யாதுக ளித்தவர்
தூமங் கொப்புளிக் குந்துகிற் சேக்கைமேற்
காம னப்பணைக் கள்ளுக வைகினர்.

---

இவ்வுவமை, ஸ்ரீ காளிதாச மகாகவியாலும் கூறப்பெற்றுள்ளதென்பர். ஏழை மலர்ப்பள்ளியில் களிக்கும்படி மார்பன் காமக்கடலில் ஆழ்ந்தான்; ஏழை - இலக்கணை.

2504. தாரவன் - சீவகன். மட்டு - தேன். புழுங்குகோதை - காம வேட்கையால் வெம்புகின்ற இலக்கணையினுடைய. பேசலாம்-சிறிது கூற லாம். தழீஇ - தழுவி. சீவகனுக்கு மேகமும், இலக்கணைக்கு மின்னுக் கொடியும் உவமைகள்.

2505. இது மெய்யாம் என்று உணர்வறியாது; உணர்வு - உணர் தற்குரிய உணர்ச்சியை. தூமம் கொப்புளிக்கும் - அகிற்புகையைக் கக்குகின்ற. காமனுடைய அப்பணையில்; அப்பணை என்றது மலர்களா லாகிய படுக்கையை. கள் - தேன்.

(இ - ள்.) சீவகனும், இலக்கணையும் இது தம்முடம்பென்று உணரும் உணர்வறியாது ஒருவர்மெய்யில் ஒருவர்மெய் மயங்கிக் களித்தவர்கள் பின்னும் சேக்கைமேலே காமன் அப்பு அணையிலே வைகினரென்க. (கஉஅ)

(வேறு)

2506. மாதர்தன் வனப்பு நோக்கி மகிழ்ந்துகண் ணிமைத்தல் செல்லான், காதலித் திருப்பக் கண்கள் கரிந்துநீர் வரக்கண் டம்ம, பேதைமை பிறரை யுள்ளி யழுபவர்ச் சேர்த லென்றாள், வேதனை பெருகி வேற்கண் டீயுமிழ்ந் திட்ட வன்றே.

(இ - ள்.) அவளழகை நோக்கி மகிழ்ந்து கண் இமையானாய்க் காதலித்திருத்தலால் அவன்கண்கள் கரிந்து நீர்வர, அதனைக்கண்டு, கேட்பாயாக; பிறரை நினைந்து அழுபவரைச் சேர்தல் அறியாமைகாணென்றாள்; அவ்வளவிலே வருத்தமிகுதலிற் கண்கள் தீயைச் சொரிந்தனவென்க.

வனப்புநோக்கிக் கண்கரிந்தது, [1] ஆக்கம் பற்றிப்பிறந்த மருட்கையென்னும் மெய்ப்பாடு; மருட்கையாவது வியப்பு. (கஉகூ)

2507. நாறுசாந் தழித்து மாலை பரிந்துநன் கலன்கள் சிந்திச்
சீறுபு செம்பொ னாழி மணிவிர னெரித்து விம்மா
ஏறியு மிழிந்து மூழூழ் புருவங்கண் முரிய நொந்து
தேறுநீர் பூத்த செந்தா மரைமுகம் வியர்த்து நின்றாள்.

(இ - ள்.) சீறுநின்று அழித்துப் பரிந்து சிந்தி நெரித்து விம்மிப் புருவங்கள் ஏறியுமிழிந்தும் முரியும்படி நொந்து முகம் வியர்த்து நின்றாளென்க. (கூ௰)

2508. இற்றதென் னுவி யென்னு வெரிமணி யிமைக்கும் பஞ்சிச், சிற்றடிப் போது புல்லித் திருமகன் கிடப்பச் சேந்து, பொற்றதா மரையிற் போந்து கருமுத்தம் பொழிப வேபோல், உற்றுமை கலந்து கண்கள் வெம்பனி யுகுத்த வன்றே.

2506. மாதர் - இலக்கணை. இமைத்தல் செல்லான் - இமையானாய். கண்டு - அதனை இலக்கணைபார்த்து அம்ம: முன்னிலை யசைச்சொல். உள்ளி - நினைந்து. அழுபவரைச் சேர்தல் பேதைமை என்றாள். வேதனை-வருத்தம்.

(உரை) [1] தொல். மெய்ப். 7, பேர்.

2507. சாந்து-மார்பிற் பூசிய கலவைச் சந்தனம். பரிந்து-அறுத்து. சீறுபு - கோபித்து. ஆழி - மோதிரம். ஆழியையுடைய விரலை நெரித்து. விம்மா - விம்மி. ஊழூழ் - முறை முறையே. முரிய - வளையும்படி. வியர்த்த முகத்திற்கு நீர்பூத்த தாமரை உவமை.

2508. பஞ்சிச்சிற்றடி - செம்பஞ்சு பூசிய சிறிய பாதம். திருமகன் புல்லிக் கிடப்ப; திருமகன் - சீவகன். பொற்ற-பொலிவுடைய. தாமரையி

(இ - ள்.) திருமகன், வேறோருபாயத்திற்கு இவளாற்றாளென்றுணர்ந்து இற்றது என்றாவியென்னாச் சீறடியைப் புல்லிக் கிடப்ப, அவளும் அதுகண்டு ஊடல்தீரக்கருதலிற் கண்கள் நீரையுகுத்தனவென்க.

சேந்து பொலிவுடையவென்க; பொற்பென்னுமுரிச்சொல் திரிந்தது. தாமரையினின்றும் புறப்பட்டுச் சிறிது கரிய நீர்மையையுடைய முத்தம் சிந்துவனபோலே கண்கள் மைகலந்து வெய்யவாகிய பனியையுகுத்தன; ஊடல் முழுதுந்தீராமையின் வெம்பனியாயிற்று. பொழிதல் ஈண்டுத் தன்வினை. உற்று - ஊடல்தீர்தலுறவெனத்திரிக்க. "பொய்ப்ப விடேஎ மெனநெருங்கிற் றப்பினேன், என்றடி சேர்தலு முண்டு" (கலித். 89) என்றாராகலின், அடியில் வணங்கிய பின்னும் ஊடல்தீராதழுதாளென்றல் கற்பிற்குப் பொருந்தாது. "இளிவே யிழவே" (தொல். மெய்ப்பாடு. 5) என்னுஞ்சூத்திரத்தில் அழுகையாவது அவலமும் கருணையுமாதலின், "கயமலருண்கண்ணாய்" (37) என்னுங் கலியில், "தானுற்ற, நோயுரைக் கல்லான் பெயருமன்*** சேயேன்மன் யானுந்துயருழப்பென்" [1] என்றவழிப் பிறன்கட்டோன்றிய இளிவரல் பொருளாக அவலந்தோன்றினாற்போல, இதனையும் பிறன்கட்டோன்றிய இளிவரல் பொருளாகப் பிறந்த கருணையென்றுகொள்க. வணங்குதல் - அவற்கு இளிவரவு. அதனாற் கருணைபிறந்தது. அழுகை ஈண்டுக் கருணை. இதனால் ஊடல் தீரக் கருதினாளாம். (௩௬௪)

2509. கொண்டபூ ணின்னைச் சார்ந்து குலாய்க்கொழுந் தீன்ற கொம்பே, கண்டுகண் கரிந்து நீரா யுகுவது கரக்க லாமே, பண்டியான் செய்த பாவப் பயத்தையார்க் குரைப்பென் றேன்காள், வண்டுகாள் வருடி நங்கை வரந்தர மொழிமி னென்றான்.

(இ - ள்.) அக்கருணை பிறந்தமையின், இனி மொழிகூறுதற்கு இடமென்றறிந்து, நீயணிந்தபூண் நின்னைச்சாருதலாலே குலாவிக் கொழுந் தீனுதற்குக் காரணமான கொம்பே! நின்னைவிடாமற் பார்த்தலாலே கண் கரிந்து நீராயுகுவதனை நீ அறியாது கரக்கலாமேயெனவினாவினான்; ஆண்டு அவட்குச் சிதைவுபிறர்க்கின்மை யென்னுமெய்ப்பாடு பிறந்த

னின்றும் போந்து. கருமுத்தம்: பாம்பில் தோன்றிய முத்து நீலநிறத்தது; திருவிளை. 17 : 55. உற்று - ஊடல்தீர எண்ணி. வெம்பனி: பெருங். 1. 40 : 192, அடிக்.

(உரை) [1] 'இது பிறன்கட்டோன்றிய இளிவரல் பொருளாக அவலச்சுவை பிறந்தது; இது கருணையெனவும்படும்' என்பர் பேராசிரியர் (தொல். மெய்ப். 5)

2509. பூண் - ஆபரணம். குலாய் - குலாவி. கொம்பே என்றது, இலக்கணையை; விளி. கண்டு - நின்வனப்பைப் பார்த்து. கரக்கலாமே- மறைக்கலாமோ. தேன்காள் - வண்டுகளே; என்றது ஒருவகை வண்டுகளை. நங்கையின் பாதத்தை வருடி.

லின்; அவள் உத்தரங் கூருமையால் தான் அதனையுணர்ந்து நிறை யழிந்து, தேன்காள்; வண்டுகாள்! யான் முற்பிறப்பிற்செய்த தீவினை யின் வினைவை நுமக்கன்றி வேறு யார்க்கு உரைப்பேன்; இனி நீங்கள் நங்கையைக் காலை வருடிவரந்தரும்படி கூறுமினென்ருனென்க.

[1] சிறைதவுபிறர்க்கின்மையாவது, புணரக்கருதி உள்ளஞ்சிதைந்து நிறையழிந்துழிப் புறத்தார்க்குப் புலனுகாமை நெஞ்சினைநிறுத்தல்; பிறர்க்கின்மை யெனவே தலைவனுணரும். இது கற்பிற்குமுரித்தென்ருர். இம்மெய்ப்பாடு இவட்கு நிகழ்ந்தமை தானுணர்ந்து இடையில் வந்த புள்ளை நோக்கி, இனி நுமக்கு எளிது; நீர் ஊடல் தீர்ப்பீராகவென்ருன்; ஊடற்குக் காரணமின்றியும் இத்துணையெல்லாம் நிகழ்ந்ததற்கு வருந்தி ஞுனுகலின். (கரு௨)

2510. பூவையுங் கிளியுங் கேட்டுப் புழைமுகம் வைத்து நோக் கிக், காவலன் மடந்தை யுள்ளங் கற்கொலோ விரும்பு கொல்லோ, சாவம்யா முருகி யொன்றுந் தவறில னருளு நங்கை, பாவையென் றிரத்து மென்ற பறவைக டம்முட் டாமே.

(இ - ள்.) பூவையும் கிளியும் அவன் வருத்தக்கூற்றைக்கேட்டுக் கூட்டின் வாயிலிலே முகத்தைவைத்துப் பார்த்திருந்து, தம்மிற்ரும் யாமும் நம் சேவல் இங்ஙனம் வணங்கி ஊடல் தீர்க்குமிடத்துத் தகா தென்று மனமுருகி இறந்துபடுவேம்; இதுகண்டும் அருளாத இவள் மனம் கல்லோ? இரும்போ? அறிகின்றிலமென்றன; என்று பின்னும் அப்பறவைகள்தாம், நங்காய்! பாவாய்! இவன் சிறிதுந் தவறிலன்; இனி நீ அருளாயென்று இரக்கக்கடவே மென்றும் கூறினவென்க.

அவை அவளூடல் தீரக்கருதிய தன்மை தாமுணர்தல் தேற்ருமை யின், இவனிறந்துபடுமெனக் கருதி இங்ஙனங்கூறின. (கருரு)

---

(உரை) [1] 'சிறைதவு பிறர்க்கின்மை யென்பது, அங்ஙனம், நருநயம் மறைத்தவழியும் உள்ளஞ் சிதைந்து நிறையழியுமாகலின் அச்சிறைதவு புறத்தார்க்குப் புலனுகாமை நெஞ்சினை நிறுத்தலும் என்றவாறு' (தொல். மெய்ப். 13, பேர்.)

2510. பூவை - நாகணவாய்ப்புள். புழையில் முகத்தை வைத்து; புழை - கூட்டின் வாயிலில். ஒன்றும் தவறிலன் - சீவகன் சிறிதும் பிழை செய்தானில்லை. அருளு - அருள்வாயாக. இரத்தும் - இரக்கக் கடவேம்.

(மேற்.) அடி, 1 : இ - வி. சூ. பெயர். 29, சிவஞா.; மு : நன். பெயர், 28, மயிலை; இ - வி. பெயர். 29.

2511. பெற்றகூ ழுண்டு நாளும் பிணியுழந் திருத்தும் பேதாய்
முற்றிமை சொல்லி னங்கை மூன்றுநா ளடிசில் காட்டாள்
பொற்றொடி தத்தை யீரே பொத்துநும் வாயை யென்றே
கற்பித்தார் பூவை யார்தங் காரணக் கிளவி தம்மால்.

(இ - ள்.) அங்ஙனம் உசாவின அளவிலே, பூவையார், தமக்கு மேல்வரும் காரியத்திற்குக் காரணமாகிய சொற்களாலே, பேதாய்! யாம் பெற்ற சோற்றை யுண்டு நாள்தோறும் கூட்டிலேபிணிப்புண்டு வருந்தி யிருப்பேம்; இத்தன்மையேமாகிய யாம் முதுக்குறைமை கூறின், பொற்றொடியாகிய நங்கை நமக்கு மூன்றுநாள் அடிசிலைக் காட்டாளாதலால் தத்தையீரே! நும்வாயைப் பொத்துமினென்று கற்பித்தாரென்க.

தத்தையீரேயென்றது இழிவுசிறப்பு. (கஙச)

2512. (க) பழியொடு மிடைந்த தேனுஞ் சீறடி பரவி னாற்கு, வழிபடு தெய்வ மாகி வரங்கொடுத் தருளல் வேண்டும், ஒழிபடைக் களிறுபோல வுயங்கவு முருகி நோக்காப், பிழிபடு கோதை போலாம் பெண்டிரைக் கெடப்பி றந்தாள்.

2513. (உ) ஈன்றதா யானு மாக விதனைக்கண் டுயிரை வாழேன், நான்றியான் சாவ லென்றே நலக்கிளி நூலின் யாப்ப, மான்றவண் மருண்டு நக்காள் வாழிய வரம்பெற் றேனென், றான்றவ னுரைப் புல்லி யணிநலம் பரவி னானே.

இவையிரண்டும் ஒரு தொடர்.

(க) பிழிபடுகோதைபோலாம்பெண்டிர் - உபாயத்தால் தேனை வாங்கிக் கொள்ளப்படும் கோதைபோலேயாம் பரத்தையர்; தம்மியல்பு கெட்டுப் பொருள்வேட்கையால் அதன்தன்மையராவராதலின், ஆமென்றார். அக்கோதையை உபாயத்தால் நெகிழ்த்து வாங்கினாற்போல இவர்க்கும் பொருளால் மனம் நெகிழ்த்து இன்பங்கோடல்வேண்டும். கெடவென்பது பொல்லாராகவென்னும்பொருட்டு. ஐ : அசை.

2511. கூழை உண்டு. பிணி உழந்திருத்தும் - கூட்டிலே பிணிப் புண்டு வருந்தியிருப்பேம். பேதாயென்றது கிளியை நோக்கிய விளி. முற்றிமை - முதுக்குறைமை. (பி - ம்.) 'முத்திமை', 'முற்றன்மை.' தத்தையீரே என்றது கிளியை நோக்கிய விளி. பூவையார் - நாகணவாய்ப்புள்.

2512. மிடைந்ததேனும் - பொருந்தியதானாலும். பரவினாற்கு - சீவகனுக்கு. அடி, 1-2 : சூளா. அரசியற். 407. படைஒழி களிறுபோல - வேல் தங்கிய யானையைப் போல; பெருங். 1. 33 : 109. உயங்கவும் - சீவகன் வருந்தவும். கோதை - பூ மாலை.

2513. ஈன்றதாய் யானுமாக - இவளைப்பெற்ற கொடிய தாய் யானு கும்படி. நூலின் யாப்ப - நூலால் கழுத்தை இறுக்கிக் கட்டிக்கொள்ள. மான்றவள் - மயங்கின இலக்கணை. ஆன்றவன் - சீவகன். நலம் - அழகு.

(உ) இதனை - இவனிறந்துபட்டால் இவட்கு உளதாம் பழியை. யானும் - இவட்குப் [1] பிள்ளையாகிய யானும்.

(இ - ள்.) நற்குணத்தையுடைய கிளி, பூவையின்மொழியைக் கேளாதே வேல் தைத்துநின்ற களிறுபோற் கணவன்வருந்தவும் நெஞ்சுருகாத பரத்தையர் தன்குடிப்பிறப்பாற் பொல்லாராகப் பிறந்தவள், தன் கணவன்செயல் பழியோடே மிடைந்ததாயினும் அதுதீர அடிபரவினவனுக்கு வரங்கொடுக்கவே வேண்டும்; இங்ஙனஞ்செய்யாமையின், நிகழ்கின்றவிதனை யான் கண்டு உயிரைக் கொண்டிரேன்; யானும் இங்ஙனம் மான்றவளைப் பெற்ற தாயாந்தன்மையேனும்படி நான்றுகொண்டு சாவக் கடவேனென்று கூறி நூலாலே கழுத்தை யாப்ப, அவள் இதனைக்கண்டு இதன் அன்புடைமையாலே மருண்டு நக்காள்; அதுகண்டு அவனமைந்து வரம்பெற்றேனென்று புல்லி நலத்தைப் பரவினனென்க.

(உ) வாழியவென்றது கிளியை. தாயாந்தன்மையேனென்றது, இங்ஙனங் கொடியவளைப்பெற்ற கொடியவளாகக் கடவேனெனக் கருதி; கொடுமை - வலியச்சாதல். (கருசு - சு)

(வேறு)

2514. நிறையோத நீர்நின்று நீடவமே செய்யினும் வாழி நீலம்
அறையோ வரிவை வரிநெடுங்க ணொக்கிலையால் வாழி நீலம்
கண்ணொவ்வா யேனுங் களித்து நகுதிநின்
வண்ண மிதுவோ மதுவுண்பார் சேரியையோ வாழி நீலம்.

வாழி : இகழ்ச்சிக்குறிப்பு. களித்து நகுதி - தேனை உட்கொண்டு அலர்தி; செருக்கிச் சிரியா நின்றுயென்பதும் பயந்தது. வண்ணம் - நிறமும் சாதியும் தோன்றநின்றது.

(இ - ள்.) நீலமே! நீ இவள் கண்ணை ஒக்கவேண்டுமென்று கடலிலே ஒருகாலாலேநின்று உயர்ந்த தவத்தைச்செய்யினும் இவள் கண்ணை ஒவ்வாயாய் நின்றுய்; இதற்கு யான் வஞ்சினங்கூறவோ? அது வேண்டா; நீலமே! நீ கண்ணை ஒவ்வாதிருக்கவும் களித்து நகாநின்றுய்; அதற்குத் தாழ்வில்லை; நின்வண்ணம் யாது? கரும்புறமல்லவோ? அதுவும் நினக்குத்தகும்; அஃது ஒழிந்து கள்ளுண்பார்சேரியிலே நிற்றலின், இக்குணமும் பட்டதோவென்றுனென்க.

இஃது, "அறுசீ ரடியே யாசிரியத் தளையொடு, நெறிபெற்று வரூஉ நேரடி முன்னே" (தொல். செய். 64) எனச் செய்யுளியலிற் கலிக்கு

---

(உரை) [1] சீவக. 1035, அடிக்.

2514. ஓதநீர் - கடல் நீரில். நீலம் - நீலோற்பலமலர்; விளி. அறையோ - வஞ்சினம் கூறவோ. அரிவை - இலக்கணையினுடைய. நகுதி - நகா நிற்பாய்; என்றது அதன் மலர்ச்சியை. மது - கள்.

அறுசீரடி விதித்தலின், 'வாழி நீலம்' என ஆசிரியத்தளைபெற்ற அறு சீரடிகள், 'கண்ணுறைவ்வா யேனுங் களித்து நகுதிநின்' என்னும் நேரடியின் முன்னும் பின்னும் வந்த அகநிலைக்கொச்சகம், உம்மையான் வெண்டளையும் விரவும். "பாநிலை வகையே கொச்சகக் கலியென, நூனவில் புலவர் நுவன்றறைந் தனரே" (தொல். செய். 155) என [1]அகநிலைக் கொச்சகத்திற்கு விதிகூறலின் ஓசை துள்ளியவாறுமுணர்க. இனி ஆசிரியத்துறையென்பார்க்கு ஆகாமை கடவுள்வாழ்த்தாகிய முதற் கவியிற்கூறினும். (௧௩௭)

(வேறு)

2515. பாண்குலாய்ப் படுக்கல் வேண்டா பைங்கிளி பூவை யென்னும், மாண்பிலா தாரை வைத்தா ரென்னுரு ரென்று நக்கு, நாண்குலாய்க் கிடந்த நங்கை நகைமுக வமுத மீந்தாள், பூண் குலாய்க் கிடந்த மார்பிற் பொன்னெடுங் குன்ற னுற்கே.

(இ - ள்.) நங்கை, நீ [1]பாண்மைச்சொல்லாலே வளைத்து எம்மை அகப்படுத்தல்வேண்டா ; கிளி பூவையென்னும் மாட்சிமையில்லாதாரை வளர்த்து வைத்தார் என்ன இளிவரவுருரென்று நக்குக் குன்றனுற்கு அமுதத்தை ஈந்தாளென்க.

பூவைக்கும் கருத்து அதுவாதலின், சேரக்கூறினுள். (௧௩௮)

2516. நலங்குவித் தனைய மாதர் நன்னல மாய வெல்லாம், புலம்புவித் தருளி னீங்கிப் பகைப்புலம் புக்க வேந்திற், கலங் குவித் தனைய நம்பி கவர்ந்திடக் கலாப மேங்கச், சிலம்புநொந் திரங்கத் தேன்ருர் பரிந்துதே னெழுந்த தன்றே.

நலம் - மகளிர்நலம். புலம்புவித்து - அவசமாக்கி. பகைப்புலம் புக்கவேந்து போலே அருளின் நீங்கிக் கவர்ந்திட. [1]கலம் பல நிலங்களிற் பிறந்த பலமணிகளையும் தன்னிடத்திற்சேர்த்தாற்போலே பல்லோரிடத் துள்ள நற்குணங்களெல்லாம் தான்சேர்ந்தானென்ருர். பரிந்து - பரிய.

(இ - ள்.) நம்பி, மாதர் நலமெல்லாவற்றையும் சிலம்பு இரங்கத் தார் பரியப் புலம்புவித்துக் கவர்ந்திட அம்மாதரும் கலாபமேங்க நம்பி நலத்தைக் கவர்ந்திடத் தேனினம் எழுந்ததென்க. (௧௩௯)

---

(உரை) [1](பி - ம்.) 'வகைநிலைக் கொச்சகம்.'

2515. பாண் - தாழ்ச்சி ; சீவக. 1624. படுக்கல் - அகப்படுதல். நாண் - நாணம். மார்பினையுடைய குன்றனுற்கு - சீவகனுக்கு.

(உரை) [1]பாண்மைச்சொல் - வணக்கச்சொல்.

2516. நலம் - இன்பம். வேந்தினைப் போல் கவர்ந்திட ; "அன்னு யறங்கொல்" (யா - வி. 66, மேற்.). நம்பி - சீவகன். தேனையுடைய தார் ; தேன் - வண்டுகள்.

(உரை) [1]புறநா. 218 : 1-5.

2517. திருநிறக் காம வல்லி திருக்கவின் கொண்டு பூத்துப்
பெருநிறங் கவினி யார்ந்த கற்பகம் பிணைந்த தேபோல்
அருநிறக் குருசின் மார்பத் தசைந்தன ளலங்கல் வேலும்
நெரிபுறத் தடற்று வாளு நீலமு நிகர்த்த கண்ணாள்.

நெரிபுறத்தடறு - சருச்சரைபட்ட புறத்தையுடைய உறை; 'நெரி வுற்ற தடத்து வாழும்' என்ற பாடத்திற்கு நெரிவுற்ற நீலமென்க; வலிய அலர்த்தின நீலம்.

(இ - ள்.) கண்ணாள், காமவல்லி, திருவினழகைக்கொண்டு பூத்துக் கற்பகத்தைப் பிணைந்தாற்போலே குருசின்மார்பிலே அவசத்தாலே துயின்றாளென்க. (கசஂ௦)

(வேறு)

2518. (க) மணிக்கண் மாமயிற் சாயன் மாதரும்
அணிக்கந் தன்னதோ ளரச சீயமும்
பிணித்த காதலாற் பின்னிச் செல்வுழிக்
கணித்த நாள்களேழ் கழிந்த காலையே.

2519. (உ) சூட்டுஞ் சுண்ணமு மணிந்து சுந்தரம்
ஒட்டி யொண்பொனூ லோங்கு தாரொடு
பூட்டிக் குண்டலம் பொற்பப் பெய்தபின்
மோட்டு முத்தொளிர் வடம்வ ளாயினார்.

2520. (ங) பானு ரைய்யன பைந்து கிலணிந்
தானி ரைய்யினத் தலங்க லேறனான்
மானி ரைய்யினம் மருளு நோக்கினார்
ஊனு யிருணு மொருவ னாயினான்.

2517. திரு - அழகு. திருவின் கவினைக் கொண்டு. சீவகனுக்குக் கற்பகமும் இலக்கணைக்குக் காமவல்லியும் உவமைகள்; சீவக. 1129; சூளா. நகர. 5. குருசில் - சீவகன். வேலையும் வாளையும் நீலத்தையும் நிகர்த்த கண்ணாள் : இலக்கணை.

2518. மாதர் - இலக்கணை. அணிக்கந்து - அழகிய தூண். அரச சீயம் - சீவகன். பிணித்த - கட்டப்பட்ட. கணித்த - நிச்சயித்த.

2519. ஒட்டி - பூசி. பெய்தபின் - அணிந்த பின்பு. வடத்தால் வளாயினார்; வளாயினார் - வளைத்தார்.

2520. பால்நுரையன்ன துகிலை யணிந்து. ஆனிரையினத்தே ஏறனான் : சீவகன்; ஏறு - விடை; சீவக. 751, 1475, 1723, 1916. நோக்கினார் - மகளிர். நோக்கினாருடைய ஊனையும் உயிரையும் உண்ணும் ஒருவனாயினான்.

இவைமூன்றும் ஒருதொடர்.

(௨) சூட்டு - பூ. சுந்தரமோட்டி - சிந்துரப் பொடியைப் பூசி.

(௩) அலங்கல் - மாலை.

(இ - ள்.) மாதரும் அரசசீயமும் முற்பிறப்பிற் பிணித்த காதலாலே பிணைந்து செல்கின்ற அளவிலே அறுதியிட்ட நாள்களேழுங்கழிந்த எட்டா நாளிலே, ஒப்பித்தற்குரியார் தாரோடே சூட்டுஞ்சுண்ணமு மணிந்து ஓட்டிப் பூட்டிப் பெய்தபின் வளாயினர் ; அவர் வளைத்தபின், ஏறனன், அணிந்து மகளிருயிரையுண்ணும் ஒருவனுயினனென்க. (௧௪௪ - ௩)

2521\. சுநந்தை தன்மகன் சுடர்பொற் சூழித்தேன்
இனங்க வர்ந்துண விலிற்று மும்மதத்
தநந்த னன்னகை யானை யேறினன்
குனிந்த சாமரை குளிர்சங் கார்த்தவே.

(இ - ள்.) முன்பு சுநந்தைமகனென்று உலகங்கருதப்பட்டவன் இப்பொழுது சூழியினையும் சொரியுமதத்தினையும் அநந்தனையொத்த நெடிய கையினையுமுடைய யானையையேறினன் ; அப்பொழுது கவரிகள் வீசின ; சங்குகள் ஆர்த்தனவென்க. (௧௪௪)

(வேறு)

2522\. (௧) இரும்பிடி நூறு சூழ விறுவரை நின்ற தேபோற், கரும்பொடு காய்நெற் றுற்றிக் கருப்புரக் கந்தி னின்ற, சுரும்பு சூழ் மதத்த சூளா மணியெனுஞ் சூழி யானைப், பெருந்தகைப் பிணையன் மன்னர் முடிமிதித் தேறி னனே.

2523\. (௨) சட்டகம் பொன்னிற் செய்து தண்கதிர் வெள்ளி வேய்ந்து, வட்டநல் வைரம் வாய்ப்ப நிரைத்துமேன் மணிகள் சேர்த்திச், சுட்டுதற் கரிய முத்தின் றொத்துவாய் நாற்ற முந் நீர்ப், பட்டவான் பவளக் காம்பின் குடைநிழற் பருதி யொத்தான்.

2521\. மகன் - சீவகன். உண்ணுதற்கு இலிற்றும் ; இலிற்றும் - பிலிற்றுகின்ற ; புறநா. 68 : 8. அனந்தன் - ஆதிசேடன் என்னும் பாம்பு ; யானையின் துதிக்கைக்கு உவமை ; முல்லைப். 69-70. சூழியையும் மதத்தையும் கையையுமுடைய யானையை ஏறினன் ; சூழி - முகபடாம். குனிந்த - வீசின.

2522\. பிடி - பெண்யானை. இறுவரை - பெரியமலை ; ஆண்யானைக்கு உவமை. துற்றி - உண்டு. கந்து - கம்பம். சுரும்பு - வண்டு. சூளாமணியென்னும் யானைமீது ஏறினன்.

2523\. பொன்னிற் சட்டகம் செய்து ; சட்டகம் - சட்டம். வைரத்தால் வட்டத்தை நிரைத்து. முத்தின் றொத்து வாய் நாற்ற - முத்துத் தொகுதிகள் விளிம்பிலே தொங்கவிடப்பட்டு. பவளக்காம்பையுடைய குடை நிழலில் ; “ பவளக்காற் குடையி னீழலான் ” (சூளா. துறவு. 41)

இவையிரண்டும் ஒரு தொடர்.

(க) ஏறினன் : தொழிற்பெயர் ; சுட்டு.

(இ - ள்.) கரும்போடே நெல்லைத் துய்த்து நூறு பிடி சூழ ஒரு பெரியவரைநின்றாற்போலக் கருப்பூரமணிந்த கம்பத்தே சேர்ந்துநின்ற சூளாமணி யென்னும் யானையை மன்னர்முடியை மிதித்து ஏறின அவன், பொன்னாலே சட்டத்தைச்செய்து வெள்ளியாலே வேய்ந்து வைரத்தாலே வட்டத்தை நிரைத்து அதன்மேலே முத்துமணிகளை யழுத்தி விலையிடுதற்கரிய முத்துத் தாமங்கள் விளிம்பிலே நாற்றவும் பட்டுப் பவளக்காம்பையுடையதொரு குடை நிழலிலிருந்த பருதியை ஒத்தானென்க.

யானையின் பெயரும் ஏறின முறைமையும் முற்கூறுமையின், பிற்கூறினார். (கசரு - சு)

2524. மடற்பனைக் குழாத்திற் பிச்ச நிரைத்தன மன்னர் சூழ்ந்து, புடைக்களி றேறித் திங்கட் பொழிகதிர்க் குப்பை யன்ன, எடுத்தெறி கவரி வீச வியம்பல முழங்கி யார்ப்பக், கடற்படை வெள்ளஞ் சூழக் காவலன் வீதி சேர்ந்தான்.

(இ - ள்.) பிச்சங்கள் பனைக்குழாம்போலே நிரைத்தன ; அவ் வளவிலே காவலன், மன்னர் பக்கத்திற் களிறுகளிலே ஏறிச் சூழ்ந்து கவரியை வீச இயம் ஆர்ப்பப் படைவெள்ளம் சூழ வீதியைச் சேர்ந்தானென்க. (கசஎ)

2525. அடிநில முறுத ணாணி யருவருத் தமரி னாலித்
திடுமயிர் சிறக ராக வெழுந்துமேற் பறப்ப போலப்
படுமழைத் துளியிற் பாய்மாப் பரந்தன நிரந்த பொற்றேர்
இடைநில மின்றி வேழ மீண்டின மள்ளர் தொக்கார்.

அப்படை சூழ்ந்தபடி கூறுகின்றார்.

(இ - ள்.) அமரில் வந்து ஆலித்து அடிநிலமுறுதலை அருவருத்து நாணி இட்ட மயிர் சிறகுபோலே தோன்ற எழுந்து பறப்பனபோலே பாய்ந்து செல்கின்ற மாப் பரந்தன ; தேர் நிரந்தன ; இடைவெளி இன்றாம்படி வேழம் ஈண்டின ; வீரரும் தொக்காரென்க.

துளி : எண்ணிறத்தற்கு உவமை. (கசஅ)

---

2524. குழாத்தின் - தொகுதியைப்போல். பிச்சம் - பீலிக்குடை ; சீவக. 416 ; "பிச்சக் குடைநீழற் சமணர்" (தே. திருஞா. நல்லூர். 10). புடை - பக்கத்தில். இயம் - வாத்தியம். கடல்போற் படைவெள்ளம் சூழ. காவலன் : சீவகன்.

2525. அடி நிலத்தை உறுதற்கு நாணி. ஆலித்து - முழங்கி. மயிர் - இட்ட வாசங்கள் ; மதுரைக். 391, ந. மழைத்துளியைப் போலப் பரந்தன. அடி, 1-3 : சீவக. 2160, அடிக். தேர் நிரந்தன. மள்ளர் - வீரர்.

2526. கொழுமடற் பெண்ணை யீன்ற குரும்பையுஞ் செப்புங் கொன்ற, இழைமுலைத் தடத்தி னுடன் கணவனைக் காண வேகிக், கழுமொலி யரவ வானங் கனைபெயல் கடற்பெய் தன்ன, குழு மொலி யரவ மீண்டிக் கொடிநகர் பொலிந்த தன்றே.

(இ - ள்.) மக்களெல்லாம் இலக்கணையுடைய கணவனைக் காண ஏகி அரவம் ஈண்டுதலின், நகர் பொலிந்ததென்க.

வானம் கடலிலே பெய்த ஒலியன்ன திரண்ட அரவத்தோடே யீண்டி. கடல் பழையவொலிக்கும் பெய்தல் புதியவொலிக்கும் உவமை. (௧௪௯)

2527. ஒள்ளிலைச் சூலந் தெண்ணீ ருலாமுகில் கிழிக்கு மாடக், கொள்கொடிக் குழாத்தி னாலுங் கொழுநறும் புகையி னாலும், தெள்ளுறு சுண்ணத் தாலுந் தேமலர்த் துகளி னாலும், புள் ளினம் பொழுது காணு புலம்பிக்கூ டடைந்த வன்றே.

(இ - ள்.) சூலம் தெளிந்த நீர்பரந்த முகிலைக்கிழிக்குமாடத்திற் கட்டின கொடித்திரள் முதலியவற்றாலே கதிர்மறைதலிற் பறவைத்திரள் பகற்பொழுதைக் காணுவாய் வருந்திக் கூட்டைச் சேர்ந்தனவென்க.

கடலிலே யுலாவும் முகிலுமாம். (௧௫௦)

2528. பைந்தொடி மகளிர் பாங்கர் பரிந்துநூல் சொரிந்த காசு
சிந்தின தழலென் றஞ்சிச் சிறையன்ன நிலத்தைச் சேரா
இந்திர கோப மாமென் றிளமயில் குனிந்து குத்திச்
சிந்தையிற் றேம்பத் தாமே திருமணி நக்க வன்றே.

(இ - ள்.) கணவர் ஊடின மகளிர் மேகலையைப் பற்ற, அது பரிதலின் நூல்சொரிந்த மணிகள் சிந்தினவற்றை நெருப்பென்றஞ்சி அன்னம் நிலத்தைச் சேராவாயின; அவற்றை இந்திரகோபமென்று மயில்கள் குத்தி அவையன்மையின் நெஞ்சாலே வருந்த, ஒளிவிட்ட மணிகள் அதற்கு நக்காற்போன்றிருந்தனவென்க.

இப்பறவைகள் ஆண்டு வளர்ந்தன. (௧௫௧)

---

2526. பெண்ணை - பனை. இழை - ஆபரணம். தடத்தினுள்தன் கணவனை - இலக்கணையினுடைய கணவனாகிய சீவகனை. கழும் ஒலி = கழுமு ஒலி - நிறைந்த ஒலி. வானம் - மேகம்.

2527. சூலம் முகிலைக் கிழிக்கும் மாடத்தில்; "மணிமாடத் துச்சி மிசைச் சூலஞ் செழுங்கொண்ட லகடிரிய" (பெரியதிரு. 3. 9: 4); "சூல நெற்றி, அந்தரந் திவளு ஞாயிற் கோயில்" (சூளா. மந்திர. 123). புள்ளினம் - பறவைக் கூட்டம். பொழுதைக் காணுவாய்.

2528. பாங்கர் - பக்கத்தே. பரிந்து - மேகலை அறுதலாலே. காசு - மணிகள். சிந்தினவற்றை. மயில் இந்திரகோபத்தை உண்ணல்: சீவக. 1819. சிந்தையின் தேம்ப - நெஞ்சால் வருந்த.

2529. வெள்ளைமை கலந்த நோக்கிற் கிண்கிணி மிழற்றி யார்ப் பப், பிள்ளைமை காதல் கூரப் பிறழ்ந்துபொற் றேடு வீழத், துள் ளுபு செலீஇய தோற்றந் தொடுகழற் காமன் காமத், துள்ளுயி ரறியப் பெண்ணாய்ப் பிறந்ததோர் தோற்ற மொத்தார்.

இக்கவிமுதலாக [1]வேட்கைபிறவாப்பருவத்தாரும் பிறக்கின்ற பருவத்தாரும், பிறந்த பருவத்தாருமென மூன்றுகூறுக்கிக் கூறுகின்றார்; "பேதை யல்லை மேதையங் குறுமகள், பெதும்பைப் பருவத் தொதுங் கினை புறத்தென" (அகநா. 7) என்றலின், பேதை வேட்கை பிறவாப் பருவத்தாதலும், பெதும்பை வேட்கை பிறக்கின்ற பருவத்தாதலும் பெற்றாம். இவையொழிந்த மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை யென்னும் பெயர்கள் வேட்கை பிறந்த பருவத்துப் பெயர்களாம். அன்றி அவையும் பல பருவத்தையுணர்த்தும் பெயர்களெனின், அது முதனூல்களிற் கூறாமையானும், சான்றோர் வேறுபாடு கூறாமல் மகளிர்க் குப் பொதுப்பெயராகச் செய்யுள் செய்தலானும் தேவர்க்கும் அது கருத் தென்றாம். இனி, உலாவிற்கு அங்கமாகப் புதிய நூல்களிற் கூறிய விதி இதற்காகாமையுணர்க. உள்ளொன்று கொள்ள நோக்காது வெள்ளைமை கலந்த நோக்கோடென்க.

(இ - ள்.) வேட்கை பிறவாத மகளிர், தம் பிள்ளைத் தன்மையாலே காண்டற்குக் காதன் மிகக் கிண்கிணியார்ப்பத் தோடு வீழத் துள்ளா நின்று நோக்கோடு சென்ற தோற்றத்தாற் காமன் காமத்தினின்பத்தையே நுகர்ந்தறிதற்குப் பெண்ணாய்ப் பிறந்த தோற்றத்தை ஒத்தாரென்க.

இது வேட்கை பிறவாப் பருவத்தாரைக் கூறிற்று. (கருஉ)

2530. தன்னெறி வளரக் காமன் றன்முலை யிரண்டு மாகி,
முன்னரே வளர்கின் றற்போன் முகிழ்முலை முத்த மேந்திப்,
பொன்னெறி மணியிற் பொங்கிக் குழல்புறம் புடைப்ப வோடிப்,
பின்னிறீஇ வைத்த போலப் பெதும்பையர் விதும்பி நின்றார்.

2529. வெள்ளைமை கலந்த நோக்கின் - உள்ளே ஒன்றுங் கொள்ளாத தன்மை கலந்த நோக்கினேடு. பிள்ளைத் தன்மையாற் காதல் கூர. செலீஇய - சென்ற. காமத்துள்ளுயிர் அறிய - காமத் தின்பத்தை நுகர்ந்தறிதற்கு.

(உரை) [1]வேட்கை பிறவாப் பருவத்தாரும், வேட்கை பிறக்கின்ற பருவத்தாரும், வேட்கை பிறந்த பருவத்தாருமென இங்கே கூறியது போல் மகளிரை மூன்று கூறுக்கி வழங்குவர் வடநூலாரும்.

2530. தன்நெறி வளர - தனது காமநீதி உலகில் வளரும்படியாக. முகிழ்முலை முத்தம் ஏந்தி - அரும்பிய முலையில் முத்துமாலையைத் தாங்கி. பொன் எறி மணியின் - பொன்னில் அழுத்திய நீலமணியைப்போல;

(இ - ள்.) பெதும்பையர், காமன் தன்னீதி உலகிலே வளரும்படி மகளிர் முலையிரண்டுந்தாஞகி வளர்கின்ருற்போலே முகிழ்த்தமுலையிலே முத்தத்தையேந்திப் பொன்னிலே வந்து தாக்குகின்ற நீலமணிபோலே குழல்பொங்கி முதுகிலே புடைக்கும்படி ஓடி மனமசைந்து முன்னரே நின்ருரென்க.

போல் முகிழ்த்தவென்க. எறிதல், "திரையெறிதல்" போல் நின்றது. பின்னும் தலை நிறுத்திவைத்தாற்போலே நின்ருரென்றது, சேரநிறுத்திஞற்போல நின்றமைகூறிற்று. இனிக் காமன்ருன் தன்னெறி வளர முலையிரண்டும் தனக்குண்டாய் வளர்கின்ருற்போலே நின்ருரென்று முரைப்ப.

இது வேட்கைபிறக்கின்ருரைக் கூறிற்று. (கருரு)

2531. அணிநிலா வீசு மாலை யரங்குபுல் லென்னப் போகித்
துணிநிலா வீசு மாலைப் பிறைநுதற் ருேழி சேர்ந்து
மணிநிலா வீசு மாலை மங்கையர் மயங்கி நின்ருர் [தார்.
பணிநிலா வீசும் பைம்பொற் கொடிமணி மலர்ந்த தொத்

(இ - ள்.) ஒளியை வீசும் மணிமாலையையுடைய மங்கையர், தாம் ஆடுகின்ற ஒளியை வீசும் மாலையையுடைய அரங்கு புல்லெனப்போய் நிலாவை வீசும் மாலைக்காலத்துப் பிறைபோலும் நுதலையுடைய தோழியைச் சேர்ந்து மயங்கி நின்றவர்கள், ஒளியைவீசும் பொற்கொடி மணியைப் பூத்த தன்மையையொத்தாரென்க.

பணிகொடி - ஒழிந்தகொடிகள் தாழ்கின்ற கொடி; பணி - பரத்தலு மாம். இது சிறிது வேட்கைபிறந்து மயங்கிஞரைக் கூறிற்று. (கருச)

2532. வள்ளுகிர் வரித்த சாந்தின் வனமுலை நோக்கி ஞரை [கக்
உள்ளுயி ருண்ணுங் கூற்றி னுடன்றுகண் கரிந்து பொங்
கள்ளுயி ருண்ணு மாலைக் கதுப்பொரு கையி னேந்தி
நள்ளிருள் விளக்கிட் டன்ன நங்கைமார் மல்கி ஞரே.

சீவக. 335, அடிக். புறம் - முதுகில். கூந்தலுக்கு நீலமணியும் முதுகு புறத்திற்குப் பொன்னும் உவமைகள். பெதும்பையர் விதும்பி நின்ருர்; "பெதும்பை மகளிர் விதும்பி நோக்கினர்" (பெருங். 2. 7 : 71). பெதும்பையர் - வேட்கை பிறக்கின்ற பருவத்தார்.

2531. நிலா - ஒளி. மாலையையுடைய அரங்கு. அரங்கு புல் லென்னப்போகி; "செல்வம் புல்லென வெய்திஞர்" (சூளா. குமார. 10); புல்லென - பொலிவழிந்து தோன்ற. நிலாவை வீசும் மாலைக்காலத்துப் பிறையைப்போலும் நுதலையுடைய தோழியை. பொற்கொடி மங்கை யருக்கு உவமை. நின்றவர் மணியை மலர்ந்த தொத்தார்.

2532. வள்ளுகிர் வரித்த - பெரிய நகத்தாலே எழுதின. நோக்கி ஞரை - தம்மைப் பார்த்தவர்களை. கூற்றைப்போல் உடன்று. மாலையில் கள்ளினது உயிரை உண்ணும் கதுப்பை; கள் - தேன். உயிர் - ஈண்டு மணம். கதுப்பு - கூந்தல். இருளில் விளக்கிட்டாலன்ன நங்கைமார்.

உகிராலே எழுதின முலை : எழுவாய். 'கரிந்து' என்றுர், கோபத் தாற் கருகியென்றுற்போலவும் தோன்ற. மாலையின் தேனினது மணத்தையுண்ணுமயிர்.

(இ - ள்.) செறிந்த இருளுக்கு விளக்கிட்டாற்போலும் தோற்றப் பொலிவையுடைய நங்கைமார், தம்முலை தம்மை நோக்கினுரைக் கூற்றுப் போலே கோபித்துப் பொங்கக் குலைந்த கதுப்பை ஒருகையாலே ஏந்தி நிறைந்தாரென்க.

இனி, கதுப்பையேந்துதலின், இருளிலே விளக்கிட்டன்னவென்று மாம்.

இனி முதலாக வேட்கைமிக்காரைக் கூறுகின்றுர். (கஉ௬)

2533. மட்டொளித் துண்ணு மாந்தர் மாண்புபோன் மறைந்து வண்ணப், பட்டொளித் தொழிய வல்குற் பசுங்கதிர்க் கலாபந் தோன்றக், குட்டநீர்க் குவளைக் கண்கள் விருந்துண விரும்பி நின்றுர், அட்டுந்தே னணிந்த மாலைப் பவளக்கொம் பணிந்த தொத்தார்.

மாலையையுடையதொரு பவளக்கொம்பை ஒப்பித்த தன்மையை யொத்தாரென்றது, முற்கூறியவரைச்சுட்டிற்று. கள்ளைக் கரந்துண்ணு மாக்கள் கரக்கவும் தோன்றுமாறுபோல, மேகலை வண்ணப்பட்டிலே ஒளித்துக் கிடவா நிற்கவும் சிறிதுதோன்றுறவென்க.

(இ - ள்.) அவர்கள், மேகலை தோன்றக் கண்கள் இவனிடத்துப் புதுமையை மறைந்து நுகர விரும்பியேநின்றுரென்க. (கஉ௭)

2534. பெரும்பொரு ணீதிச் செங்கோற் பெருமக னுக்கம் போலப், பரந்திட மின்றி மேலாற் படாமுலை குவிந்த கீழால், அரும்பொரு ணீதி கேளா வரசனிற் சுருங்கி நந்து, மருங்கு நொந் தொழிய வீதி மடந்தைய ரிடங்கொண் டாரே.

பெரிய பொருளாகிய நீதிபொருந்தின செங்கோலையுடைய பெரு மகன். [1] ஆல்கள் : அசைகள்.

2533. மட்டு - கள்ளை. மாந்தரது மாண்புபோல. வண்ணம் - நிறம். கலாபம் பட்டில் ஒளித்து ஒழியவும் தோன்ற ; கலாபம் - மேகலை. விருந்து உண - சீவகனிடத்துப் புதுநலத்தை நுகரும்படி. மாலையை யுடைய பவளக்கொம்பை. ஒத்தார், நின்றுர் என்க.

2534. பொருளாகிய நீதியையுடைய. பெருமகன் : சீவகன். ஆக்கம் - செல்வப் பெருக்கு. மேலால் பரந்து குவிந்த படாமுலையின் கீழால் ; படாமுலை - சாயாத முலை. கேளாத அரசனைப்போல் சுருங்கி நந்தின மருங்கு ; மருங்கு - இடை. நொந்தொழிய - வருந்தும்படி.

(உரை) [1] மேலால், கீழால் என்பனவற்றில் உள்ளன.

(இ - ள்.) தன்மேலிருந்து பெருமகனுக்கம்போலே மார்பு இடமின்றும்படி பரந்து குவிந்த படாமுலைக்கீழேயிருந்து, பொருளாகிய நீதியைக் கேளாத அரசனைப்போலே சுருங்கி நந்தின இடை நோம்படி மடந்தையர் வந்து வீதியை இடமாகக் கொண்டாரென்க.

இது முதலிய மூன்றுகவி [1] பின்பு வந்தோரைக் கூறுகின்றன. (கருஎ)

2535. செல்வர்க்கே சிறப்புச் செய்யுந் திருந்துநீர் மாந்தர் போல, அல்குற்கு முலைக்கு மீந்தா ரணிகல மாய வெல்லாம், நல் கூர்ந்தார்க் கில்லை சுற்ற மென்றுநுண் ணுசுப்பு நைய, ஒல்கிப் போய் மாடஞ்சேர்ந்தா ரொருதடங் குடங்கைக் கண்ணார்.

(இ - ள்.) கண்ணார், தமது [1]நுசுப்பு மிடித்தார்க்குச் சுற்றமின்றுயிருந்ததென்று வருந்தாநிற்கவும் செல்வர்க்குப் பின்னும் வேண்டுஞ் சிறப்புக்களைச் செய்யும் பொல்லாத நீர்மையையுடைய மாந்தரைப்போலே அல்குற்கும் முலைக்கும் அணிகலமாயவெல்லாம் ஈந்தார்; ஈந்தபின்பு போய் மேனிலத்தைச் சேர்ந்தாரென்க. (கருஅ)

2536. கார்வளர் மின்னு வீசுங் குண்டலங் காய்பொ னோலை
ஏர்வளர் பட்ட மேற்ப வணிந்திருள் சுமந்து திங்கள்
நீர்வளர் நீலம் பூத்து நிரைத்தபோ னிரைத்த மேலால்
வார்வளர் முலையி னார்த மாழைவாண் முகங்கண் மாதோ.

(இ - ள்.) திங்கள் பலவும் காரிலே தோன்றிய மின்னை வீசுங் குண்டல முதலியவற்றைப் பொருந்த அணிந்து இருளைச்சுமந்து நீலத்தைப் பூத்து நிரைத்தனபோலே முலையினார்தம் இளைய முகங்கள் மேனிலத்தே நிரைத்தனவென்க. (கருகூ)

---

[1] பின்பு வந்தோரென்றது வேட்கை மிக்க பருவத்தாரை.

2535. திருந்துநீர் - பொல்லாத தன்மையையுடைய. அடி, 1: "செல்வரை, யெல்லாருஞ் செய்வர் சிறப்பு" (குறள், 752); ஆதியுலா, 136 - 8. நுசுப்பு, நல்கூர்ந்தார்க்குச் சுற்றம் இல்லை என்று நையவும்; நாலடி. 113. ஒல்கி - அசைந்து. மாடத்தைச் சேர்ந்தார். குடங்கை போலும் கண்ணார்; சீவக. 342, அடிக்.

(உரை) [1] நுசுப்பு மிடித்தார் - இடைவறுமையுற்றார்; "இடை மிடித்தார்தமை" (வெங்கைக்கோவை, 31)

2536. காரில் வளர்ந்த மின்னல்; கார் - மேகம். ஏர் - அழகு. இருளென்றது கூந்தலை. திங்களென்றது முகத்தை. நீலம் என்றது கண்களை. மேலால் நிரைத்தவென்க; ஆல்: அசை. வார் - கச்சு. மாழை - இளமை.

2537. குறையணி கொண்ட வாறே கோதைகா ளூடர வோடிச், சிறையழி செம்பொ னுந்தித் தேன்பொழிந் தொழுக வேந்திப், பறையிசை வண்டு பாடப் பாகமே மறைய நின்றார், பிறையணி கொண்ட வண்ணல் பெண்ணொர்பால் கொண்ட தொத்தார்.

(இ - ள்.) செம்பாதி குறையாகப் பூணணிந்த அளவிலே சீவகன் வந்தானாக, முன்பே அவற்குக்கொடுத்தற்குச் சமைத்தெடுத்த கோதைகள் தம்மிற் பிணங்க ஓடிச்சென்று சிறையழிந்த தேன் செம்பொனுந்தியிலே பொழிந்தொழுக அக்கோதையையேந்திச் செம்பாதியணியாத நாணத்தாலே ஒருபாகமறைய நின்றவர்கள், அண்ணல் ஒருபாலிலே கொள்ளப்பட்ட பெண்ணையொத்தாரென்க.

பறை - பறத்தல். (கசுo)

2538. பொன்னரி மாலை பூண்டு பூஞ்சிகை குலாவி முன்கை, மின்னரிச் சிலம்பு தொட்டு விருப்பொடு விரைந்து போவான், கன்னிய ராடி நோக்கித் தம்மைத்தாங் கண்டு நாணிப், பின்னவை யணிந்து செல்வா ரிடம்பெறு தொழிந்து போனார்.

(இ - ள்.) கன்னியர், அவனைக் காணவேண்டுமென்கிற விருப்பத்தாலே போதற்கு விரைந்து பொன்னரிமாலையைக் கழுத்திலே பூண்டு பூஞ்சிகையிலே அதனை வைத்தாராகக் கருதி அதனையொழியப் பூஞ்சிகையை முடித்துத்தொட்டுக் கண்ணாடியைப் பார்த்துத் தம்மை அதிலே கண்டு நாணிப்பின்பு அவை அணிந்து செல்கின்றவர்கள் காண்டற்கு இடம்பெறாதே தவிர்ந்துபோனாரென்க. (கசுக)

2539. முத்துலாய் நடந்த கோல முலைமுதன் முற்ற மெல்லாம், வித்திய வேங்கை வீயும் விழுப்பொனும் விளங்கக் காமத், தொத்துநின் றெரிந்து கண்டார் கண்சுடச் சுடர்ந்து நின்றார், ஒத்தொளிர் காம வல்லி யொருங்குபூத் துதிர்ந்த தொத்தார்.

---

2537. குறை அணிகொண்டவாறே - உடலில் பாதி குறையாக ஆபரணங்களை அணிந்தவாறே. கோதை - கூந்தல். தேன் உந்தியிற் பொழிந்து ஒழுக. கோதையை ஏந்தி. பறை - பறத்தல்; "பறைதபு முதுகுரு கிருக்கும்" (ஐங்குறு. 180). பாகமே - ஒரு பாகம். அண்ணல் : சிவபெருமான். பெண் : உமை.

2538. பூஞ்சிகை - பூக்களை யணிந்த முடி. போவான் விரைந்து - போதற்கு விரைவுகொண்டு. ஆடி - கண்ணாடி.

2539. முத்து - முத்துமாலை. முலைமுதல் முற்றமெல்லாம் - முலையின் அடிப் பாகமான மார்பெல்லாம். வேங்கை வீயும் விழுப்பொனும்

(இ - ள்.) கண்ணுற் கண்டவர்களுக்குத் காமத்தீயின் தொத்து நின்று எரிந்து சுடுதலாலே, அவர்கள் வேங்கைவீயையும் பொன்னையும் வித்திய போலும் பசலை, உலாவிநடந்த முத்தணிந்த முலை தோன்றுதற்குக் காரணமாகிய மார்பெல்லாம் சுடர்ந்து விளங்க நின்றாரென்க.

அலர்ந்த காமவல்லியை ஒத்தாரென்பது சுட்டுப்பெயராயிற்று. இனி, பசந்த தம்மை நோக்கினர் கண் சுடும்படி நின்றார், வல்லிபூத்துப் பொலிவழிந்த தன்மையையொத்தாரென்றுமுரைப்ப. இத்துணையும், மணநிலை வகையிற்பிறந்த பெண்பாலாரையும் பரத்தையரையும் கூறினர். இது மக்கள் வகையாற் காமப்பொருட்பகுதிபற்றி முன்னோர் கூறிய குறிப்பு வகையான் வந்த செந்துறைப்பாடாண்பகுதியாம். (கசூஉ)

2540. உகிர்வினை செய்து பஞ்சி யொள்ளொளி யரத்த மூட்டி
அகில்கம ழுங்கை சேப்ப வரிவைய ரலங்க ருங்கி [போன்
வகிர்படு மழைக்கண் சின்னீர் மாக்கய லெதிர்ந்தவே
முகில்கிழி மின்னி னோக்கி முரிந்திடை குழைந்து நின்றார்.

இதுமுதலாகக் கற்புடை மகளிரைக் கூறுகின்றார்.

(இ - ள்.) மகளிர், தம்மழகிய மை சிவக்கும்படி உகிரைச்சீவிப் பஞ்சாலே ஊட்டி அகில்கமழ் அலங்கலை யணிந்து கயல் சின்னீரை எதிர்ந்தாற்போலே வடுவகிர்போலுங்கண் உவகைக்கண்ணீரரும்ப நோக்கிப் பாதுகாத்தற்கு இவ்வரசனைப் பெற்றேமேயென்று முரிந்து முகில்கிழி மின்னினின்றாரென்க.

இடைகுழைந்து நின்றாரெனவே மனக்குழைவின்றென்று கற்புக் கூறினர். (கசூ௩)

2541. முனித்தலைக் கண்ணி நெற்றிச் சிறார்முலை முழாலிற் பில்கிப், புனிற்றுப்பால் பிலிற்றித் தேமா வடுவிறுத் தாங்குப் பாய, நுனித்துக்கண் ணரக்கி நோக்கா தொசிந்துநின் றார்க ளன்றே, கனிப்பொறை மலிந்து நின்ற கற்பகப் பூங்கொம் பொத்தார்.

விளங்க: "திருக்கிளர் வேங்கையும் பொன்னும் பிதிர்ந்து" (பெருங். 1. 33 : 181). வேங்கைப்பூவும் பொன்னும் பசலைக்கு உவமை. தொத்து - கொத்து. கண்ணுற் கண்டவர்களுக்கு எரிந்து சுடுதலால்.

2540. உகிர் வினைசெய்து - நகங்களை அழகுபடச் சீவி. அகில் கமழ்கின்ற அலங்கலைத் தாங்கி. வகிர் - மாவடுவின் பிளவு; கண்களிற்குவமை. கயல் சின்னீரை எதிர்ந்தாற்போல் கண்ணில் நீரரும்பநோக்கி. மின்னினைப்போல் நின்றார்.

2541. முனித்தலைச் சிறார் - முனிவர்களுடைய தலைபோன்ற தலையையுடைய சிறு பிள்ளைகள்; "முனித்தலைப் புதல்வர்" (புறநா. 250); "முனித்தலைச்சிறாரை" (பெருங். 2. 2 : 107). கண்ணியை நெற்றியிலேயுடைய சிறார். முழாலின் - தழுவுதலால்; "முழாலிற் பொலி

(இ - ள்.) இருடிகள் தலைபோலும் புன்றலையையும், கண்ணி நெற்றி யையுமுடைய சிறுர் முலையிலே சேர்தலாலே ஈன்றணிப்பாற் பாலூறி வடுவிறுத்தாற்போலே பிலிற்றிப்பாயக் கண்ணை யமுக்கி அரசனை நுனித்து நோக்காதே நாணி நின்றவர்கள் கற்பகத்தையொத்தாரென்க.

கனியாகிய பாரமிக்குநின்றதொரு கற்பகமெனவே புதல்வனாகிய பயனைக் கொடுத்தாரென்பது கூறினுர். கற்பகங்கூறிற்று, கற்புமிகுதி யால் தம் கணவர்க்குச் செல்வமெல்லாம் கொடுப்பாரென்று கருதி. (கசாச)

2542. அவிரிழை சுடர முல்லை யலங்கலங் கூந்தல் சோரத்
தவிர்வெய்ய காமந் தாங்கித் தடமுலைக் கால்கள் சாய
இவர்தரு பிறவி யெல்லா மின்னமா கென்று நின்றுர் [தார்.
சுவர்செய்தாங் கெழுதப் பட்ட துகிலிகைப் பாவை யொத்

முல்லை கற்பிற்குச் சூடினுர். தவிர்வெய்யகாமந்தாங்கி - போகப்பட்ட கொடிய காமத்தையுடையராய்; வெய்ய : அடை. இது, "வீதராகர்" என்றுற்போல நின்றது. இன்னமாக - பிறக்கும் பிறவியெல்லாம் [1] நீ காக்கின்ற உலகிலே இங்ஙனம் இனிது உறைவேமாக. பாவை, கொண்ட நிலை தான் கெடுமளவும் குலையாததன்மைபோல, அவர் தாம்கொண்ட கற்பும் குலையாதிருத்தலின், 'பாவை' என்றுர்.

(இ - ள்.) சுடரச் சோரத் தாங்கிச் சாய இன்னமாகென்று கூறிநின் றுர், பாவையையொத்தாரென்க. (கசாரு)

2543. வேரிநா றலங்கன் மாலை மின்னிழை மயங்கி யெங்கும்
பூரித்துப் புதவந் தோறுங் குவளையு மரையும் பூத்துப்
பாரித்துப் பைம்பொ னுக ருலகிவண் வீழ்ந்த தேபோல்
மாரிமா மயில னுரு மைந்தரு மயங்கி னுரே.

---

வண் முழவும்" (தணிகைப். வள்ளி. 59). 1-2. கலித். 84 : 1-4. கண்ணை அரக்கி நுனித்துநோக்காது; அரக்கி - அமுக்கி; பெருங். 1. 36 : 99. கனியாகிய பொறை; என்றது புதல்வர்களை. பொறை - பாரம். நின்ற வர்கள் ஒத்தார்.

2542. இழை - ஆபரணம். தவிர் - போகப்பட்ட. முலைக்கால்கள்- முலையின் அடிகள். இவர்தரு - தாம் இனிமேவுகின்ற. இன்னம் ஆக - இத்தன்மையையுடையமாக. துகிலிகையால் எழுதப்பட்ட பாவையை ஒத்தார்; துகிலிகை - எழுதுகோல்.

(உரை) [1] பெருங். 1. 40 : 386 - 90.

2543. வேரி - தேன். அலங்கலும் மாலையும் இழையும் மயங்கி; மயங்கி - கலந்து. புதவம் - வாயில். மரை - தாமரை. குவளையென்றது கண்களையும் மரையென்றது முகங்களையும் குறித்தன. பூத்து - பொலிவு பெறப்பட்டு. பொன்னுலகும் நாகருலகும் பாரித்து வீழ்ந்ததேபோல்; பாரித்து - பரவி. மாரியைக் கண்ட மயிலன்னவரும்; என்றது மகளிரை.

(இ - ள்.) நாகரும் பொன்னுலகிற்றேவரும் பரக்கவந்து இவ் விடத்தை விரும்பினதன்மைபோலே, நகரெங்கும் அலங்கலும் மணி மாலையும் இழையும் பூரித்து மயங்கப்பட்டு, வாயில் தோறும் கண்ணும் முகமும் பொலிவுபெறப்பட்டு மயிலனாரும் மைந்தரும் மயங்கினாரென்க.

தம்மைக் காக்கின்ற அரசனாதலின், [1] அன்புமிகுதியால் இருபாலாரு முடன் வந்தார். (கசுசு)

2544. கோதைதாழ் குடையி னீழற் கொற்றவன் பருதி யாக
மாதரார் முகங்க ளென்னுந் தாமரை மலர்ந்த தெண்ணீர்க்
காதநான் ககன்ற பொய்கைக் கடிநகர் குவளை பூத்துப்
பேதுறு கின்ற போன்ற பெருமழைக் கண்கண் மாதோ.

(இ - ள்.) கட்டியங்காரனென்னும் மதியாற்குவிந்த மாதரார்முக மென்னுந்தாமரை இக்கொற்றவன் பருதியாக நாற்காதத்தளவும் அகன்ற நகராகிய பொய்கையெங்கும் மலர்ந்தன; மலர்ந்தபின் அவற்றிற் கண் களும் குவளை பூத்துப் பேதுறுகின்றனபோன்றனவென்க.

பேதுறுதல் - இன்மையுற்று மயங்குதல். (கசுஎ)

2545. மாந்தரு மாவுஞ் செல்ல மயங்கிமே லெழுந்த நீறு
தேந்தரு கோதை யார்தந் தெண்மட்டுத் துவலை மாற்ற
ஆய்ந்தபொன் னகர மெங்கு மணிகல வொளியி னாலே
காய்ந்துகண் கலக்கப் பூத்த கற்பக மொத்த தன்றே.

முற்கூறிய மயிலனாரும் மைந்தரும் மயங்கினவர்களுடைய செய்தி கூறுகின்றார்.

---

(உரை) [1] பெரிய மகிழ்ச்சியைத் தரும் காலங்களிலும் திருவிழாக் காலங்களிலும் ஆடவரும் மகளிரும் வேறுபாடின்றி அந்நிகழ்ச்சிகளைக் கொண்டாடுவரென்பது ஈண்டு அறியத்தக்கது.

2544. கோதை - பூமாலை. கொற்றவன் : சீவகன். தெண்ணீரை யுடைய நகராகிய பொய்கையில் மலர்ந்தன. 'காத நான்ககன்ற' என்ற தனால், இராசமாபுரம் நாற்காத அகலமுடைய தென்பது பெறப்பட்டது; "காத நான்குங் கடுங்குர லெடுப்பி" (சிலப். 5 : 133) என்பதனால், காவிரிப்பூம்பட்டினத்தினெல்லையும் நாற்காதமுடையதென்று தெரிகின் றது. இவ்விரண்டையும் உற்றுநோக்குமிடத்து, பெரிய நகரத்தினெல்லை நாலுகாதமாக இருத்தல் வேண்டுமென்று வெளியாதலுடன், காதம் என்ற சொல்லுக்குத் துணிந்த பொருள் யாதோ என்ற ஐயமும் உண்டா கிறது. பேதுறல் - துன்புறுதல்.

2545. மா - குதிரை. நீறு - தூசி. மட்டுத்துவலை - தேனின் துளி. நீற்றைக் கோதையாருடைய மட்டுத்துவலை மாற்ற; "தேரிற் றுகளைத் திருந்திழையார் பூங்குழலின், வேரிப் புனலணைப்ப" (நள. சுயம். 22). நகரம் - இராசமாபுரம்.

(இ - ள்.) மாந்தரும் மாவும் செல்லுதலாலே மயங்கி எழுந்த நீற்றை மகளிர் வீசுகின்ற பூவிற்றேன் மாற்றுநிற்க, ஆய்ந்த கலங்களை அரசன் வேண்டாதிருக்கவும் அவன்முன்னே வீழ மைந்தர் எங்கும் வீசுகின்ற விளக்கத்தாலே, இப்பொன்னகர், வேண்டக்கொடுக்கின்ற கற்பகத்தைக் காய்ந்து எதிர்ப்பட்ட அளவிலே கொடுத்ததொரு கற்பகத்தையொத்த தென்க.

கண்கலத்தல் - எதிர்ப்படுதல். பூத்ததனாற்பயன் கொடையேயாம். (கசுஅ)

2546. பெண்பெற்ற பொலிசை பெற்றார் பிணையனார் பெரிய யாமும், கண்பெற்ற பொலிசை பெற்று மின்றெனக் கரைந்து முந்நீர், மண்பெற்ற வாயுள் பெற்று மன்னுவாய் மன்ன வென்னாப், புண்பெற்ற வேலி னான்மேற் பூமழை தூவி னாரே.

முற்கூறிய மகளிர், இங்ஙனங்கூறிப் பூவை வீசுகின்றார்.

(இ - ள்.) வீரமகளும் திருமகளும் நின்னை விடாதேயுறைதலின், தாம் பெண்டன்மையைப் பெற்றதனாலுள்ள இலாபத்தைப்பெற்றார்; அதனால், அவர்கள் நின்னை விடாதுறைவாராகவென்று யாம் கூற வேண்டா; கற்புமிகுதியால் அவர்களிற் பெரிய யாமும் சச்சந்தன் மகனாகிய நின்னை எமக்கரசனாகக் காணப்பெறுதலின், இன்று கண் பெற்றதனாலுள்ள இலாபம் பெற்றேமென்று கூறி அவனது ஆயுளுக்குக் கரைந்து, மன்னனே! முந்நீரும் மண்ணும் பெற்றஆயுளை நீ பெற்று மன்னுவாயாகவென்று வாழ்த்தி அவன் மேலே பூவைத் தூவினாரென்க.

இஃது, 'உப்பு முலகு முள்ளளவளவும் வாழ்வீர்' என்னும் உலக வழக்கு. உம்மை : சிறப்பு. இங்ஙனம் நீடுவாழ்கென வாழ்த்துதற்குரியோர் கற்புடை மகளிர். ஏனையோர் வாழ்த்துவரேற் பயனின்றாம். இத்துணையும், உயர்குடிப் பிறந்தோருறைகின்ற வீதிகூறினார். (கசுகூ)

(வேறு)

2547. சுண்ண மேற்சொ ரிவார் தொழுது தொங்கல் வீழ்ப்பார்
தண்ணென் சந்த னநீ ரார்ந்து தேன்று ளும்பும்
வண்ணப் பந்தெ றிவார் வளையொ லிப்ப வோச்சிக்
கண்ணி யிட்டெ றிவார் கலவை நீர்தெ ளிப்பார்.

2546. பெண்பெற்ற பொலிசை - பெண் தன்மையைப் பெற்றதனாலுள்ள இலாபத்தை; பொலிசை - இலாபம். பிணையனார் - மகளிர். இன்று பெற்றும். கரைந்து - வாயாரக்கூறி. முந்நீரும் மண்ணும்பெற்ற ஆயுளைப் பெற்று மன்னுவாய்.

2547. சுண்ணத்தை மேலே சொரிவார். தொங்கல் - மாலை. சந்தனமும் நீரும் ஆர்ந்து; ஆர்ந்து - நிறையப்பட்டு. வண்ணப்பந்து - பல வர்ணங்களையுடைய பூக்களாலாகிய பந்து. வளை - வளையல்; சங்கு எனலுமாம். கலவைநீர் - வாசனைப் பொருள்கள் கலந்த நீர்.

(இ - ள்.) ஒழிந்த மகளிர், ஓச்சிச் சொரிவார் ; வீழ்ப்பார் ; சந்தனமும் பனிநீரும் நிறையப்பட்டுத் தேன்துளும்பும் பூம்பந்தையெறிவார் ; கண்ணியையெறிவார் ; பசுங்கூட்டையும் பனிநீரையும் கூட்டித் துருத்தி முதலியவற்றால் தெளிப்பாராயினரென்க. (கஎ௦)

2548. முந்து சூர்த டிந்த முருக னம்பி யென்பார்
ஐந்து ருவ வம்பி னநங்க னென்ற யர்வார்
கந்து கன்வ ளர்த்த சிங்கங் காண்மினென்பார்
சிந்தை யிற்க ளிப்பார் சேணெ டிய கண்ணார்.

(இ - ள்.) சிந்தையிற் களிப்பார்ந்த மிக நெடிய கண்ணார், இந்நம்பி, முருகனென்பார் ; காமனென்று வருந்துவார் ; சிங்கங்காணுங்கோளென்பாராயினரென்க. (கஎக)

2549. தேசி கமு டியுந் திருந்து பட்டு டையும்
பாச மாக நின்று பன்ம லர்க்க ழுநீர்
மூசி வண்டி மிரும் மொய்ய லங்க ருழக்
காசில் காமஞ் செப்பிக் கண்ணி னலி ரப்பார்.

(இ - ள்.) வண்டிமிரும் கழுநீர்மாலை தாழும்படி சிலமகளிர் சீவகனுடைய முடியும் உடையும் தம்மைப் போகாமற்பிணிக்கும் கயிறாகக் கருதிநின்று தம் கண்ணாலே காமத்தைச் சொல்லி நின்று இரப்பாராயினரென்க. (கஎஉ)

2550. வண்ட றைந்த தாரான் வண்ணங் கண்ட பின்றைக்
கண்டி லேனென் மாமை கைவ ளையொ டென்பார்
ஒண்டொ டியி வன்றன் னுருவு கண்டு வாழ்வார்
பெண்டி ராய்ப்பி றந்தார் பெரியர் போத வென்பார்.

2548. முந்து - முன்பு. சூர்தடிந்த முருகன் ; "அணங்குடையவுண ரேமம் புணர்க்கும், சூருடை முழுமுத றடிந்த பேரிசைக், கடுஞ்சின விறல்வேள்" (பதிற். 11 : 4-5) ; சூர் - சூரபன்மா. நம்பியை முருகன் என்பார். ஐந்து உருவ அம்பின் - ஐந்து அழகிய மலரம்புகளையுடைய. சேண் நெடிய - மிக நீண்ட.

2549. தேசிகமுடி - ஒளியையுடைய கிரீடம் ; தேசிகம் - ஒளி ; 'தேசு தேசிகமெனத் திரிந்தது' (சீவக. 1480, ந.) ; "சிறப்பிடையறுத தேசிக முடையது" (பெருங். 3. 3 : 43). பாசம் - கயிறு. வண்டிமிர்கின்ற கழுநீரலங்கல் தாழும்படி. காமஞ் செப்பல் : நற். 94 : 2.

2550. தாரான் - சீவகனுடைய. கைவளையையும் மாமையையும் கண்டிலேனென்பார். ஒண்டொடி : விளி. போதப் பெரியர் ; போத - மிக.

ஒண்டொடி, இவன் வடிவைக்கண்டு ஈண்டுவாழ்கின்ற யாமேகாண் பெண்டிராய்ப் பிறந்தேமென்பார். அவர்க்கெதிரே அவனை நுகரு மகளிரோவென்று வினயினர்க்கு அவர் தவத்தாற் பெரியர்காண்; அதனை விடலாகாதென்பார். தம்மைப் பிறர்போற் கூறினர்.

(இ - ள்.) என்பார்; என்பாராயினரென்க. (௩௭௩)

(வேறு)

2551. கொழித்திரை யோத வேலிக் குமரனைப் பயந்த நங்கை, விழுத்தவ முலக மெல்லாம் விளக்கிநின் றிட்ட தென்பார், பிழிப்பொலி கோதை போலாம் பெண்டிரிற் பெரிய ணோற்றாள், சுழித்துநின் றருத கற்பிற் சுநந்தையே யாக வென்பார்.

(இ - ள்.) கொழித்து இரைக்கின்ற கடலை வேலியாகவுடைய உலகிற் பெண்டிருள் இவனைப்பெற்ற விசயைதவமேகாண் உலகெல்லாம் விளக்கி நிலைபெற்றதென்பார்; அதுவன்று; பெண்டிருட்பெரியளாக நோற்றாள் சுநந்தையேகாணென்பாராயினரென்க.

பிழியையுடைய பொலிகோதை. 'ஆக' என்பதனை மாற்றுக. சுழித்தல் - வேறோரிடத்தின்றி நிற்றல். அருத கற்பு - அருட்கற்பு. (௩௭௪)

2552. (க) சாந்தகங் கிழிய மாலைத் தடமுலை ஞெமுங்கப் புல்லிச், சேர்ந்தெழு நங்கை மாரே திருநங்கை மார்க ளல்லார், கூந்தலு முலையு முத்துங் கோதையுஞ் சுமந்து நைவான், போந்தவந் நங்கை மார்கள் பொய்ந்நங்கை மார்க ளென்பார்.

இது முதல், "நஞ்சுகுடித் தாலும்" (சீவக. 2557) என்னுங்கவி யளவும் ஒரு தொடராக்குக.

(இ - ள்.) ஆகங்கிழியும்படி ஞெமுங்கப் புல்லிப் புணர்ந்தெழு முலையினையுடைய நங்கைமாரே நல்வினை செய்த நங்கைமார்; அந் நங்கைமாரல்லாதார், கூந்தல் முதலியவற்றைச்சுமந்து வருந்துதற் கென்றே பிறந்த பொய்ந்நங்கைமார்களென்பாரென்க.

வடிவுமாத்திரையேயாய்ப் பயன்பெறுமையின், 'பொய்ந்நங்கை மார்கள்' என்றார்.

---

2551. இரை - ஒலிக்கின்ற. ஓதவேலி - உலகம். குமரன் : சீவகன். நங்கையது தவம்; நங்கை - விசயை. பிழி - தேன். பெண்டிருள் பெரியளாக நோற்றாள் சுநந்தையே என்பார்.

2552. சாந்தகம் கிழிய - சாந்துபூசிய மார்பு கிழியும்படி. ஞெமுங்க- அழுந்த; சூளா. சுயம். 63. திருநங்கைமார்கள் - நல்வினையையுடைய மகளிராவர்; திரு - நல்வினை; சீவக. 2556. அல்லார் - அவர்களல் லாதார். கோதை - பூமாலை. நைவான் போந்த - வருந்துதற்கென்றே பிறந்த.

2553. (உ) இடம்பட வகன்று நீண்ட விருமலர்த் தடங்க ணென்னும், குடங்கையி னெண்டு கொண்டு பருகுவார் குவளைக் கொம்பின், உடம்பெலாங் கண்க ளாயி னொருவர்க்கு மின்றி யேற்ப, அடங்கவாய் வைத்திட் டாரப் பருகியிட் டீமி னென்பார்.

**(இ - ள்.) கண்ணென்னுங்கைகளாலே முகந்துகொண்டு பருகுவார்; குவளையை முழுதும் பூத்ததொரு கொம்புபோலே உடம்பெல்லாம் பொருந்தக் கண்ணுயிற்றுயின், இவர்களொருவர்க்கும் இன்றும்படி இவன் மேனியடங்க அக்கண்களிடத்தே வந்துநிறைய அதனையிட்டுவைத்து நுகருமின்; அல்லது இவ்விரண்டு கண்களாலும் நுகர முடியாதென்பா ரென்க.**

**இட்டீமின் : வினைத்திரிசொல்.**

2554. (ஈ) முலைமுத றுறந்த வன்றே மூரித்தா ளாளி யானைத், தலைநிலம் புரள வெண்கோ டுண்டதே போன்று தன்கைச், சிலையிடம் பிடித்த ஞான்றே தெவ்வரைச் செகுத்த நம்பி, நிலவுமிழ் குடையி னீழற் றுஞ்சுக வைய மென்பார்.

**(இ - ள்.)** யாளி முலையைத் துறந்தவன்றே யானைத்தலை நிலத்தே கிடந்து பதைக்கும்படி அதன்கோட்டை வாங்கி உண்ட தன்மைபோல, உலகறியத் தன்கையிலே வில்லையெடுத்து நிரைமீட்டவன்றே தெவ்வரைக் கொன்ற நம்பியது குடைநிழலிலே இவ்வுலகு தங்குகவென்பாரென்க.

தெவ்வரென்ற பன்மை, பிள்ளைகள் நூற்றுவரையுங்கருதி. வேடர் பகைவரன்மை முன்னர்க் கூறினும். யானைக்குக் கோட்டைப் பறித்த பின்னரும் சிறிதுபொழுது பதைத்து உயிர்போமாறுபோல நிரைமீட்ட அன்றுதொட்டும் இவன் நமக்குப் பகையாவனென்னுங்கருத்துடனே

---

2553. குடங்கையி னெண்டுகொண்டு பருகல் : சீவக. 1258, அடிக்; “குடங்கையி னெண்டு கொள்ளவுங் கூடும்” (சிலப். 10 : 85). குவளைக் கொம்பின் - குவளையைப் பூத்த கொம்புபோல. உடம்பெலாம் கண் களாயின்; “உடம்பெலாங் கண்ணாய்” (திருவா. சதகம். 21). ஆர இட்டுவைத்து - நிறைய அதனை இட்டுவைத்து.

2554. யாளி முலை முதல் துறந்தவன்றே - இளைய சிங்கம், தன் தாயின் முலையை யுண்ணுதலை நீங்கிய அப்பொழுதே. நிலத்தே புரளும்படி. தன் கையிடத்தில் சிலையைப் பிடித்தஞான்றே; தன் என்றது சீவகனை. தெவ்வரை - கட்டியங்காரன் முதலியவரை. அடி, 1-3 : “ஆளி நன்மா னணங்குடைக் குருளை, மீளி மொய்ம்பின் மிகுவலி செருக்கி, முலைக்கோள் விடாஅ மாத்திரை ஞெரேரெனத், தலைக்கோள் வேட்டங் களிறட் டாஅங்கு” (பொருந. 139-42); “ஆளி நன்மா னணங் குடை யொருத்தல், மீளி வேழத்து நெடுந்தகை புலம்ப, ஏந்தல் வெண் கோடு வாங்கிக் குருகருந்தும்” (அகநா. 381 : 1-3). நம்பியின் குடை நிழலில் வையம் துஞ்சுக.

**பதைத்துப் பட்டானென்று தாம் கருதியிருந்தமை கூறினர். அவன் பதைத்தமை, "வாளுற்ற புண்ணுள் வடிவேலெறிந் திற்ற தேபோல்" (சீவக. 455) என்றதனுணர்க.**

(வேறு)

2555. (ச) இந்நகரப் புறங்காட்டி லிவன்பிறந்த வாறும்
தன்னிகரில் வாணிகனிற் றுன்வளர்ந்த வாறும்
கைந்நிகரில் வேந்தர்தொழப் போந்ததுவுங் கண்டால்
என்னைதவஞ் செய்யா திகழ்ந்திருப்ப தென்பார்.

**(இ - ள்.)** இவன் இந்நகரப் புறங்காட்டிலே பிறந்தபடியும், **தன் குலத்திற்கு ஒத்தலில்லாத வாணிகனில்லிலே தான்வளர்ந்தபடியும், தம் ஒழுக்கத்திற்கு ஒப்பில்லாத அரசர்தொழப் போந்த தன்மையுங்கண்டால், நல்லறிவுடையோர் தவஞ்செய்யாதிருப்பது என்னையென்பாரென்க.**

பொன்னகரும் பாடம். **கண்டார்கூற்றுதலிற் [1] பிள்ளையார்குலத் திற்கு ஒவ்வாத வாணிகனென்றார்.**

2556. (கூ) பெருமுழங்கு திரைவரைக ணீந்திப்பிணி யுறினும்
திருமுயங்க லில்லையெனி னில்லைபொரு ளீட்டம்
ஒருமுழமுஞ் சேறலில ரேனும்பொரு ளூர்க்கே
வரும்வழிவி னுயுழந்து வாழ்கதவ மாதோ.

**பெருந்திரை - கடல். கடத்தற்கருமையின், வரையையும் நீந்தி யென்றார்.**

**(இ - ள்.) திரையையும் வரையையும் நீந்தி** வருந்தினும் **ஒருவர்க்கு நல்வினையின்றேற்** பொருளீட்டமில்லை; ஒரு முழ **நீளமும்** செல்லுதலில **ராயினும் அவர் நல்வினையுடையாராயின், பொருள் தானே வழிகேட்டு உழந்து அவரிருந்த ஊரிலே வரும்; ஆதலால் அதற்கு ஏதுவாகிய தவம் வாழ்வதாக வென்பாரென்க.**

**தந்தை முறையால் தேடிய பொருள் தானே வந்து இவனுக்கு எய்திற்றென்றார்.**

---

2555. புறங்காடு - சுடுகாடு. இவன் : சீவகன். **வாணிகன் இல் - சந்துக்கடனுடைய வீட்டில்.** தவம் செய்யாது இகழ்ந்திருப்பது என்னை என்பார்.

(உரை) [1] பிள்ளையார் - சீவகன்.

2556. முழங்குகின்ற பெரிய திரை - கடல். பிணியுறினும் - பொரு ளீட்டற்காக வருந்தினாலும். திரு முயங்கல் இல்லையெனின் - அவரை நல்வினை பொருந்துதல் இல்லையானால். பொருளீட்டம் இல்லை. பொருள் வழி வினய் உழந்து ஊர்க்கே வரும்; "ஆக்க மதர்வினுய்ச் செல்லும்... உழை" (குறள், 594). தவம் வாழ்க.

2557. (சு) நஞ்சுகுடித் தாலுநவை யின்றுதவ நின்றால்
அஞ்சியொளித் தாலுமர ணில்லைதவ முலந்தாற்
குஞ்சரத்தின் கோட்டிடையு முய்வர்தவ மிக்கார்
அஞ்சலில ரென்றுமற னேகளைக ணென்பார்.

தன்னையாக்கிய சச்சந்தனைக் கொன்ற பின்னும் கட்டியங்காரன் அரசாண்டிருந்தமைகருதி, நஞ்சைக் குடித்தாலும் தவம் நின்றால் நவையின்றாமாயிருந்ததென்றார். தாமரைவியூகம் வகுத்து அதனுள்ளே நின்றும் அவன்பட்டமை கருதி, அஞ்சியொளித்தாலும் தவம் மாண்டால் அரணில்லையாயிருந்ததென்றார். இவையிரண்டானும் கட்டியங்காரனிரு வினையையும் வியந்தார். கட்டியங்காரன் இவனைச் சிறைசெய்து யானைக்கு இடக்குறித்தமை கருதி, தவமிக்கார் கோட்டிடையினுமுட்பட உய்வாராயிருந்தாரென்றார். இதனால், சீவகனது நல்வினையை வியந்தார். ஆதலால், தவஞ்செய்தார்க்கும் சிறிது தீவினையால் இடர் வந்தவிடமெங்கும் களைகணுவது அறக்கடவுளேயாயிருத்தலின், அதனையுடையார் அஞ்சுதலிலராயிருந்தாரென்பாரென்க. களைகண், [1] 'முதுகண்' என்றாற் போலும் வழக்கு. முன்னிற்றீவினை தவஞ்செய்தார்க்கும் இடையே நுகரவேண்டும்.

(இ - ள்.) என்பார் ; என்பாராயினாரென்க. (கஎரு-அ0)

(வேறு)

2558. முரல்வாய சூற்சங்க முடமுட் டாழை முகைவிம்மும்
கரைவாய முத்தீன்று கானன் மேயுங் கடற்சேர்ப்பன்
உரைவாய நகர்பரவப் போகி யொண்பொ னெயில்சூழ்ந்த
விரைவாய பூம்பிண்டி வேந்தன் கோயிற் கெழுந்தானே.

வளைந்து நிலத்தே வீழ்ந்த தாழையின்முகை அலரும் கரையை இடத்தேயுடைய கானலிலே சங்கு முத்தையீன்று வருத்தமின்றித் தானே போய் மேயுமெனவே, தன்பிள்ளைக்குச் செவிலியாய் அம்முகை வளர்க்கு

2557. நஞ்சு - விடம். தவம் நின்றால் நவையின்று. தவம் உலந்தால் அஞ்சி ஒளித்தாலும் அரணில்லை. தவமிக்கார் உய்வர். குஞ்சரத்தின் கோட்டிடையும் உய்வரென்றது, சீவகன் குணமாலையைப் பிழைப்பித்தற்காக அசனிவேகத்தின் கோட்டிடையில் நின்று பொருதமையைக் குறித்தது. அறனைக் களைகணகவுடையார் அஞ்சலிலர்.

(உரை) [1] முதுகண் - பாதுகாப்பாக இருக்கும் முதியவர் ; "முற்றிழை மகளிர்க்கு முதுக ணுமென" (பெருங். 1. 36 : 198); இச் சொல் சிலாசாஸனங்களிலும் காணப்படுகிறது.

2558. முரல்வாய - ஒலிக்கின்ற வாயையுடைய. முடமுள் தாழை முகை - வளைந்த முள்ளையுடைய தாழையின் மொட்டு. விம்மும் - அலருகின்ற. கானல் - கடற்கரைச்சோலையில். சேர்ப்பன் : சீவகன். நகர் தன்னைப்பரவ. பொன் எயில் - பொன்மதில். பிண்டிவேந்தன் கோயிற்கு- அருகதேவனது கோயிற்கு.

மென்று கருதிற்றென்பதும் ஒன்று தோன்றியவாறு காண்க; [1] சங்கு தாழையின் முகைக்கு உவமையாதலின். உரையிடத்தனவாகிய நகர்; "நிலநாவிற்றிரிதரூஉம்" (கலித். 35) என்றாற்போல. தெய்வத்தன்மையால் விரையை மாறாமல் இடத்தேயுடையவாகிய பிண்டி.

(இ - ள்.) சேர்ப்பன், நகரை வலமாகப் போய்ப் பின்பு வேந்தன் கோயிலுக்குப் போயினானென்க. (கஅக)

2559. அருகு மயிலகவ வன்ன மேங்கக் குயில்கூவக், குருகு பொறையுயிர்க்குங் கொடுமுட் டாழை வெண்டோட்டு, முருகு பொறையுயிர்க்கு மொய்பூங் காவிற் படைநீக்கித், திருகு கனை கழலான் செம்பொற் கோயில் சேர்ந்தானே.

அருகே நின்று அகவ ஏங்கக் கூவக் குருகினம் ஈனும் காவெனவே, அக்குருகின் வருத்தத்திற்கு அவையும் வருந்தினவென்பது தோன்றிற்று. தாழை தோட்டிற்சுமந்திருந்த தேனாகிய பாரத்தைச் சொரியும் கா.

(இ - ள்.) கழலான், காவிலே படையை நிறுத்திக் கோயிலைச் சேர்ந்தானென்க. (கஅஉ)

2560. திறந்த மணிக்கதவந் திசைக ளெல்லா மணந்தேக்கி
மறைந்த வகிற்புகையான் மன்னர் மன்னன் வலஞ்செய்து
பிறந்தே னினிப்பிறவேன் பிறவா தாயைப் பெற்றேனென்
றிறைஞ்சி முடிதுளக்கி யேத்திக் கையாற் றொழுதானே.

அரசன் வருங்காலத்துப் பிறர் புகுதாமற் கதவடைத்து அவனுக்குத் திறத்தல் இயல்பு. அகிற்புகையால் மணம் தேக்குதலாலே திசைகளெல்லாம் மறைந்தன.

(இ - ள்.) அங்ஙனஞ்சேர்ந்தபொழுது கதவுகள் திறந்தன; திசைகள் மறைந்தன; அவ்வளவிலே மன்னன் வலஞ்செய்து, பிறவாத நின்னைப் பெற்றேனாதலின், இதற்கு முன்பிறந்த யான் இனிப் பிறவேனே யென்று முடிதுளக்கி இறைஞ்சி ஏத்தாநின்று தொழுதானென்க.

'ஏத்தி' என்பது நிகழ்காலமுணர்த்திற்று. (கஅங)

---

(உரை) [1] சூளா. நாட்டுச். 14, மந்திர. 17.

2559. ஏங்க - ஒலிக்க. குருகு - நாரை. பொறையுயிர்க்கும் - ஈனுகின்ற. வெள்ளிய தோட்டினின்றும். முருகுபொறை யுயிர்க்கும் - தேனை ஈனுகின்ற. படை - சேனை. கழலான்: சீவகன்; எழுவாய்.

2560. கதவம் திறந்தன. அகிற்புகையால் மணம்தேக்கித் திசைகளெல்லாம் மறைந்தன. மன்னன் - சீவகன். பிறவாதாயை - பிறவாத உன்னை; என்றது அருகனை. மு: மேரு. மன்னனுந். 67; சூளா. இரத. 61.

(வேறு)

2561. திருமறு மார்பினை திலகமுக் குடையினை
அருமறை தாங்கிய வந்தணர் தாதையை
அருமறை தாங்கிய வந்தணர் தாதைநின்
எரிபுரை மரைமல ரிணையடி தொழுதும்.

(இ - ள்.) மார்பினையுடையை; குடையினையுடையை; ஆதி வேதத்தை முற்றக்கற்ற அந்தணர்க்குத் தாதையாந் தன்மையை யுடையை; நீ அங்ஙனமாதலின், நின்னடியைத் தொழுகின்றேமென்று னென்க.

உளப்பாடு, ஒழிந்த மக்களையுங்கருதிற்று; "உம்மொடு வரூஉங் கடதற" (தொல். வினை. 5). ஈண்டு நிகழ்காலமுணர்த்துதல் கால மயக்கு. எரிபுரையுமடியென்றார், பிறவியைச்சுடுதலின்; மலர்மேலேற்று தலுமாம். (கஅச)

2562. உலகுணர் கடவுளை யுருகெழு திறலினை
நிலவிரி கதிரணி நிகரறு நெறியினை
நிலவிரி கதிரணி நிகரறு நெறியைநின்
அலர்கெழு மரைமல ரடியிணை தொழுதும்.

(இ - ள்.) கடவுட்டன்மையையுடையை; அநந்தவீரியத்தை யுடையை; சுக்கிலத்தியானத்தையுடையை; நீ அங்ஙனமாதலின், நின்னடியைத் தொழுது மென்றுனென்க.

நிலவின்கதிரையொத்த நெறி. அணி: உவமவுருபு. (கஅரு)

2563. மறுவற வுணர்ந்தனை மலமறு திகிரியை
பொறிவரம் பாகிய புண்ணிய முதல்வனை
பொறிவரம் பாகிய புண்ணிய முதல்வநின்
நறைவிரி மரைமலர் நகுமடி தொழுதும்.

---

2561. திருமறு மார்பினை - திருமகளாகிய மறுவையுடைய மார்பினை உடையாய். திலகம் - மேலாதல்; சீவக. 3001. அந்தணர்க்குத் தாதை யாகவுள்ளாய். எரிபுரை மரைமலர்: சீவக. 2741; மரை - தாமரை; முதற்குறை.

(மேற்.) அடி, 4: கல். 'திங்கண்முடி' 32, மயில்.

2562. கடவுளை - கடவுட்டன்மையையுடையாய். திறல் - வீரியம். கதிரணி - கதிரை ஒத்த. நெறி - சுக்கிலத்தியானமாகிய நெறி.

2563. மறு - குற்றம். மலத்தை அறுக்கின்ற திகிரியையுடையாய்; மலம் - குற்றம்; திகிரி - தருமசக்கரம். பொறி - இந்திரியங்கள். நறை - தேன். மலரை நகும் அடியைத் தொழுதும்; நகும் - இகழும்.

திகிரி - அறவாழி. இந்திரியங்கட்கு வரம்பாகிய முதல்வனென்றது, அவற்றிற்கு அவ்வருகு பட்டிருக்கின்ற முதல்வனென்றவாறு.

(இ - ள்.) உணர்ந்தாய்; திகிரியையுடையாய்; புண்ணியத்திற்குக் காரணமான தன்மையையுடையை; அத்தன்மையையுடையவனே! நின்னடியைத் தொழுதுமென்றானென்க.

இவைமூன்றும் தாழம் பட்ட ஓசையும் முடுகியலுமாய் ஒருபொருள் மேல் மூன்றடுக்கிக் கந்தருவமார்க்கத்தான் இடை மடக்கிய தேவபாணித் தாழிசைக் கொச்சகவொருபோகு. (கஅசு)

## (வேறு)

2564. நந்தா விளக்குப் புறமாகென நான்கு கோடி
நொந்தார்க் கடந்தான் கொடுத்தான்பின்னை நூறு மூதூர்
கந்தார் கடாத்த களிறுங்கொடித் தேர்க ளூறும்
செந்தா மரைமே னடந்தானடி சேர்த்தி னானே.

(இ - ள்.) நொந்தார்க்கடந்தோன், இறைவற்கு விளக்குப்புறமாக வென்று நூறூரையும், பூசனைக்கு நான்குகோடி பொன்னையும் கொடுத்தான்; கொடுத்தபின்னரும் சேவித்தற்கு, நூறுகளிற்றையும், நூறுதேரையும் அவனுக்குச் சேர்த்தினானென்க. (கஅஎ)

2565. வாடாத மாலை மணிமாலைபொன் மாலை முத்த
நீடார மாலை நிழன்மாண்ட பவழ மாலை
மாடார்ந் திழியு மருவிம்மலர் பொற்ப வேற்றிக்
கூடார்க் கடந்தான் வலங்கொண்டிடஞ் சென்று புக்கான்.

நீடு ஆரம் - சந்தனம்; தாமம் பாடமாயின், ஒழுங்காம். மாடு - பக்கம்.

(இ - ள்.) கூடார்க்கடந்தான், வாடாதமாலைகளிற்றுழும் மணிமாலை முதலியவற்றையும் மலரையும் திருவடிமேலேற்றி வலஞ்செய்துபோய்த் தன் கோயிலிடத்தே புக்கானென்க. (கஅஅ)

---

2564. நந்தாவிளக்கு - அவியாவிளக்கு; சீவக. 3144. விளக்குப் புறம் - விளக்கெறிப்பதற்காக அளித்த கொடை. கடந்தோன் : சீவகன். தாமரைமேல் நடந்தானடி - அருகன் பாதத்திற்கு.

2565. முத்தமாலை. நிழல் மாண்ட - ஒளி மாட்சிமைப்பட்ட. மாடு ஆர்ந்து - மலையின் பக்கத்தே பொருந்தி. பொற்ப - அழகுபட. கூடார்க் கடந்தான் - பகைவரை வென்ற சீவகன். இடம் - தன் அரண்மனையில்.

(வேறு)

2566. உலமரு நெஞ்சி னொட்டா மன்னவ ரூர்ந்த யானை
வலமருப் பீர்ந்து செய்த மணிகிளர் கட்டிலேறி
நிலமகள் கணவன் வேந்தர் குழாத்திடை நிவந்தி ருந்தான்
புலமகள் புகழப் பொய்தீர் பூமகட் புணர்ந்து மாதோ.

(இ - ள்.) நிலமகள் கணவன், நாமகள் புகழத் திருமகளைப் புணர்ந்து வேந்தர் திரளிலே சிங்காசனத்தில் ஏறியிருந்தானென்க.
'நிவந்து' என்றார், அரசரில் தான் மேலாயிருத்தலின். (கஅகூ)

2567. எத்துணைத் தவஞ்செய் தான்கொ லென்றெழுந் துலக மேத்த, வித்திய புகழி னற்கு விருந்தர சியற்றி நாடும், ஒத்தன னல்கித் தன்னை யுழந்தனள் வளர்த்த தாய்க்குச், சித்திரத் தேவிப் பட்டந் திருமக னல்கி னானே.

(இ - ள்.) திருமகன், இவன் எவ்வளவு தவஞ்செய்தானென்று உலக மேத்தும்படி கந்துக்கடனுக்கு இதற்கு முன்பில்லாத அரசுரிமையை வலியக் கொடுத்து நாட்டையும் நல்கித் தன்னை வருந்தி வளர்த்த சுநந்தைக்கு நன்றாகிய தேவியென்னும் பட்டத்தையும் நல்கினானென்க.
"அந்த ணாளர்க் கரசுவரை வின்றே" (தொல். மரபு. 82) என்பத னால், அந்தணரொழிந்த இருவர்க்கும் முடியுடை வேந்தராதற் றன்மை இன்மையின், ஈண்டு அரசளித்தது குறுநில மன்னர்க்குரிய அரசாயிற்று. (ககூ0)

2568. இனக்களி யானை மன்ன ரிளவுடை யானென் றேத்தத்
தனக்கிளை யானை நாட்டித் தான்றனக் கென்று கூறிச்
சினக்களி யானை மன்னர் மகளிரைச் சேர்த்தி நம்பன்
மனக்கினி துறைக வென்று வளங்கெழு நாடு மீந்தான்.

---

2566. உலமரு நெஞ்சின் - அலமருகின்ற மனத்தையுடைய. யானையின் மருப்பை யீர்ந்து; ஈர்ந்து - அறுத்து. கணவன் - சீவகன். நிவந்து - உயர்ந்து. புலமகள் - நாமகள்; புலம் - அறிவு. பூமகள் - திருமகளை.

2567. எத்துணைத் தவம் செய்தான்கொல் என்று உலகம் ஏத்த; "இவன் தந்தை......என்னுஞ் சொல்" (குறள், 70). புகழினற்கு: கந்துக்கடனுக்கு. விருந்தரசு - புதிய அரசுரிமையை. ஒத்தனவற்றை நல்கி. தன்னை உழந்தனளாய் வளர்த்த தாய்க்கு; சுநந்தைக்கு. சித்திரம் - நன்மை. தேவிப் பட்டம்: சூளா. மந்திர. 73, அரசியற். 417. திருமகன் - சீவகன்; எழுவாய்.

2568. மன்னர் - சிற்றரசர். இளவுடையான் - இளவரசன். தனக்கு இளையானை யென்றது நந்தட்டனை. நாட்டி: இளவரசாக்கி. தான் -

(இ - ள்.) நம்பன், நந்தட்டனை மன்னரெல்லாம் இளவுடையானென் றேத்தும்படி இளவரசாக்கி, அவன்றான், இரத்தலறியாதவன், எனக்கு நீங்கள் இக்காரியத்தைச் செய்தல்வேண்டுமென்று இரந்துகொண்டு கூறிக் குறுநிலமன்னர் மகளிரை நபுலற்கும் விபுலற்கும் மணஞ்சேர்த்தி, இனி நீங்கள் மனத்திற்கு இனிதாக உறைவீரென்று கூறி அவர்க்கு நாடுகளையும் கொடுத்தாரென்க.

நபுலனை, "காமம்போற் காளை மீண்டான்" (சீவக. 2259) என்றும், விபுலனை, "உணராதவ னின்றான்" (சீவக. 2265) என்றும் அவர் படாமை கூறுதலின், அவருக்கு இந்த வரிசை கொடுத்தானென்று கூறுதல் தேவருக்குக் கருத்தாம். அது மன்னர் மகளிரையென்ற பன்மையானுமுணர்க. அன்றி, விபுலன் பட்டானென்று கூறுவார் நம்ப னென்றது நபுலனையாக்கி அவனுக்கு மகளிரைச் சேர்த்தி யென்ப. (கககக)

2569. ஆழ்கடல் வையத் தில்லா வருநிதி யரசு நல்ல
சூழ்மணி யாழி செம்பொற் சூட்டொடு கண்ணி காதற்
றோழர்கட் கருளித் தொல்லை யுழந்தவர் தம்மைத் தோன்ற
வாழ்கென நிதியு நாடு மன்னவன் கொடுப்பித் தானே.

(இ - ள்.) மன்னவன், காதற்றோழர்கட்கு உலகில் வேறு சிலர்க் கில்லாத பழைய அரசையும் ஏறுதிமோதிரத்தையும் செம்பொன்னாற் செய்த பட்டத்தையும் கண்ணியையும் நிதியையுமருளி, அவர்களை யொழியத் தனக்கு உழந்தவர்களைத் தோன்ற வாழ்கவென்று கூறி அமைச்சரைக்கொண்டு நிதியையும் நாட்டையும் கொடுப்பித்தானென்க. (கககஉ)

2570. வளர்த்தகைத் தாயர் தம்மை வருகென வருளித் தங்கள், கிளைக்கெலாஞ் சிறப்புச் செய்து கேட்டவர் மருள வைந் தூர், விளைத்துள கெடாத வைக லாயிர மிறுப்புத் தண்டக், கொளக்கொடுத் தயாவு யிர்த்தான் கொற்றவ னென்ப வன்றே.

---

சீவகன். தனக்கென்று கூறி - தனக்கு இக்காரியத்தைச் செய்ய வேண்டுமென்று சிற்றரசரிடம் இரந்துகூறி. மன்னர் - சிற்றரசருடைய. சேர்த்தி - நபுலவிபுலற்கு மணம் புணர்த்தி. நம்பன் - சீவகன்; எழுவாய். மனத்திற்கு இனிதாக.

2569. ஆழி - ஏறுதிமோதிரம்; சீவக. 2167, அடிக். சூட்டு - பட்டம். கண்ணி - முடிமாலையையும். தோழர்கட்கு - பதுமுகன் முதலிய நண்பர்களுக்கு. தொல்லை உழந்தவர் தம்மை - முதலில் தனக்காகத் துன்பமுற்றவர்களை. மன்னவன் - சீவகன்; எழுவாய்.

2570. கைத்தாயர் - செவிலித்தாயர். தங்கள் கிளைக்கெலாம் - அவர்களுடைய உறவினர்க்கெல்லாம். உளவிளைத்து, வைகல் ஆயிரம் இறுப்புத் தண்டக்கெடாத ஊர் ஐந்தைக் கொளக்கொடுத்து; உள

(இ - ள்.) கொற்றவன், தன்னை வளர்த்த செவிலித்தாயரை வருக வென்று அழைத்து அவர்கள் சுற்றத்திற்குச் சிறப்புச்செய்து அவர்கள் தாங்கள் கொள்ளும்படி உலகில் விளைதற்குள்ளனவற்றையெல்லாம் விளைவித்து நாள்தோறும் ஆயிரம் பொன்னிறுப்புத்தண்டக் கெடாத ஊர்கள் ஐந்தைக் கேட்டவர் மருளக் கொடுத்து இளைப்பாறினானென்க. (கககூ)

2571. கைத்தல மந்தி கொண்ட கைம்மகப் போன்று தங்கட்,
பத்திமை விடாது மேனாட் படைக்கல நவின்ற பொற்றேர்,
மைத்துன மன்னர்க் கெல்லாம் வளநிதி மணிசெய் மான்றேர்,
தத்துநீர் மிசைச்சென் மாவுந் தவழ்மதக் களிறு மீந்தான்.

(இ - ள்.) மந்தியைக் கையாலே தழுவிக்கொண்ட ஒழுக்கத்தை யுடைய மகப்போலே தன்கட் புத்தியை விடாதே நவின்ற மன்னர்க்கு நிதிமுதலியவற்றை யீந்தானென்க.

உம்மை விரிக்க. "மகவும் பிள்ளையும் பறழும் பார்ப்பும், அவையு மன்ன வப்பா லான" (தொல். மரபு. 14) என்றார். (ககூச)

2572. கோமகன் கோல மான்றேர்க் கோவிந்த னென்னுங்
கொய்தார், மாமற்கு மடங்க லாற்றற் கட்டியங் கார னென்ற,
தீமக னுடைய வெல்லாந் தேர்ந்தனன் கொடுத்துச் செல்வன்,
ஓவலில் கறவை யொத்தா னுலோகபா லற்கு மாதோ.

(இ - ள்.) சீவகன், கோவிந்தனென்னுமாமற்குக் கட்டியங்கார னுடைய பொருள்களெல்லாவற்றையும் ஆராய்ந்து கொடுத்துச் செல்வ னாகிய உலோகபாலனுக்குச் சுரபியை யொத்தானென்க. (ககூரு)

2573. பேரிடர் தன்க ணீக்கிப் பெரும்புணை யாய தோழற்
கோரிடஞ் செய்து பொன்னா லவனுரு வியற்றி யூரும்
பாரிடம் பரவ நாட்டி யவனது சரிதை யெல்லாம்
தாருடை மார்பன் கூத்துத் தான்செய்து நடாயி னானே.

---

விளைத்து - உலகில் உள்ளனவற்றை யெல்லாம் விளைவித்து. (பி - ம்.) 'ஆயிரமீடுகண்ட'. அயாவுயிர்த்தான் - இளைப்பாறினான்.

2571. கைம்மகப்போன்று - ஒழுக்கத்தையுடைய இளைய குரங்கைப் போல. பத்திமை - பத்தி. மைத்துன மன்னர்க்கெல்லாம் - உலோக பாலன், விசயன் முதலாயினார்க்கெல்லாம். அடி, 1-2 : "மரனிவர் குரங்கின் மகக்கோட் போல, நிலைமையொடு திரிதரு நீதிய னாகி" (பெருங். 1. 36 : 53-4)

2572. கோமகன் - சீவகன். மாமற்கு - மாமனுக்கு. தேர்ந்தனன் - ஆராய்ந்து. செல்வனாகிய உலோகபாலனுக்குக் கறவை ஒத்தான். ஓவலில் கறவை - இடைவிடாது பொழிகின்ற சுரபி.

2573. தன்கண் பேரிடரைநீக்கி. புணை - தெப்பம். தோழற்கு - சுதஞ்சணனுக்கு. பாரிடம்பரவ - பூமியிலுள்ளவர் புகழும்படி. தாருடை மார்பன் - சீவகன்; எழுவாய். கூத்து - நாடகம். நடாயினான் - நடத்தினான்.

(இ - ள்.) தாருடைய மார்பன், தன்கண்இடரை நீக்கித் தெப்பமாகிய சுதஞ்சணனுக்கு ஒரு கோயிலைச்செய்து அவன் வடிவைப் பொன்னாலியற்றி ஒரூரையும் நிலைபெறுத்தி அவன் சரிதத்தைத் தான் ஒரு நாடகமாகச் செய்து நடத்தினானென்க. (கககூ)

2574. ஊன்விளை யாடும் வைவே லுறுவலி சிந்தித் தேற்பத்
தான்விளை யாடி மேனா ளிருந்ததோர் தகைநல் லாலைத்
தேன்விளை யாடு மாலை யணிந்துபொற் பீடஞ் சேர்த்தி
ஆன்விளை யாடு மைந்தா ரதன்புற மாக்கி னானே.

(இ - ள்.) உறுவலி, இனிப்பெறுதார் யாரென்று சிந்தித்து, மேனாள் தான் விளையாடியிருந்த ஆலத்திற்கு இதற்குச் செய்யும் உபகாரம் இதுவென்று அதற்கேற்ப மாலையையணிந்து பீடத்தைச் சேர்த்தி ஐந்தூரை அதற்கு இறையிலியாக்கினானென்க.

அதனிழலிலே பசுக்கள் கிடத்தல் அதற்கு அறமாகுமென்றும், அவற்றின்பால் அதற்குச் சொரிதல் தகுமென்றுங் கருதி, 'ஆன்விளையாடு மைந்தார்' என்றார். (கககூஎ)

(வேறு)

2575. கொட்ட மேகம ழுங்குளிர் தாமரை
மொட்டின் வீங்கிய வெம்முலை மொய்குழல்
அட்டுந் தேனழி யும்மது மாலையார்
பட்ட மெண்மரும் பார்தொழ வெய்தினார்.

இன் : பொரு. தேனினமொய்க்குங் குழல். அழியும் மதுவைச் சொரியும் மாலை.

(இ - ள்.) முலையினையும் கொட்டமே கமழுங் குழலினையுமுடைய மாலையாரெண்மரும் பார்தொழும்படி பட்டமெய்தினாரென்க. (கககூஅ)

---

2574. ஊன் - மாமிசம். உறுவலி - மிக்கவலியுடைய சீவகன்; எழுவாய். மேனாள் தான் விளையாடியிருந்த ஆலை; ஆல் - ஆலமரம். ஆன் - பசுக்கள். சீவகன் இளமையில் தான் விளையாடிக்கொண்டிருந்த ஓர் ஆலமரத்திற்குச் செய்யும் உபகாரமாக அதற்கு ஏற்ப மாலையை யணிவித்தானென்பது முதலிய செய்திகள், துன்பக் காலத்தில் தன்னை ஏற்றிக்கொண்டு வந்து இளைப்பால் இடைவழியில் இறந்துபோன பெண் யானை ஒன்றற்கு உதயணன் மாடஞ் சமைப்பித்தான் என்பது முதலிய செய்தியை ஒத்துள்ளன ; பெருங். 4. 3 : 10 - 46.

2575. கொட்டமே கமழுங் குழல்; "கொட்டமே கமழுங் குழலாள்", "கொட்டமே கமழும் கொள்ளம்பூதூர்" (தே. திருஞா. கோயில். 2, கொள்ளம். 1). தாமரை மொட்டைப் போல வீங்கிய; வீங்கிய - பெருத்த. அழியும் மதுவை அட்டும் மாலையார் ; அட்டும் - சொரிகின்ற. எண்மரும் பட்டத்தை எய்தினார் ; எண்மர் - காந்தருவதத்தை முதலிய மனைவியரெண்மர்.

2576. பஞ்சிசூ ழல்குற் பல்வளை வீங்குதோள்
வஞ்சி நுண்ணிடை வம்பணி வெம்முலை
விஞ்சை யன்மகள் சீறடி வீழ்ந்தனர்
அஞ்சி லோதிய ரும்பவிழ் கோதையார்.

(இ - ள்.) அங்ஙனம் பட்டமணிந்த பின்பு குணமாலைமுதலிய எழு வரும் அல்குன்முதலியவற்றையுடைய தத்தையை வணங்கினரென்க. (கக௯)

2577. வீடி லைந்தரைக் கோடி விருத்திமேல்
நாடி யாயிர நாடொறு நங்கைமார்க்
காடு சாந்தடி சிற்புற மாக்கினன்
கோடு வாலொளிக் குங்குமக் குன்றனன்.

கோடு வால் ஒளி - நுடங்குகிற அழகிய ஒளி.

(இ - ள்.) குன்றனன், நங்கைமார்க்கு ஐந்தரைக்கோடிபொன் விடுத லில்லாத நாடுகளைச் சீவிதமாகவிட்டு, அதன்மேலே அவர்க்கு அண்ணி தாக வேண்டுமென்று நாடிச் சாந்துக்கும் அடிசிலுக்கும் நாடோறும் ஆயிரம்பொன்னுக்கு இறையிலியாக்கினனென்க. (உ௦௦)

2578. ஆனை மும்மத மாடிய காடெலாம்
மானை நோக்கியர் வாய்மது வாடின
வேனன் மல்கிவெண் டேர்சென்ற வெந்நிலம்
பானன் மல்கிவெண் பாலன்னம் பாய்ந்தவே.

---

2576. பஞ்சி - துகில்; ஆகுபெயர். வம்பு - கச்சு. விஞ்சையன் மகள் : காந்தருவதத்தையினுடைய. அம் சில் ஓதி - அழகிய சிலவாகிய கூந்தல். கோதையார் - குணமாலை முதலிய எழுவர்.

2577. வீடு இல் - விடுதலில்லாத. விருத்தி - சீவிதம்; சீவிப்பதற் காக விட்ட நிலம்; சீவக. 1374, அடிக். சாந்துக்கும் அடிசிற்கும் நாடொறும் ஆயிரம் புறமாக்கினன். புறம் - இறையிலிநிலம். (பி - ம்.) 'கோடுவாளொளி'. குன்றனன் : சீவகன்.

2578. ஆடிய - திரிந்த. மானை; ஐ : அசை யெனலுமாம். மது - கள். வேனல் - வேனிற்காலம்; "வேனலானையுரித்து" (தே. திருநா. கடவூர். 3); "இளவேனல் வந்ததால்", "வேனற்பாணிக் கலந்தாள்" (சிலப். 8, இறுதி வெண்பாக்கள்); "இளவேனல் வந்த தெதிர்" (நள. சுயம். 21). வெண்டேர் - வெள்ளிய பேய்த்தேர். வெந்நிலம் - பாலைநிலம். பானல் - குவளை. பால்போலும் அன்னப்பறவை. இப்பாடலில் சீவகன் காடு கெடுத்து நாடாக்கியதைக் கூறினர்.

**மான் நைகின்ற நோக்கியர்.**

**(இ - ள்.) இவன் திருத்துதலின், ஆனைதிரிந்த காடுகளெல்லாம், கணவரோடு கூடிய மகளிர் கொப்புளித்த மதுவையாடின ;'பேய்த்தேர் பரந்த நிலமெல்லாம் பானல் பூத்துப் பால்போலும் அன்னம் பரந்தன வென்க.**

**"புறவே, ஒள்ளிழை மகளிரொடு மள்ளர் மேன" (பதிற். 13) என்றார் பிறரும். (உ0க)**

2579. மாரி மல்கிவ ளங்கெழு மண்மகள்
வாரி மல்கிவ ரம்பில ளாயினுள்
ஆரி யாவடி சிற்றளியா னெய்வார்ந்
தேரி யாயின வெங்கணு மென்பவே.

**(இ - ள்.) இவன்செய்கின்ற அறத்தின் மிகுதியாலே, திங்கண்மும் மாரி பெய்து உலகம் விளைவுமிக்குத் தன் எல்லையைக்கடந்தது ; அதன் மேலாக மடைப்பள்ளியினின்றும் நெய்யொழுகுதலாலே எவ்விடமும் ஏரி யாயினவென்க.**

**எனவே பசுக்கள் மிகப் பால்பொழிந்தனவென்றார். (உ0உ)**

2580. ஏக வெண்குடை யின்னிழற் றண்ணளி
மாக மாய்க்கட லெல்லை நிழற்றலாற்
போக பூமியும் பொன்கிளர் பூமியும்
நாகர் நாகமு நாணி யொழித்தவே.

**(இ - ள்.) இன்னிழற்குடை மாகத்திலே தீண்டித் தண்ணளியாலே உலகை நிழற்றலால், இதற்கு உத்தரகுருவும், பொன்னுலகும், நாக ருடைய நாகலோகமும் நாணித் தம்பெருமையைக் கைவிட்டனவென்க. (உ0ங)**

2581. வண்டு மேய்ந்து வரிமுரல் பூஞ்சிகைக்
கெண்டை வென்றகண் ணார்களுங் கேள்வரும்
உண்டு மூத்திடை யூறிலர் சேறலாற்
பண்டை யூழியிற் பார்மலி வுற்றதே.

---

**2579. மாரி - மழை. மண்மகள் - பூமி. வாரிமல்கி - விளைவுமிக்கு. ஆரியா - அதற்கு மேலாக. அடிசிற்றளி - மடைப்பள்ளியினின்றும்.**

**2580. தண்ணளியால் நிழற்றலால். போகபூமி - உத்தரகுரு. பொன்கிளர்பூமி - சுவர்க்கம். நாகருடைய நாகம் : பவணலோகம். ஒழித்த - தம் பெருமையைக் கைவிட்டன. உத்தரகுருவும் பவணலோக மும் இன்பத்திற் சிறந்தவை யென்பர்.**

**2581. வரிமுரல் - பாட்டை ஒலிக்கின்ற. கெண்டை - கெண்டை மீனை. கேள்வர் - கணவர். உண்டு - இன்பம் நுகர்ந்து. மூத்து - மூப்**

(இ - ள்.) மகளிரும் மைந்தரும் நுகர்ந்து முறையே முதிர்ந்து மக்கட்கு விதித்த ஆயுளில் இடையூறின்றிச் சேறலாலே, பார் பண்டையூழி போலே மலிவுற்றதென்க.

வரி - பாட்டு. பண்டையூழி - [1] கிருதயுகம். (௨0௪)

(வேறு)

2582. செருநாடு செஞ்சுடர்வேற் றிருகு செம்பொற் கனைகழற்கால், திருநாடு தேம்பைந்தார்ச் செல்வன் செவ்வி பெறு தொழிந்து, பெருநாட் டருங்கலங்கள் சுமந்து பேரு மிடம் பெறுஅ, தொருநாட் டரசுணங்க வுரவோன் கொற்ற முயர்ந்ததே.

(இ - ள்.) செருவை நாடும் வேலினையும், காலினையும், திருமகளுடும் தாரினையுமுடைய செல்வனது சமயத்தைப் பெருமையினுலே காட்சியொழிந்து வேற்றுநாட்டிற் கலங்களைச்சுமந்து அசையுமிடம் பெறுதே ஒரு நிலையிலேநின்று அரசுணங்கும்படி அவன்வெற்றியுயர்ந்த தென்க.

நாட்டு - நிலை ; இனி, ஒருநாட்டுக்கு வேண்டும் அரசனென்றுமாம். (௨0௫)

(வேறு)

2583. வலையவர் முன்றிற் பொங்கி வாளென வாளை பாயச், சிலையவர் குரம்பை யங்கண் மானினஞ் சென்று சேப்ப, நிலை திரிந் தூழி நீங்கி யுத்தர குருவு மாகிக், கொலைகடிந் திவற லின்றிக் கோத்தொழி னடாத்து மன்றே.

(இ - ள்.) அவன், முன்றிலிலே வாளை பாயக் குரம்பையிலே மானினம் தங்கக் கொலைகடிந்து மக்கட்குப் பேராசையுமின்றாக நடாத்து மென்க.

---

புற்று. இடையூறிலராய்ச் சேறலால். பண்டையூழி - முதலூழியாகிய கிருதயுகம். மலிவுற்றது - சிறப்புற்றது.

(உரை) [1](பி - ம்.) 'திரேதாயுகம்'

2582. செருநாடு' வேல் - போரை விரும்புகின்ற வேல். திருநாடும் தார் - திருமகள் விரும்புகின்ற மாலை. வேலையும் காலையும் தாரையுமுடைய செல்வன் : சீவகன். செல்வனுடைய செவ்வியைப் பெறுது; செவ்வி - சமயம். பெறுது - பெருமையால். பேரும் இடம் பெறுஅது - பெயர்தற்கு உரிய இடம் பெறுமல். ஒருநாட்டு - ஒரே நிலையில். உணங்க - வருந்த. உரவோன் கொற்றம் - சீவகனுடைய வெற்றி. கொற்றமென்பதற்கு அரசவுரிமையென்றும் பொருளுண்டு ; சீவக. 204, அடிக்.

2583. வலையவர் முன்றில் - வலைஞருடைய முற்றத்திலே. வாளென வாளைபாய ; சீவக. 1180 ; "வாளை வாளிற் பிறழ" (நற். 390) ; "வாளை பிறழுங்கயங்கடுப்ப......ஆடினர்" (பு - வெ. 147); "வாளெனவாளைகள்

இவ்வூழியிலே உலகம் தன்னிலைதிரிந்து நீங்கி உத்தரகுருவுமாக வெனத் திரித்து, நடாத்துமென்பதனோடு முடிக்க. (உ०௬)

(வேறு)

2584. கதங்கனல் யானை நெற்றிக் கட்டிய பட்ட மேபோல், மதங்கமழ் கோதை யல்குன் மணிக்கிடந் திமைத்துக் காமப், பதம்பல பார்க்குஞ் சாயற் பாவைமற் றநங்க மாலை, விதம்படக் கருதி மாதர் விளைத்தது விளம்ப லுற்றேன்.

யானையினெற்றியிற் பட்டம்போலே அல்குலிலே மணிகிடந்திமைக்கப்பட்டுக் காமத்தையுண்டாக்கும் செவ்வி பலவற்றையும் நோக்கும் பாவை. மதம் - தேன். கோதையையும் சாயலையுமுடைய பாவை. இமைப்பவும் : பாடம். பாவையென்றது தேசிகப்பாவையை. மற்று : வினைமாற்று.

(இ - ள்.) அவள், அநங்கமாலை கூற்றிலே தான்படவே இவற்குக் காதல் விளையுமென்றுகருதிக் காதலை விளைத்தமை கூறலுற்றேனென்றானென்க.

என்பது, பதுமையாருடன்கூட அழைத்துக்கோடல் முறைமையன்மையிற் பின்பு அழைக்கக் கருதியிருந்த தேசிகப்பாவை, சீவகன் தன்னிடத்து அன்பின்மையின், தன்னை மறந்தானாகக்கருதித் தானே வந்தவள், சீவகன் கருத்தறியாதே அவன் அநங்கமாலையை உட்கொண்டிருப்பானாகக் கருதி அவள் தோழி ஓலைகொண்டு வந்தாளாக நடித்ததொரு செய்தியைக் கூறுகின்றாரென்றவாறு; "தானுடை முல்லையெல்லாந் தாதுகப் பறித்திட் டானே" (சீவக. 686) எனவே கட்டியங்காரன் புணர்ந்தமை பெற்றாம். அதனால், சீவகன் அவளைப் புணர்ந்தானாக மேற்கூறுதல் தேவர்க்குக் கருத்தன்றென்பதுணர்க. (உ०௭)

---

பாய" (கம்ப. பம்பை. 22). சிலையவர் - வேடருடைய. குரம்பையங்கண்- சிறுகுடிசையிடத்து. சேப்ப - தங்க. ஊழிநிலைதிரிந்து நீங்கி. இவறலின்றி - பேராசையில்லாமல். அடி. 1-4; "வலைஞர் முன்றின் மீன் பிறழவும்......கொலை கடிந்துங் களவு நீக்கியும்" (பட்டினப். 197-9). உத்தரகுருவுமாகிக் கோத்தொழில் நடாத்தும் : "உத்தரகுருவினொப்பத் தோன்றிய" (சிலப். 2 : 10); "உத்தர குருவி னொளியொத் தன்றால், வித்தக வீரன் விறற்படை வீடு" (பெருங். 1. 57 : 116-7)

2584. கதம் - கோபம். கோதை - கூந்தல்; பூமாலையெனலுமாம். மணி - மணி; 'மனவு என்னும் செய்யுட்சொல் விகாரமாயிற்று' (சீவக. 2781, ந;) "மனவே.ரல்குன் மடந்தை" (பொருளியல்). காமப்பதம் - காமத்தை யுண்டாக்கும் செவ்வி. பாவை : தேசிகப்பாவை; இவள் பதுமையின் தோழி; சீவகனாற் காதலிக்கப்பட்டவள். கருதி - சீவகனுக்குக் காதலுண்டாகுமென்றெண்ணி. மாதர் : தேசிகப்பாவை.

(வேறு)

2585. ஈர்ந்தண்கோதையிளையார் குழாத்திடையாளெங்கோனடி சேர்வலென், ருர்ந்தசெந்தாமரை முகத்தினாளடிகள் வந்தீங்ககன் கடையுளாள், சார்ந்தசாயற்றட மாமுலைத்தையல் வல்லேவரு கென்றான், சேர்ந்துமன்னர் முடிவைர விற்றிளைக்குஞ் செம்பொற் செறிகழலினான்.

மன்னர் முடிசேர்தலாலே வைரத்தினொளி திளைக்கும் அடியினான்.

(இ - ள்.) அடிகளே! தாமரைமுகத்தினாளாகிய கோதை சேடியர் திரளிடத்தாளாய்வந்து எம்மரசனைக் காண்பேனென்று தலைவாயிலிலே வந்து நின்றாளென்று வாயிலோனிசைப்ப, அவனும் அவள் விரைய வருவாளாக என்றானென்க.

நாமழைப்பதற்கு முன்னே தேசிகப்பாவை வந்தாளென்றுணர்த லின் 'வல்லே வருக' என்றான். அன்றி அநங்கமாலையை வல்லே வருக வென்றானயின், இனி, அவள் எக்காலத்து வருவாளென்று அவள்வரவை விரும்பியிருந்தானும்; ஆகவே அவளைத் தீண்டி [1] ஒப்பித்தலின், தனக்கு நிகழ்ந்தவேட்கையைக் கட்டியங்காரற்கஞ்சிக் கரந்திருந்து அவன் அவளை வலிதிற் கொண்டு போதற்கும் பொறுத்திருந்தானும்; ஆயின், அவன் வீரத்திற்குக் குற்றந் தங்கு மென்றுணர்க. (௨௦அ)

2586. அருவிலைநன் கலஞ்செய்போர்வையன்ன நாணவடி யொதுங்கிச்சென், றுருவமொவ்வாதொசியு நுசுப்பொல்கிக் கோமானடி தொழுதபின், மருவின்சாயன் மணிமெல்விரல் கூப்பி யோலை மரபினீட்ட, இரவியென்னவிளங்குமொளியிறைவன் கொண்டாங்கதுநோக்குமே.

நல்ல கலத்தைப் புறத்தே காட்டும் போர்வை. ஒசியும் - முறியும்.

2585. தாமரைமுகத்தினாளாகிய கோதை: தேசிகப்பாவை. இளை யார் குழாத்திடையாள் வந்து - தோழியர் கூட்டத்தினளாய் வந்து. கடை - வாயில். கடையுளாள் என்று வாயிலோன் இசைப்ப. தையல்: தேசிகப்பாவை. மன்னர் முடி சேர்ந்து. கழலினான்: சீவகன்.

(உரை) [1] ஒப்பித்தல் - அலங்கரித்தல்.

2586. அரிய விலையையுடைய போர்வை, நன்கலம் செய் போர்வை என்க; கலம் - ஆபரணம். போர்வையுடன் உருவம் ஒவ்வாது நாண ஒதுங்கிச் சென்று; உருவம் ஒவ்வாது - தன்பழைய வடிவம் கட்புலனா காதபடி. கோமான் - சீவகனுடைய. சாயல்: தேசிகப்பாவை. இரவி - சூரியன். இறைவன் - சீவகன். கொண்டு - அவ்வோலையைக் கொண்டு.

(இ - ள்.) சாயல், போர்வையுடனே தன் பழையவுருவமொவ்வாத படி அன்னம்நாண நடந்துசென்று நுசுப்பு வளையும்படி வளைந்து கோமானடியை வணங்கினபின்பு விரலைக்கூப்பி முறைமையாலே ஓலையை நீட்ட, அதனை வாங்கிக்கொண்டு வாசிக்கும் இறைவனென்க.

இது பெயரெச்சம். (உ0௬)

2587. (௧) அடிகள்கண்டாங்குவந்தருளுகவநங்கமாலையடி வீழ்ச்சிமுன், கொடியவேலான்கொதித்தரங்கினீக்கிக்கோயிற் சிறைவைத்தபின், கடிசெய்பைந்தார்க்கமழ்மாலைவேற்கந்துகற் குச்சிறுவயானிப், படியனல்காய்பசுமணிகள்வேய்ந்தோங்கும் பைம்பொற்செறிகழலினய்.

இதுமுதல், "அறனிழலாய்" (சீவக. 2590) என்னுங் கவியளவும் ஓலைப் பாசுரம்.

மாலை, வேலிற்கடை. அனலைக்காயுமணியும், பசுமணியும் வேய்ந்து.

2588. (உ) என்னநாளுமரற்றப்பொருள்விடுப்பப்போகியின மழைகண்மொய்த், தன்னந்துஞ்சுமடிக்குடிலினுள்ளன்றியான் கொண்டநாடகத்தினைத், துன்னிநம்பியுருவுதீட்டித்தொங்கல் வேய்ந்துதொழுதாற்றநீ, மன்னர்மன்னமதிதோய்குடையாய்மக ளிர்காமமறைத்தொழிதியோ.

(உ) துன்னி - துன்ன. தொழுதாற்ற - தொழுதுசெல்ல. மகளிரிடத்திற் காமத்திற் புலப்படாதே யொளித்து அதனைத் தவிர்கின்றாயோ.

2589. (௩) கண்கடுஞ்சாகதிர்முத்தமேகாலுங்கையார்வளைகழலுமாற், பண்கொள்சொல்லார்மாமைநீங்கிப்பைம்பொன்போர்த் தபடாமுலைகளும், மண்கொள்வேன்மன்னர்நண்பின்மையைவை யக்கெல்லாமுடனறையவோ, பெண்களாவிவிடுத்தொழிபவோ பெரியோர்நண்படைந்தார்பெயர்பவோ.

2587. அடிகள் : சீவகன்; விளி. அடிவீழ்ச்சி - வணக்கம். அடி, 1-2 : "மற்றடிகள் கண்டருளிச் செய்கமல ரடிக்கீழ்ச், சிற்றடிச்சி தத்தையடி வீழ்ச்சி" (சீவக. 1873). வேலான் : கட்டியங்காரன். கொதித்து - கோபித்து. கோயில் - தன் அரண்மனையில். கந்துகற்குச் சிறுவ என்றது சீவகனை ; விளி. யான் இப்படி, கழலினய், என்பதன்பின், என்ன நாளுமரற்ற (சீவக. 2588) என்பதை இயைத்துக்கொள்க.

2588. பொருளை விடுப்ப. அடிக்குடில் - அடிச்சேரி. துன்னி = துன்ன - பொருந்தியிருந்தாளாக. நம்பி - சீவகனுடைய. தொங்கல் - மாலை. ஆற்ற - செல்ல. ஒழிதியோ - தவிர்கின்றாயோ.

2589. துஞ்சாவாய் முத்தமே காலும்; துஞ்சுதல் - உறங்குதல். முத்தம் - நீர்த்துளி. மாமை - பொன்னிறம். முலைகள் பொன்போர்த்த;

(௩) மன்னர்க்கு நட்பின்மையை உலகுக்கெல்லாம் சாற்றவோ. மகளிராவி அவரைக் கைவிட்டுப்போக அமையுமோ. பெரியார் நட்பை யடைந்தார் விட்டுநீங்க அமையுமோ.

2590. (௪) அறனிழலாயுலகளிக்குநின்னுரைமாலையணிவெண்
குடைப், புறனிழலினயலேனேயான்புல்லாமன்னர்நிணம்பொழி
யும்வேன், மறனிழன்மதயானையாய்வந்தவென்றோழிவாமலேகை,
திறனழியாமையின்னேவிடுத்தருளுகதேர்வேந்தர்வேந்தனே.

(௪) அறனிழலாய் - அறத்தின் நிழலையுடையாய். புறன் - இடம். மறனிழல் - மறத்தினது ஒளி.

(இ - ள்.) ஓலையை வாங்கிக்கொண்டு வாசிக்குமிறைவன், அடிகள் அநங்க மாலைவணக்கத்தை ஆங்குக் கண்டு உவந்தருளுகவென்ற அவள் வணக்கத்தை நோக்கி, பின்பு கட்டியங்காரன் கோபித்து அரங்கினின்று நீக்கிச் சிறை வைத்தபின்பு, சிறுவனே! கழலினையென்று யான் இப்படி நாளும் அரற்றப் பொருளுய் அவன் போகவிடப்போய் அடிச்சேரியிலே இருந்ததன்றி யான் ஆடின நாடகத்தினைத் தான் 'பார்த்திருக்கின் ருளைகத் தன்னுருவென்ன வெழுதி வேய்ந்து, மன்னனே! குடையாய்; நீ ஒழிதியோ? 'பெயர்பவோ? அறையவோ? ஒழிபவோவென்றுகூறி அவ்வுருவைத்தொழுது யான் செல்லா நிற்கவும், என்கண்கள் துஞ்சா வாய் நீரையேகாலும்; வளை கழலாநிற்கும்; முலைகளும் பசந்தன; இங் ஙனம் வருந்துதற்கு யான் நின்குடையிடத்து நிழலின்நீங்கிய அயலிடத் தேனே; அல்லேனாதலின், யானையாய்! வேந்தனே! வந்த என்தோழி யாகிய வாமலேகை வருந்தாமற் கூறி இன்னே விடுத்தருளுவாயாக வென்று வாசித்தானென்க.

இவன், அநங்கமாலையை உட்கொண்டிருப்பாளுகக்கருதி இவற்கு அவளெழுதின ஓலைகொண்டு வந்தாளொருதோழியாகத் தேசிகப்பாவை நடித்தாள். இதனால், தன்வேட்கையை அறிவித்தாளாயிற்று. (உ௯௦-௯௩)

பொன்போர்த்த - பசலைகொண்டன. மன்னரது நண்பின்மையை. வையக்கு - உலகத்திற்கு. அறையவோ - கூறவோ.

2590. அறனிழலா யென்றது சீவகனை; விளி. யான் நின் வெண் குடையின் நிழலின் அயலேனோ. புல்லாமன்னர் - பகையரசரது. நிழல் மறல் - தன்னிழலைக் கோபிக்கின்ற. திறனழியாமை - வருந்தாமல். மறு மொழி விடுத்தருளுக.

2591. புள்ளும்யாழுங்குழலுமேங்கப்புனைந்துவல்லானினைந்தி யற்றிய, பள்ளிச்செம்பொற்படையமளிமேன்மழலைமணியாழ்தான் வௌவிக், கொள்ளுந்தீஞ்சொலலங்காரப்பூங்கொடியைப் புல்லி மணிக்குவட்டினை, எள்ளிவீங்கித் திரண்டதோண்மேற் குழைவில் வீச விருந்தானே.

புள் - வளை; "புட்கை போகிய புன்றலை மகார்" (மலைபடு. 253) என்றார். பள்ளி - இடம். யாழ் கருதும் மழலைத் தீஞ்சொல்லையுடைய கொடி.

(இ - ள்.) அங்ஙனம் வாசித்தவன், தேசிகப்பாவை நடித்தநிலைக்கு மகிழ்ந்து அவள்கையில் வளையும் யாழும் குழலுமேங்கப் பாட்டைக் கேட்டு அலங்காரத்தையுடைய வல்லியையொப்பாளைத் தன்றோள்மேற் புல்லி, வல்லான் நினைந்து கைசெய்தியற்றியவிடத்தில் அமளிமேலே வீச இருந்தானென்க.

தாளத்தை ஒற்றுதலின், வளையொலிப்பவென்றார். (உகச)

2592. அங்கைசேப்பக்குருகிரங்கவலங்கலம்பூங்குழறுயல்வர, மங்கைநல்லார்பவழவம்மியரைத்தசாந்தமலர்பெய்மாலை, பொங்குதூமக்கொழுமென்புகைபுரிந்தபஞ்சமுகவாசமும், தங்குதாம மார்பினுற்குந்தையலாட்குங்கொண்டேந்தினரே.

(இ - ள்.) மங்கை அங்கைசேப்ப வளையிரங்கத் துயல்வர அரைத்த சாந்த முதலியவற்றைச் சீவகற்கும் தேசிகப்பாவைக்கும் நல்லாரேந்தினரென்க.

கொண்டு - இவர்கள் கூட்டத்தையுட்கொண்டு. தூமம் - [1] தூம முட்டி; ஆகுபெயர். (உகரு)

2593. அருளுமாறென்னையநங்கமாலையடித்திதோழியன்றே வெனத், தெருளலான்செல்வக்களிமயக்கினுற்றிசைக்குமென்ன றிவளக்கியகருதி, மருளிற்சொன்னாய்மறப்பேனோயானின்னை யென்னமகிழ்ைங்கணை, உருளுமுத்தார்முகிழ்முலையினுளுள்ளத் துவகைதோற்றினளே.

---

2591. குழல் - வேய்ங்குழல். ஏங்க - ஒலிக்க. வல்லான் - வல்ல வன். மழலையாழ் : சீவக. 2480, அடிக். பூங்கொடி : தேசிகப்பாவை. மணிக்குவட்டினை எள்ளி - மாணிக்கமலையை இகழ்ந்து.

2592. குருகு இரங்க - வளைஒலிப்ப. குழல் துயல்வர - கூந்தல் அசைய. நல்லார் : தோழியர். மார்பினுற்கும் : சீவகனுக்கும். தைய லாட்கும் : தேசிகப் பாவைக்கும்.

(உரை) [1] (பி - ம்.) 'தூமமூட்டி'

2593. யான், அநங்கமாலையாகிய அடித்தியுடைய தோழியன்றே. (பி - ம்.) 'அடிச்சிதோழி'. என-என்று தேசிகமாலை கூற. நாற்றிசைக்கும்

(இ - ள்.) நீ என்னை அருளுதற்குக் காரணமென்னை? யான் அநங்க மாலையாகிய அடித்தியுடைய தோழியன்றோவென்று அசதியாடிக் கூறினாளாக, அவனும் அதற்கு மறுமொழிகூறுகின்றவன், நாற்றிசைக்கும் என் னறிவை அளந்துகாட்டவேண்டி இவன் செல்வத்தாற்பிறந்த களிமயக் காலே என்னைத் தெளியானென்று கருதி நின்பேதைமையானே இங்ங னங்கூறினாய் ; இந்நடிப்புவேண்டா; யான் நின்னை மறப்பேனோவென்ன, அவள் உள்ளத்தே உவகைதோற்றினாளென்க.

மயக்கின் ; இன் : ஏதுப்பொருட்டு. அறிவை அளந்துகாட்ட வெனவே குறிப்பான் அறிவின்மையையே ஈண்டுக் காட்டிற்று. இனி, 'ஆற்றிசைக்கும்' என்று பாடமோதி, மயக்கினால் தெருளலானென்று கருதி, நன்னெறியிலே இசைக்குமென்னறிவை அளக்கியவென்றுமாம். 'திகைக்கும்' என்று பாடமாயின், மயக்கினால் திகைக்கும் தெருளலா னென்க. யான் நின்னை மறப்பேனோவெனவே தேசிகப்பாவையேயா யிற்று. காமனைங்கணையைத் தன்னிடத்தேயுடைய தேசிகப்பாவை யெனவே வேட்கையைத் தான் நிகழ்த்துவாளாயிற்று. தோற்றினா ளெனச் சினைவினை முதலொடுமுடிந்தது. (உகசு)

2594. முறுவற்றிங்கண்முகவரங்கின்மேன்முரிந்துநீண்டபுரு வக்கைக, ணெறியின்வட்டித்துநீண்டவுண்கண்சென்றும்வந்தும் பிறழ்ந்துமாடப், பொறிகொள்பூஞ்சிலம்புமேகலைகளும்புணர்ந்த வின்னியங்களார்ப்பவேந்த, னறியுநாடகங்கண்டான்பைந்தார லர்ந்துமாதர்நலங்குழைந்ததே.

(இ - ள்.) வேந்தன், சிலம்பும் மேகலையுங்கூடிய இன்னியமார்ப்ப முறுவலையுடையதொரு திங்கள்போலும் முகமாகிய அரங்கிலே புருவமா கிய கைகளைச்சுழற்றிக் கண்களாடத் தான் முன்பு அவளிடத்துக்கண்ட நாடகத்தினை மீட்டும் கண்டான் ; அப்பொழுது அவணலம் அவசமாய் நெகிழ்ந்ததென்க.

நெறியின் - அப்புணர்ச்சிக்காலத்து நிகழுமுறையானே. சென்று - செவியுறச்சென்று. அவன்தொழிலாற் சிலம்பும், அவள்தொழிலான் மேக லையுமார்ப்ப. அறியுநாடகமெனவே முன்பு புணர்ந்த தேசிகப்பாவை யென்பது பெற்றும். (உகஎ)

---

என் அறிவு அளக்கிய கருதிச் செல்வக்களி மயக்கினால் தெருளலான் என்று மருளிற் சொன்னாய் ; அளக்கிய - அளத்தற்கு. தெருளலான் - தெளி யான். மருளின் - பேதைமையாலே. என்ன - என்று சீவகன்கூற. முலை யினாள் : தேசிகப்பாவை.

2594. முறுவலையுடையதொரு திங்கள்போலும் முகமாகிய அரங் கில். புருவமாகிய கைகளை வட்டித்து ; வட்டித்து - சுழற்றி. சிலம்பும் மேகலைகளுமாகிய இன்னியங்களார்ப்ப. வேந்தன் : சீவகன். மாதர் : தேசிகப்பாவை. குழைந்தது - நெகிழ்ந்தது.

2595. நான்மருப்பின்மதயானை நறியபைந்தாமரைமடந்தை யைத், தேன்மதர்ப்பத்திளைத்தாங்கவன் றிருவின்சாயனலங்க வர்ந்தபின், ஊன்மதர்த்தவொளிவேற்கண்ணார்பரவவிவ்வாறொழு குமன்றே, வானகத்துநிலத்துமில்லாவண்ணமிக்கமணிப்பூணி னான்.

நான்மருப்பின் மதயானையென்பது, யானையிரண்டினையுணர்த் திற்று. திரு - அழகு. தம்மைநோக்கினாருடம்பு மதர்த்தற்குக் காரண மான கண். வானிலும் நிலத்திலுமில்லாதவனென்றார், பிறன் தாரம் நச் சாத குணமுண்மையின்.

(இ - ள்.) பூணினான், இரண்டானை பக்கத்தேநின்று நீரைச்சொரிய நடுவே தாமரைப்பூவிலேயிருந்த திருமகளைத்திளைத்தாற்போல அத்தேசி கப்பாவை நலத்தை நுகர்ந்தபின்பு, மகளிர்பரவப் பின்பும் அவன் இங் ஙனம் ஒழுகாநிற்குமென்க.

"வரிநுத லெழில்வேழம் பூநீர்மேற் சொரிதரப், புரிநெகிழ் தாமரை மலரங்கண் வீறெய்தித், திருநயந் திருந்தன்ன" (கலித். 44) என்றார்பிற ரும். இனி, [1] ஐராவதத்தின்மேலே பொய்கையாயதில் தாமரையிலே யிருக்கும் திருவென்பாருமுளர். (உ௬அ)

---

2595. நால் மருப்பின் - நான்கு தந்தங்களையுடைய. யானையிரண் டைப் பக்கத்தேயுடையதாமரை மடந்தையை; சீவக. 2485, அடிக். திளைத்தாங்கு - இடைவிடாது பயின்றாற்போல. அவன் : சீவகன். சாயல் நலம் - தேசிகப்பாவையினுடைய இன்பத்தை. கண்ணார் - மகளிர். பூணினான் : சீவகன்.

(உரை) [1] 'ஐராவதத்தின்மேல்' என்ற வாக்கியத்திற்குத் திக்கஜ பர்வதங்களுள் ஒன்றாகிய ஐராவதத்தின்மேலுள்ள பொய்கையில் மலர்ந்த தாமரைமலர்மேலுள்ள திருமகளென்றும், ஐராவதமென்ப தற்கு ஐராவத க்ஷேத்திரமென்றும் பொருள் கூறுவர் ; ஸ்ரீ புராணத்தில் 23-வது பார்சுவதீர்த்தங்கரர் புராணத்திலுள்ளதாகிய 'ஸ்வாமி பிறந்த வுடன் ஜன்மாபிஷேகத்திற்குக் கொண்டு போகுங்காலத்தில், ஜம்பூத் வீபப்பிரமாணமாகி, முப்பத்திரண்டு முகத்தையுடைத்தாகி, முகமொன் றுக்கு எட்டுக் கொம்பையுடைத்தாகி, கொம்பொன்றுக்கு ஒரு பொய்கை யாகி, பொய்கையொன்றுக்கு முப்பத்திரண்டு கமலபுஷ்பமுள்ளதாகி, புஷ்பமொன்றுக்கு முப்பத்திரண்டு இதழாகி, இதழொன்றுக்கு முப்பத்தி ரண்டு நர்த்தனஸ்திரீகளாகி, நிர்மிக்கப்பட்டதோரைராவதம்' என்னும் வாக்கியமும், "பொலம்பூங் காவும் புனல்யாற்றுப் பரப்பும், இலங்குநீர்த் துருத்தியு மிளமரக் காவும், அரங்கும் பள்ளியு மொருங்குடன் பரப்பி, ஒருநூற்று நாற்பதி யோசனை விரிந்த, பெருமால் களிற்று" (சிலப். 25 : 12-6) என்னும் பகுதியும் அதனரும்பதவுரையும் இங்கே அறியத் தக்கன.

(வேறு)

2596. நரம்புமீ திறத்தல் செல்லா நல்லிசை முழவும் யாழும்
இரங்குதீங் குழலு மேங்கக் கிண்கிணி சிலம்பொ டார்ப்பப்
பரந்தவா ணெடுங்கட் செவ்வாய்த் தேசிகப் பாவை கோல
அரங்கின்மே லாடல் காட்டி யரசனை மகிழ்வித் தாளே.

(இ - ள்.) அத்தேசிகப்பாவை, புணர்ச்சியாகிய நாடகமொழிய நரம்பினோசையைத் தப்பாத முழவுமுதலியன ஏங்கக் கிண்கிணியும் சிலம்பு மார்ப்ப அரங்கின்மேலே கூத்தைக்காட்டி அரசனை மகிழ்வித்தாளென்க.

"இடக்க ணிளியா வலக்கண் குரலா, நடப்பது தோலியற் கருவியாகும்" என்றார். (உகக)

2597. கடற்படை மன்னர் தம்மைக் காதலின் விடுத்துக் காமன்
தொடுத்தகோன் மார்பிற் றங்கத் தூமலர்க் கொம்ப ரனாளை
வடித்தவின் னமிர்தி ஞரப் பருகலின் மழைக்கட் செவ்வாய்
துடித்துவண் டுண்ணத் தூங்குஞ் செந்தளி ரொத்த
[தன்றே.

விடுத்து - விடுக்க.

(இ - ள்.) கூடவிருந்து நாடகங்கண்ட அரசரைக் காதலோடே போகவிட, காமனம்பு அவனெஞ்சிலே தங்குதலின், அத்தேசிகப் பாவையை அமிர்துபோலே பருக, அவள் செவ்வாய் துடித்து மழைக் கண் வண்டுண்ணத் தூங்குஞ் செந்தளிரை ஒத்ததென்க.

வண்டு அதரத்தில் வடுவிற்குவமை; இல்பொருளுவமை. [1] இசையும் கூத்தும் காமத்திற்குத் [2] தீபனமாகலிற் பின் புணர்ச்சிகூறினர். (உஉ0)

2596. நரம்புமீது இறத்தல் செல்லா - நரம்பின் ஓசையைத் தப்பாத. இரங்கு - ஒலிக்கின்ற; குழலுக்கு அடை. அரசனை : சீவகனை.

2597. காதலின் - அன்போடு. விடுத்து - அவர்களிருப்பிடத்திற்குப் போகவிடுத்து. கோல் - மலரம்பு. கொம்பனாளை : தேசிகப்பாவையை. அமிர்தின் - அமிர்தத்தைப்போல. ஆர - நிறைய. செவ்வாய் தளிரை ஒத்ததென்க.

(உரை) [1] இசை காமத்தை வளரச்செய்யும் என்பது; சீவக. 28, அடிக்; பாகவதம், 10. 12 : 6. [2] தீபனம் - வளரச்செய்யுங்கருவி.

2598. இளமையங் கழனிச் சாய லேருழு தெரிபொன் வேலி
வளமுயங் குருவ மென்றோள் வரம்புபோய் வனப்பு வித்திக்
கிளை நரம் பிசையுங் கூத்துங் கேழ்த்தெழுந் தீன்ற காம
விளைபய னினிதிற் றுய்த்து வீணைவேந் துறையு மாதோ.

[1] பொன் : ஆகுபெயர். போய் - போக.

(இ - ள்.) பூணுகிய வேலிசூழ்ந்த இளமையாகிய கழனியிலே வீணை வேந்து தன்சாயலாகிய ஏராலேயுழுது தன்வனப்பை வித்துகையினாலே, அஃது இசையும் கூத்துமாக நிறத்தெழுந்து பின்பு ஈன்ற காமமாகிய விளைவின் பயத்தை அவன்றான் இனிதின் நுகர்ந்து உறையாநிற்கு மென்க.

தோளாகிய வரம்பு சூழ்போகாநிற்க உழுதென்க. தனதுசாயலால் விளைந்த அழகைக்கண்ட அளவில் காமவேட்கை விளைவித்தற்குக் கூத்தையும் பாட்டையும் நடத்துதலிற் பிறந்தது, காமமென்க. (உஉக)

கஉ - **இலக்கணையாரிலம்பகம் முற்றிற்று.**

**ஆகக்கவி, உ௬௲அ.**

---

2598. இளமையாகிய கழனியில். சாயலாகிய ஏரால் உழுது. தோளாகிய வரம்பு. நரம்பாலாகிய இசை. கேழ்த்து - நிறத்து. காமமாகிய விளைவின் பயத்தை. துய்த்து - நுகர்ந்து. வீணைவேந்து : சீவகன் ; சீவக. 28, அடிக் ; 2335.

(உரை) [1] பொன்னாலாகிய ஆபரணத்திற்காயிற்று.

## பதின்மூன்றுவது

# முத்தியிலம்பகம்

### க – விசயமாதேவியார் துறவு

2599. நீரேந்தி நெய்ம்மிதந்து நிணம்வாய்ப் பில்கி யழல்விம்மிப்
போரேந்திப் பூவணிந்து புலவு நாறும் புகழ்வேலோன்
காரேந் திடிமுரச மார்ப்பக் காய்பொற் கலன்சிந்திப்
பாரேந்திச் செல்லுநாட் பட்ட தாநாம் பகர்வதே.

(இ - ள்.) நெய் மிதந்தே கிடக்கப்பட்டுக் கோபத்தீ நிறைந்து போர்த்தொழிலை மேற்கொண்டு நிணத்தை வாயினின்றும் சிறு துவலை யாகவிட்டு மண்ணுநீராடிப் பூவைக்கொண்டு வழிப்படப்பட்டுப் பின்னும் புலவுநாறுதற்குக் காரணமான வேலையுடையோன், காரேந்தின இடி போலும் தியாகமுரசு முழங்கப் பூண்களை வரையாமற்கொடுத்துப் பாரைக்காத்துச் செல்லுநாளிலே, பிறந்ததொரு செய்தி நாம் மேற்கூறு கின்றதென்றுரென்க.

"வென்ற வாளின் மண்ணோ டொன்ற" (தொல். புறத். 13) என்று உழிஞையிலும், "மாணார்ச் சுட்டிய வாண்மங் கலமும்" (தொல். புறத். 36) என்று பாடாண்டிணையிலும் கூறிய வாளினை வாகைத்திணையிற் கூறாது, "பெரும்பகை தாங்கும் வேலி னானும்" (தொல். புறத். 21) என்று வேலிற்கே வாகை கூறியது, காவற்றொழில்பூண்ட மாயோனும் படையும் போலாது அழித்தற்றொழிலோர்க்கேயுரித்தாய் முக்கட்கடவுளும் முருகனும் கூற்றுமேந்தி வெற்றிபெறுதற்குச் சிறந்ததென்பதுபற்றி யெனப் புறத்திணையியலுட் கூறினமையால், ஈண்டும் வேலினைவியந்து மண்ணுநீராட்டின வெற்றியைக் கண்டோர் புகழ்தலின், 'புகழ்வேல்' என்றார். இது கட்டியங்காரன் பட்டபின் பகையரசரை வென்றமை கூறிற்று. (க)

---

2599. அழல் விம்மி - கோபத்தீ நிறைந்து. புலவு - மாமிச நாற்றம். வேலோன் : சீவகன். அடி, 1-2 : "அரும்பவிழ்தார்க் கோதை யர செறிந்த வொள்வாள், பெரும்புலவுஞ் செஞ்சாந்து நாறிச் - சுரும்போடு, வண்டாடும் பக்கமு முண்டு முதுநரி, கொண்டாடும் பக்கமு முண்டு" (முத்.). கார் - மேகம். இடிபோலும் முரசம். முரசம் - கொடை முரசு ; மும்முரசத்துள் ஒன்று. கலன் - ஆபரணங்களை. கலன்சிந்தி யென்றது கொடுத்தலைச் சிறப்பித்தது. பட்டது - பிறந்த செய்தி.

2600. விண்பாற் சுடர்விலக்கி மேகம் போழ்ந்து விசும்பேந்தி
மண்பாற் றிலகமாய் வான்பூத் தாங்கு மணிமல்கிப்
பண்பால் வரிவண்டுந் தேனும் பாடும் பொழிற்பிண்டி
எண்பா லிகந்துயர்ந்தாற் கிசைந்த கோயி லியன்றதே.

(இ - ள்.) எட்டுக்கன்மங்களினீங்கி எட்டுக் குணங்களால் உயர்ந் தாற்குப் பொருந்தின கோயில், அரசனேவலாலே, மேகத்தைப்பிளந்து இருசுடரையும் விலக்கி வான் மீனைப்பூத்தாற்போல மணிகள் மல்குத லாலே விசும்பின்மேலாய் மண்ணிற் கோயில்கட்குத் திலகமாய்ப் பொழி லாகிய பிண்டிக்குள்ளே சமைந்ததென்க.

விசும்பு - தேவருலகு. வரி - பாட்டு. (உ)

2601. அடிசிற் கலங்கழீஇக் கருனை யார்ந்த விளவாளை
மடுவின் மதர்த்துணரா வாழைத் தண்டிற் பலதுஞ்சும்
நெடுநீர்க் கழனிசூழ் நியமஞ் சேர்த்தி விழவ யர்ந்து
வடிநீர் நெடுங்கண்ணார் கூத்தும் பாட்டும் வகுத்தாரே.

நியமம் : ஆகுபெயரால் ஊராயிற்று.

(இ - ள்.) மடுவின்கண்ணே அடிசிலாக்குங் கலங்களைக் கழுவுத லாலே பொரிக்கறியை நுகர்ந்த வாளைகள் செருக்கிக்கரையேற அறியா வாய் வாழைத் தண்டின்மேலே பலவுந்துயிலும் கழனிசூழ்ந்த ஊரை இறையிலியாக விட்டுத் திருநாளையுமியற்றிப் பரத்தையருடைய கூத்தை யும் பாட்டையுமுண்டாக்கினரென்க.

அரசனேவலின், அமைச்சர் இயற்றுவித்தார். (ங)

---

2600. சுடர் - சந்திரசூரியரை. விசும்பேந்தி - ஆகாயத்தின் மேலாய். மண்பால் - பூமியிடத்து. திலகமாய் - எல்லாவற்றிலும் மேன் மையுடையதாகி. வான்பூத்தாங்கு - விண்மீனைப் பூத்தாற்போல. மல்கி - நிறைதலால். வரியை வண்டும் தேனும் பாடுகின்ற; தேன் - வண்டி னுள் ஒருவகை. எண்பால் இகந்து - காதி முதலாகிய எட்டுக் கன்மங் களினின்றும் நீங்கி; எண்பால் உயர்ந்தாற்கு - எட்டுக் குணங்களாலும் உயர்ந்தாற்கு; என்றது அருகனை; "எண்குணன் பாதத்தில் பழம் பொருள்" (சிலப். 10 : 188). பிண்டியினிடத்து இயன்றது.

2601. மடுவில் அடிசிற்கலம் கழுவுதலால். கருனை - பொரிக் கறியை. வாளை - ஒருவகை மீன். உணரா - அறியாவாய். நியமம் - ஊரை. சேர்த்தி - அருகன் கோயிலுக்கு இறையிலியாகவிட்டு. விழவு - திருவிழா. கண்ணார் : பரத்தையர்.

2602. அல்லி யரும்பதமு மடகுங் காயுங் குளநெல்லும்
நல்ல கொழும்பழனுங் கிழங்குந் தந்து நவைதீர்த்தார்க்
கில்லையே கைம்மாறென் றின்ப மெல்லா மவர்க்கீந்தாள்
வில்லோன் பெருமாட்டி விளங்கு வேற்கண் விசையையே.

விசயை தானையுடன் தனித்துவாராமற் கூடப்போந்தமைபற்றி, 'நவைதீர்த்தார்' என்றார். கைம்மாறில்லையென்றது, அவர்கள் பொருள் கண்மேற் பற்றற்றவராதலின் அவர் செய்த உதவிக்குத் தன்னாற்செய்ய லாமுதவி இன்றென்று கருதி. தான் கோயில் சமைப்பித்துப் பூசனை செய்த பயனெல்லாம் அவர்க்கு நீர்பெய்து கொடுத்தாள்.

(இ - ள்.) சச்சந்தன் தேவியாகிய விசயை அல்லிமுதலிய உணவைத் தந்து நவைதீர்த்தார்க்குக் கைம்மாறில்லையென்று ஈந்தாளென்க. (ச)

2603. தனியே துயருழந்து தாழ்ந்து வீழ்ந்த சுடுகாட்டுள், இனியா ளிடர்நீக்கி யேமஞ் சேர்த்தி யுயக்கொண்ட, கனியார் மொழியாட்கு மயிற்குங் காமர் பதிநல்கி, முனியாது தான்காண மொய்கொண் மாடத் தெழுதுவித்தாள்.

(இ - ள்.) அருளுடைமையின் எல்லார்க்கும் இனியாளாகிய விசயை, தன்னிடரைத்தீர்த்துத் தாபதப்பள்ளியிலே சேர்த்துப் பிழைப்பித்துக் கொண்ட தெய்வத்திற்கும் அஃதுறையும் சுடுகாட்டிலே கோயிலியற்றி, மயிற்கும் எழுதுவித்தலைச் செய்தாளென்க.

விசயை தனித்து வருத்தமுறுகையினாலே, பையப்பைய வீழ்ந்த மயிற்கும் தானிருக்கின்ற மாடத்தே தான் எப்பொழுதும் காணும்படி எழுதுவித்தலைச் செய்தாளென்க. 'மயிற்கும்' என்னும் நான்காவது, அச்சிறப்பைக் கொடுத்தாளென்பதனோடு முடியும். உம்மையிரண்டும் சிறப்பு. (ரு)

2604. அண்ணல் பிறந்தாங் கைஞ்ஞூற் றைவர்க் களந்தான்பால்
வண்ணச் சுவையமுதம் வைக நாளுங் கோவிந்தன்
வெண்ணெ யுருக்கிநெய் வெள்ள மாகச் சொரிந்தூட்டப்
பண்ணிப் பரிவகன்றாள் பைந்தார் வேந்தற் பயந்தாளே.

---

2602. அல்லியரும்பதம் - அல்லியரிசியாலாக்கிய உணவு. அடகு - இலை. அடி, 1-2 : சீவக. 355. நவைதீர்த்தாரென்றது சீவகனுக்கு உதவிசெய்தவர்களை. கைம்மாறில்லையென்று. வில்லோன் பெருமாட்டியாகிய விசயை ; வில்லோன் : சச்சந்தன்.

2603. இனியாள் : விசயை ; எழுவாய். ஏமம்சேர்த்தி - பாதுகாப்பான தாபதப் பள்ளியில் சேர்ப்பித்து. மொழியாட்கும் - கூனிவடிவாக வந்த தெய்வத்துக்கும். மயிற்கும் - மயிற் பொறிக்கும்.

2604. அண்ணல் பிறந்த ஆங்கு - சீவகன் பிறந்த இடமாகிய சுடு காட்டில். ஆன்பால் அளந்து - பசுவின்பாலைப் பங்கிட்டளந்து. வண்

தோழர் ஐஞ்ஞூற்றுநால்வர்க்கும் சீவகனுக்குமாக ஐஞ்ஞூற்றைந்து பிள்ளைகளுக்குப் பாலளந்து. வண்ண அமுதம் - பருப்புச்சோறு. கோவிந்தன் - நந்தகோன்.

(இ - ள்.) விசயை, சீவகன் பிறந்த இடம் சுடுகாடாகக் கிடவாதபடி சாலையாக்கிக் கோவிந்தன் அதற்குரியனாய் நின்று நாடோறும் பிள்ளைப் பாலும் அளந்து நெய்யைச் சொரிந்து 'அமுதத்தையும் ஊட்டப்பண்ணி அவ்வறம் வைகுகையினாலே பரிவை அகன்றாளென்க.

பரிவு - இவ்விடத்துக் கூறியனவெல்லாம் செய்து முடிக்கவேண்டு மென்று நினைத்திருந்த வருத்தம். (சு)

2605. தோடார் புனைகோதை சுநந்தை சேர்ந்து தொழுதாளைப்
பீடார் பெருஞ்சிறுவற் பயந்தீர் வம்மி னெனப்புல்லி
நாடார் புகழாளை நாண மொழிகள் பலகூறிக்
கோடாக் குருகுலத்தை விளக்கிட் டாளை விளக்கினாள்.

புகழாள் - விசயை ; ஐ : அசை. விளக்கிட்டாள் - சுநந்தை. இது சுட்டுப் பெயராம்.

(இ - ள்.) விசயையைச்சேர்ந்து சுநந்தை கோதை கையாற்றொழு தாளை அவ்விசயை புல்லிக்கொண்டு பின்னும் அவளை, சிறுவற்பயந்தீர் ! அணித்தாகவம்மினென நாணமுடைய மொழிகள் பல கூறி விளக்கினா ளென்க.

உலகம் பெருமை நிறைதற்குக் காரணமான சிறுவனை மீட்டும் நீர் பயந்தீராதலின் என்னினும் நல்வினையுடையீரென்றலின், இது நாண மொழியாயிற்று. இவளே இவ்வுலகைப் பிழைப்பித்தாளென்றலின், விளக்கினாளுமாயிற்று. (எ)

2606. மறையொன் றுரைப்பனபோன் மலர்ந்து நீண்டு செவி வாய்வைத், துறைகின்ற வோடரிக்க ணுருவக் கொம்பி னெண் மரும், இறைவி யடிபணிய வெடுத்துப் புல்லி யுலகாளும், சிறுவர்ப் பயந்திறைவற் றெளிவீ ரென்று டிருவன்னாள்.

---

ணம் - வர்ணம். கோவிந்தன் - கோவிந்தக்கோன் ; கோவிந்தையின் தந்தை. ஊட்டப்பண்ணி : ஒரு சொல். வேந்தற்பயந்தாள் - சீவகனைப் பெற்ற விசயை ; எழுவாய்.

2605. சேர்ந்து - விசயையையடைந்து. கோதையும் சுநந்தையு மாகிய தொழுதவளைப் புகழாள், புல்லிச் சிறுவற்பயந்தீர், வம்மினென நாணமொழிகள் கூறி ; புகழாள் : விசயை. கோடா - மாறுபடாத. சீவ கன் குருகுலத்திற் பிறந்தவன் ; சீவக. 290, 805. விளக்கிட்டாளை - சுநந்தையை.

2606. மறை - இரகசியம். செவியில் வாயைவைத்து. எண்மர் - காந் தருவதத்தை முதலிய மனைவியரெண்மர். இறைவி - விசயையினுடைய.

(இ - ள்.) மலர்ந்து நீண்டு ஒருமறைமொழி கூறுவனபோலச் செவியிடத்தே வாய்வைத்து உறைகின்ற கண்ணினையுடைய எண்மரும் விசயையடியைக் கொம்பு பணிந்தாற்போலப் பணிய, அவள் அவரை யெடுத்துக்கொண்டு புல்லிச் சிறுவரைப் பயந்து தெளிமினென்றுளென்க.

எனவே இருமைக்கும் பயன்கூறினாளென்க. இறைவன் - சருவக் கியன். முன்பு திருவையொப்பாள். சிறுவரில் நால்வர் உலகாளுதற்கு உரியரன்றேனும் தம் குலத்தொழிற்கேற்ப உலகாளுதற்குரியரென்பது பற்றி, 'உலகாளுஞ் சிறுவர்' என்றாள்; "மெய்தெரி வகையி னெண்வகை யுணவின்" (தொல். மரபு. 78) எனவும், "கண்ணியுந் தாரு மெண்ணின ராண்டே" (தொல். மரபு. 79) எனவும் ஆசிரியர் கூறினமையின், தம்குலத்துக்குரிய உழுது பயன்கோடலும், அரசன்கொடுத்த சிறப்புக் களுமின்றித் தன் புதல்வராதலின், அரசாட்சி முதலியன கொடுப்ப அவர்தாமும் தம்வழித் தோன்றினோரும் ஆள்வரென்றுணர்க. [1] உலகென்னுஞ்சொல், மண்ணுலக முழுதுமேயன்றித் தன்கட்கூறுபட்ட நிலங்களையுமுணர்த்துமென்பது, "மாயோன் மேய காடுறை யுலகமும்" (தொல். அகத்திணை. 5) என்னுஞ் சூத்திரத்தானுணர்க. (அ)

2607. பொங்கு மணிமுடிமேற் பொலிந்தெண் கோதைத் தொகையாகிக், கங்குற் கனவகத்தே கண்ணுட் டோன்றி வந் தீர்நீர், எங்கும் பிரியற்பீ ரென்று கண்கண் மலர்ந்திருந்து, கொங்கு ணறும்பைந்தார்க் கோமா னிங்கே வருகென்றாள்.

(இ - ள்.) என்று கூறியவள், நீர் கங்குற்கனவிடத்தே முடிமேலே எட்டுப் பூமாலைத்திரளாய்ப் பொலிந்துதோன்றி வந்தீர்; இவ்வாறு வந்தநீர் மேலும் எவ்விடத்தும் என்னைப் பிரியற்பீராகவென்று கூறி உடம்பு முழுதுங்கண்ணாயிருந்து, பின்னர்ச் சீவகனை நோக்கி இவ்விடத்தே வருவாயாகவென்றாளென்க.

முன்னர், "இறைவற்றெளிவீர்" (சீவக. 2606) என்றும், ஈண்டு, 'பிரியற்பீர்' என்றுங் கூறினமையால், பின்னர் என்னிடத்தே வந்து துறப்பீராக என்றாளாயிற்று. (க)

சிறுவரைப் பயந்து; என்றது இம்மைப்பயனை. இறைவன் தெளிவீர் - கடவுளை அறிவீர்; என்றது மறுமைப்பயனை. திருவன்னாள் : விசயை.

(உரை) [1] பரி. 3 : 19-20, பரிமேல்.

2607. எண்கோதை - எட்டுப் பூமாலை. தோன்றி வந்தீர்நீர் என்றது காந்தருவதத்தை முதலிய எண்மரை. கனவகத்தே தோன்றியது; சீவக. 223. எங்கும் - எவ்விடத்தும். கோமான் : சீவகன்; விளி.

2608. சிங்க நடப்பதுபோற் சேர்ந்து பூத்தூய்ப் பலர்வாழ்த்தத்
தங்கா விருப்பிற்றம் பெருமான் பாத முடிதீட்டி
எங்கோ பணியென்று வஞ்சா நடுங்கா விருவிற்கட்
பொங்க விடுதவிசி லிருந்தான் போரே றனையானே.

(இ - ள்.) ஏறனையான்: அதுகேட்டுப் பலரேத்தச் சிங்கம் நடப்பது போல நடந்துசென்று முதற் பூவைத்தூவிப் பின்னர் விசயையடியிலே தன்முடியைத் தீண்டுவித்து இருத்தற்கஞ்சி மெய்ந்நடுங்கி எனக்கு ஒல்லும் பணிவிடை இனி எவ்விடத்தேயென்றுவினாய் இரண்டுவிற்கிடை நீளம் அகலவிட்ட தவிசின்மேலே இருந்தானென்க.

பெருமான் : னஃகானொற்று மகடூஉவுணர்த்திற்று. இவள்கூறிய அறமெல்லாம் தான்செய்து முடித்தலின், இன்னும் அவையுளவோ வென்பது தோன்ற, 'எங்கோபணி' என்றான். (கo)

(வேறு)

2609. கொற்றவி மகனை நோக்கிக் கூறின ளென்ப நுங்கோக்
குற்றதைப் பிறர்கள் கூற வுணர்ந்தனை யாயி னானும்
இற்றென வுரைப்பக் கேண்மோ விலங்குபூ ணலங்கன் மார்
செற்றவர்ச் செகுத்த வைவேற் சீவக சாமி யென்றாள். [பிற்

உணர்ந்தனை என்பவென மாறுக. ஆயினானுமென்புழி ஆன் : சாரியை.

(இ - ள்.) அங்ஙனமிருந்த மகனை நோக்கித் தேவி ஒருமொழி கூறினாள் ; அஃது யாதெனின், சீவகசாமி ! நுந்தந்தைக்குற்ற தீங்கைப் பிறர்கூற அறிந்தாயென்று சொல்லுவார்கள் ; ஆயினும் யான் இத்தன்மைத்தென்று கூறக்கேட்பாயாகவென்று கூறினாளென்க.

சாமியென்னுமொருமை நும்மென்னும் பன்மையோடு மயங்கிற்று. பூணினையும், மார்பினையும், கட்டியங்காரனையும், ஒழிந்தோரையும் வென்ற வேலினையுமுடைய சீவகசாமியென்க. (கக)

2608. பூத்தூய் - விசயை பாதத்தில் பூவைத்தூவி. தம்பெருமானென்றது விசயையை. பாதத்தில் தன் முடியைத் தீட்டி ; தீட்டி - தீண்டுவித்து ; "சென்றவர் திருந்தடி முடியிற் றீட்டினான்" (சூளா. இரத. 75). அடி, 1-2 : "இளஞ்சிங்க நடப்பதே போற்சென்றவன் பணிந்தெழுந்து" (மேரு. பூரண. 43). பணி எங்கோ என்று - யான் செய்யத்தக்க பணிவிடை எவ்விடத்தேயென்று வினாவி. இருவிற்கண் - இரண்டு விற்கிடையில். பொங்கவிடுதவிசில் - அகலவிட்ட ஆதனத்தில். ஏறனையான் : சீவகன்.

2609. கொற்றவி - விசயை. மகனை : சீவகனை. நுங்கோக்கு உற்றதைப் பிறர்கள் கூற உணர்ந்தனை யென்ப ; என்ப - என்று சொல்லுவார்கள். (பி - ம்.) 'உற்றது நாங்கள்கூற' (நன். 458, சிவஞா. மேற்.). செற்றவர் - பகைவரை.

2610. (க) நாகத்தால் விழுங்கப் பட்ட நகைமதிக் கடவுள் போலப், போகத்தால் விழுங்கப் பட்டுப் புறப்படான் புன்சொ ஞானன், ஆகத்தா னமைச்சர் நுண்ணூற் றேட்டியா லழுத்தி வெல்லும், பாகர்க்குந் தொடக்க நில்லாப் பகடுபோற் பொங்கி யிட்டான்.

2611. (உ) நுண்மதி போன்று தோன்று நுணுகிய நுசுப்பி னார்தம், கண்வலைப் பட்ட போழ்தே கடுநவை யரவோ டொக்கும், பெண்மையைப் பெண்மை யென்னார் பேருணர் வுடைய நீரார், அண்ணலைத் தெருட்ட றேற்று தமைச்சரு மகன்று விட்டார்.

2612. (ங) கற்சிறை யழித்து வெள்ளங் கடற்கவா யாங்குக் கற்றோர், சொற்சிறை யழித்து வேந்தன் றுணைமுலை துறத்தல் செல்லான், விற்சிறை கொண்ட போலும் புருவத்து விளங்கு வேற்கண், நற்சிறைப் பட்டு நாடு நகரமுங் காவல் விட்டான்.

2613. (ச) பிளிறுவார் முரசத் தானைப் பெருமகன் பிழைப்பு நாடிக், களிறுமென் றுமிழப் பட்ட கவழம்போற் றகர்ந்து நில்லா, தொளிறுவேற் சுற்ற மெல்லா முடைந்தபி னொருவ னானன், வெளிறுமுன் வித்திப் பின்னை வச்சிரம் விளைத்த லாமோ.

---

2610. நாகம் - இராகுவென்னும் பாம்பு. போகம் - மகளிரின்பம். புன்சொலிற்கு நானுதவனாய். நுண்ணூலாகிய தோட்டியால். பாகர் தொடக்கவும் நில்லாத பகடுபோல ; பகடு - யானை ; சீவக. 200, ந.

2611. நுண்மதி - நுட்பமான அறிவு. கண்ணாகிய வலையில். கடுநவையரவு - கடிய குற்றத்தையுடைய பாம்பு. அண்ணலை - சச்சந் தனை. தெருட்டல் தேற்றாது - தெளிவித்தலை யறியாது. அமைச்சர் - நிமித்திகன் முதலியோர்.

2612. வெள்ளம் கற்சிறையை யழித்துக் கடற்கு அவாயாங்கு ; “ வருபுனற் கற்சிறை கடுப்ப ” (மதுரைக். 725) ; “ வருவிசைப் புனலைக் கற்சிறைபோல ” (தொல். புறத். 8). அவாயாங்கு - விரும்பினாற்போல. கற்றோரது சொல்லாகிய சிறையை. வேந்தன் : சச்சந்தன். கண்ணாகிய சிறைப்பட்டு. காத்தலை விட்டான்.

2613. தானையையுடைய பெருமகனது பிழைப்பு நாடி ; பெருமகன்: சச்சந்தன். பிழைப்புநாடி - தப்பை ஆராய்ந்து. கவழம் - கவளம். தகர்ந்து - சிதறி. சுற்றம் - உறவினர். உடைந்தபின் - தோற்றபின்பு. வெளிறென்றது தீவினையையும் வச்சிரமென்றது நல்வினையையும் உணர்த்தியன. மு : மேரு. வச்சிராயுதன். 6.

2614. (ரு) வனைகலக் குயவ ஞணின் மன்னரை யறுத்து முற்றிக், கனைகுர லுருமி ஞர்ப்பக் காவல னின்னை வேண்டி, வினைமயிற் பொறியி னென்னைப் போக்கிவிண் விரும்பப் புக்கான், புனைமுடி வேந்த போவல் போற்றென மயங்கி வீழ்ந்தான்.

இவையைந்தும் ஒருதொடர்.

(இ - ள்.) அங்ஙனம் கூறுகின்றாள், பாம்பாலே தனது ஒளிமறைக் கப்பட்ட மதியைப்போலப் போகத்தாலே தனதொளி மறைக்கப்பட்டுப் புறப்படானாய்க் காமத்தாற் கெட்டானென்று பிறர்கூறும் புன்சொற்கு நாணுகை, அதுகண்டு அத்தீங்கைத் தம்மறிவாலே வெல்லும் அமைச்சர், இங்ஙனம் நுண்ணியநுசுப்பினார்தம் கண்வலைப்பட்ட பொழுதே அது பாம்புபோற் கொல்லுமென்று கருதி, அண்ணலைப் பேருணர்வுடைய நீரார் பெண்மையைப் பெண்மையென்னார் காணென்று கூறிப் பின்னும் நுண்ணூற்றேட்டியாலமுத்தித் தெருட்டிடுதலைத் தானுட்கொண்டு தன்னெஞ்சைத் தெளிவியாதே வேந்தன், துணைமுலையைத் துறத்தல் செய்யானாய் வில்லைச் சிறைசெய்து வைத்தாற்போலும் புருவத்திடத்தே விளங்கும் கண்ணாகிய தப்பாத சிறையிலே அகப்பட்டுத் தீவினையாலே கூரிய அறிவுபோன்றுதோன்றி நாட்டையும் நகரத்தையும் தான் காத்தலைக் கைவிட்டுக் கட்டியங்காரன் கையிலே கொடுத்துப் பாகர் தொடக்கவும் அவர்க்கு நில்லாத பகடுபோலே பொங்கியிட்டானாகை, அதுகண்ட அமைச்சரும் நீங்கிப்போயினார்; அவர்போக, அப்பெருமகன் வெள்ளம் கற்சிறையழித்துக் கடற்செல்ல அவாவியாங்குக் கற்றோர் சொற்சிறை யழித்துப் பிழைத்த பிழைப்பைச் சுற்றமெல்லாம் நோக்கி அரசனுழை நில்லாதே கவழும்போற் சிதறியுடைந்து போனபின் தானொருவனுமேயாயினான்; அதனைக் கட்டியங்காரனுணர்ந்து குயவன் நாண்போலே மன்னரைக் கீழறுத்து அவர் தன் சுற்றத்தாரானபின் வந்துசூழ்ந்து ஆர்ப்ப, அரசன் நின்னை யான் பெறவேண்டி என்னை மயிற்பொறியிற்போக்கித் தான் துறக்கம்புக்கான். அந்நிலை அவற்கு வந்தது, தீவினையைவித்திவைத்து அதற்குப் பின்னை நல்வினையாக விளைவிக்கலாகாமையிற்காண். வேந்தனே! நீயும் இத்தன்மைத்தாகிய காமத்தினைப் போற்றுவாயாக; இனி யான் துறத்தற்குப் போவலென்று கூற, அவனும் அதுகேட்டு மயங்கி வீழ்ந்தானென்க.

'வெளிறுவித்தி வச்சிரம் விளைத்தலாமோ' என்றது, 'ஆமணக்கு நட்டு ஆச்சாவாக்கலாகாது' என்னும் பழமொழி. (கஉ - கூ)

---

2614. குயவன் நாணைப்போல மன்னரை அறுத்து. காவலன்: சச்சந்தன். போவல் - யான் துறத்தற்குப் போவேன். போற்று - காப்பாற்றிக்கொள். என - என்று விசயை கூறியவுடன்.

2615. (க) சீதநீர் தெளித்துச் செம்பொற் றிருந்துசாந் தாற்றி தம்மான், மாதரார் பலரும் வீச வளர்ந்தெழு சிங்கம் போலப், போதொடு கலங்கள் சோர வெழுந்துபொன் னுரை மார்பன், யாதெனக் கடிகண் முன்னே யருளிய தென்னச் சொன்னாள்.

2616. (உ) பிறந்துநாம் பெற்ற வாணா ளித்துணை யென்ப தொன்றும், அறிந்திலம் வாழ்து மென்னு மவாவினு ளழுந்து கின்றாம், கறந்துகூற் றுண்ணு ஞான்று கண்புதைத் திரங்கி னல்லால், இறந்தநாள் யாவர் மீட்பா ரிற்றெனப் பெயர்க்க லாமோ.

2617. (ங) சுமைத்தயிர் வேய்ந்த சோற்றிற் றுய்த்தினி தாக நம்மை, அமைத்தநா ளென்னு நாகம் விழுங்கப்பட் டன்னதங் கண், இமைத்தகண் விழித்த லின்றி யிறந்துபா டெய்து கின்றாம், உமைத்துழிச் சொறியப் பெற்றா மூதியம் பெரிதும் பெற்றாம்.

2618. (ச) கடுவளி புடைக்கப் பட்ட கணமழைக் குழாத்தி னுமும், விடுவினை புடைக்கப் பாறி வீற்றுவீற் றாயி னல்லால், உடனுறை பழக்க மில்லை யொழிமதி யத்தை காதல், வடுவுடைத் தென்று பின்னு மாபெருந் தேவி சொன்னாள்.

இவை நான்கும் ஒருதொடர்.

---

2615. சீதம் - குளிர்ச்சி. போது - மலர். கலம் - ஆபரணம். மார்பன் : சீவகன். அடிகள் : விசயை; விளி. முன்னே - முன்பு. அருளியது யாது என்ன ; என்ன - என்று சீவகன் கேட்ப.

2616. வாணாள் - வாழும் நாட்கள். இத்துணை - இவ்வளவு. ஒன்றும் - சிறிதும். வாழ்தும் - நீண்ட நாட்கள் உயிருடனிருப்போம். அவா - ஆசை. கண் புதைத்து - கண்ணைப் பொத்தி. இற்றென - இத் தன்மைத்தென்று கூறி.

2617. சுமைத்தயிர் - கட்டித்தயிர். சோற்றின் - சோற்றைப்போல. நாள் என்னும் நாகம், சமைத்த தயிர்ச் சோற்றைப்போல் நம்மை இனிதாகத் துய்த்து விழுங்கப்பட்டு. உமைத்துழி - தினவுகின்ற இடத்தே. (பி - ம்.) 'உமைத்துழிச் செறியப்பெற்றாம்'. ஊதியம் - இலாபம்.

2618. வளியால் புடைக்கப்பட்ட மழைக்குழாத்தைப்போல் ; வளி - காற்று. விடுவினை - தீவினை. பாறி - சிதற அடிக்கப்பட்டு. வீற்றுவீற்றாயி னல்லால் - வேறு வேறாய்ப் போவதல்லது. வடுவுடைத்தாதலால், காதலை ஒழி என்று. தேவி : விசயை.

(ரு) ஈண்டு, 'உமைத்துழிச் சொறியப்பெற்றும்' என்பது, விழுங்கு தற்கு வாய்க்கொண்டகாலம் சிறிதுபொழுது விழுங்காதிருக்கவும் பெற்றே மாதலின், ஈண்டுத் தவஞ்செய்துகோடுமென வெழுந்த மனவெழுச்சிக் கண்ணே அதனை முற்றமுடித்துக் கொள்ளப்பெற்றேமென்றவாறும்.

(சு) என்று சொன்னாளென, "சீதநீர்" (சீவக. 2615) என்ற கவியோடு கூட்டுக. மதி, அத்தை இரண்டும் அசை.

(இ - ள்.) அங்ஙனம் வீழ்ந்த ஆரமார்பன், மாதரார் பலரும் பனி நீரைத் தெளித்துச் சாந்தாற்றியால் வீசுதலாலே துயில்கொண்டெழு கின்ற சிங்கம்போலப் போதும் கலமும் சோர எழுந்து, எனக்கு அடிகள் முன்பு அருளிச்செய்தது யாது? அதனை இப்பொழுது அருளிச்செய்யு மென்று கேட்க, அவளும், 'வாழ்துமென்னும் அவாவினுள் அழுந்தா நின்றும்; அங்ஙனம் அழுந்துகின்ற நாம் பிறந்து அறுதியாகப் பெற்ற வாணாள் இவ்வளவென்பது சிறிது மறிந்திலம்; அதனை நம்வாழ்வு இத் தன்மைத்தென அறியக்கூறிக் கூற்றுக்கறந்து உயிரையுண்ணும் அன்று இப்பிறப்பினைத் தப்புதற்குத் தவஞ்செய்யப் பெற்றிலேமேயென்று வருந்தி விடுத்தலல்லது அதனைச் செய்தற்குக் கழிந்த நாளை மீட்கவல்லா ரொருவருமில்லை;' அது நம்மாலு மீட்கலாகாது; அக்கூற்று ஏவிய கால மென்னும் பாம்பு குறைவறச்சமைத்த கட்டித் தயிரால் வேய்ந்த சோறு போல நம்மை இனிதாகவைத்து நுகர்ந்து பின்னர் ஒன்றாக விழுங்கப் பட்டு இறந்தபாடெய்துகின்ற நாம் இப்பொழுது அவ்விறந்துபாட்டி னுடைய அழகிய இடத்தேயிருந்து முன்புசெய்த நல்வினையாலே தினவு தின்ற இடத்தே சொறியப் பெற்றுமாதலிற் பெரிதும் ஊதியம்பெற்றும்; இங்ஙனம் இடம்பெற்ற காலத்துத் தவஞ்செய்யாதே நாமும் சுற்றத்தின் மேல் நிகழ்கின்ற காதலை விரும்புவேமாயின், அக்காதல் வடுவுடைத்து; அஃதென்னையெனின், காற்றடிக்கப்பட்ட மழைக்குழாம் சிதறுமாறு போலச் சிதறிவிடுதற்குக் காரணமான தீவினை சிதற அடிக்கப்பட்டுச் சுற்றமெல்லாம் வெவ்வேறாய்ப் போவதல்லது கூடவுறையும் பழக்கம் அதற்கில்லை; ஆதலால், எம்மிடத்துக் காதலை நீயும் ஒழிவாயாகவென்று சொன்னாள்; இங்ஙனஞ் சொல்லிப் பின்னும் தேவி சில அறவுரை சொன்னாளென்க. (கஎ - உ0)

(வேறு)

2619. (க) முருந்தனைய தூமுறுவன் முற்றிழையார் சேரி
இருந்திளமைக் கள்ளுண் டிடைதெரித லின்றிக்
கருந்தலைகள் வெண்டலைக ளாய்க்கழியு முன்னே
அருந்தவமுந் தானமு மாற்றுமினோ கண்டீர்.

2619. முருந்தனைய தூமுறுவல் - மயிலிறகின் முளையைப்போன்ற வெள்ளிய பற்கள். இழையார் : மகளிர். சேரி - சேர்ந்த இடத்தில். இளமையாகிய கள்ளை. ஆற்றுமின் - செய்யுங்கள்.

2620. (உ) உடற்றும் பிணித்தீ யுடம்பினுயிர் பெய்திட்
டடுத்துணர்வு நெய்யாக வாற்றறுவை யாகக்
குடித்துண்ணுங் கூற்றங் குடில்பிரியா முன்னே
கொடுத்துண்மின் கண்டீர் குணம்புரிமின் கண்டீர்.

2621. (௩) உழந்தாலும் புத்தச்சொன் றிட்டூர்த றேற்று
திழந்தார் பலரா லிடும்பைநீர் யாற்றுள்
அழுந்துமா லப்பண்டி யச்சிறு முன்னே
கொழுஞ்சீலங் கூலியாக் கொண்டூர்மின் பாகீர்.

2622. (௪) பிறந்தவர்க ளெல்லா மவாப்பெரிய ராகித்
துறந்துபுகழ் வேண்டாரோர் துற்றவிழு மீயார்
அறங்கரிது சேய்த்தென்ப தியாதுமறி யாரேல்
வெறும்பொருள தம்மா விடுத்திடுமி னென்றான்.

(வேறு)

2623. (௫) முல்லை முகைசொரிந்தாற் போன்றினிய பாலடி சின் மகளி ரேந்த, நல்ல கருனையா னுள்வாயும் பொற்கலத்து நயந்துண் டார்கள், அல்ல லடைய வடகிடுமி னோட்டகத்தென் றயில்வார்க் கண்டுஞ், செல்வ நமரங்கா ணினையன்மின் செய் தவமே நினைமின் கண்டீர்.

2620. பிணியாகிய தீயையுடைய உடம்பில் உள்ள உயிரை. பெய் திட்டு - சோறுகப் பெய்துகொண்டு. ஆற்றலைத் துவையாக; துவை - துவையல். குடில் - உடம்பை. பிரியாமுன்னம் - உயிர்வேறு உடல் வேறாகக் குலைப்பதற்கு முன்பு. குணம் புரிமின் - நற்குணத்தை விரும்புங்கள்.

2621. உழந்தாலும் - சகடம் பழகினாலும். புத்தச்சு ஒன்று இட்டு - புதிய அச்சு ஒன்றை இட்டு. இடும்பையாகிய நீரையுடைய ஆற்றில்; இடும்பை - துன்பம். அப்பண்டி - அந்தச் சகடம். அச்சு என்பதற்கு உயிரென்றும் ஒரு பொருள் தோற்றியது. சீலத்தையே கூலியாகக் கொண்டு. பாகீர் - பாகர்களே.

2622. புகழை வேண்டாராய்த் துறந்து. துற்று அவிழும் - உண்ணப்படும் சோற்றையும். அறம் - தருமம். சேய்த்து - சிவப்பு நிறமுடையது. தருமம் கறுப்புச் சிவப்பென்று தெரியாதவரென்றது, அதன் தன்மையை அறியாதவர் என்று கூறியவாறு; "ஆரருள் சுரக்கு நீதி யறநிறங் கரிதோ வென்றான்" (கம்ப. விபீடணனடைக்கலப். 137). அது வெறும்பொருள் - அந்த ஆசை பயனில்லாத பொருள்.

(மேற்.) அடி, 1 : தொல். பெயர். 15, ந

2623. முல்லைமுகைபோலும் பாலடிசில். மகளிர் அடிசிலேந்தல் : நாலடி. 1. கருனை - பொரிக்கறி. நாள்வாயும் - நாள்தோறும். அல்லல் -

2624. (சு) அம்பொற் கலத்து ளடுபா லமர்ந்துண்ணு வரிவை யந்தோ, வெம்பிப் பசிநலிய வெவ்வினையின் வேறுயோ ரகல்கை யேந்திக், கொம்பிற் கொளவொசிந்து பிச்சை யெனக்கூறி நிற்பாட் கண்டு, நம்பன்மின் செல்வ நமரங்கா ணல்லறமே நினைமின் கண்டீர்.

2625. (எ) வண்ணத் துகிலுடுப்பின் வாய்விட் டழுவதுபோல் வருந்து மல்குல், நண்ணுச் சிறுகூறை பாகமோர் கைபாக முடுத்து நாளும், அண்ணுந் தடகுரீஇ யந்தோ வினையேயென் றழுவாட் கண்டும், நண்ணன்மின் செல்வ நமரங்கா ணல்லறமே நினைமின் கண்டீர்.

2626. (அ) மைதிரண்ட வார்குழன்மேல் வண்டார்ப்ப மல்லிகை மென் மாலை சூடிக், கைதிரண்ட வேலேந்திக் காமன்போற் காரிகையார் மருளச் சென்றூர், ஐதிரண்டு கண்டங் குரைப்ப வோர் தண்டூன்றி யறிவிற் றள்ளி, நெய்திரண்டாற் போலு மிழ்ந்து நிற்கு மிளமையோ நிலையாதே காண்.

இவையெட்டும் ஒருதொடர்.

(க) (இ - ள்.) மகளிர்சேர்ந்த இடத்தேயிருந்து இளமையாகிய கள்ளை உண்டு அறமுதலியவற்றை அறிதலின்றிப் பயன்படாமல்

துன்பம். ஓட்டகத்து அடகையிடுமின் என்று; அடகு - இலைக்கறி. அயில்வார் - உண்பவர்களை. செல்வத்தை நினையன்மின். நமரங்காள்; சீவக. 547, அடிக்.

2624. அடுபால் - காய்ச்சிய பாலை. அமர்ந்து - விரும்பி. வெவ்வினை யின் - தீவினையால். அகலைக்கையிலேந்தி. கொம்பின் - பூங்கொம்பு போல. செல்வத்தை நம்பன்மின்.

2625. உடுப்பின் - உடுத்தால். அல்குலில் உடுத்து. நண்ணுச் சிறு கூறை - பிறர் அணுக முடியாது அருவருக்கத்தக்க சிறிய ஆடையை. அல்குலில் கூறை ஓர் பாகமும், கை ஓர் பாகமும் உடுத்து. அண்ணுந்து- மேலே பார்த்து. அடகு உரீஇ - இலையைப்பறித்து. அடி, 3 : ‘பாவத் தைச் செய்வார் அதன் விளைவின்கண் அந்தோ வினையேயென்றழுங்கு வார்’ (குறள், 275, பரிமேல்.)

(மேற்.) அடி, 3 : குறள், 275, பரிமேல்.

2626. மை - கருமை. கைதிரண்ட - காம்புதிரண்ட. ஐ - சிலேட்டுமம். கண்டம் குரைப்ப - கழுத்தில் ஒலி உண்டாதலால்; இரு முதலால். இளமை நிலையாதுகாண்.

மூப்பதற்கு முன்பே இளமைப்பருவத்தே தவமும் தானமும் நிகழ்த்துமி னென்று சொன்னுளென்க.

கண்டீரென்றது, வினவொடு சிவணுது நின்றதோர் அசை.

(உ) (இ - ள்.) வருத்துகின்ற நோயாகிய தீயையுடைய உடம்பினு யிரைச் சோருக முன்னே பெய்துகொண்டு உணர்வை நெய்யாக ஆற்ற லைத் துவையாகக்கூட்டி அதனை உண்ணுங்கூற்றம் உடம்பை நிலைகுலைப் பதற்கு முன்னே கொடுத்துண்மின்; நற்குணத்தை விரும்புமினென்று சொன்னுளென்க.

உயிர்போவதற்கு முன்னே உணர்வும் ஆற்றலும் தேய்தலியல்பு.

(ங) (இ - ள்.) உடம்பாகிய சகடத்தை நடத்தும் பாகீர், அச்சகடம் தொழில்செய்து வருந்திப் பழகினும் புதியதோருயிராகிய அச்சைக் கொண்டு வந்து இட்டு ஊர்தலொண்ணுதாகலான், அச்சகடத்தைத் தனக் கடைத்த காலமுள்ள அளவும் செலுத்திப் பின்னர் இழந்தார்பலர்; இனி அங்ஙனமன்றித் தனக்கடைத்த காலத்திற்கு நடுவேயும் தீவினைமிகுதி யால் உள்ளதாகிய இடும்பையாகிய நீரையுடைய ஆற்றிலே அச்சகடம் அழுந்தாநிற்கும்; அங்ஙனமழுந்தி அஃது உயிராகிய அச்சு முறிவதற்கு முன்னே அதனுற் கோடற்குரிய சீலத்தை நுமக்குப் பெறுபயனைக் கொண்டு அதனைச் செலுத்துமினென்று சொன்னுளென்க.

(ச) (இ - ள்.) பிறந்த மக்களெல்லாம் அவாப்பெரியராய்ப் புகழை வேண்டாராய் அதனைத்துறந்து துற்றப்படுவதோர் அவிழையும் ஈயாராய் அறம் இத்தன்மைத்தென்பது சிறிதும் அறியாராயின், அந்த அவாப் பயனில்பொருளாம்; அதனைக் கைவிட்டுப்போகடுமினென்று சொன்னு ளென்க.

அம்மா : ஐயோவென்னும் இரக்கக்குறிப்பு.

(ரு) (இ - ள்.) முல்லை முகையைச் சொரிந்தாற்போன்று மெல்லிய தாய் இனிய அடிசிலை மகளிரெடுக்க, அதனைவிரும்பிப் பொரிக்கறி கருவி யாகப் பொற்கலத்தே நாடோறும் உண்டவர் தீவினைசேர இவ்வோட்ட கத்தே அடகையிடுமினென்றுகூறி இரந்துண்பாரைக் கண்டுவைத்தும் செல்வத்தை ஒன்ருக நினையன்மின்; நமரங்காள்! செய்கின்ற தவத் தையே ஒன்ருக நினைமினென்று சொன்னுளென்க.

அம் : அசை.

(சு) (இ - ள்.) அடுபாலை மனம்பொருந்திப் பொற்கலத்திலுண்ணுத அரசன்தேவி, ஐயோ! தீவினையால் முன்னின்ற தன்மை வேறுபட்டுப் பசி வெம்பி நலிகையாலே ஓர்அகலைக் கையிலேந்திக் கொம்புபோல நுடங்கிப் பிச்சையிடுமினென்றுகூறி நிற்பாளைக் கண்டுவைத்தும் செல் வத்தை நச்சன்மின்; நமரங்காள்! அறத்தையே நச்சுமினென்ருளென்க.

(எ) (இ - ள்.) துகிலையுடுப்பின் அழுவதுபோல் வருந்துமல்குலிலே பிறராணுகாது அருவருக்கும் சிறுகூறை ஒருபாகமும், ஒருகை ஒருபாகமுமாக உடுத்து மேனோக்கி அடகையுருவி அதனை இடுவதொன்றின்மையான், ஐயோ! வினையே! நீ என்செய்தாயென்றுகூறி நாடோறும் அழுவாளைக் கண்டு வைத்தும், நமரங்காள்! செல்வத்தை நணுகன்மின்; தவத்தை நணுகுமினென்று சொன்னாளென்க.

இதுகாறும் பொதுவாகக் கூறினாள்.

(அ) (இ - ள்.) தம்மை அறிவிடத்தினின்றும் தாமே நீக்கிக் குழலிலே மாலையை ஆர்ப்பச் சூடி ஏந்திக் காரிகையார்மருளக் காமன்போற் சென்றார், பின்பு ஐ திரண்டு இருமுதலாலே உமிழ்ந்து தண்டையூன்றி நிற்றற்குக் காரணமான இளமை நிலையாதுகாணென்று சொன்னாளென்க.

கை - காம்பு. இது சீவகனை நோக்கிக்கூறினாள்.

அறவுரைகூறினாள், எங்ஙனங்கூறினாளெனின், இங்ஙனமிங்ஙனம் கூறினாளென எல்லாவற்றோடும் கூட்டுக. (உக-அ)

(வேறு)

2627. என்றலுஞ் சுநந்தை சொல்லு மிறைவிதான் கண்டதையா, நன்றுமஃ தாக வன்றே யாயினு மாக யானும், ஒன்றினன் றுறப்ப லென்ன வொள்ளெரி தவழ்ந்த வெண்ணெய்க், குன்று போல் யாது மின்றிக் குழைந்துமெய்ம் மறந்துநின்றான்.

(இ - ள்.) இறைவி இங்ஙனங்கூறின அளவிலே, அதனைத் தனக்கு உறுதியாகக் கருதி ஒருமொழிகூறும் சுநந்தை, ஐயனே! இவள் கருதிய காரியம் நன்றாயினுமாக; தீதாயினுமாக; அதனை யானும் பொருந்தினேன்; இனித் துறப்பேனென்றுகூற, அதுகேட்டுச் சீவகன் எரிதவழ்ந்த வெண்ணெய்க் குன்றுபோல உருகி மறுத்துச்சொல்லுஞ்சொல் சிறிதுமின்றி நின்றானென்க.

கந்துக்கடன் முன்னேயிறத்தலின், சுநந்தையைத் துறவுவிலக்கிக் கூறுதல் அறனன்றென்று கருதுதலின், மறுக்குஞ்சொல் யாதுமின்றி நின்றானென்றார். கந்துக்கடனிறந்தமை இத்தொடர்நிலைச் செய்யுளில் தேவர்கூறிற்றிலர், தகுதியன்றென்றுகருதி; இத் துறவால் உய்த்துணர வைத்தார். (உகூ)

---

2627. என்றலும் - என்று இவ்வாறு விசயை கூறுதலும். சொல்லும் - சொல்லுவாள். இறைவிதான் கண்டது - விசயை கருதியது; தான் : அசை. ஐயா : சீவகனை ; விளி. அஃது நன்றாக; அன்றேயாயினுமாக. ஒன்றினன் - அக்காரியத்திற்குப் பொருந்தினேன். என்ன - என்று சுநந்தை கூறுதலும். குன்றுபோல் குழைந்து. யாதுமின்றி - மறுத்துக் கூறுஞ் சொல் சிறிதுமில்லாமல்.

(வேறு)

2628. ஒருயி ரொழித்திரண் டுடம்பு போவபோல்
ஆரிய ஞெழியவங் கௌவை மார்கடாம்
சீரிய துறவொடு சிவிகை யேறினர்
மாரியின் மடந்தைமார் கண்கள் வார்ந்தவே.

(இ - ள்.) உடம்பையொழித்து உயிர்போமாறன்றி ஒருயிரைக் கை விட்டு இரண்டுடம்பு போந்தன்மைபோலே சீவகனிருப்பத் தாய்மார் இருவரும் முன்பு [1] தாம் நின்ற நோன்பிற் சீரிதாகிய துறவையுட்கொண்டு சிவிகையிலே ஏறிப் போயினர் ; அங்கிருந்த தேவிமார்கள் கண்கள் மாரி போல நீர்வடிந்தனவென்க. (௩௦)

2629. நன்மயிற் பொறியின்மேற் போய நாளினும்
புன்மையுற் றழுகுரன் மயங்கிப் பூப்பரிந்
திந்நகர் கால்பொரு கடலி னெங்கணும்
மன்னனி லாகுல மயங்கிற் றென்பவே.

(இ - ள்.) இந்நகரெவ்விடமும் சச்சந்தன் பட்டநாளினுங்காட்டிற் புன்மையுற்றுப் பூப்பரிந்து கால்பொருகடல்போலே அழுகிற குரல்மயங்கிப் பின்னர்ச் சீவகனைப்போலே [1] கையறவிலே மயங்கிற்றென்க.
என்ப : அசை. (௩௧)

2630. அழுதுபின் னணிநகர் செல்ல வாயிரந்
தொழுதகு சிவிகைகள் சூழப் போயபின்
இழுதமை யெரிசுடர் விளக்கிட் டன்னவள்
பழுதில்சீர்ப் பம்மைதன் பள்ளி நண்ணினாள்.

---

2628. ஆரியன் : சீவகன். ஔவைமார்கள் : விசயையும், சுநந்தையும். சீவகனுக்கு உயிரும், தாயரிருவர்க்கும் ஈருடம்புகளும் உவமைகள். சிவிகை - பல்லக்கு. மடந்தைமார் : காந்தருவதத்தை முதலியவருடைய. மாரியின் வார்ந்த - மேகத்தைப்போல் நீர் வடிந்தன.

(உரை) [1]தாம் நின்ற நோன்பென்றது, மகன் வாழவேண்டுமென்று முன்பு நோற்றிருந்ததனை.

2629. நாளினும் - நாளைக் காட்டிலும். புன்மையுற்று - வருத்தத்தையடைந்து. கால் - காற்று. கடலின் - கடலைப்போல. மன்னனில் - சீவகனைப்போல. ஆகுலம் - வருத்தத்தில்.

(உரை) [1] கையறவு - செயலறுதல்.

2630. நகர் பின்னே அழுது செல்ல. தொழுதகு - தன்னைத் தொழத்தக்க. இழுது - நெய். சுடரை விளக்கிட்டன்னவளாகிய பம்மை

சுடர் - ஒளி. விளக்கிட்டன்னவளாகிய பம்மை ; என்றது, பிறப்பாகிய இருளைப்போக்கி வீடாகிய ஒளியைப் பரப்புதற்கு உரியளென்றவாறு.

(இ - ள்.) நகர் பின்னே அழுதுசெல்லத் தன்னைத் தொழத்தக்க சிவிகைகள் ஆயிரம் சூழத் தான்சென்று பம்மையிருக்கின்ற பள்ளியைச் சேர்ந்தாளென்க.

ஆயிரஞ்சிவிகையிற் போகிய மகளிரும் துறப்பதற்கு ஒருப்பட்டுப் போயினரென்றுணர்க. (கூஉ)

2631. அருந்தவக் கொடிக்குழாஞ் சூழ வல்லிபோல்
இருந்தறம் பகர்வுழி யிழிந்து கைதொழு
தொருங்கெமை யுயக்கொண்மி னடிக ளென்றனள்
கருங்கய னெடுந்தடங் கண்ணி யென்பவே.

(இ - ள்.) அவள், தவத்தினொழுங்கையுடைய மகளிர்த்திரளாகிய புறவிதழ் சூழ்ந்திருப்பத் தான்நடுவே அல்லிபோல் இருந்து அறங்கூறுகின்ற இடத்தே தேவி இழிந்துசென்று கைதொழுது, அடிகளே ! எம்மையெல்லாம் சேரப் பிறவிக்கடலினின்றும் கரையேற்றுவீராகவென்றாளென்க.

முன்பு கயல்போலுங் கண். (கூகூ)

(வேறு)

2632. ஆரழன் முளரி யன்ன வருந்தவ மரிது தானம்
சீர்கெழு நிலத்து வித்திச் சீலநீர் கொடுப்பிற் றீந்தேன்
பார்கெழு நிலத்து ணாறிப் பல்புக ழீன்று பின்னால்
தார்கெழு தேவ ரின்பந் தையலாய் விளைக்கு மென்றாள்.

முளரி - விறகு. தீந்தேனையுடைய தார்.

---

யுடைய பள்ளியை ; பம்மை - பத்மை ; துறவுபூண்ட ஒருத்தி. பள்ளி - தவப் பள்ளியை. விசயை நண்ணினாள்.

2631. தவக்கொடிக் குழாம் - தவவொழுங்கையுடைய மகளிர் கூட்டம். அல்லி - அல்லிப்பூ ; பம்மைக்கு உவமை. பகர்வுழி - கூறுகின்ற இடத்தே. இழிந்து - விசயை இறங்கி. எம்மை ஒருங்கே உயக்கொண்மின். கண்ணி : விசயை ; எழுவாய். கன்னிப் பருவத்தும், விவாகமான பின்பும், கணவனிறந்த பின்பும் பெண்பாலார் துறத்தற்குரியர் என்பர் ; திருவிளை. சமணரைக்கழு. 17.

2632. தவம் முளரியில் அழலன்ன ; ஆதலால் அரிது. தானத்தை நிலத்து வித்தி. சீலமாகிய நீரை. நிலம் - உத்தரகுரு. நாறி - தோன்றி. தேவரின்பத்தை விளைக்கும் ; தையலாய் : விசயை ; விளி.

(இ - ள்.) தையலாய்! அருந்தவம் முளரியிலழல்போலக் கொடிய; ஆதலால், நினக்கு மேற்கோடலரிது; அதனைக்கைவிட்டுத் தானத்தினை ஐம்பொறியும்வென்று அவாவற்ற இடத்தே வித்தி அதுமுளைக்கும்படி சீலமாகிய நீரை எப்பொழுதும் கொடுப்பின், அஃது உத்தரகுருவிலே முளைத்துப் புகழை ஈன்று பின்பு தேவரின்பத்தை விளைத்துவிடுமென்று கூறினானென்க.

தானப்பயனாற் போகபூமியிலே பிறந்து ஆண்டுள்ள நுகர்ச்சியை எய்திப்பின் துறக்கம் பெறுவாரென்றாள். (ருச)

2633. அறவுரை பின்னைக் கேட்டு மடிகண்மற் றெமக்கு வல்லே
துறவுதந் தருளு கென்னத் தூநக ரிழைத்து மேலால்
நறவிரி தாம நாற்றி வானகம் விதானித் தாய்ந்து
திறவிதிற் றவிசு தூபந் திருச்சுடர் விளக்கிட் டாரே.

(இ - ள்.) தேவி அதனைக்கேட்டு, அடிகளே! அறவுரை பின்னைக் கேட்டும்; இப்பொழுது துறத்தலைத் தந்தருளுவீராகவென்ன, ஆங்குள்ள தவமகளிரும், துறவுக்குச் செய்வனவற்றை ஆராய்ந்து நகரைக் கோலத்தைச்செய்து தாமத்தைநாற்றி வானகத்தை மேலே விதானித்து நன்றாகத் தவிசையும் தூபத்தையும் விளக்கையுமிட்டாரென்க. (ருரு)

(வேறு)

2634. பாலினுற் சீறடி கழுவிப் பைந்துகில்
நூலினு லியன்றன நுனித்த வெண்மைய
காலனைக் கண்புதைத் தாங்கு வெம்முலை
மேல்வளாய் வீக்கினுர் விதியி னென்பவே.

மெல்லிதாக நூற்ற வெண்மையுடையநூல்; எனவே பட்டாகா தாயிற்று. முன்பு காலனைக் கண்புதைத்தாற்போல வெவ்வியமுலை; கண்புதைத்தல் - அவன் கொலைத்தொழிலை மாற்றுவித்தல்.

---

2633. கேட்டும் - கேட்கின்றேம். அடிகள் : பன்மை; விளி. மற்று: அசை. என்ன - என்று விசயை கூற. நகரிழைத்து - நகரை அழகு செய்து. மேலால் - மேலே; ஆல் : அசை. தாமம் - மாலை. விதானித்து- மேற்கட்டுக் கட்டி. திறவிதின் - நன்றாக.

2634. துகிலை முலைமேல் வளாய் வீக்கினுர்; வளாய் - சூழ்ந்து. தவமகளிர் வெண்டுகிலால் மார்பைச் சுற்றல்; சீவக. 2635, 2993; மேரு. புராண. 46.

(இ - ள்.) அவற்றையிட்ட பின் ஆகமவிதியாலே சீறடியைப் பாலாற் கழுவி நூலாலியன்ற கோடித்துகிலை முலைமேலே சூழ்ந்து வீக்கினாரென்க.

இஃது, [1] இருவர் தீக்கையும் கூறிற்று. (௩௬)

2635. தேனுலா மாலையுங் கலனுஞ் சிந்துபு
பானிலாக் கதிரன வம்மென் பைந்துகில்
தானுலாய்த் தடமுலை முற்றஞ் சூழ்ந்தரோ
வேனிலான் வருநெறி வெண்முள் வித்தினார்.

(இ - ள்.) மாலையையும் கலத்தையும் வாங்கிப்போகட்டு நிலாப் போன்ற ஒளியினவாகிய துகிலுலாவ முலைமுற்றத்தைச்சூழ்ந்து காமன் வரும் வழியை முள்ளாலடைத்தாரென்க.

உலாய் - உலாவ. வெண்டுகிலாதலின், 'வெண்முள்' என்றார். இஃது ஒழிந்த மகளிருடைய தீக்கை கூறிற்று. (௩௭)

2636. முன்னுபு கீழ்த்திசை நோக்கி மொய்ம்மலர்
நன்னிறத் தவிசின்மே லிருந்த நங்கைமார்
இன்மயி ருகுக்கிய விருந்த தோகைய
பன்மயிற் குழாமொத்தார் பாவை மார்களே.

(இ - ள்.) தவிசினைப்பொருந்தி அதன்மேலே கிழக்குநோக்கியிருந்த தாயரிருவரும் அல்லாதமகளிரும், மயிருகுத்தற்கிருந்த மயிற்றிரளை ஒத்தாரென்க.

தோகையவாகிய மயில். (௩௮)

---

(உரை) [1] இருவர் : விசயை, சுநந்தை.

2635. கலன் - ஆபரணம். சிந்துபு - சிந்தி. பால் : நிலாவுக்கு அடை ; உவமையன்று. நிலாப்போலும் கதிரனவாகிய துகில் உலாய் ; கதிர் - ஒளி. உலாய் = உலாவ - பரக்க. முலைமுற்றம் - முலையின் முன்னிடத்தை. வேனிலான் : காமன். நெறியில் வெண்முள்ளை வித்தினார். வெண்முள்ளென்றது வெண்டுகிலை.

2636. முன்னுபு - ஆதனத்தைப் பொருந்தி. மலராகிய தவிசு ; மலர்போலும் நிறத்தையுடைய தவிசெனலுமாம். நங்கைமார் : விசயையும் சுநந்தையும். உகுக்கிய - உகுத்தற்கு. தோகையையுடைய மயிற் குழாத்தை. நங்கைமார்களும் பாவைமார்களும் ஒத்தாரென்க.

2637. மணியியல் சீப்பிடச் சிவக்கும் வாணுதல்
அணியிருங் கூந்தலை யௌவை மார்கடாம்
பணிவிலர் பறித்தனர் பரமன் சொன்னநூற்
றுணிபொருள் சிந்தியாத் துறத்தன் மேயினர்.

**மணியாலியன்ற சீப்பிட அதுபொருமற்சிவக்கும் நுதலைச் சேர்ந்த கூந்தல்.**

**(இ - ள்.)** இறைவன் கூறிய ஆகமத்தில் துணியும்பொருளைச் சிந்தித்துத் துறத்தலைச் செய்ய மேவினவர் கூந்தலை ஆரியாங்கனைகள் தாம் ஒன்றிற்றாழ்வில்லாராய்ப் பறித்தாரென்க. (௩௯)

2638. கன்னிய ராயிரர் காய்பொற் கொம்பனார்
பொன்னியற் படலிகை யேந்திப் பொன்மயிர்
நன்னிலம் படாமையே யடக்கி நங்கைமார்
தொன்மயி ருகுத்தநன் மயிலிற் றோன்றினார்.

**(இ - ள்.)** அங்ஙனம் பறித்த அழகிய மயிரினைக் கொம்பனாராகிய கன்னியராயிரவர் பள்ளியில் வீழாமற் படலிகையிலே ஏந்திக்கொண்டு போய் அடக்கி, அந்நங்கைமார் பழையமயிரையுகுத்த மயிலில் தோன்றினாரென்க.

**அடக்கி : இது பிறவினை கொண்டது.** (௪௦)

2639. பொற்குடந் திருமணி பொழியப் பெய்தபோல்
எற்புடம் பெண்ணிலாக் குணங்க ளானிறைத்
துற்றுட னுயிர்க்கருள் பரப்பி யோம்பினார்
முற்றுட னுணர்ந்தவ னமுத முன்னினார்.

---

2637. சீப்பிடுதலால் சிவக்கின்ற நுதல். ஔவைமார்கள் - தவ மகளிர்கள். பணிவிலர் - தாழ்வில்லாதவராய். பரமன் : அருகன். சிந்தியா - எண்ணி. துறத்தல் மேயினவர் கூந்தலை ஔவைமார்கள் பறித்தனர். தவமகளிர் தலைமயிரைப் பறித்தல் : "அனிச்சப்பூம் போது கொய்வார் போலணி மயிரை வாங்கி" (மேரு. பூரண. 46)

2638. கொம்பனாராகிய கன்னியராயிரவர். படலிகை - தட்டு ; பெட்டி எனலுமாம். நங்கைமார் - மயிர்பறிக்கப்பட்ட மகளிர். மயிலின்- மயிலைப்போல்.

2639. பொற்குடத்தில் மணியைப் பெய்ததுபோல. எற்புடம்பைக் குணங்களால் நிறைத்து. உடனே உற்று. உணர்ந்தவன் அமுதம் - இறைவனாகிய அருகன்கூறிய அமுதம்போலும் ஆகமத்தை. முன்னினார் - பொருந்தினவர்கள் ; எழுவாய்.

தவம்புரிந்து அடங்கத்தக்க நல்வினையுடைமையிற் பொற்குடத்தோடு உவமித்தார். பல்லுயிர்க்கும் வந்த துன்பங்களைத் தாமும் உடனேயுற்று அவ்வுயிர்களுக்கு அருளைப்பரப்பி.

(இ - ள்.) அங்ஙனம் இறைவனாகமத்தைப் பொருந்தினவர்கள், பொற்குடத்தைப் பெறுதற்கரிய மணியை மிகுத்து வழிய நிரப்பினாற் போலே எற்புடம்பை எண்ணிறந்த குணங்களாலே நிறைத்துப் பரப்பித் தவத்தைப்பேணினாரென்க. (சக)

2640. புகழ்ந்துரை மகிழ்ச்சியும் பொற்பில் பல்சனம்
இகழ்ந்துரைக் கிரக்கமு மின்றி யங்கநூல்
அகழ்ந்துகொண் டரும்பொருள் பொதிந்த நெஞ்சினார்
திகழ்ந்தெரி விளக்கெனத் திலக மாயினார்.

(இ - ள்.) அங்கத்தையுடைய ஆகமத்தின் பொருளைக் கல்லியெடுத்துக்கொண்டு கட்டிவைத்த நெஞ்சினையுடையவர்கள், தமக்கு மயக்கமின்மையின், எரிகின்ற விளக்கெனத் திகழ்ந்து பல்சனமும் புகழுமுரைக்கும் இகழுமுரைக்கும் மகிழ்ச்சியும் இரக்கமுமின்றித் திலகமாயினாரென்க. (சஉ)

(வேறு)

2641. அலைமணிக் கவரி மான்றே ரடுகளி யானை பாய்மா
நிலநெளி கடலந் தானை நிரந்துபூச் சுமப்ப மன்னன்
சிலமலர் தானு மேந்திச் சென்றுசீர் பெருக வாழ்த்தி
இலமலர்ப் பஞ்சிப் பாதத் தெழின்முடி தீட்டி னானே.

(இ - ள்.) நால்வகைப்படையும் பரந்து பூவைச்சுமப்ப மன்னன்றானும் சிலமலரையேந்திச்சென்று வாழ்த்தி மலர்போலும் பாதத்தே தன்முடியைச் சேர்த்தினானென்க. (சங)

---

2640. புகழ்ந்துரைக்கு மகிழ்ச்சியும் இகழ்ந்துரைக்கு இரக்கமும் இன்றி ; சீவக. 2825 ; " உவத்தல் காய்தலோ டிலாது " (வளையாபதி). புகழ்ந்துரை - புகழ். இகழ்ந்துரை - இகழ். அங்கத்தையுடைய நூலின் பொருளை அகழ்ந்துகொண்டு பொதிந்த நெஞ்சினார் ; நூல் - அருகன் கூறிய ஆகமம். பொதிந்த - கட்டி வைத்த.

2641. மணியையும் கவரியையும் உடைய மான்பூட்டிய தேர் ; மான் - குதிரை. நிரந்து - பரந்து. மன்னன் - சீவகன். இலமலர் போலும் பஞ்சி பூசிய பாதத்தே ; இலமலர் - இலவம்பூ. தீட்டினான் - சேர்வித்தான்.

2642. (க) கடியவை முன்பு செய்தேன் கண்ணிுறற் காணச் சின்ுறள், அடிகளிந் நகரி னுள்ளே யுறைகென வண்ணல் கூற, முடிகெழு மன்னற் கொன்று மறுமொழி கொடாது தேவி, படி மம் போன் றிருப்ப நோக்கிப் பம்மைதான் சொல்லி ுறளே.

2643. (உ) காதல னல்லே நீயுங் காவல நினக்கி யாமும்
ஏதில மென்று கண்டா யிருந்தது நங்கை யென்னத்
தாதலர் தாம மார்ப னுரிமையுந் தானு மாதோ
போதவிழ் கண்ணி யீர்த்துப் புனல்வரப் புலம்பி னுனே.

இவையிரண்டும் ஒரு தொடர்.

(இ - ள்.) அண்ணல், முன்பு நும்மைக்காண்டற்கு வேண்டும் நல் வினை செய்யாதேன் கண்ணுலே எப்பொழுதும் காணும்படி, சின்ுறள், அடிகள், இந்நகரினுள்ளே உறைவீராகவெனக் கூற, அவற்கு விசயை உத்தரம் சொல்லாது பாவைபோன்றிருந்தாளாக, அத்தன்மையை நோக்கிச் சொல்லிடத்தாளாகிய பம்மைதான் நீயும் எம்மாற் காதலிக்கப் படுமவனல்லை; காவல! நினக்கு யாங்களும் சுற்றமல்லமென்று காண் நங்கை இருந்ததென்று சொல்ல, அதுகேட்டு அரசன், தேவிமாரும் தானு மாக அழுதானென்க. (சச - ரு)

2644. ஏதில ுனயி ுறலு மிறைவர்தம் மறத்தை நோக்கக்
காதல னடிக ளென்னக் கண்கனிந் துருகிக் காசின்
மாதவ மகளி ரெல்லா மாபெருந் தேவி யாரை
ஏதமொன் றில்லை நம்பிக் கின்னுரை கொடுமி னென்ுறர்.

(இ - ள்.) அங்ஙனமழுத அரசன், அடிகளே! யான் தேவிக்குச் சுற்றமன்றேனும் இறைவர் அறத்தைத் துணிந்து நிற்கின்ற நிலைமை

2642. கடியவை - தீவினை. காண - காணும்படி. அடிகள் : விசயை; விளி. உறைக என்று அண்ணல்கூற; அண்ணல் - சீவகன். ஒன்றும் - சிறிதும். தேவி - விசயை. பம்மை : தவப்பள்ளியிலுள்ள துறவி.

2643. காதலன் அல்லை - எம்மால் அன்பு செய்யத் தக்கவனல்லை. ஏதிலம் - அயலாராக உள்ளேம். நங்கையிருந்தது என்ன; நங்கை : விசயை. என்ன - என்று பம்மைகூற. மார்பன் - சீவகன். உரிமை - மனைவியர். கண்ணியை யீர்த்துப் புனல்வரும்படி புலம்பினுன்.

2644. ஏதிலனுயினும் - யான் அயலாறுறலும். அடிகள் : விசயை. ஏதம் - குற்றம். நம்பிக்கு - சீவகனுக்கு.

**யைப் பார்க்க அதனாற் காதலிக்கும் தன்மையையுடையேனென்று கூற, தவமகளிரெல்லாம் மனமுருகிக் கண்ணோட்டஞ் செய்து தேவியாரை இனி மறுமொழி கொடுத்தலால் வருங்குற்றமின்று; நம்பிக்கு மறுமொழி கொடுமினென்றாரென்க.** (சசு)

2645. *திரைவள ரிப்பி யீன்ற திருமணி யார மார்பின், வரை வளர் சாந்த மார்ந்த வைரக்குன் றனைய திண்டோள், விரை வளர் கோதை வேலோய் வேண்டிய வேண்டி னேமென், றுரை விளைத் துரைப்பக் காளை யுள்ளகங் குளிர்ந்து சொன்னான்.*

**இப்பி ஈன்ற ஆரம்; மாணிக்கம் கலந்து கோத்த ஆரம். கோதையையுடைய வேல்.**

**(இ - ள்.) அதுகேட்ட தேவி, மார்பினையும் தோளினையுமுடைய வேலோய்! நீ விரும்பின காரியங்களை யாமும் விரும்பினேமென்று உரையை வலிய எழுப்பிக் கூற, அரசன் மனமகிழ்ந்து ஒரு மொழி கூறினானென்க.**

**வேண்டியவென்ற பன்மை, உறைகவென்றதும் காதலனென்றதும்.** (சஎ)

2646. *அடிகளோ துறக்க வொன்று முற்றவர் யாது மல்லர், சுடுதுய ரென்கட் செய்தாய் சுநந்தைநீ யெளவை யல்லை, கொடியைநீ கொடிய செய்தாய் கொடியையோ கொடியை யென்னா, இடருற்றோர் சிங்கந் தாய்மு னிருந்தழு கின்ற தொத் தான்.*

(இ - ள்.) அவன் எங்ஙனங் கூறினானெனின், அடிகள் என்னிடத்து ஒன்றும் வருத்தமுற்றவரல்லர்; ஆதலான், அவரோ துறக்க; சுநந்தாய்! வருந்தி வளர்த்தலின், நீயே எனக்குத்தாய்; இதற்குமுன்னர் யாதும் கொடியையல்லையாயினும் துறந்தாயாதலின், என்கட் சுடுதுயர் செய் தாய்; அங்ஙனஞ் செய்த நீ மிகவும் கொடியை கொடியை யென்று கூறுதலைச் செய்து சிங்கம் துன்பமுற்றுத் தாய்முன் இருந்து அழுகின்ற தன்மையை ஒத்தானென்க. (சஅ)

---

2645. இப்பியீன்றமணி - சங்கம் பெற்ற முத்து. விரை - வாசனை. மார்பினையும் தோளையும் கோதையையும் உடைய வேலோய்; என்றது சீவகனை; விளி. நீ வேண்டியதை யாமும் வேண்டினேம் என்று. உரை விளைத்து உரைப்ப - சொல்லை வலிய எழுப்பிக் கூற. காளை : சீவகன்.

2646. அடிகள் ஒன்றும் உற்றவரல்லராதலால் துறக்க; அடிகள் - விசயை. ஔவையாகிய நீ என்கட் சுடுதுயர் செய்தாய்; ஔவை - தாய். நீ முன்பு கொடியையல்லையாயினும் இன்று கொடிய செய்தாய். சிங்கம் இடருற்றுத் தாய்முன் இருந்து அழுகின்றதொத்தான்.

2647. சென்றதோ செல்க விப்பாற் றிருமக ளனைய நங்கை, இன்றிவ டுறப்ப யானின் னரசுவந் திருப்பே னாயின், என்றெனக் கொழியு மம்மா பழியென விலங்கு செம்பொற், குன்றனான் குளிர்ப்பக் கூறி கோயில்புக் கருளு கென்றாள்.

(இ - ள்.) அதுகேட்ட சுநந்தை, தன் கணவனை யிழந்து புதல்வன ரசை உவந்திருந்தாளென்று இதற்குமுன்னர் உலகத்து நிகழ்ந்தபழி நிகழ்ந்தே போக; இனி நங்கையாகிய இவள் இன்று துறப்ப யான் இன்னும் நின்னரசை உவந்திருப்பேனாயின், கேளாய்; இப்பாற் பிறக்கும் பழி என்றுதான் எனக்குப் போவது; போகாமை நீயே யறிதி யென்று அரசன் மனங்குளிர்ப்பக் கூறி, இனிக் கோயிலிலே புக்கு உலகத்தைக் காப்பாயாகவென்றாளென்க. (சகூ)

2648. பந்தட்ட விரலி னார்தம் படாமுலை கிழித்த பைந்தார், நந்தட்டன் றன்னை நோக்கி நங்கையா ரடிகள் சொன்னார், நொந் திட்டு முனிய வேண்டா துறந்தில நும்மை யென்னக், கந்தட்ட திணிதிண் டோளான் கற்பக மலர்ந்த தொத்தான்.

பந்தட்ட - பந்தை வருத்தின.

(இ - ள்.) சுநந்தை அங்ஙனங் கூறினபின்பு, நங்கையாராகிய அடிகளும் நந்தட்டனை நோக்கி, நும்மை யாம் துறந்திலம்; அதனாலே நீ நொந்து வெறுக்க வேண்டாவென்று சொன்னார்; அவனும் கேட்டு மகிழ்ந்தானென்க. (சுo)

2649. துறந்தவிந் நங்கை மார்தந் தாமல ரனைய பாதம், உறைந்தவென் சென்னிப் போதின் மிசையவென் றுரைப்ப வேத்திக், கறந்தபா லனைய கந்திக் கொம்படுத் துருவப் பைம்பூண், பிறங்குதார் மார்பன் போந்து பெருமணக் கோயில் புக்கான்.

2647. சென்றதோ செல்க - நிகழ்ந்த பழி நிகழ்க; ஓ : அசை. நங்கையாகிய இவள் துறப்ப; இவள் - விசயை. பழி என்று ஒழியும் என. குன்றனான் - சீவகன். கோயில் - அரண்மனை.

2648. பந்து அட்ட விரலினார் - பந்தை விளையாடுதலால் வருத்தின விரலையுடைய மகளிர்கள். நங்கையாராகிய அடிகள்; விசயை. நொந் திட்டு - நொந்து; ஒரு சொல். நும்மைத் துறந்திலமென்ன. தோளான் - நந்தட்டன். கற்பகம் மலர்ந்ததைப்போல் மகிழ்ச்சி கொண்டான்.

2649. பாதம், என் சென்னியிலுறைந்த போதின் மிசைய வென்று. கந்தியாகிய கொம்பு; கந்தி : ஆரியாங்கனைகளுக்குப் பொதுப் பெயர்; சீவக. 1089, அடிக். மார்பன் - சீவகன்.

(இ - ள்.) அவன் மகிழ்ந்தபின், அரசன், இந்நங்கைமாருடைய பாதம் என் சென்னியிலுறைந்த போதின் மிசையனவென்று அவர் உறைகின்ற தன்மைக்குப் பொருந்த வாழ்த்திப் பால்போல் மிகவுந் தூய கந்தியாகிய கொம்பு இவர்களைப் புரக்கும்படி சேர்த்திப் பள்ளியினின்றும் போந்து கோயில் புக்கானென்க. (௬௧)

2650. வடிநிரை நெடிய கண்ணார் மாமிமார் விடுப்ப வேகிக், கடி நிரை சிவிகை யேறிக் கதிர்மணிக் குடைபின் செல்ல, உடை திரைப் பரவை யன்ன வொளிறுவேன் மறவர் காப்பக், கொடி நிரைக் கோயில் புக்கார் குங்குமக் கொடிய னாரே.

கடிச்சிவிகை - வரைவினையுடைய சிவிகை; என்றது, அரசனால் தேவியர் குலங்கட்கேற்ப இவ்வாறு செல்லற்குரியரென்று முன்போதற் கும் பின்போதற்கும் வரையப்பட்ட சிவிகை யென்றவாறு; "ஏற்றற் கண்ணு நிறுத்தற் கண்ணும், உரிமை கொடுத்த கிழவோன் பாங்கிற், பெருமையிற் றிரியா வன்பின் கண்ணும்" (தொல். கற்பு. 6) என்றார், கற்பியலின் கண்.

(இ - ள்.) கொடியனாராகிய வடுவகிர் நிரையன்ன கண்ணார், மாமிமார் விடுப்பப் பள்ளியினின்றும் போய் நிறைத்த சிவிகையிலே ஏறிக் குடை பின்னே செல்ல மறவர்காப்பக் கோயிலிலே புக்காரென்க. (௬௨)

(வேறு)

2651. முழுதுல கெழிலேத்து மூரிவேற் றானை மன்னன்
தொழுதகு பெருமாட்டி தூமணிப் பாவை யன்னாள்
பொழிதரு மழைமொக்குட் போகம்விட் டாசை நீக்கி
வழிவரு தவமெய்தி வைகின டெய்வ மன்னாள்.

'பாவையன்னாள்' என்றார், ஐம்பொறியால் நுகர்தற்குரியனவற்றை நுகராதிருந்தமை நோக்கி. முன்பு அருந்ததி யென்று தொழத்தக்க.

---

2650. வடிநிரை - வடுவகிரின் வரிசையைப்போன்ற. கண்ணார் : காந்தருவதத்தை முதலியவர்கள். மறவர் - வீரர். கொடி நிரைக் கோயில் - கொடிகளின் வரிசையையுடைய அரண்மனை. கொடியனா ராகிய கண்ணாரென்க.

2651. மன்னனுடைய பெருமாட்டி, தொழுதகு பெருமாட்டி யென்க; மன்னன் - சச்சந்தன். பெருமாட்டி - விசயை. மழை மொக்குள் போலும் போகத்தை.

**(இ - ள்.)** எழிலை உலகமுழுதுமேத்தும் சச்சந்தன் பெருமாட்டி, பாவை யன்னாள், தெய்வமன்னாள், அவள் மழைமொக்குள் போலும் போகத்தைத் தீதென்று நீக்கி ஆசையையுநீக்கி வீட்டையெய்தும் வழியிலே வருகின்ற பரமாகமத்திற்கூறிய தவத்தையெய்தித் தங்கினா ளென்க.

எனவே ஒழிந்தோர் கூறிய தவங்கள் வீடுபேற்றிற்கு வழியல்ல வாயின. (ருங)

## உ. நீர்விளையாட்டணி

2652. உடைதிரை முத்தஞ் சிந்த வோசனிக் கின்ற வன்னம்
படர்கதிர்த் திங்க ளாகப் பரந்துவான் பூத்த தென்னா
அடர்பிணி யவிழு மாம்ப லலைகடற் கானற் சேர்ப்பன்
குடைகெழு வேந்தற் கிப்பா லுற்றது கூற லுற்றேன்.

**(இ - ள்.)** முரிகின்றதிரை முத்தைச் சிந்துகையாலே அதற்கு வெருவிச் சிறையடிக்கொள்கின்ற அன்னம் திங்களாகக் கடல் வானாக அது சிந்தின முத்தம் அவ்வான் மீனைப் பூத்ததாகவுட்கொண்டு பகலே இதழ் பிணித்த பிணியவிழும் ஆம்பல் அலைகின்ற கடற்கானலையுடைய சேர்ப்பனாகிய வேந்தற்கு இப்பாற்பிறந்த செய்தியைக் கூறலுற்றேனென்றா ரென்க. (ருச)

2653. (க) துறவின்பாற் படர்த லஞ்சித் தொத்தொளி முத்துத் தாமம், உறைகின்ற வுருவக் கோலச் சிகழிகை மகளி ரின்பத், திறைவனை மகிழ்ச்சி செய்து மயக்குவா னமைச்ச ரெண்ணி, நிறையநீர் வாவி சாந்தங் கலந்துடன் பூரித் தாரே.

2652. **திரை முத்தத்தைச் சிந்துதலால். ஓசனிக்கின்ற அன்னம் -** அஞ்சிச் சிறகை அடித்துக்கொள்கின்ற அன்னப்பறவை; "ஓசனிக் கின்ற வுறுவெயிற் கடைநாள்" (சிலப். 14 : 125). கடலை ஆகாயமாகவும், அன்னத்தைச் சந்திரனாகவும், முத்துக்களை நட்சத்திரங்களாகவும் கூறினார். என்னா - என்று உட்கொண்டு. அடர்பிணி அவிழும் ஆம்பல் - இதழ் பிணித்த கட்டு அவிழ்கின்ற ஆம்பற்பூ. சேர்ப்பனாகிய வேந்தற்கு ; சீவகனுக்கு.

(மேற்.) அடி, 1 : சிலப். 14 : 125, அரும்பத ; 120-25, அடியார். 1-3 ; சிலப். 7 : 29, அரும்பத.

2653. இறைவன், துறவின்பாற் படர்தற்கு அஞ்சி ; இறைவன் : சீவகன். படர்தல் - செல்லுதல். சிகழிகை - மயிர் முடியையுடைய. மகளிரின்பத்தால் மகிழ்ச்சி செய்து. மயக்குவான் - சீவகனை மயக்கும் பொருட்டு. நீரைச் சாந்தம் கலந்து வாவி நிறையப் பூரித்தார் ; பூரித்தார்- அடக்கினர்.

2654. (உ) நீரணி மாட வாவி நேர்ம்புணை நிறைத்து நீணீர்ப்
போரணி மாலை சாந்தம் புனைமணிச் சிவிறி சுண்ணம்
வாரணி முலையி னார்க்கு மன்னற்கும் வகுத்து வாவி
ஏரணி கொண்ட விந்நீ ரிறைவகண் டருளு கென்றார்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) முத்துத்தாமத்தையுடைய சிகழிகை.

(இ - ள்.) அமைச்சர், இறைவன் துறவின்பாற்சேறற்கு அஞ்சி அக்கருத்தைப் போக்குதற்குரிய மகளிர் நீரிடத்துப் போர் செய்தற்குத் தம்மிடத்தே கொண்ட அணியின்பத்தாலே முன்னர் அவனை மன மகிழ்ச்சி செய்து பின்னர் இன்பத்தே மயக்குதற்கு எண்ணி நீரைச் சாந்துடனே கலந்து வாவிநிறையப் பூரித்தார்; அங்ஙனம் பூரித்த மாடத்தையுடைய நீரணிவாவியிலே நொய்ய தெப்பங்களையும் நிறைத்து அழகிய மாலை முதலியவற்றை அம்மகளிர்க்கும் மன்னற்கும் படைக்கல மாக வகுத்து இந்நீர்வாவியை, இறைவனே! கண்டருளுகவென்று ரென்க. (ருரு-சு)

2655. கணமலை யரசன் மங்கை கட்டியங் கார னாகப், பணை முலை மகளி ரெல்லாம் பவித்திரன் படைய தாக, இணைமலர் மாலை சுண்ண மெரிமணிச் சிவிறி யேந்திப், புணைபுறந் தழுவித் தூநீர்ப் போர்த்தொழி றொடங்கி னாரே.

வேறொரு பகையரசைத் தாம் கேட்டறியாமையானும் கட்டியங் காரன் கொடுமை இக்காலத்தும் தம்மனத்து நிகழ்தலானும், 'கட்டியங் காரனாக' என்றார்.

(இ - ள்.) அவ்வமைச்சர் வாவியைக் காட்டினபின்பு, தேவியரிற் காந்தருவதத்தை கட்டியங்காரனாக, ஒழிந்த மகளிரெல்லாம் அரசன் படையாகப் படைவகுத்து, மாலைமுதலிய கருவிகளையேந்தி, புணையின் புறத்தைத் தழுவி, நீர்க்கண்ணே போர்த்தொழிலைத் தொடங்கினாரென்க. (ருஎ)

---

2654. மாடத்தையுடைய நீரணிவாவியில்; பரி. 10 : 27; சிலப். 10 : 25; பெருங். 1. 40 : 17, 42 : 39. நேர்ம்புணை - மெல்லிய தெப்பத்தை. சிவிறி - நீர்வீசு கருவி. மன்னற்கும் - சீவகனுக்கும். வகுத்து - செய்து. இந்நீர் வாவியைக் கண்டருளுக என்றார். இறைவ என்றது சீவகனை; விளி.

2655. கணம் - கூட்டம். மலையரசன் மங்கை - காந்தருவதத்தை. பவித்திரன் : சீவகன்; சீவக. 2311. மாலை முதலிய கருவிகள்; சீவக. 2654; 2656. புணையின் புறத்தைத் தழுவி; புணை - தெப்பம். நீர் - நீரின் கண்ணே. மு : "மாற்று மன்ன ராகுமி னனைத்தும், உரிமை மகளி ரொடு செருமீக் கூறிக்,—...அரச குமர ரார்ப்பொலி யரவமும்" (பெருங். 1. 41 : 20-23)

2656. தூமலர் மாலை வாளாச் சுரும்பெழப் புடைத்துந் தேன்சோர், தாமரைச் சதங்கை மாலை சக்கர மென்ன வீழ்த்தும், காமரு கணைய மாகக் கண்ணிக ளொழுக விட்டும், தோமர மாகத் தொங்கல் சிதறுபு மயங்கி னாரே.

தேன்சோர் தாமரை - கைகள்.

(இ - ள்.) அங்ஙனம் போர்தொடங்கின மகளிர், கையாலே மாலையை வாளாக ஓச்சியும், ஒருதலைச் சதங்கை மாலையைப் [1] பாராவளை யாக எறிந்தும், கண்ணிகளைக் கணையமாக முன்னே மிதக்கவிட்டும், பரியமாலைகளைத் தண்டாகச் சிதறுநின்றும் தம்மிற் கலந்தாரென்க. (ரு அ)

2657. (க) அரக்குநீர்ச் சிவிறி யேந்தி யாயிரந் தாரை செல்லப், பரப்பினுள் பாவை தத்தை பைந்தொடி மகளி ரெல்லாம், தரிக்கில ராகித் தாழ்ந்து தடமுகிற் குளிக்கு மின்போற், செருக்கிய நெடுங் கண் சேப்பச் சீதநீர் மூழ்கினாரே.

2658. (உ) தானக மாட மேறித் தையலார் ததும்பப் பாய்வார், வானகத் திழியுந் தோகை மடமயிற் குழாங்க ளொத்தார், தேனின மிரியத் தெண்ணீர் குளித்தெழுந் திருவி னன்னார், பான்மிசைச் சொரியுந் திங்கள் பனிக்கடன் முளைத்த தொத்தார்.

---

2656. வாள் - அறுக்கும் வாள்; ரம்பமெனப்படும்; பெருங். 1. 41: 12. தாமரை யென்றது கைகளை. சதங்கை மாலையைச் சக்கரமாக வீழ்த்தியும்; பெருங். 1. 41 : 9. கண்ணிகளைக் கணையமாக ஒழுகவிட்டும்; பெருங். 1. 41 : 13. தொங்கலைத் தோமரமாகச் சிதறுபு; தொங்கல் - பெரியமாலை. தோமரம் - தண்டு. இதிற் கூறப்பட்ட மாலைகளின் இயல்பு: குறிஞ்சிப். 103 - 4, அடிக்.

(உரை) [1] பாராவளை - சுழல்படை; இது பாராவளையமெனவும் வழங்கப்படும்; பரி. 15 : 61, பரிமேல்; திருவால. 39 : 19; "சுழல் வட்டம் பாராவளையே" (பிங்கலந்தை, 15 : 60)

2657. சிவிறி : நீர்வீசுகருவி. பாவையாகிய தத்தை பரப்பினுள். முகிலிற் குளிக்கும் மின்னலைப்போல; குளிக்கும் - மறையும். மகளிரெல்லாம் நீரில் மூழ்கினர்.

2658. தானகமாடம்-விரிந்த இடத்தையுடைய நீர்மாடம்; "தானக மாடமொடு தலைமணந் தோங்கிய" (பெருங். 1. 38 : 81); "தானகமணி நிலைச்சுடர்" (சூளா. இரத. 62). மாடமேறிப் பாய்வார் மயிற்குழாங்களை

2659. (ரு) கண்ணிகொண் டெறிய வஞ்சிக் காறளர்ந் தசைந்து சோர்வார், சுண்ணமுஞ் சாந்தும் வீழத் தொழுதன ரிரந்து நிற்பார், ஒண்மலர் மாலை யோச்ச வொசிந்துகண் பிறழ வொல்கி, வெண்ணெயிற் குழைந்து நிற்பார் வேற்கணா ராயி னாரே.

இவைமூன்றும் ஒருதொடர்.

(க) அரக்குநீர் - இங்குலிகம் கரைத்தநீர்; தடத்துநீர். வெண்முகி லின் மறையுமின்போல்.

(உ) தன்னகமாடம்: விகாரம்; நீரகத்துச்செய்த பல நிலங்களை யுடைய மாடம். பால் - பால்போலுமொளி.

(ரு) கால்தளர்ந்து அசைந்து - நின்ற நிலைகுலைந்து இளைத்து. கண் பிறழ ஒல்கி - கண் பிறழ்ந்து பார்க்கும்படி ஒதுங்கி.

(இ - ள்.) அங்ஙனம் இரண்டு படையும் கலந்த பின்னர்த் தத்தை சிவிறியை ஏந்தி ஆயிரந்தாரையை முன்னர் நின்ற மகளிர்மேலே செல்ல விட்டாள்; அதனைத் தையலாரெல்லாரும் தரிக்கமாட்டாராய்க் குறைந்து கண்சிவப்ப நீரிலே மூழ்கினார்; அங்ஙனம்மூழ்கி அதனுட் சிறிதுபொழுது உறைதலாற்றாராய் மாடத்தேறிப்பாய்வார், மயிற்றிரளை ஒத்தார்; அத னுட் சிறிதுபொழுது உறைந்தெழும் திருவினன்னார், தமது முகந் தோன்றியபொழுது திங்கள் கடலில்முளைத்த தன்மையை ஒத்தார்; இங்ஙனமிவர்கள் குறைந்த பின் பின்னே வந்துபொருத வேற்கண்ணார், அவள் அதனை நீக்கிக் கண்ணிகொண்டெறிய அஞ்சிச் சோர்வார்; சுண்ணமும் சாந்தும் வீழ எறிய இரந்துநிற்பார்; மாலையை ஓச்சக் குழைந்து நிற்பாராயினாரென்க. (ருஎ - சுக)

2660. கூந்தலை யொருகை யேந்திக் குங்குமத் தாரை பாயப், பூந்துகி லொருகை யேந்திப் புகுமிடங் காண்டல் செல்லார், வேந்தனைச் சரணென் றெய்த விம்முறு துயர நோக்கிக், காய்ந்து பொற் சிவிறி யேந்திக் கார்மழை பொழிவ தொத்தான்.

ஒத்தார். தேனினம் - வண்டின் கூட்டங்கள். குளித்து - மூழ்கி. பால் போலும் ஒளியைச் சொரிகின்ற திங்கள். முளைத்தது - தோன்றியதை. மகளிர் முகத்துக்குத் திங்கள் உவமை.

2659. எறிய - தத்தை எறிதலால். ஓச்ச - ஓச்சுதலால். வெண் ணெயின் - வெண்ணெயைப்போல. வேற்கணார் இவ்விதம் நிற்பாராயினா ரென்க.

2660. கூந்தலை...துகிலொரு கையேந்தி; கலிங்கத். 46; "அகி லேந்து கூந்த லொருகையி லேந்தி யசைந்தொருகை, துகிலேந்தி" (தஞ்சை. 27). சரண் - அடைக்கலம். கார் - மேகம்.

(இ - ள்.) அவர்கள் அங்ஙனமாயபின்பு தத்தை மீண்டும் சிவிறியை ஏந்தி வேந்தனருகே அணியாக நின்ற மகளிர்மேலே விட்ட குங்குமத் தாரை அவர்கள் மேலேபரக்க, அவர்கள் அதற்கு ஆற்ருதே கூந்தலை ஒருகையாலே ஏந்தித் துகிலை ஒருகையாலே ஏந்திப் புகுமிடங்காணுராய் வேந்தனைச் சரணென்று சேர, அவனும் அவர்கள் வருத்தத்தைப் பார்த்துக் காய்ந்து சிவிறியை ஏந்திக் கார்தான் மழைபொழியுந் தன்மையை ஒத்தானென்க. (கூஉ)

2661. வீக்கினுன் ருரை வெய்தாச் சந்தனத் தளிர்நன் மாலை
ஒக்கினுர் கண்ணி சுண்ண முடற்றினு ருருவச் சாந்திற்
பூக்கமழ் துகிலுந் தோடு மாலையுஞ் சொரியப் போர்தோற்
ருக்கிய வநங்கன் சேனை யாறலா ருயிற் றன்றே.

(இ - ள்.) அங்ஙனம் பொழிந்தபின்பு, தத்தையைச் சூழ்ந்த மகளிர் சந்தனத்தளிர் விரவிய மாலையை ஓச்சினுர்; ஓச்சிப் பின்னும் கண்ணியாலும் சுண்ணத்தாலும் சாந்தாலுமெறிந்து அவனை உடற்றினுர்; அவனும் பின்னர்ச் சிவிறியில் தாரையை வெய்தாம்படி முறுக்கினுன்; அதற்கு ஆற்ருதே முன் போரையாக்கிய அச்சேனை, துகிலும் தோடும் மாலையும் சிந்தக் கெட்டு வழியல்லா வழிகளிலே போயிற்றென்க.

[1] மகளிரெல்லாம் காமன்படையாதலின், தத்தைசேனையையும் 'அநங்கன்சேனை' என்ருர். (கூஙு)

2662. அன்னங்க ளாகி யம்பூந் தாமரை யல்லி மேய்வார்
பொன்மயி லாகிக் கூந்தல் போர்த்தனர் குனிந்து நிற்பார்
இன்மலர்க் கமல மாகிப் பூமுகம் பொருந்த வைப்பார்
மின்னுமே கலையுந் தோடுங் கொடுத்தடி தொழுது நிற்பார்.

(இ - ள்.) அங்ஙனங் கெட்டவர்கள், அன்னங்களாய் அல்லியை மேய்வார்; மயிலாய் மயிரால் மறைத்துக்கொண்டு நிற்பார்; உடம்பை மறைத்துத் தாமரைப்பூவாய்ப் பூவுடன் முகத்தைப் பொருந்தவைத்து நிற்பார்; திறை கொடுத்துத் தொழுது நிற்பாராயினுரென்க. (கூச)

---

2661. வெய்தா - வேகமாக. மாலையை ஓக்கினுர். உடற்றல் மகளிர் தொழில். தோடு - காதணி. அநங்கன் சேனை - மகளிர்.

(உரை) [1] சீவக. 458.

2662. மகளிர்க்கு அன்னமும், மயிலும், தாமரையும் உவமைகள். கமலம் - தாமரைப் பூ.

2663. பண்ணுரை மகளிர் மாலை பைந்துகில் கவர்ந்து கொள்ளக், கண்ணுரை மகளிர் சோர்ந்து காரிருட் டிவளு மின்போற், பெண்ணுரைப் பிடிக்கைக் கூந்தற் பொன்னரி மாலை தாழ, வெண்ணுரை யுடுத்து நின்றார் வேந்தனைக் குண்ண நின்றார்.

பண்போலும் உரையினையுடைய மகளிரென்றது, அரசன் படையை. தம் கண்ணினாலே அரசனுக்கு வருத்தத்தையுரைக்கு மகளிரென்றது, அரசனைச் [1] சேவித்தற்குரிய மகளிராய் ஈண்டுத்தத்தையோடு கூடின படையை; பிடிக்கைபோலப் பின்னின கூந்தல்.

(இ - ள்.) அவர்கள் அங்ஙனமாய பின்னர்ப் பண்ணுரைமகளிர் கண்ணுரை மகளிருடைய மாலையையும் துகிலையும் கவர்ந்து கொள்ளுதலிற் பொன்னரி மாலை இருளில் நுடங்கு மின்போற்றாழச் சோர்ந்து தமது பெண்தன்மையைப் பலருங்கூறவேண்டி வெண்ணுரையை யுடுத்து நின்றவர், அரசன் தமதழகை நுகரநின்றாரென்க.

தமக்குத் தோற்றமை தோன்றத் துகிலைக் கவர்ந்தாரென்க. பெண்களுக்கு உவமையாக உரைக்கப்படும் பிடியென்றுமாம். (சா ரு)

2664. (க) தன்படை யுடையத் தத்தை சந்தனத் தாரை வீக்கி, ஒன்பது முகத்தி னோடி யுறுவலி யகலம் பாயப், பொன்படு சுணங்கு போர்த்த பொங்கிள முலையிற் றாவான், முன்படு குலிகத் தாரை முழுவலி முறுக்க லுற்றான்.

2665. (உ) மெய்ப்படு தாரை வீழி னோமிவட் கென்ன வஞ்சிக், கைப்படை மன்ன னிற்பக் கதுப்பயன் மாலை வாங்கிச், செப்படு முன்கை யாப்பத் திருமகன் றொலைந்து நின்றான், பைப்புடை யல்கு லாளைப் பாழியாற் படுக்க லுற்றே.

---

2663. பண்போல் உரையையுடைய மகளிர். கண்ணால் உரைக்கும் மகளிர். இருளில் திவளும்; திவளும் - விளங்கும். பெண் - கட்புலனாய அமைதித் தன்மை. பிடிக்கைக் கூந்தல்: "பிடிக்கை யன்ன பின்னுவீழ் சிறுபுறம்" (சிறுபாண். 191); "பிடிக்கை யன்ன பின்னகம்" (அகநா. 9); பெருங். 1. 40 : 193 - 5. நோக்கு - அழகு.

2664. உடைய - தோற்றுப் போக. தத்தை - காந்தருவதத்தை; நாமைக தேசம். உறுவலி அகலம் - சீவகனது மார்பில். சுணங்கு - தேமல். தாவானாகி. முழுவலி : சீவகனெனலுமாம்.

(உரை) [1] முருகு. 199 - 205, ந.

2665. நோம் - துன்பமுண்டாகும். கதுப்பு - கூந்தல். செப்பட - செவ்விதாக. யாப்ப - கட்ட. பைப்புடை - பாம்புப் படத்தின் பக்கத்தைப் போன்ற. பாழி - வன்மை.

2666. (ரு) அடுத்தசாந் தலங்கல் சுண்ண மரும்புனல் கவர வஞ்சி, உடுத்தபட் டொளிப்ப வொண்பொன் மேகலை யொன்றும் பேசா, கிடப்பமற் றரச ளேக்கிக் கெட்டதுன் றுகின்மற் றென்ன, மடத்தகை நாணிப் புல்லி மின்னுச்சேர் பருதி யொத்தான்.

இவைமூன்றும் ஒரு தொடர்.

(க) வீக்கி - வீக்க. முன்பு அடு - தத்தையது வலியை அடுகின்ற.

(உ) கைப்படை - சிவிறி. செப்பட - செவ்விதாக. பைப்புடை - படத்தின் பக்கம். பாழி - வலி.

(ரு) பட்டு ஒளிப்ப - நனைந்தபடியாலே மெய்ம்முழுதும் தோன்றும் படி பட்டு ஒட்டிக்கொள்ள. துகில் - வெண்பட்டு. புல்லி - புல்ல.

(இ - ள்.) அவரழுகை அங்ஙனம் நுகர்ந்த மன்னன், அல்குலாளைச் சாந்து அலங்கல் சுண்ணமென்கின்றவற்றால் அகப்படுக்கலுற்றான்; உற்றவன், அப்பொருள்கட்கு அடுத்த வலியாலே அவற்றைக்கொண்டு எறிதற்கு அஞ்சி நிற்ப, தத்தை தன்படை முன்னர்க்கெட அவள் பொருதே ஒன்பது தாரையாக ஓடி உறுவலி யகலத்தே பாயும்படி சந்த னத் தாரையை வீக்க, அதுகண்டு திருமகன் முன்படு குலிகத்தாரையை முழுவலியோடே முறுக்கலுற்றான்; உற்றவன் கைப்படையின் மெய்ப்படு தாரை இளமுலைமேல் வீழின், இவட்குநோமென்றஞ்சிச் செவ்விதாகத் தூவானுய்த் தொலைந்து நின்றான்; அதுகண்டு அவள் மாலையைவாங்கி முன்கையையாப்ப, ஆண்டுப் புனல் இவளுடுத்த வெண்பட்டினைக் கவரு கையினாலே, அப்பட்டு மேகலை சிறிதும் பேசாதே கிடக்கும்படி ஒளிப்ப, பின்னை அரசன் அதனைநோக்கி நினதல்குலில் துகில் கெட்டுப்போயிற் றுக் காணென, அதுகேட்டு அவள் நாணித் தன்னைத்தழுவ, அவன் ஆண்டு மின்னுச்சேர்ந்த பருதியை ஒத்து நின்றானென்க. (சுசு - அ)

2667. விம்மகிற் புகையின் மேவி யுடம்பினை வேது செய்து
கொம்மென நாவி நாறுங் கூந்தலை யுலர்த்தி நொய்ய
அம்மல ருரோமப் பூம்பட் டுடுத்தபி னனிச்ச மாலை
செம்மலர்த் திருவி னன்னார் சிகழிகைச் சேர்த்தி னாரே.

---

2666. அலங்கல் - மாலை. உன் துகில் கெட்டது என்ன. என்ன - என்று சீவகன் கூற. மடத்தகை - காந்தருவதத்தை. புல்லி - சீவகனைப் புல்ல. அடி. 2 - 4 : பெருங். 1. 40 : 148 - 51. காந்தருவதத்தைக்கு மின்னும், சீவகனுக்குப் பருதியும் உவமைகள்.

2667. விம்முகின்ற அகிற் புகையில் மேவி; விம்முதல் - கக்குதல். நாவி - கஸ்தூரி. நொய்ய - மெல்லிய. அம்மலர் - அழகிய மலர்த்

கொம்மென - விரைய. மலர்த்தொழிலையுடைய பொலிவுபெற்ற பட்டு.

(இ - ள்.) அங்ஙனம் போர்செய்த பின்னர்த் திருவன்னூர், விரையத் தமது கூந்தலையுலர்த்தி அகிற்புகையிலே மேவி உடம்பை வேதுகொண்டு பட்டையுடுத்தபின் அனிச்சமாலையை முடியிலே சேர்த்தியிருந்தாரென்க. (௬௯)

---

## ௯. இருதுநுகர்வு

### (வேறு)

2668. கார்கொள் குன்றன கண்கவர் தோளினான்
நீர்கொ ணீரணி நின்றுக னற்றலின்
வார்கொண் மென்முலை வம்பணி கோதையார்
ஏர்கொள் சாயலுண் டாடுமற் றென்பவே.

(இ - ள்.) அத்திருவன்னூர் அங்ஙனமிருந்தபின்னர், அவருடைய நீர்மை கொண்ட நீர்க்கோலம் அரசனுடைய உள்ளத்தேநின்று வருத்துதலின், அவரழகுகொண்ட மென்மையை அவன் முன்னர்க் கண்ணாலே நுகர்ந்து, பின்னர் அவரோடு மேல் விளையாடுமென்க.

ஆடுமென்றது, ஈண்டு எதிர்காலமுணர்த்திற்று; என்றது, மேற்கூறுகின்ற முதுவேனில் முதலிய ஆறுகாலத்திலும் விளையாடுமென்றவாறு. (௭0)

### [முதுவேனில்]

2669. வேனில் வாய்க்கதிர் வெம்பலின் மேனிலைத்
தேனு லாங்குளிர்ச் சந்தனச் சேற்றிடைத்
தானு லாய்த்தட மென்முலைத் தங்கினான்
பானி லாக்கதிர் பாய்தரு பள்ளியே.

---

தொழிலையுடைய. உரோமப் பூம்பட்டு - எலி மயிராற் செய்த பொலிவு பெற்ற பட்டு; "உருவ மார்ந்தன வுரோமப் பட்டுடுத்து" (சீவக. 2425). அனிச்சமாலையைச் சிகழிகையில் சேர்த்தினர்; சிகழிகை - மயிர்முடி. திருவினன்னூர் - திருமகளைப் போன்றவர்; எழுவாய்; இன் : அசை.

2668. கார் - மேகம். குன்றன்ன தோளினான் : சீவகன். நீர் கொள் நீரணி - மகளிரது நீர்மைகொண்ட நீர் விளையாட்டு. முலையில் வம்பை அணிந்த கோதையாரது சாயலை; வம்பு - கச்சு. சாயல் - மென்மை. உண்டாடும் - நுகர்வான்.

2669. வேனில்வாய் - முதுவேனிற் பருவத்தே. கதிர் வெம்பலின் - வெயில் கொதித்தலால். தான் உலாய் - தான் பொருந்தி. நிலாப் பாயும் பள்ளியில் முலைத்தடத்தே தங்கினான்.

(இ - ள்.) முதுவேனிற்காலத்து ஞாயிறு கொதித்தலின், அதற் காற்றுதே மேனிலத்தில் தேக்கின சந்தனச்சேற்றிடையிலே தான் உலாவிப் பின்னர் நிலாமுற்றத்திற் பள்ளியிலே அம்மகளிர் முலைத் தடத்தே சேர்ந்தானென்க. (எக)

2670. முழுது மெய்ந்நல மூழ்கலி னீர்சுமந்
தெழுது கண்ணிரங் கப்புரு வக்கொடி
தொழுவ போன்முரி யச்சொரி பூஞ்சிகை
அழுவ போன்றணி நித்தில முக்கவே.

(இ - ள்.) அங்ஙனஞ் சேர்ந்தவன், அவர்கள் மெய்ந்நலமாகிய தடத்தே முழுது மூழ்குதலின், அதற்கஞ்சிக் கண் நீர்சுமந்து இரங்கா நிற்க, புருவம் நீ வருத்தினையென்று அதற்குத் தொழுவனபோலே வளையாநிற்க, பூஞ்சிகை அணிந்த நித்திலம் அப்பூஞ்சிகை அழுவன போலே சிந்தினவென்க. (எஉ)

2671. எழுத்தின் பாடலு மாடலு மென்றிவை
பழுத்த கற்பகப் பன்மணிக் கொம்பனார்
அழுத்தி யன்னவ ணிவளைத் தோண்மிசைக்
கழிக்கு மைங்கணைக் காமற்குங் காமனே.

(இ - ள்.) காமனுக்கும் வருத்தத்தைச் செய்கின்றவன், பாட்டையும் கூத்தையும் கேட்டும் கண்டும் அடிப்பட்ட மகளிர்தோண்மிசைக் கூட்டத் தாலே அம்முதுவேனிற் காலத்தைக் கழியாநிற்குமென்க. (எரு)

[கார்]

2672. நீர்து ளும்பு வயிற்றின் னிழன்முகில்
பார்து ளும்ப முழங்கலிற் பல்கலை
ஏர்து ளும்ப வெரீஇயிறை வற்றழீஇக்
கார்து ளும்பு கொம்பிற்கவி னெய்தினார்.

2670. நலத்தே முழுதும் மூழ்கலின். நலம் - மகளிரின்பம். எழுது கண்ணில் நீர் சுமந்து இரங்க. எழுதுகண் - மையெழுதிய கண். முரிய - வளைய. நித்திலம் உக்க - முத்துக்கள் சிந்தின.

2671. பழுத்த - முற்றிய. கொம்பனார் - மகளிர். அழுத்தியன்ன வளையணிந்ததோள். காமற்கும் காமன் - சீவகன்.

2672. முகில் - மேகம். பார் - பூமி. கலை - மேகலைகள். வெரீஇ - அஞ்சி. இறைவன் - சீவகன். கொம்பின் - பூங்கொம்பைப்போல.

நிழல் - ஒளி. துளும்புதல்நான்கும் அசைதலாம்.

(இ - ள்.) அங்ஙனம் அக்காலங்கழிந்த அளவிலே, முகில் முழங்கலின், அதுகேட்டு மகளிர் அஞ்சி இறைவனைத்தழுவிக் காராற் கவின்பெற்று அசையுங் கொம்புபோலக் கவின்பெற்றாரென்க. (எச)

2673. இழிந்து கீழ்நிலை யின்னகிற் சேக்கைமேற்
கிழிந்து சாந்தழி யக்கிளர் மென்முலை
தொழிந்து மட்டொழு கத்துதை தார்பொர
அழிந்த மேகலை யஞ்சிலம் பார்த்தவே.

[1] தொழிந்து - தொழித்து; விகாரம்; என்றது சிதறியென்றதாம். பூக்கிழிந்து மட்டுச் சிதறியொழுகும்படி தார் பொர.

(இ - ள்.) அங்ஙனம் கவின்பெற்றவர்கள், அம்முகில் மழைபெய்தலிற் குளிர்ந்து, கீழ்நிலத்தேயிழிந்து அகிற்சேக்கைமேலேயிருந்த பின்பு அரசனது தூசிப்படை முலைச்சாந்தழியப் பொருதலின், அதற்கெதிரே அவர் மேகலைகள் பொருதழிந்தன; அதுகண்டு மகிழ்ந்து பின்னர்ச் சிலம்புகளார்த்தனவென்க.

மகளிர்தொழிலால் மேகலையும், தலைவன்றொழிலாற் சிலம்பும் ஆர்த்தன. (எரு)

2674. தேனி ருலன தீஞ்சுவை யின்னடை
ஆன ருமுலைப் பாலமு தல்லதொன்
றுனு மேவல ரச்சுற வெய்திய
மான ருமட நோக்கிய ரென்பவே.

வடிவினாலும், மென்மையாலும், இனிமையாலும் இருலையொத்த அடை. எந்நாளும் பாலறாத ஆனினது முலையிற்பாலமுதம்; என்றது, சினைமேலும் கறக்கும்பசுவெனப் பசுவினது விசேடங் கூறிற்று. அமுதென்றதனால், “பசுவினமுது கொற்றிப் பாலே காம நுகர்வார்க் குரித்து” என நூலிற்கூறியவாறே கூறினர். அச்சமுற்ற மானினது நோக்கம் விடாத நோக்கியர்.

2673. கீழ்நிலையில் இழிந்து; இழிந்து - இறங்கி. மட்டு - தேன். முலைச்சாந்து அழியத் தார் பொர; தார் - மார்பின் மாலை. மேகலை அழிந்த.

(உரை) [1] சீவக. 1986.

2674. தேனிருல் - தேனடை; “இருஅல் புரையு மெல்லடை” (மதுரைக். 624); “மெழுகு மெல்லடை” (புறநா. 103). அரு - நீங்காத. ஒன்றுனும் - வேறொன்றாயினும். அச்சுறவு - அஞ்சுதல். மான் - மானினுடைய பார்வை.

**(இ - ள்.)** அங்ஙனம் காமநுகர்கின்ற நோக்கியர், இக்கார்காலத்திற்கு உரித்தாகக்கூறிய அடையையும் பாலமுதையும் நுகர்வதல்லது அவிழ்பதம் சிறிதும் நுகராராயினரென்க. (எசு)

[கூதிர்]

(வேறு)

2675. (க) கூதிர்வந் துலாவலிற் குவவு மென்முலை
வேதுசெய் சாந்தமும் வெய்ய தேறலும்
போதவிழ் மாலையும் புகையுஞ் சுண்ணமும்
காதலித் தார்கருங் குவளைக் கண்ணினார்.

2676. (உ) சுரும்புநின் றருமலர்த் தொங்க லார்கவின்
அரும்புகின் றார்கட லமிர்த மேயென
விரும்புகின் றனிள வேனில் வேந்தனுஞ்
சரங்கள்சென் றழுத்தலிற் றரணி மன்னனே.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) முலையை வெம்மை செய்யுஞ் சாந்தம் - அகிற்சாந்தம். வெய்ய தேறல் - அக்காலத்திற்கு ஆமென்று விரும்பிய தேறல்.

**(இ - ள்.)** கார்கழிந்து கூதிர்வந்து பரத்தலின், கண்ணினார் சாந்த முதலியவற்றைக் காதலித்தார்; அதனை உட்கொண்டு, காமன், அரசன் மேலே சரங்களை யழுத்தலின், அவ்வேந்தன் அவர்களிருக்கின்ற இடத்தே அப்பொருள்களைக்கொண்டு சென்று கொடுத்து அத்தொங்கலார் அழகரும்புகின்றவர்களை அமுதமென்றே கருதி அக்கூதிர்க்காலமெல்லாம் நுகராநின்றனென்க. (எஎ-அ)

2677. குழைமுக மிடவயிற் கோட்டி யேந்திய
அழனிறத் தேறலுண் மதிகண் டையென
நிழன்முகப் பகைகெடப் பருகி நீள்விசும்
புழலென நோக்குவாண் மதிகண் டேடினாள்.

2675. வேது - வெம்மை; "வேதணி சரத்தினன்" (தே. திருஞா. பிரமபுரம், மின். 2); "தடமுலை வேதுகொண் டொற்றியும்" (கலிங்கத். 33). வெய்யதேறல் - வெம்மையையுடைய கள்ளின் தெளிவுமாம்; "உண்ண மதுவும்" (பெருங். 1. 38 : 60). போது - மலரும் பருவத் தரும்பு. புகை - அகிற்புகை.

2676. அரு - நீங்காத. கவின் அரும்புகின்றார் - அழகு தோற்று கின்ற மகளிரை. வேனில் வேந்தன் - மன்மதன். சரங்கள் - அம்புகள். தரணி மன்னன் - சீவகன்.

2677. அடி, 1. "குழைமுகஞ் சுடரக்கோட்டி" (சூளா. சுயம். 88). கோட்டி - சாய்த்து. அழல் நிறத்தேறலுள் - நெருப்புப்போன்ற செந்நிறத்தையுடைய கள்ளின் தெளிவில். நிழல் - ஒளி. முகப்பகை -

(இ - ள்.) அங்ஙனம் நுகருகின்றான் அக்காலத்தே தனக்குக் கொடுப்பதாக ஏந்திய தேறலைக் குழைமுகத்தை இடத்தேகோட்டி நோக்குங் குணமாலை, அதனுள்ளே தன்முகமாகிய மதிதோன்றக்கண்டு அதனை மதியாகக் கருதித் தன்முகத்திற்கும் பகையாகுந் தன்மை கெடும்படி விரையப் பருகி இனி நீள்விசும்பிலே உழல்வாயெனக்கூறி அவ்விசும்பிலே அம்மதியைக் கண்டு ஊடினாளென்க. (எகூ)

2678. (க) பருகினேற் கொளித்துநீ பசலை நோயொடும்
உருகிப்போ யின்னுமற் றுளையென் றுள்சுடக்
குருதிகண் கொளக்குண மாலை யூடினாள்
உருவத்தா ருறத்தழீஇ யுடற்றி நீக்குவான்.

2679. (உ) நங்கைநின் முகவொளி யெறிப்ப நன்மதி
அங்கதோ வுள்கறுத் தழகிற் றேய்ந்தது
மங்கைநின் மனத்தினால் வருந்த லென்றவள்
பொங்கிள வனமுலை பொருந்தி னானரோ.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) பருகினேற்கென்னும் நான்கனுருபு இன்னுமுளையென்னும் பகைப் பொருள்கொண்டது. தேறலுண்டதனாற் சிவந்ததனை மதியோடூடிச் சிவந்ததாக்கினார்.

(இ - ள்.) அக்குணமாலை எங்ஙன மூடினாளெனின், பருகினேற்கு அக்காலத்துருகிப் பின்னரொளித்துப்போய் என்னை உள்சுடவுடற்றிப் பசலை நோயோடே இன்னும் உளையாயினையென்று கூறிக் கண்சிவப்ப ஊடினாள்; அவ்வூடலைத் தழீஇ நீக்குகின்றவன், நங்காய்! அங்கேசென்று நின்முகவொளி பரத்தலாலே அஃது உள்கறுத்து அழகினின்று நீங்கித் தேய்ந்துவிட்டது; நினக்கு ஏற்ப நன்மதியோ? அன்றே; இனி,

முகத்திற்குப் பகையாகும் தன்மை. ஐயெனப் பருகி. நோக்குவாள்: குணமாலை. அடி, 2-4: கம்ப. உண்டாட்டு. 17.

2678. பசலை நோயென்றது வெளுத்த தன்மையை. கண்குருதி கொள்ள; குருதி - செந்நிறம். உருவத்தார் - அழகிய மாலை. உடற்றி - வருத்தி.

2679. நங்கை: விளி. உள்கறுத்து என்றது களங்கத்தைக் கருதி. வருந்தல் என்று - வருந்தாதே என்று சொல்லி. வனம் - அழகு.

**மங்காய்! நின்மனத்திஞல் வருந்தாதே கொள்ளென்று ஊடலை நீக்கினன்; நீக்கிப் பின்னர் அவள்முலையைப் பொருந்திஞனென்க. (அ௦ - அக)**

[முன்பனி]

(வேறு)

2680. (க) கொங்கு விம்முபூங் கோதை மாதரார்
பங்க யப்பகைப் பருவம் வந்தென
எங்கு மில்லன வெலிம யிர்த்தொழிற்
பொங்கு பூம்புகைப் போர்வை மேயிஞர்.

2681. (உ) கூந்த லின்புகைக் குவவு மென்முலைச்
சாந்த மேந்திய தமால மாலையும்
ஆய்ந்து தாங்கிஞ ரரவ மேகலை
காய்ந்து நித்திலங் கடிய சிந்திஞர்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(இ - ள்.) மாதரார், முன்னர்க் கூதிர்க்காலத்தே குளிரை அஞ்சி மேகலையைநீக்கி முத்தையும் சிந்தினவர்கள், பின்னர்ப் பனிப்பருவம் வந்ததாக, தொழிலினையும் புகையினையுமுடைய எங்குமில்லனவாகிய எலிமயிர்ப்போர்வையை மேவிஞர்; மேவி அக்காலத்திற்கு ஏற்கும்படி கடியனவற்றை ஆராய்ந்து கூந்தலிலே புகையையும், முன்னர்ச் சாந்த மேந்திய முலையிலே பச்சிலையாற்றெடுத்த மாலையையும் தாங்கிஞரென்க. (அஉ - கூ)

2682. அளிந்த தீம்பழ மிஞ்சி யார்ந்தநீர்
விளைந்த வல்விளை வரிசி வேரியும்
வளைந்த மின்னஞர் மகிழ்ந்து சண்பகம்
உளைந்து மல்லிகை யொலியல் சூடிஞர்.

---

2680. கொங்கு - வாசனை; தேனுமாம். பங்கயப் பகைப் பருவம்-தாமரைக்குப் பகையாகிய முன்பனிப் பருவம்; சீவக. 3072; நைடதம், அன். கண். 9. எலி மயிர்ப்போர்வை வெம்மையை யுடையதென்பது; சீவக. 819, அடிக். அகிற்புகையையுடைய போர்வை.

2681. கூந்தலில் இனிய புகையையும். சாந்தம் ஏந்திய : நகிலுக்கு அடை. தமாலம் - பச்சிலை மரம். மேகலையையும் நித்திலத்தையும். காய்ந்து - வெறுத்து.

2682. அளிந்த - மிகப்பழுத்த. அரிசியையும் என உம்மை விரிக்க. உளைந்து - வெறுத்து.

எலுமிச்சம்பழத்தின் நீரிலே ஆர்ந்த இஞ்சி; செவ்விஞ்சி. அரிசி வலிய விளைவாக விளைந்தன; அவை, பொரி அவல் முதலியன; கருப்புக் கட்டி முதலிய பலவுங்கூட்டி முறுகப் பொரித்தலின், வலிய விளை வாயிற்று. வேரி - மது.

(இ - ள்.) நுடங்கின மின்னையொப்பார், இஞ்சியையும் வேரியையும் பொரி அவல் முதலியவற்றையும் நுகர்ந்து, சிறுசண்பகத்தை வெறுத்து மல்லிகை மாலையைச் சூடினாரென்க.

இனி, பழமும் இஞ்சியும் நீரிலேநின்று விளைந்த வலிய விளைதலை யுடைய அல்லியரிசியுமென்று முரைப்ப. (அச)

2683. (க) தொத்து டைம்மலர்த் தொங்கல் கண்பொர
முத்து டைம்முலைக் கண்க ணொந்தவென்
றெய்த்த டிச்சிலம் பிரங்கு மின்குரல்
கைத்தெ டுத்தலிற் காமந் தாழ்ந்ததே.

2684. (உ) பொன்ப னிப்புறும் பொற்பி னார்நலம்
அன்ப னித்தலை யணங்க வத்தலை
முன்ப னித்தலை முழுது நீங்கிப்போய்ப்
பின்ப னித்தலை பேண வந்ததே.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) எய்த்தென்றது எய்யாதென்னும் எதிர்மறைவினைக்கு விதிவினை; அஃது அறிந்தென்னும்பொருட்டாம். கைத்து - செலுத்தி. எடுத்தல் - எழுப்புதல்.

(இ - ள்.) திருமகள் வருந்தும் பொற்பினார், அங்ஙனம் கோலஞ் செய்த நலம் அன்பனை இக்காலத்தே வருத்துதலாலே. அவனும் தனது தொங்கல் அவர்கள் முலைக்கண்ணைப்பொர முயங்கி, இம்முலைக்கண்கள் நொந்தன வென்று முன்னர்க்கூறிப்பின்னர்ப் புணர்ச்சிக்காலத்தை யறிந்து சிலம்பினது இரங்குங்குரலைச் செலுத்தி எழுப்புதலாலே, காமவின்பம் அக்காலத்திலே தங்கிற்று; அதனோடே முன்பனிக்காலமும் முழுக்க நீங்கிப்போய்ப் பின்பனிக் காலம் அவர்களெதிர்கொள்ளும்படி வந்ததென்க. (அரு - சா)

---

2683. தொத்து - பூங்கொத்து. தொங்கல் - மாலை. எய்த்து - அறிந்து; சீவக. 2481. இரங்கும் - ஒலிக்கும். கைத்து - செலுத்தி; "நுகமின்றி விளாக் கைத்து" (திருவா. அதிசய. 8). தாழ்ந்தது - தங்கியது.

2684. பொன் - திருமகள். பனிப்புறும் - நடுங்குதற்குக் காரண மாகிய. அன்பனை அணங்க; அணங்க - வருத்த. முன்பனி, பின்பனி; பருவப்பெயர்கள். பேண - விரும்பும்படி.

[பின்பனி]

2685. (க) வெள்ளி லோத்திரம் விளங்கும் வெண்மலர்க்
கள்செய் மாலையார் கண்கொ ளாத்துகில்
அள்ளி யேந்திய வரத்த வல்குலார்
ஒள்ளெ ரிம்மணி யுருவப் பூணினுர்.

2686. (உ) செந்நெ ருப்புணுஞ் செவ்வெ லிம்மயிர்
அந்நெ ருப்பள வாய்பொற் கம்பலம்
மன்ன ருய்ப்பன மகிழ்ந்து தாங்கினுர்
என்ன ரொப்புமில் லவர்க ளென்பவே.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) வெள்ளிலோத்திரத்தினது வெண்மலராற்செய்த மாலை. அரத்தத்தினது நிறத்தை அள்ளிக்கொண்டு கண்ணுற் பார்க்கவொண்ணுத துகிலையேந்தியவல்குல்; அள்ளிக்கொள்ளுதல் - வாரிக்கொள்ளுதல். என்றது, அரத்தந்தோயாமல் அரத்தநிறத்தை இயல்பாகக்கொண்ட துகிலாயிற்று; "கோபத் தன்ன தோயாப் பூந்துகில்" (முருகு. 15) போல இத்துகிலும் இவர்க்குள்ளதென்றுர்.

(உ) நெருப்பைத் தின்னும் எலிமயிர்க்கம்பலம்; அந்த நெருப்பினளவு வெம்மைய வென்று ஆராய்ந்த பொலிவினையுடைய கம்பலம்; உய்ப்பனவாகிய கம்பலம். உய்த்தல் - திறைதருதல். என்னரும் - எத்தன்மையரும்.

(இ - ள்.) என்னரும் தமக்கு ஒத்தலையில்லாத மகளிர், குளிர்நீங்குதற்கு மாலையார், அல்குலார், பூணினுராய்க் கம்பலத்தைத் தாங்கினுரென்க.

இனி, அரத்தத்தை அள்ளியேந்தினவல்குலென்றுமுரைப்ப. 'என்னருப்புமில்லவர்' என்று பாடமோதி, எக்குற்றமுமில்லாதாரென்றுமுரைப்ப. (அஎ - அ)

2687. ஆட லின்சுவை யமர்ந்து நாடொறும்
பாடன் மெய்ந்நிறீஇப் பருகிப் பண்சுவைத்
தோடு மாமதி யுரிஞ்சு மொண்பொனின்
மாடக் கீழ்நிலை மகிழ்ந்து வைகினுர்.

2685. வெள்ளிலோத்திர...வெண்மலர். ஐங்குறு. 301. கண்கொளாத் துகில் - இழை தெரியாத ஆடை. அரத்தத்தை அள்ளியேந்திய துகிலென்க. எரிம்மணி; சந்தம் நோக்கி ஒற்று விரிந்தது.

2686. நெருப்புண்ணுதல் எலிக்கு அடை. பொன் - பொலிவு. என்னர் - எப்படிப்பட்டவரும். ஒப்பும் என்பதிலுள்ள உம்மையை என்னர் என்பதனேடு கூட்டுக. மயிரால் ஆடை நெய்தல்; சிலப். 14 : 205 - 7.

2687. அமர்ந்தும் - விரும்பியும். மெய்ந்நிறீஇ - தம்முடம்பில் நிறுத்தி. உரிஞ்சும் - உராயும். பொன்னின் மாடம் - பொன்னுற் செய்த மாடம்.

**(இ - ள்.) அவர்கள், நாடோறும் கூத்தைக்கண்டும், மிடற்றுப் பாட்டைத் தங்கள் மெய்யிலே நிறுத்திப் பருகி யாழ் முதலியவற்றிற் பண்ணை நுகர்ந்தும் மாடத்தின் கீழ்நிலத்தே தங்கினரென்க. (அகூ)**

## (வேறு)

2688. புரிக்குழன் மடந்தையர் பொம்மல் வெம்முலை
திருக்கழற் குருசிலார் திளைக்கும் போரினுட்
செருக்குரற் சிறுபறை சிலம்பு கிண்கிணி
அரிப்பறை மேகலை யாகி யார்த்தவே.

புரிக்குழல் - [1] நெறிப்பினையுடைய குழல். செருக்குரல் - போரை உண்டாக்குங் குரல்.

(இ - ள்.) அங்ஙனம் வைகின மகளிரிளமுலையும், தலைவன்தாரும் பொருகின்ற போரிலே, சிலம்பும் கிண்கிணியும் சிறுபறையாகி, மேகலை அரிப்பறையாகி ஆர்த்தனவென்க. (கூ௦)

2689. ஏச்செயாச் சிலைநுத லேழை மார்முலைத்
தூச்செயாக் குங்குமந் துதைந்த வண்டினம்
வாய்ச்சியா லிட்டிகை செத்து மாந்தர்தம்
பூச்செயா மேனிபோற் பொலிந்து தோன்றுமே.

ஏச்செயாச்சிலைநுதல் - ஏத்தொழில் செய்தற்கு ஏறிட்டும் அத்தொழில் செய்யாத விற்போலும்நுதல்; இந்திரவில்லுமாம். வண்டினம் துதைந்த குங்குமம் - வண்டினம் படிதற்குக் காரணமான குங்குமம்; தூச்செயாக்குங்குமம் - கழுவாத குங்குமம்.

---

2688. மடந்தையர் - சீவகன் மனைவியர். பொம்மல் - பெருமை. குருசில் - சீவகன். முலையும் தாரும் திளைக்கும் போரினுள்; திளைக்கும்-பொருகின்ற. செரு - காமப்போர். சிலம்பும் கிண்கிணியும் சிறுபறையாகி. மேகலை அரிப்பறையாகி.

(உரை) [1] நெறிப்பு - நெளிவு.

2689. ஏச்செயாச்சிலை - அம்புத்தொழிலைச் செய்யாது வளைந்த வில். சிலைபோலும் நுதல். தூச்செயா - கழுவாத. வாய்ச்சி - செதுக்குகின்ற ஓர் கருவி. இட்டிகை - செங்கல். செத்தும் - செதுக்குகின்ற. பூச்செயா மேனி - கழுவாத உடம்பு.

(இ - ள்.) அங்ஙனம் புணர்ந்த மகளிர்முலையிற் பூசின பாடழிந்து கிடந்த குங்குமம், இட்டிகைவாய்ச்சியால் இட்டிகை செத்து மாந்தருடைய கழுவாத மேனிபோல் தோன்றுமென்க.

இனி, அவர் முலையிற் குங்குமத்தே செறிந்த வண்டினந்தான் இட்டிகை செத்திஞர் மேனிபோல்தோன்றுமென்றும் உரைப்ப. (கூக)

[இளவேனில்]

(வேறு)

2690. குரவம் பாவை கொப்புளித்துக் குளிர்சங் கீர்ந்த துகளே போல், மரவம் பாவை வயிருரப் பருகி வாடை யதுநடப்ப, விரவித் தென்றல் விடுதூதா வேனி லாற்கு விருந்தேந்தி, வரவு நோக்கி வயாமரங்க ளிலையூழ்த் திணரீன் றலர்ந்தனவே.

வாடைதொடங்கின காலத்தே குரவம் பூத்தலின், அத்தேனைப் பல காலுமுண்டு தெவிட்டினமைதோன்ற, 'கொப்புளித்து' என்ருர். கொப்புளித்தல் - காற்றுச் சிதற அடித்தல். பாவையிரண்டும் ஆகுபெயர். வாடைகழிகின்ற காலத்தே மரவம்பூத்த புதுமைபற்றி வயிறு நிறைய வுண்டென்ருர். இதனுல் மிகக் காற்றுச் சிதற அடியாமை கூறிற்று. வாடை நடப்ப - வாடை போகாநிற்கவென நிகழ்வு. தென்றல் விரவி வரவு நோக்கி - தென்றல் வாடை போகாநிற்க விரவிவருகின்ற வரவைக் குறித்து. இலை ஊழ்த்து வயாமரங்கள் - அதனுலே இலையுதிர்த்து வயா நோய்கொண்ட மரங்கள். அது விடு தூதா - அத்தென்றல் காமன் விடுத்த தூதாகக்கொண்டு. வேனிலாற்கு விருந்தேந்தி இணரீன்று அலர்ந்தன - அக்காமனுக்கு விருந்திடுதலை ஏறட்டுக்கொண்டு ஈன்று அலர்ந்து விருந்திட்டன.

(இ - ள்.) வாடை, கொப்புளித்துப் பருகி நடப்ப, தென்றல் விரவி வரவு நோக்கி அதனுலிலையூழ்த்து வயாநோய்கொண்ட மரங்கள் பின்னர் அது தூதாக விருந்தேந்தி இணரீன்று அலர்ந்தனவென்க.

இதனுல், 'வாடையும் தென்றலும் முன்னர்விரவித் தென்றல் பின்பு முதிர்ந்ததென்ருர். கொப்புளித்துப் பருகியென்பனவும், வயாமரமென்பதூஉம், மாற்றருஞ்சிறப்பின்மரபன்றி, வழக்கின்கண் அடிப்பட்டுச் செய்யுளின்பம் படவந்த மரபென்று மரபியலிற் பாதுகாத்தாம். (கூஉ)

---

2690. குரவம்பாவையைக் கொப்புளித்து; கொப்புளித்து - சிதற அடித்து. ஈர்ந்த துகள் - அறுத்ததனுல் உண்டான தூசி. வாடையது - வாடைக் காற்று; அது பகுதிப் பொருள் விகுதி. வேனிலாற்கு - மன்மதனுக்கு. வயாநோய் கொண்ட மரங்கள். ஊழ்த்து - சொரிந்து. இணர் ஈன்று - பூங்கொத்தைப் பூத்து.

2691. இளிவாய்ப் பிரசம் யாழாக விருங்கட் டும்பி குழலாகக் களிவாய்க் குயில்கண் முழவாகக் கடிபூம் பொழில்க ளரங்காகத், தளிர்போன் மடவார் தணந்தார்தந் தடந்தோள் வளையு மாமையும், விளியாக் கொண்டிங் கிளவேனில் விருந்தா வாட றொடங்கினன்.

இளி - இளியென்னும் நரம்பு. கணவரைப் பிரிந்தார் தம்முடைய வளை கழன்ற படியையும், மாமைநிறம் கெட்ட படியையும், தத்தங் கண வர் உணர்தற்குத் தூதுசென்ற பாணன் யாழ்மேல் வைத்துப் பாடும் பாட்டைப் பாட்டாகக் கொண்டென்க. அது, "நிலம்பெயர்ந் துறைதல் வரைநிலை யுரைத்தல், கூத்தர்க்கும் பாணர்க்கும் யாத்தவை யுரிய" (தொல். கற்பு. 28) என்பதனுணர்க; "விளியாதான் கூத்தாட்டுக் காண்டலும்" (திரி. 11) என்றார் பிறரும்.

(இ - ள்.) 'இளவேனிலென்னுங் கூத்தன், இன்னது இன்னதாகக் கொண்டு புதிதாக ஆடலைத் தொடங்கினனென்க. (கூரு)

2692. வேனி லாடும் விருப்பினால் வியன்காய் நெல்லிச் சாந் தரைத்து, நான வெண்ணெய் கதுப்புரைத்து நறுநீ ராடி யமிர் துயிர்க்கும், தேனா ரகிலின் புகைசேர்த்தி வகுத்து நாவிக் குழம் புறீஇ, ஆனாப் பளித நறுஞ்சுண்ண முகிரி னுழுதாங் கணிந் தாரே.

(இ - ள்.) அங்ஙனம் வந்த வேனிற்காலத்தே விளையாடும் விருப் பினாலே கதுப்பில் எண்ணெயைத் தேய்த்து நெல்லியை அரைத்து அச் சாந்தைக் கொண்டு நீராடிப் பின்னர்ப் புகைத்து வகிர்ந்து புழுகை வார்த்து உகிராலே நீக்கி அவ்விடத்தே கருப்பூரப் பொடியை அணிந்தா ரென்க. (கூச)

---

2691. இளியென்னும் பண்ணையுடைய பிரசம்; பிரசம் - வண்டு. இருங்கண் தும்பி குழலாக - கரியகண்ணையுடைய வண்டின் ஒலி வேய்ங் குழலாக; "குழலிசை தும்பி கொளுத்திக் காட்ட" (மணி. 4 : 3); "இருந் தும்பியின் குழலூதும்" (கார். 15); "குழல்வாய்த் தும்பியும்" (பெருங். 2. 13 : 24); களிக்கின்ற வாயையுடைய குயில்கள் முழவாக; "கடிகமழ் மாங்குயின் முழவா" (இலிங்க. நவவருட. 46). தணந்தார் - பிரிந்தார். விளி - பாட்டு. விருந்தா - புதிதாக. இளவேனில் ஆடல் தொடங்கினன். மு. "இரங்கு குயின்முழவா வின்னிசையாழ் தேனா அரங்க மணிபொழிலா வாடும் போலு மிளவேனில்" (யா - வி. 76, மேற்.)

2692. வேனில்-வேனிற் காலத்தே. நெல்லிக்காயின் சாந்தரைத்து நானம் - கஸ்தூரி. கதுப்புரைத்து - கூந்தலில் தேய்த்து. சேர்த்தி - தப் கூந்தற்கு ஊட்டி. நாவிக்குழம்பு உறீஇ - புழுகைத் தடவி. (பி - ம். 'நானக்குழம்பு'. பளிதம் - கருப்பூரப் பொடி. உகிரின் உழுது - நகத்தி னால் கூந்தலைச் சிக்கறுத்து.

2693. முத்தார் மருப்பி னிடைவளைத்த முரண்கொள் யானைத் தடக்கையின், ஒத்தே ருடைய மல்லிகையி னொலியன் மாலை யுறுப் படக்கி, வைத்தார் மணிநூற் றனைவம்பால் வளைய முடித்து வான்கழுநீர், உய்த்தாங் கதனுட் கொளவழுத்திக் குவளைச் செவித்தா துறுத்தாரே.

(இ - ள்.) முன்னர் முன்பனிக்காலத்திற்கு ஐம்பாலிலே மருப்பி னிடத்தே சுற்றிய யானைத்தடக்கையினை யொத்து ஏருடையனவாகிய மல் லிகை மாலையையடக்கி அதனருகே வகைமாலையையும் வைத்தவர்கள், இவ்விளவேனிற்காலத்து அம்மயிரினைத் திரளமுடித்து அதனுள்ளே கழு நீர்மாலையைச் செலுத்தி அதுகொள்ள அழுத்தி ஆங்கே குவளையினது செவ்வித்தாதையும் உறுத்தினரென்க.

மல்லிகையினொலியல் - மல்லிகையாற்கட்டின மாலை. உறுப்புமாலை யென்க. (கூ௫)

2694. புகையார் வண்ணப் பட்டுடுத்துப் பொன்னங் கலைகள் புறஞ்சூழ்ந்து, நகையார் கவுள கிண்கிணியுஞ் சிலம்பு நாய்நாச் சிறடிமேற், பகைகொண் டார்போற் சுமாஅய்க் கண்பின் பரூ உக்காம் பனைய கணைக்கால்சூழ்ந், 'தகையார்ந் திலங்கும் பரியகந் தாமே கவினச் சேர்த்தினர்.

கண்பின்பரூஉக்காம்பு - இரண்டுகண்ணுக்கும் பின்னாகிய பரிய தண்டு; என்றது இரண்டு கண்ணுக்கும் நடுவாகிய பச்சைமூங்கிலை; "தேனெய்பெய், வாடாத காம்பேபோல்" (சீவக. 176) என்றார் முன்னும்.

---

2693. தடக்கையின் ஒத்து - வளைந்த கையைப் போன்று; "கோட் டிடை வளைஇய குஞ்சரத் தடக்கையிற், சூட்டொடு விரைஇச் சுற்றுபு முடித்து" (பெருங். 2. 5 : 174 - 5). மணிநூற்றனைய ஐம்பால் - நீல மணியைக் கம்பியாக்கினலொத்த மயிர்; சீவக. 1784. கூந்தலுக்கு யானைத்துதிக்கையும் மல்லிகைமாலைக்குத் தந்தமும் உவமைகள். கழுநீர் - செங்கழு நீர் மாலை. செவி - செவ்வி.

2694. புகை - அகிலின் புகை. வண்ணம் - நிறம். பொன்னங்கலை கள் - பொன்னாலாகிய மேகலைகள்; அம் : அசை. புறம்சூழ்ந்து-பட்டுக்கு மேலே வளைத்து. நகை - ஒளி. நாய்நாவைப்போலும் அடி; பொருந. 42; சிறுபாண். 17-8; மலைபடு. 42-3; நற். 252; பெருங். 2. 19 : 176- 85. சுமாஅய் - சுமத்தி. கண் - கணு. பரியகம் - காற்சரியென்னும்

(இ - ள்.) அவர்கள், இடையோடு பகைகொண்டாரைப்போலே தாம் பட்டையுடுத்து அதன்மேலே மேகலையை வளைத்து அடிமேலே கிண்கிணியையுஞ் சிலம்பையுஞ் சுமத்திக் காம்பனைய கணைக்காலிலே பரியகஞ்சூழ்ந்து கவினச்சேர்த்திஞரென்க.

அகை - கூறுபாடு ; சூழ்ந்துதகையென்பது விகாரமுமாம். (கூசு)

2695. பிடிக்கை வென்று கடைந்தனபோற் பஞ்சி யார்ந்த திரள் குறங்கு, கடித்துக் கிடந்து கவின்வளருங் காய்பொன் மகரங் கதிர்முலைமேல், உடுத்த சாந்தின் மிசைச்செக்க ரொளிகொண் முந்நாட் பிறையேய்ப்பத், துடிக்குங் கதிர்சேர் துணை முத்தந் திருவில் லுமிழ்ந்து சுடர்ந்தனவே.

ஒழுகநோக்குதலிற் பிடிக்கையைவென்று, திரட்சியாலும் சருச்சரையின்மையாலும் பஞ்சியாலும் கடைந்தனபோல் திரண்ட குறங்கு.

(இ - ள்.) அவர்கள் பின்னருமணிதலிற் குறங்கைக் கௌவிக் கிடந்து அழகுவளரும் குறங்குசெறியும், செக்கர்வானிற் பிறையையொப்ப முலைமேற் பூசின சாந்தின்மேலே கிடந்தசையும் கதிரையுடைய முத்தமும் வில்லைக் கான்று ஒளிவிளங்கினவென்க. (கூஎ)

2696. குழியப் பெரிய கோன்முன்கை மணியார் காந்தட் குவிவிரன்மேற், கழியப் பெரிய வருவிலைய சிறிய மணிமோ திரங்கனலத், தழியப் பெரிய தடமென்றோட் சலாகை மின்னத் தாழ்ந்திலங்கும், விழிகண் மகர குண்டலமுந் தோடுங் காதின் மிளிர்ந்தனவே.

பெரியவென்றது, ஆகுபெயராற் [1] கேவணங்களை. அருவிலையவென்றது, ஆகுபெயராற் பூணிணை. குழிய, தழியவென்பன செயவெனெச்சம்.

---

2695. பிடிக்கை - பெண்யானையின் துதிக்கை ; துடைக்கு உவமை. திரள்குறங்கு - திரண்ட துடை. கடித்து - கௌவி. மகரம் - குறங்கு செறியென்னும் ஆபரணம். செக்கர் - செவ்வானில். முந்நாட்பிறை - மூன்றும் நாட் பிறை. முத்தம் - முத்துமாலை. திருவில் - இந்திரவில். மார்பிற் பூசிய குங்குமச் சாந்திற்குச் செவ்வானமும், முத்துவடத்திற்கு மூன்றும் பிறையும் உவமைகள் ; சீவக. 1501, அடிக்.

2696. கோல் முன்கை - திரண்ட முன்கையிடத்து. காந்தள் மலர் போலும் குவிந்த விரலின்மேல். கழிய - மிக. பெரியனவும் அரியவிலையினவும் சிறியனவுமான மணியாலாகிய மோதிரம். கனல - ஒளிவீச. தழிய - தழுவும்படி. சலாகை - காதில் இடும் கம்பி. விழித்த கண்ணையுடைய மகரம்போன்ற வடிவத்தையுடைய குண்டலம்.

(உரை) [1] கேவணம்-ஆபரணங்களில் மணிகளை அழுத்துகின்ற குழி.

(இ - ள்.) அவர்கள் பின்னரும் அணிதலின், திரண்ட முன்கை யிடத்துக் காந்தளையொத்த விரன்மேலே சிறிய மணிமோதிரம் கனலப் பெரிய தோளிலே கேவணம் குழிந்திருத்தலிற் கழியப்பெரிய மணிகள் ஆர்ந்த அருவிலையையுடைய அணிகலம் தழுவக் காதிலே மகரகுண்டல மும் தோடும் மிளிர்ந்தனவென்க.

மகரத்திற்கும் குண்டலத்திற்குமிடையில் ஒட்டின சலாகை மின்னு நிற்கத் தோளிலே தாழ்ந்திலங்கும் குண்டலம். விழித்த கண்ணையுடைய மகரம். இனி, சலாகை - வாகுவலயமென்பாருமுளர். (கூஅ)

2697. நாணுள் ளிட்டுச் சுடர்வீசு நன்மா ணிக்க நகுதாலி, பேணி நல்லார் கழுத்தணிந்து பெருங்கண் கருமை விருந்தூட்டி, நீணீர் முத்த நிரைமுறுவல் கடுச்சுட் டுரிஞ்சக் கதிருமிழ்ந்து, தோணீர்க் கடலுட் பவளவாய்த் தொண்டைக் கனிக டொழு தனவே.

நாணைத் தன்னுள்ளேயடக்கி நகுகின்ற தாலியைப் பழையநிலையிலே கிடக்கும்படிபேணி. சுடர்வீசு மாணிக்கத்தைக் கழுத்திலே அணிந்து. கண்ணுக்குக் கரிய மையை விருந்திட்டு. தோணீர்க்கடல் - தோண்டின கடல் : வினைத்தொகை ; தோள் : முதனிலை ; நீர் : இடைக்கிடப்பு.

(இ - ள்.) நல்லார், பேணி அணிந்து ஊட்டிக் கடுவைச்சுட்டு முறுவலை உரிஞ்ச, அதுபட்டுப் பவளவாய் மிக்க கதிரையுமிழ்தலாலே, தொண்டைக் கனிகள் தோற்றுத் தொழுதனவென்க. (கூகூ)

2698. மாலை மகளி ரணிந்ததற்பின் பஞ்ச வாசங் கவுட் கொண்டு, சோலை மஞ்ஞைத் தொழுதிபோற் றோகை செம்பொ னிலந்திவளக், காலிற் சிலம்புங் கிண்கிணியுங் கலையு மேங்கக் கதிர்வேலும், நீலக் குவளை நிரையும்போற் கண்ணார் காவி லிருந்தாரே.

(இ - ள்.) வேலும் குவளைநிரையும்போலும் கண்ணாராகிய அம் மகளிர், ஒப்பனைக்குறைதீர மாலையையணிந்தபின் வெற்றிலையைத் தின்று காலிற் சிலம்பு முதலியன ஏங்கக் கொய்சகம் நிலத்தேபட்டுத் துவளச் சென்று சோலையிலே மயிற்றிரளிருந்தாற்போலக் காவிலே இருந்தாரென்க. (க00)

2697. நாண் - பொன்னுண். நகு - ஒளிவீசுகின்ற. நல்லார் - மகளிர். கண்ணுக்கு மையை ஊட்டி. முத்தநிரைபோலும் முறுவல். கடுச்சுட்டு முறுவல் உரிஞ்ச - கடுக்காயைச்சுட்டுப் பொடிசெய்து பல்லைத் தேய்த்தலால்.

2698. மகளிர் மாலையை யணிந்ததற்பின். பஞ்சவாசம் - வெற்றிலை. சோலையிடத்து மஞ்ஞைத் தொழுதிபோல் ; தொழுதி - கூட்டம். தோகை- கொய்சகம். நிலம் திவள - நிலத்தே புரள. கலை - மேகலை. நிரை - வரிசை. வேலையும் குவளையையும் போன்ற கண்ணார் : மகளிர்.

2699. மணிவண் டொன்றே நலம்பருக மலர்ந்த செந்தாமரைத் தடம்போல், அணிவேன் மன்ன னலம்பருக வலர்ந்த வம்பார் மழைக்கண்ணார், பணியார் பண்ணுப் பிடியூர்ந்து பரூஉக்காற் செந்நெற் கதிர்சூடித், தணியார் கழனி விளையாடித் தகைபா ராட்டத் தங்கினார்.

(இ - ள்.) ஒருவண்டு பூக்களின் நலத்தையெல்லாம் பருகப் பூத்த தாமரைத்தடம்போலே, அரசனேபருக வம்பார்நலத்தைக் காவிலே கொடுத்த மகளிர், அணிகலம் நிறைந்த சமைத்தலையுடைய பிடியை யேறிப்போய்க் கழனியிலே விளையாடிப் பருத்த தாளினையுடைய செந்நெற் கதிரைச்சூடி அதனாலும் தணியாராய் அரசன் தமதழகைப் பாராட்ட அக்கழனியிலே தங்கினாரென்க.

இது, நகரியினின்றும்போய் நாட்டிலுள்ளனவற்றை நுகர்ந்து இன்பமுற்றமை கூறிற்று. சூடியென்றார் தொழத்தகுதலின்; "தொழுது கொண், டுண்க வுகாஅமை நன்கு" (ஆசார. 20) என்றார். (கOக)

2700. எண்ணற் கரிய குங்குமச்சேற் றெழுந்து நான நீர் வளர்ந்து, வண்ணக் குவளை மலரளைஇ மணிக்கோல் வள்ளத் தவ னேந்த, உண்ணற் கினிய மதுமகிழ்ந்தா ரொலியன் மாலை புறந் தாழக், கண்ணக் கழுநீர் மெல்விரலாற் கிழித்து மோந்தார் கனி வாயார்.

(இ - ள்.) அங்ஙனம் விளையாடிய கனிவாயார் அரசன் எழுந்து வளர்ந்து நிறத்தையுடையவாகிய குவளைமலரை விரவி உண்ணற்கினிய மதுவை மணியழுத்தி விளிம்பு பிரம்புகட்டின வட்டிலிலேந்த அதனைப்

---

2699. நீலமணிபோலும் வண்டு. நலம் - பூக்களின் அழகை. மன்னன் - சீவகன். நலம் - மகளிரது நலத்தை. அம்பு ஆர் - அம்பை ஒத்த. கண்ணார் - காந்தருவதத்தை முதலியவர்கள். சீவகனுக்கு வண்டும், அவன் மனைவியர்க்குத் தாமரைத் தடமும் உவமைகள். பணியார் பண்ணுப்பிடி - ஆபரணங்கள் நிறைந்த ஆயத்தம் செய்யப்பட்ட பெண்யானையை. பரூஉக்கால் - பருத்த தாளினையுடைய. நெற்கதிர் சூடுதல்: பெருங். 1. 42 : 68; சூளா. அரசியற். 397. தணியார் - வேட்கை தணியாதவராய். தகை - அழகு.

2700. நான நீரில் வளர்ந்து. வண்ணத்தையுடையவாகிய குவளை மலர். வண்ணம் - நிறம். அளைஇ - கலந்து. மணிக்கோல் வள்ளம் - மணிகளையுடைய அழகிய கிண்ணம் எனலுமாம்; கோல் - கோலம். கடைக்குறை. அவன் - சீவகன். அடி, 2 : மதுவைநுகர்கையில் மோந்து இன்புறுதற் பொருட்டுக் குவளை மலர் வட்டிலில் விரவப்பெற்றது; "இஞ்சிவீ விராய பைந்தார் பூட்டி" (பதிற். 42 : 10-11, உரை). அடி, 2-3 : சீவக. 2083. ஒலியல் - பூமாலை. மாலை - முத்துமாலை. கண்ண - தம் கருத்தைச் சீவகன் கருதும்படி. கனிவாயார் : சீவகன் மனைவியர்.

பூமாலை முத்தமாலையென்கின்றவை புறத்தேதாழவுண்டு மகிழ்ந்தார்; மகிழ்ந்தபின் இவர்கள் குறிப்பு இன்னவென்று அவன்கருதும்படி கழுநீரை உகிராற்கிழித்து மோந்தாரென்க.

இப்பூ வடுப்படுத்தி மோந்தும் இனிய நாற்றத்தவேயாயினாற்போல எம்மையும் உகிர்முதலியவற்றாற் சிறிது வடுப்படுத்தி நுகர்தல் எமக்கு வருத்தமென்று அஞ்சினையாயினும் அஃது எமக்கு மிக்க இன்பமே யாதலின், உனக்கும் இன்பஞ்செய்யுமென்பதுணர்த்துவதற்குக் கிழித்து மோந்தாரென்க; இளமைச்செவ்வி மிக்கவழி மகளிர்க்கு இங்ஙனம் வடுப் படுத்தி நுகர்தல் இன்பஞ் செய்யுமென்று காமநூலிற் கூறலின், அதனையீண்டுக் கூறினார். அது "காமத்தூழுறு கனியை யொத்தாள்.........வேந்த னஞ்சிறைப் பறவை யொத்தான்" (சீவக. 192) என முன்னர்க் கூறியவாற்றானுமுணர்க. (கஎ௨)

## ச. புதல்வர்ப்பேறு

2701. இவ்வா றெங்கும் விளையாடி யிளையான் மார்பி னலம் பருகிச், செவ்வாய் விளர்த்துத் தோண்மெலிந்து செய்ய முலையின் முகங்கருகி, அவ்வாய் வயிறு கால்வீங்கி யனிச்ச மலரும் பொறையாகி, ஒவ்வாப் பஞ்சி மெல்லணைமே லசைந்தா ரொண் பொற் கொடியன்னார்.

(இ - ள்.) அக்கொடியன்னார், தாம் கருதிய இத்தன்மையை எந்நிலத்தினுமிருந்து புணர்ந்து, அக்கருத்துமுற்றியபின்னர் மகப் பேற்றை விரும்பி இவனைப்போலும் புதல்வரைப்பெறவேண்டுமென்று அவன் வடிவழகையெல்லாம் உட்கொண்டு புணர்ந்து கருப்பம் தங்குத லாலே, விளர்த்து, மெலிந்து, வயாநோய் செய்துவிடுகையினாலே பின்பு முலையின் முகங் கருகி வீங்கிப் பாரமாய்த் தமது மென்மைக்கு ஒவ்வாத பஞ்சணைமேலே தங்கினாரென்க.

மார்பென்றது மெய்யை. பருகியென்னும் செய்தெனெச்சம் காரண காரியப்பொருட்டாய்க் கருப்பம் தங்கினமைதோன்ற நின்றது; பருக வென்றுமாம். [1] பூப்பின் புறப்பா டீராறு நாளும் நீவா துறைந்து, நாளு மோரையும் நன்றாயவாறு முணர்ந்து, தலைவியைநோக்கி நீயும் இன்பங் கருதாது இவனேபோலும் புதல்வனை யானுடையேனாகவேண்டுமென்று கருதுவாயெனத் தலைவன் கூறிப் பின்னர்ப் புணர்தல்வேண்டுமென நூலிற் கூறியவாறே இவரும் கூறினார். கால் - இடம். (கஎங)

---

2701. இளையான் - சீவகனுடைய. மார்பினலம் பருகி: பெருங். 2. 1 : 37-8. வாய்விளர்த்தல் முதலியன கருப்பத்திற்குரிய அடையாளங் கள்; சீவக. 231. அவ்வாய் வயிறு - அழகுவாய்த்த வயிறு. கால் - இடம். அனிச்சமலரும்; உம்மை: இழிவு சிறப்பு. ஒவ்வா - தம் காலின் மென்மைக்குப் பொருந்தாத. மு: சீகாளத்தி. கண்ணப்ப. 18-9.

(உரை) [1] தொல். கற்பு. 46.

2702. தீம்பால் சுமந்து முலைவீங்கித் திருமுத் தீன்ற வலம்புரி போற், காம்பேர் தோளார் களிறீன்றார் கடைக டோறுங் கடி முரசம், தாம்பாற் பட்ட தனிச்செங்கோற் றரணி மன்னன் மகிழ்தூங்கி, ஓம்பா தொண்பொன் சொரிமாரி யுலக முண்ணச் சிதறினான்.

(இ - ள்.) காம்பேர்தோளார், தம்முலைகள் பாலைச்சுமந்து அடி வீங்கி, வலம்புரி நலந்தொலைந்தீனுமாறுபோல நலந்தொலைந்து புதல் வரைப் பெற்றார்; அப்பொழுது முரசந்தாம் வாயில்கடோறும் கூறுபட நின்றொலித்தன; அக்காலத்தே மன்னன் மகிழ்ச்சிசெறிந்து ஓம்பாது சொரியும் பொன்மழையை உயர்ந்தோர் ஏற்பப் பெய்தானென்க. (கoச)

2703. காடி யாட்டித் தராய்ச்சாறுங் கன்னன் மணியு நறு நெய்யும், கூடச் செம்பொன் கொளத்தேய்த்துக் கொண்டு நாளும் வாயுறீஇப், பாடற் கினிய பகுவாயுங் கண்ணும் பெருக வுகிருறுத்தித், தேடித் தீந்தேன் றிப்பிலிதேய்த் தண்ணா வுரிஞ்சி மூக்குயர்த்தார்.

(இ - ள்.) காடியை வார்த்துப் பிரமிச்சாறும் கண்டசருக்கரைத் தேறும் நறுநெய்யும் தம்மிற்கூடப் பொன்னால்தேய்த்துப் பிள்ளைகள் கொள்ளும்படி மருந்தாகச் சிலநாட்கொண்டு வாயுறுத்திப் பின்னர்த் தேனிலே அதிவிடயத்தையும் திப்பிலியையுந் தேய்த்து நாளும் வாயுறுத்தி வாயும் கண்ணும் பெருகும்படி உகிரான் அகற்றி அண்ணாக்கையுரிஞ்சி மூக்கை உயர்த்தினாரென்க.

தராய் - திராயுமாம். தேடி - ஆராய்ந்தென்றுமாம். (கoரு)

2704. யாழுங் குழலு மணிமுழவு மரங்க மெல்லாம் பரந் திசைப்பத், தோழன் விண்ணோ னவட்டோன்றி வயங்காக் கூத்து வயங்கியபின், காழார் வெள்ளி மலைமேலுங் காவன் மன்னர் கடிநகர்க்கும், வீழா வோகை யவன்விட்டான் விண்பெற் றாரின் விரும்பினார்.

2702. திருமுத்து - கண்டார் விரும்பும் அழகையுடைய முத்து. காம்பு - மூங்கில். களிறு - பிள்ளைகளை; காதற்சொல். பாற்பட்ட - கூறுபட ஒலித்தன. தரணிமன்னன் - சீவகன். ஓம்பாது - தனக்கு என்று பாதுகாவாமல். மாரியென்றதற்கேற்ப உண்ண என்றார்.

2703. காடி - கஞ்சி. கன்னல் மணி - கருப்புக்கட்டி; "தானேற்ற மான சருக்கரை மாமணியே" (யா - வி. 62, மேற்.). வாயுறீஇ - வாயில் உறுத்தி; வாயுறையென்று மருந்திற்கு வழங்கும் பெயர் அறியற்பாலது; தொல். செய். 112, பேர். பெருக - பெரிதாகும்படி. உகிர் உறுத்தி - நகத்தால் அகலமாகும்படி செய்து. அண்ணா - உண்ணாக்கு.

2704. குழலும் யாழும் முழவும் என முறைக்கு ஏற்பக்கொள்க. அரங்கம் - நாடகசாலை. தோழனாகிய விண்ணோன்: சுதஞ்சணன். காழ் - வைரம். மன்னர் - சிற்றரசர். வீழா - கெடாத.

(இ - ள்.) அக்காலத்தே தோழனுகிய சுதஞ்சணன் தோன்றி யாழ் முதலியன அரங்கெல்லாமிசைப்ப இவ்வுலகத்தில் ஆடாத கூத்து இவ் வுலகிலே ஆடிய பின்னர், கலுழவேகனிடத்திலும் தன் சுற்றமாகிய ஒழிந்தாரிடத்திலும் கெடாத ஓகையை அரசன் சொல்லிப் போகவிட்டான்; அவர்களும் அது கேட்டு விண்பெற்ருரைப்போலே விரும்பிஞரென்க.

வயங்காக்கூத்து - [1] சீவக சரிதை. காழார்மணிமுழவென்க. (கoசா)

2705. தத்த நிலனு முயர்விழிவும் பகையு நட்புந் தந்தசையும்,
வைத்து வழுவில் சாதகமும் வகுத்த பின்னர்த் தொகுத்தநாட்,
சச்சந் தணனே சுதஞ்சணனே தரணி கந்துக் கடன்விசயன்,
தத்தன் பரதன் கோவிந்த னென்று நாமந் தரித்தாரே.

(இ - ள்.) அங்ஙனம் ஓகைபோக்கிய பின்னர், கணிகள் திரண்டு, கோள்கள் தம்முடைய தம்முடைய நிலங்களிலே நிற்கின்ற நிலேகளும், அவற்றுட் சில உச்சமான நிலேயும், தாழ்ந்த நிலேயும், தம்முட் பகைத்த நிலேயும், தம்முட் பொருந்தின நிலேயும், தாம் நிற்கின்ற தசைகளேயும் முன்னே கிடத்திச் சாதகமுமெழுதிய பின்னர்ப் [1] பன்னிரண்டென்னு மெண்ணுகத் தொகுத்த நாளிலே, அப்புதல்வர்கள் பெயர்களேச் சுமந்தா ரென்க.

தேவிமாரை முற்கூறிய முறையே அவர்கள் புதல்வர் பெயர்களேயும் வைத்தாரென்க. தரணி - உலோகபாலன் இயற்பெயர்; நட்பு மிகுதி யால், உலோகபாலன் பெயரும், விசயன் பெயருமிட்டான். தத்தன் - விசயமாதேவியார் தந்தை பெயர்; அது கோவிந்த மகாராசன் தனது மகனே ஸ்ரீ தத்தனென்று பெயரிட்டதனுனுணர்க. அப்பெயரைத் தத்த னென்று குறைத்து வைத்தார்; சாகரதத்தன் பெயரென்பாருமுளர். பரதன் - அச்சணந்தியாசாரியன் பெயர். (கoஎ)

---

(உரை) [1] அரசருடைய சரித்திரத்தை நாடகமாக நடித்தல் மரபென் பது, 'ராஜராஜ நாடகம்' என்னும் நூற்பெயர் சிலாசாஸனத்திற் காணப்படுவதாலும் அறியப்படும்.

2705. நிலம் முதலியன கோள்களுக்குரியன. சச்சந்தணன் முதலி யன சீவகன் மக்கள் பெயர்.

(உரை) [1] பன்னிரண்டா நாளிற் பெயரிடுதல்: "பத்து நாளுங் கடந்த விரண்டா நாள்......மத்த மாமலே தாங்கிய மைந்தனே, உத்தா னஞ்செய் துகந்தன ராயரே" (பெரியாழ். 1. 1 : 8)

2706. ஐயாண் டெய்தி மையாடி யறிந்தார் கலைகள் படை
பின்றார், கொய்பூ மாலை குழன்மின்னுங் கொழும்பொற் றோடுங்
ண்டலமும், ஐயன் மார்க டுளக்கின்றி யாலுங் கலிமா வெகுண்
ந்தார், மொய்யா ரலங்கன் மார்பற்கு முப்ப தாகி நிறைந்ததே.

(இ - ள்.) அவ்வையன்மார்கள், ஐயாட்டைநாளை எண்ணுகைப் ற்று மையோலை பிடித்துக் கலைகள் கற்றார் ; படைக்கலம் பயின்றார் ; வை வெகுண்டு ஊர்ந்தார் ; அங்ஙனஞ் சமைந்தகாலம் அரசனுக்கு ப்பதாண்டாய் நிறைந்ததென்க.

மாலையும் குழலும் தோடும் குண்டலமும் அசையாமலூர்தல் ஒழிந் ார்க்கு அரிதாகலின், அவைகள் துளங்காமலூர்ந்தாரென்றார். குண்டூர்ந்தார் - அடித்தேறினர்.

நிறைந்ததென்றது, அரசவுரிமை நிகழ்த்தின யாண்டு முப்பதும் ர்னர்க்கழிந்த யாண்டு பதினைந்தும் ஆக நாற்பதையாண்டு சென்ற யின், இல்லறத்திற்குரிய காலம் முற்றுப்பெற்றதென்றவாறு. இனி, றவறத்தின்மேல் உள்ளம் நிகழ்தற்குக் காரணம் கூறுகின்றார். (கoஅ)

## ரு. சோலைநுகர்வு

)7. பூநிறை செய்த செம்பொற் கோடிகம் புரையு மல்குல்
வீநிறை கொடிய னாரும் வேந்தனு மிருந்த போழ்தில்
தூநிறத் துகிலின் மூடிப் படலிகை கொண்டு வாழ்த்தி
மாநிறத் தளிர்நன் மேனி மல்லிகை மாலை சொன்னாள்.

(இ - ள்.) பூ நிறைதல் செய்த பூந்தட்டையொக்குமல்குலையுடைய ந்த கொடியனாரும், அரசனும் சேர்ந்திருந்த காலத்தே பூவிடு பெட்டி

2706. மையாடி - கல்விகற்கத் தொடங்கி. நவின்றார் - பழகினர். லையும் குழலும். துளக்கு - அசைதல். கலிமா - மனஞ் செருக்கிய திரைகள். மொய் - வன்மை ; மார்பிற்கு அடை ; வண்டுகள் மொய்த்தல் றுகூறி அலங்கலுக்கு அடையாக்கினுமாம். மு : சூளா. துறவு. 187.

(உரை) [1] நாற்பது பிராயத்திற்குப் பின்பே துறத்தல் இயல்பாத ர் இங்ஙனம் கூறினர் ; " நாற்ப திகந்தா நரைத்தூதும் வந்ததினி, ந்த றுணிவா நிலையா திளமையே " (வளையாபதி)

2707. கோடிகம் - பூந்தட்டு ; சீவக. 352. வீ - பூ. கொடியனார் : கன் தேவியர். படலிகை - பூவிடுபெட்டி. நிறத்தையுடைய மாந்தளிர் னி. மல்லிகைமாலை : ஒருத்தி பெயர்.

யைத் துகிலான் மூடிக் கையிலே கொண்டு அரசனை வாழ்த்தி மல்லிகை மாலை ஒருமொழி கூறினாளென்க.

'வீநிறைகொடி' என்றார், புதல்வர்ப் பயந்தமை தோன்ற. (௧௦௯)

2708. தடமுலை முகங்கள் சாடிச் சாந்தகங் கிழிந்த மார்பிற், குடவரை யனைய கோலக் குங்குமக் குவவுத் தோளாய், தொடை மலர் வெறுக்கை யேந்தித் துன்னினன் வேனில் வேந்தன், இடமது காண்க வென்றா ளிறைவனு மெழுக வென்றான்.

குடவரை - அத்தகிரி. தொடைமலர் - தொத்தாகிய பூ.

(இ - ள்.) அவள் எங்ஙனங் கூறினாளெனின், முலைமுகங்கள் சாடிக் கிழிந்த மார்பினையுடைய அரசனே! காமன், பூவாகிய [1] பாகுடத்தை யேந்திச் சோலையிலே அணுகினான்; அஃது அவனைக் காண்டற்கு இடம்; நீ சென்று காண்பாயாக வென்று கூறினாள்; அரசனும் எழுகவென்றா னென்க. (௧௧௦)

2709. முடித்தலை முத்த மின்னு முகிழ்முலை முற்ற மெல்லாம், பொடித்துப்பொன் பிதிர்ந்த வாகத் திளையவர் புகழ்ந்து சூழக், கடுத்தவாள் கனல வேந்திக் கன்னியர் காவ லோம்ப, இடிக்குரற் சீய மொப்பா னிழையொளி விளங்கப் புக்கான்.

முத்தமின்னு முலை; முகிழ் போலுமுலை. கடுத்த - கோபித்த.

(இ - ள்.) அங்ஙனங் கூறிய அரசன், முடியைத் தலையிலேயுடைய முலைப்பரப்பெல்லாம் சுணங்கு தோன்றிச் சிதறின ஆகத்தையுடைய தேவியர் தன்னைச்சூழ, கன்னியர் புகழ்ந்து போற்றல் செய்ய, வாளை யேந்தி, இழை விளங்க அச்சோலையிலே புக்கானென்க. (௧௧௧)

2710. இலங்குபொன் னார மார்பி னிந்திர னுரிமை சூழக்
கலந்தபொற் காவு காண்பான் காமுறப் புக்க தேபோல்
அலங்குபொற் கொம்ப னாரு மன்னனு மாட மாதோ
நலங்கவின் கொண்ட காவு நல்லொளி நந்திற் றன்றே.

---

2708. சாடி - மோதி. குடவரை - அத்தமனகிரி; குங்குமச் சாந்து பூசியதற்கு உவமை. வெறுக்கை - செல்வம். வேனில் மலரேந்தித் துன்னல்; சிலப். 14 : 113 - 7. இறைவன் : சீவகன்.

(உரை) [1] பாகுடமென்பது ப்ராப்ருதம் என்னும் வடமொழிச்சிதைவு; கையுறை என்பது பொருள். "நரிப்ப டைக்கொரு பாகுடம் போலே கோடிமூடி யெடுப்பதன் முன்னம்" (பெரியாழ். 4. 5 : 8)

2709. முகிழ்முலை : வினைத்தொகை யெனலுமாம். முற்றம் - பரப்பு. இளையவர் - மகளிர். இழை ஒளி - ஆபரணங்களின் ஒளி.

2710. உரிமை - தேவியர். காமுற - விருப்பமுற. மாது, ஓ : அசைகள். நந்திற்று - பெருகிற்று. அன்று, ஏ : அசைகள்.

(இ - ள்.) அங்ஙனம் புகுந்த கொம்பனாரும் அரசனும், தாம் முன்பு பழகின கற்பகச் சோலையைக் காண்டற்கு இந்திரன் உரிமை சூழப் புக்கு ஆடின தன்மைபோல ஆட, அக்கா ஒளி சிறந்ததென்க. (ககஉ)

2711. புலவியுண் மகளிர் கூந்தற் போதுகுக் கின்ற தேபோற்
குலவிய சிறகர்ச் செங்கட் கருங்குயில் குடையக் கொம்பர்
நிலவிய தாது பொங்க நீண்மலர் மணலிற் போர்த்துக்
கலவியிற் படுத்த காய்பொற் கம்பல மொத்த தன்றே.

(இ - ள்.) அந்தக் காவிடமெல்லாம் மகளிர் புலவிக்கண்ணே தமது கூந்தலிற் போதை உகுக்கின்ற தன்மைபோலே, குயில் கொம்பிலே யிருந்து தாது பொங்கக் குடையப் பூக்கள் மணலிலே வீழ்ந்து அதனை மறைக்கையினாலே கலவி காரணத்தாற் படுத்த கம்பலத்தை ஒத்த தென்க. (ககங)

2712. காசுநூல் பரிந்து சிந்திக் கம்பலத் துக்க தேபோல்
மூசுதேன் வண்டு மொய்த்து முருகுண்டு துயில மஞ்ஞை
மாசில்பூம் பள்ளி வைகி வளர்ந்தெழு மகளி ரொப்பத்
தூசுபோற் சிறக ரன்னந் தொழுதியோ டிரியச் சேர்ந்தார்.

நூல் பரிந்து - நூல் அற்று.

(இ - ள்.) மணிகள் சிந்திக் கம்பலத்தே வீழ்ந்துகிடந்த தன்மை போலே அக்கம்பலத்தை ஒத்த இடத்தே தேனும் வண்டும் மொய்த்துத் துயிலாநிற்க, அப்பூம்பள்ளியிலே மயில் கிடந்தெழுகின்றது துயில் கொண்டெழுகின்ற மகளிரை ஒவ்வாநிற்க, அன்னங்கள் கெடாநிற்க அவர்கள் சேர்ந்தாரென்க. (ககச)

2711. புலவியுள் - ஊடற்காலத்தில். உகுக்கின்றது - சொரிகின்றது. கொம்பர் - கொம்புகளிடத்தே. நிலவிய - விளங்கிய. தாது - மகரந்தப் பொடி. குயில் மலரைக் குடைந்து உகுத்தல் : சிறுபாண். 4 - 5. காய் பொன் - விளங்கும் பொன்.

2712. காசு - மணிகள். நூல் - மணிகளைக் கோத்த நூல். முருகு - தேனை. வண்டுக்கும் தேனுக்கும் மணிகள் உவமை. வளர்ந்தெழு - விழித்து எழுகின்ற. தூசு - வெள்ளிய ஆடை ; அன்னச் சிறகுக்குவமை. தொழுதி - தொகுதி.

2713. காதிக்கண் ணரிந்து வென்ற வுலகுணர் கடவுள் காலத்
தாதிக்கண் மரங்கள் போன்ற வஞ்சொலீ ரிதனி னுங்கள்
காதலிற் காண லுற்ற விடமெலாங் காண்மி னென்றான்
நீதிக்க ணின்ற செங்கோ னிலவுவீற் றிருந்த பூணான்.

காதி கண் அரிந்து வென்ற - [1] காதிவினைகளைத் தன்னிடத்தே இல்லாதபடி வேரறுத்து அவற்றை வென்ற; அவை ஞானாவரணீயம் முதலாயின.

(இ - ள்.) அங்ஙனஞ் சேர்ந்த பின்னர், அரசன், அஞ்சொலீர்! இம்மரங்கள், [2] இறைவன்தோன்றிய ஆதிக்காலத்திடத்து மரங்கள்போற் பயன்பட்டு நின்றன; இதனாலே நீர் நும் காதலாற் காணவேண்டிய இடங்களெல்லாவற்றையும் சென்று காண்பீராக என்றானென்க. (கககூ)

2714. வானவர் மகளி ரென்ன வார்கயிற் றூச லூர்ந்தும்
கானவர் மகளி ரென்னக் கடிமலர் நல்ல கொய்தும்
தேனிமிர் குன்ற மேறிச் சிலம்பெதிர் சென்று கூயும்
கோனமர் மகளிர் கானிற் குழாமயில் பிரிவ தொத்தார்.

(இ - ள்.) அவன் அங்ஙனம் கூறியபின்னர், அவன் தேவிமார் ஊர்ந்தும் கொய்தும் கூவியும் மயிற்குழாம் வெவ்வேறாகப் பிரியுந் தன்மையை ஒத்தாரென்க. (கககூ)

2713. காதிக்கண்ணரிந்து வென்ற: "காதிகண் ணரிந்து வீடுங் காலத்தால்" (மேரு. மன்னுந். 180). கடவுள்: ரிஷப தீர்த்தங்கரர். ஆதிக்கண் - ஆதிக்காலத்தில். இடப தீர்த்தங்கரர் அவதரித்தற்கு முன்பு இவ்விடமெல்லாம் போக பூமியாக இருந்தனவென்றும், அப்பால் கரும பூமியாயினவென்றும் கூறுவர். செங்கோலையும் பூணையுமுடையவன்; எழுவாய்.

(உரை) [1] (பி - ம்.) 'உபாதி'. [2] இறைவனென்றது ரிஷப தீர்த்தங்கரரை; இவர் முதல் தீர்த்தங்கரர். இவர் தந்தையும் பதினான்காம் மனுவுமாகிய நாபிராசன் காலத்து, "மேகங்களெழுந்து மழை பொழிந்தன; எல்லாத் தானியங்களும் உழுது வித்தாமல் கால ஸ்வபாவத்தால் தாமே விளைந்தன; கற்பக விருட்சங்கள் மறைந்தபின், நானாவிதமாகிய விருட்சங்கள் தாமே தோன்றிப் பலித்தன" என்று ஸ்ரீ புராணம் கூறுதலின், ஈண்டு ஆதிக்காலத்திடத்து மரங்களென்றது அக்காலத்துத் தாமே தோன்றிப் பலித்த மரங்களை என்றறிக.

2714. வானவர் மகளிர் - அரம்பையர். கானவர் மகளிர் - வேடிச்சியர். சிலம்பெதிர்கூவல், மகளிர் விளையாட்டுக்களில் ஒன்று; திருச்சிற். 30. கோன் அமர் - அரசன் விரும்பிய. குழாம் மயில் - கூட்டமாகிய மயில்.

2715. நெடுவரை யருவி யாடிச் சந்தன நிவந்த சோலைப்
படுமதங் கவரும் வண்டு பைந்தளிர்க் கவரி யேந்திப்
பிடிமகிழ்ந் தோப்ப நின்ற பெருங்களிற் றரசு நோக்கி
வடிமதர் மழைக்க ணல்லார் மன்னனை மகிழ்ந்து நின்றார்.

**(இ - ள்.)** அங்ஙனம் பிரிந்த நல்லார், அத்தொழில்களால் இளைத்த லின், அருவியிலேயாடி மிக்க மதத்தை நுகராநின்ற வண்டைத் தளி ராகிய கவரியை யெடுத்துப் பிடி ஓட்டச் சோலையிலே நின்ற களிற்றை நோக்கித் தாமும் அங்ஙனங் கூடுதற்கு அரசனை விரும்பி நின்றாரென்க. (கக௭)

2716. கொழுமடற் குமரி வாழைத் துகிற்சுருள் கொண்டு தோன்றச், செழுமலர்க் காம வல்லி செருக்கயல் சிற்ப மாகக், கழுமணிச் செம்பொ னாழிக் கைவிர லுகிரிற் கிள்ளி, விழுமுலைச் சூட்டி நின்றார் விண்ணவர் மகளி ரொத்தார்.

**(இ - ள்.)** அங்ஙனம் விரும்பினவர், வாழையினது துகில்போலும் வெள்ளிய குருத்தை வாங்கிக்கொண்டு அதிலே சிற்பத்தொழில் தோன்ற உள்ளே கயற்பிணைக்கும் அதனைச் சூழக் காமவல்லியுமாக உகிரால் கிள்ளி அதனை முலையிலே சூட்டி இங்ஙனம் விநோதந் தோன்ற நின்றார்; அப்பொழுது அவர் தெய்வமகளிரை யொத்தாரென்க. (கக௮)

2717. (க) கடைதயிர்க் குரல வேங்கை கண்ணுறச் சென்று நண்ணி, மிடைமயிர்க் கவரி நல்லான் கன்றுணக் கண்டு நிற்பார், புடைதிரண் டெழுந்த பொம்மல் வனமுலை பொறுக்க லாற்றார், நடைமெலிந் திகலி யன்ன நன்னடை நயந்து நிற்பார்.

**2715.** நிவந்த - உயர்ந்த. சோலையில். படுமதம் - உண்டாகும் மதத்தை. ஏந்தி வண்டை ஓப்ப. நின்ற களிற்றரசு. பைந்தளிர்க் கவரி யேந்தி: "வார்தளிர் கவரிவீச" (சீவக. 2730). வடி - மாவடுவின் வகிர்.

**2716.** குமரி வாழை - குலை ஈனாத வாழை. கொழுமடற்......சுருள்: "கனமடற் குமரி வாழை யுள்ளெழு சுருளை வாங்கி" (சூளா. சுயம். 87). துகிலைப்போன்று வெள்ளிய சுருள். கழுமணி - கழுவிய மணி; "கழு மணி மோதிரங் கழித்தார்" (பெருங். 2. 12 : 74). உகிரின் - நகத்தால். அடி, 1 - 3 : "செந்தளிர் வாங்கிப், பத்திரச் சேதம் பற்பல கிள்ளியும்" (பெருங். 2. 14 : 30 - 31). விழு : விழுமமென்பதன் விகாரம்; விழுமம் - சிறப்பு.

**2717.** தயிர்கடையும் ஓசையைப் போன்ற குரலையுடைய வேங் கைப் புலி; "புலிக்குரன் மத்த மொலிப்ப வாங்கி......தயிர்கலக்கி" (பெரும்பாண். 156 - 8); "கடையலங் குரல வாள்வரி யுழுவை" (அகநா. 277); "இரும்புலிக் கிரிந்த கருங்கட் செந்நாகு, நாட்டயிர்

2718. (உ) எம்வயின் வருக வேந்த னிங்கென விரங்கு நல்லி யாழ், வெம்மையின் விழையப் பண்ணி யெஃகுநுண் செவிகள் வீழச், செம்மையிற் கனிந்த காமத் தூதுவிட் டோத முத்தம், வெம்முலை மகளிர் வீழ்பூம் பொதும்பருள் விதும்பி னாரே.

இவை இரண்டும் ஒருதொடர்.

(க) கடைகின்ற தயிரிலெழுந்த குரலவாகிய வேங்கை எதிர்ப்படுத லாலே சென்றணுகிக் கவரியைப் பசுவின் கன்று உண்ண. முன்னர் அன்னத்தோடு இகலி நடந்து பின்னர் முலைப்பாரம் பொறுக்கலாற்றா ராய்த் தமது நன்னடை தோற்று அவற்றின் நடையை நயந்து.

(உ) எஃகு நுண் செவி - அரசனுடைய கூரிய நுண்செவி. அது [1] மூவகைச் செவியினும் தலையான செவி. தலைமையோடே கனிதல் கொண்ட காமம். கேட்டாற் காமத்தையே விரும்புவித்தலிற் பாட்டை, 'காமத் தூது' என்றார். முத்தம் விரும்பின முலை. சுற்றுக் கவிந்த பூக்கலையுடைய இளமரச்செறிவு. விதும்பினார் - நடுங்கினார்.

(இ - ள்.) அங்ஙனம் நின்ற மகளிர், கண்டு நிற்பார், நயந்து நிற்பாராய்ப் பின்னர்ப் புணர்ச்சி விருப்பினாலே ஈங்கு நின்ற எம்வயின் அரசன் வரவேண்டுமென்று கருதி யாழைப்பண்ணி அவன் செவிகள் தாழும்படி பாடி அவனை அழைத்துப் பொதும்பிலே கூடுதற்கு விதும் பினாரென்க. (ககக - உ௦)

2719. பிடிமரு ளடையி னார்தம் பெருங்கவின் குழையப் புல் லித், தொடைமலர்க் கண்ணி சேர்த்திச் சுரும்புண மலர்ந்த மாலை, உடைமது வொழுகச் சூட்டி யுருவத்தார் குழைய வைகிக், கடிமலர் மகளி ரொத்தார் காவலன் களிவண் டொத்தான்.

கடைகுரல் கேட்டொறும் வெரூஉம்'' (தொல். அகத். 41, ந. மேற்.). கண்ணுற - நெருங்க. கவரியை உண்ண. புடை - பக்கம். ஆற்றாராய் நடைமெலிந்து. இகலி - மாறுபட்டு. அன்னத்தின் நன்னடையை. நயந்து - விரும்பி.

2718. இரங்குதல் - ஒலித்தல். வெம்மையின் - புணர்ச்சியின் மேலுள்ள விருப்பத்தால். வீழ - விரும்ப. ஓதம் - கடல். விதும்பினார் - விரைந்தார்; 'புணர்ச்சி விதும்பல்' (குறள், 129-ஆம் அதி. அவதா. பரிமேல்.)

(உரை) [1] மூவகைச் செவிகளாவன :—தோற்செவி, மரச்செவி, எஃகுச்செவி யென்பன; "ஒட்டைமரச் செவியர் கேளார்" (சீவக. 1552); மூவகைச் செவிகளுள், "தோளா மரச்செவித் தூரா வயிற்றுச் சுமடர்" (திருநூற். 10) என்பதனால் மரச்செவியும், 'எஃகுச் செவி யாலே சுருதியை யளந்து' (முருகு. 140 - 41, ந) என்பதனால் எஃகுச் செவியும் நூல்களில் வழங்கப்பட்டவாறு அறிக.

2719. பிடி மருள் - பெண் யானையை ஒத்த. குழைய - வாட. தொடை - தொடுத்தல். தார் குழைய - மார்பின் மாலை வாட. மகளிர் மலரை ஒத்தார். அடி, 4 : சீவக. 191, ந.

(இ - ள்.) அவன், அதுகேட்டு வந்து அவர் கவின் கெடுகையினாலே கண்ணியைச் சேர்த்தி மாலையைச் சூட்டித் தாரிற் பூ அலரப் புல்லி வைக, ஆண்டு அம்மகளிர் கடிமலரை ஒத்தார்; அவன்றான் களிவண்டை ஒத்தானென்க.

வைகி - வைக. கடி - ஈண்டு வரைவு; கடியென்னுமுரிச்சொல் முதனிலையாய் நின்ற பெயரெச்சம், வினைத்தொகையாய் நின்றது; கடிந்த மலரெனவே, மேல் கூட்டமின்றாயிற்று. களிவண்டெனவே, மேல் தேன் நுகரும் விருப்பமின்றி நுகர்ச்சி யமைந்த வண்டாயிற்று. என்றது, மேல் துறவுக்குக் காரணங் கூறுகின்றாராதலின், ஈண்டுத் தேனையுமிழ்ந்து அமிர்தத்தை நுகருமென்பது தோன்றக் கூறினார், "தேன்வா யுமிழ்ந்த வமிர் துண்டவன் போன்று செல்வன்" (சீவக. 29) என்று பதிகத்துள் அவ்வாறே கூறலின். (கஉக)

2720. இழைந்தவர் நலத்தை யெய்தி யினந்திரி யேறு போலக்,
குழைந்ததார் நெகிழ்ந்த தானைக் கொற்றவன் பெயர்ந்து போகி,
வழிந்துதேன் வார்ந்து சோரும் வருக்கையி னீழல் சேர்ந்தான்,
விழைந்தவக் கடுவ னாங்கோர் மந்தியை விளித்த தன்றே.

(இ - ள்.) தாரினையும் நெகிழ்ந்த துகிலினையுமுடைய கொற்றவன்றான், கூடினவர்கள் நலத்தையெல்லாம் விழைவற நுகர்ந்து, இனத்தை மனத்தாற் கைவிட்ட ஏறுபோல மீண்டுபோய் ஒரு வருக்கையின் நீழலைச் சேர்ந்தான்; ஆங்கே களவொழுக்கத்தை விழைந்த கடுவன் அதுபெறுதற்கு ஒரு மந்தியை அழைத்ததென்க.

தேன் பழத்தின் நின்றும் வடிந்து வீழும் வருக்கை. (கஉஉ)

2721. அளித்திள மந்தி தன்னை யார்வத்தால் விடாது புல்லி,
ஒளித்தொரு பொதும்பர்ச் சேர்ந்தாங் கொருசிறை மகிழ்ச்சி
யார்ந்து, தளிர்த்தலைப் பொதும்பர் நீங்கித் தம்மின மிரண்டுஞ்
சேர்ந்த, களித்தலைக் கூட்டங் காதன் மந்திகண் டிருந்த தன்றே.

2720. இழைந்தவர் - கூடினவருடைய. இனந்திரியேறு : 'இனம் பிரியேறு' என்று பாடம் இருப்பின் நன்று. தானை - ஆடை. கொற்றவன் : சீவகன். வருக்கை - பலாமரம். கடுவன் - ஆண்குரங்கு. மந்தி - பெண் குரங்கு. அடி, 4 : "ஆசினிக் கனினிய பலவி னூர்வுற்று, முட்புற முதுகனி பெற்ற கடுவன், துய்த்தலை மந்தியைக் கையிடூஉப் பயிரும்" (புறநா. 158 : 22 - 4)

2721. பொதும்பர் - மரச்செறிவு. ஆர்ந்து - நிரம்ப நுகர்ந்து. இரண்டும் - களவிற் புணர்ந்த கடுவனும் மந்தியும். சேர்ந்த : முற்று. அன்று, ஏ : அசைகள்.

(இ - ள்.) அம்மந்தி வந்த பின்னர், கடுவன் சேய்த்தாக ஒளித்துப் போய் ஒருபொதும்பரின் ஒருசிறையிலே அம்மந்தியை அளித்துப் புல்லு கையினுலே அவையிரண்டும் மகிழ்ச்சியை ஆர்ந்து அப்பொதும்பரி னின்று நீங்கித் தம்மினங்களைச் சேர்ந்தன ; அக்கூட்டத்தினை அக்கடுவ னது காதன்மந்தி கண்டிருந்ததென்க. (கஉா)

2722. பரத்தையர்த் தோய்ந்த மார்பம் பத்தினி மகளிர் தீண் டார், திருத்தகைத் தன்று தெண்ணீ ராடிநீர் வம்மி னென்ன, உரைத்ததென் மனத்தி லில்லை யுயர்வரைத் தேனை யுண்பார், வருத்துங்காஞ் சிரமும் வேம்பும் வாய்க்கொள்வார் யாவர் சொல்லாய்.

(இ - ள்.) அங்ஙனம் கண்டிருந்த மந்தி, பரத்தையரைத் தோய்ந்த மார்பம் திருத்தகைத்தன்றாகலின், அதனைப் பத்தினிமகளிர் தீண்டார் ; இனித் தெண்ணீரிலே குளித்து வம்மினெனக் கூற, அதுகேட்டுக் கடு வன், நீ கூறியது யான் மனத்தும் நினைத்ததில்லை ; அன்றியும் தேனை யுண்பார் காஞ்சிரத்தையும் வேம்பையும் தின்னுர் ; யான் அத்தன்மை யேனுதலைநீயே கூறுயென்றதென்க. (கஉச)

2723. ஈங்கினி யென்னை நோக்கி யெவன்செய்தி யெனக்கு வாளுள், நீங்கிற்றுச் சிறிது நிற்பிற் காண்டியா னீயு மென்னத், தூங்கித்தான் றுளங்க மந்தி தொழுத்தையேன் செய்த தென்று, தாங்குபு தழுவிக் கொண்டு தன்னைத்தான் பழித்த தன்றே.

(இ - ள்.) அம்மந்தி மறுமொழி கொடாது துனித்து நோக்கலின், அக்கடுவன்றான், தூங்கி, இனி இவ்விடத்து என்னை இங்ஙனம் நோக்கி

2722. பரத்தையரைத் தோய்ந்த மார்பத்தை. பத்தினி மகளிர் - கற்புடைய மங்கையர் ; "பத்தினிப் பெண்டிர்" (மணி. 2 : 48). திருத் தகைத்தன்று - அழகுடைத்தன்று. உரைத்தது - நீ கூறிய பரத்தைமை. தேன் காதன் மந்திக்கும், காஞ்சிரமும் வேம்பும் பரத்தை மந்திக்கும் உவமை.

2723. எவன் செய்தி - என்ன செய்வாய். நீங்கிற்று - விரைவு பற்றிய காலவழுவமைதி. காண்டியால் ; ஆல் : அசை. துளங்க - மனம் நடுங்கும்படி. தொழுத்தையேன் : "தூசனாஞ் சொல்லுந் தொழுத்தை மாரும்" (பெரியாழ். 2. 9 : 8) ; "இத்தொழுத்தையோந் தனிமை தானே", "தொழுத்தையோந் தனிமையும்" (திருவாய்மொழி, 10. 3 : 3 - 4)

(மேற்.) மு. நன். பெயர். 28, மயிலை ; இ - வி. பெயர். 29.

என்செய்வாய்; எனக்கு உயிர் போயிற்று; அதனை இங்ஙனஞ் சிறிது பொழுது நிற்பின், நீயும் காண்பாயென்று மந்தியது மனம் துளங்கச் சொல்ல, அம்மந்தி, இத்தொழுத்தையேன் செய்ததொரு வருத்தமிதனை ஒழிகவென்று எடுத்துத் தழுவிக்கொண்டு தன்னைத் தானே பழித்த தென்க.

தொழுத்தையேன் - நினது ஏவற்றொழில் செய்தற்குரியேன்; "இல்லுட், டொழுத்தையாற் கூறப்படும்" (நாலடி. 326) என்றார் பிறரும். (கஉ௩)

2724. கண்ணினாற் குற்றங் கண்டுங் காதலன் றெளிப்பத் தேறிப், பெண்மையாற் பழித்த மந்தி பெருமகி ழுவகை செய் வான், திண்ணிலைப் பலவின் றேங்கொள் பெரும்பழங் கொண்டு கீறிப், பண்ணுறு சுளைகள் கையாற் பகுத்துணக் கொடுத்த தன்றே.

தேறி - தேற. மனமகிழும் மகிழ்ச்சி. பகுத்து - கோதுகளை நீக்கி.

(இ - ள்.) அங்ஙனம் பழித்த மந்தி, குற்றத்தைக் கண்ணாற் கண்டு வைத்தும் தன் கணவனூடல் தீர்ப்பத் தன் பெண்மையால் தேறுதலின், அதற்குக் கடுவன் மகிழ்ந்து அதனை மகிழ்ச்சி செய்யவேண்டிப் பலாப் பழத்தை யெடுத்துக்கொண்டு கீறிப்பகுத்து ஆராய்தலுற்ற சுளைகளை அது தின்னக் கையிற் கொடுத்ததென்க. (கஉ௪)

2725. இன்கனி கவரு மந்தி கடுவனோ டிரிய வாட்டி, நன்கனி சிலத னுண்ண நச்சுவேன் மன்ன னோக்கி, என்பொடு மிடைந்த காம மிழிபொடு வெறுத்து நின்றான், அன்புடை யரிவை கூட்டம் பிறனுழைக் கண்ட தொத்தே.

சிலதன் - அரசனேவல்செய்து அக்காவினைக் காக்கின்றவன்; பிறரும், "பூவிலை மடந்தைய ரேவற் சிலதியர்" (சிலப். 5 : 51) என்றார். என்பு - ஈண்டு உடம்பு. ஈண்டுக் காமமென்றது, அரசவுரிமையை யெய்தி நுகரும் போகத்தின்மேலே நிகழும் ஆர்வத்தை. அது, "செல் வம் புலனே புணர்வு விளையாட்டென், றல்ல னீத்த வுவகை நான்கே" (தொல். மெய்ப்பாடு. 11) என்பதனானுணர்க. ஈண்டு இழிபென்றது, இளி வரலாகிய சுவையையாதலின் அச்சுவையை யுணர்த்தும் நால்வகை

---

2724. குற்றத்தைக் கண்டும். தேறி - தெளிந்து. பெண் தன்மை யால் தன்னைப் பழித்த. செய்வான் - செய்யும் பொருட்டு. தேம் கொள் - இனிமையைக் கொண்ட. கீறி - பிளந்து.

2725. மந்தியைக் கடுவனோடு ஆட்டி; ஆட்டி - அலைத்து. சிலதன் - தொழில் செய்வான்; "சிலதர் காக்குஞ் சேணுயர் வரைப்பின்" (பெரும்பாண். 324). நச்சுவேல் - நஞ்சு பூசிய வேல். கண்டதொத்து வெறுத்து நின்றான்.

மெய்ப்பாட்டினும் முன்னர் நின்ற மூப்பினையே கொள்க. அது, " மூப்பே பிணியே வருத்த மென்மையோ, டியாப்புற வந்த விளிவர ஞன்கே" (தொல். மெய்ப்பாடு. 6) என்பதனுனுணர்க. இனி நான்கினையும் வெறுத் தானென்றுமாம்.

(இ - ள்.) அங்ஙனம் கனியைக் கவரும் மந்தியைக் கடுவனோடே கெட்டுப் போம்படி அலேத்து அவை தின்கின்ற கனியைச் சிலதன் உண்ணு நிற்க, அதனை மன்னன் நோக்கித் தனக்கு அன்புடைய மனைவி தன்னைக் கூடுகின்ற கூட்டத்தைப் பிறனிடத்தே செய்யக் கண்ட தன்மையை யொத்து, உடம்பு தோன்றுகின்ற காலத்து உடன்றோன்றிச் செறிந்த ஆர்வத்தையும் மேல் வருகின்ற மூப்பையும் வெறுத்து நின்ருனென்க. (கஉஎ)

2726. கைப்பழ மிழந்த மந்தி கட்டியங் கார ஞெத்த, திப்பழந் துரந்து கொண்ட சிலதனு மென்னை யொத்தான், இப்பழ மின்று போகத் தின்பமே போலு மென்று, மெய்ப்பட வுணர்வு தோன்றி மீட்டிது கூறி ஞனே.

(இ - ள்.) அங்ஙனம் வெறுத்து நின்றவன் கைப்பழமிழந்த மந்தி அரசை இழந்த கட்டியங்காரஞெத்தது ; அவற்றைத் துரந்து இப்பழத் தைக் கொண்ட சிலதனும் அவனைத் துரந்து அரசை யெய்திய என்னை யொத்தான் ; இன்னும் வலியான் வாங்கி நுகர்தற்குரிய இப்பழத்தை நுகர்ந்து இவனெய்துகின்ற இன்பம் இன்று யானுகர்கின்ற இன்பத் தையே யொக்குமென்று உண்மையாக உணர்வு தோன்றி அதனுனும் அமையாதே தன்னெஞ்சுடனே மீண்டும் இத்தன்மை தோன்றக் கூறினு னென்க. (கஉஅ)

2727. மெலியவர் பெற்ற செல்வம் வேரொடுங் கீழ்ந்து வௌவி, வலியவர் கொண்டு மேலே வரம்பிகந் தரம்பு செய்யும், கலியது பிறவி கண்டாங் காலத்தா லடங்கி நோற்று, நலிவிலா வுலக மெய்த னல்லதே போலு மென்ருன்.

அரம்பு - குறும்பு. கலியாவது, நுகரும் பொருள்களின்மையான் அவற்றின்மேற் செல்லும் பற்ருல் நிகழும் வருத்தம் ; செருக்குமாம்.

(இ - ள்.) அவன் எங்ஙனங் கூறினுனெனின், வலியில்லாதவர் பெற்ற செல்வத்தை வலியவர் மேலே வரம்பிகந்து வேரோடும் கீழ்ந்து

2726. துரந்து - ஒட்டி. என்னையென்றது, சீவகனை. மெய்ப்பட - உண்மையாக. மீட்டு - மறுபடியும்.

2727. செல்வத்தைக் கீழ்ந்து வௌவி. அரம்பு - குறும்பு ; " அரம்பு மல்லலுங் கரம்பு மில்லது" (பெருங். 3. 2 : 48). பிறவியது கலி ; கலி - துன்பம்.

வெளவிக் கொண்டு குறும்பு செய்யும் பிறவியது கலியைக் கண்ணுற் கண்டாம்; ஆதலின், இச்செல்வத்தைக் கைவிட்டுத் துறத்தற்குரிய காலத்தே துறந்து தவஞ்செய்து ஐம்பொறியுமடங்கி ஒன்றுனும் நலிவில் லாத வீட்டுலகத்தை யெய்துதலே நல்லதுபோலுமெனக்கென்று கூறினு னென்க.

'மேலைவரம்பிகந்து' என்றது, தந்தை தாயத்தைப் புதல்வனே பற்றுதற்குரியனென முன்னர்க் கூறிய வரம்பைக் கடந்தென்றவாறு. என்றது, சச்சந்தனரசைக் கட்டியங்காரன் வலிதினெய்திய தன்மை கூறியவாறாயிற்று. (கஉகூ)

2728. நல்வினை யென்னு நன்பொற் கற்பக மகளி ரென்னும், பல்பழ மணிக்கொம் பீன்று பரிசில்வண் டுண்ணப் பூத்துச், செல் வப்பொற் சிறுவ ரென்னுந் தாமங்க டாழ்ந்து நின்ற, தொல்கிப் போம் பாவக் காற்றி னொழிகவிப் புணர்ச்சி யென்றான்.

(இ - ள்.) நல்வினை யென்கின்ற கற்பகத்தின் மணிக்கொம்பு, பரிசிலராகிய வண்டு நுகரும்படி பரிசிலைப் பூத்து, மகளிரென்கின்ற பழத்தை யீன்று புதல்வரென்கின்ற மாலைகள் தன்னிடத்தே தங்கி நின்றது; இங்ஙனம் நின்றது தீவினையாகிய காற்று வந்தடித்தலின், நிலைபேறின்றிச் சாய்ந்து விழுந்து போவதாயிருந்தது; இஃது இங்ஙனம் விழுவதற்கு முன்னே இவ்வில்லறத்திற் பயிற்சி நம்மை விட்டு நீங்குவதாகவென்று நெஞ்சை வலியுறுத்தினானென்க. (கா௰)

2729. வேட்கைமை யென்னு நாவிற் காமவெந் தேறன் மாந்தி, மாட்சியொன் றானு மின்றி மயங்கினேற் கிருளை நீங்கக், காட்டி னார் தேவ ராவர் கைவிளக் கதனை யென்று, தோட்டியாற் றொடக் கப் பட்ட சொரிமதக் களிற்றின் மீண்டான்.

(இ - ள்.) அங்ஙனம் வலியுறுத்தினவன், வேட்கைத் தன்மை யென் னும் நாவாலே காமமாகிய கள்ளை நிறையவுண்டு வீட்டினைத்தரும் நற்

2726 - 7. மு: "வாளூர் நுதலார் வலைப்பட் டடியேன் பலவின் கனிவீந்தது போல்வதன்முன், ஆனேடுபெண்ணா முருவா கிநின்று யடியே னுய்யப்போ வதோர்சூ ழல்சொல்லே" (தே. சுந்தர. திருநெல் வாயில் அரத்துறை) என்னும் திருவாக்கு இதன் பொருளை ஆராய்தற்கு இன்றியமையாதது.

2728. கற்பகம்: எழுவாய். செல்வப் பொற் சிறுவர்: "பொன் போற் புதல்வனோடு" (ஐங்குறு. 265); "பொன்போற் புதல்வர்" (புறநா. 9). தாமம் - மாலை. காற்றின் ஒல்கிப்போம். புணர்ச்சி ஒழிக

2729. வெந்தேறல் - விருப்பமுள்ள கள்ளின் தெளிவை. ஒன்று னும் - சிறிதாயினும். கைவிளக்கு என்றது துறவை. தோட்டி - அங்குசம்

செய்கை சிறிதுமின்றிப் போகத்தே மயங்கினேற்கு இவ்விருள் நீங்கும்படி வீட்டுநெறியிலே செலுத்தும் கைவிளக்காகிய துறவுள்ளத்தைக் காட்டிய இவர்கள் தேவராகக் கூடுமென்று கூறித் தோட்டியைக் கடந்த மதயானை போலாது தோட்டியால் தொடக்கப்பட்டதொரு மதயானை போலே போகநுகர்ச்சியினின்று மீண்டானென்க.

ஐ : அசை. காட்டினார் : மந்தியும், கடுவனும், சிலதனும் ; இவர்கள் இங்ஙனங் காட்டிய நல்வினையான், மேலே தேவராவரென்றுமாம். களிறு : இல்பொருளுவமை. (கருக)

2730. கைந்நிறை யெஃக மேந்திக் கனமணிக் குழைவில் வீச, மைந்நிற மணிவண் டார்ப்ப வார்தளிர் கவரி வீச, மெய்ந்நெறி மகிழ்ந்து நின்றான் வேனில்வாய்க் காம னொத்தான், மொய்ந்நிற மாலை வேய்ந்து முருகுலா முடியி னானே.

(இ - ள்.) அங்ஙன மீண்ட முடியினன், வீச ஆர்ப்ப வீச ஏந்தி வீட்டை விரும்பி நின்றவன், காமனை யொத்தானென்க.

'தளிர் கவரிவீச' என்றார், பொதும்பரிடைத் தனியே நிற்றலின். காமனோடுவமித்தார், [1] மனவேட்கை யடங்குதலின். (கருஉ)

2731. நடுச்சிகை முத்துத் தாமம் வாணுத னான்று நக்கப்
படுத்தனர் பைம்பொற் கட்டில் பாடினர் கீதந் தூபம்
எடுத்தன ரெழுந்து தேனா ரெரிமணி வீணை யார்த்த
கொடிப்பல பூத்துச் சூழ்ந்த குங்குமக் குன்ற மொத்தான்.

(இ - ள்.) தொழில் செய்தற்குரிய மகளிர், சிகை நடுவில் தலைப் பாளை நான்று நக்க நின்று கட்டிலைப் படுத்தார் ; அதிலே அவனிருந்த பின்னர்ச் சிலர் தூப மெழுப்பினார் ; சிலர் பாடினார் ; அதன் பின்னர் யாழுமெழுந்து ஆர்த்தன ; அவை அங்ஙனம் நிகழ மகளிர் சூழ இருந்தவன், பல கொடி பூத்துச் சூழ்ந்த குங்குமமலையை யொத்தானென்க. (கருரு)

2730. எஃகம் - வேல். வில் - ஒளி. மணிவண்டு - நீலமணிபோலும் வண்டு. முருகு - வாசனை.

(உரை) [1] காமன் மனவேட்கை யடங்கியவன் : சீவக. 674, ந. " சிலைவலான் போலுஞ்செறிவினான் " (கலித். 143)

2731. சிகை - மயிர்முடி. நான்று - தொங்கி. கட்டில் படுத்தனர். தேன் ஆர் - தேனை ஒத்த. ஆர்த்த - ஒலித்தன. கொடி, மகளிர்க்கு உவமை.

2732. மெள்ளவே புருவங் கோலி விலங்கிக்கண் பிறழ நோக்கி, முள்ளெயி றிலங்கச் செவ்வாய் முறுவற்றூ தாதி யாக, அள்ளிக் கொண் டுண்ணக் காமங் கனிவித்தார் பனிவிற் றுழ்ந்த, வள்ளி தழ் மாலை மார்பன் வச்சிர மனத்த னானான்.

பனிவில் - முத்துவடம்; ஆகுபெயர்.

(இ - ள்.) அங்ஙனமிருந்தவனை அம்மகளிர், தம் புருவத்தை வளைத்துக் கண் விலங்கிப் பிறழப் பார்த்துச் செவ்வாயில் எயிறிலங்க முறுவலிக்கும் முறுவற்றூது முதலாக ஒழிந்த காமக் குறிப்புக்கள் நிகழ்த்துவனவற்றைக் கருவியாகக் கொண்டு அவன் காமவின்பத்தை அள்ளி உண்ணும்படி பழுப்பித்துப் பார்த்தார்; பார்த்தற்கு அவன் மனம் நெகிழாது துறவின்கண்ணே வைர மனத்தனாயினானென்க. (கரு௬ச)

2733. முலைமுகஞ் சுமந்த முத்தத் தொத்தொளிர் மாலை யாரும், மலைமுகந் தனைய மார்பின் மன்னனு மிருந்த போழ்திற், கொலைமுகக் களிற னாற்கு நாழிகை சென்று கூறக், கலைமுக மல்லர் புல்லிக் கமழுநீ ராட்டி னாரே.

முலைத்தலை சுமந்த முத்தத் தொத்து விளங்குமாலை. மலையின் பெருமையைக் கொள்ளை கொண்டாற்போலு மார்பு. மஞ்சன மாட்டு தற்குக் கூறிய இலக்கணங்கள் போன மல்லர்.

(இ - ள்.) அங்ஙனம் மகளிரும் அரசனுமிருந்த பொழுதிற் கழிந்த நாழிகையைக் கணிகள் கூற, மல்லர் உடம்பு தடவி மஞ்சன மாட்டினா ரென்க. (கரு௬ரு)

2732. கோலி - வளைத்து. பிறழ - மாறுபட. முள்ளைப்போன்ற எயிறு; எயிறு - பல். முறுவல் - புன்னகை. வள்ளிதழ் - வளவிய இதழ்.

2733. தொத்து - கொத்து. மலையை முகந்தாற்போன்ற. நாழிகை கூற; அரசனுக்குக் கழிந்த நாழிகையைக் கணிகள் கூறுதல்: "குறுநீர்க் கன்ன லினைத்தென் றிசைப்ப" (முல்லைப். 58); "வேதா ளிகரொடு நாழிகை யிசைப்ப" (மதுரைக். 671); "பொழுதுசென்றுழிகை............ உணர்த்த" (சூளா. சுயம். 134); "பூமென் கணையும் பொருசிலையுங் கைக்கொண்டு, காமன் றிரியுங் கருவூரா - யாமங்கள், ஒன்றுபோ யொன்றுபோ யொன்றுபோய் நாழிகையும், ஒன்றுபோ யொன்றுபோ யொன்று" (சிலப். 5 : 49, அடியார். மேற்.). நாழிகை கூறும் கணிகள் நாழிகைக்கணக்கரென்றும், கடிகையாரென்றும் கூறப்படுவர்.

2734. வெண்டுகின் மாலை சாந்தம் விழுக்கலம் விதியிற் சேர்த்தி
நுண்டுகிற் றிரைகள் சேர்ந்த நூற்றுலா மண்ட பத்துக்
கண்டிரண் முத்த மென்றேட் காவிக்கண் மகளிர் போற்றி
எண்டிசை மருங்கு மேத்த வினிதினி னேறி ஞனே.

(இ - ள்.) துகில் முதலிய நான்கினையும் அரசியலிற் கூறிய வாற்றாலே சேர்த்தி எண்டிசையினின்று மகளிர் போற்றி ஏத்தத் திரைகள் சேர்ந்த நூறடி உலாவுதலையுடைய அழகு செய்யு மண்டபத்தே ஏறின னென்க.

பொருட்கட்டோன்றும் வரையறைக்குணப் பெயராகிய நூறென்னும் எண்ணுப் பெயர் எண்ணுடைப் பொருண்மேல் ஆகுபெயராய் நின்றது; "ஆறறி யந்தணர்" (கலித். 1) என்றாற்போல. உண்டால் நூறடி உலாவுதல் வேண்டுமென்று மருத்துவநூல் கூறியதனைக் கூறினர். (கருசு)

2735. நெய்வளங் கனிந்து வாச நிறைந்துவான் வறைக ளார்ந்து
குய்வளங் கழுமி வெம்மைத் தீஞ்சுவை குன்ற லின்றி
ஐவரு ளொருவ னன்ன வடிசிலான் மடைய னேந்த
மைவரை மாலை மார்பன் வான்சுவை யமிர்த முண்டான்.

(இ - ள்.) கனிந்து நிறைந்து ஆர்ந்து கழுமி அறுசுவையும் குறைதலின்றி வெம்மையையுடைய அடிசிலை வீமசேனனை யொத்த மடையன் ஏந்த, அரசன் அவ்வடிசிலை உண்டானென்க.

குய் - தாளிப்பு. நூல்மடையன் - நூல்போன மடையன். (கருஎ)

---

2734. சாந்தம் - சந்தனம். விழுக்கலம் - சிறந்த ஆபரணம். கண் திரள் - இடம் திரண்ட; "கண்டிரண் முத்தம் பயக்கு மிருமுந்நீர்." (ஐந். எழு. 61)

2735. நெய்வளம் - நெய்யின் மிகுதி. வாசம் - நறுமணம். வறைகள் - வறுவல்கள். வெம்மைத்தீஞ்சுவை - சூட்டினால் உண்டான இனிய சுவை. குய்வளங்கழுமி : "குய்வளங் கொளீஇ" (பெருங். 2. 3 : 23). ஐவருள் ஒருவன் - வீமசேனன்; இவன் மடைத் தொழிலிற் சிறந்தவனென்பது வெளிப்படை. அவனால் மடை நூலொன்று செய்யப் பட்டுள்ளதென்பது, "காவெரி யூட்டிய கவர்கணைத் தூணிப், பூவிரி கச்சைப் புகழோன் றன்முன், பனிவரை மார்பன் பயந்த நுண்பொருட், பனுவல்" (சிறுபாண். 238 - 41) என்பதனால் விளங்கும்; வீமபாக மென்று தமிழில் ஒருநூல் வழங்குகின்றது. மைவரை - மேகங்களை யுடைய மலை. அமிர்தம் - உணவு.

2736. கைப்பொடி சாந்த மேந்திக் கரகநீர் விதியிற் பூசி,
மைப்படு மழைக்க ணல்லார் மணிச்செப்பின் வாச நீட்டச்,
செப்படு பஞ்ச வாசந் திசையெலாங் கமழ வாய்க்கொண்,
டொப்புடை யுறுவர் கோயில் வணங்குது மெழுக வென்றான்.

பொடி - உழுத்தம்பொடி முதலியன.

(இ - ள்.) முன்னர்ப் பொடியையும் பின்னர்ச் சந்தனத்தையும் தன் கையிலே வாங்கி நீராலே நூலில் விதித்த விதி தப்பாமற் பூசி நல்லார் செப்பிலிருந்த முகவாசத்தை நீட்ட அதனைத் தின்று கோயிலில் உறுவரை யாம் வணங்குதும்; அதற்கு எழுவீராகவென்றானென்க.

செப்படும் ஒப்புடைக் கோயில் - செப்பினைத் தன்னோடு உவமிக்குமளவில், அதனைக் கெடுக்கும் ஒப்பினையுடைய கோயில். உறுவர் - எல்லாத் தேவரினும் மிக்கவர். (கரு அ)

---

## சா. அறிவர்சிறப்பு

2737. ஒருபகல் பூசி னோராண் டொழிவின்றி விடாது நாறும்,
பெரியவர் கேண்மை போலும் பெறற்கரும் வாச வெண்ணெய்,
அரிவையர் பூசி யாடி யகிற்புகை யாவி யூட்டித், திருவிழை
துகிலும் பூணுந் திறப்படத் தாங்கி னாரே.

(இ - ள்.) அதுகேட்டு அரிவையர் ஒருபொழுது பூசின் ஒருகாலமு மொழிவின்றாய் எக்காலமும் விடாமல் நாறும் பெரியவர் கேண்மையை ஒக்கும் வாச எண்ணெயைப் பூசி மஞ்சனமாடிப் புகைத்துத் துகிலையும் பூணையும் தாங்கினாரென்க.

'ஓராண்டும்' என்னுமும்மை விகாரத்தால் தொக்கது; அஃது எக்காலமுமென்னும்பொருட்டு. (கரு கூ)

---

2736. கரகநீர் - கமண்டலத்திலுள்ள நீரால். பூசி - வாய் துடைத்து. மை எழுதிய மழைக்கண். செப்படு பஞ்சவாசம் : சுட்டுப் பெயரளவாய் நின்றதெனலுமாம். அடி, 2-3 : "பணியோள் பற்றிய பவழச் செப்பின், வாச நறுந்திரை.........தான்பின் கொண்டு" (பெருங். 1. 34 : 46-8). உறுவர் : "உறற்பால நீக்க லுறுவர்க்கு மாகா" (நாலடி. 104)

2737. ஒழிவு - நீங்குதல். கேண்மைபோலும் எண்ணெய், நாறும் எண்ணெய் என்க. அடி, 1 - 2 : "ஒருநாட் பூசினு மோரியாண்டு விடாஅத், திருமா ணுறுப்பிற்குச் சீர்நிறை யமைத்துக், கரும வித்தகர் கைபுனைந் தியற்றிய வாச வெண்ணெய்" (பெருங். 2. 5 : 98 - 101). புகையாவி : இரு பெயரொட்டு. திருமகளும் விரும்பும் துகில்.

2738. நற்றவஞ் செய்த விர ருளவழி நயந்து நாடும்
பொற்றதா மரையி ளுளிற் பூஞ்சிகை முத்த மின்னக்
கொற்றவற் றொழுது சேர்ந்தார் கொம்பனர் வாமன் கோயில்
மற்றவன் மகிழ்ந்து புக்கு மணிமுடி துளக்கி ளுனே.

மிக்க தவத்தைச் செய்து அதனுல் நால்வகை வீரத்தையுமுடைய ராவர். அவை, "கல்வி தறுக ணிசைமை கொடையெனச், சொல்லப் பட்ட பெருமித நான்கே" (தொல். மெய்ப். 9) என்பதனுனுணர்க.

(இ - ள்.) அங்ஙனந் தாங்கின கொம்பனர், வீரரை நயந்து அவருள்ள இடத்தை நாடும் பொற்றமரையினுளைப் போலே கொற்றவனை நாடிச் சென்று முத்தம் மின்னத் தொழுது சேர்ந்தார்; பின்னர் அவன் அதற்கு மகிழ்ந்து வாமன் கோயிலிலே புக்கு வணங்கினுனென்க (கசo)

(வேறு)

2739. கடிமலர்ப் பிண்டிக் கடவுள் கமலத்
தடிமலர் சூடி யவருலகில் யாரே
அடிமலர் சூடி யவருலக மேத்த
வடிமலர் தூவ வருகின்ரு ரன்றே.

எக்காலமும் புதிதாகிய மலர். கமலத்தே நடந்த அடியாகிய மலர்.

(இ - ள்.) கடவுளுடைய திருவடியை முற்பிறப்பிற் சூடினவர் இப் பிறப்பில் இவ்வுலகின்கண் யாவராய் நுகர்வரெனக் கேட்பீராயின், அவ் வடிமலரைச் சூடினவர்களன்றே உலகமேத்தும்படி அரசர் வடித்த மலரைத் தூவ ஈண்டு வருகின்றவரென்று தேவியர் கேட்பத் துதித்தா னென்க.

ஒழிந்த இரண்டற்கும் இவ்வாறே பொருளுரைக்க. (கசக)

2738. நற்றவஞ் செய்த வீரர் - புண்ணியமிகுத்தவர். நயந்து நாடும் - விரும்பி ஆராயும். பொற்ற - பொலிவுபெற்ற. தாமரையினுளின் - திருமகளைப் போல. அடி, 1 - 2: "திருமக ணிலைமையுஞ் செல்வர் கேட்டிரேல், மருவிய மனிதரை யிகந்து மற்றவள், பொருவறு புகழினர் புதியர் காமுறும், ஒருவர்கண் ணுறவில ளுணர்ந்து கொண்மினே," "புண்ணிய முலந்தபின் பொருளி லார்களைக், கண்ணிலர் துறந்திடுங் கணிகை மார்கள்போல், எண்ணில ளிகந்திடு மியாவர் தம்மையும், நண் ணிய நண்பில ணங்கை வண்ணமே" (சூளா. முத்தி. 14, 15) என்ப வற்றில் திருமகளியல்பு இச்செய்யுளிற் போலவே கூறப்பட்டிருத்தல் காண்க. சிகையில் முத்தம் மின்ன. வாமன் - அருகன்.

2739. கடி - விளக்கம். அடிமலரைச் சூடியவர். உலகம் ஏத்த - உலகம் புகழும்படி.

2740. முத்தணிந்த முக்குடைக்கீழ் மூர்த்தி திருவடியைப்
பத்திமையா ணுளும் பணிகின்றார் யாரே
பத்திமையா ணுளும் பணிவார் பகட்டெருத்தின்
நித்தில வெண்குடைக்கீழ் நீங்காதா ரன்றே.

பணிவார் - பணிந்து போவார். எருத்தத்தின் மேலே குடைக்கீழே யிருக்கின்ற இருப்பு நீங்காமல் வருகின்றார். (கசஉ)

2741. கருமக் கடல்கடந்த கைவலச் செல்வன்
எரிமலர்ச் சேவடியை யேத்துவார் யாரே
எரிமலர்ச் சேவடியை யேத்துவார் வான்றோய்
திருமுத் தவிராழிச் செல்வரே யன்றே.

இருவினையாகிய கடலைக் கடந்து அதனாற் பெற்ற கேவல மடந்தையை நுகரும் செல்வன். முத்தவிராழி - முத்து விளங்குகின்ற கொற்றக்குடை; ஆழி - வட்டம்; ஆகுபெயர்.

அங்ஙனம் முடி துளக்கினவன், வணக்கத்தாற் பெறும்பயனைத் தேவியர் கருதும்படி இம்மூன்று தாழிசையாலும் கூறித் துதித்தா னென்க. (கசங)

(வேறு)

2742. வண்ண மாமலர் மாலை வாய்ந்தன
சுண்ணங் குங்குமந் தூமத் தாற்புனைந்
தண்ணல் சேவடி யருச்சித் தானரோ
விண்ணி லின்பமே விழைந்த வேட்கையான்.

(இ - ள்.) தேவருலகில் இல்லாத வீட்டின்பத்தையே விரும்பின வேட்கையை யுடையவன், அங்ஙனந் துதித்துப் பின்னர் வாய்ந்தன வாகிய மலர் முதலிய ஐந்தினையும் புனைந்து அண்ணல் சேவடியை அருச்சித்தானென்க. (கசச)

---

(மேற்.) அடி, 1: நேமி. உரி. 3.

2740. முக்குடை: சீவக. 139, அடிக். பகட்டெருத்தின் - யானை யின் புறக்கழுத்தில். அடி, 3-4: "யானை யெருத்தம் பொலியக் குடை நிழற்கீழ்ச், சேனைத் தலைவராய்ச் சென்றோரும்" (நாலடி. 3)

2741. கைவலச் செல்வன் - முத்தியாகிய செல்வத்தை உடையவன். எரிமலர்ச் சேவடி: சீவக. 2561, ந.

2742. வண்ணம் - நிறம். சுண்ணம் - வாசனைப்பொடி. தூமம் - அகிற்புகை. வேட்கையான் - விருப்பத்தையுடைய சீவகன்.

## எ. அறவுரை

2743. இலங்கு குங்கும மார்ப னேந்துசீர்
நலங்கொள் சாரணர் நாதன் கோயிலை
வலங்கொண் டாய்மலர்ப் பிண்டி மாநிழற்
கலந்த கன்மிசைக் கண்டு வாழ்த்தினான்.

(இ - ள்.) அங்ஙனம் அருச்சித்த குங்கும மார்பன், ஆகாயத்தே வந்து ஸ்ரீநாதன் கோயிலை வலங்கொண்டு பிண்டியின் கீழே பளிக்குக் கன்மிசையிலே நலங்கொண்டு நின்ற பெரிய மணிகளின் நிறத்தைக் கலந்த சாரணரிருவரைக் கண்டு வாழ்த்தினானென்க.

[1] மேல் இருசுடரை உவமித்தலின், மாணிக்கமும் முத்துமே கொள்க. (கசூ)

2744. உரிமை தன்னொடும் வலங்கொண் டோங்குசீர்த்
திரும கன்பணிந் திருப்பச் செய்தவர்
இருநி லம்மனாற் கின்ப மேயெனப்
பெருநி லம்மனன் பெரிதும் வாழ்த்தினான்.

(இ - ள்.) அங்ஙனம் வாழ்த்தின திருமகன் உரிமைச் சுற்றத்தோடே வலம் வந்து வணங்கி இருந்த அளவிலே, சாரணர், மன்னனுக்கு இருநில மாளுதல் இன்பமன்றாயிற்றே யென்று கேட்ப, அம்மன்னனன்றான் இரு நிலத்தைத் துறந்த தன்மையை உணர்ந்ததற்கு வியந்து மிகவுந் துதித்தானென்க.

ஏகாரம் : எதிர்மறை. (கசசு)

---

2743. மார்பன் - சீவகன். சாரணர் - சமணமுனிவர்; அவர் தல சாரணர், ஜலசாரணர், பலசாரணர், புஷ்பசாரணர், தந்துசாரணர், சதுரங்குலசாரணர், சங்கசாரணர், ஆகாசசாரணரென எண்வகையார்; இவ்விருவராகச் சென்று தருமோபதேசஞ் செய்தல் அவர்கட்கியல் பென்பர். சாரணரைக் கண்டு. கல் - சிலாதலம்; சிலப். 10 : 24 - 5, 160 - 61; இது சந்திரகாந்தக் கல்லால் அமைக்கப்படுவது; "தென்றலுஞ் செழுமதுத் திவலை மாரியும், என்றுநின் றுருததோ ரிளந்தண் பிண்டியும், நின்றொளி திகழ்வதோர் நிலாக்கல் வட்டமும், சென்றவ ரமர்ந்துழித் திகழ்ந்து தோன்றுமே" (சூளா. இரத. 74)

(உரை) [1] சீவக. 2893.

2744. உரிமை - தேவியர். அடி. 1 : "அரச னுரிமையோ டப் பொழில் புகுந்து" (மணி. 25 : 1). திருமகன் - சீவகன். பெருநிலமனன் - சீவகன்.

2745. தெருள லேன்செய்த தீவி னையெனும்
இருள்வி லங்கநின் றெரியு நீள்சுடர்
அருளு மின்னெனக் கடிக ளென்றனன்
மருள்வி லங்கிய மன்னர் மன்னனே.

(இ - ள்.) அங்ஙனந் துதித்து இல்லறத்தின் மயக்கந் தீர்ந்த மன்னன், அடிகளே! பிறப்பறுமாறு அறியாதேன் எப்பிறப்புக்களிலும் செய்துகொண்ட தீவினையென்னும் இருள் கெடும்படியாகச் சிலநாள் நின்று தவஞ்செய்து பின்னர் எரியுநீள்சுடராகிய ஞானத்தை எய்தும் படி எனக்கு அருளுமினென்று னென்க.

இனி, இருள் விலகும்படி நின்று எரியுஞ்சுடர் - [1] இரத்தினத் திரயமு மாம். (கசஎ)

(வேறு)

2746. பாற்கடற் பனிமதி பரவைத் தீங்கதிர்
மேற்பட மிகநனி சொரிவ தொப்பவே
நூற்கடன் மாதவ னுனித்த நல்லறம்
கோற்கடன் மன்னனுக் குரைக்கு மென்பவே.

(இ - ள்.) அதுகேட்ட நூற்கடலாகிய சாரணன், பரவையில் தோன்றின பனிமதி தன் கதிரைப் பாற்கடலின் மேலே வீழ நனி சொரிவ தொப்ப, மிகவும் நுனித்த அறத்தை மன்னனுக்கு உரையாநிற்குமென்க.

செங்கோல் நடாத்துதலைக் கடனுகவுடைய. (கசஅ)

(வேறு)

2747. தேனெய் தோய்ந்தன தீவிய திருமணி யனைய
வானி னுய்ப்பன வரகதி தருவன மதியோர்
ஏனை யாவரு மமுதெனப் பருகுவ புகல்வ
மான மில்லுயர் மணிவண்ண னுவலிய வலித்தான்.

---

2745. தெருளலேன் - தெளியாதேனுகிய யான். விலங்க - நீங்க. சுடரென்றது ஞானத்தை. அடிகள்: விளி. மருள் - மயக்கம்.

(உரை) [1] இரத்தினத் திரயம் - நற்காட்சி, நன்ஞானம், நல்லொழுக்கம்.

2746. பாற்கடலில் கதிரைச் சொரிவதை ஒப்ப. நுனித்த - ஆராய்ந் தறிந்த. என்ப, ஏ: அசைகள். மாதவன் உரைக்கும். மேற்கூறிய சாரணரிருவருள் உபதேசிப்போர் மூத்தோராதலின், 'நூற்கடன் மாதவன்' என ஒருமையாற் கூறினர்; இது, சிலப். 10 : 163-ஆம் அடி முதலியவற்றுலும் அறியப்படும்.

2747. தேனெய் - தேனுகிய நெய். வான் - சுவர்க்கம். மானம் - குற்றமெனினுமாம். மணிவண்ணன்: "மணிவரை யனைய மாதவன்" (சீவக. 2891). நுவலிய வலித்தான் - சொல்லுதற்குத் துணிந்தான்.

உயர்மணிவண்ணன் - இருவரிலு மூத்தவன்; இரத்தினப் பிரபை யென்னுமவன்.

(இ - ள்.) அங்ஙனமுரைக்கின்ற மணிவண்ணன், பலவகைப்பட்ட அறங்களுள், தீவிய தேனெய்யை ஒத்தனவாகையாலே, 'சிலநாள் துறக்கத்திலே செலுத்துவனவாய் அறிவில்லோர் யாவரும் புகல்வனவற்றையும், பெறுதற்கரிய மணியை யொத்தனவாய் வீட்டைத் தருவனவாய் அறிவுடையோர் யாவரும் அமுதெனப் பருகுவனவற்றையும் நுவலத் துணிந்தானென்க.

தேனுகர்வார்க்கு, அது புளிச்சுவையையுந் தருதலின், நிலையில்லாத துறக்கந்தருகின்ற அறத்திற்கு உவமையாயிற்று. துறக்கத்தையும் வீட்டையும் தருகின்ற இருவகையறமும் கூறுகின்றது, இவற்கு இன்னும் துறக்கத்திற் செல்லுங்கருத்து உண்டாமோவென்பது உணர்தற்கு. மானம் - ஒப்பு. (௧௪௯)

2748. அருமை யின்னெய்தும் யாக்கையும் யாக்கைய தழிவும்
திருமெய் நீங்கிய துன்பமுந் தெளிபொருட் டுணிவும்
குருமை யெய்திய குணநிலை கொடைபெறு பயனும்
பெருமை வீட்டொடும் பேசுவல் கேளிது பெரியோய்.

(இ - ள்.) அங்ஙனந் துணிந்தவன், பெரியோய்! தவத்தாற் பெறுகின்ற மக்கள் யாக்கையையும், அந்த யாக்கை தனக்கடைத்த நூறியாண்டும் நிலைபெற்று நில்லாது கருப்ப முதலாகஅழிகின்ற அழிவையும், நல்வினை மெய்யினின்றும் நீங்கப்பட்டனவாகிய நரகர் விலங்கு மக்கள் தேவரென்கின்ற நாற்கதியிற் றுன்பத்தையும், துணியப்படும் பொருளையும் அப்பொருளைத் துணியுந் துணிவையும், நிறத்தைப் பெற்ற சீலத்தினது நிலையையும், தானத்தையும், அத்தானத்தாலும் சீலத்தாலும் காட்சியாலும் பெறும் பயனையும், பெருமையையுடைய வீட்டிலக்கணத்தோடுங் கூறுவேன்; அவற்றுள் இப்பெறுதற்கருமையை முதற்கேளென்றானென்க.

நீங்கிய : தொழிற்பெயர். இதுவென்றது, பெறுதற்கருமையை. குருவென்று முரிச்சொல் ஈறு திரிந்தது. திருமையும் பாடம். (௧௫௦)

---

2748. யாக்கை - மனிதவுடம்பு. திருமெய் - நல்வினையால் அடையும் உடம்பு. குருமை - நிறம்; மை பகுதிப்பொருள் விகுதி யெனலுமாம். குணநிலையையும் கொடையையும் என உருபும் உம்மையும் விரிக்க.

## அ. பெறுதற்கருமை

2749. பரவை வெண்டிரை வடகடற் படுநுகத் துளையுட்
டிரைசெய் தென்கட லிட்டதோர் நோன்கழி சிவணி
அரச வத்துளை யகவயிற் செறிந்தென வரிதால்
பெரிய யோனிகள் பிழைத்திவண் மானிடம் பெறலே.

**பரவை - பரத்தல்.**

**(இ - ள்.)** அரசனே ! எண்ணுங்கால் நால்வகைத் தோற்றத்தாற் பெரியவாகிய யோனிகளைத் தப்பி இவ்வுலகிலே மக்கள் யாக்கையைப் பெறுதல், தென் கடலிலே போகட்டதொரு கழி வடகடலிலே உண்டான நுகத்துளையிலே முதற்சென்றெய்தி அவ்வளவேயன்றி அத்துளையினடுவே சென்று செறிந்ததென்னும்படி அரிதாயிருக்குமென்றானென்க. (கூகூ)

2750. விண்டு வேய்நர லூன்விளை கானவ ரிடனும்
கொண்டு கூர்ம்பனி குலைத்திடு நிலைக்களக் குறும்பும்
உண்டு நீரென வுரையினு மரியன வொருவி
மண்டு தீம்புனல் வளங்கெழு நாடெய்த லரிதே.

**ஊனே உணவாக விளையும்.**

**(இ - ள்.)** அங்ஙனம் மானிடம் பெற்றாலும், நீருண்டென்று வார்த்தையிலும் கூறுதற்கரியவாய் வேய் வெடித்தொலிக்குங் கானவரிடத்தையும் மிக்க பனியைக்கொண்டு குலைக்குமிடமாகிய குறும்புகளையும் நீங்கி நன்னாட்டிலே பிறத்தல் அரிதென்றானென்க. (கூ௨)

2749. கழி - கயிறெனலுமாம் ; தக்க. 132, உரை. சிவணி - பொருந்தி. இவண் - இவ்வுலகத்தில். அடி, 1-3 : “வளைபயில் கீழ்கடனின்றிட மேல்கடல் வானுகத்தின், துளைவழி நேர்கழி கோத்தென” (திருச்சிற். 6); “தென்கட லிட்டதோர் திருமணி வான்கழி, வடகடனுகத்துளை வந்துபட் டாஅங்கு” (பெருங். 1. 32 : 17-8); “திண்பெற்ற வடபால் வீரை செறிநுகத் துளையி னூடே, வண்பெற்ற வடபால் வீரைக் கழிசெல மருவு மாபோல்” (மெய்ம்மொழி); ‘வடகடலிட்ட ஒரு நுகத்தின் ஒரு துளையில் தென்கடலிட்ட ஒருகழிசென்று கோத்தாற்போல’ (இறை. 2, உரை). அரிதால்......மானிடம் பெறல் : “மக்க ளுடம்பு பெறற்கரிது” (அறநெறிச். 212)

(மேற்.) அடி, 4 : மாறன். பொருளணி. 99.

2750. விண்டு - பிளந்து. வேய் - மூங்கில். கூர்ம்பனி - மிக்க

2751. வில்லின் மாக்கொன்று வெண்ணிணைத் தடிவிளிம் படுத்த
பல்லி ளுர்களும் படுகடற் பரதவர் முதலா
எல்லை நீங்கிய விழிதொழி லிழிகுல மொருவி
நல்ல தொல்குலம் பெறுதலு நரபதி யரிதே.

(இ - ள்.) நரபதி! மாக்களை வில்லாலே கொன்று அவற்றின் தசையைத் தின்கின்ற பல்லினராகிய கரும்புறத்தோரும் பரதவருமுதலாக எண்ணிறந்த இழிதொழிலால் இழிந்த குலங்களிற் பிறவாமல் நற்குலத்திலே பிறத்தலும் அரிதென்றானென்க. (கருங)

2752. கருவி மாமழை கனைபெயல் பொழிந்தென வழிநாள்
அருவி போற்றொடர்ந் தருதன வரும்பிணி யழலுட்
கருவிற் காய்த்திய கட்டளைப் படிமையிற் பிழையா
துருவின் மிக்கதோ ருடம்பது பெறுதலு மரிதே.

(இ - ள்.) குலத்திற்பிறக்குங் காலத்தும், பெருமழைபெய்ததாகப் பின்னர்ச் சிலகல்லிடை அருவி இடையறாதொழுகுமாறுபோலே, உயிர்க் கிழவனைத் தொடர்ந்து விடாதனவாய்ப் போக்குதற்கரிய இருவினை வயிற்றுத் தீயினுள்ளே இட்டுவைத்துக் காய்ச்சின கருப்பத்தின் கண்ணே அவ்விருவினையின் கட்டளையாற் பின்தோன்றும் வடிவத்தில் தீவினையின் கட்டளையால் உறுப்புக் குறையும் வடிவைத் தப்பி நல்வினையின் கட்டளையாலே உருவான் மிக்கதோருடம்பை அம்மக்கள்யாக்கை பெறுதலுமரிதென்றானென்க.

பிணித்தலையுடையது பிணியாயிற்று. கட்டளையென்றார், தத்தம் பயனை நுகர்வித்தற்குரிய கோவையையுடையதாதலைப் பிழையா விதியினை. (கருச)

2751. மாக்களை வில்லின் கொன்று; மா - விலங்கு. தடி - ஊன். விளிம்பிலே அடுத்த. பரதவர் - நெய்தனில மக்கள். நரபதி : விளி.

(உரை) கரும்புறத்தோர் - வேடர்; இச்சொல் இலக்கணவுரைகளில் மேற்கோளாக வழங்குகின்றது.

2752. கருவி - மின்முதலிய தொகுதி. பொழிந்தென - பெய்ததாக. கருவி......அருதன : "யாமத்துக், கருவி மாமழை வீழ்ந்தென வருவி, விடரகத் தியம்பு நாட" (குறுந். 42 : 1-3). அருவிவினைக்கு : "வினையிற் றிரள்வெள் ளருவித்திர டேங்கி வீழ" (கம்ப. கடறுவு. 50). கருவில் - கருப்பத்தில். படிமை - விதி. பிழையாது - தவறாமல். உரு - அழகு.

(மேற்.) அடி, 4 : குறள், 407, பரிமேல்.

2753. காம னன்னதோர் கழிவனப் பறிவொடு பெறினும்
நாம நாற்கதி நவைதரு நெறிபல வொருவி
வாம னூனெறி வழுவறத் தழுவின ரொழுகல்
ஏம வெண்குடை யிறைவமற் றியாவது மரிதே.

(இ - ள்.) இறைவனே! அங்ஙனம் மிக்க அழகை அறிவுடனே பெற்றாராயினும் அச்சத்தைத் தரும் நாற்கதியிலே செலுத்தும் குற்றத்தைத் தரும் பரசமயங்களைக் கைவிட்டு வாமனூல்வழியை யாவதும் வழுவறத் தழுவினரா யொழுகுதல் அரிதென்றானென்க.

இத்துணையும், மக்கள்யாக்கை பெறுதற்கருமையும், அது பெற்றாலும் நன்னிலமும் நற்குலமும் நல்வடிவும் நல்லறமும் பெறுதற்கருமையுங் கூறி, இனி, அவ்வியாக்கை நிலைபெறாதொழியுந் தன்மை கூறுகின்றார். (கருரு)

---

## க. நிலையாமை

2754. (க) இன்ன தன்மையி னருமையி னெய்திய பொழுதே, பொன்னும் வெள்ளியும் புணர்ந்தென வயிற்றகம் பொருந்தி, மின்னு மொக்குளு மெனநனி வீயினும் வீயும், பின்னை வெண்ணெயிற் றிரண்டபின் பிழைக்கவும் பெறுமே.

2753. கழிவனப்பு - மிக்க அழகு; வனப்பு - பலவுறுப்பும் திரண்ட வழிப்பெறுவதோர் அழகு; தொல். செய். 235, பேர். பெறினும்: உம்மை, அங்ஙனம் பெறுதற்கு இயலாமையை விளக்கியது. நாமம் - அச்சம்; உரிச்சொல் ஈறு திரிந்தது. நாற்கதி - மக்கள் முதலிய நால்வகைப் பிறப்பு. நெறி - பிறமதங்கள். வாமன் - அருகன்; சீவக. 271. ஏம வெண்குடை - மக்களுக்கு இன்பத்தைச் செய்யும் வெண்குடை.

2749 - 53. இச்செய்யுட்களின் பொருளும், "வினைப்பய வலியினாலே வேறுவே றியாக்கை யாகித், தனிப்பல பிறவி தம்முட் டுன்புறா உம் பல்லுயிர்க்கு, மனித்தரி னரிய தாகுந் தோன்றுத றோன்றி னாலும், இனித்தவை நுகர வெய்துஞ் செல்வமு மன்ன தேயால்", "உயர்குடி யதனிற் றோன்ற லூனமில் யாக்கை யாதல், மயர்வறு கல்வி கேள்வித் தன்மையால் வல்ல ராதல், பெரிதுணர் வரிய வெய்தல் பேரறங் கோட லென்றாங், கரிதிவை பெறுத லேடா பெற்றவர் மக்க ளென்பார்" (வளையாபதி) என்பவற்றின் பொருளும் ஒருவாறு ஒத்து விளங்குதல் காண்க.

2754. மின்னும் மொக்குளும் யாக்கைக்கு: "மின்னி னிலையில, மன்னுயி ராக்கைகள்" (திருவாய்மொழி, 1. 2 : 2): "படுமழை மொக்குளிற் பல்காலுந் தோன்றிக், கெடுமிதோர் யாக்கை" (நாலடி. 27). வீயும் - அழியும். பிழைக்கவும் - அழியவும்.

2755. (உ) வெண்ணெ யாயது வீங்குபு கூன்புற யாமை, வண்ண மெய்தலும் வழுக்கவும் பெறுமது வழுக்கா, தொண்மை வாண்மதி யுருவொடு திருவெனத் தோன்றிக், கண்ண ணுரழக் கவிழினுங் கவிழுமற் றறிநீ.

2756. (ரு) அழித லின்றியங் கருநிதி யிரவலர்க் கார்த்தி, ம்முழுதும் பேர்பெறு மெல்லையுண் முரியினு முரியும், வழுவில் பொய்கையுண் மலரென வளர்ந்துமை யாடிக், கெழீஇயி னுரொடுங் கிளையழக் கெடுதலுங் கெடுமே.

2757. (சா) கெடுத லவ்வழி யில்லெனிற் கேள்விக டுறைபோய், வடிகொள் கண்ணியர் மனங்குழைந் தநங்கனென் றிரங்கக், கொடையுங் கோலமுங் குழகுந்தம் மழகுங்கண் டேத்த, விடையிற் செல்வுழி விளியினும் விளியுமற் றறிநீ.

2758. (சு) எரிபொன் மேகலை யிலங்கரிச் சிலம்பொடு சிலம்பும், அரிபொற் கிண்கிணி யணியிழை யரிவையர்ப் புணர்ந்து, தெரிவில் போகத்துக் கூற்றுவன் செகுத்திடச் சிதைந்து, முரியும் பல்சன முகம்புடைத் தகங்குழைந் தழவே.

2759. (சூ) கோதை மங்கையர் குவிமுலைத் தடத்திடைக் குளித்துக், காதன் மக்களைக் கண்டுவந் தினிதினிற் கழிப்பப், பேது செய்பிணிப் பெரும்புலி பாய்ந்திடப் பிணமாம், ஓத மாக் கட லுடைகலத் தவருற்ற துறவே.

---

**(மேற்.) அடி, 1 : தொல். வினை. 37, ந.; இ - வி. வினை. 17.**

2755. வீங்குபு - பெருத்து. கூன் புறம் - வளைந்த முதுகு. வண்ணம் - வடிவம். வழுக்கல் - அழிதல். மதி - பூர்ணசந்திரன். கண்ணனுர் - கண்போன்ற உறவினர்.

2756. ஆர்த்தி - நிறையக் கொடுத்து. பேர் - புகழ். பொய்கையுள் மலரென வளர்ந்து : "மக்களை...தாமரைப் போதுபிடித் தாங்கு" (மதுரைக். 461-3) ; "போதவிழ் தாமரை யன்னநின், காதலம் புதல்வன்" (ஐங்குறு. 424) ; "அடைமறை யாயிதழ்ப் போதுபோற் கொண்ட, குடைநிழற் றோன்றுநின் செம்மலை" (கலித். 84 : 10 - 11). மையாடி - கல்விகற்று. கெழீஇயினுர் - நண்பர்.

2757. வடி - மாவடுவின் வகிர். குழகு - இளமை ; "கொம்மைக் குழகாடும்" (சீவக. 2790). விடையின் - காளையைப்போல.

2758. எரிபொன் - விளங்கும் பொன். அரி - பரல். போகத்து - புணர்ச்சியில். அழச் சிதைந்து முரியும்.

2759. கோதைமங்கையர் - மாலையைப்போன்ற மகளிர் ; திருச்சிற். 1. தடம் - பரப்பு. பேது - மயக்கம். உடைகலத்தவர் உற்றது - உடைந்த கப்பலிலுள்ளார் அடைந்த துன்பத்தை.

2760. (எ) காமம் பைப்பயக் கழியத்தங் கடைப்பிடி சுருங்கி, ஊமர் போலத்த முரையவிந் துறுப்பினி லுரையாத், தூய்மை யில்குளந் தூம்புவிட் டாம்பொரு ளுணர்த்தி, ஈம மேறுத லொருதலை யிகலமர் கடந்தோய்.

இவை ஏழும் ஒரு தொடர்.

(இ - ள்.) இகலமர் கடந்தோய்! நீ யான் இனிக் கூறுகின்றதனை அறிவாயாக; அஃது யாதெனின், இக்கூறிய நால்வகைத் தன்மையிற் காட்டில் மக்கட்கு விதித்த ஆயுள் நிலைபெறுதலரிதாகையினாலே, அது: பொன்னும் வெள்ளியும் புணர்ந்தவெனச் சுரோணிதமும் சுக்கிலமும் வயிற்றகத்தே பொருந்தி மக்கள் யாக்கை எடுத்தற் கெய்திய பொழுதிலே மின்னும் மொக்குளும் தோன்றிக் கெடுமாறு போலக் கெடினும் கெடும்; அங்ஙனங் கெடாது வெண்ணெய்போல் திரண்ட பின்னர்க் கெடவும் பெறும்; அதிற் கேடின்றேல், அஃது யாமையின் தன்மையைப் பெற்ற அளவிலே கெடவும் பெறும்; அஃது அந்நிலையிற் கெடாதேல், நிறைமதி போலும் குறையா உருவுடனே பிறந்து இருமுதுகுரவர் முதலாயினோர் அழக் கெடினுங் கெடும்; அதிற் கேடின்றி இரவலர்க்கு நிதி முழுதையுங் கொடுத்துப் பெயரிடுமளவிலே கெடினுங் கெடும்; அதிற் கேடின்றேல் மையோலை பிடித்து நட்டோரும் கிளையுமழக் கெடுதலையுஞ் செய்யும்; அவ்வழிக் கேடின்றேல் நூல்களை முற்றக்கற்று, மகளிர், வடிவையும் இளமையையும் அழகையுங் கண்டு அநங்கனேயென்று மனங்குழைந்திரங்கப் பரிசிலர் கொடையை ஏத்த விடைபோல் நடக்கின்ற காலத்தே கெடினுங் கெடும்; அதிற்கேடின்றேல் அரிவையரைப் புணர்ந்து வேறொன்றுந் தெரியாத போகநுகர்ச்சிக் காலத்தே கூற்றுவன் உயிரை வௌவுதலாலே பல் சனம் சிதைந்து முகத்தே புடைத்துக்கொண்டு அழும்படி கெடும்; அதிற் கேடின்றேல் மகளிரிடத்தே அழுந்தி அவர் பெறும் புதல்வரைக் கண்டு உவந்து காலங்கழிக்குமளவிலே தம் சுற்றத்தார் உடைகின்ற மரக்கலத்தில் இருந்தவருற்ற வருத்தத்தை உறும்படி நோயாகிய புலி பாயப் பிணமாய்க் கெடும்; அதிற் கேடின்றேல் தம் போகநுகர்ச்சி மெல்ல

---

2760. பைப்பய - மெல்ல மெல்ல; "சின்னெறி பைப்பய நீங்கினார்" (கம்ப. அகத்திய. 27). உரை அவிந்து - வார்த்தை அடங்கி. உரையா - உரைத்து. ஊமரியல்பு: "உடம்பி னுரைக்கு முரையா நாவிற், படம்புகு மிலேச்சர்" (முல்லைப். 65 - 6). குளமென்றது உடம்பை. தூம்பும் குளமும்: சீவக. 1976. ஈமம் - பிணஞ்சுடும் விறகடுக்கு. ஒருதலை - துணிவு. கடந்தோய் - வஞ்சியாது எதிர்நின்று வென்றோய்.

மெல்லக் கழிதலாலே தம் கடைப்பிடிகள் குறைந்து ஊமர் போலே உறுப் பாலே வார்த்தை கூறித் தூய்மையில்லாத உடம்பாகிய குளம் ஒன்பது வாயிலாகிய தூம்புகளும் தம் வயத்தன வாகாமற் சேரத் திறந்து பாய்ந்து இவ்வியாக்கை முடிவில் ஆம்பொருளிது வென்று அறியாதார்க்கு அறிவித்துச் சுடுகாட்டிலே ஏறுதல் உறுதி ; ஆதலால், நீ இதற்கு வேருகி நிலைபெறும் பொருளை அறிவாயாக வென்றுனென்க.

முன்னிரு திங்களிற் பொன்னும் வெள்ளியும் போன்றும், பின்னிரு திங்களில் வெண்ணெய் போன்றும், ஐந்தாம் திங்களில் ஆமை போன்றும், ஆறும் திங்களில் உருத்தெளிந்தும் பிறக்குமென்றுர். இரண்டிடத்திற் கூறிய மற்று : வினைமாற்று. 'பிணமாய்' என்றும் பாடம். (கருசு - சு௨)

2761. தேங்கொள் பூங்கண்ணித் திருமுடித் திலகவெண் குடையோய், ஈங்கி தன்றியு மிமையவ ரமையலர்க் கடந்த, தாங்கு மாவண்கைச் சக்கர மிக்குயர் பிறரும், யாங்க ணுரைவ ருரொடு பேரெமக் குரையாய்..

இமையவர்க்குப் பகைவராயுள்ளாரை ஆண்டுச் சென்று வென்ற பிறர் ; திருவை ஒழிந்த அரசர்பாற் செல்லாமல் தம்மிடத்தே தாங்கும் பிறர் ; முன்னர்ச் செலுத்துஞ் சக்கரம் மிக்குயர்தற்குக் காரணமாகிய பிறர். உலகில் அரசரெல்லாரும் வணங்க இருத்தலிற் சக்கரவர்த்திகளை, 'பிறர்' என்றுர்.

(இ - ள்.) அரசனே ! யாம் இவ்வுலகில் மக்கட்குரியனவாகக் கூறிய இந்நிலையாமையேயன்றியும் அவரிற் சிறந்த சக்கரவர்த்திகளும் நிலை பெற்றிருந்தாரில்லை ; அவர்களூரும் பெயரும் நிலைபெருமையின், யாமுணர்ந்திலேம் ; நீ நிலைபேறுணர்ந்தன உளவேற் கூறென்று னென்க. (கசா௬)

2761. தேம் கொள் - இனிமை கொண்ட. திலகம் - மேலாதல். இமையவருடைய அமையலரைக் கடந்தவர் : முசுகுந்தன்முதலியோர். வண்கைப் பிறர், மிக்குயர் பிறர் என, 'பிறர்' என்பதை முன்னும் கூட்டுக. சக்கரம் - ஆஞ்ஞாசக்கரம். யாங்கணுரை - எவ்விடத்தார் ? மு. "திரையிடு மணலினும் பலரே யுரைசெல, மலர்தலை யுலக மாண்டுகழிந் தோரே" (மதுரைக். 236-7) ; "தம்பெயர் தம்மொடு கொண்டனர் மாய்ந்தோர்,...சேயாற்று, வடுவா ழெக்கர் மணலினும் பலரே" (மலைபடு. 553 - 6) ; சிலப். 28 : 123 - 50.

## ௧௦. நரக கதித்துன்பம்

(வேறு)

2762. வெவ்வினை செய்யு மாந்த ருயிரெனு நிலத்து வித்தி, அவ்வினை விளையு ளுண்ணு மவ்விடத் தவர்க டுன்பம், இவ்வென வுரைத்து மென்று நினைப்பினும் பனிக்கு முள்ளம், செவ்விதிற் சிறிது கூறக் கேண்மதி செல்வ வேந்தே.

**(இ - ள்.)** அங்ஙனங் கூறி, வேந்தே ! தீவினையைச் செய்யு மாந்தர் தமது உயிரென்னும் நிலத்தே அத்தீவினையை விதைத்து அத்தீவினையின் பயனை நுகரும் அந்நரகத்திடத்தே அந்நரகர் படும் துன்பம் இத் தன்மையவென உரைக்கக் கடவேமென்று நினைப்பினும் உள்ளம் நடுங்கும் ; ஆயினும் சிறிது அதன் தன்மை கூறச் செவ்விதிற் கேட்பா யாகவென்றானென்க. (கசூச)

2763. ஊழ்வினை துரப்ப வோடி யொன்றுமூழ்த் தத்தி னுள்ளே, சூழ்குலைப் பெண்ணை நெற்றித் தொடுத்ததீங் கனிக ளூழ்த்து, வீழ்வன போல வீழ்ந்து வெருவரத் தக்க துன்பத், தாழ்துய ருழப்ப வூணு மருநவை நஞ்சு கண்டாய்.

**(இ - ள்.)** தீவினை தம்மனத்தைச் செலுத்துதலாலே ஓடிச் சென்று அதன் பயனையெல்லாம் நுகர்தற்குப் பொருந்தின முகூர்த்தத்திலே பெண்ணைமேற்றொடுத்த கனிகள் ஊழ்த்துப் பெருங்காற்றாற் சேர விழுவன போலே தலை கீழாக வீழ்ந்து பின்னரும் நரகத்தே சென்று பிற ஆழ்துயரையுழப்பர் ; அவர்க்கு அவ்விடத்து ஊணும் நஞ்சுகா ணென்றானென்க.

ஒன்று மூழ்த்தம் - ஒரு முகூர்த்தமென்றுமாம். வெருவரத்தக்க துன்பமென்றது, நரகத்தை. நஞ்சு உணவாயும் சாகார், இத்தீவினையை நுகர்தற்காக. எதிர் நின்று போர் செய்யாது எளியராயிருப்பாரைச் சேரக் கொன்றார், பின்னர் இங்ஙனம் நுகர்வரென்றார். (கசூரு)

---

2762. விளையுள் உண்ணும் - வினையின் பயனை அனுபவிக்கும். அடி, 1 - 2 : இவ்வடிகளை உரைநடையாக அமைத்தனர் பரிமேலழகர் ; குறள், 320. இவ்வென - இவையென்று. உரைத்தும் - சொல்லுவோம். உள்ளம் பனிக்கும். கேண்மதி ; மதி : முன்னிலையசை.

2763. மூழ்த்தம் : முகூர்த்தமென்பதன் விகாரம். நெற்றி - உச்சி. வெருவரத்தக்க - அஞ்சத்தக்க. உழப்ப - அனுபவிப்பர். நவை நஞ்சு - தீங்கைச் செய்யும் விடம்.

2764. இட்டிவேல் குந்தங் கூர்வா ளெரிநுனைச் சுரிகை கூட
நட்டவை நிரைத்த பூமி நவையுடை நரகர் பொங்கி
உட்பட வெழுந்து வீழ்ந்தாங் கூன்றகர்த் திட்ட வண்ணம்
எட்டெலாத் திசையுஞ் சிந்திக் கிடப்பவா லடக்க மில்லார்.

(இ - ள்.) முன்னர் ஐம்பொறிகளில் அடக்கமில்லாராய்த் தீவினையையுடையராகிய நரகர் பொங்கி எழுந்து ஈட்டி முதலியன கூட நட்டவை நிரைத்து நிற்கின்ற பூமியிலே அவை தம்முள்ளே அழுந்தும்படி வீழ்ந்து அவ்விடத்தே ஊனைச் சிதறத் தட்டினாற்போல் எல்லாத் திசைகளிலுஞ் சிந்திக்கிடவா நிற்பர் காணென்றானென்க. (கசுசு)

2765. வெந்தடி தின்ற வெந்நோய் வேகத்தான் மீட்டு மாலைப்
பைந்தொடி மகளி ராடும் பந்தென வெழுந்து பொங்கி
வந்துடைந் துருகி வீழ்ந்து மாழ்குபு கிடப்பர் கண்டாய்
கந்தடு வெகுளி வேகக் கடாமுகக் களிற்று வேந்தே.

(இ - ள்.) வேந்தே! முற்பிறப்பிலே விரும்பிய தசைகளைத் தின்றதனாற் பிறந்த தீவினையின் கொடுமையினாலே மகளிராடும் பந்தெனத் தீயினின்றும் பொங்கி எழுந்து வீழ்ந்து மீட்டும் அதனுள்ளே வந்து உருகி உடைந்து மயங்கிக் கிடப்பர் காணென்றானென்க. (கசுஎ)

2766. வயிரமுண் ணிரைத்து நீண்ட வார்சினை யிலவ மேற்றிச், செயிரிற்றீ மடுப்பர் கீழாற் சென்னுனைக் கழுவி லேற்றி, மயிருக்கொன் றாக வாங்கி யகைத்தகைத் திடுவர் மன்னா, உயிரைப்பே துறுத்து மாந்த ருயிரைப்பே துறுக்கு மாறே.

(இ - ள்.) அரசனே! ஒன்றனுயிரை வருத்த முறுத்தும் மாந்தருடைய உயிரை வருத்தமுறுத்துமாற்றைக் கேளாய்: தாம் செய்த தீவினையாலே உடம்பில் தைத்தால் முனை முறியாதபடி வைரமாகிய முள்ளை

2764. இட்டி - ஈட்டி; குறுக்கல்விகாரம்; சீவக. 1136. சுரிகை - பத்திரமென்னும் ஒருவகை வாள். நட்டவை - நடப்பட்டவை. நவையுடை - குற்றம் செய்தலையுடைய. அடக்கமில்லார் கிடப்பவால்; ஆல்: அசை.

2765. வெந்தடி; வெம்மை - விருப்பம். மாலையையும் தொடியையும் அணிந்த மகளிர். மாழ்குபு - மயங்கி. (பி - ம்.) 'மாழ்கியுங் கிடப்பர்.' கந்து அடு - கட்டுத்தறியை வருத்துகின்ற.

2766. முள்ளை நிரைத்து. வார்சினை - நீண்ட கிளையையுடைய. கீழால் - கீழே. செல்நுனை - உடம்பிலே செல்லும் நுனியையுடைய. (பி - ம்.) 'வாங்கி வகைத்தரிந் திடுவர்'. பேதுறுத்தும் - வருத்தும்.

முழுக்க நிரைத்து நீண்ட இலவிலே ஏற்றிக் கீழே நெருப்பை எரிப்பர்; அதுவே யன்றிக் கழுவிலே ஏற்றித் தாம் கொன்ற விலங்கு முதலியவற் றினது ஒரு மயிருக்கு ஒரு தசையாக அறுத்தறுத்து வாங்கிப் போகடுவ ரென்றுனென்க. (கசுஅ)

2767. துடிக்குரற் குரல பேழ்வாய்த் தொடர்ப்பிணி யுறுத்த
செந்நாய், மடுத்திட வைர வூசி வாளெயி றழுந்தக் கௌவிப்,
புடைத்திட வலறி யாற்றார் பொன்றினும் பொன்றல் செல்லார்,
உடுப்பினம் வேட்டஞ் செய்தா ருழப்பவாற் றுன்ப மாதோ.

(இ - ள்.) உடுப்பினத்தை வேட்டை யாடினவர், துடியின் குரல் போலுங் குரலவாகிய சங்கிலியாற் பிணித்த பெரிய வாயையுடைய செந் நாயைக் கொண்டுவந்து கடிக்கவிட, அவை வைரவூசிகள் போலும் எயி றுகள் அழுந்தக் கௌவி உதறிப் போகடுதலாலே ஆற்றாராய் அலறி இவ் வாறே உடம்பு பொன்றினும் உயிர்பொன்றுதல் செல்லாராய்த் துன்ப முழப்பரென்றுனென்க.

இவர்கள் துன்பமுறுதற்காக அழிந்த உடம்பு மேலும் வடிவு கூடு மென்றுணர்க. (கசுகூ)

2768. வாளைமீன் றடிக தின்றார் வருகென வுருக வெந்த,
வாளத்தைக் கொடிற்றி னேந்திப் பகுத்துவாய் புகுத்த லாற்றார்,
ஊளைக்கொண் டோடு கின்று ருள்ளடி யூசி பாயத், தாளொற்றித்
தப்பி வீழ்ந்தார் தறிவலை மானிற் பட்டார்.

(இ - ள்.) நம்முடைய நல்லறத்தைத் தப்பிப் புலாலுண்ண விரும்பி னராய்ப் பின்னர் வாளைமீன் தடிகள் தின்றார், இங்ஙனே வாருங்கோ ளென்று அழைத்து அவர்கள் வாயைப் பகுத்து உருக வெந்த செப்புப் பாளத்தைக் கொடிற்றாலே யெடுத்துப் புகுத்தலைப் பொறாராய்க் கூப் பிட்டு ஓடுகின்றவர்கள், அங்ஙனமோடாமைக்கு நட்டுவைத்த அடி யொட்டி உள்ளடியிலே பாய்கையினாலே, கால் நிலத்தோடே ஒட்டிக் கொண்டு தறிவலையில் அகப்பட்ட மான்போலே பின்னரும் அகப்பட்டா ரென்றுனென்க.

2767. துடிக்குரற் குரல - உடுக்கையின் ஓசைபோன்ற குரலை யுடைய. தொடரால் பிணியுறுத்த; தொடர் - சங்கிலி. வைரவூசிபோன்ற எயிறு. ஆற்றார் - பொறுதவராய். பொன்றல் - இறத்தல். உடுப்பினம் = உடும்பு இனம். உடும்பை நாயால் வேட்டையாடுதல்: "ஞமலி தந்த மனவுச்சூ லுடும்பின்" (பெரும்பாண். 132)

2768. வாளைமீனின் தடிகள்; தடி - மாமிசம். கொடிற்றின் - குறடு என்னும் கருவியால். பகுத்து - பிளந்து. (பி - ம்.) 'கொண்டோடு வாரை யுள்'. ஒற்றி - ஒட்டி. தறி வலை - முளையிலே கட்டிய வலை.

'தப்பி வீழ்வார்' என்ற பாடத்திற்குத் தப்பி வீழ்வாராய்த் தின்று ரென்க. தறி வலை - தறியைப் புதைத்து அதனோடே கட்டி நிலத்தில் இட்டு வைத்த வலை. (கஎ௦)

2769. காதலாள் கரிந்து நையக் கடியவே கனைந்து கன்றி
ஏதிலான் றார நம்பி யெளிதென விறந்த பாவத்
தூதுலை யுருக வெந்த வொள்ளழற் செப்புப் பாவை
ஆதகா தென்னப் புல்லி யலறுமால் யானை வேந்தே.

(இ - ள்.) வேந்தே! தன் மனைவி வருந்தா நிற்கத் தான் ஏதிலான் தாரம் எனக்கு எளிதென்று உலகியலை இறந்து நச்சிப் பலரும் கடிந்து கூறுநிற்கவே அதிலே செறிந்து தழும்பிச் செய்த பாவத்தாலே, அவ்வுயிர்கள், பின்னர் உலையில் ஒள்ளழலிலே உருக வெந்த செப்புப் பாவையைக் கண்டோர், ஆ! தகாதென்னும்படி தழுவி ஆற்றாது அலறுங் காணென்று னென்க. (கஎக)

2770. சிலையினன் மாக்கள் கொன்று செழுங்கடல் வேட்ட மாடி
வலையினன் மீன்கள் வாரி வாழுயிர்க் கூற்ற மான
கொலைநரைக் கும்பி தன்னுட் கொந்தழ லழுத்தி யிட்டு
நலிகுவர் நாளு நாளு நரகரை நாம வேலோய்.

(இ - ள்.) நாமவேலோய்! கொன்றும் வாரியும் வேட்டமாடி உடல் வாழுமுயிர்கட்குக் கூற்றமான பாவிகளை நரகத்துள்ள நெருப்பின் கண்ணே அழுத்தி நாடோறும் நாடோறும் நரகரைச் சுடா நிற்பரென்று னென்க. (கஎ௨)

---

(மேற்) அடி, 4 : தொல். வினை. 34, ந.

2769. கரிந்து - மனம் கருகி. கடிய - பிறர் தகாதென விலக்க. கன்றி - அடிப்பட்டு. ஏதிலான் தாரம் நம்பி - அயலான் மனைவியை விரும்பி. இறந்த - வரம்பு கடந்து செய்த. ஏதிலான்......இறந்த : "எளிதென வில்லிறப்பா னெய்தும்......பழி" (குறள், 145). உருகும்படி வெந்த. செப்புப் பாவையைப் புல்லல் : "வம்புலாங் கூந்தன் மனைவியைத் துறந்து பிறர்பொரு டாரமென் றிவற்றை, நம்பினு ரிறந்தா னமன்றமர் பற்றி யெற்றிவைத் தெரியெழு கின்ற, செம்பினு லியன்ற பாவையைப் பாவீ தழுவென மொழிவதற் கஞ்சி" (பெரியதிரு. 1. 6 : 4); "தங்கிருட் போதிற் றலைச்சென் றயன்மனை, அங்கு மகிழ்ந்தா ளவளிவள் காணெனச், செங்கன லேயென வெம்பிய செம்பினிற், பொங்கனற் பாவைகள் புல்லப் புணர்ப்பார்" (சூளா. துறவு. 93)

2770. மாக்கள் - விலங்குகளை. கடலில் மீன்வேட்டமாடி. உயிர்க்குக் கூற்றமான. கொலைநரை - கொலை செய்வோரை. நரகரை அழலிலழுத்தியிட்டு நலிகுவர். நாமவேல் - அச்சம் செய்யும் வேல்.

2771. பாரகங் கழுநர் போலப் பரூஉத்தடி பலரு மேந்தி
வீரநோய் வெகுளி தோற்றி விழுப்பற வதுக்கி யிட்டுக்
காரகற் பொரிப்பர் கண்ணுட் சுரிகையை நடுவர் நெஞ்சிற்
பாரக்கூர்ந் தறிக ணட்டுப் பனையெனப் பிளப்பர் மாதோ.

(இ - ள்.) அதுவேயன்றிப் பாரிலுள்ளார் செய்த தீவினைகளைத் தாம் கழுவுவார்போலே நிரயபாலர் பலரும் பரிய தடிகளை யெடுத்து வலிய நோயைக் கொடுக்குங் கோபமெழுந்து அவர்களுடம்பிற் கழிவதொன்றும் இல்லையாம்படிகூட நருக்கியிட்டுச் சிலரைக் காரகலிலே பொரிப்பர்; சிலரைக் கண்ணிலே சுரிகையை நடுவர்; சிலரை நெஞ்சிலே தறிகளைப் புடைத்துப் பின்னர்ப் பனைபோலப் பிளப்பரென்றானென்க.

பல்லுயிர்களும் தாம் செய்த வினையைத் தாமே நுகரினும் அதனை முயன்று நுகர்வித்துக் கழிப்பராதலின், 'கழுநர்போல' என்றார்; இஃது ஒப்பில்போலி. (கஎங)

2772. நாப்புடை பெயர்த்த லாற்றார் நயந்துநீர் வேட்டு நோக்கிப், பூப்புடை யணிந்த பொய்கை புக்குநீ ருண்ண லுற்றாற், சீட்படு குழம்ப தாகிச் செல்லலுற் றந்தோ வென்னக், கூப்பிடு குரலாய் நிற்பர் குறைப்பனைக் குழாங்க ளொத்தே.

(இ - ள்.) அங்ஙனம் தீவினைப்பயனை நுகருங்கால் தண்ணீர்வேட்டு நாவை வறட்சியால் அசைத்தலாற்றாராய்ப் பூவணிந்த பொய்கைகளை நயந்து நோக்கிப் புக்கு அதில் தண்ணீரை உண்ணத்தொடங்கினால் அது சீயாலுண்டான குழம்பாகையினாலே தாம் வருத்தமுற்றாராய் அப்பொழுது அழத்தொடங்கி, அந்தோவென்று கூப்பிட்டிடுங் குரலாராய்த் தலைபோன பனைத்திரளை ஒத்து நிற்பரென்றானென்க.

'அணிந்து' என்று பாடமாயின், தோன்றுமென ஒருவினை வருவிக்க. (கஎச)

2771. பாரகம் - பூமியிலுள்ளார். கழுநர் - கழுவுபவர். பரூஉத்தடி - பருத்த இறைச்சி. வீரம், நோய்க்கு அடை. விழுப்பு - கழிதல். விழுப்பற அதுக்கியிட்டு: "விழுப்பற வதுக்கவினை யேகொடிய தென்பார்" (மேரு. நிரயத். 25). காரகல் - கரிய இருப்புச் சட்டியில். நெஞ்சு - மார்பு. கூர்ந்தறிகள் - கூர்மையான முளைகள்.

2772. நாவைப் புடைபெயர்த்தல்; புடைபெயர்த்தல் - பக்கத்தே அசைத்தல். வேட்டு - விரும்பி. செல்லல் - துன்பம். குரலாய் நிற்பர் - குரலையுடையராகி நிற்பர். குழாங்களொத்து நிற்பர்.

2773. நறுமலர்த் தாம நான்று நானநீர் பிலிற்றும் பந்தர்க்,
குறுகலுங் குடநெய் பெய்த கொந்தழல் போன்று பொங்கிப்,
பறையல கனைய வெண்பற் பசுங்கழற் குண்டு பைங்கண்,
உறுதுயர் நரகர் தம்மை யுருகச்சுட் டிடுங்க ளன்றே.

[1] பறையலகு இக்காலத்துப் பலகறையென மருவிற்று.

(இ - ள்.) பலகறையையொத்த பெரிய பல்லினையும், பசுங்கழல் போலும் கண்ணினையுமுடைய நரகர் நீர்வேட்டுப் பந்தரைக் குறுகின அளவிலே அப்பந்தர் குடநெய் சொரிந்த நெருப்புப்போலப் பொங்கி அவரை உருகச் சுட்டிடு மென்றுனென்க.

கள் : அசை. (கஎ௩)

2774. வெந்துருக் குற்ற செம்பின் விதலையு ளழுத்தி யிட்டும்,
எந்திர வூச லேற்றி யெரியுண மடுத்துஞ் செக்கிற், சுந்தெழுந்
தரைத்தும் போகச் சுண்ணமா நுணுக்கி யிட்டும், மந்தரத்
தனைய துன்பம் வைகலு முழப்ப மாதோ.

(இ - ள்.) வெந்து உருகுதலுற்ற செம்பாலான குழம்பிலே நிரய பாலரால் அழுத்தியிடப்பட்டும், எந்திரமான ஊசலிலேற்றிக் கீழே நெருப்பை எரிக்கப்பட்டும், செக்கிலே இட்டு [1]நீரெழுந்து போக அரைக்கப் பட்டும், சுண்ணமாக நுணுக்கியிடப்பட்டும் மந்தரமலைபோற்பெரிய துன்பத்திலே நாடோறும் வருந்துவரென்றுனென்க.

விதலை - குழம்பு. (கஎ௪)

2773. தாமம் - மாலை. நான்று - தொங்கவிடப்பட்டு. பிலிற்றும் - துளிக்கும். பறையலகு - பலுவை; "பிடித்தாடி யன்ன பிறழ்பற்பே யார" (பு - வெ. 160). கழல் - கழற்சிக்காய். குண்டு பைங்கண் - ஆழ மான பசிய கண்.

(உரை) [1] "நின், மிஞிறுஞிமி றுக விளங்க - இமிழ்கின்ற, வைசாகி வைகாசி வாய்ந்த பறையலகே......பலகறையென் றனவே" (கச்சி. வண்டு. 414-5)

2774. விதலை : "மானிணைப் புழுக்கலொடு தேனெய் விதலையின்" (பெருங். 2. 12 : 113). எந்திரவூசல் - எந்திரத்தால் இயங்கும் ஊசல். மடுத்தும் - சேர்த்தியும். சுந்து - நீர். நுணுக்கியிடுதல் - பொடியாக் குதல். வைகலும் - நாள்தோறும். மாது, ஓ : அசைகள்.

(உரை) [1] (பி - ம்.) 'நீறெழுந்து'

2775. உழும்பகட் டெருது போல வுரனறு தாள ராகிக்,
கொழுங்களி யளற்றுள் வீழ்ந்துங் கொழும்புகை மடுக்கப் பட்டும்,
அழுந்துமிந் நரகந் தன்னுட் செல்பவர் யார்கொ லென்னின்,
எழுந்துவண் டிமிரும் பைந்தா ரிறைவநீ கேண்மோ வென்றான்.

பகடு - பெருமை.

(இ - ள்.) இறைவனே! யான் கூறியவாறேயன்றிப் பலரும் தாம் செய்த தீவினையாலே சென்று அழுந்தும் இந்நரகத்துள்ளே எருதுபோல வலியற்ற காலராய் அழகிய செறிந்த சேற்றுள்ளே விழுந்தும் ஆண்டு நின்றும் எழுதற்குப் புகை மடுக்கப்பட்டும் செல்வர்; அங்ஙனம் சேறற் குரியார் யாரென்று கேட்டியாயின், அவர்களை மேலே யான்கூறக் கேட்பாயாகவென்றானென்க.

" துன்னின ரழுந்துநரகம் " என்ப. (கஎஎ)

2776. கொல்வதே கன்றி நின்றார் கொடியவர் கடிய நீரார்
இல்லையே யிம்மை யல்லா லும்மையு முயிரு மென்பார்
அல்லதுந் தவமு மில்லை தானமு மிழவென் பாரும்
செல்பவந் நரகந் தன்னுட் டவினைத் தேர்க ளூர்ந்தே.

(இ - ள்.) கொலைத்தொழிலிலே அடிப்பட்டு நின்றாரும், நெஞ்சு கொடியாரும், கடிய தொழில் செய்வாரும், இப்பிறப்பேயன்றி மறுமையு மில்லை; உயிர்க்கிழவனென்று ஒருவனுமில்லை யென்பாரும், நல்வினையும் தீவினையுமில்லை யென்பாரும், செய்த தானமும் பயன்தாராதென்பாரும் தீவினையாகிய தேரை ஏறி அந்நரகந்தன்னுட் செல்வரென்றானென்க.

தவமும் தவமல்லதுமென்க. (கஎஅ)

## கக. விலங்குகதித்துன்பம்

### (வேறு)

2777. எரிநீர வேநரக மந்நரகத் துன்பத்
தொருநீர வேவிலங்கு தாமுடைய துன்பம்
பெருநீர வாட்டடங்கட் பெண்ணணங்கு பூந்தார்
அருநீர வேந்தடர்த்த வச்சணங்கு வேலோய்.

---

2775. உரன் - வன்மை. இமிரும் - ஒலிக்கும். பைந்தார் - வாடாத மாலை. கேண்மோ; மோ: முன்னிலை யசை.

2776. கன்றி - தழும்பி. உம்மையும் உயிரும் இல்லை யென்பார். உம்மை - மறுபிறப்பு. இழவு - இழத்தல். தேர்களூர்ந்து நரகந்தன்னுள் செல்ப. " இல்லையுயிர் நல்வினை யிறந்தவர் பிறப்பெனச், சொல்லினவர் செம்புருக்கி வாயிற்பெய் துயிர்வார் " (மேரு. நிரையத். 23)

2777. எரிநீர - எரிகின்ற தன்மையையுடைய. பெண் அணங்கு - மகளிரை வருத்துதற்குக் காரணமான. அச்சணங்கு வேலோய்: " அச் சணங்கு வேற்றுருவும் ", " அச்சணங் கயில்வேல் " (கூர்ம. சந்திர. 8, கண்ணன் சிவ பூசை. 14)

(இ - ள்.) பெரிய நீரவாகிய கண்ணையுடைய [1] பெண்களை வருத்துந் தாரினையும், அடர்த்தற்கரிய தன்மையவாகிய வேந்துகளை அடர்த்த வலியினையும், வருத்தத்தினைச் செய்யும் வேலினையுமுடைய அரசனே! நரகம் எக்காலமும் எரியினது தன்மையவே; அந்நரகத்திலே பல்லுயிரும் உறும் துன்பத்தோடு ஒருதன்மையவே விலங்குசாதியுடைய துன்பமு மென்றானென்க. (௧எ௯)

2778. கழைபொதிர்ப்பத் தேன்சொரிந்து காய்த்தினைக ளார்த் தும், மழைதவழுங் குன்றில் வயமா முழங்க, உழையளிய தாமு றூஉந் துன்பங்க ணின்மேல், விழைவயரா வேந்துறூஉந் துன் பமே கண்டாய்.

(இ - ள்.) இருளிலே மூங்கில் பொதிர்ப்ப அது தேனைச் சொரிந்து தினைகளை யார்த்துங் குன்றிலே புலி முழங்க, அதுகேட்ட அளிய உழை மானுறும் துன்பங்கள் நின்னிடத்து விருப்பஞ் செய்யாத வேந்துகளுறுந் துன்பமேகாணென்றானென்க. (௧அ௦)

2779. நிணம்பிலிற்றும் வாயர் நெருப்பிமைக்குங் கண்ணர்
குணனஞ்சர் கூற்றனைய கோணாய் மடுப்பக்
கணமஞ்ஞை யஞ்சிக் கழுத்தொளிப்ப கண்டாய்
மணமல்கு பூந்தார் மழைதழீஇய கையாய்.

(இ - ள்.) தாரினையுடைய மழைபோன்ற கையாய்! வாயராய் இமைக்குங் கண்ணராய்த் தம் குணத்தால் நஞ்சின்தன்மையையுடை யார், கூற்றனைய கொலைத்தொழிலையுடைய நாயைச் செலுத்த, அதற்கு அஞ்சித் தம் கழுத்தைச் சிறகிலே மறைப்பன மயில்கள்காணென்றா னென்க. (௧அ௧)

2780. மண்ணுறை மஞ்ச ளுரிஞ்சி மலர்சூட்டிக்
கண்ணுர் மறியறுத்துக் கையா லுதிரந்தூய்
உண்ணீரே தேவி ருவந்தென்ப திவ்வுலகம்
நண்ணுர்க் கடந்தோய் நமனுலகி னுன்மடங்கே.

---

(உரை) [1] (பி - ம்.) 'பேதைகளை'

2778. பொதிர்ப்ப - துளைக்க. வயமா - புலி. அளிய உழை - இரங் கத் தக்கனவாகிய உழைமான்கள். விழைவு அயரா - விரும்புதலைச் செய்யாத.

2779. பிலிற்றும் - துளிக்கும். குணன் நஞ்சர். கோள் - கொலை. கணமஞ்ஞை - கூட்டமாகிய மயில். மழை தழீஇய - மழையின் தன்மை யைத் தழுவிய.

2780. மண் - கழுவுதல். உரிஞ்சி - பூசி. கண் ஆர் மறி - கண் ணிற்கு ஆர்ந்த ஆட்டின் குட்டியை. உதிரந்தூய்: "மறியீர்ந் துதிரந் தூய் வேலற்றரீஇ" (ஐந். ஐம். 20). தேவீர்: விளி. தேவர்களை விளித் துப் பலிகொடுத்தல்: குறுந். 362: 1-5.

மு. "வெறியயர்......இல்" (நாலடி. 16)

(இ - ள்.) நண்ணூர்க் கடந்தோய்! இவ்வுலகம் மறிக்கு மஞ்ச ளுரிஞ்சி மண்ணுதல் முடிகையினாலே பின்னர் மலரைச் சூட்டி அதனை யறுத்துக் கையாலே உதிரத்தைத் தூவி, தேவீர்! உவந்து உண்ணீ ரென்று கூறுகின்ற கொடுமை நரகத்திலும் நான்மடங்கு கொடியதென்ற னென்க. (கஅஉ)

2781. மங்கை மனுவனைய மென்சூன் மடவுடும்பு
செங்கண் வரிவரால் செந்நீ ரிளவாளை
வெங்கருனை புல்லுதற்கு வேறுவே றாக்குறைப்ப
அங்காந் தழுகின்ற தார்கண்ணே நோக்குமே.

மனு - அக்கு; இனி, 'மனவு' என்னும் செய்யுட்சொல் விகாரமாயிற் றென்றுமாம்.

(இ - ள்.) உடும்பு வரால் வாளையென்கின்றவற்றைப் பொரிக்கறி யாகச் சமைத்தற்கு வேறுவேறாக அறுப்ப, அவை உயிர்போவதற்கு வாய் அங்காந்தழுகின்ற தீவினை யாரிடத்தே செல்லுமென்றானென்க.

அழுதல் - பழைய தன்மை கெட்டு வருந்துதல்; அஃது அசைவென்னு மெய்ப்பாடாம். யார்கண்ணே நோக்குமென்றது செய்தவர்கண்ணே யன்றி ஏவினார்கண்ணும் உடம்பட்டார்கண்ணும் செல்லுமென்றவாறு. (கஅங)

2782. கடலரண மாகாது காடரண மாகா
குடலரண மாகாது குன்றரண மாகா
அடுதுயர மூர்ந்தலைப்ப வாங்கரணங் காணாப்
படுதுயரத் தாலே பதைத்தளிய வேமே.

'ஆங்கு' என்றது தாம் செல்கின்ற விலங்குகதியை. 'அரணம்' என்றது அதற்குக் காவலாகிய நல்வினையை. காணா அளியவென்க.

(இ - ள்.) தாம் செல்கின்ற கதிக்குக் காவலாகிய நல்வினை முன் செய்யாத விலங்குகள், தம்மை அடுகின்ற தீவினை சென்று அலைக்கையி னாலே கடல் அரணமாகாமற் காடுகள் அரணமாகாமற் குடல் அரண மாகாமற் குன்றுகள் அரணமாகாமல் மேன்மேலுண்டாம் துயரத்தாலே பதைத்து வேமென்றானென்க.

---

2781. மங்கை மனு அனைய - மகளிர் அணியும் அக்குமணியைப் போன்ற. மனுவனைய மென்சூனுடும்பு: "மனவுச்சூ லுடும்பு" (பெரும்பாண். 132). வரி - கோடுகள். செந்நீர் - புதுநீரிலுள்ள. வெங் கருனை - வெப்பமுள்ள பொரிக்கறி. அங்காந்து - வாய்திறந்து.

2782. அரணம் - பாதுகாவல். படுதல் - உண்டாதல். வேம் - வேகும்.

குடலிற் கிடந்தவையும் நோயான் வருந்திவிடுமென்றான். 'ஆகா' என்ற பன்மையை ஆகாவாயென விரித்து ஆகாமலெனவுரைக்க. (கஅச)

2783. முழுப்பதகர் தாடுரந்து முட்டாற்றிற் குத்தி
உழப்பெருது பொன்றப் புடைத்துழுது விட்டாற்
கழித்துண்ணுங் காக்கை கடிவோரு மின்றிப்
புழுச்சொரியத் துன்பம் பொறுக்கலா பொன்றும்.

அறிவு நுழைதற்கு வழியிலராய், தீவினை செய்யலாகாதென்பார்க்குப் பதகங் கூறுவார் முழுப்பதகர்; பதிதர்: விகாரமுமாம்; பாதகர் பதகரென விகாரமுமாம்.

(இ - ள்.) பதகர் உழுதற்றொழிலையுடைய எருத்தை முற்படச் சாம்படி அடித்து அதற்குப் போகாமையின் தாற்றுக்கோலாலே குத்தித் தமது முயற்சியாலே துரந்து உழுது கைவிட்டால் என்பைக் கழித்துத் தசையையுண்ணும் காக்கையை ஓட்டுவாரின்றாய்ப் புழுச்சொரியத் துன்பம் பொறுக்கமாட்டாது சாமென்றானென்க. (கஅரு)

2784. நிரம்பாத நீர்யாற் றிடுமணலு ளாழ்ந்து
பெரும்பார வாடவர்போற் பெய்பண்டந் தாங்கி
மருங்கொற்றி மூக்கூன்றித் தாடவழ்ந்து வாங்கி
உரங்கெட் டுறுப்பழுகிப் புல்லுண்ணு பொன்றும்.

(இ - ள்.) சிறிதாகிய நீரையுடைய யாற்றில் இடுமணலுள்ளே சகடம் அழுந்துதலாலே, அதிற் பெய்த பண்டத்தைப் பெரும்பாரத்தைச் சுமந்த ஆடவர் அதனைக் கைவிடாது தாங்குமாறுபோலத் தாமும் தாங்கித் தமக்குப் போகலா நிலத்தைச்சேர்ந்து மூக்கை நிலத்தே ஊன்றி அடிமுழந்தாளிட்டு இழுத்துத் தம் வலியெல்லாம் கெட்டுப் பின்பு உறுப்புக்களழுகிப் புல்லுண்ணுவாய்ச் சாமென்றானென்க. (கஅசு)

2783. தாள் துரந்து; தாள் - முயற்சி. தாற்றுமுள்ளாற் குத்தி. உழப்பெருது: சீவக. 751. உண்ணும் - தசையை உண்ணும். கடிவோர் - ஓட்டுவோர். பொன்றும் - இறக்கும்.

2784. ஆழ்ந்து - ஆழ்தலால். பெரும்பாரத்தைச் சுமந்த ஆடவரைப்போல். மருங்கு ஒற்றி - பக்கத்தைச் சேர்ந்து. புல்லை உண்ணு தனவாய். அடி, 2 - 4: "ஆரைச் சாகாட் டாழ்ச்சி போக்கும், உரனுடை நோன்பகட் டன்ன வெங்கோன்", "பண்டச் சாகாட் டாழ்ச்சி சொல்லிய, வரிமணன் ஞெமரக் கற்பக நடக்கும், பெருமிதப் பகட்டுக்குத் துறையுமுண்டோ" (புறநா. 60, 90); "மடுத்தவா யெல்லாம் பகடன்னான்" (குறள், 624); "குண்டுதுறை......பகட்டிணை போல" (பெருங். 1. 53 : 53-4)

(மேற்.) அடி, 3 : குறள், 624, பரிமேல்.

2785. போழ்மதிபோற் கூரிரும்பிற் பூநுதல்கள் போழ்ந் திடவும், காழ்நுதியிற் குத்துண்டுங் கார்மழைபோ னின்ற திர்ந்தும், வீழ்பிடிகள் சிந்தித்தும் வெந்நோய்தம் முள்சுடவெந், தாழத்த கந்திளக யானை யலம்வருமே.

(இ - ள்.) யானைகள், மதியை வகிர்ந்ததுபோலும் தோட்டியாலே மத்தகத்தைப் பிளக்கப்பட்டும் பரிக்கோலாற் குத்துண்டும் அவை பொறுமல் அதிர்ந்தும் காமநோய் சுட வெந்து பிடிகளை நினைத்தும் ஆழ நாட்டின கந்து இளகச் சுழலுமென்றுனென்க. (கஅஎ)

2786. எரிவளைப்ப வெம்புகையுண் டின்னுயிர்விட் டேகும்
அரிவளைப்பக் குஞ்சரமு மாலிபோ னீராம்
வரிவளைக்கும் வெண்மயிர்க்கு முத்திற்கு மாந்தர்
திருவளைத்த மார்ப செகுத்திடுவர் தேங்கார்.

(இ - ள்.) திருவைத்தடுத்த மார்பனே! சில விலங்குகள், நெருப்பு வளைப்பப் புகையையுண்கையினுலே உயிர்விட்டுப் போம்; குஞ்சரங் களும் சிங்கம் வளைப்ப உயிர்விட்டுப் போம்; அவையேயுமன்றி மாந்தர் நீரிலே பிறக்குஞ் சங்கை வரிவளைக்கும், இப்பியை ஆலிபோலு முத்திற்கும், கவரிமாவை மயிர்க்குந் தேங்காராய்க் கொல்வர்காணென்று னென்க. (கஅஅ)

2787. வேள்விவாய்க் கண்படுத்தும் வெவ்வினைசெ யாடவர்கை
வாளின்வாய்க் கண்படுத்தும் வாரணத்தி னீருரிபோற்
கோளிமிழ்ப்பு நீள்வலைவாய்க் கண்படுத்து மின்னணமே
நாளுலப்பித் திட்டார் நமரலா தாரெல்லாம்.

---

2785. போழ்மதி - பிறை. கூரிரும்பு - அங்குசம்; "அரைமதி யிரும்பொடு" (பெருங். 1. 32 : 96). பூநுதல் - தெறுழம் பூவைப்போன்ற புள்ளிகளையுடைய நெற்றி; புறநா. 119 : 2. காழ்நுதி - குத்துக்கோலின் நுனி. கார் மழை - கரிய மேகம். வீழ்பிடிகள் - தன்னை விரும்பிய பெண் யானைகள். வெந்நோய் - கொடிய காமநோய். கந்து இளக - கட்டுத்தறி முறியும்படி. அலம் வரும் - மனம் சுழலும்.

2786. புகையை உண்டு. அரி - சிங்கம். அடி, 2 : "நீராலிக் கட்டிநனி நிரந்தெழுந்து" (சூளா. சுயம். 204). ஆலிபோல் முத்து எனக் கூட்டுக. நீர் ஆம் - நீரில் விளையும். தேங்கார் - வருந்தாராய்.

2787. கண்படுத்தும் - கொன்றும். வாரணத்தின் ஈருரி - யானை யினது உரிக்கப்பட்ட தோல்; இது வலைக்கு உவமை. இமிழ்ப்பு - கட்டுதல். இன்னணமே - இவ்விதமே. நாள் உலப்பித்திட்டார் - தம் வாழ்நாளைக் கெடச் செய்தார்.

(இ - ள்.) உணர்வின்மாக்கள் தமக்கு நன்மையைத் தருமென்று போர்த்த யானையின் பசுந்தோல் தம்முயிர்க்குக் கேடாயினாற்போல, கொடியமாக்கள் நமக்கு நன்மையைத் தருமென்று விலங்குகளை விருந்திடுதற்கு வாளின் வாயாற் கொன்றும் வேள்வியிடத்தே கொன்றும் வலையிடத்தே கொன்றும் இப்படியே தமது வாழ்நாளைத் தேய்ப்பித்து விட்டார், நம்முடைய [1] தமரல்லாதாரெல்லாருமென்றானென்க.

யானையின் பசுந்தோல் பிறருடம்பிற்பட்டாற் கொல்லுமென்றுணர்க. "கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாண்மேற், செல்லா துயிருண்ணுங் கூற்று" (குறள், 326) என்றார் பிறரும். இனி, அவற்றின் வாழ்நாளுமென்ப. இனி, வாரணத்துரிபோலே தப்பாமற் கொல்லும் வலையென்றுமாம். இமிழ்ப்பு - கட்டு. கோள்வலை. (கஅகூ)

2788. கொல்வாருங் கூட்டுட் செறிப்பாரு மாடவர்கள்
அல்லாரு நாய்வேட்ட மாடாத மாத்திரையே
அல்லாத பைங்கிளியும் பூவையு மாதியா
எல்லாங் கிளைபிரித்திட் டேமுறுநோய் செய்பவே.

ஆடவர்களல்லாராயிருப்பார் - மகளிர். முற்கூறிய ஆடவரேயன்றி மகளிருமென உம்மை எச்சவும்மை. அல்லாத - நம் சமயமல்லாத.

(இ - ள்.) அல்லாத மகளிரும், கருணைபுல்லுதற்குக் கொல்வாருங் கிளியும் பூவையுமுதலாக ஒழிந்தவுயிர்களையெல்லாம் தத்தங் கிளையைப் பிரித்துக் கூட்டுள் அடைப்பாருமாய் அவற்றிற்கு வருத்தமுறு நோயைச் செய்வார்; ஆதலால், அவரும் புறம்போந்து நாய்வேட்டமாடாத மாத்திரையா யிருப்பர்காணென்றானென்க.

என்றதனால், உள்ளிருந்தும் பாவமே செய்வரென்றான். (கசுO)

2789. மல்லன் மலையனைய மாதவரை வைதுரைக்கும்
பல்லவரே யன்றிப் பகுத்துணும் பாவிகளும்
அல்குல் விலைபகரு மாய்தொடிய ராதியார்
வில்பொருதோண் மன்னா விலங்காய்ப் பிறப்பவே.

---

(உரை) [1] (பி - ம்.) 'சமயமல்லார்'

2788. கூட்டுள் செறித்தல் சிவல், குறும்பூழ் முதலிய பறவைகளை. பூவை - நாகணவாய்ப்புள். ஏமுறும் நோய் - வருத்தம் அடைதற்குக் காரணமான துன்பத்தை.

2789. மல்லல் - வளத்தையுடைய. மலையனைய மாதவர் : "குன்றன்னார்" (குறள், 898); "ஆன்றோர் போலத், துளக்க மில்லாத் திருத்தகு நிலைமைய" (பெருங். 1. 50 : 4-5); "மலையனைய நிலையுடைய மாதவர்கள்" (மேரு. சமவ. 50). பகுத்து உணா - சுற்றத்தார் விருந்தினரோடு பகுத்து உண்ணாத. தொடியர் - பரத்தையர்.

(இ - ள்.) வில்பொருத தோளையுடைய அரசனே! மலைபோலசையாத மாதவத்தோரைப் பழித்துரைக்கும் பலரும், பகுத்துண்ணுதாரும், பரத்தையர் முதலாயினுரெல்லாரும் விலங்காய்ப் பிறப்பர்காணென்று னென்க. (கக௯)

---

## ௧௨. மக்கட்கதித்துன்பம்

2790. தம்மை நிழனோக்கித் தாங்கார் மகிழ்தூங்கிச்
செம்மை மலர்மார்ப மட்டித் திளையார்தோள்
கொம்மைக் குழகாடுங் கோல வரைமார்பர்
வெம்மை மிகுதுன்பம் வேந்தே சிலகேளாய்.

வரைமார்பர் : இகழ்ச்சி.

(இ - ள்.) வேந்தே! தம்மார்பிலே பூசப்படுவனவற்றைப் பூசித் தம்மைக் கண்ணுடியிலே பார்த்துத் தம்மழகைத் தாங்கமாட்டாராய் மகிழ்ச்சி செறிந்து பெரிய இளமைச்செவ்வியாலே இளையார்தோளைக் கூடும் வரைமார்பரது துன்பத்திலே சிலவற்றைக் கேட்பாயாகவென்று னென்க. (கக௨)

2791. ஈருட் டடிமூடி யீண்டு மலப்பண்டப்
போர்வை புழுமொய்ப்பப் பொல்லாக் குடர்சூடிச்
சார்தற் கரிதாகித் தானின் றருவள்ளல்
நீர்வாய்ச் சுரம்போந்தார் தம்மை நினையாரோ.

தமக்கு அடைத்த காலங்கள்தோறும் உறுப்புக்கள் திரள்கின்ற மலமாகிய தம்முடம்பைப் போர்த்த போர்வையைப் புழுமொய்ப்ப. நீராற்றூய்மை செய்யாக்காற் சேர்தற்கரிதாகிப் பொல்லாதான சுரம்; நீர்தானின்றருத சுரம்; அள்ளலை இடத்தேயுடைய சுரம்.

---

(மேற்.) அடி, 1 : குறள், 898, பரிமேல்.; நன். பொது. 56, மயிலை. சங்கர; இ - வி. அணி. 22.

2790. நிழல் நோக்கி - கண்ணுடி நிழலை நோக்கி. மட்டித்து - சந்தனத்தைப் பூசி. இளையார் - மகளிருடைய. அடி, 3 : "குழக ராயிள மடந்தையர்க் குருகுவோர்" (வி - பா. சூதுபோர். 66)

(மேற்.) அடி, 3 : நன். உயிரீற்றுப். 1, மயிலை.

2791. ஈருள் - ஈரல். தடி - மாமிசம். (பி - ம்.) 'மலபண்டம்'. அரு - நீங்காத. அள்ளல் - சேறு. இச்செய்யுள் கருவிலிருத்தலையும் பிறத்தலையும் கூறியது.

(இ - ள்.) தாம் வயிற்றுள் இருக்கின்ற காலத்து அவ்விடத்தில் புழுத் தாயினுடைய ஈருளாகியதடியை மூடித் தமது போர்வையையும் மொய்யா நிற்கத் தாம் குடரைச் சூடியிருந்து புறம்போதுங் காலத்து அருவழி யைப் போந்த மக்கள் தம் தாய்மையை நினையார்களோ? நினையாமையி னன்றே தம்மை வியக்கின்று ரென்றுனென்க.

ஓகாரம் : எதிர்மறை. இனி, மலபிண்டத்திற் பிறந்த புழு, தடியை யும் மூடித் தம்மையும் மொய்ப்ப வென்பாரும் உளர். (ககூங)

2792. அஞ்சொன் மடவார்த மார்வக் களிபொங்க
நெஞ்சத் தயிலேற்று நீள்வெங் கழுவூர்ந்தும்
குஞ்சிக் களியானைக் கோட்டா லுழப்பட்டும்
துஞ்சிற் றுலகந்தோ துன்பக் கடலுள்ளே.

குஞ்சி - மத்தகத்தின் மயிர்.

(இ - ள்.) உலகத்து மாக்கள், மகளிரிடத்து அவாவாற் பிறந்த மயக்கம் மிகுதலின், அவரைப் பெறுதற்கு நெஞ்சிலே வேலையேற்றும், அவர்க்குப் பொருள் கொடுத்தற்குக் களவு கண்டு கழுவேறியும், அவ ரைக் களவு கண்டு யானைக்கிடப்பட்டும் துன்பக் கடலிலே அழுந்தினர்; அந்தோ! இத்துன்பத்தை நீ நோக்காநின்றுயே யென்றுனென்க. (ககூச)

2793. பண்ணுர் களிறேபோற் பாயோங் குயர்நாவாய்
கண்ணுர் கடன்மண்டிக் காற்றிற் கவிழுங்கால்
மண்ணுர் மணிப்பூணுய் மக்க ளுறுந்துன்பம்
நண்ணு நரகத்தி னுன்கா மடியன்றே.

(இ - ள்.) பூணுய்! சமைத்த களிறுபோலப் பாய் விரித்த நாவாய் கடலிலே ஓடிக் காற்றுற் கவிழும்போது மக்கள் படுந்துன்பம், சென்று சேர்தற்கரிய நரகத் துன்பத்திலும் நான்மடங்கு காணென்றுனென்க. அந்நரகம் : [1] நிகோதம். (ககூரு)

---

2792. மடவார்தம் ஆர்வக் களி - மகளிர்மீதுள்ள ஆசையாகிய மயக்கு. உலகு : ஆகுபெயர்.

2793. அடி, 1 : "களிறுங் கந்தும் போல நளிகடற், கூம்புங் கலனுந் தோன்றும்" (தொல். உவம. 37, மேற்.). பண்ணுர் களிறு - அலங்கரித்தல் பொருந்திய யானை. நாவாய் - கப்பல். கண்ணிற்கு ஆர்ந்த கடல்; இடம் நிறைந்த கடலெனினுமாம். அடி, 2 - 3 : "வந்ததே, ஆழ்கலத் தன்ன கலுழ்" (நாலடி. 12). மண் ஆர் - கழுவுதல் பொருந்திய; மணிக்கு அடை. நான்காமடி : சீவக. 2780; மடி - மடங்கு.

(உரை) [1] நிகோதம் - இரத்தினப் பிரபை முதலிய நரகம் ஏழினுக் கும் கீழுள்ளது.

2794. (க) செந்தீப் புகையுண்டுஞ் சேற்று ணிலைநின் றும்
அந்தோ வெனமாற்ரு லாற்றப் புடையுண்டும்
தந்தீ கெனுமுன்கை வீக்கத் தளர்வுற்றும்
நொந்தார் குடிச்செல்வர் நோன்மை நுகம்பூண் டார்.

2795. (உ) கண்சூன் றிடப்பட்டுங் கால்கை களைந்தாங்கே
அண்பல் லிறக்கையா லாற்றத் தகர்பெற்றும்
நுண்சாந் தரைப்பார்போ னேவ முழங்கையாற்
புண்செய் திடப்பட்டும் புன்க ணுழப்பவே.

இவை இரண்டும் ஒரு தொடர்.

(க) தந்தீகென்பது வினைத்திரி சொல். நொந்தார் - பகைவர்.

(இ - ள்.) நின் பகைவர் நாட்டிற் குடியிருக்கும் மக்களாகிய செல்வர், நீ தேடிய பொருளை அரசனுக்குத் தருவாயாகவெனச் சொல்லி முன்கையை வீக்க அத்துன்பத்திற்குத் தளர்ந்து அதனைப் பொறுக்கின்ற நுகத்தை முன்னர்ப் பூண்டவர், பின்னர் அங்கே சேற்றிலே நிற்றலைச் செய்தும், மாற்ருற் புடையுண்டும், கையால் அண்பல்லிறத் தகர்பெற்றும், சாந்து அரைப்பார் போல முழங்கையாற் புண் செய்யப்பட்டும், கால் கை களைந்து கண் சூன்றிடப்பட்டும், புகையுண்டும் துன்பத்தே அழுந்துவர் காணென்ருனென்க.

செல்வர் பூண்டாரென்க. தந்தீகென ஒருமையாற் கூறிற்று, அவரைத் தனித்தனியே தண்டித்தலின். (ககூசு - எ)

2796. மாலைக் குடைமன்னர் வைய மகற்றுவான்
காலைக் கதிதுன்பங் காவல் பெருந்துன்பம்
சோலை மயிலன்னர் தோள்சேர் விலராயின்
வேலைக் கடலேபோற் துன்பம் விளையுமே.

2794. மாற்ருல் - வளாரால். தந்தீகெனு - தருகவென்று. (பி - ம்.) ‘தந்தீயெனு’. வீக்க - கட்ட. நுகம் பூண்டார் - பாரத்தை மேற்கொண்டவர்; நுகம் - பாரம்; “எழுவர் பூண்ட வீகைச் செந்நுகம்,......ஒருதான் ருங்கிய” (சிறுபாண். 113 - 5)

2795. சூன்றிடப்பட்டும் - தோண்டப்பட்டும். (பி - ம்.) ‘கால்கள் குறைத்தாங்கே’. அண்பல் - நாவிளிம்பு அணுகுதற்குக் காரணமான பல். புன்கண் உழப்ப - துன்பத்தை அனுபவிப்பர்.

2796. வையம் அகற்றுவான் - தாம் ஆளும் பூமியை அகலச் செய்யும் பொருட்டு; “நாடுகண் ணகற்றிய வுதியஞ் சேரல்” (அகநா, 65 : 5). கதி - பகைவர் நாட்டின்மீது செல்லும் செலவு. காவல் - கைப்பற்றிய நாட்டைக் காத்தல். சோலை மயிலன்னர் : சீவக. 283. வேலைக் கடல் - கரையையுடைய கடல். காமத்திற்குக் கடல் : “கடலன்ன காமம்” (குறள், 1137)

**(இ - ள்.)** மன்னர்க்கு வையத்தை அகற்றுதற்குப் போதற்குரிய காலையிலே போகின்ற போக்குத் துன்பம்; அதனை அகற்றிப் பிறர் கொள்ளாமற் காத்தல் துன்பம்; அவையேயன்றி அவர்தாம் மகளிர் தோளைச் சேராராயின், அவர்க்குக் கரையையுடைய கடல்போல் துன்பம் பெருகுமென்று னென்க. (கககஅ)

2797. ஊன்சே ருடம்பென்னு மோங்கன் மரச்சோலை
தான்சேர் பிணியென்னுஞ் செந்தீக் கொடிதங்கிக்
கான்சேர் கவினென்னுங் காமர் மலர்வாடத்
தேன்சேர் மலர்மார்ப தீத்திட் டிறக்குமே.

**(இ - ள்.)** மார்பனே, உடம்பென்னுஞ் சோலையிலே சேர்ந்த பிணியென்னுந் தீயொழுங்கு அதனை விட்டுப் போகாமல் தங்கிக் கவினென்னும் கான்சேர் மலர் வாடும்படி அச்சோலையைச் சுட்டுத் தான் போமென்றுனென்க. (கககக)

2798. கொட்டுப் பிடிபோலுங் கூனுங் குறளாமை
விட்டு நடப்பனபோற் சிந்தும் விளைந்துசீ
அட்டு முயவுநோ யல்லாப் பிறநோயும்
பட்டா ருறுதுன்பம் பன்னிச் சொலலாமோ.

**(இ - ள்.)** கொட்டுப் பிடி போலுங் கூனரும், குறளரும், ஆமை கைவீசி நடக்குமாறுபோலுஞ் சிந்தரும், சீ விளைந்து வடியும் வருந்து நோயையும் பிற நோயையும் உற்றவர்களும் படுந்துன்பம் நம்மால் ஆராய்ந்து கூற முடியாது காணென்றுனென்க. (உ00)

(வேறு)

2799. வேட்டன பெருமை துன்பம் விழைநரைப் பிரித றுன்பம், மோட்டெழி லிளமை நீங்க மூப்புவந் தடைத றுன்பம், ஏட்டெழுத் தறித லின்றி யெள்ளற்பா டுள்ளிட் டெல்லாம், சூட்டணிந் திலங்கும் வேலோய் துன்பமே மாந்தர்க் கென்றுன்.

---

2797. ஓங்கல் - ஓங்குதல். கான் - மணம். காமர் மலர் - விருப்பம் மருவின மலர். தீத்திட்டு - சுட்டு. இறக்கும் - தான் நீங்கும்.

2798. கொட்டுப்பிடி - களைக்கொட்டின் பிடி. விட்டு - கைகளை வீசி. கூனும் குறளும்: சீவக. 764. அட்டும் - சொரியும். உயவு - வருத்தம்; "உயாவே யுயங்கல்" (தொல். உரி. 71). பன்னி - ஆராய்ந்து.

2799. விழைநரை - தம்மை விரும்பினவரை. மோடு - பெருமை. எழில் இளமை - எழுச்சியோடு கூடிய இளமை. அடி, 3: "சவைநடுவே, நீட்டோலை வாசியா நின்றுன் குறிப்பறிய, மாட்டா தவனன் மரம்" (மூதுரை, 13). எள்ளற்பாடு - இகழப்படுதல். சூட்டு - இறைச்சி.

(இ - ள்.) மாலை யணிந்து இலங்கும் மேலோய்! மக்கட்கு வேட்ட பொருள்களைப் பெறுமை துன்பம்; விரும்பினரைப் பிரிதல் துன்பம்; மூப்புவந்து சேர்தல் துன்பம்; இவையேயன்றி ஏட்டி லெழுத்தை அறிதலின்றி இகழ்தல் முதலாக மற்றுள்ள இகழ்ச்சிகளெல்லாம் துன்பமேயாயிருக்குங் காணென்றானென்க. (உ0க)

## கரு. தேவகதித்துன்பம்

2800. திருவிற்போற் குலாய தேந்தார்த் தேவர்தந் தன்மை செப்பிற், கருவத்துச் சென்று தோன்றார் காணிலந் தோய்தல் செல்லார், உருவமே லெழுத லாகா வொளியுமிழ்ந் திலங்கு மேனி, பருதியி னியன்ற தொக்கும் பன்மலர்க் கண்ணி வாடா.

(இ - ள்.) இனித் தேவருடைய குணத்தைக் கூறின், அவர் கருவிற் சென்று பிறவார்; கால் நிலந் தீண்டுதல் செல்லார்; அவருருவத்தைக் கூறின், எழுதலாகா; அவர் நிறம் பருதியில் இயன்ற தொக்கும்; அவர்க்குக் கண்ணி வாடா என்றானென்க. (உ0உ)

2801. அங்கையு மடியு நோக்கிற் றாமரை யலர்ந்த தொக்கும், பங்கய மனைய செங்கண் பருவொளிப் பவழஞ் செவ்வாய், செங் கதிர் முறுவன் முத்தின் றெளிநகை திகழுஞ் செய்யாள், வெங்கடை மழைக்க ணோக்கி வெய்துறத் திரண்ட வன்றே.

(இ - ள்.) அவர் தேவியர்க்குக் கையும், அடியும் தாமரையலர்ந்த செவ்வியை யொக்கும்; கண் கமலத்தை யொக்கும்; வாய் செங்கதிராகிய பேரொளியையுடைய பவழத்தை யொக்கும்; திகழு முறுவல் முத்தின் ஒளியை யொக்கும்; இவையேயன்றி அவர்க்குத் திருமகள் இவரழகைப் பெற்றிலேனென்று தானோக்கி வருந்தும்படி ஒழிந்த அவயவ அழகும் வந்து திரண்டன என்றானென்க. (உ0ங)

2802. தாணெடுங் குவளைக் கண்ணித் தளையவிழ் கோதை மாலை, வாண்முடி வைர வில்லும் வார்குழை சுடரு மார்பிற், பூணிடை நிலவு மேனி மின்னொடு பொலிந்த தேவர், ஊணுடை யமிர்தம் வேட்டா லுண்பது மனத்தி னாலே.

2800. திருவில் - இந்திர வில். செப்பின் - சொல்லப் புகுந்தால். கருவத்து - கருவில்; அத்து: சாரியை. எழுதலாகா: முற்று. மேனி ஒக்கும். பருதி - சூரியன்.

2801. கண் பங்கயம் அனைய. நகை - ஒளி. கண்ணால் நோக்கி. வெய்துற - துன்பம் அடைய. அன்று, ஏ: அசைகள்.

2802. தளை அவிழ் - முறுக்கு அவிழ்கின்ற. வாள்முடி - ஒளியையுடைய கிரீடம். மின்னொடு பொலிந்த மேனியென்க. ஊண் உடை - உண்ணப்படுதலையுடைய.

(இ - ள்.) குவளைக் கண்ணியினையும், [1] மார்பிற் கோதையினையும், நெற்றி மாலையினையும், வான்முடியிலுண்டாகிய வைர வில்லினையும், சுடரும் குழையினையும், மார்பிற் பூணிடத்தில் நிலவினையும், மின்னொடு பொலிந்த நிறத்தினையுமுடைய அத்தேவர் உண்டற்றொழிலையுடைய அமிர்தத்தை உண்டற்கு விரும்பினால் மனத்தாலே உண்பது; கையினாலும் உண்ணார் காணென்றானென்க. (உ0ச)

2803. சிதரரி யொழுகி யோடிச் செவியுறப் போழ்ந்து நீண்ட
மதரரி மழைக்க ணம்பா வாங்குவிற் புருவ மாகத்
துதைமணிக் கலாப மின்னத் தொன்மலர்க் காம னம்பு
புதைமலர் மார்பத் தெய்யப் பூவணை மயங்கி வீழ்வார்.

சிதரரி - சிதரின செவ்வரி. மதரரி - கதிர்த்த அழகு. ஓடிப்போழ்ந்து நீண்ட கண்.

(இ - ள்.) காமன் தொன் மலரம்பு முன்னரப் புதைந்த தேவருடைய மலர்ந்த மார்பிலே, தேவியர் புருவம் வாங்கு வில்லாகக் கண் அம்பாக எய்ய மயங்கிக் கலாபம் மின்ன அணையிலே வீழ்வார் காணென்றானென்க.

கலாபமின்னவென்றது புணர்ச்சியை. (உ0ரு)

2804. (க) பூத்ததை கொம்பு போன்று பொன்னிழை சுடரு மேனி, ஏத்தருங் கொடிய ரைை யிருநடு வாகப் புல்லிக், காய்த்தி யிட் டுள்ளம் வெம்பிக் கடைந்திடு கின்ற காமம், நீத்துநீர்க் கடலை நீந்தும் புணையென விடுத்தல் செல்லார்.

---

(உரை) [1] மார்பிற் கோதை - மார்பின் மாலை; "கோதை மார்பிற் கோதை" (புறநா. 48)

2803. போழ்ந்து - பிளந்து. புதைதல் அம்பின் தொழில். மலர் மார்பு - பரந்த மார்பு. பூவணை - பூவாலாகிய படுக்கையில்.

2804. பூததை - பூக்கள் செறிந்த. பொன்னிழைக்கு ஏற்ப வேங்கை மரத்தின் கொம்பைக் கொள்க; "மலர்ந்த வேங்கையின் வயங்கிழை யணிந்து" (பதிற். 40 : 22). கொடியனார் - மகளிர். காய்த்தியிட்டு - சுட்டு. கடைந்திடுகின்ற காமம் - மிகப் பண்ணுகின்ற காமம்; சீவக. 1308. புணையென - தெப்பமென்று மகளிரைக் கருதி.

2805. (உ) பொங்கல்வெம் முலைக ளென்னும் போதொடு பொருது பூந்தார், அங்கலந் தொடையன் மாலை கிழிந்தழ கழிய வைகிக், கொங்கலர் கோதை நல்லார் குரைகட லமிர்த மாகத், தங் கலர் பருகி யாரார் தாழ்ந்துகண் ணிமைத்தல் செல்லார்.

இவை இரண்டும் ஒரு தொடர்.

(க) ஏத் தருங் கொடி - வேள் அம்பைச் செலுத்துதலைத் தருங் கொடி. இரு நடுவாக - இடைமுரிய. நீத்து - பெருக்கு.

(உ) பொங்கல் - பெருமை. அழகிய கலத்தினையும் தொடையன் மாலையினையுமுடைய முலை. தங்கலர் - அமையார்.

(இ - ள்.) கொம்பை யொத்து இழை சுடரும் மேனியையுடைய கொடியன்னாரைப் புல்லி அவருடைய முலைகளென்னுந் தாமரை முகைக ளோடே தமது தார் பொருது தோற்று அழகழிய வைகி அதனாலும் அமையாராய் அவரை அமிர்தமாகப் பருகி அதனாலும் ஆராராய் விருப்ப மிகுதியாற் கண்ணிமையாமல் தாழ்ந்து உள்ளம் வெம்பிக் காய்த்தியிட்டுக் கடைந்திடுகின்ற காமக்கடலை நீந்துந் தெப்பம் இவர்களேயென்று கருதி அவர்களைக் கைவிடார் காணென்றானென்க. (உ௦சு-எ)

2806. (க) கருவியின் னிசைக ளார்ப்பக் கற்பக மரத்தி னீழற், பொருகய லனைய கண்ணும் புருவமு மரவஞ் செய்ய, அரவமே கலைக ளம்பொற் கிண்கிணி சிலம்பொ டார்ப்பத், திருவனா ராடல் கண்டுந் திருவொடு திளைத்து மானார்.

2807. (உ) பனிமுகின் முளைத்த நான்கு பசுங்கதிர்த் திங்க ளொப்பக், குனிமருப் புழுது மேகங் குஞ்சரங் குனிந்து குத்த, இனிதினி னிலங்கு பொற்றோ டேற்றுமின் குழைகள் பொங்கத், துனிவிலர் களிற்றோ டாடித் தொழுதகக் கழிப்பர் வேந்தே.

---

2805. போதொடு - மலரும் பருவத்து அரும்போடு. தாரும், கலமும், மாலையும் கிழிந்து. கொங்கு அலர் - மணம் பரவிய. நல்லாரை அமிர்தமாகக் கருதி. ஆரார் - தெவிட்டாராய்.

2806. பொரு கயல் - தம்மில் போர் செய்யும் கயல்மீன். (பி - ம்.) 'புருவமு முருவஞ்செய்ய'. இப்பாடத்திற்கு 'உரு' அச்சமாதலின், உருவமென்பதை அதன் திரிபாகக் கொள்க. அரவமேகலைகள் - ஒலியைச் செய்யும் மேகலைகள். ஆனார் - அமையாதவராய்.

2807. முகிலில் முளைத்த. திங்கள் ஐராவதத்தின் தந்தத்திற்கு உவமை. குனிதல் - வளைதல். மேகத்தைக் குத்த. ஏற்று - போரை ஏற்று. தோடும் குழைகளும் பொங்க. துனிவிலர் - வெறுப்பில்லாதவராய்.

இவை இரண்டும் ஒரு தொடர்.

(க) அரவஞ் செய்ய - மனத்தைக் கலக்க.

(உ) பனிமுகில் - பனிமாசு. வெண்மேகத்தே முளைத்த நான்கு பிறையை யொப்ப வென்றார், வெள்ளை யானை நாற்கோட்டதாதலின். ஏற்று - போரேற்று. தொழுதக - விரும்ப.

(இ - ள்.) வேந்தே! அங்ஙனம் நுகர்ந்தவர், கற்பகமரத்தின் நீழலிலே இருந்து நால்வகைக் கருவிகளுடனே இனிய இசைகள்ஆராநிற்கத் திருவனுருடைய மேகலை முதலியன ஆராநிற்க அவர் கண்ணும் புருவமும் அரவஞ் செய்யாநிற்கக் கூத்தைக் கண்டும் செல்வத்துடனே ஒழிந்த விளையாட்டுக்களை விளையாடியும் அமையாராய்க் குஞ்சரம் மேகத்தோடே போர் தொடங்கிக் குனிந்து திங்களொப்ப வளைந்த மருப்பாலும் குத்தும்படி தமது தோடும் குழையும் பொங்க அதனை மேற்கொண்டு துனிவிலராய் அக்களிற்றோடே விளையாடிப் பொழுது போக்குவர் காணென்றானென்க. (உ0அ - க)

2808. கடிகைவா ளார மின்னக் கற்பகக் காவு கண்டும்
தொடிகவி னருத மென்றோட் டேவியர் சூழ வாமன்
அடிகையிற் றொழுது பூத்தூ யஞ்சலி செய்து வீடே
முடிகவிப் பிறவி வேண்டே முனைவவென் றிரப்ப வன்றே.

கடிகை - தோள்வளை.

(இ - ள்.) அவர், போகம் நுகர்வதற்கு வேண்டுவன தருகின்ற கற்பகக் காவைக் கண்டுவைத்தும் இது நிலையாதென்று உட்கொண்டு தேவியர் சூழத் தோள்வளையும் ஆரமும் மின்னச் சென்று வாமனடியைத் தொழுது பூவைத் தூவி வணங்கி, முனைவனே! இப்பிறவியை விரும்பேம்; வீடே எமக்கு முடிவதாகவென்று இரப்பர் காணென்றானென்க. (உகம)

2808. கடிகை வாளாரம் மின்ன: "கடிகை யாரங் கழுத்தின் மின்ன" (பெருங். 1. 38 : 123). கவின் அருத - அழகு நீங்காத. வாமன் அடி கையிற்றொழுது; தேவர்கள் ஜினபூஜை செய்வதுண்டென்றும், தேவலோகத்தில் 8497023 ஜினாலயங்களுள்ளனவென்றும் கூறுவர்; இதனை, "பாரிடை யீரிரு நூற்றைம்பத் தெட்டுப்பத் தாம்பவணத், தோரெழு கோடியெண் ணேன்பா னிலக்க முயர்ந்தகற்பத், தோரியல் யோனிதொள் ளேழா யிரச்சின்ன மெண்ணவொண்ணுச், சீரிய வந்தரர் சோதிடத் தீசர்நற் சேதியமே" (திருநூற். 92) என்பதனால் உணர்க. அஞ்சலிசெய்து - கைகூப்பி வணங்கி. இப்பிறவியை வேண்டேம். இரப்ப - வேண்டுவர்.

2809. மலங்குவித் தாவி வாட்டி வாய்நிறை யமிர்தம் பெய்த
இலங்குபொற் கலச மன்ன வெரிமணி முலைகள் பாயக்
கலந்தனர் சென்ற பின்றைக் கதிர்கழன் றிருந்த வெய்யோன்
புலம்புபோற் புலம்பித் தேவர் பொற்புகுத் திருப்ப வன்றே.

[1] பற்று, ஆர்வம், செற்றம் முதலிய மலங்களைத் திரட்டித் தமக்குள்ள ஆயுளை அவமே போக்கி.

(இ - ள்.) தேவர், வாயளவும் நிறைய அமிர்தம் பெய்த கலசமன்ன முலைகள் பாயக் கலந்தனராய் ஆவியை வாட்டிச் சென்ற பின்னுளிலே கதிர்போன ஞாயிற்றின் புலம்புபோற் புலம்பிப் பொலிவைப் போக்கி இருப்பரென்றானென்க.

[2] முலைகள் தேவரை மயங்கப்பண்ணி ஆவியை வாட்டிப் பாய வென்றுமாம். (உகக)

2810. எல்லைமூ வைந்து நாள்க ளுளவென விமைக்குங் கண்ணும், நல்லெழின் மாலை வாடு நஞ்சுடை யமிர்துண் டாரிற், பல்பகற் றுய்த்த வின்பம் பழுதெனக் கவல்ப கண்டாய், பில்கித்தே னொழுகும் பைந்தார்ப் பெருநில வேந்தர் வேந்தே.

(இ - ள்.) வேந்தே! அத்தேவர்கட்கு உயிர்போகப் பதினைந்து நாள்கள் உளவெனக் கண்ணும் இமைக்கும்; மாலை வாடும்; அவர் தாம் நஞ்சையுள்ளேயுடைய அமிர்தை உண்டாரைப்போலே அங்ஙனம் பலநாளும் நுகர்ந்த இன்பத்தைப் பயனின்றிக் காலம் போக்கினோமேயென்று பின் வருந்துவர் காணென்றானென்க. (உகஉ)

2811. தேவரே தாமு மாகித் தேவராற் றொழிக்கப் பட்டும், ஏவல்செய் திறைஞ்சிக் கேட்டு மணிகமாப் பணிகள் செய்தும், நோவது பெரிதுந் துன்ப நோயினுட் பிறத்த றுன்பம், யாவதுந் துன்ப மன்ன யாக்கைகொண் டவர்கட் கென்றான்.

---

2809. வாய்நிறை அமிர்தம் பெய்த......முலைகள்: "தீங்கரும் பும் மமிழ் துஞ்செழுந் தேனும் பொதிந்து......கொங்கைகளே" (திருச்சிற். 46). கழன்று - நீங்கி. வெய்யோன் புலம்பு - சூரியனுடைய தனிமை. பொற்பு - பொலிவு.

(உரை) [1] பற்று......மலங்கள்: சீவக. 3039. [2] இப்பொருட்கு 'மலங்குவித்து' என்பதை ஒரு சொல்லாகக் கொள்க.

2810. இமைக்கும்: முற்று. நஞ்சையுடைய அமிர்து. உண்டாரின்- உண்டவரைப்போல. துய்த்த - அனுபவித்த. பழுது - குற்றமுடையது. கவல்ப - கவலையடைவர்.

2811. தொழிக்கப்பட்டும் - கோபிக்கப்பட்டும். மாப்பணிகள் - பெரிய ஆபரணங்கள். நோயினுள் - மக்கள் யாக்கை முதலியவற்றுள். யாவதும் - யாதும்; வகரம் விரித்தல்.

(இ - ள்.) மன்னு! தாமும் தேவரேயாயிருந்தும் வேறொரு தேவ ராற் கோபிக்கப்பட்டும், அவரை யிறைஞ்சி அவரேவல் கேட்டும், அவ் வேவலைச் செய்தும், அவர்கள் தம்முடைய அணிகலங்களிற் பெரிய பணி களைச் செய்தும் நோவது மிக்க துன்பம்; அதனை விட்டு மண்ணிடை வந்து மக்களாயும் விலங்காயும் பிறத்தலுந் துன்பம்; ஆதலால், யாதோரியாக்கையை யெடுத்தவர்கட்கு அவ்வியாக்கைகளெல்லாம் துன்பத்தையே செய்யுங் காணென்றானென்க.

அணி திரிந்து அணிகமாயிற்று. பணிகள் செய்வார் - மயன் முதலி யோர்; "நாவலொடு பெயரிய பொலம்புனை யவிரிழை" (முருகு. 18) என்றார் பிறரும். என்றானென்பதனை முன்னர்க் கூறியவற்றிற்கும் கூட்டுக. இனி, ஊர்திகளாகிப் பணிகள் செய்துமென்பாருமுளர்; வாகன தேவதைகளாகி யென்பதாம்; [1] அணிகம் - ஊர்தி. (உகங)

---

## கச. நற்காட்சி

### (வேறு)

2812. கொங்கு விம்மு குளிர்பிண்டி குழவி ஞாயிற் றெழி லேய்ப்பச், சிங்கஞ் சுமந்த மணியணைமேற் றேவ ரேத்திச் சிறப்பயர, எங்கு முலக மிருணீங்க விருந்த வெந்தை பெருமானார், தங்கு செந்தா மரையடியென் றலைய வேயென் றலையவே.

(இ - ள்.) பிண்டியின் கீழே அணைமேலே தேவர் சிறப்புச் செய்ய ஞாயிற்றெழிலேய்ப்ப உலகமெங்கும் இருணீங்க இருந்த எந்தையாகிய பெருமானாருடைய தாமரைமேல் தங்கின அடி என்றலை யிடத்தவே, என்றலை யிடத்தவே என்றானென்க.

இது [1] விரைவு. இருள் - பிற தெய்வங்களைத் தெய்வமென்று கருதுதல். (உகச)

2813. இலங்கு செம்பொ னெயின்மூன்று மெரிபொன் முத்தக் குடைமூன்றும், வலங்கொண் டலர்தூஉ யடியேத்தும் வைய மூன்றும் படைமூன்றும், கலங்கா துயர்ந்த வதிசயங்கண் மூன்றுங் காமர் நூன்மூன்றும், நலங்கொ டைம்பாற் குணக்கடலு முடையார் நம்மை யுடையாரே.

---

(உரை) [1] "அந்தரம் விளங்க வெங்கு மணிகமூர்ந் தமர ரீண்டி" (சீவக. 3115)

2812. கொங்கு - வாசனை. குழவி ஞாயிற்று எழில் - பால சூரியனது அழகு. பெருமானாரது அடிகள்.

(உரை) [1] "விரைசொல் லடுக்கே மூன்றுவரம் பாகும்" (தொல். எச்ச. 28) என்பது இங்கே கருதற்பாலது.

2813. எயில் - மதில். எரி பொன் - விளங்கும்பொன். அலர் தூஉய் - மலரைத் தூவி.

எயின் மூன்ருவன : உதயதரம், பிரீதிதரம், கல்யாணதரம். குடை மூன்ருவன : சந்திராதித்தியம், நித்திய விநோதம், சகல பாசனம். உலக மூன்ருவன : நாகலோகம், பூலோகம், சுவர்க்கலோகம். படை மூன்ருவன: இரத்தினத்திரயம் ; அவை : நற்காட்சி, நன்ஞானம், நல்லொழுக்கம். அதிசயங்கள் மூன்ருவன : சகசாதிசயம், கர்மக்ஷயாதிசயம், தெய்விகாதிசயம். நூன் மூன்ருவன : அங்காகமம், பூர்வாகமம், பகுசுருதியாகமம். குணக்கடல் - அநந்தஞானுதி குணங்கள்.

(இ - ள்.) இவற்றையுடையார்காண், நம்மை அடிமையாக உடையாரென்ருனென்க. (உகரு)

2814. மன்ற ஞறு மணிமுடிமேன் மலிந்த சூளா மணிபோலும்,
வென்ருேர் பெருமா னறவாழி வேந்தன் விரிபூந் தாமரைமேற்,
சென்ற திருவா ரடியேத்தித் தெளியும் பொருள்க ளோரைந்தும்,
அன்றி யாறு மொன்பானு மாகு மென்பா ரறவோரே.

வென்ருேர் - இருடிகள். [1] ஐந்தாவன : சீவம், புற்கலம், தருமம், அதருமம், ஆகாசம். அன்றி - இவ்வைந்துமேயன்றி ; இவற்ருேடு காலமுஞ் சேர ஆறுமாகும். ஒன்பதாவன : சீவம், அசீவம், புண்ணியம், பாவம், ஆஸ்ரவம், சம்வரை, நிர்ச்சரை, பந்தம், மோக்ஷம் என இவை.

(இ - ள்.) அறவோர் சூளாமணிபோலும் பெருமான், வேந்தன், அவனுடைய அடியையேத்தித் தெளியும் பொருள்கள் ஐந்தும், ஆறும், ஒன்பது மென்பரென்ருனென்க. (உகசு)

2815. பெரிய வின்பத் திந்திரனும் பெட்ட செய்கைச் சிறு குரங்கும், உரிய செய்கை வினைப்பயத்தை யுண்ணு மெனவே யுணர்ந்தவனை, அரிய ரென்ன மகிழாது மெளிய ரென்ன விகழாதும், இருசார் வினையுந் தெளிந்தாரே யிறைவ னூலுந் தெளிந்தாரே.

---

2814. சூளாமணி - முடி மணி. அறவாழி - தரும சக்கரம். திரு - கண்டார் விரும்பும் தன்மை.

(உரை) [1] ஐந்தினைப் பஞ்சாஸ்திகாயமென்றும், ஆறினை ஷட்திரவிய மென்றும், ஒன்பதினை நவபதார்த்தமென்றும் கூறுவர் வடநூலார்.

2815. பெட்ட - தான் விரும்பிய. புண்ணிய மிகுதிக்கு இந்திரனையும் பாவ மிகுதிக்குக் குரங்கினையும் எடுத்துக் காட்டினர். உண்ணும் - அனுபவிக்கும். இருசார் வினை - நல்வினை, தீவினைகள்.

பெட்ட - விரும்பின.

**(இ - ள்.)** தம் செயலால் தமக்குரியவாகிய இருவினையின் பயனை இந்திரனும் குரங்கும் நுகருமென்றே உணர்ந்து பிறர் இந்நிலை எய்துதற் கரியரென்று வியந்து இந்திரனை மகிழாதேயும், பிறர் இந்நிலை எய்துதற் கெளியரென்று வெறுத்துக் குரங்கை இகழாதேயும் நல்வினை தீவினையின் தன்மை இத்தன்மைத்தென்று தெளிந்தவர்களேகாண் இறைவனுடைய நாற்பத்திரண்டு பரமாகமத்தையும் தெளிந்தாரென்றுனென்க.

[1] அவை பன்னிரண்டும் பதினான்கும் பதினாறும் ஆக நாற்பத்திரண்டு. (உகஎ)

2816. உறுவர்ப் பேண லுவர்ப்பின்மை யுலையா வின்பந் தலை நிற்றல், அறிவர் சிறப்பிற் கெதிர்விரும்ப லழிந்தோர் நிறுத்த லறம்பகர்தல், சிறியா ரினத்துச் சேர்வின்மை சினங்கை விடுதல் செருக்கவித்தல், இறைவ னறத்து ளார்க்கெல்லா மினிய ராத லிதுதெளிவே.

**(இ - ள்.)** மிக்கோரை விரும்புதல், வெறுப்பில்லாமை, வீடெய்துங் கருத்துத் தம்மிடத்தே நிற்றல், அறிவர்க்குச் செய்யும் பூசைக்கு எதிர் விரும்புதல், அழிந்தோரைப் பழைய நிலையிலே நிறுத்துதல், அறத்தைக் கூறுதல், அறிவின் மாக்களைக் கூடாதிருத்தல், சினத்தைப் போக்குதல், செருக்கைக் கெடுத்தல், இச்சமயத்தார்க்கெல்லாம் இனியராதல் ஆகிய இத்தன்மைகாண் பரமாகமப் பொருளைத் தெளிந்த தெளிவாவதென்றுனென்க. (உகஅ)

2817. செறியச் சொன்ன பொருடெளிந்தார் சேரார் விலங்கிற் பெண்ணாகார், குறுகார் நரக மோரேழுங் கீழ்முத் தேவர் குழாந் தீண்டார், அறியா துரைத்தே னதுநிற்க வாறே நரக மாகாத, பொறியார் போக பூமியுள் விலங்கு மாவ ரொருசாரார்.

---

(உரை) [1] அங்காகமம், 12; பூர்வாகமம், 14; பகுசுருதியாகமம், 16; "ஆறிரண் டங்கமு மாய்ந்தீரேழ் பூர்வமும், கூறிரண்டெண் கேள்வி களிற் குன்றுமற்-றேறி, வரந்தருநல் லோத்துரைக்கும் வாய்மையார் பாதம், நிரந்தரநான் வந்திப்ப னின்று" (சீவசம்போதனை) என்பதனால் அறிக.

2816. உறுவர்ப் பேணல் - முனிவரை உபசரித்தல். உவர்ப்பு - வெறுப்பு. சிறப்பு - பூசை. பகர்தல் - கூறுதல். அவித்தல் - அடக்குதல்.

**(மேற்.)** அடி, 1 : நன். உரி. 11, மயிலை.

2817. செறியத் தெளிந்தார் விலங்கிற் சேரார். குழாம் - கூட்டம். பொறி - நல்வினை.

இக்கவியின் விசேடவுரையிலுள்ள வரலாறு இரத்தின கரண்டக மென்னும் வடநூலிற் சொல்லப்பட்டுள்ள தென்பர்.

(இ - ள்.) யான் சொன்ன பொருளைச் செறியத் தெளிந்தார், விலங்கிற் சேரார் ; பெண்ணாகப் பிறவார் ; ஏழு நரகத்தையும் அணுகார் ; கீழான மூன்று தேவர்திரள்களைத் தீண்டார் ; இவற்றுள் நரகமேழென்று அறியாமற் கூறினேன் ; அது நின்மனத்தே ஏழென்று துணியாமை நிற்பதாக ; ஆகாத நரகம் ஆறே ; அதற்குக் காரணம் யாதெனின் ஒரு சாரார் நல்வினை நிறைந்த போக பூமியில் விலங்காய்ப் பிறப்பதும் செய்வர்காணென்றானென்க.

நரகமேழாவன : இரத்தினப்பிரபை, சருக்கராப்பிரபை, வாலுகாப்பிரபை, பங்கப்பிரபை, தூமப்பிரபை, தமப்பிரபை, தமத்தமப்பிரபை எனவிவை. கீழ் முத்தேவராவார் : பவணர், வியந்தரர், [1] ஜ்யோதிஷ்கர். ஆகாத நரகமாறே யென்றது முன்பே நரகாயுஷ்யம் கட்டினபின்பு [2] தரிசனங்கொண்டவர், முதல் நரகத்திலே முதற்புரையிலே நரகராயும், விலங்காயுஷ்யம் கட்டின பின்பு தரிசனங் கொண்டவர் போகபூமியிலே விலங்காயும் பிறப்பரென்றதென்க. (உகக)

---

## கரு. சீலம்

### (வேறு)

2818. ஏத்தருந் திருமணி யிலங்கு நீர்மைய
கோத்தன போற்குண நூற்றுக் கோடியும்
காத்தன காவல பதினெண் ணாயிரம்
பாத்தன பண்ணவர் சீல மென்பவே.

(இ - ள்.) காவலனே! இலங்கு நீர்மையவாகிய திருமணியைக் கோத்தன போலும் எண்பத்து நான்கு நூறாயிரமாகப் பகுக்கப்பட்டனவாகிய குணவிரதங்களும், நூற்றுக்கோடி மகா விரதங்களும், பதினெண்ணாயிரஞ் சீலாசாரமும் பண்ணவர் காக்கப்பட்டனகாணென்றானென்க. (உஉ०)

---

(உரை) [1] ஜ்யோதிஷ்கர் : சந்திராதித்திய கிரக நக்ஷத்திர தாரகைகள் ; " சந்திரருஞ் சூரியருந் தாரகையு நாண்மீனும், வெந்திறல கோட்களுமா மெனவிளங்கி விசும்பாரு, மந்தரத்தை வலஞ்சூழ்ந்து வருபவரும் நிற்பவரும், சுந்தரஞ்சேர் மணிமுடியாய் சுடர்பவருஞ் சோதிடரே " (சூளா. துறவு. 206). [2] தரிசனம் - நற்காட்சி.

2818. ஏத்தரும் - புகழ்தற்கு அரிய. குணம் - குணவிரதம். பாத்தன - பகுக்கப்பட்டன. இதிற் கூறப்பட்டவை துறவிகளுக்குரிய நித்தியாசாரங்களாம்.

2819. மொய்யமர் ஞாட்பினுண் முரண்கொண் மன்னவர்
மெய்புகு பொன்னணி கவச மொப்பன
மையலைம் பொறிமதம் வாட்டி வைகலும்
செய்வினை நுணுக்குவ சீல மென்பவே.

(இ - ள்.) அவற்றுட் சீலமென்று கூறப்படுவன, வலிமேவின போரிலே மன்னவர் மெய் சென்று மறையும் கவசத்தை யொப்பனவாய் நாடோறும் உண்ணின்று மயக்கத்தைச் செய்யும் ஐம்பொறியின் செருக்கையும் வாட்டிப் புறத்துச் செய்யும் தீவினையையும் குறைப்பனகா ணென்றானென்க. (உஉக)

2820. மணித்துணை ரனையதங் குஞ்சி வண்கையாற்
பணித்தனர் பறித்தலிற் பரவை மாநிலம்
துணித்தொரு துணிசுமந் தனைய திண்பொறை
அணித்தகு முடியினு யாதி யாகவே.

மணி அனைய துணர் - நீலமணியனைய பற்றும்.

(இ - ள்.) முடியினாய்! குஞ்சியைத் தங் கையாற் பறிக்கையினாலே, இத்திண்ணிய பொறையுடைமை, நிலத்தை இருகூறாக்கி அதில் ஒரு கூற்றைச் சுமந்து பொறுத்த தன்மையவென்று கருதி அச்சீலங்களுள் இதனை ஆதியாகக் கொண்டு பணித்தாரென்றானென்க.

ஒரு துணியோடு உவமித்தலின், ஏனைய ஒரு கூறும் இஃது ஒரு கூறுமாகக் கூறினான், அருமையானென்றுணர்க. இது துறவின் பகுதி யென்றுணர்க. (உஉஉ)

(வேறு)

2821. பெரியவாட் டடங்கட் செவ்வாய்ப் பிறர்மனை பிழைக்கு மாந்தர், மரீஇயவாய்ப் புறஞ்சொற் கூர்முண் மத்திகைப் புடையு மன்றி, ஒருவர்வா யுமிழப் பட்ட தம்பல மொருவர் வாய்க்கொண், டரியவை செய்ப வையத் தாண்பிறந் தார்க ளன்றே.

---

2819. மொய் அமர் - வன்மை பொருந்திய. பொன் அணி - இரும்பினாற் செய்து அணியப்பட்ட. மையல் ஐம்பொறி - மயக்கத்தைச் செய்யும் ஐந்து இந்திரியங்கள். நுணுக்குவ - குறைப்பன.

2820. மணி - நீலமணி. தம் குஞ்சியைத் தம் கையாற் பறித்தல், 'உலோச்சு' என்னும் பெயரினதென்பர்; இந்தக் கிரியை, 3031-ஆம் பாடலிலும் வந்துள்ளது; "தடுக் குடுத்துத் தலையைப் பறிப்பாரொடு" (தே. திருஞா. திருப்பிரமபுரம், 'விடையதேறி' 10); "பறித்த புன்றலைக் குண்டிகைச் சமணர்" (தே. திருஞா. திருப்பிரமபுரம், 'அன்ன மென்னடை' 10). பரவை - கடல். துணித்து - இரண்டு கூறாக்கி. ஆக என்பதன்பின் பணித்தனரென்னும் சொல்லை இயைத்து முடிக்க.

2821. கண்ணையும் வாயையுமுடைய மனை. மனையை அவாய் மரீஇ; மரீஇ - மருவி. பிழைக்கும் - குற்றம் செய்யும். அரியவை : இகழ்ச்சிக் குறிப்பு.

**(இ - ள்.)** கண்ணிணையும் செய்ய வாயிணையுமுடைய பிறர் மனை யாளை அவாவி அவளிடத்தே மருவி ஒழுக்கத்தைத் தப்பும் மாந்தர் இம்மையிற் புறஞ் சொல்லாகிய கூர்முண் மத்திகைப் புடைபெறுதலு மன்றி அவளை முன்னர் நுகர்ந்தாரொருவர் அவள் வாய்க்கண்ணே உமிழப்பட்ட தம்பலத்தைப் பின்னர் நுகர்வாரொருவர் தம் வாய்க் கண்ணே வாங்கிக்கொண்டு தின்று இங்ஙனம் அரியனவற்றையும் செய் வார்கள்; இத்தன்மையார் வையத்தில் ஆண்மக்களாய்ப் பிறந்தவர்க ளன்று காணென்றானென்க.

இக்கவி, இல்லறஞ் செய்வார்க்குரிய விரதங்களுள், இது [1] காத்தலரி தென்று கூறிற்று. (உஉ௩)

2822. ஒழுக்கமே யன்றித் தங்க ளுள்ளுணர் வழிக்கு மட்டும்
புழுப்பயி றேனு மன்றிப் பிறவற்றின் புண்ணு மாந்தி
விழுப்பய னிழக்கு மாந்தர் வெறுவிலங் கென்று மிக்கார்
பழித்தன வொழித்தல் சீலம் பார்மிசை யவர்கட் கென்றான்.

**(இ - ள்.)** உலகில் அறம் செய்வார்க்குச் சீலமாவன: ஒழுக்கத்தைக் கெடுத்தலேயன்றி உணர்வையுங் கெடுக்கும் கள்ளையும், புழுப்பயின்ற தேனையும், பிறவற்றின் புண்ணாகிய தசைகளையும் மாந்தி வீடுபேற்றினை இழக்கு மாந்தர் உணர்வில்லா விலங்குபோல்வரென்று உயர்ந்தோர் பழித்தவற்றை நுகர்தலைத் தவிர்தல்காணென்றானென்க. (உஉ௪)

---

## க௬. **தானம்**

2823. நன்னிலத் திட்ட வித்தி னயம்வர விளைந்து செல்வம்,
பின்னிலம் பெருக வீனும் பெறலருங் கொடையும் பேசிற்,
புன்னிலத் திட்ட வித்திற் புற்கென விளைந்து போகம், மின்
னெனத் துறக்குந் தானத் தியற்கையும் விரித்து மன்றே.

(உரை) [1] இது பற்றியே திருவள்ளுவரும் இதனை, "பிறன்மனை நோக்காத பேராண்மை" (குறள், 148) என்றார்.

2822. உணர்வு அழிக்கும் - அறிவைக் கெடுக்கும். மட்டு - கள். விழுப்பயன் - மக்கட் பிறப்பால் அடைய வேண்டிய சிறந்த பயன். மிக்கார் - உயர்ந்தோர். பழித்தனவற்றை ஒழித்தல்.

2823. வித்தின் - விதையைப்போல. நயம் - விருப்பம். நிலம் - பூமியில். கொடை - தானம். புற்கென - புல்லென; "புல்லென்ற நாப்புலவர் போன்று" (பு - வெ. 267); 'புற்கென்ற செந்நாப் புலவரை

(இ - ள்.) நன்னிலத்திலே விதைத்த விதைபோல விருப்பம்வர விளைந்து செல்வத்தைப் பின்பு உலகிலே பெருக ஈனும் பெறுதற்கரிய தலையான தானத்தியற்கையையும், சொல்லுமளவிற் பொல்லா நிலத்தே விதைத்த விதைபோலே பொல்லாதாக விளைந்து போகமானது நிலை நில்லாது மின்போலத் தோன்றி மாயும் இடையான தானத்தினது இயற்கையையும் இனி விரித்துக் கூறுது மென்றானென்க. (உஉ௩)

2824. (க) ஐவகைப் பொறியும் வாட்டி யாமையி னடங்கி
யைந்தின், மெய்வகை தெரியுஞ் சிந்தை விளக்குநின் றெரிய
விட்டுப், பொய்கொலை களவு காம மவாவிருள் புகாது போற்றிச்,
செய்தவ நுனித்த சீலக் கணைகதிர்த் திங்க ளொப்பார்.

2825. (உ) வாய்ச்சிவா யுறுத்தி மாந்தர் மயிர்தொறுஞ் செத்தி
னுலும், பூச்சுறு சாந்த மேந்திப் புகழ்ந்தடி பணிந்த போதும்,
தூக்கியிவ் விரண்டு நோக்கித் தொல்வினை யென்று தேறி, நாச்
செறு பராவு கொள்ளார் நமர்பிற ரென்று முள்ளார்.

2826. (௩) பாற்கதிர்த் திங்கட் கொட்பிற் பருமித்த களிறு
போல, நூற்கதி கொண்டு கண்ணு னுகத்தள வெல்லை நோக்கி,
மேற்கதிக் கேணி யாய விழுத்தவர் மனையில் வந்தாற், காற்கொசி
கொம்பு போலக் கைதொழு திறைஞ்சி மாதோ.

யொத்து' (பு - வெ. 267, உரை). மின் நிலையாமைக்கு உவமை. விரித்தும் - விரித்துச் சொல்லுவோம். மு : "கேத்திர நன்ற தாயிற் கேடின்றி யிட்ட வித்து......அதனையன்றே" (நரிவிருத்தம், 16)

2824. யாமையின் அடங்கி : "ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றின்" (குறள், 126). சீலமாகிய மிக்க கதிர்களையுடைய.

2825. வாய்ச்சி - மரத்தைச் செதுக்குதற்குரிய கருவி. செத்துதல் - வெட்டுதல். பூச்சுறு - பூசுதல் பொருந்திய. தூக்கி - சீர்தூக்கி. நாச்செறு - நாவாற் செறுதல். பராவு - புகழ்தல். மு. சீவக. 1167, 2640; 'நடுவு நிலைமை......சமநிலை; அஃதாவது செஞ்சாந் தெறியினுஞ் செத்தினும் போழினும், நெஞ்சோர்ந் தோடா நிலைமை; அது காமம் வெகுளி நீங்கினார் கண்ணே நிகழ்வது' (தொல். மெய்ப். 12, பேர்.); "தத்தமக்குக் கொண்ட குறியோ தவமல்ல......பகலாணி போன்று" (பழ. 95)

2826. திங்கட்கொட்பின் - சந்திரனது சுழற்சிபோல. பருமித்த அலங்கரிக்கப்பட்ட. கதி - வழி. ஏணி-செலுத்துபவராகிய. விழுத்தவர்

2827. (ச) தொடிக்கையாற் றெழுது வாழ்த்தித் தூமணி நிலத்து ளேற்றிப், பொடிப்புனை துகிலி னீக்கிப் புகழ்ந்தடி கழீஇய பின்றை, அடுத்தசாந் தகிலி னாவி யாய்மல ரருச்சித் தானார், கொடுப்பர்நா லமிர்த மூன்றிற் குணம்புரிந் தடங்கி னார்க்கே.

இவை நான்கும் ஒரு தொடர்.

(க) மனவெழுச்சியடங்கி ஆமைபோல் ஐம்பொறியையும் கெடுத்துப் பொய் கொலை களவு காமம் அவாவாகிய இருள் சென்று புகாமற் சீவபுற்கலம் முதலிய ஐந்தின் மெய்வகையினை ஆராயும் சிந்தையாகிய விளக்கை அவியாமல் எரியவிட்டுப் போற்றிச் செய்கிற தவத்தைக் கூர்க்க நிகழ்த்தின சீலமாகிய கதிரினையுடைய திங்களையொப்பார்.

(உ) மாந்தர் வாய்ச்சியினது வாயைச் சேர்த்தி ஒரு மயிர்க்கு ஒரு செத்தாகச் செத்தினும் பணிந்தபொழுதும் இவ்விரண்டினையும் சீர் தூக்கிப் பார்த்துப் பழவினையென்று தெளிந்து, செத்தின காலத்தும் பணிந்த காலத்தும் பிறரென்றும் நமரென்றும் கொள்ளாராய் வைதலையும் வாழ்த்துதல் செய்தலையுமுள்ளார்; இது நிரனிறை.

(ஙு) [1] திங்கள் எல்லா மீன்களையும் அளித்தற்குச் சுழலும் சுழற்சி போல எல்லாரையும் அளித்தற்குப் பல தாரணிந்த களிறு அடங்கி மெத்தென நடக்குமாறுபோல ஆகமத்திற் கூறிய வழியை உட்கொண்டு நுகத்தளவாகிய எல்லையை நோக்கி மனையிடத்து வந்தால்.

(ச) அடுத்த - பொருந்தின. நாலமிர்தம் - உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன. மூன்றின்-மனோவாக்குக் காயங்களின் தூய்மையோடே.

---

சிறந்த துறவிகள். அடி, 1-3 : "மண்ணிற்கண் ணுகத்தளவு நோக்கி.........புக்கான்" (மேரு. வச்சிராயுதன். 38). காற்கு ஒசி - காற்றால் வளைந்த; காற்கு : வேற்றுமை மயக்கம்.

துறவிகள் பிக்ஷைக்குச் செல்லுதல், "வில்லின தெல்லை கண்ணோக்கிமெல் லடிகள் பாவி, நல்லருள் புரிந்து யிர்க்க ணகைமுத லாய நாணி, இல்லவ ரெதிர்கொண் டியி னெதிர்கொளுண் டியரு மாகி, நல்லற வமுத முண்டார் நடந்தனர் வீதி யூடே" (முதலாவது, 24) என இப்படியே யசோதர காவியத்திற் கூறப்பட்டிருத்தல் காண்க.

2827. ஏற்றி - இருக்கச்செய்து. பொடி - காலினுள்ள பொடியை. கழீஇய பின்றை - கழுவிய பிறகு. ஆவி - புகை. ஆனார் - இவற்றாலும் அமையாராய். நாலமிர்தம் - நால்வகையுணவு; "உண்டி நாலு விதத்தி லாறு சுவைத்தி றத்தினில்" (பெரிய. இளையான். 4). அடங்கினார்க்குக் கொடுப்பர்.

(உரை) [1] 'அச்சுவினி முதலாகிய நட்சத்திரங்களுள் கிரமஹானியின்றிச் சரிக்கின்ற சந்திரனைப்போலக் கிருகந்தோறும் மௌனியாகி எழுந்தருளுகின்ற சுவாமி' என ஸ்ரீ புராணத்தில் விருஷப தீர்த்தங்கரர் புராணத்தும் கூறினர்.

(இ - ள்.) திங்களொப்பாராய் உள்ளாராய் மேற்கதிக்கு எல்லையாகிய விழுத்தவர் மனையில் வந்தால், அவரைக் கையால் தொழுது எதிர்கொண்டு மணி நிலத்தே இருத்திப் பின்னர்க் கொம்புபோல இறைஞ்சிக் கைதொழுது அவரடியிற் பொடியைத் துகிலால் துடைத்து நீராற் கழுவின பின்னர், அவரைச் சந்தன முதலியவற்றால் அருச்சித்து அமையாராய் அவர்க்கு நால்வகை அமிர்தத்தையும் மூன்றோடே கொடுப்பர்காணென்றானென்க. (உஉகூ - கூ)

2828. ஒன்பது வகையி னோதிற் றுத்தமர்க் காகு மார்ந்த
இன்பத மருளி யீத லிடையென மொழிப யார்க்கும்
துன்புற விலங்கு கொன்று சொரிந்துசோ றூட்டி னோர்க்கும்
நன்பொருள் வழங்கி னோர்க்கும் பயனமக் கறிய லாகா.

(இ - ள்.) ஒன்பது வகையினாற் கொடுக்கவேண்டுமென்று கூறிற்று, யான் முற்கூறிய [1] உத்தமராயினோர்க்காகும்; குறைவற்ற இனிய சோற்றை யார்க்கும் அருளிக்கொடுத்தல் இடையாய தானமென்று கூறுவர்; இவையன்றி விலங்கைத் துன்புறக் கொன்று சோற்றையூட்டினோர்க்கும், அதனை உண்ட பாவிகட்கும், அவர்க்கு நல்ல பொருளைக் கொடுத்தார்க்கும் விளையும் தீவினைப்பயன் நமக்கு அறிந்து கூற முடியாவென்றானென்க.

ஒன்பதாவன : "எதிர்கொள லிடநனி காட்டல் கால்கழீஇ, அதிர்படவருச்சனை யடியின் வீழ்தரல், மதுர நன் மொழியொடு மனமெய் தூயராய், உதிர்கநம் வினையென வுண்டி யேந்தினர்" என இவை. (உகூ௦)

---

## கஎ. தானப்பயன்

### (வேறு)

2829. கூற்றுநா வலறுவ தனைய கூரிலை
ஏற்றநீர்த் துளும்புவா ளிறைவ வீங்கினிப்
போற்றினை கேண்மதி பொருவில் புண்ணியர்க்
காற்றிய கொடைப்பய னறியக் கூறுவாம்.

---

2828. ஓதிற்று - சொல்லப்பட்டது. ஆர்ந்த - நிறைந்த. பதம் - உணவு. இடை - இடைப்படுதானம். பயன் - பாவத்தின் பயன்.

(உரை) [1] "உத்தமர்க் கொன்பது புண்ணியத் தாலீவ, துத்தம தான மெனல்" (அருங்கலச் செப்பு, 136)

2829. வேலின் இலைக்குக் கூற்றின் நா உவமை. பொரு இல் - ஒப்பு இல்லாத. ஆற்றிய - அளித்த.

அலறுவதாகிய கூற்றுநாவனைய வாள் - தன் கொடுமை கூறிப் பலரும்.கூப்பிடப்படுவதாகிய கூற்றினது நாப்.பல்லுயிரையும் உண்ணு மாறுபோலப் பகைவருயிரையுண்ணும் வாள்; வடிவுவமையும் கொள்க. துளும்பு நீரேற்ற.வாள் - மணிக்குடங்களில் அசையும் மஞ்சனநீரை அரசர் சொரியும் வாள்.

(இ - ள்.) இறைவனே! இனி இவ்விடத்து மனைவியுந் தானும் மனம் பொருந்திப் புண்ணியர்க்குக் கொடுத்த கொடையின் பயனை நீயறியக் கூறுவேம்; அதனைப் போற்றிக்கேளென்றனென்க. (உ௯க)

2830. (க) கடிப்புவா ரங்குலி கொளீஇய கைதுரந்
தடுத்துவார் மயிர்த்துதி யலற வூதலிற்
பொடித்தபொற் றமரை யனைய பொங்கழல்
இடைக்கிடந் தெவ்வள விரும்பு காய்ந்ததே.

2831. (உ) காய்ந்தவவ் வளவினுற் கௌவு நீரதொத்
தாய்ந்தறி கொடையின தளவிற் புண்ணியம்
தோய்ந்துயி ருடம்பிவ ணொழியத் தொக்கநாள்
வீந்துபோய் வயிற்றகம் விதியி னெய்துமே.

இவை இரண்டும் ஒரு தொடர்.

(க - உ) விளிம்பிற் பிணித்த கடிப்பிற் சேர்த்த வாரை விரல் கோத்துக் கொண்ட கையாலே நெருக்கிச் செலுத்தித் துருத்தியை ஊதலின், அவ்வழலிடைக் கிடந்து இரும்பு எவ்வளவு காய்ந்தது, அக்காய்ந்த மிகுதியினாலே தான் உண்ணும் நீர்போல இருப்புயிரும் தோய்ந்தென்க. நெடியவாய மயிரையுடைய துருத்தி. அலற - அதன் வாயொலிப்ப. [1] உயிரென்றது மேல், "இரும்பு போலவாம், பிணியுயிர்" (சீவக. 3111) என்பதனால் ஈண்டு நரகத்துச் சேறற்குரிய இருப்புயிரைக் கூறிற்றும்.

(இ - ள்.) இவ்விருப்புயிர், பல பிறப்பினும் தீவினையென்னும் தீயினுட் கிடந்து காய்ந்தே தீவினைப்பயனாகிய நீரையுண்ணுதலைக் கெடுத்து ஈண்டுச் செய்த நற்றானத்தினது அளவாலே உண்டான புண்ணிய நீரை உண்டுபோய்ப் போகபூமியிலே ஒரு வயிற்றகத்தே எய்துமென்று னென்க.

2830. வாரை அங்குலியிற் கொளீஇ; அங்குலி - விரல். கொளீஇ - கொண்டு. மயிர்த்துதி - மயிரையுடைய தோல். பொடித்த - தோன்றிய. தாமரைப்பூ அழலுக்கு உவமை.

2831. கௌவு நீரது ஒத்து - தான் உண்ணும் நீரினை ஒத்து. கொடையினது அளவில் - தானத்தின் அளவால். புண்ணியம் தோய்ந்து- புண்ணியம் சேரப்பெற்று. தொக்கநாள் வீந்து; வீய = வீந்து - கெட. உயிர் வயிற்றகம் எய்தும்.

(உரை) [1] உயிரின் வகை இன்னவென்பது 3107-ஆம் பாடல் முத லியவற்றால் விளங்கும்.

(உ) தப்பும் வழி இதுவென்று ஆராய்ந்தறிந்த கொடை. தனக்கு அடைத்த நாளறுதலின், உடம்பு இவனொழியப் போயென்க. (உருஉ-ரு)

2832. (க) திங்கணு ளொன்பதும் வயிற்றிற் சேர்ந்தபின்
வங்கவான் றுகில்பொதி மணிசெய் பாவைபோல்
அங்கவ ரிரட்டைக ளாகித் தோன்றலும்
சிங்கினு ரிருமுது குரவ ரென்பவே.

2833. (உ) இற்றவர் தேவராய்ப் பிறப்ப வீண்டுடல்
பற்றிய விசும்பிடைப் பரவு மாமுகில்
தெற்றென வீந்தெனச் சிதைந்து போகுமால்
மற்றவம் மக்கடம் வண்ணஞ் செப்புவாம்.

இவை இரண்டும் ஒரு தொடர்.

(க) வங்கம் - மரக்கலம். சிக்கினார் : விகாரம்.

(உ) இற்றவர் - உடம்பை நீத்தவர்.

(இ - ள்.) அவ்வுயிர் ஒன்பது திங்களால் உண்டான இருநூற்றெழுபது நாளும் வயிற்றிலே இருந்தபின், அவ்வுயிரை யுடையவர்கள் துகிலாற் பொதிந்த பாவை அத்துகிலினின்றும் புறப்பட்டாற்போல அவ்விடத்தே வருத்தமின்றி இரட்டைப் பிள்ளைகளாய்ப்பிறந்த அளவிலே, இருமுது குரவர் தம்மை முன்னர்ச் சிக்கிக்கொண்டு நின்றவர்கள், தம்முடம்பை நீத்துப்போய்த் தேவராய்ப் பிறப்ப, ஈண்டிய உடல் மேகவிநாசம்போலே மாய்ந்துபோம் ; அம்மக்கள் வண்ணம் இனிச் செப்புவாமென்றானென்க. (உருச - ரு)

---

2832. வங்கவான்துகில் - கப்பலில் வந்த சிறந்த ஆடை. மணியாற் செய்த பாவைபோல. சிங்கினார் - இறந்தனரெனலுமாம் ; சிங்குதல் - அழிதல் ; "சிங்கா வண்புகழ்ச் சிங்க புரத்து" (சிலப். பதிகம், 47). இருமுது குரவர் - தாய் தந்தையர்.

2833. ஈண்டுடல் : வினைத்தொகை. தெற்றென - தெளிவாக. வீந்தென - அழிந்தாற்போல.

இக்கவியும் இதனுரையும் பின்னுள்ளவாறு சில பிரதிகளில் வேறுபட்டுள்ளன ; "இற்றவர் தேவராய்ப் பிறப்ப வீண்டுடம், பற்றமில் பறவைக ளடையக் கொண்டுபோய்ச், சுற்றிய பாற்கடற் றுளும்ப விட்டிடும், பொற்றிரள் வரையொடு மின்னுப் போலவே" இ - ள். சிக்கிக்கொண்டு நின்றவர்கள் தம்முடம்பை நீத்துப்போய்த் தேவர்களாய்ப் பிறப்ப, வரையோடு கூடிய மின்னுப்போல ஈண்டிய உடம்பைச் சில பறவைகள் எடுத்துக்கொண்டு போய்ப் பாற்கடலிலே போகடுமென்றானென்க ; வேறுபாடு இன்னும் பலவுள. இச்செய்யுளின் பாடபேதம் மிக அதிகம் ; உரைக்கு ஏற்ற பாடம் இங்கே பதிப்பிக்கப்பெற்றது ; ஏனையிடங்களிலும் இப்படியே.

2834. பிறந்தவக் குழவிகள் பிறர்கள் யாவரும்
புறந்தர லின்றியே வளர்ந்து செல்லுநாள்
அறைந்தன ரொன்றிலா வைம்ப தாயிடை
நிறைந்தனர் கலைகுண முறுப்பு நீரவே.

(இ - ள்.) பிறந்த அப்பிள்ளைகள், புறத்துள்ளார் ஒருவரும் போற்றுதலின்றியே வளர்ந்து செல்லுநாள் நாற்பத்தொன்பதென்னும் நாளுக்குள்ளே நீர்மையையுடையவாகிய உறுப்பும் கலையும் குணமும் நிறைந்தனரென்றும் ஆகமத்தே அறைந்தாரென்றுனென்க.

குழவியென்னும் விரவுப்பெயரின் பின்வந்த கள்ளீறு ஈண்டு உயர்திணையையுணர்த்துதல், "கடிசொ லில்லை" (தொல். எச்ச. 56) என்பதனாற்கொள்க. (உ௲௬)

(வேறு)

2835. சோலைமீ னரும்பித் திங்கட் சுடரொடு பூத்த தேபோல்
மாலையுங் கலனு மீன்று வடகமுந் துகிலு நான்று
காலையு மிரவு மில்லாக் கற்பக மரத்தி னீழற்
பாலையாழ் மழலை வேருய்ப் பன்மணிக் கொம்பி னின்ருள்.

வடகம் - அத்தவாளம்.

(இ - ள்.) பாலையாழ்போலும் மழலைச் சொல்லாள் அவனை நீங்கிப் போய் ஒரு சோலை மீனையரும்பித் திங்களை ஞாயிற்ருேடு பூத்த தன்மை போல ஈன்று நான்று காலையும் இரவுமில்லாத கற்பகமரத்தின் நிழலிலே மணிக்கொம்பு போலே நின்ருளென்ருனென்க. (உ௲எ)

2836. இலங்குபொற் குவடு சாந்த மெழுதிய தனைய தோண்மேல்
நலங்கிளர் குழைக ளுன்று சாந்தின்வாய் நக்கி மின்னக்
கலங்கலந் தகன்ற மார்பிற் கற்பக மாலை தாழ
விலங்கர சனைய காளை வேனில்வேந் தென்னச் சேர்ந்தான்.

2834. புறந்தரல் - காப்பாற்றுதல். ஒன்றிலா ஐம்பது - நாற்பத்தொன்பது.

2835. சோலை : எழுவாய். சுடர் - சூரியன். வடகம் - மேற்போர்வை. நான்று - தொங்கி. பாலையாழ் இனிமை மிகுதிக்குக் கூறப்பட்டது.

2836. பொற்குவடு - பொன் மலை. குவடு அனைய தோள் என்க. நான்று - தொங்கி.

(இ - ள்.) சிங்கத்தை யொத்த அந்தக் காளை சாந்தமெழுதியதாகிய [1] குடவரையனைய தோண்மேற் கிடந்த சாந்தினிடத்துக் குழைகள் நான்று நக்கி மின்ன மார்பிலே மாலை தாழக் காமனென்ன அக்கற்பகத்தைச் சேர்ந்தானென்றானென்க. (உ௩அ)

2837. குண்டலங் குலவி மின்னப் பொன்னரி மாலை தாழத்
தெண்கட லமிர்திற் செய்த பாவையிற் பாவை நிற்ப
விண்டலர் மாலை மார்பன் விதியினாற் சென்று மாதோ
கண்டனன் கலந்த வுள்ளங் காதலி னொருவ ரானார்.

(இ - ள்.) அதனைச் சேர்ந்தவன் அமிர்தாற் செய்த பாவைபோல மின்னத் தாழ அவள் நின்ற அளவிலே, ஊழாலே சென்று கண்டான்; அப்பொழுது இருவருள்ளமும் காதலினாற் கலந்தன; பின்பு ஒரு மனத்தராயினாரென்றானென்க. (உ௩௯)

2838. கொதிநுனைக் காம னம்பு கொப்புளித் துமிழ்ந்து காம
மதுநிறை பெய்து விம்மு மணிக்குட மிரண்டு போல
நுதிமுக முத்தஞ் சூடி நோக்குந ராவி வாட்ட
விதிமுலை வெய்ய வாகித் தாரொடு மிடைந்த வன்றே.

காமத்தைக் கொப்புளித்துக் கொதிநுனையினையுடைய அம்பைக் காமன் சொரிய; உமிழ்ந்து - உமிழ. மதுப்பெய்து நிறைந்த மணிக் குடம்.

(இ - ள்.) நோக்குநர் ஆவி வாட்டுதற்குக் கண்ணினையுடைய முகத்தே முத்தத்தைச் சூடி வெய்யவாகிக் குடமிரண்டுபோல விம்மும் முலை, விதியாலே அம்பைக் காமன் உமிழ அவன் தாரோடு மிடைந்த வென்றானென்க.

வாட்டுதற்கு முடிசூடின. (உ௪௦)

2839. இமைத்தநுங் கண்க ளென்னை யிகழ்ந்தனி ரென்று சீற, அமைத்துநின் னழகு கோல மாரவுண் டறுக்க லாற்றா, திமைத்தன வஞ்சி யென்ன விளையவள் சிலம்பிற் குஞ்சி, நமைத்தபூந் தாமந் தோய நகைமுக விருந்து பெற்றான்.

---

(உரை) [1] பொற்குவ டென்பதற்குக் குடவரை யென்று பொருளெழுதியது, "அத்த மென்னும் பொன்னஞ் சிலம்பு" (பாண்டிக் கோவை) என்பதை நோக்கிப் போலும்.

2837. குலவி - விளங்கி. பொன்னரிமாலை - பொன்னை அரிந்து செய்த மாலை. விண்டு - முறுக்கவிழ்ந்து. கலந்த - கலந்தன; முற்று.

2838. கொதிக்கும் நுனையையுடைய காமனம்பு. காமமாகிய மதுவை நிறையப் பெய்து. முலை விதியால் மிடைந்த என்க.

2839. இமைத்த - இமைத்தன. சீற - கோபிக்க. இயற்கை யழகையும் அலங்காரத்தாற் பிறந்த கோலத்தையும். ஆர - நிரம்ப.

(இ - ள்.) நும் கண்கள் இமைத்தன ; ஆதலாலே நீர் என்னை இகழ்ந்தீரென்று அவள் சீற, அதற்கஞ்சி, அவை நின் வடிவழகையும் ஒப்பனைக்கோலத்தையும் நிறையவுண்டு அறுக்கமாட்டாதே இமைத் தனகாணெனச் சொல்லா நிற்க, இளையவளது சிலம்பிலே தன் குஞ்சியிற் சூட்டிய தாமம் தோய்தலாலே அமைத்து நகைத்த முகத்தில் விருந்தைப் பெற்றுனென்றுனென்க.

அமைத்து - பொறுத்து ; 'வழுவமைத்து' என்றுற்போல நின்றது. என்று கூறவும் பாடம். (உசக)

2840. இன்னகி லாவி விம்மு மெழுநிலை மாடஞ் சேர்ந்தும்
பொன்மலர்க் காவு புக்கும் புரிமணி வீணை யோர்த்தும்
நன்மலர் நான வாவி நீரணி நயந்துஞ் செல்வத்
தொன்னலம் பருகிக் காமத் தொங்கலாற் பிணிக்கப் பட்டார்.

(இ - ள்.) அங்ஙனம் புணர்ந்தவர்கள் மாடத்தைச் சேர்ந்தும் காவிலே புக்கும் யாழைக் கேட்டும் வாவியிலாடுதற்கு நீர்க்கோலத்தை விரும்பியும் செல்வத்தையுடைய தொன்னலம் பருகிக் காமமாகிய மாலையாற் கட்டப்பட்டாரென்றுனென்க. (உசஉ)

2841. பூமுற்றுந் தடங்க ணுளும் பொன்னெடுங் குன்ற னும்
காமுற்று நினைந்த வெல்லாங் கற்பக மரங்க ளேந்தத்
தாமுற்றுக் கழிப்பர் தான மிடையது செய்த நீரார்
ஏமுற்றுக் கரும பூமி யிருநிதிக் கிழமை வேந்தே.

(இ - ள்.) வேந்தே! அங்ஙனம் தலையான தானத்தைச்செய்த பூவின் தன்மை நிரம்பிய கண்ணுளும் குன்றனும் தாங்கள் விரும்பி நினைந்தவெல்லாம் கற்பகமரங்கள் கொடுக்க அவற்றை நுகர்ந்து காலங்

---

வஞ்சி : விளியாக்கினும் பொருந்தும். நமைத்த - பிணித்த ; "நும்மா னமைப்புண்ணேன்" (தே. திருநா. ஆரூர். பொய். 3). நகை முகவிருந்து : சீவக. 1046, அடிக்.

2840. விம்மும் - நிறைந்த. எழுநிலை மாடம் - ஏழு நிலைகளை யுடைய மாளிகை. வீணையின் இசையைக் கூர்ந்து கேட்டும். நீரணி - நீர் விளையாட்டு. தொங்கல் - மாலை.

2841. காமுற்று - விரும்பி. கற்பகமரங்களென்று பன்மையாற் கூறினுர் அவை பத்தாகலின் ; "பத்துவகை பாதவ மியற்றிய பயத்தால், அத்தகைய செய்கையு மவர்க்கனைய கண்டாய்" (சூளா. துறவு. 185). ஏமுற்று - மயக்கமுற்று. கருமபூமியென்பதனேடும் கழிப்பரென்பதைக் கூட்டுக.

கழிப்பர்; இடையதாகிய தானத்தைச் செய்தவர்களும் கரும பூமியிலே இருநிதிக்கிழமைக் கண்ணே 'மயக்கமுற்றுக் காலங்கழிப்பரென்று னென்க.

ஏமுற்று, "தேரே முற்றன்று" (கலித். 74) என்றாற்போல நின்றது. கடையான தானத்திற்குப் பாவமே உண்மையின், ஈண்டுக் கூறிற்றிலர். (உ௪௩)

2842. அடங்கலர்க் கீந்த தானப் பயத்தினு லலறு முந்நீர்த்
தடங்கட னடுவுட் டீவு பலவுள வவற்றுட் டோன்றி
உடம்பொடு முகங்க ளொவ்வா ரூழ்கனி மாந்தி வாழ்வர்
மடங்கலஞ் சீற்றத் துப்பின் மானவேன் மன்ன ரேறே.

இது முற்கூறிய புண்ணியரல்லாதார்க்கு ஈந்த தானத்துக்குப் பயன் கூறுகின்றது.

(இ - ள்.) மன்னரேறே! ஐம்பொறியையும் வாட்டாதார்க்குக் கொடுத்த தானப் பயனாலே, கடலிடைத் தீவுகள் பலவுள; அவற்றிலே உடம்பு மக்களுடம்பும் முகம் விலங்கின் முகமுமாய்த் தோன்றிக் கனியை மாந்தி வாழ்வரென்றானென்க. (உ௪௪)

---

## ௧௪. சீலப்பயன், காட்சிப்பயன்

2843. செப்பிய சீல மென்னுந் திருமணி மாலை சூழ்ந்தார்
கப்பத்து ளமர ராவர் காட்சியி னமிர்த முண்டார்
ஒப்பநீ ருலக மெல்லா மொருகுடை நிழற்றி யின்பம்
கைப்படுத் தலங்க லாழிக் காவல ராவர் கோவே.

---

2842. முந்நீர்த்தடங்கடல் - மூன்று நீர்மையையுடைய பெரிய கடல்; சீவக. 5, ந. தீவு பல உள; இத்தீவுகளை அந்தரத்துவீபமெனவும், குமானுஷ்யத்துவீபமெனவும் கூறுவர்; அவைகள் தொண்ணூற்றாறு; அவற்றை, "வாரியுட் டீவு தொண்ணூற்றாறு" எனவும், ஈண்டு, "உடம்பொடு முகங்களொவ்வார்" என்றதை விளக்கி, "ஒன்றதாங் காலர் வாலர் கொம்பர்தாழ் செவியர் சீயம், பன்றிமான் குரங்கு கீரி ஒட்டகங் கரடி யாதி, ஒன்றலா முகத்தர் பல்ல மாயுகங் காத மோக்கம், தின்றிடாப் பழத்தை மண்ணை முழைஞ்சிலு மரத்துஞ் சேர்வர்" (மேரு. சமவ. 180 - 81) எனவும் கூறினர். ஊழ்கனி - பதனழிந்து வீழ்ந்த பழங்களை. மாந்தி - உண்டு. மடங்கல் - சிங்கம். துப்பு - வன்மை.

(மேற்.) அடி, 1. இ - கொ. வினை. 17, உரை; மு: குறள், 276, பரிமேல்.

2843. மணிமாலை - மாணிக்க மாலை. கப்பம் - பதினாறுவகைக் கற்பலோகம்; "கப்பத் திந்திரன் காட்டிய நூலின்" (சிலப். 11 : 154). உண்டார் ஆழியையுடைய காவலராவர்; ஆழி - ஆஞ்ஞாசக்கரம்.

(இ - ள்.) கோவே! யான் முற்கூறிய சீலமென்னும் மாணிக்க மாலையைச் சூடினூர் கற்பத்தில் அமரராவர்; காட்சிப்பயனை நுகர்ந்தார் பின்னர் உலகெல்லாமொப்ப ஒரு குடையாலே நிழற்றி இன்பத்தை அகப்படுத்துச் சக்கரவர்த்திகளாவரென்றுனென்க. (உசரு)

---

## கக. வீடுபேறு

### (வேறு)

2844. வீட்டின தியற்கைநாம் விளம்பிற் றீங்கதிர்ப்
பாட்டரும் பனிமதி பழித்த முக்குடை
மோட்டிருங் கொழுமலர்ப் பிண்டி மூர்த்திநூல்
ஈட்டிய பொருளகத் தியன்ற தென்பவே.

இளைய ஞாயிற்றினது கூறுபாட்டினையும் பனிமதியினையும் பழித்த முக்குடை மூர்த்தி. மோடு - புடைபட்ட வயிறு.

(இ - ள்.) வீட்டினது இயற்கையை நாம் கூறின், அது மூர்த்தி யீட்டிய நூற்பொருளிடத்தே கூறிற்று; அதனை யான் கூறக் கேட்பாயாக வென்றுனென்க.

என்ப : அசை. (உசசு)

2845. உள்பொரு ளிதுவென வுணர்தன் ஞானமாம்
தெள்ளிதி னப்பொரு டெளிதல் காட்சியாம்
விள்ளற விருமையும் விளங்கத் தன்னுளே
ஒள்ளிதிற் றரித்தலை யொழுக்க மென்பவே.

(இ - ள்.) பொருள்களுள் உண்மைப்பொருள் இதுவெனவுணர்தல் ஞானமாம்; அங்ஙனமுணர்ந்த அப்பொருளின் தன்மை இதுவெனத் தெளிந்து விடுதல் காட்சியாம்; அங்ஙனம் தெளிந்த இரண்டினையும் நீக்கமற விளங்கும்படி தன் மனத்திலே நிலைபெறுத்துதல் ஒழுக்கமா மென்றுனென்க.

ஐ, என்ப : அசைகள். (உசஎ)

---

2844. தீங்கதிர்ப்பாடு - இளஞ்சூரியனது கூறுபாடு. முக்குடையை யுடைய மூர்த்தி; சீவக. 139, அடிக். மோடு - பெருமை. பொருளகத்து - பொருளினுள்ளே.

2845. அடி, 1 : "பொருளல் லவற்றைப் பொருளென் றுணரும், மருளானு மாணுப் பிறப்பு", "எப்பொருள்......மெய்ப்பொருள் காண்ப தறிவு" (குறள், 351, 423). விள் - நீங்குதல். இக்கவியாற் கூறப் பட்டவை இரத்தினத்திரயங்கள்; சீவக. 1436, அடிக்.

2846. கூடிய மும்மையுஞ் சுடர்ந்த கொந்தழல்
நீடிய வினைமர நிரைத்துச் சுட்டிட
வீடெனப் படும்வினை விடுதல் பெற்றதங்
காடெழிற் றோளினா யநந்த நான்மையே.

(இ - ள்.) தோளினாய்! இங்ஙனங் கூடிய மூன்று தன்மையும் நின்றெரிந்த நெருப்பு மிகவளர்ந்த இருவினையாகிய மரத்தினை நிரைத்துச் சுட்டுப்போகட அவ்விருவினை தாம் நெடுங்காலம் பயின்ற உயிர்க் கிழவனைக் கைவிடுதல் வீடெனப்படும்; அங்குப்பெற்ற பயன் அநந்த சதுட்டயங்கள் காணென்றானென்க.

அவை : அநந்தஞானம், அநந்ததரிசனம், அநந்தவீரியம், அநந்த சுகம். (உ௪அ)

2847. கடையிலா வறிவொடு காட்சி வீரியம்
கிடையிலா வின்பமுங் கிளந்த வல்லவும்
உடையதங் குணங்களோ டோங்கி விண்டொழ
அடைதலான் மேலுல கறியப் பட்டதே.

இதனாலே வினை விடுத்தகாலத்துப் பெற்ற அநந்தசதுட்டயமுங் கூறிப் பின்னர் ஏனை நான்கும் கூறுகின்றார். கடையிலா - முடிவில்லாத. இதனை நான்கினோடும் கூட்டுக. கிடை - ஒப்பு.

(இ - ள்.) அறிவும் காட்சியும் வீரியமும் இன்பமுமெனக் கிளந் தனவும், அல்லனவும் தம்முடைய குணங்களாலே மிக்கு விண்ணி லுள்ளார் தொழும்படி வந்துசேருதலாலே வீட்டுலகென்பதொன்றுண்டு; அது யாவராலும் அறியப்பட்டதென்றானென்க.

அல்லவென்றது [1] ஏனை நான்கையும். (உ௪௯)

---

2846. மும்மையாவன : நற்காட்சி, நன்ஞானம், நல்லொழுக்கம் என்பன. சுடர்ந்த - எரிந்த. வினையாகிய மரத்தை. வினைவிடுதல் வீடெனப்படும்; விடுதல் - உயிர்க்கிழவனை நீங்குதல். அநந்த நான்மை - அநந்தசதுட்டயங்கள். அடி, 4 : "எல்லையி லின்ப முணர்வு வலிகாட்சி, புல்லும் வினைவென் றவர்க்கு" (அருங்கலச் செப்பு, 157); "அநந்த சதுட்டய மவையெய்த" (பஞ்சகல்யாண அகவல்)

2847. விண் தொழும்படி யடைதலால்.

(உரை) [1] ஏனை நான்காவன : நாமமின்மை, கோத்திரமின்மை, ஆயுவின்மை, அழியாவியல்பு என்பன.

## ௨௦. பிறவிகளறவுரை

2848. மாதவ னெனப்பெயர் வரையி னவ்வரை
ஏதமி லெயிறணி பவள வாய்த்தொடுத்
தாதியி லறவுரை யருவி வீழ்ந்தென
மாதுயர் மலங்கெட மன்ன னாடினன்.

(இ - ள்.) அழகிய வரைகளையுடைய பவளம்போலும் வாயிற் பிறந்த ஏதமில் அறவுரையாகிய அருவி தொடுத்து மாதவனெனப் பெயர் பெற்ற வரையினின்றும் வீழ்ந்ததாக, துயரைச் செய்யும் மலங்கெடும்படி **மன்னன் ஆடினனென்க.**

" **நுண்ணிய வரியொடு திரண்டு** " (சீவக. 1702) என்றார் முன்னும். வாய் மேகமாயிற்று. (௨௬௦)

2849. எல்லையி லறவுரை யினிய கேட்டபின்
தொல்லையெம் பிறவியுந் தொகுத்த பாவமும்
வல்லையே பணிமின மடிக ளென்றனன்
மல்லைவென் றகன்றுபொன் மலர்ந்த மார்பினான்.

மல் - மற்றொழில். பொன் - திரு.

(இ - ள்.) அங்ஙனமாடின மார்பினான் இனியவாகிய எல்லையில்லாத அறவுரையைக் கேட்டபின்னர், அடிகளே! எம்முடைய முற்பிறப்பையும், அப்பிறப்பில் யாம் தொகுத்த பாவத்தையும் கடுக அருளிச்செய்யுமென்றா னென்க.

கடுகத் துறத்தற்கு வல்லையென்றான். அம் : அசை. (௨௬௧)

2850. கதிர்விடு திருமணி யங்கைக் கொண்டதொத்
தெதிர்வது மிறந்தது மெய்தி நின்றதும்
அதிர்வறு தவவிளக் கெறிப்பக் கண்டவன்
பதரறு திருமொழி பணிக்கு மென்பவே.

---

2848. வரையின் - மலையினின்றும். அவரை - அழகிய கீற்றுக்களை யுடைய. அறவுரையாகிய அருவி, வரையினின்றும் தொடுத்து வீழ்ந் தென; வீழ்ந்தென - வீழ்ந்ததாக. மா - பெருமை. மலம் - குற்றம். மன்னன் - சீவகன். அருவியென்றதற்கேற்ப ஆடினான் என்றார்.

2849. இனியவாகிய அறவுரை. தொகுத்த - முற்பிறப்பில் சேர்த்து வைத்த. பணிமின் - எடுத்துக்கூறுங்கள். மார்பினான் - சீவகன்.

2850. கதிர் - ஒளி. அங்கை - உள்ளங்கையில். அதிர்வறு தவ விளக்கு எறித்தலால் எதிர்வதும் இறந்ததும் எய்திநின்றதும் கண்டவன் திருமொழி பணிக்கும்; அதிர்வு - நடுக்கம். எதிர்வு - எதிர்கால நிகழ்ச்சி. இறந்தது - நடந்தநிகழ்ச்சி. எய்திநின்றது - நிகழ்கின்ற நிகழ்ச்சி. திரு மொழி - உண்மையான வார்த்தை. பணிக்கும் - கூறுவான்.

**(இ - ள்.)** மணியை அங்கையிற் கொண்டால் ஆண்டுள்ளவற்றை அது விளக்குந்தன்மையையொத்து நடுக்கமற்ற தவவிளக்கு விளக்குதலாலே முக்காலத்தையுமுணர்ந்தவன் மெய்யான வார்த்தையைச் சொல்லுமென்க. (உருஉ)

(வேறு)

2851. முழுநீர் வளைமேய் தலின்முத் தொழுகிப்
பொழிநீர் நிலவின் னிருள்போழ்ந் தரிசிக்
கழுநீ ரொழுகக் கழுநீர் மலரும்
தழுநீ ரதுதா தகியென் றுளதே.

முழுநீர் - கடல்.

**(இ - ள்.)** கடலிற் சங்கு நாட்டைத்தழுவின நீரிடத்ததாய் வந்து ஊரிலே அரிசிக்கழுநீரிலே மேய்கையினலே அவை சொரிந்த முத்து ஒழுங்குபட்டு அணையாய்க் கழுநீரைப் போகவொட்டாமல் தடுத்தலின், அதனிடத்தே செங்கழுநீர் ஒழுக நின்று மலரும் தாதகியென்று ஒரு நாடு உளதென்றுனென்க.

இருளைப் போழ்ந்து பொழியும் நீர்மையையுடைத்தாகிய நிலவினையுடைய முத்தென்க. முத்தொழுகிக் கழுநீர் மலருமெனக் காரண காரியமாதலின், அப்பொருட்டாயிற்று. (உருரு)

2852. கயல்பாய்ந் துகளக் கடியன் னம்வெரீஇ
வியனீள் சுடர்வெண் மதிசேர் வதுபோல்
அயலே யலர்தா மரைசேர்ந் துறையும்
வயல்சூழ்ந் தனவூர் வளமார்ந் தனவே.

கயல் பாய்ந்து உகளுகையினலே மிக்க அன்னம் வெருவி விண்ணில் ஞாயிற்றை மதிசென்று சேரும் தன்மைபோல அயலேயலர்ந்த தாமரையைச் சேர்ந்துறையும் வயலென்க.

**(இ - ள்.)** அந்நாட்டில் வயல் சூழ்ந்தனவாகிய ஊர்கள் செல்வம் நிறைந்தனவென்றுனென்க. (உருச)

2853. அவணத் தவர்கூந் தலகிற் புகையைச்
சிவணிச் சிறுகால் கமுகம் பொழில்சேர்ந்
துவணுய்த் திடமஞ் செனநின் றுலவும்
பவணத் தொருபாங் கினதா லளிதோ.

---

2851. வளை - சங்கு. வளை அரிசிக்கழுநீரில் மேய்தலின் கழுநீர் மலரும். தழுநீரது - தழுவினநீரையுடைத்தாகிய.
2852. உகள - பிறழ்தலால். கடி - மிகுதி. சுடரை மதி சேர்வது போல்; சுடர் - சூரியன். அன்னம் சேர்ந்து உறையும். வளம் - செல்வம்.
2853. அவணத்தவர் - அங்கேயுள்ளவர்கள். சிவணி - ஒன்றுகப் பொருந்தி. சிறுகால் - தென்றற்காற்று. உவண் - அந்த நாட்டில். உய்த்திட - புகையைச்செலுத்த. மஞ்சு - வெண்மேகம். பவணம் - நாகலோகம்.

**(இ - ள்.)** தென்றற்காற்று, அந்நாட்டில் ஊர்களிலிருப்பார் கூந்தலிற் புகையை முதற்பொருந்திப் பின்னர்க் கமுகம் பொழிலைச் சேர்ந்து அதன் மணத்தையும் பொருந்தி அந்நாடெங்கும் அவற்றைச் செலுத்த அப்புகை வெண்மேகமென நின்றுலாவும்; ஆதலால், அந்நாடு அளிக்கத் தக்கதொரு நாடன்று; நாகலோகத்தின் ஒரு கூற்றின் தன்மையை உடையதாயிருக்குமென்றுனென்க.

அந்நாடு கேடின்மையின் அளிக்கவேண்டாதாயிற்று. அளித்தல் - காத்தல். (உருரு)

2854. மதியுஞ் சுடரும் வழிகா ணலுருப்
பொதியும் மகிலின் புகையுங் கொடியும்
நிதியின் கிழவன் னினிதா வுறையும்
பதிபொன் னகரின் படிகொண் டதுவே.

**(இ - ள்.)** அகிற்புகையும் கொடியும் திங்களையும் ஞாயிற்றையும் வழிகாணலுருதனவாம்படி மறைக்கும் பதி நிதியின்கிழவன் விடாமல் உறையும் பொன்னகரின் தன்மையைக் கொண்டதென்றுனென்க. (உருசு)

(வேறு)

2855. ஏம மாகிய துப்புர வெய்திய
பூமி மாதில கம்மெனும் பொன்கிளர்
நாம நன்னகர் வீதிக டாமெலாம்
காம வல்லி கிடந்தன போன்றவே.

காமவல்லியெல்லாம் கிடந்தனவென்றது காமவல்லியெல்லாம் கிடக்கப்பட்ட அமராவதியிற்றெருக்களை.

**(இ - ள்.)** நுகர்பொருளைத் தன்னிடத்தே கொண்ட பூமிமாதிலகமென்னும் நாமத்தையுடைய நன்னகரிற் பொன்கிளர் வீதிகள் தாம் அமராவதியில் தெருக்களை யொத்தனவென்றுனென்க. (உருஎ)

---

2854. வழியைக் காணலுருதவாறு. பொதியும் - மறைக்கும். புகையும் கொடியும் பொதியும் பதி, நிதியின் கிழவன் உறையும் பதி. படி - தன்மை.

2855. துப்புரவு - நுகரும் பொருள்கள். வீதிகள் காமவல்லி கிடந்தனவாகிய அமராவதியின் தெருக்களைப்போன்றன.

(வேறு)

2856. பைங்கழன் மன்னர் மன்னன் பவணமா தேவனென் பான், சங்கினுண் முத்த மொப்பாள் சயமதி பயந்த நம்பி, ஐங்கணைக் காம னன்று னசோதர னரச சீயம், தங்கிய கேள்வி யாற்குத் தையலார்ச் சேர்த்தி னரே.

(இ - ள்.) அந்நகரிலுறையும் மன்னர்மன்னன் யாரென்னின் பவணமாதேவனென்று பெயர் கூறப்படுவானொருவன்; அவன்தேவி யாரென்னின், முத்தமொப்பாளாகிய சயமதியென்பா ளொருத்தி; அவர் பெற்ற பிள்ளை யாரென்னின், காமனன்னுகிய அசோதரன்; அவன்றன் அரசசிங்கம்; அவனுக்குத் தையலாரைச் சேர்த்தினரென்றனென்க. (உருஅ)

2857. இளமுலை பொருது தேந்தா ரெழில்குழைந் தழிய வைகிக், கிளை நரம் பிசையுங் கூத்துங் கிளர்ந்தவை கனற்ற நாளும், வளைமயங் குருவ மென்றோள் வாய்நலம் பருகி மைந்தன், விளை மதுத் தேறன் மாந்தி வெற்றிப்போ ரநங்க னானன்.

(இ - ள்.) அம்மைந்தன் அத்தையலார் முலைகள் பொருதலினலே தார் குழைந்தழிய அவர்கள் வாய்த்த நலத்தைப்பருகி இசையுங்கூத்துந் தோற்றியவைகள் நாளும் காமத்தைக் கனற்ற வைகித்தேறலை மாந்தி மென்றோளினையுடைய அம்மகளிர்க்கு அநங்கனயினனென்றனென்க. (உருகூ)

2858. இலங்கரி பரந்த வாட்க ணிளையவர் புலவி நீங்கச், சிலம்பெனும் வண்டு பாடச் சீறடிப் போது புல்லி, அலங்கல்வாய்ச் சென்னி சேர்த்தி யரிமதர் மழைக்கண் பில்க, நலங்கவர்ந் துண்டு நண்ணர் நாமுறக் கழிக்கு மாதோ.

(இ - ள்.) அவன் அவ்விளையவர் புலவி நீங்கும்படி தன் சென்னியில் அலங்கலிடத்தே அவர் சீறடிப்போதை வண்டு பாடச் சேர்த்திப் பின்னர்

---

2856. பவணமாதேவனுடைய மனைவி சயமதி; அவர்கள் புதல்வன் அசோதரன். அரசசீயம் - இராச சிங்கம். கேள்வியாற்கு - அவ் வசோதரனுக்கு. சேர்த்தினர் - மணம் புரிவித்தார்.

2857. பொருது - பொருதலால். வைகி - தங்கி. கிளையென்னும் நரம்பின் இசை; சீவக. 841. இசையும் கூத்துமாகிய கிளர்ந்தவை காமத்தைக் கனற்ற; சீவக. 2597, ந. கிளர்ந்தவை - தோன்றியவை. மென்றோளினையுடைய மகளிரது வாய்த்த நலத்தை. மைந்தன் - அசோதரன்.

2858. இளையவர் - மகளிர். நீங்க - நீங்கும்படி. சென்னியில் அலங் கலிடத்தே சீறடிப்போதைச் சேர்த்தி. நலம் - இன்பம். நண்ணர் நாமுற - பகைவர் அச்சமுறும்படி. கழிக்கும் - காலம் போக்கும்.

அவரை உவகைக் கண்ணீர் பில்கப் புல்லி நலத்தை நுகர்ந்து பகைவர் அஞ்சக் காலம் போக்குமென்றுனென்க.

இங்ஙனம் காமம் நுகரினும் வீரத்தின் மிக்கமை தோன்ற, ' நாமுற ' என்றுர். (உ௫௰)

(வேறு)

2859. மங்கையர் தம்மொடு மடங்கன் மொய்ம்பினுன்
பங்கயப் பனித்தடஞ் சேரப் பார்ப்பனம்
செங்கயற் பேரின மிரியச் செவ்வனே
பொங்கிமேற் பறந்துவிண் புதைந்த தென்பவே.

(இ - ள்.) அம்மொய்ம்பினுன், மங்கையருடனே நீர் விளையாடுதற்குப் பங்கயத்தடத்தைச் சேர்ந்தாகை, ஆண்டுறைந்த பார்ப்பையுடைய அன்னத்திரள், அஞ்சிக் கயலிரியப் பொங்கி மேலே செவ்வனே பறக்கையினுலே விண் மறைந்ததென்றுனென்க. (உ௫௧)

(வேறு)

2860. வேய்ந்த வெண்டாமரைக் கோதை போல விசும்பிற் பறக்கின்ற வெள்ளை யன்னம், ஆய்ந்த முகிலாடைத் திங்கட் கண்ணி யாகாய மென்னு மரிவை சாயற், றேய்ந்ததன் காதலன் பற்ற வற்றுச் சொரிகின்ற மேகலைபோல் வீழ்ந்த வாளை, பாய்ந்து துகைப்பக் கிழிந்த கூழைப் பனித்தா மரைசூழ் பகற்கோயிலே.

வாளை துகைத்தலாலே கிழிந்த கூழையிலையையுடைய குளிர்ந்த தாமரை சூழ்ந்த நீராவி மண்டபம். பகற்கோயிலென்றுர் பகற்போதில் இருத்தல் பற்றி.

(இ - ள்.) கட்டின வெண்டாமரை மாலைபோல விசும்பிலே பறக்கின்ற வெள்ளையன்னம் ஆடையினையும் கண்ணியினையுமுடைய ஆகாய மென்னும் அரிவையது மேகலையை அவள் தன் சாயலைத் தோய்ந்த கணவன் ஊடல் தீர்ப்பான் பிடிப்ப அவையற்றுச் சொரிகின்றபோலக் கோயிற்கண்ணே வீழ்ந்தன வென்றுனென்க.

முத்தமேகலையென்றுணர்க. (உ௫௨)

---

2859. மொய்ம்பினுன் - அசோதரன். பங்கயத்தடம் - தாமரைத் தடாகம். பார்ப்பு அனம் - குஞ்சுகளையுடைய அன்னப்பறவைகள். செவ்வனே - நேரே. பறந்து - பறக்கையினுல். புதைந்தது - மறைந்தது.

2860. வேய்ந்த - கட்டின. முகிலாகிய ஆடையினையும், திங்களாகிய கண்ணியினையுமுடைய ஆகாயம். பற்ற - மேகலையைப் பிடிப்ப. வெள்ளை யன்னம் மேகலையற்றுச் சொரிகின்றபோல் கோயிலில் வீழ்ந்தன என்க. பகற்கோயில் : " பகற்கோயி லெய்தினுன் " (சூளா. சுயம். 134)

(வேறு)

2861. விரும்புபொற் றட்டிடை வெள்ளிக் கிண்ணமார்ந்
திருந்தன போன்றிள வன்னப் பார்ப்பினம்
பொருந்துபொற் ருமரை யொடுங்கிப் புக்கொளித்
திருந்தகண் டானிளங் கோக்க ணம்பியே.

(இ - ள்.) இளங்கோக்களுக்கெல்லாம் தலைவனுகிய அவன் பொற்றட்டிலே வெள்ளிக்கிண்ணம் இருந்தவைபோன்று பறத்தலாற்ருமல் தாமரையிலே புக்கு ஒடுங்கி ஒளித்திருந்த அன்னப்பார்ப்பினத்தைக் கண்டானென்ருனென்க.

பொருந்து - ஒளித்தற்குப் பொருந்தின. நம்பி : ஈண்டு இளமைப் பெயரன்று. (உகாரு)

2862. உரிமையுட் பட்டிருந் தொளிக்கின் ருர்களைப்
பெருமநீ கொணர்கெனப் பேசு காஞ்சுகி
ஒருமகற் கீந்தனன் கோயில் புக்கனன்
எரிமுயங் கிலங்குவேற் காளை யென்பவே.

(இ - ள்.) அவன் அங்ஙனங் கண்ட அன்னப்பார்ப்பை அவனுரிமையும் கண்டிருந்து, பெரும! ஒளிக்கின்ற பார்ப்புக்களைக் கொண்டுவாவென்று சண்டையிட்டு நின்ற இவ்வொருமகனுக்கு நீ பேசுவாயாகவென்று அவர்கள்கூற, அதுகேட்ட காளையும் அங்ஙனங் கூறி அவற்றுள் ஒன்றனைப் பிடிப்பித்து அவர்க்கு ஈந்தனுய்க் கோயிலிலே புக்கானென்ருனென்க.

உட்பட்டென்றது அக்காட்சிக்கு உட்பட்டென்றவாறு. எனவென்றதனை இரண்டிடத்துங் கூட்டுக. 'பெருமைநீர்' என்று பாடமோதுவாருமுளர். பல பார்ப்பைப் பிடிப்பித்தானென்ருற் பலகாற் சிறைப்படுதல் வேண்டுமாதலின் அவற்றுள் ஒன்றென்றே பொருள் கூறவேண்டிற்று. (உகாச)

2863. வடமலைப் பொன்னனுர் மகிழ்ந்து தாமரைத்
தடமுறை வீர்க்கிவை தடங்க ளல்லவே
வடமுலை யெனநடாய் வருடிப் பாலமு
தூடவூறீஇ யோம்பினுர் தேம்பெய் கோதையார்.

2861. அன்னப்பார்ப்பினம் - அன்னக் குஞ்சுகளின் கூட்டங்கள். பொன்போலும் தாமரையில் ஒடுங்கி. ஒளித்திருந்த அன்னப்பார்ப்பினத்தைக் கண்டான். இளங்கோக்களுக்கு நம்பி; நம்பி - தலைவன்; என்றது அசோதரனை.

2862. உரிமை - மனைவியர். ஒளிக்கின்ருர்களை - மறைகின்ற அன்னக் குஞ்சுகளை. காஞ்சுகியாகிய ஒரு மகற்குப் பேசு என. காளை - அசோதரன்.

2863. வடமலைப் பொன்னனுர் - ஹிமவானிடத்துள்ள பத்மை யென்னும் பொய்கையில் தோன்றி ஸ்ரீயை ஒப்பவர்; சீவக. 183, அடிக்.

(இ - ள்.) திருவையொப்பார், அவன்ஈந்ததற்கு மகிழ்ந்து பின்னர் அவர்கள்தாம் தாமரைத்தடத்தே உறையும் நுமக்கு ஈண்டுறைகின்ற முலைத்தடம் அத்தடங்களல்லவே; வடங்களுநறைகின்ற முலையல்லவோ வென நன்மொழிகளை நடத்திக் கையாலே தடவி எல்லாருஞ் சேர்ந்து பாலமிர்தத்தைக் கொடுத்துப் பாதுகாத்தாரென்றாளென்க.

உறைவீர்க்கென்றது ஒன்றனைக் கூறும் பன்மைக்கிளவி. இப்பார்ப்பு, கட்டுதல் கூட்டிலடைத்தல் செய்யும் பருவத்ததன்றென்பது தோன்ற முலையிலணைத்தென்றார்; அஃது, “இளவன்னப் பார்ப்பினம்” (சீவக. 2861) என்றதனானுமுணர்க. இதனுள் இப்பார்ப்பைக் கட்டிவைத்து வளர்த்தாரென்னாது முலைத்தடத்தே அணைத்துவைத்து வளர்த்தா ரென்றமையால், சீவகனும் கட்டுண்டானென்றற்குக் காரணமின்மை யறிக. (உசுரு)

(வேறு)

2864\. கண்டா னொருநாட் கதிர்மாமுடி மன்னர் மன்னன்
தண்டா மரைசூழ் தடத்திற்பிரித் தார்கள் யாரே
ஒண்டா ரிளங்கோவென் றுழையவர் கூற வல்லே
கொண்டிங்கு வம்மின் கொலைவேலவன் றன்னை யென்றான்.

(இ - ள்.) மன்னர்மன்னன் ஒருநாள் இவர்கள் முலைமேலணைத்து வளர்க்கின்ற தன்மையைக் கண்டான்; கண்டு இதனைத் தடத்தினின்றும் பிரித்தார் யார்தானென்றான்; அதுகேட்ட உழையர் அசோதரனென்று கூற, அதுகேட்டு அவன் அவனை இங்கே வல்லே கொண்டு வம்மி னென்று கூறினானென்றானென்க.

கொலைவேலவனென்றது இகழ்ச்சிக்குறிப்பு; அரசனைப்பிடியாமற் பார்ப்பைப்பிடித்தானென்றலின். பார்ப்பைக் கட்டுதல் கூட்டிலடைத்தல் செய்யாமையால், அரசற்குக் காட்சியானமையுணர்க. (உசுசு)

---

வடமலைப்பொன்: “வடமலைப் பிறந்த பொன்னும்” (பட்டினப். 187); “வடதிசை மாமலைச் சுடர்விடு பொன்னும்” (பெருங். 1. 58 : 33). உறைவீர்க்கென்றது அன்னப்பார்ப்புக்களை நோக்கி. இவை - இம்முலைத் தடம். நடாய் - நடத்தி. உடன் உறீஇ - எல்லாரும் சேர்ந்து.

2864\. மன்னர்மன்னன் - பவணமாதேவன். தடத்தினின்றும் பிரித் தார்கள் யார் என்று கேட்க. இளங்கோ - அசோதரன். உழையவர் - மந்திரிகள். கொலைவேலவன் - அசோதரன்.

2865. (க) படுகண் முழவும் பசும்பொன்மணி யாழு மேங்க
இடுகுந் நுசுப்பி னவராட விருந்த நம்பி
அடிகட் கடிக ளருளிற்றென் றிறைஞ்ச வல்லே
கடிவிம்மு தாரான் கழல்கையிற் றொழுது சேர்ந்தான்.

(வேறு)

2866. (உ) அணிசே ரிடக்கை விரலால் வலத்தோள்
மணிசேர் வளைவாய் வதின்வைத் துவலத்
தணிமோ திரஞ்சூழ் விரல்வாய் புதையாப்
பணியா முடியாற் பணிந்தா னிளையோன்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) முழவும் யாழுமேங்க நுசுப்பினவராட அது கண்டிருந்த நம்பி யென்க.

(இ - ள்.) அதுகேட்ட உழையர் நம்பியிடத்தே சென்று நுமக்கு நும்மரசனது அருள் இத்தன்மைத்தென்று கூறி இறைஞ்ச, அதுகேட்ட வன் வல்லே சென்று அரசனதடியைக் கையாற்றொழுது பின்னர் முடி யாற்பணிந்தான்; பணிந்தபின்னர் இடக்கைவிரலாலே வலத்தோளின் வளையை நன்றாகத்திருத்தி வலக்கையின் விரலாலே வாயைப் புதையாச் சேர்ந்தானென்றானென்க. (உகள - அ)

(வேறு)

2867. கிளைப்பிரி வருஞ்சிறை யிரண்டுங் கேட்டியேல்
விளக்கிய வித்தனை யிருமற் றீங்கெனத்
திளைக்குமா மணிக்குழை சுடரச் செப்பினான்
வளைக்கையார் கவரிகொண் டெறிய மன்னனே.

கிளைப்பிரிவு - தாயையும் தந்தையையும் பிரித்தல். சிறையாவது, தான் நினைத்தவாறொழுகுதலின்றிப் பிறர் நினைத்தவாறே ஒழுகும்படி காத்தல். இளம்பார்ப்புக் கிளையைப் பிரிந்திருந்து ஆற்றின அருமை நோக்கி, 'அருஞ்சிறை' என்றார்.

---

2865. ஏங்க - ஒலிக்க. இடுகும் நுசுப்பினவர்-தேய்கின்ற இடையை யுடையவர்கள். நம்பி - அசோதரன். உழையர் இறைஞ்ச. தாரானு டைய கழலை; தாரான் - பவணமாதேவன்.

2866. வளை - தோள்வளையை. வாய்வதின் வைத்து - மூட்டு வாயைப் பொருத்தி. புதையா - புதைத்து.

2867. விளக்கிய - விளைத்தற்கு. வித்தனை - வித்தை யொப்பாய். வளைக்கையார் - மகளிர். எறிய - வீச. மன்னன் - பவணமாதேவன்.

(இ - ள்.) மகளிர் கவரி வீசாநிற்ப மன்னன், இவ்விரண்டின் பயனை யும் கேட்டியேல், அவ்விரண்டின்பயனையும் மேல் விளைத்தற்கு ஒரு வித்தையொப்பாய்! இங்கேயிருவென்று குழைசுடரச் செப்பினானென்றா னென்க.

ஈண்டுப் பார்ப்பைப் பிரித்ததற்குத் தானும் பிரிந்தும் அதனைச் சிறை செய்ததற்குத் தானுஞ் சிறைப்பட்டும் அத்தீவினை நுகர்ந்தா னென்று முன்னர்ப் பொருளுரைத்ததே தேவர்க்குக் கருத்தென்றுணர்க; என்னை? நீ இப்பார்ப்பைக் கட்டிவைத்ததனையுங் கேளென்று அவனை நோக்கி ஈண்டு அரசன் கூறுமையின். (உசகூ)

(வேறு)

2868. அறம்பெரிய கூறின் னலங்கலணி வேலோய்
மறம்புரிகொ ணெஞ்சம்வழி யாப்புகுதந் தீண்டிச்
செறும்பெரிய தீவினைகள் சென்றுகடி தோடி
உறும்பெரிய துன்ப முயிர்க்கொலையும் வேண்டா.

(இ - ள்.) வேலோய்! பெரிய தீவினையின் தன்மையைக்கூறின், அவை மறத்தை விரும்பிய நெஞ்சுவழியாகப் புகுந்து திரண்டு தம்மைச் செய்த உயிரோடே கடிதோடிச் சென்று அதனைச் செறும்; செறும் பொழுது அது பெரிய துன்பமுறும்; ஆதலால், அத்தீவினைக்கு அடிய தாகிய உயிர்க்கொலையும் நுமக்கு வேண்டா; இஃது அறங்களுட் பெரிய அறமென்று கூறினானென்றானென்க. (உஎ௦)

2869. மெய்யுரைவி ளங்குமணி மேலுலக கோபுரங்கள்
ஐயமிலை நின்றபுகழ் வையகத்து மன்னும்
மையல்விளை மாநரக கோபுரங்கள் கண்டீர்
பொய்யுரையும் வேண்டா புறத்திடுமி னென்றான்.

(இ - ள்.) மெய்யுரையைக் கூறினால் அதற்கு இவ்வையகத்தே நிலை நின்ற புகழ் மன்னும்; மறுமையில் மேலுலகத்து மணிக்கோபுரங்களை யுடைய கோயில் மன்னும்; பொய்யுரையைக் கூறினால் அதற்கு இம்மை யிற்பழியும் மறுமையில் நரகத்துக்கோயில்களும் மன்னும்; இவ்விரண்டும் ஐயமில்லைக் கண்டீர் ஆதலால், அப்பொய்யுரையையும் கைவிடுமினென்று கூறினானென்றானென்க. (உஎக)

2868. மறம்புரிகொள் - பாவத்தை விரும்பிய. பெரிய துன்பம் உறும். இக்கவிமுதலியவற்றாற் கூறப்படும் உயிர்க்கொலை முதலியவை ஸப்த வியஸனத்தின் பாற்படும் என்பர்.

2869. மையல் - மயக்கம். பொய்யுரைத்தால் நரககோபுரங்கள் மன்னும். புறத்திடுமின் - கைவிடுங்கள்.

2870. முளரிமுக நாகமுளை யெயிறுழுது கீற
அளவிறுயர் செய்வரிவண் மன்னரத னுலும்
விளைவரிய மாதுயரம் வீழ்கதியு ளுய்க்கும்
களவுகட னுகக் கடிந்திடுதல் சூதே.

தாமரைப்பூப்போலும் புகரையுடைத்தாகிய முகத்தையுடைய யானையினது முளைத்த எயிறு.

(இ - ள்.) களவின் விளைவினைக் கேள்; இவ்வுலகிலே மன்னர் யானைக் கொம்பு குத்திப்பிளக்கக் கொல்வர்; பின்னர் நரகத்திலே அரிய துன்பங்களை அது தானே செலுத்தும்; அதனுலும் அக்களவை மேற்கொண்டு கடிதல் உபாயமெனக் கூறினுனென்றுனென்க. (உஎஉ)

2871. மடத்தகைய நல்லார் மனங்கரிய மாற்றுர்
பிடர்த்தலையொள் வாள்போற் பிறர்மனைகள் சேரின்
எடுப்பரிய துன்பத் திடைப்படுவ ரின்று
நடுக்குடைய காமம் விடுத்திடுத னன்றே.

(இ - ள்.) தம் மனைவியர் வருந்தப் பிறர்மனையாளைச் சேரின், தாங்கற்கு அரிய துன்பத்திடையிலே அழுந்துவர்; ஆதலால், நடுங்குதலுடைய காமத்தினைக் கைவிடுதல் நன்றென்று கூறினுனென்றுனென்க.

மாற்றுர் கழுத்தில் வைத்த வாள்போல் இன்றுத பிறர்மனையென்றது கொன்றே விடுமென்றற்கு. (உஎங)

2872. தெருளிற்பொருள் வானுலக மேறுதற்குச் செம்பொன்
இருளில்படு கால்புகழ்வித் தில்லையெனி னெல்லா
அருளுநக வையநக வைம்பொறியு நையப்
பொருளுநக வீட்டும்பொருள் யாதும்பொரு ளன்றே.

2870. யானையின் நெற்றியிலுள்ள புள்ளிக்குத் தாமரை உவமை. அடி. 1-2 : சீவக. 782, அடிக். வீழ்கதியுள் - நரகத்தில். கடனுக - மேற்கொண்டு. சூது - உபாயம்.

2871. மடத்தகைய நல்லார் மனம் கரிய - மடமைத்தன்மையையுடைய மனைவியர் மனம் வருந்தும்படி. வாள்போலும் துன்பத்தைத் தருகின்ற பிறர் மனைகளைச் சேரின். அடி. 2-3 : சீவக. 253; வி - பா. 11-ஆம் போர். 42. எடுப்பரிய - தாங்குதற்கரிய. நடுக்கு - நடுங்குதல். (பி - ம்.) 'கடுப்புடைக் காமம்'

2872. தெருளின் - ஒருவன் தெளிவானுயின். செம்பொனுலகம் ஏறுதற்குப் படுகால்; படுகால் - ஏணி; படிக்கால் எனவும் வழங்கும்;

ஒருவன் தெளிவானாயின், அருள்கள் பலவாதலின், 'எல்லாவருளும்' என்றார். வையம் : ஆகுபெயர். ஐம்பொறியும் பொருள்களை நுகரப் பெறாது வருந்த. பொருளுநக - அவ்வைம்பொறியும் நுகர்தற்குரிய பொருள்களும் எம்மை நுகர்கின்றிலனென்று நக.

(இ - ள்.) தெருளில், நக, நக, நைய, நக ஈட்டும் பொருள் சிறிதும் நற்பொருளன்று; அங்ஙனம் தீதாக ஈட்டுதலில்லையெனின், அப்பொருள் இம்மையிற் புகழை விளைக்கும் வித்தாம்; மறுமையிற் செம்பொனுலக மேறுதற்கு மயக்கமற்ற ஏணியாமென்று கூறினானென்றானென்க. (உஎச)

2873. பொய்யொடு மிடைந்தபொரு ளாசையுரு ளாயம்
மைபடும் வினைத்துகள் வழக்குநெறி மாயம்
செய்தபொருள் பெய்தகலன் செம்மைசுடு செந்தீக்
கைதவ நுனித்தகவ ருடலொழி கென்றான்.

(இ - ள்.) பொய்யொடு நெருங்கின பொருளாசையையுடைய பரத்தையர், மாயத்தைச் செய்த இன்பநிறையப் பெய்ததொரு கொள்கலம்; ஆதலின் அது பாவமுண்டாந் தீவினையாகிய துகளைப் புகுத்தற்கு வழியாயிருக்கும்; அதனை ஆடுதலையும், நடுநிலைமையைச் சுடுநெருப்பாகிய வஞ்சனைகூர்த்த கவறுடுதலையும் ஒழிகவென்று கூறினானென்றானென்க.

உருளாயம் - தம்மை நுகர்வார் மனங்கட்கேற்பப் புரளும் ஆயம். வழக்கு, "வளிவழக்கறுத்த வங்கம்" (புறநா. 368) என்றாற்போலக் கொள்க. பொருளென்றது, நாற்பொருட்கு முரித்தேனும் ஈண்டு இன்பத்தின்மேற்று. (உஎரு)

2874. காமமுடை யார்கறுவொ டார்வமுடை யாரும்
தாமமொடு சாந்துபுனை வார்பசியி னுண்பார்
ஏமமுடை யார்களிவ ரல்லரிவை யில்லா
வாமனடி யல்லபிற வந்தியன்மி னென்றான்.

---

"குறுந்தொடை நெடும்படிக்கால்" (பட்டினப். 142). புகழுக்கு வித்து. ஈட்டும் பொருள் - சேமிக்கும் பொருள். அடி. 3-4 : "வைத்த, பொருளு மவனை நகுமே யுலகத், தருளு மவனை நகும்" (நாலடி. 273)

2873. பொய்யொடு மிடைந்த பொருளாசை : "பொய்யோ டிடை மிடைந்த சொல்" (நாலடி. 80); "பொய்யொடு மிடைந்தவை தோன்றின்" (இறை. 18, உரை, மேற்.). உருள் ஆயம் - தம் இன்பத்தை நுகர்வார்க்கேற்ப மனம் புரளுகின்ற பரத்தையர். மை படும் வினைத்துகள் - பாவமுண்டாகும் தீவினையாகிய துகளை. செம்மை - நடுநிலைமை. கைதவம் - வஞ்சனை.

2874. கறுவு - கோபம். ஆர்வம் - ஆசை. தாமம் - மாலை. ஏமமுடையாரல்லார் - நம்மைப் பாதுகாப்பவரல்லர். வாமன் - அருகன். வந்தியன் மின் - வணங்காதீர்.

(இ - ள்.) காமத்தையுடையாரும், செற்றத்தோடு ஆசையையுடையாரும், தாமத்தையும் சாந்தையும் புனைவாரும், பசியாலே இல்லிலே சென்று பலிகொள்வாருமாகிய இவர்கள் நம்மை உய்யக்கொள்ளுமவரல்லர் ; ஆதலின், இத்தீக்குணங்களில்லாத வாமனடியல்லாத பிறவடிகளை வணங்கன்மினென்று கூறினானென்றானென்க. (உஎசு)

2875. பூவைகிளி தோகைபுண ரன்னமொடு பன்மா
யாவையவை தங்கிளையி னீங்கியழ வாங்கிக்
காவல்செய்து வைத்தவர்க டங்கிளையி னீங்கிப்
போவர்புகழ் நம்பியிது பொற்பிலது கண்டாய்.

(இ - ள்.) நம்பி! தன் கிளையோடே புணர்ந்த அன்னத்தோடே பூவை முதலியனவும் பல விலங்குகளும் ஒழிந்தனவுமாகிய அவை தம் கிளையினின்று நீங்கி வருந்தப் பிரித்து இம்மையிற் காவலிட்டு வைத்தவர்கள் மறுமையில் தம் கிளையினின்று நீங்கித் தாமும் பிறராற் காவல் செய்யப்பட்டுப் போவார் ; ஆதலின், நீ பிரித்துக் காவல்செய்த இதுவும் பொலிவில்லாதது காணென்று கூறினானென்றானென்க.

கட்டுதல் கூட்டிலடைத்தல் செய்தற்குரியவல்லா இளமைப்பருவத்தனவற்றையே ஈண்டுக்கூறலின், 'காவல்செய்து' என்றார். ஈண்டுக் காவல் செய்து வைத்தவரென்று கூறுதலின், முன்னம் கட்டுண்டானென்றற்குக் காரண மின்மையுணர்க. (உஎஎ)

(வேறு)

2876. அல்லித்தா ளற்ற போது மறுதநூ லதனைப் போலத்,
தொல்லைத்தம் முடம்பு நீங்கத் தீவினை தொடர்ந்து நீங்காப்,
புல்லிக்கொண் டுயிரைச் சூழ்ந்து புக்குழிப் புக்குப் பின்னின்,
றெல்லையி றுன்ப வெந்தீச் சுட்டெரித் திடுங்க ளன்றே.

(இ - ள்.) அல்லித்தண்டு அற்று வீழ்ந்தபோதும் நூலறுது தொடர்ந்து நிற்குந் தன்மைபோலத் தம்முடம்பு உயிரை நீங்கிக்கிடக்க எல்லையில்லாத துன்பத்தையுடைய தம் தொல்லைத் தீவினையாகிய வெந்தீ அவ்வுயிரை நீங்காது தொடர்ந்துசென்று சூழ்ந்து புல்லிக்கொண்டு

2875. பூவை - நாகணவாய்ப்புள். தோகை - மயில். பன்மா - பல விலங்குகள். தம் கிளையின் - தம் சுற்றத்தினின்றும். வாங்கி - அவற்றைப் பிரித்து. நம்பி - அசோதரன் ; விளி.

2876. தாள் - தண்டு. நூல் அறுததனைப்போல. உடம்பிற்கு அல்லித்தண்டும், தீவினைக்கு அல்லி நூலும் உவமைகள். புல்லிக் கொண்டு - உயிரைத் தழுவிக்கொண்டு. உயிரைச்சுட்டெரித்திடும். எரித்திடுங்கள் ; கள் : அசை.

அவ்வுயிர் போய்ப் புக்கதொரு மெய்யிலே தானும் புக்குப் பின்னே நின்று அதனை எரித்துச்சுட்டிடுமென்று கூறினனென்றனென்க. (உஎஅ)

2877. அறவிய மனத்த ராகி யாருயிர்க் கருளைச் செய்யிற்
பறவையு நிழலும் போலப் பழவினை யுயிரோ டாடி
மறவியொன் றானு மின்றி மனத்ததே சுரக்கும் பால
கறவையிற் கறக்குந் தம்மாற் காமுறப் பட்ட வெல்லாம்.

(இ - ள்.) அறத்தையுடைய மனத்தராய்ப் பல்லுயிர்க்கும் அருளைச் செய்வாராயின், அந்நல்வினை பறவையும் நிழலும் விடாது திரியுமாறு போல அவ்வுயிரை விடாமற்றிரிந்து சிறிதும் மறப்பின்றித் தம்மாற் காதலிக்கப்பட்டன எல்லாவற்றையும் சுரபியைப்போலக் கொடுக்குமென்று கூறினனென்றனென்க.

மனத்தில் நினைத்ததே கொடுக்கும் பாலவாகிய கறவை. (உஎகூ)

2878. நெடுமணி யூபத் திட்ட தவழ்நடை யாமை நீணீர்த்,
தொடுமணிக் குவளைப் பட்டந் துணையொடு நினைப்ப தேபோல்,
கடுமணிக் கயற்க ணல்லார் காமமும் பொருளுஞ் சிந்தித்,
தடுமணி யாவி நீப்பா ரறிவினுற் சிறிய நீரார்.

மணி - அழகு. மணிக்குவளை : உவமத்தொகை. கடிய கண். மணிக்கயல் - அழகிய கயல். மணியடுமாவி நீப்பாரென்றது, வீடுபெறுதற்குரிய மணியுயிரைப் பாழே போக்குவரென்றவாறு.

(இ - ள்.) அறிவில்லாதார், யாகத்திற்கு நட்ட தறியிலே கட்டின யாமை தான் கிடக்கும் பொய்கையையும் துணையையும் நினைக்குமாறு போல, நல்வினை செய்யாதிருந்து காமத்தையும் பொருளையும் நினைத்து ஆவிநீப்பாரென்று கூறினனென்றனென்க.

"அழலெழு தித்திய மடுத்த யாமை, நிழலுடை நெடுங்கயம் புகல் வேட் டாஅங்கு" (361) என்றார் அகத்திலும். (உஅ0)

---

2877. அறவிய மனத்தராகி - தருமத்தையுடைய மனத்தினராய்; சீவக. 1125, அடிக். பழவினை - நல்வினை. மறவி ஒன்றானு மின்றி - மறத்தல் ஒரு சிறிது மில்லாமல். பாலவாகிய கறவையின்; கறவையின் - சுரபியைப் போல.

2878. யூபம் - யாகத்திற்கு நட்ட தூண். குவளையையுடைய பட்டம்; பொய்கை. பட்டத்தையும் துணையையும் நினைப்பதே போல். நல்லாரது காமத்தையும் பொருளையும் சிந்தித்து.

2879. வீறழி வினைசெய் காலன் வைரவாள் வலையிற் பட்டாற், சாறழி குவளை மாலை யவரையுந் தனமு நீக்கி, ஆறிழி வரையிற் றோன்று மறநனி நினைப்பர் செம்பொன், ஏறெழி னெறியி னேறி யிருவிசும் பாளு நீரார்.

வீறழிந்த வினையாவது கொலைத்தொழில். பலகாலும் வெட்டினுற் கேடின்றென்றற்கு வைரவாளென்றார். வாள்போல மாறுமற்கொல்லும் வலையிலகப்பட்டாலென்றது, பிறந்தாலென்றவாறு. சாறழிதனம் - விழாக்கொண்டாடுதல்மிக்க பொருள். ஆறிழிகின்ற வரையென்றார், பயன்படுதலும் நிலைகுலையாமையும் பற்றி. செம்பொனீராரென்றது, சுவர்க்கத்தே செல்லும் பொன்னுகிய உயிரையுடையாரை. நெறி - தவம்.

(இ - ள்.) ஏழிலேறுபோலே அரிதென இகழாது தவத்தாலே விசும்பிலே ஏறி அதனையாளுஞ் செம்பொனீரார், காலன் வலையிலகப்பட்டால், மகளிரையும் பொருளையும் நீக்கி, மலைபோல் தோன்றும் அறத்தைச் செய்ய நினைப்பரென்று கூறினுனென்றுனென்க. (உஅக)

2880. துன்னிமற் றறத்தைக் கேட்டே துகினெருப் புற்ற தேபோல், மின்னுத்தார் மார்பன் மெய்வெந் தாலியி னுருகிப் பெண்பால், அன்னப்பார்ப் பன்று கொண்ட தடத்திடை விடுவித் திட்டான், பின்னைத்தன் கிளைகள் கூட்டம் பெருந்தகை வித்தி னுனே.

(இ - ள்.) மின்னுப்போலுந் தாரையுடைய மார்பன், அங்ஙனம் அறத்தைத் துன்னிக்கேட்டு அஞ்சி ஆலிபோலே நெஞ்சுருகி மெய்வெந்து பின்னர் உடுத்த துகிலிலே நெருப்புற்றதனை விரைந்து நீக்குமாறுபோல விரைந்து அன்னப்பார்ப்பைப் பெண்பாலிடத்தினின்றும் விடுவித்து அன்று பிடித்த தடத்தின் நீரிடத்தே போகவிட்டான்; அங்ஙனஞ் செய்தலாலே, அப்பெருந்தகை முன்னர்க் கிளைப்பிரிவை வித்தியதே யன்றிப் பின்னர்க் கிளைகளிடத்துக் கூட்டத்தையும் வித்தினுனென்று னென்க.

இக்காரணத்தாலே விசயையை நீங்கிச் சுநந்தையிடத்தே வளர்ந்தா னென்றும், பின்னர் அவளைச்சேர்ந்தானென்றும் முன்னர்க்கூறினூர். (உஅஉ)

2879. வீறு - பெருமை. காலனுடைய வயிரவாளாகிய வலையிற் பட்டால். சாறு - விழா. குவளைமாலையையுடைய மகளிரையும் தனத்தையும் நீக்கி. வரையைப்போற்றோன்றும் அறத்தை நினைப்பர். நெறியால் விசும்பிலேறி ஆளும் செம்பொனீரார்.

2880. துகிலில் நெருப்புற்றதேபோல். மார்பன் - அசோதரன். ஆலியின் - ஆலங்கட்டியைப்போல். அன்னப்பார்ப்பைப் பெண்பாலி னின்றும் விடுவித்து. கிளைகள் - சுற்றத்தினர். பெருந்தகை - அசோ தரன்.

2881. மெய்ப்படு முதுபுண் டீர்ப்பான் மேவிய முயற்சி போல, ஒப்புடைக் காமந் தன்னை யுவர்ப்பினே டொழித்துப் பாவம், இப்படித் திதுவென் றஞ்சிப் பிறவிநோய் வெருவி னானே, மைப் படு மழைக்க ணல்லார் வாய்க்கொண்ட வமுத மொப்பான்.

(இ - ள்.) மகளிர் வாய்க்கொண்ட அமுதம்போல அவர் நினைத்த தன்மையனாயிருந்தவன், அறங்கேட்டபின்னர் உடம்பிலுண்டாகிய [1] ஒடுவைத் தீர்த்தற்குப்பொருந்திய முயற்சிபோலத் தன் இளமைக்கு ஒப்புடைய காமத்தை வெறுப்பினாலொழித்துப் பாவத்தையும் இஃது இப்படிப் பெரியதொரு தன்மையையுடைத்தென்று அஞ்சி இவற்றை யெல்லாமுடைய பிறவி நோயை வெருவினானென்றானென்க. (உஅந)

2882. ஆளியாற் பாயப் பட்ட வடுகளி யானை போல, வாளி விற் றடக்கை மைந்தன் வாய்விட்டுப் புலம்பிக் காம, நாளினு நஞ்சு துய்த்தே னச்சறை யாக நன்பொற், றோளியர்த் துறந்து தூய்தாத் தவஞ்செய்வ லடிக ளென்றான்.

(இ - ள்.) அங்ஙனம் வெருவின மைந்தன், நஞ்சிற்கு ஓரிருப்பிட மாகக் காமமாகிய நஞ்சினை நாடோறும் நுகர்ந்தேனென்று யானை போலப் புலம்பி மகளிரைத்துறந்து தவத்தைத் தூய்தாகச் செய்வேன்; அடிகளே யென்று கூறினானென்றானென்க. (உஅச)

2883. சிறுவன்வாய் மொழியைக் கேட்டே தேர்மன்னன் றானுஞ் சொன்னான், உறுகளிற் றுழுவ மற்றுன் னொளிமுடித் தாய மெய்தி, அறைகடல் வேலி காத்துன் னலங்கல்வேற் றாய மெல்லாம், பெறுதகு புதல்வற் கீந்து பின்னைநீ துறத்தி யென்றான்.

(இ - ள்.) அங்ஙனம் கூறிய அசோதரன்மொழியைக் கேட்டு அரசனும் சொன்னான்; அஃதியாதெனின், உழுவனே! தாயத்தையெய்திக் காத்துப் புதல்வனுக்கீந்து பின்னை நீ துறத்தியென்று கூறினானென்றானென்க. (உஅரு)

2881. மெய்ப்படு - உடம்பில் தோன்றிய. உவர்ப்பினேடு-வெறுப்பினால். இது இப்படித்தென்று அஞ்சி; இப்படித்து - இத்தன்மையை யுடைத்து. பிறவி நோய்க்கு வெருவினான். நல்லார் - மகளிர்.

(உரை) [1] ஒடு - புண் கட்டி.

2882. ஆளி - சிங்கம். வாளி - அம்பு. நச்சு அறையாக, காமமாகிய நஞ்சை நாளினும் துய்த்தேன்; நச்சு அறை - நஞ்சிற்கு இருப்பிடம். நாளினும் - நாள்தோறும். தோளியர் - மகளிரை.

2883. மன்னன் - பவணமாதேவன். தாயம் - அரசவுரிமை. அறை கடல் - ஒலிக்கின்ற கடல். பெறுதகு - பெறத்தக்க.

2884. கொலைச்சிறை யுய்ந்து போகு மொருவனைக் குறுக வோடி, அலைத்தனர் கொண்டு பற்றி யருஞ்சிறை யழுத்து கின்றார், தொலைப்பருஞ் சுற்றத் தாரோ பகைவரோ வடிக ளென்ன விலைப்பெரு மணியை முந்நீர் நடுக்கடல் வீழ்த்த தொத்தான்.

தொல்லை : விகாரம்.

(இ - ள்.) அது கேட்ட அசோதரன், அடிகளே! சிறையினின்றும் தப்பிப்போமொருவனைத் தொடர்ந்து சென்று பற்றிக்கொண்டு அலைத் தனராய்ச் சிறையிலே அழுத்துகின்றார் சுற்றத்தாரோ? பகைவரோ? என்றுகூற, அதுகேட்ட அரசன் பெருவிலை மணியை மூன்று தன்மையை யுடைய நடுக்கடலிலே வீழ்த்த தன்மையையொத்தானென்றனென்க.

முந்நீர்க்கு, "முந்நீர்ப் பிறந்த" (சீவக. 5) என்ற கவியிற் கூறினும். (உஅசு)

2885. காதல மல்ல மேனாட் கழிந்தநம் பிறவி தம்முள்
ஏதிலம் யாங்க ளெல்லா மினிக்கொளு முடம்பி னனும்
ஆதலாற் சுற்ற மில்லை யதுபட்ட வாறென் றம்பூந்
தாதலர் மார்ப னற்புத் தளையறப் பரிந்திட் டானே.

(இ - ள்.) அத்தன்மையனாகிய அரசன், முன்பு போன நம் பிறவி களில் யாங்களெல்லாம் இவற்குச் சுற்றமல்லேம்; இனிப் பிறக்கும் பிறவிக்கண்ணும் யாங்களெல்லாம் இவற்குச் சுற்றமாகேம்; ஆதலால், ஈண்டுச் சுற்றமென்பதொன்றில்லை; இவற்குப் பட்டவாறும் அதுவென்று கருதி அன்பாகிய தளை போம்படி அறுத்தானென்றனென்க.

தாய் முதலியோரையுங்கூட்டி, 'யாங்களெல்லாம்' என்றான். 'அது' என்றது, தான் கருதிய கருத்தினை. (உஅஎ)

2884. சிறை - சிறையினின்றும். குறுக ஓடி - தொடர்ந்து சென்று. பற்றிக்கொண்டு அலைத்தனராய். தொலைப்பரு - நீக்குதற்கரிய எனலு மாம். அடிகள் : விளி. என்ன - என்று அசோதரன் சொல்ல. பெரு விலையையுடைய மணியை. முந்நீராகிய நடுக்கடலில். ஒத்தவன் பவணமாதேவன். அடி, 4 : சீவக. 3109; "ஓங்கிய நன்மணி யுறுகடல் வீழ்த்தோர்" (சிலப். 30 : 30); "மாமணி, ஓங்குதிரைப் பெருங்கடல் வீழ்த்தோர்" (மணி. 2 : 72-3)

2885. காதலம் - சுற்றம். ஏதிலம் - சுற்றமாகேம். அடி, 1 - 2 : சீவக. 270. பட்டவாறு - தோன்றியவிதம். மார்பன் - பவணமாதேவன். அன்பாகிய தளை அறும்படி.

2886. நற்பொறி குயிற்றி வல்லான் செய்ததோர் நன்பொற் பாவை, பொற்பொறி கழல வெல்லாப் பொறிகளுங் கழல்வ தேபோற், சொற்பொறி சோர வெல்லாப் பொறிகளுஞ் சோர்ந்து நம்பன், இற்பொறி யின்ப நீக்கி யிராயிரர் சூழச் சென்றான்.

**(இ - ள்.)** நடத்துதற்குரித்தாகிய நல்ல எந்திரத்தை உள்ளே வகுத்து வல்லவன் செய்த பாவை அந்நற்பொறி குலைய எல்லாப் பொறியும் குலையுந் தன்மைபோலே அங்ஙனம் தளைபரிந்த அரசனது சொல்லாகிய எந்திரமொன்று கழலுதலாலே, நம்பன் தன்னுடைய ஐம்பொறிகள் புலன்களிலே செல்லும் வேட்கையும்போக இல்லின்கண் நல்வினையால் நுகருமின்பத்தையும் நீக்கி இரண்டாயிர அரசர்கள் சூழ்ந்து செல்லத் துறவிலே சென்றானென்றானென்க.

சோர்ந்து - சோர. (உஅஅ)

2887. தணக்கிறப் பறித்த போதுந் தானளை விடுத்தல் செல்லா, நிணப்புடை யுடும்ப னுரை யாதினு னீக்க லாகும், மணப்புடை மாலை மார்ப னொருசொலே யேது வாகக், கணைக்கவி னழித்த கண்ணார்த் துறந்துபோய்க் கடவு ளானான்.

**(இ - ள்.)** வாலை இறப்பிடித்துப் பறித்தகாலத்தும் தான் அளையைக் கைவிடாத உடும்பையொப்பாரை யாதொருகாரணத்தாலும் இல் வாழ்க்கையினின்றும் போக்கலாகாது; இங்ஙனம் அரிதாயிருக்கவும், அசோதரன் முற்பிறப்பிலும் தவஞ்செய்து வருதலின், தந்தை கூறிய ஒரு சொல்லே துறவிற்குக் காரணமாகக் கருதி மகளிரைத் துறந்து போய்க் கடவுளாயினானென்றானென்க.

நிணத்தைப் புடையிலேயுடைய. மணத்தைக் கூடுதலையுடைய மாலை. ஒரு சொல்லென்றது, "விளக்கிய வித்தகனாய்" (சீவக. 2867) என்றதனை. (உஅகூ)

2886. பொறி - எந்திரம். பவணமாதேவனுடைய சொல்லாகிய பொறி சோர. எல்லாப்பொறிகளும் - ஐம்பொறிகளும். நம்பன் - அசோதரன். இல்பொறி இன்பம் - இல்வாழ்க்கையிடத்து நல்வினையால் நுகரும் இன்பத்தை ; பொறி - நல்வினை.

2887. தணக்கு - வால். அளைவிடுத்தல்செல்லா - வங்கினைக் கை விடாத. நிணம் - தசை. உடும்பனார் - உடும்பையொப்பவர். தணக் கிற......உடும்பனார் : "வங்கினைப் பற்றிப் போதா வல்லுடும் பென்ன நீங்கான்". (பெரிய. கண்ணப்ப. 116). மணம் - வாசனை. மார்பன் - அசோதரன். ஒரு சொலே - பவணமாதேவன் கூறிய ஒருசொல்லே. கணை - அம்பு. கண்ணாரைத் துறந்து.

2888. தூமமார்ந் தணங்கு நாறுஞ் சுரும்புசூழ் தாரி னானும்
தாமமா ரொலிய லைம்பாற் சயமதித் திருவு மார்ந்த
காமமா சுண்ட காதற் கதிர்வளைத் தோளி னாரும்
நாமநாற் கதியு மஞ்சி நற்றவத் துச்சி கொண்டார்.

அணங்கு - தெய்வம். தாரினான் - பவணமாதேவன். சயமதியாகிய திரு : அவன்றேவி. காமமாகிய மாசிலே தழும்பிய தோளினார் - அசோதரன் தேவிமார்.

(இ - ள்.) அவன் கடவுளான பின்னர்த் தாரினானும் சயமதியும் தோளினாரும் நாற்கதியிலும் சேறற்கு அஞ்சி நற்றவத்தின் முடிவைக் கைக்கொண்டாரென்றானென்க. (உகூ௦)

(வேறு)

2889. ஆசார நாணத் தவஞ்செய்தலர்க் கற்ப கத்தார்ச்
சாசார னென்னுந் தகைசாலொளித் தேவர் கோவாய்
மாசார மாய மணிவானுல காண்டு வந்தாய்
தூசார்ந்த வல்குற் றுளும்புந்நலத் தாரொ டென்றான்.

சாசாரன் - [1]ஸஹஸ்ராரன். சாரம் - ஸாரம். துளும்பும் - ஒழுகும்.

(இ - ள்.) அங்ஙனம் கடவுளாகிய நீ தவத்திற்குரிய ஒழுக்கநாணத் தவஞ்செய்து அதனாலே கற்பகத்தாரையுடைய சாசாரனென்னும் இந்திரனாகி ஆண்டு நலத்தாரொடு வந்தாயென்றானென்க.

வந்தாயென்றது அவதரித்தலை. தேவருலகின்கண் நுகருமின்பமும் யானுகரப் பெற்றிலேனென்னும் அவாவற்றாலன்றி ஈண்டு வீடுபெறுத லின்றென்பது உணர்த்தற்கு இந்திரனாய் வந்தாயென்றான். எனவே எல்லா அவாவுமற்றது வீடாயிற்று. முற்பிறப்பில் தேவியரானவரே இப் பிறப்பிலும் தேவியராக வந்தாரென்று ஈண்டுச் சாரணர் கூறுதலின், முன்னர்க் கனவில் 'எண் முத்தணிமாலை' (சீவக. 223) தூங்கக் கண்டாளென்றுணர்க. (உகூக)

2888. தூமமார்ந்து - அகிற்புகை ஊட்டப்பெற்று. அணங்கு நாறும் - தெய்வத்தன்மை கமழ்கின்ற. தாமம் ஆர் ஒலியல் - ஒளி நிறைந்த மாலையைச் சூடிய. தோளினார் - அசோதரனுடைய மனைவியர். நாமம் - அச்சம்.

2889. ஆசாரம் - ஒழுக்கம். சாசாரன் என்னும் தேவர்கோவாய் : "இந்தச் சாசாரனானால்" (மேரு. நால்வரும். 40); "சாசார மென்னு மிந்திர வுலக மெய்தி" (சூளா. மந்திர. 116). உலகு - ஸஹஸ்ரார லோகத்தை. நலத்தார் - மனைவியர்.

(உரை) [1] ஸஹஸ்ராரமென்னும் உலகமென்பது கற்பலோகம் பதி னாறனுள் பன்னிரண்டாவதென்பர்.

2890. மின்னார் சிலம்பிற் சிலம்புங்குர லன்ன மேனாள்
மன்னா பிரித்தாய் பிரிந்தாய்சிறை வைத்த தனாற்
பொன்னார மார்ப சிறைப்பட்டனை போலு மென்றான்
இன்னாப் பிறவிப் பிணிக்கின்மருந் தாய சொல்லான்.

சிலம்பு போல ஒலிக்கும்.

(இ - ள்.) மருந்தாய சொல்லான், மன்னா! முற்பிறப்பிலே அன்னப் பார்ப்பைக் கிளையினின்றும் பிரித்தாய்; அத்தீவினையாலே நீயும் இப் பிறப்பிற் கிளையினின்றும் பிரிந்தாய்; பொன்னார மார்பனே! முன் அதனைக் காவல் செய்துவைத்த தீவினையாலே நீயும் கண்டுச் சிறைப் பட்டாய்போற் பிறர்க்குத் தோன்றினாயென்றானென்க.

பிறரிடத்து வளர்ந்தமை குறிப்பானுணரக் கூறினாராதலிற் சுநந்தையைப் பிறரென்று கூற்றாற் கூறாராயினார். போலுமென்பது, "வேறுபட வந்த வுவமத் தோற்றம்" (தொல். உவம. 32) என்னுஞ் சூத்திரத்து அடங்கும்; ஒப்பில்போலியன்று; இதனைத் தற்குறிப்பேற்றமென்ப. சீவகற்குச் சிறைப்பட்ட தன்மையின்மை, "விலங்கிவில் லுமிழும் முறுன்" (சீவக. 1167) என்னும் கவியிற் கூறினார். கண்டுச் சாரணர், சிறைவைத்ததனாற்***சிறைப்பட்டனைபோலும்' என்று கூறிய சிறையென்னுஞ் சொல்லும், முன்னர்க் கூறிப்போந்த கட்டென்னுஞ் சொல்லும் பரியாயச் சொல்லன்றி வேறுவேறு பொருள்தருஞ் சொற்களாம்; என்னை? இத் தமிழ்ப்பாடையில் உலகவழக்காகிய இயற்சொற்களில் ஒரு வினையை உணர்த்துதற்கு ஒரு சொல் வழங்குதலன்றி இரு சொல் வழங்காமையின். சிறையென்பது தடுத்துக் காத்தலையுணர்த்தும்; முன்னர், "அருஞ்சிறை" (சீவக. 2867) என்றதற்குப் பின்னர், "காவல் செய்து வைத்தவர்கள்" (சீவக. 2875) என்றமையால். அன்றியும், "சிறைகாக்குங் காப்பெவன் செய்யும்" (குறள், 57), "சிறைபனி யுடைந்த சேயரி மழைக்கண்" (குறுந். 86), "கொலைச்சிறை யுய்ந்துபோகு மொருவனை" (சீவக. 2884) என்றாற்போல்வன பிறவற்றானும், சிறைக்கால், நீர்ச்சிறையென்னும் வழக்கானுமுணர்க. இஃது ஆகுபெயராய்ச் சிறைவைத்தானென்றாற் சிறைக்கோட்டத்தை யுணர்த்துமாறுமுணர்க. இதற்குக் [1] கோலுதல், அகப்படுத்தல், தகைத்தலென்றாற்

---

2890. மின்னார் சிலம்பிற் சிலம்பும் குரல் அன்னம் - மகளிரது சிலம்புபோல் ஒலிக்கும் ஒலியையுடைய அன்னத்தை; சூளா. நகர. 11; கம்ப. நகர. 65; கையடைப். 22; பம்பை. 15; அரங்கத்தந். 92. மன்னா என்றது சீவகனை; விளி. பிரித்தாயாதலாற் பிரிந்தாய். சிறை வைத்ததனாற் சிறைப்பட்டனைபோலும். சொல்லான்: முனிவன்; எழுவாய்.

(உரை) [1] (பி - ம்.) 'கொல்லுதல்'

போல ஆசிரியன் முழுவதூஉந்திரித்த திரிசொற்கள் பரியாயச்சொற்களாம்; இதற்குச் சிக்கலென்பது திசைச்சொல். இனிக் கட்டினானென்னுஞ்சொல், உண்டான், வந்தான், போனானென்பனபோலப் புடைபெயர்ச்சித் தொழிலுணர்த்துஞ் சொற்கு வேறொரு சொல்லின்றி நிற்கும்; இதற்கு வீக்கினான், பிணித்தான், யாத்தானென்றாற் போல ஆசிரியன் முழுவதூஉந் திரித்துக்கொண்டவினைத்திரி சொற்கள் பரியாயச்சொற்களாம். இது பசுவைமுலையைக்கட்டினான், பாம்பை வாயைக்கட்டினானென்றாற் போலப் புடைபெயர்ச்சித்தொழில் புலப்படாமலும் நிற்கும்; இவ்விரண்டு சொல்லும் வேறு வேறு பொருள் தருதலின், ஒன்றற்கொன்று பரியாயமாகாமையிற் சாரணர் கூறிய சிறையென்னுஞ் சொல்லிடத்துக் கட்டென்னுஞ்சொல்லின் பொருள் பிறத்தலின்மையின், முன்னர்க் கட்டென்று கூறியது ஈண்டைக்குப் பொருந்தாதாயிற்று. ஈண்டு இவர் கூறிய பாவம் காரணமும், ஆண்டுச் சிறைப்பட்டது காரியமுமாகவே கோடல் வேண்டலிற் சிறைப்பட்டானென்றேயாண்டும் பொருள் கூறுவதன்றிக் கட்டுண்டானென்று பொருள் கூறலாகாமை யுணர்க. (உ௯௨)

(வேறு)

2891. மஞ்சிவர் மணிவரை யனைய மாதவன்
வஞ்சமி லறவுரை பொதிந்த வாய்மொழி
அஞ்சின னிருந்துழி யம்பு வீழ்ந்தென
நஞ்சுமிழ் வேலினா னடுங்க வீழ்ந்ததே.

பயன்தருதலின், மஞ்சு கூறினார்.

(இ - ள்.) சலிப்பற்ற மாதவன் முற்கூறிய அறவுரையாலே, வேலினான், அரசாட்சியை அஞ்சியிருந்த அளவிலே, உமிழும் நஞ்சைப் பொதிந்த வாய்மொழி அவன் நடுங்கும்படி வீழ்ந்ததென்க.

நஞ்சைப்பொதிந்த வாய்மொழியென்றது, தீவினையாற் சிறைப்பட்ட தன்மை கூறியதனை. அஃது அம்புவீழ்ந்த விடத்தினின்றும் போதற்குப் பிறர் நடுங்குமாறுபோல அரசாட்சியைக் கைவிட்டுப்போதற்கு நடுங்கும்படி வீழ்ந்ததென்க. (உ௯௩)

2892. வாரணி மணித்துடி மருட்டு நுண்ணிடைக்
காரணி மயிலனார் சூழக் காவலன்
ஏரணி மணிமுடி யிறைஞ்சி யேத்தினான்
சீரணி மாதவர் செழும்பொற் பாதமே.

2891. வேலினான், அம்புவீழ்ந்தென நடுங்கும்படி மாதவன் வாய்மொழி வீழ்ந்தது. அடி, 2-4 : சீவக. 3016.

2892. துடியை மருட்டுகின்ற நுண்ணிடை; துடி - உடுக்கை. கார் அணி; மயிலுக்கு அடை. காவலன் : சீவகன். முடியாலிறைஞ்சி.

காரணி - காராலுண்டான அழகு.

(இ - ள்.) அதுகேட்ட அளவிலே, காவலன், தேவியர் சூழ வணங்கி நிற்ப மாதவர்பாதத்தை முடியாலேயிறைஞ்சி ஏத்தினனென்க. (உகூச)

2893. நலத்திரு மடமக ணயந்த தாமரை
நிலத்திருந் திருசுடர் நிமிர்ந்து செல்வபோல்
உலப்பருந் தவத்தின லோங்கு சாரணர்
செலத்திரு விசும்பொளி சிறந்த தென்பவே.

திரு : தாமரைக்கு அடை.

(இ - ள்.) தாமரைப்பூவையுடையவிடத்தே சாரணரிருவருமிருந்து, ஞாயிறும் திங்களும் செல்வனபோல விசும்பிலே செல்ல, அவர் திருவொளி அவ்விசும்பெங்கும் சிறந்ததென்க. (உகூரு)

---

## உக. தாயத்தீர்வு

2894. சாரணர் போயபின் சாந்த மேந்திய
வாரணி வனமுலை வஞ்சிக் கொம்பனார்
போரணி புலவுவேற் கண்கள் பூத்தன
நீரணி குவளைநீர் நிறைந்த போன்றவே.

(இ - ள்.) சாரணரிருவரும் போயபின் தேவியர் நீரணி கண்கள் பூத்தனவாகிய குவளைகள் நீர்நிறைந்தன போன்றனவென்க.

இனித் துறப்பனென்றஞ்சி நீர் மல்கின. (உகூசு)

2895. பொன்வரை நிலாக்கதிர் பொழிந்து போர்த்தபோல்
தென்வரைச் சந்தனந் திளைக்கு மார்பினான்
மின்னிவர் நுசுப்பினார் மெலிய மெல்லவே
இன்னுரை கொடான்கொடிக் கோயி லெய்தினான்.

2893. நலம் - அழகு; நன்மை எனலுமாம். நயந்த - விரும்பிய. தாமரையையுடைய நிலத்தே இருந்து. செல - ஆகாயத்தே எழுந்து போக.

2894. சாந்தம் - குங்குமச்சாந்து. கொம்பனாருடைய நீரணிந்த கண்கள் பூத்தனவாகிய குவளை நீர்நிறைந்ததைப் போன்றன; கொம்பனார் - சீவகன் மனைவியர்.

2895. பொன்வரை - மேருமலையில். தென்வரை - பொதியமலை. மார்பினான் : சீவகன். நுசுப்பினார் : சீவகன் மனைவியர். கொடியையுடைய கோயிலை; கோயில் - அரண்மனை.

(இ - ள்.) மேருவிலே நிலாத் தனது கதிரைச் சொரிந்து அதனை மறைத்தாற்போல மலயத்திற் சந்தனங்கிடந்து பயன்கொண்ட மார்பினுன், தேவியர் வருந்த இன்னுரைகொடாளுய் மெல்லக் கோயிலைச் சேர்ந்தானென்க. (உகள)

2896. அஞ்சுரை பொழிந்தபா லன்ன மென்மயிர்ப்
பஞ்சிமெல் லணையின்மேற் பரவை யல்குலார்
மஞ்சிவர் மதிமுக மழுங்க வைகினர்
நஞ்சுயிர்த் தணிநலங் கரிந்து நையவே.

மடி சொரிந்த பாலெனவே நுரையுண்மை பெற்றும்.

(இ - ள்.) அப்பொழுது தேவியர், நஞ்சுபோல வெய்துயிர்த்து நைய மழுங்க அரசன் தோளணைத் துயிலாது நுரைபோலும் பஞ்சணை மேலே வைகினரென்க. (உகஅ)

(வேறு)

2897. வெள்ளெயிற் றரவு மேய்ந்த மிச்சிலின் மெலிந்து மேகப்
புள்வயிற் பிறந்த புட்போ லொன்றலா துரைத்த றேற்ருர்
கள்வயிற் றலர்ந்த கோதைக் கலாபவில் லுமிழு மல்குல்
ஒள்ளெயிற் றவர்கள் பொன்பூத் தொளிமணி யுருவ நீத்தார்.

கள்ளை வயிற்றிலே அலர்ந்த மாலையினையும் கலாபத்தினது ஒளியைக் காலும் அல்குலினையுமுடைய எயிற்றவர்கள். மேகப்புள் - வானம் பாடி.

(இ - ள்.) வானம்பாடி மேகத்துப்பிறந்த துளியையே நச்சிப் பாடுமாறு போல அரசனுள்வயிற் பிறந்த அளியொன்றுமல்லாதனவற்றை உரைத்தலறியாத தேவியர், பாம்புமேய்ந்த குறைமதிபோல் ஒளிகெட்டுப் பசந்து மணிகளின் உருவைக் கைவிட்டாரென்க. (உகக)

---

2896. அம் சுரை - அழகிய மடி. பாலன்னமென்மயிரையுடைய பஞ்சியாலாகிய அணை; "பால்பரந் தன்ன பஞ்சி மெல்லணை" (பெருங். 1. 34 : 145). அல்குலார் : சீவகன் மனைவியர். மழுங்க - ஒளிகெட. நஞ்சு உயிர்த்து - விடத்தைப்போல் வெவ்விதாகப் பெருமூச்சுவிட்டு. நைய வைகினர்.

2897. மேய்ந்த - உண்ட. மிச்சிலின் - குறைச்சந்திரனைப்போல். புள்போல் - மேகத்துளியை விரும்பிப்பாடுமாறுபோல. ஒன்றலாது - சீவகனிடத்து அன்பொன்றுமேயல்லாமல். அடி, 1-2: "துளிநசை வேட்கை யான் மிசைபாடும் புள்ளிற்றன், அளிநசைஇ யார்வுற்ற வன்பினேன் யாளுக" (கலித். 46 : 20-21); "துளிநசைப் புள்ளினின் னளிநசைக் கிரங்கி" (புறநா. 198 : 25). தேற்ருராகிய எயிற்றவர்கள் : சீவகன் மனைவியர்.

2898. கிளிச்சொலி னினிய சொல்லார் கிண்கிணி சிலம்பொ டேங்கக், குளித்துநீ ரிரண்டு கோலக் கொழுங்கயல் பிறழ்ப வே போற், களித்துநீர் சுமந்து வாட்கண் கலாஅய்ப்பிறழ்ந் தலமந் தாட, அளித்ததா ரலங்க லாழி யவன்றுற வுரைத்து மன்றே.

(இ - ள்.) அத்தேவியருடைய கிண்கிணியும் சிலம்பும் ஏங்க வாட் கண் ஆட முன்னரளித்த அரசன்றுறவை இனிக் கூறுதுமென்றுரெள்க. இரண்டு கயல் நீரிலே குளித்துப் பிறழ்பவைபோலக் கண்கள் களித்து உவகைக்கண்ணீரைச் சுமந்து பிறழ்ந்து கலாய்த்து அலமந் தாடவென்க. அலங்கல் : ஆழிக்கு அடை. (௩௦௦)

2899. புனைமருப் பழுந்தக் குத்திப் புலியொடு பொருது வென்ற
கனைகுர லுருமுச் சீற்றக் கதழ்விடை யுரிவை போர்த்த
துனைகுரன் முரசத் தானைத் தோன்றலைத் தம்பி னொன்றுன்
நனைமல ரலங்கற் கண்ணி நந்தனுந் தொழுது சேர்ந்தான்.

(இ - ள்.) அத்துறக்கின்ற அரசனும் சீவின கொம்பு அழுந்தக் குத் திப் பொருதுவென்ற உருமுப்போலும் சீற்றத்தையுடைய ஏற்றின் உரி வையைப் போர்த்த முரசையுடைத்தாகிய தானையையுடைய நந்தனைக் கொண்டுவருவீராக வென்றுன்; அவனும் வந்து தொழுது சேர்ந்தா னென்க. (௩௦௧)

2900. கொடியணி யலங்கன் மார்பிற் குங்குமக் குன்ற மன்னுன்
அடிபணிந் தருளு வாழி யரசரு ளரச வென்னப்
படுசின வெகுளி நாகப் பைத்தலை பனித்து மாழ்க
இடியுமிழ் முரச நாண வின்னண மியம்பி னுனே.

2898. சொல்லாருடைய கிண்கிணியும் சிலம்பும் ஏங்க; ஏங்க - ஒலிக்க. இரண்டு கயல் நீருட் குளித்துப்பிறழ்பவேபோல். கலாய் - கோபித்து. அலமந்து - வருந்தி. அளித்த - முன்பு பாதுகாத்த. ஆழிய வன் - சீவகனுடைய.

2899. விடை உரிவை - ஏற்றின்தோல். அடி, 1-3 : சீவக. 2142, அடிக் ; " விசித்துவினை மாண்ட மயிர்க்கண் முரசம் " (புறநா. 63 : 7) ; " ஏற்றுரி போர்த்த விடியுறழ் தழங்குரற்,......கொற்ற முரசம் " (பெருங். 2. 2 : 28-9). தோன்றலை - நந்தட்டனை. நனை - தேன்.

(மேற்.) மு : சிலப். 5 : 76-88, அடியார்.

2900. கொடியணி - எழுது கொடியணிந்த என்றுமாம். குன்றமன் னுனுடைய அடியைப்பணிந்து. அருளு வென்ன - காரியத்தை அருளிச் செய்வாயாக என்று கேட்ப. பைத்தலை - படத்தையுடைய தலை. பனித்து- நடுங்கி. இடியுமிழ் முரசம் : சீவக. 2392 ; " உருமிடி முரசு " (முருகு. 121) ; " இடிமுரசியம்ப " (பரி. 4) ; " இடியுமிழ் முரசம்" (அகநா. 354); " இடிமுர சறைந்த தென்பவே " (சூளா. சுயம். 213)

வெற்றிக்கொடி யெடுத்தற்குக் காரணமான மார்பு; ஒழுங்குபட அணிந்த அலங்கலுமாம். பாம்பின்றலை நடுங்கி மயங்க இடிக்கும் இடியோசையைப் பிறப்பிக்கும் முரசம்.

(இ - ள்.) அங்ஙனம் தொழுது சேர்ந்தவன், பின்னர்க் குன்று மன்றான் அடியைப் பணிந்து, அரசனே! நினைத்த காரியத்தை அருளிச் செய்வாயாக வென்ன, அவனும் முரசம் நாண இன்னணம் செப்பினானென்க.

அது மேற் கூறுகின்றார். வாழி : அசை. (௩௦௨)

2901. ஊனுடைக் கோட்டு நாகான் சுரிமுக வேற்றை யூர்ந்து, தேனுடைக் குவளைச் செங்கேழ் நாகிளந் தேரை புல்லிக், கானுடைக் கழனிச் செந்நெற் கதிரணைத் துஞ்சு நாடு, வேன்மிடை தானைத் தாயம் வீற்றிருந் தாண்மோ வென்றான்.

(இ - ள்.) ஊனையுடைத்தாகிய கோட்டினையும் சுரிமுகத்தினையுமுடைய நத்தை, வரம்பிற்றுயின்ற ஆவினதேற்றினையும் செங்கேழ் நாகினையுமேறி இளந்தேரையினையும் புல்லிப்போய்க் குவளைக்கழனியிற் காட்டின் தன்மையையுடைய செந்நெற்கதிரணையிலே துயிலும் நாட்டையும், மற்றுமுள்ள தாயத்தினையும் வருத்தமின்றி ஆள்வாயாக வென்றானென்க. (௩௦௩)

2902. கரும்பலாற் காடொன் றில்லாக் கழனிசூழ் பழன நாடு, சுரும்புலாங் கண்ணி விண்ணோர் துறக்கமும் வீடும் வேண்டேன், அரும்புவா யலர்ந்த வம்மென் றாமரை யனைய பாதம், விரும்பியான் வழிபட் டன்றே வாழ்வதென் வாழ்க்கை யென்றான்.

பழனம் - நீர்நிலம். அரும்புவாயலர்ந்த - அரும்பு நெகிழ்ந்தலர்ந்த.

(இ - ள்.) அதுகேட்ட நந்தன், நாடும் துறக்கமும் வீடும் எய்தி வாழும் வாழ்க்கை யான் வேண்டேன்; அவை எனக்கு என்? யான் வேண்டுவது, நின் பாதத்தை விரும்பி வழிபட்டு வாழ்வதன்றே வென்றானென்க.

இனி வழிபட்டு வாழ்வதன்றோ என்வாழ்க்கை, வேண்டேனென்றுமாம். (௩௦௪)

---

2901. சுரிமுக நாகு ஆனேற்றையும், செங்கேழ்நாகினையும் ஊர்ந்து, இளந்தேரையையும் புல்லி. செந்நெற் கதிராகிய அணையில். நாட்டினையும், தாயத்தினையும் ஆண்மோ என்றான்; தாயம் - அரசுரிமை. ஆண்மோ - ஆள்வாயாக.

2902. கரும்பலாற் காடொன்றில்லாக் கழனி; "கரும்பல்லது காடறியாப் பெருந்தண்பணை" (புறநா. 16 : 15-16); "கரும்பல்லது காடின்மை யான்" (சிலப். 10 : 81-5, அடியார், உரை நடை). கண்ணி - மாலை. துறக்கம் - சுவர்க்கம். வீடு - மோட்சம். அம்மென் தாமரை - அழகிய மெல்லிய தாமரை.

2903. குன்றென மருண்டு கோல மணிவண்டுங் குழாங்கொ டேனும், சென்றுமொய்த் திமிரும் யானைச் சீவகற் கிளைய நம்பி, மன்றல்வீற் றிருந்து மின்னு மணிக்குவ டனைய தோளான், ஒன்றுமற் றரசு வேண்டா னுவப்பதே வேண்டி னானே.

மலையென்று மருண்டு வண்டும் தேனும் சென்று மொய்த்து இமிரும் யானையையுடைய நம்பி. தோளான் - அரசன்.

(இ - ள்.) அங்ஙனம் கூறின நந்தட்டன், அரசாட்சியைச் சிறிதும் வேண்டானாய் அரசனுவக்கும் துறவே விரும்பினானென்க. (௩௦௩)

2904. பொலிவுடைத் தாகு மேனும் பொள்ளலிவ் வுடம்பென் றெண்ணி, வலியுடை மருப்பி னல்லால் வாரணந் தடக்கை வையா, தொலியுடை யுருமுப் போன்று நிலப்படா தூன்றின் வைவேற், கலிகடிந் துலகங் காக்குங் காளையைக் கொணர்மி னென்றான்.

(இ - ள்.) அதுகேட்ட அரசன், இவ்வுடம்பு மேற்றோற்றப் பொலிவுடைத்தா யிருக்குமாயினும் உள்ளு வயிர்த்திராது; அதனால் இப் பருவத்தே துறத்துமென் றெண்ணி, யாம் துறக்குங் காலத்து, உருமுப் போன்று ஒலியுடைய வாரணம் நிலத்துவீழாமல் தன்னைத்தாங்கும் வலியையுடைய மருப்பினன்றி வேறோரிடத்துக் கையை வையாது; அது போல யாமும் அரசினைத் தாங்குதற்குரிய சச்சந்தன் மேலே இதனை வைத்துமென்று கருதி அவனைக் கொணர்மினென்றா னென்க.

ஊனைத் தின்னும் வைவேற்காளை. (௩௦௪)

2905. கழுமணி யார மார்பிற் காவலன் மக்கள் காய்பொன், எழுவளர்ந் தனைய திண்டோ ளிளையவர் தம்முண் மூத்த, தழு மலர்க் கொம்பு போலுந் தத்தைநாட் பயந்த நம்பி, விழுமணிப் பூணி னானை வீற்றிரீஇ விதியிற் சொன்னான்.

2903. கோலம் - அழகு. குழாங்கொள் தேனும் - கூட்டத்தைக் கொண்ட தேனென்னும் வண்டின் சாதியும். இமிரும் - ஒலிக்கின்ற. நம்பி - நந்தட்டன். மன்றல் - மணம். நம்பி, அரசு ஒன்றும் வேண்டாது தோளான் உவப்பதே வேண்டினான்; ஒன்றும் - சிறிதும்; தோளான் : சீவகன்.

2904. பொள்ளல் - உள்ளீடில்லாமை. உருமுப்போன்று ஒலியுடைய வாரணம் மருப்பினல்லாமல் தடக்கையை வையாது; தடக்கை - துதிக்கை. ஊன்தின் - மாமிசத்தைத் தின்கின்ற; வேலுக்கு அடை. காளையை - தன் மகனாகிய சச்சந்தனை; இவன் காந்தருவதத்தையிட மாகப் பிறந்தவன்.

2905. கழுவிய மணி. காவலன் : சீவகன். எழு - கணையமரம். மூத்த நம்பியாகிய பூணினானை : என்றது, காந்தருவதத்தையின் மகனாகிய சச்சந்தனை. தழுமலர்க் கொம்பு - தழுவிய மலரையுடைய கொம்பு. வீற்றிரீஇ - தனியே இருக்கச் செய்து; சீவக. 2914, ந.

கழுமணி : வினைத்தொகை. திண்டோண் மக்களென்க. முழுதும் மலரையுடைய கொம்பு. தத்தை முதனுட்பயந்த நம்பி.

(இ - ள்.) காவலன் தன்மக்கள் இளையவர் தங்களில் மூத்த நம்பியாகிய சச்சந்தனை வீற்றிருத்தி நூல்விதியாற் கூறினனென்க.

மேல் முடிசூட்டி வீற்றிருத்துவதனை வீற்றிரீஇயென இறந்த காலத்தாற் கூறினர், இயற்கைபற்றி. (கூ0எ)

2906. பால்வளை பரந்து மேயும் படுகடல் வளாக மெல்லாம்
கோல்வளை யாமற் காத்துன் குடைநிழற் றுஞ்ச நோக்கி
நூல்விளைந் தனைய நுண்சொற் புலவரோ டறத்தை யோம்பின்
மேல்விளை யாத வின்பம் வேந்தமற் றில்லை கண்டாய்.

நூல் பயன் தந்தாற்போலுஞ் சொல்.

(இ - ள்.) அவன் எங்ஙனங் கூறினனெனின், வேந்தனே! நீ உலகெல்லாம் நின்குடை நிழலிலே தங்கும்படி பார்த்து அதனைக் கோல் வளையாமற் காத்து அமைச்சரையும் அறத்தையும் பாதுகாப்பவல்லை யாயின், நினக்கு மேலுண்டாகாத இன்பம் வேறில்லை காணென்று னென்க.

'வேந்த' என்றான், மேல் முடிசூட்டக் கருதுதலின். (கூ0அ)

2907. வாய்ப்படுங் கேடு மின்றும் வரிசையி னரிந்து நாளும்,
காய்த்தநெற் கவளந் தீற்றிற் களிறுதான் கழனி மேயின்,
வாய்ப்பட லின்றிப் பொன்றும் வல்லனுய் மன்னன் கொள்ளின்,
நீத்தநீர் ஞால மெல்லா நிதிநின்று சுரக்கு மன்றே.

(இ - ள்.) யானைக்கு நெற்கவளத்தை முறைமையால் நாளுமரிந்து தீற்றின், அதற்கு உணவுமாம்; அழிவுமின்றும்; அங்ஙனந் தீற்றுக்களிறு தானே கழனியிலே மேயின், உணவுமின்றி அழிந்துவிடும்; அத்தன்மை போல மன்னனும் கொள்ளவல்லனுய் முறைமையாற் கொள்ளின், உலகும் அவன் வழிநின்று பயன்படுமென்றுனென்க. (கூ0கூ)

2906. பால்வளை - பால்போலும் வெண்ணிறமுடைய சங்கு. வளாகம் - உலகப் பரப்பு. கோல் - செங்கோல். உன்குடை நிழலில் துஞ்சக்காத்து; துஞ்ச - தங்கும்படி. நுண் சொற் புலவர் - நுண்ணிய சொல்லைக்கொண்ட அறிவுடையோர்; என்றது அமைச்சரை; குறள், 632, 634, 636; "அஞ்சொனுண்டேர்ச்சிப் புலவர்" (புறநா. 235 : 13). புலவரையும் அறத்தையும் ஓம்பின்.

2907. அரிந்து, தீற்றின் வாய்ப்படும்; கேடுமின்றும்; வாய்ப்படும் - உணவாகும். கழனி - வயலில். பொன்றும் - நெற்கதிரும் அழிந்து விடும். நீத்தமாகிய நீரையுடைய. மு : புறநா. 184.

2908. நெல்லுயிர் மாந்தர்க் கெல்லா நீருயி ரிரண்டுஞ் செப்பிற்
புல்லுயிர் புகைந்து பொங்கு முழங்கழ லிலங்கு வாட்கை
மல்லலங் களிற்று மாலை வெண்குடை மன்னர் கண்டாய்
நல்லுயிர் ஞாலந் தன்னு ளமவே னம்பி யென்றான்.

(இ - ள்.) நம்பி ! உலகத்து மக்கட்கெல்லாம், நெல்லுமுயிர் ; நீரு முயிர். இவ்விரண்டும் யான் கூறுமளவிற் சிறந்த உயிரல்ல; அவர்க்குச் சிறந்த உயிர் மன்னர்காணென்றா னென்க. (ருகO)

2909. ஆர்வலஞ் சூழ்ந்த வாழி யலைமணித் தேரை வல்லான்
நேர்நிலத் தூரு மாயி னீடுபல் காலஞ் செல்லும்
ஊர்நில மறித றேற்றா தூருமேன் முறிந்து வீழும்
தார்நில மார்ப வேந்தர் தன்மையு மன்ன தாமே.

வலம் - இடம். அலைகின்ற மணி.

(இ - ள்.) தாருக்கு நிலமாகிய மார்பனே ! ஊரவல்லவன் தேரை ஒத்த நிலத்திலே ஊருமாயின் மிகப் பலகாலம் நடக்கும் ; அதனை ஊரு நிலமிது வென்று அறியாதூருமாயின், அதுவுமுறிந்து தானும் வீழும் ; அத்தன்மைத் தாம் வேந்தர் தன்மையு மென்றானென்க.

என்றது, வேந்தர் அரசை ஆளுமுறைமையின் ஆளின், அது நீடு நடக்கும் ; அவ்வாறு ஆளாராயின், அதுவுங்கெட்டுத் தாமும் வீழ்வ ரென்றாணும். (ருகக)

2910. காய்ந்தெறி கடுங்கற் றன்னைக் கவுட்கொண்ட களிறு போல, ஆய்ந்தறி வுடைய ராகி யருளொடு வெகுளி மாற்றி, வேந்தர்தாம் விழைப வெல்லாம் வெளிப்படார் மறைத்தல் கண்டாய், நாந்தக வுழவ ரேறே நன்பொரு ளாவ தென்றான்.

(இ - ள்.) ஏறே ! வேந்தர், அருளோடு அறிவுடையராகி, ஒருவனைக் காய்ந்தெறியுங்கல்லைக் காலம் வருமளவும் கவுளிலே மறைத்துவைத்த களிறு போலே பகைவர்மேற் சென்ற கோபந் தோன்றாராய்ப் பொறுத்தா ரென்று அவருட் கொள்ளும்படி அதனைக் காலம் வருமளவுமாற்றி, அவர்

2908. மாந்தர்க்கு நெல்லும் உயிர் ; நீரும் உயிர். புல்லுயிர் - அற்பமான உயிராகும். கையையும், களிற்றையும், மாலையையும், குடையையும் உடைய மன்னர். நல்லுயிர் மன்னராவர். நம்பி : சச்சந்தன் ; விளி. மு : புறநா. 186.

2909. ஆர் - ஆரக்கால். ஆழி - சக்கரம். அலைகின்ற மணியை யுடைய. 'தெரிந்தவனூர்ந்தால் தேர் பலநாளூரலாம்' என்பது ஒரு பழமொழி. மு : புறநா. 185.

2910. காய்ந்து - கோபித்து. கவுள் - கன்னத்தினுட்புறம். அரு ளோடு அறிவுடையராகி என மாறுக. அடி, 1 - 2 : பெருங். 1. 43 : 10-11; சூளா. சீயவதை. 94. அடி, 3 : குறள். 440, 692. நாந்தகம் - வாள். மறைத்தலே நன் பொருளாவது.

தாம் விரும்புவனவற்றையெல்லாம் ஆராய்ந்து கொடுத்து அவரை அழிக்கின்ற எண்ணத்தை மறைத்தல்காண் அவர்க்கு நன்பொருளாவதென்றானென்க.

"களிறுகவு ளடுத்த வெறிகற் போல, ஒளித்த துப்பினை" (புறநா. 30) என்றார் பிறரும். (௩கஉ)

2911. குடிபழி யாமை யோம்பிற் கொற்றவேன் மன்னர் மற்றுன், அடிவழிப் படுவர் கண்டா யரும்புகழ் கெடுத லஞ்சி, நொடியலோ ரெழுத்தும் பொய்யை நுண்கலை நீத்த நீந்திக், கொடியெடுத் தவர்க்கு நல்கு கொழித்துணர் குமர வென்றான்.

(இ - ள்.) தீங்கை நீக்கி நன்மையை உணர்கின்ற குமரனே! புகழ் கெடுதலையஞ்சிப் பொய்ம்மொழி ஓரெழுத்தையும் கூறாதேகொள்; கலைகளாகிய கடல்களை நீந்தி வெற்றிக்கொடியை யெடுத்த அமைச்சருக்கு எப்பொழுதும் அருள்; இவையேயன்றிக் குடிமக்கள் பழியாமற் பாதுகாப்பாயாயின், பின்னை மன்னர் நின்னடியிடத்தே வீழ்வர்காணென்றானென்க. (௩கரு)

2912. சேனடந் தாங்கு மோடிச் சென்றுலாய்ப் பிறழும் வாட்கண், மான்மட நோக்கின் மாதர் மாலைநாட் பயந்த மைந்தன், கானடந் தனைய மான்றேர்க் காளையைக் காவன் மன்னன், தானுடனணிந்து தன்போ லிளவர சாக்கி னானே.

உம்மை : இசைநிறை. கால் நடந்தனைய - காற்று விசைகொண்டு நடந்தாற்போன்ற; இனித் தன்கால் நடந்தாற்போல மனங்கருதியதே செய்யுமென்றுமாம்; கானடந்தனைய காளை - சுதஞ்சணன்.

(இ - ள்.) சேல் நடந்தாங்குப் பிறழுங் கண்ணிணையும், மான் போலும் நோக்கினையும், காதலையுமுடைய குணமாலை முதற்பயந்த மைந்தனாகிய காளையைச் சீவகன்றான் சச்சந்தனுடனே கூடியிருந்து பட்டங்கட்டித் தான் கந்துக் கடனுளில் இளவரசாயிருந்தாற்போல இளவரசாக்கினானென்க.

என்றது, தன் குலத்திற்கேற்ற நுகர்ச்சியையெய்தும் அரசவுரிமையை. (௩கச)

2911. குடி பழியாமை - குடி மக்கள் தன்னைப் பழியாமல். பொய்யை ஓர் எழுத்தும் நொடியல்; நொடியல் - சொல்லாதே. அடி, 2-3. பொய்: புறநா. 216 : 7 கொடி - வெற்றிக் கொடி; பட்டினப். 169-71. நல்கு - அருள் செய்வாயாக. கொழித்துணர் குமர - தீமையை நீக்கி நன்மையறிகின்ற குமரனே.

2912. சேல் - ஒருவகை மீன்; கண்ணுக்கு உவமை. மாதர் - காதல். கண்ணையும், நோக்கினையும், மாதரையுமுடைய மாலை. மாலை - குணமாலை; நாமைகதேசம். மைந்தனாகிய காளையை என்றது குணமாலையின் மகனை சுதஞ்சணனை. மன்னன் : சீவகன். தன்போல் அணிந்து எனலுமாம்.

2913. கூரெயி றணிந்த கொவ்வைக் கொழுங்கனிக் கோலச் செவ்வாய், ஏரணி மயிலஞ் சாய லிலக்கணை யீன்ற சிங்கம், சீருடைச் செம்பொற் கண்ணிச் சிறுவனைச் செம்பொன் மாரி, பேரறைந் துலக முண்ணப் பெருநம்பி யாக வென்றான்.

(இ - ள்.) செவ்வாயினையும் சாயலையுமுடைய இலக்கணையீன்ற சிங்கமாகிய சிறுவனை, உலகெல்லாம் நின்புகழைச் சாற்றி நீ சொரிகின்ற பொன் மழையை நுகரும்படி பெருநம்பியாயிருப்பாயாக வென்று னென்க.

என்றது சச்சந்தனுக்குப் பின்பு கோவிந்தன் அரசாளும்படி உரிமை கொடுத்தானென்றவாறு. (௬௧௩)

2914. தன்கழ றொழாத மன்னர் தாஞ்சுமந் தேந்தி நின்ற
பொன்றிக ழுருவிற் றம்பி புதல்வனைத் தந்து போற்றி
மின்றிகழ் முடியுஞ் சூட்டி வீற்றிரீஇ வேந்து செய்தான்
குன்றினங் குழீஇய போலுங் குஞ்சரக் குழாத்தி னானே.

குஞ்சரக் குழாத்தினான் - சச்சந்தன்.

(இ - ள்.) சீவகன், தன்னடியை முன்பு பணியாத மன்னர் பின்பு வணங்கித் திறையாகவெடுத்த பொன்னாற்செய்த பூண்விளங்கும் வடிவினையுடைய நந்தட்டன் புதல்வனை யழைத்துக் குறுநிலமன்னர்க் குரிய அரசாட்சியிலே அவன் நிற்கும்படி போற்றி வீற்றிருத்தி, தன்மகன் சச்சந்தனை முடியுஞ்சூட்டி வேந்தாக்கினானென்க.

"படையுங் கொடியும்" (தொல். மரபு. 7) என்னுஞ் சூத்திரத்தான் அரசர்க்கே முடிகூறினமையானும், "வில்லும் வேலும்" (தொல். மரபு. 83) என்னுஞ் சூத்திரத்தான் மன்பெறு மரபினேனோர்க்கு முடிகூறாமை யானும், "அந்த ணாளர்க் கரசுவரை வின்றே" (தொல். மரபு. 82) என்னுஞ் சூத்திரத்தான் அரசில்வழி அந்தணரை அரசியல் பூண்ப ரென்றமையானும், நந்தட்டன் புதல்வனை முடிசூட்டினானென்றல் பொருந்தாமையுணர்க. (௬௧௪)

2913. கொவ்வைக் கனிபோலும் செவ்வாய். இலக்கணையின் மகனான சிறுவனை; என்றது கோவிந்த னென்பவனை. உலகம் பேரறைந்து - உலகத்தவர் உன் புகழைக்கூறி. பெருநம்பி யென்பது ஓரரசனுக்குப் பின்னே அரசவுரிமைபெற உரியோர்க்குக் கொடுக்கப்படும் பட்டப்பெயரென்று தெரிகிறது. 'முன்னோன் றன்னைப் பின்ன ரியற்றிப், பின்னோன் றன்னையும் பெருநம்பி யாகென'. (சிலப். பதிகம், 1-2, கட்டுரை, அடியார்.); 'பெருநம்பிப்பட்டம் பெறுதல் சிந்தாமணியிலும் உதயணன்கதையிலுமுள்ளது' (தக்க. 179, உரை)

2914. மன்னர் - பகையரசர். பொன் - திறையாக எடுத்த பொன் னால். தம்பி புதல்வனை - நந்தட்டன் மகனை. குஞ்சரக் குழாத்தினானை முடியுஞ்சூட்டி வேந்து செய்தான்; குழாத்தினான்: காந்தருவ தத்தையின் மகனான சச்சந்தன். வேந்து செய்தான் - அரசாக்கினான். (பி - ம்.) 'குன்றுடன் குழீஇய போலும்'

2915. நிலஞ்செதி ளெடுக்கு மான்றேர் நித்திலம் விளைந்து முற்றி, நலஞ்செய்த வைரக் கோட்ட நாறும் மதத்த நாகம், குலஞ்செய்த குமரர்க் கெல்லாங் கொடுத்தன னிதியு நாடும், உலஞ்செய்த வைரக் குன்ற மோரிரண் டனைய தோளான்.

செதிள் - தூளி. குலஞ்செய்த - குலத்தையுண்டாக்கின. இனி, 'திறஞ்செய்து' என்று பாடமாயின், கூறுபடுத்தியென்க. உலத்தால் தொழில் செய்த தோள்.

(இ - ள்.) தோளான், தேர்களையும், கோட்டினையும் மதத்தினையு முடையவாகிய யானைகளையும், நிதியையும், நாடுகளையும் ஒழிந்த குமரர்க் கெல்லாம் கொடுத்தானென்க. (௫கஎ)

2916. நூற்கிடங் கொடுத்த கேள்வி நுண்செவி மண்கொண் ஞாட்பில், வேற்கிடங் கொடுத்த மார்பின் வில்வலான் றோழர் மக்கள், நாற்கடல் வளாகங் காக்கு நம்பிதன் கண்க ளாகப், பாற் கடற் கேள்வி யாரைப் பழிப்பற நாட்டி னானே.

நூற்கேள்விக்கு இடங்கொடுத்த நுண்செவியினையும், மண்ணைக் கொள்ளும் போரிடத்தே வேலுக்கு இடங்கொடுத்த மார்பினையுமுடைய தோழர்.

(இ - ள்.) வில்வலான், தோழர் மக்களாகிய தூய நூற்கேள்வியை யுடையாரைச் சச்சந்தனுக்குக் கண்களாக நாட்டினானென்க.

என்றது தன்தோழர் தனக்குச்செய்த தொழில்களை அவர் மக்களும் இவற்குச் செய்கவென்றானென்றவாறு. (௫கஅ)

---

2915. நித்திலம் - முத்து. நலம் - அழகு. தேரையும், நாகத்தையும், நிதியையும், நாட்டையும் குமரர்க்கெல்லாம் கொடுத்தனன். தோளான் : சீவகன்.

(மேற்.) அடி, 1 : பிரயோக. திங்ரு. 13.

2916. ஞாட்பில் - போரில். செவியினையும், மார்பினையுமுடைய தோழருடைய மக்கள். வில்வலான், தோழர்மக்களாகிய கேள்வியாரை நம்பிதன் கண்களாக நாட்டினான்; வில்வலான் : சீவகன். நம்பி : சச்சந்தன். தோழரை அரசனுக்குக் கண்ணாகக் கூறுதல்; "சூழ்வார் கண்ணாக வொழுகலான் மன்னவன், சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்" (குறள், 445); "தாளே பெருங்கிளை தோளே துணைவி, பல்லே மக்கள் கண்ணே தோழர்", "கண்போற் காதனின் கழிபே ரமைச்சன்", "கண்புரை தோழன்" (பெருங். 2. 10 : 100 - 101, 11 : 166, 17 : 161)

2917. காவல ரகல மென்னுங் கழனியு ளுழுது காமர்
மாவலம் விளைத்த கோட்டு மழகளிற் றரச னன்னான்
பூவலர் கொடிய னாரை விடுக்கிய கோயில் புக்கான்
தூவல ரொலிய லார்தம் வலக்கண்க டுடித்த வன்றே.

மாவலம் விளைத்த - திருத்தங்கும் வெற்றியை விளைத்த ; மா - பெருமையுமாம்.

(இ - ள்.) களிற்றையொப்பான், தன் தேவியாராகிய கொடியைப் போல்வாரை இல்லறத்திற் பற்றை விடுவித்தற்குக் கோயிலிலே புக்கான் ; ஆண்டு அவர் வலக்கண்கள் துடித்தனவென்க.

செல்வச் செருக்கின்றிச் சாரணர்கூறிய அறத்தின்வழிச் சேறலிற் கடாமின்றிப் பாகன் தோட்டியை நீவாத களிற்றினையும், புதல்வர்ப் பயந்து பயன் கொடுத்தலிற் பூவலர்ந்த கொடியையும் உவமித்தார். தூவலரொலியல் - தூய்தாக அலர்ந்த மாலை. இனி, 'தூவலர்க்கொடியனார்' என்று பாடமோதி, ஒழிகின்ற அலர்களையுடைய கொடியனையாரென்றுமாம் ; தூவுதல் - ஒழிதல். (௩௧௯)

---

## ௨௨. துறவுணர்த்தல்

2918. செம்பொனாற் செறிய வேய்ந்து திருமணி முகடு கொண்ட, வெம்புநீள் சுடருஞ் சென்னி விலங்கிய மாட மெய்தி, அம்பொனாற் றெளிந்த பாவை யனையவர்த் தம்மி னென்றான், பைம்பொனல் வளர்க்கப் பட்ட பனைதிரண் டனைய தோளான்.

பொன்னால்வேய்ந்து மணியால் முகடுகொண்ட மாடம் ; ஞாயிறும் விலங்கிப் போகப்பட்ட சென்னியையுடைய மாடம்.

(இ - ள்.) தோளான், மாடத்தைச் சேர்ந்து, தத்தம் பொருண் மிகுதியாற் செல்வநன்றென்று துணியப்பட்ட பாவையனையாரைத் தம்மினென்றானென்க. (௩௨௦)

---

2917. காவலர் - பகையரசரது. மா - திருமகள். களிற்றரசன் : பூதநாதன். கொடியனாரை - தன்மனைவியரை. விடுக்கிய - இல்வாழ்க்கையிற் பற்றை விடுத்தற்கு. தூ - தூய்மை. ஒலியலார் : மனைவியர். மகளிர்க்கு வலக்கண் துடித்தல் தீமை விளைவிக்கும் என்பர்.

2918. வெம்பு சுடர் : சீவக. 2 ; சுடர் - சூரியன். பொன் - செல்வம். பாவையனையவர் - மனைவியர். தோளான் : சீவகன்.

(வேறு)

2919. (க) தின்பளித மாலைத்திர டாமந்திகழ் தீம்பூ
நன்கொளிசெய் தாமநறும் பூநவின்ற தாமம்
பொன்றெளித்த தாமம்புரி முத்தமிளிர் தாமம்
மின்றெளித்த மின்னுமணி வீழ்ந்ததிர டாமம்.

2920. (உ) ஈன்றமயில் போனெடிய தாமத்திடை யெங்கும்
மான்றுமணம் விம்முபுகை மல்கிநுரை யேபோல்
தோன்றுமணிக் காலமளித் தூவணையின் மேலார்
மூன்றுலகம் விற்குமுலை முற்றிழையி னாரே.

இவையிரண்டும் ஒரு தொடர்.

(இ - ள்.) அங்ஙனம் அழைக்கின்ற அரசனேவலாளர் செல்கின்ற காலத்து, ஈன்றமயில்போலும் முற்றிழையினார், தின்னப்படுகின்ற கருப்பூர வொழுங்கால் திரண்ட தாமம், தீம்பூ மிகவுமொளிசெய்த தாமம், பூந்தாமம், பொற்றகட்டை ஒப்பஞ்செய்த தாமம், முத்தத்தாமம், மின்னென்று தெளிவித்த மணியினது மின்னுத்தங்கிய தாமமாகிய இத்தாமங்களினிடையே கிடந்த மணிக்காலமளியில் விம்முபுகை மல்குகையினாலே மணமெங்குமயங்கி நுரையேபோல்தோன்றும் அணையின் மேலாராயிருந்தாரென்க. (௬உக-உ)

2921. இன்னதரு ளென்றிளைய ரேத்தஞ்மி ரார்ப்ப
மின்னினிடை நோவமிளர் மேகலைகண் மின்னப்
பொன்னரிய கிண்கிணியும் பூஞ்சிலம்பு மேங்க
மன்னனடி சேர்ந்திறைஞ்சி வாழியென நின்றார்.

(இ - ள்.) அவர் அங்ஙனமிருந்தவளவிலே, சென்ற இளையர், அரசன் திருவுள்ளம் நீங்கள் தன்னிடத்தேற வருவதாயிருந்ததென்று கூறி ஏத்த, அவரும், ஆர்ப்ப நோவ மின்ன ஏங்கச்சேர்ந்து வாழியெனக்கூறி மன்னனடியை வணங்கிநின்றாரென்க. (௬உ௬)

2919. பளித மாலைத்திரள் தாமம் - கருப்பூரத்தாலாகிய ஒழுங்கையுடைய திரண்ட மாலை. தீம்பூவாலாகிய தாமம்; தீம்பூ : ஒருவகை மரம். மின்னைப்போல் தெளிவித்த.

2920. மணம் மான்று - வாசனையெங்கும் மயங்கி. மணிக்கால் அமளி - மாணிக்கத்தாற் செய்த கால்களையுடைய படுக்கையிடத்து. நுரைபோற்றோன்றும் தூவணையின் மேலார்.

2921. இளையர் - ஏவலாளர். பொன்னாற் செய்த அரிகளையுடைய கிண்கிணி. பூஞ்சிலம்பு - அழகிய சிலம்பு. (பி - ம்.) 'சிலம்பு மார்ப்ப'. மன்னன் : சீவகன்.

2922. கலவமயில் கால்குவித்த போலுங்கம ழைம்பால்
நிலவுமணி மேகலை நிலாவுமிழும் பைம்பூண்
இலவமலர் வாயினணி கூரெயிற்றி னீரே
உலவுமனம் வைத்துறுதி கேண்மினமி தென்றான்.

**(இ - ள்.)** மயில் கலாபத்திடத்தைக் குவித்தாற் போலும் ஐம்பால் முதலியவற்றையுடைய எயிற்றினீர் ; நும்முடைய மனம் பரந்த மனமாயிருக்கும் ; அதனை ஒருப்படுத்திவைத்து உறுதியாகக் காரியத்தைக் கேட்பீராகவென்றானென்க.

[1] அம் : அசை. (௯௨௪)

(வேறு)

2923. வாயழ லுயிர்க்கு மாழி மன்னவன் குறிப்பு நோக்கி,
வேயழத் திரண்ட மென்றோள் வெம்முலைப் பரவை யல்குல்,
தோய்பிழி யலங்க லார்தந் தொன்னலந் தொலைந்து வாடிக்,
காயழற் கொடியைச் சேர்ந்த கற்பக மாலை யொத்தார்.

வேய் வருந்தத் திரண்ட தோள். தோய்பிழி - செறிந்த மது.

**(இ - ள்.)** அதுகேட்ட தோள் முதலியவற்றையுடைய தேவியர், அழலை வாயுயிர்க்குமொழியையுடைய அரசன் துறவையுட்கொண்டு தம் நலந்தொலைந்து வாடி நெருப்பொழுங்கைச்சேர்ந்த மாலையை யொத்தாரென்க. (௯௨௫)

2924. கருங்கடற் பிறப்பி னல்லால் வலம்புரி காணுங் காலைப்,
பெருங்குளத் தென்றுந் தோன்றா பிறைநுதற் பிணைய னீரே,
அருங்கொடைத் தான மாய்ந்த வருந்தவந் தெரியின் மண்மேல்,
மருங்குடை யவர்கட் கல்லான் மற்றையர்க் காவ துண்டே.

**(இ - ள்.)** பிணையனீரே ! ஆராயுமிடத்து, வலம்புரி கடலிற்பிறப்பினல்லது குளத்தினுள் எந்நாளும்பிறவா ; அதுபோலக் கொடையாகிய

---

2922. அடி, 1 : புறநா. 146 : 8-9. இலவமலர்போலும் வாய். உலவு மனம் - எங்கும் பரத்தலைக்கொண்ட மனத்தை. வைத்து - ஒருப்படுத்தி வைத்து. உறுதியாகிய இது கேண்மின்.

(உரை) [1] கேண்மினம் என்பதிலுள்ளது.

2923. அழலையுயிர்க்கும் வாயையுடைய ஆழி ; ஆழி - சக்கரம். மன்னவன் - சீவகனுடைய. பிழி - தேன். அலங்கலார் : மனைவியர். நலம் - அழகு. அழற்கொடி - நெருப்பினொழுங்கு.

2924. வலம்புரி - ஒருவகைச்சங்கு. தானமும் தவமும். தெரியின் - ஆராய்ந்தால். மருங்கு உடையவர்கட்கல்லால் - செல்வமுடையவர்க் கல்லது. மற்றையர்க்கு - வறுமையையுடையவர்க்கு.

**தானமும், அருந்தவமும் ஆராயின் மண்மேற் செல்வமுடையார்க்கல்லது மிடியர்க்குண்டாந் தன்மையில்லையென்றானென்க.**

**அருங்கொடைத்தானம் - உத்தம தானம்.** (ருஉசு)

2925. அட்டுநீ ரருவிக் குன்றத் தல்லது வைரந் தோன்றா, குட்டநீர்க் குளத்தி னல்லாற் குப்பைமேற் குவளை பூவா, விட்டு நீர் வினவிக் கேண்மின் விழுத்தகை யவர்க ளல்லாற், பட்டது பகுத்துண் பாரிப் பார்மிசை யில்லை கண்டீர்.

**(இ - ள்.) நீர் வெளிப்படுத்தி யான்கூறுகின்ற இதனைக் கேட்பீராக; குன்றத்தல்லது வைரம் தோன்றா; குளத்திலல்லது குவளை பூவா; அவை போலத் தகுதிப்பாட்டையுடையவர்களன்றி இவ்வுலகிற் பகுத்துண்பாரில்லை காணுங்கோளென்றானென்க.** (ருஉஎ)

2926. நரம்பொலி பரந்த கோயி னன்னுதன் மகளிர் தூவும், பெரும்பலிச் சோற்றி னீதல் பெரிதரி தாகு மேனும், சுரும்பொலி கோதை யார்த மனைவயிற் றூண்டோ றூட்டும், அரும்பலி யனைத்து மீயி னதுபொருட் குன்று கண்டீர்.

**(இ - ள்.) அரசன் கோயிலில் தேவியர் பரவித் தெய்வங்கட்குக் கொடுக்கும் பெரும்பலியாகிய சோறுபோல மிகக்கொடுத்தல் மிடியர்க்கு அரிதாயிருக்குமாயினும் தத்தநிலைக்குத் தகும்படி மகளிர் தம்மனையிற் றூண்களிலுறையும் தெய்வங்கட்குத் தூவும் பலியளவும் ஈவர்களாயின், அத்தானம் பின்பு அவர்க்கு மேருவாயிருக்குங்காணுங்கோளென்றானென்க.**

பொருட்குன்று - மகா மேரு. (ருஉஅ)

2927. அற்றவர் வருத்த நீக்கி யாருயிர் கொண்டு நிற்கும், துற்றவி ழீதல் செம்பொற் றுறக்கத்திற் கேணி யாகும், முற்றுயி ரோம்பித் தீந்தே னூனொடு துறப்பின் யார்க்கும், மற்றுரை யில்லை மண்ணும் விண்ணுநும் மடிய வன்றே.

---

2925. அட்டுநீர் - சொரிகின்ற நீரையுடைய; அட்டும் - சொரியும்; சீவக. 112, 2798, ந. விட்டு - வெளிப்படுத்தி. விழுத்தகையவர் - தகுதிப்பாட்டையுடையவர்.

2926. கோயிலில் மகளிர் தூவும் பெரும்பலியாகிய சோற்றினைப் போல். கோதையார் தம் மனைவயின் தூண் தொறும் ஊட்டுகின்ற பலி யனைத்தும் ஈயின்; கோதையார் - மகளிர். அனைத்தும் - அளவாயினும். பொருட்குன்று - மேருமலை.

2927. ஆருயிர் கொண்டுநிற்கும் வருத்தத்தை நீக்கி, அற்றவர்க்குத் துற்றவிழ் ஈதல் துறக்கத்திற்கு ஏணியாகும்; அற்றவர் - பொருளற்றவர். துற்றவிழ் - உண்ணும் சோற்றை. உயிர் ஓம்பி - உயிர்களைப் பாதுகாத்து. தேனையும் ஊனையும் துறப்பின். மற்று : அசை.

(இ - ள்.) ஆருயிர் கொண்டுநிற்கும் வருத்தத்தை நீக்கி அற்ற வர்க்குத் துற்றுஞ் சோற்றைக் கொடுத்தல் துறக்கத்திற்கு வழியாம்; அவையேயன்றிக் கொலைகடிந்து தேனையும் ஊனையும் துறப்பார்க ளாயின், அவர் சிலர்க்கும் மண்ணும் விண்ணும் வந்துவணங்குதற்கு வேறு சில அறம் கூறவேண்டுவதில்லை; நுமக்கு அவ்விரதங்கள் முன்னர் உளவாதலின், மேல் அவ்விரண்டும் நும்மடியிடத்தவன்றே யென்றானென்க. (௯உ௯)

(வேறு)

2928. மாலைப் பந்தும் மாலையு மேந்தி மதுவார்பூஞ்
சோலைம் மஞ்ஞைச் சூழ்வளை யார்தோள் விளையாடி
ஞாலங் காக்கும் மன்னவ ராவார் நறவுண்ணுச்
சீலங் காக்குஞ் சிற்றுப காரம் முடையாரே.

(இ - ள்.) பந்தையும் மாலையையும் [1] கையுறையாகக்கொடுத்துச் சோலையில் மகளிர்தோளிலே விளையாடி ஞாலங்காக்கும் வேந்தர்களாய் ஈண்டிருப்பார், முன்னர்க் கள்ளுண்ணுமையாகிய சீலத்தைக் காக்குஞ் சிறியவுதவியையுடையார் காணுங்கோளென்றானென்க. (௯௯0)

2929. மாசித் திங்கண் மாசின சின்னத் துணிமுள்ளின்
ஊசித் துன்ன மூசிய வாடை யுடையாகப்
பேசிப் பாவாய் பிச்சை யெனக்கை யகலேந்திக்
கூசிக் கூசி நிற்பர் கொடுத்துண் டறியாதார்.

(இ - ள்.) முற்பிறப்பிற் பிறர்க்கிட்டுண்ணுதார், பின்பு அழுக்கினை யுடையனவாகிய சிறிய சீலைகளை முள்ளாகிய ஊசியாலே தைத்த தையல் மொய்த்த ஆடையைக் குளிர்மிக்க காலத்திற்கு உடையாகக்கொண்டு ஓட்டையேந்தி, பாவாய்! பிச்சையிடுகென்று பேசிச் செல்வர்மனையினுட் சேறற்குக் கூசிக்கூசி நிற்பரென்றானென்க. (௯௯க)

2928. மாலைப்பந்து - மாலையாற்சமைத்த பந்து; "புலராப் பச்சிலை யிடையிடுபு தொடுத்த, மலரா மாலைப் பந்துகண் டன்ன" (புறநா. 33 : 12-3); "தாரகம் புதைத்த தண்மலர் நறும்பைந்து" (பெருங். 3. 8 : 64). சோலையிடத்து மஞ்ஞைபோலும் வளையார். நறவு உண்ணுச்சீலம் - முற்பிறப்பில் கள்ளுண்ணுமையாகிய சீலத்தை.

(உரை) [1] கையுறை - கையின்கண்சேர்த்துவது; காணிக்கை.

2929. மாசினவாகிய சின்னத்துணிகளை; சின்னத்துணி - சிறிய துண்டு. முள்ளாகிய ஊசியால். துன்னம் மூசிய - தையல் மொய்த்த. பாவாய்: விளி. கையில் அகலை ஏந்தி. மு. நாலடி. 193; கலித். 18 : 9-10.

(மேற்.) அடி, 1 : பிரயோக. சமாச. 5.

(வேறு)

2930. காட்டகத் தொருமகன் றுரக்கு மாக்கலை
ஒட்டுடைத் தாமெனி னுய்யு நங்களை
ஆட்டியிட் டாருயி ரளைந்து கூற்றுவன்
ஈட்டிய விளைமதுப் போல வுண்ணுமே.

(இ - ள்.) காட்டகத்து ஒட்டவல்லானொருவன் ஒட்டுங்கலை ஓடவற்றுயின் அவனைத் தப்பியும்போம்; அங்ஙனந் தப்பாதபடி கூற்றுவன் நம்மை ஆட்டி உயிரைவாங்கி மதுப்போலவுண்ணுமென்றானென்க.
(௲௲௨)

2931. புள்ளுவர் கையினு முய்யும் புள்ளுள
கள்ளவிழ் கோதையீர் காண்மி னல்வினை
ஒள்ளியா னொருமக னுரைத்த தென்னன்மின்
தெள்ளியீ ரறத்திறந் தெரிந்து கொண்மினே.

(இ - ள்.) கோதையீர்! யான்முற்கூறியவாறேயன்றி நல்வினையாற் புள்ளுவர்கையிலே அகப்பட்டுப் பிழைத்துப்போம் புட்களுமுள; அதுபோல யாமும் நல்வினை செய்தால் அக்கூற்றத்தைத் தப்பிப்போதலுங் கூடுமென்று காண்மின்; அறிவுடையீர்! யான் இங்ஙனங்கூறிய அறத்தினை அறிவுடையானொருவன் பயனின்றாகவுரைத்ததென்று கொள்ளன்மின்; அதன்திறத்தை உலகியல்பால் தெரிந்துகொண்மினென்றானென்க.
(௲௲௲)

2932. மாய்தலும் பிறத்தலும் வளர்ந்து வீங்கலும்
தேய்தலு முடைமையைத் திங்கள் செப்புமால்
வாய்புகப் பெய்யினும் வழுக்கி நல்லறம்
காய்வது கலதிமைப் பால தாகுமே.

---

2930. ஒருமகன் - ஒருவேட்டுவன். துரக்கும் - ஓட்டுகின்ற. கலை - மான். ஒட்டுடைத்தாமெனின் - ஓடவல்லதாயின். அடி, 1 - 2 : புறநா. 193. நங்களை - நம்மை. அளைந்து - வாங்கி. கூற்றுவன் நம்மை அளைந்து உண்ணும்.

2931. புள்ளுவர் - வேடர். ஒள்ளியான் - அறிவுடையான்; சீவக. 741. என்னன்மின் - என்று கொள்ளாதீர். தெள்ளியீர் - அறிவுடையீர்.

2932. அடி, 1-2 : "தேய்த லுண்மையும், பெருக லுண்மையும், மாய்த லுண்மையும், பிறத்த லுண்மையும் அறியா தோரையு மறியக் காட்டித், திங்கட் புத்தே டிரிதரு முலகத்து" (புறநா. 27 : 11-4). நல்லறத்தை வாய்புகப் பெய்யினும்; வாய்புகப் பெய்யினும் - செவியிடத்துச் செல்லும்படி சொரிந்தாலும். வழுக்கி - மனங்கொள்ளாமல். காய்வது - கெடுத்துவிடுவது; கலித். 45 : 1, ந. கலதிமைப்பாலது - தீவினையின் கூறுகும்.

(மேற்.) அடி, 1-2 : நன். பொது. 58, மயிலை, சங்கர; இ - வி. பொது. 53.

(இ - ள்.) திங்கள், சாதலும் பிறத்தலும் தேய்தலும் பெருகலும் யாக்கைக்கு உடைமையாதலை அறியாதோரையுமறியக்காட்டிச் செப்பா நிற்கும்; அதனைக்கண்டும், நல்லறத்தைச் செவிக்குள்ளே செல்லும்படி சொரியினும் அதனைக்கேட்டும் மனங்கொள்ளாதே அவற்றைக் கைவிடுவது தீவினையின் கூறுமென்றுனென்க. (௩௩௪)

2933. புள்ளிநீர் வீழ்ந்தது பெருகிப் புன்புலால்
உள்வளர்ந் தொருவழித் தோன்றிப் பேரறம்
உள்குமேன் முழுப்புலாற் குரம்பை யுய்ந்துபோய்
வெள்ளநீ ரின்பமே விளைக்கு மென்பவே.

(இ - ள்.) சுக்கிலம் பைக்குள்ளே வீழ்ந்தது பெருத்துப் புற்கென்ற தசைபரந்து தான் புக்கவழியாலே புறப்பட்டு அறிவுண்டாய் அறத்தை நன்றென்று கொள்ளுமாயின், அது பிறவியைத் தப்பிப்போம்படியாகக் கடல்போலப் பெரிய வீட்டின்பத்தை விளைவிக்குமென்றுனென்க.

போய் : போகவெனத் திரிக்க. (௩௩௫)

2934. பாற்றுளி பவளநீர் பெருகி யூன்றிரண்
டூற்றுநீர்க் குறும்புழை யுய்ந்து போந்தபின்
சேற்றுநீர்க் குழியுளே யழுந்திச் செல்கதிக்
காற்றுணுப் பெறுதழு தலறி வீழுமே.

(இ - ள்.). சுக்கிலமும் குருதியும் பெருத்துத் தசைதிரண்டு உய்ந்து இடையறுது ஊறுநீரையுடைய சிறுவாயிலாலே போந்தபின், அறிவையுடைத்தாய் அறத்தை நன்றென்று கொள்ளாதாயின், செல்கதிக்கு நல்வினையாகிய [1] பொதிசோற்றைப் பெறுதேபோய் நரகத்தே கிடந்து அழுதுகூப்பிட்டு மீட்டும் அக்குறும்புழைக்குள்ளே அழுந்தி வீழுமென்றுனென்க.

குறும்புழை : இடக்கர். 'பருகி' என்று பாடமாயின் உள்ளடக்கியென்க. (௩௩௬)

2935. திருந்திய நல்லறச் செம்பொற் கற்பகம்
பொருந்திய பொருளொடு போகம் பூத்தலால்
வருந்தினு மறத்திற மறத்த லோம்புமின்
கரும்பெனத் திரண்டதோட் கால வேற்கணீர்.

2933. பேரறம் உள்குமேல் - அறத்தை நன்றென்று கொள்ளுமாயின். குரம்பையினின்றும் உய்ந்துபோய். இன்பம் - வீட்டின்பத்தை.
2934. பால்துளி - சுக்கிலம். பவளநீர் - இரத்தம். ஊற்று நீர்க் குறும்புழை - ஊறுகின்ற நீரையுடைய சிறு வாயிலாலே. ஆற்றுணா - கட்டுச்சோறு.

(உரை) [1] பொதிசோறு - கட்டுச்சோறு.

2935. நல்லறமாகிய கற்பகம். பொருளையும் போகத்தையும் பூத்தலால். அறத்திறம் மறத்தல் - தருமத்தின் கூறுபாட்டை மறத்தலை.

**(இ - ள்.)** வேற்கணீர்! யான்கூறிய நல்லறமாகிய கற்பகம் வீடேயன்றிப் பொருளையும் போகத்தையும் பூத்தலால் வருந்தினீராயினும் அறத்தை மறத்தலை ஒழிவீராகவென்றானென்க.

காலத்தைச்செய்யும் வேல். (௩௩௭)

2936. மந்திர மருந்திவை யில்லை யாய்விடின்
ஐந்தலை யரவினை யாவர் தீண்டுவார்
சுந்தரச் சுரும்புசூழ் மாலை யில்லையேல்
மைந்தரு மகளிரை மருங்கு சேர்கிலார்.

**(இ - ள்.)** உலகத்தில் மந்திரமும் மருந்தும் இல்லையாயிற் போகிற பாம்பைத்தீண்டித் தம்வயத்ததாக்குவாரில்லை; அதுபோல நன்றாகிய நறுநாற்றங்களாற் சுரும்பு சூழுமியல்பு தமக்கில்லையாயின், மைந்தரும் மகளிரருகே சென்று அவரைத் தம்வயத்தராக்குதலிலரென்றானென்க. (௩௩௮)

2937. பொன்றுலாம் பொன்னனீர் தருதும் பாகுநீர்
தின்றலாற் சிறுவரை யானுஞ் சொற்சில
இன்றெலா மெம்மருங் கிருந்து பேசினல்
வென்றுலாம் வேற்கணீர் விழுத்தக் கீர்களே.

**(இ - ள்.)** பொன்னனீர்! வேற்கணீர்! நீரெல்லாம் முன்னர்ப் பாகு தின்று விழுத்தக்கீர்களாயிருத்தலன்றி இன்று எம்மருங்கிருந்து பாகு தின்னுமல் சிறுவரையானும் சிலசொற் பேசுதலரிது; அங்ஙனம் பேசினல் ஒருதுலாம் பொன் தருவேமென்றானென்க. (௩௩௯)

**(வேறு)**

2938. மெய்ப்படு சாந்தும் பூவு மிகநனி கமழு மேனும்
கைப்படு சாந்தும் பூவுங் கொண்டலாற் கலக்க லாகா
ஐப்படு பித்து நெய்த்தோ ரசும்புசோ ரழுகற் புன்றோற்
பொய்ப்பட வுரைத்த துண்டோ பொன்னனீர் நம்மு ளாமால்.

காலவேல் - இறுதியைச் செய்யும் வேல்; "கால வேலான்" (கம்ப. கையடை. 11)

2936. மந்திரமும் மருந்தும் என்ற இவை. சுந்தரம் - அழகு. மாலை - இயல்பு. மருங்கு - பக்கத்தே.

2937. பொன்னனீர், வேற்கணீர் இரண்டும் விளி. பாகு - வெற்றிலை முதலியன. சிறுவரையானும் - சிறிய காலவளவேனும். பேசினல் துலாம் பொன் தருதும். விழுத்தக்கீர்கள் - தகுதிப்பாடுடையீர்.

2938. மெய்ப்படு - உடம்பில் முன்னேயணிந்த. கலக்கலாகா - கூடுதல் முடியா. ஐப்படு - ஐயோடுகூடிய. நெய்த்தோர் - இரத்தம். நம்முள் நாமால்; ஆல் : அசை. மு : நாலடி. 43.

அழுகலசும்பு - மலங்கள்.

(இ - ள்.) பொன்னனீர்! நம்முள் நாமன்றே கூறுகின்றேம்; ஐயோடுகூடிய பித்தையும், குருதியையும், புன்றேலிணையுமுடைய அழுகலசும்பு சோரு மெய்யிலே முன்னேயணிந்த சாந்தும் பூவும் கமழுமாயினும் பின்னுங் கைவழியாகிய சாந்தும் பூவுங்கொண்டல்லது கூடலாகா; அத்தன்மையிற் பொய்யாக யான் கூறியதுண்டோ? கூறுமினென்றானென்க. (௩௪௦)

2939. அனிச்சத்தம் போது போலத் தொடுப்பவே குழைந்து மாழ்கி, இனிச்செத்தாம் பிறந்த போழ்தே யென்றுநா மிதனை யெண்ணி, தனிச்சித்தம் வைத்த றேற்றாந் தளர்ந்துகண் பரப்பி நோக்கிப், பனித்துமென் றுற்ற போழ்தே பழுதிலா வறிவி னென்றும்.

(இ - ள்.) நாம் பிறந்தபொழுதே இனிச் செத்தேமல்லேமோவென்று இதனையெண்ணி, நூலாற்றெடுப்பவே மயங்கிவாடும் அனிச்சப்பூப் போலத் தீவினையுற்றபொழுதே குழைந்து மயங்கித் தளர்ந்து பரப்பி நோக்கி நடுங்குவேமென்றெண்ணிப் பழுதிலாவறிவினுலுண்டாம் தனித்த சித்தத்தை நிலைபெற வைத்தலைத் தெளியேம்; ஆதலால் யாம் உய்யுமாறு என்னையென்றானென்க.

'வாடும்' என ஒருசொல் வருவிக்க. (௩௪௧)

2940. நீனிறங் கொண்ட வைம்பா னிழன்மணி யுருவ நீங்கிப், பானிறங் கொண்டு வெய்ய படாமுலை பையிற் றூங்கி, வேனிற மழைக்கண் டாமு மிமைகுறைந் தழுகி மேனி, தானிறங் கரக்குங் காலந் தையலீர் மெய்ய தன்றே.

(இ - ள்.) தையலீர்! மணியினது நீலநிறத்தைக்கொண்ட மயிர் அவ்வுருவம் நீங்கி வெளுத்து, முலையும் பைபோல ஞான்று, கண்களும் இமையழுகிக் குறைந்து, மேனி ஒளிகெடு மூப்பு மேல் நும்மிடத்தே வருமல்லவோ? அதற்கு முன்னே துறப்பீராகவென்றானென்க. (௩௪௨)

---

2939. தொடுப்பவே - நூலினால் தொடுக்கவே. மாழ்கி என்பதன் பின் 'வாடும்' என ஒருசொல்வருவிக்க. நாம் பிறந்தபோழ்தே இனிச் செத்தாம் என்று எண்ணி. தனித்த சித்தத்தை. பனித்தும் - நடுங்குவேம்.

2940. மணியின் நீனிறம் கொண்ட ஐம்பால் உருவம்நீங்கி; உருவம் - பழைய நிறம். வெய்ய - விரும்பத்தக்க; வெப்பத்தையுடைய எனலுமாம். பையின் தூங்கி - பைபோலத் தொங்கி; "இறும்பூது சான்ற முலையுங் காணாய், வெறும்பை போல வீழ்ந்துவே றாயின" (மணி. 20 : 55-6). கண்தாமும் - கண்களும். நிறம் கரக்கும் - ஒளி கெடும்.

(வேறு)

2941. குஞ்சர மயாவுயிர்த் தனைய குய்கமழ்
அஞ்சுவை யடிசிலை யமர்ந்துண் டார்கடாம்
இஞ்சிமா நகரிடும் பிச்சை யேற்றலால்
அஞ்சினேன் றுறப்பல்யா ணுர்வ மில்லையே.

(இ - ள்.) யானை உயிர்த்தாற்போன்ற ஓசையையுடைய தாளிப்புக் கமழும் அடிசிலையுண்டவர்கள் தாம் பின்னர்ப் பிச்சையேற்றலாற் செல்வத்தில் ஆசை எனக்கில்லை. அரசாட்சியை அஞ்சினேன்; இனி யான் துறப்பேனென்றானென்க. (௫௪௫)

---

## ௨௫. அந்தப்புர விலாவணை

2942. (௧) ஒருவர்தம் வலிகெடு முடன்று பொங்கிமேல்
இருவர்மற் றியைந்தெழுந் திருப்பி னென்பபோல்
உருவநுண் ணுசுப்பிற விருந்த வொண்மணிப்
பரியகட் படாமுலைப் பைம்பொற் கொம்பனீர்.

2943. (௨) காதலங் கழிந்தநா ளிதனி னிப்புறம்
ஏதில மென்றசொற் செவிச்சென் றெய்தலும்
மாதரார் மழைமலர்த் தடங்கண் மல்குநீர்
போதுலா மார்பின்வாய்ப் பொழிந்து வீழ்ந்தவே.

இவையிரண்டும் ஒருதொடர்.

(௧) நீலமணிபோலும் பெரிய கண்.

2941. அயா உயிர்த்தனைய - கொட்டாவி விட்டாற்போன்ற. குய் - தாளிப்பு. அமர்ந்து - விரும்பி. இஞ்சி - மதில். ஆர்வம் - ஆசை.

2942. இருவர் எழுந்திருப்பின் ஒருவர் வலிகெடும் என்பபோல். உருவம் - அழகு. மணிபோலும் பரிய கண்ணையுடைய முலை.

2943. கழிந்த நாளிற் காதலம். இதனின் இப்புறம் ஏதிலம் என்ற சொல் - தருமவுரையைக் கேட்டதற்கு இப்பால் நாம் அயலாரானோம் என்று சீவகன் கூறிய சொல். மாதரார் - மனைவியர். மு : சீவக. 269.

(இ - ள்.) ஒருவர்மேலே இருவரியைந்து உடன்று பொங்கி எழுந்திருப்பின் அவ்வொருவர்வலி கெடுமென்று சொல்லிக்காட்டுவனபோலே நுசுப்பு வருந்த வீங்கின முலைகளையுடைய கொம்பனீர்! இதற்கு முன்பு கழிந்த நாளெல்லாம் இல்லறத்தின்மேற் காதலையுடையேம்; அறங்கேட்டதற்கு இப்பால் அதனைக் கைவிட்ட தன்மையையுடையேமென்ற சொல்லைத் தேவியர் கேட்டவளவிலே அவர்கள்கண்ணீர் இடையறுது சொரிந்து மார்பிலே வீழ்ந்தனவென்க. (௩௪௪-௫)

(வேறு)

2944. செருக்கி நிணந்தின்று சிவந்து மன்ன ருயிர்செற்ற, நெருப்புத் தலைநெடுவேற் கண்ணார் கண்ணீர் நிழன்மணிப்பூட், பரப்பி னிடைப்பாய்ந்து குளமாய்ப் பாலார் படாமுலையை, வருத்தி மணிநெடுங்கோட் டருவி போல வீழ்ந்தனவே.

(இ - ள்.) நிணந்தின்று செருக்கிச் சிவந்து செற்ற வேல்போலுங் கண்ணாருடைய அங்ஙனம்வீழ்ந்த கண்ணீர், பூணாகிய கரையுள்ளே பாய்ந்து குளமாய்நிறைந்து தம்மைத்தாங்கின முலையைவருத்தி மலையினின்றும் அருவி வீழுமாறுபோல அம்முலைகளினின்றும் வீழ்ந்தனவென்க. (௩௪௫)

2945. அழலேந்து வெங்கடுஞ்சொ லுருமே றுண்டாங் கலர்சிந்தி, நிழலேந்து பூங்கொடிக ணிலஞ்சேர்ந் தாங்கு நிலஞ்சேர்ந்து, கழலேந்து சேவடிக்கீழ்க் கண்ணீர் வெள்ளங் கலநிரப்பக், குழலேங்கு மாறேங்கி யழுதார் கோதை மடவாரே.

(இ - ள்.) அங்ஙனநின்றழுத மடவார், பூங்கொடிகள் உருமேறு வீழ்ந்து அலர்சிந்தி நிலத்தே வீழ்ந்துகிடந்ததென்னும்படியாக ஏதிலமென்ற சொல்லாலே சேவடிக்கீழ் நிலத்தே வீழ்ந்துகிடந்து கண்ணீர் வெள்ளம் ஆங்குள்ள கலநிரப்ப அழுதாரென்க.

2944. செருக்கி - மயங்கி. கண்ணாரது கண்ணீர். பூண்பரப்பினிடை - ஆபரணங்களாகிய கரையுள்ளே. அழுதலால் முலையிடைக் குளமாதல்: சீவக. 1523, 1629; "கருங்கால் வெண்குருகு மேயும், பெருங்குள மாயிற்றென் னிடைமுலை நிறைந்தே" (குறுந். 325 : 5-6)

2945. அழல் - தீ. கடுஞ்சொல் - சீவகன் கூறிய கொடுஞ்சொல்லால். நிழல் - ஒளி. பூங்கொடிகள் உருமேறுண்டு அலர்சிந்தி நிலம் சேர்ந்தாங்கு. சேவடிக்கீழ் - சீவகன் பாதத்தில். குழலேங்குமாறு ஏங்கி அழுதார்; "ஆம்பலங் குழலி னேங்கி" (நற். 113 : 11); "குழலினை வதுபோ லழுதனள்" (புறநா. 143 : 15); "வேய்ங்குழல்.........நாண, ஏங்கினள்" (கம்ப. அரசியற். 3)

குழல் ஏங்கியழுமாறுபோல ஏங்கியழுதாரென்க. (ஈசஎ)

(வேறு)

2946. குலிவகஞ் சேற்று ளூறிக் குங்கும நீரு ளோங்கிப்
பொலிகென வண்டு பாடப் பூத்ததா மரைகள் போலும்
ஒலிகழ லடிக ணுங்கிழ்ப் பிழைத்ததென் னுரைமி னென்னப்
புலிநிழற் பட்ட மான்போற் போகுயி ராகி நின்றார்.

அத்தேவியர் அவனடிமுதலாக முடியளவுநோக்கிக் கூறுகின்றார்.

(இ - ள்.) குலிகச்சேற்றிலே மூளைத்துக் குங்குமம் கலந்த பனி நீரிலே வளர்ந்து வண்டாகிய பாணர் பரிசில் பெறுதற்குப் பொலிகெனப் பாடப் பூத்த தாமரைப்பூக்கள் போலுந் திருவடிகளே! யாங்கள் நும்மி டத்துப் பிழைத்தது யாது? அதனை உரைமினென்றுகூறிப் புலிக்கட் பட்ட மானுயிர்போலப் போதற்கொருப்பட்ட உயிராகி நின்றாரென்க. (ஈசஅ)

2947. அருந்தவி சாகி யெம்மைச் சுமந்தயா வுயிர்த்த வாண் மைப், பெருந்தகு குறங்கு காணீர் பெண்ணுயி ரளிய தாமே, வருந் துமா லென்று நோக்கீர் வாடுமா லாவி யென்னீர், விருந்தினர் போல நின்றீர் வெற்றுடல் காண்மி னென்பார்.

(இ - ள்.) முன்னர் எமக்குத்தவிசாகி எம்மைச்சுமந்து இளைப்பாற் றிய ஆளுந்தன்மையையுடைய குறங்குகாள்! நீங்கள் அளிக்கத் தக்க பெண்ணுயிர் தாம் அளியாக்கால் வருந்துமென்று நினையீராய் இவ்வருத் தமேயன்றி இவ்வுயிர் வாடுமென்று நினையீராய் விருந்தினரைப்போல நின்றீர்; இனி வெற்றுடலைக் காண்பீராகவென்பாரென்க. (ஈசகூ)

2948. கோதையுந் துகிலு மேந்திக் குங்கும மெழுதிக் கொய்பூந்
தாதுகொண் டளகத் தப்பித் தடமுலை வருடிச் சேர்ந்து
காதல் கொண் டிருந்த காமர் கைவிர லளிய நீரும்
ஏதில ராகிக் கோமா னெண்ணமே யெண்ணி னீரே.

---

2946. குலிகம் - சாதிலிங்கம். நாறி - தோன்றி. ஓங்கி - வளர்ந்து. அடிகள் - சீவகனுடைய பாதங்கள்; விளி. நுங்கீழ்ப் பிழைத்தது என் - நும்மிடத்துச்செய்த பிழை யாது? என்ன - என்று. போகுயிராகி - போவதற்குத் துணிந்த உயிரை உடையவராகி.

2947. இப்பாடல், சீவகனுடைய துடைகளை நோக்கிக் கூறுவது. தவிசு - ஆதனம். அயாவுயிர்த்த - இளைப்பாற்றிய. குறங்குகாள் - துடை களே. அளிய - அளிக்கத் தக்க. ஆவிவாடும் என்னீர்; என்னீர் - என்று எண்ணுதவராய்.

2948. இப்பாடல், சீவகனுடைய கைவிரல்களை நோக்கிக் கூறுவது. கோதை - மாலை. குங்குமம் - குங்குமச்சாந்து. அளகம் - முன்னுச்சி மயிர். வருடி - தடவி. கைவிரல்: விளி. அளிய - எம்மை அளிக்கத்தக்க. ஏதிலர் - அயலார். கோமான்: சீவகன்.

அளகம் - [1] பனிச்சை.

(இ - ள்.) ஏந்தி எழுதி அப்பித் தைவந்து சேர்ந்து காதலைக்கொண் டிருந்த விரல்களே ! எம்மை யருளத் தக்க நீரும் எமக்கு அயலாராகி அரசனெண்ணியதனையே எண்ணினீர் ; இது தகுமோவென்பாரென்க.

செந்தீக்கடவுளை வலஞ்செய்து அதுசான்றாக நும்மைப் பாதுகாப்பே மென்று எங்கைகளைப் பற்றின நீரென்றலின், உம்மை சிறப்பும்மை. 'சாந்தங், காதல்கொண் டணிந்த' என்றும் பாடம். (ருசுo)

2949. பஞ்சிகொண் டெழுதி யார்ந்த சீறடி பனித்த லஞ்சிக்,
குஞ்சிமே லேற்ற கோமான் கொப்புளித் திட்ட வெம்மை, வஞ்சித்
தீர் மணிசெய் தோள்காள் வாங்குபு தழுவிக் கொள்ளீர், நெஞ்ச
நீர் வலியீ ராகி நிற்பிரோ நீரு மென்பார்.

(இ - ள்.) தோள்காள் ! எழுதி அழகுநிறைந்த அடி ஊடுகின்ற காலத்து உடம்பிற்பட்டால் நொந்துநடுங்குமென்றஞ்சித் தலையிலேற்ற அரசன் இனி நுகரேமென்று கைவிட்ட எம்மை நீர் அணைத்துத் தழுவிக் கொள்ளீர் ; இனி நீரும் நெஞ்சம்வலியீராகி நிற்பீரோ ? அங்ஙனம் நிற்பீ ராயின், நும்முடைய கை எங்களைப்பற்றித் தெளிவிக்கின்ற காலத்து அதற்கு உதவியாயிருந்தும் உண்மை செப்பாது வஞ்சித்தீரென்பா ரென்க.

'நெஞ்சின்' என்ற பாடத்திற்கு நெஞ்சுபோலென்க. ஈண்டும் [1] உம்மை : சிறப்பு. (ருசுக)

2950. முட்டுவட் டனைய கோல முத்துலாய்க் கிடந்து மின்ன
மட்டுவிட் டலர்ந்த கோதை மதுவொடு மயங்கி நாளும்
ஒட்டியிட் டுறைய வெங்கட் குயரணை யாய மார்பம்
நட்புவிட் டொழியு மாயி னன்மையார் கண்ண தம்மா.

---

(உரை) [1] கூந்தலின் ஐம்பால்களுள் ஒன்றன்பெயர்.

2949. இப்பாடல் சீவகனுடைய தோள்களை நோக்கிக்கூறுவது. பஞ்சி - செம்பஞ்சுக்குழம்பு. பனித்தல் அஞ்சி - நடுங்குதற்குப்பயந்து. அடியைக் குஞ்சிமேலேற்ற. கொப்புளித்திட்ட - கைவிட்ட. எம்மை - எங் களை. வஞ்சித்தீர் - வஞ்சனைசெய்தீர். வாங்குபு - அணைத்து. நீர் தழு விக்கொள்ளீர் ; நீரும் நிற்பீரோ என்க.

(உரை) [1] நீரும் என்பதிலுள்ளது.

2950. இப்பாடல் சீவகனுடைய மார்பத்தை நோக்கிக்கூறுவது. முட்டுவட்டு - அரக்கு வட்டு ; "முட்டிணை வட்டும்" (பெருங். 1. 38 : 170). கோலம் - திரட்சியையுடைய. மட்டு - தேன். கோதை - எமது மார்பிலுள்ள பூமாலை. மதுவொடு - உன்னிடத்துக் கிடந்த மாலையி லுள்ள தேனோடு. ஒட்டியிட்டு - ஒன்றுபட்டு. மார்பம் : விளி. நன்மை - நற்குணம்.

(இ - ள்.) ஒன்றோடொன்றுசேர்ந்து அரக்குவட்டனையவாய்த் திரண்டு பெருத்த முத்துக் கிடந்து மின்ன எம்முடைய மார்பிற்கோதை நின்னிடத்துக் கிடந்த மாலையின்மதுவோடே மயங்கி நாடோறும் ஒன்று பட்டுறையும்படி எங்கட்கு அணையாய மார்பமே! கேளாய்; எம்மோடு கொண்ட நட்புக் கைவிட்டு நீங்கின், மற்று நற்குணம் யாரிடத்தே யுள்ளதுகூறுயென்பாரென்க. (௯௫௨)

2951. மாக்கவின் வளரத் தீண்டி மணிநகை நக்கு நாளும், பூக்கவி னார்ந்த பைந்தார் புனைமதுத் தேனெ டேந்தித், தாக்கி யெம் முலைக டம்மை நெருக்கினாய் தரணி மன்னின், நீக்கிநீ யெம்மை நோக்காய் நீத்தியோ நீயு மென்பார்.

(இ - ள்.) எம்முடைய பெரிய அழகு வளரும்படி தீண்டி மாணிக் கத்தின வொளியை நீதோற்றுவித்து மதுவைத் தேனினத்தோடேயேந்தி மற்றுள்ள பூக்களினழகு நிறைந்த கழுநீர்த்தாரே! நீ எம்முலைகளைத் தாக்கி நெருக்கினாய்; அங்ஙனநெருக்கிய நீயும் தரணிமன்னனைப்போல எம்மைநீக்கிப் பாதுகாவாயாய்க் கைவிட்டுநின்றாயோவென்பாரென்க. (௯௫௩)

2952. அன்னமே தோகை நல்யா ழமுதமே யாய்ந்த தீந்தேன்
இன்னரே நங்கை மாரென் றேத்திய பவளச் செந்நா
என்னை நீ கண்ட தெம்மை யிரண்டுநா வாயி னாயே
மன்னன்போ லீர மின்றி வலித்தனை வாழி யென்பார்.

(இ - ள்.) நங்கைமார், அன்னம், தோகை, யாழ், அமுதம், தேனென்கின்ற இத்தன்மையரேயென்று ஏத்திய பவளமாகிய செவ்விய நாவே! நீ மன்னனைப்போல் அருளின்றி எம்மை அழித்துக்கூறத் துணிந்தனை; இங்ஙனங்கூறுதற்கு எம்மிடத்துக் கண்ட குற்றம் எத் தன்மைத்தாகிய குற்றம்; அதனைக் கூறு; கூறாயேல் நீ இரண்டு நாவாயேவிட்டாயென்பாரென்க. (௯௫௪)

---

2951. இப்பாடல் சீவகனுடைய மார்பின்மாலையை நோக்கிக் கூறுவது. கவின் - அழகு. மணி நகை நக்கு - மாணிக்கத்தின் ஒளியைத் தோற்றுவித்து. பூக்கவின் ஆர்ந்த பைந்தார் - பூக்களினழகை நிறையக் கொண்ட பசுமையான கழுநீர்மாலை; விளி. மது - தேன். தேன்: ஒரு வகைவண்டு. மன்னின் - மன்னனைப்போல. நீயும்; உம்மை: சிறப்பு.

2952. இப்பாடல், சீவகனுடைய நாவைநோக்கிக் கூறுவது. அன்னமே; ஏ: அசை. இன்னரே - இத் தன்மையையுடையவர்களே. செந்நா - செவ்விய நாவே; விளி. நீ எம்மிடத்துக்கண்டது என்னை? வலித்தனை - எம்மை வெறுத்துக் கூறத்துணிந்தாய். வாழி: அசை.

2953. பூணினு னெருங்க நொந்து பொதிர்த்தன வெம்பி யென்று, நாணினுல் வருத்தந் தீர்ப்பா னன்முலைக் கண்க டம்மைப், பேணிநீ ரெழுதி யோம்பிப் பேரின்பங் கொண்டு தந்தீர், காண்மினே வின்றெம் வண்ணங் கண்ணிலீர் கண்க ளென்பார்.

(இ - ள்.) இவை பூணோடே நெருங்குதலாலே வெம்பி நொந்து புடைக்கொண்டனவென்று அரசன்கருதி அவன் நொய்தாக அணிந்த பொன்னுணினுற் பின்னும் அம்முலைகட்குப் பிறந்த வருத்தத்தை நீக்குதற்குக் கண்களே! நீர் அம்முலைக்கண்களைப் பேணி நும்மணி களாலே எழுதிப் பாதுகாத்துப் பேரின்பத்தைக்கொண்டு எமக்கும் பேரின்பத்தைத் தந்தீர்; இங்ஙனம் இன்பத்தைத் தந்த நீர் துன்பமாகக் கருதி இன்று அருளிலீராயினீர்; எம்வண்ணம் கெட்டபடியை இனிக் காண்பீராகவென்பாரென்க. (௩௫௫)

2954. சென்னிமேன் மிதித்த வஞ்செஞ் சீறடித் திருவில் வீச
மின்னிவா ளாரஞ் சிந்த வெறுநிலத் துறைந்து நீயெம்
இன்னகை முறுவல் பார்த்தா யின்றெம தாவி பார்த்தாய்
மன்னிய மாலை வண்டார் மணிமுடி வாழி யென்பார்.

(இ - ள்.) வண்டார் மாலையினையுடைய நீலமணிபோலும் மயிர் முடியே! வெறுநிலத்திலே ஆரம் மின்னிச் சிந்த அரசன் வீழ்ந்து வணங்கவும் அவன் சென்னிமேலே திருவில்வீச மிதித்த சீறடியிலே நீயுறைந்து எம் முகிழ்நகை எய்துமோவென்று முன்புபார்த்தாய்; இன்று எமதாவி வருந்துதலையும் பார்த்தாய்; நின்வழிபாடு பொய்யாயிருந்த தென்பாரென்க.

வாழி: அசை. என்பார் என்பாரென்றவற்றிற்கு ஆயினுரென வருவித்து முடிக்க. இத்துணையும் அவயவங்களைநோக்கிக் கூறிற்றுகத் தேவர்கூறினர்; "சொல்லா மரபி னவற்றொடு கெழீஇச், செய்யா மரபிற் றொழிற்படுத் தடக்கியும்" (தொல். பொருளியல், 2) என்னும் பொருளியற் சூத்திரத்தாலென்றுணர்க. (௩௫௬)

2953. இப்பாடல், சீவகனுடைய கண்களை நோக்கிக்கூறுவது. பொதிர்த்தன - வீங்கின. தீர்ப்பான் - தீர்த்தற்கு. கண்ணிலீர் - அரு ளில்லாதவராயினீர். கண்கள்: விளி.

2954. இப்பாடல் சீவகனுடைய மயிர்முடியை நோக்கிக்கூறுவது. திருவில் வீச - இந்திரவில்லைப்போல் பல நிறத்தை வீச. வாள் ஆரம் - ஒளியையுடைய முத்துமாலை. எமது ஆவி வருந்துதலைப் பார்த்தாய். மணிமுடி - நீலமணிபோலும் நிறத்தையுடைய மயிர்முடியே; விளி.

2955. வீங்குபாற் கடலு நஞ்சாய் விளைந்ததால் விரிந்த
வெய்யோன், பாங்கிலா விருளை யீன்று பார்மறைத் திட்ட தாலோ,
தீங்கதிர்த் திங்கள் செந்தீச் சொரிந்ததாற் றிசைக ளெல்லாம்,
தாங்குமா றென்னை யாவி தரிக்கிலேந் தேவிர் காளோ.

(இ - ள்.) அரசன் இங்ஙனந் தன்தன்மை திரிந்தமையால், இனிப் பாற்கடலும் நஞ்சாய்விளைந்தது; வெய்யோன் தன்னிடத்தில்லாத இருளை ஈன, அவ்விருள் பாரை மறைத்துவிட்டது; திங்கள் திசைகளெல்லாம் செந்தீயைச் சொரிந்தது; ஆதலால், தேவிர்காள்! யாம் எம்மாவியைத் தரிக்கமாட்டுகிலேம்; அதனைத் தரிக்குமாறு எங்ஙனம்? கூறுவீராகவென்பாராயினரென்க.

ஈன்று - ஈன. (ருருஎ)

(வேறு)

2956. விண்ணோர் மடமகள்கொல் விஞ்சை மகளேகொல்
கண்ணோர் கழிவனப்பிற் காந்தருவ தத்தையென்
றெண்ணய வாணெடுங்கண் மெய்கொள்ள வேமுற்றுப்
பண்ணோற் பயின்றீ ரினியென் பயில்வீரே.

இனித் தேவியர் அரசனைநோக்கி ஒருவரையொருவர் காட்டிக் கூறுகின்றார்.

(இ - ள்.) உலகம் எண்ணுந்தன்மையுண்டாய வனப்பிற் றத்தையுடைய வாள்போலுங்கண் அறிவைக் கவர்ந்துகொள்ளுகையினாலே இவளை விண்ணோர் மகளோ; விஞ்சைமகளோவென்று மயக்கமுற்று விஞ்சைமகளேயென்று துணிந்து யாழ்வென்று உறவுகொண்ட நீர் இங்ஙனம் கைவிட்ட நிலையில் என்ன உறவு கொண்டீராவீரென்க. (ருருஅ)

2957. கொல்வே னெடுங்கட் குணமாலை குஞ்சரத்தால்
அல்லனோ யுற்றாளுக் கன்று களிறடர்த்துப்
புல்லிப் புணர்முலையின் பூங்குவட்டின் மேலுறைந்தாய்
எல்லேமற் றெம்பெருமாற் கின்றிவளு மின்னாளோ.

2955. நஞ்சு - விடம். மறைத்திட்டதால் - மறைத்துவிட்டது; ஆல்: அசை. திங்கள் திசைகளெல்லாம் தீயைச்சொரிந்தது. என்னை - எவ்விதம். தேவிர்காள். ஓ: அசை. மு: நைடதம், சந்திரோபா. 30.

2956. கழிவனப்பின் - மிக்க அழகையுடைய. எண்ணய - எண்ணுந் தன்மையையுடைய. மெய்கொள்ள - அறிவைக் கவர்ந்துகொள்ள. ஏமுற்று - மயங்கி. பண்ணால் - இசையோடு.

2957. கொல்லுகின்ற வேலைப்போலும் நெடிய கண்ணையுடைய. குஞ்சரம் - அசனிவேகம். குணமாலையாகிய அல்லல்நோயுற்றவளுக்கு. முலையாகிய குவட்டின்மேல். எல்லே - வெளியாக; சீவக. 653, ந. இவளும் - குணமாலையும்.

**(இ - ள்.)** குணமாலை யானையால்வருத்தமுற்ற இவள்பொருட்டு அன்று அவ்யானையைவருத்தி இவளைப் புல்லியுறைந்தாய்; அங்ஙன முறைந்த நினக்கு இன்று இவளும் வெளியாக யின்னுளாயினளோ வென்க. (நகூகூ)

2958. தூம்புடைய வெள்ளெயிற்றுத் துத்தி யழலுகப்
பாம்புடைய நோக்கிப் பதுமை பவழவாய்
தேம்புடைய வின்னமுதாச் சேர்ந்தாய்க் கினியதுவே
ஆம்புடைய நஞ்சடங்கிற் றின்றூறிற் றாகாதே.

தேம்புதலையுடைய பதுமை. இனி - இங்ஙனநீக்கின நிலையால். மேல் வளருங் கூற்றினையுடைய நஞ்சு ஒருபுறத்தேயடங்கித் தீராமல் நின்றது; அதுவே இன்று ஊறிற்றாகாதோவென்க.

**(இ - ள்.)** புரையினையுடைய எயிற்றினையும், பொறியினையும், நஞ்சினையுமுடைய நாகப்பாம்பின் நஞ்சு உடையும்படி நோக்கிப் பதுமை வாய் அமுதமாகக்கொண்டு கூடின நினக்கு அந்நஞ்சே தீர்ந்த தில்லையாகாதோவென்க. (நசுo)

2959. தாழ்ந்துலவி மென்முலைமேற் றண்ணாரம் வில்விலங்கப்
போழ்ந்தகன்ற கண்ணிணை லேப்பெற்றுப் போகலாய்
தாழ்ந்தமர ரின்னமிர்தந் தக்கநாட் டாகாதே
வீழ்ந்ததென வீழ்ந்தாய்நீ யின்றதுவும் விட்டாயோ.

போழ்ந்து - போழ.

**(இ - ள்.)** முலைமேல் ஆரந்தாழ்ந்து உலவி ஒளியைக் குறுக்கிடும் படியாகக் கண்ணிணையாலே நின்னெஞ்சைப் பிளக்க எய்த ஏவைப் பெற்றுப் போக மாட்டாயாய்ச் சுரர்கொண்டுபோகின்ற அமுதம் தாழ்ந்து வீழ்ந்தது, தக்கநாட்டிலேயாகாதேயென்று கருதி விரும்பினாய்; இன்று அவ்விருப்பமும் விட்டாயோவென்க. (நசுக)

---

2958. தூம்பு - துளை. துத்தி - பொறி. அழல் - விடம். நாகப் பாம்பு உடைய நோக்கி - நாகப்பாம்பின்விடம் கெடும்படி பார்த்து. பதுமையுடைய வாயை அமுதாகச் சேர்ந்தாய்க்கு. தேம் - இனிமை யெனலுமாம். ஆம் புடைய - மேல் வளரும் திறத்தையுடைய. நஞ்சு அடங்கிற்று இன்று ஊறிற்றாகாதோ; அடங்கிற்று - அடங்கியதே.

2959. தண்ணாரம் - குளிர்ச்சியைக் கொண்ட முத்துமாலை. வில் விலங்க - ஒளியைக் குறுக்கிடும்படியாக. கண்ணிணையாலெய்த ஏவைப் பெற்று; ஏ - அம்பு. வீழ்ந்தாய் - விரும்பினாய். இப்பாடலிற் சீவகன் கேமசரியை மணந்தது கூறப்பட்டுள்ளது; சீவக. 20.

2960. கண்ணோ கயலோ கழுநீரோ காவியோ
பெண்ணோ வமுதோ பிணையோ வெனப்பிதற்றித்
துண்ணென் சிலைத்தொழிலுங் காட்டிமுன் னின்புற்றீர்
புண்மேற் கிழிபோற் றுறத்தல் பொருளாமோ.

(இ - ள்.) இவள் பொருட்டுச் சிலைத்தொழிலையும் அரசனுக்குக் காட்டி இவளைப் பெற்றபின்னர், இவளைப் பெண்ணோ! அமுதோவென்றும், முகத்தில் இவை கண்ணோ! கயலோ! கழுநீரோ! காவியோ! பிணையோவென்றும் புனைந்துரைத்து முன்பு இன்புற்ற நீர் இக்காலத்துப் புண்ணிற்கிடந்த சீலை போலத் துறத்தல் அறமாமோவென்க. (ஙசஉ)

2961. பொன்னகர வீதி புகுந்தீர் பொழிமுகிலின்
மின்னி னிடைநுடங்க நின்றாடன் வேனெடுங்கண்
மன்ன னகரெல்லாம் போர்ப்ப வலைப்பட்டீர்க்
கின்னே யொளியிழந்த வின்று விடுகினவோ.

பொழிமுகில் கூறிற்று, மிகவிளங்குதற்கு. மன்னன் - சச்சந்தன். இனி, 'மன்ன' என்று பாடமாயின், ஒருமை பன்மை மயக்கமாம். 'போர்ப்ப' என்றது, "எங்கெங்கே நோக்கினு மங்கங்கே தோன்றுமே" (சீவக. 1971) என்றதனை.

(இ - ள்.) இராசமாபுரத்து வீதியிலே புகுந்த நீர் விமலைகண் சூழ்போத அவ்வலையிலே அகப்பட்டீர்; அவ்வலைப்பட்ட உமக்கு அக்கண் இப்படியே இன்றுவாய் ஒளிகெட்டுக் குறைந்தனவோ வென்க. (ஙசங)

2962. செங்கச் சிளமுலையார் திண்கறையூர் பல்லினார், மங்கையர்கள் காப்ப மகிழ்ந்தாளை நீமகிழ்ந்து, பங்கயமே போல்வாளைப் பார்ப்பானுய்ப் பண்ணணைத்துத், தங்கினாய் கோவே துறத்த றகவாமோ.

2960. காவி - நீலோற்பலமலர். பிணை - மான்; கண்ணுக்குவமை. சிலைத்தொழில் காட்டியது: சீவக. 1640, 1641. கனகமாலையையின்புற்றீர். புண்மேற்கிழி - புண்ணை ஆற்றுதற்கு அதன்மேற்போட்ட துணி. பொருள் - தருமம். இப்பாடலில் சீவகன் கனகமாலையை மணந்தது கூறப்பட்டது.

2961. முகிலினிடத்து மின்னைப்போலும் இடைநுடங்க; நுடங்க - அசைய. நின்றாள்: விமலை. மன்னன் நகரெல்லாம் - சச்சந்தனுடைய நகர முழுதும். இன்னே - இப்படியே. கண் இன்றுவாய் ஒளியிழந்து இடுகினவோ; இடுகுதல் - குறைதல். இப்பாடலிற் சீவகன் விமலையை மணந்தது கூறப்பட்டது.

2962. செங்கச்சை யணிந்த இளமுலையார் - இளமங்கையர். பல்லினார்: முதியமகளிர். முலையாரும், பல்லினாருமாகிய மங்கையர். மகிழ்ந்தாளை - உவந்திருந்த சுரமஞ்சரியை. பார்ப்பானுய் - வேதியனாய். பண் அணைத்து - பாட்டால் சேர்த்து. தகவு - தகுதிப்பாடு.

முதுமையாற் கறைபோக விளக்கமாட்டாத பல்லினர். பங்கயமே போல்வாள் - தாமரை ஞாயிற்றையே நோக்குமாறு போல நின்னையே நோக்கிக் கற்புக்கடம் பூண்டவள்.

(இ - ள்.) கோவே! இளையரு முதியருமாகிய மங்கையர் காப்ப அக் காவலை மகிழ்ந்தாளை நீயுமகிழ்ந்து பார்ப்பானுய்ச் சென்று பாட்டாலே சேர்த்துக் கூடினாய்; இனி இங்ஙனம் துறத்தல் நினக்குத் தகுதிப் பாடோவென்க.

'பண்ணாலைத்து' என்ற பாடத்திற்குப் பண்ணாலே அவள் வன்மையை நெகிழ்த்தென்க. (௫௬௪)

2963. புல்லா ருயிர்செகுத்த பொன்னந் திணிதோளாய்
மல்லா ரகன்மார்ப மட்டேந்தி வாய்மடுத்திட்
டெல்லாருங் காண விலக்கணையோ டாடினாய்
அல்லாந் தவணடுங்க வன்பி னகல்வாயோ.

(இ - ள்.) தோளாய்! மார்பனே! ஏந்த மதுவை எடுத்துக் கொடுத்து இலக்கணையோடு புணர்ந்தாய்; அங்ஙனம் புணர்ந்த நீ அவள் அலமந்து நடுங்க அன்பினின்றும் அகல்வாயோ வென்க.

ஏந்தி - ஏந்த. (௫௬௫)

## ௨௪. கோயில்விலாவணை

2964. (௧) கல்லோ மரனு மிரங்கக் கலுழ்ந்துருகி
எல்லாத் திசைதோறு மீண்டி யினமயில்போற்
சொல்லாத் துயர்வார் தொழுவா ரழுவாராய்
அல்லாந் தகன்கோயி லாழ்கடல்போ லாயிற்றே.

2965. (௨) பூப்பரிவார் பொன்செய் கலம்பரிவார் பொன்வளையை
நீப்பி ரெனப்புடைப்பார் நீடாமஞ் சிந்துவார்
ஏப்பெற்ற மான்பிணைபோ லேங்குவா ரின்னுயிரைக்
காப்பரேற் காவலனர் காவாரோ வின்றென்பார்.

2963. புல்லார் - பகைவரது. மட்டு - கள்ளை. வாய் மடுத்திட்டு - இலக்கணையின் வாயிடம் நெருங்கிக் கொடுத்து. அவள் அல்லாந்து - இலக்கணை அலமந்து. அன்பினின்றும் அகல்வாயோ.

2964. கல்லும் மரனும்; ஓ: அசை. சொல்லா - சொல்லி. அல்லாந்து - அலமந்து. கோயில் - அரண்மனை.

2965. பரிவார் - அறுப்பார். புடைப்பார் - மோதி உடைப்பார். நீள் தாமம் - நீண்ட மாலையை. ஏ - அம்பு.

2966. (ங) கழுநீருந் தாமரையுங் கண்டனவே போலும்
முழுநீர்வேற் கண்ணும் முகமு முலறிச்
செழுநீர் மணிக்கொடிகள் காழகஞ்சேர் கொம்பாய்
அழுநீர வாயலறி யல்லாப்ப போன்றரே.

இவை மூன்றும் ஒரு தொடர்.

(க) சொல்லாவென்றதுடன் என்று இங்ஙனஞ் சொல்லியென முற் கூறியவற்றைக் கூட்டியுரைக்க.

(உ) காவலனர் - காத்தலை வல்லவர்.

(ங) கழுநீரையும் தாமரையையும் சேரக் கண்டாற்போலும் கண்ணு முகமுமென்க.

(இ - ள்.) தேவியர் கலங்கி நெஞ்சுருகிக் கல்லும் மரமுமிரங்கா நிற்க இங்ஙனஞ்சொல்லி, பூப்பரிவார்; கலம்பரிவார்; புடைப்பார்; சிந்துவார்; ஏங்குவார்; என்பாராய் உலறி மணிக்கொடிகள் கருமை சேர்ந்த கொம்பாய் அலறி அழுந்தன்மையவாய் அலமருவனவற்றை ஒத்தார்; அதுகண்டு, எல்லாத் திசைகளிலும் நின்ற மகளிரும் இனமயில் போலீண்டி துயர்வார்; தொழுவார்; அழுவாராய் அலமருகையினலே கோயிலில் கடலொலிபோலே ஒலியுண்டாயிற்றென்க.

(ங) வளவிய நீர்மையையுடைய மணியென்றார், பல நிறத்து மணி களையும் கருதி. (ஙசுசு - அ)

(வேறு)

2967. பண்ணார் பணைமுழவம் பாடவிந்து பன்மணியாழ் மழலை நீங்கிப், புண்ணார் புனைகுழலு மேங்கா புனைபாண்டி லிரங்கா வான்பூங், கண்ணுறொலிகவுள கிண்கிணியு மஞ்சிலம்புங் கலையு மாரா, மண்ணார் வலம்புரியும் வாய்மடங்கிக் கோன்கோயின் மடிந்த தன்றே.

2966. உலறி - காய்ந்து. காழகம் சேர் - கருமை சேர்ந்த. அழு நீரவாய் - அழுந்தன்மையவாய். அல்லாப்ப - அலமருவனவற்றை.

2967. பண்ணார்யாழும், பணைமுழவும் பாடவிந்து; பாடு அவிந்து - ஒலியடங்கி. குழல் - வேய்ங்குழல். பாண்டில் - கஞ்சதாளம். கவுள - பக்கத்தையுடைய. ஆரா - ஒலியாவாய். வாய்மடங்கி - ஊதாதொழிந்து. கோன்கோயில் - சீவகனுடைய அரண்மனை.

மண்ணூர்கோன் - உலகெல்லாம் புகழ்நிறைந்த கோன்; இனி, மண்ணூர் வலம்பரி - அரக்கிட்டாடின வலம்புரி யென்றுமுரைப்ப.

(இ - ள்.) பூப்போலும் கண்ணுருடைய மழலைமொழிபோய் அழுங் குரல் மயங்குதலாலே, பெரிய முழவமும் பண்ணூர் யாழும் ஒலிகெட்டுத் துளையார்ந்த குழலும் ஊதாவாய்க் கஞ்சதாளமும் ஒலியாவாய் ஒலிக் கின்ற பக்கத்தையுடைய கிண்கிணி முதலியவும் ஒலியாவாய் வலம்புரியும் ஊதாதொழிந்து அரசன் கோயில் ஆரவாரமற்றதென்க. (௩௬௯)

2968. அணியார் மணியரக்கு வட்டழுத்தி வைத்தனைய செங்கண் மாத்தாட், பிணியார் பெருந்துருத்தி யன்ன பெருங் கவுள பிறையேர் கோட்ட, பணியார் கமழ்கடாத் தண்ண லரசுவாப் பண்ணூர் பாய்மா, இணையாது மில்லாத கண்ணீர் வீழ்த் துண்ணூநின் றினைந்த தாமே.

(இ - ள்.) அண்ணலுடைய மணியிணையும் கண்ணிணையும் தாளிணை யும் வண்டுகள் படிய நிறைந்த கடாத்திணையுமுடைய கவுள கோட்ட வாகிய யானைகள், யாதும் ஒப்பில்லாத பண்ணுதல் நிறைந்த குதிரைகள் தாமுண்ணுவாய் அழுது வருந்தினவென்க. (௩௭௦)

2969. கழித்த கடிப்பிணையுங் கைவளையு மாலையுங் களைந்து முத்தும், தொழித்த நறுஞ்சாந்துஞ் சுண்ணமும் பன்மணியுங் கலனுஞ் சிந்தி, விழித்து வியன்கோயில் பன்மீன் பரந்திமைக்கும் பனியார் வானம், பழித்துப் பசும்பொன் னுலகு குடிபோயிற் றொத்த தன்றே.

சாந்தும் சுண்ணமுமளைந்த மணியென்க. களைந்து கழித்த சிந்தி விழித்து - வாங்கிப் போகடப்பட்டன சிந்தி விளங்கி யென்க. 'களைந்த முத்து' என்றும் பாடம். தொழித்த கலன் - ஆரவாரித்த கலன்.

(இ - ள்.) கோயில் கடிப்பிணை முதலியன விழித்துப் பன்மீனிமைக் கும் வானைப் பழித்து மக்களெல்லாம் போந்து அரசனிடத்தே நிற்றலிற் பொன்னுலகு குடிபோன தன்மையை ஒத்ததென்க. (௩௭௧)

---

2968. யானையின் கண்ணிற்கு அரக்குவட்டு உவமை. மாத்தாள் - பெரிய பாதத்தையுடைய. அரசுவா - இராச யானை; சீவக. 2231, 3087; சூளா. மந்திர. 32. பாய்மா - குதிரை. இனைந்த - வருந்தின.

2969. கடிப்பிணை - குதம்பை போல்வதோரணி; காதைப்பெருக்கு வதற்கிடுவது. மீன் - நட்சத்திரம்.

2970. அழலாற் சுரையெயிற்று வெஞ்சினவைந் தலைசுமந்த வெகுளி நாகம், நிழலார் திருமணியுந் தேவர் திருமுடிமே னிலவி வீசும், சுழலார் பசும்பொன்னும் வேய்ந்து சொரிகதிர்மென் பஞ்சி யார்ந்த, கழலா னகர மமுது கடைகடல்போற் கலங்கிற்றன்றே.

அழல் - நஞ்சு. சுரை - பொய். நாகத்தின் தலைசுமந்த மணியும் பொன்னும் மேலே வேய்ந்து கதிரைச் சொரிகின்ற நகரமென்க. சுழலுத லார்ந்த தேவர் முடிமேல் நிலவி வீசுங்கழல் - வலஞ்செய்த நிறைந்த தேவர் வணங்கின முடிமேல் நிலைபெற்று ஒளியைவீசும் அடியென்க; கழல் : ஆகுபெயர்; பஞ்சியார்ந்த கழல் - நிறத்தாலும் மென்மையாலும் செம்பஞ்சியின் தன்மைநிறைந்த அடி. அது மேல், "திருவடிப்போ தமரர் முடிமே லணிந்தாரே" (சீவக. 3090) என்பதனாலுணர்க.

(இ - ள்.) மேல் தேவர் வணங்கும் கழலானது நகரம் கடல்போற் கலங்கிற்றென்க. (ௗஎ௨)

---

## உ௫. நகரவிலாவணை

### (வேறு)

2971. நீர்நிறை குளத்து மாரி சொரிந்தென நறுநெய் துள்ளும்
நேர்நிறை பொரியுங் குய்யும் வறைகளு நிவந்த வாசம்
பார்நிறை யடிசிற் பள்ளி தளியொடு சாலை யெல்லாம்
ஊர்நிறை யுயிர்த்த லின்றி யுயிர்சென்ற போன்ற வன்றே.

குளத்திலே மழைபெய்ததென்னும்படி துள்ளும் நறுநெய்யாற் பொரித்த பொரிக்கறி; பல காயங்கள் குறிக்கு நேராக நிறைந்த பொரிக் கறி. குய் - தாளிக்குங்கறி. வறைகள் - துவட்டின கறிகள். பாரிலே நிறைந்த புகழினையுடைய ஊர்.

(இ - ள்.) [1]அடுக்களைகளிலும், கோயில்களிலும், சோறிடுஞ்சாலை களிலும் சமைக்கும் பொரியலும் குய்யலும் வறையலும் வளர்ந்த வாசம்

---

2970. அழல் - விடம். சுரை எயிறு - உள்ளே துளையையுடைய பற்கள்; சீவக. 2958. நாகத்தின் ஐந்தலையிற் சுமந்த நிழலார்மணி; நிழல் - ஒளி. கழலான் நகரம் - சீவகனுடைய இராசமாபுரம்.

2971. குய் - தாளிப்புடைய கறி. வறை - வறையல்; வறுவலென வழங்கும். நிவந்த - வளர்ந்த. அடி, 1-2 : புறநா. 386 : 1-3. அடிசிற் பள்ளி - உணவு சமைக்கும் இடம். தளி - கோயில். சாலை - சோறிடும் சாலை. தளியும் சாலையும்; சீவக. 306.

(உரை) [1] அடுக்களை : அடுக்குள் என வழங்கப்படும்.

ஊர்நீறையும்படி தோன்றுதலின்றாய் அவ்விடங்கள் உயிர்சென்றாற் போன்றனவென்க. (ஙஎங)

2972. கோட்புலிச் சுழல்கண் ணன்ன கொழுஞ்சுவைக் கருனை முல்லை, மோட்டிள முகையின் மொய்கொள் கொக்குகிர் நிமிரல் வெண்சோ, றூட்டுறு கறிகொ டேமாங் கனிசுவைத் தயிரொ டேந்தி, வேட்டவர்ப் பெருது வீதி வெறுநிலங் கிடந்த வன்றே.

புலிக்கண்போன்ற நிறத்தையுடைய கருனைக்கிழங்கு. முல்லைமுகை யாற்செய்த பந்துபோலத் திரட்டுதல் கொண்ட சோறு; ஒரோவோர விழ் கொக்குகிர் போலும் நீட்சியையுடைய சோறு. உண்ணப் பண்ணுங் கறி. தேமாவிற் கொண்ட கனி.

(இ - ள்.) முன்பு சோற்றையும் கருனை முதலியவற்றையும் தயி ரோடே ஏந்தி விரும்பினூர்க்குக் கொடுக்கின்ற வீதிகள், இன்று அரசன் துறவினுல் வருந்தி விரும்புவாரின்மையின், அவர்களைப் பெருமல் வெறு நிலமாய்க் கிடந்தனவென்க. (ஙஎச)

2973. மைந்தர்தம் வண்கை யான்முன் மணிவள்ளத் தெடுத்த தேறல், பைந்துகின் மகளிர் மேவார் பாசிழை பசும்பொன் மாலை, சிந்தியே கரந்தார் சொற்போன் மெய்யின்கட் சேர்த லின்றாய்ச், சந்தனச் சாந்தொ டாரந் தாங்கவி னிழந்த வன்றே.

(இ - ள்.) மைந்தர் தம் கையாலே முன்பு மகளிர்க்கெடுத்த தேறலை இன்று எடுத்தலை மேவார்; மகளிர் இழையையும் மாலையையும் சந்தனக் குழம்பையும் ஆரத்தையுஞ் சிந்தி அவற்றை மேவார்; அவர் அங்ஙன மேவாமையின், அவை அழகிழந்தனவென்க.

---

2972. கருனைக்கிழங்கிற்குப் புலியின் கண் உவமை; "புலிக்கண் வெப்பர்" (புறநா. 269 : 4). முல்லைமுகையினைப்போன்ற வெண்சோறு; "மாதர்மென் முல்லை யீன்ற வான்முகை யனைய மூரல்" (நைடதம், நாடு. 14). கொக்குகிர்நிமிரல் வெண் சோறு - கொக்கினது நகத்தைப் போன்ற நீட்சியையுடைய வெண்மையான சோறு; "கொக்குகிர் நிமிரன் மாந்தி" (நற். 258 : 6). ஊட்டுறு - உண்ணப்பண்ணும். சுவையுடைய தயிர். வேட்டவர் - விரும்புபவரை.

2973. வள்ளம் - கிண்ணம். தேறல் - மதுத்தெளிவு. மேவார் - பொருந்தார். கரந்தார் சொல்போல் - மறைப்பவரின் பொய்ச்சொல்லைப் போல். ஆரம் - முத்துமாலை. கவின் - அழகு.

உண்மைப் பொருளின்கட் செல்லுதல் செய்யாத துறவோர் சொல்லுஞ்சொல் பற்றுவிடாதிருக்கவும் பற்றற்றன போன்றிருக்குமாறு போல, அவர்களும் பற்றுண்டாயிருக்கவும் அரசன் துறக்கின்ற வருத்தத்தால் இவற்றிற்பற்றில்லாதார்போல மேவாதிருந்தாரென்றுகொள்க. (ருஎ௬)

2974. தாழிவாய் மறைக்குந் தண்ணென் றடம்பெருங் குவளைக் கண்ணூர், சூழிவாய் முல்லை மாலை முலைமுக முரிந்து நக்க, யாழின்வாய் முழவம் விம்ம வாட்டொழிந் தயர்ந்து தீந்தேன், ஊழிவாய்க் கொண்ட தொக்கும் பாடலு மொழிந்த தன்றே.

(இ - ள்.) தாழியின் வாயை மறைக்கும் குவளைபோலுங் கண்ணூர் பெட்டியின் முல்லைமாலை முலைமேலே நக்க முழவொலிப்ப முரிந்தாடும் ஆட்டுமொழிந்து யாழின்வாயிசைக்கேற்பப் பாடும் பாட்டும் ஒழிந்து அவ்வூர் வருந்திற்றென்க.

ஊழ் : ஊழியெனத் திரிந்தது. தேனினந் தான் பாடுமாறுழிந்து முறைமைப்படப் பாடினலொக்கும் பாட்டு. (ருஎசு)

2975. அருங்கல நிறைந்த வம்பூம் பவழக்கா றிகழும் பைம்பொற், பெருங்கிடு கென்னுங் கோலப் பேரிமை பொருந்தி மெல்ல, ஒருங்குட னகர மெல்லா முறங்குவ தொத்த தொல்லென், கருங் கடல் கல்லென் சும்மை கரந்தது மொத்த தன்றே.

அருங்கலம் நிறைந்த அம்பூம்பவழக்கால் - [1] மணிபுனை செம்பொற் கொட்டை வம்பணி பவளக்கால்; பவழக்கால் திகழுங்கிடுகு; கிடுகு - சட்டம். நகரிக்கு அங்காடி கண்ணுகவும் சட்டம் அதற்கு இமையாகவும் உவமஞ்செய்தார்.

(இ - ள்.) நகர் கிடுகென்னும் இமை பொருந்தி உறங்குவதொத்தது; அதுவேயன்றி ஒலியவிந்து கிடத்தலிற் கடல் சும்மையை மறைத்ததுவு மொத்ததென்க.

இதனுல், அங்காடியடைத்ததென்றூர். (ருஎஎ)

2974. அடி, 1 : சீவக. 833, அடிக். சூழிவாய் - பூவிடு பெட்டி. ஆட்டொழிந்து - ஆடுதலை நீங்கி. ஊழிவாய்க் கொண்டதொக்கும் - முறைமைப்படப் பாடினலொக்கும். ஒழிந்த - நீங்கின.

2975. அடி. 1-2 : சீவக. 113, அடிக். சும்மை - ஒலி.

(உரை) [1] சீவக. 113.

2976. கலையுலாய் நிமிர்ந்த வல்குற் கடல்விளை யமுத மன்னார், முலையுலாய் நிமிர்ந்த மொய்தார் முழவுமுத் துரிஞ்சி மின்னச், சிலையுலாய் நிமிர்ந்த மார்பன் றிருநகர் தெருள்க லாதாய், நிலை யிலா வுலகின் றன்மை நீர்மைமீக் கூறிற் றன்றே.

அமுதமன்னார் முலையுலாய்ப் பரந்த மார்பன் ; தாரும் முழவுபோலு முத்தும் உரிஞ்சி மின்னும்படி சிலையுலாவி நிமிர்ந்த மார்பன்.

(இ - ள்.) மார்பனது நகர், பொலிவழிதலால் இராசமாபுரமென்று தெளியலாகாததாய் உலகின் தன்மை நிலையில்லா நீர்மையாயிருக்கு மென்று மேலாகக் கூறிற்றென்க. (ருஎஅ)

(வேறு)

2977. கூந்த லகிற்புகையும் வேள்விக் கொழும்புகையும்
ஏந்து துகிற்புகையு மாலைக் கிடும்புகையும்
ஆய்ந்த பொருளொருவர்க் கீயா வதிலோப
மாந்தர் புகழேபோற் றேன்று மறைந்தனவே.

(இ - ள்.) கூந்தலுக்கு இட்ட புகையும், யாகத்திற் புகையும், துகிற்கு ஏந்தின புகையும், மாலைக்கு இட்ட புகையும் பொருளை ஈயாத உலோபர்புகழ்போல மறைந்தனவென்க. (ருஎகூ)

2978. புல்லுண் புரவி புலம்பு விடுகுரல்போல்
நல்லவளை போழுரவ நாரை நரல்குரல்போற்
கல்லா விளையர் கலங்காச் சிரிப்பொலியும்
கொல்யானைச் சங்கொலியுங் கூடா தொழிந்தனவே.

2976. கலை - மேகலை. உலாய் - பரந்து ; சூழ்ந்து எனலுமாம். முழவு போலும் முத்து. தாரும் முத்தும் உரிஞ்சி ; உரிஞ்சி - உராய்ந்து. மார்பனது நகர் ; மார்பன் : சீவகன். தெருள்கலாதாய் - தெளிய வொண்ணாததாய். உலகின் தன்மை நிலையிலா நீர்மையது என்று. மீக்கூறல் - மேலாகக் கூறுதல்.

2977. துகிற்கு ஊட்டிய புகை. அடி, 1-2 : கருத்தொப்பு : " அட்டி லுமிழ்ந்தன புகைய கிற்புகை, நெட்டிலு மிழந்தன " (கம்ப. நகர்நீங்கு. 204). ஆய்ந்த - ஆய்ந்து ஈட்டிய. அதி - மிகுதி. தோன்றுவாய் மறைந் தனவே.

(மேற்.) அடி, 3-4 : பிரயோக. திங்ஙு. 11.

2978. புலம்புவிடு குரல்போல் - சோம்புவிடுங்கால் உண்டாகும் ஒலியைப்போல. வளை - சங்கு. இளையர் சிரிப்பொலிக்கு நாரையின் குரல் உவமை. யானையும் சங்கும் ஒலிக்கின்ற ஒலி.

(இ - ள்.) புரவி வருந்திச் சோம்பு போக்குங்கால் எழும் விளிபோலச் சங்கறுக்கின்ற அரவமும், நாரை நரலுங்குரல்போல இளையர் விடாது சிரிக்கின்ற சிரிப்பொலியும், யானையும் சங்கும் ஒலிக்கின்ற ஒலியும் அவ் விடத்துக் கூடாமல் நீங்கினவென்க. (௩அ௦)

2979. பொற்புடைய பூமாலை சாந்தம் புனைகலன்கள், கற்புடைய மங்கையரிற் காவ லவையிழந்த, நற்புடைய தேனீர் நறவு நயம்புல்லார், சொற்பொருள்போல் வேட்கப் படாசோர்ந் தொழிந்தனவே.

(இ - ள்.) மாலையும் சாந்தமும் கலன்களும் நறவும் கற்புடைய மங்கையரைப் போலக் காவலிழந்தவை, அறிவில்லார் சொற்பொருள் சோர்ந்து வேட்கப்படாதவாறுபோல வேட்கப்படாவாய் ஒழிந்தனவென்க. (௩அ௧)

2980. தீம்பால் கிளிமறந்து தேவ ரவிமடங்கித்
தூம்பார் நெடுங்கைம்மாத் தீங்கரும்பு துற்றுவாய்
ஆம்பா லுரைமடங்கி யாரும் பிறர்பிறராய்க்
காம்பார் நடுவிருட்கட் காடேபோ லாயிற்றே.

ஆம்பாலுரைமடங்கி யாரும் பிறர் பிறராய்-அரசன் துறவினைத் தாமுமுட் கொண்டமையின், மனவேட்கையாலே நுகரப்படும் பொருள் கள் மேல் நிகழும் பகுதியையுடைய வார்த்தைகள் மீண்டு, அவற்றிற் பற்றுதலின்மையின், யாரும் சுற்றத்தொடர்ச்சியற்றவர்களாய். இடை யாமத்திருளில் நின்ற முள்ளுடை மூங்கில் நிறைந்த காடேபோலென்ற தனுற் பயன் : இவ்வூரிற் பெற்ற செல்வந்தன்னையே நுகர்ந்தாற் பின்னும் (மயக்கஞ் செய்யும் பிறவியாகிய இருளைப் பிறப்பித்தலும், முட்போலப் பற்றினால் தொடக்கிக்கோடலும், வீட்டுப்பயன் கொடாமையுமாம்). ஆதலின், துறவுள்ளம் பிறந்தோர்க்கு இத்தன்மைத்தான நகரி காடு போலாயிற்று ; கிளிக்கும் தேவருக்கும், களிற்றிற்கும் பொருள்களி னுகர்ச்சியின்மையிற் காடுபோலாற்று.

(இ - ள்.) மறத்தலானும் மடங்குதலானும் துற்றுவாய் நிற்றலானும் பிறர்பிறராய் நிற்றலானும் அவற்றிற்கும் அவர்க்கும் நகரி காடுபோ லாயிற்றென்க. (௩அ௨)

2979. மங்கையரின் - மங்கையரைப்போல. நற்பு - நன்மை. நயம்புல்லார் - அறிவில்லாதவர் ; நயம் - அறிவு. வேட்கப்படாவாய்ச் சோர்ந்தொழிந்தனவென்க.

2980. தீம்பால் கிளிமறந்து ; "நிறைந்த பால்கிளி, வட்டிலு மிழந்தன" (கம்ப. நகர்நீங்கு. 204). தூம்பு - துளை. துற்றுவாய் - உண்ணுதனவாகி. காம்பு - மூங்கில்.

2981. நீர்முழங்கு நீல நெடுமேக மால்யானைத்
தேர்முழங்கு தானைத் திருமாலின் முன்றுறப்பான்
பார்முழங்கு தெண்டிரைபோற் செல்வந்தம் பாலர்க்கிந்
தார்முழுது நாடு முரவோன்றாள் சேர்ந்தவே.

*நீரினையுடைய முழங்குமேகம்போலும் யானையும் தேரும் முழங்கும் தானையையுடைய அரசன்.*

**(இ - ள்.)** ஊரிலுள்ளாரும், நாட்டிலுள்ளாரும் அரசன் முன்னாகத் துறத்தற்குக் கடல்போலுஞ் செல்வத்தைத் தமது புதல்வர்க்கு அளித்து அறிவுடையோன்றாளைச் சேர்ந்தாரென்க. (௩அ௩)

---

## உ௬. துறவுவலியுறுத்தல்

### (வேறு)

2982. கொல்லுலைப் பொங்கழற் கிடந்த கூரிலை
மல்லல்வே லிரண்டொரு மதியுள் வைத்தபோற்
செல்லநீண் டகன்றகஞ் சிவந்த கண்ணினூர்
அல்லலுற் றழுபவர்க் கரசன் சொல்லினான்.

சொல்லினான் : முற்றுவினைத்திரிசொல்.

**(இ - ள்.)** அங்ஙனம் சேர்ந்த அளவிலே, மதியுள்ளே இரண்டு வேலைச் சேரவைத்தாற்போல முகத்திலே கிடந்து செவியுறநீண்டு அகன்று சிவந்த கண்ணினூரழுபவர்க்கு அரசன் ஒருமொழி கூறினானென்க. (௩அ௪)

### (வேறு)

2983. நற்றவம் பரவை ஞால நாமுட னிறுப்பின் வையம்
அற்றமி றவத்திற் கென்று மையவி யனைத்து மாற்றா
திற்றென வுணர்ந்து நிற்பிற் றிருமக ளென்று நீங்காள்
பற்றறுடே நிற்பி னென்றுந் திருமகள் பற்றல் செல்லாள்.

2981. திருமாலின்முன் - சீவகனுக்கு முன்னாக; உலகத்தைக் காக்கும் அரசனைக் காவற்றொழிற்குரிய திருமாலாகக் கூறுதல் மரபு; "திருவுடை மன்னரைக் காணிற் றிருமாலைக் கண்டேனே யென்னும்" (திருவாய்மொழி, 4. 4 : 8). துறப்பான் - துறவுபூணுதற்கு. பாலர் - குமரர்.

2982. கொல்லனுலையிடத்து அழலிற் கிடந்தவேல். அகம் - உள்ளம். கண்ணினூராய் அல்லலுற்று அழுபவர்க்கு. அரசன் : சீவகன்.

2983. நாம், தவத்தையும் ஞாலத்தையும் உடன்நிறுப்பின். அற்றம் இல் - குற்றம் இல்லாத. ஐயவி அனைத்தும் - வெண்சிறுகடுகளவும். அடி, 1-2 : சீவக. 3027. நிற்பின் - தவத்தே நின்றால். பற்று - ஆசை. மு : புறநா. 358.

(இ - ள்.) நாம் தவத்தையும் ஞாலத்தையும் சேரநிறுப்பின், ஞாலம் தவத்திற்கு எந்நாளும் வெண்சிறுகடுகளவும் நிறையாற்றாது; அதனை இற்றெனவுணர்ந்து அத்தவத்தே நிற்பின், திருமகள் என்றும் நம்மை நீங்காள்; நாம் பற்றோடே நிற்பின், திருமகளும் நம்மைப் பற்றுதல் செய்யாள்; ஆதலாற் பற்றுவிட்டுத் தவஞ்செய்ம்மினென்றானென்க. (ருஅரு)

2984. உப்பிலிப் புழுக்கல் காட்டுட் புலைமக னுகுப்ப வேகக், கைப்பலி யுண்டி யானும் வெள்ளின்மேற் கவிழ நீரும், மைப் பொலி கண்ணி னீரான் மனையக மெழுகி வாழ, இப்பொருள் வேண்டு கின்றீ ரிதனை நீர் கேண்மி னென்றான்.

(இ - ள்.) யானும் சுடுகாட்டிலே பாடைமேலே கிடந்து புலைமகன் ஒரு கையாலே புழுக்கலாகிய பலியைவிட்டு நீரையுகுப்ப அவற்றையுண்டு கவிழ, நீரும் கண்ணீரான் மெழுகி வாழ இப்பயனில் பொருளை விரும்பா நின்றீர்; அதனைவிட்டு இப்பயனுடைய பொருளைக் கேட்பீராகவென்றா னென்க.

புலைமகனென்றார், புரோகிதனை; அவன் தன்குலத்திற்குரியன செய்யாது அரசன் குலத்துக்குரிய தொழில்களை மேற்கொண்டு நிற்றலின்; "புலைய னேவப் புன்மே லமர்ந்துண்டு" (புறநா. 360) என்றும், "இழி பிறப்பினோ னீயப் பெற்று" (புறநா. 363) என்றும் பிறரும் கூறினர்; நாவிதனுமாம். கவிழ்தல் - பொன்றக் கெடுதல். (ருஅசு)

2985. (க) கொல்சின யானை பார்க்குங் கூருகிர்த் தறுக ணாளி, இல்லெலி பார்த்து நோக்கி யிறப்பின்கீ ழிருத்த லுண்டே, பல்வினை வெள்ள நீந்திப் பகாவின்பம் பருகி லல்லால், நல்வினை விளையு ளென்னு நஞ்சினுட் குளித்த லுண்டே.

2984. காட்டுள் புழுக்கலைப் புலைமகன் உகுப்ப; காடு - சுடுகாடு. உப்பிலிப்புழுக்கல் - உப்பிடப்பெறாததாகிய புழுக்கிய சோறு. வெள்ளில் - பாடை. அடி, 3 : புறநா. 249 : 14.

2985. ஆளி - சிங்கம். இல்லெலி - வீட்டெலி. இறப்பு : வீட்டி னிறப்பு. உண்டே; ஏ : எதிர்மறை. பகா இன்பம் - வீட்டின்பம். நல்வினையாலுண்டாகிய விளையுள் : செல்வம்.

2986. (உ) ஆற்றிய மக்க ளென்னு மருந்தவ மிலார்க ளாகிற்,
போற்றிய மணியும் பொன்னும் பின்செலா பொன்ன னீரே,
வேற்றுவ ரென்று நில்லா விழுப்பொருள் பரவை ஞாலம்,
நோற்பவர்க் குரிய வாகு நோன்மின நீரு மென்றான்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) பல்வினை - இருவினை. பகா இன்பம் - நீங்காவீட்டின்பம். நல்வினை விளையுள் - நல்வினையாலுண்டாகிய செல்வம்.

(உ) ஆற்றிய - தேடிய. என்னும் - சிறிதும்.

(இ - ள்.) பொன்னனீர்! யானையையுணவாகப் பார்க்கும் யாளி எலியை உணவாகப் பார்த்திருத்தலில்லை; அதுபோல அறிவுடையோர் வீட்டின்பமாகிய அமுதைப் பருகுதலன்றிச் செல்வமாகிய நஞ்சினைப் பருகி அதனுள்ளே அழுந்துதலில்லை; அத்தன்மையையும் நெஞ்சினால் நோக்கி, மக்கள் தேடிவைத்த தவம் சிறிதுமுடையரல்லராயின், அவர்களாற் பேணிவைக்கப்பட்டவாகிய மணியும் பொன்னும் பின்செலா; அவையல்லா விழுமிய பொருள்களும் ஞாலமும் அவரை வேற்றுவரென்று நினைத்து அவர்பக்கல் நில்லாவாய் நோற்பவர்க்கு உரியவாய்நிற்கும்; அத்தன்மையையுநோக்கி நீரும் நோற்பீராக வென்றானென்க.

நோக்கியென்றதனை இரண்டற்குங்கூட்டுக. (௩அஎ-அ)

2987. காதலஞ் சேற்றுட் பாய்ந்த மதியெனுங் கலங்க னீரை
ஊதுவண் டுடுத்த தாரா னுவர்ப்பினி னுரிஞ்சித் தேற்ற
மாதரார் நெஞ்சந் தேறி மாதவஞ் செய்து மென்றார்
காதலான் காத லென்னு நிகளத்தா னெடுங்க ணாரே.

உவர்ப்பு - வெறுப்பு; அஃதாவது பொருள்கண்மேற்சென்ற பற்றுள்ளத்தை விடுதல். தாரானாகிய காதலான் தன்மனைவியர்மேல் வைத்த காதலென்னும் பிணிப்பினாலே தேற்றவென்க. ஈண்டுக் [1] காதலென்றது பல

2986. மக்கள் ஆற்றிய தவம் இலார்களாகின். பொருளும் ஞாலமும் நோற்பவர்க்கு உரியவாகும்.

2987. காதலாகிய சேற்றுள் பாய்ந்த மதியாகிய நீரை; மதி - மகளிரது அறிவு. தாரானாகிய காதலான், மதியெனும் நீரை உவர்ப்பினா லுரிஞ்சி, காதலென்னும் நிகளத்தால் தேற்ற; நிகளம் - பிணிப்பு. மாதரார் - மனைவியர்.

(உரை) [1] ஈண்டுக் காதலென்பதற்கு உரையாசிரியர் எழுதும் பொருள் கூர்ந்தறியற்பாலது.

பிறப்பிலும் நமக்கு மனைவியராய் வந்தவர் இப்பிறப்பிற் செய்யுந் தவத்தாற் பிறப்பற்று வீடுபெறவேண்டுமென்று காதலித்த காதலை. அன்றிக் காதலனிடத்து வைத்த காதலால் துறந்தாரென்றல் பொருந் தாமையுணர்க. காதலாகிய சேற்றுக்குள்ளே பாய்ந்துநின்ற நீர்.

(இ - ள்.) காதலான், மாதராருடைய அறிவென்னுநீரைக் காத லாகிய பிணிப்பாலே உரிஞ்சித் தேற்ற அவர்நெஞ்சு வெறுப்பினால் தேறித் தவஞ்செய்து மென்றாரென்க. (ரு அகூ)

2988. தூமஞ்சால் கோதை யீரே தொல்வினை நீத்த நீந்தி, நாமஞ்சால் கதியி னீங்கி நன்பொன்மே லுலகி னுச்சி, ஏமஞ்சா லின்பம் வேண்டி னென்னொடும் வம்மி னென்றான், காமஞ்சாய்த் தடர்த்து வென்ற காஞ்சனக் குன்ற மன்னன்.

காமத்தைத் தள்ளி நெருக்கின ஏமஞ்சாலின்பம் - வீடு.

(இ - ள்.) மேருவையொப்பான், கோதையீரே! நாற்கதியினின்று நீங்கி இருவினைக்கடலை நீந்தித் துறக்கத்துக்கு மேலான வீட்டின்பத்தை விரும்புவீராயின், இன்று என்னுடனே துறத்தற்கு வருவீராகவென்றா னென்க. (ரு கூ௦)

2989. நாடக நயந்து காண்பார் நலங்கிளர் கண்கள் சூன்றும்
ஆடகக் கலத்து ளான்பா லமிர்தினை நயந்துண் பாரை
நீடகம் வெகுண்டுங் கையாற் பிடித்துநீ றட்டி யிட்டேம்
கோடக மணிந்த கோல முடியினாய் துறத்து மென்றார்.

நாடகமெனவே பாட்டும் கூறிற்று; "விளியாதான் கூத்தாட்டுக் காண்டலும்" (திரி. 11) என்றலின். சூன்றும் - தோண்டியும். உண்பாரை நீறட்டியுமென்றது, உண்பாரை உண்ணாமல்தடுத்துமென்ற வாறு. நீடகம் வெகுண்டும் - மிக்க அன்பினாற் புணர்கின்றாரை நெடுங் காலம் நெஞ்சாலே வெகுண்டும். கையாற்பிடித்தும் - நறிய நாற்றங்களை நுகர்கின்றாரை நுகராமற் கையாற் பிடித்தும். இட்டேமென்றது, யாங்கள் பிறந்ததொரு பிறப்பிலே பிறரை இங்ஙனம் ஐம்பொறியால் நுகராமல் தடுத்து யாமும் நுகர்ச்சியைக் கைவிட்டேமாதலின், இனி

2988. தூமம் - அகிற்புகை. இன்பம் - வீட்டின்பம். குன்ற மன்னன்: சீவகன்.

2989. ஆடகக்கலத்துள் - பொன்னாலாகிய பாத்திரத்துள். பால மிர்து - பாலன்னம். கோடகம் - ஒருவகைமுடி. துறத்தும் - துறப்பேம்.

எமக்கு நுகர்ச்சி இன்றென்றவாறு. கோடகம்: [1] தாமம், முகுடம், பதுமம், கோடகம், கிம்புரியென்னும் ஐவகையிற் சிகரமாய்ச் செய்தமுடி.

(இ - ள்.) அதுகேட்ட தேவியர், முடியினய்! எமக்கு இனி நுகர்ச்சி யின்மையின், யாமும் நின்னோடு துறத்தலைச் செய்வேமென்றாரென்க. (௩௯௯)

(வேறு)

2990. சாந்தங் கிழிய முயங்கித் தடமலராற்
கூந்தல் வழிபட்ட கோவேநீ செல்லுலகில்
வாய்ந்தடியேம் வந்துன் வழிபடுநா ளின்றேபோற்
காய்ந்தருளல் கண்டா யெனத்தொழுதார் காரிகையார்.

முயக்கத்தால் வருத்தம் நிகழ்ந்ததாகக் கருதி மலராற் கூந்தலை வழி பட்டு வருத்தந்தீர்த்த கோவேயென்றது, எமக்கு வருத்தமில்லாததனை வருத்தமாகக்கொண்ட நீ ஈண்டு வருத்தமுள்ளதனைத் தீர்க்கின்றிலை யென்றதாம். வாய்ந்து - வீடுபெறுதற்குரிய தவங்கள் எமக்கு வாய்த்து.

(இ - ள்.) அத்தேவியர், கோவே! நீ செல்லும் வீட்டுலகின்கண்ணே அடியேமும் வாய்த்து வந்து நின்னை வழிபடுநாள், இன்றுபோலே முனிந் தருளாதொழிகவென்று தொழுதாரென்க. (௩௯௨)

## உ௭. தேவிமார்துறவு

(வேறு)

2991. தெண்டிரை நீத்த நீந்தித் தீங்கதிர் சுமந்து திங்கள், விண்படர்ந் தனைய மாலை வெண்குடை வேந்தர் வேந்தன், கண்டிரண் முத்த மாலைக் கதிர்முலை நங்கை மாரை, வெண்டிரை வியக்குங் கேள்வி விசயைகண் ணபயம் வைத்தான்.

திங்கள் கடலை நீந்திக் கதிரைச் சுமந்து விண்ணிலே சென்றாற் போன்ற குடையையுடைய வேந்தன். கண் திரண்ட முலை. கடல்போலும் நூற்கேள்வி.

---

(உரை) [1] தாமம் முதலிய முடிவகை ஐந்தன் பெயர்கள்; முருகு. 83-4, ந; சூடாமணி நிகண்டு, 7 : 22.

2990. உன் வழிபடும் நாள் - உன்னை வழிபடுகின்ற நாளில். காய்ந்தருளல் - கோபியாதே. காரிகையார் - மனைவியர்.

2991. கதிர் - கிரணம். மாலையையுடைய வெண்குடை வேந்தன்: சீவகன். திரை வியக்குங் கேள்வி விசயை; "கடலே யனையம்யாங் கல்வியால்" (நன்னெறி, 7). அபயம் - பயமின்மை.

(இ - ள்.) வேந்தன், தேவியரை விசயையிடத்தே அச்சமின்றாக வைத்தானென்க. (௩௯௩)

2992. கடிமலர் நிறைந்து பூத்த கற்பகக் கொம்புங் காமர், வடிமலர் மலர்ந்த காம வல்லியுந் தம்மைத் தாமே, உடைமலர் கொய்து போக வுகுத்திடு கின்ற தொத்தார், படைமலர் நெடுங்க ணல்லார் பாசிழை நீக்கு கின்றார்.

சிறந்தமலர் தேனிறைந்தலர்ந்த கொம்பு. விருப்பம் வடிந்த மலர் மலர்ந்த வல்லி.

(இ - ள்.) தேவியர், தம்மெய்யணிகளைத் தாமே நீக்குகின்றவர், கொம்பும் வல்லியும் தம்முடைய மலர் தம்மிடத்து நின்றும் போம்படி கொய்து சிந்துகின்ற தன்மையை ஒத்தாரென்க. (௩௯௪)

2993. தழுமலர்த் தாம நான்று சந்தகின் மணந்து விம்மும், செழுமணி நிலத்துச் செம்பொற் றிருமுத்த விதான நீழல், எழுமையும் பெறுக வென்னு மெழின்முலை நெற்றி சூழ்ந்தார், கழுமிய துகிலிற் காமன் கண்புடைத் திரங்க மாதோ.

(இ - ள்.) பருமையாலே தழுவப்படுந் தாமம் நான்று சந்தன மணந்து அகிற்புகை விம்மும் நிலத்திலே மேற்கட்டியினிழலிலே அவரை யிருத்திக் காமன் இரங்கத் துகிலான் முலைநெற்றியைச் சூழ்ந்தாரென்க.

கணவனை எழுமையும் பெறுகவென்னுமுலை. இழைதெரியாமல் மயங்கிய துகில் ; கழுமல் - மயக்கம். (௩௯௫)

2994. நறும்புகை நான நாவிக் குழம்பொடு பளிதச் சுண்ணம், அறிந்தவ ராய்ந்த மாலை யணிந்தபைங் கூந்த லாய்பொன், நிறந் தரு கொம்பு நீலக் கதிர்க்கற்றை யுமிழ்வ வேபோற், செறிந்திருந் துகுத்துச் செம்பொற் குணக்கொடி யாயி னாரே.

---

2992. காமர் வடி மலர் - விருப்பம் வடிந்த மலரை. உகுத்திடுதல் - சிந்துதல். படைமலர் - காமன்படையாகிய நீலமலரைப்போன்ற. இழை - ஆபரணம்.

2993. நான்று - தொங்கவிடப்பட்டு. விதானம் - மேற்கட்டி. நெற்றி - உச்சி. கழுமிய - மயங்கிய. காமன் இரங்கத் துகிலால் முலைநெற்றியைச் சூழ்ந்தார்.

2994. நாவியினது நானக்குழம்பு ; நாவி - கஸ்தூரி. பளிதச் சுண்ணம் - கருப்பூரப்பொடி. பொன் நிறம் தரு கொம்பு - கற்பகக் கொம்பு. கூந்தலை உகுத்து.

**(இ - ள்.)** அங்ஙனஞ் சூழப்பட்ட அவர்கள், கற்பகக்கொம்பு நீலக் கதிர்த்திரளைக் கழிப்பனவபோல நாவியினது நானக்குழம்போடே புகையையும் கருப்பூரப்பொடியையும் மாலையையுமணிந்த கூந்தலை மனோவாக்குக் காயங்களால் அடங்கியிருந்து உகுத்து நற்குணத்தை யுடைய செம்பொற்கொடியாயினரென்க. (௩௯௬)

## உஅ. பெரிய யாத்திரை

### (வேறு)

2995. இலம்பெரி தெனவிரந் தவர்கட் கேந்திய
கலஞ்சொரி காவலன் கடகக் கையிணை
புலம்புரிந் துயர்ந்தன விரண்டு பொன்னிற
வலம்புரி மணிசொரி கின்ற போன்றவே.

ஏந்திய கலம் - உயர்ந்த கலம். புலம் புரிந்து - அறிவுமிக்கு. நிறப் பொன் - மாற்றற்ற பொன்.

**(இ - ள்.)** பெரிதாக [1] வறுவியோமென்று இரந்தவர்கட்குக் காவலன் புலம்புரிந்து கலஞ்சொரியுங் கையிணைகள், உயர்ந்தனவாகிய இரண்டு சங்கநிதி பொன்னையும் மணியையும் சேரச் சொரிகின்றனவற்றை ஒத்தனவென்க. (௩௯௭)

2996. என்பரிந் தெரிதலைக் கொள்ள வீண்டிய
அன்பரிந் திடுகலா வுலக மார்கென
மின்சொரி வெண்கலம் வீசும் வண்கைகள்
பொன்சொரி தாமரைப் போது போன்றவே.

என்பரிந்து - எலும்புருகி; எலும்பு : விகாரம். அன்பரிந்து - அன்பற்று. எரியுந்தன்மையைக் கொள்ள ஈண்டிய மின்சொரிகலம்; நெருப்பின்தன்மையைக் கொள்ள ஈண்டிய மின்னுமாம். வெண்கலம் - முத்தாற்செய்த கலங்கள். வன்கையும் பாடம். இரப்போர்மேல் அன்பற்று அவர்க்கு இடமாட்டாத உலகங்களாவன : வேற்றரசராண்ட நாடுகளும், இழிகுலத்தோருறையும் வன்பாலாகிய நிலங்களும் முதலியனவாம்.

2995. பெரிதும் இலமென இரந்தவர்கட்க்கு; இலம் - இல்லாமை யெனினுமாம்; தொல். புள்ளிமயங்கு. 21, ந. இலம்.........காவலன். பெருங். 1 : 39 : 72-3; மலைபடு. 576-7. காவலன் - சீவகனுடைய. புலம் - அறிவு. இரண்டு வலம்புரி மணியைச் சொரிகின்றவற்றைப் போன்றன.

(உரை) [1] வறுவியோம் - வறுமையுடையோம்.

2996. ஆர்க என - ஆர்வனவாகவென்று.

**(இ - ள்.)** அரசன், இடுகலா உலகங்கள் ஆர்வனவாகவென்று என் ரிந்து கலங்களை வீசுங் கைகள் பதுமநிதியை ஒத்தனவென்க. (௯௯௮)

997. பூந்துகில் புனைகல மாலை பூசுசாந்
தாய்ந்துல குணாவுவந் தருளி மாமணி
காந்திய கற்பகக் கான மாயினான்
ஏந்திய மணிமுடி யிறைவ னென்பவே.

மாலை - முத்தமாலை. கானமென்றார், [1] பத்துவகைக் கற்பகங்கள் காடுப்பனவெல்லாம் கொடுத்தலின்.

**(இ - ள்.)** இறைவன் துகில் முதலியனவற்றை உலகம் நுகரும்படி ந்ந்து உவந்து கொடுத்துக் கற்பகக் கானமாயினானென்க. (௯௯௯)

(வேறு)

2998. தேய்பிறை யுருவக் கேணித் தேறுநீர் மலர்ந்த தேனார், நெய்நிறக் குவளை யஞ்சிக் குறுவிழிக் கொள்ளும் வாட்கண், வேய் றை யழித்த மென்றோள் விசயையைத் தொழுது வாழ்த்திச், சய்நிறச் சிவிகை சேர்ந்தான் றேவர்கொண் டேகி னாரே.

தேய்பிறையெனவே நுதலாயிற்று. குறுவிழிக்கொள்ளும் - மீண்டு வியும். வேய்போலுமென்றோள்.

**(இ - ள்.)** அங்ஙனம் கொடுத்த பின்னர்ச் சேயை ஒத்தவன், நுதலை ம் கண்ணையும் தோளையும் நிறையாலழித்த விசயையைத் தொழுது ாழ்த்திச் சிவிகையிலே ஏறினான்; அப்பொழுது தேவர் கொண்டுபோயி )ரென்க.

2997. கலம் - ஆபரணம். அருளி - கொடுத்து. காந்திய - ஒளி ட்ட. இறைவன் : சீவகன்.

(உரை) [1] பத்துவகைக் கற்பகங்களாவன : (க) மத்தியாங்கம் .) தூரியாங்கம் (௩) பூஷணாங்கம் (௪) மாலியாங்கம் (௫) தீபாங்கம் ) கிருகாங்கம் (௭) சோதிராங்கம் (௮) போசனாங்கம் (௯) பாசனாங்கம் ௦) வஸ்திராங்கம் என்பனவாம்; இவை முறையே திவ்ய ஸாரமாகிய ானாவித பானங்களையும், நானாவித வாத்தியங்களையும், அநேகவித பரணங்களையும் அநேகவித மாலைகளையும், அநேகவித இரத்தின பங்களையும், பிராஸாத மண்டபாதிகளையும், சந்திராதித்தரொளியினை டக்கு மொளியினையும், நானாவித ரஸத்தனவாகிய நான்குவகை உண ணையும், வேண்டிய கலங்களையும், விசித்திர வஸ்திரங்களையும் கொடுக் ம்; இது ஸ்ரீ புராணத்திற் கண்டது.

2998. தேய்பிறையுருவக்கேணி : "மதிசேர்ந்த....வான் பொய்கை" ட்டினப். 35-8) குவளையையஞ்சிக் குறுவிழிக்கொள்ளும் வாட்கண்; செங்கழுநீரானந்தரில் விழித்த கண்ணெனக் குறுவிழிக் கொள்ளும்" ர்ம. சம்புதீ தீவின். 57)

சச்சந்தன் பட்டபின், தன்னூறுப்புக்கள் பொலிந்திருக்கல் ஆகாதென்று உட்கொண்டு அவற்றின்பொலிவினைக் கடிந்தமைதோன்ற, நிறையாலழித்த வென்றார். (சூ௦௦)

---

## உகூ. சமவசரண வருணனை

### (வேறு)

2999. நரம்பெழுந் திரங்கின வீணை நன்குழல்
பரந்துபண் ணுயிர்த்தன பைய மெல்லவே
விருந்துபட் டியம்பின முழவம் வீங்கொலி
சுரந்தன சுடர்மணிப் பாண்டி லென்பவே.

(இ - ள்.) அவனை அவர்கொண்டு போகின்றபொழுது வீணையி னரம்பு மிக்கு இரங்கின ; குழல் உயிர்த்தன ; முழவம் புதுமையுண்டாய் இயம்பின ; கஞ்சதாளம் மிக்க ஓசையைக் கொடுத்தனவென்க. (சூ௦க)

3000. மங்குலா யகிற்புகை மணந்து கற்பகப்
பொங்குபூ மாலைகள் பொலிந்து பூஞ்சுணம்
தங்கியித் தரணியும் விசும்புந் தாமரோ
செங்கதிர்த் திருமணிச் செப்புப் போன்றவே.

(இ - ள்.) அவன் போகின்றபொழுது அகிற்புகை மணந்து இருளாய் மாலைகள் பொலியப்பட்டுச் சுண்ணம் தங்கப்பட்டுத் தரணியும் விசும்பும் மணியிருக்கின்ற செப்பை ஒத்தனவென்க.
மணி - [1] சமவசரணம். (சூ௦௨)

---

2999. வீணை நரம்பு எழுந்து இரங்கின - வீணையின் நரம்பு மிக்கு ஒலித்தன. குழல் - வேய்ங்குழல். பண் - இராகத்தை. பையமெல்ல : ஒரு பொருட் பன்மொழி. விருந்துபட்டு - புதுமையுற்று.

3000. மங்குலாய் - இருளாய். பொலிந்து - பொலியப்பட்டு. சுணம் - சுண்ணம். மணியடங்கிய செப்புப்போன்றன ; பெருங். 2. 6 : 160.

(உரை) [1] சமவசரணம் : இது பூமிக்கு ஐயாயிரம் வில்லுயரத்திற்கு மேலே பன்னிரண்டு யோசனை அளவுள்ளதாய்ச் சௌதருமேந்திராதி தேவர்களால் நிருமிக்கப்பட்ட சினாலயம் ; இதற்குப் பூமியிலிருந்து இருபதினாயிரம் படிகளுள்ளனவென்பர். இவ்வாலயத்தின் இயல்பை ஸ்ரீ புராணத்தும், மேருமந்தர புராணத்தும் அந்நூலாசிரியர் நிரம்ப விரித்துக் கூறினர் ; திருநூற். 18.

(வேறு)

3001. திலக முக்குடைச் செல்வன் றிருநகர்
பலரு மேத்தினர் பாடின ராடினர்
குலவு பல்லியங் கூடிக் குழுமிநின்
றுலக வெள்ள மொலிப்பது போன்றவே.

(இ - ள்.) அங்ஙனம் போகின்றபொழுது, செல்வன் திருநகர் தோன்றியதனைக்கண்டு தேவரும் மக்களுமேத்தினர்; பாடினர்; ஆடினர்; பின்னர் அவருடைய வாச்சியங்கள் கூடிநின்று ஒலித்துக் கடல் குழுமிநின்று ஒலிக்கின்ற தன்மையை ஒத்தனவென்க. (சOங)

3002. கானி ரைத்தன காவொடு பூம்பொய்கை
தேனி ரைத்தன செம்பொ னெடுமதில்
மேனி ரைத்தன வெண்கொடி யக்கொடி
வானு ரிப்பன போன்று மணந்தவே.

(இ - ள்.) அங்ஙனம் போகின்றபொழுது, மணநிரைத்தனவாகிய சோலைகளுடனே தேனினங்கள் இரைத்தனவாகிய பொய்கைகளும் சூழ்ந்த மதிலின்மேலே அப்பொழுது, கொடிகள் நிரைத்தன; அக்கொடிகள் காற்றால் தேவருலகைத் தீண்டினவை அதனை உரிக்குமாறுபோன்று நெருங்கின வென்க. (சOச)

3003. கோல முற்றிய கோடுயர் தூபையும்
சூல நெற்றிய கோபுரத் தோற்றமும்
ஞால முற்றிய பொன்வரை நன்றரோ
கால முற்றுடன் கண்ணுற்ற போன்றவே.

---

3001. திலகம் - மேன்மை. செல்வன் - அருகன். இயம்-வாத்தியம்.

3002. கான் நிரைத்தனவாகிய காவொடும்; கான் - வாசனை. தேன் - வண்டு. மணந்தவே - நெருங்கின.

3003. கோடு உயர் - உச்சி உயர்ந்த. தூபை - ஸ்தூபி; சமவசரணத்துள்ள பதினொரு பூமியுள் நவஸ்தூபாபூமியென்று ஒரு பூமி உளதாதலின், ஈண்டுத் தூபை கூறினர்; பதினொரு பூமியாவன: (க) சைத்தியப் பிராஸாத பூமி (உ) காதிகாபீமி (ங) வல்லிபூமி (ச) உத்தியானபூமி (ரு) துவசபூமி (சூ) கற்பகவிருட்ச பூமி (எ) நவஸ்தூபாபூமி (அ) துவாதசகோஷ்டபூமி (கூ) பிரதமபீடம் (கO) துவிதீயபீடம் (கக) திருதீய பீடம் என்பனவாம். சூலம் - இடிதாங்கி. பொன்வரை - மேருமலை.

கோலம் - அழகு. ஞாலந்தான் சூழ்ந்த.

(இ - ள்.) தூமையின் தோற்றமும் கோபுரங்களின் தோற்றமு மிருந்தபடி, மேருக்கள் தம்மிற் கூடுவதொருகாலம் மிகவுமுண்டாய்ச் சேரக்கூடியவற்றை ஒத்தனவென்க.

பல அண்டங்கள் உளவாதலிற் பலமேரு வுளவாம். (௩0௫)

3004. வாயிற் றோரணங் கற்பக மாலைதாழ்ந்
தேயிற் றிந்திரன் பொன்னக ரின்புறம்
போயிற் றேயகி லின்புகை போர்த்துராய்
ஞாயிற் றெள்ளொளி நைய நடந்ததே.

(இ - ள்.) வாயிலில் நட்ட தோரணம், கற்பகமாலை தாழ்ந்து அகிலின் புகை பொருந்திற்று; அப்புகை, பொருந்திப் பின்னர் உராய்ப் போர்த்து இந்திரனகரின் புறம்போயிற்று; போய பின்னர் ஞாயிற்றி னொளிமழுங்க அது நடந்ததென்க. (௩0௬)

3005. செய்ய தாமரைப் பூவினுட் டேங்கமழ்
பொய்யில் சீர்த்திவெண் டாமரை பூத்தபோன்
றையஞ் செய்தடு பானிறப் புள்ளினம்
மையி ருமரை மத்தகஞ் சேர்ந்தவே.

(இ - ள்.) 'அரசன்சென்ற ஆரவாரத்தாலே மதிலைச்சூழ்ந்த காக்களி லிருந்த வெள்ளையன்னங்கள் செந்தாமரையினுள்ளே வெண்டாமரை பூத்த தன்மையை யொத்து ஐயம் நிகழ்த்திப் பொய்கைகளிற் செந்தா மரைத் தலையிலே சேர்ந்தனவென்க. (௩0௭)

3006. மல்லன் மாக்கட லன்ன கிடங்கணிந்
தொல்லென் சும்மைய புள்ளொலித் தோங்கிய
செல்வ நீர்த்திருக் கோயிலிம் மண்மிசை
இல்லை யேற்றுறக் கம்மினி தென்பவே.

3004. ஏயிற்று - பொருந்திற்று. போர்த்து - மூடி. நைய - மழுங்க.

3005. ஐயம்செய்து - ஐயத்தை உண்டாக்கி. புள்ளினம் - அன்னத்தின் குழாம். தாமரை மத்தகம் - செந்தாமரையின் உச்சியில்.

3006. மல்லல் - வளன். கிடங்கு - அகழி. சும்மைய - ஒலியை யுடையவாகிய. கோயில் - சமவசரணம். துறக்கம் - சுவர்க்கம்.

(இ - ள்.) கிடங்கு சூழ்ந்து சும்மையவாகிய புள் ஒலிக்கப்பட்டு ஓங்கிய கோயில் இவ்வுலகிலில்லையாயின், துறக்கம் நன்று; இஃது உளதாதலால் துறக்கம் தீதாயிற்றென்க. (சoஅ)

(வேறு)

3007. விளங்கொளி விசும்பறுத் திழிந்து மின்னுதார்த்
துளங்கொளி மணிவணன் றொழுது துன்னினான்
வளங்கெழு மணிவரை நெற்றிப் பாற்கடல்
இளங்கதிர்ப் பருதியொத் திறைவன் றோன்றினான்.

(இ - ள்.) அங்ஙனம் தேவர் கொண்டு போந்தபடியினாலே, சீவகன் விசும்பை ஊடறுத்து இழிந்து [1]கோயிலைநோக்கித் தொழுது சேர்ந்தான் அப்பொழுது மணிவரைத் தலையினின்றும் பருதியையொத்து இறைவன் தோன்றினானென்க.

மணி - ஈண்டு மாணிக்கம். பாற்கடலிற் பருதியென்றார், ஒளிமிக்கிருந்ததற்கு. இறைவன் - [2] ஸ்ரீவர்த்தமான சுவாமிகள். (சoகூ)

3008. வினையுதிர்த் தவர்வடி வின்ன தென்னவே
வனைகதிர்த் தடக்கைவைத் திருந்த வாமனார்
கனைகதிர்த் திருமுக மருக்க னாகவான்
புனைமலர்த் தாமரை பூத்த தொத்தவே.

(இ - ள்.) அங்ஙனம் தோன்றி இருவினையைக் கெடுத்தவர் வடிவு இத்தன்மைத்தாயிருக்குமென்று அவ்வடிவுதான் கூறும் படியாகவே கையை வைத்திருந்த வாமனாருடைய முகம் அருக்கனாக, தேவர்கள் முகங்கள் அலர்ந்தவை தாம், தாமரை பூத்த தன்மையை ஒத்தன வென்க. (சகo)

3009. இரிந்தன விருவினை யிலிர்த்த மெய்ம்மயிர்
சொரிந்தன கண்பனி துதித்துக் காதலால்
அரிந்தது மணிமிட றலர்பெய்ம் மாரிதூஉய்த்
திரிந்தனன் வலமுறை திலக மன்னனே.

---

3007. விசும்பறுத்து - ஆகாயத்தின் நடுவைப் பிளந்து. தொழுது - கோயிலைவணங்கி. மணிவண்ணன் : சீவகன். பாற்கடலிடத்துப் பருதியை ஒத்து.

(உரை) [1] கோயில் : கந்தகுடி எனப்படும். [2] இவர் இருபத்து நான்காம் தீர்த்தங்கரர்.

3008. வாமனாருடைய முகம் அருக்கனாக ; வாமன் : அருகன். அருக்கன் - சூரியன். வான் - வானிடத்துள்ள தேவர் முகம்.

3009. இருவினை இரிந்தன ; இரிந்தன - கெட்டன. இலிர்த்த - சிலிர்த்தன. அரிந்தது - அற்றது. திலகமன்னன் : சீவகன்.

(இ - ள்.) அப்பொழுது, மன்னனுக்கு இறைவன்மேற் சென்ற காதலாலே இருவினை கெட்டன; மெய்ம்மயிர்கள் சிலிர்த்தன; கண்கள் உவகை நீரைச்சொரிந்தன; துதித்து மிடறு அரிந்தது; அவ்வளவிலே அவன் வலமுறையாகத் திரிந்தானென்க. (சகக)

3010. முத்தொளிர் தாமமு முருவ மாமணித்
தொத்தொளிர் தாமமுஞ் சொரிபொற் றாமமும்
தத்துநீர்த் தண்கடற் பவழத் தாமமும்
வைத்தபூந் தாமமு மலிந்து தாழ்ந்தவே.

(இ - ள்.) அவன் அங்ஙனம் வலம்வருகின்ற காலத்தே ஒளிரும் முத்துத்தாமமும், ஒளிரும் மாணிக்கத்தாமமும், ஒளியைச்சொரியும் பொற்றாமமும், பவழத்தாமமும், கொத்துத் தன்னிடத்தே வைத்த பூவாற் செய்த தாமமும் மிக்கு அவ்விடத்தே தங்கினவென்க. (சகஉ)

3011. மணிவரை யெறிதிரை மணந்து சூழ்ந்தபோல்
அணிமயிர்க் கவரிக ளமர ரேந்தினர்
துணிமணி முக்குடை சொரிந்த தீங்கதிர்
பணிமணிக் காரிருள் பருகு கின்றதே.

(இ - ள்.) அப்பொழுது, மாணிக்கமலையைத் திரைகள் சூழ்ந்தாற் போலே அமரர் கவரியை ஏந்தி இறைவனைச் சூழ்ந்து நின்று வீசினர்; ஆண்டு முக்குடைசொரிந்த கதிர், நீலமணிகளின் இருளைப் பருகாநின்றதென்க.

பணித்தல் - ஏனையொளிகளைத் தாழ்த்தல். (சகங)

3012. முழாத்திரண் மொய்ம்மலர்த் தாமந் தாழ்ந்துமேல்
வழாத்திரு மலரெலா மலர்ந்து வண்டினம்
குழாத்தொடு மிறைகொளக் குனிந்து கூய்க்குயில்
விழாக்கொள விரிந்தது வீரன் பிண்டியே.

3010. பொற்றாமம் - பொன்மாலை. மலிந்து தாழ்ந்த - மிக்குத் தங்கின.

3011. மணிவரை - மாணிக்கமலை. கவரி - சாமரை. மணிக் காரிருள் - நீலமணிகளின் கரிய இருளை; சமவசரணத்தை இந்திரநீல மணி மயத்ததென்று சைனநூல்கள் கூறும்.

3012. வழாத் திருமலர் - வாடாத அழகிய மலர்; மணி. 3 : 50. இறை கொள்ள - தங்குதல் கொள்கையினால். குயில் கூய் - குயில் கூவும் படியாக; "கோகிலங்கள், கூக்கொண்டு சேருங் குளிர்பிண்டி யானை" (திருநூற். 1). மலர்த்தாமம்......பிண்டி : சீவக. 3018; சிலப். 11 : 3.

கூய் - கூவ. வீரன் - ஸ்ரீ வர்த்தமானசுவாமிகள்.

(இ - ள்.) அப்பொழுது வீரன்பிண்டி, முழாப்போலத் திரண்ட தாமம் நான்று மேலால் வாடாத் திருமலர் பூத்து வண்டினம் குழாத்தோடு தங்குதல் கொள்கையினுலே பாரமிக்கு வளைந்து, குயில்கள் கூவும் படியாகப் பரந்த தென்க. (சகச)

3013. பிண்டியின் கொழுநிழற் பிறவி நோய்கெட
விண்டலர் கனைகதிர் வீரன் றோன்றினான்
உண்டிவ ணறவமிர் துண்மி னோவெனக்
கொண்டன கோடணை கொற்ற முற்றமே.

(இ - ள்.) அப்பொழுது, பிறவியாகிய நோய் கெடும்படி நிழலிலே இறைவன் தோன்றினான்; இனி, இவ்விடத்தே அறமாகிய அமிர்தம் உண்டு; அதனை உண்பீராகவென்று கோயிலில் திருமுற்றம் ஆரவாரத்தைக் கொண்டனவென்க.

கோடணை - [1] திவ்யத்தொனி. (சகரு)

3014. வானவர் மலர்மழை சொரிய மன்னிய
ஊனிவர் பிறவியை யொழிக்கு முத்தமன்
தேனிமிர் தாமரை திளைக்குஞ் சேவடி
கோனமர்ந் தேத்திய குறுகி னானரோ.

(இ - ள்.) தேவர் பூமழை சொரியாநிற்க அரசன் பிறவியைக் கெடுக்கும் உத்தமனுடைய அடியை ஏத்துதற்கு அணுகினானென்க.

3013. பிண்டியின் நிழலில் வீரன் தோன்றினான். வீரன் - ஸ்ரீவர்த்தமான சுவாமிகள். இவண் அமிர்து உண்டு; உண்மினோ எனக் கொற்ற முற்றம் கோடணை கொண்டன; கோடணை - ஆரவாரம்.

(உரை) [1]திவ்யத் தொனியாவது, அருகனுக்குத் தேவர்கள் செய்யும் எண்வகைச் சிறப்பினுள் ஒன்று; எண்வகைச் சிறப்புக்களை, "சுடர்மண் டலஞ்சுர துந்துபி தெய்வத் துவனிசிங்கப், பிடர்மண் டலவணை பிண்டி வெண்சாமரை பெய்மலரின், அடர்மண் டலமழை யம்பொற் குடைமும்மை யாமடியோம், இடர்மண் டலங்கெடுப் பாற்கிமை யோர்செயு மெண்சிறப்பே" (திருநூற். 80) என்பதனாலுணர்க.

3014. ஊன் இவர் - உடம்பிலே பரக்கின்ற. உத்தமன் - ஸ்ரீவர்த்தமானருடைய. சேவடி - பாதத்தை. கோன் : சீவகன். ஏத்திய - துதித்தற்கு.

ஊனிவர்பிறவி - உடம்புகளிலே பரக்கின்ற பிறப்பு. இமிருந்தே னினம் தாமரையென்று திளைக்கும் சேவடி. (சுகசு)

3015. குருகுலஞ் சீவக குமரன் கோத்திரம்
அருகலில் காசிப மடிகள் வாழியென்
றெரிமணி முடிநில முறுத்தி யேத்தினன்
புரிமணி வீணைகள் புலம்ப வென்பவே.

துறக்கும்பொழுது குடியும் குலமும் கேட்டே துறப்பித்தல் இயல்பு.

**(இ - ள்.)** அவனணுகின அளவிலே, அடிகளே! இவன்குலம் குரு குலம், இவன்பெயர் சீவகன்; இவன் கோத்திரம் காசிபகோத்திரமென்று சொல்லுவார்களென்று உழையர் கூற, அவ்வரசனும் வணங்கி யாழ் வருந்தத் துதித்தானென்க.

வாழி : அசை. என்று - என்ன. (சுகஎ)

3016. மன்னவன் றுறவெனத் துறத்தன் மாண்பெனப்
பொன்வரை வாய்திறந் தாங்குப் புங்கவன்
இன்னுரை யெயிறுவில் லுமிழ வீழ்ந்தது
மின்னியோர் வியன்மழை முழங்கிற் றொத்ததே.

**(இ - ள்.)** அங்ஙனம் துதித்த அரசன் யான் துறப்பேனென்று கூற, அது கேட்ட புங்கவன், பொன்வரை வாய்திறந்தாற்போல வாய்திறந்து, நின் மனம் துறவில் வீழ்ந்தது; இனி நீ துறத்தலே மாட்சிமையென்று எயிறு வில்லுமிழக் கூறிய இன்னுரை மழை மின்னி முழங்கிய தன்மையை ஒத்ததென்க.

எயிறு வில்லுமிழ்ந்தது மின்னுக்கு உவமை. (சுகஅ)

---

## ௩௦. சீவகன்றுறவு

### (வேறு)

3017. காய்களிற்றி னிடைமருப்பிற் கவளம்போன் றேமா ராக் கதியுட் டோன்றி, ஆய்களிய வெவ்வினையி னல்லாப்புற் றஞ்சினே னறிந்தார் கோவே, வேய்களிய வண்டறைய விரிந்த லர்ந்த தாமரையின் விரைசேர் 'போதின், வாயொளியே பெற நடந்த மலரடியை வலங்கொண்டார் வருந்தார் போலும்.

---

3015. அருகலில் - குறைதலில்லாத. புலம்ப - வருந்த.

3016. மன்னவன் : சீவகன். துறவென - துறப்பேனென்று கூற. புங்கவன் - ஸ்ரீவர்த்தமானர். உரை, மழை முழங்கியதை ஒத்தது.

3017. காய்தல் - கோபித்தல். ஏமாரா - கெடுகின்ற; சீவக. 1699. ஆய் களிய - ஆராய்ந்த உவப்பினையுடைய. அல்லாப்புற்று - வருந்த முற்று. தாமரைப் போதின்வாய் ஒளிபெற நடந்த மலரடி : சீவக. 3022.

(இ - ள்.) அறிந்தாருடைய கோவே! களிற்றின் மருப்பிடையிலே வைத்த கவளம் அது நுகர்ந்து கெடுமாறுபோன்று கூற்றுவன்கைப்பட்டு அவனுகர்ந்து கெடுகின்ற கதிகளிலே பிறந்து ஆராய்ந்த களிப்பினை யுடைய தீவினையாலே வருத்தமுற்று இப்பிறவியை அஞ்சினேன்; இப் பிறவியால்வருந்தாதவர், தாமரையினது போதிடத்தே அதுதான் ஒளி பெறநடந்த நின்திருவடிகளை வலம்வந்தார்போலே இருந்ததென்று ரைன்க.

களிப்பினையுடையவாகிய வண்டு அறையும்படி விரிந்தலர்ந்த தாம ரையென்றது, முதற்பொருட்கேற்ற அடையடுத்துநின்றது. போலுமென் றது, "ஒப்பில் போலியு மப்பொருட் டாகும்" (தொல். இடை. 30) என் றதனாற் பொருள்தந்தே நின்றது. (சகக)

(வேறு)

3018. சேடார் செம்பொற் றிருமணி வைரத் தொத்தணிந் துல கோம்பும், வாடா மாலை வார்தளிர்ப் பிண்டி வாமநின் குண நாளும், பாடா தாரைப் பாடா துலகம் பண்ணவர் நின்னடிப்பூச், சூடா தார்தாள் சூடார் மாலைச் சுடர்மணி நெடுமுடியே.

(இ - ள்.) பெருமைநிறைந்த பொன்னோடே மணியையும் வைரத் தொத்தினையுமணிந்து உலகைக்காக்கும் பிண்டியின்கீழிருந்த வாமனே! நின் குணத்தை நாளும் பாடாதாரை இறைவனென்று உலகம்பாடாது; நின்னடிப்பூச் சூடாதாரடிகளைத் தேவர் தம்முடிகளிற் சூடார்; ஆதலான், யான் நின்னைப்பாடி நின்னடியைச் சூடுவேனென்றுரைன்க.

வாடாத மாலையினையும் தளிரினையுமுடைய பிண்டி. (சஉ௦)

(வேறு)

3019. வைய மூன்று முடனேத்த வளருந் திங்கள் வாளெயிற், றைய வரிமான் மணியணைமே லமர்ந்தோய் நின்னை யமராதார், வெய்ய வெந்நோய் வினையுதைப்ப வீழ்ந்து துன்பக் கடலழுந்தி, நெய்யு நுண்ணூ னாழிகையி னிரம்பா நின்று சுழல்வரே.

---

3018. சேடு - பெருமை. வாடாத மாலையையும் தளிரையுமுடைய பிண்டி; "வாடா மாமலர் மாலை தூக்கலின்" (மணி. 3 : 50). குணத் தைப் பாடாதாரை உலகம் பாடாது; பாடாது - புகழாது. நின்அடிப் பூவைச் சூடாதாருடைய தாளைப் பண்ணவர் முடிமீது சூடார்.

3019. திங்கள் போலும் வாளெயிறு; திங்கள் - பிறைச் சந்திரன். அரிமான் - சிங்கம். அமராதார் - விரும்பி நினைந்து பொருந்தாதார். நெய்யும் நுண்ணூல் நாழிகை: நெய்தற் றொழிற்குரிய கருவிகளுள் ஒன்று.

ஐ : உரிச்சொல் ; ஈறுதிரிந்தது.

**(இ - ள்.)** உலகமூன்றும் ஒருகாலத்தே ஏத்தப் பிறைபோலும் எயிற்றையுடைய சிங்கஞ்சுமந்த அணைமேல் அமர்ந்தவனே! நின்னை நெஞ்சாற் பொருந்தாதார், வெய்ய வினைதள்ளத் துன்பக்கடலிலே வீழ்ந்து அழுந்தி வெந்நோய் நிரம்பாநின்று நெய்தற்றொழிலையுடைய தார்கிடக்கும் நாடாப்போல மறுகுவரென்றானென்க. (௩௨௧)

3020. தொழுதிப் பன்மீன் குழாஞ்சூழத் துளும்பா திருந்த திங்கள்போல், முழுதும் வைய முடனேத்த முதுவாய் வலவை யாயிருந், தழுது வினைக ளெல்லாப்ப வறைந்தோய் நின்சொ லறைந்தார்கள், பழுதி னறுநெய்க் கடற்சுடர்போற் பல்லாண் டெல்லாம் பரியாரே.

**(இ - ள்.)** தொகுதலையுடைய பன்மீன்றிரள்சூழ அசையாதிருந்த திங்கள்போலே வையமுழுதும் ஒரு காலத்தே ஏத்த முதிய உண்மையால் வெற்றியையுடையையாயிருந்து இருவினைகள் அழுதுவருந்த அறத்தைச் சாற்றினவனே! நின் அறத்தைச் சாற்றினவர்கள், நெய்க்கடலிலிட்ட விளக்குப்போலே பலகாலங்களெல்லாம் கெடாரென்றானென்க. (௩௨௨)

3021. செழும்பொன் வேய்ந்து மணியழுத்தித் திருவார் வைர நிரைத்ததனுட், கொழுந்து மலருங் கொளக்குயிற்றிக் குலாய சிங் கா தனத்தின்மேல், எழுந்த பருதி யிருந்தாற்போ லிருந்த வெந்தை பெருமானே, அழுந்தேன் வந்துன் னடியடைந்தே னரு வாய்ப் போத லழகிதோ.

**(இ - ள்.)** வேய்ந்து அழுத்தி நிரைத்து அதனுள்ளே கொழுந்தும் மலரும் வடிவுகொள்ளும்படி வல்லியை எழுதிப் பண்ணின சிங்காசனத்திலே இளஞாயிறு இருந்தாற்போல இருந்த எந்தையாகிய பெருமானே! பிறவிக்கடலில் அழுந்தேனாய் வந்து நின்னடியைச் சேர்ந்தேன் ; பிறப்பற்றுப்போதல் நினக்கு நன்றென்றானென்க.

**3020.** துளும்பாதிருந்த - அசையாதிருந்த. முதுவாய் - முதிய உண்மையால். வலவையாயிருந்து - வெற்றியுடையையாயிருந்து. அறத்தை அறைந்தோய். நெய்க்கடலிற் சுடரைப் போல; சுடர்-விளக்கு. பரியார் - கெடார்.

**3021.** குயிற்றி - எழுதி. குலாய - பண்ணின. அருவாய்ப்போதல்- பிறப்பற்றுப் போதல். அழகிது - நன்று.

ஓகாரம் : சிறப்பு ; ஈற்றசையுமாம். (சஉரு)

(வேறு)

3022. குண்டலமும் பொற்றேடும் பைந்தாருங் குளிர்முத்தும்
வண்டலம்பு மாலையு மணித்தொத்து நிலந்திவள
விண்டலர்பூந் தாமரையின் விரைததும்ப மேனடந்த
வண்டலர்பூந் திருவடியை மணிமுடியின் வணங்கினான்.

தார் : மார்பின்மாலை. வண்டலம்புமாலை : முடியின்மாலை ; அதின் மணிக் கொத்து.

(இ - ள்.) அவன் அங்ஙனங்கூறிக் குண்டலமுதலியன நிலத்திலே கிடந்தசையத் திருவடியை முடியால் வணங்கினானென்க.

விரை ததும்ப விரிந்தலர்ந்த தாமரையின்மேல் நடந்த அடி ; பூக் களையுடைய அடி. (சஉச)

3023. நிலவிலகி யுயிரோம்பி நிமிர்ந்தொளிர்ந்து பசிபகைநோய்
உலகமிருள் கெடவிழிக்கு மொண்மணி யறவாழி
அலகையிலாக் குணக்கடலை யகன்ஞான வரம்பானை
விலையிலா மணிமுடியான் விண்வியப்ப விறைஞ்சினான்.

(இ - ள்.) மணிமுடியான், ஒளியால் நிலவை விலக்கிப் பல்லுயிரை யும் பாதுகாத்து மேனோக்கி விளங்கி உலகம் பசியும் பகையும் நோயும் இருளுநீங்க விழிக்கும் அறவாழியையுடைய எண்ணிறந்த குணக்கடலை, ஞானத்துக்கு வரம்பாந்தன்மையை யுடையவனை இறைஞ்சினானென்க. (சஉரு)

3024. தூய்த்திரண் மணித்தாமஞ் சொரிந்துபொன் னிலநக்கப், பூத்திரண் மணிமாலைப் போர்ச்சிங்கம் போதகம்போல், ஏத்தரிய குணக்கடலை யிகலின்ப வரம்பானைத், தோத்திரத்தாற் றொழு திறைஞ்சித் துறப்பேனென் றெழுந்திருந்தான்.

---

3022. வண்டு அலம்பும் மாலை - வண்டுகள் ஒலிக்கின்ற பூமாலை. திவள - அசைய. விரை - வாசனை.

3023. உலகத்துப் பசியும், பகையும், நோயும், இருளும் கெடவிழிக் கும் அறவாழி ; அறவாழி - தருமசக்கரம் ; " அறவாழி யந்தணன் " (குறள், 8, பரிமேல்.). அலகையிலா - எண்ணிறந்த; ஐ : அசை. குணக் கடல் : சீவக. 3024 ; " நற்குணக்கடல் " (கம்ப. கடவுள். 2). முடியான்: சீவகன்.

3024. தூய்த்திரள் - தூய்மையாகத் திரட்சி கொண்ட. தாமம் நிலத்தை நக்க. சிங்கம் : சீவகன். போதகம் - யானை. குணக்கடல் : சீவக. 3023.

தூய்தாத் திரண்ட முத்துத்தாமம். பூ - பொலிவு. இகலின்பம் - உலகிலுள்ள இன்பங்களுக்கு மாருகிய இன்பம்; அஃதாவது வீட்டின்பம்.

**(இ - ள்.)** மாலையையுடைய சிங்கம், குணக்கடலாயவனை வீட்டின் பத்துக்கு வரம்பாயவனைத் தோத்திரங்களைச்சொல்லி வாழ்த்தித் தாமம் நிலநக்கப்போதகம் இறைஞ்சுமாறுபோல இறைஞ்சி இனி யான் துறப்பேனென்று கூறி அவ்விடத்துநின்றும் போந்தானென்க.

சுதன்மரென்னும் [1] கணதரர்இருக்குமிடத்தே போந்தான். (௩௨௬)

(வேறு)

3025. முடியணி யமரரு முலைநல் லார்களும்
புடைபணிந் திருந்தவப் புலவன் பொன்னகர்
கடிமலர்க் கற்பகங் காம வல்லியோ
டிடைவிரா யெங்கணும் பூத்த தொத்ததே.

சுண்ணமணிந்து முலைநல்லவர்களாயிருக்கின்றவர்களும்.

**(இ - ள்.)** அப்பொழுது, தேவரும் அவர் தேவிமாரும் வணங்கியிருந்த அறிவுடையோன்கோயில், கற்பகமும் காமவல்லியும் கலந்திருந்த தன்மையை ஒத்ததென்க. (௩௨௭)

3026. ஒத்தொளி பெருகிய வுருவப் பொன்னகர்
வித்தகன் வலஞ்செய்து விழுப்பொற் பூமிபோய்
மத்தக மயிரென வளர்த்த கைவினைச்
சித்திரக் காவகஞ் செல்வ னெய்தினான்.

**(இ - ள்.)** வித்தகனது ஒளிகளெல்லாம் ஒத்து மிக்க கோயிலைச் செல்வன் வலம்வந்து பொற்பூமியைக் கடந்துபோய்க் காவிடத்தைச் சேர்ந்தானென்க.

தலைமயிர்போலப் பேணி வளர்த்த கா. (௩௨௮)

(உரை) [1] கணதரர்இருக்குமிடம் கணதரகோட்டமென வழங்கும்; கணதரர் பதினொருவர்: கௌதமர், வாயுபூதி, அக்கினிபூதி, சுதன்மர், மௌரியர், மந்தரர், புத்திரர், மைத்திரேயர், அகம்பனர், அசேலகர், பிரபாஸர்.

3025. புடை - பக்கத்தே. புலவன் - சுதன்மரென்னும் கணதரர். விராய் - கலந்து.

3026. நகரை வலம் செய்து. மத்தக மயிரென - தலைமயிரைப் போல; குறள், 964. கை வினை - தொழிலையுடைய. செல்வன் - சீவகன்.

3027. ஏமநீ ருலகமோ ரிம்மிப் பாலென
நாமவே னரபதி நீக்கி நன்கலம்
தூமமார் மாலையுந் துறக்கின் ருனரோ
காமனுர் கலங்கழிக் கின்ற தொத்ததே.

(இ - ள்.) நரபதி, [1] உலகத்தையும் தவத்தையும் தூக்கிப்பார்த்து உலகம் ஓர்இம்மியென்னும் நிறையளவென்று அதனை நீக்கித் துறக்கின்றவன் அக்காலத்துக் கலத்தையும் மாலையையும் கழிக்கின்ற தன்மை, காமனுர் அணிகலங்களைக் கழிக்கின்ற தன்மையை ஒத்ததென்க. (சஉகூ)

3028. மணியுறை கழிப்பது போல மங்கலப்
பணிவரு பைந்துகி னீக்கிப் பாற்கடல்
அணிபெற வரும்பிய வருக்க னுமெனத்
திணிநிலத் தியன்றதோர் திலக மாயினான்.

பணிவரு - குறைகூறுதற்கரிய.

(இ - ள்.) அரசன், மணியை மறைத்த உறையைக் கழிக்கின்ற தன்மைபோலத் தன்மேனியை மறைத்த துகிலை நீக்கி, ஆண்டுப்பிறந்த மிக்க ஒளியாலே, பாற்கடலிலே அரும்பிய அருக்கன் நிலத்திலே இயன்றதாமென்று கூறும்படி ஒருதிலகமாயினனென்க. (சங0)

3029. மலிந்தநன் மாலைகள் வண்ணப் பூந்துகில்
நலிந்துமின் னகுமணி நன்பொற் பேரிழை
மெலிந்தனென் சுமந்தென நீக்கி மேனிலைப்
பொலிந்ததோர் கற்பகம் போலத் தோன்றினான்.

(இ - ள்.) அரசன், தன்மேற் கிடந்தனவற்றை நீக்கியிருந்தவன், யான் மாலையும் துகிலும் மணியும் இழையுஞ்சுமந்து மெலிந்தேனென்று அவற்றை நீங்கி மேனிற்றலாற் பொலிந்ததொரு கற்பகமுண்டேல் அது போலத் தோன்றினனென்க.

3027. ஓரிம்மிப்பாலென - ஓர் இம்மியளவென்று. நரபதி : சீவகன். கலம் - ஆபரணம். தூமம் - அகிற்புகை. காமனுர் - மன்மதன்.

(உரை) [1] சீவக. 2983, அடிக்.

3028. மணியை உறை கழிப்பது போல். சீவகன் மேனிக்கு மணி உவமை. அரும்பிய - தோன்றிய. அருக்கன் - சூரியன். திணி நிலம் - அணுச்செறிந்த நிலம்.

3029. வண்ணம் - நிறம். இழை - ஆபரணம். சுமந்து மெலிந்தனென் என நீக்கி.

மின்னை நலிந்து நகுமணி யென்க. (சகூக)

3030. திருந்திய கீழ்த்திசை நோக்கிச் செவ்வனே
இருந்ததோ ரிடிகுரற் சிங்கம் பொங்கிமேற்
சுரிந்ததன் னுளைமயிர் துறப்ப தொத்தனன்
எரிந்தெழு மிளஞ்சுட ரிலங்கு மார்பினன்.

உளை - கழுத்தின் மயிர்.

(இ - ள்.) ஒளிமிக்குத் தோன்றுதற்குக் காரணமான இளஞ்சுடர் போல் இலங்குமார்பினன், மயிர் களைதற்கிருந்தபொழுது, திருந்தின கீழ்த்திசையினைநோக்கி நேரேயிருந்ததொரு சிங்கம் தன்னுளையின் மயிரினைத் துறக்குந் தன்மையை யொத்தானென்க.

மேல் - முன்பு. முன்புபொங்கி இடிக்குங் குரலையுடைய சிங்கமென்க. (சகூஉ)

3031. அஞ்சுடர்த் தாமரைக் கையி னன்மணிக்
குஞ்சிவெண் படலிகைக் குமர னீப்பது
செஞ்சுடர்க் கருங்கதிர்க் கற்றை தேறுநீர்
மஞ்சுடை மதியினுட் சொரிவ தொத்ததே.

(இ - ள்.) குமரன் தாமரைபோலுங் கையினாலே நீலமணிபோலுங் குஞ்சியை வாங்கி வெள்ளித்தட்டிலே இடுகின்ற தன்மை, செஞ்ஞாயிற் றிடத்துண்டாகிய கருங்கதிர்க்கற்றையை அஞ்ஞாயிறு தான்வாங்கித் தெளிந்த நீர்மையையுடைய மதியிடத்தேயிடுகின்ற தன்மைபோன்ற தென்க. (சகூங)

3032. வேலைவாய் மணியிலை யூழ்த்து வீழ்ப்பதோர்
காலைவாய்க் கற்பக மரத்திற் காவலன்
மாலைவா யகிறவழ் குஞ்சி மாற்றலிற்
சோலைவாய்ச் சுரும்பினந் தொழுது சொன்னவே.

---

3030. செவ்வனே - நேராக. சுரிந்த - வளைந்த. சீவகன் மார்பிற்கு இளஞ்சுடர் உவமை; சீவக. 442 க்குப் பின் உள்ள, 'சேட்டிளம் பருதி' என்னும் அதிகப் பாடல்.

3031. குமரன் மணிக்குஞ்சியை வெண்படலிகையில் நீப்பது; குமரன்: சீவகன். மணிக்குஞ்சி - நீலமணி போலும் நிறத்தைக் கொண்ட தலைமயிர். படலிகை - தட்டு. கருங்கதிர்க் கற்றையை மதியினுட் சொரிவதொத்தது.

3032. ஊழ்த்து - முறைமைப்பட்டு. காவலன்: சீவகன். சுரும்பினம் - வண்டின் கூட்டம்.

வேலைவாய் - துறத்தற்குரிய நல்ல பொழுதின்கண்ணே.

(இ - ள்.) தன்னுடைய நீலமணிபோலும் இலைகளை முறைமைப்பட்டு உதிர்ப்பதொரு காலத்திடத்துக் கற்பகமரம்போலே அரசன் மாலையில் அகிற்புகை தவழுங்குஞ்சியை வேலைவாய்க் களைதலாலே சுரும்பினம் தொழுது சில மொழி கூறினவென்க. (சநூச)

3033. (க) தங்கிடை யிலாத்திருக் கேசந் தன்னையும்
கொங்குடைக் கோதையுங் கொய்து நீக்கினாய்
நுங்கடை நோக்கிநாம் வாழும் வாழ்க்கையும்
எங்கிடை யவரினி யெங்குச் செல்பவே.

3034. (உ) என்றன தேனின மிரங்கு வண்டொடு
சென்றன விடுக்கிய செல்வன் பொன்மயிர்
இன்றொடு தொழுதன நும்மை யாமென
மன்றலுண் டவைவலங் கொண்டு சென்றவே.

இவையிரண்டும் ஒருதொடர்.

(இ - ள்.) அச்சுரும்பினம், யாங்கள் நும்முடைய இடத்தை நோக்கி வாழும் உயிர்வாழ்வினையுடையேம்; இங்ஙனமாகவும் நீ தமக்கு ஒப்பில்லாத மயிரினையும் மாலையினையும் வாங்கிப்போக்கினாய்; இனி எம்மையொப்பார் எங்கே போவாரென்றன; அவ்வளவிலே வண்டோடே தேனினங்கள், செல்வனுடைய பெறுதற்கரிய மயிரினை வழிவிடுதற்குச் சென்றவை, மன்றலையுண்டு, இன்றோடே உறவு கைவிட்ட நும்மைத் தொழுதேம்; இது முற்பிறப்பில் யாங்கள்செய்த தீவினையாமென்று கூற, ஏனையவை வலங்கொண்டு பின்சென்றனவென்க.

ஏனையவையென்றது மிஞிறுகளை. நீக்கினாய், நும்மென்பன ஒருமை பன்மைமயக்கம். (சநூரு - சு)

---

3033. தம் கிடையிலா - தமக்கு ஒப்பில்லாத. கேசம் - தலைமயிர். கொங்கு - வாசனை. கோதை - மாலை. எம் கிடையவர் - எம்மைப் போன்றவர்.

3034. தேனினம் - வண்டின் கூட்டம். விடுக்கிய - விடுத்தற்கு. செல்வன்: சீவகன். மன்றலை யுண்டு நும்மை யாம் தொழுதனம் என; என - என்று கூறி.

3035. மேற்படு கற்பக மாலை வேய்ந்துபொன்
ஏற்புடைப் படலிகை யெடுத்துக் கொண்டுபோய்
நாற்கடல் கடந்தவ னமோவென் றிட்டிடப்
பாற்கடற் பனிமதி போல வீழ்ந்ததே.

(இ - ள்.) அப்பொழுது, மேலிடத்துண்டாகிய கற்பகமாலையாலே சூழ்ந்து படலிகையோடே எடுத்துக்கொண்டுபோய் நாலுகடலைக்கடந்து பாற்கடலிலே நமோவென்று சுதஞ்சணன்போகட, அக்கடலிலே அப்படலிகை மதிபோல வீழ்ந்ததென்க.

பொன் - ஈண்டு வெள்ளி. (சாஙஎ)

(வேறு)

3036. (க) ஏவா விருந்த வடிக ளிவர்வாய்ச்சொற்
கோவா மணிகொழித்துக் கொண்டாலே போலுமால்
சாவா கிடந்தார் செவிச்சார்த்தி னப்பொழுதே
மூவா வமரராய் முத்தணிந்து தோன்றுவரே.

3037. (உ) தோளா மணிகுவித்தாற் போன்றிலங்கு தொல் குலத்துச், சூளா மணியாய்ச் சுடர விருந்தானை, வாளார் முடிவைர விற்றிளைத்து வண்டரற்றும், தாளார வேத்திப் போய்த் தன்கோயில் புக்கானே.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) ஏவா - சொல்லி. சாவாகிடந்தார், 'உண்ணுகிடந்தான்' போல நிகழ்காலமுணர்த்திற்று.

---

3035. படலிகை - தட்டு. அவன் - சுதஞ்சணன். பாற்கடலில் நமோ என்று கூறி இட்டிட; இட்டிட - சீவகனுடைய தலைமயிரைப் போட. ஏழுகடல்களுள் பாற்கடலை ஐந்தாவதாகக் கூறுதல் சைன சம்பிரதாயம்; " நாற்கட லும்பர் நாக வேதிகைப், பாற்கடற் பரப்பில் " (பெருங். 4. 5 : 66 - 7); " உவரி தண்ணீர் தேன்சுரை, திவரும் பானெ யிக்குவின், சுவைய நீரின் வாரிகள், அவையு மேழு வாகுமே " (மேரு. சமவ சரணச். 202)

3036. அடிகளாகிய இவருடைய வாய்ச்சொல்; அடிகள் : சீவகன். கோவா - துளையிட்டுக் கோக்கப் பெறாத. மணி - மாணிக்கத்தை. கொழித்து - குற்றம் நீக்கி. செவிசார்த்தின் - மனம் கொண்டு கேட்பா ராகில்.

3037. தோளாமணி - துளையிடப் பெறாத மாணிக்கம். சூளாமணி - நாயக மணி. சுடர - ஒளிவிட. வாள் - ஒளி. வண்டரற்றும் தாளை ஆர ஏத்திப் போய். கோயில் - அரண்மனை. புக்கவன் சுதஞ்சணன்.

(இ - ள்.) துறந்த மகிழ்ச்சியால் இறைவனைத் துதித்திருந்த அடிகளுடைய பரந்த வாய்ச்சொற்கள் துளையிடாத மாணிக்கத்தைக் குற்ற நீக்கிக் கொண்டாலொக்கும்; இவற்றைப் பயனின்றிச் சாவாநின்றவர்கள் மனங்கொண்டு கேட்பாராயின், அப்பொழுதே தேவராய்த் தோன்றுவரென்று சுதஞ்சணன் தன்னருகு நின்றார்க்குக் கூறித் துளையிடாத மணியைக் குவித்தாற்போன்று விளங்கும் தன் குலத்திலுள்ளார்க்கு ஒரு நாயகமணியாய் விளங்க இருந்தவனைப் பூவென்று வண்டரற்றுந் தாளை நிறைய வாழ்த்தித் தன் கோயிலிலே புக்கானென்க.

வைரத்தின் ஒளி திளைத்தென்னுஞ் செய்தெனெச்சம், அரற்றுமென்னும் பிறவினை கொண்டது; "அம்முக் கிளவியும்" (தொல், வினை. 34) என்னும் சூத்திர விதியால். (சாஅ-கூ)

3038. புக்கான் சுதஞ்சணனும் பொற்று மரைமகளிர்
தொக்காலே போலுந்தன் றேவிக் குழாஞ்சூழ
மிக்கான் குணம்பாடி யாடி மிகுதீம்பால்
தொக்க கடல்போற் சுதங்க ணிறைந்தனவே.

(இ - ள்.) அச்சுதஞ்சணன் எங்ஙனம் சென்று புக்கானென்னின், பொற்றாமரையிற் பல திருச் சென்று தொக்கிருந்தாற்போலுந் தேவியர் திரள் சூழச் சீவகசாமி குணத்தைப் பாடி ஆடிச் சென்றுபுக்கான்; அவன் புக்கபின்பு சீவகசாமிக்குச் சுருதஞானங்கள் நிறைந்தனவென்க. (சசo)

3039. பற்றார்வஞ் செற்ற முதலாகப் பாம்புரிபோல்
முற்றத் துறந்து முனிகளா யெல்லாரும்
உற்றுயிர்க்குத் தீம்பால் சுரந்தோம்பி யுள்ளத்து
மற்றிருள் சேரா மணிவிளக்கு வைத்தாரே.

பற்று - பெற்றதன்மேல்நிகழும் ஆசை. ஆர்வம் - பெறாததன்மேல் நிகழும் ஆசை.

(இ - ள்.) நந்தட்டனும், தோழன்மாரும், பற்றும் ஆர்வமும் செற்றமு முதலாகிய ஏனையமுழுதையும் பாம்பு தோலுரிக்குந்தன்மை

---

3038. தொக்காலே போலும் - ஒருங்கு கூடியிருந்தாற்போன்ற. மிக்கான் - சீவகனுடைய. பாடியாடிச் சுதஞ்சணன் புக்கான். சுதங்கள் - சுருதஞ் ஞானங்கள்; நாலுணர்ச்சி; அஃது அக்ஷராத்மகம், அநக்ஷராத்மகம் என இருவகைப்படும்; நீல. ஆசீவக. 2.

3039. பற்று, ஆர்வம், செற்றம் முதலாக முற்றவும் பாம்புரிபோல் துறந்து; சீவக. 1546, அடிக்; திருநூற். 16. எல்லாரும் - நந்தட்டனும் தோழன்மாரும். தீம்பால் - கருணை. மணிவிளக்கென்றது சுருத ஞானத்தை.

போலே துறந்து இருடிகளாய் உயிர்களுக்குற்றுக் கருணையைச்சொரிந்து பாதுகாத்து நெஞ்சிலே அஞ்ஞானஞ்சேராத சுருதஞானத்தை வைத்தா ரென்க. (சசக)

3040. கோமா னடிசாரக் குஞ்சரங்கள் செல்வனபோற்
பூமாண் டிருக்கோயிற் புங்கவன்றாள் சேர்ந்தேத்தித்
தாமார்ந்த சீலக் கடலாடிச் சங்கினத்துள்
தூமாண் வலம்புரியின் றோற்றம்போற் புக்காரே.

(இ - ள்.) சக்கரவர்த்தியடியைச் சேர யானைத்திரள் செல்வன போலத் தாம் கோயிலிலிருந்த ஸ்ரீவர்த்தமான சுவாமிகளடியைச் சேர்ந்து ஏத்திச் சீலக்கடலிலே ஆடிச் சங்கினத்திலே வலம்புரி தோன்றினாற் போலப் பின் சீவகசாமியும் திரளும் முனிக்குழாத்தினடுவே புக்கா ரென்க. (சசஉ)

---

## ௩௧. சேணிகன்வரவு

### (வேறு)

3041. மட்டலர் வனமலர்ப் பிண்டி வாமனார்
விட்டலர் தாமரைப் பாதம் வீங்கிருள்
அட்டலர் பருதியி னளிக்கச் செல்லுநாட்
பட்டதோர் பொருளினிப் பழிச்சு கின்றதே.

(இ - ள்.) இருளைக்கொன்று அலர்ந்த பருதிபோல வாமனுடைய திருவடிகள் இருவினையைக்கெடுத்து அருள்பண்ணும்படி அவர்கள் வழி பட்டுச் செல்லுநாளிலே பிறந்ததொருபொருள் இனி யான் கூறுகின்ற தென்று தேவர் கூறினாரென்க. (சசங)

### (வேறு)

3042. கயலின முகளிப் பாய முல்லையம் பொதும்பிற் காமர்
புயலின மொக்குள் வன்கட் குறுமுயல் புலம்பிக் குன்றத்
தயல்வளர் கின்ற வாமான் குழவியோ டிரிந்து செந்நெல்
வயல்வளர் கரும்பிற் பாயு மகதநா டென்ப துண்டே.

3040. கோமான் - பரதேசுவர சக்கரவர்த்தி. அடி, 1 : சீவக. 32, அடிக். புங்கவன் - ஸ்ரீ வர்த்தமான சுவாமிகள். சீவகனுக்கு வலம்புரி உவமை.

3041. வாமனுடைய பாதம் இருளை அட்டு அளிக்கச் செல்லுநாளில். பட்டதோர் பொருள் - நிகழ்ந்ததாகிய ஒரு காரியத்தை. பழிச்சுதல் - புகழ்ந்து கூறுதல்.

3042. புயலினவாகிய மொக்குள்போலும் கண்ணையுடைய முயல்; புறநா. 333 : 1-3. புலம்பி - அஞ்சிவருந்தி. ஆமான் குழவி - காட்டுப் பசு வின் கன்று.

(இ - ள்.) கயலினம் எழுந்துபாய்கையாலே அதற்கு வெருவிக் குறிய முயல் தன்னினத்தை நீங்கிக் கரும்பிற்பாயும் மகதநாடென்ப தொரு நாடுண்டென்க.

பொதும்பு - குறுங்காடு. புயல் - நீர்; ஆகுபெயர். மொக்குள்போலும் கண். இரிந்து - இரிய ; குன்றத்தயலே வளர்கின்ற ஆமான்குழவியோடு இரியும்படி முயல்பாயுமென்க. எனவே நிலமயக்கம் கூறினர். (சசச)

3043. இரும்பிடி தழீஇய யானை யிழிமதங் கலந்து சேருய்ச்
சுரும்பொடு மணிவண் டார்க்குந் துகிற்கொடி மாட வீதிப்
பெருங்கடி நகரம் பேசி னிராசமா கிருக மென்பர்
அருங்கடி யமரர் கோமா னணிநக ராய தொன்றே.

(இ - ள்.) யானையின் மதங்கலந்து சேருய் அதனாலே சுரும்பும் வண்டும் ஆரவாரிக்கும் கொடியையுடைய மாடங்களையுடைத்தாகிய வீதியையுடைய அந்நாட்டின் நகரம் இராசமாகிருகமென்று பெயர் கூறுவர் ; அதன் தன்மை பேசின், இந்திரன் நகரை ஒப்பதொன்று யிருக்குமென்க. (சசரு)

3044. எரிமிடைந் தனைய மாலை யினமணி திருவில் வீசும்
திருமுடி யார மார்பிற் சேணிக னென்ப நாமம்
அருமுடி மன்னர் சூழ வலரணி பிண்டி வேந்தன்
திருவடி விருந்து செய்வான் றிரண்முர சறைவித் தானே.

(இ - ள்.) மாலையினையும், முடியினையும், ஆரமார்பினையுமுடைய அந்நகரியிலரசன்பெயர், சேணிகனென்று கூறுவர் ; அவன் அரசர்சூழ இருந்து பிண்டிவேந்தன் திருவடிக்குப் பூசனைசெய்தற்கு முரசறைவித்தா னென்க.

சேணிகன் - ச்ரேணிகமகாராசன். (சசகு)

3043. இரும்பிடி - கரிய பெண்யானை. சுரும்பும் வண்டும் ஆர்க் கின்ற கொடியையுடைய. அமரர் கோமான் - இந்திரன். நகர்-அமராவதி.

3044. சேணிகன் : உத்தமச்ரோதாக்களுள் ஒருவன் என்பர். பிண்டிவேந்தன் திருவடி - வாமனுடைய பாதத்திற்கு. விருந்து - பூசனை.

(வேறு)

3045. (க) பொன்னு வழியாற் புகழ்நாவழித் தாய்ந்த மெல்கோல், மின்னுர் மணிப்பு, ணவன்மேவிவிண் காறு நாறும், முன்னேர் வகுத்த முகவாசம் பொதிந்த வெந்நீர், மன்னுர வாய்க்கொண் டுமிழ்ந்தான்மணி மாலை வேலோன்.

3046. (உ) தீம்பா னுரைபோற் றிகழ்வெண்பட் டுடுத்து வண்டார், தேம்பாய சாந்த மெழுகிக்கலன் றேறன் மாலை, தாம்பால தாங்கிப் புகழ்தாமரைக் குன்ற மன்ன, ஆம்பான் மயிர்வேய்ந் தயிராவணை மேறி னானே.

இவையிரண்டும் ஒரு தொடர்.

(க) ஆய்ந்த மெல்கோல் - நூற்கண்ணேயாய்ந்த மெல்கோல். மேவி- தின்று. பொதிந்த வெந்நீர் - மருந்துகளிட்டுக் காய்ந்த துவர்நீர்.

(உ) வண்டு ஆர் சாந்தம். தேம்பாய மாலை. தேறுதலையுடைய கலம். பால - பாலின் தன்மையவாகிய வெள்ளியவற்றை. ஆம் பால் மயிர் - தான் அணிந்தவற்றின் பகுதியாகிய வெள்ளிய மயிர். ஐராவணை மெனவே களிறும் வெள்ளிதாயிற்று.

(இ - ள்.) அங்ஙன மறைவித்த பூணவனுகிய வேலோன், கோலைத் தின்று நாவழியால் நாவைவழித்து வெந்நீரை உமிழ்ந்தான் ; உமிழ்ந்த பின்னர் முகவாசத்தை வாய்க்கொண்டு வெண்பட்டையுடுத்துச் சந்தனத்தை மெழுகிப் பாலவாகிய கலங்கள்தாம் மாலைகள் தாம் பல தாங்கி வெண்டாமரை பூத்த குன்றையொத்த ஐராவணத்தையேறினனென்க. (சசஎ-அ)

(வேறு)

3047. (க) எறிசுறும் பரற்று மாலை யெரிமணிச் செப்பு வெள்ளம், பொறிவரி வண்டு பாடும் பூஞ்சுண்ண நிறைந்த பொற்செப், பறிவரி துணர்வு நாணித் தலைபனித் தஞ்சுஞ் சாந்தம், செறியிரும் பவழச் செப்புத் தெண்கடற் றிரையி னேரே.

3045. பொன்னுற் செய்த நாவழியென்னும் கருவியால் நாவை வழித்து. வெந்நீருமிழ்ந்த பின்னர் முகவாசத்தை வாய்க்கொண்டு; முகவாசம் - வெற்றிலை முதலியன. முகவாசம் என்பதற்கு வாசனைப் பொருள்களென்று உரை கொண்டு வெந்நீருக்கு அடையாக்குதலுமாம். வேலோன் : சேணிகன்.

3046. பாலின் நுரைபோலும் வெண்பட்டு ; " நுரையென விரிந்த நுண்பூங் கலிங்கம் " (சிலப். 22 : 21); " நுரைபுரை கலிங்கம் " (பெருங். 2. 5 : 86). பட்டத்து யானையை ஐராவணமெனக் கூறுதல் மூவருலாவிற் காணப்படும்.

3047. மாலையை உள்ளே கொண்ட மணிச் செப்பு. சுண்ணம் - வாசனைப்பொடி.

3048. (உ) வந்துதேன் மயங்கி மூசு மலயச்செஞ் சாந்த மார்ந்த, சந்தனச் செப்புங் கங்கை தருமண லலகை யாற்றுச், சுந்தரம் பெய்த யானைத் தூமருப் பியன்ற வெண்செப், பந்தரத் தலர்ந்த பன்மீ னெனைத்துள வனைத்து மாதோ.

3049. (ங) மைபொதி குவளை வாட்கண் மல்லிகைக் கோதை நல்லார், நெய்பொதி நெஞ்சின் மன்னர் நிலம்பிறக் கிடுவ போலும், கொய்சுவற் புரவி மான்றேர் குழுமணி யோடை யானை, மெய் பொதிந் துயர்ந்த கோமான் விரைப்பலி சுமந்த வன்றே.

இவை மூன்றும் ஒருதொடர்.

(க) பொருள்களையுணருமுணர்வு நேரே அறிவரிதாய் நாணித் தலை நடுங்கியஞ்சும் மெய்ப்பொருளை உள்ளேபொதிந்து உயர்ந்த கோமானென (சீவக. 3049) மேலே கூட்டுக; கோமான் - ஸ்ரீவர்த்தமான சுவாமிகள். சாந்தம் - அகிற்சாந்து. தெண்கடற்றிரையினாலே வந்து கரையிலே செறிந்த பவழச் செப்பென்க.

(உ) சந்தனமரத்தாற்செய்த செப்பு. கங்கையினுடைய திரை தரு மணல். அலகு - எண். சுந்தரம் - சிந்தூரம்.

(ங) நெய்பொதிநெஞ்சு - நேயம்பொதிந்த நெஞ்சு; நேயம், நெய் யென்று விகாரமாயிற்று; 'நெய்பொதி குஞ்சி' என்றபாடத்திற்கு நெய் - நானம்.

(இ - ள்.) அவன் அதனையேறிப் புறம்போந்த காலத்தே கோமானுக்குப் பூசனைசெய்தற்கு நல்லாரும், மன்னரும், ஆகாயத்துப் பன்மீன் எவ்வளவெண்ணுள அவ்வளவெண்ணுண்டாக எடுத்த மாலையிட்ட மணிச்செப்புவெள்ளமும், சுண்ணநிறைந்த பொற்செப்பும், சாந்திட்ட பவழச்செப்பும், சந்தனமிட்ட சந்தனச்செப்பும், சிந்தூரமிட்ட யானை மருப்பானியன்ற செப்பும் ஆகிய விரைப்பலிகளைப் புரவியும் தேரும் யானையும் சுமந்தனவென்க. (சசகூ-ருக)

3048. தேன் - வண்டு. அலகை - எண்; ஐ: அசை. அடி, 2: ஆற்று மணல், கடல்மணல்களை அளவின் பெருமைக்குக் கூறுதல் மரபு; மதுரைக். 235-7; புறநா. 55, 136. மருப்பாலியன்ற வெண்செப்பு. அந்தரம் - ஆகாயம். எனைத்துள - எவ்வளவெண்ணுள. அடி, 4: புறநா. 302 : 10-11.

3049. மை - கருமை. நல்லார் - மகளிர். பிறக்கு - பின். நிலம் பிறக்கிடுவபோலும் கொய்சுவற்புரவிமான்; "நிலம்பிறக் கிடுவது போற் குளம்பு கடையூஉ, உள்ள மொழிக்குங் கொட்பின் மான்மேல்" (புறநா. 303 : 1-2). கோமான் - வாமனுக்கு.

3050. கொடிக்குழாங் குஞ்சி பிச்சக் குழா நிறை கோல மாலை, முடிக்குழா மூரி வானம் பால்சொரி கின்ற தொக்கும், குடைக் குழா மிவற்றின் பாங்கர்க் குளித்தது குளிர்சங் கார்க்கும், படைக் குழாம் பாரிற் செல்லும் பாற்கடல் பழித்த வன்றே.

**(இ - ள்.)** அப்பொழுது, கொடிக்குழாமும் குஞ்சிக்குழாமும் பிச்சக் குழாமும் முடிக்குழாமும் வான் பாலைச்சொரிகின்ற தன்மைபோலும் கொற்றக்குடைக்குழாமும் இவற்றின் பாங்கர்க் குளித்ததாகிய படைக் குழாமும் தம்மிற்கூடி, பசிய நிறம் விரவிப் பாரிலே நடப்பதொரு பாற்கட லுண்டேல் அதனைப் பழித்தவென்க. (சஞ௨)

3051. கனைகடல் கவரச் செல்லுங் கணமழைத் தொழுதி போலும், நனைமலர்ப் பிண்டி நாத னல்லறங் கொள்ளை சாற்றிப், புனைமுடி மன்ன ரீண்டிப் பொன்னெயிற் புறத்து விட்டார், வினையுடைத் தின்ப வெள்ளம் விரும்பிய வேட்கை யானே.

**(இ - ள்.)** அம்மன்னர் ஈண்டி இருவினையைக்கெடுத்து இன்பமாகிய வெள்ளத்தை விரும்பிய வேட்கையாலே நன்றாகிய அறத்தைக் கொள்ளை கொள்ளும்படி பறையறைவித்து எயிற்புறத்துவிட்டார்; அந்நிலைமை கடலை முகக்கச் செல்லும் மழைத்திரளை ஒக்குமென்க. (சஞ௩)

(வேறு)

3052. வண்டுசூழ் பூப்பலி சுமந்து தான்வலம்
கொண்டுசூழ்ந் தெழுமுறை யிறைஞ்சிக் கோனடி
எண்டிசை யவர்களு மருள வேத்தினான்
வெண்டிரைப் புணரிசூழ் வேலி வேந்தனே.

**(இ - ள்.)** அவர்கள் விட்டபொழுது, சேணிகன் பூப்பலியைத் தான் சுமந்து வலங்கொண்டு மனத்தாலே சூழ்ந்து இறைவனதடியை எழுகா லிறைஞ்சி ஏத்தினானென்க.

3050. பிச்சக்குழாம் - பீலிக்குடையின் தொகுதி. குடை - வெண் குடை. குளித்ததாகிய படைக்குழாம்; குளித்தல் - மறைதல்.

3051. கனைகடல் - ஒலிக்கின்ற கடல். மழைத் தொழுதி - மேகக் கூட்டம். பிண்டிநாதனுடைய அறத்தைக் கொள்ளை கொள்ளும்படி சாற்றி; சாற்றி - பறையறைவித்து. விட்டார் - தங்கினார். வினை உடைத்து - இருவினையையும் கெடுத்து. வேட்கையால் மன்னர் விட்டார்.

3052. பூப்பலி: "கமலப்பூப்பலி", "அலர்செய் பூப்பலி" (சூளா. துறவு. 35, 39). கோன் அடியை எழுமுறையிறைஞ்சி; கோன்: வாமன். வேந்தன் ஏத்தினான்: வேந்தன்: சேணிகன்.

புணரியைச்சூழ்ந்தவேலியென்றது சக்கரவாளகிரியை. அதற்கு வேந்தனெனவே சேணிகனைச் சக்கரவர்த்தியென்றார். (சருச)

(வேறு)

3053. பகல்வளர் பவழச் செந்தீப் பருதிமுற் பட்ட தேபோல்,
இகல்வினை யெறிந்த கோமா னிணையடி யொளியிற் றோன்று,
தகல்விசும் புறையுந் தேவ ரொளியவிந் திருப்ப மன்னன், முகில்
கிழி மதியம் போலு முனிக்குழா நோக்கி னானே.

(இ - ள்.) பவழம்போலுஞ்செந்தீ உதயகிரியிற் பருதியின்முன்னர் ஒளிமழுங்கினாற்போல இறைவன் இணையடியொளியினால் தேவரொளி தோன்றாது மழுங்கியிருந்த அளவிலே மதிபோலும் முனித்திரளைச் சேணிகன் நோக்கினானென்க. (சருரு)

3054. கண்வெறி போக வாங்கோர் கடுந்தவ னுருவ நோக்கி,
ஒண்ணெறி யொருவிக் கோமா னொளிதிரண் டிருந்த தாங்கொல்,
விண்ணெறி வழுவி வீழ்ந்த விண்ணவ னொருவன் கொல்லென்,
றெண்ணெறி யாது மோரா திருந்திது கூறி னானே.

(இ - ள்.) அங்ஙனம்நோக்கின சேணிகன், அவ்விடத்தேயிருந்த கடியதவத்தையுடையவனுருவைக் கண் வெறிபோகநோக்கி, இறைவ னொளி ஒள்ளிய நெறியைத் தப்பிப்போயிருந்ததோ? அன்றி இவன்றான் விண்ணவனொருவனோவென்று எண்ணுநெறியாற் சிறிதும் அறுதியிட மாட்டாதிருந்து இம்மொழியைக் கூறினானென்க. (சருசா)

(வேறு)

3055. விளங்கொளி விசும்பறுத் திழிந்து விண்ணவன்
இளங்கதி ரெனத்துறந் திருப்பக் கண்டனம்
வளங்கெழு முக்குடை யடிகள் வாய்மொழி
துளங்கின னெனத்தொழு திறைஞ்சி னானரோ.

---

3053. பவழம்போலும் செந்தீ. பருதிமுன் - சூரியன் முன்னர். பட்டதேபோல் - ஒளி கெட்டதேபோல. கோமான் - வாமன். மன்னன் : சேணிகன்.

3054. கடுந்தவனென்றது சீவகனை. கோமான் - வாமனுடைய. எண்ணும் நெறி யாதும் ஓராது இருந்து; யாதும் - சிறிதும்.

3055. விண்ணவன் - தேவனொருவன். முக்குடையடிகள் - வாமன். துளங்கினன் - தப்பினான். இப்பாடல் சேணிகன் கூற்று.

(இ - ள்.) அஃது யாதெனின், விண்ணவனிழிந்து இளஞாயிறென்னும்படி துறந்திருப்பக்கண்டேம்; இறைவன்றான் கூறிய ஆகமம் தப்பினானென்று சுதன்மரென்னும் கணதரரைநோக்கி அவன்கூறினான்; கூறி அவரைக் கைகூப்பித் தொழுது வணங்கினானென்க. (சுருஎ)

3056. மன்னவ கேண்மதி வானில் வாழ்பவர்
பொன்னியல் கற்பகப் போக பூமியார்
என்னதுந் துறவல ரிறைவன் வாய்மொழி
சொன்னவா றல்லதெப் பொருளுந் தோன்றுமே.

இறைவன் - ஸ்ரீவர்த்தமான சுவாமிகள்.

(இ - ள்.) அதுகேட்ட கணதரர், மன்னவ! கேட்பாயாக; தேவரும் போகபூமியோரும் சிறிதும் துறவார்; இறைவனாகமங் கூறியவாறன்றி எப்பொருள்களும் தோன்றாவென்றாரென்க. (சுருஅ)

3057. அடிகளுக் கிடமருங் கிருந்த வாய்மலர்க்
கடிகமழ் தாமரைக் கண்ணி னானிவன்
வடிவமே வாய்திறந் துரைக்கும் வானவன்
ஒடிவறு பேரொளி யுட்கத் தக்கதே.

(இ - ள்.) அதுகேட்ட [1] சேணிகன், கணதரரைநோக்கி, நினக்கு இடப்பக்கத்திருந்த தாமரைக்கண்ணினனாகிய இவனுடைய உட்கத்தக்கதாகிய கெடாத பேரொளியையுடைய வடிவமே தேவனென்று வாய்விட்டுக் கூறாநிற்கும்; ஆதலால், யான் இங்ஙனங் கூறினேனென்றானென்க. (சுருகூ)

---

3056. கேண்மதி - கேட்பாயாக; மதி: முன்னிலையசை. வானில் வாழ்பவரும் போகபூமியாரும் என்னதும் துறவலர்; என்னதும் - சிறிதும். தோன்றுமே - தோன்றாது; ஏ: எதிர்மறை. இப்பாடல் சுதன்மர் கூற்று.

3057. அடிகள் என்றது சுதன்மரை நோக்கிக் கூறியது. மருங்கிருந்த கண்ணினனாகிய இவனுடைய உட்கத்தக்கதாகிய ஒளியுடைய வடிவமே வானவன் என்பது உரைக்கும்; இவனென்றது சீவகனை. இப்பாடல் சேணிகன் கூற்று.

(உரை) [1] "மற்றொருநாள் ஸ்ரேணிகமகாராஜன் சமவசரணமடைந்து அசோக வனத்துள் அசோகவிருட்ச மூலத்து ரூபயௌவந லட்சண சகிதராகித் தியானாரூடராகியிருந்த சீவந்தர முனிகளைக் கண்டு அத்தியந்தம் விஸ்மிதனாகிச் சுதன்மரென்னுங் கணதரரையடைந்து பகவானே! இத்திருசலட்சண சகிதராகிய இந்தத் தபோதனர் யாரென்று வினவ, அவரும் அருளிச் செய்வார்" என்று ஸ்ரீ புராணத்துங் கூறினர்.

3058. திருவினோ டகன்ற மார்பிற் சீவக சாமி யென்பான்
உருவினோ டொளியு நோக்கி னொப்புமை யுலகி னில்லை
மருவினா ரிமைத்து நோக்கின் மனம்பிறி தாகி நிற்பார்
அரிதிவன் முகத்து நோக்க லழகொளி யன்ன வென்றான்.

(இ - ள்.) அச்சேணிகனை நோக்கி, இவன், திருமகளோடு கூடி அகன்ற மார்பினையுடைய சீவகசாமியென்கின்றவன்; இவனுக்கு அச்சத் தோடுங்கூடிய புகழைப்பார்த்தால் உலகில் ஒப்பில்லை; அழகும் ஒளியும் நீ கூறிய தெய்வத்தன்மையாயேயிருக்கும்; இவனை மருவினார்களும் இமைத்துப்பார்த்தால் அவனன்றென்று மனம்வேறாய்நிற்பார்; ஆதலால், இவனிடத்துநோக்குதல் அரிதென்று கணதரர் கூறினாரென்க. (சகூ0)

---

## கூ2. சேணிகன்வினா

(வேறு)

3059. மாதவன் சரிதமுந் துறந்த வண்ணமும்
ஏதமின் றியம்புமி னடிக ளோவெனப்
போதலர் புனைமுடி யிறைஞ்சி யேத்தினான்
காதலிற் கணந்தொழக் காவன் மன்னனே.

(இ - ள்.) அதுகேட்ட சேணிகன், சீவகசாமி முற்பவங்களிற் செய்த தவங்களையும், ஈண்டுப் பற்றற்றுத் துறந்த செய்திகளையும் குற்ற மின்றாக அடிகளியம்புமினென்று அந்தக் கணதரரை இறைஞ்சி யேத்தினான்; அருகிருந்த முனிகணம் இவற்றைக் கேட்கவேண்டுங் காதலினாலே கைதொழாநிற்கவென்க.

ஓகாரம் சிறப்புணர்த்திற்று. (சகூக)

3060. பாட்டருங் கேவலப் பரவை மாக்கடற்
கூட்டருங் கொழுந்திரை முகந்து மாமுனி
மோட்டிரு மணிமுகின் முழங்கிப் பெய்தலின்
ஊட்டரு மறவமிர் துலக முண்டதே.

3058. மருவினார் - சீவகனைப் பொருந்தியவர்களும். இவன் முகத்து நோக்கல் அரிது. அழகும் ஒளியும் அன்னவே. இப்பாடல் சுதன்மர் கூற்று.

3059. மாதவன்: சீவகன்; துறவுபூண்டானாதலின் இவ்வாறு கூறினார். அடிகள்: சுதன்மர்; விளி. மன்னன் இறைஞ்சினான்; மன்னன்: சேணிகன்.

3060. பாட்டரும் - புகழ்தற்கரிய. கேவலஞானமாகிய கடலில். முனியாகிய முகில் முகந்து பெய்தலின். அறமாகிய அமிர்தத்தை.

(இ - ள்.) புகழ்தற்கரிய கேவலஞான மென்னுங்கடலிற் கூட்டத்தை யுடைய பெறுதற்கரிய திரையை முனியாகிய முகில் முகந்துகொண்டு நின்று அறமாகிய அமிர்தத்தைப் பெய்கையினாலே அதனை உலகமுண்டதென்க.

எனவே, இந்த ஞானத்தாலே பல பிறப்பிற்செய்த தவங்களை உணர்ந்து கூறினாரென்றார். தவங்களைக்கூறவே அறமாயிற்று. இக் காரணங்கூறவே துறந்தவண்ணமும் கூறினாராயிற்று. மோடு - பெருமை. ஊட்டரும் - பிறரை அறிவித்தற்கரிய. (சகூ௨)

3061. சீவகன் றிருவின மாக யாமென
நாவகந் தழும்பநின் றேத்தி நன்றரோ
காவல னாதியாக் கணங்கள் கைதொழப்
பாவமில் சுதன்மராற் பாடப் பட்டதே.

(இ - ள்.) அதுகேட்டு, யாங்களும் பெரிதும் சீவகன்பெற்ற இத்திருவினை உடையேமாகவேண்டுமென்று நாத்தழும்புற ஏத்திச் சேணிகன் முதலாக முனிகணங்களுந்தொழும்படி இவன் சரிதம் சுதன்மரென்னுங் கணதரராலே இப்படிப் பாடப்பட்டதென்றாரென்க. (சகூ௩)

---

## ௩௩. கேவலோற்பத்தி

### (வேறு)

3062. முல்லைசூழ் முல்லை வேலி முயலொடு கவரி மேயும்
கொல்லைசூழ் குன்றத் துச்சிக் குருசினோற் றுயர்ந்த வாறும்
வில்லுமிழ்ந் திலங்கு மேனி விழுத்தவ நங்கை மார்கள்
மல்லலங் குமரர் வான்மேற் சென்றதும் வகுக்க லுற்றேன்.

முல்லைநிலஞ்சூழ்ந்த குன்று.

(இ - ள்.) குருசில், முல்லைபடர்ந்த வேலியையுடைய கொல்லை சூழ்ந்த மலையுச்சியிலேநின்று தவஞ் செய்து வீடுபெற்றபடியும், தேவி

3061. திருவினமாக - திருவினை உடையேமாக. காவலன் ஆதியா - சேணிகன் முதலாக. சீவகசரிதம் பாடப்பட்டது.

3062. கவரி - கவரிமான். குருசில் குன்றத்துச்சியில் நோற்று உயர்ந்தவாறும்; குருசில் : சீவகன். நங்கைமார்கள் : சீவகனுடைய மனைவியர். குமரர் - நந்தட்டன் முதலியவர். வகுக்கல் - கூறுபடுத்திச் சொல்லுதல்.

மாரும், நந்தட்டனும் தோழன்மாரும் துறக்கத்துச் சென்றபடியும் கூறுபடுத்துக் கூறுவேனென்றுரென்க. (சுகூசு)

### (வேறு)

3063. முழுது முந்திரி கைப்பழச் சோலைத்தேன்
ஒழுகி நின்றசும் பும்முயர் சந்தனத்
தொழுதிக் குன்றந் துளும்பச்சென் றெய்தினன்
பழுதில் வாய்மொழிப் பண்ணவ னென்பவே.

(இ - ள்.) வாய்மொழியையுடைய பண்ணவன், முந்திரிகைப் பழத்தையுடைய சோலையில் தேனொழுகி நிற்கையினாலே முழுக்க அசும்பும் குன்றிலே துளும்பச் சென்று சேர்ந்தானென்க.

பண்ணவன் - சீவகசாமி. துளும்ப - ஆண்டையார் இவன் இங்ஙனம் துறத்தற்கு வருந்த; தவத்தின் கனத்தால் இளகுதலுமாம். (சுகூரு)

3064. நணிதி னெண்வினை யின்னவை கண்ணிறீஇத்
துணிய வீர்ந்திடுந் துப்பமை சிந்தையான்
மணியின் மேன்மணி கட்டிய தொத்ததற்
கணியு மாயலர் ஞாயிறு மாயினன்.

(இ - ள்.) அதனைச் சேர்ந்து அண்ணிதாக எண்வினையினுடைய குற்றங்களை முன்னர் நிறுத்தி அவற்றை அற்றுப்போம்படி அறுத்திடும் தூய்மையமைந்த சிந்தையையுடையனாய் அதன்மேல் நின்றபொழுது அதற்கு நீலமணியின்மேலே மாணிக்கத்தையழுத்திய தன்மையை ஒத்து ஒரு பூணுமாய் இளஞாயிறுமாயினனென்க. (சுகூகூ)

3065. குன்றின் வீழரு விக்குரல் கோடணைச்
சென்றெ லாத்திசை யுஞ்சிலம் பின்மிசை
நின்ற னன்னிறை வம்மின நீரென
ஒன்றி நின்றதி ரும்மொரு பாலெலாம்.

---

3063. சோலையில் தேன் ஒழுகி நிற்கையால் அசும்பும் குன்றத்தில். துளும்ப - சீவகன் துறவு பூணுதலைப் பார்ப்பவர் வருந்த. பண்ணவன் எய்தினன்; பண்ணவன் : சீவகன்.

3064. நணிதின் - அண்ணிதாக. நவை கண் நிறீஇ - குற்றங்களை முன்னர் நிறுத்தி. துப்பு அமை - தூய்மையமைந்த; துப்பு - வன்மை யெனலுமாம். சிந்தையான் : சீவகன். அணி - ஆபரணம். அலர் ஞாயிறு - இளஞ்சூரியன்.

3065. குன்றின் கோடு அணைச்சென்று எலாத்திசையும் வீழ் அருவிக் குரல்; கோடு - சிகரத்திடத்தே. அணைச் சென்று - அணைதலைச் சென்று. இறை நின்றனன் நீர்வம்மின் என; இறை : சீவகன். குரல் அதிரும்.

(இ - ள்.) அக்குன்றினது சிகரத்திடத்தே எல்லாத் திசைகளினும் அணைதலைச் சென்று வீழ்கின்ற அருவிக்குரல், இச்சிலம்பிலே இறை வந்து நின்றான்; அறங்கேட்கும்படி நீர் வம்மினென்று ஒருபாலெல்லாம் அதிருமென்க.

கோடு - மரக்கோடுமாம். (சசுஎ)

3066. செம்பொன் பின்னிய போற்றினைக் காவலர்
வெம்பு மும்மத வேழம் விலக்குவார்
தம்பு னத்தெறி மாமணி சந்துபாய்ந்
தும்பர் மீனெனத் தோன்றுமோர் பாலெலாம்.

(இ - ள்.) அக்குன்றின் ஒருபாலெல்லாம், பொற்கம்பி பின்னியது போலும் முற்றிய தினைக்காவலராய் நின்று வேழத்தை ஓட்டுகின்றவர்கள், தம்புனத்தே நின்று எறிந்த மணி சந்தனமரத்தைத் தள்ளிப் போய் மீனெனத் தோன்றாநிற்குமென்க. (சசுஅ)

3067. யானை குங்கும மாடி யருவரைத்
தேனெய் வார்சுனை யுண்டு திளைத்துடன்
கான மாப்பிடி கன்றொடு நாடகம்
ஊன மின்றிநின் றாடுமோர் பாலெலாம்.

(இ - ள்.) அக்குன்றினொருபாலெல்லாம், யானை குங்குமக் கொடியிலே கிடந்து பின்னர்த் தேனொழுகிய சுனைநீரைச் சேரவுண்டு களித்து அக்களிப்பாலே பிடியோடும் கன்றோடும் சுழன்று திரியாநிற்குமென்க. (சசுகூ)

3068. வரிய நாக மணிச்சுடர் மல்கிய
பொருவில் பொன்முழைப் போர்ப்புலிப் போதகம்
அரிய கின்னரர் பாட வமர்ந்துதம்
உருவந் தோன்ற வுறங்குமோர் பாலெலாம்.

3066. பொன் பின்னியதுபோலும் தினை: "பொன்போற் சிறு தினை" (குறுந். 105 : 1). காவலராய் வேழத்தை விலக்குவார். பாய்ந்து - தள்ளிப்போய்.

3067. குங்குமம் - குங்குமக்கொடி. திளைத்து - களித்து. பிடியொடும் கன்றொடும் நாடகம் ஆடும். ஊனம் - குறைபாடு.

3068. வரிய நாகம் - வரிகளையுடைய பாம்பு. புலியுடன் போதகமும்; போதகம் - யானை. கின்னரர் பாட; "கின்னர கீதத்துக் கேள்வி மாந்தர்" (பெருங். 1, 37 : 108)

**(இ - ள்.)** அக்குன்றிடுரைபாலெல்லாம், மணியினது ஒளிநிறைந்த வரிகளையுடையவாகிய பாம்பும் புலிகளோடே யானைக்கன்றுகளும் பெறுதற்கு அரிய கின்னரர்கள் அமர்ந்து பாடுதலாலே அதுகேட்டு மணியினதொளியிலே தம் வடிவுதோன்றக் கிடந்து உறங்கா நிற்குமென்க.

இவை, இருடிகளிருத்தலின் தீங்கு செய்யாவாயின. (சஎ0)

3069. பழுத்த தீம்பல வின்கனி வாழையின்
விழுக்கு லைக்கனி மாங்கனி வீழ்ந்தவை
தொழித்து மந்தி துணங்கை யயர்ந்துதேன்
அழிக்கு மஞ்சுனை யாடுமொர் பாலெலாம்.

**(இ - ள்.)** அக்குன்றிடுரைபா லெல்லாம், மந்திகள், முப்பழம் வீழ்ந்தவற்றைத் தின்று ஆரவாரித்துத் துணங்கையாடிப் பின்னர்த் தேனுகிய வெள்ளம் சென்று அழிக்குஞ் சுனையிலே ஆடுமென்க. (சஎக)

(வேறு)

3070. நளிசிலம் பதனி னுச்சி நாட்டிய பொன்செய் கந்தின்
ஒளியொடு சுடர வெம்பி யுருத்தெழு கனலி வட்டம்
தெளிகடல் சுடுவ தொத்துத் தீயுமிழ் திங்க ளுன்கும்
விளிவருங் குரைய ஞான வேழமேற் கொண்டு நின்றான்.

ஞாயிற்றினது வட்டம் கடலைச் சுவறப்பண்ணும் தன்மையை யொத்து ஒளியோடே விளங்கும்படி கோபித்துத் தீயைச் சொரியும் [1] திங்கள்.

**(இ - ள்.)** அவன், முற்கூறியனவெல்லாஞ் செறிந்த சிலம்பின் உச்சியிலே ஞானமாகிய வேழத்தை ஏறி நாட்டின கந்துபோலே திங்களுன்கும் நின்றானென்க.

[2] குரைய : அசை. சித்திரை முதலிய நான்கு திங்களையும் கூறினர். (சஎ2)

3071. (க) பார்க்கடல் பருகி மேகம் பாப்பினம் பதைப்ப மின்னி
வார்ப்பிணி முரசி னார்த்து மண்பக விடித்து வானம்
நீர்த்திரள் பளிக்குத் தூணி சொரிந்திட நின்று வென்றான்
மூர்த்தியாய் முனிவ ரேத்து முனிக்களி றனைய கோமான்.

---

3069. தொழித்து - ஆரவாரித்து; சீவக. 2969. மந்தி - பெண் குரங்கு. துணங்கை : ஒருவகைக் கூத்து.

3070. சிலம்பு - மலை. கந்தின் - தூணைப்போல. கனலிவட்டம் - சூரியனது வட்டம். ஞானமாகிய வேழம்.

(உரை) [1] திங்கள் - மாதம். [2] குறிஞ்சிப். 14.

3071. பார்க்கடல் - பாறையையுடைய கடலை; முருகு. 45, ந. பாப்பினம் - பாம்புக் கூட்டங்கள். நீர்த்திரளைப் பளிக்குக் கோலையுடைய தூணி சொரிந்திட ; என்றது மழைபெய்ததை. கோமான் : சீவகன்.

3072. (உ) திங்களுள் கவையு நீங்கத் திசைச்செல்வார் மடிந்து
தேங்கொள், பங்கயப் பகைவந் தென்னப் பனிவரை யுருவி வீசும்,
மங்குல்சூழ் வாடைக் கொல்கான் வெள்ளிடை வதிந்து மாதோ,
இங்குநான் காய திங்க ளின்னுயி ரோம்பி னுனே.

3073. (ரு) வடிமலர் நெடுங்க ணூரு மைந்தரும் வரவு பார்த்தங்
கடிமலர் பரவ வேறி யாரமிர் தரிதிற் கொள்வான்
கடிமலர்க் கமலத் தன்ன கையினை மறித்துக் கொள்ளான்
முடிதவக் கடலை நீந்தி யின்னண முற்றி னுனே.

இவை மூன்றும் ஒரு தொடர்.

(க) மூர்த்தியாய் - தவவேடமுடையனுய்.

(உ) அவையென்று சுட்டிற்று, முற்கூறிய திங்களுன்காகிய காரை யும் கூதிரையும். மடிந்து : செய்தெனெச்சம் பிறவினைகொண்டது. தேம் கொள் பங்கயப்பகை - அத்தேசங்களிலே கொண்ட பனி. இங்குதல் - தங்குதல்.

(இ - ள்.) அங்ஙனம் நின்ற கோமான், வானிடத்து மேகம் பாரிடத் துக் கடலைப்பருகிப் பாப்புத்திரள் பதைக்கும்படி மின்னி ஆர்த்து இடித்து நீர்த்திரளைப் பளிக்குக்கோல் கிடக்குந்தாணி அதனைச் சொரியு மாறுபோலச் சொரிய அத்திங்களுன்கு நின்று அவையும் போனபின்பு, பனிக்காலம் வந்ததாக, பனிமாசைத் தடவிவரும் வாடைக்கு ஒல்கானுய் வெளியிலே நான்காகிய திங்களும் உணவொழிந்து தங்கி இங்ஙனம் ஆறுகாலங்களையும் வென்றுன்; அவ்வளவிலே தேவிமாரும், நந்தட்ட னும், தோழன்மாரும் இவன் [1] சரியைகொள்ள வரும் வரவினை நோக்கி அவ்வரையிலேயேறி அவன் சரியை கோடற்கு அடிமலர்களைப் பரவ,

---

3072. திங்கள் - மாதம். தேம்கொள் - தேசங்களிலே கொண்ட. பங்கயப் பகை யென்றது பனிப்பருவத்தை; சீவக. 268, அடிக். வாடைக்கு ஒல்கான்; ஒல்கான் - தளராதவனுய். வெள்ளிடை - வெளியில். இங்கு உயிர் - தங்கிய உயிர்.

3073. நெடுங்கணுர் - சீவகன் மனைவியர். மைந்தர் : நந்தட்டனும் தோழன்மாரும். அமிர்தைக் கொள்வதற்கு அடிமலரைப் பரவ; அமிர்து - உணவு. கொள்ளானுய்த் தவத்தை முற்றினுன்.

(உரை) [1] சரியை கொள்ள - பிக்ஷை கொள்ள.

**அவனும் அதனையெல்லாம் கொள்ளானாய் வேண்டாவென்று கையினை மறித்து அதிலே சிறிது கைக்கொண்டு ஓரியாண்டாக உணவொழிந்து தங்கின இன்னுயிரைப் பாதுகாத்தான்; இவன் அங்ஙனம் தவக் கடலை நீந்திப் பின்னர் வீடுபெறுதற்குக் காரணமான அத்தவத்தை இங்ஙன முடித்தானென்க.**

முடித்தல் - வீடுபெறுதல். அது முடித்தபடி மேற்கூறுகின்றார். (௪௭௩-௫)

3074. ஒளிறுதேர் ஞானம் பாய்மா வின்னுயி ரோம்ப லோடைக், களிறுநற் சிந்தை காலாள் கருணையாங் கவசம் சீலம், வெளிறில்வாள் விளங்கு செம்பொன் வட்டமெய்ப் பொருள்க ளாகப், பிளிறுசெய் கருமத் தெவ்வர் பெருமதின் முற்றி னானே.

வெளிறு - குற்றம்.

(இ - ள்.) மெய்ஞ்ஞானமே விளங்குந் தேராக இனிய உயிரைப் பாதுகாத்தலே மாவாகச் சன்மார்க்க மதியே களிறாகக் கருணையே காலா ளாகச் சீலமே தனக்காம் உடம்புக்கீடாக மெய்ப்பொருள்களே வாளும் கேடகமுமாகக் கொண்டு ஆரவாரத்தைச் செய்யும் இருவினையாகிய பகைவர் பெரிய மதிலை வளைத்தானென்க. (௪௭௬)

3075. உறக்கெனு மோடை யானை யூணெனு முருவத் திண்டேர், மறப்பெனும் புரவி வெள்ளம் வந்தடை பிணிசெய் காலாட், டிறப்படப் பண்ணிப் பொல்லாச் சிந்தனை வாயில் போந்து, சுறக்கட லனைய தானை துளங்கப்போர் செய்த தன்றே.

(இ - ள்.) அப்பொழுது, அக்கருமத்தெவ்வருடைய கடலனைய தானை, உறக்கமென்னும் யானையினையும், உணவென்னும் உட்குதலை யுடைய தேரினையும், மறவியென்னும் புரவி வெள்ளத்தினையும், வளியும் பித்தும் ஐயும் வந்தடைதலைச் செய்யும் பிணிகளாகிய காலாளினையும் கூறுபட அணிந்து அசுப பரிணாமமென்கின்ற வாயிலைவிட்டுப் போந்து நடுங்கும்படி போர் செய்ததென்க. (௪௭௭)

3074. ஓம்பல் - பாதுகாத்தல். பிளிறுசெய் - ஆரவாரத்தைச் செய் கின்ற. கருமத் தெவ்வர் - இருவினையாகிய பகைவர்.

3075. உறக்கு - உறக்கம். ஊண் - உணவு. திறப்பட - கூறுபட. சுறக் கடல் - சுறாமீனையுடைய கடல்.

3076. தெளிவறுத் தெழுவர் பட்டா ரீரெண்மர் திளைத்து வீழ்ந்தார், களிறுகா லுதைப்ப வெண்மர் கவிழ்ந்தனர் களத்தி னுள்ளே, பிளிறிவீழ் பேடி பெண்ணோ யறுவகைத் துவர்ப்பும் பேசின், அளிபடு சிந்தை யென்னு மாழிவாய் வீழ்ந்த வன்றே.

(இ - ள்.) அப்போர்க்களத்திலே அக்கருமத்தெவ்வர் படையிலே எழுவர் கலங்கிப் பட்டார்; பதினறுவர் பொருது வீழ்ந்தார்; சன்மார்க்க மதியென்னும் களிறு காலாலுதைப்ப எண்மர் கவிழ்ந்தார்; அப்பொழுது கூப்பிட்டு வீழ்கின்ற நபுஞ்சக வேதமும், ஸ்திரீவேதமும், அறுவகைத் துவர்ப்பும் சொல்லின், தண்ணளியையுடைய சிந்தனையென்னும் சக்காரத்தின் வாயிலே பட்டனவென்க.

[1] எழுவரென்றது: மித்தியாத்துவம், சம்மியக் மித்தியாத்துவம், சம்மியத்துவப் பிரகிருதி, அநந்தானுபந்திக்குரோதம், அநந்தானுபந்தி மானம், அநந்தானுபந்தி மாயை, அநந்தானுபந்திலோப மென்பன வற்றை. இவை முறையே கற்பிளப்புப்போல்வதூஉம், கற்றூண் போல்வதூஉம், வெதிர்வேர் முடங்கல்போல்வதூஉம், உலைமூக்கிற் பற்றின கிட்டம்போல்வதூஉம், சேறு போல்வதூஉம், சேறும் நீரும் கலந்தாற்போல்வதூஉம் மண்ணின்மேற்றெளிந்த நீர்போல்வதூஉமென்று கொள்ளப்படும்; ["மலைநிலனே மணனீர்க்கீற் றிவைவெகுளிக் குவமமாம், சிலையென்பு திமிசுத்தூண் செங்கொழுந்து பெருமிதக்கா, முலை மாயை முதிர்வெதிர்போர்த் தகர்மருப்பு நார்விடைநீர், உலையுசவு நீர் மஞ்சட் டுகிலினீ ருலோபக்கே." அநந்தானுபந்திக்குரோத முதலாகச் சஞ்சுவலனலோபமிறுதியாகக் கிடந்த இப்பதினாறு கஷாயமும் விரித்துக் கொள்க]. இவை உவமை காட்டினபடி. ஈரெண்மராவார்: "இருகதி நாற்சாதி யீராநு பூர்வி, வெயில்விளக்கு நிற்ற னுணுகல் - பொதுவுடம்பு, நித்தாதி மூன்றோ டிவைபதினா றென்றுரைப்பர், எப்பொருளுங் கண்டுணர்ந்தோ ரீண்டு." அவற்றுள், இருகதியாவன: நரககதி, விலங்குகதி. நாற்சாதியாவன: ஏகேந்திரிய சாதிநாமகர்மம், துவீந்திரியசாதி நாம கர்மம், திரீந்திரியசாதி நாமகர்மம், சதுரிந்திரியசாதி நாமகர்மம். ஈராநு பூர்வியாவன: நரககத்தியாநு பூர்வி, திரியக்கத்தியாநுபூர்வி. வெயிலென்றது, ஆதபநாமகருமத்தை. விளக்கென்றது உத்தியோத நாம கருமத்தை. நிற்றலென்றது, தாவர நாமகருமத்தை. நுணுகலென்றது, சூக்குமநாம கருமத்தை. பொதுவுடம்பென்றது, சாதாரண சரீரத்தை. அஃது ஓருயிர்க்குடம்பாய் நின்றே பலவேறு உயிர்க்கும் உடம்பாதல்; அவை கடுகுமூலம், கற்றுழை முதலியன; கிளுவை முதலாகக் கொம்புநட்டாலாவனவுமாம். நித்தாதி மூன்றுவன: நித்திராநித்திரையும் பிரசலாப்பிரசலையும், ஸ்தியானக்கிரந்தியுமாம். அவற்றுள், நித்திரா

---

3076. (உரை) [1] இந்தக் கருமங்களினிலக்கணமும், இவற்றின் பெயர்க் காரணமும், இவற்றிற்குரிய உவமைகளும் **கருமஸ்வரூபம்** என்னும் நூலில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

நித்திரையாவது, உறக்கத்தின் மேலுறக்கம். பிரசலாப்பிரசலையாவது, துளக்கத்தின் மேல்துளக்கம். ஸ்தியானக்கிரந்தியாவது, கனவிற் செய்தது நனவிலறியாமை. எண்மரென்றது: அப்பிரத்தியாக்கியானக் குரோதம், அப்பிரத்தியாக்கியான மானம், அப்பிரத்தியாக்கியான மாயை, அப்பிரத்தியாக்கியான லோபம், பிரத்தியாக்கியானக்குரோதம், பிரத்தியாக்கியானமானம், பிரத்தியாக்கியானமாயை, பிரத்தியாக்கியான லோபமென்பனவற்றை. இவைமுறையே நிலம்பிளந்தாற் . போல்வதூஉம், எலும்புபோல்வதூஉம், தகர்க்கோடுபோல்வதூஉம், உசவு போல்வதூஉம், மணற்கீற்றுப்போல்வதூஉம், திமிசுத்தூண்போல்வதூஉம், வாளின் வாய்நார்போல்வதூஉம், நீர்மஞ்சள் போல்வதூஉமென்று கொள்ளப்படும். பேடியாவது, நபுஞ்சகவேதம். பெண்ணேயாவது, ஸ்திரீவேதம். அறுவகைத் துவர்ப்பாவன: ஆசியம், இரதி, அரதி, சோகம், பயம், சுகுச்சை என இவை. அவற்றுள் ஆசியமென்பது - சிரித்தல்; இரதியென்பது - வேண்டுதல்; அரதியென்பது - வேண்டாமை; சோகமென்பது - அசைவு; பயமென்பது - அச்சம்; சுகுச்சையென்பது - அருவருப்பு. பிளிறுதல் - அரற்றுதல். (சஎஅ)

3077. மயக்கப்போர் மன்னன் மக்கண் மந்திரி யவரும் வீழ
வியப்புறு வேத வில்வாய் வேட்கையம் பெடுத்திட் டெய்யக்
கலக்கமி லசுப மென்னுங் குந்தத்தாற் கணைபெய்ம் மாரி
விலக்கித்திண் வெறுப்பு வாளால் விரைந்துயி ரவனை யுண்டான்.

மயக்கம் - மோகநீயம். முன்பு பட்டவர்களெல்லாம் அவனுடைய மக்களும், மந்திரிகளும். அசுபமாவது - தோல், இரத்தம், இறைச்சி, மேதை, எலும்பு, மச்சை, சுவேதநீராயிருக்கும் இவ்வுடம்பென்று கருதின கருத்து.

(இ - ள்.) மன்னனுடைய மக்களும், மந்திரியாகியவரும் பட்டு வீழ்கையினாலே, பின்பு, அம்மன்னன், புருடவேதமென்கின்ற வில்லின் வாயிலே தாகமோகமென்கின்ற அம்புகளைத் தொடுத்தெய்ய, அந்த அப்புமாரியைக் கலக்கமில்லாத அசுபமென்னும் குந்தத்தாலே விலக்கி உடம்புவெறுத்தலாகிய வாளாலே விரைந்து அவனை உயிரையுண்டானென்க. (சஎகூ)

3078. கரும்பெறி கடிகை போன்றுங் கதலிகைப் போழ்கள் போன்றும், அரும்பொறிப் பகைவர் தம்மை யுறுப்பறத் துணித்து மீர்ந்தும், மருந்தெறி பிணியைக் கொல்லு மருத்துவன் போன்று மாதோ, விருந்தெறிந் தெறியு மூவர் மேற்படை யியற்றி னானே.

3077. வில்லின் வாயில். குந்தம் - எறிகோல். வெறுப்பாகிய வாளால்.

3078. கரும்பெறி கடிகை - கரும்பின் துண்டம். கதலிகைப் போழ்கள் - வாழைத் துண்டுகள்.

(இ - ள்.) அவன் பின்னர் ஐம்பொறியாகிய பகைவரைக் கடிகை போலே துணித்தும், போழ்கள்போலே ஈர்ந்தும், நிலைபெற்றிருந்து கொன்று, பின்னர் மருந்தினையெறியும் பிணியைக் கொல்லும் மருத்துவனை ஒத்து ஐயும் பித்தும் வளியுமாகிய மூவர்மேலே படையை நிகழ்த்தினானென்க.

மருந்தெறி - மருந்தாலே கொல்லுமென்றுமாம். (௪அ०)

3079. செழுமல ராவி நீங்கு மெல்லையிற் செறிந்து காயம்
கழுமிய வுதிரம் போல விமைப்பினுட் கரந்து நீங்கக்
கொழுமலர்க் குவளைக் கண்ணிக் கூற்றுயி ருண்ப தேபோல்
விழுமிய தெவ்வர் வாணாள் வீழ்ந்துக வெம்பி னானே.

செழுமலர் - வளமை மிக்க.

(இ - ள்.) அங்ஙனம் படையை நிகழ்த்தி அவரையும் வென்றவன், உடம்பிலே செறிந்து கோத்திருக்கும் உதிரம் உயிர்போங்காலத்து ஒரு மாத்திரையிற் கரந்துபோமாறுபோல இருவினையும் தன்னிடத்தி னின்றும் கரந்துபோம்படியாக உயிர்களைக் கூற்றுவனுண்டாற்போல அவ்வினைத்தெவ்வருயிர் குறைந்துகெட உண்டானென்க. (௪அக)

3080. குரோதனே மானன் மாயன் கூர்ப்புடை யுலோப னென்பார், விரோதித்து விரலிற் சுட்டி வெருவரத் தாக்க வீரன், நிரோதனை யம்பிற் கொன்று னித்தைநீள் பசலைப் பேரோர், விராகெனும் வேலின் வீழ வெகுண்டன னவரும் வீழ்ந்தார்.

(இ - ள்.) குரோதன் முதலிய நால்வரும் பின்னர் மாறுபட்டு விரலாலே சுட்டிக்காட்டிப் போர்செய்ய, வீரன், நிரோதனையென்னு மம்பாலே கொன்றான்; பின்னர் நித்திரையும், பிரசலையுமென்னும் பேருடையோர் தாக்க, அவரை விராகமென்னும் வேலாலே பொருதான்; அவரும் பட்டாரென்க.

நால்வரென்றது - சஞ்சுவலனக்குரோதம், சஞ்சுவலனமானம், சஞ்சுவலனமாயை, சஞ்சுவலனலோபமென்பனவற்றை. அவை முறையே நீர்க்கீற்றுப்போல்வதூஉம், செங்கொழுந்து போல்வதூஉம், விடைநீர்போல்வதூஉம், துகிலினீர்போல்வதூஉமென்று கொள்ளப் படும். நிரோதனை - செறிப்பு. விராகமென்பது விகாரமாயிற்று. (௪அஉ)

---

3079. காயம் - உடம்பில். குவளைக்கண்ணியை அணிந்த கூற்று. வெம்பினான் - உண்டான்.

3080. வெருவர - அஞ்சும்படி.

3081. புணரிபோற் சிறுபுன் கேள்விப் படையொடு புகைந்து பொங்கி, உணர்வொடு காட்சி பேறென் றிடையுறு கோக்க ளேற்ருர், இணரெரி முழக்க மன்ன சுக்கிலத் தியான மென்னும், கணையெறிந் துகைப்ப வீழ்ந்து காற்படை சூழப் பட்டார்.

கடல்போலப் பெரிய சிறிய புல்லிய கேள்வியையுடைய படையென்றது, நெறியல்லா நெறியொழுகும் சமயங்களை.

(இ - ள்.) உணர்வொடு காட்சி பேறென்று சொல்லப்பட்டு மறுபடையாக வருமரசர் புகைந்துபொங்கிப் படையோடே வந்து பொருதார்; அவர் கிளைத்தலையுடைய நெருப்பினது முழக்கம்போன்ற சுக்கிலத்தியானமென்னும் அம்புபட்டுத் தள்ளுகையினுலே வீழ்ந்து, அவர் காலாட்படை சூழ்ந்து கிடக்கப்பட்டாரென்க.

உணர்வென்றது - மதிஞாஞுவரணீயம், சுருதஞாஞுவரணீயம், அவதிஞாஞுவரணீயம், மனப்பரியய ஞாஞுவரணீயம், கேவலஞாஞுவரணீயமென்பனவற்றை. அவற்றுள், மதிஞாஞுவரணீயம் - சுவபாவ புத்தியை மறைப்பது; சுருதஞாஞுவரணீயம் - சுருதஞானத்தை மறைப்பது; அவதிஞாஞுவரணீயம் - அதீதகதமான பரிஞானத்தை மறைப்பது; அஃதாவது தன்னுடைய முற்பிறப்பையறியுமறிவை மறைப்பது; மனப்பரியயஞாஞுவரணீயம் - மனப்பரியயஞானத்தை மறைப்பது; என்பது தன்னுடைய முற்பிறப்பையும், பிறருடைய முற்பிறப்பையுமறியுமறிவை மறைப்பது; கேவலஞாஞுவரணீயம் - திரிகால ஞானத்தையு மறைப்பது; காட்சியென்றது - சக்குதரிசஞுவரணீயம், அசக்குதரிசஞுவரணீயம், அவதிதரிசஞுவரணீயம், கேவலதரிசஞுவரணீய மென்பனவற்றை. அவற்றுள், சக்குதரிசஞுவரணீயமென்பது- கண்ணுலறியுமறிவுக்கு முன்காணுங்காட்சியை மறைப்பது; அசக்குதரிசஞுவரணீயமென்பது - கண்ணெழிந்த நான்கிந்திரியங்களினுலு மறியுமறிவுக்கு முன்காணும் காட்சியை மறைப்பது; அவதிதரிசஞுவரணீயமென்பது - அவதிஞானத்துக்கு முன்காணுங் காட்சியை மறைப்பது; கேவலதரிசஞுவரணீயமென்பது - கேவல ஞானத்துக்கு முன்காணுங்காட்சியை மறைப்பது. பேறென்றது - தாஞுந்தராயம், இலாபாந்தராயம், போகாந்தராயம், உபபோகாந்தராயம், வீரியாந்தராயமென்பனவற்றை. அவற்றுள், தாஞுந்தராயமாவது - கொடையினை விலக்குவது; இலாபாந்தராயமாவது - இலாபத்தை இடையிலே விலக்குவது; போகாந்தராயமாவது - துய்த்தற்குரிய போகங்களை விலக்குவது; உபபோகாந்தராயமாவது - அனுபவிக்கும் பொருள்களை

3081. புணரி - கடல். கோக்கள் - அரசர். இணரெரி - கிளைத்தலையுடைய நெருப்பு. சுக்கிலத்தியானமென்னும் கணை; "சுக்கிலத்தியான வாளெடுத்து" (மேரு. சஞ்சயந்த. 21). காற்படை - காலாட்படை.

விலக்குவது ; வீரியாந்தராயமாவது - வீரியத்தை விலக்குவது. காற் படையாவன : பரிசேந்திரியம், நயனேந்திரியம் முதலாயின. (௩௮௲)

3082. காதிப்போர் மன்னர் வீழக் கணையெரி சிதறி வெய் யோன், ஓதிய வகையி னொன்றி யுலகுச்சி முளைத்த தேபோல், வீதிபோ யுலக மூன்றும் விழுங்கியிட் டலோக நுங்கி, ஆதியந் தகன்ற நான்மைக் கொடியெடுத் திறைமை கொண்டான்.

(இ - ள்.) அங்ஙனம் போர்செய்யும் உபாதியாகிய மன்னர் பட்டு வீழும்படி கணையாகிய நெருப்பைத் தூவிக்கொன்று, பின்னர் ஆகமத்தி லோதிய கூற்றிலே பொருந்தி, வெய்யோன், உலகுச்சியிலே முளைத்த தன்மைபோலப் பரக்கப்போய் உலகமூன்றையும் விழுங்கி அலோகத்தை யும் விழுங்கிப் பின்னர் ஆதியும் அந்தமுமகன்ற நான்கு கூறுகிய வெற்றிக்கொடியை யெடுத்து இறைவனுந் தன்மையைக் கொண்டா னென்க.

அந்நான்காவன : அநந்தஞானம், அநந்ததரிசனம், அநந்த வீரியம், அநந்தசுகமெனை இவை. (௩௮௪)

3083. பசும்பொனி னுலகிற் றேவர் பயிர்வளை முரச மார்ப்ப
அசும்புசேர் களிறு திண்டே ரலைமணிப் புரவி வேங்கை
விசும்பியங் கரியோ டாளி விடைமயி லன்ன நாகம்
நயந்தவை பிறவு மூர்ந்து நாதன்றாள் கோயில் கொண்டார்.

பயிர்வளை - அழைக்கின்ற சங்கு.

(இ - ள்.) தேவர்கள், களிறுமுதலிய வாகனங்களையும், விரும்பின பிறவற்றையுமேறி வளையுமுரசுமார்ப்ப வந்து நாதனுடைய தாளைக் கோயிலாகக்கொண்டாரென்க. (௩௮௫)

3084. நறுமலர் மாலை சாந்தம் பரூஉத்துளித் துவலை நன்னீர்க்
கறைமுகில் சொரியக் காய்பொற் கற்பக மாலை யேந்திச்
சிறகுறப் பரப்பி யன்னம் பறப்பன போல வீண்டி
நிறைகடல் விஞ்சை வேந்தர் நீணில மன்னர் சேர்ந்தார்.

---

3082. போர்செய்யும் காதியாகிய மன்னர் ; காதி - உபாதி. அலோகம் - பார்க்கப்படாத இடம். நுங்கி - விழுங்கி. ஆதியந்தகன்ற: சூளா. இரத. 82. நான்மைக்கொடி - நான்குவகையையுடைய வெற்றிக் கொடியை.

3083. பயிர்தல் - அழைத்தல். அலைகின்ற மணியையுடைய புரவி. வேங்கை - புலி. அரி - சிங்கம். ஆளி - அத்தியாளி. விடை - ஏறு. நாதன்றாள் - சீவகனுடைய பாதத்தை. கோயிலாகக் கொண்டார்.

3084. பரூஉத்துளி - பரிய துளி. விஞ்சை வேந்தரும் நில மன்னரும் சேர்ந்தார்.

(இ - ள்.) விஞ்சை வேந்தர், கற்பகமாலையை ஏந்தி அன்னம் பறப்பனபோலப் பறந்துவந்து ஈண்டித் தாளைச்சேர்ந்தார்; பின்னர் நீணிலத்துமன்னர், மாலையை ஏந்திக் கரியமுகில் பருந்துளியோடு கூடிய துவலையைச்சொரியுமாறுபோலே சந்தனத்தையுடைய பனிநீரைச் சொரியும்படி நிறைகடல்போல் வந்து தாளைச்சேர்ந்தாரென்க. (சஅசு)

3085. விண்ணியங் கருக்கன் வீழ்ந்து மீனிலங் கொள்வ தேபோல், மண்ணெலாம் பைம்பொன் மாரி மலர்மழை சொரிந்து வாழ்த்தி, எண்ணிலாத் தொழில்க டோற்றி யிந்திரர் மருள வாடிக், கண்முழு துடம்பிற் றோன்றிச் சுதஞ்சணன் களிப்புற் றானே.

(இ - ள்.) அருக்கன் விரும்பி மருளாநிற்க, விசும்பிலே இயங்கு மீன்கள் நிலத்தே குவிந்தாற்போல மண்ணிலுள்ளார் குவிந்து மலர் மழை சொரிந்து மருளாநிற்க, இந்திரர் பொன்மாரியைச் சொரிந்து வாழ்த்தித் தொழில்கள் தோற்றி மருளாநிற்க, சுதஞ்சணன் உடம்பு முழுதிலும் கண் தோன்றி ஆடிக் களிப்புற்றானென்க.

தொழில்கடோற்றி - மகிழ்ச்சியாற் கூத்து முதலிய தொழில்கள் தோற்றி. (சஅஎ)

3086. குளித்தெழு வயிர முத்தத் தொத்தெரி கொண்டு மின்ன, அளித்துல கோம்பு மாலை யகன்குடை கவித்த தாங்கு, வளிப்பொர வுளருந் திங்கட் கதிரெனக் கவரி பொங்கத், தெளித்துவில் லுமிழுஞ் செம்பொ னாசனஞ் சேர்ந்த தன்றே.

எரியுமாணிக்கமாலையாலே தம்மொளி மறைந்து பின்னரும் எழும் வயிரத்தையும் முத்தத்தொத்தையுங்கொண்டு குடை மின்னக் கவித்தது.

(இ - ள்.) அப்பொழுது காற்று ஒன்றோடொன்று பொரும்படி உளருங்கவரி திங்கட்கதிரெனப் பொங்காநிற்க ஆசனம் சேர்ந்தது; அவ்வளவிலே உலகை அளித்தோம்பும் குடை வந்து கவித்ததென்க. (சஅஅ)

---

3085. அருக்கன் - சூரியன். உடம்பு முழுவதிலும் கண் தோன்றி.

3086. ஆங்கு - அப்பொழுது. வளிபொர - காற்று ஒன்றோடொன்று பொரும்படி. கவரி - சாமரை. வில் - ஒளி.

## (மணியரும்பதம்)

### (வேறு)

3087. மணியுமிழ் திருக்கேசம் வானவ ரகிற்புகையும்
பிணியவிழ்ந்த கற்பகமும் பெயர்ந்தோடக் கமழுமால்
துணியரு வினையெறிந்தாற் கதுநாற்றஞ் சொல்லலாம்
அணிதிக முரசுவா வதன்கடாஞ் சாற்றுதோ.

துணி அரு வினை - நீக்குதற்கரியதென்று துணிந்த வினை.

**(இ - ள்.)** அரசுவாவை அதன் கடாமே அரசுவாவென்று சாற்றுதோ? **அதுபோல வினையைக் கெடுத்தாற்கு இயல்பாகவுளதாம் நாற்றமாகிய அதனைக் கேசந்தானே புகையும் கற்பகப்பூவும் கெட்டுப்போம்படி கமழ்ந்து கூறுநிற்கும்; ஆதலால், நமக்கும் அதன்றன்மை சொல்லலா மென்றுரென்க.** (சஅகூ)

3088. முழங்குதிரு மணிமுறுவன் முருக்கிதழ் கொடிப்பவழத்
தழங்குரல்வாய் தளையவிழ்ந்த மந்தாரந் தவநாறும்
அழுங்கல்சூழ் வினைவெறுத்தாற் கதுநாற்ற மறியலாம்
வழங்குபொன் வரைவளரும் பைங்கண்மா வுரையாதோ.

**முத்துப்போலும் முறுவலையுடைய வாய்; முருக்கிதழையும் பவழத்தையும் போன்ற வாய்; தழங்கு குரலையுடைய வாய்.**

**(இ - ள்.)** மேருவிலே வளரும் நாவியை அதனிடத்து வழங்கு நாற்றந்தானே நாவியென்று கூறுதோ? அதுபோல இரக்கத்தையுடைத் தாய்ச் சூழ்ந்த வினையை வெறுத்துக் கெடுத்தாற்கு இயல்பாகவுளதாம் நாற்றமாகிய அதனை வாய்தானே பிணியவிழ்ந்த மந்தாரம் கெட நாறிக் கூறுநிற்கும்; ஆதலால், நமக்கும் அதன் தன்மை அறிந்து கூறலா மென்றுரென்க. (சகூ0)

3089. உறுப்பெலா மொளியுமிழ்ந் துணர்வரிதா யிருசுடரும்
குறைத்தடுக்கிக் குவித்ததோர் குன்றேபோன் றிலங்குமால்
வெறுத்திரு வினையுதிர்த்தாற் கதுவண்ணம் விளம்பலாம்
கறுப்பொழிந்த கனையெரிவாய்க் காரிரும்பே கரியன்றே.

---

3087. மணி உமிழ் திருக்கேசம் - நீலமணியின் நிறத்தைச் சிந்து கின்ற அழகிய தலைமயிர். பெயர்ந்தோட - கெட்டுப்போம்படி. துணி அருவினை - நீக்குதற்கரிய வினை. அரசுவா - இராசயானை. கடாம் - மதம்.

3088. மணிமுறுவல் - முத்துப்போலும் முறுவல். முருக்கிதழ் - முருக்கம்பூவின் இதழ். தவநாறும் - மிக மணம் வீசும். அழுங்கல் சூழ்வினை - இரக்கத்தையுடைத்தாய்ச் சூழ்ந்த வினையை; சீவக. 3093. மா - மான்.

3089. இருசுடர் - அக்கினியும், சூரியனும். இருவினையை வெறுத்து உதிர்த்தாற்கு. வண்ணம் - நிறம். எரிவாய்க்கிடந்து கறுப்பொழிந்த இரும்பே கரியாகும்; கரி - சாட்சி.

(இ - ள்.) இருவினையை வெறுத்துக் கெடுத்தாற்கு இயல்பாக உளதாம் நிறமாகிய அதனை, உறுப்பெல்லாந்தானே ஒளியைக்கான்று, எரியின் வாய்க்கிடந்து தன் கறுப்புத்தீர்ந்த இரும்பே சான்றன்றோ வென்று, குன்றுபோன்று விளங்கிக் கூருநிற்கும்; ஆதலால் நமக்கும் அதன்தன்மை கூறலாமென்றாரென்க.

இருசுடரென்றது ஈண்டு ஞாயிற்றையும், நெருப்பையுமாம்.

இம்மூன்று கவியும் தேவர் மகிழ்ச்சியாலே எடுத்துக்காட்டுவமையான் உலகிற்கு அறிவித்தார். (சகக)

## (வேறு)

3090. வானோ ரேந்து மலர்மாரி வண்ணச் சாந்தம் பூஞ் சுண்ணம், கானார் பிண்டிக் கமழ்தாமங் கறையார் முகிலி னிறங் காட்டும், தேனார் புகைக ளிவையெல்லாந் திகைப்பத் திகைகண் மணநாறி, ஆனா கமழுந் திருவடிப்போ தமரர் முடிமே லணிந் தாரே.

பூ - பொலிவு. கறை - கறுப்பு. முகிலினிறத்தைத் தாம் காட்டிக் கொள்ளும் புகைகள்.

(இ - ள்.) வானோரேந்துகின்ற பூமழை, சாந்தம், சுண்ணம், புகைகள், பிண்டித்தாமமாகிய இவையெல்லாங்கெட இயல்பாகிய மணம் திசைகளெங்குந்தோன்றி அமையாவாய் நாறும் திருவடித்தாமரையைத் தேவர் முடிமேலே அணிந்தாரென்க. (சகஉ)

## (வேறு)

3091. சுறவுக்கொடிக் கடவுளொடு காலற்றொலைத் தோயெம்
பிறவியறு கென்றுபிற சிந்தையில ராகி
நறவமலர் வேய்ந்துநறுஞ் சாந்துநில மெழுகித்
துறவுநெறிக் கடவுளடி தூமமொடு தொழுதார்.

---

3090. கான் - வாசனை. திகைப்ப - கெட. மணம் திகைகளில் நாறி; திகை - திசை. ஆனா கமழும் - அமையாதனவாய் மணம் வீசும். மு: பெருங். 2. 1 : 15-6.

3091. சுறவுக் கொடிக் கடவுள் - மன்மதன். காலற்றொலைத்தோய் - யமனை வென்றோய். நறவமலர் - தேனையுடைய பூ. சாந்தால் நிலத்தை மெழுகி. தூமம் - அகிற்புகை.

(மேற்.) அடி, 1 : தொல். செய். 9, ந.

(இ - ள்.) விஞ்சையர், வேறொரு சிந்தையிலராய் வேய்ந்து மெழுகி, காமனொடு காலனைக்கெடுத்தோய்! எம்பிறவி அறுவதாகவென்றுகூறி, அவனடியைத் தூமத்தோடே தொழுதாரென்க. (சகூ௩)

3092. (க) பாலனைய சிந்தைசுட ரப்படர்செய் காதி
நாலுமுட னேயரிந்து நான்மைவரம் பாகிக்
காலமொரு மூன்றுமுட னேயுணர்ந்த கடவுள்
கோலமலர்ச் சேவடிகள் கொண்டுதொழு தும்யாம்.

3093. (உ) முழங்குகட னெற்றிமுளைத் தெழுந்தசுட ரேபோல்
அழுங்கல்வினை யலறநிமிர்ந் தாங்குலக மூன்றும்
விழுங்கியுமி ழாதுகுணம் வித்தியிருந் தோய்நின்
இழுங்கில்குணச் சேவடிக ளேத்தித்தொழு தும்யாம்.

3094. (௩) ஏத்தரிய பல்குணங்கட் கெல்லைவரம் பாகி
நீத்தவரு ளிந்திரனை நின்றுதொழு தமரர்
நாத்தழும்ப வேத்தித்தவ நங்கையவர் நண்ணித்
தோத்திரங்க ளோதித்துகண் மாசுதுணிக் கின்றார்.

இவை மூன்றும் ஒரு தொடர்.

(க) காதிநான்காவன: ஞானாவரணீய முதலியன. அவை 'புணரி போல்' (சீவக. 3081) என்னுங் கவியிற்கூறப்பட்டன. நான்மையாவன: அநந்தஞானம், அநந்ததரிசனம், அநந்தவீரியம், அநந்தசுகம்.

(உ) அழுங்கல் - இரக்கம். நிமிர்ந்தோடுகையினாலே அவ்விடத்து உலக மூன்றினையுமுணர்ந்து பின்னர் அந்நிலை நீங்காதே குணத்தை வித்தியிருந்தோய். இழுக்கில் குணம், விகாரம்; இழுங்கு - நீங்குதலுமாம்.

(௩) எல்லைவரம்பாகி - சிறுவரம்பன்றிப் பெருவரம்பாய். நீத்தவருள் - பெருக்கத்தையுடைய அருள். இந்திரன் - முனீந்திரன். ஏத்தி - ஏத்துகையினாலே; இது பிறவினைகொண்டது.

---

3092. படர் - துன்பம். காதிநாலும் - ஞானாவரணீயம் முதலிய நான்கையும். நான்மைக்கும் வரம்பாகி; நான்மை - அநந்தஞானம் முதலிய நான்கு.

3093. முளைத்து - தோன்றி. சுடர் - பாலசூரியன். அழுங்கல் வினை - இரக்கத்தைத் தரும் வினை; சீவக. 3088. இழுங்கில் = இழுக்கில் - குற்றமில்லாத.

3094. நீத்த அருள் - பெருக்கத்தையுடைய அருள்; நீத்தம் - பெருக்கம். துகள்மாசு துணிக்கின்றார் - துகளாகிய குற்றத்தைத் துணித்து நின்றார்.

**(இ - ள்.)** அமரர், சுக்கிலத்தியானத்தையுடைய சிந்தை விளங் குகையினாலே அரிந்து வரம்பாகி உணர்ந்த கடவுளே! நின்னடிகளை உட்கொண்டு யாமும் தொழுவேமென்றும், சுடர்போலிருந்தோய்! நின் னடிகளை யாமும் தொழுவேமென்றுங்கூறி இந்திரனைத்தொழுது ஏத்து கையினாலே, தேவியராய்த் துறந்தவர்களும் நண்ணி ஓதித் துகளாகிய அழுக்கைத் துணியாநின்றாரென்க. (சகூச-கூ)

(வேறு)

3095. (க) செய்தவ னேவினை சேருமு தற்கெனும்
ஐயமின் றுயலர் தாமரை மேலடி
மொய்ம்மலர் தூய்முனி யாதுவ ணங்குதும்
மெய்யுல கிற்குவி ளம்பிய வேந்தே.

3096. (உ) நல்லன வேயென நாடி யோர்புடை
அல்லன வேயறை கின்றபுன் றுதைர்கள்
பல்வினைக் கும்முலைத் தாய்பயந் தாரவர்
சொல்லுவ நீசுக தாவுரை யாயே.

3097. (ரு) மதியறி யாக்குணத் தோனடி வாழ்த்தி
நிதியறை போனிறைந் தார்நிக ரில்லாத்
துதியறை யாத்தொழு தார்மலர் சிந்தா
விதியறி யும்படி வீரனை மாதோ.

இவைமூன்றும் ஒருதொடர்.

(க) என்னும் - சிறிதும்.

(உ) நல்லபொருள்களே யென்றுராய்ந்து ஒரு கூற்றிலே தீயனவா கிய பொருள்களையே சாற்றுகின்ற புல்லறிவினையுடைய பரசமயிகள், பல் வினைகளையும் வளர்த்தற்குச் செவிலித்தாயை உண்டாக்கிவிட்டாரென் றது, அவர் கூறிய ஆகமங்களிலே இருவினைகெடுக்குமாறு கூறிற்றில ரென்றதாம்.

---

3095. வினையைச் செய்தவன். எனும் - சிறிதும். மெய் உலகிற்கு விளம்பிய - உண்மைப் பொருளை உலகத்திற்கு எடுத்துக்கூறிய.

3096. நாடி - ஆராய்ந்து. அல்லனவே - தீயனவாகிய பொருள் களையே. முலைத்தாய் - செவிலித்தாய்; பாலூட்டி வளர்ப்பவள். சுகதா - சுகத்தைத் தருபவனே.

3097. நிதிஅறைபோல் நிறைந்தார் - பொன்னறையைப்போலக் கேள்வியால் வாமனுடைய பரமாகமங்கள் நிறைந்த மனைவியர். துதி அறையா - துதிகளைக்கூறி. சிந்தா - சிந்தி. வீரனைத்தொழுதார்.

(ந.) மதியறியாக்குணத்தோன் - மதிஞானத்தான் அறியவொண்ணுக் குணத்தோன். நிதியறைபோலே கேள்வியால் பரமாகமங்கள் நிறைந்த தேவியர். ஒப்பில்லாத்தோத்திரம்.

(இ - ள்.) அங்ஙனம் துணிக்கின்ற தேவியர், மெய்ப்பொருளை உலகிற்கு விளம்பிய வேந்தே! சுகதா! வினையைச்செய்தவன் சிறிதும் ஐயமின்றாய் எண்வினையையுமுடையவன்; அவற்றிற்குப் புன்முதர்கள் செவிலியைப் பயந்தார்; அதுகேட்டற்கு யாங்கள் நின்னடியை வணங்குகின்றோம்; அவர் கூறுவனவற்றை நீயுரையாயென்று குணத்தோனடியை வாழ்த்தி அறைந்து சிந்தி இருவினையைத் தாங்களறியும்படி அவனைத் தொழுதாரென்க. (சகள-கூ)

(வேறு)

3098. தீவினைக் குழவி செற்ற மெனும்பெயர்ச் செவிலி கையுள், வீவினை யின்றிக் காம முலையுண்டு வளர்ந்து வீங்கித், தாவினை யின்றி வெந்நோய்க் கதிகளுட் டவழு மென்ற, கோவினை யன்றி யெந்நாக் கோதையர்க் கூற லுண்டே.

வீவினையின்றி - கெடுகின்ற தொழிலின்றி; ஒழிதலின்றியென்பாருமுளர். தாவினையின்றி - குதித்துப்போம் வினையின்றி. கோதையர் - கோதாகிய பொருளையுடையவர்.

(இ - ள்.) அவற்றுள், அவன் தீவினையின் தன்மை கூறக்கேட்ட தேவியர், தீவினையாகிய குழவி செற்றமென்னுஞ் செவிலிகையிலேயிருந்து காமமாகிய முலையையுண்டு வீங்கி வளர்ந்து தாவினையின்றி நோய்க்கதிகளிலே தவழுமென்று கூறிய இக்கோவையன்றிப் பயனில் பொருள் கூறியவர்களை எம் நாக் கொண்டாடுதலின்றென்று புகழ்ந்தாரென்க. (௬௦௦)

3099. நல்வினைக் குழவி நன்னீர்த் தயாவெனுஞ் செவிலி நாளும், புல்லிக்கொண் டெடுப்பப் பொம்மென் மணிமுலை கவர்ந்து வீங்கிச், செல்லுமாற் றேவர் கோவா யெனுமிருள் கழிந்த சொல்லால், அல்லிமே னடந்த கோவே யச்சத்து ணீங்கி னோமே.

---

3098. தீவினையாகிய குழவி. செற்றமாகிய செவிலியின்கையில். காமமாகிய முலையை. தாவினையின்றி - கெடும்வினையில்லாமலென்றுமாம். என்ற - என்று கூறிய. கோவினையன்றி - இத்தலைவனையல்லாமல். நா - நாக்கு. கோதையர் - குற்றத்தையுடையவரை.

3099. நல்வினையாகிய குழவி. நன்னீர்த் தயாவெனும் செவிலி - நல்ல நீர்மையையுடைய அருள் என்னும் செவிலி. கவர்ந்து - விரும்பி உண்டு. தேவர் கோவாய்ச் செல்லுமால் எனும் சொல்லால். அல்லிமேல் - தாமரையின் அகவிதழ்மேல்.

**(இ - ள்.)** பின்னர் அவன் நல்வினையின்றன்மை கூறக்கேட்ட தேவியர், கோவே! நல்வினையாகிய குழவி அருளென்னுஞ் செவிலி தழுவிக் கொண்டெடுப்ப அவள் முலையையுண்டு வீங்கி இந்திரனுய்ச் செல்லா நிற்குமென்று கூறிய இருள் நீங்கின சொல்லாலே, அச்சம் நீங்கினேமென்றாரென்க.

இக்கவியிரண்டும் [1] கொண்டுகூற்றென்றுணர்க. (௩௦க)

## (வேறு)

3100. மணியினுக் கொளியக மலர்க்கு மல்கிய
அணியமை யங்குளிர் வாச மல்லதூஉம்
திணியிமி லேற்றினுக் கொதுக்கஞ் செல்வநின்
இணைமலர்ச் சேவடி கொடுத்த வென்பவே.

மணியென்றது, மணியுயிரை; அது வீடுபெற்றவுயிராம். அழகமைந்த அகமலரென்றது, தங்களுடைய இதயகமலங்களை. இமிலேறென்றது, அறத்தினை; தருமத்திற்கு அது வடிவாகலின்.

**(இ - ள்.)** அத்தேவியர், பின்னரும் செல்வனே! நின்சேவடிகள் மணிக்கு ஒளியைக்கொடுத்தன; எம்முடைய அகப்பூவிற்கு வாசத்தைக் கொடுத்தன; அன்றியும், தருமத்திற்கு இருப்பிடத்தைக் கொடுத்தன வென்று புகழா நிற்பரென்க. (௩௦உ)

---

## (பரிநிர்வாணம்)

3101. இகலிருண் முழுமுத றுமிய வீண்டுநீர்ப்
பகல்சுமந் தெழுதரும் பருதி யன்னநின்
இகலிரு மரைமல ரளித்த சேவடி
தொகலருங் கருவினை துணிக்கு மெஃகமே.

---

(உரை) [1] கொண்டு கூற்று - பிறர்கூறியதைக்கொண்டு கூறியது.

**3100.** நின்சேவடி, மணியினுக்கு ஒளியையும் அகமலர்க்கு வாசத்தையும் ஏற்றினுக்கு ஒதுக்கத்தையும் கொடுத்தன; அகமலர் - இதயமாகிய பூ. ஏறு - தருமம்; "அறமெனப் படுமால் வெள்ளேறு" (பாகவதம், 266); "அறனுரு வாகிய வானேறேறுதல்" (ஒற்றியூர் ஒருபா. 6 : 3). ஒதுக்கம் - தங்குமிடம்.

**3101.** இகல் - மாறுபாடு. இருளாகிய முழுமுதல்துமிய; முழுமுதல் - பெரிய வடிவு; துமிய - கெட. பகல் - ஒளி. மலரையளித்த அடி வினையைத் துணிக்கும் எஃகம்; எஃகம் - வாள்.

தன்னொடு மாறுபடுகின்ற இருளாகிய பெரிய வடிவு துமியும்படி ஒளியைச் சுமந்து கடலிலே தோன்றும் ஞாயிற்றை ஒத்தனவாய் இருவினையோடு இகலுமடி.

(இ - ள்.) அவர், பின்னரும் பழவினையறுக்கும் வாள் நின்னடியென்று புகழ்ந்தாரென்க. (௩0௩)

(வேறு)

3102. மீன்றயங்கு திங்கண் முகநெடுங்கண் மெல்லியலார்
தேன்றயங்கு செந்நாவிற் சின்மென் கிளிக்கிளவி
வான்றயங்கு வாமன் குணம்பாட வாழியரோ
கான்றயங்கி நில்லா கருவினைகாற் பெய்தனவே.

(இ - ள்.) மீன்றிரளுக்குள்ளே கிடந்தசையும் திங்கள்போலும் முகத்தையும் கண்ணையுமுடைய தேவியர், தம் நாவிற்கிளவியாலே வாமன்குணத்தைப்பாட, அவர் தீவினைகள் அசைந்து நில்லாவாய்க் காட்டின்கண்ணே ஓடினவென்க.

வானிலுள்ளாரும் அசையும் வாமன்குணம். (௩0௪)

(வேறு)

3103. மதியம்பொழி தீங்கதிர்கள் பருகிமல ராம்பல்
பொதியவிழ்ந்து தேன்றுளிப்ப போன்றுபொரு வில்லார்
விதியிற்களித் தாரறிவன் விழுக்குணங்க ளேத்தித்
துதியிற்றொழு தார்துளங்கு முள்ளமது நீத்தார்.

(இ - ள்.) அங்ஙனந் தீவினைகெடுதலின், அவ்வொப்பில்லாத தேவியர், அத்தீவினையால் துளங்குமுள்ளமாகிய அது நீங்கப்பட்டாராய்ப் பின்னர் அவன் கூற்றினைக்கேட்டுக் களித்தார்; களித்து, மதியின் கதிரைப்பருகி மலர்ந்த ஆம்பல் மிகவிரிந்து தேனைத்துளிக்குமாறுபோன்று, அறிவன் குணங்களை ஏத்தித் துதிகளோடே அவனைத்தொழுதாரென்க. (௩0௫)

3102. மெல்லியலார் - சீவகனுடைய மனைவியர். தேன்தயங்கு - தேனின் இனிமை விளங்குகின்ற. கிளிக்கிளவியால் வாமன் குணத்தைப் பாட. வினை கானின்கண் காற்பெய்தன ; காற்பெய்தன - ஓடின.

3103. மதியம் - சந்திரன்; அம் : அசை. ஆம்பல் மலர். பொதி - கட்டு.'பொருவில்லார் : சீவகனுடைய மனைவியர். அறிவன்-வாமனுடைய.

3104. ஆர்ந்தகுணச் செல்வனடித் தாமரைக ளேத்திச்
சேர்ந்துதவ வீரர்திசை சிலம்பத்துதி யோதித்
தூர்ந்தவிரு டுணிக்குஞ்சுடர் தொழுதருளு கென்றார்
கூர்ந்தமிழ்த மாரியெனக் கொற்றவனுஞ் சொன்னான்.

(இ - ள்.) அங்ஙனம் அவனடிகளையேத்தி எல்லாருங்கூடித் துதிகளை ஓதித் தொழுது நெடுங்காலமாய்ச் செறிந்த இருளையறுக்குஞ் சுடரை எமக்கு அருளிச்செய்வாயென்றார்; அவனும் அதனை அருளிச் செய்தானென்க.

சுடர் - பரமாகமம். அவன்சொன்னபடி மேற்கூறுகின்றார். (கூ0சு)

3105. இன்பமற் றென்னும் பேரா னெழுந்தபுற் கற்றை தீற்றித், துன்பத்தைச் சுரக்கு நான்கு கதியெனுந் தொழுவிற் றோன்றி, நின்றபற் றார்வ நீக்கி நிருமலன் பாதஞ் சேரின், அன்பு விற் றுண்டு போகிச் சிவகதி யடைய லாமே.

மற்று : அசை.

(இ - ள்.) இன்பமாகிய பெரிய பசு, நான்கு கதியாகிய பெரிய தொழுவிலே தோன்றிக் கற்றை தீற்றப்பட்டுத் துன்பமாகிய பாலைச் சுரக்கும்; அதனிடத்துநின்ற பற்றையும், ஆர்வத்தையும் நீக்கி மலமற்றவன் திருவடிகளை அறிவுடையோர் சேர்வராயின், அன்பைக்கொடுத்து அத்திருவடிகளைத் தியானித்துப்போய் வீட்டுலகை அடைவார்களென்று கூறினானென்க.

எழுந்த புற்கற்றை - மனவெழுச்சியாகிய புற்கற்றை. (கூ0எ)

3106. வாட்கையம் மைந்த ராயும் வனமுலை மகளி ராயும், வேட்கையை மிகுத்து வித்திப் பிறவிநோய் விளைத்து வீயாத், தேட்கையிற் கொண்ட தொக்கு நிச்சநோய்ச் செற்றப் புன்றோற், பூட்கையை முனியின் வாமன் பொன்னடி தொழுமி னென்றான்.

---

3104. தவவீரர் - தவமாகிய வீரத்தையுடையவர். சிலம்ப - ஒலிக்க. தூர்ந்த இருள் - செறிந்த இருட்டை. ஓதித் தொழுது அருளுக என்றார்.

3105. இன்பமென்னும் பேரான்; பேரான் - பெரிய பசு. மற்று : அசை. தீற்றி - ஊட்டப்பட்டு. பற்றையும் ஆர்வத்தையும் நீக்கி; பற்று - பெற்ற பொருளிடத்துண்டாவது. ஆர்வம் - பெறாத பொருள்மேல் உண்டாவது. நிருமலன் - மலம் அற்றவன். விற்று - கொடுத்து. சிவகதி - வீட்டுலகம்.

3106. வாளைக் கையிலேயுடைய மைந்தர். தேளைக் கையிற் கொண்ட தொக்கும் புன்றோலை உடைய உடம்பை முனியின்.

தேளைக் கைக்குள்ளே பிடித்திருந்த தன்மையையொக்கும் புன்றேல்; இஃது ஆகுபெயரால் உடம்பாயிற்று ; நாடோறும் தாகமுமோகமுமாகிய நோயினையும் செற்றத்தினையும் மேற்கோளினையுமுடைய புன்றேல்.

**(இ - ள்.)** அங்ஙனங்கூறி, நீர் ஆசையை மிகுத்து விதைத்து வாளைக் கையிலேயுடைய அழகிய மைந்தராயும் மகளிராயும் வரும் பிறவி நோயை விளைத்து வீந்துபோகாதே கொண்டதொக்கும் புன்றேலை முனிவீராயின், வாமனடியைக் கைதொழுமினென்று கூறினனென்க.

வீயாது : விகாரம். (௬௦அ)

(வேறு)

3107. (க) தன்னுயிர் தான்பரிந் தோம்பு மாறுபோல்
மன்னுயிர் வைகலு மோம்பி வாழுமேல்
இன்னுயிர்க் கிறைவனு யின்ப மூர்த்தியாய்ப்
பொன்னுயி ராய்ப்பிறந் துயர்ந்து போகுமே.

3108. (உ) நெருப்புயிர்க் காக்கிநோய் செய்யி னிச்சமும்
உருப்புயி ரிருவினை யுதைப்ப வீழ்ந்தபின்
புரிப்புரிக் கொண்டுபோய்ப் பொதிந்து சுட்டிட
இருப்புயி ராகிவெந் தெரியுள் வீழுமே.

3109. (ங) மழைக்குர லுருமுவா வோத மாக்கடற்
பிழைத்ததோ ரருமணி பெற்ற தொக்குமால்
குழைத்தலைப் பிண்டியான் குளிர்கொ ணல்லறம்
தழைத்தலைச் சந்தனப் பொதும்பர்ச் சார்ந்ததே.

---

3107. பரிந்து - வருந்தி. ஓம்புதல் - காத்தல். வைகலும் - நாள் தோறும். அடி, 1-2 : குறள், 316.

3108. உயிருக்கு நெருப்பாக்கி நோய்செய்யின் ; நெருப்பாக்கி - வெம்மையை உண்டு பண்ணி. நிச்சமும் - நித்தமும். இருப்புயிராகி - தீவினை பொருந்திய உயிராய்ப்போய். எரி - நரகம்.

3109. உருமுக்குரலையுடைய மழைபெய்யும் உவாக்கடலில் ; ஓதம் - பெருக்கம். பிழைத்ததோர் - கெடுத்ததொரு. குழை - தளிர். இச்சந்தனப் பொதும்பரிடத்துப் பிண்டியானுடைய நல்லறத்தைச் சார்ந்தது, கடலிடைப் பிழைத்ததொரு மணியைப் பெற்றதொக்கும்.

3110. (௪) மல்குபூங் கற்பக மரத்தி னீழலான்
நல்குவா னொருவனை நயந்து நாடுமோ
பில்குபூம் பிண்டியா னமிர்துண் டார்பிறர்
செல்வங்கண் டதற்கவாச் சிந்தை செய்யுமோ.

3111. (௫) மணியுயிர் பொன்னுயிர் மாண்ட வெள்ளியின்
அணியுயிர் செம்புயி ரிரும்பு போலவாம்
பிணியுயி ரிறுதியாப் பேசி னோனினித்
துணிமின மெனத்தொழு திறைஞ்சி வாழ்த்தினர்.

இவை ஐந்தும் ஒரு தொடர்.

(௧) இறைவன் - சக்கரவர்த்தி. இன்பமூர்த்தி - சுகரூபி. பொன்னுயிராய் - அருகந்தாவத்தையாய்.

(௨) உயிர்களுக்கு வெம்மையுண்டாக்கி நோய்செய்யின், உருப்பை உயிர்க்கின்ற அப்பெரிய தீவினை நோயிடத்தே தள்ளுகையினாலே, அந்த நோய் புரியாற் புரிமேற்கட்டி இறுகப்பொதிந்து சுட வீழ்ந்தபின்பு தீவினை தோய்ந்த உயிராய்ப்போய் நரகத்துக்குள்ளே வெந்துவீழும்.

(௩) உருமுக்குரலையுடைய மழைபெய்கின்ற உவாக்கடல். இச்சந்தனப் பொதும்பரிலே பிண்டியானறஞ் சார்ந்ததனை நீர்பெற்ற தன்மை கடலிலே வீழ்ந்த மணியைப் பெற்ற தொக்கும்.

(௪) கற்பகத்தினிழலிடத்தே தங்குவான் வேறோர் உபகாரியைத் தேடான்; அதுபோல இறைவனறங்கேட்டோர் சிந்தை பிறர்செல்வத்தைக் கண்டு அதற்கு அவாச் செய்யாது.

(௫) மணியுயிர் - வீடுபெற்றவுயிர். பொன்னுயிர் - தேவருயிர். வெள்ளியுயிர் - மக்களுயிர். செம்புயிர் - மக்களிற் கீழாயினாருயிரும், விலங்கினுயிரும். இரும்புபோலவாம் பிணியுயிர் - நரகருயிர்.

(இ - ள்.) அவன் அங்ஙனம் கூறிப் பின்னரும் ஒருவன் தன்னுயிரைக் காக்குமாறுபோலப் பலவுயிரையும் காப்பானாயின், இறைவனாய் மூர்த்தியாய்ப் பொன்னுயிராய் விசும்பின்கண் இயங்கி வீடுபெறும்; அங்ஙனம் செய்யாது நோய் செய்யின் நரகத்தே வீழும்; அங்ஙனம் வீழாத

---

3110. நீழலான் - நிழலிடத்தே தங்குவோன். நல்குவான் - உபகாரி. அமிர்தென்றது அறத்தை. உண்டாரது சிந்தை பிறர்செல்வம் கண்டு அதற்கு அவாச் செய்யாது.

3111. அடி, 1-2: "கருமம் பிறப்பும்......வெண்ண் பிறப்பும்" (மணி. 27 : 150-52); "வெண்மை நன்பொன்மை......உணருமென்றான்" (சிவ. சித்தி. ஆசீவகன். 8); சூளா. இரத. 62.

படி நீயிர் ஈண்டு அறம்பெற்ற தன்மை கடலின் கண்ணே வீழ்ந்தமணியைப் பெற்றதொக்கும்; அவ்வறங் கேட்டோர்சிந்தை அவாச் செய்யாது; யான் உமக்கு இங்ஙனம் பிணியுயிர் ஈருகப் பேசினேன்; இனி அவற்றைத் துணிவீராகவென்றுகூற, அதுகேட்டு அவரும் இறைஞ்சித் தொழுது ஏத்தினரென்க. (௩0கூ-௧௩)

3112. விண்ணின்மேன் மலர்மழை பொழிய வீங்குபாற்
றெண்ணிலாத் திருமதி சொரியத் தேமலர்
மண்ணின்மேன் மழகதிர் நடப்ப தொத்ததே
அண்ணலா ருலாய்நிமிர்ந் தளித்த வண்ணமே.

திசைகள் பரந்த மண்.

(இ - ள்.) அத்தலைவன், அருளின்கண்மிக்கு உலாய் உலகிடத்துயிரை அளித்த தன்மை, பூமழை பொழிய மதிநிலாச்சொரிய இளஞாயிறு திரியும் தன்மையை ஒத்ததென்க.

என்றதனாற்பயன் : இளஞாயிறு இருளைக் கெடுத்து உலகை அளித்தாற்போல, இவனும் மக்கள் மனத்திருளைக் கெடுத்து அறக்கதிரைப் பரப்புகின்றானென்பதாம். மதி - குடை. பொழியச் சொரியத் திரிவதொரு ஞாயிறு இல்பொருளுவமை. (௩௧௪)

(வேறு)

3113. பான்மிடை யமிர்து போன்று பருகலாம் பயத்த வாகி
வானிடை முழக்கிற் கூறி வாலற வமிழ்த மூட்டித்
தேனுடை மலர்கள் சிந்தித் திசைதொழச் சென்ற பின்றாள்
தானுடை யுலகங் கொள்ளச் சாமிநாள் சார்ந்த தன்றே.

கூறுபாடுநெருங்கின அமிர்துபோன்றென்றது, கேட்போருணர்விற்கும் அவர் நிற்கின்ற நிலைக்குமேற்பக் கூறுபாடுடைய அறங்களென்றற்கு. வாலிதாய் எல்லாரும் அறியப்படுகின்ற அறம். தானுடையுலகம் - தான் முன்பு செய்த தவத்தாலே தனதாகிய வீடு.

3112. பால்போலும் நிலாவை மதிசொரிய. மழகதிர் - இளஞ்சூரியன். அளித்தவண்ணம் - உலகத்துயிரைப் பாதுகாத்த தன்மை; இதனை ஸ்ரீ விகாரமென்பர்.

3113. பால் மிடை - கூறுபாடு நெருங்கிய. வாலறம் - வெள்ளியதாகிய அறம். தானுடையுலகமென்றது வீட்டை. சாமி கொள்ளும்படியாக நாள் சார்ந்தது; சாமி - சீவகன்.

(இ - ள்.) சாமி, அங்ஙனம் பருகலாம் பயத்தவாய் அறியும் அமிர்தத்தைக் கூறி ஊட்டி எல்லாரும் தொழும்படி நடந்த பிற்காலத்தே வீட்டுலகத்தை அவன் கொள்ளும்படியாக நாள் சேர்ந்ததென்க.

என்றது, வீடுபெறக் கற்பித்த காலம் வந்ததென்றவாறும். (ருகரு)

3114. உழவித்தி யுறுதி கொள்வார் கொண்டுய்யப் போகல் வேண்டித், தொழுவித்தி யறத்தை வைத்துத் துளங்கிமி லேறு சேர்ந்த, குழவித்தண் டிங்க ளன்ன விருக்கைய ளுகிக் கோமான், விழவித்தாய் வீடு பெற்ருன் விளங்கிநால் வினையும் வென்றே.

(இ - ள்.) அக்கோமான், உழவுத்தொழிலைப்பரப்பி அதன்பயனைக் கொள்ளவல்லார் கொண்டு பிறவியைத் தப்பப்போகலைத் தான்விரும்பிச் சமவசரணத்தே அறத்தை உண்டாக்கிவைத்து வைகாசிப்பிறைபோன்ற பல்லியங்காசனத்தையுடையனுய் விளங்கி விழவுக்குக் காரணமாய் நால் வினையையும் வென்று வீடுபெற்றுனென்க.

உழவு - வழிபாடு. ஏறு சேர்ந்த திங்கள் - இடபவிராசியைச் சேர்ந்த திங்கள். நால்வினையாவன: பின்பு நின்ற வேதநீயம், ஆயுஷ்யம், நாமம், கோத்திரமென இவை. (ருகசு)

3115. துந்துபி கறங்க வார்த்துத் துகிற்கொடி நுடங்க வேந்தி
அந்தரம் விளங்க வெங்கு மணிகமூர்ந் தமர ரீண்டி
வந்துபொன் மாரி சிந்தி மலர்மழை சொரிந்து சாந்தும்
கெந்தநா றகிலுங் கூட்டிக் கிளர்முடி யுறுத்தி னுரே.

(இ - ள்.) அப்பொழுது, தேவர், ஈண்டி வாச்சியமொலிக்க ஆர்த்து நுடங்கக் கொடியை ஏந்தி ஆகாயமெங்கும் விளங்க ஊர்திகளை ஏறிவந்து சிந்திச் சொரிந்து சாந்தையும் அகிற்புகையையுஞ்சேர்த்தி வணங்கினுரென்க. (ருகஎ)

3116. முளைத்தெழு பருதி மொய்கொண் முழங்கழற் குளித்த தேபோற், றிளைத்தெழு கொடிகள் செந்தீத் திருமணி யுடம்பு நுங்க, விளைத்தபின் விண்ணு மண்ணு மங்கலம் வகையிற் செய்து, வளைப்பொலி கடலி னுர்த்து வலங்கொண்டு நடந்த வன்றே.

---

3114. உழவித்தி - உழவுத் தொழிலைப்பரப்பி. உறுதி - பயன். தொழுவில் அறத்தை வித்தி வைத்து; தொழு - சமவசரணம். ஏறு - இடபராசி. கோமான்: சீவகன். விழவித்தாய் - விழாவிற்குக் காரணமாய். வினையை வென்று வீடுபெற்றுன்.

3115. நுடங்க - அசைய. அணிகம் - ஊர்திகளை; சீவக. 2811, ந. கெந்தம் நாறு அகிலும் - வாசனை வீசுகின்ற அகிற்புகையும்.

3116. முழங்கு அழல் - மிக்க நெருப்பில். - தீக்கொடிகள் உடம்பை நுங்க; நுங்க - விழுங்கும்படி. மங்கலம் - கலியாணம். வளைப்பொலி - சங்காற்பொலிவுபெற்ற.

**(இ - ள்.)** எழுகின்றஞாயிறு மிக்கநெருப்பிலே முழுகின்றாற்போலச் செந்தீக்கொடிகள் திருமேனியை விழுங்கும்படி அதனைவிளைத்தபின்பு, விண்ணிலுள்ளோரும், மண்ணிலுள்ளோரும் [1] பரிநிர்வாணமென்னுங் கல்யாணத்தை விதியினாற்செய்து சங்காற்பொலிந்த கடல்போல ஆர்த்து வலஞ்செய்து போனாரென்க. (௩௧௮)

3117. கேவல மடந்தை யென்னுங் கேழ்கிளர் நெடிய வாட்கட்
பூவலர் முல்லைக் கண்ணிப் பொன்னொரு பாக மாகக்
காவலன் றானோர் கூறாக் கண்ணிமை யாது புல்லி
மூவுல குச்சி யின்பக் கடலினுண் மூழ்கி னானே.

**(இ - ள்.)** கண்ணினையும், கண்ணியையுமுடைய கேவலஞான மென்னும் பொன் ஒருபாகமாகக் காவலன் தானொருபாகமாகப் புல்லி உச்சியிலேயிருந்து இன்பக்கடலிலே அழுந்தினானென்க. (௩௧௯)

3118. பிரிதலும் பிணியு மூப்புஞ் சாதலும் பிறப்பு மில்லா, அரிவையைப் புல்லி யம்பொ னணிகிளர் மாடத் தின்றேன், சொரிமது மாலை சாந்தங் குங்குமஞ் சுண்ணந் தேம்பாய், விரி புகை விளக்கு விண்ணோ ரேந்தமற் றுறையு மன்றே.

**(இ - ள்.)** விண்ணோர் மாலைமுதலியவற்றை மாடங்களிலே ஏந்த நீங்குதல் முதலியன இல்லாத அரிவையைப் பருகியுறையுமென்க. (௩௨௦)

---

## (தேவிமார்நோற்றுயர்வு)

3119. வல்லவன் வடித்த வேல்போன் மலர்ந்துநீண் டகன்ற வாட்கண், மெல்லவே யுறவி யோம்பி யொதுங்கியு மிருந்து நின்றும், முல்லையஞ் சூட்டு வேயின் முரிந்துபோ நுசுப்பி னல்லார், மல்லற்குன் றேந்தி யன்ன மாதவ முற்றி னாரே.

---

(உரை) [1] கர்ப்பாவதரணம், ஜன்மாபிஷேகம், பரிநிஷ்கிரமணம், கேவலஞானம், பரிநிர்வாணம் என்னும் பஞ்சகலியாணங்களுள் பரிநிர் வாணம் ஐந்தாவதாதலின் கலியாணமெனப்பட்டது; பரிநிர்வாணம் - முத்தி.

3117. கேழ் - நிறம். கண்ணி - மாலை. காவலன் - சீவகன். மூவுல கத்தினுச்சியிலேயிருந்து.

3118. அரிவையை - கேவல மடந்தையை. விண்ணோர் மாலை முத லியவற்றை மாடத்து ஏந்த. சீவகன் உறையும்; உறையும் - உறைவான்.

3119. வல்லவன் - தொழிலில் வல்லவன். கண்ணையுடைய நுசுப்பி னல்லார், உறவியோம்பி, ஒதுங்கியும் இருந்தும் நின்றும் மாதவத்தை முற்றினார்; உறவியோம்பி - எறும்பையும் பாதுகாத்து.

(இ - ள்.) அவன் அங்ஙனமுறைகின்ற காலத்தே, நல்லார் தம் கண்ணுலே எறும்பிற்கும் ஒரேதம் வாராமற் பாதுகாத்து நடந்தும், இருந்தும், நின்றும் மலையை எடுத்தாற்போன்ற மாதவத்தை முடித்தாரென்க. (கஉக)

(வேறு)

3120. சூழ்பொற் பாவையைச் சூழ்ந்து புல்லிய
காழகப் பச்சை போன்று கண்டெறூஉம்
மாழை நோக்கினூர் மேனி மாசுகொண்
டேழைப் பெண்பிறப் பிடியச் சிந்தித்தார்.

மாழை - இளமை.

(இ - ள்.) அந்நோக்கினூர், நன்றென்று சூழ்ந்த பொற்பாவையைச் சூழ்ந்து தழுவிய கருஞ்சேற்றையுடைய தோல்போன்று, முன்பு தம் கண் தெறுமேனியெல்லாம் மாசுகொண்டு பெண்பிறப்புக்கெடும்படி தியானித்தாரென்க. (கஉஉ)

3121. ஆசை யார்வமோ டைய மின்றியே
ஓசை போயுல குண்ண நோற்றபின்
ஏசு பெண்ணொழித் திந்தி ரர்களாய்த்
தூய ஞானமாய்த் துறக்க மெய்தினூர்.

ஆர்வம் - இரதிகன்மம். ஐயமின்றியென்றது தரிசனவிசுத்தியைக் கூறிற்று.

(இ - ள்.) ஆசையும், பற்றும், ஐயமுமின்றிப் போய்ப் புகழையுடைய தேவருலகிலுள்ளவற்றை நுகரும்படி நோற்றபின்பு பொல்லாதென்றுகூறும் பெண்பிறப்பைக் கைவிட்டு இந்திரர்களாய் ஞானம்பெற்றுச் சுவர்க்கத்தை எய்தினூரென்க. (கஉங)

---

3120. காழகப் பச்சைபோன்று மாசுகொண்டென்க; ,காழகப் பச்சை - கருமையை யுடைய தோல். கண்தெறூஉம் - முன்பு கண்களின் ஒளியை அழிக்கின்ற. மாழை - ஒருவகை மானுமாம். ஏழை - அறியாமையாகிய குணத்தையுடைய. இடிய - கெடும்படி.

3121. ஐயமின்றி - நற்காட்சியிற் சங்கையில்லாமல். ஓசை உலகு உண்ண - புகழையுடைய தேவருலகத்தின்பத்தை நுகரும்படி. ஏசுபெண் ஒழித்து - தீங்கைத் தருமென்று இழித்துக்கூறும் பெண்பிறப்பை நீக்கி ஞானத்தைப் பெற்று.

3122. காம வல்லிகள் கலந்து புல்லிய
பூமென் கற்பகப் பொன்ம ரங்கள்போல்
தாம வார்குழற் றைய லார்முலை
ஏம மாகிய வின்ப மெய்தினர்.

(இ - ள்.) அங்ஙனமெய்தினவர், வல்லி தழுவிய கற்பகமரம்போலே தெய்வமகளிர்முயக்கத்தைப் பெற்றரென்க.

இங்ஙன முயங்கித் தாம் எய்திய செல்வத்தை வியந்துகூறுதலின் அஃது ஊடலையும், புலவியையும் விளைத்ததென்பர் மேல். (௩உ௪)

3123. கலவி யாகிய காமத் தின்பயன்
புலவி யாதலாற் பொன்னங் கொம்பனார்
உலவு கண்மல ரூடற் செவ்விநோக்
கிலைகொள் பூணினா ரிதயம் போழ்ந்ததே.

(இ - ள்.) கலவியாலுண்டாகிய காமத்தின் பயன் புலவியாதலால் அப்புலவியை மேல்விளைத்தற்கு அவர்தேவியர் ஊடிப்பார்த்தநோக்கு அவர்நெஞ்சினை வருத்தியதென்க. (௩உ௫)

3124. பூவி னுள்ளவள் புகுந்து முள்ளத்தாள்
நாவிற் பெண்பெயர் நவிற்றி னீரெனக்
காவிக் கண்கடை யிடுகக் காற்சிலம்
பாவித் தார்த்தன வம்மென் குஞ்சியே.

(இ - ள்.) அப்பொழுது, அவர், நும் உள்ளத்தே திருமகளிருந் தாள்; நா மகளையும் வாக்காற்கூறினீரென்று புலவிவிளைத்துக் கண் ணருகி நோக்குதலாலே குஞ்சியிலே சிலம்பார்த்தனவென்க.

ஆவித்து - வாய்விட்டு. (௩உ௬)

---

3122. கலந்து - கூடி. தாமம் - மாலை. தையலார் - தெய்வமகளிரது. ஏமம் - காவல். இன்பத்தை எய்தினர்.

3123. கலவி - முயக்கம். புலவி - ஊடல். கொம்பனாருடைய ஊடல் நோக்கு பூணினாருடைய இதயத்தைப் போழ்ந்தது. கொம்பனார் - தெய்வமகளிர். பூணினார் : தேவருடம்பு பெற்ற தேவிமார்.

3124. பூவினுள்ளவள் - திருமகள். நாவிற் பெண் - நாமகள். காவி - நீலோற்பலமலர். இடுக - அருகி நோக்குதலால். குஞ்சியில் சிலம்பு ஆவித்து ஆர்த்தன என்றது, ஊடல்கொண்ட தெய்வமகளிரது பாதத்தைத் தேவிமாராகிய தேவர் தம் தலையால் வணங்கி அவ்வூடலை நீக்கினரென்பதுணர்த்தியது.

3125. நெஞ்சி னேரிழை வருந்து மென்றுபூங்
குஞ்சி யேற்றது குறிக்கொ ணீயெனுப்
பஞ்சின் மெல்லடிப் பாவை பூநுதால்
அஞ்சி னூர்க்கதோர் தவற தாகுமே.

(இ - ள்.) அங்ஙனம் ஆர்த்தலைப்பெற்றவர்கள், பாவாய்! பூநுதால்! நின்னடி மார்பிலே பட்டாற் பூணுலே அவை வருந்துமென்று குஞ்சியிலேற்றது; அத்தன்மையைக் கருதுவாயென்றுகூறிப் பின்னரும் தவறு பிறக்குமென்று அஞ்சினூர்சிலர்க்குத் தவறுகிய அது பிறந்தேவிடுமாயிருந்ததென்றுகூறி அவர் புலவியைத் தீர்த்தாரென்க. (ருஉஎ)

3126. (க) தவளைக் கிண்கிணித் தாமஞ் சேர்த்தியும்
குவளைக் கண்மலர்க் கோலம் வாழ்த்தியும்
இவளைக் கண்டகண் ணிமைக்கு மோவெனுத்
திவளத் தேமலர்க் கண்ணி சேர்த்தியும்.

3127. (உ) பன்ம ணிக்கதிர்ப் பரவை மேகலை
மின்ன ணிந்துகத் திருத்தி வெம்முலைப்
பொன்ன ணிந்துபூஞ் சுண்ணந் தைவர
நன்ம ணிக்குழை யிரண்டு நக்கவே.

3125. நெஞ்சின் இழை வருந்துமென்று - நின்பாதம் பட்டால் என்மார்பிடத்து ஆபரணத்தால் வருந்துமென்றெண்ணி. குஞ்சி - தலையில். நீகுறிக்கொள் எனு - அத்தன்மையை நீ மனத்தெண்ணுவாயாக என்று கூறி. பாவை, பூநுதால் என்பன விளி.

3126. தவளைக்கிண்கிணி : சீவக. 243, அடிக். சேர்த்தியும் - அணிவித்தும். கோலத்தை வாழ்த்தியும். இவளை : வழுவமைதியால், 'பலர்' என்று பன்மையே கொள்க. திவள - அசைய. கண்ணி - மாலை.

3127. மின் உக அணிந்து - ஒளிவிட அணிந்து. மேகலையைத் திருத்தி. முலையிடத்துப் பொன்னையும் சுண்ணத்தையும் அணிந்து; பொன் - ஆபரணம்; ஆகுபெயர். சுண்ணம் - வாசனைப்பொடி. தைவர - தடவ. குழை - குண்டலம். நக்க - ஒளிவீசின.

3128. (ந) செய்த நீர்மையார் செயப்பட் டார்கடாம்
எய்தி யாவையும் முணர்க வென்பபோல்
மைய வாங்குழன் மடந்தை குண்டலம்
நைய நின்றெலா நாண நக்கவே.

இவைமூன்றும் ஒரு தொடர்.

(க) தவளைவாயையுடைய சதங்கைமாலை. குவளைக்கண்மலர் (உ) நன் மணிக்குழையிரண்டையும் நக்கவென்றது, ஊடல்தீர்ந்து கூட்டந்தருதற்கு மலர்ந்து நோக்கின நோக்கை. திவள - அசைய.

(உ) பொன் - அணிகலம்.

(ந) செய்தநீர்மையார்தாம் யாவையுமெய்திச் செயப்பட்டார்களென்பபோல் நக்கவென்றது, முற்பிறப்பிற் பிறரை மதியாமற்செய்த தன்மையையுடையவர்கள்தாம் இப்பிறப்பில் தம்மைவந்து அவை எய்துகையினாலே இப்பொழுது பிறராற் பாராமற் செய்யப்பட்டார்களென்று கூறுவன போலக் குண்டலநக்கவென்றவாறு. இது தற்குறிப்பேற்றம். தம்மையொழிந்தனவெல்லாம் இங்ஙனநகாதே நின்று நாணுநிற்க நையாநிற்கத் தாம் நக்கனவென்க; என்றது, தேவிமார் முற்பவத்திற் பிள்ளையார் முடியை மிதித்த வினைப்பயத்தால் தாங்களும் இப்பவத்து மிதியுண்டாரென்றவாறு.

(இ - ள்.) கண்மலர் நக்க, அதனை உணர்ந்தவர்கள்தாம் கோலத்தை வாழ்த்தியும் சேர்த்தியும் சேர்த்தியும் திருத்தியும் முலையிலே பொன்னையும் சுண்ணத்தையுமணிந்தும் இவளைக் கண்ட கண் இமைக்குமோவெனக்கூறித்தைவர அதனைக்கண்டு மடந்தைகுண்டலம் நக்கவென்க.

இவளையென்றும், மடந்தையென்றும் ஒருமையாற்கூறினரேனும், "ஒருபாற் கிளவி யெனைப்பாற் கண்ணும், வருவகை தானே வழக்கென மொழிப" (தொல். பொருளியல், 28) என்னும் பொருளியல் வழுவமைதியாற் பன்மை கூறிற்றென்றுணர்க. (௬உஅ-௩௦)

3128. செய்தநீர்மையார், தாம் யாவையும் எய்திச் செயப்பட்டார்களாவதை உணர்கவென்பபோல்; என்றது, முன்பு ஊடல் கொண்ட காலத்துத் தேவிமார், தம்பாதத்தைச் சீவகனைத் தலையால் வணங்கும்படி செய்தமையால், இப்பிறவியில் தாம் தேவராகி ஊடல் கொண்ட தெய்வமகளிரது பாதத்தை வணங்கலாயினரென்பதை உணர்த்தியது. மடந்தை : ஈண்டும், 'மடந்தையர்' எனப் பன்மையே கொள்க.

3129. (க) செல்வக் கிண்கிணி சிலம்பத் தேன்சொரி
முல்லைக் கண்ணிகள் சிந்த மொய்ந்நலம்
புல்லிப் பூண்டதார் புரள மேகலை
அல்குல் வாய்திறந் தாவித் தார்த்தவே.

3130. (உ) இலங்கு கொம்பனார் காம மென்னும்பேர்
கலந்த கள்ளினைக் கைசெய் தையென
மலர்ந்து வாய்வைத்தார் மணிகொள் வள்ளத்தே
நலங்கொள் சாயலார் நடுங்கி நையவே.

இவையிரண்டும் ஒரு தொடர்.

(க) பூண்ட மேகலையென்க.

(உ) மணிகொள்வள்ளத்து நலங்கொள் காமமென்னும் பேர்கலந்த கள்ளினை வாய்வைத்தாரென்றது, முத்தைத் தன்னிடத்தே கொண்ட தமது வாயாகிய வட்டிலிலேயிருந்து நன்மைகொண்ட வேட்கையென்னும் பெயர் கூடின கள்ளை அவர்கள் வாயிடத்தே வைத்தார்களென்றவாறு ; என்றது, இருதிறத்தோரும் அதரபானம்பண்ணினமை கூறிற்று. [1] கள்ளுப்போலே எயிற்று நீர் மகிழ்ச்சிகொடுத்தலிற் கள்ளென்றார். மலர்ந்து - மகிழ்ந்து.

(இ - ள்.) அவர்கள் தம் தேவியரை அங்ஙனம் கை செய்து மலர்ந்து ஐயென, கொம்பனாராகிய சாயலார் நடுங்கி நையும்படி அவர்மொய்ந் நலத்தைப் புல்லி வாய்வைத்தார் ; அப்பொழுது கண்ணிகள் சிந்தத் தார் புரளக் கிண்கிணி சிலம்ப மேகலை வாய்விட்டார்த்தனவென்க.

ஆவித்துத் தேன்சொரி கண்ணி. தேவர்க்கு இமையாமைநோக்கி யிருந்து இன்பநுகர்தலேயன்றி மக்களைப்போலத் தொழிலோடுகூடி இன்பநுகர்தலுமுளதென்பது இதனாற்பெறும். (ருகக-உ)

---

3129. செல்வம் - பாக்கியத்தையுடைய. சிலம்ப - ஒலிக்க. பூண்ட - அணிந்த. தார் - மார்பின்மாலை. அல்குலிடத்து மேகலை வாய்திறந் தார்த்தவென்க.

3130. கொம்பனார் - தெய்வமகளிர். கைசெய்து - அழகு செய்து. சாயலார் - தெய்வ மகளிர்.

(உரை) [1] கலித். 4 : 13 - 4.

3131. வெம்மை கொண்டதே னமிர்த மெல்லவே
அம்மை யஞ்சொலா ரார வுண்டவர்
தம்மைத் தாமகிழ்ந் துறைய வித்தலைச்
செம்மை மாதவர்க் குற்ற செப்புவாம்.

வெம்மை - வேண்டுதல். தேன் - இனிமை. அம்மை - அமைதி.

(இ - ள்.) அங்ஙனம் புணர்ந்தபின்பு அத்தேவியர் மெல்ல அமுதத்தை ஆராநிற்க, அத்தேவரும் அதனையுண்டு தம்மைத்தாம் மகிழ்ந்துறையாநிற்க, இவ்விடத்து நந்தட்டற்கும் தோழர்க்கும் பிறந்த செய்கைகூறுவேமென்றுரைக்க. (௩௱௩)

---

## (நந்தட்டன் தோழன்மார் நோற்றுயர்வு)

3132. நாள்கண் கூடிய நகைவெண் டிங்கள்போற்
காளை நந்தனுந் தோழன் மார்களும்
நாளு நாளினு நடுங்க நற்றவம்
தாளி னீட்டினர் தம்மைத் தாம்பெற்றார்.

(இ - ள்.) நந்தட்டனும், தோழன்மாரும் நாடோறுந் தன்னிடத்தே கலைகள் வந்து கூடிய மதிபோலே, நாடோறும் நாடோறும் முயற்சியாலே நற்றவத்தைக் கண்டார் நடுங்கும்படி ஈட்டினர்; ஈட்டி ஐம்பொறியையும் தம் வசமாக்கினரென்க. (௩௱௪)

3133. பாவ னைமரீஇப் பட்டி னியொடும்
தீவி னைகழூஉந் தீர்த்தன் வந்தியாப்
பூவுண் வண்டன கொட்பிற் புண்ணியர்
நாவின் வேட்கையு நஞ்சி னஞ்சினர்.

(இ - ள்.) அப்புண்ணியர் பட்டினிகளோடே [1] சோடசபாவனைகளை மருவி எழுந்திருந்து இறைவனை வணங்கிப் பின்னர் உயிரைப் பாது

3131. வெம்மை - விருப்பம். அம்மை - அமைதித்தன்மையுடைய. அஞ்சொலார் ஆர - தெய்வமகளிர் உண்ணாநிற்க. அவர் உண்டு - அத் தேவரும் அதனை உண்டு. இத்தலை - இவ்விடத்து. மாதவர்க்கு - நந்தட்டனுக்கும், தோழன்மார்க்கும்.

3132. நாள்கண்கூடிய - நாள்தோறும் தன்னிடத்துக் கலைகள் வந்து சேர்ந்த. நகை - ஒளி. காளையாகிய நந்தனும். நாளும் - நாள் தோறும். தாளின் - முயற்சியால்.

3133. மரீஇ - மருவி. கழூஉம் - கழுவுகின்ற. தீர்த்தன் வந்தியா - இறைவனை வணங்கி. கொட்பின் - சுழலுதலையுடைய. புண்ணியர் - நந்தட்டன் முதலியவர். நஞ்சின் - விடத்தைப்போல்.

காத்துத் தவஞ்செய்தற்குக் கருதிய மனக்கொட்பினாலே பூவையுண்கின்ற வண்டை யொத்த நாவினாற்கொண்ட உணவையும் பின்னர் நஞ்சு போல அஞ்சிக் கைவிட்டாரென்க.

வண்டொத்த வேட்கையென்றது - வண்டுபோலச் சிறிதாகக் கொள்ளு முணவை ; வேட்கை : [2] ஆகுபெயர். (ருஙரு)

(உரை) [1] சோடசபாவனைகளாவன : (க) தரிசன விசுத்தி, (உ) விநய சம்பந்நதை, (ங) சீலவ்ரதேஷ்வ நதீசாரம், (ச) அபீக்ஷண ஞானோப யோகம், (ரு) சம்வேகம், (சு) சக்திதஸ்தியாகம், (எ) சக்திதஸ்தபஸ், (அ) ஸாதுஸமாதி, (கூ) வையாவிருத்தியம், (க0) அருகத்பக்தி, (கக) ஆசாரியபக்தி, (கஉ) பகுசுருதபக்தி, (கங) பிரவசனபக்தி, (கச) ஆவசியகாபரிஹாணி, (கரு) மார்க்கப்பிரபாவனை, (கசு) பிரவசன வத்ஸலத்வமென்பன ; அவற்றுள் (க) தரிசனவிசுத்தியாவது : பகவத் அருகத் பரமேசுவரோபதிஷ்டமாகிய மோக்ஷ மார்க்கத்துச் சங்காதிக ளின்றித் தெளிதல். (உ) விநயசம்பந்நதையாவது : குருக்கள் முதலாயி னோருள் சத்காரம் பண்ணுதலில் ஆதரமுடைமை. (ங) சீலவ்ரதேஷ்வ நதீசாரமாவது : அஹிம்ஸாதி விரதங்களுள்ளும், தத்விரதரக்ஷணார்த்த மாகிய குரோதாதி நிவிர்த்தி முதலாகிய சீல விரதங்களுள்ளும் பழுதின்றி ஒழுகுதல். (ச) அபீக்ஷண ஞானோபயோகமாவது : தத்துவ ஞானத் தினை நித்தியமும் அப்பியசித்தல். (ரு) சம்வேகமாவது : தருமத்திலும் தருமபலத்திலும் பிரீதியுடைமை. (சு) சக்திதஸ்தியாகமாவது : தன் சக்திக்குத் தக்க வண்ணம் சற்பாத்திரங்களுள், ஆகாரதானம், அபய தானம், ஞானதானம் பண்ணுதல். (எ) சக்திதஸ்தபஸாவது : தன் சக்திக்குத் தக்க வண்ணம் இந்திரியங்களும் மனமும் தன் வசமாதற் பொருட்டுக் காயக்கிலேசம் பண்ணுதல். (அ) ஸாதுஸமாதியாவது : தபோதனர்க்கு யாதானும் ஒரு காரணத்தினால் தவத்தினுக்கு விரோதம் வந்தால் அதனைத் தீர்த்துத் தவத்திலே நிறுத்துதல். (கூ) வையாவிருத் தியமாவது, சம்மியக்தரிசனாதி குணங்களையுடைய ஜனங்கட்குத் துக்கம் வந்தால் அதனைத் தீர்த்தல். (க0) அருகத் பக்தியாவது : அருகத் பர மேசுவரருள் எழுகின்ற பக்தி. (கக) ஆசாரிய பக்தியாவது : ஆசாரிய ராயினார்கண் எழுகின்ற பக்தி. (கஉ) பகுசுருத பக்தியாவது : பகுசுருத ராகிய முனிகளுள் எழுகின்ற பக்தி. (கங) பிரவசனபக்தியாவது : பர மாகமத்துள் எழுகின்ற பக்தி. (கச) ஆவசியகாபரிஹாணியாவது : ஆவசியகம் ஆறினையும் சொன்ன காலங்களுட் செய்தல். (கரு) மார்க்கப் பிரபாவனையாவது : ஞானதப பூஜாதிகளால் ஜினதர்மத்தினைப் பிர காசிப்பித்தல். (கசு) பிரவசனவத்ஸலத்துவமாவது : தருமஸ்தராயினா ரைக் கண்டால் கன்று கண்ட கறவை போன்றிருத்தல் ; இவை ஸ்ரீ புரா ணத்திற் கூறப்பட்டன. ஆவசியகம் ஆறாவன : ஸாமாயிகம், ஸ்துதி, வந்தனை, பிரதிக்கிரமணம், பிரத்தியாக்கியானம், வியுஸ்ஸர்க்கமென் பன. [2] வேட்கையாலாகிய உணவிற்காயிற்று.

3134. கருவிற் கட்டிய காலம் வந்தென
உருவ வெண்பிறைக் கோட்டி னோங்கிய
அருவிக் குன்றின்மேன் முடித்திட் டைவரும்
திருவின் றேற்றம்போற் றேவ ராயினார்.

உயர்ச்சியால் தன்னிடத்தே பிறையையுடைய சிகரத்தாலே ஓங்கிய குன்று.

(இ - ள்.) அங்ஙனம் உணவைத் துறந்த ஐவரும் குன்றிலே நின்று ஏனைத் தவங்களையும் முடித்துவிட்டுக் கருப்பந் தங்குகின்ற காலத்தே இறத்தற்கு விதித்த காலம் வந்ததாக, இவ்வுடம்பைக் கைவிட்டுத் தேவராயினாரென்க.

தீவினை நீங்கி நல்வினை வந்தால் திருமகள் நினைவின்றித் தோன்று மாறு போல இவரும் இவ்வுடம்பினை நீக்கித் தேவர்யாக்கை கடிதிற் பெற்றாரென்றார். (௩௱௩௰௪)

(வேறு)

3135. அனங்கனைத் தவஞ்செய வழன்று கண்டவர்
மனங்களைக் கவர்ந்திடு மணிக்கண் வெம்முலைப்
பொனங்கொடி மயிலனார்ப் புல்ல மாப்பிடி
இனம்பயில் கடாக்களிற் றின்ப மெய்தினார்.

தாம் தவஞ்செய்தற்கு அனங்கனை அழன்று நோக்கினவர் - இருடிகள். இனிக் காமனைத் தம்மைப் பெறுதற்குத் தவஞ்செய்யும்படி அழன்று தம்மைக் கண்டார் மனங்களைக் கவர்ந்திடுமென்றுமாம்.

(இ - ள்.) அவர் தேவராயின காலத்தே, தெய்வமகளிரும் தோன்ற அவரை அத்தேவர் புல்லுதலாலே, பிடியினத்தைப் புல்லிய களிற்றினது இன்பத்தை அவரெய்தினாரென்க.

என்றது, களிற்றிற்கு ஊற்றின்பமே மிக்க இன்பமாகலின், ஊற்றின்பத்திற்கு இஃது உவமையாயிற்று. (௩௱௩௰௫)

3134. கருவில் - கருப்பம் தங்குகின்ற காலத்தே. கட்டிய காலம் - இறத்தற்கு விதித்த காலம். பிறைபோலும் கோட்டினால்; கோடு - உச்சி. முடித்திட்டு - தவத்தை முடித்து. ஐவரும் - நந்தட்டனும் தோழன்மார் நால்வரும்.

3135. அனங்கன் - மன்மதன். அழன்று கண்டவர் - கோபித்துப் பார்த்த முனிவர். மயிலனார் - தெய்வ மகளிரை. பிடியினத்தோடு பயின்ற கடாக்களிற்றின் இன்பத்தை எய்தினார்; கடாக்களிறு - ஆண் யானை.

(வேறு)

3136. காதணிந்த தோடொருபான் மின்னு வீசக் கதிர்மின்னுக் குழையொருபாற் றிருவில் வீசத், தாதணிந்த தாமங்களொருபாற் சோரத் தாமரைக்கண் டாமிரங்கப் புருவ மாட, மாதணிந்த நோக்கினு ரல்குற் காசு மணிமழலைக் கிண்கிணியுஞ் சிலம்பு மேங்கப், போதணிந்த தாருடையப் பொருது பொங்கிப் புணர்முலைகள் போர்க்களந்தாங் கண்ட வன்றே.

**(இ - ள்.) அத்தேவர், தேவியருடனே அல்குற்காசும், கிண்கிணியும், சிலம்பும் ஆரவாரிப்பப் பொருகையினாலே, அத்தேவியர் முலைகள் ஒருபால் தோடு மின்னுவீச, ஒருபால் மகரக்குழை ஒளியைவீச, ஒருபால் தாமங்கள் சோர, கண்கள் உவக்கைக்கண்ணீர் வீழ்ப்ப, புருவம் ஏறி முரிய, கணவர் மார்பிலுள்ள தாருடையப் போர்க்களத்தைக் கண்டன வென்க.**

பொருது - பொர. (௫௩அ)

3137. முழுதார மின்னு முலைக்குவட்டினுன் மொய்ம்மார்பிற் குங்குமச்சே றிழுக்கி வீழ, உழுதார்வம் வித்தி யுலப்பிலாத நுகர்ச்சி விளைத்தலர்ந்த கற்பகத் தின்கீழ், எழுதார் மணிக் குவளைக் கண்வலையுட்பட் டிமையார்கள் காம மறுசுழியுளாழ்ந், திழுதார்மென் பள்ளிப்பூந் தாது பொங்க விருவர் பலராகி யின்புறுபவே.

**(இ - ள்.) அத்தேவர்கள், கற்பகத்தின்கீழிடத்துப்பள்ளியிலே தம் தேவியர் ஆரமுழுதுமின்னும் முலைக்குவட்டாலே மார்பிற் குங்குமச் சேற்றைத் [1] தொளியாக உழுது ஆர்வத்தைவித்தி இன்பத்தைத் தாது பொங்க விளைத்தலாலே அவர் கண்வலையிற்பட்டுச் சுழியிலே விழுந்து இன்புறுவரென்க.**

இழுதார்பூ - தேனிறைந்தபூ. இருவர்பலராகி - அத்தேவரும் தேவியரும் பலபல வேடங்களைக்கொண்டு. (௫௩௯)

---

3136. தாது - மகரந்தப் பொடி. தாமம் - மாலை. ஆட - வளைதலைச்செய்ய. மாது - காதல். நோக்கினர் - தெய்வமகளிர். காசு - மேகலையின் மணிகள். மழலைக்கிண்கிணி; சீவக. 293, 317, அடிக். போது - மலரும் பருவத்தரும்பு.

3137. ஆரம் - முத்துமாலை. குங்குமச்சேற்றை உழுது. ஆர்வத்தை விதையாக வித்தி. உலப்பிலாத - எல்லையில்லாத. நுகர்ச்சியாகிய பயனை விளைவித்து ; நுகர்ச்சி - இன்பம். கண்ணுகிய வலையுட்பட்டு. இமையாதவர்களாய்க் காமச்சுழியுள் ஆழ்ந்து. இழுது - தேன். இருவர் - தேவரும் தெய்வமகளிரும்.

(உரை) [1] தொளி - சேறு.

3138. மண்கனிந்த பொன்முழவ மழையின் விம்ம மாமணியாழ் தீங்குழல்க ளிரங்கப் பாண்டில், பண்கனியப் பாவைமார் பைம் பொற் றோடுங் குண்டலமுந் தாம்பதைப்ப விருந்து பாட, விண் கனியக் கிண்கிணியுஞ் சிலம்பு மார்ப்ப முரிபுருவ வேனெடுங்கண் விருந்து செய்யக், கண்கனிய நாடகங்கண் டமரர்காமக் கொழுந் தீன்று தந்தவந்தா மகிழ்ந்தா ரன்றே.

கண்கள் காமமாகிய கொழுந்தை ஈன்று கொடுத்து விருந்துசெய்ய.

(இ - ள்.) விண்ணிலுள்ளோர் மனமுருக, அத்தேவர், முழவம் விம்ம யாழும் குழலும் பாண்டிலும் இரங்கப் பாவைமார்தாம் தோடும் குண்டலமும் பதைப்ப இருந்து பண்முற்றுப்பெறப் பாட அவர்கள் கண் கள் விருந்துசெய்யக் கிண்கிணியும் சிலம்புமார்ப்ப நாடகத்தைக் கண்ணு ருகக் கண்டு மகிழ்ந்தாரென்க. (ருசo)

(வேறு)

3139. முருகுடைந்த பூங்கோதை முத்தணிந்த தோளார்
ஒருகுடங்கைக் கண்ணு ளுளங்கழிய வேவுண்
டருகடைந்த சாந்தழிய வம்முலைமேல் வீழ்ந்தார்
திருவடைந்த நீண்மார்பிற் றேந்துளிக்குந் தாரார்.

(இ - ள்.) அத்தேவர், கோதையையும், முத்தையுமணிந்த தோளா ருடைய கண்ணாலே ஏவுண்டு முலையருகே கிடந்த சாந்தழியும்படி அம் முலை மேலே வீழ்ந்தாரென்க. (ருசக)

---

3138. மண் - மார்ச்சனைமண். மழையின் - மேகத்தைப் போல. விம்ம - ஒலிக்க. யாழும் குழலும் பாண்டிலும் இரங்க; இரங்க - ஒலிக்க. பண்கனிய - இராகம் உருகும்படி. கண்கனிய - இன்பத்தாற் கண் உருக. தம் தவத்தைத் தாம் மகிழ்ந்தார்.

(பி - ம்.) 'தந்தவர் தாமகிழ்ந்தார்.'

3139. முருகு - தேன்; வாசனை எனலுமாம். முத்து - முத்து மாலை. தோளாருடைய கண்ணால் ஏவுண்டு. தோளார் : தெய்வமகளிர். ஒரு குடங்கைக் கண் : சீவக. 342, அடிக். உளம் கழிய - உள்ளத்தே மிக. திரு அடைந்த - திருமகள் தானே விரும்பிச் சேர்ந்த. தாரார் : தேவர் ; என்றது நந்தட்டன் முதலியவரை.

3140. நிலவி யொளியுமிழு நீளிலைவேற் கண்ணார்
கலவித்தூ தாகிய காமக்கை காய்த்திப்
புலவிப் படைபயிலப் பூச்செய்த கோலம்
உலவித் துறக்க மொளிபூத்த தன்றே.

நிலவி - நிலைபெற்று. பூச்செய்தகோலம் - காமனம்புகள் அவர்கள் மேற்பட்டுச் செய்த கோலம்.

(இ - ள்.) அத்தேவியர், புணர்ச்சிக்குத் தூதாகிய காமமென்கின்ற கையாலே புலவியாகிய படையைக்காய்த்தி அவர்மேலெய்கையினாலே காமனம்பு செய்தகோலம் எங்கும்பரந்து துறக்கம் அவ்வொளிப்பொலிவு பெற்றதென்க.

என்றது, துறக்கத்துள்ளார் இவர்களின்பநுகர்ச்சியைப் புகழ்ந்தா ரென்றவாறும். (ருசஉ)

3141. புருவச் சிலைநுதற் பொன்றுஞ்சு மல்குல்
உருவத் துடியிடையா ரூடலுப் பாகத்
திருவிற் றிகழ்காமத் தேன்பருகித் தேவர்
பொருவற் கரிய புலக்கடலு ளாழ்ந்தார்.

சிலைபோன்ற நுதல். பொன் - மேகலை. உருவம் - அழகு. உப்பு - இனிமை. திருவினாற்றிகழுங் காமமாகிய தேன். புலக்கடல் - விடயக் கடல்.

(இ - ள்.) அத்தேவர் புருவ முதலியவற்றையுடைய தேவியரூடலே இனிமையாகத் தேனைப்பருகி ஒப்புக்கூறுதற்கரிய புலக்கடலிடத்தாரா யினாரென்க. (ருசங)

(வேறு)

3142. முகடு மணியழுத்தி முள்வைர முள்வேய்ந்து முத்தம் வாய்சூழ்ந், தகடு பசுமணியார்ந் தங்காந் திருள்பருகி யடுபால் விம்மிப், பகடு படவடுக்கிப் பண்ணவனார் தம்மொளிமே னின்றாற் போலும், தகடு படுசெம்பொன் முக்குடையான் றாளிணையென் றலைவைத் தேனே.

---

3140. கண்ணார் - தெய்வமகளிர். கலவிக்குத் தூதாகிய காம மெனும் கையால் புலவியாகிய படையைக் காய்த்தி; கலவி - முயக்கம். புலவி - ஊடல். காய்த்தி - வெவ்விதாக்கி. உலவி - பரந்து.

3141. புருவத்தையுடைய சிலைபோலும் நுதல். பொன்துஞ்சும் - பொன்னாபரணம் தங்கும். இடையார் - தெய்வமகளிரது. உப்பாக - இனிமையாக. ஊடலை இனிதென்றல்: சீவக. 1996. தேவர் - நந்தட்டன் முதலியவர். பொருவற்கரிய - ஒப்பிடுதற்கரிய. புலக்கடல் - விடயக் கடலிலே.

3142. முகடு - உச்சியில். முத்தம் - முத்துமாலை. பால்விம்மி - பால் போன்ற ஒளியைச் சிந்தி. பகடு - பெருமை. பண்ணவனார்தம் ஒளி - அருகனுடைய ஒளி. முக்குடையான் - அருகனுடைய.

முகடு மணியாகவிட்டு. முள் - கூர்மை. இருளைப்பருகி முத்தம் பால் போன்ற ஒளியைச் சொரிந்து. அடுபால் - காயும் பால்.

(இ -ள்.) தலையிலே மாணிக்கமழுத்தி உள்ளே வைரமழுத்தி விளிம்பிலே முத்தமாலை சூழ்ந்து நடுவே நீலமணி நிறைந்து பருகி விம்மி மூன்றாக அடுக்கி இறைவனொளி மேலே நின்றாற்போலும் முக்குடையை உடையானது திருவடிகளை என் தலைமேலே வைத்தேனென்றாரென்க.

இவ்விலக்கியம் இடுக்கணின்றி இனிதுமுடிந்த மகிழ்ச்சியான், மீட்டும் வணங்கினார். (ருசச)

## (ஓம்படை)

3143. முந்நீர் வலம்புரி சோர்ந்தசைந்து வாய்முரன்று முழங்கி யீன்ற, மெய்ந்நீர்த் திருமுத் திருபத்தேழ் கோத்துமிழ்ந்து திருவில் வீசும், செந்நீர்த் திரள்வடம்போற் சிந்தா மணியோதி யுணர்ந்தார் கேட்டார், இந்நீர ராயுயர்வ ரேந்துபூந் தாமரை யாள் காப்பா ளாமே.

சோர்ந்தசைந்து - தளர்ந்து நடுங்கி. வாய்முரன்று முழங்கி - வாயினால் மெல்ல இசைத்துப் பின் மிகவுமுழங்கி. மெய்ந் நீர்க்குத் தன் மெய்யிடத்து நீர்மை யென்றும், புராணத்துப் பொருளாதலின், உண்மை யான பொருளினீர்மை யென்றும் கூறுக. செந்நீர்த்திரள் - சிவந்த நீர்மையையுடைய மாணிக்கம்; ஆகுபெயர். இம்முத்தையும், மணியையு மீன்ற வலம்புரி, இல்பொருளுவமை.

(இ - ள்.) சோழகுலமாகிய கடலிலே பிறந்து வலம்புரி, பிறர் குற்றங் கூறுகின்றாரென்று தளர்ந்து அஞ்சி முரன்று முழங்கி ஈன்ற இருபத்தேழாகிய முத்தையும், மாணிக்கத்தையும் வடம்போலே கோக்கப்பட்டுத் திருவில் உமிழ்ந்து வீசுஞ் சிந்தாமணி யென்னுமிச் செய்யுளை, ஓதியுணர்ந்தாரும், அவர் கூறக் கேட்டாரும் இந்திரராய்ப் பின்பு வீடுபெறுவர் ; அவரை இப்பவத்துத் திருமகள் காப்பாளென்க.

---

3143. முந்நீர் - கடல். வலம்புரி யென்றது இந்நூலாசிரியராகிய திருத்தக்க தேவரை. மெய்ந்நீர் - உண்மையான பொருளின் நீர்மையை யுடைய. சிந்தாமணியை ஓதி.

இது தேவர் குருக்கள் கூறினாரென்றுணர்க; தேவர் இங்ஙனம் தம் மைப்புனைந்துரைத்தலாகாமையின். முத்துமணியும் கோத்தாற்போன்ற தென்றார், எளிதிற் பொருள்தந்தும், அரிதிற் பொருள்தந்தும் நிற்றலின். இருபத்தேழென்றார், ஒன்றைப் பத்தாற்பெருக்கின இருநூற்றெழுபதைப் பத்தாற் பெருக்கின இரண்டாயிரத் தெழுநூற்றை; எனவே தேவரருளிச் செய்த செய்யுள், [1] இரண்டாயிரத் தெழுநூறென்றே கொள்க. (க)

(வேறு)

3144. செந்தா மரைக்குச் செழுநாற்றங் கொடுத்த தேங்கொள்
அந்தா மரையா ளகலத்தவன் பாத மேத்திச்
சிந்தா மணியின் சரிதஞ்சிதர்ந் தேன்றெ ருண்டார்
நந்தா விளக்குச் சுடர்நன்மணி நாட்டப் பெற்றே.

செந்தாமரைக்கு நாற்றங் கொடுத்த அந்தாமரை யென்றது, இறைவன் திருவடிகளை. அந்தாமரையை ஆளுகின்ற விரிந்த ஞானத்தையுடையவனென்றது, சீவகனை. சிதர்ந்தேனென்றது, பரக்கக் கூறினேனென்றவாறு. அவியாத விளக்கு உள்ளே நின்று எரிகின்ற நன்மணி யென்றது, குருக்களை.

(இ - ள்.) குருக்கள் அங்ஙனநாட்டிக் கூறக் கேட்ட தேவர், சீவகனது இனிய சரிதமாகிய சிந்தாமணியை யான் நின்பாதமேத்திச் சிதர்ந்தேன்; இச்சிந்தாமணியை, நன்மணியே! நீ இங்ஙனம் நாட்டப்பெற்று இவ்வுலகத்தோரும் நன்றென்று தெளிந்தாரென்க. (உ)

(வேறு)

3145. செய்வினை யென்னு முந்நீர்த் திரையிடை முளைத்துத்
தேங்கொள், மைவினை மறுவி லாத மதியெனுந் திங்கண் மாதோ,
மொய்வினை யிருள்கண் போழு முக்குடை மூர்த்தி பாதம்,
கைவினை செய்த சொற்பூக் கைதொழு தேத்தி னேனே.

---

(உரை) [1] மற்றை 445 செய்யுட்களும் கந்தியார் என்னும் பெண் புலவரால் இடையிடையே பாடிச் சேர்க்கப்பட்டனவென்று சிலர் கூறுகின்றனர்; அச்செய்யுட்கள் இன்னவை யென்று புலப்படவில்லை.

3144. தேம் கொள் - இனிமை கொண்ட. அந்தாமரையை ஆளும் அகலத்தவன் சரிதமாகிய சிந்தாமணியை நின்பாதமேத்திச் சிதர்ந்தேன்; அகலத்தவன் - சீவகனுடைய. சிதர்ந்தேன் - பரக்கக் கூறினேன். நன்மணி: விளி. நாட்டப்பெற்றுத் தெருண்டார்; தெருண்டார் - உலகத்தவரும் நன்றென்று தெளிந்தார்.

3145. செய்வினை - நல்வினை. மதியெனும் - அறிவென்னும். திங்களாற் கைவினை செய்த சொல்லாகிய பூவை மூர்த்திபாதத்தே தூவித் தொழுது; கைவினை - தொழிலழகு. சொல் - செய்யுள். மூர்த்தி - அருகதேவன்.

செய்வினை - முன்செய்த நல்வினை. மைவினைமறு - தீவினையாகிய மறு. மொய்வினையிருள் - செறிந்த வினையாகிய இருள். கைவினை செய்த - ஆராய்ந்த.

(இ - ள்.) நல்வினை யென்னும் கடலிலே முளைத்து இனிமை கொண்ட நல்லறிவென்கின்ற திங்களாலே நீ கைவினை செய்த செய்யு ளாகிய பூவை யான் கைக்கொண்டு மூர்த்தி பாதத்தே தூவித் தொழுது ஏத்தினேனென்று தேவர் குருக்களை நோக்கிக் கூறினாரென்க. (ரு)

---

[1] "தத்தை குணமாலை" என்னுங் கவியும், [2] "பகைமாற்று" என்னும் கவியும் கந்தியார் கூற்று.

கரு. முத்தியிலம்பகம் முற்றிற்று.

ஆகக்கவி, ருகசரு.

## சீவகசிந்தாமணி நச்சினார்க்கினியருரை

முற்றுப்பெற்றது.

---

(வாழ்த்து)

திங்கண்மும் மாரி பெய்க திருவறம் வளர்க செங்கோல்
நன்கினி தரச ளுள்க நாடெலாம் விளைக மற்றும்
எங்குள வறத்தி னோரு மினிதூழி வாழ்க வெங்கள்
புங்கவன் பயந்த நன்னூல் புகழொடும் பொலிக மிக்கே.

[1] தத்தைகுண மாலையொடு தாவில்புகழ்ப் பதுமை
ஒத்தவெழிற் கேமசரி யொண்கனக மாலை
வித்தகநல் விமலையொடு வெஞ்சுரமஞ் சரிதான்
அத்தகையி லக்கணையொ டாகமண மெட்டே.

[2] பகைமாற் றொருநற் பரன்வாழ்த் தவைச்சொற் பதிக விலம்பகமோ
வகைமாற் றொருநா மகளோ கோவிந்தை மணமுறு தத்தைகுணம்
மிகைமாற் பதுமை கேமசரி கனகம் விமலையர் வீழ்சுரமஞ்
சகைமாற் றொடுமண் மகள்பூ விலக்கணை முத்தியீ ராறென்றே.

[இப்பாடல் செந்தமிழ்த் தொகுதி 20, பகுதி 5, 23-ஆம் பக்கத்தில் 'பெயர் விழையான்' என்பவரால் வெளியிடப் பெற்றுள்ளது]

## பின்னேயுள்ள செய்யுட்கள்
## சில பிரதிகளிற் காணப்பட்டன :

---

(வெண்பா)

(க) நாமகள்கோ விந்தையொடு நற்காந் தருவதத்தை
தாமகுணை மாலை தனிப்பதுமை - கேமசரி
[1] மின்கனக மாலை விமலைசுர மஞ்சரியோ
டன்பி னிலக்கணைபத் தாம்.

(விருத்தம்)

(உ) உருவள ரகலவை பூமி யுயர்தவங் கருணை யூக்கம்
பொருவலி விசயம் வீரம் புண்ணிய மாதர் போகம்
பெருநிதி யொழுக்கஞ் சீலம் பிள்ளைகண் மானங் கல்வி
திருமுத லிவையீ ரெட்டுஞ் சீவக னொருவன் பெற்றான்.

(வெண்பா)

(ங) மண்டித் தடுமாறி வாழ்விழந்தேன் மாதுயரப்
பண்டைப் பழவினைநோய் பற்றற்றேன் - பிண்டித்
திருமாலை முக்குடைக்கீழ்த் தேவாதி தேவர்
பெருமானை யானடைந்த பின்.

(ச) திருத்தக்க மாமுனிசிந் தாமணி கம்பர்
விருத்தக் கவித்திறமும் வேண்டே - முருத்தக்க
கொங்குவேண் மாக்கதையைக் கூறேங் குறளணுகேம்
எங்கெழிலென் ஞாயி றெமக்கு.

---

(பி - ம்.) [1] 'மாகனமாலைவிமலைசுரமைகணையோ, டாகுதிருமணங் களாம்'

3481—96

# சீவகசிந்தாமணி
# உரைச் சிறப்புப்பாயிரச் செய்யுட்கள்

---

(வெண்பா)

(க) பாரத்தொல் காப்பியமும் பத்துப்பாட் டுங்கலியுட
ஆரக் குறுந்தொகையு ளைஞ்ஞான்கும் - சாரத்
திருத்தகு மாமுனிசெய் **சிந்தா மணியும்**
விருத்திநச்சி னார்க்கினிய மே.

(நேரிசையாசிரியப்பா)

(உ) பாற்கடல் போலப் பரந்த நன்னெறி
நூற்படு வான்பொரு ளுண்ணிதி னுணர்ந்த
போக்கறு கேள்விப் புலவோர் புலத்தின்
நாற்பொருள் பொதிந்த தூக்கமை யாப்பினைத்
தேக்கிய சிந்தைய னாகிப் பாற்பட
எழுத்துஞ் சொல்லும் பொருளுமிம் மூன்றும்
இழுக்கற வாய்ந்த வழுக்கிறேல் சீர்த்தித்
தொல்காப் பியமெனுந் தொடுகடற் பரப்பை
மறுவுங் குறையு மின்றி யென்றும்
கலையி னிறைந்த கதிர்மதி யென்ன
நிலையுடை கலத்தி னெடுங்கரை காணாக்
கல்லா மாந்தர் கற்பது வேண்டியும்
நல்லறி வுடையோர் நயப்பது வேண்டியும்
உரையிடை யிட்ட காண்டிகை யுரைத்தும்
ஆன்றோர் புகழ்ந்த வறிவினிற் றெரிந்து
சான்றோ ருரைத்த தண்டமிழ்த் தெரியல்
ஒருபது பாட்டு முணர்பவர்க் கெல்லாம்
உரையற முழுதும் புரைபட வுரைத்தும்
ஒலித்திரைத் தலத்தி னுணர்ந்தோ ருரைக்கும்

கலித்தொகைக் கருத்தினைக் காட்சியிற் கண்டதற்
குள்ளுறை யுவமமு மேனை யுவமமும்
தெள்ளிதிற் றெரிந்து திணைப்பொருட் கேற்ப
உள்ளுறை யுவமத் தொளித்த பொருளைக்
கொள்பவர் கொள்ளக் குறிப்பறிந் துணர்த்தி
இறைச்சிப் பொருளுக் கெய்தும் வகையைத்
திறப்படத் தெரிந்து சீர்பெறக் கொளீஇத்
துறைப்படு பொருளொடு சொற்பொருள் விளக்கி
முறைப்பட வினையை முடித்துக் காட்டிப்
பாட்டிடை மெய்ப்பாடு பாங்குறத் தெரித்துப்
பாற்பட நூலின் யாப்புற வுரைத்த
நாற்பெயர் பெயரா நடப்பக் கிடத்திப்
போற்ற வின்னுரை பொருள்பெற விளம்பியும்
வையம் புகழ்ந்து மணிமுடி சூட்டிய
பொய்யில் வான்கதை பொதிந்த செந்தமிழ்ச்
**சிந்தா மணியைத்** தெண்கடன் மாநிலம்
வந்தா தரிப்ப வண்பெரு வஞ்சிப்
[1] பொய்யா மொழிபுகழ் மையறு காட்சித்
திருத்தகு முனிவன் கருத்திது வென்னப்
பருப்பொருள் கடிந்து பொருட்டொடர்ப் படுத்து
வினையொடு முடியப் புனையுரை யுரைத்தும்
நல்லறி வுடைய தொல்பே ராசான்
கல்வியுங் காட்சியுங் காசினி யறியப்
பொருடெரி குறுந்தொகை யிருபது பாட்டிற்
கிதுபொரு ளென்றவ னெழுதா தொழிய
இதுபொரு ளென்றதற் கேற்ப வுரைத்தும்
தண்டமிழ் தெரித்த வண்புகழ் மறையோன்
வண்டிமிர் சோலை மதுரா புரிதனில்
எண்டிசை விளங்க வந்த வாசான்
பயின்ற கேள்விப் பாரத் துவாசன்
நான்மறை துணிந்த நற்பொரு ளாகிய
தூய ஞான நிறைந்த சிவச்சுடர்
தானே யாகிய தன்மை யாளன்
நவின்ற வாய்மை நச்சினார்க் கினியன்
இருவினை கடியு மருவியம் பொதியிலில்

[1] இவர் தஞ்சைவாணன்கோவை ஆசிரியரான பொய்யாமொழிப் புலவரல்லர்.

௫ மருவிய குறுமுனி தெரிதமிழ் விளங்க
ஊழி யூழி காலம்
வாழி வாழியிம் மண்மிசை தானே.

(விருத்தம்)

(௬) பச்சைமா லனைய மேகம் பௌவநீர் பருகிக் கான்ற
எச்சினுற் றிசையு முண்ணு மமிழ்தென வெழுநா வெச்சி
மெச்சிநா ளும் விண்ணோர் மிசைகுவர் வேத போதல்
[1] நச்சினார்க் கினிய ளுவி னல்லுரை கொள்வர் நல்லோர்.

(பி - ம்.) [1] 'நச்சினர்க் கினிய னெச்சி னறுந்தமிழ் நுகர்வர்'

# சீவகசிந்தாமணிச் செய்யுண் முதற்குறிப்பகராதி

(எண் - செய்யுளெண்)

# அரும்பதமுதலியவற்றின் அகராதி

(எண் - செய்யுளெண்)

வள்ளூரம் - ஊன், 1552 [66
வள்ளைவாடு-வாடிய வள்ளைக்கொடி,
வளம் - அழகு, 751 [223
வளர்ந்ததை (வினைத் திரி சொல்),
வளராதன - துயிலாதன, 1366
வளாய் - சூழ்ந்து, 2634
வளாயினர், 2519
வளிமுகச் சுடர், 298
வளை (சங்கு) ஆர்த்தன, 1850
வளைக்குக்காந்தட்டோடு, 1742
வளைத்தேன் - தடுத்தேன், 889
வளைந்த அரிசி, 824
வளைப்பு - காவல், 2077
வளைய சுந்தரம் - தடமித்தன் பட்டத்து யானை, 1830
வளையவள், 651 [தை, 2185
வளையாத வில்லுக்குஊடிய மடந்
வளையாபதி-ஐந்து காப்பியங்களுள்
வளைவாயுகிர், 2439 [ஒன்று, 1434
வளை வேறு தொடி வேறு, 469
வற்கம் இட்டவண்பரிமா (வல்கம், வடமொழி), 1060
வற்புற்றான், 1122
வறிய வர்மனம், 1416
வறுமையுற்றார்க்குஉறவில்லை, 2535
வறைகள் - வறுவல்கள், 2735
வன்செலல் அத்திரி, 1773
வனகிரி - சினையமுள்ள ஒரு மலை,
வனதெய்வம், 354 [1210, 1565
வனப்பு - வகுப்பழகு, 1721, 2292
வனம், 636
வனை கலத்திகிரி, 1839
வனையலாம்படித்தலாவடிவு, 709
வாக்கமை பாவை-திருத்தமமைந்த பாவை, 667
வாக்கமையுரு, 1258
வாக்கி - வார்த்து, 471
வாக்கினிற் செய்த பொன்வாள் - மயிர்க் கத்தி, 2495
வாக்கு - திருத்தம், 667, 1473
வாகனமில்லாத பொழுது கவசமணிதல் கூடாது, 266
வாங்க, 2179
வாங்கி - தழுவி, 584
வாச்சியம், 3215 [622, 1476
வாசநெய் - வாசனை எண்ணெய்,
வாசவெண்ணெய், 2737
வாசவல் - பாசவல் (வி), 1562
வாசி யறியாதான்-உயர்வுதாழ்வு தெரியாதவன், 899
வாசியின்றி, 723
வாசினை - வாசித்தல், 603, 1079
வாட்கடல், 2195 [கடாவிட்டு, 1143
வாட்கடாக்கொண்டு - வாளாலே
வாட்கண் அகன்றாள் - உடம்பெல்லாம் கண்ணானாள், 1475
வாட்கயல், 46
வாட்கூத்து, 783
வாட்டிய, 1947
வாட்படை - வாள்வீரர், 436, 1739
வாட்படை சுருவாக, 2223
வாடாமாலைப் பிண்டி (ஜை), 3018
வாணாள் - உயிர், 3079
வாணிகம், 770 [வல்லர், 1500
வாணிகமகளிர்தாமே வாணிகம்
வாணுதற்பட்டம், 1257
வாத்திய ஒலியை நீரிற் பிறப்பித்தல், 965
வாத்தியவகை, 110, 2967
வாமலேகை: அநங்க மாலையின் தோழி, 2590
வாமன் - அருகன், 160, 2738
வாமனார் - புத்தர், 210
வாய் - வடு, 454; விளிம்பு, 595
வாய்க்கிலையறிதலில்லான், 1230
வாய்ச்சி, 2825 [2689
வாய்ச்சியால் இட்டிகைசெத்து,
வாய்த்த - தப்பாத, 419
வாய்த் தலை - மதகு, 40
வாய்திறந்துபாடல், 658
வாய்ந்த - வாய்த்த (வி), 2043
வாய்ப்பறையறைந்து தூற்றி, 211
வாய்பூசி, 1301
வாய்மொழிந்துரைக்கலுற்றாள்,
வாய்வது, 717, 2866 [1707
வாய்வழிகடாம், 735
வாய்விடொடு - வாய்விடுதலொடு (ஒடு: உடனிகழ்ச்சி), 592
வாயில் - தூது, 997; வழி, 2008,
வார் - கடைகயிறு, 711 [2112
வார்மதமுண்டு உகுத்திடுகளிறு, 182
வாரணத் தொழு - யானைத் தொழு,
வாரணப்போர், 120 [958
வாரணவாசி-ஊர், 395, 612, 2188
வாரம்படல் - பக்ஷபாதமுறல், 888

# விளங்காமேற்கோளகராதி

[எண் - செய்யுளெண்]

இவற்றுட் சிலவற்றின் நேரே குறிக்கப்பட்ட நூற்பெயர்கள் சிலப்பதிகாரவுரை, கல்லாடவுரை முதலியவற்றிற் கண்டவை.

# பிழையும் திருத்தமும்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 50 | 12 | கூட்டங் | கூடங் |
| 56 | 3 | பார்ப்பெறும் | பார்ப்பெணும் |
| 151 | 11 | நிலத்துய்ச் | நிலத்துச் |
| 172 | 34 | தெய்வம் | தெய்வதம் |
| 175 | 29 | குறுதிகான்று | குருதிகான்று |
| 229 | 9 | மரத்தையும் | மறத்தையும் |
| 231 | 8 | கணையுமறுத் | கணையும்மறுத் |
| 238 | 9 | கருதிக் | கருகிக் |
| 298 | 34 | யொன்பான் | யென்பான் |
| 303 | 8 | பிரிவு | பரிவு |
| 319 | 17 | மேகளையாள் | மேகலையாள் |
| 355 | 23 | சூயா | சூளா |
| 376 | 12 | வென்றேன் | வென்றன் |
| 393 | 5 | மறப்புடை | மறப்படை |
| 402 | 30 | ஊண் | ஊன் |
| 433 | 26 | மாறுகொண்டதோர் | மாறுகொண்டதொர் |
| 440 | 30 | மென்பதோர் | மென்பதொர் |
| 443 | 10 | பான்மீ | பன்மீ |
| 446 | 35 | செப்பினுள் | செப்பினன் |
| 449 | 8 | சொல்லிகந்தறி | சொலிகந்தறி |
| 458 | 25 | பசுவை | பசுவைத் |
| 467 | 37 | காரண | காரன |
| 497 | 20 | விழுங்கும் | விழுங்கு |
| 502 | 26 | கூர்தர | மிக்கு ஊர்தர |
| 502 | 27 | கூர்தர | ஊர்தர |
| 517 | 23 | னுறுமுறு | னுறுமுற |
| 521 | 10 | எனென்றான் | என்னென்றான் |
| 537 | 18 | அவளெய்தின | அவரெய்தின |
| 558 | 13 | ணிக்களைத் | ணிக்கலைத் |
| 559 | 18 | மருகு | மறுகு |
| 560 | 26 | சச்கரம் | சக்கரம் |
| 564 | 16 | கருதி | கருதிப் |
| 569 | 32 | வீழ்ந்த | விழ்ந்த |
| 575 | 15 | வனையிடத்தே | மனையிடத்தே |
| 578 | 20 | வாளாதே | வாளாலே |
| 593 | 1 | றிசைசெய் | றிரைசெய் |
| 594 | 17 | தானுடைய | தாமுடைய |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 609 | 10 | மெல்லாமியர் றி | வெல்லாமியற்றி |
| 632 | 22 | வந்து | வந்தது |
| 646 | 7 | மென்றும்கூறி | மென்று கூறி |
| 685 | 10 | வாயவிழ் | வாயவிழ்ந் |
| 685 | 11 | ருரங்கு | ருரங் |
| 694 | 26 | டாயாய் த் | விடாயாய்த் |
| 719 | 4 | வழுங்கள் | வழுங்கன் |
| 733 | 9 | மாளே | மாலே |
| 750 | 14 | தோதையர் | கோதையர் |
| 764 | 30 | அந்தமலேயில் | அத்தமனமலேயில் |
| 784 | 5 | எவ் வூரி | எவ்வூரி |
| 808 | 37 | என் றி | என்று |
| 826 | 15 | இறுந்துபடுமோ | இறந்துபடுமோ |
| 838 | 35 | தடக்கண் | தடங்கண் |
| 840 | 23 | அதிலார்ந்து | அகிலார்ந்து |
| 851 | 19 | திரியுஞ் | திரியுந் |
| 856 | 9 | வண்ணபே | வண்ணமே |
| 874 | 13 | செய்வித்தும் | செய்வித்துப் |
| 880 | 21 | தீப்போல | தீப்போலே |
| 890 | 30 | தேரில் | தேரின் |
| 895 | 19 | தேங்குழான் | தேங்குழலான் |
| 909 | 19 | அவளுடைய | அருளுடைய |
| 931 | 26 | வான்மதில் | வாண்மதில் |
| 947 | 34 | திருமு | திருமுடி |
| 968 | 16 | மிக்கவர்களே | மிக்கவர் மகளே |
| 999 | 36 | தாம் | தான் |
| 1018 | 15 | என்னே | எல்லே |
| 1026 | 28 | துதர்வாய் | துவர்வாய் |
| 1027 | 20 | மாலுற்ற | மாலுற்று |
| 1057 | 39 | நடுங்குதாய | நடுங்குதய |
| 1061 | 22 | எத்துவார் | ஏத்துவார் |
| 1098 | 31 | உண்மை | உம்மை |
| 1156 | 27 | கொடாமல் | கெடாமல் |
| 1191 | 8 | கலங்கொள் | களங்கொள் |
| 1208 | 18 | கைசெய்யப்பட்டன | கைசெய்யப்பட்ட |
| 1209 | 5 | சுழிமதி | கழிமதி |